20-2

உ

கடவுள் துணை.

ஸ்ரீ சுவாமி சித்கநாநந்தகிரி அவர்கள்
இயற்றியருளிய

# நியாயப்பிரகாசம்.

இது
ஸ்ரீ சாது இரத்தின வேதாந்த விசாரணைச் சபையினருள் ஒருவராகிய
ம-ா-ா-ஸ்ரீ பு. நாகரத்தின நாயகரவர்களால்
தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

ஷை சபையினருள் ஒருவராகிய
ஸ்ரீமத். வி. முருகேச முதலியாரவர்களால்
பரிசோதிக்கப்பட்டு,

ஷை பு. நாகரத்தின நாயகரவர்களால்
சென்னை
திரிபுரசுந்தரிவிலாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.



11th October 1907.

இதன் விலை ரூபா 4-0-0.

உ

கடவுள் துணை.

# முகவுரை.

" கண்ணிய வறிவுடைக் கௌதம கணாதர
பரமா சிரியர் பாதாம் புயங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே".

நியாயப்பிரகாசமென்பது மீமாஞ்சை, நியாயம், வைசேஷிகம், சாங்கியம், யோகம், வேதாந்த மென்னும் வைதிக சாத்திர மாறனுள் நியாய சித்தாந்தத்தையும், வைசேஷிக சித்தாந்தத்தையும் தன்னுள் ளடக்கியதோர் நூலாம். நியாய சாத்திரமும், வைசேஷிக சாத்திரமும், தர்க்க சாத்திரமா மென்பது மிகப் பிரசித்தம். தர்க்கசாத்திரமென்பது திரவிய முதலிய பதார்த்தங்களின் சொரூபத்தை நன்றாய் நிரூபித்துக் காட்டும் நூலாம். நிரூபித்தலாவது பதார்த்தத்தின் இலக்கண மின்னது, அதன் சொரூப மின்னது, அஃதிதனாற் கொள்ளத்தக்கது என்றிங்ஙனம் பலவகையால் விளக்குவதாம்.

இத்தர்க்க சாத்திரம் ஆதியிற் கௌதமராலும், கணாதராலுஞ் செய்யப்பட்டு விளங்குவதென்பது தர்க்கநூலுணர்ந்தாரியாவரு மறிந்த தொன்றும். அவ்விருவர் கூறிய தர்க்கங்களில் சிறப்பு வகையால் சிலவேறுபாடிருப்பினும் பொதுவகையால் யாதொரு வேறுபாடுமின்றிக் கருத்தொத்திருத்தலின் இரண்டும் மேன்மக்களால் கொள்ளப்பட்டு வருகின்றன. "காணாதம் பாணிநீயஞ்ச ஸர்வஶாஸ்த்ரோபகாரகம்—கணாதரியற்றிய வைசேஷிக சாத்திரமும், கௌதமரியற்றிய நியாய சாத்திரமும் சர்வ சாத்திரங்களின் பொருளையும் உணர்தற்குப் பேருபகாரமாயிருக்கின்றன" என்றான்றோர் கூறியவாற்றான் நியாயசாத்திரமும், வைசேஷிகசாத்திரமும் உணராதவர்க்குச் சாத்திரங்களின் உண்மைப்பொருள் விளங்கமாட்டாதென்ப தொருதலையாம். தர்க்கசாத்திரம் ஏனைய சாத்திரங்களின் உண்மைப் பொருளை யுணர்தற்குப் பரமோபகாரமாயிருக்கின்றதென்பது "ஆதி முதலொழிய வல்லா தனவெண்ணி, நீதி வழுவா நிலைமையவான்—மாதே, யறமார் பொருளின்பம் வீடென் றிவற்றின், றிறமா மோ வெண்ணிறந்தாற் செப்பு" என்னுந் திருவாக்கானும் நன்குவிளங்கும். எண், தர்க்கம், அளவை, நியாயம், ஏரணம் என்பன ஒருபொருட்கிளவி. தர்க்கசாத்திரத்தின் உதவியின்றி எப்பொருளையும் ஆராய்வதற்கும், வாத சபையிலொன்றை யெடுத்துப் பேசுவதற்கும் முடியாமையைநோக்கி ஸ்ரீமத், பரமஹம்ச பரிவ்ராஜகாசாரிய சுவாமி-யுத்தவாநந்தகிரி அவர்களின் சீடர்களுள் ஒருவரும் பிரபல பண்டித சிரோமணியுமாகிய ஸ்ரீ சுவாமி சித்கநா

நந்தகிரி யென்னும் பெரியார் சம்ஸ்கிருத பாஷையில் தேர்ந்த ஞானமில்லாதவர்பொருட்டும், சம்ஸ்கிருத ஞானமின்றிய அதி மதிநுட்பமுடையோர் பொருட்டும் நியாய சாத்திரத்தையும், வைசேஷிக சாத்திரத்தையும் தமது மதிநுட்பத்தினால் நன்குற ஆராய்ந்து தமது இந்தி பாஷையில் நியாயப் பிரகாசமெனப் பெயரியதோர் சிறந்த தர்க்க நூலினை கடல்போல் விரிவாக அருளிச்செய்தனர். அப்பெரியார் தமது இந்தி பாஷையில் இயற்றியருளிய அரிய பெரிய நூற்கள் பலவற்றுள் இதுவும் ஒன்றாம். இக்காலத்தில் பிரபலமாக வழங்கி வருவது கணததர்க்கமே யாகலின் அதனை இதில் மிக விரித்துக் கூறியும், மிகப் பிரபலமாக வழங்கப் பெறாதிருப்பது கௌதமதர்க்க மாகலின் அதனை சுருக்கிக் கூறியு முள்ளார். வைசேஷிக தர்க்கமே இந்நூலில் விரிவாய்க் கூறப்பட் டிருப்பினும் கௌதமதர்க்கம் இதனுள் அந்தர்கதமா யிருப்பது கருதாது, தலைமை பற்றித் தாமியற்றிய இந் நூலுக்கு நியாயப் பிரகாசமெனப் பெயர் தந்தனர். நியாய மென்பதன் பொருள் யுக்தி, அல்லது அநுமானம், அல்லது தர்க்க மென்பதாம். பிரகாச மென்பதன் பொருள் விளக்குவ தென்பதாம். இதற்குத் தமிழில் அளவை விளக்கமென்பது பொருளாம். இந்நூல் சம்ஸ்கிருதத்தில் வல்ல பண்டிதர்களாலும் மிகுதியும் விரும்பப்படுவதா மென்பது இந்தி பாஷையிலும், சம்ஸ்கிருத பாஷையிலும் தர்க்க நூல் வல்லார் வாக்கான் விளங்கும். இந்நூல் சம்ஸ்கிருத பாஷையில் மிகப் பிரசித்தமாயுள்ள குசுமாஞ்சலி, லீலாவதி, தினகரி, முக்தாவலி, நியாய தரிசனம் என்றற் றொடக்கத்து நூல்களை ஆதரவாகக்கொண் டெழுந்தமையின் சம்ஸ்கிருத பாஷையிலும் இந்தி பாஷையிலும் வல்ல பண்டிதர் பலராலும் பொன்னேபோற் போற்றப்படுகின்றது. தர்க்கநூல் வைதிக சாத்திரமாறனுள் நியாயமும் வைசேஷிகமுமா யிருப்பது பற்றியும், "வேதமொரு நான்குமா றங்கமும்நன் னியாய மீமாஞ்சை யொடுமிருதி புராணமுமீ ரேழாம், ஓதலுறும் வித்தைகளாம்" என்று ஆன்றோர் கூறியவாறு பதினான்கு வித்தைகளுள் ஒன்றாயிருப்பதுபற்றியும், தமிழ்மக்கள் ஞான சாத்திரங்களின் உண்மைப் பொருள்களை எளிதி லுய்த்துணர்வதற்கு விரிந்த தர்க்கநூ லொன்றின்மைபற்றியும், தமியேன் வேதாந்தாப்பியாசஞ் செய்வதற்கு மூலபுருஷரா யிருந்தவரும் இச்சென்னைமாநகரின்கண் வேதாந்த பாஸ்கரரா யெழுந்தருளியிருந்தவருமான சற்குரு, மகான், சை. இரத்தின செட்டியாரவர்கள் இந்நியாயப் பிரகாசமெனப்பெயரிய தர்க்கநூலினை மொழிபெயர்த்துத் தமிழ் மக்களுக் குபகரிக்க வேண்டுமெனக் கருதி யிருந்தது பற்றியும் இதனைத் தமிழில் செவ்விய வசனநடையில் மொழிபெயர்த் தச்சிட்டனன். இந்நூல் ஏழு பரிச்சேதங்க ளுடையது.

இந்நூலின் முதற்பரிச்சேதத்தில் மங்கலவாதமும், மீமாஞ்சகர் பட்டபாதர், பட்டபாதரை யநுசரித்தவர்கள், பிரபாகரர், முராரிமிசிரர், சாங்கியர், யோகசாத்திர மதமுடையார், பாசுபதசாத்திர மதமுடையார், வைஷ்ணவர்கள், ஹைரண்ணியகர்ப்பர், ஏகதண்டி வேதாந்திகள், திரிதண்டிவேதாந்திகள், திரிதண்டி வேதாந்திகளை யநுசரித்தவர்கள், இராமாநுஜ மதமுடையார், மத்வமதமுடையார், வல்லப மதமுடையார், சூன்னியவாதி மாத்தியமிகர்,

தேகாத்மவாதிச் சார்வாகர், க்ஷணிகவிஞ்ஞானவாதி யோகாசாரர், ஜைநமத முடையார் முதலியவர்கள் கூறும் முத்தியின் விவரமும், திரவிய முதலிய பதார்த்தங்களும், பிரமாண முதலிய பதார்த்தங்களும் சுருக்கமாய் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன.

இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி முதலிய வொன்பது திரவியங் களும், சூன்னியவாதி மாத்தியமிகர், க்ஷணிக விஞ்ஞானவாதி யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாஷிகர், ஜைனர், தேகாத்மவாதிச்சார்வாகர், இந்திரிய ஆத்மவாதிச் சார்வாகர், பிராண ஆத்மவாதி ஹைரண்ணியகர்ப்பர், புத்தி யாத்மவாதி ஹைரண்ணியகர்ப்பர், மீமாஞ்சக பட்டபாதர், பிரபாகரர், நாரத பாஞ்சராத்திர மதமுடையார், சாங்கியர், பாதஞ்சலசாத்திர மதமுடையார், வேதாந்திகள் முதலியவர்கள் கூறும் ஆத்மஸ்வரூபமும், மோக்ஷ ஸ்வரூபமும், அவற்றின் கண்டனமும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

மூன்றுவது பரிச்சேதத்தில் உருவ முதலிய இருபத்து நான்கு குணங் கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

நான்காவது பரிச்சேதத்தில் கருமம், சாமாநியம், விசேஷம், சமவா யம், அபாவமென்னும் ஐந்து பதார்த்தங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

ஐந்தாவது பரிச்சேதத்தில் பதார்த்தங்களின் சாதர்மிய வைதர்மியங் கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

ஆறுவது பரிச்சேதத்தில் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களும், பிராமாண்ணியமும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

ஏழாவது பரிச்சேதத்தில் கௌதமமுனிகள் அருளிய பிரமாண முதலிய பதினறு பதார்த்தங்களும், இவை கணதமுனிகளருளிய ஏழு பதார்த் தங்களில் அடங்கும் வகையும், தீதிதிகார சிரோமணி பட்டாசாரியர் கணத முனிகள் அருளிய பதார்த்தங்களுள் சிலவற்றை அங்கீகரித்துச் சிலவற்றை அங்கீகரியாது தாம் மிகுதியாக அங்கீகரித்த பதார்த்தங்களும், சம்பந்த வடிவ சங்கதியும், பிறவும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு பரிச்சேதத்திலும் தடைவிடைகளுடன் பலமதசித்தாந்தங் களை யெளிதிலறிய விரும்புவோர்க்கு இஃதோர் இன்றியமையாத் துணையாம். இஃதொவ்வொருவரிடத்தும் இருக்கத்தக்கதா மென்பது இந்நூலின் சில பக்கங்களை வாசிப்பதனலேயே நன்கு விளங்கும்.

"பண்ணிலார்க் கில்லாத பாட்டின் பயன்போன்றுங்
கண்ணிலார்க் கில்லாக் கவின்போன்று—மெண்ணிலா
வஞ்சொ லளவை யறியா தவர்க்கில்லை
செஞ்சொ லளவின் சிறப்பு."

"இரர்க மறியா ரிசைப்பயன் றுனறியார்
தாரதர மறியார் சற்காரியமறியா
ரோரா ரளவை யொருபயனுந் தானறியா
ராராய்ந் தளவை யறிந்துகொ ளீரே."

"காண்டல் கருத லுவம மாகமம்
மாண்டரு வருத்தா பத்தி யோடியல்
பைதிக வபாவ மீட்சி யொழிவறி
வெய்தியுண் டாநெறி யென்றிவை தம்மாற்
பொருளி னுண்மை புலங்கொளவேண்டும்."

என்றற் றொடக்கத்துச் செய்யுட்களால் தர்க்கம் பதார்த்தங்களின் உண்மையை யுணர்தற்கு இன்றியமையா திருப்ப தென்பது பெறப்படுதலின், இம்மொழிபெயர்ப்பு நியாயப் பிரகாசத்தினைக் கல்வி கேள்வி யறிவொழுக்க முடையா ரியாவரும் அன்பு கூர்ந்து ஏற்றுக் கொள்ளுவார்க ளென்று நம்புகிறேன். ஒவ்வொரு மதவாதிகளும் தத்தம் மதசித்தாந்தத்தை ஸ்தாபிப்பதற்கு மத தர்க்கத்தை விட்டுப் பொதுதர்க்கத்தினையே பெருந்துணையாக நாடுதல் இயல்பா யிருத்தலின், மத தர்க்கமும், பொதுத் தர்க்கமும் கடல்போல் விரிவாய்க் கூறப்பட்டுள்ள இந்நியாயப்பிரகாசம் ஒவ்வொரு மதவாதிகளிடத்து மிருக்கத்தக்கதேயாம். (ராயல் பாரம் 8-பேஜி கொண்டவுள்வில் 883-பக்கங் கொண்டு) இந்நியாயப்பிரகாசம் யாவர்க்கும் உபயோகமாம் பொருட்டு நான்கு ரூபாய் விலைக்கே குறைத்து வைக்கப்பட்டிருக்கின்றது.

தமியேனுக்குப் பொருள்விளக்க மாகாத அநேக சம்ஸ்கிருத பதங்கட்குப் பொருள் விளக்கி வைத்த மருவூர் பிரம்மஸ்ரீ கணேச சாஸ்திரியாரவர்களுக்கு எஞ்ஞான்றும் வந்தனவழிபாடுடையவனா யிருக்கின்றேன்.

ஸ்ரீசாது இரத்தின வேதாந்த விசாரணைச் சபையினருள் ஒருவரும், தர்க்க வேதாந்த சாஸ்திரங்களில் வல்லுநரும், எனது நேசருமான ஸ்ரீமத், வி. முருகேச முதலியாரவர்கள் இந்நூலை அச்சிடுங்கால் தமியேனொடிருந்துப் பரிசோதித்துத் தந்தனர். அவர் இப்புத்தக விஷயத்தில் காட்டிய வூக்கமும் உதவியும் எஞ்ஞான்றும் மறக்கத்தக்கனவாகா.

இந்நூலை எனது விருப்பத்திற் கிணங்கியவாறு விரைவில் அச்சிட்டுக் கொடுத்த திரிபுர சுந்தரிவிலாச அச்சியந்திரசாலையாரது பெருந்தன்மை எஞ்ஞான்று மிகவும் பாராட்டற்பாலதாம்.

இந்நூலின்கண் பிராந்திப் பிரமாதங்களால் பிழைகளிருப்பின் அவற்றைத் தர்க்கநூலுணர்வுடையார் தெரிவிப்பின் மறுபதிப்பில் அப்பிழைகளைத் திருத்தி யச்சிடுவதுடன் அவர்களுக்கு வந்தனமு மளிக்கப்படும்.

இந்நூல் யாதொரு இடையூறுமின்றிப் பூரணமாக முற்றுப் பெறுமாறு திருவருள் செய்த எல்லாம் வல்ல இறைவன் இஃதெஞ்ஞான்றும் நிலைபெறுமாறும் அருள் புரிவாரெனப் பிரார்த்திக்கின்றனன். இதிற் பிழையுளதாயின் உலகம் பொறுக்க.

இங்ஙனம்,
பு. நாகரத்தினம்,
148, தம்புசெட்டி வீதி,
முத்தியாலுப்பேட்டை,
சென்னை.

1907ஆம் அக்டோபர்மீ 11உ

# அநுக்கிரமணிகை.

இதனடியிற் குறிப்பித்த விஷயங்களின் உட்பிரிவுகளும், பலமத சித்தாந்தங்களும் அவ்வப் பரிச்சேதத்தில் அவ்வவ் விஷயங்களை அநுசரித்து எழுதப்பட்டிருக்கின்றன வாகையால் அவ்வவ் விஷயங்களை அநுசரித்து அவ்வவ் விஷயங்களைத் தொடர்ச்சியாய்க் காண்க.

பக்கம்.

முதலாவது பரிச்சேதம்.

பக்கம்.



## மூன்றாவது பரிச்சேதம்.



## நான்காவது பரிச்சேதம்.

பக்கம்.



ஐந்தாவது பரிச்சேதம்.



ஆறுவது பரிச்சேதம்.



ஏழாவது பரிச்சேதம். ... 863



---

# PREFACE.

The attention of the public is earnestly invited to a tamil translation of this work just published for the first time. It was originally written in *Hindi* by Swami CHITHKANANANTHAGIRI.

The study of Logic is an efficient means to the understanding of the truths involved in the *Shastras*. Of the six systems of orthodox Hindu philosophical thoughts, namely, *the Mimāmsa, the Sānkhya, the Nyāya, the Vysāshiga, the Yoga* and *the Vedānta*, the systems of Nyāya and the Vysāshiga embody the philosophy of Logic. It has been held in very high esteem in this country, occupying a position of equality with the study of language. In spite of the high place that it holds in the field of knowledge, not a single large work on the subject in Tamil has appeared till now. The only works that are accessible in Tamil are the translations of *Tharkasangraham, Tharkamirtham, Tharkagowmathi* and *Tharkabasha*. These are very elementary and their scope of knowledge is very limited. The necessity therefore of a larger work on the subject with a wider scope of information has prompted the author to produce this translation. This work clearly presents the expositions of the Nyāya and the Vysāshiga systems of logic, throwing much light upon their definitions, their methods of reasoning, their criticisms and explanations. It is divided into seven chapters.

CHAPTER I.—Introduces considerations on Mangalam (the three kinds of auspicious expressions prefixing a work, namely : I. Contents, etc., 2. Praise, 3. Invocation), then presents the various lines of thoughts adopted by several teachers in their attempts to define Freedom and ends with a brief enumeration of the seven categories of GANATHA.

CHAPTER II.—Defines the Earth and its congeners, being the nine components of the first category, *viz.*, Thravyam, discussing them fully. Description is also given of the views held by the various schools of thought in regard to the nature of the Athman and Salvation, at the same time refuting them.

CHAPTER III.—Takes up the second category, namely, the Quality, defines and discusses the twenty-four qualities embraced by it.

CHAPTER IV.—Devotes itself to the remaining five cat... *viz.*, Action, Common Notation, Specific Notation, Permanent Rela... and Negation.

CHAPTER V.—Comprises considerations on the likeness and unlikeness amongst the categories.

CHAPTER VI.—Considers the Direct, the Inferential and other Methods of Knowledge and enters into a discourse on the Differentiation in Perception.

CHAPTER VII.—Presents a description of the sixteen categories of GOWTHAMA and how these could be comprised in the seven categories of GANATHA and mentions how BATTACHARRIAR deals with the categories of GANATHA, dispensing with some, retaining others and making his additions. A final exposition of the reasons advanced regarding the particular order in which the various Methods of Knowledge are treated, concludes this chapter.

Arguments and illustrations richly pervade the whole work Exposition and refutation of every system of thought characterise its chapters. A perusal of a few of its pages will certainly convince every sectarian of the need for such a work. The author has tried his best to make the translation very intelligible.

A neatly calico bound book of 111 Royal forms.

Price Rs. 4/- per copy. Postage separate.

Copies can be sent by V. P. Post on application to the undersigned

P. NAGARATHNAM,
148, *Thumbu Chetty Street,*
*George Town, Madras.*

MADRAS,
12*th October,* 1907.



# OPINIONS.

SANSKRIT COLLEGE, MYLAPORE,
*26th August*, 1907.

MR. P. NAGARATNA NAIKAR has placed before me his Tamil translation of the Nyaya Prakasa, a work in the Hindustani Language, relating to the Nyaya Darsana founded and represented by the Sanskrit Scholars of India. I have carefully examined this Tamil translation and I find that the translator has spared no pains to make the translation accurate and desirable in all possible ways. I have much pleasure to note that this translaticn very faithfully and clearly represents many a complicated point relating to the Nyaya Darsana as represented by standard works like Muktavali, Dinakari, Kusamanjali, etc.

Now that attempts are being made everywhere to liberally disseminate the elevating principles of Hindu Philosophy through the medium of living vernaculars, the value of a Tamil Nyaya work like the present one is evidently too much to be ignored. I hope that especially for people who desire to correctly understand Hindu Vedanta as represented by some Tamil translations of standard Vedantic works in Sanskrit, this Tamil work (Nyaya Prakasa) will prove very useful ; and broadly speaking, it will substantially facilitate any attempt that may be made in these days to increase the scope of appreciating Hindu Philosophy and being benefited by the same. I wish the translator every success and I believe he will meet with a warm encouragement at the hands of the enlightened public.

S. KUPPUSWAMI SASTRI, M.A..
*Principal,*
*The Madras Sanskrit College,*
*Mylapore,*

---

12, SAN THOME HIGH ROAD,
*28th September*, 1907.

DEAR SIR,

I have glanced through your Tamil translation of the Hindi work known as *Nyayaprakasa*, and am glad to be able to say that, so for as I have been able to see it, it appears to me to be a useful addition to Tamil literature. The work gives a clear summary of Indian Sanskritic thought on logic in accordance with the *Nyaya* and *Vaiseshika*, systems of Hindu philosophy and also in accordance with the later developments of the study of logic among Indian Pandits. It is not easy to translate such a work into Tamil ; and I congratulate you on the marked success with which you have done the translation. A work like the *Nyayaprakasa*

is not intended for easy popular reading ; it has to be studied with care and under the guidance of an able teacher. To such as are willing to undergo the labour of such study, and know more Tamil than Sanskrit, your translation of the Hindi work on logic is certain to be of value. Whether your Tamil may not be still further simplified is a point to which you may well attend when you bring out the next edition. The use of the book by students will itself be helpful in indicating the lines along which it may be improved.

Yours Sincerely,
M. RANGACHARI, M.A.,
*Professor, Sanskrit and Comparative Philology,*
*Presidency College,*
*and*
*Curator, Government Oriental Manuscripts Library,*
*Madras.*

To
M. R. Ry.,
P. NAGARATNA NAIKAR AVERGAL.

---

MADRAS, 16*th October*, 1907.

I congratulate MR. NAGARATNA NAICKER for having successfully reduced to the Tamil language a valuable treatise in the Nyaya Philosophy in Hindustani. Until now there was no good book in Tamil of the 'Tharka' Sastra except the few Elementary books which are laconic and written in as difficult a language as possible. MR. NAGARATNA NAICKER's work is a real acquisition to the Tamil literature.

K. GOVINDASWAMI MUDALIAR,
*Inspector of Post Offices, Madras City, and*
*Member of Sri Sadhu Rathna Vedanta Vicharana Sabha.*

---

ஶ்ரீவேதாந்தராமாநுஜாய நம꞉.

ஶ்ரீவித்வந்நாகநாதகிரிஸ்வாமிபி꞉ ஹிந்துஸ்தாநீபாஷாயாம் ப்ரகடீக்ருத꞉ ந்யாயப்ரகாஶநாமா க்ரந்த꞉ உத்தரதேஶே ஸர்வத்ர ப்ரஸித்த꞉ । தமிமம் க்ரந்தம் நாகரத்நநாயகோ நாம விவேகீ த்ராவிடபாஷாயாம் வ்யவ்ருணுத. [illegible] க்ரந்த꞉ [illegible] தர்கஶாஸ்த்ர [illegible] தர்கஶாஸ்த்ரே [illegible]. [illegible] ஜ்ஞாநம் [illegible] க்ரந்த꞉ [illegible] விஷா । இதி ஶ்ரீ [illegible].

கும்பகோணம் ஶ்ரீ. உ. வே. வாஸுதேவாசார்ய꞉,
[illegible].

22, BROADWAY,
31—x—07.

TO

MR. P. NAGARATHNA NAYAGAR.

DEAR SIR,

I have much pleasure in congratulating you for Your Translation of *Nyayaprakasa* and am glad to say that I am much impressed by its easy and intelligible style.

It gives a clear insight into the logical systems as conceived by the *Nyaya* and the *Vaiseshika* philosophers, as well as by more modern thinkers. You have, by reason of this achievement, very charitably economised the tremendous work that lies before the student of the Indian Logical systems. In the absence of Sanskritic learning, every Tamil student, inclined for such intellectual studies, will find the present translation very valuable in informing him of the Logical systems that have developed in India.

I sincerely hope for a wide dissemination of this work and shall be very glad to see that your labour is deservingly reciprocated.

I remain,
Dear Sir,
Yours very faithfully,
M. RAJA BAHADUR,
L. R. C. P. & S, Edin, L. F. P. & S., Glas.

उ

श्री विष्णुनाथसूरिविरचितन्यायप्रकाशाख्यग्रन्थस्य मूलतः श्री नारायणाचार्यस्वामिना द्राविडभाषया विरचित [illegible]

[illegible]

पञ्चापकेशशास्त्री,
वेदान्तशास्त्राध्यापकः,
संस्कृतपाठशाला, मैलापूर्.

---

[illegible]

श्री विष्णुनाथसूरिवर्यैर्विरचितो [illegible] न्यायप्रकाशाख्य [illegible] स च श्री नारायणाचार्यस्वामिना द्राविडभाषायां यथामूलं प्रकटीकृतः. [illegible] तत्त्वजिज्ञासूनां [illegible] न्यायप्रकाशाभियो ग्रन्थो विजयतेतराम्.

इत्थं [illegible] गणेशशास्त्री,
[illegible]

---

श्री

MYLAPORE, 10-10-1907.

श्रुत्यन्तवेद्य [illegible] विवेचन [illegible],
स्पष्टीकृताभिप्रायेण ग्रन्थोऽयं कं न तोषयेत् ॥
गीर्वाणवाणीविज्ञानरहितानपि यः स्फुटम्,
वेदान्ततत्त्वजिज्ञासून् कृतार्थान् कुरुते यतः ॥
सन्त्येव द्राविड्यामपि संस्कृतानि वचांसि चेत्,
[illegible] न संशयः ॥
स्पष्टीकृतार्थ [illegible]
[illegible]
[illegible] विचारसारो
न्यायप्रकाशो जयताच्चिराय ॥

इति - के - वेङ्कटेश्वरशास्त्री,
*Assistant Librarian, Govt. Oriental Library, Egmore.*

௪

# சிறப்புப்பாயிரம்.

ஸ்ரீ சாது இரத்தினவேதாந்த விசாரணைச்சபையினருள் ஒருவரும், வேதாந்த
வுபந்நியாசகரும், சென்னை ஹிந்துதியலாஜிகல்ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதருமாகிய
ஸ்ரீமத், கோ. வடிவேலு செட்டியாரவர்கள் இயற்றிய
நிலமண்டில வாசிரியப்பா.

சீர்மலி தாமரைத் திசைமுகன் படைப்பி
னேர்பெறு நாற்குலத் திரண்டாங் குலத்துப்
பத்தர்க் கிரங்கிப் பதமருள் பவனைப்
பத்துத் திசையும் பணிபதத் தவனை
அளப்பரும் பெருமை வளத்தினை யுடையனைக்
களங்கனி புரையுங் கரியமே னியனை
அருமறைச் சிரத்து மன்ப ருளத்தும்
இருமையி னெழுந்தரு ளெம்மா னரிந்தமன்
கருணையிற் பீமக் காவலன் பாற்கட
றருமதி யெனப்பெறு சதுரப் பாட்டினன்
திருந்திய வறிவுடைச் செம்மல்வே தாந்தம்
பொருந்திய வகத்தன் போக்கமி னடையன்
உருவுந் திருவு முயர்வார் கல்வித்
திருவும் புகழுஞ் சீர்மையுங் கொடையும்
வாய்மையுங் கருணையும் வற்றா வொழுக்கமும்
தூய்மையு மேன்மையுந் துரிசறு கேண்மையும்
அருந்தவ வங்கமு மடக்கமு முறவாய்
வருபெரு ஞானி மகானி ரத்தின
நம்பியி னடிமலர் நாளுமெற் போன்று
நம்பிப் போற்றுமெ னன்ப னகர்சொல்
இசையுறு நாக ரத்தினக் குரிசில்
வசையறு நெறியில் வைத்தற் குரிய
கற்பன கசடறக் கற்றற் கருவியா
வுற்றிடு மெழுத்தொ டியரெண் ணிரண்டனுள்
பெருமையார் தருக்கம் பிறங்கிடு தமிழிற்
சுருக்கமாச் சிலவே துளங்குத னோக்கியும்
எண்ணு மெழுத்துங் கண்ணெனப் புலவர்
எண்ணிச் சொற்ற வியல்பினை யோர்ந்தும்
அவையினில் வெற்றி யடைதற் கருவி

நவையறு மளவையா நண்ணுவ துணர்ந்தும்
இன்னும் பிறவு மன்ன வறிந்தும்
உன்னத நிலையம ருத்தவா நந்த
கிரியெனுஞ் சற்குரு கேட்டா மரையடி
திரிபற வேத்துஞ் சீமான் சித்தநா
நந்த கிரியெனு நாவலர் பெருமான்
அந்தமி றன்மையை யகத்துண ரறிஞன்
ஏரண நூல்பல யினிதி னுய்ந்திங்
காரணப் பொருளை யறிதற் கெளிதாய்
அதிமதி நுட்ப மமைதற் பொருட்டு
விதியுணர் கலைஞர் வியந்திடு மாறு
பளகறு மிந்துஸ் தானியிற் பாங்காய்
வளமுற விரித்து வகுத்தரு ணூலாம்
பிணக்கொழி நியாயப் பிரகா சத்தினை
இணக்கமுற் றிதம்பெற வின்றமிழ் மக்கள்
கத்திய நடையிலெண் கற்றவர் மதிக்கச்
சத்துவ முற்ற தமிழ்ப்பெருந் தெய்வம்
நன்மக னிவனென நனிசிரந் துளக்கத்
தன்மனு சீர்த்தி சார்ந்தெத் திசையும்
நிறைவுறு வெண்மை நிலவுற வன்பா
முறைதிறம் பாது மொழிபெயர்த் தனனே

## தற்சிறப்புப்பாயிரம்.

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

குணமெனுங் குன்றமீ மிசைநின்ற தேசிகனைக்
குறையெலாம் வீட்டியருள்வோன்
குஞ்சர முகத்துமுன் னோக்குடை விநாயகனைக்
குளிரிமய வரைதந்த குமரன்
கணவனும் பரசிவனைக் கயத்தாபி ரம்மிதழ்க்
கள்ளூறு நறுங் கமலமே
கண்ணிணை களிக்குமா வாலய மெனத்திகழ்
கனங்குழைத் திருவங்கனை
மணவாள னென்னுநெடு மாலினை ரடிமலர்
மனத்திறுற் பேசியேத்தி
வணங்கிகௌ தமநியாய மளவையே முதலாக
வழங்குமெண் ணிருபதார்த்தம்
எனுவரன் கணுதமுனி யாற்றியவை சேடிகத்
தேற்றமாந் திரவியமுதல்
எழ்தொகைப் பதார்த்தமு மிந்தியினின் முறையாக
இன்றமிழ்க் கேற்றிவைப்பாம்.

## அவையடக்கம்.

எண்சீர்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பாசிலை பாம்பணையிற் பரம்பொரு டாங்கிற்றேனும்
பருநாவாய் புணைகளையும் படியாதேந் தும்மால்,
வீசுதிரைப் பாற்கடலே விணோர்க்குச்சுதை யீந்து
விடமீய விரிசடையோன் றனுண்டா னென்றும்,
பாசமிலாப் பரம்பொருளைப் பைந்துளபன் றனையும்
பணிந்துபகர் நியாயவை சேடிகமிந் தியினின்
றுசணவாத் தமிழிற்றந்தே னுய்ந்தவர்தா நோக்கி
னறியாத பிழையென்றே யலர்தூற்று ரன்றே.

முக்கிய கவனிப்பு.—867 - பக்கம் 20 - வது வரியில் சரீரப் பிராணனது அந்திய சையோகத்தினை ஜன்ம மென்பர், என்பதை சரீர பிராணன்களது ஆதி சையோகத்தினை ஜன்ம மென்பரெனத் திருத்துக. ஈற்றிற் குறிப்பித்த பிழை திருத்தப் பத்திரப்படி அன்பு கூர்ந்து திருத்தி வாசிக்கவும்.

ஓம் ஸ்ரீகணேஶாயநம:, ஸ்ரீகுருப்யோர்நம:,

ஸ்ரீகாசிவிஶ்வேஶ்வராயநம:, ஸ்ரீசங்கராசாரியேப்யோநம:.

# நியாயப் பிரகாசம்.

## முதற் பரிச்சேதம்.

### க. மங்களாசரணத்தின் கவி.

[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

ஸ்ரீ குருவையும், சர்வவிக்கினங்களை நாசஞ்செய்பவரான விநாயகரையும், பார்வதியின் பதியான ஸ்ரீமஹாதேவரையும், இலட்சுமியின் பதியான ஸ்ரீ விஷ்ணுவையும் நமஸ்கரித்து, கௌதம முனிவரால் அருளிச் செய்யப்பட்ட நியாய சாத்திரத்தின் பிரமாண முதலிய பதினறு பதார்த்தங்களையும், கணுதமுனிவரால் அருளிச் செய்யப்பட்ட வைசேடிக சாத்திரத்தின் திரவிய முதலிய வேழு பதார்த்தங்களையும் நன்முக நிச்சயஞ் செய்து யாம் மிக்கச் சுந்தரமாக நியாயப் பிரகாசமென்னும் இந்நூ லியற்றுவாம்.

### உ. இப் பிராகிருதநூ லியற்றுவதனுலாம் பயன்.

சங்கை :—குசுமாஞ்சலி, லீலாவதி முதலிய நியாய நூற்கள் பலவுள வாதலின் அந்நூற்களை வாசிப்பதினுலேயே அதிகாரிகட்கு அத்திரவிய முதலிய பதார்த்தங்களின் உணர்ச்சி யுண்டாகின்றது. ஆகையால் நியாயப் பிரகாசமெனப் பெயருள்ள விந்நூ லியற்றுவதனு லோர்பயனு மில்லையெனுஞ் சங்கையுண்டாக இனி இந்நூ லியற்றுவதனுலாம் பயனைக் கூறுவாம்.

“ ஸந்யாஸஹி ஐதி ” குசுமாஞ்சலி, லீலாவதி முதலிய நூற்களை வாசிப்பதினுல் அதிகாரிகட்கு அத்திரவிய முதலிய பதார்த்தங்களின் போதமுண்டாய்விடுகின்றது. எனினும், அவ்வெல்லா நூற்களும் சமஸ்கிருத பாஷையி லிருக்கின்றன வாகையால் வியாகரணம், காவியம், கோசம் முதலிய சாதனமுள்ளவர்கட்கே அச்சமஸ்கிருத நூற்களால் போத (ஞான) முண்டாய் விடுகின்றது. வியாகரண முதலிய சாதனங்களில்லாப் புருஷர்கட்கு அச்சமஸ்கிருத நூற்களால் பதார்த்தங்களின் போத முண்டாவதில்லை. வியாகரண முதலிய சாதன நூற்களை வாசிப்பதனுல் மிக்கப் பிரயாசமுண்டாகிறதாகையால், எவ்வதிகாரிகள் வியாகரண முதலிய நூற்களை வாசிப்பதனுலுண்டாம் பிரயாசையில்லாமலே அந்த நியாய வைசேடிக சாத்தி

ரங்களின் பதார்த்தங்களை யறிய விச்சித்திருக்கின்றார்களோ அவ்வதிகாரிகள் இதத்தின் பொருட்டு அதாவது: அவ்வதிகாரிகட்கு எளிதாகவே அப் பதார்த்தங்களை போதிக்குமாறு நியாயப்பிரகாசமெனப் பெயரிய ஒரு வசன நூலை, பிராகிருதத்தில் உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்னும் இம் மூன்றைக் கூறும் வாயிலாக யாம் இயற்றுவாம்.

சங்கை:—உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்னும் இம் மூன்றின் சொரூபம் யாதென்னுஞ் சங்கையுண்டாக இனி முறையாக உத்தேச முதலிய வைகளின் சொரூபத்தை வர்ணிப்பாம்.

௩. உத்தேசத்தினது லக்ஷணத்தின் வர்ணனம்.

உத்தேசலக்ஷணம்:—"𑌨𑌾𑌮𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌵𑌸𑍍𑌤𑍁𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌂 𑌉𑌦𑍍𑌦𑍇𑌶𑌃" (இ-ள்.) பெயர் மாத்திரத்தா லெவ்வஸ்துவைக் கூறுவதுண்டோ அது உத்தேசமெனப்படும். எங்ஙனம்: திரவியம் (பொருள்), குணம் (பண்பு), கர்மம் (தொழில்), சாமானியம் (பொதுமை), விசேஷம் (சிறப்பு), சமவாயம் (ஒற்றுமைச்சம்பந்தம்), அபாவம் (இன்மை) என திரவிய முதலிய பெயர் மாத்திரத்தால் எத்திரவிய முதலிய பதார்த்தங்களின் கூற்றுண்டோ அது உத்தேசமெனப்படும்.

௪. இலக்ஷணத்தினது லக்ஷணத்தின் வர்ணனம்.

இலக்ஷணத்தின் இலக்ஷணம்:—"𑌅𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌧𑌰𑍍𑌮𑍋 𑌲𑌕𑍍𑌷𑌣𑌂" (இ-ள்.) எவ்வஸ்துவிற்கு எது அசாதாரண தர்மமாகின்றதோ அவ்வசாதாரண தர்மம் அவ்வஸ்துவின் லக்ஷணமெனப்படும். எங்ஙனம்: கந்தகுணம் கேவலம்பிருதிவியிலேயே இருக்கின்றது; பிருதிவியினும் வேறான ஜல முதலியவற்றில் கந்த குணமிருப்பதில்லை. ஆகையால் பிருதிவி மாத்திரத்தின் அசாதாரண தர்ம மாவதால் அக்கந்தமுடைமை பிருதிவியின்லக்ஷணமாம். அங்ஙனமே சீதபரிசமுடைமை நீரின் லக்ஷணமாம். வெம்மைப் பரிச முடைமை வன்னியின் லக்ஷணமாம். இவ்வாறாக எவ்வெத்தர்மம் எவ்வெப்பதார்த்தங்களின் அசாதாரண தர்மமாகின்றதோ அவ்வவ்வசாதாரண தர்மம் அவ்வப்பதார்த்தங்களின் லக்ஷண *வடிவமாகவேயறிக. ஆண்டு அந்தலக்ஷணவடிவ் தர்மத்தில் லக்ஷியத்தன்மை யவச்சேதக (வரையப்பட்ட) தர்மத்தின் உடநிகழ்ச்சித் தன்மை யாதோ, அதாவது; அந்த லக்ஷியத் தன்மையின் அவச்சேதக தர்மத்தின் வியாப்பியத் தன்மையும், வியாபகத் தன்மையும் யாதோ அதுவே அந்த லக்ஷண வடிவ தர்மத்தில் அசாதாரணத்தன்மையாம், எங்ஙனம்: கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு பிருதிவியி லிருக்கும் லக்ஷியத் தன்மை யாதோ அந்த †லக்ஷியத் தன்மையின் அவச்சேதக தர்மம் பிருதிவித் தன்மையாம். அப்பிருதிவித் தன்மைத் தர்மத்தின் வியாப்பியத் தன்மையும், வியாபகத் தன்மையும், கந்த

* வடிவமெனின் சொரூபமென்றறிக. இதனால் பிருதிவித்தன்மை வடிவ்தருமமெனின் பிருதிவித்துவரூபமான தருமமென்பது பொருள்.

† இலக்ஷியத்தன்மையின் அவச்சேதகம்.—இலக்ஷணத்தாலறியப்பட்ட பொருளை வரைந்து கொண்டிருப்பது.

முடைமை வடிவ தர்மத்திலிருக்கின்றன. இதுவே அக்கந்தமுடைமை வடிவ தர்மத்தில் அசாதாரணத் தன்மையாம். யாண்டாண்டு கந்தமுடைமை இருக்கின்றதோ ஆண்டாண்டு பிருதிவித் தன்மை இருக்கின்றது. இவ்வாற்றால் அக்கந்த முடைமையில் பிருதிவித்துவ தர்மத்தின் வியாப்பியத் தன்மை பிரதீதியா (காணப்படு) கின்றது. யாண்டாண்டு பிருதிவித் தன்மை தர்மமிருக்கின்றதோ ஆண்டாண்டு கந்தமுடைமை இருக்கின்றது. இவ்வாற்றால் அக்கந்தமுடைமையில் பிருதிவித்தன்மைத் தர்மத்தின் வியாபகத்தன்மை பிரதீதியாகின்றது. ஆண்டு எவ்வஸ்துவின் வாசக சத்தத்தின் (பெயரினது) உச்சரிப்பு முதலினுண்டாகின்றதோ அவ்வஸ்து வியாப்பிய மெனப்படும். எவ்வஸ்துவினது வாசக சத்தத்தின் உச்சரிப்பு பின்னருண்டாகின்றதோ அவ்வஸ்து வியாபக மெனப்படும்.

## ரு. பரீக்ஷையினது லக்ஷணத்தின் வர்ணனம்.

பரீக்ஷையின் லக்ஷணம்:—"லக்ஷிதஸ்ய லக்ஷணம் ஸம்பவதி நவா இதி விசார: பரீக்ஷா." (இ-ள்.) இந்த லக்ஷித வஸ்துவிற்கு இந்த லக்ஷணம் சம்பவிக்கிறதா இல்லையாவென்னும் விசாரம் யாதோ அது பரீக்ஷை யெனப்படும். எங்ஙனம்: பிருதிவி முதலிய லக்ஷித வஸ்துக்கட்கு கந்தமுடைமை முதலிய லக்ஷணம் சம்பவிக்கிறதா இல்லையா வென்னும் விசாரம் யாதோ அது பரீக்ஷை யெனப்படும்.

சங்கை:—உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்னு மிம்மூன்றிற்கும் பயன் யாது என்னும் சங்கை யுண்டாக இனி அவைகளின் பயனை நிருபிப்பாம்.

## சா. உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை யென்னும் மூன்றின் பிரயோஜன வர்ண்னம்.

ஆண்டு, உத்தேசத்திற்கோ அநுமானத்தில் பக்ஷத்தின் ஞானம் பயனும், லக்ஷணத்திற்கு பக்ஷத்தில் வேறு பதார்த்தங்களின் பேத ஞானம் பயனும், பரீக்ஷைக்கு அந்த லக்ஷணத்தில் அதிவியாப்தி முதலிய தோஷங்களின் நிவிர்த்தியுமே பயனுமாம்.

"ப்ருதிவீ இதரேப்யோ பித்யதே கந்தவத்த்வாத் யந்நைவம் தந்நைவம் யதா ஜலம்" (இ-ள்.) பிருதிவி, ஜல முதலிய மற்றப் பதார்த்தங்களின் பேதமுடையதாம், கந்தமுடைமையால், எவ்வெவ்வஸ்து ஜலமுதலிய பதார்த்தங்களின் பேதமுடைய தல்லவோ அவ்வவ்வஸ்து கந்தமுடையது மன்றும். எங்ஙனம்: ஜல முதலிய வஸ்துக்களைப் போலும். இவ்வநுமானத்தில் பிருதிவி யென்னும் உத்தேசத்திற்கு பிருதிவி வடிவ பக்ஷத்தின் ஞானமே பயனும். கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு பிருதிவி வடிவ பக்ஷத்தில் ஜல முதலிய வேறு பதார்த்தங்களின் பேத ஞானமே பயனும். அல்லது "இது பிருதிவி" என்னும் வியவஹாரத்திற்கு விஷயமாகத்தக்கதாம், கந்தமுடைமையால், என்னும் வியவஹாரம் அந்த லக்ஷணத்திற்குப் பயனும். இவ்வாறுன கிரமத்தினை பின்னர் யாண்டு மறிக.

சங்கை :—லக்ஷணத்தில் அதிவியாப்தி முதலிய தோஷங்களின் நீக்கம் பரீக்ஷைக்குப் பயனாகக் கூறப்பட்டது. அவ்வதிவியாப்தி முதலிய தோஷங்களெத்தனை வகைத்தாம்; அத்தோஷங்களின் சொரூபம் யாவை யென்னும் சங்கையுண்டாக; இனி அவ்வதிவியாப்தி முதலிய தோஷங்களின் சொரூபங்களை வர்ணிப்பாம். ஆண்டு அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவமென்னும் முக்குற்றங்களுளவாம். அம் முக்குற்றங்களி லோர்குற்றமும் எந்த லக்ஷணத்தில் உளதாகின்றதோ அந்த லக்ஷணம் துஷ்டமெனப்படும். துஷ்ட லக்ஷணத்தால் லக்ஷிய வஸ்துவின் சித்தி யுண்டாகிறதில்லை. அம் மூன்று குற்றங்களில்லாத லக்ஷணம் யாதோ அந்த லக்ஷணம் துஷ்டமில்லாததெனப்படும். துஷ்ட மில்லாத லக்ஷணத்தினாலேயே லக்ஷிய வஸ்துவின் சித்தி யுண்டாகின்றது.

## ஏ. அதிவியாப்தி தோஷத்தின் லக்ஷணம்.

அதிவியாப்தி லக்ஷணம்:—"லக்ஷ்யவ்ருத்தித்வே ஸதி அலக்ஷ்யவ்ருத்தித்வம் அதிவ்யாப்தி:" (இ-ள்.) தனது லக்ஷியத்திலிருப்பதாயும், அலக்ஷியத்திலிருப்பதாயுமுள்ளது யாதோ அது அதிவியாப்தி குற்றமெனப்படும். எங்ஙனம்: "கோடுடையது ஆ" என்னும் லக்ஷணம் ஒருவன் கூறின் அக்கோடுடைமை வடிவ லக்ஷணம் ஆவிற்கு அதிவியாப்தி தோஷமுடையதாம். எற்றுக்கெனின், எங்ஙனம் ஆக்கள் கோடுடையனவாமோ அங்ஙனமே எருமை, ஆடு முதலியனவும் கோடுடையனவாம். ஆகையால் கோடுடைமை வடிவ லக்ஷணம் தனது லக்ஷிய வடிவ ஆக்களிலிருந்து கொண்டு அலக்ஷியவடிவ எருமை, ஆடு முதலியவைகளிலு மிருக்கின்ற தாகையால் இக்கோடுடைமை வடிவ லக்ஷணம் அதிவியாப்தி தோஷமுடையதாம்.

## ஐ. அவ்வியாப்தி தோஷத்தின் லக்ஷணம்.

அவ்வியாப்தி லக்ஷணம் :—"லக்ஷ்யைகதேசாவ்ருத்தித்வம் அவ்யாப்தி:" (இ-ள்.) தனது லக்ஷியத்தின் ஏக தேசத்தில் இராதது யாதோ அது அவ்வியாப்தி குற்றமெனப்படும். எங்ஙனம்: 'ஆ' கபில (புகைமை) நிறமுடையது என ஆவிற்கு கபிலநிறமுடைமை வடிவலக்ஷணம் ஒருவன்கூறின் அக்கபிலநிறமுடைமைவடிவலக்ஷணம் அவ்வியாப்தி குற்றமுடையதாம். எற்றுக்கெனின், அக்கபில நிறமுடைமை வடிவ லக்ஷணம் தனது லக்ஷிய வடிவமான வெல்லா ஆக்களிலுமிருப்பதில்லை; ஆனால் சில ஆக்களிடத்தே அக்கபில நிறமுடைமை இருக்கிறதாகையால் லக்ஷியத்தின் ஏக தேசத்தில் இல்லாமைப்பற்றி அக்கபில நிறமுடைமை வடிவ லக்ஷணம் அவ்வியாப்தி குற்றமுடையதாம்.

## ஓ. அசம்பவ தோஷத்தின் லக்ஷணம்.

அசம்பவ லக்ஷணம்:—"லக்ஷ்யமாத்ராவ்ருத்தித்வம் அஸம்பவ:" (இ-ள்.) தனது லக்ஷியத்திலேயே இல்லாதது யாதோ அது அசம்பவ குற்றமெனப்படும். எங்ஙனம்: ஒருவன் 'ஆ' ஒற்றைக்குளம்புடையது என ஒற்றைக்குளம்புடைமை லக்ஷணம் கூறின் அவ் வொற்றைக் குளம்புடைமை வடிவ ஆவின் லக்ஷணம் அசம்பவ குற்றமுடையதாம். ஏனெனின், ஓராவினிடத்தும்

ஒற்றைக் குளம்பு சம்பவிக்கிறதில்லை. எல்லா ஆக்களின் பாதங்களில் இரட்டைக் குளம்புகளிருக்கின்றன. குதிரை, கழுதை முதலியவைகளிடத்தேயே ஒற்றைக் குளம்பு இருக்கின்றது. ஆகையால் அவ்வொற்றைக் குளம்புடைமை வடிவ 'ஆ' வின் லக்ஷணம் தனது லக்ஷிய மாத்திரத்தில் இல்லாமையால் அசம்பவ குற்றமுடையதாம். ஆகையால் கோடுடைமை, கபில நிறமுடைமை, ஒற்றைக்குளம்புடைமையாம் இம் மூன்று "ஆ" வின் லக்ஷணம் முறையாக அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவமாம் முக்குற்றங்களுடையதாவதால் தனது லக்ஷிய வடிவ 'ஆ' வின் சித்தியைச் செய்வதில்லை. அவ்வதிவியாப்தி முதலிய மூன்று குற்றங்களில்லாத களகம்பளம் (அலைதாடி) உடைமையாதிவடிவலக்ஷணம்யாதோ அந்தலக்ஷணமே 'ஆ' வடிவலக்ஷியத்தை சித்திசெய்கின்றது. ஆண்டுக் கழுத்தின் கீழ் தொங்கும் சர்மத்தினை (தோலை) அலைதாடிஎன்பர். முதலிய வென்பதனால் கோடு முதலியவைகளைக் கொள்ளுக. ஆகையால் அவ்வலைதாடியுடைய கோழி முதலியவைகளிடத்தும், அலைதாடி இல்லாத கோடுடைய எருமை, ஆடு முதலியவைகளிடத்தும் அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி முதலியன உண்டாகிறதில்லை. இவ்வாறாக அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவ வடிவ மூன்று குற்றங்களின் பரிகாரம் யாதோ அதுவே பரீக்ஷைக்குப் பயனும். இவ்விதமாய உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்னும் மூன்றும் நியாயப் பிரகாசமெனப் பெயரிய இந்நூலிற் கூறப்பட்டன. ஆகையால் இந்நூலால் அதிகாரிகட்குத் திரவிய முதலிய பதார்த்தங்களின் தத்துவஞானம் அவசியமுண்டாம். இவ்வார்த்தை ஸ்ரீபாஷியகாரரும் கூறியிருக்கின்றனர்.

ஆண்டு பாஷிய வசனம்:— "த்ரிவிதா சாஸ்த்ரஸ்ய ப்ரவ்ருத்திருத்தேசோ லக்ஷணம் பரீக்ஷா சேதி" (இ-ள்.) உத்தேசம், லக்ஷணம், பரீக்ஷை என்னு மூவிதத்தால் (இந்நியாய வைசேடிக) சாத்திரத்தின் பிரவிருத்தி யுண்டாகின்றது.

## ௧0. அநுபந்த சதுட்டயத்தின் நிரூபணம்.

சங்கை:—புத்தியுடைய புருஷர்களுக்கு எச்சாத்திரத்தை வாசிப்பதில் பிரவிருத்தி (ஊக்கம்) உண்டாகின்றதோ அச்சாத்திரத்தின் விஷயம், பயன், அதிகாரி, சம்பந்தம் என்னும் நான்கு அநுபந்தங்களைக் கண்ணுறுவதனாலேயே பிரவிருத்தி யுண்டாகின்றது. இந்நான்கு அநுபந்தங்களின் ஞானமின்றி புத்தியுடைய புருஷர்கட்கு சாத்திரத்தை வாசிப்பதில் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை என்னும் வார்த்தை வேறு சாத்திரத்திலும் கூறப்பட்டிருக்கிறது.

ஆண்டு சுலோகம்:—"ஸித்தார்த்தம் ஸித்தஸம்பந்தம் ச்ரோதும் ச்ரோதா ப்ரவர்த்ததே । சாஸ்த்ராதௌ தேந வக்தவ்ய: ஸம்பந்த: ஸப்ரயோஜந:"

(இ-ள்.) கேட்போருக்கு எச்சாத்திரத்தின் பயன் ஞாதமோ (அறியப்பட்டதோ) அங்ஙனமே எச்சாத்திரத்தின் சம்பந்தம் ஞாதமோ அத்தகைய சாத்திரத்தினையே சிரவணஞ் செய்வதற்கு கேட்போர் பிரவிருத்திக்கின்றனர். ஆகையால் கேட்போர்கள் சாத்திரத்தில் பிரவிருத்திப்பதற்காக சாத்திர

கர்த்தா வித்வானனவன் சாத்திரத்தின் முதலில்சம்பந்தமும், பயனும், அவசிய மாகக் கூறவேண்டும். அச்சதுட்டய (நான்கு) அநுபந்தம் இந்நூலிற் கூறப் படவில்லை; ஆகையால் புத்தியுடைய புருஷர்கட்கு இந்நூலை வாசிப்பதில் பிர விருத்தி சம்பவியா தென்னுஞ் சங்கை யுண்டாக, இனி இரண்டாவது கவியில் அதிகாரியைக் கூறுவதானே குறிப்பிடப்பட்டுள்ள சதுட்டய அநுபந்தங் களைக் கூறுவாம். அல்லது கௌதம முனிவராலும், கணாத முனிவராலும் அருளிச் செய்யப்பட்ட நியாய வைசேடிக சாத்திரங்களின் பதார்த்தங்களை நன்றாக நிச்சயஞ் செய்து நூலைச் சுந்தரமாக இயற்றுவாம். என முற்கூறிய வசனத்தால் நியாயப் பிரகாசமெனப் பெயரிய விந்நூலிற்கு நியாய வைசேடிக சாத்திரங்களின் பிரகரண வடிவத் தன்மைகள் கூறப்பட்டன. எச்சதுட்டய அநுபந்தம் சாத்திரத்திற்குண்டோ அச்சதுட்டய அநுபந்தமே அச்சாத்தி ரத்தின் பிரகரணங்களாகின்றன, ஆகையால் அச்சதுட்டய அநுபந்தங்களைக் கூறுவாம்.

கக. சாத்திரத்தினது அபிதேயத்தின் லக்ஷணம்.

"ஶாஸ்த்ரஜந்ய ப்ரமிதி நிவர்த்யாஜ்ஞாநவிஷயோ(அ)பிதேய:" (இ-ள்.) சாத்திரத்தா லுண்டாய பிரமையால் (உண்மை ஞானத்தால்) நிவர்த்தமாகத் தக்க அஞ்ஞானத்திற்கு எப்பதார்த்தம் விஷயமாகின்றதோ அப்பதார்த்தம் அச்சாத்திரத்தின் அபிதேய மெனப்படும். எங்ஙனம்: நியாய சாத்தி ரத்தினை வாசிப்பதற்கு முன் புருஷனுக்கு திரவிய முதலிய பதார்த்தங்களின் அஞ்ஞான மிருக்கின்றது. அவ்வஞ்ஞானம் நியாய சாத்திரத்தினை வாசிப் பதனா லுண்டான பதார்த்த ஞானத்தால் நீங்கி விடுகின்றது. ஆகையால் அத்திரவிய முதலிய பதார்த்தங்கள் நியாயசாத்திரத்தின் அபிதேயமாம். இவ் வபிதேயமே விஷயமெனப்படும்.

கஉ. சாத்திரத்தினது பிரயோஜன லக்ஷணம்.

"யத³ர்த²ப்ராப்த்யுத்³தே³ஶேந புருஷ: ஸாத⁴நேஷு ப்ரவர்த்ததே தத் ப்ரயோஜநம்" (இ-ள்.) எவ்வர்த்தத்தினது பிராப்தியின் உத்தேசத்தால் புருஷன் அதன் சாதனங் களில் முயலுகின்றானே அவ்வர்த்தம் பயனெனப்படும். அப்பயனும் இரு விதமாம். ஒன்றோ முக்கியப் பயனும், மற்றையது கௌணப்பயனுமாம்.

கங. முக்கியப் பிரயோஜனத்தின் லக்ஷணம்.

"இதரேச்சாநதீ⁴நேச்சா விஷயோ முக்²யம்" (இ-ள்.) பிறவத்துவை விஷ யஞ் செய்யும் இச்சையினதீனமாகாத விச்சையும், அவ்விச்சைக்கு விஷயமும் யாதோ அது முக்கியப் பயனெனப்படும். எங்ஙனம்: சுகத்திலும், துக்கா பாவத்திலும் உலகவருக்குண்டாகும் இச்சை யாதோ அவ்விச்சை வேறோர் வத்துவை விஷயஞ் செய்யும் இச்சையின் அதீனமன்று. அவ்விரண்டிலும் உலகவருக்குத் தானாகவே இச்சையுண்டாகிற தாகையால் சுகமும், துக்கா பாவமுமாகிய இரண்டும் முக்கியப் பயனெனப்படும்.

கச. கௌணப் பிரயோஜனத்தின் லக்ஷணம்.

"முக்²யப்ரயோஜநேச்சா(அ)தீ⁴நேச்சாவிஷயோ கௌ³ணம்" (இ-ள்.) முக் கியப் பயனை விஷயஞ் செய்யும் இச்சையி னதீனமாகிய இச்சையும், அவ்விச்

சைக்கு விஷயமும் யாதாமோ அது கௌணப்பயனெனப்படும். எங்ஙனம்: முக்கியப்பயன்: வடிவ சுகத்தினதும், துக்கா பாவத்தினதும் சாதனம் யாதோ அச்சாதனங்களில் யாவருக்கு முண்டா மிச்சை யாதோ அது 'சுக மெமக்குண்டாகுக.' அங்ஙனமே 'துக்காபாவ மெமக்குண்டாகுக' வென்ப தாக சுகத்தையும், துக்கா பாவத்தையும் விஷயஞ் செய்யும் இச்சையின் அதீனமாகவே அச்சாதனங்களில் இச்சை யுண்டாகின்றது. தானுக அச் சாதனங்களில் இச்சை யுண்டாவதில்லை. ஆகையால் அச்சுகத்தின் சாதன மும், துக்காபாவத்தின் சாதனமும் கௌணப் பயனெனப்படும். ஈண்டு பிரசங்கத்தில் அத்தியந்த துக்க நிவிர்த்தி வடிவ மோக்ஷம் இந்நியாய சாத்தி ரத்தின் முக்கியப் பயனும். இம்மோக்ஷம் நிச்ரேயசம், அபவர்க்கம், முக்தி, பரம புருஷார்த்தம், பந்த நிவிர்த்தி யென இவை முதலிய பெயர்களால் வழங்கப்படுகின்றது. அம்மோக்ஷ சாதன வடிவ தத்துவ ஞானம் யாதோ அத்தத்துவ ஞானம் இந்நியாய சாத்திரத்தின் கௌணப் பயனும்.

### கரு. அதிகாரி லக்ஷணம்.

"விவியப்ரயொஜநவ்ராஷ்டிகாஃ கயிகாரி" (இ-ள்.) முக்கிய, கௌண வேறுபாட்டால் கூறிய இருவித பயன்களது விச்சையுடைய புருஷன் இந்நியாய சாத்திரத்திற்கு அதிகாரியெனப் படுவன்.

### கசு. சாத்திரத்தின் எழுவித சம்பந்த வர்ணனம்.

சம்பந்தமோ பலவிதமாகின்றன. விஷயத்திற்கும், சாத்திரத்திற்கும் பிரதி பாத்திய, பிரதி பாதக பாவ சம்பந்தமாம். ஈண்டு திரவிய முதலிய பதார்த்த வடிவ விஷயமோ பிரதிபாத்தியமாம்; இந்நியாய சாத்திரம் அதனை பிரதி பாதிப்பதாம். பதார்த்த தத்துவ ஞானத்திற்கும், சாத்திரத் திற்கும் ஜன்னிய, ஜனக பாவ சம்பந்தமாம். பதார்த்த தத்துவ ஞானமோ ஜன்னியமாம்; விசார வாயிலாக விந்நியாய சாத்திரம் அதன் ஜனகமாம். மோக்ஷத்திற்கும், சாத்திரத்திற்கும் பிரயோஜ்ஜிய, பிரயோஜக பாவ சம்பந்த மாம். மோக்ஷமோ பிரயோஜ்ஜியமாம்; தத்துவ ஞான வாயிலாக விந்நியாய சாத்திரம் அதன் பிரயோஜகமாம். மோக்ஷத்திற்கும், பதார்த்த தத்துவ ஞானத்திற்கும் பிரயோஜ்ஜிய, பிரயோஜக பாவ சம்பந்தமாம். மோக்ஷ மோ பிரயோஜ்ஜியமும்; பதார்த்த தத்துவ ஞானம் அதன் பிரயோஜகமு மாம். திரவிய முதலிய பதார்த்தங்கட்கும், தத்துவ ஞானத்திற்கும் விஷய, விஷயி பாவ சம்பந்தமாம். திரவிய முதலிய பதார்த்தங்கள் விஷயமும்; தத்துவஞானம் விஷயியுமாம். மோக்ஷ வடிவ பயனுக்கும், அதிகாரிக்கும் பிராப்பிய, பிராபக பாவ சம்பந்தமாம். பயனே பிராப்பியமும்; அதிகாரி அதன் பிராபகனுமாம். அதிகாரிக்கும், விசாரத்திற்கும் கர்த்துரு, கர்த் தவ்விய பாவ சம்பந்தமாம். அதிகாரி கர்த்தாவும்; விசாரம் கர்த்தவ்வியமுமாம். இவ்வாறுக அநேக சம்பந்தங்க ளுண்டாகக்கூடும். ஆகையால் இவ்வாறுய விஷயம், பயன், அதிகாரி, சம்பந்தமாம் இந்நான்கு அநுபந்தங்களைக் கண்ணுற்ற புத்தியுடைய புருஷனுக்கு இந்நூலைப் படிப்பதில் முயலுதல் உண்டாகும். இது சதுட்டய அநுபந்த நிரூபணம்.

### கஎ. மங்கல வாத வர்ணனம்.

சங்கை:—நூற்றுவக்கத்தில் சதுட்டய அநுபந்தங்களின் நிரூபணத்திற்கோர் நூலில் அதிகாரிகளின் பிரவிருத்தியே பயனும். ஆகையால் சபலமாவது பற்றி நூற்றுவக்கத்தில் சதுட்டய அநுபந்தங்களின் நிரூபணம் செய்வது உசித (நல்) மாம். நூற்றுவக்கத்தில் குரு, ஈசுவரன் முதலியோரது நமஸ்கார முதலிய மங்கலம் செய்வதற்கோர் பயனுமில்லை. ஆகையால் அம்மங்கலம் செய்வது நலமுடைத் தன்றென்னும் சங்கையுண்டாக வினி மத வேறு பாட்டால் அம்மங்கலத்தின் பயனை நிரூபிப்பாம்.

### கஅ. பிராசீன நவீன நையாயிகர்களின் மத வேறுபாட்டால் மங்கலத்தினது பலத்தின் வர்ணனம்.

ஆண்டு பிராசீன நையாயிகரோ இது கூறுகின்றனர். எந்நூலில் எம்மங்கலம் கூறப்பட்டிருக்கிறதோ அதற்கு அந்நூல் முடிதலேபயனும்; ஆனால் அம்மங்கலம் ஞானவடிவமாவதால் விரைவிலழிவதாம். அந்நூலின் முடிவு சிலகாலத்திற்குப் பின்னுண்டாகும். விரைவிலழியும் அத்தகைய மங்கலத்திற்கு வேறு காலத்தி லுண்டாவதான முடிவை யுண்டாக்குந் தன்மை ஒரு வியாபாரமன்றி நேராகச் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் இடையில் அம்மங்கலத்தால் ஜன்னியமாகிய யாதாமோர் வியாபாரம் கற்பிக்கவேண்டும். அந்த வியாபாரம் நூன் முடிவின் பிரதிபந்தக பாப வடிவ இடையூற்றின் துவம்ச வடிவமாகவே இருக்கின்றது. அம்மங்கலத்தாலுண்டா மிடையூற்றின் துவம்சம் நூன் முடிவு வடிவ காரியத்தின் மறைப்பில்லாத முதற் கூணத்தி லிருக்கின்றது. ஆகையால் அம்மங்கலம் இடையூற்றின் துவம்ச வாயிலாக நூன் முடிதற்குக் காரணமாம். எங்ஙனம்: யாக வடிவ கிரியை சிலகாலத்திற்குப் பின் வரப்போகிற ஸ்வர்க்கத்திற்குத் தன்னாற் றோற்றிய தர்ம வடிவ அபூர்வ வாயிலாக காரணமாகின்றது.

சிந்தாமணிக்காரர் முதலிய நவீன நையாயிகர்களோ இது கூறுகின்றனர். நூலின் முடிவு அம்மங்கலத்தின் பயனன்று. நூல் முடிவிற்கு பிரதிபந்தகமாகிய பாபவடிவ இடையூற்றின் துவம்ச மாத்திரமே அம்மங்கலத்தின் பயனும். நூலின் முடிவோ விக்கினுபாவத்தோடுள்ள அதிர்ஷ்ட புத்தி ஸ்பூர்த்தி முதலிய தனது சாமக்கிரியி (காரணத்தி) னனேயே யுண்டாகின்றது. அம்மங்கலமோ முடிவிற்குக்காரணமாகிய விக்கினத்துவம்சத்தின்காரணமாவதால் அம்முடிவைக்குறித்து அன்னியதாசித்தமே (வேறோராற்றாற் பெறப்படுவதே) யாம். எக்காரியத்திற்கு எத்தனை காரண சாமக்கிரி யிருக்கவேண்டுமோ அக்காரண சாமக்கிரியினும் எவ்வஸ்து வேறுமோ அவ்வஸ்து அக்காரியத்தைக் குறித்து அன்னியதா சித்தமாகின்றது. இவ்வார்த்தை பின்னர் ஆறுவது பரிச்சேதத்திற் றெளிவாகும். அல்லது எப்பிராசீன புருஷர்கள் அம்மங்கலத்திற்கு விக்கினத்துவம்ச வாயிலாக சமாப்தியின் காரண மொப்புகின்றனரோ அவர்கள் மதத்தில் விக்கினத்துவம்சம், சமாப்தியா மிரண்டினும் மங்கலத்தின் காரியத்தன்மை யொப்புவதில் மிகைப்படக் கூறும் குற்றமே சம்பவிக்கின்றது. கேவலம் விக்கினத் (தடையின்) துவம்சத்தில் அம்மங்கலத்

தின் காரியத்தன்மை யொப்புவதில் மிகைப்படக்கூறும் குற்றத்தின் அடைவு பிராப்தமாகிறதில்லை, ஆனால் எளிதிற் கூறுதல் வடிவ குணமே பிராப்தமாகின்றது. இக்காரணத்தானும் அம்மங்கலத்திற்கு விக்கினத்துவம்சமாத்திரமே பயனாக வொப்புவது நலமுடைத்தாம்.

சங்கை :—ஓர் கால் அம்மங்கலத்திற்கு விக்கினத்துவம்ச மாத்திரமே பயனாகுமாயின், எப்புருஷனிடத்தில் தானாகவே விக்கினங்களின் அத்தியந்தாபாவம் இருக்கின்றதோ அப்புருஷன்செய்யும் மங்கலம் பயனில்லாததேயாம்.

சமாதானம் :—விக்கினங்களின் முழுதும் அபாவமுடைய புருஷன் செய்யும் மங்கலம் யாதோ அம்மங்கலத்தில் பயனில்லாத் தன்மையில் எமக்கும் இஷ்டமாம், அதாவது அவ்விடத்தில் அம்மங்கலம் பயனில்லாததேயாம்.

சங்கை :—மங்கலத்திற்குப் பயனில்லாத் தன்மை யொப்பின் பயனில்லாத அர்த்தத்தில் புருஷனுக்குப் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை, ஆகையால் அம்மங்கலத்தில் புருஷனுக்குப் பிரவிர்த்தியே யுண்டாகலாகாது.

சமாதானம் :—நூல் முடிவிற்குத் தடையாய் பாப விசேஷத்தினை விக்கினமென்பர். அவ்விக்கினங்களும், விக்கினங்களின் அபாவமும் ஒருவனுக்கும் பிரத்தியக்ஷ மாவதில்லை. யாவருக்கும் அவற்றில் சந்தேகமேயிருக்கின்றது, ஆகையால் தானாகவே சித்தித்த அவ்விக்கினங்களின் அத்தியந்தாபாவ முடையவனுக்கும் நம்மிடத்து விக்கினமிருக்கிறதா? இல்லையா? என்பதாகத் தன்னிடத்தில்லாத விக்கினங்களின் சங்கையைச்செய்து, சங்கித்த விக்கினங்களை நிவிர்த்தி செய்யும் பொருட்டு மங்கலத்தில் பிரவிர்த்தி சம்பவிக்கிறது. அவ்விக்கினங்களின் சம்சய நிச்சய சாதாரண ஞானமாத்திரமே அம்மங்கலத்தில் பிரவிர்த்தியையுண்டுபண்ணுவதாம். சம்சய வடிவவிக்கினங்களின் ஞானம் விக்கினமில்லாதபுருஷனிடத்துமுளதாம், ஆகையால் அவ்விக்கினங்களின் அத்தியந்தாபாவ முடையவனுக்கும், அம்மங்கலத்தில் பிரவிர்த்தி யுண்டாகக்கூடும். ஓர்கால் அச்சம்சயஞானத்தைப் பிரவிர்த்திக்குக் காரணமாக வொப்பாவிடினும், அவ்விக்கின மில்லாதவனுக்கு ஆன்றோ ரொழுக்கத்தானேயே அம்மங்கலத்தில் பிரவிர்த்தியுண்டாகும். கருத்திதுவாம்:- முன்னிருந்த வான்றோர்களியாவரும் தாமியற்றிய நூற்றுவக்கத்தில் மங்கலத்தைச் செய்து வந்திருக்கின்றனர். ஆகையால் யாமும் நூற்றுவக்கத்தில் மங்கலம் செய்தல் நலமுடைத்தாமென வான்றோ ரொழுக்கத்தால் அப்புருஷனுக்கு மங்கலத்தில் பிரவிர்த்தி சம்பவிக்கின்றது. ஆண்டு "[illegible]"

(இ-ள்.) ஆன்றோர் எவ்வெக்கருமங்கள் செய்கின்றனரோ அவ்வக்கர்மங்களையே ஏனையோரும் செய்கின்றனர். அவ்வான்றோர் எதனைப்பிரமாணமாகக் கொள்ளுகின்றனரோ அதனையே ஏனையோரும் பிரமாணமாகக் கொள்ளுகின்றனர்; என்னும் கீதா வசனத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஆன்றோர்களின் ஒழுக்கத்தானும் உலகவரது பிரவிர்த்தியைக்கூறியிருக்கின்றனர்.

சங்கை :—விக்கினங்களின் முழுதும் அபாவமுடைய புருஷன் செய்த மங்கலத்திற்குப் பயனின்மை யொப்பின் அம்மங்கலத்தில் விக்கின நாசத் தின்காரணத் தன்மையைக் கூறிய வேத வசனம் அப்பிரமாணமாகும்.

சமாதானம் :—விக்கினங்கள் உளதாகியே அவ்வேத வசனம் அம்மங் கலத்தில் விக்கினத்துவம்சத்திற்குக் காரணத்தன்மைக் கூறியிருக்கிறது. விக் கினங்களின் முழுதுமபாவ முளதாக அவ்வேத வசனம் அம்மங்கலத்தில் விக் கினத் துவம்சத்தின் காரணத் தன்மையைக் கூறவில்லை, ஆகையால் அவ்வேத வசனத்தில் அப்பிரமாணத் தன்மையில்லை. கருத்திதுவாம் : விக்கினத் துவம்சத்தில் எங்ஙனம் மங்கலத்திற்குக் காரணத்தன்மையுளதோ அங்ஙனமே விக்கினவடிவ பிரதியோகிக்கும் தனது துவம்சத்தில் காரணத்தன்மையுளது. எவ்விடத்தில் பிரதியோகி விக்கின வடிவ காரணமில்லையோ, மங்கலவடிவகா ரணமிருக்கிறதோ, அவ்விடத்தில் மங்கல வடிவகாரணத்தால் விக்கினத்துவம் சத்தின் காரியத்தினுற்பத்தி யுண்டாகா விடினும் அம்மங்கலத்தில் விக்கினத் துவம்சத்திற்குக் காரணத்தன்மையின் பாதமுண்டாகிறதில்லை. எங்ஙனம் : குலாலவடிவகாரணத்தினிருப்புளதாயினும் மற்றும், மண், தண்டம், சக்கரம் முதலிய காரணங்களின் அபாவமுளதாக குலாலனால் கடவடிவகாரியத் தின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. அதனால் அக்குலாலனிடத்தில் கடத்தின் காரணத் தன்மையின் பாத முண்டாகிறதில்லை. ஏனெனின் எக்காரியத்தி னுற் பத்தியில் எத்தனைக் காரணங்கள் அபேக்ஷிக்கப்படுமோ அவ்வளவு கார ணங்களு மெப்பொழு தொருமிக்கின்றனவோ அப்பொழுதே அக்காரியத்தி னுற்பத்தி யுண்டாகின்றது. சில குறைந்த காரணங்களால் அக்காரியத்தி னுற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் மங்கலத்தில் விக்கினத்துவம்சத்திற் குக் காரணத்தன்மை கூறுவதாகிய வேதவசனம் அப்பிரமாணவடிவமன்று. இக்காரணத்தானேயே பாபமில்லாத புருஷனுனவன் தன்னிடத்தில் பாபத் தின் பிராந்தியைச் செய்து பாபத்தின் நிவிர்த்தியின் பொருட்டுச் செய்யும் பிராயச்சித்தம் யாதோ அந்த பிராயச்சித்தத்திற்குப் பயனில்லாத் தன்மை யுண்டாயினும் பிராயச் சித்தத்தில் பாபத்தின் நிவிர்த்திக்குக் காரணத்தன் மையைக் கூறுவதான வேதவாக்கியத்திற்கு அப்பிரமாணத் தன்மை யுண்டா கிறதில்லை.

சங்கை :—அம்மங்கலத்தில் அவ்விக்கினத்துவம்சத்தின் காரணத் தன் மை சம்பவியாது, ஏனெனின் "ஸமெ-ஶவிநாஶமாயாஂதி ஸமெஸஜிவ ராந தஃ" (இ-ள்.) கணேசரின் ஸ்தோத்திரத்தைப்படிப்பதால் விக்கினங்கள் யாவும் நிவிர்த்தியாய் விடுகின்றன வென்னும் இச்சாத்திர வசனம் கணேசரின் தோத் திரத்தைப் படித்தலினும் விக்கினத் துவம்சத்திற்குக் காரணத்தன்மைக் கூறி யிருக்கிறது, அன்றியும், தர்மசாத்திரத்திற்கூறிய பிராயச்சித்தம்யாதோ அந்த பிராயச் சித்தங்களாலும் பாப வடிவ விக்கினங்களின் துவம்ச முண்டாகின் றது. அத்தோத்திரத்தைப் படித்தலினு லுண்டாம் விக்கினத் துவம்சத்தினும் பிராயச்சித்தத்தாலுண்டாம் விக்கினத் துவம்சத்தினும், மங்கலத்திற்குக் கா ணத்தன்மையின் அபாவமிருப்பதால் மங்கலத்தில்விக்கினத்துவம்சத்தின் கா

ணத்தன்மை சம்பவியாது. ஓர்கால் மங்கலமின்றி வேறோருபாயத்தால் விக்கினங்களின் துவம்சமுண்டாவதின்றாயின் அம்மங்கலத்தில் விக்கினத் துவம்சத்தின் காரணத் தன்மை சம்பவிக்கும், ஆனால் விக்கினங்களின் துவம்சமோ மங்கலமின்றி வேறு உபாயங்களாலுண்டாய் விடுகின்றது. ஆகையால் அம்மங்கலத்தில் விக்கினத் துவம்சத்தின் காரணத் தன்மை சம்பவியாது.

சமாதானம்:—சர்வ விக்கினத் துவம்சங்களில் அம்மங்கலத்திற்குக் காரணத்தன்மையில்லை. * விஜாதீய விக்கினத் துவம்சத்திலேயே அம்மங்கலத்திற்குக்காரணத் தன்மையுண்டு. விஜாதீய விக்கினத் துவம்சத்தில் கணேசர் ஸ்தோத்திரப் படிப்பிற்கும், விஜாதீய விக்கினத் துவம்சத்தில் பிராயச் சித்தத்திற்கும், காரணத் தன்மையுண்டு, ஆகையால் ஸ்தோத்திரத்தைப் படிப்பதனாலுண்டாவதும், பிராயச்சித்தத்தாலுண்டாவதுமான விக்கினத்துவம்சத்தில் அம்மங்கலத்திற்குக் காரணத் தன்மையில்லை யாயினும் அவ்விஜாதீய விக்கினத் துவம்சத்திற்குக் காரணத்தன்மை யுண்மையால் அம்மங்கலத்தில் விக்கினத் துவம்சத்தினது காரணத்தன்மையின் அபாவம் சித்தமாவதில்லை.

சங்கை:—ஓர் கால் விக்கினத் துவம்ச மாத்திரமே அம்மங்கலத்தின் பயனாகுமாயின், நூன்முடிதலில் இச்சையுடைய புருஷனுக்கு அம்மங்கலத்தில் பிரவிர்த்தி யுண்டாவதின்றாக வேண்டும். நூன்முடிவில் விருப்பமுடையவனுக்கும் அம்மங்கலத்தில் பிரவிர்த்தியுண்டாகப் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகிறதாகையால் முடிவிற்குச்சாதனமான விக்கினத்துவம்சத்தின் சாதனத்தன்மை ஞானத்தானேயே அம்மங்கலத்தில் பிரவிர்த்தியைக் கூறுவதாகும். அதெப்போதுண்டாகிறதோ அப்போது அவ்விக்கினத் துவம்சத்தில் முடிவின் சாதனத்தன்மைச் சித்தமாகிறதென்பது சம்பவியாது. ஏனெனின்: எப்புருஷனிடத்தில் விக்கினங்களின் அத்தியந்தாபாவம் தானாக்வேயிருக்கிறதோ அப்புருஷனியற்றிய நூலும் முடிவெய்துகின்றது. அம்முடிவில் அவ்விக்கினத் துவம்சத்திற்கும் காரணத்தன்மையில்லை.

சமாதானம்:—எல்லா நூலாசிரியர்களிடத்தில் விக்கினத்துவம்சத்திற்கே முடிவின் காரணத் தன்மையில்லை. ஆனால் சில நூலாசிரியரிடத்தோ விக்கினத்துவம்சத்திற்கே முடிவின் காரணத்தன்மையுண்டு. சில நூலாசிரியரிடத்தோ விக்கினங்களின் அத்தியந்தாபாவத்திற்கே முடிவின் காரணத்தன்மை யுண்டு. சிலநூலாசிரியரிடத்தோ விக்கினங்களின் பிராகபாவத்திற்கே அம்முடிவின் காரணத்தன்மையுண்டு. அன்றியும் விக்கினங்களின் பேதவடிவு அன்னியோன்னியாபாவமோ அவ்விக்கினங்களுள்ளபோதும் புருஷனிடத் திருக்கின்றது. ஆகையால் விக்கினங்களின் அன்னியோன்னியா பாவத்திற்கு அம்முடிவின் காரணத்தன்மை யாண்டும் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் விக்கினஅத்தியந்தாபாவத்தாலுண்டாம் முடிவிலும், விக்கினப்பிராகபா

* விஜாதீய விக்கினத் துவம்சத்திலேயே—கணேசரின் ஸ்தோத்திரத்தைப் படிப்பதாலும், பிராயச்சித்தத்தாலும் உண்டாம் விக்கினத் துவம்சங்களினும் வேறான விக்கினத்துவம்சத்திலேயே மங்கலத்திற்குக் காரணத்தன்மையிருக்கிறது.

வத்தாலுண்டா முடிவிலும் அவ்விக்கினத் துவம்சத்தின் காரணத்தன்மையின்
ருயினும், தன்னாலுண்டாம் முடிவைக்குறித்துக் காரணத்தன்மையிருப்பதால்
விக்கினத்துவம்சத்தில் முடிவின் காரணத்தன்மையின் அபாவம் சித்தியாது.

சங்கை :—விக்கினங்களின் துவம்சமும், விக்கினங்களின் அத்தியந்தா
பாவமும், விக்கினங்களின் பிராகபாவமுமாம் இம்மூன்று அபாவங்கட்கும்
முடிவின் காரண மொப்பின் காரணத் தன்மையின் அவச்சேதக தர்மம்
ஒன்றெனல். சித்திப்பதின்றாகும். ஆனால் விக்கினப்பிரத்துவம்சாபாவத்தன்
மை, விக்கின அத்தியந்தாபாவத்தன்மை, விக்கினப்பிராகபாவத்தன்மை என்
னும் இம்மூன்று தர்மங்களும் அக்காரணத்தன்மையின் அவச்சேதகங்களாகும்.
ஓர் தர்மத்தில் காரணத்தன்மையின் அவச்சேதகத்தன்மை சம்பவித்துவிடுமா
யின் நாநா தர்மங்களில் அக்காரணத் தன்மையின் அவச்சேதகத் தன்மை
யொப்புதல் கௌரவ தோஷத்துடன் கூடியதாம்.

சமாதானம் :—நூன்முடிவிற்கு எவ்விக்கினபாவத்தின் காரணத் தன்
மையுண்டோ, அது விக்கினத்துவம்சத் தன்மை, விக்கின அத்தியந்தாபாவத்
தன்மை, விக்கினப்பிராக பாவத்தன்மை வடிவமான காரணத்தன்மையன்று.
ஆனால் விக்கினச் சம்சர்க்கா பாவவடிவத்தானேயே அவ்விக்கினபாவத்திற்
கும் முடிவைக் குறித்துக் காரணத்தன்மையிருக்கின்றது, விக்கினச் சம்சர்க்
காபாவத்தன்மைதர்மம் விக்கினத்துவம்சத்திலும், விக்கின அத்தியந்தாபாவத்
திலும், விக்கினப்பிராகபாவத்திலுமாம் இம்மூன்றிலுமிருக்கின்றது. அன்னி
யோன்னியாபாவத்தினும் வேறான அபாவத்தினை சம்சர்க்கா பாவமென்பர்.
இவ்வபாவங்களின் ஸ்வரூபம் பின்னர் நான்காவது பரிச்சேதத்திற் றெளிவா
கும். ஆகையால் அக்காரணத்தன்மையின் அவச்சேதக தருமத்திற்கு நாநா
தர்மத்தின் அவச்சேதகத் தன்மையில்லை. ஆனால் சம்சர்க்கா பாவத்தன்
மையாம் ஒரே தர்மம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாம். எத்தர்
மம் எக்காரணத் தன்மையின் குறைந்த விடத்திலும் அதிக விடத்திலுமில்லா
மல், அக்காரணத் தன்மையின் சமானவிடத்திலிருக்கின்றதோ அத்தர்மமே
அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. அதாவது பிறவற்றினி
ன்றும் வியாவர்த்தகமா (பிரிக்கப்படுவதா) கின்றது. எங்ஙனம்: பிரசங்கத்
தில் நூன்முடிவின் காரணத்தன்மை, கூறிய அம்மூன்று அபாவங்களிலிருக்
கின்றது. சம்சர்க்காபாவத்தன்மை தர்மமும் அம்மூன்று அபாவங்களிலிருக்
கின்றது, ஆகையால் அச்சம்சர்க்காபாவத்தன்மை தர்மம் அக்காரணத் தன்
மையின் அவச்சேதகமெனப்படும். அல்லது யாண்டும் விக்கினங்களின் அத்
தியந்தாபாவத்திற்கே அம்முடிவின் காரணத்தன்மையிருக்கின்றது. விக்கினங்
களின் துவம்சத்திற்கும், விக்கினங்களின் பிராக பாவத்திற்கும் விக்கினத்
துவம்ச வாயிலாக மங்கலத்திற்கும், அம்முடிவின் காரணத்தன்மையில்லை.
ஏற்றுக்கொளின், எவ்வத்துவிற்கு யாண்டு பிரத்துவம்சா பாவம் அல்லது
பிராகபாவ மிருக்கிறதோ அவ்வத்துவிற்கு ஆண்டு அத்தியந்தா பாவமுமி
ருக்கின்றது. அத்துவம்சப் பிராகபாவத்திற்கு அவ்வத்தியந்தா பாவத்தோடு
விரோதமில்லை, ஆகையால் எந்நூலாசிரியரிடத்தில் அவ்விக்கினங்களின் பிரத்

துவம்சா பாவம் அல்லது பிராகபாவமிருக்கிறதோ அந்நூலாசிரியரிடத்தி லும் அவ்விக்கினங்களின் அத்தியந்தாபாவம் அவசியமிருக்கிறது. அம்மங் கல மிருக்குமிடத்தை இடமாகக்கொண்ட அவ்விக்கினங்களின் அத்தியந்தா பாவத்தாலேயே முடிவுண்டாய் விடுகின்றது. ஆகையால் அந்நூன்முடிவிற்கு மங்கலமும், அம்மங்கலத்தாலுண்டாம் விக்கினத்துவம்சமும், விக்கினங்களின் பிராக பாவமுமாம், மூன்றும் அன்னியதாசித்தமாம் (பிறிதோராற்றாற் பெறப்படுவதாம்.) இனி மங்கலத்திற்கு விக்கினத்துவம்சவாயிலாகச் சமாப்தி யின் காரணமொப்புவோரான முற்கூறிய பிராசீன நையாயிகர்களின் மதத் தில் வாதி சங்கைசெய்கின்றான்.

சங்கை:—ஓர் கால் மங்கலத்திற்கு விக்கினத் துவம்ச வாயிலாக முடிவிற்குக் காரணத்தன்மை யுண்டாயின், நிர்விக்கின முடிவின் பொருட்டு நூற்றுவக்கத்தில் மங்கலஞ் செய்தல் கூடும். ஆனால் மங்கலத்திற்கு நூன் முடி வைக்குறித்துக் காரணத்தன்மையே சித்திப்பதில்லை. ஏனெனின் காரிய கார ணத்தின் அன்வயவுடநிகழ்ச்சி ஞானமும், வியதிரேகவுடநிகழ்ச்சி ஞானமு மாமிரண்டுமே அக்காரணத்தன்மையை நிச்சயிப்பனவாகின்றன. அவ்விரண் டும் அம்மங்கலத்தில் இல்லை. அன்வயவியபிசார ஞானமும், வியதிரேக வியபி சார ஞானமுமா மிரண்டும் அக்காரணத் தன்மை நிச்சயத்தின் பிரதிபந்தக மாகின்றன. அவையிரண்டும் அம்மங்கலத்திலிருக்கின்றன.

### கக. காரணத் தன்மையை நிச்சயிக்கும் அன்வய சஹசாரத்தினதும் வியதிரேக சஹசாரத்தினதும் லக்ஷணம்.

ஆண்டு "காரணஸத்வே கார்யஸத்வம் அந்வய ஸஹசார:" (இ-ள்.) காரணமிருக்க நியமமாக எக்காரியத்தி னுற்பத்தியுண்டோ அது அன்வய (உடன்பாட்டு) சஹசாரம் (உடநிகழ்ச்சி) எனப்படும். எங்ஙனம்: மண், குலாலன், தண்டம், சக்கர முதலிய காரணங்களிருக்க, நியமமாகக் குடவடிவ காரியத்தி னுற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் அம்மண் முதலிய கார ணங்கள் அன்வய வுடநிகழ்ச்சி யுடையனவாம்.

"காரணாபாவே கார்யாபாவ: வ்யதிரேக ஸஹசார:" (இ-ள்.) காரணங்களினபாவமிருக்க எந்நியமத்தால்காரியத்தின்அபாவமுண்டோஅது வியதிரேக (எதிர்மறை), சஹசாரம் (வுடநிகழ்ச்சி) எனப்படும். எங்ஙனம்: மண் முதலியகாரணங்களின் அபாவமிருக்க நியமமாகக்குடவடிவ காரியத்தின் அபாவமிருக்கிறது; அதாவது உற்பத்தியுண்டாவதில்லை, ஆகையால் அம்மண் முதலிய காரணங்கள் வியதிரேக வுடநிகழ்ச்சியுடையனவாம்.

### உ0. காரணத் தன்மையை பாதிக்கும் அன்வய வியபிசாரத்தினதும் வியதிரேக வியபிசாரத்தினதும் லக்ஷணம்.

"காரணஸத்வேகார்யாபாவ: அந்வயவ்யபிசார:" (இ-ள்.) காரணமி ருக்கக் காரியத்தினுற்பத்தி யின்மை வடிவ அபாவம் யாதோ அது அன்வய வியபிசாரமெனப்படும்.

"காரணாபாவே கார்யோத்பத்திர் வ்யதிரேகவ்யபிசார:" (இ-ள்) காரணத்தின் அபாவமுளதாயினும் காரியத்தினுற்பத்தியாதோ அது வியதிரேக வியபிசராம் (பிறழ்ச்சி) எனப்படும். காதம்பரிமுதலிய நூற்களிலோ அம்மங்கலம் கூறப்பட்டுளதாயினும், அந்நூற்கள் முடிவெய்தவில்லை, ஆகையால் அம்மங்கலத்தில் இவ்வன்வய வியபிசாரத்தின் ஞானம் அன்வய வுடனிகழ்ச்சி ஞானத்தின் பிரதிபந்தக வாயிலாகக் காரணத்தன்மை நிச்சயத்தினை பாதிப்பதாம். அன்றியும் நாத்திக நூற்களில் மங்கலமோ கூறப்பட வில்லையாயினும் அந்நூற்கள் முடிவெய்தியிருக்கின்றன. ஆகையால் அம்மங்கலத்தில் வியதிரேக வியபிசாரத்தின் ஞானம் வியதிரேக வுடனிகழ்ச்சி ஞானத்திற்குப்பிரதிபந்தக வாயிலாக அக்காரணத்தன்மை நிச்சயத்தினை பாதிப்பதாம். கருத்திதுவாம்: அன்வய வியதிரேக வியபிசாரஞான வடிவ பிரதிபந்தகமிருக்க மங்கலத்தில் அன்வய வியதிரேக வுடனிகழ்ச்சியின் நிச்சயமுண்டாகிறதில்லை. அந்த நிச்சயமின்றி அம்மங்கலத்தில் சமாப்தியின் (முடிவின்) காரணத்தன்மைச் சித்தியாகிறதில்லை ஆகையால் மங்கலம் சமாப்தியின் காரணமேயன்று, என வாதியின் சங்கையுண்டாக இனி அநுமானப்பிரமாணத்தால் அம்மங்கலத்தில் விக்கினத் துவம்ச மூலமாகச் சமாப்தியின் காரணத்தன்மையைச் சித்திசெய்யும் பொருட்டு முதலில் அநுமானப் பிரமாணத்தால் அம்மங்கலத்தில் சபலத்தன்மையைச் சித்தம் செய்வாம்.

உக. மங்கலத்திலிருக்கும் சபலத்தன்மையைச் சாதிக்கும் அநுமானம்.

அவ்வநுமானம் வருமாறு:—"மங்களம் ஸஃபலம் அநிந்திதசிஷ்டாசார விஷயத்வாத் தர்சாதிவத்" (இ-ள்.) அம்மங்கலம் ஓர் பயனுடையதாவதற்கு யோக்கியமாம், பழிப்பல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாவதால், எவ்வெவ்வத்து பழிப்பல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாமோ, அவ்வவ்வத்து ஓர் பயனுடையதே யாம். எங்ஙனம்: * தர்சம் முதலிய கர் மங்கள் பழிப்பல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாவதால் ஸ்வர்க்க முதலிய பயனுடையதாம். அங்ஙனமே அம்மங்கலமும் பழிப்பல்லாத ஆன் றோரொழுக்கத்திற்கு விஷயமாவதால் ஓர் பயனுடைமை அவசியமுண்டாகும். இவ்வநுமானத்தில் மங்கலமோ பக்ஷமாம், சபலத் தன்மை சாத்தியமாம், பழிப்பல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாந் தன்மை வேதுவாம், தர்ச முதலிய கர்ம விசேஷம் திருட்டாந்தமாம். இவ்வாறாக அநுமானத்தின் கிரமத்தைப் பின்னர் யாண்டு மறிக. இனி பழிப்பல்லாத ஆன்றோரொழுக்கத் திற்கு விஷயமாவதால் என்னும் ஏதுவிலுள்ள பழிப்பல்லாத முதலிய பதங் களின்பயனை வர்ணிப்பாம். ஆண்டுக்கூறிய அனுமானத்தில் "விஷயமாவதால்" என விம்மாத்திரமே வேதுவாகக் கூறின், அவ்வேதுவிற்குச் சுகத்தில் வியபி சாரம் (பிறழ்ச்சி) உண்டாகும். ஏனெனின் நான் சுகி என்னும் ஞானத்திற்கு விஷயத்தன்மை அச்சுகத்திலும் இருக்கின்றது, சபலத்தன்மையாகிய சாத் தியம் அச்சுகத்திலில்லை. எக்காரணத்தாலெனின் அச்சுகம் தானே பலவ்டிவ

* தர்சகர்மம்—அமாவாசையிற் செய்யும் வேள்வி.

மாம், வேறோர் பலத்தினை யுண்டாக்குவ தன்றும். ஆகையால் அப்பலத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை சுகத்திலிருப்பதால் விஷயத்தன்மை வடிவ ஏது வியபிசாரியே யாகின்றது, அச்சாத்தியாபாவமுடைமை இருத்தற்றன்மை வடிவ வியபிசாரதோஷத்தை நிவிர்த்தி செய்யும்பொருட்டு அவ்வேதுவில் "ஒழுக்கம்" என்னும் பதம் கூறப்பட்டது, அதாவது ஆசாரத்திற்கு விஷயத்தன்மையால் என்னுமிப்பதம் கூறப்பட்டது. கிரியா விசேஷத்தினை ஆசாரமென்பர். என்றாலும் அக்கிரியை சுவிஷயகமாவதில்லை ஆகையால் ஈண்டு ஆசாரபதத்தால் அக்கிரியைக் கொள்ளத்தக்கதன்று விஷயத் தன்மைப் பதத்தின் சமீபத் தன்மையால் அவ்வாசார பதத்தால் முயற்சி வடிவ பிரயத்தினத்தையே கொள்ள வேண்டும். அம்முயற்சி, ஞான இச்சைகளைப்போன்று சவிஷயகமேயாம். அம்முயற்சியின் விஷயத்தன்மை அச்சுகவடிவ பலத்தில் (பயனில்) இல்லை. ஆகையால் அச்சுகத்தில் சபலத் தன்மை வடிவசாத்தியத்தைப் போன்று அவ்வாசார விஷயத் தன்மை வடிவ வேதுவிற்கும் அபாவமிருப்பதால் அந்த வியபிசாரதோஷமுண்டாகிறதில்லை. சுகவடிவ பலத்தி னுத்தேசத்தி னுனேயே அப்பலத்தின் சாதனத்தில் புருஷனுக்குப் பிரவிர்த்தி யுண்டாகின்றதாகையால், உத்தேசியத் (உத்தேசிக்கப் பட்டத்) தன்மை வடிவமாக அம்முயற்சியின் விஷயத்தன்மை அப்பலத்திலு மிருப்பதால் மீண்டும் அச்சுகவடிவ பலத்தில் அவ்வாசாரமாகிய விஷயத் தன்மை வடிவ ஏது வியபிசாரமேயாகின்றது. என்றாலும், ஈண்டுவிதேயத் (விதிக்கப்படுந்) தன்மை வடிவத்தானேயே அம்முயற்சியின் விஷயத்தன்மையைக் கொள்ளுக. விதேயத் தன்மை வடிவமாக முயற்சி விஷயத் தன்மை அப்பலத்திலிருப்பதில்லை, ஆனல் அப்பலத்தின் சாதனங்களிலேயே யிருக்கின்றது. விதேயத்தன்மை வடிவமாக ஆசார (ஒழுக்க) விஷயத் தன்மையாகிய ஏது வியபிசாரமுடையதன்று. அல்லது "ஆசார விஷயத் தன்மையால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறுவதால் அச்சுகவடிவ பலத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகிறதில்லையென்றாலும் நாத்திக புருஷன் செய்த இனிய வந்தன முதலியவைகளில் அவ்வேதுவின் வியபிசார முண்டாகின்றது. ஏனெனின்: விதேயத்தன்மை வடிவமாவதால் முயற்சி விஷயத் தன்மையாக ஏதுவோ அவ்வினிய வந்தனத்திலு மிருக்கின்றது. அவ்வினிய வந்தனத்தில் சபலவடிவ சாத்தியமோ இல்லை. ஆகையால் சபல வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை இனிய வந்தன முதலியவைகளி லிருப்பதால் அவ்வாசார விஷயத் தன்மையாகிய ஏது, வியபிசாரியே யாகின்றது. அவ் வியபிசார தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஆன்றோர்" என்னும் பதம் கூறப்பட்டது.

உஉ. ஆன்றோர்த் தன்மையின் லக்ஷணம்.

"ஸகலாம்ஶ ஃபலஸாதநதா ஸம்ஶயரஹித புத்தி விஷயத்வம்" (இ-ள்.) பல அம்சத்திலும் பலத்தின் சாதனத்தன்மை யம்சத்திலும் பிராந்தியில்லாத்தன்மையே ஆன்றோர்த்தன்மை யெனப்படும். கர்மத்தின் பலபாவமில்லாத வத்துவில் கர்மத்தின் பலபாவத் தன்மை புத்தியும் கர்மத்தின்பலவடிவ வத்து-

வில் கர்மத்தின் பலமில்லாத் தன்மைப்புத்தியும் யாதோ அது பலஅம்சத்தில் பிராந்தியெனப் படுகின்றது. பலத்தின் சாதனமில்லாததில் பலத்தின் சாதனத்தன்மை புத்தியும், பலத்தின் சாதனத்தில் பலத்தின் சாதனமில்லாத் தன்மைபுத்தியும் யாதோ அது சாதனத்தன்மையம்சத்தில் பிராந்தியெனப்படுகின்றது. அத்தகைய பிராந்தியில்லாப் புருஷன் ஆன்றோனும். அத்தகைய ஆன்றோர்த் தன்மை, அப்பல சாதனத் தன்மை அம்சத்தில் பிராந்தியுடைய நாத்திக புருஷர்களிடத்தி லிருப்பதில்லை, ஆகையால் இனிய வந்தன முதலியவைகளில் சபலத் தன்மை வடிவச் சாத்தியத்தைப் போன்று ஆன்றோரொழுக்க விஷயத் தன்மையாகிய ஏது, அபாவமாவதால் ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏது, இனியவந்தன முதலியவைகளில் வியபிசாரமாவதன்று.

உ௩. வேறுவகையாக ஆன்றோர்த் தன்மையின் லக்ஷணம்.

சில நூலாசிரியரோ ஆன்றோர்த் தன்மைக் கிவ்விலக்ஷணம் கூறுகின்றனர். "வெத³ப்ராமாண்யாப்⁴யுபக³மத்வம் ஶிஷ்டத்வம்" (இ-ள்.) வேதத்தின் பிரமாணத்தன்மையின் அங்கீகாரம் யாதோ அதனை ஆன்றோர்த் தன்மை என்பர். இவ்வாறான ஆன்றோர்த் தன்மை நாத்திக புருஷனிடத்தி லில்லை. ஏனெனின், நாத்திகர்கள் வேதத்திற்குப் பிரமாணத் தன்மை யங்கீகரிப்பதில்லை ஆகையால் நாத்திக புருஷன் செய்த இனிய வந்தன முதலியவைகளில் ஆன்றோரொழுக்க விஷயத் தன்மையாகிய ஏதுவிற்கும் அபாவமிருப்பதால் அவ்வேது ஆண்டு வியபிசாரியாவதன்று. அங்ஙனங் கூறிய ஆன்றோர்த் தன்மையின் வசனம் அசங்கதமாம். ஏனெனின், இவ்வாறாய ஆன்றோர்த் தன்மையுள்ள ஏதுவிற்கு நாத்திகன் செய்த இனிய வந்தன முதலியவைகளில் வியபிசாரமின்றாயினும், வேதத்திற்குப் பிரமாணத் தன்மையை அங்கீகரிக்குமோர் ஆத்திகன் பிரமாதத்தின் வசத்தால் அக்கர்மத்தைச் செய்யும் யோக்கியமான காலத்தை மீறி இரவிற் செய்த தர்சமுதலிய கர்மங்கட்கு எப்பயனு முண்டாகிறதில்லை. கூறிய ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏதுவோ அக்கர்மத்திலுமிருக்கின்றது. சபலத்தன்மைவடிவசாத்தியத்தின் அபாவமுடைமை அத்தர்சமுதலிய கர்மங்களிலிருப்பதால் ஆன்றோரொழுக்க விஷயத் தன்மையாகிய ஏது, ஆண்டு வியபிசாரியேயாகும். முற்கூறியபலசாதனத்தன்மையம்சத்தில் பிராந்தியில்லாத் தன்மை வடிவ ஆன்றோர்த்தன்மை அங்கீகரிக்கின், காலத்தைமீறி பிரமாதத்தால் இரவிற் தர்சமுதலிய கர்மங்களை எப்புருஷன் செய்கின்றானோ அந்தப்பிரமாதமுடைய புருஷனிடத்தில் ஆன்றோர்த் தன்மையில்லை. ஏனெனின், எப்பயனை அடையும் பொருட்டு எக்காலத்தில் எக்கர்மம் வேதமானது விதித்திருக்கிறதோ அக்கர்மம் அக்காலத்திற்செய்யப்படுவதாகியே அப்பலத்திற்கு ஏதுவாகின்றது, வேறு காலத்தில் செய்வதாகிய அக்கர்மம் அப்பலத்திற்கு ஏதுவாகிறதில்லை. ஆகையால் பலத்தின் சாதனமில்லாததாகிய கர்மத்தில் பலத்தின் சாதனத் தன்மை புத்தி வடிவ பிராந்தி யுடையவனாவதால் பிரமாதி ஆத்திகன் முற்கூறிய ஆன்றோர்த்

தன்மை யுடையவனன்று. ஆகையால் பிரமாதி புருஷன் (வழுவுதலையுடைய வன்) இடத்தில் முற்கூறிய ஆன்றோர்த் தன்மையுள்ள ஏதுவிற்கு வியபிசார முண்டாகிறதில்லை. அல்லது "ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாவதால்" என இம்மாத்திரம் ஏது வாகக்கூறின் நாத்திகன் செய்த இனிய வர்தன முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகிறதில்லை, என்றாலும் "ஹிம்ஸ்யாத் ஸர்வாபூதாநி" என்னுமிவ்வேத வசனமானது விரோதியை நாசஞ் செய்யும் பொருட்டு விதித்துள்ள ஸ்யேன யாகத்தில் கூறிய அவ் வேதுவிற்கு வியபிசாரமே யுண்டாகின்றது. ஏனென்னின், அந்த ஸ்யேன யாகத்தில் சபலத்தன்மை வடிவ சாத்தியமோவில்லை. கூறிய ஆன்றோரொழுக் கத்திற்கு விஷயமாந் தன்மைவடிவ ஏது ஆண்டுமுள்ளது. ஆகையால் சபலத் தன்மையாகிய சாத்தியத்தின் அபாவமுடைமை ஸ்யேன யாகத்திலிருப்ப தால் ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏது ஆண்டு வியபிசாரி யேயாகின்றது. அந்த வியபிசார தோஷத்தை நிவிர்த்திச்செய்யும் பொருட்டு அவ்வேதுவிற்குப் பழிப்பல்லாத வென்னும் பதங் கூறப்பட்டது.

உச. பழிப்பல்லாத் தன்மையின் லக்ஷணம்.

"பலவதநிஷ்டாநநுபந்திகவம் அவிகீதகவம்" (இ-ள்.) வலிவு உடைய அனிஷ்டத்தை உண்டாக்காத் தன்மை யாதோ அது பழிப்பல்லாத் தன்மை யெனப்படும். இப்பழிப்பல்லாத் தன்மை ஆன்றோரது முயற்சி வடிவ வொ ழுக்கத்தின் விசேஷமாகவறிக. அதாவது பழிப்பல்லாததாம் அத்தகைய ஆன் றோர்களினொழுக்கம் யாதோ "அவ்வொழுக்கத்திற்குவிஷயமாவதால்" என்ப தானபழிப்பில்லாத ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவஏது, ஸ்யேன யாகத்திலில்லை. ஏனென்னின், எப்புருஷன் விரோதியைத் தொலைத்தற் பொரு ட்டு ஸ்யேன யாகத்தைச் செய்கின்றானோ அவனது விரோதியோ மரிக்கின் றான். ஆனால் ஸ்யேன யாகத்தைச் செய்தவனுக்குப் பரலோகத்தில் நரகத் தின் அடைவு அவசியமுண்டாகின்றதெனத் தர்ம சாத்திரத்திற் கூறப்பட்டி ருக்கிறது. ஆகையால் அந்த ஸ்யேனயாகத்தை விஷயஞ்செய்யும் ஆன்றோ ரொழுக்கம் வலிவு உடைய அனிஷ்டத்தை யுண்டாக்காததன்று; ஆனால் நரக வடிவ வலிவு உடைய அனிஷ்டத்தை யுண்டாக்குவதேயாம் ஆகையால் அந்த ஸ்யேனயாகத்தில் சபலத்தன்மையாகிய சாத்தியத்தைப் போன்று, பழிப்பல் லாத ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏதுவிற்கு அபாவமிருப்ப தால் ஆண்டுக் கூறிய ஏதுவிற்கு வியபிசார முண்டாவதின்று.

சங்கை:—ஸ்யேனயாகத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரத்தை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் பழிப்பல்லாதவென்னும்பதங் கூறியது வீணேயாம். ஏனெனின், ஸ்யேன யாகமும் சத்துருவின் மரண வடிவ இஷ்டத்தின் சாதனமாவதால் சபலமேயாம். அச்சபல ஸ்யேன யாகத்தில் ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயத்தன்மை வடிவ ஏது, உளதா யினும் அவ்வியபிசாரதோஷ முண்டாவதில்லை. சாத்தியத்தின் அபாவமுடை யதிலிருக்கும் ஏதுவே வியபிசாரியாகின்றது.

சமாதானம்:—"மங்களம் ஸபலம் அவிகீதஶிஷ்டாசார விஷயத்வாத்" எனக்கூறிய அநுமானத்தில் மங்கலவடிவபக்ஷத்தில் சபலம் என்னும் பதத்தால் கேவலம் இஷ்டசாதனத் தன்மை வடிவ சபலத்தன்மை சாத்தியத்தினை கொள்ளற்க. ஆனால் மங்கலாசரணத்தில் புத்திமானுக்குப் பிரவிர்த்தியை யுண்டுபண்ணும் பொருட்டு சபலம் என்னும் பதத்தால் வலிவு உடைய அனிஷ்டத்தின் அஜனக (உண்டாக்காத) இஷ்ட சாதனத்தன்மை வடிவ சபலத்தன்மை சாத்தியத்தையே கொள்ளுக, ஏனெனின் விஷம்கலந்த அன்னத்தில் பசியின் நிவிர்த்தி வடிவ இஷ்டத்தின் சாதனத்தன்மை என்னும் ஞானம் புருஷனுக்கிருக்குமாயினும் அப்புருஷனுக்கு அவ்வன்னத்தைப் புசிப்பதில் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை, ஆகையால் கேவலம் இஷ்டசாதனத்தன்மை ஞானமாத்திரம் அந்தப் பிரவிர்த்திக்குக் காரணமன்று. ஆனால் வலிவு உடைய அனிஷ்டத்தின் அஜனக இஷ்டசாதனத் தன்மை ஞானமே பிரவிர்த்திக்குக்காரணமாகின்றது. வலிவு உடைய அனிஷ்டத்தினையுண்டுபண்ணாத இஷ்டசாதனத்தன்மை ஞானம், விஷம்கலந்துள்ள அன்னத்தில் இல்லை. ஆனால் அவ்வன்னத்தில் மரணவடிவ வலிவு உடைய அனிஷ்டத்தினை யுண்டாக்குந்தன்மை ஞானமேயுண்டு. ஆகையால் பசியாற் பீடிக்கப்பட்ட புத்திமானுக்கு அவ்வன்னத்தை புசிப்பதில் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. அத்தன்மைத்தாய பிரவிர்த்தியில் உபயோகியான வலிவு உடைய அனிஷ்டத்தின் அஜனக இஷ்டசாதனத் தன்மையாகியச் சபலத்தன்மை சாத்தியம், அந்த ஸ்யேனயாகத்தி லில்லை. முற் கூறியமுறைப்படி ஆன்றோ ரொழுக்கத்திற்கு விஷயமாந் தன்மை வடிவ ஏதுவோ அந்த ஸ்யேன யாகத்திலு மிருக்கின்றது. அவ்வேதுவில் பழிப்பல்லாத வென்பதின் கூற்றின்மையால் வியபிசார தோஷத்தின் அடைவு அவசியமுண்டாம் அந்த வியபிசார தோஷத்தை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் பழிப்பல்லாத வென்னும் பதம் அவசியம் கூறுதல் வேண்டும். இவ்வாறாய அநுமானப்பிரமாணத்தால் அம்மங்கலத்தில் சபலத்தன்மையே சித்தமாகின்றது. ஆண்டு அம்மங்கலத்தின் பயன்யாது? அதாவது எங்ஙனம் தர்சமுதலிய கர்மங்கட்கு ஸ்வர்க்கமாகிய அதிர்ஷ்டபயன் உண்டாகின்றதோ, அங்ஙனமே அம்மங்கலத்திற்கு ஓர் அதிர்ஷ்ட பயனுண்டா? அல்லது எங்ஙனம் காரீரியாகத்திற்கு மழை வடிவ திர்ஷ்ட பயனுண்டாகின்றதோ அங்ஙனம் அம்மங்கலத்திற்கும் ஓர் திருஷ்ட பயனுண்டா? எனப் பயன் விசேஷத்தினை அறிதல் வேட்கையுண்டாக எக்கர்மத்திற்குத் திருஷ்டபயன் சம்பவிக்கின்றதோ அக்கர்மத்திற்கு அதிர்ஷ்டபயனைக் கற்பித்தல் நலமன்றாம், இஃது நூலாசிரியர்களின் நியமம், நூற்றுவக்கத்தில் அந்நூலாசிரியன் துவக்கிய தமது நூல் விக்கினமின்றி முடிவெய்துக வென்னுமிச்சையானேயே மங்கலத்தில் பிரவிர்த்திக்கின்றான். ஆகையால் அந்நூலாசிரியனது இச்சையின் விஷயவடிவத்தாலும் அந்நூலின் முடிவே முதலில் பிராப்தமாம். ஸ்வர்க்கமுதலியன அல்லது பசுபுத்திரர் முதலியன முதலில் பிராப்தமே அன்று. ஆகையால் மங்கலத்திற்கு விக்கினமின்றி நூல்முடிதல் வடிவப்பயனே கொள்ளத்தக்கதாம். இக்கருத்

தால் மங்கலத்தில் நூன்முடிவு வடிவ திருஷ்டபயனது ஏதுத் தன்மையின பரிசேஷ அநுமானத்தால் சித்தம் செய்வாம்.

உரு. மங்கலத்தில் சமாப்தியின் பயனுடைமையைச் சாதிக்கும் அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ஓம்ஙலஂஸஓாவுஹைலஂ ஸஓா வெஜூா நஃ்ஙூஷமஂஸூஂகுவஸஂதிஸஹஂகுாஃயமெநூவஂதமெநூவஂயயாவடூாடி" (இ-ள்.) மங்கலம் முடிவாகிய பயனையே யுண்டாக்குவதாம், அம்முடிவைவிட வேறுபயனை உண்டாக்காததாகிப் பயனை யுண்டாக்குவதாவதால், எவ்வெவ் வத்துமுடிதல் வடிவப்பயனை யுண்டாக்குவதன்றோ அவ்வவ்வத்து அம்முடிவை விட வேறுபயனை யுண்டாக்காததாகிப் பயனை யுண்டாக்குவதுமன்றாம். கட முதலிய பதார்த்தங்களைப் போலும். இவ்வாறு பரிசேஷ வநுமானத்தால் அம்மங்கலத்தில் விக்கினத்துவம்சம் வாயிலாக நூன்முடிதல் வடிவ திருஷ்ட பயனது காரணத் தன்மையே சித்தமாகின்றது.

உசு. அநுமிக்கப்பட்ட சுருதியினால் அம்மங்கலத்தில் சமாப்தி பயனுடைமையின் சித்தி.

சில நூலாசிரியரோ அம்மங்கலத்திற்கு நூன்முடிதலின் காரணத் தன்மையில் சுருதியே பிரமாணமெனக் கூறுகின்றனர் அச்சுருதி யிதுவாம். "ஸ்ரூ நஸஓாவுகாமொ ஓம்ஙலஂஸஓாவமொஃ" (இ-ள்.) நூற்கு விக்கினமின்றி முடிவை இச்சிப்பவன் நூன்முகத்தில் மங்கலம் செய்யக் கடவனென்னும் இச்சுருதி ஓர்வேதத்தின் சாகையிலும் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவதில்லை. என்றாலும் ஆன்றோரொழுக்கத்தால் அச்சுருதி அநுமிக்கப் படுவதாகின்றது, இக்காலத்தில் அச்சுருதியுடன் கூடிய சில வேதத்தின் சாகை நஷ்டமாய் விட்டதாதையால் அச்சுருதி இக்காலத்தில் காணப்படுகிறதில்லை.

உஎ. அம்மங்கலத்தைப் போதிக்கும் சுருதியின் சாதகமான அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ஓம்ஙலஂவெஃவொயிக கதவ்யதாகஂ ஸுஷிக்கயஉஸுவாஹூ நிஷிஜ ஸிஷூாவாரவிஷயகூாக் உஸூாதிவக" (இ-ள்.) வேதமானது போதித்துள்ள கர்த்தவ்விய (செயற் பாலதாம்) தன்மை ஏதற்கோ அது வேதபோதித கர்த்தவ்வியத்தன்மை யெனப்படும். அத்தகைய வேதபோதித கர்த்தவ்வியத் தன்மை மங்கலத்தி லுள்ளது. அலௌகிகமும் தர்ம சாத்திரத்தால் நிஷித்த மின்மையுமாம் அத்தன்மைய ஆன்றோ ரொழுக்கத்திற்கு விஷயமாவதால், எவ்வெவ்வத்து அத்தகைய ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாகின்றதோ அவ்வவ்வத்து வேதத்தால் போதித்த கர்த்தவ்வியத் தன்மையுடையதேயாம், தர்சமுதலிய கர்மங்களைப் போலும். ஈண்டு இவ்வநுமானத்தில் மங்கலம் பக்ஷமும், வேத மானது போதித்த கர்த்தவியத்தன்மை சாத்தியமும், அலௌகிக தர்ம சாத்தி ரத்தால் நிஷித்தமில்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயத்தன்மை ஏதுவும்,

தர்சமுதலிய கர்மங்கள் திருஷ்டாந்தமுமாம். இவ்வேதுவினும் முற்கூறிய வேதுவைப்போன்று விஷயத்தன்மை என்னும் பதத்தின் அண்மையிலுள்ள ஆசாரபதத்தால் முயற்சியாகிய பிரயத்தனத்தைக் கொள்ளுக, கிரியையினைக் கொள்ளற்க. ஈண்டு 'தர்மசாத்திரத்தால் நிஷித்தமல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயமாவதால்' என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் அலௌகிகமென்னும் பதம் கூறுவிடின், உண்டி முதலிய லௌகிக விவகாரங்களில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும், ஏனெனின், அவ்வுண்டி முதலியவைகளில் தர்மசாத்திரத்தால் நிஷித்தமில்லாததாகிய அவ்வான்றோர்களின் ஆசாரம் யாதோ அதற்கு விஷயத் தன்மை வடிவ ஏதுவோ விருக்கின்றது, ஆனால் வேதமானது போதித்த கர்த்தவ்வியத் தன்மை வடிவ சாத்தியம் ஆண்டில்லை. ஆகையால் அவ்வேதபோதித கர்த்தவ்வியத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அவ்வுண்டிமுதலியவைகளிலிருப்பதால் அத்தர்ம சாத்திரத்தால் நிஷித்தமில்லாத ஆன்றோரொழுக்க விஷயத் தன்மை வடிவ ஏது, வியபிசாரியேயாகும். அந்த வியபிசார தோஷத்தை நிவிர்த்திச்செய்யும் பொருட்டு கூறிய அவ்வேதுவில் அலௌகிகமென்னும் பதங் கூறப்பட்டது.

உஅ. அலௌகிகத் தன்மையின் லக்ஷணம்.

"விதிஜந்ய ராகாதிப்ராப்திர் அலௌகிக:" (இ-ள்.) சாத்திரத்தின் ஆஞ்ஞை (விதி) யன்றியே கேவலம் ராகாதிகளினால் எவ்வத்து பிராப்தமாமோ அவ்வத்துவினை லௌகிகமெனப்படும். அந்த லௌகிக பதார்த்தத்தினும் வேறாய பதார்த்தம் யாதோ அதனை அலௌகிகமெனப்படும். இவ்வாறாய அலௌகிகத்தன்மை அவ்வுண்டி முதலியவற்றை விஷயஞ் செய்யும் ஒழுக்கத்திலில்லை, ஆனால் அவ்வுண்டிமுதலியவைகளின் கர்த்தவ்வியத்தன்மை, பிராணி மாத்திரத்திற்கு சாத்திரத்தின் ஆஞ்ஞையின்றி கேவலம் ராகத்தானேயே பிராப்தமாம். ஆகையால் உண்டிமுதலிய லௌகிக வியவகாரங்களில் வேதம் போதித்த கர்த்தவ்வியத் தன்மை வடிவ சாத்தியத்தைப் போன்று அலௌகிக தர்ம சாத்திரத்தால் நிஷித்தமல்லாத ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏதுவிற்கும் அபாவமுண்மையால் அவ்வுண்டி முதலியவைகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாவதில்லை அல்லது அவ்வநுமானத்தில் "அலௌகிக ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயத்தன்மையால்" என இம்மாத்திரமே ஏதுவாக்கூறி அவ்வேதுவில் "தர்மசாத்திரத்தால் நிஷித்தமல்லாத" வென்னும் பதங் கூறுவிடின் வழுவுதலுடையவன் இரவின்கட்செய்த சிராத்தத்தி (தென்புலத்தார்க்கடனோம்பலி) ல் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின், இரவிற்செய்த தென்புலத்தார்க் கடனோம்பல் முதலியவற்றில் அலௌகிக ஆன்றோரொழுக்க விஷயத்தன்மையாகிய ஏதுவோ விருக்கின்றது. ஆனால் வேதம்போதித்த கர்த்தவ்வியத்தன்மை வடிவ சாத்தியம் ஆண்டில்லை ஆகையால் கூறிய அச்சாத்தியத்தின் அபாவமுண்மை இரவிற் செய்த சிராத்தத்திலிருப்பதால் அலௌகிக ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அந்த வியபி

சாரதோஷத்தை நிவிர்த்திச்செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "தர்மசாத்திரத்தால் நிஷித்தமல்லாத" என்னும் பதம் கூறப்பட்டது. இரவிற் செய்யும் தென்புலத்தார்க் கடனும்பலே விஷயஞ்செய்யும் ஆன்றோர்களின் ஒழுக்கம் தர்மசாத்திரத்தினுல் நிஷித்தமல்லாதகன்று; தர்மசாத்திரத்தினுல் நிஷித்தமேயாம். ஆகையால் இரவிற்செய்த தென்புலத்தார்க் கடனும்பலில் அவ்வேத போதித கர்த்தவ்வியத்தன்மை வடிவ சாத்தியத்தைப் போன்று அலௌகிக தர்ம சாத்திரத்தால் நிஷித்தமல்லாத ஆன்றோரொழுக்க விஷயத்தன்மை வடிவ ஏதுவிற்கும் அபாவமுண்மையால் இரவிற் செய்த தென்புலத்தார்க் கடனும்பலில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகிறதில்லை. அல்லது "அலௌகிக தர்ம சாத்திரத்தால் நிஷித்தமல்லாத ஒழுக்கத்திற்கு விஷயத் தன்மையால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் ஆன்றோரென்னும் பதங் கூறுவிடின், பௌத்தர் முதலிய நாத்திகர்கள் செய்த இனிய வந்தனமுதலிய கர்மங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின், அவ்வினிய வந்தன முதலியவைகளில் அலௌகிக தர்ம சாத்திரத்தால் நிஷித்தமல்லாதவொழுக்கத்திற்கு விஷயத்தன்மைவடிவ ஏதுவேயிருக்கிறது. ஆனல் அவ்வேதபோதித கர்த்தவ்வியத் தன்மையாகிய சாத்தியம் ஆண்டில்லை. ஆகையால் கூறிய அச்சாத்தியத்தின் அபாவமுடைமை அவ்வினிய வந்தன முதலியவைகளி லிருப்பதால் அலௌகிக தர்மசாத்திரத்தால் நிஷித்தமல்லாத வொழுக்கத்திற்கு விஷயத் தன்மை வடிவ ஏது வியபிசாரியே யாகும். அந்த வியபிசார தோஷத்தை நிவிர்த்திச் செய்யும்பொருட்டு அவ்வேதுவில் "ஆன்றோர்" என்னும் பதங்கூறப்பட்டது.

## உக. சிஷ்டத் தன்மையின் லக்ஷணம்.

"வெஃஷாக்த கூ-ு-க-கத-ரு ஏகூம் ஶிஷ்டகூம்" (இ-ள்.) வேதமானது கூறியுள்ள சந்தியோபாசனைமுதலிய கர்மங்களின் கர்த்தாத் தன்மை யாதோ, அதனை சிஷ்ட (ஆன்றோர்)த் தன்மை யெனப்படும். இவ்வாருகக் கூறிய ஆன்றோரின் லக்ஷணம் சம்பவியாது. ஏனெனின், லக்ஷணத்திலுள்ள வேத சப்தம் யாதோ அவ்வேத சப்தத்தால் எல்லா வேதங்களையும் கொள்ளுவதா? சிறுபான்மை வேதத்தைக்கொள்ளுவதா? முதற் பக்ஷத்திலோ இந்த லக்ஷணம் அசம்பவதோஷ முடையதேயாம். ஏனெனின், வேதங்கள் கூறிய எல்லா கர்மங்களின் கர்த்தாத் தன்மை ஒருவனிடத்தும் சம்பவியாது ஆகையால் ஒருவனும் சிஷ்டனுகான். இரண்டாவது பக்ஷத்திலோ, பௌத்தர் முதலிய நாத்திகரிடத்திலும் ஆன்றோரின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. ஏனெனின், "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி" என்னும் வேத வசனமானது எல்லா பூதங்களது ஹிம்சையின் நிஷேதம் கூறியுளது. சிறுபான்மை வேதங் கூறிய அஹிம்சா வடிவ கர்மத்தின் கர்த்தாத் தன்மை நாத்திகரிடத்து மிருக்கின்றது. நாத்திகரிடத்தில் கூறிய அவ்வான்றோரின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியே யுண்டாகின்றது ஆகையால் வேதங் கூறிய கர்மங்களின் கர்த்திருத்தன்மை வடிவ ஆன்றோர்த் தன்மை சம்பவிப்பதில்லை.

## ௬௰. வேறுவகையால் சிஷ்டத் தன்மையின் லக்ஷணம்.

“வேதப்ராமாண்ய ஸ்வீகர்த்ருத்வம் ஶிஷ்டத்வம்” (இ-ள்.) இருக் முதலிய வெல்லா வேதங்கள் பிரமாண வடிவமாமெனச் சர்வ வேதங்களின் பிரமாணத் தன்மையின் அங்கீகாரம் யாதோ அதனை ஆன்றோர்த் தன்மை என்பர். இவ்வாறாய ஆன்றோர்த் தன்மை நாத்திக புருஷரிடத்திலில்லை ஆகையால் நாத்திகர்கள் செய்த இனிய வந்தன முதலியவைகளில் வேதபோதித கர்த்தவ்வியத் தன்மையாகிய சாத்தியத்தைப் போன்று அலௌகிக தர்ம சாத்திரத்தால் நிஷித்தமல்லாத ஆன்றோரொழுக்கத்திற்கு விஷயத்தன்மையாகிய ஏதுவிற்கும் அபாவமுண்மையால், ஆண்டுக்கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகிறதில்லை. இவ்வாறாகக் கூறிய அநுமானப் பிரமாணத்தால் சித்தஞ் செய்யப்பட்ட, கூறிய அச்சுருதியே அம்மங்கலத்தினுள்ள முடிவின் காரணத் தன்மையில் பிரமாணமாம். இவ்வாறாகச் சில நூலாசிரியரோ அம்மங்கலத்தில் நூன்முடிவின் காரணத் தன்மையினை முற்கூறிய அநுமானப் பிரமாணத்தால் சித்தஞ்செய்திருக்கின்றனர். சில நூலாசிரியரோ ஆன்றோ ரொழுக்கத்தால் அநுமானஞ் செய்யப்பட்ட, கூறிய அச்சுருதியால் சித்தஞ் செய்திருக்கின்றனர். இவ்வளவு நூற்களால் அம்மங்கலத்தில், விக்கினத்துவம்ச வாயிலாக நூன்முடிவின் காரணத் தன்மை, மதபேதத்தால் அநுமானப் பிரமாணம் அல்லது கூறிய சுருதிப் பிரமாணத்தால் சித்தஞ் செய்யப்பட்டது. இனி அம்மங்கலத்தில் முற்கூறிய அன்வயவியதிரேக வியபிசாரத்தின் நிவிர்த்தியைச் செய்வாம்.

## ௬௧. மங்கலமின்றி நூன்முடிவு உடைய நாத்திகர்களிடத்தில் மங்கலத்தின் சாதகமான அநுமானம்.

முற்கூறிய முறைப்படி அம்மங்கலத்தில் நூன்முடிவின் காரணத் தன்மை யேற்பட மங்கலமின்றியே முடிவெய்திய நாத்திக நூற்களிலும் முடிதல் வடிவ காரியத்தால் மங்கல வடிவ காரணத்தின் அநுமானஞ் செய்யப்பட்டது. எங்ஙனம்: மலை முதலியவற்றில் தூம வடிவ காரியத்தைக் கண்டுழி தூமத்தின் காரணத்தன்மை வடிவ வன்னியின் அநுமானஞ் செய்யப்படுகிறதோ அங்ஙனமே நூன் முடிதல் வடிவ காரியத்தால் மங்கல வடிவ காரணத்தின் அநுமானஞ் செய்யப்படுகின்றது. அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். “அயம் நாஸ்திக: க்ருதமங்கள: விக்நத்வம்ஸவத்வே ஸதி நிர்விக்நஸமாப்திமத்வாத் சைத்ரவத்” (இ-ள்.) நாத்திகன் முன்னர் மங்கல கர்த்தாவாவன், விக்கினங்களின் துவம்ச வாயிலாக நூலின் முடிவெய்துதலுடையவனாவதால், யாவன் விக்கினங்களின் துவம்ச வாயிலாக நூலின் முடிவையுடையவனாவனோ அவன் முன்னர் மங்கலத்திற்குக் கர்த்தாவே யாகின்றான், சைத்திரனெனப் பெயரிய புருஷனைப்போலும். ஈண்டு நூன்முகத்தில் மங்கலத்தைச் செய்து நூன்முடிவு பெறச் செய்த சைத்திரனெனப் பெயரிய புருஷனே திருஷ்டாந்த வடிவமாக அறிக. இவ்வாறாய் நூன்முடிவு வடிவ காரியத்தால் நாத்திகனூற் கர்த்தாவிற்கு ஜன்மாந்திரத்தின் (வேறுபிறப்பின்)

மங்கலம் அநுமானஞ் செய்யப்படுகின்றது. ஜன்மாந்திரத்தின் மங்கலமே விக்கினத்துவம்ச வாயிலாக நாத்திகரது நூன்முடிதற்குக் காரணமாகின்றது.

ஙஉ. மங்கலமின்றி நூன்முடிவையுடைய ஆத்திக புருஷனிடத்து மங்கலத்திற்குச் சாதகமான யுக்தி.

எவ்வாத்திகனது நூலில் மங்கலமின்றியே முடிவு காணப்படுகின்றதோ அவ்வாத்திகனிடத்தில் ஜன்மாந்திரத்தின் மங்கலம் அநுமானஞ் செய்யப்படுவதில்லை, இஜ்ஜன்மத்தின் மங்கலம் அநுமானஞ் செய்யப்படுகின்றது. அதாவது இஜ்ஜன்மத்தில் ஆத்திகனானவன் நூற்றுவக்குங் காலத்தில், குரு, ஈஸ்வரரது நமஸ்கார முதலிய மங்கலஞ் செய்கின்றான். ஆனால் அம்மங்கலம் நூன்முகத்தில் கவிமுதலிய வடிவத்தால் வரையவில்லை. நூற்குப் புறம் பாக்செய்த அம்மங்கலமே விக்கினத்துவம்ச வாயிலாக அம்முடிவிற்குக் காரணமாகின்றது, அல்லது ஆத்திகனானவன் தன்னிடத்தில் ஓர் பிரமாணத்தால் சித்தித்த விக்கினங்களின் அத்தியந்தாபாவத்தை நிச்சயித்து மங்கலங் கூறவில்லை யென்னும் கற்பனையைச்செய்க. ஆகையால் அம்மங்கலத்தில் முற்கூறியுள்ள காரணத்தன்மை நிச்சயத்தினைப் பாதிக்கும் வியதிரேக வியபிசார ஞானம் பிராப்தமாவதில்லை. அம்மங்கலத்தில் நூன்முடிவின் காரணத்தன்மையை நிச்சயஞ் செய்யும் அன்வய வுடனிகழ்ச்சி ஞானமே பிராப்தமாகின்றது.

ஙங. மங்கலத்துடன் கூடிய நூல் முடியாவிடத்து மங்கலத்திலுள்ள அசாங்கத் தன்மையின் கற்பனை.

* எக்காதம்பரிமுதலிய நூற்களில் அம்மங்கலமிருக்கினும் நூன்முடியவில்லையோ அக்காதம்பரி முதலிய நூற்களில் அம்மங்கலத்தின் அசாங்கத் தன்மையே கற்பனஞ் செய்க. ஆண்டு எவ்வங்கங்களோடு கூடிய அம்மங்கலம் விக்கினத் துவம்ச வாயிலாக அச்சமாப்தி வடிவ காரியத்தை யுண்டு பண்ணுவதாகின்றதோ அவ்வங்கங்க ளில்லாத் தன்மையினை அசாங்கத் தன்மை யெனப்படும். எங்ஙனம்: மழையின் பொருட்டு காரீரி வேள்வி செய்யப் படினும் எப்பொழுது மழையுண்டாகவில்லையோ அப்பொழுது அக்காரீரி வேள்வியில் அசாங்கத் தன்மைக் கற்பனஞ் செய்யப்படுகின்றது, அங்ஙனமே அம்மங்கலஞ் செய்யப்படினும் யாண்டு நூன் முடிவில்லையோ ஆண்டு அம்மங்கலத்திற்கு அசாங்கத் தன்மையே கற்பனைச் செய்க. எக்காரணத்தாலெனின், அவ்வெல்லா அங்கங்களோடு கூடியதாகியே அம்மங்கலம் அம்முடிவினை யுண்டாக்குவதாகின்றது.

ஙச. சர்வ அங்கங்களுடன் கூடிய மங்கலத்தோடுள்ள நூல் முடியாவிடத்து மிக்க வலிவு உடைய விக்கினத்தின் அல்லது அனேக விக்கினங்களின் கற்பனை.

அவ்வெல்லா அங்கங்களோடுகூடிய மங்கலமுள்ளதாயினும் அந்நூலின் முடிவு உண்டாகிறதில்லை யென்னும் நிர்ணயத்தால் ஒருவாற்றானுண்டாய

* காதம்பரியென்பது—பாணனென்ற மாகவியால் இயற்றிய சிருங்கார ரசப் பிரதானமான மாகாவியம்.

விடின் அவ்விடத்தில் அந்நூலின் முடிவைத் தடுப்பது ஓர் வலிவு உடைய விக்கினமாக அறிக. அல்லது பிரசுர (அனேக) விக்கினங்களின் பிரதிபந்தக மாக அறிக.

௩௫. வலிவு உடைய மங்கலத்திற்கு அல்லது பிரசுர மங்கலத்திற்கு அவ்விக்கினங்களை நாசஞ்செய்யுந் தன்மை.

சங்கை:—வலிவு உடைய விக்கினத்தையும் அனேக விக்கினங்களையும் அம்மங்கலம் என் நிவர்த்திச் செய்யாது?

சமாதானம்:—நூன்முடிவிற்குப் பிரதிபந்தகமான பாபவடிவ விக்கினங் களைவிட எம்மங்கலம் குறைந்த சங்கியை (எண்ணை) யுடையதாகாமல் விக்கி னங்களுக்குச் சமானமான சங்கியை உடையதாவனவோ அல்லது அதிக சங் கியை யுடையதாவனவோ அவ்வனேக மங்கலமே அவ்வனேக விக்கினங்களை யும் வலிவு உடைய ஓர் விக்கினத்தையும் நாசஞ்செய்கின்றது. இக்காரணத்தா னேயே நூலாசிரியர் நூன்முகத்தில், குரு, ஈஸ்வரர் முதலியவர்களது நமஸ் காரமுதலிய அனேக மங்கலம் செய்கின்றனர். எந்நூல் ஒரே மங்கலத்தால் விக்கினத்துவம்ச - மூலமாக நூன் முடிவு காணப்படுகிறதோ ஆண்டு அவ் வொரே மங்கலம் மிக்க வலிவு உடையதாக வறிக. எங்ஙனம்: அனேக மங்க லம் அனேகவிக்கினங்களையும் வலிவு உடைய ஓர்விக்கினத்தையும் நாசஞ்செய் கின்றதோ அங்ஙனமே மிக்கவலிவு உடைய ஓர் மங்கலமும் அனேக விக்கினங் களையும் வலிவு உடைய ஓர் விக்கினத்தையும் நாசஞ் செய்கின்றது. இவ்வாறுக அவ்வனேகமங்கலமும் மிக்கவலிவு உடைய ஓர்மங்கலமும் அக்காதம்பரி முத லிய நூற்களில் இல்லை. இக்காரணத்தால் காதம்பரி முதலிய நூற்களும் விக் கினத்துவம்ச வாயிலாக முடிபெய்தவில்லை.

௩௬. வலிவு உடைய அல்லது பிரசுர மங்கல சஹிதநூல் முடியாவிடத்தில் அம்மங்கலத்திற்குப்பின் உண்டாவதான விக்கினங்களின் கற்பனை.

அல்லது அனேக மங்கலங்களும் அதி வலிவு உடைய ஓர் மங்கலமு மிருக்கினும் நூன்முடி பெய்துகிறதில்லை யென்னும் நிச்சயம் ஓர்காலொரு வாற்றானுண்டாய்விடின் ஆண்டு இவ்வாறான கற்பனைச் செய்க. அம்மங்கலத் திற்கு முன்னுள்ள நூன்முடிவின் பிரதிபந்தகவிக்கினங்கள் எத்தனையோ அவ் வெல்லா விக்கினங்களோ அம்மங்கலத்தால் நாசமாய் விட்டன, ஆனால் அம்மங்கலத்தின் பின்னர் உண்டாகும் சில பாப வடிவ விக்கினமே அம்முடி விற்குப் பிரதிபந்தகமாகின்றன. இக்காரணத்தானேயே நூலாசிரியர் அவ் விக்கின நிவிர்த்தியின் பொருட்டு அந்நூலினிடையிலும் அம்மங்கலத்தைச் செய்கின்றனர். ஆகையால் அக்காதம்பரி முதலிய நூற்களில் அவ்வன்வய வியபிசார ஞானம் அம்மங்கலத்திலுள்ள முடிவின் காரணத் தன்மையினை யாதிப்பதன்று. ஆனால் முற்கூறிய வியதிரேக வுடனிகழ்ச்சி ஞானமே அக் காரணத் தன்மையினை நிச்சயஞ் செய்வதாம்.

## ௫௭. மங்கலத்தினதும் சமாப்தியினதும் ஸ்வரூபத்தைக்கூறும் வாயிலாக அவற்றின் அசாமானாதி கரண்ணியத்தின் சங்கை.

சங்கை:—ஜன்மாந்திரத்தின் மங்கலம், அல்லது இச்சன்மத்தின் மங்கலம் விக்கினத்துவம்சவாயிலாக நூன்முடிவிற்குக்காரணம் எப்பொழுதாகின்றதோ, அப்பொழுது அம்மங்கலத்திற்கும், முடிவு வடிவ காரியத்திற்கும், ஓர் அதிகரணத்திலிருத்தற்றன்மையுண்டாகும். ஓர் அதிகரணத்திலிருக்கும் பதார்த்தங்கட்கே காரிய காரண பாவமுண்டாகின்றது. வெவ்வேறு அதிகரணத்திலிருக்கும் பதார்த்தங்கட்கு அக்காரிய காரண பாவமுண்டாகாது. வெவ்வேறு அதிகரணத்திலிருக்கும் பதார்த்தங்கட்கும் காரிய காரண பாவமுண்டாகுமாயின், தேசாந்தரத்திலிருக்கும் குலாலனால், இத்தேசத்திலுள்ள கடத்தினுற்பத்தியுண்டாகவேண்டும். அங்ஙனமாவதில்லை, ஆகையால் வெவ்வேறு தேசத்திலுள்ள பதார்த்தங்களின் காரிய காரண பாவம் சம்பவியாது. அம்மங்கலமும், நூன்முடிவுமாமிரண்டும் ஓர் அதிகரணத்தில் இருப்பதில்லை. வெவ்வேறு அதிகரணத்திலிருப்பதாம். ஏனெனின், நூன்முடிவிலுள்ள வர்ணத்தினை (எழுத்தை) சமாப்தி என்பர். அல்லது அம்முடிவிலுள்ள வர்ணத்தின் துவம்சத்தினை சமாப்தி என்பர். இவ்வீற்றெழுத்து சாத்திரத்தில் சரமவர்ணமெனக் கூறப்பட்டிருக்கிறது. ககரவடிவமுதலிய கடையெழுத்து சத்தவடிவமாவதால் தனது சமவாயி காரண வடிவ ஆகாசத்திலேயேயிருக்கும். அக்கடையெழுத்தின் துவம்சமும் சுவப்பிரதியோகி கடையெழுத்தின் சமவாயி காரணவடிவ ஆகாசத்திலேயே யிருக்கும். இவ்வாற்றால் அவ்வீற்றெழுத்து வடிவ சமாப்தி அல்லது ஈற்றெழுத்தின் துவம்ச வடிவ சமாப்தி ஆகாசத்திலேயே இருக்கின்றது. அக்குரு, ஈஸ்வரரது ஸ்மரணாதி வடிவ மங்கலமோ ஞான வடிவ மாவதால், நூலாசிரியரது ஆத்மாவில் இருக்கின்றது. ஆகையால் அம்மங்கலம் சமாப்தியின் காரணமாவதன்றெனவாதி சங்கைசெய்யின் இனி அம்மங்கலத்தில் சமாப்தியினது காரணத் தன்மையினை சித்தி செய்வான் கருதி அம்மங்கல வடிவ காரணத்திற்கும், சமாப்திவடிவ காரியத்திற்கும் சாமானாதி கரண்ணியம் நிரூபிப்பாம்.

## ௫௮. மங்கல வடிவ காரணத்தினதும் சமாப்தி வடிவ காரியத்தினதும் சாமானாதி கரண்ணியத்தின் வர்ணனம்.

சுவஜனக விக்கினத்துவம்ச வுற்பத்தி யவச்சேதகத்தன்மை வடிவ சம்பந்தத்தால் முடிவு அந்நூலாசிரியரின் சரீரத்தி லிருக்கிறது. அச்சரீரத்தில் அவச்சேதகத் தன்மைச் சம்பந்தமாக அந்த ஞான வடிவ மங்கலமுமிருக்கின்றது. ஈண்டுச் சுவப்பதத்தால் நூன்முடி பெய்துதலை அறிக. அச்சமாப்தியையுண்டாக்கும் விக்கினத்துவம்சம் யாதோ அவ்விக்கினத்துவம்சத்தினுற்பத்தி சரீராவச்சின்ன ஆத்மாவிலேயே யுண்டாகின்றது, கேவல ஆத்மாவினுண்டாகிறதில்லையாகையால் அச்சரீரம் அம்முடிவினை உண்டாக்கும் விக்கினத்துவம்சத்தினுற்பத்தியின் அவச்சேதகமாம். இவ்வாற்றால் அக்கிரந்த சமாப்தி சுவஜனக விக்கினத் துவம்ச வுற்பத்தி யவச்சேதகத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தமாகச் சரீரத்திலிருக்கின்றது. அந்த ஞான வடிவ மங்கலமும் சரீ

அவச்சின்ன ஆத்மாவிலேயே உண்டாகின்றது, கேவல ஆத்மாவிலுண்டாகிற தில்லை. ஆகையால் அந்த ஞான வடிவ மங்கலமும் அவச்சேதகத் தன்மைச் சம்பந்தமாக அச்சரீரத்திலேயே உண்டாகின்றது. இவ்வாற்றால் சுவஜனக விக்கினத்துவம்ச வுற்பத்தி அவச்சேதகத்தன்மைச்சம்பந்தமாக அச்சரீரத்திலிருப்பதாகிய முடிவைக்குறித்து அச்சரீரத்தில் அவச்சேதகத் தன்மைச் சம்பந்தமாக விருக்கும் அம்மங்கலங் காரணமாகின்றது. ஈண்டுச் சுவஜனக விக்கினத்துவம்ச வுற்பத்தி அவச்சேதகத் தன்மை வடிவ சம்பந்தமோ அச்சமாப்தியிலுள்ள காரியத்தின் அவச்சேதகச் சம்பந்தமாம், அவச்சேதக வடிவ சம்பந்தமோ அம்மங்கலத்திலுள்ள காரணத்தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமாம். ஆண்டுக் காரணத்தின் அதிகரணத்தில் எச்சம்பந்தத்தால் அக்காரிய மிருக்குமோ அச்சம்பந்தம் காரியத் தன்மையினவச்சேதக மெனப்படும். அக்காரியத்தின் அதிகரணத்தில் எச்சம்பந்தத்தால் அக்காரண மிருக்குமோ அச்சம்பந்தங் காரணத் தன்மையின்வச்சேதக மெனப்படும். எங்ஙனம்:—திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் உற்பூத வுருவத்தின் காரணத் தன்மையுண்டாகின்றது. ஆண்டு விஷயத்தன்மைச்சம்பந்தத்தால் அச்சாக்ஷுஷப்பிரத்தியக்ஷம் கடமுதலிய திரவியங்களிலிருக்கின்றது. அக்கடமுதலிய திரவியங்களில் அவ்வுற்பூத உருவம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது, ஆகையால் அந்தவிஷயத் தன்மைச்சம்பந்தமோ அக்காரியத்தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமாம், அச்சமவாயம் அக்காரணத்தன்மையினவச்சேதகச்சம்பந்தமாம். இம்முறையை பின்னர்க்கூறும் சம்பந்தங்களிலு மறிக. அல்லது அவச்சேதகத் தன்மைச் சம்பந்தத்தால் அச்சமாப்தி அந் நூலாசிரியனது சரீரத்தி லிருக்கின்றது. ஏனெனின், அவ்வீற்றெழுத்து வடிவ சமாப்தியி னுற்பத்தியாவது, அவ்வீற்றெழுத்தின் துவம்ச வடிவ சமாப்தியி னுற்பத்தியாவது அச்சரீராவச்சின்ன ஆகாசத்திலேயே உண்டாகின்றது. கேவல ஆகாசத்தி லுண்டாவதில்லை. ஆகையால் அவச்சேதகத் தன்மை வடிவ சம்பந்தத்தால் அச்சமாப்தி அச்சரீரத்திலேயே யிருக்கிறது. அச்சரீரத்தில் சுவஜன்னிய (தன்னாற்றோன்றிய) விக்கினத்துவம்சா வச்சேதகத் தன்மை வடிவ சம்பந்தத்தால் அம்மங்கலமுமிருக்கின்றது. ஈண்டுச் சுவ என்னுஞ் சொல்லால் அம்மங்கலத்தினைக்கொள்ளுக, அம்மங்கலத்தால் உண்டான விக்கினத்துவம்சம்யாதோ, அத்துவம்சம், அச்சரீராவச்சின்ன ஆத்மாவிலேயே வுண்டாகின்றது, கேவல ஆத்மாவிலுண்டாகிறதில்லை. ஆகையால் அம்மங்கலம் சுவஜன்னிய விக்கினத்துவம்சாவச்சேதகத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால் அச்சரீரத்திலிருக்கின்றது. இவ்வாறாய அவச்சேதகத் தன்மைச் சம்பந்தத்தால், அச்சரீரத்துளதாகிய சமாப்திக்கு அச்சரீரத்தில் சுவஜன்னிய விக்கினத்துவம்சாவச்சேதகத் தன்மை வடிவ சம்பந்தத்தாலிருக்கும் அம்மங்கலம் காரணமாகின்றது. ஈண்டு அவச்சேதக வடிவ சம்பந்தமோ அக்காரியத்தின் அவச்சேதகச் சம்பந்தமும், சுவஜன்னிய விக்கினத் துவம்சாவச்சேதகத் தன்மை வடிவ சம்பந்தம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமுமாம். அல்லது சுவப்பிரதியோகி கடை எழுத்திற்கு அநுகூலமான முயற்சித் தன்மையாகிய சம்பந்தந்

தால் அச்சமாப்தி அந்நூலாசிரியோனது ஆத்மாவிலிருக்கின்றது. அம் மங்கலமும் அவ்வாத்மாவில் ஆசிரியத் தன்மை வடிவ சம்பந்தத்தா லிருக்கின் றது. ஈண்டுச்சுவசப்தத்தால் அவ்வீற்றேழுத்தின் துவம்சமாகியசமாப்தியினைக் கொள்ளுக. அவ்வீற்றெழுத்தின் துவம்ச வடிவ சமாப்திக்குப் பிரதியோகி யாக்கடையெழுத்தாமோ அவ்வெழுத்திற்கு நிமித்த காரண வடிவமான பிரயத் தின வடிவமுயற்சி அந்நூலாசிரியனது ஆத்மாவில் சமவாயசம்பந்தமாக்கிருக் கின்றது, அவ்வாத்மாவில் ஞான வடிவ மங்கலமும் ஆசிரயத்தன்மைச்சம்பந் தமாகவிருக்கின்றது. ஆகையால் சுவப்பிரதியோகியான கடை எழுத்திற்கு அநுகூலமான முயற்சியுடைமை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால் ஆத்மாவி லிருப்பதாகிய அச்சமாப்திக்கு அவ்வாத்மாவில் ஆசிரயத் தன்மை வடிவ சம் பந்தத்தாலிருப்பதாகிய அம்மங்கலம் காரணமாகின்றது. ஈண்டுச் சுவப்பிரதி யோகி கடை எழுத்திற்கு அநுகூலமான முயற்சியுடைமை வடிவ சம்பந்த மோ அக்காரியத் தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமாம், ஆசிரயத்தன்மை வடிவ சம்பந்தம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமாம். இவ் வாறாகக்கூறிய சம்பந்தங்களால் ஜன்மாந்திரத்தின் மங்கலத்திற்காவது அல் லது இஜ்ஜன்மத்தின் மங்கலத்திற்காவது விக்கினத்துவம்சமூலமாக அந்நூன் முடி பெய்துதலின் காரணத் தன்மைச் சம்பவிக்கக் கூடும்.

### ௬௯. நவீனமதத்தில் விக்கினத் துவம்சத்தினதும் சமாப்தியினதும் சாமாநாதி கரண்ணியத்தின் வர்ணனம்.

மங்கலத்திற்குச் சமாப்தியின் காரணமொப்பாமல் மங்கல ஜன்னிய விக்கினத்துவம்சத்திற்கே சமாப்தியின் காரணத்தன்மையை யொப்பும் நவீன நையாயிகரோ விக்கினத் துவம்ச வடிவ காரணத்திற்கும், சமாப்தி வடிவ காரி யத்திற்கும், இவ்வாறாகச் சாமாநாதி கரண்ணியம் (ஓர் நிலைக்களம்) கூறுகின்ற னர். சுவப்பிரதியோகியாகிய கடை எழுத்திற்கு அநுகூலமான முயற்சி யுடைமை வடிவ சம்பந்தத்தால் அச்சமாப்தி அந்நூலாசிரியனது ஆத்மாவிலி ருக்கின்றது. அவ்வாத்மாவில் விக்கினங்களின் துவம்சமும் விசேஷணத் தன்மை வடிவச் சம்பந்தத்தா லிருக்கின்றது. ஈண்டுச் சுவசப்தத்தால் ஈற்றெழுத் தின் துவம்சவடிவ சமாப்தியினைக் கொள்ளுக. மற்றவற்றை முற்கூறியவாறே அறிந்துக்கொள்க. அபாவமாத்திரம் தனது அதிகரணத்தில் விசேஷணத்தன் மைச் சம்பந்தத்தானேயே யிருக்கின்றது, ஆகையால் அவ்விக்கினங்களின் பிரத்துவம்சாபாவமும் அவ்வாத்மாவில் விசேஷணத் தன்மை வடிவ சம்பந் தத்தானேயே யிருக்கின்றது, ஆகையால் சுவப்பிரதியோகியான கடை எழுத் திற்கும் அநுகூலமான முயற்சியுடைமை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால் அவ்வாத்மாவிலிருப்பதாகிய சமாப்திக்கு அவ்வாத்மாவில் விசேஷணத் தன் மை வடிவ சம்பந்தத்தாலிருக்கும் அவ்விக்கினத்துவம்சங் காரணமாகின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் விக்கினங்களின் அத்தியந்தாபாவத் திற்கும், விக்கினங்களின் பிராகபாவத்திற்கும், அச்சமாப்தியின் காரணத் தன் மை அறிதல் வேண்டும். ஈண்டுச் சுவப்பிரதியோகியாகிய கடை எழுத்திற்கு அநுகூலமான முயற்சியுடைமை வடிவசம்பந்தமோ அக்காரியத்தன்மையின்

அவச்சேதகச்சம்பந்தமும், விசேஷணத் தன்மை வடிவசம்பந்தமோ அக்காரணத்தன்மையின் அவச்சேதகச் சம்பந்தமுமாம். கூறிய இம்முறைப்படி அம்மங்கல வடிவ காரணத்திற்கும், அவ்விக்கினத் துவம்ச வாயிலாகச் சமாப்தி வடிவ காரியத்திற்கும், அந்நூலாசிரியனது சரீரத்துடனாகத்தான் அல்லது ஆத்மாவுடனாகத்தான் சாமானாதிகரண்ணியங் கூடும். ஆகையால் அம்மங்கலத்தில் விக்கினத்துவம்ச வாயிலாக அந்நூன் முடிபெய்துதலின் காரணத் தன்மைக் குற்றமில்லாததாம்.

௪௰. நூலில் கவி முதலியனவாக மங்கலத்தை யெழுதுவதனாலாம் பயனது வர்ணனம்.

சங்கை:—முற்கூறிய முறைப்படி அம்மங்கலத்தில் நூன்முடிபெய்துதலின் காரணத்தன்மையின் சித்தியுளதாக, நூலாசிரியன் நூல் விக்கினமில்லாமல் முடியும் பொருட்டு, நூன்முகத்தில் அம்மங்கலம் செய்யத்தக்கதாமெனினும், அம்மங்கலத்தை நூன்முகத்தில் கவிமுதலிய வடிவங்களாலெழுதுவதில் ஓர் பயனுமின்றாம்.

சமாதானம்:—கவி முதலிய வடிவமாக நூன்முகத்தில் மங்கலத்தை யெழுதாவிடின் ஆத்திகப்புருடன் அந்நூலாசிரியனிடத்து நாத்திகத்தன்மையினைச் சங்கித்து அந்நூலிற் பிரவிர்த்திக்கமாட்டான், ஆகையால் அந்நூலில் ஆத்திகனுக்குப் பிரவிர்த்தியை யுண்டாக்கும் பொருட்டு அந்நூலாசிரியனானவன் அந்நூன்முகத்தில் கவிமுதலிய வடிவங்களால் அம்மங்கலத்தை அவசியமாய் வரைதல் வேண்டும், அல்லது மனதினுற் செய்யப்பட்ட ஈஸ்வரஸ்மரணமுதலிய வடிவ மங்கலம் செய்தவருக்கே பிரதீதி யாகின்றது, மற்றவர்கட்குப் பிரதீதியாகாது நூன்முகத்தில் கவிமுதலிய வடிவமாக வரைந்த மங்கலம் மற்றவர் கட்கும் பிரதீதியாகின்றது. ஆகையால் இவ்வெமது மங்கலத்தைக்கண்டு, எமது சிஷ்யப் பிரசிஷ்ய ராதியோரும் தாமியற்றும் நூன்முகத்தில் அம்மங்கலத்தைச்செய்கவென்று தமது சிஷ்யப் பிரசிஷ்யர்முதலியோர்க்கு அறிவுறுத்தற் பொருட்டும் அந்நூலாசிரியன் அந்நூன்முகத்தில் கவிமுதலிய வடிவங்களால் அம்மங்கலத்தை வரைதல் இன்றியமையாமையேயாம்.

௪௧. வைசேடிக சாத்திரத்திலும் நியாய சாத்திரத்திலும் அத, தர்ம, பிரமாணம் என்னும் இப்பதங்களால் மங்கலத்தி னிருப்பினது வர்ணனம்.

சங்கை:—வைசேடிக சாத்திரகர்த்தாவா (ஆக்கியோரா)ன கணாத முனிவர் அச்சாத்திரத்தின் முதலில் கவி முதலிய வடிவங்களால் ஓர் மங்கலம் எழுதினாரில்லை, அவ்வண்ணமே நியாய சாத்திரகர்த்தா கௌதம முனிவரும் அச்சாத்திரத்தின் முதலில் கவி முதலிய வடிவங்களாக ஓர் மங்கலமுமெழுதினாரில்லை ஆகையால் அம்முனிவர்களிடத்திலும் நாத்திகத் தன்மையினைச் சங்கித்து ஆத்திகர்கட்கு அவர்கள் சாத்திரத்திற் பிரவிர்த்தி யுண்டாவதின்றாகவேண்டும்.

சமாதானம்:—கணுதமுனிவரருளிச்செய்த வைசேடிக சாத்திரத்தின் முதலில் "அதாதோ தர்மம் வ்யாக்யாஸ்யாம:" என்னுஞ் சூத்திரங் கூறப் பட்டிருக்கிறது. அச்சூத்திரத்தின் முதலிலுள்ள "அத" என்னும் சப்தம் யாதோ அவ்வத சப்தமே அம்மங்கலத்தை உணர்த்துவதாம். ஏனெனின், ஸ்மிருதியில் ஓங்காரத்திற்கும், அதவென்னும் சப்தத்திற்கும் மங்கல வடிவத் தன்மையே கூறப்பட்டிருக்கிறது. ஆண்டுச் சுலோகம். "ஓங்காரஸ்சாதஸப்தஸ்ச த்வாவேதௌ ப்ரஹ்மண: புரா। கண்டம் பித்வா விநிர்யாதௌ தஸ்மாந் மாங்கலிகாவுபௌ" (இ-ள்.) ஓங்காரமும், அத என்னும் சப்தமுமா மிரண்டும், முன்னர் பிரஹ்மாவின் கண்டத்தைப் பேதித்து வெளிப்பட்டன. அக் காரணத்தால் அவ்விரண்டு சப்தங்கள் மங்கலத்தினையே உணர்த்துவனவாகின் றன. அல்லது ஈஸ்வரரது நாமங்கள் கணக்கிடப்பட்டுள்ளவிடத்தும்தர்மமும் ஈஸ்வரரது நாமமெனக் கூறப்பட்டுளது. ஆகையால் கூறிய அச்சாத்திரத் தில் எத்தர்மமென்னும் சப்தமிருக்கிறதோ அத்தர்மமென்னும் சப்தம் பர மேஸ்வரனை ஸ்மரிப்பதாவதால் மங்கலவடிவமேயாம்.

கௌதமமுனிவர் அருளிச் செய்த நியாய சாத்திரத்தின் முதலிலோ "ப்ரமாண ப்ரமேய ஸம்ஸய ப்ரயோஜந த்ருஷ்டாந்த ஸித்தாந்த அவயவ தர்க்க நிர்ணய வாத ஜல்ப விதண்டா ஹேத்வாபாஸ சல ஜாதி நிக்ரஹ ஸ்தாநாநாந் தத்வஜ்ஞாநாந் நிஸ்ரேயஸாதிகம:" என இப்பதினாறு பதார்த்தங்களைப் பிரதிபாதிக்குஞ் சூத்திரங் கூறப்பட்டிருக்கிறது, அச்சூத்திரத்தின் முதலி லுள்ள பிரமாணமென்னும் சப்தமும் பரமேஸ்வரனது நாமத்தையே கூறிய தாம். ஆகையால் பரமேஸ்வரனை ஸ்மரிப்பதாவதால் பிரமாணமென்னும் அச்சப்தமும் மங்கலவடிவமேயாம். இவ்வாறுய ஈஸ்வர வாசக சப்த வடிவ மங்கலத்தைக் கண்ணுற்று ஆத்திக புருஷர்கட்கு நியாய வைசேடிகசாத்திரங் களில் பிரவிருத்தியுண்டாகின்றன.

### ௯௨. வஸ்து நிர்த்தேச முதலிய வடிவ மூவித மங்கலங்களின் வர்ணனம்.

சங்கை:—குரு, ஈஸ்வரர்களைக் குறித்து செய்யப்படும் நமஸ்காரம் (வணக்கம்) யாதோ அதற்கே மங்கல வடிவத் தன்மை சம்பவமாம். அந்ந மஸ்காரமின்றி கேவலம் குரு, ஈஸ்வரர்களின் ஸ்மரண மாத்திரத்திற்கு மங் கலவடிவத் தன்மை சம்பவியாது.

சமாதானம்:—அம்மங்கலம் நமஸ்கார மாத்திரமேயன்று. ஆனல் அம்மங்கலம் மூவிதமாகின்றன. முதலாவது வத்து நிர்த்தேச வடிவ மங்கல மும், இரண்டாவது நமஸ்கார வடிவ மங்கலமும், மூன்றுவது ஆசீர்வாத (வாழ்த்து) வடிவ மங்கலமுமாம். இனி இம்மூன்றின் லக்ஷணங் கூறுவாம்.

### ௯௩. வஸ்து நிர்தேச வடிவ் மங்கலத்தின் வர்ணனம்.

"நமஸ்காராதிகம் த்யக்த்வா ஸ்வரூபம் கேவலம் வஸ்துநிர்தேஸ:"

(இ-ள்.) நமஸ்காரமுதலியவைகளின்றி கேவலம் பரமேஸ்வர வடிவவத்துவின்

சங்கீர்த்தனம் (துதி) வஸ்து நிர்த்தேச வடிவ மங்கல மெனப்படும். நமஸ்கார வடிவ மங்கலத்திலும், ஆசீர்வாத வடிவ மங்கலத்திலும், அவ்வீஸ்வர வடிவ வஸ்துவின் சங்கீர்த்தனமிருக்கின்றது, என்றாலும் ஆண்டு நமஸ்காரமயிலாக, அல்லது விரும்பிய பொருளின் பிரார்த்தனை வாயிலாகவே அவ்வீஸ்வர வடிவ வஸ்துவின் சங்கீர்த்தன முண்டாகின்றது. ஆகையால் இவ்வஸ்து நிர்த்தேச வடிவ மங்கலத்தின் "லக்ஷணத்தில் நமஸ்காராதியின்றி" என்னும் பதத்தினைக் கூறுவதால் இந்த லக்ஷணத்திற்கு அந்த நமஸ்கார வடிவ மங்கலத்திலும், ஆசீர்வாத வடிவ மங்கலத்திலும் அதிவியாப்தியுண்டாகாது.

### சச. நமஸ்காரவடிவ மங்கலத்தின் லக்ஷணம்.

"ஸ்வாபேக்ஷோத்க்ருஷ்டத்வ ... வ்யாபாரவிசேஷ: நமஸ்கார:" (இ-ள்.) நமஸ்காரத்திற்கு யோக்கியமான குரு, ஈஸ்வரன் முதலியவர்களிடம் நமஸ்காரஞ் செய்பவனிடத்துள்ள தாழ்ந்த தன்மையினை யாவருக்கும் உணர்த்துவதாகிய நமஸ்கரிப்பவனது மனோ வாக்குக் காயங்களாலாய வியாபார விசேஷம் யாதோ அதனை நமஸ்கார வடிவ மங்கலமென்பர்.

### சரு. ஆசீர்வாத வடிவ மங்கலத்தின் லக்ஷணம்.

"ஸ்வஸ்யாந்யஸ்ய வா வாஞ்சிதார்த்த ப்ராப்த்யர்த்தம் ஈஸ்வரப்ரார்த்தநம் ஆசீர்வாத:" (இ-ள்.) நூலாசிரியன் தான்விரும்பிய பொருளையும், தனது சீடர்கள் விரும்பிய பொருளையும் அடைவதற்காகச் செய்யும் பரமேஸ்வரப் பிரார்த்தனையை ஆசீர்வாத வடிவ மங்கல மென்பர். ஆகையால் அவ்வைசேடிக சாத்திரத்திலும், நியாய சாத்திரத்திலும், நமஸ்கார வடிவ மங்கலத்திற்கும் ஆசீர்வாதவடிவ மங்கலத்திற்கும் அபாவமிருக்கினும் அவ்வஸ்து நிர்த்தேச வடிவ மங்கலம் அச்சாத்திரத்திலிருக்கின்றது.

சங்கை :— "லக்ஷண ப்ரமாணாப்யாம் வஸ்துஸித்தி:" (இ-ள்.) இலட்சணம், பிரமாணமா மிவ்விரண்டினாலேயே வஸ்துவின் சித்தியுண்டாகின்றதென்பது சாத்திரக்காரர்கள் நியமமாம். ஆண்டு மங்கலத்தின் சொரூபமோ முற்கூறிய முறைப்படி பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களால் சித்தமாம். ஆனால் அம்மங்கலத்தின் லக்ஷணம் யாதென்னுஞ் சங்கை அடையப்பட, அல்லது முன்னர் வஸ்து நிர்த்தேசமுதலிய மூவித மங்கலத்திற்கு வெவ்வேறு லக்ஷணங் கூறப்பட்டது, அம்மூன்றின் விசேஷ லக்ஷணம் சம்பவிக்கும் இருந்து அம்மங்கலத்திற்கோர் சாமான்னிய லக்ஷணஞ் சித்திக்க வேண்டும், அச்சாமானிய லக்ஷணமின்றி விசேஷ லக்ஷணம் சம்பவியாதென்னும் சங்கையண்டாகில் இனி அம்மங்கலத்தின் சாமானிய லக்ஷணங் கூறுவாம்.

### சசா. மங்கலத்தின் சாமானிய லக்ஷணம்.

"விக்நநிவ்ருத்தி ... ஸாதநத்வே ஸதி விஹித ... காரணம் மங்கலம்" (இ-ள்.) விக்கினங்களின்;

னும் வேறானதும், விக்கினத்துவம்சப் பிரதிபந்தகாபாவத்திலும் வேறானதுமான ஆரம்பத்தினிச்சைக்கு விஷயமாகிய காரியத்தின் விக்கினத்துவம்சத்திற்கு அசாதாரண காரணமாவதே மங்கலமெனப்படும். ஆண்டுக்கூறிய அம்மங்கலம் விக்கினங்களினும் வேறானதும், விக்கினத்துவம்ச வடிவகாரியத்தைத் தோற்றுவிப்பதுமான பிரதிபந்தகாபாவத்தினும் வேறானதும், ஆரம்பத்தினிச்சைக்கு விஷயமாகிய நூலினை பிரதிபந்திக்கும் விக்கினங்களின் துவம்சத்திற்கு அசாதாரணகாரணமுமாம். ஆகையால் மங்கலத்திற்குக்கூறிய இந்நலக்ஷணஞ் சம்பவிக்கின்றது. ஆண்டுக் கூறிய லக்ஷணத்தில் "விக்கினங்களினும் வேறானதும்" என்னும் பதங்களைக் கூறாவிடின், அவ்விக்கினங்களிலேயே அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், அந்த விக்கினம் அந்தவிக்கினத்துவம்சத்தினையுண்டாக்கும் பிரதிபந்தகாபாவத்தினும் வேறானதும், ஆரம்பிக்க விரும்பிய விக்கினத்துவம்சத்தின் அசாதாரண காரணமுமாம். எங்ஙனம்: கடத்தின் துவம்சத்தில் தண்டத்தாலடைத்தல் முதலியனவும், அக்கடவடிவ பிரதியோகியும் தனது துவம்சத்தில் அசாதாரண காரணங்களாகின்றனவோ, அங்ஙனமே அவ்விக்கினத் துவம்சத்தில் அவ்விக்கினவடிவ பிரதியோகியும் அசாதாரண காரணமாகின்றது. அவ்விக்கினங்களில் அந்த லட்சணத்தின் அதிவியாப்தியை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "விக்கினங்களினும் வேறானதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டுத் தனது பேதம் தன்னிடத்திலிருப்பதில்லை. தன்னினும் வேறான வத்துவில் தனது பேதமிருக்கிறது. அவ்விக்கினங்களின் பேதம் அவ்விக்கினங்களிலிருப்பதில்லை, ஆகையால் அவ்விக்கினங்களில் அம்மங்கலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "விக்கினத்துவம்சப் பிரதிபந்தகாபாவத்தினும் வேறானதும்" என்னுமிப்பதங்கள் கூறாவிடின், அவ்விக்கினத் துவம்சப் பிரதிபந்தகாபாவத்தினிடத்தே அம்மங்கலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், பிரதிபந்தகமிருக்க ஓர் காரியத்தினுற்பத்தியுமுண்டாவதின்று. ஆகையால் அந்தப் பிரதிபந்தகாபாவமும் காரியத்தினுற்பத்தியில் காரணமாகின்றது. அன்றியும் அவ்விக்கினங்களின் துவம்சமுமோர் காரியவடிவுமாம். ஆகையால் அவ்விக்கினத் துவம்சத்தினுற்பத்தியினும் பிரதிபந்தகாபாவம் காரணமேயாம். அந்தப் பிரதிபந்தகாபாவம் அவ்விக்கினங்களினும் வேறுமாம். அத்தகைய விக்கினத் துவம்சத்தின் காரணமாகிய பிரதிபந்தகாபாவத்தில் அந்த லக்ஷணத்தின் அதிவியாப்தியை நிவர்த்திச்செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விக்கினத்துவம்சப் பிரதிபந்தகாபாவத்தினும் வேறானதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. அவ்விக்கினத் துவம்சப் பிரதிபந்தகாபாவம் தன்னினும் வேறன்று. ஆகையால் அதனிடத்துக்கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாவதின்று. அல்லது கூறிய அம்மங்கலத்தின் லக்ஷணத்தில் "ஆரம்பிக்க விரும்பிய" என்னும் பதங்கள் கூறாவிடின் காரீரியாகத்தில் (மழையின்பொருட்டுச்செய்யும் வேள்வியில்) அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், அக்காரீரியாகம் அவ்விக்கினங்களினும் வேறு

னதும், அவ்விக்கினத் துவம்சப் பிரதிபந்தகா பாவத்தினும் வேறானதும் மழையைத் தடுக்கும் விக்கினங்களின் துவம்சத்திற்கு அசாதாரண காரணமுமாம். அக்காரீரியாகத்தில் அந்த லக்ஷணத்தின் அதிவியாப்தியை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஆரம்பிக்கவிரும்பிய" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆரம்பம் செய்யும் இச்சைக்கு விஷயமானகாரியம் நூலேயாம். ஈண்டுப் பிரசங்கத்தில் அதனைப் பிரதிபந்திக்கும் விக்கினங்களின் துவம்சத்திற்கு அசாதாரண காரணம் அம்மங்கலமேயாம். காரீரியாக மன்று ஆகையால் 'ஆரம்பிக்க விரும்பிய' என்னும் பதத்தைக் கூறியதால், அக்காரீரியாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாவதின்று. அல்லது அம்மங்கலத்தின் லக்ஷணத்தில் "அசாதாரணம்" என்னும் பதங் கூறுவிடின் அந்த லக்ஷணத்திற்கு காலம், அதிர்ஷ்ட முதலிய சாதாரண காரணங்களில் அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், அக்காலம் அதிர்ஷ்டமுதலியவைகள் அவ்விக்கினங்களினும் வேறானதும், அவ்விக்கினத்துவம்சப் பிரதிபந்தகாபாவத்தினும் வேறானதும், ஆரம்பிக்க விரும்பிய நூலின் பிரதிபந்தக விக்கினங்களின் துவம்சத்திற்குக் காரணமுமாம். அக்கால, அதிர்ஷ்ட முதலியவைகளில் கூறிய அந்த லக்ஷணத்தின் அதிவியாப்தியை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அசாதாரணமென்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு ஈஸ்வரன், ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சி, தேசம், காலம், அதிர்ஷ்டம், பிராகபாவம், பிரதிபந்தகாபாவமா மென்பதும் காரிய மாத்திரத்திற்குச் சாதாரண காரணங்களாம். அதாவது, இவ்வொன்பான் காரணங்களின்றி ஓர் காரியமும் உற்பத்தியாவதின்று. அந்த லக்ஷணத்தில் காரணத்திற்கு அசாதாரண மென்னும் விசேஷணத்தைக் கூறுவதால்காலம், அதிர்ஷ்ட முதலிய சாதாரண காரணங்களில் கூறிய அம்மங்கலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாவதின்று. மங்கலவாதம் முற்றுப்பெற்றது.

### ௪எ. கேவலம் தத்துவ ஞானத்தான் மோக்ஷத்தினது பிராப்தியின் வர்ணனம்.

இனியிந்நூலிற்கூறுவதற்கு யோக்கியமான எத்திரவிய முதலிய பதார்த்தங்களுள்வோ, அப்பதார்த்தங்களின் நிரூபணத்திற்கு எவ்வாற்றால் தத்துவ ஞானத்திலுபயோகமும், அத்தத்துவ ஞானத்திற்கு எவ்வாற்றால் மோக்ஷத்தின் சாதனத் தன்மையுமாமோ, அவ்வெல்லாவகையினையும் விரிவாக நிரூபிப்பாம். சுருதியில் கேவலம்தத்துவஞானத்தானேயே மோக்ஷத்தினடைவு கூறப்பட்டிருக்கிறது. ஆண்டுச்சுருதி "தமேவவிதித்வாதி ம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதேயநாய" இ-ள்.) ஆத்மாவை அறிந்தே அதிகாரிபுருஷன் துக்கத்தின் அத்தியந்த நிவிர்த்தி வடிவ மோக்ஷத்தையடைகின்றான் அம்மோக்ஷத்தினது பிராப்தியின்பொருட்டு அவ்வாத்ம ஞானமல்லாமல் வேறோருபாயமுமின்று அவ்வாத்ம ஞானமொன்றே அம்மோக்ஷத்தின் அடைவிற்கு உபாயமாம், என்பவைமுதலிய அனேக சுருதிகளில் கேவலம் ஆத்ம ஞானத்தானேயே மோக்ஷத்தினடைவு கூறப்பட்டுளது.

சஅ. தத்துவ ஞானமின்றியே காசிமரணம், பிரயாகைமரணம், கர்மம், உபாசனை யிவை முதலியவைகளால் முக்தியினது அடைவு.

சங்கை :—கேவலம் ஆத்மஞான மொன்றினுனேயே முக்தியுண்டாகின்றது, வேறோருபாயத்தா லுண்டாகிறதில்லை என்னு மிந்நியமம் சம்பவிப்பதின்று. ஏனெனின் சுருதி, ஸ்மிருதிகளில் அம்முக்தியை அடையும் பொருட்டு அத்தத்துவஞானமின்றி வேறு அனேக வுபாயங்களுங் கூறப்பட்டிருக்கின்றன.

ஆண்டு "காஶீ மரணான்முக்தி:" (இ-ள்.) அதிகாரி புருஷனுக்கு ஸ்ரீகாசியில் மரிப்பதால் முக்தியின் பிராப்த முண்டாகின்றது என்னும் இச்சுருதியோ காசியில் மரித்தலினுனேயே முக்தியின் அடைவு கூறியிருக்கிறது.

"உபாப்⁴யாமேவ பக்ஷாப்⁴யாம் யதா² கே² பக்ஷிணாங்க³தி:॥ ததை²வ ஜ்ஞாநகர்மப்⁴யாம் ப்ராப்யதே ப்³ரஹ்ம ஶாஶ்வதம்" (இ-ள்.) எங்ஙனம் ஆகாசத்தில் பக்ஷிகள் இரண்டு பக்ஷங் (இரக்கை) களாலேயே பறக்கின்றனவோ ஓர் பக்ஷத்தால் பறப்பதின்றோ, அங்ஙனமே அதிகாரி புருஷனுக்கு ஞானம் கர்மமென்னு மிவ்விரண்டினுனேயே மோக்ஷத்தினடைவு உண்டாகின்றது, கேவலம் கர்மமொன்றினுல், அல்லது ஞானமொன்றினுல் மோக்ஷத்தினடைவு உண்டாகிறதில்லை. என்னுமிவைமுதலிய வசனங்களிலோ ஞானம், கர்ம மென்னும் இரண்டின் சமுச்சயத்தி (கூடியத) னுனேயே முக்தியினடைவு கூறப்பட் டிருக்கிறது. "கர்மணைவ ஹி ஸம்ஸித்³தி⁴மாஸ்தி²தா ஜநகாத³ய:" (இ-ள்.) ஜனகர் முதலியோர் கர்மத்தினுனேயே மோக்ஷத்தை அடைந்தார்கள். இவைமுதலிய வசனங்களால் கேவலம் கர்மத்தினுனேயே முக்தியின்பிராப்தி கூறி யிருக்கின்றது. அன்றியும், "ப்³ரஹ்மஜ்ஞாநேந முச்யேத ப்ரயாக³ மரணேந வா। அத²வா ஸ்நாநமாத்ரேண கோ³மத்யாம் க்ருஷ்ணஸந்நிதௌ⁴" (இ-ள்) இவ்வதிகாரி புருஷன் பிரஹ்ம ஞானத்தால்: அல்லது பிரயாகையில் மரித்தலால், அல்லது ஸ்ரீ கிருஷ்ண பகவானது சமீபத்திலுள்ள கோமதி தீர்த்தத்தின் ஸ்நானமாத்திரத்தால், முக்தியை அடைகின்றான். இச்சாத்திர வசனம் பிரஹ்ம ஞானத்தாலும், பிரயாகையில் மரித்தலாலும் கோமதியின் ஸ்நானத்தாலும் முக்தியின் அடைவு கூறியிருக்கிறது. சில சுருதிகளிற் சகுணப் பிரஹ்மத்தி னுபாசனையாலும் முக்தியி னடைவு கூறியிருக்கின்றது, ஆகையால் ஆத்ம ஞானத்தினுனேயே முக்தியுண்டாகிறது வேறுபாயத்தா லுண்டாகிறதில்லை யென்னும் நியமம் சம்பவியாது.

சகூ. அக்காசிமரணம், கர்மம், உபாசனை முதலியவைகட்குத் தத்துவ ஞானத்தி லுபயோகத்தின் வர்ணனம்.

சமாதானம்:—"நாந்ய: பந்தா² வித்³யதே அயநாய" அவ்வாத்ம ஞானமன்றி வேறுவழியில்லை என முற்கூறிய சுருதி அம்மோக்ஷத்தினடைவில் அவ்வாத்ம ஞானமன்றி வேறு கர்மம், உபாசனைமுதலிய வெல்லா வுபாயங்களையும் நிஷேதிக்கின்றது. ஆகையால் எங்ஙனம் அவ்வாத்மஞானவடிவத்தத்துவ

ஞானத்திற்கு நேராக மோக்ஷத்தின் சாதனத்தன்மை யுண்டோ அங்ஙனம் கர்ம முதலியவைகட்கு நேராக மோக்ஷத்தின் சாதனத் தன்மை யில்லை. ஆனால் அந்த தத்துவஞானத்திலேயே அக்கர்மாதிகட்குச் சாதனத்தன்மை யிருக்கின்றது. ஆண்டுக் காசியில் மரித்த புருஷனுக்கு மஹாதேவரி னுபதேசத்தால் தத்துவ ஞானமுண்டாகின்றது. அத்தத்துவ ஞானத்தால் முக்தியினடைவு உண்டாகின்றது. இவ்வாறாக நிஷ்காமகர்மமும் தத்துவஞானத்தைப் பிரதிபந்திக்கும் பாபங்களின் துவம்சவாயிலாக அத்தத்துவ ஞானத்திற்கே காரணமாம். அங்ஙனமே அப்பிரயாகையில் மரித்தலும், கோமதி ஸ்நானமும், சகுணப் பிரஹ்மத்தி னுபாசனையுமாம் யாவும் தத்துவ ஞானத்திற்கே சாதனங்களாம். நேராக முக்திகருச் சாதனமன்று. தத்துவஞான மொன்றே நேராக முக்திக்குச் சாதனமாம். அத்தத்துவ ஞானத்தில் காசிமரண முதலிய வுபாயங்கள் உபயோகிகளாம். இவ்வாறாய பரம்பரை யுபயோகத்தின் அங்கீகாரத்தினாலேயே சாத்திரத்தில் காசிமரண முதலியவைகட்கு முக்தியின் சாதனங் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் கேவல தத்துவஞானத்தால் மோக்ஷத்தை யொப்புவதால் அவ்வசனங்கட்கு விரோதமுண்டாவதின்று.

## ௫ய. கர்மத்தில் மோக்ஷத்தினது சாதனத் தன்மையின் கண்டனம்.

அல்லது வாதி கேவலம் கர்மத்தினையே மோக்ஷத்தின் சாதனமாக வொப்பின் அவ்வாதியை இதுவினவுவாம். சன்னியாசிக்கு சாஸ்திரமானது விதித்துள்ள பிக்ஷையின் பொருட்டுத் திரிதல்முதலிய கர்மங்க ளியாவையோ அக்கர்மங்கட்கு மோக்ஷத்தின் சாதனத்தன்மையுளவா? அல்லது. கிருகஸ்தனுக்கு சாஸ்த்திரமானது விதித்துள்ள அக்கினி ஹோத்திராதி கர்மங்கள் யாவையோ அக்கர்மங்கட்கு மோக்ஷத்தின் சாதனத்தன்மையுளவா?

ஆண்டுச் சன்னியாசியின் கர்மங்கட்கு மோக்ஷத்தின் சாதனத் தன்மையாமென்னும் முதற்பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின் பிக்ஷையின்பொருட்டுத் திரிதல்முதலிய சன்னியாசியின் கர்மங்களில் கிருகஸ்தனுக்கு அதிகாரமின்றாம். ஆகையால் அக்கிருகஸ்தனுக்கு முக்தியுண்டாவதின்றாகவேண்டும். சாத்திரத்திலோ அக்கிருகஸ்தனுக்கும் முக்திக்கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுச் சாத்திரவசனம் “ கஉ-ூெணவஹிஸஂஸிூி ஊஷ்ரிதாஜநகாடிய:। ஶ்ராஜ்க்ஷ்ரதத்வாநீவ ஞ்ரஹ்ஸெஷ்ராவிஹி உ-ஷ்ரெத ” (இ-ள்.) ஜனகர் முதலிய கிருகஸ்தர்கள் நிட்காம கர்மங்களினாலேயே மோக்ஷத்தை யடைந்தார்கள். சிரார்த்த முதலிய கர்மங்களைச் செய்பவனும், சத்திய முரைப்போனுமான கிருகஸ்தனும் முக்தியையடைகின்றான். சன்னியாசியின் கர்மத்திற்கே மோக்ஷத்தின் சாதனத்தன்மையொப்பின் கிருகஸ்தனுக்கு முக்தியைக்கூறுவதான இவ்வெல்லா வசனங்களும் வீணாகுமாகையால் அச்சன்னியாசியின் கர்மத்திற்கு மோக்ஷத்தின் சாதனத்தன்மை சம்பவியாது. கிருகஸ்தரின் கர்மங்கட்கே மோக்ஷத்தின் சாதனத் தன்மையாமென்று மிரண்டாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின் அந்தக் கிருகஸ்தரின் அக்கினிஹோத்திரமுதலிய கர்மங்களில் சன்னியாசிகட்கு அதிகாரமின்றாகையால் அச்சன்னியாசிகட்கு முக்தி

யின்றாக வேண்டும். அச்சன்னியாசிகட்கு முக்தியின் அடைவு சுருதி ஸ்மிருதிகளில் பிரசித்தமே. ஆகையால் கிருகஸ்தரின் கர்மங்கட்கே மோக்ஷத்தின் சாதனத் தன்மை சம்பவியாது. எங்ஙனம் சொர்க்கமுதலிய சுகங்களில் விலக்ஷணத் தன்மையுண்டோ, அங்ஙனம் முக்தியில் ஓர் விலக்ஷணத் தன்மையுமின்று. அவ்விலக்ஷணத் தன்மையைக் கொண்டு விஜாதீய முக்திக்கு சன்னியாசிகளின் கர்மங்கட்கும் கிருகஸ்தர்களின் கர்மங்கட்கும் காரணத் தன்மையுண்டு. ஆகையால் அக்கர்மங்கட்கு நேராக மோக்ஷத்தின் சாதனத் தன்மை சம்பவியாது, அல்லது "தமேதம்வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேந தாநேந தபஸா அநாஶகேந" (இ-ள்.) அதிகாரியிராம்மணன் இவ்வாத்மாவை வேதாத்தியயநம், வேள்வி, தானம், தவ மிவைமுதலிய கர்மங்களால் அறிவதற்கு இச்சிக்கின்றான். இச்சுருதியில் அவ்வேள்வி தான முதலிய கர்மங்கட்கு ஆத்மஞானத்தினிச்சா வடிவ * விவிதிஷைக்கு அல்லது அவ்வாத்ம ஞானத்திற்கே காரணத் தன்மையைக் கூறப்பட்டிருக்கின்றது. மோக்ஷத்தின் காரணத் தன்மைக் கூறப்படவில்லை. அன்றியும் "நகர்மணா ந ப்ரஜயா தநேந த்யாகேநைகே அம்ருதத்வமாநஶு:" (இ-ள்.) முன்னிருந்த வித்துவான்கள் அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களாலும், புத்திரர்முதலிய பிரஜைகளாலும், சுவர்ண முதலிய தனங்களாலும், மோக்ஷத்தை அடைந்தனரல்லர். ஆனால் அக்கர்ம முதலியவைகளின் தியாக பூர்வகமான தத்துவ ஞானத்தினாலேயே மோக்ஷத்தை அடைந்துள்ளார். இச்சுருதி அம்முக்தி யடைவின் பொருட்டு அக்கர்மங்களை நிஷேதஞ் செய்கின்றது. இக்காரணத்தினாலும் அக்கர்மங்கள் அம்மோக்ஷத்திற்குச் சாதனமன்று. ஆனால் தத்துவஞானமொன்றே அம்மோக்ஷத்திற்குச் சாதனமாமென்னும் நியமம் சித்தமாயிற்று.

### ௫௧. மோக்ஷத்திற்கு ஏதுவாகிய தத்துவஞானத்தின் சொரூப வர்ணனம்.

ஆத்மாவினை தேகம், இந்திரியம் முதலிய சர்வ அனாத்ம பதார்த்தங்களினும் வேறாக அறிவது தத்துவஞானமெனப்படும். ஈண்டு ஆத்ம சப்தத்தால் ஜீவாத்மா, ஈஸ்வர வடிவ பரமாத்மாவாமிரண்டையுங் கொள்ளுக. ஒன்றைக் கொள்ளற்க. ஏனெனின் "ஆத்மாநமேவ விஜாநீயாத் அயமஸ்மீதி பூருஷ:। கிமிச்சந் கஸ்ய காமாய ஶரீரமநுஸம்ஜ்வரேத்" என்னும் இச்சுருதியில் ஜீவாத்மாவின் ஞானமே மோக்ஷத்தின் காரணமெனப்பட்டது. அன்றியும் "தமேவ விதித்வாதி ம்ருத்யுமேதி" என்னும் இச்சுருதியில் பரமாத்மாவின் ஞானமே மோக்ஷத்தின் காரணமெனப்பட்டது. கேவலம் ஜீவாத்மாவின் ஞானத்திற்கே மோக்ஷத்தின் காரணமொப்பின், பரமாத்மாவின் ஞானத்தால், மோக்ஷத்தின் அடைவைக்கூறிய அச்சுருதி அசங்கதமாகும். அல்லது கேவலம் பரமாத்மாவின் ஞானத்திற்கே மோக்ஷத்தின் காரணமொப்பின் ஜீவாத்மாவின் ஞானத்தால் மோக்ஷத்தின் அடைவைக் கூறிய சுருதி அசங்கதமாகும். ஆகையால் ஒரோர் ஞானம் மோக்ஷத்தின்

* விவிதிஷை - ஞானத்திற்கு முற்கொள்ளுந் துறவு.

காரணமன்று. ஆனால் தேகாதி பிற பதார்த்தங்களினும் வேறு வடிவமாயுள்ள ஜீவாத்மாவினதும் பரமாத்மாவினதுமாம் இரண்டின் தத்துவஞானமே அம்மோக்ஷத்தின் காரணமாம்.

## ருஉ. தத்துவஞானத்தின் சிரவணமுதலிய சாதனங்களின் வர்ணனம்.

அத்தகைய ஆத்மஞானத்தின் பிராப்தி, சிரவணம், மனனம், நிதித்தியாசனமாம் மூன்று சாதனங்களானேயே யுண்டாகின்றது. ஆண்டுச் சுருதி "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" (இ-ள்.) பிருகதாரண்ணியமென்னும் உபநிஷத்தில் யாஞ்ஞவல்கிய முனியானவர் தனது காதலியான மைத்திரேயிக்கு இவ்வசனங்கூறினர். ஓ மைத்திரேயி! ஆத்மா காணத்தக்கது. அதாவது ஆத்மசாக்ஷாத்காரம் மோக்ஷவடிவ இஷ்டத்திற்குச் சாதனமாம். ஆகையால் முமுக்ஷுக்கள் அவ்வாத்மசாக்ஷாத் காரத்தை அவசியமாய்ச் சம்பாதிக்கவேண்டும். ஆண்டு அவ்வாத்மசாக்ஷாத் காரத்திற்குச் சாதனம் யாது என்னுஞ் சங்கை பிராப்தமாக அந்த யாஞ்ஞவல்கிய முனிவர் அச்சாதனங்களைக்கூறுகின்றனர். ஓ மைத்திரேயி! இவ்வாத்மா கேட்கத்தக்கதும், மனனஞ் செய்யத்தக்கதும், நிதித்தியாசனஞ் செய்யத்தக்கதுமாம். அதாவது ஆத்மாவின் சிரவண மனன நிதித்தியாசனங்களும் அவ்வாத்ம சாக்ஷாத் கார வடிவ இஷ்டத்தின் சாதனங்களாம். ஆகையால் அவ்வாத்ம சாக்ஷாத் காரத்தின் இச்சையுடைய புருஷன் சிரவணம், மனனம், நிதித்தியாசனமாம் மூன்றினை அவசியமாய்ச் சம்பாதிக்கவேண்டும். இச்சுருதியானது ஆத்ம தத்துவ ஞான சாக்ஷாத்காரத்தினது பிராப்தியின் பொருட்டு, சிரவணம், மனனம், நிதித்தியாசனமென்னும் மூன்று சாதனங்களை விதித்துளது. இனி முறையாக அச்சிரவணமுதலிய மூன்றின் லக்ஷணங் கூறுவாம்.

## ருங. சிரவணத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ச்ரோத்ரிய ப்ரஹ்மநிஷ்ட குரோர் முகாச் ச்ருதிவாக்யார்த்த விஜ்ஞானம் ச்ரவணம்" இ-ள். எக்குரு சுரோத்திரியராகி அதாவது நானா யுக்திகளால் சிஷ்யரது ஐயத்தை நிவிர்த்திச் செய்வதிற் சமர்த்தராகியும், பிரஹ்ம்ம நிஷ்டராகி அதாவது ஆத்ம தத்துவ சாக்ஷாத்காரமுடையவருமாகின்றரோ அத்தகைய சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவின் முகத்தினின்றும் சுருதி வாக்கியங்களின் அர்த்தத்தை அறிவது சிரவணமாம்.

## ருச. மனனத்தின் லக்ஷணம்.

"ஸாதக பாதக ப்ரமாணவந்த்யாஸ பூர்வ யுக்திபிஸ் ச்ருதார்த்த சிந்தனம் மநநம்" (இ-ள்.) அச்சிரவணஞ் செய்யப்பட்ட அர்த்தத்திற்குச் சாதகமான பிரமாணங்களையும் அவ்வர்த்தத்தினும் விபரீதமான அர்த்தத்தைப் பாதிக்கும் பிரமாணங்களையும் விளக்குதல் வடிவயுக்திகளால் சிரவணஞ்செய்யப்பட்ட அர்த்தத்தினை மீண்டு மீண்டும் சிந்திப்பது மனனமாம். இவ்விதமாகச் சிரவணம், மனனங்களின் சொரூபம் சுருதிகளினும்

கூறப்பட்டிருக்கிறது. ஆண்டுச் சுருதி "𑌶𑍍𑌰𑍋𑌤𑌵𑍍𑌯𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯 𑌶𑍍𑌚𑍋𑌪 𑌪𑌤𑍍𑌤𑌿𑌭𑌿𑌃" (இ-ள்.) ஆத்மா சுருதி வாக்கியங்களால் சிரவணஞ் செய்யயோக்கியமும், சாதக பாதக பிரமாணங்களின் விளக்கவடிவ யுக்திகளால் மனனஞ் செய்ய யோக்கியமுமாம்.

## ருரு. நிதித்தியாசனத்தின் லக்ஷணம்.

"𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌯 𑌨𑍈𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑍇𑌣 𑌦𑍀𑌰𑍍𑌘𑌕𑌾𑌲 𑌅𑌨𑍁𑌸𑌨𑍍𑌧𑌾𑌨𑌂 𑌨𑌿𑌦𑌿𑌧𑍍𑌯𑌾𑌸𑌨𑌂" (இ-ள்.) சிரவணஞ்செய்யப்பட்ட அர்த்தத்தினை நிரந்தரம் (இடைவிடாது) நீண்டகால பரியந்தம் அநுசந்தானம் செய்வது நிதித்தியாசன மாம். இவ்வாறாய சிரவணம், மனனம், நிதித்தியாசனங்களால் அதிகாரிக்குத் தத்துவ ஞானத்தின் அடைவு உண்டாகின்றது.

## ருசு. நிஷ்காமகர்மம், ஆத்மசுத்தி, வைராக்கியம், சிரவண முதலியன, தத்துவஞானம், மோக்ஷமா மிவைகளில் முன் முன்னுள்ளவைகள் பின் பின்னுள்ளவைகட்குச் சாதனத்தன்மையின் வர்ணணம்.

வைராக்கியமின்றி விஷய விருப்புடையவனுக்கு அச்சிரவண முதலியவைகளில் பிரவிருத்தி சம்பவியாது. ஆகையால் அதிகாரியானவன் சிரவண முதலியவைகளை அடையும்பொருட்டு முதலில் வைராக்கியத்தைச் சம்பாதிக்க வேண்டும். இவ்வுலக விஷயங்களாலும், சொர்க்கமுதலிய வுலகங்களின் விஷயங்களாலும் உண்டான எல்லாச் சுகங்களையும், அச்சுகங்கட்குச் சாதனங்களான அனைத்தினும் இச்சையில்லாத் தன்மையினை வைராக்கிய மெனப்படும். அத்தகைய வைராக்கியம் அசுத்த ஆத்மாவிலுண்டாகாது, சுத்த ஆத்மாவிலேயே அவ்வைராக்கிய முண்டாகின்றது. ஆகையால் அவ்வைராக்கியத்தையடையும் பொருட்டு அதிகாரியானவன் ஆத்மாவின் சுத்தியைச் சம்பாதிக்கவேண்டும். பாபகர்மங்களின் க்ஷயத்தினை ஆத்ம சுத்தியென்பர். அவ்வாத்மசுத்தி நிஷ்காம கர்மங்களின்றி யுண்டாகாது. ஆகையால் இக்கிரமம் சித்தித்தது; நிஷ்காமகர்மங்களால் ஆத்மசுத்தியுண்டாம், அவ்வாத்மசுத்தியால் விஷயங்களில் வைராக்கியமுண்டாம், அவ்வைராக்கியத்தால் சிரவணமுதலியவைகளிற் பிரவிர்த்தியுண்டாம், அச்சிரவணாதிகளால் தத்துவஞான முண்டாம், அத்தத்துவ ஞானத்தால் நிச்சிரேயசு வடிவ மோக்ஷமுண்டாகின்றது.

சங்கை:—எங்ஙனம் காசியில் மரணமடைதல் முதலியவைகட்குச் சாக்ஷாத்தாக மோக்ஷத்தின் சாதனத் தன்மையின்றோ அங்ஙனமே அத்தத்துவ ஞானத்திற்கும் சாக்ஷாத்தாக மோக்ஷத்தின் சாதனத்தன்மையின்று. ஏனெனின் தத்துவஞானிகட்கும் சம்சாரத்தில் அவஸ்திதி (அகப்பட்டுநிற்றல்) காணப்படுகின்றது. அத்தத்துவ ஞானம் சாக்ஷாத்தாக மோக்ஷத்திற்குச் சாதனமாயின், தத்துவஞானிகட்குச் சம்சாரத்தில் அவஸ்திதி யுண்டாகாததாக வேண்டும்.

### ருஎ. ஜீவன்முக்திவடிவ அபரமோக்ஷத்தினதும் விதேகமுக்திவடிவ பரமோக்ஷத்தினது வர்ணனம்.

சமாதானம்:—அம்மோக்ஷம் இருவிதமாகின்றன. ஒன்றோ பரமோக்ஷமும், மற்றையது அபரமோக்ஷமுமாம். ஜீவன்முக்தியினை அபரமோக்ஷமென்றும், விதேகமுக்தியினைப் பரமோக்ஷமென்றுங் கூறப்படும். ஆண்டுச் சிரவணமுதலிய சாதனங்களால் நிச்சயஞ் செய்யப்பட்ட ஆத்மாவின் நிஜசொரூபமும், இடைவிடாதஞானாப்பியாசத்தால் தேகாதிகளிடத்தில் ஆத்மத் தன்மைப்புத்தி வடிவ மித்தியாஞான நிவிர்த்தியுமுடைய பிராரப்தகர்மத்தின் போக்தாவாகிய தத்துவ வேத்தாவிற்குச் சீவன் முக்தி வடிவ அபரமோக்ஷமோ தத்துவஞானத்திற்குப் பின்னரே பிராப்தமாகின்றது.

### ருஅ. விதேகமுக்தியேன்னும் பரமோக்ஷத்தினது பிராப்தியின் கிரம வர்ணனம்.

மற்றய விதேகமுக்தி என்னும் பரமோக்ஷமோ தத்துவவேத்தாவிற்கு (தத்துவமுணர்ந்தோனுக்கு)த் தத்துவஞானத்திற்குப் பின்னருண்டாவதின்று ஆனல்முறையாகவுண்டாகின்றது. நியாயசாத்திரத்தில் கௌதமமுனியானவர் கூறியஅம்முறையிதுவாம் ஆண்டுச்சூத்திரம், “[illegible]” (இ-ள்.) துக்கம், ஜன்மம், பிரவிர்த்தி, தோஷம், மித்தியாஞானமென்னுமிவ் வைந்தனுள்முன்முன்னுள்ளவைகளை அபேக்ஷித்துப்பின்பின்னுள்ளவைகளின் அபாவமுளதாக, அப்பின் பின்னுள்ளவைகளோடு மறைப்பின்றி முன்முன்னிருப்பதின் அபாவம்யாதோ அதனல் பரமோக்ஷமெனப் பெயரிய அபவர்க்கம் (வீடுபேறு):பிராப்தமாகின்றது. ஈண்டுக் கருத்திதுவாம். நான் மனிதன், நான் பிராம்மணன், நான் செவிடன், நான் குருடன் என இவ்வாறுகத்தேகேந்திரியமுதலியவைகளிலுள்ள ஆத்ம புத்தி வடிவ மயக்கத்தினை மித்தியாஞானமெனப்படும். அம்மித்தியா ஞானத்தால் இஷ்ட வத்துவின் ராகவடிவமும், அநிஷ்டவத்துவில் துவேஷவடிவமுமான தோஷங்கள் உண்டாகின்றன. அந்த ராகத்துவேஷ வடிவ தோஷத்தால் தர்ம அதர்ம வடிவ பிரவிருத்திகளுண்டாகின்றன, அத்தர்ம அதர்ம வடிவ பிரவிர்த்தியால் சரீரத்தின் சம்பந்த வடிவ ஜன்மமுண்டாகின்றது. அஜ்ஜன்மத்தால் துக்க முண்டாகின்றது. இவ்வாறுகப் பரம்பரையால் அம்மித்தியாஞானமே ஆத்மாவின் சம்சாரத்திற்குக் காரணமாகின்றது. எப்பொழுது அதிகாரிக்கு முற்கூறிய சிரவணமுதலிய சாதனங்களால், தேகம், இந்திரியம் முதலிய வெல்லாபதார்த்தங்களினும் ஆத்மா வேறுமென்னும், தத்துவஞான முண்டாகின்றதோ, அப்பொழுது அத்தத்துவஞானத்தால் நான்மனிதன், நான்பிராம்மணனென்னும் இவை முதலிய வாசனையோடு கூடிய எல்லா மித்தியா ஞானங்களும் நிவிர்த்தியாய் விடுகின்றன. அவ்வாசனையோடு கூடிய மித்தியா ஞானத்தின் நிவிர்த்தியால் அவ்வாசனையோடு கூடிய ராகத்துவேஷ வடிவ தோஷங்களின் அபாவ முண்டாகின்றது. இராகத் துவேஷ வடிவ தோஷங்களின் அபாவத்தால் தர்ம

அதர்ம வடிவ பிரவிர்த்தி உண்டாகா. தர்ம அதர்ம வடிவ பிரவிர்த்தி உண்டாகாததால் பிராரப்த கர்மத்திற்குப்பயனாகிய இத்தேகத்தினும் வேறான தேகத்தின் சம்பந்த வடிவ ஜன்மத்தின் அபாவ முண்டாகின்றது. அச்சரீர சம்பந்த வடிவ ஜன்மத்தின் அபாவத்தால் இருபத்தொரு துக்கங்களின் நாச முண்டாகின்றன. இவ்விருபத்தொரு துக்கங்களின் அத்தியந்தநிவிர்த்தி (மீண்டும் வாராது தொலைதல்)யே பரமோக்ஷமெனப்படும். இவ்வாறாகக் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தினாலே அத்தத்துவ ஞானத்திற்கு விதேக முக்தி என்னும் பரமோக்ஷத்திற்குக் காரணத் தன்மை யுண்டு.

## ருக. போகத்தானேயே கர்மத்தின் நாசமுண்டாகின்றதாகையால் அப்போகத்தின் பொருட்டு ஞானிக்கும் ஜன்மமுண்டாகு மென்னும் பூர்வபக்ஷத்தின் வர்ணனம்.

சங்கை:—தத்துவ வேத்தாவிற்குத் தத்துவ ஞானத்தின்பின்னருண்டாம் புண்ணிய பாப வடிவ கர்மத்தால் ஜன்மத்தின் பிராப்தி யுண்டாகாது. எனினும் அத்தத்துவ ஞானத்திற்குமுன் அனேக ஜன்மங்களிற் செய்துள்ள புண்ணிய பாபகர்மங்களினால் தத்துவ வேத்தாவிற்கும் ஜன்மத்தின் பிராப்தி அவசியமுண்டாகும். ஏனெனின், ஸ்மிருதிகளில் போகத்தினானேயே கர்மங்களின் நாசங் கூறப்பட் டிருக்கின்றது. ஆண்டு ஸ்மிருதி "அவஶ்யமேவ ஹோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம் । நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடி ஶதைரபி" (இ-ள்.) செய்யப்பட்ட சுபகர்மமும், அசுபகர்மமும் அவசியமாய் அநுபவிக்க வேண்டும். போகமின்றி நூறுகோடி கற்பங்களானாலும் அச்சுப அசுப கர்மங்கள் நாசமாவதில்லை. ஆகையால் தத்துவ வேத்தாவிற்கு முன்னுள்ள சஞ்சித கர்மங்களின் வசத்தால் ஜன்மத்தினடைவு அவசிய முண்டாகும்.

## ருஉ. போகத்தினைப்போன்று பிராயச்சித்தத்திற்கும், தத்துவஞானத்திற்கும் கர்மத்தை நாசஞ் செய்யுந்தன்மையின் வர்ணனம்.

சமாதானம்:—கேவலம் போகத்தினானேயே அச்சுபாசுப கர்மங்களின் நாசமுண்டாகின்றது வேறுபாயங்களா லுண்டாகிறதில்லை என்னும் நியமம் யாண்டுஞ் சம்பவியாது. ஏனெனின் "தர்மேண பாபமபநுததி" (இ-ள்.) அதிகாரி புருஷன் தர்மத்தால் பாபத்தை நிவிர்த்திச் செய்கின்றான். இச்சுருதியில் பலபோகமில்லாமலே கேவலம் தர்மத்தினானேயே அப்பாபத்தின் நிவிர்த்திக் கூறப்பட்டிருக்கின்றது. அன்றியும் தர்மசாத்திரத்தில் மநு யாஞ்ஞியவல்கியர் முதலிய ரிஷிகளானோர் அவ்வப்பாப நிவிர்த்தியின் பொருட்டு அனேக பிராயச் சித்தங்கள் கூறியிருக்கின்றனர். அந்தப் பிராயச்சித்தங்களாலும் பலபோகமில்லாமலே பாபங்களின் நிவிர்த்தி யுண்டாகின்றது. இவ்வாறாகத் தர்மத்திற்கும் பல போகமில்லாமலே நிவிர்த்தி சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுச்சுலோகம் "கர்மநாஶாஜலஸ்பர்ஶாத் கரதோயாவிலங்கநாத் । கண்டகீபாஹுதரணாத் கர்ம க்ஷீயதே நாத்ர" (இ-ள்.) கர்மநாச நதியினைப் பரிசிப்பதாலும் கர்த்தோயாநதியினைக்

கடந்து கரைசேருவதாலும், கண்டநதியினை தோள்களால் நீந்துவதினாலும், செய்துள்ள தருமத்தை உலகவர் முன்னிலையிற் புகழ்ந்துகொள்ளுவதினாலும், அத்தர்மங்கள் நஷ்டமாய் விடுகின்றன. இவ்வாறாகச் சுக துக்க வடிவ பயன்களை அநுபவிக்காமலே கூறிய பிராயச் சித்தமுதலிய வுபாயங்களால் அச்சுபாசுபகர்மங்களின் நாசம் சுருதிஸ்மிருதி வடிவசாத்திரங்கள் கூறியிருக்கின்றன. அங்ஙனமே அச்சுருதி ஸ்மிருதிவடிவசாத்திரங்கள் தத்துவஞானத்தாலும் அச்சுபா சுப வடிவ சர்வ சஞ்சித கர்மங்களின் நாசமுங் கூறியிருக்கின்றன. ஆண்டுச் சுருதி “ க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ” (இ-ள்.) நம்மனோர் முதலிய ஜீவர்களின் அபேக்ஷையால் பரமா (உயர்வா)யுள்ள பிரம்மா முதலியயாவரும் எதைநோக்க அவரமெனப்படும் நிக்கிருஷ்டம் (இழிந்தவர்கள்) ஆவார்களோ அதனைப் பராவரம் எனப்படும். அத்தகைய பராவர வடிவம் பரமாத்மாவின் தரிசனமுண்டாகத் தத்துவ வேத்தாவினது முன்னுள்ள சுபாசுபவடிவ சர்வ சஞ்சிதகர்மங்கள் நாசத்தை அடைகின்றன. ஆண்டுச் சுருதி “ ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா யா ” (இ-ள்.) ஏ அர்ச்சுனா! எங்ஙனம் ஜ்வாலையோடு கூடிய பெரிய வன்னி காஷ்டங்களின் சமூஹ (கூட்ட) ங்களை பஸ்மஞ் செய்கின்றதோ அங்ஙனமே தத்துவஞானமான வன்னி சர்வசஞ்சித கர்மங்களையும் நாசஞ் செய்கின்றது. என்னுமிவைமுதலிய அனேக சுருதிஸ்மிருதி வசனங்கள் தத்துவஞானத்தால் பூர்வமுள்ள சர்வகர்மங்களின் நாசத்தைக் கூறியிருக்கின்றன. ஓர் கால் கேவலம் போகத்தானேயே சுபாசுப கர்மங்களின் நாசமுண்டாகுமாயின் முற்கூறிய எல்லா வசனங்களும் அசங்கதமாகும். ஆகையால் அவசியம் போகிக்கவேண்டும் என இச்சுருதியில் கூறப்பட்ட போகமென்னும் பதம் பிராயச் சித்தம், தத்துவ ஞானமுதலாக சுபாசுப கர்மங்களை நாசஞ் செய்யும் எல்லாவற்றிற்கும் உபலக்ஷணமாம். அல்லது பிராரப்த கர்மங்களுக்கு போகமின்றி நாசமுண்டாகாமல் கேவலம் போகத்தானேயே நாசமுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய ஸ்மிருதி வசனம் அந்த பிராரப்தகர்மங்களின் மீதேயுளது. சஞ்சித கர்மங்களின் மீதிராது. இவ்வாற்றால் அத்தத்துவ வேத்தாவிற்கு முன்னுள்ள எல்லாக் கர்மங்களும் அத்தத்துவ ஞானத்தினானேயே நாசமாய் விடுகின்றன. அன்றியும் எப்பிராரப்தகர்மமானது அத்தத்துவவேத்தாவினது சரீரத்தைவுண்டாக்குகின்றதோ, அந்தப் பிராரப்த கர்மமோ பலத்தின் போகத்தானேயே நாசமாய் விடுகின்றது. வேறோருபாயத்தால் நாசமாவதன்று. அந்தப் பிராரப்த கர்மத்தின் நாசத்திற்குப்பின் தத்துவ வேத்தாவிற்கு இருபத்தொரு துக்கங்களின் ஆத்தியந்தக (முற்றும்) நிவிருத்தி வடிவ பரமோக்ஷம் பிராப்தமாகின்றது.

### ௬௧. தத்துவஞானத்திற்குப்பின் காயவியூகத்தால் சர்வகர்மங்களினது பலத்தின் போகமென்னும் மதத்தினது வர்ணனம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர், எங்ஙனம் பிராரப்த கர்மங்கள் பலபோகமின்றி நாசமாவனவன்றோ, அங்ஙனமே அச்சஞ்சித கர்மங்களும் பல போகமின்றி கேவலம் தத்துவ ஞானத்தால் நாசமாவனவன்று.

ஆனால் சஞ்சித கர்மங்களும் பல போகத்தாலேயே நாசமாகின்றன. ஆகையால் தத்துவ வேத்தா அக்காலத்தில் அத்தத்துவஞானத்தின் பிரபாவத்தால் அனேகவிதமான சரீரங்களைத் தரிக்கின்றான். அவ்வனேகவித சரீரங்களைச் சாத்திரத்தில் காயவியூக மென்னும் நாமத்தால் வழங்கப் பட்டிருக்கிறது. அனேக ஜன்மங்கட்கு முன்னுள்ள கர்மங்களுள் எவ்வெச்சுப அசுப கர்மங்களின் சுகதுக்க வடிவ பயன்கள் எவ்வெச்சரீரத்தில் அனுபவிக்கப்படுமோ, அவ்வச்சரீரத்தின் சுகதுக்க வடிவபயன்கள் அவ்வச்சரீரத்தில்ஒரே காலத்தில் அநுபவிக்கப்பட்டு அதன் பின்னர் தத்துவ வேத்தாக்கள் அப்பரமோக்ஷத்தையடைகின்றனர். இம்மதம் முற்கூறிய தத்துவஞானத்தால் கர்மங்களின் நாசத்தைக் கூறியுள்ள சுருதி ஸ்மிருதிகட்கு விருத்தமாவதால் சிரத்தைசெய்யத் தகுதியன்று.

## ௬௨. இருபத்தோரு துக்கங்களின் சொரூப வர்ணனம்.

சரீரம் ஒன்று, சுரோத்திர முதலிய விந்திரியங்கள் ஆறு, சுரோத்திர முதலிய விந்திரியங்களின் விஷயம் ஆறு, சுரோத்திரமுதலிய விந்திரியங்களால் உண்டாவதான புத்திகள் (ஞானங்கள்) ஆறு, சுகம் ஒன்று, துக்கம் ஒன்று ஆக இருபத்தொரு துக்கமெனப்படுகின்றன. அதாவது சரீரம், சுரோத்திரேந்திரியம், துவக்கிந்திரியம், சட்சுவிந்திரியம், இரசனேந்திரியம், கிராணேந்திரியம், மனேந்திரியம், சுரோத்திரேந்திரியத்தின் சத்த முதலிய விஷயங்கள், துவக்கிந்திரியத்தின் பரிசமுதலிய விஷயங்கள், சக்ஷு விந்திரியத்தின் உருவ முதலிய விஷயங்கள், இரசனேந்திரியத்தின் இரசமுதலிய விஷயங்கள், கிராணேந்திரியத்தின் கந்தமுதலிய விஷயங்கள் மனேந்திரியத்தின் சுக, துக்க முதலிய விஷயங்கள், சுரேத்திரேந்திரியத்தால் ஜன்னிய (உண்டாம்) சத்தமுதலிய விஷயங்களின் சிராவண ஞானம், துவக்கிந்திரியத்தால் ஜன்னிய பரிசமுதலிய விஷயங்களின் துவாச ஞானம், சக்ஷு விந்திரியத்தால் ஜன்னிய உருவமுதலிய விஷயங்களின் சாக்ஷுஷஞானம், இரசனேந்திரியத்தால்ஜன்னிய இரசமுதலிய விஷயங்களின் இராசன ஞானம், கிராணேந்திரியத்தால் ஜன்னிய கந்தமுதலிய விஷயங்களின் கிராணஜஞானம், மனேந்திரியத்தால் ஜன்னிய சுகதுக்கமுதலிய விஷயங்களின் மானச ஞானம், சுகம், துக்கம், ஆக இவை இருபத்தொரு துக்கங்களெனப்படுகின்றன.

## ௬௩. முக்கிய கௌணபேதத்தால் இருவித துக்க சப்தத்தினது அர்த்தத்தின் வர்ணனம்.

பாபகர்மத்தாலுண்டாயதும், நான் துக்கி என்னும் பிரதீதிக்கு விஷயமும், ஆத்மாவின் விசேஷ குணமுமான அத்தகைய துக்கத் தன்மை ஜாதியுடைய பிரசித்ததுக்கமே ஆத்ம துக்க சப்தத்திற்கு முக்கிய அர்த்தமாம். துக்கத் தன்மை ஜாதியில்லாத சரீரமுதலிய விருபதுகளோ சாக்ஷாத் அல்லது பரம்பரையாக முக்கிய துக்கத்தை யுண்டாக்குவனவாம். ஆகையால் அச்சரீர முதலிய விருபதுகளும் ஆத்ம துக்க சப்தத்திற்கு கௌண அர்த்தமாம். ஆகையால் முக்கிய துக்கத்தைப் போன்று சரீர முதலியவைகளும் துக்க

சப்தத்தாற் கூறப்பட்டது. எங்ஙனம்:—சாக்ஷாத்தாக விஷத்தை புசித்தவனி டத்தும் விஷத்தைப் புசித்தானெனவிஷ பதத்தின் பிரயோக முண்டா கின்றது. விஷங்கலந்த மதுவைப் புசித்தவனிடத்தும் விஷத்தைப் புசித்தா னென்றும் விஷ பதத்தின் பிரயோகமுண்டாகின்றது. அதாவது எங்ஙனம் விஷத்திலும், விஷங்கலந்த மதுவிலும் விஷபதத்தின் பிரயோகம் சமான மாகின்றதோ அங்ஙனமே முக்கியதுக்கத்திலும், அத்துக்கத்தையுண்டாக்கும் சரீரமுதலியவைகளிலும், துக்க பதத்தின் பிரயோகம் சம்பவிக்கின்றது. ஆகையால் ஈண்டுச் சரீரமுதலிய இருபத்தொன்றையும் துக்க சத்தத்தாற் கூறுதல் கூடும்.

சங்கை:—சரீரம், இந்திரிய முதலியன துக்கத்தை யுண்டாக்குவனவா மா கையால் சரீரமுதலியவைகளில் கௌண துக்கவடிவத்தன்மைசம்பவிக்கின்றன. எனினும் சொர்க்கமுதலிய சுகங்களில் கௌண துக்க வடிவத் தன்மையும் சம்பவியாது. ஏனெனின் "யந்நது:கேந ஸம்பிந்நம்" இவை முதலிய சுரு திகள் சொர்க்க சுகத்தை துக்கமில்லாததாகக் கூறியிருக்கின்றன.

## கூச. சொர்க்க முதலிய சுகங்களிலும் துக்கத்தை உண்டுபண்ணுந் தன்மையால் துக்கவடிவத் தன்மையின் வர்ணனம்.

சமாதானம்:—அச்சொர்க்க சுகம் துக்கமில்லாததன்று. முதற்காலத் திலும், இடைக்காலத்திலும், கடைக்காலத்திலும் சொர்க்க சுகம் துக்கத் தாலேயே நிறைந்துளது. ஆண்டுச் சொர்க்க சுகம் மிகுந்த தனத்தைச்செல விடுவதினாலும், சரீரத்தின் ஆயாசத்தினாலும், புருஷர்கட்குப் பிராப்தமா கின்றது. ஆகையால் அச்சொர்க்கசுகம், முதற்காலத்திலும் துக்கத்தால் வியாப்தமா (நிறைந்ததா) கின்றது. சொர்க்கமடைந்த புருஷர்களுக்குத் தன்னினும் மிகுந்தபோகமுடைய தேவதைகளைக்கண்ணுறுவதால் பொறாமை யினாலுண்டாகும் துக்கமுண்டாகின்றது. அன்றியும் இந்திரன் முதலிய தே வர்களுக்கும் பராதீனத்தன்மை (சுதந்திரமின்மை) யாலுண்டாகும் துக்கமும் கீழ்வீழ்தலின் பயத்தாலுண்டாகும் துக்கமு முண்டாகின்றது. ஆகையால் சொர்க்கம் இடைக்காலத்திலும் துக்கத்தால் வியாப்தமாகின்றது எப்பொ ழுது சொர்க்கமடைந்தவர்களது புண்ணிய நாசத்திற்குப் பின்னர் கீழ்வீழ்த லுண்டாகின்றதோ, அப்பொழுதும் அவர்கட்கு அச்சொர்க்கசுகத்தை நீங்கு வதனாலுண்டாகும் துக்கமுண்டாகின்றது. ஆகையால் அச்சொர்க்க சுகம், கடைக்காலத்திலும் துக்கத்தால் வியாப்தமாகிறது. இவ்வாறாக மது விஷங் கலந்த அன்னத்தைப்புசிப்பதனாலாய திருப்தியினைப்போன்று பலதுக்கங்க ளால்நிறைந்துள்ளதால் சொர்க்கத்தின்சுகமும் துக்கவடிவமேயாம். சொர்க்க சுகம் அனேக துக்கங்களால் நிறைந்துள்ள தெனின் இவ்வுலகவிஷயங்களா லுண்டாஞ் சுகத்தைக் கூறுவானேன். "யந்நது:கேந ஸம்பிந்நம்" என்னும் இச் சுருதியோ சகாம புருஷர்களை யாகாதி கர்மங்களில் பிரவிர்த்திப்பான் வேண்டி அச்சொர்க்கத்தின் புகழ்ச்சிக் கூறியதாம். ஆகையால் அச்சுருதி அர்த்தவாதவடிவமாம் அர்த்தவாத வடிவ சுருதியால் அச்சொர்க்க சுகத்தில்

எல்லாத் துக்கங்களில்லாத் தன்மை சித்தியாது. அல்லது முற்கூறிய அச்சுருதி அவசியம் வரப்போகிறத் துக்கங்களினும் வேறான வியாதியாலுண்டாம் துக்கங்களின் அபாவத்தைக் கூறியதாம். சர்வதுக்கங்களின் அபாவத்தைக் கூறியதன்று. ஆகையால் அச்சுருதிக்கும் விரோதம் உண்டாகாது.

கூடு. ஆறுஞானங்கள், சரீரம், சுகம், துக்கம் என்னும் ஒன்பான் துக்கங்கள் விஷயங்களில் அடங்குவதாயினும் அவைகளை வேறாக எழுதுவதனாலாம் பயன்.

சங்கை:—முக்கிய துக்கத்தினை யுண்டாக்குந் தன்மையால் அச்சரீர முதலியவைகளில் கௌண துக்க வடிவத் தன்மைச் சம்பவிக்கின்றது, என்றாலும் இருபத்தொரு துக்கங்கள் சம்பவியா. ஆனால் ஆறு இந்திரியங்களும், ஆறுவிஷயங்களுமான இப்பனிரெண்டுவிதமான துக்கங்களே சம்பவிக்கின்றன, ஏனெனின் சரீரமும், அறுவகை புத்தியாகிய ஞானமும், சுகதுக்கமாமெனான்பதும் இவைகளுக்கு விஷயத் தன்மை வடிவத்தானேயே சங்கிரஹமாகின்றன. ஆண்டுச்சரீரமோ சக்ஷுவிந்திரிய ஜன்னிய ஞானதிற்கும், துவக்கிந்திரிய ஜன்னிய ஞானத்திற்கும் விஷயமாம், அவ்வாறுவிதஞானங்களும், சுகதுக்கமுமாகிய வெட்டும் மனவந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயங்களாம்.

சமாதானம்:—உண்மை விசாரத்தால் நோக்கின் இந்திரியம் ஆறு, விஷயம் ஆறு, என்னும் இப்பன்னிரண்டுவிதத்தானேயே துக்கம் சம்பவிக்கின்றது. சரீரம், ஆறு ஞானம், சுகம், துக்கமா மிவ்வொன்பான்களுக்கு அறுவித விஷயங்களிலேயே அடக்கம் சம்பவிக்கின்றது. எனினும், சரீரமும், அறுவித புத்தி வடிவ ஞானங்களுமான இவ்வேழில் முக்கிய துக்கத்தின் அசாதாரண காரணத் தன்மை யிருப்பதால், வேறுகட முதலியவைகளின் அபேக்ஷையால் அவைகளுக்குப் பிரதானத் தன்மையிருக்கின்றனவென்னும் அர்த்தத்தைக் குறிப்பிப்பான் கருதியும், முக்கியத் தன்மையால் விடத்தக்கதான அத்துக்கத்தினும் வேறான சரீரமுதலிய விருபதுகளோ அத்துக்கத்தின் சம்பந்தித் தன்மையால் விடத்தக்கதுமாம் என்னும் அர்த்தத்தைக் குறிப்பிப்பான் வேண்டியும் சரீரம், ஆறுவித ஞானம், சுகம், துக்கமாமொன்பான்களுக்கு அந்தவிஷயத்தினும் வேறானவை என்னும்வசனங்கூறப்பட்டது.

கூகூ. சத்த முதலிய ஆறுவிஷயங்களும், ஆத்மாவோடு சம்பந்தமில்லாததாவதாலும், நித்தியமாவதாலும் அவைகளின் நாசத்தில் மோக்ஷ வடிவத் தன்மையினது அசம்பவத்தின் சங்கை.

சங்கை:—சரீரம், ஆறு விந்திரியங்கள், ஆறு ஞானங்கள், சுகம், துக்கங்களா மிப்பதினைந்து துக்கங்களோ அவ்வஜ்ஜீவாத்மாவின் சம்பந்தமுடையனவாம். ஆகையால் தத்துவஞானத்தால் அவ்வஜ்ஜீவாத்மா முக்தனாக அப்பதினைந்து துக்கங்களின் நிவிர்த்தியோ சம்பவிக்கின்றது. ஆனால் சத்தம் ,பரிச முதலிய அறுவித விஷயங்களோ அவ்வவ் வாத்மாவின் சம்பந்தமுடையனவன்று. ஆகையால் அவ்வவ்வாத்மாவிற்கு முக்தியுண்டாக அச்சத்தம், பரிச முதலிய அறுவகை விஷயங்களின் நிவிர்த்தி சம்பவியாது,

அல்லது எச்சைத்திரனெனப்பெயரிய புருடனுக்குச் சுரோத்திரமுதலிய விந்திரியங்களின் சத்தம்; பரிசமுதலிய வெல்லாவிஷயங்கள் நஷ்டமாய்விட்டனவோ அச்சைத்திரனென்போனுக்கு மோக்ஷமுண்டாவதாக ஒருவரும் அங்கீகரிக்க மாட்டார்கள். ஆகையால் சத்தமுதலிய விஷயங்களின் நாசத்தில் முக்தி வடிவத் தன்மை யொப்புவது முற்றும் விருத்தமாம். அல்லது அவ்விஷயங்களின் நாசத்தில் மோக்ஷ வடிவத் தன்மை சம்பவியாது. எற்றுக்கெனின், அச் சுரோத்திர முதலிய விந்திரியங்களின் விஷயங்களான சத்தம், பரிச முதலியன நித்தியமல்லாதனவாம். ஆகையால் அவற்றின் நாசம் சம்பவிக்கின்றன, வென்றாலும் அச்சுரோத்திர முதலிய விந்திரியங்களின் விஷயங்களான, சத்தத் தன்மை, பரிசத் தன்மை முதலிய சாதிகளும், மனதுக்கு விஷயமான ஆத்மாவுமா மெல்லா விஷயங்களும் நித்தியமாம். ஆகையால் அவைகளுக்கு நாசமே சம்பவியாது.

### ௬௭. விஷயசப்தத்தால் அந்த விஷயசம்பந்தி யிச்சாவடிவ ராகத்தின் கிரஹணத்தால் அவற்றின் நாசத்தில் மோக்ஷவடிவத் தன்மையின் சம்பவம்.

சமாதானம்:—ஈண்டு விஷய பதத்தால் அவ்வச்சத்த முதலிய விஷயங்களின் ராக (விருப்ப)த் தினையே கொள்ளல்வேண்டும். அந்த ராகம், வெளிப்பட்ட இச்சைவடிவமாவதால் ஆத்மாவின் சம்பந்தமுடையதும், அநித்தியமுமாம். ஆகையால் சரீரமுதலியவைகளைப் போன்று ராகவடிவ ஆறுவிஷயங்கட்கும் நிவிர்த்தி சம்பவித்துவிடுகின்றது. அங்ஙனமே ராகவடிவ விஷயங்களின் நாசத்தில் முக்தி வடிவத் தன்மையும் சம்பவிக்கின்றது.

### ௬௮. சுரோத்திரயமும், மனமுமா மிவ்விரண்டிற்கும் நித்தியமுளதாயினும் விசேஷணத்தின் நாசத்தால் அவ்விரண்டின் நாசவர்ணனம்.

சங்கை:—முற்கூறப்பட்ட சரீரமுதலிய இருபத்தொரு துக்கங்களில் ஆகாசவடிவ சுரோத்திர இந்திரியமும், மனமுமாம் இவ்விரண்டும் சித்தாந்தத்தில் நித்தியமாம். ஆகையால் அவ்விரண்டிற்கும் நாசங் கூறுதல் சம்பவியாது. சரீரமுதலிய பத்தொன்பதுகட்கே நாசம் சம்பவிக்கின்றது.

சமாதானம்:—விசேஷணத்தோடு விசிஷ்டமான சுரோத்திரமும், மனமும் ஞானத்தின் உற்பத்தி வாயிலாகத் துக்கத்தினேதுவாவதால் துக்க வடிவமாகின்றன. அவ்விசிஷ்ட வடிவ சுரோத்திர மனதுகட்கு, முக்திகாலத்தில் விசேஷணத்தின் நாசத்தால் நாசமுண்டாய் விடுகின்றன. இனி இப்பொருளைத் தெளிவாய் நிரூபிப்பாம். கர்ண கோளகத்திலுள்ள ஆகாசத்தினைச் சுரோத்திர விந்திரிய மெனப்படும். கேவல ஆகாசத்தினை சுரோத்திரமென்பதில்லை. அக்கர்ண கோளகமான விசேஷணத்துடன் விசிஷ்டமான ஆகாச வடிவ சுரோத்திரேந்திரியம் சத்துருவினது துர்வசனத்தின் ஞான வாயிலாகக் கேட்பவனது ஆத்மாவில் துக்கத்தினையுண்டாக்குகின்றது, ஆகையால் ஞானத்தினுற்பத்தி வாயிலாக துக்கத்தினை யுண்டாக்குவதாவதால் சுரோத்திரேந்திரியம், துக்க வடிவமேயாம். விதேக முக்தி காலத்தில் அக்கர்ண

கோளகமான விசேஷணம் நாசமாய்விடுகின்றது. ஆகையால் முக்தி காலத்தில் ஸ்வரூபத்தி னிருப்புளதாயினும் ஆகாச வடிவ சுரோத்திரம் அக்கர்ண கோளக வடிவ விசேஷணத்தின் அபாவத்தால் சத்த ஞானத்தினை யுண்டாக்குவது வாயிலாக ஆத்மாவில் துக்கத்தினை யுண்டாக்குகிறதில்லை. இவ்வாற்றால் முக்திகாலத்தில் கர்ண கோளகமான விசேஷணத்திற்கு நாசமுண்டாக, தத்விசிஷ்ட (தன்னுடன் கூடிய) சுரேந்தி ரேந்திரியத்திற்கும் நாசங் கூறப்பட்டது. இவ்வாறாக மனமும், ஆத்மாவோடு சையோக சம்பந்த வடிவ வியாபாரத்தால் விசிஷ்டமாக அவ்வாத்மாவில் ஞானத்தினை யுண்டாக்குவது வாயிலாகத் துக்கத்தினை யுண்டாக்குவதாவதால் துக்க வடிவமாகின்றது. அவ்வாத்மாவோடு மனதின் சையோக சம்பந்தம் மோக்ஷ காலத்திலுண்டாகிறதில்லை. ஆகையால் பரமோக்ஷ காலத்தில் தன் சொரூபத்தி னிருப்புளதாயினும் அம்மனம் சையோக சம்பந்த வடிவ வியாபாரத்தின் அபாவத்தால் ஞானத்தினை யுண்டாக்குவது வாயிலாக ஆத்மாவில் துக்கத்தினை யுண்டாக்குவதன்று.

சங்கை:—மோக்ஷ காலத்தில் ஆத்ம மனதுகளின் சையோக சம்பந்தம் அங்கீகரியாவிடின், மோக்ஷ காலத்தில் அம்முக்த ஆத்மாவில் விபுத்தன்மைச்சம்பவியாததாகும். ஏனெனின் "𑌸𑌰𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌤𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑌂𑌯𑍋𑌗𑌿𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌭𑍁𑌤𑍍𑌵𑌂" (இ-ள்.) பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமென்னு மிவ்வைந்து திரவியங்களைமூர்த்தத் திரவியங்களெனப்படும். இவ்வெல்லா மூர்த்தத் திரவியங்களோடுள்ள சையோகித்தன்மையே, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவென்னும் நான்கில் விபுத்தன்மையாம் ஆகையால் முக்த ஆத்மாவின் விபுத்தன்மையினை சித்திசெய்யும்பொருட்டு மோக்ஷ காலத்தில் முக்தஆத்மாவிற்கு மனதோடு சையோக சம்பந்தம் அவசிய மொப்ப வேண்டியதாகும்.

சமாதானம்:—முக்தி காலத்தில் ஆத்மாவிற்கு மனதோடு சையோக சம்பந்தமுண்டாகுக, என்றாலும் அச்சையோகத்திற்கு ஞானத்தினுற்பத்தியில் வியாபார வடிவத் தன்மையில்லை.

### ௬௯. புரீததியினும் பாகிய தேகாவச்சின்ன ஆத்ம மனச் சையோகத்தில் ஞானமாத்திரத்திற்குக் காரணத் தன்மையின் வர்ணனம்.

புரீததியென்னும் நாடியினும் பாகிய (புறம்பான) தேகாவச்சின்ன ஆத்ம மனச் சையோகமே அந்த்ஞானத்தினுற்பத்தியில் வியாபாரமாகின்றது, இக்காரணத்தானேயே சுழுத்தி அவத்தையில் புரீததியென்னும் நாடியில் பிரவேசமடைந்த மனத்திற்கு ஆத்மாவினோடு சையோக சம்பந்தமுளதாயினும், புரீததியின் வெளிதேகாவச்சின்ன ஆத்மமனதுகளின் சையோகத்தின் அபாவத்தால் ஓர் ஞானமும் உண்டாகிறதில்லை. அன்றியும் மோக்ஷ காலத்தில் சரீரத்தின் அபாவமுண்டாவதால் அச்சரீரத்தின் அவயவமான புரீததியின் அபாவமும் உண்டாகின்றது, ஆகையால் மோக்ஷ காலத்தில் ஆத்ம மனச் சையோகத்தின் அபாவத்தால் ஆண்டு ஞானத்தி னுற்பத்தி வாயிலாகத் துக்கத்தின் உற்பத்தி யுண்டாவதின்றாம்.

ஏ௰. துவக், மனச் சையோகத்தில் ஞானமாத்திரத்தின் காரணத் தன்மை வாதியின் மத வர்ணனம்.

சில் நூலாசிரியரோ விது கூறுகின்றனர். சுஷுப்தியில் ஞானத்தினுற்பத்தியை நிவிர்த்திப்பான் வேண்டி துவக்கினோடு மனதின் சையோகமே ஞானத்திற்கு நிமித்தகாரணமாக வொப்புகின்றனர். அம்மனம் அச்சுழுத்திகாலத்தில் துவாசமில்லாத புரீததியில் பிரவேசமாய் விடுகின்றது அக்காலத்தில் மனதிற்குத் துவக்கினோடு சையோகமிருப்பதில்லை ஆகையால் அச்சுழுத்தி காலத்தில் ஓர் ஞானமு முண்டாகிறதில்லை. ஜாக்கிரம், சொப்பன காலங்களில் மனதிற்குத் துவக்கினோடு சையோக சம்பந்த மிருக்கின்றதாகையால் சாக்கிர சொப்பனங்களில் அனேக ஞானங்கள் உண்டாகின்றன. ஆகையால் துவக்கின் சங்கமுடைய மனமே ஞானத்தினையுண்டாக்குவது வாயிலாகத் துக்கத்தினை யுண்டாக்குவதாவதால் துக்கவடிவமாகின்றது, மோக்ஷகாலத்தில் துவக்கிற்கு நாசமுண்டாய்விடுகின்றது. ஆகையால் மோக்ஷகாலத்தில் சொரூபத்தினிருப்புளதாயினும் அம்மனம் துவக்கு சையோக வடிவ வியாபாரத்தின் அபாவத்தால் ஞானத்தினுற்பத்தி வாயிலாகத் துக்கத்தினையுண்டாக்குவதன்று. ஈண்டு துவக்கென்னும் சப்தத்தால் துவக்கிந்திரியத்தைக் கொள்ளுக.

ஏக. சர்ம, மனச் சையோகத்தில் ஞானமாத்திரத்திற்குக் காரணத் தன்மை வாதியின் மத வர்ணனம்.

சில் நூலாசிரியரோ சுழுத்தியில் ஞானத்தினுற்பத்தியை நிவிர்த்திச்செய்வான் வேண்டிச்சர்மத்தினோடு மனதின் சையோகத்திற்கு ஞானமாத்திரத்தின் நிமித்த காரணமொப்புகின்றனர். சுழுத்தி காலத்தில் புரீததியில் பிரவேசமுள்ள மனத்திற்குச் சர்மத்தினோடு சையோகமிருப்பதில்லை, ஆகையால் அச்சுழுத்தியில் ஓர் ஞானமு முண்டாகிறதில்லை. ஜாக்கிர, சொப்பன காலங்களில் மனதிற்குச் சர்மத்தினோடு சையோக சம்பந்தமுண்டாகின்றது, ஆகையால் சாக்கிர சொப்பனங்களில் அனேக ஞானங்கள் உண்டாகின்றன. ஈண்டுச் சர்மமென்னும்சப்தத்தால் துவக்கிந்திரியமிருக்கும் கோளகத்தை கொள்ளுக. ஆண்டுப்புரீத்தியில் எங்ஙனம் துவக்கிந்திரிய மிருப்பதின்றோ அங்ஙனமே அத்துவக்கிந்திரியத்தின்கோளகமிருப்பதின்றும். இவ்வாறாக கோளகவடிவசர்மத்திற்கும் மோக்ஷ காலத்தில் அபாவமே யிருக்கின்றது. ஆகையால் மோக்ஷ காலத்தில் சொரூபத்தினிருப்புளதாயினும் அம்மன சர்ம சையோக வடிவு வியாபாரத்தின் அபாவத்தால் ஞானத்தினுற்பத்தி வாயிலாகத்துக்கத்தைஉண்டாக்குவதன்று. ஆகையால் இவ்வர்த்தம் சித்தமாயிற்று. சுரோத்திரேந்திரியமும், மனமுமாமிரண்டும் ஸ்வரூபமாக நித்தியமாயினும் முற்கூறிய கர்ண கோளக வடிவ விசேஷணத்துடன் விசிஷ்டமாகி ஞானத்தினுற்பத்தி வாயிலாகத் துக்கத்தினை யுண்டாக்குவ தாவதால் துக்கவடிவ மாகின்றது. மோக்ஷகாலத்தில் அவ்வக்கர்ண கோளக முதலிய விசேஷணத்தின் அபாவமுண்டாக தத்விசிஷ்ட சுரோத்திர, மனவடிவ துக்கங்கட்கும் நாசம் சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் சரீரமுதலிய விருபத்தொரு துக்கங்களின் அத்தியந்த

நிவிர்த்தி யாதோ அதுவே பரமோக்ஷமாம். இவ்வகையான மோக்ஷம் தத்துவ ஞானம் ஒன்றினாலேயே உண்டாகின்றது. வேறோர் உபாயத்தா லுண்டாவதன்று.

சங்கை:—தத்துவ ஞானமில்லாமலே தத்தங் காரணங்களால் அச்சரீர முதலிய துக்கங்களின் துவம்ச வடிவ நிவிர்த்தி சம்பவமாய் விடுகின்றது. துக்க நிவிர்த்தியின்பொருட்டுத் தத்துவஞானத்தைச் சம்பாதிப்பது வியர்த்தமாம்.

சமாதானம்:—சம்சார காலத்தில் தத்தங் காரணங்களால் அச்சரீர முதலிய துக்கங்களின் நிவிர்த்தியுண்டாகின்றன வென்றாலும், அத்துக்க நிவிர்த்தியில் அத்தியந்தத் தன்மையுண்டாகிறதில்லை, ஆகையால் அத்துக்கத்தின் நிவிர்த்தி முக்தி வடிவ மெனப்படுகிறதில்லை. முற்கூறிய முறைப்படி தத்துவஞானத்தா லுண்டாம் சரீர முதலிய துக்கங்களின் நிவிர்த்தியிடத்தேயே அத்தியந்தத்தன்மையிருக்கின்றது, ஆகையால் அவ்வத்தியந்தத் துக்க நிவிர்த்தியே முக்தியெனப்படும். இனி கூறிய இவ்வபிப்பிராயத்தானேயே முக்தியின் லக்ஷணம் கூறுவாம்.

## எஉ. ஆத்தியந்திக (முற்றும்) துக்க நிவிர்த்தி வடிவ முக்தியின் லக்ஷணம்.

“ ஸ்வஸமாநாதிகரணது:கப்ராகபாவாஸமாநகாலீந து:கத்வம்ஸ: ” (இ-ள்.) ஈண்டுச் சுவவென்னும் சப்தத்தால் துக்கத் துவம்ச (நாச) த்தினைக் கொள்ளுக அத்துக்கத்துவம்சத்தின் அதிகரண (இட)த்தில் இருப்பதாகிய துக்கத்தின் பிராகபாவம் (முன்னின்மை) யாதோ அத்துக்கப் பிராக பாவத்தோடு ஒருங்கில்லாத துக்கத் துவம்சத்தினை முக்தியெனப்படும். ஆண்டு சுகர், வாமதேவர் முதலிய முக்த புருஷர்களிடத்திலுள்ள சரீர முதலிய துக்கங்களின் துவம்சம் யாதோ அத்துக்கத் துவம்சம் சுவசமானாதிகரண (தன்னிலே களத்துளதான) துக்கப் பிராகபாவத்திேனாடு ஒருங்கில்லாதனவேயாம், ஆகையால் அத்துக்கத் துவம்சத்தில் முக்தி வடிவத்தன்மை சம்பவிக்கின்றது. ஆண்டு “துக்கத்துவம்சம்முக்தி” அதாவது துக்கத்தின் துவம்சம் யாதோ அதனை முக்தியென இம்மாத்திரமே முக்தியின் லக்ஷணமாகக் கூறின் இச்சம்சார காலத்தில் நம்மனோர் முதலிய பத்த ஜீவர்களிடத்தும் சரீர முதலிய சிறிது துக்கங்களின் துவம்சமுண்டாகின்றது. அத்துக்கத் துவம்சத்தில் அம்முக்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திச் செய்வான் கருதி அந்த லக்ஷணத்தில் சுவசமானாதி கரண துக்கப் பிராக பாவத்தோடு ஒருங்கிராத வென்னுமிவ்வளவும், துக்கத்துவம்சத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுச் சம்சாரகாலத்தில் பத்த புருஷர்களது சரீரமுதலிய துக்கங்களின் துவம்சம் யாதோ அத்துக்கத்துவம்சம், அத்துக்கத்துவம்சத்தின் அதிகரணத்திலிருப்பதான துக்கப் பிராகபாவத்தோடு ஒருங்கிருப்பதாம். எப்பத்த புருஷனிடத்து துக்கத் துவம்சமிருக்கின்றதோ அப்பத்த புருஷனிடத்து பின்னருண்டாவதான சரீர முதலிய அனேக துக்கங்களின் பிராகபாவ மிருக்கின்றது.

அத்துக்கப் பிராகபாவத்தினோடு ஒருங்கிராததே அந்துக்கத் துவம்சமாகின்றது. ஆகையால் அந்த விசேஷணத்தைக் கூறுவதால் பத்த புருஷர்களின் துக்கத் துவம்சத்தில் அம்முக்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துக்கப்பிராகபாவம் சமானகாலத்திலிராத துக்கத்துவம்சம் முக்தி" என விம்மாத்திரமே அம்முக்தியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் சுவசமானாதி கரணமென்னும் இவ்வளவும், துக்கப் பிராகபாவத்திற்கு விசேஷணமாகக் கூறாவிடின், சுகர், வாமதேவர் முதலியவரது துக்கத் துவம்ச வடிவ முக்தியில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகும். ஏற்றுக்கெனின், தத்துவஞானமில்லாத பத்தஜீவரிடத்துளதான சரீரமுதலிய துக்கங்களின் பிராகபாவம் யாதோ அத்துக்கப் பிராக பாவங்களின் சமான காலத்திலிருப்பதே சுகர், வாமதேவர் முதலியவர்களின் துக்கத்துவம்ச வடிவ முக்தியாம். அந்த அவ்வியாப்தி தோஷத்தை நிவிர்த்திச்செய்யும் பொருட்டுச் சுவசமானாதி கரணமென்னும் இவ்வளவும் துக்கப் பிராக பாவத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுச் சுகர், வாமதேவர் முதலிய முக்த புருஷர்களின் ஆத்மாவில் ஓர் துக்கப் பிராக பாவமுமின்றும் ஆகையால் சுகர், வாமதேவர் முதலிய முக்த புருஷர்களின் துக்கத் துவம்ச வடிவ முக்தி சுவசமானாதி கரண துக்கப் பிராக பாவத்தின் சமான காலத்திருப்பதன்றும். ஆகையால் அம்முக்தியில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது. இதனால் இவ்வர்த்தம் சித்தித்தது; சரீரமுதலிய இருபத்தொரு துக்கங்களின் துவம்சம் தத்தங் காரணத்தா லுண்டாகின்றதெனினும் அத்துக்கத் துவம்சத்தில் விசேஷண வடிவ சுவசமானாதி கரணத் துக்கப் பிராக பாவம் சமானகாலத்தி லிராத்தன்மை வடிவ ஆத்தியந்திகத் தன்மை யாதோ அவ்வாத்தியந்திகத் தன்மை வடிவ விசேஷணம் முற்கூறிய வாற்றால் தத்துவ ஞானத்தானேயே சித்தமாகின்றது. வேறுபாயத்தால் சித்தமாவதன்று. இக்காரணத்தால் அவ்விருபத்தொரு துக்கங்களின் ஆத்தியந்திக நிவிர்த்தி வடிவ முக்தியும் தத்துவ ஞானத்தினாலேயே சாத்தியமெனப்படும்.

## எஅ. நவீன நையாயிகர்களின் துரித (பாப)த் துவம்ச வடிவ முக்தியின் வர்ணனம்.

நவீன நையாயிகர்களோ இவ்வாறாக மோக்ஷ மொப்புகின்றனர். துக்கத்தின் துவம்சம் முக்தியன்று பாபவடிவ துரிதத்தின் துவம்சமே முக்தியாம். ஏனெனின், விபுத்திரவியத்தின் பிரத்தியக்ஷயோக்கிய விசேஷகுணம் யாதோ அந்த விசேஷ குணம் தனக்குப் பின்னுள்ளதும் தன் அதிகரணத்திலிருப்பதுமான யோக்கிய விசேஷ குணத்தால் நாசமாகின்றது. எங்ஙனம் விபு ஆத்மாவிலுண்டாவதான பிரத்தியக்ஷ யோக்கிய ஞானம், இச்சைமுதலிய விசேஷ குணங்கள் யாவையோ அவ்விசேஷ குணங்கள் தனக்குப்பின்னுள்ளதும் சுவசமானாதி கரணமுமாகிய ஞானம், இச்சை முதலிய விசேஷ குணங்களால் நாசமாய் விடுகின்றன. எங்ஙனம் விபு ஆகாசத்தி லுண்டாவதான பிரத்தியக்ஷ யோக்கிய சத்த விசேஷகுணம் யாதோ, அச்சத்தம் தனக்குப் பின்னுள்ளதும் சுவசமானாதிகரணமுமாகிய இரண்டாவது சத்த வடிவ விசேஷ

குணத்தால் நாசமாய் விடுகின்றது. கருத்திதுவாம் முதற்க்ஷணத்தில் விபு ஆத்மாவில் ஓர் ஞானமுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அந்த ஆத்மாவிலுண்டாகும் இச்சை வடிவ யோக்கிய விபுவின் விசேஷகுணம் அந்த ஞானவடிவ யோக்கிய விபுவின் விசேஷ குணத்தினை நாசஞ் செய்வதாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அந்த ஞான குணம் நாசமாய் விடுகின்றது. இம்முறையை எல்லா விபுவின் யோக்கிய விசேஷ குணங்களில் அறியத் தக்கது. இவ்வெல்லா அர்த்தங்களும் பின்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறுவாம். இவ்வாறாக அத்துக்கமும் விபு ஆத்மாவின் பிரத்தியக்ஷ யோக்கிய குணமாம். ஆகையால் அத்துக்கமும் தனக்குப்பின்னுள்ள இச்சை முதலிய விசேஷ குணங்களால் தானே நாசமாய் விடும். துக்கநாசத்தில் தத்துவஞானத்திற்கு யாதோருபயோகமுமில்லை. பாப வடிவ துரிதம் விபு ஆத்மாவின் விசேஷ குணமாயினும் பிரத்தியக்ஷ யோக்கிய மன்றும். ஆகையால் பாப வடிவ துரிதத்தின் நாசம் தனக்குப் பின்னுள்ள இச்சைமுதலிய விசேஷ குணங்களால் சம்பவியாது. தத்துவ ஞானத்தினாலேயே பாப வடிவ துரிதத்தின் நாசம் சம்பவிக்கின்றது, இவ்வார்த்தை சுருதி ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுச் சுருதி "க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே" (இ-ள்.) பரமாத்மாவின் சாக்ஷாத்காரமுண்டாகத் தத்துவவேத்தாப் புருஷனது எல்லாக் கர்மங்களும் நாசமாய்விடுகின்றன. ஆண்டு ஸ்மிருதி "ஜ்ஞாநாக்நிஃ ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா" (இ-ள்.) ஏ அர்ச்சுனா! தத்துவ ஞான வடிவ வன்னி, வன்னியைப்போன்று வெல்லா கர்மங்களையும் சாம்பராக்கி விடும். என்னுமிவைமுதலிய சுருதி ஸ்மிருதிகளில் தத்துவஞானத்தால் பாபவடிவ துரிதங்கட்கே நிவிர்த்திக் கூறப்பட்டிருக்கின்றன, துக்கத்தின் நிவிர்த்தியைக்கூறப்படவில்லை ஆகையால் அப்பாப வடிவ துரிதங்களின் துவம்சம் முக்தியாம்; துக்கத் துவம்சம் முக்தியன்று.

சங்கை:—தத்துவஞானமின்றி வேறோருபாயத்தால் பாப வடிவ துரிதங்களின் நிவிர்த்தியுண்டாகாவிடின், தத்துவஞானத்திற்குப் பாபத் துவம்ச வடிவ முக்தியில் காரணத் தன்மையுண்டாகும். பாபங்களின் துவம்சமோ தத்துவஞானமின்றியே பிராயச்சித்த வடிவ வுபாயத்தாலும் உண்டாகின்றது ஆகையால் வியதிரேக வியபிசாரமுண்டாவதால், தத்துவஞானம் பாபத் துவம்சமான முக்தியைக் குறித்துக் காரணமாவதின்று.

சமாதானம்:—பிராயச்சித்தக் கர்மங்களாலும் பாபத்தின் நாசமுண்டாகிறதெனினும் பிராயச் சித்தத்தால் பாப வடிவ துரிதங்களின் ஆத்தியந்திக நிவிர்த்தியுண்டாவதின்று. தத்துவஞானத்தினாலேயே அவ்வாத்தியந்திக நிவிர்த்தியுண்டாகின்றது, ஆகையாலிம்முக்தியின் லக்ஷணம் சித்திக்கின்றது.

## எச. ஆத்தியந்திக துரித (பாப) த் துவசம்ச முக்தியின் லக்ஷணம்.

"ஸ்வஸமாநாதிகரண துரித ப்ராகபாவா ஸமாநகாலீந துரித த்வம்ஸ: முக்தி:" (இ-ள்.) ஈண்டுச் சுவவென்னும் சத்தத்தால் பாபத்துவம்சத்

தினைக் கொள்ளுக, அந்தப்பாபத் துவம்சத்தின் அதிகரணத்தி லிருப்பதான பாபத்தின் பிராகபாவம் யாதோ அந்தப் பிராகபாவம் சமானகாலத்தில் இராத பாபத் துவம்சத்தினை முக்தியெனப்படும். ஆண்டுப் "பாபத்துவம்சம் முக்தி" என இம்மாத்திரமே முக்தியின் லக்ஷணமாகக் கூறின், தத்துவஞானமில்லாத பத்த புருஷர்களிடத்தில் பிராயச் சித்தத்தால் உண்டாம் பாபத் துவம்சத்தில் முக்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும் அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவிர்த்திசெய்வான் கருதி அந்தலக்ஷணத்தில் "சுவசமானாதிகரண பாபத்தின் பிராகபாவம் சமான காலத்திராத" என்னு மிவ்வளவும் அந்தப் பாபத் துவம்சத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுப் பிராயச்சித்தத்தாலுண்டாம் பாபத்துவம்சமிருக்கும் பத்த ஆத்மாவில் பின்னருண்டாவதான அனேக பாபங்களின் பிராகபாவமிருக்கின்றது. ஆகையால் பிராயச்சித்தத்தாலுண்டாம் பாபத்துவம்சம் பாபத்தினது பிராகபாவங்களின் சமானகாலத்திலிருப்பதேயாம்; சமானகாலத்தி லிராததன்று. ஆகையால் அந்த விசேஷணத்தைக் கூறுவதால் பிராயச்சித்தத்தா லுண்டான பாபத்துவம்சத்தில் அம்முக்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. "பாபத்தின் பிராகபாவம் சமானகாலத்திராத பாபத்துவம்சம்முக்தி" என விம்மாத்திரமே முக்தியின் லக்ஷணமாகக் கூறி, அந்த லக்ஷணத்தில் சுவசமானாதி கரணமென்னு மிவ்வளவும் பாபத்தின் பிராகபாவத்திற்கு விசேஷணமாகக்கூறுவிடின் சுகர், வாமதேவர் முதலிய ஆத்மாக்களின் பாபத்துவம்ச வடிவ முக்தியில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகும், ஏனெனின் சுகர், வாமதேவர்முதலிய முக்தபுருஷர்களினும் வேறான பத்த (பந்தமுடைய) புருஷர்களின் ஆத்மாவிலுள்ள பாபங்களின் பிராகபாவம்யாதோ, அந்தப் பிராகபாவங்களின் சமானகாலத்தில் இருப்பதே அச்சுகர் வாமதேவர் முதலியவர்களின் பாபத்துவம்ச வடிவ முக்தியாம்; சமான காலத்தில் இல்லாதனவன்றாம். அந்தஅவ்வியாப்திதோஷத்தை நிவிர்த்திப்பான்வேண்டி அவ்விலக்கணத்தில் சுவசமானாதிகரணமென்னும் இவ்வளவும், அப்பாபத்தின் பிராகபாவத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுச் சுகர் வாமதேவர் முதலிய முக்த புருஷர்களின் ஆத்மாவில் ஓர் பாபத்தின் பிராகபாவமுமிராது. ஆகையால் சுகர், வாமதேவர் முதலியவர்களின் பாபத்துவம்ச வடிவமுக்தி சுவசமானாதிகரண பாபத்தின் பிராக பாவத்தின் சமானகாலத்தில் இல்லாததேயாம்; சமான காலத்திலிருப்பதன்று. ஆகையால் அவ்விசேஷணத்தைக் கூறுவதால் முக்தியின் லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது. ஆண்டிதுகாறும் பிராசீன நையாயிகர்களினதும் நவீனநையாயிகர்களினதுமாம் வெவ்வேறு முக்தியைநிரூபித்தனம். இனிபிரசங்கத்தால் வேறுசாத்திரக்காரர்களின் முக்திகளையும் நிரூபிப்பாம். முக்தி காலத்தில் ஆத்தியந்திக துக்க நிவிர்த்தியுண்டாகிறதென்னும் வார்த்தைச் சர்வ சாத்திரக்காரர்களுமொப்பியுள்ளார். முக்தி காலத்தில் முக்த புருஷனுக்கு துக்கத்தின் அடைவை ஓர் சாத்திரக்காரரு மொப்பினாரில்லை. ஆனால் துக்கத் துவம்சத்தின் முக்தித்தன்மையில் சாத்திரக்காரர்களுக்குப் பரஸ்பர விவாதமுண்டு: அதைக்காட்டுவாம்.

## எ௫. மீமாஞ்சகர்களது முக்தியின் லக்ஷணம்.

மீமாஞ்சகர்களோ இம்மோக்ஷமொப்புகின்றனர் "யந்ந து:கேந ஸம்பிந்நம்" என்னுமிச்சுருதியானது ஸ்வர்க்க சுகத்தினை துக்கமில்லாததாகக் கூறியிருக்கிறது. அன்றியும் "அக்ஷய்யம் ஹவை சாதுர்மாஸ்ய யாஜிந: ஸுக்ருதம் பவதி" என்னுமிச் சுருதியானது ஸ்வர்க்க சுகத்தினை நாசமில்லாததாகக் கூறியிருக்கிறது. ஆகையால் அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களால் ஸ்வர்க்க சுகத்தின் பிராப்தி யாதோ அதுவே முக்தியாம். பட்டபாதர், பிரபாகரர், முராரிமிசிரரா மூவரும் மீமாஞ்சகரெனப்படுவர்.

## எசு. பட்டபாதரது முக்தியின் லக்ஷணம்.

பட்டபாதரோ இம்மோக்ஷ மொப்புகின்றனர், நித்திய சுகத்தின் அபிவியக்தி (வெளிப்படை) யே முக்தியாம். சுகத்தின் வெளிப்படையோ சம்சார காலத்திலுமுண்டாகின்றது, அதனிடத்தில் முக்தியின் லக்ஷணத்தின் அதிவியாப்தியினை நிவர்த்தி செய்வான் பொருட்டு அச்சுகத்திற்கு நித்தியமென்னும் இவ்விசேஷணங் கூறப்பட்டது. நித்தியசுகத்திற்குச் சம்சாரகாலத்தில் வெளியாதலுண்டாகிறதில்லை. மோக்ஷகாலத்திலேயே வெளியாதலுண்டாகின்றது. "நித்யம் விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம" (இ-ள்.) ஆத்மா நித்திய விஞ்ஞானஸ்வரூபமும், ஆனந்தஸ்வரூபமுமென்னு மிச்சுருதியே நித்திய சுகத்திலும் நித்திய விஞ்ஞானத்திலும் பிரமாண வடிவமாம். கருத்திருவாம், ஜடபோத (~~அறிவில்லாத~~) ஸ்வரூப ஆத்மாவில் நித்திய சுகமும் நித்திய ஞானமும் சம்சார காலத்திலுமிருக்கின்றன வெனினும் சம்சாரகாலத்தில் நித்திய சுகமும் நித்திய ஞானமும் பிரதீதியாவனவன்று. எப்பொழுது அதிகாரியானவன் ஆத்மஞானமும் கர்மமுமாம் இரண்டின் அனுஷ்டானம் செய்கின்றானோ அப்பொழுது அந்தஞான கர்மங்களின் சமுச்சயத்தால் (கலப்பினுல்) நித்திய சுகமும் நித்திய ஞானமும் பிராதுர்ப் பாவத்தினை (தோற்றத்தினை) அடைவதாகின்றன, அதன் பின்னர் விஷய விசேஷத்தின் அபேக்ஷையில்லாத நித்திய ஞானத்தால் நித்திய சுகத்தின் வெளிப்படையுண்டாகின்றது. அந்த நித்திய சுகத்தின் அபிவியக்தியே முக்தியாம்.

## எஎ. பட்டபாதரை அநுசரித்தவர்களது மதவர்ணனம்.

பட்ட பாதரை அநுசரித்த சில நூலாசிரியரோ விதுகூறுகின்றனர். மானச ஞானத்தாலுண்டாம் நித்திய சுகத்தின் அபிவியக்தியே முக்தியாம்.

## எஅ. பட்டபாதரை அநுசரித்த வேறு மதத்தின் வர்ணனம்.

பட்டபாதரை அநுசரித்த வேறு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் நையாயிகர்கள் துக்கா பாவத்திற்கு முக்தித்துவ மொப்புகின்றனரோ அங்ஙனமே துக்கா பாவ மாத்திரமே முக்தியாம்.

## எக. பிரபாகரர் முக்தியின் வர்ணனம்.

பிராபகரரோ இம்மோக்ஷம் கூறுகின்றனர். ஆத்ம ஞான வாயிலாக வைதீக கர்மத்தின் அநுஷ்டானம் யாதோ அவ்வநுஷ்டானத்தால் மூலத்

தோடுள்ள தர்மம் அதர்மங்களின் நாசத்தின் பொருட்டு தேக இந்திரிய முதலியவைகளின் சம்பந்தத்தை அத்தியந்தம் கெடுத்தல் யாதோ அதுவே முக்தியாம்.

### ௮௰. முராரி மிசிரரது முக்தியின் வர்ணனம்.

முராரி மிசிரரோ இம்முக்தியைக் கூறுகின்றனர். துக்கத்தின் அத்தியந்தாபாவமே முக்தியாம்.

சங்கை:—துக்கத்தின் அத்தியந்தா பாவத்தில் முக்தித் தன்மை சம்பவியாது. ஏனெனின் எப்பதார்த்தம் எவ்வதிகரணத்திலோர்காலுமிராததாமோ அப்பதார்த்தத்தின் அத்தியந்தா பாவமே அவ்வதிகரணத்தி லிருக்கின்றது. அங்ஙனமன்றே: வாயுவில் ஒர்காலும் உருவமிராதாகையால் வாயுவில் உருவத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. அங்ஙனம் ஆத்மாவிலோர்காலும் துக்கமிராதாயின் ஆத்மாவில் துக்கத்தின் அத்தியந்தா பாவம் சம்பவிக்கும். ஆனால் ஆத்மாவிலோ சம்சாரகாலத்தில் துக்கமிருக்கின்றது, ஆகையால் ஆத்மாவில் துக்கங்களின் அத்தியந்தா பாவம் சம்பவியாது. அல்லது துக்கத்தின் அத்தியந்தா பாவத்தினை முக்திவடிவமாகவொப்பின் கடமுதலிய பதார்த்தங்களில் துக்கத்தின் அத்தியந்தாபாவம் சுபாவத்தானேயேயிருக்கின்றதாகையால் அக்கடமுதலியனவும் முக்தியுடையதெனல் வேண்டும். அல்லது துக்கத்தின் அத்தியந்தா பாவத்தினை முக்தி வடிவமாக வொப்பின் அம்முக்தியில் புருஷப் பிரயத்தினத்தால் சாத்தியத் தன்மையின்றாய் விடும்; ஏனெனின் அவ்வத்தியந்தா பாவம் நித்தியமேயாகின்றது. எவ்வெப்பதார்த்தம் நித்தியமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் புருஷப் பிரயத்தினத்தால் சாத்தியமாவதின்று. எங்ஙனம்: ஆத்மா நித்தியமாவதால் புருஷப் பிரயத்தினத்தால் சாத்தியமாவதின்றாம். அங்ஙனமே அத்துக்கங்களின் அத்தியந்தா பாவ வடிவ முக்தியும் நித்தியமாவதால் புருஷப் பிரயத்தினத்தால் சாத்தியமாவதின்றாகும். அதனால் முக்திப் பிராப்தியின் பொருட்டு முமுக்ஷு ஜனங்களின் முயற்சி வீணாகும். ஆகையால் துக்கத்தின் அத்தியந்தா பாவத்தில் முக்தி வடிவத் தன்மை சம்பவியாது.

சமாதானம்:—துக்கங்களின் நித்திய அத்தியந்தா பாவம் யாதோ அந்த நித்திய அத்தியந்தாபாவத்தை ஈண்டு முக்தி வடிவமாகக் கூறியதன்று. ஆனால் அத்துக்கங்களின் சாமயிக அத்தியந்தாபாவத்தையே ஈண்டு முக்திவடிவமாகக் கூறியதாம். பிரதியோகியின் வருதலுளதாக நஷ்டமாவதும் பிரதியோகியின் போதலுளதாக உண்டாவதுமான அபாவம் யாதோ அவ்வுற்பத்தி நாசமுடைய அபாவம் ஸாமயிகா பாவமெனப்படும். எங்ஙனம்: பூதலத்திலுள்ள அபாவத்தினை ஸாமயிகா பாவமெனப்படும். ஆண்டு அக்கடத்தினை கொணர்ந்து பூதலத்தில் வைத்தகாலத்தில் அக்கடாபாவம் நஷ்டமாய் விடுவதும், அப்பூதலத்தினின்றும் அக்கடத்தினை கொண்டு போங்காலத்தில் அக்கடாபாவம் மீண்டும் உண்டாவதாகின்றது. ஆகையால் உற்பத்தி நாசமுடையதாவதால் அக்கடாபாவம் ஸாமயிகா பாவமெனப்படும். இவ்வாறாய அத்துக்கங்க

ளின் ஸாமயிக அத்தியந்தா பாவத்திற்கு முக்தி வடிவ மொப்புவதில் முற்கூறிய தோஷம் பிராப்தமாகாது. இவ்வாறுய துக்க அத்தியந்தா பாவத்தில் முக்தி வடிவத் தன்மை சுருதியிலும், சூத்திரத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுச்சுருதி "ஜ்ஞாத்வைநமத்யந்தம் விமுச்யதே" (இ-ள்.) தத்துவவேத்தாவான புருஷன் துக்கத்தினின்றும் அத்தியந்த விமுக்தமா (நீங்கி) யிருக்கப் பிரவேசிக்கின்றான். ஆண்டுச்சூத்திரம் "ததத்யந்தவிமோக்ஷோऽபவர்க:" (இ-ள்). துக்கங்களின் அத்தியந்தாபாவமே அபவர்க்கமென்னும் மோக்ஷமாம்.

## ௮௧. சாங்கிய சாத்திரத்தின் முக்தி வர்ணனம்.

சாங்கிய சாத்திரமுடையாரோ இம்முக்தியை யொப்புகின்றனர், சத்வம், ராஜசம், தாமதமாமுக்குண வடிவமும், நித்தியமும் ஏகமும் பரிணாமியுமான இத்தகைய பிராதான மென்னும் ஜடப்பிரகிருதியும், காரிய காரண பாவ மில்லாத நித்திய கூடஸ்த அகர்த்தா சேதன புருஷனுமான இவ்விரண்டின் விவேகத்தால் இப்புருஷனது அநாதி அவிவேகம் நிவிர்த்தியாய் விடுகின்றது. அதன் பின்னர் அந்த விவேகமுடைய புருஷனிடத்தினின்றும் நிவிர்த்தியாய் விட்ட *பிரகிருதியாதோ அந்தப் பிரகிருதிக்கு மீண்டும் புருஷனது போகத்தின் பொருட்டு பிரவிர்த்தி யுண்டாவதின்று. அதன் பின்னர் †மூவித துக்கங்களின் அத்தியந்த நிரோத (நீக்க) வாயிலாகப் புருஷனுக்கு எதார்த்தகர்த்தா, வுதாசீன கூடஸ்த வடிவமா கநிற்றல் யாதோ அதுவே முக்தியாம்.

## ௮௨. யோகசாத்திரமதமுடையாரது முக்தியின் வர்ணனம்.

யோக சாத்திரமுடைய பாதஞ்சல முனிவரோ இம்முக்தியை யொப்புகின்றனர். ‡அவித்தை, ¶அஸ்மிதை, ராகம், (விருப்பு) துவேஷம், (வெறுப்பு) ||அபினிவேசமென்னும் ஐந்து கிலேச (துக்க) வடிவமும், ஜாதி, ஆயுள், போகம், ரூபமென்னும் இவை முதலிய பரதந்திர வடிவமுமான எத்தனை பந்தகங்க ளிருக்கின்றனவோ அப்பந்தகங்களுக்கு அஷ்டாங்கயோகத்தால் நிவிர்த்தியுண்டான பின்னர் சுதந்திரத் தன்மையின் அடைவு யாதோ அதுவே முக்தியாம்.

## ௮௩. பாசுபதசாத்திரத்தின் முக்தி வர்ணனம்.

பாசுபத சாத்திர முடையாரோ இம்முக்தியை யொப்புகின்றனர்; பாசுபதசாத்திரத்திற் கூறிய பசுபதியின் பூஜை அர்ச்சனை முதலியவையாவையோ, அப்பூஜை அர்ச்சனை முதலிய பாசுபத தர்மங்களின் அநுஷ்டானத்தால் ஜீவனாகிய பசுவினது பந்தமாகிய பாசத்தின் நிவிர்த்தியுண்டான பிறகு ஜீவனுக்குமீண்டும் வருதலில்லாத (ஜனனமில்லாத) பசுபதியின் சமீபத்தில் செல்லுதலே ஜீவனது முக்தியாம்.

---

* பிரகிருதி—சத்துவம், ராஜசம், தாமதமென்னும் முக்குணங்களின் சமானநிலைமை. இதனைப் பிரதானமென்றும் வழங்கப்படும். † மூவித துக்கங்கள்—ஆதி ஆத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம். ‡ அவித்தை—விசாரித்துப்பார்த்தால் இல்லாமற்போவது. ¶ அஸ்மிதை—புத்தி ஆத்மாக்களின் ஒருமையுணர்ச்சி. || அபினிவேசம்—மரணபயத்தால் சரீரத்தை ரக்ஷித்தற்கு உண்டாகும் ஆக்கிரகம்.

### ௪௪. வைஷ்ணவர்களின் முக்தி வர்ணனம்.

வைஷ்ணவர்களோ இம்முக்தியை யொப்புகின்றனர். விஷ்ணுவைப் பிரதிபாதிக்கும் நாரதம், பாஞ்சராத்திர முதலிய சாத்திரங்களிற் கூறிய விஷ்ணுபக்தர்களின் தர்மங்கள் யாவையோ அத்தர்மங்களின் அநுஷ்டானத்தா லுண்டாவதான விஷ்ணுவின் பிரசாத (அநுக்கிரக) த்தால் ஜீவனுக்கு மீண்டும் வருதலில்லாத (ஜனனமில்லாத) விஷ்ணு லோக கமன (செல்லுவதான) விசேஷம் யாதோ அதுவே ஜீவனுக்கு முக்தியாம்.

### ௪௫. ஹைரண்ணிய கர்ப்பரது முக்தியின் வர்ணனம்.

ஹைரண்ணிய கர்ப்பரோ இம்முக்தியை யொப்புகின்றனர், ** பஞ்சாக்கினிவித்தியா முதலிய உபாசனைகளால் ஜீவாத்மாவிற்கு †† அர்ச்சிர முதலிய மார்க்க வாயிலாக மீண்டும் ஜனனமில்லாத பிரம்மலோகப் பிராப்தியே ஜீவாத்மாவின் முக்தியாம்.

### ௪௬. ஏகதண்டி வேதாந்திகளது முக்தியின் வர்ணனம்.

ஏகதண்டி வேதாந்திகளோ இம்முக்தியைக் கூறுகின்றனர், அஹம் பிரஹ்மாஸ்மி யென்னும் ஜீவப்பிரஹ்மத்தின் அபேதசாக்ஷாத் காரம் யாதோ அச்சாக்ஷாத்காரத்தால் அநாதி அவித்தையின் நிவிர்த்தியுண்டாக சர்வவுபாதிகளில்லாத கேவல சுத்த வாத்மா சுயப்பிரகாசஞான சுக வடிவமாக இருத்தலே ஜீவாத்மாவின் முக்தியாம்.

### ௪௭. திரிதண்டி வேதாந்திகளது முக்தியின் வர்ணனம்.

திரிதண்டி வேதாந்திகளோ இம்முக்தியை யொப்புகின்றனர். "ஸோஹம் ப்ரஹ்மாஸ்மி, ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம அயமாத்மா ப்ரஹ்ம தத்வமஸி" என்னுமிவைமுதலிய சுருதிவசனங்களோ ஜீவப்பிரஹ்மத்தின் அபேதத்தைக் கூறுகின்றன. அன்றியும் "ஜுஷ்டம் யதா பஶ்யத்யந்யமீஶம் ஆவஶ்ய ஸம்ஜ்ஞாஸம்வாயாஸெ ப்ரஹ்மணி வேதிதவ்யம்" என்னுமிவை முதலிய சுருதி வசனங்கள் ஜீவப்பிரஹ்மத்தின் பேதத்தைக்கூறுகின்றன. கேவலம் ஜீவப்பிரஹ்மங்களின் அபேத மொப்பின் பேதத்தைப் போதிக்கும் வசனங்கள் அசங்கதமாகும். கேவலம் ஜீவப்பிரஹ்மங்களின் பேதமொப்பின் முற்கூறிய அபேதத்தைப்போதிக்கும்வசனங்கள் அசங்கதமாகும். ஆகையால் அவ்விரு வாக்கியங்களது பிரமாணத் தன்மையின் பொருட்டு ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் அபேதமா மிரண்டினையுமொப்பவேண்டும். எப்பொழுது அதிகாரி புருஷன் ஆத்மஞானமும் கர்மமுமா மிரண்டின் அநுஷ்டானங்க

---

** பஞ்சாக்கினி—காருகபத்மம், ஆஹவநீயம், தக்ஷிணக்கினி, சப்பியம், ஆவசத்வம். ஆதி யென்பதால் பிரணவாதி பிரம்ம உபாசனையைக் கொள்ளுக. †† அர்ச்சிர மார்க்க முதலியன—அக்னி அபிமானிதேவதை, ஜோதி அபிமானிதேவதை, தின அபிமானிதேவதை, சுக்லபக்ஷ அபிமானிதேவதை, ஷண்மாச அபிமானிதேவதை, உத்தராயண அபிமானிதேவதை, சம்வச்சர அபிமானிதேவதை, சூரியன், சந்திரன், மின்னல் இவைகள் மூலமாய்ச்சென்று முடிவில் அமானவ புருஷன்மூலமாய்ப் பிரம்மலோகம் சேர்வது. இதனை, தேவயான மார்க்கமென்றும் வழங்கப்படும்.

ளைச் செய்கின்றனோ அப்பொழுது ஞான கர்மங்களின் சமுச்சய (கலப்பு) பழக்கத்தால் காரண வடிவ பிரஹ்மத்தில் காரிய வடிவ ஜீவனுக்கு கர்ம வாசனையோடுள்ள பேத அம்சத்தின் நிவிர்த்தி வடிவ யெமுண்டாகின்றது அதுவே ஜீவாத்மாவிற்கு முக்தியாம்.

அஅ. திரிதண்டி வேதாந்திகளை அநுசரித்தவர்களது முக்தியின் வர்ணனம்.

சில நூலாசிரியரோ இம்முக்தியை யொப்புகின்றனர். "ஊஷூ-ூ௵ நணு ஹ-ஷூ௨ஜீவ-௰ம்" என்னுமிவைமுதலிய சுருதிகள் பிரஹ்மத்தின் நிர்விகார அவஸ்தையைக் கூறுகின்றன "ய௦தாவா ஐ௱நிஷ-ூ௭தாநி ஜாயஂ௦தெ" என்னுமிவை முதலிய சுருதிகள் பிரஹ்மத்தின் சவிகார அவஸ்தையைக் கூறுகின்றன. ஆண்டு பிரஹ்மத்திற்குக் கேவல நிர்விகாரமுடைய அவஸ்தையை யொப்பின் பிரஹ்மத்திற்குச் சவிகார அவஸ்தையைக் கூறுவதான சுருதி வசனங்கள் அசங்கதமாகும். பிரஹ்மத்திற்கு கேவல சவிகாரமுடைய அவஸ்தையை யொப்பின் பிரஹ்மத்திற்கு நிர்விகாரமுடைய அவஸ்தையைக் கூறுவதான சுருதி வசனங்கள் அசங்கதமாகும். ஆகையால் இவ்விருவித வாக்கியங்களின் பிரமாணத்தன்மையின் பொருட்டுப் பிரஹ்மத்திற்கு சவிகாரம், நிர்விகாரமாமிரு அவஸ்த்தைகளை யொப்பவேண்டும். எங்ஙனம்:—சமுத்திரத்திற்கு அலைகளோடும் அலைகளின்றியுமிருக்கு மிரு அவஸ்தைகளுண்டாகின்றனவோ அங்ஙனமே பிரஹ்மத்திற்கும் சவிகார நிர்விகார மென்னு மிரு அவஸ்தைகளுண்டாகின்றன. ஆண்டு ஞானகர்மங்களின் சமுச்சய (கலப்பு) அப்பியாசத்தால் சவிகாரஅவஸ்தையின் நீக்கமுண்டாகி ஜீவாத்மாவிற்கு நிர்விகார அவஸ்தையின் பிராப்தியுண்டாகிறது, அதுவே இஜ்ஜீவாத்மாவின் முக்தியாம்.

அகூ. இராமாநுஜ மதமுடையாரது முக்தியின் வர்ணனம்.

இராமாநுஜ மதமுடையாரோ இம்முக்தியை யொப்புகின்றனர், ஸ்ரீ பகவான் வாசுதேவனிடத்திலிருக்கும் சர்வஜகத்தின் கர்திருத்தன்மையாதோ அக் கர்திருத்தன்மை தர்மத்தினை விட்டு அப்பகவானுடைய சர்வஞ்ஞத்தன்மை முதலிய கல்யாண குணங்களெத்தனையோ, அச்சர்வஞ்ஞத் தன்மை முதலிய குணங்களின் பிராப்தி வாயிலாக ஜீவாத்மாவிற்கு அப்பகவானுடைய யதார்த்தஸ்வரூபத்தின் அநுபவம் யாதோ அதுவே ஜீவாத்மாவின் முக்தியாம்.

கூ௦. மத்துவமதமுடையாரது முக்தியின் வர்ணனம்.

மத்வ மதமுடையாரோ இம்முக்தியை யொப்புகின்றனர், ஜகத்கர்திருத்தன்மை, இலக்குமி, ஸ்ரீவச்சனென்னும் மூன்றையும் விட்டு வேறெத்தனை விஷ்ணுபகவானுடைய நிரதிசயானந்த முதலிய தர்மங்களுளவோ அவைகளின் சாதுர்சிய (ஒப்புமை) தர்மங்களின் பிராப்தி ஜீவனுக்குண்டாவதே ஜீவாத்மாவின் முக்தியாம். அம்முக்தியும் சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், சாயுச்சியம் என்னும் வேறுபாட்டால் நான்கு விதமாகின்றது. விஷ்ணு பகவானிருக்கும் வைகுண்டலோகம் யாதோ அந்த லோகத்தின்

பிராப்தியினையே ஜீவனுக்கு சாலோக்கியமென்பர். அந்தலோகத்தில் ஜீவாத்மாவிற்கு விஷ்ணுபகவானுடைய சாமீபத் தன்மையின் பிராப்தத்தினையே சாமீப்பியமென்பர். சமீபத் தன்மையின் பிராப்தமுண்டாய் ஜீவாத்மாவிற்கு விஷ்ணுபகவானுடைய சாரூப (ஒப்புமையுருவ) த்தின் பிராப்தம் யாதோ அதனைசாரூப்பிய மென்பர். அவ்விஷ்ணு பகவானுடைய ஸ்வரூபத்தில் ஜீவாத்மாவின் லயம்யாதோ அதனை சாயுச்சியமென்பர்.

### கக. வல்லபமதமுடையாரது முக்தியின் வர்ணனம்.

வல்லபமதமுடையாரோ விம்முக்தியை யொப்புகின்றனர். கோலோகத்தில் இருபுஜமுடைய கிருஷ்ணபகவானோடு அவரது அம்சவடிவஜீவனுக்கு *ராசலீலையின் அனுபவம் யாதோ அதுவே ஜீவனுக்கு முக்தியாம்.

### கஉ. வியாகரண சாத்திரிமுடையாரது முக்தியின் வர்ணனம்.

வியாகரண சாத்திரமுடையாரோ இம்முக்தியை யொப்புகின்றனர். †பரா, ‡பைசந்தி, ¶ மத்திமை, || வைகரி என நான்குவிதமாக வாக்குகளுண்டாகின்றன, இந்நான்குவித வாக்குகளில் முதலிலுள்ள பராவெனப் பெயரிய வாக்கு யாதோ அது பிரஹ்ம வடிவமாம் இத்தகைய பிரஹ்ம வடிவ பரா வாணியின் தரிசனம் யாதோ அதுவே ஜீவனுக்கு முக்தியாம்.

### கங. இரசேஸ்வர வாதிகளது முக்தியின் வர்ணனம்.

இரசேஸ்வர வாதிகளோ இம்முக்தியை யொப்புகின்றனர்; பாதரசத்தினை பானஞ்செய்வதால் (அருந்துவதால்) மூப்பு மரணாதிகளின்றி இத்தேகத்தின் நிலைத்தற்றன்மையான ஜீவன் முக்தியாதோ அதுவே ஜீவாத்மாவின் முக்தியாம்.

### கச. சூன்னியவாதி மாத்திமிகரது முக்தியின் வர்ணனம்.

சூன்னிய வாதி மாத்திய மிகரோ இம்முக்தியை யொப்புகின்றனர். இவ்வெல்லாஜகத்தும் சூன்னியமேயாம் பிராந்தி நோக்கால் சத்வடிவ பிரதீதியுண்டாகின்றது. உண்மையாக வோர் வத்துவும் சத்தன்றுமென சூன்னிய பாவத்தின் பரிபாக பரியந்தம் சூன்னிய வடிவ ஆத்மாவின் தத்துவ ஞானமும் அத்தத்துவ ஞானத்தால் சூன்னிய பாவத்தின் பிராப்தம் யாதோ அதுவே முக்தியாம்.

### கரு. தேகாத்மவாதி சார்வாகரது முக்தியின் வர்ணனம்.

தேகாத்மவாதி சார்வாகரோ இம்முக்தியை யொப்புகின்றனர். விதி நிஷேதமில்லாத சுதந்திரத் தன்மையாதோ அதுவே முக்தியாம். அல்லது இச்சரீரவடிவ ஆத்மாவின் மரணம் யாதோ அதுவே முக்தியாம்.

---

* ராசலீலை—ஸ்ரீமத் பாகவதத்தின்கண் தசமஸ்கந்தத்தினில் ஸ்ரீகண்ணன் கோபிகைகளுடன் செய்த சிங்கார ரசசம்பந்தமான கிரீடை யெனக்கூறப்பட்டிருக்கிறது.

† பரா—நாபியினின்றும் எழும் சூக்ஷ்ம சத்தம். ‡ பைசந்தி—இருதயத்தினின்றும் எழும் சூக்ஷ்மசத்தம். ¶ மத்தியமா—கண்டத்தினின்றும் எழும் சூக்ஷ்மசத்தம். || வைகரி—வாக்கினின்றும் எழுஞ் சத்தம்.

### ௬௬. க்ஷணிக விஞ்ஞான வாதி யோகாசாரரது முக்தியின் வர்ணனம்.

விஞ்ஞான வாதி யோகாசாரரோ விம்முக்தியை யொப்புகின்றனர். அதாவது இருவித விஞ்ஞானமுண்டாகின்றன. ஒன்றோ ஆலயவிஞ்ஞானமும், மற்றையது பிரவிர்த்திவிஞ்ஞானமுமாம். அவ்விருவித விஞ்ஞானமும் க்ஷணிகமாகின்றன. ஆண்டுக் கட பட முதலிய விஷயாகாரமாக இதுகடம், இதுபடம் என்னுமிவைமுதலிய விஞ்ஞானம் யாதோ அந்த விஞ்ஞானமோ பிரவிர்த்தி விஞ்ஞானமெனப் படுகின்றது. இப்பிரவிர்த்தி விஞ்ஞானத்தி னுபாதான காரணவடிவமும், கட பட முதலிய பதார்த்தங்களை விஷயஞ்செய்யாததான யான் யான் என்னுமிவ்வாறாய விஞ்ஞானமும் யாதோ அந்த விஞ்ஞானம் ஆலய விஞ்ஞானமெனப்படுகின்றது. அவ்வாலய விஞ்ஞானத்தினும் வேறான பதார்த்தங்கள் யாவும் துச்சமாம் (பொய்யாம்.) ஆண்டுச் சம்சார காலத்தில் வர்த்தமான பிரவிர்த்தி விஞ்ஞானம் யாதோ அவைகளின் உச்சேதமுளதாக (நாசமுளதாக) கேவல ஆலய விஞ்ஞானத்தின் தாரை (தொடர்ச்சி) யாதோ அதுவே முக்தியாம்.

### ௬௭. ஆர்ஹத (ஜைன) மதமுடையாரது முக்தியின் வர்ணனம்.

ஆர்ஹதமதமுடையாரோ விம்முக்தியை யொப்புகின்றனர். எங்ஙனம், கூட்டில் அடைப்பட்டக் கிளிப்பக்ஷி கூட்டிற்கு நஷ்டமுண்டாகச் சுவதந்திரமாக ஆகாசத்திற் பறந்து விடுகின்றதோ அங்ஙனமே, ஆர்ஹத சாத்திரங்கூறிய தபத்தினாலும், ஆத்ம ஏகாக்ரசமாதியால் அஷ்டவித கர்மவடிவபந்தத்தின் துவம்சமுண்டாயதன் பின்னர் சுகைக்கியவடிவமும், நிராவரண ஞான வடிவமுமான ஆத்மாவின் சுவதந்திர முண்டாகி நிரந்தர வூர்த்துவ கமனம் (மேற்செல்லுவது) யாதோ அல்லது அலௌகிக ஆகாசத்திற் செல்லுவது யாதோ அதுவே இவ்வாத்மாவிற்கு முக்தியாமென்பர். அஷ்டவித கர்மங்களின் ஸ்வரூபமும், அலௌகிக ஆகாசத்தின் ஸ்வரூபமும், பின்னர் இரண்டாவ துபரிச்சேதத்தில் ஆர்ஹதமதநிரூபணத்திற் றெளிவாய்க் கூறுவாம். மீமாஞ்சகர் மதமுதலாக ஆர்ஹதரது மதமட்டுமாம் எத்தனை வாதிகளின் முக்தியைக் கூறினமோ அம்முக்தியினைப் பிருஹத் நியாயக் கிரந்தங்களில் தூஷிக்கப்பட்டிருக்கின்றது. அத்தூஷணம் கிரந்தம் விரியுமென்னும் பயத்தா லீண்டெழுதப்படவில்லை. ஆனால் சர்வவாதிகளின் முக்தி மாத்திரத்தின் ஸ்வரூபமீண்டு நிரூபித்தனம். முக்தி வாதம் முற்றிற்று.

### ௬௮. தத்துவஞானத்தில் திரவியமுதலிய பதார்த்தங்களினது நிரூபணத்தின் உபயோக வர்ணனம்.

இனியிந்நூலிற் கூறப்படும் திரவியமுதலிய பதார்த்தங்களின் ஞானத்திற்கு எவ்வகையால் தத்துவஞானத்திநுபயோகமோ அவ்வகையினை நிரூபிப்பாம். ஆண்டு ஆத்மாவானது தேகம், இந்திரிய முதலிய வெல்லாப் பதார்த்தங்களினும் வேறாமென்னும் இவ்வாறாய தத்துவ ஞானத்தால் அத்தியந்த துக்க நிவிர்த்தி வடிவ மோக்ஷத்தின் பிராப்தியை முற்கூறினம். அத்தத்துவ ஞானம் தேகேந்திரிய முதலிய சர்வ அனாத்ம பதார்த்தங்களின் ஞானமின்றி சம்பவியாது. ஏனெனின் எவ்வெவ்வபாவத்தை விஷயஞ்செய்யும் ஞானமுண்

டாகின்றதோ அவ்வவ்வபாவ ஞானம் அவ்வபாவத்தின் பிரதியோகியை விஷயஞ் செய்யும் ஞானத்தினுனேயே யுண்டாகின்றது. பிரதியோகியின் ஞானமின்றி அபாவ ஞான முண்டாகாது. எங்ஙனம், கடவடிவப் பிரதி யோகியின் ஞானமுளதாகியே பூதலமுதலிய விடங்களில் அக்கடாபாவத்தின் ஞானமுண்டாகின்றது. கடவடிவப்பிரதியோகியின்ஞானமின்றிக் கடாபாவத்தின் ஞானம் பிரதீதமாவதின்று. அங்ஙனமே ஆத்மாவில் தேகேந்திரிய முதலிய சர்வ அனுத்ம பதார்த்தங்களின் அன்னியோன்னியாபாவ வடிவ பேதத்தை விஷயஞ் செய்வதாகிய தத்துவஞானம் யாதோ அத்தத்துவ ஞானமும் தேகேந்திரியமுதலிய சர்வ அனுத்ம பதார்த்த வடிவப் பிரதியோகியின் ஞானமின்றி சம்பவியாது. ஆகையால் தத்துவஞானத்தின் சித்தியின்பொருட்டுத் தேகேந்திரியமுதலிய சர்வ அனுத்மபதார்த்தங்களை அறிதல்வேண்டும். தேகேந்திரிய முதலிய சர்வ அனுத்ம பதார்த்தங்களின்ஞானம் திரவிய முதலிய பதார்த்தங்களின் நிரூபணம் செய்தாலன்றிச்சம்பவியாது. ஆகையால் திரவிய முதலிய பதார்த்தங்களின் நிரூபணம் அவசியங் கூறவேண்டியதாம். முதலில் சுருக்கமாக நிரூபித்தப்பதார்த்தங்களைப்பின்னர் விரிவாக நிரூபிப்பதால் கேட்போருக்குப் பதார்த்தங்களின் போதம் எளிதாயுண்டாகின்றது. ஆகையால் கேட்போருக்கு எளிமை வாயிலாக போதமாம் பொருட்டுத் திரவிய முதலிய பதார்த்தங்களை முன்னம் சுருக்கமாக நிரூபிப்பாம்.

### கூகூ. பதார்த்தங்களின் அசாதாரண லக்ஷணம்.

ஆண்டு "ஜ்ஞேயத்வம் ப்ரமேயத்வம் அபிதேயத்வம் அஸ்தித்வம் பதார்த்த லக்ஷணம்" (இ-ள்.) திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களின் அசாதாரண தர்மாகிய ஞேயத்தன்மை, பிரமேயத் தன்மை, அபிதேயத் தன்மை, அஸ்தித் தன்மை என்னும் நான்கும் லக்ஷண வடிவமாம், ஞானத்தின் விஷயத் தன்மையினை ஞேயத்தன்மை யென்பர். பிரமாஞானத்தின் விஷயத் தன்மையினைப்பிரமேயத் தன்மை யென்பர், ஜீவாத்மாவின் ஞானத்தின் விஷயத் தன்மையும், பிரமையின் விஷயத்தன்மையும் எல்லாப்பதார்த்தங்களிலிருப்பதில்லை எனினும் சர்வஞ்ஞவீஸ்வர ஆத்மாவினது ஞானத்தின் விஷயத் தன்மையும், பிரமையின் விஷயத் தன்மையும், எல்லாப் பதார்த்தங்களிலும் இருக்கின்றன. அந்தவிஷயத் தன்மையே திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களின் லக்ஷணமாம். கேட்போருக்கு இப்பதத்தா லிவ்வர்த்தத்தின் போதமுண்டாகுக வென்னும் பதத்திலுள்ள ஈஸ்வரனது விச்சா வடிவ சக்தியாதோ அதனை அபிதையென்பர். அவ்வபிதையின் விஷயத் தன்மையினை அபிதேயத் தன்மை யென்பர். கடபட முதலிய பதங்கட்கு அபிதையின் விஷயத்தன்மை திரவிய முதலிய சர்வபதார்த்தங்களிலின்றும். என்றாலும் பதார்த்த மாத்திரத்தின் வாசகமான சர்வமுதலிய பதங்கள்யாவையோ அவ்வெல்லாப்பதங்கட்கு அபிதையின் விஷயத் தன்மை அத்திரவிய முதலிய சர்வ பதார்த்தங்களிலுமிருக்கின்றது. அதுவே திரவிய முதலிய பதார்த்தங்களின் லக்ஷணமாம். காலத்தின் சம்பந்தத்தினை அஸ்தித் தன்மை யென்பர். அதுவும் திரவிய முதலிய சர்வ பதார்த்தங்களிலிருக்கின்றது.

ஈ௩. திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களைச் சாமான்னியமாக நிரூபித்தல்.

அப்பதார்த்தங்கள் கணாதமுனிவர் அருளிச்செய்த வைசேடிக சாத்திரத்தில் திரவியம், குணம், கருமம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமென்னும் வேறுபாட்டா லெழுவகையாகின்றன. அல்லது அப்பதார்த்தம் பாவம், அபாவமென்னும் வேறுபாட்டா லிருவிதமாகின்றன. ஆண்டு முதற்பாவ பதார்த்தமோ திரவியம், குணம், கருமம், சாமான்னியம், விசேஷம், சமவாய மென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். மற்றைய அபாவ பதார்த்தமோ சம்சர்க்கா பாவம், அன்னியோன்னியா பாவமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். முதற் சம்சர்க்கா பாவமோ பிராக பாவம், பிரத்துவம்சா பாவம், அத்தியந்தாபாவம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். மற்றைய அன்னியோன்னியா பாவமோ ஒன்றேயாம்.

ஈக. திரவிய நிரூபணம்.

ஆண்டு ஏழு பதார்த்தங்களுள் முதல் திரவிய பதார்த்தமோ பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனமென்னும் வேறுபாட்டாலொன்பது வகைத்தாம்.

ஈஉ. மூர்த்த அமூர்த்தத் திரவியங்களின் பேத வர்ணனம்.

இவ்வொன்பது திரவியங்களினும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமென்னும் ஐந்து திரவியங்களோ மூர்த்தத் திரவிய மெனப்படுகின்றன. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவென்னும் நான்கும் அமூர்த்தத் திரவியங்க ளெனவும், விபுவு மெனப்படுகின்றன.

ஈ௩. நித்திய அநித்திய திரவியங்களின் பேத வர்ணனம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்கின் பரமாணுக்களும், ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனமென்னும் யாவும் நித்தியத் திரவியங்க ளெனப்படுகின்றன. துவியணுகாதி காரியவடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் யாவும் அநித்தியத் திரவியமெனப்படுகின்றன.

ஈச. பிருதிவிவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஆண்டு அவ்வொன்பது திரவியங்களில் முதற்கட் பிருதிவி வடிவ திரவியம் நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். பரமாணுவடிவ பிருதிவியோ நித்தியமும், துவியணுகாதி காரிய வடிவபிருதிவி அநித்தியமுமாகின்றது. அவ்வநித்தியப் பிருதிவியும் சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். பார்த்திவ சரீரம் யோனிஜம், அயோனிஜ மென்னும் வேறு பாட்டா லிருவகைத்தாம். சுக்ல, சோணித கலப்பினாலுண்டாய சரீரம் யாதோ அச்சரீரம் யோனிஜ மெனப்படுகின்றது. அந்த யோனிஜ சரீரமும், ஜராயுஜம், அண்டஜமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். மனிதர் முதலிய சரீரங்கள் ஜராயுஜ மெனப்படுகின்றன. பக்ஷி சர்ப்ப முதலிய சரீரங்கள் அண்டஜமெனப்படுகின்றன. யோனிஜ சரீரத்தினும் வேறான சரீரம் யாதோ அச்சரீரம் அயோனிஜமெனப்படுகின்றது. அவ்வயோ

ணிஜ சரீரமும் ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், அதிர்ஷ்ட விசேஷஜன்னிய மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். புழு, கொசுகு முதலிய சரீரங்கள் ஸ்வேதஜ மெனப்படுகின்றன. மரமுதலியன உத்பிஜ்ஜமெனப்படுகின்றன. மனு முதலிய சரீரங்கள் அதிர்ஷ்ட விசேஷ ஜன்னியமெனப்படுகின்றன. நாற்றத்தினைக் கிரஹிக்கும் கிராண வடிவ பார்த்தீவ இந்திரியம் ஒரேவிதமாகின்றது. மண், கல், வடிவ முதலிய பார்த்திவ விஷயமோ பலவகைத்தாம்.

௫௫. ஜலவடிவத் திரவயத்தினைச் சுருக்கமாய் நிரூபித்தல்.

இரண்டாவது ஜலவடிவத்திரவியமும் நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். பரமாணு வடிவ ஜலமோ நித்தியமும், துவியணுகாதி காரிய வடிவ ஜலம் அநித்தியமுமாகின்றது. அவ்வநித்திய ஜலமும் சரீரம், இந்திரியம், விஷயம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஜலீய (ஜலக்கூறும்) சரீரம் அயோனிஜமேயாகின்றது. அந்த ஜலக்கூறும் சரீரம் வருணலோகத்திற் பிரசித்தமாம். இரசத்தை கிரஹிக்கும் இரசனேந்திரியம் ஜலீயவிந்திரிய மெனப்படும். நதி, கடல் முதலியன ஜலீயவிஷயமெனப்படும்.

௫௬. தேயு வடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

மூன்றாவது தேயு வடிவத் திரவியமும் நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். பரமாணுவடிவத்தேயுவோ நித்தியமும், துவியணுகாதி காரிய வடிவத்தேயு அநித்தியமுமாகின்றது. அவ்வநித்தியத்தேயுவும் சரீரம், இந்திரியம், விஷய மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். தேயு சரீரம் அயோனிஜமேயாகின்றது. அத்தேயு சரீரம் சூரிய லோகத்திற் பிரசித்தமாம். உருவத்தைக் கிரஹிக்கும் சக்ஷு விந்திரியம் தேயு விந்திரிய மெனப்படும். தைஜசவிஷயமோ மண்ணிலுள்ளது, விண்ணிலுள்ளது, வயிற்றிலுள்ளது, ஆகரத்தி (சுரங்கத்தி) லுள்ளது என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். பிரசித்த வன்னியைப் பௌம மென்றும், மின்னல் முதலியவைகளை திவ்வியமென்றும், ஜடராக்கினியை ஔதர்ய மென்றும், பொன் முதலியவைகளை ஆகரஜமென்றும் வழங்கப்படும். அல்லது உத்பூத ரூபம் உத்பூத பரிசமுடையது, அநுத்பூத ரூபம் அநுத்பூத பரிசமுடையது, உத்பூத பரிசம் அநுத்பூத ரூபமுடையது, உத்பூதரூபம் அநுத்பூதபரிசமுடையது என்னும் வேறுபாட்டால் அத்தேயு நான்குவகைத்தாம்.

௫௭. வாயுவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

நான்காவது வாயுவடிவத் திரவியமும் நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். பரமாணு வடிவ வாயுவோ நித்தியமும், துவியணுகாதி காரிய வடிவ வாயு அநித்தியமுமாகின்றது. அநித்திய வாயுவும் சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். வாயவீய சரீரமோ அயோனிஜமேயாகின்றது. வாயவீய சரீரம் வாயுலோகத்திலேயே பிரசித்தமாம். பரிசத்தைக் கிரஹிக்கும் துவக்கிந்திரியம் வாயவீய விந்திரியமெனப்படும். மர முதலியவைகளின் அசைவிற்குக் காரண வாயுவும், சரீரத்தில் சஞ்சரிக்கும் பிராண வாயுவும் வாயவீய விஷயமெனப்படும்.

௱௯. ஆகாசவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஐந்தாவது ஆகாச வடிவத் திரவியமோ ஒன்றும், நித்தியமும், விபுவுமாம். அவ்வாகாசத்திற்கு பிருதிவி முதலியவைகளைப் போன்று ஓர் சரீரமும் விஷயமுமின்றாம். ஆனால் அவ்வாகாசத்திற்கும் இந்திரியமோ இருக்கின்றது அது சத்தத்தைக் கிரஹிக்கும் சுரோத்திரேந்திரியமாம்.

௱௧௰. காலவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஆறாவது காலவடிவத் திரவியமும் ஒன்றும், நித்தியமும், விபுவுமாகின்றது.

௱௰. திசைவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஏழாவது திக்கு வடிவத் திரவியமும் ஒன்றும், நித்தியமும், விபுவுமாகின்றது.

௱௧௧. ஆத்ம வடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

எட்டாவது ஆத்ம வடிவத் திரவியமோ ஜீவாத்மா, ஈஸ்வராத்மாவென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஜீவாத்மாவோ அனேகமும், நித்தியமும், விபுவுமாம். ஈஸ்வர ஆத்மாவோ ஒன்றும், நித்தியமும், விபுவுமாம்.

௱௧௨. மனவடிவத் திரவியத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

மனவடிவத் திரவியமும் ஜீவாத்மாவினைப் போன்று அனேகமும், நித்தியமும், அணுவுமாம். சுருக்கமாகத் திரவிய நிரூபணம் முற்றிற்று.

௱௧௩. இருபத்து நான்கு வகையான குணங்களின் வர்ணனம்.

இரண்டாவது குண பதார்த்தமோ ரூபம், ரசம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், குருத்துவம், திரவத்துவம், சினேகம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், வாசனையென்னும் வேறுபாட்டால் இருபத்துநான்கு வகைத்தாம்.

௱௧௪. உருவ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

இவ்விருபத்து நான்கு குணங்களில் முதலாவது வுருவ குணமோ வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை, புகைமை, சித்திரமென்னும் வேறு பாட்டால் எழுவகைத்தாம். அவ்வுருவ குணம் பிருதிவி, ஜலம், தேயுவென்னும் மூன்றுத் திரவியங்களி லிருக்கின்றது. பிருதிவியிலோ அவ்வெழுவகை உருவமுமிருக்கின்றது. ஜலம், தேயுவென்னுமிரண்டில் கேவலம் சுக்கிலவுருவம் (வெண்மை வுருவ) மே யிருக்கின்றது. அவ்வுருவம் ஜலத் தேயுக்களின் பரமாணு வடிவ நித்தியத் திரவியங்களிலோ நித்தியமும், மற்றையவற்றில் அநித்தியமுமாகின்றது.

௱௧௫. இரசகுணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

இரசகுணமோ தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். அந்த ரசம் பிருதிவி,

ஜலமென்னு பிருதிரவியங்களிலேயேயிருக்கின்றது. பிருதிவியிலோ அறுவகை ரசமுமிருக்கின்றது. ஜலத்தில் மதுரரசமொன்றே யிருக்கின்றது, அந்த ரசமும் பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் நித்தியமும், மற்றையவற்றில் அநித்தியமுமாகின்றது.

## ௱கக௫. கந்தகுணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

கந்தகுணமோ நறுநாற்றம், தீநாற்றமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம், அக்கந்த குணம் பிருதிவியொன்றிலேயே யிருப்பதும், அநித்தியமுமாகின்றது.

## ௱கக௬. பரிசகுணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

பரிசகுணமோ, குளிர்ச்சி, வெம்மை, வெம்மையும் குளிர்ச்சியு மில்லாததென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அந்தப் பரிச குணம் பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்குத் திரவியங்களிலிருக்கின்றது. ஜலத்திலோ குளிர்ந்த பரிசமும், தேயுவில் வெம்மைப் பரிசமும், பிருதிவிவாயுவாம் இரண்டில் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுமிருக்கின்றது. அப்பரிசம் பரமாணு வடிவ நித்தியஜலத்திலும், பரமாணு வடிவ நித்தியத்தேயுவிலும், பரமாணு வடிவ நித்திய வாயுவிலும் நித்தியமாகின்றது. மற்றையவைகளில் அநித்தியமாகின்றது.

## ௱கக௭. சங்கியைக் குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

சங்கியைக் குணமோ ஒன்றாந் தன்மை, இரண்டாந் தன்மை, மூன்றாந் தன்மையென்னு மிவை முதலிய வேறுபாட்டால் அனேகவித மாகின்றது. அச்சங்கியைக்குணம் பிருதிவி முதலிய திரவியங்களிலிருக்கின்றது. ஒருமைத் தன்மைச்சங்கியையோ நித்தியத்திரவியங்களில் நித்தியமும், அநித்தியத்திரவியங்களில் அநித்தியமுமாகின்றது. இரண்டாந் தன்மை, மூன்றாந் தன்மை முதலிய சங்கியைகளோ யாண்டும் அநித்தியமேயாம்.

## ௱கக௮. பரிமாண குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

பரிமாண குணமோ நுண்மை, பெருமை, நெடுமை, குறுமை யென்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். அந்நான்கு வகைத்தாய பரிமாணமும், பரமம், மத்திமமென்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். அப்பரிமாணமும் பிருதிவி முதலிய ஒன்பான் திரவியங்களிலேயே யிருக்கின்றது. பிரிதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கு பரமாணுக்களிலும், மனதிலும் பரமநுண்மைத்தன்மையும், பரமகுறுமைத்தன்மையுமிருக்கின்றது. அப்பிருதிவி முதலிய நான்கின் துவியணுக்களில்மத்திமநுண்மைத் தன்மையும், மத்திமகுறுமைத்தன்மைப்பரிமாணமு மிருக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்கிலோ பரம பெருமைத் தன்மையும், பரம நெடுமைத் தன்மையு மிருக்கின்றது. கடமுதலிய திரவியங்களிலோ மத்திம பெருமைத் தன்மையும், மத்திம நெடுமைத் தன்மைப் பரிமாணமு மிருக்கின்றது. இப்பரிமாணம் நித்தியத்திரவியங்களில் நித்தியமும், அநித்திய

திரவியங்களில் அநித்தியமுமாகின்றது. அவ்வநித்திய பரிமாணமும் சங்கியா ஜன்னியம், பரிமாண ஜன்னியம், பிரசய ஜன்னியமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

**௱உ௰. வேற்றுமைத் தன்மையினைச் சுருக்கமாக வர்ணித்தல்.**

வேற்றுமைக்குணமோ வொருமை வேற்றுமை, இருமை வேற்றுமை, மும்மை வேற்றுமை யென்னு மிவை முதலிய வேறுபாட்டால் அனேக வகைத்தாம். அவ்வேற்றுமைக் குணமும் பிருதிவி முதலிய வொன்பான் திரவியங்களிலேயே யிருக்கின்றது. ஒருமை வேற்றுமையோ நித்தியத் திரவியங்களில் நித்தியமும், அநித்தியத் திரவியங்களில் அநித்தியமு மாகின்றது. இருமை, மும்மை முதலிய வேற்றுமைகளோ யாண்டும் அநித்தியமேயாகின்றது.

**௱உக. சையோக குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.**

சையோக குணமோ அன்னியதர கர்மஜ சையோகம், உபயதர கர்மஜ சையோகம், சையோகஜ சையோகமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அச்சையோக குணமும் பிருதிவிமுதலிய வொன்பான் திரவியங்களிலேயே யிருப்பதும் யாண்டும் அநித்தியமுமாகின்றது. கிரியாஜன்னிய சையோகமும் * அபிகாதாக்கிய சையோகம், நோதனாக்கிய சையோகமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம்.

**௱உஉ. விபாக குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.**

விபாக (பிறிவு) குணமோ அன்னியதர கர்மஜ விபாகம், உபயதர கர்மஜ விபாகம், விபாகஜ விபாக மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அவ்விபாகஜ விபாகம் காரண மாத்திர விபாக ஜன்னியம், காரண அகாரண விபாக ஜன்னியமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். இவ்விபாகமும் பிருதிவிமுதலிய வொன்பான் திரவியங்களிலேயே யிருப்பதும், யாண்டும் அநித்தியமுமாகின்றது.

**௱உ௩. பரத்வ அபரத்வ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.**

பரத்வம், அபரத்வ மென்னு மிரு குணங்களோ தைசிக பரத்வம், காலிக பரத்வம், தைசிக அபரத்வம், காலிக அபரத்வமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். பரத்வ, அபரத்வமா மிரு குணங்களும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமென்னும் ஐந்து திரவியங்களி லிருக்கின்றது. அதனிடத்திலும் காலிக பரத்வ அபரத்வங்களோ ஜன்னிய மூர்த்தத் திரவியங்களிலேயே யிருக்கின்றது. பரத்வ அபரத்வமா மிரு குணங்களும் அநித்தியமேயாம்.

**௱உச. குருத்வ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.**

குருத்வ குணமோ, நீட்டல், முகத்தல், நிறுத்தல் என்னும் இவை முதலிய வேறு பாட்டால் அனேக வகைத்தாம். இக்குருத்வ குணம்

---

* இதன்விரிவைப் பின்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் சையோக நிரூபணத்திற் காண்க.

பிருதிவி, ஜலமென்னும் இரு திரவியங்களிலேயே இருக்கின்றது. அதனிடத்தும் பரமாணு வடிவ நித்திய பிருதிவி ஜலங்களில் அக்குருத்வம் நித்தியமாகின்றது. துவியணுக முதலிய அநித்திய பிருதிவி ஜலங்களில் அக்குருத்வம் அநித்தியமாகின்றது. இக்குருத்வ குணம் * அதீந்திரியமேயாம்.

௱௨௫. திரவத்வ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

திரவத்வ குணமோ இயல்பாயுள்ளது, நிமித்தத்தாலாயது வென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். அத்திரவத்வ குணம் பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்றுத் திரவியங்களிலேயே யிருக்கின்றது. ஜலத்திலோ இயல்பாயுள்ளத் திரவத்வமும், அரக்கு நெய் முதலிய பிருதிவிகளிலும், பொன் முதலிய தேயுக்களிலும் நிமித்தத்தினலாய திரவத்வமுமிருக்கின்றது. அத்திரவத்வம் ஜலத்தின் பரமாணுக்களில் நித்தியமும், மற்றைய வற்றில் அநித்தியமுமாம்.

௧௨௬. சினேஹ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

சினேஹ குணமோ பிரக்ருஷ்டம் (சிறந்தது,) அபக்ருஷ்டம் (தாழ்ந்தது) என்னும் வேறு பாட்டா லிருவகைத்தாம் அச்சினேக குணம் ஜலம் ஒன்றினிடத்தே யிருக்கின்றது. எண்ணெய் முதலியவைகளின் அடக்கமாயுள்ள ஜலத்திலோ வுயர்ந்த சினேஹ ~~குண~~மிருக்கின்றது. அந்த சினேஹம் பரமாணு வடிவ நித்திய ஜலத்திலோ நித்தியமும், துவியணுக முதலிய அநித்திய ஜலங்களில் அநித்தியமுமாகின்றது.

௧௨௭. சத்தகுணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்

சத்தகுணமோ ஒலிவடிவ சத்தம், வர்ண (எழுத்து) வடிவ சத்தமென்னும் வேறுபாட்டாலிருவகைத்தாம். அவ்விருவகைத்தாய சத்தமும் சம்யோகஜ சத்தம், விபாகஜசத்தம், சத்தஜசத்தமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இச்சத்தகுணம் ஆகாசம் ஒன்றிலேயே யிருப்பதும், அநித்தியமுமாம்.

௧௨௮. புத்தி குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

ஞானவடிவ புத்தி குணமோ ஆத்மா வொன்றிலேயே யிருக்கின்றது. அப்புத்தி நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாகின்றது. ஈஸ்வர ஆத்மாவின் புத்தியோ நித்தியமும், பிரத்தியக்ஷமும், ஏகமுமாகின்றது. ஜீவாத்மாவின் புத்தியோ அநித்தியமும், பிரத்தியக்ஷ பரோக்ஷமென்னுமிருவடிவமும், அனேகமுமாகின்றது; அதாவது அவ்வநித்திய புத்தியும் அநுபவம், ஸ்மிருதி யென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அநுபவம், ஸ்மிருதி யென்னு மிருவகைத்தாய புத்தியும் யதார்த்தம் அயதார்த்தமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். முதலாவது யதார்த்தவநுபவமோ பிரத்தியக்ஷம், அநுமிதி, உவமிதி, சாப்தி, யென்னும் வேறுபாட்டால் நான்குவகைத்தாம். இந்நான்கில் முதலாவது பிரத்தியக்ஷமோ கிராணஜம், ராசனம், சாக்ஷுஷம், ஸ்பரிசம், சிராவணம், மானசமென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். அவ்வறுவகைத்தாய பிரத்தியக்ஷமோ ஸவிகல்பம்,

* அதீந்திரியம் - இந்திரியங்களுக்கு விஷயமாகாதது.

* [illegible] தாழ்ந்த [illegible] மிருக்கின்றது

நிர்விகல்ப மென்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தும். லௌகிகம் அலௌகிகமென்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்துமாம். அலௌகிகப்பிரத்தியக்ஷமும் சாமான்னியலக்ஷண சம்பந்தத்தாலுண்டாயது, ஞானலக்ஷண சம்பந்தத்தாலுண்டாயது, யோகஜ தர்மலக்ஷண சம்பந்தத்தாலுண்டாயது என்னும் வேறுபாட்டால் மூவகையாம். மற்றைய அயதார்த்த அநுபவமோ சம்சயம், விபர்யயம், தர்க்கமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

கஉ௧. சுக குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

சுககுணமோ கேவலம் ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றது. அச்சுக குணம் வைஷிகம் (விஷயத்தாலுண்டாவது), அபிமானிகம் (அபிமானத்தாலுண்டாவது), மனோரதிகம் (மனதாற் கற்பித்துக் கொள்ளுவதனாலுண்டாவது), ஆப்பியாசிகம் (பழக்கத்தாலுண்டாயது) என்னும் வேறுபாட்டால் நான்குவகைத்தாம். இவ்வெல்லாச் சுகங்களும் அநித்தியமேயாம்.

கநுய. துக்க குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

துக்க குணமும் கேவலம் ஜீவாத்மாவிலேயேயிருக்கின்றது. அத்துக்கமும் அச்சுகத்தினைப் போன்று நான்கு வகைத்தாம். அங்ஙனமே அநித்தியமுமாம்.

கநுக. இச்சா குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

இச்சா குணமோ நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவ்விச்சாகுணம் கேவலம் ஆத்மாவிலேயேயிருக்கின்றது. ஈஸ்வர ஆத்மாவிலோ அவ்விச்சா குணம் நித்தியமும், ஏகமுமாம். ஜீவாத்மாவில் அவ்விச்சா குணம் அநித்தியமும், பலவிச்சை, உபாய விச்சை என்னும் வேறுபாட்டால் இருவகைத்துமாம்.

கநுஉ. த்வேஷ குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

துவேஷகுணமோ கேவலம் ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றது. அத்துவேஷமும் துக்கத் துவேஷம், துக்கோபாய துவேஷமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். இத்துவேஷகுணம் அநித்தியமேயாம்.

கநுங. முயற்சி குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

பிரயத்தினமாகிய முயற்சி குணமோ நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அம்முயற்சி குணமும், கேவலம் ஆத்மாவிலேயே யிருக்கின்றது. ஈஸ்வர ஆத்மாவிலோ அம்முயற்சி நித்தியமும், ஏகமுமாம். ஜீவாத்மாவில் அம்முயற்சி அநித்தியமும், பிரவிருத்தி, நிவிர்த்தி ஜீவன்யோனியென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

கநுச. தர்ம அதர்ம குணங்களைச் சுருக்கமாக வர்ணித்தல்.

தர்ம அதர்மமென்னு மிருகுணங்களோ கேவலம் ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றன. அநித்தியமும், அதீந்திரியமுமாகின்றன.

## கஙடு. சம்ஸ்கார குணத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

சம்ஸ்கார குணமோ வேகம், நிலைபெறுத்துகை, பாவனை யென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். முதலாவது வேக வடிவ சம்ஸ்காரமோ பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமென்னு மைந்து மூர்த்தத் திரவியங்களி லிருக்கின்றது. இரண்டாவது நிலைபெறுத்துகை யென்னும் சம்ஸ்காரமோ கேவலம் பிருதிவியிலேயே யிருக்கின்றது. சில நூலாசிரியரின் மதப்படி நிலை பெறுத்துகை யென்னும் சம்ஸ்காரம் பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்கிலு மிருக்கின்றது. மூன்றாவது பாவனா வடிவ சம்ஸ்காரமோ கேவலம் ஜீவாத்மாவிலேயே யிருப்பதும், அதீந்திரியமுமாகின்றது. வேக வடிவ சம்ஸ்காரமும் கர்மஜவேகம், வேகஜ வேகமென்னும் வேறுபாட்டால் இரு வகைத்தாம். இச்சம்ஸ்கார குணம் அநித்தியமேயாம்.

## கஙசு. விசேஷ குணங்களின் நிரூபணம்.

இவ்விருபத்து நான்கு குணங்களில் உருவம், ரசம், கந்தம், பரிசம், சினேகம், இயல்பாயுள்ள திரவத்துவம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனை யென்னும் பதினாறும் விசேஷ குணங்களெனப்படும்.

## கஙஎ. சாமான்னிய குணங்களின் நிரூபணம்.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், நிமித்தத்தாலாகிய திரவத்துவம், குருத்துவம், வேகமென்னும் பத்தும் சாமான்னிய குணங்களெனப்படும். நிலைபெறுத்துகை எம்மதப்படி கேவலப் பிருதிவி மாத்திரத்திலிருப்பதாமோ அம்மதப்படி அந்நிலை பெறுத்துகை விசேஷ குணமாம். எம்மதப்படி அந்நிலை பெறுத்துகை பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கிலிருப்பதாமோ அம்மதப்படி அந்நிலை பெறுத்துகை சாமான்னிய குணமாம். சுருக்கமாக குணநிரூபணம்.

## கஙஅ. கர்ம பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

மூன்றாவது கர்ம பதார்த்தமோ எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தலென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். அக்கர்மம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமென்னு மைந்து திரவியங்களிலேயே யிருப்பதும் அவ்வெல்லாக் கருமங்களும் அநித்தியமுமாம். சுருக்கமாக கர்ம நிரூபணம்.

## கஙக. ஜாதிவடிவ சாமான்னிய பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

நான்காவது ஜாதி வடிவ சாமான்னிய பதார்த்தமோ திரவியம், குணம், கருமமென்னு மூன்று பதார்த்தங்களிலேயே யிருப்பது. அச்சாமான்னியம் பரம், அபரமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். திரவியம், குணம், கருமமென்னு மிம்மூன்றிலிருப்பதான சத்தா ஜாதியோ பரசாமான்னியமெனப்படுகிறது. ஒன்பான் திரவியங்களிலிருப்பதான திரவியத் தன்மை ஜாதியும், இருபத்துநான்கு குணங்களி லிருப்பதான குணத்தன்மை ஜாதியும்,

ஐவகை கருமங்களிலிருப்பதான கருமத்தன்மை ஜாதியுமாம். இவை முதலிய வெல்லா ஜாதிகளும் அபர சாமான்னிய மெனப்படுகின்றது. இவ்வெல்லா ஜாதி வடிவ சாமான்னியம் நித்தியமேயாம். சுருக்கமாக சாமான்னிய நிரூபணம்.

### கசய. விசேஷ பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஐந்தாவது விசேஷ பதார்த்தமோ நித்தியத் திரவியங்களிலேயேயிருப்பதும், நித்தியமுமாகிறது. பரமாணு முதலியத் திரவியங்கள் அனேகமாம். ஆகையால் விசேஷமும் அனேகமேயாம். சாமான்னியமாக விசேஷ நிரூபணம்.

### கசக. சமவாய பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஆறுவது சமவாயபதார்த்தமோ அவயவம் அவயவியா மிரண்டிற்கும், குணம் குணியா மிரண்டிற்கும், கிரியை கிரியையுடையதாம் இரண்டிற்கும், ஜாதி வியக்தியா மிரண்டிற்கும், விசேஷம் நித்தியத் திரவியங்களா மிரண்டிற்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் யாதோ அதனை சமவாயமெனப்படும். அச்சமவாயம் ஏகமும், நித்தியமும், அதீந்திரியமுமாகின்றது. சுருக்கமாக சமவாய பதார்த்த நிரூபணம்.

### கசஉ. அபாவ பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஏழாவது அபாவ பதார்த்தமோ சம்சர்க்காபாவம், அன்னியோன்னியாபாவமென்னும் வேறுபாட்டால் இருவிதமாம். முதலாவது சம்சர்க்காபாவமோ பிராசீனர்களின் மதப்படி பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், சாம்பிகாபாவமென்னும் வேறுபாட்டால் நான்குவகைத்தாம். நவீன நையாயிகர் மதப்படி பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அத்தியந்தாபாவம்,அன்னியோன்னியாபாவமா மிரண்டும் நித்தியமேயாம். மற்றையவெல்லா அபாவங்களும் அநித்தியமாம். அவ்வநித்திய அபாவங்களிலும் பிராகபாவமோ உற்பத்தியின்றி அநாதியும், நாசமுடையதுமாகின்றது. பிரத்துவம்சாபாவமோ உற்பத்தியுடையதும் நாசமில்லாது அநந்தமுமாகின்றது. சாமயிகாபாவமோ உற்பத்தி யுடையதும், நாசமுடையதுமாகின்றது. சுருக்கமாக அபாவ நிரூபணம்.

கணாதமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய வைசேடிக சாத்திரத்தின் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களை முதலில் சுருக்கமாய் நிரூபணஞ் செய்யப்பட்டது. இனி கௌதமமுனிவர் அருளிச் செய்யப்பட நியாயசாத்திரத்தின் பிரமாணமுதலிய பதினாறு பதார்த்தங்களை நிரூபிப்பாம்.

### கசாங. பிரமாண முதலிய பதினாறு பதார்த்தங்களைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஆண்டு பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோஜனம், திர்ஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை,

ஏத்வாபாசம், சலம், ஜாதி, நிக்கிரஹஸ்தானமென்னும் வேறுபாட்டால் பதினாறு பதார்த்தங்களைக் கூறப்பட்டிருக்கின்றன.

கசச. பிரமாண பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

பிரமாண பதார்த்தமோ பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சப்தமென்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். முதலாவது பிரத்தியக்ஷ பிரமாணமோ பாஹியம், ஆந்தரமென்னும் வேறுபாட்டால் இரு வகைத்தாம். பாஹிய பிரத்தியக்ஷப் பிரமாணம் கிராணம், ரசம், சக்ஷுஸ், துவக்கு, சுரோத்திரமென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். மனம் ஆந்தரப் பிரத்தியக்ஷ பிரமாண மெனப்படுகின்றது. இரண்டாவது அநுமானப் பிரமாணமும் பூர்வவத் (காரணத்தை லிங்கமாகவுடைய) அநுமானம், சேஷவத் (காரியத்தை லிங்கமாக உடைய) அநுமானம், சாமான்னியதோதிருஷ்ட (காரண காரியங்கட்கு வேறான லிங்கத்தையுடைய) அநுமானமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அம்மூவகை அநுமானமும் ஸ்வார்த்தம் (தன் பொருட்டு), பரார்த்தம் (பிறர் பொருட்டு) என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவிதமாம். மூன்றாவது உபமானப் பிரமாணமும் சாதுருசிய விசிஷ்ட (சமான இயல்படுத்த) பிண்ட ஞானம், வைதர்மிய விசிஷ்ட (வேற்றியல் படுத்த) பிண்ட ஞானம், அசாதாரண தர்ம விசிஷ்ட (சிறப்பியல் படுத்த) பிண்ட ஞானம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். நான்காவது சப்தப் பிரமாணமோ திர்ஷ்டார்த்தகம் (புசித்தற்கு விரும்புவோன் அடுதலைச்செய்க என்றல் முதலிய காணப்படும் பொருளைக் கூறுவது), அதிர்ஷ்டார்த்தகம் (ஸ்வர்க்கம் விரும்புவோன் வேள்வியைச் செய்க என்றல் முதலிய காணப்படாத பொருளைக் கூறுவது) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.—(க)

கசரு. பிரமேய பதார்த்தங்களைச் சுருக்கமாக நிருபித்தல்.

பிரமேய பதார்த்தமோ ஆத்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோஷம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், அபவர்க்கமென்னும் வேறுபாட்டால் பன்னிருவகைத்தாம். அப்பன்னிருவகைத்தாய பிரமேயங்களில் முதலாவது ஆத்மவடிவப் பிரமேயமோ ஜீவாத்மா, ஈஸ்வராத்மா வென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஜீவாத்மாவோ நாநாவும், ஈஸ்வராத்மா ஏகமுமாம். அவ்விரு ஆத்மாக்களும் நித்தியமும், விபுவுமாகின்றன. சரீர வடிவப் பிரமேயமோ ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜமென்னும் வேறுபாட்டால் நான்குவகைத்தாம். இந்திரிய வடிவப் பிரமேயமோ கிராணம், ரசனம், சக்ஷுஸ், துவக்கு, சுரோத்திரம், மனமென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். அர்த்த வடிவப் பிரமேயமோ உருவம், ரசம், சத்தம், ஸ்பரிசம், கந்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சியென்னும் வேறுபாட்டால் பதினொருவகைத்தாம். அல்லது அவ்வர்த்தவடிவப்பிரமேயம் திரவியம், குணம், கருமம், சாமான்னியம், விசேஷம், சமவாயமென்னும் வேறுபாட்டால் அறுவகைத்

தாம். புத்தி வடிவப் பிரமேயமோ நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஈஸ்வராத்மாவின் புத்தியோ நித்தியமும், ஏகமும், பிரத்தியக்ஷ வடிவுமாம். ஜீவாத்மாவின் புத்தி அநித்தியமாகின்றது. அவ்வநித்திய புத்தியும் அநுபவம், ஸ்மிருதியென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவ்விரு வகைத்தாய அநித்திய புத்தியும் யதார்த்தம், அயதார்த்தமென்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். யதார்த்த அநுபவமோ பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தியென்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். அயதார்த்த அநுபவமோ சம்சயம், விபர்யயம், தர்க்கமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். மனவடிவப் பிரமேயமோ நாநாவும், நித்தியமும், அணுவுமாம். பிரவிருத்தி வடிவப் பிரமேயமோ வாகாரம்பம் (வசனத்திற்கு அநுகூலமாயது), புத்தியாரம்பம் (தியானத்திற்கு அநுகூலமாயது), சரீராரம்பம் (உட்கேட்டைக்கு அநுகூலமாயது) என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். தோஷ வடிவப் பிரமேயமோ ராகம், துவேஷம், மோஹ மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அவற்றுள் முதலாவது ராகவடிவ தோஷமோ காமம் (இச்சை), மற்சரம் (தன் பயனை விசாரியாமலே பிறன் விரும்பியதைத் தடுக்க விரும்புதல்), ஸ்ப்ருஹை (தர்ம விரோதமில்லாது பொருளை யடைய விரும்புதல்); திருஷ்ணை (என்னுடையது ஒருநாளுங் கெடலாகாதென்னும் விருப்பம்), உலோபம் (தர்ம விரோதமாக பிறர் பொருளை யடைய விரும்புதல்), மாயை (பிறரை வஞ்சிக்க விரும்புதல்), இடம்பம் (தர்ம மில்லாதவனை விருந்தும் தர்ம முடையவனைத் தன்னைப் புகழ்ந்துப் பேசுவது) என்னும் வேறுபாட்டால் எழுவகைத்தாம். இரண்டாவது த்வேஷ வடிவ தோஷமோ குரோதம் (கண் சிவத்தல் முதலியவற்றிற்குக் காரணமாயது), ஈரிஷை (சாதாரண வஸ்து ஒன்றை தன்னுடையதாகக் கொள்ளும் புருஷனைக் குறித்துண்டாவது), அசூயை (வேறு புருஷர்களது கல்வி முதலிய குணங்களைக் குறித்துண்டாவது), துரோகம் (வேறு புருஷரைக் கெடுத்தற் பொருட்டுண்டாவது), அமர்ஷம் (குற்றஞ் செய்வோனைத் தண்டிப்பதற்குத் தன்னிடத்தில் வல்லமையில்லாதவனிடத்துண்டாவது), அபிமானம் (அபகாரஞ் செய்பவனைத் துன்பத்திற்குள்ளாக்குவதற்கு வல்லமையில்லாதவனிடத்துண்டாவது) என்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். மூன்றாவது மோஹ வடிவ தோஷமோ விபர்யயம் (மித்தையாலாய ஞானம்), சம்சயம் (ஒரு தர்மியின் மாறுபட்ட பலதருமங்களால் விசேஷிக்கப்பட்ட வுணர்வு), தருக்கம் (வியாப்பியத்தை ஆரோபித்தலால் வியாபகத்தை ஆரோபிப்பது), மானம் (தன்னிடத்திலில்லாத குணங்களை ஆரோபித்துக் கொண்டு உயர்வாகக் கருதும் புத்தி), பிரமாதம் (முன் கர்த்தவ்விய அகர்த்தவ்வியங்களாக நிச்சயித்தவற்றி லுண்டாம் அகர்த்தவ்விய கர்த்தவ்வியத் தன்மையான ஞானம்), பயம் (அநிஷ்டத்தைச் செய்வோன் யாதேனும் ஓர்காரணம் வாய்த்தகாலத்து அதனைவிடுத்தற்குத் தகுதியில்லாமையை அறிதல்), சோகம் (இஷ்டவஸ்துப் பிரிந்தகாலத்து அதுமீண்டும் கிடைத்தற்குரிய தாகாமையை யுணர்தல்) என்

னும் வேறுபாட்டால் எழுவகைத்தாம். மரணத்திற்குப் பின்னுண்டாம் ஜன்மத்தினை பிரேத்திய பாவமென்பர். பலவடிவப் பிரமேயமோ முக்கியம் (சுக துக்க சாக்ஷாத்காரம்), கௌணம் (முக்கிய பலசாதனம்) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். துக்க வடிவப் பிரமேயமோ யான் துக்கி என்னும் பிரதீதியால் பிராணிகள் யாவற்றிற்கும் பிரசித்தமாயுள்ளது. சரீரமுதலிய இருபத்தொரு துக்கங்களின் ஆத்தியந்திக நிவிர்த்தியினை மோக்ஷமென்பர். —(உ).

கசசு. சம்சய பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

சம்சய வடிவ பதார்த்தமோ சாதாரண தர்மமுடைய தர்மி ஞானத்தாலுண்டாயது, அசாதாரண தர்மமுடைய தர்மி ஞானத்தாலுண்டாயது, விப்பிரதிபத்தி வாக்கியத்தாலுண்டாய தென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அச்சம்சயம் பகிர்விஷயகம் (புறவிடயத்தது), அந்தர்விஷயகம் (உள்விடயத்தது) என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். பாகிர் விஷயக சம்சயமும் திருசியமான தர்மிகம் (காணப்படுந் தர்மியினது), அதிருசியமான தர்மிகம் (காணப்படாத தர்மியினது) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.—(ங).

கசஎ. பிரயோஜன பதார்த்தத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

பிரயோஜன பதார்த்தமோ முக்கியம் (சுகம் துக்காபாவம்), கௌணம் (முக்கியப்பிரயோஜன சாதனம்) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.—(ச).

கசஅ. திருஷ்டாந்த பதார்த்தத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

வாதிப் பிரதிவாதிகளது நிச்சயத்திற்குச் சாதகமான திருஷ்டாந்த பதார்த்தமோ சாதர்மியம் (அந்வயதிருஷ்டாந்தம்), வைதர்மியம் (வெதிரேக் திருஷ்டாந்தம்) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.—(ரு).

கசகூ. சித்தாந்த பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

சித்தாந்த (சாத்திரமுணர்ந்தவர்ப் பிரமாணமுடைமையால் அங்கீகரித்த) பதார்த்தமோ சர்வ தந்திர சித்தாந்தம், பிரதி தந்திர சித்தாந்தம், அதிகரண சித்தாந்தம், அப்பியுபகம சித்தாந்த மென்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம்.—(சு).

கருய. அவயவ பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

அவயவ பதார்த்தமோ பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரணம், உபநயம், நிகமனமென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். அவற்றுள் இரண்டாவது ஏதுவென்னும் அவயவமும் அஞ்ஞாத வியதிரேக வியாப்திக ஏது போதகம், அப்பிரதீதான்வய வியாப்திக ஏது போதகம், பிரதீதான்வய வியதிரேகவியாப்திகயேது போதகமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். உதாஹரண வடிவ அவயவமோ அன்வயவியாப்தி போதகம், வியதிரேக

வியாப்தி போதகமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்; நான்காவது உபய வடிவ அவயவமும் அன்வயி, வியதிரேகி யென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.—(எ).

கருக. தர்க்க பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

தர்க்க பதார்த்தமோ ஆத்மாசிரியம், அந்நியோன்னியாசிரியம், சக்கிரிகா, அநவஸ்தா, பிரமாண பாதிதார்த்தப் பிரசங்க மென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆத்மாசிரியம், அன்னியோன்னியாசிரியம், சக்கிரிகா வென்னும் மூவித தர்க்கங்களோ உற்பத்தி, ஸ்திதி, ஞப்தி யென்னும் வேறுபாட்டால் மும்மூன்று வகைத்தாம். அல்லது அத்தர்க்க பதார்த்தம் வியாகாதம், ஆத்மாசிரியம், இதரேதராசிரியம், சக்கிரிகாசிரியம், அனவஸ்தா, பிரதிபந்தி கல்பனு, லாகவ கல்பனு, கௌரவம், உத்சர்க்கம், அபவாதம், வைஜாத்தியமென்னும் வேறுபாட்டால் பதினொரு வகைத்தாம். அத்தர்க்கபதார்த்தம் விஷய பரிசோதகம், வியாப்தி கிராஹிக மென்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம்.—(அ).

கருஉ. நிர்ணய பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

பிரமாணத்தின்பயன் வடிவ நிச்சய ஆத்மஞானம் யாதோ அதனை நிர்ணய மெனப்படும்.—(கூ).

கருங. வாத பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

தத்துவத்தை (உண்மையை) யறிய விச்சையுடைய இருவர் ஒருவருக்கொருவர் கூறும் வினுவிடை யாதோ அதனை வாதமென்பர்.—(கo).

கருச. ஜல்ப பதார்த்தத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

ஒருவரை யொருவர் வெல்லவேண்டு மென்னும் இச்சையுடையவர்கள் தத்தங்கருத்தை நிலைக்கச் செய்வதான வசனங்கள் யாவையோ அவற்றை ஜல்பமென்பர்.—(கக).

கருரு. விதண்டை பதார்த்தத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

ஒருவரை யொருவர் வெல்லும் வேட்கையுடையவர்கள் கூறும் தமது கக்ஷியை நிலைக்கச் செய்யாத கதை யாதோ அதனை விதண்டை யென்பர்.—(கஉ).

கருசு. ஏதுப்போலிப் பதார்த்தத்தினைச் சுருக்கமாக வர்ணித்தல்.

ஏதுப்போலிப் பதார்த்தமோ வியபிசாரி, விருத்தம், அசித்தி, சப்பிரதிபக்ஷம், பாதிதமென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். முதலாவது வியபிசாரி யேத்துவாபாசமோ சாதாரணம், அசாதாரணம், முடிவுபெறுமை யென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அசித்தியேத்துவாபாசமும் சொரூபாசித்தம், ஆசிரியாசித்தம், வியாப்பியத் தன்மையசித்த மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.—(கங).

கருஎ. சல பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

ஒரு பொருள் கருதிச் சொல்லியதற்கு வேறு பொருள் கற்பித்துக் கொண்டுப் பழித்தலான சலபதார்த்தமோ வாக்சலம், சாமான்னியசலம், உபசாரசலம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.—(கச).

கருவு. ஜாதி பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

போலிவிடையினை ஜாதியென்பர், அஜ்ஜாதி பதார்த்தமோ சாதர்மிய (பொது வியல்பு) சமை, வைதர்மிய (வேற்றியல்பு) சமை, உத்கிருஷ்ட (உயர்ச்சி) சமை, அபகிருஷ்ட (தாழ்ச்சி) சமை, வர்ண்ணிய (புகழ்ந்துரை) சமை, அவர்ண்ணிய (பழித்துரை) சமை, விகற்ப சமை, சாத்திய சமை, பிராப்தி (அடைவு) சமை, அப்பிராப்தி (அடையாமை) சமை, பிரசங்கசமை, பிரதி (வேறு) திருஷ்டாந்த சமை, அநுற்பத்தி (உற்பத்தியின்மை) சமை, சம்சய (ஐய) சமை, பிரகரண சமை, ஏது சமை, அர்த்தாபத்தி சமை, அவிசேஷ (விசேஷமின்மை) சமை, உபபத்தி சமை, உபலப்தி சமை, அநுபலப்தி சமை, நித்திய சமை, அநித்திய சமை, காரிய சமை என்னும் வேறுபாட்டால் இருபத்து நான்கு வகைத்தாம்.—(கரு).

கருசு. நிக்கிரஹ பதார்த்தத்தினைச் சுருக்கமாக நிரூபித்தல்.

பிறரை ஜெயிப்பதற்கு ஏது யாதோ அது நிக்கிரஹஸ்தான மெனப்படுகின்றது. அந்நிக்கிரஹஸ்தான பதார்த்தமோ பிரதிஞ்ஞாஹானி (மேற்கோளழிவு), பிரதிஞ்ஞாந்தரம் (வேறுமேற்கோள்), பிரதிஞ்ஞா விரோதம் (மேற்கோண் மாறுபாடு), பிரதிஞ்ஞா சந்நியாசம் (மேற்கோள் விடுதல்), ஏத்வாந்தரம் (வேற்றேது), அர்த்தாந்தரம் (வேற்றுப் பொருள்), நிரர்த்தகம் (பொருளின்மை), அபார்த்தகம் (பொருளுணரப்படாமை), அவ்விஞ்ஞாதார்த்தம் (பொருட்போலி), அப்பிராப்தகாலம் (காலம் பெறாமை), நியூனம் (குன்றக்கூறல்), அதிகம் (மிகைப்படக்கூறல்), புனருக்தம் (கூறியது கூறல்), அநநுபாஷணம் (பிற்கூற்றின்மை), அஞ்ஞானம் (அறியாமை), அப்பிரதிபா (விடை தெரிந்து விளங்காமையால் பேசாதிருத்தல்), விக்ஷேபம் (தனக்கு வேறு காரியமிருக்கின்றதெனக்கூறி வாதத்தை நிறுத்தல்), மதாநுஞ்ஞை (தன் குற்றத்தைப் பரிகரிக்காமல் பிறர் குற்றங் கூறல்), பர்யநுயோஜ்யோ பேக்ஷணம் (எடுத்துக் காட்டக்கூடிய தோல்வித்தானத்தைக் காட்டாதிருத்தல்), நிரநுயோஜ்ஜியாநு யோகம் (தோல்வியில்லா விடத்துத் தோல்விகூறல்), அபசித்தாந்தம் (சித்தாந்தபோலி), ஏத்வாபாச மென்னும் வேறுபாட்டால் இருபத்திரண்டு வகைத்தாம். சுருக்கமாகப் பிரமாண முதலிய பதினாறு பதார்த்தங்களின் நிரூபணம்.

முந்நூற்படி கணாதமுனிவ ரருளிச்செய்த வைசேடிக சாத்திரத்தின் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களையும், கௌதமுனிவ ரருளிச்செய்த நியாயசாத்திரத்தின் பிரமாண முதலிய பதினாறு பதார்த்தங்களையும் சுருக்கமாய் நிரூபிக்கப்பட்டன. இனி இந்நியாயப் பிரகாச நூலில் பின்னர் அத் திரவிய முதலிய பதார்த்தங்களின் விஸ்தார நிரூபணம் எம்முறைப்படி செய்யப்படுமோ அம்முறையினை நிரூபிப்பாம்.—(கசு).

## கசு௰. முதற்பரிச்சேதத்தில் சுருக்கமாகக் கூறப்பட்ட திரவிய முதலிய புதார்த்தங்களை இரண்டாவது முதலிய பரிச்சேதங்களில் விரிவாகக் கூறுவதை வர்ணித்தல்.

இந்தியாப் பிரகாச நூலில் இரண்டாவது பரிச்சேதத்திலோ பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களை விரிவாக நிரூபிப்பதுடன் இருளிலும், பொன்னிலும், அத்திரவியங்களிலும் வேறுந்திரவியத் தன்மையினைக் கண்டிப்பாம். மூன்றாவது பரிச்சேதத்திலோ ரூபமுதலிய இருபத்து நான்கு குணங்களை விரிவாய் நிரூபிப்பாம். நான்காவது பரிச்சேதத்தில் கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமென்னும் ஐந்து பதார்த்தங்களை விரிவாய் நிரூபிப்பதுடன் சக்தி, சாதுர்ஸ்ய முதலியவைகளில் அவ்வேழு பதார்த்தங்களினும் வேறான பதார்த்தத் தன்மையினைக் கண்டிப்பாம். ஐந்தாவது பரிச்சேதத்திலோ திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களின் சாதர்மிய வைதர்மியங்களையும், பிருதிவி முதலிய ஒன்பதுதிரவியங்களின் சாதர்மிய வைதர்மியங்களையும், ரூப முதலிய இருபத்து நான்கு குணங்களின் சாதர்மிய வைதர்மியங்களையும் கூறுவாம். ஆண்டுச்சாமான்ன தர்மத்தினைச் சாதர்மியம் என்றும், விருத்த தர்மத்தினை வைதர்மிய மென்றும் கூறுவர்.

மூன்றாவது பரிச்சேதத்தில் சாமான்னியமாகக் கூறப்பட்ட புத்தி வடிவ குணம் யாதோ அந்த ஞான வடிவ புத்தியினை ஆறாவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபிப்பாம். அதாவது அவ்வாறாவது பரிச்சேதத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணத்தா லுண்டாகும் பிரத்தியக்ஷப் பிரமையினையும், அநுமானப் பிரமாணத்தாலுண்டாகும் அநுமிதிப்பிரமையினையும், உபமானப் பிரமாணத்தாலுண்டாகும் உபமிதிப் பிரமையினையும், சத்தப்பிரமாணத்தாலுண்டாகும் சாப்தீப் பிரமையினையும், ஸ்மிருதி ஞானத்தினையும், சம்சய விபர்யய தர்க்க வடிவ அயதார்த்த அநுபவத்தினையும், பிரமாண்ணிய வாதத்தினையும் நிரூபிப்பாம்.

ஏழாவது பரிச்சேதத்திலோ நியாய சாத்திரத்தின் பிரமாண முதலிய பதினாறு பதார்த்தங்களின் விரிவையும், முற்கூறிய திரவியமுதலிய ஏழு பதார்த்தங்களில் அப்பதினாறுபதார்த்தங்களினடக்கமும், தீதிதிகார பட்டாசாரியரானவர் கணாதமுனிவர் அருளிய திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களில் எத்தனைப் பதார்த்தத்தினைக் கண்டித்து எத்தனைப் பதார்த்தத்தினை அதிகமாக வொப்பினரோ அவ்வெல்லாப் பதார்த்தங்களையும் நிரூபிப்பாம்.

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசாரிய ஸ்ரீ ஸ்வாமி உத்தவாநந்தகிரி பாதத்தை பூஜித்த சிஷ்யராகிய ஸ்ரீ ஸ்வாமி சித்கனாநந்தகிரி யென்பவர் அருளிச் செய்யப்பட்ட நியாயப் பிரகாச மங்கலமுக்தி வாத நிரூபண வாயிலாக சுருக்கமாக திரவிய முதலிய பதார்த்தங்களின் நிரூபண மமைந்த முதற்பரிச்சேதம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ குருப்பியோநமః. ஸ்ரீ விஸ்வேஸ்வராயநமః.

நியாயப்பிரகாசம் முதற்பரிச்சேதம்

முற்றுப் பெற்றது.



ஓம் ஸ்ரீகணேசாயநமஃ. ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வராயநமஃ.
ஸ்ரீகுருப்பியோநமஃ. ஸ்ரீசங்கராசாரியேப்பியோநமஃ.

# நியாயப் பிரகாசம்.

## இரண்டாவது பரிச்சேதம்.

### கசுக. திரவிய நிரூபணம்.

முதற் பரிச்சேதத்தில் சுருக்கமாக நிரூபிக்கப்பட்ட பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களை இவ்விரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபிப்பாம். லக்ஷணம், பிரமாணத்தாலேயே வத்துவின் சித்தி யுண்டாகின்றது. லக்ஷணம் பிரமாணமின்றி வத்துவின் சித்தி உண்டாகாதென்னும் நியாயத்தினை அங்கீகரித்துப் பிருதிவிமுதலிய ஒன்பதுதிரவியங்களைச் சித்திசெய்வான் கருதி, முதலில் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் சாமான்னிய லக்ஷணம் கூறுவாம். ஆண்டு "ஸமவாயிகாரணம் த்ரவ்யம்" அல்லது "குணாஶ்ரயஃ த்ரவ்யம்" அல்லது "த்ரவ்யத்வஜாதிமத் த்ரவ்யம்" அல்லது "குணாத்யந்தாபாவாநதிகரணம் த்ரவ்யம்". இனி முறையாக இந்நான்கு லக்ஷணங்களின் அர்த்தத்தை நிரூபிப்பாம்.

### கசுஉ. திரவ்வியத்தின் சமவாயி காரணத்தன்மை வடிவ முதலாவது லக்ஷணத்தின் வர்ணனம்.

முதலாவது "ஸமவாயி காரணம் த்ரவ்யம்" என்னும் லக்ஷணத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம். காரியத்தின் சமவாயிகாரணம் யாதோ அதனைத் திரவியமெனப்படும். பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களிலேயே யோக்கியத் திரவிய வடிவ காரியத்தின் அல்லது குண வடிவ காரியத்தின் அல்லது கரும வடிவ காரியத்தின் சமவாயிகாரணத் தன்மை யிருக்கிறது. குணம், கருமமென்னும் பதார்த்தங்களில் காரியத்தின் சமவாயி காரணத் தன்மை யுண்டாவதில்லை. ஆகையால் இச்சமவாயி காரண வடிவத் திரவியத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. மனவடிவத் திரவியத்திலோ வோர் காரியத் திரவியமும் சமவாய சம்பந்தமாக வுண்டாகிறதில்லை. குணமும், கருமமும் சமவாய சம்பந்தமாக வுண்டாகின்றன. ஆகையால் மனவடிவத் திரவியத்தில் திரவிய வடிவ காரியத்தின் சமவாயி காரணத் தன்மையின்றும். கேவலம் குணவடிவ காரியத்திற்கும், கருமவடிவ காரியத்திற்குமே சமவாயிகாரணத் தன்மை யிருக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்கு விபுத்திரவியங்களி லோர்த்திரவியமும், கருமமும் சமவாய சம்பந்தமாக வுண்டாகிறதில்லை. குணமே சமவாய சம்பந்தமாக

வுண்டாகிற தாகையால் அந்நான்கு விபுத்திரவியங்களில் கேவலம் குண வடிவ காரியத்தின் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது. பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்குத் திரவியங்களிலோ திரவிய வடிவ காரியமும், குணவடிவ-காரியமும், கருமவடிவ காரியமுமாம் மூன்றும் சம வாய சம்பந்தமாக வுண்டாகின்றன. ஆகையால் பிருதிவி முதலிய நான்குத் திரவியங்களில் திரவிய வடிவ காரியத்தினதும், குணவடிவ காரியத்தி னதும், கருமவடிவ காரியத்தினதும் சமவாயி காரணத் தன்மை யிருக்கின் றது. பிருதிவி முதலிய நான்குத் திரவியங்களிலும் சரீரம், கட முதலிய அந்தியாவயவி வடிவ பிருதிவி முதலியவைகளில் ஓர்த் திரவியமும் சமவாய சம்பந்தமாக வுண்டாவதின்று. குணமும், கருமமு முண்டாகின்றன வாகையால் சரீரம், கட முதலிய வடிவ அந்தியாவயவிகளில் திரவிய வடிவ காரியத்தின் சமவாயி காரணத் தன்மை இன்றும். கேவலம் குண வடிவ காரியத்தினதும், கரும வடிவ காரியத்தினதும் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது. அந்தியாவயவியின் சொரூபம் பின்னர் பிருதிவி நிரூபணத் திற் கூறுவாம். இவ்வாற்றால் பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களி லேயே சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது.

## கசுரு. சமவாயி காரணத்தின் சொரூப வர்ணனம்.

எத்திரவியத்தில் எக்காரியம் சமவாய சம்பந்தமாக வுண்டாவ தாகின்றதோ அத்திரவியம் அக்காரியத்தின் சமவாயி காரண மெனப்படும். எங்ஙனம்: தந்துக்களில் பட வடிவ காரியம் சமவாய சம்பந்தமாக வுண்டாவ தாகின்றது. ஆகையால் அத்தந்து அப்படத்தின் சமவாயி காரணமாம், அங்ஙனமே அப்படம் தன்னிடத்துள்ள வுருவ முதலிய குணங்கட்கும், கரு மங்கட்கும் சமவாயி காரணமாம். "சமவாயி காரணம் திரவியம்" என்னும் முதலாவது லக்ஷணத்தில் "சமவாயி" என்னும் பதங் கூறாது "கார ணம் திரவியம்" என விம்மாத்திரமே திரவியத்தின் லக்ஷணமாகக் கூறின் உருவ முதலிய குணங்களிலும் அத்திரவியத்தின் லக்ஷணத்திற்கு அதி வியாப்தியுண்டாம். எற்றுக்கெனின், தந்துமுதலிய அவயவங்களி லுள்ள உருவ முதலிய குணங்கள் பட முதலிய அவயவியிலுள்ள உருவ முதலிய குணங்களின் காரணமாகின்றன. அங்ஙனமே உருவ முதலிய குணங்கள் தன்னை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானத்திற்கும், சுவத்துவம்சத்திற்கும், காரணமாகின்றன. அவ்வுருவ முதலிய குணங்களில் அவ்விலக்கணத்தின் அதிவியாப்தியை நிவிருத்தி செய்யும்பொருட்டுத் திரவியத்தின் லக்ஷணத்தில் "சமவாயி" என்னும் இதை காரணத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. "சமவாயி" என்னும் விசேஷணத்தைக் கூறுவதால் அவ்வுருவமுதலிய குணங் களில் திரவியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. ஏனெனின், தந்துவிலுள்ள உருவ முதலிய குணங்கள் படத்திலுள்ள உருவ முதலிய குணங்களின் சமவாயி காரணமன்று. ஆனால் அசமவாயி காரணமாம். அங்ங னமே அவ்வுருவ முதலிய குணங்கள் சுவபிரத்தியக்ஷத்திற்கும், சுவத்துவம் சத்திற்கும், சமவாயி காரணமன்று நிமித்த காரணமாம்.

## கசுச. அசமவாயி காரணத்தின் சொரூப வர்ணனம்.

எப்பதார்த்தம் எக்காரியத்தின் சமவாயி காரணத்தில் சமவாயசம்பந்தமாக அல்லது சுவாசிரிய சம்பந்தமாக இருப்பதாகி காரியத்தினை யுண்டாக்குவதாகின்றதோ அப்பதார்த்தம் அக்காரியத்தின் அசமவாயி காரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: தந்துக்களின் சையோகம் படவடிவ காரியத்தின் சமவாயி காரண வடிவ தந்துக்களில் சமவாய சம்பந்தமாக இருப்பதாகி அப்பட வடிவ காரியத்தினை யுண்டாக்குவதாகின்றது. ஆகையால் அத்தந்துக்களின் சையோகம் பட வடிவ காரியத்தின் அசமவாயி காரணமெனப்படுகின்றது. அங்ஙனமே: அத்தந்துக்களின் உருவ முதலிய குணங்கள் அப்படத்திலுள்ள உருவ முதலிய குணங்களின் சமவாயி காரணவடிவ அப்படத்தில் சுவாசிரிய சம்பந்தமாக விருப்பதாகி அப்படத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குவதாகின்றன. ஆகையால் தந்துக்களின் உருவ முதலிய குணங்கள் அப்படத்திலுள்ள உருவ முதலிய குணங்களின் அசமவாயி காரண மெனப்படுகின்றன. ஈண்டு இரண்டாவது சம்பந்தத்தில் சுவ வென்னுஞ் சத்தத்தால் தந்துக்களின் உருவ முதலிய குணங்களைக் கொள்ளுக. அவ்வுருவ முதலிய குணங்களின் ஆசிரியமாகிய தந்து யாதோ அத்தந்துக்களில் அப்படம் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. ஆகையால் அத்தந்துக்களின் உருவ முதலிய குணங்கள் சுவாசிரிய சமவாய வடிவ பரம்பரைச் சம்பந்தமாக அப்படத்தி லிருக்கின்றது.

## கசுரு. நிமித்த காரணத்தின் சொரூப வர்ணனம்.

சமவாயி காரணம், அசமவாயி காரண மென்னு மிரண்டிற்கும் வேறான காரணத்தினை நிமித்த காரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: பட வடிவ காரியத்திற்கு தறி, வேமா, நாடா முதலிய வெல்லாக் காரணங்களையும் நிமித்த காரண மெனப்படுகின்றன. அங்ஙனமே: கட வடிவ காரியத்திற்கு தண்டம், சக்கிரம், குலாலன் முதலிய யாவும் நிமித்த காரண மெனப்படுகின்றன. ஒரு காரியத்திற்கு சமவாயி காரணமும், அசமவாயி காரணமும் ஒவ்வொன்றேயாகின்றது. நிமித்த காரணம் பலவாகின்றன. அதனிடத்தும் சமவாயி காரணத் தன்மையோ திரவிய பதார்த்த மொன்றினிடத்தேயுண்டாகின்றது. குணமுதலிய பதார்த்தங்களிலுண்டாவதில்லை. அசமவாயி காரணத் தன்மையோ குணம், கருமமென்னு மிருபதார்த்தங்களிடத்தேயே யுண்டாகின்றது. திரவிய முதலிய பதார்த்தங்களி லுண்டாவதின்று நிமித்த காரணத் தன்மையோ திரவிய முதலிய வெல்லாப் பதார்த்தங்களி லுண்டாகின்றது. இதுகாறும் "சமவாயி காரணம் திரவியம்" என்னும் முதலாவது லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. இனி இரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம்.

## கசுசு. திரவியத்தின் குணாசிரியத்தன்மை வடிவ இரண்டாவது லக்ஷணத்தின் நிரூபணம்.

" குணாஶ்ரயோ த்ரவ்யம் " என்னு மிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எப்பதார்த்தம் சமவாய சம்பந்தமாக உருவ முதலிய

குணங்களின் ஆசிரியம் (பற்றுக்கோடு) ஆகின்றதோ அப்பதார்த்தம் திரவியமெனப்படுகின்றது. காலீக சம்பந்தமாக உருவ முதலிய குணங்கள் கருமமுதலிய பதார்த்தங்களிலு மிருப்பனவாயினும் சமவாய சம்பந்தமாக உருவ முதலிய குணங்கள் கரும முதலிய பதார்த்தங்களி லிருப்பனவன்றும். பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களுக்குச் சமவாயசம்பந்தமாக குணங்களின் ஆசிரியத் தன்மை வடிவ லக்ஷணம் சம்பவிக்கின்றது. பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் எவ்வெத் திரவியத்தில் எவ்வெக் குணங்க ளிருப்பனவாமோ அவ்வக்குணங்களை அவ்வத்திரவிய நிரூபணத்திற் கூறுவாம்.

கசுஎ. திரவியத்தினுற்பத்தி க்ஷணத்தில் அவற்றின் குணங்களினுற்பத்தியில் தோஷத்தைக் கூறும் வாயிலாக இரண்டாவது க்ஷணத்தில் குணங்களினுற்பத்தியினை நிலைநாட்டுகை.

சங்கை :—குணாசிரியத் தன்மையெனக் கூறிய திரவியத்தின் லக்ஷணம் அவ்வியாப்தி குற்றமுடைய தாவதால் அசங்கதமாம். ஏனெனின், எவ்வெத் திரவியம் எவ்வெக்ஷணத்தி லுண்டாவதாமோ அவ்வக்காரிய திரவியம் அவ்வவ்வுற்பத்தி க்ஷணத்தி லுருவ முதலிய குணங்களின்றியே யுண்டாகின்றது. உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் காரிய திரவியத்தி லுருவ முதலிய குணங்க ளுண்டாவ தாகின்றன. ஏனெனின், பாவகாரியம் யாதோ அது சமவாயி காரணம், அசமவாயி காரணம், நிமித்த காரண மென்னும் முக்காரணங்களா லுண்டாகின்ற தென்னு மிது நியாய சாத்திரக்காரர்களது நியமமாம். அன்றியும் அம்மூவித காரணங்களும் காரியத்தி னுற்பத்தி க்ஷணத்தினும் மரைப்பில்லாத முற்க்ஷணத்தி லிருப்பனவாகியே அக்காரியத்தினை யுண்டாக்குவனவாம். உருவ முதலிய குணங்களும் பாவ காரியமாகையால் உருவ முதலிய குணங்களின் உற்பத்தி க்ஷணத்தினும் முற்க்ஷணத்தில் அம்முக்காரணங்களை அவசியமொப்பவேண்டும். கடமுதலிய திரவியங்களின் உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் கடத்தி லுருவ முதலிய குணங்களுக்கு உற்பத்தி யொப்பின் உருவ முதலிய குணங்களின் உற்பத்தி க்ஷணத்தினும் முதற் க்ஷணத்தில் உருவ முதலிய குணங்களுக்கு சமவாயி காரண வடிவ கடமும், கபாலத்தின் உருவ முதலிய அசமவாயி காரணங்களும், தேசகால முதலிய நிமித்த காரணங்களும் இருக்கின்றன. ஆகையால் இம்மூன்றினது காரணங்களால் கடத்தி னுற்பத்தியினும் இரண்டாவது க்ஷணத்தில் கடத்தி னுருவ முதலிய குணங்களின் உற்பத்தி சம்பவிக்கின்றன. கடத்தி னுற்பத்தி க்ஷணத்திலேயே கடத்தினுருவமுதலிய குணங்களுக்கு உற்பத்தி யொப்பின் உருவ முதலிய குணங்களின் உற்பத்தி க்ஷணத்தினும் முற்க்ஷணத்தில் அக்கட வடிவ சமவாயி காரணமின்றும். ஆகையால் கட வடிவ சமவாயி காரணத்தின் அபாவத்தால் கடத்தி னுற்பத்தி க்ஷணத்தில் அதனுருவ முதலிய குணங்களுக்கு உற்பத்தியே சம்பவியாது. ஓர்காலக் கடத்தி னுற்பத்தி க்ஷணத்தில் அதனுருவ முதலிய குணங்களுக்கு உற்பத்தி யுண்டாயின் சமவாயி காரணமின்றியே கேவலம் அசமவாயி காரணத்தாலும்

நிமித்த காரணங்களாலும் அவ்வுருவ முதலிய குணங்களி னுற்பத்தி யுண்டாகும். இது சித்தாந்தத்திற்கு விருத்தமாம். எக்காரணத்தாலெனின் சித்தாந்தத்தில் பாவ காரியத்தி னுற்பத்தி மூன்று காரணங்களானேயே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அல்லது ஓர் காலத்தில் உண்டாவதான திரவிய குணங்களுக்கு உபாதான உபாதேய பாவ மொப்பின் ஓர் காலத்தில் உண்டாவதான ஆவி னிருகோட்டிற்கும் பரஸ்பர உபாதான உபாதேய பாவ முண்டாக வேண்டும். எங்ஙனம்: ஒரே காலத்தில் உற்பத்தியுடைய இவ்விரு கோட்டிற்கு பரஸ்பர உபாதான உபாதேய பாவமுண்டாவ தின்றோ அங்ஙனமே ஒரே காலத்தில் உற்பத்தியுடைய அத்திரவியத்திற்கும், குணத்திற்கும் பரஸ்பர உபாதான உபாதேய பாவம் சம்பவியாது.

கசுஅ. காரண சாமக்கிரி யொன்றினால் குண, குணிகளின் உற்பத்தி ஒப்புவதில் தோஷத்தின் வர்ணனம்.

சமவாயி, அசமவாயி, நிமித்த வடிவ மூன்று காரணங்கள் கட படமுதலிய திரவியங்களை யுண்டாக்குவனவாமோ அதே மூன்று காரணங்கள் கடபட முதலிய திரவியங்களின் உருவ முதலிய குணங்களையு முண்டாக்குவனவாம். ஆகையால் கட பட முதலிய திரவியங்களின் உற்பத்திக்ஷணத்திலேயே அதனுருவமுதலிய குணங்களின் உற்பத்தியொப்புவதில் முற்கூறிய சமவாயி காரணத்தின் அபாவ வடிவ தோஷம் பிராப்த மாகாதென சிலர் கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், அக்கட பட முதலிய திரவியங்களின் காரணங்களே அவைகளின் குணங்களுக்குக் காரணமாகுமாயின் கட பட முதலிய திரவியங்கட்கும், அவற்றின் உருவ முதலிய குணங்கட்கும் பரஸ்பரம் வேறு பாடு சம்பவியாதாகும். ஆனால் கட பட முதலிய திரவியங்களும், உருவ முதலிய குணங்களும் அபின்னமேயாகும். எக்காரணத்தாலெனின் காரியங்களின் வேறுபாடே காரியத்தின் வேறுபாட்டிற்கு சாதகமாகின்றது. எங்ஙனம்: தந்து முதலிய காரணங்களால் உண்டாய பட வடிவ காரியத்தால் அத்தந்து முதலிய காரணங்களினும் வேறான கபால முதலிய காரணங்களாலுண்டாய கட வடிவ காரியம் வேறாவது போலும். அன்றியும் குண, குணியின் அபேதம் நியாய சித்தாந்தத்தில் அங்கீகார மின்றாம். குண, குணியின் பேதமே அங்கீகாரமாம். ஆகையால் கட பட முதலிய திரவியங்களின் காரணம் கட பட முதலியவைகளினது உருவ முதலியவைகளின் காரணமாகமாட்டாது. கட பட முதலிய திரவியங்களின் காரணத்தினும் அவற்றின் உருவ முதலிய குணங்களின் காரணம் வேறாகவே யொப்ப வேண்டும். இங்ஙனம் கூறிய முறைப்படி கட பட முதலிய திரவியங்கள் தனது உற்பத்தி க்ஷணத்தில் உருவ முதலிய குணங்களின்றியும், கரும மின்றியும் உண்டாவதாகின்றன. அதாவது உற்பத்தி க்ஷணத்தில் அக்கட பட முதலிய திரவியங்கள் நிர்குணமும், நிஷ்கிரியையுமாய் உண்டாவதாகின்றன. அத்தகைய உற்பத்திக்ஷணவச்சின்ன கட பட முதலிய திரவியங்களில் குணாசிரியத் தன்மை வடிவ லக்ஷண மின்றாம். ஆகையால் அந்த லக்ஷணம் அவ்வியாப்தி தோஷமுடையதாவதால் துஷ்டமாம். அத்தகைய துஷ்ட

லக்ஷணத்தால் திரவியத்தின் சித்திபுண்டாக மாட்டாதென்னும் சங்கை யுண்டாகக் கூறிய அந்த லக்ஷணத்தினை இனி வேறு வகையாக வர்ணிப்பாம்.

௧௬௧. அவ்விரண்டாவது லக்ஷணத்தை வேறுவகையாக வர்ணித்தல்.

"குணஸமாநாதிகரண ஸத்தாபிந்நஜாதிமத் த்ரவ்யம்" (இ-ள்.) எவ்வதிகரணத்தில் உருவ முதலிய குணங்கள் சமவாய சம்பந்தமாக இருக்கின்றனவோ அவ்வதிகரணத்தில் சமவாய சம்பந்தமாக விருக்கும் ஜாதி யாதோ அஜ்ஜாதி குணசமாநாதி கரண மெனப்படுகின்றது. அத்தகைய குண சமாநாதி கரணமும் சத்தா ஜாதியினும் வேறானஜாதி யாதோ அஜ்ஜாதி யுடைய பதார்த்தம் திரவிய மெனப்படுகின்றது. இத்தகைய ஜாதிதிரவியத் தன்மை ஜாதியாம். ஏனெனின், பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே உருவ முதலிய குணங்கள் சமவாய சம்பந்தமாக விருக்கின்றன. அத்திரவியத் தன்மை ஜாதியும் அத்திரவியங்களிலேயே சமவாய சம்பந்தமாக இருக்கின்றது. ஆகையால் திரவியத் தன்மை ஜாதி குண சமாநாதி கரண மெனப்படுகின்றது. அத்திரவியத் தன்மை ஜாதி சத்தா ஜாதியினும் வேறுமாம். இத்தகைய திரவியத் தன்மை ஜாதியுடையன பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களாம். இத்தகையத் திரவியத் தன்மை ஜாதி உற்பத்தி க்ஷணாவச்சின்ன கட முதலிய நிர்குணத் திரவியங்களிலு மிருக்கின்றது. ஆகையால் அவற்றில் இந்த லக்ஷணத்தின் அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு "சத்தா ஜாதியினும் வேறான ஜாதி யுடையது" திரவியமென இம்மாத்திரமே திரவியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணசமாநாதி கரணம்" என்னும் பதங் கூறாவிடின் குணத்திலும், கருமத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், உருவ முதலிய இருபத்து நான்கு குணங்களி லிருப்பதான குணத் தன்மை ஜாதியும், எழும்பற்றன்மை முதலிய ஐந்து கருமங்களி லிருப்பதான கருமத் தன்மை ஜாதியும், சத்தா ஜாதியினும் வேறுமாம். ஆகையால் சத்தையினும் வேறான குணத் தன்மை ஜாதியுடைய குணங்களிலும் கருமத் தன்மை ஜாதியுடைய கருமங்களிலும் கூறிய அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி குற்றத்தை நிவிர்த்தி செய்வான் கருதி அந்த லக்ஷணத்தில் "குண சமாநாதி கரணம்" என்னும் இதை அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. குணத்திலும், கருமத்திலும் சமவாய சம்பந்தமாக ஓர் குணமு மிருப்பதில்லை. ஆகையால் குணத் தன்மை ஜாதியும், கருமத்தன்மை ஜாதியும், குண சமாநாதிகரண மன்று. ஆகையால் குண கருமங்களில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "குண சமாநாதி கரண ஜாதி யுடையது திரவியம்" என விம்மாத்திரமே திரவியத்தின் இலக்கணமாகக் கூறி அவ்விலக்கணத்தில் "சத்தையினும் வேறானது" என்னும் பதம் கூறாவிடின் அவ்விலக்கணத்திற்கு மீண்டும் அக்குண கருமத்தில் அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் உருவ முதலிய குணங்களும், சத்தாஜாதியும் சமவாய சம்பந்தமாக இருக்கின்றன. ஆகையால் அச்சத்தாஜாதியும் குணசமாநாதிகரணமாம்.

இத்தகைய் குண சாமாஞதி கரண சத்தா ஜாதியுடையது எங்ஙனம் திரவியமாமோ அங்ஙனமே குண, கருமமும், சத்தா ஜாதியுடையன வாம். அக்குண, கருமத்தில் கூறிய அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவிர்த்தி செய்வான் வேண்டி அவ்விலக்கணத்தில் "சத்தைபினும் வேறான" என்னும் இதை அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. சத்தா ஜாதி சத்தா ஜாதியினும் வேறன்று. ஆகையால் அச்சத்தா ஜாதியைக் கொண்டு அந்த லக்ஷணத்திற்கு குண, கருமங்களில் அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—குண சாமாஞதி கரண சத்தா ஜாதியினும் வேறான ஜாதி யுடையது திரவிய மெனக் கூறிய விலக்கணத்திற்கும் குணத்தில் அதிவி யாப்தியுண்டாகின்றது. ஏனெனின், "ஊகංஈ-ஙூං ஈஷாஃ வுநுகீ" (இ-ள்.) ஒருமைத்தன்மை எண்ணுடைய உருவகுணம் சுவையினும் வேறும். (உருவம் ஒன்று சுவையின்வேறு) என்னு முணர்ச்சி உருவ குணத்தில் ஒரு மைத் தன்மை யெண் வடிவ குணத்தினையும், வேற்றுமைத் தன்மை குணத் தினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அவ்வுணர்ச்சியின் வலியால் உருவ குணத்திலும் ஒருமைத் தன்மை சங்கியா குணமும், வேற்றுமைத் தன் மை குணமும் அவசிய மொப்புவதாகும். அன்றியும், அவ்வுருவ குணத்தில் குணத்தன்மை ஜாதியுமிருக்கின்றது. ஆகையால் அக்குணத் தன்மை ஜாதி ஒருமைத் தன்மைச் சங்கியை வடிவ குணத்தினதும் வேற்றுமைத் தன்மை வடிவ குணத்தினதும் சாமாஞதி கரணமும் சத்தா ஜாதியினும் வேறுமாம். இத்தகைய குண சாமாஞதி கரண சத்தையினும் வேறான் குணத்தன்மை ஜாதி யுடையது உருவ முதலிய குணங்களாம். ஆகையால் உருவ முதலிய குணங் களில் கூறிய அவ்விலக்கணத்தின் அதிவியாப்தியுண்டாகும்.

சமாதானம் :—உருவமொன்று சுவையின் வேறு என்னு முணர்ச்சி உருவ குணத்தில் சமவாய சம்பந்தமாக வொருமைத் தன்மை யெண்ணின் குணத்தினையும், வேற்றுமைத் தன்மை குணத்தினையும் விஷயஞ் செய்கிற தில்லை. ஏனெனின், குண பதார்த்தம் சமவாய சம்பந்தமாக திரவிய பதார்த்த மொன்றினிடத்தே யிருக்கின்றது. குண முதலிய பதார்த்தங்களில் சமவாய சம்பந்தமாக இருப்பதில்லை. எக்கட முதலிய திரவியங்களில் உருவ குணம் சமவாய சம்பந்தமாக இருக்கின்றதோ அக்கடாதி திரவியங் களில் ஒருமைத் தன்மையாகிய சங்கியைக் குணமும், வேற்றுமைத் தன்மை யாகிய குணமும் சமவாய சம்பந்தமாக இருக்கின்றன. ஆகையால் உருவ குணத்திற்கு ஒருமைத் தன்மை சங்கியை, வேற்றுமைத் தன்மை குணங்க ளோடு சாமாஞதி கரண்ணிய சம்பந்த மிருக்கின்றது. அச்சாமாஞதி கரண் ணிய சம்பந்தமாக உருவ குணத்தி லிருப்பதாகிய அவ்வொருமைத் தன்மை, வேற்றுமைத் தன்மை குணங்களையே அவ்வுணர்ச்சி விஷயஞ் செய்கின்றது. ஆகையால் உருவ முதலிய குணங்களில் கூறிய அத்திரவியத்தின் இலக்கணத் திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

களஎ. திரவியத் தன்மை ஜாதியுடைமை வடிவ திரவியத்தின் மூன்றாவது லக்ஷணத்தின் நிரூபணம்.

"த்ரவ்யத்வஜாதிமத் த்ரவ்யம்" என்னும் மூன்றாவது இலக்கணம் நிரூபிப்பாம். எப்பதார்த்தம் சமவாய சம்பந்தமாக திரவியத் தன்மை ஜாதியுடையதாமோ அப்பதார்த்தம் திரவியமெனப்படும். ஆண்டுச் சமவாய சம்பந்தமாக திரவியத் தன்மை ஜாதி பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றது. குண முதலிய பதார்த்தங்களில் இருப்பதில்லை. ஆகையால் திரவியத் தன்மை ஜாதியுடைமை வடிவ திரவியத்தின் இலக்கணமும் சம்பவிக்கின்றது.

சங்கை :—இத்திரவியத்தின் ஜாதியுடைமையாகிய திரவிய இலக்கணமும், முற்கூறிய திரவியத் தன்மை ஜாதியுள்ள திரவிய இலக்கணமும், பின்னர் கூறப்படும் திரவியத் தன்மை ஜாதியுள்ள திரவிய இலக்கணமும் சித்திக்கும்போது முதலிலோர் பிரமாணத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாகவேண்டும். திரவியத்தன்மை ஜாதியின் சித்தியின்றி அவ்விலக்கணம் சம்பவியாதென்னும் சங்கையுண்டாக இனி பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்தியை செய்வாம்.

களஅ. ஏகாகாரப் பிரத்தியக்ஷத் தோற்றத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்தியினை வர்ணித்தல்.

பரஸ்பரம் வெவ்வேறான பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களில் இது திரவியம், இது திரவிய மென்னும் ஏகாகாரப் பிரதீதி யுண்டாகின்றது. அதாவது *ஏகாகார தர்மமாக தோற்ற முண்டாகின்றது. அவ்வேகாகாரப்பிரதீதியில் யாதாமோர் விஷயங் காரணமாக வொப்பவேண்டும். ஆண்டு பரஸ்பரம் வெவ்வேறான பிருதிவி முதலிய திரவியங்களுக்கோ அவ்வேகாகாரப் பிரதீதியில் காரணத் தன்மைச் சம்பவியாது. ஆனால் பிருதிவி ஜல முதலிய வொன்பதுத் திரவியங்களில் அநுகதமாயிருக்கின்ற திரவியத் தன்மை ஜாதியாதோ அத்திரவியத் தன்மை ஜாதியே ஓர் விஷய வடிவமாக ஏகாகாரப் பிரதீதியின் காரணமாம். ஆகையால் இது திரவியம், இது திரவிய மென்னும் பிரத்தியக்ஷமே அத்திரவியத் தன்மை ஜாதியில் பிரமாணமாம்.

சங்கை :—பரமாணு முதலிய அதீந்திரிய திரவியங்களில் இது திரவியம், இது திரவியமென்னும் பிரத்தியக்ஷப் பிரதீதி ஓர் ஜீவனுக்கு முண்டாகிறதில்லை. ஆகையால் அந்தப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் திரவியங்களில் அதீந்திரியத் திரவியத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாவ தின்றாம். அல்லது சாத்திர சம்ஸ்கார மில்லாத புருஷர்களுக்கும் பொன் வெள்ளி முதலிய பதார்த்தங்களிலேயே இது திரவியமென்னும் பிரதீதி யுண்டாகின்றது. கடமுதலிய திரவியங்களில் இது திரவிய மென்னும் பிரதீதியுண்டாவதின்று. ஆகையால் இது திரவிய மென்னும் பிரத்தியக்ஷப் பிரதீதியால் திரவியத் தன்மை ஜாதி

* ஏகாகாரப்ரதீதி—ஒரேவடிவத்தோற்றம்.

யின் சம்பவமின்று. என்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்திசெய்வாம்.

களஉ. அநுமானப் பிரமாணத்தால் திரவியத் தன்மை ஜாதியினது சித்தியின் வர்ணனம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "த்ரவ்ய வ்ருத்திர்யா ஸம்யோகஸ்ய விபாகஸ்ய வா ஸமவாயிகாரணதா ஸாகிஞ்சித் தர்மாவச்சிந்நா காரணதாத்வாத் தந்துவ்ருத்திகாரணதாவத்" (இ-ள்.) பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களிலிருக்கின்ற சையோக வடிவ காரியத்தின் அல்லது விபாக வடிவ காரியத்தின் சமவாயி காரணத் தன்மை யாதோ அக்காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம். காரணத் தன்மை யாவதால், எது வெது காரணத் தன்மை யாமோ அது வது ஓர் தருமத்தால் அவச்சின்னமேயாகின்றது. நிரவச்சின்னமாக ஓர் காரணத் தன்மையுமுண்டாகிறதில்லை. எங்ஙனம்: தந்துக்களிலிருக்கும் படத்தின் சமவாயிகாரணத் தன்மை தந்துத் தன்மை தர்மத்தால் அவச்சின்னமாமோ அங்ஙனமே திரவியத்திலிருக்கும் காரணத் தன்மையும் ஓர் தருமத்தால் அவச்சின்னமேயாகும். ஆண்டுப் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலிருக்கும் சையோக, விபாகமாகிய காரியத்தின் சமவாயி காரணத் தன்மை யாதோ அக்காரணத்தன்மையின் அவச்சேதகம் திரவியத் தன்மை ஜாதியே யாகின்றது. வேறோர் தர்மம் அவச்சேதகமாவதின்று.

களஈ. அவச்சேதகத் தருமத்தின் சொரூப வர்ணனம்.

எத்தருமம் எத்தருமத்தின் குறைந்த விடத்திலும் அதிகவிடத்திலும் இராமல் சமான விடத்திலிருப்பதாமோ அத்தருமம் அத்தருமத்தின் அவச்சேதகமெனப்படும். அதாவது வேறு தருமங்களினின்றும் வேறுவதாகின்றது. அவச்சேத்திய தருமத்தின் குறைந்த அல்லது அதிக விடத்தில் இருப்பதாகிய தருமம் அவற்றின் அவச்சேதக மாவதன்று. இவ்வாறுய அவச்சேதகத் தருமத்தின் லக்ஷணம் ஈண்டுத் திரவியத் தன்மை ஜாதியிலேயே யிருக்கின்றது. வேறோர் தருமத்தில் இருப்பதில்லை. ஏனெனின், சையோக, விபாகமாகிய காரியத்தின் சமவாயி காரணத் தன்மையும் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றது. குணம், கருமமுதலிய பதார்த்தங்களிலிருப்பதில்லை. திரவியத் தன்மை ஜாதியும் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றது. குணம், கரும முதலிய பதார்த்தங்களிலிருப்பதில்லை. ஆகையால் அக்காரணத் தன்மையின் சமானவிடத்தி லிருப்பதால் அத்திரவியத் தன்மை ஜாதியே காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. குணமாத்திரத்திலிருக்கும் குணத் தன்மை ஜாதியும், கரும மாத்திரத்திலிருக்கும் கருமத்தன்மை ஜாதியும், திரவியத்திலிருக்கும் காரணத்தன்மை ஜாதியின் சாமானாதிகரணமேயன்றும். ஆகையால், குணத் தன்மை ஜாதியும், கருமத் தன்மை ஜாதியும், அக்காரணத் தன்மையின் அவச்சேதக மாவதன்று. அவ்வவச் சேத்திய தருமத்தின் சாமானாதிகரணத் தருமமே அதன்

அவச்சேதகமாகின்றது. பிருதிவி மாத்திரத்திலிருக்கும் பிருதிவித் தன்மை ஜாதியும், ஜலமாத்திரத்திலிருக்கும் ஜலத்தன்மை ஜாதியும், தேயுமாத்திரத்திலிருக்கும் தேயுத் தன்மை ஜாதியுமாம் இவை முதலிய திரவியங்களைப் பிரிக்கும் ஜாதிகள் திரவியத்திலிருக்கும் காரணத் தன்மையின் அதிகரணத்திலேயே யிருக்கின்றது. அற்றுயினும் பிருதிவித் தன்மை முதலிய ஜாதிகள் காரணத் தன்மையினும் குறைந்த விடத்திலிருப்பனவாம். ஆகையால் பிருதிவித் தன்மை முதலிய ஜாதிகளும் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாவதன்று. சத்தா ஜாதி ஒன்பது திரவியங்களிலிருக்கின்றது. என்றாலும் சத்தா ஜாதி திரவியங்களினும் வேறான குண, கருமங்களிலு மிருக்கின்றது. ஆகையால் திரவியத்திலிருக்கும் காரணத் தன்மையினும் அதிகவிடத்திருப்பதாவதால் அச்சத்தா ஜாதியும் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகாது. பரிசேஷத்தால் திரவியமாத்திரத்திலிருக்கும் திரவியத்தன்மை ஜாதியே அத்திரவியத்திலிருக்கும் காரணத்தன்மையின் அவச்சேதகமாகின்றது.

சங்கை:—திரவியத்தி லிருக்கும் காரணத் தன்மையின் அவச்சேதகம் குணத் தன்மை ஜாதியே யாகின்றது. ஏனெனின், பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே அச்சையோக, விபாக குணத்தின் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது. குணத் தன்மை ஜாதியும் அவ்வொன்பது திரவியங்களி லிருக்கின்றது. சமவாய சம்பந்தமாக அக்குணத் தன்மை ஜாதி குணத்திலேயே யிருக்கின்றது. திரவியத்தி லிருப்பதில்லை. எனினும் ஸ்வாசிரயாசிரயத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தமாக குணத் தன்மை ஜாதி திரவியத்திலு மிருக்கின்றது. ஈண்டு சுவசத்தத்தால் அக்குணத் தன்மை ஜாதியினைக் கிரஹிக்குக. அக்குணத் தன்மை ஜாதியின் ஆசிரயம் உருவ முதலிய குணங்களாம். அவ்வுருவ முதலிய குணங்களின் ஆசிரயம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களாம். இவ்வாறாய ஸ்வாசிரயாசிரயத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தமாக அப்பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் இருப்பதாகிய குணத் தன்மை ஜாதியே அத்திரவியத்தி லிருக்கும் காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக சித்திக்கும். ஆகையால் கூறிய அவ்வநுமானப் பிரமாணத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்தி சம்பவியாது.

சமாதானம்:—சாக்ஷாத் சம்பந்தமாயுள்ள அத்தர்மத்திற்கு ஓர் பிரமாணத்தால் பாதம் யாண்டுண்டாகின்றதோ ஆண்டே பரம்பரைச் சம்பந்தமாயுள்ள தர்மத்தினை அவ்வநுமிதி ஞானம் விஷயஞ் செய்கின்றது. யாண்டுச் சாக்ஷாத் சம்பந்தமாயுள்ள தர்மத்திற்கு ஓர் பிரமாணத்தால் பாதமுண்டாகிறதில்லையோ ஆண்டுப் பரம்பரைச் சம்பந்தமாயுள்ள தர்மத்தினை அவ்வநுமிதி ஞானம் விஷயஞ் செய்கிறதில்லை. இப்பிரசங்கத்தில் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் சாக்ஷாத் சம்பந்தமாயுள்ள திரவியத் தன்மை ஜாதி வடிவ தர்மத்திற்கு ஓர் பிரமாண பாதகமு மின்றாம். ஆகையால் அச்சாக்ஷாத் சம்பந்தமாயுள்ள திரவியத் தன்மை தர்மத்தினை விட்டு அவ்வநுமிதி ஞானம் கூறிய அப்பரம்பரைச் சம்பந்தமாயுள்ள குணத்

தன்மை ஜாதி வடிவ தர்மத்தினை விஷயஞ் செய்கிறதில்லை. திரவியத்தன்மை ஜாதியினையே அவ்வநுமிதி ஞானம் விஷயஞ் செய்கிறது. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் திரவியத் தன்மை ஜாதியின் சித்தியேயுண்டாகின்றது. குணத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாகிறதில்லை.

சங்கை:—கூறிய இவ்வநுமானத்தால் ஒன்பது திரவியங்களி லிருக்கும் ஓர் திரவியத் தன்மை தர்மத்தின் சித்தி யுண்டாகின்றது. அத் திரவியத்தன்மை தர்மத்தில் ஜாதி வடிவத் தன்மை இவ்வநுமானத்தால் சித்தியாது. ஆகையால் எங்ஙனம் ஆகாசத் தன்மை, காலத் தன்மை, திக்குத் தன்மை, சாமான்னியத் தன்மை, விசேஷத் தன்மை, சமவாயத் தன்மை, அபாவத் தன்மை யென்னு மிவை முதலிய தர்மங்கள் ஜாதி வடிவ மாகாது உபாதி வடிவமாமோ அங்ஙனமே திரவியத் தன்மை தர்மமும் ஜாதி வடிவ மாகாது உபாதி வடிவமேயாகும்.

சமாதானம்:—காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவாவது, காரியத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவாவது, பிரதிபந்தகத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவாவது, *பிரதிபத்தியத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவாவது, பதத்தின் †சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவாவது சித்திக்கும் தர்மத்தின் ஜாதித் தன்மையால் ஓர் தோஷம் பாதிப்பதின்றாகுமாயின் அத்தர்மம் ஜாதி வடிவமேயாகின்றதென்னு மிது நியாயசாத்திரக்காரர் சித்தாந்தமாம். அஜ்ஜாதித் தன்மையினைப் பாதிக்கும் தோஷம் பின்னர் நான்காவது பரிச்சேதத்தில் சாமான்னிய நிரூபணத்தில் கூறுவாம். அத் திரவியத் தன்மை வடிவ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிக்கும் அத் தோஷம் ஒன்றுமே யின்றாம். ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் அத்திரவியத் தன்மை தர்மம் ஜாதி வடிவமாகவே சித்தமாகும்.

சங்கை:—எங்ஙனம் சையோக, விபாகமென்னும் இரு குணங்கள் திரவியத்தி லிருக்கின்றனவோ அங்ஙனமே யுருவம் முதலிய குணங்களும் திரவியத்திலேயேயிருக்கின்றன. அவ்வுருவ முதலிய குணங்களை ‡பரித்தியாகம் செய்து சையோக, விபாக வடிவ குணத்திற்குச் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக அத்திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்வதில் காரணம் யாது.

சமாதானம்:—எங்ஙனம் சையோக, விபாகமென்னு மிரு குணங்கள் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களி லிருக்கின்றனவோ, அங்ஙனம் உருவ முதலிய குணங்கள் ஒன்பது திரவியங்களிலிருப்பனவன்று. சில குணங்களோ ஒவ்வோர் திரவியத்திலேயே யிருக்கின்றன. எங்ஙனம்: சத்தம், புத்தி முதலிய குணங்கள் போலும். சில குணங்க ளிரு திரவியங்களிலேயே யிருக்கின்றன. எங்ஙனம்: ரசமுதலிய குணங்கள் போலும். சில குணங்களோ மூன்று திரவியங்களிலேயே யிருக்கின்றன. எங்ஙனம்: உருவ முதலிய குணங்கள் போ

*பிரதிபத்தியத்தன்மை—பிரதிபந்திக்கப்படுவது யாதோ அப்பொருளின் தன்மை.
†சக்கியத்தன்மை—பொருள் அல்லது அர்த்தத்தின் தன்மை. ‡பரித்தியாகம்—நீக்குதல்.

லும். சில குணங்களோ நான்குத் திரவியங்களிலேயே யிருக்கின்றன. எங்ஙனம்: பரிசமுதலிய குணங்கள் போலும். சில குணங்களோ ஐந்து திரவியங்களிலேயே யிருக்கின்றன. எங்ஙனம்: பரத்வம், அபரத்வ முதலிய குணங்கள் போலும். ஆகையால் அவ்வுருவ முதலிய குணங்களுக்கு சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்யின் திரவியத் தன்மை ஜாதி ஒன்பது திரவியங்களில் சித்திப்பதின்று. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து திரவியங்களிலேயே சித்திப்பதாகும். சையோக, விபாகமென்னு மிரு குணங்களோ பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றன. ஆகையால் அவ்விரண்டின் காரணத் தன்மை அவச்சேதகமாக அத்திரவியத் தன்மை ஜாதி ஒன்பது திரவியங்களிலேயே சித்தமாகின்றது. இக்காரணத்தால் உருவ முதலிய குணங்களை பரித்தியாகம் செய்ய சையோக, விபாகத்தின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக அத்திரவியத் தன்மை ஜாதி ஒன்பது திரவியங்களிலேயே சித்தமாகின்றது. ஆகையால் அவ்வுருவ முதலிய குணங்களின் பரித்தியாகத்தால் சையோக, விபாகத்திற்கு சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்யப்பட்டது.

சங்கை:—எங்ஙனம் சையோக, விபாக மென்னும் இரு குணங்கள் பிருதிவி முதலிய திரவியங்களி லிருக்கின்றனவோ அங்ஙனமே சங்கியை, பரிமாணம், வேற்றுமை என்னு முக்குணங்களும் அவ்வொன்பது திரவியங்களிலுமிருக்கின்றன. ஆகையால் அம்முக்குணங்களின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாய் விடுகின்றது. அம்முக்குணங்களைப் பரித்தியாகம் செய்து கேவலம் சையோக, விபாக வடிவ குணத்தின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்வதில் காரணம் யாது?

சமாதானம்:—சங்கியை, பரிமாணம், வேற்றுமை என்னும் முக்குணங்களும் சையோக, விபாகங்களைப் போன்று ஒன்பது திரவியங்களிலிருக்கின்றன. எனினும் அம்முக்குணங்கள் நித்தியமும், அநித்தியமுமாகின்றன. ஆண்டு, நித்தியத் திரவியங்களிலிருக்கும் ஒருமைத் தன்மைச் சங்கியையோ நித்தியமும், இருமை முதலிய எல்லாச் சங்கியைகளும் அநித்தியமுமாம். அங்ஙனமே நித்தியத் திரவியங்களி லிருக்கும் பரிமாணம் நித்தியமும், அநித்தியத் திரவியங்களிலிருக்கும் பரிமாணம் அநித்தியமுமாகின்றது. அங்ஙனமே நித்தியத் திரவியங்களிலிருக்கும் ஒருமை வேற்றுமைத் தன்மை நித்தியமும், இருமை வேற்றுமைத்தன்மை முதலிய வெல்லாம் அநித்தியமுமாம். இவ்வாற்றால் சங்கியை, பரிமாணம், வேற்றுமை யென்னும் முக்குணங்களும் நித்தியமும், அநித்தியமு மாகின்றன. நித்திய, அநித்தியமாம் இரண்டிலிருப்பதாகிய தர்மம் காரியத் தன்மையின் அவச்சேதகமாகாது. ஆகையால் நித்திய, அநித்தியங்களி லிருப்பனவாகிய, சங்கியைத் தன்மை, பரிமாணத் தன்மை, வேற்றுமைத் தன்மையென்னும் தர்மங்கள் அத்திரவியத்தினது காரியத்

தன்மையின் அவச்சேதகமாகிறதில்லை. இக்காரணத்தால் சங்கியை, பரிமாணம், வேற்றுமையென்னும் மூன்று குணங்களின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்கிறதில்லை. சையோக, விபாகமென்னு மிருகுணங்களோ அநித்தியமேயாகின்றன. நித்திய மாவனவன்று. ஆகையால் சையோக, விபாக வடிவ காரியத்தின் சமவாயி காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்யப்பட்டது.

சங்கை :—ஓர் சையோக வடிவ குணத்தின் சமவாயி காரணத்தன்மை அவச்சேதக வடிவமாகவே திரவியத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாய்விடுவதாயின் அவற்றில் விபாக குணத்தைக் கிரஹிப்பது பயனின்மையாம்.

சமாதானம் :—சில நூலாசிரியரோ ஆகாச முதலிய விபுத்திரவியங்களின் சையோகத்தினை நித்தியமாக வொப்புகின்றனர். அவர்கள் மதத்தில் எங்ஙனம் சங்கியாத் தன்மை முதலிய தர்மங்கள் நித்தியம், அநித்தியமா மிரண்டிலிருக்கின்றனவோ அங்ஙனமே சையோகத்தன்மைதர்மம் நித்தியம், அநித்தியமாமிரண்டிலிருக்கின்றது. ஆகையால் சங்கியாத்தன்மை, பரிமாணத் தன்மை முதலிய தர்மங்களைப்போன்று சையோகத்தன்மை தர்மமும் அக்காரியத்தன்மையின் அவச்சேதகமாகிறதில்லை. அவர்கள் மதத்தில் சையோகத்தினது சமவாயிகாரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகிறதில்லை. விபாக குணத்தினையோ ஒரு நூலாசிரியரும் நித்தியமாக வொப்புகிறதில்லை. விபாகத்தினை யாவரும் அநித்தியமாக வொப்புகின்றனர். இக்காரணத்தால் அவ்விபாகத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக திரவியத்தன்மை ஜாதியின் சித்திசெய்யப்பட்டது.

கள௪. வேறு அநுமானத்தால் திரவியத்தன்மை ஜாதியின் சித்தி.

சில நூலாசிரியரோ இவ்வாறாக திரவியத் தன்மை ஜாதியின் சித்தி செய்கின்றனர். எவ்வவயவங்களில் எத்திரவியம் சமவாய சம்பந்தமாக இருக்கின்றதோ அவ்வவயவங்களில் அத்திரவியத்தினும் வேறான மற்றைய திரவியத்தினுற்பத்தி யுண்டாகிறதில்லை. எங்ஙனம்: ஓர் படத்தின் ஆசிரயமாகிய தந்துக்களில் வேறுபடத்தினுற்பத்தி யுண்டாவதில்லை. ஆகையால் அவ்வவயவங்களில் சமவாய சம்பந்தமாக வேறு திரவியத்தின் உற்பத்தியில் முதல் திரவியத்திற்கு சமவாய சம்பந்தமாக பிரதிபந்தமொப்பவேண்டும். இவ்விதமாக திரவியத்திலிருக்கும் வேறுதிரவியத்தின் பிரதிபந்தகத் தன்மை யாதோ அப்பிரதி பந்தகத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவே திரவியத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாகின்றது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களிலிருக்கும் திரவியத் தன்மை ஜாதி யாதோ அத்திரவியத் தன்மை ஜாதியுடைய பதார்த்தம் திரவியமெனப்படும். "திரவியத் தன்மை ஜாதியுடையது திரவியம்" என்னும் மூன்றாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிக்கப்பட்டது.

### கஎடு. திரவியத்தின் நான்காவது லக்ஷணத்தின் வர்ணனம்.

“ 𑌗𑍁𑌣𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌵𑍇 𑌸𑌤𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌵𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌮𑍍 ” என்னும் நான்காவது அர்த்தத்தை நிரூபிப்பாம். எப்பதார்த்தம் குணம், கருமமென்னுமிரு பதார்த்தத்தினும் வேறும் ஜாதி வடிவ சாமான்னியமுடையதுமாமோ அப்பதார்த்தம் திரவியமெனப்படும். ஆண்டுப் பிருதிவிமுதலிய வொன்பது திரவியங்கள் குண, கருமங்களினும் வேறும் ஜாதிவடிவசாமான்னியமுடையனவுமாம். ஆகையால் கூறிய இத்திரவியத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஈண்டு “சாமான்னிய முடையது” திரவியமென விம்மாத்திரமே அத்திரவியத்தின் லக்ஷணமாகக்கூறி, அந்தலக்ஷணத்தில் குண, கருமங்களுக்கு வேறுனது என்னும் பதங்கூறுவிடின் குண, கருமங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், திரவியத்தைப்போன்று குண, கருமங்களும் ஜாதியாகிய சாமான்னியமுடையனவேயாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்திற்கு குண, கருமங்களுக்கு வேறுன தென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுக் குணமும், கருமமும், குணத்தினும், கருமத்தினும், வேறுவனவன்று. ஆகையால் குண கருமங்களில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது “குணத்தினும் கருமத்தினும்” வேறுனது திரவியமென இம்மாத்திரமே அத்திரவியத்தின் லக்ஷணமாகக்கூறி, அந்த லக்ஷணத்தில் சாமான்னிய முடைய தென்னும் பதங் கூறுவிடின் சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவ மென்னும் நான்கில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் திரவியம் குண, கருமங்களினும் வேறுமோ அங்ஙனமே சாமான்னிய முதலிய நான்கும் குண, கருமங்களினும் வேறேயாகின்றன. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் சாமான்னியமுடைய தென்னும் பதங் கூறப்பட்டது. சாமான்னிய முதலிய பதார்த்தங்கள் ஜாதிவடிவ சாமான்னியமுடையனவன்றும். ஆகையால் அவற்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

சங்கை:—சாமான்னியமுடைய தென்னும் பதத்தினைக் கூறுவதாலும் கூறிய அந்தலக்ஷணத்திற்கு சாமான்னியம், விசேஷம், சமவாயமாம் மூன்றில் அதி வியாப்தி யுண்டாகும். ஏனெனின், எத்திரவியம், குணம், கருமங்களில் சமவாய சம்பந்தமாக அஜ்ஜாதியாகிய சாமான்னிய மிருக்குமோ அத்திரவிய, குண, கருமங்களிற் சமவாய சம்பந்தமாக அச்சாமான்னிய முதலிய மூன்றுமிருக்கின்றன. ஆகையால் சாமானுதிகரண்ணிய சம்பந்தமாக சாமான்னியமுதலிய மூன்று பதார்த்தங்களும் ஜாதியாகிய சாமான்னியமுடையனவேயாம். அங்ஙனமே குண, கருமங்களினும் வேறுமாம்.

சமாதானம்:—கூறிய அந்த லக்ஷணத்தில் சாமான்னிய முடைய தென்னும் பதத்தால் சமவாய சம்பந்தமாக சாமான்னியமுடைய பதார்த்தத்தினைக் கிரஹிக்குக. ஆண்டுஜ் ஜாதியாகிய சாமான்னியம் சாமான்னியம், விசேஷ முதலிய பதார்த்தங்களில் சமவாய சம்பந்தமாக விருப்பதன்று.

ஆகையால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு சாமான்னியம், விசேஷ முதலிய வற்றில் அதிவியாப்தி யுண்டாகாது.

௧௭௬. ஒன்பது வகைத்தாயத் திரவியத்தின் வர்ணனம்.

இவ்வாறாகக்கூறிய நான்கு லக்ஷணங்களால் லக்ஷிதத் திரவிய பதார்த்தம் யாதோ அத்திரவிய பதார்த்தம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனமென்னும் வேறுபாட்டால் ஒன்பது வகைத்தாம்.

௧௭௭. பிருதிவி வடிவத் திரவியத்தின் லக்ஷணம்.

இனி ஒன்பது வகைத்தாயத் திரவியங்களுள் உத்தேசத்தின் அநுசாரமாக முதலாவது பிருதிவியாகிய திரவியத்தினை நிரூபிப்பாம். “கந்தவதீ ப்ருதிவீ” அல்லது “ப்ருதிவீத்வஜாதிமதீ ப்ருதிவீ.”

௧௭௮. பிருதிவின் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்தின் வர்ணனம்.

இனி இவ்விரண்டு லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தினது அர்த்தத்தின் நிரூபணஞ் செய்வாம். ஆண்டு எத்திரவியம் சமவாய சம்பந்தமாக கந்தகுணமுடையதாமோ அத்திரவியம் பிருதிவியெனப்படும். காலிக சம்பந்தமாக கந்தகுணம் காலத்திலும், ஜலமுதலியவைகளிலும், தைசிக சம்பந்தமாக திசையிலுமிருக்கின்றது. என்றாலும் சமவாய சம்பந்தமாக கந்த குணம் பிருதிவியொன்றிலேயே யிருக்கின்றது. காலதிசைகளிலிருப்பதில்லை. ஆகையால் கந்தமுடைமை வடிவ பிருதிவியின் லக்ஷணத்திற்கு கால முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகாது. நியாய சாத்திரத்தில் காலத்திற்கும், திசைக்கும், சர்வ பதார்த்தங்களின் ஆதாரத் தன்மைக் கூறியிருக்கின்றது. அதுவும் சமவாய சம்பந்தமாக எல்லாப் பதார்த்தங்கட்கும் ஆதாரத் தன்மைக் கூறியதன்று. காலிக சம்பந்தமாக காலத்திற்கு சர்வ பதார்த்தங்களின் ஆதாரத் தன்மையும், தைசிக சம்பந்தமாக திசைக்கு சர்வ பதார்த்தங்களின் ஆதாரத்தன்மையுங் கூறியதாம். கால திசைகளி லிருப்பனவாகிய சங்கியை முதலிய ஐந்து குணங்கட்கும், விசேஷ பதார்த்தத்திற்கும், திரவியத் தன்மை ஜாதி சத்தா ஜாதிகட்குமே அக்கால திசைகளில் சமவாய சம்பந்தமாக ஆதாரத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் சமவாய சம்பந்தமாக கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்குக் கால முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகாது.

௧௭௯. நறுநாற்றத் தீநாற்றமுடைய கபாலங்களாலுண்டான கடத்தில் நிர்க்கந்தத் தன்மையின் சாதகயுக்தி.

சங்கை:—அக்கந்தமுடைமை வடிவ பிருதிவியின் லக்ஷணத்திற்கு நறுநாற்றத் தீநாற்றமுடையக் கபாலங்களாலுண்டானக் கடத்திலும், தோன்றியழியுங் கடத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்னக் கடத்திலும் அவ்வியாப்தியே யுண்டாகும் ஏனெனின் நறுநாற்றமுடைய நறுநாற்றக் கபாலமும், தீநாற்றமுடையத் தீநாற்றக்கபாலமும் யாதோ அந்நறுநாற்றத்தீநாற்றக் கபாலங்களாலுண்டான அக்கடம் கந்தமில்லாததேயாம். ஏனெனின் அக்கபால முதலிய

அவயவங்களின் கந்தமே அக்கடமுதலிய அவயவிகளின் கந்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. ஆண்டு அக்கடத்தில் எப்பொழுது ஓர் கபாலத்தின் நறுநாற்றத்தால் நறுநாற்றம் உற்பன்னமாகுமோ அப்பொழுது இரண்டாவது கபாலத்தின் தீநாற்றம் நறுநாற்றத்தின் உற்பத்தியில் பிரதிபந்தகமாகும். அக்கடத்தில் எப்பொழுது ஓர் கபாலத்தின் தீநாற்றத்தால் தீநாற்றம் உற்பன்னமாகுமோ அப்பொழுது அவ்விரண்டாவது கபாலத்தின் நறுநாற்றம் அத்தீநாற்றத்தினுற்பத்தியில் பிரதிபந்தகமாகும். இவ்வாறுகப் பரஸ்பர பிரதிபந்திக்கப்படுவது பிரதிபந்திப்பதாம் பாவத்தால் அக்கடத்தில் ஓர் கந்தமும் உண்டாகாததாகும்.

## கஅ௯. அக்கடத்தில் சித்திர (கலப்பு) நாற்ற மொப்புவராகிய வாதியின் மதம்.

ஈண்டுச் சிலர், கூறிய இச்சங்கைக்கு இத்தகைய சமாதானம் கூறுகின்றனர். அந்நறுநாற்றத் தீநாற்றமுடையக் கபாலங்களால் உண்டானக் கடத்தில் ஓர் கந்தமும் உண்டாகாவிடின் உலகவருக்கு கிராண இந்திரியத்தால் அக்கடத்தின் கந்தஞானம் உண்டாகாததாக வேண்டும். உலகர் யாவரின் அநுபவசித்தமான அர்த்தத்தினைக் கேவலம் யுக்தி மாத்திரத்தால் அபாவமாகக் கூறுவது அத்தியந்த விருத்தமாம். ஆகையால் உலகரது அநுபவத்தின் வழியால் அக்கடத்தில் ஓர் கந்தத்தினுற்பத்தி யவசிய மொப்பவேண்டும். ஆண்டு எங்ஙனம் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை முதலிய உருவமுடைய தந்துக்களால் உண்டாகிய படம் யாதோ அப்படத்தில் முற்கூறிய முறைப்படி பரஸ்பர பிரதிபத்திய, பிரதிபந்தக பாவமாக ஓர் வெண்மை உருவத்திற்கு அல்லது கருமை முதலிய உருவத்திற்கோ உற்பத்தி யுண்டாகிறதில்லை. என்றாலும் அத்தந்துக்களின் வெண்மை, கருமை, பசுமை முதலிய வுருவங்கள் கலந்து அக்கடத்தில் ஓர் சித்திர (கலப்பு) வுருவத்தினை உற்பத்திச் செய்கின்றது. அங்ஙனமே அக்கபாலங்களின் நறுநாற்றமும், தீநாற்றமும் கலந்து அக்கடத்தில் ஓர் சித்திர (கலப்பு) நாற்றத்தை உண்டாக்கும். அக்கடத்தில் கேவலம் நறுநாற்றத்தின் உற்பத்தியிலும், கேவலம் தீநாற்றத்தின் உற்பத்தியிலுமே அக்கபாலங்களின் நறுநாற்றத் தீநாற்றத்திற்குப் பரஸ்பரம், பிரதிபத்திய பிரதிபந்தக பாவமிருக்கின்றது. அக்கடத்தில் ஓர் சித்திர (கலப்பு) கந்தத்தினுற்பத்தியில் ஓர்ப் பிரதிபந்தகமு மின்றாம்.

## கஅக. அக்கடத்தில் சித்திரக் கந்தத்தின் கண்டனம்.

இச்சமாதானமும் சம்பவியாது எனெனின் நறுநாற்றத் தீநாற்றக் கபாலங்களாலுண்டானக் கடத்தில் உலகருக்கு எக்கந்தத்தின் தோற்றம் உண்டாகின்றதோ அத்தோற்றம் ஓர் கால் அக்கடத்தில் கந்தத்தினுற்பத்தி யொப்பினலன்றி சித்தியாவிடின் அத்தோற்றத்தின் வழியால் அக்கடத்தில் கலப்பு நாற்றத்தினுற்பத்தி அங்கீகரிக்கக்கூடும். ஆனால் அத்தோற்றமோ அக்கபாலங்களின் கந்தத்தனையே சித்தித்து விடுகின்றது. அதாவது, சுவாசிரய சமவேதத்தன்மைச் சம்பந்தத்தால் அக்கபாலங்களின்கந்தமே அக்கடத்தில் தோற்று

வதாகின்றது. ஈண்டுச்சுவ்சத்தத்தால் அக்கபாலங்களின் நறுநாற்றத் தீநாற்றங் களை கிரஹிக்குக. அக்கந்தத்தின் ஆசிரயமாகிய கபாலம்யாதோ அக்கபாலத்தில் அக்கடம் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. இவ்வாறாயப் பரம்பரைச் சம்பந்தத்தால் அக்கபாலங்களின்கந்தமே அக்கடத்தில் தோற்றுவதாகின்றது. அத்தோற்றத்தின் வலியால் அக்கடத்தில் சித்திரக் கந்தத்தின் அங்கிகாரம் செய்வது பயனின்மையாம்.

கஅ௨. சித்திரக் கந்தத்தினைப் போன்றுச் சித்திரவுருவம், சித்திரப் பரிசத்தின் அங்கீகாரம் செய்யாததின் சங்கை.

சங்கை:—நறுநாற்றத் தீநாற்றக் கபாலங்களாலுண்டானக் கடத்தில்சித்திரக்கந்தம் அங்கிகரியாவிடின் செம்மை, கருமை, பசுமை, முதலிய உருவமுடைய தந்துக்களாலுண்டான படத்தில் சித்திர உருவமும் அங்கிகரிப்பதின்றாகும். அங்ஙனமே மென்மை, வன்மை, பரிசமுடைய தந்து முதலிய அவயவங்களா லுண்டான பட முதலியவைகளில் சித்திரப் பரிசமும் அங்கிகரிப்பதின்றாகும்.

கஅ௩. சித்திரவுருவத்தினதும், சித்திரப்பரிசத்தினதும் சாதகயுக்தியினைக் கூறும் வாயிலாக மஹத்வ சமானாதி கரண உத்பூத உருவ விசேஷத் திரவியத்தின் சாக்ஷுஷ வடிவப் பிரத்தியக்ஷத்தின் ஏதுத் தன்மையின் வர்ணனம்.

சமாதானம்:—அப்படத்தில் அச்சித்திரவுருவம் அங்கிகரிக்காவிடின் அப்படத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமேயுண்டாகாததாகும். ஏனெனின் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ சமானாதிகரண உத்பூதவுருவங் காரணமாகின்றது. அம்மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவமின்றி திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. இக்காரணத்தாலேயே பரமாணு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம், சக்ஷு முதலிய இந்திரியங்கள் இவை முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. பரமாணுக்களில் உத்பூத உருவமோ இருக்கின்றது; என்றாலும் மஹத்வ பரிமாணமின்று. ஆகையால் மஹத்வ சமானாதிகரண வுத்பூத வுருவத்தின் அபாவத்தால் அப்பரமாணுக்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவென்னும் ஐந்துத் திரவியங்களில் மஹத்வ பரிமாணமிருக்கின்றது. என்றாலும் அவ்வைந்தில் உத்பூத உருவமின்றாம். ஆகையால் மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவத்தின் அபாவத்தால் அவ்வைந்தினது சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாவதின்று; மனதிலோ மஹத்வமுமின்று, உத்பூதவுருவமுமின்று. ஆகையால் அம்மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவத்தின் அபாவத்தால் அம்மனதின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. சக்ஷு, ரசனம், கிராணமென்னும் மூன்று இந்திரியங்களிலோ மஹத்வமும், உருவமு மிருக்கின்றது ஆனால் உத்பூத வுருவமின்றாம். அநுத்பூத வுருவமிருக்கின்றது. துவாசம், சுரோத்திரமென்னும் இரு விந்திரியங்களில் கேவலம் மஹத்வமிருக்கின்றது.

உருவமின்றும். ஆகையால் மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவத்தின் அபாவத்தால் அவ்விந்திரியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிற தில்லை. அல்லது எங்ஙனம் அம்மஹத்வ சமானாதிகரண உத்பூதவுருவம் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் காரணமாகின்றதோ அங்ஙனமே அம்மஹத்வ சமானாதிகரண உத்பூத வுருவம் திரவியத்தின் துவாசப்பிரத்தியக்ஷத்திலும் காரணமாகின்றது. ஆகையால் மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவத்தின் அபாவத்தால் கூறிய பரமாணு, வாயு, ஆகாசமுதலியவைகளின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷம் எங்ஙனமுண்டாவதின்றோ அங்ஙனமே பரமாணு வாயு முதலியவைகளின் துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. ஈண்டுக் கருத்திதுவாம். சமானாதிகரண்ணிய சம்பந்தமாக மஹத்வபரிமாண விசிஷ்ட உத்பூத வுருவமுள்ள திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும், துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றது. மஹத்வ விசிஷ்ட உத்பூத வுருவத்தின் அபாவமுடைய திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும், துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாவதின்று. மஹத்வ விசிஷ்ட வுத்பூத உருவத்தின் அபாவ வடிவ விசிஷ்டாபாவம் சிலவிடத்தோ மஹத்வவுருவ விசேஷணத்தின் அபாவத்தாலுண்டாகின்றது, சிலவிடத்தோ உத்பூத வுருவ விசேஷியத்தின் அபாவத்தாலுண்டாகின்றது. சிலவிடத்தோ மஹத்வ வுருவ விசேஷணத்தினதும் உத்பூத உருவ விசேஷியத்தினதுமாமிரண்டின் அபாவத்தா லுண்டாகின்றது. பிருதிவி, ஜலம், தேயுவென்னும் மூன்றின் பரமாணுக்களில் உத்பூத உருவ விசேஷியமோ விருக்கின்றது. மஹத்வ வடிவ விசேஷணமின்றும் ஆகையால் அப்பரமாணுக்களில் விசேஷணபாவத்தாற்றோன்றிய விசிஷ்டாபாவம் இருக்கின்றது வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவென்னும் ஐந்தில் மஹத்வ விசேஷணமோ விருக்கின்றது உத்பூத உருவ விசேஷியமின்றும். ஆகையால் வாயுமுதலிய ஐந்துத்திரவியங்களில் விசேஷியாபாவத்தாற்றோன்றிய விசிஷ்டா பாவமிருக்கின்றது. ஈண்டு வாயு சத்தத்தால் பரமாணு, துவியணுக வடிவ வாயுவினும் வேறான வாயுவினைக் கொள்ளுக. பரமாணு துவியணுக வடிவ வாயுக்களிலோ மஹத்வ வடிவ விசேஷணத்தின் அபாவமு மிருக்கின்றது. மனதிலோ மஹத்வ வடிவ விசேஷணமும், உத்பூத வுருவ விசேஷியமுமின்றும். ஆகையால் அம்மனதில் விசேஷண, விசேஷியமா மிரு அபாவங்களாற்றோன்றிய விசிஷ்டாபாவமிருக்கின்றது. சக்ஷுமுதலிய விந்திரியங்களில் மஹத்வவுருவ விசேஷணமோ இருக்கின்றது. உத்பூதவுருவ விசேஷியமின்றும். ஆகையால் அவ்விந்திரியங்களிலும் விசேஷியாபாவத்தாற்றோன்றிய விசிஷ்டாபாவ மிருக்கின்றது. இவ்வாறாக மஹத்வசமானாதிகரண உத்பூதவுருவமே அத்திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும் துவாசப்பிரத்தியக்ஷத்திலுங்காரணமாகின்றது. ஆண்டு வெண்மை, கருமை, பொன்மையாதி உருவமுடைய தந்துக்களாலுண்டான படத்தில் சித்திரவுருவம் அங்கீகரியாவிடில் அம்மஹத்வ சமானாதிகரண உத்பூதவுருவ காரணத்தின் அபாவத்தால் அப்படத்தின் பிரத்தியக்ஷமே யுண்டாகாது. அப்படமும் உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாகின்றது. இக்காரணத்தால் அப்படத்தில் சித்திர (கலப்பு) உரு

வத்திற்கு உற்பத்தி அங்கீகரிக்கின்றனர். இவ்வாறாக வன்மை, மென்மைப் பரிச முடைய அவயவங்களாலுண்டான படமுதலியவைகளில் சித்திர (கலப்பு) பரிச மும் அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஏனெனின் எங்ஙனம் மஹத்வ சமாநா திகரண உத்பூதவுருவத்திற்கு திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும் துவாசப் பிரத்தியக்ஷத்திலுங் காரணத் தன்மையிருக்கிறதோ, அங்ஙனமே அத் திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் உத்பூத பரிசத்திற்குங் காரணத்தன் மையிருக்கின்றது. ஒர் கால் அப்படத்தில் சித்திரப்பரிசம் அங்கீகரியாவிடின் அப்படத்தின் துவாசப் பிரத்தியக்ஷமேயுண்டாவதின்றாகும். ஆகையால் அப் படத்தினது துவாசப் பிரத்தியக்ஷத்தின் பொருட்டுச் சித்திர வுருவத்தைப் போன்றுச் சித்திரப்பரிசமும் அவசியம் அங்கீகரிக்க வேண்டும். எங்ஙனம், உருவத்திற்கும், பரிசத்திற்கும் திரவியத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தில் காரணத் தன்மையிருக்கிறதோ அங்ஙனம் கந்தகுணத்திற்குத் திரவியத்தின் பிரத்தி யக்ஷ ஞானத்தில் காரணத் தன்மையில்லை. ஆகையால் சித்திரவுருவம் சித்திரப் பரிசத்தினைப்போன்று அக்கடத்தில் சித்திர கந்தத்தினை அங்கிகரிப்பது பய னின்மையாம். இவ்வாற்றால் நறுநாற்றத் தீநாற்றமுடையக் கபாலங்களாலுண் டானக் கடம் கந்தமில்லாததேயாம். அக்கட வடிவ பிருதிவியில் அக்கந்த முடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகின்றது.

## க௪௪. தோன்றியழியுங் கடத்தில் நிர்க்குணத் தன்மையின் வர்ணனம்.

அல்லது முதற்க்ஷணத்தில் உண்டாய் இரண்டாவது க்ஷணத்தில் நஷ்டமாகும் தோன்றியழிந்தக் கடத்திலும் அக்கந்தமுடைமை வடிவ லக்ஷ ணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். ஏனெனின், முதற்க்ஷணத்திலோ நிர்க்குணத் திரவியமுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அத்திரவியத் தில் உருவ முதலிய குணங்களுண்டாகின்றதென்னும் வார்த்தை திரவிய லக்ஷணநிரூபணத்தில் யுக்தியோடுங்கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் உற்பத்தி க்ஷணத்திலோ கடத்தில் கந்தமின்றாம். இரண்டாவது க்ஷணத்தில் கடத்தில் கந்தகுணமுண்டாவதற்கு அவ்விரண்டாம் க்ஷணத்தில் அக்கடம் நஷ்டமேயா கின்றது. இங்ஙனம் தோன்றியழிந்தக் கட முதலிய வடிவ பிருதிவியிலும் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்றது. அங்ஙனமே உற்பத்தி க்ஷணவச்சின்னக் கட முதலிய வடிவ பிருதிவியிலும் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்றதென் னுஞ் சங்கையுண்டாக, இனி கந்தமுடையது பிருதிவியெனக் கூறிய லக்ஷணத் தை வேறுவிதமாக நிரூபிப்பாம்.

## க௪௫. பிருதிவியின் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்தை வேறுவகையாக வர்ணித்தல்.

“ மநூவஸாநாயிகாண ஊவூக்ஷ ஸாக்ஷாஉ)ாவ) ஜாதிஉதீ வூயிவீ” (இ-ள்.) கந்த குணத்தின் சமானாதிகரணமும், திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமா மித்தகைய ஜாதியுடைய திரவியம் பிரு

திவியெனப்படும். ஆண்டுக் கந்தகுணம் சமவாய சம்பந்தமாக பிருதிவியிலேயேயிருக்கின்றது ஜலமுதலியவைகளிலிருப்பதில்லை. பிருதிவித் தன்மை ஜாதியும் சமவாயசம்பந்தமாக பிருதிவியிலேயேயிருக்கின்றது ஜலமுதலியவைகளிலிருப்பதில்லை. ஆகையால் அப்பிருதிவித் தன்மை ஜாதி கந்த சமானாதிகரணமெனப்படும். அங்ஙனமே பிருதிவித் தன்மை ஜாதி திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இப்பிருதிவித் தன்மை ஜாதி யெல்லாப் பிருதிவியிலுமிருக்கின்றது. ஆகையால் நறுநாற்றத்திநாற்றக் கபாலங்களாலுண்டான கடவடிவப்பிருதிவியிலும், தோன்றியழிந்த கடமுதலிய பிருதிவியிலும், உற்பத்தி க்ஷணவச்சின்னக் கடமுதலிய பிருதிவியிலும் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு "திரவியத்தன்மை சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது பிருதிவி" என இம்மாத்திரமே பிருதிவியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "கந்தசமானாதிகரணம்" என்னும் பதங்கூறாவிடின் ஜலமுதலிய திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எஜ்ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் அதிகரண வடிவ இடத்தினும் குறைந்தவிடத்திருக்கின்றதோ அஜ்ஜாதியே அத்திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியெனப்படும். எங்ஙனம்: திரவியத்தன்மைஜாதியிருப்பதற்கு இடமாகிய பிருதிவிமுதலிய எவ்வொன்பது திரவியங்களோ அவ்வொன்பது திரவியங்களாகிய இடத்தினும் குறைந்தவிடமாகிய பிருதிவியாதோ அப்பிருதிவி மாத்திரத்தி லிருப்பதாகிய பிருதிவித் தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய மெனப்படுகின்றது. அங்ஙனமே ஜலத்தன்மை, தேயுத் தன்மை, வாயுத்தன்மையென்னுமிவ்வமுதலிய ஜாதிகளும் அத்திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதிகளாம். அஜ்ஜலத்தன்மை முதலிய ஜாதிகளுடைய ஜல முதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "கந்தசமானாதிகரணம்" என்னும் இது அஜ்ஜாதிக்குவிசேஷணமாகக்கூறப்பட்டது. ஆண்டு ஜலமுதலிய திரவியங்களில் ஜலத்தன்மை முதலிய ஜாதிகளிருக்கின்றது. ஜல முதலிய திரவியங்களில் கந்தகுண மிருப்பதின்று. கந்தகுண மிருக்கும் பிருதிவியில் ஜலத்தன்மை முதலிய ஜாதிகளிருப்பன வன்று. ஆகையால் ஜலத்தன்மை முதலிய ஜாதிகள் கந்தகுணத்தின் சமானாதி கரணமன்றாம். பிருதிவித்தன்மை ஜாதியே கந்தகுணத்தின் சமானாதிகரணமாம். ஆகையால் ஜலத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு ஜலமுதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "கந்த சமானாதி கரண ஜாதியுடையது பிருதிவி" என விம்மாத்திரமே பிருதிவியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "திரவியத்தன்மையின் சாக்ஷாத்வியாப்பியம்" என்னும் இப்பதங்கூறாவிடின் திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டும் சத்தாஜாதியைக்கொண்டும் அந்த லக்ஷணத்திற்குமீண்டும் அஜ்ஜலமுதலியவைகளில் அதிவியாப்திபுண்டாம். ஏனெனின், கந்தகுணமிருக்கும் பிருதிவியில் திரவியத்தன்மை ஜாதியும் சத்தா ஜாதியுமிருக்கின்றன. ஆகையால் திரவியத்தன்மை

ஜாதியும், சத்தா ஜாதியும் பிருதிவித்தன்மை ஜாதியைப்போன்று கந்த சமாநாதிகரணமேயாம். இவ்வித கந்த சமாநாதிகரண திரவியத்தன்மை ஜாதியுடையனவும், சத்தா ஜாதியுடையனவும் ஜலமுதலிய திரவியங்களுமாம். ஆகையால் ஜலமுதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்தி செய்வான் கருதி அந்தலக்ஷணத்தில் "திரவியத்தன்மையின் சாக்ஷாத்வியாப்பியம்" என்னுமிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுத் திரவியத் தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். அங்ஙனமே சத்தா ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். அச்சத்தா ஜாதி குணம், கரும வடிவ அதிக இடத்திருப்பதாவதால் திரவியத் தன்மை ஜாதியின் வியாபக ஜாதியாம். ஆகையால் அவ்விசேஷணத்தைக் கூறுவதால் திரவியத் தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் அந்த லக்ஷணத்திற்கு ஜலமுதலிய திரவியங்களில் அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "கந்த சமாநாதிகரண திரவியத் தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது பிருதிவி" என விம்மாத்திரமே பிருதிவியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங்கூறாவிடின் கந்தசமாநாதிகரணமும், திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம் இத்தகைய கடத்தன்மை ஜாதியைக் கொண்டு கேவலம் கட வடிவப் பிருதிவியிலோ அந்தலக்ஷணம் சம்பவிக்கும். படமுதலிய பிருதிவியில் அக்கடத் தன்மை ஜாதியின்றாம். ஆகையால் படாதி வடிவபிருதிவியில் அந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாம். அந்த அவ்வியாப்தி தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுக் கடத் தன்மை முதலிய ஜாதிகள் திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமன்றாம். ஆனால் பிருதிவித் தன்மை ஜாதியே சாக்ஷாத் வியாப்பியமாகின்றது. பிருதிவி, ஜல முதலிய திரவியங்களை வேறுபடுத்தும் ஜாதிகளே அத்திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதிகளாம். ஆகையால் "சாக்ஷாத்" தென்னும் பதத்தைக் கூறுவதால் அக்கடத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அக்கட முதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. இதுகாறும் "கந்தமுடையது பிருதிவி" என்னும் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிக்கப்பட்டது.

### கஅஞ. பிருதிவியின் பிருதிவித் தன்மை ஜாதியுடைமை வடிவ இரண்டாவது லக்ஷணத்தின் வர்ணனம்.

இனி "ப்ருதிவீத்வஜாதிமதீ ப்ருதிவீ" என்னுமிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் சமவாயசம்பந்தமாக பிருதிவித் தன்மை ஜாதியுடையதாகின்றதோ அத்திரவியம் பிருதிவியெனப்படும். சமவாய சம்பந்தமாகப் பிருதிவித் தன்மை ஜாதி கேவலம் பிருதிவியிலேயேயிருக்கின்றது. ஜல முதலியத் திரவியங்களிலிருப்பதில்லை. ஆகையால் பிருதிவித்தன்மை ஜாதியுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—பிருதிவித் தன்மை ஜாதியுடைமை வடிவ பிருதிவியின் லக்ஷணம் சித்திக்கும்போது முதலிலோர் பிரமாணத்தால் பிருதிவித் தன்மை ஜாதியின் சித்தியுண்டாகவேண்டும். பிருதிவித்தன்மை ஜாதியின் சித்தியின்றி அந்த லக்ஷணம் சம்பவியாதென்னுஞ் சங்கையுண்டாக, இனி பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் பிருதிவித்தன்மை ஜாதியின் சித்தி செய்வாம்.

## கமள. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் பிருதிவித் தன்மை ஜாதியின் சித்தி.

ஆண்டுக் கருமை, பொன்மை, செம்மை முதலிய உருவத்தால் பரஸ்பர விலக்ஷணப் பிருதிவியில் இது பிருதிவி, இது பிருதிவி யென்னும் ஏகாகாரத்தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகிறது. அவ்வேகாகாரத் தோற்றம் அப்பரஸ்பர விலக்ஷண பார்த்திவ வியக்திகளால் சம்பவிக்கிறதில்லை. சர்வவியக்திகளில் அநுகதமாயிருக்கும் பிருதிவித்தன்மை ஜாதியொன்றினுனே அவ்வேகாகாரத் தோற்றமுண்டாகின்றது. ஆகையால் இது பிருதிவி யென்னும் பிரத்தியக்ஷப் பிரமாணமே பிருதிவித் தன்மை ஜாதியின் சாதகமாம்.

சங்கை:—அதியிந்திரிய பரமாணு, துவியணுக வடிவப் பிருதிவியிலும், கிராணவிந்திரியவடிவப்பிருதிவியிலும், இது பிருதிவியென்னும் பிரத்தியக்ஷப் பிரதீதி ஒருவருக்கு முண்டாகிறதில்லை. ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் அதியிந்திரியப் பிருதிவியில் பிருதிவித் தன்மைஜாதி சித்தியாதாகும். அல்லது சாத்திர சம்ஸ்காரமில்லாத புருஷர்கட்கு பிரசித்த பூதலத்திலேயே இது பிருதிவி யென்னும் உணர்ச்சியுண்டாகின்றது. நெய், அரக்கு, இரத்தினம் முத்து, பவழம், முதலிய பார்த்திவ வத்துக்களில் இது பிருதிவி யென்னும் உணர்ச்சியுண்டாகிறதில்லை. ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் எல்லாப் பிருதிவிகளில் பிருதிவித்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாதென்னும் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் எல்லாப் பிருதிவித் தன்மை ஜாதியினைச் சித்தி செய்வாம்.

## கமஅ. அநுமானப் பிரமாணத்தால் பிருதிவித் தன்மை ஜாதியின் சித்தியைக் கூறுதல்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம் “ வ்ருயிவீவூத்தியடா மஂயஸ ஶவாயிகாரணதா ஷாகிஂவிஸ யஉடாவஜிநா காரணதாலாஸ தஂதஉவூத்தி காரணதாவஸ ” (இ-ள்.) பிருதிவியிலிருக்கும் கந்தகுணத்தின் சமவாயி காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம் காரணத் தன்மையாவதால் எதுவெது காரணத்தன்மையாமோ அதுவது ஓர்தர்மத்தால் அவச்சின்னமேயாகும். நிரவச்சின்னமாக ஓர் காரணத்தன்மை யுண்டாகிறதில்லை. எங்ஙனம்: தந்துக்களிலிருக்கும் படத்தின் சமவாயி காரணத்தன்மை தந்துத்தன்மைத் தர்மத்தால் அவச்சின்னமாம். அங்ஙனமே பிருதிவியிலிருக்கும் கந்தத்தின் சமவாயி காரணத் தன்மையும் ஓர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமாகும். அத்தர்மம் பிருதிவித்தன்மை ஜாதியேயாம். ஏனெனின்,

பிருதிவிமாத்திரத்தி லிருக்கும் கந்தகுணத்தின் சமவாயிகாரணத் தன்மை யால் அதிக இடத்தும் குறைந்த விடத்துமிராமல் காரணத் தன்மையின் சமானவிடத்திருக்கும் தர்மமே காரணத் தன்மையின் அவச்சேதகமாகும். இத்தகைய தர்மம் பிருதிவித்தன்மை ஜாதியேயாம். ஆகையால் கூறிய அவ்வநுமானத்தில் கந்தகுணத்தின் சமவாயிகாரணத்தன்மையி னவச்சேதக வடிவ்மாக பிருதிவித் தன்மை ஜாதியின் சித்தியேயுண்டாகின்றது. அப்பிருதிவியில் திரவியத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியுமிருக்கின்றன. எனினும் திரவியத் தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் கந்தத்தின் சமவாயி காரணத் தன்மையின் பிருதிவிவடிவ தேசத்தினும், அதிகமாகிய ஜலாதி தேசத்து மிருக்கின்றன. ஆகையால் திரவியத் தன்மை ஜாதியும், சத்தாஜாதியும் காரணத் தன்மையின் அவச்சேதகமாவனவன்று. ஜலத்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மை என்னுமிவை முதலிய ஜாதிகளோ அக்காரணத் தன்மையின் பிருதிவி வடிவ அதிகரணத்திலேயே யிருப்பனவன்றும். ஆகையால் ஜலத் தன்மையாதி ஜாதிகளும் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாவனவன்று. கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் அக்கட படமுதலிய பிருதிவியிலேயே யிருக்கின்றன. ஜல முதலியவைகளி லிருப்பனவன்று. என்றாலும் அக்கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் எல்லாப் பிருதிவியிலு மிருப்பனவன்று. சில கட படாதி வடிவப் பிருதிவியிலேயே யிருக்கின்றன. கந்தகுணத்தின் சமவாயி காரணத் தன்மையோ எல்லாப் பிருதிவியிலு மிருக்கின்றது. ஆகையால் அக்காரணத் தன்மை இடத்தினும் குறைந்தவிடத்திருப்பதாவதால் அக்கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளும் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகமாட்டாது. பரிசேஷமாக எல்லாப் பிருதிவியிலுமிருப்பதாகியப் பிருதிவித்தன்மை ஜாதியே அக்காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாகச் சித்திக்கின்றது. ஆகையால் கூறிய அவ்வநுமானப் பிரமாணத்தால் பரமாணுத் துவியணுகாதி வடிவ அதீந்திரியப் பிருதிவிகளிலும், பிரசித்தப் பிருதிவியிலும் பிருதிவித் தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது. இப்பிருதிவித் தன்மை ஜாதியுடையத் திரவியம் பிருதிவியெனப்படும்.

## கஅகூ. ஜல, வாயுக்களில் கந்தத்தன்மையின் சாதகமான பூர்வபக்ஷம்.

சங்கை:—கந்தமுடையது பிருதிவியெனக் கூறிய அந்த லக்ஷணத்திற்கு ஜலத்திலும், வாயுவிலும் அதிவியாப்தியும் கல், இரத்தினம், முத்து, பவழ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியு முண்டாம். ஏனெனின், இஜ்ஜலம் நறுநாற்றமுடையதாம், இஜ்ஜலம் தீநாற்றமுடையதாம், அங்ஙனமே இக்காற்று நறுநாற்றமுடையதாம், இக்காற்றுத் தீநாற்றமுடையதாமென்னும் உணர்ச்சி உலகர் யாவருக்கு முண்டாகின்றது. அந்தப்பிரத்தியக்ஷப் பிரதீதியின் வலியால் அஜ்ஜலத்திலும், வாயுவிலும் கந்தகுணம் அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஓர்கால் அஜ்ஜல, வாயுக்களில் கந்தகுணமுண்டாகாவிடின் உலகர் யாவருக்கும் ஆண்டுக் கந்தத்தின் பிரதீதியுண்டாகாததாக

வேண்டும். ஆகையால் அஜ்ஜலத்திலும், வாயுவிலும் கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியே யுண்டாகும். அல்லது கல், இரத்தினம், முத்து, பவழ முதலிய பிருதிவியில் ஓர் கால் அக்கந்தகுணமிருப்பதாயின் உலகர் யாவருக்கும் கந்த உணர்ச்சியுண்டாகவேண்டும். கல் முதலியவைகளில் ஒருவருக்கும் கந்தவுணர்ச்சி யுண்டாகிறதில்லை. ஆகையால் கல் முதலியவைகளில் கந்தகுணமின்றாம். கல் முதலியவைகளும் பிருதிவி வடிவமேயாம். கல் முதலிய பிருதிவியில் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகிறது.

கக௦. ஜல, வாயுக்களில் பிருதிவியின் சம்பந்தத்தால் கந்தவுணர்ச்சியின் வர்ணனம்.

சமாதானம்:—ஜலத்திலும், வாயுவிலும் சமவாய சம்பந்தமாக கந்தகுணமிருக்குமாயின் எல்லா ஜலத்திலும், எல்லா வாயுவிலும் கந்த குணம் உலகவருக்குப் பிரதீதியாக வேண்டும். எல்லாஜலத்திலும், எல்லாவாயுவிலும் உலகவருக்குக் கந்தகுணம் பிரதீதியாகிறதில்லை. சிலஜலத்திலும், சிலவாயுவிலுமே உலகவருக்குக் கந்தகுணம் பிரதீதியாகின்றது ஆகையால் இதை அறியத்தக்கதாம். கஸ்தூரி, குசும (புட்ப) முதலிய கந்தமுடைய பிருதிவியின் சையோக சம்பந்தமுண்டாகும் ஜலத்திலும், வாயுவிலுமே உலகவருக்கு கந்தத்தின் பிரதீதி யுண்டாகின்றது. கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சையோக சம்பந்த முண்டாகாத ஜலத்திலும், வாயுவிலும் உலகவருக்கு கந்தத்தின் உணர்ச்சியுண்டாகிறதில்லை. இவ்வாறுய அன்வய வெதிரேகங்களால் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் கந்தமே சுவாசிரய சையுக்தத் தன்மைச் சம்பந்தமாக ஜலத்திலும், வாயுவிலும் பிரதீதியாகின்றது. ஈண்டுச் சுவசத்தத்தால் கந்தகுணத்தைக் கொள்ளுக. அக்கந்த குணத்தின் ஆசிரயமாகிய கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சையோக சம்பந்தமுடையது அஜ்ஜலமும், வாயுவுமாம். இவ்வித பரம்பரைச் சம்பந்தத்தால் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் கந்தமே ஜலத்திலும், வாயுவிலும் பிரதீதியாகின்றது. இயல்பாக அஜ்ஜல, வாயுக்களில் கந்தகுணமின்றாம்.

கககக. அஜ்ஜல, வாயுக்களில் பிருதிவியின் அம்சங்களுக்கு பிரத்தியக்ஷத்தினது சங்கையின் வர்ணனம்.

சங்கை:—உலகவருக்கு கந்தத்தின் பிரதீதியுண்டாகும் ஜல, வாயுக்களில் ஓர் கால் கஸ்தூரி, குசும முதலிய கந்தமுடைய பிருதிவியின் சையோக சம்பந்த முண்டாகுமாயின் அஜ்ஜல, வாயுக்களில் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், அல்லது துவாசப் பிரத்தியக்ஷ முண்டாக வேண்டும். அந்தப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆகையால் அக்கந்தம் அஜ்ஜல, வாயுக்களினதேயாம்.

கககஉ. அப்பிருதிவியினது அம்சங்களின் சூக்ஷமத் தன்மையால் பிரத்தியக்ஷமாகாத் தன்மையின் வர்ணனம்.

சமாதானம்:—அஜ்ஜலத்தில் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் அதிசூக்ஷம அம்சங்கள் கலக்கின்றன. இக்காரணத்தால் உலகவருக்கு

கந்தகுணமுடைய சூக்ஷும அம்சங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், அல்லது துவாசப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. இவ்வாறாக அவ்வாயுவும் தூரத்திலுள்ள கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சூக்ஷும அம்சங்களைக் கொண்டு வருகின்றது. அந்த பிருதிவியின் அம்சம் அத்தியந்த சூக்ஷும மாகையால் உலகவருக்கு அவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், அல்லது துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. கேவலம் கிராண விந்திரியத்தால் அவற்றின் கந்தத்தின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது.

### கககங. கஸ்தூரி, குசும முதலியவைகளில் வாயுவின் சம்பந்தத்தால் அவயவங்களின் நீக்கமும், குறைவுத் தன்மையின் சங்கையும்.

சங்கை:—ஓர் கால் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சூக்ஷும அம்சங்களை அவ்வாயு வெடுத்துக் கொண்டுவரின் அனேக சூக்ஷும அம்சங்களின் நீக்கத்தால் குசும முதலியவைகளில் அனேக துவாரங்களுண்டாக வேண்டும். கஸ்தூரி முதலியவைகளில் குறைவுத் தன்மையு முண்டாக வேண்டும். அங்ஙன முண்டாகிறதில்லை ஆகையால் அவ்வாயுவிலேயே அக் கந்தம் அங்கீகரிக்க வேண்டும்.

### கககச. கஸ்தூரி, குசும முதலியவைகளில் போக்தா புருஷனது அதிர்ஷ்டத்தால் மீண்டும் அவ்வவயவங்களினது உற்பத்தியின் வர்ணனம்.

சமாதானம்:—அக்கஸ்தூரி, குசும முதலிய விஷயங்களை போகிக்கும் ஜீவர்களின் அதிர்ஷ்ட விசேஷத்தின் வசத்தால் அக்கஸ்தூரி, குசும முதலியவைகளில் வெவ்வேறு அம்சங்களின் உற்பத்தியுண்டாய் விடுகின்றன. அதாவது எத்தனை சூக்ஷும அம்சங்களை அவ்வாயு கொண்டு வருகின்றதோ அத்தனை சூக்ஷும அம்சங்களே போகிக்கும் ஜீவர்களது அதிர்ஷ்டத்தின் வசத்தால் மீண்டும் உற்பத்தியாகின்றன. ஆகையால் குசும முதலிய புட்பங்களில் துவாரத் தன்மையுண்டாவதின்று. அங்ஙனமே கஸ்தூரி முதலியவைகளில் குறைவுத் தன்மையு முண்டாகிறதில்லை.

### கககரு. கற்பூரத்தில் அவ்வதிர்ஷ்டத்தின் வசத்தால் மீண்டும் அவயவங்களின் உற்பத்தியில் சங்கையின் வர்ணனம்.

சங்கை:—போகிக்கும் ஜீவர்களின் அதிர்ஷ்ட விசேஷத்தால் மீண்டும் வேறு அம்சங்களின் உற்பத்தியுண்டாகுமாயின் கற்பூரத்திலும் குறைவுத்தன்மை யுண்டாகலாகாது. கற்பூரத்தில் குறைவுத் தன்மையோ பிரத்தியக்ஷத்தில் காணப்படுகின்றது.

### கககசு. கற்பூர முதலியவைகளில் அவ்வதிர்ஷ்டத்தின் அபாவத்தால் மீண்டும் அவ்வவயவங்களின் உற்பத்தியாகாமையின் வர்ணனம்.

சமாதானம்:—எங்ஙனம் கஸ்தூரி, குசும முதலியவைகளில் போகிக்கும் ஜீவர்களின் அதிர்ஷ்ட விசேஷமிருக்கின்றதோ அங்ஙனம் கற்பூர முத

ஷியவைகளில் போகிக்கும் ஜீவர்களின் அதிர்ஷ்ட விசேஷமின்றும். ஆகையால் கற்பூர முதலியவைகளில் வேறு அம்சங்களின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆனால் க்ஷண க்ஷணத்தில் குறைவுத்தன்மையே யுண்டாய் விடுகின்றது. இவ்வாறாகப் பிருதிவியின் கந்தமே ஜல, வாயுக்களில் பிரதீதியாகின்றது. இயல்பாக அஜ்ஜல, வாயுக்களில் அக்கந்தகுணமின்றும். ஆகையால் கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணத்திற்கு அஜ்ஜல, வாயுக்களில் அதிவியாப்தியுண்டாகாது.

கஃஎ. கல் முதலியவைகளில் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்தினது அவ்வியாப்தியினை நிவர்த்தித்தல்.

இனி கல், இரத்தினம், முத்து, பவழ முதலிய பிருதிவியில் கந்தமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியை நிவிர்த்திப்பாம். ஆண்டு எவ்வாதி அக்கல் முதலியவைகளில் கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணத்திற்கு அவ்வியாப்திக் கூறினனோ அவ்வாதியை யிதுவினவுவாம். அக்கல் முதலியவைகளில் பிருதிவித்தன்மையை அங்கிகரிப்பதின்மையால் அக்கல் முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியைக் கூறுகின்றாயா? அல்லது அக்கல் முதலியவைகளில் பிருதிவித் தன்மையை அங்கீகரித்து அந்த லக்ஷணத்திற்கு ஆண்டு அவ்வியாப்தியைக் கூறுகின்றாயா? ஆண்டு வாதி முதலாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், கல் முதலியவைகள் பிருதிவி வடிவமே அல்லாதபோது அக்கல் முதலியவைகளில் கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணத்திற்கு அவ்வியாப்திக் கூறுவது அத்தியந்தம் அசங்கதமாம். ஏனெனின், எந்த லக்ஷணம் தனது லக்ஷியத்தின் ஓரிடத்திருந்து ஓரிடத்திருப்பதில்லையோ அந்த லக்ஷணமே அவ்வியாப்திதோஷமுடையதாகின்றது. எங்ஙனம் கபிலநிறமுடைமைவடிவ ஆவின் லக்ஷணம் சில ஆக்களிடத்தேயிருக்கின்றது. எல்லா ஆக்களிலுமிருப்பதில்லை. ஆகையால் அக்கபிலநிறமுடைய ஆவின் லக்ஷணம் அவ்வியாப்தி தோஷமுடையதெனப்படும். அங்ஙனமே கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணம் பிருதிவித்தன்மையல்லாத கல் முதலிய அலக்ஷிய வத்துக்களில் இருப்பதின்மையால் அவ்வியாப்தி தோஷமுடையதாகாது. ஓர்கால் அலக்ஷியத்திலிருப்பதின்றாயினும் அந்த லக்ஷணம் அவ்வியாப்தி தோஷமுடையதாயின் எல்லா சத் லக்ஷணங்களும் அவ்வியாப்தி தோஷ முடையனவேயாகும். இக்காரணத்தால் ஓர் சத்லக்ஷணமும் அலக்ஷியத்திலிருப்பதில்லை. இனி வாதி இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், இக்கல் முதலியவைகளில் பிருதிவித் தன்மையினை அங்கீகரிப்பதாக அப்பிருதிவித்தன்மை வடிவ ஏதுவால் அக்கல் முதலியவைகளில் அக்கந்த குணத்தின் அநுமிதி அவசியமுண்டாகும்.

கஃஅ. அநுமானப் பிரமாணத்தால் கல் முதலியவைகளில் கந்தமுடைமையின் சித்தி.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம், "பாஷாணாதயஃ கந்தவந்தஃ ப்ருதிவீத்வாத் யத்ப்ருதிவீ தத்கந்தவத்" (இ-ள்.) கல், இரத்தினம், முத்து,

பவழ முதலியன கந்தகுணமுடையனவாம், பிருதிவித்தன்மை தர்மமுடையனவாவதால், எவ்வெத் திரவியம் பிருதிவித் தன்மை தர்மமுடையனவாமோ அவ்வத்திரவியம் கந்தகுணமுடையனவேயாம். எங்ஙனம்: பிரசித்த கஸ்தூரி, குசும முதலிய திரவியங்கள் பிருதிவித்தன்மை தர்மமுடையன வாவதால் கந்தகுணமுடையனவுமாம். அங்ஙனமே கல் முதலியனவும் பிருதிவித்தன்மை தர்மமுடையன வாவதால் கந்தகுண முடைமை அவசிய முண்டாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் கல் முதலியவைகளில் கந்தகுணத்தின் சித்தியுண்டாகின்றது.

### க௯௯. கல் முதலியவைகளின் கந்தத்தில் பிரத்தியக்ஷத் தன்மையின் சங்கை.

*சங்கை*:—ஓர் கால் கல் முதலியவைகளில் கந்தமிருக்குமாயின் எங்ஙனம் கஸ்தூரி, குசும முதலியவைகளில் கந்தம் உலகவருக்குக் கிராண விந்திரியத்தால் பிரதீதியாகின்றதோ அங்ஙனமே கல் முதலியவைகளின் கந்தமும் உலகவருக்குக் கிராண விந்திரியத்தால் பிரதீதியாதல் வேண்டும்; பிரதீதியாவதின்று. ஆகையால் கல் முதலியவைகளில் கந்தகுணமின்றாம்.

### உ௱. கல் முதலியவைகளின் கந்தத்தில் அநுத்பூதத்தன்மையால் பிரத்தியக்ஷமாகாத் தன்மையின் வர்ணனம்.

*சமாதானம்*:—கல் முதலியவைகளிலுள்ள கந்தம் கஸ்தூரி, குசும முதலியவைகளின் கந்தத்தைப்போன்று; உத்பூதமன்றாம்; அக்கந்தம் அநுத்பூதமாம். உத்பூதகந்தத்தின் பிரத்தியக்ஷமே கிராணவிந்திரியத்தாலுண்டாகின்றது. அநுத்பூத கந்தத்தின் பிரத்தியக்ஷம் கிராண விந்திரியத்தா லுண்டாவதில்லை. ஆகையால் கல் முதலியவைகளினது கந்தத்தின் பிரத்தியக்ஷம் உலகவருக்குக் கிராண விந்திரியத்தாலுண்டாகிறதில்லை. ஆனால் பிருதிவித் தன்மை வடிவ ஏதுவால் கந்தத்தின் அநுமிதி ஞானமேயுண்டாகின்றது.

### உ௦க. கல் முதலியவைகளில் பிருதிவித் தன்மையின் அபாவத்தினது சங்கையின் வர்ணனம்.

*சங்கை*:—பிருதிவித் தன்மை வடிவ ஏதுவால் கல் முதலியவைகளில் கந்த குணத்தினைச் சித்திசெய்வதற்கு கல் முதலியவைகளின் பிருதிவித்தன்மையிலேயே ஓர் பிரமாணமுமின்றாயின் பிருதிவித்தன்மை வடிவ ஏதுவால் கல் முதலியவைகளில் கந்த குணத்தின் சித்தியோ அத்தியந்தம் தூரமாமென்னுஞ் சங்கையுண்டாக இனி அக்கல் முதலியவைகளில் யுக்தியால் பிருதிவித் தன்மையை நிலைநாட்டுவாம்.

### உ௦உ. கல் முதலியவைகளில் பிருதிவித் தன்மையின் சாதக யுக்தியின் வர்ணனம்.

ஆண்டு அத்தியந்த வன்னியின் சையோகத்தால் கல் முதலியன பஸ்ம (சாம்பர்) பாவத்தினை அடையும்போது கல் முதலியவைகளின் பஸ்மத்தில் உலகர் யாவருக்கும் கிராண விந்திரியத்தால் கந்தத்தின் பிரத்தியக்ஷ [illegible]

கின்றது. எப்பதார்த்தத்தில் கந்தகுணம் பிரதீதியாகின்றதோ அப்பதார்த்தம் பிருதிவியேயாகின்றது. இவ்வர்த்தத்தில் ஓர் வாதிக்கும் விவாதமின்றாம். ஆகையால் கல் முதலியவைகளின் பஸ்மம் கந்தகுணமுடையதாவதால் பிருதிவி வடிவமென்றே அங்கீகரிக்கப்படுவதாகும். இவ்வாறாக கல் முதலிவைகளின் பஸ்மத்தில் பிருதிவித் தன்மை வடிவத்தின் சித்தியுண்டாக அப்பஸ்மத்தை ஆரம்பிக்கும் அவயவங்களிலும் பிருதிவி வடிவத்தன்மையே அங்கீகரிக்கப்படுவதாகும். ஏனெனின் அவயவங்களின் கந்தகுணமே அவயவியின் கந்தகுணத்தின் அசமவாயி காரணமாகின்றது. ஓர்கால் அப்பஸ்மத்தினை ஆரம்பிக்கும் அவயவங்களின் கந்த குணம் அங்கீகரியாவிடின் அப்பஸ்ம வடிவ அவயவியிலும் கந்தகுணத்தின் உற்பத்தி யுண்டாவதின்றாகும். அப்பஸ்மத்திலோ கந்தகுணம் பிரத்தியக்ஷப் பிரதீதியாகின்றது. ஆகையால் அப்பஸ்மத்தை ஆரம்பிக்கும் அவயவங்களிலும் கந்தகுணம் அவசிய மொப்பவேண்டியதாகும். கந்தகுண வடிவ ஏதுவால் அவ்வவயவங்களில் பஸ்மத்தைப் போன்று பிருதிவித் தன்மையும் அவசிய மொப்ப வேண்டியதாகும். இவ்வாற்றால் அப்பஸ்மத்தை ஆரம்பிக்கும் அவயவங்களில் பிருதிவித் தன்மையின் சித்தியுண்டாக அக்கல் முதலியவைகளை ஆரம்பிக்கும் அவயவங்களிலும் பிருதிவித் தன்மையே அங்கீகரிக்கவேண்டியதாகும். ஏனெனின், இது சாத்திரக்காரர் நியமமாம். "யத் த்ரவ்யம் யத் த்ரவ்யத்வம்ஸஜந்யம் தத்த்ரவ்யோபாதாநோபாதேயம்" (இ-ள்.) எத்திரவியம் எத்திரவியத்தின் துவம்சத்தாலுண்டாவதாகின்றதோ அத்திரவியம் அத்திரவியத்தின் உபாதான காரணத்தின் உபாதேயமேயாகின்றது. எங்ஙனம்: நூறு முழ அளவுள்ள பெரிய படத்தின் துவம்சத்தாலுண்டான பத்து முழ அளவுள்ள சிறிய படம் அப்பெரிய படத்தின் உபாதான காரண வடிவ தந்துக்களின் உபாதேயமேயாகின்றது. அதாவது பெரிய படத்தினுபாதான காரண வடிவ தந்துவே அச்சிறிய படத்திற்கும் உபாதான காரணமாம். அங்ஙனமே ஈண்டுப் பிரசங்கத்தில் அப்பஸ்ம வடிவத் திரவியமும் கல் முதலியத் திரவியங்களின் துவம்சத்தாலுண்டானதாம். ஆகையால் அப்பஸ்ம வடிவத் திரவியமும் கல் முதலியத் திரவியங்களின் உபாதான காரணத்தின் உபாதேயமாகின்றது. அதாவது கல் முதலியத் திரவியங்களின் உபாதான காரண அவயவமே அப்பஸ்ம வடிவத்திரவியத்தின் உபாதான காரணமாகும். ஆகையால் அவ்வவயவங்களாலுண்டான பஸ்மத்தில் எங்ஙனம் பிருதிவித் தன்மை யங்கீகாரமோ அங்ஙனமே அவ்வவயவங்களாலுண்டான கல் முதலியவைகளிலும் பிருதிவித்தன்மை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். இவ்வாறாய யுக்தியால் கல் முதலியவைகளில் பிருதிவித்தன்மையே சித்தமாகின்றது. பிருதிவித் தன்மையின் சித்தியுண்டாக கல் முதலியவைகளில் பிருதிவித் தன்மை வடிவ ஏதுவால் கந்தகுணத்தின் அநுமானம் சம்பவிக்கின்றது. ஆகையால் கந்தமுடைமை வடிவப் பிருதிவியின் லக்ஷணத்திற்கு கல், இரத்தினம், முத்து, பவழ முதலிய பிருதிவிகளில் அவ்வியாப்தி யுண்டாகாது.

உ௦௩. பிருதிவியின் பதினான்கு குணத்தின் வர்ணனம்.

இவ்விதமாகக் கூறிய விருவித லக்ஷணங்களால் லக்ஷிதப்பிருதிவியில் உருவம், ரசம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், வேகஸ்திதிஸ்தாபக மெனப் பெயரிய சம்ஸ்கார மெனப் பதினான்கு குணங்களிருக்கின்றன.

உ௦௪. நித்திய, அநித்திய வடிவமாக பிருதிவியி னிருவித வேற்றுமை.

இத்தகைய பதினான்கு குணங்களுடைய பிருதிவி நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டா லிருவிதமாகின்றது. பரமாணு வடிவப் பிருதிவியோ நித்தியமெனப்படும். துவியணுக முதலிய காரிய வடிவ வெல்லாப் பிருதிவிகளும் அநித்தியமெனப்படும். காரிய வடிவ அநித்தியப் பிருதிவியே அவயவியெனப்படும். இனி பிரசங்கத்தால் நித்திய, அநித்திய வஸ்துக்களின் லக்ஷணம் நிரூபிப்பாம்.

உ௦௫. பரமாணுமுதலிய நித்திய பதார்த்தங்களின் வர்ணனம்.

ஆண்டு "ப்ராகபாவ ப்ரதியோகித்வ த்வம்ஸ ப்ரதியோகித்வ ரஹிதத்வம் நித்யத்வம்" (இ-ள்). எப்பதார்த்தம் பிராகபாவத்தின் பிரதியோகியாகாமலும், துவம்சத்தின் பிரதியோகியாகாமலு மிருக்குமோ அப்பதார்த்தம் நித்தியமெனப்படும். ஆண்டுப் பரமாணு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அன்னியோன்னியாபாவம், அத்தியந்தாபாவம், அங்ஙனமே நித்திய குணங்களிவைமுதலிய எத்தனை நித்திய பதார்த்தங்கள் அங்கீகரிக்கப்படுமோ அப்பரமாணு முதலிய நித்திய பதார்த்தங்களின் உற்பத்தியுண்டாகிறதில்லை. ஆகையால் அந்த நித்திய பதார்த்தங்களில் பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மையுண்டாகாது. உண்டாகும் கட முதலிய பதார்த்தங்களிலேயே பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மை யுண்டாகின்றது. பரமாணு முதலிய நித்திய பதார்த்தங்களின் நாசமுமுண்டாவதின்று. ஆகையால் நித்திய பதார்த்தங்களில் பிரத்துவம்சா பாவத்தின் பிரதியோகித் தன்மையுமுண்டாகாது. நாசமுடைய கட முதலிய பதார்த்தங்களிலேயே பிரத்துவம்சா பாவத்தின் பிரதியோகித் தன்மை யுண்டாகின்றது. ஆகையால் கூறிய நித்திய வத்துவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "பிராகபாவத்திற்குப் பிரதியோகியாகாதது நித்தியம்" என்னு மிம்மாத்திரமே நித்தியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "துவம்சத்திற்குப் பிரதியோகியாகாததும்" என்னும் பதங் கூறாவிடின் பிராகபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், நியாய சித்தாந்தத்தில் பிராகபாவத்திற்கு உற்பத்தி அங்கீகரியாது அநாதியொப்புகின்றனர். ஆகையால் பிராகபாவம் பிராகபாவத்திற்கு பிரதியோகியன்றாம். சித்தாந்தத்தில் பிராகபாவத்திற்கு நித்தியமொப்புவதில்லை. ஆகையால் அநித்தியப் பிராகபாவத்தில் நித்தியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்திசெய்வான் கருதி அந்த லக்ஷணத்தில் "துவம்சத்தின் பிரதியோகியாகாததும்" என்னும்

பதங் கூறப்பட்டது. பிராகபாவத்தில் துவம்சத்திற்குப் பிரதியோகியாகாத் தன்மையில்லை. கடமுதலிய பிரதியோகிகள் உற்பத்தியானபின்னர் கடமுதலிய காரியங்களின் பிராகபாவம் நஷ்டமாய் விடுகின்றது. ஆகையால் அப்பிராக பாவம் அத்துவம்சத்தின் பிரதியோகியேயாம். ஆகையால் அந்தலக்ஷணத்தில் "துவம்சத்திற்குப் பிரதியோகியாகாததும்" என்னும் பதத்தைக் கூறுவதால் பிராகபாவத்தில் நித்தியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகிறதில்லை. அல்லது "துவம்சத்தின் பிரதியோகியாகாதது நித்தியம்" என விம்மாத்திரமே நித்தியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பிராகபாவத்திற்குப் பிரதியோகியாகாததும்" என்னும் பதங் கூறுவிடின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம் ஏனெனின், நையாயிகர்கள் துவம்சத்தின் துவம்சம் அங்கீகரிப்பதில்லை. ஆனால் துவம்சத்திற்கு அநந்தமொப்புகின்றனர். ஆகையால் துவம்சத்திற்குப் பிரதியோகியாகாத் தன்மைத் துவம்சத்திலு மிருக்கின்றது. சித்தாந்தத்தில் துவம்சம் நித்தியமன்றாம். ஆகையால் அநித்தியத் துவம்சத்தில் நித்தியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பிராகபாவத்திற்கு பிரதியோகியாகாத் தன்மையுமாய்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுத் துவம்சத்தில் பிராகபாவத்திற்குப் பிரதியோகியாகாத் தன்மையின்றாம். கடமுதலிய காரியங்களைப்போன்று உண்டாவதாவதால் துவம்சம் பிராகபாவத்தின் பிரதியோகியே யாகின்றது. ஆகையால் அவ்விசேஷணத்தைக் கூறுவதால் பிரத்துவம்சாபாவத்தில் நித்தியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## உ௧௬. கட முதலிய அநித்திய பதார்த்தங்களின் லக்ஷணம்.

ஆண்டு "வ்ராமஹாவ வ்ரதியொகிகூ யூஂஸாவ்ரதியொகிகூாநூ காவாநு கநிதூ்ு" (இ-ள்.) பிராகபாவப் பிரத்துவம்சாபாவப் பிரதியோகித் தன்மையுடைய பதார்த்தமும், அவ்விரண்டில் ஒன்றை பிரதியோகியாக வுடைய பதார்த்தமும், அநித்தியமெனப் படுகின்றது. அதாவது பிராகபாவ மொன்றிற்கு, அல்லது துவம்சமொன்றிற்கு, அல்லது பிராகபாவம், துவம்சமாம் இரண்டிற்குப் பிரதியோகியாம் பதார்த்தம் யாதோ அப்பதார்த்தம் அநித்தியமெனப் படுகின்றது. ஈண்டுக் கேவலம் பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மையே அநித்தியத்தின் லக்ஷணமாகக்கூறின் பிராகபாவத்தில் பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மையின்றாம். ஆகையால் பிராகபாவத்தில் அநித்தியத்தன்மை யுண்டாகாது. பிராகபாவத்திலும் அநித்தியத் தன்மை அங்கீகாரமாம். ஆகையால் அந்த லக்ஷணத்தில் துவம்சத்தின் பிரதியோகித் தன்மைக்கும் அநித்தியத்தன்மைக்கூறப்பட்டது. துவம்சத்தின் பிரதியோகித் தன்மைப் பிராகபாவத்திலு மிருக்கின்றது. ஆகையால் பிராகபாவமும் அநித்தியமேயாம். அல்லது கேவலம் துவம்சத்தின் பிரதியோகித் தன்மையே அநித்தியத்தின் லக்ஷணமாகக் கூறின் துவம்சத்தில் துவம்சத்தின் பிரதியோகித் தன்மையின்றாம். ஆகையால் துவம்சத்

தில் அநித்தியத் தன்மையுண்டாகாது. சித்தாந்தத்தில் துவம்சத்திலும் அநித்தியத் தன்மையே அங்கீகாரமாம். ஆகையால் அந்த லக்ஷணத்தில் பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மைக்கும் அநித்தியத் தன்மைக் கூறப்பட்டது. பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மை துவம்சத்திலு மிருக்கின்றது. ஆகையால் அத்துவம்சமும் அநித்தியமேயாம். ஆகையால் இது சித்தமாயிற்று. பிராகபாவத்திலோ கேவலம் துவம்சத்தின் பிரதியோகித் தன்மை வடிவ அநித்தியத் தன்மை யிருக்கின்றது. பிரத்துவம்சாபாவத்திலோ கேவலம் பிராகபாவத்தின் பிரதியோகித்தன்மை வடிவ அநித்தியத்தன்மையிருக்கிறது. கட முதலிய பதார்த்தங்களில் பிராகபாவம், பிரத்துவம்சாபாவமாம் இரண்டின்பிரதியோகித்தன்மை வடிவ அநித்தியத்தன்மை யிருக்கின்றது. இவ்வாறாகப் பரமாணு வடிவப் பிருதிவியோ நித்தியமாம். துவியணுக முதலிய காரிய வடிவ் வெல்லாப் பிருதிவியும் அநித்தியமாம்.

## உ௦எ. அநித்தியப் பிருதிவியின் சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவித வகுப்பின் வர்ணனம்.

அவ்வநித்தியப் பிருதிவியும் சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு எப்பதார்த்தம் முதலில் சாமான்னிய வடிவமாக அறியப்படுகிறதோ அப்பதார்த்தத்தினைப் பின்னர் விசேஷ வடிவமாக அறிவதற்கு இச்சையுண்டாகின்றது. ஆகையால் பின்னர்க் கூறப்படும் பார்த்தீவ, ஜலீய, தைஜஸ, வாயுவீய வடிவ சரீர இந்திரிய விஷயங்களின் நிரூபணஞ் செய்யவேண்டி முதலில் அவ்வெல்லாச் சரீரங்கட்கும், எல்லா விந்திரியங்கட்கும், எல்லா விஷயங்கட்கும் ஓர் சாமான்னிய லக்ஷணம் அவசியம் நிரூபிக்கப்படவேண்டும்.

## உ௦அ. சரீரங்களின் சாமான்னிய லக்ஷணம்.

பார்த்தீவ, ஜலீய, தைஜஸ, வாயுவீயமென்னும் நான்கு வகைச் சரீரங்களின் சாமான்னிய லக்ஷணம் முதலில் நிரூபிப்பாம். "அந்த்யாவயவித்வே ஸதி சேஷ்டாஶ்ரயம் ஶரீரம்" (இ-ள்.) எத்திரவியம் அந்தியா வயவீயாகி சேஷ்டையின் ஆசிரயமாகின்றதோ அத்திரவியம் சரீரமெனப்படும். எங்ஙனம் மனிதர், பசு, பக்ஷி, புழு, விருக்ஷம் இவை முதலிய சரீரங்கள் அந்தியாவயவியும், சேஷ்டையின் ஆசிரயமுமாகின்றன. ஆகையால் அம்மனிதர் முதலிய தேகங்களில் சரீரத் தன்மை பொருந்தியதாம். ஆண்டு "சேஷ்டாசிரயம் சரீரம்" என் விம்மாத்திரமே சரீரத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அந்தியாவயவித் தன்மையாகி" என்னும் பதங் கூறுவிடின் அஸ்தம், பாதம் முதலிய அவயவங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், சரீரத்தைப்போன்று கை, கால் முதலிய அவயவங்களும் சேஷ்டையின் ஆசிரயமேயாம். ஆனால் கை, கால் முதலிய அவயவங்கள் சரீரமெனப்படுவனவன்று. இவ்வித சரீர வடிவமல்லாத கை, கால் முதலிய அவயவங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்தி செய்வான் வேண்டிச் சேஷ்டையின் ஆசிரயத்திற்கு "அந்தியாவயவியென்னும்" விசேஷ

ணங் கூறப்பட்டது. ஆண்டு கை, கால் முதலிய அவயவங்களில் அந்தியாவயவித் தன்மையின்றும். ஆகையால் கை, கால் முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகாது. அல்லது "அந்தியாவயவீசரீரம்" என விம்மாத்திரமே அச்சரீரத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சேஷ்டையின் ஆசிரயம்" என்னும் பதங் கூறாவிடின் கட, பட முதலிய பதார்த்தங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், மனிதர் முதலிய சரீரங்கள் எங்ஙனம் அந்தியாவயவியாமோ அங்ஙனமே கட, பட முதலியவைகளும் அந்தியாவயவியாம். கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சேஷ்டையின் ஆசிரயம்" என்னும் பதங் கூறப்பட்டது. கட, பட முதலிய பதார்த்தங்கள் சேஷ்டையின் ஆசிரயமாவனவன்று. ஆகையால் அக்கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௨௦௧. சேஷ்டையின் லக்ஷணம்.

"ஹிதாஹிதப்ராப்தி பரிஹாராய க்ரியா சேஷ்டா" (இ-ள்.) சுகப் பிராப்தியின் பொருட்டும், துக்க நிவர்த்தியின் பொருட்டுமாம் கிரியா விசேஷம் யாதோ அக்கிரியா விசேஷத்தினைச் சேஷ்டையென்பர். இவ்வாறுய சேஷ்டை மனிதர் முதலிய சரீரங்களிற் பிரசித்தமேயாம். அந்தியாவயவியின் ஸ்வரூப மறிந்தாலன்றி அந்தியாவயவி வடிவ சரீரத்தின் லக்ஷணம் அறியப்படாது. ஆகையால் அந்தியாவயவியின் லக்ஷணம் நிரூபிப்பாம்.

### ௨௧. அந்தியாவயவியின் லக்ஷணம்.

"அவயவஜந்யத்வேஸதி அவயவ்யஜநகம் அந்த்யாவயவீ" (இ-ள்.) எத்திரவியம் அவயவங்களாலுண்டாயதாய் வேறோர் அவயவியினை யுண்டாக்குவதன்றோ அத்திரவியம் அந்தியாவயவியெனப்படும். எங்ஙனம்: மனிதர் முதலிய சரீரங்கள் கை, கால் முதலிய அவயவங்களாலுண்டானதும் தன்னிடத்தில் சமவாய சம்பந்தமாக வேறு அவயவியினை யுண்டாக்காததுமாம். ஆகையால் மனிதர் முதலிய சரீரங்கள் அந்தியாவயவியெனப்படும். இவ்வாறுக கட, பட முதலிய திரவியங்களும் கபாலம், தந்து முதலிய அவயவங்களாலுண்டானதும் தன்னிடத்தில் சமவாய சம்பந்தமாக வேறு அவயவியினை யுண்டாக்காதனவுமாம். ஆகையால் கட, பட முதலிய திரவியங்களும் அந்தியாவயவியெனப்படும். ஆண்டு "அவயவியைபுண்டாக்காதது அந்தியாவயவீ" என விம்மாத்திரமே அந்தியாவயவியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அவயவத்தாலுண்டாயதாய்" என்னும் பதங்கூறாவிடின் ஆகாச முதலிய திரவியங்களிலும் குணம், கரும முதலிய பதார்த்தங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகும். ஏனெனின், ஆகாச முதலியவைகள் தம்மிடத்தில் சமவாய சம்பந்தமாக ஓர் அவயவியினை யுண்டாக்குவனவு மன்றும். ஆகாச முதலியன அந்தியாவயவிகளுமன்றும். ஆகையால் ஆகாசமுதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்திசெய்வான் கருதி அந்த

லக்ஷணத்தில் "அவயவங்களாலுண்டாயதாய்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆகாச முதலிய திரவியங்களும், குணம், கரும முதலிய பதார்த்தங்களும் அவயவியினை யுண்டாக்காதனவாயினும் அவயவங்களா லுண்டானதன்றும். ஆகையால் ஆகாச முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகாது. அல்லது "அவயவங்களாலுண்டாயது அந்தியாவயவீ" என விம்மாத்திரமே அந்தியாவயவியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "அவயவியையுண்டாக்காதது" என்னும் பதங் கூறுவிடின் கை, கால் முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின், கை, கால் முதலிய அவயவங்களும் தத்தம் அவயவங்களாலுண்டானதேயாம். ஆனால் கை, கால் முதலிய அவயவங்கள் அந்தியாவயவியெனப்படுகிறதில்லை. கை, கால் முதலிய அவயவங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "அவயவியை யுண்டாக்காதது" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு கை, கால் முதலிய அவயவங்களில் அவயவியினை யுண்டாக்காத் தன்மையின்றும். ஆனால் சரீர முதலிய அவயவியினையுண்டாக்கும் தன்மையேயிருக்கின்றது. ஆகையால் கை, கால் முதலிய அவயவங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "அவயவங்களாலுண்டாகி யுண்டாக்காதது அந்தியாவயவீ" என விம்மாத்திரமே அவ்வந்தியாவயவியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "அவயவியினை" என்னும் பதங்கூறுவிடின் அந்த லக்ஷணம் அசம்பவ தோஷமுடையதேயாம். ஏனெனின், சரீரம், கட முதலிய எத்தனை அந்தியாவயவிகளுண்டோ அவ்வெல்லா அந்தியாவயவிகளும் தம்மிடத்திலுள்ள குணம், கிரியை முதலியவைகளை யுண்டாக்குவனவேயாம். அந்தியாவயவியொன்றினையு முண்டாக்காதனவன்றும். தோன்றி அழிந்த கட முதலியவைகள் தம்மிடத்துள்ள குணக்கிரியைகளை யுண்டாக்குவனவன்று. எனினும் அக்கட முதலியனவைகளும் தமது துவம்ச முதலியவைகளை யுண்டாக்குவனவேயாம். அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அவயவியினை" என்னும் பதங் கூறப்பட்டது. கட, பட முதலிய அந்தியாவயவிகள் தம்மிடத்துள்ள குண, கரும முதலியவைகளை யுண்டாக்குவனவாயினும் அவயவியினை யுண்டாக்குவனவன்று. ஆகையால் அந்தியாவயவியின் லக்ஷணத்தில் லக்ஷிதமாத்திரத்தி லின்மை வடிவ அசம்பவ தோஷம் பிராப்தமாகாது. ஆண்டு அவயவம், அவயவி யென்னும் இருபதங்கள் பொருந்திய முற்கூறிய அந்தியா வயவியின் லக்ஷணம் யாதோ அந்த லக்ஷணத்தின் ஞானமுண்டாகும்போது முதலில் அவயவம், அவயவி யென்னும் இரு ஞானங்க ளுண்டாகின்றன. இவ்விரு ஞானங்களின்றி அந்தியாவயவியின் ஞானம் சம்பவிக்கிறதில்லை. இக்காரணத்தால் அவயவத்தினதும், அவயவியினதும் ஸ்வரூபம் வர்ணிப்பாம்.

## உகச. அவயவத்தின் லக்ஷணம்.

"த்ரவ்யஸமவாயி காரணம் அவயவ:" (இ-ள்.) திரவியத்தின் சமவாயி காரணம் யாதோ அது அவயவமெனப்படும். எங்ஙனம், தந்து பட

வடிவ திரவியத்தின் சமவாயிகாரணமாம். கபாலம் கடவடிவத் திரவியத்தின் சமவாயி காரணமாம். கை, கால் முதலியன சரீர வடிவ திரவியத்தின் சமவாயி காரணமாம். ஆகையால் தந்து, கபாலம், கை, கால் முதலியன அவயவங்களெனப்படும். ஆண்டு "சமவாயி காரணம் அவயவம்" என விம்மாத்திரமே அவயவத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "திரவியம்" என்னும் பதங்கூறாவிடின் ஆகாச முதலிய திரவியங்களில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாம். ஏனெனின் ஆகாச முதலிய திரவியங்களும் சத்த முதலிய குணங்களின் சமவாயி காரணமேயாம். ஆனால் ஆகாச முதலியவைகளில் அவயவ வடிவத்தன்மை அங்கிகாரமின்றாம். ஆகாச முதலியவைகளில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆகாச முதலியவைகளில் ஓர் திரவியத்திற்கும் சமவாயி காரணத் தன்மையின்றாம். ஆகையால் ஆகாச முதலியத் திரவியங்களில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகாது. அல்லது "திரவிய காரணம் அவயவம்" என விம்மாத்திரமே அவயவத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "சமவாயி" என்னும் பதங் கூறாவிடின் தந்து முதலிய அவயவங்களின் சையோகமும் பட முதலியத் திரவியங்களின் அசமவாயி காரணமாகின்றது. காலம், திக்கு, ஈஸ்வரன், பிராகபாவமிவை முதலியனவும் கட முதலிய திரவியங்களின் நிமித்த காரணமாகின்றன. அவ்வெல்லாக் காரணங்களில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திசெய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சமவாயி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவயவ சையோக முதலிய காரணங்களில் திரவியத்தின் சமவாயி காரணத் தன்மையின்றாம். ஆகையால் அக்காரணங்களில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

### உ௪உ. அவயவியின் லக்ஷணம்.

"ஜந்யத்ரவ்யம் அவயவீ" (இ-ள்.) உற்பத்தியாகுந் திரவியம் யாதோ அது அவயவியெனப்படும். ஆண்டுப் பிருதிவியின் துவியணுக முதலாக உற்பத்தியுடைய பார்த்திவத் திரவியங்களும், ஜலத்தின் துவியணுக முதலாக உற்பத்தியுடைய ஜலீயத் திரவியங்களும், தேயுவின் துவியணுக முதலாக உற்பத்தியுடையத் தேயுத் திரவியங்களும், வாயுவின் துவியணுக முதலாக உற்பத்தியுடைய வாயுவீயத்திரவியங்களுமாம் எல்லா ஜன்னியத் திரவியங்களும் அவயவியெனப்படுகின்றன. ஆண்டு "திரவியம் அவயவீ" என விம்மாத்திரமே அவயவியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜன்னியம்" என்னும் பதங் கூறாவிடின் பரமாணு ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களில் அவயவியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அத்திரவியத்திற்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. "ஜன்னியம் அவயவீ" என விம்மாத்திரமே அவயவியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "திரவியம்" என்னும் பதங் கூறாவிடின் உற்பத்தியுடைய குண, கருமங்களில் அவயவியின் லக்ஷணத்திற்கு

அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு "திரவியம்" என்னும் பதங் கூறப்பட்டது. அக்குண, கருமாதிகளில் திரவியத் தன்மையின்றாம். ஆகையால் குண, கருமங்களில் அவயவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

### உகங. யோனிஜம், அயோனிஜமென்னும் வேறுபாட்டால் சரீரத்தின் இருவித வர்ணனம்.

இவ்வாறாகக்கூறிய லக்ஷணத்தால் லக்ஷித அச்சரீரம் யோனிஜம், அயோனிஜமென்னும் வேறுபாட்டாலிருவகைத்தாம்.

### உகச. யோனிஜ சரீரத்தின் வர்ணனம்.

" ஶுக்ரஶோணிதயோ꞉ ஸம்யோகேந ஜந்யம் ஶரீரம் யோநிஜம் " (இ-ள்.) புருஷனது வீரிய வடிவ சுக்ரமும், ஸ்திரீயின் வீரிய வடிவ சோணிதமுமா மிரண்டுங் கலத்தலாலுண்டாகுஞ் சரீரம் யோனிஜமெனப்படும்.

### உகரு அயோனிஜ சரீரத்தின் லக்ஷணம்.

" யோநிஜபிந்நம் ஶரீரம் அயோநிஜம் " (இ-ள்.) யோனிஜசரீரத்தினும் வேறானசரீரம் அயோனிஜமெனப்படும்.

### உகசா. ஜராயுஜம், அண்டஜமென்னும் வேறுபாட்டால் யோனிஜ சரீரத்தின் வர்ணனம்.

யோனிஜ சரீரமும் ஜராயுஜம், அண்டஜமென்னும் வேறுபாட்டாலிருவகைத்தாம். ஆண்டு மாதாவின் உதரத்தில் பாலகனை ஆவரணஞ் செய்வதாகிய சர்மவிசேஷத்தினை ஜராயு (கருப்பை) என்பர். அஜ்ஜராயுவினின்றும் உண்டாகும் சரீரம் ஜராயுஜமெனப்படும். எங்ஙனம்: மனிதர், ஆ, குதிரை, எருமை, ஸ்வான் மிவை முதலிய சரீரங்கள் ஜராயுஜ மெனப்படும். ஸ்திரீயின் உதரத்தில் உண்டாகிய முட்டையினின்றும் உண்டாம் சரீரம் அண்டஜமெனப்படும். எங்ஙனம்: பக்ஷி, சர்ப்ப முதலிய சரீரங்கள் அண்டஜமெனப்படும்.

### உகஎ. ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், அதிர்ஷ்டவிசேஷ மென்னும் வேறுபாட்டால் அயோனிஜ சரீரத்தின் மூவகை வர்ணனம்.

அயோனிஜ சரீரமும் ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், அதிர்ஷ்ட விசேஷ ஜன்னியமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு ஜலாதி வடிவ ஸ்வேதத்தால் (வேர்வையால்) உண்டாகும் சரீரங்கள் ஸ்வேதஜமெனப்படும். எங்ஙனம்: புழு, கொசு, ஈ முதலிய சரீரங்கள் ஸ்வேதஜமெனப்படும். அப்புழு முதலிய சரீரங்களினுற்பத்தி கேவலம் அதர்மத்தோடுங்கூடிய பரமாணுக்களாலேயே யுண்டாகின்றது. பிருதிவியினை பேதித்து தத்தம் விதையினின்றும் உற்பன்னமாகும் சரீரங்கள் உத்பிஜ்ஜ மெனப்படும். எங்ஙனம்: மரம், கொடி, செடி இவை முதலியன உத்பிஜ்ஜ சரீரங்களெனப்படும். கேவலம்

புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்ட விசேஷத்தாலேயே யுண்டாகுஞ் சரீரம் அதிர்ஷ்ட விசேஷத்தா லுண்டாம் சரீரங்களெனப்படும். எங்ஙனம்: ஸ்வர்க்கத்திலுள்ள தேவதா சரீரங்களும், நரகத்திலுள்ள நரகர் சரீரங்களும் அதிர்ஷ்ட விசேஷத்தா லுண்டாயின வெனப்படும். புண்ணிய விசேஷத் தோடுங்கூடிய பரமாணுக்களாலே தேவசரீரங்களின் உற்பத்தி யுண்டாகின் றது. பாப விசேஷத்தோடுங் கூடிய பரமாணுக்களால் நரகர் சரீரங்களின் உற்பத்திபுண்டாகின்றது.

சங்கை:—தேவர்களின் சரீரங்கள் அயோனிஜமேயா மென்னும் அர்த்தத்திற் பிரமாணம் யாது?

உகஅ. தேவர் சரீரங்களில் சுருதிப் பிரமாணத்தால் அயோனிஜத் தன்மையினது சித்தியின் வர்ணனம்.

சமாதானம்:—தேவ சரீரங்களின் அயோனிஜத்தன்மையில் சாக்ஷாத் வேதத்தின் சுருதியே பிரமாணமாம். ஆண்டுச் சுருதி "ப்ரஹ்மணோ மானஸா: புத்ரா: மனவ:" (இ-ள்.) மனு முதலியோர் பிரஹ்மாவின் மானச புத்திரர்களாம். அதாவது, அதிர்ஷ்ட விசேஷ வசமாக மனு முதலி யோர் கேவலம் பிரஹ்மாவின் சங்கல்ப மாத்திரத்தாலேயே யுண்டாயினர். மனிதர் முதலிய சரீரங்களைப்போன்று சுக்ல, சுரோணிதத்தின் கலப்பால் மனு முதலியோரின் சரீரம் உண்டாயினவன்று என்னுமிச்சுருதி தேவர் முதலிய வர்களின் சரீரத்திற்கு அயோனிஜமே கூறியிருக்கிறது.

சங்கை:—"யோநிம் விநா ந சரீரம்" (இ-ள்.) சுக்ல, சுரோணிதத் தின் கலப்பு வடிவ யோனியின்றி சரீரம் உண்டாவதின்று என்னுமிச் சுருதி எல்லாச் சரீரங்கட்கும் யோனிஜம் கூறியதாகி அயோனிஜ சரீரத்தின் நிஷேதமே கூறியிருக்கின்றது. ஆகையால் இச்சுருதியிலும் விருத்தமாகிய முற்கூறிய சுருதி அயோனிஜ சரீரத்தினைச் சித்தம் செய்வதெப்படியாகும்.

சமாதானம்:—"யோனியின்றி சரீரமில்லை" என்னும் சுருதியிலுள்ள யோனி சத்தம் சுக்ல, சுரோணிதத்தின் கலத்தல் வடிவ யோனியின் வாசக மன்று. ஆனால் அந்த யோனி சத்தம் காரணத்தின் வாசகமாம். அதாவது காரணமின்றி ஓர் சரீரத்தினுற்பத்தியும் உண்டாவதன் றென்னும் அர்த்தம் அச்சுருதியால் சித்தமாகின்றது. தேவர் முதலியவர்களின் சரீரங்களும் அதிர்ஷ்ட முதலிய காரணங்களால் உண்டாவனவேயாம். ஆகையால் அவ் விரு சுருதிகட்கும் பரஸ்பரம் விரோதமுண்டாகாது. அல்லது "யோனி யின்றி சரீரமில்லை" எனக் கூறிய சுருதியிலுள்ள யோனி சத்தத்தால் சுக்ல, சுரோணிதத்தின் கலப்பு வடிவ யோனியினையே கிரஹிக்குக. ஆனால் அச்சுருதியிலுள்ள சரீர சத்தத்தால் சரீர மாத்திரத்தினைக் கிரஹிப்பதன்று. சரீர சத்தத்தால் கேவலம் மனிதர், பசு, பக்ஷி, முதலிய ஜராயுஜ அண்டஜ சரீரங்களையே கிரஹிக்குக. அதனால் சுக்ல, சுரோணிதத்தின் கலப்பு வடிவ யோனியின்றி மனிதர் முதலிய சரீரங்களின் உற்பத்திபுண்டாகாதென்னுமிது அச்சுருதியின் அர்த்தமாகச் சித்தமாகின்றது. ஆகையாலும் அவ்விரு சுருதி கட்கும் விரோதமுண்டாகமாட்டாது.

### ௨௧௯. மர முதலியவைகளில் சரீரத்தினது அபாவத்தின் சங்கை.

சங்கை :—எங்ஙனம்: மனிதர், பசு, பக்ஷி, புழு, ஈ இவை முதலிய சரீரங்களில் உலகவருக்கு சரீர வடிவத்தன்மை தோற்றுகிறதோ அங்ஙனம் மரம், கொடி, செடி முதலியவைகளில் ஒருவருக்கும் சரீரத் தன்மை பிரதீதியாகிறதில்லை. ஆகையால் எங்ஙனம் மனிதர், பசு முதலிய தேகங்கள் ஜீவாத்மாவின் சரீர வடிவமாமோ அங்ஙனம் அம்மர முதலியன ஓர் ஜீவாத்மாவின் சரீர வடிவமன்று மென்னுஞ் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் மர முதலியவைகளில் சரீரத் தன்மையைச் சித்தஞ்செய்வாம்.

### ௨௨௦. மர முதலியவைகளில் அநுமானப் பிரமாணத்தால் சரீர வடிவத்தன்மை சித்தியின் வர்ணனம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம், "வ்ருக்ஷஶரீரம் ப்ராணாதிக வாயுஸம்பந்தவத்த்வாத் மநுஷ்யாதிதேஹவத்" (இ-ள்.) மரம், கொடி முதலியன சரீர வடிவமாக யோக்கியமாம் பிராணவாயுவின் சம்பந்தமுடையதாவதால், எவ்வெத்திரவியம் பிராணவாயுவின் சம்பந்தமுடையதாமோ அவ்வத்திரவியம் சரீர வடிவமேயாகின்றது. எங்ஙனம்: மனிதர் முதலிய தேகம் பிராணவாயுவின் சம்பந்தமுடையனவாவதால் சரீரவடிவமாமோ. அங்ஙனமே மர முதலியனவும் பிராணவாயுவின் சம்பந்தமுடையனவாவதால் சரீர வடிவமேயாகும் என்னு மிவ்வநுமானத்தால் மரம், கொடி முதலியவைகளில் சரீரத்தன்மையே சித்திக்கின்றது.

### ௨௨௧. மர முதலியவைகளில் பிராணவாயுவினது அபாவத்தின் சங்கை.

சங்கை :—எங்ஙனம் மனிதர் முதலிய சரீரங்களில் பிராணவாயுவின் சம்பந்தம் பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாகின்றதோ அங்ஙனம் மர முதலியவைகளில் பிராணவாயுவின் சம்பந்தம் பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் பிராணவாயுவின் சம்பந்தத்தால் மர முதலியவைகளில் சரீரத் தன்மை எங்ஙனம் சித்திக்கும் ; சித்தியாது. ஏனெனின், எவ்வேது எப்பக்ஷத்தில் ஞாதமாகின்றதோ (அறியப்படுகின்றதோ) அவ்வேதுவே அப்பக்ஷத்தில் தனது சாத்தியத்தினைச் சித்திசெய்வதாகின்றது. எங்ஙனம் பர்வத வடிவ பக்ஷத்தில் அறியப்படும் புகை வடிவ ஏதுவே பர்வதத்தில் வன்னி வடிவ சாத்தியத்தினைச் சித்தி செய்கின்றது. அறியப்படாத ஓர் ஏதுவும் தனது சாத்தியத்தினைச் சித்தி செய்கிறதில்லை.

### ௨௨௨. மர முதலியவைகளில் அநுமானப் பிரமாணத்தால் வாயுவினது சித்தியின் வர்ணனம்.

சமாதானம் :—மர முதலியவைகளில் பிராணவாயுவின் சம்பந்தம் பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாவதின்று. என்றாலும் வளர்ச்சி முதலிய வேதுக்களால் பிராண வாயுவினது சம்பந்தத்தின் அநுமானமுண்டாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வ்ருக்ஷ: ப்ராணாதிக வாயுஸம்பந்தவாந் । வ்ருத்திக்ஷதபக்நஸம்ரோஹணவத்த்வாத் மநுஷ்யாதிஶரீரவத்॥"

(இ-ள்.) இம்மரம் பிராணவாயுவின் சம்பந்தமுடையதாம் வளர்ச்சியுடைய
தாவதால் அல்லது வெட்டடைந்த, சிதைவடைந்த அவயவங்களின் கூடுதற்
றன்மை யுடையதாவதால் எவ்வெத்திரவியம் வளர்ச்சி யுடையதாகின்றதோ
அல்லது வெட்டடைந்த, சிதைவடைந்த அவயவங்களின் கூடுதற்றன்மை
யுடையதாகின்றதோ அவ்வத்திரவியம் பிராணவாயுவின் சம்பந்தமுடையதே
யாகின்றது. எங்ஙனம் மனிதர் முதலிய சரீரங்கள் போலும் கருத்திதுவாம்.
எங்ஙனம் மனிதர் முதலிய சரீரங்களில் சில கை, கால் முதலிய அவயவங்கள்
வெட்டடைந்தும், சிதைவடைந்தும் சில காலத்திற்குப் பிறகு மீண்டும் முன்
போன்று கூடிக்கொள்ளுகிறதோ அங்ஙனமே மர முதலியவைகளினு முண்
டாகின்றது. ஒவ்வொருநாளும் வளர்ச்சியாகிய விருத்தியும், குறைவாகிய
நாசமும் எங்ஙனம் மனிதர் முதலிய சரீரங்களி லுண்டாகின்றனவோ அங்ங
னமே அப்பெருக்கமும், குறைவும், மர முதலியவைகளினு முண்டாகின்றன.
ஆகையால் அம்மர முதலியனவும் மனிதர் முதலிய சரீரங்களைப்போன்று
பிராணவாயுவின் சம்பந்த முடையனவேயாம். பிராணவாயுவின் சம்பந்த
முடையன வாவதானேயே அம்மர முதலியன மனிதர் முதலிய சரீரங்களைப்
போன்று சரீர வடிவமேயாம் இவ்வாறுகக்கூறிய அநுமானப் பிரமாணத்
தால் அம்மர முதலியவைகளில் சரீரத்தன்மையே சம்பவிக்கின்றது.

## உ௨௫. மர முதலியவைகளில் சாத்திரப் பிரமாணத்தால் சரீரத்தன்மை சித்தியின் வர்ணனம்.

அல்லது அநுமானப் பிரமாணத்தால் மர முதலியவைகளில் சரீரத்
தன்மை சித்திப்பதுடன் சாத்திரப் பிரமாணத்தாலும் மர முதலியவைகளில்
சரீரத்தன்மையே சித்தமாம். ஆண்டுச் சுலோகம் "நர்மதாதீரஸம்ஜாதா:
ஸரஜார்ஜுநவ்ருக்ஷா:। நர்மதாதோயஸம்ஸ்பர்ஶாத் தேயாம் திவஸ்ஸம்
ப்ராப்தி." "குருஹுங்க்ருத்ய த்வங்க்ருத்ய விப்ரான்நிர்ஜித்ய வாதத:। ஶ்மஶா
நே ஜாயதே வ்ருக்ஷ: கங்கக்ருத்ரோபஸேவித:॥" (இ-ள்.) ஸ்ரீநர்மதாநதியின்
கரைமேல் உண்டாகிய சரளார்ஜ்ஜுனமெனப் பெயரியமரங்கள் நர்மதாநதியி
னது ஜலஸ்பரிசத்தால் உண்டாகியதர்மங் காரணமாக பரமகதியை அடைவ
னவாகின்றது. தனது குருவைக் குறித்து அதட்டிப்பேசுவதாலும், எதிர்த்
துப் பேசுவதாலும், பிராமணரை விவாதத்தில் ஜெயித்து அவமானப்படுத்
துவதாலு முண்டான பாபத்தின் வசத்தால் இப்புருஷன் மயான பூமியில்
மரசரீரத்தினை யடைபவனாகின்றான் அம்மரம் மாம்சங்களை ஆகாரமாகவுடைய
கழுகு, பருந்து முதலிய பக்ஷிகளால் சதாகாலமும் சேவிக்கப்படுவதாகின்றது.
ஆண்டு முதலாவது சுலோகத்திலோ நர்மதா நதியின் ஜலஸ்பரிசத்தா லுண்
டாகிய தர்ம விசேஷத்தின் வசத்தால் அம்மர அவச்சின்ன ஜீவாத்மாவிற்கு
முற்கூறிய உத்தமகதியின் பிராப்தி அம்மரத்திற்கு ஜீவாத்மாவின் சரீர
வடிவ மொப்புவதிலேயே சம்பவமாகிறது. ஏனெனின் சரீராவச்சின்ன
ஜீவாத்மாவிற்கே அச்சரீரத்தோடு கங்காஜல முதலியவைகளின் ஸ்பரிசத்தா
லுண்டாகிய தர்ம விசேஷங் காரணமாக சுப கதியின் பிராப்தி யுண்டாகின்
றது. கடாவச்சின்ன ஆத்மாவிற்கு கங்காஜலமுதலியவைகளின் ஸ்பரிசத்தால்

தர்ம விசேஷத்தின் உற்பத்தியும் தர்மத்தால் சுப கதியின் பிராப்தியுமுண்டாகாது. ஆகையால் அம்மரத்தில் ஜீவாத்மாவின் சரீர வடிவத் தன்மை அவசியமொப்ப வேண்டும். இரண்டாவது ஈலோகத்தில் குரு, பிராமணர்களின் திரஸ்காரத்தாலுண்டாகிய பாபத்தின் துக்க வடிவப் பயனை அநுபவிக்கும் பொருட்டு அஜ்ஜீவாத்மாவிற்கு மயான பூமியில் மரசரீரத்தின் பிராப்திக் கூறப்பட்டிருக்கிறது. ஆண்டு அம்மரத்திற்குச் சரீர வடிவ மொப்பாவிடின் அம்மராவச்சின்ன ஜீவாத்மாவில் அப்பாப கர்மத்தின் துக்க வடிவப் பயனது போகம் சம்பவியாததாகும். ஏனெனின், சரீராவச்சின்ன ஆத்மாவிலேயே சுக துக்கங்களின் சாக்ஷாத்கார வடிவ போகமுண்டாகின்றது. கடாவச்சின்ன ஆத்மாவில் அப்போகமுண்டாகிறதில்லை. எவ்வவச்சின்ன ஆத்மாவில் அப்போகமுண்டாகின்றதோ அது சரீரமேயாகின்றது. இக்காரணத்தானேயே சாத்திர வேத்தா புருஷர்கள் "ஹொமாயதநஂஶரீரஂ" என் சரீரத்தின் லக்ஷணங் கூறியுள்ளார், ஆகையால் சாத்திரப் பிரமாணத்தானும் அம்மர முதலியவைகளிற் சரீர வடிவமே சித்தமாகின்றது. இதுகாறும் சரீரத்தின் லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. இனி கிராண, ரசன, சக்ஷு, துவக், சுரோத்திரம், மனமென்னும் ஆறு விந்திரியங்களின் சாதாரண லக்ஷணத்தினைக் கூறுவாம்.

உஉச. இந்திரிய சாமான்னியத்தின் லக்ஷணம்.

"ஶஸ்ரேதரொஊஂத விஶெஷகுணாநாஶ்ரயவெஸதி ஜ்ஞாநகாரண உநஃஸஂயொகாஶ்ரயஂ இந்த்ரியஂ" (இ-ள்.) எத்திரவியம் சத்தத்தினும்வேறான உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயமாகாது, ஞானத்தின் காரணமாகிய மனதின் சையோகத்திற்கு ஆசிரயமாகின்றதோ அத்திரவியம் இந்திரியமெனப்படும். அத்தகையது கிராண முதலிய ஆறு விந்திரியங்களாம். ஆண்டு கட முதலிய வைகளிலிருக்கும் உருவ முதலிய குணங்கள் யாவையோ அவ்வுருவ முதலிய குணங்கள் சத்த குணத்தினும் வேறுமாம். அங்ஙனமே உத்பூதமும் விசேஷ குணமுமாம். அத்தகைய சத்தத்தினும் வேறான உத்பூத் விசேஷ குணங்களின் ஆசிரய வடிவம் அக்கட முதலிய திரவியங்களாம். கிராண முதலிய ஆறு விந்திரியங்களோ அச்சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயமாகாதனவேயாம். ஞானத்தின் காரணமாகிய மன சையோகம் யாதோ அச்சையோகத்திற்கும் கிராண முதலிய ஆறு விந்திரியங்கள் ஆசிரய வடிவமுமாம். ஆகையால் கூறிய கிராண முதலிய ஆறு விந்திரியங்களின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு முதலில் ஜீவாத்மாவிற்கு மனதினோடு சையோக சம்பந்த முண்டாகின்றது. அதன் பின்னர் அவ்வாத்ம சம்புக்த மனதிற்கு அக்கிராணாதி இந்திரியங்களோடு சையோக சம்பந்தமுண்டாகின்றது. அதன் பின்னர் அம்மன சம்புக்த கிராண முதலிய விந்திரியங்களுக்கு கந்த முதலிய அர்த்தங்களோடு யோக்கிய சையோக சம்புக்த சமவாயாதி வடிவ சம்பந்தமுண்டாகின்றது. அதன் பின்னர் அக்கந்தமுதலிய அர்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. இவ்வாறுய வழியின்றி ஓர் அர்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞானமுமுண்டாகிறதில்லை. இவ்வாறாக அவ்விந்திரிய மனதின் சையோகமும் அந்த ஞானத்தின் காரண

மாகின்றது. அச்சையோகத்தின் ஆசிரயத் தன்மை அக்கிராண முதலிய வெல்லா விந்திரியங்களிலிருக்கின்றன. ஆண்டு "ஞானத்தின் காரணமான மன சையோகத்திற்கு ஆசிரியமிந்திரியம்" என விம்மாத்திரமே அவ்விந்திரியங்களின் லக்ஷணமாகக் கூறி, அந்த லக்ஷணத்தில் "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணங்கட்கு ஆசிரயமாகாததாய்" என்னும் பதங் கூறுவிடின் ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் இந்திரிய மனச் சையோகம் பிரத்தியக்ஷ ஞானத்தின் காரணமாகின்றதோ அங்ஙனமே ஆத்ம மனச் சையோகமும் அந்த ஞானத்தின் காரணமாகின்றது. அந்த ஞானத்தின் காரணமாகிய மனச் சையோகத்தின் ஆசிரயத் தன்மை எங்ஙனம் அம்மனத்திற்காமோ அங்ஙனமே ஆத்மாவிற்குமாம். ஆகையால் ஆத்மாவில் அவ்விந்திரியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாததாய்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சத்தத்தினும் வேறான ஞானம், சுகம், துக்காதி வடிவ விசேஷ குணங்கள் யாவையோ அக்குணங்களுக்கு அவ்வாத்மா ஆசிரய வடிவமேயாம். ஆசிரயமாகாததன்று. ஆகையால் அவ்விசேஷணத்தைக் கூறுவதால் அவ்வாத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாதது விந்திரியம்" என விம்மாத்திரமே அவ்விந்திரியத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானத்தின் காரணமான மனச் சையோகத்திற்கு ஆசிரயம்" என்னும் பதங் கூறுவிடின் காலம், திக்குகளிலும், குண, கரும முதலிய பதார்த்தங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், காலத்திலும், திசையிலும் ஓர் விசேஷ குணமு மிருப்பதின்று. சங்கியை முதலிய ஐந்து சாமான்னிய குணங்களே யிருக்கின்றன. குணம், கரும முதலிய பதார்த்தங்களிலோ ஓர் குணமுமிருப்பதின்று. ஆகையால் கால, திசைகளும், குணம், கரும முதலிய பதார்த்தங்களும் அச்சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயமாகாதனவேயாம். அக்கால, திக்குகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்வான் கருதி அந்த லக்ஷணத்தில் "ஞானத்திற்குக் காரணமான மனச்சையோகத்தின் ஆசிரயம்" என்னும் விசேஷிய பாகம் கூறப்பட்டது. ஆண்டு அக்கால முதலியவைகளில் ஞானத்தின் காரணமாகிய மனச் சையோகத்தின் ஆசிரயத் தன்மையின்றும். ஆகையால் அக்காலம், திக்கு முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாதாகி ஞானத்திற்குக் காரணமான மனச் சையோகத்திற்கு ஆசிரயமாவது இந்திரியம்" என விம்மாத்திரமே அந்த விந்திரியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சத்தத்தினும் வேறான" என்னும் பதங் கூறுவிடின் சுரோத்திர இந்திரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாம். ஏனெனின், ஆகாச வடிவ சுரோத்திர விந்திரியத்தில் உத்பூத விசேஷ குணத்தின் ஆசிரய

மாகாத் தன்மையின்றும். அச்சுரோத்திர இந்திரியம் சத்தமாகிய உத்பூத விசேஷ குணத்தின் ஆசிரய வடிவமேயாம். அச்சுரோத்திர இந்திரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அவ்வுத்பூத விசேஷ குணத்திற்கு "சத்தத்தினும் வேறான" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சுரோத்திர விந்திரியத்தில் அச்சத்தமாகிய உத்பூத விசேஷ குணத்தின் ஆசிரயத்தன்மையிருக்கின்றது. என்றாலும், அச்சத்தத்தினும் வேறான உருவ முதலிய உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயத் தன்மையின்றும். ஆகையால் அச்சுரோத்திர இந்திரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சத்தத்தினும் வேறான விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாததாய் ஞானத்திற்கு காரணமான மனச் சையோகத்திற்கு ஆசிரயமாவ திந்திரியம்" என விம்மாத்திரமே அவ் இந்திரியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உத்பூதம்" என்னும் பதங் கூறாவிடின் சுரோத்திரம், மன மென்னு மிரு இந்திரியங்களிலோ அந்த லக்ஷணம் பொருந்தும். ஆனால் கிராணம், ரசனம், சக்ஷு, துவக்கு வென்னும் நான்கு விந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாம். ஏனெனின், அந்நான்கு விந்திரியங்களில் சத்தத்தினும் வேறான விசேஷகுணங்களுக்கு ஆசிரயமாகாத் தன்மையில்லை. ஆனால் அநுத்பூத உருவ முதலிய விசேஷ குணங்களின் ஆசிரயத் தன்மையிருக்கின்றது. அந்த அவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அவ் விசேஷ குணங்களுக்கு "உத்பூதம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுக் கிராண முதலிய நான்கு விந்திரியங்கட்கு அநுத்பூத உருவ முதலிய விசேஷ குணங்களின் ஆசிரயத் தன்மை யிருக்கின்றது என்றாலும் உத்பூத உருவ முதலிய விசேஷ குணங்களின் ஆசிரயத் தன்மையின்றும். ஆகையால் கிராண முதலிய நான்கு விந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அல்லது "சத்தத்தினும் வேறான உத்பூத குணங்கட்கு ஆசிரயமாகாததாய் ஞானத்திற்குக் காரணமான மனச் சையோகத்தின் ஆசிரயமாவது இந்திரியம்" என இம்மாத்திரமே அவ்விந்திரியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறாவிடின் இந்த லக்ஷணம் ஓர் விந்திரியத்தினிடத்தும் பொருந்தாது. ஆகையால் லக்ஷிய மாத்திரத்தில் இல்லாததாவதால் அந்த லக்ஷணம் அசம்பவ தோஷமுடையதாம். ஏனெனின், சத்தத்தினும் வேறானதும் உத்பூதமுமாம் அத்தகைய சையோக முதலிய சாமான்னிய குணங்கள் யாவையோ அவைகளுக்கு ஆசிரயமாகாத் தன்மை ஓர் விந்திரியத்தினிடத்து மின்று. சர்வ விந்திரியங்களும் அச்சையோக முதலிய குணங்களின் ஆசிரய வடிவமேயாம். அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சையோக முதலியன விசேஷ குணங்களன்று சாமான்னிய குணங்களாம். ஆகையால் அவ்விசேஷமென்னும் பதத்தைக் கூறுவதால் அச் சையோக முதலிய சாமான்னிய குணங்கள் மூலமாக அந்த லக்ஷணத்திற்கு அசம்பவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகாது. அல்லது "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாது காரண மனச் சையோகத்

தின் ஆசிரயமாவது இந்திரியம்" என விம்மாத்திரமே அவ்விந்திரியத்தின் லக்ஷ
ணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறுவிடின் கால
திசைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், கால
மனச் சையோகம் அல்லது திசை மனச்சையோகமும் தனது துவம்சத்
திற்குக் காரணமேயாம். அக்காரண வடிவ மனச்சையோகத்தின் ஆசிரயத்
தன்மை அக்கால திசைகளிலு மிருக்கின்றது. அங்ஙனமே கால திசைகளில்
சத்தத்திலும் வேறான உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயமாகாத் தன்மை
யுமிருக்கின்றது. அக்கால திசைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை
நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங்
கூறப்பட்டது. ஆண்டு கால மனச்சையோகம், அல்லது திக்கு மனச்சை
யோகம் தன் துவம்சத்தைக் குறித்து காரணமாயினும் ஞானத்திற்கு காரண
மன்று. ஆகையால் அந்த லக்ஷணத்திற்கு கால, திசைகளில் அதிவியாப்தி
யுண்டாகாது. அல்லது "சத்தத்திலும் வேறான உத்பூத விசேஷ குணத்
திற்கு ஆசிரயமாகாது ஞானத்திற்குக் காரணமான சையோகத்தின் ஆசிரய
மாவது விந்திரியம்" என விம்மாத்திரமே அவ்விந்திரியத்தின் லக்ஷணமாகக்
கூறி அந்த லக்ஷணத்தில் "மனம்" என்னும் பதங் கூறுவிடின் சக்ஷு விந்திரி
யத்தை ஆரம்பிக்கும் அவயவங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி
யுண்டாம். ஏனெனின், பிராசீன நையாயிகர்கள் கட முதலியவைகளினது
பரிமாணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷகாலத்தில், அச்சக்ஷு விந்திரியத்தின்
அவயவத்தினதும் அக்கட முதலிய திரவியங்களின் அவயவங்களினதும் சை
யோகமும் காரணமாக வொப்புகின்றனர். அந்த ஞானத்தின் காரண வடிவ
சையோகத்தின் ஆசிரயத் தன்மை அச்சக்ஷு விந்திரியத்தின் அவயவங்களிலு
மிருக்கின்றது அங்ஙனமே சத்தத்திலும் வேறான உத்பூத விசேஷ குணங்க
ளின் ஆசிரயமாகாத் தன்மையு மிருக்கின்றது. அந்த சக்ஷு விந்திரியத்தின்
அவயவங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்தி
செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மனம்" என்னும் பதங் கூறப்பட்
டது. ஆண்டு அச்சக்ஷுவின் அவயவங்களுக்கு ஞானத்தின் காரண வடிவ
மனதின் சையோகத்திற்கு ஆசிரயத் தன்மையின்று. ஆகையால் மனமென்
னும் பதத்தைக் கூறுவதால் சக்ஷு விந்திரியத்தின் அவயவங்களில் அந்த
லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. 'நவீன நையாயிகர்களோ மன
மென்னும் பதத்தைக் கூறுவதற்கு இப்பயன் கூறுகின்றனர்.' அந்த லக்ஷணத்
தில் "மனம்" என்னும் பதத்தைக் கூறுவிடின் 'காலத்தில்' அந்த லக்ஷணத்
திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் "காலத்தில் உருவமில்லை" என்
னும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் அக்காலத்தில் உருவா பாவத்தின் விஷயம்
செய்கின்றது. எதுவெது பிரத்தியக்ஷ ஞானமாமோ அதுவது இந்திரிய
அர்த்தங்களின் சம்பந்தத்தானேயே உண்டாவதாகின்றது. இந்திரிய அர்த்
தங்களின் சம்பந்தமின்றி அந்தப் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகாது. ஆகையால்
அவ்வுருவா பாவத்தோடு சக்ஷு விந்திரியத்தின் சக்ஷு சம்யுக்த விசேஷணத்
தன்மை சம்பந்தம் யாதோ அச்சம்பந்தமே அவ்வுருவாபாவத்தின் பிரத்தி
யக்ஷத்தில் காரணமாம். ஆண்டு சக்ஷுவின் சையோக முடையதாவதால்

சக்ஷு சம்புக்த காலம் யாதோ அக்காலத்தில் அவ்வுருவாபாவம் விசேஷணமாம். இவ்வாறாக சக்ஷு சம்புக்த விசேஷணத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தினை நிகழச் செய்யும் சக்ஷுவிற்கு காலத்தினோடு சையோக சம்பந்தம் யாதோ அச் சையோக சம்பந்தமும் அப்பரம்பரைச் சம்பந்தத்தினை நிகழச்செய்யுந் தன்மை வடிவமாக அவ்வுருவாபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் காரணமேயாம். அத்தகைய ஞானத்தின் காரண வடிவ சையோகத்தின் ஆசிரய வடிவம் காலமாம். அங்ஙனமே அக்காலம் சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணங்களின் ஆசிரயமாகாததுமாம். இவ்வாறாக அக்காலத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மனம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அக்காலத்தில் ஞானத்தின் காரணமாகிய மனதின் சையோகத்திற்கு ஆசிரயத் தன்மையின்றாம். ஆகையால் அக்காலத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—"ஞானத்திற்குக் காரணமான மனச்சையோகத்திற்கு ஆசிரயம் இந்திரியம்" எனவிம்மாத்திரமே அவ்விந்திரியத்தின் லக்ஷணமாகக்கூறுவதால் ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாததாய்" என்னும் பதங் கூறப்பட்டது. அவ்வதிவியாப்தியோ "ஆத்மாவினும் வேறானது" என இவ்வளவு லகு விசேஷணத்தைக் கூறுவதானேயே நிவர்த்தியாய் விடுகின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்தின் ஆசிரயமாகாததாய்" என அதி குருவாகிய விசேஷணங் கூறுவது பயனின்மையாம்.

சமாதானம்:—சுஷுப்தி காலத்தில் ஞானத்தினது உற்பத்தியின் ஆபத்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு, சர்ம, மனச்சையோகத்தினை எந்நையாயிகர்கள் ஞானத்திற்குக் காரணமாக வொப்பினரோ அவர்கள் மதத்தில், அவ்விந்திரியத்தின் லக்ஷணத்திற்கு அச்சர்மத்தில் அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின், அச்சர்மம் ஆத்மாவினும் வேறும் ஞானத்தின் காரண வடிவ சர்ம மனச்சையோகத்திற்கு ஆசிரய வடிவமுமாம். அச்சர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் ஆத்மாவினும் வேறாந் தன்மை வடிவ லகு விசேஷணத்தினை தியாகம் செய்து சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணத்திற்கு ஆசிரயமாகாத் தன்மையாகிய குரு விசேஷணங் கூறப்பட்டது. அந்த சர்மத்தில் சத்தத்தினும் வேறான உத்பூத விசேஷ குணங்களுக்கு ஆசிரயமாகாத்தன்மையின்றாம். ஆசிரயத் தன்மையேயிருக்கின்றது. ஆகையால் அச்சர்மத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. ஈண்டு துவக்கிந்திரியமிருக்கும் இடத்தினை சர்மமென்பர்.

எந்நையாயிகர் மதத்தில் சர்ம மனச்சையோகம் ஞான மாத்திரத்திற்கு காரணமன்றோ ஆனால் புரீததியினும் பாகிய தேகாவச்சின்ன ஆத்ம மனச்

ஸையோகமே அந்த ஞான மாத்திரத்திற்கு காரணமாமோ அந்நையாயிகர் மதத்திலோ "ஆத்மாவினும் வேறான ஞானத்திற்கு காரணமான மனஸ்ஸையோகத்தின் ஆசிரயமாவது இந்திரியம்" என்னும் லக்ஷணமாகிய இந்திரியத்தின் லக்ஷணமே சம்பவிக்கின்றது. இவ்விரு மதமும் முன்னர் முதற் பரிச்சேதத்தில் முக்தி நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். இது காறும் கிராண முதலிய ஆறு விந்திரியங்களின் சாதாரண லக்ஷணங் கூறப்பட்டது. இனி பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீய மென்னும் நான்கு வகைத்தாய விஷயங்களின் சாதாரண லக்ஷணங் கூறுவாம்.

## உஉரு. விஷய சாமான்னியத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ஶரீரேந்த்ரியபிந்நத்வேஸதி போகோபயோகீ விஷய:" (இ-ள்.) எத்திரவியம் சரீர, இந்திரியங்களினும் வேறாகி போகத்திற்குபயோகியாகின்றதோ அத்திரவியம் விஷயமெனப்படும். எங்ஙனம்: பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கின் துவியணுகமாகிய காரியங்கள் முதற்கொண்டு தூல வடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயு மட்டுமாம் எல்லாக்காரிய திரவியங்களும் சரீரம் இந்திரியத்தினும் வேறும் ஜீவர்களின் போகத்திற்குபயோகியுமாம். ஆகையால் துவியணுக முதல் தூல மட்டுமாம் காரியத் திரவிய வடிவ விஷயங்கட்கு கூறிய அந்த லக்ஷணம் சம்பவிக்கின்றது.

## உஉசு. போகத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ஸுகது:கான்யதரஸாக்ஷாத்கார: போக:" (இ-ள்.) யான் சுகி என்னும் சாக்ஷாத் காரத்தினையும், யான் துக்கி என்னும் சாக்ஷாத் காரத்தினையும் போகமென்பர். இவ்வித போகத்திற் குபயோகியாம் திரவியம் விஷயமெனப்படும். ஆண்டு "போகத்திற் குபயோகி விஷயம்" என விம்மாத்திரமே விஷயத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில், "சரீர இந்திரியத்தினும் வேறாகியது" என்னும் பதங் கூறாவிடின் சரீர விந்திரியங்களிலேயே அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் அவ்விஷயங்களின்றி அப்போகம் சம்பவியாதாமோ அங்ஙனமே அச்சரீர விந்திரியங்களின்றியும் அப்போகம் சம்பவியாதாகும். ஆகையால் போகத்தி னுபயோகித் தன்மை அச்சரீர விந்திரியங்களிலு மிருக்கின்றது. அச்சரீர விந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "சரீர இந்திரியத்தினும் வேறானது" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு தனது பேதம் தனது ஸ்வரூபத்திலிருப்பதில்லை. ஆகையால் அச்சரீர விந்திரியங்களில் சரீர விந்திரியங்களின் பேதமின்றாம். ஆகையால் சரீர விந்திரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சரீரத்தினும் இந்திரியத்தினும் வேறானது விஷயம்" என விம்மாத்திரமே அவ்விஷயத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "போகத்திற்கு வுபயோகி" என்னும் பதங் கூறாவிடின், பரமாணு வடிவ நித்தியத்திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். எக்காரணத்தாலெனின், அப்பரமாணு வடிவ நித்தியத் திரவியம் அச்சரீர வின்

திரியத்தினும் வேறுமாம். அவ்வதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "போகத்திற்குவுபயோகி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பரமாணு வடிவ நித்தியத் திரவியங்களில் போகத்தின் உபயோகித் தன்மையில்லை. ஆகையால் அப்பரமாணு வடிவ நித்தியத் திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### உஉஎ. காரியத் திரவியங்கள் யாவற்றிலும் விஷய வடிவத் தன்மையின் சாதக யுக்தி.

ஈண்டு கருத்திதுவாம். சர்வ காரிய மாத்திரத்தின் உற்பத்தி ஜீவர்களாது புண்ணிய பாபமாகிய அதிர்ஷ்டத்தின் அதீனமாகின்றது. எக்காரியத்தின் உற்பத்தி எஜ்ஜீவனது புண்ணிய பாபமாகிய அதிர்ஷ்டத்தின் அதீனமாகின்றதோ அக்காரியம் அஜ்ஜீவாத்மாவின் போகத்தினை சாக்ஷாத் அல்லது பரம்பரையாக உண்டாக்குகின்றது. எக்காரணத்தாலெனின், பீஜம். பிரயோஜனமாம் இரண்டின்றி ஓர் காரியத்தினுற்பத்தியும் உண்டாகாது, ஆனால் அப்பீஜப் பிரயோஜனங்களாலேயே சர்வ காரியங்களினுற்பத்தி யுண்டாகின்றது. ஆண்டு ஜீவர்களின் புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டமோ அக்காரியங்களின் உற்பத்தியில் பீஜமாம். அஜ்ஜீவர்களைக் குறித்து போகத்தின் பிராப்தி அக்காரியத்தினது உற்பத்தியின் பிரயோஜனமாம். இவ்வாறாக துவியணுக முதலாக பிரம்மாண்டபரியந்தம் எவ்வளவு காரியத் திரவியங்கள் இருக்கின்றனவோ அவ்வெல்லாக் காரியத் திரவியங்கள் ஜீவர்களது புண்ணிய பாபவடிவ அதிர்ஷ்டத்தாலுண்டாவன வாவதால் அஜ்ஜீவர்களுக்கு சாக்ஷாத் அல்லது பரம்பரையாக அப்போகத்தின் பிராப்தியை அவசியம் செய்கின்றன. ஆகையால் துவியணுக முதற் கொண்டு பிரம்மாண்டமட்டுமாம் எல்லாக்காரியத் திரவியங்கள் விஷய வடிவமேயாம்.

### உஉஅ. காரிய மாத்திரத்திற்கு விஷய வடிவ மொப்புவதில் சரீரம், இந்திரியம், விஷய மென்னும் வேறுபாட்டின் அசித்தியின் சங்கை.

சங்கை:—கூறிய முறைப்படி துவியணுக முதற்கொண்டு பிரம்மாண்டமட்டுமாம். எல்லாக் காரியத்திரவியங்களுக்கும் விஷய வடிவத் தன்மையின் பிராப்தமுண்டாக அவ்வெல்லாக் காரியத்தினிடையிலுள்ள சரீர விந்திரிய வடிவகாரியங்கட்கும் விஷய வடிவத் தன்மையே பிராப்தமாகும். ஆகையால் முற்கூறப்பட்டுள்ள சரீரம், இந்திரியம், விஷயமென்னும் மூவகை வேறுபாடு சித்தியாததாகும்.

### உஉகூ. கேட்போரது புத்தியைத் தெளிவித்தற் பொருட்டு அம்மூவகை வேறுபாட்டின் வர்ணனம்.

சமாதானம்:—உண்மை விசாரத்தால் நோக்கினே சரீரம், இந்திரியம் என்னுமிரண்டினும் விஷய வடிவத் தன்மையே சித்திக்கின்றது. விஷயத்தினும் வேறாகியத் தன்மை சித்தியாது. எனினும், நூலாசிரியரோ, சரீரம், இந்திரியம், விஷய மென்னும் மூன்றினை வெவ்வேறாக நிரூபித்துளார். அதுகேட்போருக்குப் புத்தியினது பெருக்கத்தின் பொருட்டு நிரூபிக்கப்பட்டது.

## உ௱ ௦. சூக்ஷம் திர்ஷ்டியால் பரமாணுக்களிலும் விஷய வடிவத் தன்மையின் வர்ணனம்.

அல்லது சூக்ஷம விசாரத்தால் நோக்கின் பரமாணு வடிவ நித்தியத் திரவியங்களிலும் விஷயத் தன்மையே சித்தமாகின்றது. ஏனெனின், "சரீரத்தினும் இந்திரியத்தினும் வேறாய் போகத்திற்குவுபயோகி விஷயம்" என முற்கூறிய விஷயத்தின் லக்ஷணத்தில் "போகத்திற்கு வுபயோகி" என்னும் பதத்தால் சாக்ஷாத் போகத்தின் சாதனத் தன்மை அல்லது சாக்ஷாத் பரம்பரைச் சாதாரண போகத்தின் சாதனத் தன்மைக் கூறக்கருதியதாம். சாக்ஷாத் போகத்தின் சாதனத்தன்மை கூறக்கருதியதாயின் துவியணுகங்களிலும் அவ்விஷயத் தன்மை சித்தமாகாதாகும். ஏனெனில் சாக்ஷாத் போகத்தின் சாதனத் தன்மையோ துவியணுக முதலியவைகளிலுமில்லை. சாக்ஷாத் பரம்பரைச் சாதாரணபோகத்தின் சாதனத் தன்மைக் கூறக்கருதியதாயின் பரம்பரையாக போகத்தின் சாதனத் தன்மை எங்ஙனம் துவியணுக முதலியவைகளி லிருக்கின்றதோ அங்ஙனமே அப்பரமாணுக்களிலும் இருக்கின்றது. ஆகையால் அத்துவியணுகங்களைப் போன்று அப்பரமாணுவும் விஷய வடிவமாகவே சித்திக்கின்றது. இவ்வாற்றானேயே சில நியாய நூற்களில் காரிய வடிவப் பிருதிவி ஜல, முதலியவைகளுக்கு அச்சரீரம், இந்திரியம், விஷய வடிவத்தால் வேறுபாடு கூறப்படவில்லை. ஆனல் சாமான்னியத்தானேயே அந்தப் பிருதிவி ஜல, முதலியவைகளுக்கு, சரீர, இந்திரியம், விஷய வடிவத்தால் வேறுபாடு கூறப்பட்டிருக்கிறது. இதுகாறும், சாமான்னியமாக சரீர, இந்திரய, விஷய மென்னும் மூன்றின் நிரூபணம் செய்யப்பட்டது. இனி பார்த்திவ சரீரம், பார்த்திவ விந்திரியம், பார்த்திவ விஷய மென்னும் மூன்றின் ஸ்வரூபம் வர்ணிப்பாம். அவற்றுள்ளும் முதலில் பார்த்திவ சரீரத்தின் வர்ணனஞ் செய்வாம்.

## உ௱க. பார்த்திவ சரீரத்தின் லக்ஷணம்.

" ருஂயவகுஶரீரஂ வாயிவஶரீரஂ " (இ-ள்.) எச்சரீரம் சமவாய சம்பந்தமாக கந்தகுண முடையதாமோ அச்சரீரம் பார்த்திவ சரீர மெனப்படும். எங்ஙனம், மனிதர், விலங்கு, பக்ஷி, மரம், புழு, இவை முதலிய சரீரங்கள் சமவாய சம்பந்தமாக அக்கந்த குணமுடையனவாம். ஆகையால் மனிதர் முதலிய சரீரங்கள் பார்த்திவ சரீரமெனப்படும்.

## உ௱உ. வேறுவகையாக பார்த்திவ சரீரத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த சரீரத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன சரீரத்திலும், நறுநாற்ற, தீநாற்றமுடைய அவயவங்களாலுண்டான சரீரத்திலும் கந்தகுணத்தின் அபாவமிருப்பதால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாம். என்றாலும் முற்கூறிய பிருதிவியின் லக்ஷணத்தைப் போன்று ஈண்டும் " ருஂயஸஹநாயிகரண ஊவ்யவஸாக்ஷாஜ வாவ்யவ ஜாதி உக ஶரீரஂ வாயிவஶரீரஂ " என இவ்வாறாகப் பிருதிவித் தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் அச்சரீரத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சரீரம்" என்னுமிப்பதம் பார்த்திவ விந

திரிய விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். மற்றய பதங்களின் பயனோ முற்கூறிய பிருதிவியின் லக்ஷணத்தைப் போன்று அறிந்து கொள்க.

## உ௱௫. பார்த்திவ சரீரம் யோனிஜம், அயோனிஜம் என்னும் வேறுபாட்டால் இருவிதப் பிரிவின் வர்ணனம்.

கூறிய அப்பார்த்திவ சரீரம், யோனிஜம், அயோனிஜ மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு அந்த யோனிஜ பார்த்திவ சரீரமும் ஜராயுஜம் அண்டஜ மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அயோனிஜ பார்த்திவ சரீரமும், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், அதிர்ஷ்ட விசேஷ ஜன்னியமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு மனிதர், விலங்கு முதலிய சரீரங்களோ ஜராயுஜமெனப்படும். பக்ஷி, சர்ப முதலிய சரீரங்களோ அண்டஜமெனப்படும். புழு, கொசு முதலிய சரீரங்கள் ஸ்வேதஜமெனப்படும். மரம், கொடி முதலிய சரீரங்கள் உத்பிஜ்ஜ மெனப்படும். மனு முதலியவர்களின் சரீரங்கள் அதிர்ஷ்ட விசேஷ ஜன்னிய மெனப்படும். யோனிஜ, அயோனிஜ சரீரங்களின் நிரூபணம் முன் சரீர சாமான்னிய நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அது ஈண்டும் அறிந்து கொள்க.

சங்கை:—மனிதர் முதலிய சரீரங்களின் பார்த்திவத் தன்மையில் பிரமாணம் யாதென்னுஞ் சங்கையின் பிராப்தமுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத்தன்மையை நிலை நாட்டுவாம்.

## உ௱௬. மனிதர் முதலிய சரீரங்களில் அநுமானப் பிரமாணத்தால் பார்த்திவத் தன்மையின் வர்ணனம்.

ஆண்டு மனிதர் முதலிய சரீரங்களில் கந்தப் பிரதீதியும், வெண்மை நிறத்தினும் வேறான கருமை, பொன்மை முதலிய உருவமும் பிரதீதியாகின்றன. அக்கந்த குணமும் கருமை, பொன்மை முதலிய உருவங்களும் பிருதிவியன்றி வேறோர் திரவியத்திலிருப்பனவன்று. கேவலம் பிருதிவியொன்றிலேயே யிருக்கின்றன. ஆகையால் அக்கந்த குணத்தால் அல்லது கருமை முதலிய உருவங்களால் இம்மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத் தன்மையின் அநுமானமே யுண்டாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். “ மநுஷ்யாதிஶரீரம் பார்திவம் கந்தவத்வாத் நீலாதிரூபவத்வாத் வா யதைவம் ததைவம் ” (இ-ள்.) மனிதர் முதலிய சரீரங்கள் பார்த்திவமாகயோக்கியமாம் கந்தகுணமுடையனவாவதால் அல்லது கருமை முதலிய உருவமுடையன வாவதால் எவ்வெத்திரவியம் கந்தகுணமுடையதாமோ அல்லது கருமை முதலிய உருவமுடையதாமோ அவ்வத்திரவியம் பார்த்திவமேயாம். எங்ஙனம் பிரசித்த கஸ்தூரி, குசும முதலிய திரவியங்கள் கந்தகுணமுடையனவாவதால் அல்லது கருமை முதலிய உருவமுடையனவாவதால் பார்த்திவ வடிவமாமோ அங்ஙனமே மனிதர் முதலிய சரீரங்

களும் கந்தகுண முடையனவாவதால் அல்லது கருமை முதலிய உருவ முடையனவாவதால் பார்த்திவ வடிவமேயாகும் இவ்வாருய அநுமானத்தால் மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத் தன்மையே நிலைக்கின்றது.

### உ௩௫. மனிதர் முதலிய சரீரங்களில் ஜல முதலிய வடிவத் தன்மையின் சாதகச் சங்கை.

சங்கை :—அம்மனிதர் முதலிய சரீரங்களில் எங்ஙனம் பிருதிவியின் அசாதாரண தர்ம வடிவ கந்தம் பிரதீதியாகின்றதோ அங்ஙனமே ஜலத்தின் அசாதாரண தர்ம வடிவ ஸ்வேதமும் (வேர்வையும்), தேயுவின் அசாதாரண தர்ம வடிவ வெம்மையும், வாயுவின் அசாதாரண தர்ம வடிவ சதா சஞ்சரித்த லுடைமையும், ஆகாசத்தின் அசாதாரண தர்ம வடிவ அவகாசமும் (இடமும்) பிரதீதியாகின்றன. ஆகையால் எங்ஙனம் கந்தமுடைமை வடிவ ஏதுவால் மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத் தன்மை சித்தியாகின்றதோ அங்ஙனமே ஸ்வேதம், வெம்மை முதலிய ஏதுக்களால் மனிதர் முதலிய சரீரங்களில் ஜலீய, தைஜசாதி வடிவத் தன்மையும் சித்தமாய் விடுகின்றது. ஆகையால் மனிதர் முதலிய சரீரங்களில் ஜலீய, தைஜசாதி வடிவத் தன்மை ஏனுண்டாகக் கூடாது.

### உ௩௬. மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத் தன்மையினது சாதக யுக்தியினது வர்ணனம்.

சமாதானம் :—மரணம், மூர்ச்சை முதலிய காலங்களில் ஸ்வேதம், வெம்மை முதலியவைகளின் நாசமுண்டாயினும் மனிதர் முதலிய சரீரங்களில் சரீர வடிவமாக பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றது. அங்ஙனமே கந்தகுணத்தின் பிரதீதியும், கருமை முதலிய உருவங்களின் பிரதீதியும் ஆண்டு உண்டாகின்றன. ஆகையால் மனிதர் முதலிய சரீரங்களில் பார்த்திவத் தன்மையே சம்பவிக்கின்றது. ஜலீய, தைஜச முதலிய வடிவத் தன்மை சம்பவிக்கிறதில்லை.

சங்கை :—மனிதர் முதலிய சரீரங்களில் கேவலம் பார்த்திவத்தன்மையை அங்கீகரித்து ஜலீய, தைஜச முதலிய வடிவத் தன்மை அங்கீகரியாவிடின் மனிதர் முதலிய சரீரங்கட்கு சாத்திரத்தில் பாஞ்சபௌதிகத் தன்மைக் கூறப்பட்டது யாதோ அது அசங்கதமாகும்.

### உ௩௭. பார்த்திவ முதலிய சரீரங்களில் பஞ்சபூதோபாதானத் தன்மையின் கண்டனம்.

சமாதானம் :—மனிதர் முதலிய சரீரங்கட்குச் சாத்திரத்தில் பாஞ்சபௌதிகத்தன்மை கூறப்பட்டிருக்கிறதென்னும் வார்த்தை உண்மையாமாயினும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசமென்னும் ஐந்து பூதங்கள் மனிதர் முதலிய சரீரங்களின் உபாதான காரணங்களாகின்றனவென்னுங் கருத்தால் சாத்திரமானது சரீரத்தில் பாஞ்சபௌதிகத் தன்மைக் கூறியிருப்பதன்று. ஆனல் மனிதர் முதலிய சரீரங்கள் ஐந்து பூதங்களாலேயே யுண்டாகின்றனவென்னுங் கருத்தாக அச்சரீரத்தில் சாத்திரமானது பாஞ்சபௌதிகத் தன்மைக் கூறியிருக்கின்றது. ஆண்டு மனிதர்முதலியபார்த்திவசரீரங்களிலோ

பிருதிவியொன்றே உபாதான காரணமாகின்றது. மற்றய ஜல முதலிய நான்கு பூதங்களும் நிமித்த காரணமாகின்றன. அங்ஙனமே வருணலோகத்திலுள்ள ஜலீய சரீரங்களிலோ ஜலமொன்றே உபாதான காரணமாகின்றது. மற்றய பிருதிவி முதலிய நான்கு பூதங்கள் நிமித்த காரணமாகின்றன. அங்ஙனமே சூரிய லோகத்திலுள்ள தைஜச சரீரத்தில் தேயுவொன்றே உபாதான காரணமாகின்றது. மற்றய பிருதிவி முதலிய நான்கு பூதங்கள் நிமித்த காரணமாகின்றன. அங்ஙனமே வாயு லோகத்திலுள்ள வாயவீய சரீரங்களிலோ வாயுவொன்றே உபாதான காரணமாகின்றது. மற்றய பிருதிவி முதலிய நான்கு பூதங்கள் நிமித்த காரணமாகின்றன. இதுகாறும் பார்த்திவ சரீரத்தின் நிரூபணஞ் செய்யப்பட்டது. இனி பார்த்திவ இந்திரியத்தின் நிரூபணஞ் செய்வாம்.

## உ௱டு. கிராணமாகிய பார்த்திவ விந்திரியத்தின் லக்ஷணம்.

"஗ந்஧வஞிந்஦்ரியம் பார்஥ிவேந்஦்ரியம்" (இ-ள்.) எவ்விந்திரியம் சமவாய சம்பந்தமாக கந்தகுணமுடையதாமோ அவ்விந்திரியம் பார்த்திவ விந்திரியமெனப்படும். சமவாய சம்பந்தமாக கந்தகுணமுடையது கிராண விந்திரியமொன்றேயாம். ஆகையால் கிராண விந்திரியம் பார்த்திவ விந்திரியமெனப்படும்.

## உ௱சு. பார்த்திவ விந்திரியத்தினை வேறுவகையாக வர்ணித்தல்.

நறுநாற்றத் தீநாற்றமுடைய அவயவங்களாலுண்டான கிராண விந்திரியத்திலும், தோன்றியழிந்த கிராண விந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன கிராண விந்திரியத்திலும் கந்த குணத்தின் அபாவமிருப்பதால் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். எனினும் முற்கூறிய பிருதிவியின் லக்ஷணத்தைப் போன்று ஈண்டும் "஗ந்஧ ஸமாநாதி஖ரண த்ரவ்யத்வ ஸாக்ஷாத் வ்யாப்ய ஜாதிமதிந்த்ரியம் பார்஥ிவேந்஦்ரியம்" என்னும் பிருதிவித் தன்மை ஜாதி பொருந்திய லக்ஷணத்தைக் கூறுவதால் அக்கிராண விந்திரியத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதம் பார்த்திவ சரீர விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றய பதங்களின் பயன் முற்கூறியவாறே அறிந்து கொள்க. கூறிய கிராண விந்திரியம் நாசி நுனியிலிருக்கின்றது. நறுநாற்றத் தீநாற்றங்களைக் கிரஹிக்கின்றது.

சங்கை:—கூறிய கிராண விந்திரியத்தின் லக்ஷணம் சம்பவிக்கும் போது முதலில் கிராண விந்திரியத்தில் ஓர் பிரமாணத்தால் கந்தகுணத்தின் சித்தியுண்டாக வேண்டும். கந்தகுணத்தின் சித்தியின்றி கூறிய அந்த லக்ஷணம் சம்பவியாதென்னுஞ் சங்கையின் பிராப்தமுண்டாக வினி அநுமானப் பிரமாணத்தால் கிராண விந்திரியத்தில் கந்த குணத்தின் சித்தியைச் செய்வாம்,

### உசய. கிராண விந்திரியத்தில் கந்தகுணத்தின் சாதகயுக்தி.

ஆண்டு கிராண விந்திரியம் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் கந்தகுணத்தினைக் கிரஹிக்கின்றது. ஆகையாலிது அறியத்தக்கதாம். கிராண விந்திரியமும் கந்தகுணமுடையதேயாம் ஏனெனில் இது சாத்திரக்காரரின் நியமமாம். "யதிந்த்ரியம் ரூபாதிபஞ்சஸு மத்யே யம் குணம் க்ருஹ்ணாதி ததிந்த்ரியம் தத்குணயுக்தம்" (இ-ள்.) எவ்விந்திரியம் உருவம், ரசம், கந்தம், பரிசம், சத்தமென்னும் ஐந்து குணங்களுள் எக்குணத்தை கிரஹிக்கின்றதோ அவ்விந்திரியம் அக்குணமுடையதேயாம். எங்ஙனம் சக்ஷு, ரசனம், கிராணம், துவக், சுரோத்திரமென்னும் ஐந்து இந்திரியங்கள் முறையாக உருவமுதலிய குணங்களைக் கிரஹிக்கின்றன. ஆகையால் இவ்வைந்திந்திரியங்கள் முறையாக அந்த உருவ முதலிய குணங்களை யுடையனவேயாம். ஆகையால் இவ்வநுமானம் சித்தமாயிற்று. "க்ராணேந்த்ரியம் கந்தவத் கந்தக்ராஹகேந்த்ரியத்வாத் சக்ஷுராதிவத்" (இ-ள்.) கிராண விந்திரியம் கந்தகுண முடையதாக யோக்கியமாம். கந்தத்தைக் கிரஹிக்கும் இந்திரியமாவதால், எவ்வெவ்விந்திரியம் உருவ முதலிய வைந்து குணங்களுள் எக்குணத்தை கிரஹிக்கின்றதோ, அவ்விந்திரியம் அக்குணமுடையதேயாம். எங்ஙனம் சக்ஷு முதலிய விந்திரியம் உருவ முதலிய குணங்களைக் கிரஹிப்பனவாவதால் அவ்வுருவ முதலிய குணங்களுடையதாமோ அங்ஙனமே கிராண விந்திரியமும் கந்தகுணத்தினைக் கிரஹிப்பதாவதால் அக்கந்த குணமுடையதேயாமென்னும் அநுமானப் பிரமாணத்தால் கிராண விந்திரியத்தில் கந்த குணத்தின் சித்திபுண்டாகிறது. கந்தகுண வடிவமாதுவால் கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியினைப் போன்று கிராண விந்திரியத்தில் பார்த்திவத் தன்மையே சித்தமாகின்றது.

### உசக. கிராண விந்திரியத்தில் பார்த்திவத் தன்மையின் சாதக அநுமானம்.

அல்லது கிராண விந்திரியத்தில் இவ்வாறாக அநுமானப் பிரமாணத்தால் பார்த்திவத் தன்மையின் சித்தியைச் செய்க. "க்ராணேந்த்ரியம் பார்திவம் ரூபாதிஷு மத்யே கந்தஸ்யைவ அபிவ்யஞ்ஜகத்வாத் குங்குமகந்தாபிவ்யஞ்ஜக க்ருதவத் [illegible]" (இ-ள்.) கிராண விந்திரியம் பார்த்திவமாக யோக்கியமாம் உருவம், ரசம், கந்தம், பரிச மென்னும் நான்கனுள் கேவலம் கந்தத்தினையே வெளிப்படுத்துவதாவதால், எவ்வெத் திரவியம் உருவ முதலிய நான்கனுள் கந்தகுணமொன்றையே வெளிப்படுத்துகிறதோ அவ்வத்திரவியம் பார்த்திவமேயாகின்றது. எங்ஙனம் குங்குமத்தில் கலப்புற்ற பசுநெய் அக்குங்குமத்தின் உருவம், ரசம், கந்தம், பரிசமென்னும் நான்கனுள் கேவலம் கந்தகுண மொன்றையே வெளியாக்குவதாகின்றது; உருவம், ரசம், பரிசமென்னும் மூன்று குணங்களை வெளியாக்குகிறதில்லை. ஆகையால் பசுநெய்யில் பார்த்திவத் தன்மைப் பிரத்தியக்ஷ சித்தமாம். அல்லது கஸ்தூரி, குசும முதலிய பார்த்திவத்

திரவியங்களினின்றும் வாயு எடுத்துக்கொண்டு வந்த நறுநாற்றப் பார்த்திவ பாகம் யாதோ அந்நறுநாற்றப் பார்த்திவபாகம் தன்னிடத்திலுள்ள உருவ முதலிய நான்கனுள் கேவலம் கந்தமொன்றினையே வெளியாக்குகின்றது. உருவம், ரசம், பரிசமென்னும் மூன்றினை வெளிப்படுத்துவதன்று. ஆகையால் அந்நறுநாற்றமுடைய பார்த்திவ பாகங்களில் அப்பார்த்திவத் தன்மை நிச்சயமாகவே யிருக்கின்றது. அங்ஙனமே அக்கிராண விந்திரியமும் கஸ்தூரி, குசும முதலிய பார்த்திவத் திரவியங்களின் உருவ முதலிய நான்கனுள் கேவலம் கந்தகுணமொன்றையே வெளிப்படுத்துவதாகின்றது. உருவம், ரசம், பரிச மென்னும் மூன்றினை வெளியாக்குவதன்று. ஆகையால் கிராண விந்திரியத்திலும் பார்த்திவத் தன்மை அவசிய மொப்ப வேண்டும். ஆண்டுக் கூறிய அநுமானத்தில் "உருவ முதலியவைகளுள் கந்தத்தை வெளிப்படுத்துவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "ஏ" என்னும் பதங் கூறாவிடின் மட்பாத்திர விசேஷமாகிய புது கலசம் யாதோ அக்கலசத்தில் வார்க்கப்பட்டஜலம் அக்கலசத்தின் கந்தத்தினை வெளியாக்குகின்றது. அஜ்ஜலத்தில் அவ்வேது வியபிசாரியாகும். மனமின்றி ஓர் வத்துவின் ஞானமு முண்டாகாது. ஆகையால் அம்மனமும் அக்கந்தத்தினை வெளிப்படுத்துவதாம். அம்மனத்திலும் அவ்வேது வியபிசாரியாகும். அதாவது அஜ்ஜலத்திலும், மனதிலும் அப்பார்த்திவத் தன்மை வடிவ் சாத்தியமின்றும் ஆனல் உருவ முதலியவைகளுள் கந்தத்தினை வெளியாக்குந்தன்மை ஏது வடிவம் அஜ்ஜலத்திலும், மனதிலுமிருக்கின்றது. ஆகையால் பார்த்திவத் தன்மைச் சாத்தியத்தின் அபாவமுடைமை அஜ்ஜலத்திலும், மனதிலுமிருப்பதாவதால் அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஏ" என்னும் பதங் கூறப்பட்டது. அத்தேற்றவேகார பதம் அக்கந்த குணத்தினும் வேறான உருவம், ரசம், பரிசமென்னும் மூன்றின் பிரத்தியக்ஷஞானத்தினை நிஷேதஞ் செய்கின்றது. ஆண்டு புதுகலசத்தின் ஜலம் கேவலம் அம்மட்பாத்திரத்தின் கந்தத்தினையே வெளியாக்குவதன்று ஆனல் மாவில் வார்க்கப்பட்ட அப்புது கலசத்தின் ஜலம் அம்மாவின் ரசத்தினையும் வெளியாக்குகின்றது. அம்மனமும் கேவலம் கந்தமொன்றினையே வெளியாக்குகிறதில்லை. ஆனல் உருவ முதலியவைகளையும் வெளியாக்குவதாகின்றது. ஆகையால் அத்தேற்றவேகாரம் பொருந்திய ஏதுவைக்கூறுவதால் அப்புது கலசத்தின் ஜலத்திலும், மனதிலும் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது அவ்வநுமானத்தில் "கந்தத்தையே வெளியாக்குவதாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் உருவ முதலியவைகளுள் என்னும் பதங் கூறாவிடின் அவ்வேது சொரூபாசித்தி தோஷமுடையதாம். ஆண்டு பக்ஷத்தில் ஏதுவினிருப்பின்றியதனை சொரூபாசித்தி யென்பர். ஏனெனின் கிராண விந்திரியம் கேவலம் கந்தமொன்றினையே வெளியாக்குவதன்று. ஆனல் கந்தத்திலிருக்கும் கந்தத்தன்மை ஜாதியினையும், அக்கந்தத்தின் அபாவத்தினையும் வெளியாக்குகின்றது அச்சொரூபாசித்தி தோஷத்தை நிவர்த்திசெய்யும் பொருட்டு அவ்வேதுவில்

"உருவ முதலியவைகளுள்" என்னும் பதங் கூறப்பட்டது. அதாவது உருவம், ரசம், கந்தம், பரிச மென்னு மைந்தனுள் கிராண விந்திரியம் கந்தகுணம் ஒன்றினையே வெளியாக்குவதாகின்றது. உருவ முதலிய மூன்றினை வெளியாக்குவதன்று. ஆகையால் கிராண விந்திரியத்திற்கு கந்தத் தன்மை ஜாதியினையும், கந்தாபாவத்தினையும் வெளியாக்கும் தன்மையிருக்கினும் சொரூபாசித்தி தோஷத்தின் பிராப்தியுண்டாகாது.

சங்கை :—எங்ஙனம் கிராண விந்திரியம் உருவ முதலியவைகளுள் கேவலம் கந்தத்தையே வெளியாக்குகின்றதோ அங்ஙனமே அக்கந்தத்தினோடு கிராண விந்திரியத்தின் சுவ சம்யுக்த சமவாய வடிவசம்பந்தம் யாதோ அச்சம்பந்தமும் கேவலம் கந்தத்தினையே வெளியாக்குகின்றது. உருவ முதலியவைகளை வெளியாக்குவதன்று. அச்சம்பந்தம் பார்த்திவ பதார்த்தமன்றும். ஆகையால் பார்த்திவத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அச்சம்பந்தத்திலிருப்பதாவதால் அவ்வேது வியபிசாரியேயாகும்.

சமாதானம் :—அவ்வேதுவினோடு "திரவியமாய்" என்னும் பதமும் சேர்க்குக, அதாவது "திரவியமாய் உருவ முதலியவைகளுள் கந்தத்தை வெளியாக்குவதால்" என இவ்வளவேது கூறுக. ஆண்டு அக்கிராண விந்திரியத்தின் சம்பந்தத்தில் அத்திரவியத் தன்மை தர்மமின்றும். ஆகையால் அச்சம்பந்தத்தில் கூறிய இவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது.

சங்கை :—கூறிய அவ்வேது கிராண விந்திரிய வடிவ பக்ஷத்திலோவிருக்கின்றதெனினும் அக்குங்குமங் கலந்த ஆவின்நெய் வடிவ திர்ஷ்டாந்தத்தில் அவ்வேதுவில்லை. ஏனெனின், அவ்வாவின்நெய் எங்ஙனம் குங்குமத்தின் கந்தத்தினை வெளியாக்குகிறதோ, அங்ஙனமே தன்னிடத்துள்ள உருவ முதலியவைகளையும் வெளியாக்குவதேயாகின்றது. கேவலம் கந்தமாத்திரத்தையே வெளியாக்குவதன்று.

சமாதானம் :—அந்நெய் வடிவ திர்ஷ்டாந்தத்தில் கூறிய அவ்வேதுவின் அசித்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவினோடு "மற்றவைகளைச் சார்ந்த" என்னும் பதமுங் கூறுக அதாவது "திரவியமாகி பிறவற்றைச்சார்ந்த உருவ முதலியவைகளுள் கந்தத்தை வெளியாக்குவதாவதால்" என இவ்வளவேது கூறுக. ஆண்டு அந்நெய் தனது உருவ முதலியவைகளை வெளியாக்குவதாயினும் அக்குங்குமத்தின் உருவமுதலியவைகளுள் கேவலம் கந்தமொன்றையே வெளியாக்குவதாகின்றது. அக்குங்குமத்தின் உருவ முதலியவைகளை வெளியாக்குகிறதில்லை. ஆகையால் அவ்வேதுவில் அவ்வுருவ முதலியவைகளுக்கு "பிறவற்றைச்சார்ந்த" என்னும் விசேஷணத்தைக் கூறுவதால் அவ்வாவின்நெய் வடிவ திர்ஷ்டாந்தத்தில் அவ்வேதுவிற்கு அப்பிரசித்தி யுண்டாகாது.

சங்கை :—அவ்வேதுவினோடு "பிறவற்றைச்சார்ந்த" என்னும் பதத்தைக் கூறுவதால் அவ்வேதுவின் சரீரம் பெரிதாகும். ஆகையால் சரீரத்தினாலாம் கௌரவ தோஷத்தின் பிராப்தியுண்டாகும்.

சமாதானம்:—இக்கௌரவ தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு முற்கூறிய அவ்வநுமானத்தில் "வாயு கொண்டு வந்த நறுநாற்றமுடைய பார்த்திவ பாகத்தைப் போன்று" என்னுமிரண்டாவது திர்ஷ்டாந்தங் கூறப் பட்டது. ஆண்டு வாயுவானது வேறிடத்திருந்து கொண்டு வந்த கஸ்தூரி, குசும முதலிய பிருதிவியின் சூக்ஷ்ம நறுநாற்றமுள்ள பாகம் யாதோ அவைக ளின் உருவ முதலிய குணங்கள் ஒன்றிற்கும் பிரத்தியக்ஷமாவதன்று. ஆனால் அவைகளின் கந்த மாத்திரமே பிரத்தியக்ஷமாகின்றது. ஆகையால் அந்நறு நாற்றமுடைய பார்த்திவ பாகம் தன்னிடத்துள்ள உருவ முதலியவைகளை வெளியாக்குவதன்று தன்னிடத்துள்ள கந்தமொன்றையே வெளியாக்குகின் றது. ஆகையால் கூறிய அவ்வேதுவில் "பிறவற்றைச்சார்ந்த" என்னும் பதத் தைக்கூறுவிடினும், அந்நறுநாற்றமுடைய பார்த்திவபாக வடிவ திர்ஷ்டாந் தத்தில் கூறிய அவ்வேதுவிற்கு அசித்திபுண்டாகாது. இவ்விவ்விய அநுமானத் தால் அக்கிராண விந்திரியத்தில் பார்த்திவத் தன்மையே சித்தமாகின்றது.

சங்கை:—"ஸதிகுட்யெசித்ரம்" (இ-ள்.) ஆதார வடிவ சுவற்றி னிருப்புளதாகவே சுவற்றின் பேரில் சித்திரமெழுதப்படுகின்றது. அச்சுவற் றின் அபாவமிருக்க அவற்றின் பேரில் சித்திரமுமெழுதப்படுகிறதில்லையென் னும் நியாயம் உலகத்தில் பிரசித்தமாம். அங்ஙனமே ஈண்டு பிரசங்கத்தில் முதலில் ஓர் பிரமாணத்தால் கிராண முதலிய ஆறுவிந்திரியங்களின் சித்தி யுண்டாகிய பின்னரே அக்கிராண முதலிய விந்திரியங்களில் பார்த்திவ முத லிய வடிவத் தன்மை சித்தமாகும். கிராண முதலிய விந்திரியங்களின் சித்தி யின்றி கிராண முதலிய விந்திரியங்களில் பார்த்திவ முதலிய வடிவத் தன்மை சித்தியாதாகும். ஆகையால் கிராண முதலிய ஆறு விந்திரியங்களை ஓர் பிரமா ணத்தால் அவசியம் சித்தி செய்யவேண்டுமென்னுஞ் சங்கையின் பிராப்தி யுண்டாக வினி அநுமானப் பிரமாணத்தால் கிராண முதலிய ஆறு விந்திரி யங்களின் சித்தியைச் செய்வாம்.

## உ௪உ. இந்திரிய மாத்திரத்தின் சாதக அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ரூபாத்யுபலப்தய: கார ணஸாத்யா: க்ரியாத்வாத் சித்க்ரியாவத்" (இ-ள்.) உருவத்தின் உபலப்தியும் (ஞானமும்), ரசத்தினுபலப்தியும், கந்தத்தினுபலப்தியும், பரிசத்தினுபலப்தி யும், சத்தத்தினுபலப்தியும், சுக துக்கத்தினுபலப்தியுமாம் அறுவகையாய ஞானவடிவ வுபலப்திகள் ஓர்காரணத்தால்சாத்தியமாக யோக்கியமாம். கிரி யாவடிவமாவதால், எதுவெது கிரியையாமோ அவ்வக்கிரியை ஓர் காரணத் தால் அவசியம்சாத்தியமாகின்றது. எங்ஙனம், சேதிக்கும் வடிவகிரியை கோ டரிவடிவகாரணத்தால் சாத்தியமாம். அக்கிரியாத்தன்மை அவ்வுருவமுதலிய வுபலப்திகளினு மிருக்கின்றது. ஆகையால் அவ்வுபலப்திகளுமோர் காரணத் தால் அவசியம் சாத்தியமாவனவாம். ஆண்டு இவ்வநுமானத்தால் உருவ வுபலப்தியின் காரண வடிவமாக சக்ஷுவிந்திரியத்தின் சித்தியுண்டாகின் றது. ரசவுபலப்தியின் காரண வடிவமாக ரசன விந்திரியத்தின் சித்தியுண்

டாகின்றது. கந்த வுபலப்தியின் காரண வடிவமாக கிராண விந்திரியத்தின் சித்தியுண்டாகின்றது. பரிச வுபலப்தியின் காரண வடிவமாக துவக்கிந்திரியத்தின் சித்தி யுண்டாகின்றது. சத்த வுபலப்தியின் காரண வடிவமாக சுரோத்திர விந்திரியத்தின் சித்தியுண்டாகின்றது. சுக துக்க வுபலப்தியின் காரண வடிவமாக மன விந்திரியத்தின் சித்தியுண்டாகின்றது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அக்கிராண முதலிய ஆறு விந்திரியங்களின் சித்தியுண்டாக கிராண முதலிய விந்திரியங்களில் பார்த்திவாதி வடிவத்தினை சித்திசெய்தல் சம்பவிக்கின்றது. இதுகாறும் பார்த்திவ விந்திரியத்தின் நிரூபணஞ் செய்யப்பட்டது. இனி பார்த்திவ விஷயத்தின் நிரூபணஞ் செய்வாம்.

### உசரு. பார்த்திவ விஷயத்தின் லக்ஷணம்.

" ഗംധവിഷയഃ വായിർവവിഷയഃ " (இ-ள்.) எவ்விஷயம் சமவாய சம்பந்தமாக கந்தகுணமுடையதாமோ அவ்விஷயம் பார்த்திவ விஷயமெனப் படும். ஆண்டு பார்த்திவ துவியணுக முதலாக எவ்வளவு மண், கல், கஸ்தூரி, குசும முதலிய திரவியங்களுளவோ அவையெல்லாம் சமவாய சம்பந்தமாக கந்தகுணமுடையனவாவதால் பார்த்திவ விஷயமெனப்படும்.

### உசச. வேறுவகையாக பார்த்திவ விஷயத்தின் லக்ஷணம்.

நறுநாற்றத் தீநாற்றமுடைய அவயவங்களாலுண்டான கட முதலிய பார்த்திவ விஷயங்களிலும், தோன்றியழிந்த கட முதலிய பார்த்திவ விஷயங்களிலும், உத்பத்தி க்ஷணவச்சின்ன கட முதலிய பார்த்திவ விஷயங்களிலும் கந்த குணத்தின் அபாவமிருப்பதால் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். என்றாலும் முற்கூறிய பிருதிவியின் லக்ஷணத்தைப் போன்று " ഗംധസമാനാധികരണ ദ്രവ്യത്വസാക്ഷാദ്വ്യാപ്യ ജാതിമദ്വിഷയഃ വായിർവവിഷയഃ " என இவ்வாறாய பிருதிவித் தன்மை ஜாதி பொருந்திய லக்ஷணத்தைக் கூறுவதால் அக்கட முதலிய வடிவ பார்த்திவ விஷயத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "விஷயம்" என்னும் பதம் பார்த்திவசரீர விந்திரியத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றைய பதங்களின் பயன் முற்கூறியவாறே அறிந்து கொள்க. பார்த்திவ விஷய நிரூபணம்.

சங்கை:—முன்னர் பரமாணு வடிவ பிருதிவிக்கு நித்தியங் கூறப்பட்டது அங்ஙனமே பின்னர் பரமாணு வடிவஜலத்திற்கும், பரமாணு வடிவ தேயுவிற்கும், பரமாணு வடிவ வாயுவிற்கும் நித்தியம் கூறப்படும். பரமாணுக்களில் நித்திய வடிவத்தன்மை சித்திப்பதற்கு முதலிலோர் லக்ஷணத்தாலும் ஓர் பிரமாணத்தாலும் அப்பரமாணுக்களின் சித்தியுண்டாகவேண்டும். பரமாணுக்களின் சித்தியின்றி அவைகளில் நித்தியத் தன்மைக் கூறுதல் சம்பவியாது. ஆகையால் அப்பரமாணுக்கட்கு ஓர் லக்ஷணமும் பிரமாணமும் அவசியம் கூறவேண்டுமென்னுஞ் சங்கையின் பிராப்தமுண்டாக வினி முதலில் பரமாணுக்களின் லக்ஷணம் நிரூபிப்பாம்.

## உ௫௫. பரமாணுவின் லக்ஷணம்.

"[illegible]"

(இ-ள்.) எத்திரவியம் மனதினும் வேறாய் சமவாய சம்பந்தமாக பரம அணுத் தன்மைப் பரிமாணமுடையதாமோ அத்திரவியம் பரமாணுவெனப் படுகின்றது. ஆண்டுப் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கின் பரமாணுக்கள் மனதினும் வேறும் சமவாய சம்பந்தமாக பரமாணுத் தன்மைப் பரிமாணமுடையனவுமாம். ஆகையால் அப்பரமாணுக்களுக்குக் கூறிய அந்த லக்ஷணம் சம்பவிக்கிறது. ஆண்டு "பரமாணுத்தன்மைப் பரிமாணமுடையது பரமாணு" என விம்மாத்திரமே அப்பரமாணுக்களின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "மனதினும் வேறாய்" என்னும் பதங் கூறுவிடின் மனதில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். யாது காரணத்தாலெனின், அம்மனமும் அப்பரமாணுக்களைப்போன்று பரம அணுத்தன்மைப் பரிமாணமுடையதேயாம். அவ்வதிவியாப்தித் தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மனதினும் வேறாய்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு மனத்தில் மனதின் பேதம் சம்பவியாதாகையால் அம்மனதில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "மனதினும் வேறாய் அணுத் தன்மைப் பரிமாணமுடையது பரமாணு" என விம்மாத்திரமே அப்பரமாணுவின் லக்ஷணமாகக் கூறி, அந்த லக்ஷணத்தில் "பரம" என்னும் பதங் கூறுவிடின் துவியணுகாதி வடிவ காரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், இரு பரமாணுக்களின் சையோகத்தா லுண்டாய துவியணுக வடிவ காரியம் யாதோ அத்துவியணுகம் மனத்தினும் வேறும் அணுத் தன்மைப் பரிமாணமுடையதுமாம். அத்துவியணுகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அணுத் தன்மைப் பரிமாணத்திற்கு "பரம" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுத் துவியணுகத்தில் மத்திம அணுத்தன்மைப் பரிமாணத்தி னிருப்புள்ளதாயினும் பரம அணுத்தன்மைப் பரிமாணம் இருப்பதில்லை. ஆகையால் துவியணுகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "மனதினும் வேறாய்ப் பரிமாணமுடையது பரமாணு" என விம்மாத்திரமே அப்பரமாணுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பரமாணுத்தன்மை" என்னும் பதங்கூறுவிடின் பரமாணு, மன மென்னுமிரண்டைவிட்டு எல்லாத்திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின் அப்பரிமாண குணம்பிருதிவி முதலிய ஒன்பதுத் திரவியங்களிலிருக்கின்றது. அங்ஙனமே பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்கள் மனதைவிட வேறுமாம். அவ்வதிவியாப்தியை நிவர்த்திப்பான் கருதி அந்த லக்ஷணத்தில் "பரம அணுத்தன்மை" என்னும் பதம் பரிமாணத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் பரிமாணத்தினிருப்புளதாயினும் அப்பரம அணுத்தன்மைப் பரிமாணம் கேவலம் பரமாணுவினும், மனதினுமே யிருக்கின்றது. வேறோர் திரவியத்தில் அப்பரமாணுத்தன்மைப் பரிமாணமிருப்பதில்லை. ஆகையால் அப்பரமாணுக்களி

னும் வேறான திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "மனதினும் வேறானது பரமாணு" என விம்மாத்திரமே அப்பரமாணுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பரமாணுத் தன்மைப் பரிமாணமுடையது" என்னும் பதங்கூறுவிடின் பரமாணுவினும், மனதினும் வேறான திரவிய குண முதலிய சர்வபதார்த்தங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திசெய்வான்வேண்டி அந்தலக்ஷணத்தில் "பரமாணுத் தன்மைப் பரிமாணமுடையது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அப்பரமாணுவினும், மனதினும் வேறான வேறோர் பதார்த்தம் அப்பரமாணுத் தன்மைப் பரிமாண முடையதன்றாம். ஆகையால் திரவியமுதலிய பதார்த்தங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. இதுகாறும் பரமாணுக்களின் லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. இனி அநுமானப்பிரமாணத்தால் அப்பரமாணுக்களின் சித்தியை செய்வாம்.

உசகூ. அநுமானப் பிரமாணத்தால் பரமாணுக்களின் சித்தி.

சுவர் முதலியவைகளிலுள்ள வீட்டின் சாளரத்தில் நுழையும் சூரியக் கிரணங்களிலுள்ள எல்லாவற்றிலும் நுண்ணியத்துகளினைத் திரியணுகமென்பர், இதனை திரிசிரேணுவென்றும், துருடி யென்றுங்கூறுவர்.

"த்ர்யணுகம் ஸாவயவம் ஜந்யம் வா சாக்ஷுஷத்ரவ்யத்வாத் கடவத்"

(இ-ள்.) அத்திரியணுகம் அவயவங்களால் ஜன்னியமாக யோக்கியமாம், சாக்ஷுஷத் திரவியமாவதால், அதாவது சக்ஷு விந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷ ஞானத்திற்குவிஷயமாகும் திரவியமாவதால், எவ்வெத்திரவியம் சாக்ஷுஷத் திரவியமாகின்றதோ அவ்வத் திரவியம் அவயவங்களா லுண்டாவதேயாம். எங்ஙனம்: கடம் சாக்ஷுஷத் திரவியமாம். ஆகையால் கபால வடிவ அவயவங்களா லுண்டாவதுமாம். அங்ஙனமே திரியணுகமும் சாக்ஷுஷத் திரவிய மாகையால் அவயவங்களா லுண்டாவதேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "திரவியமாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "சாக்ஷுஷம்" என்னும் பதங் கூறுவிடின் அவ்வேது ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களில் வியபிசாரியாகும். ஏனெனின், ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம், பரமாணு வென்னும் நித்தியத் திரவியங்களில் அவ்வவயவ ஜன்னியத் தன்மை வடிவ சாத்தியமோ வின்றாம். ஆனால் அத்திரவியத் தன்மை வடிவ ஏது அவ்வாகாச முதலியவைகளிலுமிருக்கின்றது. ஆகையால் அவ்வவயவ ஜன்னியத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அவ்வாகாச முதலிய நித்தியத் திரவியங்களில் இருப்பதாவதால் அத்திரவியத் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்வான் வேண்டி அவ்வேதுவில் "சாக்ஷுஷம்" என்னும் பதம் திரவியத்திற்கு விசேஷணமாகக்கூறப்பட்டது. ஆண்டு அவ்வாகாச முதலியவைகளில் மஹத்வ சமாநாதிகரண உத்பூத உருவத்தின் அபாவத்தால் அச்சாக்ஷுஷத்தன்மை ஏதுவின்றாம். ஆகையால் அவ்வாகாச முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது அவ்வநுமானத்தில் "சாக்ஷுஷத் தன்மையால்" என விம்மாத்திரமே

ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "திரவியம்" என்னும்" பதங் கூறுவிடின் சாக்ஷுஷ ஞானத்தின் விஷயமாகிய குணம், கரும முதலியவைகளில் அவ் வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின் அக்குணம், கரும முதலிய வைகளில் அவ்வவயவ ஜன்னியத் தன்மை வடிவ சாத்தியமோவின்றும் ஆனால் அச்சாக்ஷுஷத்தன்மை வடிவ ஏது அக்குண, கருமங்களிலும் இருக் கின்றது. ஆகையால் அவ்வவயவ ஜன்னியத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அக்குண, கரும முதலியவைகளில் இருப்பதாவதால் அச் சாக்ஷுஷ வடிவத்தன்மை ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோ ஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "திரவியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அக்குண, கருமங்களில் அத்திரவியத் தன் மையின்றும். ஆகையால் அக்குண, கரும முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அத்திரி யணுகத்தில் அவயவ ஜன்னியத்தன்மை சித்திக்கின்றது. அத்திரியணுகத்தின் அவயவமே துவியணுகமெனப்படும். ஏனெனின், பரஸ்பர சம்யுக்த மூன்று துவியணுகங்களாலேயே திரியணுக வடிவ காரியத்தினுற்பத்தி யுண்டாகின் றது. ஆகையால் மூன்று துவியணுகங்கள் திரியணுகவடிவ காரியத்தினை ஆரம் பிக்கும் அவயவங்களாம். இவ்வாறாக திரியணுகம்சித்தித்தபின்னர் மீண்டு மிவ் வாறாக அநுமானம் செய்க. "ஸ்வ்யணுகஃ ஸாவயவஃ மஹத்வாரம்பக ஸ்வாத் ஸ்வாவயவத்" (இ-ள்.) துவியணுகமும் அவயவங்களாலுண்டாகயோக் கியமாம். மஹத்வபரிமாணமுடைய திரியணுக வடிவத்திரவியத்தை ஆரம்பிப் பதாவதால், எவ்வெத்திரவியம் மஹத்துவ பரிமாணமுடையத் திரவியத்தினை ஆரம்பிப்பதாமோ அவ்வத்திரவியம் அவயவங்களா லுண்டாவதேயாம். எங் ஙனம்: கபால வடிவ திரவியம் மஹத்துவ பரிமாணமுடைய கட வடிவ திரவி யத்தை ஆரம்பிப்பதாம். ஆகையால் அக்கபால வடிவத் திரவியம் *கபாலிகா வடிவ அவயவங்களா லுண்டானதேயாம். அங்ஙனமே மஹத்துவ பரிமாண முடைய திரியணுக வடிவத்திரவியத்தினை ஆரம்பிக்குந்தன்மை துவியணுகங்க ளிலுமிருக்கின்றது. ஆகையால் துவியணுகமும் சில அவயவங்களாலுண்டாவ தேயாகும். இவ்வாறாய அநுமானத்தால் துவியணுகத்தின் அவயவம் சித்தி யாகின்றது. துவியணுகத்தினை ஆரம்பிக்கும் அவயவமே பரமாணுவெனப்ப டுகின்றது. ஏனெனின் பரஸ்பர, சம்யுக்த விரு பரமாணுக்களாலேயே துவி யணுக வடிவ காரியத்தினுற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் அவ்விரு பரமாணுக்களே துவியணுகத்தை ஆரம்பிக்கும் அவயவங்களாம். அப்பர மாணு ஓர் அவயவத்தா லுண்டாவதன்று. ஆனால் அப்பரமாணு அஜன்னிய மேயாம்.

## உசஎ. பரமாணுக்களில் அவயவ ஜன்னியத் தன்மையின் சங்கை.

சங்கை:—எங்ஙனம் கூறிய அநுமானப் பிரமாணத்தால் துவியணுக வடிவ காரியத்தில் அவயவ ஜன்னியத்தன்மை சித்தம் செய்யப்பட்டதோ அங்

---

கபாலிகா - கபாலங்களின் அவயவங்கள்.

ஙனமே அவ்வநுமானப்பிரமாணத்தால் பரமாணுக்களிலும் அவயவ ஜன்னியத்தன்மையே சித்தமாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். “[illegible]” (இ-ள்.) அப்பரமாணு அவயவங்களாலுண்டாக யோக்கியமாம், துவியணுக வடிவ காரியத் திரவியத்தின் சமவாயி காரணமாவதால், எவ்வெத்திரவியம் காரியத் திரவியத்தின் சமவாயி காரணமாமோ அவ்வத்திரவியம் அவயவங்களாலுண் டாவதேயாகின்றது. எங்ஙனம் கபாலம் கட வடிவக் காரியத் திரவியத்தின் சமவாயி காரணமாவதால் கபாலிகா வடிவ அவயவங்களா லுண்டாவதே யாம். அங்ஙனமே பரமாணுவும் துவியணுக வடிவ காரியத் திரவியத்தின் சமவாயி காரணமாவதால் அவயவங்களால் அவசியம் ஜன்னியமாவதாகும். இவ்வாறாய அநுமானத்தால் பரமாணுக்களிலும் அவயவத்தன்மையே சித்த மாகின்றது. ஆகையால் அப்பரமாணுவும் அவயவங்களா லுண்டானதே யாகின்றது.

உ௬௪. பரமாணுக்களில் நிரவயவத் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம்:—இவ்வாறாய அநுமானத்தால் பரமாணுக்களில் அவய வத்தாலுண்டாந் தன்மை அங்கிகரிக்கின் அப்பரமாணுக்களை ஆரம்பிக்கும் அவயவங்களிலும் பரமாணு வடிவ காரியத் திரவியத்தின் சமவாயி காரணத் தன்மை வடிவ ஏதுவால் அவயவ ஜன்னியத் தன்மையே சித்தமாகும். பின்னர் அவ்வவயவங்களிலும் அவ்வேதுவால் அவயவ ஜன்னியத் தன்மையே சித்தமாகும். இவ்வாறாக முடிவில்லாத அவயவங்களின் தொடர்ச்சி யொப்புவதில் அனவஸ்தை தோஷத்தின் பிராப்தியுண்டாகும். அவ்வனவஸ்தை தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு முடிவில் சில அவயவங்களுக்கு அவயவங்களா லுண்டாதலின்மை எப்பொழுதுவொப்புவதாமோ அப்பொழுதுஅவ்வஜன்னிய அவயவங்களிலேயே அக்காரியத்திரவியத்தின் சமவாயி காரணத் தன்மை வடிவ ஏது வியபிசாரியாகும்.

உ௬௫. பீஜாங்குர நியாயத்தால் அநவஸ்தையில்
தோஷமில்லாத் தன்மையின் சங்கை.

சங்கை:—எங்ஙனம்: பீஜத்தால் அங்குரமுண்டாகிறது. அவ்வங்குரத்தால் மீண்டும் பீஜமுண்டாகிறது. அப்பீஜத்தால் மீண்டும் அங்குர முண்டாகிறது. இவ்வாறாய முடிவில்லாத பீஜாங்குரங்களின் தொடர்ச்சி யொப்புவதில் பிராப்தமாகும் அனவஸ்தையை ஓர் நூலாசிரியரும் தோஷவடிவமாக யொப்பினரில்லை. அங்ஙனமே ~~[illegible]~~ புண்ணிய பாப வடிவ அதிர்ஷடத்தால் சரீரமுண்டாவ தாகின்றது. அச்சரீரத்தால் மீண்டும் அதிர்ஷ்ட முண்டாவதாகின்றது. அதிர்ஷ்டத்தால் மீண்டும் சரீரமுண்டாவதாகின்றது. இவ்வாறாக முடிவில்லாத அதிர்ஷ்ட சரீரங்களின் தொடர்ச்சி யொப்புவதில் பிராப்தமாகும் அனவஸ்தையையும் ஓர் நூலாசிரியரும் தோஷ வடிவமாக வொப்பினரில்லை. அங்ஙனமே அப்பரமாணுக்களின் அவயவங்கட்கு முடிவில்லாத தொடர்ச்சியை யொப்புவதில் பிராப்தமாகும் அனவஸ்தையும் தோஷ வடிவமாகாததாகும்.

## உடுஉ. பிரமாணத்தால் சித்தமாகாத அனவஸ்தையில் தோஷவடிவத் தன்மையின் சித்தி.

சமாதானம்:—எவ்வனவஸ்தை சில பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களால் சித்தமாகின்றதோ அவ்வனவஸ்தையே தோஷ வடிவமாகாததாம். எவ்வனவஸ்தையில் ஓர் பிரமாணமுமின்றாகுமோ அவ்வனவஸ்தையோ தோஷ வடிவமேயாம். ஆண்டு அப்பீஜ அங்குரங்களின் அனவஸ்தையில் எங்ஙனம் பிரத்தியக்ஷப் பிரமாணமும், அதிர்ஷ்ட சரீரங்களின் அனவஸ்தையில் சாத்திரப் பிரமாணமு மிருக்கின்றனவோ, அங்ஙனம் அப்பரமாணுக்களின் அவயவங்களின் அனவஸ்தையில் ஓர் பிரமாணமுமின்றாம். மாறாக பிரத்தியக்ஷப் பிரமாண விரோதமே அவ்வனவஸ்தையை பாதிப்பிதா மென்னும் வகையைக் காட்டுவாம்.

## உடுக. முடிவில்லாத அனவஸ்தையின் தொடர்ச்சி யொப்புவதில் மேருவிற்கும், கடுகிற்கும் சமானத்தன்மையின் பிராப்தி.

ஆண்டு எவ்வாதி ஓர் திரவியத்தில் அவயவங்களின் தொடர்ச்சியின் முடிவை அங்கீகரியாது அவ்வவயவங்களின் அனவஸ்தையை அங்கீகரிக்கின்றனே அவ்வாதியின் மதத்தில் மேருபர்வதத்திற்கும், கடுகிற்கும் சமான பரிமாண முண்டாகவேண்டும். ஏனென்னின், திரவியத்திலுள்ள பரிமாணத்தின் பெரிது, சிறிதுக்களின் பயனைப் பயப்பிப்பது திரவியத்தை ஆரம்பிக்கும் அவயவங்களின் எண்ணிக்கையேயாம். ஆண்டுக் குறைந்த வெண்ணிக்கையுடைய அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட திரவியமோ சிறிய பரிமாணமுடையதாகின்றது. அதிக வெண்ணிக்கையுடைய அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட திரவியம் பெரிய பரிமாணமுடையதாகின்றது. அப்பரிமாணத்தின் பெரிது, சிறிதாம் பயனைப் பயப்பிக்கும் அவயவங்களின் அதிக, குறைந்த வெண்ணிக்கை அவயவங்களுக்கு அனவஸ்தை யொப்புவதில் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் மேருபர்வதம் கணக்கில்லாத அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்டதாமோ அங்ஙனமே கடுகும் கணக்கில்லாத அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்டதாம். ஆகையால் மேரு பர்வதத்திற்கும், கடுகிற்கும் சமான பரிமாண முண்டாகவேண்டும். அது பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விரோதமாம். மேரு பர்வதத்தின் அவயவங்களின் தொடர்ச்சியும், கடுகின் அவயவங்களின் தொடர்ச்சியும் பரமாணுபரியந்தம் அங்கீகரிக்கப்பட்டு பரமாணுவிற்குப் பின் அவயவ தொடர்ச்சி அங்கீகரிக்கப்படாவிடின் மேரு பர்வதத்தின் சமான வடிவத் தன்மை தோஷம் பிராப்தமாகாது. ஏனெனின் கடுகின் பருமனே குறைந்த எண்ணிக்கையுடைய அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்டதாம். மேரு பர்வதமோ அதிக வெண்ணிக்கையுடைய அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்டதாம். இக்காரணத்தால் கடுகின் பருமனில் குறைந்த பரிமாணமிருக்கின்றது. மேரு பர்வதத்தில் அதிக பரிமாணமிருக்கின்றது.

## உ௫உ. முடிவில்லாத அவயவ தொடர்ச்சியை யொப்புவதில் பரமாணுக்களில் மகத்துவத்தினது பிராப்தியின் வர்ணனம்.

அல்லது முடிவில்லாத அவயவங்களின் அனவத்தை யொப்புவதில் கேவலம் மேரு பர்வதத்தின் சமானத் தன்மை வடிவ தோஷமே பிராப்த மாகாது. ஆனால் அப்பரமாணுக்களில் மஹத்துவத்தின் பிராப்தி வடிவ தோஷமும் பிராப்தமாகின்றது. ஏனெனின், எத்திரவியம் சாவயவத் திரவியத்தால் ஆரம்பிக்கப்பட்ட திரவியமாமோ அத்திரவியம் மஹத்துவ பரிமாண முடையதேயாகின்றது. எங்ஙனம், திரியணுக வடிவத் திரவியம் துவியணுக வடிவ சாவயவத் திரவியத்தால் ஆரம்பிக்கப்பட்டதாம். ஆகையால் அத்திரியணுகம் மஹத்துவ பரிமாணமுடையதுமாம். அங்ஙனமே அவயவங்களின் அனவத்தையில் அப்பரமாணுவும் சாவயவத் திரவியத்தானேயே ஆரம்பிக்கப்படுவதாகும். ஆகையால் அப்பரமாணுவும் திரியணுகத்தைப் போன்று மஹத்துவ பரிமாணமுடைமை அவசியமாகும். அது அத்தியந்தம் விருத்தமாம். ஏனெனின், அப்பரமாணுக்களின் அம்மஹத்துவ பரிமாணம் அங்கீகரிக்கின் அப்பரமாணுக்களுக்கும் திரியணுகத்தைப் போன்று சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகவேண்டும். பரமாணுக்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் ஒருவருக்குமுண்டாகிறதில்லை. இக்காரணத்தானும் அவ்வவயவங்களின் அனவத்தை அங்கீகரிக்க யோக்கியமன்றும். ஆனால் மேரு, கடுகு, கடம், படம் இவை முதலிய அவயவிகளெவ்வளவோ அவைகளின் அவயவங்களின் தொடர்ச்சியின் முடிவு ஒன்றில் அங்கீகரிக்கவேண்டும். அவ்வவயவ தொடர்ச்சியின் முடிவு எதனிடத்தி லுண்டாகிறதோ அதுவே பரமாணுவெனப்படும்.

சங்கை:—மேரு பர்வத முதலிய அவயவிகளினது அவயவ தொடர்ச்சியாண்டு முடிவையடைகின்றதோ அது பரமாணு வாருக. என்றாலும் அம்முடிவின் ஆசிரய வடிவ பரமாணுக்களின் நித்தியத்தன்மையில் ஓர் பிரமாணமுமின்றும்.

## உ௫௩. பரமாணுக்களின் நித்தியத் தன்மையின் சாதகயுக்தி.

சமாதானம்:—அவ்வவயவத் தொடர்ச்சியினது முடிவின் வரம்பாகிய பரமாணுயாதோ, அப்பரமாணுக்கட்கு நித்திய மொப்பாவிடின் அசமவேத பாவ காரியத்தி னுற்பத்தி யொப்புவதாகும். அதாவது அப்பரமாணு வடிவ பாவ காரியத்திற்கு சமவாயி காரணமின்றியே உற்பத்தி யொப்புவதாகும். அது அத்தியந்தம் விருத்தமாம். ஏனெனின் எதுவெது பாவ காரியமாமோ அதுவது சமவாயி காரணமும், அசமவாயி காரணமும், நிமித்த காரணமு மென்னும் மூன்று காரணங்களானேயே உண்டாவதாகின்றது, சமவாயி காரணமின்றி ஓர் பாவ காரியமும் உண்டாவதின்று. ஆண்டு பிரத்துவம்சாபாவ வடிவ காரியமோ, சமவாயி அசமவாயி காரணங்களின்றி கேவலம் நிமித்த காரண மாத்திரத்தானேயே உண்டாவதாகின்றது. ஆகை

யால் ஈண்டு பாவ காரியத்திலேயே மூன்று காரணங்களால் ஜன்னியத் தன்மைக் கூறப்பட்டிருக்கிறது. அப்பரமாணுவும் பாவவடிவமாம். ஆகையால் அப்பரமாணுக்களை அநித்தியமாக வொப்பின் சமவாயி காரணமின்றியே பரமாணு வடிவ பாவ காரியத்தி னுற்பத்தி யொப்புவதாகும். இவ்வசமவேத பாவகாரியத்தினுற்பத்திப் பிரசங்கவடிவ தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அப்பரமாணுக்களுக்கும் துவியணுக முதலியவைகளைப் போன்று சில அவயவங்களால் ஜன்னியத்துவமொப்பின் முற்கூறிய மேரு, கடுகுகளில் சமான பரிமாணத்தின் பிராப்தி வடிவ தோஷம் பிராப்தமாகும். அப்பரமாணுக்களுக்கு நித்தியத்துவ மொப்புவதில் அவ்விரு தோஷமும் பிராப்தமாகாது. ஆகையால் அப்பரமாணுக்கட்கு நித்தியத்துவ மொப்புவதே யோக்கியமாகும்.

சங்கை :—இவ்வாறாய யுக்தியால் அப்பரமாணுக்களில் நித்திய வடிவத் தன்மையின் சித்தியுண்டாகுக. எனினும் அப்பரமாணுக்களின் பரம அணுத்தன்மையில் பிரமாணம் யாது?

## உருச. பரமாணுக்களின் பரம அணுத்துவ வடிவத் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம் :—எங்ஙனம் மஹத்வ பரிமாணத்தின் ஏற்றத் தாழ்வுத் தன்மை ஆகாச முதலிய விபுத்திரவியங்களில் முடிவடைகின்றதோ, அங்ஙனமே அணுத் தன்மைப் பரிமாணத்தி னேற்றத்தாழ்விற்கும் ஒன்றில் முடிவு வொப்பவேண்டும். அவ்வணுத்தன்மைப் பரிமாணத்தின் ஏற்றத் தாழ்வின் முடிவு பரமாணுக்களிலேயே யுண்டாகின்றது. ஆகையால் அப்பரமாணுக்களில் அப்பரம அணுத்தன்மைச் சம்பவிக்கின்றது. கருத்திதுவாம்: நெல் முதலியவைகளின் மஹத்வபரிமாணத்தினும் கடமுதலியவைகளின் மஹத்வ பரிமாணம் மிகுதியாகின்றது. கட முதலியவைகளின் மஹத்வ பரிமாணத்தினும், மட முதலியவைகளின் மஹத்வ பரிமாணம் மிகுதியாகின்றது. அம்மட முதலியவைகளின் மஹத்வ பரிமாணத்தினும் பர்வத முதலியவைகளின் மஹத்வ பரிமாணம் மிகுதியாகின்றது. இவ்வாறாக அம்மஹத்வ பரிமாணத்தின் குறைவு மிகுதித் தன்மைகளின் சாபேக்ஷ ஆகாச முதலிய விபுத்திரவியங்களின் மஹத்வ பரிமாணத்தில் சென்று முடிவை அடைகின்றது. அவ்வாகாச முதலியவைகளின் மஹத்வ பரிமாணத்தினும் மிகுதியான பரிமாணம் ஓர் திரவியத்திற்கு முண்டாகிறதில்லை. இக்காரணத்தால் அவ்வாகாசமுதலியவைகளின் மஹத்வ பரிமாணத்தினை பரம மஹத்வமென்பர். அங்ஙனமே கட முதலியவைகளின் பரிமாணத்தினும் நெல் முதலியவைகளின் பரிமாணம் குறைவாகின்றது. நெல் முதலியவைகளின் பரிமாணத்தினும் கடுகின் பரிமாணம் குறைவாகின்றது. கடுகின் பரிமாணத்தினும் திரியணுகத்தின் பரிமாணம் குறைவாகின்றது. இவ்வாறாக அவ்வணுத்தன்மைப் பரிமாணத்தின் குறைவு அதிகத்தன்மைகளின் சாபேக்ஷ அப்பரமாணுக்களின் பரிமாணத்தில்சென்று முடிவை அடைகின்றது. அப்பரமாணு

வின் அணுத்தன்மை பரிமாணத்திலும் அதிகமான அணுத்தன்மைப் பரிமாணம் ஓர் திரவியத்திற்கு முண்டாகிறதில்லை. ஆகையால் சாத்திரவேத்தா புருடர்கள் அப்பரமாணுவின் அணுத்தன்மைப்பரிமாணத்தினை மேலான அணுத்தன்மைப் பரிமாண மென்பர். இவ்வாறாய யுக்தியால் அப்பரமாணுக்களில் பரம அணுத்தன்மை சித்தமாகின்றது.

## உருரு. திரியணுகத்தில் அணுத்தன்மைப் பரிமாணத்தினது தாரதம்மியத் தன்மையின் முடிவைக் கண்டித்தல்.

சங்கை:—அவ்வணுத் தன்மைப் பரிமாணத்தின் தாரதம்மியத் தன்மை திரியணுகத்திலேயே ஏன் முடிவடையக் கூடாது?

சமாதானம்:—முன்னர் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத் திரவிய வடிவ ஏதுவால் அத்திரியணுகத்தில் அவயவ ஜன்னியத்தன்மையைச் சித்தஞ் செய்து வந்துள்ளோம். அங்ஙனமே பெரிதை ஆரம்பிக்கும் தன்மை வடிவ ஏதுவால் அத்திரியணுகத்தின் அவயவ வடிவ துவியணுகங்களிலும் அவ்வவயவத்தாலுண்டாந் தன்மைச் சித்தஞ் செய்து வந்துள்ளோம். ஆகையால் அத்திரியணுகத்திலும், துவியணுகத்திலும் அவ்வணுத் தன்மைப் பரிமாணத்தினது தாரதம்மியத் தன்மையின் முடிவுண்டாகிறதில்லை. ஆகையால் பரமாணுவினையும், துவியணுகத்தினையும் அங்கீகரியாது திரியணுகத்தில் அவ்வணுத் தன்மைப் பரிமாணத்தினது ஏற்றத்தாழ்வுகளின் முடிவை யொப்புபவராகிய நீதிநீகாரரின் மதம் அசங்கதமாம். இதுகாறும் அநுமானப் பிரமாணத்தால் அப்பரமாணுக்களின் சித்தி செய்யப்பட்டது. இனி சாத்திரப் பிரமாணத்தானும் அப்பரமாணுக்களின் சித்தியைச் செய்வாம்.

## உருசு. சாத்திரப் பிரமாணத்தால் பரமாணுக்களினது சித்தியின் வர்ணனம்.

ஆண்டு ஸ்மிருதி "ஜாலாந்தரகதே பாநௌ யத் ஸூக்ஷ்மம் த்ருஶ்யதே ரஜ:। தஸ்ய ஷஷ்டதமோ பாக: பரமாணு: ஸ உச்யதே" (இ-ள்.) சுவர் முதலியவைகளிலுள்ள சாளரவாயிலாக வீட்டில் விழும் சூரியனது கிரணங்களில் பிரதீதியாகும் சூக்ஷ்மதுகள் திரியணுகமெனப்படும். அத்திரியணுகமாகிய துகளின் ஆறிலொரு பாகம் பரமாணு வெனப்படுகின்றது. என்னும் ஸ்மிருதி வசனம் பரமாணுக்களில் பிரமாண வடிவமேயாம். அங்ஙனமே ,, யஸ்ய நாஶோ ந வித்யேத ந நாஶோ பரமாணுஸு தத் ஸூக்ஷ்மம் பரமாணுர்வை வக்ஷ்யேஹம் பரமாணவ: ஸ்வீயபேஷணா கொஸம் யத: ஸூக்ஷ்மபரமாணு: ஸம்ஜ்ஞேயோ ந்யாயவைசேஷிகே'' என்னும் இவை முதலிய அனேக சாத்திரங்களின் வசனம் அப்பரமாணுக்களில் பிரமாண வடிவமாம். ஆகையால் முற்கூறிய லக்ஷணப் பிரமாணங்களினிருப்புளதாக நித்தியப் பரமாணுவை அவசியம் அங்கீகரிக்க யோக்கியமாம். பிருதிவி நிருபணம் முற்றிற்று. இனி ஜல நிருபணம்.

## உருஎ. ஜல வடிவத் திரவியத்தின் விஸ்தார நிரூபணம்.

"ஶீதஸ்பர்ஶவத்ஜலம்" அல்லது "ஜலத்வஜாதிமத்ஜலம்." என்னு மிரு லக்ஷணங்களில் முதல் லக்ஷணத்தை நிரூபிப்பாம்.

## உருஅ. அஜ்ஜலத்தில் குளிர்ந்த பரிசத்தன்மை வடிவத்தின் லக்ஷணம்.

எத்திரவியம் சமவாய சம்பந்தமாக குளிர்ந்த பரிசமுடையதாமோ அத்திரவியம் ஜலமெனப்படும். ஆண்டு சமவாய சம்பந்தமாக குளிர்ந்த பரிசம் ஜலமொன்றிலேயே யிருக்கின்றது. அஜ்ஜலத்தினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களிருப்பதில்லை. ஆகையால் இக்குளிர்ந்த பரிசமுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "பரிசமுடையது ஜலம்" என விம்மாத்திரமே அஜ்ஜலத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குளிர்ந்த" என்னும் பதங் கூறாவிடின் பிருதிவி, தேயு, வாயு வென்னும் மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் ஜலத்தில் அப்பரிச குண மிருக்கிறதோ அங்ஙனமே பிருதிவி, தேயு, வாயு வென்னும் மூன்றிலும் அப்பரிச குண மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அப்பரிசத்திற்கு "குளிர்ந்த" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு பிருதிவி, தேயு, வாயு வென்னும் மூன்றில் பரிசகுணமிருப்பதாயினும் அப்பரிசம் சீதமன்றாம். ஆனால் பிருதிவி, வாயு வென்னும் இரண்டிலோ வெம்மையும் சீதமுமில்லாத பரிசமிருக்கின்றது. தேயுவில் வெம்மைப் பரிசமிருக்கின்றது. ஆகையால் பிருதிவி, தேயு, வாயு வென்னும் மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## உருகூ. சந்தன் முதலிய பிருதிவியில் குளிர்ந்த பரிசத்தன்மையின் சாதகச் சங்கை.

சங்கை:—குளிர்ந்த பரிசமுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவியாது. ஏனெனின், இப்புஷ்பம் குளிர்ச்சியாயிருக்கின்றது. இச்சந்தனம் குளிர்ச்சியாயிருக்கின்றது.இக்கல்குளிர்ச்சியாயிருக்கின்றது. என்னும்பிரதீதி உலகர் யாவருக்குமுண்டாகின்றது. அப்பிரதீதியால் அப்புஷ்பம், சந்தன முதலிய பிருதிவியிலும் அக்குளிர்ந்த பரிசம் சித்தயாகின்றது. ஆகையால் பிருதிவி வடிவ அப்புஷ்பம், சந்தனமுதலியவைகளில் அஜ்ஜலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அங்ஙனமே சந்திர வடிவ தேயுவிலும் அக்குளிர்ந்த பரிசம் பிரதீதியாகின்றது. ஆகையால் அச்சந்திர வடிவ தேயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. அல்லது இக்குளிர்ந்த பரிசமுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம், கேவலம் அதிவியாப்தி தோஷமுடையதன்றாம். ஆனால் சில ஜலவிசேஷத்தில் அவ்வியாப்தி தோஷமுடையதுமாம். ஏனெனின், சில பர்வதத்தினின்றும் விழப்பட்ட ஜலம் அத்தியந்தம் வெம்மையாகவே யிருக்கின்றது. அவ்வெம்மை ஜலத்தில் அக்குளிர்ந்த பரிச

முடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகின்றது. இவ்வாறாக அதிவியாப்தி, அவ்வியாப்தியாமிருதோஷங்களுடையதாவதால் அக்குளிர்ந்த பரிசமுடை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவியாது.

## உகூ௦. ஜலத்தின் சம்பந்தத்தால் பிருதிவி, தேயு முதலியவைகளில் குளிர்ந்த பரிசத் தன்மையின் சித்தி.

சமாதானம் :—ஜலத்தின் சையோக சம்பந்தமுண்டாகியே அப்புஷ்பம், சந்தனம், கல், சந்திரன் முதலியவைகளில் அக்குளிர்ந்த பரிசம் பிரதீதியாகின்றது. அஜ்ஜலத்தினது சையோக சம்பந்தத்தின் அபாவமுளதாக அப்புஷ்ப முதலியவைகளில் அக்குளிர்ந்த பரிசம் பிரதீதியாகிறதில்லை. இவ்வாறாய அன்வய வெதிரேகத்தால் அஜ்ஜலத்தின் குளிர்ந்த பரிசமே சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அப்புஷ்பம், சந்தன முதலியவைகளில் பிரதீதியாகின்றது. ஈண்டுச் சுவசத்தத்தால் குளிர்ந்த பரிசத்தினைக் கிரஹிக்குக. அக்குளிர்ந்த பரிசத்தின் சமவாயி காரணமாகிய ஜலம் யாதோ அஜ்ஜலத்திற்கு அப்புஷ்பம், சந்தன முதலிய பார்த்திவத் திரவியங்களோடு சையோக சம்பந்தமிருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் அஜ்ஜலத்தின் குளிர்ந்த பரிசமே அப்புஷ்பம், சந்தன முதலியவைகளில் பிரதீதியாகின்றது. சமவாய சம்பந்தமாக அப்புஷ்பம், சந்தன முதலியவைகளில் அக்குளிர்ந்த பரிசமின்றும். ஆகையால் அப்புஷ்பம், சந்தன முதலிய பார்த்திவத் திரவியத்திலும், சந்திரன் முதலிய தைஜசத் திரவியத்திலும் சீத பரிசமுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## உகூக. வெம்மை ஜலத்தில் வன்னியின் சம்பந்தத்தால் வெம்மைப் பரிசத்தின் சித்தி.

சில பர்வதங்களின் ஜலத்தில் பிரதீதியாகும் வெம்மைப் பரிசமும் வெம்மைப் பரிசமுடைய வன்னியின் சையோக சம்பந்தத்தானேயே பிரதீதியாகின்றது. அதாவது அஜ்ஜலத்தில் கலந்துள்ள வன்னியின் சூக்ஷும அம்சம் யாதோ அவ்வம்சங்களின் வெம்மைப் பரிசத்தால் அஜ்ஜலத்தின் குளிர்ந்த பரிசம் மறைவடைவதாகின்றது. ஆகையால் அஜ்ஜலத்தின் குளிர்ந்த பரிசம் உலகவருக்கு பிரதீதியாகிறதில்லை. ஆனால் சுவசமவாயி சையோக சம்பந்தமாக அவ்வன்னியின் வெம்மைப் பரிசமே அஜ்ஜலத்தில் பிரதீதியாகின்றது. ஈண்டுச் சுவசத்தத்தால் அவ்வெம்மைப் பரிசத்தினைக் கிரஹிக்குக. அவ்வெம்மைப் பரிசத்தின் சமவாயி காரணவன்னி யாதோ அவ்வன்னியின் சையோக சம்பந்தம் அஜ்ஜலத்தினோ டிருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் அவ்வன்னியின் வெம்மைப் பரிசமே அஜ்ஜலத்தில் பிரதீதியாகின்றது. இக்காரணத்தானேயே, காய்ந்துள்ள குடத்தினின்றும் எடுத்து ஓர் கலசத்தில் வேறிடத்தில் வைக்கப்பட்ட ஜலம் சிலகாலம் கழிந்தபின்னர் குளிர்ச்சியாய் விடுகின்றது. ஆகையால் அஜ்ஜலத்தில் அச்சீத பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது.

## உகூஉ. தோன்றியழிந்த ஜலத்தில் குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்தினது அவ்வியாப்தியின் சங்கை.

சங்கை :— முதற் க்ஷணத்திலுண்டாய் இரண்டாம் க்ஷணத்தில் நாசமாய் விடுகின்ற ஜலத்தில் குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகும். ஏனெனின் முதற் க்ஷணத்திலோ திரவியம் நிர்க்குணமாகவே யுண்டாகின்றதென்னும் வார்த்தை முன்னர் திரவியத்தின் லக்ஷணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் உண்டாகும் முதற் க்ஷணத்திலோ அஜ்ஜலத்தில் அக்குளிர்ந்த பரிச குணம் உண்டாகிறதில்லை. இரண்டாவது க்ஷணத்தில் அஜ்ஜலத்தில் குளிர்ந்த பரிச குணமானது உண்டாவதற்கு அவ்விரண்டாவது க்ஷணத்தில் அஜ்ஜலம் நாசமாய் விடுகின்றது. இத்தகைய தோன்றியழிந்த ஜலத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன ஜலத்திலும் அக்குளிர்ந்த பரிசத்தின் அபாவமிருப்பதால் அக்குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகு மென்னுஞ் சங்கை யுண்டாக இனி குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்தை வேறு வகையாகக் கூறுவாம்.

## உகூங. குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்தை வேறுவிதமாக நிரூபித்தல்.

“ ஶீதஸ்பர்ஶ ஸமாநாதிகரண த்ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிமத் ஜலம் ”

(இ-ள்.) குளிர்ந்த பரிசத்தின் சமானாதிகரணமும் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியுமுடைய திரவியம் ஜலமெனப்படுகின்றது. ஆண்டு ஸ்ரீ கங்கா முதலிய ஜலங்களில் குளிர்ந்த பரிசம் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. அஜ்ஜலத்தில் ஜலத்தன்மை ஜாதியும் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. ஆகையால் அஜ்ஜலத் தன்மை ஜாதி குளிர்ந்த பரிசத்தின் சமானாதிகரணமெனப்படும். அங்ஙனமே அஜ்ஜலத் தன்மை ஜாதி திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய ஜலத் தன்மை ஜாதி யெல்லா ஜலங்களினுமிருக்கின்றது. அதாவது தோன்றியழிந்த ஜலத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன ஜலத்திலும் அஜ்ஜலத் தன்மை ஜாதியிருக்கின்றது. ஆகையால் கூறிய லக்ஷணத்திற்கு தோன்றியழிந்த ஜலத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன ஜலத்திலும் அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு “ஜாதியுடையது ஜலம்” என இம்மாத்திரமே அஜ்ஜலத்தின் லக்ஷணமாகக் கூறின் குண பதார்த்தத்திலும், கரும பதார்த்தத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அஜ்ஜலம் ஜலத் தன்மை முதலிய ஜாதியுடையதாமோ அங்ஙனமே அக்குண, கருமங்களும் சத்தாஜாதியை யுடையனவும், குணத்தன்மைக் கருமத்தன்மை ஜாதிகளை யுடையனவுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் “ திரவியத்தன்மை வியாப்பியம்” என்னுமிது ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு சத்தா ஜாதியும், குணத்தன்மை கருமத்தன்மை ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஏனெனின், எஜ்ஜாதி எஜ்ஜாதியின் அதிகரணத்தில் ஏக தேசத்திலிருந்து ஏகதேசத்தில் இருப்பதில்லையோ அஜ்ஜாதியே அஜ்ஜாதியின்

வியாப்பியமாகின்றது. எங்ஙனம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களி லிருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதியின் அதிகரணமாகிய ஜல வடிவ ஏகதேசத்திலோ ஜலத்தன்மை ஜாதியிருக்கின்றது. பிருதிவி முதலிய இடங்களில் அஜ்ஜலத்தன்மை ஜாதி யிருப்பதில்லை. ஆகையால் அஜ்ஜலத் தன்மை ஜாதி அத்திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியெனப் படுகின்றது. இவ்வாறாக பிருதிவித்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மை, ஆத்மத் தன்மை, மனத்தன்மை என்னும் ஜாதிகளும் அத்திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதிகளெனப்படும். எஜ்ஜாதி எஜ்ஜாதியின் ஏகதேசத்திலு மிருப்பதில்லையோ அஜ்ஜாதி அஜ்ஜாதியின் வியாப்பிய ஜாதியெனப்படுகிற தில்லை. எங்ஙனம் குண மாத்திரத்திலிருக்கும் குணத் தன்மை ஜாதியும், கரும மாத்திரத்திலிருக்கும் கருமத்தன்மை ஜாதியும் ஓர் திரவியத்திலு மிருப்பனவன்று. ஆகையால் அக்குணத் தன்மை ஜாதியும், கருமத்தன்மை ஜாதியும் அத்திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியஜாதியெனப்படுகிறதில்லை. சத்தாஜாதி யொன்பது திரவியங்களிலிருக்கின்றதெனினும் சத்தாஜாதி திரவியத்தன்மை ஜாதியைவிட குண, கரும வடிவ அதிகவிடத்து மிருக்கின்றது. ஆகையால் அச்சத்தா ஜாதியும் அத்திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய மன்றும். ஆகையால் அஜ்ஜலத்தின் லக்ஷணத்தில் "திரவியத்தன்மை வியாப்பியம்" என்னும் விசேஷணத்தைக் கூறுவதால் சத்தா ஜாதியைக்கொண்டும், குணத்தன்மைக் கருமத்தன்மை ஜாதிகளைக் கொண்டும் அந்த லக்ஷணத்திற்கு அக்குண, கருமங்களில் அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "திரவியத் தன்மை வியாப்பிய ஜாதியுடையது ஜலம்" என விம்மாத்திரம் அஜ்ஜலத்தின் லக்ஷணமாகக் கூறுவதால் அந்த லக்ஷணத்திற்கு அக்குண, கருமங்களில் அதிவியாப்தி யுண்டாகாதாயினும் அந்த லக்ஷணத்திற்கு ஆத்ம, மனமென்னு மிரண்டில் அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் அஜ்ஜலத் தன்மை ஜாதி திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமாமோ அங்ஙனமே ஆத்மத்தன்மை, மனத்தன்மை ஜாதிகளும் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய மேயாம். இத்தகைய திரவியத் தன்மை வியாப்பிய ஆத்மத் தன்மை ஜாதி யுடைய ஆத்மாவிலும், மனத்தன்மை ஜாதியுடைய மனதிலும் அஜ்ஜலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியே யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பரிச சமானாதிகரணம்" என்னுமிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மாவி லும், மனதிலும் அப்பரிசகுணம் இருப்பதில்லை. ஆகையால் அவ்வாத்மத்தன்மை ஜாதியும், மனத்தன்மை ஜாதியும் பரிச சமானாதி கரணமன்றும். ஆகையால் அவ்வாத்மத் தன்மை ஜாதியைக்கொண்டு ஆத்மாவிலும், மனத்தன்மை ஜாதியைக்கொண்டு மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பரிசசமானாதிகரண திரவியத்தன்மை வியாப்பிய ஜாதியுடையது ஜலம்" என விம்மாத்திரமே அஜ்ஜலத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் பரிசத்திற்கு "குளிர்ந்த" என்னும் இவ்விசேஷணங் கூறாவிடின் பிருதிவி, தேயு, வாயு வென்னு மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்

டாம். ஏனெனின், அப்பரிசகுணம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கிலிருக்கின்றது. ஆகையால் எங்ஙனம் அஜ்ஜலத்தன்மை ஜாதி அப்பரிசத்தின் சமானாதிகரணமாமோ, அங்ஙனமே பிருதிவித்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மை ஜாதிகளும் அப்பரிசத்தின் சமானாதிகரணமேயாம். அந்த பரிசத்தன்மை சமானாதிகரண பிருதிவித்தன்மை, தேயுத்தன்மை, வாயுத் தன்மை ஜாதிகளைக் கொண்டு பிருதிவி, தேயு, வாயுக்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அப்பரிசத்திற்கு "குளிர்ந்த" என்னும் விசேஷணங்கூறப்பட்டது. ஆண்டு அப்பிருதிவி, தேயு, வாயுக்களின்பரிசம் குளிர்ச்சியன்றாம். தேயுவிற்கு வெம்மைப் பரிசமும், பிருதிவி, வாயுக்களுக்கு வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமிருக்கின்றது. ஆகையால் பிருதிவித் தன்மை, தேயுத் தன்மை, வாயுத்தன்மை ஜாதிகள் பரிசகுணத்தின் சமானாதிகரண மாவனவாயினும் குளிர்ந்த பரிசகுணத்தின் சமானாதிகரணமன்றாம். ஏனெனின் எஜ்ஜலத்தில் குளிர்ந்த பரிசமிருக்கின்றதோ அஜ்ஜலத்தில் பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளிருப்பனவன்று. எப்பிருதிவி முதலியவைகளில் பிருதிவித் தன்மை முதலிய ஜாதிகளிருக்கிறனவோ அப்பிருதிவி முதலியவைகளில் அக்குளிர்ந்த பரிசமிருப்பதில்லை. இவ்வாறாக பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகள் குளிர்ந்த பரிசத்தின் சமானாதிகரணமன்றாம். ஆகையால் அப்பரிசத்திற்கு "குளிர்ந்த" என்னும் விசேஷணத்தைக் கூறுவதால் பிருதிவி முதலியவைகளில் அஜ்ஜலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "குளிர்ந்த பரிச சமானாதிகரண ஜாதியுடையது ஜலம்" என விம்மாத்திரமே அஜ்ஜலத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "திரவியத் தன்மை வியாப்பியம்" என்னும்பதங்கூறாவிடின் சத்தா ஜாதியைக் கொண்டு குண, கருமத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவி முதலிய வெல்லாத் திரவியங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எஜ்ஜலத்தில் குளிர்ந்த பரிச குணமிருக்கின்றதோ அஜ்ஜலத்தில் சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியுமிருக்கின்றன. ஆகையால் அச்சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியும் குளிர்ந்த பரிசத்தின் சமானாதிகரணமேயாம். அச்சத்தா ஜாதியைக்கொண்டு குண. கருமங்களிலும், திரவியத்தன்மை ஜாதியைக்கொண்டு பிருதிவி முதலிய திரவியங்களிலும், அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவியத்தன்மை வியாப்பியம்" என்னும் இது அந்த லக்ஷணத்தை நிகழச்செய்யும் ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு அச்சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் குறைவில்லாவிடத்திருப்பனவாகையால் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் அஜ்ஜலத்தின் லக்ஷணத்திற்கு குண, கருமங்களிலும், பிருதிவி முதலிய திரவியங்களிலும் அதிவியாப்தியுண்டாகாது. ஆகையால் முற்கூறிய ஜலத்தின் லக்ஷணம் தோஷமில்லாததாம். இதுகாறும் "குளிர்ந்த பரிச முடையது ஜலம்" என்னும் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபித்தனம்.

### உ௬௪ ஜலத்தன்மை ஜாதியுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம்.

இனி "ஜலத்வஜாதிமஜ்ஜலம்" என்னு மிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எத்திரவியம் சமவாய சம்பந்தமாக ஜலத் தன்மை ஜாதியுடையதாமோ அத்திரவியம் ஜலமெனப்படுகின்றது. சமவாய சம்பந்தமாக ஜலத்தன்மை ஜாதி கேவலம் ஜல மாத்திரத்திலேயே யிருக்கின்றது. அஜ்ஜலத்தினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களிலிருப்பதில்லை. ஆகையால் அஜ்ஜலத்தன்மை ஜாதியுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—இஜ்ஜலத்தன்மை ஜாதியுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவிக்கும்போது முதலில் சில பிரமாணத்தால் ஜலத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகவேண்டும். ஜலத்தன்மை ஜாதியின் சித்தியின்றி ஜலத்தின் லக்ஷணம் சம்பவியாது. ஆகையால் சில பிரமாணத்தால் ஜலத்தன்மை ஜாதியின் சித்தி அவசியம் செய்யவேண்டுமென்னும் சங்கையுண்டாக இனி பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் ஜலத்தன்மை ஜாதியின் சித்தி செய்வாம்.

### உ௬௫. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் ஜலத்தன்மை ஜாதியின் சித்தி.

நதி, கிணறு, தடாகம், சமுத்திரமிவை முதலியவைகளின் ஜலங்களில் இதுஜலம், இதுஜலமென்னும் ஓர் தர்மவடிவமாக ஏகாகாரப்பிரதீதி உலகர் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வேகாகாரப் பிரதீதி யெல்லா ஜலங்களில் இருப்பதாகிய ஜலத்தன்மை ஜாதி வடிவ விஷய மொன்றுளேயே யுண்டாகின்றது. ஆகையால் இதுஜலம், இது ஜலமென்னும் உலகவர்களின் பிரத்தியக்ஷமே அஜ்ஜலத் தன்மை ஜாதியில் பிரமாணமாம்.

சங்கை:—இது ஜலம், இது ஜலமென்னும் பிரதீதி பிரசித்த நதி, கிணறு முதலியவைகளிலோ யுண்டாகின்றது. எனினும் பரமாணு வடிவ அதீந்திரிய ஜலத்திலும், ரசனவிந்திரிய வடிவ அதீந்திரிய ஜலத்திலும் பிரதீதி ஒருவருக்கு முண்டாகிறதில்லை. ஆகையால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அதீந்திரிய ஜலத்தில் ஜலத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாததாகு மென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அஜ்ஜலத் தன்மை ஜாதியின் சித்தி செய்வாம்.

### உ௬௬. அநுமானப் பிரமாணத்தால் ஜலத்தன்மையின் சித்தி.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம், "ஜலநிஷ்டாயாஸ்ஸ்நேஹ ஸம வாயிகாரணதா ஸா கிஞ்சித்தர்மாவச்சிந்நா காரணதாத்வாத் தந்துநிஷ்டகாரணதாவத்" (இ-ள்.) ஜலத்திலிருப்பதாகிய சிநேஹ குணத்தின் சமவாயி காரணத் தன்மை யாதோ அக்காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம். காரணத் தன்மையாவதால் யாதுயாது காரணத்தன்மை யாமோ அவ்வக் காரணத்தன்மை ஓர்தர்மத்தால் அவச்சின்னமேயாகின்றது. நிரவச்சின்னமாக ஓர் காரணத் தன்மையு முண்டாகாது. எங்ஙனம் தந்துக்களிலிருப்பதாகிய படத்தின் சமவாயி காரணத்தன்மை தந்துத்தன்மை

தர்மத்தால் அவச்சின்னமாகின்றது. அங்ஙனமே அஜ்ஜலத்திலுள்ள சினேஹ குணத்தின் சமவாயி காரணத் தன்மையும் ஓர் தர்மத்தால் அவச்சின்னம் அவசியமாகும். அக்காரணத் தன்மையின் அவச்சேதக தர்மம் அஜ்ஜலத் தன்மை ஜாதியாகவே சம்பவிக்கிறது. வேறோர் தர்மமும் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகச் சம்பவியாது. ஏனெனின் எத்தர்மம் எக்காரணத் தன்மையின் குறைந்தவிடத்தும் அதிகவிடத்துமிருப்பதாகாமல் காரணத்தன்மையின் சமானவிடத்திருக்கின்றதோ அத்தர்மமே அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. அக்காரணத்தன்மையைவிட குறைந்த அதிக விடத்திலிருக்கும் தர்மம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகாது. ஆண்டு அச்சினேக குணத்தின் சமவாயி காரணத் தன்மை கேவலம் ஜல மொன்றிலேயே யிருக்கின்றது. அஜ்ஜலத்திலும் வேறான வேறோர் திரவியத்திலிருப்பதில்லை. அன்றியும் அஜ்ஜலத்தன்மை ஜாதியும் கேவலம் அஜ்ஜல மாத்திரத்திலேயேயிருக்கின்றது. அஜ்ஜலத்திலும் வேறான வேறோர்திரவியத்திலிருப்பதில்லை. ஆகையால் அஜ்ஜலத் தன்மை ஜாதியிலேயே அச்சினேகத்தின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதகத் தன்மை சம்பவிக்கின்றது. அஜ்ஜலத்தில் சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியுமிருக்கின்றது. என்றாலும் அச்சத்தா ஜாதியும், திரவியத் தன்மை ஜாதியும் கேவலம் ஜல மாத்திரத்திலேயேயிருப்பதில்லை. பிருதிவி முதலியவைகளிலு மிருக்கின்றது. ஆகையால் அதிகவிடத்திருப்பதாவதால் சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியும் அக்காரணத்தன்மையின் அவச்சேதகமாகாது.

## உகூஎ. கூறிய அநுமானத்தால் ஜலத்தன்மை ஜாதி சித்தியாமையின் சங்கை.

சங்கை:—இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் துவியணுகாதி வடிவ ஜலத்தில் ஜலத்தன்மை ஜாதியின்சித்தி யுண்டாய் விடுகின்றது. எனினும் பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் ஜலத்தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகமாட்டாது. ஏனெனின் பரமாணு வடிவ நித்திய ஜலத்திலிருப்பதாகிய சினேக குணம் நித்தியமாகின்றது. துவியணுகாதி வடிவ அநித்திய ஜலத்திலிருப்பதாகியசினேஹகுணம்அநித்தியமாகின்றது. எத்தருமம்நித்திய அநித்தியமென்னு மிரண்டிலிருக்கின்றதோ அத்தர்மம் காரியத் தன்மையின் அவச்சேதகமாகாது. எங்ஙனம்: நித்திய அநித்திய பரிமாணத்தி லிருப்பதாகிய பரிமாணத்தன்மைத்தருமம் திரவியத்தை நிரூபிக்கும் காரியத்தன்மையின் அவச்சேதகமாகாது. அங்ஙனமே சினேஹத்தன்மைத்தருமமும் நித்திய,அநித்திய சிநேஹத்திலிருப்பதாவதால் அஜ்ஜலத்தை நிரூபிக்கும் காரியத் தன்மையின் அவச்சேதகமாகமாட்டாது. ஜன்னிய சிநேஹத் தன்மை வடிவ தர்மமே காரியத் தன்மையின் அவச்சேதகமாகும். அஜ்ஜன்னிய சினேஹத்தின் சமவாயி காரணத் தன்மை கேவலம் ஜன்னிய ஜலத்திலேயே யிருக்கின்றது. பரமாணு வடிவ நித்திய ஜலத்திலின்றாம். ஆகையால் கூறிய அவ்வநுமானப் பிரமாணத்தால் அப்பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் அஜ்ஜலத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாததாகும்.

உகூ௭. வேறுவகை அநுமானத்தால் ஜலத்தன்மை ஜாதியின் சித்தி.

சமாதானம் :—துவியணுகாதி வடிவ ஜன்னிய ஜலத்தில் ஜன்னிய சிநேஹத்தின் சமவாயிகாரணத்தன்மையிருக்கின்றதென்னும்வார்த்தையோ விவாதமில்லாதத்தாம். ஆகையால் முதலில் ஜன்னியசிநேகத்தின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜன்னிய ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்க. அதாவது ஜன்னிய ஜலமாத்திரத்திலிருக்கும் ஜலத்தன்மைஜாதியின் சித்தியைச்செய்க. அதன் பின்னர் அஜ்ஜன்னிய ஜலத்தன்மை ஜாதியால் அவச்சின்ன ஜன்னிய ஜலத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜன்னிய, அஜன்னிய வெல்லா ஜலத்திலிருக்கும் சுத்த ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்க. எங்ஙனம் துவியணுகமுதலிய அநித்திய ஜலத்தில் திரியணுக முதலிய ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றதோ அங்ஙனமே பரமாணு வடிவ நித்திய ஜலத்திலும் துவியணுக வடிவ ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அப்பரமாணு வடிவ நித்திய ஜலத்திலும், துவியணுகாதி வடிவ அநித்திய ஜலத்திலும் ஜன்னிய ஜலத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

சங்கை :—அந்தியாவயவி வடிவஜலத்தில் ஜன்னியஜலத்தின் சமவாயி காரணத் தன்மையின்றும். ஆகையால் ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக அந்தியாவயவி வடிவ ஜலத்தில் ஜலத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாததாகும்.

சமாதானம் :—ஓர்ஜலத்திலும் அந்தியாவயவித்தன்மையுண்டாகாது. ஆனால் எல்லா ஜல மாத்திரத்தில் வேறு ஜலத்தின் சையோகத்தால் வேறு ஜலத்தை உண்டாக்குவதற்கு யோக்கியத்தன்மை பிரத்தியக்ஷசித்தமாம்.

சங்கை :—ஜலமாத்திரத்தில் ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத் தன்மை அங்கீகரிக்கின் வருண லோகத்திலுள்ள ஜலீய சரீரத்திலும் ஓர் ஜன்னிய ஜலத்தினுற்பத்தி யுண்டாகவேண்டும். அங்ஙனமே ரசன விந்திரிய வடிவ ஜலத்தாலும் ஓர் ஜன்னிய ஜலத்தினுற்பத்தி யுண்டாகவேண்டும். அச்சரீர விந்திரிய வடிவ ஜலத்தால் ஓர் ஜன்னிய ஜலத்தினுற்பத்தி யுண்டாகாது.

சமாதானம் :—அஜ்ஜலீய சரீரத்திலும். ஜலீய விந்திரியத்திலும் ஜன்னிய ஜலத்தின் பலோபதாயகத் தன்மை வடிவ காரணத் தன்மை யின்றும். என்றாலும் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையிருக்கின்றது. ஈண்டு இது கருத்தாம். அக்காரணத் தன்மை யிருவகைத்தாம். ஒன்றோ பலோபதாயகத் தன்மை வடிவ காரணத் தன்மையும், மற்றையது ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையுமாம்.

உகூஅ. பலோபதாயகத் தன்மை வடிவ காரணத் தன்மையின் லக்ஷணம்.

“ கார்யவ்யாப்தி ... ஸம்ப ... வயாயகத்வம் ” (இ-ள்.) காரிய வடிவ பயனுக்கு முன் மறைப்பின்றி யிருத்

தல் தன்மை வடிவச்சம்பந்தமாக பயனோடு விசிஷ்டத்தன்மையாதோ அதனை பலோபதாயகத் தன்மை வடிவ காரணத்தன்மை யென்பர். எங்ஙனம் கடத்தி னுற்பத்திக் காலத்தில் குலாலனது கையிலுள்ள தண்டம் யாதோ அத்தண்டத் தில் மறைப்பின்றி முன்னிருத்தற்றன்மை வடிவச்சம்பந்தமாக கட வடிவ பய னோடு விசிஷ்டத்தன்மையிருக்கின்றது. இதுவே அத்தண்டத்தில் பலோபதா யகத்தன்மை வடிவ காரணத் தன்மையாம்.

## உஎ0. சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையின் லக்ஷணம்.

“காரணதாவச்சேதகவத்வம் ஸ்வரூபயோக்யத்வம்” (இ-ள்) காரணத் தன்மையின் அவச்சேதக தர்மம் யாதோ அத்தர்மமுடையதனை ஸ்வரூபயோக்கியத்தன்மை வடிவ காரணத் தன்மை யென்பர். எங்ஙனம்: அத்தண்டத்தி லிருக்கின்ற கடத்தின் காரணத் தன்மை யாதோ அக்காரணத் தன்மையின் அவச்சேதக தர்மம் தண்டத் தன்மையாம். அத்தண்டத்தன்மை தர்மம் எங்ஙனம் குலாலனது கையிலுள்ள தண்டத்தி லிருக்கின்றதோ அங் ஙனமே அத்தண்டத்தன்மை தருமம் வனத்திலுள்ள தண்டத்திலு மிருக்கின் றது. அக்காரணத் தன்மையின் அவச்சேதக தண்டத்தன்மை தர்மமுடை மையே அவ்வனத்திலுள்ள தண்டத்தில் அக்கடத்திற்கு ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத்தன்மையாம். அங்ஙனமே ஈண்டுப் பிரசங்கத்தில் பர மாணு முதலிய ஜலத்தில் இருக்கும் துவியணுக முதலிய ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத் தன்மை யாதோ அக்காரணத்தன்மையோ பலோபதாய கத்தன்மை வடிவ காரணத் தன்மையாம். ஜலீய சரீரத்திலும், ஜலீய இந்திரி யத்திலும் இருக்கும் ஜன்னிய ஜலத்தின் காரணத் தன்மையாதோ அக்கார ணத்தன்மை ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையாம். இத்தகைய ஸ்வரூப யோக்கியத்தன்மை வடிவ காரணத்தன்மையி னிருப்புள தாயினும் வேறு சஹகாரி காரணங்களின் அபாவமுளதாக அஜ்ஜலீய சரீர இந்திரியங்களால் ஓர் ஜன்னிய ஜலத்தினுற்பத்தி யுண்டாகிறதில்லை. எங்ஙனம் வனத்திலுள்ள தண்டத்தில் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையி னிருப்புளதாயினும் மற்றைய குலாலன், சக்கிரம், மண் முதலிய சஹகாரி காரணங்களின் அபாவமுளதாக அத்தண்டத்தால் ஓர்கடத்திற்கும் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அஜ்ஜலீய சரீர இந்திரியங்களிலும் ஜன்னிய ஜலத்தின் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

## உஎக. நித்திய பதார்த்தத்தில் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையின் சங்கை.

சங்கை:—ஜலீய சரீர இந்திரியங்களால் ஓர் ஜன்னிய ஜலத்திற்கும் உற்பத்தி யுண்டாகாதாயினும் அஜ்ஜலீய சரீர இந்திரியத்தில் ஜன்னிய ஜலத் தின் ஸ்வரூபயோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையை அங்கீகரித்து ஜலமாத்திரத்தில் எங்ஙனம் ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத்தன்மையின்

அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தி செய்யப்பட்டதோ அங்ஙனமே பரமாணுவடிவ நித்திய ஜலத்தில் ஜன்னிய சினேஹத்தின் ஸ்வரூபயோக்கியத்தன்மை வடிவ காரணத்தன்மையை அங்கீகரித்து நித்திய, அநித்திய வடிவ ஜல மாத்திரத்தில் ஜன்னிய சினேஹத்தினது சமவாயி காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்திசெய்வதில் பாதகம் யாது; ஓர் பாதகமுமின்றும். மாறாக முற்கூறிய முறைப்படி ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வதிலேயே கல்பன கௌரவ வடிவ பாதகமிருக்கின்றது அதைக் காட்டுவாம், ஆண்டு முதலிலோ ஜன்னிய சினேஹத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜன்னிய ஜலத்திலிருக்கும் ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்து அதன் பின்னர் ஜன்னிய ஜலத்தன்மை அவச்சின்ன ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலமாத்திரத்திலிருக்கும் சுத்தஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வதும், ஜலீய அந்தியாவயவியினை யொப்பாது ஜலீய சரீர இந்திரியத்தில் ஜன்னிய ஜலத்தின் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத்தன்மையைக் கல்பனம் செய்வதுமாம் இவ்வாறாய கல்பன கௌரவ வடிவத் தோஷம் பிராப்தியாகின்றது. பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் ஜன்னிய சினேஹத்தின் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையை அங்கீகரித்து நித்திய, அநித்திய வடிவ ஜல மாத்திரத்தில் ஜன்னிய சினேஹத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்யின் கௌரவ தோஷத்தின் பிராப்தியுண்டாகாது.

## உஎஉ. நித்திய பதார்த்தத்தில் சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையின் கண்டனம்.

சமாதானம்:—பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் ஜன்னிய சினேஹத்தின் ஸ்வரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மையினை அங்கீகரிக்கின் அப்பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் அவசியமாக ஓர் காலத்தில் ஜன்னிய சினேஹத்தி னுற்பத்தி யுண்டாகும். ஏனெனின் நூலாசிரியரின் நியமமிதுவாம். "நித்யஸ்யஸ்வரூபயோக்யத்வஸ்யாவஸ்யம்பாவநியமஃ" (இ-ள்.) நித்தியபதார்த்தத்தில் ஓர்காரியத்தினது உற்பத்தியின் ஸ்வரூப யோக்கியத்தன்மை வடிவகாரணத்தன்மையை அங்கீகரிக்கின் நித்தியபதார்த்தத்தால் காரிய வடிவ பயனது உற்பத்தி அவசியமாக உண்டாகும். ஏனெனின் நித்தியபதார்த்தத்திற்கு நாசம் ஒருபோதுமுண்டாகாது. சிலகாலத்திற்குப்பிறகு வேறு காரண சாமக்கிரியின் உதவியால் நித்திய பதார்த்தத்தால் காரியத்தின் உற்பத்தி அவசியமாகவுண்டாகும். அநித்திய பதார்த்தத்தில் ஸ்வரூபயோக்கியத்தன்மை வடிவ காரணத்தன்மையினை அங்கீகரிக்கினும் காரியத்தினுற்பத்தியினது நியமம் அவசியமாக சம்பவியாது. எங்ஙனம்: வனத்திலுள்ள காஷ்ட வடிவ தண்டத்தில் கட வடிவ காரியத்தினது உற்பத்தியின் ஸ்வரூப யோக்கியத்தன்மையுளதாயினும் குலாலன், சக்கிரம், மண் முதலிய சாமக்கிரியினிருப்பிலதாக கட வடிவ காரியத்தின் உற்பத்தியைச் செய்யாமலே அத்

தண்டம் வன்னி முதலியவைகளால் நஷ்டமாய் விடுகின்றது. ஆகையால் இவ்வர்த்தம் சித்தித்தது. பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் ஜன்னிய சினேஹத்தின் ஸ்வரூபயோக்கியத்தன்மை வடிவகாரணத்தன்மையினை அங்கீகரித்து ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்யின் அஜ்ஜல பரமாணுக்களில் ஓர் காலத்தில் அவசியமாக சினேஹ குணத்தின் உற்பத்தி யுண்டாகும். அது நியாய சித்தாந்தத்தில் அங்கீகாரமின்றாம். ஆகையால் ஜன்னிய சினேஹத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வது சம்பவியாது. ஆனால் முற்கூறிய முறைப்படி ஜன்னிய ஜலத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவே ஜலத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

## உளங. வேறுவகையாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தி.

சில நூலாசிரியரோ "நித்யஸ்நேஹஸமவாயிகாரணத்வாவச்சேதகம் ஜலத்வம்" என்னும் நியமத்தினை அங்கீகரியாது ஜன்னிய சினேஹத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவே நித்திய, அநித்திய வடிவ ஜலமாத்திரத்தில் ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்கின்றனர். முற்கூறிய முறையாக ஜலத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாக ஜலத்தன்மை ஜாதியுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

## உளச. ஜலத்திலிருக்கும் பதினான்கு குணங்களின் வர்ணனம்.

இவ்வாறாக குளிர்ந்த பரிசமுடைமை வடிவ லக்ஷணத்தானும், ஜலத்தன்மை ஜாதியுடைமை வடிவ லக்ஷணத்தானும் லக்ஷித ஜலம் யாதோ அஜ்ஜலத்தில் உருவம், ரசம், ஸ்பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், சினேஹம், வேகம் என்னும் பதினான்கு குணங்களிருக்கின்றன.

## உளரு. நித்திய, அநித்திய வேறுபாட்டால் ஜலத்தி னிருவிதவேற்றுமை.

இவ்வாறாய பதினான்கு குணங்களுடைய ஜலம் நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டாலிருவகைத்தாம். ஆண்டு பரமாணு வடிவ ஜலமோ நித்தியமெனப்படுகின்றது. துவியணுகாதி காரிய வடிவ வெல்லா ஜலமும் அநித்தியமெனப்படுகின்றது; அங்ஙனமே அவயவியெனப்படுகின்றது.

## உளசா. சரீர, இந்திரிய, விஷய வேறுபாட்டால் அநித்திய ஜலத்தின் மூவகை வேற்றுமையின் வர்ணனம்.

அவயவி வடிவ அநித்திய ஜலமும் சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

## உளள. ஜலீய சரீரத்தின் லக்ஷணம்.

"ஶீதஸ்பர்ஶவச்சரீரம் ஜலீயஶரீரம்" (இ-ள்.) எச்சரீரம் சமவாய சம்பந்தமாக குளிர்ந்த பரிசமுடையதாமோ அச்சரீரம் ஜலீய சரீரமெனப்படுகின்றது.

### ௨௭௮. வேறுவகையாக ஜலீய சரீரத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த ஜலீய சரீரத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன ஜலீய சரீரத்திலும் குளிர்ந்த பரிசத்தின் அபாவமிருப்பதால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாமெனினும் முற்கூறிய ஜலத்தின் லக்ஷணத்தைப் போன்று ஈண்டும் "ஶீதஸ்பர்ஶஸமாநாதிகரண த்ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிமத் ஶரீரம் ஜலீயஶரீரம்" என்னும் ஜலத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் ஜலீய சரீரத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சரீரம்" என்னும் பதம் ஜலீய இந்திரிய விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றையபதங்களின் பயன் முற்கூறியவாறே அறிந்துகொள்க. இத்தகைய பரிசமுடைய ஜலீயசரீரம் வருணலோகத்திலேயே பிரசித்தமாம். அஜ்ஜலீய சரீரம் கேவலம் அயோனிஜமேயாம்.

### ௨௭௯. ஜலீய முதலிய சரீரங்களில் கை, கால் முதலியவைகளினது அசம்பவத்தின் சங்கை.

சங்கை:—இத்தகைய ஜலீய சரீரங்களில் முகம், பல், கை, கால், நகம், கேசமிவை முதலிய அவயவங்கள் சம்பவியாது. முக முதலிய அவயவங்களின்றி ஆஹாரம், விஹார முதலியன சம்பவியாது. ஆஹார, விஹாரங்களின்றி அச்சரீரத்தில் போகத்திற் கிடமாந்தன்மை சம்பவியாது. போகத்திற் கிடமாந்தன்மையின் அபாவமிருக்க ஜலீயசரீரங்களில் சரீரத்தன்மையே சம்பவியாதாகும். எக்காரணத்தாலெனின், சாத்திரத்தில் போகத்திற்கிடம் சரீரமெனக் கூறப்பட்டிருக்கிறது.

### ௨௮௦. ஜலீய முதலிய சரீரங்களில் பிருதிவி முதலியவைகளது சம்பந்தமாக கை, கால் முதலியவைகளின் சம்பவ வர்ணனம்.

சமாதானம்:—வருணலோகத்திலுள்ள ஜலீய சரீரங்களில் பிருதிவி முதலிய பூதங்களின் கூறும் கலப்புற்றிருக்கின்றன. ஆகையால் பனி, மேக முதலியவைகளைப்போன்று உறைந்து வலிவையடைந்து ஜலீய சரீரங்களில் முகம், தந்தம் முதலிய அவயவங்கள் சம்பவிக்கின்றன. அங்ஙனமே அவ்வவயவங்களால் ஆஹார, விஹார முதலியனவும் சம்பவமாய் விடுகின்றன. அவ்வாஹார, விஹார முதலியவைகளின் சம்பவமுள்ளதாக ஜலீய சரீரங்களில் போகத்திற்கிடமாந் தன்மையால் சரீர வடிவத் தன்மையும் சம்பவிக்கின்றது. அஜ்ஜலீயசரீரங்களில் கேவலம் ஜலத்திற்கே உபாதான காரணத்தன்மையிருக்கின்றது. பிருதிவி முதலிய பூதங்கட்கு நிமித்த காரணத் தன்மையிருக்கின்றது. ஆகையால் அச்சரீரங்களை ஜலீய சரீரமென்பர். இவ்வாறுயவஸ்தை பின்னர்க் கூறப்படும் தைஜச சரீரங்களினும், வாயவீய சரீரங்களினும் அறிந்து கொள்க. இனி ஜலீய இந்திரியத்தின் நிரூபணஞ் செய்வாம்.

### உ௪க. ஜலீய இந்திரியத்தின் லக்ஷணம்.

“ஶீதஸ்பர்ஶவதிந்த்ரியம் ஜலீயேந்த்ரியம்” (இ-ள்.) எவ்விந்திரியம் சமவாய சம்பந்தமாக குளிர்ந்த பரிசமுடையதாமோ அவ்விந்திரியம் ஜலீய இந்திரியமெனப்படுகின்றது. இத்தகைய குளிர்ந்த பரிசமுடைய இந்திரியம் ரசன இந்திரியமாம்.

### உ௪உ. வேறுவிதமாக ஜலீய இந்திரியத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த ரசன இந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன ரசன இந்திரியத்திலும் குளிர்ந்த பரிசத்தின் அபாவமிருப்பதால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகுமெனினும் முற்கூறிய ஜலத்தின் லக்ஷணத்தைப்போன்று ஈண்டும் “ஶீதஸ்பர்ஶஸமாநாதிகரணத்ரவ்யத்வவ்யாப்ய ஜாதிமதிந்த்ரியம் ஜலீயேந்த்ரியம்” என்னும் ஜலத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் ரசன இந்திரியத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டிருந்த லக்ஷணத்தில் “இந்திரியம்” என்னும் பதம் ஜலீய சரீர விஷயத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முன்னுரைத்த வாறே யறிந்து கொள்க. அந்த ரசன இந்திரியம் நாவினுனியி லிருப்பதும் மதுர முதலிய அறுவகை ரசங்களை கிரஹிப்பதுமாம்.

சங்கை:—அந்த ரசன இந்திரியம் ஜலீய இந்திரியமாமென்பதில் பிரமாணம் யாதென்னும் சங்கையுண்டாக வினி அநுமானப் பிரமாணத்தால் ரசன இந்திரியத்தில் ஜலீயத்தன்மை சித்தியைச் செய்வாம்.

### உ௪ரு. ரசன இந்திரியத்தில் அநுமானப் பிரமாணத்தால் ஜலீய வடிவத் தன்மையின் சித்தி.

அவ்வநுமானத்தி னுகாரமிதுவாம். “ரஸநேந்த்ரியம் ஜலீயம் கந்தாத்யவ்யஞ்ஜகத்வே ஸதி ரஸவ்யஞ்ஜகத்வாத் ஸக்துரஸாபிவ்யஞ்ஜகோதகவத்” (இ-ள்.) ரசன இந்திரியம் ஜலீயமாக யோக்கியமாம் கந்த முதலிய குணங்களை வெளியாக்காது ரச குணத்தை வெளியாக்குவதால், எவ்வெத்திரவியம் கந்தமுதலிய குணங்களை வெளியாக்காது ரச குணத்தை வெளியாக்குகின்றதோ அவ்வத்திரவியம் ஜலீயமேயாகின்றது. எங்ஙனம்: பிரசித்த ஜலம் மாவின் கந்தமுதலியவைகளை வெளியாக்காது மாவின் ரச குணத்தையே வெளியாக்குகின்றது. ஆகையால் இஜ்ஜலத்தில் ஜலீயத்தன்மைப் பிரசித்தமேயாம். அங்ஙனமே அந்த ரசன இந்திரியமும் அன்ன முதலிய பதார்த்தங்களின் கந்த முதலியவைகளை வெளியாக்காது கேவலம் ரச மாத்திரத்தையே வெளியாக்குகின்ற தாகையால் ரசன இந்திரியத்தில் ஜலீயத் தன்மையும் அவசியம் ஒப்பவேண்டும். ஆண்டு இவ்வநுமானத்தில் “ரசத்தை வெளியாக்குவதால்” என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் “கந்த முதலியவைகளை வெளியாக்காது” என்னும் பதங் கூருவிடின் மனதில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின் மனமின்றி யோர்வத்துவின் ஞானமுமுண்டாகாது. ஆகையால் அம்மனமும் ரசத்தை வெளியாக்குவதேயாம்.

ஆனால் அம்மனதில் ஜலீயத்தன்மை வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் அஜ்ஜலீயத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை மனதிலிருப்ப தால் ரசத்தை வெளியாக்குந் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும் அவ் வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "கந்த முதலியவைகளை வெளியாக்காது" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அம் மனதில் கந்த முதலியவைகளை வெளியாக்காத்தன்மையின்றாம். வெளியாக் குந்தன்மையேயிருக்கின்றது. ஆகையால் அம்மனதில் அவ்வேதுவிற்கு விய பிசாரமுண்டாகாது. அல்லது "கந்தமுதலியவைகளை வெளியாக்காததால்" என் விம்மாத்திரமே ஏதுவாகக் கூறின் கருமம், சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் கருமம், சாமான்னிய முதலிய பதார்த்தங்கள் கந்த முதலிய குணங்களை வெளியாக்கா ததேயாம். கருமம், சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் ஜலீயத்தன்மை வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் ஜலீயத்தன்மை சாத்தியத்தின் அபாவ முடைமை கருமம், சாமான்னிய முதலிய பதார்த்தங்களி லிருப்பதாவதால் கந்தமுதலியவைகளை வெளியாக்காத் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ரசத்தை வெளியாக்குவதால்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கரு மம், சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் அந்த ரசகுணத்தை வெளியாக் குந் தன்மையில்லை. ஆகையால் கரும முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது "கந்த முதலியவைகளை வெளியாக்காது ரசத்தை வெளியாக்குவதால்" எனக்கூறிய ஏதுவிற்கும் ரசன இந்திரியத்தின் சம்பந்தத்தில் வியபிசாரமே யுண்டாம், ஏனெனின், எங்ஙனம் ரசன இந்திரியம் கந்தமுதலியவைகளை வெளியாக்காது ரசத்தை வெளியாக்குகின் றதோ அங்ஙனமே அந்த ரசன இந்திரியத்திற்கு ரசத்தினோடு சுவசம்யுக்த சமவாய வடிவ சம்பந்தம் யாதோ அச்சம்பந்தமும் அக்கந்த முதலியவைகளை வெளியாக்காது ரச மாத்திரத்தையே வெளியாக்குவதாகின்றது. ஆனால் அச்சம்பந்தத்தில் ஜலீயத் தன்மை வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் ஜலீயத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அச்சம்பந்தத்தி லிருப்பதால் ரசத்தை வெளியாக்குந்தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு கூறிய அவ்வேது வில் "திரவியமாய்" என்னும் பதமும் கூறுக. அதாவது "திரவியமாய் கந்த முதலியவைகளை வெளியாக்காது ரசத்தை வெளியாக்குவதால்" என இவ்வ ளவேது கூறுக. ஆண்டு அச்சம்பந்தத்தில் திரவியத்தன்மைத்தருமமின்றாம். ஆகையால் அச்சம்பந்தத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டா காது. இவ்வாறாய அநுமானத்தால் ரசன இந்திரியத்தில் ஜலீயத்தன்மையே சித்தமாகின்றது.

## உ௪௪. ஜலீய விஷயத்தின் லக்ஷணம்.

இனி ஜலீயவிஷயத்தின் நிரூபணஞ் செய்வாம். ஆண்டு "ஶீதஸ்பர்ஶ வத்விஷய: ஜலீயவிஷய:" (இ-ள்.) எவ்விஷயம் சமவாய சம்பந்தமாக

குளிர்ந்த பரிசமுடையதாமோ அவ்விஷயம் ஜலீய விஷயமெனப்படுகின்றது. ஆண்டு திவ்யனாக வடிவ ஜல முதலாக நதி, சமுத்திரம், கிணறு, தடாகம், பனி, மேகம் இவை முதலிய வெல்லா ஜலங்களும் சமவாய சம்பந்தமாக குளிர்ந்த பரிசமுடையன வாகையால் ஜலீய விஷயங்களெனப்படுகின்றன.

உ௪ரு. வேறுவகையாக ஜலீய விஷயத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த ஜலீய விஷயத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன ஜலீய விஷயத்திலும் குளிர்ந்த பரிச குணத்தின் அபாவமிருப்பதால் கூறிய இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்ற தெனினும் முற்கூறிய ஜலத்தின் லக்ஷணத்தைப் போன்று ஈண்டும் "ஶீதஸ்பர்ஶ ஸமாநாதிகரண த்ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிவிஶிஷ்டஃ ஜலீயவிஷயஃ" என ஜலத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக்கூறுவதால் அஜ்ஜலீய விஷயத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "விஷயம்" என்னும் பதம் ஜலீய சரீர இந்திரியங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முன்னுரைத்தவாறே அறிந்து கொள்க. ஆண்டு பனி, மேக முதலியவைகளி னுற்பத்தி விலக்ஷண திவ்விய தேயுவின் சையோகத்தானுண்டாகின்றது.

உ௪சு. பனி, மேகமுதலியவைகளில் பார்த்திவத் தன்மையின் சாதகமாக பூர்வபக்ஷம்.

சங்கை:—பனி, மேக முதலியவைகளில் ஜல வடிவத்தன்மைச் சம்பவியாது. எனெனின் ஜலத்தில் கடின பரிசமிருப்பதில்லை, பிருதிவியிலேயே கடின பரிசமிருக்கின்றது. பனி, மேகம் முதலியவைகளில் கடினப்பரிசம் யாவருக்கும் பிரத்தியக்ஷமாக தோற்றுகின்றது. ஆகையால் பனி, மேக முதலியன பிருதிவி வடிவமேயாம். அல்லது ஜலத்தில் இயல்பாயுள்ள நெகிழ்ச்சி யிருக்கின்றது; நிமித்தத்தானய நெகிழ்ச்சி யிருப்பதில்லை. பிருதிவி, தேயுக்களிலேயே நிமித்தத்தானய நெகிழ்ச்சி யிருக்கின்றது. அவ்வியல்பாயுள்ள நெகிழ்ச்சி பனி, மேக முதலியவைகளிலின்றாம். ஆனால் பனி, மேக முதலியவைகளில் நிமித்தத்தானய நெகிழ்ச்சி யிருக்கின்றது. ஆண்டு வன்னி முதலிய தேயுவின் சம்பந்தத்தாலுண்டாம் நெகிழ்ச்சி நிமித்தத்தானய நெகிழ்ச்சி யென்ப்படுகின்றது. எங்ஙனம்: நெய், அரக்கு, பொன் முதலியவைகளின் நெகிழ்ச்சி போலும். அத்தகைய நிமித்தத்தானகிய நெகிழ்ச்சியுடையன வாகையாலும் பனி, மேக முதலியனவும் பிருதிவி வடிவமாகவே சித்தமாகின்றன.

உ௪எ. பனி, மேகம் முதலியவைகளில் ஜலவடிவத் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம்:—அப்பனி, மேக முதலியன எப்பொழுது இரவி முதலிய தேயுவின்வெப்பத்தால் நஷ்டமாய்விடுகின்றனவோ அப்பொழுது பனி, மேக முதலியவைகளில் ஜலீய வடிவத்தன்மைப் பிரத்தியக்ஷமாகவே தோற்றுகின்றது. எத்திரவியம் எத்திரவியத்தின் துவம்சத்தா லுண்டாகின்றதோ அத்திரவியம் அத்திரவியத்தி னுபாதான காரண வடிவ அவயவங்களி னுபாதேயமே யாகின்றதென்னும் நியமம் முன்னர் பிருதிவி நிரூபணத்தில்

ஆகையால் அப்பனி, மேக முதலியவைகளின் தாவம்சத் கூறி வந்துள்ளோம். ஆகையால் அப்பனி, மேக முதலியவைகளின் உபாதான காரண வடிவ அவயவம் யாதோ அதே தாலுண்டாய அஜ்ஜலத்தினுபாதான காரண வடிவ அவயவம் யாதோ அதே அவயவம் அப்பனி, மேக முதலியவைகளின் உபாதான காரணமாம். ஆகை யால் ஓர் அவயவங்களா லுண்டாவதால் அப்பனி, மேகம் முதலியனவும் பிரசித்த ஜலத்தைப்போன்று ஜல வடிவமாகவே வொப்புவது உசிதமாம். அல்லது முற்கூறப்பட்ட குளிர்ந்த பரிசமுடைமை வடிவ ஜலத்தின் லக்ஷணம் யாதோ அந்த லக்ஷணமும் அப்பனி, மேக முதலியவைகளில் அதி பிரசித்த மாகவே யிருக்கின்றது. இக்காரணத்தானும் அப்பனி, மேக முதலியவை களில் ஜலவடிவத்தன்மையே சித்தமாகின்றது. அப்பனி, மேக முதலிய ஜலங் களில் பிரசித்த ஜலத்தைப்போன்று இயல்பாயுள்ள நெகிழ்ச்சியே யிருக்கின்ற தெனினும், அவ்வியல்பாயுள்ள நெகிழ்ச்சி ஜீவர்களது புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்ட விசேஷத்தால் பிரதிபந்திக்கப் படுவதாகின்றது. ஆகையால் அக் காலத்தில் உலகவருக்கு அந்நெகிழ்ச்சிப் பிரதீதியாகிறதில்லை. இக்காரணத்தா னேயே அவ்வதிர்ஷ்ட வடிவ பிரதிபந்தகத்தின் நிவர்த்தியுண்டான் பிறகு தேயுவின் சையோக வடிவ பாகமின்றியும், பனி, மேக முதலியவைகளில் மீண்டும் அந்நெகிழ்ச்சியுலகவருக்குப் பிரதீதியாகின்றது. ஓர்கால் பனி, மேகங் களில் பார்த்திவ வடிவத் தன்மை யுண்டாயின் எங்ஙனம் நெய், அரக்கு முத லிய பார்த்திவ வத்துக்களில் வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தானேயே நிமித்தத்தாலுய நெகிழ்ச்சியுண்டாகின்றதோ அங்ஙனமே அப்பனி, மேக முதலியவைகளிலும் வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தானேயே அந்நிமித்தத்தாலுய நெகிழ்ச்சி யுண்டாக வேண்டும். அது அங்ஙனம் காணக்கிடைப்பதில்லை. யாண்டு வன்னி, சூரியன் முதலிய தேயுவின் சம்பந்தமில்லாம லிருக்கின்றதோ ஆண்டும் அப்பனி, மேகமுதலிய வைகளில் அந்நெகிழ்ச்சிப் பிரதீதமாகின்றது. ஆகையால் அப்பனி, மேகமுத லியவைகளில் நிமித்தத்தாலுய நெகிழ்ச்சியேயின்று; இயல்பாயுள்ள நெகிழ்ச் சியே யிருக்கின்றது. அப்பனி, மேக முதலியவைகளில் கடினத்தன்மையின் பிரதீதியுண்டாவது யாதோ அந்தப் பிரதீதியோ அந்தப் பிரதிபந்தகத்தின் வசமாக அப்பனி, மேக முதலியவைகளின் இயல்பாயுள்ள நெகிழ்ச்சியினைக் கிரஹிக்காததாகி மயக்க வடிவமே யாகின்றது. அந்தப் பிரதீதி பிரமாவடிவ மன்று. அல்லது அப்பனி, மேக முதலியவைகளில் கலப்புற்றிருக்கும் பார்த் திவக் கூறின் கடினத்தன்மையே பிரதீதமாகின்றது. எங்ஙனம்: பொன் வடிவ தேயுவில் கலப்புற்ற பார்த்திவக் கூறின் மஞ்சள் உருவமும், குருத்வமுமே (பளுவுமே) பிரதீதமாவதுபோலும்.

### உ௩௪. பனி, மேக முதலியவைகளில் ஜலவடிவத் தன்மையின் சாதக யுக்தி.

சில நூலாசிரியரோ விது கூறுகின்றனர். அஜ்ஜலத்தினோடு விலக்ஷ ணத் திவ்விய தேயுவின் சையோகத்தானேயே அப்பனி, மேக முதலியவைக ளின் உற்பத்தியுண்டாகின்றது. ஆண்டு அஜ்ஜலத்தில் திவ்விய தேயுவின் பிர வேசத்திற்குப்பின் அஜ்ஜலங்களுக்கு அவ்வியல்பாயுள்ள நெகிழ்ச்சி நாசமாய் விடுகின்றது. அதன் பின்னர் சூரியன் முதலிய தேயுவின் வெப்பத் தன்மை யின் சையோக சம்பந்தமுண்டாக அத்திவ்விய தேயுவின் சம்யோகம் நீங்கி விடுகின்றது அதன்பின்னர் அஜ்ஜலங்களில் மீண்டும் இயல்பாயுள்ள நெகிழ்ச்சி யுண்டாவதாகின்றது. எவ்வாற்றாலும் பனி, மேக முதலியன ஜல வடிவமே யாம். ஜல வடிவ நிரூபணம் முற்றிற்று. இனி தேயுவின் நிரூபணம்.

## உ௫க. தேயுவடிவத் திரவிய நிரூபணம்.

“ உஷ்ணஸ்பர்சவத் தேஜ: ” “ தேஜஸ்த்வஜாதிமத் தேஜ: ”

### உகூ0. வெம்மைப் பரிசமுடைமை வடிவத் தேயுவின் லக்ஷணம்.

இனி யிவ்விரு லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எத்திரவியம் சமவாயசம்பந்தமாக வெம்மைப் பரிசமுடையதாமோ அத்திரவியம் தேயுவெனப்படும். ஆண்டு சமவாய சம்பந்தமாக வெம்மைப் பரிசம் கேவலம் தேயுவிலேயே யிருக்கின்றது. தேயுவினும் வேறான பிருதிவி முதலியத் திரவியங்களில் வெம்மைப் பரிசமிருப்பதில்லை. ஆகையால் வெம்மைப் பரிசமுடைமை வடிவத் தேயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு “பரிசமுடையது தேயு” என விம்மாத்திரமே தேயுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “வெம்மை” என்னும் பதங் கூறுவிடின் பிருதிவி, ஜலம், வாயு வென்னும் மூன்றுத் திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அத்தேயு வடிவத்திரவியம் பரிசகுணமுடையதாமோ, அங்ஙனமே பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்களும் பரிசகுணமுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அப்பரிசத்திற்கு “வெம்மை” என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வெம்மைப் பரிசம் கேவலம் தேயுவிலேயே யிருக்கின்றது. தேயுவினும் வேறான பிருதிவி முதலியவைகளில் வெம்மைப் பரிசமிருப்பதில்லை. ஆகையால் பிருதிவி முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### உகூக. அந்த லக்ஷணத்திற்கு ஜலமுதலியவைகளில் அதிவியாப்தியினதும், சந்திரன் முதலிய தேயுவில் அவ்வியாப்தியினதும் சாதகமாக வாதியின் சங்கை.

சங்கை :—இவ்வெம்மைப் பரிசமுடைமை வடிவ தேயுவின் லக்ஷணம் அதிவியாப்தி தோஷத்தானும், அவ்வியாப்தி தோஷத்தானும் தூஷிக்கப்படுவதாவதால் சம்பவியாது. ஆண்டு இஜ்ஜலம் வெப்பமாயிருக்கின்றது, இக்காற்று வெப்பமாயிருக்கின்றது, இம்மண் வெப்பமாயிருக்கின்றது என்னும் பிரதீதி யுலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அம்மூன்றுப் பிரதீதிகளும் முறையாக நீரின் வெப்பத்தையும், காற்றின் வெப்பத்தையும், மண்ணின் வெப்பத்தையும் விஷயஞ் செய்கின்றன. ஆகையால் அவ்வெம்மைப் பரிசமுடைமை வடிவத் தேயுவின் லக்ஷணத்திற்கு, அஜ்ஜல முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகின்றது. அன்றியும் சந்திரன், மின்னல், ரத்தினம், பொன், சக்ஷுவிந்திரியமா மிவ்வெல்லாம் தேயுத் திரவியமாம் ; ஆனால் சந்திரன் முதலியவைகளில் வெம்மைப் பரிசம் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் அச்சந்திரன் முதலிய தைஜச பதார்த்தங்களில் வெம்மைப் பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகின்றது.

### உகூஉ. ஜல முதலியவைகளில் தேயுவின் சம்பந்தத்தால் வெம்மைப் பரிசமுடைமை வடிவத் தோற்றத்தின் வர்ணனம்.

சமாதானம்:—வெம்மைப் பரிசமுடைய தேயுவின் சையோக சம்பந்த முளதாகவே அஜ்ஜல முதலியவைகளில் வெம்மைத் தன்மைப் பிரதீதமாகின்றது. தேயுவின் சையோக சம்பந்தத்தின் அபாவமுளதாக அஜ்ஜல முதலியவைகளில் வெம்மைத் தன்மைத்தோற்றுகிறதில்லை. இவ்வாறுய அன்வய வெதிரேகத்தால் தேயுவின் வெம்மைப்பரிசமே சுவசமவாயி சம்யோக சம்பந்தமாக அஜ்ஜல முதலியவைகளில் தோற்றுவதாகின்றது. ஈண்டு சுவ வென்னுஞ் சத்தத்தால் வெம்மைப்பரிசத்தினைக் கிரஹிக்குக. அவ்வெம்மைப் பரிசத்தின் சமவாயிகாரணமாகியத் தேயுயாதோ அத்தேயுவின் சையோக சம்பந்தம் அஜ்ஜல முதலியவைகளி லிருக்கின்றது. இவ்வாறுய பரம்பரைச் சம்பந்தமாக தேயுவின் வெம்மைப் பரிசமே ஜல முதலியவைகளில் தோற்றுகின்றது. இயல்பாக அஜ்ஜல முதலியவைகளில் வெம்மைப்பரிசமின்றும். ஆகையால் அஜ்ஜல முதலியவைகளில் வெம்மைப் பரிசமுடைமை வடிவத்தேயுவின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### உகூங. சந்திரன் முதலிய தேயுவில் ஜல முதலியவைகளின் சீத பரிச முதலியவைகளால் வெம்மைப்பரிசம் மறைவடைவதின் வர்ணனம்.

சந்திரன் முதலிய தைஜச பதார்த்தங்களில் கூறிய இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியு முண்டாகாது. ஏனெனின், அச்சந்திரன் முதலிய தைஜச பதார்த்தங்களிலும் வெம்மைப் பரிச மிருப்பதின்றும்; ஆனால் ஜல முதலியவைகளின் குளிர்ந்த பரிசத்தால் மறைவையடைந்த வெம்மைப் பரிசம் பிரதீதியாகிறதில்லை. ஆண்டு சந்திர மண்டலத்தி னிடையிலுள்ள குளிர்ந்த பரிசமுடைய ஜலம் யாதோ அஜ்ஜலத்தின் குளிர்ந்த பரிசத்தால் மறைவையடைந்துள்ள சந்திரனது கிரணங்களின் வெம்மைப்பரிசம் பிரதீதியாகிறதில்லை; ஜலத்தின்குளிர்ந்தபரிசமேபிரதீதியாகிறது. இவ்வாறுக மின்னல் வடிவத் தேயுவின் வெம்மைப் பரிசமும் தன்னிடத்துள் வீடாயுள்ள ஜலத்தின் குளிர்ந்தபரிசத்தால் மறைவையடைந்து பிரதீதியாகிறதில்லை; ஜலத்தின் பரிசமே ஆண்டுப் பிரதீதியாகின்றது. இவ்வாறுக இரத்தின வடிவத் தேயுவிலும் பிருதிவியின் கூறு கலப்புற்றிருக்கின்றது. அப்பார்த்திவக் கூறின் வெப்பமும் குளிர்ச்சியுமில்லாத பரிசத்தால் மறைவையடைந்த இரத்தின வடிவத்தேயுவின் வெம்மைப் பரிசம் இரத்தினங்களின் கிரணங்களில் பிரதீதியாகிறதில்லை. அங்ஙனமே பொன் வடிவத் தேயுவிலும் மஞ்சள் உருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரியமாகிய பார்த்திவக்கூறுக் கலந்திருக்கின்றது அப்பார்த்திவக் கூறின், வெம்மையும், குளிர்ச்சியுமில்லாத பரிசத்தால் மறைவையடைந்த பொன் வடிவத் தேயுவின் வெம்மைப் பரிசம் பிரதீதியாகிறதில்லை. சக்ஷுவிந்திரிய வடிவத் தேயுவிலோ வெம்மைப் பரிசம் அநுத்பூதமாக விருக்கின்றது. ஆகையால் அவ்வெம்மைப் பரிசத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை; உத்

பூத பரிசத்தின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. ஆகையால் அச்சந்திரன் முதலிய தைஜசத் திரவியங்களில் வெம்மைப்பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

## உகூச. தோன்றியழிந்தத் தேயுவில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியின் சங்கை.

சங்கை:—எத்தேயுமுதல்க்ஷணத்திலுண்டாகி இரண்டாவது க்ஷணத்தில் நாசமாய்விடுகின்றதோ அத்தோன்றியழிந்த தேயுவில் வெம்மைப்பரிசமுடைமை வடிவ லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். ஏனெனின், முதல் க்ஷணத்திலோ திரவியம் நிர்க்குணமாகவே யுண்டாகின்றது; ஆகையால் உற்பத்திக்ஷணத்திலோ அத்தேயுவில் ஓர்குணமுமுண்டாகிறதில்லை. இரண்டாவது க்ஷணத்தில் அத்தேயுவில் வெம்மைப் பரிசமானது உண்டாவதற்கு இரண்டாவது க்ஷணத்தில் அத்தேயு தானே நாசமாய் விடுகின்றது. இத்தகைய தோன்றியழிந்தத் தேயுவிலும், உற்பத்தி க்ஷணாவச்சின்னத் தேயுவிலும் அவ்வெம்மைப் பரிசமுடைமைவடிவலக்ஷணத்திற்குஅவ்வியாப்தியேயுண்டாகின்றதென்னும் சங்கை யுண்டாக வினிகூறிய அந்தலக்ஷணத்தை வேறுவிதமாக நிரூபிப்பாம். "உஷ்ணஸ்பர்ஶ ஸமாநாதிகரண த்³ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிமத்தேஜ:" (இ-ள்.) வெம்மைப்பரிசத்தின் சமானாதிகரணமும், திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம் ஜாதியாதோ அஜ்ஜாதியுடையத்திரவியம் தேயுவெனப்படுகின்றது. ஆண்டு வெம்மைப் பரிசகுணம் சமவாய சம்பந்தமாக வன்னி, இரவி முதலிய தேயுவிலேயே யிருக்கின்றது. தேயுத்தன்மை ஜாதியும் சமவாய சம்பந்தமாக வன்னி, இரவி முதலிய தேயுவிலேயே யிருக்கின்றது. ஆகையால் அத்தேயுத் தன்மை ஜாதி வெம்மைப் பரிசத்தின் சமானாதிகரண மெனப்படுகின்றது. அத்தேயுத் தன்மை ஜாதி திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகையத் தேயுத்தன்மைஜாதி யெல்லாத்தேயுக்களிலு மிருக்கின்றது. அதாவது அத்தேயுத்தன்மை ஜாதி தோன்றியழிந்தத் தேயுவிலும், உற்பத்தி க்ஷணாவச்சின்னத்தேயுவிலுமிருக்கின்றது. ஆகையால் தோன்றியழிந்தத்தேயுவிலும் உற்பத்தி க்ஷணாவச்சின்னத்தேயுவிலும் இத்தேயுத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது. ஆண்டு "ஜாதியுடையது தேயு" வென விம்மாத்திரமே தேயுவின் லக்ஷணமாகக் கூறின் குணத்திலும், கருமத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அத் தேயு தேயுத்தன்மை முதலிய ஜாதியுடையதாமோ அங்ஙனமே குண, கருமங்களும் குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதியை யுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அஜ்ஜாதிக்கு "திரவியத்தன்மை வியாப்பியம்" என்னும் விசேஷணங்கூறப்பட்டது. ஆண்டு குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதி திரவியத்தி விராததாவதால் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியெனப்படுகிறதில்லை. ஆகையால் அக் குண, கருமங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "திரவியத்தன்மை வியாப்பிய ஜாதியுடையது தேயு" என விம்மாத்திரமே தேயுவின் லக்ஷணமாகக் கூறுவதால் குண, கருமங்களில் அந்தலக்ஷணத்திற்கு

அதிவியாப்தி யுண்டாகாவிடினும் ஆத்மாவிலும், மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியே யுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் தேயுத்தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியாமோ, அங்ஙனமே ஆத்மத்தன்மை ஜாதியும், மனத்தன்மை ஜாதியும் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியாம். அவ்வாத்மத் தன்மை ஜாதியைக் கொண்டு ஆத்மாவிலும், மனத்தன்மை ஜாதியைக்கொண்டு மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் அஜ்ஜாதிக்கு "பரிசசமானாதிகரணம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மாவிலும், மனதிலும் பரிசகுணமிருப்பதில்லை. ஆகையால் ஆத்மத்தன்மை ஜாதியும்; மனத்தன்மை ஜாதியும் பரிசத்தின் சமானாதிகரண மன்றும். ஆகையால் ஆத்மத்தன்மை ஜாதியைக் கொண்டும், மனத்தன்மை ஜாதியைக்கொண்டும், ஆத்மாவிலும், மனதிலும், அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "பரிச சமானாதிகரண திரவியத் தன்மை வியாப்பிய ஜாதியுடையது தேயு" என விம்மாத்திரமே தேயுவின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் பரிசத்திற்கு "வெம்மை" என்னும் விசேஷணங் கூறுவிடின் பிருதிவி, ஜலம், வாயு வென்னும் மூன்றுத் திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் பரிசகுணம் எங்ஙனம் தேயுவிலிருக்கின்றதோ அங்ஙனமே பிருதிவி, ஜலம், வாயு வென்னும் மூன்றுத் திரவியங்களிலும், பரிசகுண மிருக்கின்றது. ஆகையால் தேயுத்தன்மை ஜாதியைப்போன்று பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை, வாயுத்தன்மை யென்னும் மூன்று ஜாதிகளும் பரிசத்தின் சமானாதிகரணமேயாம். அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை, வாயுத்தன்மை ஜாதிகளைக்கொண்டு முறையாக பிருதிவி, ஜலம், வாயுவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் பரிசத்திற்கு "வெம்மை" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வெம்மைப் பரிசம் கேவலம் தேயுவிலேயே யிருக்கின்றது. பிருதிவி முதலியவைகளிலிருப்பதில்லை. ஆகையால் பிருதிவித்தன்மை முதலிய மூன்று ஜாதிகள் பரிசத்தின் சமானாதிகரணங்களாயினும் வெம்மைப் பரிசத்தின் சமானாதிகரண மன்றும். ஆகையால் பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு பிருதிவி முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "வெம்மைப் பரிச சமானாதிகரண ஜாதியுடையது தேயு" என விம்மாத்திரமே தேயுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "திரவியத் தன்மை வியாப்பியம்" என்னும் பதங் கூறுவிடின் திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு மீண்டும் பிருதிவி முதலிய வெல்லாத்திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அங்ஙனமே சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கருமமென்னும் மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எத்தேயுவில் வெம்மைப் பரிசமிருக்கின்றதோ

அத்தேயுவில் அத்திரவியத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியு மிருக்கின்றன. ஆகையால் தேயுத்தன்மை ஜாதியினைப் போன்று திரவியத்தன்மை ஜாதியும் சத்தா ஜாதியும் வெம்மைப் பரிசத்தின் சமானாதிகரணமேயாம். அத்திரவியத் தன்மை ஜாதியைக்கொண்டு பிருதிவி முதலிய வெல்லாத் திரவியங்களிலும் சத்தாஜாதியைக் கொண்டு, திரவிய, குண, கருமங்களிலும் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திசெய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவியத் தன்மை வியாப்பியம்" என்னும் பதங்கள் அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டன, ஆண்டு அத்திரவியத் தன்மை ஜாதி திரவியத்தன்மை ஜாதியை விட குறைந்தவிடத்திருப்பதன்று. சத்தாஜாதியோ அத்திரவியத்தன்மை ஜாதியைவிட அதிக விடத்திருப்பதாம். ஆகையால் அத்திரவியத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். எஜ்ஜாதி எஜ்ஜாதியை விட குறைந்த விடத் திருப்பதாமோ அஜ்ஜாதியே அஜ்ஜாதியின் வியாப்பியமாகின்ற தென்னும் வார்த்தை முன்னர் அடிக்கடி கூறி வந்துள்ளோம். ஆகையால் திரவியத் தன்மை ஜாதியைக்கொண்டும், சத்தா ஜாதியைக்கொண்டும் தேயுவின் லக்ஷணத்திற்குப் பிருதிவி முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகாது. இதுகாறும் "வெம்மைப் பரிசமுடையது தேயு" வென்னும் முதலாவது லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது.

## உகரு. தேயுத்தன்மை ஜாதியுடைமை வடிவத் தேயுவின் லக்ஷணம்.

இனி "தேஜஸ்த்வஜாதிமத்தேஜ:" என்னு மிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எத்திரவியம் சமவாய சம்பந்தமாக தேயுத்தன்மை ஜாதி யுடையதாமோ அத்திரவியம் தேயுவெனப் படுகின்றது. சமவாய சம்பந்தமாக தேயுத்தன்மை ஜாதி கேவலம் தேயுவிலேயே யிருக்கின்றது. தேயுவினும் வேறான பிருதிவி முதலியத் திரவியங்களில் தேயுத்தன்மை ஜாதி யிருப்பதில்லை. ஆகையால் தேயுத்தன்மை ஜாதியுடைமை வடிவ இத்தேயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை :—தேயுத்தன்மை ஜாதியுடைமை வடிவ இத்தேயுவின் லக்ஷணம் சித்திக்கும்போது முதலில் ஓர்பிரமாணத்தால் அத்தேயுத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாக வேண்டும். தேயுத்தன்மை ஜாதியின் சித்தியின்றி அந்த லக்ஷணம் சம்பவியாது. ஆகையால் அந்தலக்ஷணத்தின் சித்தியின் பொருட்டு, ஓர் பிரமாணத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தி அவசியமாகச் செய்ய வேண்டுமென்னும் சங்கையுண்டாக வினி பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

## உகசு. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தி.

வன்னி, தீபம், இரவி, சந்திரன், மின்னல் இவை முதலிய தேயுக்களில் இது தேயு, இது தேயு வென ஓர் தர்மமாக ஏகாகாரப் பிரதீதி உலகர் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வேகாகாரப் பிரதீதி எல்லாத் தேயுக்களில்

இருக்கும் தேயுத்தன்மை ஜாதியினையே விஷயம் செய்கின்றது. ஆகையால் தேயுத்தன்மை ஜாதியில் இது தேயுவென்னும் பிரத்தியக்ஷமே பிரமாணமாம்.

சங்கை :—இவ்வாறுயப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் பிரசித்த வன்னி, சூரியன் முதலிய தேயுக்களில் தேயுத்தன்மை ஜாதி சம்பவிக்கின்றதெனினும் பரமாணு வடிவ அதியிந்திரிய தேயுவிலும், சக்ஷுரிந்திரிய வடிவ அதியிந்திரிய தேயுவிலும் இது தேயுவென்னும் பிரத்தியக்ஷம் ஒருவருக்கு முண்டாகிறதில்லை. ஆகையால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அதியிந்திரிய தேயுவில் தேயுத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாதாகுமென்னும் சங்கை யுண்டாகவினி அநுமானப் பிரமாணத்தால் எல்லாத் தேயுக்களிலும் தேயுத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

## உகஎ. அநுமானப் பிரமாணத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தி.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "தெஜொநிஷ்டாயா உஷ்ணஸ்பர்ஸஸமவாயிகாரணதாவா கிம்சிதர்மாவச்சின்நா காரணதாத்வாத் தந்துநிஷ்டகாரணதாவத்" (இ-ள்.) தேயுவிலிருக்கின்ற வெம்மைப்பரிசத்தின் சமவாயி காரணத்தன்மை யாதோ, அக்காரணத்தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம். காரணத்தன்மையாவதால், எதுவெது காரணத்தன்மையாமோ அவ்வக்காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகும். நிரவச்சின்னமாக ஓர் காரணத்தன்மை யுண்டாகாது. எங்ஙனம்: தந்துக்களிலிருக்கின்ற படத்தின் சமவாயி காரணத் தன்மை தந்துத் தன்மை தர்மத்தால் அவச்சின்னமாகின்றது. அங்ஙனமே தேயுவிலிருக்கின்ற வெம்மைப் பரிசத்தின் சமவாயி காரணத் தன்மையும் ஓர் தர்மத்தால் அவச்சின்னம் அவசியமாகும். அக்காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக தேயுத் தன்மை ஜாதியின் சித்தியே யுண்டாகின்றது; வேறெஜ்ஜாதியின் சித்தியு முண்டாகிறதில்லை. ஆண்டு தேயு மாத்திரத்திலிருக்கும் காரணத் தன்மையினும் அதிக விடத்திருப்பனவாகையால் திரவியத்தன்மை ஜாதியும், சத்தாஜாதியும் காரணத்தன்மையின் அவச்சேதகமாவனவன்று; தேயு மாத்திரத்திலிருக்கும் தேயுத்தன்மை ஜாதியே அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் வெம்மைப் பரிசத்தின் சமானாதிகரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக எல்லாத் தேயுக்களில் தேயுத் தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

## உகஅ. தைஜச பரமாணுக்களில் தேயுத்தன்மை ஜாதியின் சித்தியினது சங்கை.

சங்கை :—கூறிய அநுமானப் பிரமாணத்தானும் பரமாணு வடிவ நித்திய தேயுவில் தேயுத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாது. ஏனெனின், பரமாணுவடிவ தேயுவில் வெம்மைப்பரிசம் நித்தியமும், துவியணுகாதிகாரிய வடிவ வெல்லாத் தேயுக்களில் வெம்மைப்பரிசம் அநித்தியமுமாகின்றது.

இத்தகைய நித்திய, அநித்திய வெம்மைப் பரிசத்தி லிருப்பதாகிய வெம்மைப் பரிசத்தன்மை தர்மம் தேயுவை நிரூபிக்கும். காரியத்தன்மையின் அவச்சேதகமாகாது, ஜன்னிய வெம்மைப் பரிசத்தன்மை தர்மமே அக்காரியத்தன்மையின் அவச்சேதகமாகும். ஜன்னிய வெம்மைப் பரிசத்தின் சமவாயி காரணத்தன்மை துவியணுகாதி வடிவ ஜன்னிய தேயுவிலேயே யிருக்கின்றது. பரமாணு வடிவ நித்தியத் தேயுவிலிருப்பதில்லை. ஆகையால் அப்பரமாணு வடிவ நித்தியத்தேயுவில் கூறிய அவ்வநுமானத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகாது.

## ௨௯௯. தைஜச பரமாணுக்களில் தேயுத்தன்மை ஜாதியினது சித்தியின் வகையை வர்ணித்தல்.

சமாதானம் :—முற்கூறிய ஜலத்தன்மை ஜாதியின் சித்தியினைப் போன்று ஈண்டும் முதலில் ஜன்னிய வெம்மைப்பரிசத்தின் சமவாயிகாரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகத் துவியணுக முதலிய ஜன்னிய தேயுவில் இருப்பதாகிய தேயுத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்தபின்னர் ஜன்னிய தேயுத்தன்மை ஜாதியால் அவச்சின்ன ஜன்னிய தேயுவின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக நித்திய, அநித்திய வடிவ வெல்லாத் தேயுக்களில்தேயுத்தன்மைஜாதியின் சித்தியைச்செய்க. ஆண்டு எங்ஙனம் துவியணுகாதி வடிவ அநித்திய தேயுவில் திரியணுகாதி வடிவ ஜன்னிய தேயுவிற்கு சமவாயிகாரணத்தன்மையிருக்கின்றதோ, அங்ஙனமே பரமாணுவடிவ நித்திய தேயுவிலும் துவியணுகவடிவ ஜன்னிய தேயுவிற்கு சமவாயி காரணத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் அஜ்ஜன்னிய தேயுவின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக தேயுத்தன்மை ஜாதியின் சித்தி சர்வதேயுக்களில் உண்டாய்விடுகின்றது. இரவிலோகத்திலுள்ள தைஜச சரீரமுதலிய அந்தியாவயவித் தேயுவாலும், சக்ஷுரிந்திரிய வடிவத் தேயுவாலும் ஓர்ஜன்னிய தேயுவின் உற்பத்தி யுண்டாகாதாயினும் அந்தியாவயவி வடிவ தேயுவிலும் சக்ஷுரிந்திரிய வடிவ தேயுவிலும் ஜன்னிய தேயுவின் சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அத்தேயுவிலும் தேயுத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

## ௩௦௦. வேறுவிதமாக தேயுத்தன்மை ஜாதியின் சித்தி

அல்லது பரமாணு வடிவ நித்திய தேயுவிலேயே ஜன்னிய வெம்மைப் பரிசத்திற்கு ஸ்வரூபயோக்கியத் தன்மை வடிவ காரணத்தன்மையினை அங்கிகரித்து நித்திய, அநித்திய வடிவ வெல்லாத் தேயுக்களில் ஜன்னிய வெம்மைப் பரிசத்திற்கு சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக தேயுத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்க. இவ்விருவிதங்களில் விசேஷ சங்கை, சமாதானமோ முன்னர் ஜலத்தன்மை ஜாதியின் நிரூபணத்திற் கூறிவந்துள்ளோம் அது ஈண்டும் யூகித்துக் கொள்க. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் தேயுத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாக தேயுத்தன்மை ஜாதியுடைமை வடிவ தேயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

௩௦௧. தேயுவிலிருக்கும் பதினொரு குணங்களின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய விரு லக்ஷணங்களால் லக்ஷித தேயுவடிவத் திரவியத்தில் உருவம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், திரவத்வம், வேக மென்னும் பதினொரு குணங்களிருக்கின்றன.

௩௦௨. நித்திய, அநித்திய வேறுபாட்டால் தேயுவி னிருவிதவேற்றுமை.

இவ்வாறாய் பதினொரு குணங்களுடைய தேயுத் திரவியம் நித்தியம், அநித்தியமென்னும் வேறுபாட்டா லிருவகைத்தாம். ஆண்டுப் பரமாணு வடிவ தேயுவோ நித்தியமெனப்படுகின்றது. துவியணுகாதி வடிவ சர்வ தேயுக்கள் அநித்தியமெனப்படுகின்றன; அங்ஙனமே அவயவிகள் எனப்படுகின்றன.

௩௦௩. சரீர, விந்திரிய, விஷய வேறுபாட்டால் அநித்தியத் தேயுவின் மூவித வர்ணனம்.

அவயவி வடிவ அநித்தியத் தேயுவும், சரீரம், இந்திரியம், விஷய மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

௩௦௪. தைஜச சரீரத்தின் லக்ஷணம்.

"உஷ்ணஸ்பர்சவச்சரீரம் தைஜஸசரீரம்" (இ-ள்.) எச்சரீரம் சமவாய சம்பந்தமாக வெம்மைப் பரிசமுடையதாமோ, அச்சரீரம் தைஜச சரீரமெனப் படுகின்றது. இத்தகைய வெம்மைப் பரிசமுடைய தைஜச சரீரம் இரவிலோகத்திலேயே பிரசித்தமாம்.

௩௦௫. வேறோராற்றால் தைஜச சரீரத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த தைஜச சரீரத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்னத் தைஜச சரீரத்திலும் வெம்மைப் பரிசகுணத்தின் அபாவமிருப்பதால் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாமெனினும் முற்கூறிய தேயுவின் லக்ஷணத்தைப்போன்று. ஈண்டும் "உஷ்ணஸ்பர்ச ஸமாநாதிகரண த்ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிமத் சரீரம் தைஜஸ சரீரம்" என இவ்வாறாய தேயுத் தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால், தைஜச சரீரத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சரீரம்" என்னும் பதம் தைஜச இந்திரிய விஷயத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும்பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முற்கூறியவாறே அறிந்துகொள்க. இத்தைஜச சரீரம் கேவலம் அயோனிஜமே யாகின்றது.

௩௦௬. சக்ஷு வடிவ தைஜச இந்திரியத்தின் லக்ஷணம்.

"உஷ்ணஸ்பர்சவதிந்த்ரியம் தைஜஸேந்த்ரியம்" (இ-ள்.) எவ்விந்திரியம் சமவாய சம்பந்தமாக வெம்மைப் பரிசமுடையதாமோ அவ்விந்திரியம் தைஜச இந்திரிய மெனப்படுகின்றது. இத்தகைய வெம்மைப் பரிசமுடைய தைஜச இந்திரியம் சக்ஷு இந்திரியமாம்.

## ௩௦௭. வேறேராற்றல் தைஜச இந்திரியத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த சக்ஷுஸ் இந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன சக்ஷுஸ் இந்திரியத்திலும் வெம்மைப் பரிசகுணத்தின் அபாவமிருப்பதால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாமாயினும் முற்கூறிய தேயுவின் லக்ஷணத்தைப்போன்று ஈண்டும் "உஷ்ணஸ்பர்ஶ ஸமானாதிகரண ரூபத்வ வ்யாப்ய ஜாதிமதிந்த்ரியம் தைஜஸேந்த்ரியம்" என இவ்வாறுரிய தேயுத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் சக்ஷுஸ் இந்திரியத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதம் தைஜச சரீரத்திலும், தைஜச விஷயத்திலும் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும்பொருட்டாம், மற்றப் பதங்களின் பயன் முன்னுரைத்தவாறே அறிந்துகொள்க. இச்சக்ஷுஸ் இந்திரியம் கண்ணுறை கருமணி நுனியிலிருப்பதும் உருவ முதலிய வைகளை கிரஹிப்பதுமாம்.

சங்கை:—சக்ஷுஸ் விந்திரியம் தைஜசமா மென்னும் அர்த்தத்தில் பிரமாணம் யாதென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் சக்ஷுஸ் விந்திரியத்தில் தைஜசத் தன்மையைச் சித்தம் செய்வாம்.

## ௩௦௮. சக்ஷுஸ் விந்திரியத்தில் தைஜசத்தன்மையின் சாதக அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "சக்ஷுரிந்த்ரியம் தைஜஸம் பரகீயஸ்பர்ஶாவ்யஞ்ஜகத்வே ஸதி பரகீயரூபவ்யஞ்ஜகத்வாத் ப்ரதீபவத்" (இ-ள்.) சக்ஷுஸ் விந்திரியம் தைஜசமாக யோக்கியமாம், பிறவற்றின் பரிசத்தை வெளியாக்காததாய் பிறவற்றின் உருவத்தை வெளியாக்குவதாவதால், எவ்வெத்திரவியம் பிறவற்றின் பரிசத்தை வெளியாக்காததாய் பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதாமோ அவ்வத்திரவியம் தைஜசமேயாகின்றது. எங்ஙனம்: தீபம், கடமுதலிய திரவியங்களின் பரிசத்தை வெளியாக்காததாய் கடமுதலியவைகளின் உருவத்தினையே வெளியாக்குவது போலும்; ஆகையால் அத்தீபம் தைஜசமேயாம். அங்ஙனமே சக்ஷுஸ் விந்திரியமும் கடமுதலியத்திரவியங்களின் பரிசத்தை வெளியாக்காததாய் கட முதலியவைகளின் உருவத்தையே வெளியாக்குவதாகின்றது; ஆகையால் சக்ஷுஸ் விந்திரியமும் தைஜசமேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "பிறவற்றின் உருவத்தை வெளியாக்குவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "பிறவற்றின் பரிசத்தைவெளிப்படுத்தாததாய்" என்னும் பதங் கூறுவிடின் மனதில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின், மனமின்றி ஓர் ஞானமுமுண்டாகாது; ஆகையால் அம்மனதில் பிறவற்றினுருவத்தை வெளிப்படுத்தும் தன்மை வடிவ ஏதுவோ விருக்கின்றது. தைஜசத் தன்மை வடிவ சாத்தியம் மனதிலின்றும்; ஆகையால் தைஜசத் தன்மையின் அபாவமுடைமை மனதிலிருப்பதால் பிறவற்றி னுருவத்தை வெளியாக்குந் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்வான் கருதி "அவ்வேதுவில் பிறவற்றின் பரிசத்தை வெளியாக்காததாய்" என்னும் பதங்

கூறப்பட்டது. ஆண்டு அம்மனதில் பிறவற்றின் பரிச முதலியவைகளை வெளிப்படுத்தாத் தன்மை யின்றும்; வெளிப்படுத்துந் தன்மையே யிருக்கின்றது. ஆகையால் அம்மனதில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது "பிறவற்றின் பரிசத்தை வெளிப்படுத்தாததாய்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என்னும் பதங் கூறுவிடின் பிறவற்றின் பரிச முதலியவைகளை வெளிப்படுத்தாத ஆகாச முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆகாச முதலியவைகளில் பிறவற்றி னுருவத்தை வெளிப்படுத்துந் தன்மையில்லை; ஆகையால் ஆகாச முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வேதுவில் முதலிலுள்ள "பிறவற்றின்" என்னும் பதங்கூறாது "பரிசத்தை வெளிப்படுத்தாது பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறின் அவ்வேது தீப வடிவ திர்ஷ்டாந்தத்திலிராது. ஏனெனின், அத்தீபம் தனது பரிச முதலியவைகளை வெளிப்படுத்துவதாம்; வெளிப்படுத்தாததன்று. அத்தீப வடிவ திர்ஷ்டாந்தத்தில் கூறிய அவ்வேதுவிற்கு அவ்வியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் முதலிலுள்ள "பிறவற்றின்" என்னும் பதங் கூறப்பட்டது. அத்தீபம் தனது பரிச முதலியவைகளை வெளிப்படுத்துவதாமாயினும் பிறவற்றின் பரிச முதலியவைகளை வெளிப்படுத்துவதன்று. ஆகையால் தீபத்தில் அவ்வேதுவிற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அல்லது கூறிய அவ்வேதுவில், இரண்டாவதுள்ள "பிறவற்றின்" என்னும் பதங் கூறாது "பிறவற்றின் பரிசத்தை வெளிப்படுத்தாது உருவத்தை வெளிப்படுத்துவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறின் கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின், அக்கட முதலிய பதார்த்தம் பிறவற்றின் பரிச முதலியவைகளை வெளிப்படுத்தாது தனது உருவத்தை வெளிப்படுத்துவதாம். அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் இரண்டாவதுள்ள "பிறவற்றின்" என்னும் பதங் கூறப்பட்டது. அக்கட முதலியன தமது உருவத்தை வெளிப்படுத்துவதாயினும் பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதன்று; ஆகையால் அக்கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் தீபத்தை திர்ஷ்டாந்தமாகக் கூறுது. தீப முதலிய தேயுவினொளியை திர்ஷ்டாந்தமாகக் கூறுவதற்கு, அவ்வொளியினது பரிசத்தின் பிரத்தியக்ஷ முண்டாகாது. ஆகையால் அவ்வொளி தனது பரிச முதலியவைகளை வெளிப்படுத்துவதன்று. அல்லது கூறிய அவ்வேதுவில் முதலிலுள்ள "பிறவற்றின்" என்னும் பதங்கொடாது "பரிசத்தை வெளியாக்காததாய்ப் பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறின் "பரிசத்தை வெளிப்படுத்தாது பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என்னுமிவ்வேதுவிற்கும் சக்ஷுரிந்திரியத்தின் சம்பந்தத்தில் வியபிசாரமுண்டாகும்.

ஏனெனின் கடமுதலிய அர்த்தங்களோடு சக்ஷுர் விந்திரியத்தின் சையோகம், சுவசம்புக்த சமவாயம் முதலிய சம்பந்தங்களவையோ அச்சம்பந்தங்களும் அக்கட முதலியவைகளின் பரிசமுதலியவைகளை வெளிப்படுத்தாது கட முதலியவைகளின் உருவத்தையே வெளிப்படுத்துவதாகின்றன. ஆனால் அச்சம்பந்தங்களில் தைஜச வடிவ சாத்தியமின்றும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அவ்வேதுவில் "திரவியமாய்" என்னும் பதமும் கூட்டுக, அதாவது திரவியமாய் பரிசத்தை வெளிப்படுத்தாது "பிறவற்றின் உருவத்தை வெளிப்படுத்துவதால்" என இவ்வா வேது கூறுக. அச்சம்பந்தங்களில் திரவியத்தன்மையின்றும். ஆகையால் அச்சம்பந்தங்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. இவ்வாறுய அநுமானப்பிரமாணத்தால் சக்ஷுர் விந்திரியத்தில் தைஜசத் தன்மையே சித்தமாகின்றது.

### ௩௦௯. மத வேறுபாட்டால் சக்ஷுர் விந்திரியத்தில் அப்பிராப்பியப் பிரகாசமுடையத் தன்மையினதும், பிராப்பியப் பிரகாசமுடையத் தன்மையினதும் வர்ணனம்.

உச்சுருங்கலரெனப் பெயரிய சில நூலாசிரியரோ சக்ஷுர் விந்திரியத்தினை அப்பிராப்பியப் பிரகாசமுடையதாக வொப்புகின்றனர். நியாய சித்தாந்தத்தில் சக்ஷுர் விந்திரியத்தினை பிராப்பியப் பிரகாசமுடையதாக வொப்புகின்றனர். எவ்விந்திரியம் சையோக முதலிய சம்பந்தத்தால் விஷய தேசத்தில் பிராப்தமாகி விஷயத்தை பிரகாசம் செய்கின்றதோ அவ்விந்திரியம் பிராப்பியப் பிரகாசமுடையதெனப்படுகின்றது. எவ்விந்திரியம் சையோக முதலிய சம்பந்தத்தால் விஷயதேசத்தில் பிராப்தமாகாது தனதிடத்திலிருந்துகொண்டே விஷயத்தைப் பிரகாசஞ் செய்கின்றதோ அவ்விந்திரியம் அப்பிராப்பியப் பிரகாசமுடையதெனப்படுகின்றது.

### ௩௧௦. பார்த்திவ கோளகத்திற்கு சக்ஷுர் விந்திரியத் தன்மை யோப்பி பிராப்பிய மின்மைப் பிரகாசத்தை யோப்புவராகிய உச்சுருங்கலரின் மத வர்ணனம்.

சக்ஷுர் விந்திரியம் பிராப்பிய மின்மைப் பிரகாச முடையதாம். ஆகையால் பிரசித்த பார்த்திவ கோளகமே சக்ஷுர் விந்திரியமாம். அக்கோளகத்தினும் வேறான தைஜச விந்திரியமொன்றில்லை யென்னும் உச்சுருங்கலரின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் உச்சுருங்கலரின் மதத்தைக்கூறுவாம். சக்ஷுர் விந்திரியம் பிராப்பியப் பிரகாசமுடையதன்று; பிராப்பிய மின்மைப் பிரகாசமுடையதாம். ஏனெனின், அச்சக்ஷுர்விந்திரியம் ஓர்கால் பிராப்பியப் பிரகாசமுடையதாயின், எங்ஙனம் ரசன விந்திரியம் தனது கோளகத்தினோடு சம்பந்தமுடைய பதார்த்தத்தையே கிரஹிக்கின்றதோ, அங்ஙனமே அச்சக்ஷுர் விந்திரியமும் தனது கோளகத்தினோடு சம்பந்தமுடைய பதார்த்தத்தையே கிரஹிப்பதாகும், அங்ஙனங் காணப்படுகிறதில்லை. ஆனால் அச்சக்ஷுர் விந்திரியம் தனதுகோளகத்தைவிட அத்தியந்தந்தூரமாயுள்ள சூரியன், சந்திரன் முதலிய பதார்த்தங்களையும் கிரஹிக்கின்றது. இக்காரணத்தால்

சக்ஷுவிந்திரியம் பிராப்பியப்பிரகாசமுடையதன்றாம்; ஆனால் அப்பிராப்பியப் பிரகாசமுடையதாம். அல்லது அச்சக்ஷுவிந்திரியம் ஓர் கால் பிராப்பியப் பிரகாசமுடையதாயின் அச்சக்ஷுவிந்திரியம் தன்னினும் மிகுந்த பரிமாண முடைய வத்துவை கிரஹிக்காததாகும். தனது சமான பரிமாணமுடைய வத்துவையே கிரஹிப்பதாகும். எங்ஙனம் கோடரியாற் சேதிக்க யோக்கிய பெரிய கட்டையை நக கிருந்தனி (நகத்தை வெட்டும் ஆயுதம்) வெட்டமாட்டாது. நகத்தை வெட்டும் ஆயுதம் தனது சமான பரிமாணமுடைய நகங்களையே வெட்டுகின்றது. அங்ஙனமே, அச்சக்ஷுவிந்திரியமும் தனது சமான பரிமாணமுடையவத்துவையே கிரஹிக்கும் தன்னினும் மிகுந்த பெரியபர்வத முதலியவைகளைக் கிரஹிக்கமாட்டாது. ஆனால் அச்சக்ஷுவிந்திரியம் பெரிய பர்வத முதலியவைகளையும் கிரஹிக்கின்றது. இக்காரணத்தாலும் அச்சக்ஷுவிந்திரியம் பிராப்பியப் பிரகாசமுடையதன்றாம். அல்லது அச்சக்ஷுவிந்திரியம் ஓர் கால் பிராப்பியப் பிரகாசமுடையதாயின் மரக்கிளையையும், சந்திரனையும் ஒரே காலத்தில் கிரஹிப்பதின்றாகவேண்டும். ஏனெனின் சந்திரனை அபேக்ஷித்து அக்கிளை அத்தியந்த சமீபமாயிருக்கின்றது. கிளையை அபேக்ஷித்து சந்திரன் அத்தியந்தந் தூரமாயிருக்கின்றது. ஆகையால் அச்சக்ஷுவிந்திரியம் முதலில் அக்கிளையை அடைந்து அக்கிளையை கிரஹித்த பின்னர் அச்சந்திரனை அடைந்து அச்சந்திரனைக் கிரஹிப்பதாகும். ஒரே காலத்தில் அவ்விரண்டைக் கிரஹிக்கமாட்டாது. நேத்திரங்களை திறந்தவுடனே புருஷன் கிளையினையும், சந்திரனையும் ஒரே காலத்தில் காண்கிறான். இக்காரணத்தாலும் சக்ஷுவிந்திரியம் பிராப்பியப் பிரகாசமுடையதன்றாம். அப்பிராப்பியப் பிரகாசமுடையதாம். சக்ஷுவிந்திரியத்தினை அப்பிராப்பியப் பிரகாசமுடையதாக வொப்புவதில் முற்கூறிய அத்தோஷம் பிராப்தமாகாது.

## ௬௧௧. உச்சுருங்கலர் மதத்தைக் கண்டிக்கும் வாயிலாக சக்ஷுவிந்திரியம் பிராப்பியப் பிரகாசமுடையதின் சித்தி.

உச்சுருங்கலரின் மதம் அத்தியந்தம் விருத்தமாம். ஏனெனின் அச்சக்ஷுவிந்திரியம் வத்துவையடைந்தே பிரகாசஞ் செய்கின்றது; வத்துவை யடையாது பிரகாசம் செய்வதன்று. ஆகையால் அப்பார்த்திவ கோளகம் சக்ஷுவடிவமன்று. அக்கோளகத்தினும் வேறாகவே தைஜச சக்ஷுவொன்றிருக்கின்றது. அச்சக்ஷுவிந்திரியத்தின் பிராப்பியப் பிரகாசமுடையத் தன்மையில் முன்னர் எவ்வாதியானவன் கோளகத்தோடு சம்பந்தப்பட்ட வத்துவை கிரஹிப்பதற்கு ஆபத்தி வடிவ தூஷணங் கூறினனோ அத்தூஷணமும் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் தீபவொளி தனது அதிஷ்டான வடிவ தீபத்தின் சம்பந்தமில்லாத கடமுதலிய பதார்த்தங்களையடைந்து கடமுதலிய பதார்த்தங்களைப் பிரகாசஞ் செய்கின்றதோ, அங்ஙனமே அத்தைஜச சக்ஷுவிந்திரியமும் தனது கோளக வடிவ அதிஷ்டானத்தின் சம்பந்தமில்லாத சூரியன், சந்திரன் முதலிய பதார்த்தங்களை அடைந்து அப்பதார்த்தங்களை கிரஹிக்கின்றது. இதனிடத்து சிறிதேனும் பாதமின்றாம். அல்லது அச்சக்ஷுவிந்திரியத்தின் பிராப்பியப் பிரகாசமுடையத் தன்மையில் முன்னர் அவ்வாதி

யானவன் அதிகபரிமாணமுடையவத்துவினைக்கிரஹிக்காதவ்டிவ எத்தோஷம் கூறினனே அத்தோஷம் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் பிராப்பியப் பிரகாசமுடைய தீபத்தினொளி தன்னினும் மிகுந்த பரிமாணமுடைய பர்வத முதலியனவைகளையும் பிரகாசம் செய்வதாமோ, அங்ஙனம் கோளகத்தினின்றும் வெளியான மஹத்துவ பரிமாணமுடைய தைஜச சக்ஷுர் விந்திரியமும் தன்னினும் மிகுந்த பரிமாணமுடைய பர்வத முதலியவைகளைக் கிரஹிப்ப தாகும்; இதனிடத்தோர் பாதகமுமின்றாம். பிராப்பியப் பிரகாசமுடைய விந்திரியம் தன்னினும் அதிக பரிமாணமுடைய திரவியத்தை கிரஹிக்காதென்னும் நியமமோ துவக்கிந்திரியத்திலேயே வியபிசாரமாம். ஏனெனின், பிராப்பியப் பிரகாசமுடைய துவக்கிந்திரியம் தன்னினும் மிகுந்த பரிமாணமுடைய சுவர் முதலிய திரவியங்களையும் கிரஹிக்கின்றது. அங்ஙனமே பிராப்பியப் பிரகாசமுடைய சக்ஷுர் விந்திரியமும் தன்னினும் மிகுந்த பரிமாணமுடைய பர்வத முதலியத் திரவியங்களைக் கிரஹிக்கின்றது. இதனிடத்து சிறிதேனும் பாதமின்றாம். அல்லது முன்னர் அவ்வாதியானவன் சக்ஷுர் விந்திரியத்தின் பிராப்பியப் பிரகாசமுடையத் தன்மையில் கிளையையும், சந்திரனையும் ஒரே காலத்தில் கிரஹிப்பதற்கு சம்பவியாமை வடிவ எத்தூஷணங் கூறினனே அத்தூஷணமும் சம்பவியாது. ஏனெனின் சக்ஷுர் விந்திரியம் கிளையையும், சந்திரனையும் ஓர் காலத்தில் கிரஹிக்காது; ஆனால் அச்சக்ஷுர் விந்திரியம் முதல்க்ஷணத்தில் கிளையை அடைந்து அக்கிளையை கிரஹிக்கின்றது; இரண்டாம் க்ஷணத்தில் சந்திரனையடைந்து அச்சந்திரனை கிரஹிக்கின்றது; க்ஷண வடிவ காலம் அத்தியந்தம் சூக்ஷ்மமாயிருக்கின்ற தாகையால் உலகருக்கு யான் ஒரேகாலத்தில் கிளையையும், சந்திரனையும் காண்கின்றேனென்னு மித்தகைய மயக்கமுண்டாகின்றது. அச்சந்திரன் அக்கிளையினும் அத்தியந்தந் தூரமாயிருக்கிறதென்றாலும் எங்ஙனம் சூரியனது கிரணவடிவ தேயு அத்தியந்த வேகமுடையதாய் ஓர் க்ஷணமாத்திரத்தில் சர்வ பிரம்மாண்டங்களில் பரவிவிடுகின்றதோ அங்ஙனமே அச்சக்ஷுர் வடிவ தேயுவும் அத்தியந்தம் வேகமுடையதாம் ஆகையால் முதலில் அக்கிளையை அடைந்து சீக்கிரமாகவே அச்சந்திரனையடைகின்றது. அதனாலுலகருக்கு அக்கிளையும், சந்திரனும் ஒரே கால கிரஹணமாகிறதாக மயக்க முண்டாகின்றது. ஆகையால் அப்பிராப்பியப் பிரகாசமுடையதாவதால் பார்த்திவ கோளகத்தினும் வேறான தைஜச சக்ஷுர் விந்திரியத் திரவியமொன்றில்லை யென்னும் உச்சுருங்கலரின் மதம் அத்தியந்தம் அசங்கதமாம்.

## ௩கஉ. சக்ஷுர் விந்திரியத்தில் சாலிகாசாரியரது மத வர்ணனம்.

சாலிகாசாரியரது மத மிதுவாம். பிரசித்த சக்ஷுர் விந்திரியமும், புறம்பாயுள்ள சூரியன் முதலியவைகளின் ஆலோகமுமா மிரண்டும் கலந்து ஓர் புதிய சக்ஷுர் விந்திரியத்தை ஆரம்பஞ் செய்கின்றது; அச்சக்ஷுர் விந்திரியத்திற்கு ஒரே காலத்தில் கிளை, சந்திரன் முதலிய பதார்த்தங்களோடு சம்பந்தமிருக்கின்றது. ஆகையால் அச்சக்ஷுர் விந்திரியத்தால் ஒரே காலத்தில் கிளை, சந்திரனது ஞானம் சம்பவிக்கின்றது.

## ௩௧௩. சாலிகாசாரியரது மத கண்டனம்.

அச்சாலிகாசாரியரது மதமும் அசங்கதமாம். ஏனெனின் அச்சக்ஷு விணுலும், புறம்பாயுள்ள ஆலோகத்தாலும் செய்யப்பட்ட சக்ஷு விந்திரியம் எங்ஙனம் முன்னிடத்திலுண்டாகிறதோ அங்ஙனமே பின்னிடத்தும் அவசிய முண்டாகு மாகையால் பின்னிடத்திலுள்ள பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும் அச்சக்ஷு விந்திரியத்தாலுண்டாக வேண்டும். பின்னிடத்துள்ள பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகிறதில்லை. ஆண்டு பின்னிடத்தி லுள்ள அவ்வாலோகம் சக்ஷு விந்திரியத்தை யுண்டாக்காது முன்னிடத்தி லுள்ள ஆலோகம் சக்ஷு விந்திரியத்தை யுண்டாக்குகிற தென்னும் அர்த் தத்தின் சித்தியி லோர் பிரமாணமு மின்றும். ஆகையால் அச்சாலிகாசாரிய ரது மதம் அத்தியந்தம் அசங்கதமாம். இனி தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

## ௩௧௪. தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

“உஷ்ணஸ்பர்ஶவத்விஷய: தைஜஸவிஷய:” (இ-ள்.) எவ்விஷயம் சமவாய சம்பந்தமாக வெம்மைப் பரிசமுடையதாமோ அவ்விஷயம் தைஜச விஷயமெனப்படுகின்றது. துவியணுக வடிவ தேயு முதற்கொண்டு வன்னி, இரவி, மின்னல் முதலிய தேயுமட்டுமோம் சர்வகாரிய வடிவ தேயுக்கள் சம வாய சம்பந்தமாக வெம்மைப் பரிசமுடையன வாகையால் தைஜச விஷய மெனப்படுகின்றன.

## ௩௧௫. வேறுவகையாக தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

தோன்றியழிந்த தைஜச விஷயத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன தைஜச விஷயத்திலும் வெம்மைப் பரிசகுணத்தின் அபாவமிருப்பதால் கூறிய இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாமாயினும் முற்கூறிய தேயுவின் லக்ஷணத்தைப்போன்று ஈண்டும் “உஷ்ணஸ்பர்ஶ ஸமாநாதிகரண த்ரவ்யத்வ வ்யாப்ய ஜாதிமத்விஷய: தைஜஸவிஷய:” என்னும் இவ்வாறுய தேயுத் தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் அத்தைஜச விஷயத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டிந்த லக்ஷணத்தில் “விஷ யம்” என்னும் பதம் தைஜச சரீர விந்திரியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முற்கூறியவாறே அறிந்து கொள்க.

## ௩௧௬. மண்ணிலுள்ளது, விண்ணிலுள்ளது, வயற்றினுள்ளது, ஆகரத்தினுள்ளதென்னும் வேறுபாட்டால் தைஜச விஷயத்தின் வர்ணனம்.

அத்தைஜச விஷயமும் மண்ணிலுள்ளது, விண்ணிலுள்ளது, வயற்றி லுள்ளது, ஆகரத்தி (பொன் முதலியவைகளிருக்கும் சுரங்கத்தில் உள்ளது என்னும் வேறுபாட்டால் நால்வகையாகின்றது. இனி முறையாக இந்நான் கின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம்.

## ௩௧௭. மண்ணிலுள்ளதெனப் பெயரிய தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

"வாயிலே... " (இ-ள்.) காஷ்ட முதலிய பார்த்திவ பதார்த்த இந்தனம் (விறகு) எத்தேயுவிற்காகுமோ அத்தேயு பௌமம், அதாவது மண்ணிலுள்ளதெனப்படுகின்றது. இத்தகைய பௌமமெனப்பெயரிய தேயு பிரசித்த வன்னியும், மின்மினி முதலியனவாம்.

## ௩௧௮. விண்ணிலுள்ள தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

"... திவ்யம்" (இ-ள்.) ஜல மாத்திரமாம் இந்தனம் எத்தேயுவிற்காமோ, அத்தேயு திவ்வியம், அதாவது விண்ணிலுள்ள தெனப்படுகின்றது. இத்தகைய தேயு மின்னல், சூரியன், சந்திரன், நக்ஷத்திரக்கூட்டமென்னு மிவை முதலியனவாம்.

## ௩௧௯. வயற்றிலுள்ள தைஜச விஷயத்தின் லக்ஷணம்.

"வாயிலே ... " (இ-ள்.) பார்த்திவ அன்னமும், ஜலமுமாமிரண்டும் எத்தேயுவிற்கு இந்தனமாமோ, அத்தேயு ஔதர்யம், அதாவது வயற்றிலுள்ளது எனப்படுகின்றது. புசிக்கப்பட்ட அன்னத்தையும், அருந்திபுள்ள நீரையும் ஜீர்ணிப்பதற்கு ஏதுவாகியதும் ஜடராக்கினியெனப்படுவதுமாம் இத்தேயுவினை ஔதர்யமென்பர்.

## ௩௨௦. ஆகரத்திலுள்ள தேயுவின் லக்ஷணம்.

"... ஆகரஜம்" (இ-ள்.) பிருதிவி, ஜலமென்னு மிரண்டும் எத்தேயுவின் இந்தன வடிவமன்றோ, அத்தேயு ஆகரஜமெனப்படுகின்றது. எங்ஙனம் பொன், வெள்ளி, செம்பு, ரத்தின மிவை முதலிய தேயுக்கள் ஆகரஜமெனப்படுகின்றன. ஆண்டு ஆகரமென்பது சுரங்கத்திற்காம். அச்சுரங்கத்தினின்று முண்டாகும் தேயு யாதோ அத்தேயு ஆகரஜமெனப்படுகின்றது. சுரங்கத்தினின்று முண்டாகும் பொன், வெள்ளி முதலிய தேயுக்கள் பிரசித்தமாயிருக்கின்றன.

## ௩௨௧. பொன், வெள்ளி முதலியவைகளில் பார்த்திவத் தன்மையின் சாதகமாக பூர்வ பக்ஷியின் அநுமானம்.

சங்கை:—பொன், வெள்ளி முதலியன தேயுத் திரவியங்களாமென்னும் அர்த்தத்தின் சாதகமாக ஓர் பிரமாணமுமின்றாம். மாறாக அநுமானப் பிரமாணத்தால் பொன், வெள்ளி முதலியவைகளில் பார்த்திவத்தன்மையே சித்தமாகின்றது; அவ்வநுமானத்தி னுகாரமிதுவாம். "... வாயிலே ... ... " (இ-ள்.) பொன், பார்த்திவத் திரவியமாக யோக்கியமாம். மஞ்சள் நிறமுடையதாவதால், எவ்வெத்திரவியம் மஞ்சள் உருவமுடையதாமோ அவ்வத்திரவியம் பார்த்திவமேயாம். எங்ஙனம் அரிசனம் மஞ்சளுருவமா மாகையால் அவ்வரிசனம் பார்த்திவமேயாவது போலும். அங்ஙனமே அப்பொன்னும் மஞ்சளுருவமுடையதாம். ஆகையால் பொன்னும் பார்த்திவமேயாகுமென்னும் சங்கையின் பிராப்தமுண்டாக

இனி அநுமானப்பிரமாணத்தால் பொன்னில் தைஜசத் தன்மையைச் சித்தஞ் செய்வாம்.

## ௩௨௨. சுவர்ண முதலியவைகளில் தைஜசத் தன்மையின் சாதக அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ஸுவர்ணம் தைஜஸம் அஸதி ப்ரதிபந்தகே அத்யந்தாநலஸம்யோகேঽபி அநுச்சித்யமாநத்ரவத்வாதிகரணத்வாத் யந்நைவம் தந்நைவம் யதா ப்ருதிவீ" சுவர்ணம் தைஜசத் திரவியமாகயோக்கியமாம், தடையில்லாதவழி அத்தியந்தம் எரிதழலின் சையோகமுண்டாக அழிவுபடாத நெகிழ்ச்சிக் கிடமாயிருத்தலால், எவ்வெத்திரவியம் தைஜசமாவதன்றோ அவ்வத்திரவியம் தடையில்லாதவழி அத்தியந்தம் எரிதழலின் சையோகமுண்டாக அழிவுபடாத நெகிழ்ச்சிக் கிடமுமாவதன்று. எங்ஙனம் நெய், அரக்கு முதலிய பிருதிவி தைஜசத் திரவியமன்றும். ஆகையால் அப்பிருதிவி ஜலவடிவ தடையில்லாதவழி அத்தியந்தம் எரிதழலின்சையோகமுண்டாக அழிவில்லாதநெகிழ்ச்சியின் அதிகரணமுமன்றும்; ஜலவடிவ தடையில்லாதவழி அத்தியந்தம் எரிதழலின் சையோக முண்டாக, நெய், அரக்கு வடிவ பிருதிவியின் நெகிழ்ச்சி அழிந்துவிடுகின்றது. அச்சுவர்ணமோ ஜலாதி வடிவ தடையில்லாதவழி அத்தியந்தம் எரிதழலின் சையோகமுளதாயினும் அந்நெகிழ்ச்சிக்கு அழிவு உண்டாவதில்லை. சுவர்ணம் பார்த்திவமாகுமாயின் நெய், அரக்கு வடிவ பிருதிவியினைப்போன்று சுவர்ணத்தின் நெகிழ்ச்சி நாசமாய்விடும். ஆகையால் அச்சுவர்ணம் பார்த்திவமன்றும். தைஜசத்திரவியமேயாம். ஆண்டு இவ்வநுமானத்தில் "அத்தியந்தம் எரிதழலின் சையோகமுண்டாக அழிவுபடாத நெகிழ்ச்சித்தன்மைக்கு அதிகரணமாவதால்" எனவிம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "தடையில்லாதவழி" என்னும் பதங்கூறாவிடின் ஜலத்தினிடையிலுள்ள நெய்யினிடத்து அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின் அத்தியந்தம் எரிதழலின் சையோக முளதாயினும் ஜலத்தினிடையிலுள்ள நெய்யின் நெகிழ்ச்சித் தன்மை நாசமாகிறதில்லை. ஆனால்அந்நெய்யில் தைஜசத்தன்மை வடிவசாத்தியமின்றும் ஆகையால் தைஜசத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அந்நெய்யிலிருப்பதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும்; அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அவ்வேதுவில "தடையில்லாத வழி" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அத்தியந்தம் எரிதழலின் சையோகமுடைய நெய்யில் தடையின் அபாவமின்றும் ஜல வடிவ் தடையே ஆண்டிருக்கின்றது ஆகையால் கூறிய அவ்வேதுவிற்கு நெய்யில் வியபிசாரமுண்டாகாது. அல்லது "தடையில்லாதவழி அழிவுபடாத நெகிழ்ச்சிக் குணத்திற்கு அதிகரணமாவதால்" எனவிம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் அத்தியந்தம் எரிதழலின் "சையோகமுண்டாக" என்னும் பதங்கள் கூறாவிடின் அத்தியந்தம் எரிதழலின் சையோகமுண்டாகாதநெய்யில் அவ்வேதுவின்வியபிசாரமுண்டாகும். ஏனெனின் ஜலவடிவ தடையில்லாத வழி அந்நெய் நாசமாகாத நெகிழ்ச்சிக் குணத்திற்கு அதிகரணமேயாம் அந்நெய்யில் தைஜசத் தன்மை வடிவ சாத்தியமின்றும்

ஆகையால் தைஜசத்தன்மை வடிவசாத்தியத்தின் அபாவமுடைமை அந்நெய்யி லிருப்பதால் அவ்வேது வியபிசாரியேயாகும் அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "அத்தியந்தம் எரிதழலின் சையோகமுண்டாக" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அத்தியந்தம் எரிதழலின் சையோகமில்லாத நெய்யில் தைஜசத் தன்மை சாத்தியத்தினைப் போன்று அத்தியந்தம் எரிதழலின் சையோகமுள்ள ஏதுவுமின்றாம். ஆகையால் அந்நெய்யில் கூறியவேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய இவ் வேதுவில் "அத்தியந்தம்" என்னும் பதங் கூறாவிடின் மீண்டும் அந்நெய்யில் அவ்வேது வியபிசாரியாகும். ஏனெனின், ஜல வடிவ தடையில்லாதவழியும் பர மாணு துவியணுக வடிவ வன்னியின் சையோக முளதாயினும் அல்லது பெரிய எரிதழலின்சையோகம் ஓர் க்ஷணமாத்திரம் உளதாயினும் அந்நெய்யின் நெகிழ்ச்சிக்குணம் அழிவுபடுகிறதில்லை. ஆகையால் தைஜசத்தன்மை வடிவ சாத் தியத்தின் அபாவமுடைமை அந்நெய்யிலிருப்பதால் அவ்வேது வியபிசாரியே யாகும் அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேது வில் "அத்தியந்தம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பரமாணு துவி யணுக வடிவ வன்னியின் சையோகமும், பெரிய எரிதழலின் ஓர் க்ஷணமாத்திர சையோகமும் அத்தியந்த வன்னி சையோக மெனப்படுகிறதில்லை; ஆனால் சிலகாலமட்டுமுள்ள பெரிய எரிதழலின் சையோகமே அத்தியந்த வன்னியின் சையோகமெனப்படுகின்றது. இத்தகைய வன்னியின் சையோகமுளதாக ஜல வடிவ தடையில்லாதவழி நெய், அரக்கு முதலிய பார்த்திவ பதார்த்தங்களின் நெகிழ்ச்சிக்குணம் நாசமேயாய் விடுகின்றது. ஆகையால் அந்நெய்யில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது.

சங்கை :—கூறிய இவ்வேதுவிற்கு ஜல பரமாணுக்களில் வியபிசாரமே யுண்டாகும். ஏனெனின், அவ்வத்தியந்த வன்னி சையோகத்தி னிருப்புள தாயினும் ஜல பரமாணுக்களின் நெகிழ்ச்சிக்குணம் நாசமாகாது. எக்காரணத் தாலெனின் ஜல பரமாணுக்களின் நெகிழ்ச்சிக்குணம் நித்தியமாம். நித்திய வத்துவிற்கு ஓர் போதும் நாசமுண்டாகாது. ஆகையால் தைஜசத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை ஜல பரமாணுக்களிலிருப்ப தாவதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும். கூறிய அவ்வேதுவில் "பிருதிவித் தன் மையால்" என்னும் பதத்தைக் கூறுவதால் அதாவது, தடையில்லாதவழி அத் தியந்த வன்னி சையோகமுண்டாக அழிவுபடாத நெகிழ்ச்சிக் குணத்திற்கு அதிகரணம் பிருதிவியாவதால்" என்னும் பிருதிவித் தன்மை பதமுள்ள ஏது வைக்கூறுவதால் அந்த பிருதிவித்தன்மையின் அபாவமுடைய அஜ்ஜல பரமா ணுக்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. என்றாலும் பிருதி வித்தன்மை பதத்தைக்கூறுவதால் அவ்வேதுவிற்கு யாண்டும் பிரசித்தமின்மை யுண்டாகும். ஏனெனின், இத்தகைய பிருதிவி ஒன்றின்றாம். பிருதிவியின் நெகிழ்ச்சிக்குணம் ஜலாதி வடிவ பிரதிபந்தகத்தின் அபாவமுளதாக அத்தியந் தம் வன்னியின் சையோகத்தால் நாசமாகாததன்று; நாசமேயாகின்றது. ஆகை யால் அந்த பிருதிவித்தன்மைப் பதத்தால் அஜ்ஜல பரமாணுக்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரத்தை நிவர்த்தி செய்வது சம்பவியாது.

சமாதானம்:—கூறிய அவ்வேதுவிலுள்ள நெகிழ்ச்சி என்னும் பதத்தால் ஜன்னிய நெகிழ்ச்சியினையே கொள்ளுக. அல்லது நிமித்தத்தானுய நெகிழ்ச்சியினைக் கொள்ளுக. அஜ்ஜன்னிய நெகிழ்ச்சிக் குணமும், நிமித்தத்தானுய நெகிழ்ச்சிக்குணமும் ஜல பரமாணுக்களிலிருப்பதில்லை. ஜல பரமாணுக்களில் நித்திய நெகிழ்ச்சிக் குணமும் இயல்பாயுள்ள நெகிழ்ச்சிக்குணமு மிருக்கின்றது. ஆகையால் கூறிய அவ்வேதுவிற்கு ஜல பரமாணுக்களில் வியபிசார முண்டாகாது.

சங்கை:—தைஜச சுவர்ணத்தோடு கலந்துள்ள மஞ்ச ளுருவத்திற்கும் குருத்துவத்திற்கும் ஆசிரயமாகிய பார்த்திவக்கூறும் அத்தியந்த வன்னியின் சையோககாலத்தில் சுவர்ணத்தைப்போன்று நெகிழ்ச்சியாகின்றது. ஆகையால் கூறிய அவ்வேது அப்பார்த்திவ பாகத்திலும் இருக்கின்றது. ஆனுல் பார்த்திவக்கூறில் தைஜசத்தன்மைவடிவ சாத்தியமின்ரும்; ஆகையால் தைஜசத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை பார்த்திவக்கூறில் இருப்பதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும்.

சமாதானம்:—எங்ஙனம் ஜலத்தினிடையிலுள்ள மையின் பஸ்மம் யாதோ அப்பஸ்மம் நெகிழ்ச்சியாவதின்று, ஆனுல் அஜ்ஜலமே நெகிழ்ச்சியாயிருக்கின்றது நெகிழ்ச்சியுடைய ஜலத்தின் சையோகத்தால் அம்மையின் பஸ்மத்தில் நெகிழ்ச்சித் தன்மையின் பிராந்தியுண்டாகின்றதோ அங்ஙனமே தைஜச சுவர்ணத்திலுள்ள மஞ்சள் உருவமும், குருத்வத்தின் ஆசிரியமுமாகிய பார்த்திவக் கூறு யாதோ அப்பார்த்திவக் கூறு அத்தியந்த வன்னியின் சையோகத்தால் நெகிழ்ச்சியாகிறதில்லை. அத்தைஜச சுவர்ணமே நெகிழ்ச்சியாகிறது. நெகிழ்ச்சியடைந்த தைஜச சுவர்ணத்தின் சையோகத்தால் அப்பார்த்திவக் கூறில், நெகிழ்ச்சித் தன்மையின் பிராந்தி யுண்டாகின்றது. ஆகையால் அப்பார்த்திவக் கூறில் தைஜசத் தன்மை சாத்தியத்தைப் போன்று அவ்வேதுவுமின்ரும். ஆகையால் அவ்வேதுவிற்கு பார்த்திவக் கூறில் வியபிசார முண்டாகாது. இவ்வாருய அநுமானப் பிரமாணத்தால் அச்சுவர்ணத்தில் தைஜசத்தன்மையே சித்திக்கின்றது.

## ௫௨௫. வேறு அநுமானத்தால் சுவர்ணத்தில் தைஜசத்தன்மையின் சித்தி.

சில நூலாசிரியரோ இவ்வாருய அநுமானத்தால் சுவர்ணத்தில் தைஜசத்தன்மையைச்சித்தஞ்செய்கின்றனர். "𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑌿 𑌪𑍀𑌤𑌿𑌮𑌗𑍁𑌰𑍁𑌤𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌃 𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌯𑌦𑍍𑌰𑌵𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌕𑌦𑍍𑌰𑌵𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌃। 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌨𑌲𑌸𑌂𑌯𑍋𑌗𑍇 𑌸𑌤𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌰𑌵𑌦𑍍𑌰𑌵𑌤𑍍𑌵𑌵𑌿𑌜𑌾𑌤𑍀𑌯𑌦𑍍𑌰𑌵𑌤𑍍𑌵𑌾𑌨𑌧𑌿𑌕𑌰𑌣𑌕𑍇𑌵𑌲𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌤𑌰𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌜𑌲𑌮𑌧𑍍𑌯𑌸𑍍𑌥𑌪𑍀𑌤𑌪𑌟𑌵𑌤𑍍" ॥ (இ-ள்.) அத்தியந்தவன்னியின் சையோகமுடைய சுவர்ணத்தில் கலந்துள்ள மஞ்சள் உருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரியமாகிய பார்த்திவக் கூறு யாதோ அப்பார்த்திவக் கூறு தன்னினும் வேருனதும் உருவத்தினுற்பத்தியைப் பிரதிபந்திப்பதுமாம் இத்தகைய நெகிழ்ச்சி தர்மமுடைய திரவியத்தால் சம்யுக்தமாம். அத்தியந்த வன்னி

யின் சையோகத்தினிருப்புள்ளதாயினும் முன்னுருவத்தினும் வேறான உருவத்தின் அதிகரணமாகாத பிருதிவி வடிவமாவதால், எவ்வெத்திரவியம் அத்தியந்த வன்னியின் சையோகத்தினிருப்புள்ளதாயினும் முன்னுருவத்தினும் வேறான உருவத்தின் அதிகரணமாகாத பிருதிவி வடிவமாகின்றதோ அவ்வத்திரவியம் தன்னினும் வேறானதும் உருவத்தின் உற்பத்தியை பிரதிபந்திக்கும் நெகிழ்ச்சி தர்மமுடைய திரவியத்தோடு கூடியதேயாகின்றது. எங்ஙனம்: ஜலத்திடையிலுள்ள மஞ்சள் படம் அத்தியந்த வன்னியின் சையோகமிருக்கினும் முன்னுள்ள மஞ்சளுருவத்தினும் வேறான நீலவுருவத்தினதிகரணமாகாத பிருதிவி வடிவமாம். ஆகையால் அம்மஞ்சள் படம் தன்னினும் வேறானதும் கருமை முதலிய உருவத்தின் உற்பத்தியைப் பிரதிபந்திக்கும் நெகிழ்ச்சி தர்மமுடைய ஜல வடிவ திரவியத்தோடும் கூடியதாம். அங்ஙனமே அம்மஞ்சளுருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரியமாகிய பார்த்திவக் கூறும் அத்தியந்தம் வன்னியின் சையோகமிருக்கினும் முன்னுள்ள உருவத்தினும் வேறான கருமை முதலிய உருவங்களின் அதிகரணமாகாத பிருதிவி வடிவமாம். ஆகையால் அம்மஞ்சள் உருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரயமாகிய பார்த்திவ பாகமும் தன்னினும் வேறானதும் கருமை முதலிய உருவங்களின் உற்பத்தியை பிரதிபந்திக்கும் நெகிழ்ச்சி தர்மமுடையத் திரவியத்தோடு அவசியம் கூடியதாகும். அத்தகைய மஞ்சளுருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரியமாகிய பார்த்திவக்கூறைவிட வேறானதும், அப்பார்த்திவக் கூறில் கருமைமுதலிய உருவத்தினுற்பத்தியை பிரதிபந்திப்பதும், நெகிழ்ச்சிக்குணமுடையதும் தைஜசசுவர்ணமாகவே சித்தமாகின்றது. பிருதிவி, ஜலம், வாயு முதலியன சித்தமாகிறதில்லை, ஏனெனின், கூறிய அவ்வநுமானத்தில் பக்ஷ வடிவ மஞ்சளுருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரியமாகிய பார்த்திவக்கூறு யாதோ அப்பார்த்திவக் கூறைவிட விஜாதீய வடிவத்தன்மை பிருதிவியில்லை. ஆனால் பிருதிவித்தன்மை ஜாதியால் சஜாதீய வடிவத் தன்மையேயிருக்கின்றது. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் அந்த பிருதிவியின் சித்தியுமுண்டாகாது. பக்ஷமாகிய பார்த்திவக்கூறைவிட ஜலம் வேறானதாம்; அங்ஙனமே அஜ்ஜலம் நெகிழ்ச்சி குணமுடையதுமாம். ஆயினும் அஜ்ஜலத்தின் சம்பவம் ஆண்டுண்டாகாது. ஏனெனின், அஜ்ஜலத்தில் இயல்பாயுள்ள நெகிழ்ச்சியேயிருக்கின்றது; நிமித்தஜனைய நெகிழ்ச்சியிருப்பதில்லை. சுவர்ணத்திலோ இயல்பாயுள்ள நெகிழ்ச்சி சிறிதேனும் அநுபவமாகிறதில்லை. வன்னி வடிவ தேயுவின் சையோகத்தாலுண்டாம் நிமித்தத்தானைய நெகிழ்ச்சியே சுவர்ணத்தில் பிரதீதியாகின்றது. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் ஜலத்தின் சித்தியுமுண்டாகாது. அங்ஙனமே அவ்வநுமானத்தால் வாயு, ஆகாச முதலிய திரவியங்களின் சித்தியும் சம்பவியாது. ஏனெனின், அவ்வாயு, ஆகாச முதலிய திரவியங்கள் பக்ஷமாகிய பார்த்திவக்கூறைவிட வேறுவனவேயாமாயினும் வாயு, ஆகாச முதலியத்திரவியங்கள் நெகிழ்ச்சிக்குணமுடையனவன்று; அங்ஙனமே உருவ குணமுமில்லாதனவாம். உருவமுடையத் திரவியமே பாகத்தாலாய உருவ முதலியவைகளினுற்பத்தியில் பிரதிபந்தகமாகின்றது. உருவமில்லாத திரவியம் பிரதிபந்திப்பதாகாது. ஓர் கால் உருவமில்லாத திரவியத்தின் சையோகத்திற்கும் பாகத்

தானாய உருவ முதலியவைகளி னுற்பத்தியை பிரதிபந்திப்பதாக வொப்பின், ஓரிடத்தும் தேயுவின் சையோக வடிவ பாகத்தால் பிருதிவியில் வேறான உருவம், ரச முதலியவைகளின் உற்பத்தியுண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின், உருவமில்லாத வாயு, ஆகாச முதலிய பிரதிபந்தக திரவியங்கள் எல்லாத்தேசங்களி லிருப்பனவேயாகின்றன. ஓர் தேசகாலத்திலும் அவற்றின் அபாவமில்லை. மாம்பழ முதலிய பிருதிவியில் தேயுவின் சையோக வடிவ பாகத்தால் முன்னுள்ள உருவம், ரசம் முதலியவைகளின் நாசவாயிலாக வேறான உருவம், ரசம் முலியவைகளி னுற்பத்தியுலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையாலிது அறியப்படுகிறது உருவமில்லாத வாயு, ஆகாச முதலிய திரவியங்கள் அப்பாகத்தானாய உருவம், ரச முதலியவைகளி னுற்பத்தியை பிரதிபந்திப்பனவாகா. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் பிருதிவி, ஜலம், வாயு, ஆகாச முதலியத்திரவியங்களின் சித்தி சம்பவியாது; பரிசேஷமாக தைஜச சுவர்ணத்தின் சித்தியே சம்பவிக்கின்றது. ஆண்டுக் கூறிய அவ்வநுமானத்தில் "முன்னுருவத்தினும் வேறான உருவத்திற்கு அதிகரணமாகாத பிருதிவியாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "அத்தியந்த வன்னியின் சையோகமிருக்கினும்" என்னும் பதங் கூறாவிடின், அத்தியந்த வன்னியின் சையோகமில்லாத கடத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின், எக்கடத்தில் அத்தியந்த வன்னியின் சையோகமின்றோ அக்கடம் முன்னுருவத்தினும் வேறான உருவத்தின் அதிகரணமாகாததும் பிருதிவி வடிவமுமாம். ஆனால் அக்கடத்தில் வேறான உருவத்தை பிரதிபந்திக்கும் நெகிழ்ச்சியுடையத்திரவியசையுக்தத்தன்மைவடிவசாத்தியமின்றாம். ஆகையால் அச்சாத்தியத்தின் அபாவமுடைமை அக்கடத்திலிருப்பதால் அவ்வேது வியபிசாரியேயாம். அவ்வியபிசாரதோஷத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு அவ்வேதுவில் "அத்தியந்த வன்னி சையோகமிருக்க" என்னும் பதங் கூறப்பட்டது. அக்கடத்தில் எங்ஙனம் அச்சாத்தியமின்றோ அங்ஙனமே அத்தியந்த வன்னியின் சையோகமுள்ள ஏதுவுமின்றாம். ஆகையால் அக்கடத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வேதுவில் "அத்தியந்தம்" என்னும் பதங் கூறாவிடின் எக்கடத்தில் பரமாணு துவியணுக வடிவ வன்னியின் சையோகம் அல்லது பெரிய வன்னியின் ஓர் க்ஷணமாத்திர சையோகமிருக்கிறதோ அக்கடத்தில், அத்தேயு சையோகத்தால் முன்னுருவத்தினும் வேறான உருவத்தினுற்பத்தியுண்டாகிறதில்லை. ஆகையால் அக்கடத்தில் அவ்வேதுவோ விருக்கின்றது; கூறிய அச்சாத்தியம் அக்கடத்திலின்றாம். ஆகையால் அச்சாத்தியத்தின் அபாவமுடைமை அக்கடத்திலிருப்பதாவதால் அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "அத்தியந்தம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுக் கடத்தினுள்ள பரமாணு துவியணுகவடிவ வன்னியின் சையோகம் அல்லது பெரிய வன்னியின் ஓர் க்ஷணமாத்திர சையோகமிருக்கின்றது என்றாலும் அவ்வன்னி சையோகம் அத்தியந்த வன்னி சையோகமெனப்படுகிறதில்லை. ஆகையால் அக்கடத்தில் எங்ஙனம் கூறிய சாத்தியமின்றோ அங்ஙனமே அத்தியந்த வன்னியின் சையோகமுள்ள ஏதுவுமின்றாம், ஆகையால் அக்கடத்தில் கூறிய அவ்

வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "அத்தியந்த வன்னியின் சையோகமிருக்கினும் முன்னுருவத்தினும் வேறான உருவத்தின் அதிகரணமாகாததால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ் வேதுவில் "பிருதிவியாவதால்" என்னும் பதங் கூறுவிடின் அவ்வேதுவிற்கு ஜல பரமாணுக்களில் வியபிசாரமுண்டாகும். ஏனெனின், அஜ்ஜல பரமாணுக் களில் அத்தியந்த வன்னியின் சையோக மிருக்கினும் முன்னுருவத்தினும் வேறான உருவத்தினுற்பத்தியுண்டாகிறதில்லை. ஆகையால்அவ்வேதுவோ அஜ் ஜல பரமாணுக்களில் இருக்கின்றது. அஜ்ஜல பரமாணுக்களில் விஜாதீய உரு வத்தைப் பிரதிபந்திக்கும் நெகிழ்ச்சியுடையத்திரவிய சம்யுக்தத்தன்மை வடிவ சாத்தியமின்றும். ஆகையால் அச்சாத்தியத்தின் அபாவமுடைமை அஜ்ஜல பரமாணுக்களி லிருப்பதாவதால் அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபி சாரதோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அவ்வேதுவில் "பிருதிவித் தன் மையால்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஜல பரமாணுக்களில் பிருதி வித்தன்மையின்றும். ஆகையால் பிருதிவித் தன்மையுள்ள ஏதுவின் அபாவ மிருப்பதால் அஜ்ஜலபரமாணுக்களில்கூறிய அவ்வேதுவிற்குவியபிசாரமுண்டா காது. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் தைஜச சுவர்ணத்தின் சித்தி சம்பவிக்கின்றது. கருத்திதுவாம். பார்த்திவத்திரவியத்தோடு எவ்வத்தியந்த வன்னியின் சையோகமிருக்கின்றதோ அவ்வத்தியந்த வன்னியின் சையோகம் அப்பார்த்திவத் திரவியத்தோடு விஜாதீயமும் உருவத்தினுற்பத்தியை பிரதிபந் திப்பதும் நெகிழ்ச்சிகுணமுடையதுமாம் அத்தகைய திரவியத்தின் சையோக சம்பந்தமிலதாயின் பார்த்திவத்திரவியத்தில் முன்னுருவத்தினும் வேறான உரு வம் அவசியமாக உண்டாகின்றது. எங்ஙனம் அரிசி முதலிய பார்த்திவத்திரவி யங்களோடு அத்தியந்த வன்னியின் சையோகம் யாதோ அவ்வத்தியந்த வன்னியின்சையோகம் ஜல வடிவதடையில்லாதவழி அவ்வரிசிமுதலியத்திரவி யங்களில் முன்னுள்ள வெண்மை யுருவத்தினும் வேறான கருமை முதலிய உருவத்தினுற்பத்தியை அவசியம் செய்கிறது. சுவர்ணத்திலுள்ள மஞ்சளுருவ முடையதும், குருத்வகுணமுடையதுமான பார்த்திவக்கூறுயாதோ அப்பார்த் திவக்கூறோடு அடிக்கடி அத்தியந்த வன்னியின் சையோகமிருக்கினும் முன் னுள்ள மஞ்சளுருவத்தினும் வேறான கருமை முதலிய உருவத்தி னுற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அப்பார்த்திவக் கூறிேனாடு பார்த்திவக் கூறி னும் வேறானதும், முன்னுள்ள மஞ்சளுருவத்தினும் வேறான கருமை முதலிய உருவத்தி னுற்பத்தியைப்பிரதிபந்திப்பதும், நெகிழ்ச்சிக் குணமுடையதுமாம் அத்தகைய திரவியத்தின் சையோக சம்பந்தம் அவசியம் அங்கீகரிப்பதாகும். ஆண்டு முற்கூறிய முறைப்படி பிருதிவி, ஜலம், வாயு முதலியத்திரவியங்களுக் கோ விஜாதீய உருவத்தி னுற்பத்தியில் பிரதிபந்திக்கும் தன்மை சம்பவியாது விசேஷமாக தேயு வடிவத்திரவியத்திற்கே விஜாதீய உருவத்தி னுற்பத்தியில் பிரதிபந்திக்கும் தன்மை வொப்புவதாகும். பிரதிபந்திக்கும் அத்தேயுவே சுவர்ண வடிவமாம்.

---

௩உ௪. சுருதிப் பிரமாணத்தால் சுவர்ணத்தில் தைஜசத் தன்மையின் சித்தி.

அல்லது கூறிய அநுமானப் பிரமாணத்தால் சுவர்ணத்தில் தைஜச வடிவத் தன்மை சித்திப்பதுடன் "ஃஷிரவடூ ஆஃலகிரண்" என்னுமிவை முதலிய சுருதிப் பிரமாணங்களாலும் அச்சுவர்ணத்தில் தேயு வடிவத்தன்மையே சித்தமாகிறது. இவ்வாறாகக் கூறிய முறைப்படி தைஜசத் தன்மை பிராந்திகளிலும் தைஜசத் திரவிய வடிவத் தன்மை அறிந்துகொள்க.

௩உ௫. வேறுவகையாக நான்கு வகை தேயுவின் வர்ணனம்.

பலநியாய நூற்களிலோ உத்பூத பரிசம் உத்பூத உருவம், அநுத்பூத பரிசம் அநுத்பூத உருவம் உத்பூத பரிசம் அநுத்பூத உருவம், உத்பூத உருவம் அநுத்பூத பரிசமென்னும், வேறுபாட்டால் முற்கூறிய தேயுத்திரவியம் நான்குவகையாகின்றது.

௩உ௬. உத்பூத உருவமும் உத்பூதபரிசமுமுடைய தேயுவின் லக்ஷணம்.

எத்தேயுவின் உருவமும், பரிசமுமாமிரண்டும் உத்பூதமாகின்றனவோ அத்தேயு உத்பூத உருவம், உத்பூத பரிசமுமுடையதெனப்படுகின்றது. எங்ஙனம் பிரசித்த சூரியனாகிய வன்னி வடிவ தேயுவைப்போலும். சூரியனாகிய வன்னி வடிவ தேயுவின் விளக்கமான வெண்மையுருவமும், வெம்மைப்பரிசமும் உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாகின்றன.

௩உ௭. அநுத்பூத உருவம் அநுத்பூத பரிசமுடைய தேயுவின் லக்ஷணம்.

எத்தேயுவின் உருவமும், பரிசமுமா மிரண்டும் அநுத்பூத மாகின்றனவோ அத்தேயு அநுத்பூத உருவம் அநுத்பூத பரிசமுடையதெனப்படுகின்றது. எங்ஙனம் சக்ஷுவிந்திரிய வடிவ தேயுவைப்போலும். சக்ஷுரிந்திரிய வடிவ தேயுவின் விளக்கமான வெண்மையுருவமும், வெம்மைப்பரிசமும் ஒருவருக்கும் பிரத்தியக்ஷமாகிறதில்லை. பிரத்தியக்ஷ ஞானத்தின் யோக்கியமான உருவம், பரிச முதலியன உத்பூதமெனப்படுகின்றன. பிரத்தியக்ஷ ஞானத்தின் அயோக்கியமான உருவம் பரிச முதலியன அநுத்பூதமெனப்படுகின்றன.

௩உ௮. உத்பூத பரிசம் அநுத்பூத உருவமுடைய தேயுவின் லக்ஷணம்.

எத்தேயுவின் பரிசம் உத்பூதமும், உருவம் அநுத்பூதமுமாமோ அத்தேயு உத்பூத பரிசம் அநுத்பூத உருவமுடையதெனப்படுகின்றது. எங்ஙனம் வன்னி முதலியவைகளால் காய்ந்த நீரிலுள்ள தேயு யாதோ அத்தேயுவின் வெம்மைப்பரிசமோ உத்பூதமாவதால் துவக்கிந்திரியத்தால் அறியப்படுகின்றது. விளக்கமான வெண்மை உருவம் அநுத்பூதமாவதால் சக்ஷுவிந்திரியத்தால் அறியப்படுகிறதில்லை. இக்காரணத்தாலேயே அத்தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும், துவாசப் பிரத்தியக்ஷமும் வாயுவைப் போன்று உண்டாகிறதில்லை. ஏனெனின், பிராசீன நையாயிகர்களின் மதத்தில் புறத்திரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ சமானாதிகரண உத்பூத உருவம் காரணமாகின்றது அவ்வுத்பூத உருவம் எங்ஙனம் வாயுவிலின்றோ, அங்ஙனமே அத்தேயுவிலு

மின்றும். ஆகையால் எங்ஙனம் அவ்வாயுவின் பிரத்தியக்ஷம் சக்ஷுரிந்திரியத்தாலும் துவிக்கிந்திரியத்தாலு முண்டாவதின்றோ, அங்ஙனமே அத்தேயுவின் பிரத்தியக்ஷமும் சக்ஷுரிந்திரியத்தாலும் துவக்கிந்திரியத்தாலும் உண்டாகிறதில்லை. ஆனால் எங்ஙனம் வாயுவின் பரிச மாத்திரத்தின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தாலுண்டாமோ அங்ஙனமே அத்தேயுவின் வெம்மைப் பரிசத்தின் பிரத்தியக்ஷமே, துவக்கிந்திரியத்தா லுண்டாகின்றது. எம்மீமாசஞ்கரும், நையாயிகரும் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலோ மஹத்துவ சமானாதிகரண உத்பூத உருவத்திற்குக் காரண மொப்புகின்றனரோ, திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் மஹத்துவ சமானாதிகரண உத்பூத பரிசத்திற்குக் காரணமொப்புகின்றனரோ அம்மீமாஞ்சகர் மதத்திலும் அந்நையாயிகர்கள் மதத்திலும் எங்ஙனம் வாயு சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாகாது துவாசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாமோ அங்ஙனமே காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாகாது; துவாசப்பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாகின்றது.

௩உக. உத்பூதஉருவம் அநுத்பூத பரிசமுடைய தேயுவின் லக்ஷணம்.

எத்தேயுவின் உருவம் உத்பூதமும், பரிசம் அநுத்பூதமுமாமோ அத்தேயு உத்பூத உருவம் அநுத்பூத பரிசமுடையதெனப்படுகின்றது. எங்ஙனம் தீப முதலியவைகளி னொளியாகிய தேயுவைப்போலும். அவ்வொளியாகிய தேயுவின் விளக்கமான வெண்மை உருவமோ உத்பூதமாம்; வெம்மைப்பரிசம் அநுத்பூதமாம். இக்காரணத்தானேயே கேவலம் அவ்வொளியாகிய தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. எந்நையாயிகர் புறத் திரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் மஹத்துவ சமானாதிகரண உத்பூத உருவம், உத்பூத பரிசமாம் இரண்டிற்கும் காரண மொப்புகின்றனரோ அந்நையாயிகர்களின் மதத்திலோ அவ்வொளியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. இவ்வெல்லா வார்த்தையும் பின்னர் வாயு நிருபணத்தில் தெளிவாகக் கூறுவாம்.

௩௩௦. உத்பூத உருவம் உத்பூத பரிசமுடைய தேயுவில் சுவர்ண வடிவ தேயுவின் அந்தர்பாவ வர்ணனம்.

சங்கை:—முற்கூறிய நான்கு வகைத் தேயுவில் சுவர்ணம், வெள்ளியாதி வடிவ தேயுவின் அந்தர்பாவம் (அடக்கம்) எத்தேயுவிலிருக்கின்றது.

சமாதானம்:—சுவர்ண வடிவ தேயுவின் அடக்கம் உத்பூத உருவம் உத்பூத பரிசமுடையதெனப் பெயரிய முதற் றேயுவிலேயே யிருக்கின்றது. அநுத்பூத உருவம் அநுத்பூதப் பரிசமுடையதெனப் பெயரிய தேயுவில் சுவர்ணத்தின் அடக்கமில்லை. ஏனெனின், சுவர்ணத்திற்கு அநுத்பூதஉருவமுடைமை யொப்பின் சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகாது. சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமோ உலகர் யாவருக்கும் அனுபவ சித்தமாம். ஆகையால் அச்சுவர்ணம் அநுத்பூத உருவமுடையதன்றும். உத்பூத உருவமுடையதேயாம். சுவர்ணத்திற்கு அநுத்பூத பரிசமுடைமை யொப்பின் சுவர்

ணத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகாததாகும். சுவர்ணத்தின் துவாசப் பிரத்தியக்ஷமும் உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் சுவர்ணம் அநுத்பூத பரிசமுடையது மன்றும். சுவர்ணம் உத்பூத பரிசமுடையதேயாம். ஆகையால் சுவர்ண வடிவ தேயுவின் அடக்கம் உத்பூத உருவம் உத்பூத பரிசமுடையதெனப் பெயரிய முதலாவது தேயுவிலேயே சம்பவிக்கின்றது.

### ௫௫க. சுவர்ணத்தில் அநுத்பூத பரிசத்தின் சாதன சங்கை.

சங்கை:—சுவர்ண வடிவ தேயுவில் ஓர் கால் உத்பூத உருவமும், உத்பூத பரிசமு மிருக்குமாயின் எங்ஙனம் இரவி வடிவ தேயுவின் விளக்கமான வெண்மை யுருவமும், வெம்மைப் பரிசமும் உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாகப் பிரதீதியாகின்றதோ அங்ஙனமே சுவர்ண வடிவ தேயுவின் விளக்கமான வெண்மையுருவமும் வெம்மைப்பரிசமும் உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாக பிரதீதியாகவேண்டும். அத்தகைய பிரதீதியுண்டாகிறதில்லை. ஆகையால் சுவர்ண வடிவ தேயுவின் அடக்கம் முதமாவது தேயுவில் சம்பவியாது. இரண்டாவது தேயுவிலேயே சம்பவிக்கிறது.

### ௫௫உ. பார்த்திவக்கூறின் உருவம் பரிசத்தாலாம் மறைவினால் சுவர்ணத்தின் உருவம் பரிசத்தின் கிரஹணமாகாமை.

சமாதானம்:—சுவர்ண வடிவ தேயுவில் உத்பூத வுருவம், உத்பூதபரிசமிருக்கினும் அவ்வுருவபரிசத்தின் கிரஹண மாகாமை யாதோ, அது வலிவுடைய சஜாதீய பார்த்திவ உருவ பரிசங்களாலாய மறைவினாலுண்டாயதாம். ஆண்டு தைஜச சுவர்ணத்தில் கலந்துள்ள மஞ்சளுருவம் குருத்வங்களின் ஆசிரியமாகிய பார்த்திவக்கூறுயாதோ அப்பார்த்திவக்கூறின் மஞ்சளுருவம், உருவத்தன்மை ஜாதியினாலும், வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசம், பரிசத்தன்மைஜாதியினாலும் சுவர்ண வடிவ தேயுவின் உருவ பரிசங்களின் சஜாதீயமாகின்றது. அங்ஙனமே சுவர்ணவடிவதேயுவின் உருவபரிசங்களைவிட பார்த்திவக்கூறின் உருவம், பரிசம் வலிவானதுமாம். அவ்வுருவ பரிசங்களின் வலியுடைத்தன்மைபிரத்தியக்ஷஞானவடிவகாரியத்தின்வலிவானேயேஅறியப்படுகின்றது. அதாவது இருவகையாய உருவ பரிசங்களில் எவ்வுருவ பரிசங்களின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றனவோ அவ்வுருவ பரிசங்களோ வலிவுடையனவெனப்படுகின்றன. எவ்வுருவ பரிசங்களின் பிரத்தியக்ஷ ஞானமுண்டானவன்றோ அவ்வுருவ பரிசங்கள் வலிவில்லாதன வெனப்படுகின்றன. இவ்வாறாய வலிவுடைத் தன்மை அப்பார்த்திவக்கூறின் உருவ பரிசங்களி லிருக்கின்றது. சுவர்ண வடிவ தேயுவின் உருவ பரிசங்களிலின்றாம். இத்தகைய வலிவுடைய சஜாதீய பார்த்திவ உருவ பரிசங்களாலாய மறைவினாலும் அத்தைஜச சுவர்ணத்தின் உருவ பரிசங்களின் கிரஹண முண்டாகிறதில்லை.

### ௫௫௫. பூர்வபக்ஷ முறைப்படி அபிபவத்தின் லக்ஷணம்.

சங்கை:—"ബലവ ஸஜாதீய க்ரஹண க்ருதக்ரஹணம் அபிபவ:" (இ-ள்.) வலிவுடையதும், சஜாதீயமுமாம் அத்தகைய வத்துவின் கிரஹணத்

தால் எவ்வத்துவின் கிரஹண மின்றோ அதுவே அவ்வத்துவின் அபிபவமாம் (மறைவாம்). அது ஈண்டுப்பிரசங்கத்தில் வலியுடைய சஜாதீய பார்த்திவக்கூறின் உருவ பரிசங்களின் கிரஹணத்தால் எத்தைஜச சுவர்ணத்தின் உருவ பரிசங்களின் கிரஹணமின்மையோ அக்கிரஹணமின்மையே தைஜச சுவர்ணத்தின் உருவ பரிசங்களின் மறைவாம் என்னும் இப்பிரசங்கத்தில் கிரஹணசத்தத்தால் யாண்டும் பிரத்தியக்ஷ ஞானத்தையே கிரஹிக்குக. ஆண்டு இரவி, தீபம் முதலிய ஒளியில் பார்த்திவக்கூறின் மஞ்சளுருவத்தின் கிரஹண முண்டாகின்ற தாகையால் தைஜச சுவர்ணத்தின் விளக்கமான வெண்மை உருவத்தின் கிரஹணமுண்டாகாதாகுக. ஆனால் இருளில் அப்பார்த்திவக்கூறின் மஞ்சள் உருவத்தின் கிரஹண முண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வலியுடைய சஜாதீய கிரஹணத்தாலாய கிரஹியாமை வடிவ அபிபவத்தின் (மறைவின்) அபாவமிருக்க அந்தகாரத்தில் தைஜச சுவர்ணத்தின் விளக்கமான வெண்மை உருவத்தின் கிரஹணமுண்டாகவேண்டும்; உண்டாகிறதில்லை.

## ௩௩௪. சித்தாந்தமதப்படி அபிபவத்தின் லக்ஷணம்.

சமாதானம்:—வலிவுடைய சஜாதீய கிரஹணத்தாலாய கிரஹணமின்மைக்கு யாம் மறைவு வடிவத் தன்மை வொப்புகிறதில்லை. எக்காரணத்தாலெனின், இருளில் தைஜச சுவர்ணத்தின் விளக்கமான வெண்மை யுருவத்தினது பிரத்தியக்ஷத்தின் பிராப்தியுண்டாகும் ஆனால் "ப³லவத்ஸஜாதீயஸம்ப³ந்த⁴க்ருதக்³ரஹணாபா⁴வ:" (இ-ள்.) வலிவுடையதும், சஜாதீயமுமாம் வத்துவின் சம்பந்தத்தால் எவ்வஸ்துவின் கிரஹணமின்மை யிருக்கின்றதோ அக்கிரஹணமின்மையே அவ்வத்துவின் அபிபவமாம் (மறைவாம்) என்னும் இவ்வாறாய மறைவை யாம் அங்கீகரிக்கின்றோம். ஆண்டு தைஜச சுவர்ணத்தின் உருவபரிசங்களில் பார்த்திவக்கூறின் உருவ பரிசங்களின் சுவசமவாயி சம்யுக்த சமவாயவடிவ சம்பந்தம் அவ்வந்தகாரத்திலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய அபிபவத்தி னிருப்புளதாக இருளில் சுவர்ணத்தின் விளக்கமான வெண்மை யுருவத்தின் பிரத்தியக்ஷப் பிராப்தியுண்டாகமாட்டாது. ஆண்டுக்கூறிய சம்பந்தத்தில் சுவசத்தத்தால் பார்த்திவக்கூறின் மஞ்சளுருவத்தினையும், வெம்மையும், குளிர்ச்சியுமில்லாத பரிசத்தினையும் கிரஹிக்குக. அவ்வுருவ பரிசங்களின் சமவாயிகாரணம் அப்பார்த்திவக்கூறாம். அப்பார்த்திவக்கூறின் சையோகசம்பந்த முடையது தைஜச சுவர்ணமாம். அத்தைஜச சுவர்ணத்தில் விளக்கமான வெண்மையுருவத்திற்கும், வெம்மைப் பரிசத்திற்கும் சமவாயசம்பந்தமிருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் தைஜச சுவர்ணத்தின் உருவ பரிசங்களில் அப்பார்த்திவக்கூறின் உருவ பரிசத்தி னிருப்புயாதோ அதுவே தைஜச சுவர்ணத்தின் உருவ பரிசங்களை மறைப்பதாம். அம்மறைவால் தைஜச சுவர்ணத்தின் விளக்கமான வெண்மை யுருவத்தினதும், வெம்மைப் பரிசத்தினதும் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. பார்த்திவக் கூறின் மஞ்சளுருவத்தினதும், வெம்மையும், குளிர்ச்சியுமில்லாத பரிசத்தினதும் பிரத்தியக்ஷஞானமே யுண்டாகின்றது. இவ்வாறாய மறைவால் தைஜச சுவர்ணத்தின் விளக்கமானவெண்மையுருவத்தினதும், வெம்மையினதும் கிரஹணமுண்டாகிறதில்லை

ஆயினும் அச்சுவர்ணம் உத்பூத உருவம் உத்பூதப் பரிசமுடையதேயாம். அநுத்பூத உருவம் அநுத்பூத பரிசமுடையதன்று.

### ௱௱௫. அந்தகாரத்தில் சுவர்ண வடிவத் தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் சாதகமாக சங்கை.

*சங்கை* :—அச்சுவர்ணத்தினை உத்பூத உருவம் உத்பூத பரிசமுடைய தைஜசத் திரவியமாக வொப்பின் அந்தகாரத்திலும் சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகவேண்டும். ஏனெனின், மஹத்வ பரிமாணமுடையதும், உத்பூத உருவ பரிசமுடையதுமாம் தைஜசத் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்திய க்ஷத்தில் வேறு தேயுவினது சையோகத்தின் அபேக்ஷை யுண்டாகிறதில்லை. எங்ஙனம் இரவி, தீபம் முதலிய தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் வேறோர் தேயுவினது சையோகத்தின் அபேக்ஷையுண்டாகிறதில்லையோ அங்ங னமே அச்சுவர்ண வடிவ தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும் தேயுவி னதுசையோகத்தின் அபேக்ஷையுண்டாகாததாகும். ஆகையால் இருளிலும் சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகவேண்டும், இருளில் சுவர் ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ மொருவருக்கு முண்டாகிறதில்லை. ஆகை யால் சுவர்ணம் தைஜசத் திரவியமன்றாம்.

### ௱௱௬. அந்தகாரத்தில் சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் சங்கையினை நிவர்த்திக்கும் யுக்தி.

*சமாதானம்* :—உருவத்தை விஷயம் செய்யாததாகியதாம் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை; உருவத்தை விஷயம்செய்வதாகிய திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. ஆகையால் இவ்வர்த்தம் சித்தித்தது. திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் உருவத்தின் சாக்ஷு ஷப்பிரத்தியக்ஷத்திற்கு ஆலோகசையோகாதிவடிவ சாமக்கிரிகளும் காரணமா கின்றன. ஆண்டு தைஜசசுவர்ணத்தின் விளக்கமான வெண்மையுருவத்திற்கோ முற்கூறிய முறைப்படி பார்த்திவ மஞ்சளுருவத்தால் மறைவு வுண்டாய்விடு கின்றது. ஆகையால் அவ்விளக்கமான வெண்மை யுருவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமோ சம்பவியாது. எப்பார்த்திவ மஞ்சளுருவத்தால் சுவர்ணத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ அம்மஞ்ச ளுருவத்தின் சாக்ஷு ஷப்பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரி எவ்வாலோகசையோகமாமோ அவ்வாலோக சையோகம் அவ்வந்தகாரத்திலின்றாம். ஆகையால் அந்தகாரத்தில் சுவர்ண வடிவ தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை.

*சங்கை* :—எங்ஙனம் காஷ்டாதி வடிவ பிருதிவியின் செம்மை, மஞ்ச ளாதி உருவத்தால் வன்னி வடிவத்தின் விளக்கமான வெண்மையுருவம் மறைவையடைந்ததாயினும் தன்னையும் பிற பதார்த்தங்களையும் பிரகாசிக்கின் றதோ, அங்ஙனம் பார்த்திவக்கூறின் மஞ்சளுருவத்தால் மறைவை அடைந்த தாயினும் தைஜச சுவர்ணத்தின் விளக்கமான வெண்மையுருவம் தன்னையும் சமீபத்திலிருக்கும் வேறு பதார்த்தங்களையும் அவசியமாகப் பிரகாசம் செய்யும்.

சமாதானம்:— காஷ்ட முதலிய பிருதிவியின் செம்மை, மஞ்சள் முதலிய உருவங்கள் வன்னியின் விளக்கமான உருவத்தை மறைக்கமாட்டாதனவாம். ஆனால் அவ்விளக்கமான உருவத்தின் வெண்மைத்தன்மையினை மறைக்கின்றன; ஆகையால் அவ்வன்னியின் விளக்கமானஉருவம் தன்னையும் சுவசமீபத்திலுள்ள பிறபதார்த்தங்களையும் பிரகாசிக்கின்றது. ஈண்டுச் சுவர்ணத்திலோ பார்த்திவ மஞ்சளுருவமானது வெண்மைத் தன்மை, விளக்கமானத் தன்மையா மிரண்டையும் மறைக்கின்றது. ஆகையால் அத்தைஜசசுவர்ணத்தின் விளக்கமான வெண்மையுருவம் தன்னையும் பிற பதார்த்தங்களையும் பிரகாசஞ்செய்கிறதில்லை. ஆகையால் இவ்வர்த்தம் சித்தித்தது; அச்சுவர்ணம் உத்பூதமாய் மறைவை யடைந்த உருவ பரிசமுடையதெனப் பெயரியதாம். அதாவது உத்பூதமும், மறைந்ததுமாம் உருவ பரிசங்களிரண்டும் எத்தேயுவிற்காமோ அத்தேயு சுவர்ண வடிவ தேயுவாம்.

## ௩௩௭. சுவர்ணத்தினை உத்பூத உருவம் அநுத்பூத பரிசமுடைய தேயு வடிவமாக வொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ சுவர்ண வடிவ தேயுவை முற்கூறிய நான்கு வகைத் தேயுக்களில் நான்காவது தேயு வடிவமாக வொப்புகின்றனர். அதாவது உத்பூதமாய் மறைந்துள்ள உருவமும், அநுத்பூதப் பரிசமும் அச்சுவர்ணத்திற்கு வொப்புகின்றனர். ஆண்டு உத்பூதமாய் மறைந்துள்ள உருவமும், அநுத்பூத பரிசமும் எத்தேயுவிற்காமோ அத்தேயுவினை உத்பூதமாய் மறைந்துள்ள உருவமும், அநுத்பூத பரிசமுமுடையதென்பர். அத்தகைய தேயு வடிவம் சுவர்ணமாமென்னு மிம்மதத்தில் அச்சுவர்ணம் கேவலம் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாம்; துவாசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமன்று. எவ்வாற்றானும் அச்சுவர்ணம் தைஜசத் திரவிய வடிவமேயாம். இவ்வாறாக வெள்ளித்தன்மை பிராந்திகளிலும் தைஜசத் திரவிய வடிவத் தன்மையை அறிந்துக் கொள்க. தைஜச நிரூபணம் முற்றிற்று. இனி வாயுவடிவத் திரவியத்தின் நிரூபணஞ் செய்வாம்.

## ௩௩௮. வாயு வடிவத் திரவியத்தின் நிரூபணம்.

"ரூபரஹிதஸ்பர்ஶவாந் வாயு:" அல்லது "ஸ்வாசஜாந்யஷ்ஷ்ஸ்பர்ஶவாந் வாயு:" அல்லது "வாயுத்வஜாதிமாந் வாயு:"

## ௩௩௯. வாயுவிற்கு உருவமின்றி பரிசமுடைமை வடிவ லக்ஷணம்.

இனியிம்மூன்று லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எத்திரவியம் உருவகுணமின்றிப் பரிசகுணமுடையதாமோ அத்திரவியம் வாயுவெனப்படும். அவ்வாயு உருவகுணமில்லாததும், சமவாய சம்பந்தமாக பரிசகுணமுடையதுமாம். ஆகையால் உருவமின்றி பரிசமுடைமை வடிவ வாயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "உருவமில்லாதது வாயு" என விம்மாத்திரமே அவ்வாயுவின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "பரிசமுடையது" என்னும் பதங் கூறாவிடின் ஆகாய முதலியவைகளில் வாயுவின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் வாயு உருவமில்லாததாமோ அங்ஙனமே ஆகாயம், காலம், திக்கு, ஆத்மா, மன

மென்னுமைந்துத்திரவியங்களும் குணம், கருமமுதலிய சர்வபதார்த்தங்களும் உருவமில்லாதனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "பரிசமுடையது" என்னும் பதங்கூறப்பட்டது. ஆகாயம், காலமுதலியத் திரவியங்களும், குண, கருமமுதலியபதார்த்தங்களும் உருவ குணமில்லாதனவாயினும் பரிசகுண முடையனவன்றும். ஆகையால் ஆகாசமுதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பரிசமுடையது வாயு" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "உருவமில்லாதது" என்னும் பதங் கூறுவிடின் பிருதிவி, ஜலம், தேயு வென்னும்மூன்றுத்திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம்வாயு பரிச குணமுடையதாமோ அங்ஙனமே பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்களும் பரிசகுணமுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உருவமில்லாதது" என்னும் பதங் கூறப்பட்டது. பிருதிவி, ஜலம், தேயுவென்னும் மூன்றுத் திரவியங்கள் பரிசகுண முடையனவாயினும் உருவ குணமில்லாதனவன்றும்; உருவகுணமுடையனவேயாம். ஆகையால் பிருதிவி முதலியத் திரவியங்களில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௩௪௦ தோன்றியழிந்த வாயுவில் கூறிய அந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தியின் சங்கை.

சங்கை:—முதற் க்ஷணத்திலுண்டாய் இரண்டாம் க்ஷணத்தில் நாசமாகும் வாயுவில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாம். ஏனெனின் முதற் க்ஷணத்திலோ திரவியம் நிர்க்குணமாகவே யுண்டாகின்றதென்னும் வார்த்தை முன்னர் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் உற்பத்தி க்ஷணத்திலோ வாயுவில் பரிசகுணம் சம்பவியாது. இரண்டாவது க்ஷணத்தில் பரிச குணமானது உண்டாவதற்கு இரண்டாவது க்ஷணத்தில் வாயு தானே நாசமாய் விடுகின்றது. ஆகையால் தோன்றியழிந்த வாயுவிலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயுவிலும் உருவமில்லாதுபரிசமுடைமை வடிவலக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாமென்னும் சங்கையின் பிராப்தமுண்டாக வினி அந்தலக்ஷணத்தை வேறுவகையாக நிரூபிப்பாம்.

### ௩௪௧. கூறிய அந்த லக்ஷணத்தை வேறுவகையாக வர்ணித்தல்.

" ரூபரஹிதஸ்பர்சவத்த்வ வ்யாப்யத்ரவ்யத்வஸாக்ஷாத்வ்யாப்யஜாதிமாந் வாயு:" (இ-ள்.) உருவமின்றி பரிசமுடையத் திரவியத்தி லிருப்பதும் திரவியத்தன்மைஜாதிக்கு சாக்ஷாத் வியாப்பியமுமாம் ஜாதியாதோ அஜ்ஜாதியையுடையத் திரவியம் வாயுவெனப்படுகின்றது. இத்தகையது வாயுத்தன்மை ஜாதியேயாம். ஏனெனின், வாயுத்தன்மை ஜாதி உருவமின்றி பரிசகுணமுடைய வாயுவிலேயே யிருப்பதும், ஒன்பது திரவியங்களி லிருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதியின் வாயுத்தன்மை ஜாதி சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய வாயுத் தன்மை ஜாதியையுடையது தோன்றி அழிந்த வாயுவும்,

உற்பத்தி க்ஷணாவச்சின்ன வாயுவுமாம். ஆகையால் அவ்வாயுவில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அன்றி "திரவியத் தன்மை சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது வாயு" என விம்மாத்திரமே அவ்வாயுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உருவமின்றிப் பரிசமுடையதிலிருப்பது" என்னும் பதங் கூறாவிடின் பிருதிவி, ஜலம், தேயு, ஆத்மா, மனமென்னு மைந்துத் திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் வாயுத்தன்மை ஜாதித் திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாமோ அங்ஙனமே பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை, தேயுத்தன்மை, ஆத்மத்தன்மை, மனத்தன்மை என்னுமைந்து ஜாதிகளும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாம். இவ்வித பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு பிருதிவி முதலியத் திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அஜ்ஜாதிக்கு "உருவமின்றி பரிசமுடையதிலிருப்பது" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. பிருதிவித்தன்மை முதலிய வைந்து ஜாதிகள் உருவமின்றி பரிசமுடையத் திரவியத்தி லிருப்பதில்லை. ஆகையால் பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு பிருதிவி முதலியத் திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உருவமின்றி பரிசமுடையதிலிருக்கும் ஜாதியுடையது வாயு" என விம்மாத்திரமே அவ்வாயுவின் லக்ஷணமாகக்கூறி, அந்தலக்ஷணத்தில் திரவியத்தன்மை சாக்ஷாத் வியாப்பிய மென்னும் பதங் கூறாவிடின், சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கருமமென்னும் மூன்றுப் பதார்த்தங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவி முதலியவெட்டுத் திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், உருவமின்றி பரிசமுடைய வாயுத் திரவியத்தில் சத்தா ஜாதியும், திரவியத்தன்மை ஜாதியும் சமவாய சம்பந்தமாக விருக்கின்றன. ஆகையால் சத்தாஜாதியும், திரவியத்தன்மை ஜாதியும் உருவமின்றிப் பரிசமுடையதி லிருப்பன வெனப் படுகின்றன. இத்தகைய சத்தா ஜாதி திரவியம், குணம், கரும மென்னும் மூன்றிலிருக்கின்றது. அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதி பிருதிவி முதலிய வெல்லாத் திரவியங்களிலிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு "திரவியத்தன்மை சாக்ஷாத் வியாப்பியம்" என்னு மிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. எஜ்ஜாதி திரவியத் தன்மை ஜாதியினும் குறைந்தவிடத் திருக்கின்றதோ அஜ்ஜாதியே திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியாகின்றது. இத்தகைய திரவ்யத் தன்மை ஜாதியின் வியாப்பியத்தன்மை, சத்தா ஜாதியினும், திரவியத்தன்மை ஜாதியினு மின்றும். ஆகையால் சத்தா ஜாதியைக் கொண்டும், திரவியத்தன்மை ஜாதியைக்கொண்டும் அந்த லக்ஷணத்திற்குத் திரவியமுதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பரிசமுடையதி லிருக்கும் திரவியத் தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது வாயு" வென விம்மாத்திரமே அவ்வாயுவின் லக்ஷணமாகக்கூறி, அந்தலக்ஷணத்தில் "உருவமில்லாது" என்னும் பதங்

கூறுவிடின் பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் வாயுத் தன்மை ஜாதி பரிச குணமுடைய வாயுவிலிருக்கின்றதோ, அங்ஙனமே பிருதிவித் தன்மை, ஜலத் தன்மை, தேயுத்தன்மை யென்னும் மூன்று ஜாதிகளும் முறையாக பரிசகுண முடைய பிருதிவி, ஜலம், தேயுவென்னும் மூன்றுத் திரவியங்களி லிருக்கின்றன. அங்ஙனமே வாயுத்தன்மை ஜாதியைப் போன்று திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய பிருதிவித் தன்மை முதலிய ஜாதிக ளைக் கொண்டு பிருதிவி முதலிய மூன்றுத்திரவியங்களில் கூறிய அந்த லக்ஷ ணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தைநிவர்த்திக் கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உருவமில்லாது" என்னும்பதங்கூறப் பட்டது. பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்கள் உருவ மில்லாதனவன்று; உருவமுடையனவேயாம். ஆகையால் பிருதிவி முதலிய ஜாதிகள் உருவமின்றிப் பரிசமுடையத் திரவியத்தி லிருப்பனவன்று. ஆகையால் பிருதிவி முதலிய ஜாதிகளைக்கொண்டு பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்களில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உருவமில்லாததி லிருக் கும் திரவியத் தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது வாயு" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "பரிச முடை யது" என்னும் பதங் கூறுவிடின், ஆத்மாவிலும், மனதிலும் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் உருவமில்லாத வாயு வில் வாயுத்தன்மை ஜாதியிருக்கின்றதோ அங்ஙனமே உருவமில்லாத ஆத்மா வில் ஆத்மத் தன்மை ஜாதியும், உருவமில்லாத மனதில் மனத்தன்மை ஜாதியு மிருக்கின்றது. ஆத்மத் தன்மை ஜாதியும், மனத்தன்மை ஜாதியும், வாயுத் தன்மை ஜாதியைப்போன்று திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய முமாம். இத்தகைய ஆத்மத் தன்மை ஜாதியைக் கொண்டும், மனத்தன்மை ஜாதியைக் கொண்டும் ஆத்மாவிலும், மனத்திலும் கூறிய அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பரிசமுடையது" என்னும் பதங் கூறப்பட் டது. ஆத்மாவிலும், மனதிலும் பரிசகுணமிருப்பதில்லை. ஆகையால் ஆத்மத் தன்மைஜாதியும், மனத்தன்மைஜாதியும் பரிசகுணமுடையத் திரவியத்திலிருப் பதில்லை. ஆத்மத்தன்மை ஜாதியைக் கொண்டும், மனத்தன்மை ஜாதியைக் கொண்டும் ஆத்மாவிலும், மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங் கூறாது "உருவமின்றி பரிசமுடையதிலிருப்பதும் திரவியத்தன்மை வியாப்பிய ஜாதியுடையதும் வாயு" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக் கூறின் உருவமின்றிப் பரிசமுடையதாகிய பிராணவாயுவி லிருப்பதும், திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம் பிராணத்தன்மை ஜாதியைக் கொண்டு பிராண வாயுவிலோ அந்த லக்ஷணம் பொருந்தும். ஆனல் பரமாணுவாதி வடிவ வாயுவில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாம். எக்காரணத்தா லெனின் பிராணத் தன்மை ஜாதி சர்வ வாயுக்களி லிருப்பதில்லை. அவ்வவ் வியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில்

"சாக்ஷாத்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிராண வாயுத் தன்மை ஜாதி, திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமாயினும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமன்றும். ஆனால் திரவியத்தன்மைஜதியின் சாக்ஷாத் வியாப்பிய வாயுத்தன்மை ஜாதியாதோ அவ்வாயுத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியம் அந்த பிராணத்தன்மை ஜாதியாம். ஆகையால் "சாக்ஷாத்" என்னும் பதத்தைக் கூறுவதால் பிராணத் தன்மை ஜாதியைக் கொண்டு அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. இதுகாறும் "உருவமின்றிப் பரிசமுடையது வாயு" என்னும் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிக்கப் பட்டது.

## ௫௪௨. வாயுவினிரண்டாவது லக்ஷணத்தின் நிரூபணம்.

இனி "அபாகஜாநுஷ்ண ஶீதஸ்பர்ஶவாந் வாயு:" என்னு மிரண்டாவது லக்ஷணத்தி னர்த்தம் நிரூபிப்பாம். எப்பரிசம் வன்னி முதலிய தேயுவின் சையோகவடிவ பாகத்தால் (பக்குவத்தால்) உண்டாவதன்றோ அப் பரிசம் அபாகஜமெனப்படுகின்றது. எப்பரிசம் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாததாமோ அப்பரிசம் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத தெனப்படுகின்றது. இத்தகைய அபாகஜமும், வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடையத் திரவியம் யாதோ அத்திரவியம் வாயுவெனப்படுகின்றது. அபாகஜமு (பாகத்தாலாகாதது)ம், வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமும் கேவலம் வாயுவிடத் தேயிருக்கின்றது. பிருதிவி முதலியத் திரவியங்களி லிருப்பதில்லை. ஆகையால் பாகத்தாலாகாத, வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமுடைமை வடிவவாயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டுப் "பரிசமுடையது வாயு" என விம் மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத" என்னும் பதங் கூறாவிடின் ஜலத்திலும், தேயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் வாயு, பரிச குணமுடையதாமோ அங்ஙனமே ஜலமும், தேயுவும் பரிசகுண முடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாதது" என்னுமிது அப் பரிசத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஜலத்திலும், தேயுவிலும் வெம்மைப் பரிசமும் குளிர்ந்த பரிசமுமிருக்கின்றது. ஜலத்தில் குளிர்ந்த பரிசமும், தேயுவில் வெம்மைப்பரிசமுமிருக்கின்றது. வாயுவிலேயே வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமிருக்கின்றது. ஆகையால் ஜலத்திலும், தேயுவிலும் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாதபரிசமுடையதுவாயு" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "பாகத்தாலாகாதது" என்னும் பதங் கூறாவிடின் பிருதிவியில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் வாயுவில் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாதபரிசமிருக்கின்றதோ அங்ஙனமே பிருதிவியிலும் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமிருக்கின்றது. ஒவ்வொரு பிருதிவியிலும், ஒவ்வொரு வாயுவிலும் வெம்மைப்பரிசமும் குளிர்ந்தபரிசமும் பிரதீதியாகின்றது. எனினும் அவ்வெம்மைப் பரிசமும் குளிர்ந்த பரிசமும்

வன்னியினதும், ஜலத்தினதும் சம்பந்தத்தானேயே பிரதீதியாகின்றது. இயல்பாய் பிருதிவியிலும், வாயுவிலும் வெம்மைப்பரிசமும் குளிர்ந்தபரிசமுமிருப்பனவன்று. ஆனால் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசமேயிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசத்திற்கு "பாகத்தாலாகாதது" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுப் பிருதிவியில் வாயுவைப்போன்று வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமேயிருக்கின்றதெனினும், பிருதிவியின் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசம் "பாகத்தாலாகாததன்று. வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தாலுண்டானதேயாகின்றது. வாயுவின் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப்பரிசமோ் பாகத்தா லாகாததாகின்றது. ஆகையால் பிருதிவியில்கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "பாகத்தாலாகாத பரிசமுடையது வாயு" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத" என்னும் பதங் கூறாவிடின் மீண்டும் ஜலத்திலும், தேயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் வாயு பாகத்தாலாகாத பரிசமுடையதாமோ, அங்ஙனமே ஜலத்திலும், தேயுவிலும், பாகத்தாலாகாத பரிச மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஜலத்திலும், தேயுவிலும் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமிருப்பதில்லை. ஆகையால் ஜலத்திலும், தேயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௱௪௩. இரண்டாவது லக்ஷணத்திற்கு தோன்றியழிந்த வாயுவில் அவ்வியாப்தியின் சங்கை.

சங்கை :—எவ்வாயுவு முதல் க்ஷணத்திலுண்டாய் இரண்டாவது க்ஷணத்தில் நாசமடைகின்றதோ, அத்தோன்றியழிந்த வாயுவில்கூறிய இந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாம். ஏனெனின் முதல்க்ஷணத்திலோ திரவியம் நிர்க்குணமாகவே யுண்டாகின்றது. ஆகையால் உற்பத்தி க்ஷணத்திலோ அவ்வாயுவில் ஓர் குணமுமுண்டாகிறதில்லை. இரண்டாவது க்ஷணத்தில் வாயுவில் பரிசகுணமுண்டாவதற்கு இரண்டாவது க்ஷணத்தில் அவ்வாயு தானே நாசமாய் விடுகிறது. இத்தகைய தோன்றியழிந்த வாயுவிலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயுவிலும் பாகத்தாலாகாத வெம்மையும், குளிர்ச்சியு மில்லாத பரிசமுடைமை வடிவ லக்ஷணமின்றாம். ஆகையால் அவ்வாயுவில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாம். அல்லது எப்பட முதலிய வடிவ பிருதிவியில் அத்தேயு சையோக வடிவ பாகத்தால் வெம்மையும், குளிர்ச்சியுமில்லாதப் பரிசமுண்டாகிறதில்லையோ அப்பட முதலிய வடிவ பிருதிவியில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுமுண்டாகும். இவ்வாறாய அவ்வியாப்தி தோஷத்தோடும் அதிவியாப்தி தோஷத்தோடும் பொருந்தியதாவதால் முற்கூறிய அந்த லக்ஷணம் சம்பவியாதென்னுஞ் சங்கையின் பிராப்த முண்டாக இனி அந்த லக்ஷணத்தை வேறுவகையாக நிரூபிப்பாம்.

௩௪௪. அவ்விரண்டாவது லக்ஷணத்தை வேறுவகையாக நிரூபித்தல்.

"பாகஜாநுஷ்ணாசீதஸ்பர்சவத்த்ர த்ரவ்யத்வஸாக்ஷாத்வ்யாப்ய ஜாதிமாந் வாயு:" (இ-ள்.) பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப் பரிசம் யாதோ அப்பரிசமுடையத் திரவியமாத்திரத்தி லிருப்பதாகிய திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையத் திரவியம் வாயு வெனப்படுகின்றது. இத்தகையது வாயுத் தன்மை ஜாதியேயாம். அவ்வாயுத் தன்மை ஜாதி தோன்றியழிந்த வாயுவிலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயுவிலும் இருக்கின்றது. ஆகையால் வாயுவில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அவ்வாயுத் தன்மை ஜாதி படாதி வடிவப் பிருதிவியிலிருப்பதில்லை. ஆகையால் அப்படாதி வடிவப் பிருதிவியில் இந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுமுண்டாகாது. ஆண்டு "ஜாதியுடையது வாயு" எனவிம்மாத்திரமே வாயுவின் இலக்ஷணமாகக்கூறின் குணபதார்த்தத்திலும், கர்மபதார்த்தத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் வாயு, வாயுத்தன்மை ஜாதியுடையதாமோ அங்ஙனமே குண, கர்மங்களும், குணத்தன்மை, கர்மத்தன்மை ஜாதியுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் அந்தலக்ஷணத்தை நிகழச்செய்யும்ஜாதிக்கு "திரவியத்தன்மை சாக்ஷாத் வியாப்பியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அக்குணத் தன்மை ஜாதியும், கர்மத்தன்மை ஜாதியும் கேவலம் குணத்திலும், கர்மத்திலுமே யிருக்கின்றது; ஓர்திரவியத்திலுமிருப்பதில்லை. ஆகையால் குணத்தன்மை, கர்மத்தன்மை ஜாதிகள் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பியமெனப் படுவனவன்று. ஆகையால் குணத்தன்மை, கர்மத்தன்மை ஜாதிகளைக் கொண்டு குண, கர்மங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "திரவியத் தன்மை சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது வாயு" வென் விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக் கூறின் ஆத்மாவிலும், மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அவ்வாயுத் தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாமோ, அங்ஙனமே ஆத்மத்தன்மை ஜாதியும், மனத்தன்மை ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத்வியாப்பியமாம். இத்தகைய ஆத்மத் தன்மை ஜாதியைக் கொண்டு ஆத்மாவிலும், மனத்தன்மை ஜாதியைக் கொண்டு மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பரிசமுடையதில் மாத்திரமிருப்பது" என்னும் பதம் அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மாவிலும், மனதிலும் பரிசகுண மிருப்பதில்லை. ஆகையால் ஆத்மத் தன்மை ஜாதியும், மனத் தன்மை ஜாதியும் பரிச குணமுடையத் திரவிய மாத்திரத்திலிருப்பனவன்று. ஆகையால் ஆத்மத் தன்மை ஜாதியைக் கொண்டும், மனத்தன்மை ஜாதியைக் கொண்டும் ஆத்மாவிலும், மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பரிசமுடையதில் மாத்திரமிருக்கும் திரவியத்தன்மைமின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது வாயு" என

விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக்கூறின் ஜலம், தேயு வென்னு மிருத் திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் அவ்வாயு பரிசகுணமுடையதாமோ, அங்ஙனமே ஜலம், தேயுவென் னும் இருத் திரவியங்களும் பரிசகுணமுடையனவேயாம். ஆகையால் வாயுத் தன்மை ஜாதியைப்போன்று ஜலத் தன்மை, தேயுத் தன்மை யாகிய இரு ஜாதிகளும் பரிச குணமுடைய ஜல, தேயு வென்னு மிருத் திரவியங்களில் முறையாக விருக்கின்றது. இத்தகைய பரிச குணமுடையத் திரவியத்திலிருப் பனவாகிய ஜலத்தன்மை, தேயுத்தன்மை ஜாதிகளைக்கொண்டு ஜல, தேயுக்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் பரிசத்திற்கு "வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத" வென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஜலத் திலும், தேயுவிலும் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப் பரிச மிருப்பதில்லை. ஜலத்திலோ குளிர்ந்த பரிசமும், தேயுவில் வெம்மைப் பரிசமு மிருக்கின்றது. ஆகையால் ஜலத்தன்மை ஜாதியும், தேயுத்தன்மை ஜாதியும் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடையத் திரவியத்தி லிருப்பனவன்று. ஆகையால் ஜலத்தன்மை ஜாதியைக் கொண்டு ஜலத்திலும், தேயுத் தன்மை ஜாதியைக் கொண்டு தேயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசகுணமுடையதில் மாத்திர மிருக்கும் திரவியத்தன்மை சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையதுவாயு" வென விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் பரிசத்திற்கு "பாகத்தாலாகாத" என்னும் விசேஷணங் கூறுவிடின் பிருதிவியில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் வாயுவில் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமிருக்கின்றதோ அங்ஙனமே பிருதிவி யிலும், வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமிருக்கின்றது. ஆகையால் வாயுத்தன்மை ஜாதியைப்போன்று பிருதிவித்தன்மை ஜாதியும் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடையத் திரவியத்திலேயேயிருக்கின்றது. அங்ஙன மே திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய பிரு திவித் தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவியில் அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொ ருட்டு அந்த லக்ஷணத்தில் அப்பரிசத்திற்கு "பாகத்தாலாகாத" வென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு பிருதிவியில் இருப்பதாகிய வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசம் பாகத்தாலாகாததன்று; பாகத்தாலாயதேயாம். வாயுவின் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமே பாகத்தாலாகாததாகின் றது. ஆனால் பிருதிவித்தன்மை ஜாதி பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடையத்திரவியத்திலிருப்பதன்று. ஆகையால் பிரு திவித்தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவியில் அந்த லக்ஷணத்திற்கு அதிவி யாப்தியுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூறுவிடின் பிருதிவித்தன்மை ஜாதியைக்கொண்டு அந்த லக்ஷ ணத்திற்கு பிருதிவியில் அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், எப்படாதி வடிவ பிருதிவியில் பாகத்தாளுய பரிசமிருப்பதில்லையோ அப்படாதி வடிவ

பிருதிவியிலிருக்கும் பிருதிவித் தன்மை ஜாதி பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடைய படாதிவடிவ பிருதிவி லிருப்பதும், திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய பிருதிவித் தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவியில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிருதிவித் தன்மை ஜாதி கேவலம் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமுடைய படமுதலிய பிருதிவியிலேயே யிருப்பதில்லை, பாகத்தானுய வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமுடைமை பிருதிவி பரமாணுக்களினு மிருக்கின்றது. ஆகையால் பிருதிவித்தன்மை ஜாதி பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாதப் பரிசமுடையதில் மாத்திரமிருப்பதன்று. ஆனல் வாயுத்தன்மை ஜாதியே பாகத்தானுகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசமுடையதில் மாத்திரமிருப்பதாம். ஆகையால் " மாத்திர " மென்னும்பதத்தைக் கூறுவதால் பிருதிவித் தன்மை ஜாதியைக்கொண்டு பிருதிவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது முற்கூறிய லக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங் கூருவிடின் படத்தன்மை ஜாதியைக்கொண்டு வாயுவின் லக்ஷணத்திற்கு படத்தில் அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் படத்திலிருக்கும் எவ்வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசம் யாதோ அது பாகத்தானுகாததே யாகின்றது. ஆகையால் படத்தன்மை ஜாதி பாகத்தானுகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடைய பட மாத்திரத்திலிருப்பதும், திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய படத்தன்மை ஜாதியுடைய படத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் கருதி அந்த லக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு படத்தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியை விட குறைந்தவிடத்திருப்ப தாவதால் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமாயினும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமெனப்படுகிறதில்லை. திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமோ பிருதிவித்தன்மை ஜாதியாம் அந்த பிருதிவித் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியம் படத்தன்மை ஜாதியாம். ஆகையால் "சாக்ஷாத்" தென்னும் பதத்தைக் கூறுவதால் படத்தன்மை ஜாதியைக் கொண்டு படத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## ௧௮௫. சாக்ஷாத் வியாப்பியத் தன்மையின் லக்ஷணம்.

இனி பிரசங்கத்தால் சாக்ஷாத் வியாப்பியத் தன்மையின் லக்ஷணம் கூறுவாம். " தத்வ்யாப்யவ்யாப்யவ்யாப்யபிந்நத்வேஸதி தத்வ்யாப்யத்வம் தத்ஸாக்ஷாத்வ்யாப்யத்வம் " (இ-ள்.) எஜ்ஜாதி எஜ்ஜாதியினது வியாப்பிய ஜாதியின் அவ்வியாப்பியமாகி எஜ்ஜாதியின் வியாப்பியமாகின்றதோ, அஜ்ஜாதியே அஜ்ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமெனப்படுகின்றது. எங்ஙனம் பிருதிவித் தன்மை ஜாதியானது திரவியத் தன்மை ஜாதியினது வியாப்பிய ஜல முதலிய ஜாதிகளின் அவ்வியாப்பியமாகி திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமாகின்றது,

ஆகையால் பிருதிவித்தன்மை ஜாதி திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமெனப்படுகின்றது. அங்ஙனமே ஜலத் தன்மை ஜாதியும், திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய பிருதிவித் தன்மை முதலிய ஜாதிகளின் அவ்வியாப்பியமாகி திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பியமாகின்றது. ஆகையால் ஜலத்தன்மை ஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமெனப்படுகின்றது. இவ்வாறாக தேயுத் தன்மை, வாயுத் தன்மை, ஆத்மத் தன்மை, மனத்தன்மை யென்னும் நான்கு ஜாதிகட்கும் திரவியத் தன்மைஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய வடிவத்தன்மையை அறிந்துக் கொள்க. அல்லது எங்ஙனம் பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை முதலிய ஜாதிகள் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாமோ அங்ஙனமே திரவியத் தன்மை, குணத் தன்மை, கர்மத்தன்மை யென்னு மூன்று ஜாதிகள் சத்தா ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாம். அங்ஙனமே உருவ முதலிய குணங்களிலிருப்பதாகிய உருவத் தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகள் குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாம். அங்ஙனமே எழும்பல், வீழ்தல் முதலிய கர்மங்களி லிருப்பனவாகிய எழும்பற்றன்மை, வீழ்தற்றன்மை முதலிய ஜாதிகள் கர்மத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமாம். ஆண்டு "தத்வியாப்பியத் தன்மைத்சாக்ஷாத் வியாப்பியத் தன்மை" என விம்மாத்திரமே சாக்ஷாத் வியாப்பியத் தன்மையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "தத்வியாப்பியத்தின் அவ்வியாப்பியமாகி" என்னும் பதங் கூறுவிடின் திரவியத் தன்மை ஜாதியினும் குறைந்தவிடத்தி லிருக்கும் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய படத்தன்மை, கடத்தன்மை முதலிய எஜ்ஜாதிகளோ அக்கடத் தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளுக்கும் திரவியத் தன்மைஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத் தன்மைபுண்டாக வேண்டும். அது சித்தாந்தத்தில் அங்கீகாரமின்றாம். அதாவது திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத்தன்மையில்லாக் கடத் தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளில் சாக்ஷாத் வியாப்பியத் தன்மையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திசெய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "தத்வியாப்பியத்தின் அவ்வியாப்பியமாகி" என்னும் பதங்கூறப் பட்டது. ஆண்டுக்கடத்தன்மை முதலிய ஜாதிகள் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியின் அவ்வியாப்பிய மன்றாம். ஆனால் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய பிருதிவித்தன்மை ஜாதியின் வியாப்பியமே கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளாம். ஆகையால் கடத்தன்மை, படத்தன்மை முதலியவைகளில் திரவியத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "தத்வியாப்பியத்தின் அவ்வியாப்பியத் தன்மை தத்சாக்ஷாத் வியாப்பியத் தன்மை" என விம்மாத்திரமே சாக்ஷாத் வியாப்பியத் தன்மையின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "தத்வியாப்பியத்தன்மை" என்னும்பதங்கூறுவிடின்குணத் தன்மை, கருமத்தன்மை ஜாதிகளுக்கும் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத் தன்மை யுண்டாக வேண்டும். ஏனெனின், குணத் தன்மை ஜாதி

யும், கருமத்தன்மை ஜாதியும் திரவியத் தன்மை ஜாதியின் வியாப்பிய பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளின் அவ்வியாப்பியமேயாம். குணத் தன்மை, கருமத்தன்மை ஜாதிகளில் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத் தன்மை சித்தாந்தத்தில் அங்கீகாரமின்றாம். அதாவது திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத் தன்மையில்லாக் குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதிகளில் திரவியத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பியத்தன்மையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "தத்வியாப்பியத்தன்மை" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு எஜ்ஜாதி எஜ்ஜாதியின் குறைந்தவிடத்திருக்கின்றதோ அஜ்ஜாதியே அஜ்ஜாதியின் வியாப்பியமாகின்றது. எங்ஙனம் பிருதிவி முதலிய வொன்பதுத் திரவியங்களி லிருக்கும் திரவியத் தன்மை ஜாதியின் அபேக்ஷையால் பிருதிவி வடிவ குறைந்தவிடத்திருக்கும் பிருதிவித்தன்மை ஜாதி, திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமெனப்படுகின்றது. குணத்தன்மை, கருமத்தன்மைஜாதிகளோ திரவியத்தன்மைஜாதியின் திரவிய வடிவ அதிகரணத்திலிருப்பனவன்று. ஆனால் திரவியத்தினும் வேறான குண, கர்மங்களிலேயே குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதிகளி லிருக்கின்றன. ஆகையால் குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதி, திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பிய மெனப்படுகிறதில்லை. ஆகையால் "தத்வியாப்பியத் தன்மை" என்னும் பதத்தைக் கூறுவதால் குணத்தன்மை, கருமத்தன்மை ஜாதிகளில் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியத்தன்மையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லதுகூறிய அவ்வாயுவின்லக்ஷணத்தில் "ஜாதி" என்னும் பதங் கூறாவிடின் வாயு, பட மென்னு மிரண்டி லிருப்பதாகிய இருமைத்தன்மை சங்கியை (கணக்கு) வடிவத்தர்மம் யாதோ அவ்விருமைத் தன்மை தர்மத்தினைக் கொண்டு அந்த லக்ஷணத்திற்கு அப்படத்தில் அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், அவ்விருமைத்தன்மை தர்மம் பாகத் தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசமுடைய வாயுவிலும், பட வடிவத் திரவியத்திலுமே யிருக்கின்றது. அங்ஙனமே அவ்விருமைத் தன்மை தர்மம் திரவியத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய இருமைத் தன்மை தர்மம் எங்ஙனம் வாயுவிலிருக்கின்றதோ அங்ஙனமே அப்படத்திலு மிருக்கின்றது. ஆகையால் அப்படத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஜாதி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு இருமைத் தன்மை தர்மத்தைக் கொண்டு கூறிய அந்த லக்ஷணத்திற்கு படத்தில் அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாய ஜாதியின் பயனை சர்வ ஜாதியுள்ள லக்ஷணங்களிலும் அறிந்துக் கொள்க. இது காறும் "அபாகஜ (பாகத்தாலாகாத) அநுஷ்ணசீத (வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத) பரிசமுடையது வாயு" வென்னு மிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிக்கப்பட்டது.

---

### ௩௪௬. வாயுத்தன்மை ஜாதியுடைமை வடிவ வாயுவின் மூன்றாவது லக்ஷணம்.

"வாயுத்வஜாதிமாந் வாயு:" வென்னும் மூன்றாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் சமவாய சம்பந்தமாக வாயுத்தன்மை ஜாதியுடையதாமோ அத்திரவியம் வாயு வெனப்படுகின்றது. ஆண்டு சமவாய சம்பந்தமாக வாயுத்தன்மை ஜாதி கேவலம் வாயுவிலேயே யிருக்கின்றது. வேறோர் பதார்த்தத்தி லிருப்பதில்லை. ஆகையால் வாயுத் தன்மை ஜாதியுடைமை வடிவ வாயுவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—வாயுத் தன்மை ஜாதியுடைமை வடிவ வாயுவின் லக்ஷணம் சம்பவிக்கும்போது முதலில் ஓர் பிரமாணத்தால் வாயுத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகவேண்டும். வாயுத்தன்மை ஜாதியின்றி அந்த லக்ஷணம் சம்பவியாது. ஆகையால் அந்த லக்ஷணத்தினது சித்தியின் பொருட்டு ஓர் பிரமாணத்தால் வாயுத்தன்மை ஜாதியின் சித்தி அவசியம் செய்யவேண்டுமென்னும் சங்கையின் பிராப்தியுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் வாயுத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

### ௩௪௭. அநுமானப் பிரமாணத்தால் வாயுத்தன்மை ஜாதியின் சித்தி.

ஆண்டு உருவமில்லாத வாயுவின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகாது. ஆகையால் இது வாயு, இது வாயு வென்னும் ஏகாகாரப் பிரத்தியக்ஷப் பிரதீதி யானோ வாயுத் தன்மை ஜாதியின் சித்தி சம்பவியாது. ஆனால் முற்கூறிய பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப் பரிசத்தின் சமவாயி காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாகவே வாயுத் தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வாயுநிஷ்டாயா உத்பூதஸ்பர்ஶ ஸமவாயிகாரணதா ஸா கிஞ்சித்தர்மாவச்சிந்நா காரணதாத்வாத் தந்துநிஷ்ட காரணதாவத்" (இ-ள்.) வாயுவிலிருப்பதாகிய பாகத்தாலாகாத வெம்மையும் குளிச்சியுமில்லாப் பரிசத்தின் சமவாயி காரணத்தன்மை யாதோ, அக்காரணத் தன்மை யோர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், காரணத் தன்மை யாவதால், எதுவெது காரணத் தன்மை யாமோ அவ்வக் காரணத் தன்மை, யோர் தர்மத்தால் அவச்சின்னமே யாகும்; நிரவச்சின்னமாக வோர் காரணத் தன்மையு முண்டாகாது. எங்ஙனம் தந்துக்களி லிருக்கின்ற படத்தின் சமவாயி காரணத் தன்மை தந்துத் தன்மை தர்மத்தால் அவச்சின்னமாமோ அங்ஙனமே வாயுவிலுள்ள சமவாயி காரணத் தன்மையும் ஓர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமேயாகும். அக்காரணத்தன்மையின் அவச்சேதக தர்மம் வாயுத்தன்மை ஜாதியாகவே சம்பவிக்கின்றது. வாயுத்தன்மை ஜாதியினும் வேறான வோர்தர்மம் அக்காரணத் தன்மையின் அவச்சேதக மாகமாட்டாது. எக்காரணத்தாலெனின் எத்தர்மம் எக்காரணத்தின் அதிகவிடத்தும் குறைந்தவிடத்து மிராது சமானவிடத்திருக்கின்றதோ அத்தர்மமே அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. அக்காரணத் தன்மையினும் மிகுந்த அல்லது குறைந்தவிடத் திருப்பதாகிய

தர்மம் காரணத் தன்மையின் அவச்சேதகமாகமாட்டாது. ஆண்டு பரிசத்தின் சமவாயி காரணத்தன்மையும் வாயு மாத்திரத்திலேயே யிருக்கின்றது. வாயுத் தன்மை ஜாதியும் வாயு மாத்திரத்திலேயே யிருக்கின்றது. ஆகையால் காரணத் தன்மையின் சமானவிடத்திருப்ப தாவதால் வாயுத் தன்மை ஜாதியே காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. சத்தா ஜாதியும், திரவியத் தன்மை ஜாதியும் அக்காரணத் தன்மையினும் அதிகவிடத் திருப்பனவாகையால் காரணத் தன்மையின் அவச்சேதக மாகமாட்டாது. இவ்வாறாய அநுமானப்பிரமாணத்தால் வாயுத் தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

### ௩௪௩. பரமாணு வடிவ நித்திய வாயுவில் வாயுத்தன்மை ஜாதி சித்தியாமையின் சங்கை

சங்கை :—பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசத்தின் சமவாயி காரணத் தன்மை த்வியணுகாதி வடிவ ஜன்னிய வாயுவிலேயே யிருக்கின்றது. என்றாலும் பரமாணு வடிவ நித்திய வாயுவில் அக்காரணத்தன்மையின்றாம். எக்காரணத்தாலெனின் பரமாணு வடிவ நித்திய திரவியத்தில் பரிசம் நித்தியமாகின்றது. நித்திய பதார்த்தத்திற்குச் சமவாயி காரணத் தன்மை எதனிடத்து முண்டாகிறதில்லை. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் துவியணுகாதி வடிவ அநித்திய வாயுவிலேயே வாயுத் தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகும், பரமாணு வடிவ நித்தியத் திரவியத்தில் வாயுத் தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகாததாகும்.

### ௩௪௪. பரமாணு வடிவ நித்திய வாயுவில் வாயுத்தன்மை ஜாதியின் சித்தி.

சமாதானம் :—முற்கூறிய ஜலத்தன்மை ஜாதியின் சித்தியைப்போன்று ஈண்டும் கூறிய அநுமானத்தால் முதலில் ஜன்னிய வாயுவிலேயே வாயுத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்த பின்னர் ஜன்னிய வாயுத் தன்மை யவச்சின்ன ஜன்னிய வாயுவின் சமவாயி காரணத்தன்மை யவச்சேதக் வடிவமாக நித்திய, அநித்திய வடிவ வெல்லா வாயுவிலும் வாயுத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்க. ஆண்டு எங்ஙனம், துவியணுகாதி வடிவ அநித்திய வாயுவில் திரியணுகாதி வடிவ ஜன்னிய வாயுவின் சமவாயி காரணத்தன்மை யிருக்கின்றதோ அங்ஙனமே பரமாணு வடிவ நித்திய வாயுவிலும் துவியணுக வடிவ ஜன்னிய வாயுவின் சமவாயி காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் ஜன்னிய வாயுவின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக வெல்லா வாயுவிலும் வாயுத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது. துவக்கிந்திரிய வடிவ வாயுவானும், சரீரவிருந்தியாவயவி வடிவ வாயுவானும் ஓர் வாயுவின் உற்பத்தியு முண்டாகாது. ஆகையால் துவக்கிந்திரிய சரீராதி வடிவ வாயுவில் ஜன்னிய வாயுவிற்கு சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக வாயுத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவியாது. என்றாலும் எங்ஙனம் வனத்திலுள்ள தண்டத்தில் கட வடிவ காரியத்தின் சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத்தன்மை யிருக்கின்றதோ

அங்ஙனமே துவக்கிந்திரிய வடிவ வாயுவிலும், சரீராதி வடிவ அந்தியாவயவி வாயுவிலும் ஜன்னிய வாயுவின் சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் துவக்கிந்திரிய சரீராதி வடிவ வாயுக்களிலும் வாயுத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

### ௩௫௰. வேறுவகையாக வாயுத்தன்மை ஜாதியின் சித்தி.

அல்லது பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப் பரிசத்தினது சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவே நித்திய, அநித்தியவடிவ வாயுக்களில் வாயுத் தன்மைஜாதியின் சித்தியைச்செய்க. பரமாணுவடிவ நித்தியவாயுவில் பரிசத்தின் பலோபதாயகத்தன்மை வடிவ காரணத் தன்மையின்றும். எனினும் பரமாணு வடிவ நித்திய வாயுவில் பரிசத்தின் சொரூப யோக்கியத் தன்மை வடிவ காரணத் தன்மை யிருப்பதேயாகின்றது. ஆகையால் பரமாணு வடிவ நித்திய வாயுவிலும் வாயுத் தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது. ஆண்டு இஜ்ஜாதியின் சாதகமாக விருவிதத்தில் விசேஷ சங்கை சமாதானமோ முன்னர் ஜலத் தன்மை ஜாதியின் சித்தியில் கூறி வந்துள்ளோம். அது ஈண்டும் முறையாக வூகித்துக்கொள்க. அங்ஙனமே பலோபதாயகத் தன்மை, சொரூப யோக்கியத்தன்மை யென்னு மிரண்டின் காரணத் தன்மையின் சொரூபமும், ஆண்டுக் கூறி வந்துள்ளோம் அது ஈண்டும் அறிந்துக் கொள்க. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் கூறிய வாயுவின் சித்தியுண்டாக வாயுத் தன்மை ஜாதியுள்ள "வாயுத்தன்மை ஜாதியுடையது வாயு" வென முற்கூறிய வாயுவின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது.

### ௩௫௧. வாயுவின் பரிசமுதலிய ஒன்பது குணங்களின் வர்ணனம்.

இவ்வாறுய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித வாயு வடிவத் திரவியம் யாதோ அவ்வாயுவில் பரிசம், சங்கியைப், பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், வேகமெனப் பெயரிய சம்ஸ்கார மென ஒன்பது குணங்களிருக்கின்றன.

### ௩௫௨. நித்திய, அநித்தியமென்னும் வேறுபாட்டால் வாயுவினிருவித வேற்றுமை.

இவ்வாறுய ஒன்பது குணங்களுடைய வாயுவும் நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டுப் பரமாணு வடிவ வாயுவோ நித்திய வாயு வெனப்படுகின்றது. துவியணுக முதலிய காரிய வடிவ வெல்லா வாயுவும் அநித்திய வாயு வெனப்படுகின்றது. அவ்வநித்திய வாயுவே அவயவியெனப்படுகின்றது.

### ௩௫௩. சரீர, விந்திரிய, விஷயமென்னும் வேறுபாட்டால் அநித்திய வாயுவின் மூவித வேற்றுமை.

அவ்வயவி வடிவ அநித்திய வாயுவும் சரீரம், இந்திரியம், விஷய மென்னும் வேறுபாட்டால் மூவிதமாகின்றது.

௩௫௪. வாயவீய சரீரத்தின் லக்ஷணம்.

இனி முதலில் வாயவீய சரீரத்தின் நிரூபணம் செய்வாம். "ரூபரஹிதஸ்பர்சவத்சரீரம் வாயவீயசரீரம்" (இ-ள்.) எச்சரீரம் உருவ குணமில்லாது பரிசகுணமுடையதாமோ அச்சரீரம் வாயவீய சரீரமெனப்படுகின்றது. ஆண்டு "பரிசமுடைய சரீரம் வாயவீய சரீரம்" என விம்மாத்திரமே வாயுவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உருவமில்லாது" என்னும் பதங் கூறாவிடின் பார்த்திவ, ஜலீய, தைஜச மென்னும் மூன்றுச் சரீரங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் வாயவீய சரீரம் பரிசகுணமுடையதாமோ அங்ஙனமே பார்த்திவ, ஜலீய, தைஜச சரீரங்களும் பரிசகுணமுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உருவமில்லாது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுப் பார்த்திவ முதலிய சரீரங்கள் உருவ குணமில்லாதனவன்று; உருவகுணமுடையனவேயாம். ஆகையால் பார்த்திவ முதலிய சரீரங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உருவமில்லாது பரிசமுடையது வாயவீய சரீரம்" என விம்மாத்திரமே வாயவீய சரீரத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சரீரம்" என்னும் பதங் கூறாவிடின் துவக்கிந்திரிய வடிவ வாயுவிலும், விஷய வடிவ வாயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சரீரம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுச் சரீரத்தன்மை துவக்கிந்திரிய வடிவ வாயுவிலும் விஷயவடிவ வாயுவிலு மின்றும். ஆகையால் வாயவீய இந்திரியத்திலும், விஷயத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௩௫௫. வாயவீய சரீரத்தி னிரண்டாவது லக்ஷணம்.

அல்லது அவ்வாயவீய சரீரத்திற்கு இவ்விரண்டாவது லக்ஷணம் கூறுக. "அபாகஜாநுஷ்ணாசீத ஸ்பர்சவத் சரீரம்வாயவீய சரீரம்" (இ-ள்.) எச்சரீரம் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப் பரிசமுடையதாமோ, அச்சரீரம் வாயவீய சரீரமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "பாகத்தாலாகாத" என்னும் பதம் பார்த்திவ சரீரத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத" வென்னும் பதம் ஜலீய, தைஜச சரீரங்களில் அவ்வதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம் "சரீரம்" என்னும் பதம் வாயவீய இந்திரிய, விஷயங்களில் அதிவியாப்தியை நிவர்த்திசெய்யும் பொருட்டாம். பாகத்தாலாகாத முதலிய பதங்களின் பயன் முன்னர் வாயுவின் லக்ஷணத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம்.

௩௫௬. வாயவீய சரீரத்தினது இருவகை லக்ஷணங்களை வேறுவகையாக நிரூபித்தல்.

தோன்றியழிந்த வாயவீய சரீரத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயவீய சரீரத்திலும் அப்பரிச குணத்தின் அபாவ மிருப்பதால் கூறிய அவ்

விருலக்ஷணங்களுக்கு அவ்வியாப்தி யுண்டாகுமெனினும் முற்கூறிய வாயுவின் லக்ஷணத்தைப் போன்று ஈண்டு "ரூபரஹிதஸ்பர்சவத்வே ஸதி த்வகிந்த்ரியமாத்ரக்ராஹ்யஜாதிமத் ஶரீரம் வாயவீயஶரீரம்" அல்லது "அபாகஜாநுஷ்ணாஶீத ஸ்பர்சவத்வே ஸதி த்வகிந்த்ரியமாத்ரக்ராஹ்யஜாதிமத் ஶரீரம் வாயவீய ஶரீரம்" வென வாயுத் தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் தோன்றியழிந்தவாயவீய சரீரத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயவீய சரீரத்திலும் அவ்விரு லக்ஷணங்கட்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஆண்டு அவ்விரு லக்ஷணங்களில் "சரீரம்" என்னும் பதம் வாயவீய இந்திரியத்திலும், விஷயத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முற்கூறியவாறே யறிந்துக் கொள்க. இத்தகைய வாயவீய சரீரம் பிசாசு முதலியவைகளுக் கிருக்கிறது. வாயவீய சரீரம் வாயுலோகத்தில் பிரசித்தமேயாம். அவ்வாயவீய சரீரம் கேவலம் அயோனிஜமேயாகின்றது.

### ௯௫௭. வாயவீய துவக்கிந்திரியத்தின் லக்ஷணம்.

இனி வாயவீய விந்திரியத்தின் நிருபணம் செய்வாம். ஆண்டு "ரூபரஹிதஸ்பர்சவதிந்த்ரியம் வாயவீயேந்த்ரியம்" (இ-ள்.) எவ்விந்திரியம் உருவமில்லாது பரிசகுணமுடையதாமோ அவ்விந்திரியம் வாயவீய விந்திரியமெனப்படுகின்றது. இத்தகைய வாயவீய விந்திரியம் துவக்கிந்திரியமாம். அத்துவக்கிந்திரியம் நகம், தேஹத்திலுள்ள ரோமம், புரீததியென்னும் நாடி முதலியவைகளை விட்டு சர்வ சரீர முழுமையும் வியாபகமாயிருக்கின்றது. அங்ஙனமே குளிர்ச்சி, வெம்மை, மென்மை, வன்மை முதலிய பரிசங்களைக் கிரஹிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "உருவ மில்லாது" என்னும் பதம் பார்த்திவ, ஜலீய, தைஜச விந்திரியங்களில் இந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். "பரிசமுடையது" என்னும் பதம் ஆகாச வடிவ சுரோத்திர இந்திரியத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். எக்காரணத்தாலெனின் ஆகாச வடிவ சுரோத்திரேந்திரியம் துவக்கிந்திரியத்தைப் போன்று உருவ குணமில்லாததேயாம். ஆனால் அச்சுரோத்திரேந்திரியம் பரிசகுணமுடையதன்று. ஆகையால் "பரிசமுடையது" என்னும் பதத்தைக் கூறுவதால் சுரோத்திர இந்திரியத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. "இந்திரியம்" என்னும் பதம் உருவமில்லாது பரிசமுடைய வாயவீய சரீர, விஷயங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம்.

### ௯௫௮. துவக்கிந்திரியத்தி னிரண்டாவது லக்ஷணம்.

அல்லது வாயவீய இந்திரியத்திற்கு இவ்விரண்டாவது லக்ஷணங் கூறுக. "அபாகஜாநுஷ்ணாஶீதஸ்பர்சவதிந்த்ரியம் வாயவீயேந்த்ரியம்" (இ-ள்.) எவ்விந்திரியம் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடையதாமோ அவ்விந்திரியம் வாயுவீய இந்திரிய மெனப்படுகின்றது. இத்தகைய

பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமுடைய விந்திரியம் துவக்கிந்திரியமாம். ஆகையால் அத்துவக்கிந்திரியம் வாயவீய விந்திரியமெனப் படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "பாகத்தாலாகாத" என்னும் பதம் பார்த்திவ கிராண விந்திரியத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். "வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத" வென்னும் பதம் ஜலீய ரசன விந்திரியத்திலும், தைஜச சக்ஷு விந்திரியத்திலும் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். "இந்திரியம்" என்னும் பதம் வாயவீய சரீரத்திலும், விஷயத்திலும் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம்.

## ௩௫௧. கூறிய துவக்கிந்திரியத்தின் இரு லக்ஷணங்களை வேறுவகையாக வர்ணித்தல்.

இவ்விரு லக்ஷணங்களுக்கு தோன்றியழிந்த துவக்கிந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன துவக்கிந்திரியத்திலும் பரிசகுணத்தின் அபாவமிருப்பதால் அவ்வியாப்தியே யுண்டாகும். என்றாலும் முற்கூறிய வாயுவைப் போன்று ஈண்டும் " ஸ்பர்சவிசேஷ வ்யஞ்ஜக வ்ருத்தி வாயுத்வ ஸாக்ஷாத்வ்யாப்ய ஜாதிமதிந்த்ரியம் வாயவீயேந்த்ரியம் " அல்லது " த்வாக்ஜ ப்ரத்யக்ஷ வ்ருத்தி வாயுத்வ ஸாக்ஷாத்வ்யாப்ய ஜாதிமதிந்த்ரியம் வாயவீயேந்த்ரியம் " என வாயுத் தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்தைக் கூறுவதால் தோன்றியழிந்த துவக்கிந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன துவக்கிந்திரியத்திலும் அவ்விரு லக்ஷணங்களுக்கும் அவ்வியாப்தி யுண்டாகாது. எக்காரணத்தாலெனின் வாயுத்தன்மை ஜாதி தோன்றியழிந்த துவக்கிந்திரியத்திலும், உற்பத்தி க்ஷணாவச்சின்ன துவக்கிந்திரியத்திலு மிருப்பதே யாகின்றது. ஆண்டு இவ்விரு லக்ஷணங்களில் " இந்திரியம் " என்னும் பதம் வாயவீய சரீர, விஷயத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயன் முற்கூறியவாறே யறிந்துக் கொள்க.

சங்கை :— துவக்கிந்திரியம் வாயவீய விந்திரியமா மென்பதில் பிரமாணம் யாதென்னும் சங்கையின் பிராப்த முண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் துவக்கிந்திரியத்தில் வாயவீயத் தன்மையின் சித்தியைச் செய்வாம்.

## ௩௫௦. அநுமானப் பிரமாணத்தால் துவக்கிந்திரியத்தில் வாயவீயத் தன்மையின் சித்தி.

" த்வகிந்த்ரியம் வாயவீயம் ரூபாத்யவ்யஞ்ஜகத்வே ஸதி ஸ்பர்சவ்யஞ்ஜகத்வாத் அங்க ஸங்கிஸலில சைத்யாபி வ்யஞ்ஜக வ்யஜனவாதவத் " (இ-ள்.) துவக்கிந்திரியம் வாயவீயமாக யோக்கியமாம், திரவியங்களின் உருவ முதலிய ஐந்து குணங்களுள் பரிசகுண மொன்றையே வெளிப்படுத்துவதாவதால், எவ்வெத்திரவ்வியம் உருவமுதலிய வைந்து குணங்களுள் பரிசகுண மொன்றையே வெளிப்படுத்துவதாமோ அவ்வத் திரவியம், வாயவீயமேயாகின்றது. எங்ஙனம் சரீர சம்பந்தியாகிய வியர்வை

முதலிய ஜலத்தின் குளிர்ந்த பரிசத்தினை வெளிப்படுத்துவது விசிறிக்காற்றும் அதாவது விசிறிகாற்றானது வியர்வை முதலிய ஜலத்தின் உருவ முதலிய குணங்களை வெளிப்படுத்துகிறதில்லை. கேவலம் ஜலத்தின் குளிர்ந்த பரிசத்தினையே வெளிப்படுத்துவதாகின்றது. ஆகையால் விசிறிக் காற்றில் வாயவீயத் தன்மைப் பிரசித்தமேயாம். அங்ஙனமே துவக்கிந்திரியமும் பிருதிவி முதலிய திரவியங்களின் உருவ முதலிய வைந்து குணங்களுள் கேவலம் பரிச குணத்தினையே வெளிப்படுத்துவதாகின்றது. அவற்றி னுருவ முதலியவைகளை வெளிப்படுத்துவதாவதன்று. ஆகையால் துவக்கிந்திரியத்தினும் வாயவீயத் தன்மையே யொப்ப வேண்டும். ஆண்டுக் கூறிய லக்ஷணத்தில் "பரிசகுணத்தை மாத்திரம் வெளியாக்குவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "உருவ முதலிய வைந்தனுள்" என்னும் பதங் கூறாவிடின் அவ்வேது சொரூபா சித்தி வடிவ தோஷமுடையதாம். ஏனெனின் பக்ஷத்தில் ஏதுவின் அபாவத்தினை சொரூபா சித்தி தோஷ மென்பர். ஆண்டு அத்துவக்கிந்திரியம் கேவலம் பரிசத்தினையே வெளிப்படுத்துவதன்று. ஆனால் பரிசத்திலிருக்கும் பரிசத்தன்மை ஜாதியினையும் பரிசத்தின் அபாவத்தினையும் வெளிப்படுத்துவதாகின்றது. ஆகையால் பரிச மாத்திரத்தை வெளிப்படுத்துந் தன்மை வடிவ ஏது துவக்கிந்திரிய வடிவ பக்ஷத்திலிருப்பதன்று. அச்சொரூபா சித்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "உருவ முதலிய வைந்தனுள்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு துவக்கிந்திரியம் பரிசத்தன்மை ஜாதி, பரிசா பாவமுதலியவைகளை வெளிப்படுத்துவதாயினும் உருவம், ரச முதலியவைகளை வெளிப்படுத்துவதன்று. ஆகையால் அவ்வேதுவில் சொரூபா சித்தி தோஷத்தின் அடைவு சம்பவியாது. அல்லது கூறிய அவ்வேதுவில் "ஏ" என்னும் தேற்றவேகாரபதத்தைக் கூறாவிடின் அவ்வேதுவிற்கு மனதில் வியபிசாரமுண்டாம். ஏனெனின் மனமின்றி ஓர் ஞானமுமுண்டாகாது. ஆகையால் அம்மனம் பரிசத்தையும் வெளிப்படுத்துகின்றது. ஆனால் மனதில் வாயவீயத் தன்மைச் சாத்தியமின்றாம். ஆகையால் வாயவீயத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை மனதிலிருப்பதால் அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஏ" என்னும் தேற்றவேகார பதங் கூறப்பட்டது. ஆண்டு அம்மனம் கேவலம் பரிச மொன்றையே வெளிப்படுத்துவதன்று. உருவம், ரச முதலியவைகளையும் வெளிப்படுத்துவதாகின்றது. ஆகையால் பரிசத்தினும் வேறான உருவ முதலியவைகளை வெளியாக்காததாகிய அந்த "ஏ" வென்னும் தேற்றவேகார சத்தத்தைக் கூறுவதால் அம்மனதில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அவ்வேதுவில் "திரவியமாய்" என்னும் பதங் கூறாவிடின் அவ்வேதுவிற்கு துவக்கிந்திரியத்தின் சம்பந்தத்தில் வியபிசார முண்டாகும். ஏனெனின் பரிசத்தினோடு துவக்கிந்திரியத்தின் சையுக்த சமவாய சம்பந்த வடிவ சம்பந்தம் யாதோ அச்சம்பந்தமும் கேவலம் பரிசத்தினையே வெளியாக்குவதாகின்றது. உருவ முதலியவைகளை வெளிப்படுத்துவ தாவதன்று. ஆனால் அச்சம்பந்தத்தில்

வாயவீயத்தன்மை வடிவ சாத்தியமின்றும். ஆகையால் வாயவீயத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அச்சம்பந்தத்தி லிருப்பதால் அவ்வேது வியபிசாரியாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "திரவியமாய்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சம்பந்தத்தில் திரவியத் தன்மையின்றும். ஆகையால் அச்சம்பந்தத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. இவ்வாறு அநுமானப் பிரமாணத்தால் துவக்கிந்திரியத்தில் வாயவீயத் தன்மையே சித்தமாகின்றது.

## ௩௬௬. வாயவீய விஷயத்தின் லக்ஷணம்.

" ரூபரஹிதஸ்பர்ஶவத் விஷய: வாயவீயவிஷய: " இ-ள்.) எவ்விஷயம் உருவகுணமின்றிப் பரிசகுணமுடைய தாமோ அவ்விஷயம் வாயவீய விஷயமெனப்படுகின்றது. ஆண்டுப் "பரிசமுடைய விஷயம் வாயவீய விஷயம்" என விம்மாத்திரமே வாயவீய விஷயத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "உருமின்றி" என்னும் பதங்கூறுவிடின் பார்த்திவ, ஜலீய தைஜச விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் வாயவீய விஷயம் பரிசகுண முடையதாமோ அங்ஙனமே பார்த்திவ, ஜலீய, தைஜச விஷயங்களும் பரிசகுண முடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் கருதி அந்த லக்ஷணத்தில் "உருவமின்றி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுப் பார்த்திவ முதலிய விஷயங்கள் உருவமில்லாதனவன்று; உருவமுடையனவேயாம். ஆகையால் பார்த்திவ முதலிய விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உருவமில்லாதது வாயவீய விஷயம்" என விம்மாத்திரமே வாயவீய விஷயத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பரிசமுடையது" என்னும் பதங் கூறுவிடின் உருவகுணமில்லாத ஆகாய முதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "பரிசமுடையது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆகாசமுதலிய திரவியங்கள் உருவமில்லாதனவாயினும் பரிசகுண முடையனவன்றும். ஆகையால் ஆகாச முதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உருவமில்லாது பரிசகுணமுடையது வாயவீய விஷயம்" என விம்மாத்திரமே வாயவீய விஷயத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விஷயம்" என்னும் பதங் கூறுவிடின் வாயவீய சரீரத்திலும், வாயவீய விந்திரியத்திலும், பரமாணு வடிவ நித்திய வாயுவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் வாயவீய சரீரமும், இந்திரியமும், பரமாணுவும் உருவகுணமில்லாதனவும் பரிசகுணமுடையனவுமாம், அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விஷயம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு வாயவீய சரீர, இந்திரிய, பரமாணுக்களில் விஷயத் தன்மையின்றும். ஆகையால் அவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௩௬௨. வாயவீய விஷயத்தின் இரண்டாவது லக்ஷணம்.

அல்லது வாயவீய விஷயத்திற்கு இவ்விரண்டாவது லக்ஷணங் கூறுக. "ஸ்வாகஜாநுஷ்ண ஶீதஸ்பர்ஶவத்விஷய: வாயவீயவிஷய:" (இ-ள்) எவ் விஷயம் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமுடைய தாமோ அவ்விஷயம் வாயவீய விஷயமெனப்படுகின்றது. ஆண்டுக் கூறிய இந்தலக்ஷணத்தில் "பாகத்தாலாகாத" என்னும் பதம் பார்த்திவ விஷயத் தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம். "வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசம்" என்னும் பதம் ஜலீய, தைஜச விஷ யங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட் டாம். "விஷயம்" என்னும் பதம் வாயவீய சரீர, விந்திரிய முதலியவைகளில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டாம்.

### ௩௬௩. வாயவீய விஷயத்திற்கு கூறிய விரண்டு லக்ஷணங்களை வேறுவகையாக நிரூபித்தல்.

கூறிய விரு லக்ஷணங்கட்கு தோன்றியழிந்த வாயவீய விஷயத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயவீய விஷயத்திலும் பரிசகுணத்தின் அபாவ மிருப்பதால் அவ்வியாப்தியே யுண்டாகுமெனினும் முற்கூறிய வாயுவின் லக்ஷணத்தைப் போன்று "ரூபரஹிதஸ்பர்ஶவத்வ்ருத்தித்ரவ்யத்வஸாக்ஷாத் வ்யாப்யஜாதிமத்விஷய: வாயவீயவிஷய:" அல்லது "ஸ்வாகஜாநுஷ்ண ஶீதஸ்பர்ஶவத்வ்ருத்தித்ரவ்யத்வஸாக்ஷாத்வ்யாப்யஜாதிமத்விஷய: வாயவீய விஷய:" என வாயுத்தன்மை ஜாதியுள்ள விரு லக்ஷணங்களைக் கூறுவதால் தோன்றியழிந்த வாயவீய விஷயத்திலும், உற்பத்தி க்ஷணவச்சின்ன வாயவீய விஷயத்திலும் அவ்விரு லக்ஷணங்கட்கு அவ்வியாப்தி யுண்டாகாது. எக்கார ணத்தாலெனின் தோன்றியழிந்த வாயவீய விஷயத்திலும், உற்பத்தி க்ஷணவச் சின்ன வாயவீய விஷயத்திலும் வாயுத்தன்மை ஜாதி யிருப்பதேயாகின்றது. அவ்விரு லக்ஷணங்களில் "விஷயம்" என்னும் பதம் வாயவீய சரீர விந்திரியங் களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திசெய்யும் பொருட்டாம். மற்றப் பதங்களின் பயனே முற்கூறியவாறே யறிந்துக் கொள்க.

### ௩௬௪. விஷய வாயுவில் பிராணவாயுவின் அடக்கம்.

துவியணுக வடிவ வாயு முதலாக பிராணன் முதலிய மா வாயு மட்டுமாம் சர்வ ஜன்னிய வாயுக்களையும் விஷய வடிவ வாயுக்களாகவே யறியத்தக்கன. பாஷிய முதலிய நூற்களில் அவ்வநித்திய வாயு சரீரம், இந்திரியம், விஷயம், பிராணன் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாகக் கூறப்பட்டிருக் கின்றது. என்றாலும் பிராண வடிவ வாயுவிற்கு விஷய வடிவ வாயுவிலேயே அடக்கமுண்டாய் விடுகின்றது. ஆகையால் ஈண்டு அவ்வநித்திய வாயு நான்கு வகையாக கூறப்படவில்லை; மூவிதமாகவே கூறப்பட்டது.

### ௩௬௫. பிராணவாயுவின் லக்ஷணம்.

"ஶரீராந்த:ஸஞ்சாரீ வாயு: ப்ராண:" (இ-ள்.) சரீரத்துள் சஞ் சரிப்பதாகிய வாயு யாதோ அவ்வாயு பிராணனெனப்படுகின்றது. ஆண்டு

"வாயு பிராணன்" என விம்மாத்திரமே பிராணனது லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "சரீரத்துள் சஞ்சரிப்பது" என்னும் பதங் கூறுவிடின் புறவாயுவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சரீரத்துள் சஞ்சரிப்பது" என்னும் பதங் கூறப்பட்டது. அப்புறவாயு சரீரத்துள் சஞ்சரிப்பதன்று; சரீரத்திற்குப் புறம்பாகவே சஞ்சரிக்கின்றது. ஆகையால் புறவாயுவில் பிராணனது லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சரீரத்துள் சஞ்சரிப்பது பிராணன்" என விம்மாத்திரமே பிராணனது லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "வாயு" வென்னும் பதங் கூறுவிடின் சரீரத்துள் சஞ்சரிப்பதாகிய உதிர முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "வாயு" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அவ்வுதிர முதலியவைகளில் வாயுத் தன்மையின்றும். ஆகையால் அவ்வுதிர முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—பிராண வடிவ வாயுவிற்கு விஷய வடிவ வாயுவில் அடக்க முண்டாகுக. என்றாலும் அபானன் முதலிய வாயுக்கள் விஷய வடிவ வாயுவினும் வேறாகவே சித்தமாகு மென்னும் சங்கையின் பிராப்த முண்டாக இனி அபானன் முதலியவைகட்கு பிராணவாயுவில் அடங்கும் வகையைச் சித்திச் செய்வாம்.

## ௩௬௭. பிராணவாயுவில் அபானன் முதலிய வாயுக்கட்கு அடக்கம்.

அபானன் முதலிய வாயுக்கள் பிராண வாயுவினும் வேறன்றாம்; பிராண வாயுவிலேயே அபானன் முதலிய வாயுக்களின் அடக்கமாம். அதாவது சரீரத்துள் சஞ்சரிக்கும் வாயு வொன்றே யிட வடிவ வுபாதியின் வேறுபாட்டால் அல்லது கிரியா வடிவ வுபாதியின் வேறுபாட்டால் பிராணன், அபானன், சமானன், உதானன், வியான னென்னு மைந்து பெயர்களை அடைவதாகின்றது.

## ௩௬௮. இட வடிவ வுபாதியின் வேறுபாட்டால் பிராணவாயு வொன்றினையே பிராணன், அபானன் முதலிய ஐவகையாக வர்ணித்தல்.

இவ்வார்த்தை வேறு சாத்திரங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு சுலோகம் "ஹ்ருதி ப்ராணோ குதே(அ)பாந: ஸமாநோ நாபிஸம்ஸ்தித:। உதாந: கண்டதேசஸ்தோ வ்யாந: ஸர்வசரீரக:" (இ-ள்.) இருதயத்திலிருக்கின்ற அந்தர் வாயு, பிராணனென்னும் பெயரையடைகின்றது. குய்யத்திலிருக்கின்ற அந்தர் வாயு அபானனென்னும் பெயரை அடைகின்றது. நாபியிடத்திருக்கின்ற அந்தர் வாயு சமானனென்னும் பெயரை அடைகின்றது. கண்டத்திலிருக்கின்ற அந்தர் வாயு உதானனென்னும் பெயரை அடைகின்றது. சரீர முற்றிலு மிருக்கின்ற அந்தர் வாயு வியானனென்னும் பெயரை அடைகின்றது.

இவ்வாறாக இருதய முதலிய வைந்து இடங்களின் வேறுபாட்டால் அந்தர் வாயு வொன்றே பிராணன் முதலிய வைந்து பெயர்களை யடைகின்றது.

### ரு௱௬. கிரியாவடிவ வுபாதியின் வேறுபாட்டால் பிராணவாயுவினை ஐவகையாக வேறுபடுத்துதல்.

கிரியா வடிவு வுபாதியின் வேறுபாட்டால் பிராணன் முதலிய பெயர்களின் வேற்றுமையை நிரூபிப்பாம். ஆண்டு முகத்திலுள்ள நாசியின் வாயிலாக விஸ்வாச நிஸ்வாச வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு பிராண னென்னும் பெயரை அடைகின்றது. மல முதலியவைகளைக் கீழ்ச் செலுத்துதல் வடிவக் கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு அபானனென்னும் பெயரை அடைகின்றது. புசிக்கப்பட்ட அன்னத்தை ரசாதி வடிவ பரிணமம் செய்ய வேண்டி ஜடராக்கினியின் பிரஜ்வலன வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு சமானனென்னும் பெயரை அடைகின்றது. அன்ன முதலியவைகளை உள்ளே செலுத்துதல் வடிவ கிரியைச் செய்வதால் அந்தர் வாயு உதானனென்னும் பெயரை அடைகின்றது. சர்வ நாடிகளின் முகங்களில் அன்னத்தின் சூக்ஷ்மரசத்தினை பரவச் செய்தல் வடிவ கிரியைச் செய்வதால் அந்தர் வாயு வியானனென்னும் பெயரை அடைகின்றது. இவ்வாறாய கிரியை வடிவ வுபாதியின் வேறுபாட்டால் அந்தர் வாயு வொன்றே பிராணன் முதலிய வைந்து பெயர்களை அடைகின்றது

சங்கை:—கூறிய விம்முறைப்படி அபானன் முதலிய வாயுக்கட்கு பிராண வாயுவில் அடக்க முண்டாகுக. எனினும் சாத்திரத்திற் கூறப்பட்டுள்ள நாகன், கூர்மன், குருகலன், தேவதத்தன், தனஞ்செயன் என்னும் ஐந்து வாயுக்களிருக்கின்றன. அவ்வைந்து வாயுக்களோ பிராணனினும் வேறேயாமென்னும் சங்கையின் பிராப்த முண்டாக வினி நாகன் முதலிய வைந்து வாயுக்களும் பிராண வாயுவில் அடங்கும் வகையை வர்ணிப்பாம்.

### ரு௱எ. நாகன், கூர்மன் முதலிய வைந்து வாயுக்களும் பிராணவாயுவில் அடங்கும் வகையை வர்ணித்தல்.

ஆண்டு எங்ஙனம் கிரியையின் வேறுபாட்டால் அந்தர் வாயு வொன்றே பிராணன் முதலிய வைந்து பெயர்களைப் பெறுகின்றதோ அங்ஙனமே கிரியையின் வேறு பாட்டால் அந்தர் வாயு வொன்றே நாகன் முதலிய வைந்து பெயர்களைப் பெறுகின்றதென்னும் வார்த்தையும் சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு "உத்காரே நாக ஆக்யாத꞉ கூர்ம உந்மீலநே ஸ்ம்ருத꞉ । க்ருகர꞉ க்ஷுதக்ருஜ்ஜ்ஞேயோ தேவதத்தோ விஜ்ரும்பணே । ந ஜஹாதி ம்ருதஞ்சாபி ஸர்வவ்யாபீ தநஞ்ஜய꞉" (இ-ள்.) வாந்தியைச் செய்யும் வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு நாகனென்னும் பெயரைப் பெறுகின்றது. நேத்திரங்களை இமைத்தல் வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு கூர்மனென்னும் பெயரைப் பெறுகின்றது. விக்கல் வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு குருகலனென்னும் பெயரைப் பெறுகின்றது. தும்மல் வடிவ கிரியையைச் செய்வதால்

அந்தர் வாயு தேவதத்தனென்னும் பெயரைப் பெறுகின்றது. போஷிக்கும் வடிவ கிரியையைச் செய்வதால் அந்தர் வாயு தனஞ்செயனென்னும்பெயரைப் பெறுகின்றது. அத்தனஞ்செய வாயு பிணமான சரீரத்தினையும் பரித்தியாகஞ் செய்வதில்லை. இவ்வாறாக நாகாதி ஐந்து வாயுக்களும் பிராணனது அடக்கமே யாகின்றன. ஆகையால் அவ்வாயுக்களும் விஷய வாயுவில் அடங்குவதால் அநித்திய வாயு சரீரம், இந்திரியம், விஷயமென்னும் வேறுபாட்டால் மூவித மாகவே சித்தமாகின்றது.

சங்கை:—முற்கூறிய இருவிதமாகவாவது, மூவிதமாகவாவது, நான்கு விதமாகவாவது வேறுபாடு சித்திக்கும்போது முதலிலோர் பிரமாணத்தால் வாயுவின் சித்தியுண்டாகவேண்டும். வாயுவின் சித்தியின்றி அவ்வேறுபாடு சம் பவியாது. வத்துவின் சித்தி லக்ஷணம், பிரமாண மென்னு மிரண்டினுனேயே யுண்டாகின்றது. வாயுவின் லக்ஷணம் முன்னர் கூறப்பட்டதெனினும் வாயுவைச் சித்திச் செய்வதாகிய பிரமாணம் முன்னர் கூறப்படவில்லை ஆகையால் வாயுவைச் சித்திச் செய்வதாகிய பிரமாணமும் அவசியம் கூற வேண்டும். அவ்வாயுவினை சித்திச் செய்வதாகிய பிரமாணம் யாதென்னும் சங்கையின் பிராப்த முண்டாக இனி மத வேறுபாட்டால் வாயுவில் பிரமா ணத்தின் நிரூபணம் செய்வாம்.

### ௱எக. பிராசீன நையாயிகர்கள் மதத்தில் வாயுவில் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் நிஷேத வாயிலாக பாஹ்ய திரவியப் பிரத்தியக்ஷத்தினது சாமக்கிரியின் வர்ணனம்.

முதலில் பிராசீன நையாயிகர்களின் மதத்தை நிரூபிப்பாம். அவ்வாயு பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமன்று. ஏனெனின் இந்திரியத்தா லுண்டாம் ஞானமே பிரத்தியக்ஷமாகின்றது. ஆண்டு கிராணம், ரசனம், சுரோத்திர மென்னும் மூன்று விந்திரியங்களிலோ திரவியத்தின் பிரத்தியக்ஷம் செய்வ தற்கு யோக்கியத் தன்மையேயில்லை. ஆகையால் கிராண முதலிய மூன்றிந்தி ரியங்களாலோ ஓர் திரவியத்தின் பிரத்தியக்ஷ ஞானமுமுண்டாகாது. ஆனல் கிராண முதலிய விந்திரியங்களால் கந்த முதலிய குணங்களின் பிரதியக்ஷ ஞானமே யுண்டாகின்றது. ஆகையால் கிராண முதலிய விந்திரியங்களானே வாயுவின் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகாது. சக்ஷு, துவக், மன மென்னும் மூன்றிந்திரியங்களானே திரவியத்தின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. அதனிடத்தும் மன வடிவ விந்திரியத்தானே உள்ளிருக்கும் ஆத்மா வடிவ திரவியத்தின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. மனதினுல் பிருதிவி முதலிய புறத் திரவியங்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. வாயுவும் புறத் திரவிய மாம் ஆகையால் மன வடிவ விந்திரியத்தாலும் வாயுவின் பிரத்தியக்ஷம் சம்ப வியாது. பரிசேஷமாக சக்ஷு, துவக் கென்னு மிரு விந்திரியங்களானேயே வாயுவின் பிரத்தியக்ஷம் கூறுவதாகும், அதுவும் சம்பவியாது; ஏனெனின், மஹத்வப் பரிமாணம், உத்பூத உருவம், உத்பூத பரிச மென்னும் மூன்று குணங்களிருக்கும் திரவியத்தின் பிரத்தியக்ஷமே சக்ஷு விந்திரியத்தாலாவது,

துவக்கிந்திரியத்தாலாவது யுண்டாகின்றது. அம்மூன்று குணங்களிராது வொன்று அல்லது இரண்டுகுணங்களிருக்கும் புறத்திரவியத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு விந்திரியத்தால் அல்லது துவக்கிந்திரியத்தா லுண்டாகாது. எங்ஙனம்: ஆகாசம், காலம், திக்கு வென்னும் மூன்றுத்திரவியங்களில் மஹத்வப்பரிமாண மிருக்கினும் உத்பூத உருவம், உத்பூத பரிச மென்னு மிரு குணங்களின்றும். ஆகையால் அவ்வாகாசமுதலிய மூன்றின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் அல்லது துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்றுத் திரவியங்களின் பரமாணுக்களிலும், துவியணுகத்திலும் உத்பூத உருவம், உத்பூத பரிசமென்னும் இரண்டு மிருக்கின்றன. ஆனால் மஹத்வப் பரிமாணமின்றும். ஆகையால் அப்பரமாணு, துவியணுகங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் அல்லது துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. கிராண, ரசன, சக்ஷு வென்னு மூன்றிந்திரியங்களில் மஹத்வப் பரிமாணத்தி னிருப்புளதாயினும் உத்பூத உருவம், உத்பூத பரிசமென்னு மிரண்டு மின்றும். ஆகையால் கிராண முதலிய மூன்றிந்திரியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், அல்லது துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. மனதிலோ மஹத்வம், உத்பூத உருவம், உத்பூத பரிசமென்னும் மூன்றுமின்றும். ஆகையால் அம்மனதின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், அல்லது துவாசப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை. கட முதலிய திரவியங்களில் மஹத்வம், உத்பூத உருவம், உத்பூத பரிச மென்னு மூன்று மிருக்கின்றன. ஆகையால் கட முதலியத் திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம், துவாசப் பிரத்தியக்ஷ மென்னு மிரண்டு முண்டாகின்றன. ஆகையால் இந்நியமம் சித்தமாயிற்று "விஷயதா ஸம்பந்தேந த்ரவ்ய ப்ரத்யக்ஷம் ப்ரதி ஸமவாயஸம்பந்தேந மஹத்வவிசிஷ்டோத்பூதரூபம் உத்பூத ஸ்பர்ஶச்சகாரணம்" (இ-ள்.) விஷயத்தன்மைச் சமபந்தத்தால் விஷயத்தி லுண்டாவதாகிய புறத் திரவியத்தை விஷயம் செய்யும் பிரத்தியக்ஷ ஞானம் யாதோ அந்த பிரத்தியக்ஷ ஞானத்தைக் குறித்து புறத் திரவியத்தில் சமவாய சம்பந்தமாக விருக்கின்ற மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிச மென்னு மிரண்டும் காரணமாகின்றன. எங்ஙனம் இது கடமென்னும் பிரத்தியக்ஷ ஞானம் சமவாய சம்பந்தமாகவோ ஆத்மாவி லுண்டாகின்றது. விஷயத்தன்மை சம்பந்தத்தால் கட வடிவ விஷயத்திலு முண்டாகின்றது. கடத்தில் மஹத்துவ விசிஷ்ட உத்பூதவுருவம், உத்பூத பரிசமென்னு மிரண்டும் சமவாய சம்பந்தமாக விருக்கின்றன. ஆகையால் விஷயத்தன்மைச் சமபந்தத்தால் கடவடிவ புறத்திரவியத்தி லுண்டாகின்ற இதுகடமென்னும் பிரத்தியக்ஷத்தில் கடத்தில் சமவாய சம்பந்தமாக விருக்கின்ற மஹத்வ விசிஷ்ட உத்பூதவுருவம், உத்பூத பரிசமென்னுமிரண்டும் காரணமாகின்றன. ஈண்டுத் விஷத்தன்மை சம்பந்தமோ காரியத்தன்மை யவச்சேதக சம்பந்தமாம். சமவாயசம்பந்தம் காரணத் தன்மை அவச்சேதகச் சம்பந்தமாம். மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிச மென்னு மிரண்டும் வாயுவிலின்றும். ஆகையால் வாயுவின் பிரத்தியக்ஷம் சக்ஷு விந்திரியத்தாலாவது, துவக்கிந்திரியத்தாலாவது உண்டாகிறதில்லை. வாயுவில் மஹத்வ விசிஷ்ட

உத்பூத பரிசமே யிருக்கின்ற தெனினும் உத்பூத உருவம் வாயுவிலின்றும். ஆகையால் உத்பூத உருவம், உத்பூத பரிசமென்னு மிரண்டின் அபாவம் வாயுவில் கூறப்பட்டது. எங்ஙனம் சைத்திரனெனப் பெயரிய புருஷனதிருப்புளதாயினும் மைபித்திரனெனப் பெயரிய புருஷனது அபாவமுளதாக சைத்திர மைபித்திரரா மிருவரில்லை யென்பதாக இருவரின் அபாவ வியவகாரமுண்டாகிறது. அங்ஙனமே வாயுவில் உத்பூத பரிசத்தினிருப்புளதாயினும் உத்பூத உருவத்தின் அபாவமுளதாக உத்பூத உருவம், உத்பூத பரிசமா மிரண்டும் ஆண்டின்றாகு மென்பதாக அவைகளின் அபாவ வியவகாரம் சம்பவிக்கின்றது. அல்லது எங்ஙனம் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிசவடிவ காரணத்தின் அபாவமுளதாக வாயுவின் பிரத்தியக்ஷம் சக்ஷு விந்திரியத்தாலும், துவக்கிந்திரியத்தாலு முண்டாகிறதில்லையோ அங்ஙனமே அக்காரணத்தின் அபாவமுளதாக தீப முதலியவைகளின் வொளியினதும், காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவினதும் பிரத்தியக்ஷம் சக்ஷு விந்திரியத்தாலாவது, துவக்கிந்திரியத்தாலாவது உண்டாகிறதில்லை. ஏனெனின் அத்தீபத்தில் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமோ விருக்கின்றது. என்றாலும் அவ்வொளியில் உத்பூத பரிசமின்றும். காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவில் மஹத்வ விசிஷ்ட உத்பூத பரிசமோ விருக்கின்றது. என்றாலும் அத்தேயுவில் உத்பூத உருவ மின்றும். ஆகையால் கூறிய அக்காரணத்தின் அபாவத்தால் அவ்வொளியினது பிரத்தியக்ஷமும், காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவின் பிரத்தியக்ஷமும். சக்ஷு விந்திரியத்தாலாவது, துவக்கிந்திரியத்தாலாவது உண்டாகிறதில்லை. ஆனால் எங்ஙனம் வாயுவின் பரிச மாத்திரத்தின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தாலுண்டாகின்றதோ அங்ஙனமே அத்தேயுவினது வெம்மைப் பரிச மாத்திரத்தின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தா லுண்டாகின்றது.

சங்கை:—வாயுவை யான் பரிசிக்கின்றேன், வொளியை யான் காண்கின்றேன், காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவை யான் பரிசிக்கின்றே னென்னும் அநுபவம் உலகர் யாவருக்கு மிருக்கின்றது. அநுபவ சித்த அர்த்தத்தின் பாதம் கேவலம் யுக்தி மாத்திரத்தா லுண்டாகமாட்டாது. ஆகையால் உலகர்களின் அநுபவத்தால் வாயுவிலோ துவாசப் பிரத்தியக்ஷத்தின் விஷயத் தன்மை யொப்ப வேண்டும். காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவில் துவாசப் பிரத்தியக்ஷத்திற்கு விஷயத்தன்மை யொப்ப வேண்டும்.

சமாதானம்:—கேவலம் உலகர்களது அநுபவ மாத்திரத்தால் ஓர் அர்த்தத்தின் சித்தி யுண்டாகாது. யதார்த்த அநுபவத்தானேயே அர்த்தத்தின் சித்தி யுண்டாகிறது. ஓர் கால் அநுபவ மாத்திரத்தால் அர்த்தத்தின் சித்தி யுண்டாகுமாயின் உருவமில்லாத ஆகாயத்தில் கருமை ஆகாயம் என்னும் அநுபவம் உலகர் யாவருக்கு மிருக்கின்றது. அவ்வநுபவத்தால் அவ்வாகாயத்திலும் கருமை உருவத்தின் சித்தி யுண்டாக வேண்டும். கருமை ஆகாயம் என்னும் பிரம வடிவ அநுபவத்தால் ஓர் புத்தியுடைய புருஷனும் ஆகாயத்தில் கருமை யுருவத்தை யங்கீகரிப்பதில்லை. ஆகையால் பிரம வடிவ அநுபவத்

தால் ஓர் அர்த்தத்தின் சித்தியு முண்டாகாது. யதார்த்த அநுபவத்தானேயே அர்த்தத்தின் சித்தியுண்டாகின்றது. ஆண்டு வாயுவை யான் பரிசிக்கின்றேன், ஒளியை யான் காண்கின்றேன், காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவை யான் பரிசிக்கின்றேன் என்னும் முற்கூறிய அநுபவமும் யதார்த்த வடிவ மன்றாம்; பிரம வடிவமாம். ஆகையால் பிரம வடிவ அநுபவத்தால் வாயு முதலியவைகளில் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மை சித்தமாகாது. ஆகையால் இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் வாயுவின் சித்தி சம்பவியாது. அநுமானப்பிரமாணத்தானேயே வாயுவின் சித்தியுண்டாகின்றது.

### ௩எ௨. அநுமானப்பிரமாணத்தால் வாயுவின் சித்தி.

அவ்வநுமானத்தி னுகாரமிதுவாம் "ஸ்பர்ஶ: க்வசிதாஶ்ரித: குணத்வாத் ரூபவத்" (இ-ள்.) வாயு சஞ்சரிப்பதாக உலகவருக்கு வெம்மையும் குளிர்ச்சியுமில்லா எப்பரிசம் துவக்கிந்திரியத்தா லுண்டாகின்றதோ, அப்பரிசம் ஓர் திரவியத்தினை யாசிரிப்பதாக யோக்கியமாம், குணமாவதால், எதுவெது குணமாமோ அதுவது ஓர் திரவியத்தை யாசிரிப்பதேயாம். நிராசிரியமாக குண மிருப்பதில்லை. எங்ஙனம்: உருவ குணம் குண வடிவமாவதால் பிருதிவி, ஜலம், தேயுவினை ஆசிரிப்பதாகின்றது. அங்ஙனமே அப்பரிச குணமும் குண வடிவமாவதால் ஓர் திரவியத்தை அவசியம் ஆசிரயிப்பதாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் பரிசகுணத்தில் கிஞ்சித் திரவியத்தை யாசிரிக்கும் தன்மை சித்தி யுளதாக, அக்கிஞ்சித் தென்னும் பதத்தால் வாயு வடிவத் திரவியத்தினையே கிரஹிக்க வேண்டும்.

சங்கை:—அவ்வநுமானத்தில் "பரிசம் கிஞ்சித் திரவியத்தை யாசிரிப்பது" என்னும் பிரதிஞ்ஞா வாக்கியத்திலுள்ள கிஞ்சித்தென்னும் பதம் யாதோ அக்கிஞ்சித்தென்னும் பதம் நியமமாக ஓர் அர்த்தத்தின் வாசகமாகாது. பிரசங்கத்தினை அநுசரித்து கிஞ்சித்தென்னும் பதம் சர்வ பதார்த்தங்களின் வாசகமாகின்றது. ஆகையால் கிஞ்சித்தென்னும் பதத்தால் கேவலம் வாயு மாத்திரத்தைக் கிரஹிப்பது சம்பவியாது. கிஞ்சித்தென்னும் பதத்தால் பிருதிவி முதலியவைகளின் கிரஹணமும் சம்பவிக்கிறது.

சமாதானம்:—கிஞ்சித்தென்னும் பதத்தால் பிரசங்கத்தை அநுசரித்து சர்வ பதார்த்தங்களின் கிரஹண முண்டாகின்ற தென்றாலும் ஈண்டு கிஞ்சித் தென்னும் பதத்தால் வாயு வொன்றையே கிரஹித்தல் சம்பவிக்கின்றது அவ்வாயுவினும்வேறான வேறோர் பதார்த்தத்தின் கிரஹணம் கிஞ்சித் தென்னும் பதத்தால் சம்பவியாது. ஏனெனின் உருவ முதலிய குணங்கள் சமவாய சம்பந்தமாக கேவலம் திரவிய பதார்த்தத்திலேயே யிருக்கின்றது. திரவிய பதார்த்தத்தினும் வேறான குணம், கருமம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவ மென்னும் ஆறு பதார்த்தத்தங்களில் உருவமுதலிய குணங்களிருப்பனவன்று. ஆகையால் பரிச குணத்தின் ஆசிரய வடிவமாக அக்குண முதலிய ஆறு பதார்த்தங்களையோ கிஞ்சித்தென்னும் பதத்தால் கிரஹித்தல்

சம்பவியாது. திரவிய பதார்த்தத்திலும் பிருதிவி வடிவ திரவியத்தையோ கிஞ்சித்தென்னும் பதத்தால் கிரஹிப்பது சம்பவியாது. ஏனெனின் எப்பார்த்திவத் திரவியம் உத்பூத பரிசமுடையதாமோ அப்பார்த்திவத் திரவியம் அவசியம் உத்பூத உருவமுடையதுமாகின்றது. எப்பார்த்திவத் திரவியம் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிசமுடையதாமோ அப்பார்த்திவத் திரவியம் சக்ஷு விந்திரியத்தாலாவது துவக்கிந்திரியத்தாலாவது அவசியம் பிரதீதியாகின்றது. பார்த்திவத் திரவியத்தின் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசம் கிரஹணமாகிறதென்றாலும் இத்தகைய உத்பூத உருவமுடையதும், உத்பூத பரிசமுடையதுமாம் ஓர் பார்த்திவத் திரவியம் ஆண்டுப் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் கிஞ்சித்தென்னும் பதத்தால் பிருதிவி வடிவத் திரவியத்தின் கிரஹணம் சம்பவியாது. கிஞ்சித்தென்னும் பதத்தால் ஜலவடிவத் திரவியத்தினையும், தேயு வடிவத் திரவியத்தினையும் கிரஹித்தல் சம்பவியாது. ஏனெனின் அஜ்ஜலத்திலும், தேயுவிலும் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிச மிருப்பதில்லை. ஜலத்திலோ குளிர்ந்த பரிச மிருக்கின்றது. தேயுவில் வெம்மைப் பரிச மிருக்கின்றது. ஆகையால் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசத்தின் ஆசிரய வடிவமாக ஜலமும், தேயுவும் கிஞ்சித்தென்னும் பதத்தால் கிரஹிக்கப்படமாட்டா. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்குத் திரவியங்களைக் கிரஹித்தலும் சம்பவியாது. ஏனெனின், ஆகாய முதலிய நான்குத் திரவியங்கள் விபுவாம். எல்லா மூர்த்தத் திரவியங்களோடு எத்திரவியத்தின் சையோகமாமோ அத்திரவியம் விபுவெனப்படுகின்றது. இத்தகைய ஆகாய முதலிய நான்கு விபுத்திரவியங்களை கிஞ்சித்தென்னும் பதத்தால் கிரஹிக்கின் வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசத்தின் துவாசப் பிரத்தியக்ஷம் யாண்டு முண்டாக வேண்டும். வாயு பிரவேசியாத விடங்களிலுள்ள புருஷனுக்கு வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆகையால் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசத்தின் ஆசிரய வடிவத்தால் ஆகாய முதலிய விபுத் திரவியங்களையும் கிஞ்சித் தென்னும் பதத்தால் கிரஹித்தல் சம்பவியாது. எவ்வெக்குணம் விபுத் திரவியத்தை ஆசிரிப்பதாமோ அவ்வக்குணம் யாண்டும் பிரதீதமாகிற தென்னும் நியமமும் சம்பவியாது. ஏனெனின் சத்த குணம் ஆகாய வடிவ விபுத் திரவியத்தை ஆசிரயித்திருப்பதாம். ஞானம், சுகம், துக்க முதலிய குணங்கள் ஆத்மா வடிவ விபுத் திரவியத்தை ஆசிரயித்திருப்பனவாம். ஆனால் சத்தம், ஞானம், துக்க முதலிய குணங்கள் யாண்டும் பிரதீதமாகிறதில்லை யென்றாலும் அக்குணங்கள் இருவகையாகின்றன, வொன்றோ வியாப்பியமாயிருக்குங் குணமும், மற்றையது அவ்வியாப்பியமா யிருக்குங் குணமுமாகின்றது. அச்சத்த முதலிய குணங்களோ அவ்வியாப்பியமா யிருக்கும் குணங்களாம். அதாவது தனது ஆசிரய வடிவ திரவியத்தி னேகதேசத்தி லிருந்து ஏக தேசத்திருப்பதில்லை. ஆகையால் விபுத் திரவியங்களை ஆசிரயிப்பனவாயினும் அச்சத்த முதலிய குணங்கள் யாண்டும் பிரதீதமாவனவன்று. பரிச குணமோ வியாப்பியமா யிருக்கும் குணமாம்; அதாவது தனது ஆசிரய வடிவ திரவியத்தின் சர்வ தேசத்திலிருப்

பதாம். ஆகையால் அப்பரிசத்தினை ஆகாச முதலிய விபுத்திரவியங்களை ஆசிர யிப்பதாக அங்கீகரிப்பதற்கு அப்பரிசத்தின் பிரதீதி யாண்டும் அவசியமா யுண்டாக வேண்டும். வியாப்பியமாயிருக்குங் குணத்தினையும், அவ்வியாப்பிய மாயிருக்குங் குணத்தினையும் பின்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் குணத்தின் சாதர்மிய வைதர்மிய நிருபணத்தில் தெளிவாய் நிருபிப்பாம். ஆகையால் கிஞ் சித்தென்னும் பதத்தால் ஆகாய முதலிய விபுத் திரவியங்களையும் கிரஹிப்பது சம்பவியாது. கிஞ்சித்தென்னும் பதத்தால் மன வடிவத் திரவியத்தை கிரஹித்தலும் சம்பவியாது. ஏனெனின், அம்மனம் அதியிந்திரியமாம்; அதாவது மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவ, உத்பூத பரிசத்தின் அபாவமுடை யதாவதால் அம்மனம் சக்ஷு விந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமன்றும். இத்தகைய அதிபிந்திரிய மனதை ஆசிரயிப்பதாகிய வெம்மையும் குளிர்ச்சியு மில்லாப்பரிசமும் அதியிந்திரியமேயாகும். பரிசத்தின் பிரத்தியக்ஷமோ துவக் கிந்திரியத்தால் யாவருக்கும் பிரத்தியக்ஷ மாகின்றது. ஆகையால் அப் பரிசத்தின் ஆசிரய வடிவமாக மனதையும் கிஞ்சித்தெனனும் பதத்தால் கிரஹிப்பது சம்பவியாது. ஆனல் பரிசேஷமாக கிஞ்சித்தென்னும் பதத்தால் வாயு வடிவத் திரவியத்தினையே கிரஹிப்பதாகும். இவ்வாருய அநுமானப் பிரமாணத்தானேயே அவ்வாயுவின் சித்தி யுண்டாகின்றது. அல்லது கேவல மிவ்வநுமானப் பிரமாணத்தானேயே வாயுவின் சித்தியுண்டாகிறதென்பதில்லை. ஆனல் வேறு அனேக அநுமானங்களானும் அவ்வாயுவின் சித்தியுண்டாகிறது அதைக்காட்டுவாம் உருவமுடைய பார்த்திவமுதலிய திரவியங்களின் * அபிகா தாக்கிய சையோகமின்றியே இலை முதலியவைகளில் விலக்ஷண சத்த விசேஷ முண்டாகின்றது. அச்சத்தம் வேகமுடைய வாயுவின் சையோக சம்பந்தத்தா னேயே யுண்டாகின்றது. ஆகையால் அவ்விலை முதலியவைகளின் சத்த விசே ஷத்தாலும் அவ்வாயுவின் அநுமான முண்டாகின்றது. அல்லது எக்குருத்வ தர்மமுடைய துரும்பு, பஞ்சு, மேகம், விமானம்முதலியவைகளுளவோ அத்து ரும்பு முதயலிவைகள் ஆகாயத்தினின்றும், கீழ்வீழ்தலின்றி மேற்செல்லுவது யாதோ அம்மேற்செல்லுவது அப்பரிசமும், வேகமுமுடைய வாயுவின் சையோ கத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் அத்துரும்பு முதலியவைகள் மேற் செல்லுவதினாலும் அவ்வாயுவின் அநுமானமே யுண்டாகின்றது. அல்லது உரு வமுடையபார்த்திவ முதலியத்திரவியங்களின் அபிகாதாக்கிய சையோகமில்லா மலே மர முதலியவைகளின் கிளைகளில் அசைதல் வடிவ கர்ம முண்டாவது யாதோ அக்கர்மம் பரிசமும், வேகமுமுடைய வாயு வடிவத் திரவியத்தின் சை யோகத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் அக்கிளை முதலியவைகளின் அசைதல் வடிவ கர்மத்தாலும் அவ்வாயுவின் அநுமானமே யுண்டாகின்றது. இவைமுதலிய பல அநுமானங்களால் அவ்வாயுவின் சித்தி சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்வாயு இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷய மன்று. முற்கூறிய அநுமானப் பிரமாண ஜன்னிய அநுமிதி ஞானத்திற்கே அவ்வாயு விஷயமாம்.

---

* மூன்ருவது பரிச்சேதத்தில் சையோக நிருபணத்திற் காண்க.

அல்லது துவக்கிந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு

## ௩௭௩. வாயுவினை பிரத்தியக்ஷமாக வொப்புவோராகிய நவீன நையாயிகர்களதும், மீமாஞ்சகர்களதும் மதங்களின் முறைப்படி புறத்திரவியப் பிரத்தியக்ஷத்தின் சாமக்கிரியின் வர்ணனம்.

சில நையாயிக நூலாசிரியரோ விது கூறுகின்றனர், புறத் திரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிசமாம் இரண்டிற்கும் காரணத் தன்மையின்றும். மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவத்திற்கே காரணத் தன்மை யிருக்கின்றது. ஏனெனின் காரியத்தின் அபாவத்தில் காரணத்தின் அபாவம் *பிரயோஜகமாகின்றது. ஆண்டு திரவியப்பிரத்தியக்ஷ வடிவ காரியத்தின் அபாவத்தில் உத்பூத உருவ காரணத்தின் அபாவத்தினை பிரயோஜகமாக வொப்புவதில் லாகவமிருக்கின்றது. எவ்வாதிகள் திரவியப் பிரத்தியக்ஷத்தில் உருவம், பரிசமா மிரண்டிற்கும் காரண மொப்பினரோ அவர்கள் மதத்தில் உருவம், பரிசமா மிரண்டின் அபாவத்தினை பிரத்தியக்ஷத்தின் அபாவத்தில் பிரயோஜகமாக வொப்புவதில் கௌரவ தோஷம் பிராப்தியாகின்றது. ஆகையால் முற்கூறிய பிராசீனர்களது மதம் நலமுடையதன்றும். ஈண்டிதுகருத்தாம்; திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும், துவாசப் பிரத்தியக்ஷத்திலும் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவத்தில் காரணமிருக்கினும் திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் உத்பூத பரிசத்திற்கும் காரணத் தன்மையிருக்கின்றது. அதாவது திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலோ கேவலம் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவத்திற்கே காரணத் தன்மை யிருக்கின்றது. திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்திலோ மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவம், உத்பூத பரிசமா மிரண்டிற்கும் காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அவ்வாயுவில் உத்பூத பரிசத்தி னிருப்புளதாயினும் உத்பூத உருவத்தி னபாவத்தால் அவ்வாயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமாவது துவாசப் பிரத்தியக்ஷமாவது உண்டாகிறதில்லை. தீபம், சந்திரன் முதலியவைகளினொளியில் உத்பூத பரிசத்தின் அபாவமிருக்கினும் உத்பூத வுருவமிருக்கின்றதாகையால் அவ்வொளியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. பார்த்திவ திரியணுகத்தில் உத்பூதபரிசத்தின் அபாவமிருக்கினும் உத்பூத வுருவ மிருக்கின்றதாகையால் திரியணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது, துவாசப்பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவில் உத்பூதப் பரிசத்தி னிருப்புளதாயினும் உத்பூத உருவமின்று மாகையால் வாயுவினைப்போன்று அத்தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமாவது, துவாசப்பிரத்தியக்ஷமாவது உண்டாகிறதில்லை. அத்தேயுவின் வெம்மைப் பரிசமாத்திரத்தின் துவாசப்பிரத்தியக்ஷமேயுண்டாகின்றது. ஆகையால் வாயு, பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்திப்பதின்றும். முற்கூறிய அநுமானப் பிரமாணத்தானேயே வாயு சித்தமாகிறது.

---

* பிரயோஜகம் - பிரயோஜனத்தை யுண்டுபண்ணுவது.

## ௩௭௪. நவீன நையாயிகரும், மீமாஞ்சகரும் வாயுவினைப் பிரத்தியக்ஷமாகக் கூறுதல்.

நவீன நையாயிகரும், மீமாஞ்சகருமோ வாயுவினைத் துவக்கிந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாக வொப்புகின்றனர். அவர்கள் கருத்திதுவாம்; புறத் திரவியப் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமும், உத்பூத பரிசமுமா மிரண்டும் காரணமன்றாம். அங்ஙனமே கேவலம் மஹத்வவிசிஷ்ட உத்பூத உருவம் காரணமன்றாம்; ஆனால் திரவியத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்திலோ மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவங் காரணமாம். திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ விசிஷ்ட உத்பூத பரிசங் காரணமாம். திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் உத்பூதவுருவத்தின் அபேக்ஷையில்லை. ஆண்டு வாயுவில் உருவ குணமிருப்பதில்லை யாகையால் மஹத்வவிசிஷ்ட உத்பூத உருவத்தின் அபாவத்தால் வாயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் வாயுவில் மஹத்வவிசிஷ்ட உத்பூத பரிசமிருக்கின்றதாகையால் வாயுவின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாவதில் ஓர் பாதகமுமின்றாம். ஆகையால் அவ்வாயு துவக்கிந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாம். அல்லது எங்ஙனம் வாயுவின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அங்ஙனமே காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவின் துவாசப் பிரத்தியக்ஷமும், தீபவொளியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகின்றது. ஏனெனின் திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தின் காரணமாகிய மஹத்வ விசிஷ்ட உத்பூதபரிசம் யாதோ அவ்வுத்பூத பரிசம் எங்ஙனம் வாயுவி லிருக்கின்றதோ அங்ஙனமே அஜ்ஜலத்திலும் உத்பூத பரிசமிருக்கின்றது. திரவியத்தினது சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் காரணமாகிய மஹத்துவ விசிஷ்ட உத்பூத உருவம் யாதோ அவ்வுத்பூத உருவம் எங்ஙனம் கட பட முதலிய திரவியங்களிலிருக்கின்றதோ அங்ஙனமே தீப வொளியிலும் அவ்வுத்பூத உருவ மிருக்கின்ற தாகையால் காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவின் துவாசப் பிரத்தியக்ஷத்திலும், தீபவொளியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும் ஓர் பாதகமுமின்றாம். மாறாக யான் வாயுவை பரிசிக்கின்றேன், யான் காய்ந்த ஜலத்திலுள்ள தேயுவை பரிசிக்கின்றேன், யான் ஒளியை காண்கின்றேனென்னும் உலகர் யாவரது அநுபவமும் அவ்வர்த்தத்தின் சாதகமாம். கூறிய இப்பிரதீதிகளை பிரம வடிவமாக வொப்பிய வாதியோடு யிது வினவுதல் வேண்டும். கூறிய பிரதீதிகளில் பிரம வடிவத் தன்மையோர் யுக்திப்பிரமாண மின்றியே யிருக்கிறதா? அல்லது ஓர்யுக்திப் பிரமாணத்தால் சித்திக்கிறதா? ஆண்டு அவ்வாதி முதற் பக்ஷ மங்கீகரிக்கின் அவ்வாதியானவன் எங்ஙனம் கூறிய பிரதீதிகளில் பிரம வடிவ மங்கீகரித்தனனோ அங்ஙனமே யான் கடத்தை பரிசிக்கின்றேன், படத்தைப் பார்க்கின்றேனென்னுமிவை முதலிய பிரதீதிகளிலும் பிரம வடிவத் தன்மை அங்கீகரிக்க வேண்டும். இவை முதலிய பிரதீதிகளில் பிரம வடிவத் தன்மை அவ்வாதிகளுக்கும் அங்கீகாரமின்றாம். ஆகையால் முதற்பக்ஷமோ சம்பவியாது. அவ்வாதியிரண்டாவது பக்ஷம் அங்கீகரிக்க அதுவும் சம்பவியாது. ஏனெனின், எப்பிரதீதியின் பிற்காலத்தில் விரோதி பிரதீதியுண்டாகின்றதோ அப்பிரதீதியே பிராந்திவடிவமா

கின்றது. எங்ஙனம் சுத்தியில் (கிளிஞ்சலில்) இது வெள்ளி என்னும் பிரதீதி யுண்டாய பின்னர் இது வெள்ளியன்றென்னும் விரோதிப் பிரதீதியுண்டாகின்ற தாகையால் இது வெள்ளியென்னும்பிரதீதி பிராந்தி வடிவமெனப்படுகின்றது. இவ்வாறாய விரோதிப் பிரதீதி கூறிய அந்தப் பிரதீதிகளுக்குப் பின்னுண்டாகிற தில்லை. அந்தப் பிரதீதிகள் பிரம வடிவ மன்றாம். வாயு நிரூபணம் முற்றிற்று.

## ௲எரு. பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்களால் முறையாக துவியணுக முதலிய காரியத் திரவிய வடிவ ஜகத்தினது உற்பத்தியின் வர்ணனம்.

முன்னர் துவியணுகாதி காரிய வடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயுக்களுக்கு, அவயவ வடிவம் கூறப்பட்டது. சில நாத்திக வாதிகள் அவ்வவயவியினை அங்கீகரிப்பதில்லை. பரமாணுக்களின் சமூஹ வடிவ ராசிக்கே கட, படாதி வடிவமொப்புகின்றனர். அந்நாத்திகர்களின் மதத்தைக்கண்டிக்கும்பொருட்டு முதலில் துவியணுகாதி காரிய வடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயுக்களினுற்பத்திக் கிரமத்தைக் கூறுவாம். பிரளய காலத்தில் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்குத் திரவியங்களின் அசங்கியாத (கணக்கில்லாத) பரமாணுக்கள் துவியணுகாதி வடிவ ஓர் காரியத் திரவியத்தினையும் ஆரம்பம் செய்யாதனவாகியும், அசைவில்லாதனவாகியும் வெவ்வேறாய் நிலைப்பதாகின்றன. அதன் பின்னர் சிருட்டியின் துவக்கத்தில் பரமேஸ்வரனது இச்சை யுண்டாகிறது. அதாவது காரிய வடிவத் திரவியத்தினைச் செய்வதற்கு இச்சை யுண்டாகின்றது. அவ்விச்சையின் வசமாக அவ்வெல்லாப் பரமாணுக்களில் கிரியை யுண்டாவதாகின்றது. அக்கிரியா வடிவ வேதுவில் அச்சஜாதீய (சொந்த ஜாதியுடைய) விரண்டிரண்டு பரமாணுக்கட்கு பரஸ்பர சையோகமுண்டாகின்றது. அதாவது; பிருதிவியின் பரமாணுக்கட்கு பிருதிவியின் பரமாணுக்களோடும், ஜலத்தின் பரமாணுக்கட்கு ஜலத்தின் பரமாணுக்களோடும், தேயுவின் பரமாணுக்கட்குத் தேயுவின் பரமாணுக்களோடும், வாயுவின் பரமாணுக்கட்கு வாயுவின் பரமாணுக்களோடும் சையோக முண்டாகின்றது. இவ்வாறாக சஜாதீய பரமாணுக்களின் கிரியா ஜன்னிய சையோகத்தால் துவியணுக வடிவ காரியமுண்டாகின்றது. அதாவது; பிருதிவித் தன்மையாதி வடிவமாக சஜாதீய விரு பரமாணுக்களின் சையோகத்தால் துவியணுக வடிவ காரியமுண்டாகின்றது. ஆண்டுக் கணக்கில்லாத பரமாணுக்களுள் இரண்டிரண்டு பரமாணுக்களின் சையோகத்தால் உண்டாயின துவியணுகக் காரியமும் கணக்கில்லாமலே உண்டாகின்றது. எதுவெது பாவ காரியமாமோ அவ்வப்பாவ காரியம் சமவாயி, அசமவாயி, நிமித்த மென்னும் மூன்றுக்காரணங்களானேயேயுண்டாவதாகின்றதென்னுமிது நியாய சாத்திரத்தின் நியமமாம். ஆண்டுப் பிரத்துவம்சா பாவ வடிவ காரியம் கேவலம் நிமித்த காரணத்தானேயேயுண்டாகின்றது. சமவாயி காரணத்தாலாவது, அசமவாயி காரணத்தாலாவது பிரத்துவம்சா பாவ முண்டாகிறதில்லை. ஆகையால் அந்நியமத்தில் காரிய மாத்திரத்தைக் கிரஹிக்கக் கூடாது. ஆனால் பாவ காரியத்தைக் கிரஹிக்க வேண்டும். அப்பாவ காரிய வடிவத் தன்மை துவியணுகத்திலுமிருக்கின்ற தாகையால் துவியணுக வடிவ

காரியமும் அம்மூன்று காரணங்களானேயே யுண்டாவதாகும். துவியணுக வடிவ காரியத்திற்கு இரு பரமாணுக்கள் சமவாயி காரணமும், அவ்விரு பரமாணுக்களின் கிரியா ஜன்னிய பரஸ்பர சையோக சம்பந்தம் துவியணுக வடிவ காரியத்திற்கு அசமவாயி காரணமுமாம்.

## ௨எக. ஈஸ்வரன் முதலிய ஒன்பது சாதாரண காரணங்களின் வர்ணனம்.

பரமேஸ்வரன், பரமேஸ்வரனது ஞானம், பரமேஸ்வரனது இச்சை, பரமேஸ்வரனது முயற்சி, காலம், திக்கு, பிராகபாவம், ஜீவர்களது புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டம், பிரதிபந்தகா பாவமென்னும் ஒன்பதும் துவியணுக வடிவ காரியத்தின் நிமித்த காரணங்களாம். கூறிய விப்பரமேஸ்வரன் முதலிய வொன்பதும் கேவலம் துவியணுக வடிவ காரியத்தின் நிமித்த காரணமன்று; சர்வகாரியத்தினு மிவைகட்கு நிமித்தகாரணத் தன்மையிருக்கின்றன. இக்காரணத்தானேயே இவைகளை சாதாரண காரண மென்பர். இவ்வாறு மூன்று காரணங்களால் துவியணுக வடிவ காரியங்களி னுற்பத்திக்குப் பின்னர் அத்துவியணுகங்களில் மீண்டும் கிரியை யுண்டாவதாகின்றது. அக்கிரியையால் சஜாதீய மும்மூன்று துவியணுகங்கட்கு பரஸ்பர சையோக முண்டாகின்றது. அச்சையோகத்தால் திரியணுக வடிவ காரியம் உண்டாகின்றது. அத்திரியணுக வடிவ காரியமும் அசங்கியாதமாகவே (கணக்கில்லாமலே) உண்டாகின்றது. அத்திரியணுக வடிவ காரியத்திற்கு அம்மூன்று துவியணுகங்கள் சமவாயி காரணமும், அம்மூன்று துவியணுகங்களின் பரஸ்பர சையோக சம்பந்தம் திரியணுக வடிவ காரியத்திற்கு அசமவாயி காரணமுமாகின்றது. கூறிய பரமேஸ்வரன் முதலிய வொன்பதும் திரியணுக வடிவ காரியத்திற்கு நிமித்தகாரணமாகின்றன. இவ்வாறுக அத்திரியணுக வடிவ காரியத்தின் உற்பத்திக்குப் பின்னர் அத்திரியணுகங்களிலும் மீண்டும் கிரியையுண்டாகின்றது. அக்கிரியையால் அச்சஜாதீய நன்னான்கு திரியணுகங்கட்கு பரஸ்பர சையோக சம்பந்த முண்டாகின்றது. அச்சையோகத்தால் சதுரணுக வடிவ காரியமுண்டாகின்றது. அச்சதுரணுகங்களும் கணக்கில்லாதனவாகவே யுண்டாகின்றன. அச்சதுரணுக வடிவ காரியத்திற்கு நான்கு திரியணுகங்கள் சமவாயி காரணமும், நான்கு திரியணுகங்களின் பரஸ்பர சையோக சம்பந்தம் அசமவாயி காரணமுமாகின்றன. முற்கூறிய பரமேஸ்வரன் முதலிய வொன்பதும் நிமித்த காரணங்களாகின்றன. இவ்வாறுக அவ்வைந்தைந்து சதுரணுகங்கள் கூடி வேறு ஐந்தாவதணுகமெனப்பெயரிய ஸ்தூலதர காரியத்தையுண்டாக்குகின்றது. அவ்வைந் தணுகமெனப் பெயரிய ஸ்தூலதர காரிய வடிவு அவயவங்கள் கலந்து வேறு ஸ்தூலதம காரியத்தையுண்டாக்குகின்றது. இவ்வாறுக முன் முன் காரணத்தின் அபேக்ஷையால் பின் பின் ஸ்தூல காரியத்தி னுற்பத்திக்கிரமமாக மா பிருதிவி, மா ஜலம், மா தேயு, மா வாயு உண்டாகின்றன. எங்ஙனம்: பரமாணு வடிவ சமவாயி காரணத்தின் அபேக்ஷையால் துவியணுக வடிவ காரியத்தில் இருமைகுண ஸ்தூலத்தன்மை யுண்டாகின்றது. துவியணுக வடிவ சமவாயி காரணத்தின் அபேக்ஷையால் திரியணுக

வடிவகாரியத்தில் முக்குண ஸ்தூலத்தன்மையுண்டாகின்றது. திரியணுகவடிவ சமவாயி காரணத்தின் அபேக்ஷையால் சதுரணுக வடிவ காரியத்தில் நான்கு குண ஸ்தூலத் தன்மை யுண்டாகின்றது. இவ்வாறாக மா பிருதிவி முதலிய காரியமட்டும் முன் முன் சமவாயி காரணத்தின் அபேக்ஷையால் பின் பின் காரியத்தில் ஸ்தூலத்தன்மையின் மிகுதித்தன்மையை யறிந்துகொள்க. ஆண்டு முன் முன் சமவாயி காரணத்தால் பின் பின் காரியம் வேறேயாகின்றது. எங்ஙனம்: பரமாணு வடிவ சமவாயி காரணத்தால் துவியணுக வடிவ காரியம் வேறாகின்றது. துவியணுக வடிவ சமவாயி காரணத்தால் திரியணுக வடிவ காரியம் வேறாகின்றது. இவ்வாறாக மா பிருதிவி முதலிய காரியம் வரையில் முன் முன் சமவாயி காரணத்தால் பின் பின் காரியம் வேறாகவே யுண்டாகின்றது. முன் முன் சமவாயி காரண வடிவத்திரவியத்தின் உருவ முதலிய குணங்கள் பின்பின் காரியத் திரவியத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குகின்றது. எங்ஙனம்: தந்து வடிவ சமவாயி காரணத்தின் உருவ முதலிய குணங்கள் படவடிவ காரியத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குவதாகின்றது. அங்ஙனமே பரமாணு வடிவ சமவாயி காரணத்தின் உருவ முதலிய குணங்கள் துவியணுக வடிவ காரியத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குவதாகின்றது. துவியணுக வடிவ சமவாயி காரணத்தின் உருவ முதலிய குணங்கள் திரியணுக வடிவ காரியத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குகின்றது. இவ்வாறாக மா பிருதிவி முதலிய காரியத் திரவியம் வரையில் முன் முன் சமவாயி காரணத்தின் உருவ முதலிய குணங்கள் பின் பின் காரியத் திரவியத்தின் உருவ முதலிய குணங்களை யுண்டாக்குகின்றது. பாகத்தாலாய உருவம் ரச முதலியனவும், இருமைத் தன்மை முதலியனவும், ஸம்யோக விபாகங்களும் பரிமாணம் முதலிய குணங்கள் காரணத்தின் குணங்களாலுண்டாவன வன்று. ஆனால் தனது ஆசிரய திரவியத்தில் சமவேதமாகி தேயு ஸம்யோக முதலியவைகளாலேயேயுண்டாவதாகின்றன. என்றாலும் காரணத்தின்குணங்களாலுண்டாகும் உருவ முதலிய குணங்களையே ஈண்டுக் கிரஹிக்குக. ஆண்டு காரணத்தின் குணங்களா லுண்டாவனவும், காரணத்தின் குணங்களாலுண்டாதனவுமாம் எல்லாக் குணங்களையும் பின்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் குணங்களின் சாதர்மிய வைதர்மிய நிரூபணத்தில் தெளிவாய்க் கூறுவாம்.

## ருஎஎ. மூன்று பரமாணுக்களால் துவியணுகத்தி னுற்பத்தி யொப்புவதிலும், இரு துவியணுக்களால் திரியணுகத்தி னுற்பத்தி யொப்புவதிலுமுள்ள தோஷத்தின் வர்ணனம்.

சங்கை:—எங்ஙனமிரு பரமாணுக்கள் துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்கின்றதோ அங்ஙனமே மூன்று பரமாணுக்கள் துவியணுக வடிவ காரியத்தை ஏன் ஆரம்பிக்காது? எங்ஙனம் மூன்று துவியணுகம் திரியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்கின்றதோ அங்ஙனமே இரு துவியணுகங்கள் திரியணுக வடிவ காரியத்தை ஏன் ஆரம்பிக்காது?

சமாதானம்:—மூன்று பரமாணுக்கட்கு துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்குந்தன்மை வொப்பின் ஒன்றோ கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்

டாகும். ஏனெனின் இரு பரமாணுக்களின் அபேக்ஷையால் மூன்று பரமாணுக்கள் மிகுதியாகின்றன. இரு பரமாணுக்களாலேயே துவியணுக வடிவ காரியத்தினுற்பத்தி சித்தியாயபின், மூன்று பரமாணுக்களால் துவியணுக வடிவ காரியத்தி னுற்பத்தி யொப்புவதில் கௌரவ தோஷத்தின் பிராப்தியே யுண்டாகும். மூன்று பரமாணுக்களால் துவியணுக வடிவ காரியத்தி னுற்பத்தியை யொப்புவதில் ஓர் பிரமாணமு மின்றாம். ஆகையால் மூன்று பரமாணுக்கட்கு துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்குந் தன்மை சம்பவியாது. லாகவமாக அவ்விரு பரமாணுக்களே துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பிப்பதாகின்றன.

சங்கை:—எங்ஙனம் மூன்று பரமாணுக்களில் துவியணுக வடிவ காரியத்தினை ஆரம்பிக்கும் தன்மை யொப்புவதில் கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாக அக்கௌரவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு லாகவமாக இரு பரமாணுக்களிலேயே துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்குந் தன்மை அங்கீகரிப்பதாமோ அங்ஙனமே மூன்று துவியணுகங்களில் திரியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்குந் தன்மை யொப்புவதிலும் கௌரவ தோஷத்தின் பிராப்தியே யுண்டாகின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு லாகவமாக இரு துவியணுகங்களிலேயே திரியணுக வடிவ காரியத்தை ஆரம்பிக்குந் தன்மை யொப்பவேண்டும்.

சமாதானம்:—இரு துவியணுகங்களால் திரியணுக வடிவ காரியத்தின் உற்பத்தி யொப்புவதில் லாகவ மிருக்கின்றதென்றாலும் இரு துவியணுகங்களால் திரியணுக வடிவ காரியத்தினுற்பத்தி யொப்பின் திரியணுக வடிவ காரியத்தில் மஹத்வப் பரிமாண முண்டாகாததாகும். மஹத்வப் பரிமாணத்தின் அபாவமிருக்க திரியணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகாததாகும். ஏனெனின் காரியத்தின் மஹத்வப் பரிமாணத்தில் காரியத்தின் சமவாயி காரணத்தின் மஹத்வப் பரிமாணம் அல்லது சமவாயி காரணத்தின் அனேகத் தன்மைச் சங்கியை அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: தந்து வடிவ சமவாயி காரணத்தின் மஹத்வப் பரிமாணம் பட வடிவ காரியத்தின் மஹத்வப் பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. சமவாயி காரணத்தின் பரிமாணம் எக்காரியத்தின் பரிமாணத்தை யுண்டாக்குகின்றதோ அது தனது சமான ஜாதியுடையதும் தன்னினும் மிகுந்ததுமாம்பரிமாணத்தையே உண்டாக்குகின்றது. எங்ஙனம்: தந்து வடிவ காரணத்தின் மஹத்வப் பரிமாணம் மஹத்வ வடிவமாக தனது சமானஜாதியுடையதும், தன்னினும் மிகுந்ததுமாம் படத்தின் மஹத்வப் பரிமாணத்தை உண்டாக்குகின்றது. ஆண்டு துவியணுக வடிவ காரணத்திலோ மஹத்வப் பரிமாணமின்றாம். அணுத்தன்மைப் பரிமாணமிருக்கின்றது. இக்காரணத்தாலேயே பரமாணுக்களைப் போன்று துவியணுகத்தின் பிரத்தியக்ஷ ஞானமு முண்டாகிறதில்லை. துவியணுக வடிவ காரணத்தின் அணுத்தன்மைப் பரிமாணத்தால் திரியணுக வடிவ காரியத்தின் பரிமாணத்திற்கு உற்பத்தியை அங்கீகரிக்கின் திரியணுகத்தின் பரிமாணம் துவி

யணுகத்தினது அணுத் தன்மைப் பரிமாணத்தின் அபேக்ஷயால் அணு தர மாகும். சித்தாந்தத்தில் திரியணுகத்திற்கு மஹத்வப் பரிமாண முடைமையே யொப்பப்பட்டிருக்கின்றது. இக்காரணத்தானேயே திரியணுகத்தின் சாக்ஷாஷப்பிரத்தியக்ஷமுண்டாகின்றது. ஆகையால் திரியணுகத்தின் மஹத்வப் பரி மாணம் துவியணுக வடிவ சமவாயி காரணத்தின் பரிமாண ஜன்னியுமன்றும். ஆனல் துவியணுக வடிவ காரணத்திலுள்ள அனேகத் தன்மைச் சங்கியை யாதோ அவ்வனேகத் தன்மை சங்கியை யானேயே அத்திரியணுகத்தின் மஹத்வப் பரிமாணம் உண்டாகின்றது. அவ்வனேகத் தன்மைச் சங்கியை இரண்டிலிருப்பதில்லை. மூன்று, நான்கு, ஐந்து, ஆறு என்னு மிவை முதலிய வைகளிலேயே அவ்வனேகத் தன்மைச் சங்கியை யிருக்கின்றது. ஆகையால் திரியணுக வடிவ காரியத்தில் மஹத்வப் பரிமாணத்தின் உற்பத்தியின் பொருட்டு மூன்று துவியணுகங்களானேயே திரியணுக வடிவ காரியத்தின் உற்பத்தியை யொப்ப வேண்டும்.

## ௩௭௰. பரமாணுக்களின் கிரியையில் அசமவாயி காரணத்தினது அபூர்வத்தின் சாதக சங்கை.

சங்கை:—எதுவெது பாவகாரியமாமோ அவ்வப்பாவ காரியம் சமவாயி காரணம், அசமவாயி காரணம், நிமித்த காரண மென்னு மூன்றுக ளானேயே உண்டாகின்ற தென்னும் நியமம் முன்னர் கூறப்பட்டது. அந் நியமம் சம்பவியாது. ஏனெனின் எங்ஙனம் துவியணுக முதலியன பாவகாரிய மாமோ அங்ஙனமே சிருட்டியின் துவக்கத்தில் பரமாணுக்களினது சையோ கத்தினை யுண்டாக்கும் பரமாணுக்களின் கிரியையும் பாவகாரியமாம். அக் கிரியைக்கு ஓர் அசமவாயி காரணம் பிரதீதியாகிறதில்லை. அப்பரமாணுக் களோ அக்கிரியையின் சமவாயி காரணமும், முற்கூறிய பரமேஸ்வரனது இச்சை முதலிய வொன்பதும் நிமித்த காரணமுமாகின்றன. ஆகையால் அப் பரமாணுக்களின் கிரியை எங்ஙனம் அசமவாயி காரணமில்லாமலே உண்டா கின்றதோ அங்ஙனமே துவியணுக முதலிய பாவ காரியமும்அசமவாயி கார ணமில்லாமலே உண்டாவதாகு மென்னும் சங்கை யுண்டாக இனி மத வேறு பாட்டால் அக்கிரியையின் அசமவாயி காரணத்தை நிரூபிப்பாம்.

## ௩௭௧. மதவேறுபாட்டால் பரமாணுக்கட்கு கிரியையினது அசமவாயி காரணத்தின் வர்ண்ணம்.

ஆண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். அப்பரமாணுக்க ளோடு முயற்சியுடைய ஈஸ்வரனது சையோக சம்பந்தம் யாதோ அச் சை யோக சம்பந்தமே அக்கிரியையின் அசமவாயி காரணமாகு மென்பர். சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். புண்ணிய பாப வடிவ ஜீவாத்மாவிற்கு பரமாணுக்களோடுள்ள சையோகசம்பந்தம்யாதோ அச்சையோகசம்பந்தமே அக்கிரியையின் அசமவாயி காரணமாமென்பர். கருத்திதுவாம்; ஈஸ்வர ஆத் மாவும், ஜீவாத்மாவுமா மிரண்டும் விபுவாம். சர்வ மூர்த்தத் திரவியங்களோடு எத்திரவியத்தின் சையோக சம்பந்த மிருக்கிறதோ அத்திரவியம் விபுவெனப்

படுகின்றது. பிருதிவி முதலிய பரமாணுக்களும் மூர்த்தத்திரவிய மாகையால் சிருட்டியின் துவக்கத்தில் பரமாணுக்களோடு ஈஸ்வராத்மாவிற்கும், ஜீவாத்மாவிற்கும் அச்சையோக சம்பந்த மிருப்பதேயாகின்றது. அச்சையோக சம்பந்தம் அக்கிரியையின் அசமவாயி காரணமா மென்பர். சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர் ஓர் பரமாணுவோடு வேறு பரமாணுவின் *நோதனுக்கிய சையோகம் யாதோ அச்சையோகமே அப்பரமாணுவின் கிரியைக்கு அசமவாயி காரணமாமென்பர்.

சங்கை:—நோதனுக்கிய சையோகத்தில் கிரியையின் அசமவாயி காரணத் தன்மை யொப்புவதில் அனவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகும்: ஏனெனின் எவ்விரண்டாவது பரமாணுவின் நோதனுக்கிய சையோகத்தால் முதற் பரமாணுவில் கிரியை யுண்டாய் விடுகிறதோ அவ்விரண்டாவது பரமாணுவின் நோதனுக்கிய சையோகமும் அவ்விரண்டாவது பரமாணுவின் கிரியை யானேயே யுண்டாவ தாகும் அவ்விரண்டாவது பரமாணுவின் கிரியையும் அவ்விரண்டாவது பரமாணுவோடு மூன்றுவது பரமாணுவின் நோதனுக்கிய சையோகத்தால் உண்டாவதாகும். அம்மூன்றுவது பரமாணுவின் நோதனுக்கிய சையோகமும் அம்மூன்றுவது பரமாணுவின் கிரியையால் உண்டாவதாகும். அம்மூன்றுவது பரமாணுவின் கிரியையும் அம்மூன்றுவது பரமாணுவோடு நான்காவது பரமாணுவின் நோதனுக்கிய சையோகத்தால் உண்டாவதாகும். இவ்வாறுக கிரியைகட்கும், நோதனுக்கிய சையோகத்திற்கும் பரம்பரை யொப்புவதில் அனவஸ்தா தோஷத்தின் அடைவு சம்பவிக்கும். இக்காரணத்தால் ஓர் பரமாணுவோடு வேறு பரமாணுவின் நோதனுக்கிய சையோகத்தில் அப்பரமாணுவின் கிரியைக்கு அசமவாயி காரணத் தன்மைச் சம்பவியாது.

சமாதானம்:—எங்ஙனம்: பீஜத்தால் அங்குரமும், அங்குரத்தால் மீண்டும் பீஜமும், அப்பீஜத்தால் மீண்டும் அங்குரமும், அவ்வங்குரத்தால் மீண்டும் பீஜமும் உண்டாகின்றது. இவ்வாறுய பீஜ அங்குரங்களின் அனவஸ்தையைச் சாத்திரங்கள் தோஷ வடிவமாக வொப்பவில்லை. அங்ஙனமே சரீரத்தால் புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டமும், அவ்வதிர்ஷ்டத்தால் மீண்டும் சரீரமும், அச்சரீரத்தால் மீண்டும் அதிர்ஷ்டமும் உண்டாகின்றது. இவ்வாறுய சரீர அதிர்ஷ்டங்களின் அனவஸ்தையை சாத்திரங்கள் தோஷ வடிவமாக வொப்பவில்லை. அங்ஙனமே பரமாணுக்களின் கிரியைகளதும், நோதனுக்கிய சம்யோகத்தினதும் அனவஸ்தையும் தோஷ வடிவத் தன்மையன்றும். மூல அர்த்தத்தை நாசஞ் செய்வதாகிய அனவஸ்தையினையே சாத்திரக்காரர்கள் தோஷ வடிவமாக வொப்புகின்றனர். ஆகையால் ஓர் பரமாணுவோடு வேறு பரமாணுவின் நோதனுக்கிய சையோகத்தில் அப்பரமாணுவின் கிரியைக்கு அசமவாயி காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது. சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். அப்பரமாணுக்களில் எவ்வேகாக்கிய சம்ஸ்காரமெனப் பெயரிய குண மிருக்கின்றதோ அவ்வேகமே அப்பரமாணுவின் கிரியைக்கு அசமவாயி காரண மென்பர்.+

* இதை மூன்றுவது பரிச்சேதத்தில் சையோக நிருபணத்திற் காண்க.

+ எங்ஙனம் பாணமுதலியவைகளின் இரண்டாவது முதலிய கிரியைகட்கு வேகம் அசமவாயி காரணமாம். அங்ஙனமே பரமாணுக்களின் கிரியைகட்கும் வேகம் அசமவாயி காரணமாம்

சங்கை :—அப்பரமாணுக்களின் வேகத்தினை பரமாணுக்களின் கிரியைக்கு அசமவாயி காரணமாக வொப்பின் கற்பனா கௌரவ தோஷத்தின் அடைவு சம்பவிக்கும். ஏனெனின் எங்ஙனம்: முதல் நோதனுக்கிய ஸம்யோகத்தால் பாணத்தில் கிரியையுண்டாகிறது. அக்கிரியையால் அப்பாணத்தில் வேகம் உண்டாகின்றது அவ்வேகத்தால் அப்பாணத்தில்மீண்டும் வேறுகிரியையுண்டாகின்றது. அவ்வேறு கிரியையால் அப்பாணத்தில் மீண்டும் வேறு வேகமுண்டாகிறது. இவ்வாறாக எதுகாறும் அப்பாணத்திற்குப் பூமியில் வீழ்ச்சியுண்டாகிறதில்லையோ அதுகாறும் அப்பாணத்தில் கிரியைகளின் பரம்பரையும் வேகத்தின் பரம்பரையும் கற்பிக்கப்படுவதாகும். அங்ஙனமே அப்பரமாணுக்களின் கிரியைக்கு அசமவாயி காரண வடிவ வேகமும் அப்பரமாணுக்களின் வேறு கிரியைகளால் உண்டாவதாகும். அவ்வேறு கிரியையும் வேறோர் வேகத்தால் உண்டாவதாகும். அவ்வேறு வேகம் மீண்டும் மூன்றாவது கிரியையால் உண்டாவதாகும். இவ்வாறாக பிரளயத்தின் முதற்க்ஷணம் தொடங்கி சிருஷ்டி காலம் வரையில் சர்வ பரமாணுக்களில் கிரியைகளின் பரம்பரையும் வேகத்தின் பரம்பரையும் கற்பிக்கப்படுவதாகும். இத்தகைய கற்பனா கௌரவ தோஷத்தோடு கூடியதா மாகையால் அவ்வேகத்தில் அப்பரமாணுக்களின் கிரியைக்கும் அசமவாயி காரணத் தன்மைச் சம்பவியாது.

சமாதானம் :—அக்கற்பனா கௌரவம் யாண்டும் தோஷ வடிவமாகாது. ஆனால் எக்கற்பனா கௌரவம் பயனில்லாததாமோ அக்கற்பனா கௌரவமே தோஷ வடிவமாகின்றது. பயனை யுண்டாக்கும் கற்பனா கௌரவம் தோஷ வடிவமாகாது. அத்துவியணுக முதலிய காரியத்தின் உற்பத்தி வடிவ பயன் ஈண்டும் இருக்கின்றது. ஆகையால் பயனையுண்டாக்குவதாவதால் அக்கற்பனா கௌரவம் தோஷ வடிவமாகாது. ஆகையால் அவ்வப் பரமாணுவிலுள்ள வேகத்திற்கு அவ்வப்பரமாணுவின் கிரியைக்கு அசமவாயி காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. இதுகாறும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்குத் திரவியங்களின் உற்பத்திக் கிரமம் கூறப்பட்டது. இனி அந்நான்கின் விநாசக்கிரமத்தை கூறுவாம்.

## ௩-௪0. காரியத் திரவியமாகிய ஜகத்தினது நாச வடிவ பிரளயத்தின் கிரம வர்ணனம்.

இவ்வாறு உண்டாகிய அக்காரியத் திரவியம் சில காலம் வரையில் நிலைப்பதாகின்றது. அதன் பின்னர் அப்பரமேஸ்வரனுக்கு மீண்டும் அழிப்பாம் என்னு மிச்சை யுண்டாகின்றது. அதாவது உண்டாய காரியத் திரவியங்களை நாசம் செய்வாமென்னும் இச்சை யுண்டாகின்றது. நாசம் செய்யும் இச்சையின் வசமாக பிருதிவி முதலிய நான்குத்திரவியங்களின் பரமாணுக்களில் மீண்டும் கிரியையுண்டாகின்றது. அக்கிரியையால் அவ்விரண்டிரண்டு பரமாணுக்களுக்கு பரஸ்பரம் விபாகமுண்டாகின்றது. அவ்விபாகத்தால் அவ்விரண்டிரண்டு பரமாணுக்களின் ஸம்யோகத்தின் நாசமுண்டாகின்றது. அச்ஸம்யோகத்தின் நாசத்தால் அத்துவியணுக வடிவ காரியத்தின் நாசமுண்டாகின்றது. அத்துவியணுக வடிவ சமவாயி காரணங்களின் நாச முண்டாக அத்திரியணுக

வடிவ காரியங்களின் நாசமுண்டாகின்றன. அத்திரியணுக வடிவ சமவாயி காரணத்தின் நாச முண்டாக அச்சதுரணுக வடிவ காரியங்களின் நாச முண்டாகின்றது. இவ்வாறாக முன் முன் சமவாயி காரணத்தின் நாசத்தால் பின் பின் காரியத்தின் நாசக் கிரமத்தால் மா பிருதிவிக்கும், மா ஜலத்திற்கும், மா தேயுவிற்கும், மா வாயுவிற்கும் நாசமுண்டாகின்றது. அத்துவியணுக முதலிய காரியத் திரவியங்களின் நாசமுண்டாக அவைகளின் உருவ முதலிய குணங்களும் தானே நாசமாய் விடுகின்றது. இவ்வாறாக துவியணுக முதலிய சர்வ காரியத்திரவியங்களின் நாசம்யாதோ அது சாத்திரத்தில் அவாந்திரப் பிரளயமெனக்கூறப்பட்டிருக்கின்றது. கருத்திதுவாம்; பிரளயம் இருவிதமாகின்றன. ஒன்றே அவாந்திரப் பிரளயமாகின்றது, மற்றயது மாப்பிரளயமாகின்றது.

ரு௨௪க. அவாந்திரப் பிரளயத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ஸர்வகார்யத்ரவ்யத்வம்ஸோ அவாந்தரப்ரளய:" (இ-ள்.) துவியணுக வடிவ பிருதிவி முதற் கொண்டு மா பிருதிவி வரையில் எத்தனை பிருதிவி வடிவ காரியத் திரவிய மிருக்கின்றதோ அங்ஙனமே துவியணுக ஜல முதற் கொண்டு மா ஜலம் வரையில் எத்தனை ஜல வடிவ காரியத்திரவிய மிருக்கின்றதோ அங்ஙனமே துவியணுக வடிவ தேயு முதற் கொண்டு மா தேயு வரையில் எத்தனை தேயு வடிவ காரியத் திரவிய மிருக்கின்றதோ அங்ஙனமே துவியணுக வடிவ வாயு முதற் கொண்டு மா வாயு வரையில் எத்தனை வாயு வடிவ காரியத்திரவிய மிருக்கின்றதோ அவ்வெல்லாக் காரியத் திரவியங்கட்கு முற்கூறிய முறைப்படி நாசம் யாதோ அந்த நாசம் அவாந்திரப் பிரளய மெனப்படுகின்றது. ஆண்டு சில கடாதி வடிவ திரவியங்களின் நாசமோ இக்காலத்திலு மிருக்கின்றது. ஆகையால் இக்காலத்திலும் அவாந்தரப் பிரளய வியவஹாரம் உண்டாக வேண்டும். அவ்வதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சர்வ" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு இக்காலத்தில் சிலகாரியத் திரவியத்தின் நாசமுளதாயினும் சர்வ காரியங்களின் நாச முண்டாகிறதில்லை. ஆகையால் இக்காலத்தில் அவாந்திரப் பிரளயத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது அந்த லக்ஷணத்தில் "காரியம்" என்னும் பதங் கூறாது "சர்வத்திரவிய நாசம் அவாந்திரப் பிரளயம்" என இம்மாத்திரமே லக்ஷணமாகக் கூறின், அந்த லக்ஷணம் தனது லக்ஷிய மாத்திரத்தில் (லக்ஷிய முழுமையும்) இராததாவதால் அசம்பவ தோஷமுடையதாகும். ஏனெனின் அவாந்திரப் பிரளயத்திலும் பரமாணு ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களின் நாச முண்டாகிறதில்லை. ஆனால் காரியத் திரவியங்களின் நாசமே யுண்டாகின்றது அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் அத்திரவியத்திற்கு "காரியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. அல்லது "சர்வ காரிய நாசம் அவாந்திரப் பிரளயம்" என விம்மாத்திரமே அவாந்திரப் பிரளயத்தின் லக்ஷணமாகக் கூறி, அந்த லக்ஷணத்தில் "திரவியம்" என்னும் பதங் கூறாவிடின் அந்த லக்ஷணம் மீண்டும் அசம்பவ தோஷமுடையதாகும். ஏனெனின் அப்பரமாணு முதலிய நித்தியத் திரவியங்களிலுள்ள உருவ முதலிய குணங்கள் அவாந்தி

ரப் பிரளயத்திலு மிருக்கின்றன. அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவாந்திரப் பிரளயத்தில் குண கரும வடிவ காரியத்தி னிருப்புள தாயினும் ஓர் காரியத் திரவியமிருப்பதில்லை. ஆகையால் அந்த லக்ஷணத்தில் அசம்பவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகாது.

## ௩௮௨. மா பிரளயத்தின் லக்ஷணம்.

"ஸவ-ஹாவ காய-ஷ்வாஸஃ உஹாப்ரளயஃ" (இ-ள்.) அநித்திய திரவியமும், அநித்திய குணமும், கருமமுமா மூன்றை பாவகாரிய மென்பர். அவ்வெல்லாப்பாவகாரியங்களின் நாசம்யாதோ அதுமாஹாப்பிரளயமெனப்படும். சில பாவ காரியங்களின் நாசமோ இக்காலத்திலு மிருக்கின்றது. ஆகையால் இக்காலத்திலும் அம்மாஹாப் பிரளய வியவஹாரம் உண்டாகவேண்டும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சர்வம்" என்னும் பதங் கூறப்பட்டது. இக்காலத்தில் சில பாவ காரியத்தினது நாசத்தின் இருப்புளதாயினும் சர்வ பாவ காரியங்களின் நாச மின்றும். ஆகையால் சர்வ மென்னும் பதத்தைக் கூறுவதால் இக்காலத்தில் மஹாப்பிரளயத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சர்வ காரியத்துவம்சம் மஹாப் பிரளயம்" என் விம்மாத்திரமே மஹாப் பிரளயத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பாவம்" என்னும் பதங் கூறுவிடின் அந்த லக்ஷணம் அசம்பவ தோஷமுடையதாகும். ஏனெனின் சித்தாந்தத்தில் துவம்சத்தின் துவம்சம் அங்கீகரிக்கப்படவில்லை. துவம்சத்தினை அநந்தமாக (முடிவில்லாததாக) வொப்புகின்றனர். இவ்விதத் துவம்ச வடிவ காரியம் அப்பிரளய காலத்திலும் இருக்கின்றது. அத்துவம்ச வடிவ காரியத்தின் இருப்புளதாக சர்வ காரியத்தின் துவம்சம் சம்பவியாது. அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அக்காரியத்திற்கு "பாவம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டுத் துவம்ச வடிவ காரியத்தில் பாவ வடிவத் தன்மையின்றும்; அபாவ வடிவத் தன்மையே யிருக்கின்றது. இவ்வித அபாவ வடிவத் துவம்ச வடிவ காரியத்தின் இருப்புளதாயினும் மஹாப் பிரளயத்தில் பாவ காரியமொன்று மிருப்பதில்லை. ஆகையால் அந்த லக்ஷணத்தில் அசம்பவ தோஷத்தின் அடைவு சம்பவியாது. அல்லது "சர்வ பாவத் துவம்சம் மஹாப்பிரளயம்" என் விம்மாத்திரமே மஹாப்பிரளயத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "காரியம்" என்னும் பதங் கூறுவிடின் அந்த லக்ஷணம் மீண்டும் அசம்பவ தோஷ முடையதாகும். ஏனெனின் மஹாப் பிரளயத்திலும் பரமாணு, ஆகாய முதலிய நித்திய பாவ பதார்த்தங்களிருப்பனவே யாகின்றன. நித்திய பாவ பதார்த்தங்களுக்குத் துவம்சம் சம்பவியாது. அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "காரியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு நித்திய பதார்த்தங்களில் காரிய வடிவத் தன்மையின்றும். ஆகையால் நித்திய பதார்த்தங்களி னிருப்புளதாயினும் மஹாப் பிரளயத்தில் பாவ காரியமொன்று மிருப்பதில்லை. ஆகையால் அந்த லக்ஷணத்தில் அசம்பவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகாது.

### ௩௪௩. சுருதிப் பிரமாணத்தால் ஜகத்தின் சிருட்டியினதும், பிரளயத்தினதும் சித்தி.

சங்கை:—முற்கூறிய ஜகத்தின் சிருட்டியிலும், பிரளயத்திலும் பிரமாணம் யாது?

சமாதானம்:—சாக்ஷாத் வேத பகவானது சுருதியே சிருட்டியிலும், பிரளயத்திலும் பிரமாண வடிவமாம். ஆண்டுச் சுருதி "யாதாபூர்வமகல்பயத்" (இ-ள்.) சர்வஞ்ஞ பரமேஸ்வரன் முன் சிருட்டியின் சாதிர்சியமாகவே (ஒப்புமையாகவே) இச்சிருட்டியை யுண்டாக்கின ரென்னு மிச்சுருதி முன் முன் சிருட்டியின் சாதிர்சியத் தன்மையை பின் பின் சிருட்டியில் கூறியிருக்கின்றது. அது இடையில் பிரளயமின்றி சம்பவியாது. ஆகையால் கூறிய இச்சுருதியே சிருட்டியிலும் பிரளயத்திலும் பிரமாண வடிவமாம்.

### ௩௪௪. சம்சாரத்திற்கு அனாதி, அந்தம் ஒப்புவோரான மீமாஞ்சகர்களின் மத வர்ணனம்.

மீமாஞ்சகரோ விது கூறுகின்றனர். எங்ஙனம்: பீஜத்தால் (விதையால்) அங்குரம் (முளை) உண்டாகின்றது. அவ்வங்குரத்தால் மீண்டும் பீஜமுண்டாகின்றது. அப்பீஜத்தால் மீண்டும் அங்குரம் உண்டாகின்றது. இவ்வாறாக அப்பீஜாங்குரங்களின் பிரவாஹம் அனாதியாகின்றது. இப்பீஜம் யாவற்றினும் முதலாயுள்ளது; அங்ஙனமே இவ்வங்குரம் யாவற்றினும் முதலாயுள்ளது என்னும் நிர்ணயம் ஆண்டுக் கூறப்படவில்லை. ஏனெனின் பீஜத்தினை யாவற்றிற்கு முதலாக வொப்பின் அப்பீஜமும் ஓர் அங்குரத்தானேயே உண்டாவதாக வொப்புவதாகும். அங்ஙனமே அங்குரத்தை யாவற்றினும் முதலாக வொப்பின் அவ்வங்குரமும் ஓர் பீஜத்தானேயே யுண்டாவதாக வொப்புவதாகும். ஆகையால் ஓர் பீஜத்திலும், ஓர் அங்குரத்திலும் யாவற்றினும் முதன்மை வடிவத் தன்மையின்றாம். இவ்வாறாய பீஜாங்குர நியாயப்படி இச்சம்சாரமும் பிரவாஹ வடிவமாக அநாதியும், அநந்தமுமாம். ஆகையால் இஜ்ஜகத்தின் சிருட்டியிலும், பிரளயத்திலும் ஓர் பிரமாணமு மின்றாம். ஓர் கால் இஜ்ஜகத்திற்கு பிரளயம் அங்கீகரிக்கின் "அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்ய யாஜிந: ஸுக்ருதம் பவதி" என்னு மிவை முதலிய சுருதிகளில் சாதுர்மாசிய முதலிய யாகம் செய்பவனை புருஷனுக்கு நாசமில்லாத சொர்க்க முதலிய சுகத்தின் பிராப்தி கூறப்பட்டிருக்கின்றது. அச்சொர்க்கம் அசங்கதமாகும். ஆகையால் இஜ்ஜகத்திற்கு பிரளய முண்டாகாது.

### ௩௪௫. சமவாயி காரண நாசத்தானும், அசமவாயி காரண நாசத்தானும் காரியத் திரவியத்தின் நாசமொப்புவோராகிய பிராசீன நையாயிகர்களின் மத வர்ணனம்.

பிரளய காலத்தில் நாசம் செய்வாமென்னும் பரமேஸ்வரனது இச்சை வசத்தால் துவியணுக முதலிய காரியத் திரவியங்களின் நாசம் முன்னர்

கூறப்பட்டது. அதில் பிராசீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். சில காரியத் திரவியத்திற்கோ அசமவாயி காரணத்தின் நாசத்தால் நாசமுண்டா கின்றது. சில காரியத் திரவியத்திற்கு சமவாயி காரணத்தின் நாசத்தால் நாச முண்டாகின்றது. ஓர் கால் யாண்டும் சமவாயி காரணத்தின் நாசத்தானேயே காரியத் திரவியத்தின் நாசம் அங்கீகரிக்கின் துவியணுக வடிவ காரியத் திரவியத்திற்கு நாச முண்டாகாது. ஏனெனின் துவியணுக வடிவ காரியத் திரவியத்தின் சமவாயி காரண வடிவ இரு பரமாணுக்கள் யாதோ அப்பர மாணுக்கள் நித்தியமாம்; நித்திய பரமாணுக்கட்கு ஓர் போதும் நாச முண்டாகாது. ஆகையால் துவியணுக வடிவ காரியத் திரவியங்கட்கோ சையோக வடிவ அசமவாயி காரண நாசத்தானேயே நாச முண்டாகின்றது. ஆண்டு இரு பரமாணுக்களின் சையோகமே துவியணுகத்திற்கு அசமவாயி காரணமாம். அச்சையோகம் முற்கூறிய முறைப்படி அப்பரமாணுக்களின் கிரியா ஜன்னிய பிரிவால் நாசமாய் விடுகின்றது. திரியணுக வடிவ காரிய முதற்கொண்டு மாஹா காரியம் வரையில் எத்தனை காரியங்களுளவோ அவைகட்கோ துவியணுகாதி வடிவ சமவாயி காரணத்தின் நாசத்தானேயே நாச முண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் துவியணுக முதலிய சமவாயி காரணம் அநித்தியமேயாகின்றது. இவ்வாறாக காரியத் திரவிய வடிவ ஜகத்தி னிருப்பு காலத்திலும் சில காரியத் திரவியத்திற்கோ அசமவாயி காரணத்தின் நாசத்தால் நாச முண்டாகின்றது. சில காரியத் திரவியத்திற்கு சமவாயி காரணத்தின் நாசத்தால் நாச முண்டாகின்றது. ஆண்டு எவ்விடத்தில் தந்து வடிவ சமவாயி காரணத்தி னிருப்புளதாயினும் தந்துக்களின் சையோக மாத்திரத்திற்கு நாச முண்டாகின்றதோ அவ்விடத்திலோ தந்து சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசத்தானேயே பட வடிவ காரியத் திரவியத்திற்கு நாச முண்டாகின்றது. யாண்டு வன்னி முதலியவைகளால் அத்தந்து வடிவ சமவாயி காரணத்திற்கே நாச முண்டாகின்றதோ ஆண்டு அத்தந்து வடிவ சமவாயி காரண நாசத்தானேயே பட வடிவ காரியத் திரவியத்திற்கு நாச முண்டாகின்றது. எவ்வாதி யாண்டும் அசமவாயி கார ணத்தின் நாசத்தானேயே காரியத்திரவியத்தின் நாசத்தினை ஏதுவாக வொப்புகின்றனரோ அவ்வாதியின் மதத்தில் தந்து முதலிய சமவாயி காரணம் நாச மாகுமிடத்தில் அப்பட முதலிய காரியத்திரவியம் இருக்ஷணம் வரையில் திரா சிரயமாக விருக்கும். ஏனெனின் முதற் க்ஷணத்தில் அத்தந்துக்கட்கு நாச முண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் தந்து சையோகத்திற்கு நாச முண்டாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் பட வடிவ காரியத்திற்கு நாச முண்டாகின்றது. இது அவர்கள் மதத்தில் மா கௌரவ தோஷமாகின்றது. அக்கௌரவ தோஷம் எமது பிராசீன நையாயிகர்களின் மதத்தில் உண்டா காது. ஏனெனின் எமது மதத்தில் தந்து வடிவ சமவாயி காரணத்தின் நாசத் திற்குப் பிற்க்ஷணத்திலேயே பட வடிவ காரியத்திற்கும், தந்து சையோக வடிவ அசமவாயி காரணத்திற்கும் நாச முண்டாகின்றது.

---

### ரூ௨௬. யாண்டும் அசமவாயி காரணத்தின் அழிவுபாட்டால் காரியத் திரவியத்தின் நாசம் ஒப்புவோரான நவீன நையாயிகர்களின் மத வர்ணனம்.

நவீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். சில துவியணுக வடிவ காரியத் திரவியத்திற்கு அசமவாயி காரணத்தின் நாசத்தால் நாச மொப்பு வதும், சில திரியணுகாதி வடிவ காரியத் திரவியத்திற்கு சமவாயி காரணத்தின் நாசத்தால் நாசமொப்புவதுமா மிதில் மா கௌரவதோஷம் சம்பவிக்கின்றது. ஏனெனின் அக்காரியத் திரவியத்தின் நாசத்திற்கு காரணத்தன்மையின் அவச்சேதகம் அசமவாயி காரணத் தன்மை, சமவாயி காரணத் தன்மை யென்னு மிரு தர்மங்களாகின்றன. ஆகையால் பிராசீன நையாயிகர்கள் மதம் நலமுடையதன்றாம். யாண்டும் அசமவாயி காரணத்தின் நாசத்தினையே காரியத் திரவியத்தின் நாசத்திற்கு காரணமாக வொப்பின் அக்காரியத் திரவியத்தின் நாசத்திற்கு காரணத் தன்மையின் அவச்சேதகம் அசமவாயி காரண நாசத் தன்மை வடிவ மொன்றே யாகின்றது. ஆகையால் லாகவமாக யாண்டும் அசமவாயி காரணத்தின் நாசத்தானேயே காரியத் திரவியத்தின் நாச மொப்பவேண்டும். எவ்விடத்தில் அவயவ வடிவ சமவாயி காரணத்தின் நாச முண்டாகின்றதோ அவ்விடத்திலும் அவயவ சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசமோ அவசிய முண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் ஆசிரயமாகிய திரவியத்தின் நாசத்திற்குப் பின் அத்திரவியத்தினை ஆசிரயித்த உருவ முதலிய குணங்களும் அவசியம் நாசமாகின்றன. ஆகையால் பிரளய காலத்தில் எங்ஙனம் துவியணுக வடிவ காரியத் திரவியத்திற்கு பரமாணு சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசத்தால் நாச முண்டாகின்றதோ அங்ஙனமே திரியணுக முதலிய காரியத் திரவியங்கட்கும் துவியணுக முதலிய அவயவங்களின் சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசத்தானேயே நாச முண்டாகின்றது. இவ்வாறாக காரியத் திரவிய வடிவ ஜகத்தினிருப்புக் காலத்திலும் யாண்டும் அவயவ சையோக வடிவ் அசமவாயி காரணத்தின் நாசத்தானேயே கட, பட முதலிய காரியங்களின் நாச முண்டாகின்றது.

### ரூ௨எ. ஜகத்தைத் தோற்றிவைப்பாம், ஜகத்தை நாசஞ் செய்வாமென்னும் பரமேஸ்வரனது விச்சைகளில் ஔபாதிக யுற்பத்தியினதும், வேறுபாட்டினதும் வர்ணனம்.

சங்கை:—உலகைத் தோற்றிவைப்பா மென்னும் பரமேஸ்வரனது இச்சையால் காரியத் திரவியத்தி னுற்பத்தி முன்னர்க் கூறப்பட்டது. அங்ஙனமே தோன்றிய உலகை நாசஞ் செய்வா மென்னும் பரமேஸ்வரனது இச்சையால் காரியத் திரவியங்களின் நாசமுங் கூறப்பட்டது. அது சம்பவியாது; ஏனெனின் நியாய மதத்தில் பரமேஸ்வரனது விச்சையை நித்தியமாகவும், ஒன்றாகவும், சர்வ பதார்த்தங்களை விஷயஞ் செய்வதாகவு மொப்பியிருக்கின்றனர். ஆகையால் சிருட்டியின் துவக்கத்திலும், பிரளயத்தின் ஆரம்ப காலத்

திலும் அவ்விச்சையின் உற்பத்திச் சம்பவியாது. ஓரிச்சையில் உலகைத் தோற்றிவைப்பாம், தோன்றிய வுலகை நாசஞ் செய்வாமென்னும் வேறுபாடும் சம்பவியாது. அங்ஙனமே சர்வ ஜகத்தை விஷயம் செய்யும் இச்சையில் கேவலம் உற்பத்தி மாத்திரத்தை விஷயம் செய்யும் தன்மையும், நாச மாத்திரத்தை விஷயம் செய்யும் தன்மையும் சம்பவியாது.

சமாதானம் :—பரமேஸ்வரனது விச்சை நித்தியமும், ஒன்றும், சர்வ வத்துக்களை விஷயஞ் செய்வதுமாம். என்றாலும் விசேஷணத்தி னுற்பத்தியால் அவ்விச்சையில் உற்பத்தி வியவஹார முண்டாகின்றது. அங்ஙனமே விசேஷணத்தின் வேறுபாட்டால் அவ்விச்சையில் உலகத்தைத் தோற்றிவைக்கு மிச்சை, தோன்றிய வுலகை நாசம் செய்யு மிச்சை யென்னும் பேத வியவஹார முண்டாகின்றது. ஆண்டு காரியத் திரவியத்தினது உற்பத்தியின் சாமக்கிரி வடிவ விசேஷணத்தோடு விசிஷ்டமாகிய பரமேஸ்வரனது இச்சையினை யுலகை தோற்றிவைக்கு மிச்சை யென்பர். உற்பத்தி யொன்றை மாத்திரமே விஷயம் செய்வதால் அவ்விச்சை யுலகை தோற்றிவைக்கு மிச்சை யெனப்படுகிறதில்லை. காரியத் திரவியத்தினது நாசத்தின் சாமக்கிரி வடிவ விசேஷணத்தோடு விசிஷ்டமாகிய பரமேஸ்வரனது விச்சையினை நாசம் செய்யும் இச்சை யென்பர். நாச மொன்றை மாத்திரத்தை விஷயம் செய்வதால் அவ்விச்சை நாசம் செய்யு மிச்சையெனப்படுகிறதில்லை. ஆகையால் இவ்வர்த்தம் சித்தித்தது. எங்ஙனம் தன வடிவ விசேஷணத்தி னுற்பத்தி யுண்டாக "தேவதத்தன் தனிகன்" அதாவது தேவ தத்தனெனப் பெயரிய புருஷன் தனமுண்டானவனென இவ்வாறாக தேவதத்தனென்னும் புருஷனிடத்து உற்பத்தி வியவஹார முண்டாகின்றது. உண்மையாக தேவதத்தனெனப் பெயரிய புருஷனுக்கு உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆனால் தன வடிவ விசேஷணத்திற்கே உற்பத்தி யுண்டாகின்றது. அங்ஙனமே சாமக்கிரி வடிவ விசேஷணத்தின் உற்பத்தியானேயே பரமேஸ்வரனது இச்சையில் சிருட்டி காலத்தில் உலகைத் தோற்றிவைப்பா மென்னும் பரமேஸ்வரனது விச்சையும், பிரளயத்தின் ஆரம்ப காலத்தில் உலகை நாசம் செய்வாமென்னும் பரமேஸ்வரனது விச்சையு முண்டாகிறதென்னும் வியவஹார முண்டாகின்றது. உண்மையாக அப்பரமேஸ்வரனது இச்சைக்கு உற்பத்தி யுண்டாகிறதில்லை. சாமக்கிரி வடிவ விசேஷணத்திற்கே யுற்பத்தி யுண்டாகின்றது. உற்பத்தியின் சாமக்கிரி வடிவ விசேஷணத்தினதும், நாசத்தின் சாமக்கிரி வடிவ விசேஷணத்தினதும் வேறுபாட்டால் பரமேஸ்வரனது இச்சையில் தோற்றிவைக்கு மிச்சை, நாசம் செய்யு மிச்சை யென்னும் பேத வியவஹார முண்டாகின்றது. உண்மையாக அவ் விச்சைக்கு வேறுபாடின்றாம். ஆகையால் முற்கூறிய அத்தோஷம் ஈண்டுப் பிராப்தமாகாது.

## ௩௪௪. அவயவி திரவியங்களை யொப்பாதவராகிய பரமாணு புஞ்சவாதி பௌத்தரது மத வர்ணனம்.

துவியணுக் முதலிய காரியத் திரவிய வடிவ அவயவியை யொப்பாதவரான பௌத்த வாதியின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முன்னர் துவி

யணுக முதலிய காரியத் திரவிய வடிவ அவயவியின் உற்பத்திக் கூறப்பட்டது. இனி பௌத்தரின் மதத்தை நிரூபிப்பாம். பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்குத் திரவியங்களின் துவியணுகங்கள் முதற் கொண்டு மா பிருதிவி முதலியன வரையில் நையாயிகர்கள் அங்கீகரிக்கும் அவயவிகளில் ஓர் பிரமாணமு மின்றாம்.

சங்கை:—ஏ பௌத்த! இது கடம், இது படம் என்னும் பிரத்தியக்ஷப் பிரதீதி யுலகர் யாவருக்கு முண்டாகின்றது. அந்தப் பிரத்தியக்ஷப் பிரதீதியே கட, பட முதலிய அவயவிகளில் பிரமாணமாம். ஆகையால் அவ்வவயவியில் பிரமாணத்தின் அபாவங் கூறுவது அசங்கதமாம்.

சமாதானம்:—ஏ நையாயிக! கடம், பட மென்னு மிவை முதலிய பிரதீதிகள் ஓர்கால் கட, பட முதலிய அவயவிகளின்றி சித்தியாதாயின் அந்தப் பிரதீதியின் வலிவால் அக்கட, பட முதலியவைகளின் அவயவியின் கற்பனம் செய்வதாகும் ஆனால் அப்பிரதீதிகளோ அக்கட, பட முதலியவைகட்கு அவயவி வடிவம் ஒப்பாவிடினும் சித்தமாய்விடுகின்றது. அதாவது பரஸ்பர சையோக விசிஷ்ட பரமாணுக்களின் சமூஹ வடிவ இராசி யாதோ அவ்விராசியினையே அந்தப் பிரதீதிகள் விஷயம் செய்கின்றன. அப்பரமாணு புஞ்சத்தினும் வேறான ஓர் கட, படாதி வடிவ அவயவியினை அந்தப் பிரதீதிகள் விஷயம் செய்வனவன்று. ஆகையால் இது கடம், இது படம் என்னும் பிரதீதிகளாலும் அவயவியின் சித்தியுண்டாகமாட்டா.

சங்கை:—ஏ பௌத்த! இது கடம், இது படம் என்னும் பிரதீதி ஓர்கால் பிருதிவி பரமாணுக்களின் இராசியினை விஷயம் செய்யுமாயின் எங்ஙனம் பார்த்திவ பரமாணுக்களின் இராசி வடிவம் கடமாமோ அங்ஙனமே பார்த்திவ பரமாணுக்களின் இராசி வடிவம் மட்பிண்டமுமாம். ஆகையால் அம் மட் பிண்டத்திலும், இது கடம் என்னும் உணர்ச்சி யுண்டாக வேண்டும்; உண்டாவதில்லை.

சமாதானம்:—ஏ நையாயிக! அம்மட் பிண்டத்திலும், கடத்திலும் பரமாணு இராசி வடிவத் தன்மை சமானமா மாயினும் அக்கட வடிவ பரமாணு இராசிக்கு எவ்வாறான பரஸ்பர சையோக சம்பந்த மிருக்கின்றதோ அவ்வாறான பரஸ்பர சையோக சம்பந்தம் அம்மட் பிண்ட வடிவ பரமாணு இராசிக்கின்றாம். ஆனால் அதனினும் வேறான சையோக சம்பந்தமே யிருக்கின்றது. அம்மட் பிண்ட வடிவ பரமாணு இராசிக்கு எவ்வாறான பரஸ்பர சையோக சம்பந்த மிருக்கின்றதோ அவ்வாறான சையோக சம்பந்தம் கட வடிவ பரமாணு இராசிக்கின்றாம். ஆனால் அதனினும் வேறேயாம். இவ்வாறாக படாதி வடிவ பரமாணு புஞ்சத்திற்கும் பரஸ்பரம் வெவ்வேறாகவே சையோக சம்பந்த மிருக்கின்றது. ஆகையால் வெவ்வேறு சையோக சம்பந்த விசிஷ்ட பரமாணு இராசியிலோ இது கடம் என்னும் உணர்ச்சியே யுண்டாகின்றது; இது மட்பிண்டம் என்னு முணர்ச்சி யுண்டாகிறதில்லை. வெவ்வேறு சையோக சம்பந்த விசிஷ்ட பரமாணு புஞ்சத்திலோ இது மட்பிண்டம் என்

னுமுணர்ச்சியே யுண்டாகின்றது; இது கட மென்னு முணர்ச்சி யுண்டாகிற தில்லை. இவ்வாறாக கட, பட முதலிய வெல்லாத் திரவியங்களிலும் பரமாணு இராசி வடிவத் தன்மை சமானமாயினும் அவ்வச் சையோக சம்பந்தத்தின் விலக்ஷணத் தன்மையால், இது கடம், இது படம் என்னு மிவை முதலிய வெவ்வேறு உணர்ச்சிக்கு விஷயத்தன்மைச் சம்பவிக்கின்றது.

சங்கை:—ஏ பௌத்த! எப்பரமாணுக்களின் இராசியினை நீவிர் கடாதி வடிவமாக வொப்புகின்றீரோ அப்பரமாணு மஹத்வப் பரிமாண மில்லாத தால் அதீந்திரியமேயாம். அதாவது இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷய மன்றாம். ஆகையால் அதீந்திரிய பரமாணுக்களின் இராசி வடிவ கட முத லியவைகளின் பிரத்தியக்ஷமும் உண்டாகாததாக வேண்டும். கட முதலியவை களின் பிரத்தியக்ஷமோ சக்ஷு விந்திரியத்தாலும், துவக்கிந்திரியத்தாலும் உலகர் யாவருக்கு முண்டாகின்றது.

சமாதானம்:—ஏ நையாயிக! ஓர் பரமாணுவின் பிரத்தியக்ஷ முண்டா காது. என்றாலும் அனேக பரமாணுக்களின் சமூஹத்தின் பிரத்தியக்ஷம் சம்ப விக்கின்றது. எங்ஙனம்: சக்ஷு விந்திரியத்தால் வேறு விடத்திலுள்ள ஓர் உரோமத்தின் பிரத்தியக்ஷ முண்டாகாது. என்றாலும் அனேக உரோமங்க ளின் சமூஹத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு விந்திரியத்தா லுண்டாகின்றது. அங்ஙனமே ஓர் பரமாணுவின் பிரத்தியக்ஷ முண்டாகாது. அனேக பரமா ணுக்களின் சமூஹ வடிவ கட, பட முதலியவைகளின் பிரத்தியக்ஷம் சம்ப விக்கின்றது.

சங்கை:—ஏ பௌத்த! பரமாணுக்களின் இராசிக்கே கட, படாதி வடிவ மொப்பின், "ஸ்ரீகொவடஃ ஸ்தூலஃ" (இ-ள்.) இக்கடம் ஒன்றும் மஹத்வமு மாமென்னு முணர்ச்சி யும்மது மதத்தில் சம்பவியாததாகும். ஏனெனின் அப் பரமாணு அனேகமா மாகையால் அவ்வனேக பரமாணுக்களில் ஒருமைத் தன்மையினை விஷயம் செய்வதாகிய பிரதீதி சம்பவியாது. அன்றியும் அப் பரமாணு அணுத்தன்மைப் பரிமாணமுடையதாம். ஆகையால் அணுத்தன் மைப் பரிமாணமுடைய பரமாணுக்களில் ஸ்தூலத்தன்மையினை விஷயம் செய் வதான உணர்ச்சி சம்பவியாது; அதாவது அவ்வுணர்ச்சியில் பிரமாவடிவத் தன் மைச் சம்பவியாது. இக்கடம் ஸ்தூலம் என்னும் உணச்ச்சியோ உலகர் யாவருக்கு முண்டாகின்றது.

சமாதானம்:—ஏ நையாயிக! "ஸ்ரீகொஉஹாநு யாநூராமிஃ" (இ-ள்.) இத்தான்னியத்தின் சமூஹ வடிவ ராசி ஒன்றும் மஹத்வமா மென்னும் உணர்ச்சி யுண்டாகின்றது. அங்ஙனமே அப்பரமாணு இராசி வடிவ கடத்தில் இக்கடம் ஸ்தூலம் என்னு முணர்ச்சியும் சம்பவிக்கின்றது. கருத்திதுவாம்; அத்தான்னிய வியக்திகள் அனேகமும் சூக்ஷுமமா மென்றா லும் அவ்வெல்லாத் தான்னிய வியக்திகளின் சமூஹம் யாதோ அதாவது அவ் வெல்லாத் தான்னிய வியக்திகளால் விசிஷ்ட அவ்வெல்லாத் தான்னியத்தி லிருக்கும் சங்கியை விசேஷ வடிவ சமூஹம் யாதோ அச்சமூஹம் ஒன்றே

யாம். ஆகையால் அவ்வொரு சமூஹத்தைக் கொண்டு அத்தான்னிய ராசியில் ஒருமைத் தன்மை யுணர்ச்சி யுண்டாகின்றது. அவ்வெல்லாத் தான்னிய வியக்திகளின் பரஸ்பர சையோக சம்பந்தம் யாதோ அதாவது ஓர் தான்னிய சையுக்த இரண்டாவது தான்னியத்திற்கு மூன்றாவது தான்னியத்தோடுள்ள சையோக சம்பந்தம் யாதோ அங்ஙனமே இரண்டாவது தான்னிய சையுக்த மூன்றாவது தான்னியத்திற்கு நான்காவது தான்னியத்தோடுள்ள சையோக சம்பந்தம் யாதோ அங்ஙனமே மூன்றாவது தான்னிய சையுக்த நான்காவது தான்னியத்திற்கு ஐந்தாவது தான்னியத்தோடுள்ள சையோக சம்பந்தம் யாதோ இவ்வாறாக அவ்வெல்லாத் தான்னிய வியக்திகளின் பரஸ்பர சையோக சம்பந்த விசேஷம் யாதோ அச்சையோக விசேஷமே அத்தான்னிய ராசியில் மஹத்வமாம். அம்மஹத்வ முடைமையைக் கொண்டு தான்னிய ராசியில் மஹத்வமுடைமைத் தன்மையின் உணர்ச்சி யுண்டாகின்றது. அங்ஙனமே அக்கட, படாதி வடிவ பரமாணு இராசியிலும் அவ்வெல்லாப் பரமாணுக்களோடு விசிஷ்ட அவ்வெல்லாப் பரமாணுக்களிலுள்ள சங்கியை விசேஷ வடிவ சமூஹத்தின் ஒருமைத் தன்மையைக் கொண்டு ஒரு கடம் என்னும் ஒருமைத் தன்மையை விஷயம் செய்யும் உணர்ச்சி யுண்டாகின்றது. அவ்வெல்லாப் பரமாணுக்களின் பரஸ்பர சையோக சம்பந்த விசேஷ வடிவ மஹத்வத்தைக் கொண்டு கடம் ஸ்தூலம், என ஸ்தூலத் தன்மையை விஷயம் செய்யும் உணர்ச்சி யுண்டாகின்றது. இவ்வாறாக கட, பட முதலியவைகளை பரமாணுக்களின் இராசி வடிவமாக வொப்புவதிலும், இக்கடம் ஸ்தூலம், என்னுமுணர்ச்சி சம்பவிக்கின்றது.

சங்கை :—ஏ பௌத்த! நீவிர் கட, பட முதலியவைகளை பரமாணுக்களின் இராசி வடிவமாக வொப்பின் கபாலங்களால் கட முண்டாகின்றது, தந்துக்களால் பட முண்டாகின்றது என இவ்வாறாய வுணர்ச்சி யுலகர் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வுணர்ச்சி யுமது மதத்தில் சம்பவியாத தாகும்.

சமாதானம் :—ஏ நையாயிக! இவ்வாறாய உமது சங்கை யாதோ அது எமது சித்தாந்தத்தை அறியாததாலாம். ஏனெனின் எங்ஙனம் கட, படாதிகளை யாம் பரமாணுக்களின் இராசி வடிவமாக வொப்புகின்றனமோ அங்ஙனமே அக்கபாலங்களையும், தந்துக்களையும் யாம் பரமாணுக்களின் இராசி வடிவமாகவே வொப்புகின்றனம். ஆகையால் அக்கபால வடிவப் பரமாணு இராசியினுலே அக்கட வடிவ பரமாணு இராசியி னுற்பத்தி யுண்டாகின்றது. தந்து வடிவ பரமாணு இராசியால் பட வடிவப் பரமாணு இராசியி னுற்பத்தி யுண்டாகின்ற தென்பது எமது சித்தாந்தமாம். ஆனால் எமது மதத்தில் அக்கபாலம், தந்து முதலியனவும், கடம், பட முதலியனவும் அவயவி வடிவ மன்றாம். ஆகையால் கபாலங்களால் கட முண்டாகின்றது, தந்துக்களால் பட முண்டாகின்ற தென்னு முணர்ச்சி யெமது மதத்தில் சம்பவிக்கின்றது. ஆகையால் கட, பட முதலிய சர்வ பதார்த்தங்கள் பரமாணுக்களின் இராசி வடிவமேயாம். அப்பரமாணுக்களினும் வேறான அவயவி யொன்றின்று மென்பதாக சித்தமாயிற்று.

௩௪௯. அப்பரமாணு புஞ்ச வர்த்தி பௌத்தரது மதத்தைக் கண்டிப்பது வாயிலாக அவயவித் திரவியத்தின் சித்தி.

இப்பௌத்தரின் மதம் அத்தியந்தம் அசங்கதமாம். ஏனெனின் அப்பரமாணு இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமின்மையுள்ளதால் அதீந்திரியமேயாம். இத்தகைய அதீந்திரிய பரமாணுக்களின் சமூஹ வடிவ கட படமுதலியவைகளின் பிரத்தியக்ஷ ஞானம் ஓரிந்திரியத்தாலுமுண்டாகா. கருத்திதுவாம்; இயல்பாக பிரத்தியக்ஷ அயோக்கிய பரமாணுக்களில் பரஸ்பர சையோக சம்பந்த மாத்திரத்தால் பிரத்தியக்ஷத்தின் யோக்கியத் தன்மை சம்பவியாது. ஓர் கால் பிரத்தியக்ஷத்தின் அயோக்கிய பதார்த்தங்களிலும் பரஸ்பர சையோக சம்பந்த மாத்திரத்தால் பிரத்தியக்ஷத்திற்கு யோக்கியத் தன்மையுண்டாகுமாயின் இயல்பாகப் பிரத்தியக்ஷ அயோக்கிய பிசாசு முதலியவைகளின் பிரத்தியக்ஷமும் பரஸ்பர சையோக மாத்திரத்தாலுண்டாகல் வேண்டும். ஓர் காலும் பிசாசு முதலியவைகளின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஆகையால் இயல்பாக பிரத்தியக்ஷ அயோக்கியப் பரமாணுக்களின் பிரத்தியக்ஷம் பரஸ்பர சையோக மாத்திரத்தால் சம்பவியாது. அல்லது அப்பௌத்தன்கூறிய தூரத்திலுள்ள உரோமத்தின் திருஷ்டாந்தமும் தாஷ்டாந்திக வடிவ பரமாணுக்களிலும் விஷமமாம். ஏனெனின் எங்ஙனம் பரமாணு இயல்பாக அதீந்திரியமாமோ அங்ஙனம் தூரத்திலுள்ள ஓர் உரோமம் இயல்பாக அதீந்திரியமன்றாம். சமீபத்திலுள்ள ஓர் உரோமத்தின் பிரத்தியக்ஷமும் சக்ஷுவிந்திரியத்தாலுண்டாகின்றது. தூரத்திலுள்ள ஓர் உரோமத்தின் பிரத்தியக்ஷமுண்டாகாமையாதோ அதுவும் தூரத் தன்மை தோஷ வடிவ பிரதிபந்தகத்தாலுண்டாகிறதில்லை. அப்பரமாணுவோ சக்ஷுவின் சமீபத்திலிருப்பதாயினும் பிரத்தியக்ஷமாகிறதில்லை. ஆகையால் அப்பரமாணு இயல்பாகவே பிரத்தியக்ஷ அயோக்கியமாம். இத்தகைய அதீந்திரிய பரமாணுக்களின் சமூஹ வடிவ கட, பட முதலிய பதார்த்தங்கள் ஓர் காலும் பிரத்தியக்ஷமாவனவன்று.

சங்கை:—ஏ நையாயிக! அப்பரமாணுக்கள் அதீந்திரியமாவதால் அப்பரமாணுக்களின் இராசியும் அதீந்திரியமேயாகின்றது. ஆனால் அதிர்சிய பரமாணு இராசியால் திர்சிய பரமாணு இராசியொன்று உண்டாவதாகின்றது. அக்கட, பட முதலிய வடிவ திர்சிய பரமாணு இராசியினையே இது கடம், இது படம் என்னும் பிரத்தியக்ஷ ஞானம் விஷயம் செய்கின்றது. உமது நையாயிகர்களின் மதத்தில் அப்பரமாணு நித்தியமாம். என்றாலும் க்ஷணபங்க வாதி எமது பௌத்தர்களின் மதத்தில் அப்பரமாணுக்கட்கு உற்பத்தியும், விநாசமும் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. எக்காரணத்தாலெனின், “யத்ஸத் தத்க்ஷணிகம் யதாவிதுத்” (இ-ள்.) எதுவெது பாவ பதார்த்தமாமோ அதுவது க்ஷணிகமேயாகின்றது. எங்ஙனம்: பாவ பதார்த்தமாவதால் மின்னல் க்ஷணிகமாவது போலும் என்னும் அநுமானப் பிரமாணத்தால் சர்வ பாவ பதார்த்தங்களையும் யாம் க்ஷணிகமாகவே யொப்புகின்றனம். ஆகையால் அதிர்சிய பரமாணு இராசியால் திர்சிய பரமாணு இராசியினுற்பத்தி சம்பவிக்கின்றது.

சமாதானம்:—ஏ பௌத்த! அதிர்சிய திரவியத்திற்கு திர்சிய திரவியத்தின் உபாதான காரணத் தன்மைச் சம்பவியாது. ஓர் கால் அதிர்சிய திரவியத்தாலும் திர்சிய திரவியத்தி னுற்பத்தி யொப்பின் அதிர்சிய சக்ஷு ரிந்திரியத்தாலுண்டாகின்ற வெப்பமாதி தொடர்சிக்கும் ஓர் கால் திர்சியத் தன்மை உண்டாக வேண்டும். அவ்வெப்பமாதி தொடர்ச்சி காணப்படுகிறதில்லை. ஆகையால் அதிர்சிய பரமாணு இராசியால் திர்சிய பரமாணு இராசியி னுற்பத்தி கூறுவது அத்தியந்தம் விருத்தமாம்.

சங்கை:—ஏ நையாயிக! ஓர் கால் அதிர்சிய திரவியத்தால் திர்சிய திரவியத்தி னுற்பத்தி யுண்டாகாததாயின் வன்னியால் அத்தியந்தம் காய்ந்துள்ள எண்ணை முதலியவைகளிலுள்ள அதிர்சிய வன்னியால் திர்சிய வன்னியி னுற்பத்தி யுண்டாகாததாக வேண்டும். அவ்வதிர்சிய வன்னியால் திர்சிய வன்னியி னுற்பத்தி பிரத்தியக்ஷமாய்க் காணக்கிடைக்கின்றது. ஆகையால் எங்ஙனம் அவ்வதிர்சிய வன்னியால் திர்சிய வன்னி யுண்டாவதாகின்றதோ அங்ஙனமே அதிர்சிய பரமாணுக்களால் திர்சிய பரமாணு இராசியி னுற்பத்தியும் சம்பவிக்கின்றது.

சமாதானம்:—ஏ பௌத்த! ஆண்டும் அதிர்சிய வன்னியால் திர்சிய வன்னியின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆனல் காய்ந்த தைலம் (எண்ணை) முதலியவைகளிலுள்ள திர்சிய வன்னியின் அவயவம் யாதோ அவ்வவயவங்களானேயே ஸ்தூல வன்னியி னுற்பத்தி யுண்டாகின்றது.

சங்கை:—ஏ நையாயிக! ஓர் கால் அதிர்சிய திரவியத்தால் திர்சிய திரவியத்தினுற்பத்தி யுண்டாகாததாயின் உமது மதத்திலும் அதிர்சிய துவியணுகத்தால் திர்சிய திரியணுகத்தி னுற்பத்தி யுண்டாகாததாக வேண்டும். அதிர்சிய துவியணுகத்தால் திர்சிய திரியணுகத்தி னுற்பத்தி நையாயிகராம் நீவிர் அங்கீகரித்திருக்கின்றீர். அங்ஙனமே எமது மதத்திலும் அதிர்சிய பரமாணுக்களால் திர்சிய பரமாணு இராசியி னுற்பத்தி சம்பவிக்கின்றது.

சமாதானம்:—ஏ பௌத்த! நையாயிகர்களாகிய யாம் ஓர் வஸ்துவிலும் இயல்பாக திர்சியத் தன்மையாவது, அதிர்சியத் தன்மையாவது கூறுவதில்லை. ஆனல் ஆலோக சையோகம், மஹத்வம், உத்பூத உருவம் இவை முதலிய எத்தனைப் பிரத்தியக்ஷ ஞானத்தின் காரணங்களுளவோ அக்காரண சமுதாயமுடைய பதார்த்தத்திலோ யாம் திர்சியத் தன்மை கூறுகின்றனம். அக்காரண சமுதாயத்தின் அபாவமுடைய பதார்த்தத்தில் யாம் அதிர்சியத் தன்மைக் கூறுகின்றனம். திரியணுகத்திலோ அக்காரண சமுதாயமிருக்கின்றதாகையால் திரியணுகத்திற்கு யாம் திர்சியம் ஒப்புகின்றனம். துவியணுகத்தில் மஹத்வப் பரிமாண மின்றாமாகையால் அம்மஹத்வமுள்ள காரண சமுதாயத்தின் அபாவத்தால் துவியணுகத்தினை யாம் அதிர்சியமாக வொப்புகின்றனம். இவ்வாறாக திர்சிய அதிர்சியங்களின் விவஸ்தை எங்ஙனம் எமது மதத்தில் சம்பவிக்கின்றதோ அங்ஙனம் உமது மதத்தில்

விவஸ்தை சம்பவியாது. ஏனெனின் உமது மதத்தில் பரமாணுக்களினும் வேறாக ஓர் அவயவி அங்கீகரிக்கப்படவில்லை. பரமாணுக்களிலோ மஹத்வப் பரிமாணமின்றாமாகையால் உமது மதத்தில் எங்ஙனம் முதற் பரமாணுக்களின் இராசித் தன்மை மஹத்வத்தின் இன்மையால் அதிர்சியமாமோ அங்ஙனமே அதிர்சிய பரமாணு இராசியா லுண்டான இரண்டாவது பரமாணு இராசியும் மஹத்வத்தி னின்மையால் அதிர்சியமேயாகும். ஆகையால் உமது பௌத்தர்கள் மதத்தில் கட, படாதி வடிவ பரமாணு இராசியின் பிரத்தியக்ஷம் இது கடம், இது படம் என்பதாக உண்டாகாததாக வேண்டும். கட, பட முதலியவைகளின் பிரத்தியக்ஷ ஞானம் உலகர் யாவருக்கு முண்டாகின்றது. ஆகையால் அப்பரமாணுக்களினும் வேறாகவே அக்கட, பட முதலிய அவயவிகளை அங்கீகரிக்க வேண்டியதாகும். அல்லது கட, பட முதலிய திரவியங்களைப் பரமாணுக்களின் இராசி வடிவமாக வொப்பும் பௌத்தர்களின் மதத்தில் இது கடம், இது படம் என்னு மிவை முதலிய ஞானங்களின் விஷயத் தன்மை அனேக பரமாணுக்களில் கற்பிக்கப்படுவதாகின்றது. இதனிடத்தும் மகா கௌரவ தோஷம் பிராப்தியாகும். அப்பரமாணு வடிவ அவயவங்களினும் வேறான கட, பட முதலிய வடிவ அவயவியினை அங்கீகரிக்கின் இது கடம், இது படம் என்னு மிவை முதலிய ஞானங்கட்கு விஷயத் தன்மை கட, பட முதலிய வியக்திகளில் கற்பிக்கப்படுவதாகும். இதனிடத்து அத்தியந்தம் லாகவ மிருக்கின்றது. இக்காரணத்தானும் அப்பரமாணு இராசியினும் வேறாகவே அக்கட, பட முதலிய அவயவிகளை அங்கீகரிக்க வேண்டும். ஆகையால் அப்பரமாணு இராசியை அங்கீகரித்த பௌத்தரின் மதம் அத்தியந்தம் விருத்தமாம்.

### ௫௱௧௦. ஆகாச வடிவத் திரவியத்தின் நிரூபணமும், ஆகாயத்தின் லக்ஷணமும், ஆகாயத்தின் அறு குணங்களின் வர்ணனமும்.

ஐந்தாவது ஆகாய வடிவ நிரூபணம் "ஶப்³த³ஸமவாயிகாரணம் ஆகாஶம்." (இ-ள்.) எத்திரவியம் சத்த குணத்தின் சமவாயி காரணமாமோ அத்திரவியம் ஆகாயமெனப் படுகின்றது. சத்தகுணம் சமவாய சம்பந்தமாக ஆகாயமொன்றிலேயே உண்டாகின்றது. பிருதிவி முதலியத் திரவியங்களி லுண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வாகாயத்தில் சத்த குணத்தின் சமவாயி காரணத் தன்மை சம்பவிக்கின்றது.

### ௫௱௧௧. அவ்வாகாயத்தினது அறு குணங்களின் வர்ணனம்.

அவ்வாகாயத்தில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், சத்தமென்னும் அறு குணங்களிருக்கின்றன.

### ௫௱௧௨. ஆகாயத்தின் ஒருமைத் தன்மையின் சாதக யுக்தி.

எங்ஙனம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வெனக் கூறிய நான்குத் திரவியங்கள் நித்திய அநித்திய வேறுபாட்டாலும், சரீர விந்திரிய விஷயவேறு பாட்டாலும் நாநாவாகின்றனவோ அங்ஙனம் அவ்வாகாயம் நாநா வடிவ மன்றாம். அவ்வாகாயம் ஒன்றேயாகின்றது. அவ்வாகாயத்தின் நாநாத் தன்மையில் ஓர் பிரமாணமு மின்றாம். கடாகாசம் மடாகாசம் என்பதான வுலக வியவ

ஹாரத்தால் ஆகாயத்திலும் நாநாத் தன்மை பிரதீதியாகின்றது. என்றாலும் உலக வியவஹாரம் கட, மட முதலிய வுபாதிகளின் வேறுபாட்டா லுண்டாகின்ற தாகையால் உபாதியானுய பேதவியவஹாரத்தால் அவ்வாகாயத்தினது வேறுபாட்டின் சித்தி சம்பவியாது. ஆகையால் ஆகாயம் உண்மையாக வொன்றேயாம்.

ஙஉங. ஆகாயத்தினது விபுத்தன்மையினது சாதக யுக்தி.

அவ்வாகாயத்தின் சத்த குணம் யாதோ அச்சத்த குணம் யாண்டும் பிரதீதியாகின்றது. ஸ்வாசிரயமாகிய திரவியமின்றி ஓர் குணமும் ஸ்வதந்தரத் தன்மையாக வின்றாம். ஆனல் திரவியத்தை ஆசிரயித்ததாகவே சர்வகுணங்களு மிருக்கின்றன. ஆகையால் யாண்டாண்டு சத்தகுணம் பிரதீதியாகின்றதோ ஆண்டாண்டு அவ்வாகாய வடிவத் திரவியம் அங்கீகரிக்கப்பட வேண்டும். யாண்டு முள்ள அவ்வாகாயத்தி னிருப்பு அவ்வாகாயத்தின் விபுத்தன்மையின்றி சம்பவியாது. இக்காரணத்தால் அவ்வாகாயத்திரவியத்தை விபுவாக வொப்ப வேண்டும்.

ஙஉச. ஆகாசத்தினது நித்தியத் தன்மையின் சாதக யுக்தி.

எவ்வெத்திரவியம் விபுவாமோ அவ்வத்திரவியம் நித்தியமேயாகின்றது. எங்ஙனம் ஆத்மா விபுவாவதால் நித்தியமாமோ அங்ஙனமே விபுவாவதால் அவ்வாகாயமும் நித்தியமேயாகும்.

ஙஉரு. சுருதிப் பிரமாணத்தால் ஆகாயத்தின் விபுத்தன்மை நித்தியத் தன்மைகளின் சம்பவம்.

அல்லது கேவலம் கூறிய யுக்தியானேயே ஆகாயத்தில் விபுத்தன்மையும், நித்தியத் தன்மையும் சித்திப்பதன்று. ஆனல் சாக்ஷாத் சுருதிப் பிரமாணத்தாலும் சித்தமாம். ஆண்டுச் சுருதி "ஆகாஶவத்ஸர்வகதஶ்ச நித்ய:" (இ-ள்.) இவ்வாத்மா ஆகாயத்தைப் போன்று யாண்டு மிருக்கின்றது. அதாவது; விபுவும், நித்தியமுமா மென்னும் சுருதி ஆகாயத்தின் திர்ஷ்டாந்தத்தால் ஆத்மாவிற்கு விபு வடிவமும், நித்திய வடிவமும் கூறியிருக்கின்றது. திர்ஷ்டாந்த வடிவ ஆகாயத்திற்கு விபு வடிவமும், நித்திய வடிவமும் ஒப்பினலன்றி அது சம்பவியாது. ஆகையா லிச்சுருதி அவ்வாகாயத்திற்கும் விபு வடிவமும், நித்திய வடிவமும் கூறி யிருக்கின்றது. ஆகையா லிச்சுருதிப் பிரமாணத்தாலும் ஆகாயத்திற்கு விபு வடிவமும், நித்திய வடிவமும் ஒப்ப வேண்டும்.

சங்கை:—முன்னர் ஒன்றாகவும், விபுவாகவும், நித்தியமாகவும் கூறிய அவ்வாகாயத்தில் ஒருமைத் தன்மை யென்பது யாது, விபுத்தன்மை யென்பது யாது, நித்தியத் தன்மை யென்பது யாதென்னும் சங்கை யுண்டாக இனி முறையாக அம்மூன்றின் நிரூபணஞ் செய்வாம்.

ஙஉசு. மத வேறுபாட்டால் ஒருமைத் தன்மையின் லக்ஷணம்.

சில நூலாசிரியரோ ஒருமையின் லக்ஷணமாக விது கூறுகின்றனர். "ஏகத்வ ஸாமாந்யாதிகரணமேகத்வம்" (இ-ள்.) எத்திரவியம் சமவாய சம்பந்த

மாக ஒருமைச் சங்கியையுடையதாமோ அத்திரவியம் ஒன்றெனப்படுகின்றது. அவ்வொருமைச் சங்கியை சமவாய சம்பந்தமாக ஆகாயத்திலேயே யிருக்கின்றது. பிருதிவி முதலியவைகளிலிருப்பதில்லை. இக்காரணத்தால் ஆகாயமொன்றும். அதாவது ஆகாயத்தில் அவ்வொருமைச்சங்கியை யோக்கியத்தன்மையே யிருக்கின்றது. அங்ஙனமாய வொருமைத் தன்மையின் லக்ஷணம் சம்பவியா. ஏனெனின் எங்ஙனம் அவ்வாகாயம் ஒருமைச்சங்கியை யுடையதாமோ அங்ஙனமே கடமும் ஒருமைச் சங்கியையுடையதாம். ஆகையால் ஆகாயத்தைப் போன்று கட முதலியனவும் ஒன்றென வேண்டும். அதாவது; ஒருமையின் லக்ஷணத்திற்கு கட முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகும். ஆகையால் ஒருமையின் லக்ஷணம் நலமுடையதன்றென்னும் அதிவியாப்தி தோஷத்தை முற்கூறிய லக்ஷணத்திற் கண்ணுற்று சில நூலாசிரியர் ஒருமைக்கு இந்த லக்ஷணம் கூறுகின்றனர். "த்வித்வாத்யபாவவத்வம்." (இ-ள்.) எத்திரவியம் இருமை முதலிய சங்கியையின் அபாவமுடையதாமோ அத்திரவியம் ஒன்றெனப்படுகின்றது. ஆண்டு அவ்விருமை முதலிய சங்கியைகளின் அபாவம் ஆகாயத்திலேயே யிருக்கின்றது. பிருதிவி முதலியத் திரவியங்களில் இருமை முதலிய சங்கியைகளின் அபாவமின்றும். ஆனால் இருமை முதலிய சங்கியை யேயிருக்கின்றது. ஆகையால் ஆகாயம் ஒன்றெனப்படுகின்றது. அதாவது; அவ்வாகாயத்தில் இருமை முதலியவற்றின் அபாவமுடைமையே ஒருமையா மென்பர். இங்ஙனமாய ஒருமையின் லக்ஷணமும் சம்பவியாது. ஏனெனின் கடம், ஆகாயமென்னு மிரண்டில் இருப்பதாகிய இருமையாதோ அவ்விருமை அவ்வாகாயத்திலு மிருக்கின்றது. ஆகையால் அவ்விருமை முதலியவைகளின் அபாவம் ஆகாயத்தில் சம்பவியாது. அதாவது இவ்வொருமை லக்ஷணமும் அசம்பவதோஷமுடையதாவதால் நலமுடையதன்றென்னும் அசம்பவ தோஷத்தை முற்கூறிய லக்ஷணத்திற் கண்ணுற்று சில நூலாசிரியர் ஒருமைக்கு இவ்வாறாக லக்ஷணங் கூறுகின்றனர். "ஸஜாதீயமாத்ரவ்ருத்தி த்வித்வாபாவவத்வம்" (இ-ள்.) சமான ஜாதியுடையத் திரவியத்தில் மாத்திர மிருப்பதாகிய இருமை யாதோ அவ்விருமையின் அபாவமுடையத்திரவியம் ஒன்றெனப்படுகின்றது. கடத்திலும், ஆகாயத்திலு மிருக்கும் இருமை, ஆகாயத்திலிருக்கின்றதென்றாலும் அவ்விருமை, சஜாதீயத்திரவியமாத்திரத்தி லிருப்பதன்று. கடத்தன்மை, ஆகாயத்தன்மை வடிவத்தோடிருக்கும் விஜாதீயகடமும், ஆகாயமும் யாதோ அவ்விரண்டிலேயே அவ்விருமையிருக்கின்றது. ஆகாய வடிவத்தால் ஆகாயத்தின் சஜாதீயமாக ஓர் பதார்த்த மின்றும். ஆகையால் அவ்வாகாயம் சஜாதீய மாத்திரத்திலிருக்கும் இருமையின் அபாவமுடையதேயாம். இதுவே ஆகாயத்தில் ஒருமையா மென்பர். இங்ஙனமாகக் கூறும் ஒருமையின் லக்ஷணமும் சம்பவியாது. ஏனெனின் ஆகாய வடிமாக ஆகாயத்தின் சஜாதீய வேறு ஆகாயத்தின் அபாவமிருப்பதால் அவ்விரு ஆகாயங்களி லிருப்பதாகிய இருமையே பிரசித்தமன்றும். அவ்விருமை வடிவ பிரதியோகியின் பிரசித்தமின்மையாவதால் இருமை அபாவமும் பிரசித்தமின்மையேயாகும். ஆகையால் ஒருமையின் லக்ஷணமும் அசம்பவ தோஷமுடையதாவதால் நலமுடையதன்றென்

னும் அசம்பவதோஷத்தை முற்கூறிய லக்ஷணத்திற் கண்ணுற்று சிலநூலாசிரியரோ அவ்வொருமைக்கு இவ்வாறாக லக்ஷணங் கூறுகின்றனர் " [illegible] " (இ-ள்.) சுவ்வென்னும் சத்தத்தால் ஆகாயத்தைக் கிரஹிக்குக. அவ்வாகாயமாம் பிரதியோகி எதற்காமோ அத்தகைய் அன்னியோன்னியா பாவ வடிவம் யாதோ அப்பேதம் ஆகாயம் ஒன்றை விட்டு மற்றப் பிருதிவி முதலிய சர்வ பதார்த்தங்களி லிருக்கின்றது. அந்தப் பிருதிவி முதலியவைகளில் ஆகாயத் தன்மை தர்மமிருப்பதில்லை. ஆகாயத் தன்மை தர்மம் கேவலம் ஆகாயத்திலேயே யிருக்கின்றது. அவ்வாகாயத் தன்மை தர்மம் ஆகாயப் பிரதியோகி பேதத்தின் சமானாதிகரணமன்றாம். இத்தகைய ஆகாயத் தன்மை தர்மமுடையது அவ்வாகாயமாம். இதுவே அவ்வாகாயத்தில் ஒருமையாம். இவ்வாறாய வொருமை பிருதிவி, ஜலம், வாயு, ஆத்மா, மன மென்னுமிவை முதலிய பதார்த்தங்களி லிருப்பதில்லை. ஏனெனின் பரமாணு வடிவ நித்தியப் பிருதிவி முதலியவைகளில் துவியணுகாதி வடிவ அநித்தியப் பிருதிவி முதலியவைகளின் பேத மிருக்கின்றது. அங்ஙனமே சரீர விந்திரிய வடிவப் பிருதிவி முதலியவைகளில் விஷய வடிவப் பிருதிவி முதலியவைகளின் பேதமிருக்கின்றது. ஆண்டு பிருதிவித் தன்மை முதலிய தர்ம மிருப்பதேயாகின்றது. ஆகையால் பிருதிவித் தன்மை முதலிய தர்மம் பிருதிவி முதலிய பிரதியோகிகளினது பேதத்தின் அசமானாதிகரண மன்றாம்; சமானாதிகரணமேயாம். ஆகையால் நாநா வியக்தி வடிவப் பிருதிவி முதலியவைகளில் ஒருமையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது; இவ்வொருமையின் லக்ஷணமே தோஷமில்லாததாம். இவ்வாறாய ஒருமையின் லக்ஷணம் பின்னர் கால திக்குகளிலும் அறிந்துக் கொள்க. ஆண்டு அந்த லக்ஷணத்தில் சுவசத்தத்தால் காலம் அல்லது திசையினைக் கிரஹிக்குக. ஆகாயத் தன்மை யென்னும் பதம் இருக்குமிடத்து காலத்தன்மை, திக்குத் தன்மை யென்னும் பதத்தைப் பிரயோகம் செய்க.

## ௩௯௭. விபுத்தன்மையின் லக்ஷணம்.

" [illegible] " (இ-ள்.) எத்திரவியம் சர்வமூர்த்தத் திரவியங்களோடு சையோக சம்பந்தமுடையதாமோ அத்திரவியம் விபுவெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மன மென்னுமைந்துத் திரவியங்களை மூர்த்தத் திரவிய மென்பர். இத்தகைய சர்வமூர்த்தத் திரவியங்களோடு ஆகாயத்தின் சையோகசம்பந்தம் யாதோ அதுவே அவ்வாகாயத்தில் விபுத் தன்மையாம். இவ்வாறாய விபுத் தன்மையின் லக்ஷணம் பின்னர் காலம், திக்கு, ஆத்மா வென்னு மூன்றிலும் அறிந்துக் கொள்க.

## ௩௯௮. மூர்த்தத் திரவியத்தி னிருவித லக்ஷணம்.

இனி பிரசங்கத்தால் மூர்த்தத் திரவியத்தின் லக்ஷணங் கூறுவாம். " [illegible] " அல்லது " கிரியா [illegible] " (இ-ள்.) பரம மஹத்வப் பரிமாணமுடைய ஆகாயம், காலம், திக்கு

ஆத்மா வென்னும் நான்கு விபுத் திரவியங்கள் யாவையோ அவ்விபுத் திரவியங்களில் இராசதாகிய பரிமாணம் யாதோ அப்பரிமாணத்தினை பரிச்சின்ன பரிமாண மென்பர். இத்தகைய பரிச்சின்ன பரிமாணம் அப்பிருதிவி முதலிய வைந்து மூர்த்தத் திரவியங்களிலேயே யிருக்கின்றது. அப்பரிச்சின்ன பரிமாணமுடைமையே அவ்வைந்துத் திரவியங்களில் மூர்த்தத் தன்மையாம். அல்லது கர்ம வடிவ கிரியை சமவாய சம்பந்தமாக அப்பிருதிவி முதலிய வைந்துத் திரவியங்களிலேயே யிருக்கின்றது. ஆகாய முதலிய நான்கு விபுத்திரவியங்களில் கிரியை சமவாய சம்பந்தமாக விருப்பதில்லை. ஆகையால் சமவாய சம்பந்தமாக கிரியையுடைமையே பிருதிவி முதலிய வைந்துத் திரவியங்களில் மூர்த்தத் தன்மையாம். இத்தகைய மூர்த்தத் திரவியங்களோடு ஆகாயத்தின் சையோக சம்பந்தம் யாதோ அதுவே அவ்வாகாயத்தில் விபுத் தன்மையாம். நித்தியத் தன்மையின் லக்ஷணமோ முன்னர் பிருதிவி நிரூபணத்தில் கூறிவந்துள்ளோம். அது ஈண்டும் அறிந்துக் கொள்க. அங்ஙனமே பின்னர் காலம், திக்கு, ஆத்மா, மனமா மிவை முதலிய நித்திய அநித்தியப் பதார்த்தங்களிலும் அறிந்துக் கொள்க.

## ௩௧௧. ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறுவதான சுருதியினது விவஸ்தையின் வர்ணனம்.

சங்கை:—முன்னர் ஆகாயத்தை நித்தியமாகக்கூறியது சம்பவியாது. “ஆத்மந ஆகாஶ: ஸம்பூத:” என்னுஞ் சுருதியில் ஆகாயத்திற்கு ஆத்மாவால் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. எவ்வெப்பதார்த்தம் உண்டாவதாமோ அவ்வப்பதார்த்தம் அநித்தியமேயாகும். எங்ஙனம் கட முதலிய பதார்த்தங்கள் ஜன்னியமாவதால் அநித்தியமேயாம். அங்ஙனமே ஆகாயமும் ஜன்னியமாவதால் அநித்தியமேயாகும்.

சமாதானம்:—கூறிய சுருதியிலுள்ள “சம்பூத” என்னும் பதம் யாதோ அச்சம்பூத வென்னும் பதத்திற்கு உற்பத்தி அர்த்தமன்று. ஆனால் சம்பூத வென்னும் பதத்திற்கு வெளிப்படுவதென்பதே அர்த்தமாம். ஓர்கால் சம்பூத என்னும் பதத்தால் ஆகாயத்திற்கு உற்பத்தியை கிரஹிக்கின் ஆகாயத்திற்கு நித்தியம் கூறியதாகிய “ஆகாஶவத் ஸர்வகதஶ்ச நித்ய:” என்னுஞ் சுருதிக்கு முற்கூறிய சுருதியோடு விரோத முண்டாகும். ஆகையால் அச்சுருதியிலுள்ள சம்பூத என்னும் பதத்தால் உற்பத்தியினைக் கிரஹிக்கற்க. வெளிப்படுத்துவதையே கிரஹிக்க வேண்டும். வெளியாதல் நித்திய பதார்த்தத்திற்கும் சம்பவிக்கின்றது. எங்ஙனம் மீமாஞ்சகர் மதத்தில் வர்ணாத்மக நித்திய சத்தத்திற்கு கண்டம், நா முதலிய விடங்களால் வெளியாதலுண்டாகின்றதோ அங்ஙனமே எமது நையாயிகர்கள் மதத்திலும் பிரம்மாண்ட வடிவ உபாதியின் வசத்தால் நித்திய ஆகாயத்திற்கு வெளியாதல் சம்பவிக்கின்றது. ஆகையால் உற்பத்தி விநாச மில்லாததாவதால் அவ்வாகாயம் நித்தியமேயாம்.

## ௬௰. ஆகாயத்தன்மை, காலத்தன்மை, திக்குத்தன்மை யென்னும் மூன்று ஜாதித் தன்மையின் கண்டனம்.

எங்ஙனம் பிருதிவித் தன்மை, ஜலத் தன்மை, தேயுத் தன்மை, வாயுத் தன்மை, ஆத்மத்தன்மை, மனத்தன்மை யென்னும் ஆறு தர்மங்கள் அனேக பிருதிவி முதலிய வியக்திகளில் சமவேதமாவதால் ஜாதி வடிவமாமோ அங்ஙனம் ஆகாசத் தன்மை, காலத்தன்மை, திக்குத் தன்மை யென்னும் மூன்று தர்மங்கள் ஜாதி வடிவமன்று. ஏனெனின், அனேக வியக்திகளில், சமவாய சம்பந்தமாக இருப்பதாகிய நித்திய தர்மம் யாதோ அதனை ஜாதி யென்பர். ஆண்டு ஆகாயம், காலம், திக்கு வென்னும் மூன்றுத் திரவியங்கள் பிருதிவி முதலிய திரவியங்களைப் போன்று அனேக வியக்தி வடிவமன்று; ஒவ்வோர் வியக்திவடிவமாம். ஓர் வியக்தியில் இருக்கும் தன்மையும் ஜாதித் தன்மையை பாதிப்பதே யாகின்றது. ஆகையால் ஓர் வியக்திமாத்திரத்தில் இருப்பதாவதால் ஆகாய முதலிய தர்மங்கள் ஜாதி வடிவ மன்றும். கருத்திதுவாம்; ஓர் தர்மமாக ஏகாகார பிரதீதி யாதோ அவ்வேகாகாரப் பிரதீதியே அஜ்ஜாதியின் சாதகமாம். எங்ஙனம் கருமை, பசுமை யாதி வடிவமாக பரஸ்பர விலக்ஷண அனேக கட வியக்திகளில் இது கடம், இது கடம் என்பதாக ஓர் கடத் தன்மை தர்மமாக ஏகாகார உணர்ச்சி யுண்டாகின்றது. அவ்வேகாகாரப் பிரதீதியே அவ்வெல்லாக் கடங்களில் கடத்தன்மை ஜாதியின் சாதகமாம். அவ்வேகாகாரப் பிரதீதி அனேக வியக்திகளிலேயே உண்டாகின்றது; ஓர் வியக்தியில் உண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வேகாகாரப் பிரதீதி வடிவ சாதகத்தின் அபாவத்தால் ஆகாசத் தன்மை முதலிய தர்மங்கள் ஜாதி வடிவமன்றும்; உபாதி வடிவமாம். ஜாதியினும் வேறான தர்மத்தினை உபாதி யென்பர். உபாதியினை விரிவாக பின்னர் நான்காவது பரிச்சேதத்தில் சாமான்னிய பதார்த்த நிரூபணத்தில் நிரூபிப்பாம். காலத் தன்மை, திசைத்தன்மை யென்னு மிரண்டில் ஜாதி வடிவத் தன்மை கண்டிப்பது பின்னர் கால திசையின் நிரூபணத்திலேயே உசிதமாம். ஈண்டு ஆகாய நிரூபணத்தில் உசிதமன்று மாயினும் மும்முறை யெழுதுவதால் நூல் பெருகுதல்வடிவ கௌரவ தோஷமாகின்றது. ஆகையால் லாகவமாக ஈண்டு ஆகாய நிரூபணத்திலேயே காலத்தன்மை, திசைத்தன்மை யென்னு மிரண்டில் ஜாதி வடிவத் தன்மை கண்டிக்கப்பட்டது.

சங்கை:—இதனிடத்து லாகவமா மாயினும் ஆகாயத்தின் நிரூபணத்தில் காலத்தன்மை, திசைத்தன்மைகளில் ஜாதி வடிவத் தன்மையைக் கண்டிப்பது அசங்கத அர்த்தத்தினைக் கூறும் வடிவ தோஷம் பிராப்தி யாகின்றது. அசங்கத அர்த்தத்தினைக் கூறுவோன் முன் பின் அர்த்தத் புத்தியுடைய புருஷன் அசங்கத அர்த்தத்தினைக் கூறான். முன் பின் அர்த்தத்தோடு சம்பந்த வடிவ சங்கதியுடைய அர்த்தத்தினையே கூறுவனென்னு மிது சர்வ சாத்திரமுடைய புருஷர்களின் சித்தாந்தமாம்.

சமாதானம்:—ஆகாயத்தின் நிரூபணத்தில் காலத் தன்மை, திசைத் தன்மைகளில் ஜாதி வடிவத்தன்மை கண்டிக்கப்பட்டதுயாதோ அது அசங்கத அர்த்தத்தின் கூற்றன்று. பிரசங்க சங்கதியால் (சம்பந்தத்தால்) அவ்வர்த்தம் கூறப்பட்டது.

### சாக. பிரசங்க சங்கதியின் லக்ஷணம்.

"ஸ்ம்ருதஸ்யோபேக்ஷாநர்ஹத்வம் ப்ரஸங்கஸங்கதி:" (இ-ள்) ஓர் அர்த்தத்தின் நிரூபணத்தில் ஓர் ஏதுவால் ஸ்மரணமான வேறு அர்த்தம் யாதோ அவ்வேறு அர்த்தத்தினை உபேக்ஷைச் செய்யாது அவ்வேறு அர்த்தத்தினையும் ஆண்டு நிரூபித்தற் றகுதியாம். இதனை பிரசங்க சங்கதி யென்பர். அப்பிரசங்க சங்கதி ஈண்டு மிருக்கின்றது. ஏனெனின் ஆகாயத் தன்மை, காலத்தன்மை, திசைத் தன்மை யென்னு மூன்றில் ஜாதித் தன்மையின் நிசேஷதம் செய்யப்பட்டது யாதோ அது அனேக சமவேதத் தன்மை அபாவ வடிவ ஓர் ஏதுவாகவே கூறப்பட்டது. ஆகையால் அவ்வோர் ஏது, வுடைய அநுமிதியின் விஷயத்தன்மையால் ஆகாயத்தன்மையின் நிரூபணத்தில் காலத்தன்மை, திசைத்தன்மையென்னு மிரண்டின் ஸ்மிருதியுமுண்டாகின்றது. ஆகையால் அவ்விரண்டினையும் ஈண்டு நிரூபிப்பது தகுதியாம். இவ்வாறாய பிரசங்க சங்கதியால் ஈண்டு ஆகாயத்தின் நிரூபணத்தில் காலத்தன்மை, திசைத் தன்மைகளில் ஜாதித்தன்மைக் கண்டிக்கப்பட்டது.

சங்கை:—லக்ஷணம், பிரமாண மென்னு மிரண்டினுனேயே வத்துவின் சித்தி யுண்டாகின்றது. ஆகாயத்தின் லக்ஷணமோ முன்னர் கூறப்பட்டதெனினும் ஆகாயத்தில் ஓர் பிரமாணங் கூறப்படவில்லை. ஆகையால் அவ்வாகாயத்தில் பிரமாணமும் அவசியங் கூறப்படவேண்டும். உத்பூத வுருவ, உத்பூத பரிசத்தின் அபாவத்தால் ஆகாயத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணம் சம்பவியாதென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் ஆகாயத்தின் சித்தியைச் செய்வாம்.

### சா௨. அநுமானப் பிரமாணத்தால் ஆகாயத்தின் சித்தி.

அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம் "ஶப்த: ப்ருதிவ்யாத்யஷ்டத்ரவ்யாதிரிக்ததத்ரவ்யாஶ்ரித: அஷ்டத்ரவ்யாநாஶ்ரிதத்வே ஸதி த்ரவ்யாஶ்ரிதகுணத்வாத் யந்நைவம் தந்நைவம் யதா ரூபம்" (இ-ள்.) சத்த குணம் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான ஓர் திரவியத்தை ஆசிரயிக்க யோக்கியமாம், பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காது ஓர் திரவியத்தை ஆசிரயிப்பதாவதால், எவ்வெத்தர்மம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, காலம், திக்கு, ஆத்மா, மனமென்னும் எட்டுத் திரவியங்களினும் வேறானவோர்திரவியத்தை ஆசிரயிக்காததாமோ அவ்வத்தர்மம்அவ்வெட்டுத்திரவியங்களை ஆசிரயிக்காது வேறோர் திரவியத்தை ஆசிரயிப்பது மன்றாம். எங்ஙனம்: உருவகுணம் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறானவோர் திரவியத்தை ஆசிரயிப்பதன்றாம். அவ்வுருவ குணம் அவ்வெட்டுத் திரவியங்களில் பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்றுத் திரவியங்களையே ஆசிரயிப்பதாகின்றது. ஆகையால் அவ்வுருவ குணம் அப்பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காது வேறோர் திரவியத்தை ஆசிரயிப்பதுமன்றாம். அவ்வெட்டுத்திரவியங்களில் பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்களை ஆசிரயிப்பதாகியே திரவியத்தை ஆசிரயிப்பதாகின்றது. ஆண்டு இவ்வநுமானத்தில் "திரவியத்தை

யாசிரயிப்பதாவதால்'' என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "எட்டுத்திரவியங்களை ஆசிரயிக்காததாகி'' என்னும்பதங்கூருவிடின் உருவமுதலிய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். ஏனெனின் உருவ முதலிய குணங்களும் திரவியத்தையே ஆசிரயித்திருக்கின்றன. திரவிய வடிவ ஆசிரயமன்றி ஓர் குணமும் சுதந்தரமாக விருப்பதில்லை. ஆகையால் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை யேதுவோ உருவ முதலிய குணங்களில் இருக்கின்றது. ஆனால் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை வடிவ சாத்தியம் உருவ முதலிய குணங்களிலின்றும். எக்காரணத்தாலெனின், உருவ முதலிய குணங்கள் பிருதிவி முதலிய எட்டுத்] திரவியங்களையே 'ஆசிரயிப்பனவாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டுக் கூறிய அவ்வேதுவில் "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாய்'' என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவ முதலிய குணங்களில் எங்ஙனம் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான திரவியத்தினை ஆசிரயிக்குந் தன்மை வடிவ சாத்தியமின்றோ அங்ஙனமே அவ்வெட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத்தன்மை விசிஷ்ட திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை வடிவ ஏதுவுமின்றும். ஆகையால் கூறிய அவ்வேதுவிற்கு உருவ முதலிய குணங்களில் வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததால்'' என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "திரவியத்தை ஆசிரயிப்பதால்'' என்னும் பதங் கூருவிடின் உருவத்தன்மை முதலிய ஜாதிகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் உருவத் தன்மை முதலிய ஜாதிகள் கேவலம் உருவ முதலிய குணங்களிலேயே யிருக்கின்றன. ஓர் திரவியத்தையும் ஆசிரயிப்பன வன்றும். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளில் அவ்வெட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் அவ்வெட்டுத் திரவியங்களினும் வேறான திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை வடிவ சாத்தியமின்றும். ஆகையால் கூறிய சாத்தியத்தின் அபாவமுடைமை உருவத் தன்மை முதலிய ஜாதிகளி லிருப்பதாவதால் அவ்வெட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திப்பான் கருதி அவ்வேதுவில் "திரவியத்தை ஆசிரயிப்பதாவதால்'' என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவத் தன்மை முதலிய ஜாதிகளில் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை யின்றும். ஆகையால் உருவ முதலிய ஜாதிகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாய பரிசேஷ அநுமானத்தால் சத்த குணத்தின் ஆசிரய வடிவமாக பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான வொன்பதாவது ஆகாய வடிவத் திரவியமே சித்திக்கின்றது.

### ௪௱௫. பரிசேஷ அநுமானத்தின் லக்ஷணம்.

இனி பிரசங்கத்தால் பரிசேஷ அநுமானத்தின் லக்ஷணங் கூறுவாம். "ப்ரஸக்தப்ரதிஷேதே அந்யத்ர ப்ரஸங்காத் சிஷ்யமாணே ஸம்ப்ரத்யய: பரிசேஷ:'' (இ-ள்.) சம்பவித்த அர்த்தத்தினை நிஷேதிப்பதாக

அதனால் வேறு அர்த்தத்தின் பிராப்தமாகாததால் பரிசேஷமாக விருக்கும் அர்த்தத்தில் அநுமிதி ஞானத்திற்கு விஷயத் தன்மை யாதோ அதனைப் பரிசேஷமென்பர். எங்ஙனம்: ஈண்டுப் பிரசங்கத்தில் உருவ முதலிய குணங்களைப் போன்று சத்தமுங் குணவடிவமாம். ஆகையால் அச்சத்தம் ஓர் திரவியத்தை அவசியம் ஆசிரயிப்பதாகும். ஆண்டு உருவ முதலிய குணங்களைப் போன்று சத்தத்திலும் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்குந் தன்மைப் பிராப்தமாகிறது. அந்தப் பிராப்த அர்த்தமே "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாய்" என்னு மிவ்வசனத்தால் நிஷேதஞ் செய்யப்பட்டது. அச்சத்தத்தில் குண கர்ம முதலிய பதார்த்தங்களை ஆசிரயிக்குந் தன்மையே சம்பவியாது. பரிசேஷமாக சத்தத்தில் இருக்கின்ற ஆகாய வடிவத் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை யாதோ ஆவ்வாகாயத்தை ஆசிரயிக்குந் தன்மையே அவ்வநுமிதி ஞானத்தின் விஷயமாகின்றது. இதுவே அவ்வநுமானத்தில் பரிசேஷத்தன்மையாம். ஆண்டுப் பக்ஷத்தில் ஏதுவின் அபாவம் யாதோ அது சொரூபா சித்தி தோஷமெனப்படும். விசேஷண, விசேஷிய பாகம் பொருந்திய ஏது யாதோ அவ்வேதுவில் அச்சொரூபா சித்தி தோஷம் சிலவிடத்தோ பக்ஷத்தில் விசேஷண பாகத்தின் அபாவத்தா லுண்டாகின்றது. சிலவிடத்து விசேஷிய பாகத்தின் அபாவத்தால் உண்டாகின்றது. சிலவிடத்து விசேஷண பாகமும், விசேஷிய பாகமுமா மிரண்டின் அபாவத்தா லுண்டாகின்றது. முற்கூறிய பரிசேஷ அநுமானத்தில் "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாகி திரவியத்தை ஆசிரயிப்பதாவதால்" என்னும் ஏதுவும் விசேஷண, விசேஷிய பாகம் பொருந்தியதாம். ஆண்டு "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாகி" என்னுமிதுவோ விசேஷணபாகமாம் "திரவியத்தை ஆசிரயிப்பதாவதால்" என்னுமிது விசேஷிய பாகமாம். சத்தத்தில் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மையின்றென வாதி சங்கிக்கின் அவ்விசேஷிய அசித்தியின் தோஷத்தை நிவர்த்தி செய்வான் வேண்டி இனி அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தில் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மையைச் சித்தி செய்வாம்.

## ௨௦௪. சத்தகுணத்தில் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மையின் சாதக அநுமானம்.

"ஶப்தஃ க்வசிதாஶ்ரிதஃ குணத்வாத் ரூபவத்" (இ-ள்.) சத்தம் ஓர் திரவியத்தில் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது குணமாவதால், எது வெது குணமாமோ அவ்வக்குணம் ஓர் திரவியத்தில் சமவாய சம்பந்தமாக அவசியமிருக்கும். எங்ஙனம்: சையோகம் குண வடிவமாவதால் பிருதிவி முதலியத் திரவியங்களில் சமவாய சம்பந்தமாக இருக்கின்றது. அங்ஙனமே குண வடிவமாவதால் சத்தமும் ஓர் திரவியத்தில் சமவாய சம்பந்தமாக அவசியமிருக்கும். திரவியமன்றி சுதந்திரமாக ஓர் குணமும் இருப்பதில்லை. இவ்வாறாய அநுமானத்தால் சத்தத்தில் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மையே சம்பவிக்கின்றது. ஆகையால் கூறிய அவ்வேது விசேஷிய அசித்திக் குற்றமுடையதன்றாம்.

## ௪௨௫. சத்தத்தில் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயாத் தன்மையின் சாதக அநுமானம்.

இனி கூறிய அவ்வேதுவில் விசேஷண அசித்தி தோஷத்தின் சங்கையை நிவர்த்தி செய்யும் பொருட்டு சத்தத்தில் அநுமானப் பிரமாணத்தால் எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மையின் சித்தியைச் செய்வாம் "ஶப்த꞉ அஷ்டத்ரவ்யா நாஶ்ரித꞉ ஶ்ரோத்ரக்ராஹ்யத்வாத் ஶப்தத்வவத்" (இ-ள்.) சத்தம் சமவாய சம்பந்தமாக பிருதிவி முதலிய எட்டுத்திரவியங்களை ஆசிரயிப்பதன்று, சுரோத்திர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாவதால், எவ்வெப் பதார்த்தம் சுரோத்திர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாமோ அவ்வப்பதார்த்தம் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிப்பதுமன்றும். எங்ஙனம்: சத்தத் தன்மை ஜாதி சுரோத்திர விந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாவது போலும். ஆகையால் சத்தத்தன்மை ஜாதி பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிப்பது மன்றும். அங்ஙனமே சத்தமும் சுரோத்திர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாம். ஆகையால் சத்தமும் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததேயாகும். ஆகையால் "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாகி திரவியத்தை ஆசிரயிப்பதாவதால்" என முற்கூறிய ஏது, விசேஷண அசித்தி வடிவ தோஷமுடையதன்றும்.

சங்கை:—சத்தத்தில் பிரமாணத்தால் குண வடிவத்தன்மை சித்தமாகுமாயின் குணத்தன்மை வடிவ ஏதுவால் சத்தத்தில் ஆகாய வடிவத் திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை வடிவம் சம்பவிக்கும். சத்தம் குணவடிவமாமென்பதில் ஓர் பிரமாணமுமின்றாமென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தில் குண வடிவத் தன்மையின் சித்தியைச் செய்வாம்.

## ௪௨௬. சத்தத்தில் குண வடிவத் தன்மையின் சாதக அநுமானம்.

"ஶப்த꞉ குண꞉ சக்ஷுர்க்ரஹணாயோக்ய பஹிரிந்த்ரிய க்ராஹ்ய ஜாதிமத்வாத் ஸ்பர்ஶவத்" (இ-ள்.) சத்தம் குண வடிவமாக யோக்கியமாம், சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமும் பாஹிய (புற) விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமா மித்தகைய ஜாதி யுடையதாவதால், எவ்வெப் பதார்த்தம் இத்தகைய் ஜாதியுடையதாமோ அவ்வப்பதார்த்தம் குண வடிவமேயாம். எங்ஙனம்: சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமும் பாஹிய (புற) விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமுமாமித்தகைய பரிசத்தன்மை ஜாதியாதோ அப்பரிசத்தன்மை ஜாதியுடையது பரிசமாம். ஆகையால் அப்பரிசம் குண வடிவமுமாம். அங்ஙனமே சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமும் சுரோத்திரிய வடிவ புறவிந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமுமா மித்தகைய சத்தத்தன்மை ஜாதியுடையது சத்தமுமாம். ஆகையால் சத்தமும் குணவடிவமேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "புற விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கிய ஜாதியுடைமையால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "சக்ஷு விந்திரி

யத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியம்" என்னும் பதங் கூறுவிடின் கட முத லியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகும். எற்றுக்கெனின் சக்ஷு விந்திரிய வடிவமும் துவக்கிந்திரிய வடிவமுமாம் புற விந்திரியங்களால் கிர ஹிப்பதற்கு யோக்கிய கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் யாவை யோ அக்கடத் தன்மை முதலிய ஜாதிகளுடையனவோ கட முதலிய பதார்த் தங்களாம். ஆனால் கட முதலிய பதார்த்தங்கள் குண வடிவமன்றாமாகை யால் குணத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை கட முதலியவை களிலிருப்பதாவதால் புற விந்திரியத்தால் கிரஹிக்கும் ஜாதியுடைமை வடிவ ஏது வியபிசாரியாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமும்" என் னுமிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு கடத் தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமன்றாம்; சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமே யாம். ஆகையால் அக்கடத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு கட முத லியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது அவ்வநு மானத்தில் "சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கிய ஜாதியுடைய தாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "புற விந்திரி யத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமும்" என்னும் பதங் கூறுவிடின் ஆத்மாவில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமாகிய ஆத்மத்தன்மை ஜாதி யாதோ அவ்வாத் மத்தன்மை ஜாதி வடிவ ஏதுவோ ஆத்மாவிலிருக்கின்றது. ஆனால் ஆத்மாவில் குணத்தன்மை வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் குணத்தன்மை வடிவ சாத் தியத்தின் அபாவமுடைமை ஆத்மாவி லிருப்பதாவதால் சக்ஷு விந்திரியத் தால் கிரஹிப்பதற்கு அயோக்கிய ஜாதியுடைமை வடிவ ஏது வியபிசாரியேயா கும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "புற விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமும்" என்னுமிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மத்தன்மை ஜாதி சக்ஷு விந்திரி யத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமாம். என்றாலும் அவ்வாத்மத்தன்மை ஜாதி புற விந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதன்று. மன வடிவ இந்திரியத்தா னேயே ஆத்மத் தன்மை ஜாதி கிரஹிக்கப்படுவதாகின்றது. ஆகையால் ஆத் மத்தன்மை ஜாதியைக் கொண்டு ஆத்மாவில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண் டாகாது. அல்லது கூறிய அநுமானத்தில் சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்ப தற்கு அயோக்கியமும், "புறவிந்திரியத்தால் கிரஹிப்பதற்கு யோக்கியமு மாவ தால்" என விம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "ஜாதியுடையதா வதால்" என்னும் பதங் கூறுவிடின் ரசத்தன்மை முதலிய ஜாதிகளில் அவ்வேது விற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் ரசத் தன்மை முதலிய ஜாதிகள் சக்ஷு விந்திரியத்தால் கிரஹிப்பதற்கு அயோக்கியமும், ரசன முதலிய விந்திரி யங்களால் கிரஹிப்பதற்கு யோக்கியமுமாம். ஆகையால் ரசத் தன்மை முத லிய ஜாதிகளில் கூறிய அவ்வேதுவோ யிருக்கின்றது. குணத்தன்மை வடிவ

சாத்தியம் ரசத்தன்மை முதலிய ஜாதிகளிலின்றும். ஆகையால் குணத்தன்மை வடிவசாத்தியத்தின் அபாவமுடைமை ரசத்தன்மை முதலியஜாதிகளில் இருப்பதாவதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஜாதியுடையதாவதால்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமாமிந்நான்கு பதார்த்தங்களில் ஓர் ஜாதியும் சமவாய சம்பந்தமாக விருப்பதன்று. திரவியம், குணம், கர்ம மென்னும் மூன்று பதார்த்தங்களிலேயே அஜ்ஜாதி சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. ஆகையால் ரசத்தன்மை முதலிய ஜாதிகளில் அஜ்ஜாதியுள்ள ஏதுவிற்கு அபாவமிருப்பதால் வியபிசாரமுண்டாகாது. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தில் குண வடிவத்தன்மையே சித்தமாகின்றது. ஆகையால் சத்த குணத்தின் ஆசிரய வடிவமாக ஆகாய வடிவத் திரவியத்தின் சித்தி சம்பவிக்கின்றது.

### ௬௯. ஆகாயத்தில் உருவத்தின் அசித்தியைச் செய்யும் பொருட்டு வெண்மை யுருவத்திலும், கருமை வுருவத்திலும் ஔபாதிகத் தன்மையின் சித்தி.

சங்கை:—முன்னர் ஆகாயத்தில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், சத்த மென்னும் அறுகுணங்கள் கூறப்பட்டது. அது சம்பவியாது. ஏனெனின் "ஈயியவஃசாகாஶம்" (இ-ள்.) தயிரைப்போன்று வெண்மை நிறமுடையது ஆகாயமென்னும் உணர்ச்சி உலகருக்குண்டாகின்றது. அவ்வுணர்ச்சி அவ்வாகாயத்தில் உருவ குணத்தை விஷயஞ் செய்கின்றதாகையால் அவ்வுணர்ச்சியின் வலிவால் அவ்வாகாயத்தில் ஏழாவது உருவ குணமும் அங்கீகரிக்கப் படவேண்டும்.

சமாதானம்:—எங்ஙனம் செந்நிறமில்லாப் படிகத்தில் "லொஹிதஃ ஸ்படிகஃ" என்னும்பிரதீதிசெந்நிறமுடைய செம்பருத்திப் புட்ப முதலியவைகளின் சம்பந்தத்தானேயே அப்படிகத்தில் உண்டாகின்றதோ அங்ஙனமே உருவமில்லா ஆகாயத்தில் வெண்மை உருவத்தின் உணர்ச்சியும் அவ்வாகாயத்திலுள்ள வெண்மை யுருவமுடைய சூரியன், சந்திரன் முதலியவைகளினது வொளியின் சம்பந்தத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் எங்ஙனம் "செந்நிறப்படிகம்" என்னும் உணர்ச்சி ஔபாதிகமாமோ (உபாதியினலாயதாமோ) அங்ஙனமே "தயிரைப்போன்று வெண்மை யுருவமுடையது ஆகாயம்" என்னும் உணர்ச்சியும் ஔபாதிகமேயாம். அதாவது; எங்ஙனம் செம்பருத்திப் புட்ப முதலியவைகளின் செந்நிறம் சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அப்படிகத்தில் தோற்றுகின்றதோ அங்ஙனமே அவ்வொளியின் வெண்மை யுருவமும் சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அவ்வாகாயத்தில் தோற்றுகின்றது. ஈண்டு திருஷ்டாந்தத்தில் சுவவென்னும் சத்தத்தால் செந்நிறத்தை கிரஹிக்குக. அச்செந்நிறத்தின் சமவாயி காரண வடிவ செம்பருத்திப் புட்ப முதலியவைகளின் சையோக சம்பந்தம் அப்படிகத்தோடிருக்கின்றது. தார்ஷ்டாந்தத்தில் சுவவென்னும் சத்தத்தால் வெண்மையுருவத்

தினைக் கிரஹிக்குக. அவ்வெண்மை யுருவத்தின் சமவாயிகாரணப் பிரகாச மண்டலத்தின் சையோக சம்பந்தம் ஆகாயத்தோடிருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் பிரகாச மண்டலத்தின் வெண்மை யுருவமே அவ்வாகாயத்தில் தோற்றுகின்றது. ஆகாயத்தில் சமவாய சம்பந்தமாக ஓர் உருவமு மிருப்பதில்லை.

சங்கை :—வெண்மை யுருவமுடைய பிரகாச மண்டலத்தின் சம்பந்தத்தால் ஆகாயத்தில் வெண்மை யுருவத்தின் உணர்ச்சியினை ஔபாதிகமெனக் கூறுக. ஆனால் "நீலம் நபஃ" (இ-ள்.) கருமை யுருவமுடையது ஆகாயமாமென்னும் உணர்ச்சியும் உலகர் யாவருக்கு முண்டாகின்றது. அவ்வுணர்ச்சியில் ஔபாதிகத் தன்மை யுண்டாகாது. ஏனெனின் நிர்மல ஆகாயத்தில் ஓர் கருமையுருவமுடைய திரவியத்தின் சம்பந்தமுமின்றாம். எதனால் அவ்வுணர்ச்சி ஔபாதிகமாகும்? ஆகையால் "கருமை நிறமுடையது ஆகாயம்" என்னும் உணர்ச்சியின் வலிவால் அவ்வாகாயத்தில் அக்கருமை உருவம் அவசியம் அங்கீகரிக்கப் படவேண்டும்.

சமாதானம் :—எங்ஙனம் தமிரைப்போன்று வெண்மை யுருவமுடையது ஆகாயமென முற்கூறிய உணர்ச்சி ஔபாதிகமாமோ அங்ஙனமே கருமை நிறமுடையது ஆகாயமென்னும் உணர்ச்சியும் ஔபாதிகமேயாம். ஏனெனின் பூலோகத்தின் மத்தியிலுள்ள சுமேரு பர்வதத்திற்கு கிழக்கு முதலிய நான்குத் திசைகளில் நான்கு கோடுகளிருக்கின்றன. ஆண்டு கிழக்குத் திசையாக பத்மராகமய கோடிருக்கின்றது. தெற்குத் திசையாக இந்திர நீலமய கோடிருக்கின்றது. மேற்குத் திசையாக ரஜதமய கோடிருக்கின்றது. வடக்குத் திசையாக சுவர்ணமய கோடிருக்கின்றது. ஆண்டு சுமேருவின் தென் சிகரத்திலுள்ள இந்திர நீலமய கோட்டிற்கு இக்கண்டத்தோடு சம்பந்தமிருக்கின்றது. ஆகையால் அவ்விந்திர நீலமயகோட்டின் பிரகாசம் இக்கண்டாவச்சின்ன ஆகாயத்தில் வியாபித்திருக்கின்றது. அப்பிரகாசத்தின் நீலவுருவமே சுவசமவாயி சையோக சம்பந்தமாக அவ்வாகாயத்தில் தோற்றுகின்றது. வேறு கண்டங்களிலோ பத்மராகமய முதலிய மூன்று கோடுகளின் பிரகாசத்தின் சம்பந்தத்தால் அவ்வாகாயம் முறையாக செம்மை, வெண்மை, மஞ்சளாகத் தோற்றுகின்றது. ஆகையால் கருமை யுடையது ஆகாயம் என்னும் உணர்ச்சியும் ஔபாதிகமேயாம். இது பாதஞ்சல சாத்திரம் கூறிய முறைப்படி சமாதானங் கூறப்பட்டது.

சில நூலாசிரியரோ கூறிய அச்சங்கைக்கு இவ்வாறாக சமாதானங் கூறுகின்றனர். எங்ஙனம்: மஞ்சள் நிறமில்லா சங்கில் பித்த தோஷமுடைய புருஷனுக்கு "மஞ்சள் சங்கு" என்னும் உணர்ச்சி யுண்டாகின்றது. ஆண்டு எங்ஙனம் அப்புருஷனது நேத்திரத்திலுள்ள மஞ்சள் நிறமுடைய பித்தத் திரவியத்தின் மஞ்சள் உருவம் சங்கில் ஆரோபிக்கப் படுவதாகின்றதோ அங்ஙனமே உருவமில்லா ஆகாயத்தில் நீல வுருவத்தை காண்பவனது நேத்திரத்தில் இருக்கின்ற நீலத்தன்மை யாதோ அந்நீலத்தன்மை ஆகாயத்தில் ஆரோபிக்கப்படுவ

தாகின்றது. இக்காரணத்தானேயே நேத்திரத்தில் நீலத்தன்மையில்லா *கபிலாக்ஷ புருஷன் அவ்வாகாயத்தில் நீல வுருவத்தைக் காண்கிறதில்லை. ஆகையால் நீலநிறமுடையது ஆகாயம் என்னும் உணர்ச்சி ஔபாதிகமேயாம்.

சங்கை:—எங்ஙனம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்குத் திரவியங்கள் சரீரம், இந்திரியம், விஷய மென்னும் வேறுபாட்டால் மூவித மாகின்றனவோ அங்ஙனம் இவ்வாகாயமும் மூவிதமாகின்றதா? அல்லது இல்லையா?

சமாதானம்:—பிருதிவி முதலியவைகளைப் போன்று இவ்வாகாயத்திற்கு சரீரமும், விஷயமுமோ உண்டாகிறதில்லை. ஆனால் இவ்வாகாயத்திற்கு இந்திரியமோ உண்டாகின்றது. அவ்வாகாயத்தின் இந்திரியம் சுரோத்திரிய இந்திரியமாம்.

## ௬௦௫. சுரோத்திர விந்திரியத்தின் லக்ஷணம்.

"ஶப்தோபலப்திஸாதநமிந்த்ரியம் ஶ்ரோத்ரம்" (இ-ள்.) சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டுபண்ணும் இந்திரியம்யாதோ அவ்விந்திரியம் சுரோத்திர விந்திரிய மெனப்படும். சத்தத்தின் பிரத்தியக்ஷ ஞானம் கேவலம் சுரோத்திர விந்திரியத்தானேயே யுண்டாகின்றது. வேறோர் இந்திரியத்தாலுண்டாகிறதில்லை. ஆகையால் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டாக்குந் தன்மை வடிவ சுரோத்திர விந்திரியத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "இந்திரியம் சுரோத்திரம்" என விம்மாத்திரமே சுரோத்திர விந்திரியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டு பண்ணுவது" என்னும் பதங் கூறுவிடின் சக்ஷு முதலிய விந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சுரோத்திரத்தைப் போன்று சக்ஷு முதலியனவும் இந்திரிய வடிவமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டுபண்ணுவது" என்னும் பதங் கூறப்பட்டது. சக்ஷு முதலிய விந்திரியங்கள் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டு பண்ணுவதன்று. ஆகையால் சக்ஷு முதலிய விந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சத்தத்தை விஷயஞ்செய்யும் ஞானத்தை யுண்டுபண்ணுவது சுரோத்திரம்" என விம்மாத்திரமே சுரோத்திர விந்திரியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதங் கூறுவிடின், கால முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் கால முதலியன காரிய மாத்திரத்தை யுண்டுபண்ணுவனவாம். ஆகையால் சத்தத்தை விஷயஞ்செய்யும் ஞானத்தையும் கால முதலியன வுண்டுபண்ணுவனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதங் கூறப்பட்டது. காலம், திக்கு முதலிய சாதாரண காரணங்களில் இந்திரியத் தன்மையின்றாம். ஆகையால் அக்கால முதலியவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

* கபிலாக்ஷ புருஷன்—செந் நிறமும், மஞ்சள் நிறமும் கலப்புற்ற கண்களையுடையவன்.

சங்கை:—கூறிய இவ்விலக்ஷணத்திற்கும் மனதில் அதிவியாப்தி யுண்டாம். ஏனென்னின், அம்மனம் எல்லா ஞானங்களை யுண்டாக்குவதாம். ஆகையால் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தையும் அம்மனம் உண்டு பண்ணுவதாம். அம்மனம் நியாயமதத்தில் இந்திரிய வடிவமுமாம்.

சமாதானம்:—அம்மனம் சர்வ ஞானங்களை யுண்டுபண்ணுவதால் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தையும் உண்டுபண்ணுவதாம். என்றாலும் அம்மனம் இந்திரியத் தன்மை வடிவத்தால் சர்வ ஞானங்களை யுண்டுபண்ணுவதன்று. ஆனால் மனத்தன்மை வடிவத்தால் அம்மனம் சர்வ ஞானங்களை யுண்டுபண்ணுவதாம். கேவலம் ஆந்தர சுக, துக்க முதலியவைகளின் ஞானத்தினையே அம்மனம் இந்திரியத்தன்மை வடிவத்தால் உண்டாக்குவதாம். ஈண்டு லக்ஷணத்தில் இந்திரியத்தன்மை வடிவத்தால் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டாக்கும் இந்திரியத்திற்கே சுரோத்திர வடிவத்தன்மைக் கூறக்கருதியதாம். அவ்விந்திரியத் தன்மை வடிவத்தால் சத்தத்தை விஷயஞ் செய்யும் ஞானத்தை யுண்டாக்குந் தன்மை அம்மனதிலின்றாம். ஆகையால் அம்மனதில் கூறிய அச்சுரோத்திர விந்திரியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௪௦௯. சுரோத்திர விந்திரியத்தின் இரண்டாவது லக்ஷணம்.

அல்லது "𑌶𑌬𑍍𑌦𑌸𑌮𑌵𑌾𑌯𑌿𑌕𑌾𑌰𑌣 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂" (இ-ள்.) எவ்விந்திரியம் சத்த குணத்தின் சமவாயி காரணமாமோ அவ்விந்திரியம் சுரோத்திர இந்திரியமெனப்படும். ஆண்டுச் சுரோத்திர இந்திரியத்தில் சமவாய சம்பந்தமாக வுண்டாகும் சத்தத்தினது கிரஹணமே சுரோத்திர விந்திரியத்தா லுண்டாகின்றது. ஆகையால் அச்சுரோத்திர இந்திரியத்தில் சத்தத்தின் சமவாயி காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது.

### ௪௧௦. கர்ண சஷ்குலி (கோளக) வடிவ உபாதியின் வேறுபாட்டால் ஆகாய வடிவ சுரோத்திர இந்திரியத்தினது வேறுபாட்டின் வர்ணனம்.

சங்கை:—முன்னர் ஆகாயத்தில் ஏகத்துவம் (ஒருமை) சித்தி செய்யப்பட்டது. இச்சுரோத்திர விந்திரியமோ சைத்திர, மைத்திரனென்னும் புருஷரது வேறுபாட்டால் வெவ்வேறேயாகின்றது. இத்தகைய வெவ்வேறான சுரோத்திர விந்திரியம் ஓர் ஆகாய வடிவ மென்பது எங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம்:—அவ்வாகாயம் உண்மையாக வொன்றேயாமாயினும் அவ்வாகாயம் கர்ண கோளக வடிவ உபாதியின் வேறுபாட்டால் வெவ்வேறு சுரோத்திர வடிவமாகின்றது. அதாவது; சைத்திரனென்னப் பெயரிய புருஷனது கர்ண கோளக வடிவ உபாதியால் அவச்சின்னமாகிய அவ்வாகாயம் சைத்திர புருஷனது சுரோத்திரமாகின்றது. மைத்திரனெனப் பெயரிய புருஷனது கர்ண கோளக வடிவ உபாதியால் அவச்சின்னமாகிய ஆகாயம் மைத்திர புருஷனது சுரோத்திரமாகின்றது. இவ்வாறாக ஒரே ஆகாயத்தில் கர்ண கோளக வடிவ உபாதியின் வேறுபாட்டால் வெவ்வேறு சுரோத்திர வடிவத் தன்மைச் சம்பவிக்கின்றது.

சங்கை :—அச்சுரோத்திர இந்திரியத்திற்கு எவ்வாற்றால் ஆகாய வடிவத்தன்மை யிருக்கிறதென்னும் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணமாகிய யுக்தியால் சுரோத்திர விந்திரியத்தில் ஆகாய வடிவத் தன்மையைச் சித்திச் செய்வாம்.

## சகக. சுரோத்திர இந்திரியத்தில் ஆகாய வடிவத் தன்மையின் சாதக யுக்தி.

எவ்வெவ்விந்திரயம் உருவம், ரசம், கந்தம், பரிசம், சத்த மென்னும் ஐந்து குணங்களுள் எவ்வெக்குணத்தைக் கிரஹிக்கின்றதோ அவ்வவ்விந்திரியம் அவசியம் அவ்வக்குண முடையதாகும். எங்ஙனம்: சக்ஷு, ரசனம், கிராணம், துவக்கு என்னும் நான்கு இந்திரியங்கள் முறையாக உருவம், ரசம், கந்தம், பரிச மென்னும் நான்கு குணங்களைக் கிரஹிக்கின்றன. ஆகையால் சக்ஷு முதலிய நான்கு இந்திரியங்கள் முறையாக உருவ முதலிய நான்கு குணங்களை யுடையனவாம். அங்ஙனமே சுரோத்திர விந்திரயமும் சத்த குணத்தைக் கிரஹிக்கின்ற தாகையால் அச்சுரோத்திர விந்திரியமும் அவசியம் சத்த குண முடையதாகும். அச்சத்த குணம் ஆகாய மொன்றிலேயே யிருக்கின்றது. வேறோர் திரவியத்திலிருப்பதில்லை. ஆகையால் சத்த குண முடையதாவதால் சுரோத்திர விந்திரியம் ஆகாய வடிவமாகவே சித்தமாகின்றது.

## சகஉ. ஆகாயம், காலம், திக்கு என்னு மூன்றினை ஈஸ்வரனிடத்து அடக்கம் ஒப்புவோரான நவீனரது மத வர்ணனம்.

நவீனநையாயிகர்களின் மத மிதுவாம். சத்த குணத்தின் சமவாயி காரண வடிவ ஆகாயமெனப் பெயரிய ஓர் திரவியமின்றாம். பிராசீன நையாயிகர்களும் சத்த குணத்திற்கு நிமித்த காரண வடிவமாக அங்கீகரிக்கப்பட்ட ஈஸ்வரனே சத்தத்திற்கு சமவாயி காரண மென்பர்.

சங்கை :—அவ்வீஸ்வரனைப் போன்று ஜீவாத்மாவே அச்சத்தத்திற்குச் சமவாயி காரணம் ஏன் ஆகக்கூடாது? அஜ்ஜீவாத்மா அச்சத்தத்தின் சமவாயி காரணமன்று; ஈஸ்வரனே சமவாயி காரணமா மென்னும் அர்த்தத்தின் சாதகமாக வோர் யுக்தியு மின்றாம்.

சமாதானம் :—அஜ்ஜீவாத்மாவினைச் சத்தத்திற்குச் சமவாயி காரணமாக வொப்பின் அஜ்ஜீவாத்மாவின் சுக, துக்க முதலிய குணங்கள் எங்ஙனம் யான் சுகி, யான் துக்கி என்னும் மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயங்களாமோ அங்ஙனமே அச்சத்தமும் மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாக வேண்டும். அச்சத்தம் மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமன்றாம். அச்சத்தம் சுரோத்திரப் பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாகின்றது. ஆகையால் அஜ்ஜீவாத்மாவில் சத்த குணத்திற்குச் சமவாயி காரணத் தன்மைச் சம்பவியாது.

சங்கை :—அஜ்ஜீவாத்மா சத்த குணத்தின் சமவாயி காரண மாகாததாகுக. என்றாலும் காலம், திசை யென்னு மிருத் திரவியங்கள் சத்த குணத்திற்குச் சமவாயி காரணம் ஏன் ஆகக்கூடாது?

சமாதானம்:—எமது நையாயிகர்கள் மதத்தில் எங்ஙனம் ஆகாயம் வேறு திரவியமன்றோ அங்ஙனமே கால, திசைகளும் வேறு திரவியமன்றாம். ஆகாயம், காலம், திக்கு என்னு மூன்றுத் திரவியங்கட்கு ஈஸ்வரனிடத்தே அடக்கமாம்.

சங்கை:—ஆகாய வடிவத் திரவியத்தினை அங்கீகரியாவிடின் கர்ண கோளக அவச்சின்ன ஆகாயத்திற்கு சுரோத்திர வடிவத் தன்மை எங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம்:—எமது நையாயிகர்கள் மதத்தில் கர்ண கோளக அவச்சின்ன ஆகாயத்திற்கு சுரோத்திர வடிவத்தன்மை யின்றாம். கர்ண கோளக அவச்சின்ன ஈஸ்வரனுக்கே சுரோத்திர வடிவத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் அவ்வீஸ்வரனினும் வேறான ஆகாய மெனப் பெயரிய ஓர் திரவிய மின்றாம்.

சகஈ. சத்தத்தினை பிருதிவி மாத்திரத்தின் குணமாக ஒப்புவோரான சுவதந்திரர்களது மத வர்ணனம்.

சுவதந்திரர்களின் மதமிதுவாம். அச்சத்தம் ஓர் கால் ஆகாயமாத்திரத்தின் குணமேயாயின் சத்தத்தின் சமவாயி காரண வடிவமாக ஆகாயத்தின் சித்தியுண்டாகும். அச்சத்தம் ஆகாயத்தின் குண மன்றாம். அச்சத்தம் மிருதங்கம், பேரி முதலிய பிருதிவியின் குணமேயாம். ஆகையால் மிருதங்கம், பேரி முதலியனவே சத்தத்தின் சமவாயி காரணமாம். அல்லது பிராசீன நையாயிகர்களும் அம்மிருதங்கம், பேரி முதலியவைகளை சத்தத்தின் நிமித்த காரணமாக வொப்புகின்றனர். உலகத்திலும் இச்சத்தம் மிருதங்கத்தினதாம், இச்சத்தம் பேரியினதா மென்னும் உணர்ச்சியே யுண்டாகின்றது. இச்சத்தம் ஆகாயத்தினதாமென்னும் உணர்ச்சி உலகவருக் குண்டாகிறதில்லை. ஆகையால் பிராசீன நையாயிகர்கள் எம்மிருதங்கம், பேரி முதலியவைகளை எச்சத்தத்தின் நிமித்த காரணமாக வொப்புகின்றனரோ அம்மிருதங்கம், பேரி முதலியவைகட்கு சுவதந்திரர்களாகிய யாம் லௌகிக பிரதீதியின் வலிவால் சத்தத்தின் சமவாயி காரணம் ஒப்புகின்றனம். மிருதங்கம், பேரி முதலியவைகட்கு சத்தத்தின் நிமித்த காரணம் ஒப்பி, ஆகாயத்திற்கு சத்தத்தின் சமவாயி காரணம் ஒப்பும் நையாயிகர்கள் மதத்தில் மா கௌரவ தோஷம் சம்பவிக்கும்.

சங்கை:—உமது சுவதந்திரர்களின் மதத்தில் சத்தத்தைக்கிரஹிப்பதாகிய இந்திரியத்தின் சொரூபம் யாது? ஆண்டுச் சத்தத்தைக் கிரஹிக்கும் இந்திரியத்திற்கு இப்பிரசித்த பார்த்திவ கர்ண கோளகமே ஸ்வரூபமா மென்னும் விடை சுவதந்திரர் கூறின், செவிடனுக்கும் கர்ண கோளகமோ பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. ஆகையால் செவிடனுக்கும் சத்தத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகவேண்டும். ஆண்டு அச்சுவதந்திரர்கள் இது கூறுகின்றனர்; எப்பிராசீன நையாயிகர்கள் மதத்தில் கர்ண கோளக அவச்சின்ன ஆகாயத்திற்கே சுரோத்திர வடிவம் ஒப்புகின்றனரோ, அங்ஙனமே எந்நவீன நையாயிகர்கள் மதத்தில் அக்கர்ண கோளக அவச்சின்ன ஈஸ்வரனுக்கே சுரோத்திர

விந்திரிய வடிவ மொப்புகின்றனரோ அவர்கள் மதத்திலும் ஆகாய வடிவ சுரோத்திர விந்திரியத்திற்கும், ஈஸ்வர வடிவ சுரோத்திர விந்திரியத்திற்கும் நாச முண்டாவதில்லை. ஆகையால் சுரோத்திர விந்திரியத்தி னிருப்புள்ள செவிடனுக்கும் சத்தத்தின் பிரத்தியக்ஷம் ஏன் உண்டாகக்கூடாது? உண்டாக வேண்டும். ஆண்டுச் செவிடனிடத்து சத்தத்தினது பிரத்தியக்ஷத்தின் ஆபத்தி (சம்பவியாமை) வடிவ தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு நையாயிக ராம் நீவிர் இது கூறுதாவதாகும்; செவிடனது சரீரத்தில் ஓர் தோஷ விசேஷ மிருக்கின்றது. அத்தோஷ விசேஷமே சத்தத்தினது பிரத்தியக்ஷத்தின் பிரதி பந்தகமா மாகையால் சுரோத்திர இந்திரிய மிருக்கினும் தோஷ விசேஷத் தில் சத்தத்தினது பிரத்தியக்ஷத்தின் பிரதிபந்தகத் தன்மையின் கற்பனம் எங்ஙனம் நையாயிகராகிய உமது மதத்திலிருக்கின்றதோ, அங்ஙனமே அக்கற் பனம் எமது சுவதந்திரர்கள் மதத்திலு மிருக்கின்றது. ஆகையால் கர்ண கோ ளக மாத்திரத்திற்குச் சுரோத்திர இந்திரிய வடிவம் வொப்புவதிலும் செவிட னுக்கு சத்தத்தினது பிரத்தியக்ஷத்தில் ஆபத்தி சம்பவியாது. இங்ஙனமாக சுவதந்திரர்கள் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் அர்த்தத்தினோடு இந்திரி யத்தின் சையோகமின்றி ஓர் பிரத்தியக்ஷமு முண்டாகாது. ஆகையால் மிரு தங்க முதலிய பிருதிவிகளில் சமவேத சத்தத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு அச்சத்தத்தினோடு கர்ண கோளக வடிவ சுரோத்திர விந்திரியத்திற்கு ஓர் சம்பந்தங் கூறப்படவேண்டும். ஆண்டு சுவதந்திரர் சுரோத்திர இந்திரியத்திற்கு சத்தத்தினோடு சுவ சையோகி சம்புக்த சமவாய சம்பந்த மெனக்கூறின் முன் னர் சித்தமாய சையோக முதலிய அறு சம்பந்தங்களினும் வேறான இவ்வே ழாவது சம்பந்தத்தின் கற்பனம் செய்வதில் கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகும். ஈண்டு சுவவென்னும் சத்தத்தால் கர்ணகோளக சுரோத்திர வடிவ இந்திரியத்தினைக் கிரஹிக்குக. அதனது சையோகமுடைய ஆத்மா யாதோ அவ்வாத்மாவின் சையோகமுடையது அம்மிருதங்கமாம். அம்மிருதங்காதி வடிவப் பிருதிவியில் சத்தத்தின் சமவாய சம்பந்த மிருக்கின்றது. சையோக முடையதனையே சையோகி என்றும், சம்புக்தமென்றுங் கூறுவர்.

சமாதானம்:—ஏ நையாயிக! பார்த்திவக் கர்ணகோளக மாத்திரத்திற்கே யாம் சுரோத்திர இந்திரிய வடிவமொப்பின் எமதுமதத்தில் மிகுந்த சம்பந்தத் தின் கற்பன வடிவ தோஷம் பிராப்தமாகும். சுவதந்திரர்களாகிய யாம் கர்ண கோளக மாத்திரத்திற்கு சுரோத்திர வடிவம் ஒப்புவதில்லை. ஆனால் சைத்திர, மைத்திர முதலிய புருஷர்களின் கர்ண கோளக அவச்சின்ன ஆத்மா யாதோ அவ்வாத்மாவிற்கே யாம் சைத்திர, மைத்திர முதலிய புருஷர்களது சுரோத் திர விந்திரிய வடிவம் வொப்புகின்றனம். ஆகையால் அதிக சம்பந்தத்தின் கற்பனம் எமது மதத்தி லுண்டாகாது. பேரி, மிருதங்க முதலிய பிருதிவி யில் சமவேத சத்தத்தினோடு அவ்வாத்மா வடிவ சுரோத்திர இந்திரியத்தின் சையுக்த சமவாய சம்பந்தம் முன்னர் சித்தித்ததேயாம்.

சங்கை:—ஏ சுவதந்திரா! ஆத்மாவிற்கே நீவிர் சுரோத்திர விந்திரிய வடிவமொப்பின் ஒரே ஆத்மாவில் சத்தப் பிரத்தியக்ஷ வடிவ கிரியையின் கர்த்

தாத் தன்மையும், கரணத் தன்மையும் பிராப்தமாகிறது. அது முற்றும் விருத்தமாம். ஏனெனின் ஒரே வத்துவில் ஒரே கிரியைக்கு கர்த்தாத் தன்மையும், கரணத்தன்மையும் யாண்டுங் காணப்படுவதில்லை, அக்கர்த்தாவும், கரணமும் வெவ்வேறாகவே காணப்படுகின்றது. எங்ஙனம்: வெட்டுதல் வடிவ கிரியைக்கு புருஷன் கர்த்தாவும், கோடரி கரணமுமாகின்றது.

சமாதானம்:—ஏ நையாயிக! எங்ஙனம் "ஸ்வாத்மாநம்வேத்தி" (இ-ள்.) இப்புருஷன் தனது ஆத்மாவை அறிகிறான். என்னு மிவை முதலிய உணர்ச்சியில் ஒரே ஆத்மாவிற்கு ஞான வடிவ கிரியையின் கர்த்தாத் தன்மையும், கர்மத்தன்மையு முண்டாகின்றது. அக்கர்த்தாத்தன்மைக்கும், கர்மத்தன்மைக்கும், பரஸ்பரம் விரோத முண்டாகிறதில்லை. அங்ஙனமே ஒரே ஆத்மாவில் கர்த்தாத்தன்மையும், கரணத்தன்மையும் ஒப்புவதிலும் ஓர் விரோதமுமின்றாம். அல்லது எங்நையாயிகர்கள் சத்தத்தினை ஆகாயத்தின் குணமாகவும், கர்ண கோளக அவச்சின்ன ஆகாயத்தினை சுரோத்திர இந்திரிய வடிவமாகவும் ஒப்புகின்றனரோ அவர்கள் மதத்தில் சத்தத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு அச்சுரோத்திர விந்திரியத்திற்கு சத்தத்தினோடு சமவாய சம்பந்தம் ஒப்புவதாகிறது. அச்சமவாய சம்பந்தம் எமக்குச் சம்மதமின்று. இதுவும் எமது மதத்தில் நையாயிகர் மதத்தினும் லாகவ மிருக்கின்றது.

சங்கை:—ஏ சுவதந்திரா! நீவிர் ஆத்மாவிற்கு சுரோத்திர விந்திரய வடிவ மொப்பின் ஓர் வத்துவால் கர்ண கோளகம் மறைவுப்பட்ட விடத்தினும் சத்தத்தின் பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும்.

சமாதானம்:—ஏ நையாயிக! கர்ண கோளக அவச்சின்ன ஆகாயத்திற்கு சுரோத்திர விந்திரிய வடிவம் ஒப்புவோரான உமது மதத்திலும் ஓர் வஸ்துவால் மறைவுபட்ட சுரோத்திர வடிவ ஆகாயத்தில் சத்தத்தின் உற்பத்தி யுண்டாவதில் ஓர் பாதகமுமின்றாம். ஆனால் அச்சுரோத்திரத்தால் சத்தத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆகையால் மறைவைச்செய்வதான வத்துவில் சத்தத்தின் பிரத்தியக்ஷத்தினது பிரதி பந்தகத்தன்மையைக் கற்பிப்பதாகும். அங்ஙனமே சுவதந்திரராகிய யாமும் கர்ண கோளகத்தை மறைப்பதாகிய வத்துவில் சத்தத்தினது பிரத்தியக்ஷத்தின் பிரதிபந்தகத் தன்மையைக் கற்பிக்கின்றனம். ஆகையால் கர்ண கோளகம் மறைவுப்பட்ட காலத்தில் சத்தத்தினது பிரத்தியக்ஷத்தின்ஆபத்தி எமது மதத்தி லுண்டாகாது.

### ௨௪௪. சத்தத்தை பிருதிவி முதலிய ஐந்து பூதங்களின் குணமாக வொப்புவோரான வேதாந்திகளின் மத வர்ணனம்.

வேதாந்த சாத்திர மதமோ இதுவாம். கேவலம் ஆகாயமே சத்த குணத்திற்கு ஆசிரய பூதமன்றாம். ஆனால் ஆகாயம், வாயு, வன்னி, ஜலம், பிருதிவி என்னும் ஐந்து பூதங்களே சத்த குணத்தின் ஆசிரய வடிவமாம். ஈண்டிது கருத்தாம்; மாயா விசிஷ்ட பரமேஸ்வரனால் முதலில் ஆகாயம் உண்டாயிற்று. அவ்வாகாயத்தில் சத்த குணம் ஒன்றிருக்கின்றது. அவ்வாகாயத்தால் வாயு உண்டாயிற்று. அவ்வாயுவில் சத்தம், பரிசம் என்னு மிரு குணங்க ளிருக்கின்

றன. வாயுவால் வன்னி உண்டாயிற்று. அவ்வன்னியில் சத்தம், பரிசம், உருவம் என்னும் முக்குணங்களிருக்கின்றன. அவ்வன்னியால் ஜலம் உண்டாயிற்று அஜ்ஜலத்தில் சத்தம், பரிசம், உருவம், ரசம் என்னும் நான்கு குணங்களிருக்கின்றன. அஜ்ஜலத்தால் பிருதிவி உண்டாயிற்று. அப்பிருதிவியில் சத்தம், ஸ்பரிசம், உருவம், ரசம், கந்தம் என்னும் ஐந்து குணங்களிருக்கின்றன. இவ்வாறாக ஆகாய முதலிய ஐந்து பூதங்களிலேயே அச்சத்த குண மிருக்கின்றதென்னும் வேதாந்த சாத்திரத்தின் மதத்தை ஆத்ம புராணத்தின் பத்தாவது அத்தியாயத்தில் தைத்திரீய வுபநிஷதத்தின் வியாக்கியானத்தில் யாம் விரிவாய் நிரூபித்திருக்கின்றோம். அதை ஆண்டறிந்துக் கொள்க. ஆகாய நிரூபணம் முற்றிற்று.

## சகரு. கால வடிவத் திரவிய நிரூபணம்.

“விபுத்வே ஸதி திக்பிந்நத்வே ஸதி பரத்வா ஸமவாயிகாரணாதிகரணம் காலஃ” அல்லது “பரத்வா நாஶ்ரயத்வே ஸதி விஜாதீய பரத்வா ஸமவாயி காரண ஸம்யோகாஶ்ரயஃ காலஃ” அல்லது “அதீதாதி வ்யவஹாரஹேதுஃ காலஃ”.

## சகசு. காலத்தின் முதலாவது லக்ஷணம்.

மேற்கூறிய மூன்று லக்ஷணங்களுள் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் விபுவும் திசையில் அசமவேத (சமவாய சம்பந்தமாகவிராத) பரத்துவத்தின் (முன்மையின்) அசமவாயிகாரணத்திற்குஅதிகரணமுமாமோ அத்திரவியம் காலமெனப்படும். ஆண்டு இளைய சகோதரனது அபேக்ஷையால் மூத்தசகோதரனிடத்து காலிக (காலத்தாலுய) பரத்துவ மிருக்கின்றது. அப்பரத்துவ குணத்தின் சமவாயி காரணம் மூத்தோனது சரீரமாம். அம்மூத்தோனது சரீரத்தோடு காலத்தின் சையோக சம்பந்தம் அப்பரத்துவத்தின் அசமவாயி காரணமாம். அச்சையோக வடிவ அசமவாயி காரணம் திசையில் சமவாய சம்பந்தமாக இருப்பதில்லை. ஆனால் அம்மூத்தோனது சரீரத்திலும், காலத்திலுமே சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. ஆகையால் அப்பரத்துவத்தின் அசமவாயி காரண வடிவ சையோகத்திற்கு அக்காலம் ஆதாரமாம். அங்ஙனமே அக்காலம் விபுவுமாம். ஆகையால் கூறிய காலத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு “திக்கில் சமவாய சம்பந்தமாக இராத பரத்துவத்தின் அசமவாயி காரண அதிகரணம் காலம்” என விம்மாத்திரமே காலத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் “விபுவாயும்” என்னும் பதங் கூறாவிடின் மூத்தோனது சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அக்காலம் சையோக வடிவ அசமவாயி காரணத்தின் அதிகரணமாமோ அங்ஙனமே மூத்தோனது சரீரமும் அச்சையோகத்தின் அதிகரணமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் “விபுவாயும்” என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு மூத்தோனது சரீரத்தில் விபுத் தன்மையின்றாம். ஆகையால் மூத்தோனது சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்

டாகாது. அல்லது “விபுவும் பரத்துவ அசமவாயிகாரண அதிகரணமுமாயது காலம்” என இம்மாத்திரமே காலத்தின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் “திசையில் சமவாய சம்பந்தமாயிராத” என்னும் பதங்கூறாவிடின் திசையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அண்மையிடத்திலுள்ள கடத்தின் அபேக்ஷையால் சேய்மையிடத்திலுள்ள கடத்தில் திசையினலாய பரத்துவ மிருக்கின்றது. அப்பரத்துவத்தின் சமவாயி காரணமோ அக்கடமாம். அக்கடத்திேனாடுள்ள திசையின் சையோகசம்பந்தம் அப்பரத்துவத்தின் அசமவாயி காரணமாம். அச்சையோகத்தின் அதிகரணம் அத்திசையுமாம். அங்ஙனமே அத்திசை விபுவுமாம். அத்திசையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் “திசையில் சமவாய சம்பந்தமாயிராத” என்னு மிது அவ்வசமவாயி காரணத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு அக்கடத்திேனாடுள்ள திசையின் சையோக சம்பந்தம் அக்கடத்திலுள்ள பரத்துவத்தின் அசமவாயி காரணமாம். ஆயினும் அச்சையோகம் அத்திசையில் சமவாய சம்பந்தமாக இராததன்றாம். ஆனால் அத்திசையில் அச்சையோக சம்பந்தம் சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. ஆகையால் அத்திசையில் அக்காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது “விபுவும் திசையில் சமவாய சம்பந்தமாயிராத அசமவாயி காரண அதிகரணமுமாயது காலம்” என விம்மாத்திரமே காலத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “பரத்துவம்” என்னும் பதங் கூறாவிடின் ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் ஆத்மாவிேனாடுள்ள மனதின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோக சம்பந்தம் அவ்வாத்மாவிலிருப்பனவாகிய ஞான முதலிய குணங்களின் அசமவாயி காரணமுமாம். அச்சையோகம் அவ்வாத்ம மனதுகளிலேயே சமவாய சம்பந்தமாக விருக்கின்றது. அத்திசையிலிருப்பதில்லை. ஆகையால் அவ்வசமவாயி காரண வடிவ ஆத்ம மன சையோகம் திசையில் சமவாய சம்பந்தமாக இராததுமாம். இத்தகைய சையோக வடிவ அசமவாயி காரணத்தின் அதிகரணம் அவ்வாத்மாவுமாம். அங்ஙனமே அவ்வாத்மா விபுவுமாம். அவ்வாத்மாவில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திச் செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் “பரத்துவம்” என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாத்ம, மன சையோகம் ஞான முதலியவைகளின் அசமவாயி காரணமாயினும் பரத்துவத்தின் அசமவாயி காரணமன்றாம். ஆகையால் அச்சையோகத்தின் அதிகரணத் தன்மையைக் கொண்டு ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாக முதலாவது லக்ஷணம் சம்பவிக்கின்றது.

### ௪௧௭. காலத்தின் இரண்டாவது லக்ஷணம்.

“பரத்வா நாஶ்ரயஸமவேத விஜாதீய பரத்வா ஸமவாயிகாரண ஸம்யோகாஶ்ரய: கால:” என்னும் இரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தங் நிரூபிப்பாம். ஆண்டுப் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே பரத்துவம், அபரத்துவ மென்னு மிரு குணங்களிருக்கின்றன. ஆகாயம், காலம், திசை, ஆத்மா வென்னும் நான்கு விபுத்

திரவியங்களில் பரத்துவம், அபரத்துவமென்னு மிருகுணங்கள் இருப்பனவன்று. ஆகையால் அக்காலம் அப்பரத்துவ குணத்தின் ஆசிரயமுமன்றும். இளைய சகோதரனது அபேக்ஷயால் மூத்தசகோதரனிடத்து விஜாதீய பரத்துவ மிருக்கின்றது. அதாவது; திசையினாலாய பரத்துவத்தினும் வேறான காலத்தானாய பரத்துவமிருக்கின்றது. திசையினாலாய பரத்துவத்தினும் காலத்தானாய பரத்துவ அபரத்துவங்களின் விலக்ஷணத்தன்மையைப் பின்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் பரத்துவ, அபரத்துவ குணங்களின் நிரூபணத்தில் தெளிவாய்க்கூறுவாம். மூத்தோனது சரீரத்தோடுள்ள காலத்தின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோகம் அவ்விஜாதீய பரத்துவத்தின் அசமவாயி காரணமாம். அச்சையோகத்திற்கு ஆசிரய வடிவம் அக்காலமாம். ஆகையால் கூறிய அக்காலத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "விஜாதீய பரத்துவ அசமவாயிகாரண சையோகாசிரயம் காலம்" என விம்மாத்திரமே காலத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "பரத்துவத்தின் அனாசிரயமாய்" என்னும் பதங் கூறாவிடின் மூத்தோனது சரீரத்தில் அக்காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் அம்மூத்தோனது சரீரத்திலுள்ள பரத்துவம் யாதோ அப்பரத்துவத்தின் அசமவாயி காரணம் அச்சரீரத்தினோடுள்ள காலத்தின் சையோக சம்பந்தமாம். அச்சையோக சம்பந்தத்தின் ஆசிரயத் தன்மை எவ்வணம் காலத்தி லிருக்கின்றதோ அவ்வணமே அம்மூத்தோனது சரீரத்திலு மிருக்கின்றது. அம்மூத்தோனது சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பரத்துவத்திற்கு அனாசிரயமாய்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அம்மூத்தோனது சரீரம் பரத்துவ குணத்தின் அனாசிரய மன்றும்; பரத்துவ குணத்தின் ஆசிரயமேயாம். ஆகையால் மூத்தோனது சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது கூறிய லக்ஷணத்தில் "விஜாதீயம்" என்னும் பதங்கூறாவிடின் திசையில் காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் அண்மையிலுள்ள கடத்தின் அபேக்ஷயால் சேய்மையிலுள்ள கடத்திலிருக்கின்ற திசையினாலாய பரத்துவம் யாதோ அப்பரத்துவத்தின் அசமவாயி காரணம் அக்கடத்தினோடுள்ள திசையின் சையோக சம்பந்தமாம். அச்சையோக சம்பந்தத்தின் ஆசிரயத் தன்மை அத்திசையினு மிருக்கின்றது. அத்திசை அப்பரத்துவ குணத்தின் அனாசிரயமுமாம். அத்திசையில் அக்காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விஜாதீயம்" என்னுமிது பரத்துவத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டுக் காலத்தானாய பரத்துவத்தில் திக்கினாலாய பரத்துவத்தினும் வேறான தன்மை யாதோ அதுவே அப்பரத்துவத்தில் விஜாதீயத் தன்மையாம். இத்தகைய விஜாதீயத் தன்மை திசையினாலாய பரத்துவத்தி லிருப்பதில்லை; காலத்தானாய பரத்துவத்திலேயேயிருக்கின்றது. ஆகையால் அத்திசையில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது இந்த லக்ஷணத்தில் "விஜாதீய பரத்துவம்" என்னும் பதங் கூறாது "பரத்துவத்தின் அனாசிரயமாய் அசமவாயி காரண சை-

யோக ஆசிரயம் காலம்'' என இம்மாத்திரமே காலத்தின் லக்ஷணமாகக் கூறின் ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அவ்வாத்மா அப்பரத்துவகுணத்தின் அஞசிரயமும் அவ்வாத்மாவிலிருக்கும் ஞான முதலிய குணங்களின் அசமவாயி காரண ஆத்ம மன சையோகம் யாதோ அச்சையோகத்திற்கு அவ்வாத்மா ஆசிரயமுமாம். அவ்வாத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விஜாதீய பரத்துவம்'' என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாத்ம மன சையோகம் ஞான முதலிய குணங்களின் அசமவாயி காரணமாயினும் அவ்விஜாதீய பரத்துவத்திற்கு அசமவாயி காரணமன்றும். ஆகையால் அவ்வாத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாக காலத்தின் இரண்டாவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது.

## சகஎ. காலத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"அதீதாதி வ்யவஹாரஹேதுஃ காலஃ'' என்னும் மூன்றாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் வியவஹாரத்திற்கு ஏது யாதாமோ அது காலமெனப்படும். ஆண்டு இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் சத்தத்தினை வியவஹார மென்பர். அல்லது இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் ஞானத்தினை வியவஹார மென்பர். இவ்வாறாய வியவஹாரம் காலத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் இறப்பு முதலிய வியவஹாரத்திற்கு ஏதுத் தன்மை வடிவ காலத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—"இறப்பு முதலிய வியவஹாரத்திற்கு ஏது காலம்'' என்னும் லக்ஷணத்திலுள்ள ஏது வென்னும் சத்தம் யாதோ அவ்வேது சத்தம் கேவலம் காரண மாத்திரத்தின் வாசகமாகின்றது. அக்காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவிதமாகின்றது. ஈண்டு ஏது வென்னுஞ் சத்தத்தால் சமவாயி காரணத்தினையாவது, அசமவாயி காரணத்தினையாவது, நிமித்த காரணத்தினையாவது கிரஹிக்கவேண்டும். ஆண்டு ஏது வென்னுஞ் சத்தத்தால் சமவாயி காரணத்தை கிரஹிக்கின் சத்தத்தினை வியவஹார மென்னும் பக்ஷத்திலோ சத்தத்தின் சமவாயி காரண வடிவ ஆகாயத்தில் காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஞானத்தினை வியவஹார மென்னும் பக்ஷத்தில் ஞானத்தின் சமவாயி காரண வடிவ ஆத்மாவில் காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஆகையால் ஏது வென்னுஞ் சத்தத்தால் சமவாயி காரணத்தினை கிரஹித்தற் றகுதியன்று. அவ்வேது சத்தத்தால் அசமவாயி காரணத்தை கிரஹிக்கின், சத்தத்தினை வியவஹாரமென்னும் பக்ஷத்திலோ கண்டம், நா முதலியவைகளோடுள்ள ஆகாயத்தின் சையோகம் யாதோ அதுவே அச்சத்தத்தின் அசமவாயி காரணமாம். அச்சையோகத்தில் அக்காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஞானத்தினை வியவஹார மென்னும் பக்ஷத்தில் ஆத்மாவினேடுள்ள மனதின் சையோக சம்பந்தம் யாதோ அதுவே ஞானத்தின் அசமவாயி காரணமாம். அவ்வாத்ம மன சையோகத்தில் காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்

டாம். ஆகையால் அவ்வேது வென்னுஞ் சத்தத்தால் அசமவாயி காரணத்தையுங் கொள்ளற்றகுதியன்று. அவ்வேது சத்தத்தால் நிமித்த காரணத்தை கிரஹிக்கின் எங்ஙனம் காலம் இறப்பு முதலிய வியவஹாரத்திற்கு நிமித்த காரணமாமோ அங்ஙனமே திசை, ஈஸ்வரன், அதிர்ஷ்டம் முதலியனவும் அந்த வியவஹாரத்திற்கு நிமித்த காரணங்களாம். ஆகையால் திசை, ஈஸ்வரன், அதிர்ஷ்ட முதலியவைகளில் காலத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஆகையால் ஏது வென்னுஞ் சத்தத்தால் நிமித்த காரணத்தையுங் கொள்ளற்றகுதியன்று.

சமாதானம் :—கூறிய லக்ஷணத்திலுள்ள ஏது வென்னுஞ் சத்தத்தால் சமவாயி காரணத்தையாவது, அசமவாயி காரணத்தையாவது, சாதாரண நிமித்த காரணத்தையாவது யாம் கூறக்கருதியதன்று. ஆனால் அசாதாரண நிமித்தகாரணமே கூறக்கருதியதாம். இறப்பு முதலிய வியவஹாரங்களின் அசாதாரண நிமித்த காரணத் தன்மை கேவலம் காலத்திலேயே யிருக்கின்றது. வேறோர் பதார்த்தத்திலின்றும். ஆகையால் கூறிய அக்காலத்தின் லக்ஷணத்திற்கு யாண்டும் அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் அக்காலத்தின் சித்தி சம்பவிக்கின்றது.

சங்கை :—லக்ஷணம், பிரமாண மென்னு மிரண்டினுனேயே வத்துவின் சித்தி யுண்டாகின்றது. லக்ஷணம், பிரமாணமின்றி ஓர் வத்துவின் சித்தியும் உண்டாகாது. ஆகையால் அந்த லக்ஷணத்தை சித்தி செய்யும் பொருட்டு அக்காலத்திற்கு ஓர் லக்ஷணமும், பிரமாணமும் அவசியங் கூற வேண்டும். முன்னர் அக்காலத்தின் லக்ஷணமோ கூறப்பட்டது. காலத்தில் ஓர் பிரமாணமுங் கூறப்படவில்லை. உத்பூத உருவ, உத்பூத பரிசத்தின் அபாவத்தால் காலத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணமோ சம்பவியாது. ஆகையால் அக்காலத்தின் சித்தியின் பொருட்டுப் பிரத்தியக்ஷத்தினும் வேறாகவே ஓர் பிரமாணங் கூறப்படவேண்டு மென்னுஞ் சங்கை யுண்டாக இனி அனுமானப் பிரமாணத்தால் காலத்தின் சித்தியைச் செய்வாம்.

### சசக. அநுமானப் பிரமாணத்தால் காலத்தின் சித்தி.

இளைய சகோதரனது அபேக்ஷையால் மூத்த சகோதரனிடத்து இவன் முதியோ னென்னும் பரத்துவ ஞானம் உண்டாகின்றது. மூத்த சகோதரனிடத்து இவன் இளையோ னென்னும் அபரத்துவ ஞானம் உண்டாகின்றது. பரத்துவ, அபரத்துவ ஞானங்கள் முறையாக முதியோன், இளையோனிடத்துள்ள காலத்தானுய பரத்துவ, அபரத்துவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் இவன் முதியோன், இவன் இளையோன் என்னும் பிரத்தியக்ஷப் பிரதீதியின் வலிவால் காலிகபரத்துவ, அபரத்துவங்களை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். ஆகையால் இவ்வநுமானம் சித்திக்கின்றது. "ஜ்யேஷ்ட கநிஷ்ட ஶரீர நிஷ்ட பரத்வாபரத்வே அஸமவாயிகாரணஜந்யே ஜந்ய ஸங்க்யாத் ரூபவத்" (இ-ள்.) அம்மூத்தோனது சரீரத்திலுள்ள பரத்வ குணமும், இளை

யோனது சரீரத்திலுள்ள அபரத்துவ குணமும் யாதோ அப்பரத்துவ, அபரத்துவ குணங்கள் அசமவாயி காரணத்தால் உண்டாக யோக்கியமாம், ஜன்னிய குணமாவதால், ஏது வெது ஜன்னிய குணமாமோ அதுவது அசமவாயி காரணத்தால் உண்டாவதேயாகின்றது. எங்ஙனம்: படத்திலுள்ள உருவ குணம் ஜன்னிய குண மாவதால் அசமவாயி காரணத்தால் உண்டாவதுபோலும். ஆண்டு தந்துக்களின் உருவமே அப்படத்தின் உருவத்திற்கு அசமவாயி காரணமாம். அங்ஙனமே பரத்துவ, அபரத்துவ குணங்களும் ஜன்னிய குணமாவதால் ஓர் அசமவாயி காரணத்தால் அவசியம் ஜன்னியமாகும். ஆண்டு பரத்துவ, அபரத்துவங்கட்கு கால பிண்டங்களின் சையோக மின்றி வேறோர் அசமவாயி காரணம் சம்பவியாது. மூத்தோனது சரீரத்தோடும், இளையோனது சரீரத்தோடுமுள்ள காலத்தின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோக சம்பந்தமே பரத்துவ, அபரத்துவங்கட்கு அசமவாயி காரணமாம். அவ்வசமவாயி காரண வடிவ சையோகத்தின் ஆசிரய வடிவமாக அக்காலத்தின் சித்தி சம்பவிக்கின்றது. அக்காலத்தின் சாதகமாகிய இவ்வநுமானத்தில் "குணமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "ஜன்னியம்" என்னும் பதங் கூறுவிடின் பரமாணுவிலுள்ள வுருவ முதலிய நித்திய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் அந்த நித்திய குணங்களில் குணத்தன்மைவடிவ ஏதுவோ இருக்கின்றது. அசமவாயி காரண ஜன்னியத்தன்மை வடிவ சாத்தியம் ஆண்டிருப்பதில்லை. அச்சாத்தியத்தின் அபாவமுடைமை நித்திய குணங்களில் இருப்பதாவதால் குணத் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திசெய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஜன்னியம்" என்னுமிது குணத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு நித்திய குணங்களில் எங்ஙனம் அசமவாயி காரண ஜன்னியத் தன்மை வடிவ சாத்திய மின்றோ அங்ஙனமே ஜன்னிய குணத் தன்மை வடிவ ஏதுவுமின்றும். ஆகையால் நித்திய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது அவ்வநுமானத்தில் "ஜன்னியமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில், "குணம்" என்னும் பதங் கூறுவிடின் பிரத்துவம்சாபாவத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின், கட முதலியவைகளின் பிரத்துவம்சாபாவம் சமவாயிகாரணத்தாலும், அசமவாயிகாரணத்தாலும் உண்டாவதன்று; கேவலம் நிமித்தகாரணத்தானேயேயுண்டாகின்றது. ஆகையால் பிரத்துவம்சாபாவத்தில் ஜன்னியத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது; அசமவாயி காரண ஜன்னியத்தன்மை வடிவ சாத்திய மின்றும். அச்சாத்தியத்தின் அபாவமுடைமை பிரத்துவம்சா பாவத்தி லிருப்பதாவதால் அஜ்ஜன்னியத் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும் அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிரத்துவம்சாபாவத்தில் எங்ஙனம் அசமவாயிகாரண ஜன்னியத்தன்மை வடிவ சாத்தியமின்றோ அங்ஙனமே ஜன்னிய குணத்தன்மை வடிவ ஏதுவு மின்றும். ஆகையால் பிரத்துவம்சாபாவத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது.

சங்கை:—மூத்தோனது சரீரத்திலுள்ள காலத்தானுய பரத்துவத்திற்கும், இளையோனது சரீரத்திலுள்ள காலத்தானுய அபரத்துவத்திற்கும் முதியோன், இளையோனது சரீரத்தோடுள்ள காலத்தின் சையோகம் ஓர்கால் அசமவாயி காரணமாகுமாயின் அச்சையோகத்தின் ஆசிரய வடிவமாக காலத்தின் சித்தி யுண்டாகும். ஆனல் பரத்துவ, அபரத்துவத்திற்கு அக்காலத்தின் சையோகம் அசமவாயி காரணமன்ரும். முதியோன், இளையோன் சரீரத்திலுள்ள உருவம், ரசம், கந்தமென்னும் முக்குணங்களில் யாதாமோர் குணம் பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணமாகும். ஆகையால் முற்கூறிய அநுமானத்தால் அக்காலத்தின் சித்திச் சம்பவியாது.

சமாதானம்:—அவ்வுருவ முதலிய முக்குணங்கட்கு பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணத் தன்மை சம்பவியாது. ஏனெனின் அவ்வுருவ முதலிய முக்குணங்கள் வாயுவிலின்ரும். வாயுவிலும் காலத்தானுய பரத்துவ, அபரத்துவமோ உண்டாவதாகின்றது. ஆகையால் அவ்வுருவ முதலிய முக்குணங்கள் பரத்துவ அபரத்துவத்தின் அசமவாயி காரணமன்ரும். ஓர்கால் அவ்வுருவ முதலிய குணங்கள் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாகுமாயின் அம் முக்குணங்களில்லா வாயுவில் பரத்துவ, அபரத்துவ குணங்கள் உண்டாகா.

சங்கை:—எங்ஙனம் முதியோன், இளையோன் சரீரத்தில் பரிச குணமிருக்கின்றதோ அங்ஙனமே வாயுவிலும் பரிச குண மிருக்கின்றது. ஆகையால் யாண்டும் அப்பரிச குணமே பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாகும்.

சமாதானம்:—எத்திரவியத்தில் பரிச குண மிருக்கின்றதோ அத்திரவியத்தில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் ஐந்துகுணங்களும் அவசியமிருக்கின்றன. அவ்வறு குணங்களில் எக்குணம் அப்பரத்துவ, அபரத்துவங்களின் அசமவாயி காரணமா மென்னும் நிச்சயம் உண்டாகமாட்டா. ஏனெனின், அப்பரிச முதலிய அறு குணங்களுள் பரிச குணமொன்றே பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாம் மற்றைய சங்கியை முதலிய ஐந்து குணங்கள் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமன்ரு மென்னும் அர்த்தத்தை நிச்சயிக்கும் யுக்தியின்ரும். அங்ஙனமே அச்சங்கியை முதலிய ஐந்து குணங்களில் யாதாமோர் குணம் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாம் அப்பரிச குணம் பரத்துவத்தின் அசமவாயி காரண மன்ரு மென்னும் அர்த்தத்தை நிச்சயிக்கும் யுக்தியுமின்ரும். இத்தகைய அர்த்தத்தை சித்தி செய்வதாகிய யுக்தியின் அபாவம் சாத்திரத்தில் வினிகமன விரகமெனக் கூறப்பட்டிருக்கின்றது. யாண்டு வினிகமன விரகமுண்டாகிறதோ ஆண்டு யாவற்றிற்குமே அக்காரணத் தன்மை பிராப்தமாகிறதில்லை. ஆகையால் அப்பரிச முதலிய அனேக குணங்களில் பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணத் தன்மை யொப்புவதைவிட அக்கால சையோக மொன்றில் அப்பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணத் தன்மை யொப்புவதில் அத்தியந்தம் லாகவ மிருக்கின்றது. ஆகையால் கால

சரீரங்களின் சையோகமே பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணமாக ஒப்புவது நலமுடைத்தாம்.

சங்கை :—முதியோன், இளையோன் சரீரத்தோடுள்ள பிருதிவியின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோகமே பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணமாகும். ஆகையால் கூறிய அநுமானத்தால் அக்காலத்தின் சித்திச் சம்பவியாது.

சமாதானம் :—பிருதிவியின் சையோகத்தினை பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணமாக ஒப்பின் எப்பொழுதும் ஆகாயத்தில் சஞ்சரிப்பனவாகிய நக்ஷத்திர முதலியவைகளோடு பிருதிவியின் சையோக மின்றும். ஆகையால் அந்நக்ஷத்திர முதலியவைளில் பரத்துவ, அபரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகாததாக வேண்டும். நக்ஷத்திர முதலியவைகளிலும் பரத்துவ, அபரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் பிருதிவியின் சையோகம் பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணமன்றும்.

சங்கை :—ஆகாயம், திசை, ஆத்மா, மன மென்னும் நான்கனுள் ஆகாயத்தோடு, அல்லது திசையினேடு, அல்லது ஆத்மாவினேடு, அல்லது மனதினேடுள்ள முதியோன், இளையோனது சரீரத்தின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோகமே பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாகும். ஆகையால் அச்சையோகத்தின் ஆசிரய வடிவமாக காலத்தின் கற்பனஞ் செய்வது பயனின்மையாம்.

சமாதானம் :—ஆகாயம், திசை, ஆத்மா, மனமென்னும் நான்குத் திரவியங்களுள் ஓர் திரவியத்தின் சையோகம் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாம் ஏனைய மூன்றுத் திரவியங்களின் சையோகம் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமன்று என ஓர் திரவியத்தின் சையோகத்தில் பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணத் தன்மையை நிச்சயஞ் செய்வதாகிய யுக்தி ஒன்றுமின்றும். ஆகையால் வினிகமன விரகத்தால் ஆகாயம், திசை முதலிய நான்குத் திரவியங்களின் சையோகத்திற்கு சமான வடிவமாக பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது. அவற்றின் அபேக்ஷையால் காலமொன்றின் சையோகத்திற்கு பரத்துவ அபரத்துவத்தின் அசமவாயி காரணத் தன்மை வொப்புவதில் அத்தியந்தம் லாகவ மிருக்கின்றது. ஆகையால் அக்கால பிண்ட சையோகமே பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாம். இத்தகைய சையோகத்தின் ஆசிரய வடிவமாக அக்காலத்தின் சித்திச் சம்பவிக்கின்றது.

### ௩௨௦. வேறு அநுமானத்தால் காலத்தின் சித்தி.

சில நூலாசிரியரோ இவ்வநுமானப் பிரமாணத்தால் காலத்தின் சித்தியைச் செய்கின்றனர். சூரியனது மிகுந்த கிரியைகளோடு விசிஷ்ட பிண்ட ஞானத்தால் காலத்தானுய பரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. சூரியனது குறைந்த கிரியைகளோடு விசிஷ்ட பிண்ட ஞானத்தால் காலத்தானுய அபரத்துவத்தின் சித்தி யுண்டாகின்றது. அதாவது; அப்பிண்டம், இப்பிண்டத்தின்

அபேக்ஷையால் சூரியனது மிகுந்த கிரியைகளுடையதா மென்னும் விசிஷ்ட ஞானத்தால் அப்பிண்டத்தில் காலத்தாலுய பரத்துவத்தின் உற்பத்தியுண்டாகின்றது. இப்பிண்டம் அப்பிண்டத்தின் அபேக்ஷையால் சூரியனது குறைந்த கிரியைகளுடையதாகின்ற தென்னும் விசிஷ்ட ஞானத்தால் இப்பிண்டத்தில் காலத்தாலுய அபரத்துவத்தின் உற்பத்தியுண்டாகின்றதென்னும் நியமம் நியாயசாத்திரத்தின் சித்தாந்தமாம். ஆகையால் இவ்வநுமானம் சித்தமாகின்றது. "தத்விஶிஷ்டஜ்ஞாநம் விஶேஷண விஶேஷ்யாஶ்ரய ஸம்பந்த ஸாபேக்ஷம் ஸாக்ஷாத்ஸம்பந்தாபாவவத்வே ஸதி விஶிஷ்டஜ்ஞாநத்வாத் யோ ஹி தஸ்யஃ ஜ்ஞாநவத்" (இ-ள்.) இச்சரீராதி வடிவ பிண்டம் சூரியனது அனேக கிரியைகளுடையனவா மென்னும் ஞானம் அதாவது காலத்தாலுய பரத்துவத்தின் நிமித்தகாரண வடிவ விசிஷ்ட ஞானம் கிரியா வடிவ விசேஷணமும், பிண்ட வடிவ விசேஷியமுமா மிரண்டினது சம்பந்தத்தை நிகழச் செய்யும் பதார்த்தத்தின் அபேக்ஷையுடையதாக யோக்கியமாம், விசேஷண, விசேஷியமுமாமிரண்டின் சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவமுள்ளதாக விசிஷ்ட ஞானமாவதால், எவ்வெவ் ஞானம் விசேஷண, விசேஷியமுமா மிரண்டின் சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவமுள்ளதாக விசிஷ்ட ஞான மாகின்றதோ அவ்வவ் ஞானம் விசேஷண, விசேஷியமுமா மிரண்டின் சம்பந்தத்தினை நிகழச் செய்யும் பதார்த்தத்தின் அபேக்ஷையுடையதும் அவசியமாகும். எங்ஙனம்: ஸ்படிகம் சிகப்பு என்னும் விசிஷ்ட ஞானம் போலும். ஆண்டு இந்த ஞானத்தில் வெண்மை நிறமுடைய ஸ்படிகமோ விசேஷியமும், செம்மைநிறம் விசேஷணமுமாம். ஆண்டு செந்நிற விசேஷணம் சாக்ஷாத் சம்பந்தமாகவோ அப்படிகத்தி லிருப்பதில்லை. அதாவது; சையோகம், சமவாயமா மிரண்டின் சம்பந்தங்களை சாக்ஷாத் சம்பந்த மென்பர். இத்தகைய சாக்ஷாத் சம்பந்தமாக செந்நிறமாகிய விசேஷணம் அப்படிகத்தி லிருப்பதில்லை. செம்பருத்திப் புட்ப முதலிய திரவியங்களிலேயே செந்நிறம் சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமாக இருக்கின்றது. செம்பருத்திப் புட்ப முதலியத் திரவியங்களுக்கு அப்படிகத்தினோடு சையோக சம்பந்த முண்டாகின்றது. ஆகையால் சுவசமவாயி சையோக வடிவ பரம்பரைச் சம்பந்தமாக அச்செந்நிறம் அப்படிகத்தில் காணப்படுகின்றது. ஈண்டு சுவவென்னுஞ் சத்தத்தால் செந்நிறத்தினைக் கொள்ளுக. செந்நிறத்தின் சமவாயி காரணம் செம்பருத்திப் புட்ப முதலிய திரவியங்களாம் அச்செம்பருத்திப் புட்ப முதலிய திரவியங்களின் சையோக சம்பந்தம் அப்படிகத்தோடிருக்கின்றது. இவ்வாறாக செந்நிற விசேஷணத்திற்கு படிக வடிவ விசேஷியத்தோடு சுவசமவாயி சையோக வடிவ பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது. அச்சம்பந்தத்தை நிகழச் செய்வது செம்பருத்திப் புட்ப முதலிய திரவியங்களாம். ஆகையால் படிகம் செந்நிறம் என்னும் விசிஷ்ட ஞானம் செந்நிற விசேஷணத்தினதும், படிக வடிவ விசேஷியத்தினதும் சையோக சமவாய வடிவ சாக்ஷாத்சம்பந்தத்தின் அபாவமுளதாகியும் விசிஷ்டஞானவடிவமாம். ஆகையால் அந்த விசிஷ்ட ஞானம் கூறிய விசேஷண, விசேஷியமா மிரண்டினது சம்பந்தத்தை நிகழச் செய்யும் செம்பருத்திப் புட்ப முதலிய திரவியத்

தின் அபேக்ஷையுடையதுமாம். அங்ஙனமே இப்பிண்டம் சூரியனது அனேக கிரியைகளுடையதா மென்னும் விசிஷ்ட ஞானத்திலும் சூரியனது அனேக கிரியைகளோ விசேஷண வடிவமாம். சரீராதி வடிவபிண்டம் விசேஷிய வடிவமாம். ஆண்டு அக்கிரியா வடிவ விசேஷணத்திற்கு பிண்ட வடிவ விசேஷியத்தோடு சையோக சம்பந்த வடிவ சாக்ஷாத் சம்பந்த மின்றாம். ஆனால் சுவசமவாயி சையுக்த சையோக வடிவ பரம்பரைச் சம்பந்தமேயிருக்கின்றது. ஈண்டு சுவவென்னுஞ் சத்தத்தால் சூரியனது கிரியை வடிவ விசேஷணத்தை யறிக. அக்கிரியையின் சமவாயி காரணம் சூரியனும். சூரியனது சையோக முடையது அக்காலமாம். காலத்தின் சையோக சம்பந்தம் அப்பிண்டத்திலிருக்கின்றது. இவ்வாறாக சூரியனது கிரியை வடிவ விசேஷணத்திற்கு பிண்டவடிவ விசேஷியத்தோடு சுவசமவாயி சையுக்த சையோக வடிவபரம்பரைச் சம்பந்தமிருக்கின்றது. அப்பரம்பரைச் சம்பந்தத்தை நிகழச்செய்வது, அக்காலமாம். ஆகையால் இப்பிண்டம் சூரியனது அனேக கிரியைகளுடையதா மென்னும் விசிஷ்ட ஞானம் யாதோ அவ்விசிஷ்ட ஞானம் கிரியை வடிவ விசேஷணத்திற்கு பிண்ட வடிவ விசேஷியத்தோடு சையோக சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவ முளதாகியும் விசிஷ்ட ஞான வடிவமாம். ஆகையால் அந்த விசிஷ்ட ஞானம் விசேஷண, விசேஷியமா மிரண்டின் சம்பந்தத்தை நிகழச் செய்யும் கால வடிவத் திரவியம் யாதோ அக்காலத்தின் அபேக்ஷையுடையதும் அவசியமாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தாலும் அக்காலத்தின் சித்தி சம்பவிக்கின்றது. ஆண்டுக் கூறிய இவ்வநுமானத்தில் "விசிஷ்டஞானமாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "சாக்ஷாத் சம்பந்த அபாவமுளதாக" என்னும் பதங் கூறாவிடின் "உருவமுடையது கடம்" என்னும் ஞானத்தில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின், அந்த ஞானத்தில் விசிஷ்ட ஞானத் தன்மை ஏதுவோ இருக்கின்றது. ஆனால் விசேஷண,விசேஷியமாமிரண்டின் சம்பந்தத்தை நிகழச் செய்யும் பதார்த்தத்தின் அபேக்ஷயுடைமை வடிவ சாத்திய மின்றாம். எக்காரணத்தாலெனின் அவ்வுருவ விசேஷணம் அக்கட வடிவ விசேஷியத்தில் சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமாகவே இருக்கின்றது. வேறோர் பதார்த்தம் பொருந்திய பரம்பரைச் சம்பந்தத்தால் இருப்பதில்லை. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவமுளதாக என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு "உருவமுடையது" என்னும் ஞானத்தில் உருவ விசேஷணத்திற்கு கட வடிவ விசேஷியத்தோடு சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவ மின்றாம்; சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமே இருக்கின்றது. ஆகையால் உருவமுடையது கடம் என்னும் விசிஷ்ட ஞானத்தில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது.

### ௨௨௪. சுருதி, சிமிருதி பிரமாணத்தால் காலத்தின் சித்தி.

கூறிய அநுமானப் பிரமாணத்தால் அக்காலம் சித்திப்பதுடன் சுருதி, சிமிருதி பிரமாணத்தாலும் அக்காலம் சித்தமாம். ஆண்டுச் சுருதி "ஜநாந்ய வஸ்துதா நாம் ஸகாலஃ பரிகீர்த்திதஃ" (இ-ள்.) உண்டான எல்லாப்

பதார்த்தங்களின் வயதை கணக்கிடுவதால் அது காலமெனப்படுகின்றது. ஆண்டு ஸ்மிருதி "காலஃ கலயதாமஹம்" (இ-ள்.) ஜன்னிய பதார்த்தங்களின் வயதை கணக்கிடுபவைகளுள் காலம் யான்.

சஉஉ. காலத்திலிருப்பதாகிய ஐந்து குணங்களின் வர்ணனம்.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணப் பிரமாணத்தால் சித்தமாய காலத்தில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாக மென்னும் ஐந்து குணங்களிருக்கின்றன. இத்தகைய காலத் திரவியமும் முற்கூறிய ஆகாயத்தைப் போன்று ஒன்றும், விபுவும், நித்தியமுமாம்.

சஉங. காலத்தினது ஏகத்துவத்தின் சாதக யுக்தி.

ஆண்டு காலத்தின் நாநாவாகா வொப்புவதில் ஒன்றே கௌரவதோஷத்தின் அடைவு வுண்டாகின்றது. காலத்தை யொன்றாக வொப்புவதில் கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகாது. ஆகையால் லாகவமாக காலத்தை வொன்றாக வொப்ப வேண்டும். காலத்தின் நாநாத் தன்மையில் ஓர் பிரமாணமுமின்றாம். இக்காரணத்தாலும் காலத்தை ஒன்றாகவே யொப்ப வேண்டும்.

சஉச. காலத்தின் விபுத்தன்மையின் சாதக யுக்தி.

காலத்தினது காரிய வடிவ காலத்தானய பரத்துவ, அபரத்துவம் யாதோ அப்பரத்துவ, அபரத்துவ வடிவ் காரியத்தின் உணர்ச்சி யாண்டும் உண்டாகின்றது. காரியத்தின் உற்பத்தி காரண மின்றி யுண்டாகாது. ஆகையால் யாண்டாண்டு பரத்துவ, அபரத்துவத்தின் உணர்ச்சி யுண்டாகின்றதோ ஆண்டாண்டு அக்காலத்தின் சையோகம் அங்கீகரிக்கப்படவேண்டும். அக்காலத்தினை விபுவாக வொப்பினலன்றி அச்சையோகம் யாண்டும் சம்பவியாது. ஆகையால் காலத்தை விபுவாக வொப்ப வேண்டும். இவ்வாறுய யுக்தியால் காலத்தில் விபுத் தன்மையே சித்தமாகின்றது.

சஉரு. காலத்தின் நித்தியத் தன்மையினது சாதக யுக்தி.

எவ்வெத் திரவியம் விபுவாமோ அவ்வத்திரவியம் நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: விபுவாவதால் ஆத்மா நித்தியமாம். அங்ஙனமே விபுவாவதால் காலத்தையும் நித்தியமாகவே ஒப்ப வேண்டும். அல்லது காலத்தின் உற்பத்தியிலும், நாசத்திலும் ஓர்பிரமாணமின்றாம். ஆகையாலும் காலத்திற்கு நித்தியத் தன்மை ஒப்பவேண்டும். முன்னர் ஆகாயத்தின் நிரூபணத்தில் ஆகாயத்தின் ஒருமைத்தன்மைக்கும், விபுத்தன்மைக்கும் கூறிய லக்ஷணம் யாதோ அதே லக்ஷணம் ஈண்டும் காலத்தின் ஒருமைத் தன்மைக்கும், விபுத்தன்மைக்கும் அறிந்துக் கொள்க. நித்தியத் தன்மையின் லக்ஷணமோ முன்னர் பிருதிவி நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம், அதே லக்ஷணம் ஈண்டு காலத்தின் நித்தியத்தன்மைக்கும் அறிந்துக் கொள்க.

௪௨௬. காலத்தில் எல்லா ஜகத்தினது ஆதாரத் தன்மையின் சாதக யுக்தி.

"காலஃ ஸர்வாது" (இ-ள்.) காலம் சர்வ பதார்த்தங்களையுடையதாம். என்னும் ஞானம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுணர்ச்சியின் வலிவால் அக்காலத்திற்கு சர்வ பதார்த்தங்களின் அதிகரணத் தன்மைச் சித்தமாகின்றது. ஆகையால் அக்காலம் சர்வ ஜகத்தின் ஆதார வடிவமாம். அதாவது; காலத்தானுய சம்பந்தத்தால் சர்வ பதார்த்தங்கள் காலத்திலிருக்கின்றன. ஆகையால் அக்காலத்தில் காலத்தானுய சம்பந்தத்தால் சர்வஜகத்தின் ஆதாரத்தன்மைச் சம்பவிக்கின்றது.

௪௨௭. காலத்தில் காரிய மாத்திரத்தினது நிமித்த காரணத் தன்மையின் சாதக யுக்தி.

காலம் காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமாம். காலமின்றி ஓர் காரியமும் உண்டாகாது. ஏனெனின் "இதாநீம் கடோ ஜாயதே" (இ-ள்.) இக்காலத்தில் கடம் உண்டாகிறது. என்று மிவை முதலிய உணர்ச்சி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுணர்ச்சியின் வலிவால் அக்காலத்திற்கு கட முதலிய எல்லாப் பாதார்த்தங்களைக் குறித்து நிமித்த காரணத் தன்மைச் சித்தமாகின்றது. ஆகையால் அக்காலம் சர்வ காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமாம்.

சங்கை:—இக்காலத்தில் கடம் உண்டாகிற தென்னும் இவைமுதலிய உணர்ச்சிகளால் காலத்திற்கு கட முதலிய சர்வ பதார்த்தங்களின் நிமித்த காரணத் தன்மை எங்ஙனம் சித்தமாகும்.

சமாதானம்:—இக்காலத்தில் கடம் உண்டாகிறது, இன்றைய தினம் மடம் உண்டாயிற்று, நாளைய தினம் படம் உண்டாகுமென்னும் இவை முதலிய உணர்ச்சிகள் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுணர்ச்சிகள் அவ்வக்கட, படாதி வடிவ காரிய விசேஷத்தினது உற்பத்தியின் அதிகரண வடிவமாக அவ்வவ்நிகழ்கால, இறந்தகால, எதிர்கால விசேஷத்தை விஷயஞ் செய்கின்றது. எவ்வெப் பதார்த்தம் எவ்வெக் காரியத்தினது உற்பத்தியின் அதிகரண வடிவமாக வியவஹாரத்தின் விஷயமாகின்றதோ அவ்வப் பதார்த்தம் அவ்வக்காரியத்தினது உற்பத்திக்கு நியமமாக ஏதுவுமாகின்றது. எங்ஙனம்: "தந்துஷு படஉத்பத்யதே" (இ-ள்.) தந்துக்களில் படம் உண்டாகின்றது. என்னும் உணர்ச்சியால் அத்தந்து அப்படத்தினதுஉற்பத்தியின் அதிகரண வடிவமாக வியவஹாரத்தின் விஷயமாகின்ற தாகையால் அத்தந்து அப்படத்தின் உற்பத்திக்கு ஏதுவுமாம். அங்ஙனமே அக்காலமும் அவ்வக்காரியத்தின் உற்பத்தியின் அதிகரண வடிவமாக வியவஹாரத்தின் விஷயமாகின்றது. ஆகையால் அக்காலம் அவ்வக்காரியத்தின் உற்பத்திக்கு அவசிய மேதுவுமாகும். எவ்வெப் பதார்த்தம் எவ்வெக் காரியத்தின் உற்பத்திக்கு ஏதுவாமோ அவ்வப்பதார்த்தம் அவ்வக்காரியத்திற்கும் நியமமாய் ஏதுவாகின்றது. எங்ஙனம்: தந்துவானது படத்தின் உற்பத்திக்கு ஏதுவாவ

தால் பட வடிவ காரியத்திற்கும் ஏதுவேயாம். அங்ஙனமே அக்காலமும் அக்கட முதலிய காரியங்களுக்கும் அவசியம் ஏதுவாகும். இவ்வாறாய யுக்தியால் அவ்வக்கட, படாதி வடிவ காரிய விசேஷத்தைக் குறித்து அவ்வவ் நிகழ்வு, எதிர்வு, இறப்பு வடிவ கால விசேஷத்திற்குக் காரணத் தன்மைச் சித்தமாகின்றது.

## சஉ௬. விசேஷ, சாமான்னிய பதார்த்தங்கட்கு காரண காரிய பாவ விரோத மின்மையின் வர்ணனம்.

இது நூலாசிரியர்கள் நியமமாம் "யத்விசேஷயோ: கார்யகாரணபாவ: தத்ஸாமான்யயோரபி கார்யகாரணபாவ:" (இ-ள்.) விசேஷ பதார்த்தங்கட்கு பரஸ்பர காரிய காரண பாவ முண்டாக பாதகமில்லாதிருக்கும் சாமான்னிய பதார்த்தங்கட்கும் பரஸ்பர காரிய காரண பாவமு முண்டாகின்றது. எங்ஙனம்: கிராண இந்திரியத்திற்கு கிராணஜப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத் தன்மை யிருக்கின்றது. ரசன இந்திரியத்திற்கு ராசனப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத்தன்மை யிருக்கின்றது. சக்ஷு இந்திரியத்திற்கு சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத் தன்மை யிருக்கின்றது. துவக்கிந்திரியத்திற்கு துவாசப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத்தன்மை யிருக்கின்றது. சுரோத்திர இந்திரியத்திற்கு சுரௌத்திரப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத் தன்மை யிருக்கின்றது. மன இந்திரியத்திற்கு மானசப் பிரத்தியக்ஷத்தைக் குறித்தே காரணத் தன்மை யிருக்கின்றது. இவ்வாறாக கிராண முதலிய விசேஷ இந்திரியங்கட்கும், கிராணஜ முதலிய விசேஷப் பிரத்தியக்ஷங்கட்கும் பரஸ்பரம் காரண காரியபாவம் பிரசித்தமாம். அவ்விந்திரியங்கட்கும், அந்தப் பிரத்தியக்ஷஞானங்கட்கும் சாமான்னியமாக காரிய காரணம் ஒப்புவதில் ஓர் பாதகமுமின்றாம், ஆகையால் இந்திரியத் தன்மை தர்மாவச்சின்ன இந்திரியத்திற்கு பிரத்தியக்ஷ தர்மாவச்சின்ன பிரத்தியக்ஷ ஞானத்தைக் குறித்து காரணத் தன்மை யிருக்கின்றது. இவ்வாறாக சாமான்னிய காரிய காரண பாவமும் ஆண்டு அவசிய முண்டாகின்றது. இக்காரணத்தாலேயே "இந்த்ரியஜந்யஜ்ஞாநம் ப்ரத்யக்ஷம்" என ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே முற்கூறிய யுக்திகளின் வலிவால் அவ்வக்கட, படாதி வடிவ காரிய விசேஷத்தைக் குறித்து அவ்வவ் நிகழ்வு, எதிர்வு, இறப்பு வடிவ கால விசேஷத்திற்கு காரணத் தன்மை அவசியம் ஒப்புவதாகின்றது. அங்ஙனமே அவ்வவ் ருது வடிவ கால விசேஷத்திலாவ்தாகிய வெய்யல், மழை, மாம்பழ முதலிய காரிய விசேஷங்களைக் குறித்து அவ்வவ் ருது வடிவ கால விசேஷத்திற்கு காரணத் தன்மை அவசியம் ஒப்புவதாகும். இவ்வாறாக அவ்வக் காரிய விசேஷத்தைக் குறித்து அவ்வக்கால விசேஷத்திற்குக் காரணத்தன்மையின் சித்தியுண்டாக அவைகளின் சாமான்னிய காரிய காரண பாவத்தில் ஓர் பாதகமு மின்றாம். ஆகையால் "யத்விசேஷயோ: கார்யகாரணபாவ:" என முற்கூறிய நியமத்தின் வலிவால் காரியத்தன்மைத் தர்மத்தால் அவச்சின்ன காரியமாத்திரத்தைக்குறித்து காலத்தன்மைத் தர்மத்தால் அவச்சின்ன

காலத்திற்கு அவசியம் காரணத் தன்மை ஒப்புவதாகும். இவ்வாறாய யுக்தியால் அக்காலத்திற்கு சர்வ காரிய மாத்திரத்தின் காரணத்தன்மைச் சித்தமாகின்றது. சர்வ காரிய மாத்திரத்தின் காரணத் தன்மையும் நிமித்த காரண வடிவமாகவே அறிக. அதாவது காரிய மாத்திரத்தைக் குறித்து அக்காலம் நிமித்த காரணமாம்.

சங்கை:—காரிய மாத்திரத்தைக் குறித்து அக்காலத்திற்கு நிமித்த காரணத்தன்மைக் கூறியது சம்பவியாது. ஏனெனின் காலத்தில் சமவாய சம்பந்தமாக உண்டாவதாகிய இருமை, வேற்றுமை, சையோகம், விபாக மென்னும் குணங்களைக் குறித்து அக்காலம் சமவாயி காரணமேயாகின்றது. சமவாயி காரணம், அசமவாயி காரண மென்னும் இரு காரணங்களினும் வேறான காரணத்தினை நிமித்த காரண மென்பர். ஆகையால் அவ்விருமை முதலிய குணங்களைக் குறித்து சமவாயி காரண வடிவ காலத்திற்கு இருமை முதலிய குணங்களைக் குறித்து நிமித்த காரணத் தன்மைச் சம்பவியாது. ஆனால் அவ்விருமை முதலியவைகளை விட்டு வேறு ஜன்னிய காரிய மாத்திரத்திலேயே காலத்திற்கு நிமித்த காரணத் தன்மைக் கூறுவதாகும். ஆகையால் காரிய மாத்திரத்தைக் குறித்து காலம் நிமித்த காரணமெனக் கூறுவது அசங்கதமாம்.

சமாதானம்:—காலத்திற்கு எல்லாக் காரியத்தைக் குறித்துள்ள நிமித்த காரணம் யாதோ அது காலத்தானாய சம்பந்தத்தானேயாம். ஆகையால் தன்னிடத்துள்ள இருமை முதலியவைகளைக் குறித்து சமவாய சம்பந்தமாக காலத்திற்கு சமவாயிகாரணத்தன்மையுளதாயினும் காலத்திற்கு காலத்தானாய சம்பந்தத்தால் அவ்விருமை முதலியவைகளைக்குறித்து நிமித்த காரணத் தன்மையில் ஓர் பாதகமுமின்றாம். ஆகையால் அக்காலம் காலத்தானாய சம்பந்தத்தால் சர்வகாரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமேயாம்.

## ௩௨௯. காலத்தின் நாநாத் தன்மையினது சாதக வாதியின் சங்கை.

சங்கை:—காலத்தின் பேதத்தில் ஓர் பிரமாணமுமின்றா மாகையால் காலம் ஒன்றேயாமென முற்கூறியது சம்பவியாது. ஏனெனின் இறப்பு, நிகழ்வு, எதிர்வு, க்ஷணம், நிமிஷம், கடிகை, முகூர்த்தம், யாமம், நாள், இரவு, பக்ஷம், மாதம், ருது, அயனம், வருடம் என்னுமிவை முதலிய கால வேறுபாடுகள் உலகர் யாவருக்கும் பிரதீதியாகின்றது. அவ்வுலகத் தோற்றத்தின் வலிவானேயே அக்காலத்தின் வேறுபாடு சித்திக்கின்றது. ஆகையால் அக்காலம் ஒன்றன்று; நாநாவாம்.

## ௩௩௦. காலத்தில் ஔபாதிக (உபாதியினாலாய) நாநாத் தன்மையின் சித்தி.

சமாதானம்:—எங்ஙனம் உண்மையில் வேறுபாடில்லாத ஒருவன் சமைத்தல், பாடுதல் முதலிய கிரியா வடிவ உபாதிகளின் வேறுபாட்டால் சமைப்போன், பாடுவோன் இவை முதலிய நாநாப் பெயர்களைப் பெறுகின்றானோ, அங்ஙனமே உண்மையாக வேறுபாடில்லாத ஒரே காலம் உபாதிகளின் வேறுபாட்டால் இறப்பு முதலிய நாநாப் பெயர்களைப் பெறுகின்றது.

## சஅக. பிராசீன, நவீன மத வேறுபாட்டால் காலத்தின் உபாதியின் வர்ணனம்.

ஆண்டு சூரியன் முதலியவைகளின் கிரியையே காலத்தின் உபாதிகளாகின்றன வென்பது பிராசீன நையாயிகர்கள் மதமாம். ஜன்னிய வத்து மாத்திரமே காலத்தின் உபாதிகளாகின்றன வென்பது நவீன நையாயிகர்கள் மதமாம். ஆகையால் இவ்வர்த்தம் சித்தமாயிற்று. முன்னர் அதீதமாய (கழிந்துள்ள) சூரியனது கிரியை யாதோ அவ்வதீதமாய கிரியை வடிவ விசேஷணத்தோடு விசிஷ்டமாகிய (கூடிய) அக்காலம் அதீதகாலம் எனப்படுகின்றது. வர்த்தமான (நிகழ்கின்ற) சூரியனது கிரியை வடிவ விசேஷணத்தோடு கூடிய காலம் வர்த்தமான காலமெனப்படுகின்றது. பின்னர் உண்டாகப் போகிற சூரியனது கிரியை யாதோ அந்த பவிஷ்யத் (எதிர்) கால கிரியை வடிவ விசேஷத்தோடு கூடும் காலம் பவிஷ்யத் காலமெனப்படுகின்றது. இவ்வாறாக நவீன நையாயிகர்கள் மதத்தில் கிரியையுள்ள விடத்தில் ஜன்னிய வத்துவினை பிரயோகித்து அக்காலத்தில் அதீதாதி வடிவத் தன்மையை அறிந்துக் கொள்க. அதாவது; அதீத ஜன்னிய வத்து விசிஷ்ட காலம் அதீத (இறந்த) காலமெனப்படுகின்றது. வர்த்தமான ஜன்னிய வத்து விசிஷ்ட காலம் வர்த்தமான (நிகழ்) காலமெனப்படுகின்றது. பவிஷ்யத் ஜன்னிய வத்து விசிஷ்ட காலம் பவிஷ்யத் (எதிர்) காலமெனப்படுகின்றது. இவ்வாறாக ஒரே காலம் அதீதாதி வடிவ கிரியையோடு கூடி அல்லது அதீதாதி ஜன்னிய வத்துவோடு கூடி அவ்வதீத முதலிய பெயர்களைப் பெறுகின்றது. அப்பெயர்களின் வேறுபாடு பெயர்களைப் பெற்றதின் ஒருமைத் தன்மையை நிவர்த்திச் செய்கிறதில்லை. எங்ஙனம்: சமைத்தல், பாடுதல் இவை முதலிய பெயர்களின் வேறுபாடு பெயரைப் பெற்ற புருஷனது ஒருமைத் தன்மையை நிவர்த்திச் செய்கிறதில்லை. இனி காலத்தின் உபாதி வடிவ கிரியையிலும், ஜன்னிய வத்துவிலும் அதீதத் தன்மை, வர்த்தமானத் தன்மை, பவிஷ்யத் தன்மையினை நிரூபிப்பாம்.

## சஅஉ. அதீதத் தன்மையின் லக்ஷணம்.

"வர்த்தமாநத்வம்ஸப்ரதியோகித்வம் அதீதத்வம்" (இ-ள்.) இக்காலத்தில் வர்த்தமான துவம்சத்தின் பிரதியோகித் தன்மையினை அதீதத்தன்மை யென்பர். இவ்வர்த்தமானத்திற்கு முன் எவ்வளவு சூரியனது கிரியைகள் உண்டாகி நாசமாயினவோ அங்ஙனமே எவ்வளவு ஜன்னிய பதார்த்தம் உண்டாய் நாசமாயினவோ அவ்வெல்லாக் கிரியைகளின் துவம்சமும், அவ்வெல்லா ஜன்னிய பதார்த்தங்களின் துவம்சமும் இவ்வர்த்தமான காலத்திலிருக்கின்றது. இவ்வர்த்தமானத் துவம்சத்தின் பிரதியோகித் தன்மை அக்கிரியைகளிலும், அஜ்ஜன்னிய பதார்த்தங்களிலும் இருக்கின்றது. இதுவே அக்கிரியைகளிலும் அஜ்ஜன்னிய பதார்த்தங்களிலும் அதீதத்தன்மையாம்.

## சஅஙு. வர்த்தமானத் தன்மையின் லக்ஷணம்.

"ஸ்வப்ராகபாவாநதிகரணகாலவ்ருத்தித்வம் வர்த்தமாநத்வம்" (இ-ள்.) கிரியையினதும், ஜன்னியபதார்த்தத்தினதும் துவம்சத்திற்கும், பிராக

பாவத்திற்கும் அதிகரண மாகாத காலத்தில் கிரியையினதும், ஜன்னிய பதார்த்தத்தினதும் இருப்பு யாதோ அதுவே அக்கிரியையிலும், ஜன்னிய பதார்த்தத்திலும் வர்த்தமானத் தன்மையாம். ஆண்டு உற்பத்தி க்ஷண முதலாக நாசமாம் க்ஷணம் வரையில் எவ்வளவு காலத்தில் அக்கிரியையும், அஜ்ஜன்னிய பதார்த்தமும் இருக்கின்றதோ அக்காலம் அக்கிரியையினதும், ஜன்னிய பதார்த்தத்தினதும் பிராகபாவத்தின் அதிகரண மன்றும். ஏனெனின் அக்கிரியா வடிவ பிரதியோகியினதும், ஜன்னிய பதார்த்த வடிவ பிரதியோகியினதும் உற்பத்தியால் அக்கிரியையின் பிராகபாவமும், ஜன்னிய பதார்த்தத்தின் பிராகபாவமும் நஷ்டமாய் விடுகின்றது. அக்காலம் அக்கிரியையினதும், ஜன்னிய பதார்த்தத்தினதும் பிரத்துவம்சா பாவத்திற்கும் அதிகரணமன்றும். எக்காரணத்தா லெனின் கிரியையினதும், ஜன்னிய பதார்த்தத்தினதும் பிரத்துவம்சாபாவம் பின்னர் விநாச க்ஷணத்தில் உண்டாவதாம். இத்தகைய துவம்சத்தினதும், சுவப் பிராகபாவத்தினதும் அதிகரண மல்லாத காலத்தில் அக்கிரியையினதும், ஜன்னிய பதார்த்தத்தினதும் இருப்பு சம்பவிக்கின்றது. இதுவே அக்கிரியையிலும், ஜன்னிய பதார்த்தத்திலும் வர்த்தமானத் தன்மையாம்.

## ௩௱௨௪. பவிஷ்யத் தன்மையின் வர்ணனம்.

"வர்த்தமானப்ராகபாவ ப்ரதியோகித்வம் பவிஷ்யத்த்வம்" (இ-ள்.) எவ்வெக் கிரியைகளும், ஜன்னிய பதார்த்தங்களும் வர்த்தமான காலத்திற்குப் பின் உண்டாவனவாமோ அவ்வக்கிரியைகளதும், அவ்வஜ்ஜன்னிய பதார்த்தங்களதும் பிராகபாவம் இவ்வர்த்தமான காலத்தில் இருக்கின்றது. இவ் வர்த்தமானப் பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மை அவ்வக் கிரியையிலும், அவ்வஜ்ஜன்னிய பதார்த்தத்திலு மிருக்கின்றது. இதுவே அக்கிரியையிலும், ஜன்னிய பதார்த்தத்திலும் பவிஷ்யத் தன்மையாம். அல்லது எங்ஙனம் ஒரே காலம் கிரியா வடிவ உபாதியின் வேறுபாட்டால் அதீத, வர்த்தமான, பவிஷ்யத் என்னும் வியவஹாரத்தின் விஷயமாமோ அங்ஙனமே ஒரே காலம் உபாதியின் சம்பந்தத்தால் க்ஷண முதலிய வியவஹாரத்தின் விஷயமுமாம்.

## ௩௱௨௫. முதல் க்ஷண உபாதியின் வர்ணனம்.

"ஸ்வஜந்யவிபாகப்ராகபாவாவச்சின்ன கர்ம ப்ரதமக்ஷணோபாதி:" (இ-ள்.) எக்கிரியா வடிவ கர்மம் எவ்விபாகத்தை உண்டாக்குகின்றதோ அவ் விபாகத்தின் பிராகபாவத்தோடு கூடியுள்ள கர்மம் யாதோ அவ்விபாகப் பிராகபாவ விசிஷ்ட கர்மம் முதல் க்ஷணத்தின் உபாதியாம். ஆண்டுக் கட முதலிய மூர்த்தத் திரவியங்களில் எக்கிரியா வடிவ கர்மம் உண்டாவதாகின்றதோ அக் கர்மம் இரண்டாவது க்ஷணத்தில் அக்கடத்தின் விபாகத்தை முன்னிடத்தினின்றும் உண்டாக்குகின்றது. விபாகத்தின் உற்பத்தி க்ஷணத்தில் அவ்விபாகத்தின் பிராகபாவம் நாசமாய் விடுகின்றது. ஆகையால் தன்னாற் றோன்றிய விபாகத்தின் பிராகபாவ விசிஷ்டமான அக்கர்மம் ஒரே க்ஷணத்தி லிருக்

கின்றது. அக்கர்மம் தனது உற்பத்தி க்ஷணத்திலிருந்து ஐந்தாவது க்ஷணத்தில் நாசமாகின்றதெனினும் அவ்வளவு காலமட்டும் அவ்விபாகப் பிராகபாவ வடிவ விசேஷணம் இருப்பதில்லை. ஆனால் அக்கர்மத்தினது உற்பத்தியின் இரண்டாவது க்ஷணத்திலேயே அவ்விபாகத்தின் பிராகபாவம் நாசமாய் விடுகின்றது. அவ்விபாகப் பிராகபாவ வடிவ விசேஷணம் அனாதியாவதால் அக்கர்ம வடிவ விசேஷியத்தின் உற்பத்திக்கு முன்னமே இருப்பதாயினும் அம்முற்காலத்தில் அக்கர்ம வடிவ விசேஷியமின்றாம். விசேஷண விசேஷிய முமாமிரண்டி னிருப்புளதாகியே விசிஷ்ட வியவஹாரம் உண்டாகின்றது. ஒவ்வொன்றி னிருப்புளதாக அவ்விசிஷ்ட வியவஹாரம் உண்டாவதில்லை. அவ்விபாகப் பிராகபாவ வடிவ விசேஷணத்தின் இருத்தற் றன்மையும், கர்ம வடிவ விசேஷியத்தின் இருத்தற் றன்மையும் அக்கர்மத்தின் உற்பத்தி க்ஷணத்திலேயே யுண்டாகின்றது. ஆகையால் எக்ஷணத்தில் அக்கர்மம் உண்டாவதாகின்றதோ அக்ஷணத்தில் அக்கர்மம் தன்னூற் றோன்றிய விபாகப் பிராகபாவ வடிவ விசேஷணத்தோடு விசிஷ்டமாகின்றது. அக்ஷணத்திற்கு முற் க்ஷணத்திலும், பிற் க்ஷணத்திலும் அக்கர்மம் அவ்விபாகப் பிராகபாவ வடிவ விசேஷணத்தோடு விசிஷ்டமாவதில்லை. ஆகையால் தன்னூற்றோன்றிய விபாகப் பிராகபாவ விசிஷ்ட கர்மத்தில் முதற் க்ஷணத்தின் உற்பத்தி வடிவத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஆண்டு "விபாகப் பிராகபாவ அவச்சின்ன கர்மம் முதற் க்ஷண வுபாதி" என இம்மாத்திரமே முதற் க்ஷணத்தினது உபாதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சுவஜன்னிய" என்னு மிதை விபாகத்தின் விசேஷணமாகக் கூறாவிடின் நான்கு க்ஷணமட்டும் இருப்பதாகிய அக்கர்மத்தில் முதற் க்ஷண உபாதியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அக்கடத்திலுள்ள முதற் கிரியையின் நாசத்திற்குப் பின் அக்கடத்திலுண்டாவதான இரண்டாவது கிரியையால் உண்டாகும் கடத்தின் முன்னிட விபாகம் யாதோ அவ்விபாகத்தின் பிராகபாவம் அநாதியாவதால் முதற் கிரியை யிருக்குங் காலத்திலும் அக்கடத்தி லிருக்கின்றது. ஆகையால் அவ்விரண்டாவது கிரியையா லுண்டான விபாகத்தின் பிராகபாவ விசிஷ்டமாயுள்ள அம் முதற்கிரியை நான்கு க்ஷண மட்டு மிருக்கின்றது. அக் கிரியையில் கூறிய அந்த உபாதியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திச் செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "சுவஜன்னிய" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்விரண்டாவது கிரியையால் உண்டான விபாகத்தில் முதற் கிரியையால் உண்டாந் தன்மையின்றாம். ஆகையால் அவ் விபாகப் பிராகபாவ முதற்கொண்டு நான்கு க்ஷணமட்டும் நிலைத்துள்ள முதற் கிரியையில் முதற் க்ஷண உபாதியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—இவ்வாற்றால் முதற் க்ஷணத்தில் க்ஷண வியவஹாரத்தைக் கூறுவதாயினும் இரண்டாவது க்ஷணத்தில் அந்த க்ஷண வியவஹாரத்தைக் கூறுவது எங்ஙன முண்டாம்? எக்காரணத்தா லெனின் அவ்விரண்டாவது க்ஷணத்தில் அக்கிரியா ஜன்னிய விபாகத்தின் உற்பத்தி யுளதாக விபாகத்தின்

பிராகபாவம் சம்பவியாது. ஆண்டு அவ்விரண்டாவது க்ஷணத்தில் முதற் கிரியையினும் வேறாக வேறு கிரியை அக்கடத்தில் உண்டாவதாகின்றது அவ் வேறு கிரியையே அம்முதற் கிரியையைப்போன்று தன்னாற்றோன்றிய விபாகப் பிராகபாவத்தோடு கூடியுள்ள வேறு க்ஷணத்தின் உபாதியாகின்றதெனக் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் ஒரே கடத்தில் க்ஷண க்ஷணத்தில் வெவ்வேறு கிரியையின் உற்பத்தி யொப்புவதில் ஓர் பிரமாணமு மின்றாம். ஆகையால் தன்னாற் றோன்றிய விபாகப் பிராக பாவ விசிஷ்ட கர்ம வடிவ உபாதியின் அபாவத்தால், அவ்விரண்டாவது க்ஷணத்தில் க்ஷண வியவஹாரம் உண்டாகாதென்னும் சங்கை யுண்டாக இனி அவ்விரண்டாவது க்ஷணத்திலும் க்ஷண வியவஹாரத்தைச் சம்பாதிக்கும் உபாதியினை வர்ணிப்பாம்.

## ௪௩௩. இரண்டாவது க்ஷண உபாதியின் வர்ணனம்.

"ஜந்யவிபாகநாஶ்யஸம்யோகவிஶிஷ்ட ஜந்யவிபாகஃ த்விதீய க்ஷணோபாதிஃ" (இ-ள்.) ஈண்டு இரு சுவசத்தங்களால் அக்கர்ம வடிவ கிரியையினைக் கொள்ளுக. அக்கிரியையா லுண்டான விபாகம் யாதோ அவ்விபாகத்தால் நாசமாக யோக்கியமாகிய முதற் சையோகத்தோடு கூடிய அக்கிரியா ஜன்னிய விபாகம் யாதோ அம்முதற் சையோக விசிஷ்ட விபாகம் அவ்விரண்டாவது க்ஷணத்தின் உபாதியாம். ஈண்டு இது கருத்தாம்; முதற் க்ஷணத்தில் கடத்தில் கிரியை யுண்டாவதாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அக்கடத்திற்கு முன்னிருந்த இடத்தினின்றும் விபாகம் உண்டாகின்றது. அக்கடத்தின் விபாக குணத்திற்கு அக்கடத்தின் கிரியை அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் அவ்விபாகம் அக்கிரியையாற் றோன்றியதெனப் படுகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அவ்விபாகம் அக்கடத்தின் முன்னிடத்தோடுள்ள சையோகத்தினை நாசஞ் செய்கின்றது. ஆகையால் அம்முதற் சையோகம் அவ்விபாகத்தால் நாசமாவதெனப்படுகின்றது. இத்தகைய முதற் சையோகத்தோடு விசிஷ்டமாயுள்ள அக்கிரியா ஜன்னிய விபாகம் ஓர் க்ஷண மாத்திரமே யிருக்கின்றது. க்ஷணத்திற்கு மேல் இருப்பதில்லை. அக்கிரியையா லுண்டான விபாகம் பின்னுண்டாம் சையோகத்தால் நாசமாவதால் மூன்று க்ஷணமட்டு மிருக்கின்றது. என்றாலும் அவ்விபாக வடிவ விசேஷியத்தின் ஸ்திதி பரியந்தம் அம்முதற் சையோக வடிவ விசேஷணம் இருப்பதில்லை. ஆனால் அம்முதற் சையோகம் அவ்விபாகத்தினது உற்பத்தியின் இரண்டாவது க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றது. முதற் சையோக வடிவ விசேஷணம் அவ்விபாக வடிவ விசேஷியத்தின் உற்பத்திக்கு முன்னரு மிருக்கின்றது. என்றாலும் அக்காலத்தில் அவ்விபாகம் உண்டாகவில்லை. விசேஷண விசேஷியமாமிரண்டின் இருப்புளதாகியே அவ்விசிஷ்ட வியவஹார முண்டாகின்றது. ஒன்றின் இருப்புளதாக அவ்விசிஷ்ட வியவஹார முண்டாவதில்லை. அம்முதற் சையோக வடிவ விசேஷணத்தின் இருப்புத் தன்மையும், விபாக வடிவ விசேஷியத்தின் இருப்புத் தன்மையும் அவ்விரண்டாவது க்ஷணத்திலேயே யுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்திற்கு முற் க்ஷணத்திலும், பிற் க்ஷணத்திலும் உண்டாகிறதில்லை. ஆகையால் எவ்விரண்டாவது க்ஷணத்தில் அவ்விபாகம்

உண்டாகின்றதோ அவ்விரண்டாவது க்ஷணத்திலேயே அவ்விபாகம் முதற் சையோகத்தோடு விசிஷ்டமாகின்றது. அந்த க்ஷணத்தினும் முற் க்ஷணத்தினும், பிற் க்ஷணத்திலும் அவ்விபாகம் அம்முதற் சையோகத்தோடு விசிஷ்டமாவதில்லை. ஆகையால் அம்முதற் சையோகத்தோடு விசிஷ்ட விபாகத்தில் அவ்விரண்டாவது க்ஷணத்தின் உபாதி வடிவத்தன்மைச் சம்பவிக்கின்றது.

௪௩௭. மூன்றாவது க்ஷண உபாதியின் வர்ணனம்.

இனி மூன்றாவது க்ஷணத்திலும் க்ஷண வியவஹாரத்தைச் சம்பாதிக்கும் உபாதியினை வர்ணிப்பாம் "பூர்வஸம்யோக நாஶாவச்சிந்நோத்தர ஸம்யோக ப்ராகபாவ: த்ருதீயக்ஷணோபாதி:" (இ-ள்.) முதற் சையோகத்தின் நாசத்தோடு விசிஷ்ட பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவம் யாதோ அது மூன்றாவது க்ஷணத்தின் உபாதியாம். ஈண்டு கருத்திதுவாம்; முதற் க்ஷணத்தில் கடத்தில் கிரியை யுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அக்கிரியையால் அக்கடத்திற்கு முன்னிருந்தவிடத்தோடு விபாகம் உண்டாகின்றது. முன்னிடத்தோடுள்ள அக்கடத்தின் சையோகம் யாதோ அச்சையோகத்தை நாசஞ் செய்வது அக்கிரியையா லுண்டாம் விபாகமேயாம். ஆகையால் மூன்றாவது க்ஷணத்தில் அவ்விபாகத்தால் அம்முதற் சையோகத்தின் நாசம் உண்டாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அக்கடத்திற்கு அக்கிரியையா லுண்டான வேறிடத்தோடுள்ள சையோகம் யாதோ அப்பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவம் அம்மூன்றாவது க்ஷணத்தில் அக்கடத்தில் இருக்கின்றது. முதற் சையோகத்தின் நாசமும் அம்மூன்றாவது க்ஷணத்தில் இருக்கின்றது. ஆகையால் அம்முதற் சையோக நாசவடிவ விசேஷணத்தோடு கூடிய பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவம் ஓர் க்ஷணமட்டுமே யிருக்கின்றது. ஓர் க்ஷணத்திற்கு மேல் இருப்பதில்லை. ஏனெனின், எப்பிராகபாவத்தின் பிரதியோகியினை உண்டாக்குங் காரண சாமக்கிரி யாதோ அக்காரண சாமக்கிரியே அப்பிராக பாவத்தினை நாசஞ் செய்வதாகின்றது. ஆகையால் எந்நான்காவது க்ஷணத்தில் பின்னுண்டாம் சையோக வடிவப் பிரதியோகியின் உற்பத்தி யுண்டாகின்றதோ அந்நான்காவது க்ஷணத்திலேயே பின்னுண்டாம் சையோகத்தினது பிராகபாவத்தின் நாசம் உண்டாகின்றது. அப்பிராகபாவம் அநாதியாமாகையால் எம்மூன்றாவது க்ஷணத்தில் அம்முதற் சையோகத்தின் நாச முண்டாகின்றதோ அம்மூன்றாவது க்ஷணத்திற்கு முற்காலத்திலும் பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவம் இருக்கின்றது. என்றாலும், அம்முற்காலத்தில் அம்முதற் சையோகத்தின் நாச வடிவ விசேஷணத் தன்மையின்றாம். அம்முதற் சையோகத்தின் நாச வடிவ பிரத்துவம்சாபாவம் அநந்தமாம் (முடிவில்லாததாம்). ஆகையால் எந்நான்காவது க்ஷணத்தில் பின்னுண்டாம் சையோகத்தினது பிராகபாவத்தின் நாசமிருக்கின்றதோ அந்நான்காவது க்ஷணத்திற்குப் பிற்காலத்திலும் முற்சையோகத்தின் நாச வடிவ விசேஷணம் இருக்கின்றது. என்றாலும் அப்பிற்காலத்தில் பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவ வடிவ விசேஷியம் இருப்பதில்லை. விசேஷண விசேஷியமா மிரண்டின் இருப்புளதாகியே அவ்

விசிஷ்ட வியவஹார முண்டாகின்றது. ஒன்றினிருப்புளதாக அவ்விசிஷ்ட வியவஹார முண்டாவதில்லை. அம்முதற் சையோக வடிவ விசேஷணத்தின் இருப்புத் தன்மையும், பின்னுண்டாம் சையோக பிராகபாவ வடிவ விசேஷியத்தின் இருப்புத் தன்மையும் அம்மூன்றுவது க்ஷணத்திலேயே யுண்டாகின்றது. அம்மூன்றுவது க்ஷணத்திற்கு முற்காலத்திலும், பிற்காலத்திலும் விசேஷண, விசேஷியமுமா மிரண்டின் இருப்புத்தன்மை யுண்டாகிறதில்லை. ஆகையால் முதற் சையோகத்தின் நாசத்தோடு கூடிய பின்னுண்டாம் சையோகத்தின் பிராகபாவத்தில் அம்மூன்றுவது க்ஷணத்தின் உபாதி வடிவத் தன்மைச் சம்பவிக்கின்றது.

## சஙௌ. நான்காவது க்ஷண உபாதியின் வர்ணனம்.

"உத்தரஸம்யோகப்ராகபாவாவச்சின்ன கர்ம சதுர்த்த க்ஷணோபாதி" (இ-ள்.) எக்கிரியா வடிவ கர்மத்தால் அக்கடத்திற்கு வேறிடத்தோடு சையோக முண்டாகிறதோ அப்பின்னுண்டாகிய சையோகத்தோடு கூடிய அக்கர்மம் நான்காவது க்ஷணத்தின் உபாதியாகின்றது. சண்டு கருத்திதுவாம்; முதற்க்ஷணத்தில் கட முதலிய மூர்த்தத் திரவியத்தில் கிரியை யுண்டாகின்றது, இரண்டாவது க்ஷணத்தில் அக்கிரியையால் அக்கடத்திற்கு முன்னிருந்த இடத்தினின்றும் விபாகம் உண்டாகின்றது, மூன்றுவது க்ஷணத்தில் அவ்விபாகத்தால் அக்கடத்திற்கு முன்னிருந்த இடத்தோடுள்ள சையோகம் நாசமாகின்றது, நான்காவது க்ஷணத்தில் அக்கிரியையால் அக்கடத்திற்கு வேறிடத்தோடு சையோக முண்டாகின்றது, அவ்வேறிட சையோகமே அக்கிரியையின் நாசஞ் செய்வதாம். ஆகையால் அப்பின்னுண்டாகிய சையோகத்தால் ஐந்தாவதுக்ஷணத்தில் அக்கிரியை நாசமாய் விடுகின்றது. எந்நான்காவது க்ஷணத்தில் அக்கிரியையினுண்டான பின்னுண்டாம் சையோகம் உண்டாகின்றதோ அந்நான்காவது க்ஷணத்தில் அக்கிரியை இருக்கின்றது. ஆகையால் அப்பின்னுண்டாகிய சையோக வடிவ விசேஷணத்தோடு கூடியுள்ள அக்கிரியை வடிவ கர்மம் அவ்வொரே க்ஷணத்திலேயே இருக்கின்றது. அந்நான்காவது க்ஷணத்தினும் முற்காலத்திலும், பிற்காலத்திலும் இருப்பதில்லை. எந்நான்காவது க்ஷணத்தில் அப்பின்னுண்டாம் சையோகம் உண்டாகின்றதோ அந்நான்காவது க்ஷணத்திற்கு முன்னரும் மூன்றுவது க்ஷண வடிவ காலத்தில் அக்கர்ம வடிவ விசேஷியமிருக்கின்றது. என்றாலும் அக்காலத்தில் அப்பின்னுண்டாம் சையோகவடிவ விசேஷண மின்றும். அப்பின்னுண்டாம் சையோக வடிவ விசேஷணம் அந்நான்காவது க்ஷணத்திலிருந்து இரண்டாவது கிரியா ஜன்னிய விபாகமட்டுமிருக்கின்றதென்றாலும் அக்காலம் வரையில் அக்கர்ம வடிவ விசேஷியமிருப்பதில்லை. விசேஷண, விசேஷியமா மிரண்டின் இருப்புளதாகியே அவ்விசிஷ்ட வியவஹார முண்டாகின்றது. ஒன்றினிருப்புளதாக அவ்விசிஷ்ட வியவஹார முண்டாகிறதில்லை. அப்பின்னுண்டாம் சையோக வடிவ விசேஷணத்தின் இருப்புத் தன்மையும், அக்கர்ம வடிவ விசேஷியத்தின் இருப்புத் தன்மையும் நான்காவது க்ஷணம் ஒன்றிலேயே யிருக்கின்றது. அந்நான்காவது க்ஷணத்தினும் முற் க்ஷணத்திலும், பிற க்ஷணத்திலும் அவ்விரண்டின்

இருப்புத் தன்மை யுண்டாகிறதில்லை. ஆகையால் அப்பின்னுண்டாகிய சையோக விசிஷ்ட கர்மத்தில் நான்காவது க்ஷணத்தின் உபாதி வடிவத்தன்மைச் சம்பவிக்கின்றது.

சங்கை :—அப்பின்னுண்டாகிய சையோகத்திற்குப்பின் அக்கிரியை நாசமாய் விடுகின்றது. ஆகையால் அப்பின்னுண்டாகிய சையோகத்திற்குப் பின் க்ஷண வியவஹாரம் உண்டாகாது.

சமாதானம்:—அவ்வோர் கிரியை நாசமாயினும் வேறு கிரியையின் உற்பத்தியால் முற்போன்று அந்த க்ஷண வியவஹாரம் சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் மூன்றாவது, நான்காவது முதலிய கிரியைகளாலும் அந்த க்ஷண வியவஹாரம் சம்பவிக்கின்றது.

### சஙக. உபாதியின் சம்பந்தத்தால் ஒரே காலத்தில் க்ஷணம், விநாடி கடிகை, முஹூர்த்தம், பிரஹரம், நாள், இரவு, பக்ஷம், மாதம், உருது, அயனம், வருட முதலிய வேறுபாட்டின் வர்ணனம்.

இவ்வாறாகக் கிரியா வடிவ உபாதியின் சம்பந்தத்தால் அவ்வொரே காலத்தில் முதலாவது, இரண்டாவது முதலிய க்ஷண வியவஹாரம் சம்பவிக்கின்றது. இவ்வாறாய க்ஷணங்களின் கூட்டத்தால் அக்காலத்தில் விநாடி வியவஹாரம்உண்டாகின்றது. ஏழு விநாடிகளின் சமூகத்தால் அக்காலத்தில் கடிகை வியவஹார முண்டாகின்றது. இரு கடிகைகளால் அக்காலத்தில் முகூர்த்த வியவஹாரமுண்டாகின்றது. மூன்றரை முகூர்த்தங்களால் அக்காலத்தில் பிரஹர வியவஹாரமுண்டாகின்றது. நான்கு பிரஹரங்களால் அக்காலத்தில் நாள் வியவஹாரமும், இரவு வியவஹாரமு முண்டாகின்றது. பதினைந்து பகல், இரவுகளால் அக்காலத்தில் பக்ஷ வியவஹார முண்டாகின்றது. இரு பக்ஷங்களால் அக்காலத்தில் மாதவியவஹார முண்டாகின்றது. இரு மாதங்களால் அக்காலத்தில் உருது வியவஹாரமுண்டாகின்றது. மூன்று உருதுக்களால் அக்காலத்தில் அயன வியவஹார முண்டாகின்றது. இரு அயனங்களால் அக்காலத்தில் வருட வியவஹார முண்டாகின்றது. இவ்வாறாக அவ்வொரே காலம் கிரியையாதி வடிவ உபாதிகளின் சம்பந்தத்தால் க்ஷண முதலாக வருடமட்டுமான பல பெயர்களை யடைகின்றது. உண்மையாக அக்காலம் ஒன்றேயாம். கால நிரூபணம் முற்றிற்று.

### சசா. திசை வடிவத் திரவிய நிரூபணம்.

“அகாலத்வே ஸதி அவிசேஷ குணா மஹதீ திக்” அல்லது “ப்ராச்யாதி வ்யவஹாரஹேது: திக்” அல்லது “தூராந்திகாதிப்ரத்யய ஹேது: திக்”.

### சசக. அத்திசையின் முதலாவது லக்ஷணம்.

இம்மூன்று லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் பொருளை நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் காலத்தினும் வேறும், விசேஷ குணங்களில்

லாததும், பரம மஹத்துவப் பரிமாண முடையதுமாமோ அத்திரவியம் திசை யெனப்படுகின்றது. ஆண்டு இத்திசை வடிவத் திரவியம் காலத்திலும் வேறும், உருவ முதலிய விசேஷ குணங்களில்லாததும், பரம மஹத்துவப் பரிமாண முடையதுமா மாகையால் இத்திசையின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "விசேஷ குண மில்லாதது திசை" என விம்மாத்திரமே அத்திசையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "காலத்திலும் வேறும்" என்னும் பதங் கூறுவிடின் காலத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், எங்ஙனம் அத்திசை விசேஷ குண மில்லாததும், பரம மஹத்து வப்பரிமாண முடையதுமாமோ அங்ஙனமே அக்காலமும் விசேஷ குண மில்லாததும், பரம மஹத்துவப் பரிமாண முடையதுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "காலத்திலும் வேறும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டுக் காலத்தில் காலத்தின் வேற்றுமை இருப்பதில்லை. ஆகையால் அக்காலத்தில் கூறிய அத்திசை யின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "காலத்திலும் வேறும் மஹத்துவப் பரிமாணமுடையதும் திசை" என இம்மாத்திரமே அத் திசையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விசேஷ குணமில்லாததும்" என்னும் பதங்கூறுவிடின் ஆகாயத்திலும், ஆத்மாவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் அத்திசை காலத்திலும் வேறும், பரம மஹத்துவப் பரிமாண முடையதுமாமோ அங்ஙனமே அவ் வாகாயமும், ஆத்மாவும் அக்காலத்திலும் வேறும், பரம மஹத்துவப் பரி மாண முடையனவுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விசேஷ குணமில்லாததும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாகாயமும், ஆத்மாவும் விசேஷ குண மில்லாதன வன்றும். ஆனால் ஆகாயத்திலோ சத்த வடிவ விசேஷ குண மிருக்கின்றது. ஆத்மாவில் ஞான முதலிய விசேஷ குணங்களிருக்கின்றன. ஆகையால் அவ் வாகாயத்திலும், ஆத்மாவிலும் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண் டாகாது. அல்லது "காலத்திலும் வேறும் விசேஷ குண மில்லாததும் திசை" என இம்மாத்திரமே அத்திசையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "மஹத்துவப் பரிமாணமுடையதும்" என்னும் பதங் கூறுவிடின் மனதில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அத்திசையினைப் போன்று அம்மனமும் காலத்திலும் வேறும் விசேஷ குண மில்லாததுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மஹத்துவப் பரிமாணமுடையதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அம்மனதில் அம்மஹத்துவப் பரிமாண மின்றும். ஆனால் பரம அணுத்தன் மைப் பரிமாண மிருக்கின்றது. ஆகையால் கூறிய அந்த லக்ஷணத்திற்கு மனதில் அதிவியாப்தி யுண்டாகாது.

## ௪௪௨. அத்திசையின் இரண்டாவது லக்ஷணம்.

இனி "வ்யாவ்ருத்தி வ்யவஹாரஹேதுர் திக்" என்னும் இரண்டாவது லக்ஷணத்தின் பொருளை நிரூபிப்பாம். ஆண்டு இது கிழக்கு, இது தெற்கு, இது

மேற்கு, இது வடக்கு, இது தென் கிழக்கு, இது தென் மேற்கு, இது வட மேற்கு, இது வட கிழக்கு, இது மேல், இது கீழ் என இவ்வாறாய சத்த வடிவ வியவஹாரமும், ஞான வடிவ வியவஹாரமும் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வெல்லா வியவஹாரங்களுக்கு ஏது யாதாமோ அது திசை யெனப் படுகின்றது. ஆண்டு இவ்வாறாய வியவஹாரம் அத்திசையினானேயே யுண்டாகின்றது. வேறோர் பதார்த்தத்தால் அந்த வியவஹாரம் உண்டாகிறதில்லை. ஆகையால் அத்திசைக்குக் கூறிய இவ்விரண்டாவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு முற்கூறிய காலத்தின் லக்ஷணத்தைப் போன்று இந்த லக்ஷணத்திலும் அவ்வேறுசத்தத்தால் அசாதாரண நிமித்தகாரணத்தையேக் கொள்ளுக. ஆகையால் அச்சத்தவடிவ வியவஹாரத்தின் சமவாயிகாரண வடிவ ஆகாயத்திலும், ஞான வடிவ வியவஹாரத்தின் சமவாயி காரண வடிவ ஆத்மாவிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அங்ஙனமே அச்சத்த வடிவ வியவஹாரத்தின் அசமவாயி காரண வடிவ கண்ட முதலிய இட ஆகாய சையோகத்திலும், ஞான வடிவ வியவஹாரத்தின் அசமவாயி காரண வடிவ ஆத்ம மனச் சையோகத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அங்ஙனமே அசாதாரண மென்னும் பதத்தைக் கூறுவதால் கால முதலிய சாதாரண காரணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இத்தகைய கிழக்கு முதலிய வியவஹாரங்களின் அசாதாரண நிமித்த காரணம் அத்திசையேயாம். ஆகையால் கூறிய அத்திசையின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

## ௪௪௫. கிழக்கு முதலிய பத்துத் திசைகளின் வர்ணனம்.

ஆண்டு எவ்வெக் கண்டத்தில் எவ்வெத் திசையில் சூரியன் உதிக்கின்றானோ அவ்வக் கண்டத்தில் அவ்வத் திசை கிழக்கு திசையெனப்படுகின்றது. அவ்வக்கண்டத்தில் அவ்வக்கிழக்கு பக்கமாக முகத்தை வைத்திருப்பவனது வலக்கைப் புறமாக இருக்கும் திசை தென்திசையெனப்படுகின்றது. அவனது இடக்கைப் புறமாக இருக்கும் திசை வட திசையெனப்படுகின்றது. அவனது பிற்புறமாக இருக்குந் திசை மேற்குத் திசையெனப்படுகின்றது. அவனது சிரசின் மேல் இருக்கும் திசை மேற்றிசை யெனப்படுகின்றது. அவனது பாதங்களின் கீழ் இருக்கும் திசை கீழ்த் திசையெனப்படுகின்றது. கிழக்கெனப் பெயரிய திசைக்கும், தெற்கெனப் பெயரிய திசைக்கும் இடையிலுள்ள கோணம் அக்னி திசை எனப்படுகின்றது. தெற்கெனப் பெயரிய திசைக்கும், மேற்கெனப் பெயரிய திசைக்கும் இடையிலுள்ள கோணம் நைருதி திசை யெனப்படுகின்றது. மேற்கெனப் பெயரிய திசைக்கும், வடக்கெனப் பெயரிய திசைக்கும் இடையிலுள்ள கோணம் வாயவீய திசை யெனப்படுகின்றது. வடக்கெனப் பெயரிய திசைக்கும், கிழக்கெனப் பெயரிய திசைக்கும் இடையிலுள்ள கோணம் ஐசான்னிய திசையெனப்படுகின்றது.

## ௪௪௬. திசையின் மூன்றாவது லக்ஷணம்.

“[illegible]” என்னும் மூன்றாவது அர்த்தத்தினை நிரூபிப்பாம். ஆண்டு, தைசிக பரத்துவத்தினை சேய்மை (தூர)த்

தன்மை என்னப்படும். தைசிக அபரத்துவத்தின் அண்மைச் (சமீப)த் தன்மை எனப்படும். இவ்வத்து சேய்மைத்து, இவ்வத்து அண்மைத்தாகின அச்சேய்மைத் தன்மை, அண்மைத் தன்மையின் விஷயஞ் செய்வதான புத்திக்கு எத்திரவியம் அசாதாரண நிமித்த காரணமாமோ அத்திரவியம் திசையெனப்படுகின்றது. அப்பரத்துவ, அபரத்துவத்தை விஷயஞ்செய்யும் புத்தியைக் குறித்து அத்திசைக்கு சாக்ஷாத் காரணத் தன்மையின்று என்றாலும், பரம்பரையாக அத்திசைக்கு அப்புத்தியைக் குறித்து நிமித்த காரணத் தன்மை சம்பவிக்கின்றது. அதைக் காட்டுவாம்; தைசிக பரத்துவ, அபரத்துவத்தின் விஷயஞ் செய்வதாகிய புத்தி யாதோ அப்புத்தியில் பரத்துவ, அபரத்துவ வடிவ விஷயத்திற்கு நிமித்த காரணத் தன்மையிருக்கின்றது. பரத்துவ, அபரத்துவ குணத்தில் திக்கு பிண்ட சையோகத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யிருக்கின்றது. திக்கு பிண்ட சையோகத்தில் திசைக்கு சமவாயி காரணத் தன்மை இருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் அத்திசைக்கு பரத்துவ, அபரத்துவத்தை விஷயஞ் செய்யும் புத்தியைக் குறித்து அசாதாரண நிமித்த காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஆண்டு மூன்றாவது லக்ஷணத்திலும் ஏதுவென்னுஞ் சத்தத்தால் அசாதாரண நிமித்த காரணத்தைக் கிரஹித்தது யாதோ அது பரத்துவ, அபரத்துவத்தை விஷயஞ் செய்யும் புத்தியின் சமவாயி காரண வடிவ ஆத்மாவிலும், அசமவாயி காரண வடிவ ஆத்ம மனச் சையோகத்திலும், கால முதலிய சாதாரண நிமித்த காரணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திச் செய்யும் பொருட்டு கிரஹிக்கப்பட்டது.

சங்கை:—கூறிய இம்மூன்று லக்ஷணங்களால் அத்திசையின் சம்பவமுளதாயினும் பிரமாணத்தின் அபாவத்தால் அத்திசையின் சித்தி யுண்டாகாது. எக்காரணத்தாலெனின் லக்ஷணம், பிரமாணமா மிரண்டினுனேயே வத்துவின் சித்தி யுண்டாகின்றது. கேவலம் லக்ஷண மாத்திரத்தால் வத்துவின் சித்தியுண்டாகிறதில்லை. ஆகையால் அத்திசையினை சித்தஞ் செய்வதாகிய பிரமாணமும் அவசியங் கூறப்படவேண்டும். ஆண்டு உத்பூத உருவ பரிசங்களின் அபாவத்தால் அத்திசையில் பிரத்தியக்ஷப் பிரமாணமோ சம்பவியாது. பிரத்தியக்ஷத்தினும் வேறாகவே யாதாமோர் பிரமாணங் கூறப்படவேண்டுமென்னுஞ் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அத்திசையின் சித்தியைச் செய்வாம்.

## ௪௪௫. அநுமானப் பிரமாணத்தால் திசையின் சித்தி.

ஆண்டு அண்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தின் அபேக்ஷையால் சேய்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தில் தைசிக பரத்துவ மிருக்கின்றது. சேய்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தின் அபேக்ஷையால் அண்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தில் தைசிக அபரத்துவ மிருக்கின்றது. "[illegible]" (இ-ள்.) பரத்துவ, அபரத்துவமா மிரு குணங்கள் அசமவாயி காரணத்தால்

உண்டாக யோக்கியமாம், ஜன்னிய குண வடிவமாவதால், எதுவெது ஜன்னிய குணமாமோ அதுவது அசமவாயிகாரணத்தால் உண்டாவதேயாம். எங்ஙனம்: கடத்திலுள்ள உருவ குணம் ஜன்னிய குணமா மாகையால் அவ்வுருவ குணம் அசமவாயி காரணத்தால் உண்டானதுமாம். ஆண்டு கபாலங்களின் உருவமே அக்கடத்திலுள்ள உருவத்திற்கு அசமவாயி காரணமாம். அஜ் ஜன்னிய குணத் தன்மை வடிவ ஏது பரத்துவ, அபரத்துவங்களிலுமிருக்கின்றது. ஆகையால் பரத்துவ, அபரத்துவமும் ஓர் அசமவாயி காரணத்தால் அவசியம் உண்டாவதாகும். ஆண்டு எம்மூர்த்தத் திரவியத்தில் பரத்துவ, அபரத்துவ மிருக்கின்றதோ அம்மூர்த்தத்திரவியத்தினோடுள்ள திசையின் சையோகத்திலேயே பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. உருவ முதலிய குணங்களிலும், பிருதிவி முதலியவைகளின் சையோகத்திலும் பரத்துவ, அபரத்துவத்திற்கு அசமவாயி காரணத்தன்மைச் சம்பவியாது. எக்காரணத்தாலெனின், உருவ முதலிய குணங்களில்லாத வாயு முதலியவைகளிலும், பிருதிவி முதலியவைகளின் சையோகமில்லாத நக்ஷத்திர முதலியவைகளிலும் அத்தைசிக பரத்துவத்தின் உற்பத்தி அநுபவசித்தமாம். இவ்வாறாக பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரண வடிவ திக்கு பிண்ட சையோகத்தின் ஆசிரய வடிவத்தால் அத்திசையின் சித்திச் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஜன்னிய குணமாவதால்" என்னும் ஏதுவிலுள்ள ஜன்னியம், குணமென்னு மிரு பதங்களின் பயன் முன்னர் காலத்தை சாதிக்கும் அநுமானத்தில் கூறி வந்துள்ளோம். அது ஈண்டும் அறிந்துக் கொள்ளுக. அல்லது அவ்விரு அநுமானங்களில் "ஜன்னிய பாவமாவதால்" என்னும் ஏது கூறுக. ஈண்டும் பிரத்துவம்சாபாவத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு "பாவ" என்னும் பதங் கூறப்பட்டது. ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்களில் அவ்வேதுவின் வியபிசாரத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு "ஜன்னியம்" என்னும் பதங் கூறப்பட்டது.

## சசகூ. வேறு அநுமானத்தால் திசையின் சித்தி.

சில நூலாசிரியரோ இவ்விதமாய அநுமானப் பிரமாணத்தால் அத்திசையின் சித்தியைச் செய்கின்றனர். ஆண்டு அநேக மூர்த்த சையோக விசிஷ்ட பிண்ட ஞானத்தால் தைசிக பரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அற்ப மூர்த்த சையோக விசிஷ்ட பிண்ட ஞானத்தால் தைசிக அபரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அதாவது அப்பிண்டம் இப்பிண்டத்தின் அபேக்ஷையால் மூர்த்தத் திரவியங்களின் அநேக சையோகத்தோடு கூடியதாமென்னும் ஞானத்தாலோ அப்பிண்டத்தில் தைசிக பரத்துவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. இப்பிண்டம் அப்பிண்டத்தின் அபேக்ஷையால் மூர்த்தத் திரவியங்களின் அற்ப சையோகங்களோடு கூடியதா மென்னும் ஞானத்தால் அப்பிண்டத்தில் தைசிக அபரத்துவத்தின் உற்பத்தியுண்டாகின்றது. ஆகையால் இவ்வநுமானஞ் சித்தித்தது "[illegible]" (இ-ள்.) அத்தைசிக

பரத்துவ, அபரத்துவத்திற்கு நிமித்த காரணமாகிய விசிஷ்ட ஞானம் அம்மூர்த்தத் திரவிய சையோக வடிவ விசேஷணமும், பிண்ட வடிவ விசேஷியமுமாமிரண்டின் சம்பந்தத்தை நிகழச்செய்யுந் திரவியத்தின் அபேக்ஷை யுடையதாம், சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவ மூளதாயினும் விசிஷ்ட ஞான வடிவமாவதால், எவ்வெவ் ஞானம் விசேஷண, விசேஷியமாமிரண்டின் சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவமுளதாயினும் விசிஷ்ட ஞான வடிவமாமோ அவ்வவ் ஞானம் அவ்விசேஷண, விசேஷியமா மிரண்டினது சம்பந்தத்தை நிகழச்செய்யுந் திரவியத்தின் அபேக்ஷை யுடையதேயாம். எங்ஙனம்: செந்நிறப்படிகமென்னும் ஞானம்போலும். ஆண்டு செந்நிறப் படிகமென்னும் ஞானத்தில் வெண்மை நிறமுடையப் படிகமோ விசேஷியமாம். செந்நிறம் விசேஷணமாம். அந்தச் செந்நிற வடிவ விசேஷணத்திற்கு ஸ்படிக வடிவ விசேஷியத்தில் சையோக வடிவ, அல்லது சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமோ இன்றாம். ஆனால் செம்பருத்திப் புட்ப முதலியத் திரவியங்களிலேயே அச்செந்நிறத்திற்கு சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமிருக்கின்றது. அப்படிகத்திலோ செந்நிற வடிவ விசேஷணத்திற்கு சுவசமவாயி சையோக வடிவ பரம்பரைச் சம்பந்தமே இருக்கின்றது. ஈண்டு சுவவென்னுஞ் சத்தத்தால் செந்நிற வடிவ விசேஷணத்தினைக் கொள்ளுக. அச்செந்நிறத்தின் சமவாயி காரணமாகிய செம்பருத்திப் புட்ப முதலியத்திரவியம் யாதோ அச்செம்பருத்திப் புட்ப முதலியத்திரவியத்திற்கு ஸ்படிகத்தோடு சையோக சம்பந்த மிருக்கின்றது. இவ்வாறுய பரம்பரைச் சம்பந்தத்தால் அச்செந்நிறம் அப்படிகத்தில் பிரதீதியாகின்றது. அப்பரம்பரைச் சம்பந்தம் அச்செம்பருத்திப் புட்ப முதலியத் திரவியங்களால் பொருந்தியதேயாம். ஆகையால் இது சித்தித்தது. எங்ஙனம் செந்நிறப் படிகமென்னும் ஞானம் அச்செந்நிறவடிவ விசேஷணத்திற்கு ஸ்படிகவடிவ விசேஷியத்தோடு சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவ மூளதாயினும் விசிஷ்ட ஞான வடிவமாம். ஆகையால் அந்த ஞானம் செந்நிற வடிவ விசேஷணத்தினதும், ஸ்படிகவடிவ விசேஷியத்தினதும் கூறிய அப்பரம்பரைச் சம்பந்தத்தை நிகழச்செய்யும் செம்பருத்திப் புட்ப முதலியத் திரவியங்களின் அபேக்ஷையுடையதுமாமோ அங்ஙனமே இப்பிண்டம் மூர்த்தத் திரவியங்களின் அனேக சையோகங்களோடு விசிஷ்டமாம் அங்ஙனமே இப்பிண்டம் மூர்த்தத் திரவியங்களின் அற்ப சையோகங்களோடு விசிஷ்டமாமென்னும் தைசிக பரத்துவ, அபரத்துவத்தின் நிமித்த காரணமாகிய விசிஷ்ட ஞானம் யாதோ அந்த விசிஷ்ட ஞானத்திலும் அப்பிண்டமோ விசேஷியமாம், அவ்வனேக மூர்த்த சையோகம், அல்லது அற்ப மூர்த்த சையோகம் விசேஷண வடிவமாம். ஆண்டு அச்சையோக வடிவ விசேஷணங்களுக்கு பிண்ட வடிவ விசேஷியத்தோடு சையோக வடிவ அல்லது சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தமோ இன்றாம்; அம்மூர்த்தத் திரவியங்களிலேயே அச்சையோகத்தின் சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்த மிருக்கின்றது. அப்பிண்டத்திலோடோ அச்சையோகத்திற்கு சுவசமவாயி சையுக்த சையோக வடிவ பரம்பரைச் சம்பந்த மிருக்கின்றது. ஈண்டு சுவவென்னுஞ் சத்தத்தால் அனேக மூர்த்தத் திரவிய சையோகத்தினை அல்லது அற்ப மூர்த்தத் திரவியத்தின் சையோகத்தினைக்

கொள்ளுக. அச்சையோகங்களின் சமவாயி காரண வடிவம் அம்மூர்த்தத் திரவியங்களாம். அம்மூர்த்தத் திரவியங்களின் சையோக சம்பந்தம் அத்திசையினோடிருக்கின்றது. ஆகையால் அத்திசை அம்மூர்த்தத் திரவியங்களோடு சையுக்தமெனப்படுகின்றது. அத்திசையின் சையோக சம்பந்தம் அப்பிண்டத்தோடிருக்கின்றது. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் அச்சையோகம் அப்பிண்டத்தில் விசேஷண வடிவ சம்பந்தமாய்ப் பிரதீதியாகின்றது. அப்பரம்பரைச்சம்பந்தத்தைநிகழச்செய்வது அத்திசையேயாம். ஆகையால் இது சித்தமாயிற்று; இப்பிண்டம் அனேக மூர்த்த சையோகங்களுடையதாம், இப்பிண்டம் அற்பமூர்த்த சையோகங்களுடையதாமென கூறிய அவ்விசிஷ்டஞானமும் அச்சையோக வடிவ விசேஷணத்திற்கு அப்பிண்ட வடிவ விசேஷியத்தோடு சையோக சமவாய வடிவ சாக்ஷாத் சம்பந்தத்தின் அபாவமுளதாயினும் விசிஷ்ட ஞான வடிவமாம். ஆகையால் அவ்விசிஷ்ட ஞானம் அச்சையோக வடிவ விசேஷணத்தினதும், அப்பிண்ட வடிவ விசேஷியத்தினதும் கூறிய அப்பரம்பரைச்சம்பந்தத்தை நிகழச்செய்யும் திசை வடிவத் திரவியத்தினை அவசியமாக அபேக்ஷிக்கும். இவ்வாறாய அநுமானத்தால் அச்சம்பந்தத்தை நிகழச்செய்யும் வடிவமாக அத்திசை வடிவத் திரவியத்தின் சித்திச் சம்பவிக்கின்றது. ஆண்டுக் கூறிய அவ்வநுமானத்தில் "விசிஷ்ட ஞானமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி, அவ்வேதுவில் "சாக்ஷாத் சம்பந்த அபாவமுடையதாகியும்" என்னும் பதங் கூறாவிடின், உருவமுடையது கடம் என்னும் விசிஷ்ட ஞானத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு, அவ்வேதுவில் "சாக்ஷாத் சம்பந்த அபாவமுடையதாகியும்" என்னும் பதங் கூறப்பட்டது. அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்திக்குங் கிரமத்தை முன்னர் காலத்தைச் சாதிக்கும் அநுமானத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக் கொள்ளுக.

### ௪௪௭. திசையினது ஐந்து குணங்களின் லக்ஷணம்.

இவ்வாறாய லக்ஷணப் பிரமாணங்களால் சித்தித்த திசையில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் ஐந்து குணங்களிருக்கின்றன. அத்திசையும் முற்கூறிய ஆகாயத்தினைப் போன்று ஒன்றும், விபுவும், நித்தியமுமாம்.

### ௪௪௮. திசையின் ஏகத்துவத்தைச் சாதிக்கும் யுக்தி.

ஆண்டுத் திசையினை நாநா வடிவமாக் வொப்புவதில் ஒன்றோ கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகின்றது. இரண்டாவது அத்திசையினை நாநாவாக வொப்புவதில் ஓர்ப் பிரமாணமு மின்றாம். ஆகையால் அத்திசையொன்றேயாம்.

### ௪௪௯. திசையின் விபுத்தன்மையினை சாதிக்கும் யுக்தி.

அம்மூர்த்தத் திரவியம் சேய்மையி லிருக்கின்றது, இம்மூர்த்தத் திரவியம் அண்மையி லிருக்கின்றதென்னும் உணர்ச்சி எல்லாத் தேசங்களி

லுள்ள எல்லாப் பிராணிகட்கு முண்டாகின்றது. அவ்வுணர்ச்சி அம்மூர்த்தத் திரவியங்களிலுள்ள தைசிக பரத்துவ, அபரத்துவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அவ்வுணர்ச்சியின் வலிவால் எல்லாத் தேசங்களி லுள்ள எல்லா மூர்த்தத் திரவியங்களில் பரத்துவ, அபரத்துவத்தை அங்கீ கரிக்க வேண்டும். காரணமின்றி காரியத்தின் உற்பத்தி யுண்டாகாது. ஆகை யால் எவ்வெவ் மூர்த்தத் திரவியத்தில் அப்பரத்துவ, அபரத்துவ உணர்ச்சி யுண்டாகின்றதோ அவ்வவ் மூர்த்தத் திரவியத்தோடு அத்திசையின் ஸையோக சம்பந்தம் அவசியம் அங்கீகரிக்கப்பட வேண்டும். அது திசையின் சையோ கமே அப்பரத்துவ, அபரத்துவத்தின் அசமவாயி காரணமாம். அவ்வெல்லா மூர்த்தத் திரவியங்களோடு திசையின் சையோக சம்பந்தம் சம்பவிக்கும் போது அத்திசைக்கு யாண்டும் வியாபகம் ஒப்ப வேண்டும். வியாபக வடிவத் தன்மை யொப்பினலன்றி அத்திசைக்கு அவ்வெல்லா மூர்த்தத் திரவியங்க ளோடு சையோகம் சம்பவியாது. ஆகையால் அத்திசைக்கு யாண்டும் வியா பகம் ஒப்ப வேண்டும். இவ்வாறுய யுக்தியால் அத்திசையில் விபுத்தன்மைச் சித்தமாகின்றது.

சஉ௦. திசையினது நித்தியத் தன்மையினைச் சாதிக்கும் யுக்தி.

எவ்வெத் திரவியம் விபுவாமோ அவ்வத்திரவியம் நித்தியமே யாகின் றது. எங்ஙனம் விபுவாவதால் ஆத்மா நித்தியமாமோ அங்ஙனமே விபுவாவ தால் அத்திசையும் நித்தியமேயாகும். இவ்வாறுய யுக்தியால் அத்திசையில் நித்தியத் தன்மைச் சித்தமாகின்றது. ஆண்டு ஏகத்துவம், விபுத்துவம், நித்தி யத்துவம் என்னும் மூன்றின் லக்ஷணம் ஆகாய நிரூபணத்திற் கூறி வந்துள் ளோம். அந்த லக்ஷணத்தை ஈண்டு திசையின் ஏகத்துவ, விபுத்துவ, நித்தியத் துவத்திற்கும் அறிந்துக் கொள்ளுக.

சஉக. திசையில் சர்வ ஜகத்தின் ஆதாரத் தன்மையின் சாதக யுக்தி.

ஆண்டு எங்ஙனம் முற்கூறிய காலம் சர்வ ஜகத்திற்கு ஆதாரமாமோ அங்ங னமே இத்திசையும் சர்வ ஜகத்திற்கு ஆதாரமாம். "திக் நிவிஷவஊரூவதி" (இ-ள்.) திசை சர்வ பதார்த்தங்களை யுடையதாம். என்னும் உணர்ச்சி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுணர்ச்சியே அத்திசையிலுள்ள சர்வ ஜகத்தின் ஆதாரத் தன்மையில் பிரமாணமாம். ஆண்டு அத்திசைக்கு சர்வ ஜகத்தின் ஆதாரத் தன்மை யாதோ அது தைசிக சம்பந்தத்தானேயே இருக் கின்றது. சையோகம், சமவாய முதலிய சம்பந்தத்தால் அத்திசைக்கு சர்வ ஜகத்தின் ஆதாரத் தன்மை யின்றும்.

சஉஉ. திசையில் காரிய மாத்திரத்தினது காரணத் தன்மையினை சாதிக்கும் யுக்தி.

அல்லது எங்ஙனம் முற்கூறிய அக்காலம் காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமாமோ அங்ஙனமே இத்திசையும் அக்காரிய மாத்தி ரத்தைக்குறித்து நிமித்த காரணமாம். ஆண்டு "ஜஹ வ்யொஹவதி ஜஹ

வ்யோஹவதி'' (இ-ள்.) இத்திசையில் கடம் உண்டாவதாகின்றது, இத்திசையில் படம் உண்டாவதாகின்றது. என்னும் உணர்ச்சி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுணர்ச்சியே அத்திசையிலுள்ள கட, பட முதலிய சர்வ காரியத்தின் நிமித்த காரணத்தன்மையில் பிரமாணமாம். ஆண்டு அத்திசைக்கு சர்வகாரியத்தின் நிமித்த காரணத்தன்மை யாதோ அது தைசிக சம்பந்தத்தானேயாம். வேறோர் சையோக, சமவாய முதலிய சம்பந்தத்தால் அத்திசைக்குச்சர்வ ஜகத்தின் நிமித்த காரணத் தன்மையின்றாம். அத்திசையில் சமவாய சம்பந்தத்தால் உண்டாவதாகிய இருமைச் சங்கியை, இருமை வேற்றுமை, சையோகம், விபாக மென்னும் குணங்களைக் குறித்துஅத்திசைக்கு சமவாய காரணத் தன்மையு மிருக்கின்றது. என்றாலும் தைசிக சம்பந்தத்தால் அக்குணங்களைக் குறித்து அத்திசைக்கு நிமித்த காரணத்தன்மையுமிருக்கின்றது. ஆகையால் சர்வ காரிய மாத்திரத்தைக் குறித்து அத்திசைக்கு நிமித்த காரணத் தன்மை யிருக்கின்றது. இவ்வாறாய நியமத்திற்கு அவ்விருமை முதலிய குணங்களில் வியபிசார முண்டாகாது.

சங்கை :— இத்திசையில் கடம் உண்டாகிறது, இத்திசையில் படம் உண்டாகிற தென்னு மிவை முதலிய பிரதீதியால் அத்திசையில் சர்வ காரிய மாத்திரத்திற்கு நிமித்த காரணத் தன்மை முன்னர் சித்தஞ் செய்தது எவ்வாற்றால் சித்தமாகிறது?

சமாதானம் :— சில பதார்த்தம் கிழக்குத் திசையிலேயே உண்டாவதாகின்றது, சில பதார்த்தம் தெற்குத் திசையிலேயே யுண்டாவதாகின்றது, சில பதார்த்தம் மேற்குத் திசையிலேயே யுண்டாவதாகின்றது, சில பதார்த்தம் வடக்குத் திசையிலேயே யுண்டாவதாகின்றது, சில பதார்த்தம் மேல் திசையிலேயே யுண்டாவதாகின்றது, சில பதார்த்தம் கீழ்த்திசையிலேயே யுண்டாவதாகின்றது, சில பதார்த்தம் ஐசானி முதலிய உபாதிகளிலேயே யுண்டாவதாகின்றது. இவ்வாறாக அவ்வப்பதார்த்த விசேஷத்தின் உற்பத்தியில் அவ்வக்கிழக்கு முதலிய விசேஷத்திற்குக் காரண வடிவத் தன்மை யாவருக்கும் அநுபவ சித்தமாம். எவ்வெவ் விசேஷ பதார்த்தங்கட்கு பரஸ்பர காரிய காரண முண்டாகின்றதோ அவ்வச் சாமான்னிய பதார்த்தங்கட்கும் பரஸ்பர காரிய காரண பாவ முண்டாகின்ற தென்னும் நியமம் முன்னர் கால நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். அந்த நியாயத்தின் வலிவால் ஈண்டும் காரியத் தன்மை தர்ம விசிஷ்ட காரிய மாத்திரத்தைக் குறித்து திசைத் தன்மை தர்ம விசிஷ்ட திசைக்குக் காரண வடிவத் தன்மைச் சித்தமாகின்றது. இவ்வாறாய யுக்தியால் அத்திசையில் காரிய மாத்திரத்தின் நிமித்த காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது.

## சஉடு. ஒரே திசையில் மூர்த்தத் திரவிய வடிவ உபாதியின் சம்பந்தத்தால் கிழக்கு, மேற்கு முதலிய பேத வியவஹாரத்தின் சித்தி.

சங்கை :— முன்னர் திசையினை ஒன்றெனக்கூறியது சம்பவியாது. ஏனெனின், அத்திசை ஓர் கால் ஒன்றாகுமாயின் இது கிழக்குத் திசை, இது

மேற்குத் திசை யென்னும் இவை முதலிய பேதவியவஹாரம் உண்டாகாததாக வேண்டும். அப்பேத வியவஹாரமோ உலகத்தில் பிரசித்தமாக உண்டாகின்றது. ஆகையால் அவ்வுலக வியவஹாரத்தால் அத்திசைஎ்ப நாநா வடிவமாக வொப்ப வேண்டும்.

சமாதானம்:—எங்ஙனம் ஒரே காலத்தில் வெவ்வேறு உபாதியின் சம்பந்தத்தால் இறப்பு, நிகழ்வு, எதிர்வு, க்ஷணம், விநடி என்னும் இவை முதலிய பேத வியவஹாரங்க ளுண்டாகின்றதோ அங்ஙனமே ஒரே திசையில் வெவ்வேறு உபாதிகளின் சம்பந்தத்தால் அக்கிழக்கு, மேற்கு முதலிய பேத வியவஹாரமும் சம்பவிக்கின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களோ அத்திசைக்கு உபாதி வடிவமாகின்றன. அதாவது; பேதமில்லாத ஒரே திசையில் கிழக்கு, மேற்கு முதலிய பெயர்களின் வேற்றுமை யுண்டாவது யாதோ அப்பெயர்களின் வேற்றுமையில் பிருதிவி முதலிய ஐந்து மூர்த்தத் திரவியங்களே நிமித்தவடிவமாகின்றன. எங்ஙனம்: ஒரே தேவதத்தனென்பெயரிய புருஷனிடத்தில் சமைப்போன், பாடுவோன் என இவை முதலிய பெயர்களின் வேற்றுமையில் சமைத்தல், பாடுதல் இவை முதலிய கிரியைகளே நிமித்த வடிவமாகின்றன. இனி அவ்வொரே திசையில் அவ்வுபாதிகளின் வேறுபாட்டால் அப்பெயர்களின் பேத வகையினை நிருபிப்பாம். ஆண்டு எவ்வத்துவின் அபேக்ஷையால் உதய கிரியின் அண்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தோடு கூடிய திசை யாதோ அத்திசை அவ்வத்துவின் அபேக்ஷையால் கிழக்குத்திசை யெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரயாகையின் அபேக்ஷையால் காசி உதயகிரியின் அண்மைத்தாம். ஆகையால் அக்காசியோடு கூடிய திசை யாதோ அத்திசை அப்பிரயாகையின் அபேக்ஷயால் கிழக்குத்திசை யெனப்படுகின்றது. ஆண்டு அவ்வுதயகிரி சையுக்த முதலாவது மூர்த்தத்திரவியத்தின் சையோகமும், அம்முதலாவது மூர்த்தத்திரவிய சையுக்த இரண்டாவது மூர்த்தத்திரவியத்தின் சையோகமும், அவ்விரண்டாவது மூர்த்தத்திரவிய சையுக்த மூன்றாவது மூர்த்தத் திரவியத்தின் சையோகமும், அம்மூன்றாவது மூர்த்தத் திரவிய சையுக்த நான்காவது மூர்த்தத்திரவியத்தின் சையோகமும், அந்நான்காவது மூர்த்தத் திரவிய சையுக்த ஐந்தாவது மூர்த்தத்திரவியத்தின் சையோகமாமிவை முதலாக எவ்வளவு உதய கிரி முதலிய மூர்த்தத்திரவியங்களின் சையுக்த சையோகம் அப்பிரயாகையிலிருக்கின்றனவோ அச்சையோகங்களின் அபேக்ஷையால் அக்காசியில் அச்சையுக்த சையோகம் அற்பமிருக்கின்றது. இதுவே அக்காசியில் அப்பிரயாகையின் அபேக்ஷயால் அவ்வுதயகிரியின் அண்மைத் தன்மையாம். எவ்வத்துவின் அபேக்ஷயால் அவ்வுதயகிரியின் தூரத்திலிருக்கும் மூர்த்தத்திரவியத்தோடு விசிஷ்ட திசை யாதோ அத்திசை அவ்வத்துவின் அபேக்ஷயால் மேற்குத் திசை யெனப்படுகின்றது. எங்ஙனம்: கயாவின் அபேக்ஷயால் அக்காசி உதய கிரியின் சேய்மையிலிருக்கின்றது. ஆகையால் அக்காசியோடு விசிஷ்ட திசை யாதோ அத்திசை அக்கயாவின் அபேக்ஷயால் மேற்குத் திசை யெனப்படுகின்றது. ஆண்டு அவ்வுதயகிரி முதலிய மூர்த்தத் திரவியங்களின் எவ்வளவு

சையுக்தசையோகம் அக்கயாவி லிருக்கின்றதோ அச்சையுக்த சையோகங்க ளின் அபேக்ஷையால் அக்காசியில் அச்சையுக்த சையோகம் மிகுதியாக இருக் கின்றது. இதுவே அக்காசியில் அக்கயாவின் அபேக்ஷையால் அவ்வுதயகிரி யின்சேய்மைத் தன்மையாம். எவ்வத்துவின் அபேக்ஷையால் சுமேருவின் அண்மையிலுள்ள மூர்த்தத் திரவியம் யாதோ அம்மூர்த்தத் திரவியத்தோடு விசிஷ்ட திசை அவ்வத்துவின் அபேக்ஷையால் வட திசை எனப்படுகின்றது. எங்ஙனம்: ராமேஸ்வர க்ஷேத்திரத்தின் அபேக்ஷையால் அக்காசி சுமேரு பர்வதத்தின் அண்மையிலிருப்பதாம். ஆகையால் அக்காசியோடு விசிஷ்ட திசையாதோ அத்திசை ராமேஸ்வர க்ஷேத்திரத்தின் அபேக்ஷையால் வட திசை யெனப்படுகின்றது. ஆண்டு சுமேரு முதலிய மூர்த்தத் திரவியங்களின் எவ்வளவு அச்சையுக்த சையோகம் ராமேஸ்வர க்ஷேத்திரத்தில் இருக்கின்ற தோ அச்சையுக்தசையோகங்களின் அபேக்ஷையால் அக்காசியில் அச்சையுக்த சையோகம் அற்பமிருக்கின்றது. இதுவே அக்காசியில் ராமேஸ்வர க்ஷேத்தி ரத்தின் அபேக்ஷையால் அச்சுமேரு பர்வதத்தின் அண்மைத் தன்மையாம். எவ்வத்துவின் அபேக்ஷையால் அச்சுமேரு பர்வதத்தின் சேய்மையிலுள்ள மூர்த்தத் திரவியம் யாதோ அம்மூர்த்தத் திரவியத்தோடு விசிஷ்ட திசை அவ்வத்துவின் அபேக்ஷையால் தெற்குத் திசையெனப்படுகின்றது. எங்ஙனம்: அக்காசியின் அபேக்ஷையால் அந்த ராமேஸ்வரக்ஷேத்திரம் அச்சுமேரு பர்வ தத்தின் சேய்மையிலுள்ளதா மாகையால் அந்த ராமேஸ்வரக்ஷேத்திரத்தோடு விசிஷ்ட திசை யாதோ அத்திசை அக்காசியின் அபேக்ஷையால் தெற்குத் திசையெனப்படுகின்றது. ஆண்டு அச்சுமேரு முதலிய மூர்த்தத்திரவியங்களின் சையுக்த சையோகம் எவ்வளவு அக்காசியி லிருக்கின்றதோ அச்சையுக்த சை யோகங்களின் அபேக்ஷையால் அந்த ராமேஸ்வர க்ஷேத்திரத்தில் அச்சையுக்த சையோகம் மிகுதியாயிருக்கின்றது. இதுவே அந்த ராமேஸ்வர க்ஷேத்தி ரத்தில் அக்காசியின் அபேக்ஷையால் அச்சுமேரு பர்வதத்தின் சேய்மைத் தன்மையாம். இவ்வாறாக வெவ்வேறு மூர்த்தத் திரவிய வடிவ உபாதிகளின் சம்பந்தத்தால் அவ்வொரே திசை கிழக்கு, மேற்கு இவை முதலிய நானாப் பெயர்களைப் பெறுகின்றது. அல்லது எங்ஙனம் இக்கண்டத்தில் கூறிய அவ் வுபாதியின் சம்பந்தத்தால் அத்திசையில் கிழக்கு, மேற்கு முதலிய பேத வியவஹார முண்டாகின்றதோ அங்ஙனமே வேறு கண்டங்களிலும் அவ்வுபாதிக ளின் சம்பந்தத்தானேயே அத்திசையில் அப்பேத வியவஹார முண்டாகின் றது. ஆனால் அவ்வெல்லாக் கண்டங்களில் அச்சுமேரு பர்வதமோ வட புற மாகவே இருக்கின்றது.

### ௩௫௪. ஆகாயம், காலம், திசை, என்னும் மூன்றிற்கும் ஈஸ்வரனிடத்தில் அடக்கம் ஒப்புவோரான தீதிதீகாரரின் மத வர்ணனம்.

ஈண்டு தீதிதீகாரரின் மதமோ இதுவாம். ஆகாயம், காலம், திசை யென்னும் மூன்றும் திரவியங்கள் ஈஸ்வரனைவிட வேறன்றாம்; ஈஸ்வரனிடத்தே அவைகளுக்கு அடக்க மிருக்கின்றது. ஆகையால் முற் கூறப்பட்டக் கிரியா

மாத்திர அல்லது ஜன்னிய வத்து மாத்திர காலத்தின் உபாதியோடு விசிஷ்டமாகிய அவ்வீஸ்வரனே இறப்பு, நிகழ்வு, எதிர்வு, க்ஷணம், விநாடி இவை முதலிய வியவஹாரங்கட்கு விஷயமாகின்றான். அங்ஙனமே முற்கூறப்பட்ட மூர்த்தத்திரவிய வடிவ திசையின் உபாதியுடன் விசிஷ்டமாகிய அவ்வீஸ்வரனே கிழக்கு, மேற்கு இவை முதலிய வியவஹாரங்கட்கு விஷயமாகின்றான். அதாவது அவ்வவ் உபாதி விசிஷ்ட ஈஸ்வரனாலேயே அவ்வவ்விறப்பு, நிகழ்வு முதலிய வியவஹாரங்களும், கிழக்கு, மேற்கு முதலிய வியவஹாரங்களும் சித்தமாகின்றன. ஆகையால் அவ்வியவஹாரங்களின் சித்தியின் பொருட்டு கால முதலியவற்றை வேறாகக் கற்பித்தல் அநுசிதமாம். (நல்மன்றும்).

### ௩௫௫. திக்கு, காலம், ஈஸ்வரன் என்னும் மூன்றில் காரிய மாத்திரத்தின் காரணத் தன்மையை யொப்பாதவரான சில நவீனர்களினது மத வர்ணனம்.

ஈண்டுச் சில நவீன நையாயிகர் கூறுவதாவது; ஈஸ்வரனுக்கே திசை, கால வடிவத்தன்மை யிருக்கின்றது, அல்லது அவ்வவ் ஜீவாத்மாவிற்கு திசை, கால வடிவுத் தன்மை யிருக்கின்றது என்னும் அர்த்தத்தைச் சித்தஞ் செய்வதாகிய யுக்தி ஒன்றுமின்று மாகையால் அவ்வார்த்தத்தின் சாதிக்கும் யுக்தி வடிவ வினிகமனத்தின் அபாவத்தால் ஈஸ்வரனுக்கும், ஜீவாத்மாவிற்கும் திக்கு, கால வடிவத் தன்மை யாவருக்கும் பிராப்தமாகின்றது, அவ்வனேக வடிவத் தன்மையின் அபேக்ஷையால் அத்திக்கு, காலத்தினை வேறாக் வொப்பு வதில் லாகவ மிருக்கின்றதெனக் கூறுகின்றனர். அதற்கு தீதிதிகாரர் இது கூறுகின்றனர்; அத்திக்கு, காலத்தினை ஈஸ்வரனினும் வேறாக வொப்பும் நையாயிகரும் ஈஸ்வரனே அத்திக்கு, காலத்தினைப் போன்று சர்வ காரிய மாத்திரத்திற்குக் காரண வடிவமாகவே வொப்புகின்றனர். அங்ஙனமே தைசிக பரத்துவ, அபரத்துவத்திற்கும் காரண வடிவமாக ஒப்புகின்றனர். இத்தகைய காரியமாத்திரத்தால் சித்தித்த ஈஸ்வரனுக்கே அக்காரிய மாத்திரத்தினை யுண்டாக்கும் திக்கு, கால வடிவத்தன்மை பொருந்தியதாம். ஜீவாத்மாவிற்கு காரிய மாத்திரத்தின் காரணத்தன்மையும் பரத்துவ, அபரத்துவத்தின் காரணத் தன்மையும் முன்னர் சித்தித்ததன்றும். ஆனால் கற்பிக்கப்படுவதாகும். ஆகையால் அஜ்ஜீவாத்மாவிற்கு திக்கு, கால வடிவத் தன்மை பொருந்தியதன்றும். இவ்வாறாய யுக்தி அவ்வீஸ்வரனுக்கே திக்கு, கால வடிவத் தன்மையைச் சித்தஞ் செய்கின்றது. அஜ்ஜீவாத்மாவிற்கு திக்கு, கால வடிவத் தன்மையைச் சித்தஞ் செய்கிறதில்லை. ஆகையால் அந்த திக்கு, காலத்திற்கு ஈஸ்வரனிடத்தேயே அந்தர்பாவம் (அடக்கம்) சம்பவிக்கின்றது. ஜீவாத்மாவில் அந்தர்பாவம் சம்பவியாதெனக் கூறுகின்றனர். அங்ஙனமாகத் தீதிதிகாரர் கூறுவது சம்பவியாது. ஏனெனின், ஓர் கால் அவ்வீஸ்வரனுக்கும், திக்கிற்கும், காலத்திற்கும் காரியமாத்திரத்தைக்குறித்து உண்டாக்குந் தன்மை யுண்டாயின் காரிய மாத்திரத்தினை யுண்டாக்கும் வடிவமாக சித்தித்த ஈஸ்வரனிடத்தில் அக்காரிய மாத்திரத்தினை யுண்டாக்குந் திக்கு, காலத்தின் அந்தர்பாவஞ் சம்பவிக்கும். ஆனால் அவ்வீஸ்வரனுக்கும்

திக்கு, காலத்திற்கும் அக்காரிய மாத்திரத்தை யுண்டாக்குந் தன்மையின்றும். ஆனால் அவ்வீஸ்வரனது பிரயத்தினமாகிய முயற்சிக்கே அக்காரிய மாத்திரத்தைக் குறித்துக் காரணத் தன்மை யிருக்கின்றது. முயற்சியின் ஆசிரய வடிவ கர்த்தாவிற்குக் காரியத்தினை யுண்டாக்குந் தன்மையில் ஓர்பிரமாணமுமின்றும். எங்ஙனம் ஈஸ்வரனுக்கு காரிய மாத்திரத்தினை யுண்டாக்குந் தன்மையின்றோ அங்ஙனமே சம்பந்தத்தை நிகழச்செய்யும் திக்கு, காலத்திற்கும் காரிய மாத்திரத்தினை யுண்டாக்குந் தன்மை இன்றும். ஆனால் முன்னர் அத்திக்கு, காலத்தின் உபாதியாகக் கூறப்பட்டவைகட்கே அக்காரிய மாத்திரத்தினை யுண்டாக்குந் தன்மை யிருக்கின்றது. பரத்துவ, அபரத்துவமா மிரு குணங்கட்கு குண வடிவத் தன்மையிலேயே ஓர் பிரமாணமு மின்றும். அண்மை, சேய்மையா மிருதர்மங்களானேயே அவ்வத்து பரம், இவ்வத்து அபரம் என்னும் வியவஹாரத்தின் சித்தி சம்பவித்து விடுகின்றது. பரத்துவ, அபரத்துவ குணத்தினை யுண்டாக்குந் தன்மையும் அத்திக்கிலும், காலத்திலுமின்றும்.

### சஉகூ. நவீனர்களின் மத கண்டனம்.

இந்நவீனர்களின் மதம் நலமுடையதன்றும். ஏனெனின், முற்கூறிய காலத்தினதும், திசையினதும் நாநா உபாதிகளில் காரிய மாத்திரத்தின் காரணத்தன்மை கற்பிப்பதில் மாகௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். அவற்றின் அபேக்ஷையால் ஒரே காலத்திலும், ஒரே திசையிலும் காரிய மாத்திரத்தின் காரணம் ஒப்புவதில் அத்தியந்தம் லாகவமிருக்கின்றது. ஆகையால் அந்நவீனர்களின் மதம் அசங்கதமாம்.

### சஉஎ. தீதிதீகாரரின் மத கண்டனம்.

அங்ஙனமே முற்கூறிய தீதிதீகாரரின் மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் காலம், திசையா மிருத் திரவியங்கட்கு ஈஸ்வரனிடத்தில் அடக்கம் அங்கீகரிக்கின் காலிக பரத்துவ, அபரத்துவத்திற்கும், தைசிக பரத்துவ, அபரத்துவத்திற்கும் பரஸ்பர விலக்ஷணத் தன்மை (வேறுந் தன்மை) சம்பவியாது. ஏனெனின், காரணச் சாமக்கிரியின் வேறுபாட்டானேயே காரியத்தின் வேறுபாடுண்டாகின்றது. அக்காரணச் சாமக்கிரியின் வேறுந் தன்மை ஈண்டின்றும். ஆனால் ஈஸ்வர வடிவ காரணச் சாமக்கிரி ஒன்றே யிருக்கின்றது. தைசிக பரத்துவ, அபரத்துவங்களில் காலிக பரத்துவ, அபரத்துவத்தினும் வேறுந்தன்மை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். குண நிரூபண மெனப் பெயரிய மூன்றுவது பரிச்சேதத்தில் அந்த விலக்ஷணத் தன்மையை யுக்தியினால் சித்தஞ் செய்வாம். ஆகையால் பரத்துவ, அபரத்துவத்தின் விலக்ஷணத் தன்மையின் சித்தியின் பொருட்டு அத்திக்கு, காலத்தினை ஈஸ்வரனை விட வேறுகவே யொப்புவது யோக்கியமாம். இவ்வாறுக ஆகாயத்தினையும் ஈஸ்வரனை விட வேறுகவே யொப்புவது யோக்கியமாம். ஆண்டு ஈஸ்வரனை விட ஆகாயத்தினை வேறுக ஒப்புவதில் யுக்தியோ முன் ஆகாய நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். திக்கு நிரூபணம் முற்றிற்று.

---

சஙரு. ஆத்ம வடிவத் திரவிய நிரூபணம்.

ஆண்டு "ஜ்ஞாநாதிகரணம் ஆத்மா" அல்லது "ஆத்மத்வஜாதிமாந் ஆத்மா".

சஙசு. அவ்வாத்மாவின் முதலாவது லக்ஷணம்.

இனி இவ்விரு லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். எத்திரவியம் சமவாய சம்பந்தமாக ஞானம், இச்சை, முயற்சியென்னும் முக்குணங்களின் அதிகரணமாமோ அத்திரவியம் ஆத்மாவெனப் படுகின்றது. ஆண்டு ஞான முதலிய முக்குணங்கள் சமவாய சம்பந்தமாக ஆத்மாவிலேயேயிருக்கின்றன. அவ்வாத்மாவினும் வேறான பிருதிவி முதலியத் திரவியங்களில் ஞான முதலிய குணங்களிருப்பனவன்று. ஆகையால் இந்த ஞான முதலியவைகட்கு அதிகரணத் தன்மை வடிவ ஆத்மாவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சசு௦. அவ்வாத்மாவின் இரண்டாவது லக்ஷணம்.

இனி "ஆத்மத்வஜாதிமாந் ஆத்மா" என்னும் இரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் சமவாய சம்பந்தமாக ஆத்மத்தன்மை ஜாதியுடையதாமோ அத்திரவியம் ஆத்மா வெனப்படுகின்றது. ஆண்டு அவ்வாத்மத் தன்மை ஜாதி சமவாய சம்பந்தமாக கேவலம் ஆத்மாவிலேயே இருக்கின்றது. ஆத்மாவினும் வேறான பிருதிவி முதலியத் திரவியங்களில் இருப்பதன்று. ஆகையால் இவ்வாத்மத் தன்மை ஜாதியுடைமை வடிவ ஆத்மாவின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது.

சசுக. ஜீவ, ஈஸ்வர பேதத்தால் அவ்வாத்மாவிற்கு இருவித வேற்றுமை.

இவ்வாறாய் இரு லக்ஷணங்களால் லக்ஷித அவ்வாத்மா இருவிதமாகின்றது. ஒன்றோ ஜீவாத்மாவும், மற்றையது ஈஸ்வராத்மாவுமாம். இஜ்ஜீவாத்மா சாத்திரத்தில் க்ஷேத்திரஞ்ஞனென்றுங் கூறப்பட்டிருக்கின்றது. ஈஸ்வராத்மா சாத்திரத்தில் பரமாத்மா வென்றும் புரஹ்ம மென்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு ஈஸ்வராத்மாவில் சர்வ ஜகத்தின் உற்பத்தி லயத்தின் கர்த்துருத் தன்மை வடிவ உத்கிருஷ்ட (உயர்வு)த் தன்மை யாதோ அதுவே ஜீவாத்மாவின் அபேக்ஷையால் அவ்வீஸ்வரனிடத்தில் பரத்துவமாம்.

சங்கை :—இஜ்ஜீவ, ஈஸ்வரர்களது வேற்றுமை யுண்டாகும் போது ஜீவாத்மாவிற்கும், ஈஸ்வராத்மாவிற்கும் வெவ்வேறு லக்ஷணமிருக்கவேண்டும் வெவ்வேறு லக்ஷணமின்றி அவ்விரண்டின் வேற்றுமை சித்தமாகாதென்னுஞ் சங்கை யுண்டாக இனி முதலில் ஜீவாத்மாவின் லக்ஷணத்தைக் கூறுவாம்.

சசுஉ. ஜீவாத்மாவின் லக்ஷணம்.

"விபுத்வேஸதி ஜ்ஞாநாஸமவாயிகாரண ஸம்யோகாஶ்ரயஃ ஜீவாத்மா"

(இ-ள்.) எத்திரவியம் விபுவும், ஞானத்தின் அசமவாயி காரண சையோகத்

திற்கு ஆசிரயமுமாமோ அத்திரவியம் ஜீவாத்மாவெனப்படுகின்றது. ஆண்டு அஜ்ஜீவாத்மா ஆகாயத்தைப் போன்று விபுவும், அஜ்ஜீவாத்மாவி லிருக்கும் ஞான குணத்தின் அசமவாயி காரணமாகிய ஆத்ம மனச்சையோகத்திற்கு ஆசிரயமுமாம். ஆகையால் ஜீவாத்மாவிற்கு இந்த லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஞானத்தின் அசமவாயி காரணமாகிய சையோகத்திற்கு ஆசிரயம் ஜீவாத்மா" என இம்மாத்திரமே ஜீவாத்மாவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விபுவும்" என்னும் பதங் கூறுவிடின் மனதில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், ஞானத்தின் அசமவாயி காரணமாகிய ஆத்ம மனச் சையோகத்திற்கு எங்ஙனம் ஆத்மா ஆசிரயமாமோ அங்ஙனமே அம்மனமும் அச்சையோகத்திற்கு ஆசிரயமாம். அம்மனதில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திச்செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விபுவும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அம்மனதில் விபுத்தன்மை யின்று மாகையால் அம்மனதில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "விபுத்தன்மை" என இம்மாத்திரமே அஜ்ஜீவாத்மாவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானத்தின் அசமவாயி காரணமாகிய சையோகத்திற்கு ஆசிரயமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் ஆகாயம், காலம், திக்கு, ஈஸ்வரன் என்னும் நான்கில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம், ஏனெனின், எங்ஙனம் அஜ்ஜீவாத்மா விபுவாமோ அங்ஙனமே அவ்வாகாய முதலிய நான்கும் விபுவேயாம். அவ்வாகாய முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானத்தின் அசமவாயி காரணமாகிய சையோகத்திற்கு ஆசிரயமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அவ்வாகாய முதலியன ஞானத்தின் அசமவாயி காரண வடிவ ஆத்ம மனச் சையோகத்திற்கு ஆசிரய வடிவமன்று. ஆகையால் ஆகாய முதலியவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "விபுவும் அசமவாயி காரணமாகிய சையோகத்திற்கு ஆசிரயமுமாயது ஜீவாத்மா" என இம்மாத்திரமே ஜீவாத்மாவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும்பதங் கூறுவிடின் ஆகாயம், காலம், திசை என்னும்மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், பேரி முதலியவைகளோடு அவச்சின்ன ஆகாயத்தில் உண்டாவதாகிய சத்தம் யாதோ அச்சத்தத்தின் சமவாயி காரணமோ அவ்வாகாயமாகின்றது. அவ்வாகாயத்தோடு அப்பேரி முதலியத் திரவியங்களின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோகம் அச்சத்தத்தின் அசமவாயி காரணமாகின்றது. அத்தகைய சத்தத்தின் அசமவாயி காரண வடிவ சையோகத்தின் ஆசிரயத் தன்மை அவ்வாகாயத்திலிருக்கின்றது. அங்ஙனமே அவ்வாகாயத்தில் விபுத்தன்மையு மிருக்கின்றது. ஜன்னியத்திரவிய மாத்திரத்திலிருக்கும் காலிக பரத்துவ, அபரத்துவம் யாதோ அப்பரத்துவ, அபரத்துவங்கட்கு அஜ்ஜன்னியத் திரவியத்தோடு காலத்தின் சையோகமே அசமவாயி காரணமாம். அச்சையோகத்தின் ஆசிரயத் தன்மை அக்காலத்தி லிருக்கின்றது. அங்ஙனமே காலத்தில் விபுத் தன்மையு

யிருக்கின்றது. மூர்த்தத் திரவிய மாத்திரத்தி லிருக்கும் வைதிக பரத்துவ், அபரத்துவம் யாதோ அப்பரத்துவ, அபரத்துவத்திற்கு அம்மூர்த்தத் திரவியத்தோடு திசையின் சையோகமே அசமவாயி காரணமாம். அச்சையோகத் திற்கு ஆசிரயத் தன்மை அத்திசையி லிருக்கின்றது. அங்ஙனமே அத்திசையில் விபுத்தன்மையு மிருக்கின்றது. இவ்வாற்றால் ஆகாயம், காலம், திசையாம் இவைகளில் கூறிய அஜ்ஜீவாத்மாவின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தியை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆகாயம், காலம், திசை என்னும் மூன்றில் முறையாக முற்கூறிய சத்த முதலியவைகளின் அசமவாயி காரண வடிவ சையோகத்திற்கு ஆசிரயத் தன்மை யிருக்கினும் ஞானத்தின் அசமவாயி காரண வடிவ ஆத்ம மனச் சையோகத்திற்கு ஆசிரயத்தன்மை இன்றாம். கேவலம் ஜீவாத்மாவிலேயே ஆத்ம மனச் சையோகத்திற்கு ஆசிரயத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் ஆகாயம், காலம், திசைகளில் கூறிய அஜ்ஜீவாத்மாவின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### சஉரு. அஜ்ஜீவாத்மாவின் இரண்டாவது லக்ஷணம்.

அல்லது அஜ்ஜீவாத்மாவிற்கு இவ்விரண்டாவது லக்ஷணங் கூறுக. "ஸுவது-ஃவாஜிஸவாயிகாரணம் ஜீவாத்மா" (இ-ள்.) சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனையெனப் பெயரிய சம்ஸ்காரம் என்னும் இவை முதலிய குணங்களின் சமவாயி காரணம் யாதோ அஃது ஜீவாத்மாவெனப்படுகின்றது. ஆண்டுச் சுக, துக்க முதலிய குணங்கள் சமவாய சம்பந்தத்தால் அஜ்ஜீவாத்மாவிலேயே யுண்டாகின்றது. அஜ்ஜீவாத்மாவினும் வேறான பிருதிவி முதலியத் திரவியங்களில் அச்சுக, துக்க முதலியன உண்டாவனவன்று. ஆகையால் சுக, துக்க முதலியவைகளின் சமவாயி காரணத் தன்மை வடிவமாக ஜீவாத்மாவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

### சஉசு. அஜ்ஜீவாத்மாவின் மூன்றாவது லக்ஷணம்.

அல்லது அஜ்ஜீவாத்மாவிற்கு இம்மூன்றாவது லக்ஷணங் கூறுக. "ஜந்யஜ்ஞாநாத்யதிகரணம் ஜீவாத்மா" (இ-ள்.) ஜன்னிய ஞானத்திற்கும், ஜன்னிய இச்சைக்கும், ஜன்னியமுயற்சிக்கும் எத்திரவியம் சமவாயசம்பந்தமாக அதிகரணமாமோ அத்திரவியம் ஜீவாத்மாவெனப்படுகின்றது. ஆண்டு அஜ்ஜன்னிய ஞானம், இச்சை, முயற்சி முதலியவைகள் சமவாய சம்பந்தமாக ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றன. அஜ்ஜீவாத்மாவினும் வேறான வேறோர் திரவியத்தில் அஜ்ஜன்னிய ஞான முதலியன சமவாய சம்பந்தமாக இருப்பதில்லை. ஆகையால் ஜன்னிய ஞான முதலியவைகளின் அதிகரணத் தன்மை வடிவ ஜீவாத்மாவின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஞான முதலியவைகட்கு அதிகரணம் ஜீவாத்மா" என இம்மாத்திரமே அஜ்ஜீவாத்மாவின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் அந்த ஞான முதலியவைகட்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறாவிடின் ஈஸ்வரனிடத்தில் அந்த லக்ஷணத்

திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் ஞானம், இச்சை, முயற்சி என்னும் முக்குணங்கள் எங்ஙனம் ஜீவாத்மாவி லிருக்கின்றனவோ அங்ஙனமே ஞான முதலிய முக்குணங்கள் ஈஸ்வராத்மாவினு மிருக்கின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அந்த ஞான முதலியவைகட்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சி யென்னும் முக்குணங்கள் ஜன்னிய மாவனவன்று; நித்தியமாகின்றன. ஜீவாத்மாவின் ஞான முதலியனவே ஜன்னியமாகின்றன. ஆகையால் ஈஸ்வரனிடத்து அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### சகரு. ஈஸ்வரனது லக்ஷணம்.

இனி ஈஸ்வரனது லக்ஷணத்தை நிரூபிப்பாம். "நித்யஜ்ஞாநாத்யதிகரணம் ஈஶ்வர:" (இ-ள்.) நித்திய ஞானத்திற்கும், நித்திய இச்சைக்கும், நித்திய முயற்சிக்கும் எத்திரவியம் அதிகரணமாமோ அத்திரவியம் ஈஸ்வரனெனப்படும். ஆண்டு ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சி யென்னும் மூன்றும் நித்தியமும், ஓர் வியக்தியும், சர்வ ஜகத்தை விஷயஞ்செய்வதுமாகின்றது. அஜ்ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சி யென்னும் மூன்றும் அநித்தியமும், நாநாவியுக்தியும், அற்ப வஸ்துவை விஷயஞ் செய்வதுமாகின்றன. ஆகையால் நித்திய ஞான முதலியவைகளின் அதிகரணத் தன்மை வடிவ ஈஸ்வரனது லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு முற்கூறிய ஜீவாத்மாவோ சரீரந்தோறும் வெவ்வேறுவதால் நாநாவும், விபுவும், நித்தியமுமாம். ஈஸ்வராத்மாவோ ஒன்றும், விபுவும், நித்தியமுமாம். ஆண்டு ஒருமைத் தன்மை, விபுத்தன்மை, நித்தியத் தன்மை என்னும் மூன்றின் லக்ஷணமோ முன்னர் ஆகாய நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம், அதை ஈண்டு மறிந்துக் கொள்க.

### சகசு. ஜீவாத்மாவினது பதினன்கு குணங்களின் வர்ணனம்.

ஆண்டு ஜீவாத்மாவிடத்தோ புத்தி, சுகம், துக்கம், இச்சை, த்வேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனையெனப்பெயரிய சம்ஸ்காரம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாக மென்னும் பதினன்கு குணங்களிருக்கின்றன.

### சகஎ. ஈஸ்வரனது எண் குணங்களின் வர்ணனம்.

ஈஸ்வரனிடத்தோ புத்தி, இச்சை, முயற்சி, சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் எட்டுக் குணங்க ளிருக்கின்றன. அத்தகைய நாநா ஜீவாத்மாவினும், ஈஸ்வராத்மாவினும் ஒரே ஆத்மத் தன்மை ஜாதி யிருக்கின்றது. இக்காரணத்தானேயே முன்னர் "ஆத்மத்தன்மை ஜாதியுடையது ஆத்மா" என ஜீவாத்மாவிற்கும், ஈஸ்வராத்மாவிற்கும் சாதாரண லக்ஷணங் கூறப்பட்டது.

சங்கை:—"ஆத்மத் தன்மை ஜாதியுடையது ஆத்மா" என முற்கூறிய ஆத்மாவின் லக்ஷணம் சம்பவிக்கும்போது முதலில் ஓர் பிரமாணத்தால் அவ்வாத்மத் தன்மை ஜாதி சித்திக்க வேண்டும். அவ்வாத்மத் தன்மை ஜாதியின்

சித்தியின்றி அவ்வாத்மத் தன்மையுள்ள லக்ஷணம் சம்பவியாது. ஆகையால் அந்த லக்ஷணத்தின் சித்தியின் பொருட்டு யாதாமோர் பிரமாணத்தால் அவ் வாத்மத்தன்மை ஜாதியின்சித்தி அவசியமாய்ச் செய்யப்படவேண்டுமென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அவ்வாத்மத்தன்மை ஜாதி யின் சித்தியைச்செய்வாம். "ஸுக்தநிஷ்டாயா ஸமவாயிகாரணதா ஸா கிஞ்சித்தர்மாவச்சிந்நா காரணதாத்வாத் கடகாரணதாவத்" (இ-ள்.) ஆத்மாவிலிருக்கும் சுக, துக்கங்களின் சமவாயி காரணத்தன் மை யாதோ அக்காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கிய மாம், காரணத்தன்மையாவதால், எது வெது காரணத் தன்மையாமோ அவ் வக்காரணத்தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகின்றது. நிரவச்சின்ன மாக ஓர்காரணத்தன்மையுமுண்டாகாது. எங்ஙனம் தந்துக்களில் இருக்கின்ற படத்தின் சமவாயி காரணத்தன்மை தந்துத்தன்மைத் தர்மத்தால் அவச்சின்ன மாமோ அங்ஙனமே ஆத்மாவிலிருக்கின்ற அச்சுக, துக்க முதலியவைகளின் சமவாயி காரணத் தன்மையும் காரணத் தன்மை வடிவமாவதால் ஓர் தர்மத் தால் அவசியம் அவச்சின்னமாகும். அவ்வாத்மாவி லிருக்கும் காரணத் தன் மையின் அவச்சேதக தர்மம் ஆத்மத்தன்மை ஜாதியாகவே சம்பவிக்கின்றது. அவ்வாத்மத் தன்மை ஜாதியினும் வேறான வேறோர் தர்மம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகாது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அவ்வாத்மத் தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது.

சங்கை:—இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் ஜீவாத்மாவில் ஆத் மத்தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது. என்றாலும் ஈஸ்வராத்மாவில் ஆத்மத்தன்மை ஜாதியின் சித்திச் சம்பவியாது. ஏனெனின் அச்சுக, துக்க முதலியன சமவாயசம்பந்தத்தால் ஜீவாத்மாவிலேயே உண்டாகின்றன. ஈஸ்வ ராத்மாவில் சுக, துக்க முதலியன சமவாய சம்பந்தத்தால் ஓர் காலும் உண்டா வன்வன்று. ஆகையால் அச்சுக, துக்க முதலியவைகளின் சமவாயி காரணத் தன்மைக் கேவலம் ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றது. ஈஸ்வராத்மாவி லின்றாம்.

சமாதானம்:—எங்ஙனம் கடத்தின் உற்பத்திக்காலத்தில் குலாலினது கையிலுள்ள தண்டத்தில் அக்கடத்தின் பலோபதாயகத் தன்மை வடிவ கார ணத் தன்மையிருக்கின்றதோ அங்ஙனம் அவ்வீஸ்வரனிடத்தில் அச்சுக, துக்க முதலியவைகளின் பலோபதாயகத் தன்மை வடிவ சமவாயி காரணத் தன்மை இன்றாம்; ஜீவாத்மாவிலேயே பலோபதாயகத்தன்மை வடிவ சமவாயி கார ணத்தன்மை இருக்கின்றது. என்றாலும் எங்ஙனம் வனத்திலுள்ள தண்டத் தில் அக்கடத்தின் ஸ்வரூப யோக்கியத்தன்மை வடிவ காரணத் தன்மையிருக் கின்றதோ அங்ஙனமே அவ்வீஸ்வராத்மாவிலும் அச்சுக, துக்க முதலியவைக ளின் ஸ்வரூபயோக்கியத்தன்மை வடிவ சமவாயி காரணத் தன்மையிருக்கின் றது. அக்காரணத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அவ்வீஸ்வரனிடத் தும் அவ்வாத்மத் தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது.

## ௪௬௮. சரீரம், அதிர்ஷ்டம் முதலிய காரணங்களின் அபாவத்தால் ஈஸ்வரனிடத்து சுக, துக்க முதலியவைகள் உண்டாகாமை.

*சங்கை:—அவ்வீஸ்வரனிடத்து அச்சுக, துக்க முதலியவைகளின் ஸ்வரூப யோக்கியத்தன்மை வடிவ சமவாயி காரணத்தன்மையின் அங்கீகார முண்டாகுக. அவ்வீஸ்வரனிடத்தில் அச்சுக, துக்க முதலியன சமவாய சம்பந்தத்தால் ஏன் உண்டாகக்கூடாது? உண்டாகவேண்டும்.*

*சமாதானம்:—அச்சுக, துக்க முதலியவைகளின் உற்பத்தியில் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டமும், சரீரமும் நிமித்த காரணமாகின்றது. அவ்வதிர்ஷ்ட, சரீர முதலிய வடிவ நிமித்த காரணம் எங்ஙனம் ஜீவாத்மாவி லிருக்கின்றதோ அங்ஙனம் அவ்வீஸ்வராத்மாவிலின்றும். ஆகையால் அவ்வதிர்ஷ்ட சரீராதி வடிவ நிமித்த காரணத்தினிருப்புளதாக அஜ்ஜீவாத்மாவிலேயே அச்சுக முதலியன உண்டாகின்றன. அந்நிமித்தகாரணத்தின் அபாவமிருக்கும் அவ்வீஸ்வராத்மாவில் அச்சுக, துக்க முதலியன உண்டாகா.*

## ௪௬௯. மித்தியா ஞான வடிவ காரணத்தின் அபாவத்தால் ஈஸ்வரனிடத்தில் தர்ம, அதர்மங்கள் உண்டாகாமையின் வர்ணனம்.

*சங்கை:—எங்ஙனம் ஜீவாத்மாவில் அத் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டம் உண்டாவதாகின்றதோ அங்ஙனமே அவ்வீஸ்வராத்மாவிலும் அத் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டம் ஏன் உண்டாகக்கூடாது?*

*சமாதானம்:—தேக முதலிய அநாத்ம பதார்த்தங்களில் ஆத்ம புத்தி வடிவ மித்தியா ஞானம் யாதோ அம்மித்தியா ஞானமே அவ்வதிர்ஷ்டத்தின் காரணமாகின்றது. அம்மித்தியா ஞான வடிவ காரணம் அஜ்ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றது. அவ்வீஸ்வராத்மாவில் அம்மித்தியா ஞானம் இருப்பதில்லை. ஆகையால் அம்மித்தியா ஞான வடிவ காரணமிருக்க அஜ்ஜீவாத்மாவிலேயே அவ்வதிர்ஷ்டம் உண்டாவதாகின்றது. அம்மித்தியா ஞான வடிவ காரணத்தின் அபாவ மிருக்க அவ்வீஸ்வராத்மாவில் அவ்வதிர்ஷ்டம் உண்டாகிறதில்லை. அல்லது அம்மித்தியாஞானத்தினை அவ்வதிர்ஷ்டத்தின் காரணமாக வொப்பாவிடின் தத்துவ ஞானத்தால் முக்தியை அடைந்த ஜீவாத்மாவிலும் அவ்வதிர்ஷ்டத்தின் உற்பத்தி யுண்டாக வேண்டும். அங்ஙனமே அத் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தால் அம்முக்தியை அடைந்த புருஷனுக்கு மீண்டும் ஜன்மத்தின் அடைவு உண்டாக வேண்டும். முக்தியை அடைந்த புருஷனுக்கு அவ்வதிர்ஷ்டத்தின் உற்பத்தியும், ஜன்மத்தின் அடைவும் உண்டாகிறதில்லை யென்னும் வார்த்தை சர்வ சுருதி, ஸ்மிருதிகளில் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது; இதனிடத்தில் காரண மிதுவேயாம். முக்தியை அடைந்த புருஷனது தத்துவ ஞானத்தால் அம்மித்தியா ஞானம் சம்ஸ்கார வடிவ வாசனையோடு நாசமாய் விடுகின்றது. ஆகையால் இது சித்தமாயிற்று; எங்ஙனம் அம்மித்தியா ஞான வடிவ காரணத்தின் அபாவத்தால் முக்தியை அடைந்த*

புருஷனிடத்தில் அத் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டம் உண்டாகிறதில்லையோ அங்ஙனமே அம்மித்தியாஞான வடிவ காரணத்தின் அபாவத்தால் அவ்வீஸ்வர னிடத்தும் அத் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டம் உண்டாகிறதில்லை. அவ்வதிர்ஷ்ட வடிவ காரணத்தின் அபாவத்தால் அவ்வீஸ்வரனிடத்தில் அச்சுக, துக்க முதலிய காரியங்களும் உண்டாகிறதில்லை. ஆனால் அவ்வீஸ்வரனிடத்திலும் அச்சுக, துக்க முதலியவைகளின் ஸ்வரூப யோக்கியத்தன்மை வடிவக் காரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அஜ்ஜீவாத்மாவிலும், ஈஸ்வராத்மாவிலும் அச்சுக, துக்க முதலியவைகளின் சமவாயி காரணத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அவ்வாத்மத் தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது.

## ௩௭௦. வேறுவகை அநுமானப் பிரமாணத்தால் ஆத்மத்தன்மை ஜாதியின் சித்தி.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். வேதத்தில் அனேக விடங்களில் ஜீவாத்மா, ஈஸ்வராத்மாவா மிரண்டும் ஆத்மா வென்னும் சொல்லால் வழங்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் அஜ்ஜீவாத்மா, ஈஸ்வராத்மாவா மிரண்டில் அவ்வாத்மப் பதத்தின் சக்கியத் தன்மை சமானமேயாம். அவ்வாத்மப் பதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அவ்வாத்மத்தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது. அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். "ஜீவெஶ்வரநிஷ்டா யா ஆத்மபதஶக்யதா ஸா கிஂசித்தர்மாவச்சிந்நா ஶக்யதாத்வாத் கடநிஷ்டா கடபதஶக்யதாவத்" (இ-ள்.) ஜீவ, ஈஸ்வரர்களிடத்தில் இருக்கின்ற ஆத்மப் பதத்தின் சக்கியத்தன்மை யாதோ அச்சக்கியத்தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், சக்கியத் தன்மையாவதால், எது வெது சக்கியத் தன்மையாமோ அவ்வச்சக்கியத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகும். நிரவச்சின்னமாக ஓர் சக்கியத் தன்மையு முண்டாகாது. எங்ஙனம்: கடத்திலிருக்கின்ற கடப் பதத்தின் சக்கியத்தன்மை கடத்தன்மைத் தர்மத்தால் அவச்சின்னமாமோ அங்ஙனமே ஜீவ, ஈஸ்வரர்களிடத்திலிருக்கின்ற ஆத்மப் பதத்தின் சக்கியத் தன்மையும் சக்கியத் தன்மையாவதால் ஓர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமாகும். அவ்வாத்மப் பதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதகம் ஆத்மத் தன்மை ஜாதியேயாம். இவ்வாறாக ஆத்மப் பதத்தினது சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவமாக அவ்வாத்மத் தன்மை ஜாதியின் சித்திச் சம்பவிக்கின்றது. எங்ஙனம் காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவும், காரியத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவும், பிரதிபந்தகத் தன்மையின் அவச்சேதக வடிவமாகவும், பிரதிபத்தியத்தன்மையின் அவச்சேதக வடிவமாகவும் ஜாதியின் சித்தியை நூலாசிரியர்கள் அங்கீகரிக்கின்றனர்களோ அங்ஙனமே பதத்தினது சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவமாகவும் அஜ்ஜாதியின் சித்தியை நூலாசிரியர்கள் அங்கீகரிக்கின்றனர். இக்காரணத் தானேயே குண தீதிதி நூலில் குணப் பதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவமாக குணத் தன்மை ஜாதியின் சித்தியை பட்டாசார்ய சிரோமணியானவர் அங்கீகரித்துள்ளார். ஆண்டு எப்பதம் சக்தி விருத்தியால் எவ்

வர்த்தத்தைப் போதிக்கின்றதோ அப்பதத்திற்கு அவ்வர்த்தம் சக்கியமெனப் படுகின்றது.

### சஎக. கேவலம் ஜீவாத்மாவிலேயே ஆத்மத்தன்மை ஜாதியை ஒப்பும் வாதியின் மதமும் அம்மதத்தின் கண்டனமும்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். அவ்வாத்மத் தன்மை ஜாதி ஜீவாத்மாவிலேயே யிருக்கின்றது ஈஸ்வராத்மாவில் அவ்வாத்மத்தன்மை ஜாதி இருப்பதில்லை. எக்காரணத்தாலெனின் ஈஸ்வரனிடத்தில் அவ்வாத்மத் தன்மை ஜாதியின் சாதகமாக ஓர் பிரமாணமு மின்றாம்.

சங்கை:—ஈஸ்வரனிடததில் அவ்வாத்மத் தன்மை ஜாதியை அங்கீகரியாவிடின் பிருதிவி முதலியத் திரவியங்களை வேறு படுத்துவதாகிய வாக்கியத்திலுள்ள ஆத்மப் பதத்தால் ஈஸ்வரனைக் கிரஹித்தலுண்டாகாததாகும். ஆனால் ஆத்மப் பதத்தால் கேவலம் ஜீவாத்மாவினையே கிரஹிப்பதாகும். ஆகையால் அவ்வீஸ்வரனுக்குப் பத்தாவது திரவியத் தன்மைப் பிராப்தமாகும்.

சமாதானம்:—அவ்வாக்கியத்திலுள்ள திரவியத்தை வேறுபடுத்தும் ஆத்மபதம் யாதோ அவ்வாத்மப் பதத்தின் ஸ்தானத்தில் யாம் "ஞானமுடையது" என்னும் பதத்தைக் கூறுகின்றோம். ஞான முடையது என்னும் பதத்தால் ஜீவ, ஈஸ்வரராம் இரண்டின் கலப்பு உண்டாகின்றது. ஆகையால் "ஆத்மத் தன்மை ஜாதியுடையது ஆத்மா" என முற்கூறிய லக்ஷணம் ஜீவாத்மாவிற்கே சம்பவிக்கின்றது. ஈஸ்வனுக்குச் சம்பவியாது. ஜீவ, ஈஸ்வர ரென்னு மிரண்டிற்கோ ஞானதிகரணத் தன்மை வடிவ லக்ஷணமே சம்பவிக்கின்றது.

இம்மதம் நலமுடைய தன்றாம். ஏனெனின் வேதத்தில் அனேக விடங்களில் ஜீவ, ஈஸ்வரரென்னும் இரண்டும் ஆத்மபதத்தால் வழங்கப்பட்டிருக்கின்றது. அவ்வெல்லா ஆத்மப் பதங்கட்கு ஞான முடையதில் லக்ஷணங் கூறுவதாகும். எதிகாறும் பதத்தின் முக்கிய அர்த்தம் சம்பவிக்கின்றதோ அதுகாறும் பதத்தின் லாக்ஷணிக அர்த்தம் அங்கிகரிக்கப்படுவதில்லை. இது சாத்திரக்காரர்களின் நியமமாம். அந்நியமத்திற்கு இம்மதத்தில் கேடுண்டாகும். இதுவே இம்மதத்தில் நலமில்லாத் தன்மையாம்.

முற்கூறியவாற்றால் ஜீவாத்மாவினதும், ஈஸ்வராத்மாவினதும் லக்ஷணம் வெவ்வேறாகச் சம்பவிக்கினும் பிரமாணத்தின் அபாவத்தால் ஜீவாத்மாவின் சித்தியும், ஈஸ்வராத்மாவின் சித்தியும் உண்டாகமாட்டா. ஆகையால் ஜீவாத்மாவினையும், ஈஸ்வராத்மாவினையும் சித்திச் செய்வதாகிய பிரமாணம் அவசியங் கூறப்பட வேண்டுமென்னுஞ் சங்கை யுண்டாக முதலில் ஜீவாத்மாவினைச் சாதிக்கும் பிரமாணத்தைக் கூறுவாம்.

### சஎஉ. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் ஜீவாத்மாவின் சித்தி.

ஆண்டு நான் சுகி, நான் துக்கி என்னும் மானசப் பிரத்தியக்ஷம் எல்லாப் பிராணிகட்கும் உண்டாகின்றது. அம்மானசப் பிரத்தியக்ஷம் சுக, துக்க முடைய ஆத்மாவினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அஹமாகார மானசப் பிரத்தியக்ஷமே அஜ்ஜீவாத்மாவில் பிரமாணமாம்.

சங்கை:—ஜீவாத்மாவினை பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாக வொப்பின் "ஆத்மா தாவந்ந ப்ரத்யக்ஷ:" (இ-ள்.) ஆத்மா பிரத்தியக்ஷஞானத்திற்கு விஷயமாகாது. என்னும் பாஷிய வசனத்திற்கு விரோத முண்டாகும்.

சமாதானம்:—அப்பாஷியத்திலுள்ள ஆத்மச்சத்தம்யாதோ அவ்வாத்மச் சத்தம் பரமாத்மாவினைப் போதிப்பதேயாம். ஜீவாத்மாவினைப் போதிப்பதன்று. பரமாத்மாவில் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மை யாரும் அங்கீகரிப்பதில்லை. ஆகையால் ஜீவாத்மாவினை மானசப் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாக வொப்புவதில் அப்பாஷிய வசனத்திற்கு விரோதமுண்டாகாது. அல்லது அப்பாஷியத்திலுள்ள ஆத்மச் சத்தத்தால் ஜீவாத்மாவினைக் கொள்ளினும் அப்பாஷியத்திலுள்ள பிரத்தியக்ஷ சத்தத்தால் மானசப் பிரத்தியக்ஷத்தினும் வேறான சாக்ஷுஷ முதலியப் பிரத்தியக்ஷத்தினைக் கொள்ளுக. மானசப் பிரத்தியக்ஷத்தினைக் கொள்ளற்க. சாக்ஷுஷ முதலியப் பிரத்தியக்ஷத்திற்கு விஷயத் தன்மை அஜ்ஜீவாத்மாவில் யாரும் ஒப்புவதில்லை; ஜீவாத்மாவினை யாம் கேவலம் மானசப் பிரத்தியக்ஷத்திற்கே விஷயமாக ஒப்புகின்றனம். இவ்வாற்றானும் அப்பாஷிய வசனத்திற்கு விரோதமுண்டாகாது.

## ௨௭௩. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் ஆத்மாவினது சித்தியின் சங்கை.

சங்கை:—அஹமாகாரப் பிரத்தியக்ஷத்தால் தேகமுதலியவைகளினும் வேறான அஜ்ஜீவாத்மாவின் சித்தி யுண்டாகிறதில்லை. ஏனெனின், "யான் பருத்தோன், யான் மெலிந்தோன்" என்னும் அஹமாகாரப் பிரத்தியக்ஷமோ பருமைத் தன்மை, மெலிவுத் தன்மை விசிஷ்ட ஸ்தூல சரீரத்தினை விஷயஞ் செய்கின்றது. "யான் ஒற்றைக் கண்ணன், யான் செவிடன்" என்னும் அஹமாகாரப் பிரத்தியக்ஷமோ ஒற்றைக்கண்தன்மை, செவிட்டுத்தன்மையாதி தர்ம விசிஷ்ட இந்திரியங்களையே விஷயஞ் செய்கின்றது. இவ்வாற்றால் அஹமாகாரப் பிரத்தியக்ஷம் சரீரம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி முதலிய அனேக பதார்த்தங்களை விஷயஞ்செய்கின்றது. அவ்வவ் அஹமாகாரப் பிரத்தியக்ஷத்தின் வலிவால் அவ்வவ்வாதி அவ்வத்தேக முதலியவைகளையே ஆத்ம வடிவமாக வொப்புகின்றனர். ஆகையால் அவ்வாதிகளின் சன்னிதானத்தில் அஹமாகாரப் பிரத்தியக்ஷத்தால் அத்தேக முதலியவைகளினும் வேறாக ஜீவாத்மாவின் சித்தி யுண்டாகமாட்டாதென்னுஞ் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அஜ்ஜீவாத்மாவின் சித்தியைச் செய்வாம்.

## ௨௭௪. அநுமானப் பிரமாணத்தால் ஜீவாத்மாவின் சித்தி.

"புத்த்யாதய: ப்ருதிவ்யாத்யஷ்டத்ரவ்யாதிரிக்தத்ரவ்யாஶ்ரிதா: ப்ருதிவ்யாத்யஷ்டத்ரவ்யாநாஶ்ரிதத்வே ஸதி குணத்வாத் யோ யோஷ்டத்ரவ்யாநாஶ்ரிதோ குண: ஸ தததிரிக்தத்ரவ்யாஶ்ரித: யதா ப்ருதிவ்யாத்யநாஶ்ரித: ஶப்தோஷ்டத்ரவ்யாதிரிக்தத்ரவ்யாஶ்ரித:" (இ-ள்.) புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி என்னும் ஆறு குணங்கள் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாயம், காலம், திசை, மனம் என்னும் எட்டுத் திரவியங்களினும் வேறான ஓர் திரவியத்தை ஆசிர

யிக்க யோக்கியமாம், பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத குண வடிவமாவதால், எவ்வெத்தர்மம் எத்திரவியங்களை ஆசிரயிக்காத குண வடிவமாமோ அவ்வத்தர்மம் அவ்வத்திரவியங்களினும் வேறான ஓர் திரவியத்தை ஆசிரயிப்பதேயாம். எங்ஙனம்: சத்தம் பிருதிவி முதலிய எட்டுத்திரவியங்களை ஆசிரயிக்காத குணவடிவமா மாகையால் அச்சத்தம் அப்பிருதிவி முதலிய எட்டுத்திரவியங்களினும் வேறான ஆகாய வடிவத் திரவியத்தை ஆசிரயிப்பதேயாம். அங்ஙனமே புத்தி முதலியனவும் பிருதிவி முதலிய எட்டுத்திரவியங்களை ஆசிரயிக்காத குணவடிவமாமாகையால் புத்தி முதலிய குணங்கள் அப்பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான ஓர் திரவியத்தை ஆசிரயிப்பதேயாம். பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறும், புத்தி முதலிய குணங்களின் ஆசிரய வடிவமுமாம் அத்தகையது ஜீவாத்மா வடிவத் திரவியமேயாம். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறாக புத்தி முதலிய குணங்களின் ஆசிரய வடிவமாக ஒன்பதாவது ஜீவாத்மா வடிவத் திரவியத்தின் சித்திச் சம்பவிக்கின்றது. ஆண்டு "பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத குணமாவதால்" என்னும் ஏதுவில் பிருதிவி முதலிய "எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காததாய்" என்பது விசேஷண பாகமும் "குணமாவதால்" என்பது விசேஷிய பாகமுமாம். எவ்வேது விசேஷண, விசேஷிய பாகத்தாற்பொருந்தியதாமோ அவ்வேதுவிற்கு ஓர் கால் விசேஷண பாகம் பக்ஷத்தில் இராதாயினும், விசேஷிய பாகம் பக்ஷத்தில் இராதாயினும், விசேஷண பாகமும், விசேஷிய பாகமுமாமிரண்டும் பக்ஷத்தில் இராதாயினும் அவ்வேது ஸ்வரூபாசித்தி தோஷமுடையதாகின்றது. ஆகையால் கூறிய ஏதுவில் ஸ்வரூபாசித்தி தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அப்புத்தி முதலிய குணங்களில் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மையும், குணத் தன்மையும் சித்தன் கெங்வாம்.

## சஎ௫: புத்தி முதலிய குணங்களில் பிருதிவி முதலிய ஐந்து பூதங்களினது குணபாவ வடிவத் தன்மையின் சாதக அநுமானம்.

ஆண்டு "஬ுத்₄யாத₃ய꞉ ந பூ₄தகு₃ணா꞉ மாநஸப்ரத்யக்ஷவிஷயத்வாத் யதை₂வம் ததை₂வம் யதா₂ ரூபாதி₃꞉" (இ-ள்.) அப் புத்தி முதலிய குணங்கள் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாயம், என்னும் ஐந்து பூதங்களின் குணங்களன்று, மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால், எதுவெது பிருதிவி முதலிய ஐந்துப் பூதங்களின் குணங்களாமோ அவ்வக்குணங்கள் மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமன்றாம். எங்ஙனம்: உருவம், ரச முதலியன பிருதிவி முதலிய ஐந்துப் பூதங்களின் குணங்களாமாகையால் அவ்வுருவ முதலியன மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமுமன்றாம். சாக்ஷுஷ முதலியப் பிரத்தியக்ஷத்திற்கே விஷயமாம். இப்புத்தி முதலிய குணங்களோ மானசப் பிரத்தியக்ஷத்திற்கே விஷயமாம். ஆகையால் இப் புத்தி முதலியன ஐந்துப் பூதங்களின் குணமன்றாம்.

### ௩௭௬. புத்தி முதலிய குணங்களில் திக்கு, காலம், மனம் என்னும் மூன்றுத் திரவியங்களின் குணாபாவ வடிவத் தன்மையின் சாதக அநுமானம்.

அல்லது "புத்யாதய: ந திக் கால மநஸாம் குணா: விஶேஷகுணத்வாத் ரூபவத்" (இ-ள்.) புத்தி முதலிய குணங்கள் திக்கு, காலம், மனம் என்னும் மூன்றுத் திரவியங்களின் குணமுமன்று, விசேஷகுண மாவதால், எது வெது விசேஷ குணமாமோ அதுவது திக்கு, காலம், மனம் என்னும் மூன்றுகளின் குணமாவதன்று. எங்ஙனம்: உருவம் விசேஷ குணமாவதால் திக்கு, காலம், மனமென்னும் மூன்றின் குணமன்று. அங்ஙனமே புத்தி முதலியனவும் விசேஷ குணங்களா மாகையால் புத்திமுதலியன திக்கு, காலம், மனமென்னும் மூன்றின் குணங்களன்றாம். இவ்வாறாகக் கூறிய இரு அநுமானங்களால் புத்தி முதலிய குணங்களில் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களின் அநாசிரயத் தன்மைச் சம்பவிக்கின்றது.

சங்கை :—எவ்விசேஷ குணத்தன்மை ஏதுவால் புத்தி முதலியவைகளில் திக்கு, காலம், மனமென்னும் மூன்றின் குணவடிவத் தன்மை நிஷேதஞ் செய்யப்பட்டதோ அவ்விசேஷ குணத் தன்மையில் பிரமாணம் யாதென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் புத்தி முதலியவைகளில் விசேஷ குண வடிவத் தன்மையைச் சித்தஞ் செய்வாம்.

### ௩௭௭. புத்தி முதலியவைகளில் விசேஷ குண வடிவத் தன்மையின் சாதக அநுமானம்.

"புத்யாதய: விஶேஷகுணா: குணத்வே ஸதி ஏகேந்த்ரிய க்ராஹ்யத்வாத் ரூபவத்" (இ-ள்.) முற்கூறிய புத்தி முதலிய அறு குணங்கள் விசேஷ குணமாக யோக்கியமாம், குண வடிவமாகி ஓர் இந்திரியத்தாலுண்டான ஞானத்தின் விஷயமாவதால், எதுவெது குண வடிவமாகி ஓர் இந்திரியத்தால் உண்டான ஞானத்தின் விஷயமாமோ அதுவது விசேஷ குணமேயாகின்றது. எங்ஙனம்: உருவம் குணமாகி சக்ஷு விந்திரியம் ஒன்றினால் உண்டான ஞானத்தின் விஷயமா மாகையால் அவ்வுருவம் விசேஷ குணமுமாம். அங்ஙனமே புத்தி முதலியனவும் குண வடிவமாகி மன இந்திரியமொன்றினால் உண்டான ஞானத்தின் விஷயமா மாகையால் புத்தி முதலியனவும் விசேஷ குண வடிவமுமாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அப்புத்தி முதலியவைகளில் விசேஷ குண வடிவத் தன்மைச் சித்தமாகின்றது. ஆண்டு இவ்வநுமானத்தில் "குணமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவ தாவதால்" என்னும் பதங் கூறாவிடின் சங்கியை முதலிய சாமான்னிய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் அச்சங்கியை முதலிய குணங்களில் குணத்தன்மை வடிவ ஏதுவோ யிருக்கின்றது; விசேஷ குண வடிவ சாத்திய மின்றாம். ஆகையால் விசேஷ குணத் தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அச்சங்கியை முதலிய சாமான்னிய குணங்களில்

இருப்பதாவதால் அக்குணத்தன்மை ஏது வியபிசாரியேயாகும். அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டுச் சங்கியை முதலிய சாமான்னிய குணங்களில் ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுந் தன்மை யின்றும். ஆனல் சக்ஷு, துவக்கு என்னும் இரு இந்திரியங்களால் கிரஹிக்கப்படுந் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அச்சங்கியை முதலிய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுந் தன்மையால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "குணமாகி" என்னும் பதங் கூறுவிடின் ஆத்மாவிலும், ஆத்மத்தன்மை ஜாதியிலும் புத்தித்தன்மை, சுகத்தன்மை, துக்கத்தன்மை இவை முதலிய ஜாதிகளிலும் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின், அவ்வாத்மா முதலியனவும் மன வடிவ இந்திரியம் ஒன்றினலேயே கிரஹிக்கப்படுவனவாம். ஆகையால் ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ ஏதுவோ அவ்வாத்மா முதலியவைகளி லிருக்கின்றது. ஆனல் விசேஷ குணத்தன்மை வடிவ சாத்தியம் அவ்வாத்மா முதலியவைகளி லின்றும். ஆகையால் விசேஷ குணத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவ முடைமை அவ்வாத்மா முதலியவைகளில் இருப்பதாவதால் ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ ஏது வியபிசாரியேயாகும். அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "குணமாகி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மா முதலியவைகளில் அக்குண வடிவத் தன்மை இன்றும். ஆகையால் ஆத்மா முதலியவைகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. ஆண்டு உருவம், ரசம், கந்தம், பரிசம், இயல்பாயுள்ள நெகிழ்ச்சி, ஸ்நேஹம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி, தர்மம், அதர்மம், பாவனை யெனப்பெயரிய சம்ஸ்கார மென்னும் பதினறும் விசேஷ குணங்களெனப்படும். சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்துவம், அபரத்துவம், நிமித்தத்தாலுய நெகிழ்ச்சி, குருத்துவம், வேக மென்னும் பத்தும் சாமான்னிய குணங்களெனப்படும். நிலைபெறுத்துகையெனப் பெயரிய சம்ஸ்காரமோ எம்மதப்படி பிருதிவி மாத்திரத்தின் குணமாமோ அம்மதப்படி விசேஷகுணமாம். எம்மதப்படி நிலைபெறுத்துகையெனப்பெயரிய சம்ஸ்காரம் பிருதிவி முதலிய நான்குத் திரவியங்களின் குணமாமோ அம்மதப்படி சாமான்னிய குணமாம். ஈண்டு முற்கூறிய குணமாகி ஓர் இந்திரியத்தால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ ஏது கூறிய அவ்வெல்லா குணங்களில் விசேஷ குணத் தன்மையினை சித்தஞ் செய்வதன்று; உருவம், ரசம், கந்தம், பரிசம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, வெறுப்பு, முயற்சி யென்னு மிவ்வளவு குணங்களிலேயே அவ்வேது இருக்கின்றது. ஆகையால் இவ்வளவு குணங்களிலேயே அவ்வேது விசேஷ குணத் தன்மையினைச் சித்தஞ் செய்கின்றது. தர்மம், அதர்மம், பாவனை, இயல்பாயுள்ள நெகிழ்ச்சி, ஸ்நேஹம் என்னும் ஐந்து குணங்களில் அவ்வேது இருப்பதில்லை. ஏனெனின் தர்மம், அதர்மம், பாவனை யென்னும் முக்குணங்களோ

அதீந்திரியமாகின்றன வாகையால் ஓரிந்திரியத்தாலும் அறியப்படுவனவன்று. இயல்பாயுள்ள நெகிழ்ச்சி, ஸ்நேக மென்னு மிருகுணங்களோ சக்ஷு, துவக்கு என்னு மிரு இந்திரியங்களால் அறியப்படுவனவாகின்றன. இவ்வாற்றால் ஓர் இந்திரியத்தால் அறியப்படுந் தன்மை வடிவ ஏது அத்தர்ம முதலிய ஐந்தி லிருப்பதில்லை. ஆகையால் அவ்வேது தர்ம முதலிய ஐந்தில் விசேஷ குணத் தன்மையினை சித்திச் செய்யமாட்டாது. என்றாலும் ஈண்டு ஆத்மாவைப் பிரதி பாதிக்கும் பிரகரணத்தில் எல்லா விசேஷ குணங்களில் விசேஷ குண வடிவத் தன்மையினைச் சித்தஞ் செய்வதற்கு ஓர் பயனுமின்றாம். ஆனால் முற்கூறிய அநுமானத்தில் எப்புத்தி முதலிய அறு குணங்களால் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களினும் வேறான ஜீவாத்மாவின் சித்திச் செய்யப்படுகிறதோ அப்புத்தி முதலிய அறு குணங்களிலேயே விசேஷ குண வடிவத் தன்மை யினைச் சித்திச் செய்வதற்குப் பயனும். இக்காரணத்தால் அப்புத்தி முதலிய அறு குணங்களிலேயே விசேஷ குண வடிவத்தன்மையினை சித்திச் செய்வான் பொருட்டு அக்குணத்தன்மை விசிஷ்ட ஓர் இந்திரியத்தால் அறியப்படுந் தன்மை வடிவ ஏது கூறப்பட்டது. உருவ முதலிய எல்லா விசேஷ குணங்களில் விசேஷ குண வடிவத் தன்மையினை சாதிக்கும் லக்ஷண வடிவ ஏதுவை பின்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் குணங்களின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணத் திற் கூறுவாம். இதுகாறும் புத்தி முதலிய அறு குணங்களில் பிருதிவி முத லிய எட்டுத்திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மைச் சித்தி செய்யப்பட்டது. இனிபுத்தி முதலிய குணங்களில் குணத் தன்மையினைச் சித்திச் செய்வாம்.

## சஎ௪. புத்தி முதலிய குணங்களில் குண வடிவத் தன்மையின் சாதக அநுமானம்.

“புத்த்யாதய: ஷட் குணா: அநித்யைகேந்த்ரிய ஜந்ய ஜ்ஞாந விஷயத்வாத் கந்தவத்” (இ-ள்.) புத்தி முதலிய ஆறும் குணமாகயோக்கியமாம், அநித்தியமாகி ஏகேந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாவதால், எவ்வெவ் வத்து அநித்தியமாகி ஏகேந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாமோ அவ் வவ்வத்து குணமேயாகின்றது. எங்ஙனம்: கந்தம் அநித்தியமாகி ஜன்னிய ஞானத்தின் விஷயமா மாகையால் அக்கந்தம் குணமாம். அங்ஙனமே புத்தி முதலியனவும் அநித்தியமாகி மன வடிவ இந்திரிய மொன்றினால் உண்டாம் ஞானத்திற்கு விஷயமாமாகையால் புத்தி முதலியனவும் குண வடிவமேயாகும். இவ்வாறாய அநுமானத்தால் புத்தி முதலியவைகளில் குண வடிவத் தன்மையின் சித்தி யுண்டாகின்றது. இவ்வநுமானத்தில் “ஓர் இந்திரியத்தாலறியப்படுவதால்” என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் “அநித்தியமாகி” என்னும் பதங் கூறாவிடின் உருவத் தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளில் அந்த ஏதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின் புத்தி முதலிய குணங்களைப் போன்று உருவத் தன்மை, ரசத் தன்மை முதலிய ஜாதிகளும் முறையாக சக்ஷு, ரசனம் முதலிய ஓரோர் இந்திரி யத்தாலேயே அறியப்படுவனவாகின்றன. ஆகையால் ஓர் இந்திரியத்தால் அறி யப்படுந் தன்மை ஏதுவோ அவ்வுருவ முதலிய ஜாதிகளிலிருக்கின்றது. ஆனால்

குணத்தன்மை வடிவ சாத்தியம் ஆண்டின்றும். அந்த வியபிசாரதோஷத்தை நிவர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "அநித்தியமாகி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவத்தன்மை முதலிய நித்திய ஜாதிகளில் அநித்தியத்தன்மை யின்றுமாகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "அநித்தியமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "ஒரிந்திரியத்தால் அறியப்படுந் தன்மையால்" என்னும் பதங்கள் கூறு விடின் கட முதலியத் திரவியங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் கட முதலியத் திரவியங்களில் அநித்தியத்தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனல் குணத் தன்மை வடிவ சாத்தியம் ஆண்டின்றும். அவ் வதிவியாப்தித் தோஷத்தை நிவர்த்திச்செய்வான் வேண்டி அவ்வேதுவில் "ஒரிந்திரியத்தால் அறியப்படுவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டுக் கட முதலியத் திரவியங்கள் ஒரிந்திரியத்தா லறியப்படுவனவன்றும்; சக்ஷு, துவக்கு என்னு மிரு இந்திரியங்களால் அறியப்படுவனவாம். ஆகையால் கட முதலியத் திரவியங்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாக புத்தி முதலிய குணங்களில் பிருதிவி முதலிய எட்டுத் திரவியங்களை ஆசிரயிக்காத் தன்மையும், குணத் தன்மையுமாம் இரண்டின் சித்தியுண்டாக அப்புத்தி முதலிய குணங்களின் ஆசிரயவடிவமாக அஜ்ஜீவாத்மா வடிவத் திரவியத்தின் சித்திச் சம்பவிக்கின்றது.

## ௪எகூ. வேறு அநுமானத்தால் ஜீவாத்மாவின் சித்தி.

சில நூலாசிரியரோ இவ்வாறாய அநுமானத்தால் ஜீவாத்மாவின் சித்தியைச் செய்கின்றனர். "வக்ஷுராதிஂஇந்த்ரியம் ஸகர்த்ருகம் கரணத்வாத் கடாரவத்" (இ-ள்.) சக்ஷு முதலிய இந்திரியம் ஓர் கர்த்தாவையுடையதாக யோக்கியமாம், கரண வடிவமாவதால், எதுவெது கரணமாமோ அதுவது கர்த்தாவை யுடையதேயாம். எங்ஙனம்:—கோடறி கரண வடிவமாவதால் புருஷ வடிவ கர்த்தாவை யுடையதாம். அங்ஙனமே சக்ஷு முதலிய இந்திரியமும் கரண வடிவமாவதால் ஓர் கர்த்தாவை அவசியமுடையதாகும். சக்ஷு முதலிய இந்திரிய வடிவ கரணங்கட்கு இஜ்ஜீவாத்மாவே கர்த்தாவாம். கருத்திதுவாம்; இவ்வுலகத்தில் வெட்டுதல் முதலிய கிரியைகட்கு கரண வடிவத்தால் பிரசித்தமாக கோடறி முதலியவை எத்தனையுளவோ அக்கோடறி முதலிய கரணங்கள் ஓர் புருஷ வடிவ கர்த்தாவன்றி வெட்டுதல் முதலிய கிரியைகளை உண்டாக்குவனவன்று. ஆனல் புருஷ வடிவ கர்த்தாவை ஆசிரயித்தே அக்கோடறி முதலிய கரணங்கள் வெட்டுதல் முதலிய கிரியைகளை உண்டாக்குவதாகின்றது. அங்ஙனமே உருவ முதலியவைகளை விஷயஞ் செய்யும் ஞான வடிவ கிரியைகளின் கரண வடிவம் சக்ஷு முதலிய இந்திரியங்களாம். அச்சக்ஷு முதலிய இந்திரிய வடிவ கரணமும் ஓர் கர்த்தாவன்றி ஞான வடிவக் கிரியையை உண்டாக்குவதன்று; ஓர் கர்த்தாவை ஆசிரயித்துக் கொண்டே ஞான வடிவக் கிரியை உண்டாக்குகின்றது. அச்சக்ஷு முதலிய கரணங்களின் கர்த்தா இஜ்ஜீவாத்மாவாகவே சம்பவிக்கின்றது. இவ்வாறாய அநுமானப்

பிரமாணத்தால் சக்ஷு முதலிய கரணங்களின் கர்த்தா வடிவமாக ஜீவாத்மாவின் சித்திச் சம்பவிக்கின்றது.

சஅ௦. சுருதிப் பிரமாணத்தால் ஜீவாத்மாவின் சித்தி.

அல்லது அஜ்ஜீவாத்மா கூறிய அநுமானப் பிரமாணத்தால் சித்திப்பதுடன் " ஜீவாத்மாவை விஞ்ஞானமயாத்மா ஜீவாத்மா ஸ்ரோதா த்ரஷ்டா " என்னும் இவை முதலிய சுருதிப் பிரமாணங்களாலும் சித்தமாகின்றது.

சஅக. ஈஸ்வரனிடத்து பிரத்தியக்ஷம், அநுமானம், சுருதி என்னும் மூன்றுப் பிரமாணங்கட்கு பிரவிருத்தி யுண்டாகாமையின் சாதகமாகிய பூர்வ பக்ஷம்.

சங்கை :—முற்கூறிய பிரத்தியக்ஷம், அநுமானம், சுருதிப் பிரமாணங்களால் ஜீவாத்மாவின் சித்தி யுண்டாயினும் ஈஸ்வரனைச் சாதிக்கும் பிரமாணமொன்றின்றும். ஆண்டு ஈஸ்வரனிடத்து பிரத்தியக்ஷப் பிரமாணங் கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் அந்தப் பிரத்தியக்ஷப் பிரமாணம் பாஹியம், ஆந்தர மென்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு கிராணம், ரசனம், சக்ஷு, துவக்கு, சுரோத்திர மென்னும் ஐந்து இந்திரியங்களோ பாஹியப் பிரத்தியக்ஷப் பிரமாண மெனப்படுகின்றன. மன வடிவ இந்திரியம் ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணமெனப்படுகின்றது. அவ்வைந்து விதமான பாஹியப் பிரத்தியக்ஷத்திலும் சக்ஷு, துவக்கென்னு மிரு இந்திரியங்களோ திரவியத்தினைக் கிரஹிக்கின்றன. கிராணம், ரசனம், சுரோத்திரம் என்னும் மூன்றிந்திரியங்கள் திரவியத்தினைக் கிரஹிப்பனவன்று. சக்ஷுவும், துவக்கும் மஹத்துவ விசிஷ்ட உத்பூத உருவ ஸ்பரிச முடைய திரவியத்தினையே கிரஹிப்பனவா மென்னும் வார்த்தை முன்னர் வாயு நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். நையாயிகர்கள் ஈஸ்வர வடிவ திரவியத்தினையும் ஆகாய முதலியவைகளைப் போன்று உருவ, பரிச குணங்களில்லாததாக ஒப்புகின்றனர். ஆகையால் அவ்வீஸ்வரனிடத்து பாஹியப் பிரத்தியக்ஷப் பிரமாணமோ சம்பவியாது. இவ்வாறாக ஈஸ்வரனிடத்து மன வடிவ ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணமும் சம்பவியாது. ஏனெனின் அம்மனத்தால் யான் சுகி, யான் துக்கி என அஜ்ஜீவாத்மாவின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. மனத்தால் ஈஸ்வர வடிவ பரமாத்மாவின் பிரத்தியக்ஷம் சம்பவியாது. அல்லது எங்ஙனம் சைத்திரனெனப் பெயரிய புருஷனது ஜீவாத்மாவினும் மைத்திரனெனப் பெயரிய புருஷனது ஜீவாத்மா அத்தியந்தம் வேறுமாகையால் சைத்திரனெனப் பெயரிய புருஷனது ஜீவாத்மாவின் பிரத்தியக்ஷம் உண்டாகாதோ அங்ஙனமே இஜ்ஜீவாத்மாவினும் ஈஸ்வர வடிவ பரமாத்மாவும் அத்தியந்தம் வேறுமாகையால் இஜ்ஜீவாத்மாவின் மனதால் ஈஸ்வராத்மாவின் பிரத்தியக்ஷமும் சம்பவியாது. ஈஸ்வரனிடத்து அநுமானப் பிரமாணங் கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் எங்ஙனம் தூம (புகை) வடிவ ஏதுவில் வன்னி வடிவ சாத்தியத்தின் வியாப்தி பிரசித்தமாமோ அங்ஙனமே யாதாமோர் ஏதுவில் ஈஸ்வர வடிவ சாத்தியத்தின் வியாப்தி பிரசித்தமாதுமாயின்

மனதால் மைத்திரனெனப் பெயரிய புருஷனது

அவ்வேதுவால் ஈஸ்வர வடிவ சாத்தியத்தின் அநுமானமுண்டாகும். ஓர் ஏதுவிலும் அங்ஙனமாக ஈஸ்வரனை நிரூபிக்கும் வியாப்தி பிரசித்தமின்றும். வியபிசரிக்காத சம்பந்தவடிவ வியாப்தியின் ஞானமின்றி அநுமானத்தின் பிரவிருத்தியுண்டாகாது. ஆகையால் ஈஸ்வரனிடத்து அநுமானப் பிரமாணமும் சம்பவியாது. ஈஸ்வரனிடத்தில் "யஃ ஸர்வஜ்ஞஃ ஸர்வவித்" என்னும் இவை முதலிய வேதமே பிரமாணமாமெனின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் இருக்குமுதலிய வேதங்களிலுள்ள பிரமாணத்தன்மை யாதோ அது ஈஸ்வரனால் இயற்றியத்தன்மை வடிவ ஏதுவாலேயே இருக்கின்றது. அதாவது அந்த இருக்குமுதலிய வேதங்கள் ஈஸ்வரனாலேயே அருளிச் செய்யப்பட்டதாம். ஆகையால் அவ்வேதங்களில் பிரமாணவடிவத் தன்மையின்றும். ஆண்டு முதலில் ஈஸ்வரனது சித்தி யாதாமோர் பிரமாணத்தால் சம்பவிக்குமாயின் அவ்வீஸ்வரன் உச்சரித்தத்தன்மை வடிவ ஏதுவால் அவ்வேதங்களில் பிரமாணத் தன்மையின் சித்தி யுண்டாகும். அவ்வீஸ்வரனது சித்தி இதுகாறும் எப்பிரமாணத்தாலும் உண்டாகவில்லை. ஆகையால் அவ்வீஸ்வரனிடத்தில் அவ்வேதத்திற்கும் பிரமாணத்தன்மைச் சம்பவியாது. அவ்வேதங்கட்கு பிரமாணமின்மையுளதாக அவ்வேதங்களை ஆதியாகவுடைய ஸ்மிருதி முதலியவைகட்கும் அவ்வீஸ்வரனிடத்தில் பிரமாணத்தன்மைச் சம்பவியாது. ஆகையால் பிரமாணத்தின் அபாவத்தால் ஈஸ்வரனின்றுமென்னும் சங்கை யுண்டாக இனி ஒன்பது வகைத்தாய அநுமானப்பிரமாணங்களால் அவ்வீஸ்வரனது சித்தியைச் செய்வாம்.

### ௪௩௨. ஒன்பது வகைத்தாய அநுமானங்களால் அவ்வீஸ்வரனது சித்தியைச் செய்யும் அநுமானங்களுள் முதல் அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். "அங்குராதிகம் ஸகர்த்ருகம் கார்யத்வாத் கடவத்" (இ-ள்.) அங்குர முதலிய காரியங்கள் ஓர் கர்த்தாவால் உண்டாக யோக்கியமாம், காரிய வடிவமாவதால், எவ்வெப்பதார்த்தங் காரிய வடிவமாமோ அவ்வப்பதார்த்தம் ஓர் கர்த்தாவால் உண்டாவதேயாம். கர்த்தாவின்றி ஓர் காரியமும் உண்டாகாது. எங்ஙனம் கடம் காரிய வடிவமாவதால் குலாலவடிவ கர்த்தாவால் உண்டாவதாமோ அங்ஙனமே அவ்வங்குர முதலிய காரியங்களும் காரிய வடிவமாவதால் ஓர் கர்த்தாவால் அவசியம் உண்டாவதாகும். ஆண்டு அவ்வங்குர முதலிய காரியங்களின் கர்த்தாத் தன்மை எஜ்ஜீவாத்மாவிலும் சம்பவியாது; அவ்வீஸ்வரனிடத்திலேயே அவ்வங்குர முதலிய காரியங்களின் கர்த்தாத் தன்மைச் சம்பவிக்கின்றது.

### ௪௩௩. கர்த்தா இன்றியே ஜகத்தின் உற்பத்தியை யொப்புவோராகிய வாதிகளைக் கண்டிப்பது வாயிலாக ஈஸ்வரனிடத்து சர்வஜகத்தின் கர்த்துருத்தன்மையின் சித்தி.

சங்கை:—கர்த்தா இன்றியே கேவலம் பிருதிவி முதலியவைகளின் சையோக முதலியவைகளாலேயே அவ்வங்குர முதலிய காரியங்களின் உற்பத் [illegible]

திச் சம்பவிக்கின்றது. ஈஸ்வர வடிவ கர்த்தாவை யொப்புவதில் யாதோர் பயனு மின்ரும்.

சமாதானம்:—ஈஸ்வர வடிவ கர்த்தாவின்றியே கேவலம் பிருதிவி, ஜல முதலியவைகளின் சையோகத்தால் அவ்வங்குர முதலிய காரியங்களின் உற்பத்தி அங்கிகரிக்கின் கட முதலிய காரியங்கட்கும் குலாலன் முதலிய கர்த்தாவின்றியே கேவலம் மண், ஜல முதலியவைகளின் சையோகத்தால் உற்பத்தி யுண்டாக வேண்டும். குலாலன் முதலிய கர்த்தாவின்றி அக்கட முதலிய காரியங்களின் உற்பத்திக் காணப்படுகிறதில்லை. ஆகையால் அக்கட முதலிய காரியங்களைப் போன்று அவ்வங்குர முதலிய காரியங்கட்கும் ஈஸ்வர வடிவ கர்த்தாவினுலேயே உற்பத்தி யொப்ப வேண்டுமென்னும் வார்த்தை வேறு சாத்திரங்களிலும் கூறப்பட் டிருக்கின்றது. ஆண்டுச் சுலோகம் "ஜந்தாம்யதி நாகஸ்ஸா க்ஷணமேவ நவிநாவட: விதர்காஸம்விநா வித்ரம் ஸ்வ வஸம்வேத்ஸா" (இ ள்.) இக்காரிய வடிவ ஜகத்திற்கு ஓர் கால் ஓர் கர்த்தாவினை அங்கிகரியாது கர்த்தாவின்றியே இஜ்ஜகத்திற்கு தானுகவே உற்பத்தியை யொப்பின் குலால வடிவ கர்த்தாவின்றியே கட வடிவ காரியமும் தானுகவே உண்டாக வேண்டும். அங்ஙனமே ஓவியக்கார வடிவ கர்த்தாவின்றி ஓவிய வடிவ காரியமும் தானுகவே உண்டாக வேண்டும். கடத்திலிருக்கும் ஓவிய வடிவ காரியத்திற்கு குலாலன் முதலிய ஓவியக்கார வடிவ கர்த்தாவின்றித் தானுகவே உற்பத்திக் காணப்படுகிறதில்லை. குலாலன் முதலிய கர்த்தாவினுலேயே அக்கட முதலிய காரியங்களின் உற்பத்திக் காணப்படுகின்றது. அங்ஙனமே இஜ்ஜகத் வடிவ காரியத்திற்கும் ஓர் கர்த்தாவை அவசியம் ஒப்பவேண்டும். ஆண்டு ஜீவாத்மாவிலோ சர்வ ஜகத்தின் கர்த்தாத் தன்மைச் சம்பவியாது. பரிசேஷமாக ஈஸ்வரனையே இஜ்ஜகத்தின் கர்த்தாவாக ஒப்புவதாகும்.

சங்கை:—எங்ஙனம் ஸ்வேதஜம் முதலிய சரீரங்களின் உற்பத்தி கர்த்தாவின்றியே யுண்டாகின்றதோ அங்ஙனமே அவ்வங்குர முதலிய காரியங்களின் உற்பத்தி கர்த்தாவின்றியே உண்டாய்விடும்.

சமாதானம்:—எங்ஙனம் கூறிய அநுமானத்தில் கர்த்தாத் தன்மை வடிவ ஏதுவால் அவ்வங்குர முதலிய காரியங்களில் கர்த்தாவால் உண்டாக்குந் தன்மை சித்தி செய்யப்பட்டதோ அங்ஙனமே ஸ்வேதஜ முதலியவைகளிலும் காரியத்தன்மை வடிவ ஏதுவால் கர்த்தாவால் உண்டாக்குந் தன்மைச் சித்திச் சம்பவிக்கின்றது. அதாவது எவ்வெக்காரியத்திற்கு பிரத்தியக்ஷமாக ஓர் கர்த்தாக் காணப்படவில்லையோ அவ்வெல்லாக் காரியங்கட்கும் முற்கூறிய அநுமானத்தின் பக்ஷத்திலேயே அடக்கம் கூறக்கருதிடதாம். இக்காரணத்தானேயே முற்கூறிய அவ்வநுமானத்தில் "அங்குராதி வடிவம் காரியம்" என பக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் வசனத்தில் முதலிய என்னும் பதங் கூறப்பட்டது. முதலிய வென்னும் அப்பதத்தால் ஸ்வேதஜ முதலிய சர்வ காரியங்களைக் கொள்ளுக. ஆண்டு இவ்வநுமானத்தில் குலாலன் முதலிய ஜீவாத்மா வடிவ கர்த்தா ஜன்னிய கட வடிவக் காரியத்தின் திருஷ்டாந்தத்தால் அங்குர முதலிய காரியங்களின் கர்த்தா வடிவமாக ஈஸ்வரனது சித்தியா மென்

பதில் இவ்வறிதல் வேட்கைச் சம்பவிக்கின்றது. எக்கர்த்துருத் தன்மை வடிவத்தால் குலாலன் முதலிய ஜீவாத்மாவிற்குக் கட முதலிய அற்ப காரியத்தைக் குறித்துக் காரணத் தன்மையும், ஈஸ்வரனுக்கு காரிய மாத்திரத்தைக் குறித்துக் காரணத்தன்மையு மிருக்கிறதோ அக்கர்த்துருத்தன்மை ஜீவாத்மாவிலும்; ஈஸ்வராத்மாவிலும் யாது என்னும் அறிதல் வேட்கையுண்டாக இனி மத வேறுபாட்டால் அக்கர்த்துருத் தன்மையினை நிரூபிப்பாம்.

### சஎச. பிராசீன நையாயிகர்கள் கூறிய கர்த்துருத் தன்மையின் லக்ஷணம்.

பிராசீன நையாயிகர்களோ அக்கர்த்துருத்தன்மையின் லக்ஷணம் இவ்வாறாகக் கூறுகின்றனர் "உபாதானகோசராபரோக்ஷஞான சிகீர்ஷா க்ருதிமத்வம் கர்த்ருத்வம்" (இ-ள்.) காரியத்தின் உபாதானத்தை விஷயஞ் செய்யும் அபரோக்ஷ ஞானமும், காரியத்தைச் செய்யும் இச்சையும், முயற்சியுமா மூன்றிற்கும் சமவாய சம்பந்தமாக ஆசிரயத் தன்மை யாதோ அதனை கர்த்துருத் தன்மை யென்பர். எங்ஙனம்: கட வடிவ காரியத்திற்கு உபாதான காரண வடிவ மண் விசேஷம் யாதோ அவ்வுபாதானத்தை விஷயஞ் செய்யும் அபரோக்ஷ ஞானமும், கட வடிவ காரியத்தைச் செய்யும் இச்சையும், முயற்சியுமா மூன்றும் கட வடிவ காரியத்தின் உற்பத்திக்கு முன் குலாலனிடத்தில் சமவாய சம்பந்தமாக இருக்கின்றன. இதுவே குலாலனிடத்தில் கட வடிவ காரியத்தின் கர்த்துருத் தன்மையாம். அங்ஙனமே இஜ்ஜகத் வடிவக் காரியத்தின் உபாதானக் காரண வடிவ பிருதிவி முதலியவைகளின் பரமாணுக்களை விஷயஞ் செய்யும் அபரோக்ஷ ஞானமும், அப்பரமாணுக்களால் துவியணுகாதிக் காரியத்தினை உண்டாக்கும் இச்சையும், முயற்சியுமாம் மூன்றும் அத்துவியணுகாதி காரியத்தின் உற்பத்திக்கு முன்னர் ஈஸ்வரனிடத்தில் சமவாய சம்பந்தமாக இருக்கின்றன. இதுவே ஈஸ்வரனிடத்தில் ஜகத் கர்த்துருத்தன்மையாம்.

### சஎரு. நவீன நையாயிகர் கூறும் கர்த்துருத் தன்மையின் லக்ஷணம்.

நவீன நையாயிகரோ கர்த்துருத் தன்மைக்கு இவ்விலக்ஷணங் கூறுகின்றனர் "க்ருதிமத்வம் கர்த்ருத்வம்". (இ-ள்.) சமவாய சம்பந்தமாக முயற்சியின் ஆசிரயத் தன்மை யாதோ அதுவே ஜீவாத்மாவிலும், ஈஸ்வரனிடத்தும் கர்த்துருத் தன்மையாம். குலாலன் முதலிய ஜீவாத்மாக்களிலோ கட முதலிய அற்ப காரியத்தினைச் செய்வதின் முயற்சி யிருக்கின்றது. ஈஸ்வரனிடத்திலோ சர்வ காரிய மாத்திரத்தைச் செய்வதின் முயற்சி யிருக்கின்றது. இவ்வாறுய முயற்சியுடைமை வடிவ கர்த்துருத் தன்மை வடிவத்தானேயே ஜீவாத்மாவிற்கும், ஈஸ்வரனுக்கும் காரியத்தின் காரணத் தன்மையிருக்கின்றது. இங்ஙனம் ஒப்புவதில் ஜீவ, ஈஸ்வரரிடத்துள்ள காரணத் தன்மையின் அவச்சேதகம் கேவலம் முயற்சி மாத்திரமேயாகின்றது. ஞானமும், இச்சையும் அக்காரணத்தன்மையின் அவச்சேதகமாகிறதில்லை.

௪௱௬. பிராசீனர்கள் கூறிய கர்த்துருத் தன்மையின் கண்டனம்.

உபாதானத்தை விஷயஞ் செய்யும் அபரோக்ஷ ஞானம், இச்சை, முயற்சி என்னும் மூன்றின் ஆசிரயத்தன்மைக்கே கர்த்துருத் தன்மை யொப்பிய பிராசீனர்களின் மதத்தில் ஜீவ, ஈஸ்வர வடிவ கர்த்தாவில் இருக்கின்றக் காரணத் தன்மையின் அவச்சேதகம் அம்மூன்றுமேயாகும். ஆண்டு ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சி என்னும்மூன்றும் ஒவ்வோர்வியக்தியாகின்றது. என்றாலும் ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சி யென்னும் மூன்றும் நாநா வியக்திகளாகின்றன. இத்தகைய ஞானம், இச்சை, முயற்சி என்னும் மூன்றில் அக்காரணத் தன்மையின் அவச்சேதகத் தன்மையை யொப்புவதில் கௌரவ தோஷத்தின் பிராப்தமேயுண்டாகும். அக்கௌரவதோஷத்தின் பிராப்தி எமது நவீன நையாயிகர்கள் மதத்தில்யுண்டாவதில்லை. ஆகையால் பிராசீனர்கள் கூறிய அக்கர்த்துருத்தன்மையின் லக்ஷணம் நலமுடையதன்றாம்.

௪௱௭. நவீன நையாயிகர்கள் மதத்தைக் கண்டிப்பது வாயிலாக ஆத்மத்தன்மை வடிவமாக ஜீவ, ஈஸ்வரருக்குக் காரிய மாத்திரத்தைக் குறித்துக் காரணம் ஒப்புவோர்ராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். காரிய மாத்திரத்தைக் குறித்து ஜீவ, ஈஸ்வரருக்கு முயற்சி யுடைமை வடிவ கர்த்துருத் தன்மையால் காரணம் ஒப்பினும் ஜீவ, ஈஸ்வரரிடத்துள்ள காரணத் தன்மையின் அவச்சேதகம் அனேக முயற்சிகளேயாவனவாம். ஈஸ்வரனிடத்தில் ஒரே முயற்சி யிருக்கின்றது. என்றாலும் ஜீவாத்மாவில் அனேக முயற்சி உண்டாவதாகின்றது. அவ்வனேக முயற்சிகட்குக் காரணத்தன்மையின் அவச்சேதகம் ஒப்புவதிலும் கௌரவ தோஷத்தின் பிராப்தமே யுண்டாகும். ஆகையால் அம்முயற்சி யுடைமை வடிவ கர்த்துருத் தன்மை வடிவமாகவும் அஜ்ஜீவ, ஈஸ்வரருக்குக் காரிய மாத்திரத்தின் காரணத்தன்மை யொப்புவது நலமன்றாம். ஆனால் ஈஸ்வரனிடத்திலும், சர்வ ஜீவாத்மாக்களிடத்திலும் இருக்கின்ற ஆத்மத்தன்மையாதோ அவ்வாத்மத்தன்மைவடிவத்தாலேயே ஜீவ, ஈஸ்வரருக்குக் காரிய மாத்திரத்தின் காரணத் தன்மை யொப்புவது நலமுடைத்தாம். அவ்வாத்மத்தன்மை ஜாதி அம்முயற்சியினைப்போன்று நாநா வன்றாம். ஆனால் சர்வ ஜீவாத்மாக்களிலும், ஈஸ்வராத்மாவிலும் அவ்வாத்மத் தன்மை ஜாதி ஒன்றேயாம். அவ்வோர் ஆத்மத்தன்மை ஜாதிக்கு ஜீவ, ஈஸ்வரரிடத்திலுள்ளக் காரணத் தன்மையின் அவச்சேதகம் ஒப்புவதில் முற்கூறிய மதங்களைப் போன்று கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகாது; லாகவ வடிவ குணத்தின் பிராப்தியே யுண்டாகின்றது. அல்லது ஜீவ, ஈஸ்வரருக்கு ஆத்மத் தன்மை வடிவத்தாலேயே காரிய மாத்திரத்தைக் குறித்துக் காரணம் ஒப்பின் காரிய மாத்திரத்தை நிரூபிக்கும் காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக அவ்வாத்மத்தன்மை ஜாதிக்கு ஜீவ, ஈஸ்வரர்களிடத்தில் நிர்வாதமாக சித்தியுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய ஈஸ்வர சாதக அநுமானமுள்ளவிடத்தில்

இவ்வநுமானம் சித்தமாகின்றது. "அங்குராதி³கம் ஸகர்த்ருகம் கார்யத்வாத் க⁴டவத்" (இ-ள்.) அங்குராதி வடிவக்காரியம் ஆத்மாவால் உண்டாவதாம், காரிய வடிவமாவதால், எவ்வெப்பதார்த்தங் காரியவடிவமாமோ அவ்வப்பதார்த்தம் ஆத்மாவால் உண்டாவதேயாம். எங்ஙனம் கடம் காரிய வடிவமாவதால் குலால வடிவ ஜீவாத்மாவினால் உண்டாவதாமோ அங்ஙனமே அவ்வங்குர முதலியனவும் காரிய வடிவமாவதால் ஓர் ஆத்மாவினால் உண்டாவனவாம். ஆண்டு அவ்வங்குர முதலியவைகளில் ஓர் ஜீவாத்மாவினால் உண்டாக்குந் தன்மையோ சம்பவியாது. பரிசேஷமாக ஈஸ்வராத்மாவினாலேயே அவ்வங்குர முதலியன உண்டாவனவாம்.

## சஅஅ. ஈஸ்வரனை நிரூபிக்கும் இரண்டாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். "ஸர்கா³த்³யகாலீந த்³வ்யணுக ஸம்ப்ரயோஜகம் கர்ம ப்ரயத்நஜந்யம் கர்மத்வாத் அஸ்மதா³தி³ஶரீரகர்மவத்" (இ-ள்.) சிருட்டியின் ஆதிகாலத்தில் துவியணுக வடிவக்காரிய பிரயோஜனத்தை யுண்டுபண்ணும் பரமாணுவிலுள்ள கிரியா வடிவ கர்மம் யாதோ அக்கர்மம் ஒன்றின் முயற்சியாலுண்டாவதாம், கர்ம வடிவமாவதால், எதுவெது கர்மமாமோ அவ்வக்கர்மம் ஒன்றின் முயற்சியால் உண்டாவதேயாகின்றது. எங்ஙனம் கட வடிவ காரியப் பிரயோஜனத்தை யுண்டுபண்ணுங் கபாலத்திலுள்ள கர்மம் யாதோ அக்கர்மம் கர்ம வடிவமாவதால் குலாலனாகிய ஜீவாத்மாவின் முயற்சியால் உண்டாவதாமோ அங்ஙனமே அப்பரமாணுக்களின் கர்மமும் கர்ம வடிவமாவதால் ஒன்றின் முயற்சியால் அவசியம் உண்டாவதாகும். ஆண்டு ஜீவாத்மாவின் முயற்சிக்கோ அப்பரமாணுக்களின் கர்மங்கட்குக் காரணத் தன்மைச் சம்பவியாது. பரிசேஷமாக அவ்வீஸ்வரனது முயற்சிக்கே அக்கர்மத்தின் காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. இவ்வநுமானத்தால் சாக்ஷாத் ஈஸ்வரனதுச் சித்தி யுண்டாகிறதில்லை; ஆனால் அவ்வீஸ்வரனது முயற்சியின் சித்தியேயுண்டாகின்றது. என்றாலும் விலக்ஷண (வேறான) முயற்சியின் ஆசிரயத்தன்மை வடிவமாக அவ்வீஸ்வரனது சித்திச்சம்பவிக்கின்றது. இவ்வாறாய் கிரமத்தினைப் பின்னர்க் கூறப்படும் அநுமானங்களிலும் அறிந்துக் கொள்க.

## சஅகூ. ஈஸ்வரனை நிரூபிக்கும் மூன்றாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். "க³க³நாவஸ்தி²த மேகா⁴த³யஃ பதநப்ரதிப³ந்த⁴க ப்ரயத்நாதி⁴ஷ்டி²தாஃ கு³ருத்வே ஸதி அபதநாத் ஆகாஶஸ்த² பக்ஷிவத்" (இ-ள்.) குருத்துவ தர்மமுடையதாயினும் கீழ் விழுவதின் அபாவமுடையதான மேகம், நக்ஷத்திர மண்டல முதலிய ஆகாயத்திலுள்ளத் திரவியங்கள் யாவையோ அத்திரவியங்களின் கீழ் வீழ்வதின் பிரதிபந்தகம் ஓர் முயற்சியோடு கூடியதேயாம், கீழ் வீழ்தலின்றி நிலைத்தற் றன்மையுடையதாவதால் எவ்வெத்திரவியம் கீழ் வீழ்தலின்றி நிலைத்தற்றன்மையுடையதாமோ அவ்வத் திரவியம் அவ்வீழ்ச்சியின் பிரதிபந்தக முயற்சியோடு கூடியதேயாகின்றது. எங்ஙனம், குருத்துவ தர்மமுடையதாயினும் கீழ் வீழ்தலில்லாததான ஆகாயத்திலுள்ள பக்ஷி சரீரம் யாதோ அப்பக்ஷி சரீரம் கீழ்வீழ்தலின்றி நிலைத்தற்றன்

மையுடையதாவதால் கீழ்வீழ்தலின் பிரதிபந்தக முயற்சியோடு கூடியதேயாம், ஆண்டு அப்பக்ஷி சரீராவச்சின்ன ஜீவாத்மாவின் முயற்சியே அப்பக்ஷி சரீரத்தின் கீழ் வீழ்ச்சியில் பிரதிபந்தகமாம். அங்ஙனமே ஆகாயத்திலுள்ள குருத்துவ தர்மமுடைய மேகம், நக்ஷத்திர மண்டல முதலியனவும் கீழ்வீழ்தலின்றி நிலைத்தற்றன்மை யுடையதாவதால் கீழ்வீழ்ச்சியின் பிரதிபந்தகமாகிய ஓர் முயற்சியோடு அவசியம் கூடியதாம். ஆண்டு ஓர் ஜீவாத்மாவின் முயற்சியோ அம்மேக முதலியவைகளின் கீழ் வீழ்ச்சியின் பிரதிபந்தகமாக மாட்டாது. பரிசேஷமாக ஈஸ்வரனது முயற்சி அம்மேக முதலியவைகளின் கீழ் வீழ்ச்சியின் பிரதிபந்தக வடிவமாக சித்தமாகின்றது. இவ்விலக்ஷண முயற்சியின் ஆசிரயத் தன்மை வடிவமாக அவ்வீஸ்வரனதுச் சித்திச் சம்பவிக்கின்றது.

### ௪௩௦. ஈஸ்வரனை நிரூபிக்கும் நான்காவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகார மிதுவாம். "ബ്രഹ്മാണ്ഡനാശഃ പ്രയത്നജന്യഃ നാശത്വാത് ഘടനാശവത്" (இ-ள்.) பிரளய காலத்தில் சர்வ பிரம்மாண்டங்களின் நாசமுண்டாகின்றது அப்பிரம்மாண்டங்களின் நாசம் ஓர் முயற்சியால் உண்டாவதாம், நாச வடிவமாவதால், எதுவெது நாசமாமோ அவ்வவ்நாசம் ஓர் முயற்சியாலேயே உண்டாவதாகின்றது. எங்ஙனம்: கடத்தின் பிரத்துவம்சாபாவ வடிவ நாசம் நாச வடிவமாவதால் ஜீவாத்மாவின் முயற்சியால் உண்டாவதாகின்றது. அங்ஙனமே அப்பிரம்மாண்டங்களின் நாசமும் நாச வடிவமாவதால் ஒன்றின் முயற்சியால் அவசியம் உண்டாவதாகின்றது. ஆண்டு ஜீவாத்மாவின் முயற்சியோ அச்சர்வ பிரம்மாண்டங்களின் நாசத்திற்கு ஏதுவாகமாட்டாது. பரிசேஷமாக ஈஸ்வரனது முயற்சியையே அப்பிரம்மாண்டங்களின்நாசத்திற்கு ஏதுவாக ஒப்பவேண்டியதாகும். இத்தகைய விலக்ஷண முயற்சியின் ஆசிரயத் தன்மை வடிவமாக அவ்வீஸ்வரனதுச் சித்திச் சம்பவிக்கின்றது.

### ௪௩௧. ஈஸ்வரனை நிரூபிக்கும் ஐந்தாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம் "ഘടാദിവ്യവഹാരഃ സ്വതന്ത്രപുരുഷപ്രയോജ്യഃ വ്യവഹാരത്വാത് ആധുനികകല്പിതലിപ്യാദിവ്യവഹാരവത്" (இ-ள்.) கடம் என்னுஞ் சத்தத்தினைக்கேட்பதால் உலகவருக்குக் கடவடிவ அர்த்தத்தின் ஞானமே உண்டாகின்றது. அங்ஙனமே படமென்னும் சத்தத்தைக் கேட்பதால் உலகவருக்கு பட வடிவ அர்த்தத்தின் ஞானமேயுண்டாகின்றது. இவ்வாறாக அவ்வச்சத்தத்தினைக் கேட்பதால் உலகவருக்கு அவ்வவ் வர்த்தத்தின் ஞானமே யுண்டாகின்றது. ஆகையால் இது அறியத்தக்கதாம். அக்கட, பட முதலிய சத்த வடிவ வியவஹாரம் ஓர் சுதந்திர புருஷனால் பிரயோஜ்யமாம். அதாவது இக்கட பதத்தால் உலகவருக்கு இக்கட வடிவ அர்த்தத்தின் ஞானமே யுண்டாகுக. அங்ஙனமே இப்பட பதத்தால் உலகவருக்கு இப்பட வடிவ அர்த்தத்தின் ஞானமே யுண்டாகுக என்னும் இவை முதலிய சர்வ சங்கேதம் ஓர் சுவதந்திர சர்வஞ்ஞ புருஷன் முன்னம் செய்து வைத்துள்ளான், வியவஹார வடிவமாவதால், எதுவெது வியவஹாரமா

மோ அதுவது ஓர் சுவதந்திர புருஷனால் பிரயோஜ்ஜியமே யாகின்றது. எங்ஙனம்: ஓர் ஆதுனிக (நூதன) புருஷன் கற்பிக்கப்பட்ட எழுத்து முதலிய வியவஹாரங்களைப் போலும். ஆண்டு வெவ்வேறு தேசத்தில் வெவ்வேறு புருஷர்கள் உலகவருக்கு ககார முதலிய சத்தங்களைப் போதிக்கும் பொருட்டு க. ங. ச. ஞ. ட. இவை முதலிய எழுத்துக்களைக் கற்பித்து வைத்துள்ளார் அவ்வவ்வெழுத்துக்களைக் கண்ணுற்று அவ்வத் தேசத்தில் வசிப்பவர்கட்கு அக்ககார முதலிய சத்தங்களின் ஞானம் உண்டாய் விடுகின்றது. ஆகையால் எங்ஙனம் அவ்வெழுத்து முதலிய வியவஹாரம் வியவஹார வடிவமாவதால் ஓர் ஆதுனிக சுவதந்திர புருஷனால் பிரயோஜ்யமாமோ அங்ஙனமே அக்கட முதலிய வியவஹாரமும் வியவஹார வடிவமாவதல் ஓர் சுவதந்திர புருஷனால் அவசியம் பிரோஜ்யமாகும். ஆண்டு அக்கட முதலிய வியவஹாரங்களின் பிரயோஜகத் தன்மை ஜீவாத்மாவிலோ சம்பவியாது. பரிசேஷமாக சர்வஞ்ஞ ஈஸ்வர ரெனப் பெயரிய சுவதந்திர புருஷனையே அக்கட முதலிய சர்வ வியவஹாரங்களின் பிரயோஜகமாக ஒப்புவதாகும்.

## சகூ௨. ஈஸ்வரனை நிரூபிக்கும் ஆறுவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வெதஜநிதஸாவ யமாய வாக்யாயஜ்ஞாநஜநிதா ஸாப்தப்ராமாண வெதவாக்யஜநித ப்ரமாவத்" (இ-ள்.) வேத வாக்கியங்களாலுண்டான யதார்த்த ஞான வடிவப் பிரமை யாதோ அவ்வேதத்தாலுண்டானப் பிரமை அவ்வேதத்தைக் கூறும் புருஷனது யதார்த்த வாக்கியார்த்த ஞானத்தால் உண்டானதாம், சத்தப்பிரமையாவதால், எதுவெது சத்தப்பிரமையாகின்றதோ அதுவது கூறுவோனது யதார்த்த வாக்கியார்த்த ஞானத்தால் உண்டாவதேயாகின்றது. எங்ஙனம் சையித்திரனெனப் பெயரிய புருஷனது "கடத்தைக் கொண்டுவா" என்னும் வாக்கியத்தால் உண்டாய மையித்திரனெனப் பெயரிய புருஷனதுப் பிரமை யாதோ அந்தப் பிரமை சத்தப்பிரமை வடிவமாதால் கூறுவோனாகிய சையித்திரனெனப்பெயரிய புருஷனது வாக்கியத்தின் யதார்த்த ஞானத்தால் உண்டானதேயாம். அங்ஙனமே வேத வாக்கியங்களாலும் அதிகாரி ஜனங்கட்கு யதார்த்த ஞான வடிவப்பிரமை உண்டாவதாகின்றது. இப்பிரமையும் சத்தப்பிரமை வடிவமாவதால் வேதத்தைக் கூறிய புருஷனது வாக்கியத்தின் யதார்த்த ஞானத்தால் அவசியம் உண்டாவதாகும். ஆண்டு இருக்கு முதலிய வேதங்களைக் கூறும் சாத்தியத் தன்மை ஜீவாத்மாவிலோ சம்பவியாது. ஆனால் சர்வஞ்ஞ ஈஸ்வரனிடத்தேயே அவ்வேதத்தைக் கூறியத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஈஸ்வரவடிவனாகிய கூறுவோனது யதார்த்த வாக்கியார்த்த ஞானத்தானேயே கேட்போர்களிடத்தில் அவ்வேத வாக்கியத்தா லுண்டான சத்தப் பிரமை உண்டாவ்தாகின்றது.

## சகூ௩. ஈஸ்வரனை நிரூபிக்கும் ஏழாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வெதஃ ஸுஸாவாரிவ-பாரு ஷெயஃ வெதஜாக யடெநவா தடெநவ யமாகாவத்" (இ-ள்.)

இருக்குமுதலிய வேதங்கள் ஓர் அசம்சாரி புருஷனால் அருளிச்செய்யப்பட யோக்கியமாம்; வேத வடிவமாவதால், எவ்வெச்சாத்திரம் அசம்சாரி புருஷனால் செய்த்தன்றோ அவ்வச்சாத்திரம் வேத வடிவமுமாவதன்றும். எங்ஙனம் பிரசித்த ரகுவம்ச முதலிய காவியங்கள் அசம்சாரி புருஷனால் செய்யப்பட்டதன்றும்; காளிதாசர் முதலிய சம்சாரி புருஷர்களாலேயே செய்யப்பட்டதாமாகையால் அக்காவியம் வேத வடிவமுமன்றும். இருக்கு முதலிய வேதங்களோ அக்காவியங்களைப் போன்று அவேத வடிவமன்றும்; வேத வடிவமேயாம். ஆகையால் இருக்கு முதலிய வேதங்கள் அக்காவியங்களைப்போன்று ஓர் அசம்சாரி புருஷனால் அருளிச் செய்யப்படாதனவன்றும்; ஓர் அசம்சாரி புருஷனால் அருளிச்செய்யப்பட்டனவாம். இத்தகைய இருக்கு முதலியவேதங்களைக் கூறும் சாத்தியத்தன்மை அசம்சாரி புருஷ வடிவுமாக ஜீவாத்மாவிற்கோ சம்பவியாது. பரிசேஷமாக அவ்வீஸ்வரனே அவ்வேதங்களைக் கூறும், அசம்சாரி புருஷ வடிவமாக சம்பவிக்கின்றான்.

## சகூச. ஈஸ்வரனை நிரூபிக்கும் எட்டாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வெடாஃ வௌரஷேயாஃ வாக்யத்வாத் பாரதவத்" (இ-ள்.) இருக்கு முதலிய வேதங்கள் புருஷனால் செய்யப்படுவதாக யோக்கியமாம், வாக்கிய வடிவமாவதால், எவ்வெச்சாத்திரம் வாக்கிய வடிவமாமோ அவ்வச் சாத்திரம் ஓர் புருஷனால் செய்யப்பட யோக்கியமாம். எங்ஙனம்: மாபாரதம் வாக்கிய வடிவமாவதால் புருஷனால் செய்யப்பட்டதாம். அதாவது ஸ்ரீ வியாச வடிவ புருஷனால் அருளிச் செய்யப்பட்டதாம். அங்ஙனமே இருக்கு முதலிய வேதங்களும் வாக்கிய வடிவமாவதால் ஓர் புருஷனால் அவசியம் அருளிச் செய்யப்பட்டதாகும். ஆண்டு இருக்கு முதலிய வேதங்கட்குக் கர்த்தாத் தன்மை ஜீவாத்மாவிலோ சம்பவியாது. பரிசேஷமாக இருக்கு முதலிய சர்வ வேதங்கட்குக் கர்த்தா வடிவமாக அவ்வீஸ்வரனே சித்தமாகின்றான்.

## சகூரு. ஈஸ்வரனை நிரூபிக்கும் ஒன்பதாவது அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "த்வ்யணுகபரிமாணஜநிகாஸம வாயிகாரணவரமாணுநிஷ்டத்வித்வஸங்க்யா அபேக்ஷாபுத்திஜந்யா ஏகத்வபிந்நஸங்க்யாத்வாத்" (இ-ள்.) துவியணுகத்தினது பரிமாணத்தின் அசமவாயி காரண வடிவ இரு பரமாணுக்களிலுள்ள இருமைச் சங்கியை யாதோ அவ்விருமைச் சங்கியை அபேக்ஷா புத்தியால் உண்டாக யோக்கியமாம், ஒருமைச் சங்கியையினும் வேறு சங்கியையாவதால், எவ்வெச் சங்கியை ஒருமைச் சங்கியையினும் வேறு சங்கியையாகின்றதோ, அவ்வச்சங்கியை அபேக்ஷா புத்தியால் உண்டாவதேயாகின்றது. எங்ஙனம்: இரு கடங்களிலுள்ள இருமைச் சங்கியை ஒருமைச் சங்கியையினும் வேறாகிய சங்கியையாமாகையால் அவ்விருமைச் சங்கியை இது வொன்று, இது வொன்று என்னும் அபேக்ஷா புத்தியால் உண்டாவதேயாகின்றது. அங்ஙனமே அவ்விரு பரமாணுக்களிலுள்ள இருமைச் சங்கியையும் ஒருமைச் சங்கியையினும் வேறு சங்கியை யாவதால்

அபேக்ஷா புத்தியால் உண்டாவதேயாகும். ஆண்டு ஜீவாத்மாவிற்கோ அப் பரமாணுவை விஷயஞ் செய்யும் அபேக்ஷா புத்திச் சம்பவியாது. பரிசேஷ மாக ஈஸ்வரனது அபேக்ஷா புத்தியினுனேயே அவ்விரு பரமாணுக்களில் இரு மைச் சங்கியையின் உற்பத்தி யுண்டாவதாகின்றது. இத்தகைய அபேக்ஷா புத்தியின் ஆசிரய வடிவமாக அவ்வீஸ்வரனதுச் சித்திச் சம்பவிக்கின்றது.

### சகசு. அனேக சுருதி, ஸ்மிருதிப் பிரமாணங்களாலும் அவ்வீஸ்வரனதுச் சித்தி.

இவ்வாறுய அனுமானப் பிரமாணங்களால் அவ்வீஸ்வரனதுச் சித்தி யுண்டாக அவ்வீஸ்வரன் உச்சரித்தத்தன்மை வடிவ ஏதுவால் இருக்கு முதலிய வேதங்களிலும் பிரமாண வடிவத் தன்மையின் சித்தி உண்டாகின்றது. ஆகையால் அவ்வேதமும் அவ்வீஸ்வரனது சத்பாவத்தில் பிரமாணவடிவமாம். அவ்வேத மிதுவாம். "ദ്യാവാഭൂമീജനയന്‍ ദേവ ഏകഃ വിശ്വസ്യ കര്‍ത്താ ഭുവനസ്യ ഗോപ്താ । ഈശ്വരദേവമീശ । യഃ സര്‍വ്വജ്ഞഃ സര്‍വ്വവിത് । യസ്യ ജ്ഞാനമയം തപഃ । സോഽകാമയത." (இ-ள்.) ஸ்வர்க்கத்தினையும், பூமியையும் உண் டாக்குபவனுகிய ஓர் பரமாத்மா தேவன் எல்லா விஸ்வத்திற்குக் கர்த்தாவும், சர்வ புவனங்களை ரக்ஷிப்பவனுமாவன். இப்புருஷன் ஈஸ்வரனை உபாசிக் கின்றுன். எவ்வீஸ்வரன் சாமான்னிய வடிவத்தால் யாவற்றையும் அறிபவ னுவனே அவ்வீஸ்வரனே விசேஷ வடிவமாகவும் யாவற்றையும் அறிபவ னுவன். எவ்வீஸ்வரனது ஞானமயமே தபமாமோ அவ்வீஸ்வர இச்சைச் செய்வதாயிற்று. இவை முதலிய அனேக வேதங்களின் சுருதியும் ஈஸ்வர னிடத்தில் பிரமாணமாம். அங்ஙனமே "ഈശ്വരഃ സര്‍വ്വഭൂതാനാം ഹൃദ്ദേശേഽര്‍ജുന തിഷ്ഠതി." இவை முதலிய ஸ்மிருதிகளும் அவ்வீஸ்வரனிடத் தில் பிராமாணமாம்.

### சகஎ. யுக்தியால் ஈஸ்வரனது சித்தி.

அல்லது சர்வ ஜகத்திற்கும் கர்த்தாவாக சர்வஞ்ஞ ஈஸ்வரனை அங்கீகரி யாவிடின் நியமிப்பவனது அபாவமுளதாக சூரியன், சந்திரன் முதலிய கிரஹங் கட்கு விபரீதமாக உதயமும், அஸ்த்தமனமும் உண்டாகவேண்டும். அங் ஙனமே ஜலதரமெனப்பெயரிய மேகமண்டலம் யோக்கிய காலத்தில் வருஷிப் பதின்றுக வேண்டும். ஏனெனின் சேதனமின்றி அசேதனவத்துக்கட்கு நியம மான காலத்தில் வருதல் போதல் சம்பவியாது. சூரிய, சந்திர முதலிய கிரஹங் கட்கு நியமமான தேச காலங்களிலேயே உதயமும், அஸ்தமனமும் காணப் படுகின்றது. மேகமண்டலமும் நியமமான தேசகாலங்களிலேயே வரு ஷிக்கின்றது. ஆகையால் இது அறியத்தக்கதாகின்றது; ஓர் சர்வஞ்ஞ சேத னம் இஜ்ஜகத்தினை நியமித்தவனுவன். எதனது ஆஞ்ஞையால் சூரிய, சந்திர முதலியன நியமவாயிலாக வருதல் போதல் செய்கின்றனவோ அச்சூரிய, சந்திரர்களை நியமிக்குந்தன்மை ஜீவாத்மாவிலோ சம்பவியாது; சர்வஞ்ஞ ஈஸ் வரனிடத்தே அவ்வெல்லாவற்றையும் நியமிக்குந்தன்மைச் சம்பவிக்கின்றது. ஆகையால் இச்சூரிய, சந்திர முதலியவைகளின் உதயமும், அஸ்த்தமனமும் நியமத்தின் வாயிலாக ஈஸ்வரனையே சித்திச் செய்கின்றது.

## ௪௩௰௮. ஈஸ்வரனுக்குச் சரீரம் ஒப்புவதிலும், சரீரமின்மை யொப்புவதிலும் தோஷத்தினது சங்கையின் வர்ணனம்.

சங்கை;—முற்கூறிய லக்ஷணப் பிரமாணங்களால் அவ்வீஸ்வரனது சித்தி யுண்டாகட்டும். ஆனால் அவ்வீஸ்வரன் ஜீவாத்மாவினைப் போன்று சரீர முடையவனா? அல்லது சரீரமில்லாதவனா? அவ்வீஸ்வரன் சரீரமுடையவனா மென்னும் முதற்பக்ஷத்திலும் இவ்வாராய்ச்சி செய்யவேண்டும். அவ்வீஸ்வரனது சரீரம் ஆகாயத்தைப்போன்று பரம மஹத்வப் பரிமாணமுடையதா? அல்லது கட முதலியவைகளைப் போன்று மத்திம மஹத்வப் பரிமாணமுடையதா? அல்லது பரமாணுவினைப் போன்று அணுத்துவப் பரிமாணமுடையதா? ஆண்டு அவ்வீஸ்வரனது சரீரம் பரம மஹத்வப் பரிமாண முடையதா மென்னும் முதற் பக்ஷத்தை யங்கீகரிக்கின் அத்திப் பழ முதலியவைகளில் கொசு சரீரங்களின் உற்பத்தி உண்டாகாதாக வேண்டும். ஏனெனின் சித்தாந்தத்தில் அவ்வீஸ்வரனுக்குச் சர்வ காரியத்தின் உற்பத்தியில் காரணம் ஒப்பப்பட்டிருக்கின்றது. அத்திப் பழ முதலியவைகளில் அம்மஹத்வ சரீரமுடைய ஈஸ்வரனது பிரவேசமே சம்பவியாது. ஈஸ்வரனது சரீரம் மத்திம மஹத்வப் பரிமாண முடையதா மென்னும் இரண்டாவது பக்ஷம் அங்கீகரிக்கின் அவ்வீஸ்வரனது சரீரம் மனிதர் முதலிய சரீரங்களைப் போன்று அநித்தியமேயாகும். ஏனெனின் எவ்வெத்திரவியம் மத்திமப் பரிமாண முடையதாமோ அவ்வத்திரவியம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம் மனிதர் முதலிய சரீரங்கள் மத்திம பரிமாண முடையனவாகையால் அநித்தியமாமோ அங்ஙனமே அவ்வீஸ்வரனது சரீரமும் மத்திம பரிமாண முடையதாவதால் அநித்தியமேயாம். இத்தகைய அநித்தியச் சரீர விசிஷ்ட ஈஸ்வரனுக்குச் சிருட்டியின் ஆதிகாலத்தில் துவியணுக முதலிய காரியங்களின் கர்த்தாத் தன்மையேச் சம்பவியாது. அல்லது அவ்வீஸ்வரனது சரீரம் மத்திமப்பரிமாண முடையதாகுமாயின் எவ்விடத்தில் அவ்வீஸ்வரனது சரீரம் இருப்பதாமோ அவ்விடத்திலோ காரியத்தின் உற்பத்தி யுண்டாகும்; அதனினும் வேறிடத்தில் காரியத்தின் உற்பத்தி உண்டாகாது. அது இங்ஙனம் காணப்படுவதில்லை; ஒரே காலத்தில் எல்லாவிடத்திலும் அக்காரியத்தின் உற்பத்திக் காணப்படுகின்றது. ஆகையால் அவ்வீஸ்வரனது சரீரம் மத்திமப்பரிமாணமுடைய தென்பதும் சம்பவியாது. அவ்வீஸ்வரனது சரீரம் அணுத்துவப் பரிமாண முடையதா மென்னும் மூன்றாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் அவ்வணுத்துவப் பரிமாணமுடைய ஈஸ்வரனது சரீரம் யாதா மோரிடத்திலேயே நிலைப்பதாகும்; எல்லா விடத்திலும் நிலைப்பதாகாது. எவ்விடத்தில் அவ்வீஸ்வரனது அணு சரீரம் நிலைப்பதாகின்றதோ அவ்விடத்திலோ அவ்வணு சரீர விசிஷ்ட ஈஸ்வரனால் ஓர் காரியத்தின் உற்பத்தி யுண்டாகும். அவ்விடத்தினும் வேறான இடத்தில் ஓர் காரியத்தின் உற்பத்தி உண்டாகாது. அது இங்ஙனங் காணப்படுவதில்லை; ஒரே காலத்தில் எல்லாவிடத்திலும் மழை முதலிய காரியங்களின் உற்பத்திக் காணப்படுகின்றது. ஆகையால் அவ்வீஸ்வரனது சரீரம் அணுத்துவப் பரிமாணமுடையதென்பதுஞ் சம்பவியாது. ஆகையால்

அவ்வீஸ்வரன் சரீர முடையவனும் என்னும் முதற் பக்ஷம் சம்பவியாது. அவ்வீஸ்வரன் சரீர மில்லாதவனு மென்னும் இரண்டாவது பக்ஷம் அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் அவ்வீஸ்வரனைச் சரீர மில்லாதவனாக வொப்பின் அவ்வீஸ்வரனுக்கு ஜகத்தின் கர்த்தாத் தன்மையே சித்தியாததாகும். எக்காரணத்தாலெனின் உலகத்தில் சரீர முடைய குலாலன் முதலியவர்கட்கே கட முதலிய காரியங்களின் கர்த்தாத் தன்மைக் காணப்படுகின்றது. சரீர மில்லாத் குலாலன் முதலியவர்கட்கு கட முதலிய ஓர் காரியத்தின் கர்த்தாத் தன்மைக் காணப்படுகிறதில்லை யென்னுஞ் சங்கை யுண்டாகச் சில நூலாசிரியரோர் அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர்.

சகூகூ. சரீரமில்லாமலே ஈஸ்வரனுக்குக் கர்த்தாத்தன்மை யொப்புவோராகிய சில நூலாசிரியரின் மதம்.

சரீரமுடையதே கர்த்தாவாம், சரீரமில்லாதது கர்த்தா வாகாதென்னும் நியமத்தில் ஓர் பிரமாணமு மின்றாம். ஆகையால் சரீர மில்லாமலும் அவ்வீஸ்வரனிடத்தில் கர்த்தாத் தன்மைச் சம்பவிக்கின்றது. அதாவது எங்ஙனம் மந்திர முதலியன சரீர மின்றியே காரியத்தின் உற்பத்தியைச் செய்கின்றதோ அங்ஙனமே அவ்வீஸ்வரனும் சரீர மின்றியே ஜகத் வடிவ காரியத்தை உண்டாக்குகின்றான்.

ருoo. பரமாணுக்களை ஈஸ்வரனது சரீரமாக ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ சரீரமுடையதே கர்த்தாவாகின்றதெனக் கூறி முற்கூறிய நியமத்தை அங்கீகரித்து பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்களையே அவ்வீஸ்வரனது சரீரமாக ஒப்புகின்றனர். அப்பரமாணு வடிவ சரீர விசிஷ்ட ஈஸ்வரன் அத்திப் பழ முதலியவைகளிலும் இருப்பவனாகின்றான். ஆகையால் அவ்வத்திப் பழ முதலியவைகளில் கொசு முதலிய சரீரங்களின் உற்பத்திச் சம்பவிக்கின்றது. யாண்டும் பிருதிவி முதலியவைகளின் பரமாணுக்களாலேயே காரியத் திரவியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் யாண்டாண்டு காரியத் திரவியத்தின் உற்பத்தி யுண்டாகின்றதோ ஆண்டாண்டு அப்பரமாணு வடிவ சரீர விசிஷ்ட ஈஸ்வரன் இருப்பவனே யாகின்றான். ஆகையால் ஒரே காலத்தில் அவ்வீஸ்வரனால் யாண்டும் கட முதலிய காரியங்களின் உற்பத்தியும் சம்பவிக்கின்றது.

ருoக. ஆகாசத்தினை ஈஸ்வரனது சரீரமாக வொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர் "ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம" என்னும் இச்சுருதியில் ஆகாசம் பிரஹ்மத்தின் சரீரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. பிரஹ்ம சத்தம் ஈஸ்வரனது வாசகமேயாம். ஆகையால் இச்சுருதிப் பிரமாணத்தால் அவ்வாகாசமே அவ்வீஸ்வரனது சரீரமாக சித்தமாகின்றது. அவ்வாகாசம் யாண்டும் வியாபகமா மாகையால் ஆகாச வடிவ சரீர விசிஷ்ட ஈஸ்வரனால் ஒரே காலத்தில் யாண்டும் கட முதலிய காரியங்களின் உற்பத்திச் சம்பவிக்கின்றது.

௫௦௨. ஜீவர்களின் அதிர்ஷ்டத்தால் ஈஸ்வரனுக்கு பிரஹ்மா, விஷ்ணு முதலிய சரீரம் வொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் ஜீவர்களின் மனிதர் முதலிய சரீரம் தமது புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டத்தின் வசத்தால் உண்டாவதாகின்றதோ அங்ஙனம் ஈஸ்வரனது சரீரம் தனது புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டத்தால் உண்டாவதன்று. எக்காரணத்தாலெனின் மித்தியா ஞான வடிவ காரணத்தின் அபாவத்தால் அப்புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டத்தின் உற்பத்தியே யுண்டாகா தென்னும் வார்த்தை முற்கூறப் பட்டிருக்கிறது. ஆனால் அவ்வீஸ்வரனது சரீரம் ஜீவர்களின் புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டத்தின் வசத்தானேயே யுண்டாகின்றது. அவ்வீஸ்வரனது சரீரம் பிரஹ்மா, விஷ்ணு, உருத்திரன் என மூன்று வடிவமேயாகின்றது. பிரஹ்மா சரீரத்தோடு விசிஷ்டமாகிய ஈஸ்வரன் சர்வ ஜகத்தினை உண்டாக்குகின்றான். விஷ்ணு சரீர விசிஷ்டமாகிய ஈஸ்வரன் சர்வ ஜகத்தினைப் பாலிக்கின்றான். உருத்திர சரீர விசிஷ்டமாகிய ஈஸ்வரன் சர்வ ஜகத்தினைச் சம்ஹாரஞ் செய்கின்றான்.

௫௦௩. பூதாவேச ஞாயமாக ஈஸ்வரனது சரீரத்தை யொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ பூதாவேச நியாயமாக அவ்வீஸ்வரனது சரீரம் ஒப்புகின்றனர். அவர்களின்கருத்திதுவாம்; எங்ஙனம் பைசாசமானது மனிதர் முதலிய சரீரங்களில் பிரவேசித்து தனது முயற்சியால் மனிதர் முதலிய சரீரங்களில் பலவகைத்தாய சேஷ்டைகளைச் செய்கின்றதோ அச்சேஷ்டை மனிதர் முதலிய ஜீவர்களால் செய்வதற்கு எங்ஙனம் அசக்கியமாமோ அங்ஙனமே சர்வஞ்ஞ ஈஸ்வரனும் சில ஜீவ விசேஷமாக ஆசிரத இராம, கிருஷ்ணர் முதலிய சரீரங்களில் பிரவேசித்து தனது முயற்சியால் இராம, கிருஷ்ணர் முதலிய சரீரங்களால் இராவண வதை முதலிய வாஞ்சித காரியச் சித்தியைச் செய்கின்றான். ஆண்டு எச்சரீரத்தில் பிரவேசித்து ஈஸ்வரன் அசுர வதை முதலிய வடிவ வாஞ்சித காரியத்தின் சித்தியைச் செய்கின்றானோ அச்சரீரமே அவ்வீஸ்வரனது சரீரமாக அறியத்தக்கதாம். இராவண வதை முதலிய காரியங்கள் அவ்வத் தேகாபிமானி ஜீவ விசேஷங்களால் செய்வதற்கு அசக்கியமாம்.

௫௦௪. உண்மையில் சரீரமில்லாத ஈஸ்வரனுக்கு பக்தர்களை ரக்ஷிக்கும் பொருட்டு சிவன், விஷ்ணு முதலிய ஐந்து சரீரங்களை யொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். ஈஸ்வரன் உண்மையாகச் சரீரமில்லாதவரேயாம். ஆனால் சம்சார வடிவச் சேற்றில் புதைந்த அஞ்ஞானி ஜீவர்களை ரக்ஷிக்கும் இச்சையுடையவராகிய ஈஸ்வரன் லீலா விக்கிரஹங்களைத் தரிக்கின்றான். கருத்திதுவாம்; இஜ்ஜீவர்களுக்கு தத்துவ ஞானத்தாலேயே மோக்ஷத்தின் பிராப்தி யுண்டாகின்றது. அத்தத்துவ ஞானம் உபாசனை முதலிய சாதனங்களானேயே யுண்டாகின்றது. அவ்வுபாசனை யுபாசிய

தேவதையானேயே யுண்டாகின்றது. ஆகையால் அவ்வுபாசனைகளின் சித்தியின் பொருட்டு அவ்வீஸ்வரன் சிவன், சக்தி, கணேசன், சூரியன், விஷ்ணு, பிரஹ்மா இவை முதலிய விக்கிரஹங்களைத் தரிக்கின்றார். அச்சிவ, விஷ்ணு முதலிய விக்கிரஹங்களை யுபாசிக்கும் ஜீவன் தத்துவஞான வாயிலாக மோக்ஷத்தை அடைகின்றான். இவ்வார்த்தை ஸ்ரீ வியாசபகவானுங் கூறியிருக்கின்றார். ஆண்டுச் சுலோகம் "[Grantha verse] ।" (இ-ள்.) அச்சர்வஞ்ஞ ஈஸ்வரன் சிவன், சக்தி, கணேசன், சூரியன், விஷ்ணு வென்னும் ஐந்து வடிவங்களாகவே தனது பக்தர்களின் உபாசனையின் அநுசாரமாக போக மோக்ஷத்தைக் கொடுக்கின்றான். ஆண்டு எப்பக்தர்கள் சகாமமுடையவர்களாகி உபாசனையைச் செய்கின்றார்களோ அவர்கட்காக போகத்தின் அடைவைச் செய்கின்றார். எப்பக்தர்கள் நிஷ்காமமுடையவர்களாகி உபாசனையைச் செய்கின்றார்களோ அவர்கட்காக மோக்ஷத்தின் பிராப்தியைச் செய்கின்றார். ஆகையால் சிவன், சக்தி, கணேசன், சூரியன், விஷ்ணு வென்னும் ஐந்தும் ஓர் ஈஸ்வரனது லீலாவிக்கிரஹமாவதால் சமானமேயாம் இவ்வைந்தில் சிறிதேனும் விஷமத்தன்மை யின்றாம்.

### ருஂரு. சிவன், சக்தி, கணேசன், சூரியன், விஷ்ணு என்னும் ஐந்தில் ஒவ்வொன்றிற்கே ஈஸ்வரத் தன்மை யொப்புவோராகிய துராக்கிரஹி வைஷ்ணவர் முதலியவர்களின் மதம்.

இவ்வாறாய சாத்திரத்தின் உண்மைக் கருத்தறியாது சில துராக்கிரஹி வைஷ்ணவரோ ஓர் விஷ்ணுவையே ஈஸ்வரனாக வொப்புகின்றனர். சிவன், சக்தி முதலியவர்களை ஈஸ்வரராக வொப்புகிறதில்லை. அங்ஙனமே சில சைவரும் ஓர் சிவனையே ஈஸ்வரனாக வொப்புகின்றனர். விஷ்ணு முதலியவர்களை ஈஸ்வரராக வொப்புகிறதில்லை. இவ்வாறாக சக்தியை உபாசிக்கும் சக்த புருஷர்களும் சக்தியை ஈஸ்வரனாக வொப்புகின்றனர். சிவன், விஷ்ணு முதலியவர்களை ஈஸ்வரராக வொப்புகிறதில்லை. அங்ஙனமே கணபதியை உபாசிப்பவர்களும் கணபதியையே ஈஸ்வரனாக வொப்புகின்றனர். சிவன், விஷ்ணு முதலியவர்களை ஈஸ்வரராக வொப்புகிறதில்லை. அங்ஙனமே சூரியனை உபாசிப்பவர்கள் சூரியனையே ஈஸ்வரனாக வொப்புகின்றனர். சக்தி, கணேசன் முதலியவர்களை ஈஸ்வரராக வொப்புகிறதில்லை.

### ருஂசு. அத்துராக்கிரஹிகளின் மதத்தில் சுருதிப் பிரமாணத்தினும் விரோதத் தன்மையின் வர்ணனம்.

அவ்வைஷ்ணவர் முதலியவர்களின் துராக்கிரஹம் சுருதிக்கு விரோதமாவதால் முமுக்ஷுக்கள் கிரஹிப்பதற்கு யோக்கியமன்றாம். ஏனெனின், "[Grantha verse]" என்னும் இச்சுருதி பிரஹ்மா, சிவன், விஷ்ணு என்னும் மூன்றிற்கும் ஈஸ்வர வடிவமே கூறி யிருக்கின்றது. இத்தகைய ஈஸ்வர வடிவ சிவன், விஷ்ணு முதலியவர்களில் ஒன்றிற்கு ஈஸ்வர வடிவமொப்பி மற்றையவற்றிற்கு ஈஸ்வர வடிவமொப்பாத இம்மதங்கள் கூறிய அச்சுருதிக்கு விரோதிகளேயாம்.

## ௫०எ. வேறு தேவர்களை தூஷிக்கும் வாயிலாகச் செய்யும் பக்தியின் நிஷ்பலத்தன்மையின் வர்ணனம்.

அல்லது எவன் ஓர் விஷ்ணுவையே ஈஸ்வரனாக வொப்பி விஷ்ணுவிற்கு பக்தியைச் செய்து சிவன், சக்தி முதலியவர்களைத் தூஷிக்கின்றானோ அவன் செய்துள்ள விஷ்ணுவின் பக்தி பயனில்லாததேயாம். அங்ஙனமே எவன் ஓர்சிவனையே ஈஸ்வரனாக ஒப்பி சிவனுக்குப் பக்தியைச்செய்து விஷ்ணு முதலியவர்களைத் தூஷிக்கின்றானோ அவன் செய்துள்ள பக்தி பயனில்லாததேயாம். இவ்வாறாக வேறு தேவதைகளை தூஷிக்கும் வாயிலாக செய்துள்ள சக்தி, சூரியன் முதலியவர்களின் பக்தியும் பயனில்லாததேயாம். இவ்வார்த்தை ஸ்ரீ வேதவியாச பகவானும் கூறி யிருக்கின்றார். ஆண்டுச் சுலோகம் "ஶைவாஃ ஶாக்தாஶ்ச ஸௌராஃ வைஷ்ணவா-ஏவ-க்ஷ்ஜகாஃ விதூஷம் திமொஊரார்ம் த்ராதெஷாம்ஶக்திஶ்ச நிஷ்பலா" (இ-ள்.) சிவனது உபாசகரும் சக்தியின் உபாசகரும், கணேசரின் உபாசகரும், சூரியனது உபாசகரும், விஷ்ணுவின் உபாசகருமாமெல்லாச் சாத்திரத்தின் உண்மைக் கருத்தறியாது அதாவது சிவன், சக்தி முதலிய ஐந்தும் ஒரே ஈஸ்வரனது விக்கிரஹமாமென்னும் சாத்திரத்தின் உண்மைக் கருத்தறியாது பிராந்தியால் பரஸ்பரத் துவேஷம் செய்கின்றார்கள். இக்காரணத்தால் அவர்கள் செய்துள்ள அவ்வத் தேவதைகளின் பக்தி பயனில்லாததேயாம்.

## ௫०அ. சிவன், விஷ்ணு முதலியவர்களிடத்தில் பேத புத்தியைச் செய்பவர்கட்கு அனர்த்தத்தின் வர்ணனம்.

அல்லது யாவன் சிவ, விஷ்ணுக்களின் பேதத்தைச் செய்கின்றானோ அப்பேத தரிசியானவன் நரகத்திற்கேப் பிராப்தமாகின்றான் என்னும் வார்த்தையும் ஸ்ரீ வியாசபகவானே கூறி யிருக்கின்றார். ஆண்டுச் சுலோகம் "ஶிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணு விஷ்ணோஶ்ச ஹ்ருதயம் ஶிவஃ ஏகம் ஷெபெந்தாம் கஸ்ய ஸ யாதி ரௌரவம் நரகம் வ்ரஜேத்" (இ-ள்.) சிவனது ஹிருதயம் விஷ்ணுவாம், விஷ்ணுவின் ஹிருதயம் சிவமாம். அச்சிவ, விஷ்ணுக்களிடத்தில் எவன் சிறிது மாத்திரமும் பேத புத்தியைச் செய்கின்றானோ அப்பேத தரிசி புருஷன் ரௌரவ நரகத்திற்குப் பிராப்தமாகின்றான். ஆகையால் மோக்ஷத்தின் இச்சையுடையவர்கள் அப்பரமேஸ்வரனது சிவ, விஷ்ணு முதலிய லீலா விக்கிரஹங்களில் ஓர் காலும் பேத புத்தியைச் செய்வது தகுதி யன்றாமென்னுமிது ஸ்மார்த்த புருஷர்களின் மதமாம். அதுவே அங்கீகரிக்க யோக்கியமாம்.

## ௫०௯. ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சிகளில் நித்தியத் தன்மையின் சாதக யுக்தி.

ஆகையால் இவ்வர்த்தம் சித்தமாயிற்று. அச்சர்வஞ்ஞ ஈஸ்வரன் உண்மையாக சரீரமில்லாதவரேயாம். சரீரமில்லாதவராகையாலேயே அவ்வீஸ்வரன் சக்ஷு முதலிய இந்திரியங்களு மின்றியவராம். இக்காரணத்தானேயே அவ்வீஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சி யென்னும் மூன்றையும் நித்தியமாக அங்கீகரிக்கின்றனர். ஏனெனின் அவ்வீஸ்வரனிடத்தில் ஜகத்தின் கர்த்

தாத் தன்மையின் சித்தியின் பொருட்டு சிருட்டியின் ஆதிகாலத்தில் ஈஸ்வரனுகிய யாம் இப்பரமாணுக்களால் த்வியணுக வடிவ காரியத்தை உண்டாக்குவாமென்னும் ஞானமும், அந்தஞானத்தின் சமானுகார இச்சையும், முயற்சியுமா மூன்றும் அவசியம் அங்கிகரிக்கப்படுவதாகும். ஆண்டு ஞான முதலியவைகளை உண்டாக்கும் சரீர இந்திரிய முதலிய காரணங்கள் அக்காலத்தி லின்றும். ஆகையால் அவ்வீஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சியாம் மூன்றையும் நித்தியமாக வொப்புவதே யோக்கியமாம்.

## ருகං. ஈஸ்வரனது ஞானத்தில் கேவலம் அபரோக்ஷ வடிவத் தன்மையின் சித்தி

அல்லது எங்ஙனம் ஜீவாத்மாவிற்கு சில வத்துவின் அபரோக்ஷ ஞானமும், சில வத்துவின் பரோக்ஷ ஞானமு முண்டாகின்றதோ அங்ஙனம் ஈஸ்வரனுக்கு சில வத்துவின் பரோக்ஷ ஞானம் உண்டாகிறதில்லை. ஆனுல் இறப்பு, எதிர்வு, நிகழ்வாம் எல்லா வத்துக்களை விஷயஞ் செய்யும் ஓர் அபரோக்ஷ ஞானமே யிருக்கின்றது.

## ருகக. ஈஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சிகளில் சபலத் தன்மையின் சித்தி.

அல்லது எங்ஙனம் ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சியாம் மூன்றும் சில சபலமும், சில நிஷ்பலமுமாகின்றதோ அங்ஙனம் அவ்வீஸ்வரனது ஞானம், இச்சை, முயற்சியாம் மூன்றும் நிஷ்பலமாவதன்று. ஆனுல் சபலமேயாம்.

## ருகஉ. அவ்வீஸ்வரனிடத்து நித்திய முக்தத்தன்மையின் வர்ணனம்.

அல்லது எங்ஙனம் ஜீவாத்மாவிற்குத் தத்துவ ஞானத்திற்கு முன் பந்தமும், ஞானத்திற்குப்பின் மோக்ஷமும் உண்டாகின்றதோ அங்ஙனம் ஈஸ்வரனுக்கு முறையாக பந்த மோக்ஷ முண்டாகிறதில்லை. ஆனுல் அவ்வீஸ்வரன் நித்தியமுக்தனேயாம். இவ்வளவு நூற்களால் லக்ஷணப் பிரமாண வாயிலாக ஈஸ்வர நிரூபணஞ் செய்யப்பட்டது.

## ருகங. கர்மத்தின் வசத்தால் சரீரப் பிராப்தியின் வர்ணனம்.

இனி முற்கூறிய லக்ஷணப் பிரமாணங்களால் சித்தஞ் செய்யப்பட்ட ஜீவாத்மாவிடத்தில் ஈஸ்வரனை விட விலக்ஷணத் தன்மையினை போதிக்கும் பொருட்டு அஜ்ஜீவாத்மாவின் கர்ம பராதீனத் தன்மையினையும், நாநாத் தன்மையினையும் நிரூபிப்பாம். ஆண்டு எங்ஙனம் அவ்வீஸ்வரன் சரீரமில்லாதவரோ அங்ஙனம் ஜீவாத்மா சம்சார காலத்தில் சரீரமில்லாதவனுகிறதில்லை. ஆனுல் தத்துவ ஞான சாத்திய மோக்ஷ காலத்திலேயே இஜ்ஜீவாத்மா சரீரமில்லாதவனுகின்றுன். இக்காரணத்தாலேயே " ஶரீரம்வாவஸம்தம் " என்னுமிச்சுருதி அம்மோக்ஷ காலத்தில் முக்தியடைந்த ஜீவாத்மாவிற்கு சரீரமில்லாமைக் கூறி யிருக்கின்றது. சம்சார காலத்திலோ இஜ்ஜீவாத்மா தான் செய்த புண்ணிய பாப கர்மத்தின் வசத்தால் எண்பத்தி நான்கு லக்ஷம் சரீரங்களை அடைபவனுகின்றுன்.

## ௫௧௪. ஜராயுஜ முதலிய நான்கு வகை சரீரங்களில் எண்பத்தி நான்கு லக்ஷ யோனிகளினது சங்கியைகளின் வர்ணனம்.

ஆண்டு இருபத்தோர் லக்ஷ வகைத்தாய ஜராயுஜ சரீரங்களும், இருபத்தோர் லக்ஷ வகைத்தாய அண்டஜ சரீரங்களும், இருபத்தோர் லக்ஷ வகைத்தாய ஸ்வேதஜ சரீரங்களும், இருபத்தோர் லக்ஷ வகைத்தாய உத்பிஜ்ஜ சரீரங்களும் உண்டாகின்றன. ஆண்டு புண்ணிய கர்மத்தின் வசத்தால் ஜீவாத்மாவிற்கு பிராஹ்மணர் முதலிய உத்தம சரீரங்ளின் அடைவு உண்டாகின்றது. பாப கர்மத்தின் வசத்தால் ஜீவாத்மாவிற்கு நாய் முதலிய நீச சரீரங்களின் அடைவு உண்டாகின்றது. இவ்வார்த்தையும் "𑌰𑌮𑌣𑍀𑌯𑌚𑌰𑌣𑌾𑌃 𑌰𑌮𑌣𑍀𑌯𑌾𑌂 𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌕𑌪𑍂𑌯𑌚𑌰𑌣𑌾𑌃 𑌕𑌪𑍂𑌯𑌾𑌂𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇" என்னும் இவை முதலிய சுருதிகளிற் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் இஜ்ஜீவாத்மா சம்சார காலத்தில் புண்ணிய பாப கர்மங்களின் அதீனமாகியே உயர்வு, தாழ்வாகிய சரீரங்களுக்குப் பிராப்தமாகின்றான்.

## ௫௧௫. ஜீவாத்மாவின் நாநாத் தன்மையின் சாதக யுக்தி.

அல்லது எங்ஙனம் ஈஸ்வரன் ஏகனோ அங்ஙனம் இஜ்ஜீவாத்மா ஏகன்றாம். சரீர சரீரத்தில் ஜீவாத்மா வெவ்வேறேயாம். அம்மனிதர் முதலிய சரீரங்கள் எண்ணிறந்தனவேயாம். ஆகையால் அஜ்ஜீவாத்மாவும் எண்ணிறந்தனவேயாம். ஓர் கால் எல்லாச் சரீரங்களில் ஒரே ஆத்மாவை அங்கீகரிக்கின் சிலர் சுகியாகவும், சிலர் துக்கியாகவும், சிலர் முக்தராகவும் இருக்கும் சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மை உண்டாகாததாகும். ஆனால் ஒருவன் சுகியாக யாவரும் சுகியேயாக வேண்டும். ஒருவன் துக்கியாக யாவரும் துக்கியேயாக வேண்டும். ஒருவன் பத்தனாக யாவரும் பத்தரேயாக வேண்டும். ஒருவன் முக்தனாக யாவரும் முக்தரே யாகவேண்டும். அங்ஙனமாய சுக துக்கங்களின் வியவஸ்த்தையின்மைக் காணப்படுகிறதில்லை, ஆனால் சிலர் சுகியாகவும், சிலர் துக்கியாகவும், சிலர் பத்தராகவும், சிலர் முக்தராகவும் இருக்கும் வியவஸ்தையே காணப்படுகின்றது. அச்சுக துக்க முதலியவைகளின் வியவஸ்த்தை சரீர சரீரத்தில் வெவ்வேறு ஜீவாத்மாவினை யொப்பின்றிச் சித்தியாதாகும். ஆகையால் அச்சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மை வடிவ ஏதுவால் அஜ்ஜீவாத்மா சரீர சரிரத்தில் வெவ்வேறாகவே சித்தமாகின்றான். அல்லது இவ்வுலகத்தில் சிலருக்கோ ராஜத்தன்மையால் சுகப் பிராப்தி யுண்டாகின்றது. சிலருக்கு ராஜாவின் சேவகத் தன்மையால் சுகப்பிராப்தியுண்டாகின்றது. சிலருக்கு ராஜாவின் சேவகனது சேவகத் தன்மையால் சுகத்தின் பிராப்தி யுண்டாகின்றது. அவ்வரசனுக்குத் தனது அரசுத் தன்மையால் உண்டாம் சுகப் பிராப்தி யாதோ அச்சுகம் அச்சேவகனுக்குப் பிராப்தமாகிறதில்லை. அச்சேவகனுக்குத் தனது சேவகத் தன்மையால் எச்சுகப் பிராப்தி யுண்டாகின்றதோ அச்சுகம் அவ்வரசனுக்குப் பிராப்தமாகிறதில்லை. இவ்வார்த்தை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஓர்

கால் அவ்வரச சரீரத்திலும், அச்சேவகனது சரீரத்திலும் ஒரே ஆத்மாவை அங்கீகரிக்கின் அவ்வரசனது சுகத்தின் அநுபவம் அச்சேவகனுக்கும், அச்சேவகனது சுகத்தின் அநுபவம் அவ்வரசனுக்கும் உண்டாக வேண்டும். அங்ஙனம் உண்டாவதின்று. இக்காரணத்தாலும் சரீர சரீரத்தில் அஜ்ஜீவாத்மா வெவ்வேறென்றே அங்கீகரிக்கப்பட வேண்டும்.

## ருகசு. எல்லாச் சரீரங்களில் ஆத்மாவின் ஏகத்வத்தின் சாதகமாக பூர்வபக்ஷம்.

சங்கை:—சர்வ சரீரங்களில் ஓர் ஆத்மாவினை அங்கீகரிக்கினும் அவ்வெல்லாச் சரீர வடிவ அவச்சேதக பேதத்தால் அச்சுக துக்க முதலியவைகளில் விசித்திரத்தன்மைச் சம்பவிக்கின்றது. எங்ஙனம் பாத முதலாக சிரசுமட்டுமாம் சம்பூர்ண சரீரத்தில் ஓர் ஆத்மா இருப்பதாயினும் அச்சரீர பாதாதி வடிவ அவச்சேதகபேதத்தால் எனக்கு சரீரத்தில் சுகமாயிருக்கிறது, பாதத்தில் நோயாயிருக்கிறது என சுக துக்கங்களின் விசித்திரத் தன்மை யுண்டாகின்றதோ அங்ஙனமே சைத்திர, மைத்திரன் முதலிய சர்வ சரீரங்களில் ஓர் ஆத்மாவி னிருப்புளதாயினும் அச்சைத்திர, மைத்திரன் முதலிய சரீர வடிவ அவச்சேதக பேதத்தால் அச்சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மைச் சம்பவிக்கின்றது. அதாவது ஒரே ஆத்மாவிற்கு சைத்திர சரீர விசிஷ்டத்தன்மை வடிவமாக சுகத்தின் அநுபவ முண்டாகின்றது. மைத்திர சரீர விசிஷ்டத் தன்மை வடிவமாக துக்கத்தின் அநுபவ முண்டாகின்றது. இவ்வாறாக சர்வ சரீரங்களில் ஓர் ஆத்மாவினை யொப்புவதாலும் அச்சரீரங்களின் வேற்றுமையால் அச்சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஆகையால் அச்சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மை வடிவ ஏதுவால் சரீர சரீரத்தில் அவ்வாத்மாவின் பேதத்தை ஒப்புவது முற்றும் விருத்தமாம்.

## ருகஎ. எல்லாச் சரீரங்களில் ஓர் ஆத்மாவினை யொப்புவதனாலாம் தோஷத்தின் வர்ணனம்.

சமாதானம்:—சர்வ சரீரங்களில் ஆத்மாவின் ஒருமைத் தன்மையினை அங்கீகரித்து அச்சரீரங்களின் பேதத்தால் சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மையினை அங்கீகரிக்கின் எங்ஙனம் திர்ஷ்டாந்தத்தில் எந்த யான் சரீரத்தின் சுகத்தை அநுபவிக்கின்றேனோ அதே யான் பாதத்தின் துக்கத்தையும் அநுபவிக்கின்றேன் என இவ்வாறாக அவ்வொரே ஆத்மா முறையாக சரீர பாதத்தின் சுக துக்கத்தை அநுபவிக்கின்றதோ அங்ஙனமே தாஷ்டாந்தத்திலும் எந்த யான் சைத்திரனெனப் பெயரிய புருஷன் சுகியாயிருக்கின்றேனோ அதே யான் மையித்திரனெனப்பெயரிய புருஷன் துக்கியாயிருக்கின்றேன் என இவ்வாறாக அவ்வொரே ஆத்மாவிற்கு முறையாக சைத்திர, மைத்திர சரீரத்தின் சுக துக்கத்தின் அநுபவம் உண்டாகவேண்டும். இவ்வாறாய அநுபவம் ஒரு ஜீவாத்மாவிற்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் கூறிய திர்ஷ்டாந்தத்தால் சர்வ சரீரங்களில் ஓர் ஆத்மாவின் சித்தி யுண்டாகாது.

சங்கை:—சர்வ சரீரங்களில் ஓர் ஆத்மா இருப்பதாயினும் அச்சரீரங்களின் பேதத்தால் ஓர் ஆத்மாவிற்கு அவ்வெல்லாச் சரீரங்களினது சுக துக்கங்களின் ஸ்மிருதி ஞான முண்டாகிறதில்லை. ஓர் கால் அச்சரீரங்களின் பேதத்தை ஸ்மிருதி ஞானத்திற்கு பிரதிபந்தகமாக ஒப்பாவிடின் உமது நையாயிகர்களின் மதத்திலும் எந்த யான் முன் ஜன்ம தேகத்தில் சுகியாக இருந்தேனோ அதே யான் இஜ்ஜன்ம தேகத்தில் பரமதுக்கியா யிருக்கின்றேன் என இவ்வாறாய ஸ்மிருதி ஞானம் உலகர் யாவருக்கும் உண்டாக வேண்டும். ஏனெனின் உமது நையாயிகர்கள் மதத்தில் முன் நாசமடைந்த தேகத்திலும், இவ்வர்த்தமான தேகத்திலும் அஜ்ஜீவாத்மா ஒன்றேயாம். ஆகையால் அவ்வொரே ஜீவாத்மாவிற்கு முன் பின் தேகங்களின் சுக துக்க முதலியவைகளின் ஸ்மிருதி ஞானம் உண்டாக வேண்டும். இவ்வாறாய ஸ்மிருதி ஞானம் ஓர் ஜீவாத்மாவிற்கும் உண்டாகிறதில்லை, ஆகையால் நையாயிகராகிய நீவிரும் முன் பின் சரீரங்களின் பேதத்தையே அந்த ஸ்மிருதி ஞானத்திற்குப் பிரதிபந்தகமாக ஒப்ப வேண்டும். அச்சரீரங்களின் பேதம் ஆத்மாவை யொன்றென்னும் பக்ஷத்திலுமிருக்கின்றது. இக்காரணத்தானேயே ஒரே ஆத்மாவிற்கு சைத்திர, மைத்திர முதலிய சரீரங்களின் சுக துக்கங்களின் ஸ்மிருதி ஞானம் உண்டாகிறதில்லை.

சமாதானம்:—இவ்வர்த்தமான சரீரத்தில் இருக்கும் ஜீவாத்மாவிற்கு முன்னர் நஷ்டமான சரீரங்களின் சுக துக்கங்களின் ஸ்மிருதி ஞானம் உண்டாகாமை யாதோ அதனிடத்தில் முன் பின் சரீரங்களின் பேதம் காரணமன்று. ஆனல் முன் சரீரங்களினது சுக துக்க முதலியவைகளின் சம்ஸ்காரங்களின் அபாவமே அந்த ஸ்மிருதி ஞான முண்டாகாமைக்குக் காரணமாம். அதாவது பின் பின் சரீரங்களின் பிராப்த முண்டாக முன் முன் சரீரங்களின் சுக துக்க முதலியவைகளது சம்ஸ்காரம் நஷ்டமாய்விடுகின்றது. இக்காரணத்தானேயே அயோகி ஜீவாத்மாவிற்கு இவ்வர்த்தமான சரீரத்தில் பூர்வ சரீரங்களின் சுக துக்க முதலியவைகளின் ஸ்மரண முண்டாகிறதில்லை. ஓர் கால் சரீரங்களின் பேதத்திற்கே ஸ்மிருதி ஞானம் இன்மையில் காரணமாக வொப்பின் ஒரே ஜீவாத்மாவிற்கு பால்ய யௌவன சரீரத்தின் சுக துக்க முதலியவைகளின் ஸ்மரணம் வயோத்திக காலத்தில் உண்டாகாததாக வேண்டும். ஏனெனின் அவயவங்களின் பெருக்கத்தாலும், குறைவாலும் முதலாவது அவயவத்தின் நாச முண்டாக இரண்டாவது அவயவத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. இது சாத்திரக்காரர் சித்தாந்தமாம். பால்ய, யௌவன, வயோத்திய சரீரத்தில் அவ்வவயவங்களின் வளர்ச்சியும், குறைவும் உலகர் யாவருக்கும் அநுபவசித்தமாம். ஆகையால் பால்ய சரீரத்தினும் வயோத்திய சரீரம் வேறாம். வயோத்திய சரீரத்தினும் பால்ய சரீரம் வேறாம். இவ்வாறாய பால்ய, யௌவன வயோத்திய மென்னும் மூன்று சரீரங்களின் வேறுபாடுளதாயினும் எந்த யான் பால்லிய சரீரத்தில் சுகியாயிருந்தேனோ அதே யான் யௌவனத்திலும் சுகியாயிருந்தேன், அதே யான் இவ்வயோத்திய சரீரத்திலும் சுகியாயிருக்கிறேன் என அவ்வொரே ஜீவாத்மாவிற்குத் தனது பால்லிய, யௌவன முதலிய சரீரங்களின் சுக துக்க முதலியவைகளின் அநுபவத்தின் ஸ்மிருதி ஞான

முண்டாகின்றது. ஆகையால் அச்சரீரங்களின் வேறுபாடு அநுபவத்தின் ஸ்மிருதி ஞானம் உண்டாகாமைக்குக் காரணமன்று. ஆனால் அச்சம்ஸ்காரங்களின் அபாவமே அநுபவத்தின் ஸ்மிருதி ஞானம் உண்டாகாமைக்குக் காரணமாம். இவ்வாறாக ஏக ஆத்மவாதியாகிய நீவிரும் சம்ஸ்காரங்களின் அபாவத்திற்கே அநுபவத்தின் ஸ்மிருதி ஞானம் உண்டாகாமைக்குக் காரணமாக வொப்பின் எங்ஙனம் சைத்திரனெனப் பெயரியபுருஷனால் அநுபவிக்கப் பட்ட சுக துக்கங்களின் ஸ்மரணம் மைத்திரனெனப் பெயரிய புருஷனுக் குண்டாகிறதில்லையோ அங்ஙனமே அச்சம்ஸ்காரங்களின் அபாவமிருப்பதால் அச்சைத்திரனெனப் பெயரிய புருஷனுக்கும் தான் அநுபவித்த சுக துக்க முதலியவைகளின் ஸ்மரணம் உண்டாகாததாகும். அச்சுக துக்க முதலியவைகளின் சம்ஸ்காரங்களை அங்கீகரிக்கின் எங்ஙனம் சைத்திர னென்போனுக்கு தான் அனுபவித்த சுக துக்க முதலியவைகளின் ஸ்மரண முண்டாகின்றதோ அங்ஙனமே மைத்திரனென்போனுக்கும் அச்சுக துக்க முதலியவைகளின் ஸ்மரணம் உண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் உமது மதத்தில் அச்சம்ஸ்காரங்களின் ஆசிரய வடிவ ஜீவாத்மா அச்சைத்திர, மைத்திர முதலிய சர்வசரீரங்களில் ஒன்றேயாம். இவ்வாறாய ஸ்மரணம் காணப்படுகிறதில்லை. ஆகையால் எல்லாச் சரீரங்களில் ஆத்மா ஒன்றன்றாம். சரீர சரீரத்தில் ஜீவாத்மா வெவ்வேறேயாம். அஜ்ஜீவாத்மாவின் வேற்றுமையை அங்கீகரிப்பதாகியே உலகப் பிரசித்த சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மைச் சம்பவிக்கின்றது. எல்லாச் சரீரங்களில் ஓர் ஆத்மாவின் அங்கீகார முளதாக சுக துக்கங்களின் விசித்திரத் தன்மைச் சம்பவியாது.

### ருகஎ. சுருதிப் பிரமாணத்தால் ஜீவாத்மாவினது நாநாத் தன்மையின் சித்தி.

அல்லது சுக துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மை வடிவ ஏதுவால் ஜீவாத்மாவின் நாநாத்தன்மைச் சித்திப்பதுடன் “ யொயொடெவா நார வ-ந் வை-ஷூ-ய-த ” என்னும் இவை முதலிய சுருதிப் பிரமாணத்தாலும் ஜீவாத்மாவின் நாநாத் தன்மையே சித்தமாகின்றது. “ ஏகொடெவஃ ஸவ-ஃ ஸ-ம-தெஷ-ம-ஞஃ ” என்னும் இவை முதலிய சுருதிகளில் ஆத்மாவின் ஏகத்தன்மைக் கூறப்பட்டது யாதோ அது ஜீவாத்மாவின் ஏகத்துவம் கூறப்பட்டதன்றாம். ஆனால் ஈஸ்வராத்மாவின் ஏகத்துவம் கூறப்பட்டதாம். ஆகையால் சுருதிப்பிரமாணத்தாலும் அஜ்ஜீவாத்மாவிற்கு நாநாத்தன்மையே சித்தமாகின்றது.

### ருகஅ. ஜீவாத்மாவின் விபுத்தன்மையின் சாதக யுக்தி.

இனி அஜ்ஜீவாத்மாவின் விபுத்தன்மையினைக் கூறுவாம். எங்ஙனம் ஈஸ்வரன் விபுவாமோ அங்ஙனமே இஜ்ஜீவாத்மாவும் விபுவாம். அதாவது பரம மஹத்வப் பரிமாண முடையதாம். இஜ்ஜீவாத்மா பரமாணுவினைப் போன்று அணுத்துவப் பரிமாண முடையதும், கடாதிகளைப் போன்று மத்திமப் பரிமாண முடையது மன்று.

## ௫௨௦. அணுத்துவப் பரிமாண முடைமை ஒப்புவதில் தோஷத்தின் வர்ணனம்.

ஆண்டு இஜ்ஜீவாத்மாவிற்கு ஓர் கால் அணுத்துவப்பரிமாணமுடைமை யொப்பின் அவ்வணுஆத்மா இச்சரீரத்தின் விரல் முதலிய யாதா மோரிடத்திலேயே இருக்கும்; சம்பூர்ணச் சரீரத்தில் வியாப்பியமாக இருப்பதன்று. ஆகையால் சம்பூர்ணச் சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கங்களின் அநுபவம் உண்டாகாததாகும்; விரல் முதலிய யாதாமோரிடத்திலேயே அச்சுக, துக்கங்களின் அநுபவமுண்டாகவேண்டும். கிரீஷ்ம ருது (கோடை) காலத்தில் சூரியனது வெப்பத்தால் காய்ந்துள்ள புருஷனுக்குப் பாத முதலாகச் சிரமட்டுமாம் சம்பூர்ணச் சரீரத்தில் துக்கத்தின் அநுபவ முண்டாகின்றது. அங்ஙனமே குளிர்ந்த கங்கா ஜலத்தில் மூழ்குவதால் சம்பூர்ணச் சரீரத்தில் அப்புருஷனுக்குச்சுகத்தின் அநுபவமுமுண்டாகின்றது. அச்சம்பூர்ணச்சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கத்தின் அநுபவம் அணு ஆத்மாவில் சம்பவியாததாகும். ஆகையால் அஜ்ஜீவாத்மா அணுவன்றாம்.

சங்கை:—அவ்வாத்மாவை அணுவாக வொப்புவதில் கூறிய இத்தோஷம் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் யாதா மோரிடத்தில் இருக்கும் சிறிய தீபத்தின் பிரகாசம் அவ்வீடு முழுமையும் வியாப்பியமாக இருக்கிறதோ அங்ஙனமே சரீரத்தில் யாதா மோரிடத்திலிருக்கும் அணு ஆத்மாவின் ஞான வடிவப்பிரகாசம் சம்பூர்ணச்சரீரத்தில் வியாப்பியமாயிருக்கின்றது. ஆகையால் அவ்வணு ஆத்மாவிற்குச் சம்பூர்ணச் சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கத்தின் அநுபவம் சம்பவிக்கின்றது.

சமாதானம்:—யாண்டு யோகி புருஷன் தன் யோகத்தின் பெருமையால் ஒரேகாலத்தில் அனேகசரீரங்களை எடுக்கின்றானோ ஆண்டு அந்தயோகிப் புருஷனுக்கு அவ்வணு ஆத்மா எச்சரீரத்திலிருக்குமோ அச்சரீரத்தில் அவ்வணு ஆத்மாவிற்கு அந்த ஞான வடிவப் பிரகாசம் வியாப்பியமா யிருக்கும். அச்சரீரத்தினும் வேறான வேறோர் சரீரத்தில் அந்த ஞான வடிவப் பிரகாசம் வியாப்பியமாயிராது. ஆகையால் அந்த யோகிப் புருஷனுக்கு அவ்வேறோர் சரீரத்தின் சுக, துக்க முதலியவைகளே அநுபவமாகும் அவ்வெல்லாச் சரீரங்களின் அநுபவம் உண்டாகாததாகும். சாத்திரத்திலோ அந்த யோகிப் புருஷனுக்கு ஒரே காலத்தில் அவ்வெல்லாச் சரீரங்களின் சுக, துக்க முதலியவைகளது அநுபவம் கூறப்பட்டிருக்கிறது. அது அணுஆத்மவாதியின் மதத்தில் அசங்கதமாகும். அல்லது எவ்வாதி ஜீவாத்மாவினை அணுவாக வொப்புகின்றனனோ அவ்வாதியின் மதத்தில் அவ்வணு ஆத்மாவினைப் போன்று அவற்றின் சுக, துக்க முதலியவைகளினது தர்மங்களின் பிரத்தியக்ஷ முண்டாகாததாகும். இங்ஙனம் காணப்படுகிறதில்லை; யான் சுகி, யான் துக்கி என அச்சுக, துக்க முதலியவைகளின் பிரத்தியக்ஷம் சர்வப் பிராணிகட்கு முண்டாகின்றது. இக்காரணத்தானும் அஜ்ஜீவாத்மாவில் அணு வடிவத்தன்மைச் சம்பவியாது.

### ௫௨௧. ஜீவாத்மாவிற்கு மத்திமப் பரிமாணம் வொப்புவோராகிய வாதிகளின் சங்கை.

சங்கை:—ஜீவாத்மாவிற்கு அணுத்துவப் பரிமாணமுடைமை யொப்புவதில் சம்பூர்ணச் சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கங்களின் அநுபவம் சம்பவியாததாகும். என்றாலும் ஜிவாத்மாவிற்கு மத்திமப் பரிமாணமுடைமை யொப்புவதில் சம்பூர்ணச் சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கங்களின் அநுபவம் சம்பவிக்கின்றது. ஏனெனின் மத்திமப்பரிமாணமுடைய ஜீவாத்மா பாத முதலாக சிரசுமட்டுமாம் சம்பூர்ணச் சரீரத்தில் வியாப்பியமாயிருக்கும். இத்தகைய சரீர வியாபி ஜீவாத்மாவிற்குச் சம்பூர்ணச் சரீரத்தில் வியாபித்திருக்கும் சுக, துக்கங்களின் அநுபவம் சம்பவிக்கின்றது. ஆகையால் அஜ்ஜீவாத்மாவிற்கு மத்திமப் பரிமாணமுடைமை யொப்புவதே யோக்கியமாம்.

### ௫௨௨. ஜீவாத்மாவிற்கு மத்திமப் பரிமாணமுடைமை யொப்புவதிலுள்ள தோஷத்தின் வர்ணனம்.

சமாதானம்:—ஜீவாத்மாவிற்கு மத்திமப் பரிமாணமுடைமை யொப்பின் அஜ்ஜீவாத்மா அநித்தியமேயாகும். ஏனெனின், எவ்வெத் திரவியம் மத்திமப் பரிமாணமுடையதாமோ அவ்வத்திரவியம் சாவயவமேயாகின்றது. எவ்வெத்திரவியம் சாவயவமாமோ அவ்வத்திரவியம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம்: கட, பட முதலியத் திரவியங்கள் மத்திமப் பரிமாணமுடையனவாகையால் சாவயவமும் அநித்தியமுமேயாகும். அங்ஙனமே ஜீவாத்மாவும் மத்திமப் பரிமாண முடையதாவதால் சாவயவமாகும்; சாவயவமாவதால் அநித்தியமாகும். அஜ்ஜீவாத்மாவிற்கு அநித்தியமுளதாக செய்தவினை யழிவதும், செய்யாதவினையின் அடைவுமா மிருதோஷங்களின் பிராப்தியுண்டாம்.

### ௫௨௩. செய்தவினை யழிவதும், செய்யாதவினை பிராப்தமாவதுமா மிரண்டின் சொரூப வர்ணனம்.

ஆண்டு வேதமானது விதித்துள்ள யாகம், தான முதலிய கிரியைகளால் சம்பாதிக்கப்பட்ட தர்மமும், வேதமானது விலக்கியுள்ள ஹிம்சை முதலிய கிரியைகளால் சம்பாதிக்கப்பட்ட அதர்மமும் யாவையோ அத்தர்ம, அதர்மங்கள் சுக, துக்க வடிவ போகமின்றியே நாசமாவதனை கிருத நாசம் (செய்தவினை அழிவது) என்பர். முன்னர் சம்பாதிக்கப்படாத தர்ம, அதர்மங்களின் சுக, துக்க வடிவப் பயனதுப் பிராப்தியினை அகிருதாப்பியாகமம் (செய்யாத வினையின் அடைவு) என்பர். கருத்திதுவாம்; முன் ஜன்மத்தில் தர்ம, அதர்மங்களின் கர்த்தாவாகிய எஜ்ஜீவாத்மாவோ அஜ்ஜீவாத்மா அநித்தியமாவதால் பின் ஜன்மத்தில் இருப்பதில்லை. முன்னரே நாசமாய் விடுகின்றது. அவ்வாசிரய வடிவ ஜீவாத்மாவிற்கு நாச முண்டாக தர்ம, அதர்மங்கட்கும் நாச முண்டாய் விடும். பின் ஜன்மத்தில் எஜ்ஜீவாத்மா ஜன்ம முதலாக சுக துக்க வடிவ பயனை அநுபவிக்கின்றதோ அஜ்ஜீவாத்மா அத்தர்ம, அதர்மங்களின் கர்த்தாவன்றாம். இவ்வாறாக அஜ்ஜீவாத்மாவினை அநித்தியமாக வொப்புவதில் செய்த வினை அழிவதும், செய்யாத வினை தோற்றுவதுமா மிருதோஷங்களின் அடைவுச் சம்பவிக்கும். அது சாத்திரத்திற்கு விரோதமாம். ஏனெ

னின் சாத்திரத்தில் பல போகமின்றி அஞ்ஞானி ஜீவர்களது புண்ணிய, பாப கர்மங்களின் நிவர்த்திக் கூறப்படவில்லை; சுக, துக்க வடிவ பல போகத்தாலேயே அவ்வஞ்ஞானி ஜீவர்களது புண்ணிய, பாப கர்மங்களின் நிவர்த்திக் கூறப்பட்டிருக்கிறது. ஆண்டு சுலோகம் "நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிசதைரபி ॥ அவச்யமேவ போக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்" (இ-ள்.) இப்புருஷனாற் செய்யப்பட்ட சுப, அசுப கர்மம் யாதோ அக்கர்மம் இப்புருஷனுக்கு சுக, துக்க வடிவ பயனைக் கொடுக்காது பத்துகல்ப கோடிகளாலும் நாசமாகாது. ஆனால் செய்யப்பட்ட அச்சுப, அசுப கர்மம் அவசியம் போகிக்கப்படுவதாகின்றது. ஆகையால் அஜ்ஜீவாத்மா மத்திமப் பரிமாணமுடையதென்பதும் சம்பவியாது. ஆனால் எங்ஙனம் ஈஸ்வரன் விபுவாமோ அங்ஙனமே இஜ்ஜீவாத்மாவும் விபுவேயாம். அதாவது ஆகாசம், காலம், திக்கு, ஈஸ்வரன் என்னும் நான்கைப் போன்று இஜ்ஜீவாத்மாவினை விபுவாக வொப்புவதில் முற்கூறிய அணுப்பரிமாண பக்ஷத்தின் தோஷமும், மத்திமப்பரிமாண பக்ஷத்தின் தோஷமும் பிராப்தமாகா.

## ௫௨௪. சுருதிப் பிரமாணத்தால் ஜீவாத்மாவினது விபுத்தன்மையின் சித்தி.

அல்லது ஜீவாத்மாவிற்கு விபுத்தன்மை முற்கூறிய யுக்தியால் சித்திப்பதுடன் சுருதிப் பிரமாணங்களாலும் சித்திக்கின்றது. ஆண்டுச் சுருதி "ஆகாசவத் ஸர்வகதஸ்ச நித்ய: । ஸ வா ஏஷ மஹானஜ ஆத்மா" என்னும் இவை முதலியச் சுருதிப் பிரமாணங்களாலும் சித்தமாகின்றது. "அணோரணீயான்" என்னு மிவை முதலியச் சுருதிகளில் ஆத்மாவிற்கு அணுத் தன்மைக் கூறியது யாதோ அது இருதய முதலிய உபாதிகளின் சம்பந்தத்தாற் கூறியதாம். உண்மையாக அவ்வாத்மாவிற்கு அணுத் தன்மைக் கூறப்படவில்லை. ஆகையால் கூறிய அச்சுருதிக்கு விரோத முண்டாகாது. அல்லது அணுவென்னும் அப்பதம் அவ்வாத்மாவிற்கு அறியப்படாத்தன்மையினைக் கூறி யிருக்கின்றது. அதாவது; உலகத்தில் அறியப்படாத பதார்த்தம் எவ்வள விருக்கின்றனவோ அவ்வெல்லாவற்றினும் அவ்வாத்மா அத்தியந்தம் அறியப்படாததாம். இக்காரணத்தானேயே சார்வாகர் முதலிய பலர் அவ்வாத்மாவினை அறியாதவராகி தேகம், இந்திரிய முதலியவைகளை ஆத்ம வடிவமாக வொப்புகின்றனர். அவ் வாத்மாவின் அறியப்படாத் தன்மை "ஸ்ரவணாயாபி பஹுபிர்யோ ந லப்ய:" இவை முதலிய சுருதிகளினும், "ஆச்சர்யவத் பஸ்யதி கஸ்சிதேனம்" இவை முதலிய ஸ்மிருதிகளினும் பிரசித்தமேயாம். இக்காரணத்தானும் கூறிய அச்சுருதியின் விரோத முண்டாகாது.

## ௫௨௫. ஜீவாத்மாவிற்கு நித்தியத் தன்மையின் சாதக யுக்தி.

இனி அஜ்ஜீவாத்மாவிற்கு நித்தியத் தன்மையைச் சித்தஞ் செய்வாம். முற்கூறிய விபுவாகிய ஜீவாத்மா நித்தியமாம். அதாவது; உற்பத்தி விநாச மில்லாததாம். ஏனெனின் எவ்வெத்திரவியம் விபுவாமோ அவ்வத் திரவியம்

நித்தியமே யாகின்றது. எங்ஙனம் முற்கூறிய ஆகாசம், காலம், திக்கு, ஈஸ்வரன் என்னும் நான்குத் திரவியங்கள் விபுவாமாகையால் நித்தியமுமாம். அங்ஙனமே இஜ்ஜீவாத்மாவும் முற்கூறிய முறைப்படி விபுவேயாமாகையால் ஆகாச முதலியவைகளைப் போன்று இஜ்ஜீவாத்மாவையும் நித்தியமாகவே வொப்ப வேண்டும். அல்லது அஜ்ஜீவாத்மாவினை அநித்தியமாக வொப்பின் முற்கூறியப்படி செய்தவினை யழிவதும், செய்யாதவினை பிராப்தமாவதுமா மிரு தோஷங்களின் அடைவுச்சம்பவிக்கும். அஜ்ஜீவாத்மாவினை நித்தியமாகவொப்புவதில் அவ்விரு தோஷமும் பிராப்தமாகாது. இக்காரணத்தானும் அஜ்ஜீவாத்மா நித்தியமாகவே சித்தமாகின்றது. அல்லது குழந்தையானது எக்காலத்தில் மாதாவின் வயற்றினின்றும் வெளியில் வருகின்றதோ அக்காலத்தில் அக்குழந்தைக்கு மாதாவின் ஸ்தனபானத்தில் பிரவிருத்தி யுண்டாகின்றது: இவ்வாருக வானரக் குழந்தையானது எக்காலத்தில் தாயின் வயற்றினின்று வெளியாகின்றதோ அக்காலத்தில் அவ்வானரக் குழந்தைக்கு மரக்கிளையை பிடிப்பதற்கு பிரவிருத்தி யுண்டாகின்றது. இவ்வார்த்தை யுலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷ சித்தமாம். ஆண்டுச் சேதனப் பிராணிகட்கு எவ்வெப் பிரவிருத்தி யுண்டாகின்றதோ அவ்வப் பிரவிருத்தி இவ்வத்து எமதிஷ்டத்தின் சாதனமாம் என்னும் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தானேயே யுண்டாகின்றது. அவ்விஷ்ட சாதனத தன்மை ஞானமின்றி ஓர் சேதனப் பிராணிக்கும் பிரவிருத்தி யுண்டாகாது. இவ்வார்த்தையும் உலகர் யாவருக்கும் அநுபவசித்தமாம். ஆண்டு அக்குழந்தைக்கு இஜ்ஜன்மத்தில் ஸ்தன பானத்தில் பிரவிருத்தி யுண்டாவது யாதோ அப்பிரவிருத்தியும் இந்த ஸ்தனபானம் எமதிஷ்ட சாதனமாம் என்னும் ஞானத்தானேயே ஒப்பப்படுவதாகும். ஆண்டு ஜன்ம காலத்தில் அக்குழந்தைக்கு ஸ்தனபானத்தில் இஷ்ட சாதனத்தன்மைஞானம் பிரத்தியக்ஷ முதலியப் பிரமாணங்களாலோ சம்பவியாது. ஆகையால் அவ்விஷ்ட சாதனத் தன்மை ஞானம் அநுபவ வடிவமன்ரும். ஆனல் அவ்விஷ்ட சாதனத் தன்மை ஞானம் ஸ்மிருதி வடிவமாகவே ஒப்பப்படுவதாகும். எதுவெது ஸ்மிருதி ஞானமாமோ அதுவது சம்ஸ்கார வாயிலாக முன் அநுபவத்தானேயே உண்டாவதாகின்றது. முன் அநுபவமின்றி ஸ்மிருதி ஞானம் உண்டாகாது. இவ்வார்த்தையும் உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் இது வொப்பப்படுவதாகும். அக்குழந்தையானது இஜ்ஜன்மத்திற்கு முன் ஜன்மத்தில் மாதாவின் ஸ்தனபானத்தில் தனது இஷ்ட சாதனத் தன்மையினை அநுபவித்திருக்கின்றது. அவ்வநுபவத்தாலுண்டாம் சம்ஸ்காரத்தானேயே அக்குழந்தைக்கு இஜ்ஜன்மத்தில் அவ்விஷ்ட சாதனத் தன்மையின் ஸ்மரணமுண்டாகின்றது. எவ்வெவ் ஜீவன் எவ்வெவ் வத்துவை அநுபவித்திருக்கின்றதோ அவ்வவ் ஜீவனே அவ்வவ் வத்துவை காலாந்திரத்தில் (வேறு காலத்தில்) ஸ்மரிக்கின்றது. வேறு ஜீவனுல் அநுபவிக்கப்பட்ட வத்துவின் ஸ்மரணம் வேறு ஜீவனுக்கு உண்டாகாது. இவ்வார்த்தையும் உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் எவ்வெவ் ஜீவாத்மாவிற்கு இஜ்ஜன்மத்தில் மாதாவின் ஸ்தனபானத்தில் இஷ்ட சாதனத் தன்மை

யின் ஸ்மரண ஞான முண்டாவதாகிறதோ அதே ஜீவாத்மா அதற்கு முன் ஜன்மத்தில் மாதாவின் ஸ்தனபானத்தில் இஷ்ட சாதனத் தன்மையினை அநுபவத்திருக்கின்றது. அவ்வநுபவ ஜன்னிய சம்ஸ்காரமும் அஜ்ஜீவாத்மாவிலிருக்கின்றது. எக்காரணத்தாலெனின் அநுபவம், சம்ஸ்காரம், ஸ்மிருதியாம் மூன்றும் ஓர் அதிகரணத்தில் இருப்பனவாகியும், ஓர் வத்துவை விஷயஞ் செய்வனவாகியுமே பரஸ்பர காரிய காரண பாவத்திற்குப் பிராப்தமாகின்றன. ஆகையால் இஜ்ஜன்மத்திற்கு முன் ஜன்மத்திலும் அஜ்ஜீவாத்மாவிற்கு ஜன்ம காலத்திலேயே ஸ்தனபானத்தில் பிரவிருத்தி யுண்டாவது யாதோ அப்பிரவிருத்தியும் முற்கூறிய முறைப்படி அதனினும் முன் ஜன்மத்தின் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தா லுண்டான ஸ்மிருதி ஞானத்தானேயே யுண்டாகின்றது. இவ்வாறாக முன் முன் ஜன்மங்களிலும் ஜீவாத்மாவின் இருத்தற் றன்மையே சம்பவிக்கின்றது. இவ்வாறாகப் பிரவாக வடிவமாகச் சம்ஸ்காரம் அநாதியாவதால் அஜ்ஜீவாத்மாவிற்கு அநாதித் தன்மையே சித்தமாகின்றது. எவ்வெப் பதார்த்தம் அநாதி பாவ வடிவமாமோ அவ்வப் பதார்த்தம் நாசமில்லாததேயாம். எங்ஙனம்: அநாதி பாவ வடிவமாவதால் ஆகாசம் நாசமில்லாததேயாம். அங்ஙனமே அநாதி பாவ வடிவமாவதால் இஜ் ஜீவாத்மாவும் நாசமில்லாததேயாம். எவ்வெப் பதார்த்தம் உற்பத்தி நாசமில்லாததாமோ அவ்வப்பதார்த்தம் நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: ஆகாசம் உற்பத்தி நாசமில்லாததாவதால் நித்தியமாம். அங்ஙனமே உற்பத்தி நாசமில்லாததாவதால் ஜீவாத்மாவும் நித்தியமேயாகும்.

சங்கை :—எங்ஙனம் இஜ்ஜீவாத்மா ஜன்மகாலத்தில் மாதாவின் ஸ்தனபானத்தில் முன் ஜன்மத்தில் அநுபவிக்கப்பட்ட இஷ்ட சாதனத்தன்மையினை ஸ்மரிக்கின்றதோ அங்ஙனமே முன் ஜன்மத்தில் அநுபவித்துள்ள வேறு பதார்த்தங்களையும் இஜ்ஜன்மத்தில் ஏன் ஸ்மரிக்கக் கூடாது?

சமாதானம் :—ஸ்மிருதி ஞானத்திற்கு ஏதுவாகிய பூர்வ அநுபவ ஜன்னிய சம்ஸ்காரம் உத்புத்தமாகியே அந்த ஸ்மிருதி ஞானத்திற்கு ஏதுவாகின்றது. அநுத்புத்தமாகிய சம்ஸ்காரம் ஸ்மிருதிக்கு ஏதுவாகிறதில்லை. ஓர் கால் அநுத்புத்த சம்ஸ்காரங்களாலும் ஸ்மிருதி யுண்டாகுமாயின் எப்பொழுதும் அச்சம்ஸ்காரங்களி னிருப்புளதாவதால் எப்பொழுதும் ஸ்மிருதி ஞானம் உண்டாக வேண்டும். அங்ஙன மாவதில்லை. ஆகையால் உத்புத்த சம்ஸ்காரமே ஸ்மிருதி ஞானத்திற்கு ஏதுவாகின்றது. ஆண்டு முன்ஜன்மத்தில் அநுபவிக்கப்பட்ட அவ்வெல்லாப் பதார்த்தங்களின் சம்ஸ்காரங்களைக் உத்புத்தஞ் செய்வ தொன்றும் இஜ்ஜன்மத்திலின்றும். ஆகையால் வேறு பதார்த்தங்களின் ஸ்மரணம் இஜ்ஜன்மத்திலுண்டாகிறதில்லை. அப்பாலகனுக்கு ஜன்ம காலத்தில் ஸ்தனபானத்தில் இஷ்ட சாதனத் தன்மையின் ஸ்மரணம் உண்டாகாததாயின் அப்பாலகனுக்கு ஸ்தனபானத்தில் பிரவிருத்தியே யுண்டாகாததாகும். அந்தப் பிரவிருத்தியின் அபாவமுளதாக அப்பாலகனது ஜீவனமே உண்டாகாததாகும். ஆகையால் வேறு கதியில்லாமையால் அப்பாலகனது ஜீவனத்திற்கு ஏதுவாகிய

அதிர்ஷ்டத்திற்கே அச்சம்ஸ்காரங்களை உத்புத்தஞ் செய்யுந் தன்மைக் கற்பிக்கப்படுவதாகின்றது.

### ருஉகூ. சுருதி, ஸ்மிருதிப் பிரமாணங்களால் ஜீவாத்மாவினது நித்தியத் தன்மையின் சித்தி.

அல்லது முற்கூறிய யுக்தியினுல் ஜீவாத்மாவின் நித்தியத் தன்மைச் சித்திப்பதுடன் "அவிநாஸீ வாஅரேயமாத்மா அனுச்சித்தி தர்மா" "நஜாயதே ம்ரியதே வா" இவை முதலிய அனேக சுருதி, ஸ்மிருதி வசனங்களும் ஜீவாத்மாவின் நித்தியத் தன்மையினையே கூறியிருக்கின்றன.

### ருஉஎ. சுக முதலியவைகளினது விசேஷ குணங்களின் சம்பந்தத்தால் ஜீவாத்மாவில் மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயத் தன்மை.

அல்லது எங்ஙனம் உலகர் யாவருக்கும் கூறிய ஈஸ்வரன் நித்திய பரோக்ஷமேயாமோ அங்ஙனம் ஜீவாத்மா உலகவருக்குப் பரோக்ஷமன்றும். ஆனுல் தத்தந் தேகத்தில் சர்வப் பிராணிகட்கும் மனமாகிய இந்திரியத்தால் ஜீவாத்மாவின் ஞானம் அபரோக்ஷமாகவே யுண்டாகின்றது. ஆனுல் இதனிடத்தில் இவ்வளவு விசேஷத் தன்மை யிருக்கின்றது. எங்ஙனம் பாஹ்ய (புறம்பாயுள்ள) கட முதலியத்திரவியங்களினது உருவ முதலியக்குணங்களின் சம்பந்தமின்றியே இது கடம் என்னும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாகின்றதோ அங்ஙனம் ஜீவாத்மாவின் ஞானம், சுக முதலிய குணங்களின் சம்பந்தமின்றி இது ஆத்மா வென்னும் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனுல் யோக்கிய விசேஷ குண வடிவ ஞானம், சுக முதலியக் குணங்களின் சம்பந்தத்தானேயே ஜீவாத்மாவின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு ஜீவாத்மாவின் ஞானம், சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி என்னும் அறு குணங்கள் யோக்கிய விசேஷ குணங்களெனப்படும். இவ்வறு குணங்களில் யாதாமோர் குணத்தின் சம்பந்தத்தானேயே ஜீவாத்மாவின் மானசப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதாவது யான் அறிகின்றேன், யான் சுகிக்கின்றேன், யான் துக்கிக்கின்றேன், யான் இச்சையுடையவன், யான் துவேஷமுடையவன், யான் முயற்சியுடையவன் என இவ்வாறாய ஞான முதலியக் குணங்களின் சம்பந்தத்தானேயே ஜீவாத்மாவின் மானசப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. தர்மம், அதர்மம், பாவனை யெனப் பெயரிய சம்ஸ்கார மென்னும் மூன்றும் ஜீவாத்மாவின் விசேஷ குணங்களாயினும் அம் முக்குணங்கள் பிரத்தியக்ஷ யோக்கிய மன்றும். ஆகையால் அம் முக்குணங்களின் சம்பந்தத்தால் ஜீவாத்மாவின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அதாவது; யான் தர்மியாயிருக்கின்றேன், யான் அதர்மியாயிருக்கின்றேன், யான் சம்ஸ்காரமுடையவனுயிருக்கின்றேன் என ஜீவாத்மாவின் மானசப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஆனுல் சாஸ்திரப் பிரமாணத்தானேயே அத்தர்ம முதலியவைகளின் ஞான முண்டாகின்றது. அல்லது காரிய வடிவ ஏதுவால் அத்தர்ம

முதலியவைகளின் அநுமான முண்டாகின்றது. ஆண்டு சுக வடிவ காரியத்தாலே தர்மத்தின் அநுமான முண்டாகின்றது. துக்க வடிவ காரியத்தால் அதர்மத்தின் அநுமான முன்டாகின்றது. ஸ்மிருதி வடிவ காரியத்தால் சம்ஸ்காரங்களின் அநுமான முண்டாகின்றது.

## ருஉஷ. வேறு தேகத்திலுள்ள ஜீவாத்மாவின் சேஷ்டை வடிவ ஏதுவால் அநுமானத்தின் வகை.

அல்லது இஜ்ஜீவாத்மா கூறிய முறைப்படி தத்தந் தேகத்தில் சர்வப் பிராணிகட்கும் பிரத்தியக்ஷமேயாகின்றது. வேறு தேகத்திலிருக்கும் ஜீவாத்மாவிற்கு வேறு தேகத்திலிருக்கும் ஜீவாத்மாவின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. எங்ஙனம்: சைத்திரனெனப் பெயரிய புருஷனுக்கு மைத்திரனெனப் பெயரிய புருஷனது ஜீவாத்மாவின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் அவ்வேறு தேகத்தில் சேஷ்டை வடிவ ஏதுவானேயே அஜ்ஜீவாத்மாவின் அநுமான முண்டாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ஜவஂஶரீரஂ வெதநாயிஷிதஂ வெஷாவகலாத ரயவகு" (இ-ள்.) இச்சரீரம் சேதன ஆத்மாவிற்கு ஆசிரயத் தன்மையுடையதாம், சேஷ்டையுடையதாவதால், எவ்வெத்திரவியம் சேஷ்டையுடையதாமோ அவ்வத் திரவியம் சேதனத்தின் ஆசிரயத் தன்மையுடையதேயாகின்றது. எங்ஙனம்: இப்பிரசித்த ரதம் சேஷ்டை யுடையதாம்; ஆகையால் சேதன சாரதி புருஷனுக்கு ஆசிரயத் தன்மை யுடையதுமாம். அங்ஙனமே இச்சரீரமும் சேஷ்டையுடையதாம். ஆகையால் இச்சரீரமும் சேதன ஆத்மாவிற்கு ஆசிரயத்தன்மையுடைமை அவசிய முண்டாகும். கருத்திதுவாம், எதுவெது சேஷ்டையாமோ அதுவது முயற்சியானேயே யுண்டாவதாகின்றது. முயற்சியின்றியாதோர் சேஷ்டையு முண்டாகாது. அம்முயற்சி ஆத்மாவின் குணமாவதால் அக்குணியாகிய ஆத்மாவின்றியிராது. ஆகையால் அவ்வேறு தேகத்தில் அச்சேஷ்டை வடிவ ஏதுவால் முயற்சிக் குணமுடைய ஆத்மாவின் அநுமானம் சம்பவிக்கின்றது.

சங்கை:—சுகப் பிராப்தியின் பொருட்டும், துக்க நிவர்த்தியின் பொருட்டும் உண்டாம் கிரியை யாதோ அதனை சேஷ்டை யென்பர். இத்தகைய கிரியா விசேஷ வடிவ சேஷ்டை கேவலம் சரீரத்திலேயே இருக்கின்றது. ரத முதலியவைகளில் அச்சேஷ்டை யிருப்பதில்லை. ஆகையால் அச்சேஷ்டை வடிவ ஏது அந்த ரதமாகிய திருஷ்டாந்தத்தில் சித்திக்காது.

சமாதானம்:—ரதத்தின் கிரியை சேஷ்டை வடிவமன்றும் என்றாலும் எங்ஙனம் இரதத்தின் கிரியையால் அச்சாரதி புருஷனது அநுமான முண்டாகின்றதோ அங்ஙனமே அச்சாரதியின் சேஷ்டையால் அவ்வேறு தேகத்தில் முயற்சியுடைய ஜீவாத்மாவின் அநுமானம் உண்டாகின்றது. இவ்வளவு மாத்திரத்தில் அத்திருஷ்டாந்தங் கூறப்பட்டதாம். இவ்வளவு நூற்களால் நியாயசாத்திரத்தின் முறையாக ஆத்மாவின் நிரூபணஞ் செய்யப்பட்டது. ஆண்டு நியாயசாத்திரத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆத்மாவின் சித்தி யுண்டா

கும்போது நியாய சாத்திரத்தின் விரோதிப் பிரதிவாதிகளினது மதத்தின் கண்டன முண்டாகின்றது. அம்மதங்களின் கண்டனமின்றி அவ்வாத்மாவின் சித்தியுண்டாகமாட்டாது. ஆகையால் அவ்விரோதி மதங்களைப் பிரதிபாதித்து அவசியங் கண்டிக்க வேண்டும். இக்காரணத்தால் இனி வேறு சாத்திரங்களின் முறைப்படி அவ்வாத்மாவின் நிரூபணஞ் செய்வாம். ஆண்டு முதலில் வேதத்திற்குப் புறம்பாயுள்ள மாத்திமிகன், யோகாசாரன், சௌத்திராந்திகன், வைபாடிகன், சார்வாகன், திகம்பரன் என்னும் அறுவகை நாத்திகர்களின் மதங்களை நிரூபிப்பாம்.

## ருஉகூ. சூன்னியவாதி மாத்திமிகரது மதத்தின் வர்ணனம்.

ஆண்டு முதலாவது சூன்னியவாதி மாத்திமிகரின் மதமோ இதுவாம் சுஷுப்தியினின்றும் விழித்த புருஷனுக்குச் சுஷுப்தியில் யான் இல்லையாயினேன் என்னும் அநுபவ முண்டாகின்றது. அவ்வநுபவத்தால் சூன்னியமே ஆத்மாவாகச் சித்தமாகின்றது. அல்லது கேவலம் அவ்வாத்மாவே சூன்னிய வடிவமன்று; அவ்வாத்மாவினும் வேறான இவ்வெல்லா ஜகத்தும் சூன்னிய வடிவமேயாம். ஏனெனின், இஜ்ஜகத்துத் தனது உற்பத்திக்கு முன்னரும் அசத்தேயாம்; நாசத்திற்குப்பின்னரும் அசத்தேயாகின்றது. எவ்வெப்பதார்த்தம் முதலினும், ஈற்றினும் அசத்தாகின்றதோ அவ்வப்பதார்த்தம் இடையினும் சத்தாகிறதில்லை. ஆனால் அசத்தேயாகின்றது. எங்ஙனம் ரஜ்ஜு, சர்ப்பமும் சுத்திரஜதமும் முதலினும், ஈற்றினும் அசத்தாம்; ஆகையால் இடையினும் அசத்தேயாகின்றது. அங்ஙனமே இஜ்ஜகத்தும் முதலினும், ஈற்றினும் அசத்தாவதால் இடையினும் அசத்தேயாகும். "[illegible]" என்னும் இச்சாந்தோக்கிய சுருதியும் இத்திருசியமாகியஜகத்தினை உற்பத்திக்கு முன்னர் அசத்தாகவே கூறி யிருக்கின்றது. அசத், துச்சம், சூன்னியம் என்பன ஒரு பொருட்கிளவி. ஆகையால் ஆத்மாவும் அநாத்மாவுமாம் யாவும் சூன்னியமேயாம் அதுவே பரமதத்துவமாமென்பர்.

## ருகூ0. சூன்னியவாதி மாத்திமிகரது மதத்தின் கண்டனம்.

அச்சூன்னிய வாதி மாத்திமிகனது மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் எச்சுஷுப்திப் புருஷனது அநுபவத்தின் வலிவால் அச்சூன்னிய வாதியானவன் ஆத்மாவினை சூன்னியமாக வொப்பினனோ அவ்வநுபவம் பிரமாண வடிவமேயன்றாம். ஆகையால் அப்பிரமாணிக அநுபவத்தால் சூன்னிய வடிவ ஆத்மாவின் சித்தி யுண்டாகிறதில்லை. எங்ஙனம்: சுத்தியில் (கிளிஞ்சலில்) இது வெள்ளி யென்னும் அப்பிரமாணிக அநுபவத்தால் வெள்ளியின் சித்தி யுண்டாகிறதில்லை. அல்லது அவ்வநுபவத்தினை ஓர் கால் பிரமாணத்தாலுண்டாயதாக வொப்பினும் அவ்வநுபவம் சூன்னிய வடிவ ஆத்மாவினை விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் சுஷுப்தியில் சர்வ ஞானங்களின் அபாவ விசிஷ்டசத் ஆத்மாவையே அவ்வநுபவம் விஷயஞ் செய்கின்றது. அதாவது சுஷுப்தி காலத்தில் யான் ஓர் ஞானமும் இல்லாதவனாக இருக்கின்றேன் என்னும் அநுபவத்தால் சூன்னிய வடிவ ஆத்மாவின் சித்தியுண்டாகிறதில்லை.

அல்லது இவ்வெல்லாஜ் ஜகத்தும் அசத்தாமெ்மன சூன்னிய வாதி கூறியது யாதோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின், எவ்வெப் பதார்த்தம் அசத்தாகின்றதோ அவ்வப்பதார்த்தம் இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாகிறதில்லை. எங்ஙனம்: மலடிமகன், முயற்க்கோடு முதலிய அசத் பதார்த்தம் இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாகிறதில்லை. இஜ்ஜகத்தோ இது கடம், இது படம் என்பதான சக்ஷு முதலிய இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானங்களின் விஷயமாகின்றது. இத்தகையப் பிரத்தியக்ஷப்பிரமாணத்தால் சித்தமாய ஜகத்தினை மலடி மகனைப் போன்று அசத்தாகக் கூறுவது முற்றும் விரோதமாம். ஆகையால் இஜ்ஜகத்தும் அசத்தன்றாம். அல்லது "அஸதேவேதமக்ர ஆஸீத்" என்னும் இச்சுருதியினை அங்கீகரித்து, சூன்னிய வாதியானவன் இஜ்ஜகத்தினை உற்பத்திக்கு முன்னர் அசத்தாகக் கூறினன் "ததோ வை ஸதஜாயத" என்னும் வசனத்தால் அசத்தினின்றும் இஜ்ஜகத்தி னுற்பத்திக் கூறி யிருக்கிறது. இதனையும் அச்சூன்னிய வாதி அவசியம் ஒப்ப வேண்டியதாகும். அது சம்பவியாது. ஏனெனின், அசத்தாகியக் காரணத்தாலும் காரியத்தின் உற்பத்தியுண்டாகுமாயின் அசத்தாகிய மலடி மைந்தனுலும் புத்திர வடிவ காரியத்தினுற்பத்தி யுண்டாக வேண்டும். அங்ஙனம் காணப்படுகிறதில்லை. அல்லது சூன்னிய வடிவ அசத்தினை ஜகத்தின் உபாதானக் காரணமாக வொப்பின் அவ்வசத் அவ்வெல்லாக் காரியங்களில் அநுகதமாகி (இருப்பதாகி)ப் பிரதீதமாக வேண்டும். எங்ஙனம் சுவர்ணத்தின் காரிய வடிவ கங்கண, குண்டல முதலிய பூஷணங்களில் சுவர்ண வடிவ காரணம் அநுகதமாகி இக்கங்கணம் சுவர்ணமயமாயிருக்கிறது, இக்குண்டலம் சுவர்ணமயமாயிருக்கிறது, என்பதாக அநுகதமாகிப் பிரதீதமாகிறதோ அங்ஙனமே கட, பட முதலிய காரியங்களிலும் அவ்வசத் வடிவ காரணம் அநுகதமாகி கடம் அசத், படம் அசத் என்பதாக பிரதீதமாக வேண்டும். இவ்வாறாய பிரதீதியுண்டாகிறதில்லை. மாறாக கடம் இருக்கிறது, படமிருக்கிறது என்பதாக அக்கட, பட முதலிய காரியங்கள் சத்தையை யேற்றதாகியே பிரதீதமாகின்றன. ஆகையால் அச்சூன்னிய வடிவ அசத்தில் ஜகத்தின் காரணத் தன்மைச் சம்பவியாது.

சங்கை:—"அஸதேவேதமக்ர ஆஸீத்" எனக் கூறியச் சுருதியானது சூன்னிய வடிவ அசத்தையே ஜகத்தின் காரணமாகக் கூறி யிருக்கிறது. அச்சுருதிக் கூறிய அர்த்தத்தினை நீவிர் அங்கீகரியாவிடின் உம்மிடத்தில் நாஸ்திகத் தன்மைப் பிராப்தமாகும்.

சமாதானம்:—அச்சுருதி சூன்னிய வடிவ அசத்தினை ஜகத்தின் காரணமாகக் கூறவில்லை. எச்சூன்னிய வாதி மயக்கத்தால் சூன்னிய வடிவ அசத்தினையே ஜகத்தின் காரணமாக வொப்பினனோ அம்மயக்கமுடைய சூன்னிய வாதியின் மதத்தை அநுவாதம் செய்வதாகிய அச்சுருதி பூர்வ பக்ஷ வடிவமேயாம். இக்காரணத்தானேயே அச்சுருதியின் முதலில் "தத்தைக ஆஹு:" என்னும் வசனம் கூறப்பட்டிருக்கின்றது. அதாவது சில சூன்னியவாதிகள் அசத்தையே ஜகத்தின் காரணமாக வொப்புகின்றனர்.

அல்லது கூறிய அச்சுருதியைப் பூர்வபக்ஷமாக வொப்பாவிடின் அக்சுருதியின் ஈற்றிற் கூறப்பட்டுள்ள "கூய ௧ஸ-தஃ ஸஜாயெ-த" என்னும் சுருதியாதோ அச் சுருதி அசத்காரணத்தால் சத்காரியத்தின் உற்பத்தியினை நிஷேதஞ் செய்திருக் கின்றது. அச்சுருதியும் அசங்கதமாகும். இக்காரணத்தாலும் முற்கூறிய அச் சுருதியில் பூர்வ பக்ஷ வடிவத் தன்மையே சித்தமாகின்றது. இச்சூன்னிய வாதிகட்கும், இனிக் கூறப்படும் விஞ்ஞான வாதிகட்கும், சார்வாகர்கட் கும் வேத வடிவச் சுருதியின் பிரமாணத் தன்மை அங்கீகார மின்றும். ஆகை யால் தமது மதத்தின் சித்தியின் பொருட்டு அச்சுருதிப் பிரமாணங் கூறுவது அசங்கதமாம். என்றாலும் வேதத்தைப் பிரமாணமாக வொப்புவோராகிய ஆத்திக புருடர்களை தமது மதத்தில் சிரத்தைச் செய்யும் பொருட்டு அச்சூன் னியவாதி முதலிய நாத்திகர்கள் தமது மதத்தில் அச்சுருதிப் பிரமாணத்தைக் கூறுகின்றனர். இவ்வாறாய விவஸ்தை பின்னர்க் கூறப்படும் சுருதிகளிலும் அறிந்துக் கொள்க.

## ருஙக. க்ஷணிக விஞ்ஞான வாதி யோகாசாரரது மத வர்ணனம்.

இனி க்ஷணிக விஞ்ஞான வாதி யோகாசாரரின் மதத்தை வர்ணிப்பாம். விஞ்ஞானமே ஆத்மாவாம். அவ்விஞ்ஞானம் தானே பிரகாச வடிவமாவதால் சேதனவடிவமாம். அந்த விஞ்ஞானம் பாவ வடிவமாவதால் க்ஷணிகமாம். எங்ஙனம்: பின்னல் பாவ வடிவமாவதால் க்ஷணிகமாவது போலும். ஆண்டு எப்பதார்த்தத்திற்குத் தனது உற்பத்தி க்ஷணத்தினும் பிற் க்ஷணத்தில் சம் பந்தம் உண்டாகிறதில்லையோ ஆனல் உற்பத்தி க்ஷண மாத்திரத்திலேயே சம் பந்த முண்டாகிறதோ அப்பதார்த்தம் க்ஷணிகமெனப்படுகின்றது. அக்ஷணிக விஞ்ஞானம் இருவகைத்தாம். ஒன்றோ பிரவிருத்தி விஞ்ஞானமும், மற்றை யது ஆலய விஞ்ஞானமுமாம். ஆண்டு இது கடம், இது படம், இது சரீரம் என்னு மிவை முதலிய விஞ்ஞானத்தினைப் பிரவிருத்தி விஞ்ஞான மென்பர். யான், யான் என்னும் இவ்வாறாய விஞ்ஞானத்தினை ஆலய விஞ்ஞான மென் பர். அவ்வாலய விஞ்ஞானமே ஆத்மாவாம்.

சங்கை:—க்ஷணிக விஞ்ஞானத்தினையே ஆத்மாவாக வொப்பின் சுஷுப் தியில் அவ்வாத்மா இல்லை யென்பதாகச் சம்பவிக்கும். ஏனெனின் சுஷுப் திக்கு முன் உண்டாகிய விஞ்ஞானம் க்ஷணிகமாவதால் நாசமாய் விடும். சுஷுப்தியில் வேறு விஞ்ஞானத்தினை உண்டாக்குவதாகிய காரணம் ஒன்று மின்றும். ஆகையால் சுஷுப்தியில் விஞ்ஞானத்தின் உற்பத்தியே சம்பவி யாததாகும்.

சமாதானம்:—முன் முன் விஞ்ஞானமே உத்தர உத்தர (பின் பின்) விஞ்ஞானத்திற்கு ஏதுவாகின்றது. அதாவது முதற் க்ஷணத்தில் உண்டா கிய அவ்விஞ்ஞானம் இரண்டாவது க்ஷணத்தில் சுவசஜாதீய வேறு விஞ்ஞா னத்தினை உண்டாக்கி விட்டுத் தான் நாசமாய் விடுகின்றது. அங்ஙனமே இரண்டாவது விஞ்ஞானமும் மூன்றாவது க்ஷணத்தில் சுவசஜாதீய மூன்றாவது விஞ்ஞானத்தினை உண்டாக்கிவிட்டுத் தான் நாசமாய் விடுகின்றது. இவ்வாறாக

மூன்றாவது விஞ்ஞானம் நான்காவது க்ஷணத்தில் சுவசஜாதீய நான்காவது விஞ்ஞானத்தை உண்டாக்கிவிட்டுத்தான் நாசமாய்விடுகின்றது. இம்முறையாக முன் முன் விஞ்ஞானத்திற்குப் பின் பின் விஞ்ஞானத்தின் ஏதுத்தன்மை யிருப்பதால் நதியின் பிரவாஹத்தைப் போன்று அவ்விஞ்ஞானங்களின் தொடர்ச்சி எப்பொழுதும் கட்டுண்டிருக்கின்றது. ஆண்டுச் சுஷுப்தியில் பிரவிருத்தி விஞ்ஞான தாரை இருப்பதில்லை. என்றாலும் சுஷுப்தியில் ஆலய விஞ்ஞான தாரைக் கட்டுண்டிருக்கிறது. அவ்வாலய விஞ்ஞான தாரையே ஆத்மாவாம். ஆகையால் சுஷுப்தியிலும் விஞ்ஞான வடிவ ஆத்மா இருப்பதேயாகின்றது.

சங்கை:—அந்த விஞ்ஞான ஆத்மா க்ஷணிகமாவதால் அவ்வாத்மா வினை ஆசிரயித் திருப்பதாகிய சம்ஸ்காரமும் க்ஷணிகமேயாகும். ஆகையால் முன்னர் அநுபவித்துள்ள வத்துவின் ஸ்மரணம் வேறு காலத்தில் உண்டா காததாக வேண்டும்.

சமாதானம்:—எங்ஙனம் ஒன்றின்மேல் ஒன்றாக அமைந்த அனேக வஸ்த்திரங்களின் கீழிருப்பதாகிய கஸ்தூரி யாதோ அக்கஸ்த்தூரியின் கந்த குணம்பொருந்திய சூக்ஷ்ம அவயவ வடிவ வாசனையானது கஸ்த்தூரி சம்மந்த முள்ள முதலிலுள்ள வஸ்த்திர முதலாக மேலுள்ள வஸ்த்திர மட்டுமாம் அவ் வெல்லா வஸ்த்திரங்களில் முறையாக பிராப்தமாய் விடுகின்றதோ அங்ஙனமே முன் முன் விஞ்ஞானத்தாலுண்டான சம்ஸ்காரங்கள் முறையாக பின் பின் விஞ்ஞானங்களில் பிராப்தியாய் விடுகின்றது. ஆகையால் முன் அநுபவித் துள்ள வஸ்த்துவின் ஸ்மிருதி அச் சம்ஸ்காரங்களின் வலிவால் வேறு காலத் தில் சம்பவிக்கின்றது. விஞ்ஞானத்தைப் போன்று சம்ஸ்காரமும் க்ஷணிகமா மாகையால் ஸ்மிருதி ஞான பரியந்தம் அச்சம்ஸ்காரங்களின் ஸ்திதிச் சம்பவி யாது. என்றாலும் பின் பின் விஞ்ஞானங்களில் முன் முன் சம்ஸ்காரங்களின் சஜாதீய சம்ஸ்காரங்களின் உற்பத்திச் சம்பவித்து விடுகின்றது. எவ்வளவு கட, பட முதலிய பாஹிய பதார்த்தங்களும், சுக துக்க முதலிய ஆந்தர பதார்த் தங்களும் இருக்கின்றனவோ அவ்வெல்லாப்பதார்த்தங்களும் விஞ்ஞானத்தின் ஆகார விசேஷமேயாம். அந்த விஞ்ஞானத்திற்கு வேறாக ஓர் பதார்த்தமு மின்றாம். அதாவது; அவ்வந்தர விஞ்ஞானமே கட, படாதி வடிவமாகியும், சுகதுக்காதி வடிவமாகியும் பிராப்தமாகின்றது. அல்லது "க்ஷேந்ராம்தாா தூாவிஜூா நஶய꞉" என்னும் வேத சுருதியும் அந்த விஞ்ஞானத்தினையே ஆத்மாவாகக் கூறி யிருக்கின்றது. அச்சுருதிப் பிரமாணத்தாலும் அந்த விஞ் ஞானமே ஆத்மாவாகச் சித்திக்கின்றது.

## ருஅ௨. விஞ்ஞான வாதி யோகாசாரரது மதத்தின் கண்டனம்.

அங்ஙனம் கூறிய விஞ்ஞான வாதி யோகாசாரரது மதமும் நலமு டையதன்றாம். ஏனெனின், அந்த விஞ்ஞான வாதியோடு இது வினவுதல் வேண்டும். உமது ஆத்மா வடிவ அந்த விஞ்ஞானம் சவிஷயமா (விஷயத்தோ டுள்ளதா)? அல்லது நிர்விஷயமா (விஷயமில்லாததா)?. ஆண்டு அந்த விஞ் ஞானம் சவிஷயமாம் என்னும் முதற் பக்ஷத்தை விஞ்ஞான வாதி அங்கீகரிக்

கின் அவ்வினா இதுவினவுவாம். உமது விஞ்ஞானம் சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதா? அல்லது அற்ப ஜகத்தை விஷயஞ்செய்வதா?. ஆண்டு அந்தவிஞ்ஞானம் சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதா மென்னும் முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், அவ்வாத்ம ஸ்வரூப விஞ்ஞானத்தினை சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதாக வொப்பின் சர்வ ஜீவாத்மாக்கட்கும் ஸ்வபாவமாகவே சர்வஞ்ஞத் தன்மை யுண்டாக வேண்டும். சர்வ ஜகத்தை விஷயஞ் செய்யும் ஞானமுடையவரையே சர்வஞ்ஞரென்பர். அச்சர்வஞ்ஞத் தன்மை ஒருவரிடத்திலும் காணக்கிடைப்பதில்லை. அந்த விஞ்ஞானம் அற்ப ஜகத்தை விஷயஞ் செய்வதா மென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், அற்ப மென்னும் பதத்தால் ஓர் கடத்தை கிரஹிக்கின் படமுதலிய வஸ்த்துக்களில் வினிகமன விரஹ தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். அதாவது அற்ப மென்னும் சத்தத்தால் ஓர் கட வடிவ வத்துவின் கிரஹணமே யுண்டாகின்றது; பட முதலிய வத்துக்களின் கிரஹணம் உண்டாகிறதில்லை. அல்லது அற்ப மென்னும் பதத்தால் ஓர் பட வடிவ வத்துவின் கிரஹணமே யுண்டாகின்றது; கட முதலிய வத்துக்களின் கிரஹணம் உண்டாகிறதில்லை. இவ்வாறுக ஓர் அர்த்தத்தின் சாதகமாக ஓர் யுக்தி வடிவ வினிகமன மின்றும். எவ்விடத்தில் வினிகமன விரஹம் பிராப்தமாகின்றதோ அவ்விடத்தில் அவ்வெல்லாப் பதார்த்தங்கட்கு சமானமேப் பிராப்தமாகின்றது. ஒன்றின் கிரஹணமும், மற்றையதின் நீக்கமும் உண்டாகாது. ஆகையால் இவ்விரண்டாவது பக்ஷத்திலும் முதற் பக்ஷத்தைப் போன்று கட முதலிய சர்வ பதார்த்தங்களும் விஞ்ஞானத்தின் விஷய வடிவமாக பிராப்தமாகின்றன. ஆகையால் முதற்பக்ஷத்தைப் போன்று இரண்டாவது பக்ஷத்திலும் உலகர் யாவருக்கும் இயல்பாக சர்வஞ்ஞத் தன்மையின் பிராப்தி வடிவ தூஷணம் பிராப்தமாகும். அல்லது ஆத்ம ஸ்வரூப விஞ்ஞானத்தினை சவிஷயமாக வொப்பின் சுஷுப்தி காலத்திலும் விஷயத்தின்விளக்கமுண்டாக வேண்டும். சுஷுப்தி காலத்தில் விஷயத்தின் விளக்கம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை.

சங்கை:—சுஷுப்தியில் நிர்விஷயவிஞ்ஞானத்தின் தொடர்ச்சி யிருக்கின்றது. இக்காரணத்தால் சுஷுப்தியில் ஓர் விஷயத்தின் விளக்கமு முண்டாகிறதில்லை.

சமாதானம்:—நிர்விஷய ஞானத்தில் ஓர் பிரமாணமு மின்றும். எது வெது ஞானமாமோ அதுவது சவிஷயமாகவே யுண்டாகின்றது. ஓர் கால் நிர்விஷயத்திற்கும் ஞான வடிவ மொப்பின் நிர்விஷய ஞானத்தைப் போன்று கட, பட முதலிய பதார்த்தங்களும் நிர்விஷயமாவதால் ஞான வடிவமாக வேண்டும்.

சங்கை:—எமது மதத்தில் விஞ்ஞானத்தினும் வேறுன ஓர் வத்துவு மின்றும். ஆகையால் நிர்விஷயத் தன்மை வடிவ எதுவால் கட, பட முதலிய விஷயங்களில் தாம் விஞ்ஞான வடிவத் தன்மைச் சித்தஞ் செய்தது யாதோ அது எமக்கு அங்கீகாரமேயாம்.

சமாதானம்:—உலகர் யாவரது பிரத்தியக்ஷ அநுபவத்தால் சித்தித்த கட, பட முதலிய பதார்த்தம் யாதோ அக்கட, பட முதலிய பதார்த்தங்கட்கு உமது வசன மாத்திரத்தால் நிஷேத முண்டாகமாட்டாது.

சங்கை:—அக்கட, பட முதலியவைகளை பலவகையானும் யாம் நிஷேதஞ் செய்வதில்லை. ஆனால் அக்கட, பட முதலியன விஞ்ஞானத்தின் ஆகார விசேஷமேயாமென யாம் ஒப்புகின்றனம்.

சமாதானம்:—அந்த விஞ்ஞானத்தின் ஆகார விசேஷ கட முதலியவை யாவையோ அக்கட முதலிய ஆகார விசேஷம் விஞ்ஞானத்தினும் வேறா? அல்லது அபின்னமா? ஆண்டு கட முதலிய ஆகாரவிசேஷம் விஞ்ஞானத்தினும் வேறு மென்னும் முதற் பக்ஷம் அங்கீகரிக்கின், விஞ்ஞானத்தினும் வேறான ஓர் வத்துவு மின்று மென்னும் இது உமது சித்தாந்தத்திற்கு விரோத மாகும். கட, பட முதலிய ஆகார விசேஷம் விஞ்ஞானத்திற்கு அபின்னமா மென்னும் இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் கருமை, பசுமையாம் இரண்டையும் விஷயஞ் செய்யும் சமூஹாலம்பன ஞானம் யாதோ அந்த ஞானத்தில் கருமை யாகாரம் பசுமை யாகாரமாக வேண்டும். அங்ஙனமே அப்பசுமை யாகாரம் கருமை யாகாரமாக வேண்டும். ஏனெனின் சாத்திரக் காரர்கள் இந்நியமம் கூறியிருக்கின்றனர் "தத³பி⁴ந்நாபி⁴ந்நஸ்ய தத³பி⁴ந்நத்வ நியம:" (இ-ள்.) எவ்வத்து எவ்வத்துவின் அபேதமுடைய பதார்த்தத்தினோடு அபின்னமேயாகின்றதோ அவ்வத்து அவ்வத்துவினோடும் அபின்னமே யாகின்றது. அதுவே ஈண்டுப் பிரசங்கத்தில் கருமை யாகாரம், பசுமை யாகாரமா மிரண்டும் சமூஹாலம்பன வடிவ விஞ்ஞானத்தினோடு அபின்னமே யாகும். ஆகையால் அந்நீலாகாரத்தின் அபேதமுடைய விஞ்ஞானத்தோடு அபின்னமாகிய பசுமை யாகாரம் கருமை யாகாரத்தோடும் அபின்னமே யாவதாகும். இவ்வாறாக அக்கருமை யாகாரமும் அப்பசுமை யாகாரத்தோடு அபின்னமேயாவதாகும். ஆகையால் அக்கருமை யாகாரம் பசுமை யாகார மாக வேண்டும். அப்பசுமை யாகாரம் கருமை யாகாரமாக வேண்டும். அது இங்ஙனம் காணப்படுவதில்லை.

சங்கை:—கருமை யாகாரமும், பசுமை யாகாரமுமா மிரண்டும் விஞ்ஞான வடிவமாவதால் அபின்னமேயாம். ஆனால் கருமையில் கருமைத் தன்மைத் தர்மமிருக்கின்றது. அங்ஙனமே பசுமையிற் பசுமைத்தன்மைத் தர்ம மிருக்கின்றது. அக்கருமைத் தன்மை, பசுமைத் தன்மைத் தர்மம் பரஸ்பரம் வேறாம். இக்காரணத்தால் அக்கருமை, பசுமையா மிரண்டும் வெவ்வேறாகவே பிரதீதமாகின்றது. ஆண்டு எங்ஙனம் கருமை, பசுமை முதலிய ஆகாரம் விஞ்ஞான ஸ்வரூபமாவதால் பரஸ்பரம் அபின்னமாமோ அங்ஙனம் கருமை, பசுமை முதலிய தர்மம் விஞ்ஞான ஸ்வரூபமன்று. ஏனெனின், அநீல வியாவிருத்தியினை நீலத் தன்மையென்பர். அபீத வியாவிருத்தியினை பீதத் தன்மையென்பர். ஆண்டு கருமையினும் வேறான பதார்த்தங்கட்கு அக்கருமையில் எப்பேதமிருக்கின்றதோ அதனை அநீல வியாவிருத்தி யென்பர். பசுமையினும் வேறான பதார்த்தங்கட்கு அப்பசுமையில் எப்பேதமிருக்கின்றதோ

அதனை அபீத வியாவிருத்தி யென்பர். இவ்வாற்றால் அபாவ வடிவமாவதால் கருமைத் தன்மை, பசுமைத் தன்மை தருமம் பாரமார்த்திக மன்றும். இத்தகைய பாரமார்த்திக மல்லாத கருமைத்தன்மை, பசுமைத்தன்மை தர்மங்கட்கு பாரமார்த்திக விஞ்ஞானத்தோடு அபேதம் சம்பவியாது. இத்தகைய கருமைத்தன்மை, பசுமைத்தன்மை தர்மத்தின் வேறுபாட்டானேயே கருமையில் பசுமை வடிவத் தன்மையும் பசுமையில் கருமை வடிவத் தன்மையும் ஒருவருக்கும் பிரதீதமாகிறதில்லை.

சமாதானம்:—கருமைத் தன்மை, பசுமைத் தன்மை யென்னும் விரோதமுடைய இரு தர்மங்கட்கு ஓர் விஞ்ஞானத்தில் இருத்தல் சம்பவியாது. ஓர் கால் விரோதி தர்மங்கட்கும் ஓர் வத்துவில் இருத்தல் அங்கீகரிக்கின் ஓரிடத்திலும் விரோதத்தின் பிரதிபாதனம் உண்டாகாததாய் விடும். அதாவது உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமான சீதத்தன்மை, வெப்பத்தன்மை முதலிய தர்மங்கட்கு விரோத மிருக்கின்றது. அந்த விரோதங்கட்கும் கேடுண்டாம். அல்லது, விஞ்ஞான வாதி சர்வ ஜகத்தினை க்ஷணிகமாக வொப்பின் விஞ்ஞானவாதியின் மதத்தில் அக்கடமே இக்கடமாமென்னும்பிரத்தியபிஞ்ஞானம் அநுபன்னம் (சம்பவியாதது) ஆகும். ஏனெனின் இப்பிரத்தியபிஞ்ஞானம் முற்காலத்தில் பார்க்கப்பட்ட கடத்திற்கு இக்காலத்தில் பார்க்கப்படும் கடத்தினோடு அபேதத்தை விஷயஞ் செய்கின்றது. க்ஷணிக விஞ்ஞானவாதியின் மதத்தில் முற்காலத்திய கடத்திற்கு இக்காலத்திய கடத்தினோடு அபேதமே சம்பவியாது. அல்லது விஞ்ஞான வாதியானவர் ஸ்மரணத்தினைச் சித்திச் செய்யும்பொருட்டு முன் முன் விஞ்ஞான ஜன்னிய சம்ஸ்காரங்கட்கு பின் பின் விஞ்ஞானத்தில் பிராப்தியைக் கூறியதும் சம்பவியாது. ஏனெனின், ஓர் கால் முன் முன் விஞ்ஞானத்தின் சம்ஸ்காரம் பின் பின் விஞ்ஞானத்தில் பிராப்தமாகுமாயின் மாதா வடிவ விஞ்ஞானத்தின் சம்ஸ்காரம் எங்ஙனம் மாதா வடிவ விஞ்ஞானத்தில் பிராப்தமாகின்றதோ அங்ஙனமே அம்மாதா வடிவ விஞ்ஞானத்தின் சம்ஸ்காரம் கர்பத்திலுள்ள புத்திர வடிவ விஞ்ஞானத்திலும் பிராப்தமாகும். ஆகையால் அம்மாதாவானவள் அநுபவித்துள்ள பதார்த்தங்களின் ஸ்மரணம் கர்பத்திலுள்ள புத்திரனுக்கும் உண்டாக வேண்டும். இவை முதலிய பல தூஷணம் க்ஷணிக விஞ்ஞான வாதியின் மதத்தில் பிராப்தமாகின்றது. ஆகையால் விஞ்ஞான வாதி யோகாசாரரது மதம் நலமுடையதன்றும். விஞ்ஞான வாதியானவர் ஆத்மாவிற்கு விஞ்ஞான வடிவத் தன்மையில் கூறிய சுருதியாதோ அச்சுருதியும் மயக்கமுடைய விஞ்ஞான வாதியின் மதத்தை அநுவாதஞ் செய்வதாகி பூர்வ பக்ஷவடிவமேயாம். ஆகையால் அச்சுருதியானும் விஞ்ஞான ஆத்ம வாதத்தின் சித்தியுண்டாகாது.

## ௫௩. மாத்திமிகன், யோகாசாரன், சௌத்திராந்திகன், வைபாஷிகன் என்னும் புத்தபகவானது நான்கு சீடர்களின் பேத வர்ணனம்.

ஈண்டிது அறியத்தக்கதாம். புத்த பகவானது சீடர்கள் நால்வரிருந்தனர். முதலாவது மாத்திமிகர், இரண்டாவது யோகாசாரர், மூன்றாவது சௌத்திராந்திகர், நான்காவது வைபாஷிகர் என்னும் நால்வரும் புத்தரது

சீடராகையால் பௌத்தர் எனப்படுவர். அப்புத்தரை சுகதம் என்றுங் கூறுவர். ஆகையால் அந்நால்வரும் சௌகதம் என்றுங் கூறப்படுவர். அந்நான்கு சீடர்களில் முதலாவது மாத்திமிகரை பரிபக்குவ சித்தமுடையவராகவும், முக்கிய அதிகாரியாகவும் அறிந்து அப்புத்தர் சாக்ஷாத்தாகவே சூன்னிய வாதத்தின் உபதேசம் செய்தனர். அச்சூன்னிய வாதமே புத்தருக்குச் சம்மதமாயிற்று. இரண்டாவது யோகாசார சீடனை அற்ப பரிபக்குவ சித்தமுடையவனாகவும், அமுக்கிய அதிகாரியாகவும் அறிந்து அப்புத்தர் சாக்ஷாத்தாகவே சூன்னிய வாதத்தின் உபதேசம் செய்திலர். ஆனால் அவ்வெல்லா சூன்னிய வடிவ தத்துவத்தில் யோகாசாரரது புத்தி பிரவேசமாம் பொருட்டு முதலில் விஞ்ஞான மாத்திரம் இருத்தற்றன்மை வாதத்தின் உபதேசம் செய்தனர். அவ்வெல்லா சூன்னியவாதமும், விஞ்ஞான மாத்திர வாதமும் முன்னர் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். மூன்றாவது சௌத்திராந்திக சீடருக்கும், நான்காவது வைபாஷிக சீடருக்கும் அந்தர விஞ்ஞானத்தினும் வேறான பாஹிய கட, பட முதலிய பதார்த்தங்களில் அபினிவேசத்தைக் கண்டு அப்புத்தர் அவர்களிருவரின் கருத்திற்கிணங்க அந்த விஞ்ஞானத்தினும் வேறான பாஹிய கட, பட முதலிய அர்த்தங்களை அங்கீகரித்து சர்வ சூன்னிய வடிவ தத்துவத்தில் அவ்விருவரது புத்திப் பிரவேசிக்கும்பொருட்டு பாஹிய அர்த்த வாதத்தின் உபதேசம் செய்தனர். ஆண்டு அந்தர விஞ்ஞானத்தினும் வேறான பாஹிய கட, பட முதலிய பதார்த்தம் இருக்கிறதென்னும் இவ்வளவு அம்சமோ சௌத்திராந்திகரின் மதத்திலும் வைபாஷிகரது மதத்திலும் சமானமேயாம். ஆனால் சௌத்திராந்திகரோ பாஹிய அர்த்தத்தினை கேவலம் அநுமிதி ஞானத்தின் விஷயமாகவே வொப்புகின்றனர். பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாக வொப்புகிறதில்லை. வைபாஷிகரோ பாஹிய அர்த்தத்தினைப் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாக வொப்புகின்றனர். அவ்விருவர் மதத்தில் இவ்வளவு விலக்ஷணத் தன்மை யிருக்கின்றது.

## ருஙச. பாஹிய பதார்த்தத்தினை அநுமேயமாக வொப்புவோராகிய சௌத்திராந்திகரது மதத்தின் வர்ணனம்.

சௌத்திராந்திகர் கருத்திதுவாம்; அந்தர விஞ்ஞானத்தில் கட, பட முதலிய ஆகாரவடிவ விசித்திரத்தன்மை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். அதாவது இது கடம் என்னும் விஞ்ஞானத்திலோ கட வடிவ ஆகாரம் பிராப்தமாகின்றது. இவ்வாறாக எவ்வெவ்விஞ்ஞானம் உண்டாவதாகின்றதோ அவ்வவ்விஞ்ஞானத்தில் அவ்வவ்வாகாரம் அவசியம் பிராப்தமாகின்றது. ஆண்டு அந்தர விஞ்ஞானத்திலுள்ள கட, பட முதலிய ஆகாரவடிவ விசித்திரத்தன்மை யாதோ அவ்விசித்திரத்தன்மை பாஹிய தேசத்திலுள்ள அவ்வக் கட, படாதி வடிவ அர்த்தத்தின் சாதிருசியமேயாம். அப்பாஹிய அர்த்தத்தின் சாதிருசியமின்றி விஞ்ஞானத்திலுள்ள விசித்திரத் தன்மைக்கு வேறோர் ஸ்வரூபம் சித்தியாகிறதில்லை. ஓர் கால் அப்பாஹிய கட, பட முதலிய அர்த்தத்தை அங்கீகரியாவிடின் அந்தர விஞ்ஞானத்தில் அப்பாஹிய கட, பட முதலிய அர்த்தங்களின் சாதிருசியத்திற்கு உற்பத்திச் சம்பவியாததாகும். ஆகையால்

அச்சாதிருசியத்தின் நிமித்தமாகிய கட, பட முதலிய பாஹிய அர்த்தம் யாதோ அப்பாஹிய அர்த்தம் விஞ்ஞானத்தின் விசித்திரத் தன்மையால் அநுமானம் செய்யப்படுவதாகின்றது. அப்பாஹிய அர்த்தம் ஒருவருக்கும் பிரத்தியக்ஷமாகிறதில்லை. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "ஸம்வேதநகதே விஷயாகாரப்ரதிபிம்ப: ததாவிதபிம்பஸந்நிதாநவசாத்ஸம்பவதி ப்ரதிபிம்பத்வாத் தர்பணகதமுகப்ரதிபிம்பவத்" (இ-ள்.) இது கடம், இது படம் என்னுமிவை முதலிய ஞானங்களிலுள்ள கட, பட முதலிய விஷயங்களின் ஆகாரப் பிரதி பிம்பம் யாதோ அப்பிரதி பிம்பம் அவ்வாறாய பிம்பத் தன்மை சமீப வாயிலாக உண்டாக யோக்கியமாம், பிரதி பிம்ப வடிவ மாவதால், எதுவெது பிரதி பிம்பமாமோ, அதுவது அவ்வாறாய பிம்பத்தின் சமீபத்தன்மை வாயிலாகவே யுண்டாகின்றது. எங்ஙனம்: கண்ணாடியிலுள்ள முகத்தின் பிரதிபிம்பம் அவ்வாறாய முக வடிவ பிம்பத்தின் சமீபத்தன்மை வாயிலாகவே யுண்டாகின்றது. அங்ஙனமே அந்த ஞானத்திலுள்ள விஷயாகாரப் பிரதி பிம்பமும் பிரதிபிம்ப வடிவமாவதால் அவ்வாறாய பிம்பத்தின் சமீபத் தன்மை வாயிலாகவே யுண்டாகும்.

## ௫௫. பாஹிய பதார்த்தங்களை பிரத்தியக்ஷமாக வொப்புவோராகிய வைபாஷிகரது மத வர்ணனம்.

வைபாஷிகரின் கருத்திதுவாம். கட, பட முதலிய பாஹிய பதார்த்தங்களோடு விஞ்ஞானத்திற்குச் சம்பந்தமுண்டாகாவிடின் அந்த விஞ்ஞானத்தில் பாஹிய அர்த்தங்களின் ஆகாரத் தன்மையே சம்பவியாததாகும். ஆகையால் அந்த விஞ்ஞானத்திற்கு பாஹிய பதார்த்தங்களோடு சம்பந்தம் அவசியம் ஒப்பப்படுவதாகும். எப்பொழுது பிரகாச வடிவ விஞ்ஞானத்திற்கு கட, பட முதலிய பாஹிய பதார்த்தங்களோடுச் சம்பந்தமுண்டாகிறதோ அப்பொழுது பதார்த்தங்களின் பிரகாசம் அவசியமாக உண்டாகும். ஆகையால் அக்கட, பட முதலிய பாஹிய அர்த்தங்கள் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாகின்றது. இவ்வாறாக சௌத்திராந்திகரின் மதத்தினும் சிறிது விலக்ஷணத் தன்மையுளதாயினும் அந்தர விஞ்ஞானத்தினும் வேறான பாஹிய கட, பட முதலிய அர்த்தங்களின் அங்கீகாரம் அவ்விருவர் மதத்திலும் சமானமேயாம்.

## ௫௬. சௌத்திராந்திக வைபாஷிகரின் மதத்தில் பரமாணு புஞ்ச வடிவ பாஹிய போக்கிய சங்காதத்தினதும், பஞ்சஸ்கந்த வடிவ அந்தர போக்தா சங்காதத்தினதுமாம் உற்பத்தியின் வர்ணனம்.

இனி அவ்விரு மதத்தில் பாஹிய போக்கிய சங்காதத்தினதும், அந்தர போக்தா சங்காதத்தினதும் உற்பத்தியின் வகையை நிரூபிப்பாம். ஆண்டு வன்மை யியல்புடைய பார்த்திவ பரமாணுவும், மென்மை யியல்புடைய ஜலீய பரமாணுவும், வெம்மை யியல்புடைய தைஜஸ பரமாணுவும், சஞ்சரிக்கும் இயல்புடைய வாயவீய பரமாணுவுமா மணுக்கள் யாவையோ அந்நான்குப் பரமாணுக்களின் இப்பூத பௌதிக சங்காதம் யாதோ

அச்சங்காதமே பாஹ்ய போக்கிய சங்காதமெனப் படுகின்றது. ரூபஸ்கந்தம், விஞ்ஞான ஸ்கந்தம், வேதனா ஸ்கந்தம், சம்ஞா ஸ்கந்தம், சம்ஸ்கார ஸ்கந்தம் என்னும் ஐந்து ஸ்கந்தங்களின் சமூஹ வடிவம் அந்தர போக்தா சங்காத மெனப்படுகின்றது. ஆண்டு ரூப முதலிய விஷயங்களோடுள்ள சக்ஷுர் முதலிய இந்திரியங்கள் ரூப ஸ்கந்தமெனப் படுகின்றன. அந்த ரூப முதலிய விஷயங்கள் புறம்பாயிருக்கின்றன. ஆகையால் அந்த ரூப முதலிய விஷயங்களில் அந்தர அத்தியாத்ம வடிவத்தன்மைச் சம்பவியாது. என்றாலும் சக்ஷுர் முதலிய இந்திரியங்களின் சம்பந்தத்தானும், தேகத்தினை ஆரம்பிக்குந் தன்மையானும் அந்த ரூப முதலிய விஷயங்களிலும் ஆத்தியாத்மிகத்தன்மைச் சம்பவிக்கின்றது. யான் யான் என்பதான ஆலய விஞ்ஞானமும், சக்ஷுர் முதலிய இந்திரியங்களால் உண்டாகிய நிர்விகல்பகஞானமும் யாதோ அதனை விஞ்ஞான ஸ்கந்த மென்பர். யான் சுகி, யான் துக்கி என்பதான சுக, துக்க அநுபவம் யாதோ அதனை வேதனா ஸ்கந்தமென்பர். இவன் குண்டலமுடையவன், இது புகைமை நிறமுடையது, இவன் பிராஹ்மணன் என்னும் இவை முதலிய சவிகல்பகப் பிரத்தியக்ஷம் யாதோ அந்த சவிகல்பகப் பிரத்தியக்ஷம் சம்ஞாவிஷயகமாவதால் சம்ஞா ஸ்கந்தமெனப்படுகின்றது. ராகம், த்வேஷம் மோஹம், தர்மம், அதர்மம், மதம், மானம் இவை முதலிய யாவும் சம்ஸ்கார ஸ்கந்தமெனப்படுகின்றன. ஆண்டு கேவலம் தனது ஸ்வரூப மாத்திரத்தினைப் பிரகாசஞ் செய்வதாகிய நிர்விகல்பக ஞானத்தொடர்ச்சி வடிவ ஆலய விஞ்ஞானம் யாதோ அவ்வாலய விஞ்ஞானமே ஆசயம், சித்தம், ஆத்மா வென்னும் முப்பெயர்களாகக் கூறப்படுகின்றது. அவ்வாலய விஞ்ஞானத்தினும் வேறான சர்வ ஜகத்தும் சௌத்திகமெனப்படுகின்றது. அங்ஙனமே புத்திப் போத்திய மெனப்படுகின்றது. பிரதிசங்கியா நிரோதம், அப்பிரதிசங்கியா நிரோதம், ஆகாசம் என்னும் மூன்று அபாவங்களினும் வேறான எவ்வளவு அந்தர, பாஹ்ய ஜகத்திருக்கின்றனவோ அவ்வெல்லாஜ் ஜகத்தும் க்ஷணிகமாம். அதாவது தனது உற்பத்தி க்ஷணத்தினும் வேறான க்ஷணத்திலிருப்பதில்லை. ஆண்டு இவ்வத்துவை யான் நாசஞ் செய்வேன் என்பதான வத்துப் பிரதிகூலா புத்தி யாதோ அதனை பிரதிசங்கியா வென்பர். அந்த பிரதிசங்கியா வாயிலாக வத்துவின் நாசம் யாதோ அதனை பிரதிசங்கியா நிரோத மென்பர். அந்த பிரதி சங்கியா நிரோதத்தினும் வேறான வத்துவின் துவம்சம் யாதோ அதனை அப் பிரதி சங்கியா நிரோத மென்பர். ஆவரணத்தின் அபாவத்தினை ஆகாச மென்பர். இம்மூன்று அபாவத்தினும் வேறான சர்வ பதார்த்தங்களும் க்ஷணிகமாகின்றன. ஆண்டு அநுமானம் "ஸவ-௰ க்ஷணிகஂஸாவக்ஷாத விஜ-)-ஷவஜ" (இ-ள்.) முற்கூறிய மூன்று அபாவத்தினும் வேறான ஆந்தர, பாஹ்ய போக்தா போக்கிய வடிவ சர்வ ஜகத்துக்களும் க்ஷணிகமாக யோக்கியமாம், பாவ வடிவமாவதால், எவ்வெப்பதார்த்தம் பாவ வடிவமாமோ அவ்வப்பதார்த்தம் க்ஷணிகமேயாகின்றது. எங்ஙனம் மின்னல் பாவ வடிவமாவதால் க்ஷணிகமாவது போலும். அங்ஙனமே சர்வ ஜகத்தும் பாவ வடிவமாவதால் க்ஷணிகமேயாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால்

தான்னியக்குவியலைப்போன்று கூறியப்பரமாணுக்களின் புஞ்ச வடிவ பாஹிய போக்கியப் பிரபஞ்சத்திலும், கூறியப் பஞ்சஸ்கந்த வடிவ அந்தர அத்தியாத்ம போக்தா சங்காதத்திலும் க்ஷணிக வடிவத் தன்மையேச் சித்தமாகின்றது.

## ருஅ. சௌத்திராந்திக வைபாஷிகர்களின் மத கண்டனம்.

அச்சௌத்திராந்திகரின் மதமும், வைபாஷிகரின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின், முதலாவது சௌத்திராந்திகர்கள் புறம்பாயுள்ள கட முதலிய பதார்த்தங்களை அநுமிதி ஞானத்திற்கு விஷயமாக வொப்புகின்றனர். அது அத்தியந்தம் விருத்தமாம். ஓர் கால் அக்கட முதலிய பதார்த்தங்களின் அநுமிதி ஞானமே நியம மாகுமாயின் எங்ஙனம் பர்வதத்தில் வன்னியின் அநுமிதி ஞானத்திற்குப் பின் "பர்வதத்தில் வன்னியை அநுமிக்கின்றேன்" என இவ்வாறாய அநுமிதி ஞானத்தை விஷயஞ் செய்யும் அநுவியவசாய ஞான முண்டாகின்றதோ அங்ஙனமே கட, பட முதலிய ஞானங்களுக்குப் பின்னும் "கடத்தை அநுமிக்கின்றேன், படத்தை அநுமிக்கின்றேன்" என அக்கட, பட முதலியவைகளின் ஞானத்தை விஷயஞ் செய்வதாகிய அநுவியவசாய ஞானமே நியமமாக உண்டாக வேண்டும். அங்ஙனமாய நியமமாக அநுவியவசாய ஞானம் உண்டாகிறதில்லை ஆனால் "கடத்தை சாக்ஷாத்கரிக்கின்றேன், படத்தை சாக்ஷாத்கரிக்கின்றேன்" என்னும் அநுவியவசாய ஞானமே யுண்டாகின்றது. அவ்வநுவியவசாய ஞானத்தின் வலிவால் அக்கட, பட முதலிய பாஹிய பதார்த்தத்தில் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மையேச் சித்தமாகின்றது. அல்லது அவ்வைபாஷிகர்கள் அக்கட, பட முதலிய பதார்த்தங்களை பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாக வொப்புவதும் சம்பவியாது. ஏனெனின், அவ்வைபாஷிகர்கள் அக்கட, பட முதலிய பாஹிய பதார்த்தங்களை பரமாணுக்களின் புஞ்ச வடிவமாகவே வொப்புகின்றனர். அப்பரமாணுக்களினும் வேறான அவயவியை வொப்புகிறதில்லை. அப்பரமாணுக்களில் மஹத்வப்பரிமாண மிருப்பதில்லை; அணுத்வப்பரிமாணமே யிருக்கின்றது ஆகையால் எவர்கள் மதத்திலும் பரமாணுக்களின் பிரத்தியக்ஷமுண்டாகாததாகும். அப்பரமாணுக்களின்பிரத்தியக்ஷமுண்டாகாததாக அப்பரமாணுக்களின் புஞ்சவடிவ கட,படமுதலியவைகளின் பிரத்தியக்ஷஞானமே சம்பவியாததாகும். ஆகையால் அக்கட, பட முதலிய பதார்த்தங்களைப் பரமாணுக்களின் புஞ்சவடிவமாக வொப்பி பிரத்தியக்ஷஞானத்தின் விஷயமாக வொப்புவது அத்தியந்தம் விருத்தமாம். இப்பரமாணு புஞ்சவாதத்தின் கண்டனம் முன்னர் அவயவி திரவியத்தின் சித்தியில் விரிவாய்க்கூறிவந்துள்ளோம். அல்லது உலகத்தில் பிரசித்த ஜட வடிவமாகிய துரும்பு, தான்னிய முதலிய பதார்த்தங்களைச் சேர்த்தல் வடிவச்சங்காதத்தைச் செய்வது சேதன வடிவ கர்த்தாவின் ஆதீனமாகவே காணப்படுகின்றது. சேதன கர்த்தாவின்றி அஜ்ஜட பதார்த்தங்களின் சங்காதம் யாண்டும் காணப்படுகிறதில்லை. அத்தகையநிலையான சேதனகர்த்தா உமது மதத்தில் ஒன்றுமின்றாம். ஆகையால் அஜ்ஜட பரமாணுக்களின் சங்காதத்தைச் செய்தவனார்? ஒருவரும் செய்பவரின்றாகும் அச்சங்காதத்தை செய்பவனது அபாவமிருக்க ஆந்தர, பாஹிய சங்காதமே

சித்திப்பதின்றாகும். அல்லது அச்சௌத்திராந்திக, வைபாஷிகர்கள் எப்போக்தாவின் போகத்தின் பொருட்டு போக்கிய வடிவச் சங்காதத்தை அங்கீகரிக்கின்றனரோ அப்போக்தா அவர்கள் மதத்தில் நிலையன்றும்; க்ஷணிகமாம். அங்ஙனமே எம்முமுக்ஷுவின் பொருட்டு அவ்வாதிகள் மோக்ஷத்தை அங்கீகரிக்கின்றார்களோ அம்முமுக்ஷுவும் நிலையன்றும்; க்ஷணிகமாம். ஆகையால் அப்போகம் கேவலம் போகத்தின் பொருட்டேயாகும். அங்ஙனமே அம் மோக்ஷமும் கேவலம் மோக்ஷத்தின் பொருட்டேயாகும். போக்தாவின் பொருட்டு அப்போக முண்டாகாததாகும். அங்ஙனமே முமுக்ஷுவின் பொருட்டு அம்மோக்ஷம் உண்டாகாததாகும். ஆகையால் அவ்வாதிகளின் சாத்திரமே பயனில்லாததாகும். கருத்திதுவாம், போக மோக்ஷமாமிரண்டும் பயன் வடிவமாகப் பிரசித்தமாம். அவ்வாதிகளின் மதத்தில் ஓர் போக்தாவும் நிலையின்றாம். ஆகையால் அவர்களது சாத்திரம் போக வடிவ பயன் பொருட்டும் அன்றாம். அவர்கள் சாத்திரத்தில் போகத்தின் விரோதி தபம், கிலேசம், சம்யமம் பாரிவிராஜ்யம் இவை முதலிய சாதனங்களின் உபதேசமே கூறப்பட்டிருக்கின்றது. போகத்தின் அநுகூலமான சாதனங்களின் உபதேசங்கூறப்படவில்லை. இக்காரணத்தானும் அவர்களது சாத்திரம் போகத்தின் பொருட்டன்றாம். இவ்வாறாக அவர்களது சாத்திரம் மோக்ஷ வடிவ பயன் பொருட்டுமன்றாம். ஏனெனின், அவ்வாதிகள் மோக்ஷப்பரியந்தம் நிலைப்பதான ஆத்மாவை அங்கீகரிப்பதில்லை எவ்வாத்மாவிற்கு அச்சாத்திர ஞான ஜன்னிய மோக்ஷவடிவ பயனது அடைவு உண்டாகும்? அவ்வாதிகள் ஓர் மோக்ஷ பரியந்தம் ஓர் நிலையான ஆத்மாவை யொப்பின் பாவ பதார்த்தம் யாவும் க்ஷணிகமா மென்னும் அவர்களது சித்தாந்தத்திற்கு கேடுண்டாகும். அல்லது துக்கத்தின்நிவர்த்தியினை மோக்ஷமென்பர். அத்துக்கம் அவர்கள் மதத்தில் க்ஷணிகமாவதால் தானே நாசமாய் விடுகின்றது. ஆகையால் அத்துக்கங்களின் நிவிர்த்தி வடிவ மோக்ஷத்தின் பொருட்டு தமது சீடர்களைக் குறித்துப் பலவகைத்தாய சம்யமம் முதலிய சாதனங்களை உபதேசிப்பதும் வீணேயாகும். அல்லது எச்சௌத்திராந்திக வைபாஷிகர்கள் முற்கூறிய பஞ்ச ஸ்கந்தங்களின் சங்காதங்களை போக்தாவாக வொப்புகின்றனரோ அவரோடு இதுவினவுதல் வேண்டும். அப்பஞ்ச ஸ்கந்தங்களின் சங்காதம் அந்த ஸ்கந்த வடிவ சங்காதியினும் அத்தியந்தம் வேறாயி நக்க போக்தாவா? அல்லது அந்த பஞ்சஸ்கந்தமேபோக்தாவா? அல்லது அச்சங்காதத்தின் அடக்கமான யாதாமோர் ஸ்கந்தம் போக்தாவா? ஆண்டு முதல் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அப்பஞ்ச ஸ்கந்த வடிவ் அவயவங்களினும் வேறான சங்காத வடிவ் அவயவியினை அங்கீகரிப்பதால் உமது சித்தாந்தத்திற்குக் கேடுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் ஓர் சரீரத்தில் அப்பஞ்சஸ்கந்த வடிவ ஐந்து போக்தாவை யொப்புவதாகும். அத்தகைய நாநா போக்தாக்களுக்குப் பரஸ்பரம் ஒரே அபிப்பிராய முண்டாகாது. ஆகையால் வெவ்வேறு அபிப்பிராய முடைய அவ்வனேக போக்தா இச்சரீரத்தையே நாசஞ் செய்துவிடும். எங்ஙனம்: அனேக யானைகளால் இழுக்கப்பட்ட வாழைமரம் அழிவை அடைவதாவதுபோலும். மூன்றாவதுப் பக்ஷத்தை யங்கீகரிக்கின் அப்பஞ்ச ஸ்கந்தங்க

ளுள் யாதாமோர் ஸ்கந்தம் போக்தாவா மென்னும் நிச்சய முண்டாகாத தாகும்.

சங்கை:—அப்பஞ்ச ஸ்கந்தங்களுள் விஞ்ஞான ஸ்கந்தமெனப் பெயரிய ஆலய விஞ்ஞான தொடர்ச்சி யாதோ அவ்வாலய விஞ்ஞான தொடர்ச்சியே சுவப்பிரகாசமாவதால் ஆத்மாவும், போக்தாவுமாம். அவ்வாலய விஞ்ஞானத் தாரைவடிவ போக்தாவாத்மா ஆற்று நீரின்பிரவாஹத்தைப்போன்று சந்தான வடிவமாக எப்பொழுது மிருப்பதாகியும், காரண சமுஹத்தைப் பிரகாசஞ் செய்வதாகியும் ஆசிரயணஞ் செய்யும். ஆகையால் போக்தாவாத்மாவே அப் பாஹ்ய, ஆந்தர சங்காதங்களின் கர்த்தாவாம்.

சமாதானம்:—எவ்வாலய விஞ்ஞான தாரையை நீவிர் ஆத்மாவாகவும், போக்தாவாகவும், கர்த்தாவாகவும் ஒப்புகின்றீர்களோ அவ்வாலய விஞ்ஞான தாரை அந்த க்ஷணிக விஞ்ஞானத்தினும் வேறு? அல்லது வேறன்று?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் நையாயிகர்களாகிய யாம் எந்த நிலையான ஆத்மாவினை அங்கீகரிக்கின்றேமோ அந்த நிலையான ஆத்மாவே உமக்கு ஆலயவிஞ்ஞான தாரை யென்னும் நாமத்தால் அங்கீகாரமாகும். அந்த நிலையான ஆத்மா உமக்கு அங்கீகார மின்றாம். இரண்டாவது வேறன்றுமென்னும்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அந்தக்ஷணிக அனேக விஞ்ஞானங்கட்கே ஆத்மத்தன்மையும், போக்தாத்தன்மையும், கர்த்தாத்தன்மையும் பிராப்தமாகும். அதுவும் முற்றும் விருத்தமாம். ஏனெனின், ஒரே சரீரத்தில் க்ஷணிக விஞ்ஞான வடிவ அனேக போக்தா ஆத்மாவை அங்கீகரிக்கின் அவ்வனேக போக்தாக்கட்குப் பரஸ்பரம் ஓர் அபிப்பிராயமுண்டாகிறதில்லை; வெவ்வேறான அபிப்பிராயமே யுண்டாகும். வெவ்வேறு அபிப்பிராயமுடையதாகிய அவ்வனேக போக்தா அனேகயானைகளால் இழுக்கப்பட்ட வாழைமரத்தைப்போன்று இச்சரீரத்தையே கெடுத்துவிடும். அங்ஙனமே வெவ்வேறு அபிப்பிராயமுடைய க்ஷணிக விஞ்ஞான வடிவ அனேக போக்தாக்கட்குப் போகத்தினிச்சையால் அப்போகத்தின் சாதனவடிவ சங்காதத்தின் கர்த்தாத்தன்மையும் சம்பவியாது. இவை முதலிய அனேக வகையான தூஷணம் சௌத்திராந்திக வைபாஷிகர்களின் மதத்தில் பிராப்தமாகின்றது. ஆகையால் அவர்கள் மதம் நலமுடையதன்றாம். இதுகாறும் பௌத்தர்களின் மதங் கண்டிக்கப்பட்டது. இனி ஆர்ஹத ஜைனர்களின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் அவர்கள் மதத்தை நிரூபிப்பாம்.

## ௫௩. சப்தபங்கி நியாயத்தால் ஜீவன், அஜீவன் முதலிய சர்வ பதார்த்தங்கட்கு அநைகாந்த (இன்னதெனத் துணியொணாத) சுபாவமுடைமை யொப்புவோராகிய ஆர்ஹத ஜைனர்களின் மத நிரூபணம்.

ஆண்டு ஆர்ஹத ஜைனர் விரிவாகவோ ஜீவன், அஜீவன், ஆஸ்ரவம் சம்வரம், நிர்ஜரம், பந்தம், மோக்ஷம் என்னும் ஏழு பதார்த்தங்களை யொப்புகின்றனர். அஜ்ஜைனர் சுருக்கமாகவோ ஜீவன், அஜீவன் என்னு மிரு பதார்த்தங்களையே யொப்புகின்றனர். ஆண்டு போக்தாவை ஜீவனென்பர்.

போக்கிய வஸ்த்துக்களை அஜீவனென்பர். அப்போக்கிய வடிவ அஜீவ பதார்த்தத்திலேயே அவ்வாஸ்ரவ முதலிய ஐந்து பதார்த்தங்களின் அடக்க மொப்புகின்றனர். ஆர்ஹத மத்தியமமுறையாகவோ ஜீவாஸ்த்திகாயம், புத்கலாஸ்திகாயம், தர்மாஸ்த்திகாயம், அதர்மாஸ்திகாயம், ஆகாசாஸ்த்திகாய மென்னும் ஐந்து பதார்த்தங்களை யொப்புகின்றனர். ஈண்டு அஸ்த்திகாய மென்னும் பதம் அவர்கள் மதத்தில் பதார்த்தத்தின் வாசகமாம். ஆகையால் ஜீவ பதார்த்தம், புத்கல பதார்த்தம், தர்ம பதார்த்தம், அதர்ம பதார்த்தம், ஆகாசபதார்த்தமென்னும் பெயர்கள் அவ்வைந்துபதார்த்தங்கட்குச் சித்திக்கின்றன. ஆண்டு முதலாவது ஜீவ பதார்த்தமோ நித்திய சித்த ஜீவன், முக்த ஜீவன், பத்த ஜீவன் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு ஆர்ஹத முதலியஜீவனே நித்திய சித்தஜீவனெனப்படுகின்றது. அவ்வார்ஹத முதலிய நித்தியசித்த ஜீவர்களின் சிஷ்ய பரம்பரையிலுள்ள ஜீவன் முக்தஜீவனென்னப்படுகின்றது. இக்காலத்திலுள்ள ஜீவன் பத்தஜீவனெனப்படுகின்றது. அந்ஜீவன்எவ்வெவ் மனிதர் முதலிய சரீரங்கட்குப் பிராப்தமாகின்றதோ அவ்வச் சரீரத்தின் சமானப் பரிமாண முடையதேயாகின்றது. எப்பதார்த்தம் நிறைவும் குறைவுமாகின்றதோ அதனை புத்கலமென்பர். அதாவது உயர்வு, தாழ்வு தர்மமுடையதனை புத்கலமென்பர். அப்புத்கல பதார்த்தமும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஸ்தாவர சரீரம், ஜங்கம சரீர மென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். இஜ்ஜீவனுக்கு மோக்ஷ மார்க்கத்தில் பிரவிருத்தி யுண்டாவது யாதோ அந்தப் பிரவிருத்தி வடிவ ஏதுவால் எவற்றின் அநுமானஞ் செய்யப்படுகின்றதோ அதனை தர்ம பதார்த்தமென்பர். அத்தர்ம பதார்த்தத்தானேயே இஜ்ஜீவர்கட்கு அம்மோக்ஷ மார்க்கத்தில் பிரவிருத்தி யுண்டாகின்றது. இஜ்ஜீவனுக்கு இச்சம்சாரத்தில் ஸ்திதி யாதோ அந்த ஸ்திதி வடிவ ஏதுவால் எதனது அநுமானஞ் செய்யப்படுகின்றதோ அதனை அதர்ம பதார்த்த மென்பர். அவ்வதர்ம பதார்த்தத்தானேயே இஜ்ஜீவர்கட்கு சம்சாரத்தில் ஸ்திதியுண்டாகின்றது. ஆகாச பதார்த்தமோ லோகாகாசம், அலோகாகாச மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு கீழிடத்திலுள்ள ஆகாசம் யாதோ அவ்வாகாசம் லோகாகாச மெனப்படும். மேலிடத்திலுள்ள ஆகாசம் யாதோ அது அலோகாகாச மெனப்படும். ஆண்டு முதலாவது லோகாகாசமோ பத்த ஜீவர்கள் வசிப்பதற்கிடமாம். இரண்டாவது அலோகாகாசமோ முக்த ஜீவர்கள் வசிப்பதற்கிடமாம். இனி முற்கூறிய ஜீவன் முதலிய ஏழு பதார்த்தங்களின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு போக்தாவினை ஜீவனென்பர். அஜ்ஜீவன் நித்திய சித்தன், முக்தன், பத்தன் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அவற்றின் ஸ்வரூபம் முன்னர்க் கூறி வந்துள்ளோம். போக்கிய வஸ்த்துவினை அஜீவனென்பர். உருவ முதலிய விஷயங்களின் சார்பாய நேத்திர முதலிய இந்திரியங்களின் பிரவிருத்தி யாதோ அதனை ஆஸ்ரவ மென்பர். அவ்விஷயாகாரமாகிய பிரவிருத்தியினை தடுப்பதாகிய யம, நியம முதலியவைகள் யாவையோ அவற்றை சம்வரமென்பர். புண்ணிய, அபுண்ணிய மெனப்பெயரிய சர்வ கர்மங்களை நாசஞ் செய்வதாகிய காய்ந்த சிலையின் மேல் இருப்பது முதலிய தபம் யாதோ அதனை நிர்ஜர மென்பர். கர்மத்தினை பந்த மென்பர்.

அக்கர்மமும் இருவகைத்தாம். ஒன்ருே காதி கர்மமும், மற்றயது அகாதிகர்மமுமாம். ஆண்டு முதலாவது காதி கர்மமும் ஞானவரணீயம், தர்சனுவரணீயம், மோஹனீயம், அந்தராய மென்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். மற்றைய அகாதி கர்மமும் வேதனீயம், நாமிகம், கோத்திரிகம், ஆயுஷ்க மென்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். ஆண்டு ஆர்ஹத தர்சன ஜன்னிய ஞானத்தால் முக்தி யுண்டாகாததாகு மென்னும் நிச்சயத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை ஞானுவரணீய மென்பர். ஆர்ஹத தர்சனம் அப்பிரமாண மென்னும் நிச்சயத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை தர்சனுவர்ணீய மென்பர். ஈண்டுத் தர்சன மென்னும் பதம் சாத்திரத்தின் வாசகமாம். நாநா சாஸ்திரக்காரர்கள் காட்டிய மோக்ஷத்தின் மார்க்கம் யாவையோ அவ்வெல்லாமார்க்கத்தில் எம்மார்க்கம் விசேஷ மென்னும் அநிச்சயத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை மோஹனீய மென்பர். சத்மார்க்கப் பிரவிருத்தியைப் பிரதிபந்திப்பதாகிய விக்கினம் யாதோ அதனை அந்தராய மென்பர். இந்நான்கு கர்மங்களும் மோக்ஷத்தைக் கெடுப்பதாவதால் இந்நான்கு கர்மங்களை காதி கர்ம மென்பர். இனி அகாதி கர்மங்களை வர்ணிப்பாம். ஆண்டு எமக்கு அறிவதற்கு யோக்கியம் தத்துவ ஞானமா மென்னும் ஞானத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை வேதனீய மென்பர், அத்தத்துவம் இப்பெயருடையதா மென்னும் ஞானத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை நாமிக மென்பர். யான் ஆர்ஹத சிஷ்ய பரம்பரா வடிவ கோத்திரத்தில் பிரவிஷ்டமுடையோ னென்னும் ஞானத்திற்கு ஏதுவாகிய கர்மம் யாதோ அதனை கோத்திரிக மென்பர். தத்துவ ஞானத்தின் உற்பத்தி வரையில் ஜீவனத்திற்காக சம்பாதிக்கும் கர்மம் யாதோ அதனை ஆயுஷ்கமென்பர். இந்நான்கு கர்மங்களும் மோக்ஷத்தைக் கெடுப்பதில்லை. ஆனல் மோக்ஷத்திற்கு அநுகூலமேயாமாகையால் இந்நான்கு கர்மங்கள் அகாதி கர்ம மெனப்படும். அல்லது இந்நான்கு அகாதி கர்மங்கட்கு இவ்வர்த்தம் செய்க. ஸ்திரீயின் உதிரத்தில் புருஷனது சுக்கிலமும், ஸ்திரீயின் சோணிதமும் கலப்புறுவது யாதோ அதனை ஆயுஷ்கமென்பர். கலப்புற்ற அச்சுக்கில சோணிதங்கட்கு தத்துவ ஞானத்தின் அநுகூல தேஹாகார பரிணம சக்தியாதோ அதனை கோத்திரிக மென்பர். அச்சக்தியுடைய சுக்ல சோணிதங்கட்கு இளகலுடைய அவஸ்தையையும், புத் புத அவஸ்தையையும் ஆரம்பம் செய்யும் கிரியா விசேஷம் யாதோ அதனை நாமிக மென்பர், அக்கிரியா விசேஷமுடைய பீஜத்திற்கு ஜடராக்னியாலும், பிராண வாயுவாலும் கடினமாவது யாதோ அதனை வேதனீயமென்பர். இந்நான்கு கர்மங்களும் பரம்பரையாக தத்துவ ஞானத்திற்கு அநுகூலமாம். அதாவது தத்துவ ஞானத்தை அறிவதாகிய சுக்ல புத்கலத்தின் உற்பத்திக்கு ஏதுவா மாகையால் இந்நான்கும் அகாதி கர்ம மெனப்படும். கூறிய எண் வகைத்தாய இக்கர்மம் ஜன்மத்திற்கு ஏதுவாவதால் பந்த மெனப்படும். நிவிருத்தியாய் விட்ட சமஸ்த கிலேசம் எதனதும், அக்கிலேசங்களின் வாசனை எதனதும், அங்ஙனமே ஆவரணமில்லா ஞானம் எதனதுமாமோ அத்தகைய சுக வடிவ ஆத்மா யாதோ அவ்வாத்மாவிற்கு மேலுக்குமேல் அலோகாகாயத்தில் செல்லுவது யாதோ அதனை

மோக்ஷமென்பர். அல்லது தர்ம, அதர்மங்களின் வலிவால் சம்சார சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் ஜீவன்யாவனோ அஜ்ஜீவனுக்குத் தத்துவஞானத்தின் வலிவால் அத்தர்ம, அதர்மத்தின் நாசமுண்டாக *ஜலதும்பிகா நியாயமாக நிரந்தர அலோக ஆகாசத்தில் மேற்செல்லுவது யாதோ அதனை மோக்ஷ மென்பர். ஆண்டுக் கூறிய ஜீவன் முதலிய ஏழு பதார்த்தங்களும் அனைகாந்த ஸ்வபாவ முடையதேயாமென்னும் அர்த்தத்தைப் பிரதிபாதிக்கும்பொருட்டு அவ்வாறதர் கூறிய ஏழு பதார்த்தங்களில் சப்தபங்கி நியாயத்தைக் கூறுகின்றனர் அதனிடத்தில் அவர்களின் கருத்திதுவாம்; இக்கட முதலிய பதார்த்தம் ஓர்கால் சர்வ ரூபத்தால் ஓர் சத் வடிவமாயின் அக்கட முதலிய பதார்த்தங்கள் பிராப்பிய வடிவமாக இருப்பதேயாகும். ஆகையால் அக்கட முதலிய பதார்த்தங்களின் பிராப்தியின் பொருட்டு உலகவருக்கு முயற்சியுண்டாகாததாக வேண்டும். அவ்வுலகவரோ அக்கட முதலிய பதார்த்தங்களின் பிராப்தியின் பொருட்டு முயற்சிச் செய்வதாகவே காணப்படுகிறார்கள். ஆகையால் இதையொப்ப வேண்டும். அக்கட முதலிய பதார்த்தங்கள் கடத் தன்மை முதலிய அற்ப வடிவமாகவோ சத்தாம். பிராப்பியத் தன்மை முதலிய அற்ப வடிவமாகவோ அசத்தாம். இவ்வாற்றால் வஸ்து மாத்திரத்திற்கே அனேக வடிவத் தன்மை யிருக்கின்றது. ஓர் வஸ்துவிலும் நியம வாயிலாக ஓர் வடிவாந்தன்மை யின்றாம். இனி ஏழு பங்கங்களின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஸ்யாத³ஸ்தி (இருப்பதாம்), ஸ்யாந்நாஸ்தி (இராததாம்), ஸ்யாத³ஸ்தி ச நாஸ்தி ச (இருப்பதும் இராததுமாம்), ஸ்யாத³வக்தவ்ய: (சொல்லொணாததாம்), ஸ்யாத³ஸ்தி சாவக்தவ்யஸ்²ச (இருப்பதும் சொல்லொணாததுமாம்), ஸ்யாந்நாஸ்தி சாவக்தவ்யஸ்²ச (இராததும் சொல்லொணாததுமாம்), ஸ்யாத³ஸ்தி ச நாஸ்தி சாவக்தவ்யஸ்²ச (இருப்பதும் இராததும் சொல்லொணாததுமாம்) என ஏழாம். யாண்டும் ஸ்யாத் என்னும் பதம் கத²ஞ்சித் அர்த்தத்தின் வாசகமாம். அதாவது; எப்படியோ என்பதான அர்த்தத்தின் வாசகமாம். ஆகையால் எப்படியோ இருப்பதாம், எப்படியோ இராததாம், எப்படியோ இருப்பதும் இராததுமாம், என்னும்முறையாக அவ்வேழுபங்கங்களின் அர்த்தம் சித்தமாகின்றது. இனி முற்கூறிய ஏழுபங்கங்களில் எவ்வெவ் பங்கத்திற்கு எவ்வெவ் வகையாலும் எவ்வெக்காலத்திலும் பிரவிருத்தி யுண்டாகின்றதோ அம்முறையைக் காட்டுவாம். ஆண்டு எக்காலத்தில் கட முதலிய வஸ்துக்களின் இருத்தற் றன்மைக் கூறக் கருதிய தாகின்றதோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களில் இருப்பதும் என்னும் முதலாவது பங்கம் பிரவுர்த்த மாகின்றது. எக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களின் நாஸ்தித் தன்மைக் கூறக் கருதியதாமோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களில் "இராததாம்" என்னு மிரண்டாவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எக்காலத்தில் கட முதலிய வஸ்துக்களின் இருத்தற் றன்மையும்,

* ஜலதும்பிகாநியாயம் - கிரியா விசேஷத்தால் ஜலத்தில் அமிழ்த்தப்பட்ட சுரக்காய் கிரியாவிசேஷம் நீங்கியவுடன் ஜலத்திற்குமேல் வருவதுபோல் கர்மத்தால் கட்டுண்ட ஜீவன் கர்மம் நீங்கியவுடன் அலோகாகாசத்திற் செல்லுவது.

நாஸ்தித்தன்மையும் முறையாகக்கூறக்கருதியதாமோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களில் "இருப்பதும் இராததுமாம்" என்னும் மூன்றாவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களின் இருத்தற் றன்மையும், நாஸ்தித் தன்மையும் முறையின்றிக் கூறக் கருதியதாமோ ஆண்டு இருப்பது இராதது யென்னுமிரு சத்தங்கள் பரஸ்பர விரோத முடைய அர்த்தத்தின் வாசகமாவதால் ஒரே வஸ்துவில் ஒரு காலத்தில் உச்சரிக்கப்படுவதன்றாம். ஆகையால் அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களிடத்தில் "சொல்லொணாததாம்" என்னும் நான்காவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களின் இருத்தற் றன்மையும், சொல்லாணாதத் தன்மையும் கூறக் கருதியாதாமோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துவில் "இருப்பதாம் சொல்லொணாததாம்" என்னும் ஐந்தாவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எக்காலத்தில் கட முதலிய வஸ்துக்களின் நாஸ்தித் தன்மையும், சொல்லாணாதத் தன்மையும் கூறக் கருதியதாமோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களில் "இராததும் சொல்லொணாததுமாம்" என்னும் ஆறாவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எக்காலத்தில் அக்கட முதலிய வத்துவில் இருத்தற் றன்மையும், இராதத் தன்மையும், சொல்லொணாத் தன்மையும் கூறக்கருதியதாமோ அக்காலத்தில் அக்கட முதலிய வஸ்துக்களில் இருப்பதும், இராததும், சொல்லொணாததுமாம் என்னும் ஏழாவது பங்கம் பிரவுர்த்தமாகின்றது. அல்லது எங்ஙனம் அக்கட முதலிய வஸ்துக்களின் அஸ்தித்தன்மையும், நாஸ்தித்தன்மையுமாமிரண்டு தர்மங்கள் முதலாக அச்சப்த பங்கம் பிரவுர்த்தமாகின்றதோ அங்ஙனமே அக்கட முதலிய வஸ்துக்களின் ஏகத்தன்மை, அநேகத் தன்மை, நித்தியத்தன்மை, அநித்தியத்தன்மை, பின்னத்தன்மை, அபின்னத்தன்மையா மிவை முதலிய தர்ம முதலாக அச்சப்த பங்கம் பிரவுர்த்தமாகின்றது. எங்ஙனம் ஏகமாம், அனேகமாம், ஏகமும் அனேகமுமாம், சொல்லொணாததாம், ஏகமும் சொல்லொணாததுமாம், அனேகமும் சொல்லொணாததுமாம், ஏகமும் அனேகமும் சொல்லொணாததுமாம். அங்ஙனமே நித்தியமாம், அநித்தியமாம், நித்திய அநித்தியமாம், சொல்லொணாததுமாம், நித்தியமும் சொல்லொணாததுமாம், அநித்தியமும் சொல்லொணாததுமாம், நித்தியமும் அநித்தியமும் சொல்லொணாததுமாம். அங்ஙனமே பின்னமாம், அபின்னமாம், பின்னமும் அபின்னமுமாம், சொல்லொணாததாம், பின்னமும் சொல்லொணாததுமாம். அபின்னமும் சொல்லொணாததுமாம், பின்னமும் அபின்னமும் சொல்லொணாததுமாம். யாண்டும் முதலாவது நான்காவதுமாம் இரு பங்கங்களைக் கூறக்கருதியவழி ஐந்தாவது பங்கத்தின் சித்தி யுண்டாகின்றது. இரண்டாவது நான்காவது மிரு பங்கங்களைக் கூறக் கருதிய வழி ஆறாவது பங்கத்தின் சித்தியுண்டாகின்றது. மூன்றாவது நான்காவதுமா மிரு பங்கங்களைக்கூறக் கருதிய வழி ஏழாவதுபங்கத்தின்சித்தியுண்டாகின்றது. இவ்வாறாக கட, பட முதலிய சர்வ பதார்த்தங்கட்கு அனேக வடிவத்தன்மையின் சித்தியுண்டாக அற்ப வடிவத்தால் அக்கட முதலியவைகளின் பிரவிருத்தியும், அற்ப வடிவத்தால் அக்கட முதலியவைகளின் நிவிர்த்தியுமா மிவ்வாறாக பிராப்தி தியாக முதலிய சர்வ

வியவஹாரம் சம்பவித்து விடுகின்றது. அக்கட முதலிய வஸ்துக்கட்கு நியமமாக ஓர் வடிவாந் தன்மை அங்கீகரிக்கின் அக்கட முதலிய சர்வ வஸ்துக்கள் சர்வ தேசத்திலும், சர்வ காலத்திலும் இருப்பனவேயாம். ஆகையால் அந்தப் பிராப்தித் தியாக முதலிய சர்வ வியவஹாரங்களின் லோபமே யுண்டாமாகையால் முற்கூறிய அஜ்ஜீவாதி சப்தபதார்த்தம் அநேகாந்த ஸ்வபாவ முடையனவேயாம்.

௫௩௯. அவ்வார்ஹத ஜைனர்களது மத கண்டனம்.

அஜ்ஜைனர்களின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் ஸ்தம்ப கும்பாதி வடிவ ஓர் அபின்ன அர்த்தம் யாதோ அந்த ஸ்தம்ப கும்பாதிவடிவ அர்த்தம் இருத்தற்றன்மை, நாஸ்தித்தன்மை முதலிய விருத்தத் தர்மங்களால் எழுவகையாகச் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் ஓர் வஸ்துவில் பரஸ்பர விருத்தத்தர்மங்களின் ஸ்திதி ஓர் காலும் சம்பவியாது. ஓர் கால் பரஸ்பர விரோதி தர்மங்கட்கும் ஓர் வஸ்துவில் ஸ்திதி யுண்டாகுமாயின் குளிர்ச்சித் தன்மை, வெம்மைத் தன்மையாமிவை முதலிய விரோதித் தர்மங்கட்கும் ஓர் வஸ்துவில் ஸ்திதியுண்டாகும். ஆகையால் எல்லா உலகங்களில் பிரசித்த குளிர்ச்சித்தன்மை, வெப்பத்தன்மை, மென்மைத்தன்மை, வன்மைத்தன்மை யாமிவை முதலிய தர்மங்களின் விரோதத்திற்கேக் கேடுண்டாம். அல்லது சர்வ வஸ்துக்கட்கும் அநேகாந்த ஸ்வபாவ முடைமை யொப்புவோராகிய ஜைனர்களோடு இது வினவுதல் வேண்டும். எவ்வாகாரத்தால் அக்கட முதலிய வஸ்துக்களின் சத்துத் தன்மை யிருக்கின்றதோ அவ்வாகாரத்தானேயே அக்கட முதலிய வஸ்துக்களின் அசத்துத் தன்மை யிருக்கின்றதா? அல்லது வேறோர் ஆகாரத்தால் அசத்துத் தன்மை யிருக்கின்றதா?. ஆண்டு முதலாவது பக்ஷத்திலோ குளிர்ச்சித் தன்மை, வெப்பத் தன்மையைப் போன்று அந்த சத்துத்தன்மை, அசத்துத்தன்மை வடிவ விருத்தத் தர்மங்கட்கும் ஓர் வஸ்துவில் இருத்தலாகிய அசம்பவவடிவதோஷம் முன்னர்க்கூறிவந்துள்ளோமாகையால் அம்முதலாவது பக்ஷமோ சம்பவியாது. அஜ்ஜைனர் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் எவ்வேறாகாரத்தால் அக்கடமுதலிய வஸ்துக்களின் அசத்துத்தன்மை யிருக்கின்றதோ அவ்வேறாகாரமே அசத்தாகும். அக்கட முதலிய பதார்த்தங்களிலோ சத் வடிவ மொன்றே சித்தமாகும். எங்ஙனம்: தூர தேசத்திலுள்ள கிராமத்தின் பிராப்திக்கு அசத் வடிவத்தன்மை யுளதாயினும் அக்கிராமம் அசத்தாகிறதில்லை. ஓர் கால் அந்தப்பிராப்பியக் கிராமமும் அசத்தாகுமாயின் அக்கிராமத்தின் பிராப்தியின்பொருட்டு உலகவரதுமுயற்சி உண்டாகாததாக வேண்டும்; அசத் வஸ்துக்களின் பிராப்தியின் பொருட்டு ஓர் முயற்சியுஞ் செய்யார்கள். ஆகையால் அக்கிராமம் அசத்தன்றாம்; ஆனால் தூர தேசத்திலுள்ள புருஷனுக்கு அக்கிராமத்தின் பிராப்தியே அசத்தாம். அங்ஙனமே எவ்வாகார விசேஷத்தால் அக்கட முதலிய வஸ்துக்கட்கு நீவிர் அசத்து வொப்புகின்றீரோ அவ்வாகாரத்திலேயே அவ்வசத் வடிவத் தன்மைச் சித்தமாகின்றது. அக்கட முதலிய வஸ்துக்களில் அவ்வசத் வடிவத் தன்மைச் சித்தமாகிறதில்லை. அல்லது அஜ்ஜைனர்களின் சாஸ்திரத்தில் கூறப்பட்ட ஜீவன் முதலிய ஏழு அல்லது ஐந்து பதார்த்தங்கள் யாவையோ அப்

பதார்த்தங்களிலும் ஜீவன் எவ்வாறோ, அஜீவன் எவ்வாறோ, தர்மம் எவ்வாறோ, அதர்மம் எவ்வாறோ, பந்தம் எவ்வாறோ, அபந்தம் எவ்வாறோ, மோக்ஷம் எவ்வாறோ என்னு மிவை முதலிய ஏழு பங்கங்களின் பிராப்திச் சம்பவிக்கின்றது. ஆகையால் அஜ்ஜீவன் முதலிய ஏழு பதார்த்தங்கள் அனைகாந்த ஸ்வபாவ முடையனவே யாகு மென்னும் நியம வாயிலாக யாதொன்றும் சுவபாவமுடையதாகாது. அத்தகைய அநியதசுவபாவமுடைய அஜ்ஜீவன் முதலியபதார்த்தங்களில்சிஷ்யர்களுக்குவிஸ்வாசமேயுண்டாகாததாகும். நியத சுவபாவமுடைய பதார்த்தங்களிலேயே சிஷ்யர்களுக்கு விஸ்வாசமுண்டாகின்றது. ஆகையால் அச்சிஷ்யர்களுக்கு உமது சாத்திரத்தில் பிரவிருத்தியே சம்பவியாததாகும். அல்லது அஜ்ஜைனர்களின் மதத்தில் கேவலம் சாஸ்திரப் பிரதிபாதித அர்த்தங்களில் சிஷ்யர்களது பிரவிருத்தியின் அநுபபத்தி வடிவ தோஷம் சம்பவிப்பதுடன் யாதாமோர் லௌகீக அர்த்தத்திலும் ஓர் ஜீவனது பிரவிருத்தி உண்டாகாததாகும். எனெனின் திருப்தியின்சாதனம் எவ்வன்னமாமோ அங்ஙனமே மரணத்தின் சாதனம் எவ்விஷமாமோ அவற்றிலும் திருப்திசாதனம் எவ்வாறோ, அதிருப்தி சாதனம் எவ்வாறோ, மரண சாதனம் எவ்வாறோ, அமரணசாதனம் எவ்வாறோ என்னு மிவைமுதலிய ஏழுபங்கங்களின் பிராப்தியால் ஓர் புருஷனுக்கும் விசுவாசம் உண்டாகாததாகும். ஆகையால் திருப்தியில் இச்சையுடையபுருஷனுக்கு அவ்வன்னத்தில் பிரவிருத்தியே யுண்டாகாததாகும். அங்ஙனமே மரணபயமுடைய புருஷனுக்கு அவ்விஷத்தினின்றும் நிவர்த்தி உண்டாகாததாகும். இவ்வாற்றால் சர்வவியவஸ்தையின் லோபமுண்டாகும். ஆகையால் இச்சப்த பங்கிவாதம் அத்தியந்த விருத்தமாம். அல்லது அவ்வார்ஹதரானவர்கள் ஜீவாத்மாவிற்கு எச்சரீரத்தின் சமானப் பரிமாண முடைமை யொப்புகின்றனரோ அதுவும் அத்தியந்தம் அசங்கதமாம். எனெனின், அவ்வார்ஹதர்களோடு இங்ஙனம் வினவ வேண்டும். அச்சரீரத்தின் சமானப் பரிமாணமுடைய உமது ஆத்மா நிரவயவமா? அல்லது சாவயவமா?. ஆண்டு அவ்வாத்மா நிரவயவமா மென்னும் முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதனிடத்து மிதுவினவவேண்டும். அந்நிரவயவ ஆத்மா மனித தேகத்தின் சமானப் பரிமாணமுடையதா? அல்லது யானை தேகத்தின் சமானப் பரிமாணமுடையதா? அல்லது கொசு தேகத்தின் சமானப் பரிமாண முடையதா?. ஆண்டு அஜ்ஜீவாத்மா மனித தேகத்தின் சமானப் பரிமாணமுடையதென அங்கீகரிக்கின் யாதாமோர் பாப கர்யத்தின் யோகத்தால் அஜ்ஜீவாத்மாவிற்கு எப்பொழுது யானை சரீரத்தின் பிராப்தி யுண்டாகுமோ அப்பொழுது அஜ்ஜீவாத்மா அந்த யானை சரீரத்தின் யாதாமோரிடத்திலேயேயிருக்கும். அந்த யானையின் சரீர வேறிடம் அவ்வாத்மா வில்லாததாக இருக்கும். அங்ஙனமே எஜ்ஜீவாத்மாவிற்கு எப்பொழுது யாதாமோர் பாப கர்மத்தின் வசத்தால் கொசுசரீரத்தின் பிராப்தியுண்டாகுமோ அப்பொழுது அஜ்ஜீவாத்மா அக்கொசுசரீரத்தில் எவ்வளவிருக்கக் கூடுமோ அவ்வளவு அக்கொசு சரீரத்திலிருக்கும். மற்றைய ஆத்மா அக்கொசு சரீரத்தினும் வெளியில் அலைந்துக் கொண்டிருக்கும். அஜ்ஜீவாத்மா யானை தேகத்தின் சமானப் பரிமாணமுடையதா மென்னும் வேறு பக்ஷத்தை அங்கீகரிக்கின் அஜ்ஜீவாத்மா

எப்பொழுது யாதாமோர் பாப கர்மத்தின் வசத்தால் கொசு சரீரத்திற்கு பிராப்தமாகுமோ அப்பொழுது அக்கொசு தேகத்தில் சிறிது மாத்திரம் பிரவிஷ்டமுளதாகியும் மற்றையது வெளியில் அலைந்துக் கொண்டிருக்கும். அஜ்ஜீவாத்மாவிற்கு எப்பொழுது யாதாமோர் பாப கர்மத்தின் வசத்தால் அவ்வானை சரீரத்தினும் யாதாமோர் பெரிய மீன் முதலிய சரீரத்தின் பிராப்தி யுண்டாகுமோ அப்பொழுது அஜ்ஜீவாத்மா அம்மீன் முதலிய சரீரங்களின் யாதாமோரிடத்திலேயே இருக்கும். அவ்வாத்மா யிருக்கும் விடத்தினும் வேறான அம்மச்சத்தின்சரீரம் ஆத்மா வில்லாததாக இருக்கும். அஜ்ஜீவாத்மா கொசு தேகத்தின் சமானப் பரிமாண முடையதா மென்னும் மூன்றாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அஜ்ஜீவாத்மாவிற்கு யாதாமோர் பாப கர்மத்தின் வசத்தால் எப்பொழுது யானை சரீரத்தின் பிராப்தி யுண்டாகிறதோ அப்பொழுது அஜ்ஜீவாத்மா அந்த யானை சரீரத்தின் யாதாமோர் ரோம மாத்திரத்திலேயே யிருக்கும். அவ்வாத்மா யிருக்கும் விடத்தினும் வேறான அந்த யானையின் சரீரம் அவ்வாத்மா வில்லாததாகும். எவ்வளவு சரீரம் அஜ்ஜீவாத்மா வில்லாததாமோ அவ்வளவு சரீரத்தில் அஜ்ஜீவாத்மாவிற்கு குளிர்ச்சித் தன்மை, வெம்மைத் தன்மை முதலியவைகளால் சுக, துக்கத்தின் அநுபவ மில்லாததாகும். ஆகையால் அச்சரீரத்தின் சமானப் பரிமாண முடைய ஆத்மா நிரவயவமாம் என்னும் முதற் பக்ஷம் சம்பவியாது. அத்தேகத்தின் சமானப் பரிமாணமுடைய ஜீவாத்மா சாவயவமா மென்னும் இரண்டாவது பக்ஷத்தை ஆர்ஹதர்கள் அங்கீகரிக்கின் இப்பக்ஷத்தில் முற்கூறிய தோஷம் பிராப்தமாகாது. ஏனெனின் இம்மனித தேகத்தின் சமானப் பரிமாணமுடைய ஜீவாத்மா எப்பொழுது யாதாமோர் பாப கர்மத்தின் வசத்தால் யானை சரீரத்திற்குப் பிராப்தமாகின்றதோ அப்பொழுது அவயவங்களின் பெருக்கத்தால் அஜ்ஜீவாத்மா அவ்வானை தேகத்தின் சமானப் பரிமாணமுடையதாய் விடுகின்றது. அஜ்ஜீவாத்மா எப்பொழுது கொசு சரீரத்திற்குப் பிராப்தமாகின்றதோ அப்பொழுது அவ்வவயவங்களின் குறைவால் அஜ்ஜீவாத்மா அக்கொசு சரீரத்தின் சமானப் பரிமாணமுடையதாகின்றது. ஆகையால் இச்சாவயவ பக்ஷத்தில் முற்கூறிய அத்தோஷம் பிராப்தமாவதின்று. என்றாலும் அஜ்ஜீவாத்மாவினை சாவயவமாக வொப்புவதில் அநித்தியத் தன்மைப் பிராப்தமாகும். ஏனெனின் இவ்வுலகத்தில் எவ்வெப்பதார்த்தம் சாவயவமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம் கட, பட முதலிய பதார்த்தங்கள் சாவயவமாவதால் அநித்தியமாமோ அங்ஙனமே அஜ்ஜீவாத்மாவும் சாவயவமாவதால் அநித்தியமேயாகும். அஜ்ஜீவாத்மாவிற்கு அநித்தியமுளதாக செய்தவினையழிவதும், செய்யாத வினை பிராப்தமாவதுமா மிரு தோஷங்களின் பிராப்தியுண்டாகும். ஆண்டுச் செய்யப்பட்டுள்ள கர்மங்களின் பலபோகமின்றியே எது நாசமாமோ அதனை கிருத நாசமென்பர். செய்யப்படாத கர்மங்களது பலத்தின் பிராப்தி யாதோ அதனை அகிருதாப்பியாகம மென்பர். இது முதலாக அநேக விதமான தூஷணம் அஜ்ஜைனரின் மதத்தில் பிராப்தமாகின்றது. ஆகையால் அஜ்ஜைனர்களின் மதம் அத்தியந்தம் அசங்கதமாம்.

௩௪௦. நால்வகையாய சார்வாகர்களின் மத வர்ணனம்.

இனி சார்வாகர்களின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் அச்சார்வாகர்களது மதத்தினை நிரூபிப்பாம். ஆண்டு சார்வாகர் சிலரோ இத்தூல தேகத்தினையே ஆத்மாவாக வொப்புகின்றனர். சில சார்வாகரோ சக்ஷு முதலிய இந்திரியங்களையே ஆத்மாவாக வொப்புகின்றனர். சில சார்வாகரோ பிராணனையே ஆத்மாவாக வொப்புகின்றனர். சில சார்வாகரோ மனதினையே ஆத்மாவாக வொப்புகின்றனர். இவ்வாறாய சார்வாகர்களது நான்கு பேதம் பிரசித்தமாம்.

௩௪௧. தேகாத்மவாதி சார்வாகரின் மத வர்ணனம்.

ஆண்டு முதலாவது தேகாத்மவாதி சார்வாகரோ இத்தேகத்தில் ஆத்மத்தன்மையைச் சித்திச் செய்யும் பொருட்டு இவ்விதமாக யுக்திக் கூறுகின்றனர். எல்லா வாதிகளின் மதத்தில் யானென்னும் தோற்றத்திற்கு விஷயமும், யானென்னும் சத்தத்திற்கு அர்த்தமும் ஆத்மாவேயாகின்றது. யானென்னும் தோற்றத்தில் இத்தேகமே பிராப்தமாகின்றது. இத்தேகத்தினும் வேறான தும், இத்தேகத்தினும் அந்தர்வர்த்தீ வேறோர்பதார்த்தம் யானென்னும்பிரதீதிக்கு விஷயமாகப் பிராப்தமாவதின்று. இக்காரணத்தானேயே பண்டிதபுருஷர் முதலாக பாமரபுருஷர்கள் வரையிலுள்ள உலகர் யாவருக்கும் யான் ஸ்தூலன், யான்மெலிந்தவன், யான் மனிதன், யான்பிராஹ்மணன், யான்நடப்பவன், யானறிபவன், யான் இச்சிப்பவன், யான் செய்பவன் என்னு மிவை முதலிய தோற்றத்தால் யானென்னுந் தன்மைத் தர்மத்திேனாடு ஸ்தூலத் தன்மை, மெலிவுத்தன்மை, மனிதத்தன்மை, பிராஹ்மணத்தன்மை, நடத்தல், ஞானம், இச்சை, முயற்சி இவை முதலிய தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அநுபவமே யுண்டாகின்றது. ஆண்டு தர்மியின் அபேதமுளதாகவே அத்தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அனுபவமுண்டாகின்றது. தர்மிகளின் பேதமுளதாக அத்தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அனுபவம் உண்டாகாது. எங்ஙனம்: கலயத்திலுள்ள தயிர்யாதோ அத்தயிருக்கோ மதுர ரச தர்ம மிருக்கின்றது. அக்கலயத்திற்கு சங்கைப்போன்று கழுத்துடைமையாதி தர்மங்களிருக்கின்றன. ஆண்டு அக்கலய வடிவத் தர்மிக்கும், தயிர் வடிவத் தர்மிக்கும் பரஸ்பர பேதமிருக்கின்றது, ஆகையால் ஆண்டு மதுர ரசம், சங்கைப்போன்று கழுத்துடைமையாதியா மிரு தர்மங்களின் சமானாதி கரண்ணியத்தின் அனுபவம் உண்டாகாது. ஓர் கால் தர்மிகளின் பேதமுளதாயினும் அத்தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அநுபவமும் உண்டாகுமாயின் "மதுரம் கலயம் சங்கைப்போன்று கழுத்துடைமையாதியுடையத் தயிர்" என்பதான அநுபவமும் உண்டாக வேண்டும். இவ்வாறாய அநுபவம் ஒருவருக்கும் உண்டாவதின்று. ஆகையால் இது அறியத்தக்கது; யாண்டு தர்மிகளின் அபேத முண்டாகின்றதோ ஆண்டே அத்தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அநுபவ முண்டாகின்றது. கூறியவாற்றால் உலகர் யாவருக்கும் யானென்னும் தர்மத்திேனாடு அத்தூலத்தன்மை முதலிய தர்மங்களின் சமானாதிகரண்ணியத்தின் அநுபவமே யுண்டாகின்றது. ஆகையால்

அத்தூலத் தன்மை முதலிய எல்லாத் தர்மங்களுக்கு யாதாமோர் தர்மியே யொப்ப வேண்டும். இத்தகைய தர்மி ஸ்தூல சரீரமாகவே சித்தமாகின்றது. ஏனெனின் ஸ்தூலத்தன்மை, மெலிவுத்தன்மை, பிராஹ்மணத்தன்மை, மனிதத்தன்மை, நடத்தல் என்னு மிவை முதலிய தர்மங்கள் இத்தூல தேகத்திலேயே உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றன. கூறிய முறைப்படி ஞானம், இச்சை, முயற்சி என்னும் மூன்றுத் தர்மங்கட்கும் அத்தூலத்தன்மை முதலிய தர்மங்களோடே சமானாதிகரண்ணியத் தோற்ற முண்டாகின்றது. ஆகையால் அந்த ஞான முதலிய மூன்றுத் தர்மங்கட்கும் அத்தூல தேகமே தர்மியாம். எல்லா வாதிகளின் மதத்தில் ஞானம், இச்சை, முயற்சி என்னு மிம்மூன்று தர்மங்கள் ஆத்மாவினதேயாகின்றன; வேறொன்றினதாவனவன்று. ஆகையால் அந்த ஞானமுதலியகுணங்களுடையதாவதாலும், யானென்னும் தோற்றத்திற்கு விஷயமாவதாலும் இத்தூல தேகமே ஆத்மாவாம். இத்தூல தேகத்தினும் வேறான எல்லாப்பதார்த்தங்களும் அனாத்ம வடிவமேயாம். பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னு மிந்நான்கு பூதங்களில் ஒவ்வோர் பூதத்திலும், இந்நான்கு பூதங்களிலும் அந்த ஞான வடிவ சைதன்னியம் காணக் கிடைப்பதின்று. என்றாலும் தேகாகாரப் பரிணாமத்தை அடைந்த அந்நான்கு பூதங்களில் அச்சைதன்னியத்தின் உற்பத்திச் சம்பவிக்கின்றது. எங்ஙனம் சாறுயத்தின் காரணமாகிய வெல்லம் முதலிய பதார்த்தங்களில் யாதாமொவ்வோர் பதார்த்தங்களிலும், அவ்வெல்லாப் பதார்த்தங்களிலும் மயக்கசக்தி வுண்டாவதின்று. என்றாலும் சாறுய ஆகார பரிணாமத்தை அடைந்த அவ்வெல்ல முதலிய பதார்த்தங்களில் அம்மயக்க சக்தியின் பிரத்தியக்ஷத் தோற்ற முண்டாகின்றது. அங்ஙனமே வெற்றிலை, காசிகட்டி, பாக்கு, சுண்ணாம்பு என்னும் நான்கில் ஒவ்வொன்றிற்கு ரக்த வடிவத்தின் அநுத்பாதகத் தன்மை யுளதாயினும் இந்நான்கின் சமுதாய வடிவ தாம்பூலத்திற்கு அந்த ரக்த வடிவத்தின் உற்பாதகத் தன்மையின் பிரத்தியக்ஷத் தோற்றமுண்டாகின்றது. அங்ஙனமே தேகாகாரத்தை அடைந்த அப்பிருதிவி முதலிய நான்கு பூதங்களில் அந்த ஞான வடிவ சைதன்னியத்தின் உற்பத்திச் சம்பவிக்கின்றது. ஆகையால் அச்சைதன்னியம் இத்தேகத்தின் தர்மமேயாம். அல்லது எத்தர்மத்திற்கு எத்திரவியத்தின் அதீனம் பிரதீதி யாகின்றதோ அத்தர்மத்திற்கு அத்திரவியமே தர்மியாகின்றது. எங்ஙனம் வெம்மைப் பரிசத்திற்கு அக்கினி வடிவத் திரவியத்தின் அதீனமே பிரதீதியாகின்றது. ஆகையால் அவ்வெம்மைப் பரிசத்திற்கு அவ்வக்கினி வடிவத் திரவியமே தர்மியாம். அங்ஙனமே ஞானம், இச்சை, முயற்சி என்னு மூன்றுத் தர்மங்களுக்கும் இத்தேகத்தின் அதீனமே பிரதீதியாகின்றது. தேகமின்றி அத்தர்மங்களின் பிரதீதி யுண்டாகாது. இக்காரணத்தானும் அந்த ஞான முதலியன இத்தேகத்தின் தர்மமாகவே சித்தமாகின்றன. ஓர்கால் அந்த ஞான முதலியவைகளை இத்தேகத்தினும் வேறான வேறொன்றின் தர்மங்களாக வொப்பின் திர்ஷ்ட அர்த்தத்தின்கேடும், அதிர்ஷ்ட அர்த்தத்தின் கற்பனமுமாம் தோஷம்பிராப்தமாகும். அதாவது அந்த ஞானமுதலிய குணங்களின் ஆசிரய வடிவத்தால் பிரத்தியக்ஷமாம் தேகம் யாதோ அதன் பரித்தி

யாகத்தால் அத்தேகத்தினும் வேறான ஓர் அர்த்தம் அந்த ஞான முதலிய வைகளின் தர்மி வடிவமாக கற்பனம் செய்வதாகும். அல்லது கூறிய இந்த யுக்தி மாத்திரத்தால் அத்தேகத்தில் ஆத்ம வடிவத் தன்மைச் சித்திப்பதுடன் தேவதைகளின் குரு, பிரஹஸ்பதியானவரும் "சைதந்ய விஶிஷ்ட: காய: புருஷ:" என்னும் இச்சூத்திரத்தில் சைதன்னிய விசிஷ்ட தேகத்தினையே ஆத்மாவாகக்கூறியிருக்கின்றனர். "ஸவா ஏஷ புருஷோऽந்நரஸமய:" என்னுமிச் சுருதியும் இத்தேகத்தினையே ஆத்மாவாகக் கூறியிருக்கின்றது. ஆகையாலும் இத்தேகமே ஆத்மாவாம். இத்தேகத்திற்குண்டாம் மரணம் யாதோ அதுவே மோக்ஷமாம் பிரத்தியக்ஷ மொன்றே பிரமாணமாம். பிரத்தியக்ஷத்தினும் வேறான வேறொன்றும் பிரமாண மன்றும். இக்காரணத்தால் இவ்வுலகத்தினும் வேறான வேறோர் ஸ்வர்க, நரகாதி வடிவ பர லோகமின்றும். இஜ்ஜகத்து இயல்பாகவே உண்டாகின்றது. அவ்வியல்பினும் வேறான வேறோர் ஈஸ்வரன் அல்லது புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டமாமிவை இஜ்ஜகத்திற்குக் காரண மன்றும்.

## ருசஉ. அத்தேக ஆத்மவாதி சார்வாகரின் மத கண்டனம்.

கூறிய இச்சார்வாகரின் மதம் அத்தியந்தம் அசங்கதமாம். ஏனெனின், இவ்வுலகத்தில் அசேதனமாகியவைகளுக்கு எவ்வெப்பரிணாம விசேஷமுண்டாகின்றதோ அவ்வப்பரிணாம விசேஷ வடிவ சங்காதம் திர்ஷ்ட நிமித்த மூலமாக அல்லது அதிர்ஷ்ட நிமித்த மூலமாக அச்சங்காதத்தின் பிரயோஜகமும், அச்சங்காதத்தின் போக்தாவும், அச்சங்காதத்திற்கு முன் சித்தித்த எத்தகைய ஓர் சேதனமுமாமோ அச்சேதனத்தின் அதீனமேயாகின்றது. எங்ஙனம் அசேதன பூதங்களின் ரதம், வீடு முதலிய சங்காத வடிவ பரிணாமமாவன யாவையோ அந்த ரதம், வீடு முதலிய வடிவ பரிணாமம் திர்ஷ்ட நிமித்த மூலமாகவும், அதிர்ஷ்ட நிமித்த மூலமாகவும் அந்த ரதம், வீடு முதலியவைகளின் பிரயோஜகமும், அந்த ரதம், வீடு முதலியவைகளின் உபபோக்தாவும், அந்த ரதம், வீடு முதலியவைகளினும் முன் சித்தித்த எத்தகைய சேதன புருஷனோ அச்சேதன புருஷனது அதீனமேயாகின்றன. அப்பூர்வ சித்த போக்தா சேதனமின்றி அந்த ரதம், வீடு முதலிய வடிவ பரிணாமம் உண்டாவதின்று. இவ்வார்த்தை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். அங்ஙனமே அப்பிருதிவி முதலிய அசேதன பூதங்களின் தேகாகாரப் பரிணாமம் யாதோ அத்தேகாகாரப் பரிணாமும் திர்ஷ்ட நிமித்த மூலமாக அல்லது அதிர்ஷ்ட நிமித்த மூலமாக அத்தேகத்தின் பிரயோஜகமும், அத்தேகத்தின் உபபோக்தாவும், அத்தேகத்தினும் முன் சித்தித்த எத்தகைய சேதனமாமோ அச்சேதனத்தின் அதீனமாகவே வொப்பப்படுவனவாகும். முன் சித்தித்த போக்தா சேதனமின்றி அத்தேகாகாரப் பரிணாமமே சித்திப்பதின்றாகும். அத்தகைய தேகத்தின் போக்தாவும் அத்தேகத்தினும் முன்னிருக்கும் சேதன புருஷன் உமது தேகாத்ம வாதிகளுக்கு அங்கீகாரமின்றும். எச்சேதன போக்தாவின் பொருட்டு அப்பிருதிவி முதலிய நான்கு பூதங்கள் இத்தேகாகாரப் பரிணாமத்தை

அடையும்?. இவ்வாறாக பூர்வம் சித்தித்த சேதன போக்தாவின் அபாவத்தால் அத்தேகாகாரப் பரிணாமத்தின் அசித்தமுளதாக அத்தேகாகாரப் பரிணாமத்தின் அதீனம் எப்பிருதிவி,முதலிய பூதங்களில் சைதன்னியத்தின் உற்பத்தியை நீவிர் ஒப்புகின்றீரோ அதுவும் சித்தியாததாகும். அல்லது அந்த ஞான வடிவ சைதன்னியத்தினை பிருதிவி முதலிய குணங்களாக வொப்பின் எங்ஙனம் அப்பிருதிவி முதலிய பூதங்களின் உருவ முதலிய குணங்கள் உலகர் யாவருக்கும் சக்ஷு முதலிய இந்திரியங்களால் பிரத்தியக்ஷத் தோற்ற மாகின்றதோ அங்ஙனமே அச்சைதன்னிய வடிவ குணமும் உலகவற்கு சக்ஷு இந்திரியத்தால் பிரத்தியக்ஷமாக வேண்டும். வேறு புருஷர்களின் ஞான வடிவ சைதன்னியத்தை வேறு புருஷன் சக்ஷு இந்திரியத்தாற் காணக் கூடியவனன்று. ஆகையால் இது அறியப்படுவதாகின்றது. அந்த ஞான வடிவ சைதன்னியம் பூதங்களிளின் குணமன்றாம். ஆனால் அப்பிருதிவி முதலிய பூதங்களினும் வேறான ஓர் ஆத்மாவின் குணமேயாகும். அல்லது அச்சார்வாகர்கள் சாருயத்தின் திர்ஷ்டாந்தத்தால் தேகத்தில் சைதன்னியத்தை யொப்பியது யாதோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின், அந்த சாருயவடிவ அவயவியை ஆரம்பிக்கும் அவயவம் யாதாமோ அவ்வவயவங்களில் அந்த மயக்கசக்தி வெவ்வேறேயாகின்றது. அவ்வெல்லா அவயவங்களில் அம்மயக்கசக்தி ஒன்றாக இராது. ஓர் கால் அவ்வெல்லா அவயவங்களில் ஒன்றும் மயக்கசக்தி இருக்குமாயின் அதிக சாருயபானஞ்செய்வதால் இப்புருஷனுக்கு எவ்வளவுமயக்கம் உண்டாகுமோ அவ்வளவு மயக்கம் அற்ப சாருயபானஞ் செய்வதாலும் உண்டாக வேண்டும். அது அங்ஙனங் காணப்படுவதின்று. ஆகையால் அச்சாருயத்தின் அவயவங்களில் அம்மயக்க சக்தி வெவ்வேறாகவே வொப்பப்படுவதாகும். இவ்வாறாக இத்தேகத்தின் அவயவங்களினும் அவ்வெவ்வேறு சைதன்னியமே அங்கீகாரஞ் செய்யப்படுவதாகும். இத்தேகத்தில் அனேக அவயவங்களிருக்கின்றன. ஆகையால் இவ்வோர் தேகத்தில் அனேக சேதனத்தை வொப்புவதாகும். அத்தகைய அனேக சேதனங்களுக்கு நியம பூர்வகமாய் ஓர் மதி யுண்டாகாது. ஆனால் வெவ்வேறு மதியே யுண்டாகும். ஆகையால் எங்ஙனம் ஓர் கயற்றோடு கட்டியுள்ள அனேக சகுனி பக்ஷிகளுக்கு யாதாமோர் அபிலஷித விடத்தில் நடத்தலுண்டாய் விடமாட்டாதோ அங்ஙனமே இத்தேகத்திற்கும் ஓர் அபிலஷித விடத்தில் நடத்தல் சம்பவியாததாய் விடும். அல்லது எங்ஙனம் அனேகயானைகளால் இழுக்கப்பட்ட வாழைமரத்திற்கு நாசம் உண்டாகுமோ அங்ஙனமே வெவ்வேறு அபிப்பிராயமுடைய அநேக சேதனங்களால் இழுக்கப்பட்ட இத்தேகத்திற்கும் நாசமே உண்டாகும். இக்காரணத்தாலும் அந்த ஞானவடிவ சைதன்னியத்தில் தேகத்தின் தர்மவடிவத்தன்மைச் சம்பவியாது. அல்லது அச்சார்வாகர்கள் அச்சைதன்னியத்தினை தேகத்தினது தர்மமாகச் சித்தஞ் செய்யும்பொருட்டு எத்தேகத்தின் அதீனமாக அச்சைதன்னியத்தின் தோற்றவடிவ யுக்தி கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின், அத்தேகத்தின் அதீனமே சைதன்னியத்தின் பிரதீதியாகுமாயின் மரண புருஷன் ஏன் அறியக்கூடாது. ஆனல் மரண புருஷனுக்கும் அச்சைதன்னிய வடிவ ஞானம் உண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் தேகாகாரப் பரிணா

மத்தை அடைந்த அப்பிருதிவி முதலிய பூதங்கள் அம்மரண காலத்திலும் இருப்பதேயாம். ஆனால் மரண சரீரத்தில் அச்சைதன்னிய வடிவ ஞானம் உண்டாவதில்லை. ஆகையால் அப்பிருதிவி முதலிய பூதங்களின் தேகாகாரப் பரிணாமம் யாதோ அதற்கு அச்சைதன்னிய வடிவ ஞானத்தின் உபாதான காரணத் தன்மைச் சம்பவியாது. அல்லது அந்த ஞான வடிவ சைதன்னியத்திற்கு இத்தேகத்தின் அதீனப் பிரதீதி யுண்டாவதின் மாத்திரத்தால் அச்சைதன்னியத்திற்கு அத்தேகத்தின் தர்மத் தன்மைச் சித்தமாவதின்று. ஏனெனின், எத்தர்மம் எத்திரவியத்தின் ஆதீனமாக தோற்றுகின்றதோ அத்தர்மம் அத்திரவியத்தினதேயாகின்றதென்னும் நியமம் யாண்டிங் காணக் கிடைப்பதின்று. எங்ஙனம் கட முதலியவைகளின் நீலபீதாதி வடிவங்களின் பிரதீதி ஆலோகத்தின் அதீனமேயாகின்றது. அவ்வாலோகமன்றி அந்த காரத்தில் அந்நீல பீதாதி வடிவங்களின் பிரதீதி யுண்டாகாது. ஆனால் அந் நீல பீதாதி வடிவம் அவ்வாலோகத்தின் தர்மமன்றாம். ஆனால் அவ்வாலோ கத்தினும் வேறான கடாதிகளின் தர்மமேயாம். அங்ஙனமே அந்த ஞான வடிவ சைதன்னியத்திற்கு தேகத்தின் அதீனப் பிரதீதியுளதாகியும் அந்த சைதன்னியத்தில் தேகத்தின் தர்மத்தன்மைச் சம்பவியாது. ஆனால் அத்தே கத்தினும்வேறான ஆத்மாவிற்கே அச்சைதன்னியதர்மமிருக்கின்றது. அல்லது அச்சார்வாகர்கள் மரணத்தையே எம்மோக்ஷமாக வொப்புகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின், எத்தேகத்தின் ஜன்ம முண்டாகின்றதோ அத்தேகத்தின் மரணமும் அவஸ்யமா யுண்டாகின்றது. ஆகையால் அம் மரண வடிவ மோக்ஷம் எல்லாப் பிராணிகளுக்கு முயற்சியின்றி சுலபமாம். அத்தகைய மோக்ஷத்தின் இச்சையுடைய முமுக்ஷு ஜனங்களுக்கு அச் சார்வாகர்கள் சாஸ்திரத்தில் பிரவிருத்தியே யுண்டாகாததாகும். ஆகையால் அச்சார்வாகர்கள் சாஸ்திரமே நிஷ்பலமாகும். அல்லது பிரத்தியக்ஷப் பிரமாண மொன்றேயாம்; பிரத்தியக்ஷப்பிரமாணத்தினும்வேறானப்பிரமாண மின்று மென்னும் இவ்வாறாய வசனம் கூறுவோராகிய அச்சார்வாகரோடு இது வினவுதல் வேண்டும், இவ்வாறாய உமது வாக்கியம் பிரமாணமா? அல்லது பிரமாணமன்றா?. ஆண்டு அவ்வாறாய் எமது வாக்கியம் பிரமாணமா மென்னும் முதற் பக்ஷத்தை சார்வாகர்கள் அங்கீகரிக்கின் அச்சார்வா கர்கள் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினும் வேறான வாக்கிய வடிவ சத்தத்திற்கு பிரமாணத் தன்மையைப் பலாத்காரமாக வொப்ப வேண்டியதாகும். அவ் வாறாய எமது வாக்கியம் பிரமாண மின்று மென்னும் இவ்விரண்டாவது பக்ஷத்தை சார்வாகர்கள் அங்கீகரிக்கின் அம்மித்தியா வாதி சார்வாகரின் அந்த அப்பிரமாண வடிவ வசனத்தால் அவ்வநுமான முதலியப் பிரமாணங் களின் நிஷேதம் உண்டாகமாட்டாது. அல்லது இச்சர்வ ஜகத்துச் சுவபா வத்தானேயே உற்பன்னமாகின்றது, வேறோர் புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டமும், ஈஸ்வரனும் இஜ்ஜகத்தின் காரணமன்று மென்னு மிது அச்சார் வாகர்கள் கூறுவதும் அசங்கதமாம். ஏனெனின், ஓர் கால் சுவபாவத்தானேயே எல்லாக் காரியங்கள் உற்பன்னமாகுமாயின் அக்காரியங்களில் பரஸ்பரம் விலக்ஷணத் தன்மை உண்டாவ தின்றாகவேண்டும். அங்ஙனமாகக் காணக்

கிடைப்பதின்று. ஆனால் சில சரீரங்களோ ஜன்ம முதலாக துக்கியாகவே யிருக்கின்றன. சில சரீரங்களோ ஜன்ம முதலாக சுகியாகவே யிருக்கின்றன. சில சரீரங்களோ முற்காலத்தில் சுகியாகியும், பிற்காலத்தில் துக்கியாகியுமே யிருக்கின்றன. சில சரீரங்களோ முற்காலத்தில் துக்கியாகியும், பிற்காலத்தில் சுகியாகியுமே யிருக்கின்றன. இவ்வாறாய விலக்ஷணத் தன்மையே யாண்டுங் காணப்பட்டு வருகின்றது. அவ்விலக்ஷணத் தன்மையின் ஏதுவாகிய புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்டத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். அப்புண்ணிய, பாபமின்றி அவ்விலக்ஷணத் தன்மைச் சம்பவியாது. இக்காலத்தில் பிராணிகளுக்கு யாம் சுக, துக்க வடிவ பலத்தின் பிராப்தியைச் செய்வோமென்னும்ஞானம் அஜ்ஜட புண்ணிய பாபங்களுக்கின்றாம். ஆகையால் பிராணிகட்கு அப்புண்ணிய பாபகர்மத்தின் சுக, துக்கவடிவபலத்தைக்காண்பவராகிய சர்வஞ்ஞ ஈசுவரன் ஒருவரை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். இப்பிராணிகளுக்கு ஜன்ம காலத்திலேயே சுகம் அல்லது துக்கம் பிராப்தியாகின்றது. அச்சுக, துக்கவடிவபலத்தை பிராப்தி செய்வதாகிய புண்ணிய, பாபவடிவ அதிர்ஷ்டம் யாதோ அவ்வதிர்ஷ்டம் இஜ்ஜன்ம காலத்திலோ சம்பாதிக்கப்பட்டதன்று. ஆனால் இஜ்ஜன்மத்தினும் முன்ஜன்மத்தினதாகவே அப்புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டத்தை ஒப்புவதாகும். இப்போது உற்பன்னமாயுள்ள இச்சரீரத்தன்மை முன் ஜன்மத்திலின்றாம். ஆகையால் அப்புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்டத்தின் ஆசிரயமாகியதும், அவ்வதிர்ஷ்டத்தைச்சம்பாதிப்பதுமாகிய ஆத்மாவை இச்சரீரத்தினும் வேறாகவே அங்கீகரிக்க வேண்டும். அல்லது எமது தேகம் ஸ்தூலமாம், எமது தேகம் மெலிவாமென்னும் அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தானும் தேகத்தினும் வேறாகவே ஆத்மா சித்திக்கின்றது. அல்லது இத்தேகத்தினையே ஆத்மாவாக வொப்பின் அவயவங்களின் வளர்ச்சி, குறைவுகளால் அத்தேகத்தின் நாசமுண்டாவதால் பால்ய காலத்தில் அநுபவித்துள்ள வஸ்துவின் ஸ்மரணம் வயோதிய காலத்தில் உண்டாவதின்றாக வேண்டும். எக்காரணத்தாலெனின் அவ்வயோதிய காலத்தில் பால்ய காலத்தின் சரீரம் நாசமாய் விடுகின்றது. ஒன்றால் அநுபவிக்கப்பட்ட வஸ்துவின் ஸ்மரணம் வேறொன்றிற்கு உண்டாகாது. ஆகையால் அந்த ஸ்மரணத்தின் சித்தியின் பொருட்டும் தேகத்தினும் வேறாகவே ஆத்மாவை அங்கீகரிக்க வேண்டும். அல்லது அச்சார்வாகர்கள் இத்தேகத்தில் ஆத்ம வடிவத் தன்மையைச் சித்திச் செய்யும் பொருட்டு எந்த ஸ்தூலத்தன்மை, மெலிவுத் தன்மை முதலிய தேக தர்மங்களோடு யானென்னும் ஞானம், இச்சை, முயற்சி முதலிய ஆத்ம தர்மங்களின் சாமானாதிகரண்ணியத்தின் அநுபவங் கூறியது யாதோ அச்சாமானாதிகரண்ணியத்தின் அநுபவமோ "சிகப்பு ஸ்படிகம்" என்னும் சாமானாதிகரண்ணியத்தின் அநுபவத்தினைப் போன்று பிராந்தி வடிவமேயாம். ஆகையால் அந்த பிராந்தி வடிவ் அநுபவத்தால் அத்தேகத்தின் ஆத்ம வடிவத் தன்மைச் சித்தமாவதின்று. அல்லது அந்தச் சார்வாகர்கள் தேகத்தின் ஆத்ம வடிவத்தன்மையில் எப்பிரஹஸ்பதியின் சூத்திர வடிவ வசனம் பிரமாணமாகக் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அந்த பிரஹஸ்பதியானவர் அருளிச்

செய்த சூத்திரம் யாதோ அது விரோசனன் முதலிய அசுரர்களுக்கு மோக மூட்டும் பொருட்டே அருளிச் செய்யப்பட்டதாம். ஓர் அதிகாரியின் மோக்ஷத்தின் பொருட்டு அச்சூத்திரம் அருளிச்செய்யப் பட்டதன்று. ஆகை யால் அச்சூத்திரம் ஆப்தபுருஷனால் அருளிச்செய்யப் பட்டதாயினும் அப் பிரமாண வடிவமேயாம். அல்லது அச்சார்வாகர்கள் அத்தேகத்திற்கு ஆத்ம வடிவத் தன்மையில் எச்சுருதிப் பிரமாணங் கூறுகின்றனரோ அச்சுருதியோ தேகாத்மவாதி விரோசனன் முதலிய பிராந்த புருஷர்களின் மதத்தை அநுவா தஞ் செய்வதாகி பூர்வபக்ஷ வடிவமேயாம். ஆகையால் அச்சுருதியானும் தேகத்தில் ஆத்ம வடிவத் தன்மையின் சித்தி யுண்டாகாது. ஆகையால் அத் தேகாத்மவாதி சார்வாகர்களின் மதம் நலமுடையதன்றாம்.

## ருசரு. இந்திரிய ஆத்ம வாதி சார்வாகரின் மத வர்ணனம்.

இனி சக்ஷுர முதலிய இந்திரியங்களையே ஆத்மாவாக வொப்புவோ ராகிய சார்வாகரின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் அவ்விந்திரிய ஆத்மவாதி சார்வாகர்களின் மதத்தை நிரூபிப்பாம். ஆண்டு அச்சார்வாகர் கள் அவ்விந்திரியங்களில் ஆத்ம வடிவத் தன்மையினைச் சித்தஞ் செய்யும் பொருட்டு இவ்விதமாக யுக்திக் கூறுகின்றனர். யான் பார்ப்பவன், யான் கேழ்ப்பவன், யான் ரசனிப்பவன் என்பதான அநுபவம் சர்வப் பிராணி கட்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தில் சக்ஷுர, சுரோத்திர முதலிய இந்திரியங்கட்கு காண்டல், கேட்டல் முதலிய வியாபாரங்களோடு ஆத்மா வின் யானென்னும் தன்மை தர்மத்தின் சாமாநாதிகரண்ணியந் தோற்றுகின் றது. அங்ஙனமே "யான் குருடன், யான் செவிடன் என்னும் இவை முதலிய அநுபவத்திலும் அச்சக்ஷுர, சுரோத்திர முதலிய இந்திரியங்களின் குருட்டுத் தன்மை, செவிட்டுத் தன்மை முதலிய தர்மங்களோடு அவ்வாத்மாவினது யானென்னுந்தன்மைதர்மத்தின் சாமாநாதிகரண்ணியமே பிராப்தமாகின்றது. "யான் குருடன் அறிவேன், செவிடன் விரும்புவேன், ஊமையன் செய்வேன்" என்னும் அநுபவத்தில் அச்சக்ஷுர, சுரோத்திர முதலிய இந்திரியங்களின் குருட்டுத் தன்மை, செவிட்டுத் தன்மை முதலிய தர்மங்களோடு ஆத்மாவின் ஞானம், இச்சை, முயற்சி என்னும் மூன்று தர்மங்களின் சாமாநாதிகரண்ணி யம் பிராப்தமாகின்றது. எத்தர்மங்கட்கு பரஸ்பரம் சாமாநாதி கரண்ணியம் பிராப்தமாகின்றதோ அத்தர்மங்கட்கு தர்மி ஒன்றேயாகின்றது. அத்தர்மி களின் அபேதமின்றி அத்தர்மங்களின் சாமாநாதி கரண்ணியம் உண்டாகா தென்னும் வார்த்தை முன்னர் தேகாத்மவாதி சார்வாகரின் மதத்திற்கூறி வந் துள்ளோம். எங்ஙனம்: "நீலோகட:" என்னும் அநுபவத்தில் நீலத்தன்மை, கடத்தன்மையாமிருதர்மங்களின் சாமாநாதிகரண்ணிய பிரதீத முண்டாகின்ற தாகையால் அவ்விரு தர்மங்கட்கு அவ்வொரே கட வடிவ தர்மி ஒன்றே அங்கீகாரமாம். அங்ஙனமே கூறிய அவ்வநுபவங்களிலும் சக்ஷுர, சுரோத்திர முதலிய இந்திரியங்களின் காண்டல், கேட்டல், குருட்டுத்தன்மை, செவிட்டுத் தன்மை முதலிய தர்மங்களோடு யானென்னுந் தன்மை தர்மத்திற்கும், ஞானம் இச்சை முதலிய தர்மங்கட்கும் சாமாநாதிகரண்ணிய பிரதீதமுண் டாகின்றதாகையால் அவ்வெல்லா தர்மங்கட்கு யாதாமோர் தர்மியே அங்கீக

ரிக்கப்படவேண்டும். ஆண்டு எல்லா வாதிகளின் மதத்தில் அக்குருட்டுத்தன்மை, செவிட்டுத்தன்மை முதலிய தர்மங்கள் சக்ஷுஸ், ஸ்ரோத்திர முதலிய இந்திரியங்களினதாகவே யாகின்றன. ஆகையால் அச்சக்ஷுஸ், ஸ்ரோத்திர முதலிய இந்திரியங்களே யானென்னுந் தர்மத்தினதும், அந்தஞானம் இச்சை முதலிய தர்மங்களினதும் தர்மி வடிவமாக வொப்பப்படவேண்டும். எல்லா வாதிகளின் மதத்தில் யானென்னுந் தோற்றத்திற்கு விஷயமும், ஞானம் இச்சை முதலிய குணங்களையுடையதும் ஆத்மாவேயாகின்றது. ஆகையால் கூறிய முறைப்படி யானென்னுந் தோற்றத்தின் விஷயமாவதாலும், ஞானம் இச்சை முதலிய குணங்களையுடையதாவதாலும் இச்சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களே ஆத்மாவாம். எங்ஙனம் இத்தூலதேகம் பௌதிகமாவதால் அசேதனமாமோ அங்ஙனமே அவ்விந்திரியமும் பௌதிகமாவதால் அசேதனமேயாகும். அத்தகைய அசேதன இந்திரியங்கட்கு ஆத்ம வடிவத்தன்மைச் சம்பவியாதென யாதாமோர் வாதி சங்கிக்க அது சம்பவியாது. ஏனெனின் வேதத்தில் பிராண, இந்திரியங்கட்குத் தமது தமது பெருமையில் பரஸ்பரம் சம்வாதங் கூறப்பட்டிருக்கின்றது. அச்சம்வாதம் அசேதன பதார்த்தங்கட்குப் பொருத்தமாவதன்று. ஆனல் சேதனங்கட்கே பரஸ்பர சம்வாதங் காணப்பட்டு வருகின்றது. ஆகையால் அச்சம்வாதச் சுருதிப் பிரமாணத்தால் அவ்விந்திரியங்களில் சேதன வடிவத்தன்மையே சித்தமாகின்றது. "யான் காண்பவன், யான் கேட்பவன்" என்னு மிவை முதலிய பிரத்தியக்ஷ அநுபவத்தாலும் அவ்விந்திரியங்களில் சேதன வடிவத் தன்மையே சித்தமாகின்றது. ஆகையால் அச்சுருதி பிரத்தியக்ஷ விருத்த அர்த்தத்தில் கூறிய அவ்வநுமானத்தின் பிரவிருத்தியே சம்பவியாது. அவ்விந்திரிய வடிவ சேதன ஆத்மா நாநாவாம். நாநா சேதனங்கட்கு பரஸ்பரம் ஓர் மதியே உண்டாகா தாகையால் இத்தேகத்திற்கு பிரவிருத்தி நிவிருத்தி முதலிய யாதாமோர் வியவஹாரமும் சித்திப்பதின்றாகுமென வாதி சங்கைசெய்யின் அது சம்பவியாது. ஏனெனின் உபயோக வடிவ ஓர் பயனது வசத்தால் அனேகங்கட்கும் ஓர் மதி வாயிலாக பிரவிருத்திச் சம்பவிக்கின்றது. எங்ஙனம்: சாங்கிய மதத்தில் சத்வ, ரஜ, தமமா மிம்முக்குணங்கட்கு ஓர் மதி வாயிலாக பிரவிருத்தி யுண்டாகின்றது. எங்ஙனம்: ஓரிடத்திலுள்ள புருஷர்கட்கு ஓர் மதி வாயிலாக பிரவிருத்தி யுண்டாகின்றதோ அங்ஙனமே. அந்நாக்கு இந்திரியங்கட்கும் ஓர் மதி வாயிலாக பிரவிருத்தி சம்பவிக்கின்றது. ஆகையால் இச்சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களே ஆத்மாவாம்.

## ௫௪௪. இந்திரிய ஆத்மவாதி சார்வாகரின் மத கண்டனம்.

அவ்விந்திரிய ஆத்மவாதி சார்வாகரின் மதமும் நலமுடையதன்று. ஏனெனின் எச்சார்வாகர்கள் இந்திரியங்களையே ஆத்மாவாக வொப்புகின்றனரோ அச்சார்வாகர்களை இது வினவ வேண்டும். இத்தேகத்திலுள்ள சக்ஷுஸ், ஸ்ரோத்திரம், துவக், ரசனம், கிராணம் என்னு மிவை முதலிய இந்திரியங்கள் யாவையோ அவ்விந்திரியங்கள் பிரத்தியேக ஆத்மாவா? அல்லது அவ்விந்திரியங்களின் சமுதாயம் ஆத்மாவா?. ஆண்டு பிரத்தியேக இந்திரியம் ஆத்மாவா மென்னு முதலாவது பக்ஷத்தை சார்வாகர்கள் அங்கீகரிக்கின் அச்சார்வாகர்

கள் ஒரே தேகத்தில் நாநா ஆத்மாவினை யொப்ப வேண்டியதாகும். அச்சம்பிரதான இந்திரிய வடிவ அநேக ஆத்மாக்கட்கு நியம வாயிலாக ஓர் மதி சம்பவியாது. ஆகையால் அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மா தமது தமது விஷயத்தினது உபயோகத்தின் பொருட்டு ஒரே காலத்தில் இந்த தேகத்தினை பரஸ்பரம் வெவ்வேறிடத்தில் இழுத்துச்செல்லுவதாகும். அதனால் இத்தேகத்திற்கு நாசமே யுண்டாகும். எங்ஙனம்: அனேக யானைகளால் இழுக்கப்பட்ட வாழை மரத்திற்கு நாசமே யுண்டாவது போலும். அல்லது உபயோக வடிவ ஓர் பிரயோஜனத்தின் வசத்தால் அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மாக்கட்கு ஓர் புத்தி வாயிலாக பிரவிருத்திச் சம்பவிக்கின்றதென்னு மிவ்வசனம் அச்சார்வாகர்கள் கூறின் அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மா எல்லாக் காலத்தில் ஓர் பிரயோஜனத்தின் பொருட்டே பிரவிருத்திக்கின்றதென்னும் நியமம் கூறப்படவில்லை. ஆனால் சிலகாலத்தில் அவ்விந்திரியவடிவ அநேக ஆத்மாக்களின் பரஸ்பரவிருத்த நாநா பிரயோஜனமும் அவசியம் பிராப்தமாகும். அவ்விருத்த நாநா பிரயோஜனங்களின்வசத்தால் அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மாக்கட்கு பரஸ்பர விருத்த வெவ்வேறு மதி வாயிலாக விருத்ததேசத்தில் பிரவிருத்தி அவசியம் உண்டாகும். அதனால் இத்தேகத்தின் அழிவும் அவசியம் உண்டாகும். அல்லது அச்சார்வாகர்கள் சாங்கிய மதத்தின் சத்வ முதலிய குணங்களின் திரஷ்டாந்தத்தால் எவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மாக்கட்கு ஓர் மதி வாயிலாக பிரவிருத்திக் கூறினரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அச்சாங்கிய மதத்தில் அச்சத்துவ முதலிய குணங்களினும் போக்தா புருஷன் வேறாகவே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றான். ஆகையால் அப்போக்தா புருஷனது உபயோகத்தின் பொருட்டு அச்சத்துவ முதலிய மூன்று குணங்கட்கு ஓர் மதி வாயிலாக பிரவிருத்திச் சம்பவிக்கின்றது. அச்சார்வாகர்களோ அவ்விந்திரிய வடிவ ஆத்மாக்களினும் வேறாக வேறோர் போக்தாவினை அங்கீகரிப்பதில்லை. எப்போக்தாவின் உபயோகத்தின் பொருட்டு அவ்வநேக இந்திரியங்கள் பிரவிருத்திக்கின்றன? அல்லது அந்நாநா இந்திரியங்கட்கு ஓர் மதி வாயிலாக பிரவிருத்தியில் அச்சார்வாகர்கள் ஒரிடத்திலுள்ள புருஷர்களின் எத்திருஷ்டாந்தங் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் ஒரிடத்திலுள்ள அனேக புருஷரும் எம்மட்டும் ஜீவிப்பரோ அம்மட்டும் அவ்வெல்லோருக்கும் ஒரே மதி யிருக்கின்றதென்பதும், அவ்வாறே கூடி யிருப்பரென்பதுமான நியமம் காணக்கிடைப்பதின்று. ஆனால் ஓர் கால் வெவ்வேறு பிரயோஜனத்தின் வசத்தால் அப்புருஷர்கட்கு பரஸ்பர விருத்தமதியும், பிரிதலும் அவசியமுண்டாகும். அங்ஙனமே அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மாக்கட்கும் ஓர் காலத்தில் வெவ்வேறு பிரயோஜனத்தின் வசத்தால் பரஸ்பர விருத்தமதியும், பிரிதலும் அவசியமுண்டாகும். அக்காலத்தில் அவ்விந்திரிய வடிவ அநேக ஆத்மா இத்தேகத்தினை அவசியம் கெடுத்துவிடும். அல்லது ஓர் தேகத்தில் இந்திரிய வடிவ அநேக ஆத்மாவை அங்கீகரிக்கின் சக்ஷுரிந்திரியத்தால் பார்க்கப்பட்ட பதார்த்தங்களையும், சுரோத்திர இந்திரியத்தால் கேழ்க்கப்பட்ட பதார்த்தங்களையும் வேறு புருஷனைக் குறித்து

போதிக்கும் பொருட்டு வாக்கிந்திரியத்தால் உச்சாரண மில்லாததாகும். ஏனெனின் அவ்வாக்கிந்திரிய வடிவ வக்தா அச்சக்ஷு இந்திரிய வடிவ திர்ஷ்டாவினும், அச்சுரோத்திர இந்திரிய வடிவ சுரோதாவினும் அத்தியந்தம் வேறாம். எங்ஙனம்: சைத்திரனெனப் பெயரிய புருஷனைவிடவும், மைத்திரனெனப் பெயரிய புருஷனைவிடவும் தேவதத்தனெனப் பெயரிய புருஷன் அத்தியந்தம் வேறாகின்றானகையால் அத்தேவதத்த னென்னும் பெயரிய புருஷன் அச்சைத்திர திர்ஷ்ட வஸ்துவினையும், மைத்திர சுருத வஸ்துவினையும் கூறுபவனாகமாட்டானே அங்ஙனமே அவ்வாக்கிந்திரியமும், அச்சக்ஷு இந்திரிய திர்ஷ்ட வஸ்துவினையும், அச்சுரோத்திர இந்திரிய சுருத வஸ்துவினையும் கூறமாட்டாததாகும். சைத்திர, மைத்திர, தேவதத்தன் என்னு மூவரின் பரஸ்பர சம்வாத முளதாய பின்னர் அத்தேவதத்தனெனப்பெயரிய புருஷன் அச்சைத்திர திர்ஷ்ட வஸ்துவினையும், அம்மைத்திர சுருத வஸ்துவினையும் எங்ஙனம் கூறுபவனுவனே அங்ஙனமே சக்ஷு, சுரோத்திரம், வாக்கு என்னும் அவ்வவ்விந்திரியங்கட்கு பரஸ்பர சம்வாத முளதாய பின்னர் அவ்வாக்கிந்திரியம் அச்சக்ஷு திர்ஷ்டவஸ்துவினையும், அச்சுரோத்திர சுருத வஸ்துவினையுங் கூறுவதாகும். என்றாலும் அச்சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு அப்பரஸ்பர சம்வாதங் காணப்படுவதின்று. அதாவது அச்சக்ஷு இந்திரியம் கட முதலிய வஸ்துக்களைக் கண்டு அவ்வாக் கிந்திரியத்தைக் குறித்து கூறுவதன்று. கட முதலிய வஸ்துக்களை யான் காண்பேன் என்பதாக அவ்வாக்கிந்திரியத்திற்கு அக்கட முதலிய வஸ்த்துக்களை தரிசனஞ்செய்ய சாமர்த்தியமின்றாம். ஓர் கால் அவ்வாக்கிந்திரியத்திற்கு அக்கட முதலிய பதார்த்தங்களை தரிசிக்க சாமர்த்திய முண்டாகுமாயின் நேத்திரமில்லாத அந்தகனுக்கும் அவ்வாக்கிந்திரியத்தால் அக்கட முதலிய பதார்த்தங்களின் தரிசனம் உண்டாக வேண்டும். அங்ஙனம் உண்டாவதின்று. ஆகையால் அவ்வாக்கிந்திரியத்திற்கு அக்கட முதலிய பதார்த்தங்களை தரிசிக்க சாமர்த்திய மின்றாம். எச்சக்ஷு இந்திரியத்திற்கு அக்கட முதலிய பதார்த்தங்களை தரிசிக்க சாமர்த்திய மிருக்கிறதோ அச்சக்ஷு இந்திரியத்திற்கு அக்கட முதலிய பதார்த்தங்களைக் கூறுவதற்கு சாமர்த்தியமின்றாம். ஆனல் அச்சக்ஷு இந்திரியத்தினும் வேறான வாக்கிந்திரியத்திற்கே அவைகளைக் கூறுவதற்கு சாமர்த்திய மிருக்கிறது. அவ்வாக்கிந்திரியம் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களினும் அத்தியந்தம் வேறாவதால் அச்சக்ஷு முதலியவைகளின் விருத்தாந்தங்களைக் கூற சாமர்த்தியமின்றாகும். ஆகையால் இப்புருஷன் வேறோர் புருஷனைக் குறித்து அவ்வாக்கிந்திரியத்தால் யாதாமோர் திர்ஷ்ட, சுருத அர்த்தத்தின் போதமும் செய்ய சாமர்த்தியமின்றாகும். அதனல் சர்வவியவஹாரங்கட்கு லோபம் உண்டாகும். ஆகையால் பிரத்தியேக இந்திரியம் ஆத்மாவா மென்னும் இம்முதற்பக்ஷம்சம்பவியாது. அவ்வெல்லா இந்திரியங்களின்சமுதாயம்ஆத்மா வென்னு மிவ்விரண்டாவது பக்ஷத்தை சார்வாகர்கள் அங்கீகரிக்க அதுவும் சம்பவியாது. எற்றுக்கெனின் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களின் சமுதாயத்தில் சக்ஷு முதலிய யாதாமோர் இந்திரியத்தின் நாசமுளதாயினும் அவ்விந்திரிய சமுதாய மிருப்பதின்றாகும். ஆகையால் அவ்விந்திரிய சமுதாய

வடிவ ஆத்மாவின் நாசமுண்டாக அவ்வந்தக புருஷனும், செவிட்டுப் புருஷனும் மரணத்திற்கே பிராப்தமாவார்கள். அங்ஙனம் காணக்கிடைப்பதின்று. ஆனால் வோரிந்திரிய மில்லாத அக்குருடன், செவிடன், முதலிய புருஷர்களும் ஜீவித்திருக்கவே காணப்படுகின்றார்கள். ஆகையால் அவ்விந்திரியங்களின் சமுதாயமும் ஆத்மாவன்றாம். அல்லது அச்சமுதாயம் பிரத்தியேக இந்திரிய வடிவ சமுதாயியினும் வேறா? அல்லது வேறன்றா?. ஆண்டு அச்சார்வாகர்கள் முதலாவது வேறாமென்னும் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அவ்விந்திரியங்களில் ஆத்ம வடிவத்தன்மை சித்தியாததாகும். ஆனால் அவ்விந்திரியங்களினும் வேறாகவே ஓர் ஆத்மா சமுதாயமென்னும் பெயரால் அங்கீகரிக்கப்படுவதாகும். ஆகையால் இந்திரியமே ஆத்மாவா மென்னும் அச்சார்வாகருக்கு பிரதிஞ்ஞா ஆனியுண்டாம். அச்சார்வாகர் வேறன்றாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அப்பிரத்தியேக இந்திரியத்திற்கே ஆத்மத்தன்மை பிராப்தமாகும். ஆகையால் அப்பிரத்தியேக இந்திரியத்திற்கு ஆத்ம வடிவத் தன்மையில் முன்னர் எத்தோஷங் கூறினாமோ அச்சர்வ தோஷம் இப்பக்ஷத்திலும் பிராப்தமாகும். இக்காரணத்தானும் அவ்விந்திரியம் ஆத்மாவன்றாம். அல்லது எமது சக்ஷு இந்திரியம் அதிக திர்ஷ்டியுடையதாம், எமது சக்ஷு இந்திரியம் குறைந்த திர்ஷ்டியுடையதாம் என்னு மிவைமுதலிய அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தானும் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களினும் வேறாகவே ஆத்மா சித்தமாகின்றது. அல்லது அச்சார்வாகர்கள் அவ்விந்திரியங்கட்கு ஆத்ம வடிவத் தன்மையில் ஏந்த யானென்னும் தன்மைத் தர்மத்தினோடு அவ்விந்திரியங்களின் தரிசன முதலிய தர்மங்கட்கு சாமானாதிகரண்ணியம் கூறுகின்றனரோ அச்சாமனாதிகரண்ணியத்தின் அநுபவமோ "சிகப்பு ஸ்படிகம்" என்னும் சாமானாதிகரண்ணிய அநுபவத்தினைப்போன்று பிரம வடிவமேயா மாகையால் அந்த பிரம வடிவ அநுபவத்தால் அவ்விந்திரியங்கட்கு ஆத்ம வடிவத்தன்மை சித்தியாது. அல்லது அச்சார்வாகர்கள் இந்திரியங்களின் சேதனத் தன்மையில் எவ்விந்திரியங்களின் சம்வாதம் பிரதிபாதகஞ் செய்யும் சுருதியைக் கூறினரோ அச்சுருதியோ அச்சக்ஷு முதலிய இந்திரியங்களின் அபிமானி தேவதையை விஷயமாகக்கூறியதாம். அஜ்ஜட இந்திரியங்களை விஷயஞ் செய்வதன்றாம். அவ்விந்திரியங்களின் அபிமானி தேவதை சேதனமாம். ஆகையால் அவ்விந்திரிய ஆத்மவாதஞ் சம்பவியாது. ஆகையால் இந்திரிய ஆத்மவாதி சார்வாகர்து மதம் நலமுடையதன்றாம்.

## ௫௪௫. பிராண ஆத்ம வாதி சார்வாகர்களது மத வர்ணனம்.

இனி பிராணனை ஆத்மாவாக வொப்புவோராகிய சார்வாகர்களின் மதத்தை கண்டிக்கும் பொருட்டு முதலில் அப்பிராண ஆத்மவாதி சார்வாகர்களின் மதத்தை நிரூபிப்பாம். ஆண்டு பிராண ஆத்மவாதி சார்வாகர்கள் பிராணனில் ஆத்ம வடிவத் தன்மையைச் சித்தி செய்யும் பொருட்டு இவ்விதமாக யுக்திக் கூறுகின்றனர். சொப்பனம் சுஷுப்தியில் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களின் லயமுளதாகியும் அப்பிராணன் இருப்பதாகின்றது. ஆகையால் ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி என்னு மூன்று அவஸ்தை

யிலிருப்பதாவதால் அப்பிராணனே ஆத்மாவாம். வியபிசாரியாவதால் அவ்விந்திரியம் ஆத்மாவன்றும். அல்லது இத்தேகத்தில் எதனது இருப்புளதாக ஜீவன வியவஹார முண்டாகின்றதோ, எதனது இருபின்மை உளதாக மரண வியவஹாரமுண்டாகின்றதோ அதனை ஜீவாத்மாவென்பர். இத்தகைய ஜீவாத்மாவின் லக்ஷணமும் இப்பிராணனிலேயே சம்பவிக்கின்றது. ஏனெனின் எம்மட்டும் இத்தேகத்தில் பிராணனிருக்குமோ அம்மட்டுமே இத்தேகத்தில் ஜீவன வியவஹாரமுண்டாகின்றது. எப்பொழுது இத்தேகத்தினின்றும் பிராணன் விட்டுப் போகின்றதோ அப்பொழுது இத்தேகத்தில் மரண வியவஹார முண்டாகின்றது. "ஜீவாபேதம் வாவ கிலேதம் ம்ரியதே ந ஜீவோ ம்ரியதே" என்னு மிச்சுருதியானதும் பிராணவடிவ ஜீவாத்மாவால் பரித்தியாகம் செய்யப்பட்டுள்ள தேகத்திலேயே மரண வியவஹாரங் கூறியிருக்கிறது. இக்காரணத்தானும்இப்பிராணனேஆத்மாவாகசித்திக்கின்றது. அல்லது "ப்ரேயோ ந்யஸ்மாத் ஸர்வஸ்மாதந்தரதரம் யதயமாத்மா" இச்சுருதியானது புத்திரன், தனம், ஸ்திரீ முதலிய சர்வ பதார்த்தங்களினும் பிரியதமத்தினை ஆத்மாவாகக் கூறி யிருக்கின்றது. அவ்வெல்லா வற்றினும் பிரியதமத்தன்மை இப்பிராணனிலேயே காணப்படுகின்றது. ஏனெனின் எப்பொழுது யாதாமோர் காரணத்தால் பிராணனது நாசத்தின் பிரசங்கம் வந்து சம்பவிக்கின்றதோ அப்பொழுது இவ்வுலகத்தவர் தமதுபிராணனை ரக்ஷிக்கும்பொருட்டு தனம், புத்திரன், ஸ்திரீ முதலிய சர்வ பதார்த்தங்களைப் பரித்தியாகம் செய்து விடுகின்றனர். அங்ஙனமே அஸ்தம், பாத முதலிய இந்திரியங்களின் நாசஞ் சம்பவிக்கினும் அப்பிராணனை ரக்ஷிக்கின்றனர். இக்காரணத்தானும் அப்பிராணனே ஆத்மாவாகச் சித்தமாகின்றது. அல்லது "யான் பசிதாக முடையவன்" என்னும் இவ்வுலகத்தின் அநுபவத்தானும் அந்த பசிதாக தர்மமுடைய பிராணனிலேயே யானென்னும் தன்மைத் தர்மம் தோற்றுகின்றது. எல்லா வாதிகளின் மதத்தில் யானென்னும் பிரதீதியின் விஷயம் ஆத்மாவேயாகின்றது. இக்காரணத்தானும் அப்பிராணனே ஆத்மாவாகச் சித்திக்கின்றது. அல்லது "அந்யோந்தர ஆத்மா ப்ராணமயஃ" என்னும் சுருதியும் அப்பிராணனையே ஆத்மாவாகக் கூறியிருக்கின்றது. அல்லது வேதத்தில் இக்கதை கூறப்பட்டிருக்கின்றது. அதாவது ஓர் காலத்தில் சக்ஷு முதலிய இந்திரியங்களும், பிராணனும் தமது தமது பெருமையில் விவாவதம் செய்துக் கொண்டு பிரம்மாவின் சமீபத்திற்குச் சென்றமையால் அப்பிரம்மா அவைகளைக் குறித்து இவ்வாறுய வசனம் கூறினர். நீவிர் யாவரும் இத்தேகத்தில் பிரவேசித்து வொவ்வொருவரும் வெளிப்பட எதனது வெளிப்படுதலால் இத்தேகம் அமங்கல வடிவமாய் விடுகிறதோ அது உங்களில் சிரேஷ்டமா மென அத்தகைய பிரம்மாவின் வசனத்தை அங்கீகரித்து அச்சர்வ இந்திரிய பிராணன்கள் அத்தேகத்தில் பிரவேசித்து வொவ்வொன்றாக வெளியாயிற்று. ஆண்டு சக்ஷு, சுரோத்திர முதலியவைகள் தேகத்தினின்று வெளியாகியும் அத்தேகம் குருடு, செவிடு முதலிய வடிவமாக ஜீவித்திருந்தது. எப்பொழுது பிராணன் அத்தேகத்தினின்றும் வெளியாயிற்றோ அப்பொழுது அத்தேகம்

அமங்கல வடிவமாகி விழுந்து விட்டது. அதன் பின்னர் "ஊ0ெதவவ-ூத்ரா நூரக்ஷஸ" என்னும் இச்சுருதியானது எங்ஙனம் அம்மாதா புத்திரர்களை ரக்ஷிக்கின்றாளோ அங்ஙனமே இந்திரிய முதலிய சங்காதங்களை ரக்ஷிக்குந்தன்மை அப்பிராணனுக்கென்றே கூறியிருக்கிறது. அக்காலத்தில் அப்பிராணன் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களைக் குறித்து இவ்வாறாய வசனங்கூறினதாம். "ஊ0ொஹ ொவஉ்யாஹ0ெவ தத்வ0வயா த்ூாநம வ்ரவிஹஜெ்யதஉ்ா ணவஷ்ஹ்ய வியாாயாமி" (இ-ள்.) நீவிர் மோகத்தை அடைய பிராணனாகியயானே உங்களுக்கு ஐந்துவகையால் இச்சரீரத்தை நிலைக்கச்செய்வேன். என்னு மிச்சுருதியால் அப்பிராணனுக்கே இச்சங்காதத்தை நிலைக்கச் செய்யும் ஆதாரத் தன்மை தோற்றுகின்றது. சங்காதத்தை ரக்ஷிக்குந் தன்மையும், ஆதாரத் தன்மையும் ஆத்மாவிலேயே சம்பவிக்கின்றது. வேறொன்றிலும் சம்பவியாது. இக்காரணத்தானும் இப்பிராணனே ஆத்மாவாகச் சித்திக்கின்றது.

### ருசக. பிராண ஆத்மவாதி சார்வாகரது மத கண்டனம்.

பிராண ஆத்மவாதியின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் அப்பிராணனில் அநுமானப் பிரமாணத்தால் அனாத்ம வடிவத்தன்மையே சித்தமாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம் "வ்ராணஃ கநாத்ூா வாய-ஃவாா ஸ வாஹ்யவாய-ஃவஸ" (இ-ள்.) அப்பிராணன் அனாத்மாவாக யோக்கியமாம், வாயு வடிவமாவதால், யாண்டாண்டு வாயுத்தன்மையிருக்கின்றதோ ஆண்டாண்டு அநாத்மதன்மையேயிருக்கின்றது. எங்ஙனம்: பாஹிய வாயுவில் வாயுத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அப்பாஹிய வாயுவில் அநாத்மதன்மையே இருக்கின்றது. அங்ஙனமே அவ்வாயுத் தன்மை அந்தர பிராணனிலு மிருக்கின்றது. ஆகையால் அப்பிராணனும் அனாத்மாவேயாகும். அல்லது பிராணனை நிலைக்கச் செய்வது யாதோ அதனை ஜீவனென்பர். இவ்வாறாய ஜீவ சத்தத்தின் அர்த்தம் வியாகரணத்தின் முறையாக சித்தமாகின்றது. இவ்வாறாய ஜீவ சத்தத்தின் அர்த்தம் பிராணனில் பொருந்தாது. ஏனெனின் பிராணன் ஓர் கால் தன்னைத் தானே நிலைக்கச் செய்யுமாயின் அவ்வொரே பிராணனில் நிலைத்தல் வடிவ கிரியையின் கர்த்தாத் தன்மையும், கர்மத் தன்மையும் பிராப்தமாகும். அவ்வொரே வஸ்துவில் வொரே கிரியையின் கர்த்தாத் தன்மையும், கர்மத் தன்மையும் அத்தியந்தம் விருத்தமாம். ஆகையால் அப்பிராணனைவிட வேறாகவே ஓர் ஆத்மாவை அங்கீகரிக்க வேண்டும். எமது சுவாசம் அதிகமாகச் செல்லுகின்றது, எமது சுவாசம் குறைவாகச் சொல்லுகின்றது. என்னும் அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தானும் அந்த சுவாச வடிவ பிராணத்தினும் வேறாகவே ஆத்மா சித்திக்கின்றது. அல்லது இப்பிராணனது பரிசம் பிரத்தியக்ஷத் தோற்றமாகின்றது. எவ்வெத் திரவியம் பிரத்தியக்ஷப் பரிசமுடையதாகின்றதோ அவ்வத்திரவியம் சாவயவமேயாகின்றது. எங்ஙனம்: கட, பட முதலியத் திரவியங்கள் பிரத்தியக்ஷப்

பரிசமுடையதாவதால் சாவயவமே யாமோ அங்ஙனமே பிரத்தியக்ஷப் பரிசமுடையதாவதால் அப்பிராணனும் சாவயவமேயாகும். எவ்வெத் திரவியம் சாவயவமாமோ அவ்வத்திரவியம் உற்பத்தி, நாசமுடையதே யாகின்றது. எங்ஙனம்: கட, பட முதலிய திரவியங்கள் சாவயவமாவதால் உற்பத்தி, நாசம் உடையதேயாம். அங்ஙனமே பிராணனும் சாவயவமாவதால் உற்பத்தி, நாசமுடையதேயாகும். எவ்வெத்திரவியம் உற்பத்தி, நாசமுடையதாமோ அவ்வத்திரவியம் அநித்தியமேயாகும். எங்ஙனம்: கட, பட முதலியத் திரவியங்கள் உற்பத்தி, நாசமுடைய தாவதால் அநித்தியமே யாமோ அங்ஙனமே உமது பிராண வடிவ ஆத்மாவும் உற்பத்தி, நாச முடைய தாவதால் அநித்தியமேயாகும். அவ்வாசிரய பிராண வடிவ ஆத்மாவின் நாசமுண்டாக தன்னை ஆசிரயித்த புண்ணிய, பாப கர்மங்கட்கும் அவசியம் நாசமுண்டாகும். ஆகையால் செய்யப்பட்டுள்ள புண்ணிய, பாப கர்மங்களினது சுக, துக்கவடிவ பலத்தின் போகமின்றி நாசவடிவ கிருதநாசதோஷம் பிராப்தமாகும். அங்ஙனமே செய்யப்படாத கர்மங்களின் பலத்தின் பிராப்தி வடிவ அகிருதாப்பியாகம தோஷம் பிராப்தமாகும். இக்காரணத்தாலும் பிராணன் ஆத்மாவன்றும். அல்லது அச்சார்வாகர்கள் இத்தேகத்தின் ஜீவனம் எப்பிராணனது அதீனமாகக் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் இத்தேகத்தின் ஜீவனம் கேவலம் பிராணனது அதீனமன்றும். ஆனால் பிராணனை தரிக்கச் செய்வதாகிய ஜீவாத்மாவின் அதீனமேயாம். இக்காரணத்தானேயே “ந ப்ராணேந நாபாநேந மர்த்யோ ஜீவதி கஶ்சந இதரேண து ஜீவந்தி யஸ்மிந்நேதாவுபாஶ்ரிதௌ” என்னு மிக்காடகசுருதியில் உலகர்களின் ஜீவனம் பிராண, அபானனால் கூறப்பட்டதன்றும். ஆனால் பிராண, அபானனை தரிக்கச் செய்வதாகிய ஜீவாத்மாவானேயே அஜ்ஜீவனங் கூறப்பட்டதாம். அல்லது பிராணாத்ம வாதியானவர் எப்பிராணனில் யாவற்றினும் பிரியதமத்தன்மை கூறினரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் உலகர் யாதாமொருவருக்கு அத்தியந்த துக்கமுள்ளதாக விஷ முதலியவைகளை புசித்து அப்பிராணனையும் பரித்தியாகம் செய்து விடுகின்றனர். ஆகையால் இது அறியப்படுவதாகின்றது. இப்பிராணனினும் அத்தியந்த பிரியதமம் ஓர் ஆத்மாவாம்; அவ்வாத்மாவின் சுகத்தின் பொருட்டு இவ்வுலகர் தமது பிராணனையும் பரித்தியாகம் செய்து விடுகின்றனர். அல்லது பிராண ஆத்ம வாதியானவர் அப்பிராணனது ஆத்மத் தன்மையில் “யான் பசிதாகமுள்ளவன்” என்னும் எச்சாமானாதிகரண்ணியத்தின் அநுபவங் கூறினரோ அவ்வநுபவமோ “சிகப்பு ஸ்படிகம்” என்னும் அநுபவத்தினைப் போன்று பிரம வடிவமேயாம். ஆகையால் பிரம வடிவ அநுபவத்தால் அப்பிராணனுக்கு ஆத்ம வடிவத் தன்மைச் சித்தமாவதின்று. அல்லது பிராணாத்ம வாதியானவர் அப்பிராணனுக்கு ஆத்ம வடிவத் தன்மையில் “ஸோ(அ)ஹம் ப்ராணோ(அ)ஸ்மி” என்னும் எச்சுருதி கூறினரோ அச்சுருதியோ அந்தபிராண ஆத்ம வாதியின் பிராந்தி சித்த மதத்தை அநுவாதம் செய்வதாகி பூர்வ பக்ஷ வடிவமேயாம். ஆகையால் அச்சுருதியி

ஞனும் பிராணனுக்கு ஆத்ம வடிவத் தன்மைச் சித்தமாகாது. அல்லது பிராண ஆத்ம வாதியானவர் பிராணனுக்கு சேதனத் தன்மையில் எவ் விந்திரியங்களோடு பிராணனது சம்வாதங் கூறினரோ அச் சம்வாதமும் பிராணனது அபிமானி தேவதையை விஷயஞ் செய்வதாம்; ஜடப்பிராணனை விஷயஞ் செய்வதன்று. ஆகையால் பிராண சம்வாத சுருதியினாலும் பிராண னுக்கு ஆத்ம வடிவத்தன்மைச் சித்தமாவதின்று. ஆகையால் பிராண ஆத்ம வாதி சார்வாகர்களின் மதமும் அத்தியந்தம் அசங்கதமாம்.

## ருசஎ. மனதினை ஆத்மாவாக வொப்புவோராகிய சார்வாகரது மத வர்ணனம்.

இனி மனதினை ஆத்மாவாக வொப்புவோராகிய சார்வாகர்களின் மதத்தைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் அவர்கள் மதத்தினை நிரூபிப்பாம். ஆண்டு அம்மன ஆத்மவாதி சார்வாகர் அம்மனதிற்கு ஆத்ம வடிவத் தன்மையில் இவ்வாறுய யுக்தி கூறுகின்றனர். சொப்பன அவஸ்தையில் சக்ஷு முதலிய இந்திரியங்களின் ஒய்வு உளதாகியும் அம்மனதினாலேயே எல்லா வியவஹாரங்கள் சித்தமாகின்றன. இச்சங்காதத்தில் அம்மனதிற்கே சுவதந்தி ரத்தன்மையிருக்கின்றது; மற்றய இந்திரியமுதலிய யாவும் மனதினையே அதீன மாகப்பெற்றிருப்பனவாம். இக்காரணத்தானேயே அம்மனதின் சம்பந்தமுள தாக ஞானமுதலியவைகளின் உற்பத்தியுண்டாகின்றது. அம்மனதின் சம்பந்த மிலதாக அந்த ஞான முதலியவைகளின் உற்பத்தி யுண்டாவதின்று. அதா வது சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு தமது தமது ரூப முதலிய விஷயங்க ளோடு சம்பந்த முளதாயினும் எம்மட்டும் அம்மனதிற்கு அச்சக்ஷு முத லிய இந்திரியங்களோடு சம்பந்தமின்றாமோ அம்மட்டும் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களால் சாக்ஷுஷமுதலிய ஞானங்களின் உற்பத்தியுண்டாகிறதில்லை. அம்மனதின் சம்பந்தமுண்டாயபின்னரே அச்சாக்ஷுஷ முதலியஞானங்கட்கு உற்பத்தியுண்டாகின்றது. ஆகையால் இச்சங்காதத்தில் அம்மனமே சுவதந்திர மாம். அல்லது "காமஃ ஸங்கல்போவிசிகித்ஸா ஶ்ரத்தா௳ஶ்ரத்தா த்ருதிரத்ருதிர் ஹ்ரீர்தீர்பீரித்யேதத்ஸர்வம் மந ஏவ" என்னு மிச்சுருதி இச்சை, சங்கல்பம், சம்சயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, ஞானம், பயம் என்னு மித் தர்மங்களை மனதின் தர்மமாகவே கூறியிருக்கின்றது. எல்லா வாதிகளின் மதத்தில் இவ்விச்சை முதலிய தர்மங்களை யுடையது ஆத்மா வென்பதே பிரசித்தமாம். ஆகையால் கூறிய இச்சுருதியும் அவ் விச்சை முதலியவைகளில் மனதின் தர்மத் தன்மையினைக் கூறுவதாய் அம்ம னதிலேயே ஆத்ம வடிவத்தன்மையைப் போதிக்கின்றது. "மநோமயோ௳ந்யஆத்மா" "மநோமயஃ ப்ராணஶரீரோ பாஸ்வரூபஃ" என்னு மிரு சுருதிகளோ சாக்ஷாத்தாக அம்மனதினை ஆத்மாவாகக் கூறுகின்றன. "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோஃ" என்னும் சுருதியும் அம்மனதினையே பந்தமோ க்ஷத்தின் காரணமாகக் கூறியதாகையால் அம்மனமே ஆத்மாவாம்.

ருசஅ. மன ஆத்மவாதி சார்வாகரின் மத கண்டனம்.

இச்சார்வாகரின் மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் எச்சார்வாக வாதிகள் மனதினையே ஆத்மாவாக வொப்புகின்றனரோ அவர்களோடு இது வினவுதல்வேண்டும். அதாவது மனவடிவ ஆத்மா அணுத்வ பரிமாணமுடையதா அல்லது தேஹத்தின் சமான மத்தியம பரிமாணமுடையதா? ஆண்டு அச்சார்வாகர்கள் முதலாவது அணுத்வ பக்ஷத்தை யங்கீகரிக்கின் அச்சார்வாகர்களின் மதத்தில் அம்மன வடிவ ஆத்மாவின் ஞானம், இச்சை, சுகம், துக்கம் என்னு மிவை முதலிய தர்மங்களின் பிரத்தியக்ஷ முண்டாகாததாகும். ஏனெனின் சாக்ஷுஷம், துவாசம், ராசனம், கிராணஜம், சுரோத்திரஜம், மானசம் என்னு மிவ்வறுவகை பிரத்தியக்ஷத்தில் மஹத்வ பரிமாணத்திற்கே காரணத்தன்மை யுண்டாகின்றது. அம்மஹத்வ பரிமாணமின்றி யொருபோதும் திரவிய குண முதலியவைகளின் யாதாமோர் பிரத்தியக்ஷமும் உண்டாகாது. அம்மஹத்வ பரிமாணம் அம்மனதிலின்றும். ஆகையால் அம்மன வடிவ ஆத்மாவின் ஞானம், சுக முதலிய தர்மங்களின் பிரத்தியக்ஷம் ஒருவருக்கும் உண்டாகாததாகும். "யான் அறிபவன், யான் சுகி, யான் துக்கி" என்னு மிவ்வாற்றால் அந்த ஞான, சுக முதலிய தர்மங்களின் பிரத்தியக்ஷம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அல்லது அச்சார்வாகர் அம்மன வடிவ ஆத்மாவினை அணுத்வ பரிமாணமுடையதாக வொப்பின் அச்சார்வாகரது மதத்தில் சர்வ சரீர வியாபி சுக, துக்கங்களின் அநுபவம் உண்டாகாததாகும். ஏனெனின் அம்மன வடிவ ஆத்மா அணுவாமாகையால் சரீரத்தின் யாதாமோரிடத்திலேயே இருக்கும்; சரீர முற்றிலுமிருப்பதன்று. கோடைகாலத்தில் சூரியனது ஆதபத்தால் வெப்பமடைந்த புருஷனுக்கு பாத முதலாக சிரமட்டுமாம் சரீரமுற்றிலும் துக்கத்தின் அநுபவ முண்டாகின்றது. அப்புருஷன் குளிர்ந்த நீரில் முழுகுவதால் சரீரமுற்றிலும் சுகத்தின் அநுபவ முண்டாகின்றது. சம்பூர்ண சரீர வியாபி சுக, துக்கத்தின் அநுபவம் அவ்வணுவாத்மா பக்ஷத்தில் சம்பவியாததாகும். அல்லது அம்மன வடிவ ஆத்மா தேக அளவின் மத்தியம பரிமாணமுடையதா மென்னுமிரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் இவ்விரண்டாவது பக்ஷத்தில் அம்முதற் பக்ஷத்தில் கூறிய இருதூஷணங்களோ பிராப்தமாகாது; என்றாலும் இவ்விரண்டாவது பக்ஷத்தில் ஒரே காலத்தில் சாக்ஷுஷ முதலிய சர்வ ஞானங்களின் உற்பத்தி வடிவ தூஷணம் பிராப்தமாகும். ஏனெனின் அம்மத்தியம பரிமாணமுடைய மனதிற்கு ஒரேகாலத்தில் சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்களினோடு சம்பந்தமிருக்கின்றது. அக்காலத்தில் அச்சக்ஷு முதலிய எல்லா விந்திரியங்கட்கு தமது தமது ரூப முதலிய விஷயங்களினோடும்சம்பந்தமுமிருக்கின்றது. ஆகையால் வொரேகாலத்தில் சாக்ஷுஷ முதலிய சர்வ ஞானங்களின் உற்பத்தி யுண்டாவதாகும். அங்ஙனமாவதின்று. வெவ்வேறு காலத்திலேயே சாக்ஷுஷ முதலிய ஞானங்களின் உற்பத்தி யுண்டாகின்றது. இவ்வார்த்தை பின்னர் மன நிரூபணத்திற் கூறுவாம். ஆகையால் அம்மன வடிவ ஆத்மா மத்தியம பரிமாண முடையதென்பதும் சம்பவியாது. அல்லது எவ்வெத் திரவியம் மத்தியம பரிமாண முடையதாகின்

றதோ அவ்வத்திரவியம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம் கட, பட முத லியத் திரவியங்கள் மத்தியம பரிமாண முடையதாவதால் அநித்தியமேயாம். அங்ஙனமே அம்மன வடிவ ஆத்மாவும் மத்தியம பரிமாணமுடையதாவதால் அநித்தியமேயாகும். அம்மன வடிவ ஆத்மாவிற்கு அநித்தியமுளதாக கிருத நாசம், அகிருதாப்பியாகமமென்னு மிரு தோஷங்கள் பிராப்தமாகும். ஆகை யால் அம்மனம் ஆத்மாவன்றாம். அல்லது அச்சார்வாகர்கள் அச்சங்காதத் தில் மனதிற்கு எச்சுதந்திரம் கூறினரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் பாஹ்யவிஷயங்களில் பிரவிருத்தமாம் மனம்யாதோ அப்பஹிர்முக மனதின் நிரோதம் வைராக்கியம், அப்பியாச முதலிய உபாயங்களால் கூறப்பட்டிருக் கின்றது. ஆகையால் இது அறியப்படுவதாகின்றது. வைராக்கியம், அப்பியாச முதலிய உபாயங்களால் மனதை நிரோதஞ்செய்வதாகிய ஆத்மா வேறே யாம. அல்லது எனது மனம் இப்பொழுது ஸ்திரமாக வில்லை. எனது மனம் இப்பொழுது ஸ்திரமாக இருக்கின்றது என்னும் அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வுலகரது அநுபவத்தாலும் ஆத்மா வேறாகவே சித்தமாகின்றது. அல்லது "மநஸைவாநுத்ரஷ்டவ்யம்" என்னும் சுருதியானது அம்மனதினை ஆத்ம சாக்ஷாத்காரத்தின் கரண மாகக் கூறி யிருக்கிறது. எப்பதார்த்தம் எக்கிரியையின் கரணமாமோ அப்பதார்த்தம் அக்கிரியையின் கர்மமாகாது. எங்ஙனம் தரிசன வடிவ கிரி யைக்கு கரணவடிவ எச்சக்ஷு இந்திரியமாமோ அச்சக்ஷு இந்திரியம் அத்தரி சன வடிவ கிரியைக்கு கர்ம வடிவமாவதன்று. ஆனால் அச்சக்ஷு இந்திரி யத்தினும் வேறான கட முதலிய பதார்த்தங்களே அத்தர்சன வடிவ கிரியைக்கு கர்ம வடிவமாகின்றன. அங்ஙனமே அச்சுருதி சித்த அத்தரிசன வடிவக் கிரியைக்கு கர்ம வடிவ அவ்வாத்மாவும் அக்கரண வடிவ மனதினும் வேறாகவே சித்தமாகின்றது. அல்லது அச்சார்வாகர்கள் அம்மனதிற்கு ஆத்ம வடிவத்தன்மையில் "காமசங்கல்பம்" என்னுமிவை முதலிய எச்சுருதி கூறின ரோ அச்சுருதியும் அக்காம முதலியவைகளில் மனதின் தர்மத்தினைக் கூறிய தன்று. ஆனால் அச்சுருதி அக்காம முதலிய தர்மங்களில் மனோ ஜன்னியத் தன்மையினைக்கூறியிருக்கின்றது. அக்காமமுதலியவைகளில் மனதிற்குநிமித்த காரணத்தன்மை யாமும் அங்கீகரிக்கின்றோம். ஆகையால் அச்சுருதியால் அம் மனதிற்கு அவ்விச்சை முதலிய தர்மங்களின் உபாதான காரணத் தன்மைச் சித்திப்பதின்று. ஆகையால் அம்மன ஆத்மவாதி சார்வாகரின் மதமும் நல முடையதன்றாம். வேதத்திற்குப் பிரமாணத் தன்மையினை அங்கீகரியாதவரா கிய சார்வாகர் முதலிய நாஸ்திகர்களைக் குறித்து சுருதிப் பிரமாணத்தின் விரோதங் கூறுதல் உசிதமன்றாம். என்றாலும் எங்ஙனம் அந்த நாஸ்திகர்கள் அவ்வேத வடிவசுருதிக்கு பிரமாணமின்மை ஒப்பியும் தமதுமதத்தில் ஆஸ்திக புருஷர்கட்கு சிரத்தை யுண்டாம் பொருட்டு அச்சுருதிப் பிரமாணத்தைக் கூறுகின்றனரோ அங்ஙனமே அவ்வாஸ்திக புருஷர்கள் அந்நாஸ்திகர்களின் மதத்தில் அசிரத்தை செய்யுமாறு அந்நாஸ்திகர்களைக் குறித்து சுருதிப்பிர மாணத்தின் விரோதங் கூறினும் உசிதமாம்.

---

## ருசகூ. புத்திரனை ஆத்மாவாக வொப்புவோராகிய பஹிர்முக வாதிகளின் மத வர்ணனம்.

கூறிய அத்தேகாத்மவாதி சார்வாகரிலும் அத்தியந்த பஹிர்முக சில பாமர ஜனங்களோ புத்திரனை ஆத்மாவாக வொப்புகின்றனர். அதனிடத்தில் இந்த யுக்தி கூறுகின்றனர். "புத்ரே புஷ்டே புஷ்டோஹம் புத்ரே நஷ்டே நஷ்ட:" (இ-ள்.) புத்திரனது புஷ்டி யுண்டாக யான் புஷ்டி அடைவேன். அங்ஙனமே புத்திரனது நஷ்ட முண்டாக யான் நஷ்டம் அடைவேன். என்னும் அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தால் புத்திரனிடத்திலேயே யானென்னும் தோற்றத்திற்கு விஷயத்தன்மைத் தோற்றுகின்றது. "ஆத்மா வை ஜாயதே புத்ர:" என்னுமிச்சுருதியும் புத்திரனையே ஆத்மாவாகக் கூறுகின்றது. ஆகையால் புத்திரனே ஆத்மாவாம்.

## ருரு௦. புத்திர ஆத்மவாதியின் மத கண்டனம்.

இப்புத்திர ஆத்மவாதியின் மதம் அத்தியந்தம் அசங்கதமாம். ஏனெனின் புத்திரனே ஆத்மாவாகுமாயின் அப் புத்திரனில்லாத பிரமசாரி முதலிய புருஷன் ஆத்மாவில்லாதவனாக வேண்டும். அப்புத்திர வடிவ ஆத்மாவின் மரணத்தின் பின்னர் பிதாவின் ஜீவனம் உண்டாவதின்றாக வேண்டும். இங்ஙனம் காணப்படுவதின்று. ஆகையால் அப்புத்திரன் ஆத்மாவன்றாம். அல்லது அப்புத்திர ஆத்மவாதியானவன் அப்புத்திரனது ஆத்மத் தன்மையில் "புத்ரே புஷ்டே புஷ்ட:" என்னுமிவை முதலிய உலகர்களின் எவ்வநுபவங் கூறினனோ அவ்வநுபவமோ "சிகப்பு ஸ்படிகம்" என்னும் அநுபவத்தினைப் போன்று மயக்க வடிவமேயாம். ஆகையால் அம்மயக்க வடிவ அநுபவத்தால் அப்புத்திரனிடத்து ஆத்ம வடிவத் தன்மை சித்தமாகாது. அல்லது அப்புத்திர ஆத்ம வாதியானவன் அப்புத்திரனது ஆத்ம வடிவத் தன்மையில் "ஆத்மா வை ஜாயதே புத்ர:" என்னும் எச் சுருதிப் பிரமாணத்தைக் கூறினனோ அச்சுருதி அப்புத்திராத்மவாதி மயக்க புருஷர்களின் மதத்தினை அநுவாதம் செய்வதாகி பூர்வ பக்ஷ வடிவமாம். ஆகையால் அச்சுருதியானும் புத்திரனது ஆத்ம வடிவத் தன்மைச் சித்தமாகாது. அல்லது "ந ஜாயதே ம்ரியதே வா கதாசிந் நாயம் பூத்வா பவிதா வா ந பூய:" என்னுமிச்சுருதி ஆத்மாவினை ஜனன மரண மில்லாததாகக் கூறியிருக்கின்றது. அப்புத்திரனது ஜனன மரணமோ பிரசித்தமாகத் தோற்றுகின்றது. எனது புத்திரன் புத்திவான், எனது புத்திரன் மூர்க்கன் என்னும் அநுபவத்தானும் அப்புத்திரனினும் வேறாகவே பிதாவின் ஆத்மா சித்தமாகின்றது. ஆகையால் சுருதி, யுக்தி, அநுபவமா மூன்றிற்கும் விரோதமாவதால் அப்புத்திராத்மவாதி பாமரர்களின்மதம் அத்தியந்தம் அசங்கதமாம். இவ்வளவு நூற்களால் வேதத்தினை யொப்பாதவராகிய நாஸ்திக புருஷர்களின் மதத்தினை நிரூபித்தனம். இனி வேதத்தினை யொப்புவோராகிய ஆஸ்திக புருஷர்களின் மதங்களை நிரூபிப்பாம்.

## ருருக. பிராணனை ஆத்மாவாக வொப்பும் ஹைரண்ணிய கர்பர்களின் மத வர்ணனம்.

சில இரண்ணிய கர்பரின் உபாசக புருஷரோ பிராணனை ஆத்மாவாக வொப்புகின்றனர். அந்தபிராணனது ஆத்ம வடிவத்தன்மையில் எவ் யுக்திகள் கூறுகின்றனரோ அவ் யுக்திகள் முன்னர் பிராணாத்மவாதி சார்வாகரது மத நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம். அவ்வெல்லா யுக்திகளையும் இப்பிராண ஆத்மவாதியின் மதத்திலும் அறிந்துக் கொள்க.

## ருருஉ. பிராணாத்மவாதி ஹைரண்ணியகர்பர்களது மத கண்டனம்.

எவ் யுக்திகளால் முற்கூறிய பிராணாத்மவாதியினை கண்டிக்கப்பட்டதோ அவ் யுக்திகளால் இப்பிராணாத்ம வாதியின் கண்டனமும் அறிந்துக்கொள்க. ஆகையால் இப்பிராணாத்ம வாதியின் மதமும் நலமுடையதன்றாம்.

## ருருங. புத்தி வடிவ நிலையான விஞ்ஞானத்தினை ஆத்மாவாக வொப்புவோராகிய ஹைரண்ணிகர்பர்களின் மத வர்ணனம்.

இரண்ணிய கர்பரின் உபாசக புருஷர்களில் சிலரோ விஞ்ஞானத்தினையே ஆத்மாவாக வொப்புகின்றனர். விஞ்ஞான ஆத்மவாதியின் மதத்தினை முன்னர் பிரதிபாதித்து வந்தனம். என்றாலும் முற்கூறிய அவ்விஞ்ஞான வாதி யோகாசாரர் க்ஷணிக விஞ்ஞானத்தினையே ஆத்மாவாக வொப்புகின்றனர். இவ்விரண்ணியகர்ப வுபாசகரோ புத்தி யெனப் பெயரிய நிலைத்துள்ள விஞ்ஞானத்தினையே ஆத்மாவாக வொப்புகின்றனர். ஆகையால் முற்கூறிய அவ்விஞ்ஞான ஆத்மவாதியினும் இவ்விஞ்ஞான ஆத்மவாதி விலக்ஷணமாம். ஆண்டு இவ்விஞ்ஞான ஆத்மவாதி யுபாசக புருஷர்கள் அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கு ஆத்மவடிவத்தன்மையில் இவ்வாறய யுக்திக் கூறுகின்றனர். "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே கர்மாணி தநுதேபி ச" என்னு மிச்சுருதியானது அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கே யாக முதலிய கர்மங்களின் கர்த்தாத் தன்மையும் பயிர்த்தொழில், வியாபார முதலிய லௌகீக கர்மங்களின் கர்த்தாத் தன்மையுங் கூறியிருக்கிறது. அதன் பின்னர் "விஜ்ஞாநம் ப்ரஹ்மசேத் வேத தஸ்மாச்சேந்ந ப்ரமாத்யதி ஶரீரே பாப்மநோ ஹித்வா ஸர்வாந்காமாந்ஸமஶ்நுதே" என்னு மிச்சுருதியானது அவ்விஞ்ஞானத்தின் ஞானத்திற்கு சர்வ பாபங்களின் நிவர்த்தி வடிவமும், சர்வ கர்மங்களின் பிராப்தி வடிவ பயனுங் கூறி யிருக்கின்றது. அவ்விருவிதமாய பயன் வேறு சுருதி, ஸ்மிருதிகளில் ஆத்ம ஞானத்திற்கே பயன் வடிவமாகப் பிரசித்தமாம். ஆகையால் கூறிய அச்சுருதியால் அப்புத்திவடிவ விஞ்ஞானமே ஆத்மாவாக சித்தமாகின்றது. அல்லது இப்புத்திவடிவ விஞ்ஞானத்திற்கு முற்கூறிய மனதின்சமானத் தன்மையின்றாம். ஏனெனின் அம்மனதிற்கோ "மநஸைவாநுத்ரஷ்டவ்யம்" என்னு மிவை முதலிய சுருதி வசனங்களால் கரண வடிவமே சித்தமாம். இப்புத்திவடிவ விஞ்ஞானத்திற்கோ "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" எனக்கூறிய

இச்சுருதியால் சர்வ வைதீக, லௌகிக கர்மங்களின் கர்த்தாத் தன்மையேச் சித்தமாகின்றது. எல்லா வாதிகளின் மதத்தில் கர்த்தா ஆத்மாவேயாகின்றது. எவ்வாத்மா கர்மத்தின் கர்த்தாவாகின்றதோ அவ்வாத்மாவே அக்காரியத்தின் பயனுக்குப் போக்தாவாகின்றது. இக்காரணத்தானேயே "ஶாஸ்த்ரஃலம் ப்ரயோக்தரி" என்னுமிச்சூத்திரத்தில் ஜைமினிருஷியானவர் யாகாதி கர்மங்களை செய்யும் ஜீவாத்மாவிற்கே சொர்க முதலிய பயனது பிராப்திக் கூறி யிருக்கின்றனர். அல்லது "விஜ்ஞானம் யஜ்ஞம் தநுதே" என்னும் சுருதி வெளிப்படையாகவே அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கே ஆத்மத்தன்மைக் கூறி யிருக்கின்றது. ஆகையால் அப்புத்தி வடிவ விஞ்ஞானமே ஆத்மாவாம்.

## ருரு௪. நிலைத்துள்ள புத்தி ஆத்மவாதியின் மத கண்டனம்.

அவ்விஞ்ஞான வாதிகளின் மதமும் நலமுடையதன்று. ஏனெனின் விஞ்ஞானவாதிகளோடு இது வினவுதல்வேண்டும். எங்ஙனம் நையாயிகராகிய யாங்கள் அப்புத்தியினை ஞான வடிவமாக அங்கீகரிக்கின்றனமோ அங்ஙனம் நீவிரும் அப்புத்தி வடிவ விஞ்ஞானத்தினை குணவடிவமாக வொப்புகின்றீரா? அல்லது அப்புத்தியினை திரவிய வடிவமாக வொப்புகின்றீரா? ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்க அது சம்பவியாது. ஏனெனின், குணத்தில் குணத்தின் ஆசிரயத் தன்மையும், கிரியையின் ஆசிரயத் தன்மையும் உண்டாகாது. ஆனால் திரவியத்திலேயே குண, கிரியையின் ஆசிரயத் தன்மை யுண்டாகின்றது. அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திலோ சுருதியானது குணத்திற்கும், கிரியைக்கும் ஆசிரயத் தன்மைக் கூறி யிருக்கின்றது. ஆண்டு "ஸங்கல்பம் விகல்பம் த்ருதிஶ்ச" என்னும் இச்சுருதியானதோ அப்புத்தியில் குணத்தின் ஆசிரயத் தன்மைக் கூறி யிருக்கின்றது. "ஸதீ ஸதிவேஷ்டதே ததா பலாமிதி" என்னு மிச்சுருதியானது அப்புத்தியில் அசைதல்வடிவக் கிரியைக்கு ஆசிரயத்தன்மை கூறி யிருக்கின்றது. குணத்தின் ஆசிரயமும், கிரியையின் ஆசிரயமும் திரவியமேயாகின்றது. குண முதலிய பதார்த்தங்களாகிறதில்லை. ஆகையால் அப்புத்தி திரவிய வடிவமா மென்னு மிரண்டாவது பக்ஷத்தையே அங்கீகரிப்பதாகும். இவ்விரண்டாவது பக்ஷத்தில் அத்திரவிய வடிவ புத்தி முற்கூறிய மனதினும் வேறு மென்னும் சித்திச் சம்பவியாததாகும். ஆனால் அம்மனதினையே புத்தி வடிவமாக வொப்புவதாகும். "யதேதத் ஹ்ருதயம் மநஶ்சைதத்" என்னு மிச்சுருதியும் ஹிருதய மென்னும் புத்திக்கு மனதினோடு அபேதமே கூறி யிருக்கின்றது. ஆகையால் அப்புத்தி வடிவத் திரவியம் மன வடிவமாகவே சித்தமாகின்றது. அம்மனதினும் வேறாக சித்தமாவதன்று. ஆகையால் முன்னர் அம்மன ஆத்மவாதி சார்வாகர்கள் மதத்தில் மனதின் ஆத்மவடிவத் தன்மையில் எத்தூஷணங் கூறினமோ அவ்வெல்லா தூஷணமும் இவ்விஞ்ஞான ஆத்மவாதியின் மதத்திலும் அவசியம் பிராப்தமாகும். ஆகையால்

அப்புத்தி வடிவ விஞ்ஞானத்தில் ஆத்ம வடிவத் தன்மைச் சம்பவியாது. அல்லது அவ்விஞ்ஞான ஆத்ம வாதியானவர் அப்புத்தியில் எக்கரணத்தன்மை யின் அபாவவடிவமன்றால்விசேஷத்தன்மைகூறினரோ அதுவும்அசங்கதமாம். ஏனெனின் எங்ஙனம்: “ உநஸெவாநு–ஜ்ரஷவ௱ு ” என்னு மிச்சுருதி அம்மனதிற்கு ஆத்ம ஞானத்தில் கரண வடிவத்தன்மைக் கூறியிருக்கின்றது. அங்ஙனமே “ஜ்ரஹ௱ுகெஃவநூ௱ுயாவ–ஜ்யா” என்னு மிச்சுருதி அப்புத்திக் கும் ஆத்ம ஞானத்தில் கரண வடிவத்தன்மையே கூறியிருக்கின்றது. இக்கா ரணத்தானும் அப்புத்தி மனதின் சமானமேயாம். “விஜ்ஞாநம்யஜ்ஞம்கநுதெ” என்னு மிச்சுருதியோ அவ்விஞ்ஞான பதத்தால் அப்புத்தியினும் வேறான ஞான முதலிய குணமுடைய ஜீவாத்மாவினையே அவ்வெல்லாக் கர்மங்களின் கர்த்தா வடிவமாகக் கூறியிருக்கின்றது. ஆகையால் அச்சுருதியினும் அப் புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கு ஆத்மவடிவத்தன்மை சித்தமாகாது. அல்லது அவ்விஞ்ஞான ஆத்மவாதியானவர் அப்புத்தி வடிவ விஞ்ஞானத்திற்கு ஆத்ம வடிவத் தன்மையில் “ஃஎநு௱ாஷாா ஜ்ாவிஜ்ஞாநமயஃ” என்னும் எச்சுருதியைக் கூறினரோ அச்சுருதியோ அந்த விஞ்ஞான ஆத்ம வாதியின் பிராந்தி சித்த மதத்தை அநுவாதம் செய்வதாகி பூர்வ பக்ஷ வடிவமேயாம். இக்காரணத்தா னேயே “ தஸ்மாஜ்வா ஏதஸ்மாத்விஜ்ஞாநமயா ஃநெ௱ாந்தராத்மா ஆநந்தமயஃ ” என்னுமிச்சுருதி அப்புத்தி வடிவ விஞ்ஞானத்தினும் ஆத்மாவினை வேறாகவே கூறியிருக்கின்றது. ஆகையால் கூறிய அச்சுருதியினால் அப்புத்தி வடிவ விஞ் ஞானத்தில் ஆத்ம வடிவத் தன்மைச் சித்தமாகாது. அல்லது “ ஆத்மாநம் ரயிநம்விஜ்ஃ ஶரீரம்ரயமெவது பூஜ்ஃதுஸாரயிம்விஜ்ஃ உநஃப்ரஹ ஊெவ உநிபாணிஹயாநாஹுஃ விஷயாம்ஸ்தெஷு–மொாசராந் ” என்னு மிக்காடக சுருதியில் சரீரத்தினை ரத வடிவமாகக் கூறி யிருக்கின்றது. ஜீவாத் மாவினை அந்தரக்ஷத்தில் அமர்பவராகிய ரதிகராகக் கூறி யிருக்கின்றது. அவ் விஞ்ஞான வடிவ புத்தியினை அந்த ரதத்தை செலுத்தும் சாரதியாகக் கூறி யிருக்கின்றது. சக்ஷு முதலிய இந்திரியங்களை அசுவமாகக் கூறியிருக்கின் றது. மனதினை அவ்வசுவங்களோடு கட்டியுள்ள சாரதி புருஷனது கையிலி ருக்கும் கடிவாளமாகக் கூறி யிருக்கின்றது. ரூப முதலிய விஷயங்களை அவ் விந்திரிய வடிவ அசுவங்கள் செல்லுதற்கு பூமி வடிவமாகக்கூறியிருக்கின்றது. இச்சுருதியினானும் அவ்வாத்மா வேறாகவே சித்தமாகின்றது. ஆகையால் அம்மன ஆத்ம வாதியின் மதத்தினைப் போன்று இப்புத்தி வடிவ விஞ்ஞான ஆத்ம வாதியின் மதமும் நலமுடையதன்றாம்.

## ௫௫. ஆத்மாவினை சித் ஜட வடிவமாக வொப்புவோராகிய மீமாஞ்சக பட்டபாதரின் மத வர்ணனம்.

இனி மீமாஞ்சக பட்டபாதரின் மதத்தை வர்ணிப்பாம். ஆண்டு பட்டபாதர் தேஹம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி என்னு மிவை முதலிய யாவற்றினும் வேறாகவே ஆத்மாவினை யொப்புகின்றனர். அங்ஙனமே நித்தியமாகவே வொப்புகின்றனர். ஆனால் பட்டபாதர் அவ்வாத்மாவிற்கு

சேதன வடிவமும், ஜட வடிவமும் வொப்புகின்றனர். அவ்வாத்மா விற்குச் சித், ஜட வடிவத்தன்மையில் அப்பட்டபாதர் இந்த யுக்திக் கூறுகின்றனர். சுஷுப்தியினின்றும் ஜாக்கிரத மடைந்த புருஷன் இவ் வசனங் கூறுகின்றான். யான் ஜட வடிவமாகி உரங்கினே னென்பதான இஜ்ஜாக்கிரத அவஸ்தையின் ஸ்மரணத்தால் அவ்வாத்மா ஜட வடிவமாக அறியப்படுவதாகின்றது. எவ்வெவ் வஸ்துவை விஷயஞ் செய்யும் எவ்வெவ் ஸ்மரண ஞான முண்டாகின்றதோ அவ்வவ் ஸ்மரண ஞானம் அவ்வவ் வஸ் துவை விஷயஞ் செய்யும் முன் அநுபவத்தால் ஜன்னியமேயாகின்றது. முன் அநுபவமின்றி அந்த ஸ்மரண ஞானம் உண்டாகாதென்பதான நியமம் யாண்டும் பிரசித்தமாம். ஆகையால் ஜாக்கிரதத்தின் ஸ்மரண ஞானத்தால் அச் சுஷுப்தியில் அவ்வாத்மாவின் ஜட ஸ்வரூபத்தை விஷயஞ் செய்யும் அநுப வம் அவசியம் வொப்பப்படுவதாகும். ஆண்டு அச் சுஷுப்தியில் அவ்வநுபவ ஞானத்தின் ஏது வேறு இந்திரிய முதலிய சாதனங்களோ இன்றுமாகையால் எவ்வாற்றால் அவ்வநுபவம் உற்பன்னமாகும்?. பரிசேஷத்தால் அவ்வாத்ம ஸ்வரூபஞானமே ஜடஸ்வரூபத்தின் அநுபவமாக வொப்புவதாகும். அதாவது அச்சுஷுப்தியில் அவ்வாத்மாவின் சேதனவடிவமே அவ்வாத்மாவின் ஜட வடி வத்தைப் பிரகாசஞ் செய்கின்றது. ஆகையால் எங்ஙனம் மின்மினிப்பூச்சி பிர காச வடிவமும், அப்பிரகாச வடிவமுமா மிரண்டுமாக யிருக்கின்றதோ அங்ஙனமே அவ்வாத்மாவும் பிரகாச வடிவமும், அப்பிரகாச வடிவமுமா மிர ண்டுமாக இருக்கின்றது. ஆண்டு ஞான வடிவமாவதால் அவ்வாத்மா பிரகாச வடிவமாம். ஜட வடிவமாவதால் அவ்வாத்மா அப்பிரகாச வடிவமாம். அல் லது எல்லாவாதிகளும் அஹம்பிரத்தியயத்தின் விஷயம் ஆத்மாவாகவே வொப் புகின்றனர். அவ்வாத்மாவில் அஹம் பிரத்தியய ஜன்னிய ஞானத் தன்மைத் தர்மத்திற்கு எவ்வாசிரயத் தன்மை யிருக்கிறதோ அதுவே அவ்வாத்மாவில் அஹம் பிரத்தியயத்தின் விஷயத் தன்மையாம். இத்தகைய அஹம் பிரத்தி யயத்தின் விஷயத்தன்மை அவ்வாத்மாவின் சேதன அம்சத்தில் சம்பவியாது. ஏனெனின் கர்ம, கர்த்ரு பாவத்தின் விரோதத்தால் அச்சேதன அம்சத்திற்கு தன்னாலேயே தனது பிரகாசமோ சம்பவியாது. வேறு சைதன்னியத்தால் அச்சேதன அம்சத்தின் பிரகாச மொப்பின் கட முதலியவைகளைப் போன்று அச்சேதன அம்சத்திற்கும் அசேதனத் தன்மையே பிராப்தமாகும். இக்கார ணத்தால் ஞான மாத்திரத்திற்கே அதியிந்திரிய மொப்ப வேண்டும். அத்த கைய அதிஇந்திரிய ஞான ஸ்வரூப சேதன அம்சத்தில் அவ்வஹம் பிரத்திய யத்தின் விஷயத் தன்மைச் சம்பவியாது. ஆகையால் அவ்வஹம் பிரத்திய யத்தின் விஷயத் தன்மையினை நிர்வாஹம் செய்யும்பொருட்டு அவ்வாத்மாவில் ஓர் ஜட அம்சமும் அவசியம் அங்கீகரிக்கப்படவேண்டும். இவ்வாறாய யுக்தியி னாலும் அவ்வாத்மா சித், ஜட வடிவமாகவே சித்தமாகின்றது. அல்லது கூறிய யுக்தியினாலேயே அவ்வாத்மாவின் சித், ஜட வடிவத்தன்மைச் சித்திப்பதுடன் சுருதிப் பிரமாணத்தாலும் அந்த சித், ஜட வடிவத்தன்மை சித்தமாகின்றது. ஆண்டு "ՅՆՑՐԵՑՊԱՆ-ՆՀ-Ն-ՇՆՋՆ" என்னு மிச்சுருதியோ அவ்வாத்மாவில் மனோ ஜன்னிய ஞானத்திற்கு விஷயத் தன்மையினைக் கூறியிருக்கின்றது.

"[illegible]" என்னு மிச்சுருதியோ அப்பிரமேய மென்னும் பக்ஷத்தால் அவ்வாத்மாவில் ஞானத்தின் விஷயத்தன்மையினை நிஷேதஞ் செய்திருக்கின்றது. பரஸ்பரவிருத்த அர்த்தத்தினைக் கூறுவதாகிய இரு சுருதி வசனங்கள் எப்பொழுது பிரமாண பாவத்திற்கு பிராப்தமாமோ அப்பொழுது அவ்வாத்மாவிற்கு சேதன வடிவமும், ஜட வடிவமும் பிராப்தமாம். ஆண்டு முதலாவது சுருதியோ அவ்வாத்மாவின் ஜட அம்சத்தில் ஞானத்திற்கு விஷயத் தன்மையினைக் கூறியிருக்கின்றது. இரண்டாவது சுருதியோ அவ்வாத்மாவின் சேதன அம்சத்தில் அந்த ஞானத்திற்கு விஷயத் தன்மையினை நிஷேதித்திருக்கின்றது. இவ்வாறாக அவ்வாத்மாவிற்கு சித், ஜட வடிவ மொப்புவதில் அவ்விரு சுருதிகளுக்குப் பிரமாணத் தன்மை சித்தமாகின்றது. அவ்வாத்மாவிற்கு கேவலம் சேதன வடிவமே யொப்பின் அச்சேதனத்தில் ஞானத்தின் விஷயத் தன்மையின் அசம்பவத்தால் அம்முதற் சுருதி அப்பிராமாண வடிவமாகும். அவ்வாத்மாவிற்கு கேவலம் ஜட வடிவமே யொப்பின் அந்த ஜடத்தில் அப்பிரமேயத் தன்மையின் அசம்பவத்தால் அவ்விரண்டாவது சுருதி அப்பிரமாண வடிவமாகும். ஆகையால் அவ்விரு சுருதிகளின் பிரமாணத் தன்மையின் பொருட்டு அவ்வாத்மாவிற்கு சித், ஜட வடிவமே யொப்ப வேண்டும்.

### ருருசு. அப்பட்டபாதரின் மத கண்டனம்.

அப்பட்டபாதரின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் உலகத்தில் ஒரே வஸ்துவிற்கு பரஸ்பர விருத்த உபய வடிவத் தன்மை யாண்டுங் காணக்கிடைப்பதின்று. ஓர் கால் ஒரே வஸ்துவிற்கு பரஸ்பர விருத்த உபய வடிவத் தன்மை யுண்டாகுமாயின் ஒரே வஸ்துவிற்கு ஒளி, இருளா மென்னும் உபய வடிவத்தன்மை யுண்டாகவேண்டும்; அங்ஙனமாவதின்று. அங்ஙனமே ஒரே ஆத்மாவிற்கு பரஸ்பர விருத்த சித், ஜடமா முபய வடிவத் தன்மைச் சம்பவியாது. ஆகையால் ஒரே சரீரத்தில் ஒன்று சேதன வடிவ ஆத்மா, மற்றையது ஜட வடிவ ஆத்மாவென இரு ஆத்மாக்களை அங்கீகரிப்பதாகும். அது அத்தியந்த விருத்தமாம். அல்லது ஒரே ஆத்மாவில் சித், ஜட மென்னு மிரு அம்சங்களை அங்கீகரிப்பவராகிய பட்டபாதரோடு இது வினவுதல் வேண்டும். அச்சித், ஜடமா மிரு அம்சங்கள் அவ்வம்சீ ஆத்மாவினும் வேறா? அல்லது வேறன்றா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அந்த சித், ஜட அம்சத்தினும் வேறாகிய அவ்வாத்மா சித், ஜட ஸ்வரூபமாக சித்திப்பதின்றாகும்: ஆகையால் ஆத்மா சித், ஜட வடிவமா மென்னும் உமது பிரதிஞ்ஞைக்கு ஆசி யுண்டாகும். அங்ஙனமே ஆத்மாவினும் வேறான அஜ்ஜட அம்சத்தில் அஹம் பிரத்தியக்ஷத்திற்கு விஷயத்தன்மை யிருக்கினும் அவ்வாத்மாவில் அஹம் பிரத்தியக்ஷத்தின் விஷயத்தன்மை சித்தியாததாகும். அப்பட்டபாதர் இரண்டாவது வேறன்றென்னும் பக்ஷத்தை அங்கீகரிக்கின் ஒரே ஆத்மாவோடு அபின்னமாய அச்சித், ஜட இரு அம்சங்கள் "[illegible]" என முற்கூறிய நியாயத்தால் பரஸ்பரம் அபின்னமேயாகும். ஆகையால் அஜ்ஜட அம்சத்தினை விஷயஞ் செய்தலான் அச்சித் அம்சம் அஜ்ஜட அம்சத்தி

னும் அபின்னமான தன்னையும் அவசியம் விஷயஞ் செய்யும். அங்ஙனமே தன்னை விஷயஞ்செய்யாததான அச்சித் அம்சம் தன்னினும் வேறாகாத அஜ்ஜட அம்சத்தினையும் விஷயஞ்செய்யாது. ஆகையால் அவ்வாத்மாவின் சித் அம்சம் அவ்வாத்மாவின் ஜட அம்சத்தினை விஷயஞ் செய்வதா மென்னுமிப்பட்டபாதரின் கூற்று அசங்கதமாகும். அல்லது "உநமெளவாநுஜாஷவு" என்னும் சுருதியோ அவ்வாத்மாவில் மனோ ஜன்னிய ஞானத்திற்கு விஷயத் தன்மையினைக் கூறி யிருக்கின்றது. "சுவு மெளம" என்னும் சுருதியோ அவ்வாத்மாவில் சக்ஷு முதலிய பாஹ்ய இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயத் தன்மையின் நிரோதஞ் செய்கிறது. இவ்வாற்றால் அவ்விரு சுருதிகட்கு பிரமாணத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்விரு சுருதிகளின் பிரமாணத் தன்மையின் பொருட்டு அவ்வாத்மாவில் சித், ஜட வடிவத் தன்மை அங்கிகரிப்பது அத்தியந்தம் விருத்தமாம். ஆகையால் இப்பட்டபாதர் மதமும் நலமுடையதன்றாம்.

ருடுஎ. ஆத்மாவினை ஸ்வரூபத்தில் ஜடமாக வொப்புவோராகிய பிரபாகரரின் மத வர்ணனம்.

இனி பூர்வ மீமாம்சகரில் ஒருசாரினராகிய பிரபாகரரின் மதத்தை நிரூபிப்பாம். ஆண்டு தேஹம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி என்னுமெல்லாவற்றினும் அவ்வாத்மா வேறாம். அங்ஙனமே நித்தியமும் விபுவுமாம். ஆனால் அவ்வாத்மா ஸ்வரூபமாக ஜடமேயாம். எப்பொழுது அவ்வாத்மாவினோடு மனதின் சையோக முண்டாகின்றதோ அப்பொழுது அவ்வாத்மாவில் ஞான குணம் உண்டாகின்றது. அந்த ஞான குணத்தோடு விசிஷ்டமாய அவ்வாத்மா சேதனமெனப்படும். ஆண்டு சுஷுப்தி அவஸ்தையில் புரீததியில் பிரவேசித்த மனதிற்கு அவ்வாத்மாவோடு ஞான முதலியவைகளின் ஏதுவாகிய சையோகம் உண்டாவதில்லை. ஆகையால் அச்சுஷுப்தி அவஸ்தையில் சர்வ ஞானங்களில்லாததாகிய அவ்வாத்மா தனது ஜட ஸ்வரூபத்தோடிருக்கின்றது. ஜாகிரத, சொப்பன காலத்தில் மனதின் சையோகமுள்ள அவ்வாத்மா சாக்ஷுஷ முதலிய ஞான முடையதாகிய சேதன வடிவமாக இருக்கின்றது. இக்காரணத்தானேயே சுஷுப்தியினின்றும் எழுந்திருந்த புருஷன் யான் சிறிதேனும் அறியவில்லை யென்பதான வசனங் கூறுகின்றான். உலகர்களின் இவ்வசனத்தானும் அந்த சுஷுப்தியில் சர்வ ஞானங்களின் அபாவம் சித்திக்கின்றது. அத்தகைய ஸ்வரூபமாக ஜடமாகிய ஆத்மாவில் எங்ஙனம் மனதின் சையோகத்தால் ஞான குணம் உண்டாகின்றதோ அங்ஙனமே சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், சம்ஸ்காரம் என்னுமிக்குணங்களும் அம்மனதின் சையோகத்தானேயே உண்டாகின்றது. இப்பிரபாகரரின் மதம் முற்கூறிய நியாய சாஸ்திர மதத்தின் சமானமேயாம். ஆகையால் அப்பிரபாகரரின் மதம் ஆத்ம நிர்ணயத்தில் நியாயத்திற்கு விரோதமின்மை யாவதால் இந்த நியாய நூலிற் கண்டிப்பதற்கு யோக்கியமன்றாம்.

## ருரு௪. வாசுதேவரால் சங்கர்ஷண முதலியவைகளுக்கு உற்பத்தியினைக் கூறுவோரும், ஆத்மாவினை அணுவாக வொப்புவோருமாகிய நாரத பஞ்சராத்திரத்தின் மத வர்ணனம்.

இக்காலத்தில் நிகழ்ந்து வரும் வைஷ்ணவ சம்பிரதாயங்களின் மூலமாகிய நாரத பஞ்சராத்திரமெனப் பெயரிய கிரந்தத்தை அநுசரித்த மதத்தை நிரூபிப்பாம். ஆண்டு நாரத பஞ்சராத்திர முடையார் இது கூறுகின்றனர். முதலில் வாசுதேவரால் சங்கர்ஷணம் உற்பன்னமாயிற்று. அச்சங்கர்ஷணத்தால் பிரத்யும்னம் உற்பன்னமாயிற்று. அப்பிரத்யும்னத்தால் அநிருத்தம் உற்பன்னமாயிற்று. ஈண்டு பரமேசுவரனை வாசுதேவரென்பர். ஜீவனை சங்கர்ஷண மென்பர். மனதினை பிரத்யும்ன மென்பர். அஹங்காரத்தினை அநிருத்த மென்பர். அச்சங்கர்ஷண மெனப் பெயரிய ஜீவாத்மா அணுத்வ பரிமாண முடையதேயாம். ஏனெனின் சுருதியானது மரண காலத்தில் இந்த ஜீவாத்மா சங்காதத்தினின்று உத்கிரமணமும் (வேறுதலும்), லோகாந்தரத்தில் செல்லுதலுங் கூறி யிருக்கின்றது. அவ்வுத்கிரமணமும், செல்லுதலும் அணுவாத்மாவிலேயே சம்பவிக்கின்றது; விபு ஆத்மாவில் சம்பவியாது. ஆகையால் ஜீவாத்மாவினை அணுத்வ பரிமாண முடையதாகவே வொப்பவேண்டும். அல்லது கேவலம் சுருதி கூறிய உத்கிரமண கமனத்திற்கு வேறு காரணம் சம்பவியாமையினனேயே அவ்வாத்மாவில் அணுத்தன்மைச் சித்திப்பதின்று; சுருதி, ஸ்மிருதி, சாக்ஷாத்தாகவே அஜ்ஜீவாத்மாவினை அணுவாகக்கூறுகின்றன. ஆண்டு சுருதி "ஏஷோऽணுராத்மா சேதஸா வேதிதவ்ய: । வாலாக்ரஶதபாகஸ்ய ஶததா கல்பிதஸ்ய ச । பாகோ ஜீவ: ஸ விஜ்ஞேய: । ஆராக்ரமாத்ரோ ஹ்யவரோऽபி த்ருஷ்ட: அணீயான்" என்று மிவை முதலிய சுருதிகளில் அஜ்ஜீவாத்மா அணுத்வ பரிமாண முடையதாகவே கூறப்பட்டிருக்கின்றது. கீதையில் ஸ்ரீகிருஷ்ண பகவானும் "நித்ய: ஸர்வகத: ஸ்தாணு:" என்னும் வசனத்தால் ஜீவாத்மாவினை அணுவாகவே கூறியிருக்கின்றனர். ஆண்டு "ஸர்வகதஸ்தாணு: ஸனாதன:" என்பதான் விக்கிரஹங்களை கூறுவதால் அக்கீதா வசனங்களால் அவ்வாத்மாவிற்கு அணுத்வமே சித்தமாகின்றது. அந்த அணுத்வ ஜீவன் அவ்வீசுவரனது அம்ச வடிவமேயாம். இக்காரணத்தானேயே கீதையில் ஸ்ரீ பகவான் "மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸனாதன:" என்று மிவ் வசனத்தால் ஜீவாத்மாவினை தனது அம்ச வடிவமாகக் கூறி யிருக்கின்றனர். அத்தகைய ஈசுவரனது தனது அம்ச வடிவ ஈசுவரனை அம்ச வடிவ அவ்வணு ஜீவன் எப்பொழுது தனது அம்சி வடிவ ஈசுவரனை யதார்த்தமா யறிந்து சரீரம், மனம், வாக்குகளால் சிரத்தாபக்தி வாயிலாக அவ்வீசுவரனுக்கு பூஜை ஆராதனஞ் செய்கின்றனனோ அப்பொழுது அப் பரமேசுவரனது அருளால் ஜீவாத்மா பரமேசுவரனது சமான வடிவத் தன்மைக்கு அல்லது சமீபத்தன்மைக்கு பிராப்தமாகின்றான். இதுவே இஜ்ஜீவாத்மாவிற்கு முக்தியாம். அவ்வணுவாத்மா இச்சரீரத்தின் யாதாமோரிடத்திலிருந்தும் சர்வ சரீர வியாபி தனது ஞான குணத்தால் சரீர முழுதில் குளிர்ச்சி, வெப்ப முதலியவைகளை அநுபவிக்கின்றான். எங்ஙனம்: சரீரத்தின் யாதாமோ

ரிடத்திலிருக்கும் நல்ல சந்தனத்தின் துளி சரீர முழுமையும் குளிர்ச்சியை யுண்டாக்குவது போலும். எக்காரணத்தாலெனின் வஸ்துவின் சக்தி அசிந்தியமாகின்றது. எங்ஙனம்: கஸ்தூரி முதலியவைகளின் கந்த குணம் வாயுவால் கஸ்தூரி திரவியத்தினின்றும் வேறிடத்திலும் பரவி விடுகின்றது. அங்ஙனமே ஞான குணமும் சரீர முழுமையும் பரவிவிடுகின்றது.

## ருருகூ. அங்நாரத பஞ்சராத்திரத்தின் மத கண்டனம்.

இந்நாரத பஞ்சராத்திரத்தின் மதமும் நலமுடையதன்றாம். ஏற்றுக்கெனின் எவ்வாதி ஆத்மாவினை அணுவாக வொப்புகின்றனரோ அவ்வாதியின் மதத்தில் குளிர்ந்த கங்கா ஜலத்தில் முழுகிய புருஷனுக்கு பாதமுதலாக சிரமட்டுமாம் சர்வ சரீர முழுமையில் சீதஸ்பரிசத்தின் அநுபவம் உண்டாவதின்றாகவேண்டும். அங்ஙனமே அச்சீத ஸ்பரிசத்தால் உண்டான சுகத்தின் அல்லது துக்கத்தின் அநுபவமின்றாக வேண்டும். ஏனெனின் அவ்வணு ஆத்மாவிற்கு ஒரேகாலத்தில் அச்சர்வ அவயவங்களோடு சம்பந்தம் சம்பவியாது. அவ்வணு ஆத்மாவிற்கு ஓர் அவயவ சம்யோகத்தின் பின்னர் வேறு அவயவங்களோடு சம்யோகம், அதன் பின்னர் மூன்றாவது அவயவத்தினோடு சம்யோகம் இம்முறையாக அச்சர்வ அவயவங்களோடு சம்யோகம் சம்பவிக்கின்றது. என்றாலும் முறையாக உற்பன்னமாயுள்ள அவ்வனேக சம்யோகங்களுக்கு கிரமமன்றி ஓர் ஞானத்தைபுண்டாக்குந் தன்மை சம்பவியாது. அல்லது அவ்வணுவாத்மாவிற்கு இத்தேஹத்தின் அணுப்பிரதேசத்திலேயே சையோகம் ஒப்புவதாகும். அவ்வணுப் பிரதேசத்தினும் வேறானவிடத்தில் அவ்வணுவாத்மாவின் சம்யோகம் உண்டாகாது. எத்தேஹத்தின் அணுப்பிரதேசத்தில் அவ்வாத்மாவின் சம்யோக மிருக்குமோ அவ்வணுப் பிரதேசத்தில் வேறு ஜல, தேயு முதலிய திரவியத்தின் சையோகம் உண்டாகாது. ஏனெனின் ஒரே பிரதேசத்தில் ஓர் காலத்தில் இரு மூர்த்தத்திரவியத்தின் சையோகம் யாண்டுங் காணப்படவில்லை. எங்ஙனம் : எப்பூதல பிரதேசத்தில் பாதவடிவ ஓர் மூர்த்தத் திரவியத்தின் சையோக மிருக்கின்றதோ அப்பூதல பிரதேசத்தில் அக்காலத்தில் வேறு அஸ்த முதலிய மூர்த்தத் திரவியத்தின் சையோகம் உண்டாகாது. அந்தப் பிரதேசத்தினும் வேறான பிரதேசத்திலேயே அஸ்த முதலியவைகளின் சையோக முண்டாகின்றது. அங்ஙனமே மூர்த்தத் திரவிய வடிவ அணு ஆத்மாவின் சையோகமுடைய தேஹத்தின் பிரதேசத்தினும் வேறான பிரதேசத்திலேயே ஜல முதலிய மூர்த்தத் திரவியங்களின் சையோகம் உண்டாகும். அத்தகைய ஜலத்தின் குளிர்ந்த பரிசத்தினை அவ்வணுவாத்மா எங்ஙனம் கிரஹிப்பதாகும். கிரஹிப்பதாகாது. அல்லது அவ்வணுவாத்மா சையுக்த தேஹத்தின் அணுப்பிரதேசத்தில் ஓர் கால் ஜல முதலிய திரவியங்களின் சையோகத்தை அங்கீகரிக்கினும் அப்பிரதேசத்தில் அணுமாத்திர ஜல முதலியவைகளுக்கே சையோக முண்டாகும். அவ்வணுமாத்திர ஜல முதலியவைகளினும் அதிக ஜல முதலியவைகளின் சையோகம் உண்டாகாது. பரமாணுக்களின் ரூபம், ஸ்பரிச முதலிய குணங்கள் அதீந்திரியமேயாகின்றன. ஆகையால் அவ்வணுமாத்திர

ஜல முதலியவைகளின் குளிர்ச்சி முதலிய பரிசங்கள் பிரத்தியக்ஷமே யாகாத தாகும். அல்லது அவ்வணுவாத்மா சரீரத்தின் ஏக தேசத்தில் இருப்பதாயினும் சம்பூர்ண தேஹவியாபி, தனது ஞான குணத்தால் அச்சம்பூர்ண சரீர வியாபி சீதம், வெம்மை முதலியவைகளை அநுபவிக்கின்றதென்பதாக அவ்வணுவாத்ம வாதியானவர் கூறியதும் அசங்கதமாம். ஏனெனின் எது வெது குணமாமோ அவ்வக்குணம் தனது குணி திரவியத்திலேயேயிருக்கின்றது. தனது குணி திரவியத்தினும் வேறான விடத்தில் ஓர் குணமும் செல்வதின்று. எங்ஙனம்: கடத்திலுள்ள உருவ முதலிய குணங்கள் அக்கடத்திலேயே இருக்கின்றது. அக்கடத் திரவியத்தினும் வேறான இடத்தில் செல்லாதது போலும். அங்ஙனமே அந்த ஞான குணமும் அவ்வணுவாத்மா வடிவ திரவியத்திலேயே இருக்கும். அவ்வணுவாத்மாவினும் வேறான சம்பூர்ண தேஹத்தில் இருக்காது. அல்லது அவ்வணுவாத்ம வாதியானவர் அவ்வணுவாத்மாவினும் வேறான இடத்தில் அந்த ஞான குணத்தின் செல்லுகையில் எக்கஸ்தூரி முதலியவைகளின் கந்த குணத்தினை திர்ஷ்டாந்தமாகக் கூறினரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் ஆண்டும் அக்கந்த குணம் அக்கஸ்தூரி முதலிய திரவியங்களை விட்டு சுவதந்திரமாகச் செல்வதன்று. ஆனல் அக்கந்தகுணத்தின் ஆசிரயமாகிய அக்கஸ்தூரி முதலிய திரவியத்தின் சூக்ஷ்ம அவயவமே வாயுவால் அக்கஸ்தூரி முதலிய திரவியங்களின்றும் வேறிடத்திற்குச் செல்லுகின்றது. இக்காரணத்தாலேயே அவ்வவயவங்களின் நீக்கத்தால் கற்பூர முதலிய திரவியங்களின் பரிமாணத்தின் குறைவுத் தன்மைப் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றது. அவ்வவயவங்களின் நீக்கத்தாலும் எக்கஸ்தூரி முதலிய திரவியங்களின் பரிமாணத்தின் குறைவுத்தன்மை உண்டாகிறதில்லையோ அக்கஸ்தூரி முதலிய திரவியங்களிலோ ஓர்அவயவத்தின் நீக்கமுளதாகியும் போக்தா புருஷனது அதிர்ஷ்ட வசத்தால் ஆண்டு பூர்வ அவயவங்களின் சஜாதீய வேறு அவயவம் உண்டாய் விடுகின்றது. இக்காரணத்தால் அக்கஸ்தூரி முதலிய திரவியங்களின் பரிமாணத்திற்கு குறைவு உண்டாகிறதில்லை. எவ்வாதி அக்கந்த குணத்திற்கே நீக்கமொப்புகின்றனனே அவ்வாதியும் அக்கஸ்தூரி முதலிய திரவியங்களில் நிர்கந்தத் தன்மையின் ஆபத்தியை நிவர்த்திச் செய்யும் பொருட்டு க்ஷண க்ஷணத்தில் ஓர் கந்தத்தின் நீக்கமுளதாயினும் வேறு வேறு கந்தத்தின் உற்பத்தி அவசியம் அங்கீகரிக்கப்படுவதாகும். ஆகையால் அவ்வாதிகள் மதத்தினும் எமது மதத்தில் யாதாமோர் அதிக கௌரவமின்றாம். இவ்வளவால் முற்கூறிய அச்சந்தனதுளியின் திர்ஷ்டாந்தமும் கண்டிக்கப்படுவதாக அறிக. ஏனெனின் அச்சந்தனத்தின் சையோகத்தால் வெளிப்பட்ட ஜலத்தின் சூக்ஷ்ம பாகங்களுக்கே அத்தேஹத்தின் சர்வ அங்கங்களில் பரவுதல் சம்பவிக்கிறது. ஆண்டும் அச்சந்தனத்தின் பாகமே அவ்வெல்லா அங்கங்களில் அச்சீத ஸ்பரிசத்தினை அஜ்ஜலத்தின் பாகமே அவ்வெல்லா அங்கங்களில் அச்சீத ஸ்பரிசத்தினை தோற்றுவிக்கின்றது. ஆகையால் அவ்வாத்மாவில் அணு வடிவத்தன்மை சம்பவியாது. அல்லது அங்நாரத பஞ்சராத்திர வால்யமானது ஆத்மாவின் அணு வடிவத் தன்மையில் எச்சுருதிகளைக் கூறியதோ அச்சுருதிகளோ அப்பிராந்த அணு ஆத்மவாதியின் மதத்தினை அநுவாதஞ் செய்வதாகி பூர்வபக்ஷ

வடிவமேயாம். அல்லது அச்சுருதிகள் அவ்வணு பதத்தால் ஆத்மாவின் துர் விஞ்ஞேயத் தன்மையினையே கூறியிருக்கின்றன. அவ்வாத்மாவின் அணுத்வ பரிமாணத்தினைக் கூறவில்லை. அவ்வாத்மாவின் துர்விஞ்ஞேயத் தன்மை எல்லாச் சுருதி, ஸ்மிருதிகளில் பிரசித்தமேயாம். யான் சுகி, யான் துக்கி என்னுந்தோற்றம் ஆத்மாவினையே விஷயஞ் செய்கின்றது. என்றாலும் தேஹ முதலியவைகளினும் வேற்றுவடிவத்தால் அவ்வாத்மா துர்விஞ்ஞேயமேயாம். ஆகையால் கூறிய அச்சுருதிகளால் ஆத்மாவின் அணு வடிவத் தன்மைச் சித்தமாகாது. ஆனல் "[illegible]" என்னுமிவை முதலிய சுருதிகளாலும், முற் கூறிய யுக்திகளாலும் அவ்வாத்மாவிற்கு மஹத்தன்மையே சித்திக்கின்றது. அல்லது அவ்வாதியானவர் அவ்வாத்மாவின் அணுத் தன்மையில் "[illegible]" என்னும் ஏக்கீதா வசனம் பிரமாணமாகக் கூறினரோ அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின் அந்த வசனத்தில் யாண்டும் "[illegible]" என்னு மிரு பதங்களே கூறப்பட்டிருக்கின்றன. ஆண்டு முதற் பதத்தின்பங்கத்தால் யாண்டுமுள்ளது அணு என்பதாக பதங்களைநிர்ணயித்தல் அத்தியந்தம் அசங்கதமாம். அல்லது முற்கூறியவாற்றால் இக்கீதா வசனத் தால் ஆத்மாவினை அணுவாக வொப்பின் அணு ஆத்மாவில் சலன வடிவக் கிரியை அவசியமா யுண்டாகும். ஆகையால் அவ்வாத்மாவினை சலன வடிவ கிரியை இல்லாது அசலனமாகக் கூறுவதாகிய "[illegible]" இக்கீதையின் வாக்கிய சேஷம் அசங்கதமாகும். அங்ஙனமே அவ்வாத் மாவிற்கு நிரவயவமும், நிஷ்கிரியையும் கூறுவதாகிய "[illegible]" இச்சுருதிக்கும் விரோதம் உண்டாகும். அல்லது அவ்வணு ஆத்மவாதியானவர் மரணகாலத்தில் சரீரத்தினின்றும் ஆத்மாவின் உத்கிர மணத்தினையும், லோகாந்தரத்தில் செல்லுவதையும் பிரதிபாதிப்பதாகியசுருதி காரணமாக எஜ்ஜீவாத்மாவினை அணுவாக வொப்புகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அவ்வாத்மாவிற்கு நிஷ்கிரியை கூறுவதாகிய சுருதி, ஸ்மிருதிகளின் விரோதமாவதால் அச்சுருதி அவ்வாத்மாவின் உத்கிரமணத் தினையும், செல்லுதலையுங் கூறியதன்று. ஆனல் அச்சுருதி மனதிற்கே உத் கிரமணத்தினையும், செல்லுதலையுங் கூறி யிருக்கின்றது. ஆகையால் அஜ்ஜீவாத் மாவினை விபுவாகவொப்புவதிலும் அச்சுருதியின்கதி சம்பவமாய்விடுகின்றது. அல்லது "[illegible]" என்னுமிக் கீதையின் வசனத்தால் அவ் வாதியானவர் ஜீவாத்மாவிற்கு எந்த ஈசுவரனது அம்சவடிவங் கூறினரோ அதுவும் சம்பவியாது. ஏனெனின் அஜ்ஜீவ ஈசுவர ரிடத்தில் அம்ச, அம்சி பாவ மொப்பின் அவ்வீசுவரனுக்கு நிரவயவங் கூறுவ தாகிய சுருதிகளின் விரோதம் உண்டாகும். எவ்வெத்திரவியம் அம்ச முடை யதாகின்றதோ அவ்வத்திரவியம் அநித்தியமேயாகும். எங்ஙனம்: படமுதலிய திரவியங்கள் சாம்சமாவதால் அநித்தியமாம். அங்ஙனமே அவ்வீசுவரனும் சாம்சமாவதால் அநித்தியமேயாவன். அல்லது ஜீவனுக்கு ஈசுவரனது அம்சம்

அங்கீகரிக்கின் ஜீவனுக்கு சம்சாரத்தில் அனேக துக்கம் பிராப்தமாகின்றது. அம்சவடிவ ஜீவனது துக்கங்களால் அம்சிவடிவ ஈசுவரனும் துக்கியேயாவன். எங்ஙனம்: உலகத்தில் கை, கால் அவயவ வடிவ அம்சங்களின் துக்கத்தால் தேவதத்தனெனப் பெயரிய அம்சி புருஷன் துக்கியாகின்றான். ஆகையால் அக்கீதா வசனத்தின் அம்ச, அம்சி பாவத்தில் முக்கிய தாத்பரிய மின்றாம். ஆனால் எங்ஙனம் அம்சியினும் அம்சம் குறைவாமோ அங்ஙனமே ஜீவனாகிய யான் ஈசுவரனினும் குறைந்தவனாவன். அதாவது விபுத்வ வடிவத்தாலும், ஞானம், இச்சை, முயற்சியுடைமை வடிவத்தாலும் யான் ஈஸ்வரனது சதுர்சியத்தைப் பெற்றும் ஜீவனாகிய யான் ஈசுவரனைப்போன்று நித்திய ஞான முதலிய வைகளையுடையவனன்று. ஆனால் அநித்திய ஞான முதலியவைகளையுடையவனா மாகையால் ஜீவனாகிய யான் ஈசுவரரினும் குறைந்தவனாமென்னும் அர்த்தத்தில் அக்கீதா வசனத்திற்கு தாத்பரியமா மாகையால் அக்கீதா வசனத்தால் ஈசுவரனிடத்து அம்ச, அம்சி பாவம் சித்தியாது. அல்லது அந்நாரத பஞ்சராத்திர கிரந்தத்தில் எவ்வாசுதேவனெனப் பெயரிய ஈசுவரனால் சங்கர்ஷணனெனப் பெயரிய ஜீவனுக்கு உற்பத்திக் கூறியிருக்கின்றதோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் எவ்வெவ் பாவ பதார்த்தம் உற்பத்தி யுடையதாமோ அவ்வவ் பாவ பதார்த்தம் வினாசமுடையதுமாம். எங்ஙனம்: கட முதலிய பாவ பதார்த்தம் உற்பத்தி யுடையதாம். ஆகையால் வினாசமுடையதுமாம். கீதையில் ஸ்ரீ பகவானும் "ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:" என்னு மிவ்வசனத்தால் உற்பத்தியுடைய பாவ பதார்த்தங்கட்கு நியமமாக வினாசங்கூறியிருக்கின்றனர். ஆகையால் உற்பத்தியுடையதாவதால் அந்த ஜீவாத்மா நாச முடையவனுமாம். அஜ்ஜீவாத்மாவிற்கு அநித்திய முண்டாக கிருத நாசம், அகிருதாப்பியாகமா மிரண்டு தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். அல்லது ஜீவாத்மாவிற்கு உற்பத்தி யொப்புதல் "அஜஜ்ஞூதா" என்னு மிவை முதலிய சுருதி வசனங்களாலும் "அஜோ நித்ய: ஶாஶ்வதோயம் புராண:" என்னு மிவை முதலிய கீதா வசனங்களாலும் விருத்தமாம். ஆகையால் எல்லா வகையானும் இந்நாரத பஞ்சராத்திரர்களின் மதம் அசங்கதமாம்.

### ௫௯௦. இருபத்தைந்து தத்துவங்களை அங்கீகரிப்பவராகிய சாங்கிய சாஸ்திர மத வர்ணனம்.

இனி கபில முனிவர் திருவாய் மலர்ந்தருளிய சாங்கிய சாஸ்திரத்தின் மதத்தைநிரூபிப்பாம். ஆண்டு சாங்கியசாஸ்திரத்தில் இருபத்தைந்துதத்துவங்களைக்கூறியிருக்கின்றன. அவ்விருபத்தைந்துதத்துவங்களிவையாம்; புருஷனும், பிரதானமும், மஹத்தத்வமும், அஹங்காரமும்; சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தமென்னும் பஞ்சதன்மாத்திரைகளும்; ஆகாசம், வாயு, தேயு, ஜலம், பிருதிவி என்னும் பஞ்சமஹாபூதங்களும்; சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, ரசனம், கிராணம், வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், பாயு, மனம் என்னும் பதினொரு இந்திரியங்களுமா மிவைகள் இருபத்தைந்து தத்துவங்களெனப்படுகின்றன. ஈண்டு தத்துவமெனப் பெயரியன பதார்த்தங்களாம். அவ்விருபத்தைந்து தத்துவங்

களிலும் சிலதத்துவமோ கேவலம் பிரகிருதியே ஆகின்றன. சில தத்துவமோ பிரகிருதி, விகிருதியா மிரண்டுமாகின்றன. சில தத்துவமோ கேவலம் பிரகிருதியே ஆகின்றன. சில தத்துவமோ பிரகிருதி, விகிருதியா மிரண்டு மில்லாதன வாகின்றன. இவ்வாற்றால் அவ்விருபத்தைந்து தத்துவங்களின் பிரிவு சுருக்கமாக நால்வகையாகச் சித்தமாகின்றன. ஈண்டு உபாதானத்தினை பிரகிருதியென்பர். காரியத்தினை விகிருதி யென்பர். ஆண்டு சத்துவ, ரஜ, தமமா முக்குணங்களின் சாம்பிய அவஸ்தை யாதோ அதனை பிரதான மென்பர். அப்பிரதானம் ஒன்றும். அங்ஙனமே அநாதியாவதால் உற்பத்தியின்றியதாம். ஆகையால் அப்பிரதானம் யாதொன்றிற்கும் விகிருதியாவதன்றும். அப்பிரதானத்தால் மஹத்தத்துவத்தின் உற்பத்தியுண்டாகின்றது. ஆகையால் அப்பிரதானம் அம்மஹத்தத்துவத்திற்கு உபாதான காரணமாவதால் கேவலம் பிரகிருதியேயாம். இம்மஹத்தத்துவத்தினை புத்தி என்றும், அந்தக்கரண மென்றுங் கூறுவர். அம்மஹத்தத்துவமும், அஹங்காரதத்துவமும், சத்தமுதலிய பஞ்சதன்மாத்திரையுமா மிவ்வேழு தத்துவங்களோ பிரகிருதி, விகிருதியா மிரண்டுமாகின்றன. ஆண்டு அம்மஹத்தத்துவத்தால் அஹங்காரத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் அம்மஹத்தத்துவம் அவ்வஹங்காரத்திற்கோ பிரகிருதியுமாம். கூறிய அப்பிரதானத்திற்கு விகிருதியுமாம். அவ்வஹங்காரத்தால் சத்த முதலிய பஞ்சதன்மாத்திரைகட்கு உற்பத்தி யுண்டாகின்றது. அங்ஙனமே சுரோத்திர முதலிய பதினொரு இந்திரியங்கட்கு உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் அவ்வஹங்காரம் அத்தன்மாத்திரை, இந்திரியங்கட்கோ பிரகிருதியும், கூறிய அம்மஹத்தத்துவத்தின் விகிருதியுமாம். அச்சத்த முதலிய பஞ்சதன்மாத்திரைகளால் முறையாக ஆகாச முதலிய பஞ்சமஹாபூதங்களுக்கு உற்பத்தியுண்டாகின்றது. ஆகையால் அச்சத்த முதலிய பஞ்சதன்மாத்திரை அவ்வாகாய முதலிய பஞ்சமஹாபூதங்கட்கோ பிரகிருதியும், கூறிய அஹங்காரத்திற்குவிகிருதியுமாம். இவ்வாற்றால் மஹத்தத்துவம், அஹங்காரம், பஞ்சதன்மாத்திரையா மிவ்வேழு தத்துவங்கள் முன் முன் தத்துவங்களின் அபேக்ஷையால் விகிருதியாவதாலும், உத்தர வுத்தர தத்துவங்களின் அபேக்ஷையால் பிரகிருதியாவதாலும் பிரகிருதி, விகிருதியா மிரு வடிவங்களாம். முற்கூறிய ஆகாச முதலிய பஞ்ச மஹாபூதங்களும், சுரோத்திர முதலிய பதினொரு இந்திரியமுமாம் பதினாறு தத்துவங்களோ முறையாக சத்த முதலிய பஞ்ச தன்மாத்திரைகளினதும், அஹங்காரத்தினதும் கேவலம் விகிருதியேயாகின்றன. யாதாமோர் காரியத்திற்கும் பிரகிருதியாவனவன்று.

சங்கை :—ஆகாச முதலிய பஞ்ச பூதங்கள் யாதாமோர் காரியத்திற்கு பிரகிருதியாவனவன்றெனக்கூறுதல் பிரத்தியக்ஷ விருத்தமாம். ஏனெனின் பிருதிவி முதலிய பூதங்களினின்று ஆ, விருக்ஷம், கடம், இவை முதலிய விகாரப் பிரத்தியக்ஷத் தோற்ற முண்டாகின்றது. அங்ஙனமே ஆ, விருக்ஷ முதலியவைகளினின்றும் கன்று, பீஜ முதலிய விகாரங்களும் பிரத்தியக்ஷமாகவே தோற்றுகின்றன. ஆகையால் அப்பிருதிவி முதலியவைகட்கு தமது தமது ஆ, விருக்ஷ முதலிய விகாரங்கட்குப் பிரகிருதித் தன்மை அவசியம் உண்டாகும்.

சமாதானம்:—ஆ, விருக்ஷ முதலிய விகாரமும் கன்று, பீஜ முதலிய விகாரமும் பிருதிவி முதலிய தத்துவங்களினும் வேறு தத்துவ வடிவமன்றும். ஆனால் அவ்விகாரம் பிருதிவி முதலிய வடிவமேயாம். ஏனெனின் எங்ஙனம் பிருதிவி முதலியவைகளில் ஸ்தூலத் தன்மை தர்மமும், இந்திரிய கிராஹியத் தன்மை தர்மமு மிருக்கின்றனவோ அங்ஙனமே ஆ, விருக்ஷ முதலிய விகாரங்களிலும் ஸ்தூலத் தன்மை தர்மமும், இந்திரிய கிராஹியத் தன்மைத் தர்மமு மிருக்கின்றன. ஆகையால் அவ்வெல்லா விகாரங்கள் பிருதிவி முதலிய வடிவங்களேயாம். பிருதிவியினும் வேறு தத்துவ வடிவமன்றும். ஈண்டு பிரசங்கத்தில் பிரகிருதி யென்னுஞ் சத்தத்தால் வேறு தத்துவத்தின் உபாதான காரணத் தன்மையே கூறக்கருதியதாம். காரிய மாத்திரத்தின் உபாதான காரணத்தன்மையை பிரகிருதி சத்தத்தால் கூறக் கருதியதன்று. இத்தகைய வேறு தத்துவத்தின் உபாதான காரணத்தன்மை எங்ஙனம் பிரதான முத லியவைகளி லிருக்கின்றதோ அங்ஙனம் பிருதிவி முதலிய பதினாறு விகா ரங்களின்றும். ஆகையால் பதினாறு விகாரங்கள் கேவலம் விகிருதியேயாம். பிரகிருதியன்றும். ஆத்மாவெனப் பெயரிய புருஷ தத்துவமோ யாதொன் றிற்கும் பிரகிருதியும், விகிருதியுமன்றும். இம்முறையாக கூறிய இருபத் தைந்து தத்துவங்கள் கேவலம் பிரகிருதி, பிரகிருதிவிகிருதி, கேவலம் விகி ருதி, அபிரகிருதி அவிகிருதி என நான்கு வகைத்தாம். ஆண்டு சிலர் பத் தரும், சிலர் முக்தருமாமென இவ்வாறாய பந்த மோக்ஷ வியவஸ்தை ஓர் ஆத் மாவாக வொப்புவதில் சம்பவியாது. ஆனால் நானா ஆத்மாவாக வொப்புவதி லேயே சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்வாத்மாவெனப் பெயரிய புருஷன் நாநாவாம். அதாவது சரீர சரீரந்தோறும் அப்புருஷன் வெவ்வேறேயாம். அங்ஙனமே அப்புருஷன் சேதனமும், உற்பத்தி விநாசமில்லாதவனுமாம். யாதொன்றிற்கும் காரணமுமன்றும். இக்காரணத்தானேயே தாமரையிலைப் போன்று பற்றில்லாதவனும். அதாவது எங்ஙனம் தாமரையிலை ஜலத் தால் நனைவதின்றே அங்ஙனமே அப்புருஷனும் கர்த்ருத்வ, போக்த்ருத்வ முதலிய தர்மங்களின் ஆசிரயமன்று. இவ்வாற்றால் இவ்வநுமானம் சித்தமாயிற்று. "புருஷ: கர்த்ருத்வாபாவவாந் காரணத்வாபாவவ த்வாத் யந்நைவம் தந்நைவம் யதா புத்தி:" (இ-ள்.) புருஷன் கர்த் ருத்வ தர்மத்தின் அபாவமுடையவனுகை யோக்கியமாம். காரணத்வ தர்மத் தின் அபாவமுடையவனுவதால் எவ்வெப் பதார்த்தம் கர்த்ருத்வ தர்மத்தின் அபாவமுடைமை யின்றுமோ அவ்வப் பதார்த்தம் காரணத்வ தர்மத்தின் அபாவமுடையதுமன்றும். எங்ஙனம்: மஹத்தத்துவமெனப் பெயரிய புத்தி அக்கர்த்ருத்வ தர்மத்தின் அபாவமுடையதன்றும். அதாவது அக்கர்த்ருத்வ தர்மமுடையதேயாம். ஆகையால் அப்புத்தி அக்காரணத்வ தர்மத்தின் அபாவமுடையதுமன்றும். இவ்வாறாய அநுமானத்தால் அப்புருஷனிடத்து அகர்த்தாத் தன்மையே சித்தமாகின்றது. எது கர்த்தாவாமோ அது போக் தாவாம். ஆகையால் அக்கர்த்தாத் தன்மையின் அபாவமுள்தாக அப்புருஷ னிடத்து அப்போக்தாத் தன்மையுஞ் சம்பவியாது. சாங்கிய மதத்தில் அவ்

வாத்மாவினை போக்தாவாகக் கூறியதுயர்தோ அதுவும் அவ்வாத்மாவில் புத்தியுள்ள போக்தாத் தன்மையின் ஆரோபணத்தால் கூறியதாம். உண்மையாக அவ்வாத்மா நாநா வடிவ அபோக்தாவேயாம்.

சங்கை :—புத்தியினைப் போன்று அப்புருஷனுக்குங் காரணம் வொப்புவதில் இடையூறு யாது?

சமாதானம் :—அப்புருஷனுக்கு கடமுதலிய காரியங்களின் உபாதான காரணம் வொப்பின் உபாதான காரணத்தினோடு காரியத்தின் அபேதமே யுண்டாகும். ஆகையால் அக்கட முதலிய காரியங்களின் நாசமுளதாக அச்சேதன புருஷனுக்கும் நாசமே யுண்டாகும். " அவிநாஶீவாஅரெ அய மாத்மா அநுச்சித்திதர்மா " இச்சுருதி அவ்வாத்மாவினை சொரூபமாகவே நாசமில்லாததாகக்கூறி யிருக்கின்றது. அங்ஙனமே காரிய முதலிய வடிவ தர்மத்தின் நாசத்தோடு நாசமின்மைக் கூறியிருக்கின்றது. " நஜாயதெ ம்ரியதெ வா கதாசித " இவை முதலிய சுருதி, ஸ்மிருதிகளிலும் அவ்வாத்மாவினை ஜனன, மரண முதலிய விகாரங்களில்லாததாகக் கூறி யிருக்கின்றது. அவ்வெல்லாச் சுருதி, ஸ்மிருதி வசனங்களின் விரோத முண்டாகும். அல்லது ஆத்மாவிற்கு நாசம் ஒப்புவதில் கேவலங் கூறிய சுருதி, ஸ்மிருதி வசனங்களின் விரோதமாத்திரமே யன்று. கிருதநாசம், அகிருதாப்பியாகமா மிரு தோஷங்களின் பிராப்தமும் உண்டாகும். அவ்வெல்லா தோஷங்களின் நிவர்த்தியின் பொருட்டு அவ்வாத்மாவெனப் பெயரிய புருஷனுக்கு அகாரணமே யொப்ப வேண்டும்.

சங்கை :—அத்தகைய நிர்விகார சேதன புருஷனிடத்து பிரமாணம் யாது?

சமாதானம் :—அச்சேதன புருஷன் யாதாமோர் பிரத்தியக்ஷ பிரமாணத்தினலோ அறியப்படமாட்டான். ஆனல் அநுமானப் பிரமாணத்தானேயே அறியப்படுகிறான். அதைக் காட்டுவாம். ஆண்டு " செதநொஹம் கரொமி " (இ-ள்.) சேதன வடிவ யான் செய்கின்றேன் என்னு மிவ்வாறுய பிரதீதி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அத்தோற்றத்தால் கர்த்ருத்வ தர்மமுடைய ஜட புத்தியில் சேதனத் தன்மை தர்மந் தோற்றுகின்றது. ஆண்டு ஜட புத்தியில் ஸ்வரூபத்தானே சேதனத் தன்மையின்றும். ஆகையால் கூறிய அத்தோற்றத்தின் வலிவால் அப்புத்தியில் அச்சேதனத் தன்மை தர்மம் ஆரோபிதமாக அங்கீகாரஞ் செய்வதாகும். ஏனெனின் எத்தர்மம் எவ் வஸ்துவில் உண்மையில் உண்டாவதின்றே அத்தர்மம் ஓர் கால் அவ்வஸ்துவில் தோற்றுவதாகுமாயின் அத்தர்மம் அவ்வஸ்துவில் ஆரோபணமாகவே கூறப்படுவதாம். எங்ஙனம்: மஞ்சள் வடிவமில்லாத சங்கில் பித்த தோஷமுடையவனுக்கு மஞ்சள் வடிவ தோற்றம் உண்டாகின்றது. அத்தோற்றத்தின் வலிவால் சங்கினிடத்து நேத்திரத்திலுள்ள பித்த திரவியத்தின் மஞ்சள் வடிவம் ஆரோபணமெனப்படுகின்றது. அங்ஙனமே அச்சேதனத்தன்மைதர்மமில்லாத புத்தியிலுங்கூறிய அத்தோற்றத்தின் வலிவால் அச்சேதனத் தன்மை தர்மத்

தின் ஆரோபணத்தையே கூறுவதாகும். யாதாமோர் பதார்த்தத்தின் பிரசித்த தர்மத்திற்கே வேறு பதார்த்தத்தில் ஆரோபண முண்டாகின்றது. எப்பொழுதும் பிரசித்த மில்லாத தர்மத்திற்கு ஆரோபண முண்டாகாது. ஆண்டு அப்புருஷனினும் வேறான வேறு பிரதான முதலிய சர்வ பதார்த்தங்கள் ஜடமாவதால் அச்சேதனத் தன்மை தர்மத்தின் ஆசிரயமாவனவன்று. பரிசேஷத்தால் அச்சேதனத் தன்மை அப்புருஷனிடத்தே ஒப்பப்படுவதாகும். இவ்வாறாய பரிசேஷ அநுமானத்தால் அச்சேதன தர்மத்தின் ஆசிரய வடிவமாக அப்புருஷனே சித்தமாகின்றான்.

சங்கை :—அவ்வாத்மாவெனப் பெயரிய புருஷன் அசங்க, நிர்விகாரமாவதால் இஜ்ஜகத்தின் கர்த்தாத் தன்மை சம்பவியாது. அப்புருஷனிடத்து கர்த்தாத் தன்மை உமக்கும் அங்கீகாரமின்றாம். அப்புருஷனினும் வேறான ஓர் ஈசுவரன் உமது மதத்திலின்றாம். எவ்வீசுவரன் இஜ்ஜகத்தின் கர்த்தாவாகின்றான்?. கர்த்தாவின்றி எக்காரியத்தின் உற்பத்தியுமுண்டாகாது. ஆகையால் இக்காரிய வடிவ ஜகத்திற்கு ஓர் கர்த்தாவை அவசியம் வொப்பவேண்டும். அஜ்ஜகத்கர்த்தா உமது மதத்தில் யார்?

சமாதானம் :—சுவதந்திரமும், உற்பத்தி விநாசமில்லாதது மாவதால் நித்தியமும், ஏகமும், அசேதனமுமா மித்தகைய எம்மூலப் பிரகிருதி யெனப் பெயரியபிரதானமுண்டோ அந்தப்பிரதானமேஜகத்தின்கர்த்தாவாம். காரியத்தின் அநுகூலமுயற்சியுடைமை வடிவ கர்த்ருத்தன்மை பிரதானத்தி லின்றாம். ஆனால் பிரதானத்தின் காரிய வடிவ மஹத்தத்வமெனப்பெயரிய அந்தக்கரண வடிவ புத்தியிலேயே கூறிய கர்த்ருத்வ மிருக்கின்றது. என்றாலும் அக் கர்த்தா வடிவ புத்திக்கு பிரதானத்தில் உபாதான காரணத் தன்மை யாதோ அதுவே அந்தப்பிரதானத்தில் கர்த்ருத்வமாம். அதாவது எவ்வாறாக கட வடிவக் காரியத்தின் அநுகூல முயற்சி யுடைமை வடிவ கர்த்தாத்தன்மை குலாலனிடத்திருக்கின்றதோ அவ்வாறாக ஜகத் வடிவ காரியத்தின் அநுகூல முயற்சியுடைமை வடிவ கர்த்தாத் தன்மை அப்புத்தியிலேயே இருக்கின்றது. பிரதானத்தி லிருப்பதன்று. அல்லது எங்ஙனம் அம்முயற்சி வடிவ பிரயத்னம் புத்தியின் தர்மமாமோ அங்ஙனமே விருத்திஞானம், சுகம், துக்கம், இச்சை, துவேஷம், தர்மம், அதர்மம், சம்ஸ்காரமா மிவை யாவும் அப்புத்தியின் தர்மமேயாம். அப்புத்திகள் அப்புருஷனைப் போன்று நாநாவாம். ஆகையால் சிலர் சுகியும், சிலர் துக்கியுமாம். இவ்வாற்றால் சுக, துக்க முதலியவைகளின் விவஸ்தையுஞ் சம்பவிக்கின்றது.

சங்கை :—உமது மதத்தில் அசங்க, நிர்விகார புருஷன் ஓர்கர்மத்திற்கும் கர்த்தாவன்றாம். ஆகையால் அப்புருஷனிடத்து தர்ம, அதர்மங்களின் உற்பத்தி சம்பவியாது. எக்காரணத்தாலெனின் கர்மத்தின் கர்த்தாத் தன்மையிலேயே விஹித, நிஷித்தகர்ம ஜன்னிய தர்ம, அதர்மங்களின் உற்பத்தியுண்டாகின்றது. அத்தர்ம, அதர்மங்களே தமது அதிகரணத்தில் சுக, துக்கத்தினை உண்டாக்குகின்றது. ஆகையால் அத்தர்ம, அதர்மத்தின் அபாவமுள்ளதாக அப்புருஷனிடத்து சுக, துக்கத்தின் உற்பத்தியுமுண்டாகாது. புருஷ

னிடத்து துக்கத்தின் அநுத்பன்னமுளதாக துக்கத்தின் சம்பந்த வடிவ பந்தமும் சம்பவியாததாகும். அங்ஙனமே அத்துக்கத்தின் துவம்சவடிவமோக்ஷமும் சம்பவியாததாகும். "க்ஷேணாவயுர்ெதஜஜ-ஃ விஜுயாவிஜ-வுர்ெத" என்னு மிவை முதலிய சுருதிகளில் ஜீவாத்மாவிற்கே அப்பந்தமோக்ஷத்தின் அநுபவத்தன்மை கூறப்பட்டிருக்கிறது. அங்ஙனமே உமதுமதத்திலும் புருஷனது போகமோக்ஷத்தின் பொருட்டே பிரதானத்தின் பிரவிருத்தி அங்கீகரித்திருக்கின்றீர். ஆண்டு பிரதானத்தின் விஷயாகார பரிணமத்தால் புருஷனுக்கு போகம் உண்டாகின்றது. பிரதானத்தின் புத்திமூலமாக விவேக வடிவப்பரிணமத்தால் புருஷனுக்கு மோக்ஷ முண்டாகின்றது. ஆண்டு புத்தி, ஆத்மாவினும் வேறு மென்னும் பேத ஞானத்தினை விவேகமென்பர். கூறிய இவ்வெல்லா வார்த்தைகளும் அசங்கதமாகும்.

சமாதானம்:—சாத்திரத்தில் பந்த மோக்ஷத்தின் அநுபவத் தன்மை ஜீவாத்மாவிற்குக் கூறி யிருக்கிற தென்னும் வார்த்தை சத்தியமாம். என்றாலும் துக்கத்தின் சம்பந்த வடிவ பந்தமும், துக்கத்தின் துவம்ச வடிவ மோக்ஷமோ அம்மஹத்தத்வமெனப் பெயரிய புத்தியிலேயே யுண்டாகின்றது புருஷனிடத்து கூறிய அப்பந்த மோக்ஷம் உண்டாகாது. ஆனால் அப் புருஷனிடத்தோ வேறு வகையாகவே பந்த மோக்ஷம் உண்டாகின்றது. அதைக் காட்டுவாம். அம்மஹத்தத்துவமெனப் பெயரிய புத்தியின் இருப்புளதாக புருஷனிடத்து பந்தமுண்டாகின்றது. அப்புத்தியின் இருப்பின்றாக புருஷனிடத்து மோக்ஷம் உண்டாகின்றது. ஈண்டிது கருத்தாம்; அப்புத்தியினிருப்புளதாகவே சக்ஷு முதலிய இந்திரிய மூலமாக பாஹ்ய கட முதலிய தேசத்தில் பிராப்தமாகிய புத்திக்கு இது கடம் என்னு மிவை முதலிய வடிவமாக கட முதலிய விஷயாகார பரிணமம் உண்டாவதாகின்றது. அப்புத்தியின் பரிணமமே கட முதலியவற்றை விஷயஞ் செய்யும் விருத்தி ஞானமெனப்படுகின்றது. அவ்விருத்தி ஞானத்தினோடு சம்பந்தமாயுள்ள அக்கட முதலிய விஷயம் "ஷாகாரஞாநவரிணாஜிவ-ஷுயா௫-ஷீதவெஃகக்ஷ" இவ்வாறாய சம்பந்தத்தால் புருஷனிடத்திருக்கின்றது. ஈண்டு சுவவென்னுஞ் சத்தத்தால் கட முதலிய விஷயங்களை கிரஹிக்குக. அக்கட முதலிய விஷயங்களின் ஆகாரமாகிய இதுகடம் என்னுமிவை முதலிய எவ்விருத்திஞானமாமோ அவ்விருத்தி ஞானத்தின் பரிணமி உபாதான காரணம் எப்புத்தியாமோ அப் புத்தியினோடு அத்தியந்த சான்னித்ய வடிவ தோஷத்தால் கிரஹிக்கப்படாத பேதம் எப்புருஷனுக்காமோ அப்புருஷனிடத்து புத்தியினுள்ள பரம்பரைச் சம்பந்தத்தால் அப்பாஹ்ய கட முதலிய விஷயம் அப்புருஷனிடத்து இருப்பதாகின்றதோ அக்கட முதலிய விஷயமே அப்புருஷனது அசங்க, நிர் விகாரஸ்வரூபத்தின் திரோதானத்தால் அப்புருஷனது சம்சாரத்தினை சம்பாதிக்கின்றது. இதுவே அப்புருஷனிடத்து பந்தமாம். எப்பொழுது அப்புத்திக்கு நாசமுண்டாகின்றதோ அப்பொழுது அப்புத்திக்கு இது கடம் என்னுமிவை முதலிய கட முதலிய விஷயாகார விருத்திஞான வடிவ பரிணமத்திற்கும் அபாவ முண்டாகின்றது. அவ்விருத்தி ஞானத்தின் அபாவ முண்டாக அக்கட முதலிய பாஹ்ய விஷயங் கூறிய அச்சம்பந்தத்தின் அபாவத்தால் அப்

புருஷனிடத்து பிராப்தமாவதின்று. ஆகையால் அப்புருஷனுக்கு கைவல்லிய அவஸ்தான வடிவ மோக்ஷம் உண்டாகின்றது. இவ்வாற்றால் அப்புருஷனது அப்பந்த, மோக்ஷம் அப்புத்தியின் இருப்புத் தன்மை, இலதாந் தன்மைகளினாலேயே யுண்டாகின்றன. உண்மையில் அப்புருஷனிடத்து அப்பந்த மோக்ஷமின்றாம். இவ்வாரோபித பந்த, மோக்ஷங்களையும் சாஸ்த்திரத்தில் ஜீவாத்மாவிற்கு அநுபவத் தன்மையாகக் கூறி யிருக்கின்றது. அல்லது கர்த்தாத் தன்மை யில்லாத அப்புருஷனிடத்து எக்கர்த்தாத் தன்மைத் தோற்றுகின்றதோ அங்ஙனமே சேதனத் தன்மையில்லாத அப்புத்தியில் எச்சேதனத்தன்மைத்தோற்றுகின்றதோ அதுவும் அப்புருஷ, புத்தியாமிரண்டின் பேதத்தின் கிரஹணமின்மையினாலேயே தோற்றுகின்றது. இக்காரணத்தானேயே "𑌮𑌮𑍇𑌦𑌂𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂" என்னும் தோற்றத்தால் அப்புத்தியில் புருஷனது சம்பந்தமும், கடமுதலிய விஷயங்களினது சம்பந்தமும், விருத்திஞான வடிவ வியாபாரத்தின் சம்பந்தமுமா மூன்று சம்பந்தங்கள் தோற்றுகின்றன. எங்ஙனம்: "யான்" என்பதனால் அப்புத்தியில் சேதன புருஷனது சம்பந்தந் தோற்றுகின்றது. ஏனெனின், அப்புத்தி அத்தியந்தம் ஸ்வச்சமாம், ஆகையால் அப்புத்தியில் அச்சேதன புருஷனது பிரதிபிம்பம் விழுகின்றது. எங்ஙனம்: ஸ்வச்ச தர்ப்பணத்தில் முகத்தின் பிரதிபிம்பம் விழுகின்றது. ஆண்டு அத்தர்ப்பணத்தில் அம்முகத்தின் யாதாமோர் வாஸ்தவ சம்பந்தமின்றாம். ஆனால் அப்பிரதிபிம்பமாத்திரமே எங்ஙனம் சம்பந்தமாமோ அங்ஙனம் ஸ்வச்சபுத்தியில் அச்சேதன வடிவ புருஷனது வாஸ்தவ சம்பந்தமின்றாம். ஆனால் அப்பிரதிபிம்ப மாத்திரமே சம்பந்தமாம். அதாவது அப்புருஷன், புத்தியாமிரண்டின் பேதத்தை கிரஹியாமையால் எவ்விரண்டினது ஏகத்வத்தின் அபிமானமாமோ அதுவே அப்புருஷனது புத்தியில் சம்பந்தமாம். "இது" என்பதனால் அப்புத்தியில் கடமுதலிய விஷயங்களின் சம்பந்தம் தோற்றுகின்றது. ஆண்டு அப்புத்திக்கு சக்ஷுர முதலிய இந்திரிய மூலமாக இது கடமென்னு மிவை முதலிய ஞான வடிவ பரிணமம் யாதோ அந்த ஞான வடிவ பரிணமமே அக்கட முதலிய விஷயங்கட்கு அப்புத்தியில் சம்பந்தமாம். அக்கட முதலிய விஷயங்கட்கு புத்தியில் சம்பந்தம் வாஸ்தவமாம். எங்ஙனம்: முகத்தின் சுவாசங்களால் மறைபட்டு தர்ப்பணத்தில் எம்மலினம் உற்பன்னமாகின்றதோ அம்மலினத்திற்கு அத்தர்ப்பணத்தில் வாஸ்தவமாக சம்பந்த முண்டாகின்றது. அங்ஙனமே அக்கட முதலிய விஷயங்கட்கு அப்புத்தியில் அந்த விருத்தி ஞான வடிவ சம்பந்தமும் வாஸ்தவமேயாம். "கர்த்தவ்வியம்" என்பதனால் அப்புத்தியில் கட முதலியவற்றை விஷயஞ் செய்யும் நிச்சய ஆத்மக ஞான வடிவ வியாபாரத்தின் சம்பந்தம் தோற்றுகின்றது. இவ்வாற்றால் அப்புத்தி அச்சம்பந்த வடிவ மூன்று அம்சங்களை யுடையதாம். ஆண்டு அச்சேதன புருஷனுக்கு அப்புத்தியினோடு எங்ஙனம் அவாஸ்தவ சம்பந்தமிருக்கின்றதோ அங்ஙனமே அப்புத்தியின் ஞான வடிவ பரிணமத்தினோடும் அச்சேதன புருஷனது அவாஸ்தவ சம்பந்தமே யிருக்கின்றது. எங்ஙனம்: தர்ப்பணத்திலுள்ள மலினத்தோடு முகத்தின் அவாஸ்தவ சம்பந்த மிருக்கின்றது.

இவ்வாற்றால் அச்சேதன புருஷனது அவாஸ்தவ சம்பந்தமுடைய விருத்தி ஞானமே உபலப்தி என்னும் பெயரால் வழங்கப்படும். அதாவது "சேதநோஹம்கரோமி" என்னும் இத்தோற்றத்தின் வலிவால் அப்புத்தியில் ஆரோபித சேதன புருஷன்யாவனோ அச்சேதன புருஷனுக்கு அப்புத்தியின் பரிணம வடிவ விருத்தி ஞானத்தினோடு "இதை அறிகிறேன்" என்பதான தோற்றமுண்டாகி அவாஸ்தவ சம்பந்த மிருக்கின்றது. அச்சேதனத்தின் அவாஸ்தவ சம்பந்தமுடைய விருத்திஞானத்தினை உபலப்தியென்பர். அல்லது எங்ஙனம் அந்த விருத்தி ஞானம் அப்புத்தியின் தர்மமாமோ அங்ஙனமே சுகம், துக்கம், இச்சை, துவேஷம், தர்மம், அதர்மம், சம்ஸ்காரமென்னு மிவை யாவும் அப்புத்தியின் தர்மமேயாம். ஏனெனின் "ஸுகீஹம்கரோமி உ:கீஹம்கரோமி" என்பதனால் அச்சுக, துக்க முதலிய தர்மங்களின் பிரயத்ன வடிவ முயற்சியோடு சாமாநாதி கரண்ணிய தோற்றமுண்டாகின்றது. தர்மியின் அபேதமின்றி தர்மங்கட்கு சாமாநாதி கரண்ணியந் தோற்றாது. ஆகையால் எங்ஙனம் பிரயத்ன வடிவ முயற்சிக்கு அப்புத்தி தர்மியாமோ அங்ஙனமே அச்சுக, துக்க முதலிய தர்மங்கட்கும் அப்புத்தியே தர்மியாக வொப்புதல் வேண்டும்,

சங்கை :—எங்ஙனம் முயற்சியினோடு சாமாநாதி கரண்ணியமுடையதாவதால் அச்சுக, துக்க முதலியன அப்புத்தியின் தர்மமாக வொப்பப்படுவதாமோ அங்ஙனமே "சேதநோஹம்கரோமி" என்பதான தோற்றத்தில் சேதனத் தன்மை தர்மத்திற்கும் முயற்சியோடு சாமாநாதி கரண்ணியந் தோற்றுகின்றது. ஆகையால் அச்சேதனத் தன்மைத் தர்மமும் புத்தியினதாகவே வொப்ப வேண்டும்.

சமாதானம் :—புத்தி பரிணமியாவதால் சேதன வடிவ மன்றாம். ஓர் கால் பரிணமி வஸ்துவும் சேதனமாகுமாயின் மண் முதலியனவும் சேதன வடிவமாதல் வேண்டும். இக்காரணத்தால் இவ்வநுமானஞ் சித்தித்தது. "ஸுஷி்:நசேதநா வரிணாமிக்ஷாத் மூடிவத்" என்னு மிவ்வநுமானத்தால் அப்புத்தியில் அசேதன வடிவத் தன்மையே சித்தமாகின்றது. "சேதநோஹம்கரோமி" எனக் கூறிய அநுபவமோ சேதனத் தன்மை அம்சத்தில் பிராந்தி வடிவமேயாம். எங்ஙனம்: "சிகப்பு ஸ்படிகம்" என்னும் அநுபவம் சிகப்புத் தன்மை அம்சத்தில் பிராந்தி வடிவமேயாம். ஆகையால் பிராந்தி வடிவ அநுபவத்தால் புத்தியில் சேதன வடிவத் தன்மை சித்தியாது.

## ௫கூக. அச்சாங்கிய சாஸ்திரத்தின் மத கண்டனம்.

கூறிய அச்சாங்கிய சாஸ்திர மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் முயற்சி, அதிர்ஷடம், போகம் என்னு மூன்றிற்கு சாமாநாதி கரண்ணியந் தோற்றுகின்றது. அதாவது அம்முயற்சி வடிவ பிரயத்னம் எவ்வதிகரணத்தில் இருக்கின்றதோ அவ்வதிகரணத்தில் புண்ணிய, பாப வடிவ அதிர்ஷடம் உண்டாவதாகின்றது. அப்புண்ணிய பாப வடிவ அதிர்ஷடமும் எவ்வதிகரணத்தி லிருக்கின்றதோ அவ்வதிகரணத்தில் சுக, துக்க வடிவ

போகம் உண்டாவதாகின்றது. இவ்வாற்றல் எங்ஙனம் முயற்சி, அதிர்ஷ்டம், போகமா மூன்றிற்கு சாமாஞதிகரண்ணியந் தோற்றுகின்றதோ அங்ஙனமே "ചേതനോഽഹം കരോമി" என்பதான தோற்றத்திலும் சேதனத் தன்மை தர்மத்திற்கும், முயற்சி தர்மத்திற்கும் பரஸ்பரம் சாமாஞதி கரண்ணியமே தோற்றுகின்றது. அச்சாமாஞதி கரண்ணிய அநுபவத்தால் சேதனத்திற்கே கர்த்தா வடிவத்தன்மை சித்தமாகின்றது. ஆகையால் கர்த்தாவினும்வேறான சேதனத்தில் யாதாமோர்பிரமாணமுமின்ரும். அச்சாங்கியசாஸ்திரமுடையார் "சேதனமாகியயான்செய்வேன்" என்பதான இவ்வநுபவத்திற்கு சேதனத் தன்மை அம்சத்தில் எப்பிராந்தி வடிவங் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின், அவ்வநுபவத்திற்கு எங்ஙனம் சேதனத் தன்மை அம்சத்தில் பிரம வடிவம் வொப்புகின்றனரோ அங்ஙனமே அவ்வநுபவத்திற்கு முயற்சி அம்சத்தில் பிரமவடிவம் ஏனொப்பக்கூடாது. ஆனல் அவ்வநுபவத்திற்கு அம்முயற்சி அம்சத்திலேயே பிரமவடிவம் வொப்ப வேண்டும். அவ்வநுபவத்திற்கு சேதன அம்சத்திலோ பிராந்தி வடிவம் வொப்புவதும், முயற்சி அம்சத்தில் பிரம வடிவம் ஒப்புவதுமா மிவ்வர்த்தத்தின் சாதகமாக ஓர்பிரமாணமின்ரும். ஆண்டு அச்சாங்கிய சாஸ்திரமுடையார் இது கூறுகின்றனர். "ബുദ്ധിരചേതനാ പരിണാമിത്വാത് ഘടവത്" எனக் கூறிய அநுமானத்தால் புத்தியில் அசேதன வடிவமே சித்தமாகின்றது. ஆகையால் அவ்வநுமானப் பிரமாணத்தின் வலிவால் யாம் அவ்வநுபவத்திற்கு அச்சேதனத்தன்மை அம்சத்திலேயே பிரம வடிவம் ஒப்புகின்றனமென்பதாக கூறுதலும் சம்பவியாது. ஏனெனின், "ബുദ്ധിഃ കർതൃത്വാഭാവവതീ ജന്യത്വാത് ഘടവത്"

(இ-ள்.) அப்புத்தி கர்த்ருத்வத்தின் அபாவமுடையதாம், ஜன்னியமாவதால், எவ்வெப்பதார்த்தம் ஜன்னியமாமோ, அவ்வப்பதார்த்தம் கர்த்ருத்வத்தின் அபாவமுடையதேயாம். எங்ஙனம்: கடம் ஜன்னியமாவதால் அக்கர்த்ருத்வத்தின் அபாவமுடையதேயாம். அங்ஙனமே புத்தியும் ஜன்னியமாவதால் கர்த்ருத்வத்தின் அபாவமுடையதேயாகும். இவ்வாறுய அநுமானத்தால் புத்தியில் கர்த்ருத்வத்தின் அபாவமே சித்தமாகின்றது. ஆகையால் இவ்வநுமானப் பிரமாணத்தின் வலிவால் கூறிய அவ்வநுபவத்திற்கு முயற்சி அம்சத்திலேயே பிரம வடிவம் ஒப்ப வேண்டும். அதுவுமக்கு அங்கிகார மின்ரும்; ஆகையால் "ചേതനോഽഹം കരോമി" எனக் கூறிய அநுபவத்தால் சேதனத்தையே கர்த்தாவாக வொப்ப வேண்டும். அல்லது எச்சாங்கிய சாஸ்திரமுடையார் கர்த்தா வடிவ புத்தியினும் சேதன வடிவத்தை வேருகக் கூறுகின்றனரோ அச்சாங்கிய மதத்தில் அவ்வகர்த்தா சேதன புருஷனிடத்து தர்ம, அதர்மத்தின் அபாவத்தால் சுக, துக்கத்தின் உற்பத்தி சம்பவியாது. அச்சுக, துக்கத்தின் அநுத்பன்ன முண்டாக அப்புருஷனிடத்து அத்துக்கத்தின் சம்பந்த வடிவ சம்சாரமும், அத்துக்கத்தின் துவம்ச வடிவ மோக்ஷமும் சம்பவியாது. ஆகையால் முற்கூறிய முறைப்படி புத்தியின் சத்வ, அசத்வத்தினேயே புருஷனிடத்து சம்சார, மோக்ஷங் கூறப்படுவதாகும். இதனிடத்து இது வினவுதல்வேண்டும்: அக்கர்த்தா வடிவபுத்தி நித்தியமா? அல்லது அநித்

தியமா?. ஆண்டு அப்புத்தி நித்தியமா மென்னு முதற்பக்ஷத்தை அங்கீகரிக்
கின் அப்புத்தியின் சத்வ அதீன அச்சம்சார மிப்புருஷனை எப்பொழுதும்
விடாதிருக்கும்; ஓர் காலத்திலும் அப்புருஷனுக்கு மோக்ஷம் உண்டாகாது.
ஆகையால் அம்மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு ஓர் முமுக்ஷுவும் முயற்சி
செய்யான். அதனால் அச்சாங்கிய சாஸ்திரமே வீணாகும். அப்புத்தி அநித்
தியமாமென்னு மிரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் புத்தியில் ஜன்னியத்
வமும் அவசியம் அங்கீகரிப்பதாகும். எக்காரணத்தாலெனின் அஜன்னிய
பாவ பதார்த்தத்திற்கு நாசமு முண்டாகாது. ஆனால் ஜன்னிய பாவ பதார்த்
தத்திற்கே நாசம் உண்டாகும். ஆகையால் அப்புத்தியின் உற்பத்திக்கு முன்
னர் புருஷர்கட்கு சம்சார மின்றாக வேண்டும். ஆண்டு அச்சாங்கிய சாஸ்
திரமுடையார் இவ்வர்த்தத்தில் எவ்விஷ்டாபத்தி செய்கின்றனரோ அது சம்ப
வியாது. ஏனெனில் அப்புத்தியின் உற்பத்திக்கு முன்னர் எப்புருஷன் அசம்
சாரியோ அதே புருஷன் அப்புத்தியின் உற்பத்திக்குப் பின்னர் சம்சாரி
ஆகின்றானென்னு மிவ்வர்த்தத்தை அங்கீகரிப்பதால் உமது மதத்தில் முக்தி
யடைந்த அசம்சாரி புருஷனுக்கும் மீண்டும் சம்சாரத் தன்மையின் பிராப்தி
யுண்டாகும். ஆகையால் மோக்ஷத்தின் பிராப்தியின் பொருட்டு ஓர்முமுக்ஷு
வும் முயற்சி செய்யான். அல்லது அக்கர்த்தா வடிவ புத்தியின் அநித்தியமுள
தாக அப்புத்தியின் உற்பத்திக்கு முன்னர் புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்டத்
திற்கும் அவ்வதிர்ஷ்டத்தை யுண்டாக்கும் விஹித, நிஷித்த கிரியைகட்கும்
அபாவமே யுண்டாகும். காரிய மாத்திரத்தின் உற்பத்தியில் அவ்வதிர்ஷ்டத்
திற்கு காரணத்தன்மை யிருக்கின்றது. அவ்வதிர்ஷ்டமின்றி ஓர் காரியமும்
உற்பன்னமாகாது. ஆகையால் அவ்வதிர்ஷ்ட வடிவ காரணத்தின் அபாவமுள
தாக அப்புத்தி வடிவ காரியத்திற்கு உற்பத்தியே யுண்டாகாததாகும். புத்தி
வடிவ கர்த்தாவின் அநுத்பன்ன மிருக்க அச்சம்சாரம் ஓர் காலத்திலும் உற்
பன்னமாகாது. ஆகையால் அப்புத்தியில் கர்த்தாத் தன்மைச் சம்பவியாது.
ஆனால் சேதன ஆத்மாவிலேயே அக்கர்த்தாத் தன்மை சம்பவிக்கிறது. அல்
லது அச்சாங்கியர்கள் அப்புத்தியில் சேதன புருஷனுக்கு எப்பிரதி பிம்ப
வடிவ அத்தியாசம்பந்தம் வொப்புகின்றனரோ அதுவும் அசங்கதமாம்.
ஏனெனின் உலகத்தில் உருவமுடைய தர்ப்பணமுதலிய வஸ்துவிலேயே உருவ
முடைய முக முதலிய வஸ்துவிற்கு பிரதி பிம்பம் காணப்படுகின்றது. உருவ
மில்லாத வஸ்துவில் உருவமில்லாத வஸ்துவின் பிரதிபிம்பம் யாண்டுங் காணப்
படுகிறதில்லை. திருஷ்ட அர்த்தத்தின் அநுசாரமாகவே அதிருஷ்ட அர்த்தத்தின்
கற்பன முண்டாகின்றது. ஆகையால் உருவ மில்லாத புருஷனுக்கு பிரதி
பிம்பமே சம்பவியாது. அல்லது சத்வ முதலிய மூன்று குணங்கட்கு சாம்
மிய அவஸ்தை வடிவ பிரதானம் சிருஷ்டியின் ஆதி காலத்தில் சலனக்கிரியை
யினால் அச்சாம்மிய அவஸ்தையிலதாகி அம்மஹதாதி விகாரங்களை உற்
பன்னஞ் செய்கின்றதென்னும் கற்பனமும் அச்சாங்கியர்கட்கு அசங்கதமாம்.
ஏனெனின் அச்சாங்கிய மதத்தில் ஜடப் பிரதானம் இயல்பாகவோ சேதனத்
தன்மை இல்லாததாக வொப்புகின்றனர். அங்ஙனமே சேதன புருஷனை ஆசிர
யித்ததாகவும் வொப்புவதின்றாம். அத்தகைய ஜடப் பிரதானத்திற்கு மஹ

தாதி காரியங்களை உற்பத்திச் செய்வதில் எப்படி பிரவிருத்தியுண்டாகும்? ஆனால் பிரவிருத்தி யுண்டாகாது. எக்காரணத்தாலெனின் உலகத்தில் மண், சுவர்ண முதலிய அசேதன பதார்த்தங்கள் குலாலன், பொன் வேலைக்காரன் முதலிய சேதன புருஷர்களை ஆசிரயித்ததாகியே கடம், ஆபரண முதலிய காரியங்களின் உற்பத்தியில் பிரவிருத்திக்கின்றன. சேதனத்தின் அனாசிரத அசேதன பதார்த்தங்கட்கு காரியங்களின் அநுகூலப் பிரவிருத்தி யாண்டுங் காணப்படுகிறதில்லை. திருஷ்ட அர்த்தத்தின் அநுசாரமாகவே அதிருஷ்ட அர்த்தத்தின் கற்பனம் உண்டாகின்றது. திருஷ்ட அர்த்தத்தினும் விருத்தமான அதிருஷ்ட அர்த்தத்தின் கற்பனம் உண்டாகிறதில்லை.

சங்கை :—உலகத்தில் அசேதன வஸ்துவிற்கும் காரியத்தின் அநுகூலப்பிரவிருத்தி காணப்படுகின்றது. எங்ஙனம் அசேதனமாகியும் பாலானது பிள்ளைகளின் விருத்தியின்பொருட்டு ஆ, முதலியவைகளின்ஸ்தனத்தினின்றும் பிரவிருத்திக்கின்றது. அங்ஙனமே அசேதனமாகியும் அப்பிரதானம் புருஷனது போக, மோக்ஷத்தின் பொருட்டு தானே பிரவிருத்திக்கும்.

சமாதானம் :—அவ்வசேதன பாலின் பிரவிருத்தியிலும் ஆ, வடிவ சேதனத்திற்கு சினேக வடிவ வியாபாரமும், அக்குழந்தை வடிவ சேதனத்திற்கு பசி வடிவ வியாபாரமுமே காரணமாம். அச்சேதனத்தின் வியாபாரமின்றி அஜ்ஜடமாகிய பாலிற்கு தானாக பிரவிருத்தி யுண்டாகாது. அஜ்ஜடப் பிரதானத்தின் பிரவிருத்தியிலோ நீவிர் சேதன புருஷனது வியாபாரமொன்றும் அங்கீகரிக்கவில்லை. ஆகையால் பாலின் திருஷ்டாந்தம் பிரதான வடிவ தாஷ்டாந்தத்தினும் விஷமமாம்.

சங்கை :—திருஷ்ட அர்த்தத்தின் அநுசாரமாகவே அதிருஷ்ட அர்த்தத்தின் கற்பன முண்டாகிற தென்னும் நியமம் யாண்டுஞ் சம்பவியாது. ஆனால் சிலவிடத்தில் சாஸ்திரப் பிரமாணத்தின் வலிவால் அபூர்வ அர்த்தத்தின் கற்பனமும் செய்யப்படுகின்றது. எங்ஙனம் : மேலுள்ள சொர்க்க முதலிய உலகத்திலுள்ள தேவதை முதலியவைகள் கேவலம் சாஸ்திரப் பிரமாணத்தின் வலிவால் கற்பனஞ் செய்யப்படுகின்றார்கள். அங்ஙனமே "ப்ரக்ருதே꞉ க்ரியமாணானி குணை꞉ கர்மாணி ஸர்வஶ꞉ அஹங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே" (இ-ள்.) பிரதானமெனப் பெயரிய மூலப் பிரகிருதியின் சத்வ, ரஜ, தம வடிவ முக்குணங்களாலேயே மஹதாதி சர்வ காரியங்கள் உற்பன்னமாகுமாயினும் யானென்னும் அபிமானத்தால் விமூடமாயுள்ள அந்தக்கரணம் எவனுக்காமோ அத்தகைய புருஷன் யான் கர்த்தாவென வொப்புகின்றான்: என்னுமிப்பகவத் கீதையின் வசனத்தால் அப்பிரதானத்திலேயே மஹதாதி காரியங்களின் கர்த்தாத் தன்மை சித்தமாகின்றது. அங்ஙனமே இக்கீதா வசனத்தால் அச்சேதன புருஷனிடத்து கர்த்தாத் தன்மையின் அபாவமும் சித்தமாகின்றது.

சமாதானம் :—அப்பகவத் கீதையின் வசனத்தினால் கூறிய அவ்வர்த்தம் சித்தமாகாது. ஏனெனின் கூறிய அவ்வசனத்திலுள்ள பிரகிருதி என்னும் சப்தத்தால் ஸ்ரீபகவானுக்கு உரைத்து பிரதானத்தைக் கூறக்கருத்தின்றும். ஆனால்

பிரகிருதி யென்னுஞ் சத்தத்தால் புண்ணிய, பாப வடிவ அதிருஷ்டத்தையே கூறக்கருதியதாம். அவ்வதிருஷ்ட வடிவ பிரகிருதியால் உண்டான இச்சை முதலிய குணங்களும் அச்சர்வ கர்மங்களைச் செய்திருக்கின்றன. கேவலம் ஆத்மாவே அச்சர்வ கர்மங்களைச் செய்வதன்று. ஆனால் யானென்னும் அபிமானத்தால் விமூடமாய புருஷன் கேவலம் யானென்னும் ஆத்மா வொன்றே அக்கர்மங்களின் காரணமாமென்றும் அவ்விச்சைமுதலியன அக்கர்மங்களின் காரணமன்றென்றும் கேவலம் ஓர் ஆத்மாவினையே அக்கர்மங்களின் காரணமாக வொப்புகின்றான். அவ்விச்சை முதலியவைகளை காரணமாக வொப்பு வில்லை. ஆகையால் கூறிய அவ்வர்த்தமுடைய அக்கீதா வசனத்தால் பிரதானத்தில் காரணத்தன்மை சித்தமாகாது. அங்ஙனமே புருஷனிடத்தும் அகாரணத்தன்மைச் சித்தமாகாது. ஆனால் இக்கீதாவசனம் புருஷனிடத்து இச்சை முதலியவைகளின்றி சுதந்திர காரணத் தன்மையின் அபாவம் பிரதிபாதனஞ் செய்கின்றது. சாமான்னியத்தால் காரணத்தன்மையின் அபாவம் பிரதிபாதனஞ் செய்யாதென்னும் தனது அபிப்பிராயத்தை ஸ்ரீ பகவான் பின்னர் அறிவிக்கும் சர்வகீதாவசனத்தின் உபசம்ஹார வடிவ அஷ்டாதச அத்தியாயத்தில் "𑌅𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂𑌤𑌥𑌾𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌰𑌣𑌂𑌚𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌂 𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌶𑍍𑌚𑌪𑍃𑌥𑌕𑍍𑌚𑍇𑌷𑍍𑌟𑌾 𑌦𑍈𑌵𑌂𑌚𑍈𑌵𑌾𑌤𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌮𑌂" ॥ "𑌶𑌰𑍀𑌰𑌵𑌾𑌙𑍍𑌮𑌨𑍋𑌭𑌿𑌰𑍍𑌯𑌤𑍍 𑌕𑌰𑍍𑌮𑌪𑍍𑌰𑌾𑌰𑌭𑌤𑍇 𑌨𑌰𑌃 𑌨𑍍𑌯𑌾𑌯𑍍𑌯𑌂𑌵𑌾𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂𑌵𑌾 𑌪𑌞𑍍𑌚𑍈𑌤𑍇𑌤𑌸𑍍𑌯𑌹𑍇𑌤𑌵𑌃" ॥ "𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌾𑌰 𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌕𑍇𑌵𑌲𑌂𑌤𑍁𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍 𑌨𑌸𑌪𑌶𑍍𑌯𑌤𑌿𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃" இம் மூன்று சுலோகங்களால் வெளிப்படுத்தியிருக்கிறார். இம்மூன்று சுலோகங்களின் அர்த்த மிதுவாம். சுக, துக்கத்தின் போகத்திற்கு இட வடிவமும், நேத்திர முதலிய கரணங்கட்கு ஆசிரய வடிவமும் எச்சரீரமாமோ அதனை அதிஷ்டான மென்பர். இச்சை முதலிய குணங்களையுடைய ஆத்மாவினை கர்த்தாவென்பர். சக்ஷு முதலிய இந்திரியங்களை கரணமென்பர். பிராணன், அபானன் முதலியவைகளை சேஷ்டை என்பர். புண்ணிய, பாப வடிவ அதிருஷ்டத்தை தைவ மென்பர். ஆண்டு ஜீவாத்மா புருஷன் சரீர, மனது, வாக்குகளால் எவ்வெவ் விஹித, நிஷித்த கர்மங்களை பிராரம்பிக்கின்றானோ அவ்வக்கர்மத்திற்குக் கூறிய அவ்வதிஷ்டான முதலிய ஐந்தே காரணமாகின்றன. இவ்வாறாக அவ்வைந்திற்கு காரணத்தன்மை யுளதாகியும் எவ்வவிவேகி புருஷன் கேவலம் ஆத்மாவொன்றினையே அக்கர்மங்களின் காரணமாக வொப்புகின்றானோ, அவ்வதிஷ்டான முதலியவைகளை காரணமாக வொப்பவில்லையோ, அத்துர்மதி புருஷன் பயனற்றவனேயாம். ஆகையால் இச்சாங்கிய சாஸ்திரத்தின் மதமும் நலமுடையதன்றாம்.

## ௫௪௨. அஷ்டாங்க யோகத்தால் மோக்ஷம் வொப்புவோராகிய பாதஞ்சல சாஸ்திரத்தின் மத வர்ணனம்.

இனி பாதஞ்சல முனிகள் அருளிய யோக சாஸ்திர மதத்தினை நிரூபிப்பாம். ஆண்டு முன்னர் சாங்கிய மதத்தில் எங்ஙனம் பந்த, மோக்ஷ வியவஸ்தையின் பொருட்டு நாநா புருஷர்களை அங்கீகரித்தனரோ அங்ஙனமே யோக சாஸ்திரத்திலும் ஜீவாத்மா வெனப் பெயரிய புருஷன் நாநாவாகவே

அங்கீகரிக்கப்படுகிறுன். எங்ஙனம் அச்சாங்கிய மதத்தில் பிரதான முதலிய
இருபத்துநான்குதத்துவங்கள் அங்கீகாரமாமோ அங்ஙனமே பிரதானமுதலிய
தத்துவங்களால் மஹதாதி தத்துவங்களின் உற்பத்தியும் எங்ஙனம் அங்கீக
ரிக்கப்பட்டதோ அங்ஙனமே யோக மதத்திலும்பிரதான முதலிய இருபத்து
நான்கு தத்துவங்களும், பிரதான முதலிய தத்துவங்களால் மஹதாதி தத்துவங்
களின் உற்பத்தியும் அங்கீகரிக்கப்படுகின்றன. ஆனல் முற்கூறிய சாங்கிய
மதத்தில் ஈசுவரனை அங்கீகரிப்பதின்று. சுதந்திரமாக பிரதானமே மஹதாதி
களின் வாயிலாக ஜகத்தினை உண்டாக்குவதாகின்றது. யோகமதத்திலோ
ஈசுவரன் அங்கீகரிக்கப்படுகின்றுன். அச்சர்வஞ்ஞ ஈசுவரனது அதீனமாகியே
பிரதானம் மஹதாதிகளின் வாயிலாக ஜகத்தினை உண்டாக்குகின்றது.
சுவதந்திரமாக பிரதானம் ஜகத்தினை உண்டாக்குவதன்று. என்னும்
இவ்வளவோ அச்சாங்கியமதத்தினும் யோக மதத்தில் விசேஷத் தன்மையாம்.
ஆண்டு யோகமதத்தில் ஈசுவரனுக்கு இந்த லக்ஷணங் கூறுகின்றனர். "க்லேஶ
கர்மவிபாகாஶயைரபராம்ருஷ்ட: புருஷவிஶேஷ ஈஶ்வர:" (இ-ள்.)
கிலேசம், கர்மம், விபாகம், ஆசயம் என்னும் நான்கினேடு மூன்று காலத்திலும்
அசம்பத்த எப்புருஷ விசேஷமோ அதனை ஈசுவரனென்பர். ஆண்டு அவித்
தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேசம் என்னும் வேறுபாட்டால்
அக்கிலேசம் ஐந்து வகை ஆகின்றது. விஹித, நிஷித்த கிரியையால் உண்
டான தர்ம, அதர்மங்களை கர்மமென்பர். அத்தர்ம, அதர்மங்களால் உண்
டான சுக, துக்க முதலிய வடிவ பயனை விபாகமென்பர். அப்பயனகிய போ
கத்தின் அநுகூல பூர்வ சம்ஸ்காரத்தினை ஆசய மென்பர். இனி அவ்வவித்தை
முதலிய ஐந்து கிலேசங்களை வர்ணிப்பாம். ஆண்டு "ஶுசிஸுகாத்மக்யாதிர
வித்யா" (இ-ள்.) தத்பாவமில்லாத பதார்த்தத்தில் எத்தத்பாவ புத்தியாமோ
அதனை அவித்தையென்பர். அவ்வவித்தை நான்குவிதமாகின்றது. ஆண்டு
அநித்திய சொர்க்க முதலியவைகளில் நித்தியபுத்தி, அசுசியாகிய ஸ்திரீ, சரீர
முதலியவைகளில் சுசித்வபுத்தி, பரிணமத்தில் (துக்கத்தின் ஏதுவாவதால்
துக்க வடிவ போகங்களில்) சுகத்வபுத்தி, அனத்ம வடிவ புத்தி முதலியவைக
ளில் ஆத்மத்வபுத்தி என்னுமிந்நான்கினை அவித்தையென்பர். பரஸ்பர அத்தி
யந்தம் வேறான எத்திருஷ்டா, திருசியமாமிரண்டுண்டோ அவ்விரண்டிற்கு
அவித்தையாலாகிய "அஹம் அஸ்மி" என்பதான எம்மித்தியா தாதாத்மியமா
மோ அதனை அஸ்மிதையென்பர். சுகத்திலும், சுகத்தின் சாதனங்களிலும் எப்
பிரியமுண்டோ அதனை ராகமென்பர். துக்கத்திலும், துக்கத்தின் சாதனங்களி
லும் எவ்வெறுப்புண்டோ அதனை துவேஷமென்பர். ஜந்து மாத்திரத்திற்குண்
டாம் மரணபயம்யாதோ அதனை அபினிவேசமென்பர். இவ்வாருயக் கிலேசம்,
கர்மம், விபாகம், ஆசயம் என்னுமிந்நான்கும் ஜீவாத்மா புருஷனது சித்தத்தி
லேயே இருக்கின்றன. அச்சித்தத்தின் அவிவேகத்தால் அச்சம்சார புருஷன்
அக்கிலேசமுதலியவைகளோடு சம்பந்தமேயாகின்றுன். அத்தகையகிலேசமுத
லியவைகளோடு மூன்று காலத்தில் சம்பந்தமில்லாத புருஷவிசேஷம் யாதோ
அதனை ஈசுவரனென்பர். அவ்வீசுவரன் ஒருவனும், சர்வஞ்ஞனும், ஸ்வதந்திர

னும், ஜீவாத்மா புருஷர்களினும் அத்தியந்த வேறானவனுமாம். அத்தகைய ஈசுவரனால் பிரவிருத்திப்பதாகிய அம்மூலப்பிரகிருதி வடிவ பிரதானம் முற்கூறியவாற்றால் மஹத்தாதி ஜகத்தினை உண்டாக்குகின்றது. ஆண்டு அக்கிலேச முதலியவைகட்கு ஆதாரமாகிய எச்சித்த முண்டோ அச்சித்தத்தின் விலயமுள்ளதாக புருஷன் தனது வாஸ்தவ அசங்க, நிர்விகார வடிவமாக தனித்திருத்தல் யாதோ அதுவே புருஷனுக்கு கைவல்லிய மோக்ஷமாம். ஆகையால் அம்மோக்ஷத்திற்கு இச்சையுடைய முமுக்ஷு ஜனங்கள் அச்சித்தத்தின் விலயம் செய்தல் அவசியமாம். அச்சித்தத்தின் விலயம் அஷ்டாங்க யோகமின்றி வேறோர் உபாயத்தால் உண்டாகாது. அஷ்டாங்க யோகமொன்றினாலேயே அச்சித்தத்தின் விலயம் உண்டாகின்றது. ஆகையால் அதிகாரி புருஷன் அவ்வஷ்டாங்க யோகத்தைச் செய்தல் அவசியமாம். ஆண்டு எண்வகை அங்கமெனப்படும் சாதனங்களுடைய யோகத்தினை அஷ்டாங்க யோகமென்பர். இனி அந்த யோகத்தின் அஷ்ட அங்கங்களை நிரூபிப்பாம். ஆண்டு இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பதான எட்டும் யோகங்களின் அங்கமெனப்படுகின்றன. முதலாவது இயம வடிவ அங்கமோ அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மச்சர்யம், அபரிகிரஹம் என்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆண்டு சரீரம், மன, வாக்குகளினால் பிராணி மாத்திரத்தினை வதைக்காதிருத்தலை அஹிம்சையென்பர். பிறரின் இதத்தின்பொருட்டு யதார்த்த வசனத்தின் உச்சாரணத்தினை சத்திய மென்பர். பலாத்காரத்தால் அல்லது வஞ்சனை, சூதுகளால் பிறரின் தனமுதலியபதார்த்தங்களை அபஹரியாததனை அஸ்தேயமென்பர். உபஸ்த இந்திரியத்தினை அடக்குவதனை பிரம்மச்சரியமென்பர். தேஹத்தின் நிர்வாஹத்திற்கு அதிக போக சாதனங்களை இச்சியாததனை அபரிக்கிரஹமென்பர். இவ்வாறாக வேறு நியம ரூப அங்கமும் சௌசம், சந்தோஷம், தபம், சுவாத்தியாயம், ஈசுவரப்பிரணிதானம் என்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆண்டு முதலாவது சௌசம் அந்தரம், பாஹியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு மிருத்திகை, ஜல முதலியவைகளால் சரீரத்தினது மலத்தின் நிவர்த்தியினை பாஹிய சௌசமென்பர். மையித்திரி, கருணை, முதிதை, உபேக்ஷையென்னும் நான்கினால் சித்தத்திற்கு அசூயை முதலியமலங்களில்லாமல் செய்வதனை அந்தர சௌச மென்பர். பிராணங்களின் தாரண மாத்திரத்தில் ஏதுவாகிய அன்னபானமுதலியவைகளால் களித்தலை சந்தோஷ மென்பர். குளிர்ச்சி, வெம்மை முதலிய தர்மங்களை சஹித்தலை அல்லது கிருச்சிர, சாந்திராயண முதலிய விரதத்தினை தப மென்பர். பிரணவ முதலிய மந்திரங்களின்சப்தத்தினை சுவாத்யாயமென்பர். சரீரம், மனம், வாக்குகளினால் செய்யப்பட்ட கர்மங்களை ஈசுவரனிடத்து அர்ப்பணஞ் செய்தலை ஈசுவரப் பிரணிதானமென்பர். மூன்றாவது ஆசன வடிவ அங்கமோ பாஹியம், சாரீரகமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். எல்லா வகைத்தாய விக்ஷேபமில்லாமல் சமபூமியில் முதலில் தருப்பையைபரப்பி, அதன்மேல் மிருகசர்மத்தினை பரப்பி, அதன்மேல் மிருதுவான வஸ்திரத்தை பரப்புவது மாகியதனை பாஹிய ஆசனமென்பர். மற்றைய சாரீரக ஆசனமோ எண்பத்து நான்கு

வகைத்தாம். அவற்றுள்ளும் பத்மம், ஸ்வஸ்திகம், பத்ரம், வஜ்ரம், வீரமென்னு மிவ்வைந்து ஆசனங்களே முக்கியமெனப்படும். நான்காவது பிராணயாம வடிவ அங்கமோ பாஹியவிருத்தி, அப்பியந்தரவிருத்தி, ஸ்தம்பவிருத்தி, துரிய மென்னும் பேதத்தால் நான்குவிதமாம். ஆண்டு நாசியின் துவார மூலமாக ரேசனையால் வெளியிற் சென்றுள்ள எவ்வந்தர வாயுண்டோ அவ்வாயுவினை அப்பாஹியதேசத்திலேயே நிலைக்கச்செய்வதுயாதோ அதனை பாஹியவிருத்தி என்பர். அப்பாஹிய விருத்தியெனப்பெயரிய பிராணயாமத்தினையே ரேசக மென்பர். அந்நாசியின் துவாரமூலமாக பூரணத்தால் உட்சென்றுள்ள பாஹிய வாயுயாதோ அவ்வாயுவினை அவ்வுள்ளிடத்திலேயே நிலைக்கச்செய்வது யாதோ அதனை அப்பியந்தர விருத்தி யென்பர். அவ்வப்பியந்தர விருத்தியெனப் பெயரிய பிராணயாமத்தினையே பூரகமென்பர். கூறிய ரேசகத்தினதும், பூர ணத்தினதும் பிரயத்தினமின்றியே பிராணனை கேவலம் விதாரக பிரயத்தி னத்தால் எக்கதியின் தடுத்தலுண்டோ அதனை ஸ்தம்ப விருத்தி யென்பர். ஸ்தம்பவிருத்தியெனப்பெயரிய பிராணயாமத்தினையேகும்பகமென்பர். அந்த ரேசகத்தை அறிவதற்கு அஸ்த்தாதி பரிமித பாஹிய தேசம் யாதோ, அங்ஙனமே அப்பூரகத்தை அறிவதற்கு நாபிச்சக்கிராதி வடிவ அந்தரதேசம் யாதோ அத்தேசங்களை நிச்சயிக்கும்வாயிலாகவும் அனேக பிரயத்தினத்தால் சாத்திய முமாம் அத்தகைய ஸ்தம்பவிருத்தி யெனப்பெயரிய எக்கும்பகமாமோ அது துரிய பிராணயாம மெனப்படும். மனதின் நிரோத பூர்வக எச்சோத்திர முத லிய இந்திரியங்கள் சத்த முதலிய விஷயங்களினின்றும் நிரோதமாமோ அதனை பிரத்தியாகாரமென்பர். சம்பிரஞ்ஞாத சமாதியின் சித்தியின்பொருட்டு நாபிச் சக்கிரம், இருதயம், நாசிநுனி யிவை முதலிய இடங்களில் எச்சித்தத்தை நிலைக் கச் செய்கின்றனரோ அதனை தாரணை யென்பர். எவ்வஸ்துவை விஷயஞ் செய்யும் தாரணை யுண்டோ அவ்வஸ்துவில் பிரயத்தின மில்லாமலே விருத்தி யின் ஏகாகாரத்தன்மை யாதோ அதனை தியானமென்பர். அதாவது தியாதா, தியானம், தியேயம் என்னும் மூன்றின் ஸ்பூர்த்தி பூர்வக பிரயத்தினமின்றியே அவ்வஸ்துவில் விருத்திகளின் ஏகாகாரத் தன்மை யாதோ அதனை தியான மென்பர். கருத்திதுவாம். தாரணை, தியானமா மிரண்டும் ஓர் வஸ்துவை விஷயஞ் செய்வதாகியும் தாரணையோ விஜாதீய விருத்திகளால் தடுக்கப்படுவ தாகின்றது. தியானம் விஜாதீய விருத்திகளால் தடுக்கப்படுவ தன்று. இவ் விரண்டிலிவ்வளவு பேதமேயிருக்கின்றது. யாண்டு கேவலம் தியேயவஸ்துவின் ஸ்புரணமுண்டாகின்றதோ தியாதா, தியானமா மிரண்டின் ஸ்புரணமுண்டா கிறதில்லையோ அதனைச் சமாதி யென்பர். அச்சமாதியே நெடுங்காலமட்டும் அப்பியாசஞ்செய்யப்பட்டு அசம்பிரஞ்ஞாத யோக மெனப்படும். முதலாவது சம்பிரஞ்ஞாத சமாதி சாதனவடிவமாம் மற்றைய அசம்பிரஞ்ஞாத சமாதி பயன் வடிவமாம். ஆண்டு இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத் தியாகாரம் என்னு மிவ்வைந்தோ அவ்வசம்பிரஞ்ஞாத மெனப் பெயரிய யோகத்தின் பஹிரங்க சாதனமாம். தாரணை, தியானம், சமாதி என்னும் மூன்றும் அந்த யோகத்தின் அந்தரங்க சாதனமாம். இவ்வாறாகக் கூறிய அஷ்டாங்க யோகத்தானேயே அச்சித்தத்திற்கு விலய முண்டாகின்றது.

### ருகூரு. அப்பாதஞ்சலரின் மத கண்டனம்.

இந்த யோக சாஸ்திரத்தின் மதமும் முற்கூறிய சாங்கிய மதத்தைக் கண்டித்த யுக்தியினுலேயே கண்டிக்கப்படுவதாக அறிக. இந்த யோக சாஸ்திரங் கூறிய வைராக்கியம், இயமம், நியமம், முதலிய சாதனங்கள் சர்வ சாஸ்திர முடைய முமுக்ஷு ஜனங்கட்கு அபேக்ஷிதமாம். என்றாலும் இந்த யோக சாஸ்திரத்தில் எப்பிரதானத்தால் மஹத் தத்வ முதலிய கிரமத்தால் ஜகத்தின் உற்பத்திமுதலிய பிரக்கிரியை கூறியது யாதோ அது அசங்கதமாம். அவ்விருத்த பிரக்கிரியையின் கண்டனம் முன்னர் சாங்கிய மதத்திற் கூறி வந்துள்ளோம் அதை ஈண்டும் அறிந்துக் கொள்க.

### ருகூச. ஜீவ, ஈஸ்வரரின் அபேதத்தை யோப்புவோராகிய வேதாந்திகளின் மத வர்ணனம்.

இனி வேதாந்த சாஸ்திரத்தின் மதத்தை நிரூபிப்பாம். ஆண்டு "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம। நேஹ நாநாஸ்தி கிஞ்சந। ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பஶ்யதி। உதரமந்தரம் குருதே அத² தஸ்ய பயம் பவதி। த்விதீயாத்வை பயம் பவதி" (இ-ள்.) அத்விதீய பிரஹ்ம மொன்றும். இவ்வத்விதீய பிரஹ்மத்தில் நாநாஜகத்து அற்பமுமின்றும். இவ்வத்விதீய பிரஹ்மத்தில் எப்புருஷன் நாநா ஜகத்தினை காண்கின்றானே அப்பேத தரிசி புருஷன் அடிக்கடி ஜனன, மரண வடிவ சம்சாரத்திற்கு பிராப்தமாகின்றான். எப்புருஷன் அவ்வத்விதீய பிரஹ்மத்தில் சிறிதேனும் பேதத்தினைக் காண்கின்றானே அப்பேத தரிசி புருஷனுக்கு பயமேபிராப்தமாகின்றது. புருஷனுக்கு துவிதிய பாவத்தினுனேயே பயத்தின் பிராப்த முண்டாகின்றது. என்னுமிவை முதலிய அநேக சுருதிகள் அத்விதீய பிரஹ்மம் ஒன்றினையே கூறியிருக்கின்றது. அங்ஙனமே அவ்வத்விதீய பிரஹ்மத்தில் நாநாத் தன்மையினை காண்பவனுகியபேததரிசிபுருஷனுக்கும் மீண்டும் ஜனன, மரணத்தின் பிராப்தி வடிவமும், பயத்தின் பிராப்திவடிவமுமான அர்த்தத்தினைக்கூறியிருக்கின்றது. ஆகையால் அத்விதீய பிரஹ்மமொன்றும். இவ்வாறாக முமுக்ஷு ஜனங்கள் நிச்சியஞ் செய்க. அவ்வத்விதீய பிரஹ்மம் தேசபரிச்சேதம், காலபரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்னும் மூன்று பரிச்சேதங்களில்லாததா மாகையால் அந்தபிரஹ்மம் அநந்தமும், உற்பத்தி விநாசமில்லாததுமாம். ஆகையால் சத்தியமுமாம். அந்தபிரஹ்மம் தனதுபிரகாசத்தில் வேறோர் பிரகாசத்தின் அபேக்ஷையைசெய்வதன்று. ஆகையால் ஞானஸ்வரூபமாம். அதாவது சைதன்னிய ஸ்வரூபமாம். இப்பிரஹ்மத்தின் ஆநந்தத்தானேயே யாண்டும் ஆநந்தம் தோற்றுகின்றது. ஆகையால் அந்த பிரஹ்மம் ஆநந்தஸ்வரூபமாம். ஆண்டு சுருதி "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம ஆநந்தோ ப்ரஹ்ம" (இ-ள்.) அந்தபிரஹ்மம்சத்திய வடிவமும், ஞான வடிவமும், அநந்த வடிவமும், ஆநந்த வடிவமுமாம். இனி அந்தபிரஹ்மத்தில் மூன்று பரிச்சேதங்களின் அபாவத்தை போதிக்கும் பொருட்டு முதலில் அநாத்ம வஸ்துக்களில் அம்மூன்று பரிச்சேதங்களின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு "அத்யந்தாபாவப்ரதியோகித்வம் தேஶபரிச்சேத:" (இ-ள்.) அத்தியந்தா பாவத்தின் பிரதியோகித் தன்மை

யாதோ அதனை தேச பரிச்சேத மென்பர். எங்ஙனம்: கட முதலிய பதார்த்
தங்கள் எப்பூதல முதலிய விடங்களி லிருக்கின்றனவோ அவ்விடத்தினை
விட்டு வேறிடங்களி லெல்லாம் அக்கட முதலியவைகளின் அத்தியந்தா
பாவ மிருக்கிறது. அவ்வத்தியந்தா பாவத்தின் பிரதியோகித் தன்மை
அக்கட முதலியவைகளி லிருக்கின்றது. இதுவே அக்கட முதலியவைக
ளில் தேச பரிச்சேதமாம். " [Grantha] "
(இ-ள்.) பிரத்துவம்சா பாவத்திற்கும், பிராகபாவத்திற்கும்
பிரதியோகித் தன்மை யாதோ அதனை காலபரிச்சேதமென்பர். எங்ஙனம்:
கட முதலிய ஜன்னிய பதார்த்தங்கட்கு தனது உற்பத்தியினும் முன்
னர் கபால முதலியவைகளில் பிராகபாவமிருக்கின்றது. தனது நாசத்தின்
பின்னர் அக்கபால முதலியவைகளில் பிரத்துவம்சா பாவ மிருக்கின்றது.
அப்பிராகபாவத்திற்கும், பிரத்துவம்சா பாவத்திற்கும் பிரதியோகித் தன்மை
அக்கட முதலிய பதார்த்தங்களி லிருக்கின்றது. இதுவே அக்கட முதலிய
பதார்த்தங்களில் காலபரிச்சேதமாம். " [Grantha]
[Grantha] " (இ-ள்.) பேத வடிவ அந்நியோன்னியா பாவத்தின்
பிரதியோகித்தன்மை யாதோ அதனை வஸ்து பரிச்சேதமென்பர். எங்ஙனம்:
"[Grantha]" (இ-ள்.) படம், கட மன்றும் என்னு மிவை முதலிய தோற்
றத்தில் விளக்கமான பட முதலிய வஸ்துக்களில் கட முதலிய வஸ்துக்களின்
பேத வடிவ அந்நியோன்னியாபாவம் யாதோ அவ்வன்னியோன்னியா பாவத்
தின் பிரதியோகித் தன்மை அக்கட முதலிய வஸ்துக்களி லிருக்கின்றது:
இதுவே அக்கட முதலிய வஸ்துக்களில் வஸ்து பரிச்சேதமாம். இவ்வாற்றல்
சர்வ அனாத்ம பதார்த்தங்களும் கூறிய பரிச்சேதங்களை யுடையனவேயாம்.
அம்மூன்று பரிச்சேதங்கள் பிரஹ்மத்திலின்றும். ஏனெனின் பிரஹ்மம் யாண்
டும் வியாபகமாம். ஆகையால் பிரஹ்மத்தில் தேச பரிச்சேதம் சம்பவியாது.
பிரஹ்மம் உற்பத்தி விநாசமில்லாததாம். ஆகையால் பிரஹ்மத்தில் கால பரிச்
சேதமும் சம்பவியாது. பிரஹ்மம் யாவற்றிற்கும் ஆத்ம வடிவமாம். ஆகை
யால் பிரஹ்மத்தில் வஸ்து பரிச்சேதமும் சம்பவியாது. அத்தகைய அபரிச்
சின்ன பிரஹ்மத்தின் யாதாமோரிடத்தில் அவ்வியாகிருத மெனப் பெயரிய
மூலப்பிரகிருதி வடிவ சக்தி யிருக்கின்றது. அச்சக்தி, சத்வம், ரஜம், தமம்
என்னு மிம் முக்குண வடிவமாம். அம்முக்குணாத்மக மூலப்பிரகிருதியே
சுத்த சத்துவ குணத்தின் பிரதானத் தன்மையால் மாயையெனப்படும். மலின
சத்துவகுணத்தின் பிரதானத்தன்மையால் அவித்தையெனப்படும். ஆண்டு ரஜ,
தமங்களால் மறைவையடையாத சத்துவ குணம் யாதோ அது சுத்தமெனப்
படுகின்றது. அந்த ரஜ, தமங்களால் மறைவையடைந்த சத்துவ குணம்
யாதோ அது மலின மெனப்படுகின்றது. இவ்வாறாக மூலப்பிரகிருதி யொன்
றே மாயா வடிவமும், அவித்தியா வடிவமுமாகின்றது. ஆண்டுச் சுருதி
" [Grantha] " (இ-ள்.) முக்குணாத்மக மூலப்பிர
கிருதி தானே சுத்த சத்துவ குணத்தின் பிரதானத் தன்மையால் மாயா
வடிவமாகின்றது, மலின சத்துவ குணத்தின் பிரதானத் தன்மையால் அவித்

தியா வடிவமாகின்றது. இம்மாயா, அவித்தியா வடிவ பிரதானத்தினை அஞ்ஞானமென்றுங் கூறுவர். ஆண்டு அம்மாயையோடு விசிஷ்டமாய பிரஹ்ம சேதனம் ஈசுவரனெனப் படுகின்றது. அவ்வவித்தையோடு விசிஷ்டமாய பிரஹ்மசேதனம் ஜீவனெனப்படுகின்றது. இவ்வாறாக வொரே பிரஹ்ம சேதனம் மாயா வடிவ உபாதியின் சம்பந்தத்தால் ஈசுவரனென்னும் பெயரை அடைகின்றது. அவித்தியா வடிவ உபாதியின் சம்பந்தத்தால் ஜீவனென்னும் பெயரை அடைகின்றது. எங்ஙனம்: ஒரே ஆகாசம் மடவடிவ உபாதியின் சம்பந்தத்தால் மடாகாசமென்னும் பெயரை அடைகின்றது. கட வடிவ உபாதியின் சம்பந்தத்தால் கடாகாச மென்னும் பெயரை அடைகின்றது. ஆண்டு சுத்த சத்துவ பிரதான மாயா வடிவ உபாதியுடையதாவதால் அவ்வீசுவரனே சர்வஞ்ஞனும், சர்வ சக்தி சம்பன்னனும், தனது சுத்த பிரஹ்ம ஸ்வரூபத்தின் ஆவரணமில்லாதவனும், அம்மாயையினை தன்அதீனத்தில் வைத்திருப்பவனுமாகின்றான். மலின சத்துவ பிரதான அவித்தியா வடிவ உபாதியுடையதாவதால் அஜ்ஜீவனே அல்பஞ்ஞனும், அற்பசக்தி யுடையவனும், தனது சுத்த பிரஹ்ம ஸ்வரூபத்தின் ஆவரண முடையவனும், அவித்தையின் அதீனமுடையவனுமாகின்றான். அவ்வீசுவர சேதனத்திலும், ஜீவ சேதனத்திலும் ஸ்வரூபமாக சர்வஞ்ஞத்வம், அற்பஞ்ஞத்வ முதலிய தர்மங்களின்றாம். என்றாலும் எங்ஙனம் உண்மையில் சிறிது, பெரிது பாவமில்லாத ஆகாசத்தில் கட, மட முதலிய சிறிய, பெரிய உபாதிகளின் சம்பந்தத்தால் சிறிது, பெரிதுகளாகிய பாவப்பிரதீதியுண்டாகின்றதோ அங்ஙனமே அச்சேதனத்திலும் அம்மாயா, அவித்தியா வடிவ உபாதிகளின் சம்பந்தத்தால் அச்சர்வஞ்ஞத்வ, அற்பஞ்ஞத்வ முதலிய தர்மங்கள் தோற்றுகின்றன. இனி அவ்வீசுவரனால் ஜகத்தினது உற்பத்தியின் வகையை வர்ணிப்பாம். ஆண்டு அம்மாயா விசிஷ்ட ஈசுவர சேதனம் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஜீவர்களின் புண்ணிய, பாபகர்மங்களால் பிரேரேபிக்கப்பட்டுள்ள "ஸாகொஹம்பஹு-ஸ்யாம்" (இ-ள்.) ஒரேபரமேசுவரனாகிய யான் அநேக வடிவங்களாவேன் என்பதாக சங்கல்பித்தனர். அம்மாயையின் விருத்திவடிவ சங்கல்பத்தின் பின்னர் அவ்வீசுவரனால் முதலில் சத்தகுணமுடைய ஆகாசம் உண்டாயிற்று. அவ்வாகாசத்தினின்றும் சத்தம், ஸ்பரிசமா மிருகுணங்களுடையவாயு உண்டாயிற்று. அவ்வாயுவினின்றும் சத்தம், ஸ்பரிசம், ரூபம் என்னும் முக்குணங்களுடையதேயு உண்டாயிற்று. அத்தேயுவினின்றும் சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம் என்னும் நான்கு குணங்களுடைய ஜலம் உண்டாயிற்று. அஜ்ஜலத்தினின்றும் சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும்ஐந்து குணங்களுடைய பிருதிவிஉண்டாயிற்று. இவ்வாறாக முதலில் ஆகாசமுதலிய ஐந்து சூக்ஷ்மபூதங்கள் உண்டாயின. ஆண்டு எங்ஙனம் அம்மாயை மூன்று குணாத்மகமாமோ அங்ஙனமே அம்மாயையின் காரியமாகிய ஆகாசமுதலிய ஐந்து பூதங்களும் முக்குணாத்மகமாகவே உண்டாயின. ஆண்டு ஆகாசம், வாயு, தேயு, ஜலம், பிருதிவி என்னு மிவ்வைந்து பூதங்களின் சத்துவ குணங்களின் கலப்பால் அந்தக்கரணம் உண்டாயிற்று. அதாவது சத்துவகுணப் பிரதான அவ்வைந்து பூதங்களால் அந்தக்கரணம் உண்டாயிற்று. இவ்வாறாய அர்த்தத்தினை பின்னரும் அறிந்துக் கொள்க. அவ்வந்தக்

கரணம் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் பேதத்தால் நால்வகை
ஆகின்றது. ஆண்டு சங்கல்ப, விகல்ப வடிவ விர்த்தியாகார பரிணாமத்தினை
அடைந்த அந்தக்கரணம் மனமெனப்படும். நிச்சிய வடிவ விர்த்தியாகார பரி
ணாமத்தினை அடைந்த அந்தக்கரணம் புத்தியெனப்படும். ஸ்மரண வடிவ விருத்
தியாகார பரிணாமத்தினை அடைந்த அந்தக்கரணம் சித்தமெனப்படும். அபி
மான வடிவ விருத்தியாகாரப் பரிணாமத்தினை அடைந்த அந்தக்கரணம்
அஹங்கார மெனப்படும். அவ்வந்தக்கரணம் பாத முதலாக சிரமட்டுமாம்.
சரீர முழுமையும் வியாப்தமா யிருக்கின்றது. விருத்திஞானம், சுகம், துக்கம்,
இச்சை, துவேஷம், பிரயத்தினம், தர்மம், அதர்மம், சம்ஸ்காரம் என்னு
மிவை முதலிய எல்லா தர்மங்களும் அவ்வந்தக் கரணத்தினதேயாம். ஆத்மா
அவ்வெல்லா தர்மங்களில்லா நிர்குணமும், நிஷ்கிரியையுமாம். ஆண்டு சுருதி
"காம: ஸங்கல்போ விசிகித்ஸா ச்ரத்தா ச்ரத்தா த்ருதிரத்ருதிர்ஹ்ரீர்தீர்பீரித்யேத
த்ஸர்வம் மன ஏவ" (இ-ள்.) இச்சை, சங்கல்பம், சம்சயம், சிரத்தை, அசி
ரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, விருத்திஞ்ஞானம், பயம் இவை
முதலிய யாவும் அந்தக்கரண வடிவ மனதின் தர்மங்களேயாகின்றன. என்னு
மிச்சுருதி அவ்வந்தக்கரணத்திற்கே இச்சை, சங்கல்ப முதலிய தர்மங்களைக்
கூறியிருக்கின்றது. அங்ஙனமே "ஸாக்ஷீ சேதா கேவலோ நிர்குணச்ச"
என்னுமிச்சுருதி ஆத்மாவினை சர்வகுணங்களில்லா நிர்குணமும், நிஷ்கிரியையு
மாகக் கூறியிருக்கின்றது. அவ்வாகாச முதலிய ஐந்து பூதங்களில் ஒவ்வோர்
பூதத்தின் சத்வகுணத்தால் முறையாக சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, ரசனம்,
கிராணம் என்னும் ஐந்து இந்திரியங்கள் உண்டாயின. அச்சுரோத்திர முதலிய
ஐந்துஇந்திரியங்கள் சத்த, ஸ்பரிச முதலியவிஷயங்களின் ஞானத்திற்கேஏதுவா
கின்றன. ஆகையால் அச்சுரோத்திர முதலிய ஐந்து இந்திரியங்களை ஞானேந்
திரிய மென்பர். ரஜோகுணமுடைய அவ்வாகாச முதலிய ஐந்து பூதங்களின்
கலப்பால் பிராணன் உண்டாயிற்று. அப்பிராணன் கிரியா வடிவ உபா
தியின் வேறுபாட்டால் அல்லது இடவடிவ உபாதியின் வேறுபாட்டால்
பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என ஐவகையாயிற்று.
பிராணனது கிரியா வடிவ உபாதியையும், இட வடிவ உபாதியையும் முன்னர்
வாயு நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக்கொள்க.
அவ்வாகாச முதலிய ஐந்து பூதங்களில் ஒவ்வோர் பூதத்தின் ரஜோகுணத்தால்
முறையாக வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், பாயு என ஐந்து கர்மேந்திரி
யங்கள் உண்டாயின. இவ்வாக்கு முதலிய ஐந்து இந்திரியங்கள் முறையாக
வசன முதலிய கிரியைகளின் ஏதுவேயாகின்றன. ஆகையால் இவ்வாக்கு முத
லிய ஐந்தை கர்மேந்திரிய மென்பர். இது வரையில் ஆகாச முதலிய ஐந்து
சூக்ஷ்ம பூதங்களின் சிருஷ்டியைக் கூறினம். இனி ஆகாச முதலிய ஐந்து
ஸ்தூல பூதங்களின் சிருஷ்டியைக்கூறுவாம். ஆண்டு தமோ குணப் பிரதான
அவ்வாகாச முதலிய ஐந்து சூக்ஷ்ம பூதங்கள் பஞ்சீகரண பாவத்தை அடைந்
தன. அதாவது அவ்வாகாச முதலிய ஐந்து பூதங்களை முதலில் சமான இரண்
டிரண்டு பிரிவாக்கி அவ்விரண்டில் ஒவ்வொரு பாகத்தை வேறாகவைத்து அதில்
ஒரு பாகத்தை நன்னான்கு பாகமாக்கி தன்னினும் வேறான ஒவ்வோர் பூதத்

தில் ஒவ்வோர் பாகத்தைக் கொடுக்க அப்பூதங்கள் பஞ்சீகரண பாவத்தை அடைந்தன. அப்பஞ்சீகரணத்தால் அவ்வாகாச முதலிய ஐந்து பூதங்கள் ஸ்தூல பாவத்தை அடைந்தன. அந்த ஸ்தூல பஞ்ச பூதங்களால் இத்தேஹ முதலிய ஸ்தூல ஜகத் உற்பன்னமாயிற்று. இவ்வாறாக வொரே மாயா விசிஷ்ட ஈசுவரனால் இத்தூல, சூக்ஷ்ம வடிவ சர்வஜகத் உற்பன்னமாயிற்று. எங்ஙனம்: சிலந்திப்பூச்சி தன்னால் தந்துவினை உண்டாக்குகின்றது. அத்தந்துவிற்கு சிலந்தியே உபாதான காரணமும், நிமித்த காரணமுமாம். அங்ஙனமே அம்மாயா விசிஷ்ட ஒரே ஈஸ்வரன் அவ்வாகாச முதலிய ஜகத்திற்கு உபாதான காரணமும், நிமித்தகாரணமுமாகின்றான். ஆண்டு மாயா அம்சத்தின் பிரதானத் தன்மையாலோ ஈசுவரன் ஜகத்திற்கு உபாதான காரணமாகின்றான், சேதன அம்சத்தின் பிரதானத்தன்மையாலோ கர்த்தா வடிவ நிமித்த காரணமாகின்றான். இக்காரணத்தினாலேயே இஜ்ஜகத்தில் அஸ்தி, பாதி, பிரியமென்னும் மூன்று அம்சங்களோ அச்சேதனத்தினதாகத் தோற்றுகின்றன. நாமம், ரூபம் என்னு மிவ்விரு அம்சங்கள் அம்மாயையினதாகத் தோற்றுகின்றன. முற்கூறிய மாயா விசிஷ்ட ஈசுவரனே அச்சமஷ்டி சூக்ஷ்ம பிரபஞ்சத்தின் தாதாத்மிய அபிமானத்தால் இரண்ணிய கர்ப னென்னும் பெயரை அடைகின்றான். இவ்விரண்ணிய கர்பனைச் சூத்திரான்மாவென்றுங் கூறுவர். அவ்வவ்வீசுவரனே சமஷ்டி ஸ்தூல பிரபஞ்சத்தின் தாதாத்மிய அபிமானத்தால் விராட் என்னும் பெயரை அடைகின்றான். இவ்விராட்டினை வைஸ்வானர னென்றுங் கூறுவர். இவ்வாறு முற்கூறிப அவ்வவித்தியா விசிஷ்ட சேதன வடிவ ஜீவாத்மாவும் வியஷ்டி ஸ்தூல சரீரத்தின் தாதாத்மிய அபிமானத்தால் விஸ்வனென்னும் பெயரை அடைகின்றான். வியஷ்டி சூக்ஷ்ம சரீரத்தின் தாதாத்மிய அபிமானத்தால் தைஜசனென்னும் பெயரை அடைகின்றான். வியஷ்டி காரண சரீரத்தின் தாதாத்மிய அபிமானத்தால் பிராஞ்ஞனென்னும் பெயரை அடைகின்றான். ஆண்டு சுஷுப்தியில் உள்ள அஞ்ஞானத்தினை காரண சரீர மென்பர். முற்கூறிய ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கன்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள் மனம், புத்தி என்னு மிப் பதினேழு தத்துவங்களின் சமுதாயத்தினை சூக்ஷ்ம சரீரமென்பர். இச்சூக்ஷ்ம சரீரமோ மரணத்தின் பின்னர் புண்ணிய, பாப கர்மங்களின் வசத்தால் உயர்வு, தாழ்வு, உலகங்களில் செல்லுகின்றது. அங்ஙனமே மோக்ஷம் வரையிலிருக்கின்றது. தத்துவ ஞானம் ஒன்றினாலேயே இச்சூக்ஷ்ம சரீரத்திற்கு நாசமுண்டாகின்றது. தத்துவ ஞானமன்றி வேறோர் உபாயத்தால் அச்சூக்ஷ்ம சரீரத்திற்கு நாசமுண்டாகிறதில்லை. இச்சூக்ஷ்ம சரீரத்தினை லிங்க சரீர மென்றுங் கூறுவர். எங்ஙனம் கத்தியினை கோசம் மறைக்கின்றதோ அங்ஙனமே ஆத்மாவினை மறைப்பதாகிய அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்னும் ஐந்து கோசங்களிருக்கின்றன. அவ்வைந்து கோசங்களும் கூறிய அம்மூன்று சரீரங்களிலேயே அடக்கமாம். ஆண்டு தூலசரீரத்திலோ அன்னமயகோசத்தின் அடக்கமிருக்கின்றது. அதாவது இத்தூல சரீரத்தினை அன்னமய கோச மென்பர். பிராணமய, மனோமயம், விஞ்ஞானமயம் என்னும் மூன்று கோசங்களுக்கோ கூறிய

சூக்ஷ்ம சரீரத்தில் அடக்க மிருக்கின்றது. ஆண்டு முற்கூறிய வாக்கு முத
லிய ஐந்து கர்மேந்திரியத்தோடுள்ள பிராணனை பிராணமய கோசமென்பர்.
சுரோத்திர முதலிய ஐந்து ஞானேந்திரியத்தோடுள்ள மனதினை மனோமய
கோசமென்பர். அவ்வைந்து ஞானேந்திரியங்களோடுள்ள புத்தியினை விஞ்
ஞானமய கோச மென்பர். கூறிய காரண சரீரத்தினை ஆநந்தமயகோசமென்
பர். ஆத்மாவினை மறைப்பதாகிய அன்னமய முதலிய ஐந்து கோசங்களி
லேயே சார்வாகர் முதலிய அநேக வாதிகளுக்கு ஆத்ம புத்தி சம்பவிக்கின்
றது. அத்தேஹ முதலியவைகளில் ஆத்மத்வபுத்தியே ஜீவனது அனர்த்தத்
திற்குக் காரணமாம். அதாவது உண்மையில் அசங்கம், நிர்விகாரம், நிர்
குணம், நிஷ்கிரியையுமாயினும், இவ்வாத்மா அவித்தையின்வசத்தால் ஸ்தூல,
சூக்ஷ்ம முதலிய சரீரங்களின் தாதாத்மிய அபிமானத்தால் சரீரங்களின்
ஜனனம், மரணம், சோகம், பசி, தாகம் இவைமுதலிய தர்மங்களை தன்னிடத்
தில் ஒப்பி புண்ணிய, பாப கர்மங்களின் வசத்தால் அநேக உயர்வு, தாழ்வு,
யோனிகளை அடைகின்றான். ஜீவாத்மா யாதாமோர் புண்ணிய கர்மத்தின்
பிரபாவத்தால் அதிகாரி மனித சரீரத்தை யடைந்து, இச்சம்சாரத்தில் நாநா
விதமாய தோஷங்களைக் கண்ணுற்று, வைராக்கியத்தை அடைந்து, மோ
க்ஷத்தை இச்சித்து சுரோத்திரஜ, பிரஹ்ம நிஷ்ட குருவின் சரணடையச் செல்
லுகின்றான். அங்ஙனமே அந்தகுருவின் சமுகத்தினின்றும் “ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம
அஹம் ப்ரஹ்மாஸ்மி தத்த்வமஸி அயமாத்மா ப்ரஹ்ம” என்னுமிவைமுதலியஜீவபிரஹ்
மத்தின் அபேதத்தை போதிக்கும் மஹா வாக்கியங்களை சிரவணஞ் செய்கின்
றான். அங்ஙனமே சிரவணஞ் செய்யப்பட்டுள்ள அர்த்தத்தினை மனனம், நிதித்
தியாசனஞ் செய்கின்றான். அப்பொழுது இஜ்ஜீவாத்மாவிற்கு தனது எதார்த்த
சுத்தப் பிரஹ்ம ஸ்வரூபத்தின் சாக்ஷாத்காரம் உண்டாகின்றது. அதாவது
யான் பிரஹ்ம வடிவமா மென்னும் சாக்ஷாத்கார முண்டாகின்றது. அந்த
பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் ஜீவாத்மாவிற்கு மாயா, அவித்தியா வடிவ அஞ்
ஞானம் நிவிர்த்தமாய் விடுகின்றது. அஞ்ஞானத்தின் நிவிர்த்தியுளதாக
அஞ்ஞானத்தால் கற்பித சம்சாரமும் தானே நிவிர்த்தியாய் விடுகின்றது.
எங்ஙனம்: ரஜ்ஜு வடிவ அதிஷ்டானத்தின் சாக்ஷாத்காரத்தால் ரஜ்ஜு
வினது அஞ்ஞானத்தின் நிவிர்த்தியுளதாக அவ்வஞ்ஞான கற்பித சர்ப்ப
முதலியனவும் தானே நிவிர்த்தியாய் விடுகின்றன. ஈண்டிது கருத்தாம்; மந்த
அந்த காரத்திலுள்ள ரஜ்ஜுவில் தோற்றுவதாகிய சர்ப்பம் யாதோ அச்சர்ப்
பம் சத்தென்றும், அசத்தென்றுங் கூறப்படுவதன்று. ஏனெனின் அச்சர்ப்
பம் ஓர் கால் ரஜ்ஜுவினைப் போன்று சத்தாகுமாயின் எங்ஙனம் ரஜ்ஜுவின்
ஞானத்தால் அந்த ரஜ்ஜுவின் நிவிர்த்தியுண்டாவதின்றோ அங்ஙனமே ரஜ்ஜு
வின் ஞானத்தால் சத் சர்ப்பத்தின் நிவிர்த்தியு முண்டாகாததாகும். ரஜ்ஜுவின்
ஞானத்தால் சர்ப்பத்தின் நிவிர்த்தியோ உலகர் யாவருக்கும் அநுபவ சித்த
மாம். ஆகையால் அச்சர்ப்பம் சத்தென்றுங் கூறப்படுவதன்று. அங்ஙனமே
அச்சர்ப்பம் அசத்தென்றுங் கூறப்படுவதன்று. ஏனெனின் ஓர்கால் அச்சர்ப்
பம் மலடிமகன், முயற்கொம்பைப் போன்று அசத்தாகுமாயின் எங்ஙனம்
அசத் மலடிமகனுக்கும், முயற்கொம்பிற்கும் ஓர் காலும் தோற்றமுண்டாகா

தோ அங்ஙனமே அவ்வசத் சர்ப்பத்தின் தோற்றமும் ஓர் காலும் உண்டாவ தின்ருகவேண்டும்; அச்சர்ப்பத்தின் தோற்றமோ உலகவருக்குண்டாகின்றது. ஆகையால் அச்சர்ப்பம் அசத்தென்றுங் கூறப்படாது. பரிசேஷத்தால் அச் சர்ப்பம்சத், அசத்விலக்ஷண அநிர்வசனீயமேயாம். இவ்வாருக சுத்தியில் ரஜதம், பாலை நிலத்தில் ஜலம், ஆகாசத்தில் கந்தர்வநகரம், சொப்பன பதார்த்தங்கள் இவை முதலிய யாவும் அநிர்வசனீயமேயாம். அநிர்வசனீயமாவதால் கூறிய ரஜத, சர்ப்ப முதலிய சர்வ பதார்த்தங்களும் மித்தையேயாம். அத்தகைய மித் தியா சர்ப்ப முதலியவைகளின் நிவிர்த்தி ரஜ்ஜு முதலிய அதிஷ்டானத்தின் சாக்ஷாத்காரத்தானேயே யுண்டாகின்றது. அங்ஙனமே காரண அஞ்ஞான சஹித பிரபஞ்சமும் சத், அசத் விலக்ஷண அநிர்வசனீயமாவதால் மித்தையே யாம். ஆண்டு "ஜ்ஞாநோதயாத்புராரப்தம் கர்ம ஜ்ஞாநாந்ந நச்யதி । அதத்வா ஸ்வப்ரலம் லக்ஷ்யம் விஸ்ருஷ்டபாணவத் ।" என்னும் இவை முதலிய ஸ்மிருதிகளில் தத்துவஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவிர்த்தி கூறப்பட்டிருக்கின்றது. பிரஹ்மவேத்தா வித்வான் புருஷனுக்கு அவ்வஞ்ஞானத்தின் நிவிர்த்தி அநுபவ சித்தமுமாம். ஆகையால் அவ்வஞ் ஞான சஹித பிரபஞ்சம் சத்தென்றுங் கூறப்படுவதன்று: ஓர் கால் அவ்வஞ் ஞான சஹித பிரபஞ்சம் சத்தாகுமாயின் சத் ஆத்மாவினைப்போன்று அதனது நிவிர்த்தியுண்டாகாது. உலகர் யாவருக்கும் அவ்வஞ்ஞான சஹித பிரபஞ்சம் பிரத்தியக்ஷமாகத் தோற்றுகின்ற தாகையால் அப்பிரபஞ்சம் அசத்தென்றுங் கூறப்படாது. ஓர் கால் அவ்வஞ்ஞான சஹித பிரபஞ்சம் மலடிமகன், முயற்க் கோட்டினைப் போன்று அசத்தாகுமாயின் மலடிமகன், முயற்கோட்டினைப் போன்று பிரபஞ்சம் ஒருவருக்கும் தோற்றுவதாகாததாகும். பரிசேஷத் தால் சத், அசத் விலக்ஷண அநிர்வசனீயமாவதால் அஞ்ஞான சஹித சர்வ பிரபஞ்சமும் மித்தையேயாம். ஆண்டு சுருதி "மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநந்து மஹேச்வரம் । நேஹ நாநாஸ்தி கிஞ்சந । ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பச்யதி ।" இவை முதலிய அநேக சுருதிகள் பிரபஞ்சத்தினை மித்தை யாகவே கூறி யிருக்கின்றன. இத்தகைய மித்தியா பிரபஞ்சத்தின் நிவிர்த்தி அவ்வதிஷ்டான வடிவ பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்தால் சம்பவிக்கின்றது. இத்தகைய பிரத்யக் அபின்ன பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்தால் அஞ்ஞான சஹித சர்வபிரபஞ்ச வடிவ அனர்த்தத்தின் நிவிர்த்தியுளதாக ஜீவாத்மாவிற்கு ஜீவ ஈஸ்வர பிரிவின்றி சுத்த பிரஹ்ம வடிவமாக இருப்பதே ஜீவாத்மாவிற்கு மோக்ஷமாம். ஆண்டுச் சுருதி "ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி" (இ ள்.) பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரமுடைய புருஷன் பிரஹ்ம வடிவமேயாகின்ருன்.

## ருகூரு. வேதாந்திகளின் மத கண்டனம்.

இவ்வேதாந்திகளின் மதமும் நலமுடையதன்ரும். ஏனெனின் பிரத் தியக்ஷ முதலிய பிரமாணங்களால் சித்தித்த இப்பிரபஞ்சத்தில் மித்தியாத்தன் மையே சம்பவியாது. இக்காரணத்தானேயே இப்பிரபஞ்சத்திற்கு தத்துவ ஞானத்தால் நிவிர்த்தியும் சம்பவியாது. வேதாந்திகள் பிரபஞ்சத்தின் அநிர் வசனீயத்தில் ரஜ்ஜு சர்ப்ப திருஷ்டாந்தங் கூறியது யாதோ அதுவும் அசங்க

தமாம். ஏனெனின் ஆண்டும் தோஷத்தின் வசத்தால் பிரசித்த சத் சர்ப்பத்திற்கோ ரஜ்ஜுவிடத்து விளக்க முண்டாகின்றது. ரஜ்ஜுவில் அநிர்வசனீய சர்ப்பத்தின் உற்பத்தியில் ஓர் பிரமாணமு மின்றும். அங்ஙனமே அநிர்வசனீய சர்ப்பத்தின் பிராகபாவ, பிரத்வம்சாபாவ முதலியவைகளை யொப்புவதில் கௌரவ தோஷத்தின் பிராப்தியு முண்டாகின்றது. ஆகையால் ரஜ்ஜு சர்ப்பத்தின் திர்ஷ்டாந்தத்தால் இப்பிரபஞ்சத்தில் மித்தியாத் தன்மைச் சித்த மாவதின்று. அல்லது வேதாந்திகள் இஜ்ஜகத்தின் மித்தியாத் தன்மையில் "𑌨𑍇𑌹 𑌨𑌾𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌞𑍍𑌚𑌨" என்னு மிவை முதலிய எச் சுருதிப் பிரமாணங் களைக் கூறினரோ அச்சுருதிகட்கும் அவ்வாகாச முதலிய சர்வபிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையில் தாத்பரியமின்றும். ஆனுல் அச்சுருதிக்கு ஜன்னியபாவ பதார்த்தங்களின் நசித்தற் றன்மையிலேயே தாத்பரியமாம். அதாவது ஆத்மா முதலாக ஆகாசம், காலம், திக்கு, மனம், பரமாணு முதலிய நித்தியபதார்த்தங்கள் யாவையோ அப்பதார்த்தங்களினும் வேறுகிய அவ்வெல்லா ஜன்னிய பாவபதார்த்தங்கள் யாவும் நாசமடைவனவேயாம். ஓர்கால் சுருதிக்கு பிரஹ்மத்தினும் வேறுன சர்வ ஜகத்தின் மித்தியாத் தன்மையில் தாத்பரியமாக அங்கீகரிக்கின் ஜகத்தின் அந்தர்பூதமாவதால் வேதமும் மித்தையேயாகும். அவ்வேதத்திற்கு மித்தையுளதாக மித்தியா வேதத்தால் பிரதிபாதித பிரஹ்மத்திற்கும் மித்தியாத் தன்மையே பிராப்தமாகும். அவ்வாத்ம வடிவ பிரஹ்மத்திற்கு மித்தையுளதாக அவ்வேதாந்த மதத்தில் சூன்னியவாதி மாத்யமிகரது மதத்தின் பிரவேசமுண்டாகும், இக்காரணத்தானேயே பிரபஞ்ச மித்யாவாதி வேதாந்திகளை நையாயிகர்கள் இவ்வாறுக ஏளனஞ் செய்கின்றனர். ஆண்டு சுலோகம் "𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑌮𑌾𑌸𑌿𑌦𑍍𑌧 𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌾𑌰𑍍𑌥𑌾𑌭𑌿𑌧𑌾𑌯𑌕𑌃 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑍋 𑌯𑌦𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌬𑍌𑌦𑍍𑌧𑍇 𑌕𑌿𑌮𑌪𑌰𑌾𑌧𑍍𑌯𑌤𑍇" (இ-ள்.) பிரத்தி

யக்ஷ முதலிய பிரமாணங்களால் சித்தித்த சர்வ ஜகத்தின் மித்தியாத் தன்மையினை போதிப்பதாகிய வேதாந்தமும் ஓர் கால் சாஸ்திரமாகுமாயின் சூன்னியவாதி பௌத்தர் முதலிய கிரந்தங்கள் தூஷிக்கப்படுவானேன். அதாவது அப்பௌத்தர்களின் கிரந்தமும் சாஸ்திரமாக வேண்டும். அல்லது வேதாந்திகள் "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" என்னு மிச்சுருதிப் பிரமாணத்தால் பிரஹ்மத்திற்கு நித்திய ஞான ஸ்வரூபம் ஒப்புகின்றனர். அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அவ்வேதாந்திகளோடு இது வினவுதல் வேண்டும். அச்சுருதிப்பிரமாணத்தால் ஜீவ, ஈசுவர சாதாரண பிரஹ்ம மாத்திரத்திற்கு ஞான வடிவத் தன்மையிருக்கின்றதா? அல்லது கேவலம் ஜீவாத்மாவிற்கே ஞான வடிவத் தன்மையிருக்கின்றதா? அல்லது கேவலம் ஈசுவரனுக்கே ஞான வடிவத் தன்மை யிருக்கின்றதா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிப்பாராயின் அஜ்ஜீவாத்மாவிற்கும் ஞான வடிவத் தன்மைப் பிராப்தமாகும். அதனிடத்தும் இது வினவுதல் வேண்டும். அந்த ஞானம் நிர்விஷயமா? அல்லது சவிஷயமா?. ஆண்டு அந்த ஞானம் நிர்விஷயமா மென்னு முதற் பக்ஷமோ சம்பவியாது. ஏனெனின் நிர்விஷய ஞானத்தில் யாதாமோர் பிரமாணமுமின்றும். ஏதுவெனது ஞானமாமோ அதுவது சவிஷயமேயர்கின்றது. அந்த ஞானம்

சவிஷயமா மென்னு மிரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதனிடத்தும் இது வினவுதல் வேண்டும். அந்த ஞானம் சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதா? அல்லது அற்ப வஸ்துவை விஷயஞ் செய்வதா?. ஆண்டு அந்த ஞானம் சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதா மென்னும் முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் சர்வ ஜீவாத்மாக்கள் சர்வஞ்ஞர்களாக வேண்டும். அங்ஙனமே சுமேரு முதலிய பர்வதங்களும் சர்வ ஜகத்தின் அடக்கமாவதால் சுமேரு பர்வதம் எமக்கு விஷயமென்னும் அநுபவம் சர்வ ஜீவர்கட்கும் உண்டாக வேண்டும். அத்தகைய அநுபவம் ஓர் ஜீவனுக்கும் உண்டாகிறதில்லை. அந்த ஞானம் அற்பவஸ்துவை விஷயஞ் செய்வதா மென இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் அற்பமென்னும் சத்தத்தால் யாதாமோர் கட வியக்தியின் கிரஹணமே யுண்டாகும். பட முதலிய வஸ்துக்களின் கிரஹணமுண்டாகாது. அல்லது அற்பமென்னும் சத்தத்தால் ஓர் படவியக்தியின் கிரஹணமே யுண்டாகும். கட முதலிய வஸ்துக்களின் கிரஹண முண்டாகாது. இவ்வாறாக ஓர் அர்த்தத்தின் சாதகமாக யாதாமோர் யுக்தியு மின்றாம். ஆகையால் வினிகமன விரஹத்தால் இப்பக்ஷத்திலும் ஞானத்திற்கு சர்வ ஜகத்தை விஷயஞ் செய்யுந் தன்மையே பிராப்தமாகும். ஆகையால் இப் பக்ஷத்திலும் ஜீவாத்மாவிற்கு சர்வஞ்ஞத் தன்மையின் பிராப்தி வடிவ தோஷமே பிராப்தமாகும். அல்லது சவிஷய ஞான வடிவ ஜீவாத்மா சுஷுப்தியிலும் யிருக்கின்றது. ஆகையால் சுஷுப்தியவத்தையிலும் விஷயத்தின் விளக்க முண்டாகவேண்டும். சுஷுப்தியவஸ்தையில் ஒருவருக்கும் விஷயத்தின்விளக்கம் உண்டாகிறதில்லை. ஆகையால் ஜீவ, ஈசுவர சாதாரண பிரஹ்ம மாத்திரத்திற்கு ஞான வடிவத்தன்மை யாமென்னு முதற் பக்ஷம் சம்பவியாது. கூறிய அச்சுருதிப் பிரமாணத்தால் கேவலம் ஜீவாத்மாவிற்கே ஞான வடிவத்தன்மை யிருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்திலும் முற்கூறிய தோஷத்தின் பிராப்தமே யுண்டாகும். ஆகையால் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது. கூறிய அச்சுருதிப் பிரமாணத்தால் கேவலம் ஈசுவரனுக்கே ஞான வடிவத் தன்மை யாமென்னும் மூன்றாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் இப்பக்ஷத்தில் சர்வஞ்ஞத் தன்மையின் பிராப்தி வடிவ தோஷமோ பிராப்தமாகாது. எக்காரணத்தாலெனின் சர்வ சாஸ்திரக்காரர் அவ்வீசுவரனிடத்து சர்வஞ்ஞத் தன்மையே யொப்புகின்றனர். சாஸ்திரக்காரர் ஒருவரும் ஈசுவரனுக்கு அல்பஞ்சம் ஒப்புகிறதில்லை. என்றாலும் அவ்வீசுவரனுக்கு ஞான வடிவத் தன்மைச் சம்பவியாது. ஏனெனின், "யஃ ஸவ-ஜ்ஞஃ ஸவ-விசு" (இ-ள்.) எவ்வீசுவரன் சர்வ ஜகத்தை சாமான்னியவடிவமாக விஷயஞ்செய்யும் ஞான முடையவனோ அவ்வீசுவரனே அச்சர்வ ஜகத்தினை விசேஷ வடிவமாக விஷயஞ் செய்யும் ஞான முடையவனும். என்னு மிச்சுருதிப் பிரமாணத்தால் அவ்வீசுவரனிடத்து சர்வ ஜகத்தை விஷயஞ் செய்யும் நித்திய ஞானத்திற்கு ஆசிரயத்தன்மை வெளிப்படையாக விளங்குகிறது, ஞான ஸ்வரூபத் தன்மை தோற்றுவதின்று. ஆகையால் இச்சுருதியின் அநுசாரமான "ஸத்யஞானாநந்தம்ப்ரஹ்ம நித்யவிஞானாநந்தம்ப்ரஹ்ம" இவைமுதலிய சுருதிகளிலும் ஞானமென்னும் பதத்தால் ஞானத்தின் ஆசிரயத்தினை

கிரஹித்தலே உசிதமாம். இவ்வாருக கூறிய அச்சுருதியிலுள்ள ஆநந்த
சத்தத்தாலும் அவ்வாநந்தத்தின் ஆசிரயத்தினையே கிரஹித்தல் உசிதமாம்.
சுக வடிவ ஆநந்தம் ஈசுவரனிடத் திருப்பதில்லை; ஆனால் ஜீவாத்மாவி
லேயே அவ்வாநந்த மிருக்கின்றது. ஆகையால் பிரஹ்ம வடிவ ஈசுவரனி
டத்து ஆநந்தம் சம்பவியாது. என்றாலும் ஆண்டு ஆநந்த சத்தத்திற்கு
லக்ஷணா விர்த்தியால் சுகாபாவத்தினையே கிரஹிக்குக. அச்சுகாபாவம்,
அவ்வீசுவரனிடத்து மிருக்கின்றது. உலகத்திலும் அத்துக்கா பாவத்தில்
சுக சத்தத்தின் பிரயோகங் காணப்படுகின்றது. எங்ஙனம்: வியாதியி
னால் துக்கமுடைய புருஷனுக்கு வியாதி நிவிர்த்தியானவுடன் அப்புருஷன்
யானிப்பொழுது சுகமடைந்தே னென்பதான வசனங் கூறுகின்றான்.
ஆண்டு துக்கா பாவத்திலேயே சுக சத்தத்தின் பிரயோக முண்டாகின்றது.
அங்ஙனமே அவ்வீசுவரனது ஸ்வரூபத்தைப் போதிக்கும் சுருதியிலுள்ள
ஆநந்த சத்தத்தாலும் அத்துக்கா பாவத்தின் கிரஹணஞ் சம்பவிக்கும். அல்
லது கூறிய அச்சுருதியின் வலிவால் அவ்வீசுவரனிடத்து நித்திய ஞானத்தி
னைப் போன்று நித்திய ஆநந்தமு மிருக்கட்டும். என்றாலும் அவ்வீசுவரன்
ஆநந்த வடிவமன்றாம். ஏனெனின், "ஸுகம்ப்ரஹ்ம" என்னு மிச்சுருதி
அவ்வீசுவரனை சுகத்தினும் வேருகக் கூறியிருக்கிறது. எவ்வஸ்து சுகத்
தினும் வேருமோ அவ்வஸ்து சுக வடிவமாகாது. எங்ஙனம்: சுகத்தினும்
வேருன துக்கம் சுக வடிவமன்றாம். சுகத்தினும் வேருன வஸ்துவிற்கும்
சுக வடிவ மொப்பின் அச்சுகத்தினும் வேருன துக்கத்திற்கும், சுக வடிவத்
தன்மை யுண்டாக வேண்டும். அல்லது "ஆநந்தம் ப்ரஹ்மணோவித்வாந்ந பி
பேதி குதச்சந" (இ-ள்.) இவ்வதிகாரி புருஷன் பிரஹ்மத்தின் ஆநந்தத்
தினை அறிந்தவனாக ஒன்றினாலும் பயத்தை அடையான். என்னு மிச்சுருதியில்
பிரஹ்மத்திற்கும், ஆநந்தத்திற்கும் பேதமே வெளிப்படையாய் கூறப்பட்டி
ருக்கின்றது. ஆகையால் கூறிய அச்சுருதியால் அப்பிரஹ்ம வடிவ ஈசுவர
னுக்கு ஆநந்த வடிவத் தன்மைச் சம்பவியாது. ஆனால் அவ்வாநந்த குணத்
தின் அதிகரணத் தன்மையே சம்பவிக்கின்றது. அல்லது அவ்வேதாந்திகள்
எஜ்ஜீவ, ஈசுவர அபேதங் கூறுகின்றனரோ அதுவும் சம்பவியாது. ஏனெனின்
இவ்வுலகத்தில் சில ஜீவர் சுகியாகவும், சில ஜீவர் துக்கியாகவும், சில ஜீவர்
ஞானியாகவும், சில ஜீவர் அஞ்ஞானியாகவும் இருக்கும் ஜீவர்களின்
விலக்ஷணத் தன்மை உலகத்தில் பிரசித்தமாகத் தோற்றுகின்றது. அந்த
விலக்ஷணம் ஜீவாத்மாவின் நாநாத் தன்மையின்றிச் சம்பவியாது. ஓர்
கால் சர்வ சரீரங்களில் ஒரே ஜீவாத்மாவாக அங்கீகரிக்கின் ஓர் சரீரத்தில்
சுகம் அல்லது துக்கமுளதாக எல்லாச்சரீரங்களில் சுகம் அல்லது துக்கம்
உண்டாக வேண்டும். அது இங்ஙனங் காணப்படுவதின்று. ஆகையால்
அச்சுக, துக்க முதலியவைகளின் விசித்திரத் தன்மையால் அஜ்ஜீவாத்மா
நாநாவாகவே வொப்பப்படுவதாகும். அத்தகைய அநேக ஜீவர்களோடு
வோர் ஈசுவரனுக்கு அபேதம் சம்பவியாது. ஓர் கால் வோர் ஈசுவர
னுக்கு அநேக ஜீவ வடிவ மொப்பின் அவ்வீசுவரனிடத்து ஏகத்வமும்,
அநேகத்வமுமா மிரண்டும் பிராப்தமாகும். அது அத்யந்த விருத்தமாம்.

ஏனெனின் எவ்வஸ்துவில் ஏகத்வ தர்மமிருக்கின்றதோ அவ்வஸ்துவில் அநேகத்வ தர்மமிராது. எவ்வஸ்துவில் அநேகத்வ தர்மமிருக்கிறதோ அவ்வஸ்துவில் ஏகத்வ தர்மமிராது. ஆகையால் அவ்வீசுவரனினும் ஜீவாத்மாவினை வேறாகவே யொப்ப வேண்டும். அல்லது ஓர் ஈசுவரனோடு நாநா ஜீவர்களின் அபேதம் அங்கீகரிக்கின் சில ஜீவர் பத்தரும், சில ஜீவர் முக்தருமாமென்னும் பந்த, மோக்ஷத்தின் வியவஸ்தையே சம்பவியாது. ஏனெனின் "[illegible]" என முற்கூறிய நியாயத்தால் ஒரேசுவரனோடு அபின்ன பத்த ஜீவர்கட்கும், முக்த ஜீவர்கட்கும் பரஸ்பரம் அபேதமே சித்தமாகும். அதனால் பத்த ஜீவர்களிடத்தும் முக்தத் தன்மை பிராப்தமாகும். அங்ஙனமே முக்த ஜீவர்களிடத்தும் பத்தத் தன்மைப் பிராப்தமாகும். அது அத்தியந்தம் அசங்கதமாம். ஆகையால் ஓரீசுவரனோடு நாநா ஜீவாத்மாக்களின் அபேதம் சம்பவியாது. அல்லது வேதாந்திகள் ஜீவ, ஈசுவரரின் அபேதத்தில் முன்னர் "[illegible]" இவை முதலிய எச்சுருதி வடிவ பிரமாணங்கள் கூறினரோ அச்சுருதி வசனங்களாலும் ஜீவ, ஈசுவரரது ஏகத்வம் சித்தமாகாது. ஏனெனின் எல்லா வாக்கியங்களும் இக்கர்ம கர்த்தா ஜீவாத்மாவின் ஸ்துதி செய்யப்பட்டு ஸ்துதி அர்த்தவாத வடிவமேயாம். அதாவது இக்கர்ம கர்த்தா ஜீவன் ஈசுவரனேயாம். என்பதனால் அக்கர்ம கர்த்தா ஜீவனது ஸ்துதியைச் செய்வதாகிய அவ்வாக்கியம் ஸ்துதி அர்த்தவாத வடிவமேயாம். அஸ்துதி அர்த்தவாத வடிவ வாக்கியத்தால் ஜீவாத்மாவிற்கு ஈசுவர வடிவத் தன்மை சம்பவியாது. ஓர் கால் ஸ்துதி வடிவ அர்த்தவாதத்தாலும் அபேதத்தின் சித்தியுண்டாகுமாயின் "ஆதித்யோ யூப: யஜமாந: ப்ரஸ்தர:" என்னு மிவை முதலிய ஸ்துதி அர்த்தவாத வடிவ வசனங்களால் *காஷ்டமய ஸ்தம்பமென்பெயரிய யூபத்திற்கு சூரிய வடிவத்தன்மையுண்டாக வேண்டும். அங்ஙனமே தர்பைகளின் முஷ்டி வடிவ பிரஸ்தரத்திற்கு யஜமான் வடிவத் தன்மை யுண்டாக வேண்டும். அது பிரத்தியக்ஷப் பிரமாணத்தினும் விருத்தமாம். அங்ஙனமே கூறிய ஸ்துதி அர்த்தவாத வடிவ வசனத்தால் ஜீவாத்மாவிற்கு ஈசுவர வடிவத் தன்மைச் சித்தியாது. எக்காரணத்தாலெனின் யான் ஈசுவரனன்று என்பதான ஜீவ, ஈசுவரரின் பேதத்தை விஷயஞ் செய்யும் அநுபவம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வநுபவத்தினும் விருத்த அர்த்தத்தினை அவ்வாக்கியம் பிரதிபாதித்ததன்று. ஆகையால் கூறிய அச்சுருதி வாக்கியம் ஸ்துதி அர்த்தவாத வடிவமாவதால் "ஆதித்யோ யூப:" என்னு மிவைமுதலிய வாக்கியங்களைப்போன்று அபேத வடிவ அர்த்தத்தின் சாதகமன்றாம். அல்லது "பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னு மிவை முதலிய சுருதி வாக்கியங்கள் உபாசனையையே விதித்திருக்கிறது. ஏனெனின், ஈசுவரனது உபாசனையன்றி அதிகாரி புருஷனுக்கு தத்துவ ஞானத்தின் பிராப்தி யுண்டாகாது. இக்காரணத்தானேயே

---

* ஓர்வித வேள்வியில் சூரியனாகப் பாவித்து நாட்டப்படும் ஸ்தம்பத்தினை யூபமென்பர். அங்ஙனமே யஜமானனாக பாவித்து வைக்கப்படும் தர்ப்பைக் கட்டினை பிரஸ்தரமென்பர்.

"ஸர்வம் ஸமாப்தோஷி" என்னு மிவை முதலிய சுருதிகள் ஈசுவரனது உபாசனையை விதித்திருக்கிறது. ஆகையால் முமுக்ஷு ஜனங்கள் தத்துவ ஞானத்தின் பிராப்தியின் பொருட்டு அவ்வீசுவரனது உபாசனையை அவசியம் செய்யவேண்டும். தாழ்ந்த வஸ்துவில் உயர்ந்த வஸ்துவின் புத்தி யாதோ அதனை உபாசனை யென்பர். எங்ஙனம் பெயர், வாக்கு, மனம், இவை முதலிய தாழ்ந்த வஸ்துக்களில் உயர்ந்த பிரஹ்மத்தின் புத்தி வடிவ உபாசனை சாந்தோக்கிய சுருதியில் கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனமே "பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்னு மிவை முதலிய வாக்கியங்களும் இந்த ஜீவாத்மாவில் ஈசுவர புத்தி வடிவ உபாசனையினையே விதித்திருக்கின்றன. அவ்வுபாசனையை விதித்த வாக்கியங்களால் ஜீவாத்மாவிற்கு பிரஹ்ம வடிவத் தன்மை சித்தமாகமாட்டாது. ஓர் கால் உபாசனையை விதித்துள்ள வாக்கியங்களாலும் ஜீவனுக்கு பிரஹ்ம வடிவத் தன்மையின் சித்தி யுண்டாகுமாயின் ஜட வடிவத்தால் பிரசித்த பெயர், வாக்கு, மன முதலியவைகட்கும் பிரஹ்ம வடிவத் தன்மை யுண்டாக வேண்டும். அது உமக்கும் அங்கீகார மின்றும். அல்லது "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்னு மிச்சுருதி எங்ஙனம் பிராந்த சூன்னிய வாதிகளது மதத்தை அநுவாதஞ் செய்வதாகி பூர்வ பக்ஷ வடிவமாமோ அங்ஙனமே "ப்ரஹ்ம ப்ரஹ்ம ஸதாம் ப்ரஹ்மாஸ்மி" என்னு மிவை முதலிய சுருதி வசனங்களும் அவ்வேதாந்திகளின் மதத்தினை அநுவாதஞ் செய்வதாகி பூர்வ பக்ஷ வடிவமேயாம். பூர்வ பக்ஷ வாக்கியங்களால் அஜ்ஜீவாத்மாக்களின் அபேதம் சித்திக்கமாட்டாது. ஓர் கால் பூர்வ பக்ஷ வடிவ வாக்கியங்களாலும் கூறிய அர்த்தத்தின் சித்தி யுண்டாகுமாயின் பூர்வ பக்ஷ வடிவ சுருதியால் சூன்னிய வாதத்தின் சித்தியு முண்டாகவேண்டும். ஆகையால் கூறிய அவ்வாக்கியங்களால் ஜீவ பிரஹ்மங்களின் அபேதம் சித்தியாது. அல்லது அவ்வேதாந்திகள் "ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி" என்னும் சுருதிப் பிரமாணத்தால் எப்பிரஹ்ம வேத்தா ஞானி ஜீவனுக்கு பிரஹ்ம வடிவத் தன்மைக் கூறுகின்றனரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் அச்சுருதிக்கு கூறிய இவ்வர்த்தத்தில் கருத்தின்றும். ஆனால் பிரஹ்ம வேத்தா ஞானி புருஷன் பிரஹ்மத்தின் சமானமாகின்றான். என்னும் அர்த்தத்திலேயே அச்சுருதியின் கருத்தாம். அதாவது எங்ஙனம் ஈசுவரன் சர்வ துக்கங்களில்லாதவனோ அங்ஙனமே அத்தத்துவ வேத்தா ஜீவான்மாவும் சர்வ துக்கங்களில்லாததாகும். கருத்திதுவாம்; எங்ஙனம்: அரசனினும் வேறுயுள்ள புரோஹிதனும் யானை, குதிரை முதலிய சம்பாதனையின் அதிகத்தன்மையால் அரசனெனப்படுகின்றானோ அங்ஙனமே உண்மையில் ஈசுவரனினும் வேறுயுள்ள ஜீவாத்மாவும் தத்துவ ஞானத்தால் சர்வ துக்கங்களின் அபாவமுள்ளதாக ஈசுவர னென்னும் பெயரால் வழங்கப்படுகின்றான். இக்கருத்தால் "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்னு மிச்சுருதி சர்வ துக்கங்களில்லாத தத்துவ வேத்தா ஜீவாத்மாவிற்கு ஈசுவரனது சமீபத்தன்மையைக் கூறியிருக்கின்றது. ஈண்டு நிரஞ்சனமென்னும் பதத்தால் கூறப்பட்ட சர்வ துக்கங்களின் அபாவம் யாதோ அதுவே அம்

முக்த ஜீவர்களிடத்து ஈசுவரனது சமானத் தன்மையாம். அல்லது சில வேதாந்திகள் இங்ஙனங் கூறுகின்றனர். சம்சார தசையிலோ ஜீவாத்மாவிற்கு ஈசுவரனோடு பேதமே யிருக்கிறது. மோக்ஷ தசையில் தத்துவ ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவிர்த்தியுளதாக ஜீவாத்மாவிற்கு ஈசுவரனோடு அபேத முண்டாகின்றது. இங்ஙனங் கூறுவதும் அசங்கதமாம். ஏனெனின் அந்நியோன்னியா பாவ வடிவ பேதம் நித்தியமா மாகையால் அப்பேதத்தின் நாசமேசம்பவியாது. ஓர் கால் நித்திய வஸ்துவிற்கும் நாசம் உண்டாகுமாயின் நித்திய ஆத்மாவிற்கும் நாச முண்டாக வேண்டும். அல்லது மோக்ஷ தசையில் ஓர் கால் பேதத்திற்கு நாசமும் அங்கீகரிக்கினும் ஜீவ ஈசுவர வடிவ வியக்திகள் வேறாகவே கட்டுண் டிருக்கின்றன. அல்லது முற்கூறிய சுருதிகளானேயே ஜீவ, ஈசுவரரது பேதம் சித்திப்பதுடன் "த்3வா ஸுபர்ணா ஸயுஜா ஸகா2யா । ப்ருத2கா3த்மாநம் ப்ரேரிதாரம் ச மத்வா । ஜ்ஞாஜ்ஞௌ த்3வாவஜாவீஶநீஶௌ" என்னு மிவை முதலிய அனேக சுருதி, ஸ்மிருதி வசனங்கள் ஜீவ, ஈசுவரபேதத்தினையே கூறியிருக்கின்றன. அங்ஙனமே பாதஞ்சல முதலிய அனேக சுருதிகளிலும் ஜீவ, ஈசுவரரது பேதமே கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் ஜீவ, ஈசுவரரின் பேதமே அங்கீகரிக்கப்பட வேண்டும்.

சங்கை :—ஓர் கால் ஜீவாத்மாவினை ஈசுவரரினும் வேறாகவும், ஆகாச முதலிய ஜகத்தினை சத்தியமாகவும் வொப்பின் பிரஹ்மத்தினை அத்வைத வடிவமாகக் கூறுவதாகிய "ஏகமேவாத்3விதீயம் ப்3ரஹ்ம" இச்சுருதி அசங்கதமாகும். அங்ஙனமே அகாச முதலிய சர்வ ஜகத்தினை பிரஹ்ம வடிவமாகக் கூறுவதாகிய "ஸர்வம் க2ல்வித3ம் ப்3ரஹ்ம" இச்சுருதியும் அசங்கதமாகும்.

சமாதானம்: "ஏகமேவாத்3விதீயம் ப்3ரஹ்ம" என்னும் சுருதி அத்விதீய பதத்தால் பிரஹ்மத்தினும் வேறான சர்வ ஜகத்தின் அபாவத்தினைக் கூறியதன்று. ஆனால் பிரஹ்ம வடிவ ஈசுவரனிடத் திருக்கின்ற ஏகத்வ சங்கியை யாதோ அவ்வேகத்வ சங்கியையின் சமசியத விஜாதீய பதார்த்தங்களின் விலக்ஷணத் தன்மையினையே கூறியதாம். ஆண்டு அவ்வீசுவரனிடத்து சர்வ ஜகத்தின் கர்த்தாத் தன்மையும், நித்திய ஞானம் இச்சை பிரயத்தினங்களின் ஆசிரயத் தன்மையும் யாதோ அதுவே அவ்வீசுவரனிடத்து விஜாதீய ஜீவர் முதலிய பதார்த்தங்களின் விலக்ஷணத் தன்மையாம். அதாவது சர்வ ஜகத்தின் கர்த்தாவும், நித்திய ஞான முதலியவைகளுடையவனும் ஓரீசுவரனேயாம். வேறோர் பதார்த்தம் அங்ஙனமாவதன்று. இவ்வாறாக அத்விதீயபதத்திற்கு அர்த்தம் உலகத்திலும் பிரசித்தமாம். எங்ஙனம் எப்புருஷனிடத்து மற்றெல்லாரினும் அதிக வித்தை யுண்டாகின்றதோ அப்புருஷனை "வித்வான் ஒருவனே" என்பதாக உலகர் அத்விதீய வடிவமாகக் கூறுகின்றனர். ஆண்டு அவ்வத்விதீய பதம் அவ்வித்வானினும் வேறான எல்லாவற்றின் அபாவத்தினைக் கூறியதன்று. ஆனால் அவ்வித்வான் புருஷனிடத்து மற்றைய எல்லா புருஷர்களினும் வித்தையின் அதிகத் தன்மை வடிவ விலக்ஷணத் தன்மையினையே கூறியிருக்கின்றது. அங்ஙனமே அச்சுருதியிலுள்ள அத்விதீய பதமும் ஓரீசுவரனிடத்து முன்னர்க் கூறிய விலக்ஷணத் தன்மையினையே கூறியிருக்

கிறது. ஆகையால் அச்சுருதியினால் பிரஹ்மத்தினும் வேறான சர்வ ஜகத்தின் அபாவம் சித்தியாது. அங்ஙனமே “ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம” என்னுமிச் சுருதியும் ஆகாச முதலிய சர்வ ஜகத்திற்கு பிரஹ்ம வடிவத் தன்மை கூறிய தன்று. ஆனால் இவ்வெல்லா ஜகத்தும் பிரஹ்மத்தால் வியாப்தமாம். அதாவது அந்த பிரஹ்ம வடிவ ஈசுவரனது சம்பந்த முடையதாம், என்பதான அர்த்தத்தினை அச்சுருதி பிரதிபாதிக்கின்றது. ஓர் கால் அச்சுருதியால் இக் கட, பட முதலிய சர்வ ஜகத்தினை பிரஹ்ம வடிவமாக வொப்பின் அவ்வனித்திய ஜட வடிவ கட, படாதிகளோடு அபின்னமாய பிரஹ்மத்திற்கும் அநித்திய வடிவத் தன்மையும், ஜட வடிவத் தன்மையும் பிராப்தமாகும். அது அத்தியந்தம் விருத்தமாம். ஆகையால் இவ்வெல்லா ஜகத்திற்கு பிரஹ்ம வடிவத் தன்மைச் சம்பவியாது.

சங்கை:—“ஸோ(அ)காமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேய” (இ-ள்.) ஓர் பிரஹ்மமாகிய் யாம் அனேக வடிவமாக உண்டாவோம். என்னும் இச் சுருதியில் ஓர் பிரஹ்மத்திற்கே சர்வ ஜகத் வடிவத் தன்மைக் கூறியிருக்கின்றது. இச்சர்வ ஜகத்தினை பிரஹ்ம வடிவமாக வொப்பாவிடின் கூறிய அச்சுருதி அசங்கதமாகும்.

சமாதானம்:—ஓரே ஈசுவரனாகிய யாம் கட, பட முதலிய சர்வ ஜகத் வடிவமாவோமெனக்கூறிய அர்த்தம் அச்சுருதிக்கின்று. ஆனால்நிராகாரமாகிய ஓரீசுவரனாகிய யாம் பக்த ஜனங்களை இரக்ஷிக்கும்பொருட்டு பாஹிய விஷ்ணு, சிவ வடிவமாக அனேகமாவோம். என்னும் அர்த்தம் அச்சுருதிக்கிருக்கின்றது. ஏனெனின் உலகத்தில் ஓர் சாமான்னிய ஜீவனும் தாழ்ந்த இச்சையை செய்வதின்றாயின் சர்வஞ்ஞனும், சர்வ சக்தி சம்பன்னனுமாம் அவ்வீசுவரன் கட, பட முதலிய ஜட பிரபஞ்ச வடிவமாவதற்கு எங்ஙன மிச்சிப்பார்; அத்தகைய் இச்சை அவ்வீசுவரனிடத்து சம்பவியாது.

சங்கை:—அப்பிரஹ்மத்தினும் ஜகத்தினை வேறாக வொப்பின் அப் பிரஹ்மத்தில் சர்வதுவைத பிரபஞ்சத்தின் நிஷேதஞ் செய்பவனும், அத் விதீய பிரஹ்மத்தில் துவைத பிரபஞ்சத்தினை காண்பவனுமாகிய பேததரிசி புருஷனுக்கு மீண்டு மீண்டு ஜனன மரணத்தின் பிராப்தியைக் கூறுவதாகிய “நேஹ நாநாஸ்தி கிஞ்சந । ம்ருத்யோ꞉ ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நாநேவ பஶ்யதி” மிச்சுருதி அசங்கதமாகும்.

சமாதானம்:—அச்சுருதிக்கு கூறிய அவ்வர்த்தமன்று. ஆனால் அச் சுருதியின் அர்த்த மிதுவாம்: ஓர் பிரஹ்ம வடிவ ஈஸ்வரனிடத்து நாநா ஈசுவரத் தன்மை யின்றாம். அதாவது ஒரே சர்வஞ்ஞ ஈசுவரனால் இஜ்ஜகத் தின் உற்பத்தி முதலியன உண்டாய் விடுகின்றன. நாநா ஈசுவரனை அங்கீ கரித்தல் பயனின்மையாம். இவ்வாறாக ஓரீசுவரனது இருப்புளதாகியும் நாநா ஈசுவரனை ஒப்பும் பிராந்த புருஷன் மீண்டும் மீண்டும் ஜன்ம மரணத்திற்குப் பிராப்தமாகின்றான். ஆகையால் முமுக்ஷு ஜனங்கள் நாநா ஈசுவரரை வொப் பார், சர்வ ஜகத்தின் கர்த்தாவாக ஒரே ஈசுவரனை வொப்புவர். என்பதான

அர்த்தங் கூறிய சுருதிக்காம். ஆகையால் கூறிய அவ்வேதாந்திகளின் மதமும் நலமுடையதன்றாம். இவ்வாறாக பௌத்த மத முதலாக வேதாந்த மதமட்டுமா மெல்லா மதங்களும் கண்டிக்கப்பட்டு முற் கூறிய நையாயிகர் மதமே எல்லா தோஷங்க ளில்லாததாக சித்தமாகின்றது. ஆத்ம நிரூபணம் முற்றிற்று.

## ௫௬௬. மன வடிவ திரவிய நிரூபணம்

இனி ஒன்பதாவது மன வடிவ திரவியத்தை நிரூபிப்பாம். ஆண்டு "[illegible]" அல்லது "[illegible]" அல்லது "[illegible]" அல்லது "[illegible]" இந்நான்கு லக்ஷணங்கள் மனதிற்காம்.

## ௫௬௭. மனதின் முதலாவது லக்ஷணம்.

இனி இந்நான்கு லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு யான் சுகி, யான் துக்கி என்பதான சுக, துக்கங்களின் சாக்ஷாத்காரம் யாதோ அச்சாக்ஷாத்கார வடிவ உபலப்திக்கு சாதனமும், இந்திரியமும் யாதாமோ அது மனமெனப்படும். ஆண்டு அச்சுக, துக்கமுதலியவைகளின் சாக்ஷாத்காரம் அம்மன வடிவ இந்திரியத்தினாலேயே யுண்டாகின்றது. வேறோ ரிந்திரியத்தால் உண்டாகிறதில்லை. ஆகையால் கூறிய இம்மனதின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு உபலப்தியின் சாதன இந்திரியம், மனம் என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சுகாதி" என்னு மிப்பதங் கூறாவிடின் சக்ஷு முதலிய இந்திரியங்களில் மனதின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் மனதினைப் போன்று சக்ஷு முதலிய இந்திரியங்களும் உருவ முதலிய பதார்த்தங்களின் சாக்ஷாத்காரத்திற்கு சாதனமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு கூறிய லக்ஷணத்தில் "சுகாதி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சக்ஷு முதலிய இந்திரியங்கள் உருவ முதலியவைகளின் சாக்ஷாத்காரத்திற்கு சாதனமாயினும், சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்காரத்திற்கு சாதனமன்றாம். ஆகையால் சக்ஷு முதலிய இந்திரியங்களில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "சுகாதியுபலப்திக்கு சாதனம் மனம்" என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் இந்திரியம் என்னும் பதங் கூறாவிடின் ஆத்ம மனதின் சையோகத்திலும், ஆத்மாவிலும், காலம், திக்கு, அதிர்ஷ்ட முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்காரத்திற்கு ஆத்ம, மன சையோகமோ அசமவாயிகாரணமாம். ஆத்மா சமவாயிகாரணமாம். கால முதலியன நிமித்த காரணமாம். அவ்வெல்லாவற்றில் அதிவியாப்தியை நிவிர்த்தி செய்யும் பொருட்டு "இந்திரியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாத்ம, மன சையோக முதலியவைகளில் இந்திரியத் தன்மையின்றாம். ஆகையால் அவைகளில் கூறிய மனதின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ருகூ௨. மனதின் இரண்டாவது லக்ஷணம்.

இனி "ஸ்பர்ஶரஹிதத்வே ஸதி க்ரியாவத்த்வம்" என்னு மிரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் பரிசமில்லாததாகி கிரியையுடையதாகின்றதோ அத்திரவியம் மனமெனப்படும். அத்தகைய பரிச குணமில்லாததும், கிரியையுடையதும் மனமேயாம். ஆகையால் கூறிய மனதின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது. ஆண்டு "கிரியையுடையது மனம்" என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பரிசமில்லாததாய்" என்னும் பதங் கூறாவிடின் பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அம்மனதினைப் போன்று பிருதிவி முதலிய நான்கும் கிரியை யுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பரிசமில்லாததாய்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு பிருதிவி முதலிய நான்கு திரவியங்கள் பரிச குணமில்லாதனவன்றும். பரிசகுண முடையனவேயாம். ஆகையால் அவைகளிடத்து கூறிய மனதின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பரிசமில்லாதது மனம்" என இம்மாத்திரமே அம்மனதின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "கிரியையுடையது" என்னும் பதங் கூறாவிடின் ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்கில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். எக்காரணத்தாலெனின் அம்மனதினைப்போன்று அவ்வாகாச முதலியனவும் பரிசகுண மில்லாதனவேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "கிரியையுடையது" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அவ்வாகாச முதலிய நான்கு விபுத் திரவியங்கள் கிரியையுடையனவன்றும். ஆகையால் ஆகாச முதலியவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ருகூகூ. மனதின் மூன்றாவது லக்ஷணம்.

இனி "ஸம்யோகேநாத்மக்ராஹகேந்த்ரியத்வம்" என்னும் மூன்றாவது லக்ஷணத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம் சையோக சம்பந்தத்தால் ஆத்மாவினை கிரஹிப்பதும், இந்திரியமுமாமோ அத்திரவியம் மனமெனப்படும். ஆண்டு எப்பொழுது மனதிற்கு ஆத்மாவினோடு சையோக சம்பந்த முண்டாமோ அப்பொழுது யான் சுகி, யான் துக்கி என்பதாக ஆத்மாவின் ஞான முண்டாகின்றது. ஆகையால் அம்மனம் சையோக சம்பந்தத்தால் ஆத்மாவினை கிரஹிப்பதும் இந்திரியமுமாம். ஆகையால் கூறிய மனதின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஆத்மாவை கிரஹிக்கும் இந்திரியம் மனம்" என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சையோக சம்பந்தத்தால்" என்னும் பதங் கூறாவிடின் சக்ஷு முதலிய இந்திரியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் "சக்ஷுர்த்ருஷ்டம் ஸ்மராமி" (இ-ள்.) இக்கடம் என்னுடையது என்பதான சாக்ஷுஷத் தோற்றத்தில் சக்ஷு இந்திரியம் ஆத்மாவின் ஸ்மரண

ஞான வடிவ ஞான லக்ஷணையெனப் பெயரிய சம்பந்தத்தால் ஆத்மாவினையும் அறிகிறது. ஆகையால் அவ்வதிவியாப்திதோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சையோகசம்பந்தத்தால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சக்ஷு முதலிய இந்திரியங்கள் சையோக சம்பந்தத்தால் ஆத்மாவினை அறிவதன்று. ஆனால் கட முதலிய பாஹ்ய திரவியங்களையே கிரஹிப்பனவாம். ஆகையால் சக்ஷு முதலிய இந்திரியங்களில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "சையோக சம்பந்தத்தால் கிரஹிக்கும் இந்திரியம் மனம்" என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "ஆத்மாவினை" என்னும் பதங் கூறாவிடின் மீண்டும் சக்ஷு முதலிய இந்திரியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் மனதினைப் போன்று சக்ஷு முதலிய இந்திரியங்களும் சையோக சம்பந்தத்தால் கட முதலிய திரவியங்களை கிரஹிப்பனவேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "ஆத்மாவினை" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சக்ஷு முதலிய இந்திரியங்கள் சையோக சம்பந்தத்தால் ஆத்மாவினை கிரஹிப்பனவன்று. ஆகையால் சக்ஷு முதலிய இந்திரியங்களில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "சையோக சம்பந்தத்தால் ஆத்மாவினை அறிவது மனம்" என இம்மாத்திரமே மனதின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதங்கூறாவிடின் சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், சரீர சம்பந்தமின்றி ஆத்மாவில் ஓர் ஞானமும் உண்டாகாது. ஆனால் சரீராவச்சின்ன ஆத்மாவிலேயே அந்த ஞான முதலிய குணங்கள் உண்டாகின்றன. ஆகையால் எங்ஙனம் அம்மனம் சையோக சம்பந்தத்தால் ஆத்மாவின் சாக்ஷாத்காரத்திற்குக் காரணமாமோ அங்ஙனமே சரீரமும் சையோக சம்பந்தத்தால் ஆத்ம சாக்ஷாத்காரத்திற்குக் காரணமாம். ஆகையால் அச்சரீரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "இந்திரியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சரீரத்தில் இந்திரிய வடிவத் தன்மை இன்றாம். ஆகையால் சரீரத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ருஎ0. மனதின் நான்காவது லக்ஷணம்.

இனி " மநஸ்த்வஜாதிமத்மநஃ " என்னும் நான்காவது லக்ஷணத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம். ஆண்டு எத்திரவியம், சமவாய சம்பந்தத்தால் மனத்தன்மை ஜாதியுடையதாமோ அத்திரவியம் மனமெனப்படும். ஆண்டு மனத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் மனதிலேயே இருக்கின்றது. வேறோர் பதார்த்தத்தி லிருப்பதன்று. ஆகையால் மனத்தன்மை ஜாதியுடைய மனதின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை :—இம்மனத் தன்மை ஜாதியுடைமை வடிவ மனதின் லக்ஷணம் எப்பொழுது சம்பவிக்கின்றதோ அப்பொழுது அம்மனத்தன்மை ஜாதியாதாமோர் பிரமாணத்தால் சித்தமாக வேண்டும். மனத்தன்மை ஜாதியின் சித்தியின்றி அந்த லக்ஷணம் சம்பவியாது. ஆண்டு அம்மனதின் பிரத்தியக்ஷம்

உண்டாகிறதில்லை. ஆகையால் மனதிலிருக்கும் மனத் தன்மை ஜாதியில் பிரத்தியக்ஷப் பிரமாணமோ சம்பவியாது. ஆனால் பிரத்தியக்ஷத்தினும் வேறாகவே யாதாமோர் பிரமாணங் கூறப்பட வேண்டுமென்னுஞ் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அம்மனத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

ருஎக. அநுமானப் பிரமாணத்தால் மனத் தன்மை ஜாதியின் சித்தி.

“ உ௦நாநிஷ்டாயா ௨ாநஸவ்ரத்யக்ஷகரணதா ஸா கிஂசித்₃ர்மாவச்ச்₂ந்நா கரணதாத்வாத் சக்ஷுர்நிஷ்டகரணதாவத்” (இ-ள்.) மனதினிடத்திலிருப்பதாகிய மானசப் பிரத்தியக்ஷத்தின் கரணத்தன்மை யாதோ அக்கரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், கரணத் தன்மையாவதால், எதுவெது கரணத் தன்மையாகின்றதோ அதுவது ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகின்றது. எங்ஙனம் சக்ஷுவிலிருப்பதாகிய சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் கரணத் தன்மை யாதோ அக்கரணத்தன்மை சக்ஷுத்வ தர்மத்தால் அவச்சின்னமேயாம். அங்ஙனமே அம்மனதிலுள்ள கரணத் தன்மையும் ஓர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமாகும். அக்கரணத் தன்மையின் அவச்சேதக தர்மம் மனத்தன்மை ஜாதியேயாம். இவ்வாறிய அநுமானப்பிரமாணத்தால் அம்மனத்தன்மை ஜாதியின் சித்தியுளதாக அம்மனத் தன்மை ஜாதியுடைமை வடிவ மனதின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது.

சங்கை :—கூறிய லக்ஷணங்களால் மனதின் சித்தியுளதாகியும் பிரமாணங்களின் அபூர்வ முடையதாவதால் மனதின் சித்தி யுண்டாகமாட்டாது, எக்காரணத்தாலெனின் லக்ஷணம், பிரமாணமாமிரண்டினுனே வஸ்துவின் சித்தியுண்டாகின்றது. கேவலம் லக்ஷண மாத்திரத்தால் வஸ்துவின் சித்தி யுண்டாகமாட்டாது. ஆண்டு மனதில் மஹத்வ பரிமாணமும், உத்பூத உருவம், உத்பூதபரிசமுமின்றும். ஆகையால் பிரத்தியக்ஷப்பிரமாணத்தானே மனதின் சித்தி சம்பவியாது. என்பதான சங்கை யுண்டாக இனி முதலாவது லக்ஷணத்தால் குறிப்பிக்கப்படும் அநுமானத்தால் அம்மனதின் சித்தியைச் செய்வாம்.

ருஎஉ. மனதின் சித்தியைச் செய்வதாகிய அநுமானப்பிரமாணம்.

“ ஸுகா₂தி₃ஸாக்ஷாத்காரஃ கரணஸாத்₄யஃ ஜந்யஸாக்ஷாத்காரத்வாத் சாக்ஷுஷஸாக்ஷாத்காரவத்” (இ-ள்.) யான் சுகி, யான் துக்கி என்பதாய சுக முதலியவைகளின் சாக்ஷாத்காரம் யாதோ அச்சாக்ஷாத்காரம் யாதாமோர் கரணத்தால் சித்தமாம், ஜன்னிய சாக்ஷாத்கார வடிவமாவதால், எதுவெது ஜன்னிய சாக்ஷாத்காரமாகின்றதோ அதுவது யாதாமோர் கரணத்தானேயே சாத்தியமாம். யாதாமோர் கரணமின்றி ஜன்னிய சாக்ஷாத்காரம் உண்டாகாது. எங்ஙனம் : இது கடம், இது படம் என்பதான சாக்ஷுஷ சாக்ஷாத்காரம் ஜன்னிய சாக்ஷாத்காரமாவதால் சக்ஷு வடிவ கரணத்தால் சாத்தியமாம். அங்ஙனமே அச்சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்காரமும் ஜன்னிய சாக்ஷாத்கார வடிவமாவதால் யாதாமோர் கரணத்தால் அவசி

யம் சாத்தியமாகும். ஆண்டு சக்ஷு முதலிய இந்திரியங்களில்லா குருடர் முதலியவர்கட்கும் சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்கார முண்டாகின்றது. ஆகையால் அச்சக்ஷு முதலிய இந்திரியங்கட்கோ சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்காரத்தில் கரணத்தன்மை சம்பவியாது. பரிசேஷத்தால் மனமே சுக, துக்க முதலியவைகளின் சாக்ஷாத்காரத்தின் கரண வடிவமாக சித்தமாகின்றது. ஆண்டு கூறிய அநுமானத்தில் "சாக்ஷாத்காரமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "ஜன்னியம்" என்னும் பதங் கூறாவிடின் ஈசுவரனது பிரத்தியக்ஷ ஞானத்தில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் அவ்வீசுவரனது பிரத்தியக்ஷம் நித்தியமாம். ஆகையால் அவனிடத்து அக்கரண சாத்தியத்வ வடிவ சாத்தியமோ இன்றும். சாக்ஷாத்காரத்வ வடிவ ஏது அவனிடத்திருக்கின்றது. ஆகையால் சாத்தியாபாவமுடையவீசுவரனது ஞானத்திலிருப்பதாவதால் அவ்வேது வியபிசாரியே யாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "ஜன்னியம்" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அவ்வீசுவர சாக்ஷாத்காரத்திற் அக்கரண சாத்தியத்வ வடிவ சாத்தியத்தினைப் போன்று ஜன்னிய சாக்ஷாத்காரத்வ வடிவ ஏதுவு மின்றும். ஆகையால் அவ்வீசுவர சாக்ஷாத்காரத்திற் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அம்மனதின் சித்தி சம்பவிக்கின்றது.

### ௫௭௩. சுருதி, ஸ்மிருதிப் பிரமாணங்களால் மனதின் சித்தி.

அல்லது இவ்வநுமானப் பிரமாணத்தால் அம்மனதின் சித்தி யுண்டாவதுடன் "मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः । मनःषष्ठानीन्द्रियाणि" இவை முதலிய அநேக சுருதி, ஸ்மிருதி வசனங்களாலும் அம்மனம் சித்தமாகின்றது. ஆகையால் கூறிய லக்ஷண, பிரமாணங்களினிருப்புளதாக மன வடிவ திரவியம் அவசியம் அங்கீகரிக்கப் படவேண்டும்.

### ௫௭௪. மனதினது நாநாத்வத்தின் சாதக யுக்தி.

ஆண்டு மனம் பிரத்தியேக ஜீவாத்மாவினோடு நியம வாயிலாக இருக்கின்றது. முற்கூறியவாற்றால் ஜீவாத்மா அநேகமாம். ஆகையால் மனமும் அநேகமாம். அதாவது ஜீவாத்மாவினைப் போன்று மனமும் எண்ணிறந்தனவேயாம். எங்ஙனம் ஓர் சரீரத்தில் ஒரே ஜீவாத்மா இருக்கிறதோ அங்ஙனமே ஓர் சரீரத்தில் ஒரே மனமிருக்கின்றது. ஓர் சரீரத்தில் நாநா மன மிருப்பதில்லை. எங்ஙனம் ஜீவாத்மா உற்பத்தி வினாசமில்லாததாவதால் நித்தியமாமோ அங்ஙனமே அம்மனமும் உற்பத்தி வினாச மில்லாததாவதால் நித்தியமாம்.

### ௫௭௫. அம்மனதிலிருப்பதாகிய எண்வகை குணங்களின் வர்ணனம்.

அத்தகைய மன வடிவ திரவியத்தில் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், வேகம் என்னும் எண் வகை

குணங்களே இருக்கின்றன. ஆண்டு மனதில் பரமாணுவினைப் போன்று பரம அணுத்வ பரிமாணமே யிருக்கின்றது. ஆகாச முதலியவைகளைப் போன்று பரம மஹத்வ பரிமாணமும், தேக முதலியவைகளைப்போன்று மத்தியம மஹத்வ பரிமாணமும் மனதிலிருப்பதின்று.

ருஎசு. ஒரே காலத்தில் அநேக ஞானங்களின் உற்பத்தியாகாமை வடிவ யுக்தியால் மனதினிடத்து பரம அணுத்வ பரிமாணத்தின் சித்தி.

இனி அம்மனதில் பரம மஹத்வ பரிமாணத்தினையும், மத்தியம பரிமாணத்தினையும் கண்டிக்கும் பொருட்டு பரம அணுத்வ பரிமாணத்தினை யுக்தியால் சித்தி செய்வாம். ஆண்டு சக்ஷு, துவக்கு, சுரோத்திரம், ரசனம், கிராணம் என்னும் ஐந்து இந்திரியங்கட்கு ஒரே காலத்தில் தனது தனது உருவ முதலிய விஷயங்களோடு முறையாக சையோச முதலிய சம்பந்தங்களுளதாகியும் மனதின் வியாசங்கத்தால் (வேறு விஷயத்தோடு சம்பந்தப்படுங் காரணத்தால்) ஓர் இந்திரிய ஜன்னிய ஞானமே உண்டாகின்றது. மற்றைய இந்திரிய ஜன்னிய ஞானம் உண்டாவதின்று. இவ்வார்த்தை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். இக்காரணத்தானேயே மனதின் வியாசங்கத்தால் உமது சத்தத்தை யான் சிரவணிக்கவில்லை. நீவிர் மீண்டும் அச்சத்தத்தைக் கூறுக என்பதாக உலகவர்களின் அநுபவங் காணப்படுகின்றது. ஓர் கால் அம்மனம் விபுவாகுமாயின் மனதிற்கு ஒரே காலத்தில் சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்களோடு சம்பந்தம் சம்பவிக்கும். அங்ஙனமே சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்கட்கு தமது தமது விஷயங்களோடு சம்பந்தமு மிருக்கின்றது. ஆகையால் ஒரே காலத்தில் சர்வ இந்திரியங்களால் ஜன்னிய அனேக ஞானம் உண்டாக வேண்டும். ஒரே காலத்தில் அச்சாக்ஷுஷ முதலிய எல்லா ஞானங்கள் உண்டாவதின்று. ஆகையால் மனதினை அணுவாக வொப்ப வேண்டும். மனதினை அணுவாக வொப்புவதில் ஒரே காலத்தில் சர்வ ஞானங்களது உற்பத்தியின் ஆபத்தி வடிவ தோஷம் பிராப்தமாகாது. ஏனெனின் ஒரே காலத்தில் சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்கட்கு தமது தமது விஷயங்களோடு சம்பந்தமுளதாகியும் அணுவாகிய மனதிற்கு எவ்விந்திரியத்தினோடு சம்பந்த முண்டாகின்றதோ அவ்விந்திரிய ஜன்னிய ஞானம் உண்டாகின்றது. எவ்விந்திரியத்தோடு மனதிற்கு சம்பந்த மின்றோ அவ்விந்திரிய ஜன்னிய ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வெல்லா ஞானங்களும் ஓர் காலத்தில் உண்டாகாமையால் அம்மனதினை அணுவாக வொப்ப வேண்டும்.

சங்கை:—தீர்க்க *சஷ்குலியினை புசிப்பவனாகிய புருஷனுக்கு ஒரே காலத்தில் சக்ஷு முதலிய அனேக இந்திரியங்களால் சாக்ஷுஷ முதலிய அனேக ஞானங்களின் உற்பத்தி அநுபவ சித்தமாம். ஆண்டு அப்புருஷனுக்கு ஒரேகாலத்தில் சக்ஷு இந்திரியத்தாலோ அச்சஷ்குலியினதும், அதன்

* சஷ்குலி - கட கட சத்தத்தை யுண்டாகக் கூடிய பலகாரவிசேஷம், இது முறுக்கென்று வழங்கப்படும்.

உருவத்தினதும் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. துவக்கிந்திரியத்தாலோ அச்சஷ்குலியினதும், அதன் பரிசத்தினதும் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது.. சுரோத்திர இந்திரியத்தால் அச்சஷ்குலியின் சத்தத்தினது சுரோத்திரஜப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ரசன இந்திரியத்தால் அச்சஷ்குலியின் மதுர ரசத்தினது ராசனப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. கிராண இந்திரியத்தால் அச்சஷ்குலியின் கந்தத்தினது கிராணஜப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாக அப்புருஷனுக்கு ஒரேகாலத்தில் சக்ஷு முதலிய இந்திரியங்களால் சாக்ஷுஷ முதலிய ஐந்து ஞானங்களுண்டாகின்றன. இவ்வகையாக அஷ்டாவதானஞ் செய்யும் புருஷனுக்கும் ஒரேகாலத்தில் சாக்ஷுஷ முதலிய அனேக ஞானங்கள் உண்டாவதாகின்றன. அது உமது மதத்தில் சம்பவியாது. ஏனெனின் உமது நையாயிகர்கள் மதத்தில் மனம் அணுவா மாகையால் எந்த க்ஷணத்தில் அம்மனதிற்கு சக்ஷு இந்திரியத்திேனாடு சையோக சம்பந்தமுண்டாமோ அந்த க்ஷணத்தில் அம்மனதிற்கு துவக்கு முதலிய இந்திரியங்களோடு சையோக சம்பந்த முண்டாகாது. ஆனால் அந்த க்ஷணத்திற்குப் பின் இரண்டாவது முதலிய க்ஷணங்களிலேயே அம்மனதிற்கு அத்துவக்கு முதலிய இந்திரியங்களோடு சையோக சம்பந்தம் உண்டாகும்.

சமாதானம்:—கூறிய இடத்திலும் ஒரே காலத்தில் அனேக இந்திரிய ஜன்னிய நாநா ஞானம் உற்பன்னமாகா. ஆனால் ஒவ்வோர் க்ஷணத்திற்குப் பின்னரே அந்த ஞானம் உண்டாவதாகின்றது. அதாவது அம்மனம் அத்தியந்த வேகமுடையதா மாகையால் ஒரிந்திரியத்திேனாடு சம்பந்தத்தைப் பெற்று துரிதமாகவே இரண்டாவது இந்திரியத்திேனாடு சம்பந்தத்தைப் பெறுகின்றது. இவ்வாறாக மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது இந்திரியங்களோடும் துரிதமாகவே சம்பந்தத்தைப் பெறுகின்றது. எம்முறையாக எவ்விந்திரியங்களோடு மனதிற்கு சையோக சம்பந்த முண்டாகின்றதோ அம்முறையாக அவ்வவ் விந்திரிய ஜன்னிய ஞானம் உண்டாகின்றது. ஆனால் அவ்வவ் விந்திரியங்களோடு மனதின் சம்பந்தத்தால் அவ்வவ் ஞானத்தினது உற்பத்தியின் அதிகரணமாகிய க்ஷண வடிவ காலம் அத்தியந்த சூக்ஷுமமாம். ஆகையால் உலகவருக்கு க்ஷண வடிவ காலத்தின் பேத ஞானம் உண்டாகிறதில்லை. இக்காரணத்தால் உலகவருக்கு இத்தகைய பிராந்தியுண்டாகின்றது. எமக்கு ஒரே காலத்தில் சாக்ஷுஷ முதலிய அனேக ஞானங்கள் உண்டாயின. எங்ஙனம்: கமலத்தின் அனேக இதழ்கள் உள்ளும் புறம் புமாயிருக்க புருஷன் அவைகளை துரிதமாக கவனித்து இது கூறுகின்றான். யான் ஒரே காலத்தில் அவ்வெல்லா இதழ்களை கண்ணுற்று பேதிக்கின்றேன். என்பதான அநுபவம் பிராந்திவடிவமாம். ஏனெனின் முதற்க்ஷணத்தில் பார்வையில் கிரியை உண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அப்பார்வைக்கு முன்னிடத்தினின்றும் பிரிவு உண்டாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அப்பார்வையின் சையோகம் முன்னிடத்தின்றும் நாசமாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அப்பார்வைக்கு முதல் இதழ் வடிவ உத்தர தேசத்திேனாடு சையோகம்உண்டாகின்றது. அவ்வுத்தர சையோகத்தால் முதற்கிரியை நாசமாய் விடுகின்றது. அதன்பின்னர் அப்பார்வையில் மீண்டும் இரண்டாவது கிரியையும்

முதற்கிரியையினைப் போன்று முறையாக பிரிவினையும், பூர்வ சையோகத்தின் நாசத்தினையும், இரண்டாவது இதழ்வடிவ உத்தரதேசசையோகத்தினையும் உண்டாக்கிவிட்டு ஐந்தாவது க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றது. இவ்வாறாய முறையை மூன்றாவது, நான்காவதுமுதலிய எல்லாக்கிரியைகளில் அறிந்துக்கொள்க. ஒவ்வோர் இதழ்களை பேதிப்பதில் நன்றான்கு க்ஷணங்களுண்டாகின்றன. ஆனால் அந்த க்ஷண வடிவ காலங்களினது பேதத்தின் ஞானம் உண்டாவதின்று. இக்காரணத்தானேயே உலகவருக்கு இத்தகைய மயக்க முண்டாகின்றது. எங்ஙனம் யான் ஒரே காலத்தில் அனேக இதழ்களைப் பார்த்து பேதிக்கின்றேனென்கின்றாேே அங்ஙனமே அச்சக்ஷு முதலிய ஞானங்களும் ஒவ்வோர் க்ஷண விலம்பத்தானேயே உண்டாவதாகின்றது. ஆனால் அச்சூக்ஷ்ம க்ஷண வடிவ காலங்களினது பேதத்தின் கிரஹணமின்மையால் உலகவருக்கு இத்தகைய மயக்க முண்டாகின்றது. எமக்கு ஒரே காலத்தில் சக்ஷு முதலிய அனேக இந்திரியங்களால் சாக்ஷுஷ முதலிய அனேக ஞானங்களுண்டாகின்றன வென்கின்றனர்.

## ருஎஎ. ஒரே கால்த்தில் ஓராத்மாவில் அனேக முயற்சிகளின் உற்பத்தி யுண்டாகாமை.

எங்ஙனம் ஒரே காலத்தில் ஓராத்மாவில் அனேக ஞானங்கள் உற்பன்னமாகாததாமோ அங்ஙனமே ஒரே காலத்தில் ஓராத்மாவில் அனேக பிரயத்தின வடிவ முயற்சியும் உற்பன்னமாகாது. ஆனால் அந்த ஞானங்களைப் போன்று அம்முயற்சியும் ஒவ்வோர் க்ஷணத்தின் பின்னரே உற்பன்னமாகின்றது. ஆகையால் நடனஞ் செய்யும் ஸ்திரீயின் கை, கால் விரல்களின் கிரியையினை உண்டாக்கு முயற்சிகளில் ஒரே காலநடனத்தின் தோற்ற முண்டாவதியாதோ அத்தோற்றமும் மயக்க வடிவமேயாம். அல்லது ஆண்டு ஒரே முயற்சி அவ்வெல்லா விரல்களின் கிரியையினை உண்டாக்குவதாம். இவ்வாறாய யுக்தியால் அம்மனதில் அணுத் தன்மையே சித்தமாகின்றது.

சங்கை:—கூறிய யுக்தியால் அம்மனதில் அணு வடிவத் தன்மையின் சித்தி யுண்டாகட்டும். என்றாலும் அம்மனதின் நித்தியத் தன்மையில் பிரமாணம் யாதென்னுஞ் சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் அம்மனதின் நித்தியத் தன்மையை சித்தஞ் செய்வாம்.

## ருஎஅ. அநுமானப் பிரமாணத்தால் மனதின் நித்தியத் தன்மையின் சித்தி.

"மநঃ நித்யம்பரமாணுவத்வாத் யதா பார்திவபரமாணுவத்"

(இ-ள்.) அம்மனம் நித்தியமாக யோக்கியமாம், பரமாணு வடிவமாவதால் அதாவது பரம அணுத்வ பரிமாணமுடையதாவதால், எதுவெது பரமாணு வடிவமாமோ அதுவது நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்கள் பரமாணு வடிவமாவதால் நித்தியமாம். அங்ஙனமே அம்மனமும் பரமாணு வடிவமாவதால் நித்தியமேயாகும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் அம்மனதில் நித்தியத் தன்மையே சித்தமாகின்றது. அல்லது அம்மனதினை அநித்தியமாக வொப்பின் எதுவெது

அநித்திய திரவியமாமோ அவ்வத்திரவியம் அவயவங்களால் உண்டாவனவே யாம். எங்ஙனம் பிருதிவி முதலிய திரவியங்கள் அநித்தியமாவதால் அவயவங்களால் உண்டாவனவேயாமோ அங்ஙனமே அம்மன வடிவத் திரவியமும் அநித்தியமாவதால் அவயவங்களால் உண்டானதேயாகும். இவ்வாறாக அம்மனதினை அனேக அவயவங்களா லானதாக வொப்புவதிலும், அவ்வவயவங்களில் அம்மனதின் பிராகபாவத்தை யொப்புவதிலும், அம்மனதிற்கும், அவ்வவயவங்கட்கும் காரிய, காரண பாவ மொப்புவதிலும் மா கௌரவ தோஷம் பிராப்தமாகின்றது. அக்கௌரதோஷம் மனதினை நித்தியமாக வொப்புவதில் சம்பவியாது. ஆகையால் லாகவத்தால் அம்மனம் நித்தியமாகவே சித்தமாகின்றது.

## ருஎகூ. மனதினை விபுவாக வொப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மதம்.

இனி மீமாஞ்சகர்களின் மதத்தினை நிரூபிப்பாம். ஆண்டு மீமாஞ்சகர் அம்மனதினை அணு வடிவமாக வொப்புவதின்று ; ஆனால் விபுவாக வொப்புகின்றனர். அம்மனதின் விபுத் தன்மையில் மீமாஞ்சகர் இந்நான்கு அநுமானங்களைக் கூறுகின்றனர்:

## ருஅ௦. மனதினது விபுத்வத்தின் சாதகமாகிய முதல் அநுமானம்.

ஆண்டு முதல் அநுமானம் “ உநஃ விஂ-ஹுஂஸ-ிா ஹிதஜூவ)கூாகூ கூகாஶாஜிவகூ ” (இ-ள்.) அம்மனம் விபுவாக யோக்கியமாம், பரிசகுணமில்லாத திரவியமாவதால் எவ்வெத்திரவியம் பரிசகுண மில்லாதனவாமோ அவ்வத்திரவியம் விபுவேயாம். எங்ஙனம்: ஆகாசம், காலம், திசை, ஆத்மா இந்நான்குதிரவியங்கள் பரிசகுணமில்லாத திரவிய வடிவமாவதால் விபுவாம். அங்ஙனமே அம்மனமும் பரிசகுண மில்லாத திரவிய வடிவமாவதால் விபுவேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் “திரவியமாவதால்” என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் “பரிசகுணமில்லாத” என்னும் பதங்கள் கூறுவிடின் பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு திரவியங்களில் அத்திரவியத்வ வடிவ ஏதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின் அப்பிருதிவி முதலிய நான்கு திரவியங்களில் திரவியத்வ வடிவ ஏதுவேயிருக்கிறது. ஆனால் விபுத்வ வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் வியபிசார தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் “பரிசமில்லாத” என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அப்பிருதிவி முதலிய நான்கும் பரிசகுண மில்லாதனவன்றாம். ஆனால் பரிசகுண முடையனவேயாம். ஆகையால் அந்நான்கில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது அவ்வநுமானத்தில் “பரிசமில்லாததாவதால்” என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் “திரவியமாவதால்” என்னும் பதங்கள் கூறுவிடின் குணம், கர்ம முதலிய பதார்த்தங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் திரவிய பதார்த்தம் ஒன்றினை விட்டு மற்றய குண, கர்ம முதலிய எல்லாப் பதார்த்தங்களும் குணமில்லாதனவே யாகின்றன. ஆகையால் அக்குண, கர்ம முதலிய பதார்த்தங்களில் பரிசகுண மில்லாத் தன்மை வடிவ ஏதுவே இருக்கின்றது. ஆனால் திரவியத்தன்மை வடிவ சாத்தியம் குண, கர்ம முதலியவைகளிலின்றாம்.

ஆகையால் அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அவ்வேது
வில் "திரவியமாவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குண, கர்ம
முதலியவைகளில் திரவியத் தன்மை இருப்பதின்று. ஆகையால் அக்குண,
கர்மங்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது.

## ருவுக. மனதினது விபுத்வத்தின் சாதகமான இரண்டாவது அநுமானம்.

அல்லது இவ்விரண்டாவது அநுமானத்தைச் செய்க. " மநஃ விபு
நித்யேந்த்ரியத்வாத் ஶ்ரோத்ரவத் " (இ-ள்.) அம்மனம் விபுவாக யோக்கிய
மாம் நித்தியஇந்திரியமாவதால், எதுவெது நித்திய இந்திரியமாயோ அதுவது
விபுவேயாகும். எங்ஙனம்: ஆகாச வடிவ சுரோத்திரேந்திரியம் நித்திய இந்திரி
யமாவதால் விபுவேயாம். அங்ஙனமே அம்மனமும் நித்தியஇந்திரியமாவதால்
விபுவேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "இந்திரியமாவதால்" என இம்
மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் " நித்தியம்" என்னும் பதங்கூறு
விடின் சக்ஷு, துவக், ரசனம், கிராணம் என்னும் நான்கு இந்திரியங்களில்
அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் அச்சக்ஷு முதலியவை
களில் அவ்விந்திரியத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் அவ்
விபுத் தன்மை வடிவ சாத்தியம் அவைகளிலிருப்பதின்று. ஆகையால் அவ்
வியபிசார தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "நித்தி
யம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சக்ஷு முதலிய இந்திரியங்கள்
நித்தியமன்றும். ஆனால் அநித்தியமா மாகையால் அச்சக்ஷு முதலியவைக
ளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அவ்
வநுமானத்தில் "நித்தியமாவதால்" என விம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்
வேதுவில் இந்திரியமாவதால் என்னும் பதங்கள் கூறுவிடின் அவ்வேதுவிற்கு
பரமாணு முதலிய நித்திய பதார்த்தங்களில் வியபிசாரமுண்டாம். ஏனெனின்
அப்பரமாணு முதலியவைகளில் நித்தியத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்
றது. ஆனால் இந்திரியத்தன்மை வடிவ சாத்தியம் அவைகளிலின்றும். ஆகை
யால் அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்தி செய்யும் பொருட்டு கூறிய அவ்
வேதுவில் "இந்திரியமாவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. பரமாணு
முதலிய நித்தியபதார்த்தங்களில் இந்திரியத்தன்மை யின்றும். ஆகையால் நித்
திய பதார்த்தங்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது.

## ருவுஉ. மனதினது விபுத்வத்தின் சாதகமான மூன்றாவது அநுமானம்.

அல்லது இம்மூன்றாவது அநுமானத்தைக் கூறுக. "மநஃ விபு ஜ்ஞாநா
ஸமவாயிகாரணஸம்யோகாஶ்ரயத்வாத் ஆத்மவத் " (இ-ள்.) அம்மனம் விபு
வாக யோக்கியமாம், ஞானத்திற்கு அசமவாயி காரண வடிவ சையோகத்
திற்கு ஆசிரயமாவதால், எவ்வெத்திரவியம் ஞானத்தின் அசமவாயி காரண
வடிவ சையோகத்திற்கு ஆசிரயமாகின்றதோ அவ்வத்திரவியம் விபுவேயா
கின்றது. எங்ஙனம்: ஆத்ம வடிவ திரவியம் ஞானத்தின் அசமவாயி காரண
வடிவ சையோகத்திற்கு ஆசிரயமாவதால் விபுவேயாம். அங்ஙனமே அம்மன

மும் அச்சையோகத்திற்கு ஆசிரயமாவதால் விபுவேயாகும். கருத்திதுவாம்; எப்பொழுது மனதிற்கு ஆத்மாவினோடு சையோகசம்பந்தமுண்டாகின்றதோ அப்பொழுது அந்த ஆத்மாவில் ஞானத்தின் உற்பத்தியுண்டாகின்றது. ஆகையால் அவ்வாத்ம மன சையோகம் அந்த ஞானத்திற்கு அசமவாயிகாரணமாம். அச்சையோகத்திற்கு எங்ஙனம் அவ்வாத்மா ஆசிரய வடிவமாமோ அங்ஙனமே அம்மனமும் ஆசிரய வடிவமாம். அவ்வாத்மாவின் விபுத் தன்மையில் நையாயிகர்கட்கும் அங்கீகாரமாம். ஆகையால் அவ்வாத்மாவினைப்போன்று அம்மனமும் விபுவேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "அசமவாயி காரண சையோகத்திற்கு ஆசிரயமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "ஞானம்" என்னும் பதங் கூறுவிடின் அவ்வேதுவிற்கு படத்தின் சமவாயி காரண வடிவ தந்துக்களில் வியபிசார முண்டாம். ஏனெனின் அப்பட வடிவ காரியத்திற்கு அசமவாயிகாரண வடிவம் எத்தந்துக்களின் சையோகமாமோ அச்சையோகத்தின் ஆசிரயத் தன்மை அத்தந்துக்களினு மிருக்கின்றது. ஆனால் அத்தந்துக்களில் விபுத்தன்மை வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திச் செய்யும் பொருட்டு அவ்வேதுவில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அத்தந்துக்களின் சையோகம் படத்திற்கு அசமவாயி காரணமாயினும் ஞானத்திற்கு அசமவாயி காரணமன்றாம். ஆகையால் அத்தந்துக்களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அநுமானத்தில் "ஞானத்தின் காரணமாகிய சையோகத்திற்கு ஆசிரயம்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "அசமவாயி" என்னும் பதங் கூறுவிடின் சக்ஷு முதலிய இந்திரியங்களினும், கட முதலிய விஷயங்களினும் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின் சக்ஷு முதலிய இந்திரியங்களோடு மனதின் சையோகமும், சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு கட முதலிய விஷயங்களோடு சையோகமுமாகிய யாதாமோர் அச்சையோகமும் சாக்ஷுஷ முதலிய ஞானங்கட்குக் காரணமேயாம். அச்சையோகத்தின் ஆசிரயத்தன்மை அச்சக்ஷு முதலிய இந்திரியங்களினும், கட முதலிய விஷயங்களினு மிருக்கின்றது. ஆனால் அச்சக்ஷு முதலியவைகளில் விபுத்தன்மை வடிவசாத்தியமின்றாம். ஆகையால் அவ்வியபிசாரதோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு கூறிய ஏதுவில் "அசமவாயி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சக்ஷு முதலியவைகளின் சையோகம் சாக்ஷுஷமுதலிய ஞானங்கட்கு நிமித்த காரணமாயினும் அசமவாயி காரண வடிவமன்றாம். ஆகையால் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களினும், கட முதலிய விஷயங்களினும் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது.

## ருரு. மனதினது விபுத்வத்தின் சாதகமான நான்காவது அநுமானம்.

அல்லது இந்நான்காவது அநுமானத்தைச்செய்க. "ஊநம் விஹுவிஶெஷரமணஶூந்யெ[illegible]" (இ-ள்.) அம்மனம் விபுவாக யோக்கியமாம், விசேஷகுண மில்லாத திரவியமாவதால், எதுவெது விசேஷகுணமில்லாத திரவியமாமோ அதுவது விபுவேயாகின்றது. எங்ஙனம்:

திக்கு, காலம் என்னு மிரண்டும் விசேஷ குண மில்லாத திரவியங்களாவதால் விபுவேயாம். அங்ஙனமே அம்மனமும் விசேஷ குண மில்லாத திரவியமாவ தால் விபுவேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "திரவியமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "விசேஷ குணமில்லாத" என் னும் பதங்கள் கூறாவிடின் பிருதிவி, ஜலம், தேயு, வாயு இந்நான்கு திரவியங் களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் பிருதிவி முதலிய நான்கு திரவியங்களில் திரவியத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் விபுத் தன்மை வடிவ சாத்தியம் அவைகளிலின்றாம். ஆகையால் அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "விசே ஷகுணமில்லாத" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு பிருதிவி முத லிய நான்கு திரவியங்கள் விசேஷ குண மில்லாதனவன்றாம். ஆனால் உருவ முதலிய விசேஷ குணங்களை யுடையனவேயாம். ஆகையால் பிருதிவி முத லியவைகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய அவ்வனுமானத்தில் "விசேஷ குணமில்லாததாவதால்" என இம்மாத் திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "திரவியமாவதால்" என்னும் பதங் கூறாவிடின் குண, கர்ம முதலிய பதார்த்தங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் குண, கர்ம முதலிய பதார்த்தங்களில் யாதாமோர் குணமு மிருப்பதில்லை. ஆகையால் விசேஷ குண மில்லா வடிவ ஏதுவோ குண, கர்ம முதலியவைகளி லிருக்கின்றது. ஆனால் திரவியத் தன்மை வடிவ சாத்தியம் அவைகளி லின்றாம். ஆகையால் அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு கூறிய அவ்வேதுவில் "திரவியமாவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குண, கர்ம முதலிய பதார்த்தங்கள் திரவி யத் தன்மை தர்மமுடையனவன்றாம். ஆகையால் அவைகளில் கூறிய அவ் வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாய நான்கு அநுமானங்களால் அம்மனதில் ஆகாச முதலியவைகளைப் போன்று விபுத் தன்மையே சித்திக் கின்றது.

## ௫௨௪. விபு மனதால் ஒரேகாலத்தில் அநேக ஞானங்களின் உற்பத்தி.

அத்தகைய விபுமனதிற்கு சக்ஷுமுதலிய இந்திரியங்களோடு ஒரே காலத்தில் சையோக சம்பந்த மிருக்கின்றது. இக்காரணத்தாலேயே அத்தீர்க்க சஷ்குலியை புசித்த புருஷனுக்கும், அஷ்டாவதானஞ் செய்யும் புருஷனுக்கும் ஒரேகாலத்தில் சக்ஷுமுதலிய அனேக இந்திரியங்களால் சாக்ஷுஷமுதலிய அனேக ஞானங்களின் உற்பத்தி சம்பவிக்கின்றது. எவ் விடத்தில் ஒரே காலத்தில் சக்ஷு முதலிய ஐந்து இந்திரியங்கட்கு தமது தமது உருவ முதலிய விஷயங்களோடு சம்பந்தமுளதாகியும் சாக்ஷுஷ முதலிய நாநா ஞானங்கள் உண்டாகாமல் யாதாமோ ரிந்திரியத்தால் ஒரே ஞானம் உண்டாவதாகின்றதோ அத்தலத்தில் விபுமனதிற்கு அவ்வெல்லா இந்திரியங்களோடு சம்பந்த முளதாகியும் ஓர் ஞானத்தின் உற்பத்தியில் இப்புருஷனுக்கு இச்சையே காரணமாகின்றது. அதாவது எமக்கு இவ்விந்திரியத்தால் இவ்வஸ்துவின் போதம் உண்டாகட்டும் என்பதான புரு

ஷனது இச்சையே அவ்வோர் ஞானத்தின் உற்பத்தியில் காரணமாம். இவ்வாறாக அம்மனதினை விபுவாக வொப்புவதிலும் அந்த ஞானங்களின் யௌகபத்யமும், அயௌகபத்யமுமாமிரண்டும் சம்பவிக்கின்றது. ஆண்டு ஓர் காலத்தில் அனேக ஞானங்களின் உற்பத்தியினை யௌகபத்ய மென்பர். ஓர் காலத்தில் ஒரே ஞானத்தின் உற்பத்தியினை அயௌகபத்தியமென்பர். ஆகையால் அம்மனம் ஆகாசமுதலியவைகளைப் போன்று விபுவேயாம்.

## ருஅரு. மனதினை விபுவாக வொப்புவோராகிய மீமாஞ்சகரின் மத கண்டனம்.

இம்மீமாஞ்சகர் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் மனதினை விபுவாக அங்கீகரிக்கின் மனதிற்கு ஆத்மாவினோடு சையோக சம்பந்தமே சம்பவியாததாகும். ஏனெனின் ஓர் திரவியத்தினோடு வேறு திரவியத்திற்கு சையோகம் உண்டாவது யாதோ அச்சையோகம் அத்திரவியத்தின் கிரியையினாலேயே உண்டாவதாகின்றது. எங்ஙனம் விருக்ஷத்தினோடு பக்ஷியின் சையோக சம்பந்தமுண்டாவது யாதோ அச்சையோகம் அப்பக்ஷியின் கிரியை யானேயே உண்டாவதாகின்றது. அக்கிரியையானது பரிச்சின்ன பரிமாணமுடைய மூர்த்தத்திரவியங்களிலேயே உண்டாகின்றது. ஆகாச முதலிய விபுத் திரவியங்களில் அக்கிரியை யுண்டாகிறதில்லை. ஆகையால் அக்கிரியையின் அபாவத்தால் விபுமனதிற்கு விபுஆத்மாவினோடு சையோக சம்பந்தமே சம்பவியாது. அவ்வாத்ம மனதின் சையோகமே ஞானத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்வசமவாயி காரணத்தின் அபாவமுளதாக அவ்வாத்மாவில் ஓர் ஞானமும் உண்டாகாததாகும். அந்த ஞானத்தின் அபாவமுளதாக பிரவிர்த்தி, நிவிர்த்தி முதலிய எல்லா வியவகாரங்களின் லோபமும் சம்பவிக்கும். அல்லது மீமாஞ்சகர் இது கூறுகின்றனர்; பிருதிவி முதலிய மூர்த்தத் திரவியங்களின் சையோகம் கிரியாஜன்னியமாகாது. ஆனால் விபுத்திரவியங்களின் சையோகம் விபுத்திரவியங்களைப்போன்று நித்தியமே யாகின்றது. ஆகையால் அந்த நித்திய மனதின் சையோகத்தால் ஆத்மாவில் ஞானத்திற்கு உற்பத்தி சம்பவிக்கின்றதென்பதாக மீமாஞ்சகர் கூறுவதும் அசங்கதமாம். ஏனெனின் ஏது வெது சையோக சம்பந்தமாமோ அதுவது ஜன்னியமேயாகின்றது. நித்திய சையோகத்தில் யாதாமோர் பிரமாணமுமின்றாம். யாதாமோர் பிரமாண மின்றியே சையோகத்தினை நித்தியமாக வொப்பின் கட பட முதலியவைகட்கும் நித்தியத்தன்மை யுண்டாக வேண்டும். அல்லது அவ்வாத்ம மன சையோகத்தினை நித்தியமாக வொப்பின் சுஷுப்தியின் அபாவமேயுண்டாகும். ஏனெனின் புரீததியினும் வேறான தேசாவச்சின்ன ஆத்ம மனசையோகம் யாதோ அச்சையோகமே ஞானமுதலியவைகளின் அசமவாயி காரணமாகின்றது. அவ்வசமவாயி காரண வடிவ அவ்வாத்ம மனசையோகம் விபு மன வாதிகளின் மதத்தில் சுஷுப்தியினு மிருப்பதே யாகின்றது. ஆகையால் அச்சையோகத்தால் சுஷுப்தியிலும் அந்த ஞானமுதலியன அவசியம் உண்டாவதாகும். அதனால் சுஷுப்தியின் அபாவமே யுண்டாகும். மனதினை அணுவாக வொப்புவதில் சுஷுப்தியின் அபாவவடிவதோஷம் பிராப்தமாகாது. ஏனெ

னின் அணுவாகிய மனம் எக்காலத்தில் புரீததிநாடியில் பிரவேசிக்கிறதோ அக்காலத்தில் அப்புரீததியினும் பாஹ்ய தேசாவச்சின்ன ஆத்ம மன சையோக வடிவ ஞான முதலியவைகளின் அசமவாயி காரணமின்றாம். ஆகையால் அக்காலத்தில் அந்த ஞானமுதலியவைகட்கு உற்பத்தியின்மையாவதால் சுஷுப்தியே ஆகின்றது. எக்காலத்தில் அவ்வணுமனம் புரீததியினும் வேறாக இருக்கிறதோ அக்காலத்தில் கூறிய அவ்வாத்ம மன சையோக வடிவ அசமவாயி காரணத்தினிருப்புளதாக அந்த ஞானமுதலியவைகளின் உற்பத்தியேயுண்டாகின்றது. அதாவது ஜாக்கிரத அவஸ்தை அல்லது சொப்பன அவஸ்தை யுண்டாகிறது. ஆகையால் அம்மனம் விபுவாமென்னும் மீமாஞ்சகரின் கூற்று அதங்கதமாம்.

## ருஎசு. ஓர் சரீரத்தில் ஐந்து அணு வடிவ மனங்களை அங்கீகரிப்பவராகிய வாதிகளின் மத வர்ணனம்.

சில கிரந்தகாரரோ இது கூறுகின்றனர். அம்மனம் அணுவடிவமேயாம்; விபுவடிவமன்றாம். ஆனால் ஒவ்வோர் சரீரத்தில் ஒவ்வோர் மனமிருப்பதின்று; ஒவ்வோர் சரீரத்தில் ஐந்தைந்து மனங்க ளிருக்கின்றன. ஆண்டு எவ்விடத்தில் ஒரே காலத்தில் அவ்வைந்து மனங்கட்கு சக்ஷு முதலிய ஐந்து இந்திரியங்களோடு சையோக சம்பந்தமுண்டாகின்றதோ அவ்விடத்தில் ஒரேகாலத்தில் சாக்ஷுஷ முதலிய ஐந்து ஞானங்களே உண்டாகின்றன. எவ்விடத்தில் ஒரேகாலத்தில் நான்கு மனங்கட்கு அல்லது மூன்று மனங்கட்கு அல்லது இரண்டு மனங்கட்கு அல்லது ஓர் மனதிற்கு அச்சக்ஷு முதலிய நான்கு இந்திரியங்களோடு அல்லது மூன்று இந்திரியங்களோடு அல்லது இரண்டு இந்திரியங்களோடு அல்லது ஒரிந்திரியத்தினோடு முறையாக சையோகசம்பந்தமுண்டாகின்றதோ அவ்விடத்தில் ஒரேகாலத்தில் சாக்ஷுஷ முதலிய நான்கு ஞானங்கள் அல்லது மூன்று ஞானங்கள் அல்லது இரு ஞானங்கள் அல்லது ஒரே ஞானம் முறையாக உண்டாகின்றன. ஆகையால் தீர்க்க சஷ்குலியை புசித்த புருஷனிடத்து வொரே காலத்தில் சாக்ஷுஷ முதலிய அனேக ஞானங்களின் உற்பத்தியின் அநுபவமுண்டாவது யாதோ அவ்வநுபவம் மயக்க வடிவ மன்றாம். ஆனால் அவ்வநுபவமும் எதார்த்தமேயாம். ஓர் சரீரத்தில் அணுவாகிய ஒரே மனதை அங்கீகரிக்கும் நையாயிகர்கட்கு அவ்வநுபவம் மயக்க வடிவமாகவே ஒப்பப்படுவதாகும். இவ்விதமாக ஓர் சரீரத்தில் அணுவடிவ ஐந்து மனங்களை வொப்புவதால் அந்தஞானங்கட்கு யௌகபத்யமும், அயௌகபத்யமுமா மிரண்டும் சம்பவிக்கின்றன.

## ருஎஎ. அவ்வாதிகளின் மத கண்டனம்.

இம்மதமும் நலமுடையதன்றாம், ஏனெனின் முற்கூறிய முறைப்படி ஓர் சரீரத்தில் ஒரே அணு வடிவ மனதினை வொப்புவதால் எல்லா நிர்வாகமுமுண்டாய்விடுகின்றது. அந்த ஞானங்களின் யௌகபத்ய அநுபவத்தின் எதார்த்தத்தன்மையின் பொருட்டு ஓர் சரீரத்தில் ஐந்து மனங்களை யொப்புவதிலும், புரீததியில் அவ்வைந்து மனங்களின் பிரவேசத்தால் சுஷுப்தியை யொப்புவதிலும் கேவலம் கற்பனைகௌரவமேயாம்.

## ருவுரு. அம்மனதிற்கு சங்கோச, விகாசமுடைய அவயவி வடிவத்தை ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில சாஸ்த்திரமுடையாரோ இது கூறுகின்றனர். ஓர் சரீரத்தில் ஒரே மனமிருக்கின்றது. ஆனால் அம்மனம் பரமாணுவினைப்போன்று அணு வடிவமு மன்று. ஆகாச முதலியவைகளைப் போன்று விபுவடிவமு மன்றும். ஆனால் அட்டையாகிய ஜந்துவினைப்போன்று அம்மனம் அவயவி வடிவமே யாம். அதாவது எங்ஙனம் அட்டையானது சங்கோசம் (குவிதல்) உடைய சுபாவமும், விகாசம் (விரிதல்) உடைய சுபாவமுடைய தாகின்றதோ அங்ஙனமே அம்மனமும் சங்கோச, விகாசமுடைய தாகின்றது. ஆண்டு அம்மனம் எப்பொழுது சங்கோச முடைய தாகின்றதோ அப்பொழுது அம்மனதிற்கு ஒரே திரவியத்தினோடு சம்பந்தம் உண்டாகின்றது. ஆகை யால் அக்காலத்தில் ஒரே இந்திரியத்தால் ஒரே ஞானம் உற்பன்னமாகின் றது. அம்மனம் எப்பொழுது விகாசமுடையதாகின்றதோ அப்பொழுது அம்மனதிற்கு சக்ஷு முதலிய ஐந்து இந்திரியங்களோடு சம்பந்தமுண்டா கின்றது. ஆகையால் அக்காலத்தில் சக்ஷு முதலிய ஐந்து இந்திரியங்களால் சாக்ஷுஷ முதலிய ஐந்து ஞானங்கள் உண்டாகின்றன. இவ்வாறாக அம்மன தின் அற்பவிகாசகாலத்தில் இரண்டு மூன்று ஞானங்களின் உற்பத்தி ஓர் காலத்தில் உண்டாகின்றன. இவ்வாற்றால் அம்மனதினை சங்கோச, விகாச முடைய அவயவியாக வொப்புவதில் அந்த ஞானங்கட்கு யௌகபத்யமும், அயௌகபத்யமுமா மிரண்டும் சம்பவிக்கின்றன.

## ருவுகூ. அவ்வாதிகளது மத கண்டனம்.

இம்மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் எவ்வாதி அம்மனதினை அவயவிவடிவமாக வொப்பி சங்கோச, விகாசமுடைமை யொப்புகின்றனனோ அவ்வாதியோடு இது வினவுதல் வேண்டும். அம்மனதிற்கு சங்கோசமும், விகாசமும் சுபாவமாக உண்டாகிறதா? அல்லது யாதாமோர் காரணத்தா லுண்டாகின்றதா?. ஆண்டு அவ்வாதி முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் எல்லா காலத்திலும் அம்மனதிற்கு சங்கோசமே யுண்டாகவேண்டும். அல்லது விகா சமே யுண்டாக வேண்டும். ஓர்காலத்தில் அம்மனதிற்கு சங்கோசமும், ஓர் காலத்தில் அம்மனதிற்கு விகாசமுமா மென்னும் விவஸ்தை சுபாவமா மென் னும் பக்ஷத்தில் சம்பவியாது. அம்மனதிற்கு சங்கோசமும், விகாசமும் ஓர் காரணத்தால் ஜன்னியமாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும்சம்பவியாது. ஏனெனின் அம்மனதின்சங்கோச, விகாசத்தில்வேறோர் காரணம் சம்பவியாது; பரிசேஷத்தால் புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்டமே அச்சங்கோச, விகாசத்தின் காரணமாக வொப்பப்படுவதாகும். அவ்வாதியா னவன் எந்த ஞானங்களின் யௌகபத்ய, அயௌகபத்யத்தின்பொருட்டு அம் மனதினை சங்கோச, விகாசமுடையதாக வொப்பினனோ அந்த ஞானங்களின் யௌகபத்யமும், அயௌகபத்யமும் அதிர்ஷ்டத்தினாலேயே சம்பவமாய் விடுகின்றது. ஆகையால் அந்த ஞானங்களின் யௌகபத்ய, அயௌகபத் தியத்தின் பொருட்டு அம்மனதிற்கு சங்கோச, விகாசம் வொப்புவது வீணே யாம். அல்லது அவ்வாதியானவன் எம்மனதினை அவயவியாக வொப்புகின்

றனன்றே அதுவும் அசங்கதமாம். ஏனெனின் எது வெது அவயவி திரவிய மாமோ அதுவது அவயவங்களால் ஜன்னியமாகின்றது. எங்ஙனம்: பட முதலிய அவயவி திரவியம் தந்து முதலிய அவயவங்களால் ஜன்னியமாவது போலும். அங்ஙனமே அம்மன வடிவ அவயவீ திரவியமும் அவயவங்களால் ஜன்னியமேயாகும். அங்ஙனமே அம்மனதின் அவயவமும் தமது தமது அவயவங்களால் ஜன்னியமாகும். இவ்விதமாக பரமாணுமட்டும் அம்மனதின் அவயவங்களின் தொடர்ச்சியை அங்கீகரிப்பதாகும். அங்ஙனமே அவ்வவய வங்களில் அம்மனதின் பிராகபாவம் கற்பிக்கப்படுவதாகும். அங்ஙனமே மனதின் பிரத்வம்சபாவமும் கற்பிக்கப்படுவதாகும். அதனுல் மா கௌரவ தோஷத்தின் பிராப்தியுண்டாகும். அக்கௌரவதோஷம் அம்மனதினை நிரவய வமாக வொப்புவதில் உண்டாகாது. ஆகையால் லாகவமாக அம்மனதினை நிரவயவமாகவே வொப்ப வேண்டும்.

## ருகூ௦. பௌதிக பரமாணுகட்கு மன வடிவம் வோப்புவோராகிய வாதிகளின் மத வர்ணனம்.

சில கிரந்தகாரரோ இது கூறுகின்றனர். அம்மனம் பிருதிவி முதலிய திரவியங்களினும் வேறு திரவியமன்றும்; பிருதிவி முதலிய பூதங்களின் பரமாணுக்களே அதிர்ஷ்ட விசேஷத்தால் சேர்ந்து மன வடிவமாகின்றன. அப்பௌதிக பரமாணுக்களினும் வேறாக மனதினை வொப்புவதிலும், அவ் வெல்லா மனங்களில் மனத் தன்மை ஜாதி யொப்புவதிலும் மா கௌரவ தோஷம் சம்பவிக்கின்றது. அக்கௌரவ தோஷம் அம்மனதினை பௌதிக பரமாணு வடிவமாக வொப்புவதில் சம்பவியாது. ஏனெனின் பிருதிவி முத பூதங்களின் பரமாணுக்கள் முன்னர் அங்கீகரிக்கப் பட்டதேயாம். முன்னர் சித்தித்த அத்தகைய பௌதிக பரமாணுக்கட்கே மனத்தன்மை வடிவமாக ஞான முதலியவைகளின் காரணத்தன்மையை வொப்புவது சம்பவிக்கின்றது. பௌதிக பரமாணுக்களினும் வேறாக மனதினை அங்கீகரிப்பது பயனின்மை யாம்.

சங்கை:—பௌதிக பரமாணுக்களையே மன வடிவமாக வொப்பின் எங்ஙனம் பிருதிவி முதலிய பூதங்களின் பரமாணுக்கள் துவியணுக முதலிய திரவியங்களை ஆரம்பிப்பதாமோ அங்ஙனமே அம்மன வடிவ பௌதிக பரமாணுவும் துவியணுகாதி வடிவ திரவியங்களை ஆரம்பிப்பதாக வேண்டும்.

சமாதானம்:—எவ்வதிர்ஷ்ட விசேஷத்தால் சேர்ந்து பௌதிக பரமாணு வடிவ மனமென்னும் பெயரைப் பெறுகின்றதோ அவ்வதிர்ஷ்ட விசேஷமே துவியணுகாதி வடிவ திரவியத்தை ஆரம்பிக்குந் தன்மையில் பிரதிபந்தகமாம். அல்லது துவியணுகாதி வடிவ திரவியத்தை ஆரம்பிக்குந் தன்மையில் எது சஹகாரி காரணமாமோ அச்சஹகாரி காரணங்களின் அபாவத்தானேயே அம்மன வடிவ பௌதிக பரமாணு துவியணுக முதலிய திரவியத்தினை ஆரம்பம் செய்வதின்று. ஆகையால் அம்மனம் வேறு திரவிய மன்றும். ஆனுல் அதிர்ஷ்ட விசேஷத்தால் சேர்ந்த பௌதிக பரமாணுவே மன வடிவமாம்.

ருகக. அவ்வாதிகளின் மத கண்டனம்.

இம்மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் எவ்வாதி பௌதிக பரமாணுவினையே மன வடிவமாக வொப்புகின்றனனே அவ்வாதியோடு இது வினவுதல் வேண்டும். பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு பூதங்களின் பரமாணுக்களில் எப்பூதத்தின் பரமாணுக்கட்கு நீவிர் மன வடிவம் வொப்புகின்றீர் ? பிருதிவியின் பரமாணுக்கட்கே மன வடிவத்தன்மையிருக்கின்றது. ஜல முதலியவைகளின் பரமாணுக்கட்கு மனவடிவத் தன்மையின்றும். அல்லது ஜலத்தின்பரமாணுக்கட்கே மனவடிவத்தன்மையிருக்கின்றது. பிருதிவி முதலியவைகளின் பரமாணுக்கட்கு மன வடிவத் தன்மை யின்றும். என யாதாமோர் அர்த்தத்தினைச் சித்தி செய்வதாகிய ஓர் யுக்தியுமின்றும். ஆகையால் பிருதிவி முதலிய நான்கு பூதங்களில் யாதாமோர் பூதத்தின் பரமாணுக்கட்கு மன வடிவத் தன்மைக் கூறுதல் சம்பவியாது. அல்லது அம்மனம் பிருதிவி, ஜலமா மிரு வடிவமா மெனக்கூறின் அம்மனதில் பிருதிவித் தன்மை, ஜலத்தன்மையா மிரு ஜாதிகளின் கலப்புண்டாகும். கலத்தல் வடிவ தோஷம் ஜாதித் தன்மையினை பாதிப்பதாகின்றது. ஆகையால் பிருதிவித்தமை, ஜலத்தன்மையா மிரு தோஷங்களில் ஜாதித்தன்மையே யிராது. கலத்தல் வடிவ தோஷத்தில் ஜாதித் தன்மையினை பாதிக்குந்தன்மையை பின்னர் நான்காவது பரிச்சேதத்தில் ஜாதி வடிவ சாமான்னிய பதார்த்தத்தின் நிரூபணத்திற் கூறுவாம். ஆகையால் பௌதிக பரமாணுக்களில் மன வடிவத் தன்மை சம்பவியாது. அம்மன வடிவ வொன்பதாவது திரவியத்தை பிருதிவி முதலிய எண் வகை திரவியத்தினும் வேறுகவே வொப்ப வேண்டும்.

ருகூஉ. சேதிக்கப்பட்டுள்ள தேள், பூரான் முதலிய ஜந்துக்களின் இரண்டு மூன்று துண்டங்களில் வெவ்வேறு கிரியையின் உற்பத்தியால் சில சாத்திரத்தில் நாநா மனங்களின் சாதக சங்கை.

சங்கை :—முன்னர் ஓர் சரீரத்தில் ஒரே அணு வடிவ மனம் கூறப்பட்டது யாதோ அது சம்பவியாது. ஏனெனின் கத்தி முதலிய ஆயுதங்களால் துண்டிக்கப்பட்ட தேளின் இரண்டு துண்டங்களினும், பூரானெனப் பெயரிய ஜந்துவின் இரண்டு மூன்று துண்டங்களினும் வெவ்வேறு கிரியை தோற்றுகின்றது. சரீரத்தின் எவ்வெவ் அவயவத்தில் எவ்வெக்கிரியை உற்பன்னமாகின்றதோ அவ்வக்கிரியை அவ்வவ் அவயவாவச்சின்ன ஆத்மாவின் முயற்சியானேயே ஜன்னியமாகின்றது. அவ்வப்பிரயத்தினம் அவ்வவ் அவயவாவச்சின்ன ஆத்மாவினேடு மனதின் சையோகத்தானேயே ஜன்னியமாகின்றது. அம்மனம் உமது நையாயிகர் மதத்தில் ஓர் சரீரத்தில் ஒன்றேயாம். அங்ஙனமே அணு வடிவமுமாம். ஆகையால் ஒரே அணு வடிவ மனதின் சம்பந்தத்தால் தேள் முதலியவைகளின் ஒரே துண்டத்தில் கிரியை உற்பன்னமாவதாகும். இரண்டாவது துண்டத்தில் கிரியை உற்பன்னமாகாது. ஓர் சரீரத்தில் நாநா மனதினை அங்கீகரிப்பதாக இரண்டு மூன்று துண்டங்களில் ஒவ்வோர் மனதின் சம்பந்தத்தால் வெவ்வேறு கிரியையின் உற்பத்திச் சம்பவிக்கின்றது. ஆகையால் சரீரத்தில் நாநா மனதினை வொப்புவதே யோக்கியமா மென்பதான சங்கை யுண்டாகின்றது.

### ருகூ௩. ஓர் சரீரத்தில் ஓர் மனதினை அங்கீகரித்து அச்சங்கைக்கு சமாதானம்.

ஆண்டு சில கிரந்தகாரரோ அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர். கத்தி முதலியவைகளால் இரண்டு மூன்று பிரிவையடைந்த பூரான் முதலிய ஜந்துக்களின் எத்துண்டத்தில் அவ்வணு வடிவ மன மிருக்கின்றதோ அத்துண்டத்தில் அம்மனதால் கிரியை யுண்டாகின்றது. பூரான் முதலியவைகளின் மற்றைய துண்டத்தில் அக்கிரியை யுண்டாவது யாதோ அநுமனதால் உண்டாவதன்று. ஆனால் அக்கத்தி முதலியவைகளின் அபிகாதாக்கிய சையோகத்தாலுண்டாகின்றது. ஆகையால் ஓர் சரீரத்தில் ஓர் அணு மனதினை அங்கீகரிக்கினும் பூரான் முதலியவைகளின் இரண்டு மூன்று துண்டங்களில் கிரியையின் உற்பத்தி சம்பவிக்கின்றன.

### ருகூ௪. வேறுவகையால் அச்சங்கைக்குச் சமாதானம்.

சில கிரந்தகாரரோ அச்சங்கைக்குச் சமாதானம் இவ்வாறுகக் கூறுகின்றனர். ஓர் சரீரத்தில் ஒரே அணு வடிவ மனமிருக்கின்றது. ஆனால் அம்மனம் அத்தியந்த வேக முடையதாம். ஆகையால் *காகாக்ஷி நியாயத்தால் அவ்வொரே அணு மனம் அவ்விரண்டு மூன்று துண்டங்களில் சஞ்சார கர்த்தாவாகி அக்கிரியைக்கு ஏதுவாகின்றது.

### ருகூ௫. மீண்டும் வேறு வகையால் அச்சங்கைக்கு சமாதானம்.

சில கிரந்தகாரரோ கூறிய அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர். ஓர் சரீரத்தில் அவ்வணுவாகிய நித்தியமனம் ஒன்றே யிருக்கின்றது. ஆனால் கூறிய அத்தலத்தில் புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்டத்தின் வசத்தால் வேறு மனங்களின் உற்பத்தி யுண்டாகின்றது. அம்மனங்களின் சம்பந்தத்தானேயே வெவ்வேறு துண்டங்களில் கிரியை உற்பன்னமாகின்றது.

### ருகூ௬. யோகீ புருஷன் காயவியூகஞ் செய்யுமிடத்தில் வேறு மனதின் உற்பத்தியால் யோகத்தின் விவஸ்தை.

இவ்வாறுக யோகீ புருஷனது சரீரத்திலும் ஒரே அணு மன மிருக்கின்றது. யோகீ புருஷன் எப்பொழுது தனது யோகத்தின் பெருமையால் ஒரே காலத்தில் நாநா போகங்களை போகிக்கும் பொருட்டு அனேக சரீரங்களைத் தரிக்கின்றுனே அப்பொழுது யோகீ புருஷனது அதிர்ஷ்ட விசேஷத்தால் அனேக மனங்கள் உற்பன்னமாகின்றன. அவ்வவ் மனதின் சம்பந்தத்தானேயே யோகீ புருஷன் ஒரே காலத்தில் அவ்வச் சரீரத்தில் வெவ்வேறு போகங்களை போகிக்கின்றுன். ஆகையால் ஒவ்வோர் சரீரத்தில் ஒவ்வோர் அணு வடிவ மனமே யிருக்கின்றதென்னும் அர்த்தம் சித்தமாயிற்று.

### ருகூ௭. மரணத்தின் பின்னர் சோர்க்க, நரக முதலிய உலகங்களில் மனதின் செல்லுகையின் வர்ணனம்.

அல்லது மரணத்தின் பின்னர் புண்ணிய, பாபத்தின் வசத்தால் சொர்க்க முதலியவைகளிலும் அவ்வணு வடிவ மனமே செல்லுகின்றது. ஜீவாத்மா செல்லுவதின்று. ஏனெனின் ஜீவாத்மா விபுவாமாகையால் சொர்க்க, நரக முதலிய

* காகாக்ஷிநியாயம் - காக்கையின் நேத்திரத்திலிருக்கும் மணியானது எங்ஙனம் அக்காக்கையின் இரண்டு நேத்திரங்கட்கு துரிதமாக மாறிமாறிச் செல்லுகின்றதோ அங்ஙனமே மனமும் துரிதமாகச் செல்லுகின்றதென்பதாம்.

வைகளில் ஜீவாத்மா தனது விபு ஸ்வபாவத்தா லிருக்கிறது. அத்தகைய சொர்க்க, நரக முதலியவைகளி லிருக்கும் ஜீவாத்மாவினோடு எப்பொழுது அம்மனதிற்கு சையோக சம்பந்த முண்டாகின்றதோ அங்ஙனமே ஜீவாத்மாவின் புண்ணிய, பாபவடிவ அதிர்ஷ்டத்தோடுகூடிய பரமாணுக்களால் உற்பன்னமாகிய தேக, இந்திரிய முதலியவைகளின் சம்பந்த முண்டாகின்றனவோ அப்பொழுது ஜீவாத்மாவிற்கு சொர்க்க, நரக முதலியவைகளில் சுக, துக்கத்தின் போகமும் உண்டாகின்றது. ஆகையால் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் எனக் கூறிய திரவியங்கள் ஒன்பதேயாம். இவற்றினும் வேறாக யாதாமோர் பத்தாந் திரவியமின்றாம். மன நிரூபணம் முற்றுப் பெற்றது.

## ருகூஎ. தமத்தினை பத்தாந் திரவிய வடிவமாக வொப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மத வர்ணனம்.

இனி தமத்தினையும், சுவர்ணத்தினையும் முன்னர் கூறிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினும் வேறான திரவிய வடிவமாக வொப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மதத்தினைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் மீமாஞ்சகர்களின் மதத்தினைக் கூறுவாம். ஆண்டு முன்னர் கூறிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினும் வேறான தம (இருள்) வடிவ பத்தாந் திரவியமிருக்கின்றது. ஆகையால் திரவியங்கள் ஒன்பதே என்னும் நையாயிகர்களின் கூற்று மித்தையாம். ஆனல் அத்தமத்தினைக் கூட்டி பத்துத் திரவியமாகக் கூறுவது யோக்கியமாம்.

சங்கை:—அத்தமத்தில் ஓர் பிரமாணமு மின்றாமாகையால் அத்தமத்தினை யாம் கூறவில்லை.

சமாதானம்:—அத்தமம் சக்ஷு இந்திரியத்தால் உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாகவே சம்பவிக்கின்றது. ஆகையால் சக்ஷு இந்திரிய வடிவ பிரத்தியக்ஷமே அத்தமத்தில் பிரமாணமாம். அத்தகைய பிரத்தியக்ஷ பிரமாணத்தால் சித்தித்த தமத்தினை நிஷேதித்தல் சம்பவியாது.

சங்கை:—பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் தமவடிவ வஸ்துவின் சித்தியுளதாகியும் அத்தமம் திரவிய வடிவமேயாமென்னும் அர்த்தத்தில் ஓர் பிரமாண மின்றாமென்பதாக சங்கையுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் தமத்தில் திரவிய வடிவத் தன்மையைச் சித்தம் செய்வாம்.

## ருகூகூ. அநுமானப் பிரமாணத்தால் தமத்தின் சித்தி.

அநுமானத்தின் ஆகாரமிதுவாம். "தமோ த்ரவ்யம் ரூபவத்வாத் க்ரியாவத்வாத்வா வ்யதிரேகே" (இ-ள்.) தமம் திரவியமாக யோக்கியமாம், உருவ குணமுடையதாவதால், அல்லது கிரியையுடையதாவதால், எவ்வெப்பதார்த்தம் உருவகுண முடையதாகின்றதோ அல்லது கிரியை யுடையதாகின்றதோ, அவ்வப்பதார்த்தம் திரவியவடிவமேயாம். எங்ஙனம்: பிருதிவி உருவ குணமுடையதும், கிரியையுடையதுமா மாகையால் அப்பிருதிவி திரவிய வடிவமேயாம். அங்ஙனமே தமம் உருவ குணமுடையதாவதாலும், கிரியையுடையதாவதாலும் திரவிய வடிவமேயாகும். ஆண்டு "நீலம் தமஶ்சலதி" (இ-ள்.) நீல நிறமுடைய இருள் செல்லுகின்றதென்பதான தோற்றம் உலகர் யாவருக்கும்

உண்டாகின்றது. அந்தப் பிரத்தியக்ஷத் தோற்றத்தினாலேயே தமத்தில் நீல வடிவத் தன்மையும், நடத்தலாகிய கிரியாத் தன்மையும் சித்தமாகின்றது. ஆகையால் கூறிய அவ்வநுமானத்தால் அத்தமத்தில் திரவிய வடிவத் தன்மையே சித்தமாகின்றது. அல்லது தமம் சேய்மையிலிருக்கின்றது. தமம் அண்மையிலிருக்கிறதென்பதான தோற்றத்தின்வலிவால் அத்தமத்தில் பரத்வ, அபரத்வ குணங்களும் தோற்றுகின்றன. ஆகையால் பரத்வ, அபரத்வ குணத்திற்கு ஆசிரயத் தன்மை வடிவ யேதுவாலும் அத்தமத்தில் திரவிய வடிவத்தன்மையே சித்திக்கின்றது.

சங்கை :—கூறிய அவ்வநுமானத்தால் தமத்திற்கு திரவிய வடிவத் தன்மை யிருக்கட்டும். என்றாலும் அத்தமம் முற்கூறிய ஒன்பது திரவியங்களினும் வேறு திரவியமன்று. ஆனால் அவ்வொன்பது திரவியங்களில் யாதாமோர் திரவியத்தின் அந்தர்பூதமாகும்.

### ௩00. தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர் பாவமின்மையின் சாதக அநுமானம்.

இனி அநுமானப் பிரமாணத்தால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன் பது திரவியங்களில் அந்தர்பாவ மின்மையைச் செய்வாம். ஆண்டு "தமஃ நவ்ருதிவீ ரூபம் —ஞாநாவகாஶ ஜலவஸ" (இ-ள்.) தமம் பிருதிவி வடிவ மன்றும், கந்தகுணமின்மையால், எவ்வெத்திரவியம் கந்தகுணமின்மையாமோ அவ்வத்திரவியம் பிருதிவி வடிவமாவதன்று. ஜலம் கந்த குண மின்மை யாவ தால் எங்ஙனம் பிருதிவி வடிவமன்றோ அங்ஙனமே தமமும் கந்த குண மில்லாததாவதால் பிருதிவி வடிவ மில்லாததாகும். ஆனால் பிருதிவியினும் வேறே யாம். என்னுமிவ்வநுமானத்தால் தமத்திற்கு பிருதிவியில் அந்தர்பாவமின்மை சம்பவிக்கின்றது. அங்ஙனமே "தமஃ நஜலாதிகம் நீருப —வவகாவஸ வ்ரு யிவீவஸ" (இ-ள்.) தமம் ஜல முதலிய எண்வகை திரவியவடிவமுமன்றும், நீலவடிவமுடைய தாவதால், எவ்வெத்திரவியம் நீலவடிவமுடையனவாமோ அவ்வத்திரவியம் ஜலமுதலிய எண்வகை திரவிய வடிவமு மன்றும். எங் ஙனம் பிருதிவி வடிவ திரவியம் நீலவடிவமுடையதாவதால் ஜலமுதலிய எண் வகை திரவிய வடிவமன்றுமோ அங்ஙனமே தமமும் நீலவடிவ முடையதாவ தால் ஜலமுதலிய எண்வகை திரவிய வடிவமன்றாகும். ஆண்டு இவ்வநுமா னத்தில் "உருவமுடையதாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "நீலம்" என்னும் பதம் கூறவிடின் அவ்வேதுவிற்கு ஜலம் தேயு, என்னுமிரு திரவியவங்களில் வியபிசாரமுண்டாம். ஏனெனின் ஜல தேயுக்களில் உருவ முடைமை வடிவ ஏதுவோ இருக்கின்றது; ஆனால் ஜல, தேயுவின் பேதவடிவ சாத்தியம் ஜல, தேயுக்களி லிருப்பதின்று. எக்கார ணத்தாலெனின் தனது பேதம் தன்னிடத்திலிருப்பதில்லை. ஆகையால் அவ் வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "நீலம்" என்னும் உருவ விசேஷம் கூறப்பட்டது. ஜல தேயுக்களில் நீல வடிவ மிருப்ப தின்று. ஆனால் வெண்மை உருவமே யிருக்கின்றது. ஆகையால் ஜல தேயுக் களில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறாகக் கூறிய

இரு அநுமானங்களால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர்பாவமின்மையே சித்திக்கின்றது.

### ௬௦க. ஒரே அநுமானத்தால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர்பாவமின்மை.

அல்லது இவ்வொரே அநுமானத்தால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பதுத் திரவியங்களில் அந்தர்பாவமின்மை சித்திக்கின்றது. அவ்வநுமானமிதுவாம். "தம: நவத்ரவ்யாதிரிக்தம் ஸ்பர்ச ரஹிதத்வே ஸதி ரூபவத்வாத் யந்நைவம் தந்நைவம் யதா த்ரவ்யாதி" (இ-ள்) அத்தமம் பிரிதிவி முதலிய ஒன்பது திரவிய வடிவமன்றும், பரிசகுண மிலதாகி உருவகுணமுடையதாவதால், எவ்வெப்பதார்த்தம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் பேதமுடையதன்றுமோ அவ்வப்பதார்த்தம் பரிச குண மில்லாது உருவ குணமுடையது மன்றும். எங்ஙனம்: பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்கள் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் பேதமுடையனவன்றுமாகையால் பரிசகுணமில்லாதனவாகி உருவ குண முடையனவு மன்றும். தமமோ பரிசகுணமிலதாகி உருவகுணத்தின் அபாவமுடையதன்றும். ஆனால் பரிசகுண மிலதாகி உருவகுண முடையதேயா மாகையால் தமம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் பேதத்தின் அபாவமுடையது மன்றும். ஆனால் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் பேதமுடையதேயாம். இவ்வாறாக கேவலம் ஒரே வெதிரேகி அநுமானத்தால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர்பாவ மின்மை சித்தமாகின்றது. ஆகையால் அத்தமம் முற்கூறிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர் பூதமன்றும். ஆனால் ஒன்பது திரவியங்களினும் வேறான பத்தாந் திரவிய வடிவமேயாம்.

### ௬௦உ. தம வடிவ் திரவியத்தினது லக்ஷணத்தின் வர்ணனம்.

அல்லது அத்தம வடிவ பத்தாந் திரவியத்திற்கு "ஸ்பர்ச ரஹிதத்வே ஸதி ரூபவத்வம் தம:" என்பதான லக்ஷணமே சித்தமாகின்றது. ஆண்டு ஸ்பரிச குண மிலாத் தன்மையோ ஆகாச முதலிய ஐந்து திரவியங்களிலும், குண கர்ம முதலிய பதார்த்தங்களிலு மிருக்கின்றது. ஆனால் அவைகளில் உருவ குணமின்றும். ஆகையால் ஆகாச முதலியவைகளில் தமத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. உருவ குணமோ பிருதிவி, ஜலம், தேயு என்னும் மூன்றுத் திரவியங்களிலு மிருக்கின்றது. ஆனால் அவைகளிடத்து பரிசகுணமிலாத் தன்மை இன்றும்; ஆனால் பிருதிவி முதலிய மூன்றும் பரிசகுண முடையனவேயாம். ஆகையால் அவைகளிடத்தும் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. ஆகையால் இவ்வாறாய அசாதாரண தர்ம வடிவ லக்ஷணத்தால் தம வடிவ பத்தாந் திரவியம் முற்கூறிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினும் வேறாகவே சித்தமாகின்றது. இவ்வார்த்தையை முந்தியோருங் கூறுகின்றனர். ஆண்டு சுலோகம் "தம: கலு சலம் நீலம் பராபரவிபாகவத் ॥ ப்ரஸித்தத்ரவ்யவைதர்ம்யாத் நவப்யோ பேத்து-

ஜஹஷ்தி" (இ-ள்.) அத்தமம் இயங்குதல் வடிவ கிரியை யுடையதாவதாலும், கருநிறமுடையதாவதாலும், பரத்வ அபரத்வ குணமுடையதாவதாலும் திரவிய வடிவமேயாம். அத்தமம் பிரசித்த பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் வைதர்மியமுடையதாவதால் பிருதிவி முதலிய ஒன்பது திரவியத்தினும் வேறாகவே யோக்கியமாம். ஆண்டு பிரசித்த பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் இராததாகிய முற்கூறிய பரிச மின்மைவடிவத் தன்மை தர்மம் யாதோ அதுவே தமத்தில் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் வைதர்மியமாம். ஆண்டு தமத்தில் கருமைநிற முதலிய குணமுடைமையும், கிரியை யுடைமையுமாம் வடிவ ஏதுவாலோ திரவிய வடிவத் தன்மை சித்தமாகின்றது. கூறியவைதர்மியத்தால் தமத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் அந்தர்பாவம் சம்பவியாது. பரிசேஷத்தால் தமம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினும் வேறான பத்தாந் திரவிய வடிவமாகவே சித்தமாகின்றது.

## கூ0௩. தமத்தினை திரவிய வடிவமாக ஒப்புவோராகிய மீமாஞ்சகர்கள் மத கண்டனம்.

இம்மீமாஞ்சகர் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் தமத்தினை திரவிய வடிவமாக வொப்பின் சூரியன், அக்கினியாதி தேயுவின் பிரகாச வடிவ ஆலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினுலேயே தமத்தின் பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும். ஏனெனின் எவ்வெத்திரவியம் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமுடையதாமோ அவ்வத் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் ஆலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினுலேயே உண்டாகின்றது. எங்ஙனம் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமுடைய கட, பட முதலிய திரவியங்களின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷம் அவ்வாலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினுலேயே யுண்டாகின்றது. அவ்வாலோகமின்றி அந்தகாரத்திலுள்ள கட, பட முதலிய திரவியங்களின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகிறதில்லை. அங்ஙனமே அம்மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமுடைய தம வடிவ திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும் அவ்வாலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினுலேயே யுண்டாக வேண்டும். அவ்வாலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தால் தமத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாவதின்று. ஆனால் அவ்வாலோகத்தை அபேக்ஷியாமலே சக்ஷு இந்திரியத்தினுலேயே தமத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆகையால் இது அறியத்தக்கது; அத்தமம் திரவிய வடிவமன்றாம். ஆனால் தேயுவின் அபாவம் தமமெனப்படும்.

## கூ0௪. இரவில் விவகரிப்பதான கோட்டான், முதலியவகைளில் அந்நியமத்தினது வியபிசாரத்தின் சங்கை.

சங்கை :—ஆலோகத்தோடு கூடிய சக்ஷு விந்திரியத்தினுலேயே திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதென்னும் நியமம் யாண்டும் சம்பவியாது. ஏனெனின் இரவில் ஆலோகத்தின் அபாவமுளதாயினும்

கோட்டான்முதலிய பிராணிகட்கு சக்ஷு இந்திரியத்தால் பார்த்திவ முதலிய திரவியங்களின்சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. அங்ஙனமே அத்தம வடிவ திரவியத்தின் பிரத்தியக்ஷமும் உலகவருக்கு ஆலோகமின்றியே சக்ஷு வினுலுண்டாகும்.

சமாதானம்:—இரவில் எல்லா வகையாலும் அவ்வாலோகத்தின் அபாவமுண்டாகிறதில்லை. ஆனால் மிக நுட்பமான ஆலோகம் ஆண்டும் கட்டுண்டிருக்கின்றது. மிகநுட்பமான ஆலோகமே அக்கோட்டான் முதலியவைகளின் சக்ஷு இந்திரியத்திற்கு சஹகாரியாகின்றது. அதாவது மிக நுட்பமான ஆலோகத்தோடு கூடியதாகிய அக்கோட்டான் முதலியவைகளின் சக்ஷு இந்திரியம் அத்திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்குக் காரணமாகின்றது. ஆகையால் ஆலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்தினுலேயே அத்திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாருய நியமத்திற்கு அக்கோட்டான் முதலியவைகளில் வியபிசார முண்டாகாது.

சங்கை:—திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் மிகநுட்பமான ஆலோகத்தினையும் சக்ஷு இந்திரியத்திற்குச் சஹகாரியாக வொப்பின் அக்கோட்டான் முதலியவைகளைப் போன்று நம்மனோர் முதலிய மனிதர்கட்கும் இரவு காலத்தில் திரவியங்களின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாக வேண்டும்.

சமாதானம்:—விலக்ஷண அதிர்ஷ்ட விசேஷத்தால் பிராப்தமான கோட்டான் முதலியவைகளின் சக்ஷு இந்திரியமோ சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் உற்பத்தியில் மிகநுட்பமான ஆலோகத்தினையே அபேக்ஷிக்கின்றது. அதிக ஆலோகத்தினை அபேக்ஷிக்கிறதில்லை. விலக்ஷண அதிர்ஷ்ட விசேஷத்தால் பிராப்தமான நம்மோனோராதி மனிதர்களின் சக்ஷு இந்திரியங்களோ சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் உற்பத்தியில் அதிக ஆலோகத்தினையே அபேக்ஷிக்கின்றன. நுட்பமான ஆலோகத்தினை அபேக்ஷிப்பனவன்று. இக்காரணத்தால் நம்மனோராதி மனிதர்கட்கு அக்கோட்டான் முதலியவைகளைப் போன்று நுட்பமான ஆலோகத்தால் அத்திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாவதின்று. அல்லது சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்கு நம்மனோர் என்னும் விசேஷணங் கூறுக. அதாவது நம்மனோராதி சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலேயே ஆலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்திற்கு காரணமா மென்னு மிவ்வாருய நியமம் ஒப்புக. ஆகையால் அக்கோட்டான் முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் அவ்வாலோகத்தோடு கூடிய சக்ஷு இந்திரியத்திற்கு அகாரணத் தன்மை யுளதாகியும் கூறிய நியமத்திற்கு பங்கமுண்டாகாது. அல்லது தமத்தினை பத்தாந்திரவியமாக வொப்பின் தம வடிவ திரவியத்தின் சமவாயி காரண வடிவ அவயவமொப்புவதாகும். அங்ஙனமே அவ்வவயவங்கட்கும் சமவாயி காரண வடிவ வேறு அவயவ மொப்புவதாகும். இவ்வாருக பரமாணு வரையில் தமத்தின் அவயவங்களின் தொடர்ச்சியை வொப்புவதாகும். அங்ஙனமே பின் பின் அவயவங்கட்கு முன் முன் அவயவங்களில் பிராகபாவத்தை கற்பிக்க நேரும். அங்ஙனமே அவ்வவயவங்கட்கு பிரத்துவம்சாபாவத்தை கற்பிக்க நேரும். அத

னல் மா கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். அக்கௌரவ தோஷத்தின் பிராப்தி தமத்தினை அபாவ வடிவமாக வொப்புவதில் உண்டாகாது. ஆகையால் அத்தமம் திரவிய வடிவ மன்றும். ஆனல் தேயுவின் அபாவத்தினையே தமமென்பர்.

### ௩௦௫. தமத்தில் தேயுவின் அபாவ வடிவத் தன்மையினைக் கண்டிப்பவராகிய வாதிகளின் சங்கை.

சங்கை :—தேயுவின் அபாவத்தினை தம வடிவமாக வொப்புவோராகிய நையாயிகர்களை யிது வினவுதல் வேண்டும். தேயு சாமான்னியத்தின் அபாவத்தினை தம மென்பதா? அல்லது தேயு விசேஷத்தினது அபாவத்தினை தம மென்பதா? ஆண்டு நையாயிகர் முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அத்தியந்த மிகுத்த அந்தகாரத்திலும் அத்தமத்தின் தோற்றம் உண்டாவதின்றாக வேண்டும். ஏனெனில் எல்லா காலத்திலும், எல்லாவிடத்திலும் தேயுவின் பரமாணு இருக்கின்றது. ஆகையால் அக்காடாந்தகாரத்திலும் அத்தேயுவின் பரமாணுவிருப்பதேயாம். அத்தேயு பரமாணுக்களி னிருப்புளதாக ஆண்டு தேயு சாமான்னியத்தின் அபாவமுண்டாகாது. ஆகையால் அக்காடாந்தகாரத்தில் தமத்தின் தோற்றம் உண்டாவதின்றாக வேண்டும். ஆண்டு தமத்தின் தோற்றம் யாவருக்கும் உண்டாகின்றது. ஆகையால் தேயு சாமான்னியத்தின் அபாவத்தில் தம வடிவத்தன்மை சம்பவியாது. அல்லது தேயு விசேஷத்தினது அபாவத்தினை தமமா மென்னு மிரண்டாவது பக்ஷத்தை நையாயிகர் அங்கீகரிக்கின் சூரியனது பிரகாச வடிவ ஆலோகத்தி னிருப்புளதாயினும் தமத்தின் தோற்றம் உண்டாக வேண்டும். ஏனெனின் ஆண்டும் மிக அற்ப அக்கினி, சந்திரன் முதலிய தேயு விசேஷத்தின் அபாவ மிருப்பதேயாம். ஆண்டு தமத்தின் தோற்ற முண்டாவதின்று. ஆகையால் தேயு விசேஷத்தின் அபாவத்திலும் அத்தம வடிவத் தன்மை சம்பவியாது. இத்தகைய சங்கையின் பிராப்தமுண்டாக இனி எவ்வாறாய தேயுவின் அபாவம் தமமாமோ அவ்வாறாய தேயுவின் அபாவத்தினை வர்ணிப்பாம்.

### ௩௦௬. தேயு விசேஷத்தின் சாமான்னியாபாவத்தில் தம வடிவத் தன்மையின் சித்தி.

“ ப்ரௌடப்ரகாசகதேஜ:ஸாமான்யாபாவஸ்தம: ” (இ-ள்.) எத்தேயு மிகுந்த மஹத்வ பரிமாணமுடையதும், உத்பூத அநபிபூத (அடங்காத) உருவமுடையதுமாமோ அத்தகைய தேயுவின் சாமான்னிய அபாவம் யாதோ அதாவது இவ்வாறாய சர்வ தேயுக்களின் அபாவம் யாதோ அதனை தமமென்பர். அத்தகைய தேயு பிரசித்த சூரியன், சந்திரன், அக்கினி, நக்ஷத்திரம், மின்னல், இரத்தினம் முதலியனவாம். அவ்வெல்லா தேயுக்களின் அபாவம் யாண்டுண்டாமோ ஆண்டே தமத்தின் தோற்றம் உண்டாகின்றது. ஆகையால் சூரியன் முதலிய எல்லாத் தேயுக்களின் அபாவத்தினை தமமெனபர். ஆண்டு தமத்தின் லக்ஷணத்தில் “மிகுந்த” என்னும் பதங் கூறாவிடின் திரியணுக வடிவ தேயுவினிருப்புள்ள தாக அத்தமம் தோற்றுவதின்றாக வேண்டும். ஏனெனின் திரியணுக வடிவ

தேயு மஹத்வ பரிமாண முடையதுமாம். அங்ஙனமே உத்பூத, அநபிபூத வடிவமுடையதுமாம். அத்தகைய திரியணுக வடிவ தேயுவினிருப்புளதாக அத்தேயுவின் அபாவ வடிவ தமம் ஆண்டு சம்பவிக்கிறதில்லை. திரியணுக வடிவ தேயுவி னிருப்புளதாயினும் தமத்தின் தோற்றமோ ஆண்டநுபவ சித்தமாம். ஆகையால் மஹத்வ பரிமாணத்திற்கு "மிகுந்த" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. அத்திரியணுகத்தின் மஹத்வ பரிமாணம் மிகுந்ததன்றும். ஆனால் குறைந்தகாம். ஆகையால் திரியணுக வடிவ தேயுவிற்கு கூறிய அத்தேயு விசேஷத்தில் பிரவேச முண்டாகாது. ஆகையால் அத்திரியணுக வடிவ தேயுவி னிருப்புளதாகியும் கூறிய அத்தேயு விசேஷத்தின் அபாவத்தால் ஆண்டு தமத்தின் தோற்றம் சம்பவிக்கின்றது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "உத்பூத" என்னும் உருவத்தின் விசேஷணங் கூறாவிடின் சக்ஷு இந்திரிய வடிவ தேயுவினிருப்புளதாயினும் தமம் தோற்றுவதின்றாக வேண்டும். ஏற்றுக்கெனின் சக்ஷு இந்திரிய வடிவ தேயு மிகுந்த மஹத்வமுடையதும் அநபிபூத உருவமுடையதுமாம். அத்தகைய சக்ஷு இந்திரிய வடிவ தேயுவி னிருப்புளதாக தேயுவின் அபாவ வடிவ தமம் ஆண்டு சம்பவியாது. சக்ஷு இந்திரிய வடிவ தேயுவினிருப்புளதாயினும் தமத்தின் தோற்றம் ஆண்டு அநுபவ சித்தமாம். ஆகையால் அந்த உருவத்திற்கு "உத்பூதம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அச்சக்ஷு இந்திரியத்தில் அந்த உத்பூத வடிவ மிருப்பதின்று. ஆனால் அநுத்பூத வடிவ மிருக்கின்றது. எத்தேயு விசேஷத்தில் அபாவத்திற்கு தம வடிவத் தன்மை யிருக்கின்றதோ அத்தேயு விசேஷத்தில் அத்திரியணுக வடிவ தேயுவினைப் போன்று சக்ஷு இந்திரிய வடிவ தேயுவிற்கும் பிரவேச முண்டாகமாட்டாது. ஆகையால் சக்ஷு இந்திரிய வடிவ தேயுவி னிருப்புளதாகியும் கூறிய அத்தேயு விசேஷத்தின் அபாவத்தால் ஆண்டு தமத்தின் தோற்றம் சம்பவிக்கின்றது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "அநபிபூத" என உருவத்தின் விசேஷணங் கூறாவிடின் சுவர்ண வடிவ தேயுவி னிருப்புளதாக தமம் தோற்றுவதின்றாக வேண்டும். ஏனெனின், சுவர்ண வடிவ தேயு மிகுந்த மஹத்வ பரிமாண முடையதுமாம். அங்ஙனமே உத்பூத உருவமுடையதுமாம். அத்தகைய சுவர்ண வடிவ தேயுவினிருப்புளதாயினும் தேயுவின் அபாவ வடிவ தமம் ஆண்டு சம்பவியாது. அச்சுவர்ண வடிவ தேயுவினிருப்புளதாயினும் ஆண்டு தமத்தின் தோற்றமோ அநுபவ சித்தமாம். ஆகையால் அவ்வுத்பூத உருவத்திற்கு "அநபிபூத" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சுவர்ண வடிவ தேயுவின் உருவம் அநபிபூதமன்றும். ஆனால் சுவர்ண வடிவ தேயுவினோடு கலப்புற்ற மஞ்சளுருவத்திற்கும், குருத்வத்திற்கும் ஆசிரயமாகியபார்த்திவக்கூறுயாதோ அப்பார்த்திவக்கூறின் உருவத்தால் சுவர்ணத்தின் உருவம் அடக்கமாகின்றது. ஆகையால் சுவர்ண வடிவ தேயுவிற்கும் கூறிய அத்தேயு விசேஷத்தில் பிரவேச முண்டாகாது. ஆகையால் சுவர்ண வடிவ தேயுவின் இருப்புளதாயினும் கூறிய அத்தேயு விசேஷத்தின் அபாவத்தால் ஆண்டு தமத்தின் தோற்றம் சம்பவிக்கின்றது. அல்லது அந்த லக்ஷணத்தில் "சாமான்னியம்" என்னும் பதங் கூறாவிடின்

யாண்டு ஓர் சூரிய வடிவ தேயு இருக்கின்றதோ ஆண்டும் வேறு அக்கினி, சந்திரன் முதலிய தேயுக்களின் அபாவமேயிருக்கின்றது. ஆகையால் ஆண்டும் தமத்தின் தோற்றம் உண்டாகவேண்டும். ஆனல் தமத்தின் தோற்றம் உண்டாவதின்று. ஆகையால் அந்த லக்ஷணத்தில் "சாமான்னியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சாமான்னியமென்னும் பதத்தைக் கூறுவதால் கூறிய மிக அற்ப விசேஷ தேயுவின் அபாவத்திற்கு தம வடிவத் தன்மையின் சித்தியுண்டாவதின்று. ஆனல் மிகுந்த மஹத்வப் பரிமாண முடையதும், உத்பூத அநபிபூத முடையதுமாம் சூரியன், சந்திரன், அக்கினி, நக்ஷத்திரம், இரத்தினம் முதலிய சர்வ தேயுக்களின் அபாவத்திற்கே தம வடிவத் தன்மை சித்தமாகின்றது. அச்சர்வதேயுக்களின் அபாவம் யாண்டுண்டோ ஆண்டு சூரியன் முதலிய தேயுக்களில் யாதாமோர் தேயுவும் இராது. ஆகையால் இவ்வர்த்தம் சித்தித்தது. அத்தமம் திரவிய வடிவமன்றும்; ஆனல் கூறிய தேயு விசேஷத்தின் அபாவத்தினை தமமென்பர்.

சங்கை:—தேயுவின் அபாவம் தமமாகுமாயின் "கருநிறமுடைய இருள் இயங்குகின்றது" என்னும் பிரத்தியக்ஷத் தோற்றத்தால் தமத்தில் கருநிறத் தன்மையும், இயங்கும் கிரியையுடைமையும் தோற்றமாவது யாதோ அது உண்டாகாத்தாக வேண்டும். எக்காரணத்தாலெனின் அபாவத்தில் உருவமும், கிரியையும் இருப்பதின்றும்.

## ௩௦எ. தமத்தில் நீலவடிவத்தினையும், கிரியா வடிவத்தினையும் செய்வதாகிய தோற்றத்தில் பிரம வடிவத் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம்:—தேயுவின் அபாவ வடிவ தமத்தில் நீல வடிவம் தோற்றுவது யாதோ அந்நீல வடிவம் தமத்திலின்றும். ஆனல் பிருதிவியின் நீல வடிவமே தமத்தில் தோற்றுகின்றது. எங்ஙனம்: நேத்திரத்திலுள்ள பித்த திரவியத்தின் மஞ்சள் நிறம் சங்கில் தோற்றுகின்றது. ஆகையால் "மஞ்சள் சங்கு" என்பதான தோற்றத்தினைப் போன்று. "நீலந்தமம்" என்னும் தோற்றமும் மயக்க வடிவமேயாம். அந்த பிராந்தி ஞானத்தால் தமத்தில் நீல உருவமுடைமை சித்தமாகமாட்டாது. இவ்வாறாக அவ்வபாவ வடிவ தமத்தில் இயங்குதற் றொழிற் றோற்றமாவது யாதோ அக்கிரியையும் தமத்திலின்றும். ஆனல் தீப முதலிய தேயுவின் கிரணங்களை தடுப்பதாகிய சரீர முதலிய பார்த்திவ திரவியம் யாதோ அச்சரீர முதலிய திரவியங்களின் கிரியையே தமத்தில் தோற்றுகின்றது. ஆகையால் அபாவ வடிவ தமத்தில் கிரியையுடைமைத் தோற்றமும், "மஞ்சள் சங்கு" என்னுந் தோற்றத்தினைப் போன்று மயக்க வடிவமேயாம். மயக்க ஞானத்தால் தமத்தில் கிரியையுடைமை சித்தமாகமாட்டாது.

## ௩௦அ. தமத்தினை திரவியவடிவமாக வொப்பி தமத்தின் அபாவத்தில் தேயு வடிவத் தன்மையின் சாதகவாதியின் சங்கை.

சங்கை:—பத்தாந் திரவியத்தை யொப்புவதில் நையாயிகராகிய உமக்கு தோஷமுண்டாகுமாயின் தமத்திற்கு பத்தாந் திரவிய வடிவத் தன்மையுண்

டாகாததாகட்டும். என்றாலும் அத்தேயுவின் ஸ்தானத்தில் தமத்திற்கே திரவியவடிவமொப்புவது தகுதியாம். தம வடிவ திரவியத்தின் அபாவம் யாதோ அதனை தேயு வென்பர். ஏனெனின், யாண்டாண்டு தேயுவிருக்கின்றதோ ஆண்டாண்டு தமம் தோற்றுவதின்று. யாண்டாண்டு தேயுவின் அபாவமிருக்கின்றதோ ஆண்டாண்டு தமம் தோற்றுகின்றது. இவ்வாறாய அந்வயவியதிரேகத்தால் நையாயிகராகிய நீவிர் எங்ஙனம் தமத்திற்கு தேயுவின் அபாவ வடிவ மொப்புகின்றீரோ அங்ஙனமே யாண்டாண்டு தம மிருக்குமோ ஆண்டாண்டு அத்தேயு தோற்றமாகிறதில்லை. யாண்டாண்டு தமத்தின் அபாவமிருக்குமோ ஆண்டாண்டு அத்தேயு தோற்றுகின்றதென்பதான அந்வய வியதிரேகத்தால் அத்தேயுவிற்கும் தமத்தின் அபாவ வடிவத் தன்மை சித்தமாய் விடுகின்றது. எங்ஙனம் நையாயிகராகிய நீவிர் தேயுவின் அபாவ வடிவ தமத்தில் உருவமுடைமைத் தோற்றத்தினையும் கிரியையுடைமை தோற்றத்தினையும் மயக்க வடிவமாக வொப்புகின்றீரோ அங்ஙனமே தம வடிவ திரவியத்தின் அபாவ வடிவ தேயுவினும் அந்த உருவமுடைமைத் தோற்றத்திற்கும் கிரியையுடைமை தோற்றத்திற்கும் பிரம வடிவத் தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் அத்தேயு அத்தம வடிவ திரவியத்தின் அபாவ வடிவமேயாம்.

### ௩௦௧. தேயுவிற்கு தமத்தின் அபாவ வடிவ மொப்புவதினாலாம் தோஷத்தின் வர்ணனம்.

சமாதானம்:—தேயுவினை தமத்தின் அபாவ வடிவமாக வொப்பின் தேயுவில் வெம்மைப் பரிசத்தின் தோற்றமும், விளக்கமான வெண்மைவடிவத்தின் தோற்றமுமிருப்பது யாதோ அத்தோற்றம் உண்டாகாததாகும். ஏனெனின் அபாவத்தில் பரிச குணமும், உருவ குணமு மிருப்பதின்று. ஆனால் திரவியத்திலேயே அக்குணமிருக்கின்றது. எங்ஙனம் தேயுவின் அபாவ வடிவ தமத்தில் உருவமுடைமை தோற்றத்திற்கு பிரம வடிவத் தன்மையிருக்கின்றதோ அங்ஙனம் அத்தேயுவில் வெம்மைப் பரிசமுடைமைக்கும், விளக்கமான வெண்மை உருவமுடைமைத் தோற்றத்திற்கும் பிரம வடிவத்தன்மை சம்பவியாது. ஏனெனின் வெம்மைப் பரிசமும், விளக்கமான வெண்மை உருவமும் ஓர் கால் அத்தேயுவினும் வேறான யாதாமோர் திரவியத்தில் பிரசித்தமாகுமாயின் அந்தபரிசத்திற்கும், உருவத்திற்கும், தமத்தின் அபாவ வடிவத் தேயுவில் ஆரோபணத்தால் கூறிய தோற்றத்திற்கு பிரம வடிவம் சித்தமாம். ஆனால் வெம்மைப் பரிசமும், விளக்கமான வெண்மை உருவமும் தேயுவினும் வேறான திரவியத்தில் பிரசித்தமன்றாம். அன்னியத்திர பிரசித்த அர்த்தத்திற்கே அன்னியத்திர ஆரோப முண்டாகின்றது. எப்பொழுதும் அப்பிரசித்த அர்த்தத்திற்கு ஆரோபம் உண்டாகாது. ஆகையால் தேயுவினை தமத்தின் அபாவ வடிவமாக வொப்பி தேயுவில் வெம்மைப் பரிசமுடைமைக்கும் விளக்கமான வெண்மை உருவமுடைமைத் தோற்றத்திற்கும் பிரம வடிவத் தன்மைக் கூறுதல் சம்பவியாது. ஆகையால் அத்தேயுவிற்கு தமத்தின் அபாவ வடிவத் தன்மை சம்பவியாது. ஆனால் வெம்மைப் பரிசம் விளக்கமான வெண்மை உருவமுடைமை தோற்றத்தின் வலிவால் அத்தேயுவிற்கு திரவிய வடிவத் தன்மையே சித்தமாகின்றது.

சங்கை:—எங்ஙனம் தேயுவில் வெம்மைப் பரிசமுடைமை தோற்றத்திற்கும், விளக்கமான வெண்மை உருவமுடைமைத் தோற்றத்திற்கும் பிரம வடிவத் தன்மையின்றாமோ அங்ஙனமே தமத்தில் நீல உருவமுடைமை தோற்றத்திற்கும், இயங்குதலாம் கிரியையுடைமை தோற்றத்திற்கும் பிரம வடிவத்தன்மை சம்பவியாது. ஏனெனின் தோற்றத்தில் பிரம வடிவத் தன்மையாண்டு அங்கீகரிக்கப்படுகின்றதோ ஆண்டு அத்தோற்றத்திற்கு பிற்காலத்தில் பாதஞானம் உண்டாகின்றது. எங்ஙனம் "கிளிஞ்சலில் இது வெள்ளி" என்னுந்தோற்றத்திற்குப் பின்னர் "இதுவெள்ளியன்று" என்பதான பாதஞானம் உண்டாகின்றது. ஆகையால் "இதுவெள்ளி" என்னும் முதல் தோற்றத்தில் பிரம வடிவத்தன்மை அங்கீககரிக்கப்படுகின்றது. அங்ஙனமே "கருநிறமுடைய தமம் இயங்குகின்றது" என்னுந் தோற்றத்திற்கு பின்னர் "தமம் கருநிறமுடையதன்று" "தமம் இயங்குதலுடையதன்று" என்பதான பாதஞானம் உண்டாவதின்று. ஆகையால் "கருநிறமுடைய தமம் இயங்குகின்றது" என்னும் தோற்றத்தில் பிரம வடிவத் தன்மை சம்பவியாது. ஓர் கால் பிற்காலத்திய பாதஞானமின்றியும் முன்தோற்றத்தில் பிரம வடிவத்தன்மை உண்டாகுமாயின் "இதுகடம்" "இதுபடம்" என்பதான இவை முதலிய எல்லாத் தோற்றங்கட்கும் பிரமவடிவத்தன்மையின் பிராப்தியுண்டாம். அதனால் சூன்னிய வாதத்தின் பிராப்தியுண்டாகும்.

சமாதானம்:—என்றாலும் அத்தமத்தினை பத்தாந் திரவிய வடிவமாக ஒப்புவதில் தம வடிவ திரவியத்திற்கு அனேக அவயவத்தை, கற்பித்தலும் அவ்வவயவங்களில் தமத்தின் பிராகபாவத்தை கற்பித்தலும், பிரத்துவம்சாபாவத்தைக் கற்பித்தலுமா மிவைமுதலிய முற்கூறிய கற்பனை கௌரவதோஷமே பிராப்தமாகும். ஆகையால் லாகவத்தால் அத்தமத்திற்கு தேயுவின் அபாவ வடிவம் ஒப்புவதே உசிதமாகும்.

### ௬௧௦. ஆரோபித நீல வடிவத்தினை தம வடிவமாக வொப்புவோராகிய கந்தலீகாரரின் மத வர்ணனம்.

கந்தலீகாரரின் மதமோ இதுவாம். தேயுவின் அபாவம் தமமன்றாம். அங்ஙனமே அத்தமம் பத்தாம் திரவிய வடிவமுமன்றாம். ஆனால் ஆரோபித நீல வடிவத்தினை தமமென்பர்.

### ௬௧௧. கந்தலீகாரரின் மத கண்டனம்.

இக்கந்தலீகாரரின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் அவ்வாரோபிதநீல வடிவத்தினை தமமாக வொப்பின் ஜலமுதலியவைகளில் "இது இருள்" என்பதான தோற்றமுண்டாவது யாதோ அத்தோற்றத்திற்கும் பிரம வடிவத் தன்மை அங்கீகரிக்க வேண்டும். ஏனெனின் ஜல முதலியவைகளில் பிரமத்தின் பிரகாரமாகிய நீல வடிவமின்றாம். இது இருள் என்பதான தோற்றத்திற்கு பிரம வடிவத்தன்மையேயின்றாம்; ஆனால் பிரமா வடிவமிருக்கின்றது. ஆகையால் அவ்வாரோபிதநீல உருவத்தில் தம வடிவத்தன்மை சம்பவியாது. அல்லது "தமோ நீலம் சலதி" (இ ள்.) இத்தமம் நீலஉருவமுடையதாம், நீல உருவமன்றாம். என்பதான லௌகிகத் தோற்றத்தானும் அத்தமத்தில் நீல வடிவத்தன்மை சித்தமாவதின்று.

## ௬௧௨. சுவர்ணத்தினை பத்தாந் திரவியமாக வொப்புவோராகிய மீமாஞ்சகர் மதத்தின் சங்கை.

சங்கை :—தமத்திற்கு பத்தாந் திரவியத்தன்மையுண்டாகாததாகட்டும். என்றாலும் சுவர்ண வடிவ பத்தாந் திரவியமிருக்கிறது. ஆண்டு சுவர்ணம் குருத்வ தர்மமுடைய தாவதாலும், பீத உருவமுடைய தாவதாலும் தேயு வடிவமுமன்றும். கந்தகுண மிலாததாவதால் பிருதிவி வடிவமுமன்றும். சாம்சித்திக திரவத்வமும், சினேக குணமுமிலாததாலும் சுவர்ணம் ஜலவடிவமு மன்றும். உருவகுணமுடையதாவதால் சுவர்ணம் வாயு முதலிய அறுவகை திரவிய வடிவமு மன்றும். இவ்வாறாக சுவர்ணத்திற்கு பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் யாதாமோர் திரவியத்திலும் அந்தர்பாவம் உண்டாக மாட்டாது. பரிசேஷத்தால் சுவர்ணத்தில் பத்தாந் திரவியத் தன்மையே சித்த மாகின்றது. ஆகையால் திரவியம் ஒன்பதேயாமென்னும் உமது பிரதிஞ்ஞை மித்தையாம்.

சமாதானம் :—எங்ஙனம் தமத்தில் பத்தாந்திரவியத் தன்மையின் றாமோ அங்ஙனமே அச்சுவர்ணத்திலும் பத்தாந்திரவியத்தன்மை சம்பவியாது. ஆனால் அச்சுவர்ணத்திற்கு தேயு வடிவ திரவியத்திலேயே அந்தர்பாவம் சம்பவிக்கின்றது. சுவர்ணத்திற்கு எவ்வாற்றால் அத்தேயு வடிவ திரவியத்தில் அந்தர்பாவமாமோ அவ்வகையை முன்னர் தேயு நிரூபணத்தில் விரிவாகக் கூறி வந்துள்ளோம். ஆகையால் முற்கூறிய திரவியங்கள் ஒன்பதே யாமென் னும் அர்த்தம் சித்தமாயிற்று.

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசாரிய ஸ்ரீசுவாமி உத்தவானந்தகிரி அவர்களது சீடராகிய சுவாமி சித்கனாநந்தகிரி அவர்கள் அருளிய நியாயப் பிரகாசம் திரவிய நிரூபணமெனப் பெயரிய இரண்டாவது பரிச்சேதம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீ குருப்பியோ நமஃ, ஸ்ரீ பரமாத்மனே நமஃ,

ஸ்ரீ சங்கராசாரியேப்யோ நமஃ.



ஓம் ஸ்ரீகணேசாயநம:, ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வராயநம:,
ஸ்ரீசங்கராசாரியேப்பியோநம:, ஸ்ரீகுருப்பியோநம:.

# நியாயப் பிரகாசம்.

## மூன்றாவது பரிச்சேதம்.

முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களை விரிவாய் நிரூபிக்கப்பட்டன. இனி இம்மூன்றாவது பரிச்சேதத்தில் உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களை விரிவாய் நிரூபிப்பாம்.

### ௬௩௩. இருபத்துநான்கு குணங்களின் சாத்ாரண லக்ஷணங்கள்.

“த்ரவ்யகர்மபிந்நத்வே ஸதி ஸாமாந்யவாந் குண:” அல்லது “த்ரவ்யத்வவ்யாபகதாவச்சேதக ஸத்தாபிந்ந ஜாதிமாந் குண:” அல்லது “த்ரவ்யஸமவேதகார்யவ்ருத்தி நித்யாநித்யவ்ருத்தி ஸமவாயிபிந்நகாவ்ருத்தி ஜாதிமாந் குண:” அல்லது “குணத்வஜாதிமாந் குண:” இந்நான்கும் இருபத்துநான்கு குணங்களின் சாதாரண லக்ஷணங்களாம்.

### ௬௩௪. குணங்களின் முதலாவது லக்ஷணம்.

இனி இந்நான்கு லக்ஷணங்களில் முதலாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எப்பதார்த்தம் திரவியத்தினும் கர்மத்தினும் வேறும், சமவாய சம்பந்தமாக ஜாதிவடிவ சாமான்னியமுடையதுமாமோ அப்பதார்த்தம் குணமெனப்படும். ஆண்டு உருவமுதலாக சம்ஸ்காரமட்டுமாம் இருபத்து நான்கு குணங்கள் யாவையோ அவ்விருபத்துநான்கு குணங்கள் திரவிய பதார்த்தத்தினும், கர்ம பதார்த்தத்தினும் வேறுமாம். அங்ஙனமே சமவாய சம்பந்தமாக குணத்வ ஜாதிவடிவ அல்லது சத்தா ஜாதி வடிவ சாமான்னிய முடையதுமாம். ஆகையால் கூறிய குணத்தின் லக்ஷணஞ் சம்விக்கின்றது. ஆண்டு “சாமான்னியமுடையது குணம்” என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் “திரவியத்தினும் கர்மத்தினும் வேறும்” என்னும் பதங்கள் கூறாவிடின் திரவியத்திலும், கர்மத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். ஏனெனில் எங்ஙனம் குணம் ஜாதி வடிவ சாமான்னியமுடையதாமோ அங்ஙனமே திரவியமும் திரவியத் தன்மை ஜாதி வடிவ அல்லது சத்தா ஜாதி வடிவ சாமான்னியமுடையதேயாம். அங்ஙனமே அக்கர்மமும் கர்மத்தன்மை ஜாதி வடிவ அல்லது சத்தா ஜாதி வடிவ சாமான்னியமுடையதேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் “திரவியத்தினும் கர்மத்தினும் வேறும்” என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு திரவியம் அத் திரவியத்தினும் வேறன்று. அங்ஙனமே கர்மம் கர்மத்தினும் வேறன்று. எக்

காரணத்தாலெனின் தனது பேதம் தன்னிடத்திலிருப்பதின்று. ஆகையால் திரவியத்திலும், கர்மத்திலும் அக்குணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "திரவியத்தினும் கர்மத்தினும் வேறானது குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "சாமான்னியமுடையது" என்னும் பதங்கள் கூறுவிடின் சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவம் என்னும் நான்கு பதார்த்தங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் குண பதார்த்தம் திரவியத்தினும், கர்மத்தினும் வேறுமோ அங்ஙனமே சாமான்னிய முதலிய நான்கு பதார்த்தங்களும் திரவியத்தினும், கர்மத்தினும் வேறேயாம். ஆகையால் அந்த அதிவியாப்திதோஷத்தைநிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சாமான்னியமுடையது" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சாமான்னிய முதலிய நான்கு பதார்த்தங்கள் ஜாதி வடிவ சாமான்னிய முடையதன்றும். ஆகையால் சாமான்னிய முதலிய நான்கில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## கூகரு. குணங்களின் இரண்டாவது லக்ஷணம்.

இனி "த்ரவ்யத்வவ்யாபகதாவச்சேதக ஸத்தாபிந்ந ஜாதிமாந் குண:" என்னும் இரண்டாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு திரவியத் தன்மை ஜாதியின் வியாபகத் தன்மையின் அவச்சேதகமும், சத்தா ஜாதியினும் வேறுமா மித்தகைய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய பதார்த்தம் குணமெனப்படும். இத்தகையது திரவியத்தன்மை ஜாதியின் வியாபகத் தன்மையின் அவச்சேதகமும், சத்தாஜாதியினும்வேறும் குணத்தன்மை ஜாதியேயாம். அக்குணத்தன்மை ஜாதியுடையது உருவமுதலிய இருபத்துநான்கு குணங்களாம். ஆண்டு திரவியத்தன்மை ஜாதி பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே இருக்கின்றது. குணமும் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றது. ஆகையால் குணம் திரவியத்தன்மை ஜாதியின் வியாபகமெனப்படும். உருவ முதலிய குணங்களில் இருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதியின்வியாபகத்தன்மை யாதோ அந்த வியாபகத்தன்மையின் அவச்சேதகம் குணத்தன்மை ஜாதியேயாம். குணத் தன்மை ஜாதி சத்தா ஜாதியினும் வேறுமாம். இத்தகைய குணத்தன்மை ஜாதி உருவ முதலிய எல்லாகுணங்களில் சமவாயசம்பந்தமாக இருக்கின்ற தாகையால் கூறிய குணத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "சத்தாஜாதியினும் வேறான ஜாதியுடையது குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "திரவியத்தன்மையின் வியாபகத்தன்மையின் அவச்சேதகம்" என்னும் பதங்கள் கூறுவிடின் திரவியத்திலும் கர்மத்திலும் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் சத்தா ஜாதியினும் வேறான குணத்தன்மை ஜாதியுடையது குணமாமோ அங்ஙனமே சத்தா ஜாதியினும் வேறான திரவியத்தன்மை ஜாதியுடையது திரவியமுமாம். அங்ஙனமே சத்தாஜாதியினும் வேறான கர்மத்தன்மை ஜாதியுடையது கர்மமுமாம். ஆகையால் அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவியத்தன்மையின் வியாபகத்தன்மையின் அவச்சேதகம்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு

அத்திரவியத்தன்மைஜாதியும், கர்மத்தன்மைஜாதியும் திரவியத்தன்மைஜாதியின் வியாபகத்தன்மையின் அவச்சேதகமன்றும். ஏனெனின் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் எங்ஙனம் குணம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றதோ அங்ஙனம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் ஓர்கால் ஓர் திரவியமும், கர்மமும் சமவாய சம்பந்தத்தாலிருக்குமாயின் திரவியத்தன்மை ஜாதியும், கர்மத்தன்மை ஜாதியும் குணத் தன்மை ஜாதியினைப்போன்று திரவியத்தன்மை ஜாதியின் வியாபகத்தன்மையின் அவச்சேதகமாகும். ஆனால் ஒன்பது திரவியங்களில் திரவியமும், கர்மமும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதில்லை. ஆகையால் திரவியத்தன்மைஜாதியும், கர்மத்தன்மைஜாதியும் திரவியத்தன்மை ஜாதியின் வியாபகத்தன்மையின் அவச்சேதகமாகா. பரமாணுவாதிவடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயு இந்நான்கு திரவியங்களில் துவியணுகாதிவடிவ திரவியங்கள் சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றன. அங்ஙனமே பிருதிவி, ஜலம் தேயு, வாயு, மனம் இவ்வைந்து திரவியங்களில் கர்மம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. என்றாலும் ஆகாசம், காலம், திக்கு ஆத்மா, மனம் இவ்வைந்து திரவியங்களில் ஓர் திரவியமும் சமவாயசம்பந்தமாக இருப்பதன்று. அங்ஙனமே ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா இந்நான்கு திரவியங்களில் ஓர் கர்மமும் சமவாய சம்பந்தமாக இருப்பதன்று. ஆகையால் திரவியத்தன்மை ஜாதியினும், கர்மத்தன்மை ஜாதியினும் திரவியத்தன்மை ஜாதியின் வியாபகத்தன்மையின் அவச்சேதகத்தன்மை சம்பவியாது. அல்லது "திரவியத்தன்மையின் வியாபகத்தன்மையின் அவச்சேதக ஜாதியுடையது குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "சத்தையினும்வேறானதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் திரவியத்தன்மை ஜாதியின் வியாபக உருவ முதலிய குணங்களில் இருப்பதாகிய சத்தா ஜாதியைக்கொண்டு மீண்டும் திரவிய கர்மங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திசெய்யும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சத்தையினும் வேறானதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சத்தா ஜாதி சத்தாஜாதியினும் வேறன்று. ஆகையால் சத்தாஜாதியைக் கொண்டு திரவிய, கர்மங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௬௧௬. குணங்களின் மூன்றாவது லக்ஷணம்.

"[illegible] நித்யாநித்யவ்ருத்தி [illegible] கோவாயிரஈர் முணா:" என்னும் மூன்றாவது லக்ஷணத்தின் அர்த்தம் நிருபிப்பாம். ஆண்டு திரவிய சமவேதமாத்திரத்தில் இருப்பதும், நித்திய அநித்தியமா மிரண்டில் இருப்பதும், பதார்த்தங்களை பிரிப்பதுமாகிய உபாதியாதோ அவ்வுபாதியுடைய பதார்த்தம் குணமெனப்படும். ஆண்டு எவ்வெத்தர்மங்களைக்கொண்டு திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் பிரிக்கப்படுகின்றதோ அவ்வத்தர்மம் பதார்த்தங்களை பிரிக்கும் உபாதியெனப்படும். எங்ஙனம் திரவியத் தன்மை, குணத் தன்மை, கர்மத் தன்மை, சாமான்னியத் தன்மை, விசேஷத் தன்மை, சமவாயத் தன்மை, அபாவத் தன்மை யாம் தர்மங்களைக் கொண்டே முறையாக திரவியமுதலிய ஏழுபதார்த்தங்கள் பிரிக்கப்படுகின்றன.

ஆகையால் திரவியத்தன்மை, குணத்தன்மை முதலிய தர்மங்கள் பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி எனப்படுகின்றன. ஆண்டு உருவ முதலிய இருபத்துநான்கு குணங்கள் முறையாக யோக்கிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே சமவாயசம்பந்தமாக இருக்கின்றன. ஆகையால் அவ்வுருவ முதலிய குணங்கள் திரவிய சமவேதமெனப்படுகின்றன. அத்தகைய திரவியசமவேத உருவமுதலிய குணங்களிலேயே குணத்தன்மை ஜாதி சமவாயசம்பந்தமாக இருக்கின்றது. குணத்தினும் வேறான வேறோர் பாதார்த்தத்தில் குணத்தன்மை ஜாதி இருப்பதின்று. ஆகையால் குணத்தன்மை ஜாதி திரவிய சமவேத மாத்திரத்திலிருப்பதெனப் படுகின்றது. குணத்தன்மை ஜாதி நித்திய குணங்களிலும், அநித்திய குணங்களிலுமிருக்கின்றது. ஆகையால் குணத்தன்மை ஜாதி நித்திய, அநித்தியமா மிரண்டில் இருப்பதெனப்படுகின்றது. கூறிய முறையாக குணத்தன்மை ஜாதி பதார்த்தங்களை பிரிக்கும் உபாதிவடிவமுமாம். இத்தகைய் திரவிய சமவேத மாத்திரத்திலிருப்பதும், நித்திய அநித்தியத்தி லிருப்பதும், பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம் குணத்தன்மை ஜாதி உருவமுதலிய எல்லாகுணங்களிலுமிருக்கின்றது. ஆகையால்கூறியகுணத்தின் லக்ஷணமுஞ்சம்பவிக்கின்றது. ஆண்டு "நித்தியாநித்தியத்திலிருப்பதும்பதார்த்தங்களை பிரிக்கும் உபாதியுடையதும் குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "திரவிய சமவேத மாத்திரத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் திரவியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் குணத்தன்மை ஜாதி நித்திய, அநித்திய குணங்களி லிருப்பதும், பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாமோ அங்ஙனமே திரவியத்தன்மைஜாதியும் நித்திய, அநித்திய திரவியங்களி லிருப்பதும், பதார்த்தங்களை பிரிக்கும் உபாதிவடிவமுமாம். இத்தகைய திரவியத்தன்மை ஜாதி பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "திரவிய சமவேதமாத்திரத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு திரவியத்தன்மை ஜாதி கேவலம் திரவிய சமவேதமாத்திரத்திலிருப்பதன்று. ஆனால் திரவிய சமவேதமும், திரவிய அசமவேதமுமா மிருவிதமாய திரவியங்களில் திரவியத்தன்மை ஜாதி யிருக்கின்றது. ஆண்டு துவியணுக முதலிய காரியதிரவியங்களோ திரவிய சமவேத திரவியமெனப்படுகின்றன. பரமாணு ஆகாச முதலிய நித்திய திரவியங்களோ திரவிய அசமவேத திரவியங்களெனப்படுகின்றன. ஆகையால் திரவிய சமவேத திரவியத்திலும், திரவிய அசமவேத திரவியத்திலும் இருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு திரவியத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்திபுண்டாகாது. அல்லது "திரவிய சமவேத மாத்திரத்திலிருப்பதும் பதார்த்தங்களை பிரிக்கும் உபாதியுடையதும் குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நித்தியத்திலும் அநித்தியத்திலுமிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் கர்ம பதார்த்தத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் குண பதார்த்தம் திரவியத்திலேயே சமவாய சம்பந்தந்தா னிருக்கின்றதோ அங்ஙனமே கர்ம பதார்த்த

மும் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னு மிவ்வைந்து மூர்த்தத் திரவியங்களிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் கர்மமும் குணத்தினைப்போன்று திரவிய சமவேதமெனப்படுகின்றது. இத்தகைய திரவிய சமவேத கர்ம மாத்திரத்தில் இருப்பது கர்மத்தன்மை ஜாதியாம். அக்கர்மத்தன்மை ஜாதி அக்குணத்தன்மை ஜாதியினைப் போன்று பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமாம். இத்தகைய திரவிய சமவேத மாத்திரத்தி லிருப்பதும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவ கர்மத்தன்மை ஜாதியுடையதும் கர்மமுமாம். ஆகையால் கர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அல்லது "நித்தியத்திலும் அநித்தியத்திலு மிருப்பதும்" என்னு மிப்பதங்களை கூறுவிடின் எங்ஙனம் கர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாமோ அங்ஙனமே விசேஷ பதார்த்தத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம்: அக்குண, கர்மம் திரவியத்திலிருக்கின்றனவோ அங்ஙனமே விசேஷமும் திரவியத்திலேயே சமவாய சமபந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் குண, கர்மத்தினைப்போன்று விசேஷமும் திரவிய சமவேதமெனப் படுகின்றது. இத்தகைய திரவிய சமவேத விசேஷ மாத்திரத்தில் இருப்பது விசேஷத் தன்மை தர்மமாம். அந்த விசேஷத் தன்மை தர்மம் குணத் தன்மை, கர்மத்தன்மை ஜாதியினைப் போன்று பதார்த்தங்களைப்பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய திரவிய சமவேதமாத்திரத்தில் இருப்பதும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவ விசேஷத்தன்மை தர்மமுடையதும் விசேஷபதார்த்தமுமாம். ஆகையால் விசேஷத்திலுங் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அந்த அதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நித்தியத்திலும் அநித்தியத்திலு மிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கிரியா வடிவ கர்மம் யாதொன்றும் நித்தியமாவதின்று. ஆனால் எல்லாக் கர்மங்களும் அநித்தியமேயாகின்றன. இத்தகைய அநித்திய கர்மத்தில் இருக்கும் கர்மத்தன்மை ஜாதி நித்திய, அநித்தியத்தி லிருப்பதெனப் படுகிறதில்லை. ஆனால் அக்கர்மத் தன்மை ஜாதி கேவலம் அநித்தியத்திலிருப்பதெனப்படுகின்றது. ஆகையால் கர்மத்தன்மை ஜாதியைக் கொண்டு அக்கர்மத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. நித்திய திரவியங்களி லிருப்பதாகிய விசேஷ பதார்த்தம் நித்தியமேயாகின்றது. யாதோர் விசேஷமும் அநித்தியமாவதின்று. இத்தகைய நித்திய விசேஷத்தில் இருப்பதாகிய விசேஷத் தன்மை தர்மம் நித்திய, அநித்தியத்தில் இருப்பதெனப்படுகிறதில்லை, ஆனால் விசேஷத் தன்மை தர்மம் கேவலம் நித்தியத்திலிருப்பதெனப்படுகின்றது. ஆகையால் விசேஷத் தன்மை தர்மத்தைக் கொண்டு விசேஷத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "திரவிய சமவேத மாத்திரத்தி லிருப்பதும், நித்திய அநித்தியத்தி லிருப்பதும், உபாதியுடையதும் குணம்" என இம்மாத்திரமே குணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும் என்னும் பதங்கள் கூறுவிடின் நித்திய, அநித்திய முதலிய பிரிவையுடைய உருவம், ரச முதலிய குணங்களில் இருப்பதாகிய உருவத்தன்மை, ரசத்

தன்மை ஜாதிகளைக் கொண்டு மிக அற்ப உருவ முதலிய குணங்களிலோ அந்த லக்ஷணஞ் சம்பவிக்கும். ஆனால் அக்குணம் நித்திய, அநித்திய பிரிவையுடையதன்றாம். ஆனால் கேவலம் அநித்தியமேயாம். சையோக விபாக முதலிய அநித்திய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அந்த அதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்றாம். ஆனால் குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமாம். ஆகையால் உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு சையோக, விபாக முதலிய அநித்திய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௩௧௭. குணத்தின் நான்காவது லக்ஷணம்.

இனி "ம-ணகுஜா திமாந் ம-ணஃ" என்னு மிந்நான்காவது லக்ஷணத்தின் அர்த்தம் நிரூபிப்பாம். ஆண்டு எப்பதார்த்தம் சமவாய சம்பந்தமாக குணத்தன்மை ஜாதியுடையதாமோ அப்பதார்த்தம் குண மெனப்படுகின்றது. ஆண்டு அக்குணத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தமாக உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களிலேயே இருக்கின்றது. குணத்தினும் வேறான கர்ம முதலிய பதார்த்தங்களில் குணத் தன்மை ஜாதியிருப்பதின்று. ஆகையால் குணத் தன்மை ஜாதியுடைமை வடிவ குணத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது.

சங்கை:—முற்கூறிய குணத்தன்மை ஜாதியுள்ள குணத்தின் லக்ஷணம் எப்பொழுது சம்பவிக்கின்றதோ அப்பொழுது முதலில் யாதாமோர் பிரமாணத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாக வேண்டும். குணத்தன்மை ஜாதியின் சித்தியின்றி அந்த லக்ஷணஞ் சம்பவியாது. குணத்தன்மை ஜாதியில் யாதோர் பிரமாண மின்றாம். ஆகையால் குணத்தன்மை ஜாதியுள்ள குணத்தின் லக்ஷணஞ் சம்பவியா தென்னும் சங்கையுண்டாக இனி பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

### ௩௧௮. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தி.

ஆண்டு பரஸ்பர விலக்ஷண உருவ, ரச முதலிய குணங்கள் யாவையோ அவ்வுருவ, ரச முதலிய குணங்களில் "இது குணம் இது குணம்" என்பதாக ஓர் தர்மமாக ஏகாகாரப் பிரத்தியக்ஷத் தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அவ்வேகாகாரத் தோற்றம் உருவ முதலிய எல்லாக் குணங்களி லிருப்பதாகிய குணத் தன்மை ஜாதியினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் குணத் தன்மை ஜாதியில் பிரத்தியக்ஷமே பிரமாணமாம்.

### ௩௧௯. அதீந்திரிய குணங்களில் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் குணத்தன்மை சித்தியாமையின் சங்கை.

சங்கை:—"இது குணம்" என்பதான பிரத்தியக்ஷத் தோற்றம் பிரத்தியக்ஷ யோக்கிய கட முதலிய திரவியங்களின் உருவமுதலிய குணங்களிலோ

உண்டாகின்றது. என்றாலும் பரமாணு முதலியவைகளி லிருப்பதாகிய அதீந்திரிய உருவ முதலிய குணங்களில் பிரத்தியக்ஷத் தோற்றம் உண்டாகாது. ஆகையால் அந்த பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அதீந்திரிய குணங்களில் குணத்தன்மை ஜாதியின் சித்தி உண்டாகாது. அல்லது பிரசித்த உருவ முதலிய குணங்களிலும் உலகர் யாவருக்கும் "இது குணம் இது குணம்" என்பதான பிரத்தியக்ஷத் தோற்றம் உண்டாகிறதில்லை; ஆனால் தமது தமது இச்சை வசத்தால் வேவ்வேறு பதார்த்தங்களிலேயே உலகவருக்கு குணத்தன்மையை விஷயஞ் செய்யுந் தோற்றம் உண்டாகின்றது அதைக் காட்டுவாம். ஆண்டு சத்த சாஸ்திரமுடைய வையாகரணரோ அகார, ஏகார, ஓகாரமா மூன்றினையே குணமாகக் கூறுகின்றனர். சாங்கிய சாஸ்திரமுடையாரோ சத்வ, ரஜ, தமமா மூன்றினையே குணமாகக் கூறுகின்றனர். மீமாஞ்சகரோ யாகத்தில் உபயோகி தயிர் முதலிய திரவியங்கள் யாவையோ அவற்றையே குணமாகக் கூறுகின்றனர். யோக சாஸ்திரமுடையாரோ சம, தம, திதீக்ஷை முதலியவைகளையே குணமாகக் கூறுகின்றனர். தர்ம சாஸ்திரமுடையாரோ ஈகைத்தன்மை, பொருளில் விருப்பமில்லாமை இவை முதலியவைகளையே குணமாகக் கூறுகின்றனர். காவிய சாஸ்திரமுடையாரோ ஸ்லேஷ முதலியவைகளையே குணமாகக்கூறுகின்றனர். வைத்திய சாஸ்திரமுடையாரோ ஆரோக்கிய முதலியவைகளையே குணமாகக் கூறுகின்றனர். சிற்ப சாஸ்திரமுடையாரோ சித்திர முதலிய வைகளைச் செய்யும் சாமர்த்தியத்தையே குணமாகக் கூறுகின்றனர். லௌகிக ஜனங்களோ சத்திய வசனம் முதலியவைகளையே குணமாகக் கூறுகின்றனர். இவ்வாற்றால் உலகவருக்கு வெவ்வேறு பதார்த்தங்களிலேயே குணத்தன்மை புத்தி யுண்டாகின்றது. உலகர் யாவருக்கும் உருவ முதலியவைகளில் குணத்தன்மை புத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் கூறிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் உருவ முதலிய குணங்களில் குணத்தன்மை ஜாதியின் சித்திச் சம்பவியாதென்னுஞ் சங்கையுண்டாக இனி அநுமானப்பிரமாணத்தால் குணத்தன்மை சித்தியைச் செய்வாம்.

கூஉ0. அநுமானப் பிரமாணத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தி.

"ரூபநிஷ்டாயாகாரணதாவா கிஞ்சித்³ரூபாவச்சிந்நகாரணதாவாஸ ரூப்யநிஷ்ஷகாரணதாவஸ" (இ-ள்.) உருவ முதலாக சம்ஸ்காரமட்டுமாம் இருபத்து நான்கு குணங்கள் யாவையோ அக்குணங்களி லிருப்பதாகிய காரணத்தன்மை யாதோ அக்காரணத் தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், காரணத் தன்மையாவதால், எதுவெது காரணத்தன்மையாமோ அவ்வக்காரணத்தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகின்றது. திரவச்சின்னம் ஒன்றும் காரணத் தன்மையாவதின்று. எங்ஙனம்: பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் இருப்பதாகிய காரணத் தன்மை காரணத்தன்மை வடிவமாவதால் திரவியத் தன்மை தர்மத்தால் அவச்சின்னமேயாகின்றது. அங்ஙனமே குணத்தில் இருப்பதாகிய காரணத் தன்மையும், காரணத் தன்மை வடிவமாவதால் அவசியம் ஓர் தர்மத்தால் அவச்சின்னமாகும்.

ஆண்டு எத்தர்மம் எக்காரணத் தன்மையின் குறைந்த விடத்திலும், அதிக விடத்திலு மிருப்பதின்றோ அத்தர்மமே அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாகின்றது. அக்காரணத் தன்மையினும் குறைந்தவிடத்தி லிருக்கும் தர்மம் அக்காரணத் தன்மையின் அவச்சேதகமாவதன்று. இத்தகைய குணத்திலிருக்கும் காரணத்தன்மையின் அவச்சேதக தர்மம் குணத்தன்மை ஜாதியாகவே சித்தமாகின்றது. உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளும் உருவ முதலிய குணங்களிலிருக்கின்றது. அங்ஙனமே சத்தா ஜாதியும் உருவ முதலிய குணங்களி லிருக்கின்றது. என்றாலும் உருவத் தன்மை, ரசத்தன்மை முதலியஜாதிகளோ அவ்வெல்லாக் குணங்களிலிருக்கும் காரணத் தன்மையினும் குறைந்தவிடத்திலிருப்பனவாம். சத்தாஜாதியோ காரணத்தன்மையினும் அதிகவிடத்திலிருப்பதாம். ஆகையால் உருவத் தன்மை, ரசத் தன்மை முதலிய ஜாதிகளும், அச்சத்தா ஜாதியும் அவ்வெல்லாக் குணங்களி லிருக்கும் காரணத் தன்மையின் அவச்சேதகமாகமாட்டாது. பரிசேஷமாக குணத் தன்மை ஜாதியே குணத்தி லிருக்கும் காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாகச் சித்தமாகின்றது.

## ௬௨௧. கூறிய அநுமானப் பிரமாணத்தால் குணத்தன்மை ஜாதி சித்தியாமையின் சங்கை.

சங்கை :—கூறிய இவ்வநுமானப் பிரமாணத்தாலும் குணத் தன்மை ஜாதியின் சித்திச் சம்பவியாது. ஏனெனின் எங்ஙனம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களில் சையோக வடிவ காரியத்திற்கு அல்லது விபாக வடிவ காரியத்திற்கு ஓர் சாதாரண காரணத் தன்மை யிருக்கின்றதோ அங்ஙனமே உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களிலும் யாதாமோர் சாதாரண காரணத் தன்மையினை பக்ஷத்தில்வைத்து குணத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வதா? அல்லது ஒவ்வோர் உருவ முதலிய குணங்களி லிருப்பதாகிய வெவ்வேறு காரணத் தன்மை யாதோ அவ்வெல்லாக் காரணத் தன்மைகளை பக்ஷத்தில்வைத்து குணத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வதா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின் சமவாயி காரணத் தன்மை, அசமவாயி காரணத் தன்மை, நிமித்த காரணத் தன்மை என்பதாக மூன்றுவிதமாகவே காரணத் தன்மை இருக்கின்றது. ஆண்டு சமவாயி காரணத் தன்மையோ கேவலம் திரவிய பதார்த்தத்திலேயே இருக்கின்றது. குண, கர்ம பதார்த்தங்களில் இருப்பதின்று. அசமவாயி காரணத் தன்மையோ குண, கர்மமா மிரண்டு பதார்த்தங்களிலேயே யிருக்கின்றது. வேறோர் பதார்த்தத்தில் அசமவாயி காரணத் தன்மை யிருப்பதின்று. நிமித்த காரணத் தன்மையோ திரவிய முதலிய எல்லாப் பதார்த்தங்களி லிருக்கின்றது. ஆண்டு உருவ முதலிய இருபத்து நான்கு குணங்களில் ஓர் சாதாரண அசமவாயி காரணத் தன்மையினை அங்கீகரித்து காரணத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் குணத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்யின் ஆத்மாவின் ஞான முதலிய குணங்களில் குணத் தன்மை ஜாதியின் சித்தி உண்டாவதின்றாகும். எக்காரணத்தா

லெனின் அந்த ஞான முதலிய குணங்கள் ஓர் காரியத்திற்கும் அசமவாயி காரணமாகாது. எங்ஙனம் கட முதலியன தனது துவம்சத்தில் நிமித்த காரண மாகின்றதோ அங்ஙனமே அந்த உருவ முதலிய குணங்கட்கும் தமது தமது துவம்சத்தில் நிமித்த காரண மொப்பி அந்நிமித்த காரணத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் குணத் தன்மை ஜாதியின் சித்தியைச் செய்யின் அநித்திய குணங்களிலோ குணத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகும். ஆனால் நித்திய குணங்களில் குணத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாது. எக்காரணத்தா லெனின் நித்தியகுணங்கட்கு ஓர்காலும் துவம்சமுண்டாகிறதில்லை. எங்ஙனம் கட முதலியவைகளை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானத்தில் கட முதலிய விஷயங்கள் நிமித்தகாரணமாகின்றனவோ அங்ஙனமே உருவ முதலிய குணங் களை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானத்தில் உருவ முதலிய குணங்கட்கு நிமித்த காரணம் வொப்பி அந்த நிமித்தகாரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக குணத்தன்மை ஜாதியின் சித்தியைச்செய்யின் பிரத்தியக்ஷத்திற்கு யோக்கிய உருவ முதலிய குணங்களிலோ குணத்தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகும். ஆனால் தர்ம, அதர்ம முதலிய அதீந்திரிய குணங்களில் குணத் தன்மை ஜாதியின் சித்தியுண்டாகாது. எக்காரணத்தாலெனின் அதீந்திரிய குணங்களின் பிரத்தியக்ஷஞானம் ஓர்காலுமுண்டாகிறதில்லை. ஈசுவரனுக்கும், யோகீபுருஷனுக்கும் அதீந்திரிய குணங்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறது. என்றாலும் ஈசுவரனது பிரத்தியக்ஷஞானமோ நித்தியமாவதால் ஓர் காரணத் தாலும் உண்டானதன்றாம். யோகி புருஷனது பிரத்தியக்ஷ ஞானம் ஜன்னியமாயினும் விஷயத்தால் ஜன்னியமானதன்று. அதாவது அந்த யோ கியின் பிரத்தியக்ஷ ஞானத்தில் விஷயத்திற்கு காரணத் தன்மை யுண்டாகிற தில்லை. எக்காரணத்தாலெனின் இறப்பு, எதிர்வு பதார்த்தங்களின் இருப்பின் மை யுளதாயினும் அந்தயோகீபுருஷனுக்கு இறப்பு, எதிர்வு பதார்த்தங்களின் பிரத்தியக்ஷஞானமுண்டாகிறது. ஆகையால் உருவ முதலிய எல்லாக் குணங் களில் ஓர்சாதாரண காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக அக்குணத் தன்மை ஜாதியின் சித்திசம்பவியாது. ஒவ்வோர் உருவமுதலிய குணங்களி லிருப்பதாகிய வெவ்வேறு காரணத் தன்மை யாதோ அவ்வெல்லாக் காரணத் தன்மைகளின் சமுகத்தினை பக்ஷத்தில்வைத்து அக்குணத்தன்மை ஜாதியின் சித்தி யுண்டாகின்றதென்னும் இவ்விரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் உருவமுதலிய இருபத்துநான்கு குணங் களிலுள்ள இருபத்துநான்குகாரணத்தன்மைகளை பக்ஷத்தில்வைத்து அவ்விரு பத்துநான்கு காரணத் தன்மைகளின் அவச்சேதக வடிவமாக வோர் குணத் தன்மைஜாதியின் சித்தி எங்ஙனமுண்டாகின்றதோ அங்ஙனமே உருவத்தினும் வேறான ரச முதலிய இருபத்துமூன்று குணங்களிலுள்ள இருபத்து மூன்று காரணத்தன்மைகளை பக்ஷத்தில்வைத்து அவ்விருபத்து மூன்று காரணத் தன்மைகளின் அவச்சேதக வடிவமாக அக்குணத்தன்மை ஜாதியினும் வே றான அவ்விருபத்து மூன்று குணங்களில் இருப்பதாகிய ஓர்விலக்ஷண ஜாதி யும் சித்திக்கவேண்டும். இவ்வாறாக இருபத்திரண்டு குணங்களிலும், இருபத்

தோர் குணங்களிலும், இருபத்து குணங்களிலும் வெவ்வேறு ஜாதியின் சித்தி யுண்டாக வேண்டும். அங்ஙனமாவது பிரத்தியக்ஷ விருத்தமாம். ஆகையால் அவ்விரண்டாவது பக்ஷமும் சம்பவியாது. அல்லது நியாய சித்தாந்தத்தில் பரமாணுக்களின் அணுத்வ பரிமாணத்திற்கு காரியம் ஒன்றினைக் குறித்தும் காரணத்தன்மை அங்கீகரிக்கப்படுவதின்று. ஆகையால் அணுத்வ பரிமாணத்தில் எவ்வாற்றாலும் அக்குணத்வ ஜாதியின் சித்தியுண்டாகாது. ஆகையால் குணத்திலுள்ள காரணத் தன்மையின் அவச்சேதக வடிவமாக குணத்வஜாதியின் சித்தியைச் செய்வதாகிய முற்கூறிய அநுமானம் அசங்கதமாம். என்பதான சங்கையுண்டாக இனி வேறு வகை அநுமானத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்வாம்.

### ௬௨௨. வேறுவகை அநுமானத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தி.

" ரூபாதிசதுர்விம்சதிவ்ருத்திசக்யதா கிம்சித்தர்மாவச்சின்னா சக்யதாத்வாத் கடநிஷ்டசக்யதாவத் " (இ-ள்.) உருவ முதலிய இருபத்து நான்கு குணங்களி லிருப்பதாகிய குணபதத்தின் சக்கியத் தன்மை யாதோ அக்குணபதத்தின் சக்கியத்தன்மை ஓர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், சக்கியத்தன்மைவடிவமாவதால், எது வெது சக்கியத் தன்மை யாதோ அதுவது ஓர் தர்மத்தால் அவச்சின்னமேயாகும். நிரவச்சின்னம் ஒன்றும் சக்கியத்தன்மை யாவதின்று. எங்ஙனம் கடத்தி லிருப்பதாகிய கட பதத்தின் சக்கியத்தன்மையாதோ அச்சக்கியத்தன்மை சக்கியத்தன்மை வடிவமாவதால் கடத்தன்மை தர்மத்தால் அவச்சின்னமேயாம். அங்ஙனமே அந்த உருவ முதலிய குணங்களில் இருப்பதாகிய குணபதத்தின் சக்கியத்தன்மையாதோ அதுவும் சக்கியத் தன்மை வடிவ மாவதால் ஓர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமாகும். அத்தகைய குணபதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதக தர்மம் குணத்தன்மை ஜாதியேயாம். ஆகையால் கூறிய இவ்வநுமானத்தால் குணபதத்தின் சக்கியத்தன்மையின் அவச்சேதகவடிவமாக அக்குணத்தன்மை ஜாதியின் சித்தி சம்பவிக்கின்றது.

சங்கை :—குணபதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் குணத்வ ஜாதியின் சித்தியைச் செய்யின் ஆகாசம், காலம், திக்கு என்னும் பதங்களின் சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் முறையாக ஆகாசத்தன்மை, காலத்தன்மை, திக்குத்தன்மை என்னு மிம்மூன்றிற்கும் ஜாதிவடிவம் சித்தமாகவேண்டும். அங்ஙனமே விபு, பூதம், மூர்த்தம் என்னும் பதங்களின் சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் முறையாக விபுத்தன்மை, பூதத்தன்மை, மூர்த்தத்தன்மை என்னு மிம்மூன்றிற்கும் ஜாதி வடிவம் சித்தமாகவேண்டும்.

சமாதானம் :—எங்ஙனம் குணபதத்தின் சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் குணத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாகிறதோ அங்ஙனம் அவ்வாகாச முதலிய பதங்களின் சக்கியத் தன்மையின் அவச்சேதக

வடிவத்தால் ஆகாசத் தன்மை முதலிய ஜாதிகளின் சித்தியுண்டாகிறதில்லை; அங்ஙனமே விபு முதலிய பதங்களினது சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அவ்விபுத்தன்மை முதலிய ஜாதிகளின் சித்தியும் சம்பவியாது. ஏனெனின் இது சாஸ்திரக்காரர்களின் நியமமாம். காரணத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அல்லது காரியத்தன்மையினது அவச்சேதக வடிவத்தால் அல்லது பிரதிபந்தியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அல்லது பிரதிபந்தகத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் அல்லது பத சக்கியத்தன்மையின் அவச்சேதக வடிவத்தால் சித்தமாய தர்மம் யாதோ அத்தர்மத்தின் ஜாதித் தன்மையில் ஜாதியை பாதிக்கும் தோஷம் யாதொன்றும் உண்டாகாததாயின் அத்தர்மம் நியமமாக ஜாதி வடிவமேயாகும். அத்தர்மத்தின் ஜாதித்தன்மையில் யாதாமோர் ஜாதியைபாதிக்கும் தோஷம் உண்டாகுமாயின் அத்தர்மம் ஜாதி வடிவமாவதின்று; ஆனால் உபாதிவடிவமாம். ஆண்டு அவ்வாகாசத்வ முதலிய தர்மங்களின் ஜாதித்தன்மையிலோ ஓர் வியக்தியிலிருக்குந்தன்மை வடிவதோஷம் பாதிப்பதாம். இவ்வார்த்தை முன்னர் ஆகாச நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். அவ்விபுத் தன்மை முதலிய தர்மங்களின் ஜாதித் தன்மையில் சங்கர தோஷம் பாதிப்பதாம். அச்சங்கர தோஷத்தின் ஸ்வரூபம் பின்னர் நான்காவது பரிச்சேதத்தில் சாமான்னிய பதார்த்தத்தின் நிரூபணத்தில் கூறுவாம். ஆகையால் அவ்வாகாச முதலிய பதங்களது சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவத்தால் சித்தமாயினும் அவ்வாகாசத்வ முதலிய தர்மங்கள் ஜாதிவடிவமாக சித்தமாகிறதில்லை. குணத்தன்மை தர்மத்தின் ஜாதித் தன்மையில் யாதாமோர் ஜாதியும் பாதிக்கும் தோஷமுடையதன்றாம். ஆகையால் அக்குணபதத்தின் சக்கியத் தன்மையின் அவச்சேதக வடிவமாகச் சித்தித்த குணத்தன்மை தர்மம் ஜாதி வடிவமாகவே சித்தமாகின்றது. இவ்வாறாக் குணத்தன்மை ஜாதியின் சித்தியுளதாக முற்கூறிய குணத்தன்மை ஜாதியுடைமை வடிவ குணத்தின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது.

### ௬௨௩. உருவமுதலிய இருபத்துநான்கு குணங்களது வேற்றுமையின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய நான்கு லக்ஷணங்களால் லக்ஷித குணபதார்த்தம் யாதாமோ அக்குண பதார்த்தம் உருவம், ரசம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், சினேகம், சப்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், சமஸ்கார மென்னும் வேறுபாட்டால் இருபத்துநான்கு வகைத்தாம்.

### ௬௨௪. உருவத்தன்மை முதலிய இருபத்துநான்கு தர்மங்களில் ஜாதி வடிவத் தன்மையின் சித்தி.

உருவமுதலிய இருபத்துநான்கு குணங்களில் ஒவ்வொரு குணத்தில் முறையாக இருப்பதாகிய உருவத்தன்மை, ரசத்தன்மை, கந்தத்தன்மை, பரிசத்தன்மை, சங்கியைத்தன்மை, பரிமாணத்தன்மை, வேற்றுமைத்

தன்மை, சையோகத்தன்மை, விபாகத்தன்மை, பரத்வத்தன்மை, அபரத்வத் தன்மை, குருத்வத்தன்மை, திரவத்வத்தன்மை, ஸ்னேஹத்தன்மை, சத்தத் தன்மை, புத்தித்தன்மை, சுகத்தன்மை, துக்கத்தன்மை, இச்சைத்தன்மை, துவேஷத்தன்மை, முயற்சித்தன்மை, தர்மத்தன்மை, அதர்மத்தன்மை, சம்ஸ்காரத்தன்மை என்பதான உருவத்தன்மை முதலிய இருபத்துநான்கு தர்மங்கள் ஜாதி வடிவமேயாம்.

## கூஉரு. உருவ குணத்தின் லக்ஷணம்.

இனி அவ்விருபத்துநான்கு குணங்களில் முதலாவது உருவ குணத்தை நிரூபிப்பாம். ஆண்டு " த்வகக்ராஹ்யசக்ஷுர்க்ராஹ்ய குண விபாஜகோபாதிமத்ரூபம் " (இ-ள்.) துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும், சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதுமாம் அத்தகைய குணத்தை பிரிக்கும் உபாதி யாதோ அக்குணத்தை பிரிக்கும் உபாதி எக்குணத்தில் சமவாய சம்பந்தமா யிருக்கின்றதோ அக்குணம் உருவ மெனப்படுகின்றது. ஆண்டு எத்தர்மம் உருவ முதலிய குணங்களைப் பிரிப்பதாகின்றதோ அத்தர்மம் குணத்தைப் பிரிக்கும் உபாதி எனப்படும். இத்தகைய குணங்களைப் பிரிக்கும் உபாதி முற்கூறிய உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய இருபத்து நான்கு ஜாதிகளாம். ஆகையால் கருமை, பசுமை முதலிய எல்லா உருவங்க ளில் இருப்பதாகிய உருவத் தன்மை ஜாதி குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாம். அங்ஙனமே அந்த உருவத் தன்மை ஜாதி துவக்கிந்திரியத் தால் கிரஹிக்கப் படாததுமாம். அதாவது துவக்கிந்திரிய ஞானத்தின் விஷயமன்றாம். அங்ஙனமே அந்த உருவத் தன்மை ஜாதி சக்ஷு இந்திரியத் தால் கிரஹிக்கப்படுவதுமாம். அதாவது சக்ஷு இந்திரிய ஜன்னிய ஞானத் தின் விஷயமுமாம். இத்தகைய துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும், சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதும் குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாம் உருவத் தன்மை ஜாதி சமவாய சம்பந்தமாக கருமை, பசுமை முதலிய எல்லா உருவங்களில் இருக்கின்றது. ஆகையால் கூறிய உருவத்தின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தைப் பிரிக்கும் உபாதியுடை யது உருவம்" என இம்மாத்திரமே உருவத்தின் லக்ஷணமாகக் கூறின் ரச முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெ னின் எங்ஙனம் உருவ முதலிய குணம் உருவத்தன்மை ஜாதி வடிவ குணத் தைப் பிரிக்கும் உபாதியுடையதாமோ அங்ஙனமே ரச முதலிய குணங்களும் ரசத்தன்மை முதலிய ஜாதி வடிவ குணங்களைப்பிரிக்கும் உபாதியுடையனவே யாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சக்ஷுஇந்திரியத்தால் அறியப்படுவதும்" என்னும் பதங் கள் கூறப்பட்டன. ஆண்டு ரசத் தன்மை முதலிய ஜாதிகள் சக்ஷு இந்திரி யத்தால் கிரஹிக்கப்படுவனவன்றாம். ஆனால் ரசன முதலிய இந்திரியங்களால் கிரஹிக்கப்படுவனவாம். ஆகையால் ரசத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு ரச முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண் டாகாது. "சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதும் குணத்தைப்பிரிக்கும்

உபாதியுடையதும் உருவம்'' என இம்மாத்திரமே உருவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "துவக்கினால் அறியப்படாததும்'' என்னும் பதங்கள் கூறுவிடின் சங்கியை முதலிய குணங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் உருவ குணம் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதும், குணக்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமா யித்தகைய உருவத்தன்மை ஜாதியுடையதாமோ அங்ஙனமே சங்கியை முதலிய குணங்களும் சக்ஷுஇந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதும், குணங்களைப்பிரிக்கும் உபாதிவடிவமா யித்தகைய சங்கியாத் தன்மை முதலிய ஜாதிகளை யுடையனவாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "துவக்கினால் கிரஹிக்கப்படாததும்'' என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சங்கியாத்தன்மைமுதலிய ஜாதி துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாதனன்றாம்; ஆனால் துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதேயாம். ஆகையால் அச்சங்கியாத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சங்கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும், குணத்தைப்பிரிக்கும் உபாதியுடையதும் உருவம்'' என இம்மாத்திரமே உருவத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "சக்ஷுவிந்திரியத்தால் அறியப்படுவதும்'' என்னும் பதங்கள் கூறுவிடின் புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவ உருவத்தன்மைஜாதி துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததாமோ அங்ஙனமே குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவ புத்தித் தன்மை, சுகத் தன்மை, துக்கத்தன்மை முதலிய ஜாதிகளும் துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாதனவாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சக்ஷுவிந்திரியத்தால் அறியப்படுவதும்'' என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு புத்தித் தன்மை முதலிய ஜாதிகள் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவனவன்றாம். ஆனால் மன வடிவ இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவனவாம். ஆகையால் புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு புத்திமுதலிய குணங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துவக்கிந்திரியத்தால் அறியப்படாததும், சக்ஷுவிந்திரியத்தால் அறியப்படுவதுமாம் உபாதியுடையது உருவம்'' என இம்மாத்திரமே உருவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தை பிரிப்பதும்'' என்னும் பதங்கள் கூறுவிடின் தீபம், சந்திரன் முதலியவைகளின் பிரகாசத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் தேஜச திரவிய வடிவ பிரகாசத்தில் உத்பூத பரிசமிருப்பதின்று. ஆனால் அநுத்பூத பரிச மிருக்கின்றது. ஆகையால் அந்தப்பிரகாசத்தின் துவாசப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. அந்த பிரகாசத்தில் உத்பூத உருவ மிருக்கின்றது. ஆகையால் அந்த பிரகாசத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமோ யுண்டாகின்றது. இத்தகைய பிரகாசத்தில் இருப்பதாகிய பிரகாசத் தன்மை தர்மம் யாதோ அந்தப் பிரகாசத் தன்மை தர்மமும் பிரகாசத்தினைப் போன்று துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப் படாததும், சக்ஷு இந்திரியத்தால்

கிரஹிக்கப் படுவதுமாம். அத்தகைய பிரகாசத்தன்மை தர்மமுடைய பிரகாசத்தில் உருவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தைப்பிரிப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு பிரகாசத்தன்மை தர்மம் குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்ரும். ஆகையால் பிரகாசத் தன்மை தர்மத்தைக் கொண்டு பிரகாசத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப் படாததும், சக்ஷு விந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதுமாம் குணம் உருவம்" என இம்மாத்திரமே உருவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தை பிரிக்கும் உபாதியுடையது" என்னும் பதங்கள் கூருவிடின் பரமாணுக்களின் உருவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் கட, பட முதலியவைகளின் உருவம் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாமோ அங்ஙனம் பரமாணுக்களின் உருவம் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதன்ரும். ஆனல் அதீந்திரியமாம். ஆகையால் அவ்வவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தைப்பிரிக்கும் உபாதியுடையதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கட, பட முதலியவைகளின் உருவ முதலியவைகளிலிருப்பதாகிய உருவத்தன்மை ஜாதி துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும், சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதும் குணங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். அந்த உருவத்தன்மை ஜாதி பரமாணுக்களின் உருவத்திலுமிருக்கின்றது. ஆகையால் அவ்வதீந்திரிய உருவத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

## ௩௨௩. உருவ குணம் வெண்மை, கருமை முதலிய வேறுபாட்டால் எழுவகையாம் வேற்றுமையின் வர்ணனம்.

இவ்வாருகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித உருவ குணம் யாதோ அந்த உருவ குணம் வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்தாம்.

## ௩௨௭. வெண்மைத் தன்மை முதலிய எழுவகை வேற்றுமையில் ஜாதி வடிவத் தன்மையின் சித்தி.

ஆண்டு அவ்வெண்மை முதலிய எழுவகை உருவங்களில் முறையாக இருப்பதாகிய வெண்மைத் தன்மை, கருமைத் தன்மை, பொன்மைத் தன்மை, செம்மைத்தன்மை, பசுமைத்தன்மை, புகைமைத்தன்மை, சித்திரத் தன்மை என்னும் எழுவகைத்தாய தர்மங்கள் யாவையோ அவ்வெண்மைத் தன்மை முதலிய எழுவகை தர்மங்கள் ஜாதி வடிவமேயாம். ஏனெனின் அவ்வெழுவகைத்தாய உருவங்களிலிருப்பதாகிய உருவத் தன்மை ஜாதி "இது உருவம் இது உருவம்" என்பதான பிரத்தியக்ஷத்தால் எங்ஙனம் சித்தமாமோ அங்ஙனமே அவ்வெண்மைத் தன்மை, கருமைத் தன்மை முதலிய எழுவகை ஜாதிகளும் "இது வெண்மை, இது கருமை" என்பதான இவை முதலிய பிரத்தியக்ஷத்தினுலேயே சித்தமாகின்றன.

### ௩௨௰. வெண்மை, கருமை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவம் ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

ஈண்டு சில கிரந்தகாரரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் பிரமமாண்டத்திலிருக்கும் எல்லாக் கடங்களில் கடத் தன்மை ஜாதி ஒன்றே *அநுகதமாயிருக்கின்றதோ அங்ஙனமே பிரம்மாண்டத்திலிருக்கும் எல்லா வெண்மைத் திரவியங்களிலும் வெண்மை வடிவ வியக்தி ஒன்றே அநுகதமாயிருக்கின்றது. இவ்வாறாக கருமைத் திரவியங்கள் எத்தனையிருக்கின்றனவோ அவ்வெல்லாத் திரவியங்களில் கருமை வடிவ வியக்தி ஒன்றே அநுகதமாயிருக்கின்றது. இவ்வாறாக் பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னும் ஐந்தும் ஒவ்வோர் வியக்தி வடிவமேயாம். எங்ஙனம்: ஓர் கட வியக்தியின் நாசமுள்ளதாகியும் அக்கடத்தன்மை ஜாதி நாசமாவதின்று; ஆனால் அக்கடத் தன்மை ஜாதி வேறு கட வியக்திகளை ஆசிரயித்திருக்கின்றது. ஆகையால் அக்கடத்தன்மை ஜாதி நித்தியமேயாம். அங்ஙனமே ஓர் வெண்மைத் திரவியத்தின் நாசமுண்டாகியும் அவ்வெண்மை வடிவ வியக்தி நாசமாவதின்று. ஆனால் வேறு வெண்மைத் திரவியங்களை ஆசிரயித்திருக்கின்றது. ஆகையால் அவ்வோர் வெண்மை வியக்தி நித்தியமாம். இவ்வாறாக் கருமை, பொன்மை, செம்மை, உருவ முதலிய வியக்திகளும் நித்தியமேயாம். ஆகையால் எங்ஙனம் ஆகாச வடிவம் ஓர் வியக்தியிலிருப்பதாவதால் ஆகாசத் தன்மை தர்மம் ஜாதி வடிவமன்றோ அங்ஙனமே ஒவ்வோர் வியக்தி வடிவ வெண்மை, கருமை முதலியவைகளில் இருப்பதாவதால் வெண்மைத் தன்மை, கருமைத் தன்மை முதலிய தர்மங்களும் ஜாதி வடிவமன்றாம். ஆனால் ஆகாசத்வ தர்மத்தினைப் போன்று உபாதி வடிவமேயாம்.

### ௩௨௧. அவ்வாதிகளின் மத கண்டனம்.

கூறிய இம்மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் எப்பொழுது கருமை உருவமுடைய கட முதலியத் திரவியங்கள் அத்தியந்த அக்கினியின் சையோகத்தால் செம்மை உருவமுடையன வாகின்றனவோ அப்பொழுது அக்கட முதலியவைகளில் உலகவருக்கு இத்தோற்றமுண்டாகின்றது. "நீலோ நஷ்டஃ ரக்தஉத்பந்நஃ" (இ-ள்.) இக்கடத்தினது முன்னுள்ள கருமை உருவம் நஷ்டமாய் இப்போது செம்மை உருவம் உற்பன்னமாயது. என்பதான தோற்றத்தால் அக்கருமை, செம்மை முதலிய உருவங்களின் உற்பத்தி விநாசமே சித்தமாகின்றது. உற்பத்தி விநாசமுடையதாவதால் அக்கருமை, செம்மை முதலிய வியக்திகள் நாநாவாகவே சித்தமாகின்றது. ஓர்கால் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவமெய்யின் ஓர் கருமை உருவத்தின் நாசமுண்டாக உலகத்தில் யாதோர் கருமை உருவமுமிராது. ஆகையால் எத்திரவியத்திலும் கருமை உருவத்தின் தோற்றம் உண்டாகாததாகும். கூறிய அவ்வார்த்தை அநுபவ விருத்தமாம்.

---

* அநுகதம் - இது சர்ப்பம், இது பூமாலை, இது வைக்கோல் என்பதாக இதமாகாரப் பிரதீதி யாவற்றிலும் சமமாய்த் தோற்றுவதைப் போல்வதாம்.

சங்கை:—அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு நாநா வியக்தி வடிவம் ஒப்புவதில் கௌரவதோஷமே பிராப்தமாகின்றது. அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவ மொப்புவதில் அக்கௌரவ தோஷம் பிராப்தமாகாது; ஆனால் லாகவ வடிவ குணமே பிராப்தமாகின்றது. ஆகையால் அந்த லாகவத்தால் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவமே ஒப்ப வேண்டியதாகும். அல்லது "ஸஏவாயம்நீலஃ ஸஏவாயம்ரக்தஃ" (இ-ள்.) அக்கருமையே இக்கருமையாம். அச்செம்மையே இச்செம்மையாம். என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அந்த பிரத்தியபிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத் தோற்றத்தானும் அக்கருமை, செம்மை முதலிய வியக்திகளின் ஒருமைத் தன்மையே சித்தமாகின்றது. "நீலோ நஷ்டஃ" எனக் கூறிய தோற்றமும் கருமை உருவத்தின் நாசத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆனால் கருமை உருவத்திற்கு திரவியத்தில் சமவாய சம்பந்தம் யாதோ அச்சமவாயத்தின் நாசத்தினையே விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே "ரக்த உத்பந்நஃ" என்பதான தோற்றமும் அச்செம்மையின் உற்பத்தியினை விஷயஞ் செய்வதன்று. ஆனால் அந்த செம்மை உருவத்திற்கு திரவியத்தில் சமவாயசம்பந்தம் யாதோ அச்சமவாயத்தின் உற்பத்தியினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் "நீலோ நஷ்டஃ ரக்த உத்பந்நஃ" எனக் கூறிய தோற்றத்தால் கருமை உருவத்திற்கு விநாசமும், செம்மை உருவத்திற்கு உற்பத்தியுமே சித்தமாகாது. ஆனால் அச்சமவாயத்தின் உற்பத்தி விநாசம் சித்தமாகின்றது.

சமாதானம்:—"நீலோ நஷ்டஃ ரக்த உத்பந்நஃ" என்பதான தோற்றத்தில் அக்கருமையின் நாசமும், அச்செம்மையின் உற்பத்தியுமே விளக்கமாகின்றது. அக்கருமை சமவாயத்தின் நாசமும், அச்செம்மை சமவாயத்தின் உற்பத்தியும் விளக்கமாவதின்று. எத்தோற்றத்தில் எவ்விஷயத்தின் விளக்கமுண்டாகின்றதோ அத்தோற்றத்தால் அவ்விஷயத்தின் சித்தியே யுண்டாகின்றது. வேறு விஷயத்தின் சித்தியுண்டாவதின்று. ஓர் கால் வேறு வஸ்துவை விஷயஞ்செய்யும் தோற்றத்தால் வேறுவஸ்துவின் சித்தியுண்டாகுமாயின் இதுகடம் என்பதான கடத்தை விஷயஞ் செய்யும் தோற்றத்தால் படத்தின் சித்தியுமுண்டாக வேண்டும். ஆகையால் "நீலோ நஷ்டஃ ரக்த உத்பந்நஃ" எனக் கூறிய இத்தோற்றத்தால் அக்கருமையின் நாசமும், செம்மையின் உற்பத்தியுமே சித்தமாகின்றது. அத்தோற்றத்தால் கருமை சமவாயத்தின் நாசமும், செம்மை சமவாயத்தின் உற்பத்தியும் சித்தமாவதின்று. அல்லது அவ்வாதியானவன் எந்தலாகவ வலியால் அக்கருமை, செம்மை முதலிய வடிவங்கட்கு ஒவ்வோர் வியக்திவடிவம் ஒப்பினனோ அந்தலாகவமும் "நீலோ நஷ்டஃ ரக்த உத்பந்நஃ" என்பதான பிரத்தியக்ஷத் தோற்றத்தால் பாதிதமேயாம். இவ்விதமாய் பிரத்தியக்ஷத் தோற்றத்தால் பாதிதமாகியும் கருமை முதலியவைகட்கு ஒருமைத் தன்மையினை அவ்வாதி ஓர் கால் கேவல லாகவ மாத்திரத்தால் அங்கீகரிக்கின் அவ்வாதியானவன் லாகவ மாத்திரத்தில் பிரம்மாண்டத்தில் அக்கருமை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவம் எங்ஙனம்

ஒப்புகின்றனரே அங்ஙனமே லாகவ மாத்திரத்தால் கட; பட முதலியனவும் ஒவ்வோர் வியக்தி வடிவமாகவே வொப்பப்பட வேண்டும். எங்ஙனம் "நீலோ நஷ்ட: ரக்த உத்பந்ந:" என்பதான தோற்றம் அவ்வாதியின் மதத்தில் நீல சமவாயத்தின் நாசத்தினையும், செம்மை சமவாயத்தின் உற்பத்தியினையும் விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனம் "கட உத்பந்ந: கடோ நஷ்ட:" என்பதான இவை முதலிய தோற்றங்களும் அக்கட முதலியவைகளின் உற்பத்தி விநாசங்களை விஷயஞ்செய்வதன்று. ஆனால் அக்கட முதலியவைகளின் சமவாயத்தின் உற்பத்தி விநாசங்களையே விஷயஞ் செய்கிறது. பிரம்மாண்டத்தில் கட, பட முதலியவைகட்கு ஒவ்வோர் வியக்தி வடிவத்தன்மை அவ்வாதிக்கும் அங்கீகாரமின்றாம். ஆகையால் லாகவமாத்திரத்தால் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஓர் வியக்தி வடிவத் தன்மைச் சித்தமாவதின்று. அல்லது அவ்வாதியானவன் "ஸ ஏவாயம் நீல: ஸ ஏவாயம் ரக்த:" என்பதான பிரத்தியபிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத்தால் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி வடிவத் தன்மை யொப்பியதும் சம்பவியாது. ஏனெனின் அந்த பிரத்தியக்ஷமோ முன் கருமை உருவத்தின் சஜாதீய கருமை உருவத்தினையே விஷயஞ் செய்கின்றது. எங்ஙனம்: நீவிர் எவ்வௌஷதத்தை புசித்தீரோ அவ்வௌஷதமிதுவாம். என்பதான பிரத்தியக்ஷம் முன்னைய ஔஷதத்தின் சஜாதீய ஔஷதத்தினையே விஷயஞ் செய்கின்றது. நஷ்டமடைந்த ஔஷதத்தினையும், வர்த்தமான ஔஷதத்தின் ஒருமைத் தன்மையினையும் விஷயஞ் செய்வதின்று. அங்ஙனமே "ஸ ஏவாயம் நீல:" என்பதான பிரத்தியக்ஷமும் முன்னைய உருவத்தின் சஜாதீய நில உருவத்தினையே விஷயஞ் செய்கின்றது. முன்னைய கருமை உருவத்தினையும், வர்த்தமான கருமை உருவத்தின் ஒருமைத்தன்மையினையும் விஷயஞ்செய்வதன்று. ஆகையால் அந்த பிரத்தியபிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத்தாலும் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கட்கு ஒவ்வோர் வியக்தி சித்தமாவதின்று. ஆகையால் அவ்வெண்மை, கருமை முதலிய உருவங்களை நாநா வியக்தி வடிவமாகவே ஒப்புவது யோக்கியமாம். அல்லது இது நீலமாம், இது நீலதரமாம், இது நீலதமமாம்; அங்ஙனமே இது ரக்தமாம், இது ரக்ததரமாம், இது ரக்ததமமாம், என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அத்தோற்றத்தாலும் அக்கருமை, செம்மை முதலிய உருவங்கள் நாநா வியக்தி வடிவமாகவே சித்தமாகாது. அத்தகைய நாநா வியக்தி வடிவ வெண்மை, கருமை முதலிய உருவங்களில் இருப்பதாகிய வெண்மைத்தன்மை, கருமைத்தன்மை முதலிய தர்மங்கள் யாவையோ அவ்வெண்மைத்தன்மை, கருமைத்தன்மை முதலிய தர்மங்களில் ஜாதிவடிவத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறுகக்கூறிய சங்கை, சமாதானங்களானேயே பின்னர் ரசத்தன்மை ஜாதியின் வியாப்பிய மதுரத் தன்மை, புளிப்புத்தன்மை முதலிய தர்மங்களிலும்; கந்தத்தன்மை ஜாதியின் வியாப்பிய நறுநாற்றத்தன்மை, தீநாற்றத் தன்மை தர்மங்களிலும்; பரிசத்தன்மை ஜாதியின் வியாப்பிய வெம்மைத்தன்மை, குளிர்ச்சித்தன்மை முதலிய தர்மங்களிலும் ஜாதி வடிவத் தன்மையின் சித்தியை அறிந்துக்கொள்க.

### சூ௩௦. உருவகுணத்தின் ஆசிரயமாகிய திரவிய வர்ணனம்.

கூறிய உருவகுணம் பிருதிவி, ஜலம், தேயு என்னு மூன்றுத் திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆண்டு பிருதிவியிலோ வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம் என்னு மிவ்வெழுவகைத்தாய உருவமுமிருக்கின்றது. ஜலம், தேயுவாமிவ்விரு திரவியங்களிலோ வெண்மை உருவமொன்றே இருக்கின்றது. கருமை முதலிய உருவங்கள் ஜல, தேயுக்களிலிருப்பதன்று. வெண்மை உருவமும் விளக்கமுடையது, விளக்கமில்லாத தென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்; ஆண்டு தேயுவிலோ விளக்கமான வெண்மை உருவமும் ஜலத்திலும், பிருதிவியிலும் விளக்கமில்லா வெண்மை உருவமுமிருக்கின்றது.

### சூ௩க. யமுனை முதலியவைகளின் ஜலத்தில் நீல உருவத்தின் தோற்றத்தால் ஜலத்தில் நீல உருவத்தன்மையின் சங்கை.

சங்கை :—ஜலத்திலும், தேயுவிலும் வெண்மை உருவமொன்றே இருக்குமாயின் யமுனை ஜல முதலியவைகளில் நீல உருவத்தின் தோற்றம் உண்டாவதின்றாக வேண்டும். உலகர் யாவருக்கும் யமுனை நதியின் ஜலத்தில் கருமை உருவமே தோற்றுகின்றது. இவ்வாறாக பிரசித்த அக்கினி வடிவ தேயுவிலும், சுவர்ண வடிவ தேயுவிலும் பொன்மை உருவத்தின் தோற்றம் உண்டாவதின்றாகவேண்டும். உலகர் யாவருக்கும் வன்னியிலும், சுவர்ணத்திலும் பொன்மை உருவமே தோற்றுகின்றது. அங்ஙனமே மரகதமணி வடிவ தேயுவின் கிரணங்களில் செம்மை உருவத்தின் தோற்றம் உண்டாவதின்றாக வேண்டும். உலகர் யாவருக்கும் அக்கிரணங்களில் செம்மை உருவமே பிரதீதியாகின்றது. ஆகையால் பிருதிவியினைப் போன்று ஜல, தேயுக்களிலும் கருமை, பொன்மை முதலிய நாநா உருவத்தையே ஒப்ப வேண்டியதாகும்.

### சூ௩உ. ஜலத்தில் வெண்மை உருவத்தன்மையின் சாதகயுக்தி.

சமாதானம் :—யமுனை ஜலத்தில் நீல உருவம் தோற்றுவது யாதோ அந்த நீல உருவம் அஜ்ஜலத்தினதன்று; ஆனால் அஜ்ஜல சையுக்த நீல உருவமுடைய பிருதிவியினதேயாம். அந்த நீல உருவம் சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அந்த ஜலத்தில் தோற்றுகின்றது. சுவசத்தத்தால் நீல உருவத்தினை கிரஹிக்குக. அந்நீல உருவத்தின் சமவாயி காரணமாகிய பிருதிவி யாதோ அந்த பிருதிவியின் சையோக சம்பந்தம் அந்த ஜலத்திலேயே இருக்கின்றது. இவ்வாறாக பரம்பரைச்சம்பந்தத்தால் அந்த பிருதிவியின் கருமை உருவமே அந்த ஜலத்தில் தோற்றுகின்றது. ஓர்கால் அந்த யமுனைஜலத்தில் சுபாவத்தானேயே நீல உருவமுண்டாகுமாயின் அந்த யமுனையினின்றும் எடுத்து மேல் ஆகாசத்தில் வீசப்பட்ட ஜலத்திலும் அந்த நீல உருவம் தோற்ற வேண்டும். அங்ஙனமே வெண்மையாகிய சுத்த பாத்திரங்களில் வைக்கப்பட்ட அந்த ஜலத்திலும் அந்நீல உருவம் தோற்றவேண்டும். அந்த ஜலத்தில் அந்நீல உருவம் தோற்றுவதின்று. ஆனால் உலகர் யாவருக்கும் அந்த ஜலத்தில் வெண்மை உருவமே தோற்றுகின்றது. கருத்தீதாவாம்; ஆகாசத்தில் வீசப்பட்ட யமுனை

ஜலத்தினேடும், சுத்தபாத்திரத்தில் வைக்கப்பட்ட யமுனா ஜலத்தினேடும் அந்நீல உருவமுடைய பிருதிவியின் சையோகசம்பந்த மிருப்பதின் ருகையால் அந்த ஜலத்தில் அந்நீல் உருவந் தோற்றுவதின்று. ஆனால் இயல்பான வெண்மை உருவமே தோற்றுகின்றது. இவ்வாருக சில ஜல விசேஷத்தில் பொன்மை, செம்மை, பசுமை உருவம் தோற்றுவது யாதோ அதுவும் அவ்விப்பொன்மை, செம்மை, பசுமை உருவமுடைய பிருதிவியின் சம்பந்தத்தால் தோற்றுகின்றது. இயல்பாக அந்தஜலத்தில் வெண்மை உருவமொன்றே இருக்கின்றது. இவ்வாருக வன்னி, சுவர்ணம், மரகதமணி முதலிய தேயுவிலும் இயல்பாக அவ்விளக்கமான வெண்மை உருவமேயிருக்கின்றது. பொன்மை, செம்மை முதலிய உருவமிருப்பதின்று. ஆனால் அந்த வன்னி, சுவர்ண முதலிய தேயுவினேடு சையுக்த பார்த்திவக் கூறு யாதோ அந்த பார்த்திவக் கூறின் பொன்மை முதலிய உருவங்களால் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் விளக்கமான வெண்மை உருவம் மறைவை யடைந்திருக்கின்றது. ஆகையால் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் விளக்கமான வெண்மை உருவந் தோற்றுவதின்று. ஆனால் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் பார்த்திவக் கூறின் பொன்மை முதலிய உருவமே அத்தேயுவில் தோற்றுகின்றது. வன்னி வடிவத்தேயுவில் எத்தகைய பொன்மை உருவந் தோற்றுகின்றதோ அத்தகைப் பொன்மை உருவம் அவ்வன்னி சம்பந்தத்திற்கு முன் காஷ்ட முதலிய பிருதிவியிலின்றும். என்றாலும் அவ்வன்னி வடிவத்தேயுவின் சம்பந்தத்தால் அக்காஷ்ட முதலிய பிருதிவியில் பாகத்தாலாய பொன்மை உருவம் உற்பன்னமாகின்றது. அந்த பொன்மை உருவமே அவ்வன்னி வடிவத்தேயுவில் தோற்றுகின்றது.

௯௩௩. பார்த்திவ பாகத்தின் பொன்மை உருவத்தால் சுவர்ண வடிவத்தேயுவினது வெண்மை உருவந் தோற்றமை.

சங்கை :— ஓர்கால் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் விளக்கமான வெண்மை உருவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தை வொப்புவிடின் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமு முண்டாகாததாகும். ஏனெனின் எச்சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் எத்திரவியத்தின் உருவத்தை விஷயஞ் செய்வதின்றே அச்சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் அத்திரவியத்தையும் விஷயஞ் செய்வதின்று.

சமாதானம் :— எத்திரவியத்தின் எவ்வுருவத்திற்கு ஒன்றால் மறைவு உண்டாவதின்றே அவ்வுருவத்தால் அத்திரவியத்தின் பிரத்தியக்ஷமோ சக்ஷுவாலுண்டாகின்றது. எங்ஙனம் கட, பட முதலியவைகளின் கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு ஒன்றால் மறைவு உண்டாவதின்று. ஆகையால் அக்கட, பட முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் கருமை, பொன்மை முதலிய உருவத்தால் உண்டாகின்றது. எத்திரவியத்தின் உருவத்திற்கு வேறோர் திரவியத்தின் உருவத்தால் மறைவு உண்டாகின்றதோ அம்மறைவை யடைந்த உருவத்தால் அத்திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாவதின்று. ஆனால் அவ்வேறு திரவியத்தின் உருவத்தினேயே சாக்ஷுஷப்பிரத்

திய்கக்ஷமுண்டாகின்றது. எங்ஙனம் பித்ததோஷமுடையபுருஷனுக்கு சங்கின் வெண்மை உருவத்தால் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷமுண்டாவதின்று. ஆனல் தனது நேத்திரத்திலுள்ள பித்த திரவியம் யாதோ அப்பித்த திரவியத்தின் பொன்மை உருவத்தானேயே சங்கின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. அங்ஙனமே வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷமும் பார்த்திவத் திரவியத்தின் பொன்மை முதலிய உருவத்தால் சம்பவிக்கின்றது.

## ௩௩௪. பார்த்திவ உருவத்தால் வெண்மைத் தன்மை முதலிய தர்மத்தின் தோற்றத்தை ஒப்பாதவராகிய வாதிகளின் மதம்.

சில கிரந்தகாரரோ இது கூறுகின்றனர். அப்பார்த்திவக் கூறின் பொன்மை முதலிய உருவத்தால் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவின் வெண்மை உருவத்தின் மறைவு உண்டாவதின்று. ஆனல் அவ்வெண்மை உருவத்தின் வெண்மைத் தன்மை தர்மத்தின் மறைவே யுண்டாகின்றது. ஆகையால் அவ்வன்னி, சுவர்ண முதலிய தேயுவில் விளக்கமான வெண்மை உருவம் ஒன்றே இருக்கின்றது. கருமை, பொன்மை முதலிய உருவமிருப்பதின்றென்பது சித்தமாயிற்று.

## ௩௩௫. சித்திர உருவத்தை வொப்பாதவராகிய வாதிகளின் சங்கை.

சங்கை:—முற்கூறிய ஏழாவது சித்திர உருவம் வெண்மை முதலிய அறுவகைத்தாய உருவத்தினும் வேருக சித்தமாவதின்று. ஏனெனின் சில தந்துக்கள் கருமை உருவ முடையனவும், சில தந்துக்கள் பொன்மை உருவமுடையனவும், சில தந்துக்கள் செம்மை உருவமுடையனவும், சிலதந்துக்கள் வெண்மை உருவமுடையனவுமா மிவ்வாருய வெவ்வேறு உருவமுடைய எல்லா தந்துக்களால் உண்டான படம் யாதோ அப்படத்திலேயே நீவிர் அச்சித்திர உருவத்தை அங்கீகரிக்கின்றீர்; அச்சித்திர உருவத்தில் ஓர் பிரமாணமுமின்றும். ஆகையால் அச்சித்திர உருவம் அங்கீகரிக்க யோக்கியமின்றுமெனக் கூறிய அப்படத்தில் "சித்திரப்படம்" என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அந்த பிரத்தியக்ஷத்தோற்றமே அச்சித்திர உருவத்தில் பிரமாணமாமென நீவிர் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் அத்தோற்றம் அப்பட வடிவ அவயவியின் சித்திர உருவத்தை விஷயஞ் செய்வதன்று. ஆனல் அப்படத்தின் அவயவ வடிவ தந்து யாதோ அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்களையே அத்தோற்றம் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் கூறிய அத்தோற்றத்தால் அச்சித்திர உருவத்தின் சித்தியுண்டாகமாட்டாது. ஆகையால் அந்த உருவ குணம் அறுவிதமாகவே சம்பவிக்கின்றது.

## ௩௩௬. சித்திர உருவத்தினது சாதகயுக்தியின் வர்ணனம்.

சமாதானம்:—அப்படத்தில் சித்திர உருவத்தை அங்கீகரியாவிடின் அப்படத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமே யுண்டாகாததாகும். ஏனெனின் திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ சமாநாதிகரண உத்பூத உருவமே சமவாய சம்பந்தமாக காரணமாகின்றது. இவ்வார்த்தை முன்னர்

இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி நிரூபணத்திலும், வாயு நிரூபணத்திலும் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் அப்படத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு அப்படத்தில் சித்திர உருவத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். ஆண்டு அப்படத்தின் அவயவ வடிவ் தந்துக்களிலுள்ள கருமை, பொன்மை முதலிய வேறு உருவங்கள் யாவையோ அவ்வெல்லா உருவங்கள் கலந்து அப்படத்தில் ஓர் சித்திர உருவத்தை உண்டாக்குகின்றது. அச்சித்திர உருவம் வெண்மை, கருமை முதலிய அறுவகைத் தாய உருவங்களினும் வேறேயாம்.

சங்கை:—அச்சித்திர உருவத்தை வொப்புவது பயனின்மையேயாம். ஏனெனின் அவ்விடத்தில் நீல தந்துக்களின் உருவமோ அப்படத்தில் நீல உருவத்தை உண்டாக்குகின்றது. பொன்மை தந்துக்களின் உருவமோ அப்படத்தில் பொன்மை உருவத்தை உண்டாக்குகின்றது. இவ்வாறே அவ்வத்தந்துக்களின் செம்மை, பசுமை முதலிய உருவமும் அப்படத்தின் செம்மை, பசுமை முதலிய உருவங்களை உண்டாக்குகின்றது. இவ்வாற்றால் அப்படத்தில் கருமை, பொன்மை முதலிய அநேக உருவங்கள் உண்டாவதாகின்றன. அக்கருமை, பொன்மை முதலிய எல்லா உருவங்களின் சமூகத்திலேயே சித்திரபடம் என்பதின் தோற்றம் விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே கூறியவாற்றால் அப்படத்தில் கருமை, பொன்மை முதலிய உருவங்களிருப்புள்தாக அப்படத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும் சம்பவிக்கின்றது. ஆகையால் அப்படத்தில் அச்சித்திர உருவத்தை வொப்புவது பயனின்மையாம்.

சமாதானம்:—அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்கள் அப்படத்தில் எக்கருமை, பொன்மை முதலிய உருவங்களை உண்டாக்குகின்றதோ அது வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய உருவங்களை உண்டாக்குகின்றதா? அல்லது அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய உருவங்களை உண்டாக்குகின்றதா?. ஆண்டு எக்கருமை, பொன்மை முதலிய உருவம் தனது ஆசிரயமாகிய பட முதலிய திரவியத்தின் எல்லா விடங்களில் வியாப்பியமாயிருக்கின்றதோ அக்கருமை, பொன்மை முதலிய உருவங்கள் வியாப்பியமாயிருப்பதெனப் படுகின்றது. எக்கருமை, பொன்மை முதலிய உருவம் தனது ஆசிரயமாகிய பட முதலிய திரவியங்களின் யாதாமோர் இடத்திலிருந்தும், யாதாமோரிடத்திலிராததாமோ அக்கருமை, பொன்மை முதலிய உருவம் அவ்வியாப்பியமாயிருப்பதெனப் படுகின்றது. ஆண்டு முதலாவது வியாப்பியமாயிருப்பதென்னும் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அப்படத்தின் பொன்மையிடத்திலும் அக்கருமை உருவத்தின் தோற்றம் உண்டாகவேண்டும். அங்ஙனமே அப்படத்தின் கருமையிடத்திலும் அப்பொன்மை உருவத்தின் தோற்றம் உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று, ஆகையால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவத்தால் அப்படத்தில் வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய உருவங்களின் உற்பத்தி சம்பவியாது. இரண்டாவது அவ்வியாப்பியமாயிருப்பதென்னும் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்

மவியாது. ஏனெனின் உருவம், ரசம், கந்தம் முதலிய வியாப்பியமாயிருக்கும் குணங்கள் யாவையோ அந்த உருவ முதலிய குணங்கள் யாண்டும் வியாப்பியமா யிருப்பனவேயாகின்றன. ஓரிடத்திலும் அவ்வியாப்பியமாயிருப்பன வாகா. சையோக, விபாக முதலிய அவ்வியாப்பியமா யிருக்கும் குணங்கள் யாவையோ அச்சையோக, விபாக முதலிய குணங்கள் யாண்டும் அவ்வியாப்பியமா யிருப்பனவேயாகின்றன; ஓரிடத்தும் வியாப்பியமாயிருப்பனவாகா. வியாப்பியமா யிருக்கும் குணங்களின் ஸ்வரூபமும், அவ்வியாப்பியமா யிருக்கும் குணங்களின் ஸ்வரூபமும் பின்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் நிரூபிப்பாம். எல்லா விடங்களிலும் வியாப்பியமா யிருப்பதாகிய கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு ஓர் சித்திரப்படத்தில் அவ்வியாப்பியமா யிருப்பதை ஒப்புவது அத்தியந்த விருத்தமாம். ஆகையால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்களால் அப்படத்தில் அவ்வியாப்பியமா யிருக்கும் கருமை, பொன்மை முதலிய நாநா உருவங்களின் உற்பத்தி சம்பவியாது. அல்லது அக்கருமை, பொன்மை முதலிய தந்துக்களால் ஆரம்பிக்கப்பட்ட படத்தில் சித்திர வடிவம் ஒன்றை ஒப்புவதிலும், சித்திர உருவத்திற்கு பிராகபாவம் ஒன்றை ஒப்புவதிலும், சித்திர உருவத்திற்கு பிரத்துவம்சாபாவம் ஒன்றை ஒப்புவதிலும் சித்திரப்படம் என்பதான தோற்றத்திற்கு விஷயத்தன்மை ஓர் சித்திர உருவத்தில் ஒப்புவதில் அத்தியந்த லாகவ மிருக்கின்றது. அப்படத்தில் கருமை, பொன்மை முதலிய அநேக உருவங்களை யொப்புவதிலும், அவ்வநேக உருவங்களின் அநேக பிராகபாவத்தையும், அநேக பிரத்துவம்சா பாவத்தையும் ஒப்புவதிலும் அவ்வநேக உருவங்களில் "சித்திரப்படம்" என்பதான தோற்றத்திற்கு விஷயத் தன்மையை அநேக உருவத்தில் ஒப்புவதிலும் அத்யந்தம் கௌரவ மிருக்கின்றது. ஆகையால் லாகவத்தானும் அப்படத்தில் சித்திர உருவமொன்றையே ஒப்பவேண்டும். இக்காரணத்தானேயே அப்படத்தில் சித்திர உருவம் ஒன்று. என்பதான அநுபவம் உலகவருக்கு உண்டாகின்றது.

சங்கை:—யாண்டு கேவலம் கருமை தந்துக்களால் படத்தின் உற்பத்தியுண்டாகின்றதோ ஆண்டு எங்ஙனம் அத்தந்துக்களின் கருமை உருவம் அப்படத்தில், கருமை உருவத்தை உண்டாக்குகின்றதோ அங்ஙனமே அச்சித்திர படத்திலும் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவம் அப்படத்தில் கருமை, பொன்மை முதலிய உருவங்களை ஏன் உண்டாக்கக்கூடாது.

சமாதானம்:—அச்சித்திரப்படத்தில் பரஸ்பரம் பிரதிபந்திக்கப்பட்டது, பிரதிபந்திப்பது என்னும் பாவத்தால் கருமை, பொன்மை முதலிய உருவங்கள் ஒன்றும் உண்டாவதின்று. ஈண்டு கருத்திதுவாம்; அத்தந்துக்களின் கருமை உருவம் சுவசமவாயிசமவேதத்வ சம்பந்தத்தோடு அப்படத்தில் பிராப்தமாகி எப்பொழுது படத்தில் சமவாய சம்பந்தத்தால் கருமை உருவத்தை உண்டாக்குகின்றதோ அப்பொழுது அத்தந்துக்களின் பொன்மை உருவம் சுவசமவாயி சமவேதத்வ சம்பந்தத்தோடு அப்படத்தில் பிராப்தமாகி

அக்கருமை உருவத்தின் உற்பத்தியை பிரதிபந்திப்பதாகின்றது. அதாவது அக்கருமை உருவத்தை உண்டாக்குவதின்று. இவ்வாறாக அத்தந்துக்களின் பொன்மை உருவமும் கூறிய சம்பந்தத்தோடு அப்படத்தில் பிராப்தமாகி எப்பொழுது அப்படத்தில் சமவாயசம்பந்தத்தால் பொன்மை உருவத்தை உண்டாக்குகின்றதோ அப்பொழுது அத்தந்துக்களின் கருமை உருவமும் கூறிய சம்பந்தத்தோடு படத்தில் பிராப்தமாகி அப்பொன்மை உருவத்தின் உற்பத்தியை பிரதிபந்திப்பதாகின்றது. இவ்வாறாக வெண்மை, செம்மை, பசுமை, புகைமை என்னும் நான்கிற்கும் பரஸ்பரம் பிரதிபத்திய, பிரதிபந்தகபாவத்தை அறிந்துகொள்க. கூறிய சம்பந்தத்தில் சுவசத்தத்தால் கருமை, பொன்மை முதலிய உருவங்களைக் கொள்ளுக. அக்கருமை, பொன்மை முதலிய உருவங்களின் சமவாயிகாரணம் தந்துவாம். அத்தந்துக்களில் அப்படம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அப்படம் அத்தந்துக்களில் சமவேதமெனப்படுகின்றது. இவ்வாற்றால் சுவசமவாயி சமவேதத்வ வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால் அத்தந்துக்களின் கருமை, பொன்மைமுதலிய உருவங்களினிருப்பு அப்படத்தில் சம்பவிக்கின்றது. இவ்வாறாக பரஸ்பரம் பிரதிபத்திய, பிரதிபந்தகபாவத்தால் அப்படத்தில் யாதோர் கருமை, பொன்மை உருவமும் உண்டாவதின்று. அப்படத்தில் ஓர் சித்திர உருவத்தின் உற்பத்தியில் யாதாமோர் பிரதிபந்தகமுமின்றாம். ஆகையால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய எல்லா உருவங்கள் கலப்புற்று அப்படத்தில் சித்திர உருவமொன்றினையே உண்டாக்குகின்றதென்பது பிராசீன நையாயிகர்களின் மதமாம்.

### ௩௬௭. சித்திர உருவத்தினை வொப்பாதவரும் உருவ முதலியவைகட்கு அவ்வியாப்பியமாயிருக்குந் தன்மையை யொப்புவோருமாகிய நவீனர்களின் மத வர்ணனம்.

இனி நவீன நையாயிகர்களின் மதத்தை வர்ணிப்பாம். நவீன நையாயிகர்களோ இதுகூறுகின்றனர். சித்திரபடத்தில் கருமை தந்துக்களின் உருவமோ படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை உருவத்தை உண்டாக்குகின்றது. பொன்மை தந்துக்களின் உருவம் படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் பொன்மை உருவத்தை உண்டாக்குகின்றது. இவ்வாறாக அத்தந்துக்களின் செம்மை முதலிய உருவங்களும் அப்படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் செம்மை முதலிய உருவங்களை உண்டாக்குகின்றன. இவ்வாற்றால் ஒரே படத்தில் உண்டாகிய அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய நாநா உருவங்கள் யாவையோ அந்நாநா உருவங்களின் சமூஹத்தினை சித்திரப் படமென்பதான தோற்றம் விஷயஞ் செய்கின்றது. அக்கருமை, பொன்மை முதலிய உருவங்களினும் வேறாக வோர் சித்திர உருவமின்றாம். அச்சித்திரத்தினை வேறாக வொப்புவதிலும், முற்கூறியவாற்றால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு பரஸ்பரம் பிரதிபத்திய, பிரதிபந்தகபாவம் வொப்புவதிலும் கௌரவதோஷத்தின் பிராப்தமேயுண்டாகின்றது. அல்லது அச்சித்திர உருவ வாதிகளாகிய பிராசீனர்கள் எத்தோஷங்கூறி எவ்வுருவம், ரசம் முதலிய குணங்கட்கு வியாப்பியமாயிருத்தல் உண்டாகுமெனக்

கூறின்ரோ, அந்த உருவம், ரச முதலிய குணங்கள் ஓரிடத்திலும் அவ்வியாப்பியமாயிருப்பதாகாது. ஆனால் யாண்டும் வியாப்பியமாயிருப்பதேயாகின்றது. அதாவது; வியாப்பியமாயிருக்கும் உருவம், ரசமுதலிய குணங்களில் இருப்பதாகிய உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகள் யாவையோ அந்த உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளையுடைய உருவ, ரச முதலிய குணங்கள் யாவையோ அவ்வெல்லாம் வியாப்பியமாயிருப்பதேயாகின்றன. யாண்டும் அவ்வியாப்பியமாயிருப்பதாகா. இது நியமமாம்; அப்படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய உருவங்களையொப்பின் கூறிய அந்நியமத்திற்கு பங்கமுண்டாகுமென்பதான தோஷமும் சம்பவியாது. ஏனெனின் கூறிய நியமத்தில் ஓர் பிரமாணமுமின்றாம். ஆகையால் அப்பிரமாணிக நியமத்தால் கருமை, பொன்மை முதலிய உருவங்களில் அவ்வியாப்பியமாயிருக்குந் தன்மையின் அபாவம் சித்தமாகமாட்டாது. அல்லது வியாப்பியமாயிருக்கும் ஜாதியுடைய குணம் யாண்டும் அவ்வியாப்பியமாயிருப்பதாகா. கூறிய நியமத்திற்கு யாண்டும் பிரமாண வடிவமொப்பின் ஞானம், இச்சை, முயற்சி என்னு மூன்று குணங்கள் எங்ஙனம் ஈசுவரனிடத்து வியாப்பியமாயிருப்பனவாமோ அங்ஙனம் ஜீவாத்மாவிலும் வியாப்பியமாயிருப்பனவாக வேண்டும். ஏனெனின் ஞானத் தன்மை, இச்சைத் தன்மை, முயற்சித் தன்மையாம் ஜாதி, ஈசுவரனது ஞானம், இச்சை, முயற்சியிலிருக்கின்றது. அதே ஞானத்தன்மை, இச்சைத்தன்மை, முயற்சித் தன்மையாம் ஜாதி ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சியிலிருக்கின்றது. ஆகையால் அஜ்ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயர்சியாகிய மூன்று குணங்களும் வியாப்பியமாயிருக்கும் ஜாதியுடைய குணமெனப்படும். ஆகையால் ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சியும் அவ்வீசுவரனது ஞானம், இச்சை, முயற்சியைப்போன்று வியாப்பியமாயிருப்பனவாக வேண்டும். ஜீவாத்மாவினது ஞானம், இச்சை, முயற்சி, வியாப்பியமாயிருப்பதன்று. ஆனால் அவ்வியாப்பியமாயிருப்பதேயாகின்றது. ஆகையால் எங்ஙனம் ஞானம், இச்சை, முயற்சியாம் மூன்று குணங்கள் சில இடத்து வியாப்பியமாகவும், சில இடத்து அவ்வியாப்பியமாகவும் இருப்பதாகின்றதோ அங்ஙனமே உருவ முதலிய குணங்களும் சில ஆசிரயத்திலோ வியாப்பியமாயிருப்பதாகின்றது, சில ஆசிரயத்திலோ அவ்வியாப்பியமாயிருப்பதாகின்றது. அல்லது ஒரே பட முதலிய அவயவியில் அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய நானா உருவங்களின் உற்பத்தி கூறியயுக்தியால் சித்திப்பதுடன் ஸ்மிருதி வசனங்களாலும் சித்தமாம். ஆண்டு சுலோகம் "லோஹிதாயஸ்து வர்ணேந முகே புச்சே ச பாண்டுர: ஶ்வேத: குரவிஷாணாப்யாம் ஸநீலோ வ்ருஷ உச்யதே" (இ-ள்). எப்பசு சரீரத்தின் நிறத்தால் செம்மையாகவும், முகத்திலும், வாலிலும் பாண்டுர நிறமுடையதும், குளம்புகளிலும், கோடுகளிலும் சுவேத நிறமுடையதுமாமோ அப்பசு கரும்பசுவெனப்படுகின்றது. இந்த ஸ்மிருதி வசனத்தால் ஒரே கரும்பசுவினிடத்து முகம், வால் முதலிய அவயவங்களின் வேறுபாட்டால் நானாநிறம் கூறப்படுகின்றன. அதாவது அவ்வியாப்பியமாயிருக்கும் நானா செம்மை முதலிய உருவங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

கூடிய கருமை, பொன்மை முதலிய அநேக உருவமுடைய தந்துக்களால் உண்டாம் படத்திற்கு உருவமில்லாமையை யொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சிலநூலாசிரியரோ இது கூறுகின்றனர். கருமை, பொன்மை முதலிய நாநா உருவமுடைய தந்துக்களால் உண்டான படம்யாதோ அப்படம் உருவமில்லாததே யாகின்றது. அப்படத்தில் ஓர் சித்திர உருவமும் உண்டாவதின்று. அங்ஙனமே அவ்வியாப்பியமா யிருக்கும் கருமை, பொன்மை முதலிய நாநா உருவமும் உண்டாவதின்று. ஏனெனின் அப்படத்தில் சித்திர உருவம் ஒன்றை யொப்பின் முதலாவது வெண்மை முதலிய அறுவகை உருவத்தினும் வேறான ஏழாவது சித்திர உருவம் ஒன்று கற்பிக்கப்படுவதாகின்றது. இரண்டாவது அச்சித்திர உருவத்தின் பிராகபாவத்தை கற்பிக்கநேரும். மூன்றாவது அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு பரஸ்பரம் பிரதியத்திய, பிரதிபந்தக பாவத்தை கற்பிக்கநேரும். நான்காவது அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்களில் அச்சித்திர உருவத்திற்கு காரணத்தன்மையை கற்பிக்கநேரும். இவை முதலிய கற்பனைகௌரவ தோஷமோ அப்படத்தில் சித்திரஉருவத்தினையொப்புவதில் சம்பவிக்கின்றது. ஆகையால் அப்படத்தின் சித்திர உருவத்தை ஒப்புவதும் யோக்கியமன்றாம். படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மைமுதலிய நாநா உருவங்களை ஒப்பின் அவ்வநேக கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு அநேக பிராகபாவத்தைகற்பிக்கநேரும். அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவங்களில் படத்தின் கருமை, பொன்மை முதலிய உருவங்கட்கு காரணத்தன்மையை கற்பிக்கநேரும். இவைமுதலிய கற்பனை கௌரவதோஷத்தின் பிராப்தியே உண்டாகின்றது. ஆகையால் அப்படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் கருமை, பொன்மை முதலிய நாநா உருவத்தை ஒப்புவதும் யோக்கியமன்றாம். அப்படத்திற்கு உருவமின்மையை யொப்பின் முற்கூறிய கற்பனைகௌரவதோஷம் பிராப்தமாகாது. ஆகையால் லாகவமாக அப்படத்திற்கு உருவமின்மையே யொப்ப வேண்டும். அப்படத்தில் சித்திரப்படம் என்பதானதோற்றம் உண்டாவதுயாதோ அத்தோற்றமோ அப்படத்தின் அவயவ வடிவதந்துக்களின் கருமை, பொன்மை, முதலிய நாநா உருவங்களின் சமூகத்தினையே விஷயஞ் செய்கின்றது. அப்படத்தில் ஓர்சித்திரஉருவத்தை அல்லது அவ்வியாப்பியமாயிருக்கும் நாநாஉருவங்களை அத்தோற்றம் விஷயஞ் செய்வதின்று. அல்லது அப்படத்திற்கு உருவமின்மையை ஒப்புவதில் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷத்தின் அபாவவடிவதோஷம் முன்னர் கூறப்பட்டதுயாதோ அத்தோஷமும் இப்பக்ஷத்தில் சம்பவியாது. ஏனெனின் திரவியத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷத்தில் ஓர்கால் உருவத்திற்கு சமவாயசம்பந்தமாக காரணத்தன்மையுண்டாகுமாயின் அப்படத்தின் பிரத்தியக்ஷ மின்மை வடிவ தோஷம் சம்பவிக்கும். ஆனால் அத்திரவியத்தின் சாக்ஷாத்ஷப் பிரத்தியக்ஷத்தில் உருவத்திற்கு சமவாயசம்பந்தமாக காரணத்தன்மையின்றாம். ஆனால் திரவியத்திலிருக்கும் குணம், கர்மம், சாமான்னியமாமிவற்றின் சாக்ஷாத்ஷப்பிரத்தியக்ஷத்தில் உருவத்திற்கு சுவசமவாயி சமவேதத் தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால்

காரணத் தன்மை எங்ஙனம் உண்டாகின்றதோ அங்ஙனம் அத்திரவியத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்திலும் உருவத்திற்கு சுவசமவாயி சமவேதத்தன்மை வடிவ பரம்பரைச் சம்பந்தத்தாலேயே காரணத்தன்மை இருக்கின்றது. ஈண்டு சுவசத்தத்தால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவத்தினைக் கொள்ளுக. உருவத்திற்கு சமவாயிகாரணம் எத்தந்துவாமோ அத்தந்துக்களில் அப்படம் சமவாயசம்பந்தத்தாலிருக்கின்றது. இவ்வாறுய பரம்பரைச் சம்பந்தத்தால் அத்தந்துக்களின் கருமை, பொன்மை முதலிய உருவமே அப்படத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் காரணமாம்.

௩௩௯. அவ்வாதிகளின் மத கண்டனம்.

கூறிய இம்மதம் நலமுடையதன்றும். ஏனெனின் திரவியத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்தில் சமவாயவடிவ சாக்ஷாத் சம்பந்தத்தால் உருவத்திற்கு காரணத்தன்மையின் சம்பவமுளதாக கூறிய பரம்பரைச்சம்பந்தத்தால் உருவத்திற்கு காரணத்தன்மை வொப்புவதில் கௌரவதோஷத்தின் பிராப்தியே யுண்டாகின்றது.

௩௪௦. மென்மை, வன்மை, பரிசமுடைய தந்து முதலிய அவயவங்களாலுண்டான பட முதலிய அவயவிகளிலும் கூறிய சித்திர உருவத்தினைப் போன்று மத வேறுபாட்டால் சித்திர பரிச முதலியுவைகளின் வியவஸ்தை.

இவ்வாறுக மென்மை, வன்மை பரிசமுடைய தந்து முதலிய அவயவங்களால் உண்டான பட முதலிய திரவியங்கள் யாவையோ அப்பட முதலிய திரவியங்களில் பிராசீன நையாயிகர்களோ சித்திர உருவத்தைப் போன்று சித்திரபரிசத்தையும் அங்கீகரிக்கின்றனர். நவீன நையாயிகரோ அப்படத்தில் அவ்வியாப்பியமாயிருக்கும் நாநா உருவங்களைப்போன்று அவ்வியாப்பியமாயிருக்கும் நாநா மென்மை, வன்மை பரிசத்தை வொப்புகின்றனர். சில நூலாசிரியரோ படத்தில் எவ்வாற்றானும் பரிசத்தை ஒப்புவதின்று. அதாவது அப்படத்திற்கு பரிசமின்மையை யொப்புகின்றனர். ஈண்டிது கருத்தாம்; எந்நையாயிகர் திரவியத்தின் துவாச பிரத்தியக்ஷத்தில் சமவாய சம்பந்தத்தால் உத்பூத பரிசத்திற்கு காரணம் ஒப்புகின்றனரோ அந்நையாயிகரோ அப்படத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு அப்படத்தில் சித்திர பரிசம் ஒன்றை யொப்புகின்றனர். அல்லது அவ்வியாப்பியமா யிருக்கும் நாநா மென்மை, வன்மை பரிசங்களை யொப்புகின்றனர். எந்நையாயிகர் திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் சமவாயசம்பந்தமாக உத்பூத பரிசத்திற்கு காரணமொப்புவதின்றே அந்நையாயிகரோ அப்படத்திற்கு பரிசமின்மையே யொப்புகின்றனர்.

௩௪௧. இரசத்திலும், கந்தத்திலும் சித்திர வடிவத் தன்மையின் கண்டனம்.

அல்லது உத்பூத உருவத்திற்கும், உத்பூத பரிசத்திற்கும் திரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் காரணத் தன்மை எங்ஙனம் அங்கீகரிக்கின்றனரோ அங்ஙனம் உத்பூத ரசத்திற்கும், உத்பூத கந்தத்திற்கும் திரவியத்தின் பிரத்தி

யக்ஷத்தில் காரணத் தன்மையை நூலாசிரியர் ஒருவரும் அங்கீகரிப்பதின்று. ஆகையால் மதுரம், புளிப்பு ,உவர்ப்பு, கார்ப்பு இவை முதலிய நாநா ரசமுண்டிய அவயவங்களால் உண்டாகிய சூர்ண முதலிய அவயவிகள் யாவையோ அவ்வவயவிகள் எல்லா நூலாசிரியரின் மதத்தில் ரசமில்லாதனவேயாகின்றன. அவ்வவயவிகளில் ஓர் சித்திர ரசத்தினை அல்லது அவ்வியாப்பியமாயிருக்கும் நாநா ரசங்களை நூலாசிரியர் ஒருவரும் அங்கீகரிப்பதின்று. அச்சூர்ண முதலிய அவயவிகளில் எவ்விசித்திர ரசம் தோற்றுகின்றதோ அந்தரசம் அவ்வவயவங்களினதாகவே தோற்றுகின்றது. இவ்வாறாக நறுநாற்ற, தீநாற்றமுடைய கபாலங்களால் உண்டாகிய கடம் யாதோ அக்கடத்திற்கும் நூலாசிரியர் யாவரும் கந்தமின்மையே யொப்பி யிருக்கின்றனர். அக்கடத்தில் ஓர் சித்திர கந்தத்தினையும், அவ்வியாப்பியமாயிருக்கும் நறுநாற்ற, தீநாற்ற கந்தத்தினையும் நூலாசிரியர் ஒருவரும் ஒப்பினாரில்லை. அக்கடத்தில் எந்நாற்றத்தின் தோற்றமுண்டாகின்றதோ அது அக்கபால வடிவ அவயவங்களின் நாற்றமாகவே தோற்றுகின்றது. இவ்வெல்லா வார்த்தையும் முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி திரவியத்தின் நிரூபணத்தில் விரிவாய்க்கூறி வந்துள்ளோம்.

### ௩௪௨. இருவித உருவகுணத்தின் வர்ணனம்.

ஆண்டு முற்கூறிய உருவகுணம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு ஜலத்தின் பரமாணுக்களிலும், தேயுவின் பரமாணுக்களிலுமோ உருவம் நித்தியமாம். அவ்விரு வித பரமாணுக்களினும் வேறான யாவும் அநித்தியமாகின்றது. அதாவது துவியணுக முதலிய ஜன்னிய ஜலத்திலும், துவியணுகாதி வடிவ ஜன்னிய தேயுவிலும், பரமாணு துவியணுகாதி வடிவ எல்லாப்பிருதிவியிலும் உருவம் அநித்தியமேயாகின்றது. ஆண்டு பிருதிவியின் பரமாணுக்களில் வன்னி முதலிய தேயுவின் சையோகத்தால் முன்னுள்ள உருவம், ரசம், கந்தம், பரிசம் என்னும் நான்கின் நிவர்த்திமூலமாக வேறு உருவம், ரசம், கந்தம், பரிசமா மிந்நான்கின் உற்பத்தியுண்டாகின்றது. இவ்வார்த்தை பின்னர் தெளிவாகக் கூறுவாம். ஆகையால் பிருதிவியின் பரமாணுக்களிலும் உருவ முதலியன அநித்தியமேயாகின்றன.

### ௩௪௩. உத்பூத, அநுத்பூத வேறுபாட்டால் மீண்டும் உருவ குணத்தின் இருவித வேற்றுமை.

கூறிய உருவ குணம் உத்பூதம், அநுத்பூதம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு கட, பட முதலிய திரவியங்களிலோ உத்பூத உருவ மிருக்கின்றது. தான்னியத்தை வறுக்கும் கபாலத்திலுள்ள வன்னியிலும், காய்ந்த நீரிலுள்ள வன்னியிலும், கோடைகாலத்தின் வெம்மைத்தன்மையிலும், சக்ஷு முதலிய இந்திரியங்களிலும் அநுத்பூத உருவ மிருக்கின்றது. உத்பூத உருவமே திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திலும், திரவியத்திலுள்ள குணம், கர்மம், சாமான்னியமா மிம்மூன்றின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்திலும் காரணமாகின்றது. ஆண்டு திரவியத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்திலோ உத்பூத உருவம் சமவாய சம்பந்தமாக் காரணமாகின்றது. திரவி

யத்திலிருக்கும் குணம், கர்மம், சாமான்னியமா மூன்றின் சாக்ஷாஷப்பிரத்தியக்ஷத்திலோ உத்பூத உருவம் சுவசமவாயி சமவேதத் தன்மை வடிவ பரம்பரைச்சம்பந்தத்தால் காரணமாகின்றது. ஈண்டு சுவசத்தத்தால் உருவத்தினைக் கொள்ளுக. உருவத்தின் சமவாயிகாரணம் எத்திரவியமாமோ அத்திரவியத்தில் குணம்,கர்மம், சாமான்னியமாமிவை சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றன. இவ்வாறாய பரம்பரைச் சம்பந்தத்தால் கட முதலிய திரவியங்களின் உத்பூத உருவமே அக்கட முதலிய திரவியத்திலிருக்கும் குணம், கர்மம், சாமான்னியமா மிவற்றின் சாக்ஷாஷப் பிரத்தியக்ஷத்தில் காரணமாகின்றது. உருவ நிரூபணம் முற்றுப்பெற்றது.

## ௬௪௪. இரச குணத்தின் லக்ஷணம்.

இரசநிரூபணம், ஆண்டு "ரஸநேந்த்ரியக்ராஹ்யவ்ருத்தி குணத்வவ்யாப்ய ஜாதிமாந் ரஸ:" (இ-ள்.) இரசன இந்திரியத்தால் அறியப்படும் வஸ்துவில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதி யாதோ, அஜ்ஜாதியுடையகுணம் ரசமெனப் படுகின்றது. ஆண்டு ரசன இந்திரியத்தால் மதுர முதலிய ரசத்தினது பிரத்தியக்ஷஞானமே யுண்டாகின்றது. உருவ முதலியவைகளின் பிரத்தியக்ஷஞானம் உண்டாவதின்று. ஆகையால் ரசம் ரசன இந்திரியத்தால் அறியப்படுவதெனப்படுகின்றது. இத்தகைய ரசன இந்திரியத்தால் அறியப்படும் ரசத்தில் ரசத்தன்மை ஜாதி சமவாயசம்பந்தத்தாலிருக்கின்றது. அந்த ரசத்தன்மைஜாதி குணத்தன்மைஜாதியின் வியாப்பியமுமாம். அதாவது உருவ முதலிய இருப்பத்துநான்கு குணங்களில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியினும் ரசத்தன்மை ஜாதி குறைந்தவிடத்திலிருப்பதாம். இத்தகைய ரசத்தன்மைஜாதி மதுர முதலிய எல்லா ரசங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் கூறிய ரசத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மை வியாப்பியஜாதியுடையது ரசம்" என இம்மாத்திரமே ரசத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ரசனேந்திரியத்தால் அறியப்படுவதிலிருப்பது" என்னும்பதங்கள்கூறாவிடின் உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய ரசத்தன்மை ஜாதியுடையது ரசமாமோ, அங்ஙனம் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளை யுடையன உருவ முதலிய குணங்களுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குவான் கருதி அந்தலக்ஷணத்தில் "ரசனேந்திரியத்தால் அறியப்படுவதிலிருப்பது" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் ரசன இந்திரியத்தால் அறியப்படும் வஸ்துவி லிருப்பன வன்றாம் ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் ரசத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ரசனேந்திரியத்தால் அறியப்படுவதிலிருக்கும் ஜாதியுடையது குணம்" என இம்மாத்திரமே ரசத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியம்" என்னும்பதங்கள் கூறாவிடின் குணத்தன்மைஜாதியைக் கொண்டு உருவ முதலிய குணங்கள் யாவற்றினும், சத்தாஜாதியைக் கொண்டு

திரவியம், குணம், கர்மங்களிலும் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் ரசத்தன்மை ஜாதி ரசனேந்திரியத்தால் அறியப்படும் ரசத்திலிருக்கின்றதோ அங்ஙனமே குணத்தன்மை ஜாதியும், சத்தாஜாதியும் ரசத்திலிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப் பான் கருதி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியம்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை ஜாதியும், சத்தாஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத்தன்மை ஜாதியைக்கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது, ரசனேந்திரியத்தால் அறியப்படுவது ரசம் என இம் மாத்திரமே ரசத்தின் லக்ஷணமாகக்கூறின் ரசத்தன்மை ஜாதியிலும், ரசத்தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் ரசம் ரசனேந்திரியத்தால் அறியப்படுவதாமோ அங்ஙனமே ரசத் தன்மை ஜாதியும், ரசத்தின் அபாவமும் ரசன இந்திரியத்தினலேயே அறி யப்படுவதாம். அந்த லக்ஷணத்தில் குண பதத்தினைக் கூறுவதால், அதாவது "ரசனேந்திரியத்தால் அறியப்படும் குணம் ரசம்" என்பதான லக்ஷணங் கூறுவதால் ரசத்தன்மை ஜாதியிலும், ரசத்தின் அபாவத்திலும் குணத்தன் மையின் அபாவத்தால் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. என்றாலும் பிருதிவி ஜலத்தின் பரமாணுக்களிலுள்ள ரசத்தில் அந்த லக்ஷணத் திற்கு அவ்வியாப்தியே யுண்டாகிறது. எக்காரணத்தாலெனின் அப்பரமா ணுக்களின் ரசம் அதீந்திரியமாவதால் ரசன இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவ தன்றும். ஆகையால் அவ்வவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட் டே முன்னர் ரசத்தன்மை ஜாதியுள்ள ரசத்தின் லக்ஷணங் கூறப்பட்டது. ரசன இந்திரியத்தாலறியப்படுவதிலிருப்பதும், குணத்தன்மையின் வியாப்பிய முமாகிய ரசத்தன்மை ஜாதி அவ்வதீந்திரிய ரசத்திலு மிருக்கின்றது. ஆகை யால் அவ்வதீந்திரிய ரசத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டா காது. அந்த ரசத்தன்மை ஜாதி ரசத்தின் அபாவத்திலும், ரசத்தன்மை ஜாதி யிலு மிருப்பதன்று. ஆகையால் ரசத்தின் அபாவத்திலும், ரசத்தன்மை ஜாதியி லும் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியு முண்டாகாது.

### ௬௫௫. மதுரம், புளிப்பு முதலிய வேறுபாட்டால் ரச குணத்தின் அறுவித வேற்றுமை.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித ரச குணம் மதுரம், புளிப்பு, உவர்ப்பு, கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் வேறுபாட்டால் அறுவகைத் தாம்.

### ௬௫௬. இரச குணத்தின் ஆசிரயமாகிய திரவியங்களின் வர்ணனம்.

இரச குணம் பிருதிவி, ஜலம் என்னு மிருத் திரவியங்களிலேயே இருக் கின்றது. தேயு முதலியத் திரவியங்களில் ரச குண மிருப்பதின்று. ஆண்டு பிருதிவியிலோ மதுர முதலிய அறுவகை ரச மிருக்கின்றது. ஜலத்திலோ

மதுர ரசம் ஒன்றே இருக்கின்றது. புளிப்பு முதலிய ரசங்கள் ஜலத்திலிருப் பனவன்று. பிருதிவியிலும் வெல்ல முதலியவைகளிலோ மதுர ரச மிருக்கின் றது. புளியம்பழ முதலியவைகளில் புளிப்பு ரச மிருக்கின்றது. உப்பு முத லியவைகளில் உவர்ப்பு ரச மிருக்கின்றது. வேம்பு முதலியவைகளில் கைப்பு ரச மிருக்கின்றது. கடுக்காய் முதலியவைகளில் துவர்ப்பு ரசம் இருக்கின் றது. மிளகாய் முதலியவற்றில் கார்ப்பு ரசம் இருக்கின்றது. இவ்வாறாக பிருதிவியிலோ மதுர முதலிய அறுவகைத்தாய ரசமிருக்கின்றது. ஜலத்திலோ மதுர ரச மொன்றே யிருக்கின்றது.

### ௯௪௭. ஜலத்தில் மதுர ரசத்தை கண்டிப்போராகிய வாதிகளின் சங்கை.

சங்கை:—ஜலத்தில் மதுர ரச மிருக்கிறதென்பதில் பிரமாணம் யாது? ஈண்டு ஜலத்தின் மதுர ரசத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணங் கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின் எங்ஙனம் வெல்ல முதலிய பிருதிவியில் ரசன இந் திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் மதுர முதலிய ரசம் தோற்றுகின் றதோ அங்ஙனம் அந்த ரசன இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணத் தால் அந்த ஜலத்தில் ஓர் ரசமும் தோற்றுவதின்று. தேங்காயின் ஜலத்தில் மதுர ரசம் பிரத்தியக்ஷமாகத் தோற்றமாகின்ற தாகையால் ஜலத்தின் மதுர ரசத்தில் பிரத்தியக்ஷமே பிரமாணமென சில நையாயிகர்கள் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் அத்தேங்காயின் ஜலத்தில் மதுர ரசம் தோற்றமா வது யாதோ அம்மதுர ரசம் ஜலத்திற்கின்றாம். ஆனால் அஜ்ஜலத்தின் ஆசிரய மாகிய அத்தேங்காய் வடிவ பிருதிவியின் மதுர ரசமே அஜ்ஜலத்தில் தோற்று கின்றது. ஓர் கால் அஜ்ஜலத்தில் பிருதிவியின் மதுர ரசத்தின் தோற்றத்தினை அங்கீகரியாவிடின் எலுமிச்சங் கனி முதலியவைகளின் ஜலத்தில் புளிப்பு ரசத்தின் தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. ஆகையால் அஜ் ஜலத்தில் மதுர ரசத்தினைப் போன்று புளிப்பு முதலிய ரசத்தையும் ஒப்ப வேண்டும். அஜ்ஜலத்தில் புளிப்பு முதலிய ரசத்தை நீவிர் அங்கீகரிப்பதின்று. ஆனால் எலுமிச்சங் கனி முதலிய ஜலத்தின் ஆசிரய வடிவ பிருதிவிக்கே புளிப்பு முதலிய ரசங்களின் தோற்றம் நீவிர் அங்கீகரிக்கின்றீர். அதாவது எலுமிச்சங் கனி முதலிய பிருதிவியில் இருப்பதாகிய புளிப்பு முதலிய ரசம் யாதோ அந்த ரசமே ஸ்வசுவாயி சையோக சம்பந்தத்தால் அஜ்ஜலத்தில் தோற்றுகின்றது. ஈண்டு சுவசத்தத்தால் புளிப்பு முதலிய ரசங்களைக் கொள் ளுக. அந்த ரசத்தின் சமவாயிகாரண வடிவம் எலுமிச்சங் கனி முதலிய பிருதி வியாம். அந்த பிருதிவிக்கு அஜ்ஜலத்தினோடு சையோக சம்பந்த மிருக்கின் றது. இவ்வாறாக பரம்பரைச் சம்பந்தத்தால் எலுமிச்சங் கனி முதலிய பிருதிவி யின் புளிப்பு முதலிய ரசமே அஜ்ஜலத்தில் தோற்றுகின்றது. அங்ஙனமே அத்தேங்காயின் ஜலத்திலும், அத்தேங்காய் வடிவ பிருதிவியின் மதுர ரசமே கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் தோற்றுகின்றது. ஆகையால் அஜ் ஜலத்தில் யாதோர் ரசமுமின்றா மென்பது சித்தித்தது.

௲௪௨. ஜலத்தில் மதுர ரசத்தின் சாதக யுக்தி.

சமாதானம்:—அஜ்ஜலத்தில் மதுர ரசமே யிருக்கின்றது. ஆனால் நெல்லிக்கனி முதலியவைகளை புசிக்க அஜ்ஜலத்தின் மதுர ரசத்தின் தோற்ற முண்டாகின்றது. ஆகையால் நெல்லிக்கனி முதலியவைகளை புசிப்பதற்கு முன்னர் அஜ்ஜலத்தின் மதுர ரசத்தின் பிரதீதிபுண்டாவதின்று. புருஷன் எப்பொழுது நெல்லிக்கனி முதலியவைகளை புசித்த பின்னர் அஜ்ஜலத்தினை அருந்துகின்றானோ அப்பொழுது அப்புருஷனுக்கு அஜ்ஜலத்தின் மதுர ரசம் பிரத்தியக்ஷமாகவே சம்பவிக்கின்றது.

சங்கை:—எங்ஙனம் நெல்லிக்கனி முதலியவைகளை புசித்த பின்னர் அருந்தப்பட்ட ஜலத்தில் மதுர ரசம் பிரத்தியக்ஷமாகத் தோற்றமாகின்றதோ அங்ஙனமே மிளகை புசித்த பின்னர் அருந்தப்பட்ட ஜலத்தில் கார்ப்பு ரசமும் பிரத்தியக்ஷமாகத் தோற்றமாகின்றது. ஆகையால் அஜ்ஜலத்தில் மதுர ரசத்தினைப் போன்று கார்ப்பு ரசத்தையும் அங்கீகரிக்க வேண்டும். எங்ஙனம் நெல்லிக்கனி முதலியவைகளைப் புசித்தலால் அஜ்ஜலத்தின் மதுர ரசத்திற்கு வெளியாகுந் தன்மை யிருக்கின்றதோ அங்ஙனமே மிளகை புசித்தலாலும் அஜ்ஜலத்தின் கார்ப்பு ரசத்திற்கு வெளியாகுந் தன்மைச் சம்பவிக்கின்றது.

சமாதானம்:—அஜ்ஜல பானத்திற்கு முன்னர் புசிக்கப்பட்ட நெல்லிக் கனியினது புளிப்பு முதலியவைகளில் எங்ஙனம் மதுர ரசம் தோற்றமாவ தின்றோ அங்ஙனம் அஜ்ஜல பானத்திற்கு முன்னர் புசிக்கப்பட்ட மிளகில் ஒர்கால் கார்ப்பு ரசம் தோற்றமாகாததாயின் நெல்லிக்கனியை புசித்தலைப் போன்று மிளகைபுசித்தலாலும் அஜ்ஜலத்தின் கார்ப்பு ரசத்திற்கு வெளியாகுந் தன்மைச் சம்பவமாம். ஆனால் அஜ்ஜல பானத்திற்கு முன்னரே அம்மிளகில் கார்ப்பு ரசம் பிரத்தியக்ஷமாகத் தோற்றமாகின்றது. ஆகையால் மிளகை புசித்தலால் அஜ்ஜலத்தின் கார்ப்பு ரசத்திற்கு வெளியாகுந் தன்மைச் சம்பவி யாது. ஆனால் மிளகை புசித்த பின்னர் ரசனத்தின் நுனியில் பித்தத்தின் கலக்கமுண்டாகின்றது. அப்பித்த திரவியத்தின் கார்ப்பு ரசமே சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அஜ்ஜலத்தில் தோற்றுகின்றது. இவ்வார்த்தை வயித் தியசாத்திரத்தில் வெளிப்படையாம். இவ்வாறாக எலுமிச்சங்கனி, சமுத்திரம் இவை முதலிய ஜலங்களில் புளிப்பு, உவர்ப்பு முதலிய ரசம் தோற்றமாகின் றது. அப்புளிப்பு, உவர்ப்பு முதலிய ரசமும் ஜலத்தினதன்றாம்; ஜலத்தின் ஆசி ரயமாகிய எலுமிச்சங்கனி முதலிய பிருதிவியின் அப்புளிப்பு முதலிய ரசமே சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் ஜலத்தில் தோற்றுகின்றது. இயல்பாக ஜலத்தில் மதுர ரசம் ஒன்றே இருக்கின்றது.

சங்கை:—பிருதிவி வடிவ எலுமிச்சங்கனியிலுள்ள புளிப்பு ரசம் பரம் பரைச் சம்பந்தத்தால் ஜலத்தில் விளங்குகின்றது. அல்லது ஜலத்திலுள்ள புளிப்பு ரசம் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் எலுமிச்சங்கனியில் விளங்கு கின்றதென்பதான இரு பக்ஷத்தில் யாதாமோர் பக்ஷத்தின் சாதகமாக வோர் யுக்தியுமின்றாம். ஆகையால் ஜலத்தின் புளிப்பு ரசமே எலுமிச்சங்கனி வடிவ பிருதிவியினிடத்து ஏன் விளங்கக் கூடாது?.

சமாதானம்:— மிக்க காய்ந்த ஜலமில்லாத எலுமிச்சங் கனியினிடத்தும் புளிப்பு ரசம் பிரத்தியக்ஷமாகத் தோற்றுகின்றது. ஆகையால் எலுமிச்சங் கனியினிடத்து புளிப்பு ரசத்தை அவசியம் ஒப்பவேண்டியதாகும். எலுமிச்சங்கனியின் புளிப்பு ரசத்தின் தோற்றமே எலுமிச்சங்கனியிலுள்ள ஜலத்தில் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் தோற்றுகின்றது. ஜலத்தில் புளிப்பு ரசத்தையொப்பி புளிப்புரசத்தின் தோற்றத்தைக் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் பிருதிவி வடிவ எலுமிச்சங்கனியினிடத்தில் ஒப்புவது உசிதமன்ரும். ஓர்கால் ஜலத்தின் புளிப்பு ரசத்தின் தோற்றம் எலுமிச்சங்கனியினிடத்து உண்டாகுமாயின் மிக்க காய்ந்த ஜலமில்லாத எலுமிச்சங் கனியினிடத்து புளிப்பு ரசத்தின் தோற்றம் உண்டாகாததாகவேண்டும்.

சங்கை:—எங்ஙனம் எலுமிச்சங்கனி வடிவ பிருதிவியின் புளிப்பு ரசம் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் ஜலத்தில் தோற்றுகிறதாகையால் ஜலத்தில் புளிப்பு ரசம் அங்கீகரிக்கப்படுவ தன்ருமோ அங்ஙனமே நெல்லிக்கனியின் மதுர ரசமே கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் ஜலத்தில் தோற்றுவதாகும். ஆகையால் அஜ்ஜலத்தில் மதுர ரசத்தையும் ஒப்பவேண்டிய தின்ரும்.

சமாதானம்:—நெல்லிக்கனியினிடத்து ஓர்கால் மதுர ரசம் உண்டாகுமாயின் மதுர ரசத்தின் தோற்றம் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் ஜலத்திலுண்டாகும். ஆனல் நெல்லிக் கனியினிடத்து மதுர ரசமின்ரும் புளிப்பு ரசமிருக்கின்றது. ஆகையால் நெல்லிக் கனியினிடத்து மதுர ரசத்தின் தோற்றத்தை ஜலத்தில் கூறுவது அத்தியந்தம் விருத்தமாம்.

சங்கை:—மாங்காயில் முன்னர் புளிப்பு ரச மிருந்து பின்னர் சூரியன் முதலிய தேயுவின் சையோக வடிவ பக்குவத்தால் மதுர ரசம் எங்ஙனம் உண்டாவதாகின்றதோ அங்ஙனமே நெல்லிக்கனியினிடத்தும் முதலில் புளிப்பு ரசமிருந்து பின்னர் வாயின் வெம்மைத்தன்மையும், ஜலமுமாமிரண்டின் சையோகத்தால் நெல்லிக் கனியினிடத்து மதுர ரசம் உண்டாவதாகின்றது. நெல்லிக் கனியின் பாகத்தாலாய மதுர ரசமே ஜலத்தில் கூறிய பரம்பரைச் சம்பந்தத்தால் தோற்றுகின்றது. ஆகையால் ஜலத்தில் மதுர ரசம் சம்பவியாது.

சமாதானம்:—அவயவங்களின் ரசத்தால் உண்டாகாத பிருதிவியின் ரசம் யாதோ அந்த ரசத்தின் உற்பத்தியில் பிருதிவியினேடு வன்னி முதலிய தேயுவின் சையோகமே காரணமாகின்றது. இவ்வாருய காரிய காரண பாவம் பின்னர் யாண்டும் சித்தமேயாம். நெல்லிக்கனியின் மதுர ரசத்தின் உற்பத்தியில் நெல்லிக் கனியினேடு ஜலத்தின் சையோகத்திற்கும் காரணம் அங்கீகரிப்போமாயின் முன்னர் சித்தித்த காரிய காரண பாவத்தினும் வேருன ஓர் காரிய காரண பாவத்தை கற்பிப்பதாகும். அங்ஙனமே நெல்லிக் கனியினிடத்து பாகத்தாலாய மதுர ரசத்தின் சமவாயி காரணத் தன்மையை கற்பிப்பதாகும். அங்ஙனமே மதுர ரசத்தின் பிராகபாவத்தை கற்பிப்பதாகும். அதனல் கௌரவ தோஷத்தின் பிராப்தமே யுண்டாகும்.

சங்கை:—நெல்லிக்கனியினிடத்து ஜலத்தின் சையோகத்தால் மதுர ரசத்தின் உற்பத்தியை ஒப்பின் முற்கூறியவாற்ருல் கற்பனு கௌரவமுண்டாகும்.

ஆனால் அவ்வாறு யாம் ஒப்புவதின்று; ஆனால் நெல்லிக்கனியினிடத்து எங்ஙனம் புளிப்பு ரச மிருக்கின்றதோ அங்ஙனமே மதுர ரச மிருக்கின்றது. ஆனால் அம்மதுர ரசத்தை வெளியாக்குவது ஜலத்தின் சையோகமாம். ஆகையால் ஜலபானத்திற்கு முன்னர் நெல்லிக்கனியின் மதுர ரசம் தோற்றுவதின்று; ஆனால் ஜலபான காலத்திலேயே நெல்லிக்கனியின் மதுர ரசம் தோற்றமாகின்றது. ஆகையால் ஜலத்தில் அம்மதுர ரசம் சம்பவியாது.

சமாதானம்:—கோடைகாலத்தில் பானஞ்செய்யப்பட்ட சுத்தபாத்திரத்திலுள்ள நிர்மல கங்கா ஜலம் யாதோ அக்கங்கா ஜலத்தின் மாதுர்யத் தன்மை சர்வ புத்திமான் புருஷர்கட்கு அநுபவ சித்தமாம். இவ்வாறாய அநுபவத்தால் சித்தித்த ஜலத்தின் மதுர ரசத்தை கற்பித யுக்திகளால் நிஷேதித்தல் கூடாது. ஆகையால் ஜலத்தில் இயல்பாக மதுர ரசமொன்றே யிருக்கிறதென்பது சித்தமாயிற்று.

### ௬௪௯. நித்திய, அநித்திய வேறுபாட்டாலும், உத்பூத, அநுத்பூத வேறுபாட்டாலும் ரச குணத்தின் இருவித வேற்றுமை.

கூறிய ரச குணமும் நித்திய, அநித்திய மென்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு ஜலத்தின் பரமாணுக்களிலோ ரசம் நித்தியமாகின்றது. ஜல பரமாணுவினும் வேறான யாவும் அநித்தியமாகின்றது. அதாவது துவியணுகாதி வடிவ ஜன்னிய ஜலத்திலும், பரமாணு துவியணுகாதி வடிவ எல்லா பிருதிவியினிடத்திலும் ரசம் அநித்தியமேயாகின்றது. அல்லது ரச குணம் உத்பூதம், அநுத்பூதம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். ஆண்டு வெல்லம் முதலியவைகளிலோ உத்பூத ரச மிருக்கின்றது. ரசன இந்திரிய முதலியவைகளில் அநுத்பூத ரச மிருக்கின்றது. ஆண்டு அவ்வுத்பூத ரசத்தின் பிரத்தியக்ஷமே ரசனேந்திரியத்தால் உண்டாகின்றது. அநுத்பூதத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ரச நிரூபணம் முற்றுப் பெற்றது.

### ௬௫௦. கந்தகுண நிரூபணம்.

கந்த குண லக்ஷணம். ஆண்டு "஘்ராணக்ராஹ்யவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமாந் கந்த:" (இ-ள்.) கிராண இந்திரியத்தால் அறியப்படுவதில் இருப்பதாகிய குணத்வ ஜாதியின் வியாப்பிய ஜாதி யாதோ அஜ் ஜாதியுடைய குணம் கந்தமெனப்படுகின்றது. ஆண்டு கிராண இந்திரியத்தால் நறுநாற்றம், தீநாற்றம் என்பதாக உண்டாகும் பிரத்தியக்ஷ ஞானம் யாதோ அந்த ஞானத்தின் விஷயம் நறுநாற்ற, தீநாற்றங்களாம். ஆகையால் அக் கந்த குணம் கிராண இந்திரியத்தால் அறியப்படுவதெனப்படுகின்றது. இவ்வாறாய கிராண இந்திரியத்தால் அறியப்படும் கந்தத்தில் இருப்பதாகிய கந்தத்தன்மை ஜாதி யாதோ அக்கந்தத் தன்மை ஜாதி குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய கந்தத் தன்மை ஜாதியானது எல்லாக் கந்தங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் கூறிய இக்கந்தத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத் தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது கந்தம்" என இம்மாத்திரமே

அக்கந்தத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "கிராண இந்திரியத்தா லறியப்படுவதி லிருப்பது" என்னும் பதங்கள் கூருவிடின் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அக்கந்தத் தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமாமோ அங்ஙனமே உருவத்தன்மை முதலிய ஜாதிகளும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "கிராண இந்திரியத்தா லறியப்படுவதி லிருப்பது" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் கிராண இந்திரியத்தால் அறியப்படும் கந்த குணத்தில் இருப்பனவன்று. ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "கிராண இந்திரியத்தாலறியப்படுவதி லிருக்கும் ஜாதியுடையது கந்தம்" என இம்மாத்திரமே அக்கந்தத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியம்" என்னும் பதங்கள் கூருவிடின் கிராண இந்திரியத்தால் அறியப்படும் கந்த குணத்தி லிருக்கும் சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கர்மமா மூன்றிலும், குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியம்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சத்தா ஜாதியும், குணத்தன்மை ஜாதியும் குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் அச்சத்தா ஜாதியைக் கொண்டும், குணத் தன்மை ஜாதியைக் கொண்டும் திரவிய முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "கிராண இந்திரியத்தால் அறியப்படுவது கந்தம்" என இம்மாத்திரமே அக்கந்தத்தின் லக்ஷணமாகக் கூறின் கந்தத் தன்மை ஜாதியிலும், கந்தத்தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அக்கந்த குணம் கிராண இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாமோ அங்ஙனமே அக்கந்தத்தன்மை ஜாதியும், கந்தத்தின் அபாவமும் கிராண இந்திரியத்தால் அறியப்படுவதாம். அந்த லக்ஷணத்தில் குண மென்னும் பதத்தைக் கூறுவதால் அதாவது "கிராண இந்திரியத்தால் அறியப்படும்குணம் கந்தம்" என்பதான குண பதம் பொருந்திய லக்ஷணத்தைக் கூறுவதால் அக்கந்தத் தன்மை ஜாதியிலும், கந்தத்தின் அபாவத்திலும் குணத்தன்மையின் அபாவத்தால் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. என்றும் பார்த்திவ பரமாணுக்களின் கந்தத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். எக்காரணத்தாலெனின் பரமாணுக்களின் கந்தம் அதீந்திரிய மாவதால் கிராண இந்திரியத்தால் அறியப்படுவதன்றும். ஆகையால் அவ்வவ்வியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டே முற்கூறிய கந்தத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணங் கூறப்பட்டது. கந்தத்தன்மை ஜாதி அதீந்திரிய கந்தத்திலு மிருக்கின்றது. ஆகையால் அவ்வதீந்திரிய கந்தத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாகாது.

அக்கந்தத் தன்மை ஜாதியிலும், கந்தத்தின் அபாவத்திலும் கந்தத்தன்மை ஜாதி இருப்பதில்லை. ஆகையால் கந்தத்தன்மை ஜாதியிலும், கந்தத்தின் அபாவத்திலுங் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியும் உண்டாகாது.

ரூருக. கந்த குணத்தின் ஆசிரயமாகிய திரவியத்தின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித கந்த குணம் பிருதிவி மாத்திரத்திலேயே இருக்கின்றது. பிருதிவியினும் வேறான ஜல முதலிய திரவியங்களில் கந்தகுண மிருப்பதின்று. இக்காரணத்தானேயே இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி திரவியத்திற்கு கந்தகுணமுடைமை வடிவ லக்ஷணங் கூறப்பட்டது.

ரூருஉ. நறுநாற்ற, தீநாற்ற வேறுபாட்டால் கந்த குணத்தின் இருவித வேற்றுமை.

கூறிய கந்த குணம் நறுநாற்றம், தீநாற்றமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு எக்கந்தத்தின் சாக்ஷாத்காரம் உலகவரின் சுகத்திற்கு ஏதுவாகிறதோ அக்கந்தம் நறுநாற்றமென்ப்படும். எங்ஙனம் கஸ்தூரி, புனுகு முதலியவைகளைப் போலாம். எக்கந்தத்தின் சாக்ஷாத்காரம் உலகவரின்துக்கத்திற்கு ஏதுவாகின்றதோ அக்கந்தம் தீநாற்றமெனப்படுகின்றது. எங்ஙனம் புகை முதலியவைகளின் நாற்றம் போலாம்.

ரூருங. ஜலத்திலும், வாயுவிலும் கந்த குணமுடைய பிருதிவியின் சம்பந்தத்தால் கந்தத்தின் தோற்றம்.

சில ஜலத்திலும், சில வாயுவிலும் நறுநாற்றமுடைமையும், தீநாற்றமுடைமையும் தோற்றுகின்றது. என்றாலும் நறுநாற்ற, தீநாற்றமுடைமை அஜ்ஜலத்திலும், வாயுவிலு மின்றாம்; ஆனால் அஜ்ஜல விசேஷத்திலும், அவ்வாயு விசேஷத்திலும் சம்பந்தப்பட்ட பிருதிவியின் சூக்ஷ்ம அவயவங்கள் யாவையோ அந்தபிருதிவியின்அவயவங்களது நறுநாற்ற,தீநாற்றமுடைமையே சுவசமவாயி சையோக சம்பந்தத்தால் அஜ்ஜலத்திலும், அவ்வாயுவிலும் தோற்றுகின்றது. இவ்வார்த்தை முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி நிரூபணத்தில் விரிவாய்க்கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும்அறிந்துக்கொள்க. கல் முதலிய பிருதிவியில் கந்த குணம் தோற்றுவதின்று; என்றாலும் அக்கல் முதலியவைகளின் பஸ்மத்தில் கந்த குணம் பிரத்தியக்ஷமாகத் தோற்றுகின்றது. ஆகையால் கல் முதலிய பிருதிவியிலும் கந்த குணத்தை அவசியம் ஒப்ப வேண்டும். இவ்வார்த்தையும் முன்னர் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் கந்த குணம் கேவலம் பிருதிவி மாத்திரத்திலேயே இருக்கின்றது. ஜல முதலிய திரவியங்களில் இருப்பதன்று.

ரூருச. உத்பூத, அநுத்பூத வேறுபாட்டால் மீண்டும் கந்தகுணத்தின் இருவித வேற்றுமை.

முற்கூறிய கந்த குணம் உத்பூதம், அநுத்பூதம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு கஸ்தூரி, புனுகு முதலிய பிருதிவியிலோ உத்பூத கந்த மிருக்கின்றது. கிராண இந்திரிய முதலிய பிருதிவியில்

அநுத்பூத கந்த மிருக்கின்றது. ஆண்டு உத்பூத கந்தத்தின் பிரத்தியக்ஷமே கிராண இந்திரியத்தா லுண்டாகின்றது. அநுத்பூத கந்தத்தின் பிரத்தியக்ஷம் கிராண இந்திரியத்தா லுண்டாகிறதில்லை. முற்கூறிய பலவகை கந்தங்களும் அநித்தியமேயாம். ஓர் கந்தமும் நித்தியமாவதின்று. கந்தகுண நிரூபணம் முற்றிற்று.

## ௯௫. பரிச குணத்தின் லக்ஷணம்.

ஆண்டு "வக்ஷுரா ஹ்யாஹ்யத்வக்ராஹ்யவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத் ஸ்பர்ஸ:" (இ-ள்.) சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும், துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதுமாம் வஸ்துவில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் பரிசமெனப்படுகின்றது. ஆண்டு சக்ஷு இந்திரியத்தால் பரிசத்தின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஆனால் துவக்கிந்திரியத்தினலேயே பரிசத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. ஆகையால் பரிச குணம் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப் படாததும், துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப் படுவதுமா மித்தகைய பரிசத்தி லிருப்பதாகிய பரிசத்தன்மை ஜாதி யாதோ அப்பரிசத் தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமெனப் படுகின்றது. இத்தகைய பரிசத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் குளிர்ச்சி, வெம்மை முதலிய எல்லாப் பரிசங்களி லிருக்கின்றது. ஆகையால் கூறிய பரிசத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது பரிசம்" என இம்மாத்திரமே பரிசத்தின் லக்ஷணமாகக் கூறின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய சர்வ குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகள் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமாயினும் துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படும் பரிச குணத்தி லிருப்பனவன்று. ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதிலிருப்பதும் குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையதும் பரிசம்" என இம்மாத்திரமே பரிசத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சக்ஷுவிந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும்" என்னும்பதங்கள்கூறுவிடின் சக்ஷு, துவக்கு என்னும் இரு இந்திரியங்களால் கிரஹிக்கப்படும் சங்கியை முதலிய குணங்கள் யாவையோ அச்சங்கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அப்பரிசகுணம் துவக்கிந்திரியத்தால் எங்ஙனம் கிரஹிக்கப்படுவதாமோ அங்ஙனமே சங்கியை முதலிய குணங்களும் அத்துவக் கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாம். அத்தகைய சங்கியை முதலிய குணங்களில் இருப்பதாகிய சங்கியைத் தன்மை முதலிய ஜாதிகள் யாவையோ அச்சங்கியைத்தன்மை முதலிய ஜாதிகள் அக்குணத்தன்மை ஜாதியின் வியாப்

பியமுமாம். இத்தகைய சங்கியைத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு அச் சங்கியை முதலியகுணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படாததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அச்சங்கியை முதலிய குணங்கள் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படாததன்றும். ஆனால் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாம். ஆகையால் அச்சங்கியைத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு அச்சங்கியை முதலிய குணங்களில் கூறிய லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சக்ஷு விந்திரியத்தால் கிரஹிக்கப் படாததி லிருக்கும் குணத் தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது பரிசம்" என இம்மாத்திரமே பரிசத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதிலிருப்பதும்" என்னும் பதங்கள்கூறுவிடின் சத்தகுணத்திலும், புத்திமுதலிய குணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் பரிச குணம் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படாததாமோ அங்ஙனமே அச்சத்த குணமும், புத்தி முதலிய குணங்களும் சக்ஷு இந்திரியத்தால் கிரஹிக்கப்படாததாம். இத்தகைய சக்ஷுஇந்திரியத்தால் கிரஹிக்கப்படாத சத்த முதலிய குணங்களில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம் சத்தத் தன்மை, புத்தித் தன்மை முதலிய ஜாதிகள் யாவையோ அச்சத்தத் தன்மை, புத்தித் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சத்தம், புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திப்பான் கருதி அந்த லக்ஷணத்தில் "துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சத்தம், புத்தி முதலிய குணங்கள் துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதன்றும்; ஆனால் சத்த குணமோ கேவலம் சுரோத்திர இந்திரியமொன்றினால் கிரஹிக்கப்படுவதாம். புத்தி முதலிய குணங்கள் கேவலம் மன வடிவ இந்திரியமொன்றினால் கிரஹிக்கப்படுவனவாம். ஆகையால் சத்தம், புத்திமுதலிய குணங்களில் இருப்பதாகிய சத்தத்தன்மை, புத்தித்தன்மைமுதலிய ஜாதிகளைக் கொண்டு சத்தம், புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துவக்கிந்திரிய மாத்திரத்தால் கிரஹிக்கப்படுவது பரிசம்" என இம்மாத்திரமே பரிசத்தின் லக்ஷணமாகக் கூறின் சங்கியை முதலிய குணங்களிலும், புத்தி முதலிய குணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. என்றாலும் பரிசத்தன்மை ஜாதியிலும், பரிசத்தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியேயுண்டாகின்றது. ஏனெனின் எங்ஙனம் பரிச குணம் துவக்கிந்திரிய மாத்திரத்தால் கிரஹிக்கப்படுவதாமோ அங்ஙனமே பரிசத்திலிருக்கும் பரிசத்தன்மை ஜாதியும், பரிசத்தின் அபாவமும் துவக்கிந்திரிய மாத்திரத்தாலேயே கிரஹிக்கப்படுவனவாம். அந்த லக்ஷணத்தில் குண பதத்தைக் கூறுவதால் அதாவது "துவக்கிந்திரிய மாத்திரத்தால் கிரஹிக்கப்படும் குணம் பரிசம்" என்பதான குணபதம் பொருந்திய லக்ஷணத்தைக் கூறுவதால் அப்பரிசத்தன்மை ஜாதியிலும், பரிசத்தின் அபாவத்திலும் குணத்தன்மையின் அபாவத்தால் அந்த லக்ஷ

ணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது; என்றாலும் பரமாணுக்களின் பரிசத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்றது. எக்காரணத்தாலென்னின் அப்பரமாணுக்களின் பரிசம் அதீந்திரியமாவதால் துவக்கிந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதன்றாம். ஆகையால் அவ்வவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டே முற்கூறிய பரிசத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணங் கூறப்பட்டது. கூறிய பரிசத்தன்மை ஜாதி அதீந்திரிய பரிசத்திலு மிருக்கின்றது. ஆகையால் அவ்வதீந்திரிய பரிசத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அப்பரிசத்தன்மை ஜாதியிலும், பரிசத்தின் அபாவத்திலும் பரிசத்தன்மை ஜாதி இருப்பதன்று. ஆகையால் அப்பரிசத்தன்மை ஜாதியிலும், பரிசத்தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியும் உண்டாகாது.

கூருகூ. குளிர்ச்சி, வெம்மை, வெம்மையும் குளிர்ச்சியுமில்லது என்னும் வேறுபாட்டால் பரிச குணத்தின் மூவகை வேற்றுமை.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித பரிச குணம் குளிர்ச்சி, வெம்மை, வெம்மையும் குளிர்ச்சியுமில்லது என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

கூருஎ. பரிச குணத்தின் ஆசிரயமாகிய திரவிய வர்ணனம்.

பரிச குணம் பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்கு திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகாச முதலிய திரவியங்களில் பரிச குணம் இருப்பதன்று. அந்நான்கு திரவியங்களிலும் ஜலத்திலோ கேவலம் குளிர்ந்த பரிசமேயிருக்கின்றது. தேயுவிலோ வெம்மைப் பரிசமே இருக்கின்றது. பிருதிவியிலும், வாயுவிலும் கேவலம் வெம்மையும் குளிர்ச்சியுமில்லாப் பரிசமே இருக்கின்றது. சில பர்வத முதலியவைகளின் ஜல விசேஷத்தில் வெம்மைப் பரிசம் தோற்றுகின்றது. அங்ஙனமே சந்திரன் முதலிய தேயு விசேஷத்திலும், சந்தன முதலிய பிருதிவி விசேஷத்திலும் குளிர்ந்த பரிசம் தோற்றுகின்றது. அங்ஙனமே சில பிருதிவி விசேஷத்தில் வெம்மைப் பரிசமும், சில வாயு விசேஷத்தில் குளிர்ந்த பரிசமும், சில வாயு விசேஷத்தில் வெம்மைப் பரிசமும் தோற்றுகின்றது. ஆகையால் ஜலத்தில் கேவலம் குளிர்ந்த பரிசமே இருக்கின்றது. தேயுவில் வெம்மைப் பரிசமே யிருக்கின்றது. பிருதிவி, வாயுவில் குளிர்ச்சியும், வெம்மையு மிலா பரிச மிருக்கின்றதெனமுற்கூறிய விவஸ்தை சம்பவியாது. என்றாலும் அஜ்ஜலவிசேஷத்தில் வெம்மைப்பரிசம் வன்னி முதலிய தேயுவின் சம்பந்தத்தினாலேயே தோற்றுகின்றது. சந்திரன் முதலிய தேயு விசேஷத்தில் குளிர்ந்த பரிசம் ஜலத்தின் சம்பந்தத்தினாலேயே தோற்றுகின்றது. பிருதிவி விசேஷத்திலும், வாயு விசேஷத்திலும் குளிர்ந்த பரிசமும், வெம்மைப் பரிசமும் முறையாக ஜலத்தின் சம்பந்தத்தினாலும், தேயுவின் சம்பந்தத்தினாலுமே தோற்றுகின்றதென்பதான வார்த்தை யாம் முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் ஜலத்தின் நிருபணத்திலும், தேயுவின் நிருபணத்திலும் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. ஆகையால் முன்

னர் கூறிய பரிசத்தின் ஆசிரயத்தின் வியவஸ்தை சம்பவிக்கின்றது. பிருதிவியிலும், வாயுவிலும் வெம்மையும் குளிர்ச்சியுமிலாப் பரிசமே இருக்கின்றது. என்றாலும் பிருதிவியின் வெம்மையும் குளிர்ச்சியுமிலாப் பரிசமோ பாகத்தாலாவதாம். அதாவது; வன்னி முதலிய தேயுவின் சையோக சம்பந்தத்தால் ஜன்னியமாவதாம். வாயுவின் வெம்மையும் குளிர்ச்சியுமிலாப் பரிசமோ பாகத்தாலாவதன்று. இவ்விரண்டில் இவ்வளவு விசேஷத் தன்மையிருக்கின்றது.

## கூடு௮. வன்மை, மென்மையா மிரண்டில் பரிச வடிவத் தன்மையின் சித்தி.

அல்லது எங்ஙனம் பாகத்தாலாய வெம்மையும் குளிர்ச்சியு மிலாப் பரிசம் பிருதிவியிலேயே இருக்கின்றதோ அங்ஙனமே வன்மை, மென்மையா மிருவகை பரிசமும் பிருதிவியிலேயே இருக்கின்றது. ஆண்டு கல் முதலிய பிருதிவியிலோ வன்மைப் பரிச மிருக்கின்றது. பஞ்சு முதலிய பிருதிவியிலோ மென்மை பரிசமிருக்கின்றது.

## கூடுகூ. வன்மை, மென்மைகளில் சையோக விசேஷ வடிவத் தன்மையை யோப்புவோராகிய வாதிகளின் மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். வன்மை, மென்மையா மிரண்டில் பரிச வடிவமின்றாம். ஆனால் சையோக விசேஷ வடிவமிருக்கின்றது. அதாவது சில அவயவங்களின் சையோக விசேஷத்தினை வன்மையென்பார். சில அவயவங்களின் சையோக விசேஷத்தினை மென்மையென்பர். கடினத் தன்மை தர்மத்திற்கு ஆசிரயமாகிய சையோக விசேஷம் பனிக்கட்டி, மேக முதலிய ஜலத்திலு மிருக்கிறது.

## கூகூ௦. இம்மதத்தின் கண்டனம்.

இம்மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் ஓர் கால் சையோக விசேஷம் வன்மை, மென்மைகளாகுமாயின் எங்ஙனம் இருவிரல்களின் சையோகத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தா லுண்டாகின்றதோ அங்ஙனமே அச்சையோக விசேஷ வடிவ வன்மை, மென்மைகளின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தால் உண்டாக வேண்டும்; வன்மை, மென்மைகளின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகிறதில்லை. ஆனால் துவக்கிந்திரியத்தினாலேயே பிரத்தியக்ஷமாகின்றது. பனிக்கட்டி, மேக முதலிய ஜலத்தில் வன்மைத்தன்மையின் தோற்றம் உண்டாவதுயாதோ அத்தோற்றம் மயக்க வடிவமேயாம். ஆகையால் அந்த மயக்க வடிவ தோற்றத்தால் பனிக்கட்டி, மேக முதலிய ஜலத்தில் வன்மைத்தன்மையின் சித்தியுண்டாகாது. ஆகையால் வன்மை, மென்மைகளில் சையோக வடிவத் தன்மைச் சம்பவியாது; பரிச வடிவத் தன்மையே சம்பவிக்கின்றது.

### ௩௬௧. நித்திய அநித்திய வேறுபாட்டாலும், உத்பூத அநுத்பூத வேறுபாட்டாலும் பரிச குணத்தின் இருவித வேற்றுமை.

அல்லது கூறிய பரிச குணம் நித்தியம், அநித்திய மென்னும் வேறு பாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு ஜல, தேயு, வாயு என்னும் மூன்று திரவியங்களின் பரமாணுக்களிலோ பரிசம் நித்தியமாகின்றது. பரமாணுக்களினும் வேறான யாவற்றிலும் அநித்தியமாகின்றது. அதாவது துவியணுகாதி வடிவ ஜன்னிய ஜல, தேயு, வாயுக்களிலும் பரமாணு, துவியணுகாதி வடிவ எல்லாப் பிருதிவியிலும் அப்பரிசம் அநித்தியமேயாகின்றது. அல்லது கூறிய பரிச குணம் உத்பூதம், அநுத்பூத மென்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். ஆண்டு கட, பட முதலிய திரவியங்களிலோ பரிசம் உத்பூதமாகின்றது. துவக்கு முதலிய இந்திரியங்களிலும், விளக்கு முதலியவைகளின் பிரகாசத்திலும், திரியணுகத்திலும் அப்பரிசம் அநுத்பூதமாகின்றது. ஆண்டுக் கூறிய உத்பூத பரிசமே துவக்கிந்திரியத்தால் பிரத்தியக்ஷமாகின்றது. அவ்வநுத்பூத பரிசம் துவக்கிந்திரியத்தால் பிரத்தியக்ஷமாவதின்று. இக்காரணத்தானேயே அந்தப் பிரகாசத்தினதும், திரியணுகத்தினதுமா மிரண்டினது பரிசத்தின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. பரிச குண நிரூபணம் முற்றிற்று.

### ௩௬௨. பிருதிவியிலிருக்கும் உருவ முதலிய நான்கு குணங்களின் பாகத்தாலாம் வடிவத் தன்மையின் வர்ணனம்.

ஆண்டு முன்னர் நிரூபிக்கப்பட்ட உருவம், ரசம், கந்தம், பரிசமாம் நான்கு குணங்கள் யாவையோ அவை பிருதிவியிலோ பாகத்தாலவனவாம். ஆண்டு வன்னி, சூரியன் முதலிய தேயுவின் சையோகத்தினை பாக மென்பர். அந்த பாகத்தால் பிருதிவியில் உண்டாகும் உருவ முதலியவைகளை பாகஜ மென்பர். பாகஜமென்பதான பதத்தின் அர்த்தத்தை பின்னர் யாண்டு மறிந்துக் கொள்க. எங்ஙனம் மாங்காய் முதலிய பிருதிவியிலும், அரிசி முதலிய பிருதிவியிலும் சூரிய வடிவ தேயுவின் சம்பந்தத்தாலும், வன்னி வடிவ தேயுவின் சம்பந்தத்தாலும் முன்னுள்ள உருவ, ரச, கந்த, பரிசத்தினும் வேறாகவே உருவ, ரச, கந்த, பரிசம் உண்டாகின்றன. இவ்வார்த்தை உலகர்யாவருக்கும் அநுபவசித்தமாம். இக்காரணத்தானேயே உருவ முதலிய நான்குகுணங்கள் பிருதிவியில் அநித்தியமேயாகின்றன. அதாவது பிருதிவியில் உருவ முதலிய நான்கு குணங்கள் சிலவிடத்து ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமாகின்றது. சிலவிடத்து தேயு சையோக வடிவ பாகத்தால் நாசமாகின்றது. ஆண்டு வைசேஷிகர்களின் மதத்தில் பரமாணு வடிவ நித்தியப் பிருதிவியிலோ உருவ முதலிய நான்கும் கேவலம் பாகத்தானேயே நாசமாகின்றன. துவியணுக முதலிய அநித்திய பிருதிவியில் ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமாகின்றன. நையாயிகர்களின் மதத்திலோ பிருதிவி மாத்திரத்தில் பாகத்தால் நாசமாகின்றன. அங்ஙனமே ஆசிரய திரவியத்தின் நாசத்தானும் நாசமாகின்றன. பிருதிவியினும் வேறான ஜல, தேயு, வாயு இம்

மூன்று திரவியங்களிலோ உருவ முதலிய நான்கு குணங்கள் பாகத்தாலாகா தனவேயாம். ஏனெனின் அஜ்ஜல முதலியவைகளினோடு பலமுறை வன்னி முதலியதேயுவின் சம்பந்தமுளதாயினும் முன் உருவ, ரச முதலியவைகளினும் வேறான உருவ முதலியன உண்டாவனவன்று. இக்காரணத்தானேயே ஜல, தேயு, வாயு இம்மூன்று திரவியங்களில் உருவ முதலிய நான்கு குணங்கள் நித்தியமும், அநித்தியமு மாகின்றன. ஆண்டு பரமாணு வடிவ ஜல, தேயு, வாயுக்களிலோ உருவ முதலியன நித்தியமாகின்றன. துவியணுக முதலிய ஜல, தேயு, வாயுக்களில் உருவ முதலியன அநித்தியமாகின்றன. அதாவது ஜல, தேயு, வாயு வடிவ ஆசிரய திரவியத்தின் உற்பத்தி க்ஷணத்தினு மிரண்டாவது க்ஷணத்தில் உருவ முதலியன உண்டாவனவாகின்றன. ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே நாசமாகின்றன.

சங்கை :—பிருதிவியில் வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தால் உருவ முதலிய நான்கின் உற்பத்தி எவ்வாற்றானுண்டாகிற தென்னுஞ் சங்கையுண்டாக இனி மத வேறுபாட்டால் பாகத்தாலாகிய விவரத்தை நிரூபிப்பாம்.

### ௩௩௫. பீலுபாகவாதி வைசேஷிகர்களின் மதம்.

ஆண்டு பீலுபாகவாதி அதாவது பரமாணு பாகவாதி வைசேஷிக சாஸ்திரமுடையாரோ இது கூறுகின்றனர். பிருதிவியிலும் பரமாணுவடிவ பிருதிவியிலேயே அவ்வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தால் முன்னுள்ள உருவ, ரச முதலியவைகளின் நிவர்த்தி வாயிலாக வேறு உருவ முதலியவைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. துவியணுக முதலிய அவயவி வடிவ பிருதிவியில் பாகத்தாலாகிய உருவ முதலியன உற்பன்னமாகிறதில்லை. ஆண்டு பார்த்திவ பரமாணுக்களிலேயே பாகத்தாலாகிய உருவ முதலியவைகளின் உற்பத்தியினை வொப்புவோராகிய வைசேஷிகர்களின் அபிப்பிராயமிதுவாம். புதிய கடத்தினை செய்யும் பொருட்டு குலாலன் சூளையில் வைக்கப்பட்ட பசுங்கடம் யாதோ அக்கடத்தினை ஆரம்பிக்கும் பரமாணுவினோடு ஆண்டு அதிவேகமுடைய வன்னி வடிவ தேயுவின் அபிகாதாக்கிய சையோகம் அல்லது நோதனக்கிய சையோகம் அவசியம் உண்டாகின்றது. அச்சையோகத்தால் அப்பரமாணுக்களில் அவசியம் கிரியை உண்டாவதாகின்றது. அக்கிரியையால் அப்பரமாணுக்கட்கு பரஸ்பரம் விபாகம் உண்டாவதாகின்றது. அவ்விபாகத்தால் அப்பரமாணுக்கட்கு துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பித்த சையோகம் நஷ்டமாகின்றது. அவ்வசமவாயி காரண வடிவ சையோகத்தின் நாசமுண்டாக துவியணுக வடிவ காரியத்தின் நாசம் உண்டாகின்றது. துவியணுக வடிவ சமவாயி காரணத்தின் நாசமுண்டாக திரியணுகவடிவ காரியத்தின் நாசமுண்டாகின்றது. திரியணுக வடிவ சமவாயி காரணத்தின் நாசமுண்டாக சதுரணுக வடிவ காரியத்தின் நாசம் உண்டாகின்றது. இவ்வாறாக துவியணுக முதலாக கட பரியந்தமுள்ள எல்லா அவயவிகளின் நாச முண்டாகின்றது. கேவலம் பரமாணு மிகுதி யாகின்றது. அதாவது துவியணுக முதலிய காரிய திரவியத்தின்

அதிகரணத் தன்மை யிலதாகி கேவலம் சுவதந்திர பரமாணுக்கள் மிகுதி யாகின்றன. அப்பரமாணுக்களினேடு மீண்டும் அவ்வன்னி வடிவ தேயு வின் சையோக சம்பந்த முண்டாகின்றது. அவ்வன்னி சையோகத்தால் முன்னுள்ள உருவ, ரச முதலியவைகளின் நிவர்த்தி மூலமாக வேறு வில க்ஷண உருவ முதலியவைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. அதன் பின்னர் அதிர்ஷ்ட முதலிய காரண சாமக்கிரியின் வசத்தால் விஜாதீய வன்னி சை யோகத்தால் பக்குவ பரமாணுக்களில் மீண்டும் கிரியை உண்டாகின்றது. அக்கிரியையால் அப்பரமாணுக்களில் இரண்டிரண்டு பரமாணுக்கட்கு பரஸ்பரம் சையோக முண்டாகின்றது. அச்சையோகத்தின் பின்னர் துவி யணுக காரியங்களின் உற்பத்தி யுண்டாகின்றது. அதன் பின்னர் மீண்டும் விஜாதீய வன்னி சையோகத்தால் அத்துவியணுகங்களில் கிரியை உற்பன்ன மாகின்றது. அக்கிரியையால் மும்மூன்று துவியணுகங்கட்கு பரஸ்பரம் சையோக முண்டாகின்றது. அதனுல் திரியணுக வடிவ காரியங்களின் உற் பத்தியுண்டாகின்றது. இவ்வாறுக சதுரணுக, பஞ்சாணுக முதலியவைகளின் உற்பத்திக் கிரமத்தால் அவ்வந்திய அவயவி வடிவ கடத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆண்டு பார்த்திவ பரமாணுக்களில் உற்பன்னமாகிய பாகத்தாலாய உருவ, ரச முதலியவைகள் யாவையோ அவ்வுருவ முதலிய வைகட்குப் பார்த்திவ பரமாணுவோ சமவாயி காரணமாம். பார்த்திவ பரமாணுக்களினேடு தேயுவின் சையோகம் யாதோ அத்தேயுவின் சையோகம் அசமவாயி காரணமாம். அதிர்ஷ்ட முதலியன நிமித்த காரணமாம். பாகத்தாலாய உருவ முதலியவைகளுடைய பார்த்திவ பர மாணுக்களால் உற்பன்னமாகிய துவியணுக வடிவ காரியம் யாதோ அத் துவியணுகங்களின் உருவ முதலியவைகட்கோ பரமாணுக்களின் உருவ முத லியவைகளே அசமவாயி காரணமாகின்றன. அங்ஙனமே திரியணுக வடிவ காரியத்தின் உருவ முதலியவைகட்கு அத்துவியணுகத்தின் உருவ முதலிய வைகள் அசமவாயி காரணமாகின்றன. இவ்விதமாக பூர்வ பூர்வ அவயவங் களின் உருவ முதலிய குணங்களால் உத்தர உத்தர அவயவியின் உருவ முதலிய குணங்களின் உற்பத்தி கிரமத்தால் அந்தியாவயவி வடிவ கட பரியந்தமுள்ள உருவ முதலிய குணங்கள் உற்பன்னமாகின்றன. இவ்வாற்றுல் சூளையில் வைக்கப்பட்ட முன் கடத்திற்கு நாசமுண்டாகியே மீண்டும் வேறு கடத்தின் உற்பத்தி உண்டாகின்றது. ஆனுல் வன்னி வடிவத்தேயுவின் அத்தியந்தவேகத் தால் முன்னுள்ள கடத்திற்கு நாச முண்டாகி துரிதமாகவே வேறு கடத் தின் உற்பத்தி யுண்டாகின்றது. இக்காரணத்தால் உலகவருக்கு வேறு கடம் உற்பன்னமாயிற்று என்பதான ஞானம் உண்டாகிறதில்லை. அக்கடத்தில் உலகவருக்கு அக்கட மிதுவாம் என்பதாக பிரத்தியபிஞ்ஞை ஞானமுண்டா வது யாதோ அந்தபிரத்தியபிஞ்ஞா ஞானமோ வர்த்தமான கடத்தில் நஷ்ட மாய முற்கடத்தின் சஜாதீயத் தன்மையினையே விஷயஞ்செய்கின்றது. ஆகை யால் பிரத்தியபிஞ்ஞையின் வலிவால் முன் பின் கடங்கட்கு ஒன்றுந் தன்மை சித்தமாவதின்று. அல்லது பார்த்திவ பரமாணுக்களில் பாகத்தாலாய உருவ முதலியவைகளின் உற்பத்தியை அங்கீகரியாது செய்யப்பட்ட கட முதலிய

அவயவிகளிலேயே பாகத்தாலாய உருவ முதலியவைகளின் உற்பத்தியை அங்கீகரிக்கின் அக்கடத்தினுட்பாகங்களிலுள்ள அவயவங்களில் முன்னுள்ள கருமை உருவ முதலியவைகளின் நிவர்த்தி மூலமாக வேறு செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தி உண்டாகாததாகும். ஏனெனின் அக்கட வடிவ அவயவி அத்தியந்த நிர்ஷடமாம். ஆகையால் அக்கடத்தி னுட்பாகத்தில் வன்னியின் பிரவேசமே சம்பவியாது. அவ்வன்னியின் பிரவேசமின்றி கடத்தி னுட்பாகத்திலுள்ள அவயவங்களோடு வன்னியின் சையோகமே சம்பவியாது. அவ்வன்னியின் சையோகமின்றி கடத்தி னுட்பாகத்திலுள்ள அவயவங்களில் முன்னுள்ள கருமை உருவ முதலியவைகளின் நிவர்த்தியும், வேறு செம்மை உருவத்தின் உற்பத்தியுமே சம்பவியாது. அங்ஙனமாகக் காணக்கிடைப்பதின்று; ஆனால் சுள்ளையில் வைத்த கடத்தினை உடைத்துக் காணின் அந்தர, பாஹிய, மத்திய விடங்களில் பாகத்தாலாய செம்மை உருவமே காணக் கிடைக்கின்றது. ஆகையால் முற்கூறியவாற்றால் பார்த்திவ பரமாணுக்களிலேயே பாகத்தாலாய உருவ முதலியவைகளின் உற்பத்தி யொப்புவது யோக்கியமாம்.

## ௬௬௪. பாகத்தாலாய உருவ முதலியவைகளின் உற்பத்தியில் க்ஷண பிரக்கிரியையின் வர்ணனம்.

இனி துவியணுகத்தின் விநாச க்ஷண முதலாக எத்தனை க்ஷணத்திற்கு பின்னர் அத்துவியணுகம் மீண்டும் உற்பன்னமாகி உருவ முதலிய குணங்களுடையதாகின்றதோ அத்தனை க்ஷண விவரத்தினை நிரூபிப்பாம். ஆண்டு வன்னி வடிவத் தேயுவின் சையோகத்தால் பார்த்திவ பரமாணுக்களில் கிரியை உற்பன்னமாகின்றது. அதன் பின்னர் அத்துவியணுகத்தை ஆரம்பித்த ஓர் பரமாணுவிற்கு அத்துவியணுகத்தை ஆரம்பித்த வேறு பரமாணுவால் விபாக முண்டாகின்றது. அதன் பின்னர் அத்துவியணுக வடிவ காரியத்தை ஆரம்பித்த சையோகத்திற்கு நாச முண்டாகின்றது. அதன் பின்னர் அத்துவியணுக வடிவ காரியத்திற்கு நாச முண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களில் வன்னி முதலிய தேயுவின் சையோகத்தால் முன்னுள்ள கருமை உருவ முதலியவைகளின் நாசமுண்டாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் வன்னி முதலிய தேயுவின் சையோகத்தால் அப்பரமாணுக்களில் வேறு செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தியுண்டாகின்றது. நான்காவது க்ஷணத்தில் பாகத்தாலாய உருவ முதலியவைகளையுடைய பரமாணுக்களில் விஜாதீய வன்னி முதலிய தேயுவின் சையோகத்தால் துவியணுக வடிவ திரவியத்தினை ஆரம்பிக்கும் கிரியை உற்பன்னமாகின்றது. ஐந்தாவது க்ஷணத்தில் அக்கிரியையால் அப்பரமாணுக்கட்கு முன்னுள்ள இருப்பிடத்தினின்றும் பிரிவு உண்டாகின்றது. ஆறாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்கட்கு முன்னுள்ள இடத்தினோடு சையோகம் நாசமாகின்றது. ஏழாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்கட்கு பரஸ்பரம் துவியணுகத்தை ஆரம்பிக்கும் சையோக முண்டாகின்றது. எட்டாவது க்ஷணத்தில் அத்துவியணுகத்திற்கு உற்பத்தி யுண்டாகின்றது. ஒன்பதாவது க்ஷணத்தில்

அப்பரமாணுக்களின் உருவ முதலிய குணங்களால் அத்துவியணுகத்தில் உருவ முதலிய குணங்களின் உற்பத்தி யுண்டாகின்றது. இவ்விதமாக துவியணுகத்தின் நாச க்ஷண முதலாக ஒன்பதாவது க்ஷணத்தில் அத்துவியணுகம் மீண்டும் உற்பன்னமாகி உருவ முதலிய குணங்களுடையதாகின்றது.

சங்கை:—கூறிய ஒன்பது க்ஷண விவரத்தில் எவ்விரண்டாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களின் கருமை உருவ முதலியவைகளின் நாசமுண்டாகின்றதோ அவ்விரண்டாவது க்ஷணத்திலேயே அப்பரமாணுக்களில் துவியணுகத்தை ஆரம்பிக்கும் கிரியை அங்கீகரிக்கின் ஏழாவது க்ஷணத்திலேயே அத்துவியணுக மீண்டும் உற்பன்னமாகி உருவ முதலிய குணங்களுடையதாகின்றது. அவ்வேழாவது க்ஷண விவரம் இவ்வாறுகின்றது. ஆண்டு முற்கூறியவாற்றால் முதற்க்ஷணத்தில் அத்துவியணுகத்தின் நாசமும், இரண்டாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களின் கருமை உருவத்தின் நாசமும், அத்துவியணுகத்தை ஆரம்பிக்கும் கிரியையின் உற்பத்தியும், மூன்றுவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களில் செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தியும், அக்கிரியா ஜன்னிய பூர்வ தேசத்தினின்றும் பிரிவும், நான்காவது க்ஷணத்தில் பூர்வ தேசத்தின் சையோகத்திற்கு நாசமும், ஐந்தாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்கட்கு பரஸ்பர துவியணுகத்தை ஆரம்பிக்கும் சையோகமும், ஆறுவது க்ஷணத்தில் அத்துவியணுகத்தின் உற்பத்தியும், ஏழாவதுக்ஷணத்தில் துவியணுகத்தில் உருவ முதலியவைகளின் உற்பத்தியும், அல்லது கூறிய ஒன்பதாவது க்ஷண விவரத்தில் எம்மூன்றுவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களில் பாகத்தாலாய செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தி யுண்டாகின்றதோ அம்மூன்றுவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களில் துவியணுகத்தினை ஆரம்பிக்கும் கிரியையின் உற்பத்தியை அங்கீகரிக்கின் எட்டாவது க்ஷணத்தில் அத்துவியணுகம் மீண்டும் உற்பன்னமாகி உருவ முதலிய குணங்களுடையதாகின்றது. இவ்வாறுக ஏழாவது க்ஷண விவரத்தினை அல்லது எட்டாவது க்ஷண விவரத்தினை ஒப்புவதானேயே கூறிய அர்த்தத்தின் சித்தி யுண்டாகுமாயின் ஒன்பதாவது க்ஷண விவரத்தை வொப்புவது உசிதமன்றும்.

சமாதானம்:—எப்பரமாணுவின் கிரியையானது பிரிவு முதலியவைகளின் உற்பத்திக் கிரமத்தால் அத்துவியணுகத்தினை நாசஞ்செய்ததோ அம்முதற் கிரியை அப்பரமாணுக்களில் துவியணுகத்தினை ஆரம்பிக்கும் இரண்டாவது கிரியையினை பிரதிபந்திப்பதாகின்றது. அதாவது முதற் கிரியை எவ்வளவு காலமட்டும் அப்பரமாணுவிலிருக்கின்றதோ அவ்வளவு காலமட்டும் அப்பரமாணுவில் அவ்விரண்டாவது கிரியையின் உற்பத்தியை செய்வதன்று. அம்முதற் கிரியை அப்பரமாணுவின் உத்தர தேச சையோகத்தாலேயே நாசமாகின்றது. அவ்வுத்தர தேச சையோகம் அத்துவியணுகத்தின் நாச க்ஷணத்திலேயே யுண்டாகின்றது. ஆகையால் அவ்வுத்தர தேச சையோகத்தால் அம்முதற் கிரியையின் நாசம் அப்பரமாணுவின் கருமை உருவ முதலியவைகளின் நாச க்ஷணத்திலேயே யுண்டாகின்றது. ஆகையால் அக்கருமை உருவாதி நாச க்ஷணத்தில் அப்பரமாணுவில் துவியணுகத்தினை

ஆரம்பிக்கும் கிரியையின் உற்பத்தி சம்பவியாது. அல்லது அப்பரமாணு வில் பாகத்தாலாய செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தி க்ஷணத்தில் அத்துவியணுகத்தை ஆரம்பிக்கும் கிரியையின் உற்பத்தியை யொப்புவதில் அம்முதற்கிரியை பிரதிபந்தக மன்றும். என்றாலும் எங்ஙனம் ஓர் கிரியை யுடைய திரவியத்தில் வேறு கிரியை உற்பன்னமாவதின்றோ அங்ஙனம் நிற்குண திரவியத்திலும் திரவியத்தை ஆரம்பிக்கும் கிரியை உற்பன்ன மாகிறதில்லை. ஆனால் குணத்தினது உற்பத்தியினும் இரண்டாவது க்ஷணத்தி லேயே அத்திரவியத்தில் திரவியத்தை ஆரம்பிக்கும் கிரியை உற்பன்னமா கின்றது. ஆகையால் அச்செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தி க்ஷணத்திலும் அப்பரமாணுவில் அத்துவியணுகத்தை ஆரம்பிக்கும் கிரியை யின் உற்பத்தி சம்பவியாது. ஆனால் அச்செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தியின் பின்னரே அப்பரமாணுக்களில் அத்துவியணுகத்தை ஆரம்பிக் கும் கிரியை சம்பவிக்கின்றது. ஆகையால் முற்கூறிய ஒன்பதாவது க்ஷண விவரமே நலமுடையதாம்.

சங்கை :—அப்பரமாணுக்களில் கருமை முதலிய உருவங்களின் நாச க்ஷணத்தில் அல்லது செம்மை, உருவ முதலியவைகளின் உற்பத்தி க்ஷணத்தில் அத்துவியணுகத்தை ஆரம்பிக்கும் கிரியை உண்டாகாததாகுக. என்றாலும் எவ்விரண்டாவது க்ஷணத்தில் அப்பரமாணுக்களில் கருமை உருவ முதலிய வைகளின் நாசமுண்டாகின்றதோ அவ்விரண்டாவது க்ஷணத்தில் அப்பரமா ணுக்களில் அச்செம்மை உருவ முதலியவைகளின் உற்பத்தி யுண்டாகும். அதனால் மீண்டும் எட்டாவது க்ஷண விவரமே சித்தமாகும்.

சமாதானம் ;—பாகத்தாலாய விடத்தில் கருமை உருவ முதலியவை களின் துவம்சமும் வேறு செம்மை முதலியவைகளின் உற்பத்தியின் காரண மாகின்றது. எதுவெது காரண மாகின்றதோ அதுவது காரியத்தினது உற்பத்தியினும் முற்க்ஷணத்தி லிருப்பதாகின்றது. ஆகையால் அந்த கருமை, உருவ முதலியவைகளின் நாச க்ஷணத்தில் வேறு செம்மை உருவ முதலிய வைகளின் உற்பத்தி சம்பவியாது. ஆனால் அதனினும் பிற்க்ஷணத்திலேயே சம்பவிக்கின்றது. ஆகையால் முற்கூறிய ஒன்பதாவது க்ஷண பிரகிரியையே நலமுடையதாம். இதுகாறும் பீலுபாக வாதி வைசேஷிக சாஸ்திரத்தின் மதத்தை நிரூபித்தனம். இனி பிடர பாகவாதி நியாய சாஸ்திரத்தின் மதத்தினை நிரூபிப்பாம்.

## ௬௬௫. பிடரபாகவாதி நையாயிகர்களின் மத வர்ணனம்.

ஈண்டு பீலு வென்பது பரமாணுவிற்காம், கட முதலிய அவயவியினை பிடர மென்பர். ஆண்டு அந்நையாயிகர் இது கூறுகின்றனர். சூளையில் வைக்கப்பட்ட கடத்தை ஆரம்பிக்கும் பரமாணுக்களினோடு வன்னி வடிவத் தேயுவின் அபிகாதாக்கிய சையோகத்தினது அல்லது நோதனக்கியா சையோகத்தினது நியம வாயிலாக துவியணுகத்தினை ஆரம்பிக்கும் சையோகத்தை நாசஞ் செய்யும் விபாகத்தினை உண்டாக்கும் கிரியையே

உண்டாகின்றதென்பதான அர்த்தத்தில் ஓர் பிரமாணமு மின்றும். ஆகையால் சுள்ளையில் வன்னியின் சையோகம் உளவாயினும் முற்கூறிய துவியணுகாதி நாசக் கிரமத்தால் அக்கடத்தின் நாச முண்டாவதின்று. ஆனால் அக்கடத்தின் நாச மின்றியே பரமாணுக்கள் முதலாக அக்கட புரியந்தமுள்ள பரமாணு முதலிய சர்வ அவயவங்களிலும், துவியணுக முதலிய சர்வ அவயவிகளிலும் ஒரே காலத்தில் அவ்வன்னி வடிவ தேயுவின் சையோகத்தால் முன்னுள்ள பசுமை உருவ முதலியவைகளின் நிவர்த்தி வாயிலாக வேறு செம்மை முதலியவைகளின் உற்பத்தி யுண்டாகின்றது. கடமுதலிய அவயவிகள் சூக்ஷ்ம துவாரங்களுடையதேயாகின்றன. ஆகையால் அவ்வன்னியின் சூக்ஷ்ம அவயவம் அச்சூக்ஷ்ம துவார மூலமாய் அக்கடத்தினுட் பிரவேசமாகின்றது. அவ்வன்னி அவயவங்களின் சையோகத்தால் அக்கடத்தினுள்ளிருக்கும் அவயவங்களிலும் செம்மை உருவ முதலியன உற்பன்னமாகின்றன. ஓர் கால் அக்கட முதலியவைகட்கு துவாரமுடைமை யொப்பாவிடின் அக்கட முதலியவைகளினுள் அரிசி முதலியவைகளின் பாகம் உண்டாவதின்றாகவேண்டும். அக்கட முதலியவைகளில் அரிசி முதலியவைகளையும், ஜலத்தையும் வைத்து கடத்தின் கீழினின்றும், அக்கினியின் ஜ்வாலையை யுண்டாக்க அரிசி முதலியவைகளின் பாகம் பிரத்தியக்ஷத்தில் காணப்படுகின்றது. அதாவது அவ்வன்னியின் சூக்ஷ்ம அவயவம் அக்கடத்தினுள் அச்சூக்ஷ்ம துவார மூலமாய் பிரவேசித்து அரிசிகளை பக்குவப்படுத்துகின்றது. ஆகையால் அக்கட முதலிய அவயவியை துவார முடையதாகவே யொப்ப வேண்டும். அல்லது வைசேஷிகர் பாகத்தாலாய விடத்தில் துவியணுக முதலாக அக்கடபரியந்தமுள்ள சர்வ அவயவிகளின் நாசம் அங்கீகரிக்கின்றனரோ அவ்வைசேஷிகர்களின் மதத்தில் அனேக அவயவிகளின் நாசமும், அனேக அவயவிகளின் உற்பத்தியும், அனேக அவயவிகளின் பிராகபாவமும் கற்பிக்கப்படவேண்டும். அதனால் அவர்களின் மதத்தில் கற்பனை கௌரவ தோஷம் பிராப்தமாகின்றது. அக்கற்பனை கௌரவ தோஷம் எமது நையாயிகர்கள் மதத்தில் சம்பவியாது. ஆகையால் எமது மதத்தில் லாகவமாம். அல்லது எமது மதத்தில் லாகவ மிருப்பதுடன் அக்கடமே இக்கடமாம் என்பதான பிரத்தியபிஞ்ஞா ஞானமும் அநுகூலமாம். அதாவது பிரத்தியபிஞ்ஞா ஞானமும் முற்கூறிய அக்கடத்தின் அபேதத்தை விஷயஞ் செய்வதாகி அக்கட வடிவ அவயவியின் நாச மின்மையினையே சித்தஞ் செய்கின்றது.

### ௩௩௩. சங்கியா குண லக்ஷணம்.

சங்கியாநிரூபணம் ஆண்டு "ஏகத்வாதிவ்யவஹாரஹேதுஃ ஸம்க்யா" (இ-ள்.) இது ஒன்றும், இது இரண்டாம், இது மூன்றும், இது நான்காம், இது ஐந்தாம் என்பதான இவை முதலிய வியவஹாரங்கட்கு ஹேதுவாவது யாதாமோ அது சங்கியை எனப்படும். ஆண்டு கூறிய வியவஹாரம் ஒருமைத்தன்மை, இருமைத்தன்மை முதலிய எண்க்ளாலேயே உண்டாகின்றது, வேறொன்று னுண்டாவதின்று. ஆகையால் கூறிய சங்கியையின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது.

சங்கை :—வியவஹார சத்தம் சிலவிடத்து ஞானத்தின் வாசகமாகின்றது, சிலவிடத்து சத்தத்தின் வாசகமாகின்றது. ஆண்டு " வ்யவஹ்ரியதே ஹாநோபாதாநாதிகம் ஹ்ரியதே அநேநேதி வ்யவஹார:" (இ-ள்.) எதனால் வஸ்துவின் கிரஹணம், தியாகம் முதலியன செய்யப்படுகின்றதோ அதனை வியவஹார மென்பர். இவ்வாறாய அர்த்தத்தினாலோ அவ்வியவஹார சத்தம் ஞானத்தின் வாசகமாம். எக்காரணத்தாலெனின் வஸ்துவின் கிரஹணம், தியாகம் முதலியன அவ்வஸ்துவின் ஞானத்தானேயே யுண்டாகின்றது. அந்த ஞானமின்றி யாதோர் கிரஹண, தியாக வியவஹாரம் உண்டாகிறதில்லை. "வ்யவஹ்ரியதே ஜ்ஞாயதே அநேநேதி வ்யவஹார:" (இ-ள்.) எதனால் வஸ்து அறியப்படுகிறதோ அதனை வியவஹாரமென்பர். இவ்வாறாய அர்த்தத்தால் அவ்வியவஹார சத்தம் சத்தத்தின் வாசகமாகின்றது. எக்காரணத்தாலெனின் சத்த முதலிய பிர்மாணங்களானேயே வஸ்து அறியப்படுகின்றது. சத்த முதலிய பிரமாணமின்றி யாதோர் வஸ்துவின் ஞானமும் உண்டாகாது. ஆண்டு கூறிய அச்சங்கியையின் லக்ஷணத்திலுள்ள வியவஹார சத்தம் யாதோ அந்த வியவஹார சத்தத்தால் அந்த ஞான வடிவ வியவஹாரத்தை கூறக்கருதியதா? அல்லது அச்சத்தவடிவ வியவஹாரத்தைக் கூறக்கருதியதா?. ஆண்டு முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அந்த ஞான வடிவ வியவஹாரத்தின் சமவாயி காரண வடிவ ஆத்மாவிலும், அசமவாயி காரண வடிவ ஆத்ம, மன சையோகத்திலும் நிமித்த காரண வடிவ அதிர்ஷ்டம் ஈசுவரன், காலம் முதலியவைகளிலும் அச்சங்கியையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அந்த வியவஹார பதத்தால் சத்த வடிவ வியவஹாரத்தை கூறக் கருதியதா மென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அந்த சத்த வடிவ வியவஹாரத்தின் சமவாயி காரண வடிவ ஆகாசத்திலும், அசமவாயி காரண வடிவ கண்டம், நா முதலிய ஆகாச சையோகத்திலும் நிமித்த காரண வடிவ அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியவைகளிலும் அச்சங்கியையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஆகையால் கூறிய அச்சங்கியையின் லக்ஷணம் சம்பவியாது.

சமாதானம் :—அந்த வியவஹார சத்தத்தால் பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரத்தினையே கொள்ளுக. அந்த பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரத்தின் ஏது யாதாமோ அதாவது விஷயத்தன்மை வடிவத்தால் காரணம் யாதாமோ அது சங்கியை எனப்படுகின்றது. ஆண்டு இது கடம், இது படம் என்பதான இவை முதலிய பிரத்தியக்ஷ ஞானங்களில் அக்கட, பட முதலியவைகட்கு விஷயத்தன்மை வடிவத்தால் எங்ஙனம் காரணம் உண்டாகின்றதோ அங்ஙனமே ஒன்று, இரண்டு என்பதான இவை முதலிய பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரங்களிலும் ஒருமைத்தன்மை, இருமைத்தன்மை முதலிய சங்கியைகட்கு விஷயத்தன்மை வடிவத்தால் காரணத்தன்மையேயுண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் விஷயமின்றி யாதோர் பிரத்தியக்ஷ ஞானமும் உண்டாகாது. இது கூறுவதால் அச்சங்கியைக்கு " விஷயத்வேந ஏகாதிவ்யவஹார ஹேது-ஸ்ஸம்க்யா" என்பதான லக்ஷணம் சித்தமாகின்றது. ஆண்டு ஆத்மாவிற்கும், ஆத்ம மன சையோகத்திற்கும், அதிர்ஷ்ட முதலியவைகட்கும் அந்த

பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரத்தைக் குறித்து காரணத்தன்மையி நக்கினும் விஷயத்தன்மை வடிவத்தால் காரணத் தன்மையின்றாம். ஆகையால் அவ்வாத்மா முதலியவைகளில் அச்சங்கியையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது கூறிய லக்ஷணத்திலுள்ள ஏது பதத்தினிடத்தில் "விஷயம்" என்னும் பதத்தைக்கூறுக. அதாவது "ஸங்க்யாதிவ்யவஹாரவிஷய꞉ ஸங்க்யா" என்பதாக அச்சங்கியையின் லக்ஷணத்தைக்கூறுக. அதனால் அந்த லக்ஷணத்திற்கு இவ்வர்த்தம் சித்தமாகின்றது. ஒன்று, இரண்டு, மூன்று இவை முதலிய பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரங்கட்கு எது விஷயமாகின்றதோ அது சங்கியை எனப்படுகின்றது. ஆண்டு ஒன்று, இரண்டு, மூன்று இவை முதலிய பிரத்தியக்ஷ ஞானங்கட்கு ஒருமைத் தன்மை, இருமைத்தன்மை முதலிய எண்களே விஷயமாம். அவ்வாத்மா, அதிர்ஷ்ட முதலியன விஷயமன்றாம். ஆகையால் அவ்வாத்மா, அதிர்ஷ்ட முதலியவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாவதின்று.

சங்கை:—"ஏகோ கட꞉" (இ-ள்.) ஒருமைத்தன்மை சங்கியையுடையது கடமாம். என்பதான பிரத்தியக்ஷ ஞானம் ஒருமைத்தன்மை சங்கியை விசிஷ்டகடத்தை விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அந்த பிரத்தியக்ஷ ஞானத்தில் எங்ஙனம் அவ்வொருமைத்தன்மை சங்கியைக்கு விஷயத்தன்மை வடிவத்தால் காரணத்தன்மை யிருக்கிறதோ அங்ஙனமே அக்கடத்திற்கும் விஷயத்தன்மை வடிவத்தால் காரணத் தன்மையிருக்கின்றது. அங்ஙனமே அந்த பிரத்தியக்ஷ ஞானத்திற்கு எங்ஙனம் அந்த ஒருமைத்தன்மை சங்கியை விஷயமாமோ அங்ஙனமே அக்கடமும் விஷயமாம். ஆகையால் "விஷயத்வேந ஸங்க்யாதிவ்யவஹாரஹேது꞉ ~~ஸங்க்யா~~ குண꞉" என்பதான முதலாவது லக்ஷணத்திற்கும், "ஸங்க்யாதிவ்யவஹாரவிஷய꞉ ஸங்க்யா" என்பதான இரண்டாவது லக்ஷணத்திற்கும் அக்கடத்தில் அதிவியாப்தி யுண்டாகின்றது.

சமாதானம்:—அவ்விரு லக்ஷணங்களில் "குணம்" என்னும் பதத்தையுங்கூறுக. அதாவது "விஷயத்வேந ஸங்க்யாதிவ்யவஹாரஹேது꞉ஸங்க்யா" "ஸங்க்யாதிவ்யவஹாரவிஷயோ குண꞉ ஸங்க்யா" என்பதான அவ்விரண்டு லக்ஷணங்களே குணபத முள்ளன வாக்குக. ஆண்டு அக்கட முதலியவைகளில் குண வடிவத்தன்மை யின்றாம். ஆகையால் அக்கட முதலிய திரவியங்களில் அந்த சங்கியையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஒருமையாதி வியவஹார ஏது சங்கியை" என முற்கூறிய லக்ஷணத்தில் வியவஹாரபதத்தால் சத்த வடிவ வியவஹாரத்தினைக்கொள்ளுக. "ஹேது" என்னும் பதத்தால் பிரவிருத்தி நிமித்தத்தினைக் கொள்ளுக. அதனால் அச்சங்கியைக்கு இந்த லக்ஷணம் சித்தமாயிற்று. "ஸங்க்யாதிஶப்தப்ரவ்ருத்திநிமித்தம் ஸங்க்யா" (இ-ள்.) ஒன்று, இரண்டு, மூன்று இவை முதலிய சத்தங்களின் பிரவிருத்திக்கு நிமித்தமாவது யாதோ அது சங்கியை எனப்படுகின்றது. ஆண்டு எத்திரவியத்தில் ஒருமைச் சங்கியை இருக்கின்றதோ அத்திரவியத்திலோ இது ஒன்று என்பதாக ஒருமை பதத்தின் பிரவிருத்தியுண்டாகின்றது. எத்திரவியத்தில்

இருமைச் சங்கியை இருக்கின்றதோ அத்திரவியத்தில் இது இரண்டு என்பதாக இருமை பதத்தின் பிரவிருத்தி யுண்டாகின்றது. எத்திரவியத்தில் மும்மைச் சங்கியை இருக்கின்றதோ அத்திரவியத்தில் "இது மூன்று" என்பதான மூன்றென்னும் சத்தத்தின் பிரவிருத்தி யுண்டாகின்றது. ஆகையால் ஒருமைச் சங்கியையோ வொருமை பதத்தின் பிரவிருத்திக்கு நிமித்தமாம். இருமைச் சங்கியை இருமை பதத்தின் பிரவிருத்திக்கு நிமித்தமாம். மும்மைச் சங்கியை மூன்றென்னும் பதத்தின் பிரவிருத்திக்கு நிமித்தமாம். இவ்வாறாக நான்கென்னும் தன்மை, ஐந்தென்னும் தன்மை முதலிய சங்கியைகளிலும் நான்கு, ஐந்து முதலிய சத்தங்களின் பிரவிருத்திக்கு நிமித்த வடிவத்தன்மையை அறிந்துகொள்க.

## ௩௩௭. அச்சங்கியா குணத்தின் ஆசிரயத்தினதும், ஒருமைத்தன்மை முதலாக பரார்த்த பரியந்தமாம் சங்கியையின் சொரூபத்தினதும் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித சங்கியா குணம் யாதோ அச்சங்கியா குணம் பிருதிவி முதலாக வொன்பது திரவியங்களிலு மிருக்கின்றது. அங்ஙனமே ஒருமை முதலாக பரார்த்தமட்டே உண்டாகின்றது. பரார்த்தத்திற்குப் பின்னர் யாதோர் சங்கியையும் யுண்டாவதின்று. எக்காரணத்தாலெனின் புராணங்களில் ஒருமை முதலாக பரார்த்தமட்டுமே சங்கியை கணிக்கப்பட்டிருக்கின்றது. பரார்த்தத்திற்குப் பின்னர் சங்கியை கணிக்கப் படவில்லை. ஆண்டு விஷ்ணுபுராணத்தின் சுலோகம் "𑌏𑌕𑌂 𑌦𑌶 𑌶𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌸𑌹𑌸𑍍𑌰𑌮𑌯𑌤𑌂 𑌤𑌥𑌾 𑌲𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌨𑌿𑌯𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌕𑍋𑌟𑌿𑌰𑌰𑍍𑌬𑍁𑌦𑌮𑍇𑌵 𑌚 । 𑌵𑍃𑌨𑍍𑌦𑌂 𑌖𑌰𑍍𑌵𑍋 𑌨𑌿𑌖𑌰𑍍𑌵𑌶𑍍𑌚 𑌶𑌙𑍍𑌖𑌃 𑌪𑌦𑍍𑌮𑌂 𑌚 𑌸𑌾𑌗𑌰𑌃 𑌅𑌨𑍍𑌤𑍍𑌯𑌂 𑌮𑌧𑍍𑌯𑌂 𑌪𑌰𑌾𑌰𑍍𑌧𑌂 𑌚 𑌦𑌶𑌵𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌯𑌥𑌾𑌕𑍍𑌰𑌮𑌮𑍍 ॥" (இ-ள்.) ஒன்று, பத்து, நூறு, சஹஸ்ரம், அயுதம், லக்ஷம், நியுதம், கோடி, அர்புதம், விருந்தம், கர்வம், நிகர்வம், சங்கம், பத்மம், சாகரம், அந்தியம், மத்தியம், பரார்த்தமென்பதாக ஒன்று முதலிய சங்கியைகளுக்குள் முன்முன் சங்கியைக்கு பத்துபத்து குணங்களை கூறுவதால் பின்பின் சங்கியையின்சொரூபம்சித்தமாகின்றது. எங்ஙனம் ஒன்றினை பத்து குணமாகச் செய்வதால் பத்தாகின்றது. அப்பத்தினை பத்து குணமாகச் செய்வதால் நூறுகின்றது. அந்நூற்றினை பத்து குணமாகச் செய்வதால் ஆயிரமாகின்றது. அவ்வாயிரத்தினை பத்து குணமாகச் செய்வதால் பதினாயிரமாகின்றது. அப்பதினாயிரத்தினை பத்து குணமாகச் செய்வதால் லக்ஷமாகின்றது. அந்த லக்ஷத்தினை பத்து குணமாகச் செய்வதால் பத்து லக்ஷமாகின்றது. அப்பத்து லக்ஷத்தினை பத்து குணமாகச் செய்வதால் கோடியாகின்றது அக்கோடியினை பத்து குணமாகச்செய்வதால் பத்துகோடியாகின்றது. அப்பத்து கோடியினை பத்துகுணமாகச்செய்வதால் விருந்தம் (நூறு கோடி) ஆகின்றது. அந்நூறு கோடியினை பத்து குணமாகச்செய்வதால் கர்வம் (ஆயிரம்கோடி) ஆகின்றது. அவ்வாயிர கோடியினை பத்து குணமாகச்செய்வதால் நிகர்வம் (பதினாயிரம் கோடி) ஆகின்றது. அப்பதினாயிர கோடியினை பத்து குணமாகச்செய்வதால் சங்கம் (லக்ஷம் கோடி) ஆகின்றது. அந்த லக்ஷம் கோடியினை பத்து குணமாகச்

செய்வதால் பத்மம் (பத்துலக்ஷம் கோடி) ஆகின்றது. அப்பத்து லக்ஷம் கோடியினை பத்து குணமாகச்செய்வதால் சாகரம் (நூறு லக்ஷம் கோடி) ஆகின்றது. அந்த நூறு லக்ஷம் கோடியினை பத்து குணமாகச் செய்வதால் அந்தியம் (ஆயிர லக்ஷம் கோடி) ஆகின்றது. அவ்வாயிர லக்ஷம் கோடியினை பத்து குணமாகச்செய்வதால் மத்தியம் (பதிணுயிர லக்ஷம் கோடி) ஆகின்றது. அப்பதிணுயிர லக்ஷங் கோடியினை பத்து குணமாகச்செய்வதால் பரார்த்தம் (நூறுயிரம் லக்ஷம் கோடி) ஆகின்றது. ஆண்டு ஒன்று முதலாக பரார்த்த மட்டும் சங்கியையினை யெழுதுவதற்கு இது முறையாம். ஒன்று 1, பத்து 10, நூறு 100, ஆயிரம் 1000, பதிணுயிரம் 10000, லக்ஷம் 100000, பத்து லக்ஷம் 1000000, கோடி 10000000, அற்புதம் (பத்து கோடி) 100000000, விருந்தம் (நூறுகோடி) 1000000000, கர்வம் (ஆயிரம்கோடி) 10000000000, நிகர்வம் (பதிணுயிரம் கோடி) 100000000000, சங்கம் (லக்ஷம் கோடி) 1000000000000, பத்மம் (பத்து லக்ஷம் கோடி) 10000000000000, சாகரம் (நூறு லக்ஷம் கோடி) 100000000000000, அந்தியம் (ஆயிர லக்ஷம் கோடி) 1000000000000000, மத்தியம் (பதிணுயிர லக்ஷம் கோடி) 10000000000000000, பரார்த்தம் (நூறுயிர லக்ஷம் கோடி) 100000000000000000.

கூகூரு. ஒருமைத்தன்மை, அனேகத்தன்மைகளால் சங்கியையின் இருவித வேற்றுமை.

அல்லது கூறிய அச்சங்கியா குணம் ஒருமைத் தன்மை, அனேகத் தன்மை என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு ஒருமைத் தன்மை சங்கியையினும் வேறான சங்கியையினை அனேகத் தன்மை யென்பர். அவ்வனேகத் தன்மை சங்கியையோ முற்கூறியவாற்றால் இருமைத் தன்மை, மும்மைத் தன்மை முதலாக பரார்த்த பரியந்தமாம் வேறுபாட்டால் பல வகைத்தாம். அவ்வனேகத்வ சங்கியை நித்தியத் திரவியங்களிலும், அநித்தியத் திரவியங்களிலும் யாண்டும் அநித்தியமேயாகின்றது. ஓரிடத்தும் நித்தியமாவதின்று.

கூகூகூ. ஒருமைத்தன்மை சங்கியையின் நித்திய, அநித்திய வேறுபாட்டால் இருவித வேற்றுமை.

ஒருமைத்தன்மை சங்கியையோ நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு நித்தியத் திரவியங்களிலோ ஒருமைத் தன்மை சங்கியை நித்தியமாகின்றது. அதாவது பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கின் பரமாணுக்களிலும் ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் என்னும் ஐந்து திரவியங்களிலும் அவ்வொருமைத் தன்மை சங்கியை நித்தியமாகின்றது. அநித்தியத் திரவியங்களில் அவ்வொருமைத் தன்மை சங்கியை அநித்தியமாகின்றது. அதாவது துவியணுக, திரியணுக முதலிய காரியத் திரவிய வடிவ பிருதிவி, ஜலம், தேயு, வாயுக்களில் ஒருமைத்தன்மை சங்கியை அநித்தியமாகின்றது. அவ்வநித்திய ஒருமைச்சங்கியை அவ்வாசிரய திரவியத்தின் உற்பத்தியினு மிரண்டாவது க்ஷணத்தில் உற்பன்னமாகின்றது.

அவ்வாசிரய திரவியத்தின் நாசத்தாலேயே நாசமாகின்றது. ஆண்டு எவ்வெவ் வநித்திய திரவியத்தில் எவ்வெவ் வொருமைத்தன்மை சங்கியையிருக்கின்றதோ அவ்வவ் வொருமைத்தன்மை சங்கியைக்கு அவ்வவ் வநித்தியத் திரவியமோ சமவாயி காரணமாகின்றது. அவ்வவ் வநித்தியத் திரவியத்தின் அவயவங்களி லிருப்பதாகிய ஒருமைத்தன்மை சங்கியை யாதோ அவ்வொருமைத்தன்மை சங்கியை அவ்வநித்திய திரவியங்களிலிருக்கும் ஒருமைத்தன்மை சங்கியையின் அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன அவ்வொருமைத் தன்மை சங்கியையின் நிமித்த காரணமாகின்றன. எங்ஙனம் கட வடிவ அநித்திய திரவியத்தில் இருப்பதாகிய ஒருமைத்தன்மை சங்கியையாதோ அவ்வொருமைத்தன்மை சங்கியைக்கு அக்கடமோ சமவாயிகாரணமாகின்றது. அக்கடத்தின் அவயவ வடிவ கபாலங்களி லிருப்பதாகிய ஒருமைத்தன்மை சங்கியை அசமவாயிகாரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. இவ்வாறாக த்வியணுக முதலிய அநித்தியத் திரவிங்களிலிருக்கும் ஒருமைத்தன்மை சங்கியை அநித்தியமேயாகின்றது.

ஃஎ0. அனேகத்வ சங்கியையில் அநித்தியத் தன்மையின் சித்தி.

முற்கூறிய இருமைத்தன்மை, மும்மைத் தன்மை முதலாக பரார்த்த மட்டுமாம் அனேகத்வ சங்கியையோ அபேக்ஷாபுத்தியால் உண்டாவதாலும், அபேக்ஷா புத்தியின் நாசத்தால் நாசமாவதாலும் யாண்டும் அநித்தியமேயாகின்றது. அதாவது பரமாணு ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களிலும் த்வியணுக், திரியணுக முதலிய அநித்தியத் திரவியங்களிலும் அவ்வனேகத்வ சங்கியை அநித்தியமேயாகின்றது.

ஃஎக. அனேகத்வ சங்கியையில் பர்யாப்தி சம்பந்தத்தால் அனேக திரவியாசிரயத்தின் சித்தி.

அவ்விருமைத் தன்மை, மும்மைத் தன்மை முதலிய அனேகத்வ சங்கியை அனேக திரவியங்களை ஆசிரயித்தே யிருக்கின்றது. ஒருமைத்திரவியத்தினை ஆசிரயித்திருப்பதன்று. எங்ஙனம் இரு கடங்களிலுள்ள இருமைத் தன்மை சங்கியை அக்கடங்களை ஆசிரயித்தே யிருக்கின்றது. அக்கடங்களிலுள்ள மும்மைத் தன்மை சங்கியை அவ்வக்கடங்களை ஆசிரயித்தே யிருக்கின்றது. பிரத்தியேக கடத்தை ஆசிரயித்திருப்பதன்று. அவ்விருமைத்தன்மை, மும்மைத் தன்மை முதலிய அனேகத்வ சங்கியை சமவாயசம்பந்தத்தால் பிரத்தியேக கடத்திலுமிருக்கின்றது. என்றாலும் "வனகொ௨வ்ள" (இ-ள்.) ஒருமைத் தன்மை சங்கியை விசிஷ்ட திரவியம் இருமைத் தன்மை சங்கியையுடையதாம். என்பதான தோற்றம் உலகத்தில் உண்டாகிறதில்லை. "வனகொ௩வ்ள" (இ-ள்.) ஒருமைத்தன்மை சங்கியையுடைய திரவியம் இருமைத்தன்மை சங்கியையுடையதன்றாம். என்பதான தோற்றம் உலகத்தில் உண்டாகின்றது. ஆகையால் அவ்விருமைத் தன்மை முதலிய அனேகத்வ சங்கியையின் பர்யாப்தி எனப்பெயரிய ஓர் சம்பந்த விசேஷம் அவ்வனேக திரவியங்களில் அங்கீகரிக்கப்படுகின்றது. எங்ஙனம் இரு கடங்களிலுள்ள இருமைத்

தன்மை சங்கியை அப்பர்யாப்தி சம்பந்தத்தால் அவ்விரு கடங்களிலேயே யிருக்கின்றது. அங்ஙனமே அக்கடங்களிலுள்ள மும்மைத் தன்மை சங்கியை பர்யாப்தி சம்பந்தத்தால் அவ்வக்கடங்களிலேயே இருக்கின்றது. பிரத்தியேக கடத்தில் அப்பர்யாப்தி சம்பந்தத்தால் இருமைத்தன்மை, மும்மைத் தன்மை முதலிய அனேகத்வ சங்கியை இருப்பதன்று. இக்காரணத்தானேயே "வாகொௗ" என்பதான தோற்றம் உலகவருக்குண்டாவதின்று. "வாகொநௗ" என்பதான தோற்றம் உலகவருக் குண்டாகின்றது. ஓர்கால் அவ்விருமைத் தன்மை, மும்மைத் தன்மை முதலிய அனேகத்வ சங்கியைக்கு அப்பர்யாப்தி சம்பந்தம் அவ்வனேக திரவியங்களில் அங்கீகரிக்காவிடின் அவ்விருமைத்தன்மை முதலிய சங்கியை சமவாயசம்பந்தத்தால் பிரத்தியேக திரவியத்தில் இருப்பதாவதால் "வாகொநௗ" என்பதான தோற்றம் அவசியம் உண்டாக வேண்டும். அங்ஙனமே "வாகொௗ" என்பதான தோற்றம் உண்டாவதின்ருக வேண்டும். ஈண்டு பர்யாப்தி எனப் பெயரியது ஸ்வரூப சம்பந்தமாம். ஆண்டு பிரதியோகி வடிவ வஸ்துவின் அல்லது அநுயோகி வடிவ வஸ்துவின் சொரூபம் யாதோ அச்சொரூபமே சம்பந்த வடிவமாக அதனை ஸ்வரூப சம்பந்த மென்பர். எங்ஙனம் இருகடங்களிலுள்ள துவித்வ சங்கியையின் ஸ்வரூபமே அவ்விரு கடங்களில் பர்யாப்தியெனப் பெயரிய சம்பந்தமாம். இவ்வாருக மும்மைத் தன்மை முதலிய சங்கியையினையும் அறிந்துக் கொள்க.

## ௬௭௨. அபேக்ஷா புத்தியின் லக்ஷணம்.

இனி எவ்வபேக்ஷா புத்தியால் இருமைத் தன்மை முதலிய சங்கியையின் உற்பத்தியும், எவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தால் அவ்விருமைத்தன்மை முதலிய சங்கியையின் நாசமு முண்டாகின்றதோ அவ்வபேக்ஷா புத்தியின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு "கூெநகெகைககவிஷயிணீலெ-ஜிஃ கூவெக்ஷாவ-ஜிஃ" (இ-ள்.) அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய புத்தி யாதோ அதனை அபேக்ஷா புத்தி யென்பர். எங்ஙனம் "இது ஒன்று இது ஒன்று" என்பதான புத்தி இரு ஏகத்வங்களை விஷயஞ் செய்கின்றது. "இது ஒன்று இது ஒன்று இது ஒன்று" என்பதான புத்தி மூன்று ஏகத்வங்களை விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாவதால் அப்புத்தி அபேக்ஷா புத்தியெனப்படுகின்றது. ஆண்டு இரு ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தியினலோ இருமைத் தன்மை சங்கியையின் உற்பத்தி உண்டாகின்றது. மூன்று ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தியினல் மும்மைச் சங்கியையின் உற்பத்தி உண்டாகின்றது. இவ்வாருய முறையை நான்காந் தன்மை, ஐந்தாந் தன்மை முதலிய சங்கியையின் உற்பத்தியிலும் அறிந்துக்கொள்க.

## ௬௭௩. அபேக்ஷா புத்தியால் இருமைத்தன்மை முதலிய சங்கியைகளின் உற்பத்தியின் கிரம வர்ணனம்.

இனி அவ்வபேக்ஷா புத்தியால் இருமைத்தன்மை முதலிய சங்கியைகளின் உற்பத்தியினதும், அவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தால் அவ்விருமைத்

தன்மை முதலிய சங்கியையின் நாசத்தின தும் கிரமத்தைக் கூறுவாம். ஆண்டு இருகடங்களிலேனும் சக்ஷு முதலிய இந்திரியங்களின் சம்பந்தமுளதாய பின்னர் "இது ஒரு கடம் இது ஒரு கடம்" என்பதாக இரு ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தி முதற் க்ஷணத்தி லுண்டாகின்றது, இரண்டாவது க்ஷணத்தில் அவ்விரு கடங்களில் இருமைத்தன்மை சங்கியையின் உற்பத்தியுண்டாகின்றது, அவ்விருமைத்தன்மை சங்கியைக்கு அவ்விரு கடங்களோ சமவாயி காரணமாகின்றன. அவ்விரு கடங்களிலுள்ள இரு ஏகத்வ சங்கியை அசமவாயி காரணமாகின்றது. அவ்வபேக்ஷா புத்தி நிமித்த காரணமாகின்றது. மூன்றுவது க்ஷணத்தில் விசிஷ்ட புத்தியின் காரணமாகிய விசேஷண ஞானவடிவ "த்விதவம்" என்பதாக இருமைத்தன்மைத் தன்மை தர்மத்தினை விஷயஞ்செய்யும் நிர்விகற்பக பிரத்தியக்ஷஞானம் உண்டாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அந்நிர்விகற்பக பிரத்தியக்ஷ வடிவ விசேஷணஞானத்தால் அவ்விருமைத்தன்மைத்தன்மைதர்ம விசிஷ்ட துவித்வத்தின் "இது இருமைத்தன்மை" என்பதாக சவ்விகற்பக பிரத்தியக்ஷ வடிவ விசிஷ்ட ஞான முண்டாகின்றது. அங்ஙனமே கூறிய நிர்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அவ்வபேக்ஷா புத்தியின் நாச முண்டாகின்றது. ஐந்தாவது க்ஷணத்தில் "இருகடம்" என்பதாக விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. அங்ஙனமே அவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தால் அத்துவித்வத்தின் நாசமுண்டாகின்றது. ஆண்டு ஓர் விசிஷ்ட பதார்த்தத்தில் வேறு விசிஷ்ட பதார்த்தத்தின் சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானம் யாதோ அதனை விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞான மென்பர். எங்ஙனம் கடத்வ தர்ம விசிஷ்ட கட பதார்த்தத்தில் துவித்வத்வ தர்மவிசிஷ்ட துவித்வபதார்த்தத்தின் சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய "இருகடம்" எனக் கூறிய ஞானம் விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞானமெனப் படுகின்றது. அவ்விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞானத்தில் விசேஷணத்தன்மை அவச்சேதகதர்மவிசேஷண ஞானம் காரணமாகின்றது. எங்ஙனம் "இருகடம்" என்பதான விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞானத்தில் அவ்விருகடங்களோ விசேஷியமாம். அத்துவித்வ சங்கியை விசேஷணமாம். அக்கடத்திலுள்ள விசேஷியத் தன்மையை நிரூபிக்கும் துவித்வத்திலுள்ள விசேஷணத் தன்மை யாதோ அவ்விசேஷணத் தன்மை துவித்வத்வ தர்மத்தால் அவச்சின்னமாம். ஆகையால் அத்துவித்வத்வ தர்ம விசேஷணம் துவித்வ விசேஷியமாகிய "இது இருமைத்தன்மை" என்பதான விசிஷ்ட ஞானம் யாதோ அவ்விசேஷணத்தன்மை அவச்சேதக தர்ம விசேஷண விசிஷ்ட ஞானம் கூறிய அவ்விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞானத்தில் காரணமாகின்றது. எதுவெது விசிஷ்ட ஞானமாகின்றதோ அதுவதுவு அவ்வவ் விசேஷணத்தின் ஞானத்தினனேயே ஜன்னியமாகின்றது. அவ்விசேஷணத்தின் ஞானமன்றி அவ் விசிஷ்ட ஞான முண்டாகிறதில்லை. எங்ஙனம் துவித்வத்வ தர்ம விசிஷ்ட துவித்வத்தினை விஷயஞ் செய்வதாகிய "இது இருமைத்தன்மை" எனக்கூறிய விசிஷ்டஞானம் அத்துவித்வத்வ தர்மத்தின் நிர்விகற்பக பிரத்தியக்ஷஞானத்

தால் ஜன்னியமாகின்றது. எதுவெது காரணமாகின்றதோ அதுவது தமது தமது காரியத்தின் முதற் க்ஷணத்திலிருப்பதேயாகின்றது. ஆகையால் முதற் க்ஷணத்தில் அபேக்ஷா புத்தியின் உற்பத்தி, இரண்டாவது க்ஷணத்தில் துவித்வத்தின் உற்பத்தி, முன்ருவது க்ஷணத்தில் இருமைத்தன்மைத் தன்மை தர்மத்தை விஷயஞ் செய்யும் "ஜீகுஜிகுமெகு" என்பதான நிற்விகற்பக பிரத்யக்ஷ வடிவ விசேஷண ஞானத்தின் உற்பத்தி, நான்காவது க்ஷணத்தில் அவ்விசேஷண ஞானத்தால் "இது இருமைத்தன்மை" என்பதான விசிஷ்ட பிரத்தியக்ஷ ஞானத்தின் உற்பத்தி, ஐந்தாவது க்ஷணத்தில் அவ்விசிஷ்ட ஞானத்தால் "இருகடம்" என்பதான விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ பிரத்யக்ஷத்தின் உற்பத்தி முற்கூறிய கிரமத்தால் சம்பவிக்கின்றது.

கூஎச. துவித்வத்தின் நிற்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அபேக்ஷா புத்தியின் நாசம் ஒப்புவதிலுண்டாம் தோஷத்தின் சங்கை.

சங்கை:—அவ்விருமைத்தன்மைத் தன்மையை விஷயஞ்செய்யும் நிற்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அபேக்ஷாபுத்தியின் நாசத்தை வொப்பின் அவ்வபேக்ஷா புத்தி மூன்று க்ஷணமட்டும் நிலைத்திருப்பதாகும். அது அத்தியந்த விருத்தமாம். ஏனெனின் விபுத்திரவியத்தின் யோக்கிய விசேஷ குணங்கள் யாவையோ அவ்விசேஷ குணங்கள் முன்னுள்ளதும், சுவசமானுதிகரணமுமா மித்தகைய யோக்கிய குணங்களால் நாசமாகின்றதென்பது நியாயசாஸ்திரக்காரர்களின் நியமமாம். அந்த நியமத்தால் அந்த விபுத்திரவியத்தின் விசேஷ குணங்களில் இருக்ஷணமட்டும் நிலைத்தற்றன்மையே சித்தமாகின்றது. அவ்வபேக்ஷா புத்தியும் விபு ஆத்மாவின் யோக்கிய விசேஷ குணமாம். ஆகையால் அவ்வபேக்ஷா புத்தியும் அத்துவித்வத்தின் உற்பத்தி க்ஷணத்தில் உற்பன்னமாகி ஸ்மரண ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்களால் மூன்ருவது க்ஷணத்தில் அவசியம் நஷ்டமாகும். ஆகையால் வேறு சத்தம், புத்தி முதலிய யோக்கிய விசேஷ குணங்களைப் போன்று அபேக்ஷா புத்திக்கும் இரு க்ஷணமட்டுமே நிலைத்தல் ஒப்ப வேண்டும்.

கூஎரு. துவித்வத்தின் நிற்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அபேக்ஷா புத்தியினது நாசத்தின் உற்பத்தி.

சமாதானம்:—கூறிய நியமத்தின் வலிவால் அந்த ஞான முதலியவைகட்கு இரு க்ஷணமட்டும் நிலைத்தற்றன்மையே சித்தமாகின்றது. என்ருலும் அத்துவித்வத்தின் உற்பத்தி க்ஷணத்தில் அவ்விபு ஆத்மாவில் யாதோர் யோக்கிய விசேஷ குணமும் உற்பன்னமாவதின்று. ஆகையால் அபேக்ஷா புத்தியில் மூன்று க்ஷணமட்டும் நிலைத்தற்றன்மையே கற்பிக்கப்படுவதாகின்றது. அல்லது அத்துவித்வத்தின் உற்பத்திக்ஷணத்தில் ஓர்கால் அவ்விபு ஆத்மாவில் யாதாமோர் யோக்கிய விசேஷகுணத்தின் உற்பத்தியும் அங்கீகரிக்கினும் அந்த யோக்கிய விசேஷ குணம் அபேக்ஷா புத்தியினை நாசஞ்செய்வதன்று. ஆனல் அத்துவித்வத்தின் உற்பத்தி க்ஷணத்திற்குப் பிற க்ஷணத்தில் உற்பன்னமாய அத்துவித்வத்தின் நிற்விகற்பக பிரத்தியக்ஷமே அபேக்ஷா புத்தியினை நாசஞ்செய்கின்றது. ஆகையால் அபேக்ஷா புத்தி மூன்று க்ஷணமட்டும் நிலைத்த

தாக வொப்பப்படுகின்றது. அல்லது ஓர் கால் அபேக்ஷா புத்திக்கு மூன்று க்ஷணமட்டும் நிலைத்தல் ஒப்பாவிடின் அத்துவித்வத்தின் உற்பத்தி க்ஷணத்தில் உற்பன்னமாய யாதாமோர் ஸ்மரண ஞான முதலிய விசேஷ குணங்களால் அத்துவித்வத்தின் நிற்விகற்பக பிரத்தியக்ஷ க்ஷணத்திலேயே அபேக்ஷா புத்தியின் நாசமுண்டாகும். அவ்வபேக்ஷா புத்தியின் நாசமே அத்துவித்வத்தினை நாசஞ் செய்யும். ஆகையால் எந்த க்ஷணத்தில் அத்துவித்வத்தின் சவ்விகற்பக பிரத்தியக்ஷ முண்டாகுமோ அந்த க்ஷணத்தில் அத்துவித்வத்தின் நாசமே யுண்டாகும். அத்துவித்வத்தின் நாச முண்டாக "இது துவித்வம்" என்பதாக அத்துவித்வத்தின் சவ்விகற்பக பிரத்தியக்ஷமே உண்டாகாது. ஏனெனின் இருக்கின்ற வஸ்துவின் லௌகீக பிரத்தியக்ஷமோ சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாகின்றது. இல்லாத வஸ்துவின் லௌகீக பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. இக்காரணத்தானேயே நூலாசிரியர்கள் இங்ஙனம் கூறுகின்றனர். "ஸம்பத்தம் வர்த்தமாநஞ்ச க்ருஹ்யதே சக்ஷுராதிநா" (இ-ள்.) சக்ஷு முதலிய இந்திரியங்கள் சுவசம்பந்த முடையதும், வர்த்தமானமுமாம் வஸ்துவினையே கிரஹிக்கின்றது. ஆகையால் நிற்விகற்பக பிரத்தியக்ஷத்தின் உத்தரக்ஷணத்தில் அத்துவித்வவடிவ விஷயத்தின் அபாவத்தால் "இது துவித்வம்" என்பதாக அத்துவித்வத்தின் சவ்விகற்பக பிரத்தியக்ஷம் உண்டாவதின்று. அச்சவ்விகற்பக பிரத்தியக்ஷத்தின் அபாவமுள்ளதாக "இருகடம்" என்பதாக விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ பிரத்தியக்ஷமும் உண்டாகிறதில்லை யென்பது அத்தியந்த விருத்தமாம். ஆகையால் முற்கூறிய வாற்றால் அவ்வபேக்ஷா புத்திக்கு மூன்று க்ஷணமட்டும் நிலைத்தலே ஒப்ப வேண்டும்.

## கூஎகூ. அபேக்ஷா புத்தியின் நாசத்தால் துவித்வத்தினது நாசத்தின் சாதகயுக்தி.

சங்கை:—அபேக்ஷா புத்தியின் நாசத்தால் துவித்வத்தின் நாசத்தை ஒப்பாவிடின் அனிஷ்டமாவது யாது?

சமாதானம்:—அவ்வபேக்ஷா புத்தியின் நாசந்தால் துவித்வத்தின் நாசத்தை அங்கீகரியாவிடின் அவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தின் பின்னரும் துவித்வத்தின் பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும். ஏனெனின் குணத்தின் நாசத்தில் ஆசிரய வடிவத் திரவியத்தின் நாசம் அல்லது விரோதி குணாந்தரமா மிரண்டும் காரணமாகின்றன. அவ்விரு காரணங்கள் துவித்வத்தின் நாசத்தி லின்று. அவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தின் பின்னர் அத்துவித்வத்தின் பிரத்தியக்ஷம் உண்டாவதின்று. ஆகையால் அவ்வபேக்ஷா புத்தி வடிவ நிமித்த காரணத்தின் நாசத்தானேயே துவித்வத்தின் நாசத்தை ஒப்ப வேண்டும்.

## கூஎஎ. அபேக்ஷா புத்திக்கு துவித்வத்தின் பிரத்தியக்ஷத்தில் காரணம் வொப்புவோராகிய வாதிகளின் சங்கை.

சங்கை:—அபேக்ஷா புத்தியின் அபாவ காலத்தில் துவித்வத்தினது பிரத்தியக்ஷத்தின் ஆபத்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அத்துவித்வத்திற்கு

அபேக்ஷாபுத்தி ஜன்னியம் ஒப்புவதும், அவ்வபேக்ஷா புத்தியின் நாசத்தால் அத்துவித்வத்தின் நாசம் ஒப்புவதும் அசங்கதமாம். ஏனெனின் அவ்வபேக்ஷாபுத்திக்கு அத்துவித்வத்தின் பிரத்தியக்ஷத்தைக் குறித்து காரணம் ஒப்பினும் அவ்வபேக்ஷா புத்தியின் அபாவ காலத்தில் அத்துவித்வத்தின் பிரத்தியக்ஷத்தின் ஆபத்தி நிவர்த்தமாய் விடுகின்றது. அத்துவித்வப் பிரத்தியக்ஷத்தின் ஆபத்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அத்துவித்வத்திற்கு அபேக்ஷா புத்தியால் ஜன்னியம் ஒப்புவது பயனின்மையாம். ஆகையால் அவ்வபேக்ஷா புத்தி அத்துவித்வத்தின் பிரத்தியக்ஷத்தின் காரணமேயாம். அத்துவித்வத்தின் காரணமன்றும்.

## கூஎ௯. அவ்வாதியினது சங்கையின் கண்டனம்.

சமாதானம்:—அவ்வபேக்ஷா புத்தியினை துவித்வத்தினது பிரத்தியக்ஷத்தின் காரணமாக ஒப்பின் அவ்வபேக்ஷாபுத்தியின் காரியத்தன்மையின் அவச்சேதகம் துவித்வ பிரத்தியக்ஷத்வமாகின்றது. அவ்வபேக்ஷா புத்தியினை துவித்வத்தின் காரணமாக ஒப்பின் அவ்வபேக்ஷா புத்தியின் காரியத் தன்மையின் அவச்சேதகம் துவித்வத்வ மாகின்றது. ஆண்டு துவித்வ பிரத்தியக்ஷத்வ வடிவ உபாதியின் அபேக்ஷையால் துவித்வத்வ ஜாதியினை அக்காரியத்தன்மையின் அவச்சேதகமாக ஒப்புவதில் லாகவ மிருக்கின்றது. ஆகையால் அவ்வபேக்ஷா புத்திக்கு அத்துவித்வத்தைக் குறித்தே காரணத் தன்மை யொப்புவது உசிதமாம்.

## கூஎகூ. பரமாணு, துவியணுக முதலியவைகளில் துவித்வத்தின் உற்பத்தியில் அபேக்ஷா புத்தியின் அகாரணத் தன்மையின் சங்கை.

சங்கை:—அவ்வபேக்ஷா புத்திக்கு இருமை, மும்மை முதலிய சங்கியையின் காரணத்தன்மை சம்பவியாது. ஏனெனின் பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுவும், துவியணுகமும் நம்மனோர் முதலிய ஜீவர்களின் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமன்றும். ஆகையால் பரமாணுக்களிலும், துவியணுகங்களிலும் நம்மனோர் முதலிய ஜீவர்களுக்கு "இது ஒருபரமாணு இது ஒருபரமாணு" "இது ஒருதுவியணுகம் இது ஒருதுவியணுகம் இது ஒரு துவியணுகம்" என்பதாக அபேக்ஷா புத்தி சம்பவிக்கிறதில்லை. ஆகையால் அவ்விரு பரமாணுக்களில் அத்துவித்வ சங்கியையின்உற்பத்தி உண்டாவதின்றாகும். அங்ஙனமே மூன்று துவியணுகங்களில் மும்மைச் சங்கியையின் உற்பத்தி உண்டாவதின்றாகும். ஆண்டு அவ்விரு பரமாணுக்களில் துவித்வ சங்கியையின் உற்பத்தியும், மூன்று துவியணுகங்களில் மும்மைச் சங்கியையின் உற்பத்தியும் உண்டாகா தென்பதான இஷ்டாபத்தியைச் செய்யின் துவியணுகத்தில் மத்தியம அணுத்வ பரிமாணத்தின் உற்பத்தியும், திரியணுகத்தில் அபகிருஷ்ட மத்தியம மஹத்வ பரிமாணத்தின் உற்பத்தியும் உண்டாகாததாகும். ஏனெனின் எதுவெது பாவ காரியமாகின்றதோ அதுவது சமவாயிகாரணம், அசமவாயிகாரணம், நிமித்த காரணமென்னும் மூன்று காரணங்களானேயே உண்டாவதாகின்றது. அம்மூன்று காரணங்களின்றி ஓர் பாவ காரியத்தின் உற்பத்தியும் உண்டாகிறதில்லை. பாவ

காரிய வடிவத்தன்மை துவியணுகத்தின் பரிமாணத்திலும், திரியணுகத்தின் பரிமாணத்திலு மிருக்கின்றது. ஆகையால் துவியணுகத்தின் பரிமாணமும், திரியணுகத்தின்பரிமாணமும் யாதாமோர் அசமவாயிகாரணத்தால் அவசியம் ஜன்னியமாவதாகும். ஆண்டு எங்ஙனம் கட முதலிய அவயவிகளின் பரிமாணத்தில் கபால்முதலிய அவயவிகளின் பரிமாணத்திற்கு அசமவாயிகாரணத்தன்மை யுண்டாகின்றதோ அங்ஙனமே அப்பரமாணுக்களின் பரிமாணத்திற்கு அத்துவியணுகத்தின் பரிமாணத்தினதும், அத்துவியணுகங்களின் பரிமாணத்திற்கு திரியணுகங்களின் பரிமாணத்தினதும் அசமவாயிகாரணத் தன்மைச் சம்பவியாது. ஏனெனின் அந்த பரிமாணத்திற்கு தனது சமான ஜாதியுடையதும், தன்னினும் உயர்ந்ததுமாகிய பரிமாணத்தையே உண்டாக்குந் தன்மை உண்டாகின்றது. எங்ஙனம்: கபாலங்களின் மஹத்வ பரிமாணம் மஹத்வத்வ வடிவத்தால் தனது சமானஜாதியுடையதும், தன்னினும் உயர்ந்ததுமாகிய கடத்தின் மஹத்வ பரிமாணத்தை உண்டாக்குவதாகின்றது. ஆண்டு பரமாணுக்களின் அணுப்பரிமாணத்தை அத்துவியணுகத்தின்பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாக் ஒப்பின் துவியணுகத்தின் பரிமாணம் அணுதரமாகும். துவியணுகத்தின் பரிமாணத்தை திரியணுகத்தினது பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாக ஒப்பின் அத்திரியணுகத்தின் பரிமாணம் அணுதமமாகும். அதனால் திரியணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமே யுண்டாகாததாகும். எக்காரணத்தாலெனின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் மஹத்வ சமானதிகரண உத்பூத உருவத்திற்கே காரணத்தன்மை யுண்டாகின்றது. அம் மஹத்வமின்றி எவ்வாற்றானும் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அத்திரியணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் அத்துவியணுகத்தின் பரிமாணமும், திரியணுகத்தின் பரிமாணமும் பரமாணு துவியணுக வடிவ அவ்யவங்களின் பரிமாணத்தால் ஜன்னியமன்றும். ஆனால் அவ்விரு பரமாணுவிலுள்ள துவித்வ சங்கியையே அத்துவியணுகத்தின் பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாம். மூன்று துவியணுகங்களிலுள்ள மும்மைச் சங்கியை அத்திரியணுகத்தின் பரிமாணத்திற்கு அசமவாயி காரணமா மென்னுமிது அவசியம் ஒப்பபப்படுவதாகும். ஆண்டு அவ்விரு பரமாணுவிலுள்ள துவித்வ சங்கியையைக் குறித்தும், அம்மூன்று துவியணுகங்களிலுள்ள மும்மைச் சங்கியையைக் குறித்தும் அவ்வபேக்ஷா புத்திக்கு அகாரணத் தன்மை யுண்டாவதால் யாதாமோர் இருமை, மும்மை முதலிய சங்கியையைக் குறித்து அவ்வபேக்ஷா புத்திக்கு காரணத்தன்மை சம்பவியாது.

சமாதானம்:—நம்மனோர் முதலியவர்கட்கு அப்பரமாணுக்களின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. என்றாலும் யோகி புருஷர்கட்கு அப்பரமாணுக்களின் பிரத்தியக்ஷமும் உண்டாகின்றது. ஆகையால் யோகி புருஷர்களின் அபேக்ஷா புத்தியினனேயே அவ்விரு பரமாணுக்களில் துவித்வ சங்கியையின் உற்பத்தியும், மூன்று துவியணுகங்களில் மும்மைச் சங்கியையின் உற்பத்தியும் உண்டாகின்றது. யோகி புருஷர்களின் அபேக்ஷா புத்தியின் நாசத்தானேயே இருமை, மும்மைச் சங்கியையின் நாசமுண்டாகின்றது.

சங்கை:—ஜகத்தின் இருப்பு காலத்தில் யோகி புருஷர்களின் இருப்புளதாவதால் யோகி புருஷர்களின் அபேக்ஷா புத்தியால் அவ்விருபரமாணுக்களில் துவித்வசங்கியையின் உற்பத்தியும், மூன்று துவியணுகங்களில் மும்மைச் சங்கியையின்உற்பத்தியும் சம்பவிக்கின்றது. என்றாலும் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் யோகி புருஷர்களின்றும். ஆகையால் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் பரமாணு துவியணுகங்களில் இருமை, மும்மைச் சங்கியையின் உற்பத்தி உண்டாவதின்றாகும்.

சமாதானம்:—சிருஷ்டியின் ஆதிகாலத்தில் யோகி புருஷர்களின் அபாவமுளதாயினும் ஈஸ்வரனதிருப்புளதாம். அவ்வீசுவரனுக்கு அப்பரமாணு, துவியணுக முதலிய எல்லா பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆகையால் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஈசுவரனது அபேக்ஷா புத்தியினுனேயே அப்பரமாணு, துவியணுகங்களில் இருமை, மும்மைச் சங்கியையின் உற்பத்தி யுண்டாகின்றது.

## கூ௪௰. சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஈசுவரனது அபேக்ஷாபுத்தியால் பரமாணுக்களில் துவித்வத்தின் உற்பத்தியின் சங்கை.

சங்கை:—சிருஷ்டியின் ஆதிகாலத்தில் அப்பரமாணு, துவியணுகங்களில் ஈசுவரனது அபேக்ஷா புத்தியால் இருமை, மும்மைச் சங்கியையின் உற்பத்தியை யொப்பின் இருமை, மும்மைச் சங்கியையின் நாசம் உண்டாகாததாகும். ஏனெனின் ஈசுவரனது அபேக்ஷா புத்தி நித்தியமாமாகையால் அதனது நாசம் சம்பவியாது. அபேக்ஷா புத்தியின் நாசத்தானேயே அத்துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை நீவிர் ஒப்புகின்றீர்.

சமாதானம்:—ஈசுவரனது அபேக்ஷா புத்தி க்ஷண விசேஷத்தோடு கூடியதாகியே இரு பரமாணுக்களில் துவித்வத்தினை உற்பத்தி செய்கின்றது. சஹகாரி க்ஷணமின்றி ஈசுவரனது அபேக்ஷா புத்தி துவித்வத்தை உண்டாக்குவதாகாது. ஓர் கால் அவ்வபேக்ஷா புத்திக்கு அக்ஷண விசேஷ சஹகாரியை ஒப்பாவிடின் சிருஷ்டி காலத்திற்கு முன் பிரளய காலத்திலும் அவ்வபேக்ஷா புத்தியால் அத்துவித்வத்தின் உற்பத்தி யுண்டாக வேண்டும். அங்ஙனம் உண்டாவதின்று. ஆகையால் ஈசுவரனது அபேக்ஷா புத்தியின் நாசமுண்டாகாவிடினும் அச்சஹகாரி க்ஷணவிசேஷத்தின் நாசத்தால் இருமை, மும்மைச் சங்கியையின் நாசம் சமபவிக்கின்றது.

சங்கை:—அச்சஹகாரி க்ஷண விசேஷத்தின் நாசத்தானேயே இருமை, மும்மைச்சங்கியையின்நாசத்தை ஒப்பின் அபேக்ஷா புத்தியின் நாசத்தானேயே அத்துவித்வ முதலிய சங்கியையின் நாச முண்டாகின்றதென முற்கூறிய உமது பிரதிஞ்ஞா ஹானி யுண்டாகும்.

## கூ௪௧. சஹகாரி க்ஷண விசேஷத்தின் நாசத்தால் அத்துவித்வத்தினது நாசத்தின் சித்தி.

சமாதானம்:—ஓர் கால் யாண்டும் அபேக்ஷா புத்தியின் நாசத்தானேயே அத்துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை ஒப்பின் அபேக்ஷா

புத்தி ஜன்னிய துவித்வத்தின் உற்பத்தியினும் முதற் க்ஷணத்தில் அத்துவித்வத்தின் ஆசிரயமாகிய திரவியங்களின் நாசம் யாண்டுண்டாகின்றதோ ஆண்டு அவ்வபேக்ஷாபுத்தியின் நாசமின்றியே அத்துவித்வத்தின் நாச முண்டாய்விடுகின்றதென்பது உண்டாகாததாகவேண்டும். ஆகையால் அவ்வபேக்ஷா புத்தியின் நாசம் எங்ஙனம் ஆசிரய திரவியத்தின் நாசத்தின் உபலக்ஷணமாமோ அங்ஙனமே அச்சஹகாரி க்ஷண விசேஷத்தின் நாசத்திற்கும் உபலக்ஷணமாம். அதாவது சில துவித்வ முதலிய சங்கியையின் நாசமோ அபேக்ஷா புத்தியின் நாசத்தால் உண்டாகின்றது. சில துவித்வமுதலிய சங்கியையின் நாசம் ஆசிரய திரவியத்தின் நாசத்தாலுண்டாகின்றது. சில துவித்வ முதலிய சங்கியையின் நாசம் சஹகாரி க்ஷண விசேஷத்தின் நாசத்தா லுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய பிரதிஞ்ஞையின் ஹானி உண்டாகாது.

### கூ௮௨. அபேக்ஷாபுத்தியின் நாசத்தினைப்போன்று அதிர்ஷ்ட விசேஷ நாசத்திற்கும், ஆசிரய திரவியத்தின் நாசத்திற்கும் துவித்வத்தின் நாசத்தின் காரணத்தன்மையின் வர்ணனம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். ஜீவர்களின் புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டமின்றி யாதோர் காரியத்தின் உற்பத்தியுமுண்டாகாது. ஆகையால் ஈசுவரனது அபேக்ஷா புத்தி ஜன்னியபரமாணுக்களிலுள்ள துவித்வ சங்கியை அவ்வதிர்ஷ்டத்தின் நாசத்தானேயே நாசமாகின்றது. ஆகையால் அபேக்ஷா புத்தியின் நாசம் எங்ஙனம் அவ்வாசிரய திரவியத்தின் நாசத்தின் உபலக்ஷணமாமோ அங்ஙனமே அவ்வதிர்ஷ்டத்தின் நாசத்தின் உபலக்ஷணமுமாம்.

### கூ௮௩. அதிர்ஷ்டத்தின் நாசத்தால் துவித்வத்தின் நாசத்தை ஒப்புவோராகிய வாதிகளின் மத வர்ணனம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். சிலவிடத்தோ அபேக்ஷா புத்தியின் நாசத்தால் துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை ஒப்புவதும், சிலவிடத்து ஆசிரய திரவியத்தின் நாசத்தால் துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை வொப்புவதும், சிலவிடத்து அதிர்ஷ்டத்தின் நாசத்தால் துவித்வ முதலியசங்கியையின் நாசத்தை ஒப்புவதுமாமிதனிடத்து அத்தியந்த கௌரவ முண்டாகின்றது. ஆகையால் லாகவத்தால் யாண்டும் அதிர்ஷ்டத்தின் நாசத்தானேயே துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை ஒப்புவது உசிதமாம். அவ்வதிர்ஷ்டத்தின் நாசத்தால் துவித்வ முதலிய சங்கியையின் நாசத்தை ஒப்புவதில் முற்கூறிய நியமத்தின் சங்கோசத்தால் அவ்வபேக்ஷா புத்தியில் மூன்று க்ஷணமட்டும் நிலைத்தற் றன்மையும் கற்பிக்கப் படவேண்டுவதின்று. ஆனால் எங்ஙனம் வேறு சத்த ஞான முதலியன யோக்கிய விபு விசேஷ குணமாவதால் இருக்ஷணமட்டும் நிலைப்பனவாமோ அங்ஙனமே அவ்வபேக்ஷா புத்தியும் யோக்கிய விபு விசேஷ குணமாவதால் இருக்ஷணமட்டுமே நிலைப்பதாகின்றது.

## ௬௪. சிருஷ்டியின் ஆதிகாலத்தில் வேறு பிரம்மாண்டத்திலிருக்கும் யோகியின் அபேக்ஷா புத்தியால் பரமாணுக்களில் துவித்வ முதலியவைகளின் உற்பத்தியை வொப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். சிருஷ்டியின் ஆதிகாலத்தில் அதீந்திரிய பரமாணு, துவியணுகங்களில் இருமை, மும்மைச் சங்கியையின் உற்பத்தி உண்டாவதுயாதோ அது ஈசுவரனது அபேக்ஷாபுத்தியால் அல்லது நம்மனோர் முதலியவர்களின் அபேக்ஷா புத்தியால் அல்லது இப்பிரம்மாண்டத்திலுள்ள யோகிகளின் அபேக்ஷா புத்தியால் உண்டாகிறதில்லை. ஆனால் வேறு பிரம்மாண்டத்திலுள்ள யோகிகளது அபேக்ஷா புத்தியானேயே யுண்டாகின்றது. அந்தயோகிகளது அபேக்ஷாபுத்தியின் நாசத்தானேயே இருமை, மும்மைச் சங்கியையின் நாசமுண்டாகின்றது. ஆகையால் அவ்வபேக்ஷாபுத்தியின் நாசம் கேவலம் ஆசிரய திரவியத்தின் நாசத்தின் உபலக்ஷணமேயாம். அக்ஷண விசேஷத்தின் நாசத்திற்கு அல்லது அதிர்ஷ்டத்தின் நாசத்திற்கு உபலக்ஷணமன்றும்.

## ௬௫. அபேக்ஷாபுத்திக்கு இருக்ஷணம் நிலேத்தல் ஒப்புவோராகிய நவீன நையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமோ யிதுவாம். கூறிய அவ்வபேக்ஷா புத்தியால் இரு கடங்களில் உண்டாவதாகிய துவித்வத்திற்கு துவித்வத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் முன்னரே புருஷனுக்கு அலௌகிக பிரத்தியக்ஷ வடிவ அநுபவமுண்டாகின்றது. ஆகையால் எந்த க்ஷணத்தில் துவித்வத்தின் உற்பத்தியுண்டாகின்றதோ அந்தக்ஷணத்தில் புருஷனுக்கு முன் அனுபவ ஜன்னிய சம்ஸ்காரங்களால் விசேஷண துவித்வத்வ தர்மத்தின்ஸ்மரணமுண்டாகின்றது. அத்துவித்வத்தின்ஸ்மரணமேஅவ்வபேக்ஷா புத்தியின் நாசமும் "இருகடம்" என்பதாக விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ ஞானத்தின் ஜனகமு மாகின்றது. ஆகையால் அத்துவித்வத்தின் ஸ்மரணத்திற்குப் பிற்க்ஷணத்திலேயே அவ்வபேக்ஷா புத்தியின் நாச முண்டாகின்றது. அங்ஙனமே "இருகடம்" என்பதாக விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ லௌகிக பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதனினும் பிற க்ஷணத்தில் அவ்வபேக்ஷாபுத்தியின் நாசத்தால் துவித்வத்தின் நாசமுண்டாகின்றது. ஆகையால் இங்கியமம் சித்தித்தது. முதற் க்ஷணத்தில் அபேக்ஷாபுத்தியின் உற்பத்தியும், இரண்டாவது க்ஷணத்தில் துவித்வத்தின் உற்பத்தியும் துவித்வத்தின் ஸ்மரண ஞானமும், மூன்ருவது க்ஷணத்தில் அபேக்ஷாபுத்தியின் நாசமும் "இருகடம்" என்பதான விசிஷ்டவைசிஷ்டயாவகாஹீ லௌகிக பிரத்தியக்ஷமும், நான்காவது க்ஷணத்தில் துவித்வத்தின் நாசமுமாம். இம்முறையாக அவ்வபேக்ஷா புத்தியினை இருக்ஷணமட்டும் நிலேப்பதாக ஒப்புவதாலும் துவித்வத்தின் பிரத்தியக்ஷஞானமுண்டாய் விடுகின்றது. ஆகையால் துவித்வத்தின் பிரத்தியக்ஷத்தின்பொருட்டு அவ்வபேக்ஷாபுத்தியினை மூன்றுக்ஷணமட்டும் நிலேப்பதாக வொப்புவது வீணும். ஓர்கால் முற்கூறியவாற்ருல் துவித்வத்தினது பிரத்தி

யக்ஷத்தின்பொருட்டு அவ்வபேக்ஷாபுத்தியினை மூன்றுக்ஷணமட்டும் நிலைப்ப தாக ஒப்பின் அவ்வபேக்ஷா புத்தியினைப் போன்று வேறு சுக, துக்க, சத்த முதலிய விபு விசேஷ குணங்கட்கும் மூன்று க்ஷணமட்டும் நிலைத்தற் றன்மைச் சித்தமாகும். ஏனெனின் முதற் க்ஷணத்தில் சுகத்தின் உற்பத்தி, இரண்டாம் க்ஷணத்தில் சுகத்வ தர்மத்தின் நிர்விகற்பக பிரத்தியக்ஷம், மூன்றும் க்ஷணத்தில் நிர்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அச்சுகத்தின் நாசமே உண்டாகும். அச்சுக வடிவ விஷயத்தின் அபாவமுளதாக மூன்றுவது க்ஷணத்தில் "யான் சுகி" என்பதான அச்சுகத்தின் லௌகிக பிரத்தியக்ஷமே சம்பவியாததாகும். "யான் சுகி யான் துக்கி" என்பதாக அச்சுக, துக்க முதலியவைகளின் லௌகிக பிரத்தியக்ஷம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. ஆகையால் அந்த பிரத்தியக்ஷத்தின் பொருட்டு அச்சுக, துக்க முதலியவைகட்கும் மூன்று க்ஷணமட்டும் நிலைத்தலை யொப்பவேண்டும். மூன்று க்ஷணமட்டும் அச்சுக, துக்க முதலியவைகளின் நிலைத்தற் றன்மையில் உமது பிராசீன நையாயிகர்கட்கும் அங்கீகாரமின்றும். ஆனல் இரு க்ஷணமட்டும் அச்சுக, துக்க முதலியவைகளின் நிலைத்தற் றன்மையிலேயே உமக்கும் அங்கீகாரமாம். அங்ஙனமே அவ்வபேக்ஷா புத்தியினையுங் கூறிய முறைப்படி இரு க்ஷணமட்டும் நிலைப்பதாகவே யொப்பவேண்டும்.

### கூ௮கூ. நியதமில்லாத ஏகத்வத்தினை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷாபுத்தியினிடத்து துவித்வத்வ முதலிய நியதமாய சங்கியையினது உற்பத்தியின் அபாவத்தினது சங்கை.

சங்கை:—எவ்விடத்தில் அவ்வபேக்ஷா புத்தி நியமத்தால் இரு ஏகத்வங்களை, அல்லது மூன்று ஏகத்வங்களை, அல்லது ஐந்து ஏகத்வங்களை, அல்லது அயிரம் ஏகத்வங்களை விஷயஞ் செய்கின்றதோ அவ்விடத்திலோ அபேக்ஷாபுத்தியால் நியமமாக இருமை சங்கியை, அல்லது மும்மைச்சங்கியை, அல்லது ஐந்தென்னும் சங்கியை, அல்லது ஆயிரத்வ சங்கியை உண்டாவதாகின்றது. அதனல் யாண்டு நியமமாக அவ்வனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷாபுத்தி உண்டாவதின்றுமோ ஆண்டு நியமமின்றியே அவ்வனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அவ்வபேக்ஷாபுத்தியுண்டாகின்றது. எங்ஙனம்: சேனையினும், வனதிகளிலும் நியமமின்றியே அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அவ்வபேக்ஷா புத்தி யுண்டாகின்றது. அவ்விடத்தில் எச்சங்கியை உண்டாவதாகின்றதென்னும் சங்கை யுண்டாக கந்தலீகாரரின் மதத்தைக் கூறுவாம்.

### கூ௮௭. அவ்விடத்தில் மும்மைத்தன்மை முதலிய சங்கியையினும் வேறான அனேகத்வ சங்கியையின் உற்பத்தியை யொப்புவோராகிய கந்தலீகாரரின் மதம்.

ஆண்டு கந்தலீகாரரோ இது கூறுகின்றனர். எச்சேனை, வன முதலியவைகளில் நியதமிலாத அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அவ்வபேக்ஷா புத்தி யுண்டாகின்றதோ அச்சேனை, வன முதலியவைகளில் அவ்

வபேக்ஷா புத்தியால் மும்மைத்வம், பஞ்சத்வம், ஆயிரத்வம் முதலிய நியத சங்கியை உண்டாவதின்று. ஆனுல் மும்மைத்வம் முதலிய சங்கியையினும் வேருக அனேக சங்கியை ஒன்று உண்டாவதாகின்றது.

### கூ௮௮. அனேகத்தன்மை சங்கியைக்கு மும்மைத்வ முதலிய சங்கியை வடிவம் ஒப்புவோராகிய உதயனுசாரியரின் மதம்.

உதயனுசாரியரோ இது கூறுகின்றனர். மும்மைத்வம், பஞ்சத்வம், ஆயிரத் தன்மை முதலிய சங்கியையினும் அவ்வனேகத்வ சங்கியை வேறன்றும். ஆனுல் அவ்வனேகத்வ சங்கியை மும்மைத்வ முதலிய சங்கியா வடிவமேயாம். அதாவது மும்மைத்வ முதலாக பரார்த்த பரியந்தமா மெல்லாச் சங்கியையில் அவ்வனேகத்வத் தன்மையிருக்கின்றது. ஆகையால் அவ்வனேகத்வத் தன்மை ஜாதி மும்மைத்வ முதலிய ஜாதியின் வியாபகமாம். எச்சேனை, வன முதலியவைகளில் நியதமில்லாத அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தியுண்டாகின்றதோ அச்சேனை, வன முதலியவைகளிலும் அவ்வபேக்ஷா புத்தியால் மும்மைத்வ முதலிய சங்கியையோ உண்டாகின்றது. ஆனுல் தோஷத்தின் வசத்தால் மும்மைத்வ முதலிய சங்கியையில் மும்மைத்வ முதலியவைகளின் ஞானம் உண்டாகிறதில்லை. ஆண்டு நியதமாகிய அனேக ஏகத்வங்களின் ஞானத்தின் அபாவம் யாதாமோ அவ்வபாவமே ஆண்டு தோஷ வடிவமாக அறிக. கருத்திதுவாம்; நியதமில்லாத அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்திக்கு மும்மைத்வ முதலிய சங்கியையின் உற்பத்தியினது காரணத்தன்மை யுளதாயினும் மும்மைத்வ முதலிய சங்கியையின் மும்மைத்வ முதலிய விசேஷண பிரத்தியக்ஷத்தில் நியதமாகிய அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்யும் ஞானத்திற்கே காரணத்தன்மை யுண்டாகின்றது. நியதமாகிய அனேக ஏகத்வங்களை விஷயஞ் செய்யும் ஞானமன்றி மும்மைத்வ முதலிய விசேஷண பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை.

சங்கை:—அவ்வனேகத்வ சங்கியையினை மும்மைத்வ முதலிய சங்கியா வடிவமாக வொப்பின் எச்சேனை, வன முதலியவைகளில் அவ்வனேகத்வத்தின் நிச்சய முண்டாகின்றதோ அச்சேனை, வன முதலியவைகளில் மும்மைத்வ முதலிய சங்கியையின் சம்சயம் உண்டாகாததாக வேண்டும். ஆண்டு மும்மைத்வ முதலிய சங்கியையின் சம்சயம் உலகர் யாவருக்கும் அனுபவ சித்தமாம்.

சமாதானம்:—சமான தர்ம விசேஷண நிச்சயமே அச்சம்சயத்தின் விரோதியாகின்றது. வேறு தர்ம விசேஷண நிச்சயம் வேறு தர்ம விசேஷண சம்சயத்தின் விரோதியாவதன்று. ஆகையால் அவ்வனேகத்வத் தன்மை தர்ம விசேஷண நிச்சயத்திற்கு மும்மைத்வ முதலிய தர்மவிசேஷண சம்சயத்தின் விரோதித்தன்மையே யின்றும். ஆகையால் அச்சேனை, வனமுதலியவைகளில் அவ்வனேகத்வத் தன்மையின் நிச்சய முளதாயினும் மும்மைத்வ முதலிய

சம்சயம் சம்பவிக்கின்றது. அல்லது "ஐதெர்வைஷா-த்ரெயம்ஷோநா" (இ-ள்.) இச்சேனையிலும் இச்சேனை அனேகதரமாம். என்பதான தோற்றம் உலகவருக்கு உண்டாகின்றது. அத்தோற்றத்தால் அவ்வனேகத்தன்மையில் சுவசஜாதியை நிரூபிக்கும் உத்கிருஷ்ட (உயர்வு)த்தன்மை தோற்றமாகின்றது. ஆண்டு அவ்வனேகத்வ சங்கியைக்கு மும்மைத்வ முதலிய சங்கியா வடிவ் மொப்பின் சதுஷ்டாதி வடிவ அனேகத்தன்மையில் மும்மையாதி வடிவ் சுவசஜாதீயத்தை நிரூபிக்கும் உத்கிருஷ்டத்தன்மை இருப்பதாகின்றது. ஆகையால் கூறிய அத்தோற்றம் சம்பவிக்கின்றது. அவ்வனேகத்வ சங்கியையினை மும்மைத்வ முதலிய சங்கியையினும் வேறாக வொப்பின் ஓர் வடிவமா மனேகத்வ சங்கியையில் குறைவு அதிகத்தன்மையின் அபா வத்தால் சுவசஜாதீயத்தை நிரூபிக்கும் உத்கிருஷ்டத்தன்மை சம்பவியாது. ஆகையால் உமது மதத்திற் கூறிய அத்தோற்றம் சம்பவியாததாகும். ஆகை யால் கூறிய அத்தோற்றத்தின் வலிவால் அவ்வனேகத்வ சங்கியைக்கு மும் மைத்வ முதலிய வடிவமே ஒப்ப வேண்டும். சங்கியா நிரூபணம் முற்றிற்று.

## ௬௨௧. பரிமாண குணத்தின் நிரூபணம்.

பரிமாண குணத்தின் லக்ஷணம். ஆண்டு "மாநவ்யவஹாரவிஷயவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத்பரிமாணம்" (இ-ள்.) பருமை வியவஹாரத்தின் விஷயத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் பரிமாண மெனப்படுகின்றது. ஆண்டு "இது நுண்மை, இது பெருமை, இது நெடுமை, இது குறுமை" என்பதான பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் யாதாமோ அந்த பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் முறையாக நுண்மை, பெருமை, நெடுமை, குறுமை வடிவ பரிமாணத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அந்நான்கு வகை பரிமாணம் பருமை வியவஹாரத்தின் விஷயமெனப் படுகின்றது. இத்தகைய பருமை வியவஹாரத்தின் விஷய வடிவ பரிமாணத் தில் இருப்பது பரிமாணத்தன்மை ஜாதியாம். அப்பரிமாணத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய பரிமாணத் தன்மை ஜாதியுடையது அந்நான்கு வகையாகிய பரிமாணமாம். ஆகையால் கூறிய இப்பரிமாணத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மை யின் வியாப்பிய ஜாதியுடையது பரிமாணம்" என இம்மாத்திரமே பரிமாணத் தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "பருமை வியவஹார விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள்கூறுவிடின் உருவமுதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் பரிமாணம் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய பரிமாணத்தன்மை ஜாதியுடையதாமோ அங்ஙனமே உருவ முதலிய குணங்களும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளுடையனவேயாம். ஆகையால் அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பருமை வியவஹார விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் பருமை வியவஹாரத்தின்

விஷயமாகிய பரிமாணத்தில் இருப்பனவன்றும். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பருமை வியவஹார விஷயத்திலிருக்கும் ஜாதியுடையது பரிமாணம்" என இம்மாத் திரமே அப்பரிமாணத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் பரிமாணத்தில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக்கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தாஜாதியைக்கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த் திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத் தன்மை ஜாதியைக்கொண்டு உருவ முதலிய எல்லா குணங்களிலும், சத்தா ஜாதியைக்கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் பரிமாணத்தின் லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௬௯௦. அப்பரிமாணத்தின் ஆசிரயத்தினதும், நுண்மை, பெருமை, நெடுமை, குறுமையாம் நால்வகையான வேற்றுமையினதும் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித பரிமாண குணம் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே யிருக்கின்றது. அப்பரிமாண குணம் நுண்மை, பெருமை, குறுமை, நெடுமை என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். அந்நான்கு வகையாய் பரிமாணமே பரமம், மத்யமம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். அதாவது; பரம நுண்மை, மத்யம நுண்மை, பரம பெருமை, மத்யம பெருமை, பரம நெடுமை, மத்யம நெடுமை, பரம குறுமை, மத்யம குறுமை என வழங்கப்படும்.

### ௬௯௧. நான்குவகைத்தாய பரிமாணத்தினது ஆசிரயத்தின் விவஸ்தையின் வர்ணனம்.

ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயுவா மிந்நான்கு பூதங்களின் பர மாணுக்களிலும், மனதிலுமோ பரம நுண்மை பரிமாணமும், பரம குறுமை பரிமாணமு மிருக்கின்றது. பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் துவியணு கங்களிலோ மத்யம நுண்மை பரிமாணமும், மத்யம குறுமை பரிமாணமு மிருக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவா மிந்நான்கு திரவியங்க ளிலோ பரம பெருமை பரிமாணமும், பரம நெடுமை பரிமாணமு மிருக்கின் றது. பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் திரியணுக முதலாக கட, பட முதலிய எல்லாக் காரிய திரவியங்களிலோ மத்யம பெருமை பரிமாணமும், மத்யம நெடுமை பரிமாணமும் இருக்கின்றது.

கூகூஉ. பரமாணுவினும் வேறான திரவியங்களிலும் பரமநுண்மை, பரமகுறுமை பரிமாணத்தின் ஸ்திதியின் சங்கை.

சங்கை :—நுண்மை, குறுமை பரிமாணம் ஓர் கால் பரமாணு, மனம், துவியணுகமா மிம்மூன்றி னிடத்தே யிருந்து அம்மூன்றினும் வேறான எத் திரவியத்திலும் இராததாயின் இம்முத்தினும் இம்முத்து நுண்மையாம் என்பதான நுண்மை வியவஹாரம் முத்தினிடத்து உண்டாகாததாக வேண்டும். துவஜத்தினும் (கொடியினும்) விசிறி குறிகியதாம் என்பதான வியவஹாரம் விசிறியினிடத்து உண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின் உம்து மதத்தில் அம்முத்தினிடத்தில் அவ்வணுத்வ பரிமாண மின்றும் அங்ஙனமே விசிறியில் குறுமை பரிமாணமின்றும். கூறிய அவ்வியவஹாரமோர் உலகத் தில் பிரசித்தமாகின்றது. ஆகையால் அவ்வுலக வியவஹாரத்தின் வலிவால் பரமாணு, மனம், துவியணுகம் இம்மூன்றினும் வேறான அம்முத்து, விசிறி முதலிய திரவியங்களிலும் நுண்மை, குறுமைகளை அங்கீகரிக்கவேண்டும்.

கூகூ௩. அபகிருஷ்ட மஹத்வ முத்லாக நுண்மை, குறுமை வியவஹாரத்தின் சித்தி.

சமாதானம் :—அம்முத்தினிடத்து நுண்மை வியவஹாரமுண்டாவது யாதோ அது நுண்மை பரிமாணத்தைக்கொண்டு உண்டாகிறதில்லை. ஆனல் அம்முத்தினிடத்து வேறு முத்தின் அபேக்ஷையால் அபகிருஷ்ட பெருமை யிருக்கின்றது. அந்த அபகிருஷ்ட பெருமையைக்கொண்டு அம்முத்தினிடத்து நுண்மை வியவஹார முண்டாகின்றது. ஆகையால் அந்த நுண்மை வியவ ஹாரம் "ஸிம்ஹோதேவதத்தஃ" என்பதான வியவஹாரத்தினைப் போன்று கௌணமாம். அதாவது எங்ஙனம் "ஸிம்ஹோதேவதத்தஃ" என்பதான கௌண வியவஹாரத்தால் தேவதத்தனென்பெயரிய புருஷனிடத்து ஸிம்மத் தன்மை சித்தமாவதின்றோ அங்ஙனமே கூறிய வியவஹாரத்தால் அம்முத்தி னிடத்து அந்த நுண்மை சித்தமாகிறதில்லை. இவ்வாறாக விசிறியினிடத்து குறுமை வியவஹார முண்டாவது யாதோ அதுவும் குறுமை பரிமாணத் தைக்கொண்டு உண்டாகிறதில்லை, ஆனல் விசிறியில் துவஜத்தின் அபேக்ஷை யால் அபகிருஷ்ட நெடுமை இருக்கின்றது. அவ்வபகிருஷ்ட நெடுமை தர் மத்தைக்கொண்டே விசிறியில் குறுமை வியவஹார முண்டாகின்றது. ஆகை யால் அக்குறுமை வியவஹாரமும் "ஸிம்ஹோதேவதத்தஃ" என்பதான வியவ ஹாரத்தினைப்போன்று கௌணமாம், அக்கௌண வியவஹாரத்தால் விசிறியி னிடத்து குறுமை பரிமாணம் சித்திப்பதின்று.

கூகூ௪. நுண்மை பரிமாணத்தில் குறுமை பரிமாணத்தின் அடக்கமும், மஹத்வ பரிமாணத்தில் நெடுமை பரிமாணத்தின் அடக்கமும் ஒப்புவோராகிய வாதிகளின் சங்கை.

சங்கை :—நுண்மை பரிமாணத்தினும் குறுமை பரிமாணம் வேறன் றும். நுண்மை பரிமாணமே குறுமை பரிமாணவடிவமாம். அங்ஙனமே அம் மஹத்வ பரிமாணத்தினும் நெடுமை பரிமாணம் வேறன்றும். அம்மஹத்வபரி மாணமே நெடுமை பரிமாண வடிவமாம். ஆகையால் நுண்மை, பெருமை

யென்னும் வேறுபாட்டால் அப்பரிமாணம் இருவிதமாகவே சித்தமாகின்றது. முற்கூறிய நான்குவகையாய பரிமாணம் சித்தமாவதின்று.

### ௩௬௫. அந்நான்கு பரிமாணங்களின் வெவ்வேறுந் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம்:—எத்திரவியத்தின் அபேக்ஷையால் எத்திரவியம் நுண்மை வடிவமாக தோற்றுகின்றதோ அத்திரவியத்தின் அபேக்ஷையால் அத்திரவியத்தில் குறுமை வியவஹார முண்டாவதின்று. ஆகையால் இது அறியப்படுகின்றது. குறுமைபரிமாணம் நுண்மைபரிமாணத்தினும் வேறாம். எத்திரவியத்தின் அபேக்ஷையால் எத்திரவியம் மஹத்வவடிவமாக தோற்றுகின்றதோ அத்திரவியத்தின் அபேக்ஷையால் அத்திரவியத்தில் நெடுமை வியவஹார முண்டாவதின்று. ஆகையால் இது அறியப்படுகின்றது. நெடுமை பரிமாணம் மஹத்வபரிமாணத்தினும் வேறாம். ஆகையால் முற்கூறிய நான்குவித பரிமாணமே சம்பவிக்கின்றது.

### ௩௬௬. நித்திய, அநித்திய வேறுபாட்டால் மீண்டும் கூறிய பரிமாணத்தின் இருவித வேற்றுமை.

அல்லது கூறிய பரிமாணகுணம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். ஆண்டு நித்தியத் திரவியங்களிலுள்ள பரிமாணம் நித்தியமெனப்படுகின்றது. அதாவது; பிருதிவி முதலிய நான்குபூதங்களின் பரமாணுக்களிலும், மனதிலும் உள்ள பரமநுண்மை பரிமாணமும், பரமகுறுமை பரிமாணமும் அங்ஙனமே ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா இந்நான்கிலுள்ள பரம மஹத்வ பரிமாணமும், பரம நெடுமை பரிமாணமும் நித்தியமெனப்படுகின்றது. அநித்திய திரவியங்களிலுள்ள பரிமாணம் அநித்தியமெனப்படுகின்றது. அதாவது; பிருதிவி முதலிய நான்குபூதங்களின் துவியணுகங்களிலுள்ள மத்யம நுண்மைபரிமாணமும், மத்யம குறுமை பரிமாணமும் அங்ஙனமே திரியணுகமுதலாக கட, பட முதலியத் திரவியங்களிலுள்ள மத்யம மஹத்வ பரிமாணமும், மத்யம நெடுமை பரிமாணமும் அநித்தியமெனப்படுகின்றது.

### ௩௬௭. அநித்திய பரிமாணத்தின் மூவித வேற்றுமையின் வர்ணனம்.

அநித்தியபரிமாணமும் சங்கியாமாத்திர ஜன்னியம், பரிமாண மாத்திர ஜன்னியம், பிரசயமாத்திரஜன்னியமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

### ௩௬௮. சங்கியாமாத்திர ஜன்னிய பரிமாணத்தின் நிரூபணம்.

ஆண்டு துவியணுகங்களிலுள்ள மத்யம நுண்மையும், மத்யம குறுமை பரிமாணமும் யாதோ அப்பரிமாணம் துவியணுகத்தினை ஆரம்பிக்கும் இருபரமாணுக்களிலுள்ள துவித்வசங்கியையால் ஜன்னியமாகின்றது. திரியணுகத்திலுள்ள மத்யம மஹத்வ பரிமாணம் யாதோ அப்பரிமாணம் திரியணுகத்தினை ஆரம்பிக்கும் மூன்று துவியணுகங்களிலுள்ள மும்மைச் சங்கியையால் ஜன்னியமாகின்றது. ஆகையால் துவியணுகத்தின் பரிமாணமும், திரியணுகத்தின் பரிமாணமும் சங்கியாமாத்திர ஜன்னியமெனப்படுகின்

றது. அதாவது; அப்பரிமாணத்திற்கு அச்சங்கியையே அசமவாயிகாரணமாகின்றது.

சங்கை:—எங்ஙனம் கடத்தின் பரிமாணம் கபாலத்தின் பரிமாணத்தால் ஜன்னியமாகின்றதோ அங்ஙனமே துவியணுகத்தின் பரிமாணம் பரமாணுக்களின் பரிமாணத்தால் ஏன் ஜன்னியமாகக்கூடாது? அங்ஙனமே திரியணுகத்தின் பரிமாணம் துவியணுகத்தின் பரிமாணத்தால் ஏன் ஜன்னியமாகக்கூடாது?

சமாதானம்:—அவயவங்களின் பரிமாணம் எவ்வவயவியின் பரிமாணத்தினை உண்டாக்குகின்றதோ அது சுவசமான சஜாதீயமும், சுவ உத்கிருஷ்டமுமாகிய பரிமாணத்தினையே உண்டாக்குகின்றது. எங்ஙனம்: கபாலவடிவ அவயவங்களின் மஹத்வபரிமாணம் மஹத்வத்வ வடிவத்தால் தனது சஜாதீயமும், தன்னினும் உத்கிருஷ்டமுமாகிய கடவடிவ அவயவியின் மஹத்வ பரிமாணத்தினை உண்டாக்குகின்றது. ஆண்டு துவியணுகத்தின் மத்யம நுண்மைபரிமாணம் பரமாணுவின் பரம நுண்மைபரிமாணத்தின் அபேக்ஷையால் உத்கிருஷ்டமன்றும். திரியணுகத்தின் மஹத்வபரிமாணம் துவியணுகத்தினது நுண்மைபரிமாணத்தின் சஜாதீயமன்றும். பரிமாணத்வஜாதியால் திரியணுகத்தின் பரிமாணம் துவியணுக பரிமாணத்தின் சஜாதீயமேயாம். என்றாலும் ஈண்டு அப்பரிமாணத்வ ஜாதியால் சஜாதீயத்தன்மையைக் கூறக்கருதியதன்றும். ஆனால் அப்பரிமாணத்வ ஜாதியின் வியாப்பிய நுண்மை, பெருமை, குறுமை, நெடுமை என்னும் ஜாதிகள் யாதோ அஜ்ஜாதிகளால் அச்சஜாதீயத் தன்மையைக் கூறக்கருதியதாம். ஆகையால் துவியணுகத்தினது பரிமாணத்திற்கு பரமாணுக்களின் பரிமாணம் அசமவாயி காரணமன்றும். திரியணுகத்தின் பரிமாணத்திற்கு துவியணுகத்தின் பரிமாணம் அசமவாயிகாரணமன்றும். ஓர்கால் பரமாணுவின் பரிமாணத்தால் துவியணுகத்தின் பரிமாணம் ஜன்னியமும், துவியணுகத்தின் பரிமாணத்தால் திரியணுகத்தின்பரிமாணம் ஜன்னியமுமாகவொப்பின் அப்பரமாணுவின் நுண்மை பரிமாணத்தின் அபேக்ஷையால் துவியணுகத்தின் பரிமாணம் அணுதரமாகும். அத்துவியணுகத்தின் பரிமாணத்தின் அபேக்ஷையால் திரியணுகத்தின் பரிமாணம் அணுதமமாகும். அதனால் திரியணுகத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமே யுண்டாகாததாகும். ஈண்டு தரம், தமம் என்பதான இருசத்தங்களும் மிகுதித்தன்மையின் வாசகமாம். ஆண்டு அணுவினும் அதிக அணுவினை அணுதரமென்பர். அவ்வணுதரத்தினும் அதிக அணுவினை அணுதமமென்பர். ஆகையால் துவியணுகத்தின் பரிமாணமும், திரியணுகத்தின் பரிமாணமும் பரிமாண ஜன்னியமன்றும். ஆனால் இருபரமாணுவிலுள்ள துவித்வ சங்கியையால் துவியணுகத்தின் பரிமாணம் ஜன்னியமாம். மூன்று துவியணுகங்களிலுள்ள மும்மைச்சங்கியையால் திரியணுகத்தின் பரிமாணம் ஜன்னியமாம்.

சாகக. பரிமாணமாத்திர ஜன்னிய பரிமாணத்தின் நிரூபணம்.

ஆண்டு நான்கு திரியணுகங்களால் உண்டாய சதுரணுகவடிவ காரியம் யாதோ அச்சதுரணுகத்தின் மஹத்வபரிமாணம் அந்நான்கு திரியணுக

வடிவ அவயவங்களின் மஹத்வபரிமாணத்தால் ஜன்னியமாகின்றது. அதாவது அத்திரியணுகங்களின் மஹத்வபரிமாணம் அச்சதுரணுகத்தின் மஹத்வ பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் அச்சதுரணுகத்தின் மஹத்வபரிமாணம் பரிமாண மாத்திர ஜன்னிய பரிமாணமெனப் படுகின்றது. இவ்வாறாக ஐந்து சதுரணுகங்களால் உண்டான பஞ்சாணுக வடிவ காரியம் யாதோ அப்பஞ்சாணுக வடிவ காரியத்தின் மஹத்வ பரிமாணம் அச்சதுரணுக வடிவ அவயவங்களின் மஹத்வ பரிமாணத்தால் ஜன்னியமாகின்றது. இவ்வாறாக கட வடிவ அவயவியின் மஹத்வ பரிமாணம் கபால வடிவ அவயவங்களின் மஹத்வ பரிமாணத்தால் ஜன்னியமாகின்றது. அங்ஙனமே பட வடிவ அவயவியின் மஹத்வ பரிமாணம் தந்து வடிவ அவயவங்களின் மஹத்வபரிமாணத்தால் ஜன்னியமாகின்றது. ஆகையால் அக்கட, பட முதலியவைகளின் மஹத்வ பரிமாணமும் பரிமாண மாத்திர ஜன்னிய பரிமாணமெனப்படுகின்றது.

### எ௦௦. பிரசயத்தின் லக்ஷணம்.

இனி பிரசய மாத்திர ஜன்னிய பரிமாணத்தினைக் கூறுவான் வேண்டி முதலில் அப்பிரசயத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம். ஆண்டு "மஹதவயவாநாம் ப்ரஶிதிலஃ ஸம்யோகஃ ப்ரசயஃ" (இ-ள்.) மஹத்வபரிமாணமுடைய அவயவங்களின் பரஸ்பர சிதில சையோகம் யாதோ அதனை பிரசயமென்பர். எங்ஙனம்: பஞ்சி, பிண்டத்தின் அவயவங்கட்கு பரஸ்பரம் சிதில சையோகமுண்டாகின்றது. அதாவது; கிஞ்சித் அவயவங்களால் அச்சையோகத்தின் அபாவமுளதாயினும் கிஞ்சித் அவயவங்களால் சையோகமுண்டாகின்றது. அச்சிதில சையோகத்தினை பிரசயமென்பர். ஆண்டு பரமாணுக்களிலும், துவியணுகத்திலும் மஹத்வ பரிமாணம் இருப்பதன்று. ஆகையால் அப்பரமாணுக்களின் சையோகத்திலும், துவியணுகங்களின் சையோகத்திலும் பிரசயத்தன்மை இருப்பதன்று. இவ்வர்த்தத்தினை போதிக்கும் பொருட்டே அவ்வவயவங்கட்கு "மஹத்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது.

### எ௦க. வேறுவகையாக பிரசயத்தின் லக்ஷணம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். அப்பிரசயத்தின் லக்ஷணத்தில் "மஹத்" என்னும் பதத்தைக் கூறுவது பயனற்றதாம். அப்பரமாணுக்களின் சையோகத்திலும், துவியணுகங்களின் சையோகத்திலும் பிரசயத்தன்மையுளதாயினும் யாதோரிடையூறின்றாம்.

### எ௦உ. பிரசயமாத்திர ஜன்னிய பரிமாணத்தின் வர்ணனம்.

ஆகையால் இது சித்தமாயிற்று. பஞ்சி, பிண்ட முதலியவைகளில் எம்மத்யம மஹத்வ பரிமாண மிருக்கின்றதோ அம்மஹத்வ பரிமாணம் அப்பஞ்சி, பிண்ட முதலியவைகளினது அவயவங்களின் சிதில சையோக வடிவ பிரசயத்தால் ஜன்னியமாகின்றது. அதாவது; அப்பிரசயமே அப்பரிமாணத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் அப்பஞ்சி, பிண்ட முதலியவைகளின் மஹத்வ பரிமாணம் பிரசயமாத்திர ஜன்னியமெனப்படுகின்றது.

சங்கை:—முன்னர் அநித்திய பரிமாணத்தினை சங்கியா மாத்திர ஜன்னியம், பரிமாணமாத்திர ஜன்னியம், பிரசயமாத்திர ஜன்னியம் என்னும் வேறுபாட்டால் மூவிதமாக கூறியவைகளில் "மாத்திர" மென்னும் பதம் பயனற்றதாம். ஏனெனின் சில பரிமாணம் சங்கியை, பரிமாணமாமிரண்டால் ஜன்னியமும், அல்லது பரிமாணம், பிரசய மிரண்டால் ஜன்னியமும், அல்லது சங்கியை, பரிமாணம், பிரசயமா மூன்றால் ஜன்னியமு மாகுமாயின் அப்பரிமாணத்தின் நிவர்த்தியால் மாத்திரமென்னும் பதம் பயனுடையதாமென்னும் சங்கையுண்டாக இனி மாத்திர மென்னும் பதத்தின் பயனைக் கூறுவாம்.

## ௭௦௩. சங்கியை, பரிமாண முதலிய எல்லா ஜன்னிய பரிமாணத்தின் நிரூபணம்.

சங்கியை, பரிமாணமா மிரண்டால் ஜன்னிய பரிமாணத்தினையும், பரிமாணம், பிரசயமா மிரண்டால் ஜன்னிய பரிமாணத்தினையும், சங்கியை, பரிமாணம், பிரசயமா மூன்றால் ஜன்னிய பரிமாணத்தினையும் நிரூபிப்பாம். ஆண்டு பிரசயமில்லாததும், மஹத்வ பரிமாண முடையதுமாகிய மூன்று அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவி யாதோ அவ்வவயவியின் மஹத்வ பரிமாணம் யாதோ அம்மஹத்வ பரிமாணம் அவ்வவயவங்களிலுள்ள மும்மைச் சங்கியையும், மஹத்வ பரிமாணமுமா மிரண்டால் ஜன்னியமாகின்றது. ஏனெனின் அவ்வாறுய மஹத்வ பரிமாணமுடைய இரு அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவியின் மஹத்வ பரிமாணத்தாலும் அவ்வவயவங்களினும் அற்ப மூன்று அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவியின் மஹத்வ பரிமாணத்தாலும், அம்மஹத்வ பரிமாணம் அதிசய (மிகுதி)த் தன்மையுடையதேயாம். பிரசயமுடையதும், மஹத்வ பரிமாணமுடையதுமாகிய இரு அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவி யாதோ அவ் அவயவியின் மஹத்வ பரிமாணம் யாதோ அம்மஹத்வ பரிமாணம் பரிமாணம், பிரசயமா மிரண்டால் ஜன்னியமாகின்றது. ஏனெனின் பிரசயமில்லாததும், மஹத்வ பரிமாணமுடையதுமாகிய இரு அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவியின் மஹத்வ பரிமாணத்தாலும், திரியணுகத்தின் மஹத்வ பரிமாணத்தாலும் அம்மஹத்வ பரிமாணம் அதிசயத்தன்மை யுடையதே யாகின்றது. பிரசயமுடையதும், மஹத்வபரிமாணமுடையதுமாகிய மூன்று அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவி யாதோ அவ் அவயவியின் மஹத்வ பரிமாணம் யாதோ அம்மஹத்வ பரிமாணம் சங்கியை, பரிமாணம், பிரசயமா மிம்மூன்றுகளினுல் ஜன்னியமாகின்றது. ஏனெனின் பிரசய முடையதும், அவ்வாறுய மஹத்வ பரிமாணமுடையதுமாகிய இரு அவயவங்களால் ஆரம்பிக்கப்பட்ட அவயவியின் மஹத்வ பரிமாணத்தால் அம்மஹத்வ பரிமாணம் அதிசயத்தன்மை யுடையதேயாகின்றது. இவ்வாறுய உபய ஜன்னிய பரிமாண முதலியவைகளின் வியாவிர்த்தியினை போதிப்பதாக மாத்திர மென்னும் பதம் பயனுடையதேயாம்.

---

## எ০ச. நெடுமைக்கு அவயவ சையோக வடிவ மொப்புவோராகிய வாதிகளின் மத வர்ணனம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். நெடுமைக்கு பரிமாண வடிவத்தன்மை யின்றும். ஆனால் அவயவங்களின் சையோக விசேஷத்தினை நெடுமை யென்பர். "இதுநெடுமை" என்பதான தோற்றமும் அவ்வவயவங்களின் சையோக விசேஷத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அத்தோற்றத்தானும் நெடுமை பரிமாணத்தின் சித்தி யுண்டாகமாட்டாது. ஓர்கால் அத்தோற்றத்தின் வலிவால் நெடுமைக்கு பரிமாண வடிவ மொப்பின் இதுவட்டமாம், இதுசதுரமா மென்பதான தோற்றத்தின் வலிவால் வட்டத்தன்மை, சதுரத்தன்மை முதலியவைகட்கும் வேறு பரிமாணத்தன்மைத் தோற்றமுண்டாகும்.

## எ০ரு. அநித்திய பரிமாணத்திற்கு ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசத்தின் வர்ணனம்.

அல்லது கூறிய அநித்திய பரிமாணம் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே நாசமாகின்றது. அவ்வாசிரயத்தின் நாசமின்றி வேறொன்றால் நாசமாவதின்று.

சங்கை :—அவயவி திரவியத்தின் நாசத்திற்கு தன்னிடத்திலுள்ள பரிமாணத்தின் நாசத்திற்கு காரணத் தன்மை சம்பவியாது. ஏனெனின் அவயவி திரவியத்தின் இருப்புளதாயினும் அவயவிதிரவியத்தால் எப்பொழுது மூன்று, நான்கு பரமாணுக்கட்கு நீக்க முண்டாகின்றதோ அதாவது அவயவி திரவியத்தினின்றும் எப்பொழுது மூன்று, நான்கு பரமாணுக்களின் குறைவு உண்டாகின்றதோ அல்லது அவயவி திரவியத்தில் எப்பொழுது மூன்று, நான்கு பரமாணுக்களின் உயர்வு உண்டாகின்றதோ அதாவது அவ்வவயவீ திரவியத்தில் எப்பொழுது வேறு மூன்று, நான்கு பரமாணுக்கள் வந்து கலக்கின்றதோ அப்பொழுது அதே அவயவி திரவிய மிதுவாமென்பதாக அவயவி திரவியத்தின் ஒன்றாந் தன்மையினை விஷயஞ் செய்வதாகிய பிரத்தியபிஞ்ஞையின் வலிவால் அவ்வவயவீ திரவியத்தி னிருப்புளதாயினும் அவ்வவயவீ திரவியத்தில் பூர்வ பரிமாணத்தினும் வேறு பரிமாணம் பிரத்தியக்ஷமாகின்றது. அந்த விலக்ஷண பரிமாணத்தின் உற்பத்தி பூர்வ பரிமாணத்தின் நாசமின்றி சம்பவியாது. ஆனால் பூர்வ பரிமாணத்தின் நாசமுண்டாகியே விலக்ஷண பரிமாணம் உற்பன்னமாகின்றது. ஆகையால் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே பரிமாணத்தின் நாச முண்டாகின்றதெனக் கூறுவது அசங்கதமாம். ஆனால் கூறிய விடத்தில் ஆசிரய திரவியத்தின் இருப்புளதாயினும் அற்ப அவயவங்களின் குறைவு, உயர்வுகளால் பரிமாணத்தின் நாசம் உண்டாகின்றது.

சமாதானம்:—அவயவீ திரவியத்தினின்றும் மூன்று, நான்கு பரமாணுக்களின் குறைவு உண்டாக பரமாணு சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசத்தால் துவியணுக வடிவ காரியத்தின் நாசம் அவசிய முண்டாகும்.

துவியணுக் வடிவ சமவாயி காரணத்தின் நாச முண்டாக திரியணுக வடிவ காரியத்தின் நாசமும் அவசிய முண்டாகும். இவ்வாறாக சதுரணுக, பஞ்சாணுக முதலியவைகளின் நாசக் கிரமத்தால் அவயவி திரவியத்தின் நாசம் அவசியமுண்டாகும். அதன் பின்னர் பரிசேஷமாக இருப்பதாகிய பரமாணு பரஸ்பர சையுக்தமாகி துவியணுக, திரியணுகாதிக் கிரமத்தால் பூர்வ அவயவி திரவியத்தின் சஜாதீய வேறு அவயவி திரவியத்தினை உண்டாக்குகின்றது. இவ்வாறாக சரீர முதலிய அவயவி திரவியங்களில் மிக அற்ப அவயவங்களின் உயர்வு வுண்டாக அந்த அவயவ சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசம் அவசிய முண்டாகும். அவ்வசமவாயி காரணத்தின் நாச முண்டாக அச்சரீர முதலிய அவயவிகளின் நாசமும் அவசியமுண்டாகும். அதன் பின்னர் எல்லா அவயவம் பரஸ்பர சையுக்தமாகி முன் சரீர முதலிய அவயவிகளின் சஜாதீய வேறு சரீரமுதலிய அவயவிகளை உண்டாக்குகின்றது. ஆகையால் அவயவங்களின் குறைவு இடத்திலும், உயர்வு இடத்திலும் அவயவி திரவியத்தின் நாசத்தானேயே அவற்றின் பரிமாணத்திற்கு நாச முண்டாகின்றது.

சங்கை:—ஓர் கால் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே அவற்றின் பரிமாணத்திற்கு நாச முண்டாகுமாயின் பட வடிவ திரவியத்தின் நாசமுண்டாகாவிடினும் வேறு தந்துக்களின் சையோகத்தால் அப்படத்தில் பரிமாணத்தின் அதிகத்தன்மை உண்டாகாததாக வேண்டும். வேறு தந்துக்களின் சையோகத்தால் அப்படத்தில் பரிமாணத்தின் அதிகத்தன்மை பிரத்தியக்ஷமாகவே காணக்கிடைக்கின்றது.

சமாதானம்:—அவ்விடத்திலும் வேமா (தறி) முதலியவைகளின் அபிகாதாக்கிய சையோகத்தால் கிரியா விபாகத்தின் உற்பத்தி மூலமாக அசமவாயி காரண வடிவ தந்து சையோகத்தின் நாச முளதாகி அப்படத்தின் நாசம் அவசியம் உண்டாகின்றது. கருத்திதுவாம்; ஆயிரம் தந்துக்களால் உண்டான படத்தில் எப்பொழுது வேறு தந்துக்களின் சையோக முண்டாகின்றதோ அப்பொழுது வேமா முதலியவைகளின் அபிகாதாக்கிய சையோகத்தால் அவ்வாயிரம் தந்துக்களில் கிரியை உற்பன்னமாகின்றது. அக்கிரியையால் அத்தந்துக்களின் விபாகம் பரஸ்பர முண்டாகின்றது. அவ்விபாகத்தால் அத்தந்துக்களினது சையோகத்தின் நாச முண்டாகின்றது. அத்தந்து சையோக வடிவ அசமவாயிகாரணத்தின் நாசத்தால் அவ்வாயிரம் தந்துக்களாலான படத்தின் நாச முண்டாய் விடுகின்றது. அதன் பின்னர் அவ்வாயிரம் தந்துக்களும், அவ்வேறு தந்துவும் பரஸ்பரம் சையுக்தமாகி மீண்டும் வேறு படத்தின் உற்பத்தியை செய்கின்றன. இவ்வாறாக படத்தின் பிராரம்ப முதல் அந்திய தந்து பரியந்தமாம் தந்து சையோகத்தால் பூர்வ பூர்வ படத்தின் நாசமும், உத்தர வுத்தர படத்தின் உற்பத்தியு முண்டாய்விடுகின்றது. ஆகையால் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே அவற்றின் பரிமாணத்திற்கு நாச முண்டாகின்றது. இவ்வாறாய நியமத்திற்கு அப்படத்தில் வியபிசார முண்டாகாது. அல்லது ஆசிரய திரவியத்தின் நாச மாத்திரத்தால் பரிமாணத்தின் நாசத்தை ஒப்பாது அவ்வாசிரய திரவியத்தின் இருப்புளதாகியே அற்ப,

அவயவங்களின் குறைவால் அல்லது உயர்வால் முன் பரிமாணத்தின் நாச வாயிலாக வேறு பரிமாணத்தின் உற்பத்தியை யொப்பும் மீமாஞ்சகர்களை இது வினவுதல் வேண்டும். ஆயிரம் தந்துக்களாலான படத்தில் வேறு தந்துக்களின் கலப்பால் பரிமாணத்தின் அதிகத் தன்மை யுண்டாவதுயாதோ அந்த வேறு தந்து அவ்வாயிரம் தந்துக்களாலான படத்தின் அவயவமா? அல்லது அன்று? ஆண்டு முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் வேறு தந்துக்களின் சையோகத்திற்கு முன்னர் அத்தந்து வடிவ காரணத்தின் அபாவமிருப்பதால் அவ்வாயிரம் தந்துக்களாலான படத்தின் உற்பத்தியே உண்டாகாததாகவேண்டும். அவ்வேறு தந்து அவ்வாயிரம் தந்துக்களாலான படத்தின் அவயவமன்றும் என இரண்டாவதுபக்ஷத்தை அங்கீகரிக்கின் ஆயிரம் தந்துக்களாலான படத்தினோடு வேறு தந்துக்களின் சையோகமுளதாகியும் அப்படத்தில் பரிமாணத்தின் அதிகத்தன்மை உண்டாகாததாகும். எங்ஙனம்: ஆயிரம் தந்துக்களாலான படத்தினோடு அஸ்த முதலிய திரவியங்களின் சையோகமுளதாகியும் அப்படத்தில் பரிமாணத்தின் அதிகத்தன்மை உண்டாகிறதில்லை. அவ்வேறு தந்துக்களின் சையோகத்தால் படத்தில் பரிமாணத்தின் அதிகத்தன்மை பிரத்தியக்ஷமாகத் தோற்றுகின்றது. ஆகையால் ஆண்டு வேறு தந்துக்களின் சையோகத்தால் முன்னைய படத்தின் நாசமும், வேறு படத்தின் உற்பத்தியும் அவசியம் அங்கீகரிக்கப்படுவதாகும். அப்படமே இப்படமா மென்பதான பிரத்தியபிஞ்ஞா ஞான முண்டாவது யாதோ அந்த பிரத்தியபிஞ்ஞா ஞானமோ உத்தர உத்தர படத்தில் பூர்வ பூர்வ படத்தின் சஜாதீயத்தன்மையினையே விஷயஞ் செய்கின்றது. பூர்வ, உத்தர படத்தின் ஒன்றாந்தன்மையினை விஷயஞ் செய்வதன்று. எங்ஙனம்: அத்தீபச்சுடரே இத்தீபச் சுடராமென்பதான பிரத்தியபிஞ்ஞா ஞானம் உத்தர உத்தர தீபச்சுடரில் பூர்வ பூர்வ தீபச்சுடரின் சஜாதீயத் தன்மையினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் பிரத்தியபிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத்தானும் அப்பூர்வ, உத்தர படத்தின் ஒன்றாந்தன்மை சித்தமாவதன்று.

சங்கை:—முன்னுள்ள ஆயிரந் தந்துக்களே வேறு தந்துக்களின் உதவியால் முன்னுள்ள ஆயிரந் தந்துக்களாலான படத்தினிருப்புளதாகியே வேறு படத்தினை ஆரம்பிக்கின்றது.

சமாதானம்:—இரு மூர்த்தத் திரவியங்கட்கு சமானதேசத் தன்மை உண்டாகாது. அதாவது; ஒரே அவயவங்களில் இரு மூர்த்தத் திரவியம் சமவாய சம்பந்தத்தால் இருப்பனவன்று. ஆகையால் அத்தந்துக்களில் இரு படங்களின் இருப்பு சம்பவியாது. அத்தந்துக்களில் இரு படம் ஒருவருக்கும் தோற்றுகிறதில்லை. ஆகையால் இரண்டாவது பட வடிவ திரவியத்தின் உற்பத்தியை பிரதிபந்திக்கும் பூர்வ பட வடிவ திரவியம் யாதாமோ அந்த பூர்வ படத்தின் நாசமுள்தான பின்னரே இரண்டாவது படத்தின் உற்பத்தியை ஒப்புவதாகும். ஆகையால் அநித்திய பரிமாணத்தின் நாசம் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே உண்டாகின்றதென்பது சித்தமாயிற்று.
பரிமாண நிரூபணம் முற்றிற்று.

௫0௬. வேற்றுமை குணத்தின் நிரூபணம்.

வேற்றுமைகுணத்தின் லக்ஷணம். ஆண்டு "ப்ருதக் வ்யவஹாரவிஷய வ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத் ப்ருதக்த்வம்" (இ-ள்.) வேறென்னும் வியவஹாரத்தின் விஷயத்தில் இருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோர் அஜ்ஜாதியுடைய குணம் வேற்றுமை எனப்படுகின்றது. ஆண்டு கடம், படத்தினும் வேறாம் என்பதான வேற்றுமையின் விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் யாதாமோ அந்த வியவஹாரத்தின் விஷயம் வேற்றுமை குணமேயாம். வேற்றுமை குணத்தில் இருப்பது வேற்றுமைத்தன்மை ஜாதியாம். வேற்றுமைத்தன்மை ஜாதி குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய வேற்றுமைத் தன்மை ஜாதி யுடையது வேற்றுமை குணமேயாம். ஆகையால் வேற்றுமை குணத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது வேற்றுமை" என இம்மாத்திரமே வேற்றுமையின் லக்ஷணமாகக் கூறின் குணத்வ ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "வேறென்னும் வியவஹார விஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் வேறென்னும் வியவஹாரத்தின் விஷயமாகிய வேற்றுமையில் இருப்பனவன்றாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "வேறென்னும் வியவஹார விஷயத்திலிருக்கும் ஜாதியுடையது வேற்றுமை" என இம்மாத்திரமே வேற்றுமையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் வேற்றுமையில் இருப்பதாகிய குணத்வ ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திச் செய்வான் கருதி அந்தலக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்வ ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்வ ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் குணத்வ ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் உருவ முதலிய குணங்களிலும் திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௫0௭. வேற்றுமை குணத்தின் ஆசிரயத்தின் வர்ணனம்.

இவ்வாறுக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித வேற்றுமை குணம் முற்கூறிய சங்கியை, பரிமாணத்தினைப் போன்று பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே இருக்கின்றது.

௫0௮. ஏக வேற்றுமை, அனேக வேற்றுமை என்னும் வேறுபாட்டால் இருவித வேற்றுமையின் வர்ணனம்.

எங்ஙனம் முற்கூறிய சங்கியை குணம் ஏகத்வம், அனேகத்வம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றதோ அங்ஙனமே இவ்வேற்றுமைகுணமும்

ஏக வேற்றுமை, அனேக வேற்றுமை என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு ஒரு திரவிய வியக்தியில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய வேற்றுமை யாதோ அதனை ஏக வேற்றுமை யென்பர். இரண்டு, மூன்று, நான்கு முதலிய அனேக திரவிய வியக்திகளில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய வேற்றுமை யாதோ அதனை அனேக வேற்றுமை யென்பர். எங்ஙனம்: "𑌘𑌟𑌃 𑌪𑌟𑌾𑌤𑍍 𑌪𑍃𑌥𑌕𑍍" (இ-ள்.) கடம், படத்தினும் வேறும் என்பதான தோற்றத்தால் கடத்தில் தோற்றமான படத்தின் எல்லையாகிய வேற்றுமை யாதோ அவ்வேற்றுமை ஓர் கட வியக்தியில் இருப்பதாவதால் ஏக வேற்றுமை யெனப்படுகின்றது. "𑌘𑌟𑍌 𑌪𑌟𑌾𑌤𑍍 𑌪𑍃𑌥𑌕𑍍" (இ-ள்.) இருகடங்கள் படத்தினும் வேறும் என்பதான தோற்றத்தால் இருகடங்களில் தோற்றுவதான படத்தின் எல்லையாகிய வேற்றுமை யாதோ அவ்வேற்றுமை இரு கட வியக்திகளிலிருப்பதாவதால் இருவேற்றுமை யெனப்படுகின்றது. இவ்வாருக மூன்று, நான்கு திரவியங்களிலுள்ள வேற்றுமையை அறிந்துக்கொள்க.

ஏ௱கூ. நித்திய, அநித்திய வேறுபாட்டால் இருவித வேற்றுமையின் பிரிவு.

எங்ஙனம் ஒருமைச் சங்கியை நித்திய, அநித்திய வேறுபாட்டால் இருவிதமாகின்றதோ அங்ஙனமே ஏக வேற்றுமையும் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு பரமாணு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் என்னும் நித்தியத் திரவியங்களிலோ ஏக வேற்றுமை நித்தியமாகின்றது. துவியணுக முதலாக கடாதி மட்டுமாம் எல்லா அநித்தியத் திரவியங்களில் ஏக வேற்றுமை அநித்தியமாகின்றது. எங்ஙனம் அநித்திய ஏக ஒருமைச் சங்கியை ஆசிரய திரவியத்தின் உற்பத்தியினும் இரண்டாவது க்ஷணத்தில் உண்டாகி ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமாகின்றதோ அங்ஙனமே அநித்திய ஏக வேற்றுமையும் ஆசிரய திரவியத்தின் உற்பத்தியினும் இரண்டாவது க்ஷணத்தில் உண்டாகி ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே நாசமாகின்றது. ஆண்டு அநித்திய ஏக வேற்றுமைக்கு கடாதி வடிவ ஆசிரய திரவியங்களோ சமவாயி காரணமாகின்றன. கட முதலிய ஆசிரய திரவியத்தின் கபால முதலிய அவயவங்களிலுள்ள ஏக வேற்றுமை அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. அக்கடாதி வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே அநித்திய ஏக வேற்றுமையின் நாசம் உண்டாகின்றது.

ஏ௱௰. அனேக வேற்றுமையின் நாநா வடிவத் தன்மையினதும், அநித்திய வடிவத் தன்மையினதும் வர்ணனம்.

எங்ஙனம் அனேகத்வ சங்கியை இருமை, மும்மை முதலிய வேறுபாட்டால் பலவிதமாகின்றதோ அங்ஙனமே அனேக வேற்றுமையும் இருமை வேற்றுமை, மும்மை வேற்றுமை முதலிய வேறுபாட்டால் பலவகைத்தாம். எங்ஙனம் இருமை, மும்மை முதலிய அனேகத்வ சங்கியை

நித்திய, அநித்தியத் திரவியங்களில் யாண்டும் அநித்தியமும், அபேக்ஷா புத்தியால் ஜன்னியமும், அபேக்ஷா புத்தியின் நாசத்தால் அல்லது ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமு மாகின்றதோ அங்ஙனமே இருமை வேற்றுமை, மும்மை வேற்றுமை முதலிய வேற்றுமையும் நித்திய, அநித்திய திரவியங்களில் யாண்டும் அநித்தியமேயாகின்றது. அங்ஙனமே அபேக்ஷா புத்தியால் ஜன்னியமும், அபேக்ஷா புத்தியின் நாசத்தால் அல்லது ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமுமாகின்றது.

### எகக. அனேக வேற்றுமையில் அபேக்ஷாபுத்தியால் ஜன்னியத்வத்தின் வர்ணனம்.

ஆண்டு இரண்டு கடங்களோடு சக்ஷு இந்திரியத்தின் சம்பந்தமுளதாய பின்னர் "இது ஒன்று வேறு இது ஒன்று வேறு" என்பதான இரு ஒருமை வேற்றுமைகளை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தி முதற்க்ஷணத்திலுண்டாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அவ்விருகடங்களில் படத்தின் எல்லையாகிய இருமைவேற்றுமை உண்டாகின்றது. ஆண்டு இரு வேற்றுமைக்கு இரு கடமோ சமவாயி காரணமாகின்றன. பிரத்தியேக கடத்தில் இருப்பதாகிய ஒருமை வேற்றுமை யாதோ அவ்விரு ஒருமை வேற்றுமை இருமை வேற்றுமைக்கு அசமவாயி காரணமாகின்றது. அபேக்ஷா புத்தி நிமித்த காரணமாகின்றது. மூன்றுவது க்ஷணத்தில் இருமை வேற்றுமையின் நிர்விகற்பக பிரத்தியக்ஷ முண்டாகின்றது. நான்காவது க்ஷணத்தில் "கடம் படத்தினும் வேறு" என்பதான இருமை வேற்றுமையின் சவிகற்பக பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே முன்னர் உண்டாய நிர்விகற்பக பிரத்தியக்ஷத்தால் அபேக்ஷா புத்தியின் நாசமுண்டாகின்றது. ஐந்தாவது க்ஷணத்தில் அவ்வபேக்ஷா புத்தியின்நாசத்தால் இருமை வேற்றுமையின் நாச முண்டாகின்றது. இவ்வாறுய முறையை மும்மை வேற்றுமை முதலிய வேற்றுமைகளிலும் அறிந்துக்கொள்க. கூறிய இவ்வர்தத்தில் விசேஷ சங்கை, சமாதானமோ முன்னர் சங்கியையின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அவ்வெல்லாவற்றையும் யோக்கிய முறையாக ஈண்டும் யூகித்து அறிந்துக்கொள்க.

### எகஉ. வேற்றுமைக்கு அந்நியோன்னியா பாவ வடிவம் ஒப்புவோராகிய வாதிகளின் சங்கை.

சங்கை:—பேத வடிவ அந்நியோன்னியா பாவத்தினும் வேற்றுமை குணம் வேறன்றும். ஆனல் அவ்வந்நியோன்னியா பாவத்தினையே வேற்றுமை என்பர். "ஙயவேஷூா நுயக்ஷ" என்பதான இவை முதலிய தோற்றமும் அவ்வந்நியோன்னியா பாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. வேற்றுமை குணத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆகையால் அத்தோற்றத்தானும் வேற்றுமை குணத்தின் சித்தி யுண்டாகாது. சிலர் இது கூறுகின்றனர்; அவ்வேற்றுமை குணமோ இருக்கின்றது, ஆனல் அந்நியோன்னியா பாவம் அவ்வேற்றுமை குணத்தினும் வேறன்றும். ஆனல் அவ்வேற்றுமை குணத்தினையே அந்நியோன்னியாபாவ மென்பர். அங்ஙனமாகக் கூறுவது சம்பவியாது. ஏனெனின் ஓர்கால் வேற்றுமையே அந்நியோன்னியாபாவ

மாகுமாயின் "உருவம் கடமன்று" என்பதான தோற்றம் உண்டாகாததாக வேண்டும். ஏனெனின் குணத்தில் குணத்தின் அநங்கீகாரத்தால் உருவ குணத்தில் வேற்றுமை குணம் இருப்பதன்று. எவ்வேற்றுமை குணத்தினை "உருவம் கடமன்று" என்பதான தோற்றம் விஷயஞ் செய்கின்றதோ அக் கடத்திலும் அக்கடத்தின் எல்லையாகிய வேற்றுமை இருப்பதன்று. எவ் வேற்றுமையானது உருவத்தில் சாமாநாதிகரண்ணிய சம்பந்தத்தால் தோற்ற மாகின்றதோ அத்தோற்றம் பரிசேஷத்தால் கூறிய அந்த உருவத்தில் அக் கடத்தின் பேத வடிவ அந்நியோன்னியா பாவத்தினையே விஷயஞ் செய் கின்றது. ஆகையால் அவ்வந்நியோன்னியா பாவத்திற்கு அவ்வேற்றுமை குணத்தில் அடக்கம் சம்பவியாது. ஆனால் வேற்றுமை குணத்திற்கே அவ் வந்நியோன்னியா பாவத்தில் அடக்கம் சம்பவிக்கின்றது.

## எகங. வேற்றுமையில் அந்நியோன்னியா பாவத்தினும் வேறாந் தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம்:—அந்நியோன்னியா பாவத்தினை விஷயஞ் செய்வதாகிய "கடம் படமன்று" என்பதான தோற்றம் யாதோ அத்தோற்றத்தால் வேற் றுமையினை விஷயஞ் செய்வதாகிய "கடம் படத்தினும் வேறு" என்பதான தோற்றம் வேறாகின்றது. அந்த விலக்ஷண தோற்றமே வேற்றுமை குணத்தில் அந்நியோன்னியா பாவத்தினும் வேறாந்தன்மையை சித்தஞ் செய்கின்றது. ஆகையால் அந்நியோன்னியா பாவத்தினும் வேற்றுமை குணத்தினை வேறாக வொப்பாதவராகிய நவீன நையாயிகர்களின் மதம் அசங்கதமாம். வேற்றுமை குண நிரூபணம் முற்றுப் பெற்றது.

## எகச. சையோக நிரூபணம்.

சையோக லக்ஷணம். ஆண்டு "ஸம்யுக்தவ்யவஹாரவிஷயவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமாந் ஸம்யோகஃ" (இ-ள்.) சையுக்த வியவஹாரத்தின் விஷயத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் சையோகமெனப்படுகின்றது. ஆண்டு இத்திரவியம் இத்திரவியத்தோடு சையுக்தமாம். அதாவது; இத்திரவியம் இத் திரவியத்தோடு சையோகமுடையதா மென்பதான சையோகத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் யாதோ அந்த வியவஹாரத் தின் விஷயம் எச்சையோகமாமோ அச்சையோகத்தில் இருப்பதும், குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய சையோகத் தன்மை ஜாதி யாதோ அச்சையோகத்தன்மை ஜாதி சர்வ சையோகத்திலுமிருக்கின்றது. ஆகையால் கூறிய சையோகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு முற்கூறிய பரி மாண வேற்றுமைகளின் லக்ஷணத்தைப் போன்று இச்சையோகத்தின் லக்ஷணத்திலும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தியை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "சையுக்த வியவ ஹார விஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. அச்சையோ கத்திலிருக்கும் குணத்தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக்

கொண்டும் உருவ முதலிய குணங்களிலும், திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன.

### எசரு. சையோகத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"படா ஸமவாயி காரணக்வ வ்யாபக ஜாதிமத் குணக்வ வ்யாப்யஜாதிமாந் ஸம்யோகः" (இ-ள்.) படத்தின் அசமவாயி காரணத் தன்மையின் வியாபகமும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் சையோகமெனப்படுகின்றது. ஆண்டு தந்துக்களின் சையோகமே படத்தின் அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் யாண்டாண்டு படத்தின் அசமவாயி காரணத்வ மிருக்கின்றதோ ஆண்டாண்டு சையோகத்தன்மை ஜாதி யிருக்கின்றது. இவ்வாற்றால் சையோகத்தன்மை ஜாதி அப்படத்தின் அசமவாயி காரணத்வத்தின் வியாபகமாம். அச்சையோகத் தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய சையோகத்தன்மை ஜாதி சர்வ சையோகத்தில் இருக்கின்றது. ஆகையால் கூறிய இச்சையோகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத் தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பட அசமவாயி காரணத் தன்மையின் வியாபகமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் குணத் தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "பட அசமவாயி காரணத் தன்மையின் வியாபகமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. உருவத்தன்மை முதலிய ஜாதிகள் அப்படத்தின் அசமவாயிகாரண வடிவ தந்துசையோகத்தில் இராததாவதால் அப்பட அசமவாயி காரணத்தன் மையின் வியாபகமேயன்றாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பட அசமவாயி காரணத் தன்மையின் வியாபக ஜாதி யுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷணமாகக் கூறின் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, கர்ம, குணங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அச்சையோகத்தன்மை ஜாதியினைப் போன்று அக்குணத் தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் அப்பட அசமவாயி காரணத் தன்மையின் வியாபகமேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அக்குணத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் அக்குணத் தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

எகசு. சையோகத்தின் மூன்றுவது லக்ஷணம்.

“ 𑌵𑍍𑌯𑌾𑌸𑌜𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌵𑌿𑌭𑌾𑌗𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌗𑍁𑌣𑌤𑍍𑌵 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌜𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌸𑌂𑌯𑍋𑌗𑌃” (இ-ள்.) வியாசஜ்ய விருத்தி மாத்திரத்தில் இருப்பதும், விபாகத்தில் இராததும், குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் சையோக மெனப்படும். ஆண்டு எத்தர்மம் அனேகதிரவியங்களிலிருக்கின்றதோ அத்தர்மம்வியாசஜ்யத்தில் இருப்பதெனப்படுகின்றது. எங்ஙனம்: இருமை, மும்மை முதலிய சங்கியை இரண்டு, மூன்று திரவியங்களி லிருக்கின்றது. ஆகையால் இருமை, மும்மை முதலிய சங்கியை வியாசஜ்யத்தில் இருப்பதெனப்படுகின்றது. அங்ஙனமே அச்சையோகமும் இருத் திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகையால் அச்சையோகமும் வியாசஜ்யத்திலிருப்பதெனப்படுகின்றது. அச்சையோகம் சமவாய சம்பந்தத்தால் பிரத்தியேக திரவியத்திலு மிருக்கின்றது. என்றாலும் முற்கூறிய இருமை முதலிய சங்கியையினைப் போன்று அச்சையோகம் ஸ்வரூப சம்பந்த வடிவ பர்யாப்தி சம்பந்தத்தால் இருத் திரவியவியக்திகளை ஆசிரயித்தே இருக்கின்றது. ஓர் திரவிய வியக்தியை ஆசிரயித்திருப்பதன்று. இத்தகைய வியாசஜ்யத்தி லிருக்கும் சையோக மாத்திரத்தில் இருப்பது சையோகத் தன்மை ஜாதியாம். அச்சையோகத் தன்மை ஜாதி கூறப்படும் விபாககுணத்தில் இராததுமாம். அங்ஙனமே குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய சையோகத் தன்மை ஜாதி எல்லா சையோகத்திலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இச்சையோகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு கூறிய லக்ஷணத்தில் “மாத்திரம்” என்னும் பதங் கூறுவிடின் வியாசஜ்யத்திலிருக்கும் இருமை, மும்மை முதலிய சங்கியையில் இருப்பதும், விபாகத்தில் இராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய சங்கியைத்தன்மை ஜாதியைக்கொண்டு சங்கியையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவிாப்திதோஷத்தை நிவர்த்திச்செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் “மாத்திரம்” என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அச்சங்கியைத்தன்மைஜாதி வியாசஜ்யத்திலிருத்தற்றன்மையில்லாத ஒருமை சங்கியையிலும் இருக்கின்றது. ஆகையால் அச்சங்கியைத்தன்மைஜாதி வியாசஜ்யத்திலிருப்பதில்மாத்திரம் இருப்பதன்றும். ஆகையால் அச்சங்கியாத் தன்மை ஜாதியைக் கொண்டு அச்சையோகத்தின் லக்ஷணத்திற்கு அச்சங்கியையில் அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது “விபாகத்திலிராத குணத்தன்மையின் சாக்ஷாத்வியாப்பிய ஜாதியுடையது சையோகம்” என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “வியாசஜ்யத்திலிருப்பதில் மாத்திரத்தில் இருப்பதும்” என்னும் பதங்கள் கூறுவிடின் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எனெனின் அச்சையோகத் தன்மை ஜாதியினைப் போன்று. உருவத்தன்மை முதலிய ஜாதிகளும் விபாகத்திலிராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி

அந்த லக்ஷணத்தில் "வியாசஜ்யத்தில் இருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் அவ் வியாசஜ்யத்தில் இருக்கும் தர்மத்தில் இருப்பனவன்றாம். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "வியாசஜ்யத்தில் இருப்பதில் மாத்திரத்தில் இருக்கும் குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷண மாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விபாகத்திலிராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் விபாகத்தன்மை ஜாதியைக் கொண்டு விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அச்சை யோகம் இரு திரவியங்களில் இருப்பதாவதால் வியாசஜ்யத்தி லிருப்பதென்னப் படுகின்றதோ அங்ஙனமே அவ்விபாகமும் இரு திரவியங்களில் இருப்ப தாவதால் வியாசஜ்யத்தி லிருப்பதெனப்படுகின்றது. இத்தகைய வியாசஜ்யத்தி லிருக்கும் விபாக மாத்திரத்தில் இருப்பது விபாகத்தன்மை ஜாதியாம். அவ் விபாகத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமு மாம். இத்தகைய விபாகத்வ ஜாதியைக் கொண்டு அந்த விபாகத்தில் அதி வியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "விபாகத்தி லிராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு விபாகத்தன்மை ஜாதி விபாகத்தில் இராததாகாது. ஆனால் அவ்விபாகத்தில் இருப்பதேயாகின்றது. ஆகையால் விபாகத்தன்மை ஜாதியைக் கொண்டு விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டா காது. அல்லது "வியாசஜ்யத்தி லிருப்பதில் மாத்திரத்தில் இருப்பதும் விபா கத்திலிராததுமாகிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச் சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் சாக்ஷாத்வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் இருமைத்வ, மும் மைத்வமுதலிய ஜாதிகளைக் கொண்டு இருமை, மும்மை முதலிய சங்கியையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் இருமைத்வ, மும் மைத்வ முதலிய ஜாதியும் சையோகத்தன்மை ஜாதியினைப்போன்று வியாசஜ் யத்திலிருக்கும் இருமை, மும்மை மாத்திரத்திலேயே இருக்கின்றது. அங்ஙன மே விபாகத்தில் இராததுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு இருமை, மும் மைத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய மன்றாம். ஆனால் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய சங்கியாத்தன்மை ஜாதி யாதோ அச்சங்கியாத்தன்மை ஜாதியின் வியாப்பியம் இருமைத்தன்மை, மும்மைத் தன்மை முதலிய ஜாதியாம். ஆகையால் இருமைத் தன்மை, மும்மைத் தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு இருமை, மும்மை முதலிய சங்கியையில் அச்சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

---

## எகக. சையோகத்தின் மூன்றுவது லக்ஷணம்.

"𑌵𑍍𑌯𑌾𑌸𑌜𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌮𑌾𑌤𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌵𑌿𑌭𑌾𑌗𑌾𑌵𑍃𑌤𑍍𑌤𑌿 𑌗𑍁𑌣𑌤𑍍𑌵 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌜𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 𑌸𑌂𑌯𑍋𑌗𑌃" (இ-ள்.) வியாசஜ்ய விருத்தி மாத்திரத்தில் இருப்பதும், விபாகத்தில் இராததும், குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் சையோகமெனப்படும். ஆண்டு எத்தர்மம் அனேகதிரவியங்களிலிருக்கின்றதோ அத்தர்மம்வியாசஜ்யத்தில் இருப்பதெனப்படுகின்றது. எங்ஙனம்: இருமை, மும்மை முதலிய சங்கியை இரண்டு, மூன்று திரவியங்களி லிருக்கின்றது. ஆகையால் இருமை, மும்மை முதலிய சங்கியை வியாசஜ்யத்தில் இருப்பதெனப்படுகின்றது. அங்ஙனமே அச்சையோகமும் இருத் திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகையால் அச்சையோகமும் வியாசஜ்யத்திலிருப்பதெனப்படுகின்றது. அச்சையோகம் சமவாய சம்பந்தத்தால் பிரத்தியேக திரவியத்திலு மிருக்கின்றது. என்றாலும் முற்கூறிய இருமை முதலிய சங்கியையினைப் போன்று அச்சையோகம் ஸ்வரூப சம்பந்த வடிவ பர்யாப்தி சம்பந்தத்தால் இருத் திரவிய வியக்திகளை ஆசிரயித்தே இருக்கின்றது. ஓர் திரவிய வியக்தியை ஆசிரயித்திருப்பதன்று. இத்தகைய வியாசஜ்யத்தி லிருக்கும் சையோக மாத்திரத்தில் இருப்பது சையோகத் தன்மை ஜாதியாம். அச்சையோகத் தன்மை ஜாதி கூறப்படும் விபாககுணத்தில் இராததுமாம். அங்ஙனமே குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய சையோகத் தன்மை ஜாதி எல்லா சையோகத்திலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இச்சையோகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு கூறிய லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூறுவிடின் வியாசஜ்யத்திலிருக்கும் இருமை, மும்மை முதலிய சங்கியையில் இருப்பதும், விபாகத்தில் இராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய சங்கியைத்தன்மை ஜாதியைக்கொண்டு சங்கியையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவிாப்திதோஷத்தை நிவர்த்திச்செய்வான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அச்சங்கியைத்தன்மைஜாதி வியாசஜ்யத்திலிருத்தற்றன்மையில்லாத ஒருமை சங்கியையிலும் இருக்கின்றது. ஆகையால் அச்சங்கியைத்தன்மைஜாதி வியாசஜ்யத்திலிருப்பதில்மாத்திரம் இருப்பதன்றும். ஆகையால் அச்சங்கியாத் தன்மை ஜாதியைக் கொண்டு அச்சையோகத்தின் லக்ஷணத்திற்கு அச்சங்கியையில் அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "விபாகத்திலிராத குணத்தன்மையின் சாக்ஷாத்வியாப்பிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "வியாசஜ்யத்திலிருப்பதில் மாத்திரத்தில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அச்சையோகத் தன்மை ஜாதியினைப் போன்று, உருவத்தன்மை முதலிய ஜாதிகளும் விபாகத்திலிராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி

அந்த லக்ஷணத்தில் "வியாசஜ்யத்தில் இருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் அவ் வியாசஜ்யத்தில் இருக்கும் தர்மத்தில் இருப்பனவன்றும். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "வியாசஜ்யத்தில் இருப்பதில் மாத்திரத்தில் இருக்கும் குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷண மாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விபாகத்திலிராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் விபாகத்தன்மை ஜாதியைக் கொண்டு விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அச்சை யோகம் இரு திரவியங்களில் இருப்பதாவதால் வியாசஜ்யத்தி லிருப்பதென்னப் படுகின்றதோ அங்ஙனமே அவ்விபாகமும் இரு திரவியங்களில் இருப்ப தாவதால் வியாசஜ்யத்தி லிருப்பதெனப்படுகின்றது. இத்தகைய வியாசஜ்யத்தி லிருக்கும் விபாக மாத்திரத்தில் இருப்பது விபாகத்தன்மை ஜாதியாம். அவ் விபாகத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமு மாம். இத்தகைய விபாகத்வ ஜாதியைக் கொண்டு அந்த விபாகத்தில் அதி வியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "விபாகத்தி லிராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு விபாகத்தன்மை ஜாதி விபாகத்தில் இராததாகாது. ஆனல் அவ்விபாகத்தில் இருப்பதேயாகின்றது. ஆகையால் விபாகத்தன்மை ஜாதியைக் கொண்டு விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டா காது. அல்லது "வியாசஜ்யத்தி லிருப்பதில் மாத்திரத்தில் இருப்பதும் விபா கத்திலிராததுமாகிய ஜாதியுடையது சையோகம்" என இம்மாத்திரமே அச் சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் சாக்ஷாத்வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் இருமைத்வ, மும் மைத்வமுதலிய ஜாதிகளைக் கொண்டு இருமை, மும்மை முதலிய சங்கியையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் இருமைத்வ, மும் மைத்வ முதலிய ஜாதியும் சையோகத்தன்மை ஜாதியினைப்போன்று வியாசஜ் யத்திலிருக்கும் இருமை, மும்மை மாத்திரத்திலேயே இருக்கின்றது. அங்ஙன மே விபாகத்தில் இராததுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு இருமை, மும் மைத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய மன்றும். ஆனல் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய சங்கியாத்தன்மை ஜாதி யாதோ அச்சங்கியாத்தன்மை ஜாதியின் வியாப்பியம் இருமைத்தன்மை, மும்மைத் தன்மை முதலிய ஜாதியாம். ஆகையால் இருமைத் தன்மை, மும்மைத் தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு இருமை, மும்மை முதலிய சங்கியையில் அச்சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

---

எகஎ. சையோகத்தின் நான்காவது லக்ஷணம்.

"ஜந்யூவ்யத்ஸ்வஸமாநாதிகரணாபாவ ப்ரதியோகி விபாகபிந்நகுண: ஸம்யோக:" (இ-ள்.) எக்குணம் ஜன்னிய திரவியத்தில் இருப்பதும், சுவசமானுதிகரண அபாவத்தின் பிரதியோகியும், விபாகத்தினும் வேறுமாகின்றதோ அக்குணம் சையோகமெனப்படுகின்றது. ஆண்டு தருவிற்கும், பறவைக்குமுள்ள சையோக சம்பந்தம் யாதோ அச்சையோகம் அத்தரு, பறவை வடிவ ஜன்னிய திரவியத்தில் இருப்பதுமாம். அத்தருவின் சாகையில் அப்பறவையின் சையோக முளதாயினும் அத்தருவின் மூலத்தில் அச்சையோகத்தின் அபாவமே இருக்கின்றது. அவ்வபாவத்தின் பிரதியோகித்தன்மை அச்சையோகத்தி லிருக்கின்றது. ஆகையால் அச்சையோகம் சுவசமானுதிகரண அபாவத்தின் பிரதியோகியும், விபாகத்தினும் வேறும், குணவடிவமுமாம். ஆகையால் கூறிய இச்சையோகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "சுவசமானுதிகரண அபாவப் பிரதியோகியும் விபாகத்தினும் வேருன குணம் சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ஜன்னிய திரவியத்தில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூருவிடின் சத்தம், புத்தி முதலிய அவ்வியாப்பியமாயிருக்கும் குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் ஒரே விபு ஆகாசத்தில் பேரி அவச்சின்னத்தன்மையால் சத்தகுணமிருக்கின்றது. அந்த ஆகாசத்தில் கட அவச்சின்னத் தன்மையால் அச்சத்தத்தின் அபாவமிருக்கின்றது. அவ்வபாவத்தின் பிரதியோகித்தன்மை அச்சத்தத்தி லிருக்கின்றது. அங்ஙனமே ஒரே விபு ஆத்மாவில் சரீர அவச்சின்னத் தன்மையால் புத்தி, சுக, துக்க முதலிய குணங்கள் இருக்கின்றன. அந்த ஆத்மாவில் கட அவச்சின்னத்தன்மையால் புத்தி, சுக, துக்க முதலிய குணங்களின் அபாவ மிருக்கின்றது. அவ்வபாவப் பிரதியோகித்தன்மை அப்புத்தி, சுக, துக்க முதலியவைகளில் இருக்கின்றது. ஆகையால் அச்சையோகத்தினைப் போன்று அச்சத்தம், புத்தி முதலிய குணங்களும் சுவசமானுதிகரண அபாவத்தின் பிரதியோகியேயாம். அங்ஙனமே விபாகத்தினும் வேறும், குணவடிவமுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "ஜன்னிய திரவியத்தில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சத்தம், புத்தி முதலிய குணங்கள் ஜன்னிய திரவியத்தில் இருப்பனவன்ரும். ஆனல் ஆகாசமும், ஆத்மாவுமாகிய நித்திய திரவியங்களிலேயே இருக்கின்றன. ஆகையால் அச்சத்தம், புத்தி முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜன்னிய திரவியத்திலிருப்பதும் விபாகத்தினும் வேருன குணம் சையோகம்" என இம்மாத்திரமே அச்சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சுவசமானுதிகரண அபாவப்பிரதியோகியும்" என்னும்பதங்கள் கூருவிடின் உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் உருவ முதலிய குணங்கள் கட முதலிய ஜன்னிய திரவியங்களில் இருப்பனவும், விபாக குணத்தினும் வேறும், குண வடிவமு

மாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சுவசமானாதிகரண அபாவப் பிரதியோகியும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய வியாப்பியமாயிருக்கும் குணங்கள் எக்கட முதலிய அதிகரணத்திலிருக்கின்றனவோ அவ்வதிகரணத்தில் உருவ முதலியவைகளின் அபாவ மிருப்பதன்று. ஆகையால் உருவ முதலிய குணங்கள் சுவசமானாதிகரண அபாவத்தின் பிரதியோகியாவனவன்று. ஆகையால் உருவமுதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. உருவ முதலிய குணங்கள் எக்கடாதி வடிவ அதிகரணத்திலிருக்கின்றனவோ, அவ்வதிகரணத்தில் உருவ முதலியவைகளின் பேதவடிவ அந்நியோன்னியா பாவமுமிருக்கின்றது. ஆகையால் உருவ முதலிய குணங்களும் சுவசமானாதி கரண அபாவத்தின் பிரதியோகியேயாம். என்றாலும் ஈண்டு லக்ஷணத்தில் அபாவ சத்தத்தால் அத்தியந்தா பாவத்தினைக் கொள்ளுக. உருவ முதலிய வைகளின் அத்தியந்தாபாவம் உருவ முதலியவைகளின் அதிகரணத்தில் இருப்பனவன்று. அல்லது "ஜன்னிய திரவியத்திலிருக்கும் சுவசமானாதி கரண அபாவப் பிரதியோகி குணம் சையோகம்" என இம்மாத்திரமே சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விபாகத்தினும் வேறும்" என்னும்பதங்கள் கூறாவிடின் விபாகத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் விபாகம் சையோகத்தினைப் போன்று ஜன்னிய திரவி யத்திலிருப்பதும், சுவசமானாதிகரண அபாவத்தின் பிரதியோகியும், குண வடிவமுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விபாகத்தினும் வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு தன்து பேதம் தன்னிடத்தி லிருப்பதன்று. ஆகை யால் விபாகம் விபாகத்தினும் வேறன்றாம். ஆகையால் விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜன்னிய திரவியத்தி லிருக்கும் சுவசமானாதிகரண அபாவப் பிரதியோகியும் விபாகத்தினும் வேறு மாவது சையோகம்" என இம்மாத்திரமே சையோகத்தின்லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "குணம்" என்னும் பதம் கூறாவிடின் கடமுதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் கடம் கபால வடிவ ஜன்னிய திரவியத்தில் இருப்பதுமாம்; அக்கடம் சையோக சம்பந்தத்தாலிருக் கும் பூதலத்தில் அக்கடத்தின் அத்தியந்தாபாவமு மிருக்கின்றது. ஆகையால் அக்கடம் சுவசமானாதிகரண அபாவத்தின் பிரதியோகியும் விபாகத்தினும் வேறுமாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்குமாறு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதம் கூறப்பட்டது. ஆண்டு அக்கட முதலிய திரவியங்களில் குண வடிவத்தன்மை யின்றாம். ஆகையால் அக்கட முதலியவைகளில் சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## ௭௪௫. சையோகத்தின் ஆசிரயத்தினதும், அநித்தியத்தன்மையினதும், நாசத்தின் காரணத்தன்மையினதும் வர்ண்னம்.

இவ்வாறாகக் கூறிய நான்கு லக்ஷணங்களால் லக்ஷித சையோக குணம் முற்கூறிய சங்கியை, பரிமாணம், வேற்றுமையினைப் போன்று பிருதிவி முத லிய ஒன்பது திரவியங்களிலேயே இருக்கின்றது. சையோக குணம் யாண்டும்

அநித்தியமேயாம். சையோகம் யாதொன்றும் நித்தியமாவதன்று. ஆண்டு சையோக குணம் சிலவிடத்து ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமாகின்றது. சிலவிடத்து சுவசமானாதிகரண விபாக குணத்தால் நாசமாகின்றது. எங்ஙனம்: பறவை, தருக்களின் சையோகம் அப்பறவை, தரு வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தாலும் நாசமாய் விடுகின்றது. அப்பறவை, தருக்களின் இருப்புளதாயினும் எப்பொழுது அப்பறவைக்கு கிரியை யுண்டாய் தருவினின்றும் விபாக முண்டாகின்றதோ அப்பொழுது விபாகத்தானும் பறவை, தருக்களின் சையோகம் நாசமாய் விடுகின்றது.

## ௭௧௯. சையோகத்தின் மூவிதவேற்றுமையின் வர்ணனம்.

அச்சையோகம் கர்மஜ சையோகம், சையோகஜ சையோகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு முதலாவது கர்மஜ சையோகமும் அந்நியதர கர்மஜ சையோகம், உபயகர்மஜ சையோகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆகையால் அச்சையோககுணம் அந்நியதர கர்மஜ சையோகம், உபய கர்மஜ சையோகம், சையோகஜ சையோகம் என மூவகைத்தாம்.

## ௭௨௦. அந்நியதர கர்மஜ சையோகத்தின் நிரூபணம்.

ஆண்டு ஓர் திரவியத்தின் கிரியையால் ஜன்னியமாகும் சையோகம் யாதோ அச்சையோகம் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது. எங்ஙனம்: தருவினோடுண்டாம் பக்ஷியின் சையோகம் யாதோ அச்சையோகம் கேவலம் பக்ஷியின் கிரியையானேயே ஜன்னியமாகின்றது. தருவின் கிரியையால் ஜன்னியமன்றும். ஆகையால் அச்சையோகம் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது. ஆண்டு தரு, பக்ஷிகளின் சையோகத்திற்கு அத்தரு, பக்ஷி, இரண்டுமே சமவாயி காரணமாகின்றன. பக்ஷியின் கிரியை அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. இவ்வாறாக விபு ஆத்மாவினோடுண்டாம் மன சையோகமும் அம்மனதின் கிரியையால் ஜன்னியமாவதால் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது. இவ்வாறாக ஆகாச முதலிய விபுத் திரவியங்களோடுண்டாம் கட முதலிய மூர்த்தத் திரவியங்களின் சையோகம் யாதோ அச்சையோகமும் அக்கட முதலிய மூர்த்தத் திரவியங்களின் கிரியையால் ஜன்னியமாவதால் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது.

## ௭௨௧. உபய கர்மஜ சையோகத்தின் நிரூபணம்.

இரு திரவியங்களின் கிரியையால் ஜன்னிய சையோகம் யாதோ அச்சையோகம் உபய கர்மஜ சையோக மெனப்படுகின்றது. எங்ஙனம்: இரு ஆட்டுக் கிடாக்களுக்குண்டாம் பரஸ்பர சையோகம் யாதோ அச்சையோகம் அவ்விரு ஆட்டுக்கிடாக்களின் கிரியையால் ஜன்னியமாகின்றது. ஆகையால் இரு ஆடுகளின் சையோகமும் உபய கர்மஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு இரு ஆட்டுக் கிடாக்களும் அச்சையோகத்திற்கு சமவாயி காரணமாகின்றன. அவ்விரு ஆடுகளி லுண்டாம் கிரியை யாதோ அக்கிரியை

அச்சையோகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன சையோகத்திற்கு நிமித்த காரணமாகின்றன.

எ௨௨. சையோகஜ சையோகத்தின் லக்ஷணம்.

காரண, அகாரணமாமிரண்டின் சையோகத்தால் காரிய, அகாரியமாமிரண்டின் சையோகம் உண்டாவது யாதோ அச்சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. எங்ஙனம்: கையின் கிரியையால் அக்கைக்கு தருவினோடு சையோகம் எப்பொழுதுண்டாகின்றதோ அப்பொழுது அச்சரீரம், தரு சையுக்தமாம். இவ்வாற்றால் அச்சரீரத்திலும் தருவினது சையோகத்தின் வியவஹார முண்டாகின்றது. ஆகையால் அக்கை, தருக்களின் சையோகத்தின் பின்னர் அச்சரீர, தருக்களின் சையோகம் அவசியம் அங்கீகரிக்கப்படுவதாகும். ஆண்டு அத்தருவினிடத்தும், சரீரத்தினிடத்துமோர் கிரியையின்றும். ஆகையால் அச்சரீர, தருக்களின் சையோகம் அக்கிரியையினாலோர் ஜன்னியமன்றும். பரிசேஷத்தால் அக்கை, தருக்களின் சையோகத்தானேயே ஜன்னியத்தை ஒப்புவதாகும். அச்சரீர வடிவ அவயவியின் கை வடிவ ஓர் அவயவத்தில் கிரியை உண்டாகின்றது. என்றாலும் ஒரு அவயவத்தின் கிரியையால் அவயவியில் கிரியை யுண்டாகாது. ஆனால் சர்வ அவயவங்களின் கிரியையினானேயே அவ்வவயவியில் கிரியை யுண்டாகின்றது. ஆகையால் அக்கை வடிவ காரணத்தினதும், அத்தரு வடிவ அகாரணத்தினதும் சையோகத்தால் அச்சரீர வடிவ காரியத்தினதும், அத்தரு வடிவ அகாரியத்தினதுமாம் சையோகம் யாதோ அச்சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு அச்சரீர, தருக்களின் சையோகத்திற்கு அச்சரீர, தரு விரண்டுமோர் சமவாயி காரணமாகின்றன. அக்கை, தருக்களின் சையோகம் அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. ஆண்டு தருவில் அகாரண வடிவத்தன்மை சம்பவியாது. ஆனால் தன்னிடத்திலுள்ள குணம், கர்மமுதலியவைகளுக்கு அத்தரு காரணமேயாம். அங்ஙனமே அத்தருவினிடத்து அகாரிய வடிவத்தன்மையும் சம்பவியாது. ஆனால் அத்தருவும் தனது அவயவங்களின் காரிய வடிவமேயாம். என்றாலும், காரண சத்தத்தால் அச்சையோகஜ சையோகத்தின் ஆசிரயமாகிய ஓர் திரவிய வியக்தியின் அவயவ வடிவ சமவாயி காரணத்தினைக் கொள்ளுக. அகாரண சத்தத்தால் அவ்வவயவ வடிவ சமவாயி காரணத்தினும் வேறான திரவியத்தினைக்கொள்ளுக. அங்ஙனமே காரிய சத்தத்தாலும் அவ்வவயவ வடிவ சமவாயி காரணத்தால் ஜன்னிய திரவியத்தினைக் கொள்ளுக. அகாரிய சத்தத்தால் அவ்வவயவ வடிவ சமவாயி காரண ஜன்னிய திரவியத்தினும் வேறான திரவியத்தினைக் கொள்ளுக. எங்ஙனம்: கை, தருவாமிரண்டின் சையோகத்தால் ஜன்னியசரீர, தருவாமிரண்டின் சையோகம்யாதோ அச்சையோகத்தின் ஆசிரயமாவன அச்சரீர, தரு விரண்டுமாம். இத்தகைய சரீர, தருக்களின் சையோகத்தினது ஆசிரயமாகிய சரீர வடிவ ஓர் வியக்தியாதோ அச்சரீரத்தின் சமவாயி காரணம் அக்கை வடிவ அவயவமாம். ஆகையால் அக்கை காரணமெனப்படுகின்றது. அக்கை வடிவ காரணத்தினும் அத்தரு வேறுமாம்.

அதாவது; அத்தரு அச்சரீரத்தின் சமவாயி காரணமன்றும். ஆகையால் அத்தரு அகாரண மென்ப்படுகின்றது. அச்சரீரம் அக்கை வடிவ சமவாயி காரணத்தால் ஜன்னியமாம். ஆகையால் அச்சரீரம் காரியமெனப்படுகின்றது. அத்தரு அச்சரீர வடிவ காரியத்தினும் வேறுமாம். அதாவது; அத்தரு அக்கை வடிவ காரணத்தால் ஜன்னியமன்றும். ஆகையால் அத்தரு அகாரியமெனப் படுகின்றது. இத்தகைய காரண வடிவ கையினதும், அகாரண வடிவ தருவினதுமாகிய சையோகத்தால் காரிய வடிவ சரீரத்தினதும், அகாரிய வடிவ தருவினதும் சையோகம் உண்டாகின்றது. ஆகையால் அச்சரீர, தருக்களின் சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. இவ்வாறாக கையின் தொழிலால் அக்கை, புத்தகங்களின் சையோக முண்டாக சரீரம், புத்தகங்களின் சையோகம் யாதோ அங்ஙனமே கபாலத்தின் தொழிலால் அக்கபாலம், தருவின் சையோக முண்டாக கடம், தருவின் சையோக முண்டாவது யாதோ அச்சையோகமும் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. இனி முறையாக அம்மூன்று சையோகங்களின் லக்ஷணத்தை நிரூபிப்பாம்.

## எஉ௩. அந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணம்.

ஆண்டு முதலாவது அந்நியதர கர்மஜ சையோக லக்ஷணத்தைக் கூறுவாம். "க்ரியாஸ்ரயவ்ருத்திகேவல க்ரியாவத்வ்ருத்திஸம்யோக: அந்யதரகர்மஜஸம்யோக:" (இ-ள்.) எச்சையோகம் சுவஜனக் தொழிலின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதும், சுவஜனக தொழிலுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாமோ அச்சையோகம் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது. எங்ஙனம்: பக்ஷியின் தொழிலால் உண்டான பக்ஷி, தருக்களின்சையோகம்யாதோ அச்சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய தருவிலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே சுவஜனக கிரியையுடைய பக்ஷியினிடத்தும் சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அப்பக்ஷி, தருக்களின் சையோகம் அந்நியதர கர்மஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு "கிரியையுடையதில் சமவாயசம்பந்தத்தாலிருக்கும் சையோகம் அந்நியதர கர்மஜசையோகம்" என இம்மாத்திரமே அவ்வந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் உபய கர்மஜ சையோகத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் உபயகர்மஜ சையோகமும் சுவஜனக கிரியையுடைய இரு ஆடுகளிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உபயகர்மஜ சையோகம் கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதன்று. ஆகையால் உபயகர்மஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் சையோகம்

அந்நியதர கர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே அந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சையோகஜ சையோகமும் கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சையோகஜ சையோகம் கிரியையுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்றும். ஆகையால் சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும், கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் அந்நியதர கர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே அவ்வந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சையோகம்" என்னும் பதம் கூறாவிடின் கூறப்படும் அந்நியதர கர்மஜ விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அவ்வந்நியதர கர்மஜ விபாகமும் கிரியையின் அபாவமுடைய திரவியத்திலும், கிரியையுடைய திரவியத்திலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சையோகம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வந்நியதர கர்மஜ விபாகத்தில் சையோகத்தன்மை இன்றும். ஆகையால் விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### எஉச. உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணம்.

இனி உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம்:
"ஸ்வஜநகக்ரியாபாவவத் வ்ருத்தி ஸம்யோக: உபயகர்மஜஸம்யோக:"
(இ-ள்.) எச்சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்றோ அச்சையோகம் உபயகர்மஜ சையோகமெனப்படுகின்றது. எங்ஙனம் இரு ஆடுகளின் கிரியையால் உண்டாம் சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் இருப்பதன்று. ஆகையால் அவ்விரு ஆடுகளின் சையோகம் உபயகர்மஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிராத சையோகம் உபயகர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "சுவஜனகம்" என்னும் கிரியையின் விசேஷணங் கூறாவிடின் அசைவாகும் சாகையினிடத்து பக்ஷியின் கிரியாமாத்திரத்தால் ஜன்னியமாம் சையோகம் யாதோ அங்ஙனமே நடந்துக் கொண்டிருக்கும் சைத்திரனெனப் பெயரிய புருஷனது பின்பாகத்தில் மைத்திரனெனப் பெயரிய புருஷனது கிரியா மாத்திரத்தால் ஜன்னியமாகிய சையோகம் யாதோ அவ்வந்நியதர கர்மஜ சையோகத்தில் உபயகர்மஜ சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அவ்வந்நியதர கர்மஜ சையோகம் உபயகர்மஜ சையோகத்தினைப்

அதாவது; அத்தரு அச்சரீரத்தின் சமவாயி காரணமன்றாம். ஆகையால் அத்தரு அகாரண மென்ப்படுகின்றது. அச்சரீரம் அக்கை வடிவ சமவாயி காரணத்தால் ஜன்னியமாம். ஆகையால் அச்சரீரம் காரியமெனப்படுகின்றது. அத்தரு அச்சரீர வடிவ காரியத்தினும் வேறுமாம். அதாவது; அத்தரு அக்கை வடிவ காரணத்தால் ஜன்னியமன்றாம். ஆகையால் அத்தரு அகாரியமெனப் படுகின்றது. இத்தகைய காரண வடிவ கையினதும், அகாரண வடிவ தருவி னதுமாகிய சையோகத்தால் காரிய வடிவ சரீரத்தினதும், அகாரிய வடிவ தருவினதும் சையோகம் உண்டாகின்றது. ஆகையால் அச்சரீர, தருக்களின் சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. இவ்வாறாக கையின் தொழிலால் அக்கை, புத்தகங்களின் சையோக முண்டாக சரீரம், புத்தகங் களின் சையோகம் யாதோ அங்ஙனமே கபாலத்தின் தொழிலால் அக்கபா லம், தருவின் சையோக முண்டாக கடம், தருவின் சையோக முண்டாவது யாதோ அச்சையோகமும் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. இனி முறையாக அம்மூன்று சையோகங்களின் லக்ஷணத்தை நிரூபிப்பாம்.

## எ௨௫. அந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணம்.

ஆண்டு முதலாவது அந்நியதர கர்மஜ சையோக லக்ஷணத்தைக் கூறுவாம். “க்ரியாச்ரயாவ்ருத்தித்வெ ஸதி க்ரியாவ்ருத்தித்வெ ஸதி ஸம்யோக: அந்யதரகர்மஜஸம்யோக:” (இ-ள்.) எச்சையோகம் சுவஜனக் தொழிலின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதும், சுவ ஜனக தொழிலுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாமோ அச்சையோகம் அந்நியதர கர்மஜ சையோக மெனப்படுகின்றது. எங்ஙனம்: பக்ஷியின் தொழிலால் உண்டான பக்ஷி, தருக்களின்சையோகம்யாதோ அச்சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய தருவிலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே சுவஜனக கிரியையுடைய பக்ஷியி னிடத்தும் சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அப்பக்ஷி, தருக்க ளின் சையோகம் அந்நியதர கர்மஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு “கிரியையுடையதில் சமவாயசம்பந்தத்தாலிருக்கும் சையோகம் அந்நியதர கர்மஜசையோகம்” என இம்மாத்திரமே அவ்வந்நியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் “கிரியையின் அபாவமுடையதில் சம வாய சம்பந்தத்தா லிருப்பதும்” என்னும் பதங்கள் கூறாவிடின் உபய கர்மஜ சையோகத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தா லெனின் உபயகர்மஜ சையோகமும் சுவஜனக கிரியையுடைய இரு ஆடுக ளிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் “கிரியையின் அபாவ முடையதில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும்” என்னும் பதங்கள் கூறப்பட் டன. ஆண்டு உபயகர்மஜ சையோகம் கிரியையின் அபாவமுடைய திரவியத் தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதன்று. ஆகையால் உபயகர்மஜ சையோ கத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது “கிரியை யின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் சையோகம்

அந்கியதர கர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே அந்கியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சையோகஜ சையோகமும் கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சையோகஜ சையோகம் கிரியையுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்றாம். ஆகையால் சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும், கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் அந்கியதர கர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே அவ்வந்கியதர கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சையோகம்" என்னும் பதம் கூறாவிடின் கூறப்படும் அந்கியதர கர்மஜ விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அவ்வந்கியதர கர்மஜ விபாகமும் கிரியையின் அபாவமுடைய திரவியத்திலும், கிரியையுடைய திரவியத்திலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சையோகம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வந்கியதர கர்மஜ விபாகத்தில் சையோகத்தன்மை இன்றாம். ஆகையால் விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### எஉச. உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணம்.

இனி உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம்:
" ஸ்வஜநகக்ரியாபாவவத ஸமவேதஸம்யோகः உபயகர்மஜஸம்யோகः "
(இ-ள்.) எச்சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்றோ அச்சையோகம் உபயகர்மஜ சையோகமெனப்படுகின்றது. எங்ஙனம் இரு ஆடுகளின் கிரியையால் உண்டாம் சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் இருப்பதன்று. ஆகையால் அவ்விரு ஆடுகளின் சையோகம் உபயகர்மஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு "கிரியையின் அபாவமுடையதில் சமவாய சம்பந்தத்தா லிராத சையோகம் உபயகர்மஜ சையோகம்" என இம்மாத்திரமே உபய கர்மஜ சையோகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "சுவஜனகம்" என்னும் கிரியையின் விசேஷணங் கூறாவிடின் அசைவாகும் சாகையினிடத்து பக்ஷியின் கிரியாமாத்திரத்தால் ஜன்னியமாம் சையோகம் யாதோ அங்ஙனமே நடந்துக் கொண்டிருக்கும் சைத்திரனெனப் பெயரிய புருஷனது பின்பாகத்தில் மைத்திரனெனப் பெயரிய புருஷனது கிரியா மாத்திரத்தால் ஜன்னியமாகிய சையோகம் யாதோ அவ்வந்கியதர கர்மஜ சையோகத்தில் உபயகர்மஜ சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அவ்வந்கியதர கர்மஜ சையோகம் உபயகர்மஜ சையோகத்தினைப்

போன்று கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா விராததேயாம். ஆகையால் அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் அக்கிரியைக்கு "சுவஜனகம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அச்சாகையினிடத்துள்ள அசைதல் வடிவ கிரியை அச்சையோகத்தின் ஜனகமேயன்றாம். ஆனால் பக்ஷியினது கிரியையே அச்சையோகத்தின் ஜனகமாம். அச்சையோக ஜனக கிரியைக்கு அச்சாகையில் அபாவமேயிருக்கின்றது. ஆகையால் அச்சையோக ஜனககிரியையின் அபாவமுடைமை அச்சாகையினிடத்து இருப்பதாவதால் அச்சாகை, பக்ஷியின் சையோகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாயசம்பந்தத்தா விராததன்றாம். ஆனால் சமவாயசம்பந்தத்தா விருப்பதேயாம். அங்ஙனமே அச்சைத்திரனெனப் பெயரிய புருஷனிடத்துள்ள நடத்தல் வடிவ கிரியை அச்சையோகத்தின் ஜனகமன்றாம். ஆனால் மைத்திரனெனப் பெயரிய புருஷனது கிரியையே அச்சையோகத்தின் உண்டாக்குவதாம். அச்சையோகத்தையுண்டாக்கும் கிரியையின் அபாவம் அச்சைத்திரனிடத் திருக்கின்றது. ஆகையால் அச்சையோகத்தையுண்டாக்கும் கிரியையின் அபாவ முடைமை அச்சைத்திரனிடத் திருப்பதாவதால் அச்சைத்திர, மைத்திரர்களின் சையோகம் தன்னைத் தோற்றி வைக்கும் கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா விராததன்றாம். சமவாய சம்பந்தத்தா விருப்பதேயாம். ஆகையால் அந்நியதர கர்மஜ சையோகத்தில் உபயகர்மஜ சையோகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சையோகம்" என்னும் பதம் கூறப்பட்டது யாதோ அச்சையோகப்பதங் கூறப்படும் உபய கர்மஜ விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். எக்காரணத்தாலெனின் உபயகர்மஜ விபாகமும் தன்னைத் தோற்றி வைக்கும் அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா விராததாகின்றது.

### ௭௨௫. சையோகஜ சையோகத்தின் லக்ஷணம்.

இனி சையோகஜ சையோகத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம். "கர்மாஜந்யஸம்யோகः ஸம்யோகஜஸம்யோகः" (இ-ள்.) எச்சையோகம் கிரியா வடிவ கர்மத்தால் ஜன்னியமாவதின்றே அச்சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. எங்ஙனம்: கை, தருக்களின் சையோகத்தால் ஜன்னிய சரீர, தருக்களின் சையோகம் யாதோ அச்சையோகம் கிரியா வடிவ கர்மத்தால் ஜன்னியமாவதன்று. ஆனால் அக்கை, தருக்களின் சையோகத்தாலேயே ஜன்னியமாகின்றது. ஆகையால் அச்சரீர, தருக்களின் சையோகம் சையோகஜ சையோகமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்திலும் "சையோகம்" என்னும் பதம் கூறப்படும் விபாகஜ விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். எக்காரணத்தாலெனின் விபாகஜ விபாகமும் அக்கிரியா வடிவ கர்மத்தால் ஜன்னியமாவதன்று.

எ௨௬. அபிகாதாக்கிய சையோகம், நோதனக்கிய சையோகம் என்னும் வேறுபாட்டால் சையோகத்தின் இருவித வேற்றுமை.

*அல்லது முற்கூறிய அக்கர்மஜ சையோகம் அபிகாதாக்கிய சையோகம், நோதனக்கிய சையோகமென்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம்.*

எ௨எ. அபிகாதாக்கிய சையோகத்தின் லக்ஷணம்.

ஆண்டு " ஸ்பர்ஶவேகவதோ மூர்த்தே ஸம்யோக: அபிகாதாக்ய ஸம்யோக: " (இ-ள்.) பரிசமும், வேகமுமாகிய இரண்டு குணங்களுடைய திரவியத்திற்கு வேறு மூர்த்தத் திரவியத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகம் அபிகாதாக்கிய சையோக மெனப்படுகின்றது. அவ்வபிகாதாக்கிய சையோகம் அம்மூர்த்தத் திரவியத்தின் கிரியைக்கு அசமவாயி காரணமாகின்றது. அங்ஙனமே அம்மூர்த்தத் திரவிய அவச்சின்ன ஆகாசத்தினிடத்து உண்டாகும் சத்தத்திற்கு நிமித்தகாரணமாகின்றது. எங்ஙனம்: தருக்களை வெட்டுவோன் தனது கையில் கோடரியை எடுத்துக் கொண்டு அத்தியந்த வேகத்தால் தருக்களின் மேல் அக்கோடரியை வீசுகிறான். ஆண்டு, பரிசமுடையதும், வேகமுடையதுமாகிய அக்கோடரி வடிவ திரவியத்திற்கு தரு வடிவ மூர்த்தத் திரவியத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகம் அபிகாதாக்கிய சையோக மெனப்படுகின்றது. அவ்வபிகாதாக்கிய சையோகம் அத்தருவிலோ அசைதல் வடிவ கிரியையினை உண்டாக்குகின்றது. அத்தரு அவச்சின்ன ஆகாசத்தில் துவனி வடிவ சத்தத்தினையும் உண்டாக்குகின்றது.

எ௨அ. நோதனக்கிய சையோகத்தின் லக்ஷணம்.

" ஸ்பர்ஶவதோ ஸம்யோக: நோதநாக்ய ஸம்யோக: " (இ-ள்.) பரிசமுடைய திரவியத்திற்கு எம்மூர்த்தத் திரவியத்தினோடு சையோக முண்டாகின்றதோ அச்சையோகம் நோதனக்கிய சையோகமெனப்படுகின்றது. அந்நோதனக்கிய சையோகம் சத்தத்தின் ஜனகமாவதன்று. ஆனால் அம்மூர்த்தத் திரவியத்தினிடத்து கிரியாமாத்திரத்தின் ஜனகமேயாகின்றது. எங்ஙனம்: அனேக காலம் ஜலத்தின் சம்பந்தத்தால் மிக சேறுயுள்ள பூமி யாதோ அப்பூமியில் பரிசமுடைய பாதத்தால் மிதிப்பதினாலுண்டாம் சையோகத்தினை நோதனக்கிய சையோகமென்பர். அந்நோதனக்கிய சையோகம் சத்தத்திற்கு ஹேதுவாவதன்று. ஆனால் அச்சேறு படிந்த பூமிப்பிரதேசத்தில் கேவலம் கிரியா மாத்திரத்திற்கே ஹேதுவாகின்றது.

எ௨௯. சையோகஜ சையோகத்தினை கண்டிக்குஞ் சங்கை.

சங்கை:—முன்னர் கூறப்பட்ட சையோகஜ சையோகம் யாதோ அதனிடத்து யாதாமோர் பிரமாணமும் இன்றாம். யாண்டு கபாலத்தின் கிரியையால் அக்கபாலத்திற்கு தருவினோடு சையோக முண்டாகி அதன்பின்னர் கடத்திற்கு அத்தருவினோடு சையோக முண்டாகின்றதோ ஆண்டும் அக்கபாலத்தின் கிரியையே அக்கட, தருக்களின் சையோகத்தில் காரணமாகின்றது.

அக்கபால, தருக்களின் சையோகம் அக்கட, தருக்களின் சையோகத்தில் காரணமாவதன்று. ஆகையால் அக்கட, தருக்களின் சையோகமும் கர்மஜ சையோகமாகவே சித்தமாகின்றது.

எ௩௦. சையோகஜ சையோகத்தின் சாதக யுக்தி.

சமாதானம:—எத்திரவியத்தில் சமவாய சம்பந்தத்தால் சையோகம் உண்டாகின்றதோ அத்திரவியத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய கிரியையே அச்சையோகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. ஆண்டு அக்கடத்தில் அக்கிரியை சமவாய சம்பந்தத்தாலின்றும். ஆனால் அக்கடத்தின் அவயவ வடிவ கபாலத்தில் அக்கிரியை சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அக்கபாலத்தின் கிரியையால் அக்கபாலத்திற்கே அத்தருவினேடு சையோக முண்டாகும். அக்கபாலத்தின் கிரியையால் அக்கடத்திற்கு அத்தருவினேடு சையோக முண்டாகாததாகும். ஆகையால் அக்கபாலத்தின் கிரியைக்கு அக்கட, தருக்களின் சையோகத்தின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. ஆனல் அக்கபால, தருக்களின் சையோகத்திற்கே அக்கட, தருக்களின் சையோகத்தின் அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. எக்கபாலத்தில் அக்கிரியை சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றதோ அக்கபாலத்தில் அக்கடமும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சாமானுதிகரண்ணிய சம்பந்தத்தால் அக்கடத்தில் இருப்பதாகிய அக்கபாலத்தின் கிரியை அக்கட, தருக்களின் சையோகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: சமானுதிகரண்ணிய சம்பந்தத்தால் கடத்தில் இருப்பதாகிய கபாலத்தின் உருவ முதலியன அக்கடத்தின் உருவ முதலியவைகட்கு அசமவாயி காரணமாகின்றது. என்றாலும் அச்சையோகஜ சையோக விடத்தினும் வேறான எல்லா விடத்தில் அக்கிரியைக்கு சமவாய சம்பந்தத்தானேயே அச்சையோகத்தின் ஏதுத்தன்மை சித்தமாம். கூறிய இச்சையோகஜ சையோக விடத்தில் அக்கிரியைக்கு சாமானுதிகரண்ணிய சம்பந்தத்தால் அச்சையோகத்தின் ஏதுத்தன்மையை கற்பிப்பதில் மிகுந்த காரிய, காரண பாவத்தின் கற்பனையால் கௌரவ தோஷமே பிராப்தமாகும். அதன் அபேக்ஷையால் அக்கபால, தருக்களின் சையோகத்திற்கே சமவாய சம்பந்தத்தால் அக்கட, தருக்களின் சையோகத்தின் காரணத்தன்மை கற்பிப்பது உசிதமாம்.

எ௩௧. வேறுவகை யுக்தியால் சையோகஜ சையோகத்தின் சித்தி.

அல்லது எவ்விடத்தில் ஒரு கபாலத்தின் கிரியையால் ஒரே க்ஷணத்தில் வேறு கபாலத்தினேடும், அத்தருவினேடும் அக்கபாலத்திற்கு சையோக முண்டாகின்றதோ அதனினும் பிற்க்ஷணத்தில் அவ்விரு கபாலங்களின் சையோகத்தால் அக்கடத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அங்ஙனமே பூர்வ க்ஷணத்தில் உண்டாகிய அக்கபாலத்தின் உத்தரதேச சையோகத்தால் அக்கபாலத்தின்கண் கிரியையின் நாசமுண்டாகின்றது. அதனினும் பிற்க்ஷணத்தில் அக்கடத்திற்கு அத்தருவினேடு சையோக சம்பந்த முண்டாவது யாதோ அது உண்டாகாததாக வேண்டும், ஏனெனின் அக்கபாலத்தின் கிரியையோ அக்கட, தருக்களின் சையோகத்தினும் பூர்வ க்ஷணத்திலேயே நாசமாய் விடுகின்

றது. ஆகையால் அக்கபாலத்தின் கிரியைக்கோ அக்கட, தருக்களின் ஸையோகத்தின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. அக்கடத்தினிடத்தும் கிரியை உண்டாவதின்று. அக்கிரியை அக்கட, தருக்களின் ஸையோகத்திற்கு அசமவாயி காரணமாகி பரிசேஷத்தால் அக்கபால, தருக்களின் ஸையோகத்திற்கே அக்கட, தருக்களின் ஸையோகத்தின் அசமவாயி காரணத்தன்மை ஒப்புவதாகும். ஆகையால் அச்ஸையோகஜ ஸையோகம் அவசியம் ஒப்பப்படுவதாகும்.

### எ௩உ. கையின் கிரியையால், பிற் க்ஷணத்தில் உண்டாகிய சரீரத்தின் கிரியையால் ஜன்னிய சரீர தருவின் ஸையோகத்தில் ஸையோகஜ ஜன்னியத்வ மிருக்கிறதா? அல்லது கிரியா ஜன்னியத்வ மிருக்கிறதா வென்பதின் சங்கை.

சங்கை:—யாண்டு முதற் க்ஷணத்தில் கையினிடத்து கிரியையின் உற்பத்தியும், இரண்டாம் க்ஷணத்தில் சரீரத்தில் கிரியையின் உற்பத்தியு முண்டாகின்றதோ ஆண்டு அக்கையின் கிரியையினாலோ இரண்டாவது க்ஷணத்தில் அக்கைக்கு பூர்வதேசத்தினின்றும் விபாகம் உண்டாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அவ்விபாகத்தால் அக்கைக்கு பூர்வ தேசத்தினின்றும் ஸையோகம் நாசமாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அக்கைக்கு தருவினோடு ஸையோகமுண்டாகின்றது. அந்நான்காவது க்ஷணத்தில் அச்சரீரத்தின் கிரியா ஜன்னியவிபாகத்தால் அச்சரீரத்திற்கு பூர்வதேசத்தினின்றும் ஸையோகம் நாசமாகின்றது. அதனினும் பிற் க்ஷணத்தில் அச்சரீரத்திற்கு அத்தருவினோடு ஸையோகமுண்டாகின்றது. அச்சரீர,தருக்களின் ஸையோகம் அக்கை, தருக்களின் ஸையோகத்தால் ஜன்னியமாகின்றது. அல்லது அச்சரீரத்தின் கிரியையால் ஜன்னியமாகின்றது. ஆண்டு அச்சரீர, தருக்களின் ஸையோகத்தில் அக்கை, தருக்களின் ஸையோகமும், அச்சரீரத்தின் கிரியையுமா மிரண்டும் அசமவாயி காரணமாகின்றனவெனக் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் சரீர, தருக்களின் ஸையோகத்திற்கு ஸையோகம், கிரியையா மிரண்டினால் ஜன்னியம் ஒப்பின் அச்சரீர, தருக்களின் ஸையோகத்தில் கர்மஜ ஸையோகத்திலிருக்கும் ஜாதியினதும், ஸையோகஜ ஸையோகத்திலிருக்கும் ஜாதியினதும் கலப்புண்டாகும். அச்சாங்கர்ய தோஷத்தால் அவ்விரண்டில் ஜாதித்தன்மையின் பாதமே யுண்டாகும். ஆகையால் அச்சரீர, தருக்களின் ஸையோகத்தில் அச்ஸையோகம், கிரியையா மிரண்டிற்கு காரணத்தன்மை சம்பவியாதென்பதான் சங்கை யுண்டாக சமாதானங் கூறுவாம்.

### எ௩௩. கையினிடத்து இரு ஸையோகங்களின் உற்பத்தியை ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

ஆண்டு சில நூலாசிரியரோ அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர். அவ்விடத்தில் அத்தருவினோடு அச்சரீரத்தின் இரண்டு ஸையோகமுண்டாகின்றது. ஆண்டு ஒரு ஸையோகமோ அக்கை, தருக்களின் ஸையோகத்தால் உண்டாகின்றது. மற்றைய ஸையோகம் அச்சரீரத்தின் கிரியையால்

உண்டாகின்றது. இவ்வாறாக இரு சையோகத்தின் உற்பத்தி யுண்டாகியும் இவ்விரு சையோகத்தின் இருமையின் கிரஹண முண்டாகாதது யாதோ அது சாத்ருசிய தோஷத்தின் வசத்தால் உண்டாவதின்றாம்.

### எ௬௪. அவ்விடத்தில் சித்திர சையோகத்தின் உற்பத்தியை ஒப்புவோராகிய வாதிகளின் மத வர்ணனம்.

சில நூலாசிரியரோ அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர். எங்ஙனம்: தந்துக்களின் நீல, பீத முதலிய உருவங்கள் கலந்து படத்தில் ஒரு சித்திர உருவத்தினை உண்டாக்குகின்றதோ அச்சித்திர உருவம் அந் நீல, பீத முதலிய உருவங்களினும் விஜாதீயமேயாகின்றது. அங்ஙனமே கூறிய விடத்தில் அக்கை, தருக்களின் சையோகமும், அச்சரீரத்தின் கர்மமுமா மிரண்டும் கலந்து ஒரு சித்திர சையோகத்தினை உண்டாக்குகின்றது. அச் சித்திர சையோகம் அக்கர்மஜ சையோகத்தினும், சையோகஜ சையோகத்தினும் விஜாதீயமேயாம். ஆகையால் அச்சரீர, தருக்களின் சையோகத்தில் முற்கூறிய அஜ்ஜாதி சாங்கர்ய தோஷமும் பிராப்தமாகாது.

### எ௬௫. ஒரு மூர்த்தத் திரவியத்திற்கு வேறு மூர்த்தத் திரவியத்தினோடும், விபுதிரவியத்தினோடும் உண்டாம் சையோகத்தின் விவஸ்தை.

முற்கூறிய பலவாறாய அச்சையோகம் ஒரு மூர்த்தத் திரவியத்திற்கு வேறு மூர்த்தத் திரவியத்தினோடு உண்டாகின்றது. எங்ஙனம்: பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் இவ்வைந்து மூர்த்தத் திரவியங்கட்கு பரஸ்பர சையோக முண்டாகின்றது. அங்ஙனமே ஒரு பார்த்திவ திரவியத்திற்கு வேறு பார்த்திவ திரவியத்தினோடு சையோக முண்டாகின்றது. இவ்வாறாக ஒரு ஜலீய திரவியத்திற்கு வேறு ஜலீய திரவியத்தினோடு சையோக முண்டாகின்றது. அங்ஙனமே ஒரு தைஜச திரவியத்திற்கு வேறு தைஜச திரவியத்தினோடு சையோக முண்டாகின்றது. அங்ஙனமே ஒரு வாயவீய திரவியத்திற்கு வேறு வாயவீய திரவியத்தினோடு சையோக முண்டாகின்றது. இவ்வாறாக ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா இந்நான்கு விபு திரவியங்களினோடும் அப் பிருதிவி முதலிய மூர்த்தத் திரவியங்களின் கிரியா ஜன்னிய சையோக முண்டாகின்றது. எங்ஙனம்: விபு ஆத்மாவினோடு மனதிற்கு சையோக முண்டாகின்றது. அங்ஙனமே ஆகாச முதலியவைகளோடு கட முதலியவைகளின் சையோக முண்டாகின்றது. ஆனால் ஒரு விபுதிரவியத்திற்கு வேறு விபு திரவியத்தினோடு ஓர் காலும் சையோக முண்டாவதின்று. ஏனெனின் அவ் விபுதிரவியங்களில் கிரியை யுண்டாகிறதில்லை. ஆகையால் அவ்விபுதிரவியங் கட்கு கர்மஜ சையோகமும் சம்பவியாது. கிரியையுடைய திரவியத்திற்கே அக்கர்மஜ சையோக முண்டாகின்றது. விபுதிரவியம் நிரவயவமாம். ஆகையால் அவ்விபுதிரவியங்கட்கு சையோகஜ சையோகமும் சம்பவியாது. அவயவ திரவியத்திற்கே அச்சையோகஜ சையோக முண்டாகின்றது. விபுதிரவியங்களின் சையோகத்தில் ஓர் பிரமாணமுமின்றாம்.

## எ௲கூ. இரு விபுதிரவியங்கட்கு சையோகம் ஒப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மத வர்ணனம்.

மீமாஞ்சகரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் ஒரு மூர்த்தத் திரவியத்திற்கு வேறு மூர்த்தத் திரவியத்தினோடும், விபுதிரவியத்தினோடும் சையோகமுண்டாகின்றதோ அங்ஙனமே ஒரு விபுதிரவியத்திற்கு வேறு விபு திரவியத்தினோடும் சையோக முண்டாகின்றது. அவ்விபுதிரவியங்களின் சையோகம் அநுமானப் பிரமாணத்தானேயே சித்தமாம். ஆண்டு அநுமானம் "ஆகாஶம் காலாதிநா ஸம்யோகவத் த்ரவ்யத்வாத் ஶரீரவத்" (இ-ள்.) விபு ஆகாசமானது கால முதலிய திரவியங்களின் சையோகமுடையதாவதற்கு யோக்கியமாம், திரவியமாவதால், எதுவெது திரவியமாகின்றதோ அது வது கால முதலியவைகளின் சையோகமுடையதேயாம். எங்ஙனம்: இச்சரீரம் திரவியமாவதால் கால முதலியவைகளின் சையோக முடையதேயாம். அங்ஙனமே ஆகாசமும் திரவியமாவதால் கால முதலியவைகளின் சையோகத்தை யுடையதேயாம். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் விபு திரவியங்களின் சையோகம் சித்தமாகின்றது. ஆண்டு விபுதிரவியங்களின் சையோகம் நிஷ்கிரிய விபுதிரவியங்களில் இருப்பதாவதால் கர்ம ஜன்னியமு மன்றாம், அங்ஙனமே நிரவயவ விபுதிரவியங்களி லிருப்பதாவதால் சையோக ஜன்னியமு மன்றாம். பரிசேஷத்தால் விபுதிரவியங்களின் சையோகம் விபு திரவியத்தினைப் போன்று உற்பன்ன, விநாசமின்றி நித்தியமாக ஒப்புவதே யோக்கியமாம்.

## எ௲எ. மீமாஞ்சகர்களின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் மீமாஞ்சகர்களின் மதம் நலமுடையதன்றாம். எனெனின் விபுதிரவியங்களின் சையோகம் யாதாமோர் பிரமாணத்தால் சித்தமாகுமாயின் அச்சையோகத்தில் நித்தியத் தன்மையும் சித்தமாம். ஆனால் விபுதிரவியங்களின் சையோகம் யாதோர் பிரமாணத்தாலும் சித்திக்கமாட்டாது. அச்சையோகத்தின் சித்தியின் பொருட்டு மீமாஞ்சகர்கள் முற்கூறிய அநுமானமோ சத்பிரதிபக்ஷத்தன்மை தோஷமுடையதாவதால் பிரமாண வடிவமேயன்றாம். ஆண்டு எவ்வேதுவினது சாத்தியத்தின் அபாவத்தின் சாதகம் வேறு ஏதுவாகின்றதோ அவ்வேது சத்பிரதிபக்ஷத்தன்மை தோஷமுடையதாகின்றது. ஆண்டு முற்கூறிய திரவியத்வ வடிவ ஏதுவினது விபு சையோக வடிவ சாத்தியத்தின் அபாவத்தின் சாதகம் இவ்வேதுவாம். "ஆகாஶம் காலாதிநா ந ஸம்யோகவத் நிஷ்க்ரியத்வே ஸதி நிரவயவத்வாத் ரூபாதிவத்" (இ-ள்.) ஆகாசமானது கால முதலியவைகளின் சையோக முடையதன்றாம், கிரியையின்றி நிரவயவமாவதால், எவ்வெப்பதார்த்தம் கிரியையின்றி நிரவயவமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் கால முதலியவைகளின் சையோகமுடையது மன்றாம். எங்ஙனம்: உருவ முதலிய குணங்கள் கிரியையின்றி நிரவயவமா மாகையால் உருவ முதலிய குணங்கள் கால முதலியவைகளின் சையோகமுடையதுமன்றாம். அங்ஙனமே ஆகாசமும் கிரியை இன்றி நிரவயவமா மாகையால் ஆகாசமும் கால முதலியவைகளின் சையோகமுடைய

தன்றும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் ஆகாசமெனப் பெயரிய விபுதிரவியத்தில் கால முதலிய விபுத்திரவியங்களின் சையோகத்திற்கு அபாவமே சித்தியாகின்றது. ஆகையால் முற்கூறிய திரவியத்வ வடிவ ஏது சத்பிரதிபக்ஷத் தன்மை தோஷமுடையதாவதால் துஷ்டமாம். அத்துஷ்ட ஏதுவால் விபுதிரவியங்களின் சையோகத்தின் சித்தி யுண்டாகாது. ஆண்டு இவ்வநுமானத்தில் "நிரவயவமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "நிஷ்கிரியையுடையதாகி" என்னும் பதங்கள் கூறுவிடின் பரமாணுக்களில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் பரமாணுக்களில் நிரவயவத்வ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் கால முதலியவைகளின் சையோகத்தின் அபாவ வடிவ சாத்தியமின்றாம். எக்காரணத்தாலெனின் பரமாணுவானது கால முதலியவைகளின் சையோகமுடையதேயாம். அச்சாத்தியாபாவ முடைமை இருத்தற்றன்மை வடிவ வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "நிஷ்கிரியையுடையதாகி" என்னும் பதங்கள் கூறப்பட்டன. பரமாணுக்களில் கிரியையின் அபாவமின்றாம், கிரியையே இருக்கின்றது. ஆகையால் பரமாணுக்களில் கூறிய அச்சாத்தியத்தினைப் போன்று கூறிய அவ்வேதுவிற்கும் அபாவமாவதால் வியபிசாரமுண்டாவதின்று. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "நிஷ்கிரியையுடையதாகி" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "நிரவயவமாவதால்" என்னும் பதங்கள் கூறுவிடின் சையோகஜ சையோகமுடைய நிஷ்கிரிய கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் அக்கட முதலியவைகளில் நிஷ்கிரியைத்வ வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் அச்சையோகத்தின் அபாவ வடிவ சாத்தியமின்றாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "நிரவயவமுடையதாவதால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அக்கட முதலியவைகளில் நிரவயவத்தன்மை யின்றாம். ஆகையால் அக்கட முதலியவைகளில் கூறிய அச்சாத்தியத்தினைப் போன்று கூறிய அவ்வேதுவிற்கும் அபாவமிருப்பதால் வியபிசார முண்டாகாது.

### ௭௩௪. மீமாஞ்சகர்களின் மதத்தில் இரு விபுதிரவியங்களின் சையோகத்தைப்போன்று இரு விபுதிரவியங்களின் விபாகத்தினது ஆபத்தி வடிவ தோஷம்.

அல்லது அம்மீமாஞ்சகர்கள் எத்திரவியத்தன்மை வடிவ ஏதுவால் விபுதிரவியங்களினது சையோகத்தின் சித்தியை செய்கின்றனரோ அத்திரவியத்தன்மை வடிவ ஏதுவால் விபுதிரவியங்களின் விபாகத்தின் சித்தியும் உண்டாய்விடுகின்றது. ஆண்டு அநுமானம் "ஆகாஶம்காலாதிவிபாகவத் த்ரவ்யத்வாத் ஶரீரவத்" (இ-ள்.) விபு ஆகாசமானது காலமுதலிய விபுதிரவியங்களின் விபாகமுடையதாம், திரவிய வடிவமாவதால், எதுஎது திரவியமாகின்றதோ அதுவது கால முதலியவைகளின் விபாகமுடையதேயாகின்றது. எங்ஙனம்: இச்சரீரம் திரவியவடிவமாவதால் கால முதலியவைகளின் விபாகமுடையதேயாகின்றது. அங்ஙனமே ஆகாசமும் திரவிய வடிவமாவதால் கால முத

யவைகளின் விபாகமுண்டாயதேயாகும். இவ்வாறாய அநுமானப்பிரமாணத்தால் அவ்விபுதிரவியங்களின் விபாகத்தின் சித்தியும் உண்டாய் விடுகின்றது. ஆண்டும் விபுதிரவியங்களின் விபாகம் நிஷ்கிரிய விபுதிரவியங்களில் இருப்பதாவதால் கர்மஜ விபாகமென்றுங் கூறப்படுவதன்று. அங்ஙனமே திரவய்வ விபு திரவியங்களில் இருப்பதாவதால் விபாகஜ விபாகமென்றுங் கூறப்படுவதன்று. பரிசேஷத்தால் விபுதிரவியங்களின் சையோகத்தினைப் போன்று விபுதிரவியங்களின் விபாகத்தையும் நித்தியமாகவே ஒப்ப வேண்டியதாகும் என்பதாக மீமாஞ்சகர் கூறுவது அத்தியந்த விருத்தமாம். எக்காரணத்தாலெனின் ஒரே வஸ்து ஒரே காலத்தில் அவ்வஸ்துவின் சையோகமுடையது, அவ்வஸ்துவின் விபாகமுடையது எனக் கூறுவது சம்பவியாது. ஆகையால் முற்கூறிய திரவியத்தன்மை வடிவ ஏது விபுதிரவியங்களின் சையோகத்தின் சாதகமன்றாம். சையோக நிரூபணம் முற்றிற்று.

## எ௩௧. விபாக குண நிரூபணம்.

விபாக குணத்தின் லக்ஷணம். ஆண்டு "ஸம்யொ௩நாஶகெ௯ஸ்ஸதி ஸம்யொ௩ஜநூ꞉ விஊா௩꞉" (இ-ள்.) எக்குணம் சையோகத்தை நாசஞ்செய்வதும், சையோகத்தால் ஜன்னியமுமாகிறதோ அக்குணம் விபாகமெனப்படுகின்றது. ஆண்டு எத்திரவியங்கட்கு பரஸ்பரம் சையோகமுண்டாவதின்றோ அத்திரவியங்கட்கு பரஸ்பரவிபாகமும் உண்டாவதின்று. ஆனால் முன்னர் பரஸ்பர சையுக்த திரவியத்திற்கே பின்னர் பரஸ்பர விபாக முண்டாகின்றது. ஆகையால் அவ்விபாகம் சையோகத்தால் ஜன்னியமெனப்படுகின்றது. அவ்விபாகத்தினை உண்டாக்கிவிட்டு பூர்வ சையோகம் நஷ்டமாய்விடுகின்றது. ஆகையால் விபாகம் சையோகத்தினை நாசஞ் செய்வதுமாம். ஆகையால் கூறிய விபாகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "சையோகத்தால் ஜன்னியமாவது விபாகம்" என இம்மாத்திரமே விபாகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "சையோகத்தை நாசஞ்செய்வதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் முற்கூறிய சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அச்சையோகஜ சையோகமும் அச்சையோகத்தாலேயே ஜன்னியமாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சையோகத்தை நாசஞ்செய்வதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அச்சையோகஜ சையோகம் சையோகத்தால் ஜன்னியமாயினும் சையோகத்தை நாசஞ்செய்வதன்றாம். ஆகையால் அச்சையோகஜ சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சையோகத்தை நாசஞ் செய்வது விபாகம்" என இம்மாத்திரமே விபாகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "சையோகத்தால் உண்டாவதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் சையோகத்திலும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம், ஏனெனின் எங்ஙனம் கட முதலியவைகளின் பிரத்துவம்சபாவ வடிவநாசத்தில் அக்கட முதலியவைகட்கு பிரதியோகி வடிவத்தன்மையால் காரணத்தன்மையுண்டாகின்றதோ அங்ஙனமே அச்சையோகத்தின் நாசத்திலும் அச்சையோ

கத்திற்கு பிரதியோகித்தன்மை வடிவத்தால் காரணத்தன்மையே யுண்டா கின்றது. ஆகையால் அச்சையோகமும் சையோகத்தினை நாசஞ் செய்வதே யாம். அங்ஙனமே அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவும் காரியமாத்திரத்தை உண்டாக்குவதாவதால் அச்சையோகத்தினை நாசஞ்செய்வதேயாம். அவ்வதி வியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சையோ கத்தால் உண்டாவதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அச்சை யோகமும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவும் அச்சையோகத்தால் ஜன்னிய மன்றும். ஆகையால் அவைகளிடத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாவதின்று.

சங்கை:—கூறிய இந்த லக்ஷணத்திற்கும் சையோகஜ சையோகத்தில் அதிவியாப்தியே யுண்டாகின்றது. ஏனெனின் பிரத்துவம்சாபாவ வடிவநாசத் தில் பிரதியோகிக்கும் காரணத்தன்மை உண்டாவதால் அச்சையோகஜ சை யோகமும் தனது நாசத்திற்கு காரணமேயாம். அங்ஙனமே சையோகத்தால் ஜன்னியமுமாம்.

சமாதானம்:—கூறிய அந்த லக்ஷணத்தில் எச்சையோகத்தை நாசஞ்செய்யுந் தன்மை யிருக்கின்றதோ அச்சையோகத்தால் ஜன்னியத்வம் கூறக்கருதியதாம். அது எங்ஙனம் விபாகத்திலிருக்கின்றதோ அங்ஙனம் சையோகஜ சையோகத்திலின்றும். ஆனால் அச்சையோகஜ சையோகமோ பிரதியோகிவடிவத்தால் தனது நாசத்தை யுண்டாக்குகின்றது. வேறு சையோ கத்தால் ஜன்னியமாகின்றது. ஆகையால் அச்சையோகஜசையோகத்தில் விபா கத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## எசா. விபாகத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"விப⁴க்தவ்யவஹாரவிஷயவ்ருத்திகு³ணத்வவ்யாப்யஜாதிமாந்விபா⁴க³:"

(இ-ள்.) இத்திரவியம் இத்திரவியத்தினும் பிரிக்கப்பட்டதாம். அதாவது இத் திரவியத்தின் பிரிவு உடையதாமென்பதான விபாகத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானவடிவ வியவஹாரம்யாதோ அவ்வியவஹாரத்தின் விஷயம் அவ்விபாக குணமேயாம். விபாகத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமும் விபாகத் தன்மைஜாதியாம். அந்த விபாகத் தன்மைஜாதி எல்லா விபாகத்தி லிருக்கின்றது. ஆகையால் கூறிய விபாகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில்"பிரிவுபட்டவியவஹாரவிஷயத்திலிருப்பதும்"என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அந்த உருவத் தன்மை முதலிய ஜாதிகள் பிரிவுபட்ட வியவஹாரத்தை விஷயஞ் செய்வதாகிய விபாகத்தில் இருப்பதன்றும். ஆகை யால் அந்த உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அந்த உருவ முத லிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. விபா கத்திலிருக்கும் குணத்வ ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் உருவ முதலிய எல்லா குணங்களிலும், திரவிய, குண, கர்மங்களிலும் அந்த

லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அக்குணத் தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும், குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத்தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

எசக. விபாகத்தின் மூன்றுவது லக்ஷணம்.

"வ்யாஸஜ்யவ்ருத்திமாத்ரவ்ருத்தி ஸம்யோகாவ்ருத்தி குணத்வஸாக்ஷாத்வ்யாப்ய ஜாதிமாந்விபாக:" (இ-ள்.) வியாசஜ்யத்திலிருக்கும் தர்மமாத்திரத்தில் இருப்பதும், சையோகத்தில் இராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் விபாகமெனப்படுகின்றது. ஆண்டு முற்கூறிய சையோகத்தினைப் போன்று விபாகமும் இரு திரவியங்களில் இருப்பதாவதால் வியாசஜ்யத்தி லிருப்பதென்னப்படுகின்றது அவ்வியாசஜ்யத்தி லிருக்கும் விபாக மாத்திரத்தி லிருப்பது விபாகத்தன்மை ஜாதியாம். அந்த விபாகத் தன்மை ஜாதி சையோகத்தில் இராததும், குணத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய விபாகத் தன்மை ஜாதியுடையது விபாக குணமேயாம். ஆகையால் விபாகத்திற்கு கூறிய இம் மூன்றுவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சையோகத்திலிராததும்" என்னும் பதங்கள் சையோகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். மற்றைய பதங்களின் பயனை முற்கூறிய சையோகத்தின் லக்ஷணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் முறையாக அறிந்துக் கொள்க.

எசஉ. விபாகத்தின் நான்காவது லக்ஷணம்.

"ஜந்யத்ரவ்யவ்ருத்தி ஸ்வஸமாநாதிகரணாபாவப்ரதியோகி ஸம்யோகபிந்நகுண: விபாக:" (இ-ள்.) எக்குணம் ஜன்னிய திரவியத்தி லிருப்பதும், சுவசமானாதிகரண அபாவத்தின் பிரதியோகியாவதும், சையோகத்தினும் வேறுமாகின்றதோ அக்குணம் விபாகமெனப்படுகின்றது. ஆண்டு இவ் விபாக குணம் முற்கூறிய சையோகத்தினைப் போன்று கட முதலிய ஜன்னிய திரவியங்களில் இருப்பதும், சுவசமானாதிகரண அபாவத்தின் பிரதியோகியும், சையோகத்தினும் வேறாகிய குணமுமாம். ஆகையால் விபாகத்திற்கு கூறிய இந்நான்காவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சையோகத்தினும் வேறும்" என்னும் பதங்கள் சையோகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். மற்றைய பதங்களின் பயனை முற்கூறிய சையோகத்தின் லக்ஷணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் முறையாக அறிந்துக் கொள்க.

எசங. விபாகத்தின் ஆசிரயத்தினதும், அநித்தியத் தன்மையினதும், நாசத்தின் காரணத் தன்மையினதும் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய நான்கு லக்ஷணங்களால் லக்ஷித்த விபாக குணம் முற்கூறிய சையோகத்தினைப் போன்று பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்

களிலேயே யிருக்கின்றது. முற்கூறிய சையோகத்தினைப்போன்று விபாக குணமும் யாண்டும் அநித்தியமேயாகின்றது. ஓர் விபாகமும் நித்தியமாவதின்று. ஆண்டு விபாகம் சிலவிடத்தோ ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நாசமாகின்றது. சிலவிடத்து சுவாசிரய திரவியத்தின் உத்தரதேச சையோகத்தால் நாசமாகின்றது. எங்ஙனம்: தரு சையுக்த பக்ஷியின் கிரியையால் உண்டாகிய பக்ஷி, தருக்களின் விபாகம் யாதோ அவ்விபாகம் அப்பக்ஷி, தரு வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தானும் நாசமாய் விடுகின்றது. அப்பக்ஷி, தரு வடிவ ஆசிரய திரவியங்களின் இருப்புளதாயினும் எப்பொழுது அப்பக்ஷிக்கு நில முதலிய உத்தரதேசத்தினோடு சையோக முண்டாகின்றதோ அப்பொழுது உத்தரதேச சையோகத்தானும் அப்பக்ஷி, தருக்களின் விபாகம் நாசமாய் விடுகின்றது.

## எ௪௪. கர்மஜ விபாகம், விபாகஜ விபாகமென்னும் வேறுபாட்டால் விபாகத்தின் இருவித வேற்றுமை.

ஆண்டு முற்கூறிய சையோகத்தினைப் போன்று விபாக குணமும் கர்மஜ விபாகம், விபாகஜ விபாகம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு கிரியா வடிவ கர்மத்தால் ஜன்னிய விபாகத்தினை கர்மஜ விபாக மென்பர். விபாகத்தால் ஜன்னிய விபாகத்தினை விபாகஜ விபாக மென்பர்.

## எ௪௫. அந்நியதர கர்மஜம், உபய கர்மஜ மென்னும் வேறுபாட்டால் கர்மஜ விபாகத்தின் இருவித வேற்றுமை.

ஆண்டு முதலாவது கர்மஜ விபாகமும், அந்நியதர கர்மஜ விபாகம், உபய கர்மஜ விபாகம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது.

## எ௪௬. அந்நியதர கர்மஜ விபாகத்தின் லக்ஷணம்.

ஆண்டு எவ்விபாகம் ஓர் திரவியத்தின் கிரியையால் ஜன்னியமாகின்றதோ அவ்விபாகம் அந்நியதர கர்மஜ விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: கிரியையில்லா பர்வதத்திலுள்ள பக்ஷியின் கிரியையால் பக்ஷிக்கு அப்பர்வதத்தினின்றும் விபாக முண்டாவது யாதோ அவ்விபாகம் அப்பக்ஷி மாத்திர கிரியையால் ஜன்னியமாவதால் அந்நியதர கர்மஜ விபாக மெனப்படுகின்றது. ஆண்டு அவ்விபாகத்திற்கு அப்பக்ஷி, மலை இரண்டும் சமவாயி காரணமாகின்றன. அப்பக்ஷியின் கிரியை அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. இவ்வாறாக மனதிற்கு மனதின் கிரியையால் ஆத்மாவினின்றுண்டாம் விபாகமும், கட முதலியவைகட்கு கட முதலிய மூர்த்தத் திரவியங்களின் கிரியையால் ஆகாச முதலிய விபுதிரவியங்களினின்றுடாம் விபாகமும் யாதோ அவ்விபாகமும் அந்நியதர கர்மஜ விபாகமெனப்படுகின்றது.

## எ௪௭. உபய கர்மஜ விபாகத்தின் லக்ஷணம்.

எவ்விபாகம் இரு திரவியங்களின் கிரியையால் ஜன்னியமாகின்றதோ அவ்விபாகம் உபய கர்மஜ விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: பரஸ்பர

சையுக்த இரு ஆட்டுக்கிடாக்களின் கிரியையால் அவ்விரு ஆட்டுக்கிடாக்களின் விபாக முண்டாகின்றது. அவ்விபாகம் உய்ய கர்மஜ விபாக மெனப்படுகின்றது. ஆண்டு அந்த விபாகத்திற்கு அவ்விரு ஆட்டுக்கிடாக்களும் சமவாயி காரணமாகின்றன. அவ்விரு ஆட்டுக்கிடாக்களின் கிரியை அவ்விபாகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன.

## எசஅ. காரணமாத்திர விபாக ஜன்னியம், காரண அகாரண விபாக ஜன்னியம் என்னும் வேறுபாட்டால் விபாகஜ விபாகத்திற்கு இருவிதமாந் தன்மை.

மற்றைய விபாகஜ விபாகமும் காரண மாத்திர விபாக ஜன்னிய விபாகம், காரண அகாரண விபாக ஜன்னிய விபாகம் என்னும் வேறுபாட்டால், இருவிதமாகின்றது.

## எசகூ. காரண மாத்திர விபாக ஜன்னிய விபாகத்தின் லக்ஷணம்.

ஆண்டு எவ்விபாகம் காரண மாத்திரத்தின் விபாகத்தால் ஜன்னியமாகின்றதோ அவ்விபாகம் காரண மாத்திர விபாக ஜன்னிய விபாக மெனப்படுகின்றது. எங்ஙனம்: பரஸ்பர சையுக்த இரு கபாலங்களுள் எப்பொழுது ஒரு கபாலத்தில் கிரியா வடிவ கர்மம் உற்பன்னமாகின்றதோ அதன் பின்னர் அக்கபாலத்தின் கர்மத்தால் அவ்விரு கபாலங்களின் விபாகம் உற்பன்னமாகின்றது. அதன் பின்னர் அவ்விபாகத்தால் கடத்தினை ஆரம்பித்த அவ்விரு கபாலங்களின் சையோகத்திற்கு நாச முண்டாகின்றது. அதன் பின்னர் அக்கபால சையோக வடிவ அசமவாயி காரணத்தின் நாசத்தால் அக்கடத்தின் நாசம் உண்டாகின்றது. அதன் பின்னர் அவ்விரு கபாலங்களின் விபாகம் அக்கிரியையுடைய கபாலத்திற்கு ஆகாச முதலிய பூர்வ தேசத்தினின்றும் விபாகத்தினை உண்டாக்குகின்றது. அதன் பின்னர் அக்கபால பூர்வ தேசத்தின் விபாகத்தால் கபால பூர்வ தேசத்தின் சையோகத்திற்கு நாசமுண்டாகின்றது. அதன் பின்னர் அக்கபாலத்திற்கு அக்கிரியையால் உத்தர தேசத்தினோடு சையோக முண்டாகின்றது. அதன் பின்னர் அக்கபால உத்தர தேசத்தின் சையோகத்தால் அக்கபாலத்தின் கிரியா வடிவ கர்மத்திற்கு நாசமுண்டாய் விடுகின்றது. ஆண்டு அக்கடத்தின் சமவாயி காரண வடிவ இரு கபாலங்கள் யாவையோ அவ்விரு கபாலங்களில் ஒரு கபாலத்தின் கிரியையால் அவ்விரு கபாலங்கட்கு விபாக முண்டாவது யாதோ அவ்விரு கபாலங்களின் விபாகம் அக்கடத்தின் காரண வடிவ இரு கபால மாத்திரத்தில் இருப்பதாவதால் காரணமாத்திர விபாக மெனப்படுகின்றது. இத்தகைய காரணமாத்திரவிபாகத்தானேயே அக்கிரியையுடைய கபாலத்திற்கு அவ்வாகாசாதி வடிவ பூர்வ தேசத்தினின்றும் விபாக முண்டாகின்றது. ஆகையால் அக்கபால பூர்வதேசத்தின் விபாகம் காரண மாத்திர விபாக ஜன்னிய விபாகமெனப்படுகின்றது. ஆண்டு அக்கபால பூர்வ தேசத்தின் விபாகத்திற்கு அக்கபாலமும், ஆகாசாதி வடிவ பூர்வதேசமுமாமிரண்டுமோ சமவாயி காரணமாகின்றன. அக்கபாலத்தின் கிரியா ஜன்னிய

அவ்விரு கபாலங்களின் விபாகம் அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன.

### ௭௫௦. காரண மாத்திர ஜன்னிய விபாகத்தின் சாதக யுக்தி.

சங்கை:—அக்கபால மாத்திரத்தின் விபாகத்தால் அக்கபால பூர்வ தேசத்தின் விபாகத்தின் உற்பத்தியை அங்கீகரியாவிடின் கெடுதியாவது யாது?.

சமாதானம்:—அக்கபால மாத்திரத்தின் விபாகத்தால் ஓர் கால் அக்கபால பூர்வதேசத்தின் விபாகத்தின் உற்பத்தியை அங்கீகரியாவிடின் அக்கபாலத்திற்கு ஆகாசாதி வடிவ பூர்வதேசத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகத்திற்கு நித்தியத் தன்மையின் அடைவு உண்டாகும். ஏனெனின் அக்கபால பூர்வதேசத்தின் சையோகத்தினை அக்கபால பூர்வ தேசத்தின் விபாகமே நாசமாக்குகின்றது. அக்கபால பூர்வ தேசத்தின் விபாகமன்றி அக்கபால பூர்வதேசத்தின் சையோகத்தின் நாசம் சம்பவியாது. ஆகையால் அக்கபால பூர்வதேசத்தின் சையோகம் நித்தியமேயாகும். அல்லது எத்திரவியத்தில் எவ்வளவு காலமட்டும் பூர்வதேசத்தினோடு சையோகமிருக்கின்றதோ அத்திரவியத்திற்கு அவ்வளவு காலமட்டும் உத்தரதேசத்தினோடு சையோக முண்டாவதின்று. ஆகையால் பூர்வதேசத்தின் சையோகத்திற்கு உத்தரதேசத்தின் சையோகத்தின் பிரதிபந்தகத் தன்மை கற்பிக்கப்படுகின்றது. அங்ஙனமே ஈண்டும் பிரதிபந்தக வடிவ கபால பூர்வதேச சையோகத்தின் இருப்புளதாக அக்கபாலத்திற்கு உத்தரதேசத்தினோடு சையோகமே உண்டாகாது. அவ்வுத்தரதேச சையோகத்தின் உற்பத்தி உண்டாகாததாக அக்கபாலத்தின் கிரியாவடிவகர்மமும் நாசமாகாததாகும். எக்காரணத்தாலெனின் அவ்வுத்தரதேச சையோகமே சுவஜனக கர்மத்தை நிவர்த்திக்கின்றது. ஆகையால் அக்கபாலத்தின் கர்மத்திற்கும் நித்தியத்தன்மை பிராப்தமாகும். அச்சையோகத்தின் நித்தியத் தன்மையும், கர்மத்தின் நித்தியத் தன்மையும் ஒரு வாதியாலும் அங்கீகரிக்கப்படவில்லை. ஆகையால் அக்கபால மாத்திரத்தின் விபாகத்தால் அக்கபால பூர்வதேசத்தின் விபாகத்தின் உற்பத்தியை அவசியம் ஒப்ப வேண்டியதாம்.

### ௭௫௧. ஒரே கிரியையால் ஆரம்பக சையோகத்தை நாசஞ் செய்யும் விபாகத்தினதும், ஆனாரம்பக சையோகத்தை நாசஞ் செயயும் விபாகத்தினதும், ஜனகத்தன்மையை ஒப்புவோரது மதத்தின் வர்ணனம்.

சங்கை:—அச்சையோகத்திற்கும், கர்மத்திற்கும் நித்தியத் தன்மையினை நிவர்த்திக்கும்பொருட்டு அக்கபால பூர்வதேசத்தின் விபாகமோ ரொப்பப்படுவதாம். ஆனால் அவ்விபாகம் அவ்விருகபாலங்களின் விபாகத்தால் ஜன்னியமன்றாம். ஆனால் எக்கபாலத்தின் கிரியையானது அவ்விரு கபாலங்களின் விபாகத்தினை உண்டாக்குகின்றதோ அக்கபாலத்தின் கிரியையே அக்கபால பூர்வதேசத்தின்விபாகத்தினை உண்டாக்குகின்றது. ஆகையால் அவ்விரு கபாலங்களின் விபாகத்தினைப் போன்று அக்கபால பூர்வதேசத்தின் விபாகமும் கர்மஜவிபாகமேயாம். விபாகஜ விபாகமன்றாம்.

௭௫௨. ஒரே கிரியையில் ஆரம்பக சையோக நாசத்தைச் செய்யும் விபாகத்தினதும், அநாரம்பக சையோக நாசத்தைச் செய்யும் விபாகத்தினதும் ஜனகத்தன்மையை ஒப்புவதிலுண்டாம் தோஷத்தின் வர்ணனம்.

சமாதானம்:—ஒரே கிரியா வடிவ கர்மத்திற்கு ஆரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்தின் ஜனகத் தன்மையும், அநாரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்தின் ஜனகத் தன்மையு முண்டாகாது. எங்ஙனம்: பிரசங்கத்தில் கட வடிவ திரவியத்திற்கு அசமவாயி காரண வடிவ இரு கபாலங்களின் சையோகம் யாதோ அச்சையோகமோ ஆரம்பக சையோக மெனப்படுகின்றது. அக்கபாலத்திற்கு ஆகாசாதி வடிவ பூர்வதேசத்தினோ டுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகம் அக்கடத்தின் ஜனகமன்றும். ஆகையால் அச்சையோகம் அநாரம்பக சையோகமெனப்படுகின்றது. ஆண்டு அவ்வாரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் இரு கபாலங்களின் விபாகம் யாதோ அங்ஙனமே அவ்வநாரம்பக சையோகத்தினை நாசஞ்செய்யும் அக்கபால பூர்வதேசத்தின் விபாகம் யாதோ அவ்விரு விபாகங்கட்கும் அசமவாயி காரணத்தன்மை வடிவ ஜனகத்தன்மை அக்கபாலத்தின் கிரியையில் சம்பவியாது. ஓர் கால் அவ்வொரே கிரியா வடிவ கர்மத்திற்கு அவ்வாரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்திற்கு ஜனகத்தன்மையும், அநாரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்திற்கு ஜனகத்தன்மையும் யொப்பின் மலர்வதற்கு பிராப்தமாய கமலத்தின் நாச முண்டாக வேண்டும். ஏனெனின் அந்திகாலத்தில் அக்கமலம் குவிதலையடைகின்றது. எப்பொழுது விடியற் காலமாகின்றதோ அப்பொழுது அக்கமலத்தின் இதழ்களின் முற்பாகத்தில் கிரியை யுண்டாகின்றது. அக்கிரியையால் அவ்விதழ்களுக்கு பரஸ்பரம் விபாக முண்டாகின்றன. அவ்விபாகத்தால் அவ்விதழ்களின் முற்பாக தேசாவச்சின்ன சையோகத்திற்கு நாச முண்டாகின்றது. ஆண்டு அம்முற்பாக தேசாவச்சின்ன இதழ்களின் சையோகம் அக்கமல வடிவ திரவியத்தினை ஆரம்பம் செய்வதன்றும். ஆனால் மூல தேசாவச்சின்ன இதழ்களின் சையோகமே அக்கமலத்தினை ஆரம்பகம் செய்கின்றது. ஆகையால் அம்முற்பாக தேசாவச்சின்ன இதழ்களின் சையோகம் அநாரம்பக சையோகமெனப்படுகின்றது. அம்மூல பாக தேசாவச்சின்ன இதழ்களின் சையோகம் ஆரம்பகசையோக மெனப்படுகின்றது. ஆண்டு அவ்வநாரம்பகசையோகத்தினை நாசஞ்செய்யும் விபாகம் யாதோ அவ்விபாகத்தினை உண்டாக்கும் கர்மம் அவ்விதழ்களிலிருப்பதேயாகின்றது. அக்கர்மத்தால் அம்மூலபாகதேசாவச்சின்ன ஆரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்தின் உற்பத்தியும் அவசியமுண்டாகும். அவ்விபாகத்தால் அவ்வாரம்பக சையோகத்தின் நாசமும் அவசிய முண்டாம். அவ்வாரம்பக சையோகத்தின் நாசத்தால் அக்கமலத்தின் நாசம் அவசிய முண்டாம். அது பிரத்தியக்ஷ விருத்தமாம். ஆகையால் எக்கர்மம் அநாரம்பக சையோகத்தினை நாசஞ் செய்யும் விபாகத்தினை உண்டாக்குகின்றதோ அக்கர்மம் ஆரம்பக சையோகத்தினை நாசஞ்செய்யும் விபாகத்தினை உண்டாக்கும் கர்த்தாவன்

ரூமென்னும் நியமம் அவசியம் ஒப்பப்படுவதாகும். ஆகையால் அக்கபா லத்தின் கிரியைக்கு அக்கபால பூர்வதேசத்தின் விபாகத்தினது ஜனகத் தன்மைச் சம்பவியாது. ஆனுல் அவ்விரு கபாலங்களின் விபாகத்திற்கே அவ் விபாகத்தினை உண்டாக்குந் தன்மைச் சம்பவிக்கின்றது.

எ௫ந. காரண அகாரண விபாக ஜன்னிய விபாகத்தின் வர்ணனம்.

காரண அகாரணமா மிரண்டின் விபாகத்தால் ஜன்னிய காரிய அகாரிய மாமிரண்டின் விபாகம் யாதாமோ அவ்விபாகம் காரண அகாரண விபாக ஜன்னிய விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: தரு சையுக்த கையினிடத்து கிரியை யுண்டாகி எப்பொழுது அக்கை, தருக்களின் விபாகம் உண்டாகின் றதோ அப்பொழுது சரீரத்தினிடத்தும் அத்தருவினது விபாகத்தின் வியவஹாரம் உண்டாகின்றது. அதாவது இச்சரீரம் தருவினின்றும் பிரிவுபட்டதா மென்பதான பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆகையால் அக்கை, தருக்களின் விபாகத்தின் பின்னர் அச்சரீர, தருக்களின் விபாகம் அவசிய முண்டாம். அச்சரீர, தருக்களின் விபாகத்தில் அக்கையின் கிரியையோ அசமவாயி காரணமாவதின்று. எக்காரணத்தாலெனின் அவ்விபாகத்தின் ஆசிரய வடிவ அச்சரீர, தருக்களிடத்து அக்கையின் கிரியை இருப்பதன்று. அவ் விபாகத்தின் சமவாயி காரண வடிவ ஆசிரயத்தினிடத்து சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய கிரியையே அவ்விபாகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எல்லா அவயவிகளின் கிரியை அன்றி அவயவி திரவியத்தினிடத்து கிரியை யுண்டாகாது. ஆகையால் அக்கை மாத்திரத்தில் கிரியை யுளதாகியும் அச்சரீரத்தினிடத்து கிரியையின்றும்? எக்கிரியை அச்சரீர தருக்களின் விபாகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது?. பாவ காரியத்தின் உற்பத்தி அசமவாயி காரணமன்றி யுண்டாவதின்றும். ஆகையால் அச்சரீர, தருக்களின் விபாகத்திற்கு ஓர் அசமவாயி காரணம் அவசியம் ஒப்பப்படுவதாகும். ஆகையால் பரிசேஷத்தால் அக்கை, தருக்களின் விபாகமே அச்சரீர, தருக்க ளின் விபாகத்திற்கு அசமவாயி காரணமாக சித்தமாகின்றது. ஆண்டு கை வடிவ காரணத்தினதும், தரு வடிவ அகாரணத்தினதும் விபாகமே அச்சரீர வடிவ காரியத்தினதும், தரு வடிவ அகாரியத்தினதும் விபாகத்தை உண்டாக்குகின்றது. ஆகையால் அக்கை, தருக்களின் விபாக ஜன்னிய சரீர தருக்களின் விபாகத்தினை கற்றுணர்ந்தோர் காரண அகாரண விபாக ஜன்னிய காரிய அகாரிய விபாகமென்பர். ஈண்டு காரண, அகாரண, காரிய, அகாரியமா மிந்நான்கு பதங்களின் அர்த்தத்தை முன்னர் சையோகஜ சையோக நிருபணத்தில் கூறியுள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக்கொள்க. இம்மட்டும் அந்நியதர கர்மஜ விபாகம், உபய கர்மஜ விபாகம், விபாகஜ விபாகமா மூன்றும் உதாஹரணத்தோடு நிரூபிக்கப்பட்டது.

எ௫௪. அந்நியதர கர்மஜத்தின் லக்ஷணம்.

இனி இம்மூன்றினது விபாகங்களின் லக்ஷணங்களை முறையாகக் கூறுவாம். "க்ரியாஜன்யவத்வெ ஸதெவ்வக்ஷெவஸதி க்ரியாவத்வெ ஸதெவ்வதவிஹாகஃ ஜன்யொ-க்ஷகெ-ஜவிஹாகஃ" (இ-ள்.) எவ்விபாகம் சுவஜனக கிரியையின்

அபாவமுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் சுவஜனக கிரியையுடைய திரவியத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாமோ அவ் விபாகம் அந்நியதர கர்மஜ விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: பக்ஷியின் கிரியையால் உண்டாகிய பக்ஷி, பர்வதத்தின் விபாகம் யாதோ அப்பக்ஷி, பர்வதங்களின் விபாகம் சுவஜனக பக்ஷியினது கிரியையின் அபாவமுடைய பர்வதத்திலும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும், அக்கிரியையுடைய பக்ஷி யினிடத்தும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாகின்றது. ஆகையால் அப் பக்ஷி, பர்வதங்களின் விபாகம் அந்நியதர கர்மஜ விபாகமெனப்படுகின்றது. ஆண்டு உபயகர்மஜ விபாகத்தினிடத்து இந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு இந்த லக்ஷணத்தில் "கிரியையின் அபாவமுடைய தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்". என்னும் பதங்கள் கூறப்பட்டன. விபாகஜ விபாகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு இந்த லக்ஷணத்தில் "கிரியையுடையதில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. அந்நியதர கர்மஜ சை யோகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும்பொருட்டு இந்த லக்ஷணத்தில் "விபாகம்" என்னும் பதம் கூறப்பட்டது.

எருரு. உபய கர்மஜ விபாகத்தின் லக்ஷணம்.

ஆண்டு " ஸ்வஜநகக்ரியாசுஷாவவ஻ ஸ஼வெ஻தவிஷாமஃ உஷயகஃஜ விஷாமஃ " (இ-ள்.) எவ்விபாகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவி யத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதன்றோ அவ்விபாகம் உபயகர்மஜ விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: இரண்டு ஆட்டுக்கிடாக்களின் கிரியை யால் உண்டாகிய அவ்விரண்டு ஆட்டுக்கிடாக்களின் விபாகம் யாதோ அவ் விபாகம் சுவஜனக கிரியையின் அபாவமுடைய திரவியத்தில் இருப்பதன்று. ஆனல் சுவஜனககிரியையுடைய அவ்விரு ஆட்டுக்கிடாக்களிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அவ்விரு ஆட்டுக்கிடாக்களின் விபா கம் உபய கர்மஜ விபாகமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்திலும் "விபாகம்" என்னும் பதம் முற்கூறிய உபய கர்மஜ சையோகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம்.

எருசு. விபாகஜ விபாகத்தின் லக்ஷணம்.

ஆண்டு " கஃஜந்யவிஷாமஃ விஷாமஜவிஷாமஃ " (இ-ள்.) எவ்விபா கம் கிரியா வடிவ கர்மத்தால் ஜன்னியமாவதின்றோ அவ்விபாகம் விபாகஜ விபாகமெனப்படுகின்றது. எங்ஙனம்: முற்கூறிய ஹஸ்த, தருக்களின் விபாக ஜன்னிய சரீர, தருக்களின் விபாகம் அக்கிரியா வடிவ கர்மத்தால் அஜன்னிய மாவதால் விபாகஜ விபாகமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்திலும் "விபாகம்" என்னும் பதம் முற்கூறிய சையோகஜ சையோகத்தில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம்.

எருஎ. இரு விபுதிரவியங்கள் விபாகத்தினது கண்டனம்.

அல்லது எத்திரவியங்கட்கு பரஸ்பரம் சையோக முண்டாகின்றதோ அத்திரவியங்கட்கே பரஸ்பரம் விபாக முண்டாகின்றது. எத்திரவியங்கட்கு

பரஸ்பரம் சையோக முண்டாவதின்றே அத்திரவியங்கட்கு பரஸ்பரம் விபாக மும் உண்டாவதின் றென்பது நியமமாம். ஆகையால் ஆகாச முதலிய விபு திரவியங்கட்கு முற்கூறியவாற்றுல் எங்ஙனம் பரஸ்பரம் சையோக முண்டாவ தின்றே அங்ஙனமே அவ்வாகாச முதலிய விபுதிரவியங்கட்கு பரஸ்பரம் விபாகமும் உண்டாவதின்று. ஆகாசம் காலத்தினின்றும் பிரிவுபட்டதாம், அக்காலம் திசையினின்றும் பிரிவுபட்டதாம் என்பதான விபு திரவியங்க ளிடத்து பரஸ்பரம் பிரிவின் தோற்றம் உண்டாவது யாதோ அத்தோற்றம் அவ்விபுதிரவியங்களின் விபாகத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆனல் அவ் விபாக தோற்றம் அவ்விபு திரவியங்களினது சையோகத்தின் அபாவத் தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் " ஸிஂமெஹாமெஷவஃத்தூ: " என்ப தான கௌண தோற்றத்தினைப் போன்று விபுதிரவியங்களின் விபாகத்தின் சித்தி சம்பவியாது.

## எடுஎ. விபாகத்திற்கு சையோகத்தின் அபாவ வடிவம் ஒப்புவோராகிய வாதிகளின் மத வர்ணனம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். ஒரே பிரிவுத்தன்மைத் தோற்றத்திற்கு விபுதிரவியங்களில் சையோக அபாவத்தை விஷயஞ் செய்வதையும், மூர்த்தத் திரவியங்களில் விபாகத்தை விஷயஞ் செய்வதையும் ஒப்புவது அத்தியந்தம் விருத்தமாம். ஆனல் அப்பிரிவுத்தன்மைத் தோற்றம் யாண்டும் அச்சையோக அபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. யாண்டும் அவ்விபாக குணத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆகையால் அச்சையோக அபாவத்தினையே விபாகமென்பர். அவ்விபாகம் அச்சையோக அபாவத்தி னும் வேறு குணமன்றும்.

## எடுஅ. அவ்வாதிகளின் மத கண்டனம்.

கூறிய இம்மதம் நலமுடையதன்றும். ஏனெனின் எவ்வாதி சையோ கத்தின் அபாவத்தினையே விபாகமாக வொப்பினனே அவ்வாதியினை இது வினவுதல் வேண்டும். அதாவது அச்சையோகத்தினது அத்தியந்தாபாவத் தினை விபாகமென்பதா? அல்லது அச்சையோகத்தின் பிரத்துவம்சாபாவத் தினை விபாகமென்பதா?. ஆண்டு முதலாவது அத்தியந்தாபாவ பக்ஷத்தை அங் கீகரிக்கின் உருவம், ரச முதலிய குணங்களிலும் அச்சையோகத்தின் அத்தி யந்தாபாவ மிருப்பதேயாகின்றது. ஆகையால் " ரூவஂரஸெ நவிஹ்கூ" (இ-ள்.) உருவம், ரசத்தினும் பிரிவுபட்டதா மென்பதான பிரிவுத் தன்மைத் தோற்றம் உண்டாதல் வேண்டும். உருவ முதலிய குணங்களில் பிரிவுத்தன் மைத் தோற்றம் உண்டாவதின்று. ஆகையால் அச்சையோகத்தின் அத்தி யந்தாபாவத்தில் விபாக வடிவத்தன்மை சம்பவியாது. சையோகத்தினது நாசத்தினை விபாக மென்பதான இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் கூறிய அத்தோஷம் பிராப்தமாகாது. ஏனெனின் அத்துவம்ச வடிவ நாசம் தனது பிரதியோகியின் அதிகரணத்திலேயே இருக்கின்றது. உருவ முதலிய குணங்களில் சையோக வடிவ பிரதியோகி இருப்பதன்று. ஆகையால் உருவ

முதலிய குணங்களில் அச்சையோகத்தின் பிரத்துவம்சாபாவ வடிவ நாசமும் இருப்பதன்று. என்றாலும் யாண்டு கடவடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தால் அக்கடத்தை ஆசிரயித்திருக்கும் சையோகத்தின் நாசமுண்டாகிறதோ ஆண்டும் அச்சையோகத்தின் நாசத்தைக்கொண்டு “வியோகவிஹக்ஷ்ஃ” என்பதான தோற்றம் உண்டாதல்வேண்டும். ஆண்டு அப்பிரிவின் தோற்றம் உண்டாகிறதில்லை. அல்லது யாண்டு கட, படமா மிரண்டின் சையோகத்திற்கு நாசமுண்டாகி மீண்டும் அக்கட, படங்களின் சையோக முண்டாகின்றதோ ஆண்டும் “வட்டவ்வெடநவிஹக்ஷ்ஃ” என்பதான பிரிவின் தோற்றம் உண்டாதல் வேண்டும். எக்காரணத்தாலெனின் மீண்டும் சையோக முண்டாகும் காலத்தில் முன்னைய சையோகத்தின் நாசம் அநந்தமாவதால் அக்கடத்தில் இருப்பதேயாம். உம்து மதத்தில் மீண்டும் உண்டாம் அச்சையோகத்திலும் முன்னைய சையோகத்தின் நாசமே அப்பிரிவின் தோற்றத்தின் விஷயத்தன்மையாம். முன்னைய சையோகத்தின் நாசம் மீண்டும் சையோக முண்டாம் காலத்திலு மிருப்பதேயாகின்றது. மீண்டும் சையோகமுண்டாம் காலத்தில் அப்பிரிவின் தோற்றம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் அச்சையோகத்தின் நாசத்திலும் விபாக வடிவத்தன்மை சம்பவி யாது. ஆனால் விபாகம் சையோகத்தின் அபாவத்தினும் வேறாகவே வொப்பப்படுவதாகும்.

## எகூ0. விபாகத்தில் சையோகத்தினைப்போன்று வேறும் குண வடிவத் தன்மையின் சித்தி.

அல்லது சையோகத்தின் அபாவத்தினை விபாகமென்பதான அர்த்தத்தினையும், விபாகத்தின் அபாவத்தினை சையோகமென்பதான அர்த்தத்தினையும் சாதிக்கும் யுக்தி ஒன்றுமின்றாம். ஆகையால் சையோக, விபாகமா மிரண்டிற்கும் பாவ வடிவத் தன்மையை அங்கீகரிப்பது உசிதமாம். ஆகையால் எங்ஙனம் சையோகம் வேறு குணமாமோ அங்ஙனமே விபாகமும் வேறு குணமாம். விபாக நிரூபணம் முற்றிற்று.

## எகூக. பரத்வ, அபரத்வ குண நிரூபணம்.

பரத்வ, அபரத்வ குண லக்ஷணம். ஆண்டு “பரவ்யவஹாரவிஷய வ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத்வம்” அங்ஙனமே “அபரவ்யவஹார விஷயவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத்வம்” (இ-ள்.) பர வியவஹாரத்தின் விஷயத்தில் இருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதியாதோ அஜ்ஜாதியுடைய குணம் பரத்வ மெனப்படுகின்றது. ஆண்டு அம்மூர்த்தத் திரவியம் இம்மூர்த்தத் திரவியத்தினும் பரமா மென்பதான பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் யாதோ அந்த வியவஹாரம் பரத்வ குணத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் பரத்வ குணம் பரத்வ வியவஹாரத்தின் விஷயமெனப்படுகின்றது. இத்தகைய பரத்வ வியவஹார விஷயத்தில் இருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய பரத்வ ஜாதியாதோ அந்த பரத்வ ஜாதி சமவாய சம்பந்தத்தால் எல்லா பரத்வங்களிலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இப்பரத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்

றது. இவ்வாறாக இம்மூர்த்தத் திரவியம் அம்மூர்த்தத் திரவியத்தினும் அபரமா மென்பதான பிரத்தியக்ஷ ஞான வடிவ வியவஹாரம் யாதோ அவ்வியவஹாரம் அபரத்வ குணத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அபரத்வ குணம் அபர வியவஹாரத்தின் விஷயமெனப்படுகின்றது. இத்தகைய அபர வியவஹாரத்தின் விஷயமாகிய அபரத்வத்தில் இருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய அபரத்வ ஜாதி யாதோ அந்த அபரத்வத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் எல்லா அபரத்வங்களில் இருக்கின்றது. ஆகையால் கூறிய அபரத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு குணத்வஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்விரு லக்ஷணங்களில் முறையாக "பர வியவஹாரத்தின் விஷயத்திலிருப்பதும்" "அபர வியவஹார விஷயத்திலிருப்பதும்" என்பதான இரு பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் பர, அபர வியவஹாரத்தின் விஷயமாகிய பரத்வ, அபரத்வத்தில் இருப்பனவன்று. ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணங்கட்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது அவ்விரு லக்ஷணங்களில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங் கூறுவிடின் பர, அபர வியவஹாரத்தின் விஷயமாகிய பரத்வ, அபரத்வத்தில் இருப்பதாகிய குணத்வ ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அவ்விரு லக்ஷணங்கட்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணங்களில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்வ ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்வ ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் அக்குணத்வ ஜாதியைக்கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

## எகூஉ. திக்கினாலாயது, காலத்தினாலாயது என்னும் வேறுபாட்டால் பரத்வ, அபரத்வத்தின் இருவித விபாகம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித பரத்வ, அபரத்வமா மிரு குணங்கள் திக்கினாலாயனவும், காலத்தினாலாயனவு மென்னும் வேறுபாட்டால் இரண்டிரண்டு வகைத்தாம், அதாவது; திக்கினாலாய பரத்வம், திக்கினாலாய அபரத்வம், அங்ஙனமே காலத்தினாலாய பரத்வம், காலத்தினாலாய அபரத்வம் என்பதான வேறுபாடுடையத்தாம். திக்கினாலாய பரத்வ, அபரத்வத்தினை தைசிக பரத்வம், தைசிக அபரத்வ மென்பர். அங்ஙனமே காலத்தினாலாய பரத்வ, அபரத்வத்தினை காலிக பரத்வம், காலிக அபரத்வ மென்பர்.

## எகூங. பரத்வ, அபரத்வத்தின் ஆசிரயித்தினது வர்ணனம்.

ஆண்டு பரத்வ, அபரத்வமா மிரு குணங்கள் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே இருக்கின்றன. ஆகாச முதலிய விபுதிரவியங்களில் இருப்பனவன்று, அதனிடத்தும் தைசிக

பரத்வ, அபரத்வங்களோ மூர்த்தத் திரவிய மாத்திரத்தில் இருக்கின்றன. அதா வது; பரமாணு, மன வடிவ நித்திய திரவியங்களிலும் துவியணுக முதலாக கடாதி பரியந்தமாம் எல்லா ஜன்னிய மூர்த்தத் திரவியங்களிலும் தைசிக பரத்வ, அபரத்வமிருக்கின்றன. காலிக பரத்வ, அபரத்வங்களோ கேவலம் ஜன்னிய மூர்த்தத் திரவியங்களிலேயே இருக்கின்றன. பரமாணு, மன வடிவ நித்திய மூர்த்தத் திரவியங்களில் காலிக பரத்வ, அபரத்வமிருப்பனவன்று. சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். காலிக பரத்வ, அபரத்வங்கள் கேவ லம் பிராணிகள் மாத்திரத்திலேயே இருக்கின்றன. கட முதலியவைகளில் அக்காலிக பரத்வ, அபரத்வங்கள் இருப்பனவன்று.

ஏ௬௪. பரத்வ, அபரத்வங்களில் அநித்தியத்தன்மையின் வர்ணனம்.

அல்லது எங்ஙனம் முற்கூறிய சையோக குணமும், விபாக குணமும் உற்பத்தி விநாசமுடையதாவதால் யாண்டும் அநித்தியமேயாகின்றனவோ அங்ஙனமே இத்தைசிக பரத்வ, அபரத்வ குணங்களும், காலிக பரத்வ, அப ரத்வ குணங்களும் உற்பத்தி விநாசமுடையதாவதால் யாண்டும் அநித்தியமே யாகின்றன. யாதாமோர் மூர்த்தத் திரவியங்களிலும் பரத்வ, அபரத்வ குணங்கள் நித்தியமாவனவன்று.

ஏ௬௫. தைசிக பரத்வ, அபரத்வத்தின் உற்பத்தியின் வர்ணனம்.

இனி பரத்வ, அபரத்வ குணங்களில் அநித்தியத் தன்மையினை தெளிவாக்குவான் கருதி முதலில் தைசிக பரத்வ, அபரத்வத்தினது உற்பத்தி யின் வகையை வர்ணிப்பாம். ஆண்டு காண்போனது அதிகரணத்தின் அபேக்ஷையால் ஒரே முன் பின் திசையில் முன் பின் பாவத்தாலுள்ள இருமூர்த்தத் திரவியங்கள் யாவையோ அவ்விரு மூர்த்தத் திரவியங்களுள் எம்மூர்த்தத் திரவியத்தின் அபேக்ஷையால் எம்மூர்த்தத் திரவியத்தில் காண்போனுக்கு தனது அதிகரணத்தினின்றும் சேய்மைத் தன்மை புத்தி யுண்டாகின்றதோ அச்சேய்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தி னிடத்தோ தைசிக பரத்வத்தின் உற்பத்தியுண்டாகின்றது. அவ்விரு மூர்த்தத் திரவியங்களுள் எம்மூர்த்தத் திரவியத்தின் அபேக்ஷையால் எம்மூர்த்தத் திரவியத்தில் காண்போனுக்கு தனது அதிகரணத்தினின்றும் அண்மைத் தன்மை புத்தி யுண்டாகின்றதோ அவ்வண்மையிலுள்ள மூர்த்தத் திரவியத்தி னிடத்தோ தைசிக அபரத்வத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. எங்ஙனம் காசி யிலுள்ள புருஷனுக்கு அக்காசி வடிவ அதிகரணத்தின் அபேக்ஷையால் ஒரே மேற்கு திசையில் முன் பின் திசை பாவத்தாலுள்ள பிரயாகை, மதுரா வடிவ மூர்த்தத்திரவியம் யாதோ அப்பிரயாகை, மதுரா வடிவ இரு மூர்த்தத் திரவியங்களுள் அம்மதுராவிடத்தோ காசியிலுள்ள புருஷனுக்கு பிரயாகை யின் அபேக்ஷையால் மதுராவானது காசியினின்றும் சேய்மைத்தா மென்ப தான சேய்மைத் தன்மை புத்தி யுண்டாகின்றது. ஆகையால் அச்சேய்மைத் தன்மை புத்தி வடிவ அபேக்ஷா புத்தியால் அம்மதுரா விடத்தோ தைசிக பரத்வத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அக்காசியிலுள்ள புருஷனுக்கு பிரயாகையினிடத்தோ மதுராவின் அபேக்ஷையால் பிரயாகையானது காசி

யினின்றும் அண்மைத்தா மென்பதான சமீபத்தன்மைபுத்தி யுண்டாகின்றது. ஆகையால் அவ்வண்மைத்தன்மை புத்திவடிவ அபேக்ஷா புத்தியால் பிரயாகை யினிடத்து தைசிக அபரத்வத்தின் உற்பத்தியுண்டாகின்றது. ஆண்டு மதுரா வினுள்ள தைசிக பரத்வத்திற்கு அம்மதுரா வடிவ மூர்த்தத் திரவியமோ சம வாயிகாரணமாகின்றது. அம்மதுரா வடிவ மூர்த்தத்திரவியத்தினோடுண்டாம் திசையின் சையோக சம்பந்தம் யாதோ அத்திசையின் சையோகம் பரத்வத் தின் அசமவாயி காரணமாகின்றது. கூறிய செய்மைத்தன்மை புத்தி வடிவ அபேக்ஷா புத்தி பரத்வத்திற்கு நிமித்தகாரணமாகின்றது. இவ்வாறாக அப்பிரயாகையிலுள்ள தைசிக அபரத்வத்திற்கும் பிரயாகை வடிவ மூர்த்தத் திரவியமோ சமவாயிகாரணமாகின்றது. பிரயாகை வடிவ மூர்த்தத்திரவியத் தினோடுண்டாம் திசையின் சையோக சம்பந்தம் யாதோ அத்திசையின் சையோகம் அத்தைசிக அபரத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. கூறிய அண்மைத்தன்மை புத்தி வடிவ அபேக்ஷாபுத்தி தைசிக அபரத்வத் திற்கு நிமித்த காரணமாகின்றது.

சங்கை:—செய்மைத்தன்மை புத்தியினை தைசிக பரத்வத்திற்கு நிமித்த காரணமாக வொப்பினும், அண்மைத்தன்மை புத்தியினை தைசிக அபரத் வத்திற்கு நிமித்த காரணமாக வொப்பினும் யாண்டு காண்போனுக்கு அண் மைத்தன்மை வஸ்துவில் செய்மைத் தன்மையின் பிராந்தியும், செய்மையிட வஸ்துவில் அண்மைத் தன்மை பிராந்தியு முண்டாகின்றதோ ஆண்டு அப் பிராந்தி வடிவ செய்மைத் தன்மை புத்தியால் அண்மை வஸ்துவில் தைசிக பரத்வத்தின் உற்பத்தி யுண்டாகவேண்டும். அங்ஙனமே அப்பிராந்தி வடிவ அண்மைத்தன்மை புத்தியால் செய்மையிலுள்ள வஸ்துவில் தைசிக அப ரத்வத்தின் உற்பத்தி யுண்டாக வேண்டும்.

சமாதானம்:—எங்ஙனம் செய்மைத் தன்மை புத்தி தைசிக பரத் வத்திற்கு நிமித்த காரணமாகின்றதோ அங்ஙனமே செய்மையிலுள்ள வஸ் துவிலிருக்கின்ற செய்மைத் தன்மை தர்மமும் அத்தைசிக பரத்வத்திற்கு நிமித்த காரணமாகின்றது. இவ்வாறாக எங்ஙனம் அண்மைத்தன்மை புத்தி அத் தைசிக அபரத்வத்திற்கு நிமித்தகாரணமாகின்றதோ அங்ஙனமே அண்மையி லுள்ள வஸ்துவிடத்து இருக்கின்ற அண்மைத்தன்மை தர்மமும் அத்தைசிக அபரத்வத்திற்கு நிமித்தகாரணமாகின்றது. ஆண்டு செய்மைத்தன்மை தர்மம் அண்மையிலுள்ள வஸ்துவில் இருப்பதன்று. அண்மைத்தன்மை தர்மம் செய் மையிலுள்ள வஸ்துவிடத்து இருப்பதன்று. ஆகையால் அந்நிமித்த காரணத் தின் அபாவத்தால் அண்மையிலுள்ள வஸ்துவிடத்தோ தைசிக பரத்வத்தின் உற்பத்தி யுண்டாகாது. செய்மையிடத்திலுள்ள வஸ்துவினிடத்து தைசிக அபரத்வத்தின் உற்பத்தி யுண்டாகாது.

### ௭௬௭. செய்மையினதும், அண்மையினதும் ஸ்வரூப வர்ணனம்:

இனி எச்செய்மைத் தன்மையினையும், அண்மைத் தன்மையினையும் விஷயஞ் செய்யும் கூறிய அபேக்ஷா புத்தி தைசிக பரத்வ, அபரத்வத்திற்கு

நிமித்த காரணமாகின்றதோ அச்செய்மைத்தன்மை, அண்மைத்தன்மையின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு பிரயாகையின் அபேக்ஷையால் மதுரா வானது காசியினின்றும் செய்மைத்தாம். அம்மதுராவின் அபேக்ஷயால் பிரயாகையானது காசியினின்றும் அண்மைத்தாமென்பதான அபேக்ஷாபுத்தி யுடைய காசியிலுள்ள புருஷன் யாவனோ அவனது அதிகரணமாகிய விடத்தி னின்றும் பிராரம்பித்த எவ்வளவு மூர்த்தத் திரவியங்களின் ஸம்யுக்த ஸம்யோ கம் அம்மதுரா விடத்திருக்கின்றதோ அதாவது; அவ்வதிகரண தேசத்தோ டுள்ள முதல் மூர்த்தத்திரவியத்தின் ஸம்யோகமும், அம்முதல் மூர்த்தத்திரவிய ஸம்யுக்த இரண்டாவது மூர்த்தத்திரவியத்தின் ஸம்யோகமும், அவ்விரண்டா வது மூர்த்தத் திரவிய ஸம்யுக்த மூன்றாவது மூர்த்தத் திரவியத்தின் ஸம்யோக மும், மூன்றாவது மூர்த்தத்திரவிய ஸம்யுக்த நான்காவது மூர்த்தத்திரவியத்தின் ஸம்யோகமுமாமிவ்வாறுய எவ்வளவு மூர்த்தத் திரவியத்தின் ஸம்யுக்த ஸம் யோகம் அம்மதுராவிடத்திருக்கின்றதோ அவ்வளவு மூர்த்தத் திரவியங்களின் ஸம்யுக்த ஸம்யோகம் பிரயாகையினிடத்து இருப்பதன்று. ஆனால் பிரயாகை யிலுள்ள ஸம்யுக்த ஸம்யோகங்களின் அபேக்ஷயால் அம்மதுராவிடத்து அச்ஸம்யுக்த ஸம்யோகம் அதிக மிருக்கின்றது. மதுராவிலுள்ள ஸம்யுக்த ஸம்யோகங்களின் அபேக்ஷயால் பிரயாகையினிடத்து ஸம்யுக்த ஸம்யோகம் அற்பமிருக்கின்றது. ஆண்டு பிரயாகையிலுள்ள அற்ப ஸம்யுக்த ஸம்யோகங் களின் அபேக்ஷயால் அம்மதுராவிடத்து அநேகதர ஸம்யுக்த ஸம்யோக முடைமையே அம்மதுராவிடத்து செய்மைத் தன்மையாம். அம்மதுராவி லுள்ள ஸம்யுக்த ஸம்யோகங்களின் அபேக்ஷயால் அப்பிரயாகையினிடத்து அற்பதர ஸம்யுக்த ஸம்யோக முடைமையே அப்பிரயாகையினிடத்து அண்மைத் தன்மையாம்.

௭௧௨. தைசிக பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணம்.

இனி அத்தைசிக பரத்வ, அபரத்வங்களின் லக்ஷணத்தைக் கூறுவாம். ஆண்டு "திக்ஸம்யோகா ஸமவாயிகாரணகம் பரத்வம் தைசிகபரத்வம்" "திக்ஸம்யோகா ஸமவாயிகாரணகமபரத்வம் தைசிகாபரத்வம்" (இ-ள்.) எம்மூர்த்தத்திரவியத்தினிடத்து தைசிகபரத்வம், அபரத்வமுற்பன்னமாகின் றதோ அம்மூர்த்தத் திரவியத்தினோடுண்டாம் திசையின் ஸம்யோக ஸம்பந்தம் யாதோ அத்திக் ஸம்யோகமாகிய அஸமவாயி காரணம் எதற்காமோ அத் தகைய பரத்வம் யாதோ அப்பரத்வம் தைசிக பரத்வமெனப்படுகின்றது. அத்திக் ஸம்யோகமாகிய அஸமவாயிகாரணம் எதற்காமோ அத்தகைய அபரத் வம் யாதோ அவ்வபரத்வம் தைசிக அபரத்வ மெனப்படுகின்றது. ஆண்டு இவ்விரு லக்ஷணங்களில் "திக்" என்னும் பதங் கூறுவிடின் காலிக பரத்வ, அபரத்வத்தில் இத்தைசிக பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் தைசிக பரத்வ, அபரத்வத்தில் திசையின் ஸம்யோகம் அஸமவாயி காரணமாகின்றதோ அங்ஙனமே காலிக பரத்வ, அபரத்வத்திலும் காலத்தின் ஸம்யோகம் அஸமவாயி காரணமா கின்றது. ஆகையால் ஸம்யோக அஸமவாயி காரணத்தாலாய பரத்வ, அப

ரத்வத்தன்மை அக்காலிக பரத்வ, அபரத்வத்திலு மிருக்கின்றது. அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்விரு லக்ஷணங்களில் "திக்" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அக்காலிகபரத்வ, அபரத்வத்தில் திக் சையோக அசமவாயி காரணத்வ மிருப்பதின்று. ஆகையால் அக்காலிக பரத்வ, அபரத்வத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது அவ்விரு லக்ஷணங்களில் "பரத்வ அபரத்வ" மென்னு மிரு பதங்கள் கூறுவிடின் அத்தைசிக பரத்வத்தின் லக்ஷணத்திற்கு அத்தைசிக அபரத்வத்தி னிடத்து அதிவியாப்தி யுண்டாம். அத்தைசிக அபரத்வத்தின் லக்ஷணத்திற்கு தைசிக பரத்வத்தில் அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அத்திக் சையோக அசமவாயிகாரணத்வம் அத்தைசிக பரத்வ, அபரத்வத்தில் சமானமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்விரு லக்ஷணங்களில் முறையாக "பரத்வ அபரத்வ" மென்னும் இரு பதங்கள் கூறப்பட்டன.

## எகூஅ. காலிக பரத்வ, அபரத்வத்தின் உற்பத்தியினது வகையை வர்ணிப்பாம்.

இனி காலிக பரத்வ, அபரத்வத்தின் உற்பத்தியின் வகையை வர்ணிப் பாம். ஆண்டு ஓர் திசையில் அல்லது வெவ்வேறு திசையி லிருப்பதாகிய ஓர் காலத்திலுள்ள இளையோன், முதியோனு மிருவர்களுள் காண்போனுகிய வேறு புருஷனுக்கு முதியோனிடத்து அம்முதியோன், இவ்விளையோன் அபேக்ஷயால் மூத்தோனு மென்பதான மூத்தத்தன்மை புத்தி யுண்டா கின்றது. காண்போனுகிய வேறு புருஷனுக்கு அவ்விளையோனிடத்து அவ் விளையோன், இம்முதியோனது அபேக்ஷயால் இளையோனு மென்பதான இளமைத்தன்மைபுத்தி யுண்டாகின்றது. ஆண்டு மூத்தத்தன்மை புத்தி வடிவ அபேக்ஷா புத்தியால் அம்முதியோனிடத்து காலிக பரத்வம் உற்பன்னமா கின்றது. இளமைத்வ புத்தி வடிவ அபேக்ஷா புத்தியால் அவ்விளையோ னிடத்து காலிக அபரத்வம் உற்பன்னமாகின்றது. ஆண்டு முதியோன் சரீ ரமோ காலிக பரத்வத்திற்கு சமவாயி காரணமாகின்றது. முதியோன் சரீரத் தோடுண்டாம் காலத்தின் சையோக சம்பந்தம் யாதோ அக்காலத்தின் சை யோகம் அக்காலிக பரத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. மூத்தத் தன்மையும், மூத்தத்தன்மை புத்தி வடிவ அபேக்ஷா புத்தியும் அக்காலிக பரத்வத்திற்கு நிமித்த காரணமாகின்றது. இவ்வாறாக அவ்வாலிப சரீரமோ அக்காலிக அபரத்வத்திற்கு சமவாயி காரண மாகின்றது. அவ்வாலிப சரீ ரத்திளேடுண்டாம் காலத்தின் சையோக சம்பந்தம் யாதோ அக்காலத்தின் சையோகம் அக்காலிக அபரத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. இளமையும், இளமை புத்தி வடிவ அபேக்ஷா புத்தியும் அக்காலிக அபரத்வத் திற்கு நிமித்த காரணமாகின்றது.

## எகூகூ. முதியோன், இளையோனது ஸ்வரூப வர்ணனம்.

இனி எம்முதுமை, இளமையை விஷயஞ் செய்வதாகிய அபேக்ஷா புத்தி காலிக பரத்வ, அபரத்வத்திற்கு நிமித்த காரணமாகின்றதோ அம்

முதுமை, இளமையின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு இவ்விளையோனது அபேக்ஷயால் இவ்விருத்தன் முதியோனும், முதியோனது அபேக்ஷயால் இவ்வாலிபன் இளையோனு மென்பதான அபேக்ஷாபுத்தியின் உற்பத்தி க்ஷண முதலாக முதியோன் சரீரத்தின் உற்பத்தி க்ஷண மட்டும் சூரியனது கிரியை எவ்வளவு உற்பன்னமாகி நஷ்டமாயினவோ அவ்வளவு சூரியனது கிரியை அவ்வாலிப சரீரத்தின் உற்பத்தி க்ஷணமட்டும் உண்டாயினவன்று. ஆனால் அக்கிரியைகளினும் இக்கிரியை அற்பமாகின்றது. ஆகையால் அவ்வாலிபசரீரத்தின் அபேக்ஷயால் அம்முதியோன் சரீரத்தில் சூரியனது அனேக தர கிரியைகளின் நாசத்தால் ஜன்னியமாவது யாதோ அதுவே முதியோன் சரீரத்தில் மூப்புத்தன்மையாம். அம்முதியோன் சரீரத்தின் அபேக்ஷயால் அவ்விளையோன் சரீரத்தில் சூரியனது அற்பதர கிரியைகளின் நாசத்தால் ஜன்னியத்வம் யாதாமோ அதுவே அவ்வாலிப சரீரத்தில் இளமைத் தன்மையாம்.

### ௫௭௦. காலிக பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணம்.

இனி காலிக பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணத்தை வர்ணிப்பாம். ஆண்டு "காலஸம்யோகா ஸமவாயிகாரணகம் பரத்வம் காலிகபரத்வம்" "காலஸம்யோகா ஸமவாயிகாரணகமபரத்வம் காலிகாபரத்வம்" (இ-ள்.) அக்காலிகபரத்வ, அபரத்வங்களின் ஆசிரயமாகிய ஜன்னிய திரவியத்திேனாடுண்டாம் காலத்தின் சையோகம் யாதோ அக்காலத்தின் சையோகமாகிய அசமவாயி காரணம் எதற்காமோ அத்தகைய பரத்வம் யாதாமோ அப்பரத்வம் காலிக பரத்வமெனப்படுகின்றது. அக்காலத்தின் சையோகமாம் அசமவாயிகாரணம் எதற்காமோ அத்தகைய அபரத்வம் யாதோ அவ்வபரத்வம் காலிக அபரத்வ மெனப்படுகின்றது. ஆண்டு இவ்விரு லக்ஷணங்களில் "காலம்" என்னும் பதங் கூறாவிடின் முற்கூறிய தைசிக பரத்வ, அபரத்வத்தில் இக்காலிக பரத்வ, அபரத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தா லெனின் அச்சையோக அசமவாயி காரணத்வம் அத்தைசிக பரத்வ, அபரத்வத்தினிடத்து மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு இவ்விரு லக்ஷணங்களில் "காலம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு தைசிக பரத்வ, அபரத்வத்தினிடத்து அக்கால சையோக அசமவாயி காரணத்வமின்றாம். ஆகையால் தைசிக பரத்வ, அபரத்வத்தினிடத்து இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது இவ்விரு லக்ஷணங்களில் "பரத்வம் அபரத்வம்" என்று மிவ்விரு பதங்கள் கூறாவிடின் அக்காலிக பரத்வத்தின் லக்ஷணத்திற்கு அக்காலிக அபரத்வத்தினிடத்து அதிவியாப்தி யுண்டாம். அக்காலிக அபரத்வத்தின் லக்ஷணத்திற்கு அக்காலிக பரத்வத்தினிடத்து அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு இவ்விரு லக்ஷணங்களில் முறையாக "பரத்வம் அபரத்வம்" என்று மிரு பதங்கள் கூறப்பட்டன. இதுகாறும் அத்தைசிக பரத்வ, அபரத்வத்தினதும், காலிக பரத்வ, அபரத்வத்தினதும் உற்பத்தியின் வகையினையும், லக்ஷணத்தையும் கூறி வந்தோம். இனி பரத்வ, அபரத்வ குணத்தின் விநாசத்தின் வகையினைக் கூறுவாம்.

௫௧௩. எழுவகையாய வைதிக பரத்வ, அபரத்வத்தின் விநாச வர்ணனம்.

முதலில் வைதிக பரத்வ, அபரத்வத்தினது விநாசத்தின் வகையை வர்ணிப்பாம். உதயனாசாரியரானவர் அத்வைதிக பரத்வ, அபரத்வத்தின் விநாசத்திற்கு காரணம் எழு வகையாகக் கூறியிருக்கின்றனர். ஆண்டு ச்லோகம் "அபேக்ஷாபுத்தி ஸம்யோக த்ரவ்ய நாசாத் வ்யஸ்தக் ஸமஸ்தக் ஜாஸப்த ஸப்தவிதோ ஹி நாசஸ்ஸ்யாத் பரத்வாபரத்வயோ:" (இ-ள்) அபேக்ஷாபுத்தியின் நாசம், ஸம்யோகத்தின்நாசம், திரவியத்தின்நாசம், அபேக்ஷாபுத்திநாசதிரவிய நாசம், ஸம்யோக நாச திரவிய நாசம், அபேக்ஷாபுத்தி நாச ஸம்யோக நாசம், அபேக்ஷாபுத்தி நாச ஸம்யோக நாச திரவியநாசம் என் எழுவகைத்தாய காரணத்தானேயே வைதிக பரத்வ, அபரத்வத்தினது நாசமுண்டாகின்றது. எங்ஙனம்: பிரயாகையிலுள்ள புருஷனது அபேக்ஷையால் மதுராவிடத்துள்ள புருஷனிடத்து காசியிலுள்ள புருஷனினின்றும் எத்தகைய பரத்வமிருக்கின்றதோ அத்வைதிக பரத்வத்தின் நிமித்த காரண வடிவ பிரயாகை புருஷனது அபேக்ஷாபுத்தியினால் மதுராவிடத்துள்ள புருஷன் தன்னினின்றும் சேய்மையிட்டத்துள்ளானென்பதாம் காசியிலுள்ளவனது அபேக்ஷா புத்தியின் நாசத்தானும் அம்மதுரா புருஷனிடத்துள்ள வைதிக பரத்வத்தின் நாசமுண்டாய் விடுகின்றது. எங்ஙனம்: அபேக்ஷா புத்தியின் நாசத்தால் துவித்வ முதலிய சங்கியைகளின் நாசமுண்டாகின்றது. பரத்வத்தின் ஆசிரயமாகிய மதுராவிலுள்ள புருஷன் யாவனோ அப்புருஷனோடுள்ள திசையின் ஸம்யோகம் யாதோ அத்திக் ஸம்யோகத்தின் நாசத்தானும் பரத்வத்தின் நாசம் உண்டாய் விடுகின்றது. இவ்வாறாக அம்மதுரா புருஷனிடத்துள்ள பரத்வத்தின் அபேக்ஷையினால் பிரயாகையிலுள்ள புருஷனிடத்திருக்கும் அபரத்வம் யாதோ அவ்வபரத்வத்தின் அசமவாயிகாரண வடிவ பிரயாகையிலுள்ள புருஷனோடுள்ள திசையின் ஸம்யோகம் யாதோ அத்திக் ஸம்யோகத்தின் நாசத்தானும் அம்மதுரா புருஷனிடத்துள்ள பரத்வம் நாசமாய் விடுகின்றது. இவ்வாறாக அம்மதுரா புருஷனிடத்துள்ள பரத்வத்தின் எல்லையாகிய காசியிலுள்ள புருஷன் யாவனோ அக்காசியிலுள்ள புருஷனது காசியினோடுள்ள ஸம்யோக சம்பந்தம் யாதோ அச்ஸம்யோகத்தின் நாசத்தானும் அம்மதுரா புருஷனிடத்துள்ள பரத்வம் நாசமாய் விடுகின்றது. இவ்வாற்றால் அச்ஸம்யோகத்தின் நாசம் ரூபிதமாகின்றது. அப்பரத்வத்தின் ஆசிரயமாகிய மதுராவிடத்துள்ள புருஷன் யாவனோ அவ்வாசிரய திரவியத்தின் நாசத்தானும் அப்பரத்வம் நாசமாய் விடுகின்றது. யாண்டு அவ்வபேக்ஷா புத்தியின் நாசமும், புருஷ வடிவ ஆசிரய திரவியத்தின் நாசமு முண்டாகின்றதோ ஆண்டு அபேக்ஷாபுத்தியின் நாசம், திரவிய நாசமா மிவ்விரண்டினால் அப்பரத்வத்தின் நாசமுண்டாகின்றது. யாண்டு கூறிய ஸம்யோகத்தின் நாசமும், அப்புருஷ வடிவ ஆசிரய திரவியத்தின் நாசமு முண்டாகின்றதோ ஆண்டு ஸம்யோக நாசம், திரவிய நாசமா மிரண்டினால் அப்பரத்வத்தின் நாச முண்டாகின்றது. யாண்டு அவ்வபேக்ஷாபுத்தியின் நாசமும், அச்ஸம்யோகத்தின் நாசமு முண்டாகின்றதோ ஆண்டு அபேக்ஷாபுத்தி நாசம், ஸம்யோக நாசமா மிவ்விரண்டினால் அப்பரத்வத்தின் நாச முண்டாகின்றது. யாண்டு அவ்வபேக்ஷா புத்தியின் நாசமும்

அச்சையோகத்தின் நாசமும், அவ்வாசிரய திரவியத்தின் நாசமு முண்டாகின்றதோ ஆண்டு அபேக்ஷாபுத்தி நாசம், சையோக நாசம், திரவிய நாசமா மூன்றினால் அத்தைசிக பரத்வத்தின் நாச முண்டாகின்றது. இவ்வாறாக அப்பிரயாகையிலுள்ள புருஷனிடத்துள்ள தைசிக அபரத்வத்தின் நாசத்திலும் அவ்வபேக்ஷாபுத்தி நாச முதலிய எழுவகை காரணங்களை அறிந்துக்கொள்க.

## எஎஉ. மூவகையாய காலிக பரத்வ, அபரத்வத்தின் நாச வர்ணனம்.

இனி காலிக பரத்வ, அபரத்வங்களின் விநாசத்தின் வகையினை வர்ணிப்பாம். ஆண்டு முதுமைத்தன்மை, இளமைத்தன்மை வடிவ அபேக்ஷாபுத்தியினால் அக்காலிக பரத்வ, அபரத்வங்களின் உற்பத்தி யுண்டாவது யாதோ அவ்வபேக்ஷாபுத்தி வடிவ நிமித்த காரணத்தின் நாசத்தானும் அக்காலிக பரத்வ, அபரத்வத்தின் நாச முண்டாய் விடுகின்றது. எவ்விருத்த சரீர வடிவமும், வாலிப சரீர வடிவமுமாகிய ஆசிரய திரவியத்தில் அக்காலிக பரத்வம், அபரத்வம் சமவாயசம்பந்தத்தால் உண்டாகின்றதோ அச்சரீர வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தானும் அக்காலிக பரத்வ, அபரத்வங்களின் நாச முண்டாய் விடுகின்றது. யாண்டு அவ்வபேக்ஷா புத்தியின் நாசமும், அவ்வாசிரய திரவியத்தின் நாசமுமுண்டாகின்றதோ ஆண்டு அபேக்ஷா புத்தி நாசம், திரவிய நாசமா மிவ்விரண்டினால் அக்காலிக பரத்வ, அபரத்வங்களின் நாச முண்டாகின்றது. சிலநூலாசிரியரோ இது கூறுகின்றனர். கேவலம் அபேக்ஷா புத்தி வடிவ நிமித்த காரணத்தின் நாசத்தானேயே அக்காலிக பரத்வ, அபரத்வத்தின் நாச முண்டாகின்றது. வேறொன்றினால் நாசமாவதின்று.

சங்கை:—கூறிய இப்பரத்வ, அபரத்வ குணம் எங்ஙனம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களில் உற்பன்னமாகின்றதோ அங்ஙனமே ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா என்னுமிந்நான்கு விபு திரவியங்களிலும் ஏன் உண்டாகக் கூடாது?.

சமாதானம்:—பரிச்சின்ன திரவியங்களிலேயே யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் சேய்மைத் தன்மை யிருக்கின்றது. அங்ஙனமே யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் அண்மைத்தன்மையிருக்கின்றது. ஆகாச முதலிய அபரிச்சின்ன திரவியங்களில் யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் சேய்மைத் தன்மையும், யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் அண்மைத் தன்மையும் சம்பவியாது. ஆகையால் அச்சேய்மைத் தன்மை புத்தியும், அண்மைத்தன்மை புத்தியுமாகிய அபேக்ஷா புத்தியின் அபாவத்தால் அவ்வாகாசமுதலியவைகளில் அத்தைசிக பரத்வ, அபரத்வத்தின் உற்பத்தி யுண்டாவதின்று. ஜன்னிய திரவியங்களிலேயே யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் முதுமைத்தன்மை யுண்டாகின்றது. அங்ஙனமே யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் இளமைத்தன்மை யுண்டாகின்றது. உற்பத்தி விநாசங்களில்லாத ஆகாச முதலியவைகளில் யாதாமோர் திரவியத்தின் அபேக்ஷையால் முதுமைத் தன்மையும், இளமைத் தன்மையும் சம்பவியாது. ஆகையால் அம்முதுமைத் தன்மை புத்தி வடிவமும், இளமைத் தன்மை புத்தி வடிவமு

மாகிய அபேக்ஷா புத்தியின் அபாவத்தால் அவ்வாகாச முதலியவைகளில் அக்காலிக பரத்வ, அபரத்வங்களின் உற்பத்தி யுண்டாகாது.

சங்கை:—கூறிய அத்தைசிக பரத்வ, அபரத்வங்களினாலேயே யாண்டும் பர, அபர வியவஹாரம் சித்தமாகின்றது. ஆகையால் அத்தைசிக பரத்வ, அபரத்வத்தினும் வேறான காலிகபரத்வ, அபரத்வங்களை ஒப்புவது நலமுடையதன்றாமென்னுஞ் சங்கை யுண்டாக இனி தைசிக பரத்வ, அபரத்வத்தினும் காலிக பரத்வ, அபரத்வத்தில் விலக்ஷணத்தன்மையைச் சித்தஞ் செய்வாம்.

### ௭௭௫. தைசிக பரத்வ, அபரத்வத்தினும் காலிக பர்த்வ, அபரத்வத்தில் விலக்ஷணத் தன்மையின் சாதக யுக்தி.

ஆண்டு வாலிப புருஷனது அபேக்ஷையால் காண்போனது அண்மையிடத்துள்ள விருத்த புருஷன் யாவனோ அவ்விருத்த புருஷனிடத்து அவ்வாலிப புருஷனது அபேக்ஷா புத்தியினால் தைசிக அபரத்வ மிருக்கின்றது. அவ்வாலிப புருஷனிடத்து அவ்விருத்த புருஷனது அபேக்ஷையால் தைசிக பரத்வமிருக்கின்றது. என்றாலும் காண்போனுக்கு அவ்வாலிப புருஷனது அபேக்ஷையால் அவ்விருத்தபுருஷனிடத்து பரத்வ வியவஹாரமுண்டாவதும், அவ்விருத்த புருஷனது அபேக்ஷையால் அவ்வாலிப புருஷனிடத்து அபரத்வ வியவஹார முண்டாவதும் யாதோ அப்பரத்வ, அபரத்வ வியவஹாரம் அக்காலிக பரத்வ, அபரத்வங்களாலேயே யுண்டாகின்றது. தைசிக பரத்வ, அபரத்வங்களால் உண்டாவதின்று. ஓர் கால் அத்தைசிக பரத்வ, அபரத்வங்களினும் அக்காலிக பரத்வ, அபரத்வங்களை வேறாகவே யொப்பாவிடின் கூறிய அந்த வியவஹாரம், சம்பவியாததாகும். ஆகையால் அவ்வியவஹாரத்தின் சித்தியின் பொருட்டு அத்தைசிக பரத்வ, அபரத்வங்களினும் அக்காலிக பரத்வ, அபரத்வங்களை வேறாகவே யொப்ப வேண்டும்.

### ௭௭௬. பரத்வ, அபரத்வங்கட்கு குண வடிவம் ஒப்பாதவராகிய நவீன நையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமிதுவாம். எங்ஙனம் உருவம், ரச முதலியன குண வடிவமாகின்றனவோ அங்ஙனம் அப்பரத்வம், அபரத்வம் குண வடிவமன்றாம். ஆனால் பிராசீன நையாயிகர்களால் முற்கூறப்பட்ட அநேகதர ஸம்யுக்த ஸம்யோகமுடைமை வடிவ சேய்மைத்தன்மை யாதோ அங்ஙனமே அற்பதர ஸம்யுக்த ஸம்யோகமுடைமை வடிவ அண்மைத்தன்மை யாதோ அச்சேய்மைத் தன்மையினையே பரத்வமென்றும், சேய்மைத்வமென்றுங் கூறுவர். அண்மைத் தன்மையினையே அபரத்வமென்றும், அண்மைத்வமென்றுங் கூறுவர். அச்சேய்மைத்தன்மை அண்மைத்தன்மையினும் வேறாக அத்தைசிக பரத்வ, அபரத்வ குணங்களில் ஓர் பிரமாணமுமின்றாம். இவ்வாறாக பிராசீன நையாயிகர்களால் முற்கூறப்பட்ட சூரியனது அநேகதர கிரியைகளின் நாசத்தால் ஜன்னியத்வ வடிவ மூத்தத்தன்மை யாதோ அங்ஙனமே அற்பதர கிரியைகளின் நாசத்தால் ஜன்னியத்வவடிவ இளமைத்தன்மையாதோ அவற்றையே பரத்வமென்றும், அபரத்வ மென்றுங் கூறுவர். அம்மூத்தத் தன்மை, இளமைத் தன்மையினும் வேறாக அக்காலிக பரத்வ, அபரத்வத்தினிடத்து ஓர் பிரமாணமு மின்றாம். பரத்வ, அபரத்வ குணம் முற்றிற்று.

## எஎடு. குருத்வ நிரூபணம்.

குருத்வ குணத்தின் லக்ஷணம். ஆண்டு "ஆத்யபதநாஸமவாயி காரணம் குருத்வம்" (இ-ள்.) எக்குணம் ஆதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாகின்றதோ அக்குணம் குருத்வமெனப்படுகின்றது. ஆண்டு "அத: ஸம்யோகாநுகூலக்ரியாபதநம்" (இ-ள்.) மேலிடத்திலுள்ள மூர்த்தத் திரவியங்கட்கு பிருதிவி முதலிய கீழிடத்தினோடு சையோக முண்டாவது யாதோ அச்சையோகத்தை யுண்டாக்கும் மூர்த்தத் திரவியத்தின் கிரியா விசேஷம் யாதோ அக்கிரியையினை வீழ்ச்சி என்பர். எங்ஙனம்: உயர்ந்த விருக்ஷத்தின் கிளையிலுள்ள மாம்பழ முதலியன யாவையோ அவை பரிபக்வமாகி கீழே பிருதிவியினிடத்து விழுகின்றன. ஆண்டு அம்மாம்பழ முதலியவைகட்கு அப்பிருதிவியினோடு சையோகமுண்டாவது யாதோ அச் சையோகத்தை யுண்டாக்கும் மாம்பழ முதலியவைகளின் கிரியை யாதோ அக்கிரியையினை வீழ்ச்சி என்பர். அதாவது: அக்கிளையினின்றும் அம்மாம் பழத்தின் விபாகத்தை யுண்டாக்கும் முதற்கிரியை யாதோ அம்முதற்கிரியை முதலாக அப்பிருதிவி சையோகமட்டுமாம் அம்மாம்பழத்தில் எவ்வளவு கிரியையுண்டாகின்றதோ அவ்வெல்லாக் கிரியைகள் அக்கீழிட சையோகத்திற்கு அநுகூலமாவதால் வீழ்ச்சி என்னும் பெயரால் வழங்கப்படுகின்றது. ஆண்டு அம்மாம்பழ முதலியவைகளில் முதற்கிரியா வடிவ வீழ்ச்சியுண்டாவது யாதோ அம்முதல் வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம் அம்மாம்பழ முதலியவைகளின் குருத்வமேயாகின்றது. அம்முதல்வீழ்ச்சியால் அம்மாம்பழ முதலியவைகளில் வேகம் உற்பன்னமாகின்றது. அவ்வேகத்தால் அம்முதல் வீழ்ச்சிக்கு நாசமுண்டாகி அம்மாம்பழ முதலியவைகளில் இரண்டாம் வீழ்ச்சி உற்பன்னமாகின்றது. அவ்விரண்டாம் வீழ்ச்சியினால் அம்முதல் வேகத்தின் நாசமுண்டாகி இரண்டாம் வேகம் உற்பன்னமாகின்றது. அவ்விரண்டாம் வேகத்தால் அவ்விரண்டாம் வீழ்ச்சிக்கு நாசமுண்டாகி மூன்றாம் வீழ்ச்சி உண்டாகின்றது. இவ்வாறாக அக்கீழிட சையோகமட்டும் பூர்வ பூர்வ வீழ்ச்சி ஜன்னிய வேகமானது பூர்வ பூர்வ வீழ்ச்சியின் நாசத்தால் உத்தர உத்தர வீழ்ச்சியினை உண்டாக்குகின்றது. அங்ஙனமே உத்தர உத்தர வீழ்ச்சிகளும் பூர்வ பூர்வ வேகத்தின் நாசத்தால் உத்தர உத்தர வேகத்தினை உண்டாக்குகின்றது. ஆகையால் அவ்விரண்டாம் வீழ்ச்சி முதலாக அக்கீழிட சையோகமட்டும் அம்மாம்பழ முதலியவைகளில் எவ்வளவு கிரியா வடிவ வீழ்ச்சி உண்டாகின்றதோ அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சிகளுக்கு அவ்வேக குணமே அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் ஆதிவீழ்ச்சியின் அசமவாயி காரணத்வ வடிவ குருத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "வீழ்ச்சியின் அசமவாயி காரணம் குருத்வம்" என இம்மாத்திரமே அக்குருத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஆதி" என்னும் பதங் கூறாவிடின் கூறிய முறைப்படி இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளின் அசமவாயி காரண வடிவ வேகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில்

"ஆதி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வேக குணம் அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சிகட்கு அசமவாயி காரணமாயினும் அவ்வாதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாவதன்று. ஆகையால் அவ்வேகத்தில் குருத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஆதி வீழ்ச்சியின் காரணம் குருத்வம்" என இம்மாத்திரமே குருத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதங் கூறுவிடின் அக்கிரியா வடிவ ஆதி வீழ்ச்சியின் சமவாயி காரண வடிவ அம்மாம்பழ முதலியதிரவியங்களிலும் நிமித்தகாரண வடிவ அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அம்மாம்பழ முதலிய திரவியங்களிலும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியவைகளிலும் அவ்வாதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணத்தன்மை யின்றும். ஆகையால் அவைகளிடத்து குருத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—கட முதலியவைகளில் அவ்வீழ்ச்சி ஓர் காலும் உற்பன்னமாகாது. ஆனல் அவ்வீழ்ச்சியின் உற்பத்தியின்றியே எக்கட முதலியன உற்பன்னமாகி நஷ்டமடைகின்றனவோ அவ்வுற்பத்தி, விநஷ்ட கட முதலியவைகளின் குருத்வத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் அக்கட முதலியவைகளின் குருத்வத்தில் அவ்வீழ்ச்சிக்கு அசமவாயி காரணத் தன்மை யின்று மென்னும் சங்கையுண்டாக இனி கூறிய லக்ஷணத்தை வேறு வகையாக நிரூபிப்பாம்.

எஎகூ. கூறிய லக்ஷணத்தை வேறு வகையாகக் கூறுவது.

"ஆத்யபதநாஸமவாயிகாரணவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத் குருத்வம்" (இ-ள்.) ஆதி வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தில் இருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய் ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் குருத்வமெனப்படுகின்றது. ஆண்டு அம்மாம்பழ முதலியவைகளின் ஆதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாகிய அம்மாம்பழ முதலியவைகளின் குருத்வம்யாதோ அக்குருத்வத்தில் இருப்பதும், குணத்வஜாதியின் வியாப்பியமுமாகிய குருத்வத் தன்மை ஜாதி யாதோ அக்குருத்வத் தன்மை ஜாதி எல்லாகுருத்வங்களில் சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றது. அதாவது; அவ்வுற்பத்தி, விநஷ்ட கட முதலியவைகளின் குருத்வத்திலும் குருத்வ ஜாதியிருக்கின்றது. ஆகையால் அவ்வுற்பத்தி, விநஷ்ட கட முதலியவைகளின் குருத்வத்தில் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு குணத்வ ஜாதியின் வியாப்பிய வுருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு இந்த லக்ஷணத்தில் "ஆதி வீழ்ச்சியின் அசமவாயி காரணத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அந்த உருவத்தன்மை முதலிய ஜாதிகள் அவ்வாதி வீழ்ச்சியின் அசமவாயி காரணமாகிய குருத்வத்தில் இருப்பதன்றும். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக்

கொண்டு உருவ முதலிய குணங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது இந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங் கூருவிடின் ஆதிவீழ்ச்சியின் அசமவாயி காரண வடிவ குருத்வத்தில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய சர்வ குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத் தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய மன்ரும். ஆகையால் குணத்தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

எஎஎ. கூறிய லக்ஷணத்தை மீண்டும் வேறுவகையாக வர்ணித்தல்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர்; "ஆதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம் குருத்வம்" எனக் கூறிய லக்ஷணத்தில் "ஆதி" என்னும் பதத்திற்கு யாதோர் பயனுமின்ரும். ஆனல் "வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம் குருத்வம்" என் இம்மாத்திரமே குருத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—குருத்வத்தின் லக்ஷணத்தில் ஓர் கால் "ஆதி" என்னும் பதங் கூருவிடின் முற்கூறியவாற்ருல் வேகத்தில் அக்குருத்வத்தின் லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாகும்.

சமாதானம்:—அவ்வேகத்திற்கு இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளின் அசமவாயி காரணத்தன்மை யுண்டாகுமாயின் அவ்வேகத்தில் அக்குருத்வத் தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஆனல் அவ்வேகத்திற்கு இரண் டாவது முதலிய வீழ்ச்சியின் அசமவாயி காரணத் தன்மை யின்ரும். ஆனல் எங்ஙனம் ஆதி வீழ்ச்சியில் குருத்வத்திற்கே அசமவாயி காரணத்தன்மை யிருக்கிறதோ அங்ஙனமே அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சிகளினும் அக்குருத்வத்திற்கே அசமவாயி காரணத்தன்மை யிருக்கிறது. அவ்வேகத் திற்கு அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியில் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. ஏனெனின் ஆதி வீழ்ச்சியிலோ குருத்வத்திற்கு அசமவாயி காரணம் ஒப்புவதும், இரண்டாம் வீழ்ச்சி முதலியவைகளில் வேகத்திற்கு அசமவாயி காரணம் ஒப்புவதுமா மிவ்வர்த்தத்தில் கௌரவ தோஷத்தின் பிராப்தி யுண்டாவதுடன் அவ்வேகத்திற்கு இரண்டாவது முதலிய வீழ்ச்சி யின் அசமவாயி காரணத் தன்மையில் ஓர் பிரமாணமு மின்ரும். ஆகையால் லாகவத்தால் தேயுவிலுள்ள வீழ்ச்சியினும் வேருன எல்லா வீழ்ச்சி மாத்தி ரத்தில் அக்குருத்வத்திற்கே அசமவாயி காரணம் ஒப்புவது உசிதமாம்.

சங்கை:—அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியில் குருத்வத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யிருக்கிறது, அல்லது வேகத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யிருக்கிற தென்பதான அர்த்தங்களில் யாதாமோர் அர்த் தத்தின் சாதகமாக யாதோர் யுக்தியு மின்ரும். ஆகைபால் யாதாமோர் அர்த்

த்தின் சாதக யுக்தி வடிவ வினிகமனத்தின் அபாவத்தால் குருத்வம், வேகமுமா மிரண்டிற்கே அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியில் அசமவாயி காரணம் ஒப்ப வேண்டியதாகும்.

சமாதானம்:—அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியில் குருத்வம், வேகமுமா மிரண்டிற்கு அசமவாயி காரணம் ஒப்பின் அவ்வாதி வீழ்ச்சியில் இருக்கின்ற குருத்வத்தினது ஜன்னியத் தன்மையின் அவச்சேதக ஜாதியும், பாணம் முதலியவைகளின் கர்மத்தில் இருக்கின்ற வேகத்தின் ஜன்னியத்தன்மையின் அவச்சேதக ஜாதியும் யாவையோ அவ்விருஜாதிகட்கு அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியில் சாங்கர்ய முண்டாகும். அச்சாங்கர்ய தோஷத்தால் அவ்விரு ஜாதிகளில் ஜாதித் தன்மையின் அபாவமுண்டாகும். ஆகையால் அவ்விரண்டாவதுமுதலிய வீழ்ச்சியில் அக்குருத்வம், வேகமுமாமிரண்டிற்கும் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. ஆனால் குருத்வம் ஒன்றிற்கே அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது.

சங்கை:—அவ்வேகத்தினை இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளின் அசமவாயி காரணமாக வொப்பாவிடின் பாணத்தில் உண்டாகின்ற இரண்டாவது முதலிய கிரியைகளிலும் அவ்வேகத்திற்கு அசமவாயி காரணத்தன்மை ஒப்புவதின்றாகும். கருத்திதுவாம்; வில்லின் நாணியிற் பூட்டிய பாணத்தினோடு நோதனுக்கிய சையோக முண்டாக அப்பாணத்தில் முதற்கிரியை யுண்டாவது யாதோ அம்முதற்கிரியைக்கோ அந்நோதனுக்கிய சையோகமே அசமவாயி காரணமாகின்றது. அம் முதற்கிரியையினால் அப்பாணத்தில் வேகம் உண்டாவதாகின்றது. அவ்வேகத்தால் அம்முதற்கிரியையின் நாசமுண்டாகி அப்பாணத்தில் மீண்டு மிரண்டாவதுகிரியை உண்டாவதாகின்றது. அவ்விரண்டாவது கிரியையினால் அம்முதல் வேகத்தின் நாச முண்டாகி மீண்டும் இரண்டாவது வேகம் உண்டாவதாகின்றது. அவ்விரண்டாவது வேகத்தால் அவ்விரண்டாவது கிரியையின் நாசமுண்டாகி அப்பாணத்தில் மீண்டும் மூன்றாவது கிரியை உண்டாவதாகின்றது. இம்முறையாக அப்பாணத்தின் இரண்டாவது முதலிய கிரியைகட்கு அவ்வேகமே அசமவாயி காரணமாகின்றது. அது உண்டாகாததாக வேண்டும்.

சமாதானம்:—அப்பாணத்தின் முதற்கிரியைக்கு அசமவாயி காரண வடிவ அந்நோதனுக்கிய சையோகம் அப்பாணத்தின் முதற்கிரியா ஜன்னிய விபாகத்தால் நாசமாய் விடுகின்றது. ஆகையால் அந்நோதனுக்கிய சையோகத்திற்கு அப்பாணத்தின் இரண்டாவது முதலிய கிரியைகளின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. ஆகையால் ஆண்டு அக்கிரியா ஜன்னிய வேகத்திற்கே அவ்விரண்டாவது முதலிய கிரியைகளின் அசமவாயி காரணத்தன்மை அங்கீகாரமாம். ஈண்டு பிரசங்கத்தில் அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சியின் உற்பத்தி காலத்தில் அக்குருத்வம் நாசமாவதின்று; ஆனால் அக்குருத்வம் இருப்பதேயாகின்றது. ஆகையால் அம்முதல் வீழ்ச்சியினைப்போன்று அவ்விரண்டாவது முதலிய வீழ்ச்சிகளிலும் அக்குருத்வத்திற்கே அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் கூறிய குருத்வத்தின் லக்ஷணத்தில் "ஆதி" என்னும் பதம் அசங்கதமாம்.

## ௭௭௶. கூறிய லக்ஷணத்தை மீண்டும் வேறு வகையாக வர்ணித்தல்.

அல்லது அநேக நூற்களில் குருத்வத்தின் லக்ஷணத்தில் "ஆதி" என்னும் பதங் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் அக்குருத்வத்தின் லக்ஷணத்தில் ஓர் கால் "ஆதி" என்னும் பதத்தினை வைத்திருக்கினும் "ஆதி" என்னும் பதத்தின் அர்த்தத்திற்கு அவ்வீழ்ச்சி வடிவ கிரியையினோடு அபேதம் சம்பவியாது. அதாவது; "ஆதி" என்பதாகிய வீழ்ச்சி யாதோ அதற்கு அவ்வாறாய் அர்த்தம் சம்பவியாது. ஆனால் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களுள் ஆதியிலுள்ள பிருதிவி, ஜலமா மிவ்விரு திரவியங்கள் யாவையோ அவ்விரு திரவியங்களையே "ஆதி" என்னும் பதத்தாற் கிரஹிக்குக. ஆகையால் "ஆதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணம் குருத்வம்" எனக் கூறிய இந்த லக்ஷணத்திற்கு இவ்வர்த்தம் சித்திக்கின்றது. பிருதிவி, ஜலங்களின் வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம் யாதோ அது குருத்வமெனப்படுகின்றது. இப்பக்ஷத்தில் "ஆதி" என்னும் பதம் தேயுவின் வீழ்ச்சியினை நிவர்த்திக்கும் பொருட்டாம். கருத்திதுவர்ம்; "ஶிரஸி ஸூர்ய்யகிரணா: பதந்தி பாதாதௌ சக்ஷு: பததி" (இ-ள்.) நமது சிரசின்மீது சூரியனது கிரணமும், பாத முதலியவைகளில், சக்ஷுவும் வீழ்கின்றது. என்பதான உலக வியவஹாரத்தால் தேயு வடிவ சூரியனது கிரணத்திலும், தேயு வடிவ சக்ஷு இந்திரியத்திலும் அவ் வீழ்ச்சி வடிவ கிரியை சித்தமாகின்றது. ஆண்டு தேயுவில் குருத்வ குணம் இருப்பதின்று. ஆகையால் அத்தேயுவின் வீழ்ச்சிக்கு அக்குருத்வம் அசமவாயி காரணமன்றாம். ஆனால் அக்கிரண வடிவ தேயுவினோடும், அச்சக்ஷு வடிவ தேயுவினோடும் அதிர்ஷ்டமுடைய ஆத்மாவின் சையோகமே அவ்வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணமாகின்றது. ஆண்டு கூறிய அந்த லக்ஷணத்தில் பிருதிவி ஜலங்களின் வாசகமாகிய "ஆதி" என்னும் பதங் கூறாவிடின் அக்கிரணாதி வடிவ தேயுவினது வீழ்ச்சியின் அசமவாயி காரண வடிவ அவ்வாத்ம சையோகத்தில் குருத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஆதி" என்னும் பதங் கூறப்பட்டது.

## ௭௭௯. குருத்வத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"ப்ருதிவீவ்ருத்திவ்ருத்தி ப்ரத்யக்ஷவிஷயாவ்ருத்தி குணத்வ ஸாக்ஷாத்வ்யாப்யஜாதிமத் குருத்வம்" (இ-ள்.) பிருதிவியில் இருப்பதில் இருப்பதும், பிரத்தியக்ஷத்தின் விஷயத்தில் இராததும், குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியையுடைய குணம் குருத்வமெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவியில் இருப்பதாகிய குருத்வம் யாதோ அக்குருத்வத்தில் குருத்வத்தன்மை ஜாதியிருக்கின்றது. ஆகையால் அக்குருத்வத் தன்மை ஜாதி பிருதிவியில் இருப்பதில் இருப்பதெனப் படுகின்றது. அக்குருத்வத்தின் லௌகிகப் பிரத்தியக்ஷம் எஜ்ஜீவனுக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் அக்குருத்வத்தன்மை ஜாதி பிரத்தியக்ஷத்தின் விஷயமாகிய உருவ முதலியவைகளில் இராததுமாம். அக்குருத்வத்தன்மை ஜாதி குணத்

தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய குருத்வத்தன்மை ஜாதி எல்லா குருத்வங்களிலும் இருக்கின்றது. ஆகையால் கூறிய இக்குருத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "பிரத்தியக்ஷ விஷயத்தில் இராததும், குணத் தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையதும் குருத்வம்" என இம்மாத்திரமே குருத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் அதிர்ஷ்டத்தன்மை ஜாதியைக் கொண்டு தர்ம, அதர்மமாகிய அதிர்ஷ்டத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் குருத்வத்தினைப் போன்று அத்தர்ம, அதர்மங்களின் லௌகிகபிரத்தியக்ஷமும் எஜ்ஜீவனுக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் அக்குருத்வத்தன்மை ஜாதியினைப்போன்று அதிர்ஷ்டத்தன்மை ஜாதியும், பிரத்தியக்ஷ விஷயத்தில் இராததும், குணத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாம். இத்தகைய அதிர்ஷ்டத்தன்மை ஜாதியைக்கொண்டு தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும்" என்னுமிப்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அதிர்ஷ்டத் தன்மை ஜாதி பிருதிவியில் இருப்பதாகிய குணத்தில் இருப்பதன்று. ஆனல் ஆத்மாவிலிருக்கும் தர்ம, அதர்மத்திலேயே அதிர்ஷ்டத்தன்மை ஜாதி யிருக்கின்றது. ஆகையால் அவ்வதிர்ஷ்டத்தன்மை ஜாதியைக் கொண்டு தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும் குணத்தன்மையின் சாக்ஷாத் வியாப்பிய ஜாதியுடையதும் குருத்வம்" என இம்மாத்திரமே குருத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பிரத்தியக்ஷ விஷயத்தி லிராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அக்குருத்வ குணம் பிருதிவியில் இருக்கின்றதோ அங்ஙனமே உருவம், ரசம், கந்தம், பரிசம் என்னும் நான்கு குணங்களும் பிருதிவியிலிருக்கின்றன. பிருதிவியிலிருப்பனவாகிய உருவ முதலிய குணங்களில் இருப்பதும், குணத் தன்மைஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமுமாயிருப்பது அவ்வுருவத்தன்மை முதலியஜாதிகளுமாம். அவ்வுருவத்தன்மை முதலியஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பிரத்தியக்ஷ விஷயத்தில் இராததும்" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத் தன்மை முதலியஜாதிகள் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தில் இராதனவன்றும். ஆனல் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாகிய உருவ முதலிய குணங்களில் இருப்பதேயாம். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும், பிரத்தியக்ஷ விஷயத்தில்இராததும் குணத்தன்மையின் வியாப்பியஜாதியுடையதும் குருத்வம்" என இம்மாத்திரமே குருத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில்

"சாக்ஷாத்" என்னும் பதங் கூறுவிடின், நிலைபெருத்துகைத் தன்மை ஜாதியைக் கொண்டு நிலைபெருத்துகையெனப்பெயரிய சம்ஸ்கார குணத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் குருத்வ குணம் பிருதிவியில் இருப்பதும், பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமின்மையுமாகின்றதோ அங்ஙனமே அந்நிலைபெறுத்துகை எனப்பெயரிய சம்ஸ்காரமும் பிருதிவியில் இருப்பதும், பிரத்தியக்ஷஞானத்தின் விஷயமின்மையுமாகின்றது. இத்தகைய ஸ்திதி ஸ்தாபகத்தில் இருக்கின்ற ஸ்திதி ஸ்தாபகத்தன்மை ஜாதி பிருதிவியில் இருப்பதில் இருப்பதும், பிரத்தியக்ஷ விஷயத்தில் இராததும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய ஸ்திதி ஸ்தாபகத்வ (நிலைபெருத்துகைத்தன்மை) ஜாதியைக்கொண்டு ஸ்திதி ஸ்தாபகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சாக்ஷாத்" என்னும் பதங் கூறப்பட்டது. ஸ்திதி ஸ்தாபகத்தன்மை ஜாதி குணத் தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பியமன்றும். ஆனால் குணத்தன்மை ஜாதியின் சாக்ஷாத் வியாப்பிய சமஸ்காரத் தன்மை ஜாதியாதோ அச்சம்ஸ்காரத் தன்மை ஜாதியின் வியாப்பியம் ஸ்திதி ஸ்தாபகத் தன்மை ஜாதியாம். ஆகையால் ஸ்திதி ஸ்தாபகத்தன்மை ஜாதியைக் கொண்டு ஸ்திதி ஸ்தாபகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### எ௪௦. குருத்வத்தின் மூன்றாவது லக்ஷணம்.

அல்லது முற்கூறிய இந்த லக்ஷணத்தில் "பிருதிவி" என்னும் பதமிருக்குமிடத்தில் "ஜலம்" என்னும் பதமிருக்கினும் குருத்வத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. அதாவது; "ஜலவ்ருத்திவ்ருத்தி ப்ரத்யக்ஷவிஷயாவ்ருத்தி குணத்வஸாக்ஷாத்வ்யாப்யஜாதிமத் குணத்வம்" ஆண்டு இந்த லக்ஷணத்தின் அர்த்தமும், பதங்களின் பயனும் முற்கூறிய லக்ஷணத்தைப் போன்று அறிந்துகொள்க.

### எ௪க. குருத்வத்தின் ஆசிரயத் தன்மையினதும், அதீந்திரியத் தன்மையினதும் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணங்களால் லக்ஷித குருத்வ குணம் முற்கூறிய ரச குணத்தினைப் போன்று பிருதிவி, ஜலமா மிரண்டிலேயே யிருக்கின்றது. தேயு முதலிய திரவியங்களில் குருத்வ குணம் இருப்பதன்று. குருத்வ குணம் தர்ம, அதர்மத்தினைப் போன்று அதீந்திரியமேயாகின்றது. அதாவது; எவ்விந்திரியத்தானும், குருத்வத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை.

### எ௪உ. நித்திய, அநித்திய வேறுபாட்டால் குருத்வத்தின் இருவித வேற்றுமை.

அக்குருத்வ குணம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு பரமாணு வடிவ நித்திய பிருதிவியினும், பரமாணு வடிவ நித்திய ஜலத்திலும் குருத்வம் நித்தியமாகின்றது. துவியணுகாதி வடிவ அநித்திய பிருதிவியினும், துவியணுகாதி வடிவ அநித்திய

ஜலத்திலும் குருத்வம் அநித்தியமாகின்றது. அநித்திய குருத்வம், நீட்டல் முகத்தல், நிறுத்தலென்னும் வேறுபாட்டால் பலவகைத்தாம்.

### எ௪௩. அநித்திய குருத்வத்தினது உற்பத்தி விநாசக் கிரமத்தின் வர்ணனம்.

ஆண்டு அநித்திய குருத்வம் ஆசிரய திரவியத்தின் உற்பத்தி க்ஷணத்திலும் இரண்டாவது க்ஷணத்தில் அவ்வாசிரய திரவியத்தின் அவயவங்களின் குருத்வத்தால் உண்டாவதாகின்றது. அவ்வாசிரய திரவியத்தின் நாசத்தாலேயே குருத்வ குணம் நாசமாகின்றது. எங்ஙனம்: கடத்தின் உற்பத்தி க்ஷணத்திலும் இரண்டாவது க்ஷணத்தில் அக்கடத்தில் குருத்வ குணம் உண்டாவதாகின்றது. ஆண்டு அக்கடத்திலுள்ள குருத்வத்திற்கு அக்கடமோ சமவாயி காரணமாகின்றது. அக்கடத்தின் சமவாயி காரண கபால வடிவ அவயவங்களின் குருத்வம் அக்கடத்திலுள்ள குருத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்தகாரண மாகின்றன. அக்கட வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே அக்குருத்வத்தின் நாசமுண்டாகின்றது.

### எ௪௪. குருத்வத்திற்கு பாகஜம் ஒப்புவோராகிய லீலாவதிகாரர்களின் மத வர்ணனம்.

ஈண்டு லீலாவதிகாரரின் மதமிதுவாம். எங்ஙனம் பிருதிவியில் உருவ முதலிய நான்கு குணங்கள் பாகத்தாலாகின்றனவோ அதாவது; வன்னி, முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தால் உண்டாவதாகின்றனவோ அங்ஙனமே வன்னியால் சாம்பராகிய படமுதலிய பிருதிவியில் அக்குருத்வமும் பாகத்தாலாயதாம். அதாவது; அவ்வன்னி வடிவ தேயுவின் சையோகத்தால் அப்பட முதலியவைகளில் முன்னுள்ள குருத்வத்தின் நிவர்த்தி வாயிலாக வேறு குருத்வத்தின் உற்பத்தி யுண்டாகின்றது.

சங்கை :—முற்கூறிய குருத்வத்தினது லக்ஷணத்தின் இருப்புள்ளதாயினும் பிரமாணத்தின் அபாவத்தால் குருத்வத்தின் சித்தி உண்டாகாததாகும். எக்காரணத்தாலெனின் லக்ஷணம், பிரமாணமா மிரண்டினுனேயே வத்துவின் சித்தியுண்டாகின்றது. ஆண்டு அதீந்திரியமாவதால் குருத்வத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணமோ சம்பவியாதென்பதான சங்கை யுண்டாக அநுமானப் பிரமாணத்தால் குருத்வத்தின் சித்தியைச் செய்வாம்.

### எ௪௫. அநுமானப் பிரமாணத்தால் குருத்வத்தின் சித்தி.

“ஆத்யபதநம் அஸமவாயிகாரணகம் கர்மத்வாத் பாணாதிகர்மவத்”

(இ-ள்.) முற்கூறிய அம்மாம்பழ முதலியவைகளின் ஆதிவீழ்ச்சி ஓர் அசமவாயி காரணத்தால் ஜன்னியமாக யோக்கியமாம், கர்ம வடிவமாவதால், எதுவெது கிரியாவடிவ கர்மமாகின்றதோ அதுவது அசமவாயி காரணத்தால் ஜன்னியமேயாகின்றது: எங்ஙனம்: பாண முதலியவைகளின் கர்மம் கர்ம வடிவமாவதால் நோதனுக்கிய சையோக வடிவ அசமவாயி காரணத்தால் ஜன்னியமாகின்றது. அங்ஙனமே அவ்வாதி வீழ்ச்சியும் கர்ம வடிவமாவதால் யாதா

மோர் அசமவாயி காரணத்தால் அலசியம் ஜன்னியமாவதாகும். ஆண்டு அவ்வாதி வீழ்ச்சியில் குருத்வமன்றி வேறொன்றிற்கும் அசமவாயி காரணத் தன்மைச் சம்பவியாது பரிசேஷத்தால் அக்குருத்வமே அவ்வாதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரண வடிவமாக சித்தமாகின்றது.

எ௪௬. இரச குணத்தில் ஆதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணத்தின் கண்டனம்.

சங்கை:—மாம்பழ முதலியவைகளிலுள்ள ரச குணம் யாதோ அந்த ரச குணமே அவ்வாதி வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாகும். ஆகையால் அவ்வீழ்ச்சிக்கு அசமவாயி காரண வடிவமாக அவ்வதீந்திரிய குருத்வத்தினை கற்பிப்பது பயனின்மையாம்.

சமாதானம்:—ரச குணத்தினை வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாக வொப்பின் மதுரம், புளிப்பு முதலிய நாநா ரசமுடைய அவயவங்களால் உண்டாவதாவதால் அந்தரசகுணமில்லாத சூர்ணமுதலிய அவயவிகளும், ரசமில்லா வெள்ளியாதிகளும் யாவையோ அவைகட்கு அவ்வாதி வீழ்ச்சி உண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின் வீழ்ச்சியின் அசமவாயி காரணமாகிய ரச குணம் அவைகளிடத்திலின்றும், ரசமில்லா சூர்ணம், வெள்ளி முதலியவைகளின் வீழ்ச்சி பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. ஆகையால் ரசகுணத்திற்கு அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத் தன்மை சம்பவியாது. அல்லது ஒர் கால் ரச குணத்திற்கே வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தன்மையுண்டாகுமாயின் கல்முதலியவைகளின் வீழ்ச்சியின் அபேக்ஷயால் திராக்ஷை முதலியவைகளின் வீழ்ச்சியில் பிரகர்ஷத்தன்மை யுண்டாக வேண்டும். ஏனெனின் கல்முதலியவைகளின் அபேக்ஷயால் திராக்ஷை முதலியவைகளில் பிரகிருஷ்ட மதுரமுதலிய ரசமிருக்கின்றது. காரணத்தின் உத்கர்ஷ, அபகர்ஷமே காரியத்தின் உத்கர்ஷ, அபகர்ஷத்தின் பிரயோஜகமாகின்றது. ஆகையால் திராக்ஷை முதலியவைகளின் பிரகிருஷ்ட ரசத்தால் ஜன்னியமாவதால் திராக்ஷை முதலியவைகளின் வீழ்ச்சியும் பிரகர்ஷத் தன்மையுடையதேயாக வேண்டும். அக்கல் முதலியவைகளின் அபகிருஷ்ட ரசத்தால் ஜன்னியமாவதால் அக்கல் முதலியவைகளின் வீழ்ச்சியும் அபகர்ஷத் தன்மையுடையதேயாக வேண்டும். அது அங்ஙனம் காணக்கிடைப்பதின்று. ஆனால் மாறாக திராக்ஷை முதலிய வீழ்ச்சியினும் அக்கல் முதலியவைகளின் வீழ்ச்சியிலேயே பிரகர்ஷத்தன்மை காணப்படுகின்றது. ஆண்டு எவ்வீழ்ச்சி சுவாசிரய திரவியத்தின் கீழிட சையோகத்தினை முதலில் உண்டாக்குகின்றதோ அவ்வீழ்ச்சி பிரகிருஷ்டமெனப்படுகின்றது. எவ்வீழ்ச்சி சுவாசிரய திரவியத்தின் கீழிட சையோகத்தினை பின்னர் உண்டாக்குகின்றதோ அவ்வீழ்ச்சி அபகிருஷ்டமெனப்படுகின்றது. இக்காரணத்தானும் அந்த ரச குணத்தில் அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது.

எ௪எ. குருத்வத்திலும் ஆதி வீழ்ச்சியின் அசமவாயிகாரணத் தன்மையின் அசம்பவ சங்கை.

சங்கை:—மாம்பழ முதலியவைகளிலுள்ள மஹத்வ பரிமாணம் யாதோ அம்மஹத்வ பரிமாண விசேஷமே அவ்வீழ்ச்சியின் அசமவாயிகாரணமாகும்.

ஆகையால் அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரண வடிவமாக அவ்வதீந்திரிய குருத்வத்தைக் கற்பித்தல் பயனின்மையாம்.

சமாதானம்:—அம்மஹத்வ பரிமாணத்திற்கு அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தை யொப்பின் சுவர்ண முதலியவைகளின் வீழ்ச்சியின் அபேக்ஷயால் பஞ்சி முதலியவைகளின் வீழ்ச்சியில் பிரகர்ஷத்தன்மை யுண்டாக வேண்டும். ஏனெனின் பத்து தோலா இடை சுவர்ணத்தினது மஹத்வத்தின் அபேக்ஷயால் பத்து தோலா இடையுள்ள பஞ்சி முதலியவைகளின் மஹத்வத்தில் பிரகர்ஷத்தன்மை உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. ஆகையால் பிரகிருஷ்டமஹத்வத்தால் ஜன்னியமாவதால் அப்பஞ்சி முதலியவைகளின் வீழ்ச்சி பிரகர்ஷத்தன்மை யுடையதாகவேண்டும். அபகிருஷ்ட மஹத்வத்தால் ஜன்னியமாவதால் அச்சுவர்ணமுதலியவைகளின் வீழ்ச்சி அபகர்ஷத்தன்மை யுடையதாக வேண்டும். அது அங்ஙனம் காணப்படுவதின்று. ஆனல் மாருக அப்பஞ்சி முதலியவைகளின் வீழ்ச்சியினும் அச்சுவர்ணமுதலியவைகளின் வீழ்ச்சியிலேயே பிரகிருஷ்டத்தன்மை தோற்றுகின்றது. ஆகையால் அம்மஹத்வ பரிமாணத்திலும் அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. பரிசேஷத்தால் குருத்வத்திற்கே அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. அக்குருத்வத்தினை வீழ்ச்சியின் அசமவாயி காரணமாக ஒப்புவதில் முற்கூறிய தோஷம் சம்பவியாது. ஏனெனின் திராக்ஷ முதலியவைகளின் அபேக்ஷயால் கல் முதலியவைகளில் பிரகிருஷ்ட குருத்வமிருக்கின்றது. அங்ஙனமே பஞ்சி முதலியவைகளின் அபேக்ஷயால் அச்சுவர்ண முதலியவைகளில் பிரகிருஷ்ட குருத்வ மிருக்கின்றது. ஆகையால் பிரகிருஷ்ட குருத்வத்தால் ஜன்னியமாவதால் கல், சுவர்ண முதலியவைகளின் வீழ்ச்சியோ பிரகர்ஷத் தன்மை யுடையதாகின்றது, அவ்வபகிருஷ்ட குருத்வத்தால் ஜன்னியமாவதால் அத்திராக்ஷ, பஞ்சி முதலியவைகளின் வீழ்ச்சி அபகர்ஷத் தன்மையுடையதாகின்றது.

சங்கை:—எங்ஙனம் ரசத்திற்கும், மஹத்வத்திற்கும் அவ்வீழ்ச்சியின் அசமவாயிகாரணத்தன்மை சம்பவிப்பதின்றே அங்ஙனமே குருத்வத்திற்கும் அவ்வீழ்ச்சியின் அசமவாயி காரணத்தன்மை சம்பவியாது. ஏனெனின் மரத்திலுள்ள பரிபக்குவமில்லா மாம்பழ முதலியவைகளில் குருத்வத்தினிருப்புளதாயினும் வீழ்ச்சி உண்டாகிறதில்லை. அங்ஙனமே தநுவி (வில்லி)னின்றும் விடப்பட்டபாணத்தில் குருத்வத்தி னிருப்புளதாயினும் அக்காலத்தில் அவ்வீழ்ச்சி யுண்டாகிறதில்லை. அங்ஙனமே ஆகாசத்திலுள்ள பக்ஷியின் சரீரத்தில் குருத்வத்தி னிருப்புளதாயினும் அவ்வீழ்ச்சி யுண்டாகிறதில்லை. ஆகையால் அன்வயவியபிசாரமுடையதாவதால் குருத்வத்வம் அவ்வீழ்ச்சிக்கு அசமவாயி காரணமாகமாட்டாது.

ஏ அ அ. குருத்வமுடைய திரவியத்தின் வீழ்ச்சியில் சையோகம், வேகம், முயற்சியா மூன்றின் பிரதிபந்தகத் தன்மையின் வர்ணனம்.

சமாதானம்:—குருத்வமுடைய திரவியத்திற்கு கீழே எவ்வீழ்ச்சி யுண்டாவதின்றே அதனிடத்து சையோகம், வேகம், முயற்சி என்னும் மூன்று

பிரதிபந்தங்க ளுண்டாகின்றன. ஆண்டு குருத்வமுடைய மாம்பழ முதலிய வைகளின் பரிபக்குவமில்லா காலத்தில் எவ்வீழ்ச்சி உண்டாவதின்றோ அவ் வீழ்ச்சியிலோ அம்மாம்பழ முதலியவைகளின் காம்பினோடுள்ள சையோகம் பிரதிபந்தகமாகின்றது. அதாவது; அச்சையோகம் எதுவரையி லிருக்கின் றதோ அதுவரையில் அம்மாம்பழ முதலியவைகளின் குருத்வத்தால் வீழ்ச்சி யுண்டாகிறதில்லை. பிரதிபந்தக சையோகம் அம்மாம்பழ முதலியவைகளின் பரிபக்குவ காலத்தில் நீங்கி விடுகின்றது. ஆகையால் பிரதிபந்தக சையோ கத்தின் அபாவத்தோடு கூடிய குருத்வத்தால் அம்மாம்பழ முதலியவைகளின் வீழ்ச்சியுண்டாகின்றது. குருத்வமுடைய பாண முதலியவைகளின் வீழ்ச்சி யுண்டாகாதது யாதோ அவ்வீழ்ச்சியில் அப்பாண முதலியவைகளின் கிரியா ஜன்னிய வேகம் பிரதிபந்தகமாகின்றது. அவ்வேகம் எப்பொழுது நிவர்த்தி யாகின்றதோ அப்பொழுது அப்பிரதி பந்தக வேகத்தின் அபாவத்தோடு கூடிய குருத்வத்தால் பாண முதலியவைகளுக்கு வீழ்ச்சியுண்டாகின்றது. குருத்வமுடைய பக்ஷி சரீரங்களின் வீழ்ச்சி யுண்டாகாதது யாதோ அவ்வீழ்ச்சியில் அப்பக்ஷி சரீராவச்சின்ன ஆத்மாவின் முயற்சி பிரதிபந்தக மாகின்றது. அம்முயற்சியின் நிவர்த்தி எப்பொழு தாண்டாகின்றதோ அப்பொழுது அப்பிரதிபந்தக பிரயத்னத்தின் அபாவத்தோடு கூடிய குருத் வத்தால் அப்பக்ஷி சரீரங்கட்கு வீழ்ச்சி யுண்டாகின்றது. ஆகையால் இது சித்தமாயிற்று. எங்ஙனம் அவ்வீழ்ச்சியைக் குறித்து குருத்வத்திற்கு அசம வாயிகாரணத்தன்மை யிருக்கிறதோ அங்ஙனமே பிரதிபந்தகாபாவத்திற்கும் அவ்வீழ்ச்சியைக் குறித்து நிமித்த காரணத் தன்மை யிருக்கிறது. எக்காரியத் தின் உற்பத்தியில் எவ்வளவு காரணங்கள் அபேக்ஷிக்கப்படுகின்றனவோ அவ் வெல்லாக் காரணங்களின் இருப்புளதாகியே அக்காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அக்காரணங்களில் யாதாமோர் காரணத்தின் அபாவமுள தாயினும் அக்காரியத்தின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. அதனால் இருக்கும் அக்காரணங்களில் அக்காரியத்தினை உண்டாக்காத் தன்மை கூறப்படுவ தன்று. எங்ஙனம்: மண், தண்டம், சக்கிரம் முதலிய கடத்தினது காரணங் களின் இருப்புளதாயினும் ஓர் குலால வடிவ காரணத்தின் அபாவமுளதாக அக்கட வடிவ காரியத்தின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. அதனால் இருக்கும் மண் முதலிய காரணங்களில் அக்கட வடிவகாரியத்தினை உண்டாக்காத்தன்மை கூறப்படுவதன்று. அங்ஙனமே அக்குருத்வ வடிவ காரணத்தின் இருப்புள தாயினும் பிரதிபந்தகாபாவ வடிவ காரணத்தின் அபாவமுளதாக அவ் வீழ்ச்சி வடிவ காரியத்தின் உற்பத்தியிலாததாயினும் அக்குருத்வத்தில் அவ் வீழ்ச்சியினை உண்டாக்காத் தன்மை கூறப்படுவதன்று. இவ்வார்த்தை வைசே ஷிக சூத்திரகர்த்தா கணாதமுனிவரும் கூறியிருக்கின்றனர். ஆண்டு சூத்திரம் "ஸம்யோகாபாவே குருத்வாத் பதநம்" (இ-ள்.) முற் கூறியவாற்றால் சையோகம், வேகம், முயற்சியுமாகிய மூன்றின் அபாவமுள தாய பின்னரே குருத்வ குணத்தால் திரவியத்தின் வீழ்ச்சி யுண்டாகின்றது.

---

ஏருகூ. இலகுத்தன்மையில் குணத்தன்மையின் சாதகவாதிகளின் சங்கை.

சங்கை :—உலகத்தில் எங்ஙனம் யாதாமோர் வஸ்துவில் குருத்வ வியவஹாரமுண்டாகின்றதோ அங்ஙனமே யாதாமோர் வஸ்துவில் லகுத்வ வியவஹாரமும் உண்டாகின்றது. ஆகையால் குருத்வ குணததினைப்போன்று லகுத்வத்தினையும் வேறு குணமாக வொப்ப வேண்டும். ஆண்டு இது கூறுக; யாண்டாண்டு குருத்வத்தின் அபாவ முண்டாகின்றதோ ஆண்டாண்டு லகுத்வ வியவஹார முண்டாகின்றது. ஆகையால் அக்குருத்வத்தின் அபாவத்தினையே லகுத்வமென்பர். குருத்வத்தின் அபாவத்தினும் லகுத்வம் வேறன்றுமெனக் கூறின் யாண்டாண்டு லகுத்வத்திற்கு அபாவ முண்டாகின்றதோ ஆண்டாண்டு குருத்வ வியவஹாரமே உண்டாகின்றது. ஆகையால் லகுத்வத்தின் அபாவத்தினை குருத்வமென்பர். லகுத்வத்தின் அபாவத்தினும் குருத்வம் வேறன்று மென்பதான சமான யுக்தியால் குருத்வத்திற்கு லகுத்வத்தின் அபாவ வடிவத்தன்மை ஏன் உண்டாகாது? இவ்வாறாக குருத்வத்தின் அபாவம் லகுத்வமாம், அல்லது லகுத்வத்தின் அபாவம் குருத்வமா மென்பதான இரு அர்த்தத்தில் யாதாமோர் அர்த்தத்தின் சாதகமாக ஓர் யுக்தியுமின்றும். ஆகையால் யுக்தி வடிவ வினிகமனத்தின் அபாவத்தால் சுக, துக்கத்தினைப் போன்றும், சையோக விபாகத்தினைப் போன்றும் குருத்வம், லகுத்வமா மிவ்விரண்டும் குணமாக ஒப்பப்பட வேண்டும். எங்ஙனம் திரவியத்தின் வீழ்ச்சியால் குருத்வ குணத்தின் சித்தியுண்டாகின்றதோ அங்ஙனமே திரவியத்தின் வீழ்ச்சியின் அபாவத்தால் லகுத்வ குணத்தின் சித்தியு முண்டாய் விடுகின்றது. ஆகையால் குருத்வ குணத்தினைப் போன்று லகுத்வ குணமும் வேறாகவே ஒப்பப்படவேண்டும்.

ஏகூ௦. லகுத்வத்தில் குருத்வாபாவ வடிவத்தன்மையின் சாதக யுக்தி.

சமாதானம் :—அம்மாம்பழ முதலியவைகளுக்குண்டாம் ஆதி வீழ்ச்சியின் உற்பத்தி குருத்வ குணமன்றி வேறொன்றினால் சம்பவியாதென்பதான வார்த்தை முன்னர் கூறி வந்துள்ளோம். ஆகையால் அவ்வாதி வீழ்ச்சியாகிய காரியத்தின் வேறாய அநுபபத்தியால் ஆதி வீழ்ச்சியின் காரண வடிவமாக குருத்வத்தின் கற்பனம் அவசியம் செய்யப்படுவதாகும். இவ்வாறாக குருத்வ குணத்தின் சித்தி யுண்டாக குருத்வ குணத்தின் அபாவம் யாண்டாண் டுண்டாகின்றதோ ஆண்டாண்டு அவ்வீழ்ச்சி யுண்டாவதின்று. ஆகையால் குருத்வத்தின் அபாவத்தானேயே அவ்வீழ்ச்சியின் அபாவம் சம்பவிக்கின்றது. அவ்வீழ்ச்சியின் அபாவத்தின் ஏது வடிவமாக அந்த லகுத்வ குணத்தினை கற்பிப்பதில் யாதாமோர் பிரமாணமு மின்றும்.

சங்கை :—எங்ஙனம் குருத்வத்தின் அபாவத்தால் அவ்வீழ்ச்சியின் அபாவம் சம்பவிக்கின்றதோ அங்ஙனமே லகுத்வத்தின் அபாவத்தானேயே அவ்வீழ்ச்சி சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்வீழ்ச்சியின் ஏது வடிவமாக குருத்வத்தை கற்பிப்பதில் யாதோர் பிரமாணமு மின்றும்.

சமாதானம்:—அவ்வீழ்ச்சியில் லகுத்வத்தின் அபாவத்தினை காரணமாக ஒப்பின் அவ்வீழ்ச்சியினது காரணத்தன்மையின் அவச்சேதகலகுத்வாபாவத்வமுண்டாகும். அவ்வீழ்ச்சியில் குருத்வத்தினை காரணமாகவொப்பின் அவ்வீழ்ச்சியினது காரணத்தன்மையின் அவச்சேதகம் குருத்வத்வ ஜாதியாகும். லகுத்வாபாவத்தின் அபேக்ஷையால் குருத்வத்வ ஜாதியில் அவ்வீழ்ச்சியினது காரணத்தன்மையின் அவச்சேதகத்தன்மையொப்புவதில் லாகவமிருக்கிறது. அந்த லாகவத்தின் வலியால் குருத்வத்தினையே அவ்வீழ்ச்சியின் காரணமாக ஒப்ப வேண்டும். ஆகையால் குருத்வ குணத்தின் அபாவத்தினையே லகுத்வமென்பர். லகுத்வம் வேறு குணமன்றுமென்பது சித்தமாயிற்று.

எகூக. குருத்வத்தினை த்வாசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாக ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

ஈண்டு வேறு சில நூலாசிரியரோர் குருத்வ குணத்தினை அதீந்திரியமாக ஒப்புவதின்று. ஆனால் எங்ஙனம் பிருதிவி, ஜலத்திலிருக்கும் பரிச குணத்தின் பிரத்தியக்ஷம் த்வக்கிந்திரியத்தால் உண்டாகின்றதோ அங்ஙனமே பிருதிவி, ஜலத்திலிருக்கும் குருத்வ குணத்தின் பிரத்தியக்ஷமும் த்வக்கிந்திரியத்தால் உண்டாகின்றது. இக்காரணத்தாலேயே குருத்வமுடைய சுவர்ணம், வெள்ளி முதலிய வஸ்துக்களை கையிற் கொண்டு பரீக்ஷிக்கும் புருஷன் அவற்றின் குருத்வத்தினை நிர்ணயிக்கின்றான்.

எகூஉ. அவ்வாதிகளின் மத கண்டனம்.

இவ்வாறுக் கூறும் மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் கையில் எடுத்த சுவர்ண முதலியவைகளின் குருத்வம் நிர்ணயிக்கப்படுவது யாதோ அது த்வக்கிந்திரியத்தால் உண்டாவதன்று. ஆனால் அநுமானப் பிரமாணத்தாலேயே குருத்வத்தின் நிர்ணயமுண்டாகின்றது. குருத்வமெனினும், திண்மையெனினும் ஒக்கும். குருத்வமெனினும், எண்மையெனினும் ஒக்கும். குருத்வ நிரூபணம் முற்றிற்று.

எகூ௩. திரவத்வ நிரூபணம்.

திரவத்வ லக்ஷணம்: ஆண்டு "ஆத்யஸ்யந்தநாஸமவாயிகாரணம் த்ரவத்வம்" (இ-ள்.) மேலே முதலிய உயர்விலுள்ள ஜல முதலியவைகளுக்கு கீழ் முதலிய கீழிடத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகத்தினை உண்டு பண்ணும் அஜ்ஜல முதலியவைகளின் கிரியா விசேஷம் யாதோ அக்கிரியா விசேஷத்தின் ஒழுகுவதென்பர். அவ்வாதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணம் யாதோ அது திரவத்வமென்னப்படுகின்றது. ஆண்டு முற்கூறிய குருத்வத்தின் லக்ஷணத்தினைப் போன்று இந்த லக்ஷணத்திலும் "ஆதி" என்னும் பதம் வேகத்தில் திரவத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். ஏனெனின் எங்ஙனம் அவ்வாதி வீழ்ச்சிக்கு குருத்வம் அசமவாயி காரணமும், இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளுக்கு கிரியா ஜன்னிய வேகம் அசமவாயி காரணமுமாகின்றதோ அங்ஙனமே அஜ்ஜல முதலியவைகளின் ஆதி ஒழுக்கிற்கு அஜ்ஜல முதலியவைகளின் திரவத்வமே அசமவாயி காரணமாகின்றது. இரண்டாவது முதலிய

ஒழுக்கிற்கு அஜ்ஜல முதலியவைகளின் கிரியா ஜன்னிய வேகம் அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் "ஆதி" என்னும் பதத்தைக் கூறுவதால் திரவத்வத்தின் லக்ஷணத்திற்கு அவ்வேகத்தில் அதிவியாப்தி யுண்டாகாது. "அசமவாயி" என்னும் பதத்தைக் கூறுவதால் ஒழுகுதல் வடிவகிரியையின் சமவாயி காரணமாகிய அஜ்ஜல முதலியவைகளிலும் நிமித்த காரணமாகிய அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியவைகளிலும் திரவத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—நெய் முதலியவைகளில் ஒழுகுதலாகிய கிரியை ஒருநாளும் உண்டாகாமல் ஒழுகுதலாகிய கிரியையின் உற்பத்தியின்றியே நெய்முதலியன நஷ்டமாய் விடுகின்றன. அத்தகைய உற்பத்தி விநஷ்ட நெய் முதலியவைகளின் திரவத்வத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். எக்காரணத்தாலெனின் அத்திரவத்வத்தில் ஒழுகுதலாகிய கிரியைக்கு அசமவாயி காரணத்தன்மை யின்றுமென்பதான சங்கை யுண்டாக கூறிய லக்ஷணத்தை வேறு வகையாக வர்ணிப்பாம்.

எகூச. கூறிய லக்ஷணத்தை வேறுவகையாக வர்ணித்தல்.

"ஆத்யஸ்யந்தநாஸமவாயிகாரணவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத்வம்" (இ-ள்.) ஆதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணத்திலிருப்பதும், குணத்வ ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதியாதோ அஜ்ஜாதியுடைய குணம் திரவத்வமெனப்படுகின்றது. ஆண்டு உயர்விலுள்ள ஜல முதலியவற்றின் ஆதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணமாகிய திரவத்வத்தி லிருப்பதும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய திரவத்வத்தன்மை ஜாதி யாதோ அத்திரவத்வத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தமாக எல்லா திரவத்வங்களிலிருக்கின்றது. அதாவது ; அத்திரவத்வத்தன்மை ஜாதி அந்த உற்பத்தி, விநஷ்ட, நெய் முதலியவைகளின் திரவத்வத்திலுமிருக்கின்றது. ஆகையால் அந்த உற்பத்தி, விநஷ்ட, நெய் முதலியவைகளின் திரவத்வத்தில் இத்திரவத்வத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு இந்த லக்ஷணத்தில் "ஆதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. அவ்வாதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணமாகிய திரவத்வத்தில் இருப்பதாகிய குணத்வ ஜாதியைக் கொண்டும், சத்தாஜாதியைக்கொண்டும் உருவ முதலிய எல்லாகுணங்களிலும் திரவிய, குண, கர்மங்களிலும் இந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு இந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள்கூறப்பட்டன.

எகூரு. திரவத்வத்தின் மூன்றுவது லக்ஷணம்.

"வ்யாபிவ்ருத்தி த்ரயவ்ருத்திவ்ருத்தி வாயவ்ருத்தி த்ருவ்யவ்ருத்தி ரூபாவ்யவ்ருத்தி ஜாதிமத்வம்" (இ-ள்,) பிருதிவி, ஜலம், தேயு, வென்னும் மூன்று திரவியங்களில் இருப்பதாகிய பதார்த்தத்தில் இருப்பதும் வாயுவில் இருக்கும்

பதார்த்தத்தில் இராததும், உருவ குணத்தில் இராததுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் திரவத்வமெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு என்னும் மூன்று திரவியங்களிலேயே திரவத்வ குண மிருக்கின்றது. ஆகையால் அத்திரவத்வம் பிருதிவி முதலிய மூன்றில் இருப்பதெனப்படு கின்றது. இத்தகைய திரவத்வ குணத்தில் திரவத்வத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் திரவத்வத் தன்மை ஜாதி பிருதிவி முதலிய மூன்றி லிருப்பதி லிருப்பதெனப்படுகின்றது. அத்திரவத்வ குணம் வாயுவில் இருப்பதன்று. ஆகையால் வாயுவில் இருப்பதாகிய பரிச முதலிய வைகளில் திரவத்வத்தன்மை ஜாதி இராததுமாம். அத்திரவத்வத்தன்மை ஜாதி உருவகுணத்திலிராததுமாமாகையால் அத்திரவத்வத்தன்மைஜாதி உருவத்தில் இராததெனப்படுகின்றது. இத்தகைய திரவத்வத் தன்மை ஜாதி சர்வ திரவத் வங்களிலிருக்கின்றது. ஆகையால் கூறிய இத்திரவத்வத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "வாயுவி லிருப்பதி லிராததும், உருவத்திலிராதது மாகிய ஜாதியுடையது திரவத்வம்" என இம்மாத்திரமே திரவத்வத்தின் லக்ஷ ணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பிருதிவி முதலிய மூன்றில் இருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு சத்தம், புத்தி முதலிய குணங்களில் திரவத் வத்தின்லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் திர வத்வத்தன்மை ஜாதி வாயுவிலிருக்கும் பரிச முதலியவைகளில் இராததும், உருவத்தில் இராததுமாமோ அங்ஙனமே அச்சத்தத் தன்மை, புத்தித் தன்மை முதலிய ஜாதிகளும் அவ்வாயுவி லிருக்கும் பரிச முதலியவைகளிலும், உருவத்திலு மிராதனவுமாம். அத்தகைய சத்தத் தன்மை, புத்தித் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சத்தம், புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பிருதிவி முதலிய மூன்றிலிருப் பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அச்சத்தத் தன்மை, புத்தித் தன்மை முதலிய ஜாதிகள் பிருதிவி முதலிய மூன்றுத் திரவி யங்களில் இருப்பதாகிய திரவத்வ முதலியவைகளில் இருப்பனவன்றாம். ஆனால் அச்சத்தத்தன்மை ஜாதியோ ஆகாசத்திலிருக்கும் சத்தத்தி லிருக்கின் றது. அப்புத்தித் தன்மை முதலிய ஜாதிகள் ஆத்மாவிலிருக்கும் புத்தி முத லிய குணங்களிலிருக்கின்றது. ஆகையால் அச்சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சத்தம், புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பிருதிவி முதலிய மூன்றில் இருப்பதில் இருப்பதும், உருவத்தி லிராததுமாகிய ஜாதியுடையது திரவத்வம்" என இம்மாத்திரமே அத்திரவத்வத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "வாயுவில் இருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் பரிசத்தன்மை ஜாதியைக் கொண்டு பரிச குணத்திலும், கர்மத்தன்மை ஜாதி யைக்கொண்டு கர்மத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் திரவத்வ குணம் பிருதிவி, ஜலம், தேயு என்னும் மூன்று திரவியங்களிலிருக்கின்றதோ அங்ஙனமே அப்பரிச குணமும், கர்மமும் பிரு

திவி முதலிய மூன்று திரவியங்களி லிருக்கின்றன. ஆகையால் திரவத்வத் தன்மை ஜாதியினைப் போன்று பரிசத்தன்மை ஜாதியும், கர்மத்தன்மை ஜாதியும் பிருதிவி முதலிய மூன்றிலிருப்பதில் இருப்பது எனப்படுகின்றது. அப் பரிசத்தன்மை, கர்மத்தன்மை ஜாதி உருவ குணத்தில் இராததுமாம். அத் தகைய பரிசத்தன்மை ஜாதியைக் கொண்டு பரிச குணத்திலும், கர்மத்தன்மை ஜாதியைக் கொண்டு கர்மத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "வாயுவிலிருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு பரிசத்தன்மை ஜாதியும், கர்மத்தன்மை ஜாதியும் வாயுவி லிருப்பதில் இராததன்றாம். ஆனால் அவ்வாயுவி லிருப்பதாகிய பரிசத்தில் அப்பரிசத் தன்மை ஜாதி இருப்பதேயாம். அங்ஙனமே அவ்வாயுவி லிருப்பதாகிய கர்மத்தில் அக்கர்மத் தன்மை ஜாதி இருப்பதேயாம். ஆகையால் பரிசத்தன்மை, கர்மத்தன்மை ஜாதிகளைக் கொண்டு பரிச, கர்மங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "பிருதிவி முதலிய மூன்றில் இருப்பதில் இருப்பதும் வாயுவில் இருப்பதில் இராததுமாகிய ஜாதியுடையது திரவத்வம்" என இம்மாத்திரமே திரவத்வத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உருவத்தி லிராததும்" என்னும் பதங்கள் கூறாவிடின் உருவத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். என்னனின் எங்ஙனம் திரவத்வ குணம் பிருதிவி முதலிய மூன்று திரவியங்களி லிருக்கின்றதோ அங்ஙனமே உருவ குணமும் பிருதிவி முதலிய மூன்றுத் திரவியங்களிலேயே யிருக்கின்றது. ஆகையால் திரவத்வத் தன்மை ஜாதியினைப் போன்று உருவத்தன்மை ஜாதியும், பிருதிவி முதலிய மூன்றி லிருப்பதில் இருப்பது எனப்படுகின்றது. திரவத்வ குணத்தினைப் போன்று உருவ குணமும் அவ்வாயுவி லிருப்பதன்று. ஆகையால் உருவத்தன்மை ஜாதி வாயுவி லிருப்பதி லிராததுமாம். அத்தகைய உருவத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உருவத்திலிராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை ஜாதி உருவத்தில் இராததன்றாம். ஆனால் உருவத்தில் இருப்பதேயாம். ஆகையால் உருவத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் திரவத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

### ௭௯௬. திரவத்வ குணத்தினது ஆசிரய திரவியத்தின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித திரவத்வ குணம் பிருதிவி, ஜலம், தேயு என்னுமிம்மூன்று திரவியங்களிலேயேயிருப்பதாகின்றது. வாயு முதலிய திரவியங்களில் திரவத்வ குணம் இருப்பதன்று.

### ௭௯௭. இயல்பாயுள்ள திரவத்வம், நிமித்தத்தானாய திரவத்வம் என்னும் வேறுபாட்டால் இருவித வேற்றுமை.

அத்திரவத்வ குணம் சாம்சித்திகம், நைமித்திகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு இயல்பாயுண்டாம் நெகிழ்ச்சி யாதோ அதா

வது; இவையிலுண்டாம் பாக முதலிய காரணங்களால் ஜன்னியமாகாத் நெகிழ்ச்சி யாதோ அந்த நெகிழ்ச்சி சாம்சித்திக திரவத்வமெனப்படுகின்றது. இச்சாம்சித்திக திரவத்வத்தினை நைசர்கிக திரவத்வமென்றுங்கூறுவர். வன்னி சையோக வடிவ நிமித்தத்தால் உண்டாம் நெகிழ்ச்சி யாதோ அது நைமித்திக திரவத்வமெனப்படுகின்றது. அதாவது; பாகஜ (பாகத்தாலாய) திரவத்வத்தினை நைமித்திக திரவத்வமென்பர்.

## எகூஎ. சாம்சித்திக, நைமித்திக திரவத்வங்களினது வியவஸ்தையின் வர்ணனம்.

ஆண்டு ஜலத்திலோ சாம்சித்திக திரவத்வமும், பிருதிவி, தேயுவாம் இரு திரவியங்களில் நைமித்திக திரவத்வமு மிருக்கின்றது. கட, பட முதலிய பிருதிவியிலும், வன்னி முதலிய தேயுவிலும், நைமித்திக திரவத்வம் தோற்றுகிறதில்லை. என்றாலும் நெய் முதலிய பிருதிவியிலும், சுவர்ண முதலிய தேயுவிலும் அத்தியந்த வன்னியின் சையோகத்தால் திரவத்வம் பிரத்தியக்ஷமாய் காணப்படுகின்றது.

## எகூஅ. நித்திய, அநித்திய வேறுபாட்டால் சாம்சித்திக திரவத்வத்தின் இருவித வேற்றுமை.

ஜல மாத்திரத்திலிருக்கும் சாம்சித்திக திரவத்வமும், நித்திய, அநித்திய மென்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு பரமாணு வடிவ நித்திய ஜலத்திலுள்ள சாம்சித்திக திரவத்வமோ நித்தியமாகின்றது. துவியணுகாதி வடிவ அநித்திய ஜலத்திலுள்ள சாம்சித்திக திரவத்வம் அநித்தியமாகின்றது. ஆண்டு அநித்திய சாம்சித்திக திரவத்வம் தனது ஆசிரய திரவியத்தின் உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் அவ்வாசிரய திரவியத்தின் சமவாயி காரண வடிவ அவயவங்களின் திரவத்வத்தால் உற்பன்னமாகின்றது. அவ்வாசிரய திரவியத்தின் நாசத்தானேயே நாசமாகின்றது. அவ்வாசிரய திரவியத்தி னிருப்புளதாக சாம்சித்திக திரவத்வத்தின் நாசமுண்டாவதின்று. எங்ஙனம்; ஜலீய இரு பரமாணுக்களின் சையோகத்தால் உண்டாகிய ஜலீய துவியணுகத்தின் சாம்சித்திக திரவத்வத்திற்கு அஜ்ஜலீய துவியணுகமோ சமவாயி காரணமாகின்றது. அத்துவியணுகத்தின் சமவாயி காரண வடிவ பரமாணுக்களின் சாம்சித்திக திரவத்வம் அத்துவியணுகத்தின் திரவத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிருஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. அஜ்ஜலீய துவியணுகத்தின் நாசத்தானேயே அவற்றின் திரவத்வத்திற்கு நாச முண்டாகின்றது. இவ்வாறாக அத் துவியணுக வடிவ ஜல முதலாக கிணறு, நதி முதலியவைகளின் மா ஜல மட்டுமாம் ஜன்னிய ஜலம் எவ்வளவிருக்கின்றதோ அஜ்ஜன்னிய ஜலத்தின் திரவத்வத்திற்கு அவ்வவ் ஜன்னிய ஜலத்தின் சமவாயி காரண வடிவ அவயவங்களின் திரவத்வத்தால் உற்பத்தியும், அவ்வவ் ஜன்னிய ஜல வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தான் நாசமும் அறிந்துக் கொள்க.

---

## ௩00. நைமித்திக திரவத்வத்தின் உற்பத்தி விநாச வர்ணனம்.

நெய் முதலிய பிருதிவியிலுள்ள நைமித்திக திரவத்வமும், சுவர்ண முதலிய தேயுவிலுள்ள நைமித்திக திரவத்வமும் அநித்தியமேயாகின்றது. பிருதிவி, தேயுக்களில் அத்திரவத்வம் நித்தியமாவதேயன்று. அதாவது; பரமாணு வடிவ நித்திய பிருதிவி தேயுவிலும், துவியணுகாதி வடிவ அநித்திய பிருதிவி தேயுவிலும் அத்திரவத்வம் அநித்தியமேயாகின்றது. ஆண்டு நெய்யாதி வடிவ பிருதிவியிலும், சுவர்ணாதி வடிவ தேயுவிலும் வன்னி முதலிய தேயுவின் சையோக வடிவ பாகத்தால் அத்திரவத்வம் உற்பன்னமாகின்றது. இக்காரணத்தானேயே அத்திரவத்வத்தினை பாகத்தாலாய திரவத்வமென்பர். ஆண்டு பிருதிவி, தேயுவின் திரவத்வத்திற்கு பிருதிவி, தேயுக்களோ சமவாயி காரணமாகின்றன. பிருதிவி, தேயுவினோடுண்டாம் வன்னி முதலிய தேயுவின் சையோகம் அத்திரவத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. பிருதிவி, தேயுக்களிலிருக்கும் நைமித்திக திரவத்வத்தின் நாசமோ மூன்று விதமாக உண்டாகின்றது. ஆண்டு ஆசிரய திரவியத்தின் நாசமுண்டாய பின்னர் உருவ முதலிய சர்வ குணங்களின் நாசமுண்டாகின்றது. ஆகையால் ஒன்றோ பிருதிவி, தேயு வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தால் நைமித்திக திரவியத்தின் நாச முண்டாகின்றது. மற்றையது அவ்வாசிரய திரவியத்தின் நாசமின்றாயினும் அத்தியந்த வன்னியின் சையோகத்தால் நைமித்திக திரவத்வம் நாசமாய் விடுகின்றது. எங்ஙனம்: அரக்கு முதலியவைகளின் திரவத்வமும், கரும்பின் ரச முதலியவைகளின் திரவத்வமும் அத்தியந்த வன்னி சையோகத்தான் நாசமாய்விடுகின்றது. மூன்றாவது, அவ்வாசிரய திரவியத்தின் இருப்புளதாயினும் அவ்வன்னி சையோகத்தின் நாசத்தால் நைமித்திக திரவத்வம் நாசமாய் விடுகின்றது. எங்ஙனம்: வன்னியின் சையோகத்தால் சுவர்ண முதலியவைகளில் உண்டாகிய திரவத்வம் அவ்வன்னி சையோகத்தின் நிவர்த்தி யுண்டாக நிவர்த்தியாய் விடுகின்றது.

## ௩0க. திரவத்வகுணத்தில் அசமவாயிகாரண, நிமித்தகாரணமாமிரண்டின் வர்ணனம்.

அல்லது முற்கூறிய திரவத்வ குணம் முற்கூறியவாற்றால் ஆதி ஒழுக்கிற்கு அசமவாயி காரணமாகின்றது. சங்கிரஹத்தில் நிமித்த காரணமாகின்றது. ஆண்டு மாவு, துகள்முதலிய பதார்த்தங்களை பிண்டாகாரஞ்செய்வதில் உபயோகியாகிய சையோக விசேஷத்தினை சங்கிரஹமென்பர். அச்சங்கிரஹத்தில் அத்திரவத்வம் நிமித்த காரணமாகின்றது. ஆனால் கூறப்படும் சிநேஹ குணத்தோடு கூடியுள்ள திரவத்வம் அச்சங்கிரஹத்திற்கு நிமித்த காரணமாகின்றது. ஓர்கால் சிநேஹகுணமின்றி கேவலம்திரவத்வத்தினையே சங்கிரஹத்தின் நிமித்த காரணமாக வொப்பின் வன்னி சையோகத்தால் உண்டாகிய சுவர்ண முதலியவைகளின் திரவத்வத்தானும் மாவு முதலியவைகளின் சங்கிரஹம் உண்டாக வேண்டும்; அங்ஙனமாவதின்று. ஆண்டு சிநேஹ குணம் கேவலம் ஜலத்தினிடத்தே யிருக்கின்றது. வேறோர் திரவியத்தில் இருப்பதன்று. அங்ஙனமே

அச்சாம்சித்திக திரவத்வமும் கேவலம் ஜலத்திலேயே யிருக்கின்றது; வேறோர் திரவியத்தில் இருப்பதன்று. ஆகையால் சிநேஹத்தோடுங் கூடிய திரவத்வம் சாம்சித்திக திரவத்வமேயாகின்றது. நைமித்திக திரவத்வம் சிநேஹத்தோடுங் கூடியதன்று.

சங்கை:—எச்சிநேஹ குணத்தின் சஹகாரித் தன்மையால் சாம்சித்திக திரவத்வம் சங்கிரஹத்திற்கு நிமித்த காரணமாகின்றதோ அச்சிநேஹத்தினையே அச்சங்கிரஹத்திற்கு காரணமாக வொப்புவதால் அச்சிநேஹத்தின் அபாவத்தால் வெள்ளி, சுவர்ண முதலியவைகளால் சங்கிரஹத்தினது ஆபத்தியின் நிவர்த்தி உண்டாய் விடுகின்றது. ஆகையால் அச்சாம்சித்திக திரவத்வத்தினை சங்கிரஹத்திற்கு நிமித்த காரணமாக ஒப்புவதில் யாதாமோர் பிரமாணமு மின்றாம்.

சமாதானம்:—அச்சங்கிரஹத்தில் சிநேஹத்திற்கு காரணத் தன்மை யிருக்கிறது. அல்லது சாம்சித்திக திரவத்வத்திற்கு காரணத் தன்மை யிருக்கிறதென்பதான இவ்விரு அர்த்தங்களில் ஓர் அர்த்தத்தின் சாதகமாக யாதோர் யுக்தியு மின்றாம். ஆகையால் அந்த யுக்தி வடிவ விநிகமனத்தின் அபாவத்தால் அச்சிநேஹம், சாம்சித்திக திரவத்வமா மிரண்டினையே அச்சங்கிரஹத்தின் காரணமாக ஒப்ப வேண்டும்.

## ௩௦௨. திரவத்வ குணத்தில் சக்ஷுஃ, துவக்கு வடிவ இரு இந்திரிய கிராஹித் தன்மையின் வர்ணனம்.

அல்லது சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வமெனக் கூறிய குணங்கள் எங்ஙனம்: சக்ஷுஃ, துவக், என்னும் இரு இந்திரியங்களால் அறியப்படுவனவோ அங்ஙனமே இத்திரவத்வ குணமும், சக்ஷுஃ, துவக் என்னு மிரு இந்திரியங்களால் அறியப்படுவதாம். திரவத்வமெனினும், நெகிழ்ச்சியெனினும் ஒக்கும். திரவத்வ குண நிரூபணம் முற்றிற்று.

## ௩௦௩. சிநேஹ குண நிரூபணம்.

சிநேஹகுண லக்ஷணம். "சூர்ணாதிபிண்டீபாவஹேது: குணஃ ஸ்நேஹஃ" (இ-ள்.) சூர்ணம், துகள் முதலிய திரவியங்களின் பிண்டீ பாவம் யாதோ அதாவது; பிண்டாகாரம் செய்வதில் உபயோகி சையோக விசேஷமாகிய பிண்டீ பாவத்திற்கு நிமித்த காரண வடிவ குணம் யாதோ அக்குணம் சிநேஹமெனப்படுகின்றது. ஆண்டு அச்சூர்ண முதலியவைகளின் பிண்டாகாரம் சிநேஹ குணமுடைய ஜலத்தின் சையோகத்தானேயே யுண்டாகின்றது. அஜ்ஜலத்தின் சையோகமன்றி அப்பிண்டாகார முண்டாவதின்று. ஆகையால் அச்சிநேஹ குணத்தில் அப்பிண்டாகாரத்திற்கு நிமித்த காரணத் தன்மை சம்பவிக்கின்றது. ஆண்டு "சூர்ண முதலிய பிண்டாகாரத்திற்கு ஹேது சிநேஹம்" என இம்மாத்திரமே அச்சிநேஹத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறாவிடின் காலம், ஈசுவரன் முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின்

அக்கால முதலியவைகட்கு காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரண முண்டாவதால் அப்பிண்டாகார வடிவ காரியத்திற்கும் நிமித்த காரணத்தன்மையே யிருக்கிறது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு காலம், ஈசுவரன் முதலியவைகளில் குண வடிவத்தன்மை யின்றும். ஆகையால் கால முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "குணம் சிநேஹம்" என இம்மாத்திரமே அச்சிநேஹத்தின் லக்ஷணமாகக் கூறின் உருவமுதலிய எல்லாக்குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சூர்ண முதலிய பிண்டாகாரத்திற்கு ஏது" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்களில் சூர்ண முதலியவைகளின் பிண்டாகாரத்திற்கு ஏதுத்தன்மை இருப்பதன்று. ஆகையால் உருவமுதலிய குணங்களில் சிநேஹத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௪௦௬. கூறிய இந்த லக்ஷணத்தில் அதிவியாப்தியின் சங்கை.

சங்கை:—கூறிய இந்த லக்ஷணத்திற்கும் முற்கூறிய சாம்சித்திக திரவத்வத்தில் அதிவியாப்தியே யுண்டாகின்றது. ஏனெனின் பிண்டாகாரத்தில் எங்ஙனம் சிநேஹ குணம் நிமித்த காரணமாகின்றதோ அங்ஙனமே முற்கூறிய முறைப்படி அச்சாம்சித்திக திரவத்வமும் பிண்டாகாரத்திற்கு நிமித்த காரணமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் சாம்சித்திக திரவத்வத்தின் பேதத்தினைக் கூறுக. அதாவது; "ஸாம்ஸித்திக த்ரவத்வ பிந்நத்வே ஸதி ஸக்த்வாதி பிண்டீபாவ ஹேது குணத்வம் ஸ்நேஹ" என்பதான லக்ஷணத்தைக் கூறிடினும் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்திலும், ஈசுவரனது ஞானம், இச்சை, முயற்சிகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் அவ்வதிர்ஷ்டமும், ஈசுவரனது ஞானம், இச்சை, முயற்சியுமாம் மூன்றும் காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமாகின்றன. ஆகையால் பிண்டாகார வடிவ காரியத்தைக் குறித்தும் நிமித்த காரணமேயாகின்றன. அங்ஙனமே சாம்சித்திக திரவத்வத்தினும் வேறும், குண வடிவும்மாம். அல்லது அவ்வதிர்ஷ்டத்திலும், ஈசுவரனது ஞானம், இச்சை, முயற்சிகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்திலுள்ள ஏது வென்னும் பதத்தால் அசாதாரண நிமித்த காரணத்தைக்கொள்ளின் முக்காலம், அதிர்ஷ்ட முதலிய சாதாரண நிமித்த காரணங்களில் அவ்வதிவியாப்தி தோஷத்தின் நிவர்த்தி யுண்டாய் விடுகின்றது. ஆகையால் அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதம் வீணேயாம். அல்லது அச்சூர்ண முதலியவைகளின் பிண்டாகாரம் ஜலத்தால் ஒருபோதுமுண்டாகாமல்; ஆனால் அப்பிண்டாகாரத்தின் உற்பத்தி யின்றியே நாசமாம் ஜலம் யாதோ அத்தகைய உற்பத்தி விசிஷ்ட ஜலத்தின் சிநேஹத்தில் கூறிய அந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தியேயுண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் அந்த உற்பத்தி விசிஷ்ட ஜலத்தின் சிநேஹத்தில் அப்பிண்டாகாரத்திற்கு காரணத்தன்மை யின்றே மென்

பதான சங்கை யுண்டாக இனி சிநேஹத்திற்கு இரண்டாவது லக்ஷணங் கூறுவாம்.

## ௩௦௫. சிநேஹத்தின் இரண்டாவது லக்ஷணம்.

" ஜலெதாஸவெதாவூத்தி ஜலஸவெதவூத்திகுணத்வ வ்யாப்ய வ்யாப்யஜாதிமாநுஸ்ஹஃ " (இ-ள்.) ஜலத்தினும் வேறான பிருதிவி முதலியவைகளில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் வஸ்துவில் இராததும், ஜலத்தில் சமவாய சம்பந்தமாயிருக்கும் வஸ்துவில் இருப்பதும், குணத் தன்மை ஜாதியினது வியாப்பிய ஜாதியின் அவ்வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ் ஜாதியுடைய குணம் சிநேஹமெனப்படுகின்றது. ஆண்டு அச்சிநேஹகுணம் கேவலம் ஜலமாத்திரத்திலேயே யிருக்கின்றது. ஜலத்தினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் அச்சிநேஹ குணம் இருப்பதன்று. இத்தகைய சிநேஹ குணத்தில் இருப்பதாகிய சிநேஹத் தன்மை ஜாதி யாதோ அச்சிநே ஹத்தன்மை ஜாதி அஜ்ஜலத்தினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் சமவாய சம்பந்தமா யிருக்கும் கந்த முதலிய குணங்களில் இராததும், அஜ் ஜலத்தில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய சிநேஹ குணத்தில் இருப்ப தும், குணத்வஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முலலிய ஜாதிகளின் அவ் வியாப்பியமுமாகிய சிநேஹத்தன்மை ஜாதி எல்லாச் சிநேஹங்களி லிருக்கின் றது. ஆகையால் இச்சிநேஹத் தன்மை ஜாதியுள்ள சிநேஹத்தின் லக்ஷணம் எல்லா குற்றங்களு மின்றியதாம். ஆண்டு "ஜலத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதில் இருப்பதும், குணத்தன்மையின் வியாப்பியத்தின் அவ்வியாப்பிய ஜாதியுடையதும்சிநேஹம்" என இம்மாத்திரமே சிநேஹத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜலத்தினும் வேறானவற்றில் சமவாய சம்பந்தத் தால் இருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறாவிடின் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் ஜலத்தில் சிநேஹ குண மிருக்கின்றதோ அங்ஙனமே உருவம்,ரசம்,பரிசம் முதலியகுணங்களும் ஜலத்தி லிருக்கின்றன. ஜலத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதாகிய உருவ முதலிய குணங்களில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதியின் அவ் வியாப்பியமுமாகிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ் வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஜலத்தினும் வேறானவற்றில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதி லிராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் ஜலத்தினும் வேறான பிருதிவி முதலியவைகளில் சமவாய சம்பந்தத்தாலிருக் கும் குணத்தில் இராததன்றாம். ஆனால் ஜலத்தினும் வேறான பிருதிவி முத லியவைகளில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் உருவ முதலிய குணங்களில் இருப்பதேயாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டா காது. அல்லது "ஜலத்தினும் வேறானவற்றில் சமவாயசம்பந்தத்தாலிருப்பதில்

இராததும், குணத்தன்மையின் வியாப்பியத்தின் அவ்வியாப்பிய ஜாதியுடைய தும் சிநேஹம்" என இம்மாத்திரமே சிநேஹத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜலத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் ஆத்மத் தன்மை ஜாதியைக்கொண்டு ஆத்மா விலும், மனத்தன்மை ஜாதியைக் கொண்டு மனதிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அவ்வாத்மாவும், மனமும் எத் திரவியத்திலும் சமவாய சம்பந்தத்தால் இருப்பனவன்று. ஆகையால் அவ்வாத்மத் தன்மை ஜாதியும், மனத்தன்மை ஜாதியும் ஜலத்திலும் வேறான பிருதிவி முதலியவைகளில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் உருவ முதலிய வைகளில் இராததுமாம். அங்ஙனமே குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளின் அவ்வியாப்பியமுமாம். அத்தகைய ஆத்மத்தன்மை, மனத்தன்மை ஜாதிகளைக் கொண்டு ஆத்மாவிலும், மனதிலும் கூறியலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஜலத்தில் சமவாய சம்பந்தத் தாலிருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு ஆத் மத்தன்மை, மனத்தன்மை ஜாதிகள் ஜலத்தில் சமவாயசம்பந்தத்தா லிருக்கும் குண, கர்ம முதலியவைகளில் இருப்பனவன்றும். ஆகையால் ஆத்மத்தன்மை, மனத்தன்மை ஜாதிகளைக்கொண்டு ஆத்ம, மனதில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜலத்திலும் வேறானவற்றில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதில் இராததும், ஜலத்தில் சமவாயசம்பந்தத்தால் இருப் பதி லிருப்பதுமாகிய ஜாதியுடையது சிநேஹம்" என இம்மாத்திரமே சிநே ஹத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப் பியத்தின் அவ்வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் ஜல மாத்திரத் திலிருக்கும் உருவம், பரிசம், திரவத்வமாகிய மூன்றில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் ஜல மாத்திரத்திலிருக்கும் விளங்கா வெண்மையும், குளிர்ந்த பரிசமும், சாம்சித்திக திரவத்வமுமாகிய மூன்றில் முறையாக இருப்பதாகிய உருவத் தன்மையின் வியாப்பிய ஜாதியும், பரிசத் தன்மையின் வியாப்பிய ஜாதியும், திரவத்வத் தன்மையின் வியாப்பிய ஜாதியு மாகிய மூன்று ஜாதிகள் ஜலத்திலும் வேறான பிருதிவி முதலியவைகளில் சமவாய சம்பந்தத்தாலிருக்கும் உருவம், பரிச முதலியவைகளில் இராதனவு மாம். அங்ஙனமே ஜலத்தில் சமவாய சம்பந்தத்தாலிருக்கும் உருவம், ரச முதலியவைகளி லிருப்பனவுமாம். இத்தகைய ஜாதிகளைக்கொண்டு ஜல மாத் திரத்திலிருக்கும் உருவ முதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியத்தின் அவ்வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு ஜல மாத்திரத்தின் உருவம், பரிசம், திரவத்வமா மிவைகளில் இருப்பனவாகிய ஜாதிகள் அக்குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய ஜாதிகளின் அவ்வியாப்பிய மன்றும். ஆனால் குணத் தன்மைஜாதியின் வியாப்பிய உருவத்வம், பரிசத்வம், திரவத்வமாம் ஜாதிகட்கு அந்த ஜாதிகள் வியாப்பியமேயாம். ஆகையால் அந்த ஜாதிகளைக் கொண்டு ஜல

மாத்திரத்திலிருக்கும் உருவ முதலியவைகளில் சிநேஹத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௩0சு. சிநேஹ குணத்தின் ஆசிரயத்தின் வர்ணனம்.

இவ்வாருக்க் கூறிய இரு லக்ஷணங்களால் லக்ஷித சிநேஹ குணம் ஜலமொன்றிலேயே இருக்கின்றது. ஜலத்தினும் வேருன பிருதிவி முதலிய திரவியங்களில் சிநேஹ குணம் இருப்பதன்று. ஆண்டு "ஜலம்ஸ்நிக்தம்" என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அத்தோற்றம் ஜலத்தின் சிநேஹ குணத்தினையே விஷயஞ் செய்கின்ற தாகையால் அந்த சிநேஹ குணம் பிரத்தியக்ஷத் தோற்றத்தானேயே சித்திக்கின்றது.

## ௩0எ. திரவத்வ குணத்தினும் சிநேக குணம் வேருந் தன்மையின் சாதக யுக்தி.

சங்கை :—அத்தோற்றம் ஜலத்தின் திரவத்வ குணத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அத்திரவத்வ குணத்தினும் சிநேஹ குணம் வேறன்ரும்.

சமாதானம் :—திரவத்வ குணமின்றியே பனிக்கட்டி முதலிய ஜலத்தில் சிநேஹ குணம் தோற்றுகின்றது. திரவத்வ குணமுடைய வெள்ளி, சுவர்ண முதலியவைகளில் சிநேஹ குணம் தோற்றுகிறதில்லை. ஆகையால் சிநேஹ குணத்தினை திரவத்வ குணத்தினும் வேறு குணமாகவே வொப்பவேண்டும். ஓர் கால் சிநேஹ குணத்தினை திரவத்வ குணத்தினும் வேருக வொப்பாவிடின் திரவத்வ குணமில்லா பனிக்கட்டி முதலியவைகளில் சிநேஹத்தை விஷயஞ் செய்யுந் தோற்றம் உண்டாகாததாக வேண்டும். அங்ஙனமே திரவத்வ குணமுடைய வெள்ளி, சுவர்ண முதலியவைகளில் சிநேஹத்தை விஷயஞ் செய்யுந் தோற்றம் உண்டாக வேண்டும்; அது அங்ஙனம் காணக்கிடைப்பதின்று. ஆகையால் கூறிய அத்தோற்றத்தின் வலிவால் சிநேஹ குணத்தினை வேறு குணமாகவே ஒப்பவேண்டும்.

## ௩0அ. நித்திய, அநித்திய வேறுபாட்டால் சிநேஹ குணத்தின் இருவித வேற்றுமை.

அல்லது கூறிய சிநேஹ குணம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு பரமாணு வடிவ நித்திய ஜலத்தில் சிநேஹம் நித்தியமாகின்றது. துவியணுகாதி வடிவ அநித்திய ஜலத்தில் சிநேஹம் அநித்தியமாகின்றது. ஆண்டு அநித்திய சிநேஹம் சுவாசிரய திரவியத்தின் உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் அத்திரவியத்தின் சமவாயிகாரண வடிவ அவயவங்களின் சிநேஹத்தால் உற்பன்னமாகின்றது. ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே நாசமாய் விடுகின்றது. எங்ஙனம்: ஜலீய இரு பரமாணுக்களின் சையோகத்தால் உண்டாகிய ஜலீய துவியணுகத்தின் சிநேஹத்திற்கு அஜ்ஜலீய துவியணுகமோ சமவாயி காரணமாகின்றது. அத்துவியணுகத்தின் சமவாயி காரண வடிவ பரமாணுக்களிலுள்ள சிநேஹம் அத்துவியணுகத்தின் சிநேஹத்திற்கு அசமவாயிகாரணமாகின்றது.

அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்தகாரணமாகின்றன. அத்துவியணுக வடிவ ஆசிரய திரவியத்தின் நாசத்தாலேயே சிநேஹத்தின் நாச முண்டாகின்றது. இவ்வாறாக துவியணுக் வடிவ ஜல முதலாக கிணறு, நதி முதலியவைகளின் ஜலமட்டுமா மெல்லா அநித்திய ஜலங்களிலுள்ள சிநேஹத்தின் உற்பத்தியும் விநாசமும் அறிந்துக் கொள்க.

## ௩௦௯. எண்ணெ முதலிய பிருதிவியில் சிநேஹத்தின் சாதக சங்கை.

சங்கை:—சிநேஹ குணம் ஜலம் ஒன்றிலேயே இருக்கின்றது; பிருதிவி முதலியவைகளி லிருப்பதன்றென முன்னர் கூறிய பிரதிஞ்ஞை அசங்கதமாம். ஏனெனின் எங்ஙனம் ஜலத்தின் சையோக சம்பந்தத்தால் சூர்ண முதலியவைகளின் பிண்டாகார முண்டாகின்றதோ அங்ஙனமே எண்ணெ முதலிய பிருதிவியின் சம்பந்தத்தாலும் சூர்ண முதலியவைகளின் பிண்டாகாரமுண்டாகின்றது. ஆகையால் அவ்வெண்ணெயாதி வடிவ பிருதிவியினிடத்தும் சிநேஹ குணம் அவசியம் ஒப்பப்படுவதாகும். எண்ணெ முதலியவைகளில் தோற்றும் சிநேஹம் ஜலத்தினதேயாம். அதாவது; அவ்வெண்ணெ முதலியவைகளின் உள்ளடங்கிய ஜல பாகத்தின் சிநேஹமே தோற்றுகின்ற தென்பதாகக் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் எண்ணெ முதலியவைகளின் உள்ளடங்கிய ஜலத்தின் பாகத்தை அங்கீகரிக்கின் எண்ணெ முதலியவைகளின் சையோக சம்பந்தத்தால் வன்னியின் நாசம் உண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் அவ்வன்னியின் நாசத்தில் சையோக சம்பந்தத்தால் ஜலத்திற்கு காரணத்தன்மை பிரத்தியக்ஷமாகத் தோற்றமாகின்றது. அது அங்ஙனம் காணக்கிடைப்பதின்று. ஆனால் எண்ணெயின் சையோக சம்பந்த முளதாக மாறாக வன்னியின் பெருக்கமே காணக்கிடைக்கின்றது. ஆகையால் எண்ணெ முதலியவைகளில் ஜல பாகத்தினை அங்கீகரிப்பது சம்பவியாது.

## ௩௧௦. தைலமுதலியவைகளில் ஜலத்தின் சம்பந்தத்தால் சிநேஹத்தின் தோற்றம்.

சமாதானம்:—எண்ணெ முதலியவைகளில் தோற்றும் சிநேஹமும் எண்ணெ முதலியவைகளின் உள்ளடங்கிய ஜல பாகத்தினதேயாம். ஆனால் அந்த சிநேஹம் பிரகிருஷ்டமாகின்றது. ஆகையால் அந்த சிநேஹம் அவ்வன்னிக்கு அநுகூலமேயாகின்றது; பிரதிகூலமாவதின்று. கருத்திதுவாம். அந்த சிநேஹம் பிரகிருஷ்டம், அபகிருஷ்டம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. ஆண்டு எண்ணெ முதலியவைகளின் உள்ளடங்கிய ஜல பாகங்களிலுள்ள சிநேஹம் பிரகிருஷ்ட மெனப்படுகின்றது. கிணறு, நதி முதலியவைகளின் ஜலத்திலுள்ள சிநேஹம் அபகிருஷ்டமெனப்படுகின்றது. ஆண்டு பிரகிருஷ்ட சிநேஹமுடைய ஜலமோ வன்னியினை நாசம் செய்வதன்று; மாறாக அவ்வன்னிக்கு அநுகூலமாகின்றது. அபகிருஷ்ட சிநேஹமுடைய ஜலம் வன்னியினை நாசஞ் செய்கின்றது. ஆகையால் அந்த சிநேஹ குணம் கேவலம் ஜலத்தினிடத்தேயே யிருக்கின்றது. பிருதிவி முதலியவைகளி லிருப்பதன்றெனச் சித்தித்தது. சிநேஹகுண நிரூபணம் முற்றிற்று.

௫கக. சத்த குண நிரூபணம்.

சத்தத்தின் லக்ஷணம். ஆண்டு "ஶ்ரோத்ரக்ராஹ்யோ குண: ஶப்த:" (இ-ள்.) எக்குணம் சுரோத்திர கிராஹ்யமாகின்றதோ அதாவது; சுரோத்திர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாகின்றதோ அக்குணம் சத்தமெனப் படுகின்றது. ஆண்டு சுரோத்திர இந்திரியத்தால் கேவலம் சத்த குணத்தின் ஞானமே யுண்டாகின்றது; வேறு எக்குணத்தின் ஞானமும் உண்டாகிற தில்லை. ஆகையால் இச்சுரோத்திர கிராஹ்ய குணத்வ வடிவ சத்தத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "சுரோத்திரத்தால் அறியப்படுவது சத்தம்" என இம்மாத்திரமே சத்தத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத் தில் "குணம்" என்னும் பதங் கூறுவிடின் சத்தத்தன்மை ஜாதியிலும், சத்தத் தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எனெ னின் எங்ஙனம் சத்த குணம் சுரோத்திர இந்திரியத்தால் அறியப்படுவதா கின்றதோ அங்ஙனமே அச்சத்தத்திலிருக்கும் சத்தத்தன்மை ஜாதியும், அச் சத்தத்தின் அபாவமும் சுரோத்திர இந்திரியத்தினேயே கிரஹிக்கப்படுவ தாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சத்தத்தன்மை ஜாதியிலும், சத்தத்தின் அபாவத்திலும் குண வடிவத் தன்மை யின்றும். ஆகையால் சத்தத்தன்மை ஜாதியிலும், சத்தத்தின் அபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—கர்ணகோளக அவச்சின்ன ஆகாச வடிவ சுரோத்திரத்தில் உண்டாகும் சத்தத்தினையே சுரோத்திர இந்திரியம் கிரஹிக்கின்றது. பேரி (முரசு) ஆதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகும் சத்தங்களை சுரோத்திர இந்திரியம் கிரஹிப்பதின்று. ஆகையால் அச்சத்தங்களில் கூறிய லக்ஷணத் திற்கு அவ்வியாப்தியே யுண்டாகு மென்பதான சங்கை யுண்டாக கூறிய லக்ஷணத்தை வேறு வகையாக வர்ணிப்பாம்.

௫கஉ. கூறிய லக்ஷணத்தை வேறுவகையாகக் கூறுவது.

"ஶ்ரோத்ரக்ராஹ்யவ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமாந் ஶப்த:" (இ-ள்.) சுரோத்திர இந்திரியத்தால் அறியப்படும் வஸ்துவில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் சத்தமெனப்படுகின்றது. ஆண்டு சுரோத்திர இந்திரியத்தால் எச்சத் தத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ அச்சத்தம் சுரோத்திரத்தால் அறியப் படுவதெனப்படுகின்றது. அச்சுரோத்திரத்தால் அறியப்படும் சத்தத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய சத்தத்தன்மை ஜாதி சர்வ சத்தங்களி லிருக்கின்றது. ஆகையால் பேரியாதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகிய சத்தங்களிலும் இந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஆண்டு குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் இந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு இந்த லக்ஷணத்தில் "சுரோத்திரத்தால் அறியப்படுவதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்

பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலியஜாதிகள் சுரோத்திரத்தால் அறியப்படும் சத்தத்தில் இருப்பனவன்று. ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் சுரோத்திரத்தால் அறியப்படும் சத்தத்தில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத்தன்மை ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக்கொண்டும் ஆண்டு அதிவியாப்தி யுண்டாகாது.

௫௧௩. சத்தத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"ஆகாஶவிஶேஷ ஃகுணஃ ஶப்தஃ" (இ-ள்.) ஆகாசத்தின் விசேஷ குணம் சத்த மெனப்படுகின்றது. சத்தத்தினும் வேறான மற்றும் விசேஷ குணங்கள் ஆகாசத்திலிருப்பனவன்று. ஆகையால் இவ்வாகாச விசேஷ குணமுடைமை வடிவ சத்தத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "விசேஷ குணம் சத்தம்" என இம்மாத்திரமே சத்தத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஆகாசம்" என்னும் பதங் கூறுவிடின் உருவ முதலிய விசேஷ குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சத்தத்தினைப் போன்று உருவ முதலியனவும் விசேஷ குணமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஆகாசம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவ முதலியன ஆகாசத்தின் விசேஷ குணமன்றாம். ஆனால் பிருதிவி முதலியவைகளின் விசேஷ குணமாம். ஆகையால் உருவ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஆகாசகுணம் சத்தம்" என இம்மாத்திரமே சத்தத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறுவிடின் ஆகாசத்திலிருக்கும் சங்கியை முதலிய ஐந்து குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சங்கியை முதலியன விசேஷகுணமன்றாம். ஆனால் சாமான்னிய குணமாம். ஆகையால் அச்சங்கியை முதலியவைகளில் அந்த சத்தத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௫௧௪. சத்தத்தினது ஆசிரயத்தின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித சத்த குணம் ஆகாச வடிவ ஓர் திரவியத்திலேயே யிருக்கின்றது. ஆகாசத்தினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் சத்த குணம் இருப்பதன்று.

### ருகடு. த்வனியாத்மக சத்தம், வர்ணாத்மக சத்தம் என்னும் வேறுபாட்டால் சத்தத்தின் இருவித வேற்றுமை.

அச்சத்த குணம் த்வனியாத்மகம், வர்ணாத்மகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு பேரி, மிருதங்கம், சங்கு, வேணு, வீணை இவை முதலியவைகளினின்றும் உண்டாகும் சத்தம் த்வனியாத்மக சத்தமென்னப்படுகின்றது. கண்டம், நா, உதடு, பல், அண்ணம், மூக்கு, உச்சி, மார்பு என்பதான எட்டிடங்களினின்று முறையாக உண்டாகும் அகார முதலிய எழுத்துக்கள் வர்ணாத்மக சத்தமென்னப்படுகின்றது. அதாவது; அகராதி வர்ண (எழுத்து) வடிவ சமஸ்கிருத பாஷையும், லௌகிக பாஷையுமாகிய யாவும் வர்ணாத்மக சத்தமென்னப்படுகின்றது. கூறிய த்வனியாத்மக சத்தமும், வர்ணாத்மக சத்தமுமாகிய யாவும் அநித்தியமேயாகின்றது. யாதோர் சத்தமும் நித்தியமாவதன்று.

### ௪கரு. சையோகஜம், விபாகஜம், சத்தஜம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் அச்சத்தத்தின் மூவித வேற்றுமை.

ஆண்டு முற்கூறிய த்வனியாத்மக சத்தமும், வர்ணாத்மக சத்தமும் சையோகஜம், விபாகஜம், சத்தஜம் என்னும் வேறுபாட்டால் மூவகையாகின்றன. ஆண்டு எச்சத்தம் சையோக வடிவ அசமவாயி காரணத்தால் ஜன்னியமாகின்றதோ அச்சத்தம் சையோகஜ சத்தமெனப்படுகின்றது. எச்சத்தம் விபாக வடிவ அசமவாயி காரணத்தால் ஜன்னியமாகின்றதோ அச்சத்தம் விபாகஜ சத்தமெனப்படுகின்றது. எச்சத்தம் சத்த வடிவ அசமவாயி காரணத்தால் ஜன்னியமாகின்றதோ அச்சத்தம் சத்தஜ சத்தமெனப்படுகின்றது. ஆண்டு பேரி, தண்ட முதலியவைகளின் அபிகாதாக்கிய சையோக முண்டாகிய பின்னர் அப்பேரீ அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாவதாகிய முதற் சத்தம் சையோகஜ த்வனியாத்மக சத்தமெனப்படுகின்றது. ஆண்டு அச்சத்தத்திற்கு அப்பேரீ அவச்சின்ன ஆகாசமே சமவாயி காரணமாகின்றது. அப்பேரியி னோடுண்டாம் ஆகாச சையோக சம்பந்தம் யாதோ அப்பேரீ ஆகாசசையோகம் அச்சத்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. பேரீ தண்ட சையோகமும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவும் அச்சத்தத்திற்கு நிமித்தகாரணமாகின்றன. இவ்வாறாக மிருதங்கம், சங்கு, வேணு, வீணை முதலியவைகளினின்றும் உண்டாவதாகியசத்தமும் சையோகஜ த்வனியாத்மக சத்தமெனப்படுகின்றது. மூங்கில் முதலியவைகளின் பிளவினால் சட சடவென முதற் சத்த முண்டாவது யாதோ அம்முதற் சத்தம் விபாகஜ த்வனியாத்மக சத்தமெனப்படுகின்றது. ஆண்டு த்வனியாத்மக சத்தத்திற்கு அம்மூங்கில் அவச்சின்ன ஆகாசமே சமவாயி காரணமாகின்றது. அம்மூங்கில்களோடுண்டாம் ஆகாசத்தின் விபாகம் யாதோ அம்மூங்கில் ஆகாசத்தின் விபாகம் அச்சத்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்விரு மூங்கிற் பிளவுகளின் விபாகம் அச்சத்தத்திற்கு நிமித்த காரணமாகின்றது. கண்டம், நா முதலிய விடங்களினின்றும் முதலிலுண்டாம் சத்தம் சையோகஜ வர்ணாத்மக சத்தமெனப்படுகின்றது. ஆண்டு அவ்வர்ணாத்மக சத்தத்திற்கு கண்டம், நாவாதி அவச்சின்ன

ஆகாசமோ சமவாயி காரணமாகின்றது. கண்டம், நா முதலியவைகளினோ டுண்டாம் ஆகாசத்தின் ஸையோக சம்பந்தம் அச்சத்தத்திற்கு அசமவாயிகார ணமாகின்றது. கண்டம், நா முதலியவைகளினோ டுண்டாம் வாயு முதலிய வைகளின் ஸையோகம் அச்சத்தத்திற்கு நிமித்த காரணமாகின்றது. இரு உதடுகளின் விபாக முண்டாக உண்டாம் வர்ணாத்மக சத்தம் யாதோ அம்முதல் வர்ணாத்மக சத்தம் விபாகஜ வர்ணாத்மக சத்தமெனப்படுகின்றது. ஆண்டு அவ்விபாகஜ வர்ணாத்மக சத்தத்திற்கு அவ்வுதடவச்சின்ன ஆகாச மோ சமவாயி காரணமாகின்றது. அவ்விரு உதடுகளினோடுண்டாம் ஆகாசத் தின் விபாகம் அச்சத்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்விரு உத டுகளின் பரஸ்பர விபாகம் அச்சத்தத்திற்கு நிமித்த காரணமாகின்றது. முற் கூறிய ஸையோகஜ, விபாகஜ வடிவ துவனியாத்மக முதற் சத்தத்தால் உண் டாகிய துவனியாத்மக இரண்டாவது சத்தம் சத்தஜ துவனியாத்மக சத்த மெனப்படுகின்றது. ஆண்டு அவ்விரண்டாவது துவனியாத்மக சத்தத்திற்கு அவ்வாகாசமோ சமவாயி காரணமாகின்றது. அம்முதற் துவனியாத்மக சத்தம் அசமவாயி காரணமாகின்றது. அநுகூல வாயு நிமித்தகாரணமாகின் றது. இவ்வாறாக முற்கூறிய ஸையோகஜ, விபாகஜ வடிவ வர்ணாத்மக முதற் சத்தத்தால் உண்டாகிய இரண்டாவது வர்ணாத்மக சத்தம் சத்தஜ வர்ணாத்மக சத்தமெனப்படுகின்றது. ஆண்டு அவ்விரண்டாவது வர்ணாத்மக சத்தத்திற்கு அவ்வாகாசமோ சமவாயி காரணமாகின்றது. அம்முதல் வர்ணாத்மக சத்தம் அசமவாயி காரணமாகின்றது. அநுகூல வாயு நிமித்த காரணமாகின்றது. இவ்வாறாக இரண்டாவது சத்த முதலாக அந்திய சத்தமட்டும் இடையில் எவ் வளவு சத்த முண்டாகின்றனவோ அவ்வெல்லா சத்தமும் பூர்வ பூர்வ சத்தத் தால் ஜன்னியமாவதால் சத்தஜ சத்தமெனப்படுகின்றன.

## ௯௭. பேரி முதலிய அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகும் சத்தத்திற்கு சுரோத்திர இந்திரியத்தில் அநுற்பத்தியின் சங்கை.

சங்கை :—பேரீயாதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகும் சத்தம் யாதோ அச்சத்தம் பேரியாதி அவச்சின்ன ஆகாசத்திலேயே சமவாய சம் பந்தத்தாலிருக்கும். கர்ணகோளக அவச்சின்ன ஆகாச வடிவ சுரோத்திரத் தில் அச்சத்தம் சமவாய சம்பந்தத்தாலிராது. ஆகையால் அச்சுரோத்திர இந்திரியத்தின் சம்பந்தமில்லா அச்சத்தத்தின் பிரத்தியக்ஷம் அச்சுரோத்திர இந்திரியத்தால் எப்படி யுண்டாகும்? ஆனால் அச்சுரோத்திர இந்திரியத்தால் அச்சத்தத்தின் பிரத்தியக்ஷம் சம்பவியாது. கருத்திதுவாம் :- எவ்வெவ் விந் திரியத்திற்கு எவ்வெவ்வர்த்தத்தினோடு சம்பந்த முண்டாகின்றதோ அவ்வவ் வர்த்தத்தின் பிரத்தியக்ஷமே அவ்வவ்விந்திரியத்தா லுண்டாகின்றது. அவ் விந்திரிய அர்த்தத்தின் சம்பந்தமின்றி யாதோர் பிரத்தியக்ஷமு முண்டாகாது. ஆண்டு எங்ஙனம் சக்ஷு இந்திரியத்தின் கிரியையால் சூரியன், சந்திரன் முத லிய அர்த்தத்தினோடு சம்பந்த முண்டாகின்றதோ அங்ஙனம் அவ்வாகாச வடிவ சுரோத்திர இந்திரியத்தில் கிரியை யுண்டாகிறதில்லை. எக்கிரியையால் அச்சுரோத்திர இந்திரியத்திற்கு அப்பேரியவச்சின்ன ஆகாசத்தில் சமவாய

சம்பந்தமாயிருக்கும் சத்தத்திஞேடு சம்பந்தமுண்டாகும்?. சம்பந்தமின்றியே அச்சுரோத்திர இந்திரியத்தால் சத்தத்தின் பிரத்தியக்ஷமொப்பின்காசீ அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகிய சத்தத்தின் பிரத்தியக்ஷம் மதுராவிலுள்ள புருஷன்து சுரோத்திரேந்திரியத்தால் உண்டாக வேண்டுமென்பதான சங்கை யுண்டாக இனி ஆகாச வடிவ சுரோத்திர இந்திரியத்தில் சத்தத்தின் உற்பத்தியினது வகையை வர்ணிப்பாம்.

## அகவ. வீசிதரங்க நியாயத்தினதும், கதம்ப முகள நியாயத்தினதும் வர்ணனம்.

ஆண்டு முற்கூறிய முறைப்படி பேரீயாதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகும் முதற் துவனியாத்மக சத்தமும், கண்டம், நாவாதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகிய முதல் வர்ணாத்மக சத்தமும் வீசிதரங்க நியாத்தான் அல்லது கதம்ப முகள நியாயத்தான் தனது சமீப வேறு சத்தத்தினை உண்டாக்குகின்றது. அவ்வேறு சத்தமும் மீண்டும் தனது சமீப மூன்றாவது சத்தத்தினை உண்டாக்குகின்றது. மீண்டும் அம்மூன்றாவது சத்தமும், தனது சமீப நான்காவது சத்தத்தினை உண்டாக்குகின்றது. அந்த நான்காவது சத்தமும் தனது சமீப ஐந்தாவது சத்தத்தினை உண்டாக்குகின்றது. இவ்வாருக பூர்வ பூர்வ சத்தம் சுவாசிரயமாகிய ஆகாச பிரதேசத்தினின்றும் அவ்வியவஹித ஆகாச பாகத்தில் உத்தர உத்தர சத்தத்தினை உண்டாக்கிவிடுகின்றது. அவ்வுத்தர உத்தர சத்தத்தின் உற்பத்தி யுளதாக பூர்வ பூர்வ சத்தம் நாசமாய்விடுகின்றது. இவ்வாருக பூர்வ பூர்வ சத்தத்தால் உத்தர உத்தர சத்தத்தின் உற்பத்தி யுண்டாய்விடுகின்றது. பிராணியின் கர்ண கோளக அவச்சின்ன ஆகாச வடிவ சுரோத்திரத்தில் சென்று சமவாயசம்பந்தத்தால் உண்டாவதாகிய சத்தின் பிரத்தியக்ஷமே அப்பிராணிகளின் சுரோத்திர இந்திரியத்தா லுண்டாகின்றது. அச்சத்தத்திலும் வேறு சத்தங்களின் பிரத்தியக்ஷம் சுரோத்திர இந்திரியத்தா லுண்டாவதின்று. “ஹெரீஶஹெவா ஜ்யாஶ்ரு தஃ” (இ-ள்.) பேரீயவச்சின்ன ஆகாசத்தின் சத்தத்தை யான் சிரவணிக்கின்றேன். என்பதான உலகவியவஹாரம் மயக்க வடிவமேயாம். ஆகையால் அம்மயக்க வடிவ தோற்றத்தால் அப்பேரீ சத்தத்தின் பிரத்தியக்ஷம் சித்தியாததாகும்.

## அகக. வாயுவின் சையோகத்தால் அவ்விரு நியாயங்களின் காரணமாக சத்தத்தினது உற்பத்தியின் வர்ணனம்.

முற்கூறிய வீசிதரங்க நியாயத்தினதும், கதம்பமுகள நியாயத்தினதும் அர்த்தமிதுவாம். எங்ஙனம்: சமுத்திர முதலியவைகளின் ஜலத்தில் எழும் அலையின் முற்பாகத்தில் வேறு அலையும், அவ்வேறு அலையின் முற்பாகத்தில் மூன்றாவது அலையும், மூன்றாவது அலையின் முற்பாகத்தில் நான்காவது அலையும் எழுகின்றது. இவ்வாருக கிழக்கு முதலிய ஒரே திசைகளில் அவ்வலைகளினது பரம்பரையின் பிரவாஹம் செல்லுகின்றது. அங்ஙனமே கூறிய முறைப்படி பூர்வ பூர்வ சத்தத்தால் உத்தர உத்தர சத்தத்தின் உற்பத்தி கிழக்கு முதலிய ஒரே திசையில் உண்டாய் விடுகின்றது. ஆண்டோ

வீசிதரங்க நியாயத்தால் அம்முதற் சத்தத்தால் இரண்டாவது முதலிய சத்தங்களின் உற்பத்தியை அறிந்துக் கொள்க. கதம்ப முகுளத்தின் நடுவினின்றும் முதலில் எல்லா திசைகளின் இதழ்கள் எங்ஙனம் மலர்கின்றனவோ அங்ஙனமே நடுவிலுள்ள முதற்சத்தத்தால் கிழக்கு முதலிய பத்து திசைகளில் பத்து சத்தம் உண்டாகி வேறு சத்தத்தினை உண்டாக்குகின்றது. அவ்வேறு பத்து சத்தமும் மூன்ருவது பத்து சத்தத்தினை உண்டாக்குகின்றது. இவ்வாருக பத்து திக்குகளில் பூர்வ பூர்வ சத்தங்களால் உத்தர உத்தர சத்தம் உண்டாவதாகின்றது. ஆண்டோ கதம்ப முகுள நியாயத்தால் அம்முதற் சத்தத்தால் இரண்டாவது முதலிய சத்தங்களின் உற்பத்தியை அறிந்துக்கொள்க.

சங்கை:—சிலவிடத்தோ முதற் சத்தத்தால் வீசிதரங்க நியாயத்தால் ஒரே திசையினிடத்து சத்தங்களின் தொடர்ச்சி உண்டாகின்றது. சிலவிடத்து முதற் சத்தத்தால் கதம்ப முகுள நியாயத்தால் பத்து திசைகளில் அச்சத்தங்களின் தொடர்ச்சி யுண்டாகிறதென்பதான வியவஸ்தையில் காரணம் யாது?

சமாதானம்:—இவ்வாருய வியவஸ்தையில் வாயுவின் சையோகமே யேதுவாம். ஏனெனின் அச்சத்தத்தின் உற்பத்தியில் எங்ஙனம் முற்கூறிய முறைப்படி ஆகாச முதலியன காரணமாகின்றனவோ அங்ஙனமே அவ்வாகாச வாயுவின் சையோகமும் அச்சத்தத்தின் உற்பத்தியில் நிமித்தகாரணமாகின்றது. ஆண்டு எப்பேரீயவச்சின்ன ஆகாசத்தில் அம்முதற் சத்தம் உற்பன்னமாகின்றதோ அப்பேரியிேைடு சம்பந்தமுண்டாகிய வாயு எவ்வெத்திசையாய் செல்லுகின்றதோ அவ்வத்திசை அவச்சின்ன ஆகாசத்திலேயே அவ்வாயுவின் சம்பந்தத்தால் அச்சத்தத்தினது தொடர்ச்சியின் உற்பத்தி யுண்டாகின்றது. வேறு திசையில் அவ்வாயுவினது சையோகத்தின் அபாவத்தால் அச்சத்தத் தொடர்சசியின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆண்டு எப்பொழுது அவ்வாயு ஒரே திசை முகமாகச் செல்லுகின்றதோ அப்பொழுது அவ்வீசிதரங்க நியாயத்தால் ஒரே திசையில் அச்சத்தத் தொடர்ச்சியின் உற்பத்தி யுண்டாகின்றது. இக்காரணத்தானேபே பேரீமுதலியவைகளின் சமீபவிடத்திலுள்ளவர்கட்கு அப்பேரீசத்தம் விபரீதவாயுவின்வசத்தால்சிரவணமாகிறதில்லை என்பதான உலகர்களின்வியவஹாரமும் காணக்கிடைக்கின்றது. எப்பொழுது அவ்வாயு சர்வ திசைகளின் சன்முகமாக செல்லுகின்றதோ அப்பொழுது அக்கதம்ப முகுள நியாயத்தால் அவ்வெல்லா திசைகளில் அச்சத் தொடர்ச்சியின் உற்பத்தி யுண்டாகின்றது. எங்ஙனம் மேகங்களின் கர்ஜனை வடிவ சத்தத்தால் எல்லா திசையில் சஞ்சரிக்கும் வாயுவின் சையோகத்தால் எல்லா திசைகளில் அச்சத்தத் தொடர்ச்சியின் உற்பத்தி யுண்டாகின்றது. இவ்வாருக வாயு சையோகத்தின் வசத்தானேயே அவ்விரண்டாவது முதலிய சத்தங்களினது உற்பத்தியின்நியம முண்டாகின்றது. அவ்வாயுவின் சையோகத்தினது நியமமோ அவ்வத்திசையின் சன்முகமாகிய வாயுவினது கிரியையின் வசத்தாலுண்டாகின்றது. அவ்வாயுவினது கிரியையின் நியமகமோ அதிருஷ்டமுடைய ஆத்மாவின் சையோகத்தினதேயாகின்றது. இம்மட்டும் அச்சத்தினது உற்பத்தியின் வகையினை வர்ணித்தனம். இனி சத்தத்தினது விநாசத்தின் வகையை வர்ணிப்பாம்.

## ௫௨௦. சத்தத்தின் விநாசக் கிரம வர்ணனம்.

ஆண்டு விபுத்திரவியத்தின் யோக்கிய விசேஷ குணம் தனக்குப் பின்னுண்டாவனவும், சுவசமானாதிகரணமுமாகிய யோக்கிய விபுவிசேஷ குணங்களால் நாசமாய் விடுகின்றது. எங்ஙனம்: விபு ஆத்மாவின் புத்தி முதலிய யோக்கிய விசேஷ குணங்கள் தனக்குப் பின்னுண்டாவனவும், சுவசமானாதிகரணமுமாகிய புத்தி முதலிய யோக்கிய விசேஷ குணங்களால் நாசமாய் விடுகின்றன. அங்ஙனமே இச்சத்தமும் விபு ஆகாயத்தின் யோக்கிய விசேஷ குணமா மாகையால் இச்சத்தமும் தனக்குப் பின்னுண்டாவதும், சுவசமானாதிகரணமுமாகிய இரண்டாவது சத்தத்தால் நாசமாய் விடுகின்றது. அதாவது; முற்கூறிய முறைப்படி பேரியாதி அவச்சின்ன ஆகாசத்தில் முதற் க்ஷணத்தில் ஆதி சத்தம் உண்டாவதாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அவ்வாதி சத்தத்தால் இரண்டாவது சத்தம் உண்டாவதாகின்றது. அவ்விரண்டாவது சத்தம் அவ்வாதி சத்தத்தினை நாசஞ்செய்கின்றது. ஆகையால் மூன்றாவது க்ஷணத்தில் அவ்வாதி சத்தம் நாசமாய் விடுகின்றது. இவ்வாறாக இவ்விரண்டாவது சத்தமும், தனது உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் மூன்றாவது சத்தத்தின் உற்பத்தியால் மூன்றாவது க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றது. அம்மூன்றாவது சத்தம் தனது உற்பத்தி க்ஷணத்தினும் இரண்டாவது க்ஷணத்தில் நான்காவது சத்தத்தின் உற்பத்தியால் மூன்றாவது க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றது. இவ்வாறாக உத்தர உத்தர சத்தத்தால் பூர்வ பூர்வ சத்தத்தின் நாச முண்டாகின்றது. ஆகையால் விபு ஆத்மாவின் புத்தி முதலிய யோக்கிய விசேஷ குணத்தினைப் போன்று இச் சத்த குணமும் இரண்டு க்ஷண மட்டும் நிலைப்பதாகின்றது.

சங்கை:—உத்தர உத்தர சத்தத்தால் பூர்வ பூர்வ சத்தத்தின் நாசத்தை யொப்பின் எச்சத்தத்திற்கு பின்னர் யாதோர் சத்தமும் உண்டாவதின்றோ அத்தகைய அந்திய (ஈற்று) சத்தத்தின் நாசம் உண்டாகாததாகு மென்னுஞ் சங்கை யுண்டாக சமாதானங் கூறுவாம்.

## ௫௨௧. சுந்தோப சுந்த நியாயத்தால் அந்திய, உபாந்திய சத்தத்தின் நாசத்தினை ஒப்புவோராகிய வாதிகளின் மதம்.

ஆண்டு பிராசீன நையாயிகரோ அச்சங்கைக்கு இச்சமாதானங் கூறுகின்றனர்: அவ்வந்திய சத்தத்தினை விட்டு பூர்வ பூர்வ ஆதி, மத்திய சத்தங்கள் யாவும் தனக்குப் பின்னிருப்பதும் தன் காரியமுமாகிய சத்தத்தால் நாசமாய் விடுகின்றன. அவ்வந்திய சத்தமோ தனக்குப் பின்னிருப்பதும், தன் காரியமுமாகிய சத்தத்தால் நாசமாவதின்று. ஆனால் அவ்வந்திய சத்தமோ தனக்கு அவ்வியவஹித பூர்வத்தி லிருப்பதும், தன் காரணமுமாகிய ஈற்றயல் சத்தத்தானேயே நாசமாகின்றது. இவ்வாறாக சுந்தோப சுந்த நியாயத்தானேயே அவ்வந்திய சத்தத்தினதும், ஈற்றயல் சத்தத்தினதும் நாசமுண்டாகின்றது. கருத்திதுவாம்; எங்ஙனம் சுந்தன், உபசுந்தன் எனப் பெயரிய இரு அசுரர்கள் பரஸ்பரம் சஸ்த்திர முறையால் ஒரே காலத்தில் நாசமாய் விட்டனரோ அங்ஙனமே ஈற்றயல் சத்தமும், அந்திய சத்தமும் பரஸ்பரம்

நாசமாகிறபடியால் ஒரே க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றன. அதாவது; அவ்வந்திய சத்தத்தின் உற்பத்தி க்ஷணத்திலும் இரண்டாவது க்ஷணத்தில் அவ்வந்திய சத்தமும், ஈற்றயல் சத்தமுமா மிரண்டும் நாசமாய் விடுகின்றன. ஆண்டு ஆதி சத்தமும், மத்திய சத்தமும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பனவாகின்றன. ஈற்றுச் சத்தம் க்ஷணிகமாகின்றது. ஆண்டு எவ்வஸ்து முதற் க்ஷணத்தில் உண்டாகி இரண்டாவது க்ஷணத்தில் நாசமாய் விடுகின்றதோ அவ்வஸ்து க்ஷணிக மெனப்படுகின்றது.

## ௫௨௨. அப் பிராசீன நையாயிகர்களின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் பிராசீன நையாயிகர்களின் மதம் அசங்கதமாம். ஏனெனின் எக்ஷணத்தில் அந்திய சத்தத்தின் நாச முண்டாகின்றதோ அக்ஷணத்தில் அவ்வீற்றயல் சத்தம் இருப்பதின்று. ஆனால் அக்ஷணத்தில் அவ்வீற்றயல் சத்தம் தானே நாசமாய் விடுகின்றது. காரணமிருந்தா லன்றி காரியத்தின் உற்பத்தி யுண்டாகாது. ஆகையால் அவ்வீற்றயல் சத்தத்தால் அவ்வந்திய சத்தத்தின் நாசம் சம்பவியாது. அல்லது அவ்வீற்றயல் சத்தத்தால் அந்திய சத்தத்தின் நாசம் ஒப்பின் அவ்வந்திய சத்தத்தில் க்ஷணிகத் தன்மையே பிராப்தமாகின்றது. அக்ஷணிக அந்திய சத்தத்தின் திருஷ்டாந்தத்தால் ஆதி, மத்திய சத்தங்களிலும் க்ஷணிகத் தன்மையே பிராப்தமாகும். அதாவது "ஆத்யமத்யஶப்தௌ க்ஷணிகௌ ஶப்தத்வாத் அந்த்யஶப்தவத்" என்பதான அநுமானத்தால் அவ்வாதி, மத்திய சத்தங்களிலும் க்ஷணிகத் தன்மையே சித்தமாகும். அதனால் அப்பிராசீனர்களின் மதத்தில் க்ஷணிக வாதி பௌத்தமதத்தின் பிரவேச முண்டாகும். இக்காரணத்தானும் ஈற்றயல் சத்தத்தால் அந்திய சத்தத்தின் நாசம் ஒப்புவது உசிதமன்றாம்.

## ௫௨௩. ஈற்றயல் சத்தத்தின் நாசத்தால் அந்திய சத்தத்திற்கு நாசம் ஒப்புவோராகிய நவீன நையாயிகர்களின் மத வர்ணனம்.

நவீன நையாயிகர்களோ கூறிய அச்சங்கைக்கு இவ்வாறாக சமாதானங் கூறுகின்றனர். ஈற்றயல் சத்தத்தால் அவ்வந்திய சத்தத்தின் நாச முண்டாகிறதில்லை. ஆனால் அவ்வீற்றயல் சத்தத்தின் நாசத்தானேயே அவ்வந்திய சத்தத்தின் நாச முண்டாகின்றது. அவ்வீற்றயல் சத்தத்தின் பிரத்துவம்சா பாவ வடிவ நாசம் அநந்தமாவதால் அவ்வந்திய சத்தத்தின் உற்பத்திக்ஷணத்திலும், இரண்டாவது முதலிய க்ஷணத்திலு மிருக்கின்றது. அத்தகைய ஈற்றயல் சத்தத்தின் நாசத்தால் அவ்வந்திய சத்தத்தின் நாசமும் மூன்றாவது க்ஷணத்திலேயே உண்டாகின்றது. ஆகையால் எங்ஙனம் அவ்வாதி, மத்திய சத்தங்கள் இரண்டு க்ஷணமட்டும் நிலைத்திருக்கின்றனவோ அங்ஙனமே அவ்வந்திய சத்தமும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதேயாகின்றது. இவ்வாறாக ஈற்றயல் சத்தத்தின் நாசத்தால் அவ்வந்திய சத்தத்தின் நாசம் ஒப்புவதில் முற்கூறிய தோஷம் ஈண்டு பிராப்தமாவதின்று. ஆகையால் இந்நவீனர்களின் மதமே நலமுடையதாம். இம்மட்டும் நியாய சாஸ்திரத்தின் முறைப்படி சத்தத்தினை நிரூபித்தனம். இனி மீமாஞ்சக சாத்திரத்தின் முறைப்படி சத்தத்தினை நிரூபிப்பாம்,

௫௨௪. சத்தத்தினை நித்தியமாக வேற்கும் பிரபாகரர் மதம்.

ஆண்டு பிரபாகரரின் மதமோ இதுவாம். ஆகாசத்தின் குண வடிவ சத்தம் நித்தியமேயாம்; ஒரு சத்தமும் அநித்தியமாவதன் றாகையால் சத்தத்திற்கு உற்பத்தி விநாசம் சம்பவியாது. நையாயிகர்கள் சத்தத்தின் உற்பத்தியில் கண்டம், நா முதலியனவும், விஜாதீய வாயுவின் சையோக முதலியனவுமாகிய எவ்வளவு காரணங்கள் கூறினரோ அவ்வெல்லா காரணங்களும் அச்சத்தத்தினை உண்டாக்குவதன்றாம். ஆனால் சத்தத்தினை வெளியாக்குவதாம்.

௫௨௫. அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தின் நித்தியத்தன்மையின் வர்ணனம்.

இனி அநுமானப் பிரமாணத்தால் அச்சத்தத்தின் நித்தியத்தன்மையை நிலைநாட்டுவாம். "ஶப்3தோ3 நித்ய꞉ ஶ்ராவணப்ரத்யக்ஷவிஷயத்வாத் ஶப்3த3த்வவத்" (இ-ள்.) அச்சத்தம் நித்தியமாக யோக்கியமாம், சுரோத்திர இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால், எதுவெது சிராவண பிரத்தியக்ஷத்தின் விஷயமாகின்றதோ அதுவது நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: சத்தத்தில் இருப்பதாகிய சத்தத்தன்மை ஜாதி சிராவண பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால் நித்தியமாகின்றது. அங்ஙனமே அச்சத்தமும் சிராவண பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால் நித்தியமேயாகும்.

௫௨௬. வேறு அநுமானத்தால் சத்தத்தின் நித்தியத்தன்மையின் சித்தி.

"ஶப்3தோ3 நித்ய꞉ ஆகாஶமாத்ரவ்ருத்திகு3ணத்வாத் ஆகாஶபரிமாணவத்" (இ-ள்.) அச்சத்தம் நித்தியமாக யோக்கியமாம், ஆகாச மாத்திரத்தின் குணமாவதால், எதுவெது ஆகாச மாத்திரத்தின் குணமாமோ அதுவது நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: ஆகாசத்தின் பரமமஹத்வ பரிமாணம் அவ்வாகாச மாத்திரத்தின் குணமாவதால் நித்தியமேயாகின்றது. அங்ஙனம் அச்சத்தமும் அவ்வாகாச மாத்திரத்தின் குணமாவதால் நித்தியமேயாகும். ஆண்டு "ஆகாச மாத்திரத்தின் குணமாவதால்" எனக் கூறிய ஏதுவில் "மாத்திரம்" என்னும் பதங்கூறுவிடின் ஆகாச கடத்தின் சையோகத்தில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் அவ்வாகாச கடங்களின் சையோகம் அவ்வாகாச கடமாமிரண்டினிடத்திருக்கின்றதாகையால் அச்சையோகத்தில் அவ்வாகாச குண வடிவ ஏதுவோயிருக்கின்றது; நித்தியத்வ வடிவசாத்தியம் அச்சையோகத்திலின்றாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "மாத்திரம்" என்னும் பதங்கூறப்பட்டது. ஆண்டு அவ்வாகாச கடத்தின் சையோகத்தில் கேவலம் அவ்வாகாச மாத்திர குணத்வமின்று; கடத்தினது குணமுமிருக்கின்றதாகையால் அவ்வாகாச கடத்தின் சையோகத்தில் கூறிய ஏதுவிற்கு வியபிசாரமுண்டாகாது.

௫௨௭. பிரத்தியபிஞ்ஞையால் சத்தத்தின் நித்தியத்தன்மையின் சித்தி.

அல்லது அச்சத்தத்தின் நித்தியத்தன்மை கூறிய அநுமானப் பிரமாணத்தால் சித்திப்பதுடன் "ஸோऽயம் க3கார꞉" என்பதான பிரத்தியபிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத்தாலும் அச்சத்தத்திற்கு நித்தியத் தன்மையே

சித்திக்கின்றது. அந்த பிரத்திய பிஞ்ஞையின் அர்த்தமிதுவாம். எக்ககாரத்தை யாம் முன்னர் சிரவ்ணம் செய்துள்ளோமோ அதுவே இக்ககாரமாம். ஆண்டு இப்பிரத்தியபிஞ்ஞையில் இக்காலத்திய ககாரத்தில் முற்காலத்திய ககாரத்தின் அபேதம் தோற்றுகின்றது. அவ்வபேதத் தோற்றத்தால் இடையில் அக்ககாரத்தின் நாசத்தை ஒப்புவது சம்பவியாது. ஆகையால் அவ்வபேதத்தை விஷயஞ் செய்யும் பிரத்திய பிஞ்ஞையின் வலியால் அக்ககாரத்திற்கு அவ்வளவு காலமட்டும் நிலைத்தற்றன்மையை அவசியம் ஒப்புவதாகும். ஆகையால் உத்தர உத்தர சத்தங்களுக்கு பூர்வ பூர்வ சத்தங்களை நாசஞ் செய்யும் தன்மைச் சம்பவியாது: வேறொன்றும் அச்சத்தத்தினை நாசஞ் செய்வதன்று. ஆகையால் பிரத்திய பிஞ்ஞா வடிவ பிரத்தியக்ஷத்தாலும் அக்ககார முதலிய சத்தத்திற்கு நித்தியத் தன்மையே சித்தமாகின்றது. இவ்வளவால் முற்கூறிய அநுமானத்தால் இவ்வநுகூல தர்க்கம் போதிக்கப்படுகின்றது. அக்ககார முதலியன நித்தியமன்றாயின் முற்காலத்திய ககாரத்தின் அபேத பிரத்திய பிஞ்ஞையின் விஷய மன்றாகும். அக்ககார முதலிய சத்தம் அவ்வபேத பிரத்திய பிஞ்ஞையின் விஷயமே யாகின்றது. ஆகையால் அக்ககார முதலிய சத்தத்தினை நித்தியமாகவே யொப்ப வேண்டும்.

## ௮௨௮. அப் பிரபாகரர் மத கண்டனம்.

அங்ஙனமாகக் கூறும் பிரபாகரரது மதம் நலமுடையதன்று. ஏனெனின் "உத்பந்நோ ககார: விநஷ்டோ ககார:" (இ-ள்.) இக்ககாரம் உற்பன்னமாயிற்று, இக்ககாரம் நஷ்டமாயிற்று. என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அத்தோற்றம் அக்ககார முதலிய எழுத்துக்களின் உற்பத்தி விநாசத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அத்தோற்றத்தின் வலியால் அக்ககார முதலிய எழுத்துக்களின் உற்பத்தியும், விநாசமும் அவசியம் அங்கீகரிக்கப்படுவதாகும். எவ்வெப்பதார்த்தம் உற்பத்தி விநாசமுடையதாகின்றதோ அவ்வப்பதார்த்தம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம்: கட முதலிய பதார்த்தம் உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாம். அங்ஙனமே அச்சத்தமும் உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகும். ஆண்டு மீமாஞ்சகர் இது கூறுகின்றனர். "உத்பந்நோ ககார: விநஷ்டோ ககார:" எனக்கூறிய தோற்றம் அக்ககாரத்தின் உற்பத்தி விநாசத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆனால் அக்ககார முதலிய எழுத்துக்களை வெளியாக்கும் விஜாதீய வாயுவின் உற்பத்தி விநாசத்தினை அத்தோற்றம் விஷயஞ் செய்கின்றது. அதாவது; ககாரத்தினை வெளியாக்கும் வாயு உண்டாயிற்று; அங்ஙனமே நஷ்டமாயிற்று என்பதாக அவ்வாயுவின் உற்பத்தி விநாசத்தினை விஷயஞ் செய்வதாகிய அத்தோற்றம் அக்ககார முதலிய எழுத்துக்களின் நித்தியத் தன்மையினை பாதிப்பதன்று. அங்ஙனமாக மீமாஞ்சகர்கள் கூறுவதும் அசங்கதமாம். ஏனெனின் கூறிய அத்தோற்றத்தில் அக்ககாரத்தின் உற்பத்தி விநாசமே தோற்றுகின்றது. அவ் வாயுவின் உற்பத்தி விநாசம் தோற்றுவதின்று. எத்தோற்றத்தில் எவ்வர்த்தத்தின் விளக்க முண்டாகின்றதோ அவ்வர்த்தமே அத்தோற்றத்தின் விஷயமாகின்

றது. ஆகையால் கூறிய அத்தோற்றத்தால் அக்ககாரத்தின் உற்பத்தி விநாசமே சித்தமாகின்றது. அவ்வாயுவின் உற்பத்தி விநாசம் சித்தமாவதின்று. இவ்வாறாகக் கூறிய அத்தோற்றத்தின் வலியால் அக்ககாரத்தினது உற்பத்தி, விநாசத்தின் சித்தியுண்டாக மீமாஞ்சகர்கள் ககார முதலிய சத்தங்களின் நித்தியத்தன்மையில் "ஸோऽயம் ககார:" என்பதான பிரத்தியபிஞ்ஞையைக் கூறியது மயக்க வடிவமேயாம். அதாவது; பூர்வ காலத்திய ககாரத்தின் பேதமுடைய இக்காலத்திலுள்ள ககாரத்தில் பூர்வ காலத்திய ககாரத்தின் அபேதத்தினை விஷயஞ் செய்வதாகிய பிரத்தியபிஞ்ஞை பிராந்தி வடிவமாகவே சித்திக்கின்றது. ஆகையால் அம்மயக்க வடிவ பிரத்தியபிஞ்ஞையினால் ககார முதலிய எழுத்துக்களின் நித்தியத்தன்மை சித்தமாகாது. அல்லது "ஸோऽயம் ககார:" எனக் கூறிய பிரத்திய பிஞ்ஞையினை பிரமா வடிவமாக ஒப்பினும் அந்த பிரத்திய பிஞ்ஞையினால் அக்ககார முதலியவைகளின் நித்தியத் தன்மை சித்தமாகாது. ஏனெனின் அந்த பிரத்திய பிஞ்ஞை இக்காலத்திலுள்ள ககாரத்தில் பூர்வ காலத்திய ககாரத்தின் அபேதத்தினை விஷயஞ் செய்வதன்று. ஆனால் இக்காலத்திலுள்ள ககாரத்தில் கத்வதர்மாவச்சின்ன ககாரத்தின் அபேதத்தினை விஷயஞ் செய்கின்றது. ஆண்டு எக்கத்வஜாதி பூர்வ காலத்திய ககாரத்தி லிருக்கின்றதோ அக்கத்வ ஜாதியே இக்காலத்திலுள்ள ககாரத்தி லிருக்கின்றது. ஆகையால் எங்ஙனம் பூர்வ காலத்திய ககாரம் கத்வ ஜாதியினால் அவச்சின்னமாமோ அங்ஙனமே இக்காலத்திலுள்ள ககாரமும் அக்கத்வ ஜாதியினால் அவச்சின்னமாம். இத்தகைய கத்வாவச்சின்ன ககாரத்தில் கத்வாவச்சின்ன ககாரத்தின் பேதமிருப்பதன்று. ஆகையால் பூர்வ காலத்திய ககார வியக்திக்கும், உத்தர காலத்திலுள்ள ககார வியக்திக்கும் பரஸ்பரம் பேதமிருப்பினும் கத்வ ஜாதியின் அபேத மிருப்பதால் "ஸோऽயம் ககார:" எனக் கூறிய பிரத்திய பிஞ்ஞைக்கு பூர்வ காலத்திய ககாரத்திலிருந்த கத்வஜாதி யவச்சின்னத்தோடு அபின்னமாயது இக்ககாரமாம். என்பதான அர்த்தம் சித்தமாகின்றது. இவ்வாற்றால் பிரத்திய பிஞ்ஞையினை பிரமா வடிவமாக ஒப்புவதாலும் ககார முதலிய எழுத்துக்களின் நித்தியத்தன்மை சித்தமாகாது. அல்லது அச்சத்தத்தில் உலகர்களுக்கு தாரத்வ, மந்தத்வ வடிவ விருத்த தர்மம் தோற்றுகின்றது. அவ்விருத்த தர்மம் ஒரு சத்தத்தினிடத்து சம்பவியாது. ஆகையால் தாரத்வ, மந்தத்வ வடிவ விருத்த தர்மங்களின் அத்தியாசத்தினால் அச்சத்தத்தின் பேதம் அவசியம் ஒப்பப்படுவதாகும். இக்காரணத்தாலும் கூறிய பிரத்தியபிஞ்ஞையினால் அச்சத்தத்திற்கு நித்தியத்தன்மை சித்தமாகாது. அல்லது பிரபாகரர்கள் சத்தத்தின் நித்தியத்தன்மையில் எவ்வநுமானம் கூறுகின்றனரோ அவ்வநுமானமும் அச்சத்தத்தினது அநித்தியத்தன்மையின் சாதக அநுமானத்தால் சத்பிரதிபக்ஷத் தன்மை தோஷமுடையதாவதால் துஷ்டமாம். ஆகையால் அத்துஷ்ட அநுமானத்தால் அச்சத்தத்தின் நித்தியத்தன்மை சித்தமாகாது. அச்சத்தத்தின் அநித்தியத்தன்மையின் சாதக அநுமான மிதுவாம். "ஶப்³தோ³ऽநித்ய: ஸாமாந்யவத்வே ஸதி அஸ்மதா³தி³

பாஹ்யேந்த்ரியக்ராஹ்யஜாதிமத்வாத் படவத்" (இ-ள்.) அச்சத்தம் அநித்தியமாக யோக்கியமாம், ஜாதி வடிவ சாமான்னிய முடையதாகி நம்மனோர் முதலியவர்களின் பாஹ்ய இந்திரியத்தால் கிராஹியமாவதால், அதாவது; நம்மனோர் முதலியவர்களின் பாஹ்ய இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால், எவ்வெவ் வஸ்து சாமான்னியமுடையதாகி நம்மனோர் முதலியவர்களின் பாஹ்ய இந்திரியத்தால், கிராஹியமாகின்றதோ அவ்வவ்வஸ்து அநித்தியமேயாகின்றது. எங்ஙனம்: படம் படத்வ, திரவியத்வ முதலிய சாமான்னியமுடையதாகி நம்மனோர் முதலியவர்களின் சக்ஷு, துவக்கு வடிவ பாஹ்ய இந்திரியத்தால் கிராஹியமாம். ஆகையால் அப்படம் அநித்தியமேயாம். அங்ஙனம் அச்சத்தமும் சத்தத்தன்மை, குணத்தன்மை வடிவ சாமான்னியமுடையதாகி நம்மனோர் முதலியவர்களின் சுரோத்திர வடிவ பாஹ்ய இந்திரியத்தால் கிராஹியமாம். ஆகையால் அச்சத்தமும் அப்படத்தினைப் போன்று அநித்தியமேயாகும். ஆண்டு கூறிய அவ்வநுமானத்தில் "சாமான்னியமுடையதாகி நம்மனோர் முதலியவர்களின் இந்திரிய கிராஹியமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "பாஹ்யம்" என்னும் பதங் கூறாவிடின் ஆத்மாவில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் அவ்வாத்மா ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை, சத்தாஜாதி வடிவ சாமான்னியமுடையதும், நம்மனோர் முதலியவர்களின் மன வடிவ இந்திரியத்தால் கிராஹியமுமாம். ஆகையால் கூறிய அவ்வேதுவோ அவ்வாத்மாவிடத்திருக்கின்றது; ஆனால் அநித்தியத்வ வடிவ சாத்தியம் அவ்வாத்மாவி லின்றாம். ஆகையால் அச்சாத்தியத்தின் அபாவமுடைமை ஆத்மாவி லிருப்பதாவதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "பாஹ்யம்" என்னும் பதம் இந்திரியத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாத்மாவினை அறியும் மன வடிவ இந்திரியம் பாஹ்ய இந்திரியமன்றாம். ஆனால் அந்தர் இந்திரியமாம். ஆகையால் கூறிய அவ்வேதுவிற்கு ஆத்மாவில் வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "சாமான்னியமுடையதாகி பாஹ்யேந்திரியத்தால் அறியப்படுவதாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "நம்மனோர் முதலியவர்களின்" என்னும் பதங் கூறாவிடின் பரமாணுவினிடத்து அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் அப்பரமாணு திரவியத் தன்மை வடிவ சாமான்னியமுடையதும், யோகி புருஷரது சக்ஷு வடிவ பாஹ்ய இந்திரியத்தால் கிராஹியமாவதுமாம். ஆகையால் அப்பரமாணுக்களில் கூறிய அவ்வேதுவோ இருக்கின்றது. ஆனால் அநித்தியத்வ வடிவ சாத்தியம் அப்பரமாணுக்களி லின்றாம். ஆகையால் அச்சாத்தியத்தின் அபாவமுடைமை அப்பரமாணுக்களில் இருப்பதாவதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "நம்மனோர் முதலியவர்களின்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அப்பரமாணு நம்மனோர் முதலிய அயோகிகளின் பாஹ்ய இந்திரியத்தால் கிராஹியமன்றாம். ஆகையால் அப்பரமாணுக்களில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. அல்லது கூறிய அவ்வநுமானத்தில் "நம்மனோர் முதலிய பாஹ்யேந்

திரியத்தால் கிரஹிக்கப்படுவதாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "சாமான்னியமுடையதாகி" என்னும் பதங்கள் கூறுவிடின் சாமான்னியம், சமவாயம், அபாவமாமிம்மூன்றில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். எக்காரணத்தாலெனின் அச்சாமான்னிய முதலியன நம்மனோர் முதலியவர்களின் சக்ஷு: முதலிய பாஹிய இந்திரியத்தால் கிரஹிக்கப்படுவதாம். ஆனால் அச்சாமான்னிய முதலியன அநித்தியமன்றும்; நித்தியமேயாம். ஆகையால் அவ்வநித்தியத்வ வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை அச்சாமான்னிய முதலியவைகளில் இருப்பதாவதால் கூறிய அவ்வேது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "சாமான்னியமுடையதாகி" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அஜ்ஜாதி வடிவ சாமான்னியம் திரவியம், குணம், கர்மமா மூன்று பதார்த்தங்களிலேயே சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் ஜாதி வடிவ சாமான்னிய மிருப்பதன்று. ஆகையால் அச்சாமான்னிய முதலியவைகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. கூறிய இவ்வநுமானத்தால் அச்சத்தத்தில் அநித்தியத்தன்மையே சித்தமாகின்றது. ஆகையால் அச்சத்தத்தின் நித்தியத்தன்மையினை சித்தம் செய்வதாகிய முற்கூறிய பிரபாகரரின் அநுமானம் சத்பிரதிபக்ஷத்தன்மை தோஷமுடையதாவதால் துஷ்டமாம்.

### ௮௨௯. சத்தத்தினை நித்திய திரவியமாக ஒப்பும் பட்டபாதரின் மத வர்ணனம்.

பட்டபாதரின் மதமோ இதுவாம்; அச்சத்தம் உற்பத்தி, விநாசமிலாததாவதால் நித்தியமேயாம். அச்சத்தம் உருவ முதலியவைகளைப் போன்று குண வடிவமன்றும்; ஆகாச முதலியவைகளைப் போன்று திரவிய வடிவமேயாம். இத்தகைய திரவிய வடிவ சத்தத்திற்கு நித்தியத்தன்மையை சாதிக்கும் அநுமானமிதுவாம்.

### ௮௩௦. சத்தத்தின் நித்தியத் தன்மையின் சாதக அநுமானம்.

"ஶப்தோ நித்ய: ஸ்பர்ஶரஹிதத்ரவ்யத்வாத் வ்யோமவத்" (இ-ள்.) அச்சத்தம் நித்தியமாக யோக்கியமாம், பரிச குணமில்லாத திரவிய வடிவமாவதால், எதுவெது பரிசமின்றி திரவியமாகின்றதோ அதுவது நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: ஆகாசம் பரிசமின்றி திரவிய வடிவமாவதால் நித்தியமாம். அங்ஙனம் சத்தமும் பரிசமின்றி திரவிய வடிவமாவதால் நித்தியமேயாகும். ஆண்டு இவ்வநுமானத்தில் "பரிசமின்மையால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "திரவியம்" என்னும் பதங் கூறுவிடின் கந்த முதலிய அநித்திய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் குணத்தில் குண மிருப்பதில்லை. ஆகையால் கந்த முதலிய அநித்திய குணம் பரிச குணமில்லாததேயாம். இத்தகைய கந்த முதலிய குணங்களில் அப்பரிச குணமிலாத்தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் நித்தியத்வ வடிவ சாத்தியமின்றும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "திரவியம்" என்னும் பதங் கூறப்பட்டது.

ஆண்டு கந்த முதலிய குணங்களில் திரவிய வடிவத் தன்மையின்றும். ஆகையால் கந்த முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய இவ்வநுமானத்தில் "திரவியமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாக்க் கூறி அவ்வேதுவில் "பரிசமில்லாத" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் கட முதலியவைகளில் திரவியத் தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் நித்தியத்தன்மை வடிவ சாத்தியம் அக்கடாதிகளி லின்றும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "பரிசமிலாத" என்னுமிது திரவியத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியன பரிசகுணமிலாததன்றும்; பரிச குணமுடையனவேயாம். ஆகையால் கடமுதலியவைகளில் கூறிய அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறுய அநுமானத்தால் அச்சத்தத்தில் நித்தியத்தன்மையே சித்தமாகின்றது.

சங்கை :—பரிசமிலா திரவியத்தன்மை வடிவ ஏதுவால் அச்சத்தத்தில் நித்தியத்தன்மை சித்திக்கும்போது முதலில் அச்சத்தத்தில் ஓர்பிரமாணத்தால் திரவிய வடிவத்தன்மையின் சாதகமாக யாதாமோர் பிரமாணமுமின்றுமென்பதான சங்கை யுண்டாக இனி அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தில் திரவிய வடிவத் தன்மையை சித்தி செய்வாம்.

### ௩௬க. சத்தத்தில் திரவியத் தன்மையின் சாதக அநுமானம்.

"ஶப்தோ த்ரவ்யம் ஸாக்ஷாத்ஸம்பந்தேந்த்ரியக்ராஹ்யத்வாத் கடாதிவத்" (இ-ள்.) அச்சத்தம் திரவியமாக யோக்கியமாம், சாக்ஷாத் சம்பந்தத்தால் இந்திரியகிராஹ்யமாவதால், எவ்வெப்பதார்த்தம் சாக்ஷாத் சம்பந்தத்தால் இந்திரிய கிராஹ்யமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் திரவியமேயாகின்றது. எங்ஙனம்: கட முதலியன சையோக வடிவ சாக்ஷாத் சம்பந்தத்தால் கிராஹ்யமாகின்றன. ஆகையால் அக்கட முதலியன திரவிய வடிவமேயாம். அங்ஙனமே அச்சத்தமும் சாக்ஷாத் சம்பந்தத்தால் சுரோத்திர இந்திரிய கிராஹ்யமாமாகையால் அச்சத்தமும் அக்கட முதலியவைகளைப் போன்று திரவிய வடிவமேயாகும். ஆண்டு சையோகம், சமவாயமா மிவ்விரு சம்பந்தங்களை சாக்ஷாத் சம்பந்தமென்பர். ஆண்டு இவ்வநுமானத்தில் "இந்திரியத்தால் அறியப்படுவதாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "சாக்ஷாத் சம்பந்தத்தால்" என்னும் பதங்கள் கூறுவிடின் உருவ முதலிய குணங்களில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். எக்காரணத்தாலெனின் உருவ முதலிய குணங்களும் சக்ஷு முதலிய இந்திரியங்களால் அறியப்படுவதேயாம். ஆனால் உருவ முதலியவைகளில் திரவியத்தன்மை வடிவ சாத்தியமின்றும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "சாக்ஷாத் சம்பந்தத்தால்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்கள் சாக்ஷாத் சம்பந்தத்தால் இந்திரிய கிராஹ்யமன்றும். ஆனால் சையுக்த சமவாய வடிவ பரம்பரைச் சம்பந்தத்தால் இந்திரிய கிராஹ்யமாம். ஆகையால் உருவ முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபி

சார முண்டாகாது. இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் சத்தத்தில் திரவிய வடிவத்தன்மையே சித்தமாகின்றது. ஆகையால் பரிசமில்லா திரவியத் தன்மை வடிவ ஏதுவால் அச்சத்தத்தில் நித்தியத்தன்மையின் சித்தி சம்பவிக் கின்றது. அங்ஙனமே "வொாக்ஷயம் ககாரஃ" என்பதான பிரத்திய பிஞ்ஞை யினாலும் அச்சத்தத்திற்கு நித்தியத்தன்மையே சித்திக்கின்றது.

## அ௲௨. பட்டபாதரின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறிய இப்பட்டபாதரின் மதமும் நன்முறையதன்றாம். ஏனெனின், சத்தத்தினை திரவிய வடிவமாகவும், நித்தியமாகவும் ஒப்பிய பட்ட பாதரோடு இது வினவுதல் வேண்டும். உமது சத்த வடிவ திரவியம் பிருதிவி முதலிய திரவியங்களைப் போன்று உருவ குணமுடைய திரவியமா?, அல்லது வாயு முதலிய திரவியங்களைப்போன்று உருவ குணமில்லா திரவியமா?. ஆண்டு முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் எங்ஙனம் உருவ குணமுடைய பிருதிவிமுதலிய வைகளின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகின்றதோ அங்ஙனம் அச்சத்தத்தின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தால் உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. ஆகையால்அச்சத்தம் உருவமிலா திரவியமாமென்பதான இரண்டாவதுபக்ஷமே அங்கீகரிப்பதாகும். அதுவும் சம்பவியாது; ஏனெனின் அச்சத்தத்தினை உருவமில்லா திரவியமாகவொப்பின் அச்சத்தத்தின் பிரத்தி யக்ஷம் சுரோத்திரஇந்திரியத்தால்உண்டாகாததாகும். எக்காரணத்தாலெனின் பாஹ்யதிரவியத்தின் பிரத்தியக்ஷத்தில் உத்பூதஉருவத்திற்கே காரணத்தன்மை யிருக்கின்றது. உத்பூத உருவமின்றி பாஹ்ய திரவியத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகாது. எல்லா பிராணிகட்கும் சுரோத்திர இந்திரியத்தால் அச்சத்தத் தின் பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. ஆகையால் அச்சத்தத்தில் திரவிய வடி வத்தன்மை சம்பவியாது. அச்சத்தத்தில் திரவிய வடிவத்தன்மையின் அபாவ முண்டாக கூறிய பரிசமில்லாத் தன்மை வடிவ ஏதுவால் நித்தியத் தன்மையும் சித்தமாகாது. "வொாக்ஷயம் ககாரஃ" என்பதான பிரத்திய பிஞ்ஞையில் மயக்க வடிவத்தன்மை முன்னர் கூறி வந்துள்ளோம். ஆகையால் பிரத்திய பிஞ்ஞையானும் சத்தத்தின் நித்தியத்தன்மை சித்தமாகாது. "ககாரம் உண் டாயிற்று ககாரம் நஷ்டமாயிற்று" என்பதான தோற்றம் அக்ககார முதலிய சத்தங்களின் உற்பத்தி விநாசத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையானும் அச்சத்தத்தில் நித்தியத் தன்மை சம்பவியாது.

## அ௲௩. வையாகரணிகளின் மதம்.

வியாகரண சாஸ்திரமுடையாரோ இது கூறுகின்றனர். வர்ணாத்மக சத்தத்தில் ஸ்போடமெனப் பெயரிய வேறோர் சத்தமிருக்கின்றது. அந்த ஸ்போடமெனப் பெயரிய சத்தம் நித்தியமாகின்றது. ஈண்டு அவ்வையா கரணிகளின் கருத்திதுவாம்; வர்ணங்களின் சமுதாயத்தினை பதமென்பர். அப்பதத்திலுள்ள ஒவ்வோர் வர்ணங்கட்கோ அர்த்தத்தினைப் போதிக்குந் தன்மைச் சம்பவியாது. இவ்வாறாக அச்சமுதாய வர்ணங்கட்கும் அர்த்தத்தினை போதிக்குந் தன்மைச் சம்பவியாது. ஏனெனின், வர்ணங்கள் இரண்டு க்ஷண மட்டும் நிலைத்துள்ளனவும், முறையாக உற்பன்னமுமாகின்றன. ஆகையால்

பதத்தை நிகழச்செய்யும் வர்ணங்களின் சமுதாயமே சம்பவியாது. சமுதாயத்தின் அசம்பவமுளதாக அப்பதத்தின் சித்தியே சம்பவியாது. பதத்தின் அசித்திபுண்டாக அப்பதத்தின் சிராவணப் பிரத்தியக்ஷமுண்டாகாது. எக்காரணத்தாலெனின். பிரத்தியக்ஷத்தில் விஷயத்திற்கும் காரணத்தன்மை யுண்டாகின்றது; விஷயமின்றி பிரத்தியக்ஷ முண்டாகாது. பதத்தின் அப்பிரத்தியக்ஷமுளதாக அப்பதத்தினது அர்த்தத்தின் ஸ்மரண முண்டாகாது. பதஜன்னிய பதார்த்த ஸ்மிருதியின்றி அவ்வர்த்தத்தின் சாப்த போதமும் சம்பவியாது. ஆகையால் அவ்வர்ணங்களால் வெளியாகிய வேறோர் பத ஸ்போடம் அங்கீகரிக்கப்படுவதாகும். அந்த நித்திய பத ஸ்போடத்தின் ஞானத்தாலேயே அவ்வர்த்தத்தின் ஸ்மரணம் கேட்ப்போருக் குண்டாகின்றது. அங்ஙனமே அந்த ஸ்போடத்தைக்கொண்டு அநேக வர்ணங்களில் பதம் ஒன்று, வாக்கியம் ஒன்று என்பதான ஏகத்வ வியவஹாரம் உண்டாகின்றது.

### ௩௩. வையாகரணிகளின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் வையாகரணிகளின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின், ஸ்போடவாதி வையாகரணியர்களோடு இதுவினவுதல் வேண்டும். கலச முதலிய பதங்களிலுள்ளதும், பதத்தினை நிகழச்செய்யும் எழுத்துக்களால் வெளியாகியதும், பதத்தின் அர்த்தத்தின்ஸ்மிருதியைச்செய்வதுமாகிய எப்பத ஸ்போடத்தை நீவிர் அங்கீகரிக்கின்றீரோ அப்பத ஸ்போடம் அக்கலச முதலிய பதங்களின் எல்லா எழுத்துக்களால் வெளியாகியதாகி அக்கலச முதலிய பதங்களின் கடாதி வடிவ அர்த்தத்தின் ஸ்மிருதியை உண்டாக்குகிறதா?, அல்லது அப்பதங்களின் மிக அற்ப ஏக வர்ணத்தால் வெளியாகியதாகி அப்பத ஸ்போடம் அப்பதத்தினது அர்த்தத்தின் ஸ்மிருதியை உண்டாக்குகிறதா?, அல்லது பதங்களின் எல்லா வர்ணங்களின் பிரத்தியக்ஷ ஞான வடிவ பிரகாசங்களால் வெளியாகியதாகி அப்பத ஸ்போடம் அப்பதத்தினது அர்த்தத்தின் ஸ்மிருதியை உண்டாக்குகின்றதா?. ஆண்டு முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் சம்பவியாது. ஏனெனின், இரு க்ஷணமட்டு மிருப்பதும், முறையாக உற்பன்னமாகியதுமாகிய கலச பதத்தை நிகழச்செய்யும் ககார முதலிய வர்ணங்கள் யாவையோ அவ்வெல்லாவர்ணங்களின் சமுதாயமே சம்பவியாது. அதாவது; அவ்வெல்லா எழுத்துக்கட்கு ஓர் க்ஷணத்தில் இருத்தல் சம்பவியாது. அக்கலச பதத்தை நிகழச்செய்யும் ககார முதலிய எல்லா எழுத்துக்களினது சமுதாயத்தின் அபாவமுளதாக அக்கலச பதத்திலுள்ள அப்பத ஸ்போடத்திற்கும் வெளியாதலுண்டாகாது. அப்பத ஸ்போடத்தின் அப்பிரத்தியக்ஷ முண்டாக கேட்ப்போனுக்கு அக்கலச பதத்தின் அர்த்த ஞானமே யுண்டாகாது. ஆகையால் அப்பத ஸ்போடம் அப்பதத்தை நிகழச்செய்யும் எல்லா எழுத்துக்களால் வெளியாகியதாகி அப்பதத்தினது அர்த்தத்தின் ஸ்மிருதியை யுண்டாக்குகிறதென்னும் முதற் பக்ஷம் சம்பவியாது. பதத்தின் மிக அற்ப ஏக வர்ணத்தால் வெளியாகியதாகிஅப்பதஸ்போடம் அப்பதத்தினது அர்த்தத்தின்ஸ்மிருதியை யுண்டாக்குகின்றதென்பதான இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும்சம்பவியாது; ஏனெனின் இவ்வாறு அங்கீகரிக்கின் ஓர்ககாரத்தின்உச்சரிப்

பானேயே அல்லது ஓர் லகாரத்தின் உச்சரிப்பானேயே அல்லது ஓர் சகாரத்தின் உச்சரிப்பானேயே கேழ்ப்போருக்கு கலச பதத்தினது ஸ்போடத்தின் பிரத்தியக்ஷமுண்டாகி அக்கலச பதத்தினது அர்த்தத்தின் போதம் உண்டாக வேண்டும். அங்ஙனம் காணக்கிடைப்பதின்று. அல்லது நமது மதத்தில் அக்ககார முதலிய வர்ணங்கட்கு அக்கலச வடிவ அர்த்தத்தின் ஞானத்தில் உபயோக மின்றும்; ஆனால் அப்பத ஸ்போடத்தின் போதத்திலேயே உபயோக மிருக்கிறது. அப்பத ஸ்போடத்தின் போதம் எப்பொழுது மிக அற்ப ஏக வர்ணத்தாலேயே உண்டாய் விடுகின்றதோ அப்பொழுது வேறு வர்ணம் வியர்த்தமேயாகும். ஆகையால் அவ்விரண்டாவது பக்ஷமும் சம்பவியாது. அக்கலச பதத்தை நிகழச்செய்வதாகிய ககார முதலிய சர்வ வர்ணங்களின் பிரத்தியக்ஷஞான வடிவ பிரகாசத்தால் வெளியாகியதாகிய அப்பத ஸ்போடம் அக்கலச பதத்தின் அர்த்தத்தின் ஸ்மிருதியை யுண்டாக்குகின்றதென்னும் மூன்றாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் அக்ககார முதலிய வர்ணம் இரு க்ஷணமட்டும் நிலைப்பதும், முறையாக உண்டாவது மாகின்ற தாகையால் அவ்வர்ணங்கட்கு ஓர் க்ஷணத்திலிருத்தலாகிய சமுதாயம் சம்பவியாதோ அங்ஙனமே அக்ககார முதலிய வர்ணங்களின் ஸ்ராவணப் பிரத்தியக்ஷ வடிவ பிரகாசங்களும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதும், முறையாக உற்பன்னமுமாகின்றது. ஆகையால் அந்த பிரகாசங்கட்கும் ஓர் க்ஷணத்தி லிருத்தல் வடிவ சமுதாயம் சம்பவியாது. கருத்திதுவாம்; விசிஷ்ட புத்தியில் விசேஷண ஞானத்திற்கு காரணத்தன்மை யுண்டாகின்றது. ஆகையால் முதற் க்ஷணத்தில் கத்வ ஜாதியின் நிர்விகல்பக பிரத்தியக்ஷம் உண்டாகும். இரண்டாவது க்ஷணத்தில் அக்கத்வ ஜாதி விசிஷ்ட ககாரத்தின் பிரத்தியக்ஷ முண்டாகும். மூன்றாவது க்ஷணத்தில் லத்வ ஜாதியின் நிர்விகல்பக பிரத்தியக்ஷ முண்டாகும். நான்காவது க்ஷணத்தில் அந்த லத்வ ஜாதி விசிஷ்ட லகாரத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அந்த லகாரத்தின் பிரத்தியக்ஷ க்ஷணத்திலேயே அக்ககாரத்தின் பிரத்தியக்ஷ ஞானம் நஷ்டமாய் விடும். இவ்வாறாக சகாரத்தின் பிரத்தியக்ஷ க்ஷணத்தில் அந்த லகாரத்தின் பிரத்தியக்ஷமும் நஷ்டமாய்விடும். இம் முறையாக அக்ககார முதலிய வர்ணங்களின் பிரகாசங்களின் சமுதாயம் சம்பவியாது. அந்த பிரகாசத்தினது சமுதாயத்தின் அசம்பவமுளதாக அப்பத ஸ்போடத்திற்கு வெளியாதலும் உண்டாகாது. அப்பதஸ்போடத்தின் அப்பிரத்தியக்ஷமுளதாக கேழ்ப்போருக்கு அக்கலச பதத்தால் அர்த்தத்தின் போதமே உண்டாகாது. ஆகையால் மூன்றாவது பக்ஷமும் சம்பவியாது. அல்லது அவ்வையாகரணிகள் இது கூறுகின்றனர்; பூர்வ பூர்வ வர்ணங்களின் அநுபவ ஜன்னிய பூர்வ பூர்வ வர்ணங்களை விஷயஞ் செய்யும் சமஸ்காரம் யாதோ அச்சம்ஸ்காரங்களோடு கூடிய அந்திய வர்ணத்தின் பிரத்தியக்ஷம் யாதோ அச்சமஸ்காரத்தோடு கூடிய பிரத்தியக்ஷமே அப்பத ஸ்போடத்தினை வெளியாக்குவதாம். ஆகையால் முற்கூறிய தோஷம் இப்பக்ஷத்தில் பிராப்தமாகாதென வையாகரணிகள் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின், எப்பூர்வ பூர்வ வர்ணங்களை விஷயஞ் செய்யும் சமஸ்காரத்தோடு கூடிய அந்திய வர்ணத்தின் பிரத்தியக்ஷத்

திற்கு நீவிர் அப்பதஸ்போடத்தினை வெளியாக்குந்தன்மையொப்புகின்றீரோ அப் பூர்வ பூர்வ வர்ணங்களை விஷயஞ் செய்யும் சமஸ்காரத்தோடு கூடிய அந்திய வர்ணங்களின் பிரத்தியக்ஷத்தானேயே அக்கலச முதலிய பதங்களின் ஸ்மிருதி யுண்டாகி அப்பதத்தினது அர்த்தத்தின் போதம் உண்டாய் விடுகின்றது. அதற்கிடையில் அப்பத ஸ்போடத்தினை கற்பித்தல் பயனின்மையாம். ஆகை யால் ஸ்போட வாதிகளின் மதம் அசங்கதமாம். சத்த நிரூபணம் முற்றிற்று.

## ௮௩௫. புத்தி நிரூபணம்.

புத்தியின் லக்ஷணம். ஆண்டு "ஜாநாமீத்ய நுவ்யவஸாயவிஷய வ்ருத்தி குணத்வவ்யாப்யஜாதிமத்த்வம் புத்தி:" (இ-ள்.) அறிகிறே னென்பதான அநுவியவசாய ஞானத்தின் விஷயத்தி லிருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் புத்தியெனப் படுகின்றது. ஆண்டு ஞானத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானத்தினை அநுவியவசாய மென்பர். அந்த அநுவியவசாய ஞானம் மன வடிவ இந்திரியத்தால் ஜன்னியமாவதால் மானசப் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது. ஆண்டு அறிகிறே னென்பதான அநுவியவசாய ஞானம் ஞான வடிவ புத்தியினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் ஞான வடிவ புத்தி அநுவியவசாய ஞானத்தின் விஷயமெனப்படுகின்றது. அத்தகைய புத்தியில் இருப்பதும், குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய புத்தித் தன்மை ஜாதி யாதோ அப்புத்தித்தன்மை ஜாதி சர்வ ஞான வடிவ புத்தியினு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இப்புத்தியின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஈண்டு ஞானம், புத்தி என்பதான இரு பதமும் ஒரு அர்த்தத்தின் வாசகமே யாம். அங்ஙனமே ஞானத்தன்மை, புத்தித்தன்மை யென்னு மிரண்டும் ஒன்றேயாம். ஆண்டு "குணத் தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது புத்தி" என இம்மாத்திரமே அப்புத்தியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அறிகிறேன் என்பதான அநுவியவசாய விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவ முதலிய ஜாதி களைக்கொண்டு உருவமுதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அறிகிறேன் என்பதான அநுவியவசாய விஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்கள் அறிகிறே னென்பதான அநுவியவசாயத்தின் விஷயமன்றாம்; புத்தி வடிவ ஞானமே அவ்வநுவியவசாயத்தின் விஷயமாம். ஆகையால் உருவ முதலிய ஜாதிகள் அறிகிறே னென்பதான அநுவியவசாயத்தின் விஷயத்தில் இருப்பனவன்றாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "அறிகிறேன் என்பதான அநுவியவசாய விஷயத்திலிருக்கும் ஜாதியுடையது புத்தி" என இம்மாத்திரமே அப்புத்தியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய சர்வ குணங்களிலும்,

சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் அநுவியவசாயத்தின் விஷயமாகிய புத்தியில் எங்ஙனம் அப்புத்தித்தன்மை ஜாதி இருக்கின்றதோ அங்ஙனமே அக்குணத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியு மிருக்கின்றன. அக்குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய சர்வ குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அப்புத்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அல்லது அறிகிறேனென்பதான அநுவியவசாயம் எங்ஙனம் அந்த ஞான வடிவ புத்தியினை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனமே அப்புத்தியின் ஆசிரயமாகிய ஆத்மாவினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அப்புத்தியினைப் போன்று ஆத்மாவும் அறிகிறேனென்பதான அநுவியவசாயத்தின் விஷயமெனப்படுகின்றது. அவ்வாத்மாவில் ஆத்மத்தன்மை, திரவியத் தன்மை, சத்தா என்பதான மூன்று ஜாதிக ளிருக்கின்றன. ஆண்டு ஆத்மத்தன்மை ஜாதியைக் கொண்டு ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவி முதலிய சர்வ திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். சத்தா ஜாதியைக் கொண்டு திரவியம், குணம், கர்மங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னு மிது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு குணத்தன்மை, சத்தா, ஆத்மத்தன்மை, திரவியத்தன்மையா மிந்நான்கு ஜாதிகளும் அக்குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய மன்றாம். ஆகையால் அக்குணத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு அக்குண முதலியவைகளில் புத்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜாநாமீத்யநுவ்யவஸாயவிஷயகுணோ வா ஜ்ஞானம்" (இ-ள்.) அறிகிறேனென்பதான அநுவியவசாயத்திற்கு எது விஷயமும், குணமுமாமோ அது புத்தியெனப்படுகின்றது. இவ்வாறாய புத்தியின் லக்ஷணங் கூறின் ஆத்மாவில் குண வடிவத் தன்மையின் அபாவத்தால் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. என்றாலும் ஸ்மரணம், அநுவியவசாயமுதலிய ஞானங்களுக்குப்பின் அந்த ஸ்மரணம், அநுவியவசாய முதலிய ஞானங்களை விஷயஞ் செய்வதாகிய அநுவியவசாய ஞானம் உண்டாவதன்றாம். அந்த ஸ்மரணம், அநுவியவசாய முதலிய ஞானங்களில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாம். அங்ஙனமே நிர்விகல்பக ஞானத்திற்கு அதீந்திரியத் தன்மையாவதால் அம்மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுவியவசாயத்தின் விஷயத்தன்மையே அன்றாம். அந்த நிர்விகல்பக ஞானத்திலுங் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியேயுண்டாகும் அந்த அவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு முற்கூறிய புத்தித் தன்மை ஜாதியுள்ள புத்தியின் லக்ஷணங் கூறப்பட்டது. அப்புத்தித்தன்மை ஜாதி அந்த ஸ்மரணம், அநுவியவசாய முதலிய ஞானங்களிலும், நிர்விகல்பக ஞானத்திலு மிருக்கின்றது. ஆகையால் அவைகளில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

### ௫௱௬௰௬. புத்தி குணத்தின் ஆசிரயத்தினதும், சர்வ வியவஹாரங்களின் ஏதுத்தன்மையினதும் வர்ணனம்.

அங்ஙனமாய புத்தியாகிய குணம் ஆத்மா வடிவ திரவிய மொன்றினிடத்தே சமவாய சம்பந்தமாயிருக்கின்றது. அவ்வாத்மாவினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் புத்தியாகிய குணம் சமவாய சம்பந்தத்தாலிருப்பதன்று. இந்த ஞான வடிவ புத்தியே பிரவிர்த்தி, நிவிர்த்தி, ஆஹாரம், விஹார முதலிய சர்வ வியவஹாரங்கட்கும் ஏதுவாகின்றது. அப்புத்தியின்றியாதோர் வியவஹாரமும் சித்தியாது.

### ௫௱௬௰௭. நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டால் புத்தியின் இருவித வேற்றுமை.

அப்புத்தியாகிய குணம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு ஈசுவராத்மாவின் புத்தியோ நித்திய மெனப்படுகின்றது. ஈசுவரனது புத்தியோ ஏகமும், பிரத்தியக்ஷ வடிவமும், சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதுமாகின்றது. இக்காரணத்தானேயே ஈசுவரனை சர்வஞ்ஞனென்பர். ஜீவாத்மாவின் புத்தியோ உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமெனப்படுகின்றது. ஆண்டு ஜீவாத்மாவின் அநித்திய புத்திக்கு ஜீவாத்மாவோ சமவாயி காரணமாகின்றது. அஜ்ஜீவாத்மாவினோடுண்டாம் மனதின் சையோக சம்பந்தம் அப்புத்திக்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. அவ்வநித்திய புத்தியின் நாசம் அப்புத்திக்கு பின்னர் உண்டாம் அஜ்ஜீவாத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்களாலேயே யுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய சத்த குணத்தினைப் போன்று இஜ்ஜீவாத்மாவின் புத்தியும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதேயாகின்றது.

### ௫௱௬௰௮. அநுபவம், ஸ்மிருதி என்னும் வேறுபாட்டால் அநித்திய புத்தியின் இருவித வேற்றுமை.

அஜ்ஜீவாத்மாவின் அநித்திய புத்தி அநுபவம், ஸ்மிருதி என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு அநுபவம், ஸ்மிருதியாமிவ்விருவகை புத்தியும், யதார்த்தம், அயதார்த்தம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு முதலாவது யதார்த்த அநுபவமோ பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். இந்நான்கில் முதலாவது பிரத்தியக்ஷமோ கிராணஜம், ராசனம், சாக்ஷுஷம், துவாசம், சிராவணம், மானசம் என்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். அவ்வறுவகை பிரத்தியக்ஷமே நிர்விகல்பகம், சவிகல்பகம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். அங்ஙனமே லௌகிகம், அலௌகிகம் என்னும்வேறுபாட்டால் மீண்டுமிருவகைத்தாம். அலௌகிக பிரத்தியக்ஷமும் சாமான்னிய லக்ஷண பிரத்தியாசத்தி (சம்பந்த) ஜன்னியம், ஞானலக்ஷண பிரத்தியாசத்தி ஜன்னியம், யோகஜ தர்ம லக்ஷண பிரத்தியாசத்தி ஜன்னியம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். மற்றைய அயதார்த்த அநுபவமோ சம்சயம், விபர்யயம், தர்க்கம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இப்புத்தி

யினது அநுபவம், ஸ்மிருதி முதலிய பேதங்களின் விஸ்தார நிரூபணத்தை பின்னர் ஆறுவது பரிச்சேதத்திற் கூறுவாம். ஆகையால் ஈண்டு சுருக்கமாய் நிரூபிக்கப்பட்டன. புத்தி நிரூபணம் முற்றிற்று.

அ௱௬௯. சுக நிரூபணம்.

சுகத்தின் லக்ஷணம். ஈண்டு "ஸர்வேஷாமநுகூலதயாவேத நீயம் ஸுகம்" (இ-ள்.) சர்வ பிராணிகட்கும் அநுகூலத் தன்மை வடிவத்தால் இஷ்டத்வவடிவமாக ஞானத்திற்கு விஷயமாவதுயாதோ அதாவது; இஷ்ட வடிவமறிந்து சர்வபிராணிகளும் இது எமக்குப் பிராப்தமாருக என்பதான எதனது பிராப்தியை இச்சிக்கின்றனரோ அது சுகமெனப் படுகின்றது. ஈண்டு சர்வ பிராணிகட்கும் அச்சுகத்தில் அநுகூலத் தன்மை புத்தியே யுண்டாகின்றது. பிராணிகள் ஒருவருக்கும் அச்சுகத்தில் பிரதிகூலத்தன்மை புத்தி யுண்டாகிறதில்லை. இச்சுகம் எமக்குப் பிராப்தமாருக என்பதாக சர்வ பிராணிகளும் அச்சுகத்தின் பிராப்தியை இச்சிக்கின்றனர். ஆகையால் கூறிய இச்சுகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை:—பிறர் திரவியம், பிறர் ஸ்திரீயின் உபயோக முதலியவைகளால் ஜன்னியமாகும் சுகத்தில் ஆன்றோர்கட்கு வெறுப்பே உண்டாகின்றது. அச்சுகத்தில் அநுகூல புத்தியும், அச்சுகத்தின் பிராப்தியில் இச்சையும் ஆன்றோர்கட்கு உண்டாகிறதில்லை. ஆகையால் பிறர் திரவியம், பிறர் ஸ்திரீயின் உபயோகாதி ஜன்னிய சுகத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகுமென்பதான சங்கை யுண்டாக இனி அச்சுகத்திற்கு வேறு லக்ஷணத்தைக் கூறுவாம்,

அ௱௭௰. சுகத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"இஷ்டஸாதநதா ஜ்ஞாநஜந்யஜந்யேச்சா விஷயகுணஃ ஸுகம்" (இ-ள்.) இது எமது இஷ்டத்தின் சாதனமாமென்பதான இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தால் அஜன்னியமும், ஜன்னியமுமாகிய இச்சைக்கு எது விஷயமும், குணமுமாமோ அது சுகமெனப்படுகின்றது. எங்ஙனம் சத்தம், பரிச முதலிய விஷயங்கள் சுக வடிவ இஷ்டத்தின் சாதனமாகின்றனவோ அங்ஙனம் அச்சுகம்வேறெவ்விஷ்டத்தின் சாதனமாகாது. ஆனால் அச்சுகம் பல வடிவமாவதால் தானே இஷ்டமாம். இத்தகைய சுகத்தில் உலகவர்கட்கு இச்சையுண்டாவது யாதோ அவ்விச்சை கேவலம் அச்சுக மாத்திரத்தின் ஞானத்தாலேயே ஜன்னியமாகின்றது. இஷ்ட சாதனத்தன்மையின் ஞானத்தால் ஜன்னியமாவதன்று. அச்சுக வடிவ இஷ்டத்திற்கு சத்தம், பரிசம் முதலிய விஷய வடிவ சாதனங்கள் யாவையோ அச்சாதனங்களின் இச்சை இச்சத்த, பரிச முதலியவிஷயம் எமது சுகவடிவ இஷ்டத்தின் சாதனமாமென்பதான இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தாலேயே ஜன்னியமாகின்றது. ஆகையால் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் அஜன்னியமா யித்தகைய சுகம் எமக்கு பிராப்தமாருக என்பதான ஜன்னிய இச்சை யாதோ அவ்விச்சையின் விஷயமாகியது அச்சுகமாம். அங்ஙனமே அச்சுகம் குண வடிவமுமாம். ஆகையால் கூறிய இச்சுகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஈண்டு "ஜன்னியமாகிய இச்

சைக்கு விஷயமாகும்குணம்சுகம்'' என இம்மாத்திரமே அச்சுகத்தின் லக்ஷண மாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "இஷ்ட சாதனத்தன்மை ஞான அஜன்னியம்'' என்னும் பதங்கூறுவிடின் அச்சுகத்தின்சாதனமாகிய சத்தம், பரிசம், உருவம், ரசம், கந்தம் முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அச்சுககுணம் ஜன்னிய இச்சைக்கு விஷயமாகின்றதோ அங்ஙனமே அச்சுகத்தின்சாதனமாகிய சத்தம், பரிச முதலியனவும், ஜன்னிய இச்சையின் விஷயமேயாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "இஷ்ட சாதனத்தன்மையின் ஞானத்தால் அஜன்னியம்'' என்னுமிது அவ்விச்சைக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு அச்சத்தத்தின் சாதனமாகிய சத்தம், பரிச முதலியனவைகளில் உலகவருக்குண்டாம் இச்சை யாதோ அது இச்சத்தம், பரிச முதலியன எமது சுக வடிவ சாதனமாமென்பதான இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் அச்சத்தம், பரிச முதலிய சாதனங்களின் இச்சை அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் அஜன்னியமன்றும்; ஜன்னியமாம். ஆகையால் அச்சத்தம், பரிச முதலிய சுக சாதனங்களில் அச்சுகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "இஷ்ட சாதனத்தன்மை ஞான அஜன்னிய இச்சையின் விஷயமாகிய குணம் சுகம்'' என இம்மாத்திரமே அச்சுகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜன்னியம்'' என்னும் பதங் கூறுவிடின் ஈசுவரனது இச்சையின் விஷயமாகிய உருவ முதலிய குணங்களில் அச்சுகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், அவ்வீசுவரனது இச்சை நித்தியமா மாகையால் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் அஜன்னியமேயாம். அவ்வீசுவரனது இச்சை எல்லா பதார்த்தங்களை விஷயஞ் செய்கின்றது. ஆகையால் உருவ முதலிய குணங்களும் அவ்வீசுவரனது இச்சையின் விஷயமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அவ்விச்சைக்கு "ஜன்னியம்'' என்னும் இவ்விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஈசுவரனது இச்சை ஜன்னியமன்றும்; நித்தியமாம். ஆகையால் அவ்வீசுவரனது இச்சையைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "இஷ்ட சாதனத்தன்மை ஞான அஜன்னிய, ஜன்னிய இச்சையின் விஷயம்சுகம்'' என இம்மாத்திரமே அச்சுகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணம்'' என்னும் பதங் கூறுவிடின் துக்கத்தின் அபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அச்சுகம் பல வடிவமாவதால் தானே இஷ்ட வடிவமாமோ அங்ஙனமே துக்காபாவமும், பல வடிவ மாவதால் தானே இஷ்ட வடிவமாம். வேறொன்றும் இஷ்டத்தின் சாதன வடிவமன்றும். ஆகையால் அச்சுகத்தின் இச்சையினைப் போன்று அத்துக்கா பாவத்தின் இச்சையும் அவ்விஷ்ட சாதனத் தன்மை ஞானத்தால் அஜன்னியமே யாகின்றது. அத்தகைய இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தால் அஜன்னிய, ஜன்னிய இச்சையின் விஷயம் துக்கா பாவமுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்தி செய்யும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்'' என்னும் பதங் கூறப்பட்டது.

ஆண்டு துக்கா பாவத்தில் குண வடிவத் தன்மை யின்றும். ஆகையால் துக்கா பாவத்தில் சுகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

அசக. சுகத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"சுஹம்ஸுஷீத்யாநுஷவ விஷயகுணஃ ஸுவம்" (இ-ள்.) யான் சுகிக்கின்றே னென்பதான மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுபவத்திற்கு எது விஷயமும், குண வடிவுமாகின்றதோ அது சுகமெனப்படுகின்றது. ஆண்டு யான் சுகிக்கின்றே னென்பதான அநுபவம் அச்சுக குணத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் இச்சுகத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறாவிடின் ஆத்மாவினும், ஆத்மத்தன்மை ஜாதியினும், சுகத்தன்மை ஜாதியினும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எனெனின், எங்ஙனம் அச்சுகம் அவ்வநுபவத்தின் விஷயமோ அங்ஙனமே அவ்வாத்மாவும், ஆத்மத்தன்மை ஜாதியும், சுகத் தன்மை ஜாதியும் அவ்வநுபவத்தின் விஷயமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மா, ஆத்மத்தன்மை ஜாதி, சுகத்தன்மை ஜாதியா மூன்றில் அக்குண வடிவ மின்றும். ஆகையால் அவ்வாத்மா முதலியவைகளில் அச்சுகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

அசஉ. சுகத்தின் ஆசிரயத்தினதும், உற்பத்தி விநாசத்தினதும் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணங்களால் லக்ஷித அச்சுக குணம் கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஜீவாத்மாவினும் வேறான பிருதிவி முதலியவைகளில் அச்சுக குணம் சமவாய சம்பந்தத்தால் இருப்பதன்று. ஆண்டு அச்சுக குணம் உற்பத்தி, விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது. யாதோர் சுகமும் நித்தியமாவதின்று. ஜீவாத்மாவோ சுகத்திற்கு சமவாயி காரணமாகின்றது. ஜீவாத்மாவினோடுண்டாம் மனதின் சையோக சம்பந்தம் அசமவாயி காரணமாகின்றது. தர்மமும், சத்தம், பரிச முதலிய விஷயங்களும், தேசம், கால முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. அச்சுக குணமும் அவ்வநித்திய புத்தியினைப் போன்று தனக்குப் பின்னுண்டாவதாகிய ஆத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்களாலேயே நாசமாகின்றது. ஆகையால் அவ்வநித்திய புத்தியினைப் போன்று சுககுணமும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதேயாகின்றது. ஆண்டு எல்லா பிராணிக்கும் தமது தமது ஆத்மாவின் சுகமோ யான் சுகி என்பதான மானசப் பிரத்தியக்ஷத்தானேயே அறியப்படுகின்றது. வேறு ஜீவாத்மாவின் சுகம் வேறு ஜீவாத்மாவின் மனதால் பிரத்தியக்ஷமாகிறதில்லை. ஆனால் வேறு ஜீவாத்மாவினது சுகத்தின் பிரசன்னத்தன்மை ஹேதுவால் வேறு ஜீவாத்மாவிற்கு அவைகளது சுகத்தின் அநுமான முண்டாகின்றது.

அசங. சுகத்தின் நால்வகைத்தாய வேற்றுமை வர்ணனம்.

கூறிய அச்சுக குணம் வைஷயிகம், அபிமானிகம், மனோரதிகம், ஆப்பியாசிகம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். ஆண்டு சத்தம்,

பரிசம் முதலிய விஷயங்களின் சாக்ஷாத்காரத்தால் ஜன்னியமாம் சுகம் வைஷயிக சுகமெனப்படுகின்றது. இராஜ்ய அதிபதியினதும், பாண்டித்யத்தினது மாகிய கர்வ முதலியவைகளால் ஜன்னியமாகும் சுகம், அபிமானிக சுகமெனப்படுகின்றது. விஷயங்களின் தியானத்தால் ஜன்னியமாகும் சுகம் மனோரதிக சுகமெனப்படுகின்றது. சூரியன் முதலியவைகளின் நமஸ்காரத்தாலும், ஆயாச முதலியவைகளாலும் ஜன்னியமாகிய சுகம் ஆப்பியாசிக சுகமெனப்படுகின்றது.

அசச. ஈசுவரனிடத்தில் நித்திய சுகத்தை வொப்புவோராகிய நவீன நையாயிகர்களின் மத வர்ணனம்.

ஈண்டு நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் புத்தியாகிய குணம் நித்திய, அநித்திய மென்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றதோ அங்ஙனமே அச்சுக குணமும் நித்திய, அநித்திய மெனனும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு “ நித்யவிஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம” (இ-ள்.) பிரம்மமெனப் பெயரிய ஈசுவரன் நித்திய ஞான முடையவனும், நித்திய ஆநந்தமுடையவனுமாம். என்பதான இச்சுருதி ஈசுவரனிடத்து நித்திய ஆநந்தத்தினைக் கூறி யிருக்கின்றது. சுகத்தினையே ஆநந்தமென்பர்; ஆகையால் அவ்வீசுவரனிடத்தோ நித்திய சுக மிருக்கின்றது. ஜீவாத்மாவிடத்தில் அநித்திய சுக மிருக்கின்றது. சுக நிரூபணம் முற்றிற்று.

அசரு. துக்க நிரூபணம்.

துக்கத்தின் லக்ஷணம். ஆண்டு “ ஸர்வேஷாம்ப்ரதிகூலவேதநீயம் து:கம்” (இ-ள்.) எல்லாப் பிராணிகட்கும் பிரதிகூலத்தன்மை வடிவத்தால் அநிஷ்டத்தன்மை வடிவமாக ஞானத்தின் விஷயமாவது யாதோ அதாவது; இது எமக்குப் பிராப்தமாக வேண்டா மென்பதான அநிஷ்டத்தன்மை வடிவத்தால் சர்வ பிராணிகளின் ஞானத்திற்கு எது விஷயமாகின்றதோ அது துக்கமெனப்படுகின்றது. ஆண்டு துக்கத்தில் ஒரு பிராணிக்கும் இஷ்ட புத்தியுண்டாவதின்று; ஆனல் எல்லாபிராணிகட்கும் துக்கத்தில் இது எமக்கு பிராப்தமாகாததாகுக என்பதான அநிஷ்ட புத்தியே யுண்டாகின்றது. ஆகையால் கூறிய இத்துக்கத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

சங்கை :— தபத்தைச் செய்வோராகிய முனிவர்கட்கு தபத்தால் ஜன்னிய துக்கத்தில் இத்துக்கம் எமக்கு பிராப்தமாகாததாகுக என்பதான பிரதிகூலத்தன்மை புத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் கிருச்சர சாந்த்ராயண விரதாதி வடிவ தபத்தால் ஜன்னிய துக்கத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகு மென்பதான சங்கை யுண்டாக துக்கத்திற்கு வேறு லக்ஷணங் கூறுவாம்.

அசசு. துக்கத்தின் இரண்டாவது லக்ஷணம்.

“த்வேஷவிஷயதாவிஷயஜ்ஞாநஜந்யத்வேஷவிஷயத்வம் து:கம்” (இ-ள்.) துவிஷ்ட சாதனத் தன்மையினை விஷயஞ் செய்வதாகிய ஜன்னிய ஞானத்தால் அஜன்னிய துவேஷம் யாதோ அத்துவேஷத்திற்கு எது

விஷயமும், குணமுமாமோ அது துக்கமெனப் படுகின்றது. ஆண்டு துவேஷத்திற்கு எது விஷயமாகின்றதோ அது துவிஷ்டமெனப்படுகின்றது. துக்கத்தில் சர்வ பிராணிகட்கும் துவேஷ முண்டாகின்ற தாகையால் அத்துக்கம் துவிஷ்டமெனப்படுகின்றது. இத்தகைய துவிஷ்ட துக்கத்தின் சாதனத்தன்மை சிம்ஹம், சர்பம் முதலியவைகளிலும் ஜ்வரம், சூலை முதலிய வியாதிகளிலு மிருக்கின்றது. ஆகையால் அச்சிம்ஹ முதலியவைகளில் உலகவர்கட்குண்டாம் துவேஷம் யாதோ அது துவிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் அச்சிம்ஹ, சர்ப முதலியவைகளை விஷயஞ் செய்யும் துவேஷம் அத்துவிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னியமெனப்படும். அத்துக்கம் வேறோர் துவிஷ்டத்தின் சாதனமன்று மாகையால் அத்துக்கத்தில் உலகவர்கட்குண்டாம் துவேஷம் யாதோ அத்துக்கத்தை விஷயஞ் செய்யும் துவேஷம் அத்துவிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னியமாகிறதில்லை. ஆனால் அத்துக்கத்தின் ஞான மாத்திரத்தினாலேயே அத்துக்கத்தில் துவேஷமுண்டாகின்றது. ஆகையால் அத்துக்கத்தை விஷயஞ் செய்யும் துவேஷம் அத்துவிஷ்ட சாதனத் தன்மையை விஷயஞ் செய்யும் ஞானத்தால் அஜன்னியமெனப்படுகின்றது. அத்தகைய துவிஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் ஜன்னிய ஞானத்தால் அஜன்னிய துவேஷத்திற்கு விஷயமும், குண வடிவமும் அத்துக்கமேயாம். ஆகையால் கூறிய இத்துக்கத்தின்லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "துவேஷத்தின் விஷயமாகிய குணம் துக்கம்" என இம்மாத்திரமே அத்துக்கத்தின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "துவிஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் ஜன்னிய ஞானத்தால் அஜன்னியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் துக்கத்தின் சாதன வடிவ தீநாற்றம், கைப்பு ரசமுதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அத்துக்கம் உலகவர்களின் துவேஷத்திற்கு விஷயமாகின்றதோ அங்ஙனமே அத்துக்கத்தின் சாதனமாகிய தீநாற்றம், கைப்புரச முதலியனவும் உலகவரது துவேஷத்தின் விஷயமேயாகின்றது. அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "துவிஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் ஜன்னிய ஞானத்தால்அஜன்னியமும்" என்னுமிது அத்துவேஷத்திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு அத்துக்கத்தின் சாதனங்களில் எது துவேஷமாகின்றதோ அத்துவேஷம் அத்துவிஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் ஜன்னிய ஞானத்தால் அஜன்னியமாவதின்று. ஆனால் இத்தீநாற்றம், கைப்பு ரச முதலியன எமது துக்கத்தின் சாதனமா மென்பதான துவிஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் ஜன்னிய ஞானத்தால் ஜன்னியமேயாகின்றது. ஆகையால் அத்தீநாற்றம், கைப்பு ரச முதலிய துக்கத்தின் சாதனங்களில் அத்துக்கத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் துவிஷ்ட சாதனத் தன்மையை விஷயஞ் செய்யும் ஞானத்திற்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறாவிடின் கூறிய அந்த லக்ஷணத்தில் அசம்பவ தோஷத்தின் அடைவு உண்டாம். ஏனெனின், ஈசுவரனது ஞானம் ஜகத் யாவற்றையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அது

துவிஷ்ட சாதனத் தன்மையினையும் விஷயஞ் செய்கின்றது. அவ்வீசுவரனது ஞானம் காரிய மாத்திரத்தைக் குறித்து நிமித்த காரணமா மாகையால் அத் துக்கத்தை விஷயஞ் செய்யும் துவேஷத்திற்கும் அவ்வீசுவரனது ஞானம் நிமித்த காரணமாம். ஆகையால் துக்கத்தை விஷயஞ் செய்யும் யாதோர் துவேஷமும் அத்துவிஷ்ட சாதனத் தன்மையினை விஷயஞ் செய்யும் ஞானத் தால் அஜன்னியமன்றும். ஆனால் அவ்வெல்லா துவேஷங்களும் அத்துவிஷ்ட சாதனத் தன்மையினை விஷயஞ்செய்யும் ஈசுவரனது ஞானத்தால் ஜன்னியமே யாம். ஆகையால் கூறிய அத்துக்கத்தின் லக்ஷணம் அத்துக்க வடிவ லக்ஷியத் தில் இராததாவதால் அசம்பவ தோஷ முடையதேயாகும். அவ்வசம்பவ தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அத்துவிஷ்ட சாதனத் தன்மையினை விஷயஞ் செய்யும் ஞானத்திற்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறப் பட்டது. ஆண்டு அவ்வீசுவரனது ஞானம் ஜன்னியமாவதன்று; நித்தியமா கின்றது. ஆகையால் அந்த லக்ஷணத்தில் அசம்பவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறுவிடின் அத்துக்கத்தின் லக்ஷணத்திற்கு சுகத்தின் அபாவத்தில் அதி வியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அத்துக்கத்தில் உலகவர்கட்கு துவேஷ மிருக்கின்றதோ அங்ஙனமே அச்சுகத்தின் அபாவத்திலும் உலகவர் கட்கு துவேஷமே யிருக்கின்றது. எங்ஙனம் அத்துக்கம் வேறோர் துவிஷ் டத்தின்சாதனமன்றோ அங்ஙனமே அச்சுகாபாவமும் வேறோர் துவிஷ்டத்தின் சாதனமன்றும். ஆகையால் அத்துக்கத்தின் துவேஷத்தினைப் போன்று அச் சுகா பாவத்தை விஷயஞ்செய்யும் துவேஷமும் அத்துவிஷ்ட சாதனத்தன்மை யினை விஷயஞ்செய்யும் ஜன்னிய ஞானத்தால் அஜன்னியமேயாம். அவ்வதி வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சுகாபாவத்தில் குண வடிவத் தன்மை யின்றும். ஆகையால் அச்சுகாபாவத்தில் அத்துக்கத்தின் லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௮௬௭. சுகத்தின் அபாவத்தில் துக்க வடிவத் தன்மையின் கண்டனம்.

சங்கை :—சுகத்தின் அபாவம் யாதோ அச்சுகாபாவமே துக்க வடிவமாக ஏன் ஆகக் கூடாது?. அச்சுகாபாவத்தினும் துக்கத்தினை வேறாக வொப்புவது பயனின்மையாம்.

சமாதானம் :—அச்சுகத்தின் அபாவத்திற்கு துக்க வடிவத் தன்மை சம்பவியாது. ஏனெனின், எவ்வாதி சுகத்தின் அபாவத்தினையே துக்க வடிவ மாக வொப்பினனோ அவ்வாதியோடு இது வினவுதல் வேண்டும். அச்சுகத்தி னது பிராகபாவத்தினை துக்கமென்பதா? அல்லது அச்சுகத்தினது அந் நியோன்னியா பாவத்தினை துக்கமென்பதா? அல்லது அச்சுகத்தினது அத் தியந்தாபாவத்தினை துக்கமென்பதா? அல்லது அச்சுகத்தினது பிரத்துவம்சா பாவத்தினை துக்கமென்பதா?. ஆண்டு முதலாவது பிராகபாவ பக்ஷத்தினை அங்கீகரிக்கின் ஜீவாத்மாவிடத்து சுகத்தி னிருப்புளதாயினும் பின்னர் உண்

டாவதாகிய சுகங்களின் பிராகபாவ மிருக்கின்றது. பின்னருண்டாவதாகிய சுகத்தின் பிராகபாவத்தைக்கொண்டு அச்சுககாலத்திலும் யான் துக்கி என்பதான தோற்றம் உண்டாக வேண்டும். அச்சுகத்தி னிருப்பு காலத்தில் யான் துக்கி என்பதான தோற்றம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் முதலாவது பக்ஷம் சம்பவியாது. மற்றைய அந்யோன்னியாபாவ பக்ஷத்தை அங்கீகரிக்கினும் அச்சுகத்தி னிருப்பு காலத்தில் யான் துக்கி என்பதான தோற்றமுண்டாக வேண்டும். ஏனெனின் எஜ்ஜீவாத்மாவில் சுகமிருக்கின்றதோ அஜ்ஜீவாத்மாவில் சுகத்தின் பேத வடிவ அந்நியோன்னியா பாவமுமிருக்கின்றது. அச்சுகத்தின் அந்நியோன்னியாபாவத்தைக்கொண்டுஅச்சுகத்தினிருப்புகாலத்தில் யான் துக்கி என்பதான தோற்றம் உண்டாக வேண்டும். அச்சுகத்தி னிருப்புளதாக யான் துக்கி என்பதான தோற்றம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை; ஆகையால் அந்நியோன்னியா பாவ பக்ஷமும் சம்பவியாது. மூன்றுவது அத்தியந்தாபாவ பக்ஷத்தை அங்கீகரிக்கின் கட முதலிய ஜட வஸ்துக்களில் எக்காலத்திலும் சுகம் உண்டாவதின்று. ஆனல் கட முதலியவைகளில் சுகத்தின் அத்தியந்தாபாவமே இருக்கின்றது. ஆகையால் கட முதலியவைகளிலும் துக்கம் தோற்றவேண்டும். கட முதலியவைகளில் எதற்கும் துக்கத் தோற்றமுண்டாகிறதில்லை. ஆகையால் மூன்றுவது அத்தியந்தாபாவ பக்ஷமும் சம்பவியாது. நான்காவது பிரத்துவம்சாபாவபக்ஷத்தை அங்கீகரிக்கின் முற்கூறிய கட முதலியவைகளில் துக்கத்தின் தோற்ற வடிவ தோஷம் பிராப்தமாகாது. ஏனெனின், பிராகபாவம், பிரத்துவம்சாபாவமுமா மிரண்டு அபாவங்களும் தமது பிரதியோகியின் அதிகரணத்திலேயே இருக்கின்றன; வேறென்றி லிருப்பனவன்று. ஆண்டு கட முதலியவைகளில் சுகம் இருப்பதின்று; ஆகையால் கட முதலியவைகளில் சுகத்தின் துவம்சமும் இராது. ஆத்மாவிடத்திலேயே சுகமிருக்கின்றது; அவ்வாத்மாவிடத்திலேயே சுகத்தின் துவம்சமிருக்கும்; என்றலும் அச்சுகத்தின் துவம்சத்தினை துக்க வடிவமாகவொப்பின் ஸ்வர்க்க புருஷர்கட்கும் யான் துக்கி என்பதான துக்கத்தின் அநுபவம் உண்டாக வேண்டும். ஏனெனின், சொர்க்க புருஷர்களிடத்தும் முன்னர் உண்டாகிய சுகத்தின் துவம்சம் இருப்பதேயாம். எக்காரணத்தாலெனின் அத்துவம்சம் அநந்தமாம். அந்த சொர்க்க புருஷர்கட்கு யான் துக்கி என்பதான துக்கத்தின் அநுபவம் உண்டாவதின்று. ஆகையால் நான்காவது துவம்ச பக்ஷமும் சம்பவியாது. ஆகையால் துக்கம் சுகத்தின் அபாவ வடிவமன்று. ஆனல் எங்ஙனம் அச்சுகம் வேறு குணமாமோ அங்ஙனமே அத்துக்கமும் வேறு குணமாம்.

## ௫௪௩. துக்கத்தின் மூன்றுவது லக்ஷணம்.

"ஸஹம்‌ து–கீதி ப்ரதீதி விஷய குண த்வம்" (இ-ள்.) யான் துக்கி என்பதான அநுபவத்திற்கு எது விஷயமும், குணமுமாமோ அது துக்கமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங்கூறுவிடின் ஆத்மா, ஆத்மத்தன்மைஜாதி, துக்கத்தன்மைஜாதியா மிம்மூன்றில் துக்கத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், யான் துக்கி

என்பதான அநுபவம் எங்ஙனம் துக்கத்தினை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனம் ஆத்மாவினையும், ஆத்மத்தன்மை ஜாதியினையும், துக்கத்தன்மை ஜாதியினையும் விஷயஞ் செய்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வாத்மாவிலும், ஆத்மத்தன்மைஜாதியிலும், துக்கத்தன்மைஜாதியிலும் குண வடிவத்தன்மையின்றாம். ஆகையால் அவைகளிடத்து துக்கத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௫௪௯. துக்கத்தின் ஆசிரயத்தினதும், உற்பத்தி விநாசத்தினதும் வர்ணனம்.

இவ்வாறாக மூன்று லக்ஷணங்களால் லக்ஷித துக்க குணம் கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஜீவாத்மாவினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் துக்க குணம் இருப்பதன்று. துக்க குணம் உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது. யாதோர் துக்கமும் நித்தியமாவதன்று. ஆண்டு துக்க குணத்திற்கு ஜீவாத்மாவோ சமவாயி காரணமாகின்றது. ஜீவாத்மாவினோடு மனதிற்குண்டாம் சையோகம் அசமவாயி காரணமாகின்றது. அதர்மமும், சிம்ஹம், சர்பம் முதலியனவும், ஜ்வரம், சூலை முதலியனவும், சீதம், ஆதப முதலியனவும், தேசம், கால முதலியனவுமாம் யாவும் துக்கத்திற்கு நிமித்த காரணமாகின்றன. இத்துக்க குணமும் விபு ஆத்மாவின் யோக்கிய விசேஷகுணமாவதால் முற்கூறிய புத்தி, சுகத்தினைப் போன்று தனக்குப் பின்னுண்டாவதாகிய ஆத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்களாலேயே நாசமாகின்றது. ஆகையால் புத்தி, சுக குணத்தினைப் போன்று இத்துக்க குணமும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதேயாகின்றது.

## ௫௫௦. பிரத்தியக்ஷ அநுமானங்களால் தன் துக்கத்தினதும், வேறு துக்கத்தினதும் சித்தி.

எல்லாப் பிராணிகட்கும் தமது தமது ஆத்மாவின் துக்கமோ யான் துக்கி என்பதான மானசப்பிரத்தியக்ஷத்தினாலேயே சித்தமாம். வேறு ஜீவாத்மாவின் துக்கம் வேறு ஜீவாத்மாவிற்கு மனதால் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் அஜ்ஜீவாத்மாவின் சுகத்தினது மலினத்தன்மை வடிவ ஹேதுவால் அவற்றினது துக்கத்தின் அநுமான முண்டாகின்றது. எங்ஙனம் முற்கூறிய சுக குணம் வைஷயிகம், அபிமானிகம், மனோரதிகம், ஆப்பியாசிகம் என்னும் வேறுபாட்டால் நால்வகை யாகின்றதோ அங்ஙனமே இத்துக்க குணமும் நால்வகையாகின்றது, துக்க நிரூபணம் முற்றிற்று.

## ௫௫௧. இச்சை குண நிரூபணம்.

இச்சை குண லக்ஷணம். " ஊூீதுுகூ௬ஹவவிஷயவுஜ்திமுணவு௱ஜாதிமதீ ஊூ " (இ-ள்.) யான் இச்சையுடையவனென்பதான அநுபவத்திற்கு எது விஷயமோ அந்த விஷயத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம்

இச்சையெனப்படுகின்றது. ஆண்டு யான் இச்சையுடையவன் என்பதான மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுபவம் அவ்விச்சையினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அவ்விச்சை இச்சையுடையவன் என்பதான அநுபவத்திற்கு விஷயமெனப்படுகின்றது. இத்தகைய இச்சையிடத்து இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய இச்சைத்தன்மை ஜாதி யாதோ அவ்விச்சைத்தன்மை ஜாதி இச்சை யாவற்றிலும் சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் கூறிய இவ்விச்சையின்லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது இச்சை" எனஇம்மாத்திரமே இச்சையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "இச்சையுடையேன் என்பதான அநுபவவிஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கூறாவிடின் குணத்தன்மைஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "இச்சையுடையேன் என்பதான அநுபவ விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத் தன்மை முதலிய ஜாதிகள் இச்சையுடையேன் என்பதான அநுபவத்தின் விஷயமாகிய இச்சையிடத்தில் இருப்பனவன்று. ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "இச்சையுடையேன் என்பதான அநுபவ விஷயத்தில் இருக்கும் ஜாதியுடையது இச்சை" என இம்மாத்திரமே இச்சையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் அவ்வநுபவத்தின் விஷயமாகிய இச்சையில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லா குணங்களிலும், சத்தா ஜாதியைக்கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அல்லாத் இச்சையுடையேன் என்பதான அநுபவம் எங்ஙனம் அவ்விச்சையினை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனம் அவ்விச்சையின் ஆசிரயமாகிய ஆத்மாவினையும் விஷயஞ்செய்கின்றது. அவ்வாத்மாவில் ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை, சத்தாஜாதி என்னும் மூன்றுஜாதிகள் இருக்கின்றன. ஆகையால் அவ்விச்சைத்தன்மை ஜாதியினைப் போன்று அவ்வாத்மத் தன்மை முதலிய மூன்று ஜாதிகளும் இச்சையுடையே னென்னும் அநுபவத்தின் விஷயத்தில் இருப்பனவாம். ஆண்டு ஆத்மத்தன்மைஜாதியைக்கொண்டு ஆத்மாவில் அதிவியாப்தி யுண்டாகும். திரவியத்தன்மை ஜாதியைக் கொண்டு பிருதிவி முதலிய திரவியங்களில் அதிவியாப்தி யுண்டாகும். சத்தா ஜாதியைக்கொண்டு திரவியம், குணம், கர்மங்களில் அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின்வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை, சத்தா, ஆத்மத்தன்மை, திரவியத்தன்மையுமா மிந்நான்கு ஜாதிகள் அக்குணத் தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் குணத்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு அந்த உருவமுதலியவைகளில் அவ்விச்சையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாகக் கூறிய லக்ஷணங்களால்

லக்ஷித அவ்விச்சையாகிய குணம் ஆத்மா வடிவ திரவிய மொன்றிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆத்மாவினும் வேருன பிருதிவி முதலிய திரவியங்களில் இச்சையாகிய குணம் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று.

## ௫௫௨. நித்திய, அநித்திய வேறுபாட்டால் இச்சை குணத்தின் இருவித வேற்றுமை.

அவ்விச்சையாகிய குணமும் முற்கூறிய புத்தி குணத்தினைப் போன்றே நித்திய, அநித்திய வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு ஈசுவராத்மாவின் இச்சையோ உற்பத்தி, விநாச மிலாததாவதால் நித்தியமாகின்றது. அங்ஙனமே ஒன்றும், ஜகத் யாவற்றையும் விஷயஞ் செய்வதுமாகின்றது. ஜீவாத்மாவின் இச்சையோ உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமும், நாநாவும் மிகஅற்பவஸ்துவை விஷயஞ்செய்வதுமாகின்றது. ஆண்டு ஜீவாத்மாவின் அநித்திய இச்சைக்கு ஜீவாத்மாவோ சமவாயிகாரணமாகின்றது. ஜீவாத்மாவிஞேடுண்டாம் மனதின் சையோகம் அசமவாயி காரணமாகின்றது. அஞ்ஞாத வஸ்துவிற்கு இச்சை யுண்டாகிறதில்லை. ஞாத வஸ்துவிற்கே இச்சை யுண்டாகிறது. ஆகையால் அவ்வவ்வஸ்துவின் இஷ்டத்தன்மை வடிவத்தால், அல்லது இஷ்ட சாதனத் தன்மை வடிவத்தால் ஞானம் அவ்வவ் வஸ்துவை விஷயஞ் செய்யும் இச்சைக்கு நிமித்த காரணமாகின்றது. அங்ஙனமே அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. அவ்விச்சையின் நாசமோ தனக்குப் பின்னுண்டாம் ஜீவாத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய சுக, துக்கத்தினைப் போன்று இச்சையும் இரண்டு க்ஷணமட்டே நிலைப்பதாகின்றது.

## ௫௫௩. பல இச்சை, உபாய இச்சை யென்னும் வேறுபாட்டால் அநித்திய இச்சையின் இருவித வேற்றுமை.

அஜ்ஜீவாத்மாவின் இச்சை பல இச்சை, உபாய இச்சை என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு சுகமும், துக்காபாவமுமாகிய இரண்டினை பலமென்பர். அப்பலத்தினை விஷயஞ்செய்வதாகிய இச்சையாதோ அதாவது; எமக்கு சுகம் உண்டாகுக என்பதாக சுக வடிவ பலத்தினை விஷயஞ் செய்யும் இச்சை யாதோ அங்ஙனமே துக்காபாவம் எமக்குண்டாகுக என்பதான துக்காபாவத்தினை விஷயஞ் செய்யும் இச்சை யாதோ அவ்விருவகை இச்சையினை பல இச்சை யென்பர். ஆண்டு சுக, துக்காபாவ பலத்தின் இச்சையில் சுக துக்காபாவ வடிவ பலத்தின் ஞானமே காரணமாகின்றது. அச்சுக வடிவ பலத்தின் பிராப்தியைச் செய்வதாகிய உண்டி முதலிய உபாயங்கள் யாவையோ அங்ஙனமே துக்காபாவ வடிவ பலத்தின் பிராப்தியைச் செய்வதாகிய ஔஷதம், பான முதலிய உபாயங்கள் யாவையோ அவ்வுபாயங்களை விஷயஞ் செய்வதாகிய இச்சை யாதோ அதாவது; இவ்வுண்டி ஔஷத முதலிய உபாயங்கள் எமக்கு பிராப்தமாகுக என்பதான இச்சை யாதோ அவ்விச்சையினை உபாய இச்சை யென்பர். அவ்வுபாய இச்சையிலோ இஷ்ட சாதனத்தன்மை ஞானமே காரணமாகின்றது. அதாவது;

இப்போஜனம், ஔஷதம், பான முதலிய உபாயங்கள் எமது சுக, துக்கா பாவ வடிவ இஷ்டத்தின் சாதனமா மென்பதான இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தாலேயே அவ்வுபாயங்களின் இச்சை யுண்டாகின்றது. அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானமன்றி அவ்வுபாய இச்சை யுண்டாகாது.

## ௫௱௨௰௪. இச்சா விசேஷ வடிவ ராகத்தினதும், சிகீர்ஷையினதும் லக்ஷணம்.

அல்லது கூறிய அவ்விச்சா விசேஷத்தினையே ராகமென்றும், சிகீர்ஷை யென்றுங் கூறுவர். இச்சையின் சாமான்னியத்தினை ராகமென்றும், சிகீர்ஷை யென்றுங் கூறுவதில்லை. ஆண்டு "உத்கடேச்சாராக:" (இ-ள்.) உத்கட இச்சையினை ராக மென்பர். அவ்வுத்கட இச்சை வடிவ ராகம் ஜீவாத்மா விடத்தே யிருக்கின்றது. ஈசுவராத்மாவிடத்தி லிருப்பதன்று. இக்காரணத்தா லேயே அவ்வீசுவரன் ராகமுடையவனென்று கூறப்படவில்லை; ஆனால் ராகமில் லாதவனெனப்படுவன். ஜீவாத்மா ராகமுடையவனெனப்படுகின்றனன். ஓர் கால் இச்சையின் சாமான்னியம் ராகமாகுமாயின் ஈசுவரனிடத்தும் இச்சையி னது சாமான்னியத்தினிருப்புளதாக ராகமுடையத்தன்மை உண்டாக வேண் டும். அது சுருதி, ஸ்மிருதிகளுக்கு விருத்தமாம். ஆகையால் இச்சையின் சாமான்னியம் ராகமன்றும்; ஆனால் உத்கட இச்சை வடிவ விசேஷ இச்சை யினை ராக மென்பர். இவ்வாறாக சிகீர்ஷையும் இச்சையினது விசேஷமாம். ஆண்டு "ப்ரவ்ருத்திஹேதுரிச்சாவிசேஷ:" (இ-ள்.) இப்புருஷனது பிர விர்த்திக்கு ஹேதுவாகிய இச்சா விசேஷம் யாதோ அவ்விச்சையின் விசேஷத் தினை சிகீர்ஷை யென்பர். எங்ஙனம் "பாகம்க்ருத்யாஸாதயாமி" (இ-ள்) இப்பாகத்தை யான் எனது முயற்சி வடிவ பிரயத்தினத்தால் சித்தஞ் செய் வேன். என்பதான முயற்சி சாத்தியத் தன்மை விசேஷ பாக முதலிய கிரியையை விஷயஞ்செய்யும் இச்சையின் விசேஷம் யாதோ அதனை சிகீர்ஷை யென்பர்.

## ௫௱௨௰௫. சிகீர்ஷையின் காரணத்தின் வர்ணனம்.

அச்சிகீர்ஷா விசேஷமோ முயற்சி சாத்தியத்தன்மை ஞானம், இஷ்ட சாதனத்தன்மை ஞானம், பலமுடைய துவிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவம் என்னும் மூன்று காரணங்களா லாகின்றது. இம்மூன்றுமின்றி அச்சிகீர்ஷை உண்டாகிறதில்லை. எங்ஙனம் பாக கர்த்தா புருஷனுக்கு எப் பொழுது அப்பாக வடிவ கிரியையில் இப்பாகம் எமது பிரயத்தன வடிவ முயற்சியால் சாதியமா மென்பதான முயற்சி சாத்தியத் தன்மை ஞானமும், இப்பாகம் எமது சுகவடிவ இஷ்டத்தின் சாதனமாமென்பதான இஷ்ட சாத னத்தன்மை ஞானமும், வலிவுடைய துவேஷத்தின் விஷயமாகிய மரண துக்க முதலியன யாவையோ அப்பலமுடைய துவேஷங்களின் சாதனத்தன்மை ஞானத்தின் அபாவமும் உண்டாகின்றதோ அப்பொழுதே அப்பாக கர்த்தா புருஷனுக்கு அப்பாக வடிவ கிரியையில் சிகீர்ஷை யுண்டாகின்றது. அம் மூன்றில் ஒன்றினது அபாவமுளதாயினும் அச்சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. ஆகையால் அம்மூன்றுமே அச்சிகீர்ஷையின் காரணமாகின்றன. ஆண்டு

கேவலம் இஷ்ட சாதனத் தன்மை ஞானத்தினையே சிகீர்ஷையில் காரணமாகக் கூறின் மழை முதலிய காரியங்களில் எல்லாப் பிராணிகட்கும் இஷ்ட சாதனத்தன்மை ஞான முண்டாகின்றது. ஆகையால் அவ்விஷ்ட சாதனத் தன்மை ஞானத்தால் மழை முதலியவைகளிலும் உலகருக்கு அச்சிகீர்ஷை உண்டாக வேண்டும். மழை முதலிய காரியங்களில் ஒரு பிராணிக்கும் சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. ஆனால் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் கேவலம் இச்சை மாத்திர முண்டாகின்றது. ஆகையால் அச்சிகீர்ஷையில் முயற்சி சாத்தியத் தன்மை ஞானத்தினையும் காரணமாகக் கூறியிருக்கிறது. ஆண்டு அம்மழை முதலியவைகளில் ஒருவருக்கும் முயற்சி சாத்தியத் தன்மை ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் முயற்சி சாத்தியத்தன்மை ஞான வடிவ காரணத்தின் அபாவத்தால் அம்மழை முதலியவைகளில் ஒருவருக்கும் அச்சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. அல்லது கேவலம் முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்தினையே அச்சிகீர்ஷையில் காரணமாக வொப்பின் ஜலத்தை அடித்தல் முதலிய பயனற்ற கிரியைகளிலும் உலகருக்கு முயற்சி சாத்தியத்தன்மை ஞானமோ இருக்கின்றது. ஆகையால் அம்முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்தால் உலகருக்கு அஜ்ஜலத்தை அடித்தல் முதலிய பயனற்ற கிரியைகளிலும் சிகீர்ஷை உண்டாக வேண்டும். புத்தியுடையோர்கட்கு பயனற்ற கிரியைகளில் அச்சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. ஆகையால் அச்சிகீர்ஷையில் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினையும் காரணமாகக் கூறியிருக்கின்றது. ஆண்டு ஜலத்தை அடித்தல் முதலிய பயனற்ற கிரியைகளில் உலகருக்கு இஷ்ட சாதனத்தன்மை ஞானமின்றும். ஆகையால் பயனற்ற கிரியைகளில் சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. அல்லது முயற்சி சாத்தியத் தன்மை ஞானம், இஷ்ட சாதனத்தன்மை ஞானமா மிவ்விரண்டினையே அச்சிகீர்ஷையில் காரணமாக ஒப்பின் மது, விஷம் இரண்டோடு கலப்புற்ற அன்னம் யாதோ அவ்வன்னத்தினை புசிப்பதில் பசியுள்ளவர்கட்கு சிகீர்ஷை யுண்டாக வேண்டும். ஏனெனின் பசியுள்ளவர்கட்கு அவ்வன்னத்தை புசிப்பதில் முயற்சி சாத்தியத்தன்மை ஞானமும், இஷ்ட சாதனத்தன்மை ஞானமுமிருக்கின்றன; ஆனால் பசியுள்ளவர்கட்கும் அவ்வன்னத்தினை புசிப்பதில் சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. ஆகையால் சிகீர்ஷையில் வலிவுடைய துவிஷ்ட சாதனத் தன்மை ஞானத்தின் அபாவத்தினையும் காரணமாகக் கூறியிருக்கிறது. ஆண்டு மது, விஷ சையுக்த அன்னத்தில் பலமுடைய துவேஷத்தின் விஷயமாகிய மரணத்தின் சாதனத்தன்மையின் ஞானமே யிருக்கின்றது. அப்பலமுடைய துவிஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவமின்றும். ஆகையால் அப்பலமுடைய துவிஷ்ட சாதனத்தன்மை ஞான வடிவ பிரதிபந்தகத்தினிருப்புளதாக உலகருக்கு அவ்வன்னத்தில் சிகீர்ஷை யுண்டாகிறதில்லை.

௪௫௯. வேறுவகையாக் அச்சிகீர்ஷையின் காரண வர்ணனம்.

சில நூலாசிரியரோ இங்ஙனங் கூறுகின்றனர். முயற்சி சாத்தியத் தன்மைஞானம்; இஷ்ட சாதனத்தன்மை ஞானம், பலமுடைய அநிஷ்டத்தின் அஜனகத்வ ஞானமா மிம்மூன்று ஞானங்கள் அச்சிகீர்ஷையில் காரணமாகின்றன. ஆண்டு மது, விஷ சையுக்த அன்னத்தில் முயற்சி சாத்தியத்தன்மை

ஞானத்தினதும், இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினதும் இருப்புள்ளதாயினும் பலமுடைய அநிஷ்டத்தின் அஜனகத்தன்மை ஞானமின்றாம்; ஆனால் மரண வடிவ பலமுடைய அநிஷ்டத்தின் ஜனகத்தன்மை ஞானமே யிருக்கின்றது. ஆகையால் மது, விஷ சையுக்த அன்னத்தில் பசியுள்ளவர்கட்கு சிகீர்ஷை யுண்டாகிறதில்லை. ஆகையால் இச்சா விசேஷத்தினை சிகீர்ஷை யென்பது சித்தமாயிற்று. இச்சையின் சாமான்னியம் சிகீர்ஷையன்றாம். ஓர்கால் அவ்விச்சையின் சாமான்னியம் சிகீர்ஷையாகுமாயின் எங்ஙனம் அவ்விச்சையின் சாமான்னியம் இஷ்ட சாதனத்தன்மை ஞான மாத்திரத்தா லுண்டாகின்றதோ அங்ஙனமே அச்சிகீர்ஷையும் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞான மாத்திரத்தானேயே யுண்டாக வேண்டும். இச்சா நிரூபணம் முற்றிற்று.

## அருஎ. துவேஷ குண நிரூபணம்.

துவேஷ குண லக்ஷணம். "த்வேஷ்மீத்யநுபவவிஷயவ்ருத்தி குணத்வ வ்யாப்யஜாதிமாந்த்வேஷ:" (இ-ள்.) யான் துவேஷமுடையோனென்பதான அநுபவத்திற்கு விஷயமாவது யாதோ அவ்விஷயத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் துவேஷமெனப்படுகின்றது. ஆண்டு யான் துவேஷமுடையோன் என்பதான மானசப்பிரத்தியக்ஷ வடிவ அநுபவம் துவேஷத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் துவேஷம், துவேஷ முடையோன் என்னும் அநுபவத்தின் விஷய மெனப்படும். அத்துவேஷத்தி லிருப்பதும், குணத்தன்மை வியாப்பியமுமாகிய துவேஷத் தன்மை ஜாதி யாதோ அத்துவேஷத் தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் எல்லா துவேஷங்களினு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இத்துவேஷத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது துவேஷம்" என இம்மாத்திரமே துவேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "துவேஷ முடையவ னென்னும் அநுபவத்தின் விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "துவேஷமுடையோன் என்னும் அநுபவ விஷயத்தி லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் துவேஷமுடையோன் என்பதான அநுபவத்தின் விஷயமாகிய துவேஷத்தில் இருப்பனவன்றாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "துவேஷமுடையோன் என்னும் அநுபவவிஷயத்திலிருக்கும் ஜாதியுடையது துவேஷம்" என இம்மாத்திரமே துவேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் துவேஷ முடையோன் என்பதான அநுபவத்தின் விஷயமாகிய துவேஷத்தில் இருக்கும் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய

சர்வ குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அல்லது துவேஷமுடையோன் என்பதான அநுபவம் எங்ஙனம் துவேஷ குணத்தினை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனமே துவேஷ குணத்தின் ஆசிரயமாகிய ஆத்மாவினையும் விஷயஞ் செய்கின்றது. அவ்வாத்மாவில் ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை, சத்தா என்னும் மூன்று ஜாதிகள் இருக்கின்றன. அம்மூன்று ஜாதிகளைக் கொண்டு முறையாக ஆத்மாவிலும், பிருதிவி முதலிய திரவியங்களிலும் திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை, சத்தா, ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை முதலிய நான்கு ஜாதிகள் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய மன்றும். ஆகையால் குணத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௫௫௰. துவேஷத்தின் ஆசிரயத் தன்மையினதும், உற்பத்தி விநாசத்தினதும் வர்ணனம்.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணங்களால் லக்ஷித துவேஷ குணம் கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அஜ்ஜீவாத்மாவிலும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களிலும், ஈசுவராத்மாவிலும் துவேஷமிருப்பதன்று. துவேஷ குணம் உற்பத்தி விநாசமுடையதாவதால் சுக, துக்கத்தினைப் போன்று அநித்தியமேயாகின்றது. யாதோர் துவேஷமும் நித்தியமாவதன்று. ஆண்டு ஜீவாத்மாவோ அத்துவேஷத்திற்கு சமவாயி காரணமாகின்றது. ஜீவாத்மாவினோடுண்டாம் மனதின் சையோகம் அசமவாயி காரணமாகின்றது. துக்க ஞானமும், துக்க சாதனத் தன்மை ஞானமும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவுமாம் யாவும் நிமித்தகாரணமாகின்றன. துவேஷ குணமும் சுக, துக்க குணத்தினைப் போன்று விபு ஆத்மாவின் யோக்கிய விசேஷ குணமாகையால் தனக்குப் பின்னுண்டாம் ஆத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணத்தானேயே நாசமாகின்றது. ஆகையால் துவேஷ குணமும் சுக, துக்க முதலியவைகளைப் போன்று இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதாகின்றது.

### ௫௫௧. துக்கத்துவேஷம், துக்கோபாயத் துவேஷம் என்னும் வேறுபாட்டால் இருவித வேற்றுமை.

எங்ஙனம் முற்கூறிய இச்சை பலஇச்சை, உபாயஇச்சை என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றதோ அங்ஙனமே இத்துவேஷமும் துக்கத் துவேஷம், துக்க உபாய துவேஷம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு துக்கத்தை விஷயஞ் செய்யும் துவேஷம் யாதோ அதனை துக்க துவேஷமென்பர். துக்கத்தின் உபாயமாகிய ஜ்வரம், சூலை முதலியவற்றை விஷயஞ் செய்யும் துவேஷம் யாதோ அதனை துக்க உபாய துவேஷமென்பர். ஆண்டு முதலாவது துக்கத் துவேஷத்திலோ துக்கத்தின் ஞானமே காரண

மாகின்றது. மற்றய துக்க உபாய துவேஷத்திலோ இந்த ஜ்வரம், சூலை முதலியன எமது துக்கத்தின் சாதனமா மென்பதான துக்க சாதனத்தன்மை ஞானமே காரணமாகின்றது.

சங்கை:—துக்க சாதனத் தன்மை ஞானத்தால் துவேஷமுண்டாகுமாயின் பாக முதலியவைகளிலும் உலகருக்கு துவேஷம் உண்டாகவேண்டும். ஏனெனின் அப்பாக கர்த்தா புருஷனுக்கு புகையாலும், வன்னியின் வெம்மைத் தன்மையாலும் துக்கமே யுண்டாகின்றது.

சமாதானம்:—அத்துக்க சாதனத்தன்மையின் ஞான முளதாயினும் எப்புருஷனுக்கு எக்கிரியையில் பலமுடைய இஷ்டத்தின் சாதனத்தன்மையினது ஞானம் உண்டாகின்றதோ அக்கிரியையில் அப்புருஷனுக்கு துவேஷம் உண்டாகிறதில்லை. ஆகையால் அப்பலமுடைய இஷ்ட சாதனத் தன்மை ஞானம் அத்துவேஷத்திற்கு பிரதிபந்தகமாகின்றது. ஆண்டு அப்பாக முதலியவைகளில் அத்துக்க சாதனத்தன்மையின் ஞானமுளதாயினும் போஜனஜன்னிய திருப்திவடிவ பலமுடைய இஷ்டத்தின் சாதனத்தன்மையின்ஞானம் உளதாக அப்பாக முதலியவைகளில் புருஷனுக்கு துவேஷம் உண்டாகிறதில்லை. கருத்திதுவாம்; அத்துவேஷத்தில் எங்ஙனம் துக்க சாதனத்தன்மை ஞானம் காரணமாகின்றதோ அங்ஙனமே அப்பலமுடைய இஷ்டசாதனத் தன்மை ஞானத்தின் அபாவமும் காரணமாகின்றது. அப்பலமுடைய இஷ்ட சாதனத் தன்மை ஞானாபாவ வடிவ காரணத்தின் அபாவமுளதாக அப்பாக முதலியவைகளில் உலகவர்கட்கு துவேஷம் உண்டாகிறதில்லை.

## ௫௯௦. துவேஷத்தின் விசேஷ வடிவ குரோதத்தின் லக்ஷணம்.

அல்லது எங்ஙனம் இச்சையின் விசேஷத்தினை ராகம், சிகீர்ஷை யென்பரோ அங்ஙனமே துவேஷவிசேஷத்தினை குரோதமென்பர். துவேஷ சாமான்னியத்தினை குரோதமென்பதில்லை. ஏனெனின் புருஷனுக்கு நரக முதலியவைகளில் குரோதத்தின் அபாவமுளதாயினும் துவேஷம் காணப்படுகின்றது. ஓர் கால் துவேஷ சாமான்னியம் குரோதமாகுமாயின் புருஷனுக்கு நரக முதலியவைகளில் துவேஷத்தினைப் போன்று குரோதமும் முண்டாக வேண்டும்; குரோதம் உண்டாகிறதில்லை. ஆகையால் துவேஷ விசேஷ வடிவ குரோதத்திற்கு இந்த லக்ஷணம் சித்தமாகின்றது.

"த்விஷ்டாய-ஸாய நீஸ-ரு-த வெ-த நவிஷயெவஷ: கொ்ாய:"

(இ-ள்.) துக்க முதலிய வடிவ துவிஷ்ட அர்த்தத்தின் சாதனமாகிய சேதன வஸ்து யாதோ அச்சேதனவஸ்துவை விஷயஞ் செய்யும் துவேஷம் யாதோ அதனை குரோத மென்பர். ஆண்டு நரக முதலிய ஜட வஸ்துவை விஷயஞ் செய்யும் துவேஷத்தில் பிராமாணத்தை அங்கீகரித்த புருஷர்கட்கு குரோத வியவஹாரம் உண்டாகிறதில்லை. ஆகையால் குரோதத்தின் லக்ஷணத்தில் "சேதனம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆகையால் இது சித்தமாயிற்று; துவேஷமோ சேதன, ஜட வடிவ சர்வ வஸ்துவை விஷயஞ் செய்வதாகின்றது. துவேஷ விசேஷ வடிவ குரோதமோ கேவலம் சேதன வஸ்துவை விஷயஞ் செய்வதேயாகின்றது. துவேஷ குண நிரூபணம் முற்றிற்று.

௫௬௧. முயற்சி குண நிரூபணம்.

முயற்சியின் லக்ஷணம். ஆண்டு "கரோமீத்யநுபவவிஷயவ்ருத்தி குணத்வவ்யாப்ய ஜாதிமாந் ப்ரயத்ந:" (இ-ள்.) யான் பிரயத்ன வடிவ முயற்சியுடையோன் என்பதான அநுபவத்தின் விஷயம் யாதோ அந்த விஷயத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதியாதோ அஜ்ஜாதியுடைய குணம் முயற்சியெனப்படுகின்றது. ஆண்டு செய்வேன் என்பதான மானசப் பிரத்தியக்ஷத்தின் அநுபவம் முயற்சி வடிவ பிரயத்தினத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அம்முயற்சி, செய்வேன் என்பதான அநுபவத்தின் விஷயமெனப் படுகின்றது. அம்முயற்சியில் இருப்பதும், குணத்தன்மையின் வியாப்பியமுமாகிய முயற்சித்தன்மை ஜாதி யாதோ அம்முயற்சித் தன்மை ஜாதி சமவாயசம்பந்தத்தால் முயற்சி யாவற்றினு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இம்முயற்சியின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது முயற்சி" என இம்மாத்திரமே அம்முயற்சியின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "செய்வேன் என்பதான அநுபவத்தின் விஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "செய்வேன் என்னும் அநுபவத்தின் விஷயத்திலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை முதலிய ஜாதிகள் செய்வேன் என்னும் அநுபவத்தின் விஷயமாகிய முயற்சியில் இருப்பனவன்றும். ஆகையால் உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "செய்வேன் என்னும் அநுபவ விஷயத்திலிருக்கும் ஜாதியுடையது முயற்சி" என இம் மாத்திரமே அம்முயற்சியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் செய்வேன் என்னும் அநுபவத்தின் விஷயமாகிய முயற்சியில் இருப்பதாகிய குணத் தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய எல்லா குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அல்லது செய்வேன் என்பதான அநுபவம் எங்ஙனம் அம் முயற்சியை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனமே அம்முயற்சியின் ஆசிரயமாகிய ஆத்மாவினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அம்முயற்சியினைப் போன்று அவ்வாத்மாவும் அவ்வநுபவத்தின் விஷயமெனப்படுகின்றது. அவ்வாத்மாவில் ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை, சத்தா என்னும் மூன்று ஜாதிகளிருக்கின்றன. அஜ்ஜாதிகளைக் கொண்டு முறையாக ஆத்மாவிலும், பிருதிவி முதலிய திரவியங்களிலும், திரவியம் குணம் கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் இது அஜ்ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு

குணத்தன்மை, சத்தா, ஆத்மத்தன்மை, திரவியத்தன்மை யென்னுமிந்நான்கு ஜாதிகளும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் குணத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் முயற்சி யின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## அசுஉ. முயற்சியின் ஆசிரய வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித முயற்சி குணம் ஆத்மா வடிவ திரவிய மொன்றினிடத்தே சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. அவ் வாத்மாவினும்வேறான பிருதிவி முதலிய திரவியங்களில் முயற்சி இருப்பதன்று. இம்முயற்சியைக் கிருதி யென்றும் வழங்குவர். அம்முயற்சியாகிய குண மும் முற்கூறிய புத்தி, இச்சை குணங்களைப் போன்று நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு ஈசுவராத்மாவின் முயற் சியோ உற்பத்தி விநாசமிலாததாவதால் நித்தியமாகின்றது. அங்ஙனமே ஏக மும், சர்வஜகத்தை விஷயஞ் செய்வதுமாகின்றது. ஜீவாத்மாவின் முயற் சியோ உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமாகின்றது. அங்ஙனமே நாநாவும் மிக அற்ப வஸ்துவை விஷயஞ் செய்வதுமாகின்றது. ஆண்டு ஜீவாத் மாவிலிருக்கும் அநித்திய முயற்சிக்கு ஜீவாத்மாவே சமவாயிகாரணமாகின் றது. ஜீவாத்மாவினோடுண்டாம் மனதின் சையோகம் அசமவாயி காரண மாகின்றது. இஷ்டசாதனத் தன்மை ஞான முதலியனவும், அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியனவும் நிமித்தகாரணமாகின்றன. அம்முயற்சியின் நாசம் தனக்குப் பின்னுண்டாம் ஆத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் சுக, துக்கத்தினைப்போன்று அம்முயற்சியும் இரண்டு க்ஷணமட்டும் நிலைப்பதாகின்றது.

## அசுங. பிரவிர்த்தி, நிவிர்த்தி, ஜீவனயோனி என்னும் வேறுபாட்டால் அநித்திய முயற்சியின் மூவித வேற்றுமை.

அஜ்ஜீவாத்மாவின் அநித்திய முயற்சியும் பிரவிர்த்தி, நிவிர்த்தி, ஜீவன யோனி என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இனி இம்மூன்றின் லக்ஷ ணத்தை முறையாகக் கூறுவாம்.

## அசுச. பிரவிர்த்தி வடிவ முயற்சியின் லக்ஷணம்.

ஆண்டு "ராகஜந்யகுணꞏ ப்ரவ்ருத்திꞏ" (இ-ள்.) உத்கட இச்சா வடிவ ராகத்தால் ஜன்னியமாகும் குணம் யாதோ அக்குணம் பிரவிர்த்தி யெனப்படுகின்றது. ஆண்டு எவ்வெப் பதார்த்தத்தில் எவ்வெப் பிராணிகட்கு ராக முண்டாகின்றதோ அவ்வப்பதார்த்தங்களிலேயே அவ்வப்பிராணிகட்கு பிரவிர்த்தி யுண்டாகின்றது. ராகமின்றி அப்பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் பிரவிர்த்தியில் ராக ஜன்னியத் தன்மை சம்பவிக்கின்றது. ஆண்டு "குணம் பிரவிர்த்தி" என இம்மாத்திரமே பிரவிர்த்தியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ராகஜன்னியம்" என்னும் பதங் கூறாவிடின் உருவ முத லிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதி வியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ராக ஜன் னியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவ முதலிய குணம் ராகத்

தினுல் ஜன்னியமாகிறதில்லை. ஆகையால் உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ராக ஜன்னியம் பிரவிர்த்தி" என இம்மாத்திரமே பிரவிர்த்தியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங் கூருவிடின் ராகத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் ராகத்தின் துவம்சமும் பிரதியோகி வடிவ ராகத்தால் ஜன்னியமேயாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணம்" என்னும் பதங்கூறப் பட்டது. ஆண்டு ராகத்தின் துவம்சத்தில் குண வடிவத் தன்மை யின்றும். ஆகையால் ராகத்தின் துவம்சத்தில் பிரவிர்த்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அவ்விச்சா வடிவ ராகத்தின் பிரத்தியக்ஷத்தில் கூறிய அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. ஏனெனின் விஷயமின்றி பிரத்தியக்ஷ ஞான முண்டாகிறதில்லை. ஆகையால் ராகத்தின் பிரத்தியக்ஷம் விஷய வடிவ ராகத்தால் ஜன்னியமுமாம். அங்ஙனமே குண வடிவமுமாம். என்றாலும் அந்த லக்ஷணத்தில் "ராகத்தை விஷயஞ் செய்யாததும்" என்னு மிதை குணத்தின் விசேஷணமாகக் கூறுவதால், அதாவது "ராகஜந்யா ராகாவிஷயகஞணோ ப்ரவ்ருத்திஃ" என இவ்வாருய லக்ஷணத்தை கூறுவதால் ராகத்தின் பிரத்தியக்ஷத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. ஆண்டு ராகத்தின் பிரத்தியக்ஷம் ராகத்தை விஷயஞ் செய்யாததன்றும்; ராகத்தை விஷயஞ் செய்வதேயாகின்றது. ஆகையால் ராகத்தின் பிரத்தியக்ஷத்தில் பிரவிர்த்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௫கரு. நிவிர்த்தி வடிவ முயற்சியின் லக்ஷணம்.

ஆண்டு "த்வேஷஜந்யா த்வேஷாவிஷயக ஞணோ நிவ்ருத்திஃ" (இ-ள்.) துவேஷத்தால் ஜன்னியமும், துவேஷத்தினை விஷயஞ் செய்யாதது மாகிய குணம் யாதோ அக்குணம் நிவிர்த்தி எனப்படுகின்றது ஆண்டு எவ்வெப்பதார்த்தத்தில் எவ்வெப் பிராணிக்கு துவேஷ முண்டாகின்றதோ அவ்வப்பதார்த்தத்தானேயே அவ்வப்பிராணிக்கு நிவிர்த்தி யுண்டாகின்றது. துவேஷமின்றி நிவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் நிவிர்த்தியில் துவேஷ ஜன்னியத்தன்மை சம்பவிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்திலும் முற்கூறிய பிரவிர்த்தியின் லக்ஷணத்தைப் போன்று "துவேஷ ஜன்னியம்" என்னும் பதம் உருவ முதலிய குணங்களில் நிவிர்த்தியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவிர்த்திக்கும் பொருட்டாம். "துவேஷத்தை விஷயஞ் செய்யாததும்" என்னும் பதம் துவேஷத்தின் பிரத்தியக்ஷத்தில் அதிவியாப்தியை நிவிர்த்திக்கும் பொருட்டாம். "குணம்" என்னும் பதம் துவேஷத்தின் துவம்சத்தில் அதிவியாப்தியை நிவிர்த்திக்கும் பொருட்டாம்.

## ௫கசு. ஜீவனயோனி வடிவ முயற்சியின் லக்ஷணம்.

ஆண்டு "ஜீவநாத்ருஷ்டஜந்யோ ஞணோ ஜீவநயோநிஃ" (இ-ள்.) பிராணிகளது ஜீவனத்திற்கு காரணமாகிய புண்ணிய பாப வடிவ அதிர்ஷ்டம் யாதோ அவ்வதிர்ஷ்டத்தால் ஜன்னிய குணம் யாதோ அக்குணம் ஜீவன

யோனியெனப்படுகின்றது. ஜீவனயோனி முயற்சி சரீரத்தில் சுவாச முதலிய வடிவ பிராண சஞ்சாரத்தில் காரணமும், இப்பிராணிக்கு எவ்வளவுகாலமட்டும் ஜீவனமுண்டாகின்றதோ அவ்வளவு காலமட்டும் அஜ்ஜீவனயோனி முயற்சி இருக்கின்றது. எங்ஙனம் பிரவிர்த்தி, நிவிர்த்தி வடிவ முயற்சியின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அங்ஙனம் இஜ்ஜீவனயோனி முயற்சியின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஆனால் தர்ம, அதர்மத்தினைப் போன்று இஜ்ஜீவனயோனி முயற்சி அதீந்திரியமாகின்றது. இத்தகைய அதீந்திரிய ஜீவனயோனி முயற்சியின் அநுமானம் பிராண சஞ்சார வடிவ காரியத்தால் சித்தமாகின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம்; "ப்ராணஸம்சாரஃ ப்ரயத்நஸாத்யஃ ப்ராணஸம்சாரத்வாத் யாவத்ஃ ப்ராணஸம்சாரவத்" (இ-ள்.) பிராணங்களின் சுவாச முதலிய கிரியா வடிவ சஞ்சாரம் முயற்சியால் சாத்தியமாக யோக்கியமாம், பிராணன் சஞ்சரிப்பதாவதால், எவ்வெப் பிராணன் சஞ்சரிப்பதாகின்றதோ அவ்வப்பிராணன் முயற்சியால் சாத்தியமேயாகின்றது. எங்ஙனம்: வேகமாய் ஓடும் புருஷனுக்கு பிராண சஞ்சாரம் முயற்சியினால் சாத்தியமாகின்றது. கருத்திதுவாம்; அதி வேகமாய் ஓடுபவனாகிய புருஷனது முயற்சியின் அதிகத்தன்மையால் சுவாச கிரியையின் அதிகத்தன்மை பிரத்தியக்ஷமாய் காணக்கிடைக்கின்றது. ஆகையால் அவ்வதிக பிராண சஞ்சாரியில் அதிக முயற்சியின் காரணத்தன்மை அநுபவ சித்தமாம். அவ்வதிக பிராண சஞ்சாரத்தின் திருஷ்டாந்தத்தால் பிராண சஞ்சார மாத்திரத்தில் முயற்சி சாத்தியத் தன்மையின் அநுமானம் சம்பவிக்கின்றது. ஆண்டு அவ்வதிக பிரயத்னமின்றியே சுவபாவ சித்த பிராணனது சஞ்சாரம் யாதோ, அச்சுவபாவ சித்த பிராண சஞ்சாரத்தில் யாதோர் பிரத்தியக்ஷ முயற்சியோ காரணமன்றும். ஆகையால் பிராண சஞ்சாரத்தின் காரண வடிவத்தால் அவ்வதீந்திரிய ஜீவனயோனி முயற்சியினது சித்தியே யுண்டாகின்றது.

### ௮௬௭. ஜீவனயோனி முயற்சியை ஒப்பாதவராகிய நவீன நையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். பிரவிர்த்தி, நிவிர்த்தி என்னு மிருவிதமாகவே முயற்சி யுண்டாகின்றது. மூன்றாவது ஜீவனயோனி முயற்சியில் யாதோர் பிரமாணமு மின்றும். சரீரத்தில் பிராணனது சுவாசாதி கிரியா வடிவ சஞ்சார முண்டாவது யாதோ அப்பிராண சஞ்சாரத்திலோ அதிருஷ்ட விசேஷத்தால் பிரயோஜ்ஜிய ஜீவனத்திற்கே காரணத் தன்மை சம்பவமாகிறது. அல்லது அஜ்ஜீவனத்தை பிரயோஜனஞ் செய்யும் அதிருஷ்ட விசேஷத்திற்கே காரணத்தன்மை சம்பவமாகிறது. ஆகையால் பிராண சஞ்சாரத்தின் காரண வடிவத்தால் அஜ்ஜீவனயோனி முயற்சியை கற்பிப்பது பயனின்மையாம். ஈண்டு தேஹத்தோடுகூடிய ஆத்மாவிற்கு மனதினோடுண்டாம் சையோகத்தினை ஜீவனமென்பர். அல்லது பிராசீனர்கள் ஜீவனயோனி முயற்சியை சித்தி செய்வதாகிய எவ்வநுமானப் பிரமாணத்தை கூறினரோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் சில அதிக பிராண சஞ்சாரத்

தில் சில அதிக முயற்சியின் ஜன்னியத் தன்மையினை கண்ணுற்று அதனது திருஷ்டாந்தத்தால் சர்வ பிராண சஞ்சார மாத்திரத்திற்கு அம்முயற்சியால் ஜன்னியமொப்பின் சில பிரவிர்த்தி வடிவ முயற்சியில் இஷ்ட சாதனத் தன்மை முதலிய ஞானத்தால் ஜன்னியத்தன்மை காணப்படுகின்றது. அதனது திருஷ்டாந்தத்தால் எல்லா முயற்சி மாத்திரத்திற்கு அந்த ஞானத்தால் ஜன்னியத்தை ஒப்புவதாகும். ஆகையால் சுஷுப்தி அவஸ்தையிலும் ஜீவன்யோனி முயற்சியின் ஏதுவாகிய சில அதீந்திரிய ஞானமும் அவசியம் கற்பிக்கப்படுவதாகும். அது உமக்கும் அங்கீகாரமின்றாம். ஆகையால் பிரவிர்த்தி, நிவிர்த்தி என இருவிதமாகவே முயற்சி சம்பவிக்கின்றது.

### ௮௯௮. பிரவிர்த்தி வடிவ பிரயத்னத்தில் சிகீர்ஷா, முயற்சி ஞானம், இஷ்ட சாதனத்தன்மை ஞானம், உபாதான காரணத்தின் பிரத்தியக்ஷமா மிந்நான்கு காரணத்தன்மையின் வர்ண்னம்.

இனி முற்கூறிய பிரவிர்த்தி வடிவ பிரயத்னத்தின் காரணத்தினை வர்ணிப்பாம். ஆண்டு பிரவிர்த்தி வடிவ முயற்சியில் சிகீர்ஷை, முயற்சி சாதனத்தன்மை ஞானம், இஷ்ட சாதனத்தன்மை ஞானம், உபாதானத்தின் பிரத்தியக்ஷம் என்னும் நான்கும் காரணமாகின்றன. இந்நான்கின்றி பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. எங்ஙனம் கட வடிவ காரியத்தினை உண்டாக்கும் குலாலனுக்கு எப்பொழுது இக்கடத்தினை யாம் எமது முயற்சி வடிவ பிரயத்னத்தால் சித்தஞ் செய்வாமென்பதான முயற்சி சாத்தியத்வ விசேஷ இச்சா வடிவ சிகீர்ஷையும், இக்கடம் எமது முயற்சி வடிவ பிரயத்னத்தால் சித்தமாக யோக்கியமா மென்பதான முதிசாத்தியத்தன்மை ஞானமும், இக்கடம் எமது இஷ்டத்தின் சாதனமாம் என்பதான இஷ்ட சாதனத்தன்மை ஞானமும், இம்மண்ணினால் இக்கடம் உற்பன்னமாகும் என்பதான அக்கடத்தின் சமவாயிகாரண வடிவ உபாதானத்தின் பிரத்தியக்ஷமு முண்டாகின்றதோ அப்பொழுதே அக்குலாலனுக்கு அக்கடத்தினை உண்டாக்குவதில் பிரவிர்த்தி உண்டாகின்றது. அந்த சிகீர்ஷை முதலியவைகளின்றி அக்குலாலனுக்கு பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. இவ்வாறாக சேதன பிராணிகட்கு எவ்வெக்காரியத்தினை உண்டாக்கும் பொருட்டு எவ்வெப் பிரவிர்த்தி யுண்டாகின்றதோ அவ்வப்பிரவிர்த்தி அச்சிகீர்ஷை முதலிய நான்கு காரணங்களாலேயே யுண்டாகின்றது.

சங்கை:—அப்பிரவிர்த்தியில் எங்ஙனம் முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்திற்கும், இஷ்ட சாதனத்தன்மை ஞானத்திற்கும் காரணத் தன்மை அங்கீகரிக்கின்றனரோ அங்ஙனமே இக்காரியம் எமது பலமுடைய அநிஷ்டத்தின் அஜனகமா மென்பதான பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்தினையும் அப்பிரவிர்த்தியில் காரணமாக வொப்பவேண்டும். ஓர் கால் அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மைஞானத்தினை அப்பிரவிர்த்தியில்காரணமாக ஒப்பாவிடின் பசியுள்ளவனுக்கு மது, விஷங் கலந்த அன்னத்தை புசிப்பதில் பிரவிர்த்தி யுண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் பசியுள்ளவனுக்கு

அன்னத்தை புசிப்பதில் முயற்சி சாத்தியத்தன்மை ஞானமும், இஷ்ட சாதனத்தன்மை ஞானமும் இருப்பனவேயாம்.

சமாதானம்:—அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானம் அச்சிகீர்ஷையினைக் குறித்தே காரணமாகின்றது. இவ்வார்த்தை முன்னர் இச்சையின் நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். பசியுள்ள புருஷனுக்கு அம் மது, விஷங் கலந்த அன்னத்தை புசிப்பதில் பலமுடைய அநிஷ்ட அஜனகத் தன்மை ஞானமின்றும். ஆனால் மரண வடிவ பலமுடைய அநிஷ்டத்தின் ஜனகத்தன்மை ஞானமே யிருக்கின்றது. ஆகையால் மது, விஷங் கலந்த அன்னத்தை புசிப்பதில் பசியுள்ள புருஷனுக்கு சிகீர்ஷையே யுண்டாகாது. சிகீர்ஷை வடிவ காரணத்தின் அபாவமுளதாகவே பசியுள்ளவனுக்கு அன்னத்தை புசிப்பதில் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்திற்கு அப்பிரவிர்த்தியில் சுவதந்திரமாய் காரணம் ஒப்புவதற்கு யாதோர் பயனு மின்றும்.

## அகூகூ. பிரவிர்த்தியில் பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்திற்கு காரணம் ஒப்புவோரார்கிய வாதிகளின் மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் பிரவிர்த்தியில் முயற்சி சாத்தியத்தன்மை ஞான முதலியன சுவதந்திரமாய் காரணமாமோ அங்ஙனமே அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானமும் சுவதந்திரமாகவே காரணமாம். ஓர்கால் அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்தினை பிரவிர்த்தியில்காரணமாகஒப்பாது அச்சிகீர்ஷையிலேயேகாரணம் ஒப்பின் அம்முயற்சிசாத்தியத்தன்மை ஞானத்திற்கும், இஷ்ட சாதனத்தன்மை ஞானத்திற்கும் பிரவிர்த்தியில் காரணம் ஒப்பாததாக வேண்டும்; அச்சிகீர்ஷையிலேயே காரணம் ஒப்ப வேண்டும். அங்ஙனம் நீவிர் ஒப்புவதின்று. ஆகையால் முயற்சி சாத்தியத்தன்மை, இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினைப் போன்று பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்திற்கும் பிரவிர்த்தியில் சுவதந்திரமாய்க் காரணம் ஒப்ப வேண்டும்.

## அஎ௦. சத்தத்தை சாத்தியஞ் செய்வதும், துவம்சத்தை சாத்தியஞ் செய்வதுமாகிய பிரவிர்த்தியில் உபாதான பிரத்தியக்ஷத்தினது காரணத்தன்மையில் சங்கை.

சங்கை:—காரியத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியில் அக்காரியத்தின் சமவாயி காரண வடிவ உபாதானத்தின் பிரத்தியக்ஷத்தினை காரணமாக ஒப்பின் புருஷனுக்கு மிருதங்க முதலியவைகளில் சத்தத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தி உண்டாகாததாகும். ஏனெனின் அச்சத்தத்தின் சமவாயி காரணமாகிய ஆகாசத்தின் பிரத்தியக்ஷம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. சத்தத்தினை உண்டாக்கும் பொருட்டு உலகர்கட்கு மிருதங்க முதலியவைகளை வாசிப்பதில் பிரவிர்த்தி பிரசித்தமாய் காணப்படுகின்றது. ஆகையால் உபாதானத்தின் பிரத்தியக்ஷம் பிரவிர்த்தியின் காரணமன்றும். அல்லது துவம்ச வடிவ காரியத்திற்கு யாதோர் உபாதான காரணமு மின்றும்; ஆனால் துவம்ச வடிவ காரியம் கேவலம் நிமித்த காரணத்தானேயே ஜன்னிய

மாகின்றது. ஆகையால் புருஷனுக்கு துவம்சத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியும் உண்டாகாததாகும். கட முதலிய பதார்த்தங்களை துவம்சஞ் செய்வதில் உலகரின் பிரவிர்த்தி பிரசித்தமாய்க் காணப்படுகின்றது. இக்காரணத்தாலும் உபாதான காரண பிரத்தியக்ஷம் பிரவிர்த்தியின் காரணமாக சம்பவியாது.

## ௬௭௯. அவ்வியபிசார சங்கையை நிவிர்த்திக்கும் வகை.

சமாதானம்:—மிருதங்க முதலியவைகளை வாசிப்பதில் உலகருக்கு பிரவிர்த்தி உண்டாவது யாதோ அந்தப் பிரவிர்த்தி சத்தத்தின் உற்பத்தியின் பொருட்டு உண்டாகிறதில்லை. அந்தப் பிரவிர்த்தி சத்தத்தின் சிராவண பிரத்தியக்ஷ வடிவ சாக்ஷாத்காரத்தின் பொருட்டே யுண்டாகின்றது. ஆகையால் அந்த பிரவிர்த்தி சத்தத்தை சாத்தியஞ் செய்வதன்றாம்; ஆனால் அச்சத்த சாக்ஷாத்காரத்தை சாத்தியஞ் செய்வதாம். அச்சத்த சாக்ஷாத்கார சமவாயி காரணம் ஆத்மாவாம். அவ்வாத்மா சர்வ பிராணிகட்கும் மன வடிவ இந்திரியத்தால் பிரத்தியக்ஷமேயாம். இவ்வாறாக கட முதலிய வஸ்துக்களை துவம்சஞ் செய்யும்பொருட்டு உலகரின் பிரவிர்த்தியுண்டாவது யாதோ அந்தப் பிரவிர்த்தியும் துவம்சத்தை சாத்தியஞ் செய்வதன்றாம்; ஆனால் அத்துவம்ச சாக்ஷாத்காரத்தை சாத்தியஞ் செய்வதாம். அத்துவம்ச சாக்ஷாத்காரத்திற்கு சமவாயி காரணம் ஆத்மாவாம். அவ்வாத்மா பிராணிகள் யாவற்றிற்கும் மன வடிவ இந்திரியத்தால் பிரத்தியக்ஷமேயாம். ஆகையால் பிரவிர்த்தி மாத்திரத்தில் உபாதான காரணத்தின் பிரத்தியக்ஷம் ஹேதுவாகின்றது. கூறிய இந்நியமத்திற்கு சத்தத்திலும், துவம்சத்திலும் வியபிசாரமுண்டாகாது.

## ௬௭௨. உபாதான பதத்தால் அதிஷ்டான மாத்திரத்தை அங்கீகரிப்பவராகிய நவீனர்களின் மதம்.

சிண்டு நவீன நையாயிகர்களோ இது கூறுகின்றனர். உபாதானத்தின் பிரத்தியக்ஷம் பிரவிர்த்தியில் காரணமாகின்றதென முற்கூறிய நியமத்தில் "உபாதானம்" என்னும் பதத்தால் சமவாயி காரணத்தினைக் கொள்ளற்க; உபாதான பதத்தால் அதிஷ்டான மாத்திரத்தினைக் கொள்ளுக. அக்காரியத்தின் அதிஷ்டானத்தன்மை சமவாயி காரணத்திலும், வேறு பதார்த்தங்களிலு மிருக்கின்றது. எங்ஙனம்: கட வடிவ காரியத்திற்கு அதிஷ்டானத் தன்மை கபால வடிவ சமவாயிகாரணத்திலும், பூதல முதலியவைகளிலுமிருக்கின்றது. அங்ஙனமே மிருதங்காதி அவச்சின்ன ஆகாசத்தில் உண்டாகிய சத்தம் யாதோ அச்சத்தம் சமவாய சம்பந்தத்தாலோ ஆகாயத்திலும், அவச்சேதகத் தன்மை சம்பந்தத்தால் அம்மிருதங்க முதலியவைகளிலு மிருக்கின்றது. ஆகையால் அச்சத்தத்திற்கு மிருதங்க முதலியனவும் அதிஷ்டானமாம். உலகருக்கு மிருதங்க முதலியவைகளின் பிரத்தியக்ஷ ஞானம் சக்ஷு, துவக்கிந்திரியங்களா லுண்டாகின்றது. ஆகையால் அச்சத்தத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியில் அம்மிருதங்கமுதலிய அதிஷ்டானத்தின் பிரத்தியக்ஷமே காரணமாகின்றது. இவ்வாறாக துவம்சத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியிலும் அத்துவம்சத்தினது அதிஷ்டானத்தின்பிரத்தியக்ஷமே காரணமாகின்றது.

## ௬௭௩. பிரவிர்த்தியை யுண்டுபண்ணும் முயற்சி சாத்தியத் தன்மை முதலியவைகளின் அர்த்தத்தைக் கூறும் வாயிலாக அவைகளின் பல வர்ணனம்.

ஆண்டு முன்னர் முயற்சி சாத்தியத்தன்மை ஞானம், இஷ்ட சாதனத் தன்மை ஞானம், பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானமென்னு மூன்றினையும் பிரவிர்த்தியில் காரணமாகக் கூறினும். இனி இம்மூன்றின் காரணங்களினது பிரயோஜனத்தினை வர்ணிப்பாம். ஆண்டு ஜலத்தை அடித்தல் முதலிய பயனில்லாக் கிரியையில் முயற்சி சாத்தியத்தன்மையின் ஞானமுளதாயினும் புத்தியுடைய புருஷர்கட்கு பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அந்த பிரவிர்த்தியில் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினை காரணமாகக் கூறினும். புருஷனது முயற்சி வடிவ பிரயத்னத்தால் அசாத்தியமாகிய மண்டு யாதோ அங்ஙனமே சுவர்ணமய மேருவின் கோட்டினை அபகரிப்பது முதலிய காரியம் யாதோ அக்காரியங்களில் அவ்விஷ்ட சாதனத் தன்மையின் ஞானமுளதாயினும் உலகவருக்கு பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அந்த பிரவிர்த்தியில் முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்தினை காரணமாகக் கூறினும். மது, விஷங் கலந்த அன்னத்தை புசிப்பதில் பசியுள்ளவனுக்கு முயற்சி சாத்தியத்தன்மையின் ஞானமும், இஷ்ட சாதனத்தன்மையின் ஞானமும் உளதாயினும் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அந்த பிரவிர்த்தியில் பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்தினைக் காரணமாகக் கூறினும். "ஸ்வர்க்காமோயஜேத" என்பதான இவை முதலிய வாக்கியங்களின் ஈற்றிலுள்ள விதிவாக்கியம் யாதோ அவ்விதி வாக்கியத்திற்கும் முயற்சி சாத்தியத்தன்மை, இஷ்ட சாதனத்தன்மை, பலமுடைய அநிஷ்ட அஜனகத் தன்மையே அர்த்தமாம். ஏனெனின் பிரவிர்த்தியினை உண்டாக்கும் ஞானத்திற்கு எது விஷயமாகின்றதோ அது ஈண்டு அவ்விதி முயற்சியின் அர்த்தமாகின்றது. முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்திற்கும், இஷ்ட சாதனத் தன்மை ஞானத்திற்கும், பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்திற்கும் பிரவிர்த்தியின் காரணத்தன்மையை முன்னர் சித்தி செய்துள்ளோம். ஆகையால் அம்முயற்சி சாத்தியத்தன்மையிலும், இஷ்ட சாதனத் தன்மையிலும், பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மையிலும் அவ்விதி வாக்கியத்தின் அர்த்த வடிவத்தன்மை சம்பவிக்கின்றது. அவ்விதி வாக்கியத்தின் முயற்சி சாத்தியத் தன்மை முதலிய அர்த்தத்தின் யாக முதலிய கர்மங்களில் அதிகாரி புருஷனுக்கு நிச்சயமுண்டாக பிரவிர்த்தி யுண்டாகின்றது.

ஈண்டு எக்காரியம் முயற்சி வடிவ பிரயத்னத்தால் சாத்தியமாமோ அக்காரியத்தினை முயற்சி சாத்தியமென்பர். ஆகையால் அம்முயற்சி சாத்தியத்தன்மை தர்மம் அம்முயற்சியினோடு பொருந்தியதாகின்றது. எப்பதார்த்தம் புருஷனது இச்சைக்கு விஷயமாகின்றதோ அப்பதார்த்தத்தினை இஷ்டமென்பர். ஆகையால் அவ்விஷ்ட சாதனத்தன்மை தர்மம் அவ்விச்சையோடு பொருந்தியதாகின்றது. எப்பதார்த்தம் பலமுடைய துவேஷத்திற்கு விஷயமாகின்றதோ அப்பதார்த்தத்தினை துவிஷ்டமென்பர்; அங்ஙனமே

அநிஷ்டமென்பர். ஆகையால் அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத் தன்மை தர்மம் அத்துவேஷத்தோடு பொருந்தியதாகின்றது. அத்தகைய முயற்சி சாத்தியத்தன்மை தர்மத்தினைநிகழச்செய்யும் முயற்சிக்கும், இஷ்டசாதனத்தன்மை தர்மத்தினை நிகழச்செய்யும் இச்சைக்கும், பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை தர்மத்தினை நிகழச்செய்யும் துவேஷத்திற்கும் வர்த்தமான காலத்தில் இருக்குந்தன்மையினைப் போதிக்கும் பொருட்டு "இக்காலத்திய" என்னும் விசேஷணங்கூறுக. அதாவது; இக்காலத்திய முயற்சி சாத்தியத்தன்மை ஞானமும், இக்காலத்திய இஷ்ட சாதனத்தன்மை ஞானமும், இக்காலத்திய பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானமும் பிரவிர்த்தியில் காரணமாகின்றது. ஆண்டு யௌவன காலத்தில் ராஜ்ஜியத்தினை அடைபவனுகிய ராஜனது குழந்தைக்கு கிடைக்கப்போகிற ராஜ்ஜியத்தில் இஷ்ட சாதனத்தன்மை ஞானமுமிருக்கின்றது. அங்ஙனமே பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மைஞானமும், யௌவனகாலத்தின் முயற்சி சாத்தியத்தன்மை ஞானமுமிருக்கின்றது. ஆனுல் அக்குழந்தைப் பருவ காலத்தில் முயற்சியினுல் அந்த ராஜ்ஜியம் சாத்தியமின்றும். ஆகையால் அக்காலத்திய முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்தின் அபாவத்தால் அக்குழந்தைக்கு வரப்போகிற ராஜ்ஜியத்தில் இப்பொழுது பிரவிர்த்தியுண்டாகிறதில்லை. ஓர்கால் அம்முயற்சிக்கு "இக்காலத்திய" என்னுமிவ்விசேஷணங் கூறுவிடின் அக்குழந்தைக்கு வரப்போகிற ராஜ்ஜியத்தில் அக்குழந்தைப் பருவத்திலேயே பிரவிர்த்தி உண்டாக வேண்டும். அல்லது உருசியுள்ள அன்னத்தைப் புசிப்பதால் திருப்தியுடைய புருஷனுக்கு அக்காலத்தில் அவ்வன்னத்தை புசிப்பதில் அம்முயற்சி சாத்தியத்தன்மைஞானமும், அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானமும் பின்னர் பசிகாலத்தில் உண்டாவதாகிய இச்சையின்விஷயத்தன்மையால் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானமுமிருக்கின்றது. அந்த திருப்தி அடைந்த புருஷனுக்கு அக்காலத்தில் அப்போஜனத்தின் திருப்தி சுக வடிவ பலத்தின் இச்சையன்றும். ஆகையால் இக்காலத்திய இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவத்தால் திருப்தியுடையவனுக்கு அக்காலத்தில் அப்போஜனத்தில்பிரவிர்த்தியுண்டாகிறதில்லை. ஓர்கால் அவ்விச்சைக்கு "இக்காலத்திய" என்னும் விசேஷணங் கூறுவிடின் திருப்தியுடைய புருஷனுக்கு அக்காலத்தில் அப்போஜனத்தில் பிரவிர்த்தியுண்டாக வேண்டும். அல்லது புருஷனது மரணத்தின் சாதனமாகிய விஷமுதலியவைகளின் பக்ஷணம் யாதோ அவ்விஷ முதலியவைகளின் பக்ஷணத்தில் புருஷனுக்கு பலமுடைய துவேஷத்தின் விஷயமாகிய மரண முதலிய அநிஷ்டத்தின் சாதனத்தன்மையின் ஞானமிருக்கின்றது. என்றுலும் எக்காலத்தில் யாதாமோர் அவமான முதலிய நிமித்தத்தால் புருஷனுக்கு அதிக குரோதம் உண்டாவதாகின்றதோ அக்காலத்தில் புருஷனுக்கு அம்மரணமுதலியவைகளில் அத்துவேஷ மிருப்பதின்று. ஆனுல் மாறுக தனது ஜீவனத்திலேயே அத்துவேஷ மிருக்கின்றது. ஆகையால் அக்காலத்திய பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்தால் புருஷனுக்கு அக்காலத்தில் அவ்விஷமுதலியவைகளின் பக்ஷணத்திலும் பிரவிர்த்தி யுண்டாகின்றது. ஓர்கால் அத்

துவேஷத்திற்கு "இக்காலத்திய" என்னும் விசேஷணங் கூறுவிடின் அக்குரோதத்தை தாஷிக்கும் புருஷனுக்கு அவ்விஷ முதலியவைகளின் பக்ஷணத்தில் பிரவிர்த்தி யுண்டாகாததாக வேண்டும். இவ்வாறாக ஆஸ்திக புருஷன் நினைப்பதற்கு அயோக்கிய பரஸ்திரீயினை நினைப்பதிலும், சத்துருக்கள் வதை முதலியவைகளிலும், நரக சாதனத்தன்மையின் ஞானமுளதாகியும், எப்பொழுது பரஸ்திரீயினை நினைத்தலாதி ஜன்னிய சுகத்தில் உத்கட ராகமுண்டாகின்றதோ அப்பொழுது அவ்வாஸ்திக புருஷனுக்கும் பரஸ்திரீயினை நினைத்தலாதிகளில் அந்நரக சாதன புத்தி உண்டாகிறதில்லை; அதாவது; அவ்வாஸ்திக புருஷனுக்கு அவ்வுத்கட ராகத்தின் வலிவால் பரஸ்திரீயினை நினைத்தலாதி ஜன்னிய நரகத்தில் அப்பலமுடைய துவேஷம் உண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வுத்கட ராக காலத்தில் அவ்வாஸ்திக புருஷனுக்கு பரஸ்திரீ கமனம், சத்துரு வதை முதலிய நிந்திக்கக் கூடிய கர்ம்மங்களிலும் பிரவிர்த்தி யுண்டாகின்றது.

### அஎசு. கூறிய காரண சாமக்கிரியில் பிரயத்ன சத்தத்தால் பிரயத்ன மாத்திரத்தை கிரஹிப்பதினாலாம் தோஷ வர்ணனம்.

ஆண்டு முன்னர் பிரவிர்த்தியில் பிரயத்ன சாத்தியத்தன்மை ஞானத்தினை ஏதுவாகக் கூறினும் அங்ஙனமே பிரயத்ன சாத்தியத்தன்மை விசேஷ இச்சையினை சிகீர்ஷையாகக் கூறினும், ஆண்டு பிரயத்ன சத்தத்தால் முயற்சி மாத்திரத்தினை கிரஹிப்பதன்று. ஆனால் பிரயத்ன சத்தத்தால் பிரவிர்த்தி வடிவ முயற்சியினை கிரஹிக்குக. இக்காரணத்தானேயே ஜீவனயோனிமுயற்சியால் சாத்திய பிராணங்களின் சஞ்சாரத்தில் புருஷனுக்கு பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஓர்கால் பிரயத்ன சத்தத்தால் முயற்சி மாத்திரத்தினை கிரஹிக்கின் அஜ்ஜீவனயோனி முயற்சி சாத்திய பிராண சஞ்சாரத்திலும் பிரயத்ன சாத்தியத்தன்மை ஞானத்தால் உலகருக்கு பிரவிர்த்தி யுண்டாக வேண்டும்.

### அஎரு. வேத அபோதித பயனுடைய கர்மத்தில் பிரவிர்த்திக்கும் பொருட்டு சுவர்க்க வடிவ பயனது கற்பனை.

அல்லது இஷ்ட சாதனத்தன்மை ஞானமின்றி புருஷனுக்கு எக்காரியத்திலும் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் வேதத்தில் விஸ்வஜித் யாக முதலியவைகளுக்கு எப்பயனுங் கூறப்படவில்லை. அவ்விஸ்வஜித் யாக முதலியவைகளிலும் புருஷன் பிரவிர்த்திக்கும் பொருட்டு ஓர் பயன் கற்பிக்கப்படவேண்டும். ஆண்டு சர்வபிராணிகட்கும் சுவபாவமாக சொர்க்கத்தை அடைய இச்சை யுண்டாகிறது. ஆகையால் விஸ்வஜித் யாக முதலியவைகட்கு ஸ்வர்க்க வடிவ பயன் கற்பிக்கப்படுவதாகின்றது. அப்பயனன்றி இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவத்தால் புருஷர்கட்கு விஸ்வஜித் யாக முதலியவைகளில் பிரவிர்த்தியே யுண்டாகாது.

---

## ௮௭௬. பயனது அபாவத்தால் நித்திய கர்மத்தில் பிரவிர்த்தி யின்மையின் சங்கை.

சங்கை:—“ அஹரஹ: ஸந்த்யாமுபாஸீத ” என்பதான இவை முதலிய சுருதிகள் கூறியுள்ள நாள்தோருஞ் செய்ய வேண்டிய சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மங்கள் யாவையோ அவைகட்கு யாதோர் பயனும் உண்டாகாது. பயன் வடிவ இஷ்டத்தின் அபாவ முண்டாக புருஷனுக்கு அந்த நித்திய கர்மங்களில் இஷ்ட சாதனத்தன்மை ஞானமே யுண்டாகாது. இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவமுண்டாக புருஷனுக்கு நித்திய கர்மங்களில் பிரவிர்த்தியே யுண்டாகாது. ஓர்கால் அந்த நித்திய கர்மங்களில் புருஷன் பிரவிர்த்திக்கும் பொருட்டு அந்த நித்திய கர்மங்கட்கும் பிரஹ்ம லோகாதி வடிவ பயன் அல்லது பிரத்தியவாயத்தின் (பாபத்தின்) அபாவ வடிவ பயனை கற்பிக்கின் அந்த நித்திய கர்மங்களிலும் காமிய கர்ம வடிவத் தன்மை பிராப்தமாகும். அதனுல் அச்சந்தியோபாசனை முதலிய கர்மங்களில் நித்திய கர்மவடிவத்தன்மைக்கே ஹானியுண்டாகும். எக்காரணத்தாலெனின் ஒரே கர்மத்தில் பரஸ்பரவிரோதி காமிய வடிவத்தன்மையும், நித்திய வடிவத் தன்மையும் சம்பவியாது. அல்லது அக்காமிய கர்மத்தில் பலத்தின் இச்சை யுடையபுருஷனே அதிகாரியாகின்ருன் அப்பலத்தின் இச்சை எப்புருஷனுக் கின்ருே அந்த நிஷ்காம புருஷன் அக்காமிய கர்மத்திற்கு அதிகாரியாகான். இத்தகைய பல இச்சையின்றிய புருஷனுக்கு எங்ஙனம் அக்காமியகர்மங்களை செய்யாததால் பிரத்தியவாயம் உண்டாகாதோ அங்ஙனமே அப்பல இச்சை யின்றிய புருஷனுக்கு அச்சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மங்களை செய் யாததாலும் பிரத்தியவாயம் உண்டாகாததாக வேண்டும். அந்த நித்திய கர் மங்களை செய்யாததால் அதிகாரி புருஷனுக்கு பிரத்தியவாயத்தின் பிராப் தியே சாத்திரமானது கூறி யிருக்கின்றது. ஆகையால் காமிய கர்ம வடிவத் தன்மையினை நிவிர்திக்கும் பொருட்டு அச்சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மத்திற்கு பலமின்மையே வொப்ப வேண்டும். நித்திய கர்மங்களின் பயனைக் கூறியதாகிய சுருதி யாதோ அது அர்த்தவாத வடிவமேயாம். அதா வது; நித்திய கர்மங்களில் அதிகாரி புருஷன் பிரவிர்த்திக்கும் பொருட்டு சுருதியானது நித்திய கர்மங்களை ஸ்துதி செய்திருக்கின்றது. ஆகையால் அவ்வர்த்தவாத வடிவ சுருதியால் அப்பயன் சித்தமாகாது. ஆகையால் அவ்விஷ்ட சாதனத்தன்மை ஞானத்தின் அபாவத்தால் புருஷனுக்கு அந்த நித்திய கர்மங்களில் பிரவிர்த்தி யுண்டாகாது.

## ௮௭௭. நித்திய கர்மங்களின் பல வர்ணனம்.

சமாதானம்:—சாத்திரத்தில் சந்தியோபாசனை முதலிய நித்திய கர் மங்கட்கும் பயன் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு சுலோகம் “ ஸந்த்யா முபாஸதே யே து ஸததம் ஸம்ஸிதவ்ரதா: ॥ விதூதபாபாஸ்தே யாந்தி ப்ரஹ்மலோகம் ஸநாதநம் ” (இ-ள்.) எப்புருஷன் நித்திய நிரந்தர சிரத்தாபக்தி வாயிலாக சந்தியோபாசனைமுதலிய கர்மங்களை செய்கின்ருனே அப்புருஷன் சர்வபாபங்களில்லாதவனுகி பிரஹ்ம லோகத்திற்கு பிராப்தமாகின்ருன். என்

பதான இவை முதலிய வசனங்கள் அச்சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மத்திற்கு பிரஹ்ம லோகத்தின் பிராப்தி வடிவ பயன் கூறியிருக்கின்றன. அங்ஙனமே பாப வடிவ பிரத்தியவாயத்தின் நிவிர்த்தி வடிவ பயன் கூறியிருக்கின்றன. ஆகையால் பிரஹ்மலோக முதலிய பல வடிவ இஷ்டத்தின் சாதனத் தன்மை ஞானத்தால் நித்திய கர்மங்களில் புருஷனுக்கு பிரவிர்த்தி சம்பவிக்கின்றது. அந்த நித்திய கர்மங்களின் பயனை யொப்புவதில் எக்காமிய கர்மத் தன்மையின் பிராப்தி வடிவ தோஷங் கூறப்பட்டதோ அதுவும் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் கிரஹண, சிரார்த்தாதிகளில் நித்திய கர்ம வடிவத் தன்மையும், நைமித்த கர்ம வடிவத்தன்மையுமா மிரண்டு மிருக்கின்றனவோ அங்ஙனமே அச்சந்தியோபாசனை முதலிய கர்மங்களிலும் நித்திய கர்ம வடிவத் தன்மையும், காமிய கர்ம வடிவத்தன்மையுமா மிரண்டு மிருக்கின்றன. நித்தியத்தன்மை, காமியத்தன்மையுமா மிரண்டின் விரோதத்தில் யாதோர் பிரமாணமுமின்றும். அல்லது நித்திய கர்மத்தில் காமிய கர்மத்தன்மை யொப்புவதில் அப்பல இச்சையின் அபாவ முளதாக நித்திய கர்மத்தினை செய்யாததால் பிரத்தியவாயத்தின் அநுத்பத்தி வடிவ தோஷங் கூறியது யாதோ அத்தோஷமும் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் திரிகால தோத்திர முதலியவைகளில் ஆஸ்திக புருஷனுக்குப் பல இச்சை கட்டுண்டிருக்கிறதோ அங்ஙனமே நித்திய கர்மங்களிலும் புருஷனுக்கு அப்பல விச்சை எக்காலமும் கட்டுண்டிருக்கிறது. ஈண்டு கருத்திதுவாம்; சந்தியோபாசனை முதலிய கர்மங்களைச் செய்யுங் காலத்தில் சாத்திரமானது கூறியுள்ள ஜல முதலியவைகளால் சரீரத்தின் சுசித்தன்மை முதலியவைகளிருந்தும் எப்புருஷன் பிரமாதத்தின் வசத்தால் அக்கர்மங்களை செய்யவில்லையோ அப்புருஷனுக்கு சாத்திரமானது பிரத்தியவாயத்தின் அடைவு கூறி யிருக்கின்றது. ஆகையால் சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மங்களைச் செய்வதில் பல இச்சைக்கும் அதிகார வடிவத்தன்மை யிருக்கின்றது. அங்ஙனமே அச்சுசித்வ முதலியவைகட்கும் அதிகார வடிவத்தன்மை யிருக்கின்றது. அதாவது; பல விச்சையுடையவனும் அச்சுசித்வ முதலியவைகளை யுடையவனுமாகிய புருஷனே நித்திய கர்மங்களில் அதிகாரியாகின்றான். ஈண்டு பல விச்சை வடிவ அதிகாரியின் அபாவமுளதாகியும் சுசித்வாதி வடிவ அதிகாரத்தையுடைய எப்புருஷன் அச்சந்தியோபாசனை முதலிய நித்தியகர்மங்களை செய்யவில்லையோ அப்புருஷனுக்கு அந்த நித்திய கர்மங்களை செய்யாததால் பிரத்தியவாயத்தின் அடைவு அவசிய முண்டாகின்றது. அப்பல விச்சை வடிவ அதிகாரத்தைப் பெற்றும் சுசித்வாதி வடிவ அதிகாரியின் அபாவமுடைய எப்புருஷன் நித்திய கர்மங்களைச் செய்யவில்லையோ அப்புருஷனுக்கு பிரத்தியவாயத்தின் அடைவு உண்டாகிறதில்லை. ஆகையால் அச்சந்தியோபாசனை முதலிய நித்திய கர்மங்களிலும் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் புருஷனுக்கு பிரவிர்த்தி சம்பவிக்கின்றது.

---

## அஎஅ. பிரவிர்த்தி வடிவ பிரயத்னத்தின் உற்பத்தியில் பிரபாகரர் மத வர்ணனம்.

ஈண்டு பிரபாகரரின் மதமோ இதுவாம். எக்காரியத்தில் பிரவிர்த்தி யுண்டாகின்றதோ அக்காரியத்தில் * பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மையினை விஷயஞ் செய்வதாகிய இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னியமாகிய முயற்சி சாத்தியத்தன்மை ஞானம் யாதோ அம்முயற்சி சாத்தியத் தன்மை ஞானமே சிகீர்ஷை வாயிலாக அக்காரியத்தை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியில் ஏதுவாகின்றது. பிரவிர்த்தியில் இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தினையும், பலமுடைய (வலிவுடைய) அநிஷ்ட அஜனகத்தன்மை ஞானத்தினையும் காரணத்தன்மையாக வொப்புவது பயனின்மையாம். எங்ஙனம் "பாகஃ உத்ருதிஸாத்யஃ உத்ருதிம்விநா அஸத்வஸதி உத்ருவத்ப நிஷ்டாஜநகேஷ்டஸாதநத்வாத் போஜநாதிவத்" (இ-ள்.) இப்பாகம் எமது முயற்சி வடிவ பிரயத்னத்தால்சாத்தியமாம், எமதுமுயற்சியின்றி அசித்தமாவதாகியும், எமது பலமுடைய அநிஷ்டத்தின் அஜனகமாகியும், எமது இஷ்டத்தின் சாதனமாவதால், எவ்வெக்காரியம் எமதுமுயற்சியின்றி அசித்தமாவதாகியும், எமது பலமுடைய அநிஷ்டத்தின் அஜனகமாகியும், எமது இஷ்டத்தின் சாதனமாகின்றதோ அவ்வக்காரியம் எமது பிரயத்ன வடிவ முயற்சியால் சாத்தியமேயாகின்றது. எங்ஙனம்: போஜன முதலிய காரியம் போலும். இவ்வாற்றால் பாக முதலிய லௌகீக காரியங்களிலும், யாக முதலிய வைதீக கர்மங்களிலும் புருஷனுக்கு பலமுடைய அநிஷ்ட அஜனக இஷ்ட சாதனத்தன்மை வடிவ ஏதுவால் எம்முயற்சி சாத்தியத்தன்மையின் அநுமிதிஞான முண்டாகின்றதோ அம்முயற்சி சாத்தியத்தன்மை ஞானமே சிகீர்ஷை வாயிலாக புருஷனுக்கு அப்பாகம், யாகாதிகளை சாத்தியஞ் செய்யும் பிரவிர்த்தியில் ஏதுவாகின்றது. ஈண்டு கூறிய இவ்வநுமானத்தில் "பலமுடைய அநிஷ்ட அஜனகத்தின் இஷ்ட சாதனத் தன்மையாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "முயற்சியின்றி அசித்தமாவதாகியும்" என்னும் பதங்கள் கூறாவிடின் புருஷனுக்கு பிரயத்னத்தால் அசாத்திய மழை முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின், அம்மழை முதலியவைகளில் பலமுடைய அநிஷ்ட அஜனக இஷ்ட சாதனத்தன்மை வடிவ ஏதுவோ இருக்கின்றது. ஆனால் பிரயத்ன சாத்தியத்தன்மை வடிவ சாத்தியமின்றாம். அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "முயற்சியின்றி அசித்தமாவதாகியும்" என்னும்பதங்கள்கூறப்பட்டன. ஈண்டு மழை முதலியவைகட்கு புருஷனதுமுயற்சியின்றி அசத்வமின்றாம்; சத்வமேயிருக்கின்றது. ஆகையால் அம்மழை முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. ஈண்டு மது, விஷங் கலந்த அன்னத்தைப் புசிப்ப

* பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை என்பதை—வலிவுடைய அநிஷ்டத்தை யுண்டாக்காத்தன்மை யென்றும், பலமுடைய அநிஷ்ட ஜனகத்தன்மை என்பதை—வலிவுடைய அநிஷ்டத்தை யுண்டாக்குந் தன்மையென்றும் யாண்டும் பொருளுரைத்துக் கொள்க.

தில் பசியுள்ளவனுக்கு முயற்சி சாத்தியத் தன்மையின் ஞானமுளதாயினும் அம்முயற்சி சாத்தியத்தன்மை ஞானம் அப்பலமுடைய அநிஷ்ட அஜனகத் தன்மை ஞானத்தால் ஜன்னியமன்றும். ஆகையால் பசியுள்ள புருஷனுக்கு அவ்வன்னத்தை புசிப்பதில் பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை. நீரடித்தல் முதலிய பயனற்ற கிரியையில் புருஷனுக்கு முயற்சி சாத்தியத் தன்மையின் ஞான முளதாயினும் அம்முயற்சி சாத்தியத்தன்மை ஞானம் அவ்விஷ்ட சாதனத் தன்மை ஞானத்தால் ஜன்னியமன்றும். ஆகையால் அப்பயனற்ற கிரியை களில் புருஷனுக்கு பிரவிர்த்தி யுண்டாகிறதில்லை.

அஎகூ. பிரபாகரர் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் பிரபாகரரின் மதம் அசங்கதமாம். ஏனெனின், பலமுடைய அநிஷ்ட அஜனகத்தன்மை விசிஷ்ட இஷ்ட சாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னிய முயற்சி சாத்தியத்தன்மை ஞானத்திற்கு அப்பிரவிர்த்தி யின் காரணத்தன்மை யொப்புவதில் அதி கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகின்றது. அதன் அபேக்ஷையால் பலமுடைய அநிஷ்ட அஜனக இஷ்ட சாதனத்தன்மையை விஷயஞ் செய்யும் முயற்சி சாத்தியத்தன்மை ஞானத் திற்கு பிரவிர்த்தியின் காரணத்தன்மை யொப்புவதில் லாகவ மிருக்கின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தால் விழுங்கப்படுவதாவதால் பிரபாகரரின் மதம் நலமுடைத்தன்றும்.

அஅ௦. பிரபாகரரை அநுசரித்த நவீனதார்க்கீகர்களின் மதம்.

ஈண்டு பிரபாகரரை அநுசரித்த நவீனதார்க்கீகரோ இது கூறுகின்றனர். இக்காரியம் எமது முயற்சியால் சாத்தியமாம் என்பதான முயற்சி சாத்தியத் தன்மை ஞானம் அப்பிரவிர்த்திக்கு ஏதுவன்றும். ஏனெனின் பின்னர் உண் டாவதாகிய காரியத்தில் முயற்சி சாத்தியத்தன்மையின் ஞானம் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும் சம்பவியாது. அங்ஙனமே அநுமானப் பிரமாணத்தாலும் சம்பவியாது. ஆனால் புருஷனது முயற்சியால் சாத்தியமாகுங் காரியத்தை எப்புருஷனவன் காண்கின்றானோ அப்புருஷன் எவ்வகையானும் தனது நிச்சயத்தால் அக்காரியத்தில் பிரவிர்த்திப்பவனாவான். எங்ஙனம்: அன்னத்தில் பிரியமுடையவனும், அன்னத்திற்கு வேண்டிய பதார்த்தங்களில் சாதனத் தன்மையின் ஞானமுடையவனும், அன்னத்திற்கு வேண்டிய வன்னி, ஜலம், காஷ்ட முதலிய உபகரணங்க ளுடையவனுமாகிய புருஷனுக்கே முயற்சி வடிவ பிரயத்னத்தால் அப்பாகம் சாத்தியமாகின்றது. இவ்வாறாக மற்றைய பாக கர்த்தா புருஷனிடத்து அன்ன இச்சை முதலிய எல்லா சாமக்கிரியிகளை தன்னிடத்தில் நிச்சயித்து அப்பாகத்தில் பிரவிர்த்தி யுண்டாகின்றது.

அஅக. நவீன தார்க்கீகர்களின் மத கண்டனம்.

அங்ஙனமாகக் கூறும் நவீனர்களின் மதமும் நலமுடையதன்றும். ஏனெனின், புருஷன் ககார முதலிய சுத்தங்களை போதிக்கும் பொருட்டு தனது புத்தியால் அபூர்வ கற்பனஞ்செய்து க, ங, ச என்பதான இவை முத லிய எழுத்துக்களில் பிரவிர்த்திக்கின்றவனாகின்றான். அங்ஙனமே யௌவன காலத்தில் இச்சையின் வேகத்தால் புருஷன் ஸ்திரீ சையோக முதலியவை

களில் பிரவிர்த்திக்கின்றவனுகின்றுன். அது உண்டாகாததாக வேண்டும். ஏனெனின், புருஷனது முயற்சியால் சாத்தியமா மிக்காரியம், அப்படியே எமக்குமாமென்பதான பிரவிர்த்தியின் காரணமாகிய ஞானம் அப்புருஷனுக்கின்றும். இம்மட்டும் பிரவிர்த்தி வடிவ முயற்சியின் காரணத்தினை நிரூபித்தனம்.

### அஅஉ. நிவிர்த்தி வடிவ முயற்சியின் காரணம்.

இனி நிவிர்த்தி வடிவ முயற்சியினது காரணத்தினை நிரூபிப்பாம். ஆண்டு எவ்வஸ்துவில் எப்புருஷனுக்கு துவேஷ முண்டாகின்றதோ அங்ஙனமே துவிஷ்ட சாதனத்தன்மை ஞான முண்டாகின்றதோ அவ்வஸ்துவினுலேயே புருஷனுக்கு நிவிர்த்தி யுண்டாகின்றது. அத்துவேஷ மின்றியும், துவிஷ்ட சாதனத்தன்மை ஞானமின்றியும் புருஷனுக்கு நிவிர்த்தியுண்டாகிறதில்லை. இவ்வார்த்தை உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் துவேஷமும், துவிஷ்ட சாதனத்தன்மை ஞானமுமே நிவிர்த்தியின் காரணமாகின்றன.

### அஅங. பிரயத்ன விசேஷ வடிவ உத்சாஹத்தின் வர்ணனம்.

அல்லது எங்ஙனம் துவேஷ விசேஷத்தினை குரோதமென்பரோ அங்ஙனமே முயற்சி விசேஷத்தினை உத்சாஹமென்பர். முயற்சி சாமான்னியத்தினை உத்சாஹமென்பதில்லை. ஆண்டு "ஸுகவிஶேஷஜநகீஸுகஉ விஷயகஃ வ்யபாரஃ உத்ஸாஹஃ" (இ-ள்.) சுக விசேஷத்தினை உண்டாக்குவதாகிய கர்மம் யாதோ அக்கர்மத்தினை விஷயஞ் செய்வதாகிய முயற்சியினை உத்சாஹமென்பர். எங்ஙனம்: இராஜாக்களின் யுத்த முதலிய கர்மங்களை விஷயஞ் செய்யும் முயற்சியும், விவாஹம் செய்ய வேண்டி உலகர்கள் புதிய விவாஹப் பெண்ணை காண்டல் முதலியவைகளி லுண்டாம் முயற்சியும் உத்சாஹமெனப்படும். சுமையை எடுப்பதற்குண்டாம் முயற்சிக்கு யாதோர் உத்சாஹமுமின்றுகையால் முயற்சி விசேஷத்தினை உத்சாஹ மென்பர். ஒர் கால் முயற்சி சாமான்னியம் உத்சாஹமாகுமாயின் சுமையெடுப்பதற் குண்டாம் முயற்சியிலும் உத்சாஹ வியவஹார முண்டாக வேண்டும். முயற்சி நிரூபணம் முற்றிற்று.

### அஅச. தர்ம நிரூபணம்.

தர்மத்தின் லக்ஷணம். "ஸுகாஸாதாரணகாரணம் தர்மஃ" (இ-ள்.) சுகத்திற்கு எது அசாதாரண காரணமாகின்றதோ அது தர்மமெனப்படுகின்றது. ஆண்டு உலகவருக்குண்டாம் சுகத்தின் பிராப்தி தர்மத்தானேயேயுண்டாகின்றது. தர்மமின்றி சுகத்தின் பிராப்தியுண்டாகிறதில்லை. ஆகையால் இச்சுகத்தின் அசாதாரண காரணத்தன்மை வடிவ தர்மத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "சுககாரணம் தர்மம்" என இம்மாத்திரமே சுகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அசாதாரணம்" என்னும் பதங் கூருவிடின் காலம், திக்கு, ஈசுவரன் இவை முதலிய சாதாரண காரணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், அக்கால முதலி

யன காரிய மாத்திரத்தைக் குறித்து காரணமாவதால் அச்சுக வடிவ காரியத் திற்கும் காரணமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அசாதாரணம்" என்னும் பதங் கூறப்பட்டது ஆண்டு அக்கால முதலியன அச்சுகத்தின் காரணமாயினும் அசாதாரண மன்றும்; சாதாரண காரணமாம். ஆகையால் அக்கால முதலியவைகளில் தர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை :—காமுக புருஷனுக்கு காமினியின் தரிசனம், பரிச முதலிய வைகளாலும் சுகத்தின் பிராப்தி யுண்டாகின்றது. ஆகையால் அத்தரிசனம், பரிச முதலியனவும் தர்மத்தினைப் போன்று சுகத்தின் அசாதாரண காரண மேயாம். அத்தரிசன முதலியவைகளில் தர்மத்தின் லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாகின்றது. ஆகையால் முற்கூறிய தர்மத்தின் லக்ஷணம் அதி வியாப்தி தோஷமுடையதாவதால் துஷ்டமாம். அத்தகைய துஷ்ட லக்ஷ ணத்தால் தர்மத்தின் சித்தி சம்பவியா தென்னுஞ் சங்கை யுண்டாக இனி தர்மத்திற்கு வேறு லக்ஷணங் கூறுவாம்.

### ௮௮௫. தர்மத்தின் இரண்டாவது லக்ஷணம்.

" யாமஜந்யஷமெ ஜநகவூத்திமுணக்வ வ்யாவ்யஜாதிமாநுய:தர்ம: "

(இ-ள்) எவ்வஸ்து யாகத்தால் ஜன்னியமும், சுவர்க்கத்தினை உண்டாக்குவது மாகின்றதோ அவ்வஸ்துவில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பி யமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் தர்மமெனப்படுகின்றது. ஆண்டு புருஷன் எப்பொழுது அஸ்வமேத முதலிய யாகங்களை செய்கின் றனோ அப்பொழுது அப்புருஷனிடத்து தர்மம் உற்பன்னமாகின்றது. அத் தர்மத்தால் அப்புருஷனுக்கு சுவர்க்கத்தின் பிராப்தி யுண்டாகின்றது. ஆகை யால் அத்தர்மம் யாகத்தால் ஜன்னியமும், சுவர்க்கத்தினை யுண்டாக்குவது மாம். அத்தகைய தர்மத்திலிருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப் பியமுமாயது தர்மத்தன்மை ஜாதியாம். அத்தர்மத்தன்மை ஜாதி தர்மங்கள் யாவற்றிலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் கூறிய இத் தர்மத்தின் லக்ஷணம் சர்வ தோஷங்களில்லாததாம். ஆண்டு "குணத்தன்மை யின் வியாப்பிய ஜாதியுடையது தர்மம்" என இம்மாத்திரமே தர்மத்தின் லக்ஷணமாகக் கூறின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சுவர்க்கத்தை யுண்டாக்குவதில் இருப்ப தும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்கள் சுவர்க்கத்தினை உண்டாக்குவதாகாது. ஆகையால் உருவ முதலிய குணங் களில் இருப்பதாகிய உருவத்தன்மை முதலிய ஜாதிகள் சுவர்க்கத்தை யுண் டாக்குவதி லிருப்பதன்றும். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சுவர்க்கத்தை யுண்டாக்குவதில் இருப்பதும் குணத் தன்மையின் வியாப்பியமுமாகிய ஜாதியுடையது தர்மம்" என இம்மாத்

திரமே தர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "யாகத்தாலுண்டாயதும்" என்னும் பதங் கூறுவிடின் சையோகத்தன்மை ஜாதியைக்கொண்டு சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், புருஷனது சரீரத்தினேடுண்டாம் கங்கா ஜலத்தின் சையோகம் யாதோ அக் கங்கா ஜலத்தின் சையோகமும் புருஷனது சுவர்க்கத்தினை யுண்டாக்குகிற தென்பதாக சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அத்தகைய சுவர்க்க ஜனக சையோகத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகியது சையோகத்தன்மை ஜாதியாம். அச்சையோகத் தன்மை ஜாதியைக் கொண்டு சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "யாகத்தா லுண்டாயதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அக் கங்கா ஜலத்தின் சையோகம் சுவர்க்கத்தினை உண்டாக்குவதாயினும் யாகத் தாலுண்டாயதன்றாம். ஆகையால் அச்சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "யாகத்தாலுண்டாயதில் இருப்பதும், குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையதும் தர்மம்" என இம்மாத்திரமே தர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சுவர்க்கத்தையுண்டாக்குவதும்" என்னும் பதங்கள் கூறுவிடின் யாகத்தின் பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், விஷயமின்றி யாதோர் பிரத்தியக்ஷ ஞானமும் உண்டாகிறதில்லை. ஆகையால் யாகத்தின் பிரத்தியக்ஷ ஞானம் யாக வடிவ விஷயத்தால் ஜன்னியமேயாம். அத்தகைய யாகத்தா லுண்டாய பிரத்தியக்ஷ ஞானத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகியது பிரத்தியக்ஷத்தன்மை ஜாதியாம். அந்த பிரத்தியக்ஷத் தன்மை ஜாதியைக் கொண்டு யாகத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சுவர்க்கத்தை யுண்டாக்குவதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு யாகத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானம் யாகத்தால் ஜன்னியமாயினும் சுவர்க்கத்தினை உண்டாக்குவதன்றாம். ஆகையால் யாகத்தின் பிரத்தியக்ஷத்தில் இருப்பதாகிய பிரத்தியக்ஷத்தன்மை ஜாதியைக்கொண்டு யாகத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "யாகத்தாலுண்டாயதும், சுவர்க்கத்தை யுண்டாக்குவதுமாகியதில் இருக்கும் ஜாதியுடையது தர்மம்" என இம்மாத்திரமே தர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் யாகத்தா லுண்டாயதும், சுவர்க்கத்தை யுண்டாக்குவதுமாகிய தர்மத்தில் இருக்கும் குணத்தன்மை ஜாதியைக்கொண்டு உருவ முதலிய எல்லாக் குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னுமிது அந்தலக்ஷணத்தை நிகழச்செய்யும் ஜாதிக்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு குணத்தன்மை ஜாதியும், சத்தா

ஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத் தன்மை, சத்தா ஜாதியைக் கொண்டு உருவ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "யாகத்தால் உண்டாயதும் சுவர்க்கத்தை யுண்டாக்குவதும் தர்மம்" என இம்மாத்திரமே தர்மத்தின் லக்ஷணமாகக் கூறின் யாகத்தா லுண்டாகியதர்மம் சுவர்க்கத்தை யுண்டாக்காமலே கர்மநாச நதியின் ஜல பரிச முதலியவைகளால் நாசமாய்விடும் தர்மம் யாதோ அத்தர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். அந்த அவ்வியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு முற்கூறிய தர்மத் தன்மை ஜாதியுள்ள லக்ஷணங் கூறப்பட்டது. அந்த தர்மத்தன்மை ஜாதி சுவர்க்த்தினை யுண்டக்காத தர்மத்திலு மிருக்கின்றது. ஆகையால் தர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

## ௪௮௬. தர்மத்தின் ஆசிரயத்தினதும், உற்பத்தி விநாசத்தினதும், சுக முதலியவைகளின் சாதனத்தன்மையினதும் வர்ணனம்.

இவ்வாருகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித தர்மகுணம் கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஜீவாத்மாவினும் வேருன பிருதிவி முதலிய திரவியங்களிலும், ஈசுவராத்மாவிடத்தும் தர்மமிருப்பதின்று, அத்தர்மம் அதீந்திரியமேயாகின்றது. அதாவது; எவ்விந்திரியத்தாலும் அத்தர்மத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அத்தர்மம் முற்கூறிய சுக, துக்கத்தினைப் போன்று உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது. யாதாமோர் தர்மமும் நித்தியமாகிறதில்லை. ஆண்டு ஜீவாத்மாவோ அத்தர்மத்திற்கு சமவாயி காரணமாகின்றது. அஜ்ஜீவாத்மாவினோ டுண்டாம் மனதின் சையோகம் அசமவாயி காரணமாகின்றது. வேதவிஹித யாகம், தானம், கங்காஸ்நானம் முதலிய சுபகர்மங்கள் நிமித்தகாரணமாகின்றன. அங்ஙனமே மித்தியா ஞான ஜன்னிய வாசனையும் அத்தர்மத்திற்கு நிமித்த காரணமாகின்றது. இவ்வுலக சுகம் எவ்வளவிருக்கின்றனவோ அங்ஙனமே சரீரம், இந்திரியம், சந்தனம், பெண் முதலிய சுக சாதனங்களெவ்வள விருக்கின்றனவோ அங்ஙனமே சுவர்க்க முதலிய உலகங்களின் சுகம் எவ்வளவிருக்கின்றனவோ அவைகளின் சாதனமாகிய தேவ சரீர முதலியன எவ்வளவிருக்கின்றனவோ அவைகளோடுள்ள சர்வ சுகங்கட்கும் அத்தர்மமே அசாதாரண காரணமாகின்றது,

## ௪௮௭. யாகாதிகளில் சுருதிப் பிரதிபாதித சுவர்க்க முதலியவைகளின் காரணத்தன்மையினை நிர்வஹிக்கும் பொருட்டு தர்ம வடிவ வியாபாரத்தின் கற்பனம்.

அத்தர்மம் அதீந்திரியமாயினும் யாகம், தானமுதலியவைகளின் வியாபார வடிவமாக கற்பிக்கப்படுவதாகின்றது. ஓர் கால் யாகம், தானம் முதலியவைகளின் வியாபாரவடிவமாக தர்மத்தை கற்பிக்காவிடின் யாகம், தானம் முதலிய கர்மம் சுவர்க்கத்தினை உண்டாக்குவதேயன்றாம். ஏனெனின், எவ்வஸ்து தனது காரியத்தின் மறைப்பின்றிய முதற்க்ஷணத்திலிருக்கின்றதோ அல்லது எவ்வஸ்துவால் உண்டான வியாபாரம் அக்கர்மத்தின் மறைப்பின்றிய முதற்

க்ஷணத்திலிருக்கின்றதோ அவ்வஸ்துவே அக்காரியத்தினைக் குறித்து காரணமாகின்றது. எவ்வஸ்து தானும் அக்காரியத்தின் மறைப்பின்றிய முற்க்ஷணத்திலிராததாகின்றதோ அங்ஙனமே எவ்வஸ்துவாலுண்டான வியாபாரமும் அக்காரியத்தினது மறைப்பின்றிய முற்க்ஷணத்தி லிராததாகின்றதோ அவ்வஸ்து அக்காரியத்தினைக் குறித்து காரணமாகிறதில்லை. ஆண்டு யாகம், தான முதலிய கர்மங்களோ உடனே நாசமாய் விடுகின்றன. சுவர்க்க வடிவ பயன் அப்புருஷனுக்கு மரணத்தின் பின் அனேக காலத்திற்குப் பின்னர் பிராப்தமாகின்றது. இங்ஙனம் முன்னர் நாசமாயதும், தர்ம வடிவ வியாபாரமின்றியதுமாகிய யாகம், தான முதலியவைகட்கு சுவர்க்கத்தின் காரணத்தன்மையே சம்பவியாது. "ஸ்வர்ககாமோயஜேத" என்பதான இவை முதலிய சுருதிகள் யாக, தான முதலிய கர்மங்களில் சுவர்க்கத்தின் காரணத்தன்மையே கூறியிருக்கின்றன. ஆகையால் அச்சுருதி பிரதிபாதித காரணத்தன்மையின் நிர்வாஹத்தின் பொருட்டு யாக, தான முதலியவைகளாலுண்டான தர்ம வடிவ வியாபாரம் அவசியம் கற்பிக்கப்படவேண்டும். ஆண்டு யாக, தான முதலிய கர்மங்களின் நாசமுளதாயினும் யாகாதிகளால் ஜன்னிய தர்ம வடிவ வியாபாரம் நாசமாவதின்று. ஆனால் அக்கர்மகர்த்தா ஜீவாத்மாவிடத்தில் அந்த தர்ம வடிவ வியாபாரம் கட்டுண்டிருக்கின்றது. அத்தர்மத்தானேயே அப்புருஷனுக்கு சுவர்க்க சுகத்தின் பிராப்தியுண்டாகின்றது. வியாபாரத்தினும் வேறாக வேறொன்றும் அக்காரியத்தைக் குறித்து சித்தமாகாது. எங்ஙனம்: கடத்தின் பிரத்தியக்ஷத்தில் கட, சக்ஷுக்களின் சையோகம் வியாபாரமாகின்றது. அச்சையோக வியாபாரத்தால் அச்சக்ஷு இந்திரியம் அக்கட பிரத்தியக்ஷத்தைக் குறித்து அன்னியதா சித்தமாகாது. அங்ஙனமே அத்தர்ம வடிவ வியாபாரத்தால் யாகம், தான முதலிய கர்மங்கள் சுவர்க்கத்தைக் குறித்து அன்னியதா சித்தமாகாது. ஈண்டு காரண சாமக்கிரியினும் வேறான வஸ்துவினை அன்னியதா சித்தமென்பர். ஆகையால் எங்ஙனம் அக்கடத்தின் பிரத்தியக்ஷத்தில் அச்சையோக வடிவ வியாபார மூலமாய் அச்சக்ஷு இந்திரியத்திற்குக் காரணத்தன்மை உண்டாகின்றதோ அங்ஙனமேயாக, தான முதலியவைகட்கும் அத்தர்மவடிவ வியாபார மூலமாய் சுவர்க்க வடிவ பலத்திற்கு காரணத்தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் அந்த யாக, தானுதி கர்மங்களில் சுவர்க்கத்தினது காரணத்தன்மையினை சித்தஞ் செய்யும் பொருட்டு அத்தர்மத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டும்.

## ௪௪௪. யாக முதலிய கர்மங்களின் துவம்சத்தில் வியாபாரத் தன்மையின் சங்கை.

சங்கை:—யாகம், தானம் முதலிய கர்மங்களின் துவம்சமே யாகாதிகளின் வியாபாரமாம். அதாவது; தனது துவம்சவடிவ வியாபாரவாயிலாகவே யாகம், தான முதலியன சுவர்கக வடிவ பலத்திற்குக் காரணமாம். அத்துவம்சத்திற்கு நாச முண்டாகிறதில்லை. ஆகையால் யாக முதலியவைகளின் துவம்சம் சுவர்க்கத்தின் மறைப்பின்றிய முற்க்ஷணத்தி லிருப்பதுமாம். ஆகையால் யாகம், தான முதலியவைகளின் வியாபார வடிவமாக தர்மத்தை கற்பித்தல் பயனின்மையாம்.

சமாதானம்:—யாக முதலியவைகளின் துவம்சத்தில் யாக முதலியவைகளின் வியாபார வடிவத்தன்மைச் சம்பவியாது. ஏனெனின், எவ்வஸ்து எக்காரியத்தைக் குறித்து காரணமாகின்றதோ அவ்வஸ்துவின் துவம்சம் அக்காரியத்தைக் குறித்து காரணமாகிறதில்லை. அதாவது; பிரதியோகி, துவம்சமா மிரண்டிற்கும் ஓர் காரியத்தினை உண்டாக்குந் தன்மை யாண்டுங் காணப்படுகிறதில்லை. ஆனால் எக்காரியத்தைக் குறித்து பிரதியோகி காரணமாகின்றதோ அக்காரியத்தைக் குறித்து பிரதியோகியின் துவம்சம் காரணமாவதின்று. எக்காரியத்தைக் குறித்து துவம்சம் காரணமாகின்றதோ அக்காரியத்தைக்குறித்து அத்துவம்சத்தின்பிரதியோகி காரணமாகிறதில்லைஎன்பதான விவஸ்தை யாண்டுங் காணப்படுகின்றது. ஆகையால் யாகம், தானம்முதலிய கர்மங்கட்கும், யாக முதலியவைகளின் துவம்சத்திற்கும் ஒரு சுவர்க்க வடிவ காரியத்தின் காரணத் தன்மையை யொப்புவது அத்தியந்தம் விருத்தமாம். அல்லது அந்த யாக முதலியவைகளின் துவம்சத்தினை சுவர்க்கத்தின் காரணமாக வொப்பின் சுவர்க்க வடிவ பலத்திற்கு எக்காலத்திலும் நாசம் உண்டாகாததாகும். ஏனெனின், அந்த யாக முதலியவைகளின் துவம்சம் நாசமில்லாததாவதால் நித்தியமாம். அத்தகைய துவம்ச வடிவ காரணத்தினிருப்புளதாக சுவர்க்கவடிவ பயனது நாசம் எக்காலும் உண்டாகாததாகுமென்னு மிவ்வார்த்தை சுருதி, ஸ்மிருதி வடிவ சாத்திரத்தினும் விருத்தமாம். எக்காரணத்தாலெனின் சாத்திரமானது சுவர்க்க புருஷனுக்கு பல போகத்தின் பின்னர் கீழே வீழ்ச்சி கூறியிருக்கின்றது. யாக முதலியவைகளால் உண்டாய தர்ம வடிவ வியாபாரத்தினை சுவர்க்கத்தின் காரணமாக ஒப்பின் கூறிய அத்தோஷம் பிராப்தமாகாது. எக்காரணத்தாலெனின் அத்தர்மம் அந்திய பலத்தின் போகத்தால் நாசமாய் விடுகின்றது. அல்லது சாத்திரத்தில் கங்கா ஸ்நானத்தானும் சுவர்க்கத்தின் பிராப்தி கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு ஸ்ரீ கங்கா ஜலத்தின் பிரவாஹத்திலுள்ள புருஷனது சரீரத்தினோடு அனேக ஜலத்தின் சையோகம் யாதோ அஜ்ஜல சையோகத்தினை ஸ்நானமென்பர். அத்தகைய அனேக ஜல சையோகங்களின் அனேக துவம்சங்களில் வியாபார வடிவத்தன்மையை கற்பிப்பதில் அத்தியந்தம் கௌரவதோஷத்தின் பிராப்தியுண்டாகின்றது. அதன் அபேக்ஷையால் கங்கா ஸ்நானத்தா லுண்டாம் தர்மமொன்றில் வியாபார வடிவத்தன்மை கற்பிப்பதில் லாகவமிருக்கின்றது. ஆகையால் லாகவத்தானும் அத்தர்மத்திலேயே யாகமுதலியவைகளின் வியாபார வடிவத்தன்மைச் சம்பவிக்கின்றது; துவம்சத்தில் வியாபார வடிவத்தன்மைச் சம்பவியாது. அல்லது சாத்திரத்தில் கர்ம நாச நதியின் ஜல பரிசாதிகளால் தர்மத்தின் நாசங் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு யாக, தானாதிகளால் ஜன்னிய தர்மத்தை அங்கீகரியாவிடின் அக்கர்ம நாச ஜல பரிச முதலியன எதனை நாசஞ் செய்யும்? ஆண்டு யாக, தானாதி கர்மமோ அக்கர்ம நாச ஜல பரிசத்திற்கு முன்னரே உண்டாகி நஷ்டமாய் விடுகின்றது. ஆகையால் அக்கர்ம நாச ஜல பரிச முதலியவைகளில் யாக முதலிய கர்மங்களை நாசஞ் செய்யுந் தன்மை அல்லது பிரதிபந்திக்குந் தன்மை சம்பவியாது. அந்த யாகாதி கர்மங்களின் துவம்சம் நாசமில்லாததாம். ஆகையால் துவம்சத்தை

நாசஞ் செய்யுந் தன்மையும் அவைகளிடத்து சம்பவியாது. ஆகையால் அக்கர்ம நாச ஜல பரிச முதலியவைகளால் நாசமாக யோக்கியமாகிய யாகாதி ஜன்னிய தர்ம்மம் அவசியம் அங்கீகரிக்கப் படவேண்டும்.

அஅக. தர்மத்தினை நாசஞ் செய்வனவாகிய காரணங்களின் வர்ணனம்.

இனி தர்மத்தினை நாசஞ்செய்வனவாகிய காரணங்களை வர்ணிப்பாம். ஆண்டு வேத விஹித யாகம், தானம் முதலிய சுப கர்மங்களின் அநுஷ்டானத்தால் புருஷனிடத்து உண்டாகிய தர்ம்மம் யாதோ அத்தர்மம், கர்ம நாச நதியின் ஜலத்தை பரிசிப்பதானும் நாசமாய் விடுகின்றது. தான் செய்த யாகம், தானம் முதலியகர்மங்களின் உத்கிருஷ்டத்தன்மையை போதிக்கும்பொருட்டு தனது வாக்கால் அந்த யாகம், தானம் முதலிய கர்மங்களை புகழ்ந்துக் கொண்டாடுவதானும் புருஷனுக்கு யாகம், தானம் முதலியவைகளால் உண்டாகிய தர்ம்ம் நாசமாய் விடுகின்றது. ஆகையால் அப்புகழ்ச்சியும் அத்தர்மத்தினை நாசஞ் செய்வதாகின்றது. சுக வடிவ பலத்தைக் கொடுக்கும் சுக வடிவ போகத்தானும் அத்தர்மம் நாசமாய் விடுகின்றது. சிரவணம், மனனம் முதலிய சாதனங்களால் உண்டாகிய தத்துவ ஞானத்தானும் அத்தர்மம் நாசமாய் விடுகின்றது. தர்ம நிரூபணம் முற்றிற்று.

அகூ०. அதர்ம நிரூபணம்.

அதர்ம லக்ஷணம். ஆண்டு "ദുഃഖാസാധാരണകാരണം ധർമ്മഃ" (இ-ள்.) துக்கத்திற்கு எது அசாதாரண காரணமாகின்றதோ அது அதர்மமெனப்படுகின்றது. ஆண்டு எப்பிராணிக்கு எவ்வெத்துக்கம் பிராப்தமாகின்றனவோ அவ்வத்துக்கம் அதர்மத்தானேயே பிராப்தமாகின்றன. அவ்வதர்மமின்றி அவ்வத்துக்கம் பிராப்தமாவனவன்று. ஆகையால் துக்கத்தின் அசாதாரண காரணத்தன்மைவடிவ அதர்மத்தின் லக்ஷணம்சம்பவிக்கின்றது. ஆண்டு அந்த லக்ஷணத்திலும் "அசாதாரணம்" என்னும் பதங்கூருவிடின் காலமுதலிய சாதாரண காரணங்களில் அவ்வதர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம்; எக்காரணத்தாலெனின் அக்கால முதலியன சர்வ காரிய மாத்திரத்தின் காரணமாவதால் துக்கத்திற்குங்காரணமேயாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அக்காரணத்திற்கு "அசாதாரணம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு கால முதலியவைகளில் அவ்வசாதாரண காரணத்தன்மை யின்றும். ஆனல் சாதாரண காரணத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் கால முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—எங்ஙனம் அதர்மம் துக்கத்தின் அசாதாரண காரணமாகின்றதோ அங்ஙனமே முட் குத்துதல் முதலியனவும், ஜ்வரம், சூலை முதலியனவும் துக்கத்தின் அசாதாரண காரணமேயாகின்றன. ஆகையால் அதர்மத்தின் லக்ஷணத்திற்கு முட் குத்துதல் முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகுமென்பதான சங்கை யுண்டாக இனி அதர்மத்திற்கு வேறு லக்ஷணங் கூறுவாம்.

௫௱௧. அதர்மத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"𑌨𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌕𑌰𑍍𑌮𑌜𑌨𑍍𑌯𑌨𑌰𑌕𑌜𑌨𑌕𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌗𑍁𑌣𑌤𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌜𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌧𑌰𑍍𑌮𑌃" (இ-ள்.) சுருதி, ஸ்மிருதி வடிவ சாத்திரங்களால் நிஷித்த ஹிம்சை முதலிய கர்மங்களால் உண்டானதும், நரகத்தை யுண்டாக்குவதுமாகிய வஸ்துவில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதியாதோ அஜ் ஜாதியுடைய குணம் அதர்மமெனப்படுகின்றது. ஆண்டு ஹிம்சை முதலிய நிஷித்த கர்மங்களால் ஜீவாத்மாவிடத்து அதர்மத்தின் உற்பத்தியுண்டாகின்றது. அவ்வதர்மத்தால் ஜீவாத்மாவிற்கு நரகத்தின் பிராப்தியுண்டாகின்றது. ஆகையால் அவ்வதர்மம் நிஷித்தகர்மத்தால் உண்டாவதும், நரகத்தினை உண்டாக்குவதுமாம். அத்தகைய அதர்மத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமும் அதர்மத்தன்மை ஜாதியாம். அவ்வதர்மத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் எல்லா அதர்மங்களி லிருக்கின்றது. ஆகையால் இவ்வதர்மத்தின் லக்ஷணம் தோஷமில்லாததாம். ஆண்டு "குணத்தன்மையின் வியாப்பிய ஜாதியுடையது அதர்மம்" என இம்மாத்திரமே அதர்மத்தின் லக்ஷணமாகக் கூறின் குணத்தன்மை ஜாதியின் வியாப்பிய உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக் கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நரகத்தை யுண்டாக்குவதிலிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்கள் நரகத் தினை உண்டாக்குவனவன்றாம். ஆகையால் உருவ முதலியவற்றி லிருக்கும் உருவத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நரகத்தையுண் டாக்குவதிலிருப்பதும் குணத்தன்மையின் வியாப்பியஜாதியுடையதும் அதர் மம்" என இம்மாத்திரமே அதர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத் தில் "நிஷித்த கர்மந்தா னுண்டாயதும்" என்னும் பதங் கூறாவிடின் ஈசுவர னது ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், அவ்வீசுவரனது ஞானம் காரிய மாத்திரத்தினை உண்டாக்குவதா மாகையால் நரக வடிவ காரியத்தினையும் உண்டாக்குவதேயாம். அத்தகைய நரகத்தை யுண்டாக்கும் ஞானத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமு மாயது ஞானத்தன்மை ஜாதியாம். அந்த ஞானத்தன்மை ஜாதியைக் கொண்டு ஈசுவரனது ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டா கும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷ ணத்தில் "நிஷித்த கர்மத்தால் உண்டாயதும்" என்னும் பதங் கூறப்பட் டது. ஆண்டு அவ்வீசுவரனது ஞானம் நித்தியமாவதால் நிஷித்த கர்மத்தால் உண்டாயதன்றாம். ஆகையால் அந்த ஞானத்தன்மை ஜாதி நிஷித்த கர்மத் தால் உண்டாயதிலிருப்பதன்றாம். ஆகையால் அந்த ஞானத்தன்மை ஜாதி யைக் கொண்டு ஈசுவரனது ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நிஷித்த கர்மத்தால் உண்டாயதில் இருப்பதும் குணத்தன்மையின் வியாப்பியஜாதியுடையதும் அதர்மம்" எனஇம்மாத்திரமே அவ்வதர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நரகத்தை யுண்

டாக்குவதும்'' என்னும் பதங் கூருவிடின் நிஷித்த கர்மத்தின் பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனில், விஷயமின்றி யாதோர் பிரத்தியக்ஷமும் உண்டாகிறதில்லை. ஆகையால் நிஷித்த கர்மத்தின் பிரத்தியக்ஷ ஞானம் நிஷித்த கர்ம வடிவ விஷயத்தால் ஜன்னியமே யாகின்றது. அத்தகைய நிஷித்த கர்மத்தை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாயது பிரத்தியக்ஷத்தன்மை ஜாதியாம். அந்த பிரத்தியக்ஷத்தன்மை ஜாதியைக்கொண்டு அந்த பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நரகத்தை யுண்டாக்குவதும்'' என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு நிஷித்த கர்மத்தின் பிரத்தியக்ஷ ஞானம் நரகத்தினை உண்டாக்குவதன்ரும். ஆகையால் அந்த பிரத்தியக்ஷத்தன்மை ஜாதி நரகத்தை யுண்டாக்குவதி லிருப்பதன்ரும். ஆகையால் பிரத்தியக்ஷத்தன்மை ஜாதியைக்கொண்டு அந்த பிரத்தியக்ஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "நிஷித்த கர்மத்தா லுண்டாயதும் நரகத்தை யுண்டாக்குவதிலும் இருக்கும் ஜாதியுடையது அதர்மம்'' என இம்மாத்திரமே அதர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்'' என்னும் பதங் கூருவிடின் நிஷித்த கர்மத்தால் உண்டாயதும், நரகத்தினை உண்டாக்குவதுமாகிய அதர்மத்திலிருக்கும் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய சர்வ குணங்களிலும், சத்தாஜாதியைக் கொண்டு திரவிய, குண கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்'' என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை ஜாதியும், சத்தாஜாதியும் குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்ரும். ஆகையால் குணத்தன்மை, சத்தா ஜாதியைக் கொண்டு உருவ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நிஷித்த கர்மத்தால் உண்டாயதும் நரகத்தை யுண்டாக்குவதும் அதர்மம்'' என இம்மாத்திரமே அதர்மத்தின் லக்ஷணமாகக்கூறின் நரகத்தினை உண்டாக்காமலே பிராயச்சித்தத்தால் நாசமாய்விடும் அதர்மத்தில் அந்த லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாம். அவ்வவ்வியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அதர்மத்தன்மை ஜாதியுள்ள லக்ஷணங் கூறப்பட்டது. ஆண்டு அதர்மத்தன்மை ஜாதி பிராயச்சித்தத்தால் நாசமாகும் அதர்மத்திலு மிருக்கின்றது. ஆகையால் அவ்வதர்மத்தில்கூறிய அந்தலக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது.

## ௬௩௨. அதர்மத்தின் ஆசிரயத்தினதும், உற்பத்தி விநாசத்தினதும், துக்க முதலியவைகளை உண்டாக்குவதினதும் வர்ணனம்.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித அதர்ம குணமும் முற்கூறிய தர்ம குணத்தினைப் போன்று கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஜீவாத்மாவினும் வேருன பிருதிவி முதலிய திரவியங்களிலும், ஈசுவராத்மாவிலும் அதர்ம மிருப்பதன்று. தர்மத்தினைப்

போன்று அதர்மமும் அதீந்திரியமேயாகின்றது. அதாவது; இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாகாததேயாகின்றது. முற்கூறிய தர்மத்தினைப் போன்று இவ்வதர்மமும் உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது; யாதோர் அதர்மமும் நித்தியமாகிறதில்லை. ஆண்டு அதர்மத்திற்கு ஜீவாத்மாவே சமவாயி காரணமாகின்றது. ஜீவாத்மாவினுடன் மனதின் சையோகம் அதர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. சாத்திர நிஷித்த ஹிம்சை முதலிய கர்மங்களும், மித்தியா ஞான ஜன்னிய வாசனையும், தேசம், கால முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. இவ்வுலகத்தின் துக்கமும், அத்துக்கத்தின் சாதனமாகிய ஜ்வரம், சூலை முதலியனவும், நரக முதலியவைகளின் துக்கமும், அத்துக்கங்களின் சாதனமாகிய நாரகீய சரீர முதலியனவும் எவ்வளவிருக்கின்றனவோ, அச்சாதன சஹித அவ்வெல்லா துக்கங்கட்கும் அதர்மமே காரணமாகின்றது.

## ருகூரு. ஹிம்சை முதலிய நிஷித்த கர்மங்கட்கு வியாபார வடிவத்தால் அதர்மத்தினது கற்பனையின் வர்ணனம்.

எங்ஙனம் சுவர்க்க சுகத்தின் உற்பத்தியின் பொருட்டு யாகம், தானம் முதலிய கர்மங்களின் வியாபார வடிவமாக தர்மம் கற்பிக்கப்பட்டதோ அங்ஙனமே நரக துக்கத்தின் உற்பத்தியின் பொருட்டு ஹிம்சை முதலிய நிஷித்தகர்மங்களின் வியாபாரவடிவமாக அதர்மம் கற்பிக்கப்படுவதாகின்றது. அதர்ம வடிவ வியாபாரமின்றி முன் நஷ்டமாய ஹிம்சை முதலிய நிஷித்த கர்மங்கட்கு நரகத்தின் காரணத்தன்மையே சம்பவியாது. முற்கூறிய முறைப்படி நிஷித்த கர்மங்களின் துவம்சத்திற்கும் வியாபாரவடிவத்தன்மை சம்பவியாது. ஆகையால் நிஷித்த கர்மங்களின் வியாபார வடிவமாக அதர்மம் அவசியம் கற்பிக்கப்படவேண்டும். விசேஷமாக யுக்திகள் இவ்வர்த்தத்தில் முன்னர் தர்ம நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம். அந்த யுக்திகளை ஈண்டும் முறையாக அறிந்துக் கொள்க. அல்லது ஓர் கால் நிஷித்த கர்மத்தால் ஜன்னிய அதர்மத்தை அங்கீகரியாவிடின், நிஷித்த கர்மங்கட்குப் பின் சாத்திரமானது விதித்துள்ள பிராயசித்தங்களால் எதனது நாசம் உண்டாகும்? ஆண்டு ஹிம்சை முதலிய நிஷித்த கர்மங்களோ பிராயச்சித்தத்திற்கு முன்னரே உண்டாகி நாசமாய் விடுகின்றன. ஆகையால் பிராயச்சித்தமானது ஹிம்சை முதலியகர்மங்களை நாசம் அல்லது பிரதிபந்தஞ்செய்வதன்று. நிஷித்த கர்மங்களின் துவம்சமோ நாசமில்லாததாம் ஆகையால் பிராயச்சித்தமானது துவம்சத்தையும் நாசஞ் செய்யாது. பரிசேஷத்தால் பிராயச்சித்தமானது ஹிம்சை முதலிய நிஷித்த கர்மத்தால் ஜன்னிய அதர்மத்தினையே நாசஞ் செய்கின்றது. ஆகையால் பிராயச்சித்தத்தை விதித்துள்ள சாத்திரத்தின் பிரமாண்ணியத்தன்மையின் பொருட்டும் நிஷித்த கர்மத்தால் ஜன்னிய அதர்மத்தை அவசியம் அங்கீகரிக்க யோக்கியமாம்.

## ருகூச. அதர்மத்தை நாசஞ் செய்வதாகிய காரணங்களின் வர்ணனம்.

இனி அதர்மத்தின் நாசத்தின் காரணங்களைக் கூறுவாம். ஆண்டு ஹிம்சை முதலிய நிஷித்த கர்மங்களை செய்வதால் ஜீவாத்மாவிடத்து உண்

டாகிய அதர்மம் பிராயச்சித்தத்தாலும் நாசமாய் விடுகின்றது. அதர்ம நிவிர்த்தியின் பிராயச்சித்தத்தை மனு, யாஞ்ஞவல்கியர் முதலியோர் விரிவாய் நிரூபித்திருக்கின்றனர். அதர்மத்தால் ஜீவாத்மாவிற்கு பிராப்தமாகும் துக்க வடிவ பலத்தின் போகத்தாலும் அவ்வதர்மம் நாசமாய் விடுகின்றது. சிரவணம், மனன முதலிய சாதனங்களால் உண்டாகிய தத்துவ ஞானத்தாலும் நாசமாய் விடுகின்றது. தர்மம், அதர்மமா மிரண்டும் விபு ஆத்மாவின் விசேஷ குணமாயினும் யோக்கியமன்றும்; அதீந்திரியமாம். ஆகையால் தனக்குப் பின்னுண்டாய ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்களால் தர்ம, அதர்மங்களின் நாசம் உண்டாகிறதில்லை. ஆனல் முற்கூறிய பல போக முதலிய காரணங்களாலேயே தர்ம, அதர்மங்களின் நாசம் உண்டாகின்றது.

௪௯௫. தர்ம, அதர்மத்தினை சாதிக்கும் அநுமானம்.

அல்லது முற்கூறிய தர்ம, அதர்மமா மிரு குணங்கள் இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமில்லாததாவதால் அதீந்திரியமாகின்றன. இக்காரணத்தாலேயே கற்றுணர்ந்தோர் தர்ம, அதர்மத்தினை அதிர்ஷ்டமென்னும்பெயரால் விவஹரிக்கின்றனர். அத்தகைய அதிர்ஷ்டவடிவ தர்ம, அதர்மத்தின் சித்தி இவ்வநுமானத்தா லுண்டாகின்றது. "ദേവദത്തസ്യ ശരീരാദികം ദേവദത്തസ്യ വിശേഷഗുണജന്യം കാര്യത്വേസതി ദേവദത്തസ്യ ഭോഗഹേതുത്വാത് ദേവദത്തപ്രയത്നജന്യസ്രഗാദിവത്" (இ-ள்.) தேவதத்தனென்னப் பெயரிய புருஷனது சரீர, இந்திரிய முதலியன அத்தேவதத்தனது விசேஷ குணத்தால் ஜன்னியமாக யோக்கியமாம், காரிய வடிவமாகி தேவதத்தனது போகத்திற்கு ஏதுவாவதால், எவ்வெவ்வஸ்து காரிய வடிவமாகி தேவதத்தனது போகத்திற்கு ஏதுவாகின்றதோ அவ்வவ்வஸ்து தேவதத்தனது விசேஷ குணத்தால் ஜன்னியமேயாகின்றது. எங்ஙனம்: தேவதத்தனது முயற்சியால் சாத்திய புஷ்ப சயன முதலிய வஸ்துக்கள் காரிய வடிவமாகி தேவதத்தனதுபோகத்திற்கு ஹேதுவாகின்றது. ஆகையால் தேவதத்தனது முயற்சி வடிவ விசேஷ குணத்தால் ஜன்னியமுமாகின்றது. அங்ஙனமே இத்தேவதத்தனது சரீரம், இந்திரியம் முதலியனவும் காரிய வடிவமாகி தேவதத்தனது போகத்திற்கு ஹேதுவா மாகையால் தேவதத்தனது யாதாமோர் விசேஷ குணத்தால் அவசியம் ஜன்னியமாவதாகும். ஆண்டு தேவதத்தனெனப் பெயரிய புருஷனது புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, பாவனை என்னும் இவை முதலிய விசேஷ குணங்கட்கு தேவதத்த புருஷனது சரீர, இந்திரிய முதலியவைகளின் காரணத்தன்மைச் சம்பவியாது. பரிசேஷத்தால் தர்ம, அதர்ம வடிவ விசேஷ குணமே அச்சரீர, இந்திரிய முதலியவைகளின் காரண வடிவமாக சித்தமாகின்றது. ஆண்டு கூறிய அநுமானத்தில் "தேவதத்தனதுபோகத்திற்குஏதுவாவதால்" எனஇம்மாத்திரமே ஹேதுவாகக்கூறி அவ்வேதுவில் "காரியமாவதாகி" என்னும் பதங் கூருவிடின் ஆத்மாவிலும், காலம், ஈசுவரன் முதலியவைகளிலும் அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் சுக, துக்கத்தின் சாக்ஷாத்காரத்தினை போகமென்பர். அப்போகத்திற்கு தேவதத்தனது ஆத்மாவே சமவாயிகாரணமும்,

காலம் முதலியன நிமித்த காரணமாம். ஆகையால் அவ்வாத்மா, கால முதலிய வைகளில் தேவதத்தனது போகத்திற்கு ஹேதுத்தன்மை வடிவ ஹேதுவோ யிருக்கின்றது; ஆனால் விசேஷ குணத்தால் ஜன்னியத்தன்மை வடிவ சாத்திய மின்றும். அவ்வியபிசார தோஷத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு அவ்வேதுவில் "காரியமாவதாகி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆத்மா, கால முதலியவைகளில் காரிய வடிவத்தன்மை யின்றும்; ஆகையால் அவைக ளிடத்து அவ்வேதுவிற்கு வியபிசாரமுண்டாகாது. இவ்வாறாகக் கூறிய அநு மானப் பிரமாணத்தால் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தின் சித்தி சம்ப விக்கின்றது.

## அகூகூ. ஈசுவரனிடத்தும், தத்துவவேத்தா ஞானியினிடத்தும் மித்தியா ஞான ஜன்னிய வாசனையினது அபாவத்தால் தர்ம, அதர்மத்தின் அநுற்பத்தி.

சங்கை:—எங்ஙனம் ஜீவாத்மாவில் விஹித, நிஷித்த கர்மங்களால் தர்ம, அதர்மத்தின் உற்பத்தி யுண்டாகின்றனவோ அங்ஙனமே ஈசுவரனிடத்தும் தர்ம, அதர்மங்களின் உற்பத்தி என் உண்டாகக்கூடாது?.

சமாதானம்:—தர்ம, அதர்மத்தின் உற்பத்தியில் மித்தியா ஞான ஜன்னிய வாசனையுங் காரணமாகின்றது. மித்தியா ஞான ஜன்னிய வாசனை ஈசுவரனிடத்தின்று மாகையால் ஈசுவரனிடத்து தர்ம, அதர்மங்களின் உற் பத்தி யுண்டாகிறதில்லை. அல்லது மித்தியா ஞான ஜன்னிய வாசனையின் அபாவத்தால் ஈசுவரனிடத்து எங்ஙனம் தர்ம, அதர்மங்களின் உற்பத்தி யுண்டாகிறதில்லையோ அங்ஙனமே மித்தியா ஞான ஜன்னிய வாசனையின் அபாவத்தால் யுண்மையுணர்ந்த ஞானியிடத்தும் தர்ம, அதர்மத்தின் உற்பத்தி உண்டாகிறதில்லை. இக்காரணத்தாலேயே யுண்மையுணர்ந்த ஞானிகள் செய் யும் விஹித, நிஷித்த கர்மங்கள் அந்த ஞானிகட்கு சுக, துக்க பலத்தின் பிராப்தியைச் செய்கிறதில்லை.

## அகூள. தத்துவ ஞானத்தால் சஞ்சித கர்மத்தின் நாச வர்ணனம்.

சங்கை:—முன்னர் தத்துவ ஞானத்திற்கு தர்ம, அதர்மத்தினை நாசஞ் செய்யுந் தன்மை கூறியது சம்பவியாது. ஏனெனின், ஒர்கால் தத்துவ ஞானத் தால் சர்வ தர்ம, அதர்மங்களின் நாசமுண்டாகுமாயின் தத்துவவேத்தா புருஷனது சரீரத்தின் ஸ்திதியே உண்டாகாததாகவேண்டும். அங்ஙனமே அத்தத்துவவேத்தா புருஷனுக்கு சுக, துக்கத்தின் பிராப்தியும் உண்டாகாத தாகவேண்டும். எக்காரணத்தாலெனின் அச்சரீரத்தின் ஸ்திதியிலும், சுக, துக்கத்திலும் அத்தர்ம, அதர்மமே காரணமாகின்றன. அத்தத்துவ ஞான முளதாயினும், சுக, வாமதேவர் முதலிய ஞானி புருஷரது சரீரத்தினிருப்பும், சுக, துக்கத்தின் அநுபவமும் சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சமாதானம்:—"க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்ருஷ்டே பராவரே ॥ ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா" இவை முதலிய சுருதி, ஸ்மிருதி வசனங்களில் எத்தத்துவ ஞானத்தால் கர்மங்களின் நாசஞ்

கூறப்பட்டிருக்கிறதோ அது பிராரப்த கர்மத்தினும் வேருன கர்மங்களின் நாசங் கூறப்பட்டிருக்கிறது. அதாவது; இப்புருஷனென்வன் முன் அநேக ஜன்மங்களில் விஹித, நிஷித்த கர்மங்களால் சம்பாதித்த எண்ணிறந்த தர்ம, அதர்மங்கள் இப்பொழுது பலத்தினை ஆரம்பிக்காத சஞ்சிதமாகிய தர்ம, அதர்மங்கள் யாவும் தத்துவ ஞானத்தால் நாசமாய் விடுகின்றன. சரீரத்தினை ஆரம்பித்ததும், சுக, துக்க வடிவ பலப்பிராப்தியைச் செய்ததுமாகிய பிராரப்த கர்மம் கேவலம் பலத்தின் போகத்தானேயே நாசமாகின்றது. அத்தத்துவ ஞானத்தால் நாசமாவதின்று. இக்காரணத்தானேயே "நாஹுக்தஂக்ஷீயதெ கமூ" என்னுமிவை முதலிய சாத்திரத்தின் வசனமானது பிராரப்த கர்மத்திற்கு போகத்தானேயே நாசங் கூறியிருக்கின்றது. ஆகையால் அப்பிராரப்த கர்மத்தின் வசத்தால் அத்தத்துவவேத்தா ஞானி புருஷனுக்கு சரீரத்தின் ஸ்திதியும், சுக, துக்கத்தின் அநுபவமும் சம்பவிக்கின்றன.

௫௯. தர்ம, அதர்மத்தின் சுக, துக்க வடிவ ஸ்திதியின் வியவஸ்தை.

அல்லது தர்ம, அதர்மங்கள் அநேகவிடத்தோ எவ்வெவ் ஜீவாத்மாவிடத்தில் உற்பன்னமாகின்றனவோ அவ்வவ் ஜீவாத்மாவிற்கே சுக, துக்க வடிவ பலத்தின் பிராப்தியைச் செய்கின்றன. சிலவிடத்தோ வேறு ஜீவாத்மா செய்த தர்ம, அதர்மங்கள் வேறு ஜீவர்கட்கும் அச்சுக, துக்க வடிவ பலத்தின் பிராப்தியைச் செய்கின்றன. எங்ஙனம் "விதூஸ்ஸுஹமஂகாஸ வஷிணூ யெஜத। யநூாஊாவ ாவயெசுவிணூ தநூயெஷூஸா ஹூஂ" என்னும் இவை முதலிய சுருதி, ஸ்மிருதிகளில் புத்திராதிகள் செய்த சிரார்த்த முதலியவைகளால் பிதுர்கட்கு சுவர்க்கத்தின் பிராப்தியைக் கூறியிருக்கின்றது, அங்ஙனமே "வதஂகிவிதரொ ஹெஷாஂ ஊஷுவிணாஉகக்ரியாஃ" என்னுமிவை முதலிய வசனங்களில் புத்திராதிகள் செய்த பாப கர்மத்தினுல் பிதுர்கட்கு நரகத்தின் பிராப்தியைக் கூறியிருக்கின்றது. பிதுர்கள் ஓர்கால் முத்தியடைவாராயின் அப்புத்திரர் முதலியவர்கட்கே அச்சிரார்த்த முதலிய கர்மங்களின் பயன் பிராப்தமாகின்றது. அதர்ம நிரூபணம் முற்றிற்று.

௫௬௩. சம்ஸ்கார நிரூபணம்.

சம்ஸ்கார லக்ஷணம், ஆண்டு "ஆத்விஶெஷகுணவூத்தி உ-ஜ-க வூத்திவூத்தி குணகுவவாவஜாதிரது ஸஂஸ்காரஃ" (இ-ள்.) ஆத்மாவின் விசேஷ குணத்திலிருப்பதும், மூர்த்தத் திரவியங்களிலிருப்பதுமாகிய குணத்தில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதியாதோர் அஜ்ஜாதியுடைய குணம் சம்ஸ்காரமெனப்படுகின்றது. ஆண்டு ஜீவாத்மாவில் இருப்பதாகிய பாவனுக்கிய (பாவனையெனப்பெயரிய) சம்ஸ்காரவடிவ விசேஷ குணம் யாதோ அப்பாவனையில் சம்ஸ்காரத்தன்மை ஜாதி யிருக்கின்றது. ஆகையால் அச்சம்ஸ்காரத்தன்மை ஜாதி ஆத்மாவின் விசேஷ குணத்திலிருப்பதெனப்படுகின்றது. பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களில் இருப்பதாகிய வேகமெனப் பெயரிய சம்ஸ்காரம் யாதோ, அவ்வேகத்தினும் அச்சம்ஸ்காரத்தன்மை ஜாதி யிருக்கின்றது.

ஆகையால் அச்சம்ஸ்காரத்தன்மைஜாதி மூர்த்தத்திரவியத்திலிருப்பதி லிருப்ப தெனப்படுகின்றது. அச்சம்ஸ்காரத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய சம்ஸ்காரத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத் தால் சர்வ சம்ஸ்காரங்களி லிருக்கின்றது. ஆகையால் கூறிய இச்சம்ஸ்காரத் தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "மூர்த்தத்திரவியத்திலிருப்பதிலிருப் பதும் குணத்தன்மையின் வியாப்பியமுமாகிய ஜாதியுடையது சம்ஸ்காரம்" என இம்மாத்திரமே சம்ஸ்காரத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ஆத்மாவின் விசேஷ குணத்திலிருப்பதும்" என்னும் பதங் கூறாவிடின் பிருதிவி முதலிய மூர்த்தத் திரவியங்களில் இருப்பதாகிய உருவ முதலிய குணங்களில் இருப்பதும், குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய உரு வத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்தலக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக் கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஆத்மாவின் விசேஷ குணத்தி லிருப்ப தும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவ முதலிய குணங்கள் ஆத்மாவின் விசேஷ குணங்களன்றும்; புத்தி முதலியனவே அவ்வாத்மாவின் விசேஷ குணமாம். ஆகையால் உருவத்தன்மை முதலிய ஜாதிகள் ஆத்மா வின் விசேஷ குணத்திலிருப்பனவன்றும். ஆகையால் உருவத்தன்மைமுதலிய ஜாதிகளைக் கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாகாது. அல்லது "ஆத்மாவின் குணத்திலிருப்பதும் மூர்த்தத் திரவியத்திலிருப்பதில் இருப்பதும் குணத்தன்மையின் வியாப்பியமுமாகிய ஜாதியுடையது சம்ஸ்காரம்" என இம்மாத்திரமே சம்ஸ்காரத்தின் லக்ஷண மாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறாவிடின் சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் ஐந்து குணங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், அச்சங் கியை முதலிய ஐந்து குணங்கள் பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களி லேயே இருக்கின்றன. ஆகையால் சங்கியை முதலிய ஐந்து குணங்கள் ஆத்மா வின் குணமுமாம். அங்ஙனமே பிருதிவி முதலிய மூர்த்தத்திரவியங்களின் குணமுமாம், அத்தகைய சங்கியைமுதலியஐந்துகுணங்களில் முறையாக இருப் பனவாகிய சங்கியாத்வம், பரிமாணத்வம், வேற்றுமைத்வம், சையோகத்வம், விபாகத்வமா மிவ்வைந்து ஜாதிகளிருக்கின்றன. அஜ்ஜாதிகள் ஆத்மாவின் குணத்திலிருப்பதும், மூர்த்தத்திரவியத்திலிருப்பதிலிருப்பதும், குணத்வஜாதி யின் வியாப்பியமுமாம். இத்தகைய சங்கியாத்வ முதலிய ஜாதிகளைக்கொண்டு அச்சங்கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டா கும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத் தில் "விசேஷம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அச்சங்கியை முதலிய ஐந்தும் ஆத்மாவின் குணங்களாயினும் விசேஷ குணமன்றும்; சாமான்னிய குணமாம். ஆகையால் அச்சங்கியாத்வ முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சங் கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஆத்மாவின் விசேஷ குணத்திலிருப்பதும் குணத்தன்மையின் வியாப் பிய ஜாதியுடையதும் சம்ஸ்காரம்" என இம்மாத்திரமே அச்சம்ஸ்காரத்தின்

லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "மூர்த்தத்திரவியத்தி லிருப்பதிலிருப்பதும்" என்னும் பதங்கூருவிடின் ஆத்மாவின் புத்திமுதலிய விசேஷகுணங்களில் இருப்பதும், குணத்வஜாதியின் வியாப்பியமுமாகிய புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மூர்த்தத்திரவியத்தி லிருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு புத்தி முதலிய குணங்கள் பிருதிவி முதலிய மூர்த்தத்திரவியங்களில் இருப்பனவன்று; ஆத்மா வடிவ அமூர்த்தத் திரவியத்திலேயே இருக்கின்றன. அத்தகைய புத்தி முதலிய குணங்களில் இருப்பதாகிய புத்தித்வ முதலிய ஜாதிகள் மூர்த்தத் திரவியத்திலிருப்பதி லிருப்பனவன்று. ஆகையால் புத்தி முதலிய ஜாதிகளைக் கொண்டு புத்தி முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஆத்மாவின் விசேஷ குணத்திலிருப்பதும் மூர்த்தத் திரவியத்தி லிருப்பதி லிருப்பதுமாகிய ஜாதியுடையது சம்ஸ்காரம்" என இம்மாத்திரமே அச்சம்ஸ்காரத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூருவிடின் சம்ஸ்காரத்தில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவ முதலிய குணங்களிலும், சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய, குண, கர்மங்களிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குணத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் குணத்தன்மை, சத்தா ஜாதிகளைக்கொண்டு உருவ முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௬00. வேகம், ஸ்திதிஸ்தாபகம், பாவனை யென்னும் வேறுபாட்டால் சம்ஸ்காரத்தின் மூவித வேற்றுமையினதும், அதனது ஆசிரயத்தினதும் வர்ணனம்.

இவ்வாருகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித அச்சம்ஸ்கார குணம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம், ஆத்மா என்னும் ஆறு திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு என்னும் மூன்றினிடத்து இருப்பதன்று. சம்ஸ்கார குணம் வேகம், ஸ்திதிஸ்தாபகம், பாவனை என்னும் வேறுபாட்டால் மூவிதமாகின்றது. ஆண்டு முதலாவது வேகமெனப்பெயரிய சம்ஸ்காரமோ பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆத்மாவிடத்திருப்பதன்று. மற்றைய ஸ்திதிஸ்தாபக மெனப்பெயரிய சம்ஸ்காரமோ சில நூலாசிரியர்கள் மதப்படி கேவலம் பிருதிவி யொன்றினிடத்தே யிருக்கின்றது. சில நூலாசிரியர்கள் மதப்படி பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு திரவியங்களி லிருக்கின்றது. ஆண்டு முதலாவது மதமுடையாரோ ஸ்திதிஸ்தாபகத்தினை விசேஷ குணமாகவொப்புகின்றனர். மற்றைய மதமுடையாரோ ஸ்திதிஸ்தாபகத்தினை சாமான்னிய குணமாக வொப்புகின்றனர். மூன்ருவது பாவனுக்கிய சம்ஸ்கா

ரமோ கேவலம் ஜீவாத்மாவிடத்தே யிருக்கின்றது. பிருதிவி முதலிய திரவியங்களிலிருப்பதன்று.

## ருoக. வேகமேனப் பெயரிய சம்ஸ்காரத்தின் லக்ஷணம்.

“ ஊநோவநூதிவநூதிஸஂஹாரகூவவ்யூஜாதிமாநுவெவஃ ” (இ-ள்.) மனதில் இருப்பதாகிய பதார்த்தத்தில் இருப்பதும், சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் வேகமெனப்படுகின்றது. ஆண்டு மனதில் வேகமிருக்கின்றது ; அவ்வேகத்தில் வேகத்தன்மை ஜாதி இருக்கின்றது. ஆகையால் வேகத்தன்மை ஜாதி மனதிலிருப்பதிலிருப்பதெனப்படுகின்றது. வேகம், ஸ்திதிஸ்தாபகம், பாவனையென மூவகைத்தாய சம்ஸ்காரங்களில் இருப்பதாகிய சம்ஸ்காரத்தன்மை ஜாதிக்கு வேகத்தன்மை ஜாதி வியாப்பியமாம். இத்தகைய வேகத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் சர்வ வேகங்களி லிருக்கின்றது. ஆகையால் கூறிய வேகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு “சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியஜாதியுடையது வேகம்” என இம்மாத்திரமே அவ்வேகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “மனதிலிருப்பதில் இருப்பதும்” என்னும் பதங்கள் கூறுவிடின் சம்ஸ்காரத் தன்மை ஜாதியின் வியாப்பிய ஸ்திதிஸ்தாபக ஜாதியைக் கொண்டு ஸ்திதிஸ்தாபகத்திலும், பாவனைக்கிய ஜாதியைக் கொண்டு பாவனையிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் “மனதில் இருப்பதில் இருப்பதும்” என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு ஸ்திதிஸ்தாபகமும், பாவனையும் மனதிலிருப்பதன்று. ஆகையால் ஸ்திதிஸ்தாபகத்தன்மை ஜாதியும், பாவனைத்தன்மை ஜாதியும் மனதிலிருப்பதி லிருப்பனவன்று. ஆகையால் ஸ்திதிஸ்தாபகத்தன்மை, பாவனைத்தன்மை ஜாதிகளைக்கொண்டு ஸ்திதிஸ்தாபகத்திலும், பாவனையிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது “மனதில் இருப்பதில் இருக்கும் ஜாதியுடையது வேகம்” என இம்மாத்திரமே வேகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியமும்” என்னும் பதங்கள் கூறுவிடின் மனதில் இருக்கும் சங்கியை முதலிய குணங்களில் இருப்பதாகிய சங்கியாத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு சங்கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் “சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியமும்” என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சங்கியாத்தன்மை முதலிய ஜாதிகள் சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் சங்கியாத் தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அச்சங்கியை முதலிய குணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ருoஉ. கர்மஜ வேகம், வேகஜ வேகமென்னும் வேறுபாட்டால் வேகத்தின் இருவித வேற்றுமை.

இவ்வாறாய லக்ஷணத்தால் லக்ஷித வேகமெனப் பெயரிய சம்ஸ்காரம் கர்மஜ வேகம், வேகஜ வேகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.

ஆண்டு வில்லினது நாணிக்கு பாணத்திேனாடு நோதனுக்கிய சையோக மூனா தாக அப்பாணத்தில் முதற்க்ஷணத்தில் கிரியா வடிவ கர்மம் உண்டாவதா கின்றது. அக்கர்மம் இரண்டாவது க்ஷணத்தில் அப்பாணத்தில் வேகத்தினை உண்டாக்குவதாகின்றது. அவ்வேகம் அடுத்த க்ஷணத்தில் தன்னை யுண்டாக்கிய பூர்வ கர்மத்தினை நாசஞ் செய்கின்றது. அங்ஙனமே அப்பாணத்தில் இரண்டாவது கர்மத்தினை உண்டாக்குவதாகின்றது. அவ்விரண்டாவது கர்மமும் அடுத்த க்ஷணத்தில் தன்னை யுண்டாக்கிய பூர்வ வேகத்தினை நாசஞ் செய்கின்றது. அங்ஙனமே பாணத்தில் இரண்டாவது வேகத்தினை உண்டாக்குகின்றது. இவ்வாறாக அப்பாணத்தின் வீழ்ச்சி பரியந்தம் கர்மத்தால் வேகம், வேகத்தால் கர்மம் உற்பன்னமாவதாகின்றது. அப்பாணத்தில் உண்டாவதாகிய வேகம் கர்மஜவேகமெனப்படுகின்றது. ஆண்டு அவ்வேகத்திற்கு அப்பாணமோ சமவாயி காரணமாகின்றது. அக்கர்மம் அவ்வேகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அதிர்ஷ்டம், ஈசுவரன் முதலியன அவ்வேகத்திற்கு நிமித்த காரணமாகின்றன. அத்திரவியத்தின் உத்தர சையோகத்தானேயே அக்கர்மத்தின் நாசமுண்டாகின்றது. என்றாலும் அப்பாணத்தின் கர்மத்தினை நாசஞ் செய்வதாகிய உத்தர சையோகம் அக்காலத்திலின்றும். ஆகையால் அவ்வேகத்திற்கே அக்கர்மத்தை நாசஞ் செய்யுந் தன்மை கற்பிக்கப்படுகின்றது.

சங்கை:—பூர்வ கர்மத்தின் நாசத்தின் பொருட்டு நீவிர் வேகத்தினைக் கற்பிக்கின்றீர். பூர்வ கர்மத்தின் நாசத்தை யொப்பாவிடின் கெடுதியாவது யாது?

சமாதானம்:—பூர்வ கர்மத்தின் நாசம் உண்டாகாததாயின் அப்பாணத்தில் உத்தர கர்மத்தின் உற்பத்தியே உண்டாகாததாகும். எக்காரணத்தாலெனின் பூர்வ கர்மம் உத்தர கர்மத்தின் பிரதிபந்தகமாகின்றது. பூர்வ கர்ம வடிவ பிரதிபந்தகத்தி னிருப்புள்தாக உத்தர கர்மத்தின் உற்பத்தியே உண்டாகாததாகும். ஆகையால் அப்பாண முதலியவைகளில் பூர்வ கர்மத்தினை நாசஞ் செய்வதும், உத்தர கர்மத்தினை உற்பத்தி செய்வதுமாகிய கர்மஜ வேகத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டும்.

### கூ0ரு. கர்மஜ வேகத்தை யொப்பாதவராகிய வாதிகளின் மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். நாணியின் நோதனுக்கிய சையோகத்தால் பாணத்தில் முதற் க்ஷணத்தில் கர்மம் உற்பன்னமாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அக்கர்மத்தால் அப்பாணத்திற்கு நாணி வடிவ பூர்வ தேசத்தோடு விபாகம் உற்பன்னமாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அவ்விபாகத்தால் அப்பாணத்திற்கு நாணி வடிவ பூர்வதேசத்திேனாடு சையோகத்தின் நாசம் உண்டாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அப்பாணத்திற்கு ஆகாசாதி வடிவ உத்தர தேசத்திேனாடு சையோகமுண்டாகின்றது. அவ்வுத்தர சையோகமே அப்பூர்வ கர்மத்தினை நாசஞ் செய்கின்றது. அங்ஙனமே அவ்வுத்தர கர்மத்தினை உண்டாக்குகின்றது. அவ்வுத்தர சையோகத்தால் பூர்வ கர்மத்தின் நாசமும், கர்மத்தின் உற்பத்தியும் அங்கீக

ரிப்பதில் யாதோர் பிரமாணமுமின்றும். அங்ஙனமே யாதோர் பயனுமின்றும். ஆகையால் அக்கர்மஜ ஜன்னிய வேகத்தை யொப்புவது பயனின்மையாம்.

கூ௦ச. வேகஜ வேகத்தின் ஸ்வரூப வர்ணனம்.

வேகமுடைய கபாலங்களால் உற்பன்னமாகிய கடமும் வேகமுடையதாகின்றது. ஆகையால் அக்கடத்தின் வேகம் வேகஜ வேகமெனப்படுகின்றது. ஆண்டு அக்கடத்தின் வேகத்திற்கு அக்கடமோ சமவாயி காரணமாகின்றது. அக்கபாலங்களின் வேகம் அசமவாயி காரணமாகின்றது. தேசம், காலம், ஈசுவரன் முதலியன நிமித்த காரணமாகின்றன. ஆண்டு ஜன்னிய மூர்த்தத்திரவியங்களிலோ கர்மஜ வேகமும், வேகஜ வேகமுமாகிய இருவகை வேகங்கள் உண்டாகின்றன. பரமாணு மனவடிவ நித்திய மூர்த்தத்திரவியங்களில் கேவலம் கர்மஜ வேகமே உற்பன்னமாகின்றது. அவ்விருவகைத்தாய் வேகமும் அநித்தியமேயாகின்றது; யாதோர் வேகமும் நித்தியமாவதின்று. அவ்வேகம் தன்னுற் றோன்றிய கிரியையாலும் நாசமாகின்றது. அங்ஙனமே ஆசிரய திரவியத்தின் நாசத்தாலும் நாசமாகின்றது. இவ்வேகமெனப் பெயரிய சம்ஸ்காரம் சக்ஷு, துவக்கு என்னுமிரு இந்திரியங்களால் கிராஹியமாகின்றது.

கூ௦ரு. ஸ்திதிஸ்தாபகமெனப் பெயரிய சம்ஸ்காரத்தின் லக்ஷணம்.

“வ்யாபிவீவ்யாத்திவ்யாத்தி ஊெநாவ்யாகவ்யாத்தி ஸஂஸ்காரகவவாவஜாதிமாநு ஸ்திதிஸ்தாவகஃ” (இ-ள்.) பிருதிவியிலிருக்கின்ற பதார்த்தத்தில் இருப்பதும், மனதிலிருக்கின்ற பதார்த்தத்திலிராததும், சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய குணம் ஸ்திதிஸ்தாபகமெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவியிலிருக்கின்ற ஸ்திதிஸ்தாபகத்தில் ஸ்திதிஸ்தாபகத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அந்த ஸ்திதிஸ்தாபகத்தன்மை ஜாதி பிருதிவியிலிருப்பதிலிருப்பதெனப்படுகின்றது. அந்த ஸ்திதிஸ்தாபகம் மனதிலிருப்பதன்று. ஆகையால் ஸ்திதிஸ்தாபகத்தன்மைஜாதி மனதில் இருப்பதாகிய வேகமுதலியவைகளில் இராததும், சம்ஸ்காரத்தன்மைஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய ஸ்திதிஸ்தாபகத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் சர்வ ஸ்திதிஸ்தாபகங்களிலிருக்கின்றது. ஆகையால் கூறிய இந்த ஸ்திதிஸ்தாபகத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு “மனதில் இருப்பதில் இராததும் சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியமுமாகிய ஜாதியுடையது ஸ்திதிஸ்தாபகம்” என இம்மாத்திரமே ஸ்திதிஸ்தாபகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “பிருதிவியிலிருப்பதில் இருப்பதும்” என்னும் பதங்கள் கூறுவிடின் பாவனைத்தன்மை ஜாதியைக் கொண்டு பாவனையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் ஸ்திதிஸ்தாபகமெனப்பெயரிய சம்ஸ்காரம் அம்மனதிலிருப்பதன்றோ அங்ஙனமே அப்பாவனாக்கிய சம்ஸ்காரமும் அம்மனதிலிருப்பதன்று. ஆகையால் ஸ்திதிஸ்தாபகத்தன்மை ஜாதியினைப் போன்று பாவனைத்தன்மை ஜாதியும் மனதிலிருப்பதாகிய வேக முதலியவைகளில் இராததேயாம். அங்ஙனமே சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாம்.

இத்தகைய பாவனைத்தன்மை ஜாதியைக் கொண்டு பாவனையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு பாவனைத்தன்மை ஜாதி பிருதிவியிலிருப்பதாகிய உருவ முதலிய குணங்களிலிருப்பதன்று. ஆகையால் அப்பாவனைத்தன்மை ஜாதியைக் கொண்டு பாவனையில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பிருதிவியிலிருப்பதிலிருப்பதும் சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியமுமாகிய ஜாதியுடையது ஸ்திதிஸ்தாபகம்" என இம்மாத்திரமே ஸ்திதிஸ்தாபகத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "மனதில் இருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் பிருதிவியிலிருக்கின்ற வேகத்திலிருப்பதும், சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய வேகத்தன்மை ஜாதியைக் கொண்டு வேகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மனதில் இருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு வேகத்தன்மை ஜாதி மனதிலிருப்பதாகிய வேகத்திலிருப்பதேயாம்; இராததன்றாம். ஆகையால் அவ்வேகத் தன்மை ஜாதியைக் கொண்டு வேகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "பிருதிவியில் இருப்பதில் இருப்பதும் மனதில் இருப்பதில் இராததுமாகிய ஜாதியுடையது ஸ்திதிஸ்தாபகம்" என இம்மாத்திரமே ஸ்திதிஸ்தாபகத்தின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "சம்ஸ்காரத்தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் உருவத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், உருவ குணம் பிருதிவியிலோ இருக்கின்றது; மனதிலிருப்பதில்லை. ஆகையால் உருவத்தன்மை ஜாதி பிருதிவியிலிருக்கும் உருவத்திலிருப்பதும், மனதிலிருக்கின்ற வேக முதலியவைகளில் இராததுமாம். அத்தகைய உருவத் தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்ஸ்காரத் தன்மையின் வியாப்பியமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு உருவத்தன்மை ஜாதி குணத்தன்மை ஜாதியின் வியாப்பியமாயினும் சம்ஸ்காரத்தன்மை ஜாதியின் வியாப்பியமன்றாம். ஆகையால் உருவத்தன்மை ஜாதியைக் கொண்டு உருவத்தில் ஸ்திதிஸ்தாபகத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### கூ0கூ. ஸ்திதிஸ்தாபகமெனப் பெயரிய சம்ஸ்காரத்தின் சாதக யுக்தி.

ஆண்டு தருவின் கிளையினை வளைத்து மீண்டும் விட அக்கிளைக்கு அதே பூர்வ சையோக முண்டாகின்றது. அதாவது; அக்கிளைக்கு பூர்வ சையோகமிருந்தவிடத்தில் மீண்டும் சையோக முண்டாகின்றது. அப்பூர்வ சையோகத்தினை யுண்டாக்கும் அக்கிளையின் கிரியை அக்கிளையிலுள்ள ஸ்திதிஸ்தாபக சம்ஸ்காரத்தானேயே ஜன்னியமாகின்றது. அக்கிளையில் வேகமும்

உண்டாகின்றது. என்றாலும் அவ்வேகம் அதே பூர்வ சையோகத்தை யுண்டாக்கும் கிரியையினை யுண்டாக்குவதாகாது. ஆனால் அவ்வேகமோ உத்தர சையோக மாத்திரத்தை உண்டாக்கும் கிரியையினை உண்டாக்குவ தாகின்றது. ஆகையால் அவ்வேகத்தால் ஸ்திதிஸ்தாபக சம்ஸ்காரமானது அதே பூர்வசையோகத்தை யுண்டாக்கும் கிரியையினைக்குறித்து அன்னியதா சித்தமாகாது. ஆகையால் அதே பூர்வ சையோகத்தை யுண்டாக்கும் கிரியை யின் காரண வடிவமாக ஸ்திதிஸ்தாபகமெனப் பெயரிய சம்ஸ்காரம் அவசியம் அங்கீகரிக்கப் படவேண்டும். ஸ்திதிஸ்தாபக சம்ஸ்காரம் அதீந்திரிய மாகின்றது. அதாவது; இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாகிற தில்லை. ஆனால் அதே பூர்வ சையோகத்தை யுண்டாக்கும் கிரியையால் ஸ்திதி ஸ்தாபகத்தின் அநுமான முண்டாகின்றது.

## ௬௦எ. ஸ்திதிஸ்தாபகத்தினை பிருதிவி மாத்திரத்தின் குணமாகவும், அநித்தியமாகவும் ஒப்புவோரது மத வர்ணனம்.

அல்லது ஸ்திதிஸ்தாபகத்தினை கேவலம் பிருதிவியின் குணமாக வொப்பும் நையாயிகரும் ஸ்திதிஸ்தாபகத்தினை கட படாதி வடிவ சர்வ பிருதிவியில் வொப்புவதின்று. ஆனால் கிளை, வில், பாய் இவை முதலிய பிருதிவி விசேஷத்திலேயே வொப்புகின்றனர். அவர்கள் மதத்தில் ஸ்திதிஸ்தாபகம் உற்பத்தி விநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது. யாதோர் ஸ்திதி ஸ்தாபகமும் நித்தியமாகிறதில்லை. ஸ்திதிஸ்தாபகம் அக்கிளை, வில் முதலிய வைகளின் கிரியா விசேஷத்தால் ஜன்னியமாகின்றது. அங்ஙனமே கிரியா விசேஷத்தினை யுண்டாக்குவதாகின்றது. தன்னாற் றோன்றிய கிரியா விசேஷத்தாலும், ஆசிரய திரவியத்தின் நாசத்தாலும் நாசமாகின்றது.

## ௬௦அ. ஸ்திதிஸ்தாபகத்தை பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் குணமாகவும், நித்திய அநித்தியமாகவும் ஒப்புவோரது மத வர்ணனம்.

ஸ்திதிஸ்தாபகத்தினை பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னு மிந்நான்கின் குணமாக வொப்பும் நையாயிகர்கள் மதத்தில் ஸ்திதிஸ்தாபகம் நித்தியம், அநித்தியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு பரமாணு வடிவ நித்திய பிருதிவி முதலியவைகளிலோ ஸ்திதிஸ்தாபகம் நித்தியமாகின்றது. துவியணுகாதி அநித்திய பிருதிவி முதலியவைகளில் ஸ்திதி ஸ்தாபகம் அநித்தியமாகின்றது. அநித்திய ஸ்திதிஸ்தாபகத்திற்கு துவியணுக முதலிய திரவியங்களோ சமவாயி காரணமாகின்றன. துவியணுக முதலிய திரவியங்களின் சமவாயி காரண வடிவ பரமாணு முதலிய அவயவங்களின் ஸ்திதிஸ்தாபகம் அசமவாயி காரணமாகின்றது. காலம், திக்கு முதலியன நிமித்த காரணமாகின்றன. எங்ஙனம் அநித்திய குருத்வத்தின் நாசம் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே யுண்டாகின்றதோ அங்ஙனமே அநித்திய ஸ்திதிஸ்தாபகத்தின் நாசமும் ஆசிரய திரவியத்தின் நாசத்தானேயே யுண்டாகின்றது.

---

கூ0கூ. பாவனையெனப் பெயரிய சம்ஸ்காரத்தின் லக்ஷணம்.

“ அநுபவஜந்யா ஸ்மிருதிஹேதுர்பாவநா ” (இ-ள்.) எக்குணம் அநுபவத்தால் உண்டாயதும், ஸ்மிருதி ஞானத்தினை யுண்டாக்குவதுமாமோ அக்குணம் பாவனாக்கிய சம்ஸ்கார மெனப்படுகின்றது. ஆண்டு ஸ்மிருதி ஞானத்தினும் வேறான ஞானத்தினை அநுபவமென்பர். அவ்வநுபவம் பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். அவ்வநுபவம் எவ்வஸ்துவை விஷயஞ் செய்கின்றதோ அவ்வநுபவத்தாலுண்டாய சம்ஸ்காரமும் அவ்வஸ்துவை விஷயஞ் செய்வதே யாகின்றது. அச்சம்ஸ்காரத்தாலுண்டாய ஸ்மிருதி ஞானமும் அவ்வஸ்துவை விஷயஞ் செய்வதாகின்றது. இவ்வாற்றால் அநுபவம், சம்ஸ்காரம், ஸ்மிருதி என்னும் மூன்றிற்கு சமானவஸ்துவை விஷயஞ் செய்யுந்தன்மை வடிவமாகவே பரஸ்பர காரிய, காரண பாவமுண்டாகின்றது. வேறு வஸ்துவை விஷயஞ் செய்யும் அநுபவத்தால் வேறு வஸ்துவை விஷயஞ் செய்யும் சம்ஸ்காரம் உண்டாகிறதில்லை. அங்ஙனமே வேறு வஸ்துவை விஷயஞ் செய்யும் சம்ஸ்காரத்தால் வேறு வஸ்துவை விஷயஞ் செய்யும் ஸ்மிருதி உண்டாகிறதில்லை. எங்ஙனம்: ஜீவாத்மாவிற்கு முதலில் இது கடம் என்பதாக கடத்தை விஷயஞ் செய்யும் அநுபவமுண்டாகின்றது. அவ்வநுபவத்தால் அஜ்ஜீவாத்மாவிடத்து அக்கடத்தை விஷயஞ் செய்யும் பாவனாக்கிய சம்ஸ்காரம் உண்டாவதாகின்றது. அச்சம்ஸ்காரத்தால் அஜ்ஜீவாத்மாவிற்கு வேறு காலத்தில் கடம் என்பதாக அக்கடத்தை விஷயஞ் செய்யும் ஸ்மிருதி உண்டாவதாகின்றது. ஆகையால் பாவனாக்கிய சம்ஸ்காரத்தில் சுவசமானத்தை விஷயஞ்செய்யும் அநுபவத்தால் ஜன்னியத்தன்மையும், சுவசமானத்தை விஷயஞ் செய்யும் ஸ்மிருதியினை யுண்டாக்குந் தன்மையும் சம்பவிக்கின்றது. ஆண்டு “அநுபவத்தா லுண்டாவது பாவனை” என இம்மாத்திரமே பாவனையின் லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் “ஸ்மிருதியினை யுண்டாக்குவதும்” என்னும் பதங்கள் கூறுவிடின் அநுபவத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அநுபவத்தின் துவம்சமும் அநுபவ வடிவ பிரதியோகியால் ஜன்னியமே யாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் “ஸ்மிருதியினை யுண்டாக்குவதும்” என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அநுபவத்தின் துவம்சம் அநுபவத்தால் ஜன்னிய மாயினும் ஸ்மிருதியினை யுண்டாக்குவதன்றாம். ஆகையால் அவ்வநுபவத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது “ஸ்மிருதியை யுண்டாக்குவது பாவனை” என இம்மாத்திரமே பாவனையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் “அநுபவத்தாலுண்டாயதும்” என்னும் பதங்கள் கூறுவிடின் ஆத்மாவில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், ஸ்மிருதி ஞானம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தால் உற்பன்னமாகின்றது. ஆகையால் அவ்வாத்மாவும் ஸ்மிருதி ஞானத்திற்கு ஏதுவாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் “அநுபவத்தா லுண்டாயதும்” என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு ஆத்மா நித்தியமாவதால் அநுபவத்தால்

ஜன்னியமன்றும். ஆகையால் ஆத்மாவில் அநுபவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௬௫௦. உபேக்ஷா ஞானத்தினும் வேறான நிச்சய வடிவ அநுபவத்தில் பாவனையை உண்டாக்குந் தன்மையின் வர்ணனம்.

ஆண்டு கூறிய லக்ஷணத்தில் அநுபவ சத்தத்தால் உபேக்ஷா வடிவ ஞானத்தினும் வேறும், நிச்சய வடிவமுமாகிய அநுபவத்தினைக் கொள்ளுக. அதாவது; உபேக்ஷா ஞானத்தினும் வேறானதும், நிச்சய வடிவமுமாகிய அநுபவமே பாவனாக்கிய சம்ஸ்காரத்திற்கு ஹேதுவாகின்றது. அங்ஙனமே சம்ஸ்காரவாயிலாக ஸ்மிருதிஞானத்திற்கும் ஹேதுவாகின்றது. ஆண்டு வழியிற் செல்லுகின்ற புருஷனுக்கு துரும்பு முதலிய அனேக பதார்த்தங்களின் உபேக்ஷா வடிவ ஞானம் உண்டாகின்றது. ஆனால் அப்புருஷனுக்கு வேறுகாலத்தில் அத்துரும்பு முதலிய பதார்த்தங்களின் ஸ்மரணம் உண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வநுபவத்திற்கு உபேக்ஷா ஞானத்தினும்வேறானதும் என்பதான விசேஷணங் கூறப்பட்டது. எவ்வஸ்துவின் சம்சய வடிவ ஞானமுண்டாகின்றதோ அவ்வஸ்துவின் ஸ்மரணமும் வேறுகாலத்தி லுண்டாகிறதில்லை. ஆகையால் அவ்வநுபவத்திற்கு நிச்சயமென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சம்சய ஞானத்தினும் வேறான ஞானத்தினை நிச்சயமென்பர். ஸ்மிருதி ஞானத்தால் சம்ஸ்காரத்தின் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் அச்சம்ஸ்காரத்தை யுண்டாக்கும் ஞானத்திற்கு அநுபவ மென்னும் விசேஷணங் கூறப்பட்டது.

### ௬௫௧. அநுபவ ஞானத்தின் வியாபார வடிவமாக பாவனையெனப் பெயரிய சம்ஸ்காரத்தின் கற்பனை.

அல்லது எங்ஙனம் சுவர்க்க, நரக வடிவ பயன்து உற்பத்தியின் பொருட்டு விஹித, நிஷித்த கர்மங்களின் வியாபார வடிவமாக தர்ம, அதர்மங்கள் கற்பிக்கப்படுகின்றனவோ அங்ஙனமே ஸ்மிருதிஞானத்தின் உற்பத்தியின் பொருட்டும், பிரத்தியபிஞ்ஞை ஞானத்தின் உற்பத்தியின் பொருட்டும் அநுபவத்தின் வியாபாரவடிவமாக பாவனாக்கியசம்ஸ்காரம் கற்பிக்கப்படுவதாகின்றது. ஏனெனின், கூறிய அநுபவம் இருக்ஷணமட்டும் நிலைப்பதாகின்றது: மூன்றாவது க்ஷணத்தில் நஷ்டமாய் விடுகின்றது. ஸ்மிருதி ஞானமும், பிரத்தியபிஞ்ஞை ஞானமுமோ புருஷனுக்கு மாதம், வருஷம் முதலிய காலத்திற்குப் பின்னரும் உண்டாவதாகின்றன. வேறு காலத்தில் வரப்போகிற ஸ்மிருதி, பிரத்தியபிஞ்ஞையினைக் குறித்து முன்னர் நஷ்டமாய அநுபவத்திற்கு பாவனாக்கிய சம்ஸ்கார வடிவ வியாபாரமின்றி காரணத்தன்மை சம்பவியாது. ஆகையால் ஸ்மிருதி, பிரத்தியபிஞ்ஞை வடிவ பயன் வரையில் இருப்பதாகிய பாவனாக்கிய சம்ஸ்காரம் அநுபவத்தின் வியாபார வடிவமாக அவசியம் கற்பிக்கப் படவேண்டும். ஓர் கால் பாவனாக்கிய சம்ஸ்காரத்தினை அங்கீகரியாவிடின் பூர்வ அநுபவத்தில் ஸ்மிருதிக்கும், பிரத்தியபிஞ்ஞை ஞானத்திற்கும் காரணத்தன்மையே சம்பவியாததாகும். இவ்வர்த்தத்தில் யுக்தியோ முன்னர் தர்ம, அதர்மநிருபணத்தில் விரிவாய்க் கூறிவந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க.

## ௬௬௨. ஸ்மிருதிக்கும், பிரத்தியபிஞ்ஞைக்கும் உள்ள வேற்றுமையின் வர்ணனம்.

முன்னர் வேறு தேச, காலத்தில் பார்த்துள்ள தேவதத்தனது தரிசனம் வேறு தேச, காலத்தில் உண்டாகும்போது அத்தேவதத்தனே இவன் என்பதான பிரத்தியபிஞ்ஞை ஞானமுண்டாகின்றது: அந்த பிரத்திய பிஞ்ஞை ஞானமும் பூர்வ தேவதத்தனின் விஷயஞ் செய்த அநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் ஸ்மிருதி ஞானத்தினைப் போன்று பிரத்தியபிஞ்ஞை ஞானமும் பாவனைக்கிய சம்ஸ்காரத்தானேயே ஜன்னியமாகின்றது. ஆனால் ஸ்மிருதி ஞானமோ கேவலம் சம்ஸ்காரத்தா னேயே ஜன்னியமாகின்றது. சக்ஷுா முதலிய இந்திரியத்தால் ஜன்னியமாகிற தில்லை. பிரத்தியபிஞ்ஞை ஞானமோ சம்ஸ்காரத்தோடு கூடிய சக்ஷுா இந்திரி யத்தால் ஜன்னியமாகின்றது. ஸ்மிருதியிலும், பிரத்தியபிஞ்ஞையிலும் இவ் வளவு பேதமிருக்கின்றது.

## ௬௬௩. பிரத்தியபிஞ்ஞையினை ஸ்மிருதியினை லுண்டாவதாக ஒப்பும் சிந்தாமணிக்காரரின் மத வர்ணனம்.

ஈண்டு சிந்தாமணிக்காரரின் மதமோ இதுவாம். பிரத்தியபிஞ்ஞை ஞானத்தைக் குறித்து சம்ஸ்காரத்திற்கு காரணத் தன்மையின்றாம். ஆனால் சம்ஸ்காரத்தாலுண்டான ஸ்மிருதியே பிரத்தியபிஞ்ஞை ஞானத்தைக்குறித்து காரணமாகின்றது. கருத்திதுவாம்; வேறு காலத்தில் அத்தேவதத்தனெனப் பெயரிய புருஷனைக்கண்டு பூர்வ கால விசிஷ்ட தேவதத்தனது அநுபவ ஜன்னிய சம்ஸ்காரம் உத்புத்தமா (வெளிப்பட்டதா) கின்றது. அவ்வுத்புத்த சம்ஸ்காரத்தால் பூர்வ தேச, கால விசிஷ்ட தேவதத்தனது ஸ்மரண முண்டா கின்றது. அந்த ஸ்மரணத்தோடு கூடிய சக்ஷுா இந்திரியத்தால் புருஷனுக்கு அத்தேவதத்தனே இவன் என்பதாக அத்தேவதத்தனது பிரத்தியபிஞ்ஞை ஞான முண்டாகின்றது. அங்ஙனங் கூறும் சிந்தாமணிக்காரரின் மதம் நல முடையதன்றாம். ஏனெனின், உத்புத்த சம்ஸ்காரத்தானே ஸ்மிருதியின் உற்பத்தி யொப்புவதும், ஸ்மிருதியினால் பிரத்தியபிஞ்ஞை ஞானத்தின் உற் பத்தியை யொப்புவதுமா மிவற்றின் அபேக்ஷையால் உத்புத்த சம்ஸ்காரத் தானேயே பிரத்தியபிஞ்ஞையின் உற்பத்தியை யொப்புவதில் லாகவ மிருக் கின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தால் விழுங்கப்படுவதாவதால் சிந்தா மணிக்காரரின் மதம் நலமுடையதன்றாம்.

## ௬௬௪. அநுபவத்தின் துவம்சத்தில் அநுபவத்தின் வியாபார வடிவத் தன்மையின் கண்டனம்.

அல்லது எங்ஙனம் சுவர்க்க, நரக வடிவ பயனது உற்பத்தியைச் செய்யும் பொருட்டு விஹித, நிஷித்த கர்மங்களின் துவம்சத்திற்கு வியாபார வடிவத் தன்மைச் சம்பவிக்கிறதில்லையோ அங்ஙனமே ஸ்மிருதி, பிரத்தியபிஞ்ஞையின் உற்பத்தியைச் செய்யும்பொருட்டு அநுபவத்தின் துவம்சத்திற்கும் அநுபவத் தின் வியாபார வடிவத்தன்மைச் சம்பவியாது. ஏனெனின், அவ்வநுபவத்தின் துவம்சத்திற்கு நாசம் உண்டாகிறதில்லை; ஆகையால் பூர்வத்தில் அநுபவித்

துள்ள பதார்த்தத்தின் ஸ்மிருதி எக்காலமும் உண்டாக வேண்டும். எக்காலத்திலும் அந்த ஸ்மிருதியின் நாச முண்டாகாத தாகவேண்டும். அது அநுபவ விருத்தமாம். அல்லது பிரதியோகியும் அதன் துவம்சமுமா மிரண்டிற்கும் ஓர் காரியத்தினை யுண்டாக்குந்தன்மை யுண்டாகிறதில்லை. இக்காரணத்தாலும் அநுபவத்திற்கும், அதனது துவம்சத்திற்கும் ஸ்மிருதியின் காரணத்தன்மைச் சம்பவியாது. அல்லது அநுபவத்தினது துவம்சத்தினை ஸ்மிருதியினைக்குறித்து காரணமாக ஒப்பின் அநுபவத்திற்கு ஸ்மிருதியினைக் குறித்து பிரதிபந்தகத் தன்மை யுண்டாக வேண்டும். ஏனெனின், சாத்திரத்தில் பிரதிபந்தகத்தின் லக்ஷணமிதுவாம். "காரணீபூதாபாவப்ரதியோகித்வம் ப்ரதிபந்தகத்வம்" (இ-ள்.) எவ்வபாவம் எக்காரியத்தைக் குறித்து காரணமாகின்றதோ அவ்வபாவத்தின் பிரதியோகி அக்காரியத்தைக் குறித்து பிரதிபந்தகமாகின்றது. எங்ஙனம்: வன்னியா லுண்டாம் தஹித்தற்கு மணிமந்திர முதலியவைகளின் அபாவம் காரணமாகின்றது. அக்காரணமாகிய் அபாவத்தின் பிரதியோகி வடிவ மணிமந்திர முதலியன் தஹித்தலிற் பிரதிபந்தகமேயாகின்றன. அங்ஙனமே ஸ்மிருதியின் காரணமாகிய அநுபவத்தினது துவம்சத்தின் பிரதியோகியாவதால் அவ்வநுபவமும் ஸ்மிருதியை பிரதிபந்திப்பதாகும். அங்ஙனம் கூறுதல் அத்தியந்த விருத்தமாம். ஆகையால் அநுபவத்தினது துவம்சத்தில் அவ்வநுபவத்தின் வியாபார வடிவத் தன்மைச் சம்பவியாது. ஆனால் முற்கூறிய முறைப்படி பாவனாக்கிய சம்ஸ்காரத்திற்கே அவ்வநுபவத்தின் வியாபார வடிவத்தன்மைச் சம்பவிக்கின்றது.

## கூகரு. சாதிருசியஞானம், அதிர்ஷ்டம், சிந்தனம், சம்பந்தீதரிசனமாமிந்நான்கில், சம்ஸ்காரத்தின் உத்போதகத் தன்மையின் வர்ணனம்.

அல்லது கட முதலிய வஸ்துக்களை விஷயஞ் செய்யும் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தி னிருப்புளதாயினும் சர்வ காலத்திலும் அக்கட முதலிய வஸ்துவின் ஸ்மரண முண்டாகிறதில்லை; ஆனால் சில காலத்திலேயே ஸ்மரண முண்டாகின்றது. ஆகையால் இது அறியப்படுகின்றது. பாவனாக்கிய சம்ஸ்காரம் உத்புத்தமாகி ஸ்மிருதியினை யுண்டாக்குவதாகின்றது. ஓர் கால் அநுத்புத்த சம்ஸ்காரத்திற்கும் ஸ்மிருதியை யுண்டாக்குந் தன்மை யுண்டாகுமாயின் அவ்வநுத்புத்த சம்ஸ்காரம் சர்வ காலத்திலும் இருப்பதாவதால் சர்வ காலத்திலும் கட முதலிய வஸ்துக்களின் ஸ்மிருதியுண்டாகவேண்டும். அங்ஙனம் உண்டாகிறதில்லை. சம்ஸ்காரத்தின் உத்போதகம் (வெளிப்படுத்துவது) சாதுர்சிய ஞானம், அதிர்ஷ்டம், சிந்தனம், சம்பந்தீதரிசனம் என நால்வகையாகின்றன. ஆண்டு வெள்ளியின் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரமுடைய புருஷனுக்கு கிளிஞ்சலைக் கண்டுழி வெள்ளியின் ஸ்மரண முண்டாகின்றது. ஆண்டு சாதுர்சிய ஞானமே பாவனாக்கிய சம்ஸ்காரத்தின் உத்போதகமாகின்றது. கிளிஞ்சலிலுள்ள பளபளப்புத்தன்மையே வெள்ளியின் சாதுர்சியமாம். அந்த சாதுர்சிய ஞானம் உத்புத்தமாய் வெள்ளியை விஷயஞ்செய்யும் ஸ்மிருதியினை உண்டாக்குகின்றது. ஜன்மித்த குழந்தைக்கு பசி காலத்தில் மாதாவின்

ஸ்தன்னிய பானத்தில் தனது இஷ்டத்தினது சாதனத்தன்மையின் ஸ்மரண முண்டாகி பிரவிர்த்தி யுண்டாகின்றது. அக்குழந்தையினது ஜீவனத்திற்கு ஹேதுவாகிய அதிர்ஷ்டமே அந்த ஸ்மிருதியின் ஏதுவாகிய சம்ஸ்காரத்தின் உத்போதகமாகின்றது. இவ்வார்த்தை முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் ஆத்ம நிருபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். பூர்வத்தில் அநுபவிக்கப்பட்டதாகிய சுலோக முதலியவைகளின் மரதி யுண்டாகும்போது மனதின் சாவதானத்தன்மை வாயிலாக மீண்டு மீண்டும் அந்த சுலோக முதலியவைகளை சிந்திப்பதால் அந்த சுலோக முதலியவைகளின் ஸ்மரண முண்டாய் விடுகின்றது. அம்மனதின் நினைத்தல் வடிவ சிந்தையே அந்த ஸ்மரணத்தின் ஏதுவாகிய சம்ஸ்காரத்தின் உத்போதகமாகின்றது. பிதா புத்திரர்களை ஒருங்கு வைத்து காண்பவனும், அவ்விருவரின் ஜன்னிய, ஜனக பாவ வடிவ சம்பந்தத்தினை நிச்சயஞ் செய்பவனுமாகிய புருஷனுக்கு வேறு காலத்தில் புத்திரனைப் பார்த்து அவனது பிதாவின் ஸ்மரண முண்டாய் விடுகின்றது. அப்புத்திர வடிவ சம்பந்தியின் தரிசனமே அந்த ஸ்மிருதியின் ஹேதுவாகிய சம்ஸ்காரத்தின் உத்போதகமாகின்றது. இவ்வாற்றால் அந்த சாதுர்சியஞான முதலியவைகளால் உத்புத்தமாகிய பாவனுக்கியசம்ஸ்காரமே ஸ்மிருதி ஞானத்திற்கும், பிரத்தியபிஞ்ஞை ஞானத்திற்கும் ஏதுவாகின்றது.

## ௬௬௬. பாவனுக்கிய சம்ஸ்காரத்தின் ஆசிரயத்தினதும், உற்பத்தியினதும், அதீந்திரியத் தன்மையினதும் வர்ணனம்.

கூறிய அப்பாவனுக்கிய சம்ஸ்காரம் கேவலம் ஜீவாத்மாவிடத்தே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஜீவாத்மாவினும் வேறான பிருதிவி முதலிய திரவியங்களி லிருப்பதன்று. பாவனுக்கிய சம்ஸ்காரம் உற்பத்தி வினைசமுடையதாவதால் அநித்தியமே யாகின்றது. யாதோர் பாவனுக்கிய சம்ஸ்காரமும் நித்தியமாவதின்று. ஆண்டு பாவனுக்கிய சம்ஸ்காரத்திற்கு ஜீவாத்மாவே சமவாயி காரணமாகின்றது. ஜீவாத்மாவினோ டுண்டாம் மனதின் ஸம்யோகம் அசமவாயி காரணமாகின்றது. பூர்வ அநுபவமும், காலம், ஈசுவரன் முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. எங்ஙனம் முற்கூறிய தர்ம, அதர்மங்கள் அதீந்திரியமாகின்றனவோ அங்ஙனமே இப்பாவனுக்கிய சம்ஸ்காரமும் அதீந்திரியமேயாகின்றது. அதாவது; எவ்விந்திரியத்தானும் அப்பாவனையின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. அல்லது பாவனுக்கிய சம்ஸ்காரம் விபு ஆத்மாவின் விசேஷ குணமாகியும் யோக்கியமன்றாம். தர்ம, அதர்மங்களைப் போன்று அயோக்கியமாம். ஆகையால் அப்பாவனுக்கிய சம்ஸ்காரம் தனக்குப் பின்னுண்டாகும் ஆத்மாவின் ஞான முதலிய விசேஷ குணத்தால் நாசமாகிறதில்லை. பாவனுக்கிய சம்ஸ்காரம் தன்னாற் றோன்றிய சரம ஸ்மிருதியினலேயே நாசமாகின்றது. ஆண்டு எந்த ஸ்மிருதிக்குப்பின் சில ஸ்மிருதி உண்டாவதின்றோ அந்த ஸ்மிருதியினை சரம ஸ்மிருதி யென்பர். அந்த சரம ஸ்மிருதியினை அந்திய ஸ்மிருதி யென்றுங் கூறுவர். ஈண்டு கருத்திதுவாம்; வெள்ளி முதலிய வஸ்துக்களை விஷயஞ் செய்யும் அநுபவத்தால் வெள்ளி முதலிய வஸ்துக்களை விஷயஞ் செய்யும் சம்ஸ்காரம் உண்டாவதா

கின்றது. அந்த சம்ஸ்காரம் ஜீவாத்மாவிடத்தில் கட்டுண்டிருக்கிறது. அச் சம்ஸ்காரம் எவ்வெக் காலத்தில் சாதுர்சிய ஞான முதலிய உத்போதகத்தால் உத்புத்தமாகின்றதோ அவ்வக்காலத்தில் அவ்வெள்ளி முதலிய வஸ்துவை விஷயஞ் செய்யும் ஸ்மிருதியினை உண்டாக்குகின்றது. இவ்வாறாக, வெள்ளி முதலிய வஸ்துவை விஷயஞ் செய்யும் அநேக ஸ்மிருதிகளை உண்டாக்குவதாகிய சம்ஸ்காரம் நஷ்டமாகிறதில்லை. ஆனால் வெள்ளி முதலிய வஸ்துவை விஷயஞ் செய்யும் அந்திய ஸ்மிருதியினாலேயே அச்சம்ஸ்காரம் நாசமாகின்றது. ஆகையால் அவ்வந்திய ஸ்மிருதிக்கு பாவனாக்கிய சம்ஸ்காரத்தினை நாசஞ் செய்யும் தன்மைச் சம்பவிக்கின்றது. சிலவிடத்தோ பாவனாக்கிய சம்ஸ்காரம் விலக்ஷண ரோக முதலியவைகளாலும் நாசமாய் விடுகின்றது. இக்காரணத்தாலேயே சில விலக்ஷண ரோகத்தால் அமிழ்ந்திய புருஷனுக்கு, முன்னர் அநுபவித்த பதார்த்தங்களின் ஸ்மரண முண்டாவதின்று. சிலவிடத்தில் பாவனாக்கிய சம்ஸ்காரம் காலத்தாலும் நாசமாய் விடுகின்றது. இக்காரணத்தாலேயே முன்னர் கண்ணுற்ற பதார்த்தத்தின் ஸ்மரணம் அநேக கால் கழிவால் உண்டாகிறதில்லை.

கூகஎ. முதல் ஸ்மிருதியினால் சம்ஸ்காரத்தின் நாசத்தை யொப்புவோராகிய நவீன நையாயிகரின் மத வர்ணனம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். பாவனாக்கிய சம்ஸ்காரத்தினை சரம ஸ்மிருதி நாசஞ் செய்வதாகாது. ஆனால் சம்ஸ்காரத்தின் சமான விஷயஞ் செய்வதும், சம்ஸ்காரத்தால் ஜன்னியமுமாகிய முதல் ஸ்மிருதியே சம்ஸ்காரத்தினை நாசஞ் செய்வதாகின்றது. முதல் ஸ்மிருதியினால் வேறு சம்ஸ்காரம் உற்பன்னமாகின்றது. வேறு சம்ஸ்காரத்தால் மீண்டும் வேறு ஸ்மிருதி உற்பன்னமாகின்றது. அவ்வேறு ஸ்மிருதியும் தன்னைத் தோற்றி வைக்கும் முன் சம்ஸ்காரத்தின் நாசத்தால், மீண்டும் மூன்றாவது சம்ஸ்காரத்தினை உண்டாக்குகின்றது. இவ்வாறாக அந்திய ஸ்மிருதி பரியந்தம் எவ்வளவு ஸ்மிருதிகள் உண்டாவதாகின்றனவோ அவ்வெல்லா ஸ்மிருதிகளும் தன்னைத் தோற்றி வைக்கும் முந்திய சம்ஸ்காரத்தின் நாசத்தால் மீண்டும் வேறு சம்ஸ்காரத்தினை உண்டாக்குகின்றன. இக்காரணத்தாலேயே அந்த சம்ஸ்காரம் திடதரமாகின்றது. ஸ்மிருதியினாலேயே அந்த சம்ஸ்காரத்தின் நாசத்தை ஒப்பும் பிராசீனர்களின் மதத்தில் அநேக ஸ்மிருதிகளை உண்டாக்குவதாகிய சம்ஸ்காரம் திடதரமாவதின்றாம்; சிதலமாய்விடுகின்றது.

சங்கை:—ஸ்மிருதி ஞானத்திற்கும் சம்ஸ்காரத்தினை யுண்டாக்குந் தன்மையொப்பின் அநுபவத்தாலேயே சம்ஸ்காரம் உண்டாகின்றதென்னும் நியமத்திற்கு உமது மதத்தில் பங்க முண்டாகும்.

சமாதானம்:—எமது நவீனர்கள் மதத்தில் கேவலம் அநுபவத்திற்கே பாவனாக்கிய சம்ஸ்காரத்தினை யுண்டாக்குந் தன்மை யின்றாம்; ஆனால் உபேக்ஷாவடிவ ஞானத்தினும் வேறான நிச்சய வடிவ ஞானத்திற்கே அச்சம்ஸ்காரத்தினை யுண்டாக்குந் தன்மை யிருக்கின்றது. அங்ஙனமே சம்ஸ்கார வாயிலாக ஸ்மிருதியினை உண்டாக்குந்தன்மை யிருக்கின்றது. ஞான வடிவத்தன்மை

எங்ஙனம் அநுபவத்தி லிருக்கின்றதோ அங்ஙனமே ஸ்மிருதியிலு மிருக்கின்றது. ஆகையால் ஸ்மிருதி ஞானத்திற்கு சம்ஸ்காரத்தை யுண்டாக்குந்தன்மையும், சம்ஸ்காரத்துவாரா ஸ்மிருதி ஞானத்தினை யுண்டாக்குந்தன்மையும் சம்பவிக்கின்றது. ஆகையால் பாவனைக்கிய சம்ஸ்காரத்திற்கு இந்த லக்ஷணம் சித்தமாகின்றது.

கூகவு. பாவனைக்கிய சம்ஸ்காரத்தின் வேறு லக்ஷணம்.

"ஜந்யஜ்ஞாநஜந்யஸம்ஸ்கார: பாவநா" (இ-ள்.) உண்டாய ஞானத்தால் உண்டாய சம்ஸ்காரம் யாதோ அச்சம்ஸ்காரம் பாவனை யெனப்படுகின்றது. ஆண்டு "உண்டாய ஞானத்தால் உண்டாயது பாவனை" என இம்மாத்திரமே பாவனையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சம்ஸ்காரம்" என்னும் பதங் கூறாவிடின் அநுபவ வடிவ அல்லது ஸ்மிருதி வடிவ ஜன்னிய ஞானத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அந்த ஜன்னிய ஞானத்தினது துவம்சமும் ஜன்னிய ஞான வடிவ பிரதியோகியினால் ஜன்னியமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்ஸ்காரம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஜன்னிய ஞானத்தினது துவம்சத்தில் சம்ஸ்கார வடிவத் தன்மை யின்றாம். ஆகையால் அத்துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஞானத்தா லுண்டாய சம்ஸ்காரம் பாவனை" என இம்மாத்திரமே பாவனையின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜன்னியம்" என்னும் பதங் கூறாவிடின் வேகமெனப் பெயரிய சம்ஸ்காரத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், ஈசுவரனது ஞானத்திற்கு சர்வ காரிய மாத்திரத்தைக் குறித்து காரணத் தன்மை யுண்டாகின்றது. ஆகையால் வேகமும் ஈசுவரனது ஞானத்தால் ஜன்னியமேயாம்; அங்ஙனமே சம்ஸ்கார வடிவமுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் அந்த ஞானத்திற்கு "ஜன்னியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஈசுவரனது ஞானம் நித்தியமாவதால் ஜன்னியமன்றாம். ஆகையால் வேகமெனப் பெயரிய சம்ஸ்காரத்தில் பாவனைக்கிய சம்ஸ்காரத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. சம்ஸ்கார நிரூபணம் முற்றிற்று.

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசாரிய ஸ்ரீ சுவாமி உத்தவானந்தகிரி அவர்களது சீடராகிய சுவாமி சித்கனானந்தகிரியவர்கள் அருளிய நியாயப்பிரகாச குண நிரூபணமெனப் பெயரிய மூன்றாவது பரிச்சேதம் முற்றிற்று.

ஸ்ரீபரமாத்மனேநம:, ஸ்ரீகுருப்யோநம:.



ஓம் ஸ்ரீகணேசாயநம:, ஸ்ரீகுருப்யோநம:,

ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வராயநம:, ஸ்ரீசங்கராசாரியேப்யோநம:.

# நியாயப்பிரகாசம்.

## நான்காவது பரிச்சேதம்.

திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவம் என்னும் ஏழு பதார்த்தங்களில் முதலாவது திரவிய பதார்த்தத்தினை இரண்டாவது பரிச்சேதத்திலும், இரண்டாவது குண பதார்த்தத்தினை மூன்றாவது பரிச்சேதத்திலும் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். இனி கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமாமிவ்வைந்து பதார்த்தங்களை விரிவாய் நிரூபிப்பான் வேண்டி இந்நான்காவது பரிச்சேதத்தை ஆரம்பிப்பாம்.

### ௧௧௧. கர்ம பதார்த்த நிரூபணம்.

கர்ம பதார்த்தத்தின் லக்ஷணம். ஆண்டு "ஸம்யோகவிபாகயோ ரஸமவாயிகாரணம் கர்ம" (இ-ள்.) எப்பதார்த்தம் சையோகத்திற்கும், விபாகத்திற்கும் அசமவாயி காரணமாகின்றதோ அப்பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு முதற் க்ஷணத்தில் கட முதலிய மூர்த்தத் திரவியங்களில் கிரியை வடிவ கர்மம் உற்பன்னமாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் அக்கட முதலிய மூர்த்தத்திரவியத்தின் விபாகம் பூர்வதேசத்தினின்றும் உற்பன்னமாகின்றது. அவ்விபாகத்திற்கு அக்கடத்திலுள்ள கர்மமே அசமவாயி காரணமாகின்றது. மூன்றாவது க்ஷணத்தில் அக்கர்ம ஜன்னிய விபாகத்தால் அக்கடத்தின் சையோகம் பூர்வதேசத்தினின்றும் நாசமாகின்றது. நான்காவது க்ஷணத்தில் அக்கடத்திற்கு உத்தரதேசத்தினோடு சையோக முண்டாகின்றது. அவ்வுத்தர தேச சையோகத்திற்கும் அக்கடத்திலுள்ள கர்மமே அசமவாயி காரணமாகின்றது. அதாவது; அக்கடத்தின் கர்மமே தன்னாற்றோன்றிய விபாக வாயிலாகவும், பூர்வ சையோக நாசவாயிலாகவும் அவ்வுத்தர சையோகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. இவ்வாற்றால் கர்மத்தில் சையோக, விபாகமாமிரண்டிற்கும் அசமவாயி காரணத் தன்மைச் சம்பவிக்கின்றது. ஆண்டு "சையோகத்திற்கு அசமவாயி காரணம் கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாக்கூறி அந்த லக்ஷணத்தில் "விபாகத்திற்கும்" என்னும் பதங் கூறாவிடின் சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், தருவினோடு கையின் சையோகமான பின்னர் அத்தருவினோடு சரீரத்திற்கும் சையோக முண்டாகின்றது. அச்சரீர, தருக்களின் சையோகத்திற்கு அக்கை, தருக்களின் சையோகமே அசமவாயி காரணமாகின்றது.

இவ்வார்த்தை முன்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் சையோக குணத்தின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விபாகத்திற்கும்" என்னும் பதம் கூறப்பட்டது. ஆண்டு கூறிய சையோகத்திற்கு சையோகத்தின் அசமவாயி காரணத் தன்மை யிருக்கினும் விபாகத்தின் அசமவாயி காரணத் தன்மையின்றாம். ஆகையால் அச்சையோகத்தில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "விபாகத்திற்கு அசமவாயி காரணம் கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சையோகத்திற்கும்" என்னும் பதம் கூறாவிடின் விபாகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், கைக்கு தருவினோடு விபாக மான பின்னர் அச்சரீரத்திற்கும் தருவினோடு விபாக முண்டாகின்றது. அச்சரீர, தருக்களின் விபாகத்திற்கு அக்கை, தருக்களின் விபாகமே அசமவாயி காரணமாகின்றது. இவ்வார்த்தையும் மூன்றாவது பரிச்சேதத்தில் விபாக குணத்தின் நிரூபணத்தில் விரிவாய் நிரூபித்தனம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சையோகத்திற்கும்" என்னும் பதம் கூறப்பட்டது. ஆண்டு கூறிய விபாகத்திற்கு விபாகத்தின் அசமவாயி காரணத்தன்மை யிருக்கினும் சையோகத்திற்கு அசமவாயி காரணத் தன்மையின்றாம். ஆகையால் அவ்விபாகத்தில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சையோகத்திற்கும் விபாகத்திற்கும் காரணம் கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதம் கூறாவிடின் கடமுதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், அச்சையோக, விபாகம் அக்கட முதலிய திரவியங்களில் கர்மத்தால் சமவாய சம்பந்தமாக உற்பன்னமாகின்றது. ஆகையால் கர்மத்தினைப் போன்று கட முதலிய திரவியங்களும் சையோக, விபாகத்தின் காரணமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதம் கூறப்பட்டது. ஆண்டு கட முதலிய திரவியம் சையோக, விபாகத்திற்கு சமவாயிகாரணமாயினும் அசமவாயி காரணமன்றாம். ஆகையால் கட முதலிய திரவியங்களில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

கூ௨0 கர்மத்தின் இரண்டாவது லக்ஷணம்.

" ஸம்யோகபின்நத்வே ஸதி ஸம்யோகா ஸமவாயிகாரணம் கூ௨0 ".

(இ-ள்.) எப்பதார்த்தம் சையோகத்தினும் வேறும், சையோகத்திற்கு அசமவாயிகாரணமு மாகின்றதோ அப்பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு கட முதலிய மூர்த்தத்திரவியங்களிலுள்ள கர்மம் சையோகத்தினும் வேறும் முற்கூறிய முறைப்படி கட முதலியவைகளின் உத்தர தேச சையோகத்திற்கு அசமவாயி காரணமுமாம். ஆகையால் கர்மத்திற்கு இவ்விரண்டாவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "சையோகத்திற்கு அசமவாயி காரணம் கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில்

"சையோகத்திலும் வேறும்" என்னும் பதங்கள் கூறுவிடின் சரீர, தருக்களின் சையோகத்திற்கு அசமவாயி காரணமாகிய கை, தருக்களின் சையோகத்தில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "சையோகத்திலும் வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு தனது பேதம் தன்னிடத்திலிருப்பதன்று. ஆகையால் கை, தருக்களின் சையோகம் சையோகத்திலும் வேறன்றாம். ஆகையால் அச்சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சையோகத்திலும் வேறானது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சையோகத்திற்கு அசமவாயி காரணமும்" என்னும் பதங்கள் கூறுவிடின் கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் கர்மத்தினைப் போன்று கட, பட முதலியனவும் அச்சையோகத்திலும் வேறேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சையோகத்திற்கு அசமவாயி காரணமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கட, பட முதலிய திரவியங்கள் சையோகத்திற்கு அசமவாயி காரணமன்றாம். ஆகையால் அக்கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சையோகத்திலும் வேறும் சையோகத்திற்கு காரணமுமாவது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதங் கூறுவிடின் சையோகத்தின் சமவாயி காரண வடிவ கட முதலிய திரவியங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் கட முதலிய திரவியங்கள் சையோகத்திலும் வேறும், சையோகத்திற்கு காரணமுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "அசமவாயி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலிய திரவியங்கட்கு சையோகத்தின் அசமவாயி காரணத்தன்மையின்றாம். ஆகையால் கடமுதலிய திரவியங்களில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### கூஉக. கர்மத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"விஹாமஹிநகெவஸதிவிஹாமாஸம்வாயிகாரணம் கஉஃ" (இ ள்.) எப்பதார்த்தம் விபாகத்திலும் வேறும், விபாகத்திற்கு அசமவாயி காரணமுமாகின்றதோ அப்பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்திலும் முற்கூறிய லக்ஷணத்தைப் போன்று சரீர, தருக்களினது விபாகத்திற்கு அசமவாயி காரண வடிவ கை, தருக்களின் விபாகத்தில் அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு "விபாகத்திலும் வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. விபாகத்திலும் வேறான கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு "விபாகத்திற்கு அசமவாயி காரணமும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. விபகாத்தின் சமவாயி காரண வடிவ கட முதலிய திரவியங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு "அசமவாயி" என்னும் பதங் கூறப்பட்டது.

௯௨௨. கர்மத்தின் நான்காவது லக்ஷணம்.

“[illegible]”

(இ-ள்.) மூர்த்தத்வ தர்மத்தினது வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும், பதார்த்தத்தை பிரிப்பதுமாகிய உபாதி யாதோ அவ்வுபாதியுடைய பதார்த்தம் கர்மமென்னப்படுகின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து திரவியங்களிலேயே மூர்த்தத்வ தர்மம் இருக்கின்றது. கர்மமும் இவ்வைந்து திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகையால் கர்மம் மூர்த்தத்வ தர்மத்தின் வியாப்பியமென்னப் படுகின்றது. எத்தர்மம் எத்தர்மத்தினை விட்டிருப்பதின்றோ அத்தர்மம் அத்தர்மத்தின் வியாப்பியமெனப் படுகின்றது. அத்தன்மைய கர்மத்திலிருப்பதாகிய மூர்த்தத்வ தர்மத்தின் வியாப்பியத்தன்மை யாதோ அந்த வியாப்பியத்தன்மையின் அவச்சேதகம் கர்மத்தன்மை ஜாதியாம். அக்கர்மத் தன்மை ஜாதி பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய மூர்த்தத்வத்தின் வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாகிய கர்மத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் கர்மங்கள் யாவற்றிலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இக்கர்மத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு “பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியுடையது கர்மம்” என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் “மூர்த்தத்வத்தின் வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும்” என்னும் பதங்கள் கூறாவிடின் திரவியத் தன்மை தர்மத்தைக் கொண்டு திரவியத்திலும், குணத்தன்மை தர்மத்தைக் கொண்டு குணத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எவ்வெத்தர்மங்களைக் கொண்டு திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் பரஸ்பரம் பிரிக்கப்படுகின்றதோ அவ்வத்தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியெனப்படுகின்றன. ஆண்டு திரவியத்தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை, சாமான்னியத் தன்மை, விசேஷத் தன்மை, சமவாயத் தன்மை, அபாவத் தன்மை என்னும் ஏழு தர்மங்களைக் கொண்டே அத்திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் பரஸ்பரம் பிரிக்கப்படுகின்றன. ஆகையால் திரவியத்தன்மை முதலிய ஏழு தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியெனப்படுகின்றன. பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவத்தன்மை எங்ஙனம் கர்மத்தன்மை ஜாதியி லிருக்கின்றதோ அங்ஙனமே திரவியத்தன்மை, குணத்தன்மை ஜாதியிலு மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதிக்கு “மூர்த்தத் தன்மையின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமும்” என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையில்லாத ஆகாசம், திசை முதலிய விபுதிரவியங்களிலும் திரவியத் தன்மை ஜாதி யிருக்கின்றது. அங்ஙனமே மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத்தன்மை யில்லாத சத்தம், புத்தி, முதலிய குணங்களிலும் குணத் தன்மை ஜாதி யிருக்கின்றது. ஆகையால் திரவியத்தன்மை ஜாதியும், குணத் தன்மை ஜாதியும் மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமன்றும், ஆகையால் திரவியத்தன்மை, குணத்தன்மை ஜாதியைக்

கொண்டு திரவியத்திலும், குணத்திலும் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "மூர்த்தத்வ வியாப்யியத்தன்மையின் அவச்சேதக உபாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங் கூறுவிடின் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், மூர்த்தத்தன்மை தர்மமுடைய கபாலங்களில் கடம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. மூர்த்தத்தன்மை தர்மமுடைய தந்துக்களில் படம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அக்கட பட முதலியனவும் மூர்த்தன்மை தர்மத்தின் வியாப்பியமேயாம். அத்தகைய கட, பட முதலியவைகளி லிருக்கின்ற மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகம் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளாம். அக்கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அக் கட, பட முதலியவைகளில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமாயினும் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்றாம். ஆகையால் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு கட, பட முதலியவைகளில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### கூ௨ரு. கர்மத்தின் ஐந்தாவது லக்ஷணம்.

"நிர்குணவ்ருத்திர் குணாவ்ருத்திஜாதிமத் கர்ம." (இ-ள்.) நிர்க்குண பதார்த்தத்தி லிருப்பதும், குணத்திலிராததுமாகிய ஜாதி யாதோ அஜ் ஜாதியுடைய பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு கர்மத்தில் யாதாமோர் உருவ முதலிய குணமும் சமவாயசம்பந்தத்தால் இருப்பதில்லை. ஆகையால் கர்மம் நிர்க்குணமெனப்படுகின்றது. அத்தகைய நிர்க்குண கர்மத்தில் இருப்பது கர்மத்தன்மை ஜாதியாம். ஆகையால் கர்மத்தன்மை ஜாதி நிர்க்குணத்திலிருப்பதெனப்படுகின்றது. கர்மத்தன்மை ஜாதி குண பதார்த்தத்தில் இராததுமா மாகையால் கர்மத்தன்மை ஜாதி குணத்திலிராததெனப்படுகின்றது. இத்தகைய நிர்க்குணத்திலிருப்பதும், குணத்திலிராததுமாகிய கர்மத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் சர்வ கர்மங்களி லிருக்கின்றது. ஆகையால் கூறிய இக்கர்மத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்திலிராத ஜாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நிர்க்குணத்தி லிருப்பதும்" என்னும் பதங் கூறுவிடின் திரவியத்தன்மைஜாதியைக்கொண்டு திரவியத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் கர்மத்தன்மை ஜாதி குணத்திலிராததாமோ அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதியும், குணத்தில் இராததாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நிர்க்குணத்திலிருப்பதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு

### கூஉஉ. கர்மத்தின் நான்காவது லக்ஷணம்.

"[illegible]"

(இ-ள்.) மூர்த்தத்வ தர்மத்தினது வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும், பதார்த்தத்தை பிரிப்பதுமாகிய உபாதி யாதோ அவ்வுபாதியுடைய பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து திரவியங்களிலேயே மூர்த்தத்வ தர்மம் இருக்கின்றது. கர்மமும் இவ்வைந்து திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகையால் கர்மம் மூர்த்தத்வ தர்மத்தின் வியாப்பியமெனப் படுகின்றது. எத்தர்மம் எத்தர்மத்தினை விட்டிருப்பதின்றோ அத்தர்மம் அத்தர்மத்தின் வியாப்பியமெனப் படுகின்றது. அத்தகைய கர்மத்திலிருப்பதாகிய மூர்த்தத்வ தர்மத்தின் வியாப்பியத்தன்மை யாதோ அந்த வியாப்பியத்தன்மையின் அவச்சேதகம் கர்மத்தன்மை ஜாதியாம். அக்கர்மத் தன்மை ஜாதி பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய மூர்த்தத்வத்தின் வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாகிய கர்மத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் கர்மங்கள் யாவற்றினு மிருக்கின்றது. ஆகையால் கூறிய இக்கர்மத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "மூர்த்தத்வத்தின் வியாப்பியத்தன்மையின் அவச்சேதகமும்" என்னும் பதங்கள் கூறாவிடின் திரவியத் தன்மை, தர்மத்தைக் கொண்டு திரவியத்திலும், குணத்தன்மை தர்மத்தைக் கொண்டு குணத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எவ்வெத்தர்மங்களைக் கொண்டு திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் பரஸ்பரம் பிரிக்கப்படுகின்றதோ அவ்வத்தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியெனப்படுகின்றன. ஆண்டு திரவியத்தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை, சாமான்னியத் தன்மை, விசேஷத் தன்மை, சமவாயத் தன்மை, அபாவத் தன்மை என்னும் ஏழு தர்மங்களைக் கொண்டே அத்திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் பரஸ்பரம் பரிக்கப்படுகின்றன. ஆகையால் திரவியத்தன்மை முதலிய ஏழு தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியெனப்படுகின்றன. பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவத்தன்மை எங்ஙனம் கர்மத் தன்மை ஜாதியி லிருக்கின்றதோ அங்ஙனமே திரவியத்தன்மை, குணத்தன்மை ஜாதியினு மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதிக்கு "மூர்த்தத் தன்மையின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையில்லாத ஆகாசம், திசை முதலிய விபுதிரவியங்களிலும் திரவியத் தன்மை ஜாதி யிருக்கின்றது. அங்ஙனமே மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத்தன்மை யில்லாத சத்தம், புத்தி, முதலிய குணங்களிலும் குணத் தன்மை ஜாதி யிருக்கின்றது. ஆகையால் திரவியத்தன்மை ஜாதியும், குணத் தன்மை ஜாதியும் மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமன்றாம். ஆகையால் திரவியத்தன்மை, குணத்தன்மை ஜாதியைக்

கொண்டு திரவியத்திலும், குணத்திலும் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "மூர்த்தத்வ வியாப்பியத்தன்மையின் அவச்சேதக உபாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங் கூறுவிடின் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு கட, பட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், மூர்த்தத்தன்மை தர்மமுடைய கபாலங்களில் கடம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. மூர்த்தத்தன்மை தர்மமுடைய தந்துக்களில் படம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அக்கட பட முதலியனவும் மூர்த்தன்மை தர்மத்தின் வியாப்பியமேயாம். அத்தகைய கட, பட முதலியவைகளி லிருக்கின்ற மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகம் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளாம். அக்கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு அக்கட, பட முதலியவைகளில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் மூர்த்தத்தன்மை தர்மத்தின் வியாப்பியத் தன்மையின் அவச்சேதகமாயினும் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்றாம். ஆகையால் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு கட, பட முதலியவைகளில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

கூஉகூ. கர்மத்தின் ஐந்தாவது லக்ஷணம்.

"நிர்குணவ்ருத்திர் அகுணவ்ருத்தி ஜாதிமத் கர்ம" (இ-ள்.) நிர்க்குண பதார்த்தத்தி லிருப்பதும், குணத்திலிராததுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைய பதார்த்தம் கர்மமெனப்படுகின்றது. ஆண்டு கர்மத்தில் யாதாமோர் உருவ முதலிய குணமும் சமவாயசம்பந்தத்தால் இருப்பதில்லை. ஆகையால் கர்மம் நிர்க்குணமெனப்படுகின்றது. அத்தகைய நிர்க்குண கர்மத்தில் இருப்பது கர்மத்தன்மை ஜாதியாம். ஆகையால் கர்மத்தன்மை ஜாதி நிர்க்குணத்திலிருப்பதெனப்படுகின்றது. கர்மத்தன்மை ஜாதி குண பதார்த்தத்தில் இராததுமா மாகையால் கர்மத்தன்மை ஜாதி குணத்திலிராததெனப்படுகின்றது. இத்தகைய நிர்க்குணத்திலிருப்பதும், குணத்திலிராததுமாகிய கர்மத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தால் சர்வ கர்மங்களி லிருக்கின்றது. ஆகையால் கூறிய இக்கர்மத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "குணத்திலிராத ஜாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நிர்க்குணத்தி லிருப்பதும்" என்னும் பதங் கூறுவிடின் திரவியத்தன்மைஜாதியைக்கொண்டு திரவியத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் கர்மத்தன்மை ஜாதி குணத்திலிராததாமோ அங்ஙனமே திரவியத்தன்மை ஜாதியும், குணத்தில் இராததாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நிர்க்குணத்திலிருப்பதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு

திரவியத்தன்மை ஜாதி நிர்க்குண பதார்த்தத்தில் இருப்பதன்றாம். ஆனால் உருவ முதலிய குணங்களுடைய பிருதிவி முதலிய திரவியங்களிலேயே திரவியத்தன்மை ஜாதி இருக்கின்றது. ஆகையால் திரவியத் தன்மை ஜாதியைக் கொண்டு திரவியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நிர்க் குணத் திலிருக்கும் ஜாதியுடையது கர்மம்" என இம்மாத்திரமே கர்மத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "குணத்திலிராததும்" என்னும் பதங் கூறுவிடின் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு குணத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் கர்மத்தில் குணமிருப்பதின்றோ அங்ஙனமே குணத்திலும் குணமிருப்பதின்று. ஆகையால் கர்மத்தினைப் போன்று குணமும் நிர்க்குணமெனப்படுகின்றது. அத்தகைய நிர்க்குண குணத்திலிருப்பதாகிய குணத்தன்மை ஜாதியைக் கொண்டு குண பதார்த்தத்தில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "குணத்திலிராததும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு குணத்தன்மை ஜாதி குணத்தில் இராததன்றாம்; குணத்தி லிருப்பதேயாம். ஆகையால் குணத்தன்மை ஜாதியைக் கொண்டு குணத்தில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "ஜாதி" என்னும் பதங் கூறுவிடின் சாமான்னியம், விசேஷம் முதலிய பதார்த்தங்களில் கர்மத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் குணத்திலும், கர்மத்திலும் குணமிராதோ அங்ஙனமே சாமான்னியம் விசேஷ முதலிய பதார்த்தங்களிலும் குணமிருப்பதன்று. ஆகையால் குண, கர்மத்தினைப் போன்று சாமான்னிய, விசேஷ முதலிய பதார்த்தங்களும் நிர்க்குணமேயாம். அத்தகைய நிர்க்குண பதார்த்தங்களில் இருப்பனவும், குணத்திலிராதனவுமாகிய சாமான்னியத்தன்மை, விசேஷத்தன்மை முதலிய தர்மங்களைக் கொண்டு சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "ஜாதி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சாமான்னியத்தன்மை, விசேஷத்தன்மை முதலிய தர்மங்கள் ஜாதி வடிவமன்றாம்; உபாதி வடிவமாம். ஆகையால் சாமான்னியத்தன்மை முதலிய தர்மங்களைக்கொண்டு சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஆண்டு "தேவதத்தன் செல்லுகின்றான் யஞ்ஞதத்தன் செல்லுகின்றான்" என்பதான ஒரு வடிவாந்தோற்றம் கர்மத்தன்மை ஜாதியினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் கர்மத்தன்மை ஜாதி பிரத்தியக்ஷப் பிரமாணத்தானேயே சித்தமாம்.

## கூ௨௪. கர்மத்தின் ஆசிரயத்தினது வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய ஐந்து லக்ஷணங்களால் லக்ஷித கர்ம பதார்த்தம் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே சமவாய சம்பந்தத்தால் இருக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா என்பதான விபுத்திரவியங்களில் கர்மம் இருப்பதன்று,

### ௬௨௫. எழும்பல் முதலிய வேறுபாட்டால் கர்மத்தின் ஐவகை வேற்றுமை.

கூறிய கர்ம பதார்த்தம் எழும்பல், வீழ்தல், வளைதல், நிமிர்தல், நடத்தல் என்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். இனி முறையாக இவ்வைந்தின் லக்ஷணங்களைக் கூறுவாம். ஆண்டு "ஊர்த்வதேசஸம்யோகாஸமவாயிகாரணங்கர்ம உத்க்ஷேபணம்" (இ-ள்.) மூர்த்தத்திரவியத்திற் குண்டாம் மேலிட சையோகம் யாதோ அம்மேலிட சையோகத்திற்கு அசமவாயி காரணமாகிய கர்மம் எழும்பலாகிய கர்மமெனப்படுகின்றது. "அதோதேசஸம்யோகாஸமவாயிகாரணங்கர்ம அவக்ஷேபணம்" (இ-ள்.) மூர்த்தத்திரவியத்திற்கு கீழிடத்தினோடுண்டாம் சையோகம்யாதோ அச்சையோகத்திற்கு அசமவாயிகாரணமாகிய கர்மம் வீழ்தலாகிய கர்மமெனப்படுகின்றது. எங்ஙனம் தான்னியங்களின் பதருகளை நிவர்த்திக்கும் பொருட்டு புருஷன் அத்தான்னியங்களை முறத்தில் எடுத்து தனது கையை முறத்துடன் உயரவெடுத்து தான்னியத்தை கீழே விழச்செய்கிறான். ஆண்டு முறத்தை உயரவெடுப்பதால் அம்முறத்திற்கும், அக்கைக்கும் மேலிடத்தினோடு சையோகமுண்டாகின்றது. ஆண்டு முறத்தின் மேலிட சையோகத்திற்கு அம்முறத்தின் கர்மம் அசமவாயிகாரணமாகின்றது. அக்கையின் மேலிட சையோகத்திற்கு அக்கையின் கர்மம் அசமவாயி காரணமாகின்றது. அத்தகைய மேலிடசையோகத்தின் அசமவாயிகாரணவடிவ முறத்தின் கர்மத்தினையும், கையின் கர்மத்தினையும் எழும்பலாகிய கர்மமென்பர். புருஷன் அம்முறத்தை கீழேகளத்தில்விடும்போது அம்முறத்திற்கும் அக்கைக்கும் கீழிடத்தினோடு சையோகமுண்டாகின்றது. ஆண்டு முறத்தின் கீழிட சையோகத்திற்கோ அம்முறத்தின் கர்மம் அசமவாயி காரணமாகின்றது. அக்கையின் கீழிடசையோகத்திற்கு அக்கையின்கர்மம் அசமவாயி காரணமாகின்றது. அத்தகைய கீழிட சையோகத்திற்கு அசமவாயி காரணமாகிய முறத்தின் கர்மத்தினையும், கையின் கர்மத்தினையும் வீழ்தலாகிய கர்மமென்பர். ஆண்டு முதலில் ஆத்மாவின் சையோகத்தாலும், முயற்சியினாலும் கையில் எழும்பலாகிய கர்மம் உண்டாவதாகின்றது. ஆண்டு கையிலுள்ள எழும்பலாகிய கர்மத்திற்கு அக்கையோ சமவாயி காரணமாகின்றது. அக்கையினோடுண்டாம் முயற்சியுடைய ஆத்மாவின் சையோகம் எழும்பலாகிய கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்வாத்மாவின் முயற்சி நிமித்த காரணமாகின்றது. அம்முறத்தில் உண்டாகிய எழும்பலாகிய கர்மத்திற்கு அம்முறமோ சமவாயிகாரணமாகின்றது. முயற்சியுடைய ஆத்மாவின் சையோகமுடையதும் எழும்பலாகிய கர்மமுடையதுமாகிய கைக்கு அம்முறத்தினோடுண்டாம் சையோகம் அம்முறத்தின் எழும்பலாகிய கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்வாத்மாவின் முயற்சியும், கையின் எழும்பலாகிய கர்ம முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. "ஸமீபதேசஸம்யோகாஸமவாயிகாரணங்கர்ம ஆகுஞ்சநம்" (இ-ள்.) மூர்த்தத் திரவியத்திற்கு சமீப தேசத்தினோடுண்டாம் சையோகத்திற்கு அசமவாயிகாரணமாகிய மூர்த்தத்திரவியத்தின் கர்மம் யாதோ அக்கர்மம் வளைதலாகிய கர்மமெனப்படுகின்

றது. எங்ஙனம்: சரீரத்தின் கை, கால் முதலிய அங்கங்களை குவிப்பதால் அவ்வங்கங்கட்கு சமீப தேசத்தினோடு சையோக முண்டாகின்றது. அச்சையோகத்திற்கு அசமவாயி காரணம் அக்கை, கால் முதலிய அங்கங்களின் கர்மமாம். ஆகையால் அக்கை, கால் முதலிய அங்கங்களின் கர்மம் வளைதலாகிய கர்மமெனப்படுகின்றது "தியக்ஸம்யோகாஸமவாயிகாரணம் கர்ம ப்ரஸாரணம்" (இ-ள்.) மூர்த்தத் திரவியத்திற்கு சேய்மை தேசத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகத்திற்கு அசமவாயி காரணமாகிய அம்மூர்த்தத்திரவியத்தின் கர்மம் யாதோ அக்கர்மம் நிமிர்தலாகிய கர்மமெனப்படுகின்றது. குவிந்த சரீரத்தின் கை கால் முதலிய அங்கங்களை மீண்டும் விரியச் செய்வதால் அக்கை, கால் முதலிய அங்கங்கட்கு சேய்மை தேசத்தினோடு சையோக முண்டாகின்றது. அச்சையோகத்திற்கு அசமவாயி காரணம் அக்கை, கால் முதலிய அங்கங்களின் கர்மமாம். ஆகையால் அவ்வங்கங்களின் கர்மம் நிமிர்தலாகிய கர்மமெனப்படுகின்றது. ஆண்டு வளைதலாகிய கர்மத்திற்கும், நிமிர்தலாகிய கர்மத்திற்கும் கை, கால் முதலிய அங்கங்களோ சமவாயி காரணமாகின்றன. அக்கை, கால் முதலிய அங்கங்களோ டுண்டாம் முயற்சியுடைய ஆத்மாவின் சையோகம் அக்கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்வாத்மாவின் முயற்சியும், காலம், ஈசுவரன் முதலியனவும் நிமித்த காரணமாகின்றன. "அநியதோத்தரதேசஸம்யோகாஸமவாயிகாரணம் கர்ம கமநம்" (இ-ள்.) மூர்த்தத்திரவியத்திற்கு நியமமின்றி உத்தர தேசத்தினோடுண்டாம் சையோகம் யாதோ அச்சையோகத்திற்கு அசமவாயிகாரணமாகிய அம்மூர்த்தத் திரவியத்தின் கர்மம் நடத்தலாகிய கர்மமெனப்படுகின்றது. கருத்திதுவாம்; முற்கூறிய மேலிடத்தினோடும், கீழிடத்தினோடும், அண்மையிடத்தினோடும், சேய்மையிடத்தினோடும் நியமமின்றி கேவலம் உத்தர தேசமாத்திரத்தினோடு மூர்த்தத் திரவியத்திற்குண்டாம் நியதமில்லாத சையோகத்திற்கு அசமவாயிகாரணமாகிய மூர்த்தத் திரவியத்தின் கர்மம் யாதோ அக்கர்மம் நடத்தலாகிய கர்மமெனப்படுகின்றது. ஆண்டு கர்மத்தன்மை ஜாதி எங்ஙனம் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் சித்தமாமோ அங்ஙனமே கர்மத்தன்மை ஜாதியின் வியாப்பியமாகிய எழும்பற்றன்மை, வீழ்தற்றன்மை, வளைதற்றன்மை, நிமிர்தற்றன்மை, நடத்தற்றன்மையாம் ஐந்து ஜாதிகளும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தானேயே சித்தமாம்.

சங்கை:—முற்கூறிய எழும்பற்றன்மை முதலிய ஐந்து வகையாகவே கர்மமுண்டாகின்ற தென்பதான பிரதிஞ்ஞை சம்பவியாது. ஏனெனின், உலகத்தில் சுழலுதல், பறத்தல், ஊறுதல், ஒழுகுதல் இவை முதலிய அநேக கர்மங்களின்பேதம் தோற்றுகின்றது.

சமாதானம்:—அச்சுழற்சி முதலிய கர்மங்கள் யாவும் நடத்தலிலேயே அடங்குமாகலின் நடத்தலினும் வேறன்றாம். ஆகையால் சுழற்சி முதலிய கர்மங்கள் வேறாகக் கூறப்படவில்லை.

சங்கை:—அச்சுழற்சி முதலியவைகளின் அடக்கம் நடத்தலில் சம்பவிக்குமாயின் எழும்பல் முதலிய நான்கின் அடக்கமும் நடத்திலேயே ஒப்ப

வேண்டும். ஏனெனின் மேலிடத்திலும், கீழிடத்திலும் போடப்பட்ட கல் முதலியவைகளில் "மேற்செல்லுகின்றது, கீழ்ச் செல்லுகின்றது" என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அத்தோற்றம் அக்கல் முதலியவைகளின் எழும்பலிலும், வீழ்தலிலும் நடத்தற்றன்மை தர்மத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அச்சுழற்சி முதலியவைகளைப் போன்று எழும்பல் முதலியவைகளின் அடக்கமும் நடத்தலிலேயேயொப்ப வேண்டும்.

சமாதானம்:—கூறிய முறைப்படி எழும்பல் முதலியவைகளின் அடக்கம் நடத்தலில் சம்பவிக்கின்றது. என்றாலும் சர்வஞ்ஞ மஹா கணாதமுனிவர் முதலியோர்கள் எழும்பலாதி ஐந்துவகையாகவே கர்மங் கூறியிருக்கின்றனர். ஆகையால் அவ்வைந்து வகையாகவே கர்மம் ஒப்பப்பட வேண்டும். அச்சுழற்சி முதலியவைகளின் அடக்கத்தை நடத்தலில் ஒப்ப வேண்டும்.

## கூ௨சு. கர்மத்தின் உற்பத்தியினதும், காரணத்தினதும் வர்ணனம்.

முற்கூறிய சர்வ கர்மங்களும் உற்பத்திவிநாசமுடையதாவதால் அநித்தியமேயாகின்றது. யாதாமோர் கர்மமும் நித்தியமாவதின்று. எவ்வெத் திரவியத்தில் எவ்வெக்கர்மம் உற்பன்னமாகின்றதோ அவ்வக்கர்மத்திற்கு அவ்வவ் மூர்த்தத்திரவியமோ சமவாயிகாரணமாகின்றது. அவ்வவ் மூர்த்தத் திரவியத்தினோடுண்டாம் வேறு மூர்த்தத் திரவியத்தின் அபிகாதாக்கிய சையோகம் அல்லது நோதனக்கிய சையோகம் அக்கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம் கோடரி முதலியவைகளின் அபிகாதாக்கிய சையோகம் தரு முதலியவைகளின் கர்மத்திற்கு அசமவாயிகாரணமாகின்றது. வில்லினது நாணியின் நோதனக்கியசையோகம் பாணத்தின்கிரியைக்கு அசமவாயி காரணமாகின்றது. சிலவிடத்தோ அமூர்த்தத் திரவியத்தின் சையோகமும் மூர்த்தத் திரவியத்தின் கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: முயற்சியுடைய ஆத்மாவின் சையோகம் சரீர முதலியவைகளின் கர்மத்திற்கு அசமவாயிகாரணமாகின்றது. அங்ஙனமே முயற்சியுடைய ஈசுவரனது சையோகம் பரமாணுக்களின் கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. சிலவிடத்து குருத்வமும் கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: கனி முதலியவைகளின் ஆதிவீழ்ச்சியாகிய கர்மத்திற்கு அக்கனி முதலியவைகளின் குருத்வமே அசமவாயி காரணமாகின்றது. சிலவிடத்து திரவத்வமும் கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: நீர் முதலியவற்றின் ஆதி ஒழுக்காகிய கர்மத்திற்கு அந்நீர் முதலியவைகளின் திரவத்வமே அசமவாயிகாரணமாகின்றது. சிலவிடத்து வேகமும் கர்மத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. எங்ஙனம்: இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளுக்கும் இரண்டாவது முதலிய ஒழுக்கிற்கும் வேகமே அசமவாயி காரணமாகின்றது. இவ்வார்த்தை முன்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் குருத்வ, திரவத்வ குண நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம்.

## கூ௨எ. கர்மத்தின் விநாசத்தினது வர்ணனம்.

எம்மூர்த்தத் திரவியத்தில் அக்கர்மம் உற்பன்னமாகின்றதோ அவ்வாசிரிய திரவியத்தின் நாசத்தானும் அக்கர்மம் நாசமாய் விடுகின்றது. அந்த

மூர்த்தத் திரவியத்தி னிருப்புளதாயினும் அந்த மூர்த்தத்திரவியத்தின் உத்தர சையோகத்தானும் கர்மம் நாசமாய் விடுகின்றது. சிலவிடத்தில் கர்மம் தன்னாற் றோன்றிய வேகத்தானும் நாசமாய் விடுகின்றது. முற்கூறிய கர்ம பதார்த்தம் சக்ஷு, துவக்கு என்னும் இரு இந்திரியங்களால் பிரத்தியக்ஷமாகின்றது. கர்ம நிரூபணம் முற்றிற்று.

### ௯௨௮. சாமான்னிய பதார்த்த நிரூபணம்.

சாமான்னியத்தின் லக்ஷணம். "நித்யமேகமநேகஸமவேதம் ஸாமாந்யம்" (இ-ள்.) எப்பதார்த்தம் நித்தியமாயும், அனேக வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாகின்றதோ அப்பதார்த்தம் சாமான்னியமெனப்படுகின்றது. இச்சாமான்னியத்தினை நியாய சாஸ்திரத்தில் ஜாதியென்றுங் கூறுவர். திரவியம், குணம், கர்மமென்னு மூன்று பதார்த்தங்களில் இருப்பதாகிய சத்தா ஜாதியாதோ அச்சத்தா ஜாதி உற்பத்தி விநாசமிலாததாவதால் நித்தியமும், திரவிய, குண, கர்ம வடிவ அனேக வியக்திகளில் சமவேதமுமாம். ஈண்டு சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய வஸ்துவினை சமவேதமென்பர். இவ்வாறாக பிருதிவி முதலிய வொன்பது திரவியங்களி லிருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதியும் நித்தியமும், ஒன்பது திரவிய வடிவ அனேக வியக்திகளில் சமவேதமுமாம். இவ்வாறாக உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களி லிருப்பதாகிய குணத்தன்மை ஜாதியும் நித்தியமும், இருபத்து நான்கு குண வடிவ அனேக வியக்திகளில் சமவேதமுமாம். இவ்வாறாக எழும்பல் முதலிய ஐந்து கர்மங்களிலிருப்பதாகிய கர்மத்தன்மை ஜாதியும் நித்தியமும், எழும்பல் முதலிய ஐந்து கர்ம வடிவ அனேக வியக்திகளில் சமவேதமுமாம். இவ்வாறாக சர்வ பிருதிவியிலிருக்கும் பிருதிவித்தன்மை ஜாதியும், சர்வ ஜலத்திலிருக்கும் ஜலத்தன்மை ஜாதியும், சர்வதேயுவிலிருக்குந் தேயுத்தன்மை ஜாதியும், சர்வ வாயுவிலிருக்கும் வாயுத்தன்மை ஜாதியும், சர்வ ஆத்மாவிலிருக்கும் ஆத்மத்தன்மை ஜாதியும், சர்வ மனதிலிருக்கும் மனத்தன்மை ஜாதியும், உருவ, ரச முதலிய இருபத்து நான்கு குணங்களுள் முறையாக தனித்தனி உருவ, ரச முதலிய குணங்களில் இருப்பனவாகிய உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய இருபத்து நான்கு ஜாதிகளும், எழும்பல் முதலிய ஐந்து கர்மங்களுள் முறையாக தனித்தனி எழும்பல் முதலிய கர்மத்தில் இருப்பனவாகிய எழும்பற்றன்மை முதலிய ஐந்து ஜாதிகளும், கட பட முதலியவைகளில் முறையாக இருப்பனவாகிய கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகளுமா மிவைமுதலிய எல்லா ஜாதிகளும் உற்பத்தி விநாசமில்லாததாவதால் நித்தியமும், கூறிய பிருதிவி முதலிய அனேக வியக்திகளில் சமவேதமுமாம். ஆகையால் முற்கூறிய ஜாதி வடிவ சாமான்னியத்தின் லக்ஷணம் சத்தா, திரவியத்வ முதலிய சர்வ ஜாதிகளில் சம்பவிக்கின்றது. ஆண்டு "அனேக வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பது சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நித்தியமாகியும்" என்னும் பதங் கூறுவிடின் சையோகத்திலும், விபாகத்திலும், இருமை சங்கியையிலும், இருமை வேற்றுமைமுதலிய

வேற்றுமையிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், ஒன்றினும் வேறானவற்றை அனேக மென்பர். அவ்வனேகத்தன்மை இரண்டு முதலாக பரார்த்த பரியந்தமாம் யாவற்றினு மிருக்கின்றது. இவ்வார்த்தை முன்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் சங்கியா குண நிரூபணததில் கூறி வந்துள்ளோம். ஆகையால் எங்ஙனம் அச்சாமான்னியம் அனேக வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றதோ அங்ஙனமே அச்சையோகமும், விபாக மும், துவித்வமுதலிய சங்கியைகளும், இருமைவேற்றுமை முதலிய வேற்றுமை களும் அனேக வியக்திகளிலேயே சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றன. ஆகையால் சாமான்னியத்தின் லக்ஷணத்திற்கு சையோக முதலியவைகளில் அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நித்தியமாயும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சையோகம், விபாக முதலியன அனேக திரவிய வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பனவாயினும் நித்தியமன்றாம்; அநித்தியமாம். ஆகையால் சையோக முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நித்தியமாயும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "அனேகம்" என்னும்பதங்கூறாவிடின் கூறப்படும் விசேஷ பதார்த்தத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், விசேஷம்நித்தியமும், சமவாயசம்பந்தத்தாலிருப்பதுமாம். அல்லது பரமாணு முதலிய நித்தியத் திரவியங்களி லிருக்கும் ஒருமைச் சங்கியையும், பரமாணு விலும், மனதிலுமிருக்கும் பரம அணுத்வ பரிமாணமும், ஆகாச முதலிய விபுத் திரவியங்களி லிருக்கும் பரம மஹத்வ பரிமாணமும் யாவையோ அவ்வொரு மைச்சங்கியை முதலியமூன்றும் நித்தியமும், சமவாயசம்பந்தத்தாலிருப்பனவு மாம். அவ்வொருமை முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அனேகம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு விசேஷமும், ஏகத்வ முதலியனவும் நித்திய சமவேதமாயினும் அனேக வியக்திகளில் சமவாயசம்பந்தத்தா லிருப்பனவன்றாம். ஒவ்வோர் திரவிய வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பனவாகின்றன. ஆகையால் விசேஷத்திலும், ஏகத்வ முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நித்தியமாயும் அனேக வியக்தியில் இருப்பதும் சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சமவாயசம்பந்தத்தா லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் அத்தியந்தாபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், கட முதலியவைகளின் அத்தியந்தாபாவம் அக்கடத்தினை விட்டு யாண்டுமிருக்கின்றது. அங்ஙனமே அத்தியந்தாபாவம் நித்தியமுமாம். ஆகையால் சாமான்னியத்தினைப் போன்று அத்தியந்தாபாவத்திலும் நித்தியத்தன்மையும், அனேக அதிகரணங்களில் இருத்தற்றன்மையு மிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும்பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அத்தியந்தாபாவம் நித்தியமும்,

அனேகத்தி லிருப்பதுமாயினும் அனேக வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று; ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் அத்தியந்தாபாவத்தில் சாமான்னியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

கூஉகூ. சாமான்னியத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"நிஃ ஸாமாந்யத்வே ஸதி விஶேஷாந்யத்வே ஸதி ஸமவேதம் ஸாமாந்யம்" (இ-ள்.) எப்பதார்த்தம் ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும், விசேஷ பதார்த்தத்தினும் வேறும், சமவாயசம்பந்தத்தா லிருப்பதுமாகின்றதோ அப்பதார்த்தம் சாமான்னியமெனப்படுகின்றது. ஆண்டு சாமான்னியத்தில் வேறு சாமான்னியமிருப்பதில்லை. ஆகையால் முற்கூறிய சத்தா, திரவியத்வாதி வடிவ சாமான்னியம் ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும், கூறப்படும் விசேஷ பதார்த்தத்தினும் வேறும், சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாம். ஆகையால் சாமான்னியத்திற்கு கூறிய இவ்விரண்டாவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "விசேஷத்தினும் வேறும் சமவாய சம்பந்தத்தாலிருப்பதும் சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சாமான்னியமிலாததும்" என்னும் பதங்கூறாவிடின் குணத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் குணமும், கர்மமும், விசேஷத்தினும் வேறும், திரவியத்தில் சமவாயசம்பந்தத்தா லிருப்பனவுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சாமான்னியமிலாததும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு குணமும், கர்மமும், சாமான்னியமிலாதனவன்றும்; சத்தாவடிவ சாமான்னியமுடையனவும், குணத்வ, கர்மத்வ வடிவசாமான்னிய முடையனவுமாம். ஆகையால் குணத்திலும், கர்மத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சாமான்னிய மிலாததும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விசேஷத்தினும் வேறும்" என்னும் பதங்கள் கூறாவிடின் விசேஷ பதார்த்தத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், விசேஷபதார்த்தம் ஜாதிவடிவ சாமான்னியமிலாததும், நித்திய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விசேஷத்தினும் வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு விசேஷம் விசேஷத்தினும் வேறன்றும். ஆகையால் விசேஷத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சாமான்னிய மிலாததும் விசேஷத்தினும் வேறுமாவது சாமான்னியம்" என இம்மாத்திரமே சாமான்னியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறாவிடின் சமவாய பதார்த்தத்திலும், அபாவ பதார்த்தத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் சமவாயமும், அபாவமும் ஜாதி வடிவ சாமான்னியமிலாதனவும், விசேஷ பதார்த்தத்தினும் வேறுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சமவாய சம்பந்தத்தா லிருப்பதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. சமவாயமும், அபாவமும் தனது அதிகரணத்தி சமவாய

சம்பந்தத்தா லிருப்பனவன்று; ஸ்வரூப சம்பந்தத்தா லிருப்பனவாம். ஆகை யால் சமவாயத்திலும், அபாவத்திலும் சாமான்னியத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாகக் கூறிய இரு லக்ஷணங்களால் லக்ஷித சாமான்னிய பதார்த்தம் திரவியம், குணம், கர்மம் என்பதான மூன்று பதார்த்தங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. சாமான்னியம், விசே ஷம், சமவாயம், அபாவ மென்னும் நான்கு பதார்த்தங்களில் ஜாதி வடிவ சாமான்னியம் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று. ஜாதி வடிவ சாமான் னியம் ஆகாச முதலியவைகளைப் போன்று உற்பத்தி விநாசமிலாததாவதால் நித்தியமேயாம். யாதாமோர் ஜாதியும் அநித்தியமாகிறதில்லை.

## கூ௯௰. பரம், அபரம் என்னும் வேறுபாட்டால் சாமான்னியத்தின் இருவித வேற்றுமை.

சாமான்னிய பதார்த்தம் பர சாமான்னியம், அபர சாமான்னியம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். “ அதிகதேசவ்ருத்திகம் பர ஸாமாந்யகம் ॥ அல்பதேசவ்ருத்திகம் அபரஸாமாந்யகம் ” (இ-ள்.) எஜ்ஜாதி எஜ்ஜாதியின் அபேக்ஷையால் அதிக தேசத்திருப்பதாகின்றதோ அஜ்ஜாதி அஜ்ஜாதியின் அபேக்ஷையால் பரசாமான்னிய மெனப்படுகின்றது. எஜ்ஜாதி எஜ்ஜாதியின் அபேக்ஷையால் அற்ப தேசத்தி லிருப்பதாகின்றதோ அஜ்ஜாதி அஜ்ஜாதியின் அபேக்ஷையால் அபர சாமான்னியமெனப்படுகின்றது. ஆண்டு பர சாமான்னியமோ வியாபகமாகின்றது; அபர சாமான்னியம் வியாப்பிய மாகின்றது. எங்ஙனம்: திரவியம், குணம், கர்மமென்னும் மூன்று பதார்த் தங்களில் சமவாயசம்பந்தத்தால் இருப்பதாகிய சத்தா ஜாதி திரவியமாத்திரத்தி லிருக்கும் திரவியத்தன்மை ஜாதியின் அபேக்ஷையாலும், குண மாத்திரத்தி லிருக்கும் குணத்தன்மை ஜாதியின் அபேக்ஷையாலும், கர்ம மாத்திரத்தி லிருக்கும் கர்மத்தன்மை ஜாதியின் அபேக்ஷையாலும் திரவிய, குண, கர்ம வடிவ அதிக தேசத்தி லிருப்பதாம். ஆகையால் சத்தா ஜாதி பர சாமான்னிய மெனப்படுகின்றது. சத்தையினது திரவிய, குண, கர்ம வடிவ தேசத்தின் அபேக்ஷையால் திரவிய வடிவ குறைந்த தேசத்தில் இருக்கும் திரவியத் தன்மை ஜாதியும், குண வடிவ குறைந்த தேசத்தி லிருக்கும் குணத்தன்மை ஜாதியும், கர்ம வடிவ குறைந்தவிடத்தி லிருக்கும் கர்மத்தன்மை ஜாதியும் அபர சாமான்னிய மெனப்படுகின்றன. திரவியத் தன்மை ஜாதியும் பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை முதலிய ஜாதிகளின் அபேக்ஷையால் அதிக தேசத்தி லிருப்பதாவதால் பர சாமான்னியமேயாம். அங்ஙனமே குணத் தன்மை ஜாதியும் உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளின் அபேக்ஷையால் அதிக தேசத்திலிருப்பதாவதால் பர சாமான்னியமேயாம். அங்ஙனமே கர்மத்தன்மை ஜாதியும், எழும்பற்றன்மை முதலிய ஜாதிகளின் அபேக்ஷையால் அதிக தேசத்தி லிருப்பதாவதால் பர சாமான்னியமேயாம். ஆகையால் சத்தா ஜாதியே பரசாமான்னியமா மென்பதான பிரதிஞ்ஞை சம் பவியாது. என்றாலும் திரவியத்தன்மை, குணத்தன்மை முதலிய சர்வ ஜாதி களின் அபேக்ஷையால் அதிக தேசத்தி லிருப்பதாவதால் அச்சத்தையே பர

சாமான்னியமெனப்படுகின்றது. சத்தையினும் வேறான திரவியத்தன்மை, குணத்தன்மை முதலிய ஜாதிக ளெவ்வள விருக்கின்றனவோ அத்திரவியத் தன்மை, குணத்தன்மை முதலிய ஜாதிகள் பிருதிவித்தன்மை, உருவத்தன்மை முதலிய ஜாதிகளின் அபேக்ஷையால் பர சாமான்னிய வடிவமாயினும் சத்தையின் அபேக்ஷையால் அபர சாமான்னிய வடிவமேயாம். ஆகையால் சத்தையினும் வேறான திரவியத்தன்மை, குணத்தன்மை முதலிய எல்லா ஜாதிகளும் அபர சாமான்னியமெனப்படுகின்றன.

### கூ௩க. வியாப்பியம், வியாபகம், வியாப்பிய வியாபகம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் சாமான்னியத்தின் மூவித வேற்றுமை.

சில நூலாசிரியரோ ஜாதிவடிவ சாமான்னியம் வியாபகம், வியாப்பியம், வியாப்பிய வியாபக மென்னும் வேறுபாட்டால் மூவிதமாக வொப்புகின்றனர். ஆண்டு அதிக விடத்தி லிருக்கும் ஜாதியினை வியாபகமென்பர். குறைந்த விடத்திலிருக்கும் ஜாதியினை வியாப்பிய மென்பர். ஆண்டு திரவியத்திலும், குணத்திலும், கர்மத்திலு மிருக்கும் சத்தா ஜாதி திரவியத்தன்மை, குணத் தன்மை முதலிய சர்வ ஜாதிகளின் அபேக்ஷையால் அதிக தேசத்திலிருப்ப தாவதால் கேவலம் வியாபக மென்றே கூறப்படுகின்றது. அச்சத்தா ஜாதி எஞ் ஜாதிக்கும் வியாப்பியமாகிறதில்லை. திரவிய மாத்திரத்தி லிருக்கும் திரவியத் தன்மை ஜாதி அச்சத்தா ஜாதியின் அபேக்ஷையால் குறைந்தவிடத்தி லிருப்ப தாவதால் அச்சத்தா ஜாதியின் வியாப்பிய மெனப்படுகின்றது. பிருதிவீ மாத்திரத்திலிருக்கும் பிருதிவித்தன்மை ஜாதியின் அபேக்ஷையால் அதிக தேசத்திலிருப்பதாவதால் திரவியத்தன்மை ஜாதி, பிருதிவித்தன்மை ஜாதியின் வியாபக மெனப்படுகின்றது. அங்ஙனமே திரவியத்வ ஜாதி ஜலத்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மை, ஆத்மத்தன்மை, மனத்தன்மை என்னும் ஜாதிகளின் வியாபக மெனப்படுகின்றது. பிருதிவித்தன்மை ஜாதியும் திரவி யத்தன்மை ஜாதியின் அபேக்ஷையால் குறைந்த விடத்தி லிருப்பதாவதால் திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமெனப்படுகின்றது. கட மாத்திரத்தி லிருக்கும் கடத்தன்மை ஜாதியின் அபேக்ஷையாலும், பட மாத்திரத்தி லிருக் கும் படத்தன்மை ஜாதியின் அபேக்ஷையாலும் அதிக தேசத்திருப்பதாவ தால் பிருதிவித்தன்மை ஜாதி கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதி களின் வியாபகமெனப்படுகின்றது. கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் யாதாமோர் ஜாதியின் அபேக்ஷையாலும் அதிக தேசத்திலிருப்பன வன்றாம். ஆகையால் கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் வியாபக மெனப்படுவனவன்று; ஆனால் கேவலம் பிருதிவித்தன்மைஜாதியின் வியாப்பிய மெனப்படுகின்றது. ஆகையால் இது சித்தித்தது; சத்தா ஜாதியோ கேவலம் வியாபகமாம். திரவியத்தன்மை ஜாதியும், பிருதிவித்தன்மை ஜாதியும் வியாப் பிய, வியாபகமாம். கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகள் கேவலம் வியாப்பியமேயாம். இவ்வாறாக குணத்தன்மை ஜாதியும், சத்தா ஜாதியின் வியாப்பியமேயாம். உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளின்

வியாபகமுமாம். அங்ஙனமே உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளும் குணத்வ ஜாதியின் வியாப்பியமேயாம். வெண்மைத்தன்மை, நீலத்தன்மை, மதுரத்தன்மை, புளிப்புத்தன்மை முதலிய ஜாதிகளின் வியாபகமுமாம். அவ் வெண்மைத்தன்மை, மதுரத்தன்மை முதலிய ஜாதிகள் யாதாமோர் ஜாதியின் வியாபகமுமன்றும்; ஆனால் கேவலம் உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகளின் வியாப்பியமேயாம். ஆகையால் ஈண்டும் அச்சத்தா ஜாதியோ கேவலம் வியாபகமேயாம். குணத்தன்மை, உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகள் வியாப்பிய வியாபகமாம். வெண்மைத் தன்மை, மதுரத் தன்மை முதலிய ஜாதிகள் கேவலம் வியாப்பியமேயாம். இவ்வாறாக வெவ்வேறு ஜாதிகளிலும் முறையாக வியாப்பிய வியாபக பாவத்தை அறிந்துக்கொள்க.

## ௬௩௨. ஜாதி வடிவ சாமான்னியங்களின் வியாப்பிய வியாபக பாவத்தின் வியவஸ்தை.

ஆனால் அஜ்ஜாதிகளின் வியாப்பிய வியாபக பாவத்திற்கு இவ்வியவஸ் தையை அறிந்துக் கொள்க. எஜ்ஜாதிகள் யாதாமோர் அதிகரணத்தில் பரஸ் பரம் ஒன்றாக இருக்கின்றனவோ அஜ்ஜாதிகட்கே பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவ முண்டாகின்றது. எங்ஙனம்: கடத்தில் சத்தா ஜாதியும், திரவி யத்தன்மை ஜாதியும், பிருதிவித்தன்மை ஜாதியும், கடத்தன்மை ஜாதியுமிருக் கின்றன. ஆகையால் சத்தா, திரவியத்தன்மை, பிருதிவித்தன்மை, கடத் தன்மையாம் நான்கு ஜாதிகட்கு பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவமுண் டாகின்றது. அதாவது; சத்தையின் வியாப்பியம் திரவியத்தன்மையாகின்றது. திரவியத்தன்மையின் வியாப்பியம் பிருதிவித்தன்மையாகின்றது. பிருதிவித் தன்மையின் வியாப்பியம் கடத்தன்மையாகின்றது. இவ்வாறாக வெண்மை உருவத்தில் சத்தாஜாதியும், குணத்தன்மைஜாதியும், உருவத்தன்மை ஜாதியும், வெண்மைத்தன்மை ஜாதியு மிருக்கின்றன. ஆகையால் சத்தா, குணத்தன்மை, உருவத்தன்மை, வெண்மைத்தன்மையாம் நான்கு ஜாதிகட்கு பரஸ்பரம் வியாப்பிய வியாபகபாவ முண்டாகின்றது. அதாவது; சத்தையின் வியாப்பியம் குணத்தன்மையாகின்றது. குணத்தன்மையின் வியாப்பியம் உருவத்தன்மை யாகின்றது. உருவத்தன்மையின் வியாப்பியம் வெண்மைத்தன்மையாகின்றது. இவ்வாறாக எழும்பலெனப்பெயரிய கர்மத்தில் சத்தாஜாதியும், கர்மத்தன்மை ஜாதியும், எழும்பற்றன்மை ஜாதியுமிருக்கின்றன. ஆகையால் சத்தா, கர்மத் தன்மை, எழும்பற்றன்மையாம் மூன்று ஜாதிகட்கு பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவ முண்டாகின்றது. அதாவது; அச்சத்தையின் வியாப்பியம் கர்மத்தன்மையாகின்றது. கர்மத்தன்மையின் வியாப்பியம் எழும்பற்றன்மை யாகின்றது. யாதாமோர் அதிகரணத்தில் ஒன்றாக இராமல் வெவ்வேறு அதி கரணத்தில் இருக்கும் ஜாதிகட்கு பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவம் உண்டாகிறதில்லை. எங்ஙனம்: திரவியத்தன்மை ஜாதி கேவலம் திரவியமாத் திரத்திலேயே இருக்கின்றது; குண, கர்மங்களிலிருப்பதன்று. குணத்தன்மை ஜாதி கேவலம் குண மாத்திரத்திலேயே இருக்கின்றது; திரவிய கர்மங்களி லிருப்பதன்று. கர்மத்தன்மை ஜாதி கேவலம் கர்ம மாத்திரத்திலேயே இருக் கின்றது. திரவிய குணங்களி லிருப்பதன்று. ஆகையால் திரவியத்தன்மை,

குணத்தன்மை, கர்மத்தன்மையாம் மூன்று ஜாதிகட்கு பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவம் உண்டாகிறதில்லை. அங்ஙனமே பிருதிவி, ஜல முதலிய திரவியங்களில் இருப்பனவாகிய பிருதிவித்தன்மை, ஜலத்தன்மைமுதலிய ஜாதிக்கட்கும் பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவமுண்டாகிறதில்லை. அங்ஙனமே உருவம், ரச முதலிய குணங்களி லிருப்பனவாகிய உருவத்தன்மை, ரசத்தன்மை முதலிய ஜாதிகட்கும் பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவ முண்டாகிறதில்லை. அங்ஙனமே எழும்பல், வீழ்தல் முதலிய கர்மங்களி லிருப்பனவாகிய எழும்பற்றன்மை, வீழ்தற்றன்மை முதலிய ஜாதிகட்கும் பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவ முண்டாகிறதில்லை. அங்ஙனமே கடத்தன்மை, படத்தன்மை முதலிய ஜாதிகட்கும் பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவம் உண்டாகிறதில்லை.

சங்கை:—முற்கூறிய ஜாதி வடிவ சாமான்னியத்தின் பிரிவு சித்தமாகும்போது முதலில் யாதாமோர் பிரமாணத்தால் சாமான்னியத்தின் சித்தியுண்டாக வேண்டும். சாமான்னியத்தின் சித்தியின்றி அப்பிரிவு சம்பவியாதென்னுஞ் சங்கை யுண்டாக இனி சாமான்னியத்தினது சித்தியை வர்ணிப்பாம்.

கூ௫௫. அநுகத பிரதீதியினுல் ஜாதியினது சித்தியின் வகை.

திரவிய, குண, கர்மமா மூன்று பதார்த்தங்களில் "திரவியமிருக்கின்றது குணமிருக்கின்றது கர்மமிருக்கின்றது" என்பதாக சத் வடிவ அநுகதமாகிய பிரதீதி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. ஈண்டு நானா தர்மங்களில் ஒரு தர்ம விசேஷண வடிவாந் தோற்றத்தினை அநுகதப் பிரதீதி யென்பர். அவ்வநுகதப் பிரதீதி யாதாமோர் அநுகத விஷயமின்றி சம்பவியாது. ஆண்டு திரவிய, குண, கர்மமா மூன்றும் பரஸ்பரம் விலக்ஷணமாவதால் அநுகதப் பிரதீதியின் காரணமாகிறதில்லை. பரிசேஷத்தால் திரவிய, குண, கர்மமா மூன்றில் ஒரு சத்தா ஜாதியினை அநுகத தர்மமாக வொப்ப வேண்டும். அச்சத்தா வடிவ ஒரு அநுகத தர்மத்தைக்கொண்டு கூறிய அநுகதப் பிரதீதி யுண்டாகின்றது. ஆகையால் திரவிய, குண, கர்மங்களில் சத்தாவடிவ அநுகத பிரதீதியே சத்தா ஜாதியின் சாதகமாம். இவ்வாறாக பரஸ்பர விலக்ஷண பிருதிவி, ஜல முதலிய திரவியங்களில் "இதுதிரவியம் இதுதிரவியம்" என்பதான அநுகதப்பிரதீதி திரவியத்தன்மைஜாதியின் சாதகமாம். அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண உருவ, ரச முதலிய குணங்களில் "இதுகுணம் இதுகுணம்" என்பதான அநுகதப் பிரதீதி குணத்தன்மை ஜாதியின் சாதகமாம். அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண எழும்பல், வீழ்தல் முதலிய கர்மங்களில் "இதுகர்மம் இது கர்மம்" என்பதான அநுகதப் பிரதீதி கர்மத்தன்மை ஜாதியின் சாதகமாம். அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண கட, பட முதலிய பிருதிவியில் "இதுபிருதிவி இதுபிருதிவி" என்பதான அநுகதப் பிரதீதி பிருதிவித்தன்மை ஜாதியின் சாதகமாம். அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண வெண்மை, கருமை முதலிய உருவங்களில் "இது உருவம் இது உருவம்" என்பதான அநுகதப் பிரதீதி உருவத்தன்மை ஜாதியின் சாதகமாம். அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண அனேக கடங்களில் "இது கடம் இது கடம்" என்பதான அநுகதப் பிரதீதி அக்

கடத்தன்மை ஜாதியின் சாதகமாம். இவ்வாறாக ரசத்தன்மை, கந்தத்தன்மை, படத்தன்மை, கோத்தன்மை முதலிய ஜாதிகளையும் முறையாக அவ்வநுகதப் பிரதீதியினால் அறிந்துக் கொள்க.

## கூரு௪. பூதத்வம், மூர்த்தத்வம் முதலியவைகளில் ஜாதி வடிவத் தன்மையின் சங்கை.

சங்கை:—அவ்வநுகத தோற்றத்தினை ஜாதியின் சாதகமாக வொப்பின் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாச மென்னு மிவ்வைந்தில் "இதுபூதம் இது பூதம்" என்பதான அநுகதப் பிரதீதி உலகர் யாவருக்கு முண்டாகின்றது. ஆகையால் அவ்வைந்தில் அவ்வநுகதப் பிரதீதியினால் பூதத்தன்மை ஜாதியின் சித்தியு முண்டாகவேண்டும். அங்ஙனமே பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்தில் "இது மூர்த்தம் இது மூர்த்தம்" என்பதான அநுகதப் பிரதிதி உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. ஆகையால் அவ்வைந்தில் அவ்வநுகதப் பிரதீதியினால் மூர்த்தத்தன்மை ஜாதியின் சித்தியும் உண்டாக வேண்டும்.

## கூரு௫. பூதத்வ முதலியவைகளில் ஜாதித்தன்மையை பாதிக்கும் ஆறு தோஷங்களின் வர்ணனம்.

சமாதானம்:—அவ்வநுகத தோற்றத்தால் பூதத்வ, மூர்த்தத்வத்தின் சித்தி யுளதாயினும் பூதத்வ, மூர்த்தத்வ தர்மத்தில் ஜாதி வடிவத்தன்மை யுண்டாகிறதில்லை. ஏனெனின், அவ்வநுகதப் பிரதீதியினால் சித்தமாய தர்மத்தின் ஜாதித்தன்மையினை யாதோர்தோஷமும் பாதிக்காததாயின் அத்தர்மமே அவ்வநுகதப் பிரதீதியால் ஜாதி வடிவமாக சித்தமாகின்றது. அஜ்ஜாதியை பாதிக்கும் தோஷமிருக்கின் அத்தர்மம் ஜாதி வடிவமாக சித்திக்கிறதில்லை. ஜாதியை பாதிக்கும் தோஷம் உதயணாசாரியரானவர் திரவியகிரணாவலி எனப்பெயரிய நூலிற் கூறியுள்ளார். ஆண்டு சுலோகம் "வ்யக்தேரபேதஸ்துல்யத்வம் ஸங்கரோऽதாநவஸ்திதி:। ரூபஹாநிரஸம்பந்தோ ஜாதிபாதகஸங்க்ரஹ:" (இ-ள்.) வியக்தியின் அபேதம், சமானத்தன்மை, சங்கரம், அநவஸ்தை, ரூபஹானி, அசம்பந்தம் என்பதான ஆறு தோஷங்கள் ஜாதியை பாதிப்பதாகின்றன. இனி முறையாக அவற்றின் லக்ஷணமும், உதாஹரணமும் வர்ணிப்பாம்.

## கூரு௬. வியக்தி அபேத வடிவ தோஷத்தின் வர்ணனம்.

ஆண்டு ஆகாசம், காலம், திக்கு என்பதான மூன்று திரவியங்களில் முறையாக இருப்பதாகிய ஆகாசத்தன்மை, காலத்தன்மை, திசைத்தன்மை யாம் மூன்று தர்மங்களின் ஜாதித்தன்மையினை வியக்தி அபேத தோஷம் பாதிப்பதாகின்றது. ஆண்டு "ஸாமாந்யநிஷ்ட ஸாமாந்யவ்யாப்தியோகிஸஹோ ஹாவ: வ்யக்த்யபேத:" (இ-ள்.) இந்த லக்ஷணத்தில் இரு சுவ சத்தங்களால் ஆகாசத்தன்மை முதலிய தர்மத்தினை கிரஹிக்குக. ஆண்டு ஆகாசம் காலம், திக்கு என்பதான மூன்று திரவியங்கள் நாசமாகிறதில்லை. தனித்தனி வியக்தி வடிவமாகின்றன. இவ்வார்த்தை முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் ஆகாச முதலியவைகளின் நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். ஆகையால்

ஆகாசத்திலோ ஆகாசத்தின் பேதம் இருப்பதன்று. காலத்தில் காலத்தின் பேதமிருப்பதன்று. திசையில் திசையின் பேதமிருப்பதன்று. ஆகாசம், காலம், திக்கு நாநாவாகுமாயின் ஒரு ஆகாசத்தில் வேறு ஆகாசத்தின் பேதம் இருக்கும். அங்ஙனமே ஒரு காலத்தில் வேறு காலத்தின் பேதமும், ஒரு திசையில் வேறு திசையின் பேதமு மிருக்கும். ஆனல் அவ்வாகாசம், காலம், திக்கு நாநாவன்ரும். ஆகையால் ஆகாசத்தன்மை, காலத்தன்மை, திசைத்தன்மை தர்மங்களில் சுவ ஆசிரயத்திலுள்ள சுவாசிரியப் பிரதியோகி பேதத்தின் அபாவமே யிருக்கின்றது. இதனை வியக்தி அபேதமென்பர். அவ்வியக்தி அபேத தோஷமே ஆகாசத்தன்மை, காலத்தன்மை, திசைத்தன்மை தர்மங்களின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம். கருத்திதுவாம்; நாநா தர்மங்களில் ஒரு தர்ம விசேஷண அநுகத புத்தி யாதோ அதுவே ஜாதியின்சாதகமாகின்றது. அவ்வநுகதப்பிரதீதி ஆகாச முதலிய ஒரு வியக்தியில் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் ஆகாயத்தன்மையிலும், காலத் தன்மையிலும், திசைத் தன்மையிலும் ஜாதி வடிவத்தன்மை சித்தமாகிறதில்லை.

கஅ௯எ. சமானத்தன்மை வடிவ தோஷத்தின் வர்ணனம்.

பரஸ்பர விலக்ஷண அனேக தர்மங்களில் "இது கடம் இது கடம்" என்பதான அநுகதப்பிரதீதியுண்டாகின்றது. அங்ஙனமே அவ்வனேக கடங்களில் "இது கலசம் இது கலசம்" என்பதான அநுகதப் பிரதீதியுண்டாகின்றது. ஆகையால் அவ்விருவகையாய அநுகதப் பிரதீதியால் அக்கடங்களில் கடத்தன்மை, கலசத்தன்மையா மிரு தர்மங்கள் சித்தமாகின்றன. ஆனல் அவ்விரு தர்மங்கள் ஜாதி வடிவமன்ரும். ஆனல் கடத்தன்மை தர்மமொன்றே ஜாதி வடிவமாம். கலசத்தன்மை தர்மத்தின் ஜாதித் தன்மையினை பாதிப்பது சமானத்தன்மை தோஷமாம். ஆகையால் அவ்வநுகதப் பிரதீதியால் அக்கலசத்தன்மை தர்மம் ஜாதி வடிவமாக சித்திப்பதன்று. ஆண்டு "வ்யக்தேரபேதஸ்துல்யத்வம்" என்று சுவசத்தத்தால் கலசத்தன்மையினைக் கொள்க. கலசத்வத்திலும் வேறன் கடத்தன்மை ஜாதி யாதோ அக்கடத்தன்மை ஜாதியின் சமநியதத்தன்மை கலசத்தன்மை தர்மத்தி லிருக்கின்றது. ஆண்டு எவ்வளவு கட வியக்திகளில் கடத்தன்மை ஜாதியிருக்கின்றதோ அவ்வளவு கட வியக்திகளில் கலசத்தன்மை தர்ம மிருக்கின்றது. இதுவே கலசத்தன்மை தர்மத்தில் கடத்தன்மை ஜாதியின் சம நியதத்தன்மையாம். இதனை சமானத்தன்மை யென்பர். அச்சமானத்தன்மை தோஷமே கலசத்தன்மை தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம்.

கஅ௯அ. சங்கர தோஷத்தின் வர்ணனம்.

பூதத்வம், மூர்த்தத்வம் முதலியவைகளின் ஜாதித்தன்மையினை பாதிப்பது சங்கர தோஷமாகின்றது. ஆண்டு "பரஸ்பராத்யந்தாபாவ ஸமாநாதிகரணயோர் தர்மயோரேகத்ர ஸமாவேசஃ ஸங்கரஃ" (இ-ள்.) பரஸ்பர அத்தியந்தா பாவத்திேைடு சமானுதிகரணமுடைய விரு தர்மம் யாதோ அவ்விருதர்மங்கட்கு ஒருஅதிகரணத்திலிருத்தற்றன்மையாதோ அதனை சங்கரமென்பர். எங்ஙனம்: பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்து

திரவியங்களில் பூதத்வ தர்மமிருக்கின்றது. பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து திரவியங்களில் மூர்த்தத்வ தர்மமிருக்கின்றது. ஆண்டு மனதில் பூதத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. மனதில் மூர்த்தத்வ தர்மமிருக்கின்றது. ஆகையால் மூர்த்தத்வ தர்மம் பூதத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவத்தினோடு சமான அதிகரணமுடையதாம். ஆகாசத்தில் மூர்த்தத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. ஆகாசத்தில் பூதத்வதர்மமிருக்கின்றது. ஆகையால் பூதத்வ தர்மமும் மூர்த்தத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவத்தினோடு சமான அதிகரணமுடையதாம். இவ்வாறாக பரஸ்பர அத்தியந்தாபாவத்தினோடு சமான அதிகரணமுடைய எப்பூதத்வ, மூர்த்தத்வமா மிரு தர்மங்க ளிருக்கின்றனவோ அவ்விருதர்மங்கள் பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு திரவியங்களிலேயே இருக்கின்றன. இதனை சங்கர தோஷமென்பர். அச்சங்கர தோஷமே பூதத்வ, மூர்த்தத்வ தர்மத்தின் ஜாதித் தன்மையினை பாதிப்பதாம். அதாவது; பூதத்வ, மூர்த்தத்வமா மிரு தர்மங்கள் ஜாதி வடிவமன்றாம். இவ்வாறாக சரீரத்வ, இந்திரியத்வ முதலிய தர்மங்களின் ஜாதித் தன்மையினையும் சங்கர தோஷமே பாதிப்பதாகின்றது. ஆண்டு சரீரத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவமுடைய கடாதிகளில் பிருதிவித்வ தர்மமிருக்கின்றது. பிருதிவித்வ தர்மத்தின் அத்தியந்தாபாவமுடைய ஜலீய சரீரத்தில் அச்சரீரத்வ தர்ம மிருக்கின்றது. இவ்வாறாக பரஸ்பர அத்தியந்தாபாவத்தினோடு சமான அதிகரண மூடைய எச்சரீரத்வ, பிருதிவித்வமா மிரு தர்மங்க ளிருக்கின்றனவோ அவ்விரு தர்மங்கள் மனிதர் முதலிய பார்த்திவ சரீரத்தி லிருக்கின்றன. ஆகையால் அச்சரீரத்வ தர்மத்தின் ஜாதித் தன்மையினை சங்கர தோஷமே பாதிப்பதாகின்றது. இவ்வாறாக இந்திரியத்வ தர்மத்தின் அத்தியந்தாபாவமுடைய கட முதலியவைகளில் பிருதிவித்வ தர்ம மிருக்கின்றது. அந்த பிருதிவித்வ தர்மத்தின் அத்தியந்தாபாவமுடைய ஜலீய ரசன இந்திரியத்தில் இந்திரியத்வ தர்ம மிருக்கின்றது. இவ்வாற்றால் அவ்விந்திரியத்வ, பிருதிவித்வ தர்மமா மிருதர்மங்கள் பரஸ்பரம் அத்தியந்தா பாவத்தினோடு சமான அதிகரணமுடையதாம். கிராண இந்திரியத்தில் இந்திரியத்வம், பிருதிவித்வமா மிரு தர்மங்க ளிருக்கின்றன. ஆகையால் அவ்விந்திரியத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினையும் சங்கர தோஷமே பாதிப்பதாகின்றது. இவ்வாறாக ஜலத்வ, தேயுத்வ, வாயுத்வமா மூன்று ஜாதிகளோடும் அச்சரீரத்வ தர்மத்தின் சங்கர தோஷத்தை அறிந்துக் கொள்க.

சங்கை:—அச்சங்கர தோஷம் எங்ஙனம் சரீரத்வ, இந்திரியத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகின்றதோ அங்ஙனமே பிருதிவித்வ, ஜலத்வ முதலியவைகளின் ஜாதித்தன்மையினை ஏன் பாதிப்பதாகக் கூடாது?.

சமாதானம்:—எத்தர்மங்கட்கு எச்சங்கர மூண்டாகின்றதோ அச்சங்கரம் நியம வாயிலாக அவ்விரு தர்மங்களின் ஜாதித்தன்மையினை பாதிப்பதேயாகிறதில்லை. ஆனால் சிலவிடத்தோ சங்கர தோஷம் இரு தர்மங்களின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகின்றது. சிலவிடத்து ஒரு தர்ம மாத்திரத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகின்றது. ஆண்டு பிருதிவித்வ,

ஜலத்வ, தேஜுத்வ, வாயுத்வமாம் நான்கு ஜாதிகளின் சித்தியை முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் அவ்வப்பிருதிவி முதலிய திரவியங்களின் நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம். ஆகையால் அச்சங்கர தோஷம் பிருதிவி முதலியவைகளின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகிறதில்லை. ஆனால் சரீரத்வ, இந்திரியத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகின்றது. இக்காரணத்தானேயே சில நூலாசிரியர் பூதத்வ, மூர்த்தத்வ சங்கரவிடத்தும் கேவலம் பூதத்வதர்மத்தின் ஜாதித்தன்மையினை சங்கரதோஷம் பாதிப்பதாக வொப்புகின்றனர். மூர்த்தத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாக வொப்பினாரில்லை. ஆனால் மூர்த்தத்வ தர்மமோ மூர்த்தத்திரவியத்திலிருக்கும் கிரியையின் சமவாயி காரணத்தன்மையின் அவச்சேதக வடிவமாக ஜாதி வடிவமாகவே சித்தமாகின்றது. நவீன நையாயிகரோ அச்சங்கர தோஷம் எஜ்ஜாதியினையும் பாதிப்பதாக ஒப்பினாரில்லை.

## கூ௩கூ. அனவஸ்தா தோஷத்தின் வர்ணனம்.

முற்கூறிய சத்தா, திரவியத்வம், குணத்வம், கர்மத்வம், பிருதிவித்வம், ஜலத்வம், ரூபத்வம், ரசத்வம், கடத்வம், படத்வமாமிவை முதலிய ஜாதி வடிவ சாமான்னியங்கள் யாவையோ அவ்வெல்லா சாமான்னியங்களிலிருக்கின்ற ஒரு சாமான்னியத்வ தர்மம் யாதோ, எச்சாமான்னியத்வ தர்மத்தினை ஜாதித்வ தர்மமென்பரோ அச்சாமான்னியத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை அநவஸ்தா தோஷமே பாதிப்பதாகின்றது. என்னெனின், அச்சாமான்னியத்வ தர்மத்தினை ஜாதி வடிவமாக ஒப்பின் எங்ஙனம் சத்தா, திரவியத்வ முதலியவைகளில் சாமான்னியத்வ வடிவ ஜாதி அங்கீகரிக்கின்றனரோ அங்ஙனமே அச்சாமான்னியத்வ வடிவ ஜாதியினும் ஒரு ஜாதியை அவசியம் அங்கீகரிப்பதாகும். அங்கீகரிக்கின் சாமான்னியத்வ வடிவ ஜாதியினையும், அவற்றின் ஆசிரயமாகிய சத்தா, திரவியத்வ முதலிய ஜாதிகளையுஞ் சேர்த்து அவ்வெல்லாவற்றிலும் வேறோர் ஜாதி அங்கீகரிப்பதாகும். இவ்வாறாக அவ்வேறு ஜாதிகளையும், அவற்றின் ஆசிரயமாகிய சர்வ ஜாதிகளையுஞ் சேர்த்து அவ்வெல்லா ஜாதிகளினும் மூன்றாவது வேறோர் ஜாதியை அங்கீகரிப்பதாகும். இவ்வாறாக நான்காவது, ஐந்தாவது முதலிய ஜாதிகளை அங்கீகரிப்பதால் அநவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகும். அவ்வநவஸ்தா தோஷமே சாமான்னியத்வத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம். அச்சாமான்னியத்வ வடிவ ஒரு வியக்தியில் இருப்பதாகிய தர்மத்திற்கு ஆகாசத்வ முதலியவைகளைப் போன்று ஜாதி வடிவத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆகையால் சத்தா, திரவியத்வ முதலிய சர்வ ஜாதிகளில் இருப்பதாகிய சாமான்னியத்வ தர்மம் ஜாதி வடிவமன்றாம்.

## கூ௪௦. ரூப ஆனி தோஷத்தின் வர்ணனம்.

பரமாணு, ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களில் சமவாயசம்பந்தத்தால் இருப்பனவாகிய விசேஷங்கள் யாவையோ அவ்வெல்லா விசேஷங்களில் இருப்பதாகிய விசேஷத்தன்மை தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பது ரூப ஆனி தோஷமாகின்றது. ஈண்டு ரூபமென்னும் பதத்தால் அசாதாரண தர்ம ரூப லக்ஷணத்தைக் கொள்ளுக. அந்த லக்ஷணத்திற் குண்டாம்

ஆனியினை ரூப ஆனியென்பர். அந்த ரூப ஆனியே விசேஷத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம். ஆண்டு "நிர் ஸாமாந்யத்வே ஸதி ஏக த்ரவ்ய வ்ருத்தித்வம் விசேஷ:" (இ-ள்.) எப்பதார்த்தம் ஜாதி வடிவ சாமான்னியமிலாததாகியும் திரவிய வியக்தி ஒன்றில் மாத்திரத்தில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதுமாகின்றதோ அப்பதார்த்தம் விசேஷமெனப்படுகின்றது. இவ்வாறாய விசேஷ பதார்த்தத்தின் லக்ஷணத்தைப் பின்னர்க் கூறுவாம். விசேஷத்தின் லக்ஷணம் சம்பவிக்கும்போது விசேஷத்திற்கு ஜாதி வடிவ சாமான்னியமின்மையை யொப்பி விசேஷத்தில் யாதாமோர் ஜாதி அங்கீகரிக்கின் அந்த லக்ஷணத்திற்கே ஆனியுண்டாகும். அல்லது "ஸ்வாச்ரயவ்யாவர்த்தக: விசேஷ:" (இ-ள்.) எப்பதார்த்தம் தனது ஆச்ரயமாகிய நித்தியத் திரவியத்தினை வேறு நித்தியத் திரவியத்தினின்றும் தனது சுவரூபத்தானேயே வேறு படுத்துகின்றதோ அப்பதார்த்தம் விசேஷ மெனப்படுகின்றது. இவ்வாறாய விசேஷத்தின் லக்ஷணத்தைப் பின்னர் கூறுவாம். விசேஷத்தில் யாதாமோர்ஜாதியை அங்கீகரிக்கின் அந்தலக்ஷணத்திற்கே ஆனியுண்டாகும். ஏனெனின், எப்பதார்த்தம் ஜாதியின் ஆசிரயமாகின்றதோ அப்பதார்த்தம் அஜ்ஜாதி விசிஷ்ட வடிவத்தானேயே ஸ்வாசிரயத்திலுள்ள வேறு பதார்த்தத்தின் பேதத்திற்குச் சாதகமாகின்றது. அஜ்ஜாதியின்றி கேவலம் ஸ்வரூபத்தால் அப்பேதத்தின் சாதகமாகிறதில்லை. எங்ஙனம்: கந்தத்வ முதலிய ஜாதியுடைய கந்த முதலியன கந்தத்வ முதலிய ஜாதி விசிஷ்ட வடிவத்தானேயே ஸ்வாசிரயமாகிய பிருதிவி முதலியவைகளில் ஜல முதலிய வேறு பதார்த்தங்களின் பேதத்திற்குச் சாதகமாகின்றது. அங்ஙனமே அவ்விசேஷமும் ஜாதியுடைமை வடிவுமாகி வேறு பேதத்தின் சாதகமாகுமாயின் ஸ்வரூபமாக வேறு பேதத்தின் சாதகமாகாததாகும். அதனால் தானகவே வேறுபடுத்துந்தன்மை வடிவ லக்ஷணத்திற்குக் கேடுண்டாம். இவ்வாறாக தானக்வே வேறுபடுத்துந் தன்மை வடிவ லக்ஷணத்திற் குண்டாம் ஆனி யாதோ அந்த ரூப ஆனியே விசேஷத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாகின்றது. அல்லது ரூபமென்னும் பதத்தால் விசேஷத்தின் ஸ்வரூபத்தினையே கொள்ளுக. விசேஷத்தின் ஸ்வரூபத்திற்கு ஆனியின்றும். விசேஷத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாமென்பதனைக் காட்டுவாம். விசேஷம் ஓர்கால் பரமாணு, மன வடிவ மூர்த்தத் திரவியங்களி லிருப்பதும், ஜாதியுடையதுமாயின் அவ்விசேஷம் குண வடிவமாகும். அல்லது கர்மவடிவமாகும். எக்காரணத்தாலெனின் மூர்த்தத் திரவியத்தி லிருப்பனவும், ஜாதியுடையனவும் குண, கர்மங்களேயாகின்றன. அவ்விசேஷம் ஓர் கால் ஆகாச முதலிய விபுத்திரவியங்களி லிருப்பதும், ஜாதியுடையதுமாயின் விசேஷம் கேவலம் குணவடிவமேயாகும். எக்காரணத்தாலெனின் விபுத்திரவியங்களி லிருப்பனவும், ஜாதியுடையனவும் குணங்களே யாகின்றன. இவ்வாற்றால் விசேஷத்தில் யாதாமோர் ஜாதியினை அங்கீகரிக்கின் விசேஷத்தின் ஸ்வரூபத்திற்கேக் கேடுண்டாம். ஆகையால் கூறிய ரூப ஆனி தோஷமே விசேஷத்வ தர்மத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம்.

## ௬௪௪. அசம்பந்த தோஷத்தின் வர்ணனம்.

சமவாயத்திலிருக்கும் சமவாயத்வ தர்மமும், அபாவத்திலிருக்கும் அபாவத்வ தர்மமும் யாவையோ அவற்றின் ஜாதித்தன்மையினை பாதிப்பது அசம்பந்த தோஷமேயாம். "ப்ரதியோகிதாநுயோகிதாப்யாம் ஸம்பந்தே ஸமவாயாபாவ: அஸம்பந்த:" (இ-ள்.) பிரதியோகித்தன்மை சம்பந்தத்தாலும், அநுயோகித்தன்மை சம்பந்தத்தாலும் சமவாயத்தின் அபாவத்தினை அசம்பந்தமென்பர். ஆண்டு பிருதிவி முதலிய திரவியங்களில் குணமும், கர்மமும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. அக்குண, கர்மத்தின் சமவாயத்திற்கு குணமும், கர்மமும் பிரதியோகிகளாகின்றன. பிருதிவி முதலிய திரவியங்கள் அநுயோகியாகின்றன. ஆகையால் குண, கர்மங்களின் சமவாயம் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தானே குண, கர்மங்களிலிருக்கின்றன. அநுயோகித்தன்மை சம்பந்தத்தால் பிருதிவி முதலிய திரவியங்களிலிருக்கின்றன. இவ்வாறாக திரவியம், குணம், கர்மமா மூன்று பதார்த்தங்களில் ஜாதி வடிவ சாமான்னியம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. அச்சாமான்னியத்தின்சமவாயத்திற்கு அச்சாமான்னியமோ பிரதியோகியாகின்றது. திரவிய, குண, கர்மங்கள் அநுயோகிகளாகின்றன. ஆகையால் சாமான்னியத்தின் சமவாயமும், பிரதியோகித்தன்மை சம்பந்தத்தானே சாமான்னியத்திலிருக்கின்றது. அநுயோகித்தன்மை சம்பந்தத்தால் திரவிய, குண, கர்மங்களி லிருக்கின்றது. இவ்வாறாக பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் விசேஷங்களின் சமவாயமும் பிரதியோகித் தன்மை சம்பந்தத்தானே விசேஷங்களி லிருக்கின்றது. அநுயோகித்தன்மை சம்பந்தத்தால் நித்திய திரவியங்களி லிருக்கின்றது. இவ்வாறாக தந்து முதலிய அவயவங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் பட முதலிய அவயவிகளின் சமவாயமும் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தானே பட முதலிய அவயவிகளி லிருக்கின்றது. அநுயோகித் தன்மை சம்பந்தத்தால் தந்து முதலிய அவயவங்களி லிருக்கின்றது. இம்முறைப்படி திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷமா மைந்து பதார்த்தங்களில் சமவாயம் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தால் அல்லது அநுயோகித் தன்மை சம்பந்தத்தால் அவசிய மிருக்கின்றது. அதனிடத்து மிவ்வளவு விசேஷத்தன்மை யிருக்கின்றது. சாமான்னியம், விசேஷமா மிரு பதார்த்தங்களில் யாதாமோர் பதார்த்தமும் சமவாயசம்பந்தத்தா லிருப்பதின்று. ஆகையால் சாமான்னியத்தினிடத்தும், விசேஷத்தினிடத்துமோ சமவாயம் கேவலம் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தானேயே யிருக்கின்றது. அநுயோகித் தன்மை சம்பந்தத்தா லிருப்பதன்று. பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியமாம் பதார்த்தங்கள் யாவற்றிலும் சமவாயசம்பந்தத்தாலிருப்பதன்று. ஆகையால் நித்திய திரவியங்களிலோ சமவாயம் கேவலம் அநுயோகித் தன்மை சம்பந்தத்தானேயே யிருக்கின்றது. பிரதியோகித்தன்மை சம்பந்தத்தா லிருப்பதன்று. சாமான்னியம், விசேஷம், நித்திய திரவியங்களாம் இம்மூன்றினும் வேறான திரவிய, குண, கர்மங்களில் சமவாயம் பிரதியோகித்

தன்மை சம்பந்தத்தாலும், அநுயோகித்தன்மை சம்பந்தத்தாலு மிருக் கின்றது. சமவாயம், அபாவமாமிரு பதார்த்தங்களும் யாதாமோர் பதார்த்தத் திலும் சமவாய சம்பந்தத்தா லிருப்பனவன்று. அங்ஙனமே சமவாயத்திலும், அபாவத்திலும் வேறு யாதாமோர் பதார்த்தமும் சமவாயசம்பந்தத்தாலிருப் பனவன்று. ஆகையால் சமவாயம், அபாவமா மிரண்டும் சமவாயத்தின் பிரதி யோகியுமன்றும். அங்ஙனமே அநுயோகியுமன்றும். ஆகையால் சமவாயத் திலும், அபாவத்திலும் சமவாயம் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தாலும், அநுயோகித்தன்மை சம்பந்தத்தாலு மிருப்பதன்று. இவ்வாறாக சமவாயத் திலும், அபாவத்திலும் பிரதியோகித்தன்மை சம்பந்தத்தாலும், அநுயோகித் தன்மைச் சம்பந்தத்தாலும் சமவாயத்தின் அபாவம் யாதோ அதனை அசம்பந்த மென்பர். அவ்வசம்பந்த தோஷமே சமவாயத்வத்தினதும், அபாவத்வதினதும் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம். சமவாயத்தினை ஒன்றென்னும் மதத்தில் முற்கூறிய வியக்தியின் அபேதமே ஆகாசத்வ முதலியவைகளைப் போன்று சமவாயத்தன்மையின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம். என்றாலும் சமவாயத்தினை நாநாவாக ஒப்பும் மதத்தில் அசம்பந்த தோஷமே சமவாயத்வத்தின் ஜாதித்தன்மையினை பாதிப்பதாம்.

சங்கை :—ஆகாசத்வம், காலத்வம், திசைத்வம், பூதத்வம், சரீரத்வம், இந்திரியத்வம், சாமான்னியத்வம், விசேஷத்வம், சமவாயத்வம், அபாவத்வ மாமிவை முதலிய தர்மங்கள் ஜாதி வடிவமன்றாயின் ஆகாச முதலியவை களினது தர்மங்களின் வடிவமாவது யாது?

சமாதானம் :—ஆகாசத்வ முதலிய தர்மங்கள் உபாதி வடிவமேயாம். தர்ம மாத்திரத்தினை உபாதி யென்ப ராகையால் திரவத்வ முதலிய ஜாதி களும் உபாதி வடிவமேயாம். இக்காரணத்தானேயே முன்னர் அநேக விடங்களில் திரவியத்வ, குணத்வ, கர்மத்வமா மூன்று ஜாதிகளும் பதார்த்தங் களைப்பிரிக்கும் உபாதி வடிவமாகக் கூறப்பட்டன. அங்ஙனமே பிருதிவித்வ, ஜலத்வ முதலிய ஜாதிகளும் திரவியத்தைப்பிரிக்கும் உபாதிவடிவமாகக் கூறப் பட்டன. அங்ஙனமே உருவத்வ, ரசத்வ முதலிய ஜாதிகளும் குணத்தைப் பிரிக்கும்உபாதி வடிவமாகக் கூறப்பட்டன. என்றாலும் ஈண்டு உபாதி பதத் தால் ஜாதியினும் வேறான தர்மத்தினைக் கொள்க. அவ்வுபாதியும் சகண்ட உபாதி, அகண்ட உபாதி என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு "ஸஹஸ்ரஹஸ்ரவாக வைஷிக ஸஹஸ்ஷோகாமி" (இ-ள்.) எத்தர்மம் அநேக பதார்த்தங்களோடு பொருந்தியதாகின்றதோ அத்தர்மம் சகண்ட உபாதியெனப்படுகின்றது. எங்ஙனம்: ஆகாசத்தில் சத்தகுணத்திற்கு சமவாயி காரணத்வமாவதுயாதோ அதுவே ஆகாசத்வமாம். அவ்வாகாசத்வம் சத்தம், சமவாயி காரணத்வமாகிய அநேக பதார்த்தங்களோடு பொருந்தியதாம். ஆகையால் அவ்வாகாசத்வம் சகண்ட உபாதியெனப்படுகின்றது. அங்ஙனமே அந்தியாவயவித்வ விசிஷ்ட சேஷ்டையின் ஆசிரயத்தினை சரீரத்வ மென்பர். அச்சரீரத்வமும் அந்தியாஅவயவி, சேஷ்டை இவைமுதலிய அநேகபதார்த்தங் களோடுபொருந்தியதாவதால் சகண்ட உபாதியெனப்படுகின்றது. இவ்வாறாக முன்னர் கூறப்பட்ட சிஷ்டத்வம், இந்திரியத்வம், விஷயத்வம், காலத்வம்,

திசைத்வம், சாமான்னியத்வமா மிவை முதலிய தமர்ங்கள் யாவையும் சகண்ட உபாதி வடிவமாகவே அறிந்துக் கொள்க. அங்ஙனமே இனி கூறப்படும் விசேஷத்வம், சமவாயத்வம், அபாவத்வம், பாவத்வம், காரணத்வமா மிவை முதலிய தார்மங்கள் யாவையும் சகண்ட உபாதி வடிவமாகவே அறிந்துக் கொள்க. அச்சகண்ட உபாதி வடிவ தர்மம் எவ்வெத்திரவியம் குணாதி வடிவ பதார்த்தங்களோடு பொருந்தியதாகின்றதோ அவ்வப்பதார்த்தங்களிலேயே அச்சகண்ட உபாதியின் அடக்க முண்டாகின்றது. அத்திரவியம், குண முதலிய பதார்த்தங்களினும் அச்சகண்ட உபாதி வேறன்றும்.

## ௬௪௨. அகண்ட உபாதியின் லக்ஷணம்.

ஆண்டு "ஊநிவ-ிவநீயொயஉ-ிஃ ஊவஙெ்ணாவாயிஃ" (இ-ள்.) எத்தர்மத்தின் சித்தி எவ்வகையானும் உண்டாகின்றதோ அத்தர்மம் அகண்ட உபாதி எனப்படுகின்றது. எங்ஙனம்: பிரதியோகித்வ, அநுயோகித்வ முதலிய தர்மங்கள் போலும். அவ்வகண்ட உபாதி வடிவ தர்மம் வேறே யாகின்றது. அதாவது; திரவிய முதலிய பதார்த்தங்களில் அடங்குவதன்று.

## ௬௪௩. ஜாதி வடிவ சாமான்னியத்தில் இந்திரியங்களின் கிராஹியத்தன்மை.

முற்கூறிய ஜாதி வடிவ சாமான்னிய பதார்த்தம் கிராணம், ரசனம், சக்ஷு, துவக்கு, சுரோத்திரம், மனம் என்னும் ஆறு இந்திரியங்களால் கிரஹிக்கப்படுகின்றது. அதாவது; எவ்வெவ்விந்திரியத்தால் எவ்வெத்திரவியத்தினதும், எவ்வெக்குணத்தினதும், எவ்வெக்கர்மத்தினதும் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ அவ்வவ்விந்திரியத்தால் அவ்வத்திரவியத்திலுள்ள ஜாதியினதும், அவ்வக்குணத்திலுள்ள ஜாதியினதும், அவ்வக்கர்மத்திலுள்ள ஜாதியினதும் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. இவ்வெல்லா விவஸ்தைகளையும் பின்னர் ஆறாவது பரிச்சேதத்தில் பிரத்தியக்ஷ நிரூபணத்தில் விரிவாய் நிரூபிப்பாம்.

## ௬௪௪. சத்தா ஜாதியினை ஒப்பாதவராகிய நவீன நையாயிகர் மத வர்ணனம்.

நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். "இருக்கிறது இருக்கிறது" என்பதான அநுகதப் பிரதீதியின் விஷயம் சத்தெனப்பெயரிய ஜாதியன்றும். ஆனால் திரவிய முதலிய ஆறு பதார்த்தங்களி லிருக்கும் பாவத்வ தர்மம் யாதோ அப்பாவத்வ தர்மமே அந்தப்பிரதீதியின் விஷயமாம். இக்காரணத்தானேயே சாமான்னிய முதலியவைகளில் சத்தா ஜாதியின் அபாவமுளதாயினும் "சாமான்னியமிருக்கிறது" என்பதான சத் வியவஹார முண்டாகின்றது.

சங்கை:—பாவத்வ தர்மத்தினை சத் பிரதீதியின் விஷயமாக ஒப்பின் அபாவத்தில் பாவத்வ தர்மத்தின் அபாவ மிருப்பதால் சத் பிரதீதியுண்டாகாததாக வேண்டும். அபாவத்திலும் "பூதலத்தில் கடா பாவமிருக்கிறது" என்பதான சத் வியவஹாரம் உண்டாகின்றது.

சமாதானம்:—அபாவத்திலும் சத் வியவஹாரம் உண்டாகுமாயினும் காலத்தின் சம்பந்தமாகிய சத்வமே சத் பிரதீதியின் விஷயமாம். காலத்தின் சம்பந்த வடிவ சத்வம் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களிலேயே யிருக்கின்றது. ஆகையாலும் சத்தா ஜாதியின் சித்தி உண்டாவதின்று ஆகையால் பர, அபர வேறுபாட்டால் இருவிதமாகவே சாமான்னியம் சித்திக்கின்றது. ஆண்டு சத்தா பரசாமான்னியமும், திரவியத்வமுதலியன அபரசாமான்னியமுமாகின்ற தென்பதான வைசேஷிக சாஸ்திரத்தின் பிரிவு சம்பவிக்கின்றது.

கூசுடு. கடத்வ முதலிய ஜாதிகளை அதத்வியாவிர்த்தி வடிவமாக வொப்பும் பௌத்தர்களின் மதம்.

பௌத்தமதமுடையார் இது கூறுகின்றனர். "இது கடம் இது கடம்" என்பதான அநுகதப் பிரதீதி கடத்வ ஜாதி வடிவ சாமான்னியத்தினை விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் அவ்வநுகதப் பிரதீதி அதத்வியாவிர்த்தியினையே விஷயஞ் செய்கின்றது. ஆண்டு கடத்தினும் வேறான பட முதலிய பதார்த்தங்கள் எவ்வள விருக்கின்றனவோ அவை யாவற்றையும் அதத் என்பர். அவ்வதத்திற்கு கடத்திலுள்ள பேதத்தினை அதத்வியாவிர்த்தி யென்பர். அதாவது; கடத்தினும் வேறான சர்வபதார்த்தங்கட்கு அக்கடத்திலுள்ள பேதம் யாதோ அதனை அதத்வியாவிர்த்தியென்பர். அந்தபேத வடிவ அபாவம் துச்சமாவதால் தனது ஆசிரயத்தினும் வேறன்றாம். ஆகையால் அவ்வபாவ வடிவ அகட வியாவிர்த்தி கட வியக்தி வடிவமன்று. இவ்வாறாக பிருதிவித்வம், ஜலத்வம், கோத்வம், படத்வம் முதலியனவும் அதத்வியாவிர்த்தி வடிவமாவதால் அவ்வப்பிருதிவி முதலிய வியக்திகளினும் வேறன்றாம். அல்லது கட முதலிய வியக்திகளினும் வேறான பாவ வடிவ கடத்வ முதலிய ஜாதிகளை அங்கீகரிக்கும் நையாயிகர்களோடு இது வினவுதல் வேண்டும். கடத்வஜாதி கடத்தில் இருக்கிறதா? அல்லது அகடத்திலிருக்கின்றதா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், அக்கடத்வ ஜாதி யிருப்பதற்குமுன் கடத்தின் அபாவமே யிருக்கின்றது. இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், கடத்தினும் வேறான பட முதலியவைகளை அகடமென்பர். அப்பட முதலியவைகளிலும் அக்கடத்வ ஜாதி இருக்குமாயின் அப்பட முதலியவைகளிலும் அக்கட வியவஹாரம் உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. அல்லது உண்டாகும் கடத்தில் கடத்வஜாதி யாதாமோரிடத்திலிருந்து வந்திருக்கின்றதென்பதாகக் கூறி கடத்தின் சமவாயி காரண வடிவ கபாலங்களிலேயே அக்கடத்வ ஜாதி யிருக்கின்றது, அக்கடத்வ ஜாதியே அக்கடம் உண்டாய பின் அக்கடத்தில் வருகிறதென்பதாகக் கூறுதலும் சம்பவியாது. ஏனெனின், கடத்தின் சமவாயி காரண வடிவ கபாலங்களிலும் கடத்வ ஜாதியிருக்குமாயின் அக்கபாலங்களிலும் "இதுகடம்" என்பதான கடத்வ வியவஹாரம் உண்டாகவேண்டும். அங்ஙனமாவதின்று. எக்காலத்தில் அக்கடம் உண்டாகின்றதோ அக்காலத்தில் அக்கட வியக்தியினேடு அக்கடத்வ ஜாதியும் உண்டாகின்றதென்பதாகக் கூறுவதும் சம்பவியாது. ஏனெனின், நையாயிகராம் நீவிர் ஜாதியினை நித்தியமாக அங்கீகரிக்கின்றீர். இத்தகைய நித்திய கடத்வ ஜாதியின் உற்பத்தியே

சம்பவியாது. எக்காலத்தில் கடம் உண்டாகின்றதோ அக்காலத்தில் அக் கடத்வ ஜாதி வேறு கடத்தினின்றும் வந்து அக்கடத்தி லிருக்கின்றதெனக் கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், நையாயிகராம் நீவிர் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே கிரியையினை அங்கீகரிக்கின்றீர். ஜாதி திரவிய வடிவமன்றும். ஆகையால் கடத்வ ஜாதியில் நடத்தல் வடிவக் கிரியையே சம்பவியாது. அல்லது கடத்வ ஜாதி ஒரு கட வியக்தியில் சமான வடிவத்தா லிருக்கின்றதா? அல்லது யாதாமோர் தேசத்தி லிருக்கின்றதா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக் கின் எக்கட வியக்தியில் அக்கடத்வ ஜாதி சமான வடிவத்தாலிருக்கின்றதோ அக்கட வியக்தியிலேயே அக்கடத்வ ஜாதியின் தோற்றம் உண்டாகும். அதனினும் வேறான கட வியக்திகளில் அக்கடத்வ ஜாதியின் தோற்ற முண் டாகாததாக வேண்டும். அது உமக்கும் அங்கீகாரமன்றும். ஒரு கட வியக் தியில் கடத்வஜாதி யாதாமோர் தேசத்திலிருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், உமது மதத்தில் ஜன்னிய திரவியமே சாவயவமாகின்றது. ஜாதியை நீவிர் ஜன்னிய திரவிய வடிவமாக வொப்பவில்லை. ஆகையால் கடத்வ ஜாதி யாதாமோர் தேசத்தி லிருப்பதாக வொப்புவது சம்பவியாது. இவ்வாற்றால் கோத்வம், படத்வம், பிருதிவித்வம், ஜலத்வம், திரவியத்வம் முதலிய ஜாதிகளும் சம்பவியாது. ஆகையால் கடத்வ முதலியன அதத்வியாவிர்த்தி வடிவமாவதால் கடாதி வியக்தி வடிவமேயாம். கட முதலிய வியக்தியினும் வேறான ஜாதி வடிவ பாவ பதார்த்தமின்றும்.

## ௬௪௬. பௌத்தர்களின் மத கண்டனம்.

அங்ஙனமாகக் கூறும் பௌத்த மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் செம்மை, கருமை முதலிய வடிவமாக பரஸ்பரம் வேறான நாநா கட வியக்திகள் யாவற்றிலும் ஒரு அநுகத கடத்வ ஜாதியை அங்கீகரியா விடின் அவ்வெல்லா கடங்களில் "இது கடம் இது கடம்" என்பதான ஒரு வடிவாந்தன்மை புத்தியே உண்டாகாததாகும். ஒரே வடிவாந் தன்மை புத்தியோ உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. ஆகையால் ஒரே வடிவாந் தன்மை புத்தியின் பிரமாணத்தன்மையின் பொருட்டு எல்லா கடங்களிலும் ஒரு கடத்தன்மை ஜாதியை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். ஈண்டு கருத் திதுவாம். ஞானங்களிலுள்ள விலக்ஷணத்தன்மை யாதோ அது விஷயத்தின் பேதத்தானேயே யுண்டாகின்றது. விஷயத்தின் பேதமின்றி ஞானங்களில் விலக்ஷணத்தன்மை யுண்டாகிறதில்லை. எங்ஙனம்: கடத்தினை விஷயஞ் செய்வதாகிய "இதுகடம்" என்பதானஞானம் யாதோ, அங்ஙனமே படத்தினை விஷயஞ் செய்வதாகிய "இது படம்" என்பதான ஞானம் யாதோ அவ்விரு ஞானங்களும் பரஸ்பரம்விலக்ஷணமேயாம். அவ்விருஞானங்களின் விலக்ஷணத் தன்மையில் கட, பட வடிவ விஷயத்தின் பேதமே காரணமாகின்றது. இவ் வாறாக பரஸ்பரம் வெவ்வேறு கடங்களில் "இது கடம் இது கடம்" என்ப தான ஒரு வடிவாந்தன்மை ஞானமே யுண்டாகின்றது. அந்த ஞானங்களில் பூர்வ ஞானங்களைப் போன்று விலக்ஷணத் தன்மையின்றும். ஆகையால்

இது அறியப்படுகின்றது. அந்த ஞானங்கட்கு விஷயம் ஒன்றேயாம். ஒரு விஷயத்தால் அந்த ஞானம் பரஸ்பர விலக்ஷணத் தன்மை யில்லாததேயாம். ஆண்டு கட வியக்தி வடிவ விசேஷியங்களின் பேதமோ பிரத்தியக்ஷ சித்தமாம். பரிசேஷத்தால் கடத்வ ஜாதி வடிவ விசேஷணத்தின் ஏகத்வமே சித்திக்கின்றது. ஆகையால் இது நிச்சயமாகின்றது. விசேஷங்களின் பேதமோ ஞானங்களின் விலக்ஷணத்தன்மைக்குக் காரணமாகின்றது. விசேஷணத்தின் அபேதம் ஞானங்களின் விலக்ஷணமிலாத் தன்மைக்குக் காரணமாகின்றது. விசேஷியத்தின் பேதம் அல்லது அபேதம் ஞானங்களின் விலக்ஷணத்தன்மையிலும், விலக்ஷணமிலாத் தன்மையிலும் காரணமாகிறதில்லை. இக்காரணத்தானேயே ஒரு கடத்தில் "இதுகடம், இது திரவியம், இதுபிருதிவி" என்பதான மூன்று ஞானங்களின் விலக்ஷணத்தன்மைக் காணப்படுகின்றது. ஆண்டு கட வடிவ விசேஷியம் ஒன்றாயினும் கடத்தன்மை, திரவியத்தன்மை, பிருதிவித்தன்மையாம் மூன்று விசேஷணங்களின் பேதத்தானேயே ஞானங்களின் விலக்ஷணத்தன்மை யுண்டாகின்றது. ஆகையால் பரஸ்பர விலக்ஷண அனேக கடங்களில் "இது கடம் இது கடம்" என்பதான ஒரு வடிவாந் தன்மை புத்தியே எல்லாக் கடங்களில் அநுகதமாகி எல்லாக் கடங்களினும் வேறான ஒரு கடத்தன்மை ஜாதியின் சித்தியைச் செய்கின்றது.

சங்கை :—அதத்வியாவிர்த்திக்கு கட முதலிய வியக்தி வடிவத்தன்மை சம்பவியாதாகுக. என்றாலும் எல்லாக் கட வியக்திகளில் அநுகதமாயிருக்கும் அவ்வக்கட பேத வடிவ அதத்வியாவிர்த்தி யாதோ அவ்வதத்வியாவிர்த்தியினையே ஒரு வடிவாந் தன்மைத் தோற்றம் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் ஒருவடிவாந் தோற்றத்தால் பாவ வடிவ கடத்வஜாதியின் சித்தி சம்பவியாது.

சமாதானம் :—ஒரு வடிவாந் தோற்றம் ஓர் கால் அபாவ வடிவ அதத்வியாவிர்த்தியினை விஷயஞ் செய்யுமாயின் ஒரு வடிவாந் தோற்றத்தில் "இது கடமன்று இது கடமன்று" என்பதாக நிஷேத முகத்தன்மையுண்டாக வேண்டும். ஒரு வடிவாந் தோற்றத்தில் நிஷேத முகத்தன்மை விளங்குவதின்று. ஆனால் "இது கடம் இது கடம்" என்பதாக விதி முகத்தன்மையே விளங்குகின்றது. ஆண்டு அபாவத்தின் வாசகம் 'ந' என்னும் சொல்லோடு கூடியதாம். அதனால் தோற்றும் விஷயத்தினை நிஷேதமுகத்தோற்றமென்பர். 'ந' என்னும் சொல்லின்றிய வாசகத்தின் விஷயத்தினை விதிமுகத் தோற்றமென்பர். ஆகையால் கூறிய ஒரு வடிவாந் தோற்றம் அக்கட வியாவிர்த்தியினை விஷயஞ்செய்வதன்று; பாவ வடிவ கடத்வ ஜாதியினையே விஷயஞ்செய்கின்றது. அல்லது பௌத்தர் கடத்தன்மை முதலிய ஜாதிகளை கண்டிக்கும் பொருட்டு முன்னர் செய்த விகற்பமும் அசங்கதமாம். ஏனெனின், எமது நையாயிகர்களின் மதத்தில் கடத்தன்மை முதலிய ஜாதிகள் யாவும் வியாபகமாம். ஆண்டு கடத்தன்மை முதலிய ஜாதிகட்கு ஸ்வரூபமாக எல்லா விடங்களினுமுள்ள சம்பந்தம் யாதோ அதுவே கடத்தன்மை முதலிய ஜாதிகளில் வியாபகத் தன்மையாம். ஆகையால் எந்த க்ஷணத்தில் கடம் உற்பன்னமாகின்றதோ அந்த க்ஷணத்தில் ஆண்டிருக்கும் கடத்தன்மை ஜாதிக்கு அக்

கட வியக்தியிேனுடு சமவாய சம்பந்த முண்டாகின்றது. அக்கடத்தன்மை ஜாதி யாதாமோரிடத்தினின்றும் வருவதும் உண்டாவதுமன்று.

சங்கை:—கடத்தன்மை ஜாதி ஸ்வரூபமாக எல்லாவிடங்களி லிருக்குமாயின் படமுதலிய இடங்களிலும் "இதுகடம்" என்பதாக கடத்தன்மையை விஷயஞ்செய்யும் வியவஹார முண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று.

சமாதானம்:—பட முதலிய விடங்களில் ஸ்வரூபமாயிருப்பதாயினும் கடத்தன்மை ஜாதி சமவாயசம்பந்தத்தாலிருப்பதன்று. ஆனல் கேவலம் கட வியக்திகளிலேயே கடத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. கடத்தன்மை ஜாதி எவ்வியக்தியில் சமவாய சம்பந்தத்தால் இருக்கின்றதோ அவ்வியக்தியிலேயே "இது கடம்" என்பதான வியவஹாரத்தின் காரணமுண்டாகின்றது. எவ்வியக்தியில் கடத்தன்மை ஜாதி சமவாய சம்பந்தத்தாலிருப்பதின்றோ அவ்வியக்தியில் "இதுகடம்" என்பதான வியவஹாரத்தின் காரண முண்டாகிறதில்லை. ஆகையால் கட வியக்திகளிலேயே "இது கடம்" என்பதான வியவஹார முண்டாகின்றது. பட முதலிய வியக்திகளில் அந்த வியவஹாரம் உண்டாகிறதில்லை. ஆகையால் பௌத்தர்கள் முற்கூறிய சகல விகற்பங்களும் அசங்கதமாம். இவ்வாறாகக் கூறிய வியவஸ்தையை சத்தா, திரவியத்தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை, பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை, உருவத்தன்மை, ரசத்தன்மை, படத்தன்மை, கோத்தன்மையாமிவைமுதலிய ஜாதிகளிலும் முறையாக அறிந்துக் கொள்க. சாமான்னிய பதார்த்த நிருபணம் முற்றிற்று.

## ௬௯௭. விசேஷ பதார்த்தத்தின் நிருபணம்.

விசேஷ பதார்த்தத்தின் லக்ஷணம். ஆண்டு "நிஃஸாமாநு்யெவஸெது஼஺ஸமவேதஃ விஶேஷஃ" (இ-ள்.) எப்பதார்த்தம் ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும், ஒரு வியக்தி மாத்திரத்தில் சமவாய சம்பந்தத்தாலிருப்பதுமாகின்றதோ அப்பதார்த்தம் விசேஷமெனப்படுகின்றது. ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு பூதங்களின் பரமாணுக்கள் யாவற்றிலும் விசேஷ மிருக்கின்றது. அதாவது; ஒவ்வோர் பரமாணுவிலும் ஒவ்வோர் விசேஷம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே ஆகாசம், காலம், திக்கு என்னும் மூன்றிலும் ஒவ்வோர் விசேஷம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே சகல ஆத்மாக்களிடத்தும், சகல மனங்களிடத்தும் ஒவ்வோர் விசேஷம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் ஒரு விசேஷம் திரவிய வியக்தி மாத்திரத்தில் சமவேதமெனப்படுகின்றது. விசேஷத்தில் யாதோர் ஜாதி வடிவ சாமான்னியமு மிருப்பதன்று. இவ்வார்த்தை முன்னர் சாமான்னியத்தின் நிருபணத்தில் கூறிவந்துள்ளோம். ஆகையால் விசேஷம் ஜாதி வடிவ சாமான்னிய மில்லாததுமாம். ஆகையால் கூறிய இவ்விசேஷத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஒன்றில் மாத்திரம் சமவாய சம்பந்தத்தா லிருப்பது விசேஷம்" என இம்மாத்திரமே விசேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் குணத்திலும், கர்மத்திலும்

அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் ஸையோகம், விபாகம், இருமை முதலிய சங்கியை. இருமை முதலிய வேற்றுமையாம் அனேகத்தி லிருக்கும் குணங்களை விட்டு மற்றைய உருவ முதலிய சர்வ குணங்களும் ஒவ்வோர் திரவிய வியக்தியிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே கர்மமும் ஒவ்வோர் திரவிய வியக்தியிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அக்குண, கர்மங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகும். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு குண, கர்மங்கள் ஜாதி வடிவ சாமான்னியமிலாதனவன்றாம். ஆனால் சத்தா, குணத்தன்மை, கர்மத்தன்மை முதலிய சாமான்னிய முடையனவேயாம். ஆகையால் குண, கர்மங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜாதி வடிவ சாமான்னியமில்லாததும், சமவாய சம்பந்தத்தா லிருப்பதும் விசேஷம்" என இம் மாத்திரமே விசேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஒன்றில் மாத்திரம்" என்னும் பதங் கூறுவிடின் ஜாதி வடிவ சாமான்னியத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் ஜாதியில் யாதோர் ஜாதியும் இருப்பதன்று. ஆகையால் ஜாதி வடிவ சாமான்னியம் ஜாதி வடிவ சாமான்னியமிலாததுமாம். அங்ஙனமே திரவிய, குண, கர்மங்களில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதுமாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஒன்றில் மாத்திரம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஜாதி வடிவ சாமான்னியம் ஒரு வியக்தி மாத்திரத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று. அனேக வியக்திகளில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சாமான்னியத்தில் விசேஷத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## கூசஅ. விசேஷத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"ஜந்யவ்ருத்த்யவ்ருத்திவ்யாவர்த்தகதர்மவத்வம் விசேஷ:" (இ-ள்.) ஜன்னிய பதார்த்தத்தி லிருக்கும் பதார்த்தத்திலிராததும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியும் யாதோ அவ்வுபாதியுடைய பதார்த்தம் விசேஷமெனப்படுகின்றது. ஆண்டு விசேஷம் ஜன்னிய திரவியங்களி லிருப்பதன்று; பரமாணு, ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களிலேயேயிருக்கின்றது. அத்தகைய விசேஷத்திலிருப்பதாகிய விசேஷத்தன்மை தர்மம் ஜன்னியத்தி லிருப்பதில் இராததுமாம். அதாவது; விசேஷத்தன்மை தர்மம் பிருதிவி முதலிய ஜன்னிய திரவியங்களி லிருப்பதாகிய குண கர்ம முதலியவற்றில் இராததும், பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய விசேஷத்தன்மை தர்மம் விசேஷங்கள் யாவற்றிலு மிருக்கின்றது. ஆகையால் கூறிய விசேஷத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி யுடையது விசேஷம்" என இம்மாத்திரமே விசேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஜன்னியத்தி லிருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறுவிடின் திரவியத்தன்மை, குணத்தன்மை, கர்மத்தன்மை, சாமான்னியத் தன்மையாம் நான்கைக் கொண்டு முறையாக திரவியம், குணம், கர்மம்,

சாமான்னியமாமிந்நான்குபதார்த்தங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், எங்ஙனம் விசேஷத்வ தர்மம் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமாமோ அங்ஙனமே திரவியத்தன்மை முதலிய தர்மங்களும் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஜன்னியத்திலிருப்பதில் இராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு திரவியத்வ முதலிய தர்மங்கள் ஜன்னியத்திலிருப்பதிலிராததன்றாம்; ஜன்னியத்தில் இருப்பனவாகிய திரவிய முதலியவைகளி லிருப்பனவேயாம். ஆகையால் திரவிய முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஜன்னியத்திலிருப்பதில் இராததாகிய உபாதியுடையது விசேஷம்" என இம்மாத்திரமே விசேஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப்பிரிக்கும்" என்னும் பதங்கள் கூறுவிடின் சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக் கொண்டு சத்தம், புத்தி முதலிய குணங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின், சத்தம், புத்தி முதலிய குணங்கள் ஜன்னிய திரவியத்தி லிருப்பனவன்று. ஆனால் நித்திய ஆகாசத்திலே சத்த குணமும், நித்திய ஆத்மாவில் புத்தி முதலிய குணங்களு மிருக்கின்றன. ஆகையால் சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகள் ஜன்னிய திரவியத்திலிருப்பனவாகிய உருவ முதலிய குணங்களி லிராதனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பதார்த்தங்களைப் பிரிக்கும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்றாம். ஆனால் குணத்தைப் பிரிக்கும் உபாதி வடிவமாம். ஆகையால் சத்தத்தன்மை, புத்தித்தன்மை முதலிய ஜாதிகளைக்கொண்டு அச்சத்தம், புத்தி முதலிய குணங்களில் விசேஷத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௩௪௪, விசேஷத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"ஸ்வதோவ்யாவர்த்தக: விசேஷ:" (இ-ள்.) எப்பதார்த்தம் தன்னையும், தனது ஆசிரயத்தையும் தனது ஸ்வரூபத்தானேயே வியாவர்த்தகமாக்குகின்றதோ அப்பதார்த்தம் விசேஷமெனப்படுகின்றது. ஈண்டு வேறு பதார்த்தத்தின் பேதத்தினை விஷயஞ்செய்வதாகிய அநுமிதி ஞானத்தினை வியாவிர்த்தி என்பர். அந்த வியாவிர்த்தியினை உண்டாக்கும் ஏதுவடிவமாவது யாதோ அது வியாவர்த்தகமெனப்படுகின்றது. தனது ஸ்வரூபத்தானேயே வியாவர்த்தகமாவது யாதோ அது தானே வியாவர்த்தகமெனப்படுகின்றது. தானே வியாவர்த்தகமாந் தன்மை விசேஷத்திலேயே சம்பவிக்கின்றது. வேறொன்றில் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் தானே வியாவர்த்தகமாம் இவ்விசேஷத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு விசேஷம் எப்பரமாணு முதலிய நித்திய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றதோ அப்பரமாணு முதலிய நித்திய திரவியத்தினை வேறு பரமாணு முதலிய நித்திய திரவியத்தினின்றும் தனது ஸ்வரூபத்தானேயே வேறு செய்கின்றது. எங்ஙனம்:
"[illegible]" (இ-ள்)

இப்பார்த்திவ பரமாணு வேறு பார்த்திவ பரமாணுவினும் வேறாம், விசேஷமுடையதாவதால். ஆண்டு இவ்வநுமானத்தில் விசேஷத்தினது பேதத்தின் சித்தியைச்செய்வதில் தத்வியக்தித்வ வடிவத்தானேயே ஏதுத்தன்மைச் சம்பவிக்கின்றது. ஓர்கால் விசேஷத்தினது பேததத்தின் சித்தியைச்செய்வதில் விசேஷத்வ வடிவத்தானேயே ஹேதுத்தன்மை யொப்பின் விசேஷத்வ வடிவமாக விசேஷ வடிவ ஹேது வேறு பரமாணுவினும் இருக்கின்றது. ஆனால் வேறு பரமாணுவில் வேறு பரமாணுவின் பேத வடிவ சாத்தியமின்றாம். ஆகையால் சாத்தியத்தின் அபாவமுடைமை வேறு பரமாணுவி லிருப்பதாவதால் விசேஷத்வ தர்ம விசிஷ்டஹேது வியபிசாரியேயாகும். ஆகையால் விசேஷத்திற்கு தத்வியக்தித்வ வடிவத்தானேயே ஹேதுத்தன்மைக் கூறுவதாகும். ஆண்டு விசேஷத்தில் தத்வியக்தித்வம் வேறொன்றும் சம்பவியாது. ஆனால் தாதாத்மிய சம்பந்தத்தால் விசேஷவியக்தியே தத்வியக்தித்வமாம். இவ்வாற்றால் விசேஷம் ஸ்வாசிரய பரமாணு முதலிய நித்திய திரவியத்தினை வேறு நித்திய திரவியத்தினின்றும் தனது ஸ்வரூபத்தானேயே வியாவர்த்தகமாக்குகின்றது. அல்லது விசேஷம் எங்ஙனம் தனது ஆசிரயமாகிய நித்தியதிரவியத்தினை வேறு நித்திய திரவியத்தினின்றும் தானகவே வியாவர்த்தக மாக்குகின்றதோ அங்ஙனமே விசேஷமும் தனது ஆசிரயமாகிய திரவியத்தினின்றும் தானும் தானகவே வியாவர்த்தகமாகின்றது. எங்ஙனம் "விஶேஷஃ த்ரவ்யாதிகஃ விஶேஷாத்" (இ-ள்.) விசேஷம் திரவியத்தினும் வேறாம், விசேஷமாவதால். அல்லது விசேஷம் வேறு விசேஷத்தினின்றும் தானும் தானகவே வியாவர்த்தகமாகின்றது. எங்ஙனம் "ஏதத்விஶேஷஃ தத்விஶேஷாத் பிந்நோ ந தத்விஶேஷாத்" (இ-ள்.) இவ்விசேஷம் வேறு விசேஷத்தினும் வேறாம், தனித்தனி விசேஷமாவதால். இவ்வாற்றால் விசேஷம் தனது ஸ்வரூபத்தானேயே தான் வேறு விசேஷத்தினின்றும் வியாவர்த்தகமாகின்றது. விசேஷத்திற்கு வேறு பேதத்தினை சித்தி செய்யும் பொருட்டு தன்னிடத்தில் வேறு விசேஷத்தின் அபேக்ஷை இருப்பதில்லை. ஓர் கால் விசேஷத்தினது பேதத்தின் சித்தியை செய்யும் பொருட்டு தன்னிடத்தில் வேறு விசேஷத்தின் அபேக்ஷையை யொப்பின் வேறு விசேஷத்தினது பேதத்தின் பொருட்டும் யாதாமோர் மூன்றாவது விசேஷத்தின் அபேக்ஷை யுண்டாகும். மூன்றாவது விசேஷத்தின் பேதத்தின் பொருட்டும் யாதாமோர் நான்காவது விசேஷத்தின் அபேக்ஷை யுண்டாகும். இவ்வாறாக மீண்டும் மீண்டும் விசேஷத்தின் அபேக்ஷையை யொப்புவதால் அநவஸ்தா தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். ஆகையால் முற்கூறிய வாற்றால் விசேஷத்திற்கு ஸ்வரூபமாகவே வியாவர்த்தகத்வம் வொப்ப வேண்டும். சுவதந்திரமாக வியாவர்த்தகத்வம் ஒப்புவதில் அநவஸ்தாதோஷத்தின் பிராப்தி யுண்டாகாது.

கூ0. விசேஷத்தின் ஆசிரயமாகிய நித்திய திரவியங்களைக் கூறுவது.

இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித விசேஷ பதார்த்தம் பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்களிலேயே சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. துவியணுக முதலிய அநித்திய திரவியங்களில் விசேஷம் இருப்பதன்று. பரமாணு, ஆகாச முதலிய நித்தியத் திரவியங்கள்

அநந்தமாம், ஆகையால் அவ்விசேஷமும் அநந்தமாம். அதாவது; எண்ணிறந்தவைாம். விசேஷம் நித்திய திரவியங்களைப் போன்று உற்பத்தி விநாசமில்லாததாவதால் நித்தியமேயாகின்றது. யாதோர் விசேஷமும் அநித்தியமாகிறதில்லை. விசேஷம் தர்மாதர்மங்களைப் போன்று அதீந்திரியமாகின்றது. அதாவது; யாதோர் விசேஷமும் இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயமாகிறதில்லை. அத்தகைய அதீந்திரிய விசேஷங்களின் சித்தி கேவலம் அநுமானப் பிரமாணத்தானேயே யுண்டாகின்றது.

கூருக. விசேஷத்தை சாதிக்கும் அநுமானம்.

அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "பரமாணு-ப்பேதஹேதும்ஸ்ம் ஞாப்யஃ பேதவ்யாக் ஸவாஷ்ஸேதஞாப்யபேதவக்" (இ-ள்.) சஜாதீய பரமாணுக்களின் பரஸ்பர பேதம் யாதோ அப்பேதம் யாதாமோர் லிங்கத்தால் ஞாப்யமாக யோக்கியமாம், அதாவது; யாதாமோர் ஹேது வடிவ லிங்கத்தாலுண்டாய அநுமிதிஞானத்திற்கு விஷயமாக யோக்கியமாம், பேதவடிவமாவதால், எதுவெது பேதமாமோ அதுவது யாதாமோர் லிங்கத்தால் ஞாப்யமேயாகின்றது. எங்ஙனம் இரு கடங்களின் பரஸ்பர பேதம் யாதோ அப்பேதம் அக்கடங்களின் சமவாயி காரண வடிவ கபாலங்களின் பேதத்தானேயே ஞாப்யமாகின்றது. அங்ஙனமே அப்பரமாணுக்களின் பேதமும் பேதவடிவமாவதால் யாதாமோர் லிங்கத்தால் அவசியம் ஞாப்யமாகும். ஆண்டு சஜாதீய பரமாணுக்களின் பேதத்திற்கு வேறுகவோர் லிங்ஞாபகம் சம்பவியாது. பரிசேஷத்தால் விசேஷமே பரமாணுக்களின்து பேதத்தின் ஞாபக வடிவமாக சித்தமாகின்றது. அல்லது விசேஷ பதார்த்தத்தின் சித்தி யிவ்வநுமானத்தானுமுண்டாகின்றது. "ஆகாஶநிஷ்டா ஸத்வஸமவாயிகாரணதா கிஞ்சித்தர்மாவச்சிந்நா காரணதாத்வாத் தண்டநிஷ்டகாரணதாவத்" (இ-ள்.) ஆகாசத்திலிருக்கும் சத்தகுணத்தின் சமவாயி காரணத்தன்மை யாதோ அக்காரணத்தன்மை யாதாமோர் தர்மத்தால் அவச்சின்னமாக யோக்கியமாம், காரணத்தன்மையாவதால், எதுவெது காரணத்தன்மையாகின்றதோ அதுவது யாதாமோர் தர்மத்தால் அவச்சின்னமே யாகின்றது. எங்ஙனம்: தண்டத்திலிருக்கும் கடத்தின் காரணத் தன்மை தண்டத்தன்மை தர்மத்தால் அவச்சின்னமாகின்றது. அங்ஙனமே ஆகாசத்திலிருக்கும் காரணத்தன்மையும் யாதாமோர் தர்மத்தால் அவசியம் அவச்சின்னமாகும். ஆண்டு ஆகாசத்திலுள்ள காரணத்தன்மையின் அவச்சேதகம் ஆகாசத்திலுள்ள விசேஷமேயாம்.

சங்கை:—கூறிய லக்ஷணங்களாலும், அநுமானப்பிரமாணங்களாலும் விசேஷத்தின் சித்தி யுண்டாகுக. என்றாலும் விசேஷ பதார்த்தத்தினை யொப்புவதனலாம் பயன் யாதென்னும் சங்கை யுண்டாக. இனி விசேஷ பதார்த்தத்தின் பயனைக் கூறுவாம்.

கூருஉ. விசேஷ பதார்த்தத்தினை ஒப்புவதனலாம் பயன்.

கட முதலிய அவயவீ முதலாக துவியணுக மட்டுமாம் அவயவிகளெவ்வள விருக்கின்றனவோ அவ்வவயவிகளின் பரஸ்பர பேதம் அவ்வக் கபால முதலிய அவயவங்களின் பேதத்தானேயே சித்தமாம். இவ்வாறுக கடபட முதலியவைகளின் பரஸ்பர பேதம் அவ்வக் கபால தந்து முதலிய அவய

வங்களின் பேதத்தாலேயே சித்தமாம். ஆகையால் அக்கட, பட முதலிய காரிய திரவியங்களில் விசேஷம் கற்பிக்கப்படுவதின்று. பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்பனவாகிய நான்கு பூதங்களின் பரமாணுக்களும் ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா மனம் என்பதான ஐந்து திரவியங்களும் யாதாமோர் அவயவத்தால் ஜன்னியமாவனவன்று ஆகையால் அவயவங்களின் பேதத்தால் நித்திய திரவியங்களின் பரஸ்பர பேதம் சித்திக்கிறதில்லை. பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்கள் பரஸ்பரம் அத்தியந்தமவேறும். அத்தகைய நித்திய திரவியங்களை பரஸ்பரம் பேதப்படுத்துவதாகிய யாதாமோர் தர்மமின்றி பேதம் சம்பவியாது. ஆகையால் பரமாணு, ஆகாசமுதலிய நித்திய திரவியங்களை பரஸ்பரம் பேதிப்பதாகிய யாதாமோர் தர்மத்தை அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஆண்டு சத்தா, திரவியத்வ தர்மமோ சர்வ நித்திய திரவியங்களின் சாதாரண தர்மமாம். ஆகையால் சத்தா, திரவியத்வ தர்மங்களாலும் நித்திய திரவியங்களின் பரஸ்பர பேதம் சித்தியாது. அசாதாரண தர்மமே பேதத்தின் சாதகமாகின்றது. பரிசேஷத்தால் அவ்வவ் நித்திய திரவியங்களி லிருக்கும் விசேஷமே நித்திய திரவியத்தினை வேறு நித்தியத் திரவியத்தினின்றும் வேறு செய்வதாக சித்திக்கின்றது. பார்த்திவ பரமாணுக்களை ஜல முதலியவைகளின் பரமாணுக்களினின்றும் வேறு செய்வது கந்த குணமும், பிருதிவித்வ ஜாதியுமாம். ஜலீய பரமாணுக்களை பிருதிவி முதலியவைகளின் பரமாணுக்களினின்றும் வேறு செய்வது சீத பரிசமும், ஜலத்வ ஜாதியுமாம். தைஜச பரமாணுக்களை பிருதிவி முதலிய பரமாணுக்களினின்றும் வேறு செய்வது வெம்மைப் பரிசமும், தேயுத்தன்மை ஜாதியுமாம். வாயவீய பரமாணுக்களை பிருதிவி முதலியவைகளின் பரமாணுக்களினின்றும் வேறு செய்வது பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லாத பரிசமும், வாயுத்வ ஜாதியுமாம், ஆகாசத்தினை பரமாணு முதலியவைகளி னின்றும் வேறு செய்வது சத்த குணமாம். ஆத்மாவினை பரமாணு முதலியவைகளி னின்றும் வேறு செய்வது ஞான முதலிய குணங்களும், ஆத்மத்வ ஜாதியுமாம். மனதினை பரமாணுக்களினின்றும் வேறுசெய்வது மனத்வஜாதியுமாம். ஆகையால் விஜாதீய நித்திய திரவியங்களின் பரஸ்பர பேதத்தின் பொருட்டு விசேஷத்தினை அங்கீகரிப்பது சம்பவியாது. என்றாலும் பிருதிவித்வ வடிவமான சஜாதீய பார்த்திவ பரமாணுக்கள் யாவையோ அவைகளின் பரஸ்பர பேதம் கந்த குணத்தாலும் பிருதிவித்வ ஜாதியாலும் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் கந்த குணமும், பிருதிவித்வ ஜாதியும் பார்த்திவ பரமாணுக்கள் யாவற்றிலு மிருக்கின்றன. இவ்வாறாக ஜலத்வ வடிவமான சஜாதீய ஜலீய பரமாணுக்கள் யாவையோ அவைகளின் பரஸ்பர பேதம் சீத பரிசத்தாலும், ஜலத்வ ஜாதியாலும் சம்பவியாது, எக்காரணத்தாலெனின் ஜலீய பரமாணுக்கள் யாவும் சீத பரிசமுடையதும், ஜலத்வ ஜாதியுடையதுமாம். இவ்வாறாக தேயுத்வ வடிவமான சஜாதீய தைஜச பரமாணுக்கள் யாவையோ அவைகளின் பரஸ்பர பேதம் வெம்மைப் பரிசத்தாலும், தேயுத்தன்மை ஜாதியாலும் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் தைஜச பரமாணுக்கள் யாவும் வெம்மைப் பரிசமுடையதும் தேயுத்தன்மை ஜாதியுடையதுமாம். இவ்வாறாக

வாயுத்வ வடிவமான சஜாதீய வாயவீய பரமாணுக்கள் யாவையோ அவை களின் பரஸ்பர பேதம் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியுமில்லா பரிசத்தாலும், வாயுத்வ ஜாதியாலும் சம்பவியாது. எக்காரணத்தாலெனின், சர்வ வாயவீய பரமாணுக்களும் பாகத்தாலாகாத வெம்மையும் குளிர்ச்சியு மில்லாத பரிசமுடையனவும், வாயவீயத்வ ஜாதியுடையனவுமாம். இவ்வாறாக ஆத்மத்வ வடிவமான சஜாதீய ஆத்மாக்களின் பரஸ்பரபேதம் ஞான முதலிய குணங்களாலும், ஆத்மத்வ ஜாதியாலும் சம்பவியாது. எக்காரணத்தா லெனின் ஆத்மாக்கள் யாவும் ஞான முதலிய குணங்களுடையனவும் ஆத் மத்வ ஜாதியுடையனவுமாம். இவ்வாறாக மனத்வ வடிவமாக சாஜதீய மனங் கள் யாவற்றின் பரஸ்பரபேதம் மனத்தன்மை ஜாதியால் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் மனங்கள் யாவும் மனத்வ ஜாதி யுடையனவேயாம். ஆகையால் சஜாதீய பரமாணு முதலிய நித்திய திரவியங்களை பரஸ்பரம் பேதிக்கும் பொருட்டு விசேஷ பதார்த்தம் அவசியம் அங்கீகரிக்கப்பட வேண்டும். விசேஷமின்றி சஜாதீய பரமாணு முதலியவைகளின் பரஸ்பர பேதம் சித்தியாது. இதுவே விசேஷ பதார்த்தத்தினை அங்கீகரிப்பதனாலாம் பயனும்.

௬௫௩. ஆகாசத்திலிடத்தும், ஈசுவரனிடத்தும் விசேஷத்தினை யொப்பாதவராகிய வாதிகளின் மத வர்ணனம்.

ஈண்டு சில நூலாசிரியரோர் இது கூறுகின்றனர். ஈசுவரனிடத்துள்ள நித்தியத்வ ஞானமே ஈசுவரனை ஜீவாத்மாவினின்றும் வேறு செய்கின்றது. ஆகாசத்திலுள்ள சத்த குணமே ஆகாசத்தினை வேறு பரமாணு முதலிய நித் திய திரவியங்களினின்றும் வேறு செய்கின்றது. ஆகையால் ஈசவரனிடத்தும், ஆகாசத்திலிடத்தும் விசேஷத்தை அங்கீகரிப்பது பயனின்மையாம்.

௬௫௪. விசேஷ பதார்த்தத்தினை ஒப்பாதவராகிய நவீன நையாயிகர்களின் மதம்

ஈண்டு நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். விசேஷ பதார்த் தத்தில் பிரமாணம் யாதொன்றுமின்றாம். அங்ஙனமே விசேஷ பதார்த்தத் தினை அங்கீகரிப்பதனால் யாதோர் பயனுமின்றாம். ஆனால் எங்ஙனம் பிரா சீனர்கள் விசேஷத்திற்கு தன்னிடத்திலிருக்கும் தர்மமின்றியே தானே வியா வர்த்தகமாந் தன்மை யொப்புகின்றனரோ அங்ஙனமே பரமாணு முதலிய நித்தியத் திரவியங்கட்கும் தானே வியாவர்த்தகமாந் தன்மைச் சம்பவிக்கின் றது. ஆகையால் விசேஷத்தை யொப்புவதற்கு யாதோர் பயனுமின்றாம்.

௬௫௫ விசேஷ பதார்த்தத்தை யொப்பும் கணாத முனிகள் அருளிய நியாய சாஸ்திரத்தினை அநுசரித்த வைசேஷிகர் கூறுவது.

இவ்விசேஷ பதார்த்தை ஏழு பதார்த்த வாதி கணாத முனிவரே யொப்பியுள்ளார். பதினாறு பதார்த்த வாதி கௌதம முனிவரும், வேறு சாஸ்திரமுடையாரும் விசேஷ பதார்த்தத்தை அங்கீகரித்திலர். இக்காரணத் தாலேயே கணாதமுனிகள் அருளிய சாஸ்திரத்தினைவிசேஷ சாத்திரமென்பர். அங்ஙனமே இம்மதத்தை அநுசரித்த நூலாசிரியர்களை வைசேஷிகரென்பர். விசேஷ பதார்த்த நிருபணம் முற்றிற்று.

### ௯௫௬. சமவாய பதார்த்த நிரூபணம்.

சமவாயத்தின் லக்ஷணம். ஆண்டு "நித்யஸம்பந்த: ஸமவாய:". (இ-ள்.) எப்பதார்த்தம் நித்தியமும், சம்பந்த வடிவமுமாகின்றதோ அப் பதார்த்தம் சமவாயமெனப்படுகின்றது. ஆண்டு சமவாயம் உற்பத்தி விநாச மில்லாததாவதால் நித்தியமும், குண குணி முதலியவைகளின் சம்பந்த வடிவமுமாம். ஆகையால் கூறிய இச்சமவாயத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "சம்பந்தம் சமவாயம்" என இம்மாத்திரமே சமவாயத்தின் லக்ஷண மாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நித்தியம்" என்னும் பதங் கூறாவிடின் சையோக சம்பந்தத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக் காரணத்தாலெனின் சமவாயத்தினைப் போன்று சையோகத்திலும் சம்பந்த வடிவத்தன்மையே இருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக் கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நித்தியம்" என்னுமிது அச்சம்பந்தத் திற்கு விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு சையோக சம்பந்தம் நித்திய மாவதன்று; அநித்தியமேயாகின்றது. ஆகையால் சையோகத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நித்தியம்சமவாயம்" என இம்மாத்திரமே சமவாயத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சம்பந்தம்" என்னும் பதங் கூறாவிடின் ஆகாச முதலிய நித்திய பதார்த்தங் களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவிர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்பந்தம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஆகாச முதலியவைகளில் சம்பந்தத் தன்மையின்றாம். ஆகையால் ஆகாச முதலியவைகளில் சமவாயத்தின் லக்ஷ ணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

சங்கை:—கூறிய சமவாயத்தின் லக்ஷணத்திற்கும் அத்தியந்தாபாவத்தில் அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின், பூதல முதலியவைகளில் கட முதலிய வைகளின் அத்தியந்தாபாவம் ஸ்வரூப சம்பந்தத்தானேயே இருக்கின்றது. அவ்வத்தியந்தாபாவத்தின் ஸ்வரூபசம்பந்தம் அத்தியந்தாபாவவடிவமேயாம்; அத்தியந்தாபாவத்தினும் வேறன்றாம். அவ்வத்தியந்தாபாவம் நித்தியமுமாம். ஆகையால் நித்திய வடிவத்தன்மையும், சம்பந்த வடிவத்தன்மையும் அத் தியந்தாபாவத்தினு மிருக்கின்றது. ஆகையால் அத்தியந்தாபாவத்தில் சமவா யத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம்.

சமாதானம்:—கூறிய அந்த லக்ஷணத்தில் சம்பந்த பதத்தால் இரு சம்பந்திகளினும் வேறான சம்பந்தத்தினைக் கிரஹிக்குக. அவ்விரு சம்பந்தி களினும் வேறான சம்பந்தங்கள் சையோகம், சமவாயமாமிருசம்பந்தங்களாம். அச்சையோகம், சமவாயமா மிருசம்பந்தங்களினும் வேறான மற்றைய காலிக சம்பந்தம், தைசிக சம்பந்தம், விசேஷணத்தன்மைச் சம்பந்தம், விசேஷியத் தன்மைச்சம்பந்தம், பிரதியோகித்தன்மைச் சம்பந்தம், அநுயோகித்தன்மைச் சம்பந்தம், ஆதாரத் தன்மைச் சம்பந்தம், ஆதேயத் தன்மைச் சம்பந்தம், விஷயத்தன்மைச் சம்பந்தமா மிவை முதலிய ஸ்வரூப சம்பந்தங்கள் யாவும் இருசம்பந்திகளினும் வேறாகிறதில்லை. ஆனால் சில ஸ்வரூப சம்பந்தமோ பிரதி யோகி வடிவமாகின்றன. சில ஸ்வரூப சம்பந்தம் அநுயோகி வடிவமாகின்றன.

ஆண்டு எவ்வஸ்துவிற்கு எவ்வதிகரணத்தில் எச்சம்பந்த முண்டாகின்றதோ அச்சம்பந்தத்திற்கு அவ்வஸ்துவோ பிரதியோகியாகின்றது. அவ்வதிகரணம் அநுயோகியாகின்றது. எங்ஙனம்: பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவம் விசேஷணத்தன்மை யெனப் பெயரிய ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. அந்த ஸ்வரூப சம்பந்தத்திற்கு அவ்வத்தியந்தாபாவமோ பிரதியோகியும், அப்பூதலம் அநுயோகியுமாம். ஆண்டு ஸ்வரூப சம்பந்தம் அவ்வத்தியந்தாபாவ வடிவ பிரதியோகி ஸ்வரூபமேயாம். மஹா காலத்தில் கட, பட முதலிய பதார்த்தங்கள் காலிகமெனப்பெயரிய ஸ்வரூப சம்பந்தத்தாலிருக்கின்றது. அக்காலிக சம்பந்தத்திற்கு அக்கட, பட முதலியவைகளோ பிரதியோகியும், மஹா காலம் அநுயோகியுமாம். ஆண்டு காலிக ஸ்வரூப சம்பந்தம் மஹா கால வடிவ அநுயோகி ஸ்வரூபமேயாம். ஏனெனின், காலிக ஸ்வரூப சம்பந்தத்திற்கு கட, படாதி வடிவப் பிரதியோகி ஸ்வரூபமொப்பின், அனேக கட, படாதிகளில் ஸ்வரூப சம்பந்த வடிவத்தன்மைக் கற்பிப்பதில் கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகும். கால வடிவமொன் றொப்புவதில் கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகாது. ஆகையால் லாகவத்தால் காலிக ஸ்வரூப சம்பந்தத்திற்கு மஹா கால வடிவ அநுயோகி ஸ்வரூபத்தன்மையே யொப்புவது உசிதமாம். இவ்வாறாகக் கூறிய அத்தியந்தாபாவத்தின் விசேஷணத்தன்மை யெனப் பெயரிய ஸ்வரூப சம்பந்தத்திற்கு அனேக பூதலாதி அநுயோகி ஸ்வரூபத்தன்மை யொப்புவதில் கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகின்றது. ஒரு அத்தியந்தாபாவ வடிவ பிரதியோகி ஸ்வரூபத்தன்மை யொப்புவதில் லாகவமிருக்கின்றது. இவ்வாறாக லாகவத்தின் வசத்தால் கூறிய ஸ்வரூப சம்பந்தம் சில பிரதியோகி ஸ்வரூபமேயாகின்றன; சில அநுயோகி ஸ்வரூபமாகின்றன, பிரதியோகி, அநுயோகி வடிவமா மிரு சம்பந்திகளினும் வேறாகயாதோர் ஸ்வரூப சம்பந்தமு முண்டாகிறதில்லை. ஆகையால் சையோகம், சமவாயமா மிருசம்பந்தங்களே முக்கிய சம்பந்தங்க ளெனப்படுகின்றன. இவ்விரு சம்பந்தங்களினும் வேறான முற்கூறிய ஸ்வரூப சம்பந்தங்கள் யாவும் கௌண சம்பந்தமெனப்படுகின்றன. இக்காரணத்தானேயே சாத்திரக்காரர் சம்பந்தத்திற்கு இந்தலக்ஷணங் கூறியிருக்கின்றனர். "ஸம்பந்திபிந்நத்வே ஸதி ஸம்பந்த்யாச்ரித: ஸம்பந்த:" (இ-ள்.) எப்பிரதியோகி, அநுயோகி வடிவ இருசம்பந்தங்களினும் வேறும், இரு சம்பந்திகளை ஆசிரயிப்பனவுமாமோ அவை சம்பந்தங்களெனப்படுகின்றன. எங்ஙனம்: புள், தருக்களின் சையோகம் புள், தருக்கள் வடிவ பிரதியோகி, அநுயோகி வடிவ இரு சம்பந்திகளினும் வேறும் அவ்விரு சம்பந்திகளை ஆசிரயித்ததுமாம். ஆகையால் அது சையோக சம்பந்தமெனப்படுகின்றது. இவ்வாறாக பட வடிவ அவயவியிக்குதந்து வடிவ அவயவங்களில் சமவாயம் யாதோ அச்சமவாயமும் அப்படதந்து வடிவ பிரதியோகி, அநுயோகி வடிவ இரு சம்பந்திகளினும் வேறும், அவ்விருசம்பந்திகளை ஆசிரயித்ததுமாம். ஆகையால் அது சமவாய சம்பந்தமெனப்படுகின்றது. இவ்வாறாகக்கூறிய சம்பந்தங்களின்லக்ஷணம் சையோகம் சமவாயமா மிரண்டினிடத்தே பொருந்தியதாம். முற்கூறிய ஸ்வரூப சம்பந்தங்களில் பொருந்துவதன்று. ஆகையால் சையோகம், சமவாயமா மிரண்டே

முக்கிய சம்பந்தங்க ளெனப்படுகின்றன. இவ்விரண்டினும் வேறான மற்றும் சர்வ சம்பந்தங்கள் கௌண சம்பந்த மெனப்படுகின்றன. ஆகையால் கூறிய சமவாயத்தின் லக்ஷணத்திற்கு ஸ்வரூப சம்பந்த வடிவ அத்தியந்தாபாவத்தில் அதிவியாப்தி யுண்டாகாது.

### ௬௫௭. சமவாயத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"அயுதஸித்தயோ: ஸம்பந்த: ஸமவாய:" (இ-ள்.) அயுத சித்த பதார்த்தங்களின் பரஸ்பர சம்பந்தம் யாதோ அச்சம்பந்தம் சமவாயமெனப்படுகின்றது. அவயவி அவயவம், குணம் குணி, கிரியை கிரியையுடையது, ஜாதி வியக்தி, விசேஷம் நித்தியத் திரவியம் இவ்விரண்டிரண்டு பதார்த்தங்கள் அயுத சித்தமெனப்படுகின்றன.

### ௬௫௮. அயுத சித்த பதார்த்தங்களின் லக்ஷணம்.

ஆண்டு "யயோர்த்வயோர்மத்யே ஏகமவிநஶ்யதவஸ்தமபராஶ்ரிதமேவாவதிஷ்டதே தாவயுதஸித்தௌ" (இ-ள்.) இரு பதார்த்தங்களுள் யாதர் மோர் பதார்த்தம் தனது அவிநாச காலத்தில் மற்றைய பதார்த்தத்தினை ஆசிரயித்தேயிருக்கின்றது. ஸ்வதந்திரமாக இருப்பதில்லை. அவ்விரு பதார்த்தங்கள் அயுத சித்தமெனப்படுகின்றன. எங்ஙனம்: தந்துமுதலிய அவயவங்களில் சமவாய சம்பந்தத்தால் இருக்கும் பட முதலிய அவயவிகள் அதாவது; அவயவ அவயவீ வடிவ பதார்த்தங்களுள் படாதிவடிவ அவயவீ பதார்த்தம் தனது அவிநாச காலத்தில் மற்றைய தந்துவாதி வடிவ அவயவ பதார்த்தத்தை ஆசிரயித்தே யிருக்கின்றது. அவயவ பதார்த்தத்தினை விட்டு அவயவீ பதார்த்தம் ஸ்வதந்தரமாக இருப்பதில்லை. ஆகையால் தந்துமுதலிய அவயவங்களும், படமுதலிய அவயவிகளுமாம் இரண்டும் அயுதசித்த மெனப்படுகின்றன. குணிவடிவ பிருதிவிமுதலிய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் உருவ முதலிய குணங்கள் அதாவது; அக்குண குணி வடிவமா மிரு பதார்த்தங்களுள் உருவாதி குண பதார்த்தம் தனது அவிநாச காலத்தில் மற்றைய திரவிய வடிவ குணி பதார்த்தத்தினை ஆசிரயித்தே யிருக்கின்றது. குணி பதார்த்தத்தினை விட்டு குண பதார்த்தம் ஸ்வதந்தரமாக இருப்பதில்லை. ஆகையால் உருவ முதலிய குணமும், பிருதிவி முதலிய திரவிய வடிவ குணியுமாமிரண்டும் அயுதசித்த மெனப்படுகின்றன. பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனமாமிவ்வைந்து மூர்த்தத் திரவியங்களில் சமவாய சம்பந்தத்தாலிருக்கும் கர்ம வடிவ கிரியை அதாவது; அக்கிரியை, கிரியையுடையதுமா மிரு பதார்த்தங்களுள் கிரியா பதார்த்தம் தனது அவிநாச காலத்தில் மற்றைய கிரியையுடைய மூர்த்தத் திரவியத்தினை ஆசிரயித்தே யிருக்கின்றது. கிரியையுடைய பதார்த்தத்தினை விட்டு கிரியா பதார்த்தம் ஸ்வதந்தரமாகவிருப்பதில்லை. ஆகையால் கர்ம வடிவ கிரியையும், கிரியையுடைய மூர்த்தத்திரவியமுமாமிரண்டும் அயுதசித்தமெனப்படுகின்றன. கட, படமுதலியவியக்திகளில் சமவாயசம்பந்தத்தாலிருக்கும் கடத்வ, படத்வ முதலிய ஜாதிகள் அதாவது; ஜாதி வியக்தி வடிவ இரு பதார்த்தங்கட்குள் கடத்வ, படத்வாதி வடிவ ஜாதி பதார்த்தம் கட, பட முதலிய வியக்திகளின்

அவிநாசகாலத்தில் மற்றைய கட, பட முதலிய வியக்திவடிவ பதார்த்தத்தினை ஆசிரயித்தே யிருக்கின்றது. ஆகையால் கடத்வ, படத்வ முதலிய ஜாதிகளும் கட, பட முதலிய வியக்திகளுமா மிரண்டும் அயுத சித்தமெனப்படுகின்றன. பரமாணு,ஆகாசமுதலிய நித்தியதிரவியங்களில் சமவாயசம்பந்தத்தாலிருக்கும் விசேஷபதார்த்தங்கள் அதாவது; விசேஷம், நித்தியதிரவியமா மிரண்டுபதார்த்தங்கட்குள் விசேஷபதார்த்தம் மற்றைய நித்திய திரவிய வடிவ பதார்த்தத்தினை ஆசிரயித்தே யிருக்கின்றது. நித்திய திரவியத்தினை விட்டு விசேஷ பதார்த்தம் ஸ்வதந்திரமாக இருப்பதன்று. ஆகையால் விசேஷமும், நித்திய திரவியமுமா மிரண்டும் அயுத சித்தமெனப்படுகின்றன. தந்து முதலிய அவயவங்களின் நாசத்திற்குப்பின் ஒரு க்ஷணத்திற்குப் பின்னரே பட முதலிய அவயவிகளின் நாசமுண்டாகின்றது. கட, பட முதலிய திரவியங்களின் நாசத்திற்குப்பின் ஒரு க்ஷணத்திற்கு பின்னரே உருவ முதலிய குணங்களின் நாசமும், கிரியையின்நாசமுண்டாகின்றன. ஏனெனின், தந்து முதலிய அவயவங்களின் நாசம் பட முதலிய அவயவிகளின் நாசத்திற்குக் காரணமாம். குண, கர்மத்தின் ஆசிரயமாகிய கட, பட முதலிய திரவியத்தின் நாசம் குண கர்மத்தின் நாசத்திற்குக் காரணமாம். காரணம் காரியத்தின் உற்பத்திக்கு முன்னரே இருப்பதாகின்றது. ஆகையால் பட முதலிய அவயவியும், உருவ முதலிய குணமும், கர்ம வடிவ கிரியையும் ஒரு க்ஷணமட்டும் கூறிய தந்து கட, பட முதலிய ஆசிரயங்களின்றி ஸ்வதந்திரமாகவே யிருக்கின்றன. என்றாலும் பட முதலிய அவயவியும், குண கர்மமும் ஸ்வதந்திரமாக இருக்கும் ஒரு க்ஷணம் அவயவீ முதலியவைகளின் விநாச காலமாம். அந்த விநாச காலத்தினை நிவிர்த்திக்கும் பொருட்டே அயுத சித்தத்தின் லக்ஷணத்தில் "அவிநாசகாலத்தில்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆகையால் இது சித்தமாயிற்று; கட, பட முதலிய அவயவிகட்கு கபால தந்து முதலிய அவயவங்களினோடுள்ள சம்பந்தமும், உருவ முதலிய குணங்கட்கு பிருதிவி முதலிய திரவியங்களினோடுள்ள சம்பந்தமும், கர்ம வடிவ கிரியைக்கு பிருதிவி முதலிய மூர்த்தத் திரவியங்களோடுள்ள சம்பந்தமும், கடத்வ படத்வ முதலிய ஜாதிகட்கு கட, பட முதலிய வியக்திகளோடுள்ள சம்பந்தமும், விசேஷபதார்த்தத்திற்கு நித்திய திரவியங்களோடுள்ள சம்பந்தமுமாம் அயுத பதார்த்தங்களின் சம்பந்தம் சமவாயமெனப்படுகின்றது.

### ௬௫௯. சமவாயத்தின் ஆசிரயத்தின் நிரூபணம்.

இவ்வாறாகக் கூறிய இரு லக்ஷணங்களால் லக்ஷித சமவாய பதார்த்தம் திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷமா மிவ்வைந்து பதார்த்தங்களிலேயே விசேஷணத் தன்மையெனப்பெயரிய ஸ்வரூப சம்பந்தத்தாலிருக்கின்றது. சமவாயத்திலும், அபாவத்திலும் அச்சமவாயமிருப்பதில்லை.

### ௬௬0. சமவாயத்தின் ஒருமையின் சாதக யுக்தி.

திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்களில் சமவாயம் ஒன்றேயிருக்கின்றது. ஏனெனின், ஒரே சமவாயத்தால் நிர்வாஹ முண்டாய் விடின் நாநா சமவாயம் ஒப்புவதில் முதலாவது கௌரவ தோஷத்தின் அடைவு உண்டா

கின்றது. இரண்டாவது, சமவாயத்தின் நாநாத்தன்மையில் சாதகமாக ஒரு பிரமாணமு மின்றும். ஆனால் மாறாக ஒரு வடிவாம் அநுகதப்பிரதீதியினால் சத்தா ஜாதியினைப் போன்று சமவாயத்தின் ஒருமையே சித்தமாகின்றதென்பதாகக் காட்டுவாம். எங்ஙனம்: பரஸ்பர விலக்ஷண திரவியம், குணம், கர்மமா மூன்று பதார்த்தங்களில் "திரவிய மிருக்கிறது, குண மிருக்கிறது, கர்மமிருக்கின்றது" என்பதான ஒரு வடிவாம் அநுகதப் பிரதீதி யுண்டாகின்றது. அவ்வநுகதப் பிரதீதி திரவிய முதலிய மூன்றில் அநுகதமாகிய ஒரு சத்தா வடிவ தர்மமின்றி சம்பவியாது. ஆகையால் அநுகதப் பிரதீதியின் வலிவால் திரவியம், குணம், கர்மமா மூன்றில் ஒரே சத்தா ஜாதி கற்பிக்கப் படுகின்றது. அங்ஙனமே பரஸ்பர விலக்ஷண திரவிய, குண முதலியவைகளில் "தந்துவில் படம் சமவேதம்" "கபாலத்தில் கடம் சமவேதம்" "திரவியத்தில் குணம் சமவேதம், கர்மம் சமவேதம், சாமான்னியம் சமவேதம்" என்பதான ஒரு வடிவாம் அநுகதப் பிரதீதி உண்டாகின்றது. அவ்வொரு வடிவாம் பிரதீதி தந்து முதலியவைகளில் அநுகதமாகிய ஒரு சமவாயமின்றி சம்பவியாது. ஆகையால் அவ்வநுகதப் பிரதீதியின் வலிவால் திரவிய, குண, முதலிய அயுதசித்த பதார்த்தங்களில் ஒரே சமவாயத்தை அங்கிகரிக்க வேண்டும். இவ்வாறாய யுக்தியால் அயுத சித்த பதார்த்தங்களில் ஒரே சமவாயம் சித்தமாகின்றது.

சங்கை:—சமவாயத்தினை ஒன்றாக வொப்பின் உருவமிலா வாயு முதலியவைகளினும் "உருவமுடையது வாயு" என்பதாக உருவமுடையப் பிரதீதி உண்டாக வேண்டும். ஏனெனின் பிருதிவி முதலியவைகளிலிருக்கும் உருவத்தின் சமவாயமும், வாயுவிலிருக்கும் பரிசத்தின் சமவாயமும் உமது மதத்தில் ஒன்றேயாம். ஆகையால் வாயு முதலியவைகளில் உருவ சமவாயத்தினிருப்புளதாக உருவத்தின் தோற்றம் அவசியம் உண்டாகவேண்டும். அங்ஙனமாவதின்று.

சமாதானம்:—உருவ விசிஷ்ட சமவாயத்தின் அதிகரணத்தன்மை யாதோ அந்த விசிஷ்ட அதிகரணத்தன்மையே "இது உருவமுடையது" என்பதான தோற்றத்திற்குக் காரணமாகின்றது. ஆண்டு வாயு முதலியவைகளில் உருவ குணத்தின் அபாவமிருப்பதால் உருவ விசிஷ்ட சமவாயத்தின் அதிகரணத்தன்மையின்றும். ஆனால் பரிசாதி விசிஷ்ட சமவாயத்தின் அதிகரணத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் அவ்வாயு முதலியவைகளில் "இது உருவமுடையது" என்பதான தோற்றம் உண்டாகிறதில்லை. ஆனால் உருவ விசிஷ்ட சமவாயத்தின் அதிகரணத்தன்மையுடைய பிருதிவி, ஜலம், தேயுவினிடத்திலேயே உருவமுடைய தோற்றம் உண்டாகின்றது. ஆகையால் சமவாயத்தினை ஒன்றாக வொப்புவதிலும் உருவாதி விசிஷ்ட சமவாயத்தின் அதிகரணத்தன்மைகளின் பேதமிருப்பதால் "உருவமுடையது வாயு" "பரிசமுடையது ஆகாசம்" "கந்தமுடையது ஜலம்" "கிரியையுடையது ஆத்மா" என்பதான இவை முதலியப் பிரதீதி உண்டாகிறதில்லை.

௬௬௧. சமவாயத்தின் நித்தியத்தன்மையின் சாதகயுக்தி.

சமவாயம் உற்பத்தி விநாசமில்லாததாவதால் நித்தியமாம். ஓர் கால் சமவாயத்தினை அநித்தியமாக வொப்பின் எதுவெது பாவகாரியமாகின்றதோ அதுவது சமவாயி காரணத்தால் ஜன்னியமேயாகின்றது. சமவாயி காரணமின்றி எப்பாவ காரியத்தின் உற்பத்தியும் உண்டாகிறதில்லை. ஆகையால் சமவாய வடிவ பாவ காரியத்திற்கும் யாதாமோர் சமவாயி காரணம் அவசியம் ஒப்பப்படுவதாகும். ஆண்டு சமவாய சம்பந்தத்தால் காரிய சம்பந்த திரவியத்திற்கே சமவாயிகாரணத்தன்மை யுண்டாகின்றது. எங்ஙனம்: சமவாய சம்பந்தத்தால் பட வடிவ காரிய சம்பந்த தந்துக்கட்கே படத்தைக் குறித்து சமவாயி காரணத்தன்மை யுண்டாகின்றது. அங்ஙனமே ஈண்டு பிரசங்கத்தில் சமவாய வடிவ காரியத்தின் சமவாயி காரணம் யாதோ அச்சமவாயி காரணம் சமவாயத்தால் அக்காரிய சம்பந்தமாகி சமவாயத்தைக் குறித்து சமவாயி காரணமாகின்றதா? அல்லது வேறோர் சமவாயத்தால் காரிய சம்பந்தமாகி சமவாயத்தைக் குறித்து சமவாயி காரணமாகின்றதா?. ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் சமவாயத்தின் உற்பத்தியில் சமவாயத்தின் அபேக்ஷை வடிவ ஆத்மாசிரய தோஷத்தின் பிராப்தியுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தை அங்கிகரிக்கின் வேறு சமவாயத்திற்கும் முதற்சமவாயத்தினைப் போன்று காரிய வடிவமே ஒப்பவேண்டியதாகும். அவ்வேறு சமவாயத்திற்கும் யாதாமோர் சமவாயி காரணம் ஒப்ப வேண்டியதாகும். அதனிடத்தும் இவ்விசாரம் செய்ய வேண்டும். அவ்வேறு சமவாயமும் யாதாமோர் சமவாயத்தால் தனது சமவாயி காரணத்தில் சம்பந்தப் படுகின்றதா? தன்னால் சம்பந்தப்படுகின்றதா? அல்லது முதற் சமவாயத்தால் சம்பந்தப்படுகின்றதா? அல்லது யாதாமோர் மூன்றாவது சமவாயத்தால் சம்பந்தப் படுகின்றதா?. ஆண்டு முதற்பக்ஷத்திலோ முற்போன்று ஆத்மாசிரய தோஷத்தின் அடைவு உண்டாகும். இரண்டாவது பக்ஷத்தில் பரஸ்பர அபேக்ஷா வடிவ அன்னியோன்னியாசிரய தோஷத்தின் அடைவு உண்டாகும். மூன்றாவது பக்ஷத்திலும் அம்மூன்றாவது சமவாயத்திற்கு அம்முதற் சமவாயத்தின் அபேக்ஷை யொப்புவதில் சக்கிரிகா தோஷத்தின் அடைவு உண்டாகும். மூன்றாவது சமவாயத்திற்கு நான்காவது சமவாயத்தின் அபேக்ஷை, நான்காவது சமவாயத்திற்கு ஐந்தாவது சமவாயத்தின் அபேக்ஷை இவ்வாறாக பின்பின் சமவாயங்களின் தொடர்ச்சியை யொப்புவதில் அநவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகும். ஆகையால் சமவாயத்திற்கு யாதாமோர் சமவாயி காரணமும் சம்பவியாது. சமவாயி, அசமவாயி காரணங்களின்றி எப்பாவ காரியத்தின் உற்பத்தியு முண்டாகிறதில்லை. ஆகையால் சமவாயத்திற்கு உற்பத்தியின்மையே யொப்பவேண்டும். அல்லது சமவாயத்திற்கு நாசத்தை ஒப்பின் சமவாயத்தின் நாச காலத்தில் ஆத்மா முதலிய நித்தியத் திரவியங்களில் திரவியத்வ முதலிய ஜாதிகளின் விசிஷ்ட அநுபவமே யுண்டாகாததாகும். ஆகையால் சமவாயத்திற்கு விநாசமின்மையும் ஒப்ப வேண்டும். இவ்வாற்றால் உற்பத்தி விநாச மிலாததாவதால் சமவாயம் நித்தியமாகவே சித்திக்கின்றது.

## ௬௯௨ சமவாயத்தின் பிரத்தியக்ஷத்திலும், அப்பிரத்தியக்ஷத்திலும் விவாதம்.

ஆண்டு முற்கூறிய சமவாயத்தின் ஒருமைத்தன்மையிலும், நித்தியத் தன்மையிலும் வைசேஷிகர்கட்கும், நையாயிகர்கட்கும் பரஸ்பரம் விவாதமின்றாம்; வைசேஷிகரும், நையாயிகருமாமிருவரும் சமவாயத்தின் ஒருமைத் தன்மையினையும், நித்தியத்தன்மையினையும் அங்கீகரிக்கின்றனர். ஆனால் சமவாயத்தின்பிரத்தியக்ஷத்திலும், அப்பிரத்தியக்ஷத்திலும் அவ்விருவர்கட்கும் பரஸ்பர விவாதமுண்டு. ஆண்டு வைசேஷிகரோ சமவாயத்தினை அதீந்திரியமாக வொப்பி கேவலம் அநுமானப் பிரமாணத்திற்கே விஷயமாக வொப்புகின்றனர். நையாயிகரோ சமவாயத்தினை சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்களால் ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாக வொப்புகின்றனர்.

## ௬௯௩. சமவாயத்தினை அப்பிரத்தியக்ஷமாக வொப்புவோராகிய வைசேஷிகர்களின் மத வர்ணனம்.

சம்பந்தத்தின் பிரதியோகி, அநுயோகி வடிவ சம்பந்திகள் யாவையோ அவ்வெல்லா சம்பந்திகளின் பிரத்தியக்ஷமே அச்சம்பந்தங்களின் பிரத்தியக்ஷத்தில் காரணமாகின்றது. சர்வ சம்பந்திகளின் பிரத்தியக்ஷமின்றி சம்பந்தத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஒரு சமவாயத்தின் சம்பந்தி திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷமா மிவை யாவுமாம். அவ்வெல்லா சம்பந்திகளின் பிரத்தியக்ஷம் சர்வஞ்ஞ ஈசுவரனுக்கன்றி எஜ்ஜீவனுக்கும் உண்டாகாது. பிரத்தியக்ஷ யோக்கிய மிக அற்ப கட முதலிய சம்பந்திகளின் பிரத்தியக்ஷம் ஜீவனுக் குண்டாகின்றது. என்றாலும் பரமாணு முதலிய அதீந்திரிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷம் ஜீவனுக் குண்டாகிறதில்லை. அதீந்திரிய பதார்த்தமும் ஒரு சமவாயத்தின் சம்பந்தியேயாம். ஆகையால் ஒரு சமவாயத்தினது சர்வசம்பந்திகளின் அப்பிரத்தியக்ஷமுளதாக சமவாயத்தின் பிரத்தியக்ஷமும் சம்பவியாது. அல்லது சம்பந்தத்தின் பிரத்தியக்ஷத்தில் சர்வ சம்பந்திகளின் பிரத்தியக்ஷத்தினைக் காரணமாக வொப்பாது மிக அற்ப சம்பந்தியின் பிரத்தியக்ஷத்தினையே காரணமாக வொப்பின் அதீந்திரிய ஆகாசத்தினோடுண்டாம் கடத்தின் சையோக சம்பந்தம் யாதோ அச்சையோக சம்பந்தத்தின் பிரத்தியக்ஷமு முண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் அச்சையோகத்தினது கட வடிவ ஒரு சம்பந்தியின் பிரத்தியக்ஷமே உலகருக்கிருக்கின்றது. ஆனால் வேறு ஆகாச வடிவ சம்பந்தியின் பிரத்தியக்ஷம் உலகருக்கின்று. கட ஆகாசத்தின் சையோகத்தினது பிரத்தியக்ஷம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் சம்பந்தத்தின் பிரத்தியக்ஷத்தில் அவ்வெல்லா சம்பந்திகளின் பிரத்தியக்ஷத்தினை அவசியம் காரணமாக வொப்ப வேண்டும். ஆகையால் சமவாயம் பிரத்தியக்ஷமன்றாம். ஆனால் அதீந்திரியமாம். அதாவது; சமவாயம் எவ்விந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கும் விஷயமாகிறதில்லை. அல்லது சமவாயத்தின் அதீந்திரியத் தன்மை கூறிய யுக்தியால் சித்திப்பதுடன் அநுமானப் பிரமாணத்தானும் சித்தமாம். அவ்வநுமானத்தின் வடிவ மிதுவாம். "ஸமவாயஃ அதீந்த்ரியஃ ஸ்ர்வாநுபலப்தஸம்பந்திகஸம்பந்தத்வாத் ஆகாஶாதிவத்"(இ-ள்.) சமவாயம்

அதீந்திரியமாக யோக்கியமாம், ஆத்மாவினும் வேறாகி சமவாய சம்பந்தத்தா லிராத பாவ வடிவமாவதால், எவ்வெப்பதார்த்தம் ஆத்மாவினும் வேறும், சமவாய சம்பந்தத்தா லிராததும், பாவ வடிவமு மாமோ அவ்வப்பதார்த்தம் அதீந்திரியமாகின்றது. எங்ஙனம்: ஆகாசம் ஆத்மாவினும்வேறும், எப்பதார்த்தத்திலும் சமவாய சம்பந்தத்தால் இராததாவதால், அசமவேதமும், பாவ வடிவமுமாம். ஆகையால் ஆகாசம் அதீந்திரியமேயாம். அங்ஙனமே சமவாயமும் ஆத்மாவினும் வேறும், சமவாய சம்பந்தத்தாலிராததும், பாவ வடிவமுமாம். ஆகையால் ஆகாசத்தினைப் போன்று சமவாயத்தினையும் அதீந்திரியமாகவே, ஒப்ப வேண்டும். ஆண்டு இவ்வநுமானத்தில் "சமவாய சம்பந்தத்தாலிராதபாவமாவதால்" என இம்மாத்திரமே ஏதுவாகக்கூறி அவ்வேதுவில் "ஆத்மாவினும் வேறும்" என்னும் பதங் கூறாவிடின் ஆத்மாவில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின், ஆத்மா நித்திய திரவியமாவதால் எப்பதார்த்தத்திலும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று. ஆகையால் ஆத்மா அசமவேதமும், பாவ வடிவமுமாம். ஆனால் ஆத்மா அதீந்திரியமன்றாம். மனவடிவ இந்திரியத்தால் ஜன்னியபிரத்தியக்ஷத்தின் விஷயமேயாம். ஆகையால் அதீந்திரியத்வ வடிவ சாத்தியத்தின் அபாவமுடைமை ஆத்மாவிலிருப்பதால் அசமவேத பாவத்வ வடிவ ஏது வியபிசாரியேயாகும். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "ஆத்மாவினும் வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அவ்வாத்மா ஆத்மாவினும் வேறன்று. ஆகையால் அவ்வாத்மாவில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. கூறிய அவ்வநுமானத்தில் "ஆத்மாவினும் வேறும் பாவ வடிவ மாவதாலும்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "சமவாய சம்பந்தத்தாலிராததும்" என்னும் பதங்கள் கூறாவிடின் கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின், கட முதலியன ஆத்மாவினும் வேறும், பாவ வடிவமுமாம். ஆகையால் அவ்வேதுவோ அக்கட முதலியவைகளி லிருக்கின்றது. ஆனால் அதீந்திரியத்வ வடிவ சாத்தியம் கட முதலியவைகளி லின்றாம். அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "சமவாய சம்பந்தத்தா லிராததும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு கட முதலியன அசமவேதமன்றாம்; அனால் கபால முதலிய அவயவங்களில் சமவாய சம்பந்தத்தா லிருப்பனவேயாம். ஆகையால் கட முதலியவைகளில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. அல்லது அவ்வநுமானத்தில் "ஆத்மாவினும் வேறும் சமவாய சம்பந்தத்தா லிராததும்" என இம்மாத்திரமே ஏதுவாகக் கூறி அவ்வேதுவில் "பாவம்" என்னும் பதங் கூறாவிடின் கட முதலியவைகளின் அபாவத்தில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாம். ஏனெனின், அவ்வபாவம் ஆத்மாவினும் வேறும், சமவாய சம்பந்தத்தாலிராததுமாம். ஆகையால் அவ்வேதுவோ அவ்வபாவத்தி லிருக்கின்றது. ஆனால் அதீந்திரியத்வ வடிவ சாத்தியம் அபாவத்தி லின்றாம். எக்காரணத்தாலெனின் அவ்வபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகின்றது. அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அவ்வேதுவில் "பாவம்" என்னும்

பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வபாவத்தில் பாவ வடிவத்தன்மையின்றும். ஆகையால் அபாவத்தில் கூறிய வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாறுய அநுமானப் பிரமாணத்தால் சமவாயத்தில் இந்திரிய கிராஹ்ய மின்மையே சித்தமாகின்றது. இத்தகைய அதீந்திரிய சமவாயத்தின் சித்தி இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணங்களா லுண்டாகிறதில்லை. ஆனால் தர்ம, அதர்மத்தினைப் போன்று அதீந்திரிய சமவாயத்தின் சித்தி கேவலம் அநுமானப் பிரமாணத்தாலேயே யுண்டாகின்றது.

## ௬௯௪. சமவாயத்தின் சாதக அநுமானம்.

"ரூபவாந்கட: இதிவிஶிஷ்டஜ்ஞாநம் விஶேஷணவிஶேஷ்யஸம்பந்தவிஷயகம் விஶிஷ்டஜ்ஞாநத்வாத் தண்டீதி விஶிஷ்டஜ்ஞாநவத்" (இ-ள்.) இக்கடம் உருவமுடையதா மென்பதான விசிஷ்ட ஞானம் விசேஷண, விசேஷியமா மிரண்டின் சம்பந்தத்தை விஷயஞ் செய்வதாக யோக்கியமாம், விசிஷ்ட ஞானமாவதால், எதுவெது விசிஷ்ட ஞானமாகின்றதோ அதுவது விசேஷண, விசேஷியமா மிரண்டின் சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதேயாகின்றது. எங்ஙனம்: தண்டீ புருஷன் என்னும் விசிஷ்ட ஞானம் விசிஷ்ட ஞான வடிவமாவதால் தண்ட வடிவ விசேஷணத்தினதும், புருஷ வடிவ விசேஷியத்தினதுமாம் சையோக சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதேயாகின்றது. அங்ஙனமே உருவமுடையது கடம் என்னும் விசிஷ்ட ஞானமும் உருவ விசேஷணத்தினதும், கட வடிவ விசேஷியத்தினதுமாம் சம்பந்தத்தை விஷயஞ் செய்வதேயாகின்றது. இரு திரவியங்கட்கே பரஸ்பர சையோக சம்பந்த முண்டாகின்றது. திரவியத்திற்கும், குணத்திற்கும் சையோக சம்பந்த முண்டாகிறதில்லை. ஆகையால் உருவ குணத்திற்கு கடத்தினோடு சையோகசம்பந்தமோ சம்பவியாது. பரிசேஷமாகக் கூறிய அநுமானத்தால் விசிஷ்ட ஞானத்தின் விஷய வடிவமாக சமவாயமே சித்தமாகின்றது.

## ௬௯௫. சமவாயத்தினை பிரத்தியக்ஷமாக வொப்பும் நையாயிகர்களின் மத வர்ணனம்.

சமவாயத்தினை பிரத்தியக்ஷமாக வொப்புவோராகிய நையாயிகர்களின் கருத்திதுவாம். "இஹ கபாலேஷு கடஸமவாய: இஹ தந்துஷு படஸமவாய:" (இ-ள்.) கபாலங்களில் கடத்தின் சமவாயமும், தந்துக்களில் படத்தின் சமவாயமு மிருக்கின்றது. என்பதான தோற்றம் கபால, தந்து முதலிய அவ்யவங்களில் கட, பட முதலிய அவயவிகளின் சமவாய சம்பந்தத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் சமவாயம் அதீந்திரியமன்றும். ஆனால் சக்ஷு முதலிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமேயாம். அல்லது வைசேஷிகர்கள் சம்பந்தத்தின் பிரத்தியக்ஷத்தில் சர்வ சம்பந்திகளின் பிரத்தியக்ஷமும் காரணமாகவேண்டு மென்பதாக அங்கீகரிக்கும் நியமும் சம்பந்த மாத்திரத்தின் பிரத்தியக்ஷத்தி லின்றும். கேவலம் சையோக மாத்திரத்தின் பிரத்தியக்ஷத்திலேயே அந்நியமிருக்கின்றது. அதாவது ; சையோக சம்பந்தத்தின் பிரத்தியக்ஷத்தில் சையோகத்தினது சர்வசம்பந்திகளின் பிரத்தியக்ஷம் காரணமாகின்றது. ஆனால் சமவாயத்தின் பிரத்தியக்ஷத்தில் சமவாயத்தினது

சர்வ சம்பந்திகளின் பிரத்தியக்ஷம் காரணமாகிறதில்லை. ஆனால் சில பிரதியோகி, அநுயோகி வடிவ சம்பந்தியின் பிரத்தியக்ஷத்தாலேயே சமவாயத்தின் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. ஆகையால் இது கடமென்னுஞ் சக்ஷு இந்திரிய பிரத்தியக்ஷம் எங்ஙனம் கடத்தினையும், கடத்வ ஜாதியினையும் விஷயஞ்செய்கின்றதோ அங்ஙனமே கட, கடத்வத்தின் சமவாயத்தினையும் விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே நீலகடம் என்னுஞ் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும் நீலவடிவ விசேஷணத்தினையும், கட வடிவ விசேஷ்யத்தினையும், அவ்விரண்டின் சமவாயத்தினையும் விஷயஞ் செய்கின்றது. இவ்வாறாக எவ்விந்திரியத்தால் எத்திரவியத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அவ்வத்திரவியங்களி லிருக்கும் குண, கர்மங்களின் சமவாயத்தினதும், ஜாதியின் சமவாயத்தினதும் பிரத்தியக்ஷம் அவ்வவ்விந்திரியத்தாலேயே யுண்டாகின்றது.

## ௬௬௬. சமவாயத்தினை நாநாவாக வொப்பும் நவீன நையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். சமவாயசம்பந்தம் ஒன்றன்றாம்; நாநாவாம். ஏனெனின் பிருதிவியிலேயே கந்தத்தின் சமவாய மிருக்கின்றது. ஜலத்தில் கந்தத்தின் சமவாய மின்றாமென்பதான இவை முதலிய தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. இத்தோற்றத்தால் சமவாய சம்பந்தத்திற்கு நாநாத்தன்மையே சித்தமாகின்றது. அதாவது; பிருதிவியில் கந்த குணத்தின் சமவாயம் வேறாம். ஜலத்தில் சீதபரிசத்தின் சமவாயம் வேறாம். தேயுவில் வெம்மைப் பரிசத்தின் சமவாயம் வேறாம். இவ்வாறாக எவ்வெத்திரவியத்தில் எவ்வெக் குணமும், எவ்வெக்கர்மமும், எவ்வெஜ்ஜாதியு மிருக்கின்றதோ அவ்வத்திரவியத்தில் அவ்வக்குணத்தினது சமவாய சம்பந்தமும், அவ்வக்கர்மத்தினது சமவாய சம்பந்தமும், அவ்வஜ் ஜாதியினது சமவாய சம்பந்தமும் வேறேயாகின்றது. இவ்வாறாக அச்சமவாயம் நாநாவாகவே சித்திக்கின்றது.

## ௬௬௭. சமவாயத்தினை நாநாவாகவும், அநித்தியமாகவும் ஒப்புவோராகிய பிரபாகரரின் மத வர்ணனம்.

ஈண்டு மீமாஞ்சக பிரபாகரரின் மதமோ இதுவாம். கூறிய சமவாயம் நாநாவும், அநித்தியமுமாம். ஏனெனின் "கருமை நாசமாயிற்று, செம்மை உண்டாயிற்று" என்பதான தோற்றம் கருமை உருவத்தினது சமவாயத்தின் விநாசத்தினையும், செம்மை உருவத்தினது சமவாயத்தின் உற்பத்தியினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அத்தோற்றத்தின் வழியாலேயே சமவாயத்தின் அநித்தியத்தன்மையும், நாநாத்தன்மையும் சித்தமாகின்றது.

## ௬௬௮. பிரபாகரரின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் பிரபாகரரது மதம் அசங்கதமாம். ஏனெனின் "கருமை நாசமாயிற்று, செம்மை உண்டாயிற்று" என்பதான தோற்றத்தில் சமவாயத்தின் உற்பத்தி விநாசம்தோற்றுகிறதில்லை. ஆனால் கருமை, செம்மை உருவத்தின் உற்பத்தி விநாசமே தோற்றுகின்றது. ஓர் கால் அத்தோற்றத்தால் சமவாயத்தின் உற்பத்தி விநாசமே யொப்பின் "கடம் நடஷ்டமாயிற்று"

என்பதான தோற்றத்தாலும் கடத்தின் சமவாயத்தின் நாசமே சித்தியாகும். கடத்தின் விநாசம் சித்தியாததாகும். ஆகையால் கருமை, செம்மை முதலிய வைகளைப் போன்று கடத்திற்கும் நித்தியத்தன்மை சித்தமாகும். கடத்தின் நித்தியத்தன்மை உமக்கும் அங்கிகாரமின்றாம்.

### ௬௬௯. சமவாய ஸ்தானத்தில் ஸ்வரூப சம்பந்தத்தினை யொப்பும் பட்டபாதரின் மதம்.

ஈண்டு மீமாஞ்சக பட்டபாதரின் மதமோ இதுவாம். நையாயிகர்கள் சமவாய சம்பந்தம் அங்கீகரித்துள்ள அவயவம் அவயவி, குணம் குணி முதலிய அயுதசித்த பதார்த்தங்கட்கு பரஸ்பரம் ஸ்வரூப சம்பந்தமேசம்பவிக்கின்றது. நையாயிகர்களும் அபாவ முதலியவைகட்கு ஸ்வரூப சம்பந்தமே அங்கீகரிக்கின்றனர். ஆகையால் ஸ்வரூப சம்பந்தத்தினும் வேறான ஒரு சமவாய சம்பந்தம் அயுதசித்த பதார்த்தங்கட்கு அங்கீகரிப்பது பயனின்மையாம்.

### ௬௭௦. பட்டபாதரின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறும் பட்டபாதரின் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் திரவியம், குணம், கர்ம முதலிய அனேக ஸ்வரூபங்களில் சம்பந்தத்தன்மையினை கற்பிப்பதில் அதி கௌரவ தோஷத்தின் அடைவு உண்டாகும். ஒரு சமவாயத்திலேயே அயுதசித்த பதார்த்தங்களின் சம்பந்தத்தன்மை யொப்புவதில் லாகவ மிருக்கின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தால் விழுங்கப் படுவதாவதால் பட்டபாதரின் மதம் நலமுடையதன்றாம். சமவாய பதார்த்த நிரூபணம் முற்றிற்று.

### ௬௭௧. அபாவ பதார்த்த நிரூபணம்.

அபாவ பதார்த்தத்தின் லக்ஷணம். ஈண்டு "த்ரவ்யாதிஷட்காந்யோந்யாபாவவாந் அபாவ:" (இ-ள்.) திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயமா மிவ்வாறு பதார்த்தங்களின் பேத வடிவ அந்நியோன்னியா பாவம் யாதோ அவ்வந்நியோன்னியா பாவமுடைய பதார்த்தம் அபாவமெனப்படுகின்றது. ஈண்டு திரவிய முதலிய ஆறு பதார்த்தங்களின் பேத வடிவ அந்நியோன்னியா பாவம் ஏழாவது பதார்த்தமாகிய அபாவத்திலேயே யிருக்கின்றது. வேறெப் பதார்த்தத்திலுமின்று. திரவிய பதார்த்தம் ஒன்றில் குண முதலிய ஐந்து பதார்த்தங்களின் பேத மிருக்கின்றது. என்றாலும் திரவியத்தில் திரவியத்தின் பேத மிருப்பதின்று. இவ்வாறாக குண, கர்ம முதலியவைகளிலும் திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்களின் பேதமே இருக்கின்றது. ஆனால் தனது பேதம் தன்னிடத்திலிருப்பதில்லை. ஆகையால் திரவிய முதலிய ஆறு பதார்த்தங்களின் பேதம் கேவலம் அபாவ பதார்த்தம் ஒன்றிலேயே இருக்கின்றது. ஆகையால் கூறிய இவ்வபாவத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது.

### ௬௭௨. அபாவத்தின் இரண்டாவது லக்ஷணம்.

"நிஷேதமுகப்ரதீதிவிஷய: அபாவ:" (இ-ள்.) எப்பதார்த்தம் நிஷேதமுக பிரதீதிக்கு விஷயமாகின்றதோ அப்பதார்த்தம் அபாவமெனப்

படுகின்றது. ஆண்டு "பூதலத்தில் கடமில்லை" "கடம் படமன்று" என்பதான இவை முதலிய நிஷேத முக வுணர்ச்சி யாதோ அவ்வுணர்ச்சி பூதல முதலியவைகளில் கட முதலியவைகளின் அபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் நிஷேத முக உணர்ச்சிக்கு விஷயத்வ வடிவ அபாவத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு அபாவத்தின் வாசகமாகிய 'ந' என்னும் சத்த முதலியவைகளா லுண்டான உணர்ச்சியினை நிஷேத முக உணர்ச்சி யென்பர்.

கஎ௩. அபாவத்தின் மூன்றுவது லக்ஷணம்.

"ஸம்பந்த ஸாத்ருஸ்ய பின்நத்வே ஸதி ப்ரதியோகி ஜ்ஞாநாதீந ஜ்ஞாநவிஷய꞉ அபாவ꞉" (இ-ள்.) எப்பதார்த்தம் சம்பந்தத்தினும், சாத்ருசியத்தினும் வேறும் பிரதியோகியை விஷயஞ் செய்யும் ஞானத்தின் ஆதீன ஞானத்தின் விஷயமுமாமோ அப்பதார்த்தம் அபாவமெனப்படுகின்றது. பூதல முதலியவைகளில் இருக்கும் கட, பட முதலியவைகளின் அபாவம் சையோக, சமவாய வடிவ சம்பந்தங்களினும் வேறுமாம். அங்ஙனமே கிளிஞ்சல் முதலியவைகளி லிருக்கும் வெள்ளி முதலியவைகளின் சாத்ருசியத்தினும் வேறுமாம். பிரதியோகியின் ஞானமின்றி அபாவத்தின் ஞானம் உண்டாகிற தில்லை. ஆகையால் கட, பட முதலிய பிரதியோகியின் ஞானத்தால் ஜன்னிய "கடாபாவமுடையது பூதலம்" என்பதான இவை முதலிய ஞானத்திற்கு அபாவம் விஷயமுமாம். ஆகையால் அபாவத்திற்கு கூறிய இம் மூன்றுவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு இந்த லக்ஷணத்தில் "சம்பந்த சாத்ருசியத்தினும் வேறும்" என்னும் பதங்கள் கூறுவிடின் அபாவத்தின் லக்ஷணத்திற்கு சையோகம், சமவாய வடிவ சம்பந்தங்களிலும் சாத்ருசியத்திலும் அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் அபாவத்தின் ஞானத்தில் அபாவத்தினது பிரதியோகியின் ஞானம் காரணமாகின்றதோ அங்ஙனமே சையோக, சமவாய சம்பந்தங்களின் ஞானத்திலும் சம்பந்தங்களினது பிரதியோகிகளின் ஞானம் காரணமாகின்றது. அங்ஙனமே கிளிஞ்சலிலுள்ள சாத்ருசியத்தின் ஞானத்திலும் சாத்ருசியத்தினது பிரதியோகி வடிவ வெள்ளியின் ஞானம் காரணமாகின்றது. பிரதியோகியின் ஞானமின்றி சம்பந்த சாத்ருசியத்தின் ஞான முண்டாகிறதில்லை. ஆகையால் அபாவத்தினைப் போன்று சாத்ருசியத்திலும் பிரதியோகி ஞானத்தினது ஆதீன ஞானத்தின் விஷயத்தன்மை யிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்பந்த சாத்ருசியத்தினும்வேறும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. தனது பேதம் தன்னிடத்தி லிருப்பதில்லை. ஆகையால் சம்பந்தத்திலோ சம்பந்தத்தின் பேதமின்றும். சாத்ருசியத்தில் சாத்ருசியத்தின் பேதமின்றும். ஆகையால் சம்பந்தத்திலும், சாத்ருசியத்திலும் அபாவத்தின்லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித அபாவ பதார்த்தம் சம்சர்க்காபாவம், அந்நியோன்னியாபாவம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். முதலாவது சம்சர்க்காபாவமோ பிராசீன நையாயி

கர்கள் மதத்தில் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், சாமயிகாபாவம் என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். நவீன தார்க்கிகர்கள் சாமயிகாபாவத்தினை யொப்பினாரில்லை. ஆகையால் அவர்கள் மதத்தில் சம்சர்க்காபாவம் மூவகைத்தாம். மற்றைய பேத வடிவ அந்நியோன்னியாபாவம் ஒன்றேயாம். ஆகையால் பிராசீன நையாயிகர்கள் மதத்திலோ அபாவ பதார்த்தம் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், சாமயிகாபாவம், அந்நியோன்னியாபாவம் என்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். நவீன நையாயிகர்கள் மதத்தில் அபாவபதார்த்தம் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், அந்நியோன்னியாபாவம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம்.

### கஎச. சம்சர்க்காபாவத்தின் லக்ஷணம்.

ஆண்டு "அந்யோந்யாபாவபிந்நாபாவ: ஸம்ஸர்காபாவ:" (இ-ள்.) அந்நியோன்னியாபாவத்தினும் வேறான அபாவம் சம்சர்க்காபாவமெனப் படுகின்றது. ஆண்டு "அபாவம் சம்சர்க்காபாவம்" என இம்மாத்திரமே சம்சர்க்காபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அந்நியோன்னியா பாவத்தினும் வேறான" என்னும் பதங்கள் கூறாவிடின் அந்நியோன்னியா பாவத்தில் சம்சர்க்காபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அந்நியோன்னியாபாவத்தினும் வேறான" என்னும் பதங்கள் கூறப்பட்டன. அந்நியோன்னியா பாவத்தின் பேதம் அந்நியோன்னியா பாவத்தி லிருப்பதன்று. ஆனால் சம்சர்க்கா பாவத்திலேயே அந்நியோன்னியா பாவத்தின் பேத மிருக்கின்றது. ஆகையால் அந்நியோன்னியாபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "அந்நியோன்னியாபாவத்தினும் வேறானது சம்சர்க்காபாவம்" என இம்மாத்திரமே சம்சர்க்காபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறாவிடின் கட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். ஏனெனின் எங்ஙனம் சம்சர்க்காபாவம் அந்நியோன்னியாபாவத்தினும் வேறுமோ அங்ஙனமே கட முதலியனவும் அந்நியோன்னியாபாவத்தினும் வேறேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியவைகளில் அபாவ வடிவத்தன்மையின்றும். ஆகையால் கட முதலியவைகளில் சம்சர்க்காபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### கஎரு. பிராகபாவத்தின் லக்ஷணம்.

முற்கூறிய பிராகபாவ முதலிய ஐவகை அபாவத்தில் முதலாவது பிராகபாவத்தினை வர்ணிப்பாம். "விநாஶ்யபாவ: ப்ராகபாவ:" (இ-ள்.) விநாசமுடைய அபாவம் பிராகபாவமெனப்படுகின்றது. ஆண்டு பட முதலிய காரியங்களின் உற்பத்திக்கு முன் அப்பட முதலிய காரியங்களின் சமவாயி காரணமாகிய தந்து முதலியவைகளில் அப்பட முதலிய காரியங்களின் பிராகபாவமிருக்கின்றது. அந்த பிராகபாவம் அப்பட முதலிய காரியங்களின்

உற்பத்தி யுண்டாக நாசமாய் விடுகின்றது. ஆகையால் பிராகபாவம் விநாசமும், அபாவ வடிவமுமாம். ஆண்டு "விநாசமுடையது பிராகபாவம்" என இம்மாத்திரமே பிராகபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்தலக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் பிராகபாவம் விநாசமுடையதாமோ அங்ஙனமே கட முதலியனவும் விநாசமுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியவைகளில் அபாவ வடிவத்தன்மையின்றும். ஆனால் பாவ வடிவத்தன்மையிருக்கின்றது. ஆகையால் கட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "அபாவம் பிராகபாவம்" என இம்மாத்திரமே பிராகபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விநாசமுடையது" என்னும் பதங் கூறுவிடின் பிரத்துவம்சாபாவ முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தினைப் போன்று பிரத்துவம்சாபாவ முதலியவைகளிலும் அபாவ வடிவத்தன்மையே யிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விநாசமுடையது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிரத்துவம்சாபாவ முதலியவைகளில் விநாச முடைமை யின்றும்; விநாசமின்மை யிருக்கின்றது. ஆகையால் அவ்வபாவங்களில் பிராகபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. கூறிய பிராகபாவத்தின் லக்ஷணத்திற்கு உற்பத்தி விநாசமுடைய சாமயிகாபாவத்தில் அதிவியாப்தியே உண்டாகும். என்றாலும் சாமயிகா பாவத்தினை அங்கீகரிக்காத நவீன நையாயிகர்களை அநுசரித்தவர்களோ இவ்வாறாய பிராகபாவத்தின் லக்ஷணங் கூறுகின்றனர்.

௬௭௬. பிராகபாவத்தின் இரண்டாவது லக்ஷணம்.

சாமயிகாபாவத்தினை அங்கீகரிக்கும் பிராசீன நையாயிகர்கள் கூறும் பிராகபாவத்தின் லக்ஷணமிதுவாம். "அநாதி꞉ ஸாந்த꞉ ப்ராகபாவ꞉" (இ-ள்.) அநாதியும் அதாவது; உற்பத்தியின்றியதும், சாந்தமும் அதாவது; நாச வடிவ அந்தமுடையதுமாகிய அபாவம் பிராகபாவ மெனப்படுகின்றது. ஆண்டு "அநாதி பிராகபாவம்" என இம்மாத்திரமே பிராகபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சாந்தமும்" என்னும் பதங் கூறுவிடின் பரமாணு, ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தினைப் போன்று பரமாணு, ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்களும் உற்பத்தியிலாவனவாவனவால் அநாதியேயாம். அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சாந்தம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பரமாணு, ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்கள் நாச வடிவ அந்தமுடையனவன்றும். ஆனால் அநந்தமுடையனவாம். ஆகையால் பரமாணு, ஆகாச முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சாந்தம் பிராகபாவம்" என இம்மாத்திரமே பிராகபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அநாதி" என்னும் பதங் கூறுவிடின் கட முதலிய

வைகளிலும், சாமயிகாபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தினைப் போன்று கட முதலியனவும், சாமயிகாபாவமும் நாசமுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அநாதி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியனவும், சாமயிகாபாவமும் அநாதியன்றாம்; உற்பத்தியுடையனவேயாம். ஆகையால் கட முதலியவைகளிலும், சாமயிகாபாவத்திலும் பிராகபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

கூஎஎ. பிராகபாவத்தின் மூன்றாவது லக்ஷணம்.

"ப்ரதியோகிஜநகாபாவ: ப்ராகபாவ:" (இ-ள்.) தனது பிரதியோகியினை உண்டாக்கும் அபாவம் பிராகபாவமெனப்படுகின்றது. எங்ஙனம்: படத்தின் உற்பத்திக்கு முன் தனது சமவாயி காரண வடிவ தந்துக்களில் படத்தின் பிராகபாவமிருக்கின்றது. அந்த பிராகபாவமே அப்பட வடிவ பிரதியோகியின் நிமித்த காரணமாவதால் உண்டாக்குவதாகின்றது. இவ்வாறாக எவ்வெக்காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றதோ அவ்வக்காரியத்தின் பிராகபாவமே அவ்வக்காரியத்தினை உண்டாக்குவதாகின்றது. பிராகபாவமின்றி எக்காரியத்தின் உற்பத்தியும் உண்டாகிறதில்லை. ஆகையால் பிராகபாவத்திற்கு கூறிய இம்மூன்றாவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. பிரத்துவம்ச முதலிய அபாவங்கள் தனது பிரதியோகியினை உண்டாக்குவதாகிறதில்லை. ஆகையால் "பிரதியோகியினை யுண்டாக்கும்" என்னும் பதத்தைக் கூறுவதால் பிரத்துவம்ச முதலிய அபாவங்களில் பிராகபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

கூஎஅ. பிராகபாவத்தினது ஆசிரயத்தின் வர்ணனம்.

இவ்வாறாகக் கூறிய மூன்று லக்ஷணங்களால் லக்ஷித பிராகபாவம் தனது பிரதியோகியின் சமவாயிகாரணத்திலேயே ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. எங்ஙனம்: படத்தின் பிராகபாவம் படத்தின் உற்பத்திக்கு முன் அப்பட வடிவ பிரதியோகியின் சமவாயி காரணமாகிய தந்துக்களிலேயே ஸ்வரூப சம்பந்தத்தாலிருக்கின்றது. அங்ஙனமே கடத்தின் பிராகபாவம் கட வடிவ பிரதியோகியின் சமவாயி காரணமாகிய கபாலங்களிலேயே ஸ்வரூப சம்பந்தத்தாலிருக்கின்றது. இவ்வாறாக அவ்வக்குண, கர்மாதி வடிவ காரியங்களின் பிராகபாவமும் அவ்வக்குண, கர்மாதி வடிவ பிரதியோகியின் சமவாயி காரணமாகிய திரவியங்களிலேயே ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. பிராகபாவம் உற்பத்தி யிலாததாவதால் அநாதியாயினும் நாசமுடையதாகின்றது. அதாவது அவ்வத்திரவிய குண, கர்மாதி வடிவ காரியத்தின் உற்பத்தி யுண்டாக அவ்வக்காரியத்தின் பிராகபாவம் நாசமாய் விடுகின்றது. ஆண்டு அவ்வக்கர்மத்தினது உற்பத்தியின் காரண சாமக்கிரியே அவ்வக்காரியத்தின் பிராகபாவத்தினை நாசஞ் செய்வதாகின்றது. ஆகையால் அவ்வக்காரியத்தின் உற்பத்தி க்ஷணத்திலேயே அவ்வக்காரியத்தின் பிராகபாவம் நாசமாய் விடுகின்றது.

### கூஎகூ. பிராகபாவத்தின் சாதகப் பிரதீதி.

சங்கை:—கபால முதலியவைகளில் கட முதலிய காரியங்களின் பிராக பாவமிருக்கின்ற தென்பதில் பிரமாணம் யாது.

சமாதானம்:—"ஊஹகவாலெவடொஹவிஷ்ஹதி ஊஹதம்தஷ வடொஹவிஷ்ஹதி") (இ-ள்.) கபாலங்களில் கடம் உண்டாகும், தந்துக்களில் படம் உண்டாகும். என்பதான தோற்றம் உலகர் யாவருக்கும் உண்டாகின்றது. அந்த பிரத்தியக்ஷத் தோற்றம் கபால தந்துக்களிலுள்ள கட, படத்தின் பிராகபாவத்தினையே விஷயஞ்செய்கின்றது. கூறிய தோற்றம் கட, படத்தின் எதிர்வையே விஷயஞ் செய்கின்றது. என்றாலும் வர்த்தமான பிராகபாவத்தின் பிரதியோகித் தன்மையினை எதிர் வென்பர். இவ்வார்த்தை இரண்டாவது பரிச்சேதத்தில் காலத்தின் நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். ஆகையால் கூறிய தோற்றம் பிராகபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது ஆகையால் பிராகபாவத்தில் லௌகிகப் பிரத்தியக்ஷமே பிரமாணமாம்.

### கூ௨0. பிராகபாவத்தின் சாதக யுக்தி.

அல்லது பிராகபாவத்தினை அங்கீகரியாவிடின் ஒருமுறை உண்டாகிய கடத்தின் உற்பத்தி மீண்டும் உண்டாக வேண்டும். ஏனெனின் கடத்தின் சாமக்கிரி காலம், சையோகம், குலாலன், தண்டம், சக்கிரம் இவை முதலிய எல்லாக் காரண சாமக்கிரிகளும் கடத்தின் உற்பத்தி க்ஷணத்தில் இருப்பனவே யாகின்றன. அக்காரண சாமக்கிரியினால் அக்கடத்தின் உற்பத்தி மீண்டும் அவசியமுண்டாக வேண்டும்; அங்ஙனமாவதின்று. பிராகபாவத்தை அங்கீகரிக்கின் கூறிய தோஷம் சம்பவிப்பதின்று. ஏனெனின் கடத்தின் உற்பத்திகாலத்தில் கடத்தின் பிராகபாவம் நாசமாய்விடுகின்றது. ஆகையால் மற்றைய கபாலம், தண்டம், சக்கிரம் முதலிய சர்வ காரணங்களிருக்கினும் பிராகபாவ வடிவகாரணத்தின் அபாவமிருப்பதால் உண்டாகிய கடத்திற்கு மீண்டும் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆகையால் உண்டாகிய காரியத்திற்கு மீண்டும் உற்பத்தியை நிவர்த்திக்கும் பொருட்டு பிராகபாவம் அவசியம் அங்கீகரிக்கப்படவேண்டும்.

### கூ௨க. அநுமானப் பிரமாணத்தால் பிராக பாவத்தின் சித்தி.

"அயம்வடஃ ஸெ்வாத்பத்திக்ஷணாவ்ருத்திகாரணஜந்யஃ ஸெ்வாத்பத்தி த்வீதீய க்ஷணாநுத்பந்நத்வாத்" (இ-ள்.) இக்கடம் தனது உற்பத்தி க்ஷணத்தில் இராததாகிய யாதாமோர் காரணத்தால் ஜன்னியமாக யோக்கியமாம், தனது உற்பத்தியினும் இரண்டாவது க்ஷணத்தில் உண்டாகாததாவதால். ஆண்டு அக்கடத்தின் உற்பத்தி க்ஷணத்தில் பிராகபாவத்தினும் வேறான மற்றைய கபாலம், தண்டம், சக்கிரம் முதலிய சர்வ காரணங்களிருப்பனவேயாம். ஆகையால் கபால முதலிய காரணங்களோ அவ்வநுமானத்தால் சித்தியாததாகும். பரிசேஷத்தால் கடத்தின் உற்பத்தி க்ஷணத்திலிராத பிராகபாவத்தின் சித்தியே கடத்தின் காரணமாக சம்பவிக்கின்றது.

---

௬௱௨. பிராகபாவத்தை யொப்பாதவராகிய நவீனநையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீனதார்க்கிகரோ இது கூறுகின்றனர். இக்காலத்தில் இக் கபாலங்களில் கடத்தின் பிராகபாவமிருக்கின்றதென்பதாக பிராகபாவத்தை விஷயஞ் செய்யும் தோற்றமோ உலகர் யாவருக்கும் உண்டாவதின்று. ஆகையால் பிராகபாவத்தில் யாதோர் பிரமாணமுமின்றும். ஓர் கால் கபாலங்களில் கடத்தின் பிராகபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகுமாயின் நியாய சாஸ்திரத்தின் சம்ஸ்காரமிலாத உலகர் யாவருக்கும் கபாலங்களைப்போன்று பிராகபாவத்தின் பிரத்தியக்ஷமு முண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. அல்லது பிராசீனர்கள் "இக்கபாலத்தில் கடம் உண்டாகும்" என்பதான தோற்றத்தைப் பிராகபாவத்தில் பிரமாணமாகக் கூறியதும் அசங்கதமாம். ஏனெனின் கடத்தில் வர்த்தமான காலத்தினும் பிற்காலத்தில் இருத்தற்றன்மை யாதோ அதுவே கடத்தில் எதிர்காலத் தன்மையாம். ஆகையால் கூறிய தோற்றத்தால் பிராகபாவத்தின் சித்தி சம்பவியாது. அல்லது பிராசீன நையாயிகர்கள் உண்டாகிய கடத்திற்கு மீண்டும் உற்பத்தியை நிவர்த்திக்கும் பொருட்டு பிராகபாவத்தை அங்கீகரிப்பது யாதோ அதுவும் அசங்கதமாம். ஏனெனின் எவ்வவயவங்களில் எத்திரவியம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றதோ அத்திரவியமே அவ்வவயவங்களில் சமவாய சம்பந்தத்தால் வேறு திரவியத்தின் உற்பத்தியைப் பிரதிபந்திப்பதாகின்றது. ஆகையால் கபாலங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கும் கடமே மீண்டும் கடத்தின் உற்பத்தியில் பிரதிபந்தகமாகின்றது. இவ்வாறாக மீண்டும் கடத்தின் உற்பத்தியில் அக்கடத்தின் பிரதிபந்தகத் தன்மையை வொப்புவதாலேயே உண்டாகிய கடத்திற்கு மீண்டும் உற்பத்தியின் சித்தி சம்பவிக்கிறதில்லை. ஆகையால் பிராகபாவத்தினை கடமுதலியவைகளின் காரணமாக வொப்புவது பயனின்மையாம்.

௬௱௩. நவீனர்களின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறிய நவீன தார்க்கிகர்களின் மதம் நலமுடையதன்றும். ஏனெனின் மீண்டும் கடத்தின் உற்பத்தியை பிரதிபந்திப்பது அக்கடமாக வொப்பின் பிரதிபந்தக கடத்தின் சம்சர்க்காபாவத்தினை அக்கடத்தின் உற்பத்தியில் அவசியங் காரணமாக வொப்புவதாகும். ஆகையால் பிரதிபந்தக கடத்தின் சம்சர்க்காபாவ வடிவமாக பிராகபாவத்திற்கே அக்கடத்தினைக்குறித்து காரணத்தன்மை பிராப்தமாகின்றது. ஆகையால் (வடுகுடீ ஞாத) *கட்டகுடீ பிரபாத நியாயப்படி நவீனராகிய நீவிரும் பிராகபாவத்தை அவசியம் ஒப்புவதாகும்.

* கட்டகுடீ - குட்டிச்சுவர். பிரபாதம் - காலை நேரம். கொற்றன் காலை நேரத்தில் குட்டிச்சுவரின் நிழலைப்பார்த்து இரண்டு நாழிகையாயிற்றெனக் குறிப்பிட்டான். சாத்தன் குட்டிச்சுவரின் நிழல் நாழிகையை குறிப்பிப்பதற்குக் காரணமல்ல, சூரியன் காரணமென்றான். அதற்கு கொற்றன் குட்டிச்சுவரின் நிழல் தெரியாவிட்டால் நாழிகை குறிப்பிட முடியாதாகையால் குட்டிச்சுவரின் நிழலே காரணமாமென்றனன். சூரியனில்லாவிட்டால் குட்டிச்சுவரின் நிழல் தெரியுமோவென சாத்தன் வினவ அதற்கு கொற்றன் சூரியனில்லாவிட்டால் நிழல் தெரியாது, சூரியனே காரணமென்றனன். முதலில் சூரியனை காரணமாக அங்கீகரிக்காது பின்னர் அங்கீகரித்தனனாக. இதனை கட்டகுடீ பிரபாத நியாயமென்பர்.

### ௨௮௪. பிராகபாவத்தின் துவம்சத்திற்கு பிரதியோகி வடிவத் தன்மையினதும், பிரதியோகியின் துவம்ச வடிவத் தன்மையினதும் வர்ணனம்.

அல்லது கபால்ங்களி லிருக்கும் கடத்தின் பிராகபாவத்தின் நாசம் கட வடிவ பிரதியோகியின் உற்பத்தி க்ஷணத்தில் உண்டாய் விடுகின்றது. அக்கடத்தினது பிராகபாவத்தின் நாசவடிவ துவம்சம் அக்கட மிருக்குங்கால் கட ஸ்வரூபமேயாகின்றது. அக்கடத்திற்கு நாச முண்டாகும்போது கடத்தின் பிராகபாவத்தின் துவம்சம் அக்கடத்தின் துவம்ச ஸ்வரூபமாகின்றது. ஏனெனின் அக்கட பிராகபாவத்தின் துவம்சத்தினை அக்கட வடிவ பிரதியோகியினும், கட வடிவ பிரதியோகியின் துவம்சத்தினும் வேறாகக் கற்பிப்பதில் முதலாவது யாதோர் பிரமாணமு மின்றாம். மாறாக கௌரவ தோஷத்தின் பிராப்தியே யுண்டாகின்றது. இரண்டாவது கட வடிவ பிரதியோகி காலத்திலும், கட வடிவ பிரதியோகியின் துவம்சகாலத்திலும் "கடப்பிராகபாவம் நாசமாயிற்று" என்பதாக கடப் பிராகபாவத்தின் துவம்சத்தினை விஷயஞ் செய்வதாகிய தோற்றமு முண்டாகின்றது. ஆகையால் பிராகபாவத்தின் துவம்சத்திற்கு சுவப்பிரதியோகி பிரதியோகி ஸ்வரூபமும், சுவப்பிரதியோகி பிரதியோகி துவம்ச ஸ்வரூபமும், அவசியம் ஒப்ப வேண்டும். ஈண்டு இரண்டு சுவசத்தங்களால் பிராகபாவத்தின் துவம்சத்தினைகிரஹிக்குக. அத்துவம்சத்தின் பிரதியோகி கட முதலியவைகளின் பிராகபாவம் யாதோ அப்பிராகபாவத்தின் பிரதியோகி கட முதலியனவாம்.

### ௨௮௫. பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணம்.

"உத்பத்திமாநுஷஹாவஃ வ்யுமஸாஹாவஃ" (இ-ள்.) எவ்வபாவம் உற்பத்தியுடையதாகின்றதோ அவ்வபாவம் பிரத்துவம்சாபாவ மெனப்படுகின்றது. ஈண்டு கட முதலிய காரியங்களின் உற்பத்திக்குப் பின் தண்ட முதலிய நிமித்த காரணங்களால் கட முதலியவைகளின் விநாச முண்டாவது யாதோ அவ்விநாசத்தினை பிரத்துவம்சாபாவ மென்பர். பிரத்துவம்சாபாவம் உற்பத்தியுடையதும், அபாவ வடிவமுமாம். ஆகையால் கூறிய பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணம் சம்பவிக்கின்றது. ஈண்டு "அபாவம் பிரத்துவம்சாபாவம்" என இம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உற்பத்தியுடைய" என்னும் பதங் கூறுவிடின் பிராகபாவ முதலிய எல்லா அபாவங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிரத்துவம்சாபாவத்தினைப் போன்று பிராகபாவ முதலியவைகளிலும் அபாவ வடிவத் தன்மையே யிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உற்பத்தியுடைய" என்னும் பதங் கூறப்பட்டது. ஈண்டு பிராகபாவ முதலியன உற்பத்தியுடையனவன்றாம். ஆகையால் அவைகளிடத்து அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உற்பத்தியுடையது பிரத்துவம்சாபாவம்" என இம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் பிரத்

துவம்சாபாவத்தினைப்போன்று கட முதலியனவும் உற்பத்தி யுடையனவே யாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியவைகளில் அபாவ வடிவத் தன்மையின்றும், பாவ வடிவத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் கட முதலியவைகளில் பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. கூறிய பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணத்திற்கு கூறப்படும் உற்பத்தியுடைய சாமயிகாபாவத்தில் அதிவியாப்தியே யுண்டாகும். என்றாலும் சாமயிகாபாவத்தினை அங்கீகரியாதவராகிய நவீனதார்க்கிகர்கள் மதத்தை அநுசரித்தே இந்த லக்ஷணங் கூறப்பட்டது.

கூ௪கூ. பிரத்துவம்சாபாவத்தின் இரண்டாவது லக்ஷணம்.

சாமயிகாபாவத்தினை அங்கீகரிக்கும் பிராசீனநையாயிகர் பிரத்துவம்சாபாவத்திற்கு இந்த லக்ஷணங் கூறுகின்றனர். "உத்பத்திமத்வே ஸத்யநந்தத்வம் த்வம்ஸாபாவ:" (இ-ள்.) எவ்வபாவம் உற்பத்தியுடையதும், நாச வடிவ அந்தமிலாததுமாகின்றதோ அவ்வபாவம் பிரத்துவம்சாபாவமெனப்படுகின்றது. ஆண்டு முற்கூறிய முறைப்படி பிரத்துவம்சாபாவம் உற்பத்தியுடையதுமாம்; துவம்சத்திற்கு துவம்ச முண்டாவதின்று. ஆகையால் பிரத்துவம்சாபாவம் நாச வடிவ அந்தமிலாததுமாம். ஆகையால் கூறிய பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "அநந்தம் பிரத்துவம்சாபாவம்" என இம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின்லக்ஷணமாகக்கூறி அந்தலக்ஷணத்தில் "உற்பத்தியுடையதும்" என்னும் பதங் கூறுவிடின் பரமாணு, ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்களிலும், அத்தியந்தாபாவத்திலும், அந்நியோன்னியாபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அப்பரமாணு, ஆகாச முதலியன பிரத்துவம்சாபாவத்தினைப் போன்று நாச வடிவ அந்தமிலாதனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உற்பத்தியுடையதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பரமாணு, ஆகாச முதலியன உற்பத்தி யுடையனவன்றும். ஆனால் உற்பத்தி, விநாசமிலாதன வாகையால் நித்தியமேயாம். ஆகையால் பரமாணு, ஆகாச முதலியவைகளிலும், அத்தியந்தாபாவத்திலும், அந்நியோன்னியாபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உற்பத்தியுடையது பிரத்துவம்சாபாவம்" என இம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அநந்தம்" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளிலும், சாமயிகாபாவத்திலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிரத்துவம்சாபாவத்தினைப் போன்று கட முதலியனவும் சாமயிகாபாவமும் உற்பத்தி யுடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அநந்தம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியனவும், சாமயிகாபாவமும் அநந்தமன்றும்; நாச வடிவ அந்தமுடையனவேயாம். ஆகையால் கட முதலியவைகளிலும், சாமயிகாபாவத்திலும் பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## கூஅஎ. பிரத்துவம்சாபாவத்தின் மூன்ருவது லக்ஷணம்.

" அவிநாஶிகேஸதி ப்ரதியோகி ஸமவாயிகாரணமாத்ரவ்ருத்யபாவ: த்வம்ஸாபாவ: " (இ-ள்.) எவ்வபாவம் அவிநாசி அதாவது; விநாச மிலாததும், தனது பிரதியோகியின் சமவாயி காரண மாத்திரத்தில் இருப்பதுமாமோ அவ்வபாவம் பிரத்துவம்சா பாவ மென்னப்படுகின்றது. ஆண்டு கடத்தின் பிரத்துவம்சாபாவம் விநாச மிலாததும், தனது கடவடிவ பிரதியோகியின் சமவாயி காரணமாகிய கபால மாத்திரத்திலேயே யிருப்பதுமாம். அதாவது; கட முடைந்த பின் அக்கடத்தின் அவயவ வடிவ கபாலத்திலேயே அக்கடத்தின் பிரத்துவம்சாபாவம் விசேஷணத்தன்மை யெனப் பெயரிய ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. இவ்வாருக எவ்வெத்திரவிய, குண, கர்ம முதலியவைகளின் பிரத்துவம்சாபாவம் உண்டாகின்றதோ அவ்வப்பிரத்துவம்சாபாவம் அவ்வத் திரவிய, குண, கர்மங்களின் சமவாயிகாரண வடிவ திரவியத்திலேயே ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் பிரத்துவம்சாபாவத்திற்கு கூறிய இம்மூன்ருவது லக்ஷணமும் சம்பவிக்கின்றது. ஆண்டு "பிரதியோகியின் சமவாயி காரண மாத்திரத்திலிருக்கும் அபாவம் பிரத்துவம்சாபாவம்" எனஇம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "நாசமிலாததும்" என்னும் பதங் கூருவிடின் பிராகபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் கடமுடைந்த பின் கடத்தின் பிரத்துவம்சாபாவம் கட வடிவ பிரதியோகியின் சமவாயிகாரணமாகிய கபால மாத்திரத்திலிருக்கின்றதோ அங்ஙனமே கடத்தின் உற்பத்திக்கு முன் கடத்தின் பிராகபாவமும் கட வடிவ பிரதியோகியின் சமவாயி காரணமாகிய கபால மாத்திரத்திலேயே இருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நாசமிலாததும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிராகபாவம் விநாசமிலாததன்ரும்; நாசமுடையதாம். ஆகையால் பிராகபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "நாசமிலாததும் பிரதியோகியின் சமவாயிகாரணத்தில் இருக்கும் அபாவம் பிரத்துவம்சாபாவம்" என இம்மாத்திரமே பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூருவிடின் அந்நியோன்னியாபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் கடத்தின் பிரத்துவம்சாபாவத்தினைப்போன்று கடத்தின் பேத வடிவ அந்நியோன்னியாபாவமும் கட வடிவ பிரதியோகியின் சமவாயிகாரண வடிவ கபாலங்களி லிருக்கின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கடத்தின் அந்நியோன்னியாபாவம் கேவலம் கபாலமாத்திரத்திலேயே இருப்பதன்று. ஆனல் பட முதலியவைகளினு மிருக்கின்றது. ஆகையால் அந்நியோன்னியாபாவத்தில் பிரத்துவம்சாபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௬௮௮. பிரத்துவம்சாபாவத்தின் சாதகப் பிரதீதி.

சங்கை:—கூறிய பிரத்துவம்சாபாவத்தில் பிரமாணம் யாது?

சமாதானம்:—தண்ட முதலியவைகளால் கட முதலியவைகளின் நாசமுண்டாய பின் அக்கட முதலியவைகளின் கபால முதலிய அவயவங்களை கண்ணுற்று "இந்த கடத்தின் துவம்சமாம்" என்பதாக உண்டாகும் உலகரின் பிரத்தியக்ஷப் பிரதீதி அக்கடத்தின் பிரத்துவம்சா பாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் பிரத்துவம்சாபாவம் பிரத்தியக்ஷப் பிரமாணத் தானேயே சித்தமாம்.

### ௬௮௯. பிரத்துவம்சாபாவத்தின் பிராகபாவத்திற்கு பிரதியோகி வடிவத்தன்மையினதும், பிரதியோகியின் பிராகபாவ வடிவத்தன்மையினதும் வர்ணனம்.

எதுவெது காரியமாகின்றதோ அதுவது பிராகபாவத்தால் ஜன்னியமே யாகின்றது. பிராகபாவமின்றி எக்காரியத்தின் உற்பத்தியு முண்டாகிற தில்லை. காரிய வடிவத்தன்மை எங்ஙனம் கட முதலியவைகளி லிருக்கின்றதோ அங்ஙனமே பிரத்துவம்சாபாவத்திலும் காரிய வடிவத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் கட முதலிய பாவ காரியத்தினைப் போன்று பிரத்துவம்சாபாவ வடிவ காரியமும் தனது பிராகபாவத்தானேயே ஜன்னியமாவதாகும். ஆண்டு பிரத்துவம்சாபாவத்தின் பிராகபாவம் பிரத்துவம்சாபாவத்தினது பிரதியோகி யின் இருப்பு காலத்திலோ பிரதியோகி ஸ்வரூபமாகின்றது. பிரதியோகி யின் உற்பத்திக்கு முன் பிரதியோகியின் பிராகபாவ ஸ்வரூபமாகின்றது. எங்ஙனம்: கடத்தின் பிரத்துவம்சா பாவத்தின் பிராகபாவம் அக்கடத்தி னிருப்பு காலத்திலோ அக்கட ஸ்வரூபமேயாகின்றது. அக்கடத்தின் உற் பத்திக்கு முன் அக்கடத்தின் பிராகபாவ ஸ்வரூபமாகின்றது. ஏனெனின் கட துவம்சத்தின் பிராகபாவத்தினை அக்கட வடிவ பிரதியோகியினும், அக் கடத்தின் பிராகபாவத்தினும் வேறாக கற்பிப்பதில் முதலாவது யாதோர் பிரமாணமுமின்றும்; கௌரவ தோஷத்தின் பிராப்தியே யுண்டாகின்றது. மற்றையது அக்கடத்தி னிருப்புகாலத்திலும், அக்கடத்தினது பிராகபாவத்தி னிருப்பு காலத்திலும் "கடதுவம்சமாகும்" என்பதான கடத் துவம்சத்தின் பிராகபாவத்தை விஷயஞ் செய்வதாகிய தோற்றமு முண்டாகின்றது. ஆகை யால் பிரத்துவம்சாபாவத்தின் பிராகபாவத்தினை சுவப்பிரதியோகி பிரதியோகி ஸ்வரூபமாகவும், சுவப்பிரதியோகி பிரதியோகி பிராகபாவ ஸ்வரூபமாகவும் அவசியம் ஒப்ப வேண்டும். ஈண்டு இரு சுவசத்தங்களால் கட துவம்சத் தின் பிராகபாவத்தினை கிரஹிக்குக. அந்த பிராகபாவத்தின் பிரதியோகி கடத்தின் பிரத்துவம்சாபாவமாம். அந்த பிரத்துவம்சாபாவத்தின் பிரதி யோகி அக்கடமாம்.

### ௬௯௦. பிராகபாவத்தின் அநாதித்தன்மையினையும், பிரத்துவம்சா பாவத்தின் அநந்தத் தன்மையினையும் சாதிக்கும் யுக்தி.

சங்கை:—முற்கூறிய பிராகபாவத்தினை அநாதியாக வொப்பாது உற் பத்தியுடையதாக வொப்புவதானும், பிரத்துவம்சபாவத்தினை அநந்தமுடைய தாகவொப்பாது நாசமுடையதாக வொப்புவதானும் கெடுதியாவது யாது?

சமாதானம்:—பிராகபாவத்தினை அநாதியாக வொப்பாது உற்பத்தியுடையதாக வொப்பின் கட முதலியவைகளைப்போன்று பிராகபாவத்திற்கும் வேறு பிராகபாவம் அங்கீகரிப்பதாகும். அங்ஙனமே பிரத்துவம்சாபாவத்திற்கு முடிவின்மை யொப்பாது நாசமுடைமை யொப்பின் கட முதலியவைகளைப் போன்று பிரத்துவம்சாபாவத்திற்கும் துவம்சம் அங்கீகரிப்பதாகும். அவற்றின் அங்கீகாரமுளதாக பிராகபாவத்தின் பிராகபாவ காலத்திலும், துவம்சத்தின் துவம்ச காலத்திலும் கட முதலிய பிரதியோகிகளின் ஆதார காலத்தின் பிராப்தி யுண்டாகும். ஏனெனின் இந்நியமம் காணக்கிடைக்கின்றது. “[illegible]” (இ-ள்) எக்காலம் எவ்வஸ்துவின் துவம்சத்திற்கு அதிகரணமாகாமலும், பிராகபாவத்திற்கு அதிகரணமாகாமலுமிருக்கின்றதோ அக்காலம் அவ்வஸ்து வடிவ பிரதியோகியின் அதிகரணமேயாகின்றது. எங்ஙனம்: கடத்தின் உற்பத்தி க்ஷண முதலாக கட விநாச க்ஷணமட்டுமாம் கடத்தினிருப்பு காலம் அக்கடத்தின் பிராகபாவத்திற்கும் அதிகரணமன்றாம்; எக்காரணத்தாலெனின் அக்கடத்தின் பிராகபாவம் அக்கடத்தின் உற்பத்திக்ஷணத்திலேயே நஷ்டமாய் விடுகின்றது. அங்ஙனமே அக்காலம் அக்கட துவம்சத்திற்கும் அதிகரணமன்றாம். எக்காரணத்தாலெனின் அக்கடத்தின் துவம்சம் பின்னர் உண்டாவதாம். இவ்வாறாக கடத்தின் துவம்சத்திற்கும், பிராகபாவத்திற்கும் அதிகரணமல்லாததாவதால் அக்காலம் அக்கட வடிவ பிரதியோகியின் அதிகரணமாகவே காணக்கிடைக்கின்றது. அங்ஙனமே எக்காலத்தில் கடத்தினது பிராகபாவத்தின் பிராகபாவமிருக்குமோ அக்காலமும் அக்கடத்தின் பிராகபாவத்திற்கும் பிரத்துவம்சாபாவத்திற்கும் அதிகரணமல்லாததேயாம். ஆகையால் அக்காலத்திலும் அக்கட வடிவ பிரதியோகி அவசியம் இருப்பதாக வேண்டும். இவ்வாறாக எக்காலத்தில் கடத்தின் துவம்சத்திற்கு துவம்சமிருக்குமோ அக்காலமும் அக்கடத்தின் பிராகபாவத்திற்கும், துவம்சத்திற்கும் அதிகரணமல்லாததேயாகும். ஆகையால் அக்காலத்திலும் அக்கட வடிவ பிரதியோகி அவசியம் இருப்பதாக வேண்டும். இது அத்தியந்தம் விருத்தமாம்: எக்காரணத்தாலெனின் உற்பத்திக்கு முன்னும் விநாசத்திற்குப் பின்னும் சில பாவ வஸ்துவின் இருப்பு சம்பவிக்கிறதில்லை. ஆகையால் கூறிய காலத்தில் கட முதலிய பிரதியோகியின் இருப்பு வடிவ தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அக்கட முதலியவைகளின் பிராகபாவத்திற்கு உற்பத்தியின்றி ஆறுதியும், பிரத்துவம்சாபாவத்திற்கு ஆதியும், விநாசமின்மையும் ஒப்ப வேண்டும். அல்லது எவ்வாதி கட முதலியவைகளின் பிராகபாவத்திற்கு பிராகபாவமும், துவம்சத்திற்கு துவம்சமும் ஒப்புகின்றனரோ அவ்வாதியிரோடு இதுவினவுதல் வேண்டும். கடத்தின் பிராகபாவத்தின் பிராகபாவம் கட வடிவ பிரதியோகியினும் வேறா? அல்லது அக்கட ஸ்வரூபமா? ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் முதற் பிராகபாவத்தினைப் போன்று வேறு பிராகபாவத்திற்கும் யாதாமோர் மூன்றாவது பிராகபாவம் கற்பிக்கப்படுவதாகும். அம்மூன்றாவது பிராகபாவத்திற்கு யாதாமோர் நான்காவது பிராகபாவம் கற்பிக்கப்படுவதாகும். நான்காவதற்கு ஐந்தாவது, ஐந்தாவதற்கு ஆறாவதா

மென்பதாக பிராகபாவங்களின் தொடர்ச்சி யொப்புவதில் அநவஸ்தா தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். அநவஸ்தா தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அக்கடத்தின் பிராக்பாவத்தின் பிராகபாவம் அக்கட ஸ்வரூபமா மென்பதான இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அக்கடத்தின் பிராகபாவத்தின் பிராகபாவ காலத்தில் அக்கட வடிவ பிரதியோகி இருக்க வேண்டுமென்னும் தோஷம் அவசியம் பிராப்தமாகும். இவ்வாறாக எவ்வாதி கட முதலியவைகளின் துவம்சத்திற்கு துவம்சம் அங்கீகரிக்கின்றனரோ அவ்வாதியோடு இது வினவுதல் வேண்டும். அக்கடத்தினது துவம்சம் அக்கட வடிவ பிரதியோகியினும் வேறா? அல்லது அக்கட ஸ்வரூபமா? ஆண்டு முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின் முதற் துவம்சத்தினைப்போன்று இரண்டாவது துவம்சத்திற்கும் யாதாமோர் மூன்றாவது துவம்சம் ஒப்பப்படுவதாகும். மூன்றாவது துவம்சத்திற்கு யாதாமோர் நான்காவது துவம்சம் ஒப்பப்படுவதாகும். நான்காவதற்கு ஐந்தாவது, ஐந்தாவதற்கு ஆறாவதாமென்பதான துவம்சங்களின் தொடர்ச்சியை ஒப்புவதில் அநவஸ்தா தோஷத்தின் பிராப்தியுண்டாவதாகும்; அவ்வநவஸ்தா தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு கடத்தின் துவம்சத்தின் துவம்சம் அக்கட ஸ்வரூபமாமென்பதாக இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் கடத் துவம்சத்தினது துவம்ச காலத்தில் அக்கட வடிவ பிரதியோகி இருக்கவேண்டுமென்னும் தோஷம் அவசியம்பிராப்தமாகும். அத்தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு பிராகபாவத்திற்கு உற்பத்தியின்றி ஆனதியும், பிரத்துவம்சாபாவத்திற்கு விநாசமிலாது அநந்தமும் ஒப்ப வேண்டும். அல்லது உலகத்திலும் "கடம் நஷ்டமாயிற்று" "படம்நஷ்டமாயிற்று" என்பதான தோற்றமுண்டாகின்றது. ஆனால் "நாசம் நாசமாயிற்று" என்பதான தோற்றம் ஒருவருக்கும் உண்டாவதின்று. பிரத்துவம்சாபாவத்திற்கு விநாசத்தினை கற்பிப்பதில் யாதோர் பிரமாணமு மின்றாம். இக்காரணத்தானும் பிரத்துவம்சாபாவத்திற்கு விநாசமின்மையே யொப்பவேண்டும்.

௯௯௧. அத்தியந்தாபாவத்தின் லக்ஷணம்.

ஆண்டு "நித்ய: ஸம்ஸர்காபாவ: அத்யந்தாபாவ:" (இ-ள்.) எவ்வபாவம் நித்தியமாகின்றதோ அதாவது; உற்பத்தி விநாசமிலாததாகின்றதோ சம்சர்க்காபாவ வடிவமாகின்றதோ அதாவது; அந்நியோந்நியாபாவத்தினும் வேறான அபாவ வடிவமுமாகின்றதோ அவ்வபாவம் அத்தியந்தாபாவமெனப்படுகின்றது. ஆண்டு எவ்வஸ்து எச்சம்பந்தத்தால் எவ்வதிகரணத்தில் ஒருக்காலு மிருப்பதன்றோ அவ்வஸ்துவின் அத்தியந்தாபாவமே அச்சம்பந்தத்தால் அவ்வதிகரணத்தில் இருக்கின்றது. எங்ஙனம்: வாயு, ஆகாசம் முதலியவைகளில் உருவ குணம் ஒருக்காலும் சமவாயசம்பந்தத்தா லிருப்பதன்று. ஆகையால் வாயு, ஆகாச முதலியவைகளில் உருவத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. இவ்வாறாக கந்த குணத்தின் அத்தியந்தாபாவம் பிருதிவியினை விட்டு ஜல முதலிய சர்வ பதார்த்தங்களில் இருக்கின்றது. அங்ஙனமே சத்த குணத்தின் அத்தியந்தாபாவம் ஆகாசத்தினை விட்டு யாண்டு மிருக்கின்றது. ஞான முதலிய குணங்களின் அத்தியந்தா

பாவம் ஆத்மாவினை விட்டு யாண்டும் இருக்கின்றது. இவ்வாறாக எவ்வெப் பதார்த்தம் எவ்வெச்சம்பந்தத்தால் எவ்வவெவ் வதிகரணத்தில் ஒருக்காலும் இருப்பதன்றோ அவ்வப்பதார்த்தத்தின் அத்தியந்தாபாவம் அவ்வச்சம்பந்தத் தால் அவ்வவ்வதிகரணத்தில் இருக்கின்றது. பூதல முதலியவைகளில் கட முதலியன ஒர்கால் சையோக சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சையோக சம்பந்தத்தால் அக்கட முதலியவைகளின் அத்தியந்தாபாவம் பூதல முதலியவைகளில் உண்டாவதின்று. ஆனால் கூறப்படும் சாமயிகா பாவமே யுண்டாகின்றது. கூறிய அத்தியந்தாபாவம் உற்பத்தி விநாசமிலாத தாவதால் நித்தியமும், அந்நியோன்னியாபாவத்தினும் வேறுமாவதால் சம் சர்க்காபாவ வடிவமுமாம். ஆகையால் கூறிய அத்தியந்தாபாவித்தின் லக்ஷ ணம் சம்பவிக்கின்றது. ஆண்டு "சம்சர்க்காபாவம் அத்தியந்தாபாவம்" என இம்மாத்திரமே அத்தியந்தாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷ ணத்தில் "நித்தியம்" என்னும் பதங் கூறுவிடின் பிராகபாவம் பிரத்துவம்சா பாவம் சாமயிகாபாவ மென்னும் மூன்று அபாவங்களில் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அவ்வத்தியந்தா பாவத்தினைப்போன்று அம்மூன்று அபாவங்களும் சம்சர்க்காபாவ வடிவமே யாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷ ணத்தில் "நித்தியம்" என்னுமிப் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிராகபாவ முதலியன நித்தியமன்றாம். ஆகையால் அவைகளிடத்தில் அந்த லக்ஷணத் திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "நித்தியம் அத்தியந்தாபாவம்" என இம்மாத்திரமே அத்தியந்தாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷ ணத்தில் "சம்சர்க்காபாவம்" என்னும் பதங் கூறுவிடின் அந்நியோன்னியா பாவத்திலும், பரமாணு ஆகாச முதலியவைகளிலும் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அத்தியந்தாபாவத்தினைப் போன்று அந்நியோன்னியாபாவமும், பரமாணு, ஆகாச முதலியனவும் உற் பத்தி விநாசமிலாதன வாகையால் நித்தியமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத் தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்சர்க்காபாவம்" என் னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அந்நியோன்னியாபாவத்திலும், பரமாணு ஆகாச முதலியவைகளிலும் சம்சர்க்காபாவ வடிவத்தன்மையின்றாம். ஆகை யால் அவைகளில் அத்தியந்தாபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௬௬௨. அத்தியந்தாபாவத்திற்கு தனது பிரதியோகியின் பிரகபாவத்தினோடும், பிரத்துவம்சாபாவத்தினோடும் விரோதம் ஒப்புவோராகிய பிராசீனர்களின் மதம்.

இவ்வாறாகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித அத்தியந்தாபாவம் தனது பிரதியோகியினது பிராகபாவத்தின் அதிகரணத்திலும், தனது பிரதி யோகியினது பிரத்துவம்சாபாவத்தின் அதிகரணத்திலும் இருப்பதன்று. ஏனெனின் பிராகபாவத்தினோடும், பிரத்துவம்சாபாவத்தினோடும் அத்தியந்தா பாவத்திற்கு விரோதமே இருக்கின்றது. பரஸ்பர விரோதி பதார்த்தம் ஒரு

அதிகரணத்திலிருப்பதன்று. "கருங்குடத்தில் செம்மையில்லை" என்பதான செம்மை உருவத்தின் அபாவத்தினை விஷயஞ் செய்வதாகிய தோற்றமுண்டாகின்றது. அத்தோற்றமும் கருங்குடத்தில் செம்மை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினை விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் பின்னர் வன்னியின் சையோகத்தால் அக்கடத்தில் உண்டாவதாகிய செம்மை உருவத்தின் பிராகபாவம் கருங்குடத்தி லிருக்கின்றது. அந்தப் பிராகபாவத்தினையே கூறிய தோற்றம் விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே "செங்குடத்தில் கருமையில்லை" என்பதான கருமை உருவத்தின் அபாவத்தினை விஷயஞ் செய்வதாகிய தோற்றமும் அச்செங்குடத்தில் கருமை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினை விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் செங்குடத்தில் முன்னிருந்த கருமை உருவத்தின் பிரத்துவம்சாபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் கூறிய தோற்றத்தால் கருங்குடத்தில் செம்மை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினதும், செங்குடத்தில் கருமை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினதும் சித்தி சம்பவிக்கிறதில்லை.

## கூகூரு. அவ்விரோதத்தினை ஒப்பாதவராகிய நவீனர்களின் மதம்.

சண்டு நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். அத்தியந்தாபாவத்திற்கு தனது பிரதியோகியினது பிராகபாவத்தினோடும், பிரத்துவம்சாபாவத்தினோடும் விரோதமுண்டாகின்றதென்பதான அர்த்தத்தில் யாதோர் பிரமாணமுமின்றாம். ஆகையால் அத்தியந்தாபாவம் தனது பிரதியோகியினது பிராகபாவத்தின் அதிகரணத்திலும், பிரத்துவம்சாபாவத்தின் அதிகரணத்திலு மிருக்கின்றது. ஆகையால் "கருங்குடத்தில் செம்மையில்லை" எனக் கூறிய தோற்றம் செம்மை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே "செங்குடத்தில் கருமையில்லை" எனக் கூறிய தோற்றம் கருமை உருவத்தின் அத்தியந்தாபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது.

## கூகூச. சாமயிகாபாவத்தின் லக்ஷணம்.

"உத்பத்திவிநாஶவாநுஃஹாவஃ ஸாமயிகாஹாவஃ" (இ-ள்.) எவ்வபாவம் உற்பத்தி யுடையதும், விநாசமுடையதுமாகின்றதோ அவ்வபாவம் சாமயிகாபாவமென்னப்படுகின்றது. எங்ஙனம்: சையோக சம்பந்தத்தால் பூதலத்திலிருக்கும் கடம் யாதோ அக்கடத்தினை பூதலத்தினின்றும் எடுத்து வேறிடத்திற்குக் கொண்டு போக அப்பொழுது அப்பூதலத்தில் "இப்பூதலத்தில் கடமில்லை" என்பதாக கடத்தின் அபாவத்தினை விஷயஞ் செய்வதாகிய தோற்றம் உண்டாகின்றது. மீண்டும் அக்கடத்தினைக் கொணர்ந்து பூதலத்தில் வைக்கின் அப்பொழுது "அப்பூதலத்தில் கடமில்லை" என்பதான தோற்றம் உண்டாகிறதில்லை. ஆகையால் இது அறியத்தக்கது. பூதலத்தினின்றும் கடத்தினையெடுத்துக்கொண்டு போயின் அப்பூதலத்தில் கடத்தின் அபாவம் உற்பன்னமாகின்றது. அவ்வபாவத்தினை கூறிய அத்தோற்றம் விஷயஞ் செய்கின்றது. மீண்டும் பூதலத்தில் கடத்தினை கொணர்ந்து வைக்கின் அக்கடத்தின் அபாவம் நாசமாய் விடுகின்றது. ஆகையால் கூறிய தோற்றம் உண்டாவதின்று.

அத்தகைய உற்பத்தி விநாசமுடைய அபாவம் சாமயிகாபாவமேயாம். ஓர் கால் அப்பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவத்தினை யொப்பின் அத்தியந்தாபாவம் நித்தியமும், கிரியையிலாததுமாம். ஆகையால் அப்பூதலத்தில் கடத்தினை கொணர்ந்து வைக்கின் அத்தியந்தாபாவத்தின் நாசமும், வேறிடத்திற் செல்லுதலும் சம்பவியாது. ஆகையால் கட மிருக்கினும் "பூதலத்தில் கடமில்லை" என்பதான தோற்றம் உண்டாக வேண்டும். ஆகையால் அத்தியந்தாபாவத்தினும் வேறான சாமயிகாபாவத்தினை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். ஆண்டு "உற்பத்தியுடைய அபாவம் சாமயிகாபாவம்" என இம்மாத்திரமே சாமயிகாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "விநாசமுடையதும்" என்னும் பதங் கூறுவிடின் பிரத்துவம்சாபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சாமயிகாபாவத்தினைப் போன்று பிரத்துவம்சாபாவமும் உற்பத்தியுடையதேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "விநாசமுடையதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிரத்துவம்சாபாவம் விநாசமுடையதன்றும். விநாசமின்றியதாம். ஆகையால் பிரத்துவம்சாபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "விநாசமுடைய அபாவம் சாமயிகாபாவம்" என இம்மாத்திரமே சாமயிகாபாவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "உற்பத்தியுடையதும்" என்னும் பதங் கூறுவிடின் பிராகபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சாமயிகாபாவத்தினைப் போன்று பிராகபாவமும் விநாசமுடையதேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "உற்பத்தியுடையதும்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிராகபாவம் அநாதியாவதால் உற்பத்தி யுடையதன்றும். ஆகையால் பிராகபாவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "உற்பத்தியுடையது சாமயிகாபாவம்" என இம்மாத்திரமே சாமயிகாபாவத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சாமயிகாபாவத்தினைப் போன்று கட முதலியனவும் உற்பத்தி விநாச முடையனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அபாவம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியன அபாவ வடிவமன்றும். ஆகையால் கட முதலியவைகளில் சாமயிகாபாவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. கேவலம் மூர்த்தத்திரவியத்திற்கே சாமயிகாபாவ முண்டாகின்றது. வேறோர் பதார்த்தத்திற்கு உண்டாகிறதில்லை.

### கூகூரு. கடமுடைய பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவமிருக்கினும் சம்பந்தத்தின் அபாவத்தால் அதனது பிரதீதியின் அபாவம்.

ஈண்டு சில நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். கூறிய உற்பத்தி விநாசமுடைய சாமயிகாபாவத்தில் யாதோர் பிரமாணமுமின்றும். மாறாக

கூறிய அத்தியந்தாபாவத்தினும் சாமயிகாபாவத்தினை வேறாக வொப்புவதில் கௌரவ தோஷமே பிராப்தமாகும். பூதல முதலியவைகளில் ஓர் கால் மிருப்பதும், ஓர் கால்யிராததுமாகிய கடமுதலிய மூர்த்தத்திரவியங்களின் அத்தியந்தாபாவமே பூதல முதலியவைகளிலிருக்கின்றது. அவ்வத்தியந்தாபாவம் நித்தியமாவதாலும், நிஷ்கிரியையாவதாலும் அப்பூதலத்தில் கடமிருக்கினும் இருக்கின்றது. ஆனால் கடமிருக்குங்கால் உலகவருக்கு அப்பூதலத்தில் கடத்தினது அத்தியந்தாபாவம் பிராப்தமாகாமை யாதோ அது சம்பந்தத்தின் அபாவத்தால் உண்டாகிறதில்லை. அதாவது; கட மிருக்குங்கால் கடத்தின் அத்தியந்தாபாவத்திற்கு அப்பூதலத்தினோடு ஸ்வரூப சம்பந்தமிருப்பதின்று. ஆகையால் அவ்வத்தியந்தாபாவம் இருக்கினும் உலகவருக்குப் பிராப்தமாவதின்று. ஆண்டு "கடாபாவமுடையது பூதலம்" என்பதான ஞான காலத்திய பூதலம் யாதோ அப்பூதலமே அவ்வபாவத்தின் ஸ்வரூப சம்பந்தமாம். ஆண்டு கட மிருக்குங்கால் "கடாபாவமுடையது பூதலம்" என்பதான ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் அக்காலத்தில் அப்பூதலம் ஸ்வரூபத்தாலிருப்பதாயினும் அந்த ஞான காலத்வ விசிஷ்ட வடிவமாக இருப்பதின்று.

### ௯௯௬. சாமக்கிரியின் அபாவத்தால் பிரதீதியின் அபாவம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். பூதலத்தில் கட மிருக்குங்கால் கடத்தின் அத்தியந்தாபாவத்தின் தோற்ற முண்டாகாமை யாதோ அது காரண சாமக்கிரியின் அபாவத்தால் உண்டாகிறதில்லை. ஆண்டு எப்பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவ மிருக்கிறதோ அப்பூதலத்தில் அக்கடத்தினது சையோகத்தின் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம் அக்கடாபாவத்தினது பிரதீதியின் சாமக்கிரியாம். அக்காரண சாமக்கிரி அப்பூதலத்தில் கட மிருக்குங்காலின்றும். ஏனெனின் பூதலத்தில் கடத்தின் சையோக காலத்தில் அச்சையோகத்தின் பிராகபாவமும், பிரத்துவம்சாபாவமுமின்றும். பூதலத்தில் கடத்தை கொணர்ந்து வைக்குமுன் அப்பூதலத்தில் அக்கடத்தினது சையோகத்தின் பிராகபாவ மிருக்கின்றது. பூதலத்தினின்றும் கடத்தைக் கொண்டு போயின் அக்காலத்தில் அப்பூதலத்தில் அக்கடத்தினதுசையோகத்தின் பிரத்துவம்சாபாவமிருக்கின்றது. ஆகையால் அவ்விரு காலங்களில் கூறிய சாமக்கிரியி னிருப்புளதாக "பூதலத்தில் கட மில்லை" என்பதான கடத்தின் அத்தியந்தாபாவத்தினை விஷயஞ்செய்வதாகிய தோற்ற முண்டாகின்றது. இவ்வாற்றால் அத்தியந்தாபாவம் நித்தியமாயினும் பிரதியோகி யிருக்குங் காலத்தில் அத்தியந்தாபாவத்தினது பிரதீதியின் அபாவமும், பிரதியோகி யிலாத காலத்தில் அத்தியந்தாபாவத்தின் பிரதீதியும் சம்பவிக்கின்றது. ஆகையால் பூதல முதலியவைகளில் கட முதலியவைகளின் சாமயிகாபாவத்தினை அங்கீகரிப்பது பயனின்மையாம்.

### ௯௯௭. அந்நியோன்னியாபாவத்தின் லக்ஷணம்.

"தாதாத்ம்யஸம்பந்தாவச்சிந்நப்ரதியோகிதாகாபாவத்வமந்யோந்யாபாவத்வம்" (இ-ள்.) எவ்வபாவத்தின் பிரதியோகித்தன்மை தாதாத்மிய சம்பந்தத்

தால் அவச்சின்னமாகின்றதோ அந்தப் பிரதியோகியுடைய அபாவம் அந்நியோன்னியாபாவமெனப்படுகின்றது. எங்ஙனம் "கடம் படமன்று" அதாவது; கடம் படவடிவமன்றுமென்பதானதோற்றம் உலகருக்குண்டாகின்றது. அத்தோற்றத்தால் கடத்தில் படத்தின் பேத வடிவ அந்நியோன்னியாபாவம் தோற்றுகின்றது. அக்கடத்திலுள்ள அந்நியோன்னியாபாவத்தின் பிரதியோகி படமாம். படத்திலிருப்பதாகிய அவ்வந்நியோன்னியாபாவத்தின் பிரதியோகித்தன்மை தாதாத்மிய சம்பந்தத்தாலும், படத்வ தர்மத்தாலும் அவச்சின்னமுமாம். ஆண்டு அபேதமெனப்பெயரிய சொரூப சம்பந்த விசேஷத்தினை தாதாத்மிய சம்பந்தமென்பர். அவ்வபேத வடிவ தாதாத்மிய சம்பந்தம் சர்வ பதார்த்தங்கட்கும் தமது ஸ்வரூபத்திலேயே யிருக்கின்றது. தமது ஸ்வரூபத்தினும் வேறான பதார்த்தங்களில் எவ்வஸ்துவின் தாதாத்மிய சம்பந்தமுமிருப்பதின்று. எங்ஙனம்: கடத்தின் அபேத வடிவ தாதாத்மிய சம்பந்தம் தனது கட வடிவத்திலேயே இருக்கின்றது. அக்கடத்தினும் வேறான பதார்த்தங்களி லிருப்பதன்று. அங்ஙனமே படத்தின் அபேத வடிவ தாதாத்மிய சம்பந்தம் தனது பட ஸ்வரூபத்திலேயே யிருக்கின்றது. இவ்வாறாக திரவிய, குண, கர்ம முதலிய பதார்த்தங்கள் யாவற்றின் அபேத வடிவ தாதாத்மிய சம்பந்தம் தமது ஸ்வரூபத்திலேயேயிருக்கின்றது. வேறெதிலும் இருப்பதன்று. எப்பதார்த்தம் எச்சம்பந்தத்தால் எவ்வதிகரணத்தில் இருப்பதன்றோ அப்பதார்த்தத்திற்கு அவ்வதிகரணத்தில் அச்சம்பந்தாவச்சின்னபிரதியோகித்தன்மையுடைய அபாவமேயிருக்கின்றது. எங்ஙனம் வாயுவில் உருவம் சமவாயசம்பந்தத்தால் இருப்பதன்று. ஆகையால் வாயுவில் உருவத்தின் சமவாய சம்பந்தாவச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய அத்தியந்தாபாவமே யிருக்கின்றது. அங்ஙனமே திரவியம், குணம், கர்ம முதலிய பதார்த்தங்களும் தமது ஸ்வரூபத்தினை விட்டு வேறோர் பதார்த்தத்தில் அபேத வடிவ தாதாத்மியசம்பந்தத்தால் இருப்பனவன்று. ஆகையால் திரவிய, குண, கர்மங்கட்கு தம்மினும் வேறான பதார்த்தங்கள் யாவற்றிலும் தாதாத்மிய சம்பந்தாவச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய அந்நியோன்னியாபாவமே யிருக்கின்றது. ஆகையால் "கடம் படமன்று" என்பதானதோற்றத்தால் கடத்தில் தாதாத்மிய சம்பந்தாவச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய படத்தின் அபாவம் தோற்றுகின்றது. அவ்வபாவம் அந்நியோன்னியாபாவ மெனப்படுகின்றது. இவ்வந்நியோன்னியாபாவத்தினை பேதமென்றுங் கூறுவர்.

## ௬௬௮. அந்நியோன்னியாபாவத்தின் சாதகப்பிரதீதி.

பேதவடிவ அந்நியோன்னியாபாவமும் கூறிய அத்தியந்தாபாவத்தினைப் போன்று உற்பத்தி விநாசமில்லாததாவதால் நித்தியமேயாகின்றது. பூதலத்தில் சையோக சம்பந்தத்தால் கட மிருக்கினும் "பூதலம் கடமன்று" என்பதான தோற்றம் உலகவருக்குண்டாகின்றது. அத்தோற்றமும் பூதலத்தில் கடத்தின் அந்நியோன்னியாபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே தந்துக்களில் சமவாய சம்பந்தத்தால் பட மிருக்கினும் "தந்து படமன்று" என்பதான தோற்ற முண்டாகின்றது. அத்தோற்றமும்

அத்தந்துக்களில் அப்படத்தின் அந்நியோன்னியாபாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. இவ்வாறாக பிருதிவி முதலிய திரவியங்களில் சமவாயசம்பந்தத்தால் குண, கர்ம, சாமான்னியங்க ளிருக்கினும் "திரவியம் குணமன்று" "திரவியம் கர்மமன்று" "திரவியம் சாமான்னியமன்று" என இவை முதலிய தோற்றங்க ளுண்டாகின்றன. அத்தோற்றங்கள் முறையாக திரவியத்தில் குணம், கர்மம், சாமான்னியங்களின் அந்நியோன்னியா பாவத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் பேத வடிவ அந்நியோன்னியாபாவத்தில் கூறிய பிரத்தியக்ஷத் தோற்றமே பிரமாண வடிவமாம்.

## கூகூகூ. விசேஷாபாவம், சாமான்னியாபாவம் என்னும் வேறுபாட்டால் கூறிய அத்தியந்தாபாவ, அந்நியோன்னியாபாவத்தின் இருவித வேற்றுமை

இதுகாறும் பிராகபாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், சாமயிகாபாவம், அந்நியோன்னியாபாவமென்னும் ஐவகை அபாவங்களை வர்ணித்தனம். இனி முற்கூறிய அத்தியந்தாபாவத்தினதும், அந்நியோன்னியாபாவத்தினதும் பேதத்தினை வர்ணிப்பாம். ஆண்டு அத்தியந்தாபாவமும், அந்நியோன்னியாபாவமும் விசேஷ அபாவம், சாமான்னிய அபாவம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றன. ஆண்டு "பூதலத்தில் செங்குட மிருக்கினும் கருங்குடமில்லை" என்பதான தோற்றம் உலகருக் குண்டாகின்றது. அத்தோற்றத்தால் சித்தித்த செங்குடமுடைய பூதலத்தில் கருங்குடத்தின் அத்தியந்தாபாவம் விசேஷ அத்தியந்தாபாவமெனப்படுகின்றது. "செங்குடம் கருங்குடமன்று" என்பதான தோற்றமும் உலகருக்குண்டாகின்றது. அத்தோற்றத்தால் சித்தித்த செங்குடத்தில் கருங்குடத்தின் அந்நியோன்னியாபாவம் விசேஷ அந்நியோன்னியாபாவமெனப்படுகின்றது. எப்பூதலத்தில் எவ்வகையானும் கட மிருப்பதின்றோ அத்தகைய கட சூன்னிய பூதலத்தில் "பூதலத்தில் கடமில்லை பூதலம் கடமுடையதன்று" என்பதான தோற்றம் உலகருக்குண்டாகின்றது. அத்தோற்றத்தால் சித்தித்த அப்பூதலத்தில் கடத்தின் அத்தியந்தாபாவம் சாமான்னிய அத்தியந்தாபாவமெனப்படுகின்றது. "பூதலம் கடமன்று" என்பதான தோற்றத்தால் சித்தித்த பூதலத்தில் கடத்தின் அந்நியோன்னியாபாவம் சாமான்னிய அந்நியோன்னியாபாவமெனப்படுகின்றது. முற்கூறிய விசேஷாபாவத்தினு மிச்சாமான்னியாபாவம் வேறேயாகின்றது. ஏனெனின் ஓர்கால் கூறிய விசேஷாபாவத்தினும் சாமான்னிய அபாவத்தினை வேறாக வொப்பாவிடின் எங்ஙனம் செங்குடமுடைய பூதலத்தில் "கருங்குடமின்று" என்பதான தோற்ற முண்டாகின்றதோ அங்ஙனமே "கடமில்லை" என்பதான தோற்றமு முண்டாக வேண்டும். எங்ஙனம் செங்குடத்தில் "செங்குடம் கருங்குடமன்று" என்பதான தோற்றமுண்டாகின்றதோ அங்ஙனமே "செங்குடம் கடமன்று" என்பதான தோற்றமும் உண்டாக வேண்டும். இவ்வாறாய தோற்றம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் விசேஷாபாவத்தினும் சாமான்னியாபாவத்தினை வேறாகவே யொப்ப வேண்டும்.

## ௬000. வியாசஜ்ய, அவ்வியாசஜ்ய வேறுபாட்டால் மீண்டும் அவ்விரு அபாவங்களின் இருவித வேற்றுமை.

அல்லது முற்கூறிய அத்தியந்தாபாவமும், அந்நியோன்னியாபாவமுமா மிவ்விரண்டும் வியாசஜ்யத்திலிருக்கும் தர்மாவச்சின்ன பிரதியோகித்தன்மை யுடைய அபாவம், அவ்வியாசஜ்யத்தி லிருக்கும் தர்மாவச்சின்ன பிரதி யோகித் தன்மையுடைய அபாவம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இரு விதமாகின்றன. அநேகங்களி லிருப்பதாகிய தர்மத்தினை வியாசஜ்யத்தி லிருக்கும் தர்ம மென்பர். எங்ஙனம்: இருமை, மும்மை முதலிய தர்மம் போலும். ஒன்றிலிருப்பதாகிய தர்மத்தினை அவ்வியாசஜ்யத்தி லிருக்கும் தர்மமென்பர். எங்ஙனம்: கடத்வ, படத்வ முதலியவை போலும். ஆண்டு பூதலத்தில் கடமிருக்கினும் "இப்பூதலத்தில் கட, பட மிரண்டுமில்லை" என்பதான தோற்றம் உலகருக் குண்டாகின்றது. அத்தோற்றத்தால் அப்பூதலத்தில் கட, பட மிரண்டின் அத்தியந்தாபாவம் சித்தமாகின்றது. அவ்வத்தியந்தா பாவத்தின் பிரதியோகித்தன்மை கேவலம் கடத்திலும், கேவலம் படத்திலு மின்றும். ஆனல் அக்கட, பட மிரண்டில் பிரதியோகித் தன்மை யிருக்கின்றது. இருமை தர்மமும் கேவலம் கடத்திலும், கேவலம் படத்திலு மிருப்பதன்று. ஆனல் கட, பட மிரண்டிலேயே இருமைத்தர்மம் ஸ்வரூப சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அந்த பிரதியோகித்தன்மை வியாசஜ்யத்திலிருக்கும் இருமை தர்மத்தானேயே அவச்சின்னமாகின்றது. ஆகையால் கடமுடைய பூதலத்தில் "கடபடமின்று" எனக் கூறிய தோற்றத் தால் சித்தித்த கட, பட மிரண்டின் அத்தியந்தாபாவம் வியாசஜ்யத்தி லிருக் கும் தர்மாவச்சின்ன பிரதியோகித் தன்மையுடைய அத்தியந்தாபாவமெனப் படுகின்றது. இவ்வாறாக கடத்தில் "இக்கடம், கட படமாமிரு வடிவமன்று" என்பதான தோற்றம் உலகருக்கு உண்டாகின்றது. அத்தோற்றத்தால் கடத்தில் கட, பட மிரண்டின் அந்நியோன்னியாபாவம் சித்தமாகின்றது. அவ்வந்நியோன்னியாபாவம் வியாசஜ்யத்திலிருக்கும் தர்மாவச்சின்ன பிரதி யோகித் தன்மையுடைய அந்நியோன்னியாபாவமெனப்படுகின்றது. வியா சஜ்யத்திலிருக்கும் தர்மாவச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய அத்தியந்தா பாவத்தினையும், அந்நியோன்னியா பாவத்தினையும் இரு அபாவ மென்றுங் கூறுவர். பூதலத்தில் கேவலம் ஒரு கடத்தின் அத்தியந்தாபாவமும், கடத்தில் கேவலம் ஒரு படத்தின் அந்நியோன்னியாபாவமு மிருக்கின் அவ்வத்தியந்தா பாவமும், அந்நியோன்னியாபாவமும் கடத்வ,படத்வவடிவ அவ்வியாசஜ்யத்தி லிருக்கும் தர்மத்தால் அவச்சின்ன பிரதியோகித்தன்மை யுடையனவாகையால் அவ்வியாசஜ்யத்திலிருக்கும் தர்மாவச்சின்ன பிரதியோகித் தன்மை யுடையது எனப்படுகின்றன. ஆண்டு அவ்வியாசஜ்யத்தி லிருக்கும் தர்மாவச்சின்ன பிரதியோகித் தன்மையுடைய அபாவத்தினும் வியாசஜ்யத்தி லிருக்கும் தர்மா வச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய அபாவம் வேறேயாகின்றது. ஏனெனின் ஓர்கால் அவ்விரு அபாவங்களின் பேதம் அங்கீகரியாவிடின் எங்ஙனம் கடமுடைய பூதலத்தில் "கடமில்லை" என்பதான தோற்ற முண்டாவதின்றோ அங்ஙனமே கடமுடைய பூதலத்தில் "கடமிருக்கிறது" என்பதான தோற்ற

முண்டாகாத்தாகவேண்டும். எங்ஙனம் கடத்தில் "கடம்கடமன்று" என்பதான தோற்றமுண்டாகாதோ அங்ஙனமே கடம், கட படமிரண்டு மன்று என்பதான தோற்றம் உண்டாகாததாக வேண்டும். கூறிய விடத்தில் அத்தோற்றமோ உலகர் யாவருக்கும் அனுபவ சித்தமாம். ஆகையால் கேவலம் கடாபாவத்தினும், கேவலம் படாபாவத்தினும் கட, படமா மிரண்டின் அபாவத்தை வேறாகவே யொப்ப வேண்டும்.

௧00௧. கேவல விசேஷ, விசேஷியா பாவத்தினும் விசிஷ்டா பாவத்தின் வேறுந் தன்மையின் வர்ணனம்.

இவ்வாறாக கேவலம் விசேஷணத்தின் அபாவத்தினும், கேவலம் விசேஷியத்தின் அபாவத்தினும் விசிஷ்டத்தின் அபாவம் வேறேயாகின்றது. எங்ஙனம்: தண்ட வடிவ விசேஷணத்தின் அபாவத்தினும், புருஷ வடிவ விசேஷியத்தின் அபாவத்தினும் தண்ட விசிஷ்ட புருஷனது அபாவம் வேறேயாகின்றது. ஆண்டு தண்ட வடிவ விசேஷண மிருந்து புருஷ வடிவ விசேஷிய மில்லாவிடத்தில் "தண்டி புருஷனில்லை" என்பதாக விசிஷ்டாபாவத்தை விஷயஞ் செய்யும் பிரதீதி யுண்டாகின்றது. புருஷ வடிவ விசேஷிய மிருந்து தண்ட வடிவ விசேஷணமில்லாவிடத்தில் "தண்டி புருஷன் இல்லை" என்பதான விசிஷ்டாபாவத்தை விஷயஞ் செய்யும் தோற்ற முண்டாகின்றது. ஆண்டு விசிஷ்டாபாவத்தினை விசேஷணாபாவ வடிவமாக யொப்பின் தண்ட வடிவ விசேஷண மிருக்கின் எங்ஙனம் "தண்டமில்லை" என்பதான தோற்ற முண்டாவதின்றோ அங்ஙனமே "தண்டி புருஷனில்லை" என்னும் தோற்றமும் உண்டாகாததாக வேண்டும். விசிஷ்டாபாவத்தினை விசேஷியாபாவ வடிவமாக வொப்பின் எங்ஙனம் புருஷ விசேஷிய மிருக்கின் "புருஷன் இல்லை" என்பதான் தோற்றம் உண்டாவதின்றோ அங்ஙனமே "தண்டிபுருஷனில்லை" என்னும் தோற்றமும் உண்டாகாததாக வேண்டும். விசேஷண, விசேஷிய மிருக்கினும் "தண்டி புருஷனில்லை" என்னும் விசிஷ்டாபாவத்தினை விஷயஞ் செய்யுந் தோற்றமோ உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் கேவலம் தண்ட வடிவ விசேஷணத்தின் அபாவத்தினும், கேவலம் புருஷ வடிவ விசேஷியத்தின் அபாவத்தினும் தண்ட விசிஷ்ட புருஷனது அபாவம் வேறாகவே யொப்பப்படவேண்டும். இவ்வாற்றால் கட முதலிய பிரதியோகி ஒன்றுனதாயினும் நீலத்வம் கடத்வம், உபய்த்வமா மிவை முதலிய பிரதியோகித்தன்மை அவச்சேதக தர்மங்களின் வேறுபாட்டால் அத்தியந்தாபாவத்திற்கும், அந்நியோன்னியா பாவத்திற்கும் நாநாத்தன்மை காணப்படுகின்றது.

௧00௨. பிரதியோகித்தன்மை அவச்சேதக சம்பந்தத்தின் பேதத்தானும் அபாவத்தின் நாநாத்தன்மையின் வர்ணனம்.

பிரதியோகித்தன்மை அவச்சேதக சம்பந்தத்தின் வேறுபாட்டாலும் அபாவத்தின் நாநாத்தன்மையைக் காட்டுவாம். ஆண்டு சையோக சம்பந்தத்தால் கடமுடைய பூதலத்தில் "சமவாய சம்பந்தமாக கடமில்லை" என்பதான தோற்றம் உலகருக் குண்டாகின்றது. அத்தோற்றத்தால் அப்பூதலத்தில்

அக்கடத்தின் சமவாய சம்பந்தாவச்சின்ன பிரதியோகித் தன்மையுடைய அத்தியந்தாபாவம் சித்தமாகின்றது. சமவாய சம்பந்தத்தால் கட முடைய கபாலங்களில் "சையோக சம்பந்தத்தால் கபாலங்களில் கடமின்றும்" என்பதான தோற்றம் உலகருக் குண்டாகின்றது. அத்தோற்றத்தால் அக்கபாலங்களில் கடத்தின் சையோக சம்பந்தாவச்சின்ன பிரதியோகித் தன்மையுடைய அத்தியந்தாபாவம்சித்தமாகின்றது. அவ்விரு அத்தியந்தாபாவமும் பரஸ்பரம் வேறும். ஆண்டு கடவடிவ பிரதியோகியும், கடத்வ வடிவ பிரதியோகித்தன்மை அவச்சேதக தர்மமும் ஒன்றுயினும் சையோக, சமவாய வடிவ பிரதியோகித் தன்மை அவச்சேதக சம்பந்தத்தின் வேறுபாட்டானேயே கடத்தினது அத்தியந்தாபாவத்தின் பேத முண்டாகின்றது. இவ்வாருக திரவியத்தி லிருக்கும் குண, கர்மங்கட்கு குண, கர்ம முதலிய பதார்த்தங்களிலோ சமவாயசம்பந்தாவச்சின்ன பிரதியோகித்தன்மையுடைய அத்தியந்தாபாவ மிருப்பதின்று. குண, கர்மங்கட்கு திரவியத்தில் சையோக சம்பந்தாவச்சின்ன பிரதியோகித் தன்மையுடைய அத்தியந்தாபாவ மிருக்கின்றது. இவ்வாருக பிரதியோகித் தன்மை அவச்சேதக தர்மத்தின் வேறுபாட்டாலும், பிரதியோகித்தன்மை அவச்சேதக சம்பந்தத்தின் வேறுபாட்டாலும் ஒரே வஸ்துவிற்கு அபாவங்களின் பேத முண்டாகின்றது. இதனிடத்தும் இவ்வளவு விசேஷத்தன்மை யிருக்கின்றது. அத்தியந்தாபாவத்தின் அநேகத்தன்மையிலோ பிரதியோகித் தன்மை அவச்சேதக தர்மத்தின் பேதமும், பிரதியோகித்தன்மை அவச்சேதக சம்பந்தத்தின் பேதமுமா மிரண்டுங் காரணமாகின்றன. அந்நியோன்னியாபாவத்தின் அநேகத்தன்மையிலோ கேவலம் பிரதியோகித்தன்மை அவச்சேதக தர்மத்தின் பேதமே காரணமாகின்றது.

## ௬00ரு. அபாவத்திற்கு அதிகரண வடிவம் ஒப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மத வர்ணனம்.

ஈண்டு மீமாஞ்சக பிரபாகரரின் மதமோ இதுவாம். பூதல முதலியவைகளில் "கடமில்லை" என்பதாக கடாபாவத்தை விஷயஞ்செயயும் தோற்ற முண்டாகின்றது. அக்கடத்தின் அபாவம் பூதலத்தினும் வேறன்றும். பூதல ஸ்வரூபமேயாம். இவ்வாருகஎவ்வெவ்வபாவம் எவ்வெவ்வதிகரணத்தில்தோற்றுகின்றதோ அவ்வவ்வபாவம் அவ்வவ்வதிகரண வடிவமேயாம். அவ்வதிகரணத்தினும் அவ்வபாவம் வேறுகிறதில்லை. ஓர் கால் அபாவத்தினை பூதல முதலிய அதிகரணத்தினும் வேருக வொப்பின் ஒன்றோ கௌரவதோஷத்தின் அடைவு சம்பவிக்கின்றது. மற்றையது அபாவத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு அபாவத்தினேடு விசேஷணத் தன்மையெனப் பெயரிய சம்பந்தம் கற்பிக்கப்படுவதாகும். மூன்றுவது முதல் அபாவத்திற்கும் வேறோர் அபாவம் கற்பிக்கப்படுவதாகும். அங்ஙனமே வேறு அபாவத்திற்கும் வேறோர் மூன்றுவது அபாவம் கற்பிக்கப்படுவதாகும். மூன்றுவதற்கு நான்காவது அபாவம், நான்காவதற்கு ஐந்தாவது அபாவம், ஐந்தாவதற்கு ஆறுவது அபாவம் இவ்வாருக பின் பின் அபாவங்களின் தொடர்ச்சி யொப்புவதில் அநவஸ்தா தோஷத்தின் அடைவு சம்பவிக்கும். அபாவத்தின் அதிகரண ஸ்வரூபமாக வொப்புவதில் கூறிய மூன்று

தோஷங்களும் சம்பவியாது. ஆகையால் கட முதலியவைகளின் அபாவத்தினை பூதல முதலிய அதிகரண ஸ்வரூபமாக வொப்புவதே நலமுடைய்தாம்.

## கoo௪. மீமாஞ்சகர்களின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறிய பிரபாகரரின் மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் அபாவத்தினை அதிகரண ஸ்வரூபமாகவொப்பின் "பூதலத்தில் கடாபாவமிருக்கிறது" என்பதாக பூதலம், கடாபாவமாமிவற்றின் ஆதார, ஆதேய பாவத்தினை விஷயஞ்செய்வதாகிய தோற்றம் உண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின் வஸ்துவின் அபேதத்தில் ஆதார, ஆதேய பாவத்தை விஷயஞ் செய்யுந் தோற்றம் உண்டாகிறதில்லை. ஓர் கால் அபேதத்திலும் ஆதார, ஆதேய பாவத்தின் தோற்ற முண்டாகுமாயின் எங்ஙனம் கடாபாவத்திற்கு பூதலத்தோடு அபேத மிருக்கின்றதோ அங்ஙனமே பூதலத்திற்கும் அப்பூதலத்தோடு அபேத மிருக்கின்றது. ஆகையால் "பூதலத்தில் கடாபாவமிருக்கிறது" என்பதான தோற்றத்தினைப்போன்று "பூதலத்தில் பூதலமிருக்கிறது" என்பதாகவும் தோற்றமுண்டாகவேண்டும். அத்தகைய தோற்றம் ஒருவருக்கும் உண்டாகிறதில்லை. ஆகையால் ஆதார, ஆதேய பாவத்தை விஷயஞ்செய்யுந் தோற்றத்தின் வலிவால் அபாவத்தினை அதிகரணத்தினும் வேறாக வொப்பவேண்டும். அல்லது அபாவத்தினை அதிகரண வடிவமாக வொப்பின் ஜலத்திலுள்ள கந்த குணத்தின் அபாவம் ஜல ஸ்வரூபமேயாகும். ஜல வடிவ திரவியத்தினை கிரஹிப்பதில் கிராண இந்திரியத்திற்குச் சாமர்த்திய மின்றாம். ஆனால் சக்ஷு, துவக்கிந்திரியத்திற்குச் சாமர்த்திய மிருக்கின்றது. ஆகையால் ஜலத்திலுள்ள கந்தாபாவத்தின் பிரத்தியக்ஷம் கிராண இந்திரியத்தால் உண்டாகாததாக வேண்டும்; சக்ஷு, துவக்கிந்திரியத்தால் பிரத்தியக்ஷ முண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. அல்லது அபாவத்தினை அதிகரண வடிவமாக வொப்பின் கடத்தின் பிராகபாவத்தினையும், பிரத்துவம்சாபாவத்தினையும் கபால வடிவமாகவே வொப்புவதாகும். அக்கபாலம் கடமிருக்கினு மிருக்கின்றது. ஆகையால் கட காலத்திலும் கபாலங்களில் "இதில் கடம் உண்டாகும்" "இதில் கடம் நாசமாயிற்று" என்பதாக கடத்தின் பிராகபாவ, பிரத்துவம்சாபாவத்தினை விஷயஞ் செய்யுந் தோற்றம் உண்டாக வேண்டும். அங்ஙனமாய தோற்றம் உண்டாவதின்று. ஆகையால் அவ்வபாவத்தினை அதிகரணத்தினும் வேறாகவே வொப்ப வேண்டும். அல்லது அபாவத்தினை அதிகரணத்தினும் வேறாக வொப்புவதில் பிரபாகரர் அபாவங்கட்கு அநவஸ்தைகூறியதும் சம்பவியாது.

## கooரு. இரண்டாவது அபாவத்திற்கு பிரதியோகி வடிவம் ஒப்புவோராகிய பிராசீனர்களின் மதம்.

ஆண்டு பிராசீன நையாயிகரோ அநவஸ்தா தோஷத்தை இவ்வாறாக நீக்குகின்றனர். அபாவத்தின் அபாவம் பாவ வடிவமேயாகின்றது. பாவத்தினும் வேறாவதன்று. அதாவது; இரண்டாவது அபாவம் முதல் அபாவத்தின் பிரதியோகி ஸ்வரூபமேயாகின்றது. எங்ஙனம்: கடமில்லா பூதலத்தி லிருக்கும் கடத்தின் அத்தியந்தாபாவத்தின் அத்தியந்தாபாவம் கடமுடைய பூதலத்திலேயே இருக்கின்றது. ஆகையால் கட வடிவ

பிரதியோகியின் சமநியதமாவதால் இரண்டாவது அபாவம் கட ஸ்வரூபமே யாகின்றது. கடமுடைய பூதலத்தில் "கட அத்தியந்தாபாவமில்லை" என்பதான தோற்றமும் அக்கடத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆகையால் இது சித்தித்தது. முதல் அபாவத்தின் அபாவம் யாதோ அவ்விரண்டாவது அபாவமோ முதல் அபாவத்தின் பிரதியோகி ஸ்வரூபமாகின்றது. அவ்விரண்டாவது அபாவத்தின் அபாவம் யாதோ அம்மூன்ருவது அபாவம் முதல் அபாவத்தின் சமநியதமாவதால் முதல் அபாவ ஸ்வரூபமாகின்றது. நான்காவது அபாவம் பிரதியோகி ஸ்வரூபமாகின்றது. இவ்வாருக பின் பின்னுண்டாம் அபாவங்கள் யாவும் முதல் அபாவத்திலும் அவற்றின் பிரதியோகியிலுமே முறையாக அடங்குவதாகின்றது. ஆகையால் அநவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகாது.

## ௬௦௦௬. மூன்ருவது அபாவத்திற்கு முதலாவது அபாவ வடிவம் ஒப்புவோராகிய நவீன நையாயிகர்களின் மதம்.

நவீன நையாயிகரோ அவ்வநவஸ்தா தோஷத்தினை இவ்வாருக நிவர்த்தி செய்கின்றனர். கடமுடைய பூதலத்தில் "கட அத்தியந்தாபாவமில்லை" என்பதான நிஷேதமுக தோற்றத்தின் விஷயத்தன்மை கட வடிவ பாவ பதார்த்தத்தில் சம்பவியாது. ஆகையால் இரண்டாவது அபாவம் முதல் அபாவத்தினது கட வடிவ பிரதியோகியின் சமநியதமாயினும் கட ஸ்வரூபமாகிறதில்லை. கடத்தினும் வேறேயாகின்றது. இரண்டாவது அபாவத்தின் மூன்ருவது அபாவம் முதல் அபாவத்தின் சமநியதமாவதால் முதல் அபாவ வடிவமேயாகின்றது. மூன்ருவது அபாவத்தின் நான்காவது அபாவம் இரண்டாவது அபாவத்தின்சமநியதமாவதால் இரண்டாவது அபாவவடிவமே யாகின்றது. இவ்வாருக ஐந்தாவது, ஆருவது, ஏழாவது, எட்டாவது இவை முதலிய அபாவங்கள் பின் பின்னுண்டாகுமாயின் அவ்வெல்லா அபாவங்களும் முறையாக முதல் அபாவத்திலும், இரண்டாவது அபாவத்திலுமே அடக்கமாகும். ஆகையால் கூறிய அநவஸ்தா தோஷத்தின் பிராப்தியுண்டாகாது. சமான அதிகரணத்தில் இருப்பதனை சமநியதத் தன்மையென்பர்.

## ௬௦௦எ. அபாவத்தினை அநுபலப்தி பிரமாணத்தின் விஷயமாக ஒப்பும் பட்டபாதரின் மதம்.

ஈண்டு மீமாஞ்சக பட்டபாதரின் மதமோ இதுவாம். முற்கூறிய தோஷங்களால் அபாவம் அதிகரண ஸ்வரூபமன்ரும். அதிகரணத்தினும் வேருமம்; அவ்வபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாவதின்று. ஆனல் ஆருவது அநுபலப்தியாகிய பிரமாணத்தாலேயே அபாவத்தின் ஞானமுண்டாகின்றது.

## ௬௦௦அ. கற்பிதவஸ்துவின் அபாவத்திற்கு அதிகரண வடிவம் ஒப்புவோராகிய வேதாந்திகளின் மதம்.

வேதாந்திகளின் மதமோ இதுவாம். பூதல முதலியவைகளில் உண்டாம் கட முதலியவைகளின் அபாவம் அதிகரண வடிவமன்ரும். ஆனல்

கட முதலியவைகளின் அபாவம் பூதல முதலிய அதிகரணங்களினும் வேருகின்றது. ஆனால் எவ்வஸ்து எவ்வதிஷ்டானத்தில் கற்பிதமாகின்றதோ அக்கற்பித வஸ்துவின் அபாவம் அவ்வதிஷ்டானத்தினும் வேருகிறதில்லை; அவ்வதிஷ்டான வடிவமேயாகின்றது. எங்ஙனம்: ரஜ்ஜுவில் கற்பித சர்ப்பத்தின் அபாவம் ரஜ்ஜு ஸ்வரூபமேயாகின்றது. அங்ஙனமே கிளிஞ்சலில் கற்பித வெள்ளியின் அபாவம் கிளிஞ்சல் ஸ்வரூபமேயாகின்றது. பூதலமுதலியவைகளிலுள்ள கட முதலியவைகளினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாகிறதில்லை; அநுபலப்திப் பிரமாணத்தானேயே அபாவத்தின் ஞான முண்டாகின்றது. அபாவ நிரூபணம் முற்றிற்று.

## கoo௧. சக்தியினையும், சாத்ருசியத்தினையும் வேறு பதார்த்தமாக ஒப்பும் மீமாஞ்சக பிரபாகரர் மதம்.

இனி முற்கூறிய திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களினும், சக்தியினையும், சாத்ருசியத்தினையும் வேறு பதார்த்தங்களாக வொப்புவோராகிய பிரபாகரர்களின் மதத்தினைக் கண்டிக்கும் பொருட்டு முதலில் பிரபாகரரின் மத்தை நிரூபிப்பாம். முற்கூறிய திரவிய முதலிய பதார்த்தங்களைப் போன்று சக்தியும் வேறோர் பதார்த்தமேயாம். ஏனெனின் வன்னியின் சமீபத்தில் யாதாமோர் விசேஷ மணி அல்லது மந்திரம், அல்லது மூலிகை முதலியவைகளிருக்கின் அவ்வன்னியானது எவ்வஸ்துவினையும் தஹிக்கிறதில்லை. ஆண்டு வஸ்துவினது முன்னுருவத்தின் நிவர்த்தி வாயிலாக வேறு உருவத்தின் உற்பத்தியினை தாஹ மென்பர். எங்ஙனம்: வன்னியில் வைக்கப்பட்ட கட முதலியவைகளின் முன்னுள்ள கருமை உருவம் நஷ்டமாகி செம்மை உருவம் உண்டாகின்றது. இதுவே வன்னியாலாய தாஹமாம். அத்தாஹம் மணி, மந்திர முதலியவைகளிருக்கின் உண்டாகிறதில்லை. மணி, மந்திர முதலியன வன்னியின் சமீபத்திலிராததாயின் அப்பொழுது வன்னியானது தாஹத்தை யுண்டாக்குகின்றது. ஆகையால் மணி, மந்திர முதலியவைகளில் தாஹ வடிவ காரியத்தை பிரதிபந்திக்குந் தன்மையே சித்தமாகின்றது. அக்காரியத்தினது அற்பகாரணத்தின் விநாசத்தன்மை யாதோ இதுவே வஸ்துவில் பிரதிபந்தகத் தன்மையாகின்றது. ஆகையால் அம்மணி, மந்திர முதலியவைகளில் பிரதிபந்தகத்தன்மையினை சித்திசெய்யும்பொருட்டு தாஹ வடிவ காரியத்தினது யாதாமோர் காரணத்தை விநாசஞ் செய்யுந் தன்மை அவசியம் அங்கிகரிப்பதாகும். ஆண்டு தாஹத்தின் வன்னி வடிவ காரணத்தினை விநாசஞ் செய்யுந் தன்மையோ மணி, மந்திர முதலியவைகளில் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் வன்னியாகிய காரணமோ ஆண்டு பிரத்தியக்ஷமாகவே தோற்றுகின்றது. பரிசேஷத்தால் வன்னியிலிருப்பதாகிய தஹித்தற் சக்தியாகிய காரணத்தினை விநாசஞ் செய்யுந் தன்மையே மணி, மந்திர முதலியவைகளில் ஒப்புவதாகும். ஆகையால் மணி, மந்திர முதலியவைகளில் இருக்கும் தாஹமாகிய காரியத்தினை பிரதிபந்திக்குந் தன்மை சக்தியன்றி சம்பவியா தாகையால் சக்தி கற்பிக்கப்படுகின்றது. வன்னியில் மணி, மந்திர முதலிய பிரதிபந்தகங்களின் இன்மை யிருக்குமாயின் மீண்டும்

தாஹமாகிய காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. அங்ஙனமே பிரதிபந்தக மணி, மந்திர முதலியவைகளிருக்கினும் உத்தேஜகமாகிய யாதாமோர் விசேஷ மணி, மந்திர முதலியன ஆண்டு பிராப்தமாயின் அப்பொழுது தாஹமாகிய காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் இது அறியத்தக்கது. பிரதிபந்தக மணி, மந்திர முதலியவைகளின் இன்மையும், உத்தேஜகமாகிய மணி, மந்திர முதலியனவும் வன்னியில் தாஹத்தின்காரணமாகிய சக்தியை மீண்டும் உண்டாக்குகின்றது.

## கoகo. உத்தேஜகத்தின் லக்ஷணம்.

ஆண்டு "கார்யப்ரதிபந்தக கோடிப்ரவிஷ்டாபாவ ப்ரதியோகித்வம் உத்தேஜகத்வம்" (இ-ள்.) காரியத்தினை பிரதிபந்திக்கும் வகையில் பிரவேசிப்பதாகிய அபாவம் யாதோ அவ்வபாவத்தின் பிரதியோகித்தன்மையினை உத்தேஜகத்வமென்பர். எங்ஙனம்: பிரசங்கத்தில் கேவலம் மணி, மந்திர முதலியவைகளே தாஹத்தின் பிரதிபந்தகத்தன்மையன்று. ஆனால் உத்தேஜக வடிவ மணி, மந்திரங்களின் அபாவ விசிஷ்ட மணி, மந்திர முதலியவைகட்கே தாஹத்தின் பிரதிபந்தகத்தன்மை யிருக்கின்றது. ஓர்கால் கேவல மணி, மந்திர முதலியவைகட்கே தாஹத்தின் பிரதிபந்தகத்தன்மை உண்டாகுமாயின் உத்தேஜகமாகிய மணி, மந்திர முதலியவைகளிருக்கின் பிரதிபந்தக மணி, மந்திர முதலியவைகளிருந்தும் தாஹமாகிய காரியம் உண்டாவதாகின்றது. அது உண்டாகாததாகவேண்டும். ஆகையால் உத்தேஜக மணி, மந்திர முதலியவைகளின் அபாவ விசிஷ்ட மணி, மந்திர முதலியவைகளையே பிரதிபந்தகமாக வொப்புவதாகும். இவ்வாற்றால் உத்தேஜகமாகிய மணி, மந்திர முதலியவைகளின் அபாவம் தாஹமாகிய காரியத்தின் பிரதிபந்தக வகுப்பில் பிரவேசிப்பதாம். அந்த பிரதிபந்தக வகுப்பில் பிரவேசிக்கும் அபாவத்தின் பிரதியோகித்தன்மை உத்தேஜக வடிவ மணி, மந்திர முதலியவைகளி லிருக்கின்றது. இதுவே மணி, மந்திர முதலியவைகளில் உத்தேஜகத்தன்மையாம். அல்லது எங்ஙனம் அவ்வன்னியில் தாஹமாகிய காரியத்தை யுண்டு பண்ணுவதும், உற்பத்தி விநாச முடையதும், அதீந்திரியமுமாகிய சக்தியிருக்கின்றதோ அங்ஙனமே எவ்வெக் காரணத்தால் எவ்வெக்காரியத்தின் உற்பத்தி யுண்டாகின்றதோ அவ்வக்காரணத்தில் அவ்வக்காரியத்தை யுண்டாக்கும் சக்திநியமமாக இருக்கின்றது. அச்சாமர்த்திய வடிவ சக்தியின்றி எக்காரணமும் காரியத்தினை உண்டாக்காததாகும். எங்ஙனம்: மண்ணில் கடத்தை யுண்டாக்கும் சக்தி யிருக்கின்றது. தந்துவில் படத்தை யுண்டாக்கும் சக்தி யிருக்கின்றது.

சங்கை:—கூறிய யுக்தியால் சக்தியின் சித்தி யுண்டாகுக. என்றாலும் அச்சக்தி கூறிய திரவிய முதலிய பதார்த்தங்களினும் வேறு மென்பதில் பிரமாணம் யாதென்னுஞ் சங்கை யுண்டாக. இனி திரவிய முதலிய பதார்த்தங்களினும் அச்சக்தியின் வேறுந் தன்மையினை நிரூபிப்பாம்.

## கoகக. சக்தியை சாதிக்கும் யுக்தி.

ஆண்டு குண, கர்மங்களில் பிருதிவி முதலிய திரவியங்க ளிருப்பனவன்று. சக்தியோ குண, கர்மங்களிலுமிருக்கின்றது. ஆகையால் அச்சக்தி

திரவிய வடிவமுமன்றாம். குணத்திலும், கர்மத்திலும் குண கர்மங்களிருப்பனவன்று. சக்தியோ அக்குண கர்மங்களிலு மிருக்கின்றது. ஆகையால் அச்சக்தி குண வடிவமும், கர்ம வடிவமுமன்றாம். சாமான்னியம், விசேஷம், சமவாயம், அத்தியந்தாபாவம், அந்நியோன்னியாபாவமா மிப்பதார்த்தங்கட்கு உற்பத்தி விநாச முண்டாகிறதில்லை. சக்தியோ உற்பத்தி விநாசமுடையதாம். ஆகையால் சக்தி சாமான்னியாதி வடிவமுமன்றாம். சக்தி உற்பத்தியுடையதாவதால் ஆனாதி பிராகபாவ வடிவமுமன்றாம். சக்தி விநாசமுடையதாவதால் முடிவில்லாத பிரத்துவம்சாபாவ வடிவமுமன்றாம். சக்தியினைப் போன்று கூறிய சாமயிகாபாவமும் உற்பத்தி விநாசமுடையதேயாம். ஆகையால் சாமயிகாபாவத்திலேயே சக்தி அடங்குவதாகும். என்றாலும் அபாவத்தில் நிஷேதமுக தோற்றத்தின் விஷயத்தன்மை உண்டாகின்றது. அங்ஙனமே சப்பிரதியோகிகத் தன்மையுண்டாகின்றது. அச்சக்தியில் நிஷேதமுக தோற்றத்தின் விஷயத்தன்மையும், சப்பிரதியோகிகத் தன்மையு மின்றாம். ஆகையால் எவ்வபாவத்திலும் அச்சக்தியின் அடக்கம் சம்பவியாது.

## ௩௦௧௨. சாத்ருசியத்தை சாதிக்கும் யுக்தி.

சக்தியினைப் போன்று சாத்ருசியமும் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களினும் வேறு பதார்த்தமேயாம். ஆண்டு "சந்திரனை யொத்தமுகம்" என்பதான தோற்றத்தால் முகத்தில் சந்திரனது சாத்ருசியம் சித்தமாகின்றது அங்ஙனமே "ஆவையொத்தகவயம்" என்பதானதோற்றத்தால் கவயமெனப் பெயரிய விலங்கில் ஆவின் சாத்ருசியம் சித்தமாகின்றது. ஆகையால் சாத்ருசிய பதார்த்தத்தில் பிரத்தியக்ஷமே பிரமாணமாம். அல்லது எங்ஙனம் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களில் சக்தியின் அடக்கம் சம்பவிப்பதில்லையோ அங்ஙனமே திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களில் சாத்ருசியத்தின் அடக்கமும் சம்பவியாது. ஆண்டு திரவிய, குண முதலிய ஆறு பாவ பதார்த்தங்களிலோ சாத்ருசியத்தின் அடக்கம் சம்பவியாது. எக்காரணத்தாலெனின். சாத்ருசியம் ஜாதி வடிவ சாமான்னியத்திலு மிருக்கின்றது. எங்ஙனம் ஆத்தன்மை ஜாதி நித்தியமாமோ அங்ஙனமே அசுவத்தன்மை ஜாதியும் நித்தியமாம். இவ்வாறாய தோற்றத்தால் அவ்வசுவத்தன்மை ஜாதியில் ஆத்தன்மை ஜாதியின் சாத்ருசியம் சித்தமாகின்றது. ஜாதி வடிவ சாமான்னியத்தில் திரவிய, குண முதலியன இருப்பனவன்று. ஆண்டு ஓர் கால் சாத்ருசியம், திரவியம், குண முதலிய வடிவமாகுமாயின் எங்ஙனம் ஜாதி வடிவ சாமான்னியத்தில் திரவியம், குண முதலியன தோற்றாதனவாமோ அங்ஙனமே சாத்ருசியமும் தோற்றாததாகும். ஆகையால் திரவிய முதலிய ஆறு பாவ பதார்த்தங்களில் சாத்ருசியத்தின் அடக்கம் சம்பவியாது. சாத்ருசியம் கட முதலிய பாவ பதார்த்தங்களைப் போன்று இருத்தல் வடிவமாகவே தோற்றுகின்றது. அபாவத்தினைப் போன்று இன்மை வடிவமாக தோற்றுகிறதில்லை. ஆகையால் அபாவத்திலும் சாத்ருசியத்தின் அடக்கம் சம்பவியாது. ஓர் கால் சாத்ருசியம் அபாவ வடிவமாகுமாயின் பாவ வடிவமாக தோன்றாததாகும். இன்மை வடிவமாகவே தோன்றுவதாகும். ஆகையால் சக்தியினைப்

போன்று சாத்ருசியமும் திரவிய முதலிய பதார்த்தங்களினும் வேறு பதார்த்தமாகவே ஒப்பப்பட வேண்டும்.

### ௧௦௧௫. சக்தியினை கண்டித்தல்.

வன்னி முதலியவைகளில் தாஹ முதலிய காரியங்களை உண்டு பண்ணும் ஒரு சக்தி யிருக்கிறதென்பதில் யாதோர் பிரமாணமுமின்றாம். மாறாக அனேக சக்திகளை யொப்புவதிலும், அனேக சக்திகட்கு அனேக பிராகபாவமும், அனேக பிரத்துவம்சாபாவமும் ஒப்புவதிலும், சக்தி, மணி, மந்திர முதலியவைகட்கு நாஸ்ய நாசகபாவம் ஒப்புவதிலும் கேவலம் கௌரவ தோஷமே பிராப்தமாகின்றது. ஆகையால் தாஹ முதலிய காரியத்தின் ஏது வடிவமாக வன்னி முதலியவைகளில் சக்தியினை கற்பித்தல் நலமுடைத் தன்றாம். ஆனால் உத்தேஜகமாகிய மணி, மந்திர முதலியவைகளின் அபாவத்தோடு விசிஷ்ட மணி, மந்திரமுதலியனவே தஹித்தல் வடிவ காரியத்தினை பிரதிபந்திப்பதாகின்றன. பிரதிபந்தக மணி, மந்திர முதலியவைகளின் அபாவமே அத்தாஹத்தினைக் குறித்து காரணமாகின்றது. தாஹத்தின் காரணமாகிய விசிஷ்ட அபாவம் சிலவிடத்தோ விசேஷண மாத்திரத்தின் அபாவத்தாலுண்டாகின்றது. சிலவிடத்தோ விசேஷிய மாத்திரத்தின் அபாவத்தாலுண்டாகின்றது. சிலவிடத்தோ விசேஷண, விசேஷியமா மிரண்டின் அபாவத்தாலுண்டாகின்றது. ஆண்டு எவ்விடத்தில் அவ்வன்னியின் சமீபமாக பிரதிபந்தக மணி, மந்திர முதலியனவும், உத்தேஜக மணி, மந்திர முதலியனவுமிருக்கின்றனவோ அவ்விடத்திலும் அத்தாஹ வடிவ காரியத்தின் உற்பத்தியுண்டாகின்றது. ஆண்டு பிரதிபந்தக மணி, மந்திராதி வடிவ விசேஷியத்தின் அபாவமோ யின்றாம். ஆனால் உத்தேஜகாபாவ வடிவ விசேஷணத்தின் அபாவமே யிருக்கின்றது. ஆகையால் அவ்விடத்தில் விசேஷணாபாவத்தோடு கூடிய விசிஷ்டாபாவமே தாஹத்திற்குக் காரணமாகின்றது. எவ்விடத்தில் அவ்வன்னியின் சமீபமாக பிரதிபந்தக மணி, மந்திர முதலியன இருப்பனவன்றோ ஆனால் உத்தேஜக மணி, மந்திர முதலியன இருக்கின்றனவோ அவ்விடத்திலும் தாஹமாகிய காரியம் உண்டாகின்றது. ஆண்டு உத்தேஜகாபாவ வடிவவிசேஷணத்தின் அபாவமும், பிரதிபந்தக மணி, மந்திரவடிவ விசேஷியத்தின் அபாவமு மிருக்கின்றன. ஆகையால் அவ்விடத்தில் அவ்விசேஷண, விசேஷிய உபயாபாவத்தோடு கூடிய விசிஷ்டாபாவமே தாஹத்தின் காரணமாகின்றது. எவ்விடத்தில் வன்னியின் சமீபமாக பிரதிபந்தக மணி, மந்திர முதலியனவும், உத்தேஜக மணி, மந்திர முதலியனவு மிருப்பனவன்றோ அவ்விடத்திலும் தாஹமாகிய காரியம் உண்டாகின்றது. ஆண்டு உத்தேஜகாபாவ வடிவ விசேஷணமோ இருக்கிறது. ஆனால் பிரதிபந்தக மணி, மந்திராதி வடிவ விசேஷியமின்றாம். ஆகையால் அவ்விடத்தில் விசேஷியாபாவத்தோடு விசிஷ்டாபாவமே தாஹத்திற்குக் காரணமாகின்றது. இவ்வாறாக தாஹமாகிய காரியத்தைக் குறித்து உத்தேஜகாபாவ விசிஷ்ட பிரதிபந்தகத்தின் அபாவத்திற்கு காரணத்தன்மை யொப்புவதானேயே உத்தேஜகாபாவ விசிஷ்ட பிரதிபந்தக மணி, மந்திர முதலியவைகளிருக்க தாஹ வடிவ காரியத்தி

வது உற்பத்தியின் ஆபத்தி நீங்கி விடுகின்றது. ஆகையால் வன்னியில் அனேக சக்தியும், சக்திகளின் அனேக பிராகபாவமும், பிரத்துவம்சாபாவமும் கற்பித்தல் பயனின்மையேயாம். மணி, மந்திர முதலியவைகளில் தாஹமாகிய காரியத்தின் அற்ப காரணத்தின் விநாசத்தன்மை வடிவ பிரதிபந்தகத்தன்மை இன்றாம். ஆனால் தாஹத்திற்குக் காரணமாகிய மணி, மந்திர முதலியவைகளின் அபாவம் யாதோ அக்காரணமாகிய அபாவத்தின் பிரதியோகித்தன்மையே மணி, மந்திர முதலியவைகளில் பிரதிபந்தகத் தன்மையாம். ஆகையால் பிரதிபந்தகத் தன்மையினும் வேறாக சம்பவியாமையால் சக்தியை கற்பிப்பது சம்பவியாது.

### ௧௦௧௪. சாத்ருசியத்தின் கண்டனம்.

ஆண்டு சக்தியினைப் போன்று சாத்ருசியமும் வேறு பதார்த்தமன்றாம். ஆனால் "தத்பிந்நத்வே ஸதி தத்கதபூயோதர்மவத்த்வம் ஸாத்ருஶ்யம்" (இ-ள்.) எப்பதார்த்தத்தில் எவ்வஸ்துவின் சாத்ருசியத் தோற்றம் உண்டாகின்றதோ அவ்வஸ்துவில் அசாதாரண வடிவமாக இருக்கும் அனேகத்தன்மை தர்மம் யாதோ அவ்வனேகத்தன்மை தர்மமுடைமையே அப்பதார்த்தத்தில் அவ்வஸ்துவின் சாத்ருசியமாம். எங்ஙனம் "சந்திரனையொத்ததுமுகம்" என்பதான தோற்றத்தால் முகத்தில் சந்திரனது சாத்ருசியம் சித்தமாகின்றது. ஆண்டு முகம் சந்திரனினும் வேறும், சந்திரனில் அசாதாரண வடிவமாக இருக்கும் களிப்புத்தன்மை, வட்டத்தன்மை முதலிய தர்மங்கள் யாவும் முகத்திலிருக்கின்றது. இதுவே முகத்தில் சந்திரனது சாத்ருசியமாம். ஆண்டு "வஸ்துவில் அசாதாரண தர்மமுடைமை சாத்ருசியம்" என இம்மாத்திரமே சாத்ருசியத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "தன்னினும் வேறாய்" என்னும் பதங் கூறாவிடின் பிரதியோகித்தன்மை வடிவமாக சாத்ருசியத்தினை நிருபிக்கும் சந்திரனிடத்தே அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். எக்காரணத்தாலெனின் அனேக தர்மமுடைமை சந்திரனிடத்தி லிருப்பனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "தன்னினும் வேறாய்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு சந்திரன் சந்திரனினும் வேறன்றாம். ஆகையால் சந்திரனிடத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. பிரமேயத்வம், ஞேயத்வம், அபேதத்வம் முதலிய தர்மங்கள் பதார்த்தங்கள் யாவற்றினு மிருக்கின்றன. ஆகையால் கடமும் சந்திரனது சாத்ருசியமாக வேண்டும். அதனை நிவர்த்திக்கும் பொருட்டு தர்மங்கட்கு அசாதாரணமென்னும் விசேஷணங் கூறப்பட்டது. பிரமேயத்தன்மை முதலியன அசாதாரண தர்மமன்றாம். சாதாரண தர்மமாம். மிகஅற்ப தர்மங்களைக்கொண்டு சாத்ருசிய வியவஹாரத்தினை நிவர்த்திக்கும் பொருட்டு அத்தர்மங்களின் அனேகத்தின்வாசகமாகிய "பூயம்" என்னும்பதங்கூறப்பட்டது. ஆண்டு சாத்ருசியத்தின் தர்மம் சிலவிடத்தோ ஜாதி வடிவமாகின்றது. சிலவிடத்து உபாதி வடிவமாகின்றது. ஆண்டு கடத்தின் சாத்ருசியம் படமாமென்னு மிடத்தோ கட, படங்களி லிருக்கும் பிருதிவித்வ முதலிய ஜாதியே சாத்ருசியத்தினை நிகழ்ச்செய்யும் தர்மமாம். எங்ஙனம் கோத்வ ஜாதி நித்திய

மாமோ அங்ஙனமே அசுவத்வ ஜாதியும் நித்தியமாம். ஈண்டு நித்தியத்வ வடிவ உபாதியே சாத்ருசியத்தினை நிகழச்செய்யுந் தர்மமாம். சந்திரனது சாத்ருசியம் முகமாம். ஈண்டும் களிப்புத்தன்மை முதலிய உபாதியே சாத்ருசியத்தினை நிகழச்செய்யுந் தர்மமாம். ஆகையால் சாத்ருசியம் திரவிய முதலிய பதார்த்தங்களினும் வேறன்றாம்; திரவிய முதலிய பதார்த்தங்களிலேயே அடக்கமாம். ஆகையால் மேற்கூறிய திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களே சித்தித்தன.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சுவாமி உத்தவாநந்தகிரி அவர்களது சீடராகிய சுவாமி சித்கனாநந்தகிரி அவர்களால் அருளிய கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவ மென்னும் பதார்த்தங்களின் நிரூபணமெனப் பெயரிய நியாயப்பிரகாசம் நான்காவது பரிச்சேதம் முற்றிற்று.

ஸ்ரீ குருப்பியோநமः, ஸ்ரீ காசி விசுவேசுவராப்பியாம் நமः.



உ

ஓம் ஸ்ரீகணேஶாயநம:, ஸ்ரீகுருப்யோநம:,
ஸ்ரீகாசிவிஶ்வேஶ்வராயநம:, ஸ்ரீஶங்கராசாரியேப்யோநம:.

# நியாயப்பிரகாசம்.

## ஐந்தாவது பரிச்சேதம்.

கணாத முனிகள் திருவாய் மலர்ந்தருளிய திரவிய முதலாக அபாவ மட்டுமாம் ஏழு பதார்த்தங்களுள் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களை இரண்டாவது பரிச்சேதத்திலும், உருவ முதலிய இருபத்து நான்கு குணங்களை மூன்றாவது பரிச்சேதத்திலும், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமென்னும் ஐந்து பதார்த்தங்களை நான்காவது பரிச்சேதத்திலும் நிரூபித்தனம். இனி திரவிய முதலிய ஏழுபதார்த்தங்களினதும், பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களினதும், உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களினதும் சாதர்மிய, வைதர்மியங்களை நிரூபிப்பான் வேண்டி இவ்வைந்தாவது பரிச்சேதத்தினை ஆரம்பிப்பாம்.

### ௧0௧௫. திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களின் ஞேயத்வம், பிரமேயத்வம், அபிதேயத்வம், அஸ்தித்வமாம் நான்கின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணம்.

அதனிடத்தும் முதலில் திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவ மென்னும் ஏழு பதார்த்தங்களின் சாதர்மிய, வைதர்மியங்களை நிரூபிப்பாம். ஈண்டு சமான தர்மத்தினை சாதர்மிய மென்பர். விருத்த தர்மத்தினை வைதர்மிய மென்பர். ஆண்டு திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களின் ஞேயத்தன்மை, பிரமேயத் தன்மை, அபிதேயத் தன்மை, அஸ்தித் தன்மை யென்னும் நான்கும் சாதர்மியமாகின்றன. ஈண்டு ஞானத்தின் விஷயத் தன்மையினை ஞேயத் தன்மை யென்பர். பிரமாவின் விஷயத்தன்மையினை பிரமேயத்தன்மை யென்பர். இச்சத்தத்தால் கேழ்ப்போருக்கு இவ்வர்த்தத்தின் போத முண்டாகுக என்னும் ஈசுவரனது இச்சா வடிவ சத்தத்தின் சக்தியினை அபிதா வென்பர். அவ்வபிதாவின் விஷயத் தன்மையினை அபிதேயத்தன்மை யென்பர். காலத்தின் சம்பந்தத்தினை அஸ்தித்தன்மை யென்பர். ஞேயத்வ முதலிய நான்கும் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களிலிருக்கின்றன. எப்பதார்த்தமும் ஞேயத்வ முதலியவைகளில்லாததன்றும். ஜீவாத்மாவின் ஞானத்திற்கும், பிரமாவிற்கும் பதார்த்தங்கள் யாவற்றிலும் விஷயத்தன்மை சம்பவியாது. என்றாலும் ஈசுவரனது ஞானத்திற்கும், பிரமாவிற்கும் பதார்த்தங்கள் யாவற்றிலும் விஷயத்தன்மை சம்பவிக்கின்றது. இக்காரணத்தானேயே "ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" என்னும் சுருதி ஈசுவரனை சர்வஞ்ஞனாகக் கூறி யிருக்கின்றது. கூறிய ஞேயத்வ முதலிய

நான்கும் பதார்த்தங்கள் யாவற்றிலும் இருப்பனவாகையால் கேவலம் சாதர்மியமே யாகின்றன. எதற்கும் வைதர்மிய முண்டாகிறதில்லை.

### கூ௦௪௬. திரவிய முதலிய ஆறு பதார்த்தங்களின் பாவத்வ சாதர்மியத்தினது வர்ணனம்.

திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம் என்னும் ஆறு பதார்த்தங்களின் பாவத்வம் சாதர்மியமாம். ஆண்டு "ஸமவாயைகார்த்த ஸமவாயாந்யதர ஸம்பந்தேந ஸத்தாவத்த்வம் பாவத்த்வம்" (இ-ள்.) சமவாய சம்பந்தத்தால் அல்லது ஏகார்த்த சமவாய சம்பந்தத்தால் இருக்கும் சத்தா ஜாதியுடையதனை பாவத்வ மென்பர். ஆண்டு திரவியம், குணம், கர்மம் என்னும் மூன்று பதார்த்தங்களிலோ சத்தா ஜாதி சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. சாமான்னியம், விசேஷம், சமவாய மென்னு மூன்று பதார்த்தங்களிலோ அச்சத்தா ஜாதி ஏகார்த்த சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆண்டு எத்திரவியம், குணம், கர்ம வடிவ ஒரு அர்த்தத்தில் சத்தா ஜாதி சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றதோ அத்திரவியாதி வடிவ ஒரு அர்த்தத்தில் சாமான்னிய முதலிய மூன்று பதார்த்தங்களும் சமவாயசம்பந்தத்தாலிருக்கின்றன. இதனையே ஏகார்த்த சமவாய சம்பந்தமென்பர். சமவாயம் திரவியம், குண முதலியவைகளில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று; ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கின்றது. என்றாலும் சமவாயத்தின் ஸ்வரூப சம்பந்தம் சமவாய ஸ்வரூபமேயாம். இவ்வாற்றால் ஏகார்த்த சமவாய சம்பந்தத்தால் சத்தாஜாதி சாமான்னியமுதலிய மூன்று பதார்த்தங்களிலிருக்கின்றது. கூறிய பாவத்வ தர்மம் அபாவத்தி லிருப்பதன்று. ஆகையால் பாவத்வ தர்மம் அபாவத்தின் வைதர்மியமாம். இவ்வாறாக எவ்வெத்தர்மம் எவ்வெப் பதார்த்தத்திலிருக்கின்றதோ அவ்வத்தர்மம் அவ்வப்பதார்த்ததின் சாதர்மியமாக அறிக. அவ்வப்பதார்த்தத்தினும் வேறு பதாத்தத்தினை வைதர்மியமாக அறிக.

### கூ௦௪௭. திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்களின் அனேகத்வ விசிஷ்ட பாவத்வமும், சமவாயித்வமுமா மிரு சாதர்மியத்தினை நிரூபிப்பாம்.

திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷ மென்னும் ஐந்து பதார்த்தங்கட்கோ அனேகத்வ விசிஷ்டபாவத்வமும், சமவாயித்வமுமா மிரண்டும் சாதர்மியமாகின்றன. ஆண்டு திரவிய பதார்த்தம் பிருதிவி, ஜல முதலிய வேறுபாட்டால் ஒன்பது வகைத்தாம். குண பதார்த்தம் உருவம், ரச முதலிய வேறுபாட்டால் இருபத்து நான்கு வகைத்தாம். கர்ம பதார்த்தம் எழும்பல் முதலிய வேறுபாட்டால் ஐவகைத்தாம். சாமான்னிய பதார்த்தம் பர, அபர வேறுபாட்டால் இருவகைத்தாம். ஒவ்வொரு நித்திய திரவியத்தில் இருப்பன வாகையால் விசேஷமும் எண்ணிறந்தனவேயாம். இவ்வாறாக திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்களில் அனேகத் தன்மையினை முன் கூறி வந்துள்ளோம். அங்ஙனமே முற்கூறிய முறைப்படி அவ்வைந்தும் பாவ வடிவமுமாம். ஆகையால் திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்கட்கு

அனேகத்தன்மை விசிஷ்ட பாவத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. பாவத்வ தர்மம் சமவாயத்திலு மிருக்கின்றது. அங்ஙனமே பிராகபாவ முதலிய வேறுபாட்டால் அனேகத்வ தர்மம் அபாவத்திலு மிருக்கின்றது. என்றாலும் சமவாயத்தில் அனேகத்வ தர்மமின்றும். அங்ஙனமே அபாவத்தில் பாவத்வ தர்மமின்றும். ஆகையால் அனேகத்வ விசிஷ்டாபாவத்வ தர்மம் சமவாயத்தினதும், அபாவத்தினதும் வைதர்மியமேயாம். பிரதியோகித் தன்மை சம்பந்தத்தால் அல்லது அநுயோகித்தன்மை சம்பந்தத்தால் சமவாயத்தின் இருப்புத்தன்மையினை சமவாயித்வமென்பர். ஆண்டு பிரதியோகித் தன்மை சம்பந்தத்தால் அல்லது அநுயோகித்தன்மை சம்பந்தத்தால் சமவாயம் திவிரய முதலிய ஐந்து பதார்த்தங்களிலேயே இருக்கின்றது. இவ்வாறத்தை முன்னர் நான்காவது பரிச்சேதத்தில் சாமான்னிய நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் திரவிய முதலிய ஐந்து பதார்த்தங்கட்கு சமவாயித்தன்மை வடிவ சாதர்மியமும் சம்பவிக்கின்றது.

கூகடி. திரவிய முதலிய நான்கின் சமவேத சமவேதத்வ சாதர்மியம்.

திரவியம், குணம், கர்மம், சாமான்னிய மென்னும் நான்கு பதார்த்தங்கட்கு "ஸமவேத ஸமவேதத்வ ஜாதிவ்யாப்ய ஸமானதர்மவாயித்வம்" என்னும் இவை சாதர்மியமாம். ஈண்டு சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய பதார்த்தத்தினை சமவேதமென்பர். திரவியத்தில் சமவேதமாகிய திரவிய முதலிய பதார்த்தங்களில் சமவேத பதார்த்தத்தில் இருப்பதும், பதார்த்தங்களை பிரிப்பதுமாகிய உபாதியுடைமை திரவிய முதலிய நான்கின் சாதர்மியமாம். எங்ஙனம்: கபாலத்தின் அவயவமாகிய கபாலிகா வடிவ திரவியத்தில் அக்கபால வடிவ திரவியம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. அக்கபால வடிவ திரவியத்தில் கட வடிவ திரவியம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் அக்கடத்தினை சமவேத சமவேதமென்பர். அதாவது; கடம் கபாலிகையில் சமவேத கபாலங்களில் சமவேதமெனப்படுகின்றது. இத்தகைய சமவேதத்தில் சமவேத கட வடிவ திரவியத்தில் இருப்பதாகிய திரவியத்தன்மை ஜாதி சமவேத சமவேதத்தி லிருப்பதெனப்படுகின்றது. அத்திரவியத்தன்மை ஜாதி பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய சமவேத சமவேதத்தி லிருப்பதும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியுமாகிய திரவியத்தன்மை ஜாதி பிருதிவி முதலிய திரவியங்களிலிருக்கின்றது. இவ்வாறாக கபால முதலிய அவயவங்களில் சமவேத கட முதலியவைகளில் சமவேதமாகிய உருவ முதலிய குணங்களில் இருப்பதாகிய குணத்தன்மை ஜாதியும், சமவேத சமவேதத்திலிருப்பதெனப்படுகின்றது. அங்ஙனமே குணத்தன்மை ஜாதி பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய சமவேத சமவேதத்திலிருப்பதும், பதார்த்தங்களை பிரிக்கும் உபாதியுமாகிய குணத்தன்மை ஜாதி உருவ முதலிய எல்லாக் குணங்களிலிருக்கின்றது. இவ்வாறாக கபால முதலிய அவயவங்களில் சமவேத கட முதலியவைகளில் சமவேத கர்மத்திலிருப்பதாகிய கர்மத்தன்மை ஜாதியும் சமவேத சமவேதத்தி லிருப்பதெனப் படுகின்றது. அக்கர்மத்தன்மை ஜாதி

பதார்த்தங்களை பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய சமவேத சமவேதத்தி லிருப்பதும், பதார்த்தங்களை பிரிப்பதுமாகிய உபாதி வடிவ கர்மத்தன்மை ஜாதி எழும்பல் முதலிய சர்வ கர்மங்களி லிருக்கின்றது. இவ்வாறுக கபால முதலியவைகளில் சமவேத கட முதலிய திரவியங்களில் சமவேதமாகிய குண, கர்மங்களில் சமவேத ஜாதி வடிவ சாமான்னியத்தில் இருப்பதாகிய சாமான்னியத்தன்மை தர்மமும் சமவேத சமவேதத்தி லிருப்பதெனப்படுகின்றது. அச்சாமான்னியத்வ தர்மம் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாம். இத்தகைய சமவேத சமவேதத்திலிருப்பதும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியுமாகிய சாமான்னியத்வ தர்மம் சத்தா, திரவியத்வ முதலிய சர்வ சாமான்னியங்களி லிருக்கின்றது. ஆகையால் திரவியம், குணம், கர்மம் சாமான்னிய மென்னும் நான்கு பதார்த்தங்கட்கு சமவேத சமவேதத்திலிருக்கும் சாதர்மியமும், பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதியுடைமை வடிவ சாதர்மியமும் சம்பவிக்கின்றது. கூறிய இத்தர்மம் விசேஷ முதலிய பதார்த்தங்களில் இருப்பதன்று. ஆகையால் கூறிய இத்தர்மம் விசேஷ முதலியவைகளின் வைதர்மியமேயாம்.

க0கக. திரவிய முதலிய மூன்றின் சத்தையுடைய சாதர்மியம்.

திரவியம், குணம், கர்ம மென்னும் மூன்று பதார்த்தங்கட்கு சத்தையுடைய சாதர்மியமாம். சமவாய சம்பந்தத்தால் சத்தா ஜாதியின் ஆசிரயத்தன்மையினை சத்தையுடையதே யென்பர். சத்தாஜாதி சமவாயசம்பந்தத்தால் திரவிய, குண, கர்மமா மூன்று பதார்த்தங்களிலேயே யிருக்கின்றது. ஆகையால் திரவிய, குண, கர்மமா மூன்றிற்கு சத்தையுடைய சாதர்மியம் சம்பவிக்கின்றது.

க0உ0. திரவியத்தினும் வேறான குண முதலிய ஆறு பதார்த்தங்களின் நிர்க்குணத்வம், நிஷ்கிரியைத்வமா மிரண்டும் சாதர்மியமாம்.

திரவிய பதார்த்தத்தினும் வேறான குண முதலிய ஆறு பதார்த்தங்களின் நிர்க்குணத்தன்மையும், நிஷ்கிரியத்தன்மயுமா மிவ்விரண்டும் சாதர்மியமாம். ஆண்டு குணத்தின் அத்தியந்தாபாவமுடையதனை நிர்க்குணத்தன்மை யென்பர். கிரியையின் அத்தியந்தாபாவமுடையதனை நிஷ்கிரியத்தன்மை யென்பர். ஆண்டு குண முதலிய ஆறு பதார்த்தங்களில் எக்குணமும், எக்கிரியா வடிவ கர்மமும் சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று. ஆகையால் குண முதலிய பதார்த்தங்களில் குண, கிரியையின் அத்தியந்தாபாவமே யிருக்கின்றது. ஆகையால் குண முதலிய ஆறு பதார்த்தங்கட்கு நிர்க்குணத்தன்மை, நிஷ்கிரியத் தன்மையா மிரண்டும் சாதர்மியமாக சம்பவிக்கின்றன. திரவிய பதார்த்தத்தில் குணமும், கர்மமும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் நிர்க்குணத் தன்மையும், நிஷ்கிரியத் தன்மையுமாகிய தர்மங்கள் திரவியத்தின் வைதர்மியமேயாம். உற்பத்தி க்ஷணத்தில் கட முதலிய திரவியங்களும் நிர்க்குணமும், நிஷ்கிரியையுமாகின்றன. இவ்வார்த்தை முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தின் முதலில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்கு விபுத் திரவியங்

கள் கர்ம வடிவ கிரியையிலாவனவாகின்றன. ஆகையால் உற்பத்தி க்ஷணா வச்சின்ன கட முதலிய திரவியங்களிலும், ஆகாச முதலிய விபுத்திரவியங்களி லும் நிர்க்குணத்தன்மை, நிஷ்கிரியைத் தன்மையாகிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. என்றாலும் நிர்க்குண சத்தத்தால் "குண வத்வாத்யந்தாபாவம்" என்பதான சாதர்மியத்தினைக் கொள்ளுக. அங்ங னமே நிஷ்கிரியா சத்தத்தால் "கர்மவத்வாத்யந்தாபாவ" என்பதான சாதர்மியத்தினைக் கொள்ளுக. இவ்விரண்டின் அர்த்தமிது வாம். குணமுடைய பதார்த்தத்தில் இராததாகிய தர்மம் யாதோ அத்தர்ம முடைமையும், கர்மமுடைய பதார்த்தத்தில் இராததாகிய பதார்த்தங்களைப் பிரிக் கும் உபாதி யாதோ அவ்வுபாதியுடைமையுமா மிரண்டும் அக்குண முதலிய ஆறு பதார்த்தங்களின் சாதர்மியமாம். ஆண்டு கட முதலிய திரவியங்களில் இருப்பனவாகிய கடத்வ, திரவியத்வ, பிருதிவித்வ முதலிய தர்மங்கள் குண முடையதிலும், கர்மமுடையதிலும் இராதனவன்றாம். ஆனால் உருவ முத லிய குணங்களும், கர்மங்களும் கட முதலிய திரவியங்களில் இருப்பனவே யாம். குணம், கர்ம முதலிய பதார்த்தங்களில் எக்குணமும், எக்கர்மமும் சமவாய சம்பந்தத்தா லிருப்பனவன்று. ஆகையால் குண முதலிய ஆறு பதார்த்தங்களிலும் முறையாக இருப்பனவாகிய குணத்வம், கர்மத்வம், சாமான்னியத்வம், விசேஷத்வம், சமவாயத்வம், அபாவத்வமென்னும் ஆறு தர்மங்கள் குணமுடைய பதார்த்தத்திலும், கர்மமுடைய பதார்த்தத்திலும் இராதனெனப்படுகின்றன. அங்ஙனமே அக்குணத்வ முதலிய ஆறு தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாம். அத்தகைய குண, கர்ம முடைய பதார்த்தங்களில் இராததும், பதார்த்தகளைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாகிய குணத்தன்மை முதலிய ஆறு தர்மங்களும் முறையாக குண முதலிய ஆறு பதார்த்தங்களிலேயே இருக்கின்றன. திரவிய பதார்த்தத்தி லிருப்பனவன்று. ஆகையால் உற்பத்தி க்ஷணாவச்சின்ன கட முதலிய திரவி யங்களிலும், ஆகாச முதலிய விபுத்திரவியங்களிலும் கூறிய அவ்விரண்டு சாதர்மியத்திற்கும் அதிவியாப்தி யுண்டாகாது. ஆகாச முதலிய விபுத் திரவி யங்களில் கர்மத்தின் அபாவமிருப்பதால் ஆகாசத்வ முதலிய தர்மங்கள் கர்மமுடையதில் இராதனவேயாம். என்றாலும் ஆகாசத்வம், காலத்வம் முதலிய தர்மங்கள் பதார்த்தங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமன்றாம். ஆனால் திரவியங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமாம். ஆகையால் ஆகாசத்வ முதலிய தர்மங்களைக் கொண்டு ஆகாசம் முதலிய விபுத்திரவியங்களில் கூறிய நிஷ்கிரியத்தன்மை சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௯0௨௧. சாமான்னிய முதலிய நான்கு பதார்த்தங்கட்கு சாமான்னியமிலாத் தன்மையின் சாதர்மியம்.

சாமான்னியம், விசேஷம், சமவாயம், அபாவமாம் நான்கு பதார்த் தங்கட்கு சாமான்னிய மிலாத்தன்மை சாதர்மியமாம். ஆண்டு சமவாய சம்பந்தத்தால் ஜாதி வடிவ சாமான்னிய மிலாததனை சாமான்னியமிலாத் தன்மை யென்பர். ஆண்டு ஜாதி வடிவ சாமான்னியம் சமவாய சம்பந்

தத்தால் திரவியம், குணம், கர்மமா மிம்மூன்று பதார்த்தங்களிலேயே யிருக்கின்றது. சாமான்னிய முதலிய நான்கு பதார்த்தங்களிலிருப்பதன்று. ஆகையால் சாமான்னிய முதலிய நான்கு பதார்த்தங்கட்கு சாமான்னிய மிலாத்தன்மை சாதர்மியஞ் சம்பவிக்கின்றது.

௯௦உஉ. குண, கர்மமா மிரண்டின் அசமவாயி காரணத்வ சாதர்மியம்.

குணம், கர்மமா மிரு பதார்த்தங்கட்கு அசமவாயி காரணத்தன்மை சாதர்மியமாம். அதாவது குண, கர்மமா மிரு பதார்த்தங்களிலேயே பாவ காரியத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யிருக்கின்றது. வேறெப்பதார்த் தங்களிலும் அசமவாயி காரணத்தன்மை யின்றாம். ஆண்டு ஜன்னிய திரவி யம், ஜன்னிய குணம், ஜன்னிய கர்மமா மூன்றினையும் பாவகாரிய மென்பர். ஆண்டு எவ்வெத் திரவியம் எவ்வெவ் அவயவங்களால் ஜன்னியமாகின்ற னவோ அவ்வவ் அவயவங்களின் சையோகமே அவ்வத்திரவியத்தின் அசம வாயிகாரணமாகின்றது. எங்ஙனம்: தந்து வடிவ அவயவங்களால் ஜன்னிய படத்திற்கு தந்துக்களின் சையோகமே அசமவாயி காரணமாகின்றது. கபால வடிவ அவயவங்களால் ஜன்னிய கடத்திற்கு கபாலங்களின் சையோ கமே அசமவாயி காரணமாகின்றது. அங்ஙனமே பரமாணு வடிவ அவய வங்களால் ஜன்னிய துவியணுகத்திற்கு அப்பரமாணுக்களின் சையோகமே அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் திரவிய வடிவ காரியத்திற்கு அசமவாயி காரணத்தன்மையோ கேவலம் சையோக குண மொன்றிலேயே உண்டாகின்றது. சையோகத்தினும் வேறான வேறோர் உருவ முதலிய குணங் களில் அல்லது கர்மத்தில் அத்திரவியத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யுண்டாகிறதில்லை. குண வடிவ காரியத்திற்கு அசமவாயி காரணத் தன் மையோ குணத்திலும், கர்மத்திலும் உண்டாகின்றது. எங்ஙனம்: படத்தி லுள்ள உருவ முதலிய குணங்கட்கு தந்துவிலுள்ள உருவ முதலிய குணங்கள் அசமவாயி காரணமாகின்றன. சையோக, விபாக, வேகமென்னும் மூன்று குணங்கட்கு கர்மம் அசமவாயி காரணமாகின்றது. இவ்வார்த்தை மூன்று வது பரிச்சேதத்தில் அவ்வவ் குணங்களின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந் துள்ளோம். கர்ம வடிவ காரியத்திற்கு அசமவாயிகாரணத் தன்மையோ கேவலம் குணத்தினிடத்தே யுண்டாகின்றது. கர்மத்தில் கர்மத்திற்கு அசமவாயி காரணத்தன்மை யுண்டாகிறதில்லை. ஆண்டு சில கர்மத்திற்கோ அபிகாதாக்கிய சையோகம், அல்லது நோதனக்கிய சையோகம் அசமவாயி காரணமாகின்றன. சில கர்மத்திற்கோ குருத்வ குணம் அசமவாயி காரண மாகின்றன. சில கர்மத்திற்கோ திரவத்வ குணம் அசமவாயி காரணமாகின் றது. சில கர்மத்திற்கோ வேக குணம் அசமவாயி காரணமாகின்றது. இவ்வார்த்தை முன்னர் நான்காவது பரிச்சேதத்தில் கர்மத்தின் நிரூபணத் தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். கூறிய இம்முறைப்படி பாவ காரியத் திற்கு அசமவாயி காரணத்தன்மை குண பதார்த்தத்தில் அல்லது கர்ம பதார்த்தத்தி லிருக்கின்றது. குண, கர்மங்களினும் வேறான திரவிய முதலிய பதார்த்தங்களில் அசமவாயி காரணத்தன்மை யிருப்பதன்று. ஆகையால்

குண, கர்மமா மிரு பதார்த்தங்கட்கு அசமவாயி காரணத் தன்மை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. ஆத்மாவின் ஞான முதலிய குணங்களில் எக்காரியத்திற்கும் அசமவாயிகாரணத்தன்மையுண்டாகிறதில்லை. ஆகையால் ஞான முதலிய குணங்களில் அசமவாயி காரணத்தன்மை வடிவ சாதர்மியத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகின்றது. என்றாலும் அசமவாயி காரணத்தன்மை என்னும்பதத்தால் "அஸமவாயிகாரணவ்ருத்தி ஸத்தாபிந்நஜாதிமத்வம்" என்பதான சாதர்மியத்தினைக் கொள்ளுக. (இ-ள்.) அசமவாயி காரணத்தில் இருப்பதும், சத்தா ஜாதியினும் வேறுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைமையே குண, கர்மத்தின் சாதர்மியமாம். ஆண்டு குண, கர்மமே அசமவாயி காரணமாகின்றன. இத்தகைய குண வடிவ அசமவாயி காரணத்தில் இருப்பதும், சத்தா ஜாதியினும் வேறானதும் குணத்வ ஜாதியேயாம். கர்ம வடிவ அசமவாயி காரணத்தி லிருப்பதும், சத்தா ஜாதியினும் வேறுமாயதும் கர்மத்வ ஜாதியேயாம். குணத்வ ஜாதி உருவ முதலிய சர்வ குணங்களி லிருக்கின்றது. கர்மத்வ ஜாதி எழும்பல் முதலிய சர்வ கர்மங்களி லிருக்கின்றது. ஆகையால் ஞான முதலிய குணங்களில் கூறிய சாதர்மியத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஈண்டு திரவியம், குணம், கர்மமா மூன்றி லிருப்பதாகிய சத்தா ஜாதியைக் கொண்டு திரவிய பதார்த்தத்தில் சாதர்மியத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும்பொருட்டு அசமவாயி காரணத்தி லிருக்கும் ஜாதிக்கு "சத்தையினும் வேறும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. சத்தா ஜாதி அசமவாயி காரணத்தி லிருப்பதாயினும் சத்தையினும் வேறன்றாம். ஆகையால் சத்தா ஜாதியைக் கொண்டு திரவியத்தில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௧௦௨௫. திரவிய, குணமா மிரண்டின் நித்திய, அநித்தியமா மிரண்டி லிருக்கும் சத்தையினும் வேறான சாதர்மியம்.

திரவியம், குணமா மிரண்டு பதார்த்தங்கட்கு "நித்யாநித்யவ்ருத்தி ஸத்தாபிந்நஜாதிமத்வம்" என்பதும் சாதர்மியமாம். (இ-ள்.) நித்தியம், அநித்தியமா மிரண்டி லிருப்பதும், சத்தா ஜாதியினும் வேறுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைமை திரவிய, குண மிரண்டின் சாதர்மியமாம். இத்தகைய நித்திய, அநித்தியத்தில் இருப்பது திரவியத்தன்மை ஜாதியும், குணத்தன்மை ஜாதியுமாம். ஆண்டு திரவியத்தன்மை ஜாதி பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்களிலும், கட முதலிய அநித்திய திரவியங்களிலு மிருக்கின்றது. இவ்வாறாக குணத்தன்மை ஜாதியும் நித்திய குணங்களிலும், அநித்திய குணங்களிலு மிருக்கின்றது. நித்திய, அநித்திய குணங்களை மூன்றாவது பரிச்சேதத்தில் உருவ முதலிய குணங்களின் நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். ஆகையால் திரவியத்தன்மை ஜாதியும், குணத்தன்மை ஜாதியும் நித்தியம், அநித்தியமா மிரண்டி லிருக்கின்றன. அங்ஙனமே சத்தா ஜாதியினும் வேறுமாம். இத்தகைய நித்திய, அநித்தியமா மிரண்டி லிருப்பதும், சத்தையினும் வேறுமாகிய திரவியத்தன்மை ஜாதி சர்வ திரவியங்களிலும், குணத்தன்மை ஜாதி சர்வ குணங்களிலு மிருக்கின்றது. ஆகை

யால் திரவியம், குணமாமிரு பதார்த்தங்கட்கு கூறிய சாதர்மியம் சம்பவிக்கின்றது. ஆண்டு திரவியத்தன்மை, குணத்தன்மை ஜாதியினைப் போன்று நித்திய, அநித்தியமா மிரண்டி லிருப்பதாகிய சத்தா ஜாதியைக்கொண்டு கர்ம பதார்த்தத்தில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு நித்திய, அநித்தியத்திலிருக்கும் ஜாதிக்கு "சத்தையினும் வேறும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சத்தா ஜாதி நித்திய, அநித்தியங்களி லிருப்பதாயினும் சத்தையினும் வேறன்றும். ஆகையால் சத்தாஜாதியைக்கொண்டு கர்மத்தில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. யாதோர் கர்மமும் நித்தியமாவதன்று. எல்லாக் கர்மங்களும் அநித்தியமேயாகின்றன. கர்மத்திலிருக்கும் கர்மத்தன்மை ஜாதி சத்தையினும் வேறாயினும் நித்திய, அநித்தியமா மிரண்டி லிருப்பதன்று. கேவலம் அநித்திய கர்மத்திலேயே இருக்கின்றது. ஆகையால் கர்மத்தன்மை ஜாதியைக்கொண்டு கர்மத்திலும் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அபாவத்தன்மை தர்மம் சத்தா ஜாதியினும் வேறும், அத்தியந்தாபாவ அந்நியோன்னியாபாவ வடிவ நித்திய அபாவத்திலிருப்பதும், பிராகபாவ பிரத்துவம்சாபாவ வடிவ அநித்திய அபாவத்தி லிருப்பதுமாவதால் நித்திய, அநித்தியமா மிரண்டிலிருப்பதுமாம். என்றாலும் அபாவத்தன்மை தர்மம் ஜாதி வடிவமன்றும். ஆகையால் ஜாதி என்னும் பதத்தைக் கூறுவதால் அபாவத்திலும் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௧௦௨௪. நித்திய திரவியத்தினும் வேறான பதார்த்தங்கட்கு ஆசிரயிக்குந் தன்மையுடைய சாதர்மியம்.

பரமாணு, ஆகாச முதலிய நித்தியத் திரவியங்களினும் வேறான பதார்த்தங்கள் யாவற்றிற்கும் ஆசிரயிக்குந் தன்மை சாதர்மியமாம். ஆண்டு சில அதிகரணத்தில் சையோக, சமவாய முதலிய சம்பந்தங்களால் இருப்பதனை ஆசிரயிக்குந் தன்மை யென்பர். பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்களும் காலிக சம்பந்தத்தால் கால முதலியவைகளி லிருக்கின்றன. ஆகையால் நித்திய திரவியங்களில் ஆசிரயிக்குந் தன்மை தர்மத்திற்கு அதிவியாப்தி யுண்டாகின்றது. என்றாலும் எல்லா பதார்த்தங்கட்கும் ஆதாரத்தன்மையினை நியமிக்கும் காலிக சம்பந்தத்தினும் வேறான சையோகம், சமவாய முதலிய சம்பந்தங்களால் இருத்தற் றன்மையினை ஆசிரயிக்குந் தன்மை யென்பர். அவ்வாசிரயிக்குந் தன்மை நித்தியத் திரவியங்களி லிருப்பதன்று. ஆனால் நித்திய திரவியங்களினும் வேறான பதார்த்தங்களிலேயே இருக்கின்றது. ஏழு பதார்த்தங்களின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணம் முற்றிற்று.

௧௦௨௫. பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணம்.

இனி பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களின் சாதர்மிய, வைதர்மியத்தினை நிரூபிப்பாம். ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் என்பதான ஒன்பது திரவியங்களின் சமவாயிகாரணத்தன்மை, குணமுடைமை, திரவியத்வ ஜாதியுடைமையா மூன்றும் சாதர்மிய

மாகின்றன. திரவிய வடிவ காரியத்திற்கு அல்லது குண வடிவ காரியத்திற்கு அல்லது கர்ம வடிவ காரியத்திற்கு சமவாயிகாரணத்தன்மை திரவியத்திலேயே இருக்கின்றது. வேறெப்பதார்த்தத்திலு மிருப்பதன்று. அங்ஙனமே கூறிய உருவ முதலிய குணங்களும் யோக்கிய பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களி லேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. வேறெப்பதார்த்தத்திலும் இருப்பனவன்று. திரவியத்தன்மை ஜாதியும் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. வேறெப்பதார்த் தத்திலு மிருப்பதன்று. ஆகையால் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்கட்கு சமவாயி காரணத்தன்மை, குணமுடைமை, திரவியத்வ ஜாதியுடைமை என் னும் மூன்று சாதர்மியம் சம்பவிக்கின்றன.

### கா௨சு. பரமாணு, ஆகாச முதலிய நித்திய திரவியங்களின் அவிர்த்தித்வ சாதர்மியம்.

பரமாணு, ஆகாச முதலிய நித்தியத் திரவியங்கட்கு அவிர்த்தித்வ சாதர்மியமாம். ஆண்டு நித்தியத் திரவியங்கட்கு காலிக சம்பந்தத்தினும் வேறான சையோகம், சமவாய முதலிய சம்பந்தங்களால் எவ்வதிகரணத் திலும் இராததன்மை இருப்பதால் அதனை அவிர்த்தித்வ மென்பர்.

### கா௨எ. பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்திற்கு மூர்த்தத்வமுடைமை, கிரியையுடைமை, வேகமுடைமை, பரத்வமுடைமை, அபரத்வமுடைமையாம் ஐந்தின் சாதர்மியம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து பதார்த்தங்கட்கு மூர்த்தத்வமுடைமை, கிரியையுடைமை, வேகமுடைமை, பரத்வமுடைமை, அபரத்வமுடைமையா மிவ்வைந்தும் சாதர்மியமாம். ஆண்டு “ வாரிஹிநவாரி ஊணவகூவ 8-ஒ-க-க்ஷவ” (இ-ள்.) ஆகாச முதலிய விபுத்திரவியங்களில் இராத தாகிய பரிமாணத்தினை பரிச்சின்ன பரிமாண மென்பர். அதாவது; ஆகாச முதலிய விபுத்திரவியங்களி லிருக்கும் பரமமஹத்வம், பரமநெடுமை பரிமா ணத்தினை விட்டு மற்றெல்லா பரிமாணத்தினையும் பரிச்சின்ன பரிமாணமென் பர். இத்தகைய பரிச்சின்ன பரிமாணம் பிருதிவி முதலிய ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றது. இதுவே கூறிய ஐந்து திரவியங்களில் மூர்த்தத்தன்மையாம். கிரியா வடிவ கர்மமும் சமவாய சம்பந் தத்தால் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே இருக்கின்றது. அங்ஙனமே வேகம், பரத்வம், அபரத்வமா மிம்மூன்று குணங்களும் சமவாய சம்பந்தத் தால் ஐந்து மூர்த்தத் திரவியங்களிலேயே இருக்கின்றன. ஆகையால் பிருதிவி முதலிய ஐந்து மூர்த்தத்திரவியங்கட்கு கூறிய மூர்த்தத்தன்மை முதலிய ஐந்து சாதர்மியங்கள் சம்பவிக்கின்றன. மூர்த்தத்தன்மை முதலிய ஐந்து தர்மங்கள் ஆகாசம், காலம், திக்கு, ஆத்மாவென்னும் நான்கு விபுத்திரவியங்களில் இருப் பனவன்று. ஆகையால் மூர்த்தத்தன்மை முதலியன அவ்வாகாச முதலிய நான்கு விபுத்திரவியங்களின் வைதர்மியமேயாம். இவ்வாறாக எவ்வெத்தர்மம்

எவ்வெத்தர்மத்தின் சாதர்மியமாகின்றதோ அவ்வத்தர்மம் அவ்வத்திரவியத்தினும் வேறு தர்மத்தின் வைதர்மியமாகவே அறிக.

## க0உ௭. விபுத்வத்தின் லக்ஷணம்.

ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா வென்னும் நான்கு திரவியங்கட்கு விபுத்வம், பரமமஹத்வபரிமாணமுடைமையாமிரண்டும் சாதர்மியமாகின்றன. ஆண்டு "ஸர்வமூர்த்தஸம்யோகித்வம் விபுத்வம்" (இ-ள்.) ஆகாச முதலிய நான்கிற்கு பிருதிவி முதலிய சர்வ மூர்த்தத் திரவியங்களினோடுண்டாம் சையோக சம்பந்தமே ஆகாச முதலியவைகளின் விபுத்வமாம். பரம மஹத்வ பரிமாணமும் சமவாய சம்பந்தத்தால் ஆகாச முதலியவைகளிலேயே யிருக்கின்றது. வேறெத்திரவியத்திலு மிருப்பதன்று. ஆகையால் ஆகாச முதலிய நான்கு திரவியங்கட்கு விபுத்வம், பரம மஹத்வ பரிமாணமுடைமை யென்னு மிரண்டும் சாதர்மியமாம்.

## க0உ௮. பிருதிவி முதலிய ஐந்தின் பூதத்வ சாதர்மியம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாச மென்னும் ஐந்து திரவியங்கட்கு பூதத்வம் சாதர்மியமாம். ஆண்டு "பஹிரிந்த்ரியஜந்யஜ்ஞாநவிஷயவிஶேஷகுணவத்த்வம் பூதத்வம்" (இ-ள்.) பஹிரிந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாகிய விசேஷ குணமுடையதனை பூதத்வமென்பர். ஆண்டு கந்தம், ரசம், உருவம், பரிசம், சத்த மென்னும் ஐந்து விசேஷ குணங்கள் முறையாக கிராணம், ரசனம், சக்ஷு, துவக்கு, சுரோத்திர மென்னும் ஐந்து பாஹிய இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாகின்றன. கந்த முதலிய ஐந்து விசேஷ குணங்கள் முறையாக பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாச மென்னும் ஐந்து திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. இதுவே பிருதிவி முதலிய ஐந்து திரவியங்களில் பூதத்வமாம். ஆண்டு மன வடிவ அந்தர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாகிய சுக, துக்க முதலிய விசேஷ குணங்களைக் கொண்டு ஆத்மாவில் பூதத்தன்மையின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு பூதத்வத்தின் லக்ஷணத்தில் இந்திரியத்திற்கு "பாஹியம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. அல்லது "ஆத்மாவ்ருத்திவிஶேஷகுணவத்த்வம் பூதத்வம்" (இ-ள்.) ஆத்மாவிலிராததாகிய விசேஷ குணம் யாதோ அவ்விசேஷ குணமுடையதனை பூதத்வமென்பர். ஆண்டு ஆத்மாவில் இராததாகிய முற்கூறிய கந்த முதலிய ஐந்து குணங்கள் முறையாக பிருதிவி முதலிய ஐந்து திரவியங்களி லிருக்கின்றன. இதுவே பிருதிவி முதலிய ஐந்து திரவியங்களில் பூதத்வமாம். ஆண்டு ஆத்மாவிலிராத பரத்வ, அபரத்வ குணங்களைக் கொண்டு மனதில் பூதத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு அக்குணங்கட்கு "விசேஷம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு பரத்வ, அபரத்வங்கள் விசேஷ குணமன்றும்; சாமான்னிய குணமாம். ஆகையால் பரத்வ, அபரத்வங்களைக் கொண்டு மனதில் பூதத்வத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## ௧0௩0. விசேஷகுணமுடைமை சாதர்மியம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், ஆத்மா வென்னும் ஆறு திரவியங்கட்கு விசேஷ குணமுடைமை சாதர்மியமாம். அதாவது; கூறிய ஆறு திரவியங்களிலேயே உருவ முதலிய விசேஷ குணங்கள் முறையாக சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. காலம், திக்கு, மனம் என்னும் மூன்று திரவியங்களில் யாதாமோர் விசேஷகுணம் இருப்பதன்று. ஆகையால் கூறிய ஆறு திரவியங்கட்கு விசேஷ குணமுடைமை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. ஆண்டு பிருதிவியில் உருவம், ரசம், கந்தம், பரிசமென்னும் நான்கு விசேஷ குணங்களிருக்கின்றன. ஜலத்தில் உருவம், ரசம், பரிசம், ஸ்நேஹம், சாம் சித்திக திரவத்வ மென்னும் ஐந்து விசேஷ குணங்க ளிருக்கின்றன. தேயுவில் உருவம், பரிச மென்னு மிரு விசேஷ குணங்க ளிருக்கின்றன. வாயுவில் பரிச விசேஷ குண மொன்றே யிருக்கின்றது. ஆகாசத்தில் சத்த விசேஷ குண மொன்றே யிருக்கின்றது. ஈசுவராத்மாவிடத்தில் ஞானம், இச்சை, முயற்சி யென்னும் மூன்று விசேஷ குணங்களிருக்கின்றன. ஜீவாத்மாவிடத்தில் ஞானம், இச்சை, சுகம், துக்கம், துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனையெனப் பெயரிய சம்ஸ்கார மென்னும் ஒன்பது விசேஷ குணங்க ளிருக்கின்றன.

## ௧0௩௧. பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கிற்கு பரிசமுடைமை, திரவிய சமவாயி காரணத்வங்களின் சாதர்மியம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்கு திரவியங்கட்கு பரிச முடைமை, திரவிய சமவாயி காரணத்வமா மிரண்டும் சாதர்மியமாகின்றன. ஆண்டு பரிச குணம் சமவாய சம்பந்தத்தால் பிருதிவி முதலிய நான்கு திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகாச முதலிய ஐந்து திரவியங்களில் இருப்பதன்று. ஆகையால் பிருதிவி முதலிய நான்கு திரவியங்கட்கு பரிசமுடைமை சாதர்மியம் சம்பவிக்கின்றது. திரவியத்திற்கு சமவாயி காரணத்தன்மையும் பிருதிவி முதலிய நான்கு திரவியங்களிலேயே இருக்கின்றது. ஆகாச முதலியவைகளி லிருப்பதன்று. எங்ஙனம்: பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீய பரமாணுக்கட்கு முறையாக பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீய துவியணுகங்களின் சமவாயி காரணத்தன்மை யுண்டாகின்றது. அங்ஙனமே பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீய, துவியணுகங்கட்கு முறையாக பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீய, திரியணுகங்களின் சமவாயி காரணத்தன்மை யுண்டாகின்றது. இவ்வாறாக மஹா பிருதிவி, ஜலம், தேயு, வாயுமட்டுமாம் அவ்வப்பிருதிவி முதலிய திரவியங்கட்கு சமவாயி காரணத்தன்மை அவ்வப்பிருதிவி முதலிய திரவியங்களின் அவயவங்களிலேயே இருக்கின்றது. அங்ஙனமே கட, பட முதலிய திரவியங்கட்கு சமவாயி காரணத்தன்மை கபாலம், தந்து முதலிய அவயவங்களி லிருக்கின்றது. இவ்வாற்றால் பிருதிவி முதலிய நான்கு திரவியங்களிலேயே தமது தமது சஜாதீய திரவியத்திற்கு சமவாயி காரணத்தன்மை யுண்டாகின்றது. ஆகாச முதலிய ஐந்து திரவியங்களில் எத்திரவியமும் சமவாய சம்பந்தத்தால் உண்டாவதின்று. ஆகையால் ஆகாச முதலிய

வைகளில் திரவியத்திற்கு சமவாயி காரணத் தன்மையின்றும். ஆனால் ஆகாச முதலியவைகளில் முறையாக சத்த முதலிய குணங்கட்கே சமவாயிகாரணத் தன்மை யிருக்கின்றது. கடம், சரீரம் முதலிய அந்தியாவயவி திரவியங்களில் எத்திரவியமும் சமவாய சம்பந்தத்தால் உண்டாவதின்று. ஆகையால் கடம், சரீர முதலிய அந்தியாவயவிகளில் திரவிய சமவாயி காரணத்தன்மை வடிவ சாதர்மியத்திற்கு அவ்வியாப்தியேயுண்டாகின்றது. என்றாலும் திரவிய சமவாயி காரணத்வம் என்னுஞ் சத்தத்தால் “த்ரவ்யஸமவாயிகாரணவ்ருத்தி த்ரவ்யத்வவ்யாப்யஜாதிமத்வம்” என்னும் சாதர்மியத்தைக் கூறக்கருதியதாம். (இ-ள்.) திரவியத்தின் சமவாயி காரணத்தில் இருப்பதும், திரவியத்தன்மை ஜாதியின் வியாப்பியமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியுடைமை பிருதிவி முதலிய நான்கின் சாதர்மியமாம். ஆண்டு திரவியத்தின் சமவாயி காரண வடிவ பிருதிவி முதலிய நான்கு திரவியங்களில் பிருதிவித்வம், ஜலத்வம், தேயுத்வம், வாயுத்வ மென்னும் நான்கு ஜாதிகள் முறையாக இருப்பனவுமாம். அங்ஙனமே திரவியத்வ ஜாதியின் வியாப்பியமுமாம். இத்தகைய பிருதிவித்வ முதலிய நான்கு ஜாதிகள் முறையாக பிருதிவி முதலிய நான்கினிடத்து சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. எத்திரவியத்திற்கும் சமவாயிகாரணமாகாத கடம், சரீர முதலிய அந்தியாவயவித் திரவியங்களிலும், பிருதிவித்வ முதலிய ஜாதிக ளிருக்கின்றன. ஆகையால் கடம், சரீரம் முதலிய அந்தியாவயவிகளிலும் கூறிய சாதர்மியத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. ஈண்டு திரவிய சமவாயி காரணத்தி லிருக்கும் திரவியத்வ ஜாதியைக் கொண்டும், சத்தா ஜாதியைக் கொண்டும் ஆகாச முதலிய திரவியங்களில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டு திரவிய சமவாயி காரணத்திலிருக்கும் ஜாதிக்கு “திரவியத்தன்மையின் வியாப்பியம்” என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு திரவியத்வ ஜாதியும், சத்தா ஜாதியும் திரவியத்வ ஜாதியின் வியாப்பியமன்றும். ஆகையால் திரவியத்வ, சத்தா ஜாதியைக் கொண்டு ஆகாச முதலியவைகளில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௧௦௩௨. பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்று திரவியங்கட்கு உருவமுடைமை, திரவத்வமுடைமை, பாஹிய இந்திரிய கிராஹியத்வமா மூன்றின் சாதர்மியம்.

பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்று திரவியங்கட்கு உருவமுடைமை, திரவத்வமுடைமை, பாஹிய இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ விஷய திரவியத்தன்மை யென்னும் மூன்றும் சாதர்மியமாகின்றன. ஆண்டு உருவ குணமும், திரவத்வ குணமும் சமவாய சம்பந்தத்தால் பிருதிவி முதலிய மூன்று திரவியங்களிலேயே இருக்கின்றன. வாயு முதலிய திரவியங்களி லிருப்பனவன்று. சக்ஷுஸ், துவக் வடிவ பாஹிய இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கு விஷயத்தன்மையும், பிருதிவி முதலிய மூன்று திரவியங்களிலேயேயிருக்கின்றது. வாயு முதலிய திரவியங்களிலிருப்பதன்று. ஆகையால் பிருதிவி, ஜலம், தேயு வென்னும் மூன்று திரவியங்கட்கு உருவமுடைமை, திரவத்வ

முடைமை, பாஹ்ய இந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ விஷய திரவியத்தன்மை யென்னும் மூன்று சாதர்மியங்கள் சம்பவிக்கின்றன.

க0௩௩. பிருதிவி, ஜலமா மிரண்டின் குருத்வமுடைமை, ரசமுடைமை என்னு மிரண்டின் சாதர்மியம்.

பிருதிவி, ஜலம் என்னு மிரு திரவியங்கட்கு குருத்வமுடைமை, ரசமுடைமை யென்னு மிரண்டும் சாதர்மியங்களாகின்றன. ஆண்டு குருத்வ குணமும், ரசகுணமுமா மிருகுணங்கள் சமவாய சம்பந்தத்தால் பிருதிவி, ஜல மென்னு மிரு திரவியங்களிலேயே யிருக்கின்றன. தேயு முதலிய திரவியங்களி லிருப்பனவன்று. ஆகையால் பிருதிவி, ஜலமாமிரண்டிற்கு குருத்வமுடைமை, ரசமுடைமை யென்னு மிரண்டின் சாதர்மியம் சம்பவிக்கின்றது.

க0௩௪. பிருதிவி, தேயு வென்னு மிரண்டின் நிமித்தத்தாலாய நெகிழ்ச்சியுடைய சாதர்மியம்.

பிருதிவி, தேயு வென்னு மிரு திரவியங்கட்கு நிமித்தத்தாலாய நெகிழ்ச்சியுடைமை சாதர்மியமாகின்றது. ஆண்டு வன்னி முதலிய தேயுவின் சையோகத்தால் உண்டாம் நெகிழ்ச்சியினை நிமித்தத்தாலாய நெகிழ்ச்சி யென்பர். நிமித்தத்தாலாய நெகிழ்ச்சி சமவாய சம்பந்தத்தால் நெய் முதலிய பிருதிவியிலும் பொன், வெள்ளி முதலிய தேயுவிலுமே யிருக்கின்றது. வேறோர் திரவியத்தி லிருப்பதன்று. ஆகையால் பிருதிவிற்கும், தேயுவிற்கும் நிமித்தத்தாலாய நெகிழ்ச்சியுடைமை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

க0௩௫. ஆகாசம், ஜீவாத்மா இரண்டிற்கு அவ்வியாப்பியமாயிருக்கும் விசேஷ குணமுடைமையும், க்ஷணிக விசேஷ குணமுடைமையுமா மிரண்டின் சாதர்மியம்.

ஆகாசம், ஜீவாத்மா வென்னு மிரு திரவியங்கட்கு அவ்வியாப்பியமா யிருக்கும் விசேஷ குணமுடைமை, க்ஷணிக விசேஷ குணமுடைமையென்னு மிரண்டும் சாதர்மியமாகின்றன. ஆண்டு ஆகாசத்திலோ சத்த விசேஷ குண மொன்றிருக்கின்றது. அச்சத்தம் அவ்வியாப்பியமா யிருப்பதும், க்ஷணிகமு மாகின்றது. ஜீவாத்மாவில் ஞான முதலிய ஒன்பது விசேஷ குணங்களிருக் கின்றன. ஞான முதலிய ஒன்பது விசேஷ குணங்களும் அவ்வியாப்பியமா யிருப்பனவாம். அதனிடத்தும் ஞானம், இச்சை, சுகம், துக்கம், த்வேஷம், முயற்சி என்னும் ஆறு குணங்களோ அவ்வியாப்பியமாயிருப்பனவும், க்ஷணி கமுமாகின்றன. தர்மம், அதர்மம், பாவனையெனப்பெயரிய சம்ஸ்காரம் என்னு மூன்றுகுணங்களோ கேவலம் அவ்வியாப்பியமா யிருப்பனவேயாகின்றன. க்ஷணிகமாவனவன்று. ஆண்டு “ ஷூாத்ர்௦தாஹாவ ஷஊாநாயிகாாணகூ௦ கவ்ாவ்ஷூாத்ீக௦” ஈண்டு சுவசத்தத்தால் சத்தம், ஞானமுதலிய அவ்வியாப் பியமாயிருப்பனவாகிய குணங்களைக் கொள்க. சத்தம், ஞான முதலியவை கட்கு தமது அத்தியந்தா பாவத்தினோடு சமானாதிகரணத்தன்மையே சத்தம், ஞான முதலியவைகளில் அவ்வியாப்பியமா யிருக்குந் தன்மையாம். எங்ங னம்: ஒரே விபு ஆகாசத்தின் பேரி அவச்சின்ன பிரதேசத்தில் உண்டாகிய

சத்தத்திற்கு அவ்வாகாசத்தின் கடாதி அவச்சின்னபிரதேசத்தில் தனது அத்தியந்தாபாவமிருக்கின்றது. தனது அத்தியந்தாபாவத்தினோடு சத்த குணத்திற்கு சமானாதிகரணமிருக்கின்றது. அதாவது; ஒரே விபு ஆகாசம் சத்தத்திற்கும், சத்தத்தின் அத்தியந்தாபாவத்திற்கும் அதிகரணமாகின்றது. இதனை சமானாதிகரணமென்பர். இவ்வாறாக ஒரே விபு ஜீவாத்மாவின் சரீராவச்சின்ன பிரதேசத்தில் உண்டாகிய ஞான முதலிய குணங்கட்கு ஆத்மாவின் கடாதி அவச்சின்ன பிரதேசத்தில் அத்தியந்தாபாவ மிருக்கின்றது. தனது அத்தியந்தாபாவத்தினோடு ஞான முதலிய குணங்கட்கு சமானாதிகரண மிருக்கின்றது. இவ்வாற்றால் சத்த குணத்திலும், ஞான முதலிய குணங்களிலும் தமது அத்தியந்தாபாவ சமானாதிகரணத்தன்மை வடிவ அவ்வியாப்பியமாயிருக்குந் தன்மை யிருக்கின்றது. ஆகையால் ஆகாசம், ஜீவாத்மா வென்னு மிரு திரவியங்கட்கு அவ்வியாப்பியமாயிருக்கும் விசேஷகுணமுடைமை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. "த்ருதீயக்ஷணவ்ருத்தி த்வம்ஸப்ரதியோகித்வம் க்ஷணிகத்வம்" (இ-ள்.) சத்தம், ஞான முதலியவைகட்கு மூன்றாவது க்ஷணத்தில் உண்டாம் துவம்சத்திற்கு அச்சத்தம், ஞான முதலியவைகளில் பிரதியோகித் தன்மை யாதோ அதுவே சத்தம், ஞானம் முதலியவைகளில் க்ஷணிகத்வமாம். ஈண்டு நூலாசிரியர்களின் நியமம் இதுவாம். "யோக்யவிபுவிசேஷகுணாநாம் ஸ்வோத்தரவ்ருத்தி ஸ்வஸமாநாதிகரணயோக்ய விபுவிசேஷகுணநாஶ்யத்வாத்" (இ-ள்.) விபுத்திரவியத்தின் யோக்கிய விசேஷ குணங்களின் நாசம் தனக்குப் பின்னிருப்பதும், சுவசமானாதிகரணமுமாகிய யோக்கிய விபு விசேஷ குணத்தால் உண்டாகின்றது. எங்ஙனம்: விபு ஆகாசத்தின் யோக்கிய முதல் விசேஷ குணத்தின் நாசம் விபு ஆகாசத்தின் யோக்கிய விசேஷ குண வடிவ இரண்டாவது சத்தத்தால் உண்டாய் விடுகின்றது. ஈண்டு கருத்திதுவாம். முதற் க்ஷணத்தில் ஆகாசத்தில் பேரீ தண்ட சையோக முதலியவைகளால் முதற் சத்தம் உண்டாவதாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் முதற் சத்தத்தால் ஆகாசத்தில் இரண்டாவது சத்தம் உண்டாவதாகின்றது. அவ்விரண்டாவது சத்தம் முதற் சத்தத்தினை நாசஞ் செய்வதாகின்றது. ஆகையால் மூன்றாவது க்ஷணத்தில் முதல் சத்தத்தின் நாசம் உண்டாகின்றது. மூன்றாவது க்ஷணத்தி லிருக்கும் நாச வடிவ துவம்சத்திற்கு பிரதியோகித்தன்மை முதற் சத்தத்தி லிருக்கின்றது. இதுவே முதற் சத்தத்தில் க்ஷணிகத்வமாம். இரண்டாவது முதலிய சத்தங்கட்கும் மூன்றாவது முதலிய சத்தங்களால் மூன்றாவது க்ஷணத்திலேயே துவம்சமுண்டாவதாகின்றது. அத்துவம்சத்திற்கு பிரதியோகித்தன்மை இரண்டாவது முதலிய சத்தங்களில் இருக்கின்றது. இதுவே இரண்டாவது முதலிய சத்தங்களில் க்ஷணிகத்வமாம். இவ்வாறாக விபு ஜீவாத்மாவின் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணங்கட்கு விபு ஆத்மாவின் இச்சை முதலிய யோக்கிய விசேஷ குணத்தால் நாசம் உண்டாகின்றது. ஈண்டு கருத்திதுவாம். முதற் க்ஷணத்தில் விபு ஜீவாத்மாவில் மனதின் சையோகத்தால் யாதாமோர் ஞான முதலிய யோக்கிய விசேஷ குணம் உண்டாவதாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் ஜீவாத்மாவில் யாதாமோர் இச்சையாதி வடிவ யோக்கிய விசேஷ

குணம் உண்டாவதாகின்றது. அவ்விச்சையாதி வடிவ யோக்கிய விசேஷ குணம் ஞானாதி வடிவ யோக்கிய விசேஷகுணத்தினை நாசஞ்செய்வதேயாகின்றது. ஆகையால் மூன்றாவது க்ஷணத்தில் ஞானாதி வடிவ யோக்கிய விசேஷ குணத்தின் நாசம் உண்டாய் விடுகின்றது. மூன்றாவது க்ஷணத்திலிருக்கும் நாச வடிவ த்வம்சத்திற்கு பிரதியோகித் தன்மை ஞானாதி வடிவ யோக்கிய விசேஷ குணத்தில் இருக்கின்றது. இதுவே ஞான முதலிய குணங்களில் க்ஷணிகத்வமாம். ஆண்டு முற்கூறிய நியமத்தில் விபுவின் யோக்கிய விசேஷ குணத்தின் நாசமே காரியமாம். தனக்குப்பின்னுண்டாம் சுவசமானாதிகரண யோக்கிய விபு, விசேஷ குணம் காரணமாம். காரிய வகுப்பிலுள்ள யோக்கியம், விபு, விசேஷமென்னும் மூன்று பதங்களின் பயனை முதலில் வர்ணிப்பாம். கூறிய நியமத்தில் "யோக்கியம்" என்னும் பதங் கூறாவிடின் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசார முண்டாகும். ஏனெனின் விபுவின் யோக்கிய விசேஷ குண வடிவ காரணமின்றியே கர்ம நாச நதியின் ஜல பரிச முதலியவைகளாலும், பிராயச்சித்தத்தாலும் அதிர்ஷ்டத்தின் நாசம் உண்டாய் விடுகின்றது. அவ்வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு கூறிய நியமத்தில் விநாசிய குணத்திற்கு "யோக்கியம்" என்னும் விசேஷகுணங் கூறப்பட்டது. ஆண்டு தர்மா தர்ம வடிவ அதிர்ஷ்டம் விபு ஆத்மாவின் விசேஷகுணமாயினும் யோக்கியமன்றாம்; அயோக்கியமாம். ஆகையால் அவ்வதிர்ஷ்டத்தின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய நியமத்தில் "விபு" என்னும் பதங் கூறாவிடின் உருவ முதலிய குணங்களின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசாரமுண்டாம். ஏனெனின் யோக்கிய விசேஷ குண வடிவ காரணமின்றியே வன்னி சையோக முதலியவைகளால் கட முதலியவைகளின் உருவ முதலிய குணங்கள் நாசமாகின்றன. அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு விநாசிய குணத்திற்கு "விபுவிலிருக்கும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு உருவ முதலிய குணங்கள் யோக்கிய விசேஷ குணமாயினும் விபுவிலிருப்பனவன்று; பிருதிவி முதலிய மூர்த்தத்திரவியங்களிலிருப்பனவாம். ஆகையால் உருவ முதலிய குணங்களின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசார முண்டாகாது. அல்லது கூறிய நியமத்தில் "விசேஷம்" என்னும் பதங் கூறாவிடின் ஆகாசத்திலும், ஆத்மாவிலு மிருக்கும் சையோக முதலிய குணங்களின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசார முண்டாம். ஏனெனின் யோக்கிய விசேஷ குண வடிவ காரணமின்றியே கிரியா ஜன்னிய விபாக முதலியவைகளால் சையோக முதலியன நாசமாய் விடுகின்றன. அந்த வியபிசார தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு விநாசிய குணத்திற்கு "விசேஷம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு சையோக முதலியன விபுத்திரவியத்தின் யோக்கிய குணமாயினும் விசேஷ குணமன்றாம்; சாமான்னிய குணமாம். ஆகையால் சையோக முதலியவைகளின் நாசத்தில் கூறிய காரணத்திற்கு வியபிசார முண்டாகாது. இனி கூறிய நியமத்தின் காரண வகுப்பிலுள்ள தனக்குப்பின்னிருப்பது, சுவசமானாதிகரணம், யோக்கியம், விசேஷம் என்னும் நான்கின் பயனை வர்ணிப்பாம். ஆண்டு காரண

வகுப்பில் "யோக்கியம், விசேஷம்" என்னும் பதங்கள் கூறுவிடின் இருமை முதலிய சங்கியைகளின் நிமித்த காரணமாகிய அபேக்ஷாபுத்தியின் நாசம் இரண்டாவதுக்ஷணத்தில் உண்டாவதாகிய அதிர்ஷ்டத்தால் அல்லது சையோகத்தால் மூன்றுவது க்ஷணத்தில் உண்டாகிறதில்லை. ஆனால் மூன்றுவது க்ஷணத்தில் உண்டாவதாகிய நிர்விகற்பக ஞானத்தாலேயே நான்காவது க்ஷணத்தில் அவ்வபேக்ஷாபுத்தியின் நாசமுண்டாகின்றது. இவ்வார்த்தை முன்னர் மூன்றுவது பரிச்சேதத்தில் சங்கியா குண நிரூபணத்தில் விரிவாய்க் கூறிவந்துள்ளோம். கூறிய தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு நாசக குணத்திற்கு "யோக்கியம், விசேஷம்" என்னுமிரு விசேஷணங்கள் கூறப்பட்டன. ஆண்டு தர்மம், அதர்ம வடிவ அதிர்ஷ்டமோ யோக்கியமன்றும். சையோகம் விசேஷ குணமன்றும். ஆகையால் அதிர்ஷ்டமும், சையோகமுமிருக்கினும் அபேக்ஷாபுத்தியின் நாசம் மூன்றுவது க்ஷணத்தில் உண்டாகிறதில்லை. தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தினைப் போன்று நிர்விகற்பக ஞானத்தின் பிரத்தியக்ஷமுமுண்டாகிறதில்லை. ஆனால் அதிர்ஷ்டத்தினைப் போன்று நிர்விகற்பக ஞானமும் அதீந்திரியமேயாகின்றது. என்றாலும் ஈண்டு யோக்கிய சத்தத்தால் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மையினைக் கூறக் கருதியதன்றும். ஆனால் அதீந்திரிய ஜாதி சூன்னியத்வமே யோக்கிய சத்தத்தால் கூறக்கருதியதாம். ஆண்டு தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்திலோ அதிர்ஷ்டத்தன்மையாகிய அதீந்திரிய ஜாதியிருப்பதால் அவ்வதீந்திரிய ஜாதி சூன்னியத்வ வடிவ யோக்கியத்வமன்றும். நிர்விகற்பக ஞானத்திலோ அதீந்திரிய ஜாதி சூன்னியத்வ வடிவ யோக்கியத்வமிருக்கின்றது. ஆண்டு நிர்விகற்பக ஞானமாத்திரத்திலிருக்கும் நிர்விகற்பகத்வ தர்மம் யாதோ அது ஜாதி வடிவமன்றும் உபாதி வடிவமாம்; நிர்விகற்பகஞானத்திலிருக்கும் ஞானத்வ ஜாதி அதீந்திரியமன்றும். அந்த ஞானத்வ ஜாதி அறிகிறேனென்பதான மானசப் பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாம். இவ்வாற்றால் நிர்விகற்பக ஞானத்திற்கும் யோக்கியத்வமிருப்பதால் நிர்விகற்பக ஞானத்தால் அபேக்ஷாபுத்தியின் நாசஞ் சம்பவிக்கின்றது. அங்ஙனமே நிர்விகற்பக ஞானத்திற்கும் தனக்குப் பின்னுண்டாகும் யோக்கிய விசேஷ குணத்தால் நாசஞ் சம்பவிக்கின்றது. அல்லது நாசஞ் செய்யும் குணத்திற்கு "தனக்குப் பின்னிருப்பதும்" என்னும் விசேஷணங் கூறுவிடின் முன் உண்டாகிய ஞான குணத்தால் பின் உண்டாவதாகிய இச்சா குணத்தின் நாசம் உற்பத்தி க்ஷணத்திலேயே உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. அத்தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு நாசஞ் செய்யும் குணத்திற்கு "தனக்குப் பின்னிருக்கும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஈண்டு சுவசத்தத்தால் விநாசிய குணத்தினைக்கொள்ளுக. விநாசியத்திற்குப் பின் இருக்குங் குணமே முன்னுள்ள குணத்தினை நாசஞ் செய்வதாகின்றது. ஆண்டு அந்த ஞான குணம் அந்த இச்சா குணத்தின் பின்னிருப்பதன்று; ஆனால் முன்னுள்ளதாம். ஆகையால் முன் உண்டாகிய ஞான முதலியவைகளால் பின் உண்டாய இச்சை முதலியவைகளின் நாசம் உண்டாகாது. அல்லது நாசஞ் செய்யும் குணத்திற்கு "சுவசமானாதிகரண" மென்னும் விசேஷணங் கூறுவிடின் ஆத்

மாவின் ஞானம், இச்சை முதலிய குணங்களின் நாசம் ஆகாசத்தின் சத்த குணத்தால் உண்டாக வேண்டும்; அங்ஙனமாவதின்று. அத்தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு நாசஞ் செய்யுங்குணத்திற்கு "சுவசமாநாதிகரணம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஈண்டும் சுவசத்தத்தால் விநாசிய குணத்தினைக் கொள்ளுக. விநாசிய குணத்தின் அதிகரணத்தில் இருப்பதாகிய குணமே விநாசமாகும் குணத்தினை நாசஞ் செய்கின்றது. ஆண்டு சத்த குணம் ஞான முதலிய குணங்களின் ஆத்மா வடிவ அதிகரணத்தி லிருப்ப தன்று. ஆனால் ஆத்மாவினும் வேறான ஆகாச வடிவ அதிகரணத்தில் சத்த குண மிருக்கின்றது. ஆகையால் வேறு அதிகரணத்தி லிருக்கும் சத்த குணத்தால் ஞான முதலிய குணங்களின் நாசஞ் சம்பவியாது. இவ்வாற்றால் சத்தம், ஞான முதலிய குணங்கட்கு க்ஷணிக வடிவத்தன்மை உண்டாவதால் ஆகாசத்திற்கும், ஜீவாத்மாவிற்கும் க்ஷணிக விசேஷ குணமுடைமை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. திரவிய சாதர்மிய, வைதர்மிய நிரூபணம் முற்றிற்று.

## கOாகூ. இருபத்து நான்கு குணங்களின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணம்.

ஆண்டு உருவம், ரசம், கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், ஸ்நேஹம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், சம்ஸ்காரம் என்னும் இருபத்து நான்கு குணங்கட்கு திரவியத்தை ஆசிரயிக்கும் தன்மை, நிர்க்குணத்வம், நிஷ்கிரியாத்வம், குணத்வ ஜாதியுடைமை என்னும் நான்கும் சாதர்மியமாகின்றன. ஆண்டு உருவ முதலிய இருபத்து நான்கு குணங்கள் சமவாய சம்பந்தத்தால் முறையாக பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே இருக்கின்றன. வேறெப் பதார்த்தத்திலு மிருப்பனவன்று. ஆகையால் உருவ முதலிய குணங்கட்கு திரவியத்தை ஆசிரயிக்குந் தன்மை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. உருவ முதலிய குணங்களில் எக்குணமும், அல்லது எக்கர்மமும் சமவாய சம்பந்தத்தால் இருப்பனவன்று. ஆகையால் உருவ முதலிய குணங்கட்கு நிர்க்குணத்வமும், நிஷ்கிரியாத்வமுமாகிய சாதர்மியமும் சம்பவிக்கின்றது. குணத்வ ஜாதியும் சமவாய சம்பந்தத்தால் உருவ முதலிய குணங்களிலேயே இருக்கின்றது. வேறெப் பதார்த்தத்திலும் இருப்பதன்று. ஆகையால் உருவ முதலிய குணங்கட்கு குணத்வ ஜாதியுடைமை வடிவ சாதர்மியமும் சம்பவிக்கின்றது.

## கOாகஎ. மூர்த்தத்திலிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியத்தின் நிரூபணம்.

உருவம், ரசம், கந்தம், பரிசம், பரத்வம், அபரத்வம், குருத்வம், திரவத்வம், ஸ்நேஹம், வேகம், ஸ்திதிஸ்தாபகம் என்னும் பதினொரு குணங்கட்கு மூர்த்தத்திலிருக்கும் குணத்வம் சாதர்மியமாம். ஆண்டு உருவ முதலிய பதினொரு குணங்கள் பிருதிவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னும் ஐந்து மூர்த்தத்திரவியங்களிலேயே முறையாக சமவாய சம்பந்தத்தா லிருக்

கின்றன. ஆகாச முதலிய நான்கு அமூர்த்தத் திரவியங்களில் இருப்பன வன்று. ஆகையால் உருவ முதலிய பதினொரு குணங்கட்கு மூர்த்தத்தி லிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கoருஅ. அமூர்த்தத்தி லிருக்கும் குணத்தின் நிரூபணம்.

சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனை யெனப்பெயரிய சம்ஸ்காரம் என்னும் பத்துகுணங்கட்கு அமூர்த்தத்திலிருக்கும் குணத்வம் சாதர்மியமாம். கூறிய சத்த முதலிய பத்து குணங்கள் அமூர்த்தத் திரவிய மாத்திரத்தில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. பிருதிவி முதலிய ஐந்து மூர்த்தத் திரவியங்களில் இருப்பன வன்று. அதனிடத்தும் சத்த குணமோ ஆகாசமாகிய அமூர்த்தத் திரவியத்தி லிருக்கின்றது. புத்தி முதலிய ஒன்பது குணங்கள் ஆத்மாவாகிய அமூர்த்தத் திரவியத்தி லிருக்கின்றன. ஆகையால் சத்த முதலிய பத்து குணங்கட்கு அமூர்த்தத்தி லிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கoருகூ. மூர்த்த அமூர்த்தமாமிரண்டி லிருக்கும் குணத்வத்தின் நிரூபணம்.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாக மென்னும் ஐந்து குணங்கட்கு மூர்த்த, அமூர்த்தமா மிரண்டி லிருக்கும் குணத்வம் சாதர்மியமாம். சங்கியை முதலிய ஐந்து குணங்கள் பிருதிவி முதலிய ஐந்து மூர்த்தத் திரவியங்களிலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. அங்ஙனமே ஆகாச முதலிய நான்கு அமூர்த்தத் திரவியங்களிலும் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. ஆகையால் சங்கியை முதலிய ஐந்து குணங்கட்கு மூர்த்த, அமூர்த்தமா மிரண்டிலிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கoசo. அனேகத்திலிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியத்தின் நிரூபணம்.

சையோகமும், விபாகமும் ஒருமை சங்கியையினும் வேறான இருமை யாதி சங்கியையும், ஒருமை வேற்றுமையினும் வேறான இருமையாதி வேற்றுமை முதலியனவுமாம் நான்கு குணங்கட்கு அனேகத்தி லிருக்கும் குணத்வம் சாதர்மியமாகின்றது. இச்சையோக முதலிய நான்கு குணங்கள் அனேக திரவிய வியக்திகளிலேயே இருக்கின்றன. ஒரு திரவிய வியக்தியி லிருப்பனவன்று. ஆகையால் சையோக முதலிய நான்கிற்கும் அனேகத்தி லிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கoசக. ஏகத்திலிருக்கும் குணத்வ சாதர்மியம்.

கூறிய சையோக முதலிய நான்கினும் வேறான மற்றைய உருவ முதலிய குணங்கட்கு ஏகத்திலிருக்கும் குணத்வம் சாதர்மியமாம். ஆண்டு சையோக முதலிய நான்கினும் வேறான மற்றைய உருவ முதலிய குணங்கள் யாவும் ஒவ்வோர் திரவிய வியக்தியிலேயே சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. அனேக திரவிய வியக்திகளி லிருப்பனவன்று. ஆகையால் உருவ முதலிய குணங்கள் யாவற்றிற்கும் ஒவ்வொன்றி லிருக்கும் குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

௧௦௪௨. விசேஷ குணத்வ வடிவ சாதர்மியத்தின் நிரூபணம்.

உருவம், ரசம், கந்தம், பரிசம், சாம்சித்திக திரவத்வம், சிநேஹம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம் பாவனையெனப் பெயரிய சம்ஸ்கார மென்னும் பதினாறு குணங்கட்கு விசேஷ குணத்வம் சாதர்மியமாம். அதாவது; கூறிய பதினாறு குணங்கள் நியாய சாஸ்திரத்தில் விசேஷ குணமெனப்படுகின்றன.

௧௦௪௩. சாமான்னிய குணத்வ வடிவ சாதர்மியம்.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், குருத்வம், நைமித்திக திரவத்வம், வேகம், ஸ்திதிஸ்தாபகம் என்னும் பதினொரு குணங்கட்கு சாமான்னிய குணத்வம் சாதர்மியமாம். அதாவது; கூறிய பதினொரு குணங்கள் நியாய சாஸ்திரத்தில் சாமான்னிய குணமெனப்படுகின்றன.

௧௦௪௪. பாஹ்ய ஒவ்வோர் இந்திரிய கிராஹ்ய குணத்வத்தின் நிரூபணம்.

உருவம், ரசம், கந்தம், பரிசம், சத்த மென்னும் ஐந்து குணங்கட்கு ஒவ்வோர் பாஹ்ய இந்திரிய கிராஹ்ய குணத்வ சாதர்மியம் சம்பவிக்கின்றது ஆண்டு உருவ முதலிய ஐந்து குணங்கள் முறையாக சக்ஷு, ரசனம், கிராணம், துவக்கு, சுரோத்திர மென்னும் ஐந்து பாஹ்ய இந்திரியங்கட்குள் ஒவ்வோரிந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாகின்றது. எங்ஙனம்: உருவம் சக்ஷு இந்திரிய மொன்றினால் கிராஹ்யமாம். ரசம் ரசன இந்திரியம் ஒன்றினால் கிராஹ்யமாம். கந்தம் கிராண இந்திரிய மொன்றினால் கிராஹ்யமாம். பரிசம் துவக்கிந்திரிய மொன்றினால் கிராஹ்யமாம். சத்தம் சுரோத்திர இந்திரிய மொன்றினால் கிராஹ்யமாம். ஆகையால் உருவ முதலிய ஐந்து குணங்கட்கு ஒவ்வோர் பாஹ்ய இந்திரிய கிராஹ்ய குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. ஈண்டு மன வடிவ இந்திரிய மொன்றினால் கிராஹ்ய ஞான முதலிய குணங்களில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தியை நிவர்த்திக்கும்பொருட்டு அவ்விந்திரியத்திற்கு "பாஹ்யம்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு மனம் பாஹ்ய இந்திரிய வடிவமன்றாம். ஆனால் அந்தர இந்திரியவடிவமாம். ஆகையால் மனதால் கிராஹ்ய ஞான முதலியவைகளில் கூறிய சாதர்மியத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

௧௦௪௫. இரு இந்திரிய கிராஹ்ய குணத்வத்தின் நிரூபணம்.

சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், திரவத்வம், சிநேஹம், வேக மென்னும் பத்து குணங்கட்கு இரு இந்திரிய கிராஹ்ய குணத்வம் சாதர்மியமாம். ஆண்டு சங்கியை முதலிய பத்து குணங்களின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தானும், துவக்கிந்திரியத்தானும் உண்டாகின்றது. ஆகையால் கூறிய சங்கியை முதலிய பத்து குணங்கட்கு இரு விந்திரிய கிராஹ்ய குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

௧௦௪௬. அந்தர இந்திரிய கிராஹ்ய குணத்வத்தின் நிரூபணம்.

புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி யென்னும் ஆறு குணங்கட்கு அந்தர இந்திரிய கிராஹ்ய குணத்வம் சாதர்மியமாம். ஆண்டு

புத்தி முதலிய ஆறு குணங்களின் பிரத்தியக்ஷம் மன வடிவ அந்தர இந்திரியத்தானேயே யுண்டாகின்றது. சக்ஷு முதலிய பாஹிய இந்திரியங்களால் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆகையால் புத்தி முதலிய ஆறு குணங்கட்கு அந்தர இந்திரிய கிராஹிய குணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கo௪ஏ. அதீந்திரியமாகிய குணத்வ வடிவ சாதர்மியத்தின் நிரூபணம்.

அநுத்பூதமாகிய உருவம், ரசம், கந்தம், பரிச மென்னும் நான்கு குணங்கட்கும் குருத்வம், நிர்விகற்பக பிரத்தியக்ஷம், ஜீவனயோனிபிரயத்னம், தர்மம், அதர்மம், ஸ்திதிஸ்தாபகம், பாவனை யென்னும் குணங்கட்கும் அதீந்திரியத்வம் சாதர்மியமாம். அதாவது; கூறிய இக்குணங்களின் பிரத்தியக்ஷம் எவ்விந்திரியத்தானும் உண்டாகிறதில்லை.

கo௪அ. காரண குண உற்பன்னத்வமாகிய சாதர்மியத்தின் நிரூபணம்.

தேயு சையோக வடிவ பாகத்தால் உண்டாகாதனவாகிய உருவம், ரசம், கந்தம், பரிச மென்னும் நான்கு குணங்கட்கும் மத்திம பரிமாணம், ஒருமை சங்கியை, ஒருமை வேற்றுமை, குருத்வம், சாம்சித்திக திரவத்வம், சிநேஹம், வேகம், ஸ்திதிஸ்தாபக மென்னும் பன்னிரு குணங்கட்கும் காரண குணத்தால் உண்டாந்தன்மை சாதர்மியமாம். ஆண்டு "ஸ்வாஶ்ரயஸமவாயிஸமவேத ஸஜாதீய கு³ணஜந்யத்வம் காரணகு³ணோத்பந்நத்வம்" (இ-ள்.) ஈண்டு இரு சுவ சத்தங்களால் பட முதலிய திரவியங்களின் உருவ முதலிய குணங்களைக் கொள்ளுக. உருவ முதலிய குணங்களின் ஆசிரியமாகிய பட முதலியவைகளின் சமவாயி காரணவடிவ தந்து முதலிய அவயவ மாத்திரத்தில் சமவேதமாகிய உருவ முதலியபன்னிரு குணங்கள் பட முதலிய அவயவிகளிலுள்ள உருவ முதலிய பன்னிரு குணங்களின் உருவத்வாதி தர்மங்களால் சஜாதீயமேயாகின்றன. அத்தகைய தந்துமுதலிய அவயவங்களின் உருவ முதலிய பன்னிரு குணங்களால் முறையாக பட முதலிய அவயவிகளின் உருவ முதலிய பன்னிரு குணங்கள் ஜன்னியமாகின்றன. அதாவது; அவயவிகளிலுள்ள உருவ முதலிய குணங்கட்கு அவயவங்களிலுள்ள உருவ முதலிய குணங்கள் அசமவாயி காரணமாகின்றன. இவ்வாற்றால் பட முதலிய அவயவிகளின் உருவ முதலிய பன்னிரு குணங்களில் முறையாக தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய பன்னிரு குணங்களால் உண்டாகுந் தன்மையே உருவ முதலிய பன்னிரு குணங்களில் காரண குணங்களால் உண்டாகுந் தன்மையாம். இவ்வார்த்தை முன்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் உருவ முதலிய குணங்களின் நிரூபணத்தில் தெளிவாய்க்கூறி வந்துள்ளோம். ஆகையால் கூறிய உருவ முதலிய பன்னிரு குணங்கட்கு காரண குணத்தால் உண்டாகுந் தன்மை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கo௪௯. அகாரண குண உத்பன்னத்வ சாதர்மியம்.

சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி, தர்மம், அதர்மம், பாவனை யென்னும் பத்து குணங்கட்கு அகாரண குணத்தால் உண்டாகுந்தன்மை சாதர்மியமாம். ஆண்டு ஆகாசம், ஆத்மா வென்னுமிரண்டும் நித்தியமாகின்றன. ஆகையால் ஆகாசத்திற்கும், ஆத்மாவிற்கும்

யாதொன்றும் சமவாயி காரணமாகிறதில்லை. எக்காரணத்தின் குணத்தால் சத்த முதலிய குணங்கள் உண்டாகும்?. ஆகையால் சத்த முதலிய குணங்கட்கு கூறியகாரண குணத்தால் உண்டாவதின் அபாவ வடிவ அகாரண குணத்தால் உண்டாகுந்தன்மை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

### கoருo. காரண குணோத்பன்ன, அகாரண குணோத்பன்னமாம் உபய சூன்னிய குணத்வத்தின் நிரூபணம்.

பாகத்தாலாய உருவம், ரசம், கந்தம், பரிச மென்னுங்குணங்கட்கும் பாகத்தாலாய திரவத்வம், இருமை முதலிய சங்கியை, இருமை முதலிய வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வ மென்னுங் குணங்கட்கும் முற்கூறிய காரண குணத்தால் உண்டாந் தன்மையும் முற்கூறிய அகாரண குணத்தால் உண்டாந்தன்மையும் சாதர்மியமாகிறதில்லை.

### கoருக. கர்ம ஜன்னிய குணத்வத்தின் நிரூபணம்.

சையோகம், விபாகம், வேக மென்னு முக்குணங்கட்கு கர்மஜன்னியத்வம் சாதர்மியமாம். அதாவது; இம்முக்குணங்கள் கர்மமாகிய அசமவாயி காரணத்தாலேயே உண்டாகின்றது. இவ்வார்த்தை மூன்றுவது பரிச்சேதத்தில் அவ்வக்குணங்களின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் சையோக முதலிய மூன்றிற்கு கர்மத்தால் உண்டாகுந் தன்மை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

### கoருஉ. அசமவாயி காரண குணத்வத்தின் நிரூபணம்.

உருவம், ரசம், கந்தம், பரிசம், ஒருமைசங்கியை, பரிமாணம், ஒருமை வேற்றுமை, இயல்பாயுள்ள நெகிழ்ச்சி, ஸ்நேஹம், சத்தம், ஸ்திதிஸ்தாபக மென்னும் பதினொரு குணங்கட்கு அசமவாயி காரணத்வம் சாதர்மியமாம். ஆண்டு கடமுதலிய அவயவங்களிலுள்ள உருவம், ரசம், கந்தம், பரிசம், ஒருமைச்சங்கியை, பரிமாணம், ஒருமை வேற்றுமையாம் ஏழுகுணங்கட்கோ முறையாக கபால முதலிய அவயவங்களின் உருவ முதலிய ஏழு குணங்கள் அசமவாயிகாரணமாகின்றன. ஜலவடிவ அவயவியின்சாம்சித்திக திரவத்வத்திற்கும், ஸ்நேஹத்திற்கும் ஜலத்தின் அவயவங்களின் சாம்சித்திக திரிவத்வமும், ஸ்நேஹமும் அசமவாயிகாரணமாகின்றன. அங்ஙனமே முதலாவதுமுதலிய சத்தங்கள் இரண்டாவது முதலிய சத்தங்கட்கு அசமவாயி காரணமாகின்றன. அங்ஙனமே அவயவங்களின் ஸ்திதிஸ்தாபகம் அவயவியின் ஸ்திதிஸ்தபாகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. ஆகையால் முற்கூறிய உருவமுதலிய பதினொறு குணங்கட்கு அசமவாயி காரணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

### கoருங. நிமித்த காரண குணத்வத்தின் சாதர்மியம்.

ஆத்மாவின் புத்தி முதலிய ஒன்பது குணங்கட்கு நிமித்தகாரணத்வம் சாதர்மியமாம். ஆண்டு ஆத்மாவின் புத்தி முதலிய விசேஷ குணங்களில் எக்காரியத்திற்கும் அசமவாயி காரணத்தன்மை இன்றும். ஆனல் கேவலம்நிமித்த காரணத்தன்மை இருக்கின்றது. எங்ஙனம்: ஞான வடிவ புத்தி இச்சைக்கு நிமித்த காரணமாகின்றது. அவ்விச்சை பிரவிர்த்திக்கு நிமித்த

காரணமாகின்றது. விஹித, நிஷித்த பிரவிர்த்தி தர்மாதர்மங்கட்கு நிமித்த காரணமாகின்றது. தர்மாதர்மம் சுகதுக்கங்கட்கு நிமித்தகாரணமாகின்றன. பாவனுக்கிய சம்ஸ்காரம் ஸ்மிருதி ஞானத்திற்கு நிமித்தகாரணமாகின்றது. ஆகையால் ஆத்மாவின் புத்தி முதலிய ஒன்பது விசேஷகுணங்கட்கு நிமித்த காரணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கஂ௫௪. அசமவாயி நிமித்த காரணமுடைய குணத்வ சாதர்மியம்.

வெம்மைப்பரிசம், சையோகம், விபாகம், குருத்வம், திரவத்வம், வேகம் என்னும் ஆறு குணங்கட்கு இருவித காரணத்வம் சாதர்மியமாகின்றன. அதாவது; அசமவாயி காரணத்வம், நிமித்த காரணத்வமா மென்னும் இரு காரணத்தன்மைகள் சாதர்மியமாகின்றன. ஆண்டு தைஜச அவயவங்களின் வெம்மைப் பரிசம் தைஜச அவயவியின் வெம்மைப் பரிசத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அவ்வெம்மைப் பரிசமே பாகத்தாலாய பிருதிவியின் உருவ முதலியவைகட்கு நிமித்த காரணமாகின்றது. அங்ஙனமே பேரி முதலிய ஆகாச சையோகம் துவனி வடிவ சத்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அத்துவனி வடிவ சத்தத்திற்கு பேரி தண்டங்களின்சையோகம் நிமித்தகாரணமாகின்றது. அங்ஙனமே மூங்கிலிரு பிளவின் ஆகாசவிபாகம் துவனி வடிவ சத்தத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அத்துவனிவடிவ சத்தத்திற்கு மூங்கிலிரு பிளவின்விபாகம் நிமித்தகாரணமாகின்றது. அங்ஙனமே அவயவங்களின் குருத்வம் அவயவியின் குருத்வத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அங்ஙனமே குருத்வம் ஆதி வீழ்ச்சி வடிவ கர்மத்திற்கும் அசமவாயி காரணமாகின்றது. குருத்வமே தனது ஆசிரயமாகிய திரவியத்தின் அபிகாதாக்கிய சையோகத்திற்கு நிமித்த காரணமாகின்றது. அங்ஙனமே அவயவங்களின் நெகிழ்ச்சி அவயவியின் நெகிழ்ச்சிக்கு அசமவாயி காரணமாகின்றது. அங்ஙனமே நெகிழ்ச்சி ஆதி ஒழுக்காகிய கர்மத்திற்கும் அசமவாயி காரணமாகின்றது. நெகிழ்ச்சியே துகள் முதலியவைகளை திரட்டுதல் வடிவ சங்கிரஹத்திற்கு நிமித்த காரணமாகின்றது. அங்ஙனமே அவயவங்களின் வேகம் அவயவியின் வேகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. அங்ஙனமே அவ்வேகம் தனது ஆசிரயமாகிய திரவியத்தின் கர்மத்திற்கும் அசமவாயி காரணமாகின்றது. அவ்வேகமே தனது ஆசிரயமாகிய திரவியத்தின் அபிகாதாக்கிய சையோகத்திற்கு நிமித்த காரணமாகின்றது. இவ்வாறாக வெம்மைப் பரிசமுதலிய ஆறு குணங்களில் அசமவாயி காரணத்தன்மையும், நிமித்த காரணத்தன்மையுமாமிருவகை காரணத்தன்மை யிருக்கின்றன. ஆகையால் வெம்மைப்பரிசம், சையோகம், விபாகம், குருத்வம், நெகிழ்ச்சி, வேக மென்னும் ஆறு குணங்கட்கு அவ்விரு காரணத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

கஂ௫௫. அவ்வியாப்பியமாயிருக்கும் குணத்வ நிரூபணம்.

சையோகம், விபாகம், சத்தம், அங்ஙனமே புத்தி முதலிய ஒன்பது குணங்கள் ஆக இப்பன்னிரு குணங்கட்கு அவ்வியாப்பியமா யிருக்கும் குணத்வம் சாதர்மியமாம். ஆண்டு சையோக முதலியவைகட்கு தனது அத்தியந்தாபாவத்தோடு சமானதிகரணத் தன்மை யாதோ அதுவே சையோக

முதலியவைகளில் அவ்வியாப்பியமா யிருக்குந் தன்மையாம். எங்ஙனம்: தருவின் கிளையில் பக்ஷியின் சையோகமுளதாயினும் அத்தருவின் மூலத்தில் அச்சையோகத்தின் அத்தியந்தாபாவ மிருக்கின்றது; தனது அத்தியந்தாபாவத்திேனாடு சையோகத்திற்கு சமானாதிகரணத் தன்மை யிருக்கிறது. இதுவே சையோகத்தில் அவ்வியாப்பியமா யிருக்குந் தன்மையாம். இவ்வாறாக விபாகத்திலும் அறிந்துக் கொள்க. சத்தம், புத்தி முதலியவைகளிலோ அவ்வியாப்பியமா யிருக்குந் தன்மையினை முன்னர் திரவியங்களின் சாதர்மிய, வைதர்மியங்களில் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக் கொள்க. உருவ முதலிய குணங்களும் உற்பத்தி க்ஷணவச்சின்ன கட முதலியவைகளில் இருப்பனவன்றாமாகையால் அவ்வியாப்பியமாயிருப்பனவேயாம். என்றாலும் ஈண்டு சையோக முதலியவைகளில் அவ்வியாப்பியமாயிருப்பதென்னும் சத்தத்தால் தைசிக அவ்வியாப்பியமா யிருப்பதைக் கூறக் கருதியதாம். தைசிக அவ்வியாப்பியமா யிருக்குந் தன்மை அந்த உருவ முதலியவைகளி லின்றாம். ஆனால் அந்த உருவ முதலியவைகளில் காலிக அவ்வியாப்பியமா யிருக்குந்தன்மை யிருக்கின்றது. ஆண்டு தனது ஆசிரயமாகிய திரவியத்தின் ஓரிடத்தி லிருந்து ஓரிடத்திலிராததனை தைசிக அவ்வியாப்பியமா யிருப்ப தென்பர். தனது ஆசிரயமாகிய திரவியத்தில் ஓர் காலத்திலிருந்து ஓர் காலத்திலிராததனை காலிக அவ்வியாப்பியமாயிருப்ப தென்பர். ஈசுவரனது ஞானம், இச்சை, முயற்சி என்னும் மூன்றும் அவ்வியாப்பியமாயிருப்பனவன்றாம். ஆனால் வியாப்பியமா யிருப்பனவேயாகின்றன. என்றாலும் ஈண்டு ஜீவாத்மாவின் ஞானம், இச்சை, முயற்சியினைக்கொள்ளுக.

## ௧0௫௬. சவிஷய குணத்வத்தின் நிரூபணம்.

புத்தி, இச்சை, முயற்சி, துவேஷம், பாவனை யென்னும் ஐந்து குணங்கட்கு சவிஷயத்வம் சாதர்மியமாம். ஆண்டு புத்தி முதலிய ஐந்து குணங்கள் சில வஸ்துக்களை விஷயஞ் செய்வதாகியே இருப்பனவாகின்றன. விஷயமின்றி யுண்டாவனவன்று. எங்ஙனம்: இது கடம் என்பதான இவை முதலிய ஞானங்கள் கட முதலிய வஸ்துவினை விஷயஞ்செய்வதாகி இருப்பனவாகின்றன. அங்ஙனமே "யான் சுகிக்கின்றேன்" என்பதான இவை முதலிய இச்சைகளும் சுக முதலிய வஸ்துவினை விஷயஞ் செய்வதாகியே இருப்பனவாகின்றன. இவ்வாறாக முயற்சி, துவேஷம், பாவனை என்னும் மூன்றும் சில வஸ்துவினை விஷயஞ் செய்வதாகியே இருப்பனவாகின்றன. ஆகையால் கூறிய புத்தி முதலிய ஐந்து குணங்கட்கு சவிஷயத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

## ௧0௫௭ அநித்திய குணத்வ சாதர்மியத்தின் நிரூபணம்.

கந்தம், சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், சத்தம், சுகம், துக்கம், துவேஷம், தர்மம், அதர்மம், சம்ஸ்காரம் என்னும் பன்னிரு குணங்கட்கு அநித்தியத்வம் சாதர்மியமாம். ஆண்டு கந்த முதலிய பன்னிரு குணங்கள் உற்பத்தி விநாசமுடையன வாகையால் அநித்தியமேயாகின்றன. யாதொன்றும் நித்தியமாகிறதில்லை. ஆகையால் கந்த முதலிய பன்னிரு குணங்கட்கு அநித்தியத்வ வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது.

### கா௦ரு௮. நித்திய, அநித்தியத்திலிருக்கும் குணத்தை பிரிக்கும் உபாதியுடைமை வடிவ சாதர்மியம்.

உருவம், ரசம், பரிசம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, குருத்வம், திரவத்வம், சிநேஹம், புத்தி, இச்சை, முயற்சி என்னும் பன்னிரு குணங்கட்கு நித்திய அநித்தியங்களிலிருக்கும் குணங்களைப் பிரிக்கும் உபாதியுடைமை சாதர்மியமாம். ஆண்டு கூறிய உருவம், ரச முதலிய பன்னிரு குணங்கள் நித்தியமும், அநித்தியமுமாகின்றன. அத்தகைய நித்திய, அநித்திய உருவம், ரச முதலியவைகளில் இருப்பதும், குணங்களைப் பிரிக்கும் உபாதி வடிவமுமாகிய உருவத்வம், ரசத்வம் முதலிய பன்னிரு ஜாதிகள் முறையாக உருவ முதலிய பன்னிரு குணங்களிலிருக்கின்றன. ஆகையால் உருவ முதலிய பன்னிரு குணங்கட்கு நித்திய, அநித்தியங்களிலிருக்கும் குணங்களைப் பிரிக்கும் உபாதியுடைமை வடிவ சாதர்மியம் சம்பவிக்கின்றது. குணங்களின் சாதர்மிய, வைதர்மிய நிரூபணம் முற்றிற்று.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ சுவாமி உத்தவாநந்தகிரி அவர்களது சிடராகிய சுவாமி சித்கனாநந்தகிரீ அவர்களால் அருளிய பதார்த்தம், திரவியம், குண மென்பவைகளின் சாதர்மிய, வைதர்மிய நிரூபண மெனப் பெயரிய நியாயப்பிரகாசம் ஐந்தாவது பரிச்சேதம் முற்றிற்று.

ஸ்ரீ குருப்பியோநம:.



ஓம் ஸ்ரீகணேசாயநமஃ, ஸ்ரீகுருப்யோநமஃ,
ஸ்ரீகாசிவிஸ்வேஸ்வராயநமஃ, ஸ்ரீசங்கராசாரியேப்யோநமஃ.

# நியாயப்பிரகாசம்.

## ஆறுவது பரிச்சேதம்.

முன் மூன்றுவது பரிச்சேதத்தில் புத்தி குணத்தினை சுருக்கமாய் நிரூபித்தனம். இவ்வாறுவது பரிச்சேதத்தில் அப்புத்திகுணத்தினை விரிவாய் நிரூபிப்பாம். ஆண்டு நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டால் ஞான வடிவபுத்தியினை இருவகையாகக் கூறினும். ஆண்டு ஈசுவரனது புத்தியோ நித்தியமும், ஒன்றும் பிரத்தியக்ஷ வடிவமும், சர்வ ஜகத்தை விஷயஞ் செய்வதுமாகின்றது. ஜீவாத்மாவின் புத்தி அநித்தியமும், பிரத்தியக்ஷ, பரோக்ஷமாமிரு வடிவமும், அற்ப வஸ்துவை விஷயஞ் செய்வதுமாகின்றது.

### ௬௦௫. அநுபவம் ஸ்மிருதி யென்னும் வேறுபாட்டால் அநித்தியபுத்தியின் இருவித வேற்றுமை.

ஆண்டு ஜீவாத்மாவின் அநித்திய புத்தி அநுபவம், ஸ்மிருதி என்னும் வேறுபாட்டால் இருவிதமாகின்றது. அவ்விரண்டில் முதலில் அநுபவத்தினை நிரூபிப்பாம். ஆண்டு "ஸ்ம்ருதிபிந்நம் ஜ்ஞாநம் அநுபவஃ" (இ-ள்.) ஸ்மிருதியினும் வேறான ஞானத்தினை அநுபவமென்பர். எங்ஙனம்: பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களால் உண்டாவதாகிய "இது கடம்" என்பதான இவை முதலிய ஞானம் ஸ்மிருதியினும் வேறும், ஞான வடிவமுமாம். ஆகையால் "இது கடம்" என்பதான இவை முதலிய ஞானங்கள் அநுபவமெனப்படுகின்றன. ஆண்டு "ஞானம் அநுபவம்" என இம்மாத்திரமே அநுபவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஸ்மிருதியினும் வேறும்" என்னும் பதங் கூறுவிடின் ஸ்மிருதியில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அநுபவத்தினைப்போன்று ஸ்மிருதியும் ஞான வடிவமேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த ஞானத்திற்கு "ஸ்மிருதியினும்வேறும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு ஸ்மிருதியில் ஸ்மிருதியின் பேதமின்றும். ஆகையால் ஸ்மிருதியில் அநுபவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "ஸ்மிருதியினும் வேறு அநுபவம்" என இம்மாத்திரமே அநுபவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறுவிடின் கடமுதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் அநுபவத்தினைப் போன்று கட முதலியனவும் ஸ்மிருதியினும் வேறேயாகின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது.

ஆண்டு கட முதலியன ஞான வடிவமன்றும். ஆகையால் கட முதலியவை களில் அநுபவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### ௧௦௯௦. எதார்த்த, அயதார்த்த வேறுபாட்டால் அநுபவத்தின் இருவித வேற்றுமை.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித அநுபவம் யதார்த்த அநுபவம், அயதார்த்த அநுபவம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.

### ௧௦௯௧. யதார்த்த அநுபவத்தின் லக்ஷணம்.

ஆண்டு "தத்வதி தத்ப்ரகாரகாநுபவோ யதார்த்தாநுபவ:" (இ-ள்.) அஃதுடை பொருளின் கண் அது விசேஷணமாக நிகழும் அநுபவம் யதார்த்த அநுபவமெனப்படுகின்றது. அதாவது; அத்தர்மமுடைய பதார்த்தத்தில் அத்தர்மம் விசேஷணமாக தோற்றும் அநுபவம் யதார்த்த அநுபவமாம். எங்ஙனம்: இது கடம் என்பதான இவை முதலிய அநுபவம் போலும். ஆண்டு இது கடமென்னும் அநுபவத்தில் கடத்வ தர்மமுடைய கடமோ விசேஷியமாம். அக்கடத்வ தர்மம் விசேஷணமாம். ஆகையால் கடத்வ தர்மமுடைய கடத்தில் அக்கடத்வ தர்மம் விசேஷணமாவதால் "இது கடம்" என்னும் அநுபவம் யதார்த்தஅநுபவமெனப்படுகின்றது. அங்ஙனமே வெள்ளியில் "இது வெள்ளி" என்னும் அநுபவமும் வெள்ளித்தன்மை தர்மமுடைய வெள்ளியில்வெள்ளித்தன்மை தர்மம் விசேஷணமாவதால் யதார்த்த அநுபவமெனப்படுகின்றது. ஆண்டு "அஃதுடைப் பொருளின் கண் அது விசேஷணமாக நிகழுவது யதார்த்தஅநுபவம்" என இம்மாத்திரமே யதார்த்த அநுபவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அநுபவம்" என்னும் பதங் கூறாவிடின் ஸ்மிருதி ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் யதார்த்த அநுபவம் கடத்வ முதலிய தர்ம முடைய கட முதலியவைகளில் கடத்வாதி தர்ம விசேஷணத்தை விஷயஞ் செய்கின்றதோ அங்ஙனமே "கடம்" என்பதான இவை முதலிய யதார்த்த ஸ்மிருதியும் கடத்வ முதலிய தர்மமுடைய கட முதலியவைகளில் கடத்வாதி தர்ம விசேஷணத்தை விஷயஞ் செய்வதேயாகின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "அநுபவம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு ஸ்மிருதியில் அநுபவ வடிவத்தன்மையின்றும். ஆகையால் ஸ்மிருதியில் யதார்த்த அநுபவத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "அது விசேஷணமாக நிகழும் அநுபவம் யதார்த்த அநுபவம்" என இம்மாத்திரமே யதார்த்த அநுபவத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அஃதுடைப்பொருளின் கண்" என்னும் பதங்கூறாவிடின் அயதார்த்த அநுபவத்தில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் கிளிஞ்சலில் இது வெள்ளி என்னும் அயதார்த்த அநுபவமும் வெள்ளித்தன்மை தர்ம விசேஷணத்தை விஷயஞ் செய்வதேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அஃதுடைப் பொருளின் கண்" என்னும் பதங் கூறப் பட்டது. ஆண்டு இது வெள்ளி என்னும் அயதார்த்த அநுபவம் கிளிஞ்சலில்

வெள்ளித்தன்மை தர்மத்தினை விஷயஞ் செய்வதாயினும் அக்கிளிஞ்சல் அவ் வெள்ளித்தன்மை தர்மமுடையதன்றும். ஆனால் பிரசித்த வெள்ளியே வெள் ளித்தன்மை தர்மமுடையதாகின்றது. ஆகையால் கிளிஞ்சலில் இது வெள்ளி என்னும் அநுபவம் வெள்ளித்தன்மை தர்மமுடைய பதார்த்தத்தில் வெள் ளித்தன்மை தர்ம விசேஷணத்தை விஷயஞ் செய்வதன்றும். ஆகையால், அயதார்த்த அநுபவத்தில் கூறிய யதார்த்த அநுபவத்தின் லக்ஷணத்திற்கு, அதிவியாப்தி யுண்டாகாது. யதார்த்த அநுபவத்தினை பிரமா வென்றும் வழங்குவர்.

## ௧௦௯௨. அயதார்த்த அநுபவத்தின் லக்ஷணம்.

" 𑌤𑌦𑌭𑌾𑌵𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌕𑌾𑌨𑍁𑌭𑌵𑌃 𑌅𑌯𑌥𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍁𑌭𑌵𑌃 "

(இ-ள்.) அஃதில் பொருளின் கண் அது விசேஷணமாக நிகழும் அநுபவம் அயதார்த்த அநுபவ மெனப்படும். அதாவது; எப்பொருளில் எத்தர்ம மிராததாமோ அப்பொருளில் அத்தர்மம் விசேஷணமாக நிகழும் அநுபவம் அயதார்த்த அநுபவ மெனப்படும். எங்ஙனம்; கிளிஞ்சலில் இது வெள்ளி என்னும் அநுபவம் போலும். அங்ஙனமே கயற்றில் இது பாம்பு என்னும் அநுபவம் போலும். ஆண்டு இது வெள்ளி என்னும் அநுபவத்தில் வெள்ளித்தன்மை தர்மத்தின் அபாவமுடைய கிளிஞ் சலோ விசேஷியமாம். வெள்ளித்தன்மை தர்மம் விசேஷணமாம். அங்ஙனமே இது பாம்பு என்னும் அநுபவத்திலும் பாம்புத்தன்மை தர்மத்தின் அபாவ முடைய கயறே விசேஷியமாம். பாம்புத் தன்மை தர்மம் விசேஷணமாம். ஆகையால் வெள்ளித்தன்மை தர்மத்தின் அபாவமுடைய கிளிஞ்சலில் வெள் ளித்தன்மை தர்ம விசேஷணமாவதால் "இது வெள்ளி" என்னும் அநுபவம் அயதார்த்த அநுபவமெனப்படுகின்றது. இவ்வாறுக பாம்புத்தன்மை தர்மத் தின் அபாவமுடைய கயற்றில் பாம்புத்தன்மை தர்மம் விசேஷணமாவதால் "இதுபாம்பு" என்னும் அநுபவமும் அயதார்த்த அநுபவமெனப்படுகின்றது. அயதார்த்த அநுபவத்தின் லக்ஷணத்திலும் "அநுபவம்" என்னும் பதம் அயதார்த்த ஸ்மிருதியில் அதிவியாப்தியை நிவர்த்திக்கும் பொருட்டாம். "அஃதில் பொருளின் கண்" என்னும் பதம் இது வெள்ளி, இது பாம்பு என்னு மிவை முதலிய யதார்த்த அநுபவத்தில் அதிவியாப்தியை நிவர்த்திக் கும்பொருட்டாம்.

## ௧௦௯௩. பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் வேறுபாட்டால் யதார்த்த அநுபவத்தின் நால்வகை வேற்றுமை.

முற்கூறிய யதார்த்த அநுபவமும்; பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். அந்நான்கு வகைத்தாய யதார்த்த அநுபவம் பிரமாணத்தானேயே ஜன்னியமாகின்றது. ஆகையால் யதார்த்த அநுபவத்தினைப் போன்று அதனை உண்டாக்கும் பிர மாணமும் பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தம் என்னும் வேறு பாட்டால் நால்வகையாகின்றன.

### ௧௦௬௪. பிரமாணத்தின் லக்ஷணம்.

"ப்ரமாகரணம் ப்ரமாணம்" (இ-ள்.) யதார்த்த அநுபவ வடிவ பிரமாவிற்கு கரணமாவது யாதோ அது பிரமாணமெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் நான்குவகைத்தான பிரமாவிற்கு பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம் சத்தம் என்னும் நான்கும் முறையாக கரண வடிவமாகையால் பிரமாணமெனப்படுகின்றன.

### ௧௦௬௫. கரணத்தின் லக்ஷணம்.

முன்னர் பிரமாவின் கரணம் பிரமாணமெனப்பட்டது. ஆகையால் பிரமாணம் கரணத்தோடு பொருந்தியதாவதால் கரணத்தின் ஞானமின்றி அறியப்படமாட்டாது. கரணத்தின் ஞான முளதாக பிரமாணத்தின் ஞானம் சம்பவிக்கின்றது. ஆகையால் கரணத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம். "வ்யாபாரவத் அஸாதாரணகாரணம் கரணம்" (இ-ள்.) வியாபாரமுடைய அசாதாரண காரணம் கரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: கட வடிவ காரியத்தைக் குறித்து தண்டம் கரணமாம். ஆண்டு அத்தண்டம் சுழற்சி வடிவ வியாபாரமுடையதும், அசாதாரண காரண வடிவமுமாம். ஆகையால் கட வடிவ காரியத்தைக் குறித்து அத்தண்டம் கரணமெனப்படுகின்றது. இவ்வாருக பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்த மென்னும் நான்கு பிரமாணங்களும் வியாபாரமுடையனவும், அவ்வப் பிரத்தியக்ஷ முதலிய பிரமாவின் அசாதாரண காரணமுமாகின்றன. ஆகையால் பிரத்தியக்ஷ முதலிய நான்கும் அவ்வப்பிரத்தியக்ஷ முதலிய பிரமாவின் கரணமெனப்படுகின்றன. பிரத்தியக்ஷ முதலிய நான்கு பிரமாணங்களின் ஸ்வரூபமும், வியாபாரமும் பின்னர் நிரூபிப்பாம்.

### ௧௦௬௬. வியாபாரத்தின் லக்ஷணம்.

"தஜ்ஜந்யத்வே ஸதி தஜ்ஜந்யஜநகோ வ்யாபாரः" (இ-ள்.) காரணத்தால் உண்டாவதும், காரணத்தால் உண்டாகும் காரியத்தினை உண்டாக்குவதும் யாதோ அதுவியாபாரமெனப்படுகின்றது. எங்ஙனம்: சுழற்சி தண்ட வடிவ காரணத்தால் உண்டாவதும், தண்ட வடிவ காரணத்தால் உண்டாகும் கட வடிவ காரியத்தினை உண்டாக்குவதுமாகின்றது. ஆகையால் கட வடிவ காரியத்தின் உற்பத்தியில் சுழற்சி தண்டத்தின் வியாபாரமெனப்படுகின்றது. இவ்வாருக சக்ஷு முதலிய இந்திரியத்திற்கு கட முதலியவிஷயங்களோடுண்டாம் சையோக முதலிய சம்பந்தம் அச்சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாயதும், சக்ஷு முதலிய இந்திரியங்களால் ஜன்னிய கட முதலிய பிரத்தியக்ஷத்தினை உண்டாக்குவதுமாம். ஆகையால் சையோக முதலிய சம்பந்தங்கள் சக்ஷு முதலிய இந்திரியங்களின் வியாபாரமெனப்படுகின்றன. இவ்வாருக ஸ்மிருதிஞானத்தின் உற்பத்தியில் பூர்வ அநுபவத்தின் சம்ஸ்காரம் வியாபாரமாகின்றது. சுக, துக்கங்களின் உற்பத்தியில் விஹித, நிஷித்த கர்மங்களின் தர்மம், அதர்மங்கள் வியாபாரமாகின்றன. ஆண்டு தர்ம, அதர்மத்தில் விஹித நிஷித்த கர்மங்களுக்கு வியாபாரவடிவத்தன்மையும், சம்ஸ்காரத்தில் அநுபவத்திற்கு வியாபார வடிவத்தன்மையும், முன்னர் மூன்ருவது பரிச்சேதத்தில்

தர்ம, அதர்மங்களின் நிருபணத்திலும், சம்ஸ்காரத்தின் நிருபணத்திலும் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆண்டு "அசாதாரண காரணம் கரணம்" என இம்மாத்திரமே அக்கரணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "வியாபாரமுடைய" என்னும் பதங் கூறாவிடின் கூறிய வியாபாரத்திலேயே கரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின், எங்ஙனம் அவ்வக்காரியத்தைக் குறித்து அவ்வக்கரணம் அசாதாரணகாரணமாமோ அங்ஙனமே அவ்வக்காரியத்தைக் குறித்து வியாபாரமும் அசாதாரண காரணமேயாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "வியாபாரமுடைய" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கரணத்தினைப் போன்று வியாபாரம் வியாபாரமுடையதன்று. ஆகையால் வியாபாரத்தில் கரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. "அல்லது வியாபாரமுடைய காரணம் கரணம்" என இம்மாத்திரமே கரணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அசாதாரணம்" என்னும் பதங் கூறாவிடின் ஈசுவரன், அதிர்ஷ்டம் முதலிய சாதாரண காரணங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "அசாதாரணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சாதாரண காரணத்தினும் வேறான காரணத்தினை அசாதாரண மென்பர். அவ்வசாதாரண காரணத்தன்மை ஈசுவரன், அதிர்ஷ்ட முதலிய சாதாரண காரணங்களில் இன்றாம். ஆகையால் ஈசுவரன், அதிர்ஷ்டமுதலிய சாதாரண காரணங்களில் கரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

## ௧௦௬௭. காரணத்தின் லக்ஷணம்.

ஆண்டு முன்னர் வியாபாரமுடைய அசாதாரண காரணம் கரணமாகக் கூறப்பட்டது. ஆகையால் அக்கரணம் காரணத்தாற் பொருந்தியதாவதால் அக்காரணத்தின் ஞானமின்றி அறியப்படமாட்டாது. ஆனால் அக்காரணத்தின் ஞானமுளதாக கரணத்தின் ஞானம் சம்பவிக்கின்றது. ஆகையால் அக்காரணத்தின் லக்ஷணம் கூறுவாம். "கார்யாவ்யவஹிதபூர்வ நியதவ்ருத்தித்வே ஸதி அந்யதாஸித்தபின்னம் காரணம்" (இ-ள்.) எப்பதார்த்தம் அந்நியதாசித்த வஸ்துக்களினும் வேறாம், காரியத்திற்கு நியதமாய் முதற் க்ஷணத்தி லிருப்பதுமாமோ அப்பதார்த்தம் அக்காரியத்தினைக் குறித்து காரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: தண்டம், சக்கிரம், குலாலன் கபாலம் முதலியன கடத்தினைக் குறித்து அன்னியதாசித்த கழுதை முதலியவைகளினும் வேறும், அக்கட வடிவ காரியத்திற்கு நியதமாய் முதற்க்ஷணத்தில் இருப்பதுமாம். ஆகையால் தண்ட முதலியன கடத்தின் காரண மெனப்படுகின்றன. இவ்வாறுக பட வடிவ காரியத்திற்கு தந்து, வேமா முதலியன காரணமெனப்படுகின்றன. ஆண்டு "காரியத்திற்கு முன்னிருப்பது காரணம்" என இம்மாத்திரமே காரணத்தின் லக்ஷணமாகக் கூறின் குலாலனது மனைவியிடத்தும், கழுதையினிடத்தும் காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். ஏனெனின் எங்ஙனம் தண்டம், சக்கிர முதலியன கட வடிவ

காரியத்திற்கு முன்னிருப்பன வாகின்றனவோ அங்ஙனமே கழுதை, குலாலபத்தினி முதலியனவும் கட வடிவ காரியத்திற்கு முன்னிருப்பனவேயாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "நியதமாய்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கழுதை முதலியன கட மாத்திரத்தைக் குறித்து நியமமாக முன்னிருப்பனவன்று. ஆனல் சில கட வியக்தியினைக் குறித்து முன்னிருப்பனவாம். சில கடவியக்தியினைக் குறித்து முன்னிருப்பனவுமன்றாம். ஆகையால் நியத பதத்தினைக் கூறுவதால் நியதமிலா முன்னிருக்கும் கழுதைமுதலியவைகளில் காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "காரியத்திற்கு நியதமாய் முன்னிருப்பது காரணம்" என இம்மாத்திரமே காரணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "அந்நியதாசித்தமின்றி" என்னும் பதங் கூறுவிடின் தண்ட முதலிய காரணங்களில் இருக்கும் உருவம், தண்டத்வ முதலிய தர்மங்களில் காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் எங்ஙனம் தண்ட முதலியன கட வடிவ காரியத்திற்கு நியதமாய் முன் னிருப்பனவாமோ அங்ஙனமே தண்ட முதலியவைகளின் உருவம், தண்டத்வ முதலிய தர்மங்களும் கட வடிவ காரியத்திற்கு நியதமாய் முன்னிருப்பனவேயாகின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குவான் வேண்டி அந்த லக்ஷணத்தில் "அந்நியதாசித்தமின்றி" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு உருவம், தண்டத்வ முதலிய தர்மங்கள் கடத்தினைக் குறித்து அந்நியதாசித்தமாகாதனவன்றாம். ஆனல் அந்நியதாசித்தமேயாம். ஆகையால் உருவம், தண்டத்வ முதலிய தர்மங்களில் காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. உண்மையாய் விசாரித்துப் பார்க்கின் இவ்வந்நியதாசித்தபதத்தாலேயே அந்நியதாசித்த கழுதை முதலியவைகளின் நீக்கம் உண்டாய் விடுகின்றது. ஆகையால் காரணத்தின் லக்ஷணத்தில் "நியதமாய்" என்னும் பதத்திற்கு பயன் சிறிதுமின்றாம்.

## கஎகூஅ. அந்நியதாசித்தபதார்த்தத்தின் லக்ஷணமும் அந்நியதாசித்தத்தின் ஐவகை வேற்றுமையும்.

ஆண்டு அந்நியதாசித்தியுடையதனை அந்நியதாசித்தமென்பர். ஆகையால் அவ்வந்நியதா சித்தத்தின் லக்ஷணம் கூறுவாம். "அவஶ்யக்லுப்த நியதபூர்வவர்த்திந ஏவ கார்யஸம்பவே தத்ஸஹபூதத்வம் அந்யதாஸித்தி:" (இ-ள்.) காரிய உற்பத்திக்கு நியதமாய் முன் னிருப்பதும், அவசியமாய் பிராப்தமாவதுமாகிய காரணம் யாதோ அக்காரணங்களானேயே காரியத்தின் உற்பத்தி சம்பவிப்பதாக அக்காரணங்களினும் வேறாந் தன்மையினை அந்நியதாசித்தமென்பர். எங்ஙனம்: அவசியமாய் பிராப்தமாயதும், நியதமாய் முன்னிருப்பதுமாகிய தண்டம், சக்கிரம் முதலிய காரணங்களானேயே கட வடிவ காரியத்தின் உற்பத்தி சம்பவிக்கின்றது. அத்தகைய தண்ட முதலிய காரணங்களினும் வேறாந் தன்மை தண்டத்தின் உருவம், தண்டத்வம், கழுதை முதலியவைகளி லிருக்கின்றது. இதுவே அத்தண்டத்தின் உருவ முதலியவைகளில் அந்நியதாசித்தமாம். அந்நியதாசித்தி யுடையன

வாகையால் தண்டத்தின் உருவம், தண்டத்வம் கழுதை முதலியன அந்நியதா சித்தமெனப்படுகின்றன.

## ௧0௬௯. அந்நியதாசித்தத்தின் நிரூபணம்.

அந்நியதாசித்த பதார்த்தம் ஐவகையாகின்றது. எக்காரியத்தைக் குறித்து காரணததின் முன்னிருக்குந் தன்மை எவ்வடிவமாக கிரஹிக்கப்படுகின்றதோ அக்காரியத்தைக் குறித்து அவ்வடிவம் அந்நியதாசித்தமாகின்றது. எங்ஙனம்: கடாதி வடிவ காரியத்தைக் குறித்து தண்டம், சக்கிராதி வடிவ காரணங்களின் முன்னிருத்தற்றன்மை தண்டத்வம், சக்கிராதித்வம் முதலிய வடிவத்தாலேயே கிரஹிக்கப்படுவதாகின்றது. ஆகையால் தண்டத்வம், சக்கிரத்வம் முதலிய தர்மங்கள் கடத்தினைக் குறித்து அந்நியதாசித்தமெனப்படுகின்றன. இவ்வாறாக எவ்வெக்காரியத்தைக் குறித்து எவ்வெக் காரணம் எவ்வெவ் வடிவமாக முன்னிருத்தற்றன்மையாக கிரஹிக்கபபடுவதாகின்றதோ அவ்வக்காரியத்தைக் குறித்து அவ்வவ்வடிவம் அந்நியதா சித்தமேயாகின்றது. இது முதலாவது அந்நியதாசித்தமெனப்படுகின்றது

## ௧0௭0. இரண்டாவது அந்நியதாசித்தத்தின் நிரூபணம்.

எக்காரியத்தைக் குறித்து எப்பதார்த்தத்திற்கு ஸ்வதந்திரமாக் அன்வய வெதிரேகம் உண்டாவதின்றே ஆனால்தனது காரணங்களைக்கொண்டே அன்வயவெதிரேகம் கிரஹிக்கப்படுகின்றதோ அப்பதார்த்தமும் அக்காரியத்தைக்குறித்து அந்நியதாசித்தமாகின்றது. எங்ஙனம்: கட முதலிய காரியங்களைக் குறித்து தண்ட முதலிய காரணங்களின் உருவம் பரிசமுதலிய குணங்களுக்கு ஸ்வதந்திரமாக அன்வயவெதிரேக முண்டாகிறதில்லை. அதாவது; "ர—ெவஸலெக்ஷவஃ ஸஃஂ ர—ெவாஹாவெவட்டாஹாவஃ" என்பதான அன்வய வெதிரேக முண்டாகிறதில்லை. ஆனால் உருவம், பரிச முதலிய குணங்களின் காரணமாகிய தண்ட முதலியவற்றை கிரஹிப்பதானேயே உருவம், பரிசம்முதலிய குணங்களின் அன்வய வெதிரேகம் கட முதலியவைகளைக் குறித்து கிரஹிக்கப்படுவதாகின்றது. அதாவது; "உ௦ஶா—ெவஸலெக்ஷவஃ ஸஃஂ உ௦ஶா—ெவாஹாவெ வட்டாஹாவஃ" என்பதாக தண்டமுதலிய காரணத்தினை அங்கீகரிப்பதானேயே அவ்வுருவ பரிச முதலிய குணங்களின் அன்வய வெதிரேகம் கிரஹிக்கப்படுகின்றது. ஆகையால் தண்டமுதலிய காரணங்களின் உருவ, பரிச முதலிய குணங்கள் கட முதலிய காரியங்களைக் குறித்து அந்நியதாசித்தமெனப்படுகின்றன.

## ௧0௭௧. மூன்றாவது அந்நியதாசித்தத்தின் நிரூபணம்.

எப்பதார்த்தத்திற்கு வேறோர் காரியத்தினைக் குறித்து முதலில் முன்னிருத்தற் றன்மை கிரஹிக்கப்பட்டே பின்னர் எக்காரியத்தைக் குறித்து முன்னிருத்தற்றன்மை கிரஹிக்கப்படுகின்றதோ அப்பதார்த்தமும் அக்காரியத்தைக் குறித்து அந்நியதா சித்தமேயாம். எங்ஙனம்: கட முதலிய காரியங்களைக் குறித்து ஆகாசம் அந்நியதாசித்தமாகின்றது. ஆண்டு அவ்வாகாசத்தில் சத்த குணத்திற்கு சமவாயி காரணத்தன்மை யாதோ அதுவே அவ்

வாகாசத்தில் ஆகாசத்வமாம். அவ்வாகாசத்வ வடிவத்தாலேயே அவ்வாகாசத்திற்கு கடாதிகளைக் குறித்து முன்னிருத்தற்றன்மை கூறுவதாகும். ஆகையால் அவ்வாகாசத்தின் முன்னிருத்தற்றன்மை முதலில் சத்த குணத்தைக் குறித்து கிரஹிக்கப்படுவதாகி பின்னர் கடமுதலியவைகளைக்குறித்து முன்னிருத்தற்றன்மை கிரஹிக்கப்படுவதாகின்றது. ஆகையால் அவ்வாகாசம் கட முதலியவைகளைக் குறித்து அந்நியதாசித்தமேயாகின்றது.

கஎ௨. நான்காவது அந்நியதாசித்தத்தின் நிரூபணம்.

எப்பதார்த்தத்திற்கு எக்காரியத்தினை உண்டாக்குவதைக் குறித்து முன்னிருத்தற்றன்மை கிரஹிக்கப்பட்டே எக்காரியத்தைக் குறித்து முன்னிருத்தற்றன்மை கிரஹிக்கப்படுவதாகின்றதோ அப்பதார்த்தமும் அக்காரியத்தைக்குறித்து அந்நியதாசித்தமேயாகின்றது. எங்ஙனம்: கட வடிவ காரியத்தைக்குறித்து குலாலனது தந்தை அந்நியதாசித்தமாகின்றான். ஆண்டு குலாலனது தந்தைக்கு அக்கட வடிவ காரியத்தினை உண்டாக்கும் குலால வடிவ புத்திரனைக்குறித்து முதலில் முன்னிருத்தற்றன்மைகிராஹியமாகியே பின்னர் கடவடிவகாரியத்தைக்குறித்து முன்னிருத்தற்றன்மை கிராஹியமாகின்றது. ஆகையால் குலால பித்ருத்வ வடிவமாக குலாலனதுதந்தை கட வடிவ காரியத்தினைக் குறித்து அந்நியதாசித்தமே ஆகின்றான். குலால வடிவமாகவோ குலாலனது தந்தை கடத்தின் காரணமேயாகின்றான்

கஎ௩. ஐந்தாவது அந்நியதாசித்தத்தின் நிரூபணம்.

எக்காரியத்தைக் குறித்து எக்காரணம் நியதமாய் முன்னிருத்தற்றன்மை வடிவமாக சித்தமாமோ அக்காரணங்களிலும் வேறு பதார்த்தமும் அக்காரியத்தைக்குறித்து அந்நியதாசித்தமேயாகின்றன. எங்ஙனம்: கட வடிவகாரியத்தைக் குறித்து நியதமாய் முன்னிருத்தற்றன்மை வடிவமாக சித்தமாய் தண்ட, சக்கிர, குலாலன் முதலிய காரணங்களினும்வேறுன கழுதை, குலாலபத்னி முதலியன கட வடிவ காரியத்தினைக் குறித்து அந்நியதாசித்தமேயாகின்றன.

சங்கை :—எங்ஙனம் கட வடிவ காரியத்தைக் குறித்து தண்ட முதலியவைகளுக்கு நியதமாய் முன்னிருத்தற்றன்மை யிருக்கின்றதோ அங்ஙனமே தண்ட முதலியவைகளில் இருப்பனவாகிய தண்டத்வ முதலிய தர்மங்களுக்கும் உருவம், பரிசம் முதலிய குணங்களுக்கும் அக்கட வடிவ காரியத்தைக் குறித்து நியதமாய் முன்னிருத்தற்றன்மை யிருக்கின்றது. ஆகையால் தண்டத்வம், உருவ முதலியனவே கடத்தினைக்குறித்து காரணமாகும். அத்தண்ட முதலியன கடத்தினைக் குறித்து அந்நியதாசித்தமாகும்.

சமாதானம்:—அத்தண்டமுதலியவைகளினும், அத்தண்டாதிகளினுள்ள தண்டத்வம், உருவம் முதலியவைகளினும் கட வடிவ காரியத்திற்கு நியதமாய் முன்னிருத்தற்றன்மை சமானமாயினும் தண்ட முதலியவைகளின் அபேக்ஷையால் தண்டத்வமுதலியவைகளுக்கு கடத்தினைக் குறித்து காரணத்தன்மை யொப்புவதில் லாகவமிருக்கின்றது. ஆகையால் லாகவத்தால் அத்

தண்ட முதலியவைகளையே அக்கடத்தின் காரணமாக வொப்புவது நலமுடைத்தாம்.

### ௧௦௭௪. சரீரத்தினாலாயது, உபஸ்திதியினாலாயது, சம்பந்தத்தினாலாயது என்பதான மூவித லாகவத்வம்.

அந்த லாகவத்வம் சரீரத்தினாலாயது, உபஸ்திதியினாலாயது, சம்பந்தத்தினாலாயது என்னும் வேறுபாட்டால் மூவிதமாகின்றது. ஆண்டு திரியணுக முதலாக கடாதி காரியமட்டுமாம் காரிய திரவியங்கள் அனேக அவயவ வடிவ திரவியங்களில் சமவாயசம்பந்தத்தாலிருக்கின்றன. எங்ஙனம்: திரியணுகம் மூன்று துவியணுக வடிவ அனேக திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அங்ஙனமே சதுரணுகம் நான்கு திரியணுகங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. இவ்வாறாக கடம், படமுதலியனவும் அனேக கபாலம் தந்து முதலிய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றன. ஆகையால் திரியணுக முதலாக கடாதி காரியமட்டுமாம் சர்வ காரிய திரவியங்களில் அனேக திரவிய சமவேதத்வ தர்மமிருக்கின்றது: மஹத்வபரிமாணமும் திரியணுக முதலிய கடாதிமட்டும் சர்வ காரிய திரவியங்களிலேயே இருக்கின்றது. பரமாணுக்களிலும், துவியணுகங்களிலும் அனேக திரவிய சமவேதத்வ தர்மமும், மஹத்வ பரிமாணமு மிருப்பனவன்று. திரியணுக முதலிய திரவியங்களின் பிரத்தியக்ஷ ஞானமே யுண்டாகின்றது. துவியணுகங்களின் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் பிரத்தியக்ஷ ஞானத்தில் அனேக திரவிய சமவேதத்வதர்மத்திற்கு காரணத்தன்மையொப்புக. அல்லது அம்மஹத்வத்திற்கு காரணத் தன்மையொப்புக. ஆண்டு அனேக திரவிய சமவேதத்வத்தினது சரீரத்தின் அபேக்ஷையால் மஹத்வத்தின் சரீரம் லாகவமாம். இதனையே சரீரத்தாலாய லாகவமென்பர். சரீரத்தாலாய லாகவத்தானேயே நூலாசிரியர்கள் பிரத்தியக்ஷ ஞானத்தில் மஹத்வத்தினையே காரணமாக வொப்புகின்றனர். அவ்வனேக திரவிய சமவேதத்வ தர்மத்தினை பிரத்தியக்ஷத்தில் காரணமாக வொப்பினாரில்லை.

### ௧௦௭௫. உபஸ்திதியினாலாய லாகவம்.

யாண்டு கட முதலிய ஒரே பார்த்திவ திரவியங்களில் வன்னியின் சையோகத்தால் உருவம், ரசம், கந்தம், பரிச மென்னும் நான்கு குணங்கள் உண்டாகின்றனவோ ஆண்டு கந்தத்தினைக்குறித்து உருவத்தின் பிராகபாவத்திற்கு காரணத்தன்மை ஏன் உண்டாகாது? அங்ஙனமே உருவத்தினைக் குறித்து கந்தத்தின் பிராகபாவத்திற்கு காரணத்தன்மை ஏன் உண்டாகக் கூடாது? என்னுஞ்சங்கையுண்டாக. ஆண்டு உபஸ்திதியினாலாய லாகவத்தால் கந்தத்தைக் குறித்து கந்தத்தின் பிராகபாவத்திற்கே காரணம் ஒப்புகின்றனர். பிரதியோகியின் ஞானமின்றி அபாவத்தின் ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் கந்தத்தைக் குறித்து கந்தத்தின் பிராகபாவத்திற்கு காரணம் ஒப்பின் காரிய வாசக கந்த பதத்தால் கந்த வடிவ பிரதியோகியின் உபஸ்திதி உளதாக கந்த பிராகபாவத்திற்கு துரிதமாகவே உபஸ்திதி யுண்டாகின்றது. கந்தத்தைக் குறித்து உருவத்தின்பிராகபாவத்திற்கு காரணம் ஒப்பின் உருவ

பதத்தால் உருவ பிரதியோகியின் உபஸ்திதியின் பின்னரே உருவத்தினது பிராகபாவத்தின் உபஸ்திதி யுண்டாகின்றது. ஆகையால் கந்த வடிவ காரியத்தைக் குறித்து உருவ பிராக பாவத்திலுள்ள காரணத் தன்மையின் அபேக்ஷையால் கந்த பிராகபாவத்திற்கு காரணத்தன்மை யொப்புவதில் உபஸ்திதியினலாய லாகவ மிருக்கின்றது.

கoஎசு. சம்பந்தத்தினலாய லாகவத்தின் நிரூபணம்.

தண்ட முதலியவைகட்கு கடத்தின் காரணத்தன்மை யொப்பின் தண்ட முதலியவைகட்கு கட வடிவ காரியத்தின் அதிகரணத்தில் சையோகாதி வடிவ சாக்ஷாத் சம்பந்தமே சம்பவிக்கின்றது. தண்ட முதலியவைகளின் தண்டத்வ முதலிய தர்மத்திற்கும், உருவம் பரிசம் முதலிய குணங்கட்கும் கடத்தினைக் குறித்து காரணம் ஒப்பின் தண்டத்வம், உருவ முதலியவைகட்கு கடத்தின் அதிகரணத்தில் சாக்ஷாத் சம்பந்தம் சம்பவியாது. ஆனல் தண்டாதியிலுள்ள ஸ்வாசிரய தண்ட சையோகாதி வடிவ பரம்பரா சம்பந்தமுண்டாகின்றது. ஈண்டு சுவசத்தத்தால் தண்டத்வ முதலியவைகளைக்கொள்ளுக. அவற்றின் ஆசிரயமாகிய தண்டத்தின் சையோகாதி வடிவ சம்பந்தம் கடத்தின் அதிகரணத்தி லிருக்கின்றது. ஆகையால் தண்டத்வம் தண்டத்தின் உருவ முதலியவைகளினது சம்பந்தத்தின் அபேக்ஷையால் தண்ட முதலியவைகளின் சம்பந்தம் லாகவமாம். இதனையே சம்பந்தத்தினலாய லாகவமென்பர். சம்பந்தத்தினலாய லாகவத்தால் தண்ட முதலியவைகளிலேயே கடத்திற்கு காரணத்தன்மை சம்பவிக்கின்றது. தண்டத்வம், தண்டத்தின் உருவ முதலியவைகளில் கடத்தின் காரணத்தன்மை சம்பவியாது. ஆகையால் தண்டத்வம், தண்டத்தின் உருவ முதலியன கடத்தினைக் குறித்து அந்நியதா சித்தமேயாம்.

கoஎஎ. கூறிய லாகவத்தினைப் போன்று மூவகை
கௌரவத்தின் நிரூபணம்.

அல்லது எங்ஙனம் முற்கூறியபடி லாகவம் மூவகையாகின்றதோ அங்ஙனமே கௌரவமும் சரீரத்தினலாயது, உபஸ்திதியினலாயது, சம்பந்தத்தினலாயது என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அம்மூவகையாய கௌரவத்தின் உதாஹரணம் முற்கூறியபடியே முறையாக அறிந்துகொள்க. எங்ஙனம்: மஹத்வத்தினது சரீரத்தின் அபேக்ஷையால் அனேக திரவிய சம்வேதத்வத்தின் சரீரம் குருவாம். இதனையே சரீரத்தினலாய கௌரவமென்பர். இவ்வாறுக உபஸ்திதியினலாய கௌரவத்தினதும், சம்பந்தத்தினலாய கௌரவத்தினதும் ஸ்வரூபத்தையும் முறையாக அறிந்துக் கொள்க. இவ்வாறுக் கூறிய ஐவகையான அந்நியதாசித்த பதார்த்தத்தினும் வேறும், காரியத்தினைக் குறித்து நியதமாய் முன்னிருப்பதுமாகிய பதார்த்தம் அக்காரியத்தைக் குறித்து காரணமெனப்படுகின்றது.

கoஎஅ. காரிய லக்ஷணம்.

இனி கூறிய காரணத்தின் லக்ஷணத்தில் பிரவேசமாகிய காரியத்தின் லக்ஷணங் கூறுவாம். "வ்ராஜுஹாவ வ்ரதியொ஗ிகாரு௰ம்" (இ-ள்). எப்

பதார்த்தம் பிராகபாவத்தின் பிரதியோகியாகின்றதோ அப்பதார்த்தம் காரியமெனப்படுகின்றது. எங்ஙனம்: கடாதிகளின் உற்பத்திக்குமுன் கபால முதலியவைகளில் "இதில் கட முண்டாகும்" என்பதான இவை முதலிய தோற்றத்திற்கு விஷயம் கடாதி முதலியவைகளின் பிராகபாவமாம். அப்பிராகபாவத்தின் பிரதியோகித்தன்மை கடாதிகளிலிருக்கின்றது. இதுவே அக்கடாதிகளில் காரியத்தன்மையாம்.

### கoஎகூ. சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் மூவித காரணத்தின் வேற்றுமை.

இவ்வாறாக முற்கூறிய லக்ஷணத்தால் லக்ஷித காரணம் சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகையாகின்றது. ஆண்டு "யத்ஸமவேதம் கார்யம் உத்பத்யதே தத்ஸமவாயி காரணம்" (இ-ள்.) எத்திரவியத்தில் சமவாயத்தால் சம்பந்தமாகி காரிய முண்டாகின்றதோ அத்திரவியம் காரியத்திற்கு சமவாயிகாரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: தந்து வடிவ திரவியத்தில் சமவாயத்தால் சம்பந்தமாகி பட வடிவ காரியம் உண்டாவதாகின்றது. ஆகையால் அத்தந்து படத்தின் சமவாயி காரணமாகின்றது. இவ்வாறாக கட முதலிய திரவியங்களில் உருவம், ரச முதலிய குண வடிவ காரியமும், கர்ம வடிவ காரியமும் சமவாயத்தால் சம்பந்தமாகி உண்டாகின்றது. ஆகையால் உருவம், ரச முதலிய குணங்கட்கும், கர்மத்திற்கும் கட, பட முதலிய திரவியங்கள் சமவாயி காரணமெனப்படுகின்றன.

### கoஅo. அசமவாயி காரணத்தின் லக்ஷணம்.

"ஸமவாயஸம்பந்தேன ஸமவாயிகாரணே ப்ரத்யாஸன்னம் ஆத்மவிசேஷகுணபின்னம் காரணம் அஸமவாயிகாரணம்" (இ-ள்.) எப்பதார்த்தம் எக்காரியத்தின் சமவாயி காரணத்தில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதாகியும், அல்லது சுவசமவாயி சமவாய சம்பந்தத்தா லிருப்பதாகியும், ஆத்மாவின் ஞான முதலிய விசேஷ குணங்களினும் வேறாகியும் எக்காரியத்தினைக் குறித்து காரணமாகின்றதோ அப்பதார்த்தம் அக்காரியத்தைக் குறித்து அசமவாயிகாரணமெனப்படுகின்றது. இக்காரணத்தால் அவ்வசமவாயி காரணத்திற்கு இருவகை வேற்றுமை உண்டாகின்றது. ஆண்டு முதலாவது அசமவாயி காரணமோ தனது காரியத்தின் சமவாயி காரணத்தில் சமவாய சம்பந்தத்தால் இருந்துகொண்டு காரியத்தினை உண்டாக்குகின்றது. இரண்டாவது அசமவாயி காரணமோ தனது காரியத்தின் சமவாயி காரணத்தில் சுவசமவாயி சமவாய சம்பந்தத்தால் இருந்துகொண்டு அக்காரியத்தினை உண்டாக்குகின்றது. முதலாவது அசமவாயி காரணத்திற்கு உதாஹரணங்கூறுவாம். எங்ஙனம்: தந்துக்களின் சையோகம் பட வடிவ காரியத்தின் சமவாயி காரண வடிவ தந்துக்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அத்தந்துக்களின் சையோகம் ஞான முதலிய குணங்களினும் வேறுமாம். தந்துக்களின் பரஸ்பர சையோகமின்றி படத்தின் உற்பத்தி யுண்டாகாது. ஆகையால் தந்துக்களின் சையோகம் படத்தின் காரணமுமாம். ஆகையால் தந்துக்களின் சையோகம் படத்தின் அசமவாயி

காரணமெனப்படுகின்றது. இவ்வாறாக கபாலங்களின் சையோகம் கடத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. இரு பரமாணுக்களின் சையோகம் துவியணுகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. மூன்று துவியணுகங்களின் சையோகம் திரியணுகத்திற்கு அசமவாயி காரணமாகின்றது. இவ்வாறாக உண்டாகும் சர்வ திரவியங்களைக்குறித்து அவயவங்களின் சையோகத்திற்கே அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறாக பாகத்தாலாய உருவமுதலியவைகளைக்குறித்து தேயு சையோகத்திற்கு அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. அங்ஙனமே கிரியையைக் குறித்து அபிகாதாக்கிய சையோகத்திற்கும், நோதனக்கிய சையோகத்திற்கும் அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. அங்ஙனமே சையோகம், விபாகம், வேகமாம் முக்குணங்களைக் குறித்து கிரியைக்கும், ஆதிவீழ்ச்சி வடிவ கிரியையினைக் குறித்து குணத்திற்கும் அசமவாயி காரணத்தன்மை சம்பவிக்கின்றது. அங்ஙனமே ஆதி ஒழுகுதல் வடிவகிரியையினைக்குறித்து நெகிழ்ச்சிற்கு அசமவாயி காரணத்தன்மையும், இரண்டாவது முதலிய வீழ்ச்சிகளைக் குறித்தும், இரண்டாவது முதலிய ஒழுகுதலைக் குறித்தும் வேகத்திற்கு அசமவாயிகாரணத்தன்மையும் சம்பவிக்கின்றது. சையோகஜ சையோகத்தினைக் குறித்து சையோகத்திற்கு அசமவாயி காரணத் தன்மையும், விபாகஜ விபாகத்தைக் குறித்து விபாகத்திற்கு அசமவாயி காரணத் தன்மையும், துவித்வ முதலிய சங்கியைகளைக் குறித்து ஒருமைச் சங்கியைக்கு அசமவாயி காரணத்தன்மையும், இருமை வேற்றுமை முதலிய வேற்றுமைகளைக் குறித்து ஒருமை வேற்றுமைக்கு அசமவாயி காரணத்தன்மையும், சத்தத்தினைக்குறித்து சையோகம், விபாகம், சத்தமா மூன்றிற்கு அசமவாயிகாரணத்தன்மையும், ஞானமுதலிய குணங்களைக் குறித்து ஆத்ம மன சையோகத்திற்கு அசமவாயி காரணத்தன்மையும் சம்பவிக்கின்றது. இவை முதலிய சர்வ அசமவாயி காரணங்களில் முதலாவது அசமவாயி காரணத்தன்மை யிருக்கின்றது. இனி இரண்டாவது அசமவாயி காரணத்திற்கு உதாஹரணங் கூறுவாம். பட முதலிய அவயவிகளிலுள்ள உருவம், ரசம், கந்தம், பரிசம், ஒருமைச்சங்கியை, பரிமாணம், ஒருமை வேற்றுமை, குருத்வம், திரவத்வம், சிநேஹம், ஸ்திதிஸ்தாபகமென்னுங் குணங்கள் முன்னர் ஐந்தாவது பரிச்சேதத்தில் காரண குணத்தால் உண்டாவதாகக் கூறினும். அப்பட முதலிய அவயவிகளிலுள்ள உருவ முதலிய குணங்கட்கும் தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய குணங்களே முறையாக அசமவாயி காரணமாகின்றன. ஆண்டு உருவ முதலிய காரியங்களின் சமவாயிகாரண வடிவ பட முதலியவைகளில் அத்தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய குணங்கள் சமவாயி ~~காரண~~த்தாலிருப்பனவன்று. ஆனால் அத்தந்து முதலியவைகளின் உருவ முதலிய குணங்கள் சுவசமவாயி சமவாய சம்பந்தத்தானேயே அப்பட முதலிய அவயவிகளி லிருக்கின்றன. ஈண்டு சுவசத்தத்தால் தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய குணங்களைக்கொள்ளுக. அந்த உருவ முதலிய குணங்களின் சமவாயி காரணமாகிய தந்து முதலிய அவயவங்களில் பட முதலிய அவயவி சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. இவ்வாறாக அப்பட முதலிய அவயவிகளில் சுவசமவாயிசமவாய

சம்பந்தத்தால் இருக்கும் தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய குணங்கள் படமுதலிய அவயவிகளின் உருவ முதலிய குணங்களை முறையாக உண்டாக்குவதாகின்றது அங்ஙனமே ஞான முதலிய குணங்களினும் வேறுமாம். ஆகையால் அத்தந்து முதலிய அவயவங்களின் உருவ முதலிய குணங்கள் படமுதலிய அவயவிகளின் உருவ முதலிய குணங்களின் அசமவாயி காரணமெனப்படுகின்றன. ஆண்டு முற்கூறிய அசமவாயி காரணத்தின் லக்ஷணத்தில் "ஞானத்தினும் வேறும்" என்னும் பதம் கூறுவிடின் ஆத்மாவின் ஞான முதலிய விசேஷ குணங்களில் அசமவாயி காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் இச்சையின் சமவாயி காரண வடிவ ஆத்மாவில் சமவாய சம்பந்தத்தால் இருக்கும் ஞானம் அவ்விச்சையினை யுண்டாக்குவதாகின்றது. முயற்சியின் சமவாயிகாரண வடிவ ஆத்மாவில் சமவாய சம்பந்தத்தா லிருப்பதாகிய இச்சை முயற்சியினை உண்டாக்குவதும் சுக, துக்கத்தின் சமவாயி காரண வடிவ ஆத்மாவில் சமவாய சம்பந்தத்தாலிருக்கும் தர்மம், அதர்மம் சுக, துக்கத்தினை உண்டாக்குவதுமாகின்றது. இவ்வாறாக ஞானமுதலியவைகளினும் அசமவாயி காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. ஞான முதலியன இச்சை முதலியவைகட்கு அசமவாயி காரணமாவனவன்று. ஆனால் நிமித்த காரணமாகின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞான முதலியவைகளினும் வேறும்" என்னும் பதம் கூறப்பட்டது. ஆண்டு ஞான முதலியன ஞான முதலியவைகளினும் வேறன்றாம். ஆகையால் ஞான முதலியவைகளில் அசமவாயிகாரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. படமுதலிய காரியத்தின் அசமவாயிகாரணத்தின் லக்ஷணத்திற்கு துரி, தந்து சையோக முதலிய நிமித்தகாரணத்தில் அதிவியாப்தியே யுண்டாகின்றது. என்றாலும் எங்ஙனம்: அசமவாயி காரணத்தின் சாமான்ய லக்ஷணத்தில் "ஞான முதலியவைகளினும் வேறும்" என்னும் பதம் சேர்க்கப்பட்டதோ அங்ஙனமே அவ்வப்பட முதலிய காரியத்தின் அசமவாயிகாரணத்தின் லக்ஷணத்தில் அவ்வத் "துரி, தந்து சையோக முதலியவைகளினும் வேறும்" என்னும் பதத்தைச் சேர்த்துக் கொள்ளுக. அதாவது; "படஸமவாயிகாரணே ஸமவாய ஸம்பந்தேந ப்ரத்யாஸந்நத்வே ஸதி துரிதந்துஸம்யோகாதி பிந்நத்வே ஸதி படகாரணம் படாஸமவாயிகாரணம்" என்பதாக அவ்வப்பட முதலிய காரியங்களின் அவ்வத் தந்து சையோக முதலிய அசமவாயி காரணத்திற்கு விசேஷ லக்ஷணத்தைக் கூறுக. ஆகையால் துரி, தந்து சையோக முதலிய நிமித்த காரணத்தில் அவ்வப் பட முதலிய காரியங்களினது அசமவாயி காரணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

**கoஅக. நிமித்த காரணத்தின் லக்ஷணம்.**

"தத்பிந்நம் காரணம் நிமித்தகாரணம்" (இ-ள்.) முற்கூறிய சமவாயி காரணத்தினும், அசமவாயி காரணத்தினும் வேறாகிய காரணம் நிமித்த காரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: துரி, வேமா, நாடா முதலியன படத்

தின் நிமித்த காரணமாகின்றன. அங்ஙனமே தண்டம், சக்கிரம், குலாலன் முதலியன கடத்தின் நிமித்த காரணமாகின்றன. ஆண்டு அத்துரி, வேமா முதலியன படத்தின் சமவாயிகாரண வடிவ தந்துவினும், அசமவாயி காரண வடிவ தந்து சையோகத்தினும் வேறும், பட வடிவ காரியத்தின் காரணமுமாம். ஆகையால் துரி, வேமா முதலியன படத்தின் நிமித்த காரணமெனப் படுகின்றன. இவ்வாறாக தண்டம், சக்கிரம் முதலியனவும் கடத்தின் சமவாயி காரண வடிவ கபாலங்களினும், அசமவாயி காரண வடிவ கபாலசையோகத் தினும் வேறும், கடத்தின் காரணமுமாம். ஆகையால் தண்டம், சக்கிரம் முதலியன கடத்தின் நிமித்த காரணமெனப்படுகின்றன. இவ்வாறாக தேசம், காலம், அதிர்ஷ்டம், ஈசுவரன், பிராகபாவம் முதலிய நிமித்தகாரணங்களிலுங் கூறிய லக்ஷணத்தை அறிந்துக் கொள்க. ஆண்டு கூறிய சமவாயி, அசமவாயி, நிமித்த வடிவ மூன்று காரணங்கள் திரவியம், குணம், கர்ம வடிவ பாவ காரியத்திற்கே சம்பவிக்கின்றது. பிரத்துவம்சாபாவ வடிவ அபாவ காரியத் திற்கோ நிமித்த காரணம் ஒன்றே சம்பவிக்கின்றது. சமவாயி காரணமும், அசமவாயி காரணமும் சம்பவிக்கிறதில்லை.

## ௧௦௪௨. சாதாரண, அசாதாரண வேறுபாட்டால் காரணத்தின் இருவித வேற்றுமை.

ஆண்டு முற்கூறிய காரண பதார்த்தம் சாதாரணம், அசாதாரணம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிரு வகைத்தாம். முற்கூறிய சமவாயி காரணமும் அசமவாயி காரணமுமா மிரண்டுமோ அசாதாரண காரணமே யாகின்றன. மூன்றாவது நிமித்த காரணமோ சாதாரணம், அசாதாரண மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம்.

## ௧௦௪௩. சாதாரண காரணத்தின் லக்ஷணம்.

" கார்யத்வாவச்சிந்நகார்யதாநிரூபிதகாரணதாஶாலி ஸாதாரணகாரணம்." (இ-ள்.) காரியத்வ தர்மத்தால் அவச்சின்னமாகிய காரியத் தன்மை யாதோ அக்காரியத்தன்மையால் நிரூபிக்கப்பட்ட காரணத்தன்மை யுடைய பதார்த்தம் சாதாரண காரணமெனப்படுகின்றது. அச்சாதாரண காரணம் ஈசுவரன், ஈசுவரனது ஞானம், ஈசுவரனது இச்சை, ஈசுவரனது முயற்சி, திக்கு, காலம், பிராகபாவம், அதிர்ஷ்டம், பிரதிபந்தகாபாவம் என்னும் வேறு பாட்டால் ஒன்பது வகைத்தாம். எவ்வெக்காரியம் உண்டாகின்றதோ அவ் வக்காரியத்தைக் குறித்து ஈசுவரன் முதலிய ஒன்பதுக்கே நிமித்த காரணத் தன்மை சம்பவிக்கின்றது. ஈசுவரன் முதலிய ஒன்பது காரணங்களின்றி எக்காரியத்தின் உற்பத்தியும் உண்டாகிறதில்லை. ஆகையால் காரியம் யாவற் றினும் இருப்பதாகிய காரியத்வ தர்மத்தால் அவச்சின்ன சர்வ காரிய மாத்தி ரத்திலிருக்கும் காரியத் தன்மையால் நிரூபிக்கப்பட்ட காரணத்தன்மை யுடையன ஈசுவரன் முதலிய ஒன்பது காரணங்களேயாம். ஆகையால் ஈசுவரன் முதலிய ஒன்பது காரணங்கள் காரிய மாத்திரத்தைக் குறித்து சாதாரண நிமித்த காரணமெனப்படுகின்றன.

க௦௭௪. அசாதாரண நிமித்தகாரணத்தின் லக்ஷணம்.

"கார்யதாவச்சேதகதர்மபின்னதர்மாவச்சின்னகார்யதாநிரூபிதகாரணதாசாலி அஸாதாரணகாரணம்" (இ-ள்.) காரியத்வதர்மத்திலும் வேறான தர்மம்யாதோ அத்தர்மத்தால் அவச்சின்ன காரியத்தன்மையை நிரூபிக்கும் காரணத்தன்மையுடைய பதார்த்தம் அசாதாரண காரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: காரியத்தன்மை தர்மத்திலும் வேறான கடத்வதர்மத்தால் அவச்சின்ன கடமாத்திரத்திலுள்ள காரியத்தன்மையால் நிரூபிக்கப்பட்ட காரணத்தன்மையுடையன தண்டம், சக்கிரம், குலாலன், கபாலம், கபாலசைம்யோகம் முதலியனவாம். ஆகையால் தண்டம், சக்கிரம் முதலியன கடவடிவகாரியத்தைக்குறித்து அசாதாரண காரணமெனப்படுகின்றன. அங்ஙனமே படவடிவ காரியத்தினைக்குறித்தும் தந்து, தந்துசைம்யோகம், துரி, வேமா, கடா முதலியன அசாதாரண காரணமெனப்படுகின்றன. இவ்வாறாக முற்கூறிய ஈசுவரன் முதலிய ஒன்பது சாதாரண காரணங்களைவிட்டு எவ்வெக்காரியத்தைக்குறித்து எதுவெது காரணமாகின்றதோ அவ்வக்காரணம் அவ்வக்காரியத்தைக் குறித்து அசாதாரண காரணமேயாகின்றது. முன்னர் யதார்த்த அநுபவவடிவ பிரமாவின் சித்தியின்பொருட்டு அவற்றின் காரணவடிவ பிரமாணத்தினை நிரூபிப்பான் வேண்டியும், பிரமாணத்தினது ஸ்வரூபத்தினை சித்திசெய்யும்பொருட்டும் காரணத்தின்ஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது. அக்காரணத்தினது ஸ்வரூபத்தினை சித்திசெய்யும்பொருட்டும் மூன்றுவகையாக காரணத்தின் ஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது. இனி முற்கூறிய பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்த வடிவ நால்வகையான பிரத்தியக்ஷங்கட்குள் முதலில் பிரத்தியக்ஷப் பிரமாவினை நிரூபிப்பான் வேண்டி பிரத்தியக்ஷப்பிரமாவின் காரணமாகிய பிரத்தியக்ஷப்பிரமாணத்தினை நிரூபிப்பாம்.

க௦௭௫. பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ப்ரத்யக்ஷப்ரமாகரணம் ப்ரத்யக்ஷப்ரமாணம்" (இ-ள்.) பிரத்தியக்ஷப் பிரமாவிற்கு எது கரணமாமோ அது பிரத்தியக்ஷப் பிரமாணமெனப்படுகின்றது. எங்ஙனம்: இது கடம் என்பதான இவை முதலிய பிரத்தியக்ஷப் பிரமாவின் கரணம் சக்ஷுசு முதலிய இந்திரியங்களேயாகின்றன. ஆகையால் சக்ஷுசு முதலிய இந்திரியங்கள் பிரத்தியக்ஷப் பிரமாணமெனப்படுகின்றன.

க௦௭௬. அறுவகை பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் நிரூபணம்.

ஆண்டு பிரத்தியக்ஷப்பிரமாணம் பாஹ்ய பிரத்தியக்ஷப்பிரமாணம், அந்தர பிரத்தியக்ஷப் பிரமாணம் என்னும் வேற்றுமையால் இருவகைத்தாம். ஆண்டு பாஹ்யபிரத்தியக்ஷப்பிரமாணமும் கிராணம், ரசனம், சக்ஷுசு, துவக்கு, சுரோத்திரம், எனனும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். மனவடிவ இந்திரியம் அந்தர பிரத்தியக்ஷப்பிரமாணமெனப் படுகின்றது. பாஹ்ய, அந்தரபிரமாணமும் சேர்ந்து இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப்பிரமாணம் அறுவகைத்தாம். அவ்விந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணம் திரவியத்தை கிரஹிப்பது, திரவியத்தை கிரஹியாதது என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். ஆண்டு சக்ஷுசு, துவக்கு, மனமென்னும் மூன்று இந்திரியங்களோ திரவி

யத்தினை கிரஹிப்பனவாகின்றன. கிராணம், ரசனம், சுரோத்திரமென்னும் மூன்று இந்திரியங்கள் திரவியத்தை கிரஹிப்பனவன்றும்.

கா௦ளஎ. பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம்.

"இந்திரியார்த்த ஸந்நிகர்ஷஜந்யம் ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷம்" (இ-ள்.) சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு கடமுதலிய அர்த்தங்களினோடுண்டாம் சையோக முதலிய சம்பந்தங்களை இந்திரிய அர்த்தசன்னிகர்ஷமென்பர். அவ்விந்திரிய அர்த்தங்களின் சம்பந்தத்தால் உண்டாம் ஞானம்யாதோ அதனை பிரத்தியக்ஷ ஞானமென்பர். எங்ஙனம்: கடவடிவ அர்த்தத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக சம்பந்தமுளதாயின் இதுகடம், என்பதான ஞானம் உண்டாகின்றது. ஆகையால் "இதுகடம்" என்பதான ஞானம்பிரத்தியக்ஷஞானமெனப் படுகின்றது. இவ்வாறாக எவ்வெவ் ஞானம் இந்திரிய அர்த்தத்தின் சம்பந்தத்தால் உண்டாவதாகின்றதோ அவ்வவ் ஞானம் பிரத்தியக்ஷமேயாகின்றது. ஆண்டு "ஞானம் பிரத்தியக்ஷம்" என இம்மாத்திரமே பிரத்தியக்ஷ ஞானத்தின் லக்ஷணமாகக்கூறின் அநுமிதி முதலிய ஞானங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்தலக்ஷணத்தில் "இந்திரிய அர்த்தசம்பந்தங்களால் உண்டாவதும்" என்னும் பதங்கள் கூறப்பட்டன. ஆண்டு அநுமிதிமுதலிய ஞானங்கள் இந்திரிய அர்த்தங்களின் சம்பந்தத்தா லுண்டாவனவன்று. ஆகையால் அநுமிதி முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. "இந்திரிய அர்த்தசம்பந்த ஜன்னியம் பிரத்தியக்ஷம்" என இம்மாத்திரமே பிரத்தியக்ஷ ஞானத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங்கூறுவிடின் சம்பந்தத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். எக்காரணத்தா லெனின் இந்திரிய அர்த்தங்களின் சம்பந்தத்தின் துவம்சமும் சம்பந்தவடிவ பிரதியோகியால் உண்டாவதேயாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சம்பந்தத்தின் துவம்சத்தில் ஞானவடிவத் தன்மையின்றும். ஆகையால் சம்பந்தத்தின் துவம்சத்தில் ஞானத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது.

கா௦ளஅ. தர்ப்பண முதலியவைகளால் மறைவுபட்ட பதார்த்தங்களின் பிரத்தியக்ஷத்தில் இந்திரிய அர்த்தசம்பந்த ஜன்னியத்தன்மை.

சங்கை:— தர்ப்பணம் (கண்ணாடி) முதலியவைகளால் மறைவுபட்ட பதார்த்தங்களின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தா லுண்டாகின்றது. அந்த பிரத்தியக்ஷத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியே யுண்டாகும். ஏனெனின் தர்பண முதலியவைகளால் மறைவுபட்ட பதார்த்தத்தினோடு இந்திரியத்திற்கு சையோக சம்பந்தமே சம்பவியாது. ஓர்கால் மறைவுபட்டுள்ள பதார்த்தங்களோடும் சக்ஷு இந்திரியத்திற்கு சையோகமுண்டாகுமாயின் சுவர் முதலியவைகளால் மறைவுபட்ட பதார்த்தங்களின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தால் உண்டாக வேண்டும். ஆகையால் தர்ப்பண முதலியவைகளால் மறைவுபட்ட பதார்த்தங்களின் பிரத்தியக்ஷம் இந்திரிய அர்த்தத்தின் சம்பந்தத்தா லுண்டாகிறதில்லை.

சமாதானம்:—எங்ஙனம் சுவர் முதலிய மலின திரவியங்கள் தேயுவினை நிரோதிக்கின்றனவோ அங்ஙனம் தர்ப்பணம், ஜல முதலிய ஸ்வச்ச திரவியங்கள் தேயுவினை நிரோதிக்கிறதில்லை. ஆகையால் தர்ப்பணம் முதலிய ஸ்வச்ச திரவியங்களில் அத்தைஜஸ சக்ஷு இந்திரியப் பிரவேசத்தால் மறைவுபட்ட பதார்த்தத்தினோடு சையோகம் உண்டாகின்றது. ஆகையால் தர்ப்பணாதிகளால் மறைவுபட்ட பதார்த்தங்களின் பிரத்தியக்ஷத்தில் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. யாண்டு தர்ப்பணத்தில் தனது முகத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகின்றதோ ஆண்டு புருஷனது சக்ஷு இந்திரியம் முதலில் தர்ப்பணத்தில் பிராப்தமாகி பின்னர் தர்ப்பணத்தினின்றும் திரும்பி முகத்தினோடு சையோக சம்பந்தமுடையதாகி முகத்தின் பிரத்தியக்ஷத்தினை உண்டாக்குகின்றது. ஆகையால் தர்ப்பணத்தின் சமீபகாலத்தில் தனது முகத்தின் பிரத்தியக்ஷ ஞானத்திலுங் கூறிய லக்ஷணத்திற்கு அவ்வியாப்தி யுண்டாகாது. அக்காலத்தில் "தர்பணே முகம் பஶ்யாமி" (இ-ள்). இத்தர்ப்பணத்தில் யான் எனது முகத்தைக் காண்கின்றேன். என்பதாக உலகவருக்குண்டாம் தோற்றமும் பிரம வடிவமாம்.

சங்கை:—முற்கூறிய பிரத்தியக்ஷ ஞானத்தின் லக்ஷணத்திற்கு ஈசுவரனது பிரத்தியக்ஷ ஞானத்தில் அவ்வியாப்தியே யுண்டாகின்றது. ஏனெனின் ஈசுவரனது பிரத்தியக்ஷ ஞானம் நித்தியமாவதால் இந்திரிய அர்த்தத்தின் சம்பந்தத்தால் உண்டாயதன்றாம்.

சமாதானம்:—கூறிய லக்ஷணம் ஜீவாத்மாவின் ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கே கூறப்பட்டது. ஆகையால் அந்த லக்ஷணத்திற்கு ஜன்னிய பிரத்தியக்ஷமே லக்ஷியமாம். நித்திய பிரத்தியக்ஷம் லக்ஷியமன்றாம். லக்ஷியத்தில் லக்ஷணமிராததனை அவ்வியாப்தி யென்பர். ஆகையால் கூறிய லக்ஷணத்திற்கு ஈசுவரனது பிரத்தியக்ஷத்தில் அவ்வியாப்தி யுண்டாகாது.

### ௬௭௪. வேறுவகையால் பிரத்தியக்ஷ ஞானத்தின் லக்ஷணம்.

ஈண்டு சில நூலாசிரியரோ பிரத்தியக்ஷ ஞானத்திற்கு இது லக்ஷணமாகக் கூறுகின்றனர். "ஜ்ஞாநாகரணகம் ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷம்" (இ-ள்.) எந்த ஞானத்திற்கு ஞானம் அகரணமாமோ அந்த ஞானத்தினை பிரத்தியக்ஷமென்பர். ஆண்டு "இது கடம்" என்பதான இவை முதலிய பிரத்தியக்ஷ ஞானத்தில் சக்ஷு முதலிய இந்திரியமே கரணமாகின்றது. எந்த ஞானமும் கரணமாகிறதில்லை. ஆகையால் கூறிய பிரத்தியக்ஷஞானத்தின் லக்ஷணஞ் சம்பவிக்கின்றது. ஆண்டு "ஞானம் பிரத்தியக்ஷம்" என இம்மாத்திரமே பிரத்தியக்ஷத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம் அகரணம்" என்னும் பதங் கூறாவிடின் அநுமிதி, உபமிதி, சத்தம் என்னும் மூன்று ஞானங்களில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம் அகரணம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அவ்வநுமிதி முதலிய மூன்று ஞானங்கள் ஞான அகரணகமன்றாம். ஆனால் அம்மூன்று ஞானங்கட்கு ஞானமே கரணமாகின்றது. எங்ஙனம்: அநுமிதிக்கு வியாப்தி ஞானம் கரண

மாகின்றது. உபமிதிக்கு சாத்ருசிய ஞானம் கரணமாகின்றது. சத்தத்திற்கு பதஞானம் கரணமாகின்றது. இவ்வெல்லா அர்த்தமும் பின்னர்த் தெளிவாகும். அல்லது "ஞானம் அகரணம் பிரத்தியக்ஷம்" என இம்மாத்திரமே பிரத்தியக்ஷத்தின் லக்ஷணமாகக்கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறுவிடின் கட முதலியவைகளில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். ஏனெனின் கட முதலியனவும் ஞான வடிவ கரணத்தால் உண்டாகிறதில்லை. ஆனால் தண்டாதி வடிவ கரணத்தால் உண்டாவதாகின்றன. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கட முதலியவைகளில் ஞான வடிவத் தன்மையின்றும். ஆகையால் கட முதலியவைகளில் அந்த பிரத்தியக்ஷ ஞானத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. கூறிய பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம் ஈசுவரனது பிரத்தியக்ஷத்திலும் இருக்கின்றது. ஏக்காரணத்தாலெனின் ஈசுவரனது பிரத்தியக்ஷமும் நித்தியமாவதால் ஞான வடிவ கரணத்தால் உண்டாவதன்றும்.

## ௧0௧௦. நித்திய, அநித்திய வேறுபாட்டால் பிரத்தியக்ஷத்தின் இருவித வேற்றுமை.

இவ்வாறுகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித பிரத்தியக்ஷ ஞானம் நித்திய, அநித்தியமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு ஈசுவரனது பிரத்தியக்ஷ ஞானமோர் நித்தியமும், ஒரே விதமுமாம். ஜீவாத்மாவின் பிரத்தியக்ஷமோ அநித்தியமாகின்றது.

## ௧0௧௧. நிர்விகற்பக, சவிகற்பக வேறுபாட்டானும், லௌகிக அலௌகிக வேறுபாட்டானும் மீண்டும் பிரத்தியக்ஷத்தின் இருவித வேற்றுமை.

ஜீவாத்மாவின் அநித்தியப் பிரத்தியக்ஷ ஞானமும் கிராணஜம், ராசனம், சாக்ஷுஷம், துவாசம், சுரோத்திரம், மானசம் என்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். ஆண்டு கிராண இந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை கிராணஜமென்பர். ரசன இந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை ராசனமென்பர். சக்ஷு இந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை சாக்ஷுஷமென்பர். துவக்கிந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை ஸ்பார்சனமென்றும், துவாசமென்றுங் கூறுவர். சுரோத்திர இந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை சுரோத்திரமென்றும், சிராவண மென்றுங் கூறுவர். மன இந்திரியத்தா லுண்டாம் பிரத்தியக்ஷத்தினை மானச மென்பர். முற்கூறிய அறுவகை பிரத்தியக்ஷமும் நிர்விகற்பகம், சவிகற்பகம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். அங்ஙனமே லௌகிகம், அலௌகிகம் என்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம்.

## ௧0௧௨. நிர்விகற்பக, சவிகற்பகங்களின் லக்ஷணம்.

"ப்ரகாரதாநிரூபகஞாநம் நிர்விகல்பகம்" (இ-ள்.) விஷயத்திலுள்ள விசேஷணத்தினை நிரூபிக்காத ஞானம் நிர்விகற்பகமெனப்படுகின்றது. "ப்ரகாரதாநிரூபகஞாநம் ஸவிகல்பகம்" (இ-ள்.) விஷயத்திலுள்ள

விசேஷணத்தினை நிரூபிக்கும் ஞானம் சவிகற்பகமெனப்படுகின்றது. ஈண்டு கருத்திதுவாம். "இது கடம்" என்பதான இவை முதலிய சவிகற்பக ஞானத்தின் விஷயத்தன்மை கடத்திலும், கடத்வஜாதியிலும், கடகடத்வத்தின் சமவாயத்திலு மிருக்கின்றது. ஆண்டு கடத்திலோ விசேஷியமெனப் பெயரிய விஷயத்தன்மை யிருக்கின்றது. கடத்வ ஜாதியில் விசேஷணமெனப் பெயரிய விஷயத்தன்மை யிருக்கின்றது: சமவாயத்தில் சம்சர்க்கமெனப் பெயரிய விஷயத்தன்மை யிருக்கின்றது. எவ்வெவ் ஞானத்திற்கு எவ்வெவ் விஷயத்தன்மை உண்டாகின்றதோ அவ்வவ் விஷயத்தன்மை அவ்வவ் ஞானத்தால் நிரூபிக்கப் படுவதேயாம். அதாவது; அவ்வவ் விஷயத் தன்மையினை அவ்வவ் ஞானம் நிரூபிக்கின்றது. ஆகையால் "இது கடம்" என்பதான இவை முதலிய சவிகற்பக ஞானத்தில் விசேஷணத் தன்மையை நிரூபிக்குந் தன்மையும், விசேஷியத்தன்மையை நிரூபிக்குந் தன்மையும், சம்சர்க்கத்தன்மையை நிரூபிக்குந் தன்மையும் சம்பவிக்கின்றது. ஆகையால் சவிகற்பக பிரத்தியக்ஷத்திற்கு விசேஷணத் தன்மையை நிரூபிக்கும் ஞானத்வமும், விசேஷியத் தன்மையை நிரூபிக்கும் ஞானத்வமும், சம்சர்க்கத்தன்மையினை நிரூபிக்கும் ஞானத்வமுமாம் மூன்று லக்ஷணங்கள் சம்பவிக்கின்றன. "கட கடத்வம்" என்னும் நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திலோ முற்கூறிய மூன்று வகை விஷயத்தன்மைகளுள் யாதொன்றும் விஷயத்தன்மை யாகிறதில்லை. ஆனால் நிர்விகற்பக ஞானத்திற்கு கடமுதலியவைகளில் நான்காவது விஷயத் தன்மை யொன்றை அங்கீகரிப்பதாகின்றது. ஆகையால் நிர்விகற்பக ஞானம் விசேஷணம் எனப் பெயரிய விஷயத் தன்மையினையும், விசேஷியமெனப் பெயரிய விஷயத் தன்மையினையும், சம்சர்க்கம் எனப் பெயரிய விஷயத் தன்மையினையும் நிரூபிப்பதாகிறதில்லை. ஆகையால் நிர்விகற்பக பிரத்தியக்ஷத் திற்கு விசேஷணத் தன்மையினை நிரூபிக்காத ஞானத்வமும், விசேஷியத் தன்மையினை நிரூபிக்காத ஞானத்வமும், சம்சர்க்கத்தன்மையினை நிரூபிக்காத ஞானத்வமுமா மூன்று லக்ஷணங்கள் சம்பவிக்கின்றன. நிர்விகற்பக ஞானமும் கடம், கடத்வம், சமவாயம் என்னும் மூன்றினையே விஷயஞ் செய்கின்றது. என்றாலும் நிர்விகற்பக ஞானம் கடத்தினை விசேஷியத்தன்மை வடிவ் மாக விஷயஞ் செய்கிறதில்லை. கடத்வத்தினையும் விசேஷணத்தன்மை வடிவ மாக விஷயஞ் செய்கிறதில்லை. சமவாயத்தினையும் சம்சர்க்க வடிவமாக விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் நிர்விகற்பக ஞானம் கேவலம் கடம், கடத்வம், சமவாயம் என்பதான ஸ்வரூப மாத்திரத்தினையே விஷயஞ் செய்கின்றது. இக்காரணத்தானேயே நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திற்கு முற்கூறிய மூன்றுவகை விஷயத்தன்மையினும் வேறான நான்காவது விஷயத்தன்மை யொன்றை கட முதலியவைகளில் அங்கீகரிக்கின்றனர்.

சங்கை:—அத்தகைய நிர்விகற்பக பிரத்தியக்ஷத்தில் பிரமாணம் யாது? நிர்விகற்பக ஞானம் அதீந்திரியமாவதால் அதனிடத்து பிரத்தியக்ஷப் பிர மாணமோ சம்பவியாதென்னுஞ் சங்கையுண்டாக அநுமானப் பிரமாணத் தால் சித்திசெய்வாம்.

---

க0கூ௩. அநுமானப் பிரமாணத்தால் நிர்விகற்பக ஞானத்தின் சித்தி.

"கயஂவடஃ ஊதிவிஶிஷவுஜிஃ விஶெஷணஜ்ஞாநஜந்யா விஶிஷவுஜிஃவாக ஊஂஜீதிவிஶிஷவுஜிவக" (இ-ள்.) "இதுகடம்" என்பதான விசிஷ்டபுத்தி கடத்வ விசேஷணத்தின் ஞானத்தால் உண்டாக யோக்கியமாம், விசிஷ்ட ஞானவடிவ மாவதால், எதுவெது விசிஷ்ட ஞானமாமோ அதுவது விசேஷணத்தின் ஞானத்தால் உண்டாவதேயாகின்றது. எங்ஙனம்: தண்டபுருஷன் என்னும் விசிஷ்டஞானம் தண்டவடிவ விசேஷணத்தின் ஞானத்தால் உண்டாவதாம். அங்ஙனமே "இதுகடம்" என்னும் விசிஷ்ட ஞானமும் கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்தால் அவசியம் உண்டாவதாகும். ஆண்டு "இதுகடம்" என்னும் விசிஷ்ட ஞானத்திற்கு காரணமாவதும், விசிஷ்ட ஞானத்திற்கு முன் இருப்பதுமாகிய கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானம் யாதோ அக்கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானமே நிர்விகற்பக ஞானமெனப் படுகின்றது. ஆண்டு கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்திற்கும் "இது கடம்" என்னும் ஞானத்தினைப் போன்று சவிகற்பக ஞானவடிவத் தன்மை யொப்பின் அந்த விசிஷ்ட ஞானத்திற்கும் ஏதுவாகிய வேறோர் விசேஷண ஞானத்தை ஒப்புவதாகும். அந்த விசேஷண ஞானத்திற்கும் முன் விசேஷண ஞானத்தினைப் போன்று சவிகற்பக ஞான வடிவத்தன்மையே ஒப்புவதாகும். ஆகையால் விசேஷண ஞானத்திற்கு ஏதுவாகிய வேறோர் மூன்றாவது விசேஷண ஞானம் ஒப்புவதாகும். இவ்வாறு பின்னும் பின்னும் சவிகற்பக விசேஷண ஞானங்களை ஒப்புவதில் அநவஸ்த்தா தோஷத்தின் பிராப்தியே யுண்டாகும். அவ்வநவஸ்த்தாதோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்திற்கு நிர்விகற்பகமே ஒப்ப வேண்டும்.

க0கூ௪. விசிஷ்டபுத்தியில் விசேஷண ஞான ஜன்னியத்வத்தின் சித்தி.

ஆண்டு ஒரே கடத்தில் ஓர் கால் "இதுகடம்" என்பதான கடத்வ விசேஷண விசிஷ்டஞான முண்டாகின்றது. ஓர்கால் "இது பிருதிவீ" என்பதான பிருதிவித்வ விசேஷண விசிஷ்டஞானம் உண்டாகின்றது. ஓர்கால் "இது திரவியம்" என்பதான திரவியத்வ விசேஷண விசிஷ்டஞான முண்டாகின்றது. ஆண்டு அந்த ஞானங்களின் விலக்ஷணத் தன்மையில் வேறோர் காரணமோ சம்பவியாது. பரிசேஷத்தால் கடத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்திற்கும், பிருதிவீத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்திற்கும், திரவியத்வ வடிவ விசேஷணத்தின் ஞானத்திற்குமே முறையாக அந்த ஞானங்களின் விலக்ஷணத்தன்மையில் காரணம் ஒப்புவதாகும். ஆகையால் அந்த விசிஷ்ட புத்தியில் அந்த விசேஷண ஞானத்திற்கு அவசியம் காரணம் வொப்பவேண்டும்.

க0கூ௫. லௌகிக, அலௌகிக பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ளௌகிகஸநிகஷஜந்யஂப்ரத்யக்ஷஂ ளௌகிகஂ" (இ-ள்.) சக்ஷு முதலிய இந்திரியத்திற்கு கடமுதலிய அர்த்தத்தினோடுண்டாம் சையோகாதி வடிவ லௌகிக சம்பந்தத்தால் உண்டாம் பிரத்தியக்ஷம் லௌகிகப் பிரத்தியக்ஷமெனப் படுகின்றது.

"ஜ்ஞானலக்ஷணஸந்நிகர்ஷஜந்யம் ப்ரத்யக்ஷம் ஜ்ஞானலக்ஷணம்" (இ-ள்) சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு கடமுதலிய அர்த்தங்களோடுள்ள சாமான்னிய லக்ஷணாதி வடிவ அலௌகிக சம்பந்தத்தால் உண்டாகும் பிரத்தியக்ஷம் அலௌகிகப் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது.

### ௧௦௬௬. சையோக முதலிய அறுவித லௌகிக சம்பந்தங்களின் நிரூபணம்.

ஆண்டு பிரத்தியக்ஷ ஞானத்திற்கு ஏதுவடிவமும், சக்ஷு முதலிய இந்திரியங்களின் வியாபார வடிவமுமாகிய லௌகிக சம்பந்தம் சையோகம், சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேஷணத்தன்மை என்னும் வேறுபாட்டால் அறுவகையாகின்றன. இவ்வறுவகை சம்பந்தங்களில் எதனால் எந்தப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அந்தப் பிரத்தியக்ஷம் லௌகிகப் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது.

### ௧௦௬௭. சையோக சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு சக்ஷு, துவக், மனமென்னும் மூன்று இந்திரியங்களாலேயே திரவியங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. கிராணம், ரசனம், சுரோத்திர மென்னும் மூன்று இந்திரியங்களால் திரவியங்களின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆனால் கந்த முதலியவைகளின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. அதனிடத்தும் சக்ஷு, துவக்கென்னு மிந்திரியங்களாலோ மஹத்வ பரிமாண முடையதும், உத்பூத பரிசமுடையதுமாகிய பிருதிவி, ஜலம், தேயு என்னும் மூன்று திரவியங்களின் பிரத்தியக்ஷமே யுண்டாகின்றது. மனவடிவ இந்திரியத்தானே ஆத்மவடிவ திரவிய மொன்றின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. வேறோர் திரவியத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆண்டு சக்ஷு இந்திரியத்தால் மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமுடைய கட, பட முதலிய திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் இதுகடம், இதுபடம், என்பதாக உண்டாகின்றது. சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு கட, பட முதலிய திரவியங்களோடுண்டாம் சையோக சம்பந்தமே காரணமாகின்றது. ஈண்டு இதுகருத்தாம். முதலில் மனதிற்கு ஆத்மாவினோடு சையோக முண்டாகின்றது. அதன்பின் ஆத்மசையுக்த மனதிற்கு சக்ஷு முதலிய இந்திரியங்களோடு சையோக முண்டாகின்றது. அதன்பின் மன சையுக்த சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு கட முதலிய அர்த்தங்களோடு சையோகாதி வடிவ சம்பந்த முண்டாகின்றது. அதன் பின் ஜீவாத்மாவில் "இது கடம்" என்பதான பிரத்தியக்ஷ ஞானம் உண்டாவதாகின்றது. இம் முறையை சர்வ பிரத்தியக்ஷ ஞானத்தின் உற்பத்தியிலும் அறிந்துகொள்க. ஆண்டு கட முதலிய திரவியங்களின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியமோ கரணமாம். சக்ஷு இந்திரியத்திற்கு கட முதலிய திரவியங்களோடுண்டாம் சையோக சம்பந்தம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாவதும், சக்ஷு இந்திரியத்தாலுண்டாம் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தை யுண்டாக்குவதுமாம். ஆகையால் வியாபார வடிவமாம். "இதுகடம், இதுபடம்" என்பதான இவை முதலிய சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் பயனும். இம்முறை

யை துவக் முதலிய இந்திரியங்களிலும் அறிந்துக் கொள்க. அதாவது; சர்வ பிரத்தியக்ஷத்தில் இந்திரியமோ காரணமாகின்றது. அவ்வவ் விந்திரியத்திற்கு அவ்வத் திரவிய முதலிய அர்த்தங்களோ டுண்டாம் சையோகாதி வடிவு சம்பந்தம் வியாபாரமாகின்றது. அவ்வத் திரவிய முதலிய அர்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞானம் பயனாகின்றது. துவக் இந்திரியத்தால் கட முதலிய திரவியங்களின் துவாசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அத்துவாசப் பிரத்தியக்ஷத்தில் துவக்கிந்திரியத்திற்கு கட முதலிய திரவியங்களோ டுண்டாம் சையோக சம்பந்தமே காரணமாகின்றது. இவ்வாறாக மன வடிவ இந்திரியத்தால் ஆத்மா வடிவ திரவியத்தின் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அந்த மானசப் பிரத்தியக்ஷத்தில் அம்மன வடிவ இந்திரியத்திற்கு அவ்வாத்மா வடிவ திரவியத்திேனா டுண்டாம் சையோக சம்பந்தமே காரணமாகின்றது.

கஒகூஅ. சையுக்த சமவாய சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு யோக்கிய மஹத்வ விசிஷ்ட உத்பூத உருவமுடைய கட முதலிய திரவியங்களில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய உத்பூத உருவம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், பரத்வம், அபரத்வம், திரவத்வம், ஸ்நேஹம், வேக மென்னும் பதினொரு குணங்களினதும், கிரியா வடிவ கர்மத்தினதும், சத்தா, திரவியத்வம், பிருதிவித்வம், கடத்வ முதலிய ஜாதிகளினதும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தாலுண்டாகின்றது. அந்த உருவமுதலியவைகளின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு உருவ முதலியவைகளினேடுண்டாம் சையுக்தசமவாய சம்பந்தமே காரணமாகின்றது. ஈண்டு சையோக சம்பந்த முடையதனை சையுக்த மென்பர். கட முதலிய திரவியங்கள் சக்ஷு இந்திரியத்தின் சையோக முடையன வாகையால் சக்ஷு சையுக்தமெனப்படுகின்றன. அத்தகைய சக்ஷு சையுக்தகடமுதலியவைகளில் உருவமுதலிய பதினொருகுணங்களும், கர்மமும் சத்தா, திரவியத்வ முதலிய ஜாதிகளும் சமவாய சம்பந்தத்தால் இருக்கின்றன. ஆகையால் சையுக்த சமவாய சம்பந்தத்தால் உருவ முதலியவைகளின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் சம்பவிக்கின்றது. இவ்வாறாக முற்கூறிய உருவ முதலிய பதினொரு குணங்களில் உருவத்தினைவிட்டு பரிச முதலிய பதினொரு குணங்களின் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தானு முண்டாகின்றது. அங்ஙனமே அக்கட முதலிய திரவியங்களின் கர்மத்தினதும் சத்தா, திரவியத்வம், பிருதிவித்வம், கடத்வம் முதலிய ஜாதிகளினதும் பிரத்தியக்ஷம் துவக்கிந்திரியத்தால் உண்டாகின்றது. பரிச முதலியவைகளின் துவாசப் பிரத்தியக்ஷத்திலும் துவக்கிந்திரியத்திற்கு பரிச முதலியவைகளினே டுண்டாம் சையுக்த சமவாய சம்பந்தமே காரணமாகின்றது. இவ்வாறாக ரசன இந்திரியத்தால் பிருதிவி, ஜலத்திலிருக்கும் மதுர முதலிய ரச குணத்தினது ராசனப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே கிராண இந்திரியத்தால் பிருதிவியிலிருக்கும் கந்த குணத்தினது கிராணஜப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. மன வடிவ இந்திரியத்தால் ஜீவாத்மாவின் ஞான முதலிய ஆறு குணங்களினதும், ஆத்மத்வ ஜாதியினதும் மானசப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ரசம், கந்த முதலிய குணங்களின் பிரத்தியக்ஷமும் சையுக்த சமவாய சம்பந்தத்தா

னேயே யுண்டாகின்றது. ஆண்டு ரசன இந்திரிய சையுக்த பிருதிவியிலும், ஜலத்திலும் ரச குணத்தின் சமவாய சம்பந்தமிருப்பதாலும், கிராண இந்திரிய சையுக்த பிருதிவியில் கந்த குணத்தின் சமவாய சம்பந்தமிருப்பதாலும், மன இந்திரிய சையுக்த ஆத்மாவில் ஞானமுதலிய குணங்களின் சமவாய சம்பந்தமிருப்பதாலும், ரசம், கந்த முதலிய குணங்களின் பிரத்தியக்ஷம் ரசன, கிராண முதலிய இந்திரியங்களின் சையுக்த சமவாய சம்பந்தத்தால் சம்பவிக்கின்றது.

### கoகூகூ. ஜீவாத்மாவின் ஏகத்வ சங்கியையினையும், மஹத்வ பரிமாணத்தினையும் மானசப் பிரத்தியக்ஷமாக ஒப்புவோர்களின் மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். எங்ஙனம் ஜீவாத்மாவின் ஞான முதலிய ஆறு குணங்களின் பிரத்தியக்ஷம் மனதின் சையுக்த சமவாய சம்பந்தத்தால் உண்டாகின்றதோ அங்ஙனமே ஆத்மாவின் ஒருமை சங்கியையினதும், பரம மஹத்வ பரிமாணத்தினதும் மானசப் பிரத்தியக்ஷம் சையுக்த சமவாய சம்பந்தத்தால் உண்டாகின்றது.

### கஉoo. அவ்விரு குணங்களை அப்பிரத்தியக்ஷமாக ஒப்புவோரது மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். ஜீவாத்மாவின் ஒருமைச் சங்கியையினதும், மஹத்வ பரிமாணத்தினதும் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. ஏனெனின் எவ்வர்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றதோ அவ்வர்த்தத்தில் வாதிகளின் விவாத முண்டாகிறதில்லை. ஆத்மாவின் சங்கியையிலும், பரிமாணத்திலுமோ வாதிகட்கு வாதம் பிரசித்தமாய்க் காணப்படுகின்றது. ஆண்டு சில வாதிகளோ ஆத்மாவினை ஒன்றாகவே வொப்புகின்றனர். சில வாதிகளோ ஆத்மாவினை அனேகமாக ஒப்புகின்றனர். சில வாதிகளோ ஆத்மாவினை அணுபரிமாண முடையதாக வொப்புகின்றனர். சில வாதிகள் ஆத்மாவினை மஹத்வ பரிமாண முடையதாக வொப்புகின்றனர். ஆகையால் ஜீவாத்மாவின் ஒருமைச் சங்கியையினதும், மஹத்வ பரிமாணத்தினதும் மானசப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை.

### கஉoக. சேய்மையிலுள்ள திரவியத்தினது பரிமாணத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு நால்வகை அதிக சம்பந்தம்.

சங்கை :—முன் கட முதலிய திரவியங்களின் உருவ முதலிய பதினொரு குணங்களின் பிரத்தியக்ஷம் சக்ஷு சையுக்த சமவாய சம்பந்தத்தால் கூறியது சம்பவியாது. ஏனெனின் சேய்மையிலுள்ள கட முதலிய திரவியங்களின் பரிமாணத்திேனோடு சக்ஷு இந்திரியத்திற்கு சையுக்த சமவாய சம்பந்தம் இருக்கினும் அதே பரிமாணத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை.

சமாதானம் :—பரிமாணத்தின் பிரத்தியக்ஷத்தில் நான்கு வகை வேறு சம்பந்தங்கள் காரணமாகின்றன. ஆண்டு முதலாவது சக்ஷு இந்திரியத்தின் அவயவங்கட்கும், கட முதலிய திரவியங்களின் அவயவங்கட்கும் சையோக சம்பந்தம், இரண்டாவது இந்திரிய வடிவ அவயவிக்கும், கடாதி வடிவ அவய

விக்கும் சையோக சம்பந்தம், மூன்றுவது இந்திரிய வடிவ அவயவிக்கும், கட முதலிய திரவியங்களின் அவயவங்கட்கும் சையோக சம்பந்தம், நான்காவது இந்திரியங்களின் அவயவங்கட்கும், கடாதி வடிவ அவயவிக்கும் சையோக சம்பந்தம் என்பதான நான்கு வகையான சம்பந்தங்களும் பரிமாணத்தின் பிரத்தியக்ஷத்தில் காரணமாகின்றன. ஆண்டு சேய்மையி லிருக்கும் கடத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக மாத்திர மிருக்கினும் கூறிய நால்வகை சம்பந்தங்கள் ஆண்டுண்டாகிறதில்லை. இக்காரணத்தால் சக்ஷு இந்திரியத்தால் அக்கட முதலியவைகளினது பரிமாணத்தின் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை.

## ககoஉ. சேய்மை தோஷத்தால் பரிமாணத்திற்கு அப்பிரத்தியக்ஷம் ஒப்புவோர் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். சேய்மையி லிருக்கும் கட முதலியவைகளோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக முளதாயினும் சேய்மை தோஷங் காரணமாக கட முதலியவைகளின் பரிமாணத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆகையால் அதே பரிமாணத்தின் பிரத்தியக்ஷத்தில் நால்வகை அதிக சம்பந்தங்களை காரணமாக வொப்புவது பயனின்மையாம்.

## ககoங. சையுக்த சமவேத சமவாய சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு முற்கூறிய கட முதலியவைகளின் உருவ முதலிய பதினொரு குணங்களில் முறையாக சமவாய சம்பந்தத்தா லிருக்கும் உருவத்வ முதலிய பதினொரு ஜாதிகளின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகின்றது. அந்த சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு உருவத்வ முதலியஜாதிகளோடுண்டாம் சையுக்தசமவேத சமவாயசம்பந்தங்காரணமாம். ஆண்டு சக்ஷு சையுக்த கட முதலியவைகளில் சமவேதமா யிருக்கும் உருவ முதலிய குணங்களில் உருவத்வ முதலிய ஜாதிகள் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றன. ஆகையால் சக்ஷு இந்திரியத்திற்கு சையுக்த சமவேத சமவாய சம்பந்தத்தால் உருவத்வ முதலிய ஜாதிகளின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. இவ்வாறுக கட முதலியவைகளின் கர்மத்திலிருப்பதாகிய கர்மத்வ ஜாதியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமும் சையுக்த சமவேத சமவாய சம்பந்தத்தானேயே உண்டாகின்றது. முற்கூறிய கட முதலிய திரவியங்களின் பரிச முதலிய பதினொரு குணங்களில் முறையாக சமவாய சம்பந்தத்தா லிருக்கும் பரிசத்வ முதலிய பதினொருஜாதிகளின் பிரத்தியக்ஷமும் துவக்கிந்திரியத்தால் உண்டாகின்றது. அங்ஙனமே கர்மத்தி லிருக்கும் கர்மத்வ ஜாதியின் பிரத்தியக்ஷமும் துவக் இந்திரியத்தா லுண்டாகின்றது. பரிசத்வ முதலிய ஜாதிகளின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் துவக் இந்திரியத்திற்கு பரிசத்வ முதலிய ஜாதிகளோடுண்டாம் சையுக்த சமவேத சமவாய சம்பந்தமே காரணமாகின்றது. ஆண்டு துவக் இந்திரிய சையுக்த கட முதலியவைகளில் சமவேதமாயிருக்கும் பரிச முதலிய குணங்களில் பரிசத்வ முதலிய ஜாதிகள் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் துவக் இந்திரியத்தின் சையுக்த சமவேத சமவாய சம்பந்தத்தால் பரிசத்வ முதலிய ஜாதிகளின் பிரத்தியக்ஷமும், கர்மத்வ

ஜாதியின் பிரத்தியக்ஷமும் சம்பவிக்கின்றது. இவ்வாறாக கந்த குணத்திலிருக்கும் கந்தத்வ ஜாதியின் கிராணஜப் பிரத்தியக்ஷத்தில் கிராண இந்திரியத்திற்கு கந்தத்வ ஜாதியினோடுண்டாம் சையுக்த சமவேத சமவாய சம்பந்தமே காரணமாகின்றது. இவ்வாறாக ரச குணத்தி லிருக்கும் ரசத்வ ஜாதியின் ராசனப் பிரத்தியக்ஷத்தில் ரசன இந்திரியத்திற்கு ரசத்வ ஜாதியினோடுண்டாம் சையுக்த சமவேத சமவாய சம்பந்தமே காரணமாகின்றது. இவ்வாறாக ஆத்மாவின் ஞானமுதலிய குணங்களிலிருக்கும் ஞானத்வ முதலியஜாதிகளின் மானசப் பிரத்தியக்ஷத்தில் மனதிற்கு ஞானத்வ முதலிய ஜாதிகளோடுண்டாம் சையுக்த சமவேத சமவாய சம்பந்தமே காரண மாகின்றது.

ககoச. சமவாய சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு சுரோத்திர இந்திரியத்தால் வர்ணாத்மக சத்தத்தினதும், துவனியாத்மக சத்தத்தினதும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அச்சத்தத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சுரோத்திரிய இந்திரியத்திற்கு சத்தகுணத்தினோடுள்ள சமவாய சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு கர்ணகோளகத்திலுள்ள ஆகாசத்தினை சுரோத்திர இந்திரியமென்பர். அத்தகைய சுரோத்திர இந்திரிய வடிவ ஆகாசத்தில் உண்டாவதாகிய சத்தத்தின் பிரத்தியக்ஷமே சுரோத்திர இந்திரியத்தா லுண்டாகின்றது. இவ்வார்த்தை முன்னர் மூன்றாவது பரிச்சேதத்தில் சத்தகுணத்தின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறிவந்துள்ளோம். அச்சத்தம் ஆகாசமாத்திரத்தின் குணமேயாகின்றது. குணத்திற்கும் குணியாகிய திரவியத்திற்கும் பரஸ்பரம் சமவாய சம்பந்தமே யிருக்கின்றது. ஆகையால் அச்சத்தத்தின் சிராவணப்பிரத்தியக்ஷத்தில் ஆகாசவடிவ சுரோத்திர இந்திரியத்திற்கு அச்சத்த குணத்தினோடுள்ள சமவாய சம்பந்தமே காரண மாகின்றது.

ககoரு. சமவேத சமவாய சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு சுரோத்திர இந்திரியத்தால் சத்தகுணத்திலிருக்கும் சத்தத்வ ஜாதியின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. சத்தத்வ ஜாதியின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு சத்தத்வ ஜாதியினோடுள்ள சமவேத சமவாய சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு ஆகாச வடிவ சுரோத்திர இந்திரியத்தில் சத்தம் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சத்தம் சுரோத்திர சமவேதமென்று படுகின்றது. அத்தகைய சத்தத்தில் சத்தத்வ ஜாதி சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சுரோத்திர இந்திரியத்தின் சமவேத சமவாய சம்பந்தத்தால் சத்தத்வ ஜாதியினதும், ககார முதலிய, எழுத்துக்களிலிருக்கும் கத்வ முதலிய ஜாதிகளினதும் சிராவணப் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது.

ககoசா. சத்தத்தில் சுரோத்திர இந்திரியத்தின் வியாபார வடிவத் தன்மையின் சித்தி.

சங்கை:—என்னனம் சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு கடமுதலிய அர்த்தங்களோடுள்ள சையோக சம்பந்தம் சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாவதாலும், அவ்விந்திரியங்களால் உண்டாம் கட முதலிய அர்த்தங்

களின் பிரத்தியக்ஷத்தை உண்டாக்குவதாலும் சக்ஷு முதலிய இந்திரியங்களின் வியாபார வடிவமாகின்றதோ அங்ஙனம் சமவாய சம்பந்தத்திலும், சமவேத சமவாய சம்பந்தத்திலும் சுரோத்திர இந்திரியத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவியாது. ஏனெனின் சமவாயம் நித்தியமாவதால் சுரோத்திர இந்திரியத்தால் உண்டாகுந் தன்மை சம்பவியாது. சமவாயத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு வியாபாரத்தின் அபாவமிருக்க சுரோத்திர இந்திரியத்தில் சிராவணப் பிரத்தியக்ஷத்தின் கரணத்தன்மையும் சம்பவியாததாகும். எக்காரணத்தாலெனின் வியாபாரமுடைய காரணமே கரணமா மென்பதான முற்கூறிய லக்ஷணத்திற்கு விருத்தமாவதால்.

சமாதானம்:—சத்தத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சமவாய சம்பந்தத்திற்கு வியாபார வடிவத் தன்மையின்றும். ஆனால் சத்தத்திற்கே வியாபார வடிவத்தன்மை யிருக்கின்றது. ஆண்டு சத்தம் ஆகாச வடிவ சுரோத்திர இந்திரியத்தின் குணமாவதால் சுரோத்திர இந்திரியத்தால் உண்டாவதும், சுரோத்திர இந்திரியத்தாலுண்டாம் சத்தத்தை விஷயஞ் செய்யும் சிராவணப் பிரத்தியக்ஷத்தினை விஷயத்தன்மை வடிவமாக உண்டாக்குவதுமாம். விஷயமின்றி எப்பிரத்தியக்ஷமும் உண்டாகிறதில்லை. ஆகையால் அந்தப் பிரத்தியக்ஷ ஞானத்தில் இந்திரியத்தைப்போன்று விஷயத்திற்கும் காரணத்தன்மை யங்கீகரிக்கின்றனர். ஆகையால் சத்தத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவிக்கின்றது.

### ககஎ. சுரோத்திர மனசையோகத்தில் சுரோத்திர இந்திரியத்தின் வியாபாரத் தன்மையின் சித்தி.

அல்லது சுரோத்திர இந்திரியத்தினோடுண்டாம் மனதின் சையோகமே சுரோத்திர இந்திரியத்தின் வியாபாரமாம். ஆண்டு சுரோத்திர மனதுகளின் சையோகம் சுரோத்திர இந்திரியத்தால் உண்டாவதுமாம். இந்திரியத்தினோடு மனதின் சையோகமின்றி எப்பிரத்தியக்ஷ ஞானமும் உண்டாகிறதில்லை. ஆகையால் சுரோத்திர மனதுகளின் சையோகம் சுரோத்திர இந்திரியத்தா லுண்டாம் சத்தத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தை யுண்டாக்குவதுமாம். ஆகையால் சுரோத்திர மனதுகளின் சையோகத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவிக்கின்றது.

### ககஅ. சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயமென்னும் இரண்டு சம்பந்தங்களில் சக்ஷு முதலிய இந்திரியங்களின் வியாபார வடிவத் தன்மையின் சித்தி.

சையுக்த சமவாயமும், சையுக்த சமவேத சமவாயமுமா மிரண்டு சம்பந்தங்களிலும் நித்திய சமவாயத்தின் பிரவேசமே யிருக்கின்றது. ஆகையால் இவ்விரு சம்பந்தங்களிலுங் கூறிய சமவாய சம்பந்தத்தினைப்போன்று சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு வியாபாரவடிவத்தன்மை யுண்டாகாததாகவேண்டும். என்றாலும் அவ்விரு சம்பந்தங்கள் அநித்திய சையோக சம்பந்தத்தோடும் பொருந்தியனவாம். சையோகத்தில் சக்ஷு முதலிய இந்திரியங்களால் உண்டாகுந் தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்விரு சம்பந்தங்

களில் சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு வியாபார வடிவத் தன்மை சம்பவிக்கின்றது.

### ககoகூ. சையுக்த சமவாய முதலிய நான்கு சம்பந்த ஸ்தானத்தில் இந்திரிய மனதின் சையோகத்திற்கு வியாபார வடிவம் ஒப்புவோரது மதம்.

சில நூலாசிரியரோ சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாய மென்னும் நான்கு சம்பந்தங்களால் ஜன்னியப் பிரத்தியக்ஷத்தில் அவ்வவ் விந்திரிய மனதுகளின் சையோகத்திற்கே வியாபார வடிவத்தன்மை யொப்புகின்றனர்.

### ககக0. விசேஷணத்தன்மை சம்பந்தத்தின் நிரூபணம்.

யாண்டு சக்ஷு முதலிய இந்திரியங்களால் பூதல முதலியவைகளில் கட முதலிய பதார்த்தங்களினது அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ ஆண்டு அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு அபாவத்திேைடுள்ள விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. அபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்களால் உண்டாகின்றது. ஆகையால் எவ்வெவ் விந்திரியத்தால் எவ்வெவ் வதிகரணத்தில் எவ்வெப் பதார்த்தத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அவ்வவ்வகையினை தெளிவாய்க் கூறுவாம். கடத்தில் படத்வ ஜாதியின் அபாவமிருக்கின்றது. அப்படத்வத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு, துவக் என்னும் இரு இந்திரியங்களால் "கடம் படத்வா பாவமுடையது" என்பதான பிரத்தியக்ஷ முண்டாகின்றது. படத்வாபாவத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு, துவக்கு இந்திரியங்கட்கு படத்வாபாவத்தோடுள்ள சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு சக்ஷு, துவக்கு இந்திரியங்களால் சையுக்த கடத்தில் படத்வ ஜாதியின் அபாவம் விசேஷணத் தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சக்ஷு, துவக்கு இந்திரியங்களின் சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் படத்வாபாவத்தின் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. இவ்வாறாக ஆத்மாவிலுண்டாம் சுக, துக்க முதலியவைகளின் அபாவத்தின் மானசப் பிரத்தியக்ஷமும் சையுக்த விசேஷணத் தன்மை சம்பந்தத்தாலேயே யுண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் மன சையுக்தஆத்மாவில் சுக துக்காபாவம் விசேஷணத் தன்மை சம்பந்தத்தாலேயே இருக்கின்றது. இவ்வாறாக எவ்வெத்திரவியத்தில் எவ்வெப்பதார்த்தத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் எவ்வெவ் விந்திரியத்தா லுண்டாகின்றதோ அவ்வவ் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் அவ்வவ் விந்திரியத்திற்கு அவ்வவ் அபாவத்திேைடுள்ள சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. எங்ஙனம்: கருங்குடத்தில் செம்மை உருவத்தின் அபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தத்தாலுண்டாகின்றது. வெம்மை பரிசமுடைய வன்னியில் சீதபரிசத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் துவக் சையுக்த விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லுண்டாகின்றது. ஜலத்தில் கந்த குணத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் கிராண சையுக்த விசேஷணத் தன்

மைச் சம்பந்தத்தா லுண்டாகின்றது. மதுர ரசத்தில் கைப்பு ரசத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் ரசன சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லுண்டாகின்றது. கடத்தின் நீல உருவத்தில் வெண்மைத்தன்மை ஜாதியின் அபாவமிருக்கின்றது. அவ்வெண்மைத்தன்மை அபாவத்தின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தா லுண்டாகின்றது. ஆண்டு அவ்வெண்மைத்தன்மை அபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு வெண்மைத்தன்மை அபாவத்தினோடுள்ள சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு சக்ஷு சையுக்த கடத்தில் சமவேதமாயிருக்கும் நீல உருவத்தில் வெண்மைத்வ அபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் சக்ஷு இந்திரியத்தின் சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் வெண்மைத்தன்மை அபாவத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. இவ்வாறாக வன்னியின் வெம்மைப் பரிசத்திலிருக்கும் சீதத்வாபாவத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் துவக்கிந்திரியத்திற்கு சீதத்வாபாவத்தினோடுள்ள சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. ஆண்டு துவக்கு சையுக்த வன்னியில் சமவேதமாயிருக்கும் வெம்மைப்பரிசத்தில் சீதத்வாபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் இருக்கின்றது. இவ்வாறாக புஷ்ப முதலியவைகளின் நறுநாற்றத்தில் தீநாற்றத்தன்மை ஜாதியினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் கிராண சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லுண்டாகின்றது. மதுர ரசத்தில் கைப்புத்தன்மை ஜாதியினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் ரசன சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லுண்டாகின்றது. ஆத்மாவின் சுக முதலிய குணங்களில் துக்கத்வ முதலிய ஜாதிகளினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் மன சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லுண்டாகின்றது. இவ்வாறாக திரவிய சமவேதத்திலிருக்கும் எவ்வெவ்வபாவத்தின் பிரத்தியக்ஷம் எவ்வெவ் விந்திரியத்தால் உண்டாகின்றதோ அவ்வவ்வபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் அவ்வவ் விந்திரியத்திற்கு அவ்வவ் அபாவத்தினோடுள்ள சையுக்த சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. கடத்தின் நீல உருவத்தில் இருப்பதாகிய நீலத்வ ஜாதியில் மஞ்சட் தன்மை ஜாதியின் அபாவமிருக்கின்றது. அம்மஞ்சட் தன்மை அபாவத்திற் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தா லுண்டாகின்றது. மஞ்சட் தன்மை அபாவத்தின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு மஞ்சட் தன்மை அபாவத்தினோடுள்ள சையுக்த சமவேத சமவேத விசேஷணத் தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. ஆண்டு சக்ஷு இந்திரிய சையுக்த கடத்தில் சமவேதமாகிய நீல உருவத்தில் சமவேதமாகிய நீலத்வ ஜாதியில் மஞ்சட் தன்மை ஜாதியின் அபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சக்ஷு இந்திரியத்தின் சையுக்த சமவேத சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் மஞ்சள் தன்மை அபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. இவ்வாறாக வன்னியின் வெம்மைப் பரிசத்தில் இருப்பதாகிய வெம்மைத்தன்மை ஜாதியில் சீதத்வ ஜாதியின் அபாவ மிருக்கின்றது. அச்சீதத்வ அபாவத்தின் பிரத்தியக்ஷமும் துவக் இந்திரியத்தா லுண்டாகின்றது.

சீதத்வ அபாவத்தின் துவாசப்பிரத்தியக்ஷத்தில் துவக் இந்திரியத்திற்கு சீதத்வாபாவத்திேனாடுள்ள சையுக்த சமவேத சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. ஆண்டு துவக் சையுக்த வன்னியில் சமவேதமாகிய வெம்மைப் பரிசத்தில் சமவேதமாகிய வெம்மைத்தன்மை ஜாதியில் சீதத்வாபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. இவ்வாறாக நறுநாற்றத்தன்மை ஜாதியில் தீநாற்றத்தன்மை ஜாதியினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் கிராண சையுக்த சமவேத சமவேத விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லுண்டாகின்றது. மதுரத்வ ஜாதியில் கைப்புத்தன்மை ஜாதியினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் ரசன சையுக்த சமவேத சமவேத விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லுண்டாகின்றது. சுகத்வ முதலிய ஜாதியில் துக்கத்வ முதலிய ஜாதியினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் மன சையுக்த சமவேத சமவேத விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லுண்டாகின்றது. ஆண்டு மன சையுக்த ஆத்மாவில் சமவேதமாகிய சுகத்தில் சமவேதமாகிய சுகத்வ ஜாதியில் துக்கத்வ ஜாதியின் அபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆதாக வடிவு சுரோத்திர இந்திரியத்தில் விசேஷணத்தன்மை எனப்பெயரிய ஸ்வரூப சம்பந்தத்தா லிருக்கும் சத்தத்தின் அபாவத்தினதுபிரத்தியக்ஷமும் சுரோத்திர இந்திரியத்தா லுண்டாகின்றது. சத்தாபாவத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு சத்தாபாவத்திேனாடுள்ள விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. ககார முதலிய எழுத்துக்களிலிருக்கும் நத்வ முதலிய ஜாதிகளின் அபாவத்தின் பிரத்தியக்ஷமும் சுரோத்திர இந்திரியத்தா லுண்டாகின்றது. நத்வாபாவத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு நத்வாபாவத்திேனாடுள்ள சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தமே காரணமாகின்றது. ஆண்டு சுரோத்திர இந்திரியத்தில் சமவேதமாகிய ககார முதலியவைகளில் நத்வ முதலிய ஜாதிகளின் அபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தாலிருக்கின்றது. ஆகையால் சமவேத விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் ககாரத்தி லிருக்கும் நத்வாபாவத்தின் சிராவணப் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. ககாரத்திலிருக்கும் கத்வ ஜாதியிலும் நத்வ ஜாதியின் அபாவ மிருக்கின்றது. நத்வாபாவத்தின் சிராவணப் பிரத்தியக்ஷத்தில் சுரோத்திர இந்திரியத்திற்கு நத்வாபாவத்திேனாடுள்ள சமவேத சமவேத விசேஷணத்தன்மைச் சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு சுரோத்திர சமவேத ககாரத்தில் சமவேதமாகிய கத்வஜாதியில் நத்வ ஜாதியின் அபாவம் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லிருக்கின்றது. அல்லது எங்ஙனம் திரவிய முதலிய பாவ வடிவ அதிகரணத்தில் இருப்பதாகிய அபாவத்தின் பிரத்தியக்ஷம் முற்கூறிய முறைப்படி சக்ஷு முதலிய இந்திரியங்களா லுண்டாகின்றதோ அங்ஙனமே அபாவ வடிவ அதிகரணத்திலிருப்பதாகிய அபாவத்தின் பிரத்தியக்ஷமும் சக்ஷு முதலிய இந்திரியங்களா லுண்டாகின்றது. அபாவ அதிகரணத்திலிருக்கும் அபாவத்திேனாடு சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு சையுக்த விசேஷண விசேஷணத் தன்மையும், சையுக்த சமவேத விசேஷண விசேஷணத் தன்மையும், சையுக்த சமவேத சமவேத விசேஷண விசேஷணத் தன்மையுமா மிவை முதலிய விசேஷணத் தன்மை சம்பந்த முண்டாகின்றது.

முன்னர் கடத்தில் படத்வத்தினது அபாவத்தின் பிரத்தியக்ஷம் சக்ஷு சையுக்த விசேஷணத் தன்மை சம்பந்தத்தால் கூறப்பட்டது. கடத்திலிருக்கும் படத்வாபாவத்தில் கடத்வ ஜாதியின் அபாவ மிருக்கின்றது. படத்வாபாவத்திலிருக்கும் "படத்வாபாவம் கடத்வாபாவமுடையது" என்பதான கடத்வாபாவத்தின் பிரத்தியக்ஷமும் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகின்றது. கடத்வாபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்திற்கு கடத்வாபாவத்தினோடுள்ள சையுக்த விசேஷண விசேஷணத்தன்மை சம்பந்தம் காரணமாகின்றது. ஆண்டு சக்ஷு சையுக்த கடத்தில் விசேஷணத்தன்மை சம்பந்தத்தாலிருக்கும் படத்வாபாவத்தில் கடத்வாபாவம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. ஆகையால் சக்ஷு இந்திரியத்திற்கு கடத்வாபாவத்தினோடு சையுக்த விசேஷண விசேஷணத்தன்மை சம்பந்தம் சம்பவிக்கின்றது. இவ்வாறாக எவ்வெவ் அபாவத்தின் பிரத்தியக்ஷம் எவ்வெவ் விந்திரியத்தாலும், எவ்வெவ் விசேஷணத்தன்மை சம்பந்தத்தாலும் முன் கூறப்பட்டதோ அவ்வவ் அபாவத்தில் அவ்வவ் விந்திரிய யோக்கிய யாதாமோர் பதார்த்தத்தின் அபாவ மிருக்கின் அவ்வவ் விசேஷணத் தன்மை சம்பந்தத்திற்கு பின்னும் 'விசேஷணத்தன்மை" என்பதான பதத்தினை பிரயோகித்து அவ்வவ் அபாவத்தி லிருக்கும் அபாவத்தினோடுள்ள அவ்வவ் விந்திரியத்தின் சையுக்த விசேஷண விசேஷணத்தன்மை, சையுக்த சமவேத விசேஷண விசேஷணத் தன்மை, சையுக்த சமவேத சமவேத விசேஷண விசேஷணத் தன்மை, விசேஷண விசேஷணத் தன்மை, சமவேத விசேஷண விசேஷணத் தன்மை, சமவேத சமவேத விசேஷண விசேஷணத்தன்மை என்பதான சம்பந்தங்களை முற்கூறிய உதாஹரணங்களிலேயே அறிந்துக் கொள்க. நூல் விரியுமென்னும் அச்சத்தால் விரிவாய் எழுதவில்லை. இவ்வாறாக அவ்வவ் அபாவத்தினது பிரத்தியக்ஷத்தின் காரண வடிவ விசேஷணத்தன்மை சம்பந்தம் பலவகைத்தாம். என்றாலும் கூறிய அவ்வெல்லா சம்பந்தங்களில் விசேஷணத்தன்மை அநுகதமாயிருக்கின்றது. ஆகையால் விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் அவ்வெல்லா சம்பந்தத்தில் ஒரு விசேஷணத்தன்மை சம்பந்தத்தைக் கூறினும்.

கககக. பிராசீன சம்பிரதாயப்படி கூறிய ஆறு சம்பந்தங்களின் சித்தி.

சங்கை:—அபாவப் பிரத்தியக்ஷத்தின் ஹேதுவாகிய அனேக விசேஷணத்தன்மை சம்பந்தங்கட்கு விசேஷணத்தன்மை வடிவமாக ஒரு சம்பந்த மங்கீகரிக்கின் சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாய மென்னும் நான்கு சம்பந்தங்களிலும் சமவாயம் அநுகதமா யிருக்கிறது. ஆகையால் அச்சமவாயத்வ வடிவமாக நான்கு சம்பந்தங்களையும் ஒரு சம்பந்தமாக ஒப்பவேண்டும். ஆகையால் சையோகம், சமவாயம் விசேஷணத்தன்மை யென்னும் மூன்று சம்பந்தங்களே சித்திக்கின்றன. முற்கூறிய அறுவகை சம்பந்தம் சம்பவியாது.

சமாதானம்:—கூறிய இம்முறைப்படி மூன்று சம்பந்தங்களே சித்திப்பதாயினும் முன்னுள்ள நூலாசிரியர்கள் நூற்களில் முற்கூறிய அறு

வகை சம்பந்தங்களை யெழுதி யிருக்கின்றனர். மூன்று சம்பந்தங்களை எழுதி ஞரில்லை. ஆகையால் சாஸ்திர சம்பிரதாயத்தினை அநுசரித்து முற்கூறிய சையோக முதலிய ஆறு சம்பந்தங்களையே ஒப்ப வேண்டும்.

## ககக௨. விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் சமவாயத்தின் பிரத்தியக்ஷம்.

அல்லது வைசேஷிகர் மதத்தில் சமவாயத்தின் பிரத்தியக்ஷ முண்டா கிறதில்லை. நையாயிகர்களின் மதத்தில் சமவாயத்தின் பிரத்தியக்ஷ முண்டா கின்றது. இவ்வார்த்தை முன்னர் நான்காவது பரிச்சேதத்தில் சமவாயத்தின் நிரூபணத்தில் விரிவாய்க்கூறி வந்துள்ளோம். ஆண்டு நையாயிகர்களின் மதத் தில் சமவாயத்தின் பிரத்தியக்ஷமும் கூறிய அபாவத்தினைப்போன்று விசேஷ ணத்தன்மை சம்பந்தத்தாலேயே உண்டாகின்றது. சமவாயத்தை கிரஹிக்கச் செய்யும் விசேஷணத்தன்மை சம்பந்தமும் சையுக்த விசேஷணத்தன்மை, சை யுக்த சமவேத விசேஷணத்தன்மை என்பதான இவைமுதலிய வேறுபாட்டால் அனேகவிதமாகின்றது. ஆண்டு "உருவமுடையது கடம்" என்பதான சாக்ஷு ஷப்பிரத்தியக்ஷம் கடத்தினையும் விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே கடத்தி லிருக்கும் கடத்வ ஜாதியினையும், உருவ குணத்தினையும், கடத்திலிருக்கும் கடத்வஜாதியின் சமவாயத்தினையும், உருவ குணத்தின் சமவாயத்தினையும் அக் கட உருவத்திலிருக்கும் உருவத்வ ஜாதியினையும், உருவத்வ ஜாதியின் சமவா யத்தினையும் விஷயஞ் செய்கின்றது. ஆண்டு கடத்திலிருக்கும் கடத்வ ஜாதியின் அல்லது உருவ குணத்தின் சமவாயத்தினோடு சக்ஷுர் இந்திரியத்திற்கு சை யுக்த விசேஷணத்தன்மை சம்பந்த முண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் சக்ஷுர் சையுக்த கடத்தில் கடத்வத்தின் சமவாயமும், உருவத்தின் சமவாய மும் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தா லிருக்கின்றது. உருவ குணத்திலிருக் கும் உருவத்வ ஜாதியின் சமவாயத்தினோடு சக்ஷுர் இந்திரியத்திற்கு சையுக்த சமவேத விசேஷணத்தன்மைச் சம்பந்த முண்டாகின்றது. ஆண்டு சக்ஷுர் சையுக்த கடத்தில் சமவேதமாகிய உருவத்தில் உருவத்வஜாதியின் சமவாயம் விசேஷணத்தன்மை சம்பந்தத்தா லிருக்கின்றது. இவ்வாறாக துவக்கு முதலிய இந்திரியங்களினுள் எவ்வெவ்விந்திரியம் எவ்வெத்திரவிய, குண முதலிய பதார்த்தத்தினை கிரஹிக்கின்றதோ அவ்வவ் விந்திரியம் அவ்வப்பதார்த்தத்தி லிருக்கும் சமவாயத்தினை விசேஷணத்தன்மை சம்பந்தத்தானேயே கிரஹிக் கின்றது. விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தின் முறையை முற்கூறிய அபாவத் தின் விசேஷணத்தன்மைச் சம்பந்தத்தினைப் போன்று யூகித்துக் கொள்க.

## ககக௩. சக்ஷுர் முதலிய ஆறு இந்திரியங்களில் கூறிய சம்பந்தங்களின் விவஸ்தை.

முற்கூறிய சையோக முதலிய ஆறு சம்பந்தங்கட்கு சக்ஷுர் முதலிய ஆறு இந்திரியங்களில் இவ்விவஸ்தை சித்தமாகின்றது. திரவியத்தினை கிர ஹிப்பதாகிய சக்ஷுர், துவக்கு, மன மென்னும் மூன்று இந்திரியங்கட்கோ சையோகம், சையுக்த சமவாயம், சையுக்தசமவேத சமவாயம், விசேஷணத் தன்மை என்னும் நான்கு சம்பந்தங்கள் பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் காரண

மாகின்றன. திரவியத்தினை கிரஹிக்காத கிராணம், ரசனம், சுரோத்திரமென்னும் மூன்று இந்திரியங்கட்கு மும்மூன்று சம்பந்தங்களே பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் காரணமாகின்றன. அதனிடத்தும் கிராணம், ரசனமென்னுமிரு இந்திரியங்கட்கு சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், விசேஷணத்தன்மை யென்னும் மூன்று சம்பந்தங்கள் பிரத்தியக்ஷ ஞானத்தின் காரணமாகின்றன. சுரோத்திர இந்திரியத்திற்கு சமவாயம், சமவேத சமவாயம், விசேஷணத்தன்மை யென்னும் மூன்று சம்பந்தங்கள் பிரத்தியக்ஷ ஞானத்தின் காரணமாகின்றன. கூறிய சையோக முதலிய அறுவகை சம்பந்தங்கள் லௌகிக சம்பந்தங்களெனப்படுகின்றன. லௌகிக சம்பந்தங்களால் உண்டாம் சாக்ஷுஷ முதலிய அறுவகை பிரத்தியக்ஷ ஞானமோ லௌகிகப் பிரத்தியக்ஷமெனப்படுகின்றது.

## ககக௪. ஆலோக சையோகத்தில் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்கு காரணத்தன்மையின் வர்ணனம்.

சங்கை:—இருளிலிருக்கும் கடத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோகமுள்ளதாயினும் கடத்தினதும், அக்கடத்திலிருக்கும் கடத்வ முதலிய ஜாதியினதும், உருவ குணங்களினதும், கர்மத்தினதும், அபாவத்தினதும் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆகையால் சக்ஷு இந்திரியத்தின் சையோக முதலிய சம்பந்தங்கட்கு சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் காரணத்தன்மை சம்பவியாது.

சமாதானம்:—எங்ஙனம் கட முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் கடாதிகளிலிருக்கும் உத்பூத உருவத்திற்கும், மஹத்வபரிமாணத்திற்கும் காரணத்தன்மை சம்பவிக்கின்றதோ அங்ஙனமே கட முதலிய அர்த்தத்தினோடு ஆலோகத்தின் சையோகத்திற்கும் காரணத்தன்மை சம்பவிக்கின்றது. ஆலோக சையோகமின்றி சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை. ஆண்டு சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், வன்னி, தீபமிவை முதலிய தேயுவின் பிரகாசத்தினை ஆலோகமென்பர். அந்தகாரத்திலுள்ள கட முதலியவைகளோடு அவ்வாலோகத்தின் சையோகமின்றும். ஆகையால் அக்கடாதிகளினோடு சக்ஷு இந்திரியத்தின் சம்பந்தமிருக்கினும் அக்கட முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஆண்டு கட முதலிய திரவியங்களின் எப்பிரதேசத்தில் சக்ஷுவின் சையோகமுண்டாகின்றதோ அப்பிரதேசத்திலிருக்கும் ஆலோக சையோகம் அக்கட முதலியவைகளின் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷத்திற்குக் காரணமாகின்றது. இக்காரணத்தானேயே அக்கட முதலியவைகளின் பின்புறத்தில் ஆலோக சையோகமிருந்து முன் புறத்தில் சக்ஷு சையோகமுளதாயினும் கட முதலியவைகளின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகிறதில்லை. ஆலோக சையோகமின்றியே ஆந்தை, கோட்டான் முதலியவைகட்கு எவ்வாறுக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ அம்முறையை இரண்டாவது பரிச்சேதத்தில் தமத்திரவியநிருபணத்தின் கண்டனத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம்.

---

## கககரு. அபாவப் பிரத்தியக்ஷத்தில் அநுபலப்திக்கு சஹகாரி காரணத்தன்மை.

சங்கை:—அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சக்ஷுராதி முதலிய இந்திரியங்களே காரணமாக வொப்பின் கடத்தின் அபாவமுடைய பூதலத்திலும் எப்பொழுது "கடமுடையது பூதலம்" என்பதான பிராந்தி ஞான முண்டாகின்றதோ அப்பொழுதும் சக்ஷுரா இந்திரியத்தின் சையுக்த விசேஷணத்தன்மை சம்பந்தத்தால் அக்கடாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும். "கடமுடையது பூதலம்" என்பதான ஞான காலத்தில் கடாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகிறதில்லை.

சமாதானம்:—அநுபலப்தியோடு கூடியதாகிய சக்ஷுரா முதலிய இந்திரியங்கள் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் காரணமாகின்றன. ஆண்டு எவ்வெவ்வதிகரணத்தில் எவ்வெவ் விந்திரியத்தால் எவ்வெப் பிரதியோகியினது அபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அவ்வவ் வதிகரணத்தில் அவ்வவ் விந்திரியத்தால் அவ்வப் பிரதியோகியின் ஞானம் யாதோ அந்த ஞானத்தினை உபலப்தி யென்றும், உபலம்ப மென்றுங் கூறுவர். அந்த உபலப்தியின் அபாவத்தினை அநுபலப்தி யென்றும், அநுபலம்ப மென்றுங் கூறுவர். அநுபலப்தி யெனினும், அநுபலம்ப மெனினும் ஒரு பொருட்கிளவி. அத்தகைய அநுபலப்தியோடு கூடியதாகிய சக்ஷுரா முதலிய இந்திரியங்கள் அபாவத்தினது பிரத்தியக்ஷத்தின் காரணமாகின்றன. யாண்டு "கடமுடையது பூதலம்" என்பதான கட வடிவ பிரதியோகியின் ஞான மிருக்கின்றதோ. ஆண்டு கட ஞான வடிவ உபலப்தியின் அபாவ வடிவ அநுபலப்தியின்றும். ஆகையால் அக்காலத்தில் அநுபலப்தி வடிவ சஹகாரி காரணத்தின் அபாவமிருக்க சக்ஷுரா இந்திரியத்தால் கடாபாவத்தின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை.

சங்கை:—அந்தகாரத்தில் கட வடிவ பிரதியோகியின் உபலப்தியின்றும். ஆகையால் அநுபலப்தியோடு கூடிய சக்ஷுரா இந்திரியத்தால் அக்கடாபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும்.

சமாதானம்:—அவ்வபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சக்ஷுரா முதலிய இந்திரியங்கட்கு கேவலம் அநுபலப்தி மாத்திரம் சஹகாரியன்றும். யோக்கிய அநுபலப்தி சஹகாரியாகின்றது. ஆண்டு "ഈദൃശ്യസ്മി പ്രതിയോഗി സ്യാൽ തദാ ഉപലഭ്യേത" (இ-ள்.) இப்பூதல முதலிய அதிகரணத்தில் ஓர் கால் கட முதலிய பிரதியோகி இருக்கின் சக்ஷுரா முதலிய இந்திரியங்களால் பிரதீதி யுண்டாகும். என்பதான தர்க்கத்தோடு கூடிய தன்மையே கூறிய அநுபலப்தியில் யோக்கியத்வமாம். ആகையால் அந்த யோக்கியாநுபலப்திக்கு இந்த லக்ஷணம் சம்பவிக்கின்றது. "ഈദൃശ്യസ്മി പ്രതിയോഗി സ്യാൽ തദാ ഉപലഭ്യേത ഇത്യാകാരക തർക്കസഹകൃത പ്രതിയോഗ്യ ഗ്രാഹകാഭാവഃ യോഗ്യാനുപലബ്ധിഃ" இந்த லக்ஷணத்தின் அர்த்தம் முற்கூறிய முறையாகவே அறிந்துக்கொள்க. ஆண்டு அந்தகாரத்தில் கட வடிவ பிரதியோகி யிருக்கினும் ஆலோக சையோகத்தின் அபாவத்தால் சக்ஷுரா இந்திரியத்தால் கடத்தின் தோற்ற முண்டாகிறதில்லை. ஆகையால் அந்தகாரத்தில்

ஈண்டு கட மிருக்குமாயின் சக்ஷுவால் தோற்ற முண்டாமென்பதான தர்க்க முண்டாகிறதில்லை. ஆகையால் அந்தகாரத்தில் கடத்தின் அநுபலப்தியில் கூறிய தர்க்கத்தோடு கூடியதன்மை வடிவ யோக்கியத்வத்தின் அபாவத்தால் கடாபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அந்தகாரத்திலும் கடாபாவத்தின் துவாசப் பிரத்தியக்ஷமோ உண்டாகின்றது. எக்காரணத்தாலெனின் கடத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் ஆலோக சையோகத்திற்குக் காரணத்தன்மைச் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் ஈண்டு கட மிருக்குமாயின் துவக்கு இந்திரியத்தால் பிரத்தியக்ஷ முண்டாகு மென்பதான தர்க்கம் அந்தகாரத்திலும் சம்பவிக்கின்றது. அக்கட வடிவ பிரதியோகியின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்கு ஆலோக சையோக முதலிய சர்வ சாமக்கிரிகளிருக்குமிடத்திலேயே ஈண்டு கட மிருக்கின் சக்ஷுவால் பிரத்தியக்ஷ முண்டாகு மென்பதான தர்க்க முண்டாகின்றது. அத்தர்க்கத்தோடு கூடியதாவதால் அக்கடத்தின் அநுபலப்தி யோக்கியமாகின்றது. அந்த யோக்கிய அநுபலப்தியோடு கூடிய சக்ஷு விந்திரியத்தால் கடாபாவத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாருக எவ்வெவ் விந்திரியத்தால் எவ்வெவ் அபாவத்தின் பிரத்தியக்ஷம் உண்டாகின்றதோ அவ்வவ் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் அவ்வவ் விந்திரியம் கூறிய யோக்கியாநுபலப்தியோடு கூடியதாகியே காரணமாகின்றது.

### கககசு. அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் யோக்கிய அநுபலப்தியினை கரணமாக அங்கீகரிக்கும் பட்டபாதரின் மதமும், வேதாந்திகளின் மதமு மிதுவாம்.

அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு முதலிய இந்திரியங்கள் கரண மன்றும். ஆனல் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு சஹகாரியாக நையாயிகர் அங்கீகரிக்கும் யோக்கியாநுபலப்தியே அபாவத்தின் கரணமாம். சக்ஷு முதலிய இந்திரியங்கள் யோக்கியாநுபலப்தியின் சஹகாரிகளாம். அபாவத்தின் பிரத்தியக்ஷத்தில் இந்திரியத்தினை கரணமாக வொப்பும் நையாயிகர்கள் அபாவத்திைேடு சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு விசேஷணத்தன்மை யெனப் பெயரிய சம்பந்தம் ஒன்று அதிகமாக வொப்புகின்றனர். விசேஷணத் தன்மை யெனப்பெயரிய சம்பந்தத்தை யாம் அங்கீகரிப்பதின்றும். ஆகையால் எமது மதத்தில் லாகவ மிருக்கின்றது.

### கககஎ. பட்டபாத, வேதாந்திகளின் மத கண்டனம்.

இங்ஙனங் கூறும் பட்டபாதரின் மதமும், வேதாந்திகளின் மதமும் நலமுடையனவன்றும். ஏனெனின் அபாவத்தின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு யோக்கியாநுபலப்தி யெனப் பெயரிய ஆறுவது பிரமாணம் ஒன்றை அங்கீகரிப்பதும், அவ்வபாவத்தினது பூதல முதலிய அதிகரணத்தின் ஞானத்தின் பொருட்டு சக்ஷு முதலிய இந்திரியங்களை யோக்கியாநுபலப்திற்கு சஹகாரியாக வொப்புவதுமா மிவற்றின் அபேக்ஷையால் விசேஷணத் தன்மை யெனப்பெயரிய சம்பந்தம் ஒன்றை கற்பித்து சக்ஷு முதலிய இந்திரியங்களையே அபாவத்தின் பிரத்தியக்ஷத்தினது காரணமாக வொப்புவதில்

யிருந்த லாகவ மிருக்கின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தால் விழுங்கப் படுவதால் பட்டபாத, வேதாந்தியின் மதம் அசங்கதமாம். சையோக முதலிய லௌகிக சம்பந்தங்களை நிரூபித்தனம். இனி அலௌகிக சம்பந்தத்தினை நிரூபிப்பாம்.

கககஎ. மூவகை அலௌகிக சம்பந்தங்களின் நிரூபணம்.

ஆண்டு அலௌகிகப் பிரத்தியக்ஷத்திற்குக் காரணமாகிய அலௌகிக சம்பந்தம் சாமான்னிய லக்ஷண சம்பந்தம், ஞானலக்ஷண சம்பந்தம், யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

கககஅ. சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தின் நிரூபணம்.

ஆண்டு சாமான்னிய லக்ஷண சம்பந்தம் என்பதான வாக்கியத்திலுள்ள “லக்ஷணம்” என்பதான லக்ஷண பதம் ஸ்வரூபத்தின் வாசகமாகவாவது யிருக்கும். அல்லது விஷயத்தின் வாசகமாகவாவது யிருக்கும். ஆண்டு முதற் பக்ஷத்திலோ சாமான்னியமாகிய லக்ஷணத்தின் ஸ்வரூபமாவது யாது? எச் சம்பந்தத்திற்கு அதனை சாமான்னிய லக்ஷணமென்பர்? இரண்டாவது பக்ஷத்தில் சாமான்னியமாகிய லக்ஷணத்தின் விஷயமாவதுயாது? எச்சம்பந்தத்திற்கு அதனை சாமான்னிய லக்ஷண சம்பந்த மென்பர்? ஆண்டு முதலாவது கேள்வியால் தூமத்வ முதலிய சாமான்னியத்திற்கே சாமான்னிய லக்ஷண சம்பந்தத் தன்மைச் சித்தமாகின்றது. இரண்டாவது கேள்வியால் அத்தூமத்வ முதலிய சாமான்னியத்தின் ஞானத்திற்கே சாமான்னிய லக்ஷண சம்பந்தத் தன்மை சித்தமாகின்றது. ஆண்டு முதலாவது கேள்வியினை அநுசரித்து சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம்: “இந்த்ரியஸம்பந்தவிசேஷ்யகஜ்ஞானப்ரகாரீபூதம் ஸாமாந்யம் ஸாமாந்யலக்ஷணஸந்நிகர்ஷ:” (இ-ள்.) சக்ஷு முதலிய இந்திரியங்களின் சையோக முதலிய லௌகிக சம்பந்தமுடைய விசேஷிய பதார்த்தத்தி லிருக்கும் சாமான்னியத்தினை சாமான்னிய லக்ஷண சம்பந்த மென்பர். எங்ஙனம்: அடுகளை முதலியவற்றில் தூமத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக சம்பந்த முண்டாகிய பின் “இது தூமம்” என்பதான சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அச்சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சக்ஷு இந்திரியத்தின் சையோக சம்பந்தமுடைய தூமமோ விசேஷியமாகின்றது. அத்தூமத்தி லிருக்கும் தூமத்வ ஜாதி விசேஷணமாகின்றது. ஆகையால் சக்ஷு இந்திரிய சம்பந்தமுடைய தூம விசேஷியத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தில் விசேஷண வடிவமாவதால் தூமத்வ ஜாதி சாமான்னிய லக்ஷண சம்பந்தமெனப்படுகின்றது. தூமத்வ ஜாதி வடிவ சாமான்னியம் சர்வ தூமங்களில் சமவாய சம்பந்தத்தா லிருக்கின்றது. அதாவது: முன் நஷ்டமானதும், பின் உண்டாவதுமாகிய தூமங்கள் யாவற்றிலும், வர்த்தமான காலத்திய பலவிடங்களிலுள்ள தூமங்கள் யாவற்றிலும் தூமத்வ சாமான்னியம் சமவாய சம்பந்தத்தாலிருக்கின்றது. தூமத்வ ஜாதி வடிவ சாமான்னியமே சக்ஷு இந்திரியத்திற்கு அவ்வெல்லா தூமங்களோடுள்ள சம்பந்தமாம். ஆகையால் “இது

தூமம்" என்பதான சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்குப் பின் புருஷனுக்கு தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் "எல்லாம் தூமம்" என்பதான எல்லா தூமங்களை விஷயஞ் செய்யும் அலௌகிக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷம் உண்டாவதாகின்றது. ஒரு கால் தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தினை அங்கீகரியாவிடின் எல்லா தூமங்களின் பிரத்தியக்ஷம் சக்ஷு இந்திரியத்தால் உண்டாகாததாகும். ஏனெனின் எல்லா தூமங்களினோடு சக்ஷு இந்திரியத்திற்கு சையோகாதி வடிவ ஒரு லௌகிக சம்பந்தமோ சம்பவியாது. இந்திரியங்களின் சம்பந்தமின்றி வஸ்துவின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகிறதில்லை. ஆகையால் சர்வ தூமங்களின் பிரத்தியக்ஷத்தின் பொருட்டு சக்ஷு இந்திரியத்திற்கு சர்வ தூமங்களோடு தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தம் அவசியம் அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறாக ஒரு வன்னியில் "இது வன்னி" என்பதான சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் பின் அவ்வன்னித்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் புருஷனுக்கு எல்லா வன்னிகளின் அலௌகிக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே "இது கடம்" என்பதான சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் பின் புருஷனுக்கு கடத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் "எல்லாம் கடம்" என்பதான எல்லா கடங்களை விஷயஞ் செய்யும் அலௌகிக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாய முறையை துவக்கு முதலிய சர்வ இந்திரியங்களில் அறிந்துக் கொள்க. அதாவது; எவ்வெவ்விந்திரியத்தால் எவ்வெத்திரவியம், குணம், கர்மம் முதலிய பதார்த்தங்களின் லௌகிகப் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ அவ்வப் பிரத்தியக்ஷத்தில் எவ்வெச்சாமான்னியம் விசேஷணமாகின்றதோ அவ்வச் சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் அவ்வச் சாமான்னியத்தின் ஆசிரயமாகிய அவ்வத்திரவியம், குணம், கர்மம் முதலிய எல்லா பதார்த்தங்களின் அலௌகிகப் பிரத்தியக்ஷம் அவ்வவ் விந்திரியத்தால் உண்டாகின்றது. எங்ஙனம்: புருஷனுக்கு கிராண இந்திரியத்தால் கந்த மொன்றின் பிரத்தியக்ஷத்தின் பின் கந்தத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் எல்லா கந்தங்களின் அலௌகிக கிராணஜப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாக புருஷனுக்கு ரசன இந்திரியத்தால் ரச மொன்றின் பிரத்தியக்ஷ ஞானத்தின் பின் ரசத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் ரசங்கள் யாவற்றின் அலௌகிக ராசனப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. சுரோத்திர இந்திரியத்தால் சத்த மொன்றின் பிரத்தியக்ஷத்தின் பின் சத்தத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் எல்லாச் சத்தங்களின் அலௌகிக சிராவணப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாக மனவடிவ இந்திரியத்தால் ஆத்மாவின் பிரத்தியக்ஷத்தின் பின்னும், ஆத்மாவிலிருக்கும் ஞான முதலிய குணங்களின் பிரத்தியக்ஷத்தின் பின்னும் ஆத்மத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் எல்லா ஆத்மாக்களின் அலௌகிக மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே ஞானத்வாதி வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் எல்லா ஞான முதலியவைகளின் அலௌகிக மானசப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது.

## ககஉ0. சாமான்னியத்தின் ஞானத்தினை சாமான்னிய லக்ஷண சம்பந்தமாக ஒப்புவோரது மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். தூம முதலியவைகளிலிருப்பதாகிய தூமத்வ முதலிய சாமான்னியத்திற்கு சாமான்னிய லக்ஷண சம்பந்த வடிவத்தன்மை யின்றாம். ஆனால் தூமத்வ முதலியவைகளின் ஞானத்திற்கே சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தன்மை சம்பவிக்கின்றது. ஏனெனின் ஓர் கால் தூமத்வ வடிவ சாமான்னியத்திற்கு சாமான்னிய லக்ஷண சம்பந்தம் ஒப்பின் "இது தூமம்" என்பதான ஞானத்தின் உற்பத்தியினும் அடுத்த நாளில் தூமத்தினோடு சக்ஷு இந்திரியத்தின சையோகத்தின் அபாவ மிருக்கினும் தூமத்வ வடிவ சாமான்னியம் தூமத்தி லிருக்கின்றது. ஆகையால் அத்தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் புருஷனுக்கு அடுத்த நாளில் சர்வ தூமத்தை விஷயஞ்செய்யும் அலௌகிகப்பிரத்தியக்ஷம் உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. ஆகையால் தூமத்வாதி வடிவ சாமான்னியத்தின் ஞானத்திற்கே சாமான்னிய லக்ஷண சம்பந்தம் ஒப்ப வேண்டும். அதாவது; தூம முதலியவைகளோடு சக்ஷு முதலிய இந்திரியங்களின் சையோக முதலிய சம்பந்தங்களால் உண்டாகிய "இது தூமம்" என்பதான தூமத்வ முதலிய சாமான்னிய விசேஷண ஞானமே சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு சர்வ தூம முதலியவைகளோடுள்ள சாமான்னிய லக்ஷண சம்பந்தமாம். ஆகையால் இப்பக்ஷத்தில் முற்கூறிய தோஷம் சம்பவியாது.

சங்கை:—எல்லா தூம முதலியவைகளின் ஞானத்தின் பொருட்டு நீவிர் சாமான்னிய லக்ஷண சம்பந்தம் அங்கீகரித்தீர். ஆண்டு எல்லா தூமாதிகளின் ஞான முண்டாகாவிடினும் தோஷமாவது யாது?.

சமாதானம்:—அடுகளையில் தூமத்தின் பிரத்தியக்ஷமும், வன்னியின் பிரத்தியக்ஷமும் உண்டான பின் "தூமோ வஹ்நிவ்யாப்யோ நவா" (இ-ள்.) தூமம் வன்னியின் வியாப்பியமா? அல்லது வியாப்பியமன்று? என்பதான தூமத்தில் வன்னியினது வியாப்தியின் சம்சய முண்டாகிறதில்லை. சக்ஷு இந்திரியத்தின் சையோகசம்பந்தமுடைய பிரசித்த தூமத்திலோ வன்னியினது வியாப்தியின் நிச்சயமே யிருக்கின்றது. வஸ்துவின் நிச்சய ஞானம் வஸ்துவின் சம்சயத்திற்கு பிரதிபந்தகமாகின்றது. ஆகையால் பிரசித்த தூமத்திலோ வியாப்தியின் சம்சயம் சம்பவியாது. ஆனால் பிரசித்த தூமத்தினும் வேறான வேறிடங்களிலுள்ள தூமத்தில் அல்லது வேறுகாலத்திலுள்ள தூமத்திலேயே வியாப்தியின் சம்சயங் கூறுவதாகும். சம்சயத்தில் தர்மி ஞானம் காரணமாகின்றது. தர்மி ஞானமின்றி எச்சம்சயமு முண்டாகிறதில்லை. ஆகையால் வியாப்தியினது சம்சயத்தின் சித்தியின் பொருட்டு வேறு தேசத்திலுள்ள தூம வடிவ தர்மியின் ஞானத்தை அவசியம் ஒப்புவதாகும். ஆண்டு வேறுதேசத்திலுள்ள தூமத்தினோடு சக்ஷு இந்திரியத்திற்கு யாதோர் சையோகாதி வடிவ லௌகிக சம்பந்தமோ சம்பவியாது. எக்காரணத்தால் தூமத்தின் லௌகிக பிரத்தியக்ஷ முண்டாகும்?. பரிசேஷத்தால் வேறு தேசத்திலுள்ள

அல்லது வேறு காலத்திலுள்ள தூமத்திேெடு தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தமே அங்கீகரிப்பதாகும். தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் எல்லா தூமங்களின் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகிய பின் வேறு தேசத்திலுள்ள தூமத்தில் அல்லது வேறு காலத்திலுள்ள தூமத்தில் "ய-ஒஜொவ ஹ்நி வ்யாவொ ந வா" என்பதான சம்சயம் சம்பவிக்கின்றது. ஆகையால் வியாப்பியத்வ சம்சயத்தின் சித்தியின் பொருட்டு சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தை அங்கீகரிப்பதால் எல்லா தூமங்களின் பிரத்தியக்ஷ ஞானத்தை அவசியம் ஒப்பவேண்டும்.

### ககஉக. சாமான்னிய லக்ஷண சம்பந்த வாதிகளின் மதத்தில் சர்வஞ்ஞத்தன்மை பிராப்தி வடிவ தோஷத்தின் நிவர்த்தி.

சங்கை:—யாண்டு கட முதலிய பதார்த்தம் ஒன்றில் "இது பிரமேயம்" என்பதான பிரமேயத்வ விசேஷணம் பிரத்தியக்ஷமாகிறதோ ஆண்டு பிரமேயத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் புருஷனுக்கு சர்வ பிரமேய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ முண்டாகும். ஆகையால் "இது பிரமேயம்" என்பதான ஞான மாத்திரத்தாலேயே புருஷனுக்கு சர்வஞ்ஞத்தன்மை பிராப்தமாக வேண்டும். எக்காரணத்தாலெனின் சர்வ பதார்த்தங்களை விஷயஞ் செய்யும் ஞானமுடையவனையே சர்வஞ்ஞனென்பர்.

சமாதானம்:—பிரமேயத்வ முதலிய சாதாரண வடிவமாக சர்வ பதார்த்தங்களின் ஞானத்தால் புருஷனிடத்து சர்வஞ்ஞத்தன்மை யுண்டாகிறதில்லை. ஆனால் அவ்வப் பதார்த்தத்தி லிருக்கும் கடத்வ, படத்வ முதலிய அசாதாரண தர்மத்தால் அவ்வெல்லாப் பதார்த்தங்களின் ஞானத்தாலேயே புருஷனுக்கு சர்வஞ்ஞத்தன்மையின் பிராப்தி யுண்டாகின்றது. இவ்வாறாகிய ஞானம் ஜீவாத்மாவிற்கின்றாம் ஆகையால் புருஷனிடத்து பிரமேயத்வ ஞானத்தால் சர்வஞ்ஞத்தன்மை பிராப்தமாகிறதில்லை.

### ககஉஉ. கூறிய சாமான்னிய லக்ஷண சம்பந்தம் நித்திய, அநித்திய வேறுபாட்டால் இருவகைத்தாம்.

கூறிய சாமான்னிய லக்ஷண சம்பந்தம் சிலவிடத்தோ நித்தியமாகின்றது. சிலவிடத்து அநித்தியமாகின்றது. முற்கூறிய தூமத்வ முதலிய சாமான்னியமோ ஜாதி வடிவமாவதால் நித்தியமாகின்றது. யாண்டு ஒரே கடத்தின் சையோக சம்பந்தத்தால் பூதலத்தில் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ, கடத்தின் சமவாய சம்பந்தத்தால் கபாலத்தில் பிரத்தியக்ஷ முண்டாகின்றதோ ஆண்டு பிரத்தியக்ஷத்தின் பின் சையோக சம்பந்தத்தால் அக்கடத்தின் அதிகரணமாகிய எல்லா பூதல முதலியவைகளினதும், சமவாய சம்பந்தத்தால் அக்கடத்தின்து அதிகரணமாகிய எல்லாக்கபாலங்களினதும் அலௌகிகப்பிரத்தியக்ஷம் கடவடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தாலுண்டாகின்றது. ஆண்டு கடாதி வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தம் அநித்தியமாம்.

## ககஉ௬. ஞான லக்ஷண சம்பந்தத்தின் நிரூபணம்.

"ஸவிஷயவிஷயகவ்யக்ஷ ஜநகொஜ்ஞாநவிஶேஷஃ ஜ்ஞாநலக்ஷண ஸந்நிகர்ஷஃ" (இ-ள்.) எந்த ஞானத்திற்கு எது விஷயமாமோ அவ்வஸ்து மாத்திரத்தினை விஷயஞ் செய்வதாகிய அந்த பிரத்தியக்ஷ ஞானத்தினை உண்டாக்கும் ஞானத்தினை ஞான லக்ஷண சம்பந்த மென்பர். எங்ஙனம்: முன் பலகால் சந்தனத்தின் நறுநாற்றத்தை கிரஹண இந்திரியத்தால் பிரத்தியக்ஷமாக அநுபவித்தவன் சேய்மையிலுள்ள சந்தனக் கட்டையைக் கண்ணுற, "இது நறுநாற்றமுடையது" என்பதாக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. ஆண்டு சந்தனக்கட்டையினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக சம்பந்த மிருக்கின்றது. ஆகையால் சந்தனக்கட்டை அம்சத்தின் பிரத்தியக்ஷம் லௌகிகமேயாகின்றது. சேய்மையிலுள்ள சந்தனக் கட்டையோடு கிராண இந்திரியத்தின் சையோக சம்பந்த மின்றும். ஏனெனின் எங்ஙனம் சக்ஷு இந்திரியம் தனது கோளகத்தை விட்டு சேய்மையிலுள்ள பதார்த்தங்களோடு சம்பந்தமாகின்றதோ அங்ஙனம் கிராண இந்திரியம் தனது கோளகத்தை விட்டு சேய்மையி லிருக்கும் பதார்த்தங்களோடு சம்பந்தப்படுகிறதில்லை. ஆனால் கிராண இந்திரியம் தனது கோளகத்தோடு சம்பந்தமுடைய பதார்த்தத்தின் கந்த முதலியவைகளையே கிரஹிக்கின்றது. ஆகையால் கிராண இந்திரியத்திற்கு சையுக்த சமவாய சம்பந்தத்தால் சந்தனக் கடையின் நறுநாற்றத்தின் பிரத்தியக்ஷம் சம்பவியாது. சக்ஷு இந்திரியத்திற்கு நறுநாற்றத்தோடு சையுக்த சமவாய சம்பந்த மிருக்கின்றது. என்றுலும் அச்சக்ஷு இந்திரியத்தின் சம்பந்தத்தில் கந்த குணத்தினது பிரத்தியக்ஷ ஞானத்தினை உண்டாக்குவதற்கு யோக்கியத் தன்மையின்றும். ஆகையால் "நறுநாற்றமுடைய சந்தனக்கட்டை" என்பதான சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்திற்கு நறுநாற்ற அம்சத்தில் லௌகிகப்பிரத்தியக்ஷ வடிவத்தன்மை சம்பவியாது. ஆனால் அலௌகிகப் பிரத்தியக்ஷ வடிவத்தன்மைக் கூறுவதாகும். ஆண்டு சந்தனக்கட்டையை கண்ணுற முன் அநுபவித்த நறுநாற்றத்தின் சம்ஸ்காரம் உத்புத்தமாகின்றது. அவ்வுத்புத்த சமஸ்காரத்தால் நறுநாற்றத்தின் ஸ்மரண முண்டாகின்றது. நறுநாற்றத்தை விஷயஞ் செய்யும் ஸ்மிருதி ஞானமே சக்ஷு இந்திரியத்திற்கு சந்தனக்கட்டையின் நறுநாற்றத்தோடுள்ள ஞான லக்ஷண சம்பந்தமாம். அந்த ஞானலக்ஷண சம்பந்தத்தானேயே புருஷனுக்கு நறுநாற்றத்தின் அலௌகிக சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. இவ்வாறாக கயற்றில் "இது பாம்பு" என்பதாக சாக்ஷுஷப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அந்த மயக்க வடிவ சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் சேய்மையிலுள்ள பாம்போ தோஷத்தின் வசத்தால் கயற்றில் தோற்றுகின்றது. ஆண்டு சேய்மையிலுள்ள பாம்பினோடு சக்ஷு இந்திரியத்திற்கு சையோக சம்பந்தமோ சம்பவியாது. ஆனால் பாம்பின் சாத்ருசிய தரிசனத்தால் புருஷனிடத்து முன்பார்த்த பாம்பினது சம்ஸ்காரத்தின் உத்புத்தத்தால் உண்டாகிய பாம்பின் ஸ்மிருதி ஞானமே புருஷனது சக்ஷு இந்திரியத்திற்கு சேய்மையிலுள்ள பாம்பினோடு ஞான லக்ஷண சம்பந்தமாம். அந்த ஞான லக்ஷண சம்பந்தத்தானேயே அப்பாம்பின் சாக்ஷுஷப் பிரத்

தியக்ஷம் தோஷத்தின் வசத்தால் கயற்றில் உண்டாகின்றது. ஓர் கால் ஞான லக்ஷண சம்பந்தத்தை அங்கிகரியாவிடின் கயற்றில் "இது பாம்பு" கிளிஞ்சலில் "இது வெள்ளி" பாலை நிலத்தில் "இது ஜலம்" என்பதாக பாம்பு, வெள்ளி முதலியவைகளை விஷயஞ் செய்யும் பிரத்தியக்ஷ ஞானமே யுண்டாகாததாகும். ஆகையால் மயக்க வடிவ பிரத்தியக்ஷ ஞானத்தின் சித்தியின் பொருட்டும் ஞான லக்ஷண சம்பந்தம் அவசியம் அங்கீகரிக்க வேண்டும்.

## ககஉச. சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தினும் ஞான லக்ஷண சம்பந்தத்தில் விலக்ஷணத்தன்மை.

சங்கை:—முன்னர் சாமான்னிய லக்ஷண சம்பந்தத்திற்கும் ஞான வடிவங் கூறினீர். ஞான லக்ஷண சம்பந்தத்திற்கும் ஞான வடிவங் கூறினீர். ஆகையால் அவ்விரு சம்பந்தங்கட்கும் ஞான வடிவத்தன்மை யிருப்பதால் அவ்விரு சம்பந்தங்களின் வேற்றுமை சித்தியாததாகும்.

சமாதானம்:—முற்கூறிய சாமான்னிய லக்ஷணசம்பந்தமோ தூமத்வ முதலிய சாமான்னியத்தினது தூம முதலிய ஆசிரயத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தினையே உண்டாக்குவதாகின்றது. ஞான லக்ஷண சம்பந்தமோ நறுநாற்ற முதலிய வஸ்துவின் பிரத்தியக்ஷ ஞானத்தினை உண்டாக்குவதாகின்றது. நறுநாற்ற முதலியவைகளின் ஆசிரயத்தின் பிரத்தியக்ஷ ஞானத்தினை உண்டாக்குகிறதில்லை. இதுவே கூறிய இரு சம்பந்தங்களின் வேற்றுமையாம். ஆகையால் அவ்விரு சம்பந்தங்களின் வேற்றுமை சம்பவிக்கின்றது.

## ககஉரு. யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தத்தின் நிரூபணம்.

"யொமாஸ்யாஸ ஜநிதொ யஃ-விஶெஷஃ யொமஜயஃ-லக்ஷண ஸந்நிகஷஃ" (இ-ள்.) யோகாப்பியாசத்தால் உண்டாகிய தர்மவிசேஷத்தினை யோகஜ தர்ம லக்ஷண சம்பந்த மென்பர். ஆண்டு யோகி புருஷர்கட்கு சர்வ பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. அதாவது; நஷ்டமாகிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும், பின் உண்டாவதாகிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும், வர்த்தமான பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும், சேய்மையிலுள்ள பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும், பரமாணு ஆகாச முதலிய அதீந்திரிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானமும் யோகிபுருஷனுக்கு உண்டாகின்றது. இவ்வார்த்தை சுருதி, ஸ்மிருதி, புராண முதலியவைகளில் பிரசித்தமாம். ஆண்டு யோகி புருஷரது சக்ஷு முதலிய இந்திரியத்திற்கு எல்லாப் பதார்த்தங்களோடு சையோக முதலிய யாதாமோர் லௌகிக சம்பந்தமோ சம்பவியாது. இந்திரிய அர்த்தங்களின் சம்பந்தமின்றி பிரத்தியக்ஷ ஞான முண்டாகிறதில்லை. ஆகையால் யோகி புருஷரது சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு எல்லா பதார்த்தங்களோடுள்ள யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தமே அங்கீகரிக்கப்படுவதாகும். யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தத்தினாலேயே யோகி புருஷருக்கு எல்லாப் பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ ஞானம் அவ்வவ்வசாதாரண வடிவமாக உண்டாகின்றது.

## கக௨௬. யுக்த யோகி, வியுக்த யோகி என்னும் வேறுபாட்டால் யோகீ புருஷரது இருவித வேற்றுமை.

ஆண்டு "காதாசித்கஸமாதியோகயோகீ யுக்தயோகீ ஸர்வதா ஸமாதியோகயோகீ வியுக்தயோகீ" (இ-ள்.) அப்பியாசத்தின் குறைவால் ஓர் கால் சமாதியிலிருந்தும், ஓர் கால் சமாதியினின்றும் வெளியாகும் யோகீ புருஷன் யுக்த யோகீயெனப்படுவன். அத்தியந்த அப்பியாசத்தால் மனதை வசப்படுத்தி சதா காலும் சமாதியிலேயே இருக்கும் யோகீ புருஷன் வியுக்த யோகீ எனப்படுவன். ஆண்டு சத்த முதலிய விஷயங்க ளோடு சுரோத்திர முதலிய இந்திரியங்களை செல்லவிடாமல் அடக்கியும், சுரோத்திர முதலிய இந்திரியங்களோடு மனதை செல்லவிடாமல் அடக்கியும், சாக்ஷாத்கரிக்கப்பட்டுள்ள தத்துவ வஸ்துவில் மிக ஆதரவோடு மனதை நிலைக்கச் செய்வது வாயிலாக உண்டாம் சித்தத்தினை சமாதி யென்பர். கூறிய சமாதியின் அபாவத்தினை வியுக்தான மென்பர். இவ்வாறுக் யோகீ புருஷர்கட்கு இருவித காரண மிருப்பதால் கூறிய யோகஜ தர்மமும் இரு விதமேயாகின்றது. ஆண்டு கூறிய யோகீ புருஷர்கட்கோ சமாதி காலத்தி லேயே யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தத்தால் பரமாணு, ஆகாச முதலிய அதீந்திரிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. சமாதியின் அபாவ காலத்தில் அவற்றின் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. சமாதி காலத் திலும் யோகஜ தர்ம வடிவ சம்பந்தத்தால் மன வடிவ இந்திரியத்தாலேயே அதீந்திரிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. சக்ஷு முதலிய இந்திரியங்களால் பிரத்தியக்ஷ முண்டாகிறதில்லை. அதாவது; யுக்த யோகீ புருஷனுக்கு யோகஜ தர்மம் மன வடிவ இந்திரியத்தாலேயே சம்பந்தமா கின்றது. சக்ஷு முதலிய இந்திரியங்களின் சம்பந்தம் உண்டாகிறதில்லை. வியுக்த யோகீ புருஷர்கட்கோ யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தத்தால் சதா காலத்தி லும் பரமாணு, ஆகாச முதலிய அதீந்திரிய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அங்ஙனமே சக்ஷு முதலிய சர்வ இந்திரியங்களாலும் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதாவது; வியுக்த யோகியின் யோகஜ தர்மம் கேவலம் மன வடிவ இந்திரியத்திற்கே சம்பந்தமாகிறதில்லை. சக்ஷு முதலிய இந்திரியங்கட்கும் சம்பந்தமாகின்றது. ஈண்டு சில நூற்களில் முற்கூறிய யுக்த யோகிகள் யுஞ்ஜான யோகி யென்றுங் கூறப்பட்டிருக்கின்ற னர். கூறிய வியுக்த யோகியினை யுக்த யோகி யென்றுங் கூறுவர்.

## கக௨௭. அநுமானப் பிரமாணத்தால் யோகீ புருஷரது சித்தி.

"பரமாண்வாதி: ஜந்யப்ரத்யக்ஷவிஷய: ப்ரமேயத்வாத் கடவத்" (இ-ள்.) பரமாணு, ஆகாச முதலியன யாதாமோர் ஜன்னியப் பிரத்தியக்ஷத் தின் விஷயமாக யோக்கியமாம். பிரமேய வடிவமாவதால், எவ்வெப்பதார்த் தம் பிரமேயமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் விஷயமேயாகின்றது. எங்ஙனம்: கடம் பிரமேயமாவதால் நமமனோர் முத லியவர்களினது ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாகின்றது. அங்ஙனமே பரமாணு, ஆகாச முதலியனவும் பிரமேயமாவதால் யாதாமோர் ஜன்னியப்

பிரத்தியக்ஷத்திற்கு அவசியம் விஷயமாகும். ஆண்டு பரமாணு, ஆகாச முதலிய அதீந்திரிய பதார்த்தங்களில் நம்மனோர் முதலியவர்களின் ஜன்னியப் பிரத்தியக்ஷத்திற்கு விஷயத்தன்மையோ சம்பவியாது. பரிசேஷத்தால் யோகி புருஷரது ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் விஷயத்தன்மையே யொப்புவதாகும். ஆகையால் பரமாணு, ஆகாச முதலியவற்றை விஷயஞ் செய்யும் ஜன்னியப் பிரத்தியக்ஷத்தின் ஆசிரய வடிவமாக யோகி புருஷரது சித்தியே யுண்டாகின்றது. ஆகையால் இவ்வர்த்தம் சித்தமாயிற்று. சாமான்னிய லக்ஷண சம்பந்தம், ஞான லக்ஷண சம்பந்தம், யோகஜ தர்ம லக்ஷண சம்பந்தமென்னும் மூன்று சம்பந்தத்தினை அலௌகிக சம்பந்தமென்பர். அலௌகிக சம்பந்தத்தால் ஜன்னிய முற்கூறிய பிரத்தியக்ஷம் அலௌகிகப் பிரத்தியக்ஷமெனப்படுகின்றது. அலௌகிகப் பிரத்தியக்ஷம் இராத வஸ்துவினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அலௌகிகப் பிரத்தியக்ஷத்தில் விஷயத்திற்குக் காரணத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆனால் முற்கூறிய லௌகிக பிரத்தியக்ஷத்திலேயே விஷயத்திற்குக் காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. ஆண்டு முற்கூறிய லௌகிக, அலௌகிகப் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு சக்ஷு முதலிய இந்திரியங்களே கரணமாகின்றன. முற்கூறிய சையோக முதலிய சம்பந்தங்கள் வியாபாரமாகின்றன. சாக்ஷுஷ முதலிய பிரத்தியக்ஷ ஞானம் பயனாகின்றது.

### ௧௧௨௮. இந்திரியத்தின் சம்பந்தத்தினை சவிகற்பக பிரத்தியக்ஷ ஞானத்தின் கரணமாக ஒப்புவோரது மதம்.

சில நூலாசிரியரின் மதமோ இதுவாம். கடத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக முண்டாகிய பின் முதலில் கடத்தின் நிர்விகற்பகப் பிரத்தியக்ஷம் "கடம் கடத்வம்" என்பதாக உண்டாகின்றது. அதன் பின் "இது கடம்" என்னும் சவிகற்பக பிரத்தியக்ஷம் உண்டாகின்றது. அதன் பின் இக்கடம் எமது துக்கத்திற்கு அல்லது சுகத்திற்கு சாதனமா மென்பதான தள்ளற்பாலது, அல்லது கொள்ளற்பாலதின் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆண்டு முதலில் நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திலோ சக்ஷு இந்திரியம் கரணமாகின்றது. சக்ஷுவிற்கு கடத்தினோடுண்டாம் சையோக சம்பந்தம் வியாபாரமாகின்றது. சவிகற்பக பிரத்தியக்ஷத்திலோ சையோக சம்பந்தம் கரணமாகின்றது. நிர்விகற்பக பிரத்தியக்ஷம் வியாபாரமாகின்றது. தள்ளற்பாலது, அல்லது கொள்ளற்பாலதின் பிரத்தியக்ஷத்திலோ நிர்விகற்பக பிரத்தியக்ஷம் கரணமாகின்றது. சவிகற்பக பிரத்தியக்ஷம் வியாபாரமாகின்றது. இவ்வாறாக பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் கரணத்தன்மை சிலவிடத்தோ இந்திரியத்திலுண்டாகின்றது. சிலவிடத்து இந்திரிய அர்த்தங்களின் சம்பந்தத்திலுண்டாகின்றது. சிலவிடத்து நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திலுண்டாகின்றது.

### ௧௧௨௯. அவ்வாதிகளின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறிய மதம் நன்முடையதன்றாம். ஏனெனின் நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திலும், சவிகற்பக பிரத்தியக்ஷத்திலும் தள்ளற்பாலது, அல்லது கொள்ளற்பாலதின் பிரத்தியக்ஷத்திலும் சக்ஷு முதலிய இந்திரியங்கட்கே

கரணத்தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் சம்பந்தத்திலும், நிர்விகற்பகப் பிரத்தியக்ஷத்திலும் பிரத்தியக்ஷ ஞானத்திற்கு கரணத்தன்மையைக் கூறுவது மிக விரோதமாம். ஆனால் நிர்விகற்பக பிரத்தியக்ஷத்திலோ சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு சையோகாதி வடிவ சம்பந்த மூலமாக கரணத்தன்மை யிருக்கின்றது. சவிகற்பக பிரத்தியக்ஷத்தில் சக்ஷுவாதி இந்திரியங்கட்கு சம்பந்தம், நிர்விகற்பக பிரத்தியக்ஷமா மிரண்டின் மூலமாக கரணத்தன்மை யிருக்கின்றது. தள்ளற்பாலது, அல்லது கொள்ளற்பாலதின் பிரத்தியக்ஷத்தில் அச்சக்ஷு முதலிய இந்திரியங்கட்கு சம்பந்தம், நிர்விகற்பக பிரத்தியக்ஷம், சவிகற்பக பிரத்தியக்ஷமா மூன்றின் மூலமாக கரணத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் சக்ஷுவாதி முதலியன பிரத்தியக்ஷப் பிரமாவின் கரணமாவதால் சக்ஷு முதலிய இந்திரியமே பிரத்தியக்ஷ பிரமாணமா மென்பதாக சித்தமாயிற்று. பிரத்தியக்ஷ நிரூபணம் முற்றிற்று.

## கக௱௦. அநுமானப் பிரமாண நிரூபணம்.

முன்னர் பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் நான்கினையும் யதார்த்த அநுபவமாகக் கூறினும். அதனிடத்து முதலில் பிரத்தியக்ஷ அநுபவத்தினை முன்னர் நிரூபித்தனம். இனி இரண்டாவது அநுமிதி வடிவ யதார்த்த அநுபவத்தினை நிரூபிப்பான் வேண்டி முதலில் அநுமிதியின் கரணமாகிய அநுமானப் பிரமாணத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம். "அநுமிதி கரணம் அநுமாநம்" (இ-ள்.) அநுமிதிப் பிரமாவின் கரணம் யாதோ அது அநுமானப் பிரமாணமெனப்படுகின்றது. எங்ஙனம் "பர்வதோ வஹ்நிமாந்" (இ-ள்.) இம்மலை வன்னியுடைத்து. என்னும் அநுமிதி ஞானத்திற்கு "யத்ர தூமோ வஹ்நி வ்யாப்ய:" (இ-ள்.) தூமம் வன்னியின் வியாப்தியுடையதாம். என்பதான வியாப்தி ஞானம் கரணமாகின்றது. ஆகையால் அந்த வியாப்தி ஞானம் அநுமானப் பிரமாணமெனப் படுகின்றது. ஆண்டு வியாபாரமுடைய அசாதாரண காரணமே கரணமாமென முன் கரணத்தின் லக்ஷணமாகக் கூறி வந்துள்ளோம். ஆகையால் வியாப்தி ஞான வடிவ கரணத்தின் லிங்க பராமரிசம் வியாபாரமாகின்றது. ஆண்டு "வஹ்நிவ்யாப்ய தூமவாநயம் பர்வத:" (இ-ள்.) வன்னியின் வியாப்தியுடைய தூமம் யாதோ அத்தூமமுடையது இம்மலை. என்பதான ஞானத்தினை லிங்க பராமரிசமென்பர். அப்பராமரிசம் வியாப்தி ஞானத்தால் உண்டாவதாகின்றது. அங்ஙனமே வியாப்தியின் ஞானத்தா லுண்டாம் அநுமிதியினை உண்டாக்குவதுமாகின்றது. ஆகையால் பராமரிசத்தில் வியாப்தி ஞான வடிவ கரணத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவிக்கின்றது.

## கக௱க. அநுமிதி பிரமாவின் லக்ஷணம்.

"பராமர்சஜந்யம் ஜ்ஞாநம் அநுமிதி:" (இ-ள்.) கூறிய பராமரிசத்தால் ஜன்னியமாகும் ஞானத்தினை அநுமிதியென்பர். எங்ஙனம்: "மலை தீயுடைத்து" என்பதான ஞானம் கூறிய பராமரிசத்தால் உண்டாவதாகின்றது. ஆகையால் அநுமிதி யெனப்படுகின்றது. ஆண்டு "ஞானம் அநுமிதி"

என இம்மாத்திரமே அநுமிதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "பராமரிசத்தா லுண்டாவது" என்னும் பதங்கூறுவிடின் பிரத்தியக்ஷ முதலிய ஞானங்களில் அநுமிதியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ் வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "பராமரிசத்தா லுண்டாவது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு பிரத் தியக்ஷ முதலிய ஞானம் பராமரிசத்தால் உண்டாகிறதில்லை. ஆகையால் பிரத் தியக்ஷ முதலிய ஞானங்களில் அந்தலக்ஷணத்திற்கு அதிவியாப்தியுண்டாகாது. அல்லது "பராமரிசத்தா லுண்டாவது அநுமிதி" என இம்மாத்திரமே அநு மிதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறுவிடின் பராமரிசத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பராமரிசத்தின் துவம்சமும் பராமரிச வடிவ பிரதிபோகியால் ஜன்னியமேயாகின்றது. அவ்வதிவியாப்திதோஷத்தை நிவர்த்திக்கும்பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது ஆண்டு பராமரிசத்தின் துவம்சத்தில் ஞான வடிவத்தன்மை யின்றும். ஆகையால் அத்துவம்சத்தில் அநுமிதியின் லக்ஷணத்திற்கு அதி வியாப்தி யுண்டாகாது.

## ககூஉ. பராமரிசத்தின் லக்ஷணம்.

"வ்யாப்திவிஷயகபக்ஷ தர்மதாஜ்ஞாநம் பராமர்ஶ꞉" (இ-ள்.) ஏதுவில் சாத்தியத்தின் வியாப்தியினையும், பக்ஷத்தி லிருத்தற் றன்மை வடிவ பக்ஷ தர்மத்தினையும் விஷயஞ் செய்வதாகிய ஞானம் யாதோ அந்த ஞானம் பராமரிசமெனப்படுகின்றது. எங்ஙனம்: "வன்னியின் வியாப்பிய தூமமுடை யது மலை" என்பதான ஞானம் தூம வடிவ ஏதுவில் வன்னியாகிய சாத்தியத் தின் வியாப்தியினையும், பர்வத வடிவ பக்ஷத்தில் அவ்வேதுவின் இருத்தற் றன்மை வடிவ பக்ஷ தர்மத் தன்மையினையும் விஷயஞ் செய்கின்றது. ஆகை யால் கூறிய ஞானம் பராமரிசமெனப்படுகின்றது. ஆண்டு கூறிய பராமரிசம் "வன்னி வியாப்பியம்" என்னும் இவ்வளவு அம்சத்தாலோ தூம வடிவ ஏதுவில் வன்னி வடிவ சாத்தியத்தின் வியாப்தியினை விஷயஞ் செய்கின்றது. "தூமமுடையது பர்வதம்" என்னும் இவ்வளவு அம்சத்தால் தூம வடிவ ஏதுவில் பக்ஷத்தி லிருத்தற்றன்மை வடிவ பக்ஷ தர்மத்தன்மையினை விஷயஞ் செய்கின்றது.

## ககூங. லிங்கத்தின் லக்ஷணம்.

"வ்யாப்திவிஶிஷ்டபக்ஷதர்மதா விஶிஷ்டோ ஹேது꞉ லிங்கம்" (இ-ள்.) சாத்தியத்தின் வியாப்தியோடு விசிஷ்டமும், பக்ஷத்திலிருத்தற் றன்மை வடிவ பக்ஷ தர்மத்தோடு விசிஷ்டமுமாகிய ஏது லிங்கமெனப்படுகின்றது. எங்ஙனம் தூம வடிவ ஏது வன்னியாகிய சாத்தியத்தின் வியாப்தியோடும் விசிஷ்ட மாம். பர்வதமாகிய பக்ஷத்திலிருத்தற் றன்மை வடிவ பக்ஷ தர்மத்தன்மை யோடும் விசிஷ்டமாம். ஆகையால் தூம வடிவ ஏது லிங்கமெனப்படுகின்றது. அத்தகைய லிங்கத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானம் லிங்கபராமரிச மெனப்படுகின்றது. இவ்வேது வடிவ லிங்கத்தினை சாதன மென்றுங் கூறுவர். ஆகையால் ஏது, லிங்கம், சாதனம் என்பன ஒரு பொருட்கிளவியாம். அவ்

வேதுவால் சித்தியாகும் அர்த்தம் சாத்தியமெனப்படுகின்றது. எங்ஙனம்: தூம வடிவ ஏதுவால் பர்வத முதலியவைகளில் வன்னியின் சித்தி சம்பவிக்கின்றது. ஆகையால் அவ்வன்னியினை சாத்திய மென்பர்.

## ககரு௪. அநுமிதி ஞான முண்டாவதின் கிரம வர்ணனம்.

எவன் அடுக்களை முதலியவைகளில் தூமத்தில் வன்னியின் வியாப்தியை கிரஹிக்கின்றானோ அதாவது; தூமம் வன்னியின் வியாப்தியுடையதாமென்பதான வியாப்தியின் பிரத்தியக்ஷஞானம் எவனுக்கு அடுக்களை முதலியவைகளி லுண்டாகியதோ அவன் ஒரு காலத்தில் பர்வத முதலியவைகளில் அவ்வாறாய தூமத்தினைக் கண்ணுறின் அதாவது; பூமியினின்றும் மூலஞ் சேதிக்கப்படாத உயர்ந்த தூம ரேகையைக் கண்ணுறின் அப்பொழுது முன் அநுபவித்துள்ள வியாப்தியின் சம்ஸ்காரம் அவனிடத்து உத்புத்தமாகின்றது. உத்புத்த சம்ஸ்காரத்தால் அவனுக்கு "தூமம் வன்னியின் வியாப்பியம்" என்பதான வியாப்தியின் ஸ்மரணமுண்டாகின்றது. ஆண்டு ஒரு சம்பந்தியின் ஞானம் சம்ஸ்காரத்தின் உத்போத மூலமாக வேறு சம்பந்தியினை ஸ்மரிப்பதாகின்றதென்னும் வார்த்தை முன் மூன்றாவது பரிச்சேதத்தில் சம்ஸ்கார குணத்தின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். ஆகையால் தூம வடிவ ஒரு சம்பந்தியின் ஞானத்திற்கு சம்ஸ்காரத்தின் உத்போத மூலமாக வியாப்தி வடிவ வேறு சம்பந்தியினை ஸ்மரித்தற்றன்மை சம்பவிக்கின்றது. வியாப்தியின் ஸ்மரணத்திற்குப் பின் அவனுக்கு "வன்னி வியாப்பிய தூம முடையது இது" என்பதாக பராமரிசத்தின் ஞானம் உண்டாகின்றது. ஆண்டு விசிஷ்ட புத்தியில் விசேஷண ஞானம் காரணமாகின்றதென்பதான வார்த்தை முன்னர் பலமுறை கூறி வந்துள்ளோம். கூறிய பராமரிச ஞானத்தில் வியாப்தி விசேஷண வடிவமாம். ஆகையால் வியாப்தி ஞானம் விசேஷண ஞான வடிவத்தால் பராமரிச ஞானத்தினை உண்டாக்குவதாகின்றது. பராமரிச ஞானத்திற்குப்பின் புருஷனுக்கு "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான அநுமிதி ஞான முண்டாகின்றது. ஆண்டு "தூமம் வன்னி வியாப்பியம்" எனக் கூறிய ஸ்மிருதி வடிவ வியாப்தி ஞானமோ கரணமாகின்றது. "வன்னி வியாப்பிய தூமமுடையது பர்வதம்" எனக் கூறிய பராமரிச ஞானம் வியாபாரமாகின் றது. "பர்வதம் வன்னியுடைத்து" எனக் கூறிய அநுமிதி ஞானம் பயனு கின்றது. இம்முறையை சர்வ அநுமானங்களிலும் அறிந்துக் கொள்க. நியாய சாத்திரத்தில் "பர்வதம் வன்னியுடைத்து தூமமுடைமையால்" என்பதான அநுமானத்தை பிரசித்த அநுமான மென்பர்.

## ககரு௫. லிங்கத்தினை அநுமிதியின் கரணமாக வொப்பும் பிராசீனர்களின் மதம்.

ஈண்டு பிராசீன நையாயிகர்களின் மதமிதுவாம். அநுமிதியைக் குறித்து கூறிய வியாப்தி ஞானம் கரணமன்று. ஆனால் வியாப்தி விசிஷ்டமும், பக்ஷ தர்மத்தன்மை விசிஷ்ட வடிவமுமாக அறியப்படும் தூம முதலிய லிங்கமே அநுமிதியின் கரணமாகின்றது. கூறிய லிங்க பராமரிசம் வியாபாரமாகின்றது. ஈண்டு கருத்திதுவாம்; அநுமிதியில் கேவலம் ஞான வடிவ

பராமரிச மாத்திரத்திற்கோ கரணத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஆனால் லிங்க பராமரிசத்திற்கே அவ்வநுமிதியில் கரணத்தன்மைக் கூறுவதாகும். ஆண்டு லிங்க விசிஷ்டபராமரிசத்தில் அநுமிதியின் கரணத்தன்மையின்சித்தியுண்டாக விசிஷ்ட வடிவ லிங்கத்திலும் அநுமிதியின் கரணத்தன்மை அவசியம் பிராப்த மாகும். ஏனெனின் நூலாசிரியர்களின் கருத்திதுவாம். "விஶிஷ்டவ்ருத்தி யஉஹ்வஸு ஊஸதிவாயகெ விஶெஷணவ்ருத்தீகநியாஸ" (இ-ள்.) விசிஷ்டத்திலிருப்பதாகிய தர்மத்தினைபாதிக்கும் யாதாமோர்பிரமாணத்தின் அபாவமிருக்க விசேஷணத்திலும் அவசியம் இருத்தற்றன்மைசம்பவிக்கின்றது. என்னும் நியமத்தின் வசத்தால் பராமரிச வடிவ விசேஷியத்தைப்போன்று லிங்க வடிவ விசேஷணத்திலும் அநுமிதியின் கரணத்தன்மை பிராப்தமாகின்றது. ஆண்டு பராமரிசஞானத்தின் விஷயமாகிய லிங்கத்திற்கு அநுமிதியின் கரணத் தன்மையிருக்கின்றது அல்லது லிங்க பராமரிசத்திற்கு அநுமிதியின் கரணத் தன்மையிருக்கின்றது என்பதான இரு பக்ஷத்தில் ஒரு பக்ஷத்தை சாதிக்கும் யுக்தி வடிவ விநிகமனத்தின் அபாவத்தால் அவ்விரண்டிலும் அநுமிதியின் கரணத் தன்மை பிராப்தமாகின்றது. என்றாலும் லிங்க பராமரிசத்தினை அநுமிதியின் கரணமாகவொப்பின் பராமரிசத்திற்குயாதோர்வியாபாரமும்சம்பவியாது. லிங்கத்தினை அநுமிதியின் கரணமாகவொப்பின் லிங்கத்திற்கு பராமரிச ஞானமே வியாபாரமாகச் சம்பவிக்கின்றது. ஏனெனின் பிரத்தியக்ஷ ஞானம் விஷயத்தால் உண்டாவதாகின்றதென்னும் வார்த்தை முன் பலமுறை கூறி வந்துள்ளோம். ஆகையால் தூமாதி லிங்கத்தை விஷயஞ் செய்யும் பராமரிச ஞானம் தூம முதலிய லிங்கத்தால் உண்டாவதும், தூம முதலிய லிங்கத்தாலுண்டாகும் அநுமிதியினை உண்டாக்குவதுமாம். ஆகையால் பராமரிசத்தில் தூம முதலிய லிங்க வடிவ கரணத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறாய யுக்தியால் தூம முதலிய லிங்கங்களிலேயே அநுமிதியின் கரணத்தன்மை சித்தமாகின்றது.

## ககஙகூ. பிராசீனமத கண்டனம்.

கூறிய பிராசீன நையாயிகர்களின் மதம் நன்முடையதன்றாம். ஏனெனின் தூம முதலிய லிங்கத்தினையே அநுமிதியின் கரணமாக வொப்பின் யாண்டு தூம முதலிய வர்த்தமானலிங்கமின்றி ஆனால் உண்டாய் நஷ்டமாய்விட்டதும், இனி உண்டாவதுமாகிய தூமமுதலிய லிங்கங்களால்வன்னிமுதலியவைகளின் அநுமிதி உண்டாகாததாக வேண்டும். யாக சாலையில் உண்டாகி நஷ்டமான அல்லது இனி உண்டாவதான தூம வடிவ லிங்கத்தாலும் "ஊயஂயஜாஶாலா வஹ்நிமாநதீதயூமாத" என்பதான வன்னியின் அநுமிதி யுண்டாகின்றது. எங்ஙனம் உண்டாய் நஷ்டமாயினும் அநுபவத்திற்கு சம்ஸ்கார வடிவ வியாபாரமூலமாக ஸ்மிருதியின் காரணத்தன்மைச் சம்பவிக்கின்றதோ அங்ஙனமே உண்டாய் நஷ்டமாயினும் அந்த லிங்கத்திற்கு பராமரிசவடிவ வியாபாரமூலமாய் அவ்வநுமிதியின் காரணத்தன்மைச் சம்பவிக்கின்றது. என்றாலும் அவ்விடத்தில் சப்த முதலிய பிரமாணங்களால் உண்டாகிய பராமரிசஞானத்திற்கு உண்டாய் நஷ்டமானதும், உண்டாவதுமாகிய லிங்கத்திற்கு கரணத் தன்மை

யே சம்பவியாது; வர்த்தமான விஷயமே தன்து பிரத்தியக்ஷ ஞானத்தினை உண்டாக்குவதாகின்றது. ஆகையால் சத்தாதிகளால் உண்டாகிய பராமரிசத்தில் நஷ்டமானதும், உண்டாவதுமாகிய லிங்கத்திற்கு வியாபார வடிவத் தன்மையின் அபாவத்தால் பராமரிச வடிவ வியாபார மூலமாகவும் நஷ்டமானதும், இனி உண்டாவதுமாகிய லிங்கத்திற்கு அநுமிதியின் கரணத்தன்மை சம்பவியாது.

ககஅஎ. லிங்க பராமரிசத்திற்கு அநுமிதியின் கரணத்தன்மை.

சில நூலாசிரியரோ முற்கூறிய லிங்க பராமரிசத்திற்கே அநுமிதியின் கரணத்தன்மை யொப்புகின்றனர். அப்பராமரிசத்திற்கு யாதோர் வியாபாரமும் சம்பவிக்கிறதில்லை. என்றாலும் அவர்கள் மதத்தில் வியாபாரமுடையதே கரணமா மென்னும் நியமமின்றாம். ஆனால் வியாபாரமிலாததும் கரணமாகின்றது. இவ்வாறாக அநுமிதியின் கரணத்தில் நூலாசிரியர்கட்கு பரஸ்பரம் விவாதம் சம்பவிக்கின்றது. ஆனால் அநுமிதியினைக் குறித்து பராமரிசத்திற்கு காரணத்தன்மை யாவரும் ஒப்புகின்றனர். சிலரோ பராமரிசத்திற்கு வியாபார வடிவமாக காரணத்தன்மை யொப்புகின்றனர். சிலர் கரண வடிவமாக காரணத்தன்மையொப்புகின்றனர். இக்காரணத்தானேயே முன்னர் அநுமிதிக்கு பராமரிச ஜன்னிய ஞானத்வ வடிவ லக்ஷணங் கூறப்பட்டது.

ககஅஅ. மீமாஞ்சகரும், வேதாந்திகளும் கூறிய பராமரிசத்தினை அநுமிதிக்கு காரணமாக ஒப்பாமை.

மீமாஞ்சகரும், வேதாந்திகளும் கூறிய பராமரிசத்தினை அநுமிதிக்கு காரணமாக ஒப்பினாரில்லை. ஆனால் அவர்கள் மதத்தில் அடுக்களை முதலியவற்றில் தூமத்திலுள்ள வன்னியினது வியாப்தியின் பிரத்தியக்ஷ அநுபவமே கரணமாகின்றது. பர்வத முதலியவைகளில் தூமத்தின் தரிசனத்தால் உத்புத்தமாகிய வியாப்தியின் அநுபவத்தா லுண்டாகிய சம்ஸ்காரம் வியாபாரமாகின்றது. "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான அநுமிதி பயனாகின்றது.

ககஅகூ. வியாப்தியின் ஸ்வரூப வர்ணனம்.

முன்னர் வியாப்தியை விஷயஞ்செய்யும் பக்ஷ தர்மத்தன்மை ஞானம் பராமரிசமெனப்பட்டது. வியாப்தியின் ஞானமின்றி பராமரிசத்தின் சித்தி சம்பவியாது. ஆகையால் வியாப்தியின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு தூம முதலிய ஏதுவில் இருக்கும் வன்னி முதலிய சாத்தியங்களின் வியாப்தி இருவகைத்தாம். ஒன்றோ அன்வய வியாப்தியும், மற்றையது வியதிரேக வியாப்தியுமாம்.

ககசo. அன்வய வியாப்தியின் லக்ஷணம்.

"ஹேது ஸமாநாதிகரண அத்யந்தாபாவாப்ரதியோகி ஸாத்ய ஸாமாநாதிகரண்யம் அந்வயவ்யாப்தி:" (இ-ள்.) ஏதுவின் அதிகரணத்தில் இருப்பதாகிய அத்தியந்தாபாவத்தின் அப்பிரதியோகியாகிய சாத்தியத்தினோடு அவ்வேதுவின்சமானாதிகரணத்தன்மையே அவ்வேதுவில்சாத்தியத்தின்

அன்வய வியாப்தியாம். எங்ஙனம்: "பர்வதம் வன்னியுடைத்து தூமமுடைமையால்" என்பதான பிரசித்த அநுமானத்தில் தூமமோ எதுவாம். வன்னி சாத்தியமாம். ஆண்டு தூம வடிவ எதுவின் அதிகரணமாகிய பர்வதத்திலும், அடுக்களை முதலியவைகளிலும் வன்னி வடிவ சாத்தியமோ இருக்கின்றது. ஆகையால் வன்னி வடிவ சாத்தியத்தின் அத்தியந்தாபாவமோ ஆண்டு சம்பவியாது. ஆனல் ஆண்டு கடத்தின் அத்தியந்தாபாவம் சம்பவிக்கின்றது. ஆகையால் அக்கடத்தின் அத்தியந்தாபாவம் அவ்வேதுவின் சமானாதிகரணமெனப்படுகின்றது. அவ்வத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகித்தன்மை கடத்திலிருக்கின்றது. அவ்வன்னி வடிவ சாத்தியத்திலின்றாம். ஆகையால் வன்னி வடிவ சாத்தியம் அவ்வேது சமானாதிகரண அத்தியந்தாபாவத்திற்கு அப்பிரதியோகியெனப்படுகின்றது. அத்தகைய வன்னி வடிவ சாத்தியத்தோடு தூம வடிவ எதுவிற்கு சமானாதிகரணத்தன்மை யிருக்கின்றது. இதுவே தூம வடிவ எதுவில் வன்னி வடிவ சாத்தியத்தின் வியாப்தியாம். வன்னியால் காய்ந்துள்ள அயப்பிண்டத்தில் தூமத்தின் அத்தியந்தாபாவ மிருக்கினும் வன்னி யிருக்கின்றது. ஆகையால் வன்னியின் அதிகரணத்தி லிருக்கும் அத்தியந்தாபாவத்திற்கு அப்பிரதியோகித்தன்மை தூமத்திலின்றாம். ஆனல் பிரதியோகித்தன்மையே யிருக்கின்றது. ஆகையால் அவ்வன்னியில் அத்தூமத்தின் வியாப்தி யின்றாம்.

### ககசக. வியதிரேக வியாப்தியின் லக்ஷணம்.

"ஸாய்யாஸாவவ்யாவகீ ஃ-ூதாஸாவவ்ரதியோமிகூ வ்யதிரேக வ்யாப்திஃ" (இ-ள்.) சாத்தியத்தினது அபாவத்தின் வியாபக வடிவ அபாவம் யாதோ அவ்வபாவத்திற்கு பிரதியோகித்தன்மையினை வியதிரேக வியாப்தியென்பர். எங்ஙனம்: கூறிய பிரசித்த அநுமானத்திலேயே வன்னி வடிவ சாத்தியத்தின் அபாவம் மடுவிலிருக்கின்றது. தூம வடிவ எதுவின் அபாவமும் மடுவிலிருக்கின்றது. "யாண்டாண்டு வன்னியாபாவம் ஆண்டாண்டு தூமாபாவம்" என்பதான தூமாபாவம் வன்னியாபாவத்தின் வியாபகமுமாம். சாத்தியாபாவத்தின் வியாபகமாகிய தூமாபாவத்திற்கு பிரதியோகித்தன்மை தூம வடிவ எதுவிலிருக்கின்றது. இதுவே தூம வடிவ எதுவில் வன்னி வடிவ சாத்தியத்தின் வியதிரேக வியாப்தியாம். அல்லது கூறிய அப்பராமரிசத்தின் ஸ்வரூபம் எங்ஙனம் வியாப்தியோடு பொருந்தியதாமோ அங்ஙனமே பக்ஷத்தில் எதுவின் இருத்தற்றன்மை வடிவ பக்ஷ தர்மத்தன்மையோடும் பொருந்தியதாம். ஆகையால் பக்ஷத் தன்மையினை நிரூபிப்பாம்.

### ககசஉ. பக்ஷத்தன்மையின் லக்ஷணம்.

ஆண்டு சில நூலாசிரியரோ பக்ஷத்தன்மைக்கு இந்த லக்ஷணங் கூறுகின்றனர். "ஸஂதிஜ்ஞஸாய்யவகூவ வக்ஷதா" (இ-ள்.) சாத்திய வடிவ சம்சயமுடையதனை பக்ஷமென்பர். எங்ஙனம் முற்கூறிய பிரசித்த அநுமானத்தில் "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான அநுமிதிக்குமுன் புருஷனுக்கு "பர்வதம் வன்னியுடைத்தா அன்று" என்பதான வன்னி வடிவ சாத்திய விசேஷ்ண சம்சயமுண்டாகின்றது. அச்சம்சயம் சமவாய சம்பந்தத்தால்

அப்புருஷனது ஆத்மாவி லிருப்பதாயினும், விஷயத்தன்மை ஸம்பந்தத்தால்
அப்பர்வதத்திலு மிருக்கின்றது. இதுவே அப்பர்வதத்தில் பக்ஷத்வமாம்.

கூறிய அப்பக்ஷத்தன்மையின் லக்ஷணம் சம்பவியாது. ஏனெனின் யாண்டு
வீட்டிலிருக்கும் புருஷனுக்கு மேகத்தின் கர்ஜனை வடிவ சத்தத்தினைக் கேட்டு
"ஆகாசம் மேகமுடையது" என்பதாக மேகத்தை விஷயஞ் செய்யும் அநு
மிதி யுண்டாகின்றதோ ஆண்டு கூறிய பக்ஷ தர்மத்தன்மைச் சம்பவியாது.
ஏனெனின் வீட்டிலிருக்கும் புருஷனுக்கு அநுமிதிக்கு முன் "ஆகாசம் மேக
முடையதா அன்று" என்பதான சம்சயமின்றும். அச்சாத்திய சம்சயத்தின்
அபாவமிருக்க அவ்வாகாசத்தில் கூறிய பக்ஷத்தன்மை சம்பவியாது. அல்
லது யாண்டு புருஷனுக்கு வன்னி வடிவ சாத்தியத்தின் பிரத்தியக்ஷ ஞான
மிருக்கின்றதோ ஆண்டும் யான் வன்னியை அநுமிப்பேன் என்பதான
அநுமிதியின் இச்சையுளதாக புருஷனுக்கு வன்னியின் அநுமிதி யுண்
டாகின்றது. ஆனால் ஆண்டு முற்கூறிய பக்ஷத்தன்மை சம்பவியாது. ஏனெ
னின் அவ்விடத்தில் வன்னி வடிவ சாத்தியத்தை விஷயஞ் செய்யும் பிரத்தி
யக்ஷ நிச்சய மிருப்பதால் வன்னி வடிவ சாத்தியத்தின் சம்சயம் சம்பவியாது.
ஆகையால் கூறிய பக்ஷத்தன்மையின் லக்ஷணம் அசங்கதமாம்.

### ககசஙு. பக்ஷத்தின் இரண்டாவது லக்ஷணம்.

சில் நூலாசிரியரோ கூறிய அவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்
திக்கும் பொருட்டு பக்ஷத்தன்மைக்கு இந்த லக்ஷணங் கூறுகின்றனர்.
" ஸிஷாதயிஷாவிரஹவிஶிஷ்டஸித்த்யபாவ: பக்ஷதா " (இ-ள்.) சாத்தியத்
தினை சித்தி செய்யும் இச்சையினை ஸிஷாதயிஷா வென்பர். எங்ஙனம்:
" பர்வதே வஹ்நிமநுமிதிர்ஜாயதாம் " (இ-ள்.) பர்வதத்தில் எமக்கு
வன்னியின் அநுமிதி யுண்டாகும். என்பதான வன்னி வடிவ சாத்தியத்தினை
சித்திசெய்யும்இச்சையினை ஸிஷாதயிஷாவென்பர். அச்ஸிஷாதயிஷாவின் அபாவ
வடிவ விரஹம் யாதோ அச்ஸிஷாதயிஷாவின் அபாவத்தோடு விசிஷ்ட சாத்தி
யத்தின் நிச்சய வடிவ சித்தியின் அபாவத்தினை பக்ஷமென்பர். அவ்விசிஷ்டா
பாவ வடிவ பக்ஷத்தன்மை சிலவிடத்தோ அச்ஸிஷாதயிஷா விரஹ வடிவ
விசேஷணத்தின் அபாவத்தா லுண்டாகின்றது சிலவிடத்து அச்சித்தி வடிவ
விசேஷியத்தின் அபாவத்தா லுண்டாகின்றது. சிலவிடத்து விசேஷண,
விசேஷியமா மிரண்டின் அபாவத்தா லுண்டாகின்றது. ஆண்டு எவ்விடத்தில்
அச்சித்தியும், அச்ஸிஷாதயிஷாவும் உண்டாகின்றதோ அவ்விடத்திலும் அநு
மிதி யுண்டாகின்றது. ஆண்டு அச்சித்தி வடிவ விசேஷியத்தின் அபாவமோ
யின்றும். ஆனால் அச்ஸிஷாதயிஷா விரஹ வடிவ விசேஷணத்தின் அபாவ
மிருக்கின்றது. ஆகையால் ஆண்டு அவ்விசேஷணத்தின் அபாவத்தோடு
விசிஷ்டாபாவ வடிவ பக்ஷத்தன்மையை அறிக. யாண்டு ஸிஷாதயிஷாவும்
சித்தியும் இன்றே அவ்விடத்திலும் அநுமிதியுண்டாகின்றது. ஆண்டு ஸிஷா
தயிஷா விரஹ வடிவ விசேஷணமோ இருக்கின்றது. ஆனால் சித்தி வடிவ
விசேஷிய மின்றும். ஆகையால் அவ்விடத்தில் விசேஷியத்தின் அபாவத்
தோடு விசிஷ்டாபாவ வடிவ பக்ஷத்தன்மையை அறிக. யாண்டு ஸிஷாதயிஷா

இருக்கின்றதோ ஆனுல் அச்சித்தியின்றே ஆண்டும் அநுமிதியுண்டாகின்றது. ஆண்டு சிஷாதயிஷா விரஹ வடிவ விசேஷணமு மின்றும். அங்ஙனமே சித்தி வடிவ விசேஷியமு மின்றும். ஆகையால் அவ்விடத்தில் விசேஷண, விசேஷியமாமிரண்டின் அபாவத்தோடு விசிஷ்டாபாவ வடிவ பக்ஷத்தன்மையை அறிக. யாண்டு சிஷாதயிஷா இருப்பதின்றே சாத்தியத்தின் நிச்சய வடிவ சித்தியிருக்கின்றதோ ஆண்டு அநுமிதி யுண்டாகிறதில்லை. ஆகையால் சிஷாதயிஷா விரஹ விசிஷ்ட சித்தி அநுமிதிக்குப் பிரதிபந்தகமாகின்றது. அச்சித்தியினிருப்புளதாயினும் சிஷாதாயிஷா உளதாக அநுமிதி யுண்டாகின்றது. ஆகையால் சிஷாதயிஷா உத்தேஜகமெனப்படுகின்றது. பிரதிபந்தகத்தின் லக்ஷணமும், உத்தேஜகத்தின் லக்ஷணமும் நான்காவது பரிச்சேதத்தில் சக்தியின் கண்டனத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம்.

### ககசச. பக்ஷம், சபக்ஷம், விபக்ஷ மென்னும் மூன்றின் லக்ஷணம்.

இனி பிரசங்கப்படி பக்ஷம், சபக்ஷம், விபக்ஷம் என்னும் மூன்றினை முறையாக வர்ணிப்பாம். ஆண்டு "பக்ஷதாஶ்ரயஃ பக்ஷஃ" (இ-ள்.) முற்கூறியபக்ஷத்தன்மைக்கு ஆசிரயமாவதியாதோ அது பக்ஷமெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரசித்த அநுமானத்தில் கூறிய பக்ஷத்வத்தின் ஆசிரயமாவதால் பர்வதம் பக்ஷமெனப்படுகின்றது. "நிஶ்சிதஸாத்யவாநுஸபக்ஷஃ" (இ-ள்.) எப்பதார்த்தம் சாத்திய வடிவ நிச்சயமுடையதாகின்றதோ அப்பதார்த்தம் சபக்ஷமெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரசித்த அநுமானத்தில் அடுக்களை சபக்ஷமெனப்படுகின்றது. அவ்வடுக்களையில் புருஷனுக்கு "அடுக்களை வன்னியுடைத்து" என்பதான வன்னி வடிவ சாத்திய வடிவ நிச்சயமே யிருக்கின்றது. "நிஶ்சிதஸாத்யாபாவவாநு விபக்ஷஃ" (இ-ள்.) எப்பதார்த்தம் சாத்தியாபாவ வடிவ நிச்சயமுடையதாகின்றதோ அப்பதார்த்தம் விபக்ஷமெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரசித்த அநுமானத்தில் மடு, தடாகாதிகள் விபக்ஷமெனப்படுகின்றன. மடுவில் புருஷனுக்கு "மடு வன்னி அபாவமுடைத்து" என்பதாக வன்னி வடிவ சாத்தியத்தினது அபாவத்தின் நிச்சயமே யிருக்கின்றது. சாத்தியத்தின் நிச்சயமும், சாத்தியாபாவத்தின் நிச்சயமும் ஞான வடிவமாவதால் சமவாய சம்பந்தத்தால் புருஷனது ஆத்மாவிலேயே இருக்கின்றது. என்றாலும் விஷயத்தன்மை சம்பந்தத்தால் அவ்வடுக்களையிலும், மடுவிலும் நிச்சயம் சம்பவிக்கின்றது.

### ககசரு. வியாப்தி ஞானத்தின் வர்ணனம்.

இனி முற்கூறிய வியாப்தியின் ஞானத்தின் காரணத்தினை வர்ணிப்பாம். எவனுக்கு அடுக்களை முதலியவைகளில் வன்னி வடிவ சாத்தியத்தினதும், தூம வடிவ ஏதுவினதும் சஹசார தரிசனம் "யாண்டாண்டு தூம மிருக்கின்றதோ ஆண்டாண்டு வன்னி அவசிய மிருக்கின்றது" என்பதாக அடிக்கடி உண்டாயிருக்கிறதோ அவனுக்கே "தூமம் வன்னியின்வியாப்பியமாம்" என்பதான வியாப்தி ஞானம் உண்டாகின்றது. ஆகையால் சாத்திய, சாதனங்களின் சஹசார தரிசனமே வியாப்தி ஞானத்தின் காரணமாகின்றது. அதாவது; முற்கூறிய அன்வயவியாப்தியின் ஞானத்திற்குக் காரணமாகின்றது. முற்கூறிய

வெதிரேக வியாப்தி ஞானத்திற்கு "யாண்டாண்டு வன்னியபாவம் ஆண்டாண்டு தூமாபாவம்" என்பதான சாத்திய, ஏது அபாவங்களின் ஸஹசார தரிசனமே காரணமாகின்றது.

சங்கை:— ஸஹசார தரிசனத்தில் வியாப்தியினைக் கிரஹிக்குந் தன்மை சம்பவியாது. ஏனெனின் யாண்டாண்டு பார்த்திவத்வ மிருக்கின்றதோ ஆண்டாண்டு இரும்பாற் போழற் பாலதாந் தன்மையிருக்கின்ற தென்பதான ஸஹசார தரிசனம் புருஷனுக்கு பலகால் உண்டாயினும் வயிரமணி முதலியவைகளில் பார்த்திவத்வ தர்ம மிருந்தும் இரும்பாற் போழற் பாலதாந் தன்மை தர்மத்தின் அபாவ மிருப்பதால் வியபிசாரமே பிராப்தமாகின்றது. ஆகையால் ஸஹசார தரிசனத்தால் வியாப்தி ஞானம் சம்பவியாது.

சமாதானம்:—பிறழ்ச்சி இன்மையோடு கூடிய ஸஹசார ஞானமே வியாப்தியினை நிச்சயஞ் செய்வதாகின்றது. அதாவது; ஏதுவில் சாத்தியத்தினது வியபிசார ஞானத்தின் அபாவத்தோடு கூடிய சாத்திய ஏதுவின் ஸஹசார ஞானமே வியாப்தியினது ஞானத்தின் ஏதுவாகின்றது. ஆண்டு சாத்தியத்தின் அபாவமுடைய அதிகரணத்தில் ஏதுவினிருத்தற் றன்மையே ஏதுவில் வியபிசாரமாம். பார்த்திவத் தன்மையினதும், இரும்பாற் போழற் பாலதாந் தன்மையினதும் ஸஹசார தரிசனம் காஷ்ட முதலிய பிருதிவிகளில் பலகால் உண்டாயினும் வயிரமணி முதலியவைகளில் வியபிசாரமே காணப் படுகின்றது. ஆகையால் ஸஹசார ஞானம் வியபிசார ஞானத்தின் அபாவத் தோடு கூடியதன்றும். ஆகையால் அச்ஸஹசார தரிசனத்தால் அப்பார்த்தி வத்வ தர்மத்தில் இரும்பாற் போழற் பாலதாந்தன்மை தர்மத்தின் வியாப்தி ஞானம் உண்டாகிறதில்லை.

### ௧௧௪௯. யதார்த்த, அயதார்த்த வேறுபாட்டால் வியபிசார ஞானத்தின் இருவித வேற்றுமை.

ஆண்டு வியபிசார ஞானமும் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். பார்த்திவத்வ தர்மத்தில் இரும்பாற் போழற்பாலதாந்தன்மை வியபிசார ஞானமும, வன்னியில் தூமத்தின் வியபி சார ஞானமும் யதார்த்தமெனப்படுகின்றது. வியபிசாரத்தின் அபாவமுடைய ஏதுவில் வியபிசாரத்தின் ஞானம் அயதார்த்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: வன்னி வடிவ சாத்தியத்தினது வியபிசாரத்தின் அபாவமுடைய தூம வடிவ ஏதுவில், வன்னி வடிவ சாத்தியத்தின் வியபிசார ஞானம் அயதார்த்தமெனப் படுகின்றது. அயதார்த்த வியபிசார ஞானமும் நிச்சயம், சம்சயம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு "தூமம் வன்னியின் வியபிசாரி" என்பதான தூம வடிவ ஏதுவில் வன்னி வடிவ சாத்தியத்தினது வியபிசாரத் தின் ஞானம் நிச்சயமெனப்படுகின்றது. "தூமம் வன்னியின் வியபிசாரியா அன்று" என்பதான தூமத்தில் வன்னியினது வியபிசாரத்தின் ஞானம் சம்சய மெனப்படுகின்றது. இதனை சங்கை யென்றுங் கூறுவர். ஆண்டு முற்கூறிய யதார்த்த வியபிசார ஞானத்தின் நிவர்த்தியோ தர்க்க முதலியவைகளால் உண்டாகிறதில்லை.

௧௧௭௪. அயதார்த்த வியபிசார ஞானத்தினை தர்க்கத்தால் நிவர்த்தித்தல்.

இரண்டாவது அயதார்த்த வியபிசார ஞானத்தின் நிவர்த்தி சிலவிடத்தோ தர்க்கத்தால் உண்டாகின்றது. ஆண்டு "யதி-தூமோ வஹ்நிவ்யபிசாரீ ஸ்யாத் தர்ஹி-வஹ்நிஜந்யோ நஸ்யாத்" (இ-ள்.) ஓர் கால் தூமம் வன்னியின் வியபிசாரமுடையதாகுமாயின் வன்னியால் உண்டாவதன்றாகும். என்பதான தூம வன்னியின் காரிய காரண பாவத்தின் பங்கப் பிரசங்கத்தினை தர்க்கமென்பர். அத்தர்க்கத்தால் வியபிசார ஞானம் நிவர்த்தமாய் விடுகின்றது. சிலவிடத்தில் வியபிசார ஞானத்தின் அபாவம் தானேசித்தமாகின்றது. அதாவது; வியபிசார ஞானத்தினை உண்டாக்கும் காரண சாமக்கிரியின் அபாவமிருப்பதால் வியபிசார ஞானம் உண்டாகிறதேயில்லை என்பதான வியபிசார ஞானத்தின் அபாவத்தோடு கூடிய சஹசார தரிசனத்தால் தூம முதலிய ஏதுவில் வன்னி முதலிய சாத்தியத்தினது வியாப்தியின் ஞான முண்டாகின்றது. ஆகையால் வியபிசார ஞானத்தின் அபாவத்தோடு கூடிய சஹசார ஞானமே வியாப்தியினது ஞானத்தின் காரணமாகின்றது.

சங்கை:—அடுக்களையிலுள்ள வன்னி தூமத்திேனாடு புருஷனது சக்ஷுஇந்திரியத்தின் சையோக சம்பந்த மிருக்கின்றது. ஆகையால் புருஷனுக்கு அடுக்களையிலுள்ள தூம வன்னியின் உடநிகழ்ச்சியின் பிரத்தியக்ஷமோ சம்பவிக்கின்றது. ஆனால் பர்வத முதலியவைகளிலுள்ள வன்னி தூமத்திேனாடு புருஷனது சக்ஷு இந்திரியங்களின் சையோகம் சம்பவியாது. ஆகையால் அவ்வன்னி தூமங்களின் உடநிகழ்ச்சியின் பிரத்தியக்ஷம் சம்பவியாது. உடநிகழ்ச்சியின் பிரத்தியக்ஷம் சம்பவியாததாக எல்லா தூமங்களில் எல்லா வன்னிகளின் வியாப்தியின் பிரத்தியக்ஷ ஞானமும் உண்டாகாது. வியாப்தியின் பிரத்தியக்ஷ முண்டாகாததாக பர்வதத்திலுள்ள தூமத்தின் தரிசனத்தால் பர்வதத்திலுள்ள தூமத்தால் வியாப்தியின் ஸ்மரணமும் உண்டாகாததாகும். வியாப்தியினது ஸ்மரணத்தின் அபாவமிருக்க "வன்னியின் வியாப்பிய தூமமுடையது பர்வதம்" என்பதான பராமரிசமும் சம்பவியாததாகும். பராமரிசத்தின் அபாவமுளதாக "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான அநுமிதியும் உண்டாகாததாகும்.

சமாதானம்:—எக்காலத்தில் புருஷனுக்கு அடுக்களையில் ஒருவன்னியினதும், ஒரு தூமத்தினதும் சாக்ஷுஷப்பிரத்தியக்ஷமுளதாகின்றதோ அக்காலத்தில் புருஷனுக்கு வன்னித்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் பர்வதமுதலிய சர்வ வன்னிகளின் அலௌகிக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷமுண்டாகின்றது. அங்ஙனமே தூமத்வ வடிவ சாமான்னிய லக்ஷண சம்பந்தத்தால் பர்வத முதலியவைகளிலுள்ள எல்லா தூமங்களின் அலௌகிக சாக்ஷுஷப் பிரத்தியக்ஷ முண்டாகின்றது. ஆகையால் புருஷனுக்கு அக்காலத்தில் எல்லா வன்னிகளினதும், எல்லா தூமங்களினதும் உடநிகழ்ச்சியின் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றது. உடநிகழ்ச்சியின் பிரத்தியக்ஷ முண்டாக எல்லா தூமங்களில் எல்லா வன்னிகளின் வியாப்தியின் பிரத்தியக்ஷமும் சம்பவிக்கின்றது. வியாப்தியின் பிரத்தியக்ஷமுளதாக அவ்வவ் தூமத்தின் தரிச

னத்தால் அவ்வத் தூமத்திலுள்ள அவ்வவ் வன்னியினது வியாப்தியின் ஸ்மரணமும் சம்பவிக்கின்றது. வியாப்தியின் ஸ்மரண மூலதாக கூறிய பராமரிசமும் சம்பவிக்கின்றது. அப்பராமரிசமூலதாக கூறிய அநுமிதியும் சம்பவிக்கின்றது. இம்மட்டும் அநுமானத்தின் முறையினையும், வியாப்தி பக்ஷ முதலிய காரண சாமக்கிரியினையும் வர்ணித்தனம். இனி முற்கூறிய அநுமானத்தின் வேற்றுமையினை வர்ணிப்பாம்.

### கககசஅ. ஸ்வார்த்த, பரார்த்த மென்னும் வேறுபாட்டால் அநுமானத்தின் இருவித வேற்றுமை

ஆண்டு முற்கூறிய அநுமானம் ஸ்வார்த்த அநுமானம் (தன் பொருட்டு அநுமானம்), பரார்த்த அநுமானம் (பிறர்பொருட்டு அநுமானம்) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு "ந்யாயாப்ரயோஜ்யாநுமாநம் ஸ்வார்த்தாநுமாநம்" (இ-ள்.) கூறப்படும் நியாயத்தால் உண்டாகாத அநுமானம் யாதோ அவ்வநுமானம் ஸ்வார்த்தாநுமான மெனப்படுகின்றது. "ந்யாயப்ரயோஜ்யாநுமாநம் பரார்த்தாநுமாநம்" (இ-ள்.) நியாயத்தால் உண்டாகும் அநுமானம் யாதோ அவ்வநுமானம் பரார்த்தாநுமானமெனப் படுகின்றது.

### கககசக. நியாயத்தின் லக்ஷணம்.

"ப்ரதிஜ்ஞாதிவாக்யபஞ்சகஸமுதாயঃ ந்யாயঃ" (இ-ள்.) பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரணம், உபநயம், நிகமனம் என்னும் ஐந்து வாக்கியங்களின் சமுதாயத்தினை நியாயமென்பர். அவ்வைந்து வாக்கியங்களின் ஸ்வரூபமிது வாம். "பர்வதம் வன்னியுடைத்து" என்பது பிரதிஞ்ஞை, "தூமமுடைமையால்" என்பது ஏது, "எதுவெது தூமமுடைத்து அதுவது வன்னியுடைத்து அடுக் களைப்போல்" என்பது உதாஹரணம், "இதுவும் அங்ஙனம்" என்பது உபநயம், "ஆதலின் இங்ஙனம்" என்பது நிகமனம். ஆண்டு புருஷனது அநுமிதியின் ஏது வாகிய ஸ்வார்த்தாநுமிதியோ கூறிய நியாயத்தால் உண்டாவதின்று. ஆனல் புருஷன் தானே அடுக்களை முதலியவற்றில் தூம வடிவ ஏதுவில் வன்னி வடிவ சாத்தியத்தினது வியாப்தியின் நிச்சயத்திற்கு பின் யாதாமோர் காலத் தில் பர்வத முதலிய பக்ஷத்தில் தூம் வடிவ ஏதுவினைக் கண்டு வியாப்தியினை ஸ்மரிக்கின்றான் அங்ஙனமே கூறிய பராமரிசமுடைய பர்வதமுதலிய பக்ஷத்தில் வன்னியை விஷயஞ் செய்யும் அநுமிதி யுண்டாகின்றதென்னும் ஸ்வார்த்தாநு மானத்தின் முறையை முன் விரிவாய் நிரூபித்துள்ளோம். ஸ்வார்த்தாநுமான முடையவன் வேறொருவனுக்கு பர்வதத்தில் வன்னியின் அநுமிதியை யுண் டாக்கும்போது கூறிய பிரதிஞ்ஞை முதலிய ஐந்து வாக்கியங்களின் சமுதாய வடிவ நியாயத்தினையே உண்டாக்குகின்றான். நியாயத்தால் மற்றையோ னுக்கும் வியாப்திஞானம், பராமரிச முதலியன உண்டாகி வன்னியின் அநு மிதி யுண்டாகின்றது. ஆகையால் அந்த நியாயத்தா லுண்டான அநுமானம் ஏனையோனது அநுமிதியின் ஏதுவாவதால் பரார்த்தாநுமான மெனப்படு கின்றது.

### ககடு௦. பிரதிஞ்ஞா அவயவத்தின் லக்ஷணம்.

இனி முறையாக பிரதிஞ்ஞை முதலிய ஐந்து வாக்கியங்களின் லக்ஷணத்தை வர்ணிப்பாம். ஆண்டு "ஸாத்யவிசிஷ்டபக்ஷபோதஜநகம் வசநம் ப்ரதிஜ்ஞாவாக்யம்" (இ-ள்.) கேட்பவனுக்கு சாத்திய விசிஷ்ட பக்ஷத்தின் போதத்தை உண்டாக்கும் வசனம் பிரதிஞ்ஞா வாக்கியமெனப்படுகின்றது. எங்ஙனம் "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான வசனம் வன்னி வடிவ சாத்தியத்தோடு விசிஷ்ட பர்வத வடிவ பக்ஷத்தின் போதத்தை உண்டாக்குவதாகின்றது. ஆகையால் அவ்வசனம் பிரதிஞ்ஞா வாக்கியமெனப்படுகின்றது.

### ககடுக. ஏது அவயவத்தின் லக்ஷணம்.

"பஞ்சம்யந்தம் த்ருதீயாந்தம் வா லிங்கப்ரதிபாதகம் வசநம் ஹேதுவாக்யம்" (இ-ள்.) ஐந்தாம் வேற்றுமை அல்லது மூன்றும் வேற்றுமையை ஈற்றிலுடையதாகிய தூம முதலிய லிங்கத்தினை பிரதிபாதிக்கும் வசனத்தினை ஏது வாக்கியமென்பர். எங்ஙனம் "தூமமுடைமையால்" என்பதான வசனம் மூன்றும் வேற்றுமையை ஈற்றிலுடையதும், தூம வடிவ லிங்கத்தினை பிரதிபாதிப்பதுமாம். ஆகையால் அந்த வசனம் ஏது வாக்கியமெனப்படுகின்றது.

### ககடுஉ. உதாஹரண அவயவத்தின் லக்ஷணம்.

"வ்யாப்திப்ரதிபாதகம் த்ருஷ்டாந்தவசநம் உதாஹரணம்" (இ-ள்.) ஏதுவில் சாத்தியத்தின் வியாப்தியினை பிரதிபாதிப்பதாகிய திருஷ்டாந்தத்தை போதிக்கும் வசனம் உதாஹரண வாக்கியமெனப்படுகின்றது. எங்ஙனம்: "எதுவெது தூமமுடைத்து அதுவது வன்னியுடைத்து அடுக்களைப் போல" அதாவது; அடுக்களை தூமமுடையதாவதால், வன்னியுடையதேயாம். என்பதான வசனம் தூம வடிவ ஏதுவில் வன்னி வடிவ சாத்தியத்தினது வியாப்தியினை பிரதிபாதிப்பதுமாம். அடுக்களை வடிவ திருஷ்டாந்தத்தினை பிரதிபாதிப்பதுமாம். ஆகையால் அந்த வசனம் உதாஹரண வாக்கியமெனப்படுகின்றது.

### ககடுங. உபநய அவயவத்தின் லக்ஷணம்.

"உதாஹ்ருதவ்யாப்திவிசிஷ்டத்வேந ஹேதோ: பக்ஷதர்மதாப்ரதிபாதகம் வசநம் உபநயவாக்யம்" (இ-ள்.) முன் உதாஹரண வசனத்தால் பிரதிபாதித்த வியாப்தி விசிஷ்டத்வ வடிவமாக ஏதுவிலுள்ள பக்ஷ தர்மத் தன்மையினை பிரதிபாதிக்கும் வசனம் உபநயவாக்கியமெனப்படுகின்றது. எங்ஙனம்: இப்பர்வதமும் அவ்வடுக்களைப் போன்று வன்னியின் வியாப்தியுடைய தூமமுடையதாமென்னும் வசனம் வியாப்தி விசிஷ்ட தூம வடிவ ஏதுவில் பர்வத வடிவ பக்ஷத்தில் இருத்தற்றன்மை வடிவ பக்ஷ தர்மத்தன்மையினை பிரதிபாதிக்கின்றது. ஆகையால் அந்த வசனம் உபநய வாக்கியமெனப்படுகின்றது.

---

### ௧௧௫௪. நிகமன அவயவத்தின் லக்ஷணம்.

" பக்ஷே ஸாத்யஸ்யாபாதிதத்வப்ரதிபாதகம் வசநம் நிகமநம் "

(இ-ள்) பக்ஷத்தில் சாத்தியத்தின் அபாதிதத் தன்மையினை பிரதிபாதிப்பதாகிய வசனம் நிகமனமெனப்படுகின்றது. எங்ஙனம்: வன்னி வியாப்பிய தூமமுடையதாவதால் இம்மலை அடுக்களைப் போன்று வன்னியுடையதேயா மென்பதான வசனம் பர்வத வடிவ பக்ஷத்தில் வன்னி வடிவ சாத்தியத்தின் அபாதிதத்தன்மையினை பிரதிபாதிக்கின்றது. இவ்வாறாய பிரதிஞ்ஞை முதலிய ஐந்து வாக்கியங்களின் சமுதாய வடிவ நியாயத்தால் ஏனையோனுக்கும் பர்வதத்தில் வன்னியின் அநுமிதி உண்டாகின்றது. இதனையே பரார்த்தாநுமான மென்பர்.

### ௧௧௫௫. பிரதிஞ்ஞை முதலிய வாக்கியங்களிலுள்ள பக்ஷம், ஏது, வியாப்தி முதலியவைகளின் ஞானத்தின் வகையினை வர்ணித்தல்.

ஈண்டு முற்கூறிய ஸ்வார்த்தாநுமிதி எவ்வளவு காரண சாமக்கிரியால் உண்டாவதாகின்றதோ அவ்வளவு காரண சாமக்கிரியினாலேயே பரார்த்தாநுமிதி உண்டாவதாகின்றது. ஆகையால் ஏனையோன் பிரதிஞ்ஞை முதலிய ஐந்து வாக்கியங்களை கேட்பதால் காரண சாமக்கிரியின் அடைவை வர்ணிப்பாம். ஈண்டு "பர்வதம் வன்னியுடைத்து" என்பதான பிரதிஞ்ஞா வாக்கியத்தைக் கேட்பதாலோ கேட்போனுக்கு பர்வத வடிவ பக்ஷத்தின் ஞானம் உண்டாகின்றது. "தூமமுடைமையால்" என்பதான ஏது வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு தூம வடிவ லிங்கத்தின் ஞான முண்டாகின்றது. ஏதுவெது "தூமமுடைத்து அதுவது வன்னியுடைத்து அடுக்களைப் போல" என்பதான உதாஹரண வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு வியாப்தியின் ஞானம் உண்டாகின்றது. "இதுவும் அங்ஙனம்" என்பதான உபநய வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு வியாப்தி விசிஷ்ட ஏதுவில் பக்ஷதர்மத்தன்மையின் ஞானம் உண்டாகின்றது. "ஆதலின் இங்ஙனம்" என்பதான நிகமன வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு பர்வத வடிவ பக்ஷத்தில் வன்னி வடிவ சாத்தியத்தின் அபாதிதத்தன்மையின் ஞானம் உண்டாகின்றது. இவ்வாறாக பக்ஷத்தன்மை ஞான முதலிய காரண சாமக்கிரி விசிஷ்ட பர்வதத்தில் கேட்போனுக்கு வன்னியின் அநுமிதியுண்டாகின்றது. இம்முறையாக பரார்த்தாநுமானம் பிரதிஞ்ஞை முதலிய ஐந்து வாக்கியங்களின் சமுதாய வடிவ நியாயத்தால் சாத்தியமாகின்றது. இந் நியமத்தினை ஐந்தவயவ வாக்கிய மென்றுங் கூறுவர்.

### ௧௧௫௬. பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரண மென்னும் மூன்று வாக்கியத்தின் சமுதாயத்தினை ஒப்புவோராகிய மீமாஞ்சக, வேதாந்திகளின் மதம்.

ஈண்டு மீமாஞ்சகரும், வேதாந்திகளும் பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரணம் என்னும் மூன்று வாக்கியங்களின் சமுதாய வடிவ நியாயத்தானேயே பரார்த்தாநுமிதியை யொப்புகின்றனர். பௌத்தரோ உதாஹரணம், உபநயம் என்னு மிரண்டு வாக்கியங்களின் சமுதாய வடிவ நியாயத்தானேயே பரார்த்தாநுமிதியை யொப்புகின்றனர்.

## ககரு௭. கேவலான்வயி, கேவல வெதிரேகி, அன்வயவெதிரேகி என்னும் வேறுபாட்டால் அநுமானத்தின் மூவித வேற்றுமை.

இனி முற்கூறியஅநுமானத்திற்கு மீண்டும் வேறுவகையாக வேற்றுமை கூறுகின்றனர். ஆண்டு முற்கூறிய அநுமானம் கேவலான்வயி, கேவல வியதிரேகி, அன்வய வியதிரேகி என்னும் வேறுபாட்டால் மீண்டும் மூவகைத்தாம். ஆண்டு "கேவலாந்வயீ" (இ-ள்.) எவ்வநுமானத்தில் யாதாமோர் விபக்ஷமு மின்றோ அவ்வநுமானம் கேவலான்வயி எனப்படுகின்றது. எங்ஙனம்: "வடீ கூவியெயீ வெருமைகாஸ வடவகூ" (இ-ள்.) இக்கடம் அபிதேயமாம், பிரமேய மாவதால் எவ்வெப் பதார்த்தம் பிரமேயமாகின்றதோ அவ்வப்பதார்த்தம் அபிதேயமேயாகின்றது. எங்ஙனம் படம் பிரமேயமாவதால் அபிதேயமுமாமோ அங்ஙனமே இக்கடமும் பிரமேய மாவதால் அவசியம் அபிதேயமாகும். ஈண்டு ஈசுவரனது இச்சா வடிவ பத சக்தியின் விஷயத்வத்தினை அபிதேயத்வ மென்பர். ஈசுவரனது பிரமாவின் விஷயத்தன்மையினை பிரமேயத்தன்மை யென்பர். அவ்வபிதேயத் தன்மையினதும், பிரமேயத் தன்மையினதும் அத்தியந்தாபாவம் எப்பதார்த்தத்திலு மிருப்பதின்று. ஆனால் திரவிய முதலிய எல்லா பதார்த்தங்களும் அவ்வபிதேயத்தன்மையுடையனவும், பிரமேயத்தன்மையுடையனவுமாம். எப்பதார்த்தத்தில் சாத்தியத்தினது அபாவத்தின் நிச்சயமுண்டாகின்றதோ அப்பதார்த்தமே விபக்ஷமாகின்றது. விபக்ஷத்தின் லக்ஷணம் முற்கூறி வந்துள்ளோம். ஆகையால் கூறிய அநுமானம் விபக்ஷத்தின் அபாவமுடைத்தாவதால் கேவலான்வயியெனப்படுகின்றது.

## ககரு௮. கேவல வெதிரேகியின் அநுமானத்தின் நிரூபணம்.

ஆண்டு "கேவல வ்யதிரேகீ" (இ-ள்.) எவ்வநுமானத்தில் யாதோர் சபக்ஷமு மின்றோ அவ்வநுமானம் கேவல வெதிரேகியெனப்படுகின்றது. எங்ஙனம் "ப்ருதிவீ இதரேப்யோ பித்யதே கந்தவத்வாத் யதிதரேப்யோ ந பித்யதே ந தத் கந்தவத் யதா ஜலம் ந சேயம் ததா ததா ந" (இ-ள்.) பிருதிவி ஜல முதலிய ஏனையபதார்த்தங்களின் பேதமுடையதாம், கந்தமுடைமையால், எவ்வெப்பதார்த்தம் ஜல முதலிய ஏனைய பதார்த்தங்களின் வேறன்றோ அவ்வப் பதார்த்தம் கந்முடையது மன்றும். எங்ஙனம்: ஜலம் ஏனைய பதார்த்தங்களினும் வேறன்றும். ஆகையால் கந்தமுடையதுமன்றும். அற்றேல், ஏனையவற்றின் வேறுதல் முன்னர்த்துணியப்பட்டதோ அன்றோ?. துணியப்பட்டதெனின் யாண்டு துணியப்பட்டது ஆண்டு ஏது உண்டாயின் அந்வயமுடைத்தாதல் கூடும். ஏதுவின்றாயின் துணி பொருளுணர்ச்சியின்மையின் அதனால்விசேஷிக்கப்படும்அநுமிதியின்உணர்வு எங்ஙனந் தோன்றும். விசேஷண உணர்ச்சியின்றி விசேஷிக்கப்பட்டதின் உணர்வு பிறவாமையின். அன்றியும் பிரதியோகி யுணர்ச்சியின்மையின் வியதிரேக வியாப்தி யுணர்வும் உண்டாகாதாலோ வெனின். அற்றன்று, ஆண்டு இவ்வநுமானத்தில் பிருதிவி மாத்திரமே பக்ஷமாம். ஜலம், தேயு, வாயு, ஆகாசம்,

காலம், திக்கு, ஆத்மா, மனம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாயம் என்னும் பதின்மூன்றின் பதார்த்தங்களின் அன்னியோன்னியா பாவவடிவ பதின்மூன்றின்பேதம்சாத்தியமாம். அப்பதின்மூன்றின்பேதமும் பிருதிவி யொன்றிலேயே ஒருங்கிருக்கின்றது. பிருதிவியினும் வேறான ஜல முதலிய எப்பதார்த்தத்திலும் பதின்மூன்றின் பேதம் ஒருங்கிருப்பதன்று. ஜல முதலியவைகளில் தேயு முதலிய பன்னிரு பதார்த்தங்களின் பன்னிரு பேதமோ இருக்கின்றது. என்றாலும் ஜல முதலியவைகளில் தனது பேத மிருப்பதின்று. ஆண்டு கூறிய இவ்வநுமானத்தில் பிருதிவி வடிவ பக்ஷத்தினும் வேறான பதார்த்தம் பதின்மூன்றின் பேத வடிவ சாத்தியமுடையதன்றாம். நிச்சயித்த சாத்தியமுடைய பதார்த்தமே முன்னர் சபக்ஷமெனப்பட்டது. ஆகையால் சபக்ஷத்தின் அபாவமுடையதாவதால் கூறிய அநுமானம் கேவல வியதிரேகி யெனப்படுகின்றது.

### ௧௧௫௯. அன்வயவியதிரேகீ அநுமானத்தின் லக்ஷணம்.

"ஸபக்ஷவிபக்ஷ: அந்வயவ்யதிரேகீ" (இ-ள்.) எவ்வநுமானத்தில் சபக்ஷமும், விபக்ஷமுமா மிரண்டு மிருக்கின்றனவோ அவ்வநுமானம் அன்வய வியதிரேகியெனப்படுகின்றது. எங்ஙனம்: "பர்வதம் வன்னியுடைத்து தூமமுடைமையால்" என்பதான பிரசித்த அநுமானம் போலும். ஆண்டு அடுக்களையோ வன்னி வடிவ சாத்தியமுடையதாவதால் சபக்ஷமாம். மடு வன்னி வடிவ சாத்தியத்தின் அபாவமுடையதாவதால் விபக்ஷமாம். ஆகையால் சபக்ஷ, விபக்ஷமுடையதாவதால் பிரசித்த அநுமானம் அன்வய வியதிரேகியெனப்படுகின்றது.

### ௧௧௬௦. கேவல அன்வயி, கேவல வியதிரேகீ, அன்வய வியதிரேகீ, என்னும் வேறுபாட்டால் லிங்கத்தினை மூவிதமாக ஒப்புவோரது மதம்.

சில நூலாசிரியரோ தூம வடிவ லிங்கத்தினையே கேவலான்வயி, கேவல வியதிரேகி, அன்வய வியதிரேகி என்னும் வேறுபாட்டால் மூவிதமாகக் கூறுகின்றனர். ஆண்டு "அந்வயமாத்ரவ்யாப்திகம் லிங்கம் கேவலாந்வயி" (இ-ள்.) எவ்வேது வடிவ லிங்கத்தில் சாத்தியத்தின் கேவலம் அன்வயவியாப்தி மாத்திரமிருந்து வியதிரேக வியாப்தி யிருப்பதின்றோ அந்த லிங்கம் கேவலான்வயி யெனப்படுகின்றது. எங்ஙனம் "கடம் அபிதேயம் பிரமேயத் தன்மையால் படத்தைப் போல்" எனக் கூறிய இவ்வநுமானத்தில் பிரமேயத்தன்மை ஏதுவில் கேவலம் அபிதேயத்தன்மை வடிவ சாத்தியத்தினது அன்வயவியாப்தியே யிருக்கின்றது. வியதிரேக வியாப்தியின்றாம். ஆகையால் பிரமேயத்தன்மை வடிவ லிங்கம் கேவலான்வயி யெனப்படுகின்றது. அன்வய வியாப்தியின் ஸ்வரூபமும், வியதிரேக வியாப்தியின் ஸ்வரூபமும் முன் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக் கொள்க.

---

### ௧௧௯௧. கேவல வியதிரேக லிங்கத்தின் லக்ஷணம்.

"വ്യതിരേകമാത്രവ്യാപ്തികം ലിംഗം കേവലവ്യതിരേകി" (இ - ள்.) எந்த லிங்கத்தில் கேவலம் சாத்தியத்தினது வியதிரேக வியாப்தி மாத்திரமிருந்து அன்வய வியாப்தி இருப்பதின்றோ அந்த லிங்கம் கேவல வியதிரேகியெனப்படுகின்றது. எங்ஙனம்: "பிருதிவி ஏனையவற்றின் வேறு கந்தமுடைமையால்" எனக் கூறிய அநுமானத்தில் கந்தமுடைமை வடிவ ஏதுவில் கேவலம் பிறவற்றின் பேத வடிவ சாத்தியத்தினது வியதிரேக வியாப்தியேயிருக்கின்றது. அன்வய வியாப்தி யிருப்பதின்று. ஆகையால் கந்தமுடைமை வடிவ லிங்கம் கேவல வியதிரேகியெனப்படுகின்றது.

### ௧௧௯௨. அன்வய வியதிரேக லிங்கத்தின் லக்ஷணம்.

"അന്വയവ്യതിരേക വ്യാപ്തിമല്ലിംഗം അന്വയവ്യതിരേകി" (இ - ள்.) சாத்தியத்தின் அன்வய வியாப்தியுடையதும், வியதிரேக வியாப்தியுடையதுமாகிய லிங்கம் அன்வய வியதிரேகி யெனப்படும். எங்ஙனம்: "பர்வதம் வன்னியுடைத்து, தூமமுடைமையால்" என்பதான பிரசித்த அநுமானத்தில் தூம வடிவ லிங்கம் வன்னி வடிவ சாத்தியத்தின் அன்வய வியாப்தி யுடையதும், வியதிரேக வியாப்தி யுடையதுமாம். ஆகையால் தூம வடிவ லிங்கம் அன்வய வியதிரேகி யெனப்படுகின்றது.

### ௧௧௯௩. ஏதுவின் சத் வடிவத்தன்மையினை சாதிக்கும் பக்ஷ தர்மத்தன்மை, சபக்ஷத்வம் இவை முதலிய ஐந்து ஸ்வரூபங்களின் வர்ணனம்.

ஆண்டு அன்வயவியதிரேகி லிங்கமோ பக்ஷ தர்மத்வம், சபக்ஷசத்வம், விபக்ஷாத்வயாவிருத்தி, அபாதிதவிஷயத்வம், அசத்பிரதிபக்ஷத்வம் என்பதான ஐவகை வடிவங்களோடு விசிஷ்டமாகியே தனது சாத்தியத்தின் சித்தியைச் செய்கின்றது. எங்ஙனம்: தூம வடிவ ஏதுவில் பர்வதாதி வடிவ பக்ஷத்தில் இருத்தற்றன்மை வடிவ பக்ஷ தர்மத்தன்மையும், அடுக்களை முதலிய வடிவ சபக்ஷத்தில் இருத்தற்றன்மைவடிவ சபக்ஷசத்வமுடைமையுமிருக்கின்றது. மடு வடிவவிபக்ஷத்தில் இராததன்மைவடிவவிபக்ஷாத்வயாவிருத்தியுமிருக்கின்றது. பாதிக்கப்படாத சாத்திய வடிவவிஷயம் எவ்வேதுவிற்காமோ அதனை அபாதித விஷயத்தன்மையென்பர். அவ்வபாதித விஷயத்வமும் தூமத்திலிருக்கின்றது. சாத்தியத்தினது அபாவத்தின் சாதகமாகிய வேறு ஏதுவினை சத்பிரதிபக்ஷமென்பர். சத்பிரதிபக்ஷம் எவ்வேதுவிற்கின்றோ அவ்வேது அசத்பிரதிபக்ஷமெனப்படுகின்றது. அத்தகைய அசத்பிரதிபக்ஷத்தன்மையும் தூம வடிவ ஏதுவிலிருக்கின்றது. இவ்வாற்றால் அவ்வன்வய வியதிரேகி தூம வடிவ லிங்கம் அவ்வைந்து வடிவங்களோடு விசிஷ்டமாகின்றது. கேவலான்வயி லிங்கமோ "விபக்ஷாத்வயர்விருத்தி" என்னும் தர்மத்தினை விட்டு வேறு நான்கு வடிவங்களோடு விசிஷ்டமாகியே தனதுசாத்தியத்தின் சித்தியைசெய்கின்றது. எங்ஙனம்: முன்னர் கூறிய பிரமேயத்வ ஏதுபோலும். பிரமேயத்வ வடிவ ஏதுவிற்கு யாதோர் விபக்ஷமுமின்றாம். எதனிடத்தில் இருத்தலின்மை யிருக்கும்?.

கேவல வியதிரேகி லிங்கமும் "சபக்ஷசத்வம்" என்னும் வடிவத்தினை விட்டு
வேறு நான்கு வடிவங்களோடு விசிஷ்டமாகியே தனது சாத்தியத்தின் ஸித்தி
யைச் செய்கின்றது. எங்ஙனம்: முற்கூறிய அநுமானத்தில் கந்தமுடைய
ஏதுபோலும். அக்கந்தமுடைய ஏதுவிற்கு வேறோர் சபக்ஷமு மின்றும்:
எதனிடத்து இருத்தல் சம்பவிக்கும்.?

### கக்கூச. வியதிரேக வியாப்தியினை ஒப்பாதவராகிய உதயனசாரியரின் மதம்.

யாண்டும் அன்வய வியாப்தியின் ஞானமே அநுமிதிக்குக் காரணமா
கின்றது. வியதிரேக வியாப்தியின் ஞானம் அநுமிதிக்குக் காரணமாவதின்று.
ஆகையால் "யாண்டாண்டு தூமம் ஆண்டாண்டு வன்னி" என்பதான அன்
வய சஹசார தரிசனத்தாலும், "யாண்டாண்டு வன்னியபாவம் ஆண்டாண்டு
தூமாபாவம்" என்பதான வியதிரேக சஹசார தரிசனத்தாலும்
அன்வய வியாப்தியின் ஞானமே யுண்டாகின்றது. வியதிரேக வியாப்தி
யின் ஞானம் உண்டாவதின்று. ஆண்டு எவ்வன்வய வியாப்தியின் ஞானம்
கேவலம் அன்வய சஹசார மாத்திரத்தானேயே உண்டாகின்றதோ
அவ்வன்வய வியாப்தியுடைய ஏதுவோ கேவலான்வயி யெனப்படுகின்றது.
எவ்வன்வய வியாப்தியின் ஞானம் கேவல வியதிரேக சஹசார மாத்திரத்தா
னேயே உண்டாகின்றதோ அவ்வன்வய வியாப்தியுடைய ஏது கேவல வியதி
ரேகியெனப்படுகின்றது. எவ்வன்வய வியாப்தியின் ஞானம் அன்வய சஹ
சாரமும், வியதிரேகசஹசாரமுமாமிரண்டினால் உண்டாகின்றதோ அவ்வன்வய
வியாப்தியுடைய ஏது அன்வய வியதிரேகி யெனப்படுகின்றது. இவ்வாறாக
வியதிரேக வியாப்தியின்றியே அவ்வியதிரேக சஹசாரத்தைக்கொண்டு அவ்
வேதுவடிவ லிங்கத்திற்கு கேவலான்வயி, கேவலவியதிரேகி, அன்வயவியதிரேகி
என்பதான மூவிதவேற்றுமைச் சம்பவிக்கின்றது. ஆகையால் அம்மூவிதவேற்
றுமையாலும் அவ்வியதிரேக வியாப்தியின் அங்கீகாரம் பயனின்மையாம்.

### கககூரு. பூர்வவத், சேஷவத், சாமான்னியதோ திருஷ்டவத் என்னும் வேறுபாட்டால் மீண்டும் அநுமானத்தின் மூவித வேற்றுமை.

சில நூலாசிரியரோ கூறிய அவ்வநுமானத்தின் பூர்வவத், சேஷவத்,
சாமான்னியதோ திருஷ்டம் என்னும் வேறுபாட்டால் மூவிதமாக வொப்பு
கின்றனர். ஆண்டு "[illegible]" (இ-ள்.) பூர்வ
மென்பது காரணத்திற்காம். காரணமாகிய லிங்கம் எதனிடத்திருக்கின்
றதோ அத்தகைய அநுமானம் பூர்வவத் எனப்படுகின்றது. அதாவது;
யாண்டு காரண வடிவ லிங்கத்தால் காரிய வடிவ சாத்தியத்தின் அநுமிதி யுண்
டாகின்றதோ அவ்வநுமானம் பூர்வவத் எனப்படுகின்றது. எங்ஙனம்:
மேகங்களின் கர்ஜன விசேஷத்தால் மழையின் அநுமிதி யுண்டாகின்றது:
ஆண்டு மழையோ காரியமாம். மேகங்களின் கர்ஜன விசேஷம் காரண
மாம். அம்மேகங்களின் கர்ஜன வடிவ காரணத்தால் இப்பொழுது மழை
பொழியும் என்பதாக மழை வடிவ காரியத்தின் அநுமிதி யுண்டாகின்றது.

சில நூலாசிரியரோ ஈண்டு முற்கூறிய சத்தத்தால் அன்வய வியாப்தியினை கிரஹிக்கின்றனர். அவ்வன்வய வியாப்தியுடைய அநுமானம் பூர்வவத் எனப்படுகின்றது. எங்ஙனம்: "கடம் அபிதேயம் பிரமேயத் தன்மையால் படம் போல" என முற்கூறிய கேவலான்வயி அநுமானம் அன்வயவியாப்தியுடையதாவதால் பூர்வவத் எனப்படுகின்றது.

கககசு. சேஷவத் அநுமானத்தின் லக்ஷணம்.

ஆண்டு "காரு்லிங்கக அநுமானம் ஶேஷவத்" (இ-ள்.) ஈண்டு சேஷமென்பது காரியத்திற்காம். அக்காரியமாகிய லிங்கம் எதனிடத்திலிருக்கின்றதோ அத்தகைய அநுமானம்சேஷவத் எனப்படுகின்றது. அதாவது; யாண்டு காரிய வடிவ லிங்கத்தால் காரண வடிவ சாத்தியத்தின் அநுமிதி யுண்டாகின்றதோ அவ்வநுமானம் சேஷவத் எனப்படுகின்றது. எங்ஙனம்: நதியினது ஜலத்தின் பெருக்கத்தினைக் கண்ணுற்ற புருஷனுக்கு நதியின் உற்பத்தி ஸ்தானத்தில் மழையின் அநுமிதி யுண்டாகின்றது. ஆண்டு மழையோ காரணமாம். நதியினது ஜலத்தின் பெருக்கம் காரியமாம். நீரின் பெருக்க வடிவ காரியத்தால் நதியின் உற்பத்தி ஸ்தானத்தில் மழை வடிவ காரணத்தின் அநுமிதி யுண்டாகின்றது. இவ்வநுமானத்தினை சேஷவத்தென்பர். சில நூலாசிரியரோ சேஷ மென்னும் சத்தத்தால் வியதிரேக வியாப்தியினை கிரஹிக்கின்றனர். அவ்வியதிரேக வியாப்தியுடைய அநுமானம் சேஷவத் எனப்படுகின்றது. எங்ஙனம்: "பிருதிவி ஏனையவற்றின் வேறு, கந்தமுடைமையால்" என முற்கூறிய கேவல வியதிரேகி அநுமானம் வியதிரேக வியாப்தி யுடையதாவதால் சேஷவத் எனப்படுகின்றது.

கககஎ. சாமான்னியதோ திருஷ்டவத் அநுமானத்தின் லக்ஷணம்.

ஆண்டு "காரு்காரணஹிந்லிங்கக அநுமானம் ஸாமாந்யதோத்ருஷ்டம்" (இ-ள்.) எவ்வநுமானத்தில் காரிய வடிவ லிங்கமும், காரண வடிவ லிங்கமுமிருப்பதின்றோ ஆனால் காரிய, காரணத்தினும் வேறான லிங்கமிருக்கின்றதோ அவ்வநுமானம் சாமான்னியதோ திருஷ்ட அநுமான மெனப்படுகின்றது. எங்ஙனம்: "இது திரவியம் பிருதிவித்வமுடைமையால்" என்னும் அநுமானத்தில் "பிருதிவித்வ வடிவ ஏதுவால் திரவியத்வ வடிவ சாத்தியத்தின் சித்தி சம்பவிக்கின்றது. ஆண்டு பிருதிவித்வ ஜாதி வடிவ லிங்கம் திரவியத்தன்மை ஜாதி வடிவ சாத்தியத்தின் காரியமுமன்றும். காரணமுமன்றும். ஆகையால் இவ்வநுமானம் சாமான்னியதோ திருஷ்ட அநுமானமெனப்படுகின்றது. சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். அன்வய வியாப்தியும், வியதிரேக வியாப்தியுமா மிரண்டு மிருக்கும் அன்வய வியதிரேகி அநுமானமே சாமான்னியதோ திர்ஷ்டமெனப்படுகின்றது. எங்ஙனம்; "பர்வதம் வன்னியுடைத்து தூமமுடைமையால்" எனக்கூறிய அன்வய வியதிரேகி அநுமானம் சாமான்னியதோ திருஷ்டமென்ப்படுகின்றது.

கககஅ. ஏதுவாபாசத்தின் லக்ஷணம்.

இனி பிரசங்கப்படி அசத் ஏதுக்களை நிரூபிப்பாம். அதாவது; ஏத்வாபாசங்களை நிரூபிப்பாம். வியாப்தி, பக்ஷ தர்மத்தன்மை முதலிய

சத்தேதுவின் லக்ஷணமின்றியும் ஏதுவினைப் போன்றும் தோற்றும் ஏது ஏத்வாபாசமெனப்படுகின்றது அவ்வேத்வாபாசத்தால் எச்சாத்தியத்தின் சித்தியு முண்டாகிறதில்லை. ஆண்டு "அநுமிதிம் தத்கரணம் வா ப்ரதிபத்நாதி யத் யதார்த்தஜ்ஞாநவிஷய: ஸ ஹேத்வாபாஸ:" (இ-ள்.) அநுமிதியினையும் அல்லது அநுமிதியின் கரணவடிவ வியாப்தி ஞானத்தினையும், பராமரிசத்தினையும் பிரதிபந்திப்பதாகிய யதார்த்த ஞானத்தின் விஷயம் ஏத்வாபாசமெனப்படுகின்றது. இந்த லக்ஷணத்தின் அர்த்தம் பின்னர் ஏத்வாபாசங்களின் உதாஹரணத்திற் றெளிவாகும்

ககசுகூ. ஏதுவாபாசத்தின் ஐவகை வேற்றுமை.

கூறிய லக்ஷணத்தால் லக்ஷித ஏத்வாபாசம் சவ்வியபிசாரம், விருத்தம், சத்பிரதிபக்ஷம், அசித்தம், பாதிதம் என்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். முதலாவது சவ்வியபிசார மெனப்பெயரிய ஏத்வாபாசத்தினை பிராசீன நையாயிகர் அனைகாந்திகமென வழங்குகின்றனர். வியபிசாரமெனப் பெயரிய அனைகாந்திகம் சாதாரணம், அசாதாரணம், அநுபசம்ஹாரி என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

ககஎ0. சாதாரணத்தின் லக்ஷணம்.

"ஸாத்யாபாவவத்வ்ருத்திர்ஹேது: ஸாதாரண:" (இ-ள்.) தனது சாத்தியத்தின் அபாவமுடைய அதிகரணத்திலு மிருக்கும் ஏது சாதாரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: "பர்வதம் வன்னியுடைத்து பிரமேயத்தன்மையால் அடுக்களைப் போல" அதாவது இம்மலை வன்னியுடையதாம், பிரமேய வடிவமாவதால் யாது யாது பிரமேய மாகின்றதோ அதுவது வன்னியுடையதாம். எங்ஙனம்: அடுக்களை பிரமேயத்வ தர்மமுடையதாவதால் வன்னியுடையதேயாம். அங்ஙனமே பிரமேயத்வ தர்மமுடையதாவதால் மலையும் வன்னியுடையதேயாம். ஈண்டு பிரமேயத்வ வடிவ ஏது தனது வன்னி வடிவ சாத்தியத்தின் அபாவமுடைய மடுவிலு மிருக்கின்றது. ஆகையால் பிரமேயத்வ ஏது சாதாரண அனைகாந்திக மெனப்படுகின்றது. ஆண்டு கூறிய அநுமானத்தில் "பர்வதம் வன்னியுடைத்து" என்னும் அநுமிதியின் கரண வடிவம் "வன்னி வியாப்பியம் பிரமேயத்வம்" என்பதான வியாப்தி ஞானமாகும். வியாப்தி ஞானத்தினை பிரதிபந்திக்குந் தன்மை "வன்னி அபாவமுடையதி லிருக்கும் பிரமேயத்வமாம்" என்பதான ஞானத்தில் இந்த ஞானம் யதார்த்தமுமாம். அத்தகைய வியாப்தி ஞானத்தினை பிரதிபந்திப்பதாகிய யதார்த்த ஞானத்தின் விஷயத்தன்மை பிரமேயத்வ ஏதுவிலிருக்கின்றது. ஆகையால் கூறிய ஏத்வாபாசத்தின் லக்ஷணம் பிரமேயத்வ ஏதுவில் சம்பவிக்கின்றது. இவ்வாறாக பின்னர் கூறப்படும் அசத் ஏதுக்களிலும் கூறிய ஏத்வாபாசத்தினது லக்ஷணத்தின் சம்பவத்தை முறையாக அறிந்துக் கொள்க.

ககஎக. அசாதாரண லக்ஷணம்.

"ஸர்வஸபக்ஷவிபக்ஷவ்யாவ்ருத்தோ ஹேது: அஸாதாரண:" (இ-ள்.) நிச்சயமாகிய சாத்தியமுடைய சபக்ஷங்களிலும், நிச்சயமாகிய சாத்தியாபாவ

முடைய விபக்ஷங்களிலும் இராததாகிய ஏது அசாதாரணமெனப்படுகின்றது. எங்ஙனம்: "ஶப்தஃ நித்யஃ ஶப்தத்வாத்" (இ-ள்.) சத்தம் நித்தியமாம், சத்தத் தன்மை தர்மமுடையதாவதால். என்பதான அநுமானத்தில் நித்தியத்வ வடிவ சாத்தியமுடைய ஆகாச முதலியன சபக்ஷமெனப் படுகின்றன. நித்தியத்வ வடிவ சாத்தியத்தின் அபாவமுடைய கட முதலியன விபக்ஷமெனப் படுகின்றன. சபக்ஷங்களிலும், விபக்ஷங்களிலும் சத்தத்வ ஏது இருப்பதன்று. கேவலம் சத்த வடிவ பக்ஷத்திலேயே சத்தத்தன்மை ஏதுவிருக்கின்றது. ஆகையால் சத்தத்தன்மை ஏது அசாதாரண மெனப்படுகின்றது. ஆண்டு சத்தத்தன்மை ஏதுவில் சாத்தியமுடைமை இராததன்மையின் நிச்சயமுளதாக சாத்தியமுடைமையி லிருத்தற் றன்மை வடிவ வியாப்தியின் ஞானம் சம்பவியாது. ஆகையால் அசாதாரண ஏதுவின் ஞானம் வியாப்தி ஞானத்தினை பிரதிபந்திப்பதாகின்றது.

## ககஎஉ. அநுப சம்ஹாரியின் லக்ஷணம்.

"அந்வயவ்யதிரேகத்ருஷ்டாந்த ரஹிதோ ஹேது: அநுபஸம்ஹாரீ" (இ-ள்.) அன்வய திருஷ்டாந்தமும், வியதிரேக திருஷ்டாந்தமு மில்லாத ஏது அநுபசம்ஹாரி (முடிவு பெறாமை) எனப்படுகின்றது. எங்ஙனம்: "ஸர்வம் அநித்யம் ப்ரமேயத்வாத்" (இ-ள்.) எல்லாப் பதார்த்தங்களும் அநித்தியமாக யோக்கியமாம், பிரமேயத்வ தர்மமுடையதாவதால். என்பதான அநுமானத்தில் எல்லாப் பதார்த்தங்களும் பக்ஷ வடிவமாவதால். பக்ஷத்தினும் வேறான யாதோர் அன்வய திருஷ்டாந்தமும் வியதிரேக திருஷ்டாந்தமுமின்றாம். ஆகையால் பிரமேயத்வ ஏது அநுபசம்ஹாரி எனப்படுகின்றது. இவ்வநுபசம்ஹாரி ஏதுவின் ஞானமும் வியாப்தியின்து சம்சயத்தின் உற்பத்திவாயிலாக வியாப்தியின் ஞானத்தினை பிரதிபந்திப்பதாகின்றது.

## ககஎ௩. திருஷ்டாந்தத்தின் லக்ஷணம்.

இனி பிரசங்கப்பட்டி திருஷ்டாந்தத்தின் லக்ஷணங் கூறுவாம். "வாதிப்ரதிவாதினோ: ஸாத்யஸாதநயோ: ஸாத்யாபாவ ஸாதநாபாவயோ: வா நிஶ்சயவிஷய: த்ருஷ்டாந்த:" (இ-ள்.) வாதி, பிரதிவாதியாமிருவர்கட்கு சாத்திய, சாதனமா மிருவகை நிச்சயத்திற்கு அல்லது சாத்தியாபாவ, சாதனபாவமா மிருவகை நிச்சயத்திற்கு விஷயமாகிய பதார்த்தம் திருஷ்டாந்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: வாதி, பிரதிவாதிகளாமிருவருக்கும் அடுக்களையில் "இவ்வடுக்களை வன்னியுடைத்து தூமமுடைமையால்" என்பதாக வன்னி வடிவ சாத்தியத்தினதும், தூம வடிவ சாதனத்தினதும் நிச்சயமுண்டாகின்றது. அங்ஙனமே மடுவில் "மடு வன்னி அபாவமுடையது தூமமுடைமையால்" என்பதான வன்னிவடிவ சாத்தியத்தினதும், தூமவடிவ சாதனத்தினதும் அபாவம் நிச்சயமாகின்றது. ஆண்டு முதல் நிச்சயத்தின் விஷயம் அடுக்களையாம். இரண்டாவது நிச்சயத்தின் விஷயம் மடுவாம். ஆகையால் பிரசித்த அநுமானத்தில் அவ்வடுக்களையும், மடுவும் திருஷ்டாந்தமெனப்படுகின்றது.

## ககஎச. சாதர்மிய, வைதர்மிய வேறுபாட்டால் திருஷ்டாந்தத்தின் இருவித வேற்றுமை.

ஆண்டுக் கூறிய திருஷ்டாந்தம் சாதர்மிய திருஷ்டாந்தம், வைதர்மிய திருஷ்டாந்த மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். நிச்சய சாத்திய முடையதும், நிச்சய சாதனமுடையதுமாகிய திருஷ்டாந்தம் சாதர்மிய திருஷ்டாந்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரசித்த அநுமானத்தில் அடுக்களை சாதர்மிய திருஷ்டாந்தமெனப்படுகின்றது. நிச்சயசாத்தியாபாவமுடையதும், நிச்சய சாதனபாவமுடையதுமாகிய திருஷ்டாந்தம் வைதர்மிய திருஷ்டாந்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: பிரசித்த அநுமானத்தில் மடு, வைதர்மிய திருஷ்டாந்தமெனப்படுகின்றது. ஆண்டு சாதர்மிய திருஷ்டாந்தத்தினை அன்வய திர்ஷ்டாந்த மென்பர். வைதர்மிய திர்ஷ்டாந்தத்தினை வியதிரேக திர்ஷ்டாந்தமென்பர்.

## ககஎரு. விருத்தமெனப்பெயரிய ஏதுவாபாசத்தின் லக்ஷணம்.

"ஸாத்யாபாவவ்யாப்தோ ஹேது: விருத்த:" (இ-ள்.) எவ்வேது தனது சாத்தியத்தின் வியாப்தியுடையதாகாது ஆனால் தனது சாத்தியத்தினது அபாவத்தின் வியாப்தியுடையதாமோ அவ்வேது விருத்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: "ஶப்த: நித்ய: கார்யத்வாத்" (இ-ள்.) சத்தம் நித்தியமாக யோக்கியமாம், காரியத்வ வடிவ முடையதாவதால். என்பதான அநுமானத்தில் காரியத்வ வடிவ ஏது நித்தியத்வ வடிவ சாத்தியத்தின் அபாவமுடைய கட முதலியவைகளில் இருப்பதாவதால் நித்தியத்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாப்தி யுடையதன்றும். ஆனால் "யாண்டாண்டு காரியத்வம் ஆண்டாண்டு அநித்தியத்வம்" என்பதான காரியத்வ ஏது நித்தியத்வ வடிவ சாத்தியத்தினது அபாவ வடிவ அநித்தியத்தின் வியாப்தி யுடையதேயாம். ஆகையால் காரியத்வ ஏது விருத்தமெனப்படுகின்றது. இவ்விருத்த ஏதுவின் ஞானம் சாக்ஷாத் அநுமிதியினை பிரதிபந்திப்பதேயாம்.

## ககஎசு. சத்பிரத்தியக்ஷத்தின் லக்ஷணம்.

"ஸாத்யாபாவ ஸாதகம் ஹேத்வந்தரம் யஸ்ய ஸ: ஸத்ப்ரதிபக்ஷ:" (இ-ள்.) எவ்வேதுவினது சாத்தியத்தின் அபாவத்தின் சாதகமாக வேறு பிரதிபக்ஷ ஏதுவிருக்கின்றதோ அவ்வேது சத்பிரதிபக்ஷ மெனப்படுகின்றது. இச்சத் பிரதிபக்ஷத்தினை பிரகரணசமாவென்றும் வழங்குவர். எங்ஙனம்: "ஶப்த: நித்ய: ஶ்ராவணத்வாத் ஶப்தத்வவத்" (இ-ள்.) சத்தம் நித்தியமாக யோக்கியமாம், சிராவணத்தன்மை யுடையதாவதால். அதாவது; சுரோத்திர இந்திரியத்தாலுண்டாகிய சிராவணப்பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால், யாது யாது சிராவணப்பிரத்தியக்ஷத்தின் விஷயமாமோ அதுவது நித்தியமேயாகின்றது. எங்ஙனம்: சத்தத்திலிருக்கும் சத்தத்வ ஜாதி சிராவணப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால் நித்தியமேயாம். அங்ஙனமே சத்தமும் சிராவணப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால் நித்தியமேயாகும். என்பதான அநுமானத்தால் மீமாஞ்சகர் சத்தத்தில் நித்தியத்தன்மையைச் சித்தி செய்கின்றனர். நையாயி

கரோ "ஶப்³த³꞉ அநித்ய꞉ கார்யத்வாத் க⁴டவத்" (இ-ள்.) சத்தம் அநித்தியமாக யோக்கியமாம், காரிய வடிவமாவதால், எவ்வெப்பதார்த்தம் காரிய வடிவமா கின்றதோ அவ்வப்பதார்த்தம் அநித்தியமேயாகின்றது. எங்ஙனம்: காரியவடிவ மாவதால் கடம் அநித்தியமாம். அங்ஙனமே காரிய வடிவமாவதால் சத்தமும் அநித்தியமேயாகும். என்னும் அநுமானத்தால் சத்தத்தில் அநித்தியத்வத்தைச் சித்திசெய்கின்றனர். ஆண்டு மீமாஞ்சகர்களின் சிராவணத்தன்மைவடிவ ஏது விற்கு சத்தத்திலுள்ள நித்தியத்தன்மை வடிவ சாத்தியம் யாதோ அந்த நித்தி யத்தன்மை சாத்தியத்திற்கு அநித்தியத்தன்மை வடிவ அபாவத்தின் சாதக மாக நையாயிகர்களின் காரியத்தன்மை வடிவ ஏதுவிருக்கின்றது. ஆகையால் மீமாஞ்சகர்களின் சிராவணத்தன்மை ஏது சத் பிரதிபக்ஷமெனப்படுகின்றது. சத்பிரதிபக்ஷ ஏதுவின் ஞானமும் சாக்ஷாத் அநுமிதியினை பிரதிபந்திப்பதே யாகின்றது.

கக௱எ. அசித்தமெனப் பெயரிய ஏதுவாபாசத்தின் லக்ஷணம்.

அவ்வசித்த ஏத்வாபாசம் ஆசிரயாசித்தம், ஸ்வரூபாசித்தம், வியாப் பியத்தன்மை அசித்தமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். "பக்ஷதா வச்சே²த³காபா⁴வவிஶிஷ்டோ ஹேது꞉ ஆஶ்ரயாஸித்³த⁴꞉" (இ-ள்) எவ்வேதுவின் பக்ஷத்தன்மையினது அவச்சேதக தர்மத்தின் அபாவமிருக்கின்றதோ அவ் வேது ஆசிரயாசித்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: "க³க³நாரவிந்த³ம் ஸுரபி⁴ அரவிந்த³த்வாத் ஸரோஜாரவிந்த³வத்" (இ-ள்.) ஆகாச தாமரை நறுநாற்ற முடையதாம், தாமரையாவதால், யாது யாது தாமரையாமோ அதுவது நறு நாற்றமெனப் பெயரிய சுகந்தமுடையதாம். ஜலத்தினது சேற்றில் உண்டாகிய தாமரை தாமரை வடிவமாவதால் எங்ஙனம் நறுநாற்றமுடையதாமோ. அங்ஙனமே ஆகாசத்தின் தாமரையும் தாமரை வடிவமாவதால் நறுநாற்ற முடையதேயாகும். என்பதான அநுமானத்தில் தாமரைத் தன்மை ஏதுவின் பக்ஷமாகிய ஆகாசத் தாமரையினிடத்து ஆகாசத்திலிருக்குந் தன்மை வடிவ பக்ஷத்தன்மை அவச்சேதக தர்மமின்றாம். ஆகையால் அத்தாமரைத் தன்மை ஏது ஆசிரயாசித்தமெனப்படுகின்றது. ஆண்டு தாமரையினிடத்து ஆகாசத்தி லிருக்குந் தன்மையினது அபாவ நிச்சய முளதாக ஆகாசத்தன்மை விசிஷ்ட தாமரையில் நறுநாற்றத்தின் அநுமிதி யுண்டாகிறதில்லை. ஆகையால் ஆசிரயா சித்தி ஏதுவின் ஞானமும் சாக்ஷாத் அநுமிதியினையே பிரதிபந்திப்பதாகின்றது.

கக௱அ. ஸ்வரூபா சித்தியின் லக்ஷணம்.

ஆண்டு "பக்ஷாவ்ருத்திர்ஹேது꞉ ஸ்வரூபாஸித்³த⁴꞉" (இ-ள்.) எவ் வேது தனது பக்ஷத்தி லிராததாமோ அவ்வேது ஸ்வரூபாசித்தமெனப்படு கின்றது. எங்ஙனம்: "ஶப்³தோ³ கு³ண꞉ சாக்ஷுஷத்வாத் ரூபவத்" (இ-ள்.) சத்தம் குணமாக யோக்கியமாம், சாக்ஷுஷமாவதால். அதாவது; சக்ஷு இந்திரிய ஜன்னிய சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தின் விஷயமாவதால் உருவ குணத்தினைப் போன்று. ஆண்டு இவ்வநுமானத்தில் சாக்ஷுஷத் தன்மை வடிவ ஏது சத்த வடிவ பக்ஷத்தில் இருப்பதன்று. ஏனெனின் சத்தம் சக்ஷு

இந்திரிய ஜன்னிய சாக்ஷாத்ப் பிரத்தியக்ஷத்தின் விஷயமே யாகிறதில்லை. சுரோத்திர இந்திரிய ஜன்னிய சிராவணப் பிரத்தியக்ஷத்தின் விஷயமே யாகின்றது. ஆகையால் சாக்ஷாத்த் தன்மை வடிவ ஏது சத்த வடிவ பக்ஷத்தில் இராததாவதால் ஸ்வரூபாசித்த மெனப்படுகின்றது. இச்சொரூபாசித்த ஏதுவின் ஞானம் கூறிய பராமரிசத்தினை பிரதிபந்திப்பதாகின்றது.

## ககஎகூ. சுத்தாசித்தி, பாகாசித்தி, விசேஷணாசித்தி, விசேஷியாசித்தி என்னும் வேறுபாட்டால் ஸ்வரூபாசித்தியின் நால்வகை வேற்றுமை.

ஸ்வரூபாசித்த ஏது சுத்தாசித்தம், பாகாசித்தம், விசேஷணாசித்தம், விசேஷியாசித்தம் என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். ஆண்டு எவ்வேது தனது பக்ஷமாத்திரத்தில் ஸ்வரூபமாக இருப்பதின்றோ அவ்வேது சுத்தாசித்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: முற்கூறிய சாக்ஷாத்த் தன்மை ஏது சத்த மாத்திரத்தில் ஸ்வரூபமாக இருப்பதன்று. ஆகையால் சாக்ஷாத்த் தன்மை ஏது சுத்தாசித்த மெனப்படுகின்றது.

## கக௮௦. பாகாசித்தத்தின் நிரூபணம்.

எவ்வேது தனது பக்ஷத்தின் ஓரிடத்திலிருந்து ஓரிடத்தி லிராததாமோ அவ்வேது பாகாசித்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: "ப்ருதிவ்யாப்தேஜோவாயு பரமாணவ: நித்யா: கந்தவத்வாத்" (இ-ள்.) பிருதிவி, ஜலம், தேயு, வாயு வென்னும் நான்கு பூதங்களின் பரமாணுக்கள் நித்தியமாம், கந்த குணமுடையனவாகையால். என்புதான அநுமானத்தில் பிருதிவி முதலிய நான்கு பூதங்களின் பரமாணுக்கள் பக்ஷமாம். எல்லா பக்ஷத்தில் கந்தமுடைமை வடிவ ஏது இருப்பதன்று. கேவலம் பார்த்திவ பரமாணுக்களிலேயே கந்தமுடைமையிருக்கின்றது. ஆகையால் எல்லா பரமாணு வடிவ பக்ஷத்தின் ஜலாதி பரமாணு வடிவ ஒரு பாகத்தில் இராததாவதால் கந்தமுடைமை ஏது பாகாசித்த மெனப்படுகின்றது.

## கக௮க. விசேஷணாசித்தத்தின் நிரூபணம்.

எவ்வேதுவின் விசேஷணம் பக்ஷத்திலிராததாமோ அவ்வேது விசேஷணாசித்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: "வாயு: ப்ரத்யக்ஷ: ரூபவத்வே ஸதி ஸ்பர்சவத்வாத் கடவத்" (இ-ள்.) வாயு பிரத்தியக்ஷமாக யோக்கியமாம், உருவ குண முடையதாகி பரிச குண முடையதாவதால், கடத்தினைப் போன்று. என்னும் அநுமானத்தில் உருவ முடைமை விசிஷ்ட பரிசமுடைமை ஏதுவாம். ஆண்டு வாயு வடிவ பக்ஷத்தில் பரிசமுடைமை வடிவ விசேஷியமோ இருக்கின்றது. என்றாலும் உருவமுடைமை விசேஷணம் இன்றாம். யாண்டு விசேஷணத்தின் அபாவ மிருக்கின்றதோ ஆண்டு விசேஷண விசிஷ்டத்தின் அபாவமும் இருக்கின்றது. ஆகையால் உருவமுடைமை விசிஷ்ட பரிசமுடைமை வடிவ ஏது விசேஷணாசித்த மெனப்படுகின்றது.

ககழஉ. விசேஷியாசித்தத்தின் நிரூபணம்.

எவ்வேதுவின் விசேஷியபாகம் பக்ஷத்திலிராததாமோ அவ்வேது விசேஷியாசித்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: முற்கூறிய அநுமானத்திலேயே "பரிசமுண்டயதாகி உருவமுடையதாவதால்" என்பதான பரிசமுடைமை விசிஷ்ட உருவமுண்டமை ஏதுவாம். ஆண்டு வாயு வடிவ பக்ஷத்தில் உருவமுடைமை விசேஷியத்தின் அபாவமிருப்பதால் விசிஷ்ட ஏதுவின் அபாவமே யுண்டாகும். ஆகையால் பரிசமுடைமை விசிஷ்ட உருவமுடைமை ஏது விசேஷியாசித்த மெனப்படுகின்றது.

ககழங. வியாப்பியத்தன்மை அசித்தத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ஸோபாதிகோ ஹேது: வ்யாப்யத்வாஸித்த:" (இ-ள்.) எவ்வேது உபாதி யுடையதாகின்றதோ அவ்வேது வியாப்பியத் தன்மை அசித்தமெனப்படுகின்றது. எங்ஙனம்: "பர்வத: தூமவாந் வஹ்நிமத்வாத் மஹாநஸவத்" (இ-ள்.) இம்மலை தூமமுடையாத்து, வன்னியுடைமையால், அடுக்களைப்போன்று. என்னும் அநுமானத்தில் வன்னியுடைமை ஏது ஈர விறகின் சையோகவடிவ உபாதியுடையதாவதால் வியாப்பியத்தன்மை அசித்த மெனப்படுகின்றது. அவ்வீர விறகின் சையோக சம்பந்தம் யாதோ அதுவே வன்னியுடைமை வடிவ ஏதுவில் உபாதியாம்.

ககழச. உபாதியின் லக்ஷணம்.

"ஸாத்யவ்யாபகத்வே ஸதி ஸாதநாவ்யாபக: உபாதி:" (இ-ள்.) எப்பதார்த்தம் சாத்தியத்தின் வியாபகமும், ஏது வடிவ சாதனத்தின் அவ்வியாபகமுமாமோ அப்பதார்த்தம் உபாதியெனப்படுகின்றது. எங்ஙனம்: கூறிய அநுமானத்தில் ஈர விறகின் சையோகம் தூம வடிவ சாத்தியத்தின் வியாபகமும், வன்னி வடிவ சாதனத்தின் அவ்வியாபகமுமாம். ஆகையால் கூறிய அநுமானத்தில் ஈர விறகின் சையோகம் உபாதியெனப்படுகின்றது. யாண்டாண்டு தூமமிருக்கின்றதோ ஆண்டாண்டு ஈர விறகின் சையோகம் அவசிய மிருக்கின்றது. ஈர விறகின்றி தூம முண்டாகா தென்பதாக ஈர விறகின் சையோகத்திற்கு தூம வடிவ சாத்தியத்தின் வியாபகத் தன்மை யிருக்கின்றது. யாண்டாண்டு வன்னி வடிவ சாதன மிருக்கின்றதோ ஆண்டாண்டு ஈர விறகின் சையோகம் நியமமாக உண்டாகிறதில்லை. எக்காரணத்தாலெனின் வன்னியில் காய்ந்துள்ள அயப்பிண்டத்தில் வன்னிவடிவ சாதன மிருக்கினும் ஈர விறகின் சையோகம் இருப்பதின்று. இவ்வாற்றால் ஈர விறகின் சையோகத்திற்கு வன்னி வடிவ சாதனத்தின் அவ்வியாபகத் தன்மை யிருக்கின்றது. ஆகையால் ஈர விறகின் சையோகம் உபாதி யெனப்படுகின்றது. ஈர விறகின் சையோக வடிவ உபாதி யுடையதாவதால் கூறிய வன்னியுடைமை வடிவ ஏது வியாப்பியத்தன்மை அசித்தமெனப்படுகின்றது.

ககழரு. சாத்தியவியாபக முதலிய வேறுபாட்டால் அவ்வுபாதியின் நால்வகை வேற்றுமை.

இவ்வாருகக் கூறிய லக்ஷணத்தால் லக்ஷித உபாதி கேவல சாத்திய வியாபகம், பக்ஷதர்மாவச்சின்ன சாத்திய வியாபகம், சாதன அவச்சின்ன

சாத்திய வியாபகம், உதாசின தர்மாவச்சின்ன சாத்திய வியாபகம் என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். "பர்வதம் தூமமுடையது வன்னியுடைமையால்" என முற்கூறிய அநுமானத்தில் ஈர விறகின் சையோக வடிவ உபாதி கேவல சாத்திய வியாபக உபாதியாம். எங்ஙனம்: "க்ரதுஸ்த பஶுஹிம்ஸா அதர்மஸாதநம் ஹிம்ஸாத்வாத் க்ரத்வபாஹ்யஹிம்ஸாவத்" (இ-ள்.) யாகத்திற் செய்யும் பசுவின் இம்சை அதர்மத்தின் சாதனமாம், இம்சை வடிவமாவதால், எதுவெது இம்சை வடிவமாமோ அதுவது அதர்மத்தின் சாதனமேயாகின்றது. எங்ஙனம்: யாகத்தினும் வேறாகிய இம்சை இம்சை வடிவமாவதால் அதர்மத்தின் சாதனமேயாகின்றது. அங்ஙனமே யாகத்திற் செய்யும் இம்சையும் இம்சை வடிவமாவதால் அதர்மத்தின் சாதனமேயாகும். என்பதான சாங்கியர்களின் அநுமானத்தில் நிஷித்தத் தன்மை உபாதியாம். யாண்டாண்டு அதர்மத்தின் சாதனத் தன்மையிருக்கின்றதோ ஆண்டாண்டு சாத்திரத்தால் நிஷித்தத் தன்மை அவசியமிருக்கின்றது. எங்ஙனம்: யாகத்தினும் வேறாகிய இம்சையில் அதர்மத்தின் சாதனத்தன்மையிருப்பதால் நிஷித்தத் தன்மையுமிருக்கின்றது. இவ்வாற்றால் நிஷித்தத் தன்மையாகிய உபாதிக்கு அதர்ம சாதனத் தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத் தன்மையிருக்கின்றது. யாண்டாண்டு இம்சைத்தன்மையிருக்கின்றதோ ஆண்டாண்டு நிஷித்தத்தன்மை நியமமாக இருப்பதில்லை. எங்ஙனம்: யாக சம்பந்தமான இம்சையில் இம்சைத்தன்மை வடிவசாதனமிருக்கினும் நிஷித்தத்தன்மையின்றாம். ஆனால் "பஶுநா யஜேத" என்னுமிவை முதலிய சுருதிகளால் விஹிதத்தன்மையேயிருக்கின்றது. "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி" என்பதான சுருதியும் யாகசம்பந்தமான இம்சையினும் வேறான எல்லாபூதங்களின் இம்சையினை நிஷேதிக்கின்றது. இவ்வாற்றால் நிஷித்தத் தன்மையாகிய உபாதிக்கு இம்சைத் தன்மை வடிவ சாதனத்தின் அவ்வியாபகத் தன்மையுமிருக்கின்றது. நிஷித்தத் தன்மை உபாதியும் கேவல சாத்திய வியாபகமெனப்படுகின்றது.

ககஅகரு. பக்ஷ தர்மாவச்சின்ன சாத்திய வியாபக உபாதியின் நிரூபணம்.

எவ்வுபாதி கேவல சாத்தியத்தின் வியாபகமன்றோ ஆனால் பக்ஷத்திலிருக்கும் தர்மத்தால் அவச்சின்ன சாத்தியத்தின் வியாபகமாகின்றதோ அவ்வுபாதி பக்ஷ தர்மாவச்சின்ன சாத்திய வியாபகமெனப்படுகின்றது. எங்ஙனம்: "வாயு: ப்ரத்யக்ஷ: ப்ரத்யக்ஷஸ்பர்ஶாஶ்ரயத்வாத் கடவத்" (இ-ள்.) வாயு பிரத்தியக்ஷமாம், பிரத்தியக்ஷ பரிசத்தின் ஆசிரயமாவதால், எவ்வெத்திரவியம் பிரத்தியக்ஷபரிசத்தின் ஆசிரயமாகின்றதோ அவ்வத்திரவியம் பிரத்தியக்ஷமேயாம். எங்ஙனம்: கடவடிவத்திரவியம்போலும். என்பதான அநுமானத்தில் உத்பூத உருவமுடைமை உபாதியாம். யாண்டாண்டு பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ ஆண்டாண்டு உத்பூதஉருவமுடைமையிருக்கின்றது. இவ்வாறாக உத்பூதஉருவமுடைமையாகிய உபாதிக்கு கேவல பிரத்தியக்ஷத்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மையோ சம்பவியாது. எக்காரணத்தாலெனின்

உருவ முதலியவைகளில் பிரத்தியக்ஷத்தன்மை வடிவ சாத்திய மிருக்கினும் உத்பூத உருவமுடைமை யுபாதி யிருப்பதின்று. ஆனால் அவ்வாயு வடிவ பக்ஷத்தில் இருப்பதாகிய பாஹ்ய திரவியத்தன்மை வடிவ பக்ஷ தர்மத்தால் அவச்சின்ன பிரத்தியக்ஷத்தன்மை வடிவ சாத்தியத்திற்கே உத்பூத உருவ முடைமை உபாதி வியாபகமாம். யாண்டாண்டு பாஹ்ய திரவியத்தன்மை அவச்சின்ன பிரத்தியக்ஷத் தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு உத்பூத உருவமுடைமை அவசியமாயிருக்கின்றது. எங்ஙனம்: கடமுதலியன பாஹ்ய திரவியத்தன்மை அவச்சின்ன பிரத்தியக்ஷத் தன்மையுடையன வாகையால் உத்பூத உருவமுடையனவுமாம். இவ்வாற்றால் உத்பூத உருவமுடைமை யுபாதிக்கு பாஹ்ய திரவியத்தன்மை அவச்சின்ன பிரத்தியக்ஷத்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மை யிருக்கின்றது. யாண்டாண்டு பிரத்தியக்ஷ பரிசத்தின் ஆசிரயத்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு உத்பூத உருவ முடைமை நியமமா யிருப்பதின்று. எங்ஙனம்: வாயுவில் பிரத்தியக்ஷ பரிசாசிரயத்தன்மை யிருக்கினும் உத்பூத உருவமுடைமை இருப்பதின்று. இவ்வாற்றால் உத்பூத உருவமுடைமை யுபாதிக்கு பிரத்தியக்ஷ பரிசாசிரயத் தன்மை வடிவ சாதனத்தின் அவ்வியாபகத் தன்மையிருக்கின்றது. ஆகையால் கூறிய அநுமானத்தில் உத்பூத உருவமுடைமை பக்ஷதர்மாவச்சின்ன சாத்திய வியாபக உபாதியெனப்படுகின்றது.

கக௪உள. சாதனாவச்சின்ன சாத்திய வியாபக உபாதியின் நிரூபணம்.

எவ்வுபாதி எது வடிவ சாதனத்தால் அவச்சின்ன சாத்தியத்தின் வியாபகமாமோ அவ்வுபாதி சாதனாவச்சின்ன சாத்திய வியாபகமெனப்படுகின்றது. எங்ஙனம் "ய்வம்ஸ꞉ விநாஶீஜந்யத்வாத் வட꞉" (இ-ள்.) துவம்சம் விநாசமுடையதாம், உண்டாவதாவதால், கடத்தினைப்போன்று. என்னும் அநுமானத்தில் பாவத்தன்மை உபாதியாம். யாண்டாண்டு விநாசித்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத்தன்மை யிருக்கின்றது. இவ்வாற்றால் பாவத்தன்மை யுபாதிக்கு கேவல விநாசித்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மையோ சம்பவியாது. எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தில் விநாசித்தன்மை யிருக்கினும் அது பாவத்தன்மை யன்றாம். ஆனால் ஜன்னியத்தன்மை வடிவ சாதனத்தால் அவச்சின்ன விநாசித்தன்மை யாதோ அவ்விநாசித்தன்மை சாத்தியத்திற்கே பாவத்தன்மை வியாபகத்வ மிருக்கின்றது; யாண்டாண்டு ஜன்னியத்தன்மை விசிஷ்ட விநாசித்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத்தன்மை அவசியமாயிருக்கின்றது. எங்ஙனம்: கடமுதலியன ஜன்னியத்தன்மை விசிஷ்ட விநாசித்தன்மை யுடையன வாகையால் பாவத்தன்மை யுடையனவுமாம். இவ்வாற்றால் பாவத்தன்மை வடிவ உபாதிக்கு ஜன்னியத்தன்மை வடிவ சாதனாவச்சின்ன விநாசித்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மை யிருக்கின்றது. யாண்டாண்டு ஜன்னியத்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத்தன்மை நியமமாக இருப்பதின்று. எக்காரணத்தாலெனின் பிரத்துவம்சாபாவத்தில் ஜன்னியத்தன்மை யிருக்கினும் பாவத்தன்மை யிருப்பதின்று. இவ்வாற்றால் பாவத்தன்மை யுபாதிக்கு

ஜன்னியத்தன்மை வடிவ் சாதனத்தின் அவ்வியாபகத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் கூறிய அநுமானத்தில் பாவத்தன்மை வடிவ உபாதி சாதனவச்சின்ன சாத்திய வியாபக மெனப்படுகின்றது.

கக௩௫ உதாசீன தர்மாவச்சின்ன உபாதியின் நிரூபணம்.

எவ்வுபாதி யாதாமோர் உதாசீன தர்மத்தால் அவச்சின்ன சாத்தியத்தின் வியாபகமாகின்றதோ அவ்வுபாதி உதாசீன தர்மாவச்சின்ன சாத்திய வியாபகமெனப்படுகின்றது. எங்ஙனம் "ப்ராகபாவ: விநாஶீ ப்ரமேயத்வாத் கடவத்" (இ-ள்.) பிராகபாவம் விநாசியாம், பிரமேயமாவதால், கடத்தினைப் போன்று. என்பதான் அநுமானத்திலும் பாவத்தன்மை உபாதியிருக்கின்றது. யாண்டாண்டு விநாசித்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத் தன்மை யிருக்கின்றது. இவ்வாற்றால் பாவத்தன்மை யுபாதிக்கு கேவல விநாசித்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மையோ சம்பவியாது. எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தில் விநாசித்தன்மையிருக்கினும் பாவத்தன்மை யிருப்பதின்று. ஆனால் ஜன்னியத்தன்மை தர்மத்தால் அவச்சின்ன விநாசித்தன்மை வடிவ காரியத்திற்கே பாவத்தன்மை வியாபகத்வமிருக்கின்றது. யாண்டாண்டு ஜன்னியத்தன்மை விசிஷ்ட விநாசித்தன்மையிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத்தன்மை தர்மம் அவசியமாயிருக்கின்றது. எங்ஙனம்: கட முதலியன ஜன்னியத்தன்மை விசிஷ்ட விநாசித்தன்மையுடையன வாகையால் பாவத்தன்மை தர்மமுடையனவுமாம். இவ்வாற்றால் பாவத்தன்மை யுபாதிக்கு ஜன்னியத்தன்மை தர்மாவச்சின்ன விநாசித்தன்மை வடிவ சாத்தியத்தின் வியாபகத்தன்மை யிருக்கின்றது. யாண்டாண்டு பிரமேயத்தன்மை யிருக்கின்றதோ ஆண்டாண்டு பாவத்தன்மை நியமமாயிருப்பதின்று. எக்காரணத்தாலெனின் பிராகபாவத்தில் பிரமேயத்தன்மை தர்மமிருக்கினும் பாவத்தன்மை தர்மம் இருப்பதின்று. இவ்வாற்றால் பாவத்தன்மை யுபாதிக்கு பிரமேயத்தன்மை வடிவ சாதனத்தின் அவ்வியாபகத்தன்மை யிருக்கின்றது. கூறிய அநுமானத்தில் ஜன்னியத்தன்மை தர்மம் பிராகபாவ வடிவ பக்ஷத்தின் தர்மமுமன்றாம். அங்ஙனமே சாதன வடிவமுமன்றாம். ஆனால் ஜன்னியத்தன்மை உதாசின தர்மமாம். ஆகையால் கூறிய அநுமானத்தில் பாவத்தன்மை உபாதி உதாசீன தர்மாவச்சின்ன சாத்திய வியாபகமெனப்படுகின்றது. கூறிய நால்வகை உபாதிகளில் யாதாமோர் உபாதியுடைய ஏதுவும் வியாப்பியத்தன்மை அசித்தமெனப்படுகின்றது. இவ்வியாப்பியத்தன்மை அசித்த ஏதுவின் ஞானமும் வியாப்தி ஞானத்தினை பிரதிபந்திப்பதேயாம்.

கக௩௬. பாதித ஏத்துவாபாசத்தின் லக்ஷணம்.

"யஸ்ய ஹேதோ: ஸாத்யாபாவ: ப்ரமாணாந்தரேண நிஶ்சித: ஸ பாதித:" (இ-ள்.) எவ்வேதுவினது சாத்தியத்தின் அபாவம் பிரத்தியக்ஷ முதலிய பிரமாணத்தால் நிச்சயமாகின்றதோ அவ்வேது பாதிதமெனப்படுகின்றது. எங்ஙனம்: "வஹ்நி: அநுஷ்ண: த்ரவ்யத்வாத் ஜலவத்" (இ-ள்.) வன்னி வெம்மையின்றியதாம், திரவிய வடிவமாவதால், ஜலத்தினைப்போன்று.

என்பதான அநுமானத்தில் திரவியத்தன்மை வடிவ ஏதுவின் அநுஷ்ணத் தன்மை சாத்தியத்தின் அபாவ வெம்மைத்தன்மை யாதோ அவ்வெம்மைத் தன்மை வன்னி வடிவ பக்ஷத்தில் எல்லா பிராணிகளுக்கும் துவக்கிந்திரிய வடிவ பிரத்தியக்ஷப் பிரமாணத்தானேயே நிச்சியமாம். ஆகையால் திரவியத் தன்மை வடிவ ஏது பாதிதமாம். இப்பாதித ஏதுவின் ஞானம் சாக்ஷாத் அநுமிதியினையே பிரதிபந்திப்பதாகின்றது.

ககக0. துஷ்ட லக்ஷணத்தை ஏதுவாபாசத்தில் அடக்குவது.

அல்லது அதிவியாப்தி தோஷமுடைய துஷ்ட லக்ஷணமும் ஏதுவா பாசமே யாகின்றது. ஆண்டு அதிவியாப்தி தோஷமுடைய லக்ஷணத்தின் அடக்கம் வியாப்பியத்தன்மை அசித்தத்தில் சம்பவிக்கின்றது. அவ்வியாப்தி தோஷமுடைய லக்ஷணத்தின் அடக்கம் பாகாசித்தத்தில் சம்பவிக்கின்றது. அசம்பவ தோஷமுடைய லக்ஷணத்தின் அடக்கம் ஸ்வரூபா சித்தத்தில் சம்பவிக்கின்றது.

ககககக. சாதனத்தின் நிரூபணம்.

முன்னர் சித்தித்த அர்த்தத்தினை எவ்வேதுவால் சித்தி செய்வதாகின்றதோ அவ்வேது சித்த சாதனமென்னப்படுகின்றது. ஆண்டு ஐயுற்றுத் துணி பொருளுக்கிட்டம் பக்ஷமாம் என்னும் பிராசீன நையாயிகர்களின் மதத்திலோ சித்த சாதனத்தின் அடக்கம் ஆசிரயா சித்தத்திலேயே சம்பவிக்கின்றது. ஐயுற்றுத் துணிபொருளுக்கிட்டம் பக்ஷமாக லொப்பாத நவீனர்களின் மதத்தில் சித்த சாதனத்தின் அடக்கம் நிக்ரஹ ஸ்தானத்தில் சம்பவிக்கின்றது. அநுமான நிரூபணம் முற்றிற்று.

கககக௨. உபமான நிரூபணம்.

இனி மூன்றாவது உபமிதி வடிவ யதார்த்த அநுபவத்தினை நிரூபிப்பான் வேண்டி முதலில் உபமிதி பிரமாவின் கரண வடிவ உபமானப் பிரமாணத்தின் லக்ஷணங் கூறுவாம். ஆண்டு "உபமிதிகரணம் உபமாநம்" (இ-ள்.) உபமிதி பிரமாவின் கரணம் யாதோ அது உபமானப் பிரமாணமெனப்படுகின்றது. "ஸம்ஜ்ஞாஸம்ஜ்ஞிஸம்பந்தஜ்ஞாநம் உபமிதி:" (இ-ள்.) பதத்தின் சம்ஞை என்பர். அர்த்தத்தினை சம்ஞி யென்பர். பதம், அர்த்தமாமிரண்டின் சக்தி வடிவ சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய "ஆமா ஆமா பதத்தின் வாச்சியம்" என்பதான ஞானத்தினை உபமிதியென்பர். இப்பிண்டம் "ஆ சாதிருசியம்" என்பதாக ஆமா பிண்ட விசேஷியக ஆ சாதிருசிய விசேஷணஞானம் அநுமிதியின் கரணமாகின்றது. ஆகையால் ஆ சாதிருசிய ஞானம் உபமானப்பிரமாண மெனப்படுகின்றது.

கககக௩. உபமிதி யுண்டாவதின் கிரம வர்ணனம்.

நகரவாசி யொருவன் ஆமா பதத்தின் வாச்சிய அர்த்தத்தினை யறியானுகி வனத்தில்வசிப்பவனோடு ஆமாவென்னும்விலங்கு எத்தன்மைத்தென வினவினனுகப் பின்னர் வனத்தில் வசிப்போன் நகரவாசியைக் குறித்து "கோஸத்ருசோ கவய:" (இ-ள்.) ஆவின் சாதிருசியமுடைய விலங்கின் விசேஷம் ஆமா,

சத்தத்தின் வாச்சியமாமென்பதாகக் கூறினுகை. இவ்வசனத்தை நியாயசாத்திரத்தில் அதிதேச வாக்கிய மென்பர். அவ்வசனத்தைக் கேட்டவனும், அவ்வசனத்தின் அர்த்தத்தை நிச்சயித்தவனுமாகிய நகரவாசி ஒருகாலத்தில் யாதாமோர் பயனைக்கருதி காட்டகம்புக்கானுகை. அவ்வனத்தில் தெய்வகதியாய் ஆமாவென்னும் விலங்கினை கண்ணுற்று அரண்மகன் கூறக்கேட்ட வார்த்தையினது அர்த்தத்தின் நிச்சயத்தால் நகரவாசிக்கு இவ்விலங்கு "ஆவின் சாதிருசியம்" என்பதான சாக்ஷாக்ஷப் பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்றது. ஆமாவிசேஷ்யக ஆவின் சாத்ருசிய விசேஷணப் பிரத்தியக்ஷ ஞானமே உபமிதிபிரமாவின் கரணமாம். சாதிருசிய ஞானத்திற்குப் பின் அப்புருஷனுக்கு அதிதேச வாக்கியத்தினது அர்த்தத்தின் ஸ்மரண முண்டாகின்றது. அந்த ஸ்மரணமே அக்கரணத்தின் வியாபாரமாம். ஏனெனின் அதிதேச வாக்கியார்த்தத்தின் ஸ்மரணம் கூறிய சாதிருசிய ஞானத்தால் ஜன்னியமும், சாதிருசிய ஞானத்தால் ஜன்னிய உபமிதியினை உண்டாக்குவதுமாம். ஆகையால் வனவாசியினது வாக்கியார்த்தத்தின் ஸ்மரணத்தில் சாதிருசிய ஞான வடிவ கரணத்திற்கு வியாபார வடிவத்தன்மை சம்பவிக்கின்றது. அதன்பின்னர் அப்புருஷனுக்கு "ஆமா ஆமாபதத்தின் வாச்சியம்" என்பதான ஆமாவடிவ அர்த்தத்தில் ஆமாபதத்தின் சக்தி வடிவ சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானம் உண்டாவதாகின்றது. இந்த ஞானத்தினை உபமிதி பிரமாவென்பர்.

## கககச. வேறுவகையாக உபமானப் பிரமாணத்தின் நிரூபணம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். "இது ஆவின் சாதிருசியம்" என்பதான சாதிருசியப் பிரத்தியக்ஷம் உபமிதியின் கரணமன்று. வனவாசியினது வசனத்தைக்கேட்டதால் ஆவின் சாதிருசியமுடைய விலங்கு ஆமா பதத்தின் வாச்சியமாகின்றதென்பதாக நகர வாசிக்குண்டாகும் சத்த ஞானத்தின் அநுபவமே உபமிதியின் கரணமாவதால் உபமானப் பிரமாணமாம். ஆவின் சாதிருசிய ஆமா பிண்டத்தினைக் கண்டு வனவாசியினது வாக்கியார்த்தத்தின் ஸ்மரணம் சத்த அநுபவத்தால் ஜன்னியமாவதாலும், சத்த அநுபவத்தால் ஜன்னிய உபமிதியினை உண்டாக்குவதாலும் சத்த அநுபவ வடிவ கரணத்தின் வியாபாரவடிவமுமாம். உபமிதி வடிவ பிரமா பயனும். சாதிருசியத்தின் பிரத்தியக்ஷ ஞானம் சத்த அநுபவத்தால் ஜன்னிய சம்ஸ்காரத்தின் உத்போதகமாவதால் கேவலம் சஹகாரி மாத்திரமாகின்றது.

## கககரு. வேதாந்தியின் முறைப்படி உபமிதியின் வர்ணனம்.

வேதாந்த மதமுடையாரோ இது கூறுகின்றனர். ஆமாவெனப் பெயரிய விலங்கில் ஆவின் சாதிருசிய பிரத்தியக்ஷத்தின் பின் புருஷனுக்கு எமது "ஆ இவ்வாமா விலங்கின் சாதிருசியமாம்" என்பதான ஞானமுண்டாகின்றது. அந்த ஞானத்தினை உபமிதியென்பர். ஆமாவிலுள்ள ஆ சாதிருசியப் பிரத்தியக்ஷம் உபமிதியின் கரணமாவதால் உபமானப் பிரமாணமாம்.

## கககசு. உபமானத்தின் மூவித வேற்றுமை.

உபமானப் பிரமாணம் சாதிருசிய விசிஷ்ட பிண்ட ஞானம், வைதர்மிய விசிஷ்ட பிண்ட ஞானம், அசாதாரண விசிஷ்ட பிண்ட ஞானம் என்னும்

வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு ஆவின் சாதிருசிய விசிஷ்ட ஆமா பிண்ட ஞான வடிவ முதலாவது உபமானம் முன்னர் நிரூபிக்கப்பட்டது.

## கககூஎ. வைதர்மிய விசிஷ்ட பிண்ட ஞான வடிவ உபமானத்தின் வர்ணனம்.

ஆண்டு பர்வதத்தி விருப்பவனாகிய ஒருவன் ஒட்டகம் என்னும் பதத்தின் வாச்சிய அர்த்தத்தை அறியாதவனாகி ஒருவனோடு ஒட்டகம் எத்தகைத்தாமென வினவினனாக. பின்னர் ஒட்டகத்தை அறிந்தவன் பர்வத வாசியைக்குறித்து இவ்வாறாகிய வசனங் கூறினனாக. எங்ஙனம் குதிரையின் பின் புறம் சமானமா யிருக்குமோ அங்ஙனம் ஒட்டகத்தின் பின் புறம் சமானமன்றும், ஆனால் உயர்வாகின்றது. கழுத்தும் நீண்டிருக்கும், சரீரமும் பருவனாக விருக்கும், வலிவுள்ள தழைகளையும் புசிப்பதாகின்றது. என்பதான வசனத்தைக் கேட்டதாலும் குதிரையினும் ஒட்டகத்தின் உன்னதமாகிய பின்புறமுடைமை, நீண்டகழுத்துடைமை முதலிய விருத்த தர்மங்களின் நிச்சயத்தால் ஒரு காலத்தில் தெய்வச்செயலாய் ஒட்டகத்தைக் கண்ணுற்று ஒட்டகத்தில் முற்கூறிய சர்வ விருத்த தர்மத்தினை கண்டவனாகி வைதர்மிய விசிஷ்ட பிண்ட தரிசனத்தின்பின் அப்புருஷனுக்கு முற்கூறிய அதிதேச வாக்கியார்த்தத்தின் ஸ்மரண முண்டாகி ஒட்டகம் ஒட்டக பதத்தின் வாச்சியமா மென்னும் உபமிதி ஞானம் உண்டாகின்றது. இவ்வுபமிதியில் வைதர்மிய விசிஷ்ட ஒட்டக பிண்டத்தின் ஞானமே உபமானமாம்.

## கககூஅ. அசாதாரண தர்ம விசிஷ்ட பிண்ட ஞான வடிவ உபமானம்.

ஆண்டு யாதாமொருவன் காண்டாமிருக வாக்கிய அர்த்தத்தினை அறியாதவனாகி ஏனையோனோடு காண்டாமிருகம் எத்தகைத்தாமென வினவினனாக. பின்னர் நாசியின் நுனியில் ஒற்றைக் கோடுடைய மிருகம், காண்டாமிருகம் என்பதாக அறிந்தவன் கூறிய அவ்வசனத்தைக்கேட்பதாலும், அவ்வசனத்தின் அர்த்தத்தினை நிச்சயித்ததாலும் அப்புருஷன் ஒரு காலத்தில் தெய்வ கதியால் காண்டாமிருகத்தினைக் கண்ணுற்று அதனது நாசியின் நுனியில் ஒற்றைக் கோடுடைமை வடிவ அசாதாரண தர்மத்தினைக் கண்டபின் அப்புருஷனுக்கு முற்கூறிய அதிதேச வாக்கிய அர்த்தத்தின் ஸ்மரண முண்டாகி காண்டாமிருகம் காண்டாமிருக பதத்தின் வாக்கியமா மென்பதான உபமிதி யுண்டாகின்றது. இவ்வுபமிதியில் ஒற்றைக் கோடுடைமை வடிவ அசாதாரண தர்மத்தின் ஞானமே உபமானமாகின்றது. காண்டாமிருகத்தினை கட்க மிருக மென்பர்,

## கககூகூ. உபமானப் பிரமாணத்தினை அநுமானப் பிரமாணத்தில் அடக்குவோராகிய வைசேஷிகர்களின் மதம்.

வைசேஷிக சாத்திரமுடையார் உபமானப் பிரமாணத்தினை ஒப்பினாரில்லை. ஆனால் பிரத்தியக்ஷம், அநுமானமா மிரு பிரமாணங்களையே அங்கீகரிக்கின்றனர். வைசேஷிகர்கள் கூறிய உபமிதியினை அநுமிதியின் அடக்கமாகவே விரும்புகின்றனர். உபமிதியிடத்தில் வைசேஷிகர்கள் இவ்வாறாகிய

அநுமானஞ் செய்கின்றனர். "ഗവയപദം ഗവയകപ്രവൃത്തിനിമിത്തകം ഷ്ഷ്തി വൃത്ത്യംതരേവൃദ്ധൈയുക്ത്ര പ്രയോജ്യമാനത്വാത് യഥാഗോപദം ഗോത്വ പ്രവൃത്തിനിമിത്തകം" (இ-ள்.) ஆமாபதம் ஆமாத்தன்மைப் பிரவிர்த்தி நிமித்த மாம். அதாவது; ஆமாத்தன்மை தர்மம் பிரவிர்த்தியின் நிமித்தமாகிய ஆமா பதத்தினும் வேறான பதார்த்தத்தில் சக்தி வடிவ பிரவிர்த்தியின் அபாவ முடையதாகி முதியோரால் ஆமாவிடத்தே பிரயோகிக்கப் படுவதால். எங்ஙனம் ஆ பதத்திற்கு ஆ வடிவ அர்த்தத்தினும் வேறான அர்த்தத்தில் சக்தி யுண்டாவதில்லை. அங்ஙனமே முதியோர் ஆ பதத்தினை ஆ வடிவ அர்த்தத்தி லேயே பிரயோகிக்கின்றனர். ஆகையால் ஆ பதம் ஆத்தன்மை பிரவிர்த்தி நிமித்தமேயாகின்றது. அங்ஙனமே ஆமா பதத்திற்கும் ஆமாவடிவ அர்த்தத் தினும் வேறான எப்பதார்த்தத்திலும் சக்தி வடிவ விருத்தி இருப்பதன்று. அங்ஙனமே முதியோர்கள் ஆமா பதத்தினை ஆமா வடிவ அர்த்தத்திலேயே பிரயோகிக்கின்றனர். ஆகையால் ஆமா பதமும் ஆமாத்தன்மை பிரவிர்த்தி நிமித்தமேயாகும். என்பதான அநுமானத்தானேயே ஆமா பத வாச்சியத் தன்மை ஞானம் உண்டாய் விடுகின்றது. ஆகையால் உபமானத்தினை அநு மானத்தினும் வேறாக வொப்புவது பயனின்மையாம். இவ்வாற்றால் வைசே ஷிகர் உபமிதியினை அநுமிதியின் அடக்கமாக வொப்புகின்றனர்.

### கஉ00. வைசேஷிகரின் மத கண்டனம்.

கூறிய வைசேஷிகர் மதம் அசங்கதமாம். ஏனெனின் கூறிய வியாப்தி ஞானமின்றியும் புருஷனுக்கு முற்கூறிய உபமிதி அநுபவசித்தமாம். பதவாச் சியத்தன்மை ஞானத்தின்பின் புருஷனுக்கு "உபமிக்கின்றேன்" என்பதான உபமிதி ஞானத்தினை விஷயஞ் செய்யும் மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநு வியவசாய ஞானமே யுண்டாகின்றது. "அநுமிக்கின்றேன்" என்பதான அநுமிதி ஞானத்தினை விஷயஞ் செய்யும் மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநு வியவசாய ஞானம் உண்டாவதின்று. இக்காரணத்தானும் உபமிதியினை அநு மிதியினும் வேறாக வொப்ப வேண்டும். உபமான நிரூபணம் முற்றிற்று.

### கஉ0க. சத்தப் பிரமாண நிரூபணம்.

முன்னர் பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் வேறு பாட்டால் நால்வகை யதார்த்த அநுபவம் கூறப்பட்டது. அதனிடத்தும் பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி என்னும் மூன்றும் முன்னர் நிரூபிக்கப் பட்டது. இனி நான்காவது சாப்தீ பிரமா வடிவ யதார்த்த அநுபவத்தினை நிரூபிப்பான் வேண்டி முதலில் சாப்தீ பிரமாவின் கரணமாகிய சத்தப் பிரமா ணத்தினை நிரூபிப்பாம். ஆண்டு பிராசீன நையாயிகரோ அர்த்தத்தை யுண்டு பண்ணக்கூடிய சத்தத்தினையே சாப்தீ பிரமாவின் கரணமாக வொப்புகின்ற னர். நவீன நையாயிகரோ சத்தத்தின் ஞானத்தினையே சாப்தீ பிரமாவின் கரணமாக வொப்புகின்றனர். அவ்விரு மதங்களில் முதலில் பிராசீன மதத்தினை அநுசரித்து சத்தப் பிரமாணத்தின் லக்ஷணத்தைக் கூறுவாம். "ആപ്തവാക്യംശബ്ദപ്രമാണം" (இ-ள்.) ஆப்த புருஷனால் உச்சரிக்கப் படும் வாக்கியம் சத்தப்பிரமாண மெனப்படுகின்றது. ஆண்டு "പ്രയോഗ ഹേതുഭൂതാർത്ഥ യഥാർത്ഥജ്ഞാനവാനാപ്തഃ" (இ-ள்.) சத்தத்தினது பிரயோ

கத்திற்கு ஏதுவாகிய யதார்த்த ஞானமுடைய புருஷன் ஆப்தனெனப்படுவன். ஆண்டு அறிவுடையவன் முதலில் அவ்வவ் வாக்கியத்தின் அர்த்தத்தினை யதார்த்தமாக அறிந்தபின்னரே அவ்வவ் வாக்கியத்தின் உச்சாரணமாகிய பிரயோகத்தினைச் செய்கின்றான். ஆகையால் அவ்வவ்வாக்கியத்தின் பிரயோகத்தில் அவ்வவ் வாக்கியத்தினது அர்த்தத்தின் யதார்த்த ஞானம் ஏதுவாகின்றது. அந்த யதார்த்த ஞானமுடைய புருஷன் ஆப்தனெனப்படுவன். அத்தகைய ஆப்த புருஷனால் உச்சரிக்கப்படும் வாக்கியம் சத்தப் பிரமாணமெனப்படுகின்றது. எங்ஙனம்: "பயஸாஸிஂசதி" (இ-ள்.) ஜலத்தினால் மர முதலியவைகளின் வளர்ச்சி யுண்டாகின்றது. என்பதான வாக்கியமோ ஆப்த புருஷனால் உச்சரிக்கப்பட்டதாகையால் பிரமாண சத்தமெனப்படுகின்றது. "வஹ்நிநாஸிஂசதி" (இ-ள்.) வன்னியால் மர முதலியவைகளின் வளர்ச்சி யுண்டாகின்றது. என்பதான வசனத்தைக் கூறுவோனிடத்து ஆப்தத்தன்மை யின்றாம். ஆகையால் அவ்வாக்கியம் பிரமாண சத்தமெனப்படுவதில்லை. ஆண்டு "வாக்கியம் சத்தப் பிரமாணம்" என இம்மாத்திரமே சத்தப் பிரமாணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஆப்தன் கூறிய" என்னும் பதங் கூறாவிடின் ஆப்தனல்லாதவன் உச்சரிக்கப்பட்ட வாக்கியத்தில் அச்சத்தப் பிரமாணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திப்பான் வேண்டி அந்த லக்ஷணத்தில் அந்த வாக்கியத்திற்கு "ஆப்தன் கூறிய" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. அல்லது "ஆப்தன் கூறியது சத்தப்பிரமாணம்" என இம்மாத்திரமே சத்தப் பிரமாணத்தின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "வாக்கியம்" என்னும் பதங் கூறாவிடின் ஆப்த புருஷன் கூறிய "சபகடதஸ்" என்பதான இவை முதலிய சத்தத்தில் சத்தப் பிரமாணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "வாக்கியம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு கூறிய அச்சத்தத்தில் வாக்கிய வடிவத்தன்மை யின்றாம். ஆகையால் அச்சத்தத்தில் சத்தப் பிரமாணத்தின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

## கஉ0உ. வாக்கியத்தின் லக்ஷணம்.

"ஆகாஂக்ஷாயோக்³யதாஸத்திமத்பதஸமூஹ: வாக்யம்" (இ-ள்.) ஆகாங்க்ஷை, யோக்கியத்தன்மை, ஆசத்தி என்னும் மூன்றையுடைய பதங்களின் சமூஹம் வாக்கிய மெனப்படுகின்றது. எங்ஙனம்: "ஆவைக்கொணு" என்பதான இவ்வை முதலிய வசனம் ஆகாங்க்ஷை முதலிய பதங்களின் சமூஹமாவதால் வாக்கிய மெனப்படுகின்றது.

## கஉ0ங. பதத்தின் லக்ஷணம்.

"ஶக்தம் பதம்" (இ-ள்.) இப்பதத்தால் கேட்போனுக்கு இவ்வர்த்தத்தின் போத முண்டாகுக வென்பதான ஈசுவரனது இச்சா வடிவ சக்தி யுடையது பதமெனப்படுகின்றது. எங்ஙனம்: கடமுதலிய பதங்கள் போலும். இத்தகைய பதங்களின் சமூஹத்தினை வாக்கியமென்பர்.

### ௧உ0௪. லௌகிக, வைதிக வேறுபாட்டால் வாக்கியங்களின் இருவித வேற்றுமை.

அவ்வாக்கியம் லௌகிகம், வைதிகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு லௌகிக வாக்கியமோ ஆப்த புருஷனால் உச்சரிக்கப்படுவதாகியே பிரமாணமாகின்றது. மற்றெல்லாம் அப்பிரமாணமாகின்றது. வைதிக வாக்கியமோ சர்வஞ்ஞ ஈசுவரனால் கூறப்பட்ட தாகையால் யாவும் பிரமாணமாகின்றது.

### ௧உ0௫. வேதத்தில் பௌருஷேயத் தன்மையின் சாதகமாகிய அநுமானம்.

ஆண்டு "வெஃஃ வௌ௱ஷெயஃ வாகதஜாக ஊ௱தாதிவக" (இ-ள்.) வேதம் புருஷனால் செய்யப்பட்டதாம், வாக்கிய வடிவமாவதால், யாது யாது வாக்கிய வடிவமாகின்றதோ அதுவது புருஷனால் செய்யப்பட்டதேயாம். எங்ஙனம்: பாரத முதலியன வாக்கிய வடிவமாவதால் வியாசர் முதலிய புருஷர்களால் அருளிச்செய்யப்பட்டதேயாம். அங்ஙனமே வேதமும் வாக்கிய வடிவமாவதால் யாதாமோர் புருஷனால் அவசியம் அருளிச்செய்யப்பட்டதாகும். ஆண்டு வேதத்தின் கர்த்தாத்தன்மை எஜ்ஜீவனுக்கும் சம்பவியாது. பரிசேஷத்தால் சர்வஞ்ஞ ஈசுவரனையே வேதத்திற்குக் கர்த்தாவாக வொப்ப வேண்டியதாகும். இவ்வாறாக தோஷமின்றிய சர்வஞ்ஞ ஈசுவரனால் அருளிச் செய்யப்பட்டதாகையால் வேதவாக்கியம் யாவும் பிரமாணமாகின்றது.

### ௧உ0௬. ஸ்மிருதி, புராணம், இதிஹாச மிவை முதலியவைகள் வேதமூலகத் தன்மையாக பிரமாண மாதலின் சித்தி.

ஸ்மிருதி, புராணம், இதிஹாசம் இவை முதலிய சாத்திரங்களின் வாக்கியங்கட்கு வேதமூலகத்தன்மையானேயே பிரமாணத்தன்மை சம்பவிக்கின்றது. சுவதந்திரமாக பிரமாணத்தன்மை சம்பவிக்கிறதில்லை. எவ்வெவ் ஸ்மிருதி முதலிய வாக்கியங்கட்கு இக்காலத்தில் மூலமாகிய வேதங்களின் சுருதி பிராப்தமாவதின்றோ அவ்வவ் ஸ்மிருதி முதலிய வாக்கியங்கட்கு மூலமாகிய சுருதியுடைய வேதத்தின் சாகை சில இக்காலத்தில் மறைந்திருக்கின்றதென்பதாக கற்பிக்கப்படுகின்றது. ஈண்டு வேறு சாத்திரமுடையாரோர் இது கூறுகின்றனர். எவ்வெவ் ஸ்மிருதி முதலிய வாக்கியங்களில் வேதமூலகத்தன்மை காணக்கிடைக்கின்றதோ அவ்வவ்வாக்கியங்களிலேயே பிரமாணத்தன்மை யிருக்கின்றது. வேறு வாக்கியங்கட்கு பிரமாணத்தன்மையின்றாம். ஓர் கால் அவ்வேத மூலகத்தன்மையின் தரிசன மின்மையுளதாயினும் அவ்வாக்கியங்கட்கு பிரமாணத்தன்மை யொப்பின் நம்மனோர் முதலியவர்களால் கற்பிக்கப்படுவதாகிய வாக்கியங்கட்கும் பிரமாண வடிவத் தன்மை யுண்டாக வேண்டும். நம்மனோர் முதலியவர்களின் வாக்கியங்களின் மூலமாகிய வேதத்தின் சிலசாகை மறைந்திருக்கின்றதென்பதாகிய கற்பனை ஈண்டும் சம்பவிக்கின்றது. வேதமூலகத்தன்மை காணக்கிடைக்காத ஸ்மிருதி முதலிய வாக்கியங்களில் முனிகள் அருளியத்தன்மையே பிரமாண வடிவத்தன்மையில் சாதகமாமெனக் கூறுவதும் சம்பவியாது. ஏனெ

னின் முனிகள் அருளியத்தன்மை பிரமாணத்தன்மையின் சாதகமாகுமாயின் பிரஹஸ்பதி அருளிய நாஸ்திக சூத்திரங்களிலும் பிரமாணத்தன்மை சம்பவிக்க வேண்டும். அச்சூத்திரங்களின் பிரமாணத் தன்மையை ஆஸ்திகர்கள் அங்கீகரிப்பதின்று. முற்கூறிய ஆப்த வாக்கியங்கட்கும் பிரமாணத்தன்மைக் கூறுகின்றனர். சர்வ தேவதைகளின் ஆசாரியராகிய பிரஹஸ்பதியும் ஆப்தரேயாம். பிரஹஸ்பதியருளிய சூத்திரங்களிலும் பிரமாணத்தன்மையே பிராப்தமாகின்றது. என்றாலும் ஆப்த புருஷன் தர்ம புத்தியால் கூறிய வாக்கியமே பிரமாணமாகின்றது. பிரஹஸ்பதியானவர் அருளிய சூத்திரம் தர்ம புத்தியால் அருளியதன்று. ஆனால் அசுரர்கள் மோஹிக்கும்பொருட்டு அருளியதாம். ஆகையால் அச்சூத்திரங்களில் பிரமாணத்தன்மைச் சம்பவியாது.

### ௧௨0எ. விதி, மந்திரம், அர்த்தவாத மென்னும் வேறுபாட்டால் அவ்வாக்கியத்தின் மூவித வேற்றுமை.

கூறிய வாக்கியம் விதி, மந்திரம், அர்த்தவாதம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு "உஷஸாயநதா வொயகவுரதூய ஸஹி வூாஹாதவாகூயவியிஃ" (இ-ள்.) இஷ்டத்தின் சாதனத் தன்மையினை போதிக்கும் * பிரத்தியய பதத்தோடு பொருந்திய வாக்கியம் யாதோ அந்த வாக்கியம் விதியெனப்படுகின்றது. இஷ்ட சாதனத்தன்மையினை போதிக்கும் பிரத்தியயம் லிங், லோட், தவ்வியம், கிருத்பத்தியம் இவை முதலியவாக வியாகரண சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. எங்ஙனம்: ஜெூாகிஷொெெநஷமகொமொயஜெத" (இ-ள்.) மோக்ஷம் விரும்புவோன் ஜ்யோதிஷ்டோமமெனப் பெயரிய யாகத்தைச் செய்க. என்பதான வாக்கியத்தின் ஈற்றிலுள்ள லிங் பிரத்தியய ஜ்யோதிஷ்டோமமெனப் பெயரிய யாகத்தில் ஸ்வர்க்க வடிவ இஷ்டத்தின் சாதனத் தன்மையினை போதிக்கின்றது. அந்த லிங் பிரத்தியயத்தோடு பொருந்தியதாவதால் அவ்வாக்கியம் விதி வாக்கியமெனப்படுகின்றது.

### ௧௨0அ. விதி வாக்கியத்தின் லக்ஷணம்.

விதி வாக்கியமும் அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதி என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு "வூாணாமொணாவூாஷஸூ வூாவகொவியிஃ கவ-நிவ-வியிஃ" (இ-ள்.) எவ்வர்த்தம் விதி வாக்கியத்தினும் வேறான பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்களால் பிராப்தமாவதின்றோ அவ்வர்த்தத்தினை பிராப்தி செய்யும் விதி அபூர்வ விதியெனப்படுகின்றது: எங்ஙனம்: "மோக்ஷம் வேண்டுவோன் ஜ்யோதிஷ்டோமமெனப் பெயரிய யாகஞ் செய்க" என்பதான விதி அபூர்வ விதியாம். ஆண்டு சுவர்க்க வடிவ

* விகுதியினை பிரத்தியயமென்பர். அந்த பிரத்தியயம் லிங், லோட், தவ்வியம், கிருத்தியயம் இவை முதலிய வேறுபாட்டால் வியாகரண சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. ஈண்டு "மோக்ஷம் வேண்டுவோன் ஜோதிஷ்டோமமெனப் பெயரிய வேள்வியற்றுக" என்பதான வாக்கியத்தின் ஈற்றிலுள்ள லிங் பிரத்தியயமாகிய விகுதி வியங்கோள் விகுதியாம். ஏனைய விகுதிகளை வியாகரண சாத்திரப்படி யூகித்துக்கொள்க.

பயனது சாதன வடிவமாக ஜோதிஷ்டோமமென்னும் பெயரிய யாகம் விதி வாக்கியமின்றி வேறோர் பிரமாணத்தால் பிராப்தமாகிறதில்லை. ஆனால் விதி வாக்கியத்தாலேயே பிராப்தமாகின்றது. ஆகையால் கூறிய விதி அபூர்வ விதி யெனப்படுகின்றது.

கஉ0௯. நியம விதியின் லக்ஷணம்.

ஆண்டு "பக்ஷே ஸ்வப்ராப்தஸ்ய ப்ராபகோவிதிர் நியமோவிதி:" (இ-ள்.) பக்ஷத்தில் பிராப்தமாகாத அர்த்தத்தினை பிராப்தி செய்யும் விதி நியமவிதி யெனப்படுகின்றது. எங்ஙனம்: "வ்ரீஹீந் அவஹந்தி" (இ-ள்.) உமியினை நிவர்த்திக்கும் பொருட்டு நெற்களை உலக்கையால் குத்து என்பது நியம விதியாம். ஆண்டு நெற்களின் உமியின் நிவர்த்தி நகங்களால் கிள்ளுவதாலும், உலக்கையால் குத்துதல் முதலிய நாநா வுபாயங்களாலும் சித்தமாகின்றது. ஆண்டு புருஷன் உலக்கையால் உமிக்களை நீக்கும் உபாயங்களை விட்டு நகத் தால் நிவர்த்திப்பது முதலிய வேறுபாயங்களை கிரஹிப்பதற்கு ஆரம்பிக்கும் போது அப்பக்ஷத்தில் உலக்கையால் உமியின் நிவர்த்தி அப்பிராப்தமாகின் றது. இவ்வாறாக பக்ஷத்தில் அப்பிராப்தமாகிய உலக்கையால் உமியின் நிவர்த்தியினை கூறிய விதி விதித்திருக்கின்றது. அதாவது; அப்பிராப்த அம் சத்தினை பூர்த்தி செய்கின்றது. ஆகையால் கூறிய விதி நியமவிதி யெனப்படு கின்றது.

கஉக0. பரிசங்கியா விதியின் லக்ஷணம்.

ஆண்டு "உபயோச்ச யுகபத்ப்ராப்தௌ இதரவ்யாவ்ருத்தி பரோவிதி: பரிஸங்க்யாவிதி:" (இ-ள்.) ஒரே காலத்தில் இரு அர்த்தங்களின் பிராப்தி யுண்டாக இரு அர்த்தங்களில் ஒரு அர்த்தத்தை நிவர்த்திக்கும் விதி பரிசங் கியாவிதி யெனப்படுகின்றது. எங்ஙனம் "பஞ்ச பஞ்சநகா பக்ஷ்யா:" (இ-ள்.) ஐந்து நகங்களையுடைய ஐந்து ஜந்துவை புசிப்பாயாக. என்பதான விதி பரி சங்கியா விதி யெனப்படுகின்றது. ஆண்டு முயல், அளுங்கு, உடும்பு, முள்ளம் பன்றி, ஆமை என்னு மிவ்வைந்து ஜந்துக்கள் ஐந்து நகங்களை யுடையன வாகின்றன. அங்ஙனமே இவ்வைந்தினும் வேறான மனிதர், வானர முதலிய னவும் ஐந்து நகங்களை யுடையனவாம். இவ்விரண்டின் விருப்பால் புசிப்பதின் பிராப்தியுளதாகக் கூறிய இவ்விதி அவ்வைந்து நகங்களையுடைய முயல் முத லிய ஐந்து ஜந்துக்களினும் வேறான நர, வானராதி ஜந்துக்களை புசிப்பதின் நிவர்த்தியினையே போதிக்கின்றது. சிலர் முயல் முதலிய ஐந்து ஜந்துக்களை புசிப்பது விதியல்லவென்கின்றனர். எக்காரணத்தாலெனின் அம்முயல் முத லியவைகளை புசிப்பது உலகவர்கட்கு பின்னர் இச்சையால் பிராப்தமேயா மாகையால் கூறிய அவ்விதி பரிசங்கியா விதி யெனப்படுகின்றது.

கஉகக. மந்திர வாதத்தின் லக்ஷணம்.

"ப்ரயோக ஸமவேதார்த்த ஸ்மாரகா வாக்யவிசேஷா: மந்த்ரா:" (இ-ள்.) யாகாதி முதலிய கர்மங்களின் பிரயோகத்தில் உபயோகியாகிய திரவியம், தேவதை முதலிய அர்த்தங்கள் யாவையோ அவ்வர்த்தத்தினை

ஸ்மரிப்பதாகிய வாக்கிய விசேஷம் மந்திரமெனப்படுகின்றது. அம்மந்திரம் இருக் முதலிய வேதங்களில் பிரசித்தமாம்.

### ௧௨௧௨. அர்த்த வாதத்தின் லக்ஷணம்.

ஆண்டு "[illegible]" (இ-ள்.) விஹித அர்த்தத்தின் ஸ்துதியைச் செய்யும் வாக்கியம் அல்லது நிஷித்த அர்த்தத்தின் நிந்தையைச் செய்யும் வாக்கியம் அர்த்தவாதமெனப்படுகின்றது. அவ்வர்த்தவாதம் விஹிதஅர்த்தத்தின் ஸ்துதியைச்செய்வதாகி அதிகாரி புருஷனை துரிதமாகவே விஹித அர்த்தத்தில் பிரவிர்த்திக்கச் செய்கின்றது. அங்ஙனமே அர்த்தவாதம் நிஷித்த அர்த்தத்தினை நிந்திப்பதாகி புருஷனை துரிதமாகவே நிஷித்த அர்த்தத்தினின்றும் நிவர்த்திக்கின்றது.

### ௧௨௧௩. குண வாத முதலிய வேறுபாட்டால் அர்த்தவாதத்தின் மூவித வேற்றுமை.

அவ்வர்த்தவாதம் குணவாதம், அநுவாதம், பூதார்த்தவாதம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு "[illegible]" (இ-ள்) பிரத்தியக்ஷ முதலிய பிரமாணத்தினும் விருத்த அர்த்தத்தினை போதிக்கும் வாக்கியம் குணவாதமெனப்படுகின்றது. எங்ஙனம் "[illegible]" என்பதான வாக்கியம் குணவாதமாம். ஆண்டு இவ்வாக்கியம் காஷ்டமய ஸ்தம்ப வடிவ யூபத்தினையும், ஆதித்தனையும் அபேதமாக பிரதிபாதிக்கின்றது. அங்ஙனமே தர்ப்பைக்கட்டு வடிவ பிரஸ்த்தரத்தினையும், யஜமானனையும் அபேதமாக பிரதிபாதிக்கின்றது. அவ்விரண்டின் அபேதம் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் பாதிதமாம். அத்தகைய பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விருத்தமான அபேத அர்த்தத்தினை போதிப்பதாவதால் அவ்வாக்கியம் குணவாதமெனப்படுகின்றது.

### ௧௨௧௪. அநுவாத வடிவ அர்த்தவாத லக்ஷணம்.

"[illegible]" (இ-ள்.) பிரத்தியக்ஷ முதலிய பிரமாணத்தால் நிர்ணிக்கப்பட்ட அர்த்தம் யாதோ அவ்வர்த்தத்தினை போதிக்கும்வாக்கியம் அநுவாதமெனப்படுகின்றது. எங்ஙனம் "[illegible]" (இ-ள்.) வன்னிபனியை நிவர்த்திக்கும் உபாயமாம். என்பதான வாக்கியம் அநுவாதமெனப்படுகின்றது. ஆண்டு வன்னியில் பனியினது நிவர்த்தியின் உபாயத்தன்மை உலகர் யாவருக்கும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் நிச்சயமேயாம். அத்தகைய பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் நிர்ணிக்கப்பட்ட அர்த்தத்தினைபோதிப்பதாவதால் அவ்வாக்கியம் அநுவாதமெனப்படுகின்றது.

### ௧௨௧௫. பூதார்த்த வாத அர்த்த வாதத்தின் லக்ஷணம்.

ஆண்டு "[illegible]" (இ-ள்) அக்குணமிருக்குங்கால் அக்குணத்தினைபோதிக்கும் வாக்கியம் பூதார்த்தவாதமெனப்படுகின்றது. எங்ஙனம் "[illegible]" (இ-ள்.) இப்புருஷன்

மூப்பு அவஸ்தையிலும் சூரனும். என்பதான வாக்கியம் மூப்பு அவஸ்தையிலிருக்கும் சூரத்தன்மையினை கூறுகின்றது. ஆகையால் இவ்வாக்கியம் பூதார்த்த வாதமெனப்படுகின்றது. இவ்வாறாகக் கூறிய வாக்கிய வடிவ சத்தத்தினையே பிராசீன நையாயிகர் சாப்திப் பிரமாவின் கரணமாக வொப்புகின்றனர்.

## கஉகக. சத்த ஞானத்தினை சத்தப் பிரமாணமாக வொப்புவோராகிய நவீனர்களின் மதம்.

நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். சாப்திப் பிரமாவிற்கு முற்கூறிய சத்தம் கரணமன்றாம். ஆனால் அச்சத்த ஞானமே கரணமாம். ஏனெனின் ஓர்கால் சத்த வடிவ பதத்தினையே சாப்திப்பிரமாவின் கரணமாக வொப்பின் மௌனீ புருஷன் எழுதிய ஸ்லோகத்தால் உலகவருக்கு சாப்த போதம் உண்டாகாததாக வேண்டும். ஏனெனின் வாயினால் உச்சரிக்கப்பட்ட அர்த்தமுடைய ககார முதலிய எழுத்துக்களை பதமென்பர். அப்பதம் அம்மௌனீ யெழுதிய ஸ்லோகத்திலின்றாம். இவ்வாறாக இருமை முதலிய அர்த்தத்தினை போதிக்கும் விரல் காட்டல், கண் காட்டல் முதலிய சேஷ்டைகளாலும் உலகவருக்கு இருமை முதலிய அர்த்தத்தின் சாப்த போதமுண்டாகின்றது. அதுவும் உண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின் ஆண்டு பத வடிவ கரண மின்றாம். அல்லது வீணை முதலியவைகளின் துவனி வடிவ சத்தத்தில் பத வடிவத்தன்மையின் அபாவ மிருக்கினும் பதத்தன்மையின் மயக்கமுடைய புருஷனுக்கும் பதத்தின் ஞானத்தால் அச்சத்தம் போதமாகின்றது. அதுவும் உண்டாகாததாகவேண்டும். பதத்தின் ஞானத்தினை சத்தப் பிரமாவின் கரணமாக வொப்பின் முற்கூறிய தோஷம் சம்பவியாது. எக்காரணத்தாலெனின் அவ்விடத்திலும் மௌனி யெழுதிய யெழுத்துக்களைக் கண்டும், விஜாதீய விரல் காட்டல் முதலிய சேஷ்டையினைக் கண்டும் அவ்வவ்வர்த்தத்தின் வாசக பதத்தின் ஸ்மரணாதி வடிவ ஞானம் சம்பவிக்கின்றது. ஆகையால் பதத்தின் ஞானமே சாப்தி பிரமாவின் கரணமாக வொப்பப்பட வேண்டும். பத ஞானம் சிலவிடத்தோ சிராவணப் பிரத்தியக்ஷ வடிவமாகின்றது. சிலவிடத்து ஸ்மரணாதி வடிவமாகின்றது. அவ்வப்பதத்தின் ஞானமுண்டாகிய பின் புருஷனுக்கு அவ்வப்பதத்தினது அர்த்தத்தின் ஸ்மரணமுண்டாகின்றது. அவ்வர்த்தத்தின் ஸ்மரணம் பத ஞான வடிவ கரணத்தின் வியாபாரமாகின்றது. சாப்தி பிரமா பயக்கின்றது. இச்சாப்தி பிரமாவினை சாப்த போதமென்றும், வாக்கியார்த்த ஞான மென்றுங் கூறுவர். எங்ஙனம் "நீலக்குடம்" என்னும் வசனத்தை உச்சரிப்பதாக கேட்போனுக்கு முதலில் நீலபதத்தினதும், கடபதத்தினதும் சிராவணப்பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதன் பின் நீல பதத்தின் நீல குண விசிஷ்ட அர்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அங்ஙனமே அக்கட பதத்தின் கட வடிவ அர்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அதன் பின்னர் நீல குண விசிஷ்டத்தோடு அபின்னம் கடமாமென்பதான சாப்தபோத முண்டாகின்றது.

### கஉகஎ. சாப்திப் பிரமாவின் லக்ஷணம்.

ஆண்டு "பதார்த்தே பதார்த்தாந்தரஸம்ஸர்க்கவிஷயகம் ஜ்ஞானம் ஶாப்தபோத:" (இ-ள்.) ஒரு பதார்த்தத்தில் வேறு பதார்த்தத்தின் சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானம் யாதோ அந்த ஞானம் சாப்தபோதமெனப்படுகின்றது. எங்ஙனம்: "நீலக்குடம்" என்னும் வாக்கிய ஜன்னிய ஞானம் கட பதார்த்தத்தில் நீல பதார்த்தத்தின் அபேத சம்பந்தத்தினை விஷயஞ் செய்கின்றது. ஆகையால் அந்த ஞானம் சாப்த போதமெனப்படுகின்றது.

### கஉகஅ யதார்த்த ஸ்மரணத்தில் வியாபார வடிவத் தன்மையின் வர்ணனம்.

ஆண்டு ஒரு சம்பந்தி ஞானம் சம்ஸ்காரத்தின் உத்போத மூலமாக வேறு சம்பந்தியினை ஸ்மரிப்பதாகின்றதென்னும் வார்த்தை மூன்றாவது பரிச்சேதத்தில் சம்ஸ்கார குண நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அங்ஙனமே ஈண்டும் பத வடிவ ஒரு சம்பந்தியின் ஞானம் சம்ஸ்காரத்தின் உத்போத மூலமாக அர்த்த வடிவ வேறுசம்பந்தியினை ஸ்மரிப்பதாகின்றது. ஆகையால் அப்பதார்த்த ஸ்மரணம் அப்பத ஞானத்தா லுண்டாவதாலும், பத ஞானத்தாலுண்டாம் சாப்தபோதத்தினை உண்டாக்குவதாலும் வியாபார வடிவமாம்.

சங்கை:—பதத்தால் ஜன்னிய பதார்த்த ஸ்மரணத்தினை வியாபாரமாக வொப்பின் யாண்டு கட முதலிய பதங்களால் சமவாய சம்பந்தத்தால் ஆகாச வடிவ அர்த்தத்தின் ஸ்மரண முளதாகின்றதோ ஆண்டு அக்கட பதத்தால் ஆகாசத்தின் சாப்த போதமும் உண்டாக வேண்டும்.

சமாதானம்:—பதத்திற்கு எவ்வர்த்தத்தினோடு விருத்தி வடிவ சம்பந்தமிருக்கிறதோ அவ்விருத்தி வடிவ சம்பந்தத்தால் அவ்வப்பத ஜன்னிய அவ்வப்பதார்த்தத்தின் ஸ்மரண ஞானமே அப்பத ஞானத்தின் வியாபாரமாகின்றது. ஆண்டு கட முதலிய பதங்களின் விருத்தி வடிவ சம்பந்தம் கட முதலிய அர்த்தத்தினோடே யுண்டாகின்றது. ஆகாசத்தினோடு உண்டாகிறதில்லை. ஆனால் ஆகாச பதத்திற்கு ஆகாச வடிவ அர்த்தத்தினோடு விருத்தி வடிவ சம்பந்த முண்டாகின்றது. ஆகையால் கட முதலிய பதங்களால் ஆகாசத்தின் சாப்தபோத முண்டாவதின்று.

### கஉகக. பத, அர்த்த சம்பந்தமாகிய விருத்தியின் லக்ஷணம்

"ஶாப்தபோதஹேதுபதார்த்தோபஸ்தித்யனுகூல: பதபதார்த்தயோ: ஸம்பந்தோ வ்ருத்தி:" (இ-ள்.) சாப்த போதத்தின் ஏதுவாகிய பதார்த்தத்தின் உபஸ்திதி யெனக் கூறிய ஸ்மிருதியின் அநுகூல பதம், பதார்த்தமாமிரண்டின் சம்பந்தத்தினை விருத்தி யென்பர். எங்ஙனம்: கட முதலிய பதார்த்தங்களினது சாப்தபோதத்தின் ஏதுவாகிய கட முதலிய பதார்த்தங்களின் ஸ்மிருதியினை யுண்டாக்குவதாகிய கட முதலிய பதங்கட்கு கட முதலிய பதார்த்தங்களினோடுள்ள சக்தி முதலிய சம்பந்தம் விருத்தியெனப்படு

கின்றது. அந்த விருத்தி வடிவ சம்பந்தத்தின் ஞானம் எவனுக்கு முன் உண்டாயிருக்கின்றதோ அவனுக்கு கட முதலிய பதங்களைக்கேட்பதால் அக் கட முதலிய அர்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. எவனுக்கு விருத்தி வடிவ சம்பந்த ஞானம் முன் உண்டாகவில்லையோ அவனுக்கு கட முதலிய பதங்களின் சிராவண முண்டாயினும் கட முதலிய அர்த்தத்தின் ஸ்மிருதி யுண் டாகிறதில்லை. இவ்வாருக அன்வய வியதிரேகத்தால் விருத்தி ஞானம் பத ஜன்னிய பதார்த்தத்தின் ஸ்மிருதியில் உபயோகியாகின்றது.

## கஉஉ௦. சக்தி, லக்ஷணை என்னும் வேறுபாட்டால் விருத்தியின் இருவித வேற்றுமை

பதத்தின் விருத்தி சக்தி, லக்ஷணை என்னும் வேறுபாட்டால் இரு வகைத்தாம். அதனிடத்தும் முதலில் சக்திவிருத்தியினை நிரூபிப்பாம். "[Grantha text]" (இ-ள்) கட வடிவ அர்த்தம் கட முதலிய பதஜன்னிய ஞானத்தின் விஷயமாகுக. என்பதான கடாதி பதஜன்னிய ஞான விஷயத்தன்மை விசேஷணமாகவும், கடாதி அர்த் தம் விசேஷ்யமாகவும் போதமாகுக. என்பதான ஈசுவரனது இச்சையினை சக்தி யென்பர். ஈசுவரனது இச்சை வடிவ சக்தி கட முதலிய பதத்தால் நிரூ பிக்கப்படுவதாகின்றது. ஆகையால் நிரூபகத்தன்மை சம்பந்தத்தாலோ சக்தி கட முதலிய பதங்களி லிருக்கின்றது. விஷயத்தன்மைச் சம்பந்தத்தால் கட முதலிய அர்த்தங்களிலிருக்கின்றது. ஆண்டு சக்தியினை நிரூபிக்குந்தன்மையே கட முதலிய பதங்களில் சக்தத்தன்மையாம். விஷயத்தன்மை சம்பந்தத் தால் சக்தியின் ஆசிரயத்தன்மையே கட முதலிய அர்த்தங்களில் சக்கியத்தன் மையாம்.

## கஉஉக. சைத்திர, மைத்திர முதலிய பெயர்களில் ஈசுவரனது இச்சா வடிவ சக்தியினை வர்ணித்தல்.

சங்கை :—கூறிய ஈசுவரனது இச்சா வடிவ சக்தி கடமுதலிய வைதிக பதங்களிலோ சம்பவிக்கின்றது. என்றாலும் இக்காலத்தில் பிதா முதலியவர் கள் தமது புத்திரர் முதலியவர்கட்கு சைத்திரன், மைத்திரன் என்பதாக இடும் பெயர்களில் ஈசுவரனது இச்சை வடிவ சக்தி சம்பவியாது. ஆகையால் சைத்திர, மைத்திர முதலிய பெயர்களால் உலகவருக்கு சைத்திர, மைத்திர முதலிய அர்த்தத்தின் ஸ்மிருதி உண்டாகாததாக வேண்டும். அங்ஙனமே சாப்த போதமும் உண்டாகாததாக வேண்டும்.

சமாதானம் :—சைத்திர, மைத்திர முதலிய பெயர்களிலும் ஈசுவரனது இச்சா வடிவ சக்தி இருப்பதேயாகின்றது. ஏனெனின் "[Grantha text]" (இ-ள்.) ஏகாதசி தினத்தில் பிதா புத்திரனுக்கு சைத்திரன், மைத்திரன் என்பதாக பெயரிடக்கடவன். என்பதான சுருதியால் பிரதிபாதிக்கப்பட்ட ஈசுவரனது இச்சா வடிவ சக்தி சைத்திரன், மைத்திரன் முதலிய பெயர்களிலும் சாமான்னிய வடிவமாக இருப்பதேயாகின்றது. ஆகையால் உலகவருக்கு சைத்திர, மைத்திர முதலிய பதங்களால் அர்த்தத் தின் ஸ்மிருதியும், சாப்த போதமும் சம்பவிக்கின்றது.

## ௧௨௨௨. ஆதுனிகர் உபயோகிக்கும் சங்கேத பதங்களில் சக்தியை வொப்பாதவராகிய சாம்பிரதாயிகர்களின் மதம்.

ஈண்டு சாம்பிரதாயிக நையாயிகர்களோ இது கூறுகின்றனர். ஆதுனிக புருஷர்கள் அவ்வவ்வர்த்தத்தினை போதிக்கும் பொருட்டு உபயோகிக்கும் சங்கேத பதத்திலும், வையாகிரணிகளின் சங்கேத நதி, பெருக்கம் முதலிய பதங்களிலும் ஈசுவரனது இச்சா வடிவ சக்தி இருப்பதில்லை.

## ௧௨௨௩. இச்சா மாத்திரத்திற்கு சக்தியை யொப்புவோராகிய நவீனர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகர்களின் மதமோ இதுவாம். கேவலம் ஈசுவரனது இச்சையே சக்தியன்றும். ஆனால் இச்சா மாத்திரத்தினை சக்தியென்பர். ஆண்டு சில பதங்களிலோ ஈசுவரனது இச்சை வடிவ சக்தி இருக்கின்றது. சில பதங்களில் ஜீவனது இச்சா வடிவ சக்தி யிருக்கின்றது. ஆகையால் ஆதுனிக புருஷர்களின் சங்கேத பதங்களிலும் அவ்வப் புருஷனது இச்சா வடிவ சக்தி இருப்பதேயாகின்றது. ஓர்கால் ஈசுவரனது இச்சா மாத்திரத்தினையே சக்தியாக வொப்பின் ஆதுனிக புருஷனின் சங்கேத பதங்களால் உலகவருக்கு சாப்த போதம் உண்டாகாததாக வேண்டும். சங்கேத பதங்களாலும் சாப்த போதமோ அநுபவ சித்தமாம். ஆகையால் இச்சா மாத்திரத்திற்கே சக்தியொப்ப வேண்டும். ஈண்டு முற்கூறிய இரு மதங்களில் ககரீ முதலிய ஒழுங்கினையாகிய வழுவதனுடைய பதங்கட்கு கடமுதலிய அர்த்தங்களில் சக்தியுண்டாவதில்லை. ஆனால் சக்தியின் மயக்கத்தால் ககரீ முதலிய பதங்களால் உலகவருக்கு கட முதலிய அர்த்தங்களின் போதம் உண்டாகின்றது.

## ௧௨௨௪. யோகம், ரூடி, யோகரூடி, யௌகிகரூடி என்னும் வேறுபாட்டால் சக்தியின் நால்வகை வேற்றுமை.

அச்சக்தி *யோகம், ரூடி, யோகரூடி, யௌகிகரூடி என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். ஆண்டு " அவயவஶக்திர் யோகः " (இ-ள்.) பதத்தினை நிகழச் செய்யும் பகுதி, விகுதி வடிவ தனித்தனி அவயவத்தில் இருப்பதாகிய சக்தி யோகசக்தி யெனப்படுகின்றது. எங்ஙனம்: "பச்" என்னும் "தாது" வடிவ் பகுதிக்குப் பின் "அக" என்னும் விகுதி வர "பாசக" என்னும் சத்தம் சித்தமாகின்றது. பாசக பதத்தின் "பச்" என்னும் அவயவத்திற்கோ பாக (சமயல்) வடிவ அர்த்தத்தில் சக்தியிருக்கின்றது. "அக" என்னும் அவயவத்திற்கு கர்த்தாவில் சக்தியிருக்கின்றது. அவ்வவயவ சக்தி யோகசக்தி யெனப்படுகின்றது. அந்த யோகசக்தி மாத்திரத்தால் அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் பதம் யௌகிக பதமெனப்படுகின்றது. எங்ஙனம்: பாசகனென்னும் பதம் அவயவ சக்தி மாத்திரத்தால் சமைப்போனை பிரதிபாதிப்பதாகையால் யௌகிக பதமெனப்படுகின்றது.

---

* யோகம் - காரணம். ரூடி - இடுகுறி. யோக ரூடி - காரண இடுகுறி. யோகப் பொருளினும் வேறான பொருளி லிருக்கும் ரூடிசக்தி யௌகிக ரூடி சக்தியெனப்படும்.

## கஉஉடு. ரூடி சக்தியின் லக்ஷணமும், ரூடி பதத்தின் வர்ணனமும்.

ஆண்டு "ஸமுதாயஶக்தி꞉ ரூடி꞉" (இ-ள்) பதத்தின் பகுதி, விகுதி வடிவ் அவயவ சமுதாயத்திலிருக்கும் சக்தி ரூடிசக்தி யெனப்படுகின்றது. எங்ஙனம்: கோமண்டலம், கடம் இவை முதலிய பதங்களின் பகுதி, விகுதி வடிவ அவயவங்களின் சமுதாயத்தில் இருக்கும் சக்தி ரூடிசக்தி யெனப்படுகின்றது. ரூடிசக்தி மாத்திரத்தால் அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் பதம் ரூடிபத மெனப்படுகின்றது. எங்ஙனம்: கோமண்டல முதலிய பதங்கள் ரூடிசக்தி மாத்திரத்தால் கௌமண்டல முதலிய அர்த்தத்தினை பிரதிபாதிப்பதாவதால் ரூடிபத மெனப்படுகின்றது.

## கஉஉசு. யோகரூடி சக்தியின் லக்ஷணமும், யோகரூடி பதத்தின் வர்ணனமும்.

ஆண்டு "யோகார்த்தவ்ருத்திரூடி꞉ யோகரூடி꞉" (இ-ள்.) யோக சக்தியின் அர்த்தத்தில் இருப்பதாகிய ரூடிசக்தியினை யோகரூடி யென்பர். எங்ஙனம்: பங்கஜமென்னும் பதத்தில் யோகரூடிசக்தி யிருக்கின்றது. ஆண்டு சேற்றினின்றும் எதனது உற்பத்தி யுண்டாகின்றதோ அது பங்கஜ மெனப்படுகின்றது. சேற்றினின்றும் தாமரையின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால் பங்கஜ மென்னும் பெயர் தாமரைக்காம். இவ்வாறாக பங்கஜ பதத்தின் பகுதி, விகுதி வடிவ அவயவங்களில் சேற்றினின்றும் உற்பத்தியின் கர்த்தா வடிவமாக கமலத்தினை போதிப்பதாகிய யோகசக்தி யிருக்கின்றது. கமலத்தைப் போன்று அல்லி முதலியனவும் சேற்றினின்றும் உற்பத்தியாகின்றது. ஆகையால் பங்கஜ பதத்தின் அவயவ சக்தியால் அல்லி முதலியவைகளினது போதமும் உண்டாக வேண்டும். அங்ஙனமாவதின்று. ஆகையால் பங்கஜ பதத்தின் அவயவ சமுதாயத்தில் தாமரைத் தன்மை வடிவமாக கமலத்தினை போதிக்கும் ரூடிசக்தியு மிருக்கின்றது. இவ்வாறாக யோகார்த்த கமலத்தில் இருப்பதாகிய ரூடிசக்தி யோகரூடி யெனப்படுகின்றது. யோகரூடி சக்தியால் அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் பதம் யோகரூடி பதமெனப்படுகின்றது. எங்ஙனம்: பங்கஜ முதலிய பதங்கள் போலும். பங்கஜ பதம் யோகசக்தியாலோ சேற்றினின்றும் உத்பத்தியாகும் வடிவமாகவும், ரூடிசக்தியால் கமலத் தன்மை வடிவமாகவும் ஒரே கமல வடிவ அர்த்தத்தினை பிரதிபாதிப்பதாகின்றது. ஆகையால் பங்கஜ பதம் யோகரூடி பதமெனப்படுகின்றது. பங்கஜமெனினும், சேறெனினும் ஒக்கும்.

## கஉஉஎ. யௌகிகரூடி சக்தியின் லக்ஷணமும், யௌகிகரூடி பதத்தின் வர்ணனமும்.

"யோகார்த்தபின்னார்த்தவ்ருத்திரூடி꞉ யௌகிகரூடி꞉" (இ-ள்.) யோக சக்தியின் அர்த்தத்தினும் வேறான அர்த்தத்தில் இருப்பதாகிய ரூடி சக்தியினை யௌகிகரூடி யென்பர். எங்ஙனம்: உத்பிதமென்னும் பதத்தில் யௌகிகரூடி யிருக்கின்றது. ஆண்டு உத்பிதமென்னும் பதத்தின் அவயவங்களின் யோக சக்தியோ உத்பேதன கர்த்தா மரம், கொடி முதலிய அர்த்தத்திலிருக்கின்றது. அவ்வுத்பித பதத்தின் அவயவ சமுதாயத்தின் ரூடிசக்தியோ யாக விசேஷத்தி

யிருக்கின்றது. இவ்வாறாக உத்பித பதத்தின் யோக சக்தியும், சமுதாய சக்தியும் வெவ்வேறு அர்த்தத்திலிருக்கின்றது. ஒரு அர்த்தத்திலிருப்பதன்று. ஆகையால் உத்பித பதத்தின் சக்தி யௌகிகரூடி யெனப்படுகின்றது. அத்தகைய யௌகிகரூடி சக்தியால் வெவ்வேறு அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் பதம் யௌகிகரூடி யெனப்படுகின்றது. எங்ஙனம்: உத்பித பதம் போலும். ஆண்டு உத்பித பதம் யோக சக்தியால் மரம், கொடி முதலியவைகளை பிரதிபாதிப்பதாவதாலும், ரூடி சக்தியால் யாக விசேஷத்தினை பிரதிபாதிப்பதாவதாலும்யௌகிகரூடியெனப்படுகின்றது. உத்பிதமெனினும்,பிளப்பதெனினும் ஒக்கும். உத்பேதனமெனினும், பிளந்துகொண்டுவருவதெனினும் ஒக்கும்.

கஉ௪௩. மீமாஞ்சக, வியாகரண வேதாந்திகளின் மத வர்ணனம்.

வேறு மதங்களின் முறையாக சக்தியின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம். ஆண்டு மீமாஞ்சகரோ சக்தியினை இச்சை வடிவமாக வொப்புவதில்லை. சக்தியினை திரவிய முதலிய பதார்த்தங்களினும் வேறோர் பதார்த்தமாக வொப்புகின்றனர். சக்தியில் வேறு பதார்த்தத்தின் சித்தியும், சக்தியின் கண்டனமும் முன்னர் நான்காவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். வியாகரண மதத்திலும், பாதஞ்சல மதத்திலும் வாச்சிய, வாசக பாவத்தின் மூலமாகிய பத, அர்த்தத்தின் தாதாத்மிய சம்பந்தமே சக்தியாம். வேதாந்த மதத்திலோ சர்வ பதார்த்தத்தில் தமது தமது காரியத்தை செய்வதாகிய சாமர்த்தியமே சக்தியாம். எங்ஙனம்: தந்துவில் பட வடிவ காரியத்தினை செய்வதின் சாமர்த்திய வடிவ சக்தி யிருக்கின்றது. மண்ணில் கட வடிவ காரியத்தினை செய்வதின் சாமர்த்திய வடிவ சக்தி யிருக்கின்றது. அங்ஙனமே பதத்திலும் தனது அர்த்தத்தினை போதிக்கும் சாமர்த்தியமே சக்தியாம். ஆனால் இவ்வளவு பேதமிருக்கின்றது. பதத்தின் சக்தியோ ஞாதமாகி தனது காரியத்தினைச் செய்கின்றது. வேறு சக்தி அஞ்ஞாதமாகியும் தனது காரியத்தைச் செய்கின்றது. இம்மட்டும் சக்தியின் ஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது.

கஉ௪௪. ஜாதி, ஆகிருதி, வியக்திகளில் சக்தியை யொப்புவோராகிய நையாயிகர்களின் மத வர்ணனம்.

இனி சக்தியின் விஷயமாகிய சக்கியத்தினை நிரூபிப்பாம். "ஜாத்யாக்ருதிவ்யக்தயঃ பதார்த்தঃ" என்னும் நியாய சூத்திரத்தில் கௌதம முனிகள் ஜாதி, ஆகிருதி விசிஷ்ட வியக்தியில் பதத்தின் சக்தி கூறியிருக்கின்றனர். ஈண்டு அவயவத்தின் சையோகத்தினை ஆகிருதியென்பர். எங்ஙனம்: கடத்தன்மை ஜாதியும், கபால சையோக வடிவ ஆகிருதியுமா மிரண்டோடு விசிஷ்ட கட வியக்தியில் கட பதத்திற்கு சக்தி யிருக்கின்றது. இவ்வாறாக படத்தன்மை ஜாதியும், தந்து சையோக வடிவ ஆகிருதியுமா மிரண்டோடு விசிஷ்ட பட வியக்தியில் பட பதத்தின் சக்தி யிருக்கின்றது. ஆகையால் ஜாதி, ஆகிருதி விசிஷ்ட கடாதி வியக்தியே கடாதி பதங்களின் வாச்சிய அர்த்தமும், சக்கிய அர்த்தமுமாம். கட முதலிய பதங்களால் ஜாதி ஆகிருதி விசிஷ்ட கட முதலிய வியக்தியின் ஸ்மரணமே யுண்டாகின்றது. அங்ஙனமே சாப்த போதமு முண்டாகின்றது.

### கஉ௲௰. ஜாதி விசிஷ்ட வியக்தியில் சக்தியை யொப்புவோராகிய நவீன நையாயிகர்களின் மதம்.

சில நையாயிகர்களோ இது கூறுகின்றனர். கட முதலிய பதங்களால் அவயவ சையோக வடிவ ஆகிருதியின் ஸ்மரணம் உண்டாகாதாயினும் கடத் தன்மை முதலிய ஜாதி வடிவத்தால் கட முதலியவைகளின் சாப்த போத முண்டாய் விடுகின்றது ஆகையால் கட முதலிய பதங்கட்கு ஆகிருதியில் சக்தியின்றும். ஆனால் ஜாதி விசிஷ்ட வியக்தியிலேயே சக்தி யிருக்கின்றது. ஆகையால் கட பதத்திற்கோ கடத்தன்மை ஜாதி விசிஷ்ட கடம் சக்கியமாம். அங்ஙனமே பட பதத்திற்கு படத்தன்மை ஜாதி விசிஷ்ட படம் சக்கியமாம். அவ்வப்பதத்தால் அவ்வஜ்ஜாதி விசிஷ்ட வியக்தியின் ஸ்மரணமும், சாப்த போதமு முண்டாகின்றது.

### கஉ௲௰க. வியக்தி மாத்திரத்தில் சக்தியை யொப்புவோராகிய நவீனர்களின் மதம்.

நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். கட முதலிய பதங்கட்கு கேவலம் கட முதலிய வியக்தி மாத்திரத்திலேயே சக்தியிருக்கின்றது. கடத்வ முதலிய ஜாதியினும், அவயவ சையோக வடிவ ஆகிருதியினும் கட முதலிய பதங்கட்கு சக்தி யின்றும். ஆகையால் கட முதலிய பதங்கட்கு கேவலம் கட முதலிய வியக்தியே சக்கியமாம்.

சங்கை :—கடத்தன்மை முதலிய ஜாதியில் கட முதலிய பதங்கட்கு சக்தியை யொப்பாவிடின் கட முதலிய பதங்களால் கேட்போனுக்கு கடத் தன்மை முதலிய ஜாதியின் போதம் உண்டாகாததாகும். ஏனெனின் பதத்தினது அவாச்சிய அர்த்தத்தின் போதம் பதத்தின் லக்ஷணையின்றி உண்டாகிற தில்லை. ஓர் கால் ஜாதி வடிவ அவாச்சிய அர்த்தத்தின் போதம் பதத்தின் லக்ஷணையின்றி யுண்டாமெனவொப்பின் எங்ஙனம் கட பதத்தின் அவாச்சியம் கடத்தன்மை ஜாதியாமோ அங்ஙனமே பட முதலியனவும் அவாச்சியமா மாகையால் கட பதத்தால் கடத்தன்மை ஜாதியினைப் போன்று பட முதலிய வைகளின் போதமும் உண்டாக வேண்டும்.

சமாதானம் :—பதத்தின் வாச்சிய அர்த்தத்தில் இருப்பதும், வாச்சியத் தன்மையின் அவச்சேதகமுமாகிய ஜாதி யாதோ அஜ்ஜாதியினும் வேறான அவாச்சிய அர்த்தத்தின் போதம் பதத்தின் லக்ஷணையின்றி யுண்டாகிற தில்லை. வாச்சியத் தன்மையின் அவச்சேதக ஜாதியோ அவாச்சியமாயினும் அப் பதத்தால் பிரதீதமாகின்றது. ஆகையால் கட முதலிய பதங்களால் கடத் தன்மை முதலிய ஜாதியின் போதம் சம்பவிக்கின்றது. பட முதலியவை களின் போதம் சம்பவிக்கிறதில்லை. கடத்திலிருக்கும் பிருதிவித்தன்மை, திரவியத் தன்மை முதலிய ஜாதிகள் கட, படத்தின் வாச்சியத் தன்மையினும் அதிகதேசத்திலிருப்பனவாகையால் கட மாத்திரத்திலிருக்கும் கட பதத்தின் வாச்சியத்தன்மையின் அவச்சேதகமாகிறதில்லை. ஆகையால் கட பதத்தால் பிருதிவித்தன்மை முதலிய ஜாதிகளின் போத முண்டாகிறதில்லை. இவ்வாறாக கட முதலிய பதங்கட்கு கேவலம் கட முதலிய வியக்தியில் சக்தியினை அங்கீக ரிக்கினும் கடத்தன்மை முதலியவைகளின் போதம் சம்பவிக்கின்றது.

### ௧௨௩௨. ஜாதி, வியக்தி, சம்பந்தமாம் மூன்றில் சக்தியை யொப்புவோராகிய நையாயிகர்களின் மதம்.

சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். கட முதலிய பதங்களால் எங்ஙனம் ஜாதி விசிஷ்ட வியக்தியின் போதம் உண்டாகின்றதோ அங்ஙனமே கடத்வ முதலிய ஜாதியின் கட முதலிய வியக்தியிலுள்ள சமவாயசம்பந்தம் யாதோ அச்சம்பந்தத்தின் போதமும் உண்டாகின்றது. ஆகையால் ஜாதி, வியக்தி, சம்பந்தமா மூன்றில் கட முதலிய பதங்கட்கு சக்தியிருக்கின்றது.

### ௧௨௩௩. ஜாதியில் சக்தியை யொப்பும் மீமாஞ்சகர்களின் மதம்.

மீமாஞ்சகர்கள் மதமோ இதுவாம். கட முதலிய பதங்கட்கு கடத்தன்மை முதலிய ஜாதியில் சக்தி யிருக்கின்றது. கட முதலிய வியக்தியில் சக்தியின்றாம். ஓர் கால் கட முதலிய பதங்கட்கு கட முதலிய வியக்தியில் சக்தியை அங்கீகரிக்கின் அறியப்படாத கட முதலிய வியக்தியின் சாப்த போதம் கட முதலிய பதங்களால் உண்டாகாததாகும். அறியப்படாத வியக்தியின் சாப்த போதமும் உண்டாகின்றது. ஆகையால் கட முதலிய பதங்கட்கு கடத்தன்மை முதலிய ஜாதியே சக்கியமாம், வியக்தி சக்கியமன்றாம்.

சங்கை:—கட முதலிய பதங்கட்கு கட முதலிய வியக்தியில் சக்தி அங்கீகரியாவிடின் "கடத்தைக் கொணு" என்பதான இவைமுதலிய வாக்கியங்களால் கேட்போனுக்கு கட முதலிய வியக்தியின் போதம் உண்டாகாததாக வேண்டும். ஆனால் கடத்தன்மை முதலிய ஜாதி மாத்திரத்தின் போதமே யுண்டாக வேண்டும். கட வியக்தியின் போதமின்றி கட வியக்தியினைக் கொணர்தலும் சம்பவியாது.

சமாதானம்:—கட முதலிய பதங்களால் கடத்தன்மை முதலிய ஜாதி மாத்திரத்தின் சாப்த போதமே உண்டாகின்றது. கட முதலிய வியக்திகளின் சாப்த போதம் உண்டாவதின்று. ஆனால் கடத்தன்மை முதலிய ஜாதியின் சாப்த போதத்திற்குப் பின் கட முதலிய வியக்தியின் போதம் ஆக்ஷேபத்தாலுண்டாகின்றது.

### ௧௨௩௪. அநுமான வடிவ ஆக்ஷேபத்தால் வியக்தியின் போதத்தை யொப்பும் மீமாஞ்சகர்களின் மதம்.

சில மீமாஞ்சகரோ அவ்வாக்ஷேபசத்தத்தால் அநுமானப்பிரமாணத்தை கிரஹிக்கின்றனர். அதாவது; அநுமானப் பிரமாணத்தாலேயே கட முதலிய வியக்தியின் போத முண்டாகின்றது. அவ்வநுமானத்தின் வடிவ மிதுவாம். "வ்யக்த்யாஶ்ரயா ஜாதிர்ஜாதித்வாத்" (இ-ள்.) கடத்தன்மைஜாதி வியக்தியை ஆசிரயிப்பதாம், ஜாதி வடிவமாவதால், எதுவெது ஜாதியாகின்றதோ அதுவது வியக்தியை ஆசிரயிப்பதேயாம். எங்ஙனம்: படத்வம் ஜாதி வடிவமாவதால் பட வியக்தியினை ஆசிரயிப்பதேயாம். அங்ஙனமே கடத்வ ஜாதியும் ஜாதி வடிவமாவதால் கட வியக்தியினை ஆசிரயிப்பதேயாம். என்பதான அநுமான வடிவ ஆக்ஷேபத்தானேயே கடமுதலிய வியக்தியின் ஞானம் உண்டாகின்றது.

## கஉ௲௫. அர்த்தாபத்தி வடிவ ஆக்ஷேபத்தால் வியக்தியின் போதத்தை யொப்புவோராகிய பட்டபாதரின் மதம்.

பட்டபாதரோ அவ்வாக்ஷேபத்தால் அர்த்தாபத்தி பிரமாணத்தை கிரஹிக்கின்றனர். அதாவது; கட பதத்தால் கடத்தன்மை ஜாதியின் சாப்த போதத்திற்குப் பின் அர்த்தாபத்தி வடிவ ஆக்ஷேபத்தால் கட வியக்தியின் ஞான முண்டாகின்றது. ஆண்டு எங்ஙனம் பகலில் புசிக்காதவனாகிய புருஷனது சரீரத்தின் பருமை அப்புருஷனது இரவு புசிப்பின்றி சம்பவியாததாகி இரவிற் புசித்தலை கற்பிப்பதாகின்றதோ அங்ஙனமே கடத்தன்மை ஜாதியும் தனது கட வியக்தி வடிவ ஆசிரயமின்றி சம்பவியாததாகி கடவியக்தியினை கற்பிப்பதாகின்றது. இவ்வாறாக அர்த்தாபத்தி வடிவ ஆக்ஷேபத்தால் கட முதலிய வியக்தியின் ஞானம் உண்டாகின்றது.

## கஉ௲௬. சமான வித்திவேத்தியத்வ வடிவ ஆக்ஷேபத்தால் வியக்தியின் போதத்தை யொப்புவோராகிய குரு மதம்.

குரு மதத்தரோ அவ்வாக்ஷேபத்தால் சமான வித்திவேத்தியத்தன்மையினை கிரஹிக்கின்றனர். ஆண்டு ஜாதி, வியக்தியா மிரண்டில் ஒரு ஞானத்தின் விஷயத்தன்மையினை சமான வித்திவேத்தியத்வ மென்பர். கருத்திதுவாம்; எவ்வெப்புத்தி ஜாதியினை விஷயஞ் செய்கின்றதோ அவ்வப்புத்தி ஜாதியின் ஆசிரயமாகிய வியக்தியினையும் அவசியமாய் விஷயஞ் செய்கின்றது. வியக்தியினை விட்டு அப்புத்தி கேவலம் ஜாதி மாத்திரத்தினையும் விஷயஞ் செய்வதின்று. எங்ஙனம்: "இது கடம்" என்பதான பிரத்தியக்ஷ ஞானம் கடத்தன்மை ஜாதியினை விஷயஞ் செய்வதாகி கடத்தன்மை ஜாதியின் ஆசிரயமாகிய கட வியக்தியினையும் விஷயஞ் செய்கின்றது. அங்ஙனமே கட பதத்தால் உண்டாகிய சாப்த போதமும் கடத்தன்மை ஜாதியினை விஷயஞ் செய்வதாகி கட வியக்தியினையும் விஷயஞ் செய்கின்றது. இவ்வாறாக சமான வித்திவேத்தியத் தன்மை வடிவ ஆக்ஷேபத்தானேயே கட முதலிய வியக்தியின் போத முண்டாகின்றது.

## கஉ௲௭. லக்ஷணையால் வியக்தியின் போதத்தை ஒப்புவோராகிய மண்டன மிசிரரின் மதம்.

ஈண்டு மண்டன மிசிரரின் மதமோ இதுவாம். கட முதலிய பதங்கட்கு கடத்தன்மை ஜாதியிலோ சக்தி யிருக்கின்றது. கட முதலிய வியக்தியில் லக்ஷணை யிருக்கின்றது. ஆண்டு "கடத்தைக்கொணா" என்பதான வசனத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு கட பதத்தால் கடத்தன்மை ஜாதியின் போத முண்டாகின்றது. ஆனால் கடத்தன்மை ஜாதியினை கட வியக்தியின்றி கொணர்தல் சம்பவியாது. கூறுவோனுக்கு கட வியக்தியினை கொணர்தலிற் கருத்தாம். கடத்தன்மை ஜாதியினை கொணர்தலிற் கருத்தின்றாம். அக்கருத்து சம்பவியாமையால் கேட்போன் கட வியக்தியில் கட பதத்திற்கு லக்ஷணை செய்கின்றான். ஆகையால் கேட்போனுக்கு ஒரே கட பதத்தால் சக்தி விருத்தியினாலோ கடத்தன்மை ஜாதியின் போதமும், லக்ஷணா விருத்தியினால் கட வியக்தியின் போதமும் சம்பவிக்கின்றது.

## கஉருஅ. ஜாதியில் குப்ஜ சக்தியை யோப்புவோராகிய வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ கட முதலிய பதங்கட்கு கடத்தன்மை முதலிய ஜாதியில் குப்ஜசக்தியை யொப்புகின்றனர். அவர்கள்கருத்திதுவாம். கடபதத்திற்கு கடத்வ ஜாதி, கட வியக்தியா மிரண்டிலும் சக்தி யிருக்கின்றது. ஆனால் ஜாதியிலுள்ள சக்தியோ "கடத்வம் கடபத சக்கியம்" என்பதான ஞானத்தின் விஷயமாகியே கடத்தன்மை ஜாதி விசிஷ்ட கட வியக்தியினது ஸ்மரணத்திற்கும், சாப்த போதத்திற்கும் காரணமாகின்றது. கட வியக்தியிலுள்ள சக்தியோ அறியப்பட்ட பதார்த்த ஸ்மரணத்திலும், சாப்த போதத்திலும் காரணமாவதின்று. ஆனால் வியக்தியிலுள்ள சக்தி ஸ்வரூபத்தானேயே பதார்த்த ஸ்மரணத்திலும், சாப்த போதத்திலும் காரணமாகின்றது. ஓர்கால் கட முதலிய வியக்தியில் கட முதலிய பதங்களின் சக்தியை யொப்பாவிடின் எங்ஙனம் கட பதத்தால் கட வடிவ அசக்கிய அர்த்தத்தின் போத முண்டாகின்றதோ அங்ஙனமே பட முதலிய அசக்கிய அர்த்தங்களின் போதமும் உண்டாகவேண்டும். ஆகையால் கட பதத்திற்கு அக்கட வியக்தியிலும் சக்தி யொப்ப வேண்டும்.

## கஉருகூ. இதரான்விதத்தில் சக்தியை வோப்புவோராகிய பட்டபாதரின் மதம்.

ஈண்டு பட்டபாதரின் மத மிதுவாம். எங்ஙனம் கட முதலிய பதார்த்தங்களின் விளக்கம் சாப்த போதத்தில் உண்டாகின்றதோ அங்ஙனமே கட முதலிய பதார்த்தங்களின் சம்பந்தத்தின் விளக்கமும் சாப்த போதத்தில் உண்டாகின்றது. எங்ஙனம்: "நீலக்குடம்" என்பதான வாக்கியத்தால் கட பதார்த்தத்தில் நீல பதார்த்தத்தின் அபேத சம்பந்தம் பிரதீதமாகின்றது. அவ்வவ்வஸ்துவை விஷயஞ் செய்யும் சாப்த போதத்தைக் குறித்து பதத்தின் சக்தி முதலிய விருத்தி ஞான ஜன்னிய அவ்வவ் வஸ்துவின் ஸ்மிருதியே காரணமாகின்றது. ஆகையால் சம்பந்தத்தின் போதத்தின் பொருட்டு சம்பந்தத்திலும் கட முதலிய பதங்களின் சக்தி யொப்பவேண்டும். ஓர்கால் சம்பந்தத்தில் கட முதலிய பதங்களின் சக்தி யொப்பாவிடின் சாப்த போதத்தில் சம்பந்தத்தின் விளக்கமே யுண்டாகாததாகும். ஆகையால் கட முதலிய பதங்கட்கு இதரான்வித கட முதலிய வியக்தியில் சக்தி யிருக்கின்றது. அதாவது; வேறு பதார்த்தத்தின் அன்வய வடிவ சம்பந்தமுடைய கட முதலிய வியக்தியில் கட முதலிய பதங்களின் சக்தி யிருக்கின்றது. "ஐதாநீமேதாவபோடவடிவாவ்ஃ" என்பதான ஞானமே இதரான்வித கடத்தின் சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது.

## கஉசா. காரியான்விதத்தில் சக்தியை வோப்புவோராகிய பிரபாகரரின் மத வர்ணனம்.

ஈண்டு பிரபாகரர் மதமிதுவாம். குழந்தைக்கு முதலில் முதியோர் வியவஹாரத்தால் முயற்சி சாத்தியமாகிய கொணர்தலாதி வடிவ காரிய அன்விதம் கட முதலியவைகளில் கட முதலிய பதங்களினது சக்தியின் ஞான முண்டா

கின்றது. ஆகையால் காரிய அன்வித கட முதலியவைகளிலேயே கட முதலிய பதங்கட்கு சக்தி யிருக்கின்றது. ஆகையால் "கடத்தைக்கொணு" என்பதான இவை முதலிய காரிய வாக்கியங்களாலேயே கட முதலியவைகளின் சாப்த போதமுண்டாகின்றது. "ஸந்தக்வெடஃ" என்பதான இவை முதலிய சித்த வாக்கியத்தால் கட முதலியவைகளின் சாப்த போத முண்டாகிறதில்லை. ஈண்டு கருத்தி துவாம்; அநுபாவிகம், ஸ்மாரக மென்னும் வேறுபாட்டால் சக்தி இருவகைத்தாம். ஆண்டு வஸ்துவின் சாப்தபோத மாத்திரத்திற்கு ஏதுவாகி வஸ்துவின் ஸ்மரணத்திற்கு ஏதுவாகாத சக்தி அநுபாவிக சக்தி யெனப்படு கின்றது. வஸ்துவின் ஸ்மரணத்திற்கு ஏதுவாகும் சக்தி ஸ்மாரக சக்தி யெனப்படுகின்றது. ஆண்டு கட முதலிய பதங்கட்கு காரிய அன்வித கட முதலியவைகளிலோ அநுபாவிக சக்தி யிருக்கின்றது. கடத்தன்மை முதலிய ஜாதியில் ஸ்மாரக சக்தி யிருக்கின்றது. ஆகையால் கட முதலிய பதங்களில் கார்ியத்தன்மையின் சாப்த போதத்திற்கு ஏதுத்தன்மை யுளதாயினும் ஸ்மாரக சக்தியின் அபாவத்தால் கட முதலிய பதங்களால் காரியத் தன்மையின் ஸ்மரணம் உண்டாவதின்று. ஆனால் வியங்கோள் முதலிய விதி விகுதியி னாலேயே காரியத் தன்மையின் ஸ்மரண முண்டாகின்றது. அக்காரியத் தன்மையின் வாசக விகுதி யிருக்கும் வாக்கியத்தாலேயே சாப்த போத முண்டாகின்றது. எங்ஙனம்: "கடத்தைக்கொணு" என்பதான இவை முதலிய லௌகிக வாக்கியங்களும், "மோக்ஷம் விரும்புவோன் எரியோம்புக" என்ப தான இவை முதலிய வைதிக வாக்கியங்களும் விதி விகுதியோடு பொருந் தியதாம். ஆகையால் அவ்வாக்கியங்களால் சாப்த போதம் உண்டாகின்றது. "பூதலம் கடம்" என்பதான இவை முதலிய லௌகிக வாக்கியங்களும், "தத்வமஸி" என்பதான இவை முதலிய வைதிக வாக்கியங்களும் காரியத் தன்மையின் வாசக வியங்கோள் விகுதி முதலியவைகளோடு பொருந்திய தன்றும். ஆகையால் சித்த வாக்கியத்தால் சாப்தபோத முண்டாவதின்று. சக்தியின் நிரூபணத்தில் எத்தனை மதங்களை முன்னங் கூறினோமோ அவைகளின் கண்டனம் நியாயநூற்களில் எழுதப்பட்டிருக்கின்றது. என்றாலும், நூல் விரியு மென்னும் அச்சத்தால் ஈண்டெழுதப்படவில்லை; ஆனால் கேவலம் அவ்வாதி களின் மதமாத்திரத்தைக் குறிப்பித்தனம். இம்மட்டும் சக்தி விருத்தியினை நிரூ பித்தனம். இனி சக்தியின் ஞான முண்டாகும் உபாயங்களைக் கூறுவாம்.

### கஉ௪௧. சக்தியினை கிரஹிக்கும் வியாகரண முதலிய எண்வகை உபாயங்களின் வர்ணனம்.

சக்தி ஞானத்திற்கு முதியோர் இவ்வுபாயங் கூறுகின்றனர். ஆண்டு சுலோகம் "ஶக்திக்ரஹம் வ்யாகரணோபமாந கோஶாப்தவாக்யாத்³ வ்யவஹாரதஶ்ச। வாக்யஸ்ய ஶேஷாத்³ விவ்ருதேர்வத³ந்தி ஸாந்நித்⁴யத꞉ ஸித்³த⁴பத³ஸ்ய வ்ருத்³தா⁴꞉" (இ-ள்.) வியாகரணம், உபமானம், கோசம், ஆப்தவாக்கியம், வியவஹாரம், வாக்கியசேஷம், விவரணம், சித்தபதத்தின் சமீபத் தன்மை என்பதான எண் வகை உபாயங்களால் கூறிய சக்தியின் ஞானம் உண்டாகின்றதெனை முதியோர் கூறுகின்றனர். இனி இவ்வெண்வகை உபாயங்களின் ஸ்வரூபத்தினை முறை யாக வர்ணிப்பாம்.

### கஉசஉ. வியாகரணத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

ஆண்டு தாது (மூலம்) பகுதி, விகுதி முதலியவைகளின் சக்தி ஞானம் வியாகரணத்தா லுண்டாகின்றது. எங்ஙனம்: "ஹ-ஙுஸத்தாயாம்" என்னும் வியாகரண சூத்திரத்தினுல் பூ தாதுவிற்கு சத்தா அர்த்தத்தில் சக்தி அறியப் படுவதாகின்றது. "வத-ஙீமாநெயடீ" என்னும் வியாகரண சூத்திரத்தால் லட் (நிகழ்கால) விகுதிக்கு வர்த்தமான காலத்தில் சக்தி அறியப்படுவதாகின் றது. ஆனல் சில கௌரவ முதலிய தோஷங்கள் பிராப்தியாகுமிடத்தில் வியாகரணத்தால் நிச்சயஞ் செய்வதாயினும் சக்தி பரித்தியாகஞ் செய்யப் படுவதாகின்றது. எங்ஙனம்: "செவதத்தவெவதி" என்னும் வாக்கியத்தின் ஈற்றிலுள்ள திப் (திரிசொல்) ஆக்கியாத விகுதிக்கு வையாகரணிகள் கர்த்தாவிடத்து சக்தி யொப்புகின்றனர். ஆக்கியாதார்த்த கர்த்தாவிற்கு சைத்திர புருஷனேடு அபேத வடிவமாக அன்வயமுண்டாகின்றது. அதா வது; பாக கர்த்தாவோடு அபின்னம் சைத்திரனு மென்னும் போதம் அவர் களின் மதத்தில் வாக்கியத்தா லுண்டாகின்றது. ஆனல் இவ்வையாகரணிகள் மதத்தில் கௌரவ மிருக்கின்றது. ஏனெனின் ஆக்கியாதத்திற்கு கர்த்தா விடத்து சக்தி யொப்பின் ஆக்கியாதபதத்தின் சக்கியத்தன்மை அவச்சேதகம் முயற்சியாகும். அம்முயற்சிகள் நாநாவாம். ஆக்கியாதத்திற்கு முயற்சியில் சக்தி யொப்பின் சக்கியத்தன்மையின் அவச்சேதகம் முயற்சித்தன்மை ஜாதி யாகும். அம்முயற்சித் தன்மை ஜாதி ஒன்ரும். ஆகையால் வையாகரணிகள் மதத்தில் கௌரவ தோஷத்தைக்கண்டு நையாயிகர்கள் லாகவமாக ஆக்கியா தத்திற்கு முயற்சியிலேயே சக்தி யொப்புகின்றனர். ஆக்கியாதார்த்த முயற் சிக்கு சைத்திர புருஷனிடத்து ஆசிரயத்தன்மை சம்பந்தத்தால் அன்வய முண்டாகின்றது. அதாவது; "பாகாநுகூலகூத்யாநு செவதத்ஃ" என்பதான வாக்கியத்தால் சாப்த போத முண்டாகின்றது.

### கஉசங. உபமானத்தால் சக்தியினை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்தில் உபமானத்தாலும் பதத்தினது சக்தியின் ஞான முண்டா கின்றது. எங்ஙனம்: ஆமா முதலிய பதங்கட்கு ஆமாவாதி வடிவ அர்த்தத்தில் சக்தி உபமானத்தால் கிராஹியமாகின்றது. உபமானத்தால் சக்தி கிராஹிய மாகும் வகையினை முன்னர் உபமான நிரூபணத்திற் கூறி வந்துள்ளோம்.

### கஉசச. கோசத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து கோசத்தாலும் பதங்களினது சக்தியின் ஞானம் உண்டா கின்றது. எங்ஙனம்: "கெவஶுகஃதெஹரம்வ லம்வொடிர ஜாநநாஃ" என்பதான கோசத்தின் வசனத்தால் ஏகதந்தம், ஹேரம்பம், லம்போதரம், கஜாநநம் என்னும் பதங்களின் சக்தி கணேசரிடத்து நிச்சயமாகின்றது. இவ்வா ருக கோசத்தால் வேறு அனேகபதார்த்தங்களின் சக்திஞானமு முண்டாகின் றது. அது அமர கோச முதலியவைகளில் பிரசித்தமாம். ஆனல் சிலவிடத் தில் கோசத்தால் கிராஹியமாயினும் சக்தியினை கௌரவ தோஷத்தால் தியா கஞ் செய்கின்றனர். எங்ஙனம்: "ந-ஙெணமா-ஙூாஷயஃ வ-ஙவிந-ஙணிவிம்ஶா

ஷு-ட-தஜூதி” (இ-ள்.) வெண்மை, கருமை முதலிய பதங்கள் வெண்மை முதலிய வடிவ குணங்களின் வாசகமாகும்போது நியமமாக புல்லிங்கமே (ஆண்பாலே) யாகின்றது. வெண்மை, கருமை முதலிய பதங்கள் வெண்மை, கருமை முதலிய வடிவ குணமுடைய குணி திரவியத்தின் வாசகமாகும்போது குணி திரவியத்தின் சமான லிங்கமே (பாற்பொதுவே) யாகின்றது. என்பதான கோச வசனமானது வெண்மை, கருமை முதலிய பதங்கட்கு குணம், குணியா மிரண்டில் சக்தி யிருப்பதாகக் கூறுகின்றது. என்றாலும் வெண்மை, கருமை முதலிய பதங்கட்கு குணி திரவியத்தில் சக்தியை யொப்புவதில் கௌரவ மிருக்கின்றது. அதாவது; வெண்மைத்வம், கருமைத்வ மிவை முதலிய குரு தர்மங்களில் வெண்மை முதலிய பதங்கட்கு சக்தியத்தன்மையின் அவச்சேத கத்தன்மை யொப்புவதாகின்றது. வெண்மை முதலிய பதங்கட்கு வெண்மை முதலிய குணங்களில் சக்தி யொப்பின் வெண்மை முதலிய பதங்கட்கு சக்தி யத்தன்மையின் அவச்சேதகத்தன்மை வெண்மைத்தன்மை, கருமைத்தன்மை முதலிய ஜாதிகளில் ஒப்புவதாகின்றது. ஆண்டு வெண்மைத்தன்மை, கருமைத் தன்மை முதலிய தர்மங்களின் அபேக்ஷையால் வெண்மைத்தன்மை, கருமைத் தன்மை முதலிய ஜாதிகளில் வெண்மை, கருமை முதலிய பதங்கட்கு சக்தியத் தன்மையின் அவச்சேதகத் தன்மை யொப்புவதில் லாகவ மிருக்கின்றது. ஆகையால் கௌரவ தோஷத்தைக்கண்டு வெண்மை, கருமை முதலிய பதங் கட்கு குணி திரவியங்களில் சக்தியின் பரித்தியாகத்தால் நையாயிகர்கள் லாகவமாக வெண்மை முதலியவைகட்கு கேவலம் வெண்மை, கருமை முதலிய குணமாத்திரத்திலேயே சக்தி அங்கீகரிக்கின்றனர். “நீலக் குடம்” என்பதான இவை முதலிய வாக்கியங்களில் கருமை முதலிய பதங்களால் கருமை முதலிய குணங்களுடைய குட முதலிய திரவியங்களின் போத முண் டாகின்றது. அது நீல முதலிய பதங்களின் நிரூடலக்ஷணையா லுண்டாகின்றது. ஆண்டு அநாதி தாத்பரியத்தின் விஷயமாகிய அர்த்தத்தில் பதத்தின் லக்ஷணை யினை நிரூட லக்ஷணை யென்பர்.

கஉ௲சரு ஆப்த புருஷனது வசனத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து ஆப்த புருஷனது வசனத்தாலும் பதத்தின் சக்தி ஞான முண்டாகின்றது. எங்ஙனம்: “கொகிலஃ பிகஃஉவாஷ்யஃ” என்பதான ஆப்த புருஷன் வசனத்தால் குயில் பதத்தின் சக்தி கோகிலத்தில் அறியப்படு கின்றது. “நிரூபஃ ஸ்பர்ஶவாநவாயுஃ” என்பதான ஆப்த புருஷனது வசனத்தால் உருவமின்றி பரிசமுடைய திரவியத்தில் வாயு பதத்தின் சக்தி அறியப்படுகின்றது. “நிஃஸ்பர்ஶமூர்த்தம் மநஃ” என்பதான ஆப்த வசனத் தால் பரிசமின்றிய மூர்த்தத் திரவியத்தில் மன பதத்தின் சக்தி அறியப்படு கின்றது.

கஉ௲சசு. வியவஹாரத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து வியவஹாரத்தாலும் பதங்களின் சக்தியின் ஞான முண் டாகின்றது. எங்ஙனம்: யஜமான் ஏவலாளனைக் குறித்து “ஆவைக்கொணு” என்பதான வாச்சியத்தைக் கூறினனுக. அவ்வாச்சியத்தைக் கேட்ட ஏவ

லாளன் ஆவினைக் கொணர்ந்த பின்னர் "ஆவைக்கட்டு" என்பதாக யஜமான் கூறக்கேட்ட ஏவலாளன் ஆவினைக் கட்டிய பின்னர் "குதிரையைக் கொணு" என்பதாக யஜமான் கூறக்கேட்ட ஏவலாளன் குதிரையை கொணர்ந்தனனாக. இவ்வாறாய வியவஹாரத்தினைக் கண்ட சக்தி ஞானமிலா இளையோனுக்கு ஆ, குதிரை முதலிய அர்த்தங்களில் ஆ, குதிரை முதலிய பதங்களின் சக்தி ஞான முண்டாகின்றது.

## கஉசஎ. வாக்கிய விசேஷத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து வாக்கிய விசேஷத்தாலும் பதங்களின் சக்தி ஞான முண்டாகின்றது. எங்ஙனம்: "யவமயஶ்சருர்பவதி" என்பதான வசனத்திலுள்ள யவபதத்தினைக் கேட்ட புருஷனுக்கு இவ்வாறாக சந்தேகம் உண்டாகின்றது. ஆரிய புருஷனோ நீண்ட வாலோடுங் கூடிய ஒருவித தான்னியத்தினை யவமென்பன். மிலேச்ச உலகரோ கங்குவெனப் பெயரிய ஒருவித தான்னியத்தினை யவமென்பர். ஆகையால் கூறிய வாக்கியத்திலுள்ள யவபதம் நீண்ட வாலோடுங் கூடிய தான்னியத்தின் வாசகமா? அல்லது கங்குவெனப் பெயரிய தான்னிய வாசகமா?. என்பதான சந்தேகத்தின் பின் புருஷனுக்கு வாக்கிய சேஷத்தால் யவபதத்திற்கு நீண்ட வாலோடுங் கூடிய தான்னியத்தில் சக்தியின் ஞான முண்டாகின்றது. அவ்வாக்கிய சேஷ மிதுவாம். "வஸந்தே ஸர்வஸஸ்யாநாம் ஜாயதே பத்ரஶாதநம் । மோதமாநாஶ்ச திஷ்டந்தி யவா: கணிஶஶாலிந:" (இ-ள்.) வசந்த காலத்தில் எல்லா வனஸ்பதியின் இலைகள் துளிர்த்து விடுகின்றது. நீண்டவாலுடைய யவமோ விளைந்திருப்பதாகின்றது. என்னும் வாக்கிய விசேஷத்தால் புருஷனுக்கு அந்த யவபதத்திற்கு நீண்ட வாலோடுங் கூடிய தான்னிய விசேஷத்தில் சக்தியின் ஞான முண்டாகின்றது. ககரீ முதலிய ஒழுங்கின்றி வழுவதலுடைய பதங்கட்கு சக்தியின் மயக்கத்தால் கட முதலியவைகளில் எங்ஙனம் பிரயோகம் உண்டாகின்றதோ அங்ஙனமே யவபதத்திற்கும் சக்தியின் மயக்கத்தால் கங்குவெனப் பெயரிய தான்னியத்தில் பிரயோகமுண்டாகின்றது.

## கஉசஅ. விவரணத்தால் சக்தியை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து விவரணத்தாலும் பதங்களினது சக்தியின் ஞான முண்டாகின்றது. ஆண்டு "தத்ஸமாநார்த்தகபதாந்தரேண த஦ர்த்தகதநம் விவரணம்" (இ-ள்.) பதத்தின் சமான அர்த்தமுடைய வேறுபதத்தால் பதத்தின் அர்த்தத்தினைக் கூறுவதனை விவரண மென்பர். இவ்விவரணத்தினை விவிர்த்தியென்றுங் கூறுவர். எங்ஙனம்: கடம், கலசமென்னு மிரு பதங்கள் ஒரே கட வடிவ அர்த்தத்தின் வாசகமாம். ஆண்டு எப் புருஷனுக்கு கலச பதத்தின் சக்தி ஞான மிருக்கின்றதோ கட பதத்தின் சக்தி ஞான மில்லையோ அப்புருஷனைக் குறித்து "கடோஸ்தி" என்பதான வசனம் முதலில் கூறி பின் "கலசோஸ்தி" என்பதான வசனங் கூறப்படும்போது அப்புருஷனுக்கு கலசமே கட பதத்தின் வாச்சிய அர்த்தமா மென்பதாக கலசத்தில் கட பதத்தினது சக்தியின் ஞான முண்டாகின்றது. ஆண்டு கட பதத்தின் சமான அர்த்தமுடைய கலசபதத்தால் கட பதத்தினைக் கூறுவதே விவரணமாம்.

### ௧௨௪௯. பிரசித்தார்த்த பதத்தின் சமீபத்தால் சக்தியினை கிரஹிக்கும் வகை.

சிலவிடத்து பிரசித்த அர்த்தத்தின் வாசக பதத்தின் சமீபத்தன்மையாலும் பதத்தின் சக்தி ஞான முண்டாகின்றது. எங்ஙனம்: "സഹകാരതരൌ മധുരം പികോ രൌതി" (இ-ள்.) மாமரத்தில் குயில் இனிமையாக ஒலிக்கின்றது. என்பதான வசனத்தைக் கேட்டு புருஷனுக்கு குயிலில் கோகிலத்தினது சக்தியின் ஞான முண்டாகின்றது. ஆண்டு மாமரத்தில் குயில் இனிமையாக ஒலிக்கின்றதென்னும் ஞானம் புருஷனுக்கு முன்னரே யிருக்கின்றது. ஆனால் கோகிலத்தையே குயில் என்பரென்பதான ஞானம் புருஷனுக்கு முன்னின்றாம். கூறிய வசனத்தினைக் கேட்டு மாமரம், இனிமை சத்தம், கர்த்துருத்தன்மை யென்பதான பிரசித்த அர்த்தமுடைய பதங்களின் சமீபத்தன்மையால் புருஷனுக்கு கோகிலத்திடத்து குயில் சத்தத்தினது சக்தியின் ஞான முண்டாகின்றது. முன்னர் விருத்தி சக்தி, லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் இருவிதமாகக் கூறப்பட்டது. அதனிடத்து முதலில் சக்தி விருத்தியினை முன்னர் விரிவாய் நிரூபித்தனம். இனி லக்ஷணாவிருத்தியினை நிரூபிப்பாம்.

### ௧௨௫௦. லக்ஷணா வடிவ விருத்தியின் லக்ஷணம்.

ஆண்டு "ശക്യസംബന്ധഃ ലക്ഷണാ" (இ-ள்.) எப்பதத்திற்கு லக்ஷணா விருத்தியினால் எவ்வர்த்தத்தின் போத முண்டாகின்றதோ அப்பதத்தினது சக்கிய அர்த்தத்திற்கு எவ்வர்த்தத்தினோடு சம்பந்த முண்டாகின்றதோ அதனை லக்ஷணை யென்பர். எங்ஙனம்: "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தில் கங்கா பதத்தின் லக்ஷணா விருத்தியினால் கேட்போனுக்கு கரையின் போத முண்டாகின்றது. ஆண்டு கங்கா பதத்தின் சக்கியார்த்த ஜலமாகிய பிரவாஹத்திற்கு கரையினிடத்து சையோக சம்பந்த மிருக்கின்றது. சக்கிய சம்பந்தமே கங்கா பதத்திற்கு கரையினிடத்து லக்ஷணையா மென்பதான லக்ஷணாவிருத்தியின் ஞானமுடைய புருஷனுக்கு கங்கா பதத்தினைக் கேட்ட பின்னர் கரை வடிவ அர்த்தத்தின் ஸ்மரண முண்டாகின்றது. அங்ஙனமே "கரையிலிருக்கும் கிராம" மென்னும் கரை வடிவ அர்த்தத்தின் சாப்த போத முண்டாகின்றது. ஆண்டு "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தைக் கேட்டதால் கேட்போன் கங்கா பதத்திற்கு கரையில் லக்ஷணை செய்வானே னென்னும் சங்கை யுண்டாக இனி மதவேறுபாட்டால் லக்ஷணையின் பீஜத்தினை வர்ணிப்பாம்.

### ௧௨௫௧. அன்வய அநுபபத்தியினை லக்ஷணையின் பீஜமாக வொப்பும் பிராசீனர்களின் மதம்.

ஆண்டு பிராசீன நையாயிகரோ அன்வயாநுபபத்தியினையே (கொண்டு கூட்டுணர்வு நிகழாமையையே) லக்ஷணைக்கு பீஜமாக அங்கீகரிக்கின்றனர். ஈண்டு பதங்களினது சக்கிய அர்த்தத்தின் சம்பந்தம் யாதோ அதனை அன்வய மென்பர். அச்சம்பந்த வடிவ அன்வயத்தின் அநுபபத்தி யென்னும் சம்பவியாததனை அன்வயா அநுபபத்தியென்பர். எங்ஙனம்: "கங்கையில் கிராமம்"

என்னும் வசனத்தில் கங்கா பதத்தின் சக்திய அர்த்தம் ஜலத்தின் பிரவாஹமாம். கிராம பதத்தின் சக்தியார்த்தம் இடையர்களிருக்கும் கிராமமாம். சக்திய அர்த்தங்கட்கு பரஸ்பரம் ஆதார, ஆதேய பாவ சம்பந்தம் கூறிய வாக்கியத்தால் விளங்குகின்றது. அது சம்பவியாது. அதாவது; ஜலத்தின் பிரவாஹத்தில் கிராமத்தின் ஆதாரத்தன்மைச் சம்பவியாது. ஆனால் கரையிலேயே கிராமத்தின் ஆதாரத்தன்மைச் சம்பவிக்கின்றது. இவ்வாற்றால் அன்வயாநுபபத்தியினை விசாரித்து. கேட்போன் கங்காபதத்திற்கு கரையில் லக்ஷணை செய்கின்றனன். ஆகையால் அன்வயாநுபபத்தியே லக்ஷணைக்கு பீஜமாம்.

## கஉ௫உ. தாத்பரியத்தின் அநுபபத்தியினை லக்ஷணையின் பீஜமாக வொப்பும் நவீன நையாயிகர்களின் மதம்.

ஈண்டு நவீன நையாயிகரோ இது கூறுகின்றனர். கூறுவோனது தாத்பரியத்தின் அநுபபத்தி (தாத்பரிய உணர்வு நிகழாமை) யாதோ அதுவே லக்ஷணத்திற்கு பீஜமாம். கூறிய அன்வயாநுபபத்தி லக்ஷணத்திற்கு பீஜமன்றாம். ஏனெனின் ஒர்கால் அன்வயாநுபபத்தியையே லக்ஷணைக்கு பீஜமாக வொப்பின் "தண்டத்தை விடு" என்பதான வாக்கியத்தில் தண்ட பதத்திற்கு தண்டமுடைய புருஷனிடத்து லக்ஷணை சம்பவிக்காததாக வேண்டும். ஆண்டு சமைக்குமிடத்தில் எல்லா அன்னங்களை சமைத்த பின் வீட்டின் யஜமானன் "தண்டத்தை விடு" என்பதான வசனத்தை ஏவலாளனைக் குறித்துக் கூறக் கேட்ட ஏவலாளன் தண்டத்தைத் தாங்கிய புருஷனிடத்து லக்ஷணை செய்கின்றனன். அது உண்டாகாததாகும். எக்காரணத்தாலெனின் காஷ்டவடிவ தண்டத்திற்கு பிரவேசமாகிய கிரியையிடத்து சம்பந்த வடிவ அன்வயம் சம்பவியாமையன்றாம். அவ்வன்வயம் சம்பவிக்கின்றது. ஆனால் அப்புருஷனுக்கு அன்னத்தைப் புசிப்பதில் தாத்பரியமாம். சமையல் செய்யுமிடத்தில் தண்டங்களை விடுவதிற் கூறுவோனது தாத்பரியம் சம்பவியாமையாகின்றது. இவ்வாற்றால் கூறுவோனது தாத்பரியத்தின் அநுபபத்தியினை விசாரித்து அவ்வாக்கியத்தைக் கேட்போன் தண்ட பதத்திற்கு தண்டந் தாங்கியவர்களிடத்து லக்ஷணை செய்கின்றனன். யாண்டு "கங்கையில் கிராமம்" என்பதான இவை முதலியவிடங்களில் அன்வய அநுபபத்தி நிக்கின்றதோ ஆண்டுங் கூறுவோனது தாத்பரியத்தின் அநுபபத்தி சம்பவிக்கின்றது. ஆகையால் யாண்டுங் கூறுவோனது தாத்பரியத்தின் அநுபபத்தியே லக்ஷணைக்கு பீஜமாம்.

## கஉ௫௩. ஜஹதாதி வேறுபாட்டால் லக்ஷணையின் நால்வித வேற்றுமை.

கூறிய லக்ஷணை ஜஹத் (விட்ட) லக்ஷணை, அஜஹத் (விடாத) லக்ஷணை, ஜஹத் அஜஹத் (விட்டுவிடாத) லக்ஷணை, லக்ஷித லக்ஷணை என்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். இனி முறையாக இந்நான்கின் ஸ்வரூபத்தை வர்ணிப்பாம்.

## கஉ௫௪. ஜஹத் லக்ஷணையின் லக்ஷணம்.

ஆண்டு "லக்ஷ்யதாவச்சேதகரூபேண லக்ஷ்யோபஸ்திதௌ வாச்யயோகிகாலக்ஷணா ஜஹல்லக்ஷணா" (இ-ள்.) லக்ஷியத்தன்மை அவச்சேதக

வடிவமாக லக்ஷிய மாத்திரத்தினது போதத்திற்கு ஏதுவாகிய லக்ஷணை யாதோ அந்த லக்ஷணை ஜஹத்லக்ஷணை யெனப்படும். எங்ஙனம்: "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தில் கங்கை பதத்தின் சக்கிய சம்பந்த வடிவ கரையில் லக்ஷணை யாதோ அந்த லக்ஷணை கரைத்தன்மை வடிவ லக்ஷணத் தன்மை யவச்சேதக வடிவத்தால் அக்கரை வடிவ லக்ஷிய மாத்திரத்தினது போதத்திற்கு ஏதுவாகின்றது. ஆகையால் கங்கா பதத்திற்கு கரையிலுள்ள லக்ஷணை ஜஹத்லக்ஷணையெனப்படுகின்றது. அங்ஙனமே "மஞ்சா: க்ரோசந்தி" (இ-ள்.) கட்டில் சப்திக்கின்றது. ஈண்டு ஜடமாகிய மஞ்சத்தில் சத்தத்தின் கர்த்தாத்தன்மை சம்பவியாது. ஆகையால் மஞ்சபதத்திற்கு கட்டிலிலிருக்கும் புருஷனிடத்து லக்ஷணை சம்பவிக்கின்றது. அந்த லக்ஷணையும் ஜஹத் லக்ஷணை யெனப்படுகின்றது.

கஉ௫௫. அஜஹத் லக்ஷணையின் லக்ஷணம்.

ஆண்டு "லக்ஷ்யதாவச்சேதகரூபேண லக்ஷ்யசக்யோபய போதப்ரயோஜிகாலக்ஷணா அஜஹல்லக்ஷணா" (இ-ள்.) லக்ஷியத்தன்மை அவச்சேதக வடிவத்தால் லக்ஷியம், சக்கியமாமிரண்டினது போதத்திற்கு ஏதுவாகியலக்ஷணை அஜஹத் லக்ஷணை யெனப்படுகின்றது. எங்ஙனம்: புசிப்பதற்கு வேண்டிய தயிரை காகம், பூனை முதலிய ஜந்துக்களினின்றும் ரக்ஷிக்கும் பொருட்டு "காகத்தினின்று தயிரைகாப்பாற்றுக" என்பதான வசனத்தை யொருவன் கூறக்கேட்டு புருஷன் காகபதத்திற்கு தயிரைக் கெடுப்பதில் லக்ஷணைச் செய்கின்றான். எவைகளின் பரிசமுண்டாக தயிர் புசிப்பதற்கு யோக்கியமுடையதன்றோ அவற்றை தயிரைக்கெடுப்பதென்பர். அத்தகையன காகம், பூனை, எலி முதலியனவாம். அத்தயிரைக் கெடுக்கும் காகம், பூனை முதலிய லக்ஷியங்களில் இருப்பது காக பதத்தின் லக்ஷியத்தன்மை அவச்சேதக தயிரைக் கெடுத்தற்றன்மை தர்மமாம். அத்தயிரை கெடுத்தற்றன்மை வடிவ லக்ஷியத்தன்மை அவச்சேதக வடிவமாக காகம், பூனை, எலி முதலிய எல்லா சக்கிய லக்ஷிய பதார்த்தங்களின் போதம் கேட்போனுக்கு காகபதத்தின் லக்ஷணையாலுண்டாகின்றது. ஆகையால் அக்காக பதத்திற்கு தயிரைக் கெடுப்பதிலுள்ள லக்ஷணை அஜஹத் லக்ஷணையெனப்படுகின்றது. அங்ஙனமே "கவிகையாளர் செல்லுகின்றனர்" என்பதான வசனத்திலும் கவிகை பதத்திற்கு ஒருங்கிருக்கும் புருஷனிடத்து லக்ஷணை யுண்டாகின்றது. அந்த லக்ஷணையால் ஒருங்கிருக்குந்தன்மை வடிவ லக்ஷியத்தன்மை அவச்சேதக வடிவமாவதால் கவிகையுடைய புருஷர்களதும், கவிகையின்றிய புருஷர்களதும் போதம் உண்டாகின்றது. ஆகையால் கவிகை பதத்திற்கு ஒருங்கிருக்கும் புருஷர்களிடத்துள்ள லக்ஷணையும் அஜஹத் லக்ஷணையெனப்படுகின்றது.

கஉ௫௬. ஜஹத் அஜஹத் லக்ஷணையின் லக்ஷணம்.

ஆண்டு "சக்யதாவச்சேதக பரித்யாகேந வ்யக்திமாத்ர போதப்ரயோஜிகாலக்ஷணா ஜஹதஜஹல்லக்ஷணா" (இ-ள்.) பதத்திற்குள்ள சக்கியத் தன்மையின் அவச்சேதக தர்மத்தின் பரித்தியாகத்தால் வியக்தி மாத்திரத்தினது போதத்தின் ஏதுவாகிய லக்ஷணை ஜஹத் அஜஹத் லக்ஷணையெனப்படு

கின்றது. ஜஹத் அஜஹத் லக்ஷணையினை பாகத்தியாக லக்ஷணை யென்றுங் கூறுவர். எங்ஙனம்: வேதாந்திகளின் மதத்தில் "𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌸𑌿" என்பதான வசனத்தில் ஜஹத் அஜஹத் லக்ஷணை சம்பவிக்கின்றது. ஆண்டு சர்வஞ்ஞத்தன்மை விசிஷ்ட சேதனம் தத்பதத்தின் சக்கியார்த்தமாம். அற்பஞ்ஞத் தன்மை விசிஷ்ட சேதனம் துவம்பதத்தின் சக்கியார்த்தமாம். இவ்விரண்டு சக்கியார்த்தங்களின் அபேதம் சம்பவியாது. ஆகையால் சர்வஞ்ஞத்தன்மை வடிவ சக்கியத்தன்மை அவ்ச்சேதக தர்மத்தின் பரித்தியாகத்தால் தத்பதத்திற்கு சேதன மாத்திரத்தில் லக்ஷணை சம்பவிக்கின்றது. இவ்வாறாக அற்பஞ்ஞத் தன்மை வடிவ சக்கியத்தன்மை அவச்சேதக தர்மத்தின் பரித்தியாகத்தால் துவம்பதத்திற்கும் சேதன மாத்திரத்தில் லக்ஷணை சம்பவிக்கின்றது. அச்சேதனங்கட்கு பரஸ்பர அபேதம் சம்பவிக்கின்றது. ஆகையால் தத்பதத்திற்கும், துவம்பதத்திற்கும் சேதன மாத்திரத்திலுள்ள லக்ஷணை ஜஹத் அஜஹத் லக்ஷணை யெனப்படுகின்றது. நையாயிகர்களின் மதத்திலோ ஜஹத் அஜஹத் லக்ஷணைக்கு உதாஹரணம் "அத்தேவதத்தனே இத்தேவதத்தன்" என்பதான வாக்கியமாம். ஈண்டும் அந்த தேசகால விசிஷ்ட தேவதத்தன் அந்த வென்னும் சத்தத்தின் சக்கியார்த்தமாம். இந்த தேசகால விசிஷ்ட தேவதத்தன் இந்தவென்னும் சத்தத்தின் சக்கியார்த்தமாம். அவ்விரு விசிஷ்டங்கட்கு ஒருமையின் அசம்பவமுளதாக விசேஷண அம்சத்தின் பரித்தியாகத்தால் அவ்விருபதங்கட்கு தேவதத்தனெனப் பெயரிய புருஷ வியக்தியில் லக்ஷணை சம்பவிக்கின்றது.

## ௧௨௫௭. லக்ஷித லக்ஷணையின் வர்ணனம்.

ஆண்டு "𑌶𑌕𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌃 𑌲𑌕𑍍𑌷𑌿𑌤𑌲𑌕𑍍𑌷𑌣𑌾" (இ-ள்.) பதத்தின் சக்கியார்த்தத்தின் பரம்பரா சம்பந்த வடிவ லக்ஷணை லக்ஷித லக்ஷணை யெனப்படுகின்றது. எங்ஙனம்: '𑌦𑍍𑌵𑌿𑌰𑍇𑌫𑍋 𑌰𑍌𑌤𑌿' (இ-ள்.) இரண்டு ரகரங்கள் ஒலிக்கின்றது. ஈண்டு "இரண்டு ரகரம்" என்னும் பதத்தின் சக்கியார்த்தம் இரண்டு ரகரங்களாம். அவ்விரண்டு ரகரங்களில் சப்தத்தின் கர்த்தாத்தன்மை சம்பவியாது. ஆகையால் அவ்வாக்கியத்தைக் கேட்பதால் கேட்போனுக்கு இரண்டு ரகரபதத்திற்கு வண்டு வியக்தியில் லக்ஷணை சம்பவிக்கின்றது. ஆண்டு இரண்டு ரகரபதத்தின் சக்கிய அர்த்த வடிவ இரு ரகரங்கட்கு வண்டு வியக்தியில் சாக்ஷாத் சம்பந்தமோ யின்றும். ஆனால் தான் பொருந்தியுள்ள பதவாச்சியத்தன்மை வடிவ பரம்பராசம்பந்தமிருக்கின்றது. ஈண்டு சுவசத்தத்தால் அவ்விரு ரகரங்களை கிரஹிக்குக. அவ்விரு ரகரங்களாற் பொருந்திய பிரமர பதத்தின் வாச்சியத்தன்மை அவ்வண்டு வியக்தியிலிருக்கின்றது. ஆகையால் இரண்டு ரகர பதத்திற்கு வண்டு வியக்தியில் கூறிய பரம்பரா சம்பந்த வடிவ லக்ஷணை லக்ஷித லக்ஷணை யெனப்படுகின்றது. ஈண்டு சில நூலாசிரியர் லக்ஷித லக்ஷணையினை வேறாக வொப்புவதில்லை, ஜஹத் லக்ஷணையின் அக்கடமாகக் கூறுகின்றனர். பிரமரமெனினும், வண்டெனினும் ஒக்கும். பிரமரபதத்தில் இரண்டு ரகரங்களிருப்பதால் இரண்டு ரகரங்கள் சப்திக்கின்றதெனக் கூறுவதுமுண்டு.

### ௧௨௫௮. கேவல லக்ஷணை, லக்ஷித லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் கூறிய லக்ஷணையின் இருவித வேற்றுமை.

சில நூலாசிரியரோ அந்த லக்ஷணையினை கேவல லக்ஷணை, லக்ஷித லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் இருவிதமாக வொப்புகின்றனர். ஆண்டு சக்கிய அர்த்தத்தின் சாக்ஷாத் சம்பந்தத்தினை கேவல லக்ஷணை யென்பர். சக்கிய அர்த்தத்தின் பரம்பரா சம்பந்தத்தினை லக்ஷித லக்ஷணை யென்பர். கேவல லக்ஷணையும் ஜஹத் லக்ஷணை, அஜஹத் லக்ஷணை, ஜஹத் அஜஹத் லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

### ௧௨௫௯. கௌணீ, சுத்தம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவித வேற்றுமை.

சில நூலாசிரியரோ அந்த லக்ஷணையினை கௌணீ, சுத்தா என்னும் வேறுபாட்டால் இருவிதமாக வொப்புகின்றனர். ஆண்டு சுத்தா லக்ஷணையினை ஜஹத் லக்ஷணை, அஜஹத் லக்ஷணை, ஜஹத் அஜஹத் லக்ஷணை யென்னும் வேறுபாட்டால் மூவிதமாக வொப்புகின்றனர்.

### ௧௨௬0. நிரூடி, ஸ்வாரசிகம் என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவித வேற்றுமை.

அல்லது கூறிய லக்ஷணை நிரூட லக்ஷணை, சுவாரசிக லக்ஷணை என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு "அநாதி தாத்பர்ய விஷயீபூதார்த்த நிஷ்ட லக்ஷணா நிரூட லக்ஷணா" (இ-ள்.) அநாதி தாத்பரியத்தின் விஷயமாகிய அர்த்தத்தில் இருக்கும் லக்ஷணை நிரூட லக்ஷணை யெனப்படுகின்றது. எங்ஙனம்: "நீலக்குடம்" என்பதான வாக்கியத்தில் நீல பதத்திற்கு நீல குண விசிஷ்ட திரவியத்தில் நிரூட லக்ஷணை சம்பவிக்கின்றது. நீல வடிவ லக்ஷணை சக்தியின் சாதிருசியமேயாகின்றது.

### ௧௨௬௧. ஸ்வாரசிக லக்ஷணையின் லக்ஷணம்.

"அத்யதந தாத்பர்ய விஷயீபூதார்த்த நிஷ்ட லக்ஷணா ஸ்வாரஸிக லக்ஷணா" (இ-ள்.) இக்காலத்திய புருஷனது தாத்பரியத்திற்கு விஷயமாகிய அர்த்தத்தில் இருப்பதாகிய லக்ஷணை ஸ்வாரசிக லக்ஷணை யெனப்படுகின்றது. எங்ஙனம்: ஒருவன் கங்கையில் பெரிய மீனைப் பார்த்து மற்றொருவனைக்குறித்து "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தைக் கூறக்கேட்டால் அவன் அக்கிராம பதத்திற்கு மீனிடத்து லக்ஷணை செய்கின்றான். அந்த லக்ஷணை ஸ்வாரசிக லக்ஷணை யெனப்படுகின்றது.

### ௧௨௬௨. வாக்கியத்தில் லக்ஷணையை கண்டிப்பது வாயிலாக பதத்தில் லக்ஷணையின் சித்தி.

முற்கூறிய அவ்வெல்லா வகையான லக்ஷணைகளும் பதங்களிலேயே சம்பவிக்கின்றன. வாக்கியங்களில் சம்பவிப்பனவன்று. ஏனெனின் சக்தியுடையது பதமாவதால் பதத்திற்கே சக்கியார்த்தம் சம்பவிக்கின்றது. வாக்கியத்தில் சக்தி சம்பவிப்பதில்லை. ஆகையால் வாக்கியங்கட்கு யாதோர் சக்கியார்த்தமும் சம்பவியாது. முன்னர் சக்கியார்த்தத்தின் சம்பந்தமே லக்ஷணை

யாகக் கூறப்பட்டது. ஆகையால் சக்கிய சம்பந்த வடிவ லக்ஷணை பதத்திலேயே சம்பவிக்கின்றது. வாக்கியத்தில் சம்பவிப்பதில்லை. ஆகையால் வாக்கியத்தில் லக்ஷணையை யொப்புவோராகிய மீமாஞ்சகர் முதலிய மதங்கள் அசங்கதமாம்.

### கஉ௬௩. கௌணீ விருத்தியின் லக்ஷணை.

ஈண்டு சில நூலுடையாரோ இது கூறுகின்றனர். பதத்திற்கு முற்கூறிய சக்தி விருத்தியும், லக்ஷணை விருத்தியும் எங்ஙனமுண்டோ அங்ஙனமே பதத்திற்கு மூன்ருவது கௌணீ விருத்தியு மிருக்கின்றது. ஆண்டு "ஶக்யார்த்த ஸாத்ருஶ்ய-ரூபேண ஶக்யார்த்த-ஸம்பந்தேன போதிகாவ்ருத்திஃ கௌணீவ்ருத்திஃ" (இ-ள்.) பதத்தின் சக்கிய அர்த்தத்தின் சாதிருசிய வடிவமான அசக்கிய அர்த்தத்தின் போதத்திற்கு ஏதுவாகிய விருத்தி கௌணீ விருத்தியெனப் படுகின்றது. எங்ஙனம்: "சிம்ஹம் தேவதத்தன்" என்பதான வசனத்தால் சிம்ஹத்தினதும், தேவதத்தனெனப் பெயரிய புருஷனதும் அபேத ஞானமுண்டாகின்றது. அது சம்பவியாது. ஆகையால் சிம்ஹ பதத்திற்கு கௌணீ விருத்தியால் கேட்போனுக்கு சிம்ஹத்தின் சாதிருசியம் தேவதத்தனு மென்னும் போத முண்டாகின்றது. ஆண்டு சிம்ஹ பதத்தின் சக்கியார்த்த மிருக ராஜனாகிய விலங்கிடத்து இருப்பதாகிய சூரத்தன்மை, குரூரத்தன்மை முதலிய தர்மங்கள் தேவதத்தனெனப்பெயரிய புருஷனிடத்து மிருக்கின்றது. அதுவே தேவதத்தனெனப் பெயரிய புருஷனிடத்து சிம்ஹத்தின் சாதிருசியமாம். அச்சாதிருசிய வடிவமாக தேவதத்த புருஷனது போதம் சிம்ஹ பதத்தின் கௌணீ விருத்தியாலேயே யுண்டாகின்றது. சிம்ஹ பதத்தின் சக்தி விருத்தியால் அல்லது லக்ஷணை விருத்தியால் உண்டாகிறதில்லை. ஆகையால் கௌணீ விருத்தியை சக்தி, லக்ஷணையினும் வேருகவே வொப்ப வேண்டும்.

### கஉ௬௪. லக்ஷணையில் கௌணீ விருத்தியின் அடக்கம்.

அங்ஙனங் கூறிய மதமும் நலமுடையதன்ரும். ஏனெனின் கௌணீ விருத்தி லக்ஷணையினும் வேறன்ரும்; லக்ஷணையின் அடக்கமேயாம். ஆண்டு சிம்ஹ பதத்தின் சக்கியார்த்தத்திற்கு தேவதத்த புருஷனிடத்து சாக்ஷாத் சம்பந்தமின்ரும். என்ருலும் எங்ஙனம் முற்கூறிய இரண்டு ரகர பதத்தினது சக்கியார்த்தத்தின் பரம்பரா சம்பந்தம் வண்டு வியக்தியினிடத்துச் சம்பவிக்கின்றதோ அங்ஙனமே ஈண்டும் சிம்ஹ பதத்தின் சக்கியார்த்தத்திற்கு அத்தேவதத்தபுருஷனிடத்து தன்னிடத்தி லிருக்கும் சூரத்தன்மையாதியுடைமை வடிவ பரம்பரா சம்பந்தம் சம்பவிக்கின்றது. ஆகையால் கௌணீ விருத்தியின் அடக்கம் லக்ஷித லக்ஷணையிடத்துச் சம்பவிக்கின்றது.

### கஉ௬௫. வியஞ்ஜனு விருத்தியை ஒப்புவோராகிய அலங்காரிகளின் மதம்.

ஈண்டு அலங்காரிகள் நான்காவது வியஞ்ஜனு விருத்தியையும் அங்கீகரிக்கின்றனர். அவர்களின்கருத்திதுவாம். "கரையில்கிராமம்" என்பதான வசனத்தைக் கூறுவதால் கேட்போனுக்குச் சுகமின்று. என்ருலும் கரையிலிருக்கும் கிராமத்தின் போதம் உண்டாய் விடுகின்றது. அங்ஙனமாய வசனத்தைக் கூருது "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தைக் கூறின் அவ்வசனம்

கங்கைக் கரையின் குளிர்ச்சி, தூய்மை முதலியவைகளை போதிக்கும் பொருட்டாம். ஆண்டு குளிர்ச்சி, தூய்மை முதலியவைகளின் உணர்ச்சி கங்கா பதத்தின் லக்ஷணா விருத்தியினாலோ உண்டாகாது. ஏனெனின் சொல்லுவோனது தாத்பரிய உணர்வு நிகழாமையால் லக்ஷணை சம்பவிக்கின்றது. தாத்பரிய உணர்வு நிகழாமையின் பரிஹாரம் கேவலம் கரை மாத்திரத்தில் லக்ஷணையைச் செய்வதானேயே சம்பவிக்கின்றது. ஆகைபால் குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையில் லக்ஷணையை அங்கீகரிப்பதில் யாதோர் பிரமாணமுமின்றாம். ஆகையால் குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையின் போதத்தின் பொருட்டு கங்கா பதத்திற்கு குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையினிடத்து வியஞ்ஜனா விருத்தியை அவசியம் அங்கீகரிக்க வேண்டும்.

### கஉகூகூ. லக்ஷணையால் அல்லது அநுமானத்தால் வியங்கிய அர்த்தம் போதமாவதின் வர்ணனம்.

அங்ஙனங் கூறும் மதமும் நலமுடையதன்று. ஏனெனின் கூறிய கௌணீ விருத்தியினைப் போன்று வியஞ்ஜனா விருத்தியின் அடக்கமும் லக்ஷணையினிடத்தே சம்பவிக்கின்றது. ஆண்டு கூறுவோன் குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையின் போதத்தை யுண்டாக்கும் பொருட்டு "கங்கையில் கிராமம்" என்பதான வசனத்தை உச்சரிக்குமிடத்து ஆண்டு கூறுவோனது தாத்பரிய உணர்வு நிகழாமையால் கேட்போன் கங்கை பதத்திற்கு குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையினிடத்தே லக்ஷணைசெய்கின்றான். அந்த லக்ஷணையால் புருஷனுக்கு கங்கை பதத்தால் குளிர்ச்சி, தூய்மையாதி விசிஷ்ட கரையின் போத முண்டாகின்றது. அல்லது கங்கா பதத்தின் லக்ஷணையால் புருஷனுக்கு கரை மாத்திரத்தின் சாப்தபோதமே யுண்டாகின்றது. அதன் பின்னர் "கங்கா தீரம் ஶீதபாவநத்வாதியுக்தம் கங்காபதவாச்யஸம்பந்தாத் கங்காவத்" என்பதான அநுமானத்தால் குளிர்ச்சி, தூய்மையாதிகளின் அநுமிதி ஞானமுண்டாகின்றது. ஆகையால் வியஞ்ஜனா விருத்தி லக்ஷணையின் அடக்கமேயாம். ஆகையால் சக்தி, லக்ஷணை யென்னு மிருவிதமாகவே பதத்தின் விருத்தி சம்பவிக்கின்றது. சக்தி, லக்ஷணா வடிவ விருத்தியின் ஞானம் பதார்த்தத்தின் ஸ்மிருதி மூலமாக சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது.

சங்கை :—விருத்தி ஞானமே சாப்த போதத்திற்கு ஏதுவாகுமாயின் "ஆ, குதிரை" என்பதான வாக்கியத்தாலும் உலகவருக்கு சாப்த போதம் உண்டாக வேண்டும். எக்காரணத்தாலெனின் ஆ, வடிவ அர்த்தத்தில் ஆ, பதத்தின் சக்தி ஞானமும், குதிரை வடிவ அர்த்தத்தில் குதிரை பதத்தின் சக்தி ஞானமும் உலகவருக் கிருப்பதே யாகின்றது. கூறிய வாக்கியத்தால் உலகவருக்கு சாப்த போதம் உண்டாகிறதில்லை.

சமாதானம் :—எங்ஙனங் கூறிய விருத்தி ஞானம் சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றதோ அங்ஙனமே ஆகாங்க்ஷை, யோக்கியதை, ஆசத்தி, தாத்பரியமாம் நான்கின் ஞானமும் சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது. "ஆ, குதிரை" என்னும் வாக்கியத்தில் பதங்கட்கு பரஸ்பரம் ஆகாங்க்ஷையின்றாம். ஆகையால் அவ்வாக்கியத்தால் சாப்த போதம் உண்டாகிறதில்லை.

கஉகூஎ. ஆகாங்க்ஷை (அவாய்நிலை) யின் லக்ஷணம்.

ஆகாங்க்ஷை முதலிய நான்கின் ஸ்வரூபத்தை முறையாக வர்ணிப்பாம். ஆண்டு "யத்பதேந விநா யத்பதஸ்யாந்வயாநநுபாவகத்வம் தத்பதேந தத்பதஸ்ய ஸந்நிதிரூப ஆகாங்க்ஷா" (இ-ள்.) எப்பதமின்றி எப்பதத்திற்கு சாப்த போதத்தை உண்டாக்குந் தன்மை சம்பவியாதோ அப்பதத்தில் அப்பதத்தின் சமீபத் தன்மையினை ஆகாங்க்ஷை யென்பர். எங்ஙனம்: "கடத்தைக் கொண்டுவா" வென்னும் வசனத்தில் கட மென்னும் பதத்திற்குப் பின் ஐ என்னும் இரண்டாம் வேற்றுமை யிருக்கின்றது. ஆண்டு கேவலம் கட பதத்தை உச்சரிக்கினும் கடம் கர்மத்தன்மை என்னும் சாப்தபோத முண்டாகிறதில்லை. அங்ஙனமே கேவலம் ஐ என்னும் பதத்தினை உச்சரிக்கினும் சாப்த போதம் உண்டாகிறதில்லை. ஆகையால் கட பதத்திற்கு தனக்குப் பின் மறைப்பின்றி யிருக்கும் ஐ என்னும் பதத்தின் ஆகாங்க்ஷை யிருக்கின்றது. அங்ஙனமே ஐ என்னும் பதத்திற்கும் தனக்கு மறைப்பின்றி முன்னிருக்கும் கட பதத்தின் ஆகாங்க்ஷை யிருக்கின்றது. இவ்வாறாக "கொண்டுவா" என்னும் வசனத்திலும் ஆநூர்வீ தாதுவிற்கு தனக்குப் பின்னிருக்கும் ஆக்கியாத பதத்தின் ஆகாங்க்ஷை யிருக்கின்றது. அங்ஙனமே ஆக்கியாத பதத்திற்கு தனக்கு முன்னிருக்கும் ஆநூர்வீ தாதுவின் ஆகாங்க்ஷை யிருக்கின்றது. அவ்வாகாங்க்ஷையின் ஞானம் சாப்தபோதத்திற்கு ஏதுவாகின்றது. அதாவது; ஐ முதலிய வேற்றுமை பதங்கள் மறைப்பின்றி பின்னிருத்தற் றன்மை சம்பந்தத்தால் கட முதலிய பதங்களை யுடையதாம். அங்ஙனமே ஆக்கியாத பதம் மறைப்பின்றி பின்னிருத்தற்றன்மை சம்பந்தத்தால் தாது பதமுடையதாம். என்பதான ஆகாங்க்ஷை ஞானம் முறையாக கடம், கர்மத் தன்மை, அநுகூல முயற்சி என்பதான சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது. "கடத்தைக்கொண்டுவா" என்பதான வாக்கியத்திலுள்ள கடமுதலிய பதங்கள் எவ்வெக் கட முதலிய அர்த்தங்களின் வாசகமாமோ அவ்வக் கடாதி வடிவ அர்த்தத்தின் வாசகம் "கடம் கர்மத்வம் கொண்டு வருவதாகிய முயற்சி" என்பன இவ்வாக்கியத்திலுள்ள பதங்களாம். ஆனால் இப்பதங்களிற் கூறிய ஆகாங்க்ஷையில்லை. ஆகையால் எங்ஙனம் "கடத்தைக் கொண்டுவா" எனக் கூறிய வாக்கியத்தால் கேட்போனுக்கு சாப்த போதம் உண்டாகின்றதோ அங்ஙனம் "கடம் கர்மத்தன்மை கொண்டு வருதலாகிய முயற்சி" என்னும் வாக்கியத்தால் கேட்போனுக்கு சாப்த போத முண்டாகிறதில்லை. ஆகையால் ஆகாங்க்ஷை ஞானத்தினை சாப்த போதத்திற்கு ஏதுவாக அவசியம் வொப்ப வேண்டும்.

கஉகூஅ. யோக்கியதை (தகுதி) யின் லக்ஷணம்.

"ஏகபதார்த்தே அபரபதார்த்த ஸம்பந்தோ யோக்யதா" (இ-ள்.) ஒரு பதார்த்தத்தில் வேறு பதார்த்தத்தின் சம்பந்தத்தினை யோக்கியதையென்பர். எங்ஙனம்: "கடத்தைக்கொண்டுவா" என்னும் வாக்கியத்தில் கடபதத்தின் அர்த்தத்திற்கு ஐ பதத்தின் கர்மத்தன்மை வடிவ அர்த்தத்தில் ஆதேயத் தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. கர்மத்தன்மை வடிவ அர்த்தத்திற்கு ஆநூர்வீ

தாதுவிற்கு கொண்டு வருதலாகிய அர்த்தத்தில் நிரூபிக்குந்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. கொண்டு வருதலாகிய அர்த்தத்திற்கு ஆக்கியாத விருதிக்கு முயற்சிவடிவ அர்த்தத்தில் அநுகூலத்தன்மைச்சம்பந்தமிருக்கின்றது. முயற்சிவடிவ அர்த்தத்திற்கு நீயென்னும் பதார்த்த புருஷனிடத்து ஆசிரயத்தன்மைச்சம்பந்தமிருக்கின்றது. அச்சம்பந்தத்தினை யோக்கியத்தன்மை யென்பர். யோக்கியத்தன்மையின் ஞானமுடைய புருஷனுக்கு "கடத்தைக்கொண்டுவா" என்னும் வசனத்தைக் கேட்ட பின்னர் "கடத்திலிருக்கும் கர்மத்தன்மையை நிரூபிக்கும் கொண்டுவருதலாகிய அநுகூலமுயற்சியின் ஆசிரயம், நீயென்னும் பதார்த்தம்" என்பதான சாப்த போத முண்டாகின்றது. கூறிய பதார்த்தங்களின் சம்பந்தத்தில் எப்பதத்திற்கும் சக்தி விருத்தி அல்லது லக்ஷணை விருத்தி யின்றும். பதங்களின் சக்தி விருத்தியால் அல்லது லக்ஷணை விருத்தியால் ஸ்மரண முண்டாகும் அர்த்தத்தின் சாப்த போதத்திலேயே விளக்கமாகின்றது. என்றாலும் கூறிய நியமம் பதார்த்தங்களின் போதத்திலாம்; சம்பந்தத்தின் போதத்திலின்றும். பதார்த்தங்களின் சம்பந்தங்கள் சக்தி, லக்ஷணை விருத்தியின்றி பதங்களின் சமீபத்தன்மையின் வசத்தால் சாப்த போதத்தில் விளக்க மாகின்றது. ஆகையால் சம்பந்தத்திலும் பதங்களின் சக்தியை யொப்புவோராகிய மீமாஞ்சகர்களின் மதம் கௌரவ தோஷமுடையதாவதால் அசங்கதமாம். ஓர்கால் யோக்கியத்தன்மை ஞானத்தினை சாப்தபோதத்திற்கு ஏதுவாக ஒப்பாவிடின் எங்ஙனம் "ஜலத்தால் நனைக்கப்பட்டது" என்பதான வாக்கியத்தால் சாப்த போத முண்டாகின்றதோ அங்ஙனமே "வன்னியால் நனைக்கப்பட்டது" என்பதான வாக்கியத்தாலும் சாப்த போத முண்டாகவேண்டும். ஜலத்திலோ நனைத்தற்றன்மை சம்பவிக்கின்றது. ஆனல் வன்னியில் நனைத்தற்றன்மை சம்பவிக்கிறதில்லை. ஆகையால் கூறிய யோக்கியத்தன்மையின் அபாவத்தால் "வன்னியால் நனை" என்பதான வாக்கியத்தால் சாப்தபோதமு முண்டாகிறதில்லை.

௧௨௯௯. ஆசத்தியின் லக்ஷணம்.

ஆண்டு "யத்பதார்த்தஸ்ய யத்பதார்த்தேந அந்வயாபேக்ஷா தயோ: பதயோரவ்யவதாநம் ஆஸத்தி:" (இ-ள்.) எப்பதத்தின் அர்த்தத்திற்கு எப்பதத்தின் அர்த்தத்தினேடு சம்பந்த வடிவ அன்வயம் அபேக்ஷிக்கப்படுகின்றதோ அவ்விரு பதங்களின் மறைப்பின்மை யாதோ அதாவது; மறைப்பின்றிய சமீபத்தன்மையினை ஆசத்தி யென்பர். எங்ஙனம்: "கடத்தைக் கொண்டுவா" என்னும் வசனத்தில் கடமுதலிய பதங்களினது அர்த்தத்திற்கு கொண்டுவருதல் முதலிய பதங்களினேடு அன்வயம் அபேக்ஷிக்கப்படுவதாகின்றது. ஆகையால் கட முதலிய பதங்களின் மறைப்பின்மையே ஆசத்தியாம். அவ்வாசத்தியின் ஞானமும் சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது. ஓர்கால் ஆசத்தியின் ஞானத்தினை சாப்த போதத்திற்கு ஏதுவாக வொப்பாவிடின் எங்ஙனம்: "கிரிவன்னியுடைத்து", "தேவதத்தனல் புசிக்கப்பட்டது" என்பதான வசனத்தால் "கிரிவன்னியுடைத்தாம்", "தேவதத்தனல் புசிக்கப்பட்டதாம்" என்பதான சாப்தபோதம் எங்ஙனமுண்டாகின்றதோ அங்ஙனமே

"கிரியாநீ யுண்ணப்பட்டது தேவதத்தன் வன்னியுடைத்து" என்பதான வசனத்தாலுங் கூறிய சாப்த போத முண்டாக வேண்டும். ஆனல் இவ்வசனத்தால் கூறிய ஆசத்தியின் அபாவத்தால் கூறிய சாப்தபோதமுண்டாகிறதில்லை. ஆகையால் ஆசத்தி ஞானத்தினை சாப்த போதத்தின் ஏதுவாக அவசியம் வொப்ப வேண்டும்.

## கஉஎ௦. தாத்பரியத்தின் லக்ஷணம்.

ஆண்டு "வக்தூரிச்சாதாத்பர்யம்" (இ-ள்.) இப்பதத்தால் கேட்போனுக்கு இவ்வர்த்தத்தின் போதமுண்டாகுக என்பதாக கூறுவோனது இச்சையினை தாத்பரியமென்பர். தாத்பரியத்தின் ஞானமும் சாப்த போதத்திற்கு ஏதுவாகின்றது. ஓர்கால் தாத்பரியத்தின் ஞானத்தினை சாப்த போதத்திற்கு ஏதுவாக வொப்பாவிடின் "சயிந்தவம் கொண்டுவா" என்பதான சமயோசிதமாகிய இவ்வாக்கியத்தால் கேட்போனுக்கு ஓர்கால் உப்பின் ஞான முண்டாகின்றது. ஓர்கால் குதிரையின் ஞான முண்டாகின்றது. அங்ஙன முண்டாகலாகாது. ஆனல் யாண்டும் உப்பின் ஞானமே யுண்டாக வேண்டும். அல்லது யாண்டும் குதிரையின் ஞானமே உண்டாக வேண்டும். ஆகையால் விலக்ஷண போதத்தின் சித்தியின் பொருட்டு தாத்பரிய ஞானத்தினை சாப்த போதத்திற்கு ஏதுவாக அவசியம் ஒப்ப வேண்டும். தாத்பரிய அர்த்தத்தின் ஞானம் கேட்போனுக்கு சமய விசேஷணத்தா லுண்டாகின்றது. எங்ஙனம்: போஜன சமயத்தில் சயிந்தவ பதத்திற்கு உப்பில் தாத்பரியம் அறியப்படுவதாகின்றது. நடத்தல் சமயத்தில் சயிந்தவ பதத்தால் குதிரையில் தாத்பரியம் அறியப்படுவதாகின்றது. இவ்வாறாக தாத்பரிய ஞானத்திற்கு சாப்த போதத்தின் காரணத்தன்மையின் சித்தி யுண்டாக வேதத்தினிடத்து தாத்பரியத்தின் ஞானத்தின் பொருட்டு வேதத்தின் கர்த்தா ஈசுவரன் கற்பிக்கப்படுகின்றான். அதாவது; ஈசுவரனது இச்சா வடிவ தாத்பரியத்தின் ஞானத்தானேயே வைதிக வாக்கியத்தால் கேட்போனுக்கு சாப்த போத முண்டாகின்றது. கிளி முதலிய புட்களின் வாக்கியத்தாலும் உலகவருக்கு அர்த்தத்தின் போத முண்டாகின்றது; கிளி முதலியவைகளில் இச்சா வடிவ தாத்பரியமின்றும். என்றாலும் ராம கிருஷ்ணர் முதலிய சாது பதங்களால் பொருந்திய கிளி முதலியவைகளின் வாக்கியத்திலோ ஈசுவரனது தாத்பரியத்தையே அறிக. ககரீ முதலிய வழுவுதலுடைய பதங்களால் பொருந்திய கிளியின் வாக்கியம் யாதோ அவ்வாக்கியத்தில் கற்பிப்போனாகிய புருஷனது தாத்பரியத்தை அறிக. தாத்பரியத்தின் ஞானத்தால் கேட்போனுக்கு கிளி முதலிய பக்ஷிகளின் வாக்கியங்களானும் சாப்தபோதம் சம்பவிக்கின்றது.

## கஉஎக. சில சாப்த போதத்தைக் குறித்து தாத்பரிய ஞானத்தினை காரணமாக வொப்பும் சில வாதிகளின் மதம்.

ஈண்டு சில நூலாசிரியரோ இது கூறுகின்றனர். சர்வ சாப்த போதத்தைக்குறித்து தாத்பரிய ஞானத்திற்குக் காரணத்தன்மை யின்று. ஆனல் நானா அர்த்தமுடைய பதங்களால் பொருந்திய வாக்கியங்களால் உண்டாகிய சாப்த போதத்தைக் குறித்தே தாத்பரிய ஞானத்திற்குக் காரணத்தன்மைச்

சம்பவிக்கின்றது. எங்ஙனம்: சயிந்தவபதம் உப்பு, குதிரையா மிரண்டின் வாசகமாவதால் நாநா அர்த்தமுடையதாம். சயிந்தவபதம் பொருந்திய "சயிந்தவம் கொண்டுவா" என்னும் வாக்கியத்தால் உண்டாகிய போதத்தில் தாத்பரிய ஞானத்திற்குக் காரணத்தன்மையிருக்கின்றது. ஆனால் "கடத்தைக் கொண்டுவா" என்பதான இவை முதலிய வாக்கியங்களா லுண்டாம் சாப்த போதத்தில் தாத்பரிய ஞானத்திற்குக் காரணத்தன்மையின்றாம். இவ்வாறாக கிளி முதலியவைகளின் வாக்கியங்களா லுண்டாம் சாப்த போதத்திலும் தாத்பரிய ஞானத்திற்குக் காரணத்தன்மை யின்றாம்.

### கஉஎஉ. சத்தத்தினை அநுமானத்தின் அடக்கமாக ஒப்பும் வைசேஷிகர்களின் மத வர்ணனம்.

ஈண்டு வைசேஷிக சாஸ்திரமுடையார் சத்தத்தினை அநுமானப் பிரமாணத்தினும் வேறு பிரமாணமாக வொப்பினாரில்லை. ஆனால் சத்தத்தினை அநுமானத்தின் அடக்கமாக வொப்புகின்றனர். வைசேஷிகர்களின் கருத்திதுவாம். "கடத்தைக் கொண்டுவா" என்பதான வசனத்தால் கேட்போன் இவ்வாறாகிய அநுமானஞ் செய்கின்றனன். "வ௯ாநிவ௯ாநி ஸூாரிதாய௨ ஸ௯ஸமெஙாநவ௯வெ௯காணி ஆகாஂக்ஷாதிஉ௯௯வகவாஸ மாஜ௯ய ஊதிஉூாக௵வஸ" (இ-ள்.) கடத்தை கொண்டுவா வென்னும் வாக்கியத்திலுள்ள கட முதலிய பதங்கள் கட முதலிய பதங்களால் ஸ்மரண முண்டாகிய கட முதலிய அர்த்தங்களின் சம்பந்தத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞான பூர்வகமாம் ஆகாங்க்ஷை, யோக்கியதை, ஆசத்தியுடைய பதங்களின் சமூஹ வடிவமாவதால், எவ்வெப்பதம் ஆகாங்க்ஷாதி யுடைய சமூஹ வடிவ மாகின்றதோ அவ்வப்பதம் ஸ்மரிக்கக்கூடிய பதங்களின் சம்சர்க்கத்தை விஷயஞ் செய்யும் ஞான பூர்வகமேயாகின்றது. எங்ஙனம்: வேறு புருஷர்களைக் குறித்து யாம் உச்சரிக்கப்பட்ட ஆவைக் கொண்டுவா வென்னும் பதங்களின் சமூஹம் ஆகாங்க்ஷாதியுடைய பத சமூஹ வடிவ மாவதால் யாம் ஸ்மரித்த ஆ முதலிய பதார்த்தங்களின் சம்சர்க்கத்தை விஷயஞ் செய்யும் ஞான பூர்வகமே யாகின்றது. இவ்வாறாகிய அநுமானப் பிரமாணத்தானேயே கட முதலிய பதார்த்தங்களின் சம்சர்க்கத்தின் ஞான முண்டாகின்றது. ஆகையால் சத்தப் பிரமாணம் அநுமானத்தின் அடக்கமேயாம்.

### கஉஎங. வைசேஷிகர்களின் மத கண்டனம்.

அங்ஙனங் கூறிய வைசேஷிகர்களின் மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் "கடத்தைக் கொண்டுவா" என்பதான இவை முதலிய வாக்கியத்தினைக் கேட்ட பின் கட முதலிய பதார்த்தங்களினது சம்பந்தத்தின் ஞானம் ஓர்கால் அநுமானப் பிரமாணத்தானேயே யுண்டாகுமாயின் அந்தஞானத்திற்குப்பின் அவ்வாக்கியத்தைக் கேட்போனுக்கு அநுமிதி ஞானத்தினை விஷயஞ் செய்வதாகிய "அநுமிக்கின்றேன்" என்பதான மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுவியவசாய ஞானமே யுண்டாக வேண்டும். அங்ஙனமாய அநுவியவசாய ஞானம் கேட்போனுக்கு உண்டாகிறதில்லை. ஆனால் "சிரவணிக்கின்றேன்"

என்பதான சாப்த போதத்தினை விஷயஞ் செய்வதாகிய அநுவியவசாய ஞானமே யுண்டாகின்றது. அந்த விலக்ஷண அநுவியவசாய வடிவ அநுபவத்தின் வசத்தால் சாப்தி பிரமாவினை அநுமிதியினும் வேறாகவே வொப்ப வேண்டியதாகும். சாப்திப் பிரமாவின் வேற்றுமை சித்திக்க சாப்தி பிரமாவின் கரண வடிவ சத்தப் பிரமாணமும் அநுமானப் பிரமாணத்தினும் வேறாகவே வொப்பப்பட வேண்டும். ஆகையால் பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தம் என்னும் வேறுபாட்டால் நான்கு பிரமாணங்களே சித்தமாகின்றன. சத்தப் பிரமாண நிரூபணம் முற்றிற்று.

## கஉஎச. அர்த்தாபத்தி பிரமாண நிரூபணம்.

இனி அர்த்தாபத்தியினை ஐந்தாவது பிரமாணமாக வொப்புவோராகிய பிரபாகரரின் மதத்தினை நிரூபிப்பாம். ஆண்டு "உபபாத்யஜ்ஞாநேந உபபாதககல்பநம் அர்த்தாபத்தி:" (இ-ள்.) உபபாதகத்தின் ஞானத்திற்கு ஏதுவாகிய உபபாத்தியத்தின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணமெனப்படுகின்றது. எங்ஙனம்: பகலிற் புசியாதவனாகிய தேவதத்தனெனப் பெயரிய புருஷனது சரீரத்தின் ஸ்தூலத்தன்மை வடிவ பருமைத்தன்மையினைக் கண்ட அல்லது ஒருவன் சொல்லக் கேட்ட புருஷன் தேவதத்த புருஷனது இரவுபோஜனத்தை கற்பிக்கின்றான், எக்காரணத்தாலெனின் அன்னத்தின் புசிப்பின்றி சரீரத்தின் பருமை யுண்டாகாது. ஆண்டு இரவு போஜனமோ உபபாதகமாம் (சம்பாதிப்பதாம்). பருமை உபபாத்தியமாம் (சம்பாதிக்கப்படுவதாம்). ஆண்டு எப்பதார்த்தமின்றி எப்பதார்த்தம் ஓர்காலும் சம்பவியாததாமோ அப்பதார்த்தத்திற்கு அப்பதார்த்தம் உபபாத்தியமெனப்படுகின்றது. எங்ஙனம்: இரவு போஜனமின்றி பகலிற் புசியாத புருஷனிடத்து பருமை ஓர்காலும் சம்பவியாது. ஆகையால் அவ்விரவு போஜனத்திற்கு பருமை உபபாத்தியமெனப்படுகின்றது. எப்பதார்த்தத்தின் அபாவத்தால் எப்பதார்த்தத்தின் அபாவ மிருக்கின்றதோ அப்பதார்த்தம் அப்பதார்த்தத்தின் உபபாதக மெனப்படுகின்றது. எங்ஙனம்: இரவு போஜனத்தின் அபாவத்தால் பகலிற் புசியாத புருஷனிடத்து பருமையின் அபாவ மிருக்கின்றது. ஆகையால் இரவு போஜனம் பருமையின் உபபாதகமெனப்படுன்றது. ஆண்டு "இத்தேவதத்தன் இரவிற் புசிப்பவன்" என்பதாக இரவு போஜன வடிவ உபபாதகத்தின் ஞானமோ அர்த்தாபத்தி பிரமா வெனப்படுகின்றது. "திவாऽபுஞ்ஜாநஸ்ய பீநத்வம் ராத்ரிபோஜநம் விநாऽநுபபந்நம்" (இ-ள்.) பகலில் புசியாதவனது பருமை இரவு போஜனமின்றி அநுபபன்னமா மென்னும் பருமை வடிவ உபபாத்தியத்தின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாண மெனப்படுகின்றது. ஆண்டு இரவு போஜனத்தின் ஞானம் அர்த்தாபத்திப் பிரமாணத்தினும் வேறான பிரத்தியக்ஷப் பிரமாண முதலிய பிரமாணங்களால் சம்பவியாது. ஆகையால் அர்த்தாபத்திப் பிரமாணத்தை அவசியம் வொப்ப வேண்டும்.

### கஉஎரு. அர்த்தாபத்திப் பிரமாணத்தினை கேவல வியதிரேக அநுமானத்தில் அடக்குவது.

அங்ஙனங் கூறும்பிரபாகரரின் மதமும் நலமுடையதன்றும். ஏனெனின் இரவு போஜனத்தின் ஞானம் கேவலம் வியதிரேகி அநுமானத்தாலேயே சம்பவிக்கின்றது. அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "தேவத³த்த꞉ ராத்ரௌ பு⁴ங்க்தே தி³வாऽபு⁴ஞ்ஜாநத்வே ஸதி பீநத்வாத் யந்நைவம் தந்நைவம் யதா² தி³வா ராத்ரிச அபு⁴ஞ்ஜாந꞉" (இ-ள்.) இத்தேவதத்தன் இரவில் புசிக்கின்றான், பகலிற் புசியாதவனாகி பருமை சம்பவிப்பதால், எப்புருஷன் இரவு போஜனமுடையவனன்றோ அப்புருஷன் பகலிலும் புசியாதவனாயின் பருமை சம்பவியாது. எங்ஙனம்: இரவிலும், பகலிலும் புசியாதவனாகிய புருஷனுக்கு பருமையும் சம்பவியாது. என்பதான கேவல வியதிரேகி அநுமானத்தாலேயே இரவு போஜனத்தின் ஞான முண்டாய் விடுகின்றது. ஆகையால் அவ்வர்த்தாபத்திப் பிரமாணத்தினை அநுமானப் பிரமாணத்தினும் வேறு பிரமாணமாக வொப்புவது அசங்கதமாம்.

### கஉஎசு. அநுபலப்தியினை ஆறாவது பிரமாணமாக ஒப்பும் பட்டபாத, வேதாந்திகளின் மதம்.

ஈண்டு மீமாஞ்சக பட்டபாதரும், வேதாந்திகளும் அபாவத்தினது பிரத்தியக்ஷத்தின் பொருட்டு ஆறாவது அநுபலப்திப் பிரமாணத்தினையும் வேறு பிரமாணமாக அங்கிகரிக்கின்றனர். அநுபலப்தியின் ஸ்வரூபமும், அநுபலப்தியில் பிரமாணத்தன்மையினை கண்டிப்பதும் முன்னர் பிரத்தியக்ஷ நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம் அதை ஈண்டும் அறிந்துக் கொள்க.

### கஉஎஎ. சம்பவத்தினையும், ஐதீகத்தினையும் வேறு பிரமாணமாக வொப்பும் பௌராணிகர்களின் மதம்.

ஈண்டு பௌராணிகர் சம்பவத்தினையும், ஐதீகத்தினையும் வேறு பிரமாணமாக வொப்புகின்றனர். ஆண்டு "அவிநாபா⁴விநோ யஸ்ய ஸத்தா ஸத்தாம் ந ரக்ஷ்ய ஸத்தா க்³ரஹணம் ஸம்ப⁴வ꞉" (இ-ள்.) எப்பதார்த்தம், எப்பதார்த்தமின்றி இராதோ அப்பதார்த்தம் அப்பதார்த்தத்தின் அவினாபாவம் (உடநிகழ்ச்சி) உடையதாகின்றது. அத்தகைய அவினாபாவீ பதார்த்தத்தின் சத்பாவ ஞானத்தால் அன்னிய பதார்த்தத்தின் சத்பாவ ஞானத்தினை சம்பவமென்பர். எங்ஙனம்: ஐம்பதின்றி நூறு சம்பவியாது. ஆனால் நூறு ஐம்பதாற் பொருந்தியதே யாகின்றது. ஆகையால் அந்த நூறு ஐம்பதின் அவினாபாவமுடையதாம். அந்த நூறின் ஞானத்தின் பின்னர் புருஷனுக்கு ஐம்பதின் ஞானம் அவசிய முண்டாகின்றது. ஆண்டு இது நூறுமென்பதான் ஞானமோ சம்பவப் பிரமாணமாம். இது ஐம்பதுடையதா மென்னும் ஞானம் பிரமாவடிவ பயனும். ஆண்டு சம்பவம் சம்பாவனை வடிவம், நிர்ணய வடிவம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு இவன் பிராமணனாமென்பதான ஞானத்தின் பின்னர் பிராமணனில் சதுர்த்தச வித்தைகளின் அப்பியாசத்தன்மை சம்பவிக்கின்றதென்பதான ஞானம் சம்பாவனை வடிவ

சம்பவமெனப்படுகின்றது. யாண்டு நூறென்னும் ஞானத்தின் பின்னர் ஐம்பதின் ஞான முண்டாகின்றதோ அது நிர்ணய வடிவ சம்பவ மெனப்படு கின்றது.

### கஉஎ௯. சம்பவப் பிரமாணத்தின் கண்டனம்.

அங்ஙனங் கூறும் மதம் நலமுடையதன்றாம். ஏனெனின் முதலில் சம்பாவனா வடிவ சம்பவமோ நியமமாக யதார்த்த ஞானத்தினை உண்டாக்குவதில்லை. ஆகையால் சம்பாவனா வடிவ சம்பவம் பிரமாண வடிவமன்று. மற்றைய நிர்ணய வடிவ சம்பவமோ அநுமானத்தின் அடக்கமேயாகின்றது. அநுமானப் பிரமாணத்தினும் வேறாகிறதில்லை. கருத்திதுவாம்; யாண்டாண்டு நூறிருக்கின்றதோ ஆண்டாண்டு ஐம்பதும் அவசிய மிருக்கின்றது. என்னும் சஹசார தரிசனத்தால் நூற்றில் ஐம்பதின் வியாப்தியின் நிச்சயமுடைய புருஷனுக்கு நூறாகிய ஏதுவின் ஞானத்தால் ஐம்பதாகிய சாத்தியத்தின் அநுமிதியே யுண்டாகின்றது. ஆகையால் நிர்ணய வடிவ சம்பவம் அநுமானத்தின் அடக்கமேயாம்.

### கஉஎகூ. ஐதீகப் பிரமாணத்தின் லக்ஷணம்.

ஆண்டு "விப்ரதிஷித்தா நிர்ணீத வக்த்ருகஃ ஶப்தவிஶேஷஃ ஐதிஹ்யம்" (இ-ள்.) விசேஷத்தால் நிர்ணயமாகாதாகி முதலில் கூறுவோனது சத்த விசேஷத்தினை ஐதீக மென்பர். எங்ஙனம்: இம்மரத்தில் பேய் இருக்கின்ற தென்பதான இவை முதலிய லௌகிக இதிகாசங்கள் ஐதீகமெனப்படு கின்றது. ஆண்டு புருஷன் இம்மரத்தில் பிசாசைப் பார்த்து "இஹ வடே யக்ஷஸ்திஷ்டதி" என்பதான வசனத்தைக் கூறினனாகை, அது முதலாக ஏனையோர் அம்மரத்தில் பேயைக் காணாவிடினும் உலக பரம்பரையாக அம்மரத்தில் பேயிருக்கிறதென்னுங் கூற்று நடைபெறுகின்றது. அத்தகைய ஐதீகப் பிரமாணத்தானேயே மரத்தில் உலகவருக்கு பிசாசின் ஞான முண்டாகின்றது.

### கஉ௮௦. ஐதீகப் பிரமாணத்தின் கண்டனம்.

அங்ஙனங் கூறும் மதமும் அசங்கதமாம். ஏனெனின் எவ்வைதீகம் யதார்த்தஞானத்தினை உண்டாக்குவதாகின்றதோ அவ்வைதீகமோ சத்தப்பிரமாணத்தின் அடக்கமேயாம். எவ்வைதீகம் யதார்த்த ஞானத்தினை உண்டாக்குவதன்றோ அவ்வைதீகம் பிரமாண வடிவமேயன்றாம். இரண்டு வகையானும் ஐதீகத்திற்கு வேறு பிரமாணத்தன்மை சித்தமாகிறதில்லை.

### கஉ௮க. சேஷ்டையினை பிரமாணமாக வொப்பும் தாந்திரிகர்களின் மதம்.

ஈண்டு தாந்திரிகர் சேஷ்டையினை பிரமாணமாக வொப்புகின்றனர். அவர்களின் கருத்திதுவாம், பரஸ்பர கை முதலியவைகளின் சேஷ்டையால் நீவிர் இவ்வார்த்தை அறிக என்பதாக சேஷ்டையினை சங்கேதிக்கும் புருஷனுக்கு சேஷ்டையால் அர்த்தத்தின் ஞான முண்டாய் விடுகின்றது. விஜாதீய ஞானத்திற்கு சேஷ்டையே கரணமாம். ஆகையால் விஜாதீய பிரமாவின் கரணமாவதால் சேஷ்டையும் வேறு பிரமாணமேயாம்.

## ௧௨௮௨. சேஷ்டையில் பிரமாணத்தின் கண்டனம்.

அன்னனங் கூறும் மதமும் நலமுடையதன்றாம். ஏனெனின் சேஷ்டையும் வேறு பிரமாணமன்றாம். ஆனால் விலக்ஷண சேஷ்டையால் அவ்வவ் வர்த்தத்தின் வாசக பதங்களின் ஸ்மரண முண்டாகி அவ்வவ் வர்த்தத்தின் சாப்த போதமே யுண்டாகின்றது. அல்லது சேஷ்டை வடிவ ஏதுவால் அவ் வர்த்தத்தின் அநுமிதி ஞான முண்டாகின்றது. ஆகையால் சேஷ்டையில் வேறு பிரமாண வடிவத்தன்மை சம்பவியாது. ஆகையால் பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சாப்தம் எனக் கூறிய இந்நான்கு பிரமாணங்களே சம்பவிக்கின்றன. இந்நான்கினும் குறைந்த அல்லது மிகுந்த பிரமாணங்கள் சம்பவியாதென்பது சித்தமாயிற்று.

## ௧௨௮௩. பிரத்தியக்ஷ முதலிய பிரமாணங்கட்கு மதவேறுபாட்டால் குறைவு மிகுதித் தன்மையின் வர்ணனம்.

இனி மத வேறுபாட்டால் பிரமாணங்களின் குறைவு மிகுதி என்பதைக் காட்டுவாம். ஆண்டு சார்வாக மதமுடையாரோ பிரத்தியக்ஷப் பிரமாணமொன்றினையே யொப்புகின்றனர். வைசேஷிகரும், பௌத்தரும், ஆர்ஹதருமாகிய மூவரும் பிரத்தியக்ஷம், அநுமானமா மிரண்டினை யொப்புகின்றனர். சத்தம், உபமானமா மிரண்டு பிரமாணங்களை அநுமானத்தின் அடக்கமாக வொப்புகின்றனர். ஆனந்த தீர்த்தாச்சாரியரோ பிரத்தியக்ஷம், சத்தமா மிரு பிரமாணங்களையொப்புகின்றனர். அவர்கள் மதத்தில் அநுமானம் சுவதந்திரப் பிரமாணமன்றாம். ஆனால் சுருதியினை அநுசரிப்பதாகியே பிரமாணமாகின்றது. சாங்கிய சாஸ்திர முடையாரோ பிரத்தியக்ஷம், அநுமானம், சத்தமா மூன்று பிரமாணங்களையே யொப்புகின்றனர். நையாயிகர்களின் ஏகதேசிகளோ பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானமா மிம்மூன்று பிரமாணங்களையே யொப்புகின்றனர். நையாயிகர்களோ பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தமா மிந்நான்கு பிரமாணங்களை யொப்புகின்றனர். பிரபாகரரோ பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தம், அர்த்தாபத்தி என்னும் ஐந்துபிரமாணங்களை யொப்புகின்றனர். பட்டபாதரும், வேதாந்தியும் பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தம், அர்த்தாபத்தி, அநுபலப்தி என்னும் ஆறு பிரமாணங்களை அங்கீகரிக்கின்றனர். பௌராணிகரோ கூறிய அவ்வப் பிரமாணங்களில் சம்பவம் ஐதீகமென்னு மிரண்டு பிரமாணங்களைச் சேர்த்து எண்வகைப் பிரமாணங்களை யொப்புகின்றனர். தாந்திரிகர் கூறிய எண்வகைப் பிரமாணங்களில் சேஷ்டா வடிவ பிரமாணத்தினைச் சேர்த்து ஒன்பது பிரமாணமாக வொப்புகின்றனர். ஆண்டு முன்னர் யதார்த்தம், அயதார்த்தம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகிய அநுபவங் கூறப்பட்டது. அதனிடத்து பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்தம் என்னும் நான்கு பிரமாணங்களின் யதார்த்த அநுபவம் முன்னர் விரிவாய்க் கூறி வந்துள்ளோம்.

---

### ௧௨௮௪. அயதார்த்த அநுபவத்தின் நிரூபணம்.

இனி இரண்டாவது அயதார்த்த அநுபவத்தினை நிரூபிப்பாம். ஆண்டு அயதார்த்த அநுபவத்தின் லக்ஷணம் முன்னர் கூறி வந்துள்ளோம். அதை கண்டுமறிக. அயதார்த்த அநுபவமும் சம்சயம், விபர்யயம், தார்க்கம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்து. அவற்றில் முதலில் சம்சயத்தினை நிரூபிப்பாம். ஆண்டு "ஏகஸ்மிந் தர்மிணி விருத்த பாவாபாவ ப்ரகாரகம் ஜ்ஞாநம் ஸம்ஶய:" (இ-ள்.) ஒரே தர்மியில் பரஸ்பர விருத்த பாவாபாவத்தினை விஷயஞ்செய்வதாகிய ஞானம் யாதோ அந்த ஞானம் சம்சயமெனப்படுகின்றது. எங்ஙனம்: மந்த அந்தகாரத்திலுள்ள ஸ்தாணுவில் (கட்டையில்) புருஷனுக்கு "ஸ்தாணுவோ புருஷனோ?" என்பதாக உண்டாகும் ஞானம் அந்தகாரத்தில் இருப்பதாகிய ஸ்தாணு வடிவ ஒரு தர்மியில் ஸ்தாணுத்தன்மையினையும், ஸ்தாணுத்தன்மையின் அபாவத்தினையும், புருஷத்தன்மையினையும், புருஷத்தன்மையின் அபாவத்தினையும் விஷயஞ் செய்கின்றது. ஸ்தாணுத்தன்மையும், ஸ்தாணுத்தன்மையின் அபாவமுமாமிரண்டும் புருஷத்தன்மையும், புருஷத்தன்மையின் அபாவமுமாமிரண்டும் பரஸ்பரவிரோதியுமாம். அதாவது; ஒரு அதிகரணத்திலிருப்பனவன்று. ஆகையால் ஒரு தர்மியில் விருத்த பாவாபாவம் விசேஷணமாவதால் அந்த ஞானம் சம்சயமெனப்படுகின்றது.

### ௧௨௮௫. சாதாரண தர்ம ஞான ஜன்னிய சம்சயம், அசாதாரண தர்ம ஞான ஜன்னிய சம்சயம், விப்பிரதிபத்தி வாக்கிய சம்சயம் என்னும் வேறுபாட்டால் சம்சயத்தின் மூவித் வேற்றுமை.

ஆண்டுக் கூறிய அச்சம்சயம் சாதாரண தர்ம ஞான ஜன்னியம், அசாதாரண தர்ம ஞான ஜன்னியம், விப்பிரதிபத்தி வாக்கிய ஞான ஜன்னியம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு "ஸ்தாணுவோ புருஷனோ" வென்னும் சம்சயமோ ஸ்தாணுவிடத்தும், புருஷனிடத்து மிருக்கின்ற உயர்வுத்தன்மை வடிவ சாதாரண தர்மத்தின் ஞானத்தால் ஜன்னியமாவதால் சாதாரண தர்ம ஞான ஜன்னிய சம்சயமெனப்படுகின்றது. சத்தத்தன்மை தர்மம் ஆகாச முதலிய நித்திய பதார்த்தங்களிலு மிருப்பதன்று, கட முதலிய அநித்திய பதார்த்தங்களிலு மிருப்பதன்று. கேவலம் சத்த மாத்திரத்திலேயே சத்தத்தன்மை தர்ம மிருக்கின்றதென்பதான ஞானத்திற்குப் பின் புருஷனுக்கு "சத்தம் நித்தியமோ அன்றோ" என்பதாக சத்தத்தில் நித்தியத்தன்மை, நித்தியத்தன்மை அபாவ விசேஷ சம்சய முண்டாகின்றது. அச்சம்சயம் சத்தத்தன்மை வடிவ அசாதாரண தர்மத்தின் ஞானத்தால் ஜன்னியமாவதால் அசாதாரண தர்ம ஞான ஜன்னிய சம்சயமெனப்படுகின்றது. முற்கூறிய யதார்த்த அநுபவ வடிவ பிரமாவிடத் திருப்பதாகிய பிரமாத்தன்மை தர்மத்தினை மீமாஞ்சகர் தன்னால் கிராஹியமென்கின்றனர். நையாயிகர் பிறிதாற்கிராஹியமென்பர். அவ்விரு வசனத்தினைக்கேட்பதால் புருஷனுக்கு "பிரமாத்தன்மை தன்னாற்கிராஹியமோ பிறிதாற்கிராஹியமோ" என்பதாக உண்டாம் சம்சய விப்பிரதிபத்தி வாக்கிய ஞான ஜன்னிய சம்சயமெனப்படுகின்றது.

பிரமாத்தன்மையில் தன்றற் கிராஹியத்தன்மையும், பிறிதாற் கிராஹியத் தன்மையும் பின்னர் நிரூபிப்பாம்.

### கஉ௲௬. பஹிர் விஷயகம், அந்தர் விஷயகம் என்னும் வேறுபாட்டால் கூறிய சம்சயத்தின் இருவித வேற்றுமை.

அல்லது கூறிய சம்சயம் பஹிர் விஷயகம், அந்தர் விஷயகம் என்னும் வேறுபாட்டால் மீண்டுமிருவகைத்தாம். ஆண்டு பாஹிய வஸ்துவினை விஷயஞ் செய்வதாகிய சம்சயத்தினை பஹிர் விஷயக சம்சயமென்பர். அந்தர் வஸ்துவினை விஷயஞ் செய்வதாகிய சம்சயத்தினை அந்தர் விஷயக சம்சயமென்பர். அல்லது பஹிர் விஷயக சம்சயமும் திருசியமான தர்மிகம், அதிருசியமான தர்மிகம் என்னும் வேறுபாட்டால் மீண்டுமிருவகைத்தாம். ஆண்டு உயர்வுத்தன்மை விசிஷ்ட தர்மியின் தரிசனத்தால் "இது ஸ்தாணுவோ புருஷனோ" என்பதான சம்சயம் திருசியமான தர்மிகமெனப்படுகின்றது. வனத்தில் விருக்ஷங்களின் சாகை முதலியவைகளால் மறைவுபட்ட ஆ பிண்டம் அல்லது ஆமா பிண்டம் யாதோ அவைகளின் கோட்டினை மாத்திரம் கண்ட புருஷனுக்கு "இது ஆவோ ஆமாவோ" என்பதாக உண்டாம் சம்சய ஞானம் அதிருசியமான தர்மிகமெனப்படுகின்றது. தனது ஞானங்களில் புருஷனுக்குள்ள நன்மை, தீமைகளின் சம்சயம் அந்தர்விஷயக மெனப்படுகின்றது. ஆண்டு விசேஷத்தின் அதரிசனமும், இரு கோடிகளின் ஸ்மரணமும் முற்கூறிய சம்சயங்கள் யாவற்றிலும் காரணமாகின்றன. அவைகளின்றி எச் சம்சயமுமுண்டாகிறதில்லை. ஆண்டு எதனது ஞானத்தால் சம்சயம் நிவிருத்தியாய் விடுகின்றதோ அதனை விசேஷமென்பர். எங்ஙனம்: ஸ்தாணுவினை நிச்சயிப்பதாகிய வளைந்த கோடராதிகளுடைமையும், புருஷத்தன்மையினை நிச்சயிப்பதாகிய கை, கால் முதலியன உடைமையுமாகிய விசேஷத்தின் ஞானமுளதாக சம்சயமுண்டாகிறதில்லை. ஆகையால் விசேஷத்தின் அதரிசனத்திற்கு சம்சயத்தின் காரணத்தன்மை சம்பவிக்கின்றது. இவ்வாறக சம்சயத்தில் தோற்றும் பாவ அபாவ வடிவ இருவித கோடிகளின் ஸ்மரணமும் சம்சயத்திற்குக் காரணமாம்.

### கஉ௲௭. விபர்யயத்தின் லக்ஷணம்.

ஆண்டு "மித்யாஜ்ஞாநமதத்ரூபப்ரதிஷ்டம் விபர்யய:" (இ-ள்.) மித்தை யென்பதான பெயருடையதாகிய அயதார்த்த நிச்சயத்தினை விபர்யய மென்பர். எங்ஙனம்: கிளிஞ்சலில் "இது வெள்ளி" என்பதான ஞானமும் "கயற்றில் இது பாம்பு" என்பதான ஞானமும் தேகத்தில் "யான் இளைத்தவன், யான் பருத்தவன், யான் பிராம்மணன்" என்பதான ஆத்மத்வ ஞானமும் சங்கில் "இதுமஞ்சட்சங்கு" பாலைநிலத்தில் "இதுஜலம்" என்பதான ஞானமும் மித்தியா ஞான வடிவமாவதால் விபர்யயமெனப்படுகின்றது. இம் மித்தியா ஞான வடிவ விபர்யயத்தினை பிரமமென்றும், பிராந்தியென்றுங் கூறுவர். அங்ஙனமே அப்பிரமா வென்றுங் கூறுவர். விபர்யயத்தில் சாமான்னியவடிவமாக தர்மியின் ஞானமும், விசேஷ வடிவத்தின் அதரிசனமும், ஒரு கோடியின் ஸ்மரணமும், தோஷமுமாகிய இந்நான்கும் காரணமாகின்றன.

எங்ஙனம்: "சுக்தியில் இது வெள்ளி" என்னும் விபர்யய ஞானத்தில் சுக்தி வடிவ தர்மியின் இதந்தா (இதுவென்னும்) வடிவ ஞானமும், சுக்தித்தன்மை, கருமுதுகுடைமை, முக்கோணத் தன்மை முதலிய விசேஷ வடிவத்தின் அதரிசனமும், ரஜதவடிவ ஒருகோடியின் ஸ்மரணமும், சுக்தியிலிருக்கும் வெள்ளியின் சாதிருசியமும் காரணமாகின்றன. விபர்யயத்தின் காரணமாகிய தோஷம் ஒருவகைத்தன்று. ஆனால் சாதிருசியம் சேய்மைத்தன்மை, பித்தம், காசமாலை என்பதான இவை முதலிய வேறுபாட்டால் பலவகைத்தாம். கூறிய நான்கு காரணங்களின்றி யாதோர் விபர்யய ஞானமும் உண்டாகிறதில்லை.

### கஉஅஎ. தர்க்கத்தின் லக்ஷணம்.

ஆண்டு "வ்யாப்யாரோபேண வ்யாபகாரோப: தர்க:" (இ-ள்.) வியாப்பியத்தின் ஆரோபத்தால் வியாபகத்தின் ஆரோபத்தினை தர்க்கமென்பர். எங்ஙனம்: பர்வதத்தில் தூமத்தினைக் கண்டும் பர்வதத்தில் வன்னியை அங்கீகரிக்காதவன் பர்வதத்தில் வன்னியினை அங்கீகரிக்கும் பொருட்டு பர்வதத்தில் வன்னியின் ஞானமுடைய புருஷன் இவ்வாறு தர்க்கம் செய்கின்றான். "யத்யயம் வஹ்நிமாந் ந ஸ்யாத் தர்ஹி தூமவாநபி ந ஸ்யாத்" (இ-ள்.) இம்மலையினிடத்து வன்னியில்லையாயின் தூமமுமின்றாகும். ஏனெனின் தூமம் வன்னியின் காரியமாம், காரணமின்றி காரியமுண்டாகிறதில்லை. என்பதான தர்க்கத்தினைக் கேட்ட புருஷன் தூமமுடைய பர்வதத்தில் வன்னியை அங்கீகரிக்கின்றான். யாண்டாண்டு வன்னியின் அபாவமிருக்கின்றதோ ஆண்டாண்டு தூமத்தின் அபாவமிருக்கின்றது. எங்ஙனம்: மடு முதலியவைகள் போலும். ஈண்டு வன்னியின் அபாவமோ வியாப்பியமாம். தூமத்தின் அபாவம் வியாபகமாம். பர்வதத்தில் வன்னியபாவ வடிவ வியாப்பியத்தின் ஆரோபத்தால் தூமாபாவ வடிவ வியாபகத்தின் ஆரோபஞ் செய்யப்பட்டது. ஆகையால் கூறிய ஆரோபம் தர்க்கமெனப்படுகின்றது. இத்தர்க்கம் முற்கூறிய விபர்யயத்தில் அடங்குவதாயினும், இத்தர்க்கத்தை விபர்யயத்தினும் வேறாகக் கூறுவிடின் அநுமானப் பிரமாணத்தின் சஹகாரியன்றாகும். இத்தர்க்கமோ வியபிசார சங்கையின் நிவர்த்தி மூலமாக அநுமானப் பிரமாணத்தின் அநுகூலமே யாகின்றது. இக்காரணத்தால் இத்தர்க்கம் விபர்யயத்தினும் வேறாகக் கூறப்பட்டது.

### கஉஅஅ. விஷய பரிசோதகம், வியாப்தி கிராஹியம் என்னும் வேறுபாட்டால் தர்க்கத்தின் இருவித வேற்றுமை.

கூறிய தர்க்கம் விஷய பரிச்சேதகம், வியாப்தி கிராஹகம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு "யத்யயம் நிர்வஹ்நி: ஸ்யாத் தர்ஹி நிர்தூம: ஸ்யாத்" (இ-ள்.) இம்மலை வன்னியின் அபாவமுடையதாயின் தூமத்தினது அபாவமு முடையதாகு மென்பதான இவை முதலிய தர்க்கம் விஷய பரிசோதக தர்க்கமெனப்படுகின்றது. "யதி தூமோ வஹ்நிவ்யபிசாரீ ஸ்யாத் தர்ஹி வஹ்நிஜந்யோ ந ஸ்யாத்" (இ-ள்.) ஓர்கால் தூமம் வன்னியின் வியபிசார முடையதாகுமாயின் வன்னியால் உண்டாவதன்றாகும். என்பதான இவை

முதலிய தர்க்கம் வியாப்தி கிராஹக தர்க்க மெனப்படுகின்றது. அதாவது; கூறிய தர்க்கம் தூமத்தில் வன்னியினது வியபிசாரத்தின் சங்கையின் நிவிருத்தி செய்வதால் வன்னியினது வியாப்தியினை நிச்சயிப்பதாகின்றது.

### ௧௨௯௦. ஆத்மாசிரய முதலிய வேறுபாட்டால் ஐவகை தர்க்கத்தை யொப்புவோர்களின் மதம்.

சில நூலாசிரியரோ கூறிய தர்க்கத்தினை ஆத்மாசிரயம், அன்னியோந்நியாசிரயம், சக்கிரிகா, அனவஸ்தா, பிரமாண பாதிதார்த்தப் பிரசங்க மென்னும் வேறுபாட்டால் ஐவகையாக வொப்புகின்றனர். ஆண்டு முற்கூறிய வியாப்தி கிராஹக தர்க்கத்தினை பிரமாண பாதிதார்த்த பிரசங்க மென்பர்.

### ௧௨௯௧. வியாகாதி வேறுபாட்டால் பதினொரு வகை தர்க்கத்தினை வொப்புவோர்களின் மதம்.

சில நூலாசிரியரோ தர்க்கத்தினை வியாகாதம், ஆத்மாசிரயம், இதரேதராசிரயம், சக்கிரிகா, அனவஸ்தா, பிரதிவந்தி, கல்பனாலாகவம், கல்பனாகௌரவம், உத்சர்க்கம், அபவாதம், வையாத்தியம் என்னும் வேறுபாட்டால் பதினொரு வகையாக அங்கீகரிக்கின்றனர்.

### ௧௨௯௨. வியாகாத வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

இனி முறையாக பதினொரு வகைத்தாகிய தர்க்கத்தின் லக்ஷணத்தையும், உதாஹரணத்தையும் நிரூபிப்பாம். ஆண்டு "விரு-த்தஸமு-ச்சய: வ்யாகாத:" (இ-ள்.) ஒரு அதிகரணத்தில் பரஸ்பர விருத்த தர்மங்களின் சமுச்சயத்தினை (கல்பினை) வியாகாதமென்பர். எங்ஙனம்: "விவாதாஸ்பதீபூதா க்ஷித்யாதி ஸகர்த்ருகா கார்யத்வாத் கடவத்" (இ-ள்.) விவாதத்தின் விஷயமாகிய பூமி, முதலிய ஜகத்து ஒருவனது முயற்சியால் உண்டாவதாம், காரியவடிவமாவதால் எதுவெது காரிய வடிவமாகின்றதோ அதுவது முயற்சியினாலேயே ஜன்னியமாகின்றது. எங்ஙனம்: கடம் காரிய வடிவமாவதால் குலாலனது முயற்சியால் உண்டாவதாம். அங்ஙனமே ஜகத்து காரியவடிவமாவதால் ஒருவனது முயற்சியால் அவசியம் உண்டாவதாகும். சர்வஜகத்தின் காரணத்தன்மை ஜீவனது முயற்சியில் சம்பவியாது. ஆகையால் கூறிய அநுமானத்தால் ஈசுவரனது முயற்சியே சர்வ ஜகத்திற்கு காரண வடிவமாக சித்தமாகின்றது. ஆண்டு கூறிய அநுமானத்தில் பிரதிவாதிக்கு ஜகத்தில் காரியத்தன்மை வடிவ ஏது இருக்கினும் முயற்சித்தன்மை வடிவ சாத்திய மிருப்பதினென்பதில் விவஸ்தையில்லாது. என்பதான சங்கை யுண்டாக வியாகாத வடிவ தர்க்கத்தானேயே அச்சங்கையின் நிவிர்த்தியுண்டாகின்றது. ஆண்டு காரியத்தன்மையும், முயற்சி ஜன்னியத்தன்மை அபாவமுமாமிரு தர்மங்கள் பரஸ்பரவிருத்தமாம். எங்ஙனம்: கடம் கடத்தின் பிராகபாவமும், கடமும் கடத்தின் பிரத்துவம்சாபாவமுமா மிரண்டும் பரஸ்பர விருத்தமாம், ஒரு வஸ்துவில் அவ்விரு தர்மங்களின் சமுச்சய முண்டென்னும் கூற்றுளதாக வியாகாதத்தின் பிராப்தியுண்டாகின்றது. அங்ஙனமே ஒரு வஸ்துவில் காரியத்தன்மையும் முயற்சி ஜன்னியத்தன்மை யபாவமுமா மிரண்டு தர்மங்களின் சமுச்சயமுளதென்னும் வசனமுளதாக வியாகாதத்தின் பிராப்தியே யுண்டாகின்றது.

### கஉகூ௩. ஆத்மாசிரய வடிவ தர்க்கத்தின் லக்ஷணம்.

ஆண்டு கடம், கடத்தின் பிராகபாவமா மிரண்டிற்கு ஒன்றில் சமுச்சய முண்டாகாது. ஆனல் காரியத்தன்மை, முயற்சி ஜன்னியத்தன்மை யபாவமு மாமிரண்டிற்கு ஒன்றில் சமுச்சய முண்டாகு மென்பதாக வாதி சங்கிக்கின் அவ்வாதியோடு இது வினவுதல் வேண்டும். கடம், கடத்தின் பிராகபாவமா மிரண்டோடு காரியத்தன்மை, முயற்சி ஜன்னியத்தன்மை யபாவமாமிவ்விரண் டில் அற்ப விசேஷ மிருக்கிறதா அல்லது இல்லையா? விசேஷமின்றுமெனின் கடம், கடத்தின் பிராகபாவமா மிரண்டிற்கு எங்ஙனம் ஒன்றில் சமுச்சய முண்டாகாததாமோ அங்ஙனமே காரியத்தன்மை, முயற்சி ஜன்னியத்தன்மை யபாவமா மிரண்டிற்கும் ஒன்றில் சமுச்சய முண்டாகாததாகும். ஈண்டு விசேஷ மிருக்கிறதெனின் எவ்விசேஷத்தின் வலிவால் காரியத்தன்மை, முயற்சி ஜன்னியத்தன்மை யபாவமா மிரு விருத்ததர்மங்கட்கு ஒன்றில் சமுச்சய முண்டாகின்றதோ அவ்விசேஷத்தில் அவ்விசேஷமே பிரமாணமா? அல்லது வேறு விசேஷம் பிரமாணமா? ஆண்டு அவ்விசேஷத்தில் அவ்விசேஷமே பிரமாண மாக வொப்பின் ஆத்மாசிரய முண்டாகும். ஆண்டு "ஸ்வஸ்யஸ்வாபேக்ஷணம் ஆத்மாஶ்ரய:" (இ-ள்.) மறைப்பின்றி தான் தன்னையே அபேக்ஷிப்பதனை ஆத்மாசிரய மென்பர். ஆண்டு விசேஷம் தன் சித்தியில் தானே பிரமாணமாகுமாயின் ஆத்மாசிரயமாகும். ஆண்டு கூறிய அவ்வாத்மா சிரயம் தனது அதிகரணத்தன்மையில் தனது அபேக்ஷையும், தனது ஞானத்தில் தனது அபேக்ஷையும், தனது உற்பத்தியில் தனது அபேக்ஷையும், தனது சமீபத்தில் தனது அபேக்ஷையும், தனது உபமாவில் தனது அபேக்ஷையுமா மிவை முதலிய வேறுபாட்டால் பலவகைத்தாம். இவ்வாறாகக் கூறப்படும் இதரேதராசிரயமும், சக்கிரிகையும் பலவகைத்தாமென அறிந்துக் கொள்க.

### கஉகூ௪. இதரேதராசிரய வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

விசேஷத்தில் வேறு விசேஷம் பிரமாணமா மெனக் கூறின் வேறு விசேஷத்தில் பிரமாணம் யாது? ஆண்டு வேறு விசேஷத்தில் வேறு விசேஷமே பிரமாணமா? அல்லது முதல் விசேஷம் பிரமாணமா?. ஆண்டு முதற் பக்ஷத்திலோ முன்போன்று ஆத்மாசிரய வடிவ தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தில் இதரேதராசிரய தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். ஆண்டு "த்வயோரந்யோந்யாபேக்ஷணம் இதரேதராஶ்ரய:" (இ-ள்.) இரண்டின் பரஸ்பர அபேக்ஷையினை இதரேதராசிரய மென்றும், அந்நியோன்னியாசிரய மென்றுங் கூறுவர். எங்ஙனம்: பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்கு தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தின் அபேக்ஷையும், இரண்டாவது விசேஷத்திற்கு தனது சித்தியில் முதல் விசேஷத்தின் அபேக்ஷையுமாம்.

### கஉகூ௫. சக்கிரிகா வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

ஓர்கால் இரண்டாவது விசேஷத்தில் மூன்றாவது விசேஷம் பிரமாண மாகுமாயின் மூன்றாவது விசேஷத்தில் மூன்றாவது விசேஷமே பிரமாணமா?

அல்லது இரண்டாவது விசேஷம் பிரமாணமா? அல்லது முதல் விசேஷம் பிரமாணமா?. ஆண்டு முதற் பக்ஷத்திலோ முற்போன்று ஆத்மாசிரய தோஷத்தின் பிராப்தியுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தில் இதரேதராசிரய தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். ஆண்டு "ஃயொஈஸ்வரஹாஸ்ரவெக்ஷண உ-தரெ-தராஸ்ரயஃ" (இ-ள்.) இரண்டின் பரஸ்பர அபேக்ஷையினை இதரேதராசிரய மென்றும், அன்னியோன்னியாசிரய மென்றுங் கூறுவர். எங்ஙனம்: பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்கு தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தின் அபேக்ஷயும், இரண்டாவது விசேஷத்திற்கு தனது சித்தியில் முதல் விசேஷத்தின் அபேக்ஷயுமாம்.

## கஉகசு. சக்கிரிகா வடிவ் தர்க்கத்தின் நிரூபணம்.

ஓர்கால் இரண்டாவது விசேஷத்தில் மூன்றுவது விசேஷம் பிரமாணமாகுமாயின் மூன்றுவது விசேஷத்தில் மூன்றுவது விசேஷமே பிரமாணமா? அல்லது இரண்டாவது விசேஷம் பிரமாணமா? அல்லது முதல் விசேஷம் பிரமாணமா?. ஆண்டு முதற் பக்ஷத்திலோ முற்போன்று ஆத்மாசிரய தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். இரண்டாவது பக்ஷத்தில் முற்போன்று அன்னியோன்னியாசிரய தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். மூன்றுவது பக்ஷத்தில் சக்கிரிகா தோஷத்தின் பிராப்தியுண்டாகும். ஆண்டு "வ-ுவ-ு ஸ்வ-ுவ-ுாவெக்ஷித உயஸ்ராவெக்ஷிகொ-தூராவெக்ஷிதகவம் வக்ரகம்" (இ-ள்.) முதலிலுள்ளதை இடையிலுள்ளதும், இடையிலுள்ளதை அதற்குப் பின்னுள்ளதும், அப்பின்னுள்ளதை முன்னுள்ளதும் அபேக்ஷிப்பதனை சக்கிரிகை யென்பர். எங்ஙனம்: ஈண்டு பிரசங்கத்தில் முதல் விசேஷம் தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தை அபேக்ஷிப்பதாம். இரண்டாவது விசேஷம் தனது சித்தியில் மூன்றுவது விசேஷத்தை அபேக்ஷிப்பதாம். மூன்றுவது விசேஷம் தனது சித்தியில் முதல் விசேஷத்தை அபேக்ஷிப்பதாம். இதனையே சக்கிரிகை யென்பர்.

## கஉகள. அனவஸ்தா வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

மூன்றுவது விசேஷத்தில் நான்காவது விசேஷம் பிரமாணமாம், நான்காவது விசேஷத்தில் ஐந்தாவது விசேஷம் பிரமாணமாமென முன் முன் விசேஷத்தில் பின் பின் விசேஷத்திற்கு பிரமாணத்தன்மையை மீண்டு மீண்டும் ஒப்புவதில் முற்கூறிய சக்கிரிகா தோஷம் பிராப்தமாவதின்றென வாதி கூறுவதும் சம்பவியாது. ஏனெனின் அங்ஙனம் ஒப்புவதில் அனவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகும். ஆண்டு "வ-ுவ-ுவொஸ்தூரொ தூரா வெக்ஷிதகவம் கூநவஸ்தா" (இ-ள்.) முன் முன் விசேஷம் பின் பின் விசேஷத்தை அபேக்ஷிப்பதனை அனவஸ்தை யென்பர். எங்ஙனம்: ஈண்டு பிரசங்கத்தில் முதல் விசேஷத்திற்கு தனது சித்தியில் இரண்டாவது விசேஷத்தின் அபேக்ஷை, இரண்டாவது விசேஷத்திற்கு மூன்றுவது விசேஷத்தின் அபேக்ஷை, மூன்றுவது விசேஷத்திற்கு நான்காவது விசேஷத்தின் அபேக்ஷை, நான்காவது விசேஷத்திற்கு ஐந்தாவது விசேஷத்தின் அபேக்ஷயுமாம் என்பதாக

முன் முன் விசேஷத்திற்கு பின் பின் விசேஷத்தின் அபேக்ஷையை யொப்பு வதில் அனவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகும்.

## கஉகூ௩. பிரதிவந்தி வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

ஆண்டு அவ்வைந்தாவது விசேஷம் தானே பிரமாணமா மாகையால் தனது சித்தியில் வேறு விசேஷத்தினை அபேக்ஷிக்கிறதில்லை. ஆகையால் முற்கூறிய அனவஸ்தா தோஷத்தின் அடைவு உண்டாகாதெனவாதி கூறின் பிரதிவந்தி வடிவ தர்க்கத்தால் அச்சங்கையின் நிவர்த்தியைச் செய்க. ஆண்டு "சொாக்ஷ்வரிஹாரஸாம்யம் ப்ரதிவந்தீ" (இ-ள்.) வாதி பிரதிவாதிகளா மிரு வரின் பக்ஷத்தில் சங்கை, சமாதானத்தின் சமானத்தன்மையினை பிரதிவந்தி யென்பர். எங்ஙனம்: ஈண்டு பிரசங்கத்தில் ஐந்தாவது விசேஷம் எங்ஙனம் தானே பிரமாணமாமோ அங்ஙனமே முதல் விசேஷத்திற்கும் தானே பிரமாண மாந்தன்மை சம்பவிக்கின்றது. ஆகையால் முதல் விசேஷத்தில் இரண்டாவது விசேஷத்திற்கு பிரமாணத்தன்மை யொப்புவது பயனின்மையாம், நியமத் தினது அபாவத்தின் சாமக்கிரிக்கு இரண்டில் சமானத்தன்மை யிருப்பதால். யாண்டு சமான சாமக்கிரி யிருக்கின்றதோ ஆண்டு காரியமும் சமானமே யாகின்றது. எங்ஙனம்: சமான ஸ்வபாவமுடைய தந்து முதலிய காரணங்களில் பட முதலிய காரியமும் சமானமேயாம். வாதி அவ்வைந்தாவது விசேஷத்திற்கு தனது பிரமாணத்தில் ஓர் கால் பரிஹார வடிவ விசேஷங் கற்பிக்கின் பரிஹா ரத்திற்கும் முற்கூறிய முறைப்படி ஐந்தாவது, முதலாவதாம் இரு விசேஷங் களில் சமானத்தன்மையே யுண்டாகும். இவ்வாற்றால் இரு பக்ஷங்களில் சங்கை, சமாதானத்தின் சமானத்தன்மையினை பிரதிவந்தி யென்பர்.

## கஉகூ௪. கல்பனு லாகவ வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

முற்கூறிய அநுமானத்தால் சர்வ ஜகத்தின் கர்த்தா வடிவமாக ஒரு ஈசுவரனது சித்தியைச் செய்யின் அதனிடத்து வாதிக்கு இச்சங்கை பிராப்த மாகின்றது. பிருதிவி முதலிய மஹாஸ்தூல காரியத்திற்கு ஒரு கர்த்தாவின் சித்தி எங்ஙனமுண்டாம். பல ஈசுவரரின் சித்தியே சம்பவிக்குமெனின் கற்பனு லாகவ ரூப தர்க்கத்தால் அச்சங்கையின் நிவிருத்தி யுண்டாகின்றது. ஆண்டு "ஸமர்த்தஸ்ய கல்பநாலாகவம்" (இ-ள்.) காரியத்தை உண்டாக்குவ தில் சமர்த்த வஸ்துவினது அற்பத்தன்மையின் கற்பனையை கற்பனு லாகவ மென்பர். எங்ஙனம்: பிரசங்கத்தில் சர்வ ஜகத்தின் கர்த்தா வடிவமாக கற் பிக்கப்பட்ட ஈசுவரனை ஒருவனாக அங்கீகரிக்கின் கற்பனு லாகவ மிருக்கின் றது, ஈசுவரனது ஒன்றாந்தன்மையின் கற்பனையை அங்கீகரியாவிடின் கற்பனு லாகவ முண்டாகிறதில்லை. ஏனெனின் யாண்டு ஒரே வஸ்துவால் காரியத்தின் சித்தி யுண்டாய் விடுகின்றதோ ஆண்டு வொன்றின் கற்பன மின்றாக கற்பனு லாகவத்தின் கர்த்தாத்தன்மை உண்டாகிறதில்லை. எங்ஙனம்: கன்னிகையின் ஒரே வரத்தால் காரியத்தின் சித்தி யுண்டாகின்றது. அக்கன்னிகையின் ஒரு வரத்தினை கற்பியாததாக கற்பனு லாகவத்தின் பிரயோஜனத் தன்மை உண்டாகிறதில்லை.

### கரு௦௦. கல்பனு கௌரவ வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

காரியத்தினை சித்தி செய்வதாகிய ஒரு சமர்த்த வஸ்துவி னிருப்புளதாக அனேக வஸ்துவினை கற்பிக்கின் கற்பனு கௌரவத்தின் அடைவு உண்டாகும். ஆண்டு "ஸமௌ-ந௱ஙூ க௲ நாக௲ நா ரளாௐவம்" (இ-ள்.) காரியத்தைச்செய்வதில் சமர்த்த காரணத்தின் அற்பத்தன்மையினை கற்பிக்காததனை கற்பனு கௌரவ மென்பர். எங்ஙனம்: கன்னிகையின் ஒரு சமர்த்த வரத்தின் சித்தியிருக்கினும் அனேக வரங்களின் கற்பனையில் கற்பனு கௌரவ முண்டாகின்றது. அங்ஙனமே சர்வ ஜகத்தினை உண்டாக்குவதில் சமர்த்த ஒரு ஈசுவரனுலேயே சர்வ ஜகத்தினது உற்பத்தி யுண்டாயிருக்க அனேக ஈசுவரரை கற்பிப்பதில் கற்பனு கௌரவமே பிராப்தமாகின்றது.

சங்கை:—ஈசுவரன் சரீர மில்லாதவரா மாகையால் ஈசுவரனிடத்து கர்த்தாத்தன்மையே சம்பவியாதாயின் சர்வ ஜகத்தின் கர்த்தாத்தன்மை ஈசுவரனிடத்து எங்ஙனம் சம்பவிக்கும், சம்பவியாதா மென்னும் வாதியினது சங்கையின் நிவிருத்தி உத்சர்க்க வடிவ தர்க்கத்தால் யுண்டாகும். ஆண்டு "ஊ-ஞெயாஃப-ந உஜ்ஜ ஙஃ" (இ-ள்.) மீண்டு மீண்டும் தரிசனத்தினை உத்சர்க்க மென்பர். எங்ஙனம்: யாண்டாண்டு சேதனத்வ மிருக்கின்றதோ ஆண்டாண்டு கர்த்ருத்வ மிருக்கின்றது. எங்ஙனம்: குலாலன், சேணியன் முதலியவர்களில் சேதனத்தன்மை யிருக்கின்றது. ஆகையால் கட, பட முதலியவைகளின் கர்த்ருத்வமு மிருக்கின்றது. அங்ஙனமே ஈசுவரனிடத்தும் சேதனத்தன்மை தர்மமிருக்கின்றது. ஆகையால் ஈசுவரனிடத்தும் ஜகத்திற்கு கர்த்தாத்தன்மை சம்பாவனை செய்யப்படுகின்றது. ஓர் கால் ஈசுவரனிடத்து கர்த்ருத்வத்தின் சம்பாவனை யுண்டாகாதாயின் அவ்வீசுவரனிடத்து சேதனத்தன்மையும் உண்டாகாததாகும். எங்ஙனம்: கட முதலியவைகளில் கர்த்ருத்வம் அசம்பாவிதமாம். ஆகையால் சேதனத்தன்மையு மின்றாம். அங்ஙனமே ஈசுவரனிடத்தும் கர்த்ருத்வத்தின் சம்பாவனையைச் செய்யாவிடின் ஈசுவரனிடத்து சேதனத்தன்மையும் உண்டாகாததாகும்.

### கரு௦க. அபவாத வடிவ தர்க்கத்தின் நிரூபணம்.

சங்கை:—எங்ஙனம் நம்மனோர் முதலிய ஜீவர்களிடத்து சேதனத் தன்மையால் கர்த்ருத்வத்தின் நிச்சய முண்டாகின்றதோ அங்ஙனமே ஈசுவரனிடத்தும் சேதனத்தன்மையால் கர்த்ருத்வத்தின் நிச்சயம் என் உண்டாகக் கூடாது. சேதனத் தன்மையால் கர்த்ருத்வத்தின் சம்பாவனையில் சிறிது பயனுமில்லையென வாதி சங்கிக்கின் அச்சங்கையின் நிவர்த்தி அபவாத வடிவ தர்க்கத்தா லுண்டாகின்றது. ஆண்டு "தவெஸ்ரா ஜ ஶ-ெவெஸ்க ஶெமா வாயஃ கவவாஃ" (இ-ள்.) முற்கூறிய வுத்சர்க்கத்திற்கு யாதாமோரிடத்தில் பாதமுண்டாவதனை அபவாதமென்பர். எங்ஙனம்; முக்த ஆத்மாவில் சேதனத்தன்மை யிருக்கினும் கர்த்ருத்வமின்றாம். ஓர்கால் சேதனத்தன்மையால் கர்த்ருத்வத்தின் நிச்சயமே யுண்டாகுமாயின் முக்த புருஷர்களிடத்தும் சேதனத்தன்மையால் கர்த்தருத்வத்தின் நிச்சய முண்டாக வேண்டும். முக்த

புருஷர்களிடத்து சேதனத்தன்மை யிருக்கினும் கர்த்துருத்வ முண்டாகிற தில்லை. ஆகையால் முக்த புருஷர்களிடத்து முற்கூறிய உத்சர்க்கத்தின் அபவாத மிருக்கின்றது. எதற்கு யாண்டு அபவாத முண்டாகின்றதோ அதனுல் அவ்வர்த்தத்தின் நிச்சய முண்டாகிறதில்லை. எங்ஙனம்: பிரமேயத்தன்மையால் அநித்தியத்தன்மையின் நிச்சய முண்டாகிறதில்லை. ஆகையால் சேதனத்தன்மையால் ஈசுவரனிடத்து கர்த்துருத்வத்தின் சம்பாவனை யுண்டாகின்றது. கர்த்துருத்வத்தின் நிச்சய முண்டாகிறதில்லை.

## கங0உ. வையாத்திய வடிவத்தின் நிரூபணம்.

சங்கை:—ஈசுவரனிடத்து முற்கூறிய அநுமானப் பிரமாண முண்டாகுக. ஆனுல் ஈசுவர சாதகப் பிரமாணத்தில் பிரமாணம் யாது. அங்ஙனமே அந்தப் பிரமாணத்தின் சாதகப் பிரமாணத்திலும் பிரமாணம் யாது. என்பதாக வாதி சங்கிக்கின் அச்சங்கையின் நிவர்த்தி வையாத்திய வடிவ தர்க்கத்தாலுண்டாகின்றது. ஆண்டு "ஸமாதிஸமாதேய ப்ரச்நபரம்பராயாம் மௌநம் வையாத்யம்" (இ-ள்.) சமாதானஞ் செய்வதற்கு அசக்கியமாகிய வாதியின் கேழ்விகளின் பரம்பரையின் அடைவு உண்டாக மௌனமா யிருப்பதனை வையாத்திய மென்பர். ஆண்டு வாதிகளின் கேழ்விகட்கு பரம்பரா விடையளிப்பதற்கு சக்கியமாகு மிடத்திலேயே விடை யளிப்பதாகின்றது. அக்கேழ்விகட்கு பரம்பரா விடையளிப்பதற்கு சக்கிய மில்லாவிடத்து மௌனவடிவ விடையின்மையே விடையாகின்றது. இதனை வையாத்திய மென்பர்.

## கங0௩. கூறிய தர்க்கத்தில் எழுவகை தூஷணம்.

முற்கூறிய தர்க்கத்தில் இவ்வேழு தூஷணங்க ளுண்டாகின்றது. ஆபாத்தியாசித்தி, ஆபாதகாசித்தி, உபயாசித்தி, பிரசிதிலமூலதா, மிதஸ்தர்க்க விரோதா, இஷ்டாபத்தி, விபர்யயாபர்யவசானமென்னு மேழு தூஷணங்களுளவாம். இத்தூஷணங்களின் உதாஹரணம் தர்க்க நிரூபக கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கின்றது. ஈண்டு விரிவஞ்சி விடுத்தனம்.

## கங0௪. சொப்பன ஞானத்தின் அடக்கம் மானச விபர்யயத்தில் சம்பவிப்பதின் வர்ணனம்.

ஆண்டு முன்னர் சம்சயம், விபர்யயம், தர்க்க மென்னும் வேறுபாட்டால் மூவிதமாக அயதார்த்த அநுபவம் நிரூபிக்கப்பட்டது. இம்மதத்தில் சொப்பன ஞானத்தின் அடக்கம் மானச விபர்யயத்திலேயே சம்பவிக்கின்றது. ஆண்டு புரீதத் தேசத்தில் மனம் நிலைப்பதாக சுழுப்தி யுண்டாகின்றது. புரீதத் தேசத்தினும் புறம்பாக மனம் நிலைத்திருக்கின் ஜாக்கிரத முண்டாகின்றது. புரீதத் தேசமும், பாஹிய தேசமுமா மிரண்டின் சந்தியில் மனம் நிலைத்துளதாக சொப்பன முண்டாகின்றது. அச்சொப்பனம் புண்ணிய, பாப வடிவ அதிர்ஷ்ட விசேஷத்தானு முண்டாகின்றது. அங்ஙனமே ஜாக்கிரத்மும் சிந்தா விசேஷத்தானும், வாத பித்த கபவடிவ தாதுவின் தோஷத்தானும் உண்டாகின்றது.

---

## கஙடுஎ. சம்சயம், விபர்யயம், ஸ்வப்னம், அனத்தியவசாயம் என்னும் வேறுபாட்டால் அயதார்த்த அநுபவத்தினை நால்வகையாக வொப்பும் வாதிகளின் மதம்.

சில நூலாசிரியரோ அயதார்த்த அநுபவத்தினை சம்சயம், விபர்யயம், சொப்பனம், அனத்தியவசாயம் என்னும் வேறுபாட்டால் நால்வகையாக வொப்புகின்றனர். ஆண்டு வஸ்துவினது விசேஷ வடிவத்தின் அதரிசனத்தால் உண்டாய "இது அற்பம்" என்பதான ஞானத்தினை அனத்தியவசாய மென்பர். இம்மதத்தில் முற்கூறிய தர்க்கத்தின் அடக்கம் விபர்யயத்திலேயே சம்பவிக்கின்றது.

## கஙடுசு. கூறிய அயதார்த்த அநுபவத்தினை சம்சயம், விபர்யயம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாக வொப்புவோரது மதம்.

சில நூலாசிரியரோ கூறிய அயதார்த்த அநுபவத்தினை சம்சயம், விபர்யயம் என்னும் வேறுபாட்டால் இருவிதமாகவே வொப்புகின்றனர். இவ்விருவர்கள் மதத்தில் தர்க்கம், சொப்பனம், அனத்தியவசாயமா மிம் மூன்றின் அடக்கம் விபர்யயத்திலேயே சம்பவிக்கின்றது.

## கஙடுஎ. ஞானங்கள் யாவற்றையும் யதார்த்தமாக வொப்பும் பிரபாகரரின் மதம்.

மீமாஞ்சக பிரபாகரர் மதத்திலோ ஞானங்கள் யாவும் யதார்த்தமாம்; எந்த ஞானமும் அயதார்த்தமாவதின்று. "சுத்தியில் இது வெள்ளி" என்னும்ஞானமுண்டாகுமிடத்து "இதுவெள்ளி" என்பதானவிசிஷ்டஞானம் ஒன்றன்று; இரு ஞானமாகின்றது. ஆண்டு "இது" வென்பதோ முன்னிடத்திலிருக்கும் சுத்தியை விஷயஞ் செய்யும் அநுபவவடிவ ஞானமாகின்றது. "வெள்ளி" என்பது முன்னர் யதார்த்த வெள்ளியை விஷயஞ் செய்யும் ஸ்மிருதி ஞானமாகின்றது. அவ்விரு ஞானங்கள் யதார்த்தமேயாம். அவ்விரு ஞானங்களின் வேற்றுமையை கிரஹிக்காததாலும், அவ்விரு ஞானங்களின் விஷயங்களின் வேற்றுமையை கிரஹிக்காததாலும் புருஷனுக்கு முன்னிடத்தில் பிரவிருத்தி யுண்டாகின்றது. இவ்வாறுவது பரிச்சேதத்தின் முதலில் அநுபவம், ஸ்மிருதி யென்னும் வேறுபாட்டால் இருவித புத்தியை கூறியுள்ளோம். அதனிடத்து அநுபவத்தினை இம்மட்டும் நிரூபித்தனம். இனி ஸ்மிருதியினை நிரூபிப்பாம்.

## கஙடுஅ. ஸ்மிருதி ஞானத்தின் லக்ஷணம்.

ஆண்டு "ஸம்ஸ்காரமாத்ரஜந்யம் ஜ்ஞாநம் ஸ்ம்ருதி:" (இ-ள்.) சம்ஸ்கார மாத்திரத்தால் உண்டாகும் ஞானம் ஸ்மிருதியெனப்படுகின்றது. எங்ஙனம்: முன்னர் அநுபவித்துள்ள மாதா பிதாதிகளின் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தால் புருஷனுக்கு "இவரே மாதா, இவரே பிதா" என்பதாக வேறு காலத்தில் ஸ்மரண முண்டாகின்றது. ஸ்மரண மெனினும், ஸ்மிருதியெனினும் ஒக்கும். ஆண்டு "ஞானம் ஸ்மிருதி" என இம்மாத்திரமே ஸ்மிருதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "சம்ஸ்காரமாத்திர ஜன்னியம்" என்னும் பதங் கூறுவிடின் முற்கூறிய அநுபவ ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு

அதிவியாப்தி யுண்டாம். அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "சம்ஸ்கார மாத்திரத்தா லுண்டாவது" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு அநுபவ ஞானம் சம்ஸ்கார மாத்திரத்தால் உண்டாவதன்றும்; இந்திரியம் அநுமான முதலியவைகளால் உண்டாவதாகின்றது. ஆகையால் அநுபவத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சம்ஸ்கார ஜன்னியம் ஸ்மிருதி" என இம்மாத்திரமே ஸ்மிருதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூருவிடின் சம்ஸ்காரத்தின் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் சம்ஸ்காரத்தின் நாசமும் சம்ஸ்கார வடிவ பிரதியோகியால் உண்டாவதேயாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "ஞானம்" என்னும் பதங் கூறப்பட்டது. ஆண்டு சம்ஸ்காரத்தின் துவம்சம் ஞான வடிவமன்றும். ஆகையால் துவம்சத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது. அல்லது "சம்ஸ்கார ஜன்னிய ஞானம் ஸ்மிருதி" என இம்மாத்திரமே ஸ்மிருதியின் லக்ஷணமாகக் கூறி அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூருவிடின் "அத்தேவதத்தனே யித்தேவதத்தன்" என்பதான பிரத்தியபிஞ்ஞை ஞானத்தில் அந்த லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாம். எக்காரணத்தாலெனின் பிரத்தியபிஞ்ஞை ஞானமும் சம்ஸ்காரத்தால் ஜன்னியமேயாகின்றது. அவ்வதிவியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்த லக்ஷணத்தில் "மாத்திரம்" என்னும் பதங் கூறப்பட்டது. பிரத்தியபிஞ்ஞை ஞானம் கேவலம் சம்ஸ்கார மாத்திரத்தினுனேயே உண்டாவதன்று. தேவதத்த பிண்டத்தோடு சக்ஷு விந்திரியத்தின் சையோகத்தானும் உண்டாகின்றது. ஆகையால் பிரத்தியபிஞ்ஞை ஞானத்தில் ஸ்மிருதியின் லக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகாது.

### கூ௦கூ. யதார்த்த, அயதார்த்த வேறுபாட்டால் ஸ்மிருதியின் இருவித வேற்றுமை.

ஆண்டு கூறிய லக்ஷணத்தால் லக்ஷித ஸ்மிருதியும் முற்கூறிய அநுபவத்தினைப் போன்று யதார்த்தம், அயதார்த்தம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அநுபவம் தன்னுலுண்டாம் சம்ஸ்கார வாயிலாக ஸ்மிருதிக்குக் காரணமாகின்றது. அவ்வநுபவம் யதார்த்த, அயதார்த்த வேறுபாட்டால் இருவகைத்தா மாகையால் யதார்த்த அநுபவ ஜன்னிய ஸ்மிருதி யதார்த்தமாம். அயதார்த்த அநுபவ ஜன்னிய ஸ்மிருதி அயதார்த்தமாம்.

### கூகூ௰. அநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தில் ஸ்மிருதியின் உற்பத்தியை யொப்புவோர்களின் மதம்.

ஆண்டு சில நூலாசிரியரோ ஸ்மிருதியின் ஏதுவாகிய சம்ஸ்காரங்களின் உற்பத்தி அநுபவ ஞானத்தானேயே வொப்புகின்றனர்; ஸ்மிருதி ஞானத்தால் சம்ஸ்காரங்களின் உற்பத்தியை ஒப்பினுரில்லை. அவர்கள் மதத்தில் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரம் அநேக ஸ்மிருதிகளை உண்டாக்குவதாகியும் நாசமாவதின்று. ஆனல் அந்திய (ஈற்று) ஸ்மிருதியால் அந்த சம்ஸ்காரம் நாசமாய் விடுகின்றது.

## ௩௩௧௧. ஸ்மிருதி ஞான ஜன்னிய சம்ஸ்காரத்தாலும் ஸ்மிருதியை யொப்புவோர்களின் மதம்.

சில நூலாசிரியரோ ஸ்மிருதி ஞானத்தாலும் சம்ஸ்காரங்களின் உற்பத்தி யொப்புகின்றனர். அவர்கள் மதத்தில் அநுபவ ஜன்னிய சம்ஸ்காரம் முதல் ஸ்மிருதியினை உண்டாக்குவதால் நாசமாய் விடுகின்றது. மீண்டும் அந்த ஸ்மிருதி ஞானத்தால் வேறு சம்ஸ்காரத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. இவ்வாறாக ஸ்மிருதியினால் முன் சம்ஸ்காரங்களின் நாசமும், பின் சம்ஸ்காரங்களின் உற்பத்தியும் பின்னும் பின்னும் உண்டாவதாகின்றது. இவ்விரு மதங்களின் நிரூபணத்தை விரிவாய் மூன்றாவது பரிச்சேதத்தில் சம்ஸ்கார குண நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். அதை ஆண்டறிக.

## ௩௩௧௨. பிரமாண்ணிய வாத நிரூபணம்.

இனி பிரமாண்ணிய வாதத்தினை நிரூபிப்பாம். முற்கூறிய பிரத்தியக்ஷம் அநுமிதி முதலிய யதார்த்த அநுபவ வடிவ பிரமாவில் இருக்கும் தர்மமுடைய யதார்த்தத்தில் தத்தர்ம விசேஷண ஞானத்தன்மையாகிய பிரமாத்தன்மை யாதோ, எப்பிரமாத்வம் சாத்திரத்தில் பிரமாண்ணிய மென்றுங் கூறப்பட்டிருக்கிறதோ அந்த பிரமாத்தன்மையில் மீமாஞ்சகரும், வேதாந்தியும் ஸ்வதஸ்த்வம் ஒப்புகின்றனர். நையாயிகரோ அந்தப் பிரமாத்தன்மையில் பரதஸ்த்வம் ஒப்புகின்றனர். ஆண்டு ஸ்வதஸ்த்வமும் உத்பத்தி ஸ்வதஸ்த்வம், ஞப்தி ஸ்வதஸ்த்வம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு பிரமாத்தன்மையின் உத்பத்தியில் ஸ்வதஸ்த்வத்தினை உற்பத்தி ஸ்வதஸ்த்வ மென்பர். பிரமாத்தன்மையின் ஞானத்தில் ஸ்வதஸ்வத்தினை ஞப்தி ஸ்வதஸ்த்வ மென்பர். இவ்வாறாக பரதஸ்த்வமும் உற்பத்தி பரதஸ்த்வம், ஞப்தி பரதஸ்த்வம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு பிரமாத்தன்மையின் உத்பத்தியில் பரதஸ்த்வத்தினை உற்பத்தி பரதஸ்த்வ மென்பர். பிரமாத்தன்மையின் ஞானத்தில் பரதஸ்த்வத்தினை ஞப்தி பரஸ்த்வ மென்பர்.

## ௩௩௧௩. மத வேறுபாட்டால் ஸ்வதஸ்த்வ பரதஸ்த்வத்தினதும், ஸ்வதஸ்த்வ பரதஸ்த்வத்தினது உற்பத்தி ஞானத்தினதும் வேறுபாட்டால் இருவித வேற்றுமை.

ஆண்டு முதலில் பிரமாத்தன்மையின் உத்பத்தி ஸ்வதஸ்த்வத்தினை நிரூபிப்பாம். ஆண்டு "𑌦𑍋𑌷𑌾𑌭𑌾𑌵 𑌸𑌹𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌮𑌗𑍍𑌰𑍀 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌵𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌂" (இ-ள்.) பிரம ஞானத்தின் காரணமாகிய தோஷத்தின் அபாவத்தோடுங் கூடிய ஞான மாத்திரத்தினது உற்பத்தியின் சாமக்கிரியால் பிரயோஜ்ஜியத்தன்மையே பிரமாத்தன்மையில் உற்பத்தி ஸ்வதஸ்த்வமாம். ஞான சாமான்னியத்தின் சாமக்கிரி ஆத்மா, ஆத்மமனதின் சையோகம், இந்திரியம், அநுமானம் இவை முதலியனவாம். அச்சாமக்கிரிக்கு "தோஷா பாவத்தோடுங் கூடிய" என்னும் விசேஷணங் கூறு

விடின் அப்பிரமா ஞானமும் ஞான சாமான்னியத்தின் சாமக்கிரியானேயே உண்டாவதாகின்றது. ஆகையால் அப்பிரமா ஞானத்திலும் பிரமாத்தன்மை உண்டாக வேண்டும். அதனை நிவர்த்திக்கும் பொருட்டு அச்சாமக்கிரிக்கு தோஷாபாவத்தோடுங் கூடியத்தன்மையென்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு அப்பிரமா ஞானத்தின் உற்பத்தி தோஷமின்றி உண்டாகிறதில்லை. ஆகையால் அப்பிரமா ஞானத்தினை உண்டாக்கும் சாமக்கிரி தோஷாபாவத்தோடுங் கூடியதன்றாம்; தோஷத்தோடுங் கூடியதாம். ஆகையால் அப்பிரமா ஞானத்தில் பிரமாத்தன்மை சம்பவிக்கிறதில்லை. பிரமாத்தன்மையின் ஞப்தி ஸ்வதஸ்த்வத்தினை வர்ணிப்பாம். ஆண்டு "தோஷாபாவவத்யாவத்ஸ்வாச்ரயக்ராஹகஸாமக்ரீக்ராஹ்யத்வம் ஜ்ஞப்தௌ ஸ்வதஸ்த்வம்" (இ-ள்.) ஈண்டு சுவசத்தத்தால் பிரமாத்தன்மையினைக் கொள்ளுக. பிரமாத்தன்மையின் ஆசிரயமாகிய பிரமா ஞானத்தினை கிரஹிக்கும் சாமக்கிரி எவ்வள விருக்கின்றதோ அதாவது; பிரமாத்தன்மையின் ஆசிரயமாகிய பிரமா ஞானத்தினை விஷயஞ் செய்வதாகிய ஞானத்தை உண்டு பண்ணும் தோஷாபாவத்தோடுங் கூடிய சாமக்கிரி எவ்வளவிருக்கின்றதோ அச்சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மையாதோ அதாவது; அச்சாமக்கிரியா லுண்டாய ஞானத்தின் விஷயத் தன்மை யாதோ அதுவே பிரமாத்தன்மையில் ஞப்தி ஸ்வதஸ்த்வமாம். கருத்திதுவாம்; தோஷாபாவத்தோடுங் கூடிய சாமக்கிரியால் ஜன்னிய எத்தனை ஞானம் பிரமாத்தன்மையின் ஆசிரயமாகிய பிரமா ஞானத்தினை விஷயஞ் செய்கின்றதோ அவ்வெல்லா ஞானமும் பிரமாத் தன்மையினையும் விஷயஞ் செய்கின்றது. இதுவே பிரமாத்தன்மையில் தன்னால் கிரஹிக்கப்படுந் தன்மையாம். அங்ஙனமே ஞப்தி ஸ்வதஸ்த்வமுமாம். ஆண்டு கூறிய லக்ஷணத்தில் "தோஷாபாவத்தோடுங் கூடிய" என்னும் பதங் கூறாவிடின் எந்த பிரமா ஞானத்தில் தோஷத்தின் வசத்தால் "இந்த ஞானம் அப்பிரமா" என்பதான அப்பிரமாத்வத்தின் நிச்சயமுளதாகின்றதோ அல்லது "இந்த ஞானம் அப்பிரமாவா? அல்லவா?" என்பதான அப்பிரமாத்தன்மையின் சம்சயமுளதாகின்றதோ அந்த பிரமா ஞானத்திலிருக்கும் பிரமாத் தன்மையில் சுவாசிரயத்தை கிரஹிக்கும் சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மையின்றாம். அதாவது அப்பிரமாத் தன்மையினை விஷயஞ் செய்யும் நிச்சயமும், சம்சயமும் பிரமாத்தன்மையின் ஆசிரயமாகிய ஞானத்தினையே விஷயஞ் செய்கின்றது. ஆனால் அந்த ஞானத்திலிருக்கும் பிரமாத்தன்மையினை விஷயஞ் செய்வதன்று. ஆகையால் பிரமாத்தன்மையில் கூறிய தன்னால் கிரஹிக்கப்படுந் தன்மை உண்டாவதின்றாகும். அவ்வவ்வியாப்தி தோஷத்தை நிவர்த்திக்கும் பொருட்டு அந்தலக்ஷணத்தில் "தோஷாபாவத்தோடுங் கூடிய" என்னுமிது சாமக்கிரியின் விசேஷணமாகக் கூறப்பட்டது. ஆண்டு பிரம சம்சயத்தினை உண்டாக்கும் சாமக்கிரி தோஷாபாவத்தோடுங்கூடியதன்றாம்; தோஷத்தோடுங்கூடியதாம். ஆகையால் பிரமாத்தன்மையில் சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந்தன்மை யின்மை யுளதாயினும் தன்னால் கிரஹிக்கப்படுந்தன்மைக்கு பாதம் சம்பவியாது. அல்லது கூறிய அந்த லக்ஷணத்தில் "யாவத்" என்னும் பதங் கூறாவிடின் சித்த சாதன

தோஷத்தின் பிராப்தி யுண்டாகின்றது. ஏனெனின் பிரமாத் தன்மையினை பிறிதாற் கிராஹ்யமாவதாக வொப்பும் நையாயிகரும் பிரமாத் தன்மையின் ஆசிரயமாகிய ஞானத்தினை கிரஹிக்கும் அநுமான முதலிய சாமக்கிரியால் பிரமாத்தன்மையின் ஞானம் வொப்புகின்றனர். ஆகையால் நையாயிகர்கள் சித்த அர்த்தத்தின் சித்தியைச்செய்வதால் ஸ்வதஸ்த்வவாதி மீமாஞ்சகர்கட்கு சித்த சாதன தோஷத்தின் பிராப்தி யுண்டாகும். சித்த சாதன தோஷத்தினை நிவர்த்திப்பான்வேண்டி அந்தச்சாமக்கிரிக்கு அல்லது சாமக்கிரியால்ஜன்னிய ஞானத்திற்கு "யாவத்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது. ஆண்டு நையாயிகர்களின் மதத்தில் அநுவியவசாய ஞானம் பிரமாத் தன்மையின் ஆசிரயமாகிய ஞானத்தினை கிரஹிப்பதாயினும் பிரமாத்தன்மையினை கிரஹிப்பதன்று. ஆகையால் நையாயிகர்களின் மதத்தில் பிரமாத்தன்மையில் யாவத் சுவாசிரய கிராஹக சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மை யின்றும். ஆகையால் சித்த சாதனதோஷத்தின் அடைவு உண்டாகிறதில்லை. கூறிய பிரமாத்தன்மையினை தன்னால் கிரஹிக்கப்படுந் தன்மையில் மீமாஞ்சகர்களின் மதம் மூவகைத்தாம்.

கஅகச. பிரமாத்வத்தின் ஸ்வதஸ்த்வத்தில் பிரபாகரரின் மதம்.

ஆண்டு பிரபாகரரின் மதமோ இதுவாம். கடம் முதலியவைகளை விஷயஞ் செய்வதாகிய எவ்வெப் பிரமா வடிவ வியவசாய ஞான முண்டாகின்றதோ அவ்வவ் வியவசாய ஞானம் "घटमहं जानामि" (இ-ள்.) கடத்தன்மைவடிவமாக கடத்தினை யான் அறிகிறேன் என்பதாகவே உண்டாவதாகின்றது. ஆகையால் அவ்வெல்லா வியவசாய ஞானத்தில் மிதி, மாத்ரு, மேயமா மிம்மூன்றே பிரதீதியாகின்றது. ஆண்டு வியவசாய ஞானத்தினை மிதி யென்பர். அந்த ஞானத்தின் ஆசிரயமாகிய ஆத்மாவினை மாத்ரு வென்பர். அந்த ஞானத்தின் விஷயமாகிய கட முதலியவைகளை மேயமென்பர். இவ்வாறுகக் கூறிய வியவசாய ஞானம் தன் ஸ்வரூபத்தினை கிரஹிப்பதாகி தன்னிடத்திலுள்ள பிரமாத் தன்மையினையும் கிரஹிக்கின்றது. ஆகையால் பிரமாத் தன்மையில் யாவத் சுவாசிரயத்தை கிரஹிக்கும் சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ தன்னால் கிரஹிக்கப்படுந் தன்மைச் சம்பவிக்கின்றது.

கஅகரு. பிரமாத்வத்தின் ஸ்வதஸ்த்வத்தில் முராரிமிசிரரின் மதம்.

முராரிமிசிரர் மதமோ இதுவாம். முதலில் "இது கடம்" என்பதான வியவசாய ஞான முண்டாவதாகின்றது. அதன் பின்னர் அந்த வியவசாய ஞானத்தினை விஷயஞ் செய்வதாகிய கடத்தன்மை வடிவமாக கடத்தினை யானறிகிறேன் என்பதான மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுவியவசாய ஞானம் உண்டாவதாகின்றது. அந்த அநுவியவசாய ஞானமே வியவசாய ஞானத்தினையும், வியவசாய ஞானத்திலிருக்கும் பிரமாத் தன்மையினையும் கிரஹிக்கின்றது. ஆகையால் பிரமாத் தன்மையில் யாவத் சுவாசிரயத்தை கிரஹிக்கும் சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ தன்னால் கிரஹிக்கப்படுந் தன்மைச் சம்பவிக்கின்றது.

### ௧௲௧௬. பிரமாத்வத்தின் ஸ்வதஸ்த்வத்தில் பட்டபாதரின் மதம்.

பட்டபாதரின் மதமோ இதுவாம். எல்லா ஞானங்களும் அதீந்திரியமாகின்றது. ஆகையால் ஞானத்தின் பிரத்தியக்ஷ ஞானம் சம்பவியாது. ஆனல் "இது கடம்" என்பதான இவை முதலிய ஞானங்கட்குப் பின் கட முதலிய விஷயங்களில் ஞாதத்தன்மை யென் ஒன்றுண்டாவதாகின்றது. அதன்பின் "கடம் அறியப்பட்டது" என்பதான ஞாதத்தன்மையினை விஷயஞ் செய்வதாகிய பிரத்தியக்ஷ முண்டாகின்றது. அதற்குப் பின் அந்த ஞாதவடிவ ஏதுவால் ஞானத்தின் அநுமான முண்டாகின்றது. அநுமானத்தின் வடிவமிதுவாம். "𑌘𑌟𑌃 𑌘𑌟𑌤𑍍𑌵𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑍇 𑌘𑌟𑌤𑍍𑌵 𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌕𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌷𑌯𑌃 𑌘𑌟𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌕𑌜𑍍𑌞𑌾𑌤𑌤𑌾𑌵𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌯𑌨𑍍𑌨𑍈𑌵𑌂 𑌤𑌨𑍍𑌨𑍈𑌵𑌂𑌯𑌥𑌾 𑌪𑌟𑌃" (இ-ள்) இக்கடம் கடத்தன்மையுடைய விசேஷியத்திலும், கடத்தன்மை விசேஷணத்திலு மிருப்பதாகிய ஞானத்தின் விஷயமாம். கடத்தன்மை விசேஷண ஞாதத்தன்மை யுடையதாவதால், எப்பதார்த்தம் கூறிய ஞானத்தின் விஷயமன்றோ அப்பதார்த்தம் கூறிய ஞாதத்தன்மை யுடையதுமன்றும். எங்ஙனம்: படம் போலும். இவ்வநுமானம் "இது கடம்" என்பதான ஞானத்தினையும், அந்த ஞானத்திலிருக்கும் பிரமாத்தன்மையினையும் கிரஹிக்கின்றது. ஆகையால் பிரமாத் தன்மையில் யாவத் சுவாசிரயத்தை கிரஹிக்கும் சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மை வடிவ தன்னல் கிரஹிக்கப்படுந் தன்மைச் சம்பவிக்கின்றது.

### ௧௲௧௭. பிரமாத்வத்தின் ஸ்வத்ஸ்த்வத்தில் வேதாந்திகளின் மதம்.

வேதாந்த மதத்திலோ "இது கடம்" என்பதான இவை முதலிய விருத்தி ஞானமே பிரமாத்தன்மையின் ஆசிரயமாம். அந்த விருத்தி ஞானத்தினை கிரஹிப்பது சாக்ஷி ஞானமாகின்றது. அச்சாக்ஷி ஞானம் விருத்தி ஞானத்தினை கிரஹிப்பதாகி விருத்தி ஞானத்தின் பிரமாத்தன்மையினையும் கிரஹிக்கின்றது. இதுவே பிரமாத் தன்மையில் தன்னல் கிரஹிக்கப்படுந் தன்மையாம்.

### ௧௲௧௮. பிரமாத்வத்தினை பிறிதாற் கிராஹியமாக வொப்பும் நையாயிகர்களின் மத நிரூபணம்.

ஆண்டு மீமாஞ்சகர்கள் பிரமாத்தன்மையில் தன்னல் கிரஹிக்கப்படுந் தன்மையைக் கூறியது சம்பவியாதென்கின்றனர். ஏனெனின் ஓர் கால் முற்கூறிய முறைப்படி பிரமாத்தன்மையில் தன்னல் கிரஹிக்கப்படுந் தன்மையொப்பின் எவ்விடத்தில் முன் எப்பொழுதும் ஜலத்தின் ஞானமின்றாகி முதலில் "இது ஜலம்" என்பதான ஜல ஞான முண்டாகின்றதோ அந்த ஞானத்தில் இந்த ஜல ஞானம் "பிரமாவா அல்லவா" என்பதான பிரமாத்தன்மையின் சம்சய ஞான முண்டாகின்றது. அச்சம்சயம் தன்னல் கிரஹிக்கப்படுந்தன்மை வாதிகளின் மதத்தி லுண்டாகாததாக வேண்டும். எக்காரணத்தாலெனின் ஸ்வதஸ்த்வ வாதிகளின் மதத்தில் ஜல ஞானத்தின் பின்னர் அந்த ஞானத்தினது பிரமாத் தன்மையினை கூறிய அநுவியவசாயாதிகளால் கிரஹிப்பதே

யாகின்றது. பிரமாத் தன்மையின் நிச்சயம் பிரமாத் தன்மையின் சம்சயத்தின் பிரதிபந்தகமாம். ஆகையால் பிரமாத்தன்மையின் சம்சயம் உண்டாகாததாகவேண்டும். கூறிய விடத்தில் பிரமாத்தன்மையின் சம்சயம் உலகர் யாவருக்கும் அநுபவ சித்தமாம். ஆகையால் "இது ஜலம்" என்பதான வியவசாய ஞானத்திற்குப் பின் உண்டாவதாகிய "ஜலத்தை அறிகிறேன்" என்பதான அநுவியவசாய ஞானம் வியவசாய ஞானத்தின் பிரமாத் தன்மையினை விஷயஞ் செய்வதன்றாம். கேவலம் வியவசாய ஞானமாத்திரத்தினையே விஷயஞ் செய்கின்றது. அஜ்ஜல ஞானத்திற்குப்பின்னர் புருஷனுக்கு ஜலத்தை விஷயஞ் செய்யும் இச்சை யுண்டாகின்றது. அவ்விச்சைக்குப் பின் புருஷனுக்கு ஜலத்தை விஷயஞ் செய்யும் பிரவிருத்தி யுண்டாகின்றது. அந்த பிரவிருத்திக்குப்பின் புருஷனுக்கு ஜலத்தின்பிராப்தியுண்டாகும்போது புருஷன் முன்னுண்டாகிய ஜல ஞானத்தில் பிரமாத்தன்மையின் அநுமானஞ் செய்கின்றான். அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "வ-ஹெ வொ-ஜ்ஞாநம் ப்ரமா ஸமர்த்த ப்ரவ்ருத்திஜநகத்வாத் யந்நைவம் தந்நைவம் யதாப்ரமா" (இ-ள்.) முன்னர் எமக்கு "இதுஜலம்" என உண்டாகிய ஞானம் பிரமாவாம், ஜலத்தின் பிராப்தி வடிவ பயனுடைய பிரவிருத்தியினை உண்டாக்குவதாவதால், எவ்வெவ் ஞானம் பிரமாவன்றோ அவ்வவ் ஞானம் சபலப் பிரவிருத்தியினை உண்டாக்குவதுமன்றாம். எங்ஙனம்: சுக்தியில் "இது ரஜதம்" என்னும் ஞானம் அப்பிரமா ஞானமாவது போலும். இவ்வாறாய அநுமானப் பிரமாணத்தால் பிரமாத்தன்மையின் கிரஹண முண்டாகின்றது. இதுவே பிரமாத் தன்மையில் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மையாம். அங்ஙனமே ஞப்தி பரதஸ்த்வமாம். ஆகையால் நையாயிகர்களின் மதத்தில் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மைக்கு இந்த லக்ஷணஞ் சித்தமாகின்றது. "ஜ்ஞாநமாத்ரக்ராஹக ஸாமக்ரீபிந்நஸாமக்ரீக்ராஹ்யத்வம் பரதஸ்த்வம்" (இ-ள்.) கேவலம் ஞானமாத்திரத்தினை கிரஹிக்கும் சாமக்கிரியினும் வேறான சாமக்கிரியால் கிரஹிக்கப்படுந் தன்மையே பிரமாத் தன்மையில் ஞப்தி பரதஸ்த்வமும் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மையுமாம். எங்ஙனம் பிரசங்கத்தில் "இதுஜலம்" என்னும் வியவசாய ஞானத்தினை விஷயஞ் செய்வதாகிய "ஜலத்தை யானறிகிறேன்" என்பதான மானசப் பிரத்தியக்ஷ வடிவ அநுவியவசாய ஞானம் ஆத்மாவினையும். ஆத்மாவில் சமவாய சம்பந்தத்தால் இருப்பதாகிய "இது ஜலம்" என்னும் வியவசாய ஞானத்தினையும், வியவசாய ஞானத்தின் விஷயமாகிய ஜலத்தினையும் விஷயஞ் செய்கின்றது. ஆண்டு விஷய, இந்திரியங்களின் சம்பந்தமின்றி பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகிறதில்லை. ஆகையால் மன வடிவ இந்திரியத்திற்கு விஷயங்களோடு யாதாமோர் சம்பந்தம் வொப்ப வேண்டும். மனதிற்கு ஆத்மாவினோடு சையோக சம்பந்த மிருக்கின்றது. வியவசாய ஞானத்தினோடு சையுக்த-சமவாய சம்பந்த மிருக்கின்றது. பாஹிய யதார்த்தங்களினோடு மனதிற்கு சையோகாதி வடிவ லௌகிக சம்பந்தமோ சம்பவியாது. ஆகையால் மனதிற்கு பாஹிய ஜலத்தினோடு ஞான லக்ஷண வடிவ அலௌகிக சம்பந்த மிருக்கின்றது. அதாவது; "இது ஜலம்" என்பதான

வியவசாய ஞானமே மனதிற்கு பாஹிய ஜலத்தினோடுள்ள சம்பந்தமாம். வியவசாய ஞானம் சமவாய சம்பந்தத்தால் ஆத்மாவிடத்தேயிருக்கின்றது; மனதிலிருப்பதின்று. ஆகையால் வியவசாய ஞானத்தில் மனதின் சம்பந்த வடிவத் தன்மைச் சம்பவியாது. என்றாலும் ஞான லக்ஷண சம்பந்தத்தால் சுவசையுக்த சமவேத ஞானமே கூறக்கருதியதாம். ஈண்டு சுவசத்தத்தால் மனதினைக் கொள்ளுக. மனசையுக்த ஆத்மாவில் சமவேதமாயிருப்பது "இதுஜலம்" என்னும் வியவசாய ஞானமாம். அந்த வியவசாய ஞானம் விஷயத் தன்மை சம்பந்தத்தால் ஜலத்திலிருக்கின்றது. இவ்வாறாக அநுவியவசாய ஞானத்தினது உற்பத்தியின் காரணமாகிய மன சையோகாதி வடிவ சாமக்கிரி ஞான மாத்திரத்தினை கிரஹிக்கும் சாமக்கிரி யெனப்படுகின்றது. அந்த ஞானமாத்திரத்தினை கிரஹிக்கும் சாமக்கிரியால் பிரமாத்தன்மையின் ஞான முண்டாகிறதில்லை. ஆனால் ஞான மாத்திரத்தினை கிரஹிக்கும் சாமக்கிரியினும் வேறாகக் கூறிய அநுமான வடிவ சாமக்கிரியானேயே பிரமாத் தன்மையின் அநுமிதி ஞான முண்டாகின்றது. இதனையே பிரமாத்தன்மையில் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மை யென்பர். ஈண்டு ஞான மாத்திரத்தினை கிரஹிக்கும் சாமக்கிரியினும் வேறான சாமக்கிரியே பிறிதென்னுஞ் சத்தத்தின் அர்த்தமாம்.

## கூகக. பிரமாத்தன்மையின் உத்பத்தி பரதஸ்த்வத்தின் லக்ஷணம்.

"ஜ்ஞானமாத்ரஜநகஸாமக்ர்யதிரிக்த காரணப்ரயோஜ்யத்வம் உத்பத்தௌ பரதஸ்த்வம்" (இ-ள்.). கேவலம் ஞான மாத்திரத்தினை உண்டாக்கும் சாமக்கிரியினும் வேறான காரணத்தால் பிரயோஜ்ஜியத் தன்மையே பிரமாத் தன்மையில் உத்பத்தி பரதஸ்த்வமாம். ஆண்டு கேவல ஞான மாத்திரத்தினை உண்டாக்கும் சாமக்கிரி ஆத்மா, ஆத்ம மனசையோகம், இந்திரியம், அநுமானமிவை முதலியனவாம். ஞான மாத்திரத்தினை உண்டாக்கும் சாமக்கிரியினானேயே ஞானத்தில் பிரமாத்தன்மை யுண்டாகுமாயின் சாமக்கிரியால் உண்டாவதாவதால் எல்லா ஞானமும் பிரமாவே யாகவேண்டும். எந்த ஞானமும் அப்பிரமாவாகாததாக வேண்டும். இந்திரிய முதலிய சாமக்கிரியினால் உண்டாவதாயினும் சுக்தியில் "இது ரஜதம்" என்பதான இவை முதலிய ஞானங்கள் அப்பிரமாவேயாம். ஆகையால் ஞான மாத்திரத்தினை உண்டாக்கும் சாமக்கிரியினும் வேறான காரணத்தானேயே பிரமாத்தன்மை யுண்டாவதாகின்றது. அந்த ஞான மாத்திரத்தின் சாமக்கிரியினும் வேறான காரணம் குணமாம். அந்த குணத்தால் உண்டாகிய ஞானத்திலேயே பிரமாத் தன்மை யுண்டாகின்றது. அதாவது; குணத்தோடுங் கூடிய சாமக்கிரியால் உண்டாகிய ஞானத்திலேயே பிரமாத்தன்மை சம்பவிக்கின்றது. ஆண்டு பிரத்தியக்ஷப் பிரமாவிலோ விசேஷணமுடைய விசேஷியத்தினோடு இந்திரியத்தின் சம்பந்த வடிவ குணமே காரணமாகின்றது. எங்ஙனம்: கடத்தன்மை வடிவ விசேஷணமுடைய கடத்தினோடு சக்ஷு இந்திரியத்தின் சையோக சம்பந்த வடிவ குணம் "இது கடம்" என்னும் பிரத்தியக்ஷப் பிரமாவில் காரணமாகின்றது. அநுமிதி பிரமாவிலோ வியாபகமுடையதில் வியாப்பியத்தின் ஞானவடிவ குணமே

காரணமாகின்றது. எங்ஙனம்: தூம வடிவ ஏதுவின் வியாபக வன்னியுடைய பர்வதத்தில் வன்னியின் வியாப்பிய தூமத்தின் ஞான வடிவ குணமே "மலை வன்னியுடைத்து" என்பதான அநுமிதிப் பிரமாவில் காரணமாகின்றது. உபமிதி பிரமாவிலோ யதார்த்த சாதிருசிய ஞான வடிவ குணமே காரணமாகின்றது. சாப்திப் பிரமாவிலோ யதார்த்த யோக்கியத் தன்மையாதி ஞான ரூப குணமே காரணமாகின்றது. இவ்வாறாக எதுவெது பிரமா ஞானமாமோ அதுவது குணத்தானேயே உண்டாவதாகின்றது. கூறிய குணம் கூறிய ஞானமாத்திரத்தினை உண்டாக்கும் சாமக்கிரியினும் வேறாம். அத்தகைய குண வடிவத்தால் பிரயோஜ்ஜியத் தன்மையே பிரமாத் தன்மையில் உத்பத்தி பரதஸ்த்வமாம்.

கூ௨௦. அப்பிரமாத்தன்மையின் உற்பத்தி பரதஸ்த்வத்தினதும், ஞப்தி பரதஸ்த்வத்தினதும் நிரூபணம்.

அல்லது எங்ஙனம் பிரமா ஞானத்திலிருக்கும் பிரமாத் தன்மையில் உற்பத்தி பரதஸ்த்வமும், ஞப்தி பரதஸ்த்வமு மிருக்கின்றதோ அங்ஙனமே அப்பிரமா ஞானத்திலிருக்கும் அப்பிரமாத்தன்மையினும் உற்பத்தி பரதஸ்த்வமும், ஞப்தி பரதஸ்த்வமுமே யிருக்கின்றது. பிரமா ஞானத்தின் அசாதாரண காரணம் எங்ஙனம் கூறிய குணமாமோ அங்ஙனமே அப்பிரமா ஞானத்தின் அசாதாரண காரணம் தோஷமாகின்றது. ஆகையால் தோஷமும் ஞான மாத்திரத்தின் சாமக்கிரியினும் வேறாம். அத்தகைய தோஷ வடிவ காரணத்தால் பிரயோஜ்ஜியத் தன்மையே அப்பிரமாத் தன்மையில் உற்பத்தி பரதஸ்த்வமாம். பிரமாத் தன்மையினைப் போன்று அப்பிரமாத் தன்மையின் ஞானமும் ஞானமாத்திரத்தினைக் கிரஹிக்கும் சாமக்கிரியினும் வேறான அநுமான வடிவ சாமக்கிரியினால் உண்டாகின்றது. இதுவே அப்பிரமாத்தன்மையில் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மையாம். ஆண்டு சுக்தியில் "இது வெள்ளி" என்பதான ஞானத்திற்குப்பின் வெள்ளியின் இச்சையால் பிரவிருத்தித்த புருஷனுக்கு வெள்ளியின் பிராப்தி யுண்டாகாதபோது அப்புருஷன் வெள்ளி ஞானத்தில் அப்பிரமாத் தன்மையின் அநுமானஞ் செய்கின்றான். அவ்வநுமானத்தின் ஆகாரமிதுவாம். "இதம் ரஜதமிதி ஜ்ஞாநம் அப்ரமா நிஷ்பலப்ரவ்ருத்திஜநகத்வாத் யந்நைவம் தந்நைவம் யதா ப்ரமா" (இ-ள்.) எமக்கு முன் உண்டாகிய "இது வெள்ளி" என்னும் ஞானம் அப்பிரமாவாம், நிஷ்பல பிரவிருத்தியினை உண்டாக்குவதாவதால், எவ்வெவ் ஞானம் அப்பிரமாவன்றோ அவ்வவ் ஞானம் நிஷ்பலப் பிரவிருத்தியினை உண்டாக்குவதன்றாம். எங்ஙனம்: சத் வெள்ளியில் "இது வெள்ளி" என்னும் பிரமா ஞானம் போலும். இவ்வாறாய அநுமானத்தானேயே அப்பிரமாத் தன்மையின் ஞான முண்டாகின்றது. இதுவே அப்பிரமாத் தன்மையில் பிறிதாற் கிரஹிக்கப்படுந் தன்மையாம். யாவத் எனினும், எல்லாமெனினும் ஒக்கும். சித்தசாதன தோஷமெனினும், துணிந்ததனைத் துணிதலென்னுங் குற்றமெனினும் ஒக்கும்.

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசாரிய ஸ்ரீ சுவாமி உத்தவானந்தகிரி யவர்களின் சீடராகிய சுவாமி சித்கனாநந்தகிரி யவர்களால் திருவாய் மலர்ந் தருளிய பிரத்தியக்ஷப் பிரமாணாதி நான்கின் நிரூபண மெனப் பெயரிய நியாயப்பிரகாசம் ஆறுவது பரிச்சேதம் முற்றிற்று.

ஸ்ரீ குருப்யோநம꞉.

✳

ஓம் ஸ்ரீகணேசாயநம:, ஸ்ரீகுருப்யோநம:,

ஸ்ரீகாசிவிஶ்வேஶ்வராயநம:, ஸ்ரீஶங்கராசாரியேப்யோநம:.

# நியாயப்பிரகாசம்.

## ஏழாவது பரிச்சேதம்.

இரண்டாவது பரிச்சேத முதலாக ஆறாவது பரிச்சேதமட்டும் கணாத முனிவரருளிய வைசேடிக சாத்திரத்தின் திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் விரிவாய் நிரூபிக்கப்பட்டன. இனி இவ்வேழாவது பரிச்சேதத்தில் கௌதம முனிவரருளிய நியாய சாத்திரத்தின் பிரமாண முதலிய பதினாறு பதார்த்தங்களை நிரூபிப்பாம். அங்ஙனமே இப்பதினாறு பதார்த்தங்கள் முற்கூறிய ஏழு பதார்த்தங்களில் அடங்கும் வகையினையும் வர்ணிப்பாம். ஆண்டு பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோஜனம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை, ஏத்வாபாசம், சலம், ஜாதி, நிக்கிரஹஸ்தானமாமென்னு மிப்பதினாறுபதார்த்தங்கள் கௌதம முனிவரால் நியாய சாத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. இனி இப்பதினாறு பதார்த்தங்களை முறையாக நிரூபிப்பாம்.

### ௧௫௨௧. நால்வகைத்தாய பிரமாணத்தின் நிரூபணம்.

ஆண்டு முதலாவது பிரமாண பதார்த்தமோ பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சத்தம் என்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். இந்நால்வகை பிரமாணங்களில் முதலாவது பிரத்தியக்ஷப் பிரமாணமோ பாஹியம், அந்தர மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். பாஹியப் பிரத்தியக்ஷமும் கிராணம், ரசனம், சக்ஷுஸ், துவக்கு, சுரோத்திர மென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். மனம் அந்தர பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது. கிராணம், ரசனம், சக்ஷுஸ், துவக்கு, சுரோத்திரம், மனமென்னும் ஆறு இந்திரியங்களின் ஸ்வரூபத்தை இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அங்ஙனமே இவ்வாறு இந்திரியங்களில் பிரத்தியக்ஷப் பிரமாண வடிவ தன்மையை ஆறாவது பரிச்சேதத்தில் பிரத்தியக்ஷ நிரூபணத்தில் விரிவாய்க் கூறிவந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. கிராண முதலிய ஆறு இந்திரிய வடிவ பிரத்தியக்ஷப்பிரமாணங்களின் அடக்கம் முறையாக பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம், மனமா மிவ்வாறு திரவியங்களில் சம்பவிக்கின்றது. இரண்டாவது அநுமானப்பிரமாணமும் பூர்வவத் (காரணத்தை லிங்கமாக உடையது), சேஷவத் (காரியத்தை லிங்கமாக உடையது), சாமான்னியதோதிர்ஷ்டம் (காரண காரியங்களினும் வேறான லிங்கமுடையது) என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இம்மூவகை அநுமானமும் ஸ்வார்த்தம் (தன் பொருட்டு), பரார்த்தம் (பிறர்பொருட்டு) என்னும் வேறுபாட்டால் மீண்டும்

இருவகைத்தாம். இவ்வநுமானப் பிரமாணத்தினை விரிவாக முன்னர் ஆறாவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம். அதை யீண்டு மறிந்துக் கொள்க. இந்த வியாப்தி ஞான வடிவ அநுமானத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. மூன்றாவது உபமானப் பிரமாணமும் சாதிருசிய விசிஷ்ட (சமான இயல்படுத்த) பிண்ட ஞானம், வைதர்மிய விசிஷ்ட (வேற்றியல்படுத்த) பிண்ட ஞானம், அசாதாரண தர்ம விசிஷ்ட (சிறப்பியல் படுத்த) பிண்ட ஞானமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இவ்வுப மானப் பிரமாணத்தினை ஆறாவது பரிச்சேதத்தில் உபமான நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இவ்வுப மானப் பிரமாணமும் ஞான குணத்தில் அடக்கமாம். நான்காவது சத்தப் பிரமாணமோ திருஷ்டார்த்தகம் (அன்னம் விரும்புவோன் அடுதலைச் செய்க என்றல் முதலிய காணப்படும் பொருளைச் சொல்வது), அதிருஷ்டார்த்தகம் (சுவர்க்கம் விரும்புவோன் எரியோம்புக என்ற தடக்கத்தனவாய் காணப் படா பொருளைக் கூறுவது) என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு "வொஜநகாஜஃ வமெ.தஃ" என்பதான இவை முதலிய திருஷ்ட அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் சப்தமோ திருஷ்டார்த்தகமெனப்படுகின்றது. "சுவர்க்கம் விரும்புவோன் எரியோம்புக" என்பதான இவை முதலிய அதிர்ஷ்ட அர்த்தத்தினை பிரதிபாதிக்கும் சத்தமோ அதிருஷ்டார்த்தக மெனப்படுகின்றது. இச்சத்தப்பிரமாணத்தினை முன்னர் ஆறாவது பரிச்சேதத் தில் சத்தப்பிரமாணத்தின் நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக்கொள்க. பதத்தின் ஞானத்தினை சத்தப் பிரமாண மென்னும் மதத்திலோ சத்தப் பிரமாணத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. ஞான பதத்தினை (ஞானத்தை யுண்டு பண்ணும் பதத்தினை) சத்தப் பிரமாணம் என்னும் மதத்தில் சத்தப் பிரமாணத்தின் அடக்கம் சத்த குணத்தில் சம்பவிக்கின்றது.

கூ௲உ௨. பன்னிரு வகைத்தாகிய பிரமேயத்தின் நிரூபணம்.

இரண்டாவது பிரமேய பதார்த்தமோ ஆத்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோஷம், பிரேத்தியாபாவம், பலம், துக்கம், அபவர்க்கம் என்னும் வேறுபாட்டால் பன்னிரு வகைத்தாம். முத லாவது ஆத்ம வடிவ பிரமேயமோ ஜீவாத்மா, ஈசுவராத்மா வென்னும் வேறு பாட்டால் இருவகைத்தாம். இரண்டாவது பரிச்சேதத்தில் ஆத்ம நிரூபணத் தில் ஆத்மாவினை விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக் கொள்க. ஆத்ம வடிவ பிரமேயத்தின் அடக்கம் ஆத்ம வடிவ திரவியத்தில் சம்பவிக்கின்றது. இரண்டாவது சரீர வடிவ பிரமேயமோ யோனிஜம், அயோ னிஜம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். முதலாவது யோனிஜ சரீர மும் ஜராயுஜம், அண்டஜம் என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். இரண் டாவது அயோனிஜ சரீரமோ ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம், அதிர்ஷ்ட விசேஷ ஜன் னியம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இச்சரீரத்தின் விஸ்தார நிரூ பணம் இரண்டாவது பரிச்சேதத்தில் பிருதிவி நிரூபணத்தில் கூறி வந்துள்

ளோம். அதை ஈண்டு மறிந்துக்கொள்க. இச்சரீர வடிவ பிரமேயத்தின் அடக்கம் திரவிய பதார்த்தத்தில் சம்பவிக்கின்றது. அதாவது; பார்த்திவ, ஜலீய, தைஜச, வாயவீயமா மிந்நான்குவகைத்தாய சரீரங்களின் அடக்கம் முறையாக பிருதிவி முதலிய நான்கு திரவியங்களில் சம்பவிக்கின்றது. மூன்றுவது இந்திரிய வடிவ பிரமேயமோ கிராணம், ரசனம், சக்ஷுஸ, துவக்கு, சுரோத்திரம், மனமென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். இவ்விந்திரிய வடிவ பிரமேயத்தின் அடக்கம் முற்கூறிய முறைப்படி பிருதிவிமுதலிய திரவியங்களிலேயே முறையாகச் சம்பவிக்கின்றது. "ஏகைகேந்த்ரியக்ராஹ்யவிஶேஷகுண: அர்த:" (இ-ள்.) ஒவ்வோர் இந்திரிய மாத்திரத்தால் கிரஹிக்கப்படும் விசேஷ குணத்தினை அர்த்த மென்பர். அவ்வர்த்த வடிவ பிரமேயம் ரூபம், ரசம், கந்தம், ஸ்பரிசம், சத்தம், புத்தி, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், முயற்சி யென்னும் வேறுபாட்டால் பதினொருவகைத்தாம். உருவ முதலியவைகளின் ஸ்வரூபம் முன்னர் மூன்றுவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இவ்வர்த்த வடிவ பிரமேயத்தின் அடக்கம் முறையாக யோக்கிய குண பதார்த்தத்தில் சம்பவிக்கின்றது. அல்லது அர்த்த வடிவ பிரமேயம் திரவியம், குணம், கர்மம், சாமான்னியம், விசேஷம், சமவாய மென்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம். திரவிய முதலிய ஆறு அர்த்தங்களின் ஸ்வரூபம் முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டும் அறிந்துக் கொள்க. இத்திரவியாதி வடிவ அர்த்தத்தின் அடக்கம் முறையாக திரவிய முதலிய ஆறு பதார்த்தங்களிலேயே சம்பவிக்கின்றது. ஐந்தாவது புத்தி வடிவ பிரமேயமோ நித்தியம், அநித்திய மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு ஈசுவரனது புத்தியோ நித்தியமாகின்றது. ஜீவனது புத்தி அநித்தியமாகின்றது. அவ்வநித்திய புத்தியும் அநுபவம், ஸ்மிருதி என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அவ்விருவகைத்தாய புத்தியும் யதார்த்தம், அயதார்த்த மென்னும் வேறுபாட்டால் மீண்டும் இருவகைத்தாம். ஆண்டு யதார்த்த அநுபவமோ பிரத்தியக்ஷம், அநுமிதி, உபமிதி, சாப்த மென்னும் வேறுபாட்டால் நால்வகைத்தாம். அயதார்த்த அநுபவமோ சம்சயம், விபர்யயம், தர்க்கமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இப்புத்தி வடிவ பிரமேயத்தினை முன்னர் ஆறுவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இப்புத்தி வடிவ பிரமேயத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. ஆறுவது மனவடிவ பிரமேயத்தினையோ முன்னர் இரண்டாவது பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இம்மன வடிவ பிரமேயத்தின் அடக்கம் மன வடிவ திரவியத்தில் சம்பவிக்கின்றது. ஏழாவது பிரவிருத்தி வடிவ பிரமேயமோ வாகாரம்பம்(வசனித்தற்கநுகூலமாயது), புத்தியாரம்பம்(தியானித்தற்கநுகூலமாயது), சரீராரம்பம் (உடற்சேட்டைக் கநுகூலமாயது) என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு "வசநாநுகூலப்ரயத்ந: வாகாரம்ப: ॥ சேஷ்டாநுகூலப்ரயத்ந: ஶரீராரம்ப: ॥ ஸங்கல்பாநுகூலப்ரயத்ந: புத்த்யாரம்ப:" (இ-ள்.) புருஷனது வசன உச்சாரணத்திற்கு அநுகூல

முயற்சியினை வாகாரம்பமென்பர். புருஷனது சரீரத்தின் சேஷ்டைக்கு அநுகூல முயற்சியினை சரீராரம்பமென்பர். அவ்விருவகையாய முயற்சியினும் வேறான முயற்சியினை புத்தியாரம்ப மென்பர். அப்புத்தியாரம்ப மெனப் பெயரிய முயற்சி தியான முதலியவைகட்கு அநுகூலமாகின்றது. இந்த பிரவிருத்தி வடிவ பிரமேயத்தின் அடக்கம் முயற்சி குணத்தில் சம்பவிக்கின்றது. எட்டாவது தோஷ வடிவ பிரமேயமோ ராகம், துவேஷம், மோஹமென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம்.

கநஉந. எழுவகைத்தாய ராக வடிவ தோஷத்தின் வர்ணனம்.

முதலாவது ராக வடிவ தோஷமோ காமம், மத்சரம், ஸ்புருஹை திருஷ்ணை, லோபம், மாயை, டம்பம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத்தாம். மைதுனத்தின் இச்சையினை காமமென்பர். தனது பயனை விசாரியாமலே பிறன் விரும்பியதை தடுத்தற்கு விரும்புவதனை மத்சரமென்பர். தர்ம விரோதமின்றி பொருளை அடைய விரும்புவதனை ஸ்புருஹையென்பர். இது என்னுடைய பொருள் ஒரு நாளும் கொடலாகாதென்னும் இச்சையினை திருஷ்ணை யென்பர். எக்காரியத்தில் எவ்வளவு தனம் அவஸ்யமாய் செலவிடுத லுசிதமோ அக்காரியத்தில் அவ்வளவு தனத்தை செலவிடாது காத்தற் கிச்சிப்பதனை கார்ப்பண்ணிய மென்பர். இது கிருபணத்தன்மை யெனப் படும். இதுவும் திருஷ்ணை விசேஷணமேயாம். தர்ம விரோதமாக பிறர் பொருளை அடைய விரும்புவதனை லோபமென்பர். பிறரை வஞ்சிக்க விரும்புவதனை மாயை யென்பர். அந்தரத்தில் தர்மமுடைமை யில்லாதிருந்தும் தர்மமுடையவனாக தனது மேன்மையை அறிவிக்க விரும்புவதனை இடம்ப மென்பர். இவ்வெழுவகை ராகமும் இச்சாகுணத்தி லடக்கமாம்.

கநஉச. அறுவகை துவேஷ வடிவ தோஷத்தின் வர்ணனம்.

இரண்டாவது துவேஷ வடிவ தோஷமோ குரோதம், ஈரிஷை, அசூயை, துரோஹம், அமர்ஷம், அபிமான மென்னும் வேறுபாட்டால் அறுவகைத் தாம். ஆண்டு கண் சிவத்தல் முதலியவற்றிற்குக் காரணமாகிய துவேஷ விசேஷத்தினை குரோதமென்பர். சாதாரண வஸ்துவில் பிறனது உடைமையாக அவ்வஸ்துவை கிரஹிக்கும் புருஷனிடத் துண்டாம் துவேஷத்தினை ஈரிஷை யென்பர். வேறு புருஷனது வித்தை முதலிய குணங்களில் உண்டாம் துவேஷத்தினை அசூயையென்பர். வேறு புருஷனை கெடுக்கும் பொருட்டுண்டாம் துவேஷத்தினை துரோக மென்பர். ஹிம்சையோ துரோகத்தா லுண்டாவ தாகின்றது. சில நூலாசிரியரோ ஹிம்சையினை துரோக மென்பர். குற்றஞ் செய்வோனிடத்து சாமர்த்திய மில்லாப் புருஷனுக்குண்டாம் துவேஷத்தினை அமர்ஷ மென்பர். அபகாரஞ் செய்பவனிடத்தில் அற்பமும் தீமையைச் செய்ய சாமர்த்திய மில்லாப்புருஷனுக்கு தனதாத்மாவிலுண்டாம் துவேஷத்தினை அபிமான மென்பர். இவ்வறுவகை துவேஷமும் துவேஷ குணத்தில் அடக்கமாம்.

### கஅஉரு. எழுவகைத்தாய மோஹ வடிவ தோஷத்தின் வர்ணனம்.

மூன்றாவது மோஹ வடிவ துவேஷமோ விபர்யயம், சம்சயம், தர்க்கம், மானம், பிரமாதம், பயம், சோகம் என்னும் வேறுபாட்டால் எழுவகைத் தாம். ஆண்டு விபர்யயம், சம்சயம், தர்க்கமா மிம்மூன்றின் ஸ்வரூபமோ முன்னர் ஆறாவது பரிச்சேதத்தில் அயதார்த்த அநுபவத்தின் நிரூபணத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை யீண்டுமறிக. தனது ஆத்மாவிலிராத குணங்களை ஆரோபித்துக் கொண்டு உயர்வாகக் கருதும் புத்தியினை மான மென்பர். குணவான்களிடத்து குணமின்மையைக் கருதுவதாகிய புத்தியினை ஸ்மயமென்பர். இந்த ஸ்மயத்தின் அடக்கமும் கூறிய மானத்திலேயே சம்பவிக்கின்றது. முன்னர் கர்த்தவ்வியத்தன்மை வடிவமாக நிச்சயஞ் செய்துள்ள அர்த்தத்தில் அகர்த்தவ்வியத் தன்மை புத்தியினையும், முன்னர் அகர்த்தவ்வியத் தன்மை வடிவமாக நிச்சயஞ் செய்யப்பட்டுள்ள அர்த் தத்தில் மீண்டும் கர்த்தவ்வியத் தன்மை புத்தியினையும் பிரமாதமென்பர். அனிஷ்டம் செய்வோன் யாதேனும் ஒரு காரணம் வாய்த்த காலத்து அதனை விடுவதற்கு தகுதியில்லாமையை அறியும் ஞானத்தினை பயமென்பர். இஷ்ட வஸ்து பிரிந்த காலத்து அவ்விஷ்ட வஸ்து மீண்டும் கிடைப்ப தற்குரிய தாகாமையின் ஞானத்தினை சோக மென்பர். இவ்வெழுவகை மோஹமும் ஞான குணத்தில் அடக்கமாம். மரித்தபின்னுண்டாம் பிறப்பை பிரேத்தியாபாவ மென்பர். சரீர, பிராணனது அந்திய சையோகத்தின் துவம்சத்தினை மரணமென்பர். சரீர, பிராணனது அந்திய சையோகத்தினை ஜன்மமென்பர். பிரேத்யாபாவ வடிவ பிரமேயத்தின் அடக்கம் துவம்சத்திலும், சையோக குணத்திலும் சம்பவிக்கின்றது. அதாவது; பலவடிவ பிரமேயமோ முக்கியம், கௌண மென்னும் வேறுபட்டால் இருவகைத்தாம். ஆண்டு சுகத் தின் சாக்ஷாத்காரத்தினை அல்லது துக்கத்தின் சாக்ஷாத்காரத்தினை முக்கியப் பயனென்பர். ஜன்னிய வஸ்து மாத்திரத்தினை கௌணப் பயனென்பர். ஆண்டு முக்கிய பயனது அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. கௌணப் பயனது அடக்கம் முறையார்க் திரவிய முதலியவைகளில் சம்பவிக்கின்றது. இருபத்தொரு துக்க வடிவ பிரமேயத்தின் அடக்கம் துக்க குணத்தில் சம்ப விக்கின்றது. அத்துக்க குணத்தினை மூன்றாவது பரிச்சேதத்தில் விரிவாய்க்கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இருபத்தொரு துக்கங் களின் அத்தியந்த நிவிருத்தியினையே அபவர்க்கமென்பர். அபவர்க்கத்தினை முதல் பரிச்சேதத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. அபவர்க்க வடிவ பிரமேயத்தின் அடக்கம் அபாவ பதார்த்தத்தில் சம்பவிக்கின்றது. (2)

### கஅஉசு. மூவகை சம்சயத்தின் வர்ணனம்.

மூன்றாவது சம்சய பதார்த்தமோ சாதாரண தர்மமுடைய தர்மி ஞான ஜன்னியம், அசாதாரண தர்மமுடைய தர்மி ஞான ஜன்னியம், விப்பிரதிபத்தி வாக்கிய ஜன்னியம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். அச்சம்சயம் பஹிர்விஷயகம் (புறவிடத்தது), அந்தர்விஷயகம் (உள்ளிடத்தது) என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். ஆண்டு பஹிர் விஷயக சம்சயமும்

திருசியமான தர்மிகம் (காணப்படுந் தர்மியினது), அதிருசியமான தர்மிகம் (காணப்படாத தர்மியினது) என்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். இச்சம்சய பதார்த்தத்தினை ஆறுவது பரிச்சேதத்தில் அயதார்த்த அநுபவத்தின் நிரூபணத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இச்சம்சய பதார்த்தத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. (3)

கரு௨எ. முக்கிய கௌணவேறுபாட்டால் இருவகை பயனது வர்ணனம்.

நான்காவது பிரயோஜன பதார்த்தமோ முக்கியம், கௌணமென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். ஆண்டு சுகம், துக்காபாவமா மிரண்டினை முக்கியப் பிரயோஜன மென்பர். முக்கியப் பிரயோஜனங்களின் சாதனங்களை கௌணப் பிரயோஜன மென்பர். இப்பிரயோஜன பதார்த்தத்தினை முதல் பரிச்சேதத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிக. ஆண்டு சுக வடிவ பிரயோஜனத்தின் அடக்கம் சுக குணத்தில் சம்பவிக்கின்றது. துக்காபாவ வடிவ பிரயோஜனத்தின் அடக்கம் அபாவ பதார்த்தத்தில் சம்பவிக்கின்றது. கௌணப் பிரயோஜனத்தின் அடக்கம் முறையாக திரவிய முதலிய பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. (4)

கரு௨அ. இருவகை திர்ஷ்டாந்த பதார்த்தத்தின் வர்ணனம்.

ஐந்தாவது திர்ஷ்டாந்த பதார்த்தமோ சாதர்மியும், வைதர்மிய மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். திர்ஷ்டாந்த பதார்த்தத்தினை ஆறுவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிந்துக் கொள்க. இத்திர்ஷ்டாந்த பதார்த்தத்தின் அடக்கம் முறையாக திரவிய முதலிய பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. அதாவது; திரவிய வடிவ திர்ஷ்டாந்தத்தின் அடக்கம் திரவியத்திலும், குண வடிவ திர்ஷ்டாந்தத்தின் அடக்கம் குணத்திலும் சம்பவிக்கின்றது. இவ்வாறுத கர்மம், சாமான்னிய முதலிய திர்ஷ்டாந்தத்தின் அடக்கம் கர்மம், சாமான்னிய முதலிய பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. (5)

கரு௨கூ. நால்வகை சித்தாந்த பதார்த்தத்தின் வர்ணனம்.

ஆண்டு "[illegible]" (இ-ள்.) சாத்திர வேத்தா புருஷன் பிரமாண முடைமையால் அங்கீகரிக்கப்பட்ட அர்த்தத்தினை சித்தாந்த மென்பர். அச்சித்தாந்தம் சர்வதந்திர சித்தாந்தம், பிரதிதந்திர சித்தாந்தம், அதிகரண சித்தாந்தம், அப்பியுபகம சித்தாந்தமென்னும் வேறுபாட்டால் நான்கு வகைத்தாம். எல்லா சாத்திரங்கட்கும் விரோதமின்றியதாகி தனது சாத்திரத்தில் அங்கீகரிக்கப்பட்ட சித்தாந்தத்தினை சர்வதந்திர சித்தாந்தமென்பர். எங்ஙனம்: கிராண முதலியவைகளில் இந்திரியத்தன்மையின் அங்கீகாரமும், கந்தமுதலியவைகளில் கிராண முதலிய இந்திரியங்களின் அர்த்தத்தன்மையின் அங்கீகாரமும், பிருதிவி முதலிய ஐந்தில் பூதத்தன்மையின் அங்கீகாரமுமா மிவை முதலியன சர்வதந்திர சித்தாந்தமெனப் படுகின்றன. வாதி அல்லது பிரதிவாதியாம் ஒருவராலேயே அங்கீகரிக்கப்

பட்டு மற்றவர்களால் அங்கீகரிக்கப்படாத அர்த்தம் பிரதி தந்திர சித்தாந்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: மீமாஞ்சகர்களின் மதத்தில் சத்தத்தினது நித்தியத்தன்மையின் அங்கீகாரம் பிரதிதந்திர சித்தாந்த மெனப்படுகின்றது. எவ்வர்த்தத்தின் சித்தியுளதாகியே பிரஸ்துத அர்த்தத்தின் சித்தி உண்டாகின்றதோ அது அதிகரண சித்தாந்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: துவியணுகாதி வடிவ பக்ஷத்திலிருக்கும் உபாதான கோசர அபரோக்ஷ ஞானம், இச்சை, முயற்சியுடைய புருஷனுல் உண்டாகுந் தன்மையின் காரியத்தின் சித்தியுளதாகி ஈசுவரனது சர்வஞ்ஞத் தன்மையின் சித்தி யுண்டாகின்றது. அது அதிகரண சித்தாந்த மெனப்படுகின்றது. சாக்ஷாத் சூத்திரத்தில் கூறப்பட்டிராத அர்த்தத்தின் அங்கீகாரம் அப்பியுபகம சித்தாந்த மெனப்படுகின்றது. எங்ஙனம்: மனதில் இந்திரியத்தன்மையின் அங்கீகாரம் அப்பியுபகம சித்தாந்த மெனப்படுகின்றது. இச்சித்தாந்த பதார்த்தத்தின் அடக்கம் முறையாக திரவிய முதலிய பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. (6)

கஙுங௦. ஐவகை அவயவ பதார்த்தத்தின் வர்ணனம்.

ஏழாவது அவயவ பதார்த்தமோ பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரணம், உபநயம், நிகமனமென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆண்டு இரண்டாவது ஏது அவயவமும் அஞ்ஞாத வியதிரேக வியாப்திக ஏது போதகம், அப்பிரதீதான்வய வியாப்திக ஏது போதகம், பிரதீதான்வய வியதிரேக வியாப்திக ஏது போதக மென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். மூன்றாவது உதாஹரண அவயவமோ அன்வய வியாப்தி போதகம், வியதிரேக வியாப்தி போதக மென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். நான்காவது உபநய வடிவ அவயவமும் அன்வயி, வியதிரேகி என்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். இவ்வவயவ பதார்த்தத்தினை முன்னர் ஆறாவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்தில் விரிவாய்க் கூறி வந்துள்ளோம். அதை ஈண்டு மறிக. இவ்வவயவ பதார்த்தம் சத்த ஸ்வரூபமாவதால் சத்த குணத்தில் அடக்கமாம். (7)

கஙுஙக. பதினொரு வகை தர்க்க பதார்த்தத்தின் நிரூபணம்.

எட்டாவது தர்க்க பதார்த்தமோ ஆத்மாசிரயம், அன்னியோன்னியாசிரயம், சக்கிரிகா, அனவஸ்தா, பிரமாணபாதிதார்த்த பிரசங்க மென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆண்டு ஆத்மாசிரயம், அன்னியோன்னியாசிரயம், சக்கிரிகா வென்னும் மூன்று தர்க்கமோ உத்பத்தி, ஸ்திதி, ஞப்தி என்னும் வேறுபாட்டால் மும்மூவகைத்தாம். சில நூலாசிரியர் மதத்தில் இத் தர்க்க பதார்த்தம் வியாகாதம், ஆத்மாசிரயம், இதரேதராசிரயம், சக்கிரிகா, அனவஸ்தா, பிரதிவந்தி, கல்பனு லாகவம், கல்பனு கௌரவம், உத்சர்க்கம், அபவாதம், வையாத்ய மென்னும் வேறுபாட்டால் பதினொரு வகைத்தாம். இத்தர்க்க பதார்த்தம் விஷய பரிசோதகம், வியாப்தி கிராஹக மென்னும் வேறுபாட்டால் மீண்டு மிருவகைத்தாம். இத்தர்க்க பதார்த்தத்தினை முன்னர் ஆறாவது பரிச்சேதத்தில் தர்க்கத்தின் நிரூபணத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டு மறிக. இத்தர்க்க பதார்த்தத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. (8)

கநுஉ. நிர்ணய பதார்த்தத்தின் நிரூபணம்.

பிரமாணத்தின் பயனாகிய நிச்சய வடிவ ஞானத்தினை நிர்ணயமென்பர். நிர்ணய பதார்த்தத்தின் அடக்கம் ஞான குணத்தில் சம்பவிக்கின்றது. (9)

கநுநு. வாத பதார்த்தத்தின் நிரூபணம்.

" தத்வபுஹுத்ஸோ: கதா வாத: " (இ-ள்.) தத்துவ (உண்மை) வஸ்துவினை போதிப்பதற்கு இச்சையுடைய இருவர்களின் பரஸ்பர வினு விடையினை வாதமென்பர். இவ்வாத பதார்த்தத்தின் அடக்கம் சப்த குணத்தில் சம்பவிக்கின்றது. (10)

கநுச. ஜல்ப பதார்த்தத்தின் நிரூபணம்.

" உபயபக்ஷஸ்தாபநவதீ விஜிகீஷுகதா ஜல்ப: " (இ-ள்.) தத்தந் கருத்தை நிலைக்கச் செய்யும் இச்சையுடைய வாதி, பிரதிவாதிகளின் வினு விடையினை ஜல்பமென்பர். ஜல்ப பதார்த்தத்தின் அடக்கம் சத்த குணத்தில் சம்பவிக்கின்றது. (11)

கநுரு. விதண்டை பதார்த்தத்தின் அடக்கம்.

"ஸ்வபக்ஷஸ்தாபநஹீநா விஜிகீஷுகதா விதண்டா" (இ-ள்.) தனது பக்ஷம் நிலைப்பதற்கு வேண்டிய யுக்தியில்லாப் புருஷர்களின் பரஸ்பர விவாதத்தினை விதண்டை யென்பர். இவ்விதண்டை பதார்த்தம் சத்த குணத்தில் அடக்கமாம். (12)

கநுசா. ஐவகை ஹேத்வாபாசத்தின் நிரூபணம்.

ஹேத்வாபாச பதார்த்தமோ வியபிசாரி, விருத்தம், அசித்தி, சத்பிரதி பக்ஷம், பாதிதமென்னும் வேறுபாட்டால் ஐவகைத்தாம். ஆண்டு முதலாவது வியபிசாரி ஹேத்வாபாசமோ சாதாரணம், அசாதாரணம், அநுபசம்ஹாரி யென்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். மூன்றாவது அசித்த ஹேத்வாபாசமும் ஸ்வரூபாசித்தம், ஆசிரயாசித்தம், வியாப்பியத்தன்மை அசித்தம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். இவ்வேத்வாபாச பதார்த்தத்தினை முன் ஆறாவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்தில் விரிவாய் நிரூபித்துள்ளோம். அதை ஈண்டுமறிக. ஹேத்வாபாச பதார்த்தத்தின் அடக்கம் முறையாக திரவிய முதலிய ஏழு பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. (13)

கநுஎ. மூவகை சல பதார்த்தத்தின் நிரூபணம்.

"வக்துர் தாத்பர்யாவிஷயார்த்தகல்பநயா தூஷணாபிதாநம் சலம்" (இ-ள்.) கூறுவோனது தாத்பரியத்தின் விஷயமாகிய அர்த்தத்தினை கற்பித்துக் கொண்டு கூறுவோனைக் குறித்து தூஷிப்பதனை சலமென்பர். அதாவது; ஒரு பொருள் கருதி சொல்லியதற்கு வேறுபொருள் கற்பித்துக்கொண்டு பழித்தல். எங்ஙனம்: " அயம் புருஷ: நேபாலாதாகத: நவகம்பலவத்வாத் " (இ-ள்.) இப்புருஷன் நேபாலத்தினின்று வந்தவனும், நவகம்பள முடையவனுவதால். ஈண்டு "நவகம்பள முடைமையால்" என்னும் வசனத்திலுள்ள நவமென்னும் பதத்தால் கம்பளத்தில் நவீனத்தன்மையினை போதிப்பதில் கூறுவோனது தாத்பரியமாம். அந்நவகம்பளத்திற்கு ஒன்பதென்னும்

சங்கியையினை போதிப்பதில் கூறுவோனுக்கு தாத்பரியமின்றாம். கூறுவோனது தாத்பரியத்தின் விஷயமிலதாகிய ஒன்பதென்னும சங்கியா வடிவ அர்த்தத்தினை கற்பித்துக்கொண்டு கூறுவோனைக்குறித்து ஏழைமனிதனிடத்து ஒன்பது கம்பளமின்றாம். ஒரே கம்பளமிருக்கின்ற தென்பதான அசித்த தோஷத்தின் வசனத்தினை சலமென்பர். அச்சலபதார்த்தம் வாக்சலம், சாமான்னியசலம், உபசாரசலம் என்னும் வேறுபாட்டால் மூவகைத்தாம். ஆண்டு எப்பதத்திற்கு இரு சக்கிய அர்த்தம் சம்பவிக்க ஒரு சக்கிய அர்த்தத்தினை நிர்ணயிப்பதாகிய விசேஷத்தின் அபாவத்தால் கூறுவோனது தாத்பரியத்தின் விஷயமாகாததாகிய சக்கிய அர்தத்தினை கற்பித்துக்கொண்டு கூறுவோனைக் குறித்து கூறும் தூஷணத்தினை வாக்சலமென்பர். எங்ஙனம்: முற்கூறிய உதாஹரணத்தில் நவமென்னும் பதத்திற்கு நவீனத்தன்மையும், ஒன்பதென்னுஞ் சங்கியையும் சக்கியார்த்தமாம். ஆண்டு நவபதத்திற்கு நவீனத்தன்மை வடிவ அர்த்தத்தில் கூறுவோனது தாத்பரிய மிருக்கின்றது. ஒன்பதென்னுஞ் சங்கியையில் தாத்பரியமின்றாம். நவமென்னும் பதத்தால் ஒன்பதென்னுஞ் சங்கியை வடிவ அர்த்தத்தினை கற்பித்துக்கொண்டு கூறுவோனைக் குறித்து கூறிய தூஷணத்தினை வாக்சல மென்பர். சாமான்னிய விசிஷ்ட சம்பவத் அர்த்தத்தின் அபிப்பிராயத்தால் கூறப்பட்ட வசனத்தின் அதி சாமான்னிய யோகத்தால் அசம்பவத் அர்த்தத்தன்மையினை கற்பித்துக்கொண்டு கூறுவோனைக் குறித்து தூஷிப்பதனை சாமான்னிய சலமென்பர். எங்ஙனம்: ஒருவன் "ப்ராஹ்மணோயம் வித்யாசரணஸம்பந்ந:" (இ-ள்.) இப்பிராமணன் வித்தியா ஆசரணத்தால் சம்பன்னனாம். என்பதான வசனங் கூற அவ்வசனத்தைக் கேட்ட ஒருவன் கூறும்பிப்புருஷன் பிராமணத்தன்மை வடிவ ஏதுவால் வித்தியா ஆசரணத்தினை சித்தஞ் செய்கிறானென்பதான அர்த்தத்தினை கற்பித்துக்கொண்டு கூறுவோனைக் குறித்து இவ்வாறாய வசனங் கூறுவானாகை. பிராமணத்தன்மை வடிவ ஹேதுவால் வித்தியா ஆசரணத்தின் சித்தி சம்பவியாது. எக்காரணத்தாலெனின் உபநயன சம்ஸ்காரமில்லா பிராமணனில் பிராமணத்தன்மை இருக்கினும் வித்தியா ஆசரணத்தின் அபாவமே காணப்படுகின்றதென்கின்றான். இதனை சாமான்னிய சலமென்பர். சக்தி விருத்தியால் அல்லது லக்ஷணா விருத்தியால் பிரயோகித்த சத்தத்தில் அதனினும் வேறு விருத்தியால் விலக்குவதனை உபசார சல மென்பர். எங்ஙனம்: மஞ்ச மென்னும் பதத்திற்கு மஞ்சத்தி லிருக்கும் புருஷனிடத்து லக்ஷணா விருத்தியின் அபிப்பிராயத்தால் உச்சரிக்கப்பட்ட "மஞ்சம் கூப்பிடுகிறது" என்னும் வசனத்தில் மஞ்ச பதத்திற்கு மஞ்சத்தில் சக்தி விருத்தியினை அங்கீகரித்துக்கொண்டு கேட்போன் கூறுவோனைக் குறித்து மஞ்சமோ கூப்பிடுகிறது என்கின்றான். மஞ்சத்திலிருக்கும் புருஷனே சத்திக்கின்றான் யாதோர் மஞ்சமும் சப்திக்காதுயென்கின்றான். இவ்வாறாக யானென்னும் சத்தத்திற்கு ஆத்மாவில் சக்தி விருத்தியின் அபிப்பிராயத்தால் உச்சரிக்கப்பட்ட "யான் நித்தியம்" என்பதான யானென்னும் சத்தத்திற்கு சரீரத்தில் லக்ஷணா விருத்தியை கற்பித்துக்கொண்டு கேட்போன் கூறுவோனைக் குறித்து பிதா, மாதாவால் உத்பத்தியாகும் யாம் எங்ஙனம் நித்தியமாவோமென்பதாக வினவுகிறான். இதனை

உபசார சலமென்பர். கூறிய மூவகையான சலமும் சத்த குணத்தில் அடக்கமாம். (14)

## கரு-ரு-வ. ஜாதி பதார்த்தத்தின் நிரூபணம்.

"ஃவஸ-ஷாதாரஜாதிஃ" (இ-ள்.) போலி விடையினை ஜாதியென்பர். ஆண்டு சுவபக்ஷ சாதகத் தன்மையினைப் போன்று பரபக்ஷத்தின் சாதகத் தன்மையால் சுவவியாகாதகத் தன்மையே அவ்விடையில் போலித் தன்மையாம். ஆகையால் "ஸவவ்யாவா-தகம் உத்தரஜாதிஃ" என்பது ஜாதியின் லக்ஷணமாக சித்தமாகின்றது. அஜ்ஜாதிபதார்த்தம் சாதர்மிய (பொதுவியல்பு) சமை, வைதர்மிய (வேற்றியல்பு) சமை, உத்கர்ஷ (உயற்சி) சமை, அபகர்ஷ (தாழ்ச்சி) சமை, வர்ணிய (புகழ்ந்துறை) சமை, அவர்ணிய (பழித்துறை) சமை, விகல்பசமை, சாத்தியசமை, பிராப்தி (அடைவு) சமை, அப்பிராப்தி (அடையாமை) சமை, பிரசங்க சமை, பிரதி (வேறு) திருஷ்டாந்த சமை, அநுத்பத்தி (உத்பத்தியின்மை) சமை, சம்சயசமை, பிரகரணசமை, ஏதுசமை, அர்த்தாபத்திசமை, அவிசேஷ (விசேஷமின்மை) சமை, உபபத்தி சமை, உபலப்திசமை, அநுபலப்திசமை, நித்தியசமை, அநித்தியசமை, காரியசமை என்னும் வேறுபாட்டால் இருபத்துநான்கு வகைத்தாம். ஆண்டு "ஸாயஜெ்ரண ஷாவநாஹெ-தா உவஸஹாரஃ ஸாயஸ்ரஸா" (இ-ள்.) சமான தர்மமுதலாக ஸ்தாபனு ஏதுவினை தூஷிக்கும் விடையினை சாதர்மியசமை யென்பர். எங்ஙனம்: "ஆத்மாவக்ரியஃ க்ரியாஹெ-த-ு மு-ணவகாஃ லொஷ்டவக" (இ-ள்.) ஆத்மா கிரியையுடையதாம், கிரியையின் ஏதுவாகிய குணமுடையதாவதால், எவ்வெத்திரவியம் கிரியையின் ஏதுவாகிய குணமுடையதாகின்றதோ அவ்வத்திரவியம் கிரியையுடையதேயாம். எங்ஙனம்: மட்பிண்டம் போலும். ஆண்டு கிரியை யுண்டாக்குவது வாயு சையோக முதலிய குணமே கிரியையின் ஏதுவாகிய குணமென அறிக. இவ்வாறாய அநுமானத்தால் வாதி யொருவன் ஆத்மாவிடத்து கிரியையுடைமையை நிலை பெறச் செய்ய அவ்வாதியைக் குறித்து வேறொரு வாதி இவ்வாறு விடை பகர்வானுயினன். ஓர்கால் கிரியையுடைய மட்பிண்டத்தின் சாதர்மியத்தால் ஆத்மா கிரியையுடையதாகுமாயின் ஆகாச முதலிய நிஷ்கிரிய திரவியத்தின் விபுத்வ வடிவ சாதர்மியத்தால் அவ்வாத்மா கிரியையின்றியதே யாகும். இவ்விரு பக்ஷங்களில் ஒரு பக்ஷத்தின் சாதகமாக யாதோர் யுக்தியு மின்றாம். இவ்வாறாய விடையினை சாதர்மியசமைஜாதி யென்பர். "வெயஜெ்ரண ஷாவநாஹெ-தா உவஸஹாரஃ வெயஸ்ரஸா" (இ-ள்.) வைதர்மிய முதலாக ஸ்தாபனு ஏதுவினை தூஷிக்கும் விடையினை வைதர்மியசமையென்பர். எங்ஙனம்: முற்கூறிய ஸ்தாபனு அனுமானத்திலேயே ஒருவன் இவ்வாறாக விடை பகர்கின்றான். ஓர்கால் கிரியையுடைய மட்பிண்டத்தின் சாதர்மியத்தால் ஆத்மா கிரியையுடையதாயின் மட்பிண்டத்தின் விபுத்வரூப வைதர்மியத்தால் ஆத்மா ஏன் நிஷ்கிரியையே ஆகாது?. ஆண்டு மட்பிண்டத்தின் சாதர்மியத்தால் ஆத்மா கிரியையுடையதோ ஆகின்றது, ஆனல் மட்பிண்டத்தின் வைதர்மியத்தால் ஆத்மா நிஷ்கிரியையின்றியதே யாகுமென்னும் இவ்வர்த்

த்தில் சிறிதேனும் நியாமகமின்றும். இவ்வாறாய் விடையின் வைத்தர்மியசமம் ஜாதியென்பர். ஜாதி விடை யாவும் போலியே யாகின்றது. இவ்வாறாய் இருபத்து நான்கு ஜாதி விடையின் லக்ஷணமும், உதாஹரணமும் விரிவாய் நியாய கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கின்றது. விரிவஞ்சி அவற்றை ஈண்டு வரைந்திலம். இப்போலி விடை வடிவ ஜாதியின் அடக்கம் சத்த குணத்தில் சம்பவிக்கின்றது. (15)

௩௱௩௰௧. இருபத்திரண்டு வகைத்தாய நிக்கிரஹ (தோல்வி) ஸ்தானத்தின் நிரூபணம்.

இனி நிக்கிரஹ ஸ்தானத்தினை நிரூபிப்பாம். ஆண்டு "வாதிநோ ஜயஹேது: நிக்ரஹஸ்தாநம்" (இ-ள்.) வாதியினது அபஜயத்திற்கு ஏதுவாவதனை நிக்கிரஹ ஸ்தானமென்பர். அதாவது; எதனது பிராப்த முண்டாங்கே சபையில் வாதிக்கு அபஜய முண்டாகின்றதோ அது நிக்கிரஹ ஸ்தானமெனப்படுகின்றது. அந்த நிக்கிரஹ ஸ்தான பதார்த்தம் பிரதிஞ்ஞாஹானி, பிரதிஞாந்தரம், பிரதிஞா விரோதம், பிரதிஞா சந்நியாசம், ஹேத்வந்தரம், அர்த்தாந்தரம், நிரர்த்தகம், அபார்த்தகம், அவிஞ்ஞாதார்த்தம், அப்பிராப்த காலம், நியூனம், அதிகம், புனருக்தம், அநநுபாஷணம், அஞ்ஞானம், அப்பிரதிபா, விக்ஷேபம், மதாநுஞ்ஞா, பர்யநுயோஜ்ஜியோபேக்ஷணம், நிரநுயோஜ்ஜியாநுயோகம், அபசித்தாந்தம், ஹேத்வாபாசம் என்னும் வேறுபாட்டால் இருபத்திரண்டுவகைத்தாம். இவ்விருபத்திரண்டு வகைத்தாகிய நிக்கிரஹ ஸ்தானங்களின் லக்ஷணங்களையும், உதாஹரணங்களையும் முறையாக வர்ணிப்பாம்.

௩௱௪௰. பிரதிஞ்ஞாஹானி நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"ப்ரதிஜ்ஞாதார்த்தபரித்யாக: ப்ரதிஜ்ஞாஹாநி:" (இ-ள்.) முன் பிரதிஞ்ஞை செய்த அர்த்தத்தினை பரித்தியாகஞ் செய்வதனை அதாவது; மேற்கோளழிவை பிரதிஞ்ஞாஹானி யென்பர். எங்ஙனம்: "சத்தம், அநித்தியம் பிரத்தியக்ஷ குணமாவதால்" என்னும் அநுமானத்தால் சத்தத்தில் அநித்தியத்தினை சித்தஞ்செய்பவனாகிய வாதியைக்குறித்து வேறு பிரதிவாதியானவன் "அக்ககாரமே இக்ககாரமாம்" என்பதான இவை முதலிய பிரத்தியபிஞ்ஞையின் வலிவால் சத்தத்தில் நித்தியத்தன்மையினை சித்தி செய்யும் வாதி சத்தம், நித்தியமாமென்பதான சத்தத்தின் நித்தியத்துவத்தினை அங்கீகரிப்பவனாகி சத்தத்தின் அநித்தியத்தன்மையின் பிரதிஞ்ஞையினை பரித்தியாகஞ் செய்கின்றான். இதனை பிரதிஞ்ஞாஹானி யென்பர்.

௩௱௪௧. பிரதிஞ்ஞாந்தர நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"பரோக்தடோஷோத்தீர்ஷயா பூர்வாநுக்தவிசேஷண விசிஷ்டதயா ப்ரதிஜ்ஞாதாபிதாநம் ப்ரதிஜ்ஞாந்தரம்" (இ-ள்.) பிரதிவாதி கூறிய தோஷத்தை நிவர்த்திக்க விரும்பி முன்னர் கூறப்பட்டிராத விசேஷத்தைச் சேர்த்துக் கூறிய அர்த்தத்தின் கூற்றை பிரதிஞ்ஞாந்தரம் அதாவது; வேறு மேற்கோளென்பர். எங்ஙனம்: "க்ஷிதயாதிகம் ஸகர்த்ருகம் கார்யத்வாத்"

(இ-ள்.) பிருதிவி முதலியன குணத்தால் உண்டாயதாம், காரிய வடிவமாவதால், என்னும் அநுமானத்தால் வாதியானவன் பிருதிவி முதலியவைகளில் ஈசுவரனது ஞானம், இச்சை முதலிய குணங்களால் உண்டாந்தன்மையின் சித்தியைக் கூற, வேறு பிரதிவாதியானவன் பிருதிவி முதலியவைகளில் அதிர்ஷ்ட வடிவ குண ஜன்னியத்தைக் கொண்டு சித்த சாதன தோஷங் கூற, அத்தோஷத்தினை நிவர்த்திக்கும் பொருட்டு வாதி குணத்திற்கு சவிஷயத்தன்மை விசேஷணங் கூறுவானாயினன். ஆண்டு எங்ஙனம் ஞான முதலியவைகளில் சவிஷயத்தன்மை யிருக்கின்றதோ அங்ஙனம் தர்ம, அதர்ம வடிவ அதிர்ஷ்டத்தில் சவிஷயத்தன்மை சம்பவியாது. ஆகையால் குணத்திற்கு சவிஷயத்தன்மை யென்னும் விசேஷணத்தைக் கூறுவதால் சித்த சாதன தோஷத்தின் நிவிருத்தி யுண்டாய்விடுகின்றது. ஆனால் அக்குணத்திற்கு சவிஷயத்தன்மை விசேஷணம் முன்னர் கூறப்படவில்லை. இதனை பிரதிஞ்ஞாந்தர மென்பர். சவிஷயத்தன்மை யெனினும், விஷயத்வமுடைமை யெனினும் ஒக்கும்.

௧௯௪௨. பிரதிஞ்ஞா விரோதம் நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"ஸ்வோக்தஸாத்யவிருத்தஹேதூக்தி: ப்ரதிஜ்ஞாவிரோத:" (இ-ள்) தான் கூறிய சாத்தியத்திற்கு விரோதமாகிய ஹேதுவின் கூற்றை அதாவது; மேற்கொள் மாறுபாட்டை பிரதிஞ்ஞா விரோத மென்பர். எங்ஙனம்: "த்ரவ்யம் குணபின்னம் ரூபாதிதோ(அ)ர்தாந்தரஸ்யானுபலப்தே:" (இ-ள்.) திரவியம் குணத்தினும் வேறும், உருவ முதலியவைகளினும் வேறு வடிவமாக தோற்றாமையாவதால், ஈண்டு குணம் வேறுந்தன்மை வடிவ சாத்தியத்தால் உருவமுதலியவைகளினும் வேறுந்தன்மை வடிவமாக தோன்றாதிருக்குந்தன்மை வடிவ ஹேது விருத்தமாம். அதாவது; கூறிய அச்சாத்தியத்தின் வியாப்தியுடையது அவ்வேதுவன்றாம். அத்தகைய விருத்த ஏதுவினைக் கூறுவதனை பிரதிஞ்ஞாவிரோத மென்பர்.

௧௯௪௩. பிரதிஞ்ஞா சந்நியாச நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"ஸ்வோக்தஸ்யார்த்தஸ்ய பரேண தூஷிதே தத்பரித்யாக: ப்ரதிஜ்ஞாஸந்ந்யாஸ:" (இ-ள்.) வாதி கூறிய அர்த்தத்தில் வேறு பிரதிவாதியானவன் தூஷிக்க வாதி செய்த அவ்வர்த்தத்தின் பயனின்மையினை அதாவது; மேற்கோள் விடுவதனை பிரதிஞ்ஞா சந்நியாச மென்பர். எங்ஙனம் "ஶப்தோ(அ)நித்ய: ஐந்த்ரியகத்வாத்" (இ-ள்.) சத்தம் அநித்தியமாம், இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாவதால். என்னும் அநுமானத்தால் வாதியானவன் சத்தத்தில் அநித்தியத்தன்மையின் சித்தியைக்கூற, வேறுபிரதிவாதியானவன் இந்திரிய ஜன்னிய ஞானத்தின் ஏதுவிற்கு ஜாதிவடிவ சாமான்னியத்தில் வியபிசாரத்தினைக் கூறுகிறான். அதாவது; ஜாதி வடிவ சாமான்னியத்தில் அநித்தியத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவ மிருக்கினும் இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷய வடிவ ஏது விருக்கின்றதென்னும் வியபிசாரதோஷத்தால் அவ்வநுமானத்தினை தூஷிக்கின்றான். இதனால் வாதி சத்தம் அநித்திய மென்பதை எங்ஙனம் கூறுவான். இவ்வாற்றால் தன்னால் கூறிய அர்த்தத்தின் பயனின்மையினை பிரதிஞ்ஞா சந்நியாச மென்பர்.

## கஎ-சச. ஹேத்வந்தர நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“ அவிஶேஷோக்தே ஹேதௌ ப்ரதிஷித்தே விஶேஷமிச்சதோ ஹேத்வந்தரம்” (இ-ள்.) பிரதிவாதியானவன் கூறிய தூஷணத்தை நிவர்த்திக்கச் செய்யும் இச்சையால் முற்கூறிய ஹேது கோடியில் (வகுப்பில்) வேறு விசேஷத்தினை கிரஹிப்பதனை அதாவது; வேற்றேதுவினை ஹேத்வந்தரமென்பர். எங்ஙனம்: “ஶப்தோ அநித்ய: ப்ரத்யக்ஷத்வாத்” (இ-ள்.) சத்தம் அநித்தியமாம், பிரத்தியக்ஷமாவதால், என்னும் அநுமானத்தால் வாதியானவன் சத்தத்தில் அநித்தியத் தன்மையினைச் சித்தி செய்ய, வேறு பிரதிவாதியானவன் பிரத்தியக்ஷ ஏதுவின் சாமான்னியத்தில் வியபிசாரக் கூற்றைக்கூற அதாவது; ஜாதி வடிவ சாமான்னியத்தில் அநித்தியத்தன்மை வடிவ சாத்தியத்தின் அபாவமிருக்கினும் பிரத்தியக்ஷத் தன்மை வடிவ ஏது விருக்கின்றது. ஆகையால் பிரத்தியக்ஷத்தன்மை வடிவ ஏது வியபிசாரியாம். அந்த வியபிசார தோஷத்தை நிவிருத்திக்கும் பொருட்டு வாதி அந்த ஏது கோடியில் ஜாதியுடையதாகிய விசேஷணங் கூறுவானாயினன் அதாவது; “ஜாதியுடையதாகி பிரத்தியக்ஷமாவதால்” என்னும் ஏது கூறுவானாயினன். ஆண்டு சாமான்னியத்தில் பிரத்தியக்ஷத் தன்மையுளதாயினும் ஜாதியுடைய விசேஷண மின்றும். ஆகையால் சாமான்னியத்தில் அவ்வேதுவிற்கு வியபிசார முண்டாகாது. இவ்வாற்றால் பிரதிவாதி கூறிய தோஷத்தினை நிவிருத்தி செய்யும் பொருட்டு அவ்வேது கோடியில் வேறு விசேஷணத்தின் கூற்றை ஹேத்வந்தர மென்பர்.

## கஎ-சரு. அர்த்தாந்தர நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“ப்ரக்ருதாதர்தாதப்ரதிஸம்பத்தார்த்தமர்த்தாந்தரம்” (இ-ள்.) பிரசங்கத்தில் பிராப்தமாகிய அர்த்தத்தினை பிரகிருத மென்பர். அத்தகைய பிரகிருத அர்த்தத்தில் உபயோகமற்ற அர்த்தத்தினைக் கூறுவதனை அதாவது; வேற்றுப் பொருளை அர்த்தாந்தர மென்பர். எங்ஙனம்: “ஶப்தோ அநித்ய: க்ருதகத்வாத்” (இ-ள்.) சத்தம் அநித்தியமாம் காரிய வடிவமாவதால். என்னும் அநுமானத்தால் சத்தத்தில் அநித்தியத் தன்மையின் சித்தியைச் செய்த பின் சத்தகுணமும் ஆகாசத்தினதே யாமெனக் கூறுவதனை அல்லது “காரிய வடிவமாவதால்” என்னும் ஏது பதம் ஹிநோதி தாதுவிற்கு பின்னர் துன் விகுதியின் பிராப்தமுளதாக சித்தமாகின்றது. ஸுப் விகுதியோடுங் கூடிய அல்லது திங் விகுதியோடுங் கூடிய பதமாகின்றது. இவ்வாறாகக் கூறிய கூற்று சத்தத்தின் அநித்தியத்தன்மை வடிவ பிரகிருத அர்த்தத்தில் உபயோக மின்மையேயாகின்றது. அத்தகைய பிரகிருத அர்த்தத்தில் அநுபயோகி அர்த்தத்தினைக் கூறுவதனை அர்த்தாந்தர மென்பர்.

## கஎ-சசு. நிரர்த்தக நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“அவாசகஶப்தப்ரயோகோ நிரர்த்தகம்” (இ-ள்.) எவ்வர்த்தத்திற்கும் வாசகமாகாத சத்தத்தினை அவாசக மென்பர். அத்தகைய அவாசக சத்தத்தின் பிரயோகத்தினை அதாவது; பொருளின்மையினை நிரர்த்தக மென்பர்.

எங்ஙனம் "ஶஸேோநிதத்ஜவஶவஊஶஸவாக" ஈண்டு ஜப கடதஸ் என்னும் சத்தம் எவ்வர்த்தத்திற்கும் வாசகமன்றும். அத்தகைய அவாசக சத்தத்தின் பிரயோகத்தினை நிரர்த்தக மென்பர்.

கரு௬௭. அவிஞ்ஞாதார்த்த நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"வரிஷத்ரதிவாஊஷ்வொயவஹயொஜகவஊவஹயொமஃஅவிஞாதாய-ம்"

(இ-ள்.) எப்பதத்தால் சபையிலுள்ள புருஷனுக்கும், பிரதிவாதி புருஷனுக்கும் அர்த்தத்தின் போதம் உண்டாகாதோ அத்தகைய பதத்தின் பிரயோகத்தினை அதாவது; பொருட்போலியை அவிஞ்ஞாதார்த்த மென்பர். ஆண்டு எப்பதத்தின் அன்வயம் மிக்கத் தொலையும், எப்பதத்தின் அர்த்தம் அப்பிரசித்தமும், எப்பதம் அதி விரைவாக உச்சரிக்கப்படுவதுமாகின்றதோ அப்பதம் சபையிலுள்ள புருஷனுக்கும், பிரதிவாதி புருஷனுக்கும் போதத்தினை உண்டாக்குவதன்று. அத்தகைய பதத்தின் பிரயோகத்தினை அவிஞ்ஞாதார்த்த மென்பர்.

கரு௬௮. அபார்த்தக நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"வர்வஸ்ரா நநிதாய-கவஊவஸஉ-ஹஃ அவாய-கம்" (இ-ள்.) எப்பதங்களின் அர்த்தங்களுக்கு பரஸ்பர அன்வயம் (உடன்பாடு) இன்றோ அத்தகைய பதங்களின் சமூஹத்தினை அதாவது; பொருளுணரப்படாமையை அபார்த்தக மென்பர். எங்ஙனம்: "சத்தம், கடம், படம் நித்தியம், அநித்தியமாகிய பிரமேயமாவதால்" என இவை முதலிய பதங்களின் சமூஹம் அபார்த்தக மெனப்படுகின்றது.

கரு௬௯. அப்பிராப்த கால நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"அவயவர்நாலவவஹஜெணகயநகவஹாவ்ஷகாலம்" (இ-ள்.) பரார்த்த அநுமானத்தின் ஏதுவாகிய பிரதிஞ்ஞை, ஏது, உதாஹரணம், உபநயம், நிகமனமென்னும் ஐந்து அவயவங்களில் கூறிய கிரமத்தினை பரித்தியாகஞ்செய்து கிரமமில்லாமல் கூறுவதனை அதாவது; காலம் பெறுமையினை அப்பிராப்த காலமென்பர். எங்ஙனம்: "கடம்போல காரியமாவதால் சத்தம் நித்தியம்" என்பதான இவை முதலிய இடங்களில் முதலில் கூறுவதற்கு யோக்கியமாகிய "சத்தம் நித்தியம்" என்னும் பிரதிஞ்ஞா அவயவத்தினை பின்னர் கூறியிருக்கின்றது. பின்னர் கூறுவதற்கு யோக்கியமாகிய "கடம்போல" என்னும் உதாஹரண அவயவத்தினை முன்னர் கூறியிருக்கின்றது. பிரதிஞ்ஞைக்குப் பின் கூறுவதற்கு யோக்கியமாகிய "காரியமாவதால்" என்னும் ஏது அவயவத்தினை பிரதிஞ்ஞைக்கு முன் கூறியிருக்கின்றது. இவ்வாறு பிரதிஞ்ஞை முதலிய அவயவங்களை மாறுபாடாகக் கூறியதனை அப்பிராப்த காலமென்பர்.

கரு௭௦. நியூன நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"யக்ஷிலவிஊவயவஶ-ஹநவயவாஷியாநநஹநம்" (இ-ள்.) பிரதிஞ்ஞை முதலிய ஐந்து அவயவங்களி னின்றும் மிக அற்ப பிரதிஞ்ஞாதி வடிவ அவயவங்களைக் கூறுவதனை அதாவது; குன்றக் கூறுவதனை நியூனமென்பர்.

## கஅடுக. அதிக நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

" ஹெதூதாஹரணாதிகமதிகம் " (இ-ள்.) ஒரேதுவாலும், ஒரு திர்ஷ்டாந்தத்தாலும் சாத்தியத்தினது சித்தி சம்பவிக்க அதிக வேதுவின் அல்லது அதிக திர்ஷடாந்தத்தினைக் கூறுவதனை அதாவது மிகைப்படக் கூறுவதனை அதிக மென்பர். எங்ஙனம்: "பர்வதம் வன்னியுடைத்து தூமமுடைமையால், பிரகாசமுடைமையால், அடுக்களைப் போல, மடப்பள்ளி போல" என்னும் அநுமானத்தில் தூமவடிவ ஒரு ஏதுவாலும், அடுக்களை வடிவ ஒரு திர்ஷ்டாந்தத்தாலும் பர்வதத்தில் வன்னி வடிவ சாத்தியத்தினது சித்தி சம்பவிக்கினும் அதிகமாக பிரகாச வடிவ ஏதுவினையும், மடப்பள்ளிவடிவ திர்ஷ்டாந்தத்தினையும் கூறுவதனை அதிகமென்பர்.

## கஅடுஉ. புனருக்த நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

" ஶப்தார்த்தயோ: புநர்வசநம் புநருக்தமந்யத்ராநுவாதாத் " (இ-ள்.) சொல்வதற்கு தகுதியின்றியே கூறிய அர்த்தத்தினை மீண்டும் கூறுவதனை அதாவது; கூறியதை கூறுவதனை புநருக்த மென்பர். எங்ஙனம் "சத்தம் அநித்தியம், சத்தம் அநித்தியம்" என்பதான இவை முதலிய வசனங்களை கூறுவதனை புநருக்த மென்பர்.

## கஅடுங. அநநுபாஷண நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

" விஜ்ஞாதஸ்ய பரிஷதா த்ரிரபிஹிதஸ்யாப்யநநுபாஷணம் "

(இ-ள்.) சபையிலுள்ள புருஷன் மும்முறை கூறிய அர்த்தத்தினையும் எடுத்துச் சொல்லாமையினை அதாவது; பிற்கூற்றின்மையினை அநநுபாஷண மென்பர்.

## கஅடுச. அஞ்ஞான நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"பரிஷதா விஜ்ஞாதஸ்யாபி த்ரிரபிஹிதஸ்யாவிஜ்ஞாதமஜ்ஞாநம்" (இ-ள்.) சபையிலுள்ள புருஷனால் ஜன்னியமாகியதும், வாதியானவன் மும்முறை கூறியதுமாகிய வாக்கியார்த்தத்தின் போதமின்மையினை அதாவது; அறியாமையினை அஞ்ஞான மென்பர்.

## கஅடுரு. அப்பிரதிபா நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

"உத்தரஸ்யாப்ரதிபத்திரப்ரதிபா" (இ-ள்.) பிரதிவாதியின் வினாவாக்கியத்திற்கு விடை கொடுக்க யோக்கியமறிந்தும் அவ்விடையின் மறதியின் வசத்தால் மௌனமாயிருத்தல் அதாவது; விடை தெரிந்தும் விளங்காமையால் பேசாதிருப்பதனை அப்பிரதிபா வென்பர்.

## கஅடுசா. விக்ஷேப நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

" கார்யவ்யாஸங்காத் கதாவிச்சேதோ விக்ஷேப: " (இ-ள்.) இப்போது எமக்கு இக்காரிய மிருக்கிறதென்பதாகச் சொல்லி கதையை நிறுத்துவதனை அதாவது; தனக்கு வேறு காரிய மிருக்கின்றதெனக் கூறி வாதத்தை நிறுத்துவதனை விக்ஷேப மென்பர்.

## ௧௲௫௭. மதாநுஞ்ஞா நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“𑌸𑍍𑌵𑌪𑌕𑍍𑌷𑍇 𑌦𑍋𑌷𑌮𑌨𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌯 𑌪𑌰𑌪𑌕𑍍𑌷𑍇 𑌦𑍋𑌷𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌂 𑌮𑌤𑌾𑌨𑍁𑌜𑍍𑌞𑌾” இ-ள்.) தனதுபக்ஷத்தில் பிராப்தமாகிய தோஷத்தினை நீக்குவதற்கு அசமர்த்தனாகி வேறு பக்ஷத்தில் தோஷங் கூறுவதனை அதாவது ; தன் குற்றங் களையாமல் பிறன் குற்றங் கூறுவதனை மதாநுஞ்ஞா வென்பர்.

## ௧௲௫௮. பர்யாநுயோஜ்ஜியோபேக்ஷண நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“𑌉𑌦𑍍𑌭𑌾𑌵𑌨𑌾𑌰𑍍𑌹𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌸𑍍𑌯𑌾𑌨𑍁𑌦𑍍𑌭𑌾𑌵𑌨𑌂 𑌪𑌰𑍍𑌯𑌨𑍁𑌯𑍋𑌜𑍍𑌯𑍋𑌪𑍇𑌕𑍍𑌷𑌣𑌂” (இ-ள்.) தோல்வி ஸ்தானத்திற்கு பிராப்தமாகிய பிரதிவாதியின் தோல்வி ஸ்தானத்தினை கூறாமையினை அதாவது ; எடுத்துக் காட்டற்குறிய தோல்வி ஸ்தானத்தை எடுத்துக் காட்டா திருப்பதனை பர்யாநுயோஜ்ஜியோ பேக்ஷண மென்பர்.

## ௧௲௫௯. நிரநுயோஜ்ஜியாநுயோக நிக்கிரஹஸ்தானத்தின் நிரூபணம்.

“𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑌰𑌹𑌿𑌤𑍇 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌸𑍍𑌥𑌾𑌨𑍋𑌦𑍍𑌭𑌾𑌵𑌨𑌂 𑌨𑌿𑌰𑌨𑍁𑌯𑍋𑌜𑍍𑌯𑌾𑌨𑍁𑌯𑍋𑌗𑌃” (இ-ள்.) தோல்வி ஸ்தானமின்றிய பிரதிவாதியிடத்து தோல்வி ஸ்தானத்தினைக் கூறுவதனை அதாவது ; தோல்வில்லானிடத்து தோல்விக் கூறுவதனை நிரநுயோஜ்ஜியாநுயோக மென்பர்.

## ௧௲௬௦. அபசித்தாந்த நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

“𑌏𑌕𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌮𑌭𑍍𑌯𑍁𑌪𑍇𑌤𑍍𑌯 𑌕𑌥𑌾𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑍌 𑌤𑌦𑍍𑌵𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌤𑍍𑌤𑌰𑌦𑌾𑌨𑌂 𑌅𑌪𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌃” (இ-ள்.) ஒரு சித்தாந்தத்தினைக் கொண்டு கதையின் பிரவிருத்தி யுண்டாக அச்சித்தாந்த மதத்தினும் விருத்தமாகிய சித்தாந்த மதத்தினைக் கொண்டு பிரதிவாதியைக் குறித்து விடை கொடுப்பதனை அதாவது ; சித்தாந்தப் போலியினை அபசித்தாந்தமென்பர்.

## ௧௲௬௧. ஹேத்வாபாச நிக்கிரஹ ஸ்தானத்தின் நிரூபணம்.

ஹேத்வாபாசமோ முன்னர் ஆறுவது பரிச்சேதத்தில் அநுமான நிரூபணத்தில் கூறி வந்துள்ளோம் அதை ஈண்டு மறிந்துக் கொள்க. ஆண்டு பிரதிஞ்ஞாஹானி, அநநுபாஷணம், அஞ்ஞானம், அப்பிரதிபா, விக்ஷேபம், பர்யாநுயோஜ்ஜியோபேக்ஷண மென்னும் தோல்விஸ்தானங்களின் அடக்கம் அபாவத்தில் சம்பவிக்கின்றது. அதனினும் வேறானதும், ஏத்வாபாசத்தினும் வேறானதுமான வேறு தோல்விஸ்தானங்களின் அடக்கம் முறையாக யோக்கிய குணபதார்த்தத்தில் சம்பவிக்கின்றது. ஏத்வாபாசத்தின் அடக்கம் யோக்கிய திரவிய முதலிய பதார்த்தங்களில் சம்பவிக்கின்றது. நியாய சாத்திரத்தில் கூறப்பட்ட பதினாறு பதார்த்த நிரூபணம் முற்றிற்று. (16)

—*—

## கூகூ. தீதிதிகார சிரோன்மணி பட்டாசாரியர் அங்கீகரித்த பதார்த்த நிரூபணம்.

இனி (நீயி-தி) தீதிதிகாரசிரோன்மணி பட்டாசாரியரானவர் கணாதமுனிவரருளிய திரவிய முதலிய எழு பதார்த்தங்களில் எத்தனை பதார்த்தங்களைக் கண்டித்து எத்தனை பதார்த்தங்களை அதிகமாக வொப்பினரோ அவ்வெல்லாப் பதார்த்தங்களையும் சுருக்கமாக நிரூபிப்பாம். ஆண்டு பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆத்மா வென்னும் ஐந்து திரவியங்களே சம்பவிக்கின்றது. ஆகாசம், காலம், திக்கு என்னும் மூன்று திரவியங்களின் அடக்கம் ஈசுவராத்மாவிலேயே சம்பவிக்கின்றது. மனமும் வேறு திரவியமன்றாம். அதிர்ஷ்ட விசேஷத்தால் கிடைத்த திரியணுகாத்மக பூத வடிவமே மனமாம். பிருதிவி முதலிய பூதங்களின் பரமாணுக்களிலும், துவியணுகத்திலும் யாதோர் பிரமாணமுமின்றாம். அவயவங்களின் தொடர்ச்சியும் திரியணுகத்திலேயே முடிவாகின்றது. ஈசுவரனிடத்து யாதோர் பரிமாணமு மிருப்பதின்று. உருவம், ரசம், கந்தம், பரிசம் என்னும் நான்கு குணங்கள் அநுத்பூதமாவதின்று; உத்பூதமேயாகின்றது. வேற்றுமையும் வேறு குணமன்றாம்; வேற்றுமை அந்நியோந்நியாபாவ வடிவமேயாம். இவ்வாறாக பரத்வம், அபரத்வமும் வேறு குணமன்றாம். சேய்மையினை தைசிக பரத்வ மென்பர். அண்மையினை தைசிக அபரத்வ மென்பர். ஜேஷ்ட (முதுமை)த் தன்மையினை காலிக பரத்வ மென்பர். கனிஷ்ட (இளமை)த் தன்மையினை காலிக அபரத்வ மென்பர். இவ்வாறாக விசேஷமும் வேறு பதார்த்தமன்று; விசேஷமின்றியே பரமாணு முதலிய நித்திய திரவியங்கள் தானாகவே வேறுபாடுடைய தாகின்றது. ~~உருவம், ரசம், கந்தம், பரிசம் என்னும் நான்கு குணங்கள் அவ்வியாப்பிய~~ விருத்தியுமாகின்றது. எக்காரணத்தாலெனின் புறம்பில் செந்நிறமுடைய குடத்தை யுடைக்கின் உள்ளிடத்தில் ஸ்யாம வடிவம் பிரத்தியக்ஷமாய்க் காணக்கிடைக்கின்றது. கருமை, பசுமை உருவங்களினும் சித்திர உருவம் வேறாகா. விஜாதீய (வெவ்வேறாகிய) கருமை, பசுமை முதலிய உருவங்களின் கூட்டத்தினை சித்திரமென்று வியவஹரிக்கின்றனர். அல்லது எங்ஙனம் உருவ, ரச முதலிய குணங்கள் அவ்வியாப்பியவிருத்தி யாகின்றதோ அங்ஙனமே கர்மமும் அவ்வியாப்பியவிருத்தி யாகின்றது. எக்காரணத்தாலெனின் எல்லாக் கிளைகளின் அசைவு உண்டாக அசைவில்லா மூலமுடைய மரத்தில் "மரம் அசைகின்றது" என்பதாக அசைதல் வடிவ கர்மம் காணப் படுகின்றது. ஒருமைச் சங்கியைக்கு யாதோர் அசமவாயி காரணமும் சம்பவிக்கிறதில்லை. எல்லா பாவ காரியமும் அசமவாயி காரணத்தால் ஜன்னியமாவதாக யாதோர் பிரமாணமு மின்றாம். ஆகையால் ஒருமைச் சங்கியை அசமவாயி காரணமின்றியே உண்டாவதாகின்றது. திரவிய நாசத்தைக் குறித்து அசமவாயி காரணத்தின் நாசமே காரணமாகின்றது. சமவாயி காரணத்தின் நாசம் காரணமாகிறதில்லை. திரவியத்தின் துவாசப் பிரத்தியக்ஷத்தில் பரிசமுடைமையே காரணமாகின்றது. உருவமுடைமை காரணமாகிறதில்லை. இவ்வாறாக திரவியத்தின் சாக்ஷுஷப் பிரத்தியக்ஷத்தில் உருவமுடைமை காரணமாகின்றது; பரிசமுடைமை காரணமாகிறதில்லை. திரவியம், குணம், கர்மமா

மூன்று பதார்த்தங்களில் இருப்பதும், பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தமுமாகிய சத்தா ஜாதியிலும் யாதோர் பிரமாணமுமின்றாம். எக்காரணத்தாலெனின் தர்ம முதலிய அதீந்திரிய பதார்த்தங்களில் சத்தையின் பிரத்தியக்ஷம் சம்பவியாது. சத்தாஜாதி யில்லா சாமான்னிய முதலிய பதார்த்தங்களினும் "இருக்கிறது, இருக்கிறது" என்னும் வியவஹாரத்திற்கு சத்தா ஜாதி விஷயமன்றாம். வர்த்தமானத் தன்மையே "இருக்கிறது" என்னும் வியவஹாரத்திற்கு விஷயமாம். இவ்வாறாக உருவ முதலிய இருபத்துநான்கு குணங்களில் இருப்பதும், பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தமுமாகிய ஒரு குணத்தன்மை ஜாதியிலும் யாதோர் பிரமாணமுமின்றாம். எக்காரணத்தாலெனின் தர்ம முதலிய அதீந்திரிய குணத்தில் குணத்தன்மை ஜாதியின் பிரத்தியக்ஷம் சம்பவிக்கிறதில்லை. குதிரையாதிகளி லிருக்கும் மிகுந்த வேகமுடைமையிலும், பிராமணாதிகளி லிருக்கும் துவேஷ முதலியவைகளின் அபாவத்திலும் குணமுடையது "இக்குதிரை", குணமுடையவன் "இப்பிராமணன்" என்பதான குணத்தன்மை வியவஹாரங் காணப்படுகின்றது. இவ்வாறாக பிரத்தியக்ஷம், அநுமிதி முதலியவைகளில் ஒரு சாதாரண அநுபவத்தன்மை ஜாதியுமின்றாம். ஆனால் பிரத்தியக்ஷ ஞானத்தி லிருப்பது சாக்ஷாத்கரிக்கும் அநுபவத்தன்மை ஜாதியாம். அநுமிதி முதலிய ஞானங்களில் அநுபவத்தன்மையின் வியவஹாரத்திற்கு அநுபவத் தன்மை ஜாதி விஷயமன்றாம். ஆனால் ஸ்மிருதி ஞானத் தன்மையே விஷயமாம். கட அபாவத்தின் அபாவம் பிரதியோகி கட ஸ்வரூப மாவதின்று. ஆனால் கடத்தினும் வேறேயாம். மூன்றாவது அபாவம் முதல் அபாவ வடிவ மாகின்றது. ஆகையால் அபாவங்கட்கு அனவஸ்தை யுண்டாகிறதில்லை. இவ்வாறாக துவம்சத்தின் பிராகபாவமும் பிரதியோகியின் பிராகபாவ வடிவமுமாகிறதில்லை. திரவிய முதலிய பதார்த்தங்களைப் போன்று ஸ்வத்வமும் (சொந்தமாந் தன்மையும்) வேறோர் பதார்த்தமாம். ஆண்டு "வரஹஸாநாஉதீத" என்பதான இவை முதலிய சாஸ்திர பிரமாணத்தால் ஸ்வத்வ பதார்த்தம் சித்தமாம். ஸ்வத்வம் தானம், விலைக்குவாங்கல், பித்ரு மரண மிவை முதலியவைகளால் உண்டாவதாகின்றது. ஆண்டு பிராமணனுக்கு ஆ முதலிய பதார்த்தங்களில் தானத்தால் ஸ்வத்வம் உண்டாவதாகின்றது. க்ஷத்திரிய வைசேஷிகர்கட்கு ஆ முதலியவைகளில் விலைக்கு வாங்குவதால் ஸ்வத்வம் உண்டாவதாகின்றது. புத்திரர் முதலியவர்கட்கு பிதா முதலியவர்களின் மரணத்தால் தன முதலியவைகளில் ஸ்வத்வம் உண்டாவதாகின்றது. இவ்வாறாக மண் முதலிய காரணங்களில் கட முதலிய காரியத்தை உண்டாக்குவதாகிய சக்தியும் வேறோர் பதார்த்தமேயாகின்றது. இவ்வாறாக சங்கியையும் வேறு பதார்த்தமேயாம். சங்கியை குண வடிவமன்றாம். எக்காரணத்தாலெனின் "உருவம் ஒன்று" என்னும் தோற்றத்தால் உருவ முதலிய குணங்களிலும் சங்கியை தோற்றுவதாகின்றது. சமவாயமும் ஒன்றன்றாம். நாநா சமவாயமாம். ஒர்கால் சமவாயம் ஒன்றேயாகுமாயின் ஜல முதலியவைகளிலும் கந்தாதியுடைமை யுண்டாக வேண்டும். இவ்வாறாக வைசிஷ்டயமும் (விசேஷமுடைமையும்) வேறு பதார்த்தமேயாம். எங்ஙனம் உருவ முதலியவைகளினது பிரதீதியின் நிமித்த

வடிவமாக சமவாயத்தின் சித்தி யுண்டாகின்றதோ அங்ஙனமே அபாவ முடைமை பிரதீதியின் நிமித்த வடிவமாக வைசிஷ்டயத்தின் சித்தியும் சம்பவிக்கின்றது. இவ்வாறாகக் காரணத்தன்மையும் வேறு பதார்த்தமேயாம். அக்காரணத்தன்மை காரியத்தின் வேறுபாட்டாலும், அவச்சேதக தர்மத்தின் வேறுபாட்டாலும் வேறுபாடுடைய தாகின்றது. காரணத்வத் தன்மை வடிவமாக எல்லாக் காரணங்களில் அநுகதமாகின்றது. அக்காரணத்தன்மை பதார்த்தம் சிலவிடத்தோ பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தமாகின்றது. சிலவிடத்து சாஸ்திரப் பிரமாணத்தால் சித்தமாகின்றது. ஆண்டு வன்னி முதலியவைகளில் தூம முதலியவைகளின் காரணத்தன்மை பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தமாம். யாக முதலியவைகளின் காரணத் தன்மை சாஸ்திரப் பிரமாணத்தால் சித்தமாம். இவ்வாறாக காரியத்தன்மையும் வேறு பதார்த்தமேயாகின்றது. இவ்வாறாக தீதிதிகார சிரோமணி பட்டாசாரியர் பதார்த்தத்தன்மை நிரூபணக் கிரந்தத்தில் கணாத முனிவரருளிய பதார்த்தங்களில் எத்தனை பதார்த்தங்களைக் கண்டித்து எத்தனை பதார்த்தங்களை அதிகமாக வொப்பினரோ அப்பதார்த்தங்களின் கண்டனத்திலும், அதிக பதார்த்தங்களின் சித்தியிலும் யுக்திகள் அக்கிரந்தத்தில் விரிவாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. விரிவஞ்சி அவற்றை ஈண்டு வரைந்திலம்.

## கஙகூங. சம்பந்த வடிவ சங்கதியின் லக்ஷணமும், சங்கதியின் பிரசங்க முதலிய அறுவகை பிரிவும்.

ஆண்டு "நாஸம்ஙதம் வ்யாஹரேத்" (இ-ள்.) வித்வானானவன் சம்பந்த வடிவ சங்கதியின்றி அர்த்தத்தினை நிரூபிக்கான். ஆனால் முன்னர் நிரூபித்துள்ள அர்த்தத்தினோடு சங்கதியுடைய அர்த்தத்தினையே நிரூபிப்பான். இவ் வித்வான்களது வசனத்தால் யாதாமோர் அர்த்தத்தின் நிரூபணத்தில் சங்கதியின் உபயோகம் சித்தமாகின்றது. எவ்வர்த்தம் எவ்வர்த்தத்தி னீற்றில் நிரூபிக்கப்படுகின்றதோ அவ்வர்த்தம் அவ்வர்த்தத்தின் சங்கதி யுடையதேயாகின்றது. ஆண்டு "ஊநந்தராஹியா நவ்யோர்ஜகஜிஜ்ஞாஸாஜநகஜ்ஞாநவிஷயா நுகூலஸம்பந்தஃ ஸங்கதிஃ" (இ-ள்.) முன் அர்த்தத்திற்குப்பின் அர்த்தத்தின் கூற்றின் பிரயோஜகம் எச்சிஷ்யனது ஜிஜ்ஞாசையினை உண்டாக்கும் ஞானத்திற்கு விஷயமாமோ அந்த விஷயத்திற்கு அநுகூல சம்பந்தமே முடிவில் நிரூபிக்கப்பட்ட அர்த்தத்திலுள்ள சங்கதியாம். எங்ஙனம்: பிரத்தியக்ஷ நிரூபணத்திற்குப் பின் அநுமானத்தின் நிரூபணத்தில் பிரயோஜகம் "ஊநுமாநஜ்ஞாநம் கேந்வதம்" என்பதான சிஷ்யனது ஜிஜ்ஞாசையினை உண்டாக்குகின்றது. "ஊநுமாநஜ்ஞாநம் உதிஷ்யாய நம்" என்பதான ஞானமாம். அந்த ஞானத்தின் விஷயம் அவ்வநுமானமாம். அவ்வநுமானத்தில் பிரத்தியக்ஷத்தின் காரியத்தன்மை வடிவ அநுகூலசம்பந்த மிருக்கிறது. அதுவே அவ்வநுமானத்தில் பிரத்தியக்ஷத்தின் சங்கதியாம். கூறிய சங்கதி பிரசங்க சங்கதி, உபோத்காத சங்கதி, உபஜீவ்ய உபஜீவக பாவ சங்கதி, அவசர சங்கதி, நிர்வாஹகைக்கிய சங்கதி, காரியைக்கிய சங்கதி என்னும் வேறுபாட்டால் அறுவகைத்தாம்.

௧௬௬௪. பிரசங்க சங்கதியின் நிரூபணம்.

ஆண்டு "[illegible]" (இ-ள்.) உபோத்காத முதலியவைகளினும் வேறாகிய அர்த்தத்தின் து ஸ்மரணத்தின் பிரயோஜகசம்பந்தத்தினை பிரசங்கசங்கதியென்பர். எங்ஙனம்: யதார்த்த அநுபவ வடிவபிரமாவின் பிரத்தியக்ஷம், அநுமிதி முதலிய விபாகத்திற்குப் பின் பிரத்தியக்ஷ முதலிய பிரமாவின் பிரத்தியக்ஷம், அநுமான் முதலிய பிரமாணங்களின் விபாக நிரூபணத்தில் பிரசங்க சங்கதியிருக்கிறது.

௧௬௬௫. உபோத்காத சங்கதியின் நிரூபணம்.

"[illegible]" (இ-ள்.) பிரகிருத அர்த்தத்தின் சாதகத்தன்மையினை உபோத்காத சங்கதியென்பர். எங்ஙனம் பிரமாகரண வடிவ பிரமாணத்தின் நிரூபணத்தில் உபோத்காத சங்கதியால் கரணத்தின் நிரூபணமிருக்கின்றது. ஆண்டு "பிரமாகரணம் பிரமாணம்" என்னும் பிரமாணத்தின்லக்ஷணம் கரணத்தோடுபொருந்தியதாம். ஆகையால் பிரகிருத பிரமாணத்தின் உபசாதகத்தன்மை அக்கரணத்தி லிருப்பதாவதால் பிரமாண நிரூபணத்தில் உபோத்காத சங்கதியால் அக்கரணத்தின் நிரூபணம் சம்பவிக்கின்றது.

௧௬௬௬. உபஜீவ்ய உபஜீவக பாவ சங்கதியின் நிரூபணம்.

பிரத்தியக்ஷப் பிரமாண நிரூபணத்திற்குப் பின் அநுமானப் பிரமாணத்தின் நிரூபணமிருக்கின்றது. அதனிடத்து உபஜீவ்ய உபஜீவக பாவ சங்கதியிருக்கின்றது. ஆண்டு வியாப்தி ஞான வடிவ அநுமானத்தின் உற்பத்தி சக்ஷு முதலிய பிரத்தியக்ஷப் பிரமாணத்தானேயே யுண்டாகின்றது. ஆகையால் அவ்வநுமானத்தில் பிரத்தியக்ஷப்பிரமாணத்தின் காரியத்தன்மை யாதோ அதுவே உபஜீவகத் தன்மையாம். அந்த பிரத்தியக்ஷப் பிரமாணத்தில் அநுமானத்தின் காரணத்தன்மை யாதோ அதுவே உபஜீவ்யத் தன்மையாம். இவ்வாறாக உபஜீவ்ய உபஜீவக பாவ சங்கதியானேயே பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்குப் பின் அநுமானப் பிரமாணத்தின் நிரூபணமிருக்கிறது.

௧௬௬௭. அவசர சங்கதியின் நிரூபணம்.

"[illegible]" (இ-ள்.) அர்த்தத்தின்நிரூபணத்தில் பிரதிபந்தக சிஷ்யனது ஜிஞ்ஞாசையாதோ அஜ்ஜிஞ்ஞாசையின் நிவிருத்த முளதாக பின்னர் சொல்ல வேண்டியத் தன்மையினை அவசர சங்கதியென்பர். எங்ஙனம் அநுமானத்தின் நிரூபணத்திற்குப் பின் அவசரசங்கதியால் உபமானத்தின் நிரூபண மிருக்கின்றது. ஆண்டு பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் காரிய வடிவத்தன்மை எங்ஙனம் வியாப்தி ஞான வடிவ அநுமானத்தி லிருக்கின்றதோ அங்ஙனமே சாதுர்சிய ஞான வடிவ உபமானத்தினு மிருக்கின்றது. ஆகையால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் நிரூபணத்திற்குப் பின் அநுமானம், உபமானமா மிரண்டின் நிரூப

ணம் பிராப்தமாயிற்று. ஆண்டு உபமானத்தின் அபேக்ஷையால் அநுமானப் பிரமாணம் அனேக வாதிகளுக்கு இஷ்டமாம். ஆகையால் பிரத்தியக்ஷ நிரூபணத்திற்குப் பின் சீடனுக்கு முதலில் அவ்வநுமானத்திலேயே ஜிஞ்ஞாசையுண்டாகின்றது. அநுமானத்தை விஷயஞ் செய்யும் சிஷ்யனது ஜிஞ்ஞாசை அவ்வுபமானத்தின் நிரூபணத்தில் பிரதிபந்தகமாகின்றது. அநுமானத்தினை நிரூபிப்பதாக ஜிஞ்ஞாசை நிவிருத்தியாய் விடுகின்றது. அதன் பின்னர் அவ்வுபமானத்தினை சொல்லுந் தன்மையே பிராப்தமாகின்றது. ஆகையால் அநுமானத்தின் நிரூபணத்திற்குப் பின் அவசரசங்கதியால் உபமானத்தின் நிரூபணம் சம்பவிக்கின்றது.

### ௧௫௯௮. நிர்வாஹகைக்கிய சங்கதியின் நிரூபணம்.

“ஏகப்ரயோஜக ப்ரயோஜ்யத்வம் நிர்வாஹகைக்ய ஸங்கதி:” (இ-ள்.) ஒரு பிரயோஜகத்தால் பிரயோஜ்ஜியத்தன்மையினை நிர்வாஹகைக்கிய சங்கதியென்பர். அதாவது; யாண்டு ஒரே காரணத்தால் இரண்டு மூன்று காரியம் உண்டாகின்றதோ ஆண்டு நிர்வாஹகைக்கியசங்கதி சம்பவிக்கின்றது. எங்ஙனம்: பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் நிரூபணத்திற்குப்பின் பராமரிசம், அநுமிதியாமிரண்டின் நிரூபணத்தில் நிர்வாஹகைக்கிய சங்கதியிருக்கின்றது.

### ௧௫௯௯. கார்யைக்கிய சங்கதியின் நிரூபணம்.

“ஏககார்யாநுகூலத்வம் கார்யைக்ய ஸங்கதி:” (இ-ள்.) ஒரு காரியத்தின் அநுகூலத்தன்மையினை கார்யைக்கிய சங்கதியென்பர். எங்ஙனம்: வியாப்தியும், பக்ஷதர்மத்தன்மையுமாமிரண்டும் ஒரே அநுமிதி வடிவ காரியத்தினை உண்டாக்குவதாகின்றது. ஆகையால் வியாப்தியின் நிரூபணத்திற்குப் பின் பக்ஷ தர்மத்தன்மையின் நிரூபணத்தினை கார்யைக்கிய சங்கதியென்பர். இவ்வாறாக முற்கூறிய எல்லா பதார்த்தங்களின் நிரூபணத்தில் புத்தியுடைய புருஷன் யோக்கிய முறையாக சங்கதியை அறிந்துக்கொள்க.

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவ்ராஜகாசாரிய ஸ்ரீ சுவாமி உத்தவாநந்தகிரியவர்களின் சீடராகிய சுவாமி சித்கநாநந்தகிரி அவர்கள் அருளிய பிரமாண முதலிய பதினாறு பதார்த்த நிரூபணமெனப் பெயரிய நியாயப்பிரகாசம் ஏழாவது பரிச்சேதம் முற்றிற்று.

நியாயப்பிரகாசம் முற்றுபெற்றது.

ஓம் ஸ்ரீகணேஶாயநம:, ஸ்ரீகுருப்யோநம:,

ஸ்ரீகாசீவிஶ்வேஶ்வராயநம:, ஸ்ரீஶங்கராசாரியேப்யோநம:.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 9 | 31 | யஜ்ஞாஜ்ஞாவா தி | யஜ்ஞஜ்ஞாவா தி. |
| 15 | 7 | அக்கிரியை விஷயகமாவதில்லை ... | அக்கிரியை சவிஷயகமாவதில்லை. |
| ,, | 33 | பிராந்தியில்லாத்தன்மையினை ஆன்ரோர்த்தன்மையெனப்படும். | பிராந்தியில்லாத்தன்மை ஆன்ரோர்த் தன்மையெனப்படும். |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்.. | மேற்குறித்தவாறுதிருத்துக. |
| 17 | 6 | ஸெர்வெநநாஹிவாநர்வெஜக ... | ஸெர்வெநநாஹிவாநர்வெஜத. |
| 18 | 39 | நூல்முடிதல் வடிவபயனே ... | நூல்முடிதல் வடிவதிஷ்டபயனே. |
| 19 | 28 | அதனைவேதபோதித கர்த்தவ்வியத் தன்மை யெனப்படும்... | அதுவேதபோதித கர்த்தவ்வியத் தன்மையெனப்படும். |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்.. | மேற்குறித்த வாறுதிருத்துக. |
| 23 | 27 | வேள்வியை செய்யப்படினும் ... | வேள்விசெய்யப்படினும். |
| 25 | 16 | இவ்வீற்றெழுத்தினை ... | இவ்வீற்றெழுத்து. |
| 26 | 11 | அவச்சேதகமெனப்படும் ... | அவச்சேதக சம்பந்தமெனப்படும். |
| 27 | 33 | முயற்சித்தன்மைவடிவ் ... | முயற்சியுடைமை வடிவ. |
| 28 | 8 | யெழுதுவதானுலாம் ... | யெழுதுவதனுலாம். |
| ,, | 22 | மற்றவர்கட்கு ... | மற்றையவர்கட்கு. |
| | | மேற்குறித்தவாறுவருமிடமெங்கும்... | மேற்குறித்தவாறு திருத்துக. |
| 29 | 6 | ஓங்காரஸ்தாயஸவை ... | ஓங்காரஸ்தாயஸவை. |
| ,, | 7 | ~~விநியமாதள் தவஸா நூாஜ~~ ... | ~~விநியமாதனமெதஜஒம~~ |
| ,, | 8 | வாஜள ... | வாஜள. |
| 30 | 35 | விவயஂஸாயாரண ... | விவயஂஸாவஸாயாரண. |
| 31 | 3 | காரணமாவதை ... | காரணமாவது. |
| 32 | 33 | வஂயாஂ ... | வஂயா. |
| 33 | 11 | யயாவெ ... | யயாவெ. |
| ,, | 22 | ஸாஹஜாநெநஜவஂெத ... | ஸாஹஜாநெநஜவஂெத. |
| ,, | 37 | ஆத்மஞானவடிவவத்து ... | ஆத்மஞானவடிவ தத்துவ. |
| 35 | 5 | அவ்விலக்ஷணத்தன்மையை ... | எவ்விலக்ஷணத்தன்மையை. |
| ,, | 26 | அறிவதை ... | அறிவது. |
| 39 | 19 | அசுயகர்மமும் ... | அசுபகர்மமும். |
| 41 | 34 | ஆத்மதுக்கம் ... | அத்துக்கம். |
| 42 | 27 | சொர்க்கம் இடைகாலத்திலும் ... | சொர்க்கசுகம் இடைகாலத்திலும். |
| 43 | 11 | ஆறுவிஷங்களுமான ... | ஆறுவிஷயங்களுமான. |
| 46 | 3 | சுருதியில் ... | சுஷுப்தியில். |
| 47 | 21 | துவம்சத்தினை ... | துவம்சம். |
| 48 | 26 | முக்திக்கு ... | முக்தி. |
| ,, | 36 | கரணமுமாம். ... | கரணமுமாகிய. |
| ,, | 39 | சுவசமானுதிகரணமுமாம். ... | சுவசமானுதிகரணமுமாகிய. |
| 51 | 18 | ஜடமோத ... | ஜடபோத. |
| 53 | 10 | முக்குண வடிவமும், ஏகமும் ... | முக்குண வடிவமும், நித்தியமும், ஏக[மும் |
| 55 | 11 | பிரஹ்மத்திற்கு விகார ... | பிரஹ்மத்திற்கு சவிகார. |
| 57 | 19 | ஏகாக்கிரசமாதி ... | ஏகாகாரசமாதி. |
| 60 | 24 | வன்னியை ... | வன்னி. |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 60 | 25 | முதலியவைகளை ... | முதலியவைகள். |
| 61 | 2 | திரவியமும் ஒன்றும் ... | திரவியமோ ஒன்றும். |
| 63 | 13 | உபயதர ... | உபய. |
| ,, | 20 | உபயதர ... | உபய. |
| 64 | 17 | உயர்ந்த சிநேக குணமிருக்கின்றது. அந்த சிநேகம் | உயர்ந்த சிநேகமிருக்கின்றது கிணறு முதலியவைகளின் ஜலங்களில் தாழ்ந்தசிநேககுணமிருக்கின்றது |
| 67 | 1 | ஜாதியுமாம். இவை ... | ஜாதியுமாகிய இவை [அந்தசிநேகம். |
| 71 | 16 | பயன்வடிவ ... | பிரமாணத்தின் பயன் வடிவ. |
| 73 | 15 | ஆண்டு சாமான்னிய ... | ஆண்டு சமான. |
| 78 | 5 | வன்றும். பிருதிவி முதலிய ... | வன்றும். ஆனால் பிருதிவி முதலிய ஒன்பது திரவியங்களிலேயே உருவ முதலியகுணங்கள் சமவாய சம்பந்த மாகவிருக்கின்றன. ஆகையால் ஒன் பது திரவியங்கட்கு குணங்களின் ஆசிரயவடிவத்தன்மைலக்ஷணம் சம் பவிக்கின்றதாகையால்பிருதிவிமுத |
| 79 | 24 | காரியங்களின் வேறுபாடே ... | காரணங்களின் வேறுபாடே. [லிய |
| 82 | 25 | உள்ளீடாயிருக்கின்ற ... | அநுகதமாயிருக்கின்ற. |
| ,, | 32 | பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் அதீந்திரிய | பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் திரவி யங்களில் அதீந்திரிய. |
| 83 | 36 | காரணத்தன்மை ஜாதியின் ... | காரணத்தன்மையின். |
| 85 | 17 | தர்மத்தினை ஓர் தோஷமும் ... | தர்மத்தின் ஜாதித் தன்மையில் ஓர் |
| 87 | 12 | விபுத்திரவியங்களில் ... | விபுத்திரவியங்களின். [தோஷமும் |
| 88 | 3 | நான்காவது அர்த்தத்தை ... | நான்காவது லக்ஷணத்தின் அர்த்தத் |
| 89 | 8 | உத்தேசத்தின் ... | உத்தேசக் கிரமத்தின். [தை |
| 96 | 12 | அடங்கியிருக்கும் ... | அநுகதமாயிருக்கும். |
| 110 | 23 | இச்சுருதியிலும் ... | இச்சுருதியினும். |
| 111 | 37 | வ்ருக்ஷஃ ... | வ்ருக்ஷஃ. |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்.. | மேற்குறித்தவாறு திருத்துக. |
| 115 | 3 | அதிவியாப்தியை ... | அவ்வியாப்தியை. |
| ,, | 9 | அதிவியாப்தியை ... | அவ்வியாப்தியை, |
| ,, | 13 | மிருதிரவியங்களிலோ ... | மிருஇந்திரியங்களிலோ. |
| 122 | 35 | கூறப்பட்டதன்று ... | கூறியதன்று. |
| ,, | 38 | கூறப்பட்டிருக்கின்றது ... | கூறியிருக்கின்றது. |
| 124 | 28 | [illegible] ... | [illegible]. |
| 126 | 15 | அது ... | அதாவது. |
| 128 | 12 | ஹ்ஂயவிஷயஃ ... | ஹ்ஂயவ்ஷயஃ. |
| 131 | 13 | ஜன்னியத்தும் ... | ஜன்னியத்வம். |
| 132 | 32 | அங்ஙனமே எங்ஙனம் புண்ணிய ... | அங்ஙனமே புண்ணிய. [லோ |
| 142 | 23 | கிணறு முதலுயவைகளிலோ ... | கிணறு முதலியவைகளின் ஜலங்களி |
| 159 | 3 | வெம்மை பரிசத்தன்மையே ... | வெம்மை பரிசத்தன்மை தர்மமே. |
| 161 | 38 | பரிசத்தை வெளியாக்காததாய் ... | பரிசமுதலியவற்றை வெளியகக்காத |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்.. | மேற்குறித்தவாறு திருத்துக. [தாய் |
| 162 | 37 | ஏதுவாகக்கூறின் ... | ஏதுவாகக் கூறுக. அல்லது. |
| 168 | 7 | யதா²வ்யாதிஷு ... | யதா²வ்யாதி. |
| ,, | 34 | தடையில்லாதவழி நெகிழ்ச்சி ... | தடையில்லாத வழி அழிவுபடாத |
| 171 | 12 | ஆசிரியமாகிய ... | ஆசிரயமாகிய. [நெகிழ்ச்சி |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்,. | மேற்குறித்தவாறு திருத்துக. |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 173 | 24 | அவ்வரிசி முதலிய திரவியங்களில்... | அவ்வரிசி முதலிய பார்த்திவ திரவி |
| ,, | 36 | விசேஷமாக ... | பரிசேஷமாக. [யங்களில் |
| 174 | 22 | சக்ஷுர் வடிவ தேயுவின் ... | சக்ஷுர் இந்திரிய வடிவ தேயுவின். |
| 179 | 5 | பிரகாசிக்கின்றது ... | பிரகாசிப்பிக்கின்றது. |
| ,, | ,, | சுவர்ணத்திலோ மஞ்சளுருவமானது | சுவர்ணத்திலோ பார்த்திவ மஞ்சளு |
| 183 | 3 | ஜதிரயின் ... | ஜாதியின். [ருவமானது |
| 185 | 39 | திரவியத்தன்மை சாக்ஷாத் ... | திரவியத்தன்மையின் சாக்ஷாத். |
| 187 | 33 | வியப்பியத்தன்மையின் ... | வியாப்யத்தன்மையின். |
| 189 | 33 | தர்மத்தைக்கொண்டு ... | தர்மத்தில் ஜாதி வடிவமின்றுமாகை யால் இருமைத்வ தர்மத்தைக் கொண்டு, |
| 191 | 33 | சரீர அந்தியாவயவி ... | சரீராதி அந்தியாவயவி. |
| 197 | 21 | விஷயங்களில் அதிவியாப்தி ... | விஷயங்களில் அந்த லக்ஷணத்திற்கு |
| ,, | 30 | வாயவீயவிஷயம் ... | வாயவீயம். [அதிவியாப்தி |
| 202 | 21 | ஸம்பெருநுவு ... | ஸம்பெருநபவஹிநுவு. |
| 206 | 10 | சக்ஷுர் இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமன்றும். | சக்ஷுரிந்திரியஜன்னியஞானத்திற்கு அல்லது துவக்கிந்திரியஜன்னிய ஞானத்திற்கு விஷயமன்றும். |
| 211 | 24 | சமவேதமாக ... | சமவேதமாகி. |
| 214 | 39 | அசமவாயி காரண மென்பர் ... | அசமவாயி காரண மென்பர். எங்ஙனம்: பாண முதலியவைகளின் இரண்டாவது முதலிய கிரியை கட்கு வேகம் அசமவாயி காரண மாம், அங்ஙனமே பரமாணுக்க ளின் கிரியைகட்கும் வேகம் அச மவாயி காரணமாம். |
| 220 | 9 | அசமவாயி காரணத்தன்மை ... | அசமவாயி காரண நாசத்தன்மை. |
| ,, | ,, | சமவாயி காரணத்தன்மை ... | சமவாயிகாரண நாசத்தன்மை. |
| ,, | 13 | அவச்சேதகம் அசமவாயி ... | அவச்சேதக தர்மம் அசமவாயி. |
| ,, | 27 | காரியங்களின் ... | காரியத் திரவியங்களின். |
| 221 | 1 | ஓரிச்சையால் [ணு | ஓரிச்சையில். [பரமாணு |
| 227 | 5 | இராசியாலுண்டான கிர்சிய பரமா | இராசியாலுண்டான இரண்டாவது. |
| 231 | 28 | ஆகாஶவத்ஸர்வகதஶ்ச ... | ஆகாஶவத்ஸர்வகதஶ்ச. |
| 235 | 30 | விருக்கும், ... | விருக்கின்றது. |
| 247 | 5 | செய்மையிடத்துள்ள ... | சேய்மையிடத்துள்ள. |
| | | மேற்குறித்தவாறு வருமிடமெங்கும்.. | மேற்குறித்தவாறு திருத்துக. |
| 255 | 12 | சம்பந்தத்தைப்பெற்றது ... | சம்பந்தத்தை நிகழச்செய்வது. |
| 258 | 2 | கடமுதலிய காரியங்கட்கும் ... | கட முதலிய காரியங்களின் உற்பத் திக்கும். |
| 262 | 13 | உண்டாவதாகின்றதோ அக்கர்மம்... | உண்டாவதாகின்றதோ அக்ஷணத்தி |
| 268 | 33 | கிழக்கெனப் பெரிய ... | மேற்கெனப்பெயரிய. [ல் அக்கர்மம் |
| ,, | 35 | மேற்கெனப் பெரிய ... | கிழக்கெனப்பெயரிய. |
| 272 | 6 | வடிவ ஏதுவால் ... | வடிவமாகி. |
| 275 | 31 | அச்சையோகங்களின் ... | அச்சையுக்த சையோகங்களின். |
| 285 | 38 | சிரொன்மணி ... | சிரோமணி. |
| 291 | 27 | அநித்தியமாகி ஜன்னிய ஞானத்தின் | அநித்தியமாகி ஒரு கிராண இந்திரிய ஜன்னிய ஞானத்தின். |
| 293 | 32 | புருஷனது ஜீவாத்மாவின் ... | புருஷனது மனதால்மைத்திரனெனப் பெயரியபுருஷனது ஜீவாத்மாவின். |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 305 | 7 | மித்தியா ஞான வடிவ ... | ஈசுவரனிடத்தில் மித்தியா ஞான [வடிவ |
| 307 | 11 | ஸாக்ஷாஸ்ர ... | ஸாக்ஷாத். |
| 310 | 6 | ஏகத்வதத்தின் ... | ஏகத்வத்தின். |
| 311 | 3 | அச்சரீரங்களில் ... | அச்சரீரங்களின். [தியக்ஷ |
| 316 | 23 | இஷ்டசாதனத்தன்மை பிரத்தியக்ஷ. | இஷ்டசாதனத்தன்மை ஞானம் பிரத் |
| ,, | 26 | சாதனத்தன்மை ஸ்மிருதி வடிவமாக வே | சாதனத்தன்மை ஞானம் ஸ்மிருதி வடிவமாகவே. |
| 321 | 28 | அசத்தில் காரணத்தன்மை | அசத்தில் ஜகத்தின் காரணத்தன்மை. |
| 334 | 40 | அவ்வாத்மாவிற்கு ... | அவ்வாத்மா. |
| 336 | 39 | பிரவிருத்தியும் ... | பிராப்தியும். |
| 347 | 30 | அந்நான்கு ... | அந்நாநா. |
| 360 | 6 | பஞ்ச்தா ... | பஞ்சயா. |
| 373 | 26 | ப்ஞ்ச்தா ... | பஞ்சயா. [ஸம்வ்ரா |
| 474 | 26 | வ்யவஹாரஹேதும் ஸம்வ்ரா. | வ்யவஹாரஹேது ஞானம் |
| 500 | 6 | படோபடாத்யக்ஷ ... | படோபடாத்வயக். |
| ,, | 9 | படோபடாம்த்யக்ஷ ... | படோபடாத்வயக். |
| ,, | 12 | கடவியக்திகளி லிருப்பதாவதால் ... | இருகடவியக்திகளி லிருப்பதாவதால் |
| 523 | 7 | காரியமாத்திர ... | காரணமாத்திர. |
| 526 | 36 | கர்மஜத்தின் ... | கர்மஜவிபாகத்தின். |
| 536 | 12 | புருஷனினும் ... | புருஷனினின்றும். |
| ,, | 14 | தன்னினும் ... | தன்னினின்றும் |
| 550 | 4 | வியவஹாகர ... | வியவஹார். |
| 586 | 36 | விஷயஃ ... | விஷய. |
| 602 | 22 | பிரதிசாத்தியத்தன்மை ... | கிருதிசாத்தியத்தன்மை. |
| 624 | 20 | தந்தேயப்ரஹ ... | தந்தேயஸ்ரஹ. |
| 679 | 40 | ஹாவகாஸ ... | ஹாவவகாஸ. |
| 743 | 22 | கடஸங்வ ... | படஸங்வம். |
| 749 | 30 | தம்ஷ ... | தம்த. |
| 753 | 13 | இப்பதார்த்தத்தில் ... | இத்தர்ப்பணத்தில். |
| 767 | 22 | உருதத்தின் ... | உருவத்தின் |
| ,, | 28 | இந்திரியங்களிலுள்ள து ... | இந்திரியங்களுள். |
| ,, | 18 | சாக்ஷுஷ ... | சாக்ஷுஷ |
| 779 | 10 | சாக்ஷுஷ முதலியன ... | சக்ஷுமுதலியன |
| 786 | 17 | நிஸ்ரித ... | நிஸ்சித. |
| ,, | 22 | நிஸ்ரித ... | நிஸ்சித. |
| 798 | 27 | நிஸ்ரய ... | நிஸ்சய. |
| 801 | 17 | வ்யயிவ்ரஷயஸ்ரய ... | வ்யயிவ்ரஷயஸ்சய. |
| 805 | 35 | நிஸ்ரிதஃ ... | நிஸ்சிதஃ. |
| 813 | 20 | உஹயோஸ்வய ... | உஹயோஸ்சய. |
| 814 | 26 | ஞாவஃ ... | ஞாவகஃ. |
| 826 | 23 | க்ருநிகாநு ... | க்ருதிகாநு. |
| 829 | 18 | எப்பதத்திற்கு ... | எப்பதத்தின். |
| 832 | 33 | பிரமாபதத்தின் ... | பிரமரபதத்தின். |
| 848 | 37 | 1295. சக்கிரிகாவடிவ தர்மத்தின் நிரூபணமென்னும் விஷயத்தை நீக்குக. | |